ஸ்ரீ

# பகவத்விஷயம்

## ஐந்தாம் பத்து

## திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்திநாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர்அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழிநூற்றந்தாதி இவைகளுடன்



சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.



சே. பார்த்த ஸாரதி ஐயங்காராலும்,
வீ. நரசிம்மாசாரியராலும்
பரிசோதிக்கப்பெற்றது.



திருவல்லிக்கேணி.
நோபில் அச்சுக்கூடம்.

அட்சய௵ ] [ 1926.

ஸ்ரீ:

# திருவாய்மொழி

## ஐந்தாம் பத்து.

### முதல்திருவாய்மொழி—கையார்சக்கரம் : ப்ரவேசம்.

#### ஆறாயிரப்படி.

(கையார்சக்கரம்.) இப்படி "எம்பெருமானை ஆஸ்ரயியுங்கோள்" என்று பிறரைக் குறித்து அருளிச்செய்தருளி; தம்பக்கலுள்ள ப்ராதிகூல்யங்களொன்றும் பாராதே நிர்ஹேதுகமாக எம்பெருமான், ஸ்வஸர்வேஸ்வரத்வ ஜ்ஞாநத்தையும் ஸ்வகைங்கர்யப்ராப்யத்வ ஜ்ஞாநத்தையும் தமக்குக் கொடுத்தருளித் தம்மை ஸ்வரூபவைகதாரக போஷக போக்யராக்கித் தம்பக்கல் நிரதிஶய வ்யாமுக்தனுய்க்கொண்டு தம்மோடு ஸம்ஸ்லேஷித்தபடியை ப்ரீத்யதிஶயத்தாலே அருளிச்செய்கிறார்.

#### ஒன்பதினாயிரப்படி.

அஞ்சாம்பத்தில் முதல் திருவாய்மொழியில், இப்படி பரப்ரதிபாதநார்ஹமாம்படி எம்பெருமான் ஸ்வவிஷயஜ்ஞாநத்தைப் பிறப்பித்த உபகாரத்தை ஸ்மரித்து அதிலே ஈடுபட்ட ஆழ்வார், விபரீதங்களை அநுஷ்டித்து, பகவத்ப்ராப்த்யுபாயமாகச் சொல்லுகிற வழிகள் களுக் கண்டும் அறியாதே "புருஷார்த்தங்கள் வேணும்" என்னும் ப்ரதிபத்தியுமின்றிக்கே ஸம்ஸார ஸாகரத்திலே அழுந்தாநின்றுவைத்து ஓடுகிற தசையை உணர்வதும் செய்யாதே அதுக்குமேலே விஷயபரனுமாய் எம்பெருமான்பக்கல் இச்சையுமின்றிக்கே யிருந்துவைத்து; அவன் ஸந்நிதியிலே அஸத்யபாஷணம் மஹாபாதக ஸமமாயிருக்க, ஸர்வஜ்ஞனவனுக்குங்கூட 'இவன் நமக்கு ஸ்நேஹி' என்று கருதும்படி பெரும்பொய்களைச் சொல்லுவதும்செய்து, இப்படிகளாலே அத்யந்தம் உபேக்ஷ்யனுயிருந்துள்ள என்னை, இவையொன்றும் பாராதே, விதிஶப்திதையான கேவல க்ருபையாலே, "தான் ஸர்வஶேஷி" என்னுமிடத்தையும் "தன் திருவடிகளில் அடிமையே பரமபுருஷார்த்தம்" என்னுமிடத்தையும் அறிவித்து, அவ்வடிமையாலல்லது எனக்குச் செல்லாதபடி பண்ணி என்பக்கலிலே மிகவும் வ்யாமுக்தனுய் என்னோடேவந்து கலந்தருளினனென்று ப்ரீதராகிறார்.

#### பன்னீராயிரப்படி.

முதலிரண்டுபத்தாலே - ப்ராப்யபூதனுன ஶேஷியினுடைய ரக்ஷகத்வபோக்யத்வங்களைச்சொல்லி, அநந்தரம், மூன்றும்பத்தாலும் நாலாம்பத்தாலும் - ப்ராப்தாவான பகவச்சேஷபூதனுடைய ததேகாநுபவத்வத்தையும் ததேகப்ரியத்வத்தையுஞ் சொல்லி; ஆக, நாலுபத்தாலும் - ஸித்தரூபமான பராவராத்ம யாதாத்ம்யத்தை அருளிச்செய்தாராய்; அநந்தரம், அஞ்சாம்பத்தாலும் ஆறும்பத்தாலும் - ஸித்தோபாயபூதனுன ஈஶ்வரவிஷயத்தில் சேதநனுக்கு ஸாத்யமான உபாயஸ்வீகாரத்தை அருளிச்செய்கிறார். அதில், இந்த அஞ்சாம்பத்தில் - ஸித்தமான உபாயஸ்வரூபத்தினுடைய யாதாத்ம்யத்தை நிரூபிக்கிறது. எங்ஙனேயென்னில் ;— கீழ்ச்சொன்ன ததேகப்ரியத்வத்தாலே "பகவத்கைங்கர்யமே உத்தேஶ்யம்" என்று பிறர்க்கு

உபதேசிக்கும்படி தமக்கு அவ்விஷயத்தில் பிறந்த ப்ராவண்யத்தை அநுஸந்தித்து, "இது க்கு அவனுடைய உபாயபாவம்" என்று நிஷ்கர்ஷித்து, உபாயபூதனுடைய க்ருபாபாரவஸ்ய தை யும், அதடியாக ஆஸ்ரிதரை பாகவதரையிட்டுத் திருத்திக்கொள்ளும் ஆகாரத்தையும், தி ந்தி னர்க்கு நிரதிசயப்ரேமத்தை யுண்டாக்கி ப்ராப்யத்வரையை ஜநிப்பிக்கும்படியையும், ப்ர யா லாபதசையில் ஆர்த்திபிறந்தார்பக்கல் அவனுடைய ரக்ஷகத்வ ஸாமர்த்யத்தையும், அப் ப்ய வ்யஸநத்தோடே ஹார்த்தமான அநுபவம் நடக்கையாலே ப்ரீத்யப்ரீதிகளை ஸமமாக உண் டாக் கும்படியையும், ஆர்த்யதிசயத்தாலே அநுகரிக்கும்படி அவன் இவனுக்கு அஹம்பாவவிஷ மாம் படியையும், இப்படி ஆர்த்திபிறந்தால் அகிஞ்சநரானார்க்குத் தன் உபாயபாவத்தை ப்ரகாசி ப்பிக் கும்படியையும், போகாகாங்க்ஷை யுடையார்க்கு அவ்வுபாயத்தில் ப்ரதிபத்திவிஶேஷகரத்வ தை யும், பரிபூர்ணாநுபவப்ராவண்யம் பிறந்தால் ப்ரதிபந்நமான உபாயத்தில் விஸ்வாஸஜநகத்வ தை யும், அதிசயிதஶக்தியான உபாயவிஷயத்தில் அபிநிவிஷ்டரானார்க்கு அந்த விஸ்வாஸ தை யாவத்ப்ராப்தி அநுவர்த்திப்பிக்கும்படியையும் அருளிச்செய்து, நிரபாயோபாயபூதனுடைய யாதாத்ம்யத்தை நிஷ்கர்ஷித்து அருளுகிறார்.

அதில், முதல் திருவாய்மொழியில் - உபாயபூதனான ஈஸ்வரனுடைய க்ருபாபாரவஸ்ய யத்தை ப்ரதிபாதிப்பதாக; க்ருத்ரிமாநுகூல்யவான்கள்பக்கலிலும் ஸர்வ ஸுலபனான ஈஸ்வர னுடைய க்ருபை அவ்யபிசாரிதை என்னுமிடத்தையும், அந்த க்ருபாபாரவஸ்யத்தாலே அநு ருத யோக்தியே பற்றாசாக அவன் அபிநிவிஷ்டனாய் மேல்விழும்படியையும், ஆஸ்ரிதருடைய கிந் நதையையும் போக்கித் தன்னை யநுபவிப்பிக்கும்படியையும், அநுபவப்ரதிபந்தக தோஷநி வர்த் தகத்வத்தையும், தோஷரூபஶரீராதிகள் நிவர்த்தகனுக்கு விதேயமென்னுமிடத்தையும், தோஷ ரூப ப்ரக்ருதியோடேகூட இருக்கச்செய்தேயும் அந்ததோஷம் நெஞ்சிற்படாதபடி விலக்ஷண விக்ர ஹத்தை அநுபவிப்பிக்கும்படியையும், போக்தாவின் நிகர்ஷம்பாராதே ப்ரேமத்தை ஜநிப்பி த்துத் தானும் மேல்விழுந்தநுபவிக்கும் என்னுமிடத்தையும், அநுபவிக்குமளவில் ஸர்வநிபந்த னாய் புஜிப்பிக்கும்படியையும், இப்பந்தத்தோடே அஸாதாரணாகாரஸிம்ஹவிஶிஷ்டனாய் அநுபவி ப்பிக் கும் ஆகாரத்தையும், அந்த ஆகாரத்தை அழியமாறியும் ஆஸ்ரிதார்த்தமாக அநேகாவதாரங் களைப் பண்ணும்படியையும் அநுஸந்தித்து, இப்படி உபாயபூதனான ஈஸ்வரனுடைய க்ருபா பார வஸ்யத்தை அநுபவிக்கிறார்.

## இருபத்திநாலாயிரப்படி.

அஞ்சாம்பத்தில், முதல் திருவாய்மொழியில், ஸம்ஸாரிகளிலே அந்யதமராயிருக்க, இவர்களையும் திருத்தும்படியாக ஸ்வவிஷயத்திலே ஜ்ஞாநத்தைப் பிறப்பித்த உபகா ரத்தை அநுஸந்தித்து அதிலே ஈடுபட்டு, "இந்தநன்மை நமக்கு உண்டாகைக்கு ஹேது வென்?" என்று பார்த்தார்; தம்மைப் பார்த்தவிடத்து, விபரீதாசரணமேயாய், பகவத் ப்ராப்திக்கு உபாயமாகச் சொல்லுகிற வழிகள் கனாக்கண்டும் அறியாதே அதுக்குமேலே அம்ருதமிருக்க நஞ்சைத் தின்பாரைப்போலே விஷயங்களிலே ப்ரவணனாய், இப்படியிருக்கிற தசையையும் உணரவறியாதே உபேக்ஷ்யனான என்னை இவையொன்றும் பாராதே தன் னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே தன் ஶேஷித்வத்தையும் என் ஶேஷத்வத்தையும் அறிவித்துத் தன் திருவடிகளில் கைங்கர்யத்தாலல்லது செல்லாதபடி பண்ணி, இப்படி என் பக்கலிலே வ்யாமுக்தனாய் என்னோடேவந்து கலந்தருளினானென்று ப்ரீதராகிறார். "ஶ்ரீ ஹா வேந" என்கிற ஶ்லோகத்திலே எம்பார் "ஸர்வஜ்ஞனுக்கு ஓர் அஜ்ஞாநமும் விஸ்ம்ருதியும் ஸர்வஶக்திக்கு ஓரஶக்தியு முண்டு" என்று அருளிச்செய்வர். ஒருவன் தன்னையாஶ்ரயித்தால்,

*முன்பு புத்திபூர்வம்பண்ணின குற்றத்தில் விஸ்ம்ருதி, ஜ்ஞாநம்பிறந்தால் ப்ராமாதிகமாக வருமவற்றில் அஜ்ஞாநம், இவனைவிடவேண்டுமளவில் அஶக்தி, இப்படியிருக்கைக்கு அடி ஸ்வாபாவிகமான குடல்தொடக்கு.*

## ஈடு முப்பத்தாறாயிரப்படி.

நண்ணாதார் முறுவலிப்பவிலே ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை யநுஸந்தித்து, அதுக்குப் பரிஹாரமாக, "பகவத்பரத்வஜ்ஞாநத்தையுண்டாக்குவோம்" என்று பகவத்பரத்வத்தை உபதேசித்தார் - கீழ்; இரண்டுகிட்டம் தன்னிலே சேரக்கிடக்க அதிலேயொன்று பொன்னாயிருக்குமாபோலே அவர்களிலே ஒருவராயிருக்கிற தாம், அவர்களையும் திருத்தும்படி தமக்குப்பிறந்த நன்மைக்கு "அடியேன்?" என்றுபார்த்து, தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே செய்தானத்தனையென்கிறார். "அநாதிகாலம் ஸம்ஸரித்து, புத்திபூர்வம் விரும்புவது ஶப்தாதி விஷயங்களையேயாய், தன்பக்கல் எனக்குள்ளது அஹ்ருதயமான உக்திமாத்ரமேயாயிருக்க; நான் புத்திபூர்வம் பண்ணிப்போந்த ப்ராதிகூல்யங்களை விஸ்மரித்து, ஜ்ஞாநம்பிறந்த பின்பு ப்ராமாதிகமாக வந்தவற்றில் அஜ்ஞனாய், என்னை இவ்வளவாக விஷயீகரித்தான்; பிறரையும் நான்திருத்தவல்லேனாம்படி பண்ணினான்" என்று தாம்பெற்றபேற்றின் கனத்தைச் சொல்லி ஈடுபட்டு அநுபவிக்கிறார். பகவத்பரத்வஜ்ஞாநத்தைத் தம்நெஞ்சிலே படுத்தினபடியையும், அதுக்கு உறுப்பாயிருப்பதோரு நன்மை தமக்கின்றிக்கே யிருந்தபடியையும், அநாதிகாலம் தாம் விபரீதங்களையே அநுஷ்ட்டித்துப் போந்தபடியையும், புருஷார்த்தோபாயமாகச் சொல்லுகிறவற்றில் தாம் ஒன்றும் கனாக்கண்டறியாதேயிருக்கிறபடியையும், (இழந்து நோவுபடாநிற்கச்செய்தே) "புருஷார்த்தம்வேணும்" என்னும் ப்ரதிபத்தியுமின்றிக்கேயிருந்தபடியையும் ஸம்ஸாரத்திலே தரைகாண வொண்ணாதபடி ஆழ்ந்து நோவுபடா நிற்கச்செய்தே "நோவுபடாநின்றோம்" என்று அறிவிக்கவும்மாட்டாதே உணர்த்தி யற்றிருக்கிறபடியையும், அம்ருதமிருக்க விஷத்தை விரும்புவாரைப்போலே ஆராவமுதைவிட்டு இன்னமுதெனத்தோன்றின ஶப்தாதிவிஷயங்களை விரும்பிப்போந்தபடியையும், அதுக்குமேலே அவன்பக்கல் இச்சையின்றிக்கேயிருக்க அவனையுகந்தார் சொல்லும் வார்த்தைகளைச் சொல்லிப்போந்தபடிகளையும் அநுஸந்தித்து; இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் தண்ணியேனாயிருக்கிற என்னை, அவையொன்றும்பாராதே, "தான்

---

*கையார்சக்கரம் ப்ரவேஶ - வ்ருத்தவர்த்திஷ்யமான ஸங்கதி -* **நண்ணாதார்** *இத்யாதிவாக்யத்வயேந.* **உபதேசித்தாரென்றது** *- திருந்தினவர்களுக்குமேலே மங்களாஶாஸநம்பண்ணுகையாலே, உபதேசித்துத் திருத்தினானென்றபடி.* **கிட்டம்** *- பீச்சாங்கட்டி.* **திருத்தும்படி** *- ஒன்றும்தவிலே.* **பார்த்து** *என்ற வநந்தரம், அதுக்குஹேது ஒன்றும் தம்பக்கல் காணாமையாலே யென்று கூட்டுவது. "வந்திவாய்க்கின்ற" என்றத்தைப் பற்ற -* **நிர்ஹேதுக** *இத்யாதி. "நிர்ஹேதுகம்" என்றால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம்வாராதோ? ஸஹேதுகமானாலோவென்ன -* **அநாதிகாலம்** *இத்யாதி. "பொய்யேகைம்மைசொல்லி" என்றத்தைப்பற்ற -* **தன்பக்கல் எனக்கு** *இத்யாதி. "அவனென்னாகியொழிந்தான்" என்றத்தைப்பற்ற -* **நான்புத்திபூர்வம்** *இத்யாதி.* **விஸ்மரித்து** *என்றதுக்கு ஹேது - மேலே "வ்யாமுக்தனாய்" என்றதிலே கண்டுகொள்வது.* **ப்ராமாதிகமாக** *இத்யாதிக்கு - "காப்பாரார்" என்றதின் வ்யாக்யாநத்திலே ஸ்பஷ்டம். "மெய்யேபெற்றொழிந்தேன்" என்றத்தைப்பற்ற -* **தாம்பெற்றபேற்றின்** *இத்யாதி. பாட்டில் ப்ரமேயங்களையும் உட்கொண்டு விஸ்தரிக்கிறார் -* **பகவத்பரத்வ** *இத்யாதி. "கையார்சக்கரத்து" "அம்மானாழிப்பிரான்" என்றத்தைப்பற்ற -* **பகவத்பரத்வஜ்ஞாநத்தை** *இத்யாதி. "பொய்யேகைம்மைசொல்லி" என்றத்தைப்பற்ற-* **அதுக்குறுப்பாய்** *இத்யாதி. "புறமேபுறமேயாடி" என்றத்தைப்பற்ற -* **அநாதிகாலம்** *இத்யாதி. "நின்கண் நெருங்கவைத்தே எனதாவியை நீக்ககில்லேன்" என்றத்தைப்பற்ற -* **புருஷார்த்தோபாயம்** *இத்யாதி. "காவாய்போல்" என்றத்தைப்பற்ற -* **புருஷார்த்தம் வேணும்** *இத்யாதி. "அலைநீர்க்கடலு ளழுந்தும்" என்றத்தைப்பற்ற -* **ஸம்ஸாரத்திலே** *இத்யாதி. "உள்ளன மற்றுளவா" இத்யாதியைப்பற்ற -* **அம்ருதமிருக்க** *இத்யாதி.* **இன்னமுதெனத்தோன்றின** *- இனிய அம்ருதமென்னும்படி போக்யமாய் ப்ரகாஶித்த. "போனாய்மாமருது" இத்யாதியைப்பற்ற -* **அதுக்குமேலே** *இத்யாதி.* **தான் ஸர்வஶேஷியென்றது** *- "அம்மானாழிப்பிரான்" என்றத்தைப்பற்ற. "உய்ந்தொழிந்தேன்" என்றத்தைப்*

ஸர்வமோக்ஷி'' என்னு மிடத்தையும் "தன்திருவடிகளில் கைங்கர்யமே புருஷார்த்தம்" என்னு மிடத்தையும் என்நெஞ்சிலேபடுத்தி என்பக்கலிலே வ்யாமுக்தனாய் என்னோடேவந்து கலந்தா னென்று தாம்பெற்றபேற்றைச்சொல்லி ஹ்ருஷ்டராகிறார்.

## முதற்பாட்டு.

கையார்சக்கரத்து என்கருமாணிக்கமேயென்றென்று
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்றுகாப்பாரார்
ஐயோகண்ணபிரான் அறையோவினிப்போனாலே.

ஆ.—ஸ்வசரணயுகள ஸ்நேஹ கந்தரஹிதனாய், ப்ராக்ருதவிஷய ப்ரவணனாயிருந்து வைத்து, ஸ்வவிஶ்லேஷத்தில் ஆத்மதாரண க்ஷமரல்லாதாரைப்போலே கையார்சக்கரத்து என் கருமாணிக்கமே யென்றென்று நான்சொல்ல, என்னுடைய இந்த அதிதுஸ்ஸஹமான ப்ராதி கூல்யத்தை ஒன்றும்பாராதே என்னை மெய்யாக ஸ்வாநுபவைக போகனாக்கி என்னோடே கலந்தருளினான். எம்பெருமானுடைய நிரவதிககாருண்ய ஸமுத்ரம் கரையுடைந்து பெருகப் புக்கால் எம்பெருமான் தன்னாலும் தடுக்கமுடியாதாகாதே. அவன் ஸர்வஶக்தனல்லனோ அவ னால் முடியாததுண்டோ வென்னில்; வல்லனாகில் போவதிறே யென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், நான் அத்யந்தம் அந்யபரனாயிருந்துவைத்தே தன் லௌகிகர் யாதிகளில் ஈடுபட்டார் சொல்லும் சொல்லைப் பொய்யேசொல்ல, பரமபக்தர்கள் பெறும்பேற்றை ஸ்வக்ருபையாலே அவன் எனக்குத் தந்தருளினனென்று ப்ரீதராகிறார்.

[கையாரென்று தொடங்கி]-நான் பாஹ்யவிஷயங்களிலே மிகவும் ப்ரவணனாய் அதுக்கு மேலே கையிலே பூர்ணமான திருவாழியையும் வடிவழகையுங் காட்டி என்னை யகப்படுத்தினவனை என்று பலகாலும் பெரும்பொய்யைச் சொல்லி. [விதிவாய்க்கின்றுகாப்பாரார்] - உன்க்ருபை பெருகப்புக்கால் ஒருவராலும் தடுக்கமுடியாது. [ஐயோ கண்ணபிரான் அறையோவினிப்போனாலே] - எம்பெருமான் "எனக்கும் அரியதுமுண்டோ" என்று அருளிச்செய்ய, அநுக்ரஹஶீலனாய் என் பொய்யிலே யகப்பட்ட நீ இனிவல்லையாகில் போய்க்காணு யென்கிறார். ஐயோவென்றது-களிப் பாலே.

ப.—முதற்பாட்டில், க்ருத்ரிமமான அநுகூலோக்திகளைப் பண்ண, ஸர்வஸுலபனான வனுடைய தப்பவொண்ணாத க்ருபாவைபவத்தாலே அக்ருத்ரிமப்ரேமபரர் பெறும்பேற்றைப் பெற்றேன் என்கிறார்.

கை-திருக்கையோடு, ஆர்-பொருந்தின, சக்கரம் - திருவாழியை யுடையவனாய் (அச் சேர்த்தியோடே), என் கருமாணிக்கமே - நீலரத்நம்போலே தர்ஶநீயமான வடிவை எனக்கு அநுபாவ்யமாக்கினவனே, என்றென்று - என்று என்று பாரமார்த்திக ப்ரேமயுக்தரைப்போலே பலகாலும், பொய்யே - அந்தப்ரீதியின்றி யிருக்கச்செய்தே, கைம்மை - (எதிரியும் ஸத்யபுத்தி

பற்ற - தன்திருவடிகளில் இத்யாதி. "அடியேனுடையானன்" "என்னைமுற்றவுந்தானானன்" என்றத்தைப் பற்ற - வ்யாமுக்தனாய் என்றது. கீழே "அநாதிகாலம்" இத்யாதி வாக்யத்திலே, ப்ராதிகூல்யங்களை விஸ்மரித் தென்றது - விஸ்மரியாவிட்டால் "அடியேனுடையானன்" என்கைக்கூடாமையாலே வித்த வென்றபடி

பண்ணும்படி) க்ருத்ரிமோக்திகளை, சொல்லி-பண்ணி, (உக்திவிருத்தமாமபடி) புறமேபுறமே - பாஹ்யவிஷயங்களிலே ஒன்றைவிட்டு ஒன்றைப்பற்றி, ஆடி - ஸர்வதா ஸஞ்சரித்துவைத்து, மெய்யே - பாரமார்த்திகப்ரேமயுக்தர் பெற்றபேற்றை, பெற்றொழிந்தேன் - பெற்றுவிட்டேன்; விதி-(இதுக்கு ஹேதுவாய், பொய்யையும் மெய்யாக நீ ப்ரதிபத்திபண்ணும்படி பண்ணக்கடவதாய், நீ "அல்லேன்" என்னிலும் தவிரவொண்ணாதபடி ப்ரவர்த்திப்பிக்கையாலே விதிஶப்தவாச்யையான) உன்னுடைய க்ருபை, வாய்க்கின்று - (பலோந்முகியாகிற) இது, ஆர்-ஆராலே, காப்பார் - விலக்கலாம்? (அதுக்கடி யென்னென்னில்), - கண்ணன் - ஸர்வ ஸுலபனாய்க்கொண்டு, பிரான்-எனக்கு உபகரித்த நீ, (உன்ஸ்வாதந்த்ர்யத்தாலே ஶக்தனென்று), இனி-க்ருபை பலித்த பின்பு, போனாலே - கால்வாங்கிப் போகலாமோ? ஐயோ - ஐயோ, அறையோ - வல்லையாகில் போய்க்காண். ஐயோவென்றது - அது காண்போமென்கிற ஹர்ஷோக்தி. அறையோவென்றது-அதடியான கர்வோக்தி.

இ.—முதற்பாட்டில், என்பக்கலுள்ள அஹ்ருதயமான உக்தியை ஸஹ்ருதயமாகக் கொண்டு பரபக்தி யுக்தர் பெறும்பேற்றைத் தன் க்ருபையாலே எனக்குத் தந்தருளினான் என்கிறார்.

[கையார் சக்கரத்து] - வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும் கையிலே திருவாழியைப் பிடித்தால், வேறோராபரணம் வேண்டாதிருக்கை. "ஶூஹாரணஸ்ஸுஹாரண:" [என்கருமாணிக்கமே] - நீலரத்நம்போலேயிருக்கிற வடிவை எனக்கு முற்றூட்டாகத் தந்தவனே! புறம்பு ஆத்மகுணத்திலும் போகவேண்டுவதில்லை. "ஹஸநா நா:" என்கிற பொதுவையும் அழித்தது. [என்று என்று] - மெய்யே நல்லராயிருப்பார் சொல்லும் வார்த்தை இது, இது அந்யபரரான நமக்குக் குற்றமாகக் கடவதிறே. ஒருகால் சொல்லி அநுஶயித்துவிட்டேனோ? இது தான் பொல்லாவார்த்தையோ, 'ஸூநா்ருநாநுஷ்ஸூதத:' என்றும் 'ஸு்ாெயஞதிமோஹந:' என்றும் சொல்லாநின்றதே என்ன, [பொய்யேகைம்மைசொல்லி] - நல்லவார்த்தையிறே நாமும் மெய்யாகப்பெற்றோமாகில் பொய்யென்றும், கைம்மையென்றும் - பர்யாயம்; இரட்டிப்பால் - மிகுதியாய், பெரும்பொய் என்கை. அதாகிறது - அகவாய் அறியாதாரைப் பகட்டுகை யன்றிக்கே, ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனானவனும் "மெய்" என்றிருக்கும்படி சொல்லுகை. அகவாயில் நினைவொழியச் சொல்லக்கூடாதென்றிருக்குமிறே அவன். [புறமே புறமேயாடி] - பொய்யும் மெய்யுமாய்த் தான் கலந்துசொன்னதோ? பாஹ்யவிஷயங்களிலே அவகாஹித்து, வீப்ஸையாலே-அவைதன்னிலும் ஒன்றிலே துவக்குண்டால், புறம்பு கால்வாங்கமாட்டாதிருக்கை. ஆடியென்று - அவற்றிலே நடையாடி யென்றுமாம். இதுதான்-ஜ்ஞாநம் பிறப்பதற்கு முன்புள்ள காலத்தைப் பற்றச்சொல்லுகிறாரதல், இவ்விஷயத்தில் தமக்குப்பிறந்த ப்ரேமம் "பெறுகிறபேற்றுக்குப் போராது" என்றிருக்கையாலே சொல்லுகிறாரதல். மயர்வறமதிநலமருளப்பெற்றபின்பு காலத்ரயவர்த்திகளும் கரதலாமலகவத் விஶதமாயிறே யிருப்பது. பரமபக்திபர்யந்தமாக உண்டானாலும். பேற்றைப் பார்த்தால், "முதலடியிட்டதில்லை" என்னும்படியாயிறே யிருப்பது. உம்முடையபடி இதுவாகில் பேறு இருந்தபடி யென்? என்ன-[மெய்யேபெற்றொழிந்தேன்]-பேற்றில் ஒருபுரையில்லை; என்னால் வருமதிறே புரையுள்ளது; அவனால் வருமது புரையில்லையென்கை. [பெற்றொழிந்தேன்] - பேற்றில் இனிச்செய்யலாவதில்லை. பேறு என்னளவன்றிக்கே, ஸம்ஸாரிகளுக்கும் நிழலாம்படியாகப் பெற்றேன். [விதிவாய்க்கின்று காப்பாரார்] - விதியென்று பகவத்க்ருபை. கர்மபாரதந்த்ரனுக்குக் கர்மம் அநுபவித்தல்லது நிற்கவொண்ணாதவோபாதி; அவனுக்கும், க்ருபாபாரதந்த்ரனகையாலே க்ருபைபண்ணியல்லது நிற்கவொண்ணாமையாலே, விதியென்கிறது. பகவத்க்ருபை கரைபுரளப் புக்கால் நிவாரகருண்டோ? காப்பதேது? என்னாதே காப்பாராரென்

*கிறது - பலபோக்தாவான இவனாலும், க்ருபாஜநகையான அவளாலும் ஒண்ணுதென்கை. ஸ்வ தந்த்ரனான அவனாலும் ஒண்ணாது, ஸ்வாதந்த்ர்யத்திலும் விஞ்சியிறே க்ருபை இருப்பது. இ றல் க்ருபையை விஞ்சக் குற்றஞ்செய்யவொண்ணாது. அவனால் ஸ்வாதந்த்ர்யத்தாலே குற்றங் ண்டு கைவிடவொண்ணாது. நிரங்குமமான ஸவாதந்த்ர்யத்தையுடைய நம்மால் தடுக்கத் தட்டே ன்? என்ன, [ஐயோ] - ஸ்வாதாந்த்ர்யத்தை நினைத்தோ? க்ருபையைவிஞ்சிக் கால்வாங்கிக்காண், )னி யென்கிறார். "ஐயோ" என்றது-ஹர்ஷத்தாலே. க்ருபையின்கீழ் குற்றங்காண ஜ்ஞாநமி லை; விட ஶக்தியில்லை. [கண்ணபிரான்]-ஓரிடைச்சிகையிலே கட்டுண்டதசையில் அந்த பந்தத் தத் தப்பவிரகறியாதே ஶக்தியுமின்றிக்கே யிருந்த நீயோ போகப்புகுகிறாய்! கண்ணபிரானெ ர்று ஸம்புத்தி. இனிப்போனால் அறையோவறை. அநுக்ரஹஶீலனான உனக்கு, "மெய்" எ ர்று பேரிடலாவதொரு பொய் என்பக்கலிலே உண்டானபின்பு போகலாமோ? மித்ரபாவம்பெ றல் "நத்யஜேயம்" என்னும் உனக்குப் போகலாமோ? ஸுக்ரீவ மஹாராஜரைப்போலே றை கூவுகிறார்.*

ஈடு.—முதற்பாட்டு. என்பக்கலுள்ளது அஹ்ருதயமான உக்தியாயிருக்க, இ தை ஸஹ்ருதயமாகக்கொண்டு விரும்பி, "இனி இதுக்கு அவ்வருகில்லை" என்னும்படியான பற் றைப் பண்ணித்தந்தா னேன்கிறார்.

[கையார்சக்கரத்து] - வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்கவேண்டும்படியான கை லே திருவாழியைத் தரித்தானாயிற்று. இதுதான் ஆபரணமுமாய் வினைத்தலையில் ஆயுதமுமாயிறே ருப் பது. ஒருகைக்குப் படையா யிருக்குமிறே. "கூராராழி வெண்சங்கேந்தி-வாராய்" என்று அநுச லர் க்கு ஆசைப்படுகைக்கு உடலாய், ப்ரதிபக்ஷத்தைத் துணிக்கைக்கும் உடலாயாயிற்று இருட் து. [கையார்சக்கரத் தென்கருமாணிக்கமே] - அத்தென்பது - சாரியைச்சொல். இப்படி - வ டை மெங்கும் கண்டுகொள்வது. [என்கருமாணிக்கமே] - கையுந்திருவாழியுமான அழகை அநுஸ தித் தால் அடைவே ஸ்ரீபாஞ்சஜந்யத்தை அநுஸந்திக்கவல்லரல்லரே, அநந்தரம் வடிவழகிலே ால் தாழ்ந்தார். படிகடந்து அவ்வருகு போமவரல்லரே. ஶ்ரமஹரமாய் நீலரத்நம்போலே பெருவி ய னான வடிவழகை எனக்கு முற்றூட்டாக்கினவனே. [என்று என்று] - இத்தை ஒருகால் சொ லித் தான் விட்டேனோ. பகவத்விஷயத்தி லுட்புக்கதெல்லாம் குற்றமாய்த் தோற்றுகிறதாயிற்று, " பா

---

*முதற்பாட்டு - **கையார்** இத்யாதி. அஹ்ருதயமான உக்தியென்றது - "பொய்யே கைம்மைசொ ல்" என்றத்தைப்பற்ற ஸஹ்ருதயமாக வென்றது - "பொய்யேகைம்மை" என்ற த்விருக்தியாலே - பெரும் ாய் யாய், ஸர்வேஶ்வரனும் மெய்யாகக் கொள்ளுகையாலே. பேற்றைப் பண்ணித்தந்தா னென்றது - "பொ ய் பெற்றொழிந்தேன்" என்கையாலே அர்த்தாத்ஸித்தம்.*

*"ஆர்-கை-சக்கரத்து" என்று அந்வயித்து அர்த்தம் - **வெறும்புறத்திலே** இத்யாதி. "ஆர் - கை" - அழகிய கை. ஆர் - அழகு. **வெறும் புறத்திலே** - ஒன்றுமில்லாதவிடத்திலே. ஆயுதமான திருவா க்கு ஆகர்ஷகத்வமுண்டோவென்ன - **இதுதான்** இத்யாதி. இப்போது "ஆர் - சக்கரம்" என்று அந்வயி து. படையென்று - ஆபரணத்துக்கும், ஸேனைக்கும், ஆயுதத்துக்கும் பேர். இது - சாடு; கை - ஹஸ்தமும், யுத்த ம். "உபயாகாரமுமுண்டு" என்னுமதுக்கு ப்ரமாணகதநமுகேந விவரணம் - **கூராராழி** இத்யாதி. கூர்மை க்க திருவாழியையும் வெளுத்த ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் ஏந்திவாராய் இத்யர்த்தः. துணிக்கை - சேதிக்கை. சாரி யச் சொல் - நிரர்த்தகமான ஶப்தம். திருவாழியாழ்வானை அநுஸந்தித்தவநந்தரம் ஸ்ரீபாஞ்சஜந்யத்தை அநுஸ யா தொழிவானென்? என்ன, **கையுந்திருவாழியும்** இத்யாதி. வல்லரல்லரோ என்றது "சக்கரத்தண்ணலே" என் ாத் தாழுமவராகையாலே யென்றபடி. வடிவழகிலே கால்தாழ்ந்தாரென்றது - திருவாழியில் ஸௌந்தர்யதா கம் கீழேபோக வீசுகையாலே யென்றபடி. சாடு - **படிகடந்து** இத்யாதி. படி - திருமேனியும், வாசற்படி ும். "என்கருமாணிக்கமே" என்றதுக்கு அர்த்தம் - **ஶ்ரமஹரமாய்** இத்யாதி. கருமையாலே - குளிர்த்தி யை லக்ஷித்து - **ஶ்ரமஹரமாய்** என்றது. **முற்றூட்டாக்கின** - பூர்ணபோஜநமாக்கின. அவனைப் பலகாலும் நு ஸந்திக்கிறது நல்லதன்றோ? என்ன - **பகவத்விஷயத்தில்** இத்யாதி. போராதென்று-ப்ரேமம் போராதெ று.*

ராது'' என்றிருக்கையாலே. இது போல்லாதா யிருந்ததில்லையீ ! என்ன ; - அழகிதிறே, பாவபந்தத் தோடே சொன்னேனாகில்; [பொய்யேகைம்மைசொல்லி] - பொய்யென்றும், கைம்மையென்றும், இரண்டும் - பர்யாயமான சொல். இத்தால் சொல்லிற்றாயிற்று - பிறரைப்பகட்டுகையன்றிக்கே ஸர்வஜ்ஞனும் '' இதுமெய் '' என்றுப்ரமிக்கும்படி பெரும்பொய்யையன்றோ சொல்லிற்றென்கை. பொய்யும் மெய்யுமாகக் கலந்தத்தையே தான் சொல்லப்பெற்றதோ ? [புறமேபுறமேயாடி] - இப்போது, புறமென்கிறது - ஶப்தாதிவிஷயங்களை. '' பகவத்விஷயத்தில் அவகாஹித்தது போராது '' என்று இத்தை '' பொய் '' என்று நிற்கச்செய்தேயும், ஶப்தாதிகள் புறம்பாய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கு; '' பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ '' என்னுமவரிறே. ஜாதி வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலேயாயிற்று விஷயங்கள்தோறும் தனித்தனியே கால்தாழ்ந்தபடி. இதுதான் எப்போதை நிலையைப்பற்றச் சொல்லுகிறு ரென்னில் ; - காலத்ரயத்திலு முள்ளதும் ஸமகாலத்திற்போலே தோற்றுகையாலே, பூர்வவ்ருத்தத்தைப்பற்றச் சொல்லுகிறு ரென்னவுமாம். மயர்வறமதிநலம் பெற்றபின்பும் தமக்கு விஷயாநுரூபமாகப் போராமையாலே சொல்லுகிறாராகவுமாம். 'இதுவாகில் உம்முடையநிலை பேறிருந்தபடியென்'. என்ன [மெய்யே]-என்பக்கலுள்ளது பொய்யேயானாற்போலே, அவனடியாக வந்ததாகையாலே மெய்யேயாயிருக்குமிறே. பேற்றில் கண்ணழிவு சொல்லலாவதில்லை. [பெற்றொழிந்தேன்] - பரமபதத்தேறப்போனாலும் இப்பேற்றை அசையிட்டிருக்குமத்தனை. இனி இதிற்காட்டில் ஏற்றம் செய்யலாவதில்லை. '' ஹேதுவில்லை '' என்று நின்றீர், பேறு கனத்திருந்தது ; இதுக்கு அடியென் பின்னை? என்ன. - [விதிவாய்க்கின்று]-பகவத்க்ருபை கரைபுரளப் பெருகாநின்றால் நம்மாற்செய்யலாவதுண்டோ? விதியென்கிறது - பகவத்க்ருபையை. கேசவன்தமர்க்கு இப்பாலெல்லாம் இவர், விதியென்கிறது - பகவத்க்ருபையை. அதுக்கடி - அவனால் தப்பவொண்ணாதபடி யிருக்கையாலே. [வாய்க்கின்று] - பகவத்க்ருபை ஈஶ்வரஸ்வாதந்த்ர்யமாகிற கரைபுரளப்பெருகிவந்து கிட்டாநின்றுள்ளவிடத்தில். [காப்பாரார்] - இதுக்கு நிவாரகரானாருண்டோ? காப்பதேது? என்னாதே, ஆரென்கிறது இரண்டுசேதநராலே காக்கப்போமோ ? பரதந்த்ரனை இவனாலும் தகையவொண்ணாது. ஸ்வதந்த்ரனை அவனாலும் தகையவொண்ணாது;

---

*பகட்டுகை - வஞ்சிக்கை. ''பொய்யே'' என்கிற அவதாரணார்த்தம் - பொய்யும்மெய்யும் இத்யாதி. ''பகவத்விஷயாவகாஹநம்போராது'' என்று ஸ்வதோஷாநுஸந்தாநம் பண்ணாநிற்க, ''புறமேபுறமே'' என்பானென் ? என்ன - பகவத்விஷயத்தில் இத்யாதி. '' இவர்க்கு '' என்றதின் கருத்தை அருளிச்செய்கிறார் - பாவியேனை இத்யாதி. இதுக்கடி - இவர் ப்ரக்ருதியென்று கருத்து. பாவியான என்னை, அல்பஸாரமான பல விஷயங்களையுங்காட்டி நீ முடிக்க நினைக்கிறாயோ? இத்யர்த்தः. '' புறமேபுறமே '' என்கிற அவதாரணங்களோடேகூட வீப்ஸைக்கு அர்த்தம் - ஜாதி இத்யாதி. இதுதான் இப்போது இல்லையே யென்னுமத்தை ஶங்கித்து, இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - இதுதான் இத்யாதி. போராமையாலே - ப்ரேமம்போராமையாலே. இத்தால் - வாஸ்தவம் அன்றென்றபடி. ''மெய்யே'' என்ற அவதாரணார்த்தம் - என்பக்கல் இத்யாதி பலிதம். பேற்றில் இத்யாதி. பூதநிர்த்தேசமாக - '' பெற்றொழிந்தேன் '' என்பானென்? பரமபதாதிகள் வேண்டாவோ ? என்ன - பரமபதத்து இத்யாதி. ஹேதுவில்லையென்றது - ''பொய்யேகைம்மைசொல்லி'' என்கையாலே. வாய்க்கின்று-கிட்டுமிடத்தில். இப்பாலெல்லாம் என்றது - ''என்றுமொன்றாகி'' என்கிறபாட்டைப்பற்ற. பகவத்க்ருபையை- ''விதி'' என்கைக்கு ஹேதுவேது? என்ன - அதுக்கடி இத்யாதி. '' காப்பாரார் '' என்றதுக்கு அர்த்தத்வயம், கர்மவிஶிஷ்டனையும் ஸ்வாதந்த்ர்யவிஶிஷ்டனையுமிருக்கிற சேதநேஶ்வரர்களாலே தகையப்போகாதென்று - முந்தினது; இரண்டாவது - அதுக்கு க்ருஷிபண்ணினவர்கள் இத்தைக்காப்பரோவென்று; சேதநவந்நிர்த்தேசத்துக்கு பாவம் - காப்பதேது இத்யாதி. கர்மம் ப்ரதிபந்தகமாகையாலே - காப்பதேது என்னாதே என்றபடி. ''இரண்டு சேதநர்'' என்றதின் விவரணம் - பரதந்த்ரனை இத்யாதி. பரதந்த்ரனை - கர்மபரதந்த்ரனை, ஸ்வதந்த்ரனை- '' கர்மாநுகுணமாகவே நிர்வஹிக்கக்கடவேன் '' என்னும் ஸ்வதந்த்ரனை என்றபடி. பூர்வவாக்யவிவரணம் -*

பல போக்தாவான இவனுலும் தகையவோண்ணுது. பலப்ரதாதாவான அவனுலும் தகையவோண்ணுது. [காப்பாரார்] - க்ருபாஜநகையான அவள் காக்கவோ? க்ருபா பரதந்த்ரனை நீ காக்கவோ? க்ருபாபாத்ரமான நான் காக்கவோ? "மித்ரபாவேந" (மித்ரபாவேந) என்கிற ஶ்லோகத்திலே, எம்பார், "ஸர்வஜ்ஞனுக்கு ஒரு அஜ்ஞாநமும் விஸ்ம்ருதியும், ஸர்வஶக்திக்கு ஒரு அஶக்தியு முண்டு" என்று அருளிச்செய்வர். ஒருவன் தன்னையாஶ்ரயித்தால், முன்பு புத்தி பூர்வம் பண்ணின குற்றத்திலே விஸ்ம்ருதிபண்ணி, ஜ்ஞாநம்பிறந்தால் ப்ராமாதிகமாய் வருமதிற்றில் அஜ்ஞாநம், அவனைவிடவேண்டிவருமளவிலே அஶக்தி; இப்படி இருக்கைக்கு அடி - ஸ்வாபாவிகமான குடல்தொடக்கு. "ஆர்" என்பானேன்? ஸ்வதந்த்ரனை என்றால் தகையத்தட்டேன்? என்ன- [ஐயோ] - ஆமாகில் செய்துபார்த்துக்காணாய். ஐயோ வேன்கிறது - ஹர்ஷாதிஶயத்தாலே சொல்லுகிற பாசுரம். [கண்ணபிரான்] - உபகாரசீலனை க்ருஷ்ணனே! ஒருதாயுடைய மெய்க்குப் போகமாட்டாத நீயோ என்னுடைய பொய்க்குப் போகப்புகுகிறாய், ஓரிடைச்சிகையிலே கட்டுண்ட தசையிலே அந்த பந்தத்தைத் தப்ப விரகறியாதே ஶக்தியுமின்றிக்கே யிருந்த நீயோ போகப்புகுகிறாய்? (ஆர்ஜவமானகட்டவிழ்க்கமாட்டாதவன் க்ருத்ரிமமான பந்தத்தை அவிழ்க்கமாட்டானேன் படி.) [அறையோவினிப்போனாலே] - இனிப்போனாயாகில் அறையோவறை. என்பக்கலிலே, "மெய்"

---

ப்ர:—(காப்பாரார்)—[illegible] (கஅ) [illegible] "[illegible] விவக்ஷா[illegible] விஷ்ணு । [illegible]

[illegible] ॥உ॥ மித்ரபாவேந ஸம்ப்ராப்தம் நத்யஜேயம் கதஞ்சந। தோஷா யத்யபி தஸ்ய ஸ்யாத் ஸதாமேதத் அகர்ஹிதம் ॥க॥"

பலபோக்தா இத்யாதி. ஆக, இத்தால்-அவனுடைய க்ருபையை அண்டைகொண்டு சொல்லிற்று. அதிக்கே இதுக்கு க்ருஷி பண்ணினவர்கள் தகைவர்களோ? என்று தாத்பர்யம் - க்ருபாஜநகையான இத்யாதி. "ந கஶ்சிந்நாபராத்யதி" என்று - க்ருபா ஜநகையான அவள் காக்கவோ? "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்" என்று - க்ருபாபரதந்த்ரனை நீ காக்கவோ "க்ஷாம்யதாமயமஞ்ஜலி:" என்று - க்ருபாபாத்ரமான நான் காக்கவோ? என்றபடி. இப்போது க்ருபாபரதந்த்ரனா யிருந்தானேயாகிலும், ஸர்வஜ்ஞன் ஸர்வஶக்தியன்றோ; அபராதாநுகுணமாகத் தத்கார்யமும் ஒருகால் பிறவாதோ? என்ன-மித்ரபாவேந இத்யாதி. "தோஷோயத்யபி" என்கையாலே - அஜ்ஞாநமும் விஸ்ம்ருதியும். "கதஞ்சந நத்யஜேயம்" என்கையாலே - அஶக்தியும். "தோஷோயத்யபி" என்றதுக்கு அர்த்தம் - ஒருவன்தன்னை இத்யாதி. ஆஶ்ரயித்தால் - அஹ்ருதயமாக ஆஶ்ரயித்தால் என்றபடி. "தோஷோயத்யபி" என்றதுக்கு பாவம் - விஸ்ம்ருதியும் அஜ்ஞாநமுமாக்கி, அஜ்ஞாநத்துக்குத் தாத்பர்யம்-ஜ்ஞாநம்பிறந்தால் இத்யாதி. "நத்யஜேயம்" என்றதுக்கு பாவம் - அவனைவிடவேண்டி இத்யாதி. இப்படியிருக்கைக்கடி இத்யாதி - இப்படி அர்த்தங்கொள்ளுகிறது, இப்படி யிருக்கைக்கடி ஸ்வாபாவிகமான குடற்றொடக்கென்கையாலே என்றபடி. இத்தால் - ஸ்வாபாவிகமான நாராயணத்வ ப்ரயுக்தமான ஸம்பந்தம் உண்டாகையாலே, ஸர்வஜ்ஞத்வாதிநிபந்தநமான தோஷதர்ஶநாதிகள் ஆஶ்ரிதவிஷயத்தில் ஈஶ்வரனுக்குக் கூடாதென்றதாயிற்று. "ஐயோ" என்கிற இது - விஷாதத்திலேயன்றோ? என்ன - ஐயோவேன்கிறது இத்யாதி. "கண்ணபிரான்" என்றதுக்கு பாவம் - ஒருதாயுடைய இத்யாதி; ஒருதாயுடையமெய் இத்யாதிவாக்யம் - ஸந்திக்தம். ஆனாலும், ஒருதாயினுடைய ப்ரக்ருதி ஸம்பந்தமடியான ஸ்நேஹத்துக்கு விட்டுப்போகாதநீயோ என் அஹ்ருதயோக்திக்கு விட்டுப்போகப்புகுகிறாயென்றபடி. தாயுடைய மெய்யாவது - "யதிஸ்நேஹோஸ்தி" முதலானது. ஆர்ஜவமான - ருஜுவான. "இனி" என்றதுக்கு பாவம் - என்பக்கலிலே இத்யாதி. மெய்யென்று பேரிடலாவதென்றது - ஈஶ்வரன்நினைவாலே யென்றபடி.

என்று பேரிடலாவதொரு போய்பெற்றபின்பு போனாயாகில் அறையோவறை. பகவத்க்ருபையை அண்டைகொண்டு ஈச்வரஸ்வாதந்த்ர்யத்தை அறைகூவுகிறார். கண்ணபிரானென்று ஸம்புத்தியாகவுமாம்; அன்றிக்கே, பரோக்ஷநிர்த்தேசமாய், கண்ணபிரானானவன் இனிப்போனானாகில் அறையோவறை யென்னுதல். (க)

---

# இரண்டாம்பாட்டு.

---

போனாய்மாமருதின்நடுவே என்பொல்லாமணியே
தேனேயின்னமுதே என்றென்றேசிலகூத்துச்சொல்லத்
தானேலெம்பெருமான் அவனென்னாகியொழிந்தான்
வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே.

*ஆ.—(போனாய்.) தன்திறத்திலே ப்ரேமகந்தரஹிதனா யிருந்துவைத்து, நிரதிசயப்ரேமயுக்தர் சொல்லும் பாசுரங்களை நான் சொல்ல, ஸர்வேச்வரனான தான், அத்யந்த நிஹீநதரனான என்னுள்ளே ஸபரிகரமாக வந்து புகுந்தருளினா னென்கிறார்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், தன்பக்கல் ஸ்நேஹஹீநனாயிருந்து வைத்து அஸ்த்தாநே பயசங்கிகள் சொல்லும் சொல்லை நான் சொல்ல,ஸர்வேச்வரனான தான் ஸவிபூதிகனாய்க்கொண்டு என்னுள்ளே புகுந்தருளினா னென்கிறார்.*

*[பொல்லாமணியே] - பிறர் கண்ணெச்சில் படாமைக்குச் சொல்லுகிறது. துளையா மணி யென்றுமாம். கூத்து - பொய்.*

*ப.—அநந்தரம், அஹ்ருதயமான ப்ரேமோக்தியே பற்றாசாக ஸவிபூதிகனான ஸர்வேச்வரன் என்பக்கலிலே அபிநிவிஷ்டனானா னென்கிறார்.*

*மா - மஹாகாயங்களாய் அஸுராவிஷ்டங்களாய்க்கொண்டு நலிகைக்குத் தன்னில்தான் செறிந்த, மருதின் - மருதுகளின், நடுவே - நடுவே, போனாய் - போனவனே! (அவற்றை நிரஸித்து அவ்வருகுபட்டபோதை ஔஜ்ஜ்வல்யத்தாலே), பொல்லா-தொளையாத, என்மணியே-(ரத்நம்போலே அவிகலதேஜஸ்ஸை யுடையையாய்க்கொண்டு), எனக்கு தர்சநீயனானவனே! தேனே - தேன்போலே ரஸிப்பிக்கும் வடிவில் ஸௌகுமார்யத்தை யுடையவனே! இன்அமுதே-(விரோதிபலத்தை நினைத்து ஸத்தை யழிந்த என்னை) உஜ்ஜீவிப்பிக்கும் அம்ருதமானவனே! என்றென்றே - என்றென்று தனித்தனியே, சில - (பாரமார்த்திக ப்ரேமத்தாலே) சொல்லுவன சில, கூற்று - பாசுரத்தை, சொல்ல - பாவித்துப் பலகாலுஞ் சொல்ல, எம் - எனக்கு, பெருமான் - ஸ்வாமியான, அவன் - அவன், தானேல் - தான் செய்தபடியாகில், என் - என் அபிமாநத்துக்குள்ளே, ஆகியொழிந்தான் - ஆம்படியாய் விட்டான்; வான் - ஆகாசம், மாநிலம் - பூமிமுதலான பூதபஞ்சகங்களும் தத்கார்யமான லீலாவிபூதியும், மற்றும் - அபரிச்சிந்ந மாஹாத்ம்யத்தை*

---

*அறையோவென்றது - ஜயித்தவன்சொல்லும் வார்த்தை. இந்த சப்தம் - நிஷேதவாசி. ஸ்வதந்த்ரனானவனை இப்படி நிஷேதிப்பது எத்தைக்கொண்டு என்ன, பகவத்க்ருபையை இத்யாதி. பரோக்ஷநிர்த்தேசமாவது - முன்னிலையன்றிக்கே சொல்லுகை. நான் உன்னை ஜயித்தேனென்று-"அறையோவறை" என்று அறைகூறுகிறாரென்றபடி. கையார்சக்கரத்து என் கருமாணிக்கமே - கண்ணபிரானே - என்றென்று பொய்யே என்று தொடங்கி, காப்பாரார், இனிப்போனால் - ஐயோ - அறையோ என்று அந்வயம்.* (க)

யுடைய நித்யவிபூதியும், முற்றும் - எல்லாம், என் - எனக்கு, உள்ளன - உள்ளே யிருந்து நடத்தும்படி யாயிற்று.

இ.—இரண்டாம்பாட்டில், அஸ்த்தாநேபயஶங்கிகள் சொல்லும் வார்த்தையை நான் அஹ்ருதயமாகச்சொல்ல, ஸர்வஜ்ஞனான அவன் அத்தை மெய்யாகக்கொண்டு தன் விபூதியோடே நானிட்ட வழக்கானானென்கிறார்.

[போனாய்] - யமளார்ஜுநங்கள் நடுவே போனபோது யசோதைப்பிராட்டி ப்ரேமத்தாலே சொன்னவார்த்தையை, ப்ரேமகந்தமின்றிக்கே யிருக்கிற நான் சொன்னேன். [போனாய்]- கைகழிந்தது, இனி ப்ரதிக்ரியையில்லை. பலாநுபவமே யென்றிருக்கிறார். பூதகாலமாயிருக்க, இவர்க்கு வர்த்தமாந காலம்போலே இருக்கிறது; ஈஶ்வரன் கொடுத்த ஜ்ஞாநவைஶத்யம் இவர்க்கு வயிறெரித்தலுக்கு உறுப்பாயிற்று. நலியவந்தவைதானே நலியப்பற்றாமை, தானே சென்று புக்கானென்கிறார். [மாமருது] - மஹாஸுரர்கள் வடிவுக்குத் தகுதியாக ஆவிர்ப்பவித்த மருதுகள். இவன் மௌக்த்யத்தை யறிந்து பணைத்தவை யென்றுமாம். அவ்வருகே சாய்ந்தவை, இப்பெரிய வடிவோடே உள்ளே சாய்ந்தனவாகில் என்னாகக்கடவதென்கிறார். [நடுவே - போனாய்] - இருவரும் க்ருதஸங்கேதர்களாயிருக்க, ஒன்றிலே துளைகண்டு போனாற்போலேயாயிற்றுப் போயிற்று. புணர் மருதமிறே. மௌக்த்யத்தாலே ஓரருகு ஒதுங்க அறியானே. "யமளார்ஜுநயோர்மத்யே ஜகாம" என்று ருஷி வயிறுபிடிக்கிறான்; இவர் "மாமருதின் நடுவே - போனாய்" என்கிறார். [என் பொல்லாமணியே] - "தத: கடகடாஶப்தஸ்ரவணஸஞ்ஜாதத்ராஸா: க்ஷணாத்" - இவற்றைத் தப்பிப்போய், முறிந்து விழுகிற ஓசையைக்கேட்டு அபூர்வதர்ஶநத்தாலே சிவந்து மலர்ந்த கண்ணுந் தானுமாயிருக்கிறபடி. "புணர்மருதமிறநடந்தபொற்குன்றினை" என்னக்கடவதிறே. "அழகிது என்னில் - நாட்டில் அழகோபாதியாம்" என்று, வ்யாவ்ருத்திதோற்ற, [பொல்லாமணியே] என்னுதல்; பொல்லாவென்று - நாட்டார் கண்டு கண்ணெச்சிற்படாமைக்குக் கரிதாகிறானென்னுதல். "கண்ணெச்சிற் கரிதாகச்சொல்லியது" என்று வ்யாக்யாநம் பண்ணினான். துளையாமணி; அநுபபுக்தமாயிருக்கும் மணியென்றுமாம். பொல்லல் - துளைத்தல். இதுவும் யசோதைப்பிராட்டி ஸந்நிஹிதையாய்நின்று சொன்ன வார்த்தை. [தேனே] - வந்து எடுத்துக்கொண்டபோதை ஸ்பர்ஶத்தாலும் முக்தஜல்பிதத்தாலும் கொண்டாடிச் சொன்ன வார்த்தை. இன்னமுதே] - அப்போதை போக்யதையாலே சொன்ன வார்த்தை. நிரதிஶய போக்யமாய், போன உயிரை மீட்கவற்றாயிருக்கை. [என்றென்றே] - ஒருகால் சொல்லி அநுபவித்து மீண்டோடே. [கூத்து] - சிலருடைய செயலை வேறேசிலர் அநுகரிக்கை. ப்ரேமபரவஶையானவள் சொல்லக்கேட்ட வார்த்தையை அஹ்ருதயமாக நான்சொல்ல, [தானேல்இத்யாதி] - தானாகில், இதிலேயி லுள்ளதெல்லாம் அறியவல்ல ஸாமர்த்யத்தை யுடையனாயிருக்க, அஹ்ருதயமான உக்தியையும் ஸம்பந்தத்தையுங் கொண்டு நானிட்ட வழக்கானான். என்னையுடையவன் நானிட்டவழக்கானான். உடையவன் தன்னுடைமையான எனக்கு உடைமையானான்; அதிரோத்தரமாயிற்று. அவன் விபூதி செய்ததென்? என்னில், [வானேயித்யாதி] - "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" என்கிறபடியே, விபூதியும் நானிட்டவழக்காயிற்று. ஸவிபூதிகனாய்க்கொண்டு உள்ளே புகுந்தான். [வானே மாநிலமே] - பஞ்சபூதங்களுக்கும் உபலக்ஷணம். [மற்றும்] - அவற்றின் காரியமான அண்டங்களும். [முற்றும்] - நித்யவிபூதியும். [என்னுள்ளனவே] - நித்யஸூரிகள் செல்லாமை பார்த்து அங்கேயிராதே, லீலாவிபூதி அழிந்தபடி பார்த்து இங்கேபுகுந்தான். உபயவிபூதியிலுமுள்ள நிர்வாஹம் என்பக்கலிலே இருந்து பண்ணுமத்தனையாய்விட்டது.

ஈடு.—அஸ்த்தாநேபயஶங்கிகள் சொல்லும் வார்த்தையை நான் அஹ்ருதயமாகச் சொல்ல, ஸர்வஜ்ஞனானவன் அத்தை மெய்யாகக் கொண்டு தன்விபூதியோடேகூட நானிட்ட வழக்காளனென்கிறார்.

[போனாய்மாமருதின்நடுவே] - அப்போது கண்டுநின்ற யசோதைப் பிராட்டியானவள், யமளார்ஜுநங்களின் நடுவே அவன்போனபடியைக்கண்டு பாவபந்தம் தோற்றச் சொன்ன பாசுரத்தை அதில்லாத நான் சொன்னேன். 'பூதகாலத்திலே' என்று தோற்றுகிறதில்லையாயிற்று இவர்க்கு ஜ்ஞாநவைஶத்யத்தாலே. ஸர்வேஶ்வரன் பண்ணிக்கொடுத்த ஜ்ஞாநவைஶத்யம் வயிறெரிகைக்கு உடலாய்விட்டதித்தனை. [மாமருதின் நடுவே] - பெரிய வடிவுகளையுடைய அஸுரர்களிறே அவையாய் நிற்கிறார்கள். இவனுடைய மௌக்த்யத்தை யறிந்து, பெருத்துத் தடித்து தர்ஶநீயமான வேஷத்தோடேயாயிற்று இருவரும் க்ருதஸங்கேதராய் ஒருவிவரமற நின்றபடி. ஒன்றிலே வெளிக்கண்டு போனாற்போலே யாயிற்றுப் போனபடி. "யமளார்ஜுநயோர்மத்யே ஜகாம" (யமளார்ஜுநயோர்மத்யே ஜகாம) என்ற ஆபத்தையாயிற்றுச் சொல்லுகிறது. [என்பொல்லாமணியே] - "தத: கடகடாஶப்தஸமாகர்ணநதத்பர: ஜகாமகமலேக்ஷண:" (தத: கடகடாஶப்தஸமாகர்ணநதத்பர:-ஜகாமகமலேக்ஷண:) என்கிறபடியே, இவற்றைத் தப்பிப்போய், முறிந்துவிழுகிற ஓசைகேட்டு அபூர்வதர்ஶநத்தாலே சிவந்து மலர்ந்த கண்ணும் தானுமா யிருக்கிறபடி. "புணர்மருதமிறநடந்த பொற்குன்றினை" என்னக்கடவதிறே. அழகிது என்னில்-நாட்டில் அழகோபாதியாமென்று, வ்யாவ்ருத்தி தோற்ற-பொல்லாமணியே யென்கிறாராதல்; நாட்டார்கண்டு கண்ணெச்சில் படாமைக்குக் கரிபூசுகிறா ரென்னுதல். பொல்லல்-தொளைத்தல். பொல்லாமணி-

*இரண்டாம்பாட்டு - போனாய் இத்யாதி. தமக்கு ஈஶ்வரவிஷயத்தில் ப்ரேமம் போராமையாலே, பயஸ்த்தாநே பயஶங்கைபண்ணின யசோதைப்பிராட்டியை - **அஸ்தாநேபயஶங்கிகள்** என்கிறாரென்று தாத்பர்யம். "அஸ்தாநேபயஶங்கைபண்ணுவர்கள்" என்றதுக்கு ப்ரமாணம் - "ஶங்கே பக்ஷ்யஹ்ருதாம் ... ஸ்ரீஶாரக்ஷாவியாநாய ஶக்ராஜா ... ஜா ... த॥" "உறகலுறகல்" இத்யாதி. அஹ்ருதயமாகச் சொல்ல என்றது - "சிலகூத்துச்சொல்ல" என்றத்தைப்பற்ற. ஸர்வஜ்ஞனானவன் என்றது - "தானேயெம்பெருமான்" என்றத்தைப்பற்ற. விபூதியோடே என்றது - "வானேமாநிலமே" இத்யாதியைப் பற்ற. நானிட்ட வழக்காளன் என்றது - "என்னகி" என்றத்தைப்பற்ற. நானிட்டவழக்காளன் - என் அதீநமானவன்.*

*அப்போது - மருதின் நடுவே போனபோது. சொன்னபாசுரம் - "போனாய்" இத்யாதி. அதில்லாத நான் சொன்னேன் என்றது - "சிலகூத்துச்சொல்ல" என்றத்தைப்பற்ற. யசோதைப்பிராட்டி ஸந்நிஹிதையாய்க் கண்டவளாகையாலே "போனாய்" என்னலாம், காலவ்யவதாநத்தாலே அஸந்நிஹிதரான இவர் "போனாய்" என்று அவள் சொல்லும் வார்த்தையைச் சொல்லக்கூடுமோ? என்ன - **பூதகாலத்திலே** இத்யாதி. அப்படி விஶதமானால் அநுபவிக்கலாகாதோ வென்ன - **ஸர்வேஶ்வரன்** இத்யாதி. இத்தால் - ஜ்ஞாநவைஶத்யத்தாலே ஸமகாலம் போலே தோற்றிவயிறெரிகைக்கு உடலான ஆகாரம் தமக்குஉண்டாயிருக்கவும்,ஸ்வகைச்யத்தாலே தமக்கு ப்ரேமமில்லையாக அருளிச்செய்கிறாரென்று கருத்து. வயிறெரிகை - க்லேஶிக்கை. "போனாய்" என்று - வயிறெரிகைக்கு, அது பயஹேதுவாவான் என்? என்ன - **பெரியவடிவு** இத்யாதி. அஸுரர்கள் மருதுகளாய் நிற்கிறது எதுக்கென்ன - **இவனுடைய** இத்யாதி. அதாவது - "இவன்மேல்விழுவன்" என்னுமத்தாலே என்றபடி. பெருத்து, தடித்து - உயர்ந்து, ஸ்தூலித்து. "மருது" என்கிற ஏகவசந தாத்பர்யம் - **ஒன்றிலே** இத்யாதி. நடுவேபோகை பயஹேதுவோ? என்ன - **யமளா** இத்யாதி. "வ்ருக்ஷயோர் தயோர்மத்யே ஸகஷ்டேநோ ... யமளார்ஜுநயோர்மத்யே ஜகாமகமலேக்ஷண:" நடுவே ஒருஶ்லோகம்விட்டு மேலே 'தத: கடகடாஶப்தஸமாகர்ணநதத்பர: । ... ஜகாம ...॥' இதி பஞ்சமேம்ஶே ஷஷ்ட்டே. **என்பொல்லாமணியே** - எனக்கு லோகவிலக்ஷணமாய் தர்ஶநீயமா யிருக்கிற*

தோளையாமணி; அநுபபுக்தமாயிருக்கும் மணி யென்றுமாம். இதுவும் - யசோதைப்பிராட்டி ஸந்நி ஹிதையாய்நின்று சொன்ன வார்த்தை. [தேனே] - வந்து எடுத்துக்கொண்டபோதை ஸ்ட ஸ்த் தாலும் முக்தஜல்பத்தாலும், கொண்டாடிச் சொல்லுகிற வார்த்தை. [இன்அமுதே] - அப்பே ாதை யில் போக்யதையாலே சொன்ன வார்த்தை. நிரதிசயபோக்யமாய், போனஉயிரை மீட்க ற்று யிருக்கை. " அமுதென்றும் தேனென்றும் ஆழியானென்றும் " என்று சொல்லுகிறபடியே நி பதிக போக்யமாயிருக்கை. [என்றென்றே] - ஒருகால் சொல்லி " தப்பச்செய்தோம் " என்று ளத் தான்பெற்றதோ. [சிலகூத்துச்சொல்ல] - ஒருவன் நினைவையும் செயலையும் வேறொருவன் சய்யு மது - கூத்தாவது. பரிவுடைய யசோதைப்பிராட்டி இவற்றிலே ஈடுபட்டுச்சொல்லும் பாசுரத் தைக் கிடீர் அதில்லாத நான் சொல்லிற்று. [தானேஎம்பெருமான்] - தானாகில், ஸர்வஜ்ஞனாய் ஸர்வ நியந்தாவா யிருப்பானொருவன். அகவாயறியாதானொருவனல்லன், அறிந்தால் உபேக்ஷிக் மாட் டாதா னொருவனல்லன். [அவன்] - அப்படி ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியானவன். [எ ஞகி யொழிந்தான்] - நானிட்டவழக்கானான். என்னையுடையவன் நானிட்ட வழக்கானான். டை யவன்தான் உடைமையானான், அதரோத்தரமாயிற்று. அவன் விபூதி செய்ததேன் ? என்ன ல்,— " யஸ்யைதே தஸ்ய தத்தநம் " (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்கிறபடியே விபூதி யையும் நானிட்ட வழக்காக்கினான். ஸவிபூதிகனாய்க்கொண்டு என்னுள்ளே புகுந்தான் ; [வா னமா

---

வனே! பொல்லாமைக்கு - வைலக்ஷண்யமும், ஆரோபிதமான மாலிந்யமும், தோளையாமையுமாக மூன் அர்த் தம். அப்போது தர்ஶநீயதை ஏதென்ன, தத இத்யாதி. " ஸோகண்டநிதம்ப: " என்றது - 'க்ஷூஜ மாஜவ ஜஜந:" என்று வ்ரஜஜநத்துக்கு விஶேஷணமானாலும், ஶப்தஶ்ரவண கௌதூஹலம் இவ னுக்கும் உண்டென்று கருத்து. அப்போதையில் ஸ்ப்ருஹணீயதைக்கு ப்ரமாணாந்தரம் - புணர்மருதம் இத்யாதி தன் னிலே பொருந்தி நிற்கிற மருதுகள் முறிந்துவிழும்படிநடந்து, பொற்குன்றுபோலே ஸ்ப்ருஹணீயனா னவனை யித்யர்த்தः. திருமொழி-இரண்டாம்பத்து - அஞ்சாந்திருமொழி - முதற்பாட்டு, " பாராயதுண்டு " இத்யாதி. கண்ணேச்சில் - த்ருஷ்டி. ஸ்பர்ஶத்தாலுமென்றது - "மணியே" என்றதுக்கு - ஶ்ரமஹரதையை அர்த்தாந் தரதயா விவக்ஷித்து. அப்போதையில் போக்யதையாவது - அவன் வடிவை அநுபவிக்கிறபோதையில் போக் யதை யென்றபடி. " தேனே, அமுதே " என்றதுக்கு பாவம் - நிரதிசய இத்யாதி. " இன்னமுதே ' என்ற துக்கு பாவம் - போனவுயிரை இத்யாதி. ஸப்ரமாணகமாக விவரணம் - அமுதென்றும் இத்யாதி. நித்ய போக்ய மான அம்ருதமென்றும், ஸர்வரஸஸமவாயமான தேனென்றும், நிரதிஶயபோக்யமான திருவாழியை உடையவ னென்றும் இத்யர்த்தः. இரண்டாந்திருவந்தாதி-எண்பத்தஞ்சாம்பாட்டு. " கூத்து " என்றதுக்கு ஹ்ருதயம் - ஒருவன் இத்யாதி. நினைவையும் செயலையும் என்றது - சொலவுக்கும் உபலக்ஷணம். இவற்றிலே - பயனார் ஜந்மமத்ய ப்ரவேசாதிகளிலே. தானாகிலென்றது - தானாளுமென்றபடி. ஸர்வஜ்ஞத்வ ஸர்வநியந்த்ரு வங்கள் ஸர்வஸ்வாமியானவனுக்கே யுள்ளதொன்றாகையாலே, ஸ்வாமிவாசியான " எம்பெருமான் " என்ற ஶப்தத்துக்கு அர்த்தம் - ஸர்வஜ்ஞனாய் ஸர்வநியந்தாவாயென்கிறார். இந்த இரண்டுக்கும் ப்ரயோஜநம் - அகவாய் இத்யாதி. " அவனென்னாகியொழிந்தான் " என்று தொடங்கி மேலுக்கெல்லாம் நாலு தாத்பர்யம், அதாவது - நானிட்ட வழக்கானான் என்று தொடங்கி, விபூதியையும் நானிட்டவழக்காக்கினான் என்னுமளவும் ஒரு தாத்பர்யம், இரண்டாவது - ஸவிபூதிகனாய் என்று தொடங்கி, என்னுள்ளனவே என்னுமளவாக. மூன்றாவது உபய விபூதி என்று தொடங்கி. நாலாவது - அன்றிக்கே வானேயித்யாதி உபயவிபூத்யைஶ்வர்யமும் இத்யாதி. " வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே " என்றதுக்கு நாலர்த்தம். முந்தினது - ஸவிபூதிகனாய்க் கொண்டு எனக்குப் பரதந்த்ரனானான் என்றது ; அன்றிக்கே, ஸவிபூதிகனாய்க் கொண்டு என்னுள்ளே இருந்தா னென்னுதல்; அன்றிக்கே, உபயவிபூதி நிர்வாஹமும் என்பக்கலிலே இருந்துபண்ணுமென்னுதல் ; அன்றிக்கே, உபயவிபூதியிலும் பண்ணுகிற ஆதரத்தை என்னிடத்திலே பண்ணினா னென்னுதல். " எம்பெருமான் " என் றத்தைக்கூட்டி " அவன் " என்ற பதத்துக்கு அர்த்தம் - அப்படிஸர்வஜ்ஞனாய் இத்யாதி. " எம்பெருமான் " என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் - என்னையுடையவன் இத்யாதி. பலிதம் - உடையவன் இத்யாதி. ஸவிபூதி கனாய் - என்ற இரண்டாமர்த்தத்திலே, " என்னாகியொழிந்தான் " என்னுள்ளே புகுந்தான் ; " மற்றுமுற்று

நிலமே] - பஞ்சபூதங்களுக்கும் உபலக்ஷணம். [மற்றும் - தத்கார்யமான அண்டங்களும், முற்றும்] - நித்யவிபூதியும், [என்னுள்ளனவே] - உபயவிபூதி நிர்வாஹமும் என்பக்கலிலே யிருந்து பண்ணுமத்தனையாய்விட்டது. அன்றிக்கே, [வானேயித்யாதி] - உபயவிபூதி ஐஶ்வர்யமும் என் பக்கலிலேயாய்விட்டது என்றுமாம். விஷயப்ரவணனானவன், தானுகந்தவிஷயமே எல்லா ஐஶ்வர்யமாக நினைத்திருக்குமாபோலே. "உன்னாகமுற்று மகத்தடக்கி" என்கிறபடியே. (உ)

## மூன்றாம்பாட்டு.

உள்ளனமற்றுளவாப் புறமேசிலமாயஞ்சொல்லி
வள்ளல்மணிவண்ணனே யென்றென்றேயுன்னையும்வஞ்சிக்கும்
கள்ளமனந்தவிர்ந்தே யுன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்
வெள்ளத்தணைக்கிடந்தாய் இனியுன்னைவிட்டேன்கொள்வனே.

*ஆ.—(உள்ளன.) அந்தஃகரணம் ப்ராக்ருதவிஷய ப்ரவணமா யிருக்கச்செய்தே, ஸர்வஜ்ஞனை நீயுங்கூட "மெய்" என்றிருக்கும்படி, வள்ளல்மணிவண்ணனே என்றென்று புறமே சிலமாயஞ்சொல்லி வஞ்சிக்க, நான் இப்போது உன்னுடைய ப்ரஸாதத்தாலே அந்தக் கள்ளம்தவிர்ந்து அக்ருத்ரிமநிரவதிபக்தியுக்தனாய் உன்னைக் கண்டுகொண்டொழிந்தேன். வெள்ளத்தணைக்கிடந்தாய், இனி நான் ஆத்மாந்தமாக, உன்னையல்லது மற்றொரு ப்ராப்யம் வேண்டே*

*ஒ.—மூன்றாம்பாட்டில், ஹ்ருதயம் அந்யபரமாயிருக்க, வாங்மாத்ரத்தாலே உன்னைப் பெற்ற நான் உன்னையொழிய வேறொரு புருஷார்த்தத்தை ஆசைப்படே னென்கிறார்.*

*[உள்ளனவென்று தொடங்கி] - அந்தஃகரணம் ப்ராக்ருதவிஷய ப்ரவணமாயிருக்கச் செய்தே "பரமோதாரனே, நிரதிஶய போக்யமானவனே" என்றாற்போலே புறப்பூச்சாகச் சில பொய்களைச் சொல்லி ஸர்வஜ்ஞனை உன்னையும் வஞ்சிக்கும்படியான கள்ளமனம் தவிர்ந்து உன்னைக் காணப்பெற்று க்ருதார்த்தனானேன். [வெள்ளத்தணைக்கிடந்தாய்] - என்பக்கலுண்டான வ்யாமோஹத்தாலே அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு வந்து திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவனே !*

---

*மென்னுள்ளன" விபூதியும் என்னுள்ளே புகுந்தது என்றபடி. ஈழையுங்கூட்டி பாவம் - உபய நாலாமர்த்தத்துக்கு- "அந்தாமத்தன்புசெய்து" என்கிறபடியே, அவற்றிலுண்டான ஸ்நேஹத்தை என்பக்கலிலே பண்ணினா னென்றபடி. உபயவிபூத்யைஶ்வர்யமும் இவருடைய திருவுள்ளமேயாயிருக்கக்கூடுமோ? என்ன, விஷயப்ரவணன் இத்யாதி. "ஸாம்ஸ்தமும் இவரிடத்திலேயாக அவன் நினைத்திருக்கும்" என்கைக்கு நியாமக மேது? என்ன - உன்னாகமுற்றும் இத்யாதி. அதாவது - கோவைவாயாளிற்படியே கூடுமென்றபடி. உன்னாகமுற்றுமகத்தடக்கி - உன் திருமேனிக்கு வேண்டும் சாந்து, பூமாலை, பரிவட்டம், ஆபரணாதிகளெல்லாம் என்னுள்ளேயாம்படி பண்ணி இத்யர்த்தஃ. ஆகம் - உடம்பு. "த்வயவாயு மாஜொகொஹாய பூஜாவஸ ஹாயா வஸாதஃ । யதேவஸயிமவஷி யமெவோதெ தவ ஸநஜு ॥" இதி । யஜுஶ்ஶாஸ்த்ரே. மாமருதின்நடுவே-போனாய், என்பொல்லாமணியே தேனேதொடங்கி, சொல்ல-எம்பெருமான் அவன் தானேல் - என்னாகியொழிந்தான் இத்யாரப்ய அந்வயஃ (உ)*

ப.—அநந்தரம், ஸர்வஜ்ஞனை உன்னையும் வஞ்சிக்கும்நெஞ்சில் க்ருத்ரிமஸ்வபாவம் தீர்ந்து காணப்பெற்றேன்; இப்படி உபகாரகனை உன்னையொழிய அபாஶ்ரயமுண்டோ? என்கிறார்.

உள்ளன - அந்தர்க்கதங்கள், மற்று - உன்னையொழிந்த ப்ராக்ருத விஷயங்களாய், உளவா - நடக்க, புறமே - கண்டாதுபரியாம்படி புறம்பே, வள்ளல் - உதாரனானவனே! மணிவண்ணனே - விலக்ஷணவிக்ரஹயுக்தனே! என்றென்று - என்றுஎன்று பலகாலும், சில-சில, மாயம் - மித்யோக்திகளை, சொல்லி - பண்ணி, உன்னையும் - ஸர்வஜ்ஞனான உன்னையும், வஞ்சிக்கும்-விப்ரலம்பிக்கும்படி, கள்ளம்-க்ருத்ரிமஸ்வபாவமான, மனம்-நெஞ்சு, தவிர்ந்து-தவிர்ந்து, உன்னை-(ஆநுகூல்ய பாவனையே பற்றாசாக அங்கீகரிக்கும்) உன்னை, கண்டுகொண்டு - அபரோக்ஷித்து அநுபவிக்கப்பெற்று, உய்ந்தொழிந்தேன் - அஸத்கல்பனான நான் உஜ்ஜீவித்துவிட்டேன்; (இப்படி என்னைத்திருத்துகைக்காக), வெள்ளம் - க்ஷீரார்ணவத்திலே, அணைக் கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனே! இனி-உன்க்ருஷி பலித்தபின்பு, உன்னை - (நித்யாவஸரப்ரதீக்ஷனாய் நிரதிஶயபோக்யனான) உன்னை, விட்டு-விட்டு, என் - நஶ்வரமாய் துராராதமான எத்தை, கொள்வன்- கைக்கொள்ளுவேன்?

ஈ.—மூன்றாம்பாட்டில், "பொய்யேகைம்மைசொல்லி" என்றும், "சிலகூத்துச் சொல்ல" என்றும் சொன்ன வார்த்தையை விவரியாநின்றுகொண்டு இப்படி வாங்மாத்ரத்தாலே உன்னைப்பெற்ற நான் உன்னையொழிய வேறொன்றை ஆசைப்படேனென்கிறார்.

[உள்ளன] - உள்ளுள்ளன. [மற்றுளவா] - வேறே சிலவுளவாக. அந்தக்கரணம் ப்ராக்ருதவிஷய ப்ரவணமாயிருக்கை. [புறமேசிலமாயஞ்சொல்லி] - புறப்பூச்சாகச் சிலவார்த்தை களைச் சொல்லி, இத்தால் - "கூத்துச்சொல்ல" என்றத்தைச் சொல்லிற்று. கீழே, கூத் தென்கிறது - பிறருடைய வ்யாபாரத்தைத் தான் அநுகரிக்கும் அளவாயிற்று; இங்கு "[illegible]" என்கிறபடியே க்ருத்ரிமத்தைச் சொன்னேனென்கிறார். சொல்லு கிறவைதான் எவை? என்னில், [வள்ளலித்யாதி] - பரமோதாரனே! பெருவிலையனான நீலரத் நம்போலே ஶ்லாக்யமான வடிவை எனக்கு உபகரித்தவனே! [என்றென்றே] - அவை அத்ய சொல்லாநிற்கச்செய்தே, "ஸஹ்ருதயமாகச் சொல்லுகிறார்" என்று தோற்றும்படியாகப் பல காலும் சொல்லி. [உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனம்] - ஸர்வஜ்ஞனான நீயும் "மெய்" என்று ப்ரமிக்கும்படி பகட்டும் க்ருத்ரிமயுக்தமான மநஸ்ஸை. [தவிர்ந்தே] - அஹ்ருதயமாக இழி தாரையும் மேல் விழும்படி கொண்டு முழுகும் விஷயமிறே. [உன்னை] - மித்ரபாவமடியாக "நத்யஜேயம்" என்னும் உன்னை ப்ராப்தனாய் நிரதிஶய போக்யனான உன்னை. [கண்டுகொண்டு] நிதியெடுத்தாற்போலே லபித்து; [உய்ந்தொழிந்தேன்] - "ஸந்தமேநம்" என்னும்படியிருக்கி, நான் உஜ்ஜீவிக்கப்பெற்றேன் [வெள்ளத்தணைக் கிடந்தாய்] - பரமபதத்தைவிட்டு, க்ஷீராப்தி யிலே என்னுடைய ரக்ஷணார்த்தமாக அவஸர ப்ரதீக்ஷனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே [இனி] - ஸத்ருஶமான பரமபதத்தைவிட்டு, விஸத்ருஶமான ஸம்ஸாரத்திலே என்னுடைய ரக்ஷணத்திலே அவஸரப்ரதீக்ஷனானபின்பு. [உன்னைவிட்டு] - நான் விட்டவன்றும் என்னைவிட மாட்டாத உன்னையொழிய. [என்கொள்வனே] - பச்சைகொண்டு பலவேளையிலே நிஷ்ப்ரயோஜ மான விஷயங்களைப் பற்றவோ? ஆராதிக்குமிடத்தில் துராராதரைப் பற்றவோ?

ஈடு.—பொய்யேகைம்மைசொல்லி" என்றும், "சிலகூத்துச்சொல்ல" என்றும் சொன்னவார்த்தையை விவரியாநின்றுகொண்டு, இப்படி வாங்மாத்ரத்தாலே உன்னைப்பெற்ற நான் உன்னையொழிய வேறொன்றை ஆசைப்படே னென்கிறார்.

[உள்ளன] - ஹ்ருதயத்திலுள்ளன. [மற்றுளவா] - வேறேசிலஉளவாக. அந்தஃகரணம் ப்ராக்ருதவிஷய ப்ரவணமாயிருக்க. [புறமேசிலமாயம்சொல்லி] - புறப்பூச்சாகச் சில பொய்களைச் சொல்லி. இத்தாலே "கூத்துச்சொல்ல" என்றவிடத்தைச் சொல்லிற்று. [வள்ளல்மணிவண்ணனே] - பரமோதாரனே! பெருவிலையனான ரத்நம்போலே ஶ்லாக்யமான வடிவை எனக்கு உபகரித்தவனே! [என்றென்றே] - அபுத்த்யா சொல்லாநிற்கச்செய்தேயும் "ஸஹ்ருதயமாகச் சொல்லுகிறான்" என்று தோற்றும்படியாகப் பலகாலும் - சொல்லி. [உன்னையும் வஞ்சிக்கும் கள்ள மனம்] - உள்ளுவாருள்ளத்தெல்லாம் உடனிருந்து அறியும் ஸர்வஜ்ஞனாய் ஸர்வாந்தர்யாமியான நீயும் "மெய்" என்று கருதும்படி உன்னையும் பகட்டும் க்ருத்ரிமயுக்தமான மநஸ்ஸை. [தவிர்ந்தே]- அஹ்ருதயமாக இழிந்தாரையும், மேல்விழும்படி கொண்டு முழுகும் விஷயமிறே. [உன்னை] - * மித்ரபாவமேயடியாக "ந த்யஜேயம்" (நத்யஜேயம்) என்னும் உன்னை. ப்ராப்தனுமாய் போக்யனுமான உன்னை. *[கண்டுகொண்டு] - "ஒருபடி காணவல்லோமே!" என்ற நான், நிதியெடுத்தாற்போலே லபித்து. [உய்ந்தொழிந்தேன்] - "அஸந்நேவ" (அஸந்நேவ) என்னும் படி இருக்கிற நான் உஜ்ஜீவிக்கப்பெற்றேன். ஊர்த்வ்ருஷ்டாந்தரவ்யாப்தியிறே. இனி, நீர்செய்யப்பார்த்

---

ப்ர:—(கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்)—ஶாண்டில்ய(ந-கo) யோகவித்யாயாம் "அயுத்தஜ்ஞாநேந தத்த்வாயா உபஜீவந்தி ப்ராஹ்மணாஸ்ஸ்வேதநமேவைதே ஸந்திநவீ பஜ்ஞாதவேதநம் ஊர்த்வ்ருஷ்டாந்தரவ்யாப்தி॥"

---

மூன்றும்பாட்டு - உள்ளன இத்யாதி. வாங்மாத்ரத்தாலே யென்றது - "சிலமாயஞ்சொல்லி" என்றத்தைப்பற்ற. உன்னைப்பெற்றநான் என்றது - "உன்னைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்" என்றத்தைப்பற்ற. உன்னையொழிய வென்றது - "உன்னைவிட்டு" என்றத்தைப்பற்ற. வேறொன்றைஆசைப் படே னென்றது - "என்கொள்வன்" என்றத்தைப்பற்ற. பொய்யேகைம்மைசொல்லியென்றும் என்றது- "புறமேபுறமேயாடி" என்றத்தை விவக்ஷித்து. இத்தைவிவரிக்கிறது - "உள்ளனமற்றுளவா" என்று. ஆக, "புறமேபுறமேயாடி" என்றத்தை விவரிக்கிறது - "உள்ளனமற்றுளவா" என்றென்றபடி. "புறமேசில மாயஞ்சொல்லி" என்றது - "கூத்துச்சொல்ல" என்றத்தை விவரிக்கிறது.

உள்ளன - உள்ளேயிருக்கின்றனவென்று விவக்ஷித்து, ஹ்ருதயத்திலுள்ளன என்கிறார். தாத்பர்யம்- அந்தஃகரணம் இத்யாதி. புறப்பூச்சு - மேற்பூச்சு. கீழ்ச்சொன்னது எத்தை அநுவதிக்கிறதென்ன - இத்தாலே இத்யாதி. "வள்ளல்" என்றதுக்கு அர்த்தம் - பரமோதாரனே என்று. பதத்வயத்தையுங்கூட்டி பாவம் - பெருவிலையனான இத்யாதி. வீப்ஸைக்கு பாவம் - அபுத்த்யா இத்யாதி. "உன்னையும்" என்கிற அபிப்ராயத் துக்கு பாவம் - உள்ளுவார் இத்யாதி. அநுஸந்திப்பார் அநுஸந்திக்குமெல்லாவற்றையும் கூடவிருந்து, அறிதி - அறியாநிற்குமவனே இத்யர்த்தஃ. திருமாலை முப்பத்துநாலாம்பாட்டு, "உள்ளத்தேயுறையும்" இத்யாதி. பகட்டும்- வஞ்சிக்கும். அஹ்ருதயோக்திமாத்ரத்தாலே நெஞ்சில் க்ருத்ரிமத்தைத் தவிரக்கூடுமோவென்ன-அஹ்ருதயமாக இத்யாதி "வெள்ளத்தணைக்கிடந்தாய்-உன்னை" என்றுகூட்டி பாவம் - மித்ரபாவம் இத்யாதி. "உன்னை" என்றதுக்கு, "எம்பெருமான்" "மணிவண்ணன்" என்றத்தைக்கடாக்ஷித்து பாவார்த்தம் - ப்ராப்தனுமாய் இத்யாதி. "உள்ளனமற்றுளவா" என்று கீழேயிருக்க, ஒருபடிகாணவல்லோமே என்ற இது கூடும்படி யென்? என்ன;—"கள்ளமனந்தவிர்ந்தே" என்று - விஷயவைலக்ஷண்யம் ஈடுபடுத்தினபின்பு அப்படியிருக்கக் குறையில்லை யென்றபடி. ஒருபடியென்றது - சாடு. கண்டால் உஜ்ஜீவநமாய் இருக்குமோ? என்ன, ஊர்த்வ்ரு

ததுஎது ? என்ன,—[வெள்ளத்தணைக்கிடந்தாய்] - பரமபதத்தைவிட்டு க்ஷீராப்தியிலே இவ்வேளை யிலே, என்னுடைய ரக்ஷணார்த்தமாக அவஸரப்ரதீக்ஷனாய்க்கொண்டு கண்வளர்ந்தருளுகிறவனே [இனி]-உனக்கு ஸத்ருஶமான பரமபதத்தைவிட்டு, விஸத்ருஶமான ஸம்ஸாரத்திலே என்னுடைய ரக்ஷணார்த்தமாகக்கொண்டு கண்வளர்ந்தருளினபின்பு. [உன்னைவிட்டு] - நான்விட்ட அன்றும் என்னைவிடமாட்டாதே யிருக்கிற உன்னையொழிய. [என்கொள்வனே] - பச்சைகொண்டு, பல வேளையிலே நிஷ்பலங்களாயிருக்கும் விஷயங்களைப் பற்றவோ; ஆராதிக்குமிடத்தில் துராராதராய் வருந்தி ஆராதித்தாலும் கிடைப்பதொன் றில்லாதவர்களைப் பற்றவோ? (ந

---

## நான்காம்பாட்டு.

---

> என்கொள்வனுன்னைவிட்டென்னும் வாசகங்கள்சொல்லியும்
> வன்கள்வனேன்மனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து
> நின்கண்நெருங்கவைத்தே எனதாவியைநீக்ககில்லேன்
> என்கண்மலினமறுத்து என்னைக்கூவியருளாய்கண்ணனே !

*ஆ.—(என்கொள்வன்.)- த்வத்ப்ராப்த்யபேக்ஷை யுண்டாயிருக்கச்செய்தேயும், த்வ குணாநுஸந்தாநத்தாலே சிதிலமநஶ்சக்ஷுராதி ஸர்வகரணனாகையாலே, அவற்றை நிலைநிறுத்தி த்வதேகப்ரவணமாக்கிவைக்க நான் க்ஷமனாகிறிலேன். ஆனபின்பு, நீயே உன்னுடைய நிரவதி க்ருபையாலே என்னை இப்போது த்வதிதர ஸகலவிஷயவிமுக ஸர்வகரணனாய் த்வதேகதாரகனாய் த்வத்விஶ்லேஷாஸஹிஷ்ணுவாம்படி பண்ணி யருளினாய். இனி இந்த ப்ரதிபந்தகத்தையும் போக்கி உன் திருவடிகளிலே என்னை வாங்கியருளா யென்கிறார்.*

*ஒ.—நாலாம்பாட்டில், இதுக்கு முன்பெல்லாம் உன்பக்கல் இப்படி பொய்யனாயிற்று ப்ராக்ருதி ஸம்பந்தத்தாலே யானபின்பு, இந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கியருளவேணு மென்கிறார்.*

*[என்கொள்வ னுன்னைவிட்டென்கிறபாட்டுக்கு] - பரமைகாந்திகளைப்போலே உன்னைத்தவிர மற்றொன்றாலும் கார்யமில்லையென்று சொல்லாநின்றுவைத்தும் பகவதீயமான ஆத்மாவை அபஹரித்தவன் கள்வனாகையாலே விஷயங்களினின்றும் மநஸ்ஸை நிவர்த்திப்பித்து அத்தைப் பெருமையாலே ப்ரவ்ருத்தமான கண்ணநீரையும் மாற்றி மநஸ்ஸை உன்பக்கலிலே செறியும்படி பண்ணி என்னுடைய ப்ராக்ருதிஸம்பந்தத்தை அறுக்கமாட்டுகிறிலேன். ஆனபின்*

*இத்யாதி. வேலை யென்றது - காடு; அலையும், காலமும். "வெள்ளத்தணைக்கிடந்தாய்" என்றத்தைக்கூட்டி பாவம் - உனக்கு இத்யாதி. "வெள்ளத்தணைக்கிடந்தாய் - உன்னைவிட்டு" என்று கூட்டி பாவம் - நான்விட்ட வன்றும் இத்யாதி. "மணிவண்ணனே" என்றதுக்கு ப்ரதிகோடித்வேந பாவம் - பச்சைகொண்டு இத்யாதி. பச்சை - காணிக்கை. விஷயங்கள் - ஸ்த்ரீவிஷயங்கள். "வெள்ளத்தணைக்கிடந்தாய்" என்றதுக்கு ப்ரதி கோடித்வேந பாவாந்தரம் - ஆராதிக்கும் இத்யாதி. இந்த இரண்டாலும் பலித்தது - ப்ராப்யமும் ப்ராபகமும் நீயேயாயிருக்க ப்ராப்யாந்தரங்களையும் ப்ராபகாந்தரங்களையும் பற்றவோ? என்றபடி. துராராதர்-தேவதாந்தரங்கள். "நதெவெஷெவா ஶுமஂதி நவிவஷெ்யுதஷெவாஶ்ரதாஶ்ரவஷா தஶ்ரவயுதி" இதிச்சாந்தோக்ய மதுவித்யாயாம். உள்ளன மற்றுளவாப் புறமே - வள்ளல்மணிவண்ணனே என்றென்றே - சிலமாயம் சொல்லி உன்னையும் வஞ்சிக்கும் கள்ளமனந்தொடங்கி, க்ரமேண அந்வயः.* (ச)

என்னுடைய ப்ரக்ருதி ஸம்பந்தத்தை நீயே போக்கி உன்திருவடிகளிலே என்னை அழைத்தருளாய் க்ருஷ்ணனே !

அதவா, கீழ்ப்பிறந்த ஸம்ச்லேஷம் ஜ்ஞாநாநுஸந்தாநமாத்ரமேயாய் பாஹ்யகரண யோக்யமன்றிக்கே ஒழிந்தவாறே, 'அதுக்கடி ப்ரக்ருதிஸம்பந்தம்' என்று அநுஸந்தித்து, உன்னோட்டை ஸம்ச்லேஷத்துக்கு விரோதியான ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுக்கைக்கீடான உபாயாநுஷ்டாநத்தைப் பண்ண, உன்பக்கலுண்டான ப்ரேமாதிசயத்தாலே நான் க்ஷமனாகிறிலேன்; நீயே இத்தை அறுத்துத் தந்தருளவேணு மென்கிறார்.

[என்கொள்வனென்று தொடங்கி]-இதரவிஷய ப்ராவண்யத்தைத் தவிர்ந்து உன்னைக் கண்டல்லது தரிக்கமாட்டாதபடி அபேக்ஷைவர்த்தியாநிற்கச்செய்தேயும், வன்கள்வனேன் - நினைத்தபடி கிடையாமையாலே மஹாபாபியேனென்கிறார். [மனத்தையென்று தொடங்கி] - உன் குணங்களை நினைக்கையாலே சிதிலமான கரணங்களை நிலைநிறுத்தி உன்னை ஆச்ரயித்து என் ஆத்மாவை ப்ரக்ருதியோடு பிரிக்கமாட்டுகிறிலேன்.

ப.—அநந்தரம், இந்த விப்ரலம்போக்த்யாதிமூலமான தோஷத்தைப்போக்கி அங்கீகரிக்கவேணு மென்கிறார்.

(அநந்யப்ரயோஜநர் சொல்லுமாபோலே), உன்னை-(பரமப்ரயோஜநபூதனான) உன்னை, விட்டு - விட்டு, என்-என்னப்ரயோஜநத்தை, கொள்வன் - கொள்வேன்? என்னும் - என்கிற, வாசகங்கள் - பாசுரங்களை, சொல்லியும் - பலபடியாகச் சொல்லுவதும்செய்து, வல் - அநாதி ஸித்தமாக ஆத்மாவை அபஹரித்த, கள்வனேன் - க்ருத்ரிமனான நான், மனத்தை - (விஷயாந்தரங்களிலேபோன) நெஞ்சை, வலித்து - வரவலித்து, கண்ணநீர் - (அவற்றின் இழவால் பிறக்கும்) கண்ணநீரையும், கரந்து - (வாஸநாநிவ்ருத்தியாலே) மாற்றி, மனத்தை - அந்தநெஞ்சை, நின்கண்-(நிரதிசயபோக்யனான) உன்னிடத்திலே, நெருங்கவைத்து - நெருங்கவைத்து, என்னது ஆவியை - என் ஆத்மாவை, நீக்ககில்லேன் - ஸம்ஸாரத்தில்நின்றும் விடுவிக்க மாட்டுகிறிலேன்; (இதுக்குஹேதுவான), என்கண் - என்னுடைய, மலினம் - அவித்யாதி தோஷத்தை, அறுத்து - போக்கி, என்னை-அசக்தனான என்னை, கண்ணனே - ஸ்வாசித்தாரை "ஸ்ரீஸு-ஷஹ" என்னும் க்ருஷ்ணனே! கூவியருளாய் - (உன்பக்கலிலே) அழைத்துக்கொண்டருளவேணும்.

(அன்றியே),வன்-அநாதிஸித்தமாக, கள்வனேன்-க்ருத்ரிமனான நான், உன்னை-உன்னை, விட்டு-ஒழிய, என்-வேறு என்னப்ரயோஜநம்? கொள்வன் - கொள்வேன், என்னும்-என்று, வாசகங்கள் சொல்லியும் - செல்லாமைதோன்றச் சொல்வதும்செய்து, மனத்தை - உன்னைப் பெறுமையாலே சிதிலமாகிற நெஞ்சை, வலித்து - யோகயோக்யமாம்படி சிக்கெனப்பண்ணி, கண்ணநீர் - அநுபவ அலாபத்தாலேவந்த கண்ணநீரையும், கரந்து-மாற்றி, (தாரணாதிமுகத்தாலே), நின்கண்-உன்பக்கலிலே, நெருங்க - ஸமாதிபர்யந்தமாம்படி சிக்கென, வைத்து - வைத்து, எனது ஆவியை - என் ஆத்மாவை, நீக்க - உபாஸநமுகத்தாலே முக்தமாம்படி பண்ணிக்கொள்ள, கில்லேன் - மாட்டுகிறிலேன்; என்கண் மலினமறுத்து என்னைக்கூவியருளாய் - நீயேபண்ணித்தந்தருளவேணு மென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், "பொய்யே கைம்மைசொல்லி," "சிலகூத்துச்சொல்ல," "புறமே சிலமாயஞ்சொல்லி" என்று இவ்விஷயத்திலே பொய்சொல்லிப் போருகைக்கு நிபந்தநம் ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே யானபின்பு, இத்தைப்போக்கி உன்திருவடிகளிலே அழைத்துக்கொண்டருளவேணு மென்கிறார்.

[என்கொள்வன் இத்யாதி]-பரமைகாந்திகளைப்போலே, "உன்னைவிட்டு என்ன ப்ரயோஜநத்தைக்கொள்வன்?" என்றுசொல்லாநின்றுவைத்து, [வன்கள்வனேன்] - களவாவது-பாத்ரவ்யாபஹாரம். வலிய களவாவது - "ஹோரேணாத்மாபஹாரிணா" என்கிறபடியே, பகவச்சேஷமான ஆத்மவஸ்துவை அபஹரிக்கை. த்ரவ்யங்களில் தலையான வஸ்து ஆத்மவஸ்து, உடையவன் ஸர்வாதிகன். அகவாய் இப்படி யிருக்கையாலே, உக்திமாத்ரமான ஆநுகூல்யங்கொண்டு என் விரோதியைப் போக்க க்ஷமனல்லே னென்கிறார் மேல்; [மனத்தைவலித்து]-விஷயங்களினின்றும் மநஸ்ஸை நிவர்த்திப்பித்து. நான் இந்த்ரிய ஜயம்பண்ண நினைக்கையாவது-அவை என்னை மேலிடுகை. "ஐந்த்ரியாணி ஹ்ருத்ரோயீதி ஹரந்தி ஹ்ருதயம் உத:". [கண்ணநீர் கரந்து] - விஷயாநுபவத்தால் வந்த கண்ணநீரை மாற்றி. விஷயப்ராவண்யம் ஶாஸ்த்ரோபதேஶத்தால் போமோ? உன் போக்யதையைக் காட்டிலன்றோ அந்தக்கண்ணநீர் மாறுவது. [நின்கண்நெருங்கவைத்தே] - மநஸ்ஸை உன்பக்கலிலே செறியும்படிபண்ணி, இதுவும் என்னாற் செய்யலாவதொன்றன்று, உன் வடிவைக்காட்டி மநஸ்ஸைச் சேர்த்துக்கொள்ளவேணும். ஸாக்ஷாத் ஸாம்ஹ்ருஷிதிதாபஹாரியான வடிவே வேண்டாவோ விஷயங்களில் துவக்கறுக்கைக்கும் உன் பக்கல் ப்ரவணமாக்குகைக்கும். [எனதாவியை நீக்ககில்லேன்] - என் ஶரீரத்தினின்றும் என் ஆத்மாவைப் பிரிக்கமாட்டுகிறிலேன். ஆனபின்பு, நீயே செய்தருளவேணும். [என்கண் மலினமறுத்து] - மலினம்-மாலிந்யம். அதாகிறது - ப்ரக்ருதிஸம்பந்தம். என்னுடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தை நீயே போக்கி. [என்னைக் கூவியருளாய்] - அக்ஷமனான என்னை அழைத்துக்கொண்டருளவேணும். [கண்ணனே] - தன்பக்கல் அஶக்தியை அநுஸந்தித்து ஶோகித்தவனை, "மாஶுச:" என்றிலையோ!

அதவா, "கண்டுகொண்டுப்நொழிந்தேன்" என்றவிடம் - ஜ்ஞாநாநுஸந்தாந மாத்ரமாய், பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து அது கைவாராமையாலே "இதுக்கடி ப்ரக்ருதிஸம்பந்தம்" என்று பார்த்து, இந்த விரோதியைப் போக்குகைக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ண உன் பக்கல் ப்ரேமாதிஶயத்தாலே மாட்டுகிறிலேன்; நீயே இத்தை அறுத்துத்தந்தருளவேணுமென்கிறார்.

[என்கொள்வன் இத்யாதி] - ஸ்வரூப ப்ராப்தனான உன்னையொழிய, அநர்த்தஹேதுவான விஷயங்களை விரும்புவேனோ என்று, ஸ்வரூபாநுரூபமான அபேக்ஷையைப்பண்ணி நிற்கச்செய்தேயும், [வன்கள்வனேன்] - அபேக்ஷித்தபோதே கிடையாமையாலே, மஹாபாபியேனென்கிறார். [மனத்தைஇத்யாதி] - குணாநுஸந்தாநத்தாலே ஶிதிலமான மநஸ்ஸைத் திண்ணிதாகப்பண்ணி, இழவால்வந்த கண்ணநீரையும் மாற்றி, இப்படி நீயென்றால் உடைகுலைப்படாதபடி உன்பக்கலிலே நெருங்கும்படி சேர்த்து, ப்ராணயத்தஸ்த்திதியான என்னுடைய ஶரீரத்தினின்றும் என் ஆத்மாவைப் பிரிக்க க்ஷமனாகிறிலேன். ஹோம விரோதியான ப்ரக்ருதிஸம்பந்தத்தை யறுத்து, உன்திருவடிகளிலே அழைத்தருளவேணும். [கண்ணனே] - உன்னையொழியச் செல்லாதார்க்கு வந்து முகங்காட்டி அவர்கள் விரோதியைப் போக்குமவனல்லையோ? "ஶரிதாணாய ஸாதூநாம்". அஜ்ஞரோடு பக்திபரவஶரோடு வாசியில்லையிறே உபாயாந்தராநுஷ்டாநத்துக்கு அக்ஷமராகைக்கும், ஈஶ்வரனே கடவனாகைக்கும்.

ஈடு.—நாலாம் பாட்டு. " 'பொய்யேகைம்மைசொல்லி' என்றும், 'சிலகூத்துச்சொல்ல' என்றும், 'உள்ளனமற்றுளவாப் புறமே சிலமாயஞ்சொல்லி' என்றும்-பகவத்விஷயத்திலேயும் பொய்

---

நாலாம்பாட்டு - என்கொள்வன் இத்யாதி. "பெற்றொழிந்தேன்" "கண்டுகொண்டொழிந்தேன்" என்று - கீழும்மேலும் ப்ரீதியாயிருக்க, இப்பாட்டிலும் மேலிற்பாட்டிலும் - துக்கமாயிருக்கைக்கு அடியென்

சொல்லிப்போந்தேனென்றார்; 'இப்படி பொய்யனானைக்கு நிபந்தனமேது' என்று பார்த்தார்; ப்ரக்ருதி ஸம்ஸர்க்கமாயிருந்தது; 'மெய்யே பெற்றொழிந்தேன்,' 'கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்' என்றவற்றை மறந்தார்; இந்த ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே இதரவிஷயங்களிலே ப்ரவணமான மநஸ்ஸை அவற்றில் நின்றும் மீட்டு உன்பக்கலிலே ப்ரவணமாம்படி பண்ணி, தேஹத்திற்காட்டில் ஆத்மாவைப்பிரிய அநுஸந்திக்கைக்கு க்ஷமனாகிறிலேன், நீயே என்விரோதியைப்போக்கி உன் திருவடிகளிலே அழைத்துக்கொண்டருளவேணு மென்கிறார்" என்று பட்டர் அருளிச்செய்யும்படி.

அன்றிக்கே, "'கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன்' என்றார்; அது - ஜ்ஞாநாநுஸந்தாநமான காட்சியாயிருந்தது; காட்சிக்கு அநந்தரம் பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து கையைநீட்டினார், கைக்குள் அகப்படக்கண்டிலர், அத்தாலேதளர்ந்து; இதுக்குஅடி - தேஹஸம்பந்தமாயிருந்தது, இத்தைக் கழித்துக்கொள்ளுகைக்கு ஈடாயிருப்பதொரு ஸாதநாநுஷ்டாநக்ஷமனாகிறிலேன் பக்தி பாரவஶ்யத்தாலே; ஆனபின்பு நீயே என்விரோதியைப்போக்கி உன்திருவடிகளிலே அழைத்துக் கொண்டருளவேணு மென்கிறார்" என்று நிர்வஹிப்பாரு முண்டு. க்ரமத்திலேவரும் பக்தி தமக்கு உண்டாக நினைத்திராரிறே.

[என்கொள்வனுன்னை விட்டென்னும்]-பரமைகாந்திகளைப்போலே, உன்னையொழியநான் எத்தைக்கொள்வன்? என்று இங்ஙனே வாயாலே சொல்லாநிற்கச்செய்தேயும். [வன்கள்வனேன்] - களவாவது - பரத்ரவ்யாபஹாரம். வலியகளவாவது - "சோரேணாத்மாபஹாரிணா" (சோரேணாத்மாபஹாரிணா) என்கிறபடியே, பகவதீயமான ஆத்மவஸ்துவையன்றோ "நான், என்னது" என்றிருந்தது. விறகுகளவு கண்டாரளவல்லவிறே ரத்நாபஹாரம் பண்ணினாரளவிலே தோஷம். த்ரவ்யங்களை உபாதாநம் பண்ணுகிறவிடத்திலே ஆத்மவஸ்துவை ப்ரதாநமாகச் சொன்னார்களிறே. த்ரவ்யம் விலக்ஷணமாவது, உடையவன் ஸர்வேஶ்வரனாவது, இனிச் சொல்ல

---

*ப்ர:* - (வன்கள்வனேன்)—உக்த ப்ரமேயத்ரய ஜ்ஞாநம் ப்ராப்தயே ஸ்வரூப ப்ருதிஸ்ஸம்ஜாத:, "யோந்யதா ஸந்தமாத்மாநமந்யதா ப்ரதிபத்யதே। கிம் தேந ந க்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா॥".

---

என்ன, த்வேதாபரிஹரித்தார்கள் ஆசார்யர்க ளென்கிறார் - பொய்யே இத்யாதி. ப்ரக்ருதி ஸம்ஸர்க்கமா யிருந்ததென்றது - "மலினம்" என்றத்தைப்பற்ற. எப்படியாகிலும் "பல ஸித்தியுண்டாயிற்று" என்றாரேயென்ன, மெய்யேபெற்றொழிந்தேன் இத்யாதி. மறந்தாரென்றது - அர்த்தஸித்தம். அவற்றில்நின்றும் மீட்டென்றது- "வலித்து" என்றத்தைப்பற்ற. "நின்கண்நெருங்க" இத்யாதியைப்பற்ற - உன்பக்கலிலே இத்யாதி. என்விரோதியைப் போக்கியென்றது - "அறுத்து" என்றத்தைப்பற்ற. "கூவியருளாய்" என்றத்தைப்பற்ற - உன்திருவடிகளிலே இத்யாதி. பட்டர் நிர்வாஹத்துக்கு - அஜ்ஞாநத்தாலே ப்ரபந்நரென்ற ஆர்த்தம் ஸூசிதம்.

பூர்வர்கள் நிர்வாஹத்துக்கு - பக்திபாரவஶ்யத்தாலே ப்ரபந்நரென்ற அர்த்தம் ஸூசிதம். அகப்படக் கண்டிலர் என்றது - "வன்கள்வனேன்" என்றத்தைப்பற்ற அர்த்தஸித்தம். தளர்ந்தென்றது - "மனத்தை வலித்துக் கண்ணநீர்கரந்து" என்கையாலே அர்த்தஸித்தம். "எனதாவியைநீக்ககில்லேன்" என்றத்தைப்பற்ற- ஸாதநாநுஷ்டாந இத்யாதி. பக்திபாரவஶ்யத்தாலே யென்றது - "மனத்தைவலித்து" என்கையாலே அர்த்தஸித்தம். தம்முடைய இந்த பக்தி, ஸாதநமாகாதோ, "ஸாதநாநுஷ்டாந க்ஷமனாகிறிலேன்"என்பானென்? என்ன, க்ரமத்திலே இத்யாதி. க்ரமத்திலேவரும் பக்தி - கர்மஜ்ஞாநங்களை யநுஷ்டித்து அந்த அடைவிலேவரும் பக்தி. இங்கே - "ஸக்ருத்ஸ்ம்ருதோபி" இத்யாத்யநுஸந்தேயம்.

"வாசகங்கள்சொல்லியும்" என்றதுக்கு அர்த்தம் - வாயாலே இத்யாதி. ஆத்மாபஹாரம் க்ரூரமோ? என்ன, விறகு இத்யாதி. அப்படி இவ்வாத்மவஸ்து ஶ்லாக்யமோ? என்ன - த்ரவ்யங்களை இத்யாதி. ப்ரதாநமாக என்றது - "ஆத்மாநஸ்ஸுவர்ணஸ்தேய ப்ரகரணே । ஹிரண்ய ஸுவர்ண ஸம்ப்ரதாநாதீனி" என்றத்தைப்பற்ற. சொன்னார்களிறே - பராசராதிக ளென்றபடி. த்ரவ்ய

வேண்டாவிறே. [மனத்தைவலித்து]-இதரவிஷயங்களிலே ப்ரவணமான மநஸ்ஸை அவற்றினின்றும் மீட்டு. மனத்தை மீட்டேனென்னாதே, வலித்தேனென்கிறது - அவற்றிலே நெஞ்சுபட்ட உறுதியை நினைத்து. நான் இந்த்ரியஜயம்பண்ண நினைக்கையாவது - அவை என்னைமேலிடுகை. "[illegible]" (இந்த்ரியாணிப்ரமாதீநிஹரந்திப்ரஸபம்மந:).[கண்ணநீர்கரந்து] - அவற்றினுடைய அலாபத்தாலே பாய்கிற கண்ணநீரையும் மாற்றி. [நின்கண்நெருங்கவைத்தே] - அம்மநஸ்ஸை உன்பக்கலிலே கொண்டுபோந்து மூட்டி நிரந்தரமாக அநுஸந்தித்து. [எனதாவியைநீக்ககில்லேன்] - இத்தேஹத்திற்காட்டில் ஆத்மாவைப் பிரிய அநுஸந்திக்க க்ஷமனாகிறிலேன். [என்கண்மலினமறுத்து] - இதுக்கு அடி என்னிடத்திலுண்டான மாலிந்யமிறே. மலினம் - மாலிந்யம். அதாவது - ப்ரக்ருதி ஸம்பந்தம். மெய்யனாய்க் கெட்டேனென்கிறார். † (மெய்-ஶரீரம்) அத்தையறுத்து உன் திருவடிகளிலே என்னை அழைத்துக்கொண்டருளவேணும். [கண்ணனே] - ஶோகநிவர்த்தகனன்றோ நீ, எனக்குச் செய்தருளவேண்டுவது - அழகிய வடிவைக்காட்டி "[illegible]" என்னுமத்தனையன்றோ. அவ்வடிவைக்கண்டால் ‡ "மற்றொன்றினைக்காணா" என்னும்படியாயிறே யிருப்பது.

அதவா, [என்கொள்வன் இத்யாதி] - ஸ்வரூபாநுரூபமான பாசுரத்தை வாயாலே சொல்லிநிற்கச்செய்தேயும். [வன்கள்வனேன்] - உத்தேஶ்யவஸ்துவைக் கடுக லபிக்கப்பெறாத

---

ப்ர:—(மனத்தைவலித்து)—ஸ்ரீமத்கீதாஸு த்விதீயே, "[illegible] ॥ ருக ॥ [illegible] ॥ ருo ॥ [illegible] ॥ ருக ॥";

---

ஸ்வரூப வைலக்ஷண்யத்தாலும், உடையவன் வைலக்ஷண்யத்தாலும் தோஷாதிஶயமுண்டென்கிறார் - த்ரவ்யம் இத்யாதி. இவ்விடத்திலே - "[illegible]" இத்யாதி ப்ரமாணங்கள் கண்டுகொள்வது. [illegible]" இத்யுத்யோகபர்வணி ஏகசத்வாரிம்ஶே த்ருதராஷ்ட்ரம் ப்ரதி ஸநத்ஸுஜாத:. வலிக்கை - இழுக்கை. "வலித்து" என்கிற பதப்ரயோகத்துக்கு பாவம் - மனத்தை இத்யாதி. உறுதி - தார்ட்யம். இந்த்ரியஜயம் பண்ணுகை அரிதோ? என்ன - நான் இந்த்ரியஜயம் இத்யாதி. உக்தார்த்தே ப்ரமாணம் - இந்த்ரியாணி இத்யாதி. கீதாஸு த்விதீயே, "[illegible]" இதி பூர்வார்த்தம். "கரந்து" - மாற்றி. அதாவது - "அலாபத்தால்வந்த ஶோகம் த்யாஜ்யம்" என்று விட்டென்றபடி. சாடு - மெய்யனாய் இத்யாதி. மெய்யன் - ஸத்யவான், ஶரீரவானும், உன் திருவடிகளிலே இத்யாதிக்கு ப்ரதீகம் - "கூவியருளாய்" என்கிறது. "கண்ணனே" என்றதுக்கு அர்த்தத்வயம்; கண்ணனென்று - க்ருஷ்ணனாய், சோகநிவர்த்தகன் என்று - ப்ரதமார்த்தம். இரண்டாமர்த்தம் - எனக்குச் செய்தருள இத்யாதி. இப்போது, கண்ணனென்றது - கண்ணுக்கு விஷயமானவன் என்றபடி. வடிவைக் காட்டினால் போருமோ? என்ன - அவ்வடிவை இத்யாதி. மற்றொன்றினைக்காணாவே - எனக்கு நிரதிஶயபோக்யனானவனைக் கண்டகண்கள் வேறொரு பரவ்யூஹ விபவார்ச்சைகளைக் காணாவே இத்யர்த்த:.

ஸ்வரூபாநுரூபமான என்றது - "என்கொள்வனுன்னைவிட்டு" என்றத்தைப்பற்ற. வாயாலே சொல்லி நிற்க என்றது - "வாசகங்கள்சொல்லியும்" என்றத்தைப்பற்ற. பக்திபாரவஶ்யத்தாலே ஸாதநாநுஷ்

---

† குண்டலிதக்ரந்தம் க்வாசித்கம்.    ‡ அமலனாதிபிரான்-கக.

இன்னுப்பாலே 'மஹாபாபி' என்பாரைப்போலே சொல்லுகிறார். [மனத்தை வலித்து இத்யாதி]- பக்திபாரவஶ்யத்தாலே ஶிதிலமாகிற மநஸ்ஸைத் திண்ணிதாக்கி "தனசேழிலோண்கண்ணநீர் கோண்டாள்" என்கிற கண்ணநீரையும் மாற்றி. [நின்கண் நெருங்கவைத்தே] - *"காலாழும் நெஞ்சழியும்" என்கிறபடியே, உன்னைக்கிட்டினவாறே உடைகுலைப்படுகிற மநஸ்ஸைத் தரித்து நின்று உன்னை அநுஸந்திக்கும்படிபண்ணி, இஶ்ஶரீரத்தினின்றும் ஆத்மாவைப் பிரிய அநுஸந்திக்க க்ஷமனுகிறிலேன். "இவன், தான் தன் விரோதியைப்போக்கி க்ரமத்திலே வந்துகிட்டுகிறான்" என்று ஆறியிராதே, நினைத்தகாரியம் தலைக்கட்டவல்ல நீயே என் விரோதியைப்போக்கி என்னை யழைத் துக்கோண்டருளவேணும். [கண்ணனே]-"பக்தி உபாயமன்று" என்று ஶோகித்தவனுக்கு நல் விரகு சொல்லிக்கோடுத்தவனன்றோ நீ. (ச)

# ஐந்தாம் பாட்டு.

கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை
நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டுத்
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால்
புண்ணைமறையவரிந்து என்னைப்போரவைத்தாய்புறமே.

*ஆ.—( கண்ணபிரானை. ) ஶ்ரீ வைகுண்டநிலயனாய் * அயர்வறுமமரர்களதிபதியா யிருந்துவைத்து ஸர்வபோக்யனும்படிவந்து வஸுதேவக்ருஹே அவதீர்ணனான உன்னைக் கண்டு வைத்தும் உன் திருவடிகளை ப்ராபிக்கப்பெறுகிறிலேன். என்றானென்னில்; நடுவேயோரு டம்பிலிட்டுப் பலசெய்வினைவன்கயிற்றால் திண்ணமழுந்தக்கட்டிப் புண்ணைமறையவரிந்து என் னைப்போரவைத்தாய் புறமே, அதினாலே யென்கிறார்.*

*ஒ.—அஞ்சாம்பாட்டில், மலினமாவது ப்ரக்ருதி ஸம்பந்தமென்னுமிடத்தை ஸ்பஷ்ட மாக அருளிச்செய்கிறார்.*

*[கண்ணபிரானையென்று தொடங்கி] - அயர்வறு மமரர்களுக்கு போக்யனாயிருந்து வைத்து க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணி எனக்கு போக்யனான உன்னைப் பெற்று வைத்தே பெறாதார் கணக்கானேன். [நடுவேயென்று தொடங்கி] - பெறுதொழிகிறது என்?*

---

*டாகயோக்யதை இல்லாமையைச்சொல்லுகிறவர், "வன்கள்வனேன்" என்பானென்? என்ன - உத்தேஶ்யவஸ் துவை இத்யாதி. இன்னுப்பு - வெறுப்பு. சோல்லுகிறர் - "வன்கள்வனேன்" என்று என்றபடி. பக்தி பாரவஶ்யத்தாலே யென்றது - அர்த்தஸித்தம். தனகேழில் இத்யாதி - தன்னுடைய ஒப்பில்லாத அழகிய கண்களிலே நீர் கொண்டாள் இத்யர்த்தஃ. காலாழும் இத்யாதி - கால் தடுமாறாநின்றது, நெஞ்சு சிதிலமாகா நின்றது, கண்கள் சுழலாநின்றது இத்யர்த்தஃ. உடைகுலை - ஶைதில்யம். "எனதாவியை நீக்ககில்லேன்" என்றத்தைப்பற்ற - இஶ்ஶரீரத்தில் நின்றும் இத்யாதி. "கண்ணன்" என்றதுக்கு - நிர்வாஹகன் என்று அர்த்தம் அருளிச்செய்கிறார் - நினைத்தகாரியம் இத்யாதி. "கண்ணன்" என்று - க்ருஷ்ணனைச் சொல்லு கிறதாக்கி, தாத்பர்யாந்தரம் - பக்தி இத்யாதி. இந்த த்விதீயயோஜனையில், "கண்ணன்" என்று - நிர்வாஹக னென்னுதல், க்ருஷ்ணனென்னுதல் என்று அர்த்தத்வயம். உன்னைவிட்டு - என்கொள்வன் - என்னும் வாச கங்கள் இத்யாத்யந்வயஃ க்ரமேண. (ச)*

---

** பெரிய திருவந்தாதி-நச.*

என்னில், - திருவடிகளில் ஸம்பந்தத்தை உணர்ந்தார்க்கு ப்ரக்ருதியோடு இருக்கைக்கு ஹேது வின்றியே இருக்கச்செய்தே ஒரு ஹேயமான ஶரீரத்திலே என்னை ப்ரவேஶிப்பித்து அவித்யா கர்மாதிகளாலே த்ருடமாகக்கட்டி ஶரீரதோஷம் தெரியாதபடியாகப்பண்ணி உன்னைக் காண வொண்ணாத நிலத்திலே என்னைப் போரவைத்தாய்.

ப.—அநந்தரம், கீழ் தோஷரூபமாகச்சொன்ன ப்ரக்ருத்யாதிகளிலே ஸந்தித்தாய் நீயன்றோவென்று, இவர்த்யம் அவனுக்கு விதேயமானபடியை அருளிச்செய்கிறார்.

கண்ணன் - க்ருஷ்ணனாய் அவதரித்து, பிரானை - ("ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று) உபாயோபதேஶத்தைப்பண்ணி உபகரித்து, (ஆஶ்ரயித்தவர்களை), விண்ணோர் - நித்யஸூரி களுக்கு தர்ஶநீயமான, கருமாணிக்கத்தை-விலக்ஷணவிக்ரஹத்தை அநுபவிப்பித்து, அமுதை - நித்யபோக்யமான உன்னை, நண்ணியும்-நீ தந்த ஜ்ஞாநமுகத்தாலே கிட்டியிருக்கச்செய்தேயும், (போஹாலாபத்தாலே), நண்ணகில்லேன் - கிட்டாதார்கணக்கானேன்; (அதுக்கடி), நடுவே - (நிர்வாணமயனான ஆத்மாவோடும் ஸ்வதஸ்ஸம்பந்தமற்று ஹேயப்ரத்யநீகனான உன்னோடும் துவக்கற்று, இருவரையும் அகற்றுகைக்கு) நடுவேபுகுந்தது, ஓர்-ஓர், உடம்பில் - உடம்பிலே, இட்டு-ஸம்ஸர்க்கிப்பித்து, பல-பலவகையாய், செய் - காயிகபர்யந்தமாக அநுஷ்டிதமான, வினை - கர்மங்களாகிற, வல் கயிற்றால் - ப்ரபல பாஶங்களாலே, திண்ணம் - த்ருடமாம்படி, அழுந்த - துர்விவேசமாக, கட்டி-கட்டி, புண்ணை-ஆந்தரதோஷத்தை, மறைய-காணவொண்ணாத படி, வரிந்து-நிரந்தரமாகச் சூழ்ந்து, என்னை - (இக்கட்டு அவிழ்க்கைக்கு அஶக்தனாய் அப்ராப்த னான) என்னை, புறமே-உனக்குப்புறம்பான விஷயப்ரசுர ஸம்ஸாரத்திலே, போர-போர, வைத் தாய்-இட்டுவைத்தாய். நீ நினைத்தால் விடுவிக்கலாமென்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், கீழ் "மலினம்" என்றது - ப்ரக்ருதியை யென்று ஸ்பஷ்ட மாக அருளிச்செய்து, அதிலேயிட்டு என்னை நோவுபட விட்டிருந்தா யென்கிறார்.

[விண்ணோர்கருமாணிக்கத்தை - கண்ணபிரானை - அமுதை] - நித்யஸூரிகளுக்குப் பரம போக்யமான உடம்பு படைத்தவனை, அவர்கள் நித்யாநுபவம் பண்ணாநிற்கச்செய்தே நித்யா பூர்வமான வடிவிறே. [கண்ணபிரானை] - அவ்வடிவை க்ருஷ்ணனாய்வந்து அவதரித்து எனக்கு உபகரித்தவனை. [அமுதை] - போன உயிரை மீட்கவற்றாய் நிரதிஶயபோக்யமான வடிவை என்னை அநுபவிப்பித்தான். [நண்ணியும் நண்ணகில்லேன்] - கிட்டியும் கிட்டாதார் கணக் கானேன். பேறாகச்சொல்லுகிறது - ஜ்ஞாநலாபத்தை; பேறாமையாகிறது - ஜ்ஞாநாநுகூலமான ப்ராப்தியில்லாமை. அதின்றிக்கேயொழிகிறது என்? என்னில்;—அசித்ஸம்ஸர்க்கத்தாலே ஸம்ஸாரத்திலே நீ வைக்கையாலே யென்கிறார்;—[நடுவேயோருடம்பிலிட்டு] - ஶரீரஸம்பந்தம் அநாதியாயிருக்க, "நடுவே" என்பானென்? என்னில்;—இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபாநுபந்தி யல்லாமையாலும், கர்மோபாதிகமாகையாலும், பகவத்ப்ரஸாதத்தாலே விடக்காண்கையாலும், முத்துக்கு மாலிந்யம் அநாதியாயிருக்க, ஒருநாளிலே கடைந்து தெளியக்காண்கையாலே "ஸ்வ ரூபாதிரேகி" என்று தோற்றுமாபோலே. பகவதர்ஹமான வஸ்துவுக்கு மாம்ஸாஸ்ருங்மய மான அசித்தோடு என்ன சேர்த்தியுண்டு. பெருமாளோடே அநுபவிக்கப்பாரித்த பிராட்டி முன்பே ராவணன் தோற்றினாற்போலே யிருக்கிறதாயிற்று இவர்க்கு ஶரீரஸம்பந்தம். ஸம் ஸர்க்கமொழிய, ஆஶ்ரயத்தோடு ஒரு ஸம்பந்தமில்லை யென்கை. [திண்ணமித்யாதி] - பல வாய்ச் செய்யப்பட்டு வலிதான பாபமாகிற பாஶத்தாலே த்ருடமாக நெருங்கக்கட்டி. [புண்ணை மறையவரிந்து] - ஶரீரகததோஷம் தெரியாதபடிபண்ணி. அகவாயைப் பார்த்தால் காக்கை நோக்கும்படியாயிருக்க, தோலின் கைப்பாணிப்புறத்தால் வந்தவழுமூட்சியைப் பார்த்து

ஸ்ப்ருஹை பண்ணும்படியிறே பண்ணிவைத்தது. [என்னை] - ஸ்வரக்ஷணத்தில் அப்ராப்தனாய் அஶக்தனாயிருக்கிற என்னை. [புறமே - போரவைத்தாய்] - அநுபவத்திலே பாரித்திருக்கிற பிராட்டியை அஶோகவநிகையிலே வைத்தாற்போலே, இவர்க்கு ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற இருப்பு. ஸ்வகர்மத்தால் வந்தத்தை அவன் குற்றமாக்குவானென்? என்னில்;—ப்ரஜை தானே கிணற்றிலே விழுந்தாலும், "மாதா நோக்கிற்றிலள்" என்னுமத்தைக்கொண்டு "அவள் தள்ளினாள்" என்னக்கடவதிறே. ஸ்வரூப பாரதந்த்ர்யத்தோபாதி கர்மமும் அவனைக்குறித்து "பொறுத்தோம்" என்னக் கழிகிறதிறே.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நீர் "மலினம்" என்கிறது எத்தையென்ன, இன்னதென்கிறார்.

விண்ணோர்கருமாணிக்கத்தை - கண்ணபிரானை - அமுதை. [விண்ணோர் கருமாணிக்கத்தை என்று தொடங்கி] - " தத்விப்ராஸோவிபந்யவோஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே " (தத்விப்ராஸோவிபந்யவோஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே) என்கிறபடியே, நித்யஸூரிகளுக்கு அநுபாவ்யமான வடிவழகை எனக்கு உபகரிக்கைக்காக க்ருஷ்ணனாய்வந்து அவதரித்தவனை. [அமுதை]-இப்படி அவதரித்துத் தன்னுடைய போக்யதையையாயிற்று இவரை அநுபவிப்பித்தது. [நண்ணியும் இத்யாதி] - பெற்றுவைத்தே பெறுதார்கணக்கானேன். இவர் நண்ணினாராகச் சொல்லுகிறது - பிறந்த ஜ்ஞாநலாபத்தை; நண்ணப்பெறுததாகச் சொல்லுகிறது—ஶரீரஸம்பந்தத்தோடேயிருக்கிற இருப்பை. [நடுவேயோருடம்பிலிட்டு] - ஆத்மாவுக்கு அசித்ஸம்ஸர்க்கம் அநாதியாயிருக்கச்செய்தேயும், நடுவேயோருடம்பு என்கிறார்-அது ஔபாதிகமாய்த் தோற்றுகையாலே. சலகில் கிடந்தமுத்துக்கும் பொன்னுக்கும் அழுக்கேறினநாள் அறிவாரில்லை, பின்பு கழியக்காண்கையாலே "இது வந்தேறி" என்று தோற்றுகின்றதிறே; அப்படியே பகவத்ஸமாஶ்ரயணத்தாலே கழியக்காண்கையாலே " இதுவந்தேறி " என்று தோற்றுமிறே. ராஜபுத்ரன் வழிபோகாநிற்கச்செய்தே வேடர்

---

ப்ர:—(விண்ணோர் கருமாணிக்கத்தை)—ஶ்ருதௌ, "தத்விஷ்ணோ: பரமம் பதம் ஸதா பஶ்யந்தி ஸூரய: । திவீவ சக்ஷுராததம் । தத்விப்ராஸோ விபந்யவோ ஜாக்ருவாம்ஸஸ்ஸமிந்ததே । விஷ்ணோர்யத்பரமம் பதம் ॥ உ ॥"

---

அஞ்சாம்பாட்டு - கண்ணபிரானை இத்யாதி. இன்னது என்றது - " நடுவேயோருடம்பில் " இத்யாதியைப்பற்ற.

விண்ணோர் கருமாணிக்கத்தைக் கண்ணபிரானை யமுதை-என்று அந்வயித்தது-நித்யஸூரிகளுக்கு என்று தொடங்கி, அநுபவிப்பித்தது என்னுமளவும் அருளிச்செய்கிற அர்த்தம் சேருகைக்காக பாட்டுக்கெல்லாம் அந்வயம் அருளிச்செய்கைக்காக - விண்ணோர் கருமாணிக்கத்தையென்று தொடங்கி யென்றது. கண்ணபிரானை - அமுதாயிருக்கிற உன்னை நண்ணியும் நண்ணகில்லேன், நடுவேயோருடம்பிலிட்டு - பலசெய்வினை வன்கயிற்றால் - திண்ணமழுந்தக்கட்டி - புண்ணைமறையவரிந்து என்னை - புறமே - போரவைத்தாய் இத்யந்வய இதிஶேஷ:. விப்ராஸ:-மேதாவிந:, விபந்யவ:-ஸ்துதிஶீலா:, ஜாக்ருவாம்ஸ:-ஜாகரூகா:, ஸமிந்ததே-ப்ரகாஶந்தே; ஜீஇஸீதீப்தௌ இதி தாது: அமுதையென்று - புந:ப்ரதீகக்ரஹணம்-" கண்ணபிரானை " என்றபதத்தோடே கூட்டி ஸ்வாரஸ்யம் அருளிச்செய்கைக்காக. பெறுதார்கணக்கானேன் - பெறுதாரைப் போலேயானேன். இப்படி சொல்வது எத்தைப்பற்றவென்ன - இவர் இத்யாதி. ஜ்ஞாநலாபத்தை - மாநஸாநுபவத்தை. ஶரீரஸம்பந்தத்தோடே என்றது - "உடம்பிலிட்டு" என்றத்தைப்பற்ற. இருக்கிற இருப்பினுடைய போருகையை - நண்ணப்பெறுததாகச் சொல்லுகிறதென்று தாத்பர்யம். உடம்பிலிட்டு - உடம்பிலே ஸம்ஸர்க்கிப்பித்து. அசித்ஸம்ஸர்க்கம் அநாதியாயிருக்க, "நடுவே" என்பானென்? என்ன - ஆத்மாவுக்கு இத்யாதி. அநாதியான இத்தை, " ஔபாதிகம் " என்றறியலாம்படி எங்ஙனே? என்ன - சலகில் இத்யாதி. சலகு - முத்துச்சிப்பி. வந்தேறியாகில் ஸ்வாபாவிகமாகத் தோற்றும்படி எங்ஙனே? என்ன - ராஜபுத்ரன்

கையிலே அகப்பட்டுத் தன்னை வேடனுக ப்ரதிபத்திபண்ணுமாபோலே இருப்பதோன்றிறே, சேதநன் தேஹத்திலே அஹம்புத்திபண்ணி "தேவோஹம்" (தேவோஹம்) என்றிருக்கும் இருப்பு. [திண்ணமழுந்தக்கட்டி] - அவித்யாதிகளாலே த்ருடமாக நெருங்கக்கட்டி. [பலசெய்வினை இத்யாதி] - தான் பலவாய்ச்செய்யப்பட்டிருந்துள்ள வினையாகிற வலிய பாசங்களாலே த்ருடமாம்படி ஸந்தித்து. [புண்ணைமறையவரிந்து] - தோலைமேவிக் கைப்பாணியிட்டு மெழுக்குவாசியிலே ப்ரமிக்கும்படி பண்ணின இத்தனையொழிய, அகவாய் புறவாயாயிற்றாகில் காக்கைநோக்கப் பணிபோருமத்தனையிறே. [என்னை] - ஸ்வரக்ஷணத்திலே அஸக்தனுய் அப்ராப்தனுமாயிருக்கிற என்னை. [போரவைத்தாய்புறமே] - ஏகாந்தபோகத்துக்காகப் போந்த பிராட்டி அசோகவனிகையிலே யிருந்தாற்போலே தோற்றுநின்றதாயிற்று, ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தபின்பு தேஹத்திலேயிருக்கிற இருப்பு. [புறமே] - உன்குணங்கள் நடையாடாத ஸம்ஸாரத்திலே - வைத்தாய். போரவைத்தாய் என்று - அவன்செய்தானுகச் சொல்லுகிருரிறே, தம்முடைய ஸ்வரூபத்தோபாதி "கர்மமும் அவனைக் குறித்துப் பரதந்த்ரம்" என்றிருக்கும் பரமவைதிகராகையாலே. (ரு)

## ஆரும்பாட்டு.

புறமறக்கட்டிக்கோண்டு இருவல்வினையார்குமைக்கும்
முறைமுறையாக்கைபுகலோழியக் கண்டுகோண்டோழிந்தேன்
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண்
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்தன்னையே.

**ஆ.**—(புறமற.) தம்முடைய இந்த தேஹஸம்பந்த ப்ரதிபந்தகம் போயிற்றதென்று தோற்றும்படி தமக்கு எம்பெருமான் தன்னையுள்ளபடியே காட்டியருள, அப்படியேகண்டு ப்ரீதராய் அந்தப்ரீத்யதிஶயத்தாலே தாம் கண்டபடியைப் பேசுகிருர்.

ஒ.—ஆரும்பாட்டில், இவர்க்கு ப்ரக்ருத்யநுஸந்தாநத்தாலே வந்த வ்யஸநம் விஸ்ம்ருதமாம்படி எம்பெருமான் திருவழகைக்காட்டக்கண்டு ப்ரீதராகிருர்.

[புறமறவென்று தொடங்கி] - ஸந்தமறுத்துவிட வொண்ணுதபடி ஸந்தித்து புண்ய பாபகர்மங்கள் நலிகைக்கிடாக பர்யாயேணவரும் ஶரீரப்ரவேஶத்தை "தவிர்ந்தது" என்று தோற்றும்படி. [அறமுயலாழி] - ஆஶ்ரிதபரித்ராணமாகிற பரம தர்மத்திலே முயலாநின்றுள்ள திருவாழி.

---

இத்யாதி. ஶிழ்ப்பதத்தையுங்கூட்டி ஸப்தார்த்தம் - தான்பலவாய் இத்யாதி. புண்ணை - மாம்ஸாஸ்ருக்பூயங்களை. இஶ்ஶரீரம் புண்ணுயிருக்குமோ? என்ன - தோலைமேவி இத்யாதி. மேவி - போர்த்து. கைப்பாணி மணியாஸநம். மெழுக்குவாஶி - பூச்சுவாஶி. காக்கைநோக்க - காக்கைகுத்தாமல்பார்க்க. காக்கைநோக்கவென்கிறவிடத்திலே - "யதி நாஸ்ய காயஸ்ய யத் அந்தரம் தத் பஹிர் பவேத் | தண்டம் ஆதாய லோகோ(அ)யம் ஶுந: காகாம்ஶ்ச வாரயேத்" என்றது அநுஸந்தேயம். பணிபோரும் - க்ருஷிபோரும். ஸர்வரும் இத்தையுள்ளாக விரும்பாநிற்க, புறமேயென்பானென்? என்ன - ஏகாந்தபோக இத்யாதி. ஸ்வரூபஜ்ஞாநமென்றது "நண்ணியும்" என்றத்தைப்பற்ற. தேஹத்திலேயிருக்கிற இருப்பு என்றது - "உடம்பிலிட்டு" என்றத்தைப் பற்ற. ஸப்தார்த்தம் - உன்குணங்கள் இத்யாதி. ஸ்வகர்மாநுகுணமாக வந்தத்தை அவன் செய்தானுகச் சொல்லுவானென்? என்ன - போரவைத்தாய் இத்யாதி. (6

ப.—அநந்தரம், இத்தோஷத்தோடே யிருக்கச்செய்தே அது நெஞ்சிற்படாதபடி அவன் ப்ரகாஶிப்பித்த விலக்ஷணவிக்ரஹத்தை அநுபவிக்கப்பெற்றே னென்கிறார்.

புறம் - புறம்புஒருதலை, அற-தெரியாதபடி, கட்டிக்கொண்டு - ஹந்தித்துக்கொண்டு, இரு - (புண்யபாபரூபமான) இருவகையையுடைய, வல்-ப்ரபலமான, வினையார் - கர்மத்தினார், குமைக்கும் - பீடிக்கைக்கு ஸ்த்தலமாய், முறைமுறை - தேவாதிக்ரமவிஶிஷ்டமான, ஆக்கை - ஶரீரத்திலே, புகல் - பஹுப்ரகாரமான ப்ரவேஶத்தை, ஒழிய-தவிரும்படியாக, நிறம்-தர்ஶநீயமான வேஷத்தை, உடை-உடைத்தாய், நால்-நாலுவகையாய், தடம் - சுற்றுடைத்தான, தோள்-தோள்களையும், செய்ய-சிவந்த, வாய்-திருப்பவளத்தையும், செய்ய-சிவந்த, தாமரை-தாமரைபோன்ற, கண்-கண்களையும், அறம்-ரக்ஷணதர்மத்தில், முயல் - உத்யுக்தமான, ஆழி-திருவாழியை யுடைத்தாகையாலே, அம்-பேரழகுடைய, கை-திருக்கையையு முடைத்தாய், கரு-ஶ்யாமளமான, மேனி-வடிவையுடைய, அம்மான்தன்னை - ஶேஷியானவனை, கண்டுகொண்டொழிந்தேன்-என் இழவெல்லாம் தீரும்படி அபரோக்ஷித்து அநுபவித்துவிட்டேன். ஆந்தரமான விக்ரஹாநுபவப்ரீதி "இனி ஶரீரஸம்பந்தம் நமக்கில்லை" என்கிற ப்ரதிபத்தியைப் பிறப்பித்ததென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், இவர்க்கு ப்ரக்ருத்யநுஸந்தாநத்தால் வந்த வ்யஸநம் விஸ்ம்ருதமாம்படி அவன் வடிவழகைக்காட்டக் கண்டு ப்ரீதராகிறார்.

[புறமறக்கட்டிக்கொண்டு]-புச்சம் உள்ளே யகப்படும்படி பந்தித்துக்கொண்டு, சிலரால் தலைகண்டவிழ்க்க வொண்ணாதிருக்கை. "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்று-கர்மாநுகுணமாக ஸர்வஶக்தி பிணைத்த பிணையைச் சிலரால் அவிழ்க்கவொண்ணுமோ? [இரு வல் வினையார்] - பெரிதாய் வலிதான கர்மங்கள். வினையாரென்கிறது - அவற்றாலே நெருக்குண்கிறபடியைக் கண்டு சொல்லுகிறதாதல், அவைதான் பலவகையாகையாலே பஹுவசநமாதல். [குமைக்கும் முறைமுறையாக்கை புகலொழிய] - திறந்துகிடந்த வாசல்கள்தோறும் நுழையும் க்ஷுத்ர பதார்த்தம்போலே, தேவாதி ஶரீரங்கள்தோறும் புக்கு அஹம்புத்திபண்ணி நோவுபடுகிறதிறே ஜ்ஞாநாநந்தலக்ஷணமான வஸ்து. புண்யம் தேவஶரீரத்திலே புகவிட்டு நலியும், பாபம் திர்யக்ஸ்த்தாவரங்களிலே புகவிடும்; புண்யபாபங்களிரண்டும் மநுஷ்யஶரீரத்திலே புகவிடும்; இப்படி அடைவடைவே அஸ்த்திரமான ஶரீரத்திலே அஹம்புத்திபண்ணி நோவுபடுகிறது தவிர. "தவிர்ந்தது" என்று தோற்றும்படி. [கண்டுகொண்டொழிந்தேன்]-உத்தேஶ்யனான உன்னைக் கண்டுஅநுபவிக்கப்பெற்றேன். ஶரீரப்ரவேஶம் தவிர்ந்தேன். அவனுடம்பைக் கண்டவாறே தம்முடம்பை மறக்கும்படியிறே அவ்வடிவில் வைலக்ஷண்ய மிருப்பது. [நிறமுடையித்யாதி] - வைத்தகண்வாங்கவொண்ணாதபடி அழகிய நிறத்தையுடைத்தாய், * ஸர்வபூஷணபூஷார்ஹங்களாய், கல்பகதருபணைத்தாற்போலே நாலாய், "பாஹுச்சாயாமவஷ்டப்த:" என்று ஸகல லோகாபாஶ்ரயமான தோள். [செய்யவாய்] - "ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்" என்று - முகமாகிறது முறுவலெடுத்துவைக்கக் கொள்கலமாயிற்று. [செய்யவாய்]-தோளை அண்டைகொண்டார்க்கு "ஸ்மயமாநமுகம் த்ருஷ்ட்வா" என்னும் வாய். [செய்யதாமரைக்கண்] - "ராம: கமலபத்ராக்ஷ:" என்கிறபடியே இதுக்கடியான ப்ராப்தியெல்லாந் தோற்றும்படி விஶேஷகடாக்ஷம் பண்ணும் கண். [அறமுயலாழியங்கை] - "ரக்ஷணஸ்ய ச தீக்ஷித:" என்கிறபடியே ரக்ஷகனான ஈஶ்வரனிலுங்காட்டில் ஆஶ்ரிதரக்ஷண தர்மத்திலே உத்யுக்தமான திருவாழியைக் கையிலே யுடையவன். [கருமேனி]- அத்திருவாழிக்குப் பரபாகமாய் ஶ்ரமஹரமான திருமேனியை யுடையவன். [அம்மான்தன்னையே] - அவை யடங்க

"என்னது" என்னலாம்படியான ப்ராப்தி இருக்கிறபடி. ஆக்கைபுகலொழிய - கருமேனியம்மான் தன்னை - கண்டுகொண்டொழிந்தேன். "நீலதோயதமத்யஸ்தா" என்னும்படியிறே ஹ்ருதயத்திலே யிருக்கிறபடி. முன்பு இவ்வுடம்பு அவனுடம்பை மறப்பித்தாற்போலே, இப்போது அவனுடம்பு இவ்வுடம்பை மறப்பித்தது.

ஈடு.—ஆறும்பாட்டு. "போரவைத்தாய்புறமே" என்று - இவர் நோந்தவாறே, "இவருடைய இழவை மறப்பித்து உளராக்கி நடத்தவேணும்" என்றுபார்த்துத் தன்வடிவழகைக்காட்ட, அவ்வடிவழகைக் கண்டவாறே தம் உடம்பை மறந்து ப்ரீதராய், கண்டுகொண்டே னென்கிறார். இவரை மெய்ம்மறக்கப் பண்ணிற்று அவன்வடிவு.

[புறமறக்கட்டிக்கொண்டு] - பிணைத்தவிடமறிந்து இவனால் அவிழ்த்துக்கொள்ளவொண்ணாதபடியாக, புச்சந்தோற்றாதபடி உள்முடியாக முடிந்து. "மமமாயா துரத்யயா" (மமமாயாதுரத்யயா) - ஸர்வசக்தியான நான் பிணைத்தபிணை ஒருவரால் அவிழ்க்க ஒண்ணாது என்றானிறே. [இருவல்வினையார் இத்யாதி] - இருவகைப்பட்ட மஹாபாபம் தகர்க்கும். *(வினையார் என்கிறது- அவற்றால் நெருக்குண்கிறபடியைக்கண்டு சோல்லிற்றாதல்; அவைதாம் பலவகையாகையாலே - பஹுவசநமாதல்.) [குமைக்கும் முறைமுறையாக்கை] - புண்யத்துக்கென்று தேவசரீரத்தை ப்ரவேசியா, பாபத்துக்கென்று திர்யகாதிசரீரத்தை ப்ரவேசியா, உபயத்தாலுமென்று மநுஷ்ய சரீரத்தை ப்ரவேசியாப் படும்பாட்டுக்கு ஒரு முடிவில்லையிறே. திறந்துகிடந்த வாசல்தோறும் நுழைந்து திரியும் பதார்த்தம்போலே, கர்மாநுகுணமாக தேவாதி சரீரங்கள்தோறும் ப்ரவேசித்துத் திரியும். [புகலொழிய] - புகுகைதவிர. ஜ்ஞாநாநந்த லக்ஷணமான வஸ்துவிறே உபசயாத்மகமாய்† அஸ்த்திரமான சரீரத்திலே அகப்பட்டு நோவுபடுகிறது, அதுதவிர. [கண்டுகொண்டொழிந்தேன்] - உத்தேச்யவஸ்துவைக் கண்டு அநுபவிக்கப்பெற்றேன். சரீரப்ரவேசம் தவிர்ந்தேன். [நிறமுடை இத்யாதி]-"ஸர்வபூஷணபூஷார்ஹா:" (ஸர்வபூஷணபூஷார்ஹா:) என்கிறப்டியே ஆபரணத்துக்கு ஆபரணமாய், நாலாய், சுற்றுடைத்தான திருத்தோள்களை யுடையனாய்;

ப்ர:—(புறமறக்கட்டிக்கொண்டு)—மமமாயா துரத்யயா, "தைவீஹ்யேஷா" இத்யாதி॥கசு॥

ஆறும்பாட்டு - புறமற இத்யாதி. "நிறமுடைநால்தடந்தோள்" இத்யாதியாலே - வடிவழகைக் காட்டுகையாலே, இவருடைய இழவை மறப்பித்து இத்யாதி அர்த்தஸித்தம். வடிவழகை யென்றது - "நிறமுடை" இத்யாதியைப்பற்ற காட்டவென்றது - "கண்டுகொண்டு" என்கையாலே அர்த்தஸித்தம். உடம்பை மறந்து என்றது - தம்முடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தை அநுஸந்தித்தபடியாக வந்த து:கத்தை மறந்தென்றபடி. ஈடுபாடு - இவரை இத்யாதி. மெய்யென்றது - சாடு; சரீரமும், ஸத்யமும். மெய்ம்மறக்கப்பண்ணிற்று - சரீரமடியாகவந்த து:கத்தை மறக்கப்பண்ணிற்று.

சப்தார்த்தம் - புச்சம்தோற்றாதபடி இத்யாதி. புறம் - புச்சம். அப்படி அவிழ்த்துக்கொள்ளவொண்ணாதோ? என்ன - மமமாயா இத்யாதி. உக்தப்ரமாணத்துக்கு அர்த்தம் - ஸர்வசக்தியான இத்யாதி. "வினையார்" என்ற பஹுவசநம் - நிந்தாயாம். "குமைக்கும்" என்றது - ஆக்கைக்கு விசேஷணமாகையாலே, பாதிக்கைக்கு விஷயமான வென்றபடி. தகர்க்கும் - பாதிக்கும். இருவல்வினையும் தகர்க்கிறதோ? என்ன - புண்யத்துக்கென்று இத்யாதி. "முறைமுறை" என்றதுக்கு பாவம் - திறந்து இத்யாதி. பதார்த்தம் - ச்வா. ஆக்கை - சரீரம். புகலொழிய - புகுகைதவிர. தேவாதி சரீரபரிக்ரஹம் ஸ்வரூபமன்றோ, தவிருகிறதென்? என்ன-ஜ்ஞாநாநந்த இத்யாதி. உபசயம்-வ்ருத்தி. இது-ஷட்பாவ விகாரங்களுக்கும் உபலக்ஷணம். "கண்டுகொண்டொழிந்தேன்" என்றது-முழுச்சொல்லாய், கண்டேனென்றபடி. இவ்விடத்திலே, நிறமென்று-அழகு. ஸர்வபூஷணபூஷார்ஹா: ஸர்வபூஷணாநி பூஷயிதும் அர்ஹா: என்றபடி.

† குண்டலிதம் க்வாசித்கம்.

"ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்" (ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்) என்கிறபடியே - "முறுவலெடுத்தகலம்" என்னும்படி திருமுகத்தைச் சேவ்வி பெறுத்தாநின்றுள்ள ஸ்மிதத்தையும், இழவுமறக்கும்படி குளிரக்கடாக்ஷிக்கிற திருக்கண்களையு முடையனாய்; தன்னிலும் ஆஶ்ரிதரக்ஷணமாகிற பரமதர்மத்திலே முயலாநின்றுள்ள திருவாழியை யுடைய அழகியதிருக்கையையும், அதுக்குத்தப்பிலும் தப்பவொண்ணாத குளிர்ந்தவடிவழகையும், "இதெல்லாம்எனக்கு" என்று அநுபவிக்கும்படியான ப்ராப்தியையுமுடையவனை - காணப்பெற்றேன். "நீலதோயதமத்யஸ்தா" (நீலதோயதமத்யஸ்த்தா) என்கிறபடியே ஹ்ருதயத்திலே யிருக்கிறபடி. முன்பு இவ்வுடம்பு அவ்வுடம்பை மறப்பித்தாற்போலே, இப்போது அவ்வுடம்பு இவ்வுடம்பை மறப்பித்தது. (சா)

## ஏழாம் பாட்டு.

அம்மானாழிப்பிரான் அவனெவ்விடத்தான்யானார்
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்குங்கண்டீர்
கைம்மாதுன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே
மெய்ம்மாலாயொழிந்தேன் எம்பிரானுமென்மேலானே.

*ஆ.—(அம்மான்.) ஸர்வப்ரகாரத்தாலும் அத்யந்தநிஹீநனாய், கைம்மாதுன்பொழித்தாயென்று பொய்யே தொழுது அலற்றுகையாகிற ப்ராதிகூல்யயுக்தனுமா யிருந்த என்னை, ஸர்வப்ரகாரேணாபி நிரஸ்தஸமாப்யதிகனாயிருந்த தான் தன்னுடைய நிரவதிககாருண்யத்தாலே ஸ்வவிஷய நிரதிஶய அக்ருத்ரிம பக்தியுக்தனாக்கித் தானும் நிரதிஶய அபிநிவேஶயுக்தனாய்க் கொண்டு என்னுள்ளே வந்து புகுந்தருளினானென்கிறார்.*

*ஒ—ஏழாம்பாட்டில், தாம்பெற்ற பேற்றாலே விஸ்மிதரான ஆழ்வார், எத்தனை யேனும் பாபிகளுக்கும் எம்பெருமான் க்ருபையுண்டாகக் கிடையாததில்லை யென்கிறார்.*

*[அம்மானென்று தொடங்கி] - திருவாழியைத் திருக்கையிலேயுடையனான ஸர்வேஶ்வரன் எத்தனையேனுமளவுடையார்க்கும் சென்று கிட்டவொண்ணாத விலக்ஷணன்; நான் அதி*

---

ப்ர:—வஹதேவ்மேஸஹஸா ... ஸ்ரீராமசந்த்ரவைபவம் ... "ஸ்ருஷ்ட்வா ... ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்॥உக॥"

---

"தடம்"-சூழ்வுடைமை; அதாவது- வர்த்துலதை. "ஸ்மிதாதாரம்" என்றதுக்கு அர்த்தம்-முறுவலெடுத்தகலம் என்று. "ஸ்ருஷ்ட்வா ... ஸவிலாஸஸ்மிதாதாரம் பிப்ராணம் முகபங்கஜம்" இதி பஞ்சமேம்ஶே ஸப்தமே. "செய்யவாய்" என்கையாலே-முறுவலை லக்ஷிக்கிறது. "ஸ்மிதாதாரம்" என்கையாலே - போக்யதையில் வந்தால் ஸ்மிதமே போக்யமாய், அதுக்கு ஆதாரமாயிருக்கிறது முகமென்றபடி. இழவு - கீழிற்பாட்டைக் கடாக்ஷித்து. அறவென்று - மிகுதிக்கும், தர்மத்துக்கும் வாசகமாகையாலே, உபயத்தையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - தன்னிலும் இத்யாதி. ஆனால் இவர் கண்டாரோ? என்ன - நீலதோயத இத்யாதி. "ஆக்கைபுகவொழிய" என்றது - ஶரீரநிவ்ருத்தியைப்பற்றவோ? என்ன - முன்பு இத்யாதி. இருவல்வினையார் - புறமறக் கட்டிக் கொண்டு - குமைக்கும் - ஆக்கையிலே - முறைமுறை - புகவொழிய - நிறமுடை என்று தொடங்கி, கண்டுகொண்டொழிந்தேன் இத்யந்வய:. (சா)

க்ஷுத்ரன். [கைம்மாவென்று தொடங்கி] - ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்தியை நீக்கினாற் போலே என்துக்கத்தைப் போக்கவேணுமென்று தலையிலே கையைவைத்து அஹ்ருதயமாகக் கூப்பிட்டே அக்ருத்ரிம பக்தியுக்தனானேன்; என்னை இப்படியாக்கின அவன்தானும் என்னையல்லது அறியானானான். ஆனபின்பு எத்தனையேனும் பாபிகள்மேலும் எம்பெருமானுடைய க்ருபை பெருக்ப்புக்கால் தடையின்றிக்கே பெருகுங்கிடிகோள்.

ப.—அநந்தரம், தன்க்ருபாதிஶயத்தாலே, எத்தனையேனும் நிக்ருஷ்டர்க்கும் ஸ்வவிஷயத்தில் ஆசையைப்பிறப்பித்துத் தானும் விரும்புமென்று, ஸ்வலாபமுகத்தாலே அருளிச்செய்கிறார்.

ஆழி-கையுந்திருவாழியுமாய், பிரான்-ஆஶ்ரிதரை அநுபவிப்பிக்கும் மஹோபகாரகனை, அம்மான் - நிருபாதிக ஸ்வாமியான, அவன் - அவன், எவ்விடத்தான் - (அபரிச்சிந்நஜ்ஞாநரான ஸூரிகளும் அளவிட்டு அநுபவிக்கவொண்ணாதபடி) எந்நிலத்திலே நிற்கிறான்? யான் - (இவ்விஷயத்திலே க்ருத்ரிமோக்த்யாதிகளைப்பண்ணும் நிக்ருஷ்டனான) நான், ஆர் - எவ்வளவாயிருப்பானொருவன்? (இப்படியிருக்க), கைம்மா - (உன்திருவடிகளிலே ஆராதநத்திலே உத்யுக்தமான) ஆனையினுடைய ஜந்மாத்யபகர்ஷம்பாராதே, துன்பு-க்லேஶத்தை, ஒழித்தாய் - போக்கினவனே! என்று-என்று, கை-கை, தலை-தலையிலேயாம்படி, பூசலிட்டே-ப்ரஸித்தமாகக் கூப்பிட்டே, மெய்ம்மால் - பாரமார்த்திக ப்ரேமத்தையுடையேன், ஆயொழிந்தேன் - ஆய்விட்டேன்; எப் - என்தண்மைபாராதே இப்படி திருத்தின, பிரான் - உபகாரகனானவனும், என்மேலான் - என்பக்கலிலே அபிநிவிஷ்டனானான்; (ஆதலால்), எ-எத்தனையேனும், மா பாவியர்க்கும் - மஹா பாபிகளாயிருப்பார்க்கும், விதி - தப்பவொண்ணாத பகவத்க்ருபாரூபவிதியானது, வாய்க்கின்று - பலோந்முகமாமளவில், வாய்க்குங்கண்டீர் - பலித்தேவிடுங்கிடிகோள்.

ஈ.—ஏழாம்பாட்டில், அவன் க்ருபையாலே தாம்பெற்ற பேற்றைக்கண்டு விஸ்மிதரானவர், எத்தனையேனும் அயோக்யர்க்கும் க்ருபையுண்டாக இழக்கவேண்டாகிடீரென்கிறார்.

[அம்மானாழிப்பிரான்]-கையுந்திருவாழியுமான சேர்த்தியை நித்யஸூரிகளை யநுபவிப்பித்துக் கொண்டிருக்கிற ஸர்வேஶ்வரன். [அவனெவ்விடத்தான்]-அவனெவ்வளவிலுள்ளான்; நித்யாநுபவம்பண்ணுகிற நித்யஸூரிகளுக்கும் பரிச்சேதிக்க வொண்ணாதபடி அவ்வருகானவன். [யானார்] - நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகானவன். உபயவிபூதியும் இருவர்க்கும் நடுவே. நீர் கண்டபடி என்? என்னில்,—[எம்மா இத்யாதி]-எல்லாவகையாலும் மஹாபாபத்தைப் பண்ணினவர்கள் பக்கலிலும் பகவத்க்ருபை பெருகப்புக்கால் தகையின்றியிலே பெருகுங்கிடிகோள். பகவத்க்ருபை ஏறிப் பாயப்புக்கால் "கரையிலே நின்றோம்" என்னத் தப்பவிரகில்லை. [கைம்மா இத்யாதி] - "ஜந்மமும் வ்ருத்தமும் ஜ்ஞாநமுமின்றிக்கே பூர்வஜந்மவாஸனையேயான ஆனையினுடைய துக்கத்தைப்போக்குகைக்கு அரைகுலையத்தலைகுலைய மடுவின்கரையிலே வந்து தோன்றினாற்போலே, என் துக்கத்தைப் போக்கவேணும்" என்று கையைத் தலையிலேவைத்து அஹ்ருதயமாகக் கூப்பிட்டே அக்ருத்ரிம பக்தியுக்தனானேன். கைதலை பூசல் - தலையிலே வைத்தகை மாறாதென்றுமாம். ஆனைக்கு உதவினதும் தங்களுக்கு உதவிற்றாக உபகார ஸ்ம்ருதியாலே அஞ்ஜலி பண்ணிச் சொல்லுமத்தை அஹ்ருதயமாகச் சொல்லியே, அந்தப்பொய்ம்மால் போய் மெய்ம்மாலாய் நின்றேன். அவன் செய்ததென்? என்னில், [எம்பிரானுமென்மேலானே]-நான் மெய்சொன்ன அன்றோடு பொய்சொன்ன அன்றோடு வாசியற எனக்கு உபகாரகனாய்ப் போந்தவன், என்னை இப்படியாக்கின தானும் தன் பேறாக மேல்விழுந்தான். க்ருஷியும் தன்னதேயாய்விட்டது. மெய்ம்மாலாயொழிந்தேன் - எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன் க்ருபையாலே தாம் பெற்றபேற்றைக்கண்டு விஸ்மிதராய் பகவத்க்ருபை நடையாடாநிற்க, சிலர்க்கு "நான் அயோக்யன்" என்று இழக்க வேண்டாகிடிகோளென்கிறார்.

[அம்மான்] - ஸர்வேச்வரன். [ஆழிப்பிரான்] - கையும் திருவாழியுமான அழகை நித்யஸூரிகளுக்குக் காட்சி கொடுத்துக்கொண்டிருக்கும் அவன். [அவனெவ்விடத்தான்] - அவனெவ்வளவிலுள்ளார் பரிமாறுமவன். [யானார்] - நித்யஸம்ஸாரிகளுக்கும் இவ்வருகாயிருந்தேன் நான். பிள்ளையமுதனார், "அம்மானாழிப்பிரான்" என்றுமேலேகாட்டி, "யானார்" என்று குறையச்சொல்லிக் காட்டுவர். [எம்மாபாவியர்க்கும் இத்யாதி] - எல்லாவழியாலும் மஹாபாபத்தைப்பண்ணினவர்கள் பக்கலிலும் பகவத்க்ருபை பெருகப்புக்கால் தடையில்லைகிடிகோள். பகவத்க்ருபை பெருகப்புக்கால் "கரையிலேநின்றோம்" என்னாத் தப்பவிரகில்லை. நீர் கிட்டினபடியென்? என்னில், - [கைம்மா இத்யாதி] - ஜந்மவ்ருத்தஜ்ஞாநங்களொன்றுமின்றிக்கேயிருக்கிற ஆனையானது பூர்வஜந்மவாஸனையாலே, முட்டாய்ந்தவாறே "அம்மே" என்பாரைப்போலே, நோவுபட்டவாறே திருவடிகளை ஸ்மரிக்க, ஸர்வாதிகனான தன்மேன்மைபாராதே மடுவின்கரையிலே அரைகுலையத் தலைகுலைய வந்து ரக்ஷித்த நீர்மையை அநுஸந்தித்து, "இதொரு உபகாரமிருக்கும்படியே!" என்று அந்த உபகாரஸ்ம்ருதியாலே ஸ்நேஹிகள் சொல்லும் பாசுரத்தை பாவபந்தமில்லாத நான் சொன்னேன். [கைதலைபூசலிட்டே] - தலையிலே கையைவைத்து, வாயாலேகூப்பிட்டேன்னுதல்; மாறாதே அஞ்சலிபண்ணி என்னுதல். தலையிலேவைத்த கை மாறாதே யென்றுமாம். ஆனைக்கு உதவினது தங்களுக்கு உதவிற்றென்றிருக்கும் பரஸம்ருத்த்யேகப்ரயோஜநர், அந்த

*ஏழாம்பாட்டு.* ***அம்மான் இத்யாதி.*** *க்ருபையாலே யென்றது - "விதிவாய்க்கின்று" என்றத்தைப் பற்ற.* ***தாம்பெற்றபேற்றை*** *யென்றது - "என்மேலானே" என்றத்தைப்பற்ற.* ***கண்டு விஸ்மிதராய்*** *என்றது - அர்த்தஸித்தம். "எம்மாபாவியர்க்கும்" இத்யாதியைப்பற்ற -* **பகவத்க்ருபை** *இத்யாதி.*

*கையுந்திருவாழியுமான* ***அழ***கென்றது - "ஆழி" என்றதுக்கு லக்ஷ்யார்த்தம். "ஆழிப்பிரான்" என்றவிடத்தில், ஸூரிஸேவ்யத்வம் சொன்ன இது - "அவன் எவ்விடத்தான்" என்றத்தைப்பற்ற. ஸூரிவாசகஶப்தம் இங்கில்லையேயாகிலும், "எவ்விடத்தான்" என்று - பரமபதஞ் சொல்லுகையாலே, ஸூரிகளுக்குக் காட்சி கொடுத்து என்னக் குறையில்லை. "பிரான்" என்றத்தால் சொல்லுகிற உபகாரம்— **காட்சி** இத்யாதி. "எவ்விடத்தான்" என்றதுக்கு - லக்ஷணயா, ஸூரிகளுக்காராத்யனென்று அர்த்தமென்று திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறார் - **எவ்வளவில்** இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ஸம்வாதம்-**பிள்ளையமுதனார்** இத்யாதி. **வாய்க்கின்று**- வாய்க்கப்புக்கால். பகவத்க்ருபை பள்ளமடையான அபாபிகளிடத்திலேயன்றோ ப்ரவஹிக்கிறது, மேட்டுமடையான ஸதோஷராயிருக்கிற நம்மளவும் வருமோ? என்ன— **பகவத்க்ருபை** இத்யாதி. கர்மமாகிற கரையிலே நின்றால் தப்பவிரகில்லை யென்றபடி. நீர்கிட்டினபடியென் என்றது - பகவத்க்ருபை எங்கும் பெருகுகிறபடியை யறிந்தபடியென்? என்னி லென்றபடி. திர்யக்கானவன் திருவடிகளை ஸ்மரிக்கக்கூடுமோ? வென்ன **பூர்வஜந்ம** இத்யாதி. "அவனெவ்விடத்தான்" என்றத்தைப்பற்ற-**ஸர்வாதிகனான** இத்யாதி. "கூதஜிூத"† இத்யாதியைப்பற்ற—**அரைகுலைய** இத்யாதி. **ஸ்நேஹிகள்** - அநுஸந்தித்து - சொல்லும் என்று அந்வயம். "துன்பொழித்தாய்" இத்யாதியைப்பற்ற—**இதொரு உபகாரம்** இத்யாதி. "கைதலைபூசலிட்டே" என்றதுக்கு மூன்றர்த்தம். முந்தின அர்த்தத்துக்கு, **பூசலிடுகையாவது** - கூப்பிடுகை; த்விதீயார்த்தத்துக்கு-பூசலிடுகை- கூட்டுகையாய், தலையிலே கையுங்கையுங்கூட்டி அஞ்சலிபண்ணி யென்றபடி; த்ருதீயார்த்தத்துக்கு—"இட்டே" என்கிற அவதாரணத்துக்கு-மாறாதே யென்று அர்த்தமாய், **பூசலிடுகையாவது**-கூட்டுகையாய், தீநதைதோன்றக் கையைத் தலையிலே கூட்டிவைத்தென்றபடி. இப்படி த்ரிவிதமாக அருளிச்செய்தது - முதல்கூப்பீடாய், பின்பு அதுவும் மாட்டாதே அஞ்சலியாய், அதுவும் மாட்டாதே தலையிலே கையைவைக்கையாகிற அர்த்தக்ரமத்தைப்பற்ற. இரண்டாமர்த்தத்துக்கும், மாறாதேயென்றது - ஏவகாரார்த்தம். "கைம்மா துன்பொழித்தாய்" இத்யாதியைக் கடாக்ஷித்து, "மெய்ம்மால்" என்றதுக்கு பாவம் - **ஆனைக்கு** இத்யாதி. **பரஸம்ருத்த்யேக ப்ரயோஜநர்** - நித்ய

† குண்டலிதம்.

உபகாரத்துக்குத்தோற்று உபகாரஸ்ம்ருதியாலே அஞ்சலிபண்ணிச் சொல்லும்பாசுரத்தை, அஹ்ருதய
மாகச் சொல்லி அது நெஞ்சிலே ஊற்றிருந்து பொய்ம்மால்போய் மெய்ம்மாலாய்விழுந்தது: அவன்
உம்மளவில் செய்ததேன்? என்ன,—[எம்பிரானுமென்மேலானே] - (நான் மெய்சொன்னவன்றேடு
பொய்சொன்னவன்றேடு வாசியற) என்றுமொக்க மெய்ம்மாலாய்ப் போருகிறவன் விடுமோ. எனக்
உபகாரகனானவனும், கலியர் சோறுகண்டாற்போலே என்பக்கலிலேவந்து மேல்விழுந்தான். இது
இருந்தபடியால் - [எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்] - எவ்வளவு மஹா
பாபத்தைப்பண்ணினார்க்கும், பகவத்க்ருபை பெருகாநின்றுள்ள விடத்தில் தப்பவிரகில்லைகிடீர்
பூசலிடுகை - ப்ரஸித்தமாகக் கூப்பிடுகைக்கும், ஒன்றோடொன்று ஸம்பந்திக்கிறதுக்கும் பேர். (எ)

## எட்டாம் பாட்டு.

மேலாத்தேவர்களும் நிலத்தேவரும் மேவித்தொழும்
மாலார்வந்தினநாள் அடியேன்மனத்தேமன்னினர்
சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும்நன்மக்களும்
மேலாத்தாய்தந்தையும் அவரேயினியாவாரே.

ஆ.—(மேலாத்தேவர்களும்) நித்ய ஸித்த புருஷர்களாலும், கர்மபூமியிலே வர்த்த
மாநராய் ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டராயிருந்துவைத்து ஸ்வாநுபவைகபோகரான திவ்யபுருஷர்களாலும்
அபிவந்த்யமானான எம்பெருமான் இனநாள் அடியேன்மனத்தே மன்னினான். இனி ஸர்வகால
மும் எனக்கு, சேலேய்கண்ணியரும் பெரும் செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய் தந்தையும்
மற்றுமெல்லாம் ஆவான் அவன் என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், தனக்கு விலக்ஷணபோக்தாக்க ளுண்டாயிருக்கச் செய்தே
என்னுள்ளே இப்போது புகுந்தான், எனக்கினி ஸர்வவிதபோகமும் எம்பெருமானே யென்கிறார்
[மேலாத்தேவரென்று தொடங்கி] அயர்வறும் அமரர்களும் பூமியிலே வைஷ்ணவ
களும் அநந்ய ப்ரயோஜநராய்த் தொழும்படியான பெருமையுடையவர் இப்போது என்னையல்ல
தறியாதே, என்மநஸ்ஸிலேவந்து செறிந்தார். [சேலேயென்று தொடங்கி] இனி ஹொடு
களான ஸ்திரீகளும் அதுக்குறப்பான அபரிமிதஸம்பத்தும் குணவான்களான புத்ராதிகளும்
பரிவுடைய தாயும் தந்தையும் மற்றுமெல்லாமாவார் அவரே.

ப.—அநந்தரம், உபயவிபூதிநாதனான மேன்மையையுடையவன் என்நெஞ்சில் வந்து
புகுந்து தன் ஸர்வவிதபந்துத்வத்தையும் அநுபவிப்பியாநின்றான் என்கிறார்.

மேலாம் - ஸர்வப்ரகாரோத்க்ருஷ்டரான, தேவர்களும் - ஸூரிகளும், நிலம் - இவ்
விபூதியில், தேவரும் - பகவத்ஜ்ஞாநப்ரேமாதிகளாலே உஜ்ஜ்வலஸ்வபாவரான பாகவதரும்,
மேவி - அநந்யப்ரயோஜநத்வாதிகளாலே ஒருசீராகப் பொருந்தி, தொழும் - அநுபவிக்கும்படி

ஸூரிகள். அஹ்ருதயமாக என்றது - முதற்பாட்டைக் கடாக்ஷித்து. மால் - ஸ்நேஹம். மேலுக்கு அவதா
ரிகை - அவன் இத்யாதி. "எம்பிரானுமென்மேலானே" என்றதுக்கு பாவம் - என்றுமொக்க இத்யாதி. ஸட
தார்த்தம் - எனக்கு இத்யாதி. "என்மேலான்" என்றத்தை - ஹேதுவாகக்கொண்டு, "எம்மாபாவியர்க்கும்"
இத்யாதியை உபஸம்ஹரிக்கிறார்-இதுஇருந்தபடியால் இத்யாதி. இது என்பக்கல் ப்ராவண்யம். அம்மான்இத்யா
ரப்ய, யானார், கைம்மாதுன்பொழித்தாய் இத்யாரப்ய, என்மேலானே, ஆகையாலே - எம்மாபாவியர்க்கும் இத்யா
ரப்ய அந்வயம்.

(எ

யான; மாலார் - ஸர்வாதிகாரனவர், (தம்முடைய மேன்மை நிற்கச்செய்தே), இனநாள் - இப்போது, வந்து - என்பக்கலிலே அபிமுகராய்வந்து, அடியேன் - ஸர்வகாலமும் தமக்கு ஶேஷபூதனுன என்னுடைய ஸம்பந்தமே பற்றாசாக, மனத்தே - நெஞ்சுக்குள்ளே, மன்னினர் - ப்ரதிஷ்ட்டிதரானர்; இனி-இனிமேற்பட்டு, (ஔபாதிகபந்துக்கள்போலன்றியே), சேலேய்கண்ணியரும் - விலக்ஷணத்ருஷ்டிகளான ஸ்த்ரீகளும், பெரும் - அதிஶயிதமான, செல்வமும் - ஐஶ்வர்யமும், நல் - குணாதிகரான, மக்களும்-புத்ரர்களும், மேலாப்-ப்ரியஹிதங்களால் மேற்பட்ட, தாய்தந்தையும்-மாதாபிதாக்களும், அவரே - அவரே, ஆவார் - ஆகிநிற்பர். இவ்வோவிஷயஸித்திகளாற்பிறக்கும் ப்ரீதி, தம்மை அநுபவித்துப் பிறக்கும்படி யாகாநின்றாரென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், உபயவிபூதி யுக்தனானவன் விபூதியைவிட்டு என்னுள்ளே ஸ்தாவரப்ரதிஷ்டையாய் நின்றான். நானும் என் விபூதியெல்லாம் அவனேயாகப் பற்றினேனென்

[மேலாம்இத்யாதி]-நித்யஸூரிகளும் பூமியிலுண்டான ஸ்ரீவைஷ்ணவர்களும் ஒரு நீராகச்சேர்ந்துஅடிமைசெய்யும் ஸர்வாதிகனானவன் வந்து. காட்டில் திர்யக்குக்களோடு இளையபெருமாளோடு வாசியற அடிமைகொண்டாற்போலே, விலக்கடியுண்டான ஸம்ஸாரத்திலிருக்கிறவர்களோடு நிலவரான நித்யஸூரிகளோடு வாசியற அடிமைகொள்ளும் ஏற்றத்தை யுடையவனென்கை. [இனநாள்] - இப்போது. பூர்வக்ஷணத்தில் அறியாதேயிருக்க, இங்ஙனே பலித்துக்கொடு நிற்கக்கண்டேன். [அடியேன்மனத்தே மன்னினர்]-ஸம்பந்தமடியாக மநஸ்ஸிலே செறிந்தார். இனி நீர் செய்யப்பார்த்த தென்? என்ன,-[சேலேய் கண்ணியரும்] - போக்யைகளான ஸ்த்ரீகளும் அதுக்குறுப்பான நிரவதிகஸம்பத்தும், குணவான்களான, புத்ரர்களும், பரிவுடையதாயும் தந்தையும் ஆவாரவரே. க்லேஶகரமான அவ்வோபந்துக்களாலே க்லேஶப்படவேண்டா. "மாதா பிதா ப்ராதா", "ஸுஹ்ருத் தாவக".

ஈடு.—எட்டாம்பாட்டு. உபயவிபூதிநாதனானவன் என்பக்கலிலே மேல்விழுந்து என்னை விடாதே ஹ்ருதயத்திலே புகுந்திருந்தான்; நானும் இனி நித்யஸூரிகளைப்போலே நித்யஸம்ஸாரத்தை விட்டு, அவனையே எல்லாவுறவுமுறையுமாகப் பற்றப் பார்த்தே னென்கிறார்.

[மேலாத்தேவர்களும்] - நித்யஸூரிகளும். [நிலத்தேவரும்] - பூஸுரரான ஸ்ரீவைஷ்ணவர்களும். [மேவித்தொழும்மாலார்] - இளையபெருமாளும், இடக்கைவலக்கையறியாத குரங்குகளும் ஒக்க அடிமைசெய்தாற்போலே. இரண்டுவிபூதியிலுள்ளாரும் ஒரு மிடறாகச் சேர்ந்து அடிமைசெய்யும் ஸர்வாதிகனானவன். [வந்து] - தானிருந்தவிடத்தே நான் செல்ல ப்ராப்தமாயிருக்க, நானிருந்தவிடத்திலே தானேவந்து. [இனநாள்] - இப்போது. பூர்வக்ஷணத்தில் அறியாதிருக்க, இங்ஙனே விடிந்துகொண்டு நிற்கக் கண்டேன். இப்படி வருகைக்குஅடியேன்? என்னில், - [அடி

எட்டாம்பாட்டு - மேலாத்தேவர்களும் இத்யாதி. உபயவிபூதிநாதன் என்றது - "
கள்" இத்யாதியைப்பற்ற. என்பக்கலிலே புகுந்திருந்தான் என்றது - "அடியேன் மனத்தே மன்னினர்" என்றத்தைப்பற்ற. நானும்இனி நித்யஸூரிகளைப்போலே நித்யஸம்ஸாரத்தை விட்டென்றது - அர்த்தஸித்தம். "சேலேய்கண்ணியரும்" இத்யாதியைப்பற்ற - அவனையேஎல்லாவுறவு இத்யாதி. உறவுமுறை - ப்ராப்தஸம்பந்தம்.

மேலாத்தேவர்களும் - மேலானதேவர்களும். மேவி - அந்யோந்யம் ஸஹ்ருதயராய். மால் - பெருமை. நித்யஸூரிகளோடொக்க ஸம்ஸாரிகளும் தொழுதமைக்கு த்ருஷ்டாந்தம் - இளையபெருமாளும் இத்யாதி கீழ் இரண்டுபதத்தையுங்கூட்டி ஶப்தார்த்தம் - இரண்டுவிபூதி இத்யாதி. "இனநாள்" என்றத்தை - க்ஷணபரமாக்கி, இப்போது என்கிறார். இதுக்குபாவம்-பூர்வக்ஷணத்தில்இத்யாதி(மனத்துள்ளான்)இத்யாதிக்கு

யேன்] - விடவோண்ணுத ப்ராப்தியை யிட்டு வந்தான். வந்துசெய்ததேன்? என்னில்,—[மனத்தே மன்னினுர்] - "மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான் மலராள் தனத்துள்ளான்" என்கிறபடியே - பரமயோகிகள் நெஞ்சிலும் திருப்பாற்கடலிலும் பெரியபிராட்டியார் திருமுலைத்தடத்திலுமிருக்கக் கடவ அவன், நித்யஸம்ஸாரியாய்ப்போந்த என்நெஞ்சிலே ஸ்த்தாவரப்ரதிஷ்ட்டையாயிருந்தான். இனி நீர்செய்யப்பார்த்த தேன்? என்ன,—இனி எனக்குஒரு செயலுண்டோ? இவனை யொழிய வேன்கிறுர், [சேலேய் இத்யாதி]- தங்கள் நோக்காலே துவக்கவல்ல ஸ்த்ரீகளும், நிரவதிக ஸம்பத்தும், குணுதிகரான புத்ரர்களும், தந்தாமையழிய மாறியாகிலும் ப்ரஜையை நோக்கும் மாதாபிதாக்களுமெல்லாம் இனி அவரே எனக்காகப் பற்றப்பார்த்தே னென்கிறுர். [அவரேயினியாவாரே] - க்லேஶகரமான அவ்வோ ஸம்பந்தங்களாலே க்லேஶப்படவேண்டா. "மாதாபிதா" (மாதா பிதா) "அஹம்தாவத்" (அஹம்தாவத்). (அ)

## ஒன்பதாம் பாட்டு.

ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல் பிறவிக்கடலுள் நின்றுநான்துளங்கத்
தேவார்கோலத்தோடும் திருச்சக்கரம்சங்கினேடும்
ஆவாவென்றருள்செய்து அடியேனெடுமோனனே.

*ஆ.—(ஆவாரார்) - ஆவாரார்துணையென்று அலைநீர்க்கடலுளழுந்தும் நாவாய்போல் பிறவிக்கடலுள்ளே அதிஶயநீயனும்படி நின்று நான்நடுங்க, எம்பெருமான் தன்னுடைய நிரவதிக காருண்யத்தாலே யாவா னென்றுஅருள்செய்து, தன்னுடைய ஸர்வலோகேஶ்வரத்வ ஸூசகமான நிரவதிக ஸௌந்தர்யத்தோடும் திருவாழி திருச்சங்கு தொடக்கமாகவுள்ள திவ்யாயுதங்களோடுங் கூடவந்து, அவர்களோடு கலந்தருளுமாபோலே அடியேனெடும் கலந்தருளினு னென்கிறுர்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸம்ஸாரத்தில் நான் பட்டக்லேசமெல்லாம் நீங்கும்படி தன்னுடைய நிர்வதிக க்ருபையாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து என்னோடே ஸம்ஶ்லேஷித்தா னென்கிறுர்.*

---

ப்ர:—(சேலேய்கண்ணியரும் இத்யாதி)— ஸுபாலோபநிஷதி ॥ சு ॥ "மாதா பிதா ப்ராதா" இத்யாதி. கயோயந்ராகாணூ॥ரு அ॥ [illegible] ஸுநராமதெந ஸு ஶமெந உபாயம் வ்யாத்யாதம் லக்ஷணவசநம் "ஸுஹுதாவநஹாராஜெ" இத்யாதி॥ கூக॥

---

*அர்த்தம் - பரமயோகிகள் இத்யாதி. "மனத்தேமன்னினுர்"என்றதுக்கு ஸப்தார்த்தம் நித்யஸம்ஸாரி இத்யாதி "மனத்துள்ளான்" இத்யாதி பாசுரம், மூன்ருந்திருவந்தாதி மூன்ரும்பாட்டு. "சேலேய்கண்ணியரும்" இத்யாதி விஶேஷணத்துக்குபாவம் - த்யாகத்தினுடைய தௌர்கட்யம் சொல்லுகை. சேல் - மத்ஸ்யம். ஏய்கை - ஒப்பு துவக்கவல்ல - ஈடுபடுத்தவல்ல. புத்ராதிகளை அழியமாறி ஜீவிக்கும் மாதா பிதாக்களை வ்யாவர்த்திக்கிறது. மேலாத்தாய்தந்தை யென்று. ஆவார் - ஆகிறவர்கள்; இதுக்குபாவம் எல்லாம் என்றது. பலிதம் - எனக்காக இத்யாதி. "அவரே" என்கிற அவதாரணார்த்தம் - க்லேஶகரமான இத்யாதி. அவனுடைய ஸர்வவிதபந்துத்வத்திலே ப்ரமாணம் - மாதாபிதா இத்யாதி. "மாதாபிதா ப்ராதா நிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்" இத்யாதி ஸுபாலோபநிஷதி. இப்படியிருந்த பேருண்டோ என்ன, அஹம்தாவது இத்யாதி., அஹம்தாவந்மஹாராஜெவிதாமஹம்நோவஜக்ஷயெ । ப்ராதாமதாஶ்வஶுரஶ்ச பிதாவயோராவயோ:" அடிதொடங்கி, தந்தையும் - ஆவார் - இனி - அவரே இத்யந்வய: தந்தையும் - இனி, (அவரே - ஆவாரோ அவ்ரேயாகாநிற்பரென்று உரையில் அர்த்தம்.* (அ)

[ஆவாரென்று தொடங்கி]-க்ஷுபிதமான கடலின் நடுவே அழுந்துகிற நாவாய் போலே ஸம்ஸாரஸமுத்ரத்தின் நடுவே அகப்பட்டு நின்று ரக்ஷகராவார் ஆரென்று நான் நடுங்க. [தேவாரென்று தொடங்கி] - அறவிலக்ஷணமான ஒப்பனையோடும் திவ்யாயுதங்களோடும் கூடவந்து தன்னுடைய நிரவதிகக்ருபையை என்பக்கலிலே பண்ணி என்னோடே ஸம்ஶ்லேஷித்தான்.

ப.—அநந்தரம், இப்படி ஸர்வவித பந்துவானவன் தன் அஸாதாரண விக்ரஹத்தோடேகூட என்னோடே கலந்தா னென்கிறார்.

துணை-துணை, ஆவார் - ஆவார், ஆர்-ஆர், என்று - சொல்லி, அலை-அலைகிற, நீர்-நீரையுடைத்தான, கடலுள் - கடலிலே, அழுந்தும் - அழுந்துகிற, நாவாய்போல்-நாவாய்போலே, பிறவிக்கடலுள் - ஸம்ஸாரஸமுத்ரமத்யத்திலே, நின்று-நின்று, நான் - (கரையேறிக்கொள்ள மாட்டாத) நான், துளங்க-நடுங்க, (அவ்விழவிலே), தேவு - திவ்ய ஸௌந்தர்யாதிகளால், ஆர்-பூர்ணமான, கோலத்தொடும் - வடிவோடும், திருச்சக்கரம் சங்கினொடும் - அவ்வடிவுக்கு ஶோபாவஹமான திவ்யாயுதங்களோடுங்கூட, ஆஆ என்று-ஐயோ ஐயோ என்று, அருள்செய்து - க்ருபைபண்ணி, அடியேனொடும் - தன்னுடைமையான வென்னுடனே, ஆனான்-கூடினான். கீழ், "விதி" என்று சொல்லிப் போந்தத்தை இங்கே "அருள்" என்று வெளியாக்கினாராயிற்று. தேவு - அழகு; திவ்யமாய், அப்ராக்ருதமென்றபடி.

இ.—ஒன்பதாம் பாட்டில், நான் ஸம்ஸாரத்தில் பட்ட க்லேஶமெல்லாந் தீரும்படி தன் க்ருபையாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து கலந்தானென்கிறார்.

[ஆவாரார் துணையென்று] - இத்தஶையில் நமக்குத் துணையாவாராரென்று. [அலைநீர்இத்யாதி]-க்ஷுபிதமான கடலுக்குள்ளே யழுந்துகிற நாவாய்போலே ஸம்ஸாரார்ணவத்திலே நின்று நான்துளங்க. நாவாயென்று- அதில் நிற்கிறவர்களைச் சொல்லுகிறது; மஞ்சா꞉ க்ரோஶந்தி இதிவத். கேவலம் நாவாயைச் சொன்னபோது, கரையிலே நின்றார், "இதுக்குத்துணையாவாரார்" என்கிறார்களாகக்கடவது. அப்போது-தனக்கு ஓடுகிற தஶையை யுணரமாட்டாதவளவைச் சொல்லுகிறது. நாவாய் "ஆவாரார் துணை" என்கையாவது - "வ்ருஷ்டிவ்ருதீக்ஷாஶ்ரயா꞉" என்றாற்போலே யாகக்கடவது; நடுங்குகையாவது-அசைந்துவருகை. இந்நடுக்கத்தில் அவன் செய்ததென்? என்ன— [தேவாரித்யாதி]- அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடும், அவ்வடிவுக்குச்சேர்ந்த திவ்யாயுதங்களோடும். "ஆழ்வார்களைச்சேர்த்துக்கொண்டாற்போலே என்னையும் சேர்த்துக்கொண்டான்" என்று ஆளவந்தார் நிர்வாஹம். எம்பெருமானார் "கூராராழிவெண்சங்கேந்தி - வாராய் என்று இவர் உகந்தபடியே வந்தான்" என்றருளிச்செய்வர். அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநமே யாகிலும் பூவேளைக்காரரைப்போலே ஆழ்வார்களையொழியக் காணமாட்டார். [ஆவாவென்றருள் செய்து] - ஐயோ! ஐயோ! என்று தன்னுடைய நிரவதிக க்ருபையைப் பண்ணி. *கேசவன்தமர் தொடங்கி, க்ருபையை - விதிஶப்தத்தாலே சொல்லிப் போந்தவர், இப்பாட்டிலே "அருள்" என்று வெளியிடுகிறார். [அடியேனொடுமானானே]- ஸ்வரூபாநுரூபமாக ஶேஷியாய்வந்து கலந்தான்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. பலசொல்லியேன்? நான் ஸம்ஸாரத்தில் பட்ட க்லேஶமெல்லாந் தீரும்படி தன்க்ருபையாலே அப்ராக்ருதமான வடிவோடேவந்து கலந்தானென்கிறார்.

[ஆவாரார்துணையென்று] - துணையாவாராரென்று. [அலைநீரித்யாதி] - க்ஷுபிதமான கடலுக்குள்ளே அழுந்துகிற நாவாய்போலே, ஸம்ஸாரார்ணவத்திலே நின்று நான் நடுங்க. நாவாய்போல் என்கிறவிடத்தில் - நாவாய்மாத்ரத்தை நினைத்தபோது, ஆவாரார் துணையென்றவிடம் - கரையில் நின்றார் வார்த்தையாகக்கடவது. அதுக்குக்கருத்து - நோவுபடாநிற்க உணர்த்தியற்றிருந்தபடி. அன்றிக்கே, மஞ்சா:க்ரோஶந்தி போலே தத்ரஸ்த்தரான புருஷர்களைச் சொல்லிற்றாகவுமாம். நடுங்குகையாவது - அசைந்துவருகை. இந்நடுக்கத்தில் அவன் செய்ததேன்? என்னில்—[தேவாரித்யாதி] - †(தேவு-அழகு; திவ்யமாய், அப்ராக்ருதமென்றபடி.) அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தோடும், அவ்வடிவுக்குச்சேர்ந்த திவ்யாயுதங்களோடேங்கூடவந்து, ஐயோ ஐயோ என்று என்பக்கலிலே க்ருபையைப்பண்ணி, என்னோடேவந்து கலந்தான். ஆளவந்தார் அருளிச்செய்தாராகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி — "(திருச்சக்கரம்சங்கினோடும் - அடியேனோடுமானான் என்று) கையில் ஆழ்வார்களோடு பொருந்தினாற்போலே என்னோடேவந்து கலந்தானென்கிறார்" என்று. அத்தை எம்பெருமானார் கேட்டருளி, "இங்ஙனேயாகவடுக்கும் - 'கூரா

ஒன்பதாம்பாட்டு-ஆவாரார் இத்யாதி. நாலாம்பாட்டும் அஞ்சாம்பாட்டும் தவிரக் கீழ்ப்பாட்டெல்லாம் - தம்மோடேகலந்தமை சொல்லுகையாலே - பலசொல்லி யேன் என்றது. "பிறவிக்கடலுள்நின்று நான் துளங்க" என்றத்தைப்பற்ற-நான் ஸம்ஸாரத்தில் இத்யாதி. தீரும்படி என்றது - அர்த்தஸித்தம். தன்க்ருபையாலே யென்றது-"அருள்செய்து" என்றத்தைப்பற்ற. "தேவார்கோலம்" என்றத்தைப்பற்ற - அப்ராக்ருத இத்யாதி. கலந்தானென்றது - "அடியேனோடுமானான்" என்றத்தைப்பற்ற.

"அலைநீர்க்கடலுள்" என்றதுக்கு அர்த்தம்-க்ஷுபிதமான கடலுக்குள்ளே யென்று. அழுந்துகிற-அமிழாநிற்கிற. "நாவாய்போல்" என்கிற பதத்துக்கு-கௌமாத்ரமாக விசித்தவத்கரித்து, அசேதநமான நாவாய்க்கு, "துணையாவாரார்" என்னும் நினைவு கூடுமோவென்னல்- நாவாய்போல் இத்யாதி. நாவாயைத்ருஷ்டாந்தமாக்கினதுக்கு பாவம்-அதுக்கு இத்யாதி. அதுக்குக்கருத்து என்றது - கரையிலுள்ளார் "இதுக்கு ரக்ஷகரார்" என்று நோவுபடவேண்டும்படி அசேதநமான நாவாய்போலென்றதுக்குக் கருத்தென்றபடி. கரையிலே நின்றார் வார்த்தையாம் பக்ஷத்தில் - தன்னுடைய அவஸ்த்தையைத் தான் சொல்லமாட்டேனென்று கருத்து. நாவாயிலிருக்கிற மநுஷ்யரைச் சொல்லும்போது - தமக்குஜ்ஞானமுண்டாய் "நமக்கு உபாயமாரோ" என்று து:கப்படுகிறாரென்று கருத்து. முந்தினபக்ஷத்தில், அசேதநத்துக்குத் துளக்கமேதென்ன, நடுங்குகை இத்யாதி. மற்றைப்பக்ஷத்தில், மாநஸசலநத்தைச் சொல்லுகிறது. எம்பெருமானார் நிர்வாஹத்திலே நோக்காகவருளிச்செய்கிறார்—அப்ராக்ருத இத்யாதி. "தேவு - கோலத்தொடும்-ஆர்-திருச்சக்கரம் சங்கினொடும்வந்து, ஆவாவென்றருள்செய்து அடியேனொடுமானான்" என்று அந்வயித்து, அப்ராக்ருத இத்யாதிக்கு ஶப்தார்த்தம் கண்டுகொள்வது. "கோலம்" என்றதுக்கு அர்த்தம்-ஸம்ஸ்த்தாநமென்று. "ஆர்" என்றதுக்கு அர்த்தம் - சேர்ந்த என்று. வந்து என்றது - அத்யாஹாரலப்யம். ஆளவந்தார் நிர்வாஹத்தில் ஶப்தநிர்வாஹம் - தேவார்கோலத்தொடும்- அதாவது - அப்ராக்ருதமாய் அழகிதான திருமேனியோடே; திருச்சக்கரத்தொடும் சங்கினொடும் அடியேனொடுமானான்—அதாவது - திருவாழியோடும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும் பொருந்தினாற்போலே, அப்ராக்ருதவிக்ரஹத்தோடே என்னோடேவந்து கலந்தானென்று. "அடியேனொடும்" என்றசஶப்தத்தாலே - கையில் ஆழ்வார்களோடு சேர்ந்தாற்போலே என்னோடேசேர்ந்தா னென்றபடி. அந்தை -

† குண்டலிதக்ரந்தம் க்வாசித்கம்.

ராழிவெண்சங்கேந்தி-வாராய்' என்றுயிற்று இவர் ஆசைப்பட்டிருப்பது, ஆசைப்பட்டபடியே திவ்யாயுதங்களோடேவந்து கலந்தா னென்கிறுர் '' என்று அருளிச்செய்தருளும்படி. இவர் தாம் பூவேளைக்காரரைப்போலே, இவைகாணுதபோது கைமேலே முடிவாரொருவரிறே. [அருள்செய்து அடியேனேடுமானுனே] - * கேசவன்தமர்தொடங்கி, லோபத்தாலே, க்ருபை யை-விதிஶப்தத்தாலே சொல்லிப்போந்தவர், இப்பாட்டிலே "அருள்'' என்று வெளியிடு கிறுர். [அடியேனேடுமோனுன்]- ஸ்வரூபாநுரூபமாக ஶேஷியாயே வந்துகலந்தான்.

## பத்தாம் பாட்டு.

ஆறுளுடையானென்று அஃதேகொண்டுகந்துவந்து
தானேயின்னருள்செய்து என்னைமுற்றவுந்தானுனன்
மீனுயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய்க்
கானுரேனமுமாய்க் கற்கியாமின்னங்கார்வண்ணனே.

*ஆ.—(ஆறுளுடையானென்று.) தான் என்னேடேபண்ணின ஸம்ஶ்லேஷத்தை அநுஸந்தித்தவித்தனையுமேகொண்டு உகந்துவந்து தானே இன்னருள்செய்து, இதுக்கு முன்பு என்னேடு ஒன்றும் ஸம்ஶ்லேஷியாதானுய்க்கொண்டு என்னை வேறு படக்காணவொண்ணுததொருபடி ஸம்ஶ்லேஷித்து, இதுக்கு முன்பு தான் பண்ணியரு ளின ஸர்வதிவ்யாவதாரங்களையும் எனக்கு போக்யமாகக் காட்டியருளினுன். ஆதலால், இதற்குமுன்பு தான்பண்ணியருளின இந்தத் திருவவதாரங்களெல்லாம் என்பக்கலுள்ள அபிநிவேஶத்தாலே; வேறுமெனக்காகப்பண்ண எண்ணினதுக்கும் முடிவுண்டோ வென்கிறுர்.*

---

*'' திருச்சக்கரம்சங்கினெடும்'' என்றத்தை - த்ருஷ்டாந்தமாக யோஜித்த ஆளவந்தார் நிர்வாஹத்தை. எம்பெருமானுர் நிர்வாஹத்தில், ''அடியேனெடும்'' என்றசஶப்தத்துக்கு-அதிஹேயனுன என்னேடும் என்றபடி.* **ஆர் - திருச்சக்கரமென்றது** - *திருமேனிக்குத் தகுதியான வென்றபடி. ஆளவந்தார் நிர்வாஹத்தில்,* **ஆர்கோலம்** - *அழகியதிருமேனி; ''கோலத்தொடும்'' என்ற சஶப்தம் அவ்யயம்; கோலத்தோடேயென்றபடி. எம்பெருமானுர் நிர்வாஹத்திலே ஹேத்வந்தரம் -* **இவர்தாம்** *இத்யாதி. பூவேளைக்காரராவது - ராஜாக்களுக்கு தத்தத்காலங்களிலே பூவிடாவிடில் குத்திக்கொண்டு முடியுமவர் கள்.* **இவை - கைமேலே - காணுதபோது - முடிவாரொருவரிறே** *என்று ப்ரக்ருதார்த்தங் கண்டு கொள்வது; கைமேலேமுடிவார்-யுத்தத்திலே முடிவாரென்று சாடுவுக்கு அர்த்தம். '' அருள்செய்து '' என்கிறவிடத்தில் விதிஶப்தமில்லாமற் போவானென்? என்கிற ஶங்காபரிஹாரார்த்தம் புநःப்ரதீகக்ரஹ ணம் -* **அருள்சேய்து** *இத்யாதி .கேசவன்தமர் தொடங்கி என்றது - '' மதுசூதனை '' என்கிற பாட்டுத் தொடங்கி யென்றபடி. தொடங்கியென்றது - ''என்றுமொன்ருகி'' ''கையார்சக்கரம்'' ''அம்மானுழிப் பிரான்'' என்கிற பாட்டுக்களைப் பற்ற.* **லோபத்தாலே** - *''க்ருபையைவெளியிடவொண்ணுது'' என் கிற லோபத்தாலே. '' அருள்செய்து'' என்கிற ல்யபந்தத்துக்கு - ''* **அடியேனெடுமோனுன்** *'' என்கிற பதத்தோடு ஏகவாக்யதை தோற்றுகைக்காக,* **அருள்சேய்துஅடியேனேடுமானுனே** *என்றுகீழே சொல் விற்று ; இப்போது, ''அடியேனெடுமோனுன்'' என்கிறமாத்ரத்துக்கு - ''* **அடியேன்** *'' என்கிறதினுலே ப்ரதிகோடித்வேநோபஸ்த்திதமாயிருக்கிற ஶேஷித்வ விஶிஷ்டனுய்வந்து கலந்தானென்று அர்த்தவிஶே ஷம் சொல்லுகைக்காக புநःப்ரதீகக்ரஹணம்-* **அடியேனேடுமானு னென்று**. *உரையந்வயம் க்ரமத்திலே.*

[இடங்கோள் இத்யாதி] - பயிர்தேயும்படி களை வளருமாபோலே, ஸாத்விக ரோதுங்கும்படி வளருகிற பாஹ்யஸமயங்களையெல்லாம் பறித்துப்போகடுவாரைப்போலே. "போலே"என்பானேன்? என்னில்:—ஸாத்விகர்க்கு "பிறரைநலியவேணும்" என்றொருஅபி ஸந்தியில்லையிறே; நெற்செய்யப்புல்தேயுமாபோலே, இவர்களூன்றவூன்ற அவை தன்னடையே தேயுமத்தனை. [தடங்கடல்பள்ளிப்பெருமான்] - *தாளுந்தோளும் முடிகளும் பரப்பிக் கண்வளர்ந்தருளுகைக்கீடான பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே கண் வளர்ந்தருளுகிற அழகையநுஸந்தித்து, †"பாலாழிநீகிடக்கும் பண்பை யாங்கேட்டேயும் காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்" என்று, அதிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர் களேயாய். [கிடந்தும் இத்யாதி] - தங்களுக்கு இஷ்டஸர்வசேஷ்டித விஷயமாம்படி பூமியைக் கைக்கொண்டு. ஓரோப்ரதேசங்களிலே கிடந்தும், ஓரோப்ரதேசங்களிலே யிருந்தும், ஓரோவிடங்களிலே நின்றும், பகவதநுபவஜநிதஹர்ஷத்தாலே பலபலபாட்டுக்களைப்பாடியும், மநோஹாரியாம்படி உலாவியும், கால்தரையிலேபாவாதபடி ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணியும். [நாடகஞ்செய்கின்றனவே]- இவர்கள் வ்யாபாரம் இவர்க்கு வல்லா ராடினாற் போலேயிருக்கை. "எம்பெருமானருடைய ஸ்த்திதி கமநஶயநாதிகளை நாம் கொண் டாடுமாபோலேயும், ஆளவந்தார்நடையை ராஜா கொண்டாடினாற்போலேயும் இவர் கொண்டாடுகிறபடி" என்று அருளிச்செய்வர். இந்தும் கீழே । அந்வயம். (௪)

## ஐந்தாம் பாட்டு.

செய்கின்றதேன்கண்ணுக்கொன்றே ஒக்கின்றதிவ்வுலகத்து
வைகுந்தன்பூதங்களேயாய் மாயத்தினாலெங்கும்மன்னி
ஐயமொன்றில்லையரக்க ரசுரர்பிறந்தீருள்ளீரேல்
உய்யும்வகையில்லைதொண்டர் ஊழிபெயர்த்திடுங்கொன்றே.

ஆ.—(செய்கின்றது.) என்கண்ணுக்கொன்று செய்கிறாற்போலே யிரா நின்றது. என்னென்னில் - இந்த லோகத்திலெங்கும் ஆஶ்சர்யமாம்படி வைகுந்தன் பூதங்களேயாய், எங்கும் அவர்களே மன்னுகையாலே அவைஷ்ணவரான உங்களுக்கு உய்யும் வகையின்றியே, அதத்விஷயப்ரவணரான நீங்களெல்லாரும் உபஸம்ஹ்ருதராய், ஸ்ருஷ்டிபேருமாபோலே யிருந்தது; இது நிஸ்ஸம்ஶய மென்கிறார்.

தேயும்படி - க்ஷயிக்கும்படி. களைகை - போக்குகை. ஸ்ரீவைஷ்ணவர்கள் பாஹ்யநிரஸநம்பண்ணினார்களோ, "களைவனபோலே" என்பானென்? என்ன-போலே இத்யாதி. நெற்செய்ய - பிணையடிக்க. புல்தேயும் - களங்களிலிருக்கிற புல்தேயும். "தடங்கடல்பள்ளிப்பெருமான்தன்னுடைப்பூதங்கள்" என்கிற ஸமபிவ்யாஹாரத்தாலே - "பாலாழி" என்கிற பாட்டின்அர்த்தம் உபஸ்திதமாக அத்தையும்கூட்டி பாவம் - தாளும் இத்யாதி. "பாலாழி" இத்யாதிக்கு அர்த்தம் அஸக்ருல்லிகிதம். இவர்கள் வ்யாபாரத்தை "நாடகம்" என்கிறதென்? என்ன- இவர்கள்வ்யாபாரம் இத்யாதி. வல்லார்-கூத்துவல்லார். "அவர்களுடைய ஸ்த்திதிகமநாதிகள் இவர்க்கு ஆகர்ஷகங்கள்" என்றதுக்கு த்ருஷ்டாந்தங்கள் - எம்பெருமானர் இத்யாதி. அருளிச்செய்வர் - நஞ்சீயரிதி ஶேஷ꞉. நாடகம்செய்கின்றன - நின்றார்த்தம் - வாரீரென்று கீழோடே அந்வயம். (௪)

† பெரியதிருவந்தாதி-௩௪.

ஒ.— அஞ்சாம்பாட்டில், ஸ்ரீவைஷ்ணவர்கள், அஸுரராக்ஷஸரான உங்களை முடித்து யுகத்தையும் பேர்ப்பர்க ளென்கிறார்.

[செய்கின்றதென்று தொடங்கி] - செய்கிறபடி பார்த்தோமுக்கு இங்ஙனே யாம்போலே யிராநின்றது. [இவ்வுலகத்தென்று தொடங்கி]-என்னென்னில்;- இவ்வுலகத்திலெங்கும் வைஷ்ணவர்களேயாய் தங்களுடைய இச்சாநுகுணமாக எங்கும்விடாதே வர்த்தித்து. [ஐயமொன்றில்லை] - ஒரு ஸம்சயம் இல்லை. [அரக்கரென்று தொடங்கி]-ராக்ஷஸரும் அஸுரருமாய்ப் பிறந்து வர்த்திக்கிறீர் உள்ளீராகில் ஹேயரான நீங்கள் பிழைக்கைக்கு உபாயம் இல்லை. ஸ்ரீவைஷ்ணவர்கள் மன்னுகையாலே யுகந்தானே உங்களை முடித்துப்போரு மென்றுமாம்.

ப.— அநந்தரம், ப்ரதிகூலரான அஸுர ராக்ஷஸ ப்ரக்ருதிகளைக் குறித்து, ஸ்ரீவைகுண்டநாதனுடைய குணாநுஸந்தாந வித்தரான பாகவதர் உங்களை நிரஸித்துப் போகடுவர்கள், உங்களுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லை யென்கிறார்.

செய்கின்றது - இவர்கள் செய்கிற வ்யாபாரம், என்கண்ணுக்கு - என்கண்ணுக்கு,ஒன்றேயொக்கின்றது- அதிசயிதமாயிருப்பதொன்றுபோலேயிராநின்றது,(ஏதென்னில்), இவ்வுலகத்து - (ப்ரதிகூலப்ரசுரமான) இந்தலோகத்திலே, வைகுந்தன் - பரமபத நிலயனுடைய, பூதங்களே - குணாநுபவவித்தரான பாகவதர்தாங்களே, ஆய் - ஆய், மாயத்தினால் - ஆச்சர்யவ்ருத்திகளாலே, எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும், மன்னி - நிரந்தரவாஸம்பண்ணி, அரக்கரசுரர் - ராக்ஷஸியாயும் ஆஸுரியாயுமுள்ள ப்ரக்ருதிகளோடே, பிறந்தீர் - பிறந்தவர்கள், உள்ளீரேல் - உண்டாகில், தொண்டீர் - இதரவிஷய சபலரானவர்களே, கொன்று-உங்களைநிரஸித்து, (கலி க்ருதயுகமாம்படி),ஊழி-காலத்தை, பெயர்த்திடும்-பேதிக்கும்படியாயிராநின்றது; (ஆதலால்உங்களுக்கு), உய்யும் - உஜ்ஜீவிக்கும், வகை - ப்ரகாரம், இல்லை-இல்லை; (இதில்), ஐயம் - ஸந்தேஹம், ஒன்று - ஒன்றும், இல்லை - இல்லை.

இ.—அஞ்சாம்பாட்டில், வைஷ்ணவர்கள் அஸுரராக்ஷஸரான உங்களையும் முடித்து யுகத்தையும் முடிப்பர்க ளென்கிறார்.

[செய்கின்றது இத்யாதி] - செய்கின்றது-செய்கிறபடி. என்கண்ணுக்கொன்று செய்கிறாப்போலே யிராநின்றது. அதேதென்னில்,—[இவ்வுலகத்து] - பகவத்குணத்துக்கு மேட்டுமடையான தேசத்திலே. [வைகுந்தன் பூதங்களேயாய்] - "மாகவைகுந்தம் காண்பதற்கு" என்றும், "கண்ணன் விண்ணூர்தொழுவே சரிகின்றன சங்கம்" என்றும் ஆசைப்படும் வைஷ்ணவர்களேயாய். [மாயத்தினால்]-"ஸம்பவாம்யாத்மமாயயா" என்கிறபடியாலே, இச்சையாலே. [எங்கும் மன்னி] - எங்கும் வர்த்தித்து. [ஐயமொன்றில்லை] - ஸம்சயமொன்றுமில்லை. [அரக்கர் இத்யாதி] - அஸுரராக்ஷஸரான நீங்கள் மநுஷ்யவேஷத்தைக்கொண்டு பிறந்துகலந்து திரிகிறீருள்ளீராகில். சுகஸாரணர்களைப் போலே கடற்கரையிலே யொற்றுப்பார்க்கவந்தார் குரக்குவடிவைக்கொண்டு. [உய்யும் வகையில்லை] - உஜ்ஜீவிக்கும் விரகில்லை. பகவத்வ்யதிரிக்த விஷயங்களிலே ஸக்தரான நீங்கள். [ஊழிபெயர்த்திடுங்கொன்றே] - வைகுந்தன் பூதங்கள் உங்களைக்கொன்று கல்பத்தையும் போக்குமென்னுதல், ஊழிதானே உங்களையுங்கொன்று தானும் பேருமென்

னுதல். வைஷ்ணவஸகாம்ம் காலதோஷத்தையும்போக்கி விரோதிகளேயும் நஶிப்பிக்கு மென்கை. அரக்கரசுரர் - தொண்டீர் - பிறந்தீருள்ளீரேல் உய்யும்வகையில்லை, வைகுந் தன் பூதங்கள் - கொன்று ஊழிபெயர்த்திடும் - ஐயமொன்றில்லை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஸ்ரீவைஷ்ணவர்கள் அஸுரராக்ஷஸரான உங்களேயும் முடித்து யுகத்தையும் பேர்ப்பர்க ளென்கிறுர்.

[செய்கின்றது இத்யாதி]-செய்கிறபடி பார்த்தேனுக்கு, என் கண்ணுக்கொன்று போலே இராநின்றது. என்போலே இராநின்றதென்றால் ;—ஹகவத்குணங்களுக்கு மேட்டு மடையான ஸம்ஸாரத்திலே, நித்யவிபூதியிலிருப்புக்குத் தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர் களேயாய். [மாயத்தினல் எங்கும்மன்னி] - "மாயாவயுநம் ஜ்ஞாநம்" (மாயாவயுநம் ஜ்ஞாநம்) என்கிறபடியே, இச்சாபர்யாயமான ஜ்ஞாநத்தாலே. இச்சையாலே எங்கும் புகுந் திருந்து. [ஐயமோன்றில்லை] - 'இங்கேயிருந்தே அவ்விருப்புக்குத் தோற்றிருப்பார்கள்' என்ற தில் ஒரு ஸம்ஶயமில்லை. "பேர்த்திடும்" என்னுமதில் ஒரு ஸம்ஶயமில்லை யென்றுமாம். [அரக்கர் இத்யாதி] - ராக்ஷஸராயும் ஆஸுரப்ரக்ருதிகளாயு மிருப்பார் மநுஷ்யஶரீரத்தை யேறிட்டுக்கொண்டு, ஸ்ரீ வாநரஸேனையின் நடுவே சுகஸாரணர்கள் புகுந்தாற்போலே புகுரப்பார்த்தாருண்டாகில் உங்களுக்கு உஜ்ஜீவிக்க விரகில்லை. "வாழாட்பட்டு நின்றீருள்ளீரேல்" என்று - தேடவேண்டாதே, எல்லாரும் வாழாட்பட்டு, அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேலென்று - தேடவேண்டும்படியாயிற்று * ஒன்றுந்தேவுங்கேட்டு ஸம்ஸாரம்

---

அஞ்சாம்பாட்டு - செய்கின்றது இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவர்களென்றது - "வைகுந்தன் பூதங்கள்" என்றத்தைப்பற்ற. அஸுரராக்ஷஸரான உங்களேயும் முடித்தென்றது- "அரக்கரசுரர்பிறந்தீ ருள்ளீரேல் உய்யும்வகையில்லைகொன்றே" என்றத்தைப்பற்ற. யுகத்தையும் பேர்ப்பர்களென்றது - "ஊழிபெயர்த்திடும்" என்றத்தைப்பற்ற. யுகத்தை – கலியுகத்தை.

செய்கிறபடி-ஸ்ரீ வைஷ்ணவர்கள் செய்கிறபடி. பார்த்தேனுக்கு என் கண்ணுக்குஎன்றது - பார்த்திருக்கிற என்னுடைய கண்ணுக்கென்றபடி. ஸ்ரீராமாயணத்தில் 'விஜஹ்ரு-ஸ்ஸஹஸ்ரஶ:' என்கிற விடத்திலே - வித்தமாயிருக்கிற அந்நத்தினுடைய கூடங்களென்று, அந்நஶப்தத் துக்கு லுப்தஷஷ்டியாக அர்த்தம் சொன்னாற்போலே, இங்கேயுங் கண்டுகொள்வது. யத்வா, "பண்டேனமாய்" என்கிற பாட்டிலே "கண்டேனுக்கு" என்கிற பாசுரத்துக்கு அர்த்தம் - கண்டமாத்ரத்திலே என்று சொன்னாற்போலே, பார்த்தேனுக்கு என்கிறதுக்கும் - பார்த்தமாத்ரத் திலே யென்று அர்த்தங்கண்டுகொள்வது. ஒன்றுபோலேயிராநின்ற தென்றது - "ஒன்றேயொக் கின்றது" என்றத்தைப் பற்ற. என்போலே இராநின்றதேன்றல் என்றதுக்கு - "ஊழிபெயர்த் திடும்" என்றத்தோடே அந்வயம். "ஊழிபெயர்த்திடும்" என்றதுக்கு - ஊழியையும் பேர்ப் பர்கள்போலே இராநின்றார்களென்று அர்த்தமானபோது, என்போலேயிராநின்றதென்றல் என்றது - என்போலேயிராநின்றார்க ளென்று லென்றபடி. என்போலேயிராநின்றதென்றல் என்ற அநந்தரம், ஸ்ரீவைஷ்ணவர்கள் உங்களேயுங் கொன்று யுகத்தையும் பேர்ப்பர்கள்போலே இராநின்ற தென்று கண்டுகொள்வது. நித்யவிபூதியிலிருப்பென்றது - "வைகுந்தன்" என்றத்தைப்பற்ற. இச்சாபர்யாயம் என்றதுக்கு நிகண்டு - மாயா இத்யாதி. இச்சையாலே - "எங்கும் வ்யாபித்துத் திருத்தவேணும்" என்கிற இச்சையாலே. ஐயம் - ஸம்ஶயம். "இவ்வுலகத்து வைகுந்தன்பூதங்கள்" இத்யாதிபதங்களைக் கூட்டிக்கொண்டு, "ஓர் ஐயம் இல்லை" என்றந்வயித்து ஶப்தார்த்தம் – இங்கே இத்யாதி. அஸுரராக்ஷஸர்கள் ஸந்நிஹிதராயிருக்கிறார்களோ "அரக்கரசுரர்பிறந்தீர்" என்கைக்கு என்ன - ராக்ஷஸராயும் இத்யாதி. ராக்ஷஸராயும் - ராக்ஷஸப்ரக்ருதிகளாயும். "உள்ளீரேல்" என்று யதிசப்தார்த்த கடிதமாகச் சொல்லுவானென், அத்தனை அபூர்வமோ என்னவாழா

திருந்தினபடி. [தோண்டீர்] - ஸேவாஶ்வவ்ருத்தி:" (ஸேவாஶ்வவ்ருத்தி:) என்கிற இதர விஷயங்களிலே தோண்டுபட்டிருக்க உங்களைக் கல்பந்தானே ஹிம்ஸித்துக்கொண்டு தானும் பேருமென்னுதல்; அன்றிக்கே, வைகுந்தன் பூதங்கள் உங்களையும் கொன்று ஊழியையும் பேர்ப்ப ரென்றுமாம். †(அரக்கரசுரர் - தோண்டீர்-பிறந்தீருள்ளீரேல் உய்யும்வகையில்லை, வைகுந்தன்பூதங்கள் - கொன்று - ஊழிபெயர்த்திடும் - ஐயமொன்றில்லை. இது வாக்யார்த்தத்துக்குச் சேரும்). (ரு)

## ஆறும்பாட்டு.

கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசிதீயனவெல்லாம்
நின்றவ்வுலகிற்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார்
நன்றிசைபாடியுந்துள்ளியாடியும் ஞாலம்பரந்தார்
சென்றுதொழுதுய்ம்மின்தொண்டீர் சிந்தையைச்செந்நிறுத்தியே.

*ஆ.—(கொன்று.) ஸர்வாத்மாக்களுடைய ஸர்வபாதா பரிஹாரார்த்தமாக ஶங்கசக்ரகதா ஶார்ங்காதி திவ்யாயுதோபேத பரமபுருஷ கைங்கர்யைக ஸ்வரூபரான ஸ்ரீவைஷ்ணவஜநங்கள் இந்தலோகத்திலே போந்து, நன்றிசைபாடியும் துள்ளியாடியும் ஞாலம்பரந்தார். நீங்களும் இந்ததேவதைகளைவிட்டு அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு எம்பெருமானை ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.*

*ஒ.—ஆறும்பாட்டில், ஸர்வாத்மாக்களுடைய ஸகலது:கங்களையும் போக்குகைக்காக ஸ்ரீ வைஷ்ணவர்களே லோகமெங்கும் பாடியாடிப்பரந்தார், நீங்களும் இதர தேவதா பரத்வஶங்கையைத்தவிர்ந்து அவனை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார்.*

*[கொன்றுயிருண்ணும் விசாதி] - கொன்று ப்ராணஹாநி பண்ணக்கடவதான வ்யாதிதொடக்கமானவை நின்று. [கடிவான்] - கடிகைக்காக. [நேமிப்பிரான்தமர்போந்தார்] - ஸஞ்சரிக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள். துள்ளியாடுகை - ஸஸம்ப்ரமமாக ஆடுகை.*

*ப.— அநந்தரம், ஸாம்ஸாரிக ஸகலக்லேஶமும் தீரும்படி ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான திருவாழியையுடைய ஸர்வேஶ்வரனுக்கு அடியாரானவர்கள் ஜகத்தெங்கும்*

---

*இத்யாதி. நிரதிசய ஸுகரூபமான அடிமைப்பட்டுநின்றபேருண்டாகி விதயர்த்த:. திருப்பல்லாண்டு(௩). கொண்டு - இதரவிஷயசாபல்யமென்றர்த்தம், ஸேவா இத்யாதி. "ஊழி" - கல்பம் - கலியுகம். செய்கின்றதென் கண்ணுக்கென்று தொடங்கி, எங்கும் மன்னிநின்றார்கள், ஐயமொன்றில்லை, தொண்டீரான - அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும்வகையில்லை, ஊழியானது - உங்களையுங்கொன்று - தானும்பேர்த்திடுமென்று ப்ரதமயோஜனைக்கு அந்வயம். செய்கின்றதென் கண்ணுக்கென்று தொடங்கி எங்கும் மன்னினார்கள் ஐயமொன்றில்லை, தொண்டீரான- அரக்கரசுரர்தொடங்கி, உய்யும்வகையில்லை, உங்களையுங்கொன்று - ஊழியையும் பேர்த்திடுமென்று இரண்டாம்யோஜனைக்கு அந்வயம். அர்த்த பேதமொழிய அந்வயத்தில் அதீவ பேதமில்லை. (ரு)*

† *குண்டலிதக்ராந்தம் க்வாசித்கம்; வ்யாக்யாநத்துக்கும் சேராது.*

பரந்தார்கள்; அவர்களை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்று கீழ்ச்சொன்னவர்களை நோக்கி அருளிச்செய்கிறார்.

கொன்று - ஶரீரத்தைமுடித்து, உயிர் - ப்ராணனை, உண்ணும் - க்ரஸிக்கக் கடவ, விசாதி - வ்யாதியும், பகை - பகையும், பசி - பசியும்முதலான, தீயன - க்ரூரஸ்வ பாவங்கள், எல்லாம் - எல்லாவற்றையும், இ-இந்த, உலகில் - லோகத்திலே, நின்று - நின்று, கடிவான் - கடிகைக்காக, நேமி - சக்ராயுதனான, பிரான் - ஸர்வேஶ்வரனுடைய, தமர் - அடியாராய்க்கொண்டு, போந்தார் - போந்தவர்கள், நன்று-விலக்ஷணமான, இசை- இசைகளை, பாடியும் - பாடியும், துள்ளி - ஸஸம்ப்ரமமாகக் கிளர்ந்து, ஆடியும் - ஆடியும், ஞாலம் - பூமியெங்கும், பரந்தார் - பரந்தார்கள்; தொண்டீர் - (தேவதாந்தரங்களையும் விஷயாந்தரங்களையும் உத்தேஶ்யமாகவும் போக்யமாகவும் நினைத்து) சபலரானவர்களே! சிந்தையை - உங்கள் அந்யபரமான நெஞ்சை,(ப்ராப்தமான பாகவதவிஷயத்திலே),செம்- செவ்விதாக, நிறுத்தி - நிறுத்தி, சென்று-(அவர்கள் பரிஸரத்திலே) சென்று, தொழுது- மோக்ஷத்வாநுரூபவ்ருத்தியைப்பண்ணி, உய்ம்மின் - பிழைக்கும்படி பாருங்கோள்.

இ.—ஆறும்பாட்டில், ஸகலருடைய துக்கங்களையும் போக்குகைக்காக ஸ்ரீ வைஷ்ணவர்கள் லோகமடங்கப் பரந்தார்கள், அவர்களோடே நீங்களும் அவனை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

[கொன்றுஇத்யாதி] - கையுந்திருவாழியுமான அழகிலே ஈடுபட்டிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், கடிவான் போந்தாரானவர்கள் - அதுக்காக லோகத்திலே பூமியிலே பரந்தார்கள். "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்தோ மஹாபாகோ மஹீயதே" - இத்யாதி. [நன்று இத்யாதி] - பகவதநுபவஜநித ஹர்ஷத்தாலே நன்றான இசையைப் பாடியும். துள்ளியாடுகை - ஸஸம்ப்ரமமாக ஆடுகை. [சென்று இத்யாதி.] - சென்று அவர்களைத் தொழுது உஜ்ஜீவியுங்கோளென்று பணிக்கும் திருமாலையாண்டான். அவர்களோடே சென்று ஸர்வேஶ்வரனைத் தொழுது உஜ்ஜீவியுங்கோளென்று அருளிச்செய்வர் எம்பெரு மானார். [தொண்டீர்] - தேவதாந்தரங்களிலே பரத்வஶங்கைபண்ணி அவ்வோவிடங் களிலே தொண்டுபட்டிருந்தவர்கள். திருத்துகைக்கு யோக்யதையுண்டானவர்கள். "ஶஜ்ஜந்தா ஶ்ருத்யா நஶ்யந்தி நஶ்யந்தி । நாயம் லோகோஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மந:". தேவதாந்தரங்களிலும் ப்ரயோஜநாந்தரங்களிலும் போன நெஞ்சை வகுத்த விஷயத்திலே அநந்யப்ரயோஜநமாக்கி. "யத்ராஷ்டாக்ஷரஸம்ஸித்த:" - என்னக்கடவதிறே.

ஈடு.—ஆறும்பாட்டு. ஸகல துக்கங்களையும் போக்குகைக்காக ஸ்ரீவைஷ் ணவர்கள் லோகமடங்கப் பரந்தார்கள்; அவர்களோடே நீங்களும் அவனை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

---

ஆறும்பாட்டு - கொன்றுயிர் இத்யாதி. ஸகலதுக்கங்களையு மென்றது - "கொன்று" இத்யாதியைப்பற்ற. போக்குகைக்காக என்றது - "கடிவான்" என்றத்தைப்பற்ற. ஸ்ரீவைஷ்ண வர்களென்றது - "நேமிப்பிரான்தமர்" என்றத்துக்கு எம்பெருமானார் நிர்வாஹத்தைப்பற்ற. லோக மடங்கப் பரந்தார்க ளென்றது - "ஞாலம்பரந்தார்" என்றத்தைப்பற்ற. "சென்றுதொழுதுய்ம்மின்" இத்யாதியைப்பற்ற - அவர்களோடே இத்யாதி.

[கோன்றுயிர் இத்யாதி] - தேஹவிஶ்லேஷத்தைப் பிறப்பித்து ப்ராணன்களை அபஹரிக்கக்கடவதான வ்யாதி. அன்றிக்கே, ப்ராணனை விஶ்லேஷிப்பித்து ஶரீரத்தை முடிக்கும் வ்யாதியென்னுதல். உயிரென்று - இப்போது, ஶரீரம். அப்படி செய்யும் பகையும் பசியும். இப்படி பிரித்துச்சொல்லுகிறதென்? தண்ணியவையெல்லாம்,—[நின்றிவ் வுலகில்கடிவான்] - விடாதே நின்று போக்குகைக்காக. [நேமிப்பிரான் தமர்போந்தார்] - கையுந்திருவாழியுமான அழகிலே தோற்றிருக்குமவர்கள் வந்தார்கள். போந்தநேமிப்பிரான் தமர் [நன்று இத்யாதி] - நன்றான இசைபாடியும், ஸஸம்ப்ரமந்ருத்தம்பண்ணியும், இப்படி பூமியடையப் பரந்தார்கள். [சென்றுதொழுதுய்ம்மின்] - அவர்கள்பாடே சென்று அவர்களைத்தொழுது உஜ்ஜீவித்துப் போங்கோ ளென்னுதல்; அவர்களோடே சென்று ஸர்வேஶ்வரனை யாஶ்ரயித்து உஜ்ஜீவித்துப் போங்கோ ளென்னுதல். [தொண்டீர்] - அப்ராப்த விஷயத்தில் தொண்டுபட்டிருக்கிற நீங்கள். திருந்துகைக்கு யோக்யதையுடைய நீங்கள். அதுசெய்யுமிடத்தில் [சிந்தையைச் செந்நிறுத்தியே] - தொழுதவநந்தரம் **“தெஹிமெதஷா மிதெ”** (தேஹிமேததாமிதே) என்னுதே தொழுங்கோள். (சு)

# ஏழாம்பாட்டு.

நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்களும்மையுய்யக்கொள்
மறுத்துமவனோடேகண்டீர் மார்க்கண்டேயனுங்கரியே
கறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லால்தெய்வமில்லை
இறுப்பதெல்லாம் அவன்மூர்த்தியாயவர்க்கேயிறுமினே.

---

*முந்தின அர்த்தத்துக்கு, உயிரென்று - ப்ராணன், கொன்றென்றதுக்கு - தேஹத்தையென்று அயாஹரிப்பது. த்விதீயார்த்தத்துக்கு, உயிரென்று-ஶரீரம், ப்ராணனையென்று அத்யாஹரிப்பது. முந்தினவர்த்தத்திலே - கொல்லுகைக்கும் உண்கைக்கும் ப்ராணன்கள் விஷயம்; த்விதீயார்த்தத்துக்கு - ஶரீரம் விஷயம். இப்போது - இரண்டாமர்த்தம் சொல்லுகிறபோது. “கொன்றுயிருண்ணும்” என்றத்தை - பகை பசிக்கும் விஶேஷணமாக்கி அருளிச்செய்கிறார் -* **அப்படி** *இத்யாதி.* **தண்ணியவையெல்லாம்** *என்றது - “தீயனவெல்லாம்” என்றத்தைப்பற்ற. “விசாதிபகைபசி” என்றத்தை -* “**வ்யாயிஜ ஷஷி த்ருக்ஷுத்ஸராஃ**” *என்றத்தோடே யோஜித்தும் அருளிச்செய்வர்.* **விடாதே** *என்கிறதுக்குக் கீழே - இவ்வுலகில் என்று அந்வயித்துக்கொள்வது.* **விடாதே** *யென்றது - அர்த்தஸித்தம்.* **நேமிப்பிரான்தமர்** *- ஆளவந்தார் நிர்வாஹத்திலே, நித்யஸூரிகள்; எம்பெருமானார் நிர்வாஹத்திலே,* **ஸ்ரீவைஷ்ணவர்கள்.** **போந்தநேமிப்பிரான்தமர்** *- செய்ததென்னென்னில் என்று அத்யாஹரிப்பது. போந்த - வந்த. திருமாலையாண்டான் நிர்வாஹம் -* **அவர்கள்பாடே** *இத்யாதி. அவர்கள் - நித்யஸூரிகள்.* **பாடேசென்று** *- ஸமீபத்திலே போய். எம்பெருமானார் நிர்வாஹம் -* **அவர்களோடேசென்று** *இத்யாதி. விவரணம்-* **திருந்துகைக்கு** *இத்யாதி. அதாவது - அப்ராப்த விஷயத்திலேயாகிலும் ஶேஷத்வத்துக்கு இசைகையாலே, திருந்துகைக்கு யோக்யதையுடைய நீங்களென்றபடி. அது - ஆஶ்ரயணம்.* **செந்நிறுத்தி** *- செவ்வையாக நிறுத்தி. சிந்தைக்குச் செவ்வையாவது - அநந்ய ப்ரயோஜநத்தையென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-* **தொழுத** *இத்யாதி. தொண்டீர், கொன்றுயிருண்ணுமென்று தொடங்கி, தீயனவெல்லாம் - இவ்வுலகில் - நின்று - கடிவான் நேமிப்பிரான் தமர் போந்தார்; போந்த நேமிப்பிரான் தமர், நன்றிசைபாடியுந்தொடங்கி, பரந்தார்; அவர்களோடே மின்சென்று - சிந்தையைச்செந்நிறுத்தி - தொழுதுய்ம்மின் இத்யந்வயঃ* (சு)

ஆ.—(நிறுத்தி.) மற்று, நாங்கள் ஆச்ரயிக்கிற ப்ரஹ்மருத்ராதிதேவதைகள் எங்களுக்கு ரக்ஷகராகமாட்டாரோவென்னில்; - உங்களாலே ஸமாச்ரிதைகளான தேவதைகள், உங்களை எம்பெருமான் ரக்ஷிக்குமிடத்தில் புருஷகாரமாமத்தனை; இப்பொருளில் மார்க்கண்டேயனும் ஸாக்ஷி. ஆகையால், நாராயணனே ஸர்வேச்வரன், இதிலொன்றும் ஸம்சயிக்க வேண்டா. ஆதலால் அவனை யாச்ரயியுங்கோள். அக்நீந்த்ராதிதேவதைகளையும் ஆராத்யதயா சாஸ்த்ரங்கள் ப்ரதிபாதியாநின்றனவிறே யென்னில்; - அப்படியன்று சாஸ்த்ரங்களில் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்; - அக்நீந்த்ராதி ஸமஸ்ததேவதாந்தர்யாமிதயா சரீரிபூதனான பரமபுருஷனே ஸர்வகர்மஸமாராத்யனென்றது. ஆனபின்பு, நித்யநைமித்திககாம்யரூப ஸர்வகர்மங்களாலும் அக்நீந்த்ராதி ஸமஸ்ததேவதாந்தர்யாமியான பரமபுருஷனை யாச்ரயியுங்கோ ளென்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், உங்கள் தேவதைகள் உங்களை ரக்ஷிப்பது அவன் ப்ரஸாதத்தாலே யானபின்பு அவர்களை "அவனுக்கு சேஷபூதர்" என்று புத்திபண்ணி, தத்ஸமாராதந புத்யா அவர்களை ஆச்ரயியுங்கோ ளென்கிறார்.

[நிறுத்தியென்று தொடங்கி] - உங்கள் ஹ்ருதயங்களிலே நீங்கள் நிறுத்திக்கொள்ளுகிற தேவதைகள் உங்களை ரக்ஷிக்கும்போது தாங்களாக ரக்ஷிக்க க்ஷமரல்லாமையாலும் அவன் ப்ரஸாதங்கொண்டே ரக்ஷிப்பது; இவ்வர்த்தத்துக்கு ஸ்ரீமார்க்கண்டேய பகவான் ஸாக்ஷி. [கறுத்தமனமொன்றும் வேண்டா] ஸம்சயிக்கவேண்டா. [இறுப்பதென்று மேலுக்கு] - இந்த்ராதி தேவதைகளை சரீரமாகக்கொண்டு அவர்களுக்கு அந்தராத்மதயா நின்றான் ஸர்வேச்வரனென்று புத்திபண்ணி அத்தேவதாமுகமாகப் பண்ணும் நித்யநைமித்திககர்மங்களை தத்ஸமாராதநபுத்யா பண்ணுங்கோள்.

ப.—அநந்தரம், தேவதாந்தரபரரானாரைக்குறித்து; அவனையொழிய இவர்களுக்கு ரக்ஷணசக்தியில்லை, ஸர்வஸுலபனான க்ருஷ்ணனே பரதேவதை, ஆனபின்பு, தேவதாந்தரவிஷயமான நித்யநைமித்திகாதிதர்மங்களை, அவர்களுடைய பகவச்சரீரத்வ புத்தியைப்பண்ணி அநுஷ்டிக்கும்படி பாருங்கோ ளென்கிறார்.

நும் - உங்கள், உள்ளத்து - நெஞ்சுக்குள்ளே, நிறுத்தி - ஸ்வாச்ரயமல்லாமையாலேவலியப்பிடித்து நிறுத்தி, கொள்ளும் - கொள்ளும், தெய்வங்கள் - தெய்வங்கள், உம்மை - உங்களை, உய்யக்கொளும் - உஜ்ஜீவிப்பித்துக்கொள்வதும், அவனோடே - தங்களுக்கும் பலப்ரதத்வசக்தி கொடுத்தவன்தன்னோடே, மறுத்து - மீண்டு சென்று கிட்டிக்கிடீர், (இது),மார்க்கண்டேயனும் - மார்க்கண்டேயனும், கரி - ஸாக்ஷியாக, கண்டீர் - கண்டிகோள், (ஆகையாலே), கறுத்த - (இதரதேவதாபரத்வப்ரதிபத்தி பண்ணும்படி)மலிநமான, மனம்-நெஞ்சு, ஒன்றும் - ஒருபடியாலும், வேண்டா - வேண்டுவதில்லை; ("யோயோயாம்யாம் தநும் ஭க்த:" என்கிறபடியே), கண்ணனல்லால் - (தேவதாந்தரங்களுக்கு சரீரியான) க்ருஷ்ணனையொழிய, தெய்வம் - பரதேவதை, இல்லை - இல்லை, (ஆனபின்பு), இறுப்பது-சாஸ்த்ரீயமாய்க் கர்த்தவ்யமான நித்யநைமித்திகங்களை, எல்லாம் - எல்லாம், அவன் - அந்தக்ருஷ்ணனுக்கு, மூர்த்தியாயவர்க்கே - சரீரங்களான அந்தந்தேவதைகளை விஷயீகரித்து, இறுமின் - ஸர்வயஜ்ஞாநாம்போக்தாவான அந்த க்ருஷ்ணன் பர்யந்தமாக ஸமர்ப்பியுங்கோள். இதிலே - பாகவதோத்கர்ஷஹேதுவான ப்ராரம்பம் சொல்லிற்றாயிற்று.

இ.—ஏழாம்பாட்டில், நாங்கள் நெடுநாளாஸ்ரயித்தவர்களை பலம்கிட்டுவதற்கு முன்பே விடவோவென்னில்; அவர்கள் பலம் தருவதும் அவனைக் கொண்டாயிற்று, ஆன பின்பு "அவர்கள் அவனுக்கு ஶரீரபூதர்" என்று புத்திபண்ணி பகவத்ஸமாஸ்ரயண புத்யா ஆஸ்ரயியுங்கோளென்கிறார்.

[நிறுத்தி இத்யாதி] - உங்கள்நெஞ்சிலே நீங்கள் நிறுத்திக்கொள்ளுகிற தேவதைகள். த்யேயவஸ்துக்களை நிறுத்துகையும் த்யாதாவுக்கே பரமென்கை. "ஜுஹூஷோ த்ரூ: ஶாஸ்த்ரேஷா யே ருத்ர நிதிஷ்டி" என்கிறவன் அவஸரப்ரதீக்ஷனாய் நிற்கிறதன்றே; யுக்த்யாபாஸங்களாலும் வசநாபாஸங்களாலும் பொரிபுறந்தடவி நிறுத்துகை. [உம்மையுய்யக்கொள்]-உங்களை உய்யக்கொள்ளுமிடத்தில். ரக்ஷிக்கும்போது தாங்கள் அக்ஷமராகையாலே; "பேணிலும் வரந்தர மிடுக்கிலாத தேவரை", "திருவில்லாத் தேவரை"; [மறுத்துமவனோடே கண்டீர்]-மீண்டுமவனோடே சேர்த்து அவன் ப்ரஸாதத்தாலே கிடீர். நீங்கள் அவர்களை யாஸ்ரயித்தாலும் பலம்தருவான் அவனே; "ஶமைத:"; "நஹி பாலந ஸாமர்த்யம் ருதே ஸர்வேஶ்வரம் ஹரிம்". இவர்களை யாஸ்ரயிக்க, வேறேயொருவன் பலம் தருமதெங்கே கண்டோமென்னில், [மார்க்கண்டேயனும் கரியே]-ஸ்ரீமார்க்கண்டேயபகவான் ஸாக்ஷி. [கறுத்தமனமொன்றும் வேண்டா] - இதரதேவதைகள்பக்கல் பரத்வபுத்தியாகிற தண்ணிய நெஞ்சு ஒன்றும் உங்களுக்குவேண்டா. "ஜந்ஶாஸ்த்ரஸ்யாநஸ்ய ஸம்ஶயாத்ரா. [கண்ணனல்லால் தெய்வமில்லை] - "ஸவைஷ தேவா தேவகீபுத்ர ஏவ" என்கிறபடியே க்ருஷ்ணனை யொழிய ஆஸ்ரயணீயரில்லை. அவனுக்கு ப்ரகாரபூதராய்க் கொண்டு உளராமித்தனை அல்லாததேவதைகள்; "யோயோ யாம்யாம் தநும் பக்த:". [இருப்பதெல்லாம்] - "தேவதாராதநம்" என்று தோற்றுகிற நித்யநைமித்திக கர்மமெல்லாம். [அவன்மூர்த்தியாயவர்க்கே யிறுமினே] - "இவர்கள் அவனுக்கு ஶரீரபூதரானவர்கள், அந்தராத்மா ஸர்வேஶ்வரன்" என்று புத்திபண்ணி தத்ஸமாராதந புத்யா பண்ணுங்கோள். தன் திருவடிகளைப் பிடித்தார்க்குத் தானே பலங்கொடுக்கக்கடவனாயிருக்குமிறே அவன்.

ஈடு.—ஏழாம்பாட்டு. நாங்கள் நெடுநாள் தேவதைகளுக்குப் பச்சையிட்டு ஆஸ்ரயித்துப் போந்தோம்; அதின்முடிவுகண்டு பின்னை பகவத்ஸமாஸ்ரயணம்பண்ணுகிறோமென்ன; நீங்கள் ஆஸ்ரயிக்கிற தேவதைகள் உங்களை ரக்ஷிப்பதும் அவன்பக்கலிலே கொண்டுசென்று காட்டிக்கொடுத்தாயிற்று, ஆனபின்பு, அவனையே ஆஸ்ரயிக்கப் பெறில்அழகிது; அதுவும் மாட்டிகோளாகில், நீங்கள் அவர்களுக்கு இடுகிறவற்றை "இவர்கள் அவனுக்குத்தநு

---

ஏழாம்பாட்டு - நிறுத்தி இத்யாதி. "அவனோடேகண்டீர்" என்கையாலே உத்தரப்ரத்யுத்தரமாக அருளிச்செய்கிறார் - நாங்கள் இத்யாதி. இந்த ஶங்காபரிஹாரம் "ஓடியோடி" என்கிற பாட்டிலும் சொல்லிற்றே யென்னில்; அங்கே - அவர்களையாஸ்ரயித்தால் பலமில்லை யென்றது, இங்கு- தேவதைகள் ஈஶ்வரன்பக்கலிலே கொடுபோய்ச் சேர்ப்பர்களென்கிறதாகையாலே புநருக்தியில்லை. "நிறுத்தி" இத்யாதியைப்பற்ற, நீங்கள்ஆஸ்ரயிக்கிற இத்யாதி. அவனையேயாஸ்ரயிக்கப்பெறில் அழகிதென்றது - கீழிற்பாட்டில் "சென்றுதொழுதுய்ம்மின்" என்றத்தைக் கடாக்ஷித்து. இடுகிறவற்றை யென்றது - "இருப்பதெல்லாம்" என்றத்தைப்பற்ற. அவனுக்குத்தநுபூதர் என்றது - "அவன்

பூதர், இவர்கள் முகத்தாலே நாம் பகவத்ஸமாராதநம்பண்ணுகிறோம் '' என்று புத்திபண்ணியாகிலும் இடப்பாருங்கோ ளென்கிறார்.

[நிறுத்தி] - த்யேயவஸ்துவை ஸ்த்திதிப்பிக்கையும் த்யாநம் பண்ணுகிறவனுக்கே ஹாரமாயிற்று. ஆஸ்ரயிக்கிற இவன் எடுத்துநிறுத்த, நிற்கிறவையிறே அவை. [நும்முள்ளத்துக்கொள்ளும் தெய்வங்கள்]- உந்தாமுடைய ஹ்ருதயங்களிலே கொள்ளுகிற தேவதைகள். [உள்ளத்துக்கொள்ளும்] - ''புறம்பே சிலரறியில் அபஹஸிப்பர்கள் '' என்று தாங்களறிந்தாக உபாஸிக்குமத்தனை. [உம்மையுய்யக்கொள்] - உந்தாமை உஜ்ஜீவிப்பித்துக்கொண்டார்களாகிறபடி. [மறுத்துமித்யாதி] - நீங்கள் ''அவனிலும் இவர்கள் ஆஸ்ரயணீயர்'' என்றுபற்ற, இவர்கள் உங்களை அவன்பக்கலிலே கொண்டுபோய்க்கிடிகோள் ரக்ஷிப்பது. என்றும் ரக்ஷணதர்மம் கிடப்பது அவன்பக்கலிலே, ''நஹிபாலநஸாமர்த்யம்ருதே ஸர்வேஸ்வரம்ஹரிம்'' (நஹிபாலநஸாமர்த்யம்ருதேஸர்வேஸ்வரம்ஹரிம்) என்கிறபடியே வேறுசிலரை யாஸ்ரயிக்க, அவன் பலப்ரதனாகையாவதென்? என்ன, [மார்க்கண்டேயனும் கரியே] - கரியென்று-ஸாக்ஷிக்குப் பேர். இவ்வர்த்தத்துக்கு ஸாக்ஷி ஸ்ரீமார்க்கண்டேயன். அவன் நெடுநாள் தேவனையாஸ்ரயிக்க, அவனைப்பார்த்து, ''நெடுநாள் நீ நம்மையாஸ்ரயித்தாய், இவ்வாஸ்ரயணம் பாழேபோகவொண்ணாது, உன்னோடு என்னோடு வாசியில்லை, உனக்கொருபுகல்காட்டித்தரப்போரு'' என்று ஸர்வேஸ்வரன் பக்கலிலே கொண்டுசென்று, அவன் அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டிக்கொடுத்தான்; ஆனபின்பு, இதில் ஸாக்ஷி அவனே. [கறுத்தமனமொன்றும்வேண்டா] - க்ஷுத்ரதேவதைகள் பக்கலிலே பரத்வ ப்ரதிபத்திபண்ணியிருக்கும் தண்ணியநெஞ்சு உங்களுக்கு வேண்டா. [கண்ணனல்லால் தெய்வமில்லை] - ''ஸர்வே தேவா தேவகீ புத்ர ஏவ'' (ஸர்வேதேவா தேவகீ புத்ர ஏவ) என்கிறபடியே, அவனுக்கு ப்ரகாரமாயல்லது ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு தேவதை

---

ப்ர:—(கண்ணனல்லால் தெய்வமில்லை) — [illegible] ''ஜ்யோதீம்ஷி ஶுக்ராணி ச யாநி லோகே த்ரயோ லோகா லோகபாலாஸ்த்ரயீ ச । த்ரயோऽக்நயஶ்சாஹுதயஶ்ச பஞ்ச ஸர்வே தேவா தேவகீபுத்ர ஏவ ॥''.

---

மூர்த்தியாய் '' என்றத்தைப்பற்ற. இடப்பாருங்கோள் என்றது - '' இறுமின் '' என்றத்தைப்பற்ற.

இவன் ஸ்த்திதிப்பிக்கவேணுமோ? ஸ்வயமாக நிற்கமாட்டார்களோவென்ன, - த்யேயவஸ்துவை இத்யாதி. விவரணம் - ஆஸ்ரயிக்கிற இத்யாதி. அடுத்து என்று பாடமானபோது - பலாத்கரித்தென்றபடி. நிறுத்த- ஸ்த்திதிப்பிக்க. '' உள்ளத்து '' என்றதுக்குபாவம்-புறம்பே இத்யாதி. உய்யக்கோள்-ரக்ஷிப்பது. மறுத்தும்-பின்னையும். ரக்ஷணதர்மம்ந்த தேவதைகளுக்கில்லையோவென்ன என்றும் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் நஹி இத்யாதி. இதம் ப்ரமாணம் பூர்வமேவ லிகிதம். அது எப்படியென்ன - அவன்நெடுநாள் இத்யாதி. ஸர்வேஸ்வரன்பக்கலிலே - இத்யாதிக்கு ப்ரமாணம் - ''[illegible] । [illegible] [illegible]'' இத்யாதிகள் கண்டுகொள்வது. ருத்ரனையுபாஸித்த மார்க்கண்டேயனுக்கு ஆயுஃப்ரதாதா நாராயணனென்கையாலே - அவன்கொடுப்பித்தது ஸித்தம். '' கண்ணனல்லால் - இல்லை '' என்று தேவதாந்தரங்களினுடைய ஸ்வரூபநிஷேதம்பண்ணுகிறாரோ வென்ன- ஸர்வேதேவா இத்யாதி. ''ஜ்யோதீம்ஷி ஶுக்ராணிசயாநிலோகே த்ரயோலோகா

யில்லை; "யோயோயாம்யாம் தநும்பக்த:" (யோயோயாம்யாம்தநும்பக்த:) என்கிற படியே-அவனுக்குத் தநுபூதராயுளராகி லாமித்தனே. [இறுப்பது இத்யாதி]-ஆனபின்பு,நீங்கள் அவ்வவதேவதைகளுக்குக் கொடுக்கும் ஸமாராதநத்ரவ்யங்களையெல்லாம் " இவர்கள் அவனுக்கு ஶரீரபூதர்" என்று புத்திபண்ணி, அவர்களுக்குக் கொடுக்கப்பாருங்கோள். இறுப்பதெல்லாம் - "தேவதாந்தராய" என்று தோற்றுகிற நித்யநைமித்திக கர்மங்களையெல்லாம், அவன்மூர்த்தியாயவர்க்கே - அவனுக்கு ஶரீரபூதரான அவர்களுக்கே. "அந்தராத்மா ஸர்வேஶ்வரன்" என்று புத்திபண்ணி தத்ஸமாராதந புத்த்யா பண்ணுங்கோள். (எ)

## எட்டாம் பாட்டு.

இறுக்குமிறையிறுத்துண்ண எவ்வுலகுக்குந்தன்மூர்த்தி
நிறுத்தினான்தெய்வங்களாக அத்தெய்வநாயகன்தானே
மறுத்திருமார்வனவன்தன் பூதங்கள்கீதங்கள்பாடி
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார் மேவித்தொழுதுய்ம்மினீரே.

*ஆ.—(இறுக்கும்) கேவலேந்த்ராதிகளையே ஸ்வகர்மங்களாலே ஸமாராதித்து ஸ்வாபிலஷிதபுத்ரபஶ்வாதிபலங்களை அவர்கள் பக்கலிலே பெற்றன்றோ எல்லாரும் புஜிக்கிறதென்னில்;—இந்த்ராதிகளைஎல்லாரும் ஸ்வாதிகாராநுகுணகர்மங்களாலே யாராதித்து ஸ்வாபிலஷிதங்களைப் பெற்று அநுபவிக்கும்படி அந்த ஸர்வேஶ்வரனான பரமபுருஷன் தானே ஸ்வஶரீரபூதரான அந்த இந்த்ராதிகளை, ஸர்வகர்மஸமாராத்யராய் ஸமாராதகாபிலஷித பலப்ரதாந ஸமர்த்தராம்படி பண்ணியருளினான்; ஆதலால், அவனே ஸர்வேஶ்வரன். இப்படி ஸர்வேஶ்வரனாகையாலும், பகவதேகபோகரான ஸ்ரீவைஷ்ணவர்களாலே இந்த லோகம் பூர்ணமாகையாலும், நீங்களும் எம்பெருமானையே அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்கிறார்.*

*ப்ர:*—ஸ்ரீமத்பகவத்கீதாஸு ஸப்தமே ஸ்ரீபகவாநு, "யோயோயாம்யாம் தநும் பக்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி। தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவ விதாம்யஹம்"॥௨௧॥.

லோகவாஸாஸர்வே। த்யோதம் யஸ்யாஹம் தஸ்ய ஸர்வஸ்வைவ தைவாதைவதம் தஸ்ய' இதி பாரதேபீஷ்ம:. தேவதைகள் தத்பாதந்த்ரைகளென்றதுக்கு ப்ரமாணாந்தரம் யோய இத்யாதி. "யோயோயாம்யாம் தநும்பக்த: ஶ்ரத்தயார்சிதுமிச்சதி। தஸ்ய தஸ்யாசலாம் ஶ்ரத்தாம் தாமேவவிதாம்யஹம்" இதி கீதாயாம் ஸப்தமே. இறுப்பது-கொடுப்பது. நம்முள்ளத்து - நிறுத்தி - கொள்ளும் தெய்வங்களும் உம்மை உய்யக்கொள் - மறுத்துமவனோடேகண்டீர், மார்க்கண்டேயனுங்கரியே இத்யாரப்யாந்வய:. அவனோடே - அவன்பக்கலிலே ; கொண்டுபோய் இத்யத்யாஹார:. அவன்மூர்த்தியா யவர்க்கே - அவனுக்கு ஶரீரபூதரானவர்களுக்கே. (எ)

ஒ.—எட்டாம்பாட்டில், தேவதாந்தரங்களை யாஶ்ரயித்து அபேக்ஷிதங்களைப் பெற்றாரில்லையோவென்னில், அந்த தேவதைகள் ஆஶ்ரிதரபேக்ஷிதங்கள் கொடுக்கவல்ல ராம்படி பண்ணினான் எம்பெருமானே; அவனை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

[இறுக்குமென்று தொடங்கி] - பிந்நருசிகளான அதிகாரிகள் ஸ்வவர்ணஸ்வாஶ்ரமோசித கர்மங்களாலே ஸமாராதித்து ஸ்வாபிலஷிதங்களைப்பெற்று அநுபவிக்கும்படி ஸ்வஶரீரபூதமான தேவதைகளை ஸர்வேஶ்வரன்தானே ஸமாராத்யராகவும் ஆராதகர்க்கும் அபிமதபலங்களைக் கொடுக்க வல்லராம்படியும் பண்ணினான். [மறுத்திருமார்வனென்று தொடங்கி] - அவனழகுக்குத் தோற்று அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்கள் இகழாதே மிகவும் ஹ்ருஷ்டராய்க்கொண்டு பூமியிலே திரண்டார்கள்; அவர்களைப்போலே நீங்களும் எம்பெருமானை அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோள்.

ப.—அநந்தரம், இப்படி ஸர்வதேவதாநாயகனாய் ஸ்ரீவத்ஸவக்ஷாவான க்ருஷ்ணனுடைய ஶேஷபூதரானவர்கள் லோகத்திலே அதிகராய் வர்த்தியாநின்றார்கள், அவர்களை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

இறுக்கும் - கர்த்தவ்யமாய், இறை - கடமையான நித்யநைமித்திகங்களை, இறுத்து - ஸமர்ப்பித்து, உண்ண - உஜ்ஜீவிக்கைக்காக, எவ்வுலகுக்கும் - நாநாருசிகளான ஸமஸ்தலோகத்துக்கும், தன் - தன்னுடைய, மூர்த்தி - ஶரீரபேதங்களை, தெய்வங்களாக - தத்தத்கர்மாராத்யதேவதைகளாக, நிறுத்தினான் - நிறுத்தினவன், அத்தெய்வநாயகன் தானே - ஸர்வதேவதாநாயகனான க்ருஷ்ணன்தானே, (ஆகையால்), மறு - அந்த ஸர்வாதிகத்வஸூசகமான ஸ்ரீவத்ஸத்தை, திருமார்வன் - திருமார்பிலுடையனான, அவன்தன் - அவனுக்கு, பூதங்கள் - ஶேஷபூதரான பாகவதர்கள், கீதங்கள் - நாநாகீதங்களை, பாடி - பாடி, ஞாலத்து - ஸாம்ஸாரிகதோஷத்தாலுண்டான, வெறுப்பு இன்றி - விஷாதம் இல்லாதபடி, மிக்கார் - ஸர்வோத்க்ருஷ்டராய் வர்த்தியாநின்றார்கள்; நீர் - நீங்கள், மேவி - அவர்களைக்கிட்டி, தொழுது - தொழுது, உய்மின் - உஜ்ஜீவியுங்கோள்.

இ.—எட்டாம்பாட்டில், தேவதாந்தரங்களை யாஶ்ரயித்து அபேக்ஷிதங்கள் பெற்றாரில்லையோவென்ன ;—ரஜஸ்தமஃப்ரசுரராயிருக்குமவர்களுக்கு ஆஶ்ரயணீயராகவும், அபேக்ஷிதப்ரதராகவும் தேவதைகளைப் பண்ணினான் ஸர்வேஶ்வரனே; ஆனபின்பு, அவனையாஶ்ரயியுங்கோ ளென்கிறார்.

[இறுக்குமிறையிறுத்துண்ண] - ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசித கர்மங்களாலே ஸமாராதித்து ஸ்வாபிலஷிதங்களைப் பெற்று உஜ்ஜீவிக்க. [எவ்வுலகுக்கும் தன்மூர்த்தி நிறுத்தினான் தெய்வங்களாக] - பிந்நருசிகளான அதிகாரிகளை யுடைத்தான ஸர்வலோகங்களுக்கும், தன் ஶரீரபூதரான தேவதைகளை ஸமாராத்யராக நிறுத்தினான். "ஶ்ரேஶ்வரோஹம்" என்றிருப்பார் தலைவணங்குகைக்காக நிறுத்தினான். [அத்தெய்வநாயகன் தானே]-ஆஶ்ரயிக்கிறவர்களோடு ஆஶ்ரயணீயரோடு வாசியற எல்லார்க்கும் நிர்வாஹகன் அவன்தானே. சேதநருடைய குணாநுரூபமாக ஆராத்யராகவும், அபிமதபலப்ரதராம்படியாகவும் பண்ணினான். [மறுத்திருமார்வன்] - மறுவையும் திருவையும் மார்விலே யுடையவனென்னுதல், ஸ்ரீவத்ஸத்தைத் திருமார்விலேயுடையவனென்னுதல். [அவன் தன் பூதங்கள்] - அஸாதாரணவிக்ரஹத்திலழகிலே தோற்றுத் தாங்கள் உளராயிருக்கும்

*ஸ்ரீவைஷ்ணவர்கள், பகவதநுபவஹர்ஷத்தாலே பாடி, "ஸம்ஸாரத்திலே யிருந்தோம்" என்னும் வெறுப்பின்றிக்கே பூமியிலே திரண்டார்கள்; நீங்கள் அவர்களோடேகூட அநந்ய ப்ரயோஜநராய்த் தொழுது உஜ்ஜீவியுங்கோ ளென்னுதல், அவரைத் தொழுது உஜ்ஜீவியுங் கோ ளென்னுதல்.*

ஈடு.—எட்டாம் பாட்டு. ராஜஸராயும் தாமஸராயுமுள்ள சேதநர் குணநு குணமாக ஆஶ்ரயிக்கலாம்படி இதரதேவதைகளை லோகமடங்கப் பரப்பிவைத்தான்; அவனுடைய அஸாதாரணவிக்ரஹத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள் லோக மடங்கப் பரந்தார்கள். அவர்களைப்போலே நீங்களும் அவனை யாஶ்ரயிக்கப் பாருங்கோள் என்கிறார்.

[இறுக்குமித்யாதி] - செய்தபயிருக்குக்கடமையிறுக்குமாபோலே, உந்தாமுடைய புண்யபாபாநுரூபமாக அவ்வவதேவதைகளுக்குக் கொடுக்கும் த்ரவ்யங்களைக்கொடுத்து ஜீவிக்கைக்காக, எல்லாலோகங்களிலும், தனக்குத் தநுபூதரான தேவதைகளை நிறுத்தி னான்; இவ்வருதுள்ளாரோடு அத்தேவதைகளோடு வாசியற எல்லார்க்குமொக்க நியாமகனா யிருக்கிற தானே. ராஜாக்கள் ஊர்தோறும் கூறுசெய்வார்களை வைக்குமாபோலே. [மறுத் திருமார்வன்] - ஸ்ரீவத்ஸத்தையும் பிராட்டியையுமுடைய மார்வனென்னுதல், ஸ்ரீவத் ஸத்தையுடைத்தான திருமார்வையுடையவனென்னுதல். [அவனித்யாதி] - அவனுடைய அஸாதாரணவிக்ரஹத்திலே தோற்றிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்கள், ப்ரீதிப்ரகர்ஷத்தாலே கீதங்களைப்பாடி, "ஸம்ஸாரத்திலே வர்த்திக்கவேண்டாநின்றதே!" என்கிற வெறுப்பின் றிக்கே பூமியெங்கும் பரந்தார்கள். [மேவித்தொழுதுய்ம்மினீரே] - ஆனபின்பு, நீங்கள் அவர்களைச் சென்றுஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்னுதல், அந்த ஸத்வநிஷ்டரானவர்க

---

*எட்டாம்பாட்டு* - **இறுக்கும்** *இத்யாதி. கீழ்ச்சொன்னபடியே, பலப்ரதாநஶக்தருமன்றிக்கே, பகவத்ப்ரகாரமான ஆகாரத்தாலே யொழிய ஸ்வதந்த்ரவ அநுபாஸ்யருமாயிருக்க, இந்த தேவதைகளை ஈஶ்வரன்தான் ஸ்ருஷ்டிப்பானென்? என்ன* - **ராஜஸராயும்** *இத்யாதி. சேதநர்குணநுகுணமாக - இத் யாதிக்கு - "யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: । ப்ரேதாந்பூதகணாம்ஸ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா:" இத்யாதியிலே நோக்கு.* **பரப்பிவைத்தான்** *- என்றவநந்தரம், ஆகையாலேயென்று கூட்டிக்கொள்வது. "மறுத்திருமார்வன்" இத்யாதியைப்பற்ற -* **அஸாதாரண** *இத்யாதி. "மேவித் தொழுதுய்ம்மினீர்" என்றத்தைப்பற்ற-***அவர்களைப்போலே** *இத்யாதி.*

*"இறுக்குமிறையிறுத்து" என்று - நித்ய நைமித்திகாதி ரூபேண அவர்களை யாராதிக்கை யைச் சொல்லுகிறது.* **கடமை** *- ருணமும், வரியும்.* **புண்யபாபாநுரூபமாக** *என்றது - புண்ய வ்ருத்திக்கும் பாபக்ஷயத்துக்குமாக என்றபடி என்னுதல்; அன்றிக்கே, தேவதாந்தர ஸமாஶ்ரயண ஹேதுவான புண்யபாபாநுகுணமாகவென்னுதல். "அத்தெய்வநாயகன்" என்றதுக்குபாவம் -* **இவ் வருதுள்ளார்** *இத்யாதி. "நிறுத்தினான்" என்றதுக்கு த்ருஷ்டாந்தம் -* **ராஜாக்கள்** *இத்யாதி.* **கூறு செய்வார்கள்** *- தாங்யாதிகளை விபஜிக்கும் அதிகாரிகள், மணியக்காரரை யென்றபடி. முந்தினவர்த் தத்தில்,* **திருவென்று** *- பிராட்டி. த்விதீயார்த்தத்தில்,* **திருவென்கிறது** *- மார்வுக்கு விஶேஷணம். திருமார்வ னென்றபடி. கீழேயுங்கூட்டி "பூதங்கள்" இத்யாதிக்கு ஶப்தார்த்தம்-***அவனுடைய** *இத்யாதி,* **வேண்டாநின்றதே** *- வேண்டியிருந்ததே.* **வெறுப்பு** *- குத்ஸை. "மேவி" என்று - கிட்டியென்னுதல் அநந்ய ப்ரயோஜநரா யென்னுதல். தொழுகை - பாகவதவிஷயமாதல், பகவத்விஷயமாதல்.* **அத்தெய்வ நாயகன்தானே** *- இறுக்குமென்று தொடங்கி, தன்மூர்த்தியை - தெய்வங்களாக - நிறுத்தினான்; ஆகை யாலே* **அவர்களைவிட்டு** *- மறுத்திருவென்று தொடங்கி அந்வயம்.* **திருமார்வனவன்தன் பூதங்கள்** *- திரு*

ளோடொக்க நீங்களும் அநந்யப்ரயோஜநராய் ஸர்வேஶ்வரனை யாஶ்ரயித்து உஜ்ஜீவித்துப் போங்கோ ளென்னுதல். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

மேவித்தொழுதுய்ம்மினீர்கள் வேதப்புனிதவிருக்கை
நாவிற்கொண்டச்சுதன்தன்னை ஞானவிதிபிழையாமே
பூவிற்புகையும்விளக்குஞ் சாந்தமும்நீரும்மலிந்து
மேவித்தொழுமடியாரும் பகவரும்மிக்கதுலகே.

ஆ.—(மேவித்தொழுது.) பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதி ப்ரதிபாதகமாய் பரிஶுத்தமான ருக்குக்களைச் சொல்லிக்கொண்டு பக்திமார்க்கம் தப்பாமே புஷ்பதூப தீபாநுலேபந ஸலிலாத்யுபகரணங்களாலே அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு எம்பெருமானுக்கு அடிமைசெய்கிற பரிஜநங்களும், பரமபுருஷகுணசேஷ்டிதாநுபவைகபோகரான திவ்யஜநங்களுமேயாயிற்று இந்தலோகம்; நீங்களும் அப்படியே அநந்யப்ரயோஜநராய்க் கொண்டு எம்பெருமானுக்கு அடிமைசெய்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், பகவத்பரிசர்யைக போகரான வைஷ்ணவர்களும், அதுக்கு க்ஷமரன்றிக்கே தத்குணைகதாரகரான வைஷ்ணவர்களுமேயாயிற்று இந்த லோகம்; நீங்களும் அவர்களைப்போலே அநந்யப்ரயோஜநராய் எம்பெருமானுக்கு அடிமைசெய்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

[வேதப்புனிதமென்று தொடங்கி] - வேதத்தில் பகவத்ப்ரதிபாதகமான ஸ்ரீ புருஷஸூக்தாதிகளில் ருக்குக்களைச் சொல்லிக்கொண்டு ஆஶ்ரிதரை ஒருநாளும் விடாத ஸ்வபாவனானவனை வேதாந்தங்களில் ப்ரதிபாதிக்கிற பக்திமார்க்கம் தப்பாமே. [பூவில் புகை] - பூவோடுகூடின புகை. மலிவு - மிகுதி. மேவித்தொழுகை - அநந்ய ப்ரயோஜநராய் ஆஶ்ரயிக்கை.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதரைக்கைவிடாத அப்ரச்யுதஸ்வபாவனுடைய கைங்கர்யநிஷ்டராலும் குணநிஷ்டராலும் லோகம் மிகுந்தது, அவர்களை யாஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

வேதம் - வேதத்தில், புனிதம் - ஸ்வரூபகுணாதி ப்ரதிபாதகமாகையாலே பரம பாவநங்களான, இருக்கை - ஸ்ரீ புருஷஸூக்தநாராயணாநுவாகாதி ருக் விஶேஷங்களை, நாவில் - நாவிலே, கொண்டு - உச்சரித்துக்கொண்டு, ஞானவிதி - பக்திரூபஜ்ஞாநவிதாநம்பண்ணுகிற ஶாஸ்த்ரமர்யாதை, பிழையாமே - தப்பாதபடி, (ஆராதநோபகரணமான), பூவில் - புஷ்பத்தோடுகூடின, புகையும் - தூபமும், விளக்கும் - தீபமும், சாந்தமும் - சாத்துப்படியும், நீரும் - திருமஞ்சனமும், மலிந்து - பூர்ணமாகவுடையராய்க்கொண்டு, அச்சுதன் தன்னை - அப்ரச்யுதஸ்வபாவனான ஸர்வேஶ்வரனை, மேவி - அநந்யப்ரயோஜந

---

மார்பையுடையனை அவனுக்கு ஶேஷபூதரானவர்க ளென்றபடி. ''கடல்வண்ணன்பூதங்கள்'' இத்யாதி ஸ்தலங்களிலும் - கடல்வண்ணனுடைய பூதங்களென்று ஷஷ்டீஸமாஸமாகக் கண்டுகொள்வது.

ராய்க்கொண்டு, தொழும் - ஶேஷவ்ருத்திமுகத்தாலே ஆஶ்ரயிக்கும், அடியாரும் - ஶேஷபூதரையும், பகவரும் - அவனுடைய ஜ்ஞாநஶக்த்யாதி குணாநுஸந்தாநஷித்தரான முநிகளையும், மிக்கது - மிகவுடைத்தாயிற்று, உலகு - லோகம், (ஆனபின்பு), மேவி - அவர்களைக்கிட்டி, தொழுது-தொழுது, நீர் - நீங்கள், உய்ம்மின்கள் - உஜ்ஜீவியுங்கோள்.

இ —ஒன்பதாம்பாட்டில், கைங்கர்யநிஷ்ட்டரும் குணநிஷ்ட்டரும் பூமியிலே புகுந்து ஸம்ருத்தமாக வர்த்தியாநின்றார்கள், நீங்களும் அவர்களோடொக்க ஆஶ்ரயித்து உஜ்ஜீவியுங்கோ ளென்கிறார்.

[மேவி இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய்த் தொழுது உஜ்ஜீவியுங்கோள், வேதத்தில் விபூதிவிஷயமாகச் சொன்னவை யன்றிக்கே, பகவத்குணங்களையும் வடிவழகையும் ப்ரதிபாதியாநின்றுள்ள ஸ்ரீ புருஷஸூக்தாதிகளை நாக்கிலே கொண்டு. [அச்சுதன்தன்னை] - அஹ்ருதயமாகச்சொன்னத்தை ஸஹ்ருதயமாக நினைத்து "நதஜெயஞு" என்னுமவன். அகவாய்பாராதே உக்திமாத்ரத்தைக்கொண்டு நழுவவிடாதவனை. [ஞானவிதிபிழையாமே] - வேதாந்தங்களில் ப்ரதிபாதிக்கிற பக்திமார்க்கம் தப்பாமே. ஞானமென்று - ஜ்ஞாநவிஶேஷமான பக்தியைச்சொல்லுகிறது. [பூவிற்புகையும்] - பூவோடேகூடின புகையையும், ஸமாராதந த்ரவ்யங்களையும் மிகுத்து. [மேவித்தொழுமடியாரும்]- அநந்யப்ரயோஜநராய்த் தொழும் கைங்கர்யநிஷ்ட்டரும். [பகவரும்] - அதுக்குக்ஷமரன்றிக்கே குணாநுபவம்பண்ணும் குணநிஷ்ட்டருமாகக் கொண்டு லோகமடங்க ஸம்ருத்தமாயிற்று. கிடந்தவிடத்தே கிடந்து குணாநுபவம்பண்ணும் ஸ்ரீபராங்குசனையும், தொடர்ந்து அடிமைசெய்யும் இளையபெருமாளையும்போலே இருக்குமவர்கள். மேவித்தொழுதுய்ம்மினீர்கள்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. பகவத்குணநிஷ்ட்டரும் கைங்கர்யநிஷ்ட்டருமான ஸ்ரீவைஷ்ணவர்கள் பூமியெங்கும் பரந்தார்கள், நீங்களும் அவர்களோடொக்க அநந்யப்ரயோஜநராய் ஆஶ்ரயியுங்கோ ளேன்கிறார்.

[மேவி இத்யாதி] - அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு ஆஶ்ரயித்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள். [வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டு] - வேதத்தில் அவன்விபூதிவிஷயமாகப் பரக்குமவற்றை யன்றிக்கே, அஸாதாரண விக்ரஹத்திலும் குணங்களிலும் ஸ்வரூபத்திலுமாகப் பரந்திருக்கிற ஸ்ரீபுருஷ ஸூக்தாதிகளை நாக்கிலேகொண்டு. [அச்சுதன்தன்னை] - இவர்கள் நாவிலேகொண்டு அஹ்ருதயமாகச் சொன்னால் அத்தை ஸஹ்ருதயமாகக் கொண்டு

---

ஒன்பதாம்பாட்டு - மேவி இத்யாதி. **பகவத்குணநிஷ்ட்டரும்** என்றது - "பகவரும்" என்றத்தைப்பற்ற. **கைங்கர்யநிஷ்ட்டரும்** என்றது - "அடியாரும்" என்றத்தைப்பற்ற. **பூமியெங்கும் பரந்தார்கள்** என்றது - "மிக்கதுலகு" என்றத்தைப்பற்ற. "மேவித்தொழுது" இத்யாதியைப்பற்ற- **அநந்யப்ரயோஜநராய்** இத்யாதி.

புனிதவிருக்கை - பவித்ரமான ருக்குக்களை. பவித்ரத்வம் - அஸாதாரண விக்ரஹாதி ப்ரதிபாதகமானவற்றுக்கே என்று கருத்து. மேலே "ஞானவிதி" என்று - ஜ்ஞாநவிஶேஷமான பக்தியைச் சொல்லுகையாலே, "நாவிற்கொண்டு" என்று - அஹ்ருதயமாகச் சொல்லுகை அடியார்க்கும் பகவர்க்கும் விருத்தமாகையாலே, "வேதப்புனிதவிருக்கைநாவிற்கொண்டு" என்றத்தை - "அச்சுதன் தன்னை - மேவித்தொழுதுய்ம்மினீர்கள்" என்று உபதேஶவிஷயமாயிருக்கிறவர்களுக்கு ஶேஷமாக அந்வயிப்பது. கீழேயுங்கூட்டி, அச்சுதஶப்தத்துக்கு - நவ்யாவயந்தே இதி என்கிற வ்யுத்பத்தியிலே நோக்காகஆர்த்தம்-**இவர்கள்நாவிலே** இத்யாதி. "பக்திஜ்ஞாநவிஶேஷ:" என்றத்தைப்

''நத்யஜேயம்'' (நத்யஜேயம்) என்னுமவன். [ஞானவிதிபிழையாமே] - ஞானமென்கிறது - ஜ்ஞாநவிசேஷமான பக்தியை. பக்திபலாத்க்ருதமான க்ரியைகளி லொன்றும் தப்பாமே. [பூவில் இத்யாதி] - பூவோடேகூடினபுகை தொடக்கமான ஸமாராதநோபகரணங்களை மிகுத்துக்கொண்டு அவனைவிடாதே நின்று அடிமைசெய்யுமவர்களும், குணநுஸந்தாநத்துக்கு அவ்வருகொன்றுக்கு க்ஷமரன்றிக்கேயிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களும்,மிக்கது லோகம். (தொடர்ந்தடிமைசெய்யும்) இளையபெருமாளையும், (கிடந்தவிடத்தேகிடந்து குணநுபவம் பண்ணும்) ஸ்ரீபரதாழ்வானையும்போலே இருப்பாரேயாயிற்று லோகமடைய ; நீங்களும் மேவித்தொழுதுய்ம்மின். (கூ)

## பத்தாம் பாட்டு.

மிக்கவுலகுகள்தோறும் மேவிக்கண்ணன்திருமூர்த்தி
நக்கபிரானோடு அயனுமிந்திரனும்முதலாகத்
தொக்கவமரர்குழாங்கள் எங்கும்பரந்தனதொண்டீர்
ஒக்கத்தொழகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே.

ஆ.—(மிக்க.) சதுர்முகபசுபதிப்ரதமகப்ரப்ருதி ஸமஸ்ததேவநிகரங்களும் பரமபுருஷஸமாஶ்ரயணத்தாலே லப்தலோகாதிபத்யரானார்கள் ; ஆனபின்பு, நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானை யாஶ்ரயிக்க வல்லிரோளாகில், இக்கலியுகமொன்றுமில்லை யென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், நீங்களாராதிக்கிற தேவதைகளும் எம்பெருமானை ஸமாஶ்ரயித்துத் தந்தாமுடைய பதங்களைப்பெற்றது, நீங்களும் அவர்களைப்போலே எம்பெருமானை யாஶ்ரயித்துப் பிழையுங்கோ ளென்கிறார்.

[மிக்கவென்று தொடங்கி] - ப்ரஹ்மருத்ராதி தேவதாகணங்கள் விலக்ஷணமான திருமேனியையுடைய க்ருஷ்ணனை ஆஶ்ரயித்து ஸம்ருத்தமான லோகங்கள் தோறும் தங்கள் ஐஶ்வர்யங்களால் விஸ்த்ருதமாயின. [ஒக்கவென்று தொடங்கி] - அவர்களைப்போலே நீங்களும் அவனை யாஶ்ரயிக்க வல்லிரோளாகில் கலியுக ப்ரயுக்தமான ஸகல தோஷங்களும் நீங்கும்.

---

பற்ற-**ஜ்ஞாநவிசேஷமான** இத்யாதி. விதீயதெ ஊதிவிஷ்: என்கிற வ்யுத்பத்தியிலே நோக்காகவர்த்தம். ஹவிஸ ஸமாநுதுத இத்யாதி. அதாவது - விதீயதெ ஊதிவிஷ்: என்று - ஆராதநரூபமான கர்மங்களைச் சொல்லுகிறதென்றபடி. ''பூவில்'' என்றது - த்ருதீயையாய், பூவோடே என்றபடி. **பகவர்** - பகவான்கள். ஜ்ஞாநாதிகர் இத்யர்த்தம். **அவர்களாகிறர்** - குணநிஷ்டர். **மிக்கது** - ஸம்ருத்தமாயிற்று. **லோகம் - மிக்கது** என்றந்வயம். இளையபெருமாள் கைங்கர்யநிஷ்டர், ஸ்ரீபரதாழ்வான் குணநிஷ்டர். ஞானவிதிபிழையாமே யென்று தொடங்கி, மேவித்தொழுமடியாரும் பகவரும் - உலகு-மிக்கது; அவர்களோடொக்க-வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டச்சுதன்தன்னை - மேவித்தொழுதுய்ம்மினீர்கள் இத்யந்வயம். கீழிற்பாட்டுக்களிற்போலே, இப்பாட்டிலும் - **ஸ்ரீவைஷ்ணவர்களைத் தொழுமென்ற** பக்ஷத்திலே; வேதப்புனிதவிருக்கை நாவிற்கொண்டு - ஞானவிதிபிழையாமே பூவிற்புகையும் தொடங்கி, **அச்சுதன்தன்னை** - மேவித்தொழுமடியாரும் பகவரும் - மிக்கதுலகு ; **அவர்களை** - **மேவித்தொழுதுய்ம்மினீர்கள் என்று அந்வயம்.** (க)

ப.—அநந்தரம், இப்படி ஸர்வாதிகனான ஸர்வேஶ்வரனுக்கு ஶேஷபூதரான பாகவதருடைய ஆஶ்ரயணீயதையை ப்ரதிபாதித்து, இப்பாட்டில்-ப்ரயோஜநாந்தரார்த்தமாக தேவதாந்தரங்களை யாஶ்ரயிப்பாரைக்குறித்து; அவனை யாஶ்ரயித்து தேவதைகள் அபிலஷிதபதங்கள் பெற்றவோபாதி நீங்களும் அவனை யாஶ்ரயிப்புதிகளாகில், உங்களுடைய புத்திபேதஹேதுவான காலதோஷமில்லை யென்கிறார்.

நக்கன் பிரானோடு - நக்னனான ஈஶ்வரனோடேகூட, அயனும் - ப்ரஹ்மாவும், இந்திரனும் - இந்த்ரனும், முதலாக - முதலாக, தொக்க - திரண்ட, அமரர்குழாங்கள்- தேவதாஸமூஹங்களானவை, கண்ணன் - ஸர்வாபாஶ்ரயபூதனான க்ருஷ்ணனுடைய, திரு - ஸ்ரீமத்தான, மூர்த்தி - விக்ரஹத்தை, மேவி- ஆஶ்ரயித்து, மிக்க - போக்யபோகோபகரணாதிகளால் ஸம்ருத்தமான, உலகுகள்தோறும் - லோகங்கள்தோறும், எங்கும்- ஸர்வத்ர, பரந்தன - விஸ்தீர்ணமான ஸம்பத்தையுடையரானார்கள் ; தொண்டீர் - இதரபுருஷார்த்த சபலரானவர்களே! ஒக்க - நீங்களுமவர்களோடொக்க, தொழ - அவனையே தொழ, கிற்றிராகில் - வல்லீர்கோளாகில், கலியுகம் - (உங்களுக்குத் தேவதாந்தரப்ராவண்யரூபபுத்யபகர்ஷஹேதுவான) கலியுகதோஷம், ஒன்றும் - ஒன்றும், இல்லை-இல்லை. கலியுகத்தில் பகவதர்ச்சநவிமுகராம்படி பாஷண்டோபஹதராயிறே ஜநங்க ளிருப்பதென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், நீங்களாராதிக்கிற தேவதைகளும் அவனை யாஶ்ரயித்துத் தந்தாமுடைய பதங்களைப் பெற்றது, நீங்களும் அவர்களைப்போலே அவனை யாஶ்ரயித்துப் பிழையுங்கோ ளென்கிறார்.

[கண்ணன் திருமூர்த்தியை - மேவி] - க்ருஷ்ணனுடைய அஸாதாரண விக்ரஹத்தைப்பொருந்தி யாஶ்ரயித்து. [நக்கபிரான் இத்யாதி] - பிரானென்று - ஸ்வகோஷ்டி ப்ரஸித்தி. தொக்க-திரண்ட. மிக்க வுலகுகள் - ஸம்ருத்தமான லோகங்கள். ப்ரஹ்மா தொடக்கமாகத் திரண்டதேவதா ஸமூஹங்கள் ஸம்ருத்தமான லோகங்கள் தோறும் தங்களுடைய ஐஶ்வர்யத்தாலே விஸ்த்ருதரானார்கள். [தொண்டீர்] - தேவதாந்தரஶேஷபூதரான நீங்கள். நீங்களும் அவர்களைப் போலே ஆஶ்ரயிப்புதிகோளாகில் கலியுக ப்ரயுக்தமான ஸகலதோஷங்களும் நீங்கும். தொக்க அமரர்குழாங்கள் - மிக்கவுலகுகள் தோறும் - எங்கும் பரந்தன.

ஈடு.—பத்தாம்பாட்டு. நீங்கள் ஆஶ்ரயிக்கிற தேவதைகள் செய்கிற இத்தை நீங்களும் செய்திகோளாகில், யுகப்ரயுக்தமான தோஷங்களும் போமென்கிறார்.

[மிக்க இத்யாதி] - விஸ்த்ருதமான லோகங்களெங்கும் க்ருஷ்ணனுடைய அஸாதாரணவிக்ரஹத்தை ஸமாபாஶ்ரயமாகப்பற்றி. [நக்கன் இத்யாதி] - ருத்ரனோடே ப்ரஹ்மா

---

பத்தாம்பாட்டு - மிக்க இத்யாதி. "நக்கபிரானோடு" என்று தொடங்கி, 'அமரர்குழாங்கள்-கண்ணன்திருமூர்த்தி - மேவி" என்றத்தைப்பற்ற-நீங்கள்ஆஶ்ரயிக்கிற இத்யாதி. நீங்களும் செய்திகோளாகில் என்றது - "ஒக்கத்தொழகிற்றிராகில்" என்றத்தைப்பற்ற. "கலியுகமொன்றுமில்லை" என்றத்தைப்பற்ற - யுகப்ரயுக்தமான இத்யாதி.

"கண்ணன்திருமூர்த்தி - மேவி" என்றந்வயிப்பது. மேவுகை - சுபாஶ்ரயத்வேநபற்றுகை. "தொக்க" - திரண்ட. பஹுவசநத்தோடேகூட்டி "எங்கும் பரந்தன" என்றதுக்கு விவரணம் - விபூதி விஸ்தாரத்தையுடையரானார்கள் என்று "தொண்டீரொக்க" 'இத்யாதியைப்பற்ற - அப்ராப்த இத்

வும் இந்த்ரனும் இவர்கள் தொடக்கமாகத் திரண்ட தேவதா ஸமூஹங்க ளெங்குமொக்கப் பரந்து விபூதிவிஸ்தாரத்தை யுடையரானுர்கள். அப்ராப்த விஷயத்தே தொண்டுபட்டுத் திரிகிற நீங்கள் அவர்களோடொக்க ஸர்வேஶ்வர ஸமாஶ்ரயணம்பண்ணப்பெறில், உங்கள் தோஷம் போகையேயன்றிக்கே யுகப்ரயுக்ததோஷமும் போமென்கிறுர். (௧௦)

## பதினேராம்பாட்டு.

கலியுகமோன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள்செய்யும்
மலியுஞ்சுடரோளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்தன்னைக்
கலிவயல்தென்னன்குருகூர்க் காரிமாறன்சடகோபன்
ஒலிபுகழாயிரத்திப்பத்து உள்ளத்தைமாசறுக்குமே.

ஆ.—(கலியுகம்.) ஸ்வாஶ்ரிதர் அபேக்ஷித்தால் கலியுகத்தையே க்ருதயுகமாக்கி யருளும் ஸ்வபாவனுயிருந்த எம்பெருமானைச் சொன்ன இத்திருவாய்மொழி, வைஷ்ணவத்வ விரோதி ஸகலவிரோதங்களையும் போக்குமென்கிறுர்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றூர்க்கு தேவதாந்தரங்களினுண்டான பரத்வஜ்ஞாநமும் எம்பெருமான் பக்கலுண்டான ப்ரயோஜநாந்தர பரத்வமாகிற மாநஸதோஷமும் போமென்கிறுர்.

[கலியுகமென்று தொடங்கி] - தன்னுடையார்க்கு கலியுகதோஷம் ஒன்றும் தட்டாதபடி அருள்செய்யும் ஸ்வபாவனுய், மிகவும் விலக்ஷண தேஜோரூபமான திருவடிவை யுடையனுய், அத்யாஶ்சர்யகுண சேஷ்டிதனுன க்ருஷ்ணனை. [கலிவயல்] - ஸம்ருத்தமான வயல். [ஒலிபுகழ்] - வ்யக்தமாக பகவத்குணப்ரதிபாதகமாகை.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழி, அப்யஸித்தவர்கள் நெஞ்சில் ஸகல மாலிந்யமும் அறுக்குமென்று பலத்தை அருளிச்செய்கிறுர்.

தன் - தனக்கு, அடியார்க்கு - அஸாதாரணஶேஷபூதரானவர்களுக்கு, கலியுகம் - கலியுகதோஷம், ஒன்றும் - ஒன்றும், இன்றிக்கே - தட்டாதபடி, (ஸ்வவிஷயஜ்ஞாநப்ரேமவ்ருத்திகளை), அருள் - தன்னருளாலே, செய்யும் - கொடுக்கையாலே, மலியும் - அபிவ்ருத்தமான, சுடர் - ப்ரகாசத்தையுடைத்தான, ஒளிமூர்த்தி - தேஜோமய திவ்யவிக்ரஹத்தை யுடையனுய், மாயம் - ஆஶ்சர்ய குணசேஷ்டிதங்களை, பிரான் - அவர்களை யநுபவிப்பிக்குமுபகாரகனுன, கண்ணன்தன்னை - க்ருஷ்ணனைப்பற்ற, கலி - ஸம்ருத்தமான, வயல் - வயலையுடைத்தாய், தென் - தெற்குத்திக்குக்கு, நன் - ஶ்லாக்யமான, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகராய், காரி - ஜநகவைலக்ஷண்யத்தையும்,

யாதி. தொண்டுபட்டு - அடிமைப்பட்டு. உங்கள் தோஷம் போகையே இத்யாதிக்குக் கருத்து - நீங்கள் பாகவதர்களானுல் உங்கள் ஸஞ்சாரத்தாலே யுகப்ரயுக்ததோஷமும் போமென்கை. யுகப்ரயுக்த தோஷம் - கலியுகப்ரயுக்ததோஷம். தொண்டீர், நக்கபிரானென்று தொடங்கி, குழாங்கள் - கண்ணன் திருமூர்த்தி - மேவி - மிக்கவுலகுகள்தோறும் - எங்கும்பரந்தன; ஆகையாலே நீங்களும் - ஒக்கத்தொழகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லை இத்யந்வயঃ. (௧௦)

மாறன் - குலவைலக்ஷண்யத்தையுமுடையரான, சடகோபன் - ஆழ்வாருடையதாய், ஓலி - ஸுப்ரஸித்தமான, புகழ் - பகவத்குணப்ரதைதயையுடைத்தான, ஆயிரத்து - ஆயிரந்திருவாய்மொழியில், இப்பத்து - இப்பத்தும், உள்ளத்தை - அப்யஸித்தவர்கள் நெஞ்சை, மாசு - (பாகவதஸாம்ய ப்ரதிபத்திரூபமாயும், அதுக்கடியான பகவதுத்கர்ஷாதி ஶங்காரூபமாயும், தேவதாந்தரபரத்வ ப்ரதிபத்திரூபமாயும், ப்ரயோஜநாந்தர ப்ராவண்ய ரூபமாயுமுள்ள) மாசு, அறுக்கும் - அறும்படிபண்ணும். இது அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தார்க்கு இதுதானே இதர பரதவஜஞாநததுக்கும பர்யோஜநாந்தரபரதைக்கும் அடியான மாநஸ தோஷத்தைப் போக்கு மென்கிறார்.

[கலியுகமித்யாதி] - தன்னடியார்க்குக் கலியுகமொன்றும் தட்டாதபடி அருள் செய்யும். நாட்டுக்கிட்ட நினைப்பன்றிறே அந்தஃபுரத்துக்கிடுவது. "கலௌ க்ருதயுகம் தஸ்ய", "கலி: க்ருதயுகம் ஜீவிதம் ஜஹ்யாம்", "ஹரௌ ஹாரயது விஷ்ணுர் வரஸ்ய". [மலியும் சுடரொளிமூர்த்தி] - மிகவும் விலக்ஷணதேஜோரூபமான வடிவையுடையவன். அருளாதே அநாதரிக்கிலும் விடவொண்ணாத வடிவு. அருள் செய்தது அவ்வடிவுதானேயாயிற்று. அத்யாஶ்சர்ய குணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனை. [கலிவயல்] - ஸம்ருத்தமான வயல். [ஒலிபுகழ்] - பகவத்குணங்களை வ்யக்தமாக ப்ரதிபாதித்த இப்பத்து. [உள்ளத்தைமாசறுக்குமே] - அந்தஃகரணதோஷத்தைப் போக்கும். அதாகிறது—தேவதாந்தரங்களில் பரத்வ ஶங்கை, பகவத்பரத்வத்தில் அதிஶங்கை, ஸ்ரீவைஷ்ணவ விஷயத்தில் ஸஜாதீயபுத்தி, அபாகவதஸம்ஶ்லேஷம், ப்ரயோஜநாந்தரபுத்தி, இப்படிப்பட்ட அந்தஃகரண தோஷங்களை யறுக்கும்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார்க்குத் தேவதாந்தரங்கள் பக்கலுண்டான பரத்வஶங்கையும், எம்பெருமான்பக்கல் ப்ரயோஜநாந்தரபரதையுமான மாநஸ தோஷம் போ மென்கிறார்.

[கலியுகமொன்றுமின்றிக்கே] - "கலௌ க்ருதயுகம் தஸ்ய" (கலௌக்ருத யுகம்தஸ்ய) என்கிறபடியே, கலிதோஷங்க ளொன்றும் வாராதபடியாகத் தன்னடியார்க்கு அருள்செய்யும். நாட்டுக்கிட்ட வஸ்க மல்லவிறே அந்தஃபுரத்துக்கிடுவது. [மலியும்சுடரொளி மூர்த்தி] - அருள்செய்யாதொழிந்தாலும் விடவொண்ணாத வடிவழகு. சுடரென்றும், ஒளி யென்றும் - பர்யாயமாய், இரண்டாலும் - மிகுதியைச் சொல்லுகிறது. மலிதல் - நிறைத

ப்ர:—(கலியுகமொன்று மின்றிக்கே)-"கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ்தஸ்ய க்ருதே யுகே। யஸ்ய சேதஸி கோவிந்தோ ஹ்ருதயே யஸ்ய நாச்யுத:॥".

நிகமம் - கலியுகம் இத்யாதி. "இப்பத்து உள்ளத்தைமாசறுக்கும்" என்றத்தைப்பற்ற-இத் திருவாய்மொழிகற்றார்க்கு இத்யாதி.

கலியில்லாமல் போமோவென்ன, கலௌ இத்யாதி. "கலௌ க்ருதயுகம் தஸ்ய கலிஸ்தஸ்ய க்ருதே யுகே। யஸ்ய சேதஸி கோவிந்தோ ஹ்ருதயே யஸ்ய நாச்யுத:". ஸர்வர்க்கும் கலியுகமாயிருக்க, அடியார்க்கு அந்ததோஷமொன்றும் வாராதபடி அருள்செய்யும்படி எப்படி யென்ன-நாட்டுக்கு இத்யாதி. அஸ்கம் - அர்க்கம். மூல்யதநமித்யர்த்த:. சுடரொளி - மிக்க தேஜஸ் ஸென்றர்த்தமாயிருக்க, "மலியும்" என்றபதம் வ்யர்த்தமன்றோ வென்ன, மலிதல் இத்யாதி. அப்போது, "சுடரொளி - மலியும் - மூர்த்தி" என்றந்வயம். "பிரான்" என்றது - குணசேஷ்டிதங்களை யாஶ்

லாய், மிக்கதேஜஸ்ஸாலே நிறைந்த வடிவென்றபடி. [மாயமித்யாதி] - ஆஸ்சர்யமான குணசேஷ்டிதங்களையுடைய க்ருஷ்ணனையாயிற்றுக் கவிபாடிற்று. [கலிவயலித்யாதி] - கலியென்று - மிடுக்குக்கும், ஆரவாரத்துக்கும் பேர். இவற்றால் - பூஸாரத்தைச் சொல்லுதல்; நடுவது, அறுப்பது, உழுவதாய்ச் செல்லுகிற ஆரவாரத்தைச் சொல்லுதல். இப்படிப்பட்ட வயலையுடைத்தாயிருந்துள்ள திருநகரியில் ஆழ்வாரருளிச்செய்த, ப்ரஸித்தமான புகழையுடைத்தான ஆயிரத்திலும், இந்தப் பத்தும்; தேவதாந்தரங்கள்பக்கல் பரத்வஶங்கைபண்ணுதல், ஸ்ரீவைஷ்ணவர்கள்பக்கல் ஸஜாதீயபுத்தி பண்ணுதல், "அபாகவதஸஹவாஸம் நன்று" என்றிருத்தல், ப்ரயோஜநாந்தரங்களை அபேக்ஷித்தல் செய்கையாகிற மாநஸதோஷங்களைப் போக்கும். (கக)

ரிதர்க்கு அநுபவிப்பிக்கும் உபகாரகனென்றபடி. மிடுக்கு - பூஸாரம். அருளிச்செய்தவென்று அர்த்தஸித்தம். ஒலி - ஶப்தம். அதாவது - ப்ரஶம்ஸையாய், ப்ரஸித்தியைக் காட்டுகிறது. பரத்வஶங்கையும், ஸஜாதீயபுத்தியும், "அபாகவதஸஹவாஸம் நன்று" என்றிருக்கையும், ப்ரயோஜநாந்தரத்தை யபேக்ஷித்தல் செய்கையுமாகிற மாநஸதோஷங்களைப் போக்குமென்றது - "கண்ணனல்லால்தெய்வமில்லை", "தொழுதுதொழுதுநின்றார்த்தும்", "ஊழிபெயர்த்திடுங்கொன்றே", "சிந்தையைச் செந்நிறுத்தியே" இத்யாதிபதங்கள் இத்திருவாய்மொழியிலே யிருக்கையாலே என்று கண்டுகொள்வது. மாசென்று - அழுக்காய், அத்தாலே தோஷம் சொல்லுகிறது. கலிவயல் என்று தொடங்கி, சடகோபன் - கலியுகமொன்று மித்யாரப்ய, அருள்செய்யும் - சுடரொளி மலியும் - மூர்த்தி மாயப்பிரான் கண்ணன் தன்னை, சொன்ன - ஒலிபுகழித்யாரப்ய அந்வயः. சொன்னவென்று - அத்யாஹார்யம் சடகோபனொலிபுகழாயிரமென்றதுக்கு-"ஆழ்வாருடையதாய்ஸுப்ரஸித்தமான பகவத்குணப்ரதையையுடைத்தான வாயிரம்" என்று உரையில் ஶப்தார்த்தம். உள்ளத்தைமாசறுக்கும் - நெஞ்சைமாசறும்படிபண்ணும்.

"கறுத்தமனமொன்றும் வேண்டா" என்று - ப்ரணவோக்த அநந்யார்ஹஶேஷத்வத்தையும், "அவர்களை, சென்றுதொழுதுய்ம்மின்" என்று-நமஸ்ஸினர்த்தமான ததீயஶேஷத்வத்தையும், "சிந்தையைச் செந்நிறுத்தி" என்று - த்ருதீயபதஸித்தமான ஐஸ்வர்ய கைவல்ய வ்யாவ்ருத்தமான புருஷார்த்தத்தையும் சொல்லுகையாலே, "மாசறுக்கும்" என்கிறவிடத்திலே - பதத்ரயார்த்தமும் சொல்லுகிறது.

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:— [Grantha text, illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:— [Grantha text, illegible]

திருவாய்மொழி நூற்றந்தாதி.

பொலிகபொலிகவென்றுபூமகள்கோன்தொண்டர்
மலிவுதனைக்கண்டுகந்துவாழ்த்தி—யுலகில்
திருந்தாதார்தம்மைத்திருத்தியமாறன்சொல்
மருந்தாகப்போகும்மனமாசு.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

## மூன்றாந்திருவாய்மொழி—மாசறுசோதி : ப்ரவேஶம்.

ஆ.—(மாசறுசோதி.) இப்படி ஆஶ்ரித வாத்ஸல்யாத் யநவதிக கல்யாண குணவிபூஷிதனாயிருந்த எம்பெருமானோடே ஸம்ஶ்லேஷிக்க ஆசைப்பட்டுப் பெறாதே சிரகாலம் அவஸந்நையாயிருந்தாளொருபிராட்டி, தன்னுடைய வ்யஸநத்தைப் பொறுக்க மாட்டாமையாலே "மடலூர்ந்தாகிலும் அவனோடே ஸம்ஶ்லேஷிக்கவேணும்" என்று மநோரதித்து மடலூருகையிலே வ்யவஸிதையாயிருந்த விடத்தில், இவளுடைய தோழியானவள் "நீ ஆசைப்படுகைக்கீடான ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்கள் அவனுக்குண்டோ? உண்டானால்தான் அவனை யுத்திஶ்ய மடலூருகை யுக்தமோ? இவ்வூரெல்லாம் உன்னைப்பழிசொல்லாதோ?" என்ன;—

ஒ.—மூன்றாந்திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியில் - வைஷ்ணவ ஸம்ருத்தியைக்கண்டு மங்களாஶாஸநம்பண்ணியும், ஸம்ஶயாநரைத்திருத்தியும் சென்ற ஹாவவ்ருத்தி பர்யவஸித்தபின்பு எம்பெருமானுடைய ஸௌந்தர்ய ஶீலாதிகளிலே தோற்றுப் பழையபடியே பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து அது கைவராமையாலே அவஸந்நராய்; எம்பெருமான் மேல்விழவும், தம்மோடே கலந்தால் "அவனுடைய குணங்களுக்குக்லாநி பிறக்கும்" என்று பார்த்து அகலும் ஸ்வபாவரான ஆழ்வார், தம் ஸ்வரூபத்துக்குப் போராதபடி "வழியல்லாவழியேயாகிலும் எம்பெருமானோடே ஸம்ஶ்லேஷிப்போம்" என்று தமக்குப்பிறந்த தஶாவிபாகத்தை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். எம்பெருமானைப் புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி தன்னாற்றாமையாலே எல்லாரும் இகழும்படி தன்னுடைய குடிப்பிறப்பையும் பந்துக்களையும் தோழிமாரையும் மற்றுமுள்ள மர்யாதைகளையும் பாராதே மடலூர்ந்தாகிலும் அவனோடே ஸம்ஶ்லேஷிக்கையிலே அத்யவஸிக்க, இத்தையறிந்த தோழியானவள் "இதுகாரியமன்று" என்று கற்பிக்க, அவளுக்குத் தன் தஶையை யறிவித்து மடலூருகை தவிரேனென்கிறாள். * ஏறாளுமிறையோனில் - தான்முடியப் பார்த்தாள், இத்திருவாய்மொழியில் - அவன் ஸ்வரூபத்தை யழிக்கப் பார்க்கிறாள்.

ப.—மூன்றாந்திருவாய்மொழியில்,கீழ் அநுஸந்தித்தபாகவதோத்கர்ஷஹேதுவான பகவதுத்கர்ஷத்தையும், குணவிக்ரஹாதி வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தித்து, அவனுடைய ஆலோகாலாபாதி முகத்தாலே ஸம்ஶ்லேஷித்து அநுபவிக்கைக்கு ஆசைப்பட்டு அது கிடையாமையாலே, ஆஶாஜநகமான ஆபிரூப்யாதிஶயத்தையும், அவயவவிஶேஷவைலக்ஷண்யத்தையும், ப்ரதிபந்தக நிவர்த்தகமான பாலசேஷ்டிதத்தையும், அபிநிவேஶவர்த்தகத்வத்தையும், அநந்யார்ஹதாபாதகத்வத்தையும், ஆகர்ஷகத்வ ஸ்வபாவ யோகத்தையும், ஆஸத்திஹேதுவான அர்ணவஶாயித்வாதிகளையும், அகிலவிரோதி நிவர்த்தநத்தில் அநாயாஸத்தையும்,உத்துங்கதேஶ வாஸித்வத்தையும், அஸாதாரணசிஹ்ந யோகத்தையும் அநுஸந்தித்து, ஏவம் விஶிஷ்டனான ஸர்வேஶ்வரன் விஷயத்தில் தமக்குப்பிறந்த அபிநிவேஶாதிஶயத்தாலே, "இரண்டு தலைக்கும் அநநுரூபமான ஸ்வப்ரவ்ருத்திவிஶேஷத்தாலேயாகிலும் ப்ராபிக்கக்கடவோம்" என்கிற த்வராதிஶயத்தால் தமக்குப் பிறந்த வ்யவஸாயவிஶேஷத்தை அந்யாபதேஶ முகத்தாலே, நாயகனான ஈஶ்வரனோடு கலந்து பிரிந்தாளொருநாயகி தத்ப்ராப்த்யபிநிவேஶ த்வரையாலே, தன்குடிப்பிறப்புக்கும் பெண்மைக்கும் அநநுரூபமாம்படி "அவனுடைய மெய்ப்பாட்டை யழித்து மடலூர்

தும் பெறக்கடவோம்'' என்கிற அறுதிப்பாட்டைப் பாங்கிக்கு உரைத்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.— மூன்றாந்திருவாய்மொழியில், * நண்ணாதார்முறுவலிப்பவில் ஸம்ஸாரிகள் துர்க்கதியை யநுஸந்தித்து * ஒன்றுந்தேவிலே-அவர்களைத் திருத்தி, "இவர்களிலே அந்யதமராயிருந்த நம்மை இவர்களையுந் திருத்தும்படி பண்ணுவதே!'' என்று ஈஶ்வரன் பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்துத் திருந்தினவர்களுக்கு மங்களாஶாஸநம்பண்ணின பாவவ்ருத்திபர்யவஸித்து * ஏறாளுமிறையோனில் தமக்குப்பிறந்த இழவே தலையெடுத்து ஆற்றாமையாலே, "மடலெடுத்தாகிலும் கிட்டுவோம்'' என்று துணிகிறாள். * ஏறாளுமிறையோனில்-அவன் விரும்பாத ஆத்மாத்மீயங்கள் வேண்டேனென்று தன்னை முடிக்கப்பார்த்தாள், அது அவனதாகையாலே முடிந்ததில்லை; இதில் - அத்தலையே பிடித்து அழிக்கத்தொடங்கினாள். அங்கு, "உயிரினாற்குறைவிலம்'' என்று - உயிரை வேண்டா வென்றாள்; இங்கு - உயிருக்குமுயிரை வேண்டேனென்கிறாள். இதில் - அவன் ஸ்வரூபத்தை யழிக்கப்பார்க்கிறாள். அவன்தானே மேல்விழ "தம்மோட்டைக் கலவி அவனுக்கு அவத்யம்'' என்று அகன்றவர் தம்மைப்பாராதே "வழியல்லாவழியேயாகிலும் அவனோடே ஸம்ஶ்லேஷிப்போம்'' என்று தமக்குப்பிறந்த தஶாவிஶேஷத்தை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். அதவா, "மலியும் சுடரொளி மூர்த்திமாயப் பிரான் கண்ணன்தன்னை'' என்று வடிவழகை அநுஸந்தித்தபோதே "பெறவேணும்'' என்னும் ஆசைபிறந்து அதுகிடையாதே ஒருபிராட்டி தஶையை ப்ராப்தராய், அவள் பேச்சாலே தம்முடைய தஶையைப் பேசுகிறா ரென்றுமாம். அவனைப்புணர்ந்து பிரிந்தாளொரு பிராட்டி, தன்னாற்றாமையாலே எல்லாரும் இகழும்படி தன்னுடைய பிறப்பையும் பந்துக்களையும் தோழிமாரையும் மற்றுமுள்ள மர்யாதைகளையும் பாராதே, "நாம் மடலூர்ந்தேயாகிலும் அவனோடே ஸம்ஶ்லேஷிப்போம்''என்று அத்யவஸிக்க, இத்தையறிந்த தோழி "கார்யமன்று'' என்று கற்பிக்க, அவளுக்குத் தன் தஶையை யறிவித்து மடலூருகை தவிரே னென்கிறாள்.

ஈடு.—' மலியுஞ்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்தன்னை '' என்று - வடிவழகையும் குணங்களையும் ஸௌலப்யத்தையும் அநுஸந்தித்து; இப்படி ஸுலபனுமாய், ஆஶ்சர்யமான குணசேஷ்டிதங்களை யுடையனுமாய், அவையில்லையேயாகிலும் விடவொண்ணாத வடிவழகையு முடையனான இவனை பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து அணைக்கக்கோலிக் கையைநீட்ட, அகப்படாதே கைகழிந்து நிற்க, அத்தாலே கலங்கி மடலெடுக்கையிலே உபக்ரமிக்கிறார். மடலெடுக்கையாவது - போர்சுட்டுப் பொரிகோறிக்கை

---

**மாசறுசோதி** ப்ரவேஶ. கீழே - தாம் திருத்தத்திருந்தின ஸ்ரீவைஷ்ணவஸம்ருத்திக்கு மங்களாஶாஸநம் பண்ணினவர்க்கு, இத்திருவாய்மொழியிலே - மடலெடுக்கும்படியான ஆற்றாமை வருகைக்கு அடி ஏதென்ன, கீழிற்றிருவாய்மொழியோடே ஸங்கதி - மலியுஞ்சுடரொளி இத்யாதி. உக்தகுணத்ரயத்தையும் அவரோஹ க்ரமத்தாலே விவரிக்கிறார் - இப்படி ஸுலபனுமாய் இத்யாதி. அவரோஹக்ரமமாக அருளிச்செய்தது-இம்மூன்றிலும், "பும்ஸாம் த்ருஷ்டி சித்தாபஹாரிணம்'' என்கிற வடிவழகே ஆகர்ஷகமென்னுமிடந்தோற்றுகைக்காகவும், "ரூபௌதார்யகுணை:'' என்கிறபடியே ''மாசறுசோதி'' என்று - ப்ரதமம் வடிவழகை அருளிச்செய்கையாலே, வடிவழகிலே பர்யவஸிப்பிக்கைக்காகவும். **கலங்கி** என்றவநந்தரம், ஒருபிராட்டி தசையை ப்ராப்தராயென்று கூட்டிக்கொள்வது. "மடலூர்தும்'' என்றத்தைப்பற்ற - **மடலெடுக்கையிலே** இத்யாதி. தூதப்ரேஷ

யோபாதி. "அநீதிசெய்யாதே கொள்ளுங்கோள்" என்று பிறரைத்திருத்தினவர், "நீர்செய்யப்பார்க்கிற இது அநீதி, அத்தைத்தவிரும்" என்று பிறர் திருத்தவும் திருந்தாதபடியானார். பிறரை ஹகவத்விஷயத்திலே ப்ரவணராக்குகைக்குத் திருத்துகிற இவரை, "ஹகவத்ப்ராவண்யமாகாது" என்று திருத்தப்பார்த்தால் திருந்தாரிறே.

அன்றிக்கே, * ஏருளுமிறையோனில் - அவனுக்கு உறுப்பல்லாத நானும் என்னுடைமையும் வேண்டாவென்று அலாபத்தாலே கூப்பிடும் தம்மோடொக்கக் கூப்பிடுகைக்குத் துணைதேடி லோகவ்ருத்தாந்தத்தை அநுஸந்தித்தவிடத்து, தாம் ஹகவத்விஷயத்திலே ப்ரவணராயிருக்குமாபோலே அவர்கள் இதர விஷயங்களிலே ப்ரவணரா யிருக்கிறபடியைக்கண்டு, அவர்கள் அநர்த்தத்துக்கு நொந்து அவர்களுக்கு ஹகவத்பரத்வத்தை உபபாதித்துத் திருத்தி, "இவர்களிலே ஒருவனுயிருக்கிற என்னை, இவர்களையும் திருத்தும்படியாக்குவதே ஸர்வேஶ்வரன்" என்று அவன் தமக்குப்பண்ணின உபகாரத்தை ஸ்மரித்து, தாம் திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு மங்களாஶாஸநம்பண்ணி, இப்படி பரஹிதத்துக்கு வேண்டுவ தெல்லாம் செய்து கையொழிந்தபின்பு பழைய தம்மிழவே தலையெடுத்து, "வழியல்லாவழியேயாகிலும் கிட்டுமேத்தனை" என்னும்படியான விடாய் பிறந்து மடலெடுக்கையிலே யொருப்பட்டுச் செல்லுகிறது - இந்தத்திருவாய்மொழி. ஓரோவிஷயங்களிலே ஓரோருத்தர்க்கு ஸங்கமுண்டானால் அவ்விஷயங்கள் கிடையாவிட்டால் "அவை இப்போதே பெறவேணும்" என்னும்படியான த்வரைபிறந்தால், பின்னையவையிருந்தவிடங்களிலே புகைசூழ்ந்து புறப்படவேண்டும்படியா யிருப்பதொரு ஸாஹஸத்தைப் பண்ணிப் புறப்படவிடுவித்து முகத்திலே விழிப்பாரைப்போலே, "அத்தலைக்குப் பழியை விளைத்தாகிலும் முகத்திலேவிழிக்குமத்தனை" என்று ஸாஹஸத்திலே யொருப்பட்டு, தமக்கு இவ்வளவாகப் பிறந்த தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார்.

---

*ஞாதிகள் பண்ணாதே மடலெடுக்கிறதென்னென்ன - மடலெடுக்கையாவது இத்யாதி. ஞாதப்ரேஷணத்தைப்பற்ற நிஷித்தமாய் அவற்றிலும் கார்யகரமாகையாலே மடலெடுக்கிறுமென்று கருத்து. ஞாதப்ரேஷணாதிகள்போலன்றிக்கே ஸாஹஸப்ரவ்ருத்தியுமாய், அல்ப பலமுமாயிருக்குமென்றதுக்கு த்ருஷ்டாந்தம்-போர்கூட்டுஎன்று தொடங்கி. "தத்ஸ்யஸத்ரூஶம்ஹவெசு" என்றிருக்கிற இவர் அநீதியிலே ப்ரவர்த்திக்கிறதென்? என்ன, ஸ்வாபதேஶத்திலே பரிஹாரம் - பிறரை இத்யாதி.*

*ஏருளுமிறையோனோடே ஸங்கதியாச ஸங்கத்யந்தரம்-அன்றிக்கே இத்யாதி.கீழ்த்திருவாய்மொழியோடே ஸங்கதி அருளிச்செய்ததுக்குக் கருத்து-"மலியும்சுடரொளிமூர்த்தி, மாயப்பிரான், கண்ணன் தன்னை" என்கிற மூன்றுவிஶேஷணத்தையும், "மாசறுசோதி, ஆசறுசீலனை, ஆதிமூர்த்தியை" என்கிற பதங்களாலே அநுபாஷிக்கையாலே. ஏருளுமிறையோனோடே அருளிச்செய்ததுக்குக் கருத்து - "நாடி, எனைநாளையும்", "முன்செய்யமாமையிழந்து" இத்யாதிகளைக் கடாக்ஷித்து.தம்மோடொக்க இத்யாதி-கண்ணுதாரில் ப்ரமேயம். அவர்ளுக்கு இத்யாதி - ஒன்றுந்தேவில் ப்ரமேயம். இவர்களிலே இத்யாதி-கையார்சக்கரத்தில் ப்ரமேயம். தாம்திருத்த இத்யாதி-பொலிகவில் ப்ரமேயம். கையொழிந்த பின்பு - திருத்துகிற கார்யமானபின்பு. பழையதம்மிழவேயென்றது - ஏருளுமிறையோனில் இழவேயென்றபடி. வழியல்லாவழியே யாகிலும் என்றது - அத்தலையாலே பெறுகையன்றிக்கே ஸாதநாநுஷ்டாநத்தைப் பண்ணியாகிலு மென்றபடி. மடலெடுக்குமது ஸாஹஸப்ரவ்ருத்திவிஶேஷ மென்னுமதுக்கு - "மடலெடுக்கையாவது" இத்யாதி வாக்யத்திலே ஒருத்ருஷ்டாந்தம்அருளிச்செய்து, த்ருஷ்டாந்தாம்சம்-ஓரோவிஷயங்களிலே இத்யாதி. அவை - விஷயங்கள். ஒரு ஸாஹஸத்தைப்பண்ணியென்றது - அக்நிப்ரக்ஷேபத்தைப்பண்ணி யென்றபடி. முகத்திலே விழிக்குமத்தனை என்றது - "தூமுறுவல் தொண்டைவாய்ப்பிரானை" என்கிறவிடத்தைக் கடாக்ஷித்து.*

"அபிமத விஷயத்தைப் பிரிந்து ஆற்றமாட்டாதார் மடலேடுக்கக்கடவர்கள்" என்று ஒன்றுண்டு தமிழர் சொல்லிப்போருவது. அதாவது - **"துல்யஶீலவயோ வ்ருத்தாம்"** (துல்யஶீலவயோவ்ருத்தாம்) என்று ஶீலத்தாலும் வயஸ்ஸாலும் அபிஜநத்தாலும் வடிவழகாலும் ஸம்பத்தாலும் குறைவற்றிருப்பன இரண்டு விஷயமாய், அதுதன்னில் "அறிவு, நிறைவு, ஓர்ப்பு, கடைப்பிடி" என்றாற்போலே சொல்லுகிற நாயகலக்ஷணங்கள் நாயகனுக்கும் உண்டாய், "நாண், மடம், அச்சம், பயிர்ப்பு" என்றாற்போலே சொல்லுகிற நாயகியுடையலக்ஷணங்கள் நாயகிக்கும் உண்டாய், இப்படி இரண்டுதலையும் குறைவற்று இவர்கள் தாங்கள் ப்ராப்தயௌவநருமாயிருக்க; இவர்களைப் புறம்புகூட்டு வாரின்றிக்கேயிருக்க, யாத்ருச்சிகமாக அவனும் "வேட்டைக்கு" என்று புறப்பட்டு, இவளும் "பூக்கொய்துவிளையாட" என்று உத்யாநத்திலே புறப்பட, அவ்விடத்திலே தைவயோகத்தாலே இருவர்க்கும் கண்கலவியுண்டாய், சிலரடியாகவந்த ஸம்ஶ்லேஷமல்லாமையாலே பிரிவோடே வ்யாப்தமாகப் பிரிந்து, குணாதிகவிஷயமாகையாலே இரண்டுதலைக்கும் ஆற்றாமைவிஞ்சி, ஒருதலையை யொழிய ஒருதலைக்குச் செல்லாமைபிறந்து,

---

*உல்லோகமாகச் செல்லப்போகாதே, மடலெடுக்கை ஶாஸ்த்ரஸித்தமோவென்ன-***அபிமத விஷயத்தை இத்யாதி.** *ஸமயஸித்தமென்றபடி. "பிரிந்தாற்றமாட்டாதார்" என்கைக்கு, பிரிவு ஸம்ஶ்லேஷபூர்வகமன்றோ; அந்த ஸம்ஶ்லேஷம்வருகைக்கு ஹேதுவேது, பிரிவு வருவானென்? பிரிந்தால் ஆற்றாமை வருகைக்குத்தான் ஹேதுவேதென்ன -* **அதாவது** *இத்யாதி. யாத்ருச்சிகஸம்ஶ்லேஷமாகையாலே பிரிவு விளைந்தது, குணாதிகவிஷயமாகையாலே ஆற்றாமை விளைந்ததென்றபடி. "துல்யஶீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம் । ராகவோऽர்ஹதி வைதேஹீம் தம் சேயமஸிதேக்ஷணா" இதி ஸுந்தரகாண்டே ஸீதாம் த்ருஷ்ட்வா ஹநுமான். இந்தஶ்லோகத்திலே,* "லக்ஷணாம்" *என்கையாலே -* **வடிவழகாலும் ஸம்பத்தாலும்** *என்றது ஸித்தம். கீழே - ஸம்ஸ்க்ருதலக்ஷணம் அருளிச்செய்து, த்ராவிடலக்ஷணம் அருளிச்செய்கிறார்-***அறிவுநிறைவு இத்யாதி. அறிவு** *- ஸமீசீநஜ்ஞாநம்.* **நிறைவு** *- ஐஶ்வர்யாதிபூர்த்தி.* **ஓர்ப்பு** *- நிரூபணஸாமர்த்யம்.* **கடைப்பிடி** *- ஒரு விஷயத்தை ஸ்வீகரித்தால் யாவதாயுஷம் விடாமலிருக்கை. நாண் - லஜ்ஜை. மடம் - மடப்பம். மடப்பமாவது - ஸ்த்ரீத்வமும், பவ்யதையும். அச்சம் - பீருதை. பயிர்ப்பு பிடித்ததுவிடாமலிருக்கை. பிரிவில் வைவர்ண்ய மென்றுமாம். ஸ்வாபதேஶத்திலே,* **வேட்டைக்குப் புறப்படுகையாவது** *- ஹிரண்ய ராவணாதி நிரஸநார்த்தமாக அவதரிக்கை;* **பூக்கொய்து விளையாடுகையாவது** *- "அற்ப சாரங்களவை சுவைத்தகன்று" என்கிறபடியே விஷயப்ரவணராகை;* **உத்யாநமாவது** *- "பெய்தகாவு" என்கிற லீலாவிபூதி;* **தைவயோகத்தாலே இருவர்க்கும் கண்கலவியுண்டா** *யென்றது - யாத்ருச்சிகஸுக்ருதமடியாகபகவத்கடாக்ஷம் பிறக்கை;* **தோழிமாராவார்** *- "தூர்த்தரோடிசைந்த" என்கிறபடியே விஷயப்ராவண்யஸஹகாரிகள்.* **கண்கலவி** *- காந்தர்வவிவாஹம்.* **சிலரடியாகவந்த ஸம்ஶ்லேஷமல்லாமையாலே** *யென்றது-"நாஸௌ புருஷகாரேண" இத்யாதியைப்பற்ற* **பிரிவோடே வ்யாப்தமாக** *- பிரிவோடே தலைக்கட்ட. ஸ்வாபதேஶத்திலே, இதுக்குக் கருத்து - ஸ்வாதந்த்ர்யமடியாகவே கடாக்ஷிக்கையாலே, அந்தக்கடாக்ஷம் அவன் ஸ்வாதந்த்ர்யத்தாலே, இந்தச்சேதநன் நினைத்தபோதாக பலவ்யாப்தமாகாதொழிகை யென்று.* **குணாதிகவிஷயமாகையாலே** *- பரஸ்பரம் குணாதிக விஷயமாகையாலே.* **இரண்டுதலைக்கு** *மென்று தொடங்கி,* **செல்லாமைபிறந்து** *என்றதுக்கு - ஆற்றாமைவிஞ்சுகை இரண்டுதலைக்கும் ஸமமானாலும், செல்லாமை யொருதலைக்கே விஞ்சியிருக்குமென்று தாத்பர்யம். ஒருதலைக்கு அத்தனைசெல்லாமை இல்லாமைக்கு ஸூசகம் - "பழிக்கஞ்சிக்கூடுதல்" இத்யாதி வாக்யம். இனி, மடலெடுக்கும் லக்ஷணமேதென்ன ; தத்ப்ரகாரத்தையும் அதுதான் கார்யகரமாம்*

இரண்டு தலையையுமழித்தாகிலும் பெறப்பார்க்கை. மடலூருகையாவதுதான் - அபிமத விஷயத்தைப் பிரிந்த ஆற்றாமையாலே அவ்விஷயத்தை ஒருபடத்திலே யெழுதி, வைத்த கண்வாங்காதே அத்தைப் பார்த்துக்கொண்டு, பனைமடலைக் குதிரையாகக்கொண்டு, பிரிந்த போதுதொடங்கி கண்டபோகோபகரணங்களெல்லாம் அக்நி கல்பமாய்த் தோற்ற, ஊணு முறக்கமு மின்றிக்கே, உடம்பில் துளிநீரேறிட்டுக்கொள்ளாதே, மயிரை விரித்துக்கொண்டு திரியாநின்றால், இத்தர்மஹாநியைக்கண்ட க்ஷத்ரியாதிகள் "கெட்டேன், இவனுக்கு ஒரு விஷயத்திலே இத்தனை ஸாவபந்தமுண்டாகாதே" என்று, அவர்கள் அவ்விஷயத்திலே கூட்டுதல்; இல்லையாகில், இதுவே ஹேதுவாக இரண்டுதலையிலுள்ள பந்துக்களும் கைவிட, அலக்குப்போர்போலே ஒருவர்க்கொருவர் புகலாய் அங்ஙனேகூடுதல், தோழிமார் கூட்டுதல், ஆற்றாமைகூட்டுதல், அந்தவிஷயந்தான் குணாதிகவிஷயமாயிருக்குமாகில் பழிக்கு அஞ்சிக்கூடுதல், இவையித்தனையுமில்லையாகில் முடிந்து பிழைத்தல்செய்கையாவ தொரு ஸாஹஸப்ரவ்ருத்திவிஶேஷமாயிற்று. இதுதன்னை "கடலன்னகாமத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றையார்மேல்என்று"-ஆஶ்ரயத்தளவல்லாதபடி ஆற்றாமைகரைபுரண் டாலும் ஸ்த்ரீகள் மடலூரக்கடவர்களன்று; நாயகன் தன்னாற்றாமையாலே மடலெடுத்து உலகின்மேல் வைத்துச் சொல்லுதல், † (உலகின்மேல்வைத்துச் சொல்லுகையாவது - ஸ்வா பிப்ராயத்தை யறிவியாமல் "ஒருவன்மடலூரப்போகிறான்" என்று அந்யாபதேசேந சொல்லுகை.) "நான்வரைபாயப்புகா நின்றேன், மடலெடுக்கப்புகாநின்றேன்" என்று

---

*ப்ரகாரத்தையும் தமிழருடைய ஸ்மாதியாலே காட்டுகிறார்* - **மடலூருகையாவதுதான்** *இத்யாதி. படம் - பலகை. பனைமடல் - பனைமட்டை.* **குதிரையாகக்கொண்டு** *என்றதுக்கு* - **திரியாநின்றால்** *என்றத்தோடே அந்வயம்.* **போகோபகரணங்களெல்லாம் அக்நிகல்பமாய்** *என்றவிடத்திலே-"சாந்தமும் பூணும்", 'திரிகின்றது வடமாருதம்'. 'யா நிஶா ஸஹ ...', 'ஸஷ வ...ஹாவாய...' இத்யாத்யநுஸந்தேயம்.* **ஊணுமுறக்கமுமின்றிக்கே** *என்றவிடத்திலே - "நெடிதுயிர்த்துமுண்டறியாள்" இத்யாதியும்,"உண்ணும்நாளில்லையுறக்கமுந்தானில்லை"இத்யாதியும் அநுஸந்தேயம். உண்டாகாதே யென்றது - முழுச்சொல்லாய், உண்டாயிற்றதே யென்றபடி.* **பந்துக்கள் கைவிடுகை யாவது** *- "இவள் எங்களைவிட்டுக்கடவாதிருக்க வேண்டியிருக்க, சிலசெயல்களைச் செய்யாநின்றாள்; இது நங்குடிக்குச் சேராது" என்று அவர்கள் கைவிட என்றபடி.* **அலக்குப்போராவது** *- ஶேவகர் ஈட்டிகளை பொன்றோடொன்றெதிர்த்துவைக்கை.* **தோழிமார்கூட்டுதல்** *என்றவிடத்திலே - சித்ரலேகா வ்ருத்தாந்தத்தை நினைப்பது. ஆற்றாமைகூட்டுதலென்றது - மடலெடுக்கிறவனுக்கு உண்டான ஆற்றாமை மடலெடுக்கப்படுகிற விஷயத்துக்கு முண்டாகை.* **ஆற்றாமைகூட்டுதல்** *என்றவிடத்திலே- "க்வ ... ஹ" இத்யாதியில் வ்ருத்தாந்தத்தை நினைப்பது. அந்தவிஷயம் - நாயகன் அத்தனைசெல்லாமையில்லாத அந்தவிஷயம்.* **பழிக்கஞ்சிக்கூடுத லென்றது** *- "நமக்காகவிவன் முடியாநின்றான்" என்கிற பழிக்கஞ்சிக்கூடுத லென்றபடி. இம்மடலெடுக்கைதான் தமிழருடைய விதாநாநுகுணமாக ஸ்த்ரீகளுக்குச்சேராதென்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் -* **இது தன்னைக்கடலன்ன** *இத்யாதி. இக்குறளுக்கு அர்த்தம் -* **ஆஶ்ரயத்தளவல்லாத**' *வென்று தொடங்கி,* **அல்லர்களென்று** *என்னுமளவாக. மற்றையார்மேலே யென்று கூட்டிக்கொண்டு, அநந்தரம் -* **ஸ்த்ரீகள்மடலூரா** *இத்யாதி அநுஸந்திப்பது.* **கடலன்ன** *- ஸமுத்ரஸத்ருஶமான,* **காமத்தராகிலும்** *- காமத்தையுடையவராகிலும்,* **மாதர்-ஸ்த்ரீகள் மடலூரார்** *- மடலெடார்கள்,* **மற்றையார்மேல்** *- நாயகன்மேலேயென்று ஶப்தார்த்தம். பின்னை, யார்தான் மடலூரக்கடவர்களென்ன-* **நாயகன்** *இத்யாதி. மடலெடுத்து-மடலெடுக்கைக்காக.* **உலகின்மேல்வைத்துச் சொல்லுகையாவது-** *"நாயகியைப்பிரிந்தார் மடலெடுப்பர்களோ" என்றாற்போலே லோகத்தின்மேலே வைத்து ப்ரஸங்*

---

† **குண்டலிதக்ரந்தம் க்வாசித்கம். வ்யாக்யாநத்துக்குச்சேராது.**

தோழிக்கு வந்து அறிவித்தால், அவள் கூட்டிற்றிலளாகில் பின்பு அவன் இதுசெய்யக்கடவன்; இத்தனையல்லது ஸ்த்ரீகள் மடலெடுக்கக் கடவரல்லர்கள் என்று இங்ஙனே ஒருமர்யாதை கட்டினார்கள் தமிழர்; இங்கு அங்ஙனன்றிக்கே, பிராட்டிதான் மடலெடுத்ததாக இராநின்றது, தமிழர் “ஸ்த்ரீகள்மடலூரக்கடவரல்லர்” என்றுசொன்ன இது பின்னைச்சேரும்படி என்? என்னில்; அவர்கள் ஒருதலையிலேதான் அத்தை யிசைந்தார்களே, அப்படியிசைகைக்கு அடி ஆற்றாமையே, அது இரண்டுதலைக்கு மொத்தபின்பு ஒருதலையிலோதுக்குவாரார். வரம் பழியவாகிலும் முகங்காட்டிவைத்துக்கொண்டு யரிக்க வேண்டும்படியா யிருப்பதொரு விஷயம் புறம்பில்லையே; இங்ஙனேயிருப்பார் சிலரைக் கல்பித்துக் கொண்டார்களித்தனை யிறே. இதுக்கு ஒருமர்யாதை கட்டுகையாவது - ஆசைக்கு ஒரு வரம்பிட்டார்களாமித்தனை யிறே; அப்போது பின்னை ராஜாஜ்ஞைக்கு நிற்கவேணும், இல்லையாகில் வேலியடைத் தால் நிற்கவேணும், ஆகையால் அவர்கள் ப்ரேமஸ்வபாவம் அறிந்திலர்களாமித்தனை.

இவர்தாம் * வளவேழுலகிலே - நாம் அவனோடே கலக்கையாகிற இது அவ னுக்கு அவத்யாவஹம், நம்பேற்றுக்காக அவனோடேகலந்து அவனுக்கு அவத்யத்தை விளைப் பதிற்காட்டில் நாம் அகன்று முடிந்தாகிலும் அத்தலைக்கு அதிசயத்தைப்பண்ணவமையுமென் றிருக்குமத்தோடும் சேராது; இனி * ஏறுளுமிறையோனிலே - அவனுக்கு உறுப்பல்லாத ஆத்மாத்மீயங்கள் நசித்துப்போக வமையுமென்று சொன்னவத்தோடும் சேராது; ஆக,

---

இக்கை. வரைபாயப்புகாநின்றேன் - ப்ருகுபதநம்பண்ணப்புகாநின்றேன். இது இங்கேசேரும்படி எங்ஙனேயென்று ஶங்கிக்கிறார்-இங்கு இத்யாதி. பிராட்டி - இத்திருவாய்மொழியில் நாயகி. புருஷர் கள் மடலூருகைக்கு எந்தஹேதுவோ, அந்தஹேதுவே ஸ்த்ரீகளுக்கும் உண்டாகையாலே ஸ்த்ரீகள் மடலூரத்தட்டில்லையென்று பரிஹரிக்கிறார் - அவர்கள் இத்யாதி. ஒருதலையிலொதுக்குவாரார் என் கிறவிடத்திலே - “ஸ்த்ரீணாம் த்விகுண ஆஹாரஃ லஜ்ஜா சாபி சதுர்குணா । ஸாஹஸம் ஷட்குணம் ப்ரோக்தம் காமஶ்சாஷ்டகுணோ பவேத்” என்கிற ஶ்லோகம் அநுஸந் தேயம். ஈடு - தமிழர்மர்யாதாப்ரயுக்தஶங்கையை அநப்யுபகம்யவாதத்தாலே பரிஹரித்து; அப்யுபகம்ய, அவர்கள் “இல்லை” என்றதுக்குக் கருத்து இன்னதென்கிறார் - வரம்பழிய இத்யாதி. அன்றிக்கே, பெண்மடல் லோகத்திற்கண்டோமில்லை யென்ன - வரம்பழிய இத்யாதி யாதல். வரம்பாவது - ஸ்த்ரீ த்வாபிமாநாதிகள். விஷயம்புறம்பில்லையே - ஈஶ்வரனைப்போலே இதிஶேஷஃ. ஈஶ்வரனையொழியப் புறம்பில்லையென்றபடி. ஆகையாலே இவள் பகவத்விஷயத்தில் மடலூருகைக்குத் தட்டில்லை. புறம்பு விஷயமுண்டாய், வாஸவதத்தாதிகள் மடலெடுக்கிறதாயிருக்கிறதே யென்ன - இங்ஙனே இத்யாதி. இப்படி கல்பித்துக்கொள்ளுகையாலே, அர்த்தஸ்திதியைப் பார்த்தால் ஆண்மடலுமில்லை, பெண் மடலுமில்லை யென்று கருத்து. “ஒருதலையிலொதுக்குவாரார்” என்ற டுந்தினபரிஹார விவரணம்- இதுக்கொரு இத்யாதி. ப்ரேமஸ்வபாவமறியாமையிறே இவ்வ்யவஸ்தைகட்டினதுக்கு நிபந்தன மென்று கருத்து. அப்போது - ராகப்ராப்தமன்றிக்கே, “புருஷர்களே மடலெடுக்கக்கடவர்கள்” என்று வைதமாகக்கல்பித்தபோதென்றபடி. வேலியடைத்தால் நிற்கவேணும் என்ற வகந்தார், இப்படி நில்லாமல் ஸ்த்ரீகள் ப்ரவர்த்திக்கையாலே ஆற்றாமை இரண்டுதலைக்கும் ஸமமாகையாலே, ஸ்த்ரீகள் மடலூரத்தட்டில்லை யென்று கொள்வது.

ஈடு - மடலெடுக்கை அந்யாபதேஶஸமாதிக்குச் சேராதென்று ஶங்கித்துப்பரிஹரித்து, ஸ்வாபதேஶத்திலு மிதுசேராதென்று ஶங்கித்துப்பரிஹரிக்கிறார்-இவர்தாமென்று தொடங்கி, இதில் எனக்குஉறுப்பல்லாத அவனும் அவனுடைமையும் வேண்டாவென்கிறார் என்கிற வாக்யமளவாக.

வீதராகராயிருப்பார் செய்வதுமொன்றல்ல, இவர்தம் ஸ்வரூபத்தோடும் சேராது, ஜ்ஞாநாதிகரா யிருப்பார் செய்வதுமொன்றல்ல, ஆனுல் இது இருந்தபடியென்? என்னில்; இவற்றுக்கெல்லாம் பரிஹாரம், பட்டர் திருமடல் அருளிச்செய்கிறபோது அருளிச்செய்தருளினுர், இங்குத்தைக்கும் வேண்டுவது சொல்லவேணுமிறே. ஜ்ஞாநாதிகராயிருப்பார் ஜநககுலத்திலுள்ளார்க்குமே லில்லையிறே ; அக்குடியிலே பிறந்த பிராட்டியானவள், "யாநமஸக்யா வாமராஷ்டூ" (யாநமஸ்க்யாபுராத்ரஷ்டும்) என்கிறபடியே, பெருமாள் காட்டுக்கு எழுந்தருளுகிறபோது † "மன்னனிராமன்பின் வைதேவியென்றுரைக்கும் அன்னநடையவணங்கு நடந்திலளே" என்கிறபடியே - அவர்பின்னே பிராட்டி புறப்பட்டுப்போகையாலே ஶிஷ்டாசாரமுண்டாயிருந்தது; இனித்தான் * மயர்வறமதிநல மருளப்பெற்ற இவர் அநுஷ்டிக்கையாலே இதுதானே ப்ரமாணமாகத் தட்டில்லையிறே, "யத்யதாசரதி ஶ்ரேஷ்டஃ" (யத்யதாசரதிஶ்ரேஷ்ட்டஃ) என்றும், "ஸ யத்ப்ரமாணம் குருதே" (ஸயத்ப்ரமாணம்குருதே) என்றும் ஸத்துக்களுடைய அநுஷ்ட்டாநத்தை ப்ரமாணமாகக் கோள்ளக் கடவதிறே. ஆனுலும் காமத்தை நிஷேதியாநின்றதேயென்னில்; அப்ராப்த

---

ப்ர:—ஸ்ரீ ராமாயணே அயோத்யாகாண்டே ||நக|| வநவாஸாய ம் ப்ரஸ்தா ராமேண ஸஹ ஸீதா யா வாமாயாமணக யஅ—"யாநமஸக்யாவாமராஷ்டூம் ஸ்ருத்வை தாராகாஶமயமா வி । தாஶ்வ்யஸீதாம் வஸ்த்யு ஷி ராஜஶாஸ்தாஜநாஃ||அ||".

ஶ்ரீமத்கீதாஸு த்ருதீயே, "யத்யதாசரதி ஶ்ரேஷ்டஸ்தத்தேவேதரோ ஜநஃ । ஸயத்ப்ரமாணம் குருதே லோகஸ்தநநுவர்ததே||உக||".

---

ஆக வீதராகராயிருப்பார் என்றவிடத்திலே, ஆக என்றவநந்தரம், இவர்தம் ஸ்வரூபத்தோடும் சேராது என்றத்தை அநுஸந்திப்பது. ஸ்வரூபத்தோடு மென்றது-"வளவேழுலகிலே" இத்யாதி வாக்யத்தாலும், "இனி எருளுமிறையோனிலே" இத்யாதிவாக்யத்தாலும் சொன்ன ஶேஷத்வபாரதந்த்ர்ய விஶிஷ்ட ஸ்வரூபத்தோடு மென்றபடி. வீதராக இத்யாதி - காமம் வீதராகர்க்கு நிஷித்ததயா த்யாஜ்யமாகையாலே செய்வதொன்றல்ல வென்றபடி. ஜ்ஞாநாதிகர்-ஶிஷ்டர்கள். ஆனுல் - இப்படியானுல். அருளிச்செய்கிறபோது - அர்த்தம் அருளிச்செய்கிறபோது. இங்குத்தைக்கும் - மாசறுசோதிக்கும். வேண்டுவது - வேண்டினபரிஹாரங்கள். ஶங்காத்ரயத்தையும் அவரோஹக்ரமத்தாலே பரிஹரிக்கிறுராகத் திருவுள்ளம்பற்றி, அதில், "ஶிஷ்டாநுஷ்டாநமில்லை" என்ற ஶங்கைக்கு ஶிஷ்டாநுஷ்ட்டாநமுண்டென்று பரிஹரிக்கிறுர் - ஜ்ஞாநாதிகராய் இத்யாதி. யாநமஸக்யா இதி - "யாநமஸக்யாவாமராஷ்டூம்ஸ்ருத்வைதாராகாஶமயமாவி। தாஶ்வ்யஸீதாம் வஸ்த்யுஷி ராஜஶாஸ்தாஜநாஃ" இத்யயோத்யாகாண்டே ப்ரயாணகாலே. பெரிய திருமடலில் மன்னனிராமன் இத்யாதி. ராஜாவான சக்ரவர்த்திதிருமகன் பின்னே, வைதேஹியென்று சொல்லப்படுகிறவளாய் அன்னம்போன்ற நடையையுடையளாய் அப்ராக்ருதஸ்வபாவையான பிராட்டிபோயிற்றிலளோ இத்யர்த்தஃ. இவருக்கு ஒருஶிஷ்டாசாரம் வேணுமோ, இவருடைய ஆசாரமே நமக்கு ப்ரமாணமமன்றுேவென்கிறுர்-இனித்தான் இத்யாதி. ஜ்ஞாநாதிகர் செய்தது ப்ரமாணமென்றத்தைக் காட்டுகிறுர், யத்யத் இத்யாதி. "யத்யதாசரதிஶ்ரேஷ்டஸ்தத்தேவேதரோஜநஃ । ஸயத்ப்ரமாணம்குருதே லோகஸ்தநநுவர்ததே" இது கீதாஸு த்ருதீயே. "வீதராகராய்" இத்யாதி த்விதீயஶங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறுர் - ஆனுலும் இத்யாதி. நிஷேதியாநின்றதே என்கிறவிடத்திலே - "ஶாஸ்த்ரஜ்ஞாநபஹுக்லேஶ புத்தேஶ்சலநகாரணம்", "காமோ நாவமந்தவ்யஃ" இத்யாதியைக் கண்டுகொள்வது. அப்ராப்த இதி - பகவத்வ்யதிரிக்தவிஷயங்கள் அப்ராப்

---

* பெரிய திருமடல்-௬க.

விஷயத்தில் காமத்தையிறே நிஷேதித்தது, அவை நிலைநில்லாமையாலே; பகவத்விஷயத்தில் காமத்தை "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்று விதியாநின்றதிறே. வேதாந்தவிஹிதையான பக்தியையிறே - இங்கு, காமமென்கிறது. * வளவேழுலகில் - நாம்கிட்டுகை அவனுக்கு அவத்யமென்று அகன்ற இவர், அத்தலையையழித்து முகங்காட்டுவித்துக்கொள்ளப் பார்க்கிற இது இவர் ஸ்வரூபத்தோடு சேருமோ என்னவும் வேண்டா; அங்கு அகலநினைத்ததும் அத்தலைக்கு அவத்ய பரிஹாரத்துக்காகவிறே ; தமக்கு ஆற்றாமை கரைபுரண்டிருந்தது, "தன்னையாசைப்பட்டார் பெறுதேமுடிய, முகங்காட்டாதேயிருந்தான்" என்கிற அவத்யத்தை பரிஹரிக்கைக்குச் செய்கிறாராகையாலே † (இதுவும் இவர் ஸ்வரூபத்தோடே சேரும்). அங்குஅகன்றது ஜ்ஞாநகார்யம், இங்குமேல்விழுகிறது பக்திகார்யம். இத்தனை கலங்கப்பண்ணிற்றில்லையாகில் அத்தலையில் வைலக்ஷண்யத்துக்கு நமஸ்காரம். இவர்தாம் இப்படி கலங்கிற்றிலராகில் இவருடைய ப்ரேமத்துக்கு நமஸ்காரம். அவன் அருளிற்றும் மதிநலமிறே, அதுபடுத்துகிறபாடிறே இதெல்லாம்; மதியின் கார்யம் அது, நலத்தின்கார்யம் இது. இனித்தான் ஸித்தோபாயத்தை ஸ்வீகரித்து அது பலியாவிட்டால் ஸ்வரூபத்தை அந்யதாகரிக்குமித்தனையிறே; அவன் ஸ்வரூபம் அந்யதாகரித்

ப்ர:—ப்ருஹதாரண்யகே (ச-ரு) மைத்ரேயீ ப்ராஹ்மணே, "ஆத்மா வா அரே த்ரஷ்டவ்ய: ச்ரோதவ்யோ மந்தவ்யோ நிதித்யாஸிதவ்ய:॥".

தங்களாகையாலும் அஸ்த்திரங்களாகையாலும், தத்விஷயத்தில் காமத்தையிறே நிஷேதித்ததென்றபடி. "இதரவிஷயத்தில் காமமாகாது, பகவத்விஷயத்தில் காமமாம்" என்னுமதுக்கு நியாமகமேதென்ன - பகவத்விஷயத்தில் இத்யாதி. "நிதித்யாஸிதவ்ய:" என்று பக்தியையன்றோ விதிக்கிறதென்ன - வேதாந்தவிஹிதை இத்யாதி. "இவர்தம் ஸ்வரூபத்தோடும் சேராது" என்ற ப்ரதமசங்கையை அநுவதித்து, ஷட்விதமாக பரிஹரிக்கிறதாகத் திருவுள்ளம்பற்றி ; ப்ரதமம், மடலெடுக்கை அதிசயாதாயகமென்று பரிஹரிக்கிறார், - வளவேழுலகில் இத்யாதி. இவர் ஸ்வரூபத்தோடு - அத்தலைக்கு அதிசயாதாயகமான ஸ்வரூபத்தோடு. செய்கிறாராகையாலே என்ற ஹேதுவுக்கு - என்னவும் வேண்டா என்றதோடே யந்வயம். த்விதீயபரிஹாரம் - அங்கு அகன்றது இத்யாதி. இத்தால் - பக்திகார்யமான கலக்கத்தாலே, ஸ்வரூபவிருத்தமானாலும் தவிரப்போகாதென்றபடி. ஆக, முந்தினபரிஹாரம் - அநப்யுபகமேந ; இரண்டாவது - அப்யுபகமேந. இப்படி அத்தலைக்கு அவத்யத்தை விளைத்தாகிலும் கிட்டப்பார்க்கிற இது கலக்கத்தாலேயிறே, கலங்குகைக்கு ஹேதுவேதென்ன - இத்தனை இத்யாதி. கலங்கப்பண்ணிற்றில்லையாகில் - அதிமாத்ரப்ராவண்யத்தை விளைத்ததில்லையாகில். வைலக்ஷண்யத்துக்கு நமஸ்காரம் - வைலக்ஷண்யத்துக்கு அவத்யம். ஹேத்வந்தரம்-இவர் தாம் இத்யாதி. கலங்கிற்றிலராகில் - அதிமாத்ர ப்ரேமயுக்தரல்லராகில். ப்ரேமத்துக்கு நமஸ்காரமென்றது - அல்லாதார் ப்ரேமத்திற்காட்டில் இவர் ப்ரேமத்துக்கு வாசியில்லாமையாலே, ப்ரேமத்துக்கு அவத்யமென்றபடி. அதாவது - ஈச்வரவைலக்ஷண்யத்தாலும், தாம் ப்ரேமஸ்வபாவராகையாலும் கலங்கினாரென்றபடி. "வளவேழுலகிலகன்றது ஜ்ஞாநகார்யம், இது பக்திகார்யம்" என்கைக்கு, இவர்க்கு ஜ்ஞாநபக்திகளுண்டோவென்ன, அவனருளிற்றும் இத்யாதி. "அங்ககன்றது ஜ்ஞாநகார்யம்" இத்யாதி வாக்யவிவரணம் - மதியின்கார்யம் இத்யாதி. "வளவேழுலகில் ஸ்வரூபத்துக்குச்சேராது" என்றசங்கைக்கு த்ருதீயபரிஹாரம் - இனித்தான் இத்யாதி. "ததஸ்யஸத்ருசம்பவேத்" என்றிராதே, இப்படி அந்யதாகரிக்கலாமோவென்ன - அவன்ஸ்வரூபம் இத்யாதி. அவன் ஸ்வரூபம் - ரக்ஷகத்வஸ்வரூபம். அவன்ரக்ஷகத்வஸ்வரூபம் இப்போது அந்யதாகரித்ததென்கைக்கு நியாமக

† குண்டலிதக்ரந்தம் வ்யாக்யாநவிருத்தம்.

தால் இத்தலைசொல்லவேண்டாவிறே. "இத்தலையில் கர்த்தவ்யமில்லையாகில் அவனுக்கு அஶக்தியில்லையாகில் நடுவேவிளம்பத்துக்கு ஹேதுவேன்?" என்று தோற்றுமிறே. ஆற்றாமையையும் ஆவிஷ்கரித்து அம்பும் தொடுக்கவேண்டும்படியான விஷயத்தை யன்றே இவர்பற்றிற்று. இவர் தமக்கு "மடலேடுக்கக்கடவேன்" என்று துணிந்த துணிவுக்கு மேற்பட அநுஷ்டிக்கவேண்டுவதில்லையாயிற்று குணாதிகவிஷயமாகையாலே. கடலைப் பெருமாள் ஶரணம்புக்கவிடத்தில் தானாகவந்து முகங் காட்டாமையாலே நாலுமூன்றம்பை விட்டு உடம்பிலே பாதிவேந்தபின்பிறே வந்து முகங்காட்டிற்று; இங்கு அதேல்லாம் வேண்டாமையாலே, "**சாபமாநய**" (சாபமாநய) என்கிறவோபாதி, "மடலூருவேன்" என்று அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக்கொள்ளப் பார்க்கிறார். தம்முடைய ஸ்வரூபத்தில் கலக்கம் அநுவர்த்தியாநிற்கச்செய்தேயும், அவனுடைய குணஜ்ஞாநத்தில் கலக்கமின்றிக்கே யிருக்கிறதுகாணும் இவர்க்கு. * ஏறாளுமிறையோனில் - அவனுக்கு உறுப்பல்லாத நானும் என்னுடைமையும் வேண்டா என்று முடித்துக்கொள்ளப்பார்த்தவிடத்தில், அது தம்கையதன்றிக்கே, அவனுளனாக இது அழியாததாயிருந்தது; இனி "அத்தலையே பிடித்து † (அழிப்போம்" என்று,) வேர்ப்பற்றோடே யழிக்கப்பார்க்கிறார்; உண்டாம்போதும் அத்தலையாலேயுண்டாய், இல்லையாம்போதும் ஒன்றாக இல்லையாம்படியிறே வஸ்துஸ்வரூபந்தானிருப்பது. "உயிரினாற்குறைவிலம்" என்றார் அங்கு, இங்கு - உயிர்க்கு உயிரினால் குறைவிலம் என்கிறார். * ஏறாளுமிறையோனில் - அவனுக்கு உறுப்பல்லாத நானும்

---

ப்ர:—யுத்தகாண்டே (உக) ஸமுத்ரம் ப்ரதி ராமஃ, "சாபமாநய ஸௌமித்ரே ஶராம்ஶ்சாஶீவிஷோபமாந் । ஸாகரம் ஶோஷயிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமாஃ॥உஉ॥".

---

மேதென்ன - இத்தலையில் இத்யாதி. ஆக, மடலெடுக்கையை அப்யுபகம்ய பரிஹரித்தார் - கீழெல்லாம்; இதெல்லாம்வேண்டுவது இவர் தாம் மடலெடுத்தாலன்றோ, "ஊர்ந்தும்" என்கையாலே - மடலெடுக்கவேயில்லையே யென்று அநப்யுபகம்யவாதத்தாலே நாலாம் பரிஹாரம் - ஆற்றாமையையும் இத்யாதி. இவ்வாக்யத்தை - இவர்தமக்குமடலேடுக்க இத்யாதி வாக்யாநந்தரம் அநுஸந்தித்துக் கொள்வது. குணாதிக விஷயமானால் உத்யோகமாத்ரமே போருமோ வென்ன-கடலை இத்யாதி. "சாபமாநய ஸௌமித்ரே ஶராம்ஶ்சாஶீவிஷோபமாந் । ஸாகரம் ஶோஷயிஷ்யாமி பத்ப்யாம்யாந்து ப்லவங்கமாஃ" இதி யுத்தகாண்டே ஸமுத்ரம் ப்ரதிராமஃ. மடலெடுக்கும்படிகலங்குகிறதசையிலே "குணாதிகன்" என்று குணஜ்ஞாநமுண்டாகக் கூடுமோவென்ன-தம்முடைய இத்யாதி. கீழே "இனி ஏறாளுமிறையோனிலே" இத்யாதி வாக்யத்தாற் சொன்ன ஶங்கையைப் பரிஹரிக்கிறார் - ஏறாளும் இத்யாதி. இது - அஞ்சாம்பரிஹாரம். அதாவது - அத்தலையில் விநியோகத்துக்கு உறுப்பல்லாத ஸ்வஸத்தா நாஶத்துக்கு உடலாக அவனையழிக்கப் பார்க்கிறாராகையாலே, பாரதிஶயகரத்வரூபமான ஸ்வரூபத்துக்கு விரோதமில்லையே யென்று கருத்து. அத்தலையேபிடித்து வேர்ப்பற்றோடேயழிக்க வென்றது - அவனுக்கு நிரூபகமான ரக்ஷணதர்மம் இவர் மடலெடுத்தால் அழியுமாகையாலே, நிரூபகத்தையொழிய நிரூப்யஸித்தியில்லை யென்னுமத்தைப்பற்ற. அவனையழித்தால் ஸ்வஸத்தை யழியுமோவென்ன - உண்டாம்போதும் இத்யாதி. ஒன்றாக - ஒன்றும். "ஏறாளுமிறையோனில்" இத்யாதிவாக்யத்தை முகபேதேந விவரிக்கிறார் - உயிரினால் இத்யாதி. "இனி ஏறாளுமிறையோனிலே" இத்யாதி ஶங்கைக்கு அப்யுபகமவாதேந பரிஹாராந்தரம் - ஏறாளும் இத்யாதி. இது - ஆறாம்பரிஹாரம். அதாவது - ஸ்வரூபவிருத்தமானாலும், ஆற்றாமையின் முறு

---

† குண்டலிதம் வ்யாக்யாந விருத்தம்.

என்னுடைமையும் வேண்டாவென்றார், இதில் - எனக்கு உறுப்பல்லாத அவனும் அவனுடைமையும் வேண்டா வென்கிறார். "ராவணன் மாயாசிரஸ்ஸைக்காட்டினபோது, இதரஸ்த்ரீகள் அஹ்ருதயமாக அழுமாபோலே தன்னுற்றுமையாலே கூப்பிட்டு, இவ் வார்த்தை கேட்டபோதே முடியாதிருப்பானேன்" என்று பட்டரைச் சிலர்கேட்க, "ஜ்ஞாநாஜ்ஞாநங்களன்று ஜீவநநிமித்தம், அத்தலையில் ஸத்தையாயிற்று; அதுக்கு அழிவில்லாமையாலே யிருந்தாள்" என்று அருளிச்செய்தார்.

இப்படி அத்தலையை அழித்தாகிலும் முகங்காட்டுவித்துக்கொள்ள வேண்டும்படி தமக்குப் பிறந்த தசாவிசேஷத்தை; எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொரு பிராட்டி ஆற்றாமை மீதூர்ந்திருக்கச் செய்தே இவள் தரித்திருந்த இருப்பைக்கண்டு, தோழியானவள், "முன்புத்தையளவுகளன்றிக்கே இவள் தேறியிருந்தாள், அவன் வாராதிருக்க இவளுக்கித்தனை தேற்றம் உண்டாம்போது, ஸாஹஸங்களிலே துணிந்தாளாகவேணும்" என்றுபார்த்து, "நீசெய்யநினைக்கிற இது உன் தலைமைக்கும் அவன்தலைமைக்கும், உன் மதிப்புக்கும், † (அவன்மதிப்புக்கும்) உன்பிறப்புக்கும் உன்னுடைய மர்யாதைகளுக்கும் போராதுகிடாய்" என்ன; "என்ஸ்வரூபத்தை அழித்தாகிலும் † (அவன்ஸ்வரூபத்தையழித்தும்) மடலெடுக்கை தவிரேன்" என்று துணிந்த துணிவைத் தோழிக்கு அறிவிக்க;

---

குதலாலே ஸ்வரூபத்தை அதிக்ரமித்து அவனை யழிக்கப்பார்க்கிறு ரென்றபடி. இத்தால் - எருளு மிறையோனிற்காட்டில் இதுக்கு ஆற்றாமை அதிகமென்று கருத்து. "உண்டாம்போதும் அத்தலையாலேயுண்டாய்" என்கைக்கு, அவன் ஸத்தையடியாக இத்தலையில் ஸத்தையுண்டானமை எங்கே கண்டோமென்ன; ஸம்வாதம் - ராவணன் இத்யாதி. கூப்பிட்டு என்ற வநந்தரம், ஸத்தையோடே யிருந்தா ளென்று கூட்டிக்கொள்வது. முடியாதிருப்பானேன் என்றதுக்கு - அவர் ஜீவித்திருந்தமையை தபோவிசேஷத்தாலே யறிகையாலே முடியாதிருந்தாளோ வென்று தாத்பர்யம். ஜீவநநிமித்தம் - ஜீவிக்கைக்கும் முடிகைக்கும் நிமித்தம். ஸத்தையாயிற்று - ஸத்தாதத்ராஹித்யங்களாயிற்று. யத்வா, ஜ்ஞாநாஜ்ஞாநங்களன்று ஜீவநநிமித்தம் என்கிறவிடத்திலே - "அவர் ஜீவித்திருக்கிறார்" என்கிற ஜ்ஞாநம் ஜீவநநிமித்தமன்றென்று இவ்வளவே இவ்விடத்துக்கு அபேக்ஷிதம். அஜ்ஞாநத்தையுங் கூட்டிச் சொன்னது - த்ருஷ்டாந்தார்த்தமென்னுதல். அவதாரத்தின் மெய்ப்பாட்டாலே "எதிர்த்தலையுண்டு" என்கிற ஜ்ஞாநமில்லாமையாலே, ஜ்ஞாநம் ஜீவநநிமித்தமன்றென்று தாத்பர்யம்.

ஆக, ப்ராஸங்கிகஸங்காஸமாதாநங்களைப்பண்ணி, இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார்-இப்படி இத்யாதி நசாவிசேஷத்தை-ஈஸ்வரனுக்கு அறிவிக்கவேணுமென்று பார்த்தென்று கூட்டிக்கொள்வது. மீதூர்ந்து - மேலேவ்யாபித்து. தேற்றம் - தெளிவு. "யாமடலூர்ந்தும், யாமடமின்றி" இத்யாதியைப்பற்ற - உன்தலைமைக்கும் என்றது. தலைமை - வைலக்ஷண்யம். "ஆதிமூர்த்தி" என்றத்தைப்பற்ற - அவன்தலைமைக்கும் என்றது. "என்னைநிறைகொண்டான்" என்றத்தைப்பற்ற - உன்மதிப்புக்கும் என்றது. "குதிரியாய் மடலூர்தும்" என்றத்தைப்பற்ற உன்பிறப்புக்கும் இத்யாதி. "என்னைநிறைகொண்டான்" என்றத்தைப்பற்ற - உன்னுடைய மர்யாதைகளுக்கும் போராதென்று. "யாமடலூர்ந்தும்" என்றத்தைப்பற்ற - என்ஸ்வரூபத்தையழித்தாகிலும் என்றது. தோழிக்கு அறிவிக்க என்றதுக்கு-தோழிக்கு அறிவிக்கிற வ்யாஜத்தாலே ஈஸ்வரனுக்கு அறிவிக்கவென்று

---

† குண்டலித க்ரந்தங்களிரண்டும், "அழித்தாகிலும்" என்ற விடத்தில், "அழித்தும்", என்ற பாடமும், "அறிவிக்க" என்கிற விடத்திலே, "அறிவிக்கிற பாசுரத்தாலே அருளிச் செய்கிறார்" என்ற பாடமும் வ்யாக்யான விருத்தங்கள்.

இத்தைக்கேட்டு அஞ்சி, ஸர்வேஶ்வரன், இருந்தவிடத்தில் இருக்கமாட்டாமை வந்து முகங்காட்டித் தானும் ஸத்தைபெற்று இவளையும் தரிப்பித்தானாய்த் தலைக்கட்டுகிறது. இவர் மடலிலே துணிந்தால் கடுகவந்துமுகங்காட்டிப் பிழைக்கில் பிழைக்குமித்தனைபோக்கி, இல்லையாகில் ஸத்தைகிடக்க விரகில்லையிறே அவனுக்கு; ப்ரஹ்மாஸ்த்ரத்துக்குத் தப்பவோண்ணாதிறே அவனுக்கு. இதுக்குமுன்பு, "அவனாலேபேறு" என்று போந்தாரேயாகிலும், ப்ராப்யமான கைங்கர்யத்துக்கு பூர்வகாலீநமாயிருப்பன பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளென்று சிலஉண்டிறே, அவைதவிரவோண்ணாதிறே. இனி, பக்திமானுக்கும் பக்தியுண்டு; ப்ரபந்நனுக்கும் பக்தியுண்டு, ருசியையொழிய ப்ரபத்தி பண்ணக்கூடாதே. பக்திமானுடையபக்தி, வைதமாய்வருமது; ப்ரபந்நனுடையபக்தி, ருசிகார்யமாயிருக்கும். பக்திமானுக்கு ஸாதநரூபமாயிருக்கும், இவனுக்கு தேஹயாத்ராஶேஷமாயிருக்கும். பக்திமானுக்கு பலஶ்ரத்தையில்லாதபோது தவிரலாயிருக்கும், ப்ரபந்நனுக்கு ஸ்வரூபப்ரயுக்தமாய் வருமதாகையாலே ஒருகாலும் தவிராதாயிருக்கும்.

# முதற்பாட்டு.

மாசறுசோதி என்செய்யவாய்மணிக்குன்றத்தை
ஆசறுசீலனை ஆதிமூர்த்தியைநாடியே
பாசறவெய்தி அறிவிழந்தெனைநாளையம்
ஏசறுமூரவர்கவ்வை தோழியென்செய்யுமே ?

---

*அத்யாஹரிப்பது.* "இரைக்கும் கருங்கடல்வண்ணன்" *என்றத்தைப்பற்ற-* **முகங்காட்டித் தானும்ஸத்தை பெற்று** *என்றது. முகங்காட்டாவிடில் இவளுக்கு ஸத்தையில்லையாமதொழிய, அவனுக்கு ஸத்தையில்லையாமோ வென்ன -* **இவர்மடலிலே** *இத்யாதி. அதாவது - பரமப்ரணயியாகையாலே, இவளை தரிப்பியாவிடில் அவனுக்கும் ஸத்தை கிடவாதென்றபடி. விரகில்லாமை எப்படியென்ன -* **ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு** *இத்யாதி.* **ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு** *- அத்தைப்போலே துர்லங்க்யமானதுக்கு. இத்திருவாய்மொழியில், "மடல்" என்றுசொல்லுகிறது - ஸ்வாபதேஶத்திலே, பக்தியையிறே; இது பின்னை அவனையே உபாயமாகப்பற்றியிருக்கிற இவர்க்கு உண்டாகலாமோவென்ன -* **இதுக்கு முன்பு** *இத்யாதி. அதாவது - ஸாதகபக்தியன்று, ஸாத்யபக்தி இவரதென்றபடி. இவர்தாம் ஆர்த்த ப்ரபந்நராகையாலே, ப்ரபத்தேঃபூர்வபாவித்வேநவும் பக்தியுண்டென்கிறார் -* **இனிபக்திமானுக்கும்** *இத்யாதி. இனிமேல் - பக்திப்ரபத்தி நிஷ்டர்களுடைய பக்திதாரதம்யத்தை அருளிச்செய்கிறார்-* **பக்திமானுடைய** *இத்யாதியால்.* **வைதமாய்** *- "நிதித்யாஸிதவ்ய:" என்கிற விதிமூலமாய்.* **ருசி கார்யமாயிருக்கும்** *- ராகப்ராப்தமாயிருக்கும். விவரணம் -* **பக்திமானுக்கு** *இத்யாதி வாக்யத்வயமும். அதாவது - வைதமாகையாலே அவனுக்கு ஸாதநரூபமாயிருக்கும், தேஹயாத்ராஶேஷமாகையாலே இவனுக்கு ருசிகார்யமாயிருக்குமென்றபடி. ஆக, ஸ்வயம்ப்ரயோஜநத்வத்தால் வந்த ஏற்றத்தை அருளிச்செய்து, நித்யத்வத்தாலும் ஏற்றமுண்டென்கிறார் -* **பக்திமானுக்கு பலஶ்ரத்தை** *இத்யாதி. அதாவது - ஸாதநரூபமாயிருக்கையாலே பக்தனுக்குத்தவிரலாயிருக்கும், ப்ரபந்நனுக்கு அநுபவகைங்கர்யரூப தேஹயாத்ராஶேஷமாயிருக்கிற வாகாரத்தாலே கிஞ்சித்காராஶ்ரயமான ஶேஷத்வரூபஸ்வரூபப்ரயுக்தமாய் வருமதாகையாலே தவிராததாயிருக்குமென்றபடி.*

ஆ.—நிரதிசய நிர்மலஜ்யோதிஸ்ஸௌந்தர்ய ஸௌசீல்யாத்யஸங்க்யேய கல்யாணகுணகணமஹோததியாயிருந்த பரமபுருஷனை ஆசைப்பட்டுப் பெறுதே அறிவழிந்து எத்தனை காலமுண்டு தோழீ; ஆனபின்பு, எனக்கு ஒருயுக்தாயுக்ததை யுண்டோ? என்னை ஏசுகையிலே தீர்ந்திருக்கிற ஊரவர் கவ்வைதா னிப்படி அறிவழிந்திருக்கிற என்னை எத்தைச் செய்வதென்று தோழியைக் குறித்துச் சொல்லுகிருள்.

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டி மடலூரத்துணிந்தமையை அறிந்த தோழி 'இது அபவாதகரம்' என்று நிஷேதிக்க, 'நான் அவனுடைய ஸௌந்தர்யாதிகளிலே அகப்பட்டுப் பழிக்கு அஞ்சாததசையானேன்' என்கிருள்.

[மாசு என்று தொடங்கி] - என்னோட்டை ஸம்ஶ்லேஷஜநிதஹர்ஷப்ரகர்ஷத்தாலே முறுவல்செய்த திருப்பவளத்தை யுடையனும், மடலூர்ந்தாகிலும் ஸம்ஶ்லேஷிக்க வேண்டும்படி அபரிச்சேத்யமான அழகையுடையனும், தன் பேறுகவந்து ஸம்ஶ்லேஷிக்கும் ஸ்வபாவனுமாய்ப் பெருமதிப்பனுமானவனை. [நாடியே என்று தொடங்கி] - நிரந்தரமாகத் தேடி துக்கப்பட்டு அறிவிழந்து அநேக காலமுண்டு தோழீ! ஏசுகையிலே துணிந்த ஊரார் சொல்லும்பழி எத்தைச்செய்வது? [பாசறவு] - பந்துக்கள் பக்கல் பற்றறுகையுமாம்.

ப.—முதற்பாட்டில், இவளுடைய வ்யவஸாயம் அறிந்த தோழி விலக்க உத்யோகித்து, "ஊரார் பழிசொல்வார்காண்" என்ன; அவனுடைய ஆபிரூப்யாதிகளிலே யகப்பட்டுக் கலங்கின என்னை ஊர்ப்பழி என்செய்யு மென்கிருள்.

மாசு - அழுக்கு, அறு - அற்ற, சோதி - தேஜஸ்ஸையுடைத்தாய், செய்ய - சிவந்த, வாய் - வாயையுடைத்தான, என்மணிக்குன்றத்தை - மாணிக்கமலைபோலே எனக்குபோக்யனானவனை, (ப்ரணயித்வத்தால்வந்த தாழ்ச்சியாலே), ஆசு - குற்றம், அறு - அற்ற, சீலனை-சீலத்தையுடையனும், ஆதி - தான்முற்பாடனாய்வந்து அநுபவிப்பித்த, மூர்த்தியை - ஸ்வாமியானவனை, நாடியே - நிரந்தரமாகத்தேடி, பாசு - மேனியிற்பசுமை, அறவெய்தி - அழிந்து, அறிவு - அறிவும், இழந்து - இழந்து, எனை நாளையம் - எத்தனைகாலத்தோம், தோழி - தோழீ, ஏசு - ஏசுதலிலே, அறும் - அறுதிப்பட்ட, ஊரவர் - ஊரவரது, கவ்வை - ஆரவாரம், என் - எத்தை, செய்யும் - செய்வது? பாசறவு - நிறமழிவு. பாசென்று - ஸ்நேஹமாய், அத்தைமிகவெய்தியென்றுமாம். ஏசுதல் - பழித்தல். கவ்வை - அலர்.

இ.—முதற்பாட்டில், மடலூரத் துணிந்தமையை யறிந்ததோழி, "இது அபவாதம்" என்று நிஷேதிக்க, நான் அவனுடைய ஸௌந்தர்யாதிகளிலே அகப்பட்டுப் பழிக்கஞ்சாத தசையானேன் என்கிருள்.

[மாசறுசோதி] - நான் அவனை மாசறுசோதியாக்கக்காண் புகுகிறது. விரக்தராய் ஸ்வரூபஜ்ஞராயிருக்கிற இவருட்பட இப்படி மடலெடுக்கும்படியிறே விஷயவைலக்ஷண்யம். "ஹநாஜா" என்கிறவடிவை நிலைநிறுத்தப் புகுகிறேன். விசேஷணங்களடைய - மடலெடுக்கைக்கு விஷயமாக்குகிருள். அழுக்கற்ற அழகை உடையவனை. அழகுக்கு மாசாகிறது - வ்யதிரேகத்தில் மடலெடாதொழிகை. இவ்வழகு விஶ்லேஷத்தில் மடலிலே மூட்டாதாகில், அல்லாதவிஷயத்தோபாதியா

மென்கை. அவ்வடிவைப் பிரிந்தபோது என் மர்யாதையை நோக்கியிருக்கவோ வென்கிறாள். [என்செய்யவாய்] - கலந்தபோது அகவாயில் ஹர்ஷந்தோற்றும்படி ஸ்மிதத்தாலே விக்ருதனாயிருந்தபடி. [என்செய்யவாய் - மாசறுசோதி] - ஸ்மிதமும் வடிவழகுமாயிற்று என்னை மடலிலே மூட்டிற்று. பண்டுமொரு ஸ்மிதமிறே ஊர்பூசல் விளைத்தது, இவள் கையிலே மடலைக்கொடுத்து ஊர்பூசலாக்கிற்றொரு ஸ்மிதமாயிற்று. "ஸுவாகூ)நாஷரஃ" என்று - ஒருத்தரையும் மதியாதவன், என்னோடே கலந்து பெறும் பேறுபெற்றாற்போலே விக்ருதனாயிருக்க, நான் ஸ்த்ரீத்வத்தை நோக்கியிருக்கவோ? [மணிக்குன்றத்தை] - கலந்தபோது குளிர்ந்தவொளியை யுடையனாய், பிரிவுப்ரஸக்தமாய்த் தன் செல்லாமையாலே கால்வாங்கமாட்டாதே நின்றபடி. "ஸுவிகாராய" என்கிற வடிவும் இப்படி விக்ருதமாயிருக்க. நான் அவிக்ருதையாயிருக்கவோ? [ஆசறுசீலனை] - "தன்னுடைய உத்கர்ஷமும் இவள் அபகர்ஷமும் பாராதே கலப்பதே, இதொருசீலவத்தையே" என்று சொல்லும்படி பண்ணக்காண் நான் புகுகிறது. வடிவிலே யகப்பட்ட அளவேயோ, அகவாயில் குணத்திலேயுமன்றோ அகப்பட்டது. குற்றமற்றசீலத்தை யுடையவனை. அதாவது - கலக்கிறபோது தன்பேறாக வந்து கலக்கை. என்பேறாக வந்து கலந்தானோ என் ஸ்வரூபத்தை நோக்கியிருக்க. [ஆதிமூர்த்தியை] - என்னைப் பெறுகைக்கு க்ருஷிபண்ணிப் போந்தவனை. "ஜஹா வாராஷவாவிவ௶ஜ" என்கிறபடியே, என்பேற்றுக்கு முற்பாடனாயிருக்க, நான் ஆற்றாமையிலும் பிற்பாடை யாகவோ. தன் மேன்மைபாராதே என் சிறுமைபாராதே கலந்தவனன்றோ, நான் ஆறியிருக்கவோ? [ஆதிமூர்த்தியை] - அவன் நீர்மை அதுவானாலும் உன்மதிப்புக்குப் போராதுகாண் மடலெடுக்கை என்ன; பெருமதிப்பனைக் குறித்து மடலெடுத்தால் அம்மதிப்பு உண்டாமித்தனை யன்றோ. "காரணஞ்ஜாயெ)யஃ" என்று ஶாஸ்த்ரங்கள் மூட்டுகிற விஷயத்திலேயன்றோ நான் மடலெடுக்கிறது. [நாடியேபாசறவெய்தி] - அவன் என்னைப்பெறுகைக்கு க்ருஷிபண்ணினநாளோ பாதி போரும் நான் ஆற்றாமையாலே தேடி க்லேஶப்படுகிற நாள். பாசறவென்று - துக்கமாதல், பந்துக்களோட்டைப்பற்றறுதியாதல். பாசென்று - பசுமையாய், வைவர்ண்யத்தைப்பெற் றென்னவுமாம். [நாடியேபாசறவெய்தி] - நிரந்தரமாகத்தேடி பலித்தது இது வென்கிறாள். ஆனாலும் உன்னறிவுக்குப் போராதென்ன - [அறிவிழந்தெனை நாளையம்]- அறிவிழந்து அநேகங் காலமுண்டு. நாம் அறிவிழந்து எத்தனைகாலத்தோம். திர்யக்குக்களின் காலிலேவிழுந்து தூது விட்டபோதே போயிற்றில்லையோ அறிவு; *மதியெல்லாம் உள்கலங்கியன்றோ அப்படிசெய்தது; ஆனாலும் ஊரார் சொல்லும் பழிக்குஅஞ்சவேண்டாவோ? என்ன-[ஏசறுமித்யாதி] - அவ்வெல்லை கடந்திலோமோ? என்கிறாள். [ஏசறுமூரவர்] - "ஏசியறவேணும்" என்றிருக்கிறவர்கள். ஏசுகையிலே துணிந்திருக்கிறவர்கள். கவ்வை - பழி. [தோழியென்செய்யுமே] - இவ்விஷயத்துக்குப் புறம்பானார் சொல்லுமதுக்கு ஒரு ப்ரயோஜநமில்லையென்று அறியாயோ? அவர்கள்பழி நமக்குப் புறம்பாமித்தனை யன்றோ? நமக்கு இது உபகாரகமன்றோ, பழிபற்றறுக்கிறது. "அலரெழிலாருயர் நிற்குமதனைப் பலரறியார் பாக்கியத்தால்".* நமக்கு ஸ்மாரகமன்றோ என்கிறாள்.

ஈடு.—முதற்பாட்டு. "ஸௌந்தர்யத்தாலும் ஶீலத்தாலும் மதிப்பாலும் பழிப்பற்ற தோருவிஷயமாயிற்று அது, நீசெய்யப்புகுகிற இது அவ்விஷயத்துக்குப் பழிப்பை விளைக்கப் புகுகிறாய் கிடாய்" என்று தோழி சொல்ல; நான் அவ்விஷயத்துக்குப் பழிப்புண்டாக்கப் புகுகிறேனல்லேன், பழிப்பு அறுக்கப் புகுகிறேன்காணென்கிறாள்.

[மாசறுசோதி] - கலந்துபிரிந்தவள் ஆற்றாமையின்றிக்கே மர்யாதைகளை நோக்கிக்கொண்டிருக்கையாகிறது அத்தலைக்கு அவத்யம்போலே காணும்; பிரிந்தால் இப்படி

---

முதற்பாட்டு - மாசறு இத்யாதி. மடலெடுக்கைக்குறுப்பாக நாயகிசொல்லுகிற "மாசறு
சோதி" இத்யாதி விஶேஷணங்கள்-"மடலெடுக்கவொண்ணாது" என்று நிஷேதிக்கிற தோழிக்கும்
அர்த்தஸ்வபாவத்தாலே ஹேதுத்வேந விவக்ஷிதங்களென்கிறார்-ஸௌந்தர்யத்தாலும் இத்யாதி. "ஆதி
மூர்த்தியை" என்னுமளவும் கடாக்ஷித்து-ஸௌந்தர்யத்தாலும் ஶீலத்தாலும் மதிப்பாலும் என்றது.
மதிப்பாவது - காரணத்வப்ரயுக்தமானமேன்மை. நீசெய்யப்புகுகிறவிது - நீசெய்யப்புகுகிறவித்தால்.
பழிப்பு - அவத்யம். மடலெடுத்தால் ஸௌந்தர்யத்துக்குப் பழிப்புண்டாகையாவது - "நாயகனானவன்
நாயகிபக்கலிலே பரமப்ராணயியாகையாலே, 'காமோ நாம ஜ்ஞோ நஶ்ரீ வ ஃஜ திஸஹ தாம்வஹா
ஸோகஸ்ந ந' என்கிற கணக்கிலே தன்ஸௌந்தர்யத்தைத் தானே மேல்விழுந்து ப்ராணயிநியானவ
ளுக்கு அநுபவிப்பிக்க வேண்டியிருக்க, அது செய்யாதே, ப்ராணயிநி மடலெடுக்கும்படி தாழ்த்தபோதே
ஸௌந்தர்யம் நிஷ்பலமன்றோ" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே அவத்யமாகை யென்றபடி.
ஶீலத்துக்குப் பழிப்புண்டாகையாவது - "நாயகனானவன் நாயகிவிஷயத்திலே தலை தடுமாறாய் நிற்க
வேண்டியிருக்க, இவள் மடலெடுக்கும்படி உபேக்ஷிக்கையாலே, தலை தடுமாறாப் பரிமாறுகிற ஶீலகுண
மும் அவனுக்கு ஸங்குசிதம்" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே அவத்யமுண்டாகை. மதிப்புக்
குப் பழிப்புண்டாகையாவது - "தன்னை யாசைப்பட்டு மடலெடுக்கும்படி ஒருவிஷயம் இப்படி நோவு
படாநிற்கிறவளவிலும் உபேக்ஷித்தபோதே, ஸ்வவிஷய ப்ராவண்யாதிஸித்த்யர்த்தமாகஸர்வவஸ்துக்களை
யும் உண்டாக்கும்படியான அவன் மேன்மை யென்னன்பது" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே
அவத்யமுண்டாகை. பழிப்பு அறுக்கப் புகுகிறேனென்றது - "மாசறு, ஆசறு" என்று விஶேஷிக்கை
யாலே ஸித்தம். மடலெடுத்தால் ஸௌந்தர்யத்துக்குப் பழிப்பறும் ப்ரகாரமாவது-"இப்படி ஸர்வப்ரகார
விலக்ஷணையான இவளுங்கூட மடலெடுத்தபோதே அவனுடைய ஸௌந்தர்யம் அபரிச்சிந்நமன்றோ"
என்று நாட்டார் சொல்லுகிறவழியாலேயென்றும்; ஶீலத்துக்குப் பழிப்பறும் ப்ரகாரமாவது - நான்
"மடலெடுக்க" என்று உபக்ரமித்தபோதே அவன் வந்து முகங்காட்டுகை நிஶ்சிதமாகையாலே "தன்னை
யாசைப்பட்டு மடலெடுக்க ஒருப்பட்டபோதே, தன்பெருமைபாராதே வந்து முகங்காட்டுவதே! இவன்ஶீல
மிருந்தபடியென்" என்று நாட்டார் சொல்லுகிறவழியாலே யென்றும்; மதிப்புக்குப் பழிப்பறுகையாவது-
"நாரீணாமுத்தமையான விவள் மடலெடுக்கும்போதே ஸர்வாதிகவஸ்துவேயாகவேணும்" என்று நாட்
டார்சொல்லுகிற வழியாலே யென்றும் தாத்பர்யம்.

"மாசறுசோதி" என்றதுக்கு - மடலெடுக்கையாலே மாசறுசோதி யென்று அபர
பாவித்வேநவும், மாசறுசோதியாகையாலே மடலெடுக்கிறேனென்று பூர்வபாவித்வேநவும், இரண்டு
தாத்பர்யம். அதில் முந்தின தாத்பர்யத்தில், மடலெடுக்கையாலே மாசறுசோதியென்று விவக்ஷி
த்தபோதே - மடலெடாதொழிகை சோதிக்கு மாசென்று வ்யதிரேகமுகத்தாலே பலிதத்தை
வ்யாக்யாதா அருளிச்செய்கிறார் - கலந்துபிரிந்தவள் இத்யாதி. ஆற்றாமையின்றிக்கே - மடலெ
டுக்கும்படியான வாற்றாமையின்றிக்கே. மர்யாதைகளை-ஸ்த்ரீத்வ மர்யாதைகளை. நோக்கிக்கொண்
டிருக்கையாகிறது-"நோக்கிக்கொண்டிருக்கவேணும்" என்று மடலெடாதிருக்கையாகிறது. அத்தலைக்கு-
ஸௌந்தர்யவிஶிஷ்டமான அத்தலைக்கு. அவத்யம் - ஸௌந்தர்யஹாநி. மர்யாதைகளை நோக்கிக்கொண்
டிருந்தால் அத்தலைக்கு அவத்யமாகவேணுமோவென்ன-பிரிந்தால் இத்யாதி. இப்படிப்பண்ணாதவன்று-
இப்படிமடலெடுக்கப் பண்ணாதவன்று. பூர்வபாவியான இரண்டாம் தாத்பர்யத்தை அருளிச்செய்கிறார்-

பண்ணுதவன்று மாசிறே ஸௌந்தர்யத்துக்கு. நான் என்னுடைய மர்யாதைகளைக் குலைத் தாகிலும் அவன்முகத்திலே விழிக்கை தவிரேனென்கிறாள்; வடிவு அதுவாயிருக்க, எங்ஙனே நான் மடலெடாதொழியும்படி. கேடுவாய், அவ்வடிவு ஹேயப்ரத்யநீகங்காண், நான் மடலெடாதிருக்கை அவ்வடிவுக்கு ஹேயத்தை யுண்டாக்குகைகாண். "அவன் அவ்வடிவையுகந்தார்க்குக் கோடான்" என்னும் பழியைத் துடைக்கக்காண் நான் பார்க்கிறது; "ஸக்தாநாம்" (பக்தாநாம்) என்கிற உடம்பை "தனக்கு" என்றிருக்கையாகிற இது அவ்வடிவுக்கு மாசிறே. [மாசறுசோதி] - "மடலெடுக்கை மாசு" என்றிருக்கிறாள் தோழி; "மடலெடாதொழிகை மாசு" என்றிருக்கிறாள் இவள், வ்யதிரேகத்தில் இப்படி யாற்றாமை விளையாதாகில் நாம்காண்கிற விஷயங்களோபாதியாமே. வடிவிலே அணைந்த வளாகையாலே முற்பட வடிவிலே மண்டுகிறாள். [மாசறுசோதி] - நாம் மடலெடுக்க நினைத்தவளவிலே மாசற்றுவருகிறபடி பாரா யென்கிறாள். மேல், "ஆசறுசீலனை" என்று நிற்கச்செய்தே, வடிவழகைச் சோல்லுகிறது - குணத்திலும் விக்ரஹம் ஆகர்ஷகமாயிருக்கையாலே. [என்செய்யவாய்] - "அவாக்யநாதரः" (அவாக்யநாதரः) என்று அவிக்ருதமாயிருக்கக்கடவ தத்வம், என்னோடே கலந்து அத்தால்வந்த ப்ரீதிக்குப் போக்கு விட்டு ஸ்மிதம்பண்ணி விகாரித்ரவ்யம்போலே விக்ருதனாகாநிற்க, நான் அவனைப்பிரிந்து அவிக்ருதையாயிருக்கவோ. ஒருவார்த்தை சொல்லக்கடவதன்றிக்கே, முகம்பார்த்து

---

நான் என்னுடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே. "தவிரேன்" என்கைக்கு ஹேதுவேதென்ன-வடிவு இத்யாதி. வடிவு - வடிவில் ஸௌந்தர்யம். அபரபாவியான முந்தின தாத்பர்யத்திலே, "சோதி" என்று - ஸௌந்தர்யமென்று அருளிச்செய்து, சோதியென்று - விக்ரஹமாய், இதுக்கு மாசு இன்னதென்று காட்டுவாராக வடிகொண்டெழுந்திருக்கிறார்-கேடுவாய் இத்யாதிவாக்யத்வயத்தாலே. கெடுவாய் என்றது - வார்த்தைப்பாடு. மடலெடுத்தால் வடிவுக்கு ப்ரத்யுத அதிசயமொழிய, ஹேயமன்றுகாணென்கிறாள்-அவன் அவ்வடிவை இத்யாதி. உகந்தார்க்குக் கொடாதொழிகை அவத்யமோவென்ன-ஸக்தாநாம இத்யாதி. "மடலெடுக்கவொண்ணாது" என்று நிஷேதிக்கிற தோழியைக் குறித்து, "மடலெடாதிரேன்" என்று சொல்லுகிற நாயகி, "மாசறுசோதி" என்றபோதே - மடலெடா தொழிகை மாசென்று நாயகிக்கு விவக்ஷிதமென்று தோற்றுகையாலும்; நிஷேதிக்கிற தோழிக்கும் "மடலெடுக்கை மாசு" என்று விவக்ஷிதமென்று தோற்றுகையாலும், இரண்டையும் அருளிச்செய்கிறார் - மடலேடுக்கை இத்யாதி. மடலெடா தொழிகை மாசானபடி எப்படி யென்ன - வ்யதிரேகத்தில் இத்யாதி. "ஆசறுசீலனை" என்ற குணத்தை முற்படச் சொல்லாதே, வடிவைச் சொல்லுவானென்னென்ன - வடிவிலே இத்யாதி. வடிவிலேயணைந்தவள் என்கிறவிடத்திலே - "ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்றத்தைக் கண்டுகொள்வது மண்டுகை - ஈடுபடுகை. "மாசறு" என்றவர்த்தமானார்த்தம் - நாம்மடலேடுக்க இத்யாதி. மாசற்று வருகிறபடி பாராயென்றது - "அதிவிலக்ஷணையான இவள் இப்படி மடலெடுத்தபோதே அவன் அபரிமித ஸௌந்தர்யயுக்தனன்றோ" என்று நாட்டார் கொண்டாடிச் சொல்லுகிறத்தைப் பற்ற. அவன் முன்னேயில்லாதிருக்க, பாராயென்று - காட்டக்கூடுமோவென்ன; லௌகிகர் கொண்டாடுகையாலே, அத்தைக்கேட்டு, "பாராய்" என்று சொல்லுகையாலே விரோதமில்லை. வடிவை முற்படச் சொன்னதுக்குத் தாத்பர்யாந்தரம்-மேல் ஆசறு இத்யாதி. அவாக்யநாதர: இதி சாந்தோக்யே (ங-கச) "ஸர்வகர்மா ஸர்வகாம: ஸர்வகந்த: ஸர்வரஸ: ஸர்வமிதமப்யாத்தோऽவாக்யநாதர:" வாக்: உக்தி:, ஸோऽஸ்யாஸ்தீதி வாகீ, ஸ ந ஸவதீத்யவாகீ; தத்ருஹேத: (அநாதர இதி) ஆதராஸாவ:, ஸம்ப்ராப்த ஸமஸ்தகாமத்வாதாஸாவ த்ருயாக்ஷ:. சிவப்புத்தோற்றுவது ஸ்மிதத்தாலே யாகையாலே-ஸ்மிதம்பண்ணி என்கிறார். "அவாக்யநாதர:" என்கிற ஶ்ருதிக்கு அர்த்தம்-ஒரு வார்த்தைஇத்யாதி. ஹேதுபூர்வகமாக அநாதரஸப்தார்த்தம்-முகம்பார்த்து இத்யாதி. ஆனால், "அவிகாராய" என்றத்தோடு விரோதியாதோவென்ன-கர்மநிபந்

வார்த்தைசொல்லுகைக்குத் தன்னோடொப்பதோரு தத்வாந்தரமில்லாமையாலே அநாதரித் திருக்குமவனிறே. "கர்மநிபந்தநமான விகாரமில்லை" என்ற இத்தனைபோக்கி, ஆஸ்ரித ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்களால் வரும் விகாரமில்லை யென்னில் ஒருசேதநனோடு கலந்த தன்றிக்கே யொழியுமிறே. அவன்கலந்தபோது பண்ணின ஸ்மிதமன்றோ என்னை அவ்யவ ஹிதமான உபாயத்திலே மூட்டிற்று. ஸம்ஸாரி முக்தனானால் அவனுக்குப் பிறக்கும் ஹர்ஷம்போலேகாணும் இத்தலையைப்பெற்று அவன் ஸ்மிதம்பண்ணி நின்றநிலை. [என் செய்யவாய் இத்யாதி] - இவளுடனே கலந்தத்தாலுண்டான ப்ரீதியாலே ஸ்மிதம்பண்ணி வடிவிலே வேறுபாடுதோற்ற நின்றநிலையாயிற்று இவளைக் கையும் மடலுமாம்படி தொட்டு விட்டது. † (பண்டும் ஒருஸ்மிதமிறே ஊர்ப்பூசலை விளைத்தது) வாய்க்கரையிலேநின்று மடலேடுக்கிறாளிறே; கழுத்துக்கு மேலேயிறே இவள் மடலேடுக்கப்பார்க்கிறது. [மணிக் குன்றத்தை] - கழுத்துக்குமேலே யன்றிக்கே மெய்யேமடலேடுக்கப் பண்ணிற்றென்கிறாள். என்னோடேவந்து கலந்தத்தாலே வடிவில் வைவர்ண்யம்போய்ப் புகர்த்துக்குளிர்ந்து ‡ (வளர்ந்து) நிலைபெற்றபடியும், பிரிவை ப்ரஸங்கித்துக் கால் வாங்கமாட்டாதே நின்ற நிலையுங்காண் என்னை மடலிலே துணியப்பண்ணிற்று. மாணிக்கமலைபோலே ஹோக்ய னானவனை. [ஆசறுசீலனை] - வெறும் வடிவழகுகண்டன்றுகாண் நான் துவக்குண்டது, அகவாயில்ஶீலத்தையும் கண்டுகா ணென்கிறாள். ஆசு - குற்றம். குற்றமற்ற ஶீலத்தை யுடையவனை. அவன்கலக்கிறபோது என்பேறாகக் கலந்தானாகிலன்றோ நானும் பிரிவில் என்பேற்றுக்கு வேண்டுமத்தைச் செய்திருக்கலாவது; அம்மேன்மையுடையவன் இப்படி தாழநின்று என்னைப்பெற்றவிது பெருப்பேறாகத் தான் நினைத்திருக்க, நான் அவனைப்

---

தநம் இத்யாதி. விஸ்லேஷதஶையிலே ஸ்மிதங்கூடுமோவென்ன-அவன்கலந்த இத்யாதி அவ்யவஹித மான உபாயத்திலே-மடலெடுக்கையிலே. இழே "விகாரித்ரவ்யம்போலே விக்ருதனாகாநிற்க" என்றத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாக விவரிக்கிறார் - ஸம்ஸாரி இத்யாதி. சேதநனை விகாரித்ரவ்யமென்றது - ஸ்வ பாவாந்யதா ஹாவமுண்டாகையாலே "மணிக்குன்றத்தை" என்றத்தையுங்கூட்டி புநः ப்ரதீகக்ரஹணம் பூர்வகவாக ஹாவம் - என்செய்யவாய் இத்யாதி. இவளுடனே இத்யாதி -தொட்டுவிட்டது - ஈடுபடுத் திற்று. சாடு-வாய்க்கரையிலே இத்யாதி வாக்யத்வயமும். வாய்க்கரை - ஸீமாவந்தியென்று சாடு. ப்ரக்ருதம் - திருப்பவளம். நின்று - ஈடுபட்டுநின்று. கழுத்துக்கு மேலேயிறே - கழுத்துக்கு மேலான திருப்பவளத்திலேயிறே யென்று ப்ரக்ருதம்; அஹ்ருதயமாக வென்று சாடு. கழுத்துக்குமேலே யன்றிக்கே இத்யாதியும் சாடு. திருப்பவளமாத்ரமன்றிக்கே யென்று - ப்ரக்ருதம்; அஹ்ருதயமாக வன்றிக்கே யென்று - சாடு. மெய்யே - சரீரமே, ஸத்யமாகவென்றும். "மணிக்குன்றத்தை" என்ற துக்கு ஹாவம்- என்னோடே இத்யாதி. வைவர்ண்யம்போன வொழிய புகர்த்திருக்கை கூடாமையாலே, புகர்த்திருந்தபோதே - வைவர்ண்யம்போய் என்றது ஸித்தம். புகர்த்துக்குளிர்ந்து என்றது-'மணி' என்றத்தைப்பற்ற. "குன்றம்" என்றத்தைப்பற்ற - நிலைபெற்றபடியும் இத்யாதி. தாத்பர்யம் - வெறும்வடிவழகு இத்யாதி. சீலம் - ஸௌஶீல்யம். ஶப்தார்த்தம் - ஆசு இத்யாதி. சீலத்துக்குக் குற்ற மாவது - பாரார்த்தமாக ஸம்ஸ்லேஷிக்கை. தன்பேறாக ஸம்ஸ்லேஷிக்கை - குற்றமற்றிருக்கை. இது சொல்லுகிறதுக்கு ஹாவம் - அவன்கலக்கிறபோது இத்யாதி. யத்வா, சீலத்துக்குக் குற்றமில்லா மையேதென்ன - அவன்கலக்கிறபோது இத்யாதி என்னுதல். என்பேற்றுக்கு வேண்டுமத்தைச்செய் திருக்கலாவதென்றது - என்னுடைய ஸ்த்ரீத்வமாகிற பாமலாபத்தைப் பெறுகைக்குறுப்பாக மட லெடாதிருக்கலாவ தென்றபடி. மேல் "ஆதிமூர்த்தி" என்றத்தைக் கடாக்ஷித்துஹாவம்- அம்மேன்மை

† குண்டலித க்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.

‡ குண்டலிதம் வ்யாக்யாநதுக்குச் சேராது.

பிரிந்து வைத்து, "வரில்போகடேன், கேடில்தேடேன்" என்று நினைத்திருக்கலாமோ? அவன் தன்குணம் பரிஹரித்துப்போக, என்னைப் பழி பரிஹரித்திருக்கச்சொல்லுகிறயோ? [ஆதிமூர்த்தியை] - "ஒருகுடியிலே பிறந்த உனக்கு, அவன் தானே வரவிருக்குமதொழிய நீ பதறுகிறவிது உன்மதிப்பை யறுத்துக்கொள்ளப் பார்க்கிறுய்கிடாய்" என்ன,—நான் மதிப்பை யறுத்துக்கொள்ளப் பார்க்கிறேனல்லேன், மதிப்பையுண்டாக்கிக்கொள்ளப் பார்க்கிறேனென்கிருள்; "காரணம் த்யேயஃ" (காரணம்துத்யேயஃ) என்று ஶாஸ்த்ரங்கள் ஒருமிடறுசெய்கிற விஷயத்தையன்றோ நான் ஆசைப்பட்டது, இவ்விஷயத்தை ஆசைப்பட்டுப் பெறுதே முடிந்தாலும் அதுதானே மதிப்பாம்படியான விஷயமன்றோ. வ்யாக்யாநம் பண்ணுவதற்கு முன்பேயும் ஒருபொருளுண்டு இதுக்கு அருளிச்செய்வது - "பூர்வஜ" (பூர்வஜ) என்கிறபடியே நம்மோட்டைக் கலவிக்கு அவன் முற்பாடனுகச் செய்தே, பிரிவில் ஆற்றுமைக்கு நான் பிற்பாடையாகவோ. "ஆனாலும், 'அபிமத விஷயத்தைப்பிரிந்தாள், அநந்தரம் மடலூர்ந்தாள்' என்னுமே, 'சிலநாள் ஆற்றுமையோடே பாடாற்றிக்கிடந்தாள், பின்பு தன்னால் பொறுக்கவொண்ணுமையான வளவான வாறே மடலெடுத்தாள்' என்னும் வார்த்தை படைக்கவேணுங்காண்" என்ன, [நாடியே பாசறவெய்தி]-இன்றோ, நான் எத்தனைகாலமுண்டு இப்படி க்லேஶப்படுகிறது. அவன் இத்

---

ப்ர:—(ஆதிமூர்த்தியை)—ஸுபாலோபநிஷத், "ந காரணம் காரணாநாம் த்யாதா த்யேயம் தாகாரணம் த்யேயஃ".

(பூர்வஜ—என்கிறபடியே)—ஜிதந்தாயாம், "ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபாவந। நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ மஹாபுருஷ பூர்வஜ".

---

யுடையவன் இத்யாதி. 'ஆசறு' என்றதால் பலிதம் - அவன் தன்குணம் இத்யாதி. கீழே, வரில் போகடேன் கெடில் தேடேனென்றது - வந்தால் விட்டுவிடேன் கெட்டால் தேடானென்றபடி. குணம் பரிஹரித்து-தன்பேறுகக் கலந்து ஶீலகுணத்துக்கு அவத்யம் வாராமல் பரிஹரித் தென்றபடி. "ஆதி" என்றதுக்கு அர்த்தத்வயம். முந்தினது - ஜகத்காரணமென்று; த்விதீயம் - தம்முடைய ப்ராவண்யத்துக் கடியென்று. மூர்த்திஶப்தம் - ஸ்வாமி வாசகம். முந்தினவர்த்தம் - ஒருகுடியிலே இத்யாதி. ஒருகுடி - அத்விதீயமான குடி. மதிப்பு-ஆதிக்யம். மதிப்பை யுண்டாக்கிக்கொள்ளும் ப்ரகாரமேதென்ன - காரணந்து இத்யாதி. "ஆதி" என்றதி னிரண்டாமர்த்தம் - வ்யாக்யாநம் இத்யாதி. வ்யாக்யாநம் - ஒன்பதினுயிரப்படி. அன்றிக்கே, வ்யாக்யாநம் பண்ணுவதற்குமுன் பென்றது - ப்ராஸங்கிகமாகப் பாட்டுக்குத் தாத்பர்யம் அருளிச்செய்யும்போ தென்றபடி. அந்தப்பொருள்தானேதென்ன - பூர்வஜ இத்யாதி. "ஜிதந்தே புண்டரீகாக்ஷ நமஸ்தே விஶ்வபாவந। நமஸ்தேஸ்து ஹ்ருஷீகேஶ மஹாபுருஷ பூர்வஜ." ஜிதந்தேபுண்டரீகாக்ஷ என்று - ப்ரணவோக்தஶேஷத்வமும், நமஸ்தே என்று - நமஶ்ஶப்தோக்த பாரதந்த்ர்யமும், விஶ்வபாவந என்று - நாராயண ஶப்தோக்தகாரணத்வமும், நமஸ்தேஸ்து என்று - கைங்கர்யப்ரார்த்தனையும், ஹ்ருஷீகேஶ என்று - கைங்கர்யத்தில் ஸ்வார்த்ததாநிவ்ருத்தியும் சொல்லுகிறது; விஶ்வபாவந என்று - ஜகத்காரணத்வம் சொல்லியிருக்க, பின்னையும் பூர்வஜ என்னும்போது - யஸ்மாத்பூர்வம்ஜாயதேஜகத் ஸபூர்வஜஃ என்று காரணத்வம் சொல்லுகையன்றிக்கே, சேதநோஜ்ஜீவநத்துக்கு முற்பாடனாய் க்ருஷிபண்ணுமவனென்றேயாகவேணு மென்றபடி. விஶ்வபாவந என்று-விஶ்வத்தை ஸவிப்பிக்குமவன் - உண்டாக்குமவன். ஜகத்காரண மென்றபடி. பாடாற்றி - பொறுத்து. "எனைநாளையம்" என்னுமளவுக்கும் ஸாவம் - இன்றே இத்யாதி. விவரணமாதல், "ஆதிமூர்த்தி" என்றதி னிரண்டாமர்த்தத்தைக் கடாக்ஷித்தாதல் - அவன் இத்யாதி. பட்ட

தலையைப் பெறுகைக்குப் பட்டதெல்லாம் போராதோ நான் அவனைப்பிரிந்துபட்டது. கால மெல்லாம் தேடிக்காணப்பெறுதே துஃகப்பட்டுத்திரிந்த தத்தனையாகாதேதான்; சிறைக் கூடத்திலேபிறந்து அங்கேவளருமாபோலே. விஶ்லேஷத்தாலே உந்நேயமித்தனைகாணும் ஸம்ஶ்லேஷம். பகவத்தத்வமுள்ளவிடமெங்கும் புக்குத்தேடிக் காணப்பெறுமை நசை யற்று, பின்பாகாதே மடலேடுத்தது. [பாசறவெய்தி] - துஃகத்தையுடையேனாய். பாசறவு - துஃகம். பாசு என்று - பசுமையாய், அது அறுகையாவது - வைவர்ண்யமாய், வைவர்ண் யத்தை பஜித்தேன்னுதல்; அன்றிக்கே, பாசென்று - பாசமாய், அதாவது - பற்றாய், பந்துக் கள்பக்கல் ஸங்க மற்றேன்னுதல். [பாசறவெய்தி]-ஸ்நேஹமடைய அவன்பக்கலிலே யெய்தி யேன்னுதல். எல்லாம்செய்தாலும் இது அறிவுடையார் செய்வதொன்றல்லவேன்ன, [அறி விழந்தெனைநாளையம்] - அறிவு குடிபோய் எத்தனையோர்காலத்தோம். * மயர்வறமதிநல மருளப்பெற்றவன்றே போயிற்றில்லையோ நம்முடைய அறிவு. திர்யக்கின்காலிலே விழுந்து தூதுவிட்டவன்று, அது "ஜ்ஞாநகார்யம்" என்றிருந்தாயோ இன்றிருந்து கற்பிக்கைக்கு; அன்றே * மதியெல்லாமுள்கலங்கிற்றில்லையோ. தன்பக்கலிலே கைவைத்தால் மற்றொன்று அறியாதபடி பண்ணும் விஷயமிறே, † "பேரின்பமெல்லாந்துறந்தார் தொழுதாரத்தோள்" என்னக்கடவதிறே. "நோபஜநம் ஸ்மரந்" (நோபஜநம்ஸ்மரந்) என்று - ப்ராப்தி ஸமயத்தில் இவ்வருகுள்ளவற்றை நினையாதபடி பண்ணுகையே யன்றிக்கே, ஜ்ஞாநம்பிறந்த ஸமயமேபிடித்தும் இவ்வருகுள்ளவற்றை நினையாமே பண்ணவல்ல விஷயமன்றோ ? நீ யேல் தன்னையநுஸந்தித்து லோகயாத்ரையையும் அநுஸந்திக்கும்படியோ அவன்படி.

ப்ர:—(நோபஜநம் ஸ்மரந் என்று ப்ராப்திஸமயத்தில்)-சாந்தோக்ய (௬௨) "ஸ ஏஷ:" இத்யாதி "நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்".

தெல்லாம் - பட்டகாலமெல்லாம். "எனைநாளையம் - நாடியே - பாசறவெய்தி" என்று அந்வயித்து ஹாவம் - காலமேல்லாம் இத்யாதி. ஸர்வகாலமும் துஃகப்பட்டமைக்கு த்ருஷ்டாந்தம் - சிறைக்கூடத் திலே இத்யாதி. இத்தால் - வ்யஸநாதிசயத்தாலே, ஸர்வகாலமும் துஃகப்பட்டதாய்த் தோற்றுகிற தென்று கருத்து. ஸம்ஶ்லேஷம் ஒருகாலுமில்லையோ வென்ன - விஶ்லேஷத்தாலே இத்யாதி. உந்நேயம் - அநுமேயம். அவதாரணத்தோடேகூட்டி "நாடி" என்றதுக்கு ஹாவம் - பகவத்தத்வம் இத்யாதி. பார்த்வாதிகளெங்கும் புக்கென்றபடி. "பாசறவெய்தி" என்றதுக்கு நாலர்த்தம். அதாவது பாசறவு - துஃகமும், வைவர்ண்யமும்; எய்தி - ப்ராபித்து. மூன்றாமர்த்தம்,—பாசு - ஸங்கம், அறவு - நிவ்ருத்தி, பந்துவிஷயாஸக்தி நிவ்ருத்தியை யடைந்தேன்றபடி. நாலாமர்த்தம்,—பாசத்தை - ஸ்நே ஹத்தை, அற - மிகவும், எய்தி என்று கண்டுகொள்வது. எத்தனையோர்காலத்தோம் - எத்தனை காலங்களை யுடையோமானோம். அப்படி அநேக காலமுண்டோ வென்ன - மயர்வற இத்யாதி. போனமைக்கு நியாமகமேதென்ன - திர்யக்கின் இத்யாதி. தூதுவிட்டவென்றது - அஞ்சிறையமட நாரையிலே. கற்பிக்கைக்கு - "மடலெடுக்கவேண்டா" என்று கற்பிக்கைக்கு. தூதுவிட்டது அஜ்ஞாநகார்யமென்றது அவ்விடந்தன்னிலே ஸ்புடமென்கிறார் - அன்றே மதியெல்லாம் இத் யாதி. மதிகலங்கினால் "ஆசறுசீலனை ஆதிமூர்த்தியை" என்னும்படி யென்னென்ன - தன் பக்கலிலே இத்யாதி. இத்தால் - லௌகிகஜ்ஞாநமில்லையென்ற வித்தனைபோக்கி, பகவத்விஷய ஜ்ஞாநமில்லையென்கிறதன்றென்று கருத்து. உக்கத்துக்கு ப்ரமாணம் - பேரின்பம் இத்யாதி. அந்த அழகியதோளைத் தொழுதவர்கள், ஒரோமனையிடத்திற் பிறந்தவர்கள் பிறந்து ப்ராபிக்கும் நிரதி ஶயஸுகமெல்லாவற்றையும் பரித்யஜித்தவர்களாவர் கிடிகோ ளித்யர்த்தஃ. தோளழகுதானே மற்றுள்ள இன்பங்களைத் துறக்கும்படி பண்ணுமென்கை. † இரண்டாந்திருவந்தாதி - நாற்பத்திரண்டாம்பாட்டு- "நினைப்பன்" இத்யாதி. வ்யதிரிக்தவிஷயஜ்ஞாநாபாவம் ப்ராப்த்யவஸ்த்தையிலேயன்றோ வென்ன- தன்னை இத்யாதி. அவன்படி - நோபஜநம் இத்யாதி. அப்படிவிலக்ஷணவிஷயமோவென்ன - தன்னை இத்யாதி.

லாம்சோன்னுலும் பழிக்கு அஞ்சவேண்ணுங்கா ணென்ன, [ஏசறும் இத்யாதி] - நமக்கு மடலேடுக்கை குற்றமாகிலன்றே அவர்களுக்கும் பழிசோல்லுகை குற்றமாவது. அறிவுடையார்க்கு வரக்கடவதான பழி, அது வாஸநையோடே குடிபோன நமக்கு வாராதுகாண்; இதுக்கு அஞ்சவேண்டா. இதுக்கு மூன்றுபடியாக அருளிச்செய்வர்,—"இவளையோருபழி சோன்னோமாய் விடவல்லோமே" என்று அதிலேயற்றிருக்கிற வேன்னுதல்; ஏசுகையிலே துணிந்திருக்கிற. அன்றிக்கே, "பகவத்விஷயத்திலே கைவைத்திருக்கிறவர்களுக்கு ஒரு பழி சோன்னோமாய் விடவல்லோமே" என்று துஃகப்பட்டிருக்கிற வேன்னுதல். ஏசற்றிருக்கிற நமக்கு. அதாவது - ஏசுமேல்லேகடந்தவேன்னுதல். [ஊரவர்கவ்வை] - பகவத்விஷயத்திலே கைவைத்தார் "இது பழி" என்னிலன்றே பழியாவது; இதுக்குப்புறம்பாய் நின்றவர்கள் சோல்லுமது நமக்குப்பழியோ? [தோழி] - ஸமாநஸுகதுஃகையான உனக்கு, "இதுபழி" என்று தோற்றிலன்றே எனக்கு மீளவேண்டுவது. [என்சேய்யுமே] - ஏசறுமேல்லேயிலே நிற்கிற எனக்கு, இது ஏசாம்படியிருப்பார்சோல்லும் வார்த்தைகோண்டு காரியமேன்? ஊரார்பழி புகழா மேல்லேயிலேயன்றே நாம் நிற்கிறது; அவர்கள் சோல்லுகிற விது நமக்கு அவத்யமோ, யாரகமாமித்தனையன்றே? "அலரேழிலாருயிர்நிற்கும்" என்னக் கடவதிறே. †"அலர்தூற்றிற்றதுமுதலாக்கோண்டவேன்காதல்" என்கிறபடியே, அவர்கள்பழி யாரகமாகவன்றே மடலேடுக்க விருக்கிறது. (க)

## இரண்டாம்பாட்டு.

என்சேய்யுமூரவர்கவ்வை தோழியினிநம்மை
என்சேய்யதாமரைக்கண்ணன் என்னைநிறைகோண்டான்
முன்சேய்யமாமையிழந்து மேனிமேலிவேய்தி
என்சேய்யவாயுங்கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே.

*அவன் வைலக்ஷண்யம். "ஏசறும்" என்றதுக்கு மூன்றர்த்தம்,—ஏசுகையிலே துணிந்திருக்கிற வென்று முந்தினது; ஏசறுமென்று - முழுச்சொல்லாய், துஃகப்பட்டிருக்கிறவென்று இரண்டாவது; ஏசறுகை - துஃகப்படுகை. ஏசுகையை - லௌகிகர் சொல்லுகிற நிந்தையை, அற்றிருக்கிற - கடந்திருக்கிற வென்று மூன்றாவது; இப்போது, தனக்கு விசேஷணம். அதாவது - ஊரார்பழி புகழாம்படி யிருக்கிற நமக்கென்றபடி. முந்தினவர்த்தத்திலே நோக்காக ஸாவம் - நமக்கு இத்யாதி. மூன்றாமர்த்தத்திலே நோக்காக ஸாவம் - அறிவுடையார்க்கு இத்யாதி. பழிசொல்லுகை குற்றமாவதென்றது - "ஏசுகையிலேயற்றிருக்கிற ஊரவர்" என்றத்தைப்பற்ற. பூர்வவாக்யவிவரணம் - ஏசுகையிலே துணிந்திருக்கிறவென்றது. இரண்டாமர்த்தம், ஏசுகை - துஃகப்படுகை யென்றாக்கி, அத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் - அன்றிக்கே பகவத்விஷயத்திலே இத்யாதி. ஏசுமெல்லேயைக் கடந்திருக்கையாவது - ஏசுகையை மதியாம லிருக்கையென்றபடி. "ஊரவர்" என்றதுக்கு ஸாவம் - பகவத்விஷயத்திலே இத்யாதி. "என்செய்யும்" என்றதுக்கு - புகழாமென்று தாத்பர்யம். மூன்றாமர்த்தத்தை யுபஜீவித்துக்கொண்டு, "ஊரவர்கவ்வை - என்செய்யும்" என்றதுக்கு ஸாவம் - ஏசறுமெல்லேயிலே இத்யாதி. இது - மடல். விவரணம் - ஊரார் இத்யாதி. "என்செய்யும்" என்ற ஸ்வரத்துக்கு - வ்யதிரேகத்திலே நோக்காக தாத்பர்யாந்தரம் - அவர்கள் சோல்லுகிற இத்யாதி. "பழியாரகம்" என்னுமதுக்கு ப்ரமாணம் - அலரேழில் இத்யாதி. அலரேழில் - அபவாத முதிக்கில், ஆருயிர்நிற்கும் - பூர்ணப்ராணன் நிற்குமித்யர்த்தஃ. அலர்தூற்றிற்றதுமுதலாகக்கோண்டவேன்காதல் - பழியைத்தூற்றினவது ஹேதுவாகக்கொண்ட வென்காத லித்யர்த்தஃ. மாசறுசோதி தொடங்கி, ஏனைநாளேயம், தோழி - ஏசறுமூரவர்கவ்வை - என்செய்யு மித்யந்வயஃ.* (க)

† திருவாய்மொழி-எ, ௬, அ.

ஆ.—(என்செய்யும்.) எம்பெருமான் தன்னுடைய, அதிஶீதளமாய் ஸர்வ ஸத்வமநோஹரமாய் அருணகமலஸத்ருஶமான அழகிய திருக்கண்களைக் காட்டி என்னைத் தோற்பித்துப் போனான்; அவனை ஸம்ஶ்லேஷிக்கப்பெறாமையாலே, தத்ஸம்ஶ்லேஷஜநித மான ஔஜ்ஜ்வல்யமுமிழந்து, மேனிமெலிவெய்தி, தத்ஸம்ஶ்லேஷத்தால் புதுக்கணித்த என்செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்த; இனி நம்மை என்செய்யும் ஊரவர் கவ்வை தோழீ யென்கிறாள்.

ஒ.— இரண்டாம்பாட்டில், ஏதேனும் தசையிலும் 'இங்ஙன்செய்கை ஈடல்ல' என்ற தோழியைக் குறித்துத் தரிப்பு அரிதாம்படி ஹ்ருதயத்திலும் ஶரீரத்திலும் பிறந்த ஶைதில்யத்தை அறிவிக்கிறாள்.

[என்செய்யும் என்று தொடங்கி] - ஸம்ஶ்லேஷதசையில் என்பக்கல் மிகவும் ப்ரவணனாய் ஸ்நேஹமாக நோக்கின நோக்காலே என்னை நிறையைக் கொண்டான். நிறைபோவதுக்கு முன்பே அழகிய நிறத்தையும் இழந்து உடம்பும் மெலிந்து அவனுக்கு அத்யந்தம் ஸ்ப்ருஹணீயமான என்னுடைய சிவந்த வாயும் கறுத்த கண்ணும் விவர்ண மாயிற்றின. நிறையாகிறது - மநஸ்ஸில் ஓடுகிறது ஒருவர்க்கும் தெரியாதபடியிருக்கை.

ப.—அநந்தரம், அவன்கண்ணழகாலே என் ஸர்வஸ்வத்தையும் அபஹரித்து என் வைலக்ஷண்யமடங்க அழிந்திருக்க, ஊரார் என் செய்வ தென்கிறாள்.

செய்ய - சிவந்த, தாமரை - தாமரைபோன்ற, கண்ணன் - கண்ணழகையுடைய னாய்க்கொண்டு, என் - எனக்கு பவ்யனானவன், என்னை - என்னை, நிறைகொண்டான் - பூர்த்யபஹாரம் பண்ணினான்; (ஸ்த்ரீத்வபூர்த்தி போனபடியாலே), முன் - முன்புதோற்று கிற, செய்ய - விலக்ஷணமான, மாமை - மாமைநிறமும், இழந்து - இழந்து, மேனி - (அதுக்காஶ்ரயமான) ஶரீரமும், மெலிவு எய்தி - மெலிவு எய்தி, (அவன்செய்யவாயும் செய்யதாமரைக்கண்ணும் குறியழியாதிருக்க), என் - என், செய்யவாயும் - செய்யவாயும், கருங்கண்ணும் - கருங்கண்ணும், பயப்பு - ஒருவெளுப்பாம்படியான வைவர்ண்யம், ஊர்ந்த - பரந்தன; தோழி - தோழீ, இனி - இனி, நம்மை - நம்மை, ஊரவர்கவ்வை - ஊரவர்கவ்வை, என்செய்யும் - என்செய்யும். நம்மையென்று - ஸமதுःகையான தோழி யையும் கூட்டிக்கொள்ளுகிறாள்.

இ.—இரண்டாம்பாட்டில், எல்லா தசையிலும் பழி பரிஹரிக்கவேண்டாவோ வென்ன, பழி பரிஹரிக்குமெல்லை கடந்ததுகாணென்று தன் வடிவைக் காட்டுகிறாள்.

[தோழி - இனி - என் செய்யுமூரவர் கௌவை] - இனியென்று தன் வடிவைக் காட்டுகிறாள். மேலடங்க-'இனி' என்கிற இதன் விவரணம். [தோழி] - இப்படி அவ காஹிப்பதற்கு முன்னே மீட்க வேண்டாவோ ? [நம்மை] - நிறத்தில் வேறுபாடு அவ ளுக்கும் ஒத்திருக்கிறபடி. "ஸமது:கஸுகா ஸகீ". 'வாயாலே மடலெடுக்க வேண்டா' என்கிறாளத்தனை, வைவர்ண்யம் இருவருக்கும் ஒத்திருக்கும். "யாமுடைத் துணையென்னும் தோழிமாரும் எம்மின் முன் அவனுக்கு மாய்வராலோ". 'எனக்கு அவன் வேணும்' என்னும் அளவிறே இவளுக்கு உள்ளது. 'இவள் நோவுபோகவேணும்' என்றும், 'இருவரும் சேரவேணும்' என்றும் இரட்டித்திறே அவள் நோய் இருப்பது. "தஞாவஸீஷி ஷிஹொதந்யு...ஸஜவாம்ஶரோநு" என்று பெருமாளிற்காட்டில் ஒனி

மழுங்கினார்ிறே மஹாராஜர். இவ்வைவர்ண்யத்துக்கு அடி சொல்லுகிறது [என் செய்ய இத்யாதி] - கண்ணாலே 'தவாஸ்மி' என்று சொல்லி என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினான். கிட்டினால் "என்னுடையவன்" என்னும்படியிறே இருப்பது. வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த கண்ணாலே 'ஆத்மாத்மீயங்கள் நீயிட்டவழக்கன்றோ ?' என்று சொல்லி என்னை உரிசூறைகொண்டான். "தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசி" என்னக்கடவதிறே. சொலலொன்றும் செயலொன்றுமாயிற்று. அவனுக்குப் புண்டரீகாக்ஷத்வம்போலே இவளுக்கு ஸ்த்ரீத்வம். "என்னை நிறைகொண்டான்" என்று வாய் விடப் பண்ணுகை. இழந்தவை இன்னவை என்கிறாள், மேல்—[முன்செய்யமாமையிழந்து] - முன்னையுள்ளமாமை யென்னுதல், நிறைக்குமுன்னை யென்னுதல், முன்னே - காணக்காண வென்னுதல். முன்பு தோன்றினவற்றை வாங்கியிறே கிழிச்சீலையறுப்பது. [செய்யமாமை] - ஸ்ப்ருஹணீயமானமாமை யென்கை; சிவப்பைச் சொல்லுகையன்று தாத்பரியம். [இழந்து] - அவன் விரும்பினதாகையாலே நிறம், நிதியிழந்தாற்போலே சொல்லுகிறாள். [மேனிமெலிவெய்தி] - வடிவுதான் நீர்ப்பண்டம்போலே காணக்காண சருகாகிறபடி. நிறம் வந்தாலும் அவன்தான் வந்தாலும் ஆஶ்ரயமில்லை யென்கை. [என் செய்யவாயும்] - அவயவியாகத் தேடுகிறேனோ அவயவங்கள்தோறும் அழிந்து வாராநிற்க. அவன் வாய் புலற்றுமதாகையாலே - என்னதென்கிறாள். அவன் உகந்த வழியாலே தமக்கு ப்ராப்யமாகலாமிறே. "தொழுது வைத்தேன்". அவன் 'என்னது' என்று சொல்லக்கேட்டிருக்குமே. அத்தாலே, என்னது என்கிறாள். சிவந்த வாயும், கறுத்தகண்ணும் ஒரு வெளுப்பாயிற்று. ப்ரளயகாலத்தில் ஸப்தக்ஷேத்ரம் போலே ஏகோதகமாய் அழிந்தது. [பயப்பூர்ந்தவே] - விஷம் ஊர்ந்தாற்போலே வைவர்ண்யம் வண்டலிட்டுவாராநின்றது. மடலை நிக்ஷேபித்தாயாகிலும் வடிவை மறைக்கலாமோ வென்கை.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "கீழிற்றிருவாய்மொழியில்நின்றும் இத்திருவாய்மொழிக்குப் புகுருகைக்கு வழியிரண்டாயிருக்கும்; * சீலமில்லாச்சிறியனிலே-கூப்பிட்டார்; கூப்பிடச்செய்தேயும் வந்து முகங்காட்டாமையாலே, அவனுக்கு உறுப்பல்லாத ஆத்மாத்மீயங்கள் எனக்கு வேண்டாவென்றார்; இப்படியொழியப் பேறிழவு புறம்பேயாயிருக்கிற ஸம்ஸாரிகள் படியைக்கண்டு வெறுத்தார்; 'ஈஶ்வரனும் கைவாங்கின இவர்களை நான்திருத்துவேன்' என்று, பகவத்பரத்வத்தை உபபாதித்துத்திருத்தினார்; 'இவர்களிலேயொருவனாயிருக்கிற எனக்கு இவ்வாசியுண்டாவதே' என்று, பகவத்க்ருபையைக் கொண்டாடினார்; தாந்திருத்தத் திருந்தின ஸ்ரீவைஷ்ணவ ஸம்ருத்திக்கு மங்களாஶாஸநம் பண்ணினார்; தொடங்கினகார்யம் தலைக்கட்டினவாறே பழைய இழவே தலையெடுத்து, தம் ஆற்றாமையாலே மடலூர்ந்

---

இரண்டாம்பாட்டு—என்செய்யும் இத்யாதி முதற்பாட்டுக்கு வ்யாக்யாநம் அருளிச்செய்தவனந்தரம் மத்யே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருளி, "ப்ரவேஶமும் பாட்டும் அடியேனுக்கு ப்ரஸாதிக்கவேணும்" என்ன, அவருக்காக அருளிச்செய்கிறார் - **கீழிற்றிருவாய் மொழியில்நின்றும்** இத்யாதி. **வேண்டாவென்றார்** - ஏறாளுமிறையோனிலே. **வெறுத்தார்**-நண்ணாதாரிலே. **திருத்தினார்** - ஒன்றுந்தேவிலே. **பகவத்க்ருபையைக் கொண்டாடினார்** - கையார்சக்கரத்திலே. **மங்களாஶாஸநம் பண்ணினார்** - பொலிகபொலிகவிலே. தொடங்கின கார்யம் - ஸம்ஸாரிகளைத் திருத்துகை. **பழைய இழவே** - ஏறாளுமிறையோனிலிழவே. **வழியல்லாவழி** - ஸ்வாபத்நம். "செய்ய வாய்" என்று -

தாகிலும் பெறப்பார்க்கிறு ரேன்னுதல். அன்றிக்கே, கீழே, 'மலியுஞ்சுடரொளிமூர்த்தி' என்று - வடிவழகை யநுஸந்தித்து, அநந்தரம் பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து அப்போதே பெறுமையாலே, வழியல்லாவழியே மடலூர்ந்தாகிலும் பெறப்பார்க்கிறு ரேன்னுதல்.

[மாசறுசோதி இத்யாதி] - † (மடலேடுத்தாகிலும் பெறவேண்டும்படி பழிப்பற்ற வடிவழகை யுடையனாய், என்னோட்டைக்கலவியால் வந்த ப்ரீதிதோற்ற ஸ்மிதம்பண்ணி, அந்தக்கலவியாலே வேறுபட்டுள்ள வடிவையுடையனாய், என்னோடேகலக்கிறவிடத்துத் தன்பேறுகக் கலந்தவனுமாய், மடலேடுத்துப்பெறுதே முடிந்தாலும் 'இந்த விஷயத்தை யாசைப்பட்டன்றோ மடலேடுத்தது' என்று அதுதன்னைப்பீடாகச் சொல்லலாம்படி மதிப் பனுமாயுள்ளவனை). "[என்செய்யவாய் - மாசறுசோதி - மணிக்குன்றத்தை] - என்று அந் வயமிருப்பது, 'இனி விஶேஷணந்தோறும் ஒருபொருள் சொல்லவேணும்' என்னுமத்தாலே சொன்னோம்" என்று அருளிச்செய்வர். †([நாடியே இத்யாதி] - நெடுநாள் தேடி துஃகப்பட்டு, அறிவுகுடிபோனார் செய்யுமத்தைச் செய்கிறது எத்தனைகாலமுண்டு? "இவ்விஷயத்திலே கைவைத்தார்க்கு ஒரு பழிசொன்னோமாகவேணும்" என்று அதிலேதுணிந்திருக்கிற.)

ஊரவர்சொல்லும் பழி நமக்கு என்செய்யப்புகுகிறதென்று நின்றது - கீழ்; இரண் டாம்பாட்டு—இதென்னவார்த்தை சொன்னயானாய், எல்லாம்செய்தாலும் பழிபரிஹரிக்க வேணுங்காணென்ன; நான் "பழிபரிஹரிக்கவேண்டா" என்றேனல்லேன், பழிபரிஹரிக்கு மெல்லை கடந்ததுகா ணேன்கிருள்.

[என்செய்யும் ஊரவர்கவ்வை தோழி யினிநம்மை யென்று] - தன்வடிவைக் காட்டுகிருள். இந்த இனிக்குப் பொருள் சொல்லுகிறதாயிற்று - பாட்டில் மேலிற்குறை யும். என்செய்ய தாமரைக்கண்ணனென்று தொடங்கி, என்செய்யவாயும் கருங்கண்ணும் பயப்பூர்ந்த - என்செய்யும் ஊரவர்கவ்வை தோழி இனி நம்மை என்று அந்வயம். இனி என்னை யென்னுதே, நம்மையென்கிருள் - வாயாலே "மடலூரக் கடவதல்ல" என்று நிஷேதியா நிற்கச்செய்தேயும், உடம்பு வெளுக்கிறமை அவளுக்கும் ஒத்திருக்கையாலே.

*அவயவஶோபை, "மாசறுசோதி" என்று - ஸமுதாயஶோபை, "மணிக்குன்றத்தை" என்றது - இரண்டுக்கு மாஶ்ரயமான விக்ரஹத்தை யென்னு மர்த்தவிஶேஷம் தோற்றுகைக்காக அந்வயித்தது. அந்வயித்தால் போருமோ, கீழைப்போலே ப்ரதிபதம் அர்த்தம் அருளிச்செய்ய வேண்டாவோவென்ன - இனிவிஶேஷணம் இத்யாதி.*

*வ்ருத்தாநுவாத பூர்வகமாக இரண்டாம்பாட்டுக்கு அவதாரிகை - ஊரவர் இத்யாதி. எல்லாம் செய்தாலும் - ஆற்றாமையாலே எத்தனைகாலம் பாடாற்றியிருந்தாலும். பரிஹரிக்குமெல்லை - "தத் ஸ்யஸஃஹஸம்ஹவெசு" என்றிருக்கை.*

*"பரிஹரிக்குமெல்லைகடந்தது" என்றது என்கொண்டென்ன - என்செய்யுமூரவர் இத் யாதி. இனியென்று-தன்வடிவைக் காட்டுகிருள் என்றபடி. "இனி" என்றால் - வடிவைக்காட்டின தாமோவென்ன-இந்த இனிக்கு இத்யாதி. அதாவது, மேலே சொல்லுகிற வைவர்ண்யாதிகளை-"இனி" என்று பராமர்ஶிக்கிறதாகையாலே, அர்த்தாத், "இனி" என்று - வடிவைக்காட்டின தாகலா மென்ற படி. இனிக்கு - "இனி" என்கிறதுக்கு. அந்வயப்ரதர்ஶநமுகேந உக்தார்த்தம் விஶதீகரோதி - என் செய்யதாமரைக்கண்ணன் இத்யாதி. "நம்மை" என்றதுக்கு - ஆத்மநி பஹுவசநமாக்கி, தன்வடி வைக்காட்டுகிறள் என்றார் கீழ்; அங்ஙனன்றிக்கே, தோழியையுங் கூட்டிக்கொண்டு - "நம்மை" என்கிருளென்று விவக்ஷித்து, நிஷேதிக்கிறவளைக் கூட்டிக்கொள்ளுவானென்னென்ன - இனி என்னை இத்யாதி. இப்போது, தன்வடிவை யென்றது - தங்கள்வடிவை யென்று கண்டுகொள்வது. நாயகிக்*

† குண்டலிக்ரந்தத்வயம் க்வாசித்கம்.

* "தோழிமாரும் எம்மின்முன் அவனுக்கு மாய்வராலோ" என்னக்கடவதிறே. "எனக்கு அவன் வேணும்", "இவளுக்கு அவன் வேணும்" என்னுமிதுவேயாயிற்று வாசி. இவளிலும் தோழிமார்க்கு ஆற்ருமை விஞ்சியிருக்கும்; அதுக்கடி - நாயகனைப் பிரிகை யாலுண்டான ஆற்ருமையிறே இவளுக்குள்ளது, இவள்நோவுபடக் காண்கையாலும், இவளும் அவனுமாய்ச் சேரவிருக்குமது காணப்பெருமையாலும் தோழிக்கு இரட்டித் திருக்குமிறே. "ததாஸீதித்யாதி" (ததாஸீதித்யாதி) - 'பெருமாளும் பிராட்டியுமான இருப்பிலே பிரிவுவிளைந்தது' என்று இளையபெருமாள் மஹாராஜர்க்கு அறிவிக்க, அவ் வார்த்தை செவிப்படப்பட, பெருமாள் திருமேனியில் வைவர்ண்யம் இவருடம்பிலே மாறிற்ருயிற்று. "அத்யர்த்தம் நிஷ்ப்ரப:" (அத்யர்த்தம் - நிஷ்ப்ரப:) என்று - பிராட்டியைப் பிரிகையாலுண்டான ஆற்ருமையிறே பெருமாளுக்கு உள்ளது, இவர்தம்முடைய ஆற்ருமையைக் காண்கையாலும், பிராட்டியும் தாமுமாகச் சேரவிருக்கக் காணப்பெருமை யாலும் இவர்க்கு அவ்வளவன்றிக்கே மிக்கிருக்குமிறே. அஹிதேயவசநமாயிற்று - அர்த்த ஸப்தம். அத்யர்த்தமாவது-அஹிதேயமல்லவேன்கிறது. †(வாசாமகோசரமென்றபடி.) [தோழி இனிநம்மை] என்கிருள் - "ஏகம் து:கம் ஸுகஞ்ச நௌ" (ஏகம்து:கம்ஸுகஞ்ச

ப்ர:—(என்செய்யுமூரவர்கவ்வை தோழியினிநம்மை) — ஸுந்தரகாண்டே, [௩௫] ஸீதாம்ப்ரதி ஹநூமாந், "ததஸ்ஸ்வநாஸஜம் ஸோகம் ராகவஸ்யாக்நிஷூதநம் । லக்ஷ்மணோவாநரேந்த்ராய ஸுக்ரீவாய ந்யவேதயத் ॥ ௫௫ ॥ ஸுக்ரீவவாநரேந்த்ரஸ்ய லக்ஷ்மணேநாபிதம் வச: । ததாஸீந்நிஷ்ப்ரபோத்யர்த்தம் ராஹுக்ரஸ்த இவாம்ஸுமாந் ॥ ௫௬ ॥".

(ஏகம்து:கம் ஸுகஞ்ச நௌ என்கிற ப்ராப்தியைமுன்னிட்டுக்கொண்டு)— கிஷ்கிந்தாகாண்டே பஞ்சமே, "த்வம் வயஸ்யோஸி ஹ்ருத்யோமே ஹ்யேகம் து:கம் ஸுகஞ்ச நௌ । ஸுக்ரீவோ ராகவம் வாக்யம் இத்யுவாச ப்ரஹ்ருஷ்டவத்".

கொழிய தோழிக்கு உடம்பு வெளுக்கக்கூடுமோவென்ன - தோழிமாரும் இத்யாதி. தோழிமாரும், ஈடுபடுகிற எனக்குமுன்னே, "இவளுக்கு அவன் உதவப் பெற்றதில்லை" என்று அவன்பொருட்டு ஈடுபடாநிற்பர்கள் இத்யர்த்த:. மாய்வர் - ஈடுபடாநிற்பர்கள். உடம்புவெளுக்கிறமை இருவருக்கு மொத்திருந்தால் வாசியேதென்ன - எனக்கு இத்யாதி. எனக்கு அவன்வேணும் என்னும் நாயகி, இவளுக்கு அவன்வேணும் என்னும்தோழி என்று கூட்டிக்கொள்வது. "எம்மில்முன்" என்கிறவிடத் தில், "எம்மில்" என்கிறதுக்குஹாவம்-இவளிலும் இத்யாதி. விஞ்சியிருக்கைக்கு அடியேதென்ன-அதுக் கடி இத்யாதி. தோழிமார்க்கு இரட்டித் திருக்குமென்றத்துக்கு ஸம்வாதம் - ததாஸீத் இத்யாதி. "ஸுக்ரீவவாநரேந்த்ரஸ்ய லக்ஷ்மணேநாபிதம் வச: । ததாஸீந்நிஷ்ப்ரபோத்யர்த்தம் ராஹுக்ரஸ்த இவாம்ஸுமாந்" இதி ஸுந்தரகாண்டே பஞ்சத்ரிம்ஸே ஸீதாம்ப்ரதி ஹநூமாந். இம்ஸ்லோகத்துக்கு அடியேதொடங்கி அர்த்தம்-பெருமாளும்பிராட்டியும் இத்யாதி. மாறிற்றயிற்று - இங்குமுண்டாயிற் றென்றபடி. இவர்தம்முடைய - பெருமாளுடைய தாமுமாக - பெருமாளுமாக. இவ்வர்த்தத்தை இம்ஸப்தம் வசிக்குமோ வென்ன - அஹிதேய இத்யாதி. அத்யர்த்தம் - வாசாம கோசரமாம்படி. வைவர்ண்யமாகிறவர்த்தம் வாக்குக்கு அவிஷயமாம்படி யென்றபடி. இவ்விடத்தில், அதி யென்கிறது - நஞர்த்தகம். அவளுடம்பு வெளுக்கிறது தனக்காகவென்று இவள் எப்படியறிந்தா ளென்ன-தோழியினிநம்மை இத்யாதி. அதாவது-ஸமாநஸுகது:கைக ளாகையாலே, உடம்புவெளுக்க

* திருவாய்மொழி - ௯, ௯ † குண்டலித 'க்ரந்தம் க்வாசித்கம்.

னெள) என்கிற ப்ராப்தியை முன்னிட்டுக்கொண்டு. "பழி" என்று பரிஹரிக்கப் பார்க்கிற வள்தன்னையும் பழி சொல்லுகிறளிறே, "ஏகம் து:கம் ஸுகஞ்சநௌ" (ஏகம் துஃகம்ஸுகஞ்சநௌ) என்றிருக்குமது அவளுக்கு முண்டாகையாலே. பழிக்கு அஞ்சவேண்டாமைக்கு நமக்கு இப்போதுவந்ததேன்? என்ன, [என்செய்ய தாமரைக்கண்ணனென்னை நிறைகொண்டான்] - "என்னுடைய ஆத்மாத்மீயங்களுடைய நீயிட்ட வழக்கன்றோ" என்கிற அகவாயில் தண்ணளி தோற்றும்படி வாத்ஸல்யத்தாலே குதறிச்சிவந்த தாமரை போன்ற திருக்கண்களாலே குளிரநோக்கி, "நானும் என்னுடைமையும் உன்னது" என்றுசொல்லுவாரைப்போலே வந்து இத்தலையை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணிக்கொண்டு போனான். எனக்கு உபகரிப்பாரைப்போலேயிருக்கநோக்கி, என்னை உரிகூறை கொண்டு போனான். சோலவொன்றும் செயலொன்றுமாயிருந்தது; † "தூதுசெய்கண்கள் கொண்டொன்றுபேசி" என்னக்கடவதிறே. [என்னைநிறைகொண்டான்] - அவனுடைய புருஷோத்தமத்வத்துக்குப் புண்டரீகாக்ஷத்வம் எல்லையாயிருக்குமாபோலே யாயிற்று இவள் ஸ்த்ரீத்வத்துக்கு நிறை எல்லையாயிருக்கும்படி. அவன் புருஷோத்தமனானாற்போலே

---

ப்ராப்தியுண்டென்றபடி. இப்படிசொல்லுகிறதின் கருத்தை அருளிச்செய்கிறார் - பழியென்று இத்
யாதி. விவரணமாதல். "த்வம் வயஸ்யோஸி ஹ்ருத்யோமே ஹ்யேகம் து:கம் ஸுகஞ்ச
நௌ। ஸுக்ரீவோ ராகவம் வாக்யமித்யுவாச ப்ரஹ்ருஷ்டவத்" இதி கிஷ்கிந்தா
காண்டே பஞ்சமே. "என்செய்ய தாமரைக்கண்ணனென்னைநிறைகொண்டான்" என்றதுக்கு -
"நான் என்னுடையவன்" என்கிற ஆகாரம் தோற்றும்படி கண்ணாலே குளிரநோக்கி என்னை
ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினனென்றர்த்தம் விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-என்னுடைய இத்யாதி.
இந்தவர்த்தத்தில், "நிறை" என்கிறது - நிறையவென்றாய், எல்லாவற்றையுமென்றபடி. என்செய்ய
தாமரைக்கண்ணன் - என்னுடைய செய்யதாமரைக்கண்ணன். "செய்யதாமரைக்கண்ணன்" என்
றது - இப்போது, வாத்ஸல்யகுணபரம். இத்தால் - "நான் உன்னுடையவனன்றோ" என்று அவன்
கண்ணாலே யறிவித்தமையைக் கொண்டு - என் என்கிறாளென்றபடி. குதறி - உல்பணமாய்.
கீழ்வாக்யவிவரணம் - எனக்கு இத்யாதி. இருக்கநோக்கி - இருக்கும்படி நோக்கி. உரிகூறை
கொண்டு-கூறையையுரிந்துகொண்டு. கூறை-புடவை. இத்தால் அவன் தௌராத்ம்யத்தை பலிப்பிக்
கிறார் - சோலவொன்றும் இத்யாதி. கண்ணாலேநோக்கின வித்தனையன்றோ, சொன்னதேபின்னை
யென்ன - தூதுசெய் இத்யாதி. தூதக்ருத்யத்தைப்பண்ணுகிற கண்களைக் கொண்டு ஸ்வாபிப்ரா
யத்தை ஸ்பஷ்டமாகச்சொல்லி யித்யர்த்த:. "நிறை" என்றது - ஸாகல்யவாசியென்றும், "செய்ய
தாமரைக்கண்ணன்" என்றது - வாத்ஸல்யகுணபரமென்றும் அருளிச்செய்து; "செய்யதாமரைக்
கண்ணன்" என்றது - பரத்வபரம் என்று அர்த்தாந்தரம் விவக்ஷித்து, அத்தையே த்ருஷ்டாந்தமாக்கி,
"நிறை" என்றதுக்கு - அடக்கமென்று அர்த்தாந்தரம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி புந:ப்ர
தீகக்ரஹணம் - என்னைநிறைகொண்டான் என்று. அத்தையுபபாதிக்கிறார் - அவனுடைய இத்யாதி.
இத்தால் - இவ்விலக்ஷணவஸ்துவை யபஹரிக்கிறானாகையாலே, தன் வைலக்ஷண்யத்தைக் காட்டி
அபஹரித்தானென்று கருத்து. இப்போது, "என்" என்றது - செய்யதாமரைக்கண்ணனை ஆகா
ரத்தை எனக்குக்காட்டி யென்றபடி. கீழ்வாக்யவிவரணம் - அவன் இத்யாதி. ஆக, 'என்' என்ற
துக்கு - என்னுடையவென்றும், எனக்கென்றும்; "செய்யதாமரைக்கண்ணன்" என்றது - வாத்
ஸல்யகுணபரமென்றும், பரத்வபரமென்றும்; "நிறை" என்றதுக்கு - ஸமஸ்தமுமென்றும், அடக்க
மென்றும் அர்த்தத்வயம் கண்டுகொள்வது. விஶ்லேஷித்து நோவுபடுகிற ஸமயத்திலே "என்" என்
றது; அவன் கலந்தபோது "நான் உன்சரக்கன்றோ" என்று கண்வழியாலே சொன்னதுகொண்டு,

† திருவாய்மொழி - கூ, கூ, கூ.

யாயிற்று, இவள் நாரீணாமுத்தமையாயிருக்கும்படி. [என்] - பிரிவோடேயிருந்து மடலூர்ந்து பழிவிளையாநிற்கச்செய்தேயும் "என்னுடையவன்" என்னலாம்படிகாணும் அவன் கிட்டினு லிருக்கும்படி. [என்னைநிறைகொண்டான்] - "நூறாயிரம் புருஷோத்தமர்கள் கூடினாலும் தோற்றுப்போமிதுக்கு மேற்படச் செய்யலாவதில்லை" என்றாயிற்று இவளுடைய ஸ்த்ரீத்வாபிமாநந்தா னிருப்பது. [என்செய்ய தாமரைக்கண்ண னென்னை நிறைகொண்டான்] - தன்னுடைய பும்ஸ்த்வத்தையடைய அழியமாறி என்னுடைய ஸ்த்ரீத்வத்தைக் கொண்டான். தான்தோற்றுப்போலேகாணும் இவளைத் தோற்பித்தது. [என்னை நிறை கொண்டான்] - கடலைத் தறைகண்டான். "என்னைநிறைகொண்டான்" என்று இவள் தான் தோழிக்குச்சொல்லும்படியிறே பண்ணிற்று. தோழிதானும் இவள்வடிவிலே வேறு பாடுகொண்டு "உற்றநன்னோயிதுதேறினோம்" என்று இவள் அகப்பட்டபடி யறியுமத்தனை போக்கி, இவள்தான் தோழிக்கும் வாய்விட்டுச்சொல்லாதபடியிறே ஸ்த்ரீத்வந்தா னிருப்பது. "நைவமாகிஞ்சிதப்ரவீத்" (நைவமாகிஞ்சிதப்ரவீத்) என்னக்கடவதிறே. [நிறைகொண்டான்] - நிறையாகிறது - அடக்கம். அகவாயிலோடுகிறவிது பிறர்க்குத்தெரியாதபடி மறைத்துக்கொண் டிருக்கையிறே. நான் எனக்கு ஓடுகிற தசையை உனக்கு

---

ப்ர:—(நைவமாகிஞ்சிதப்ரவீத் என்னக்கடவதிறே) — ஸ்ரீமதயோத்யாகாண்டே, [ருஅ] தஶரதம் ப்ரதி ஸுமந்த்ர:, "ஜாநகீ து மஹாராஜநிஶ்வஸந்தீ தபஸ்விநீ । பூதோபஹதசித்தேவ விஷ்டிதா விஸ்மிதா ஸ்திதா ॥ நச॥ அத்ருஷ்டவ்யஸநா ராஜபுத்ரீ யஶஸ்விநீ । தேந து:கேந ருததீ நைவமாகிஞ்சிதப்ரவீத் ॥நரு॥".

---

"என்" என்கிறாளென்று - கீழே அருளிச்செய்து ; அங்ஙனன்றிக்கே, அவன் கிட்டினபோது தாழநின்று பரிமாறினமையைப்பற்றச் சொல்லுகிறாளென்று தாத்பர்யாந்தரம் - பிரிவோடே இத்யாதி. ஸாமாந்யேந "நிறைகொண்டான்" என்றாலும் - தன்னுடைய நிறைகொண்டமை ஸித்திக்குமாயிருக்க, "என்னை" என்று விஶேஷித்து ஊன்றிச்சொன்னதுக்கு பாவம்-நூறாயிரம்இத்யாதி. இத்தால் - அவனுடைய பும்ஸ்த்வத்தையும் அதிக்ரமித்திருக்கும் இவளுடைய ஸ்த்ரீத்வமென்று கருத்து. இப்படி அதிக்ரமித்திருக்குமாகில், நிறைகொள்ளக்கூடுமோவென்ன ; கீழிற்பதத்தையும்கூட்டிபாவம்-தன்னுடைய இத்யாதி. அதாவது - எனக்குத்தாழநின்று நிறைகொண்டானென்று கருத்து. அழியமாறி-அழித்து. விவரணம்-தான் இத்யாதி. தோற்றுப்போலேயென்றது - "ஆத்மாத்மீயங்கள் நீயிட்ட வழக்கு" என்றத்தைப்பற்ற. "நூறாயிரம்" இத்யாதிவாக்யவிவரணம்-கடலை இத்யாதி. து:காதிஶயத்தாலே இப்படி சொல்லவுங்கூடுமே, இது வாஸ்தவமென்று இவளறியும்படி எப்படியென்ன - என்னை நிறைகொண்டானென்று இத்யாதி. இத்தால்-எத்தனை யாற்றாமையுண்டானாலும் இவ்வார்த்தை சொல்லாத இவள் சொன்னபோதே, இது வாஸ்தவமென்று கருத்து. ஆனால்-இதுக்குமுன்பு தோழிக்குத் தன் தசைசொல்லாளோவென்ன - தோழிதானும் இத்யாதி. உற்றநன்னோய் இத்யாதி-உள்ளூறப்பெற்ற ஶ்லாக்யமான நோய்இது என்று அறுதியிட்டோமித்யர்த்த:. அப்படி அந்தரங்கர்க்கும் வாய்விட்டுச்சொல்லாதபடிபண்ணுமோ ஸ்த்ரீத்வமென்ன-நைவமாகிஞ்சித் இத்யாதி. "அத்ருஷ்டவ்யஸநா ராஜபுத்ரீ யஶஸ்விநீ । தேநது:கேந ருததீநைவமாகிஞ்சிதப்ரவீத்" இத்யயோத்யாகாண்டே தஶரதம்ப்ரதி ஸுமந்த்ர:. ஸ்த்ரீத்வமென்றதுக்கு ஶப்தநிர்வாஹம் - நிறையாகிறது அடக்கம் இத்யாதி. "என்னைநிறைகொண்டானென்று" இத்யாதி வாக்யவிவரணம் - நான் எனக்கு

வாய்விட்டுச் சொல்லும்படியன்றோ பண்ணிற்று. "நிறைகொண்டான்" என்கிற இதி னுடைய வ்யாக்யாநமாயிருக்கிறது - மேல். உன்னை அவன் கொண்டதுதானேதென்ன, "நிறைகொண்டான்" என்கிற சொல்லுக்குள் அடங்கினவைதன்னை எண்ணுகிறாள். [முன்செய்யமாமையிழந்து மேனிமேலிவெய்தி என் செய்யவாயும் கருங்கண்ணும் பயப் பூர்ந்த - என்செய்யு மூரவர்கவ்வை தோழீ இனிநம்மை] - நீ "மடவாருவேன்" என்கிற வாயைப் புதைத்தால், என்வடிவு மடலேடுக்கிறவித்தை என்கொண்டு மறைப்பாய்? [முன் இத்யாதி] - இதுக்குமூன்றுபடியாக அருளிச்செய்தருளுவர்,—தன்பக்கல் கைவைப் பதற்குமுன்னே - பிறந்தபோதே உண்டான நிறத்தையிழந்தேன்னுதல்; அன்றிக்கே, அல் லாத இழவுகளுக்கு முன்னே நிறத்தையிழந்தேன்னுதல்; முன்பு தோற்றினவற்றைப் பறித் துக்கொண்டு, பின்பிறே கிழிச்சீரை யறுத்துக்கொள்வது; அவன்தானும் முந்துறவிரும்பிற்று இந்நிறத்தைக்காணும்; அங்ஙனன்றிக்கே, முன்னே - காணக்காண நிறத்தை இழந்தேன் னுதல். [செய்யமாமை] - "செய்யமாமை" என்றும் சொல்லாநின்றது, "மணிமாமை" என்றுஞ் சொல்லாநின்றது; இரண்டாலும் - சிவப்பும், கறுப்புமல்ல இங்குச்சொல்லுகிறது; இரண்டிலுமொக்க வேறின ப்ரயோஜநம் - ஸ்ப்ருஹணீயதையாயிற்று. [இழந்து] - அவனோடு கலந்துபெற்ற நிறத்தைத் தநமாக நினைத்திருந்தபடியாலே - இழந்தேன்கிறாள். [மேனி மேலிவெய்தி] - இனி அவன்வந்தாலும் நிறம்வந்தாலும் தொங்குகைக்கு ஆஶ்ரய மில்லை; ஆஶ்ரயமுண்டானாலிறே தொங்குவது. நீர்ப்பண்டம்போலே காணக்காணச் சருகாகாநின்றதாயிற்று. [என்செய்யவாய் இத்யாதி] - அவயவியாகத் தேடுகிறேனோ, அவய வங்கள்தோறும் வற்றிவருகிறபடி பாராயோ? [என்செய்யவாயுங்கருங்கண்ணும்] - இப் போது தன்னுடைய அவயவங்களைத் தானே ப்ரஶம்ஸிக்கிறாளல்லள்; அவன்வந்து கிட்டின

---

இத்யாதி. "நிறை" என்றதில் மூந்தின அர்த்தத்திலே நோக்காக உத்தரபதாவதாரிகை - நிறை கொண்டானென்கிற இத்னுடைய இத்யாதி. மற்றைப்பக்ஷத்தில், அடக்கம் போனபோதே யல்லாத வையும் போயிற்றென்கிறாளென்று உத்தரபதஸங்கதி யாகக்கடவது. வ்யாக்யாநமாயிருக்கிறது - "ஸா வஸ்வாபஹாரம் பண்ணிக்கொண்டு போனான்" என்றதின் வ்யாக்யாநமாயிருக்கிற தென்றபடி. உத்தர ப்ரத்யுத்தரரூபேண கீழ்வாக்யவிவரணம் - உன்னையவன் இத்யாதி. இப்படி அந்வயித்ததுக்கு ஸாவ மாதல், "மாமை" இத்யாதிக்கெல்லாம் ஸாவமாதல் - நீமடலூருவேனென்கிற இத்யாதி. புதைத்தால்- மூடினால். இதுக்கு-"முன்" என்றதுக்கு. மூன்றுபடியாவது - அவனோடே கலப்பதற்கு முன்னே யென்னுதல், மேனிமெலிவெய்துகை தொடக்கமான இழவுகளுக்கு முன்னேயென்னுதல், காணக் காணவென்னுதல் என்று. முன்-முன்னே. மேனிமெலிவெய்துகை தொடக்கமான இழவுகளுக்கு முன்னே நிறமிழக்கைக்கு ஹேதுவேதென்ன - முன்புதோற்றின இத்யாதி. கிழிச்சீரை - சாளிகை. ஹேத்வந்தரம் - அவன்தானும் இத்யாதி. அதாவது - தான் முந்தற விரும்பினதாகையாலே முற்பட அபஹரித்தானென்றபடி. அவன் முந்தற நிறத்தை விரும்புகையாலேயன்றோ, அவனுக்கு உறுப்பல் லாத ஆத்மாத்மீயங்களை வேண்டாவென்கிற - ஏறாளும்இறையோனிலே, முந்தற "மணிமாமைகுறை விலம்" என்றது. இது இருபத்துநாலாயிரத்திலே வ்யக்தம். ஏறாளும்இறையோனிலே மணிமாமை யென்றும் சொல்லாநின்றது, இது வ்யாஹதமன்றோவென்னில் என்று ஶங்காவாக்யத்தைப் பூர்த் துக்கொள்வது. இங்கு - இவ்வோவிடங்களிலே. போயென்னாதே, "இழந்து" என்றதுக்கு பாவம்- அவனோடு இத்யாதி. அவன்வந்தாலும் நிறம்வந்தாலும் என்றதுக்கு பாவம் - அவன்வந்தால் நிறம் வருமே, அந்தநிறத்துக்கு ஆஶ்ரயமில்லையென்றபடி. "முன் - மேனிமெலிவெய்தி" என்று, முன் என்கிறபதத்தை இங்கேயுங் கூட்டிபாவம்-நீர்ப்பண்டம் இத்யாதி. நீர்ப்பண்டம் - ஜலமயபதார்த்தம். அவயவியாக - ஶரீரியாக. "செய்யவாயும் கருங்கண்ணும்" என்று விஶேஷணமிட்டு - தன் அவயவங் களை தானே வர்ணிக்கலாமோ வென்ன - இப்போது இத்யாதி. அவனுடைய ஸ்ரீஸஹஸ்ரநாமத்துக்

போது அவனுடைய ஸ்ரீஸஹஸ்ரநாமத்துக்கு விஷயம் இவையேயாயிற்று. அத்தைச் சேவியாலே கேட்டிருக்குமே, அத்தாலேசொல்லுகிருள். தான் இழந்தக்ரமம் சொல்லாநிற்கச் செய்தே, அவன் உகந்தக்ரமம் தோற்றுகின்றதுகாணும்இவளுக்கு. [என் இத்யாதி] - அவன் தனக்கு இத்தை ஸர்வஸ்வமுமாக நினைத்திருந்தபடியாலே, இவளும் "உன்னது என்னது" என்று ஒருதலை பற்றுகிருள். ஸ்வஸ்வரூபமும் ப்ராப்யாந்தர்க்கதமாயிறே உத்தேஶ்யமாவது. இங்ஙனன்றாகில், "[grantha]" (த்வ்யக்ஷரஸ் துபவேந்ம்ருத்யு:) என்கிற வழியாலே பற்றுகிருளன்றே. [என்செய்யவாயும்கருங்கண்ணும் பயப்பூர்ந்த] - அவனுடைய வாய்ப்புதுசோறு பறியுண்ணுகின்றதேன்கிருள். † "செங்கனி வாய்நுகர்ந்தான்", ‡ "மணநோக்கமுண்டான்" என்னக்கடவதிறே. [செய்யவாயும் கருங் கண்ணும் பயப்பூர்ந்த] - கடலும்மலையும் குடியிருப்புமான விடமெல்லாம் ப்ரளயகாலத்தில் ஏகோதகமாமாபோலே, எங்குமொக்க வைவர்ண்யமேயாயிற்று. ஒருவெளுப்பாயிற்று. விஷம்பரந்தாற்போலே காணக்காண வண்டலிட்டு வைவர்ண்யமானது பரப்புமாறிற்று. (௬)

---

ப்ர:—(இங்ஙனன்றாகில், '[grantha]' என்கிறவழியாலே பற்றுகிருளன்றே)—[grantha], "[grantha]"

---

சென்றது - அவன்பண்ணும் ஸ்தோத்ரத்துக்கென்றபடி. விஷயமென்று அறியும்படி எப்படியென்ன- அத்தைச்சேவியாலே இத்யாதி. "செய்யமாமை, செய்யவாயும், கருங்கண்ணும்" என்கிறவர்ணனை யால் பலித்தவர்த்தம் - தான் இழந்த இத்யாதி. தானிழந்தக்ரமமாவது - மாமை, மேனி, செய்யவாய், கண், இவற்றை யிழந்தக்ரமம். "என்" என்று - மமகாரந்தோற்றச் சொல்லலாமோவென்ன - அவன் தனக்கு இத்யாதி. இத்தை - அவயவத்தை. ஸர்வஸ்வமுமாக நினைத்திருந்தபடியாலே யென்றது - "செங்கனிவாய்நுகர்ந்தானை" "மணநோக்கமுண்டான்" என்றத்தைப்பற்ற. உன்னதென்னதென்று- உன்னதாகையாலே என்னது என்று. ஒருதலை - ததீயத்வாகாரம். இதுக்கு ஸ்வாபதேஶம் - ஸ்வஸ்வரூபமும் இத்யாதி. ப்ராப்யாந்தர்க்கதமாயிறே - ப்ராப்யபூதனுக்கு உபயுக்தமாயிறே. ஸ்வஸ்வரூபமும் இத்யாதிவாக்யத்துக்குத் தாத்பர்யம்-ப்ராப்யபூதனான ஈஶ்வரனுடைய "மதீயம்" என்கிற அபிமாநாந்தர்ப் பூதமான வழியாலேயன்றே ஆத்மஸ்வரூபந்தானும் "[grantha]" இத்யாதிப்படியே ப்ராப்யமாயிற்று; ஆகையாலே, ஆத்மதர்மமான ஜ்ஞாநபக்த்யாதிகளும் அவனுக்கு உறுப்பான வழியாலே யன்றே ஆதரிக்க ப்ராப்தமென்று. '[grantha]' இதி பகவச்சாஸ்த்ரே. அல்லாத அவயவங் களுக்கும் வைவர்ண்யமொத்திருக்க,கண்ணையும் வாயையும் விஶேஷிக்கிறதுக்குக் கருத்தென்னென்ன- அவனுடைய இத்யாதி. "வாய்ப்புகுசோறு" என்றதுக்கு ப்ரமாணம்-சேங்கனிவாய் இத்யாதி. சிவந்த கனிபோன்ற வாயையுஜித்தவனை யித்யர்த்த:. மணநோக்கமுண்டானே - பிராட்டியுடைய அழகிய நோக்கை தாரகமாகவுடையவனே யித்யர்த்த:. † மூந்தினபாசுரம், திருமொழி மூன்றாம்பத்து ஏழாந் திருமொழி இரண்டாம்பாட்டு, "பண்டிவன்" இத்யாதி. ‡ பிந்தினபாசுரமும், எட்டாம்பத்து பத்தாந் திருமொழி முதற்பாட்டு, "வண்டார்" இத்யாதி. "முன்செய்யமாமை" இத்யாதியையுங் கூட்டி பாவம்-கடலும் இத்யாதி. "பயப்பு" என்றத்தைப்பற்ற - ஒருவெளுப்பாயிற்று என்றது. வெளுப் பாயிற்றென்றது - வெள்ளமாயிற்றென்று சாடு, வெளுத்ததென்று ஸஹஜார்த்தம். "ஊர்ந்த" என்ற துக்கு பாவம் - விஷம் இத்யாதி. பறப்புமாறிற்று - இடமில்லாதபடி பரம்பிற்று. அந்வய: பூர்வமே வோக்த:. (௨)

## மூன்றும் பாட்டு.

---

ஊர்ந்தசகடம் உதைத்தபாதத்தன்பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாயன் என்னைநிறைகொண்டான்
பேர்ந்தும்பெயர்ந்தும் அவனோடன்றியோர்சொல்லிலேன்
தீர்ந்தவென்தோழி என்செய்யுமூரவர்கவ்வையே?

ஆ.—(ஊர்ந்தசகடம்.) "ஆகிலும் மடலூருகை நமக்குப் போராது" என்று தோழிசொல்ல,—தன்னுடைய அதிதைவாதிமாநுஷ திவ்யசேஷ்டிதங்களாலும் அழகாலும் என்னை நிறைகொண்டான்; ஆனபின்பு, பேர்ந்தும் பெயர்ந்தும் அவன் திற மல்லது மற்றேதேனும் சொல்லிலும் கேளேன். நான் ஏதேனு மொன்றைச் சொன்னால் அத்தைச் செய்கையிலே எனக்கு முற்படவே துணிந்திருக்கக்கடவ நீ என்னை ப்ரதிபந் திக்கலாமோ? நீ ப்ரதிபந்திக்கிறது "ஊரவர் நம்மைப்பழிசொல்லுவர்" என்றிறே, அது தத்குணபராஜிதரான நம்மைச்செய்வதென்? என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஏதேனும் சிலவற்றாலே போதுபோக்கி யிருக்கு மத்தனையல்லது அஸத்ருஶங்களிலே ப்ரவர்த்தித்தால் நாடு பழி சொல்லாதோ? என்ன,—'எனக்கு அவனாலல்லது செல்லாது, நாட்டார் சொல்லும் பழி என்னை எத்தைச் செய்வது?' என்கிறாள்.

[பேய்முலை என்று தொடங்கி] - யஶோதைப்பிராட்டி முலையிலே அணையுமா போலே அணைந்து பேய்முலையைச் சுவைப்பதும் செய்து தாய் முகத்தில் சிரிக்குமா போலே முறுவல் செய்கையாலே சிவந்த திருப்பவளத்தையுடையவன் இச்சேஷ்டிதங் களாலே என்னை நிறைகொண்டான். [பேர்ந்தும் என்று தொடங்கி] - போயும் வந்தும் அவன்திறமான சொல்லாலல்லது போது போக்குகைக்கு வேறொரு சொல் உடையே னல்லேன். 'தீர்ந்த' என்றதுக்குக் கருத்து - அந்தரங்கையான நீயே நிஷேதிக்கக்கடவை யோ? என்று.

ப.—அநந்தரம், அவனுடைய விரோதிநிவர்த்தகமான அதிபாலசேஷ்டிதத் திலே அகப்பட்ட என்னை ஊரார் அலர் என்செய்யு மென்கிறாள்.

ஊர்ந்த - நலியநினைந்துஊர்ந்துவந்த, சகடம் - சகடத்தை, உதைத்த - (ஸ்தந்யார்த்தியாயழுதுநிமிர்ந்த அங்யபரவ்யாபாரத்தாலே முறிந்துவிழும்படி) உதைத்த, பாதத்தன் - திருவடிகளையுடையவனாய், (அதுபக்வதசையாம்படி அதிஶைஶவாவஸ்தையிலே), பேய்முலை - பேய்முலையை, சார்ந்து - (தாய்முலையோபாதி நெஞ்சு பொருந்திச்) செறிந்து, சுவைத்த - (ப்ராணஸஹிதமாகப் பசையற) உண்ட, செம் - சிவந்த, வாயன் - திருப்பவளத்தையுடையவன், (இப்பருவம்நிரம்பாச்செயலாலே), என் - என், நிறையை - நிரப்பத்தை, கொண்டான் - அபஹரித்தான்; (ஆகையாலே), பேர்ந்தும் பெயர்ந்தும் - மீண்டும் மீண்டும், அவனோடன்றி - அவனோடுசேர்ந்ததன்றி, ஓர் - வேறொரு, சொல் - வார்த்தையை, இலேன் - உடையேனல்லேன், என் - என்னோடொருநெஞ்சாம்படி, தீர்ந்த - அறுதியுடைய, தோழி-தோழீ, ஊரவர் - ஊரவருடைய, கவ்வை-அலர், என்-எத்தை,

செய்யும் - செய்யும்? அவன்கொண்டநிறையை மீளஅழைக்குமோ, அவனையொழிய வேறே சிலரை நான்பெற்றிடப்பண்ணுமோ வென்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், ஏதேனுமொரு லோகயாத்ரையாலே போது போக்கி யிருக்கவன்றோ அடுப்பது என்ன,—அவனாலல்லது எனக்குச் செல்லாதான பின்பு அவ்வெல்லைகழிந்தே னென்கிறாள்.

[ஊர்ந்த இத்யாதி]-பூதனை விஷயமாகவும் ஶகடாஸுரன் விஷயமாகவும் பண்ணின சேஷ்டிதங்களாலே, அவர்கள் நிரஸநமென்று ஒரு வ்யாஜத்தையிட்டு என்னுடைய ஸ்த்ரீத்வத்தை யிழந்தேனென்கிறாள். பருவம் நிரம்பி ப்ரணயத்திலே தேஶிகனாய்ச் செய்தவையொழிய, பாலசேஷ்டிதங்களும் தனக்காகச் செய்தானென்றிருக்கிறாள்; "அவதரித்தது தனக்கு" என்றிருக்கையாலும், ஸ்நேஹம் ஸத்தாப்ரயுக்தமாகையாலும். ஊர் ஶகடமன்று, ஊர்ந்த ஶகடம். அது செய்ததெல்லாம் செய்தற்றது, இவன் மௌக்த்யத்தாலே யகப்பட்டான், திருவடிகளினுடைய அவதாரத்தாலே பிழைத்தானித்தனை. தாயார் ரக்ஷகமாக நிறுத்தின ஶகடம், பாடிகாப்பாரே களவுகாணுமா போலேயிறே நலிந்தது. [உதைத்த பாதத்தன்] - "ஸ்தந்யார்த்தீ ப்ரருரோதஹ" என்று, முலையை நினைத்துச் சீறித் திருவடிகளை நிமிர்த்தான், மேல் விழுந்த ஶகடம் துகளாய்ப் போயிற்று. "இது பக்வதஶை" என்னும்படியிறே பூதனாநிரஸநதஶை. [பேய் முலை இத்யாதி] - யஶோதைப்பிராட்டிமடியிலேயணைந்து முலைக்கீழே முழுகினாற்போலே யாயிற்று முலையுண்டது. [சுவைத்த] - "ப்ராணைஸ்ஸஹ்தம்வவள" என்னுமாபோலே உயிரும் முலையிலே சுரக்கும்படியாயிற்று முலையுண்டது. [செவ்வாயன்]-பிள்ளைகள் தாய் முகத்திலே சிரிக்குமாபோலே ஸ்மிதம்பண்ணின திருவதரத்தில் பழுப்பையுடையவன். [என்னை நிறைகொண்டான்]-ஒரு செயலாலே இரண்டு ஸ்த்ரீ வதம் பண்ணினான். ஆசைப் பட்டாரில் உகவாதாரதே நன்றாயிற்றுகாணும்; அவளை நற்கொலையாகக்கொன்றான், என்னை உயிர்க்கொலையாகக் கொன்றான். நிறை - நிறைவு, அடக்கம் - ஸ்த்ரீத்வம். நிரூபகமான ஸ்த்ரீத்வம் போனால் நிரூப்யமுண்டோ? என்கை. அவன் அப்படிச் செய்தால் லோகயாத்ரையோடே போதுபோக்கினாலோ என்ன, [பேர்ந்தும் இத்யாதி] - போயும் வந்தும் அவன் திறமான சொற்களாலல்லது வேறு போதுபோக்குகைக்குச் சொல்லுடையேனல்லேன். "அவனை நினை, அவனைமற," என்று சொல்லுகிற வித்தனையிறே. இத்தையிறே * ஏதுசெய்தால் மறக்கேன் என்கிறது. "நாம் இவ்விஷயத்தில் மூட்டப்படும் பாடும் நம்மாலும் மீட்கவொண்ணாதபடி ப்ரவணையாவதே!" என்று ப்ரீதையானாள். [தீர்ந்தவென் தோழி] - அந்தரங்கையான நீ, நிஷேதிக்கக் கடவையோ? "அதிற்குறையுண்டோ ஊரார் பழிக்கு அஞ்சியன்றோ நான் விலக்குகிறது" என்ன, ஊரார் பழிகொண்டு கார்யமென்? உன்னெஞ்சில் குறையில்லாமையேயன்றோ எனக்கு வேண்டுவதென்கிறாள்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. "என்செய்யுமூரவர்கவ்வை" என்றாள்; "எல்லாம்செய்

மூன்றாம்பாட்டு - ஊர்ந்தசகடம் இத்யாதி. கீழிற்பாட்டிலே - பழிபரிஹரிக்குமெல்லை கடந்ததென்று சொல்லியிருக்க, இப்பாட்டிலே மீளவும் "என்செய்யு மூரவர்கவ்வை" என்றதுக்கும்; மடலூருகிற ஸமயத்திலே பழிசொல்லவேண்டி யிருக்க, அவன் பண்ணினவுபகாரம் முதலானவற்றைச் சொல்லுகிறதுக்கும் அநுகுணமாக அவதாரிகை - என்செய்யுமூரவர்கவ்வை என்றாள் இத்யாதி. என்றாள் என்றவநந்தரம், கீழே, மீளவுமிப்பாட்டிலே "என்செய்யுமூரவர்கவ்வை" என்று சொல்லு

தாலும் பழி பரிஹரிக்கவேண்டாவோ'' என்றிருக்குமிறே இவள்; ''இதுபழி'' என்று பரிஹரிக்க வொண்ணாதபடி எனக்கு ப்ராவண்யத்தை விளைத்தவனெங்குத்தான், '' இதுபழி '' என்று மீளாதபடி இவ்விஷயத்திலே ப்ரவணையாயிருக்கிற நான் எவ்வளவிலே நிற்கிறேன், '' இது பழி '' என்று சொல்லுவர்கள்தான் எவ்வளவிலே நிற்கிறார்கள், அவர்கள் சொல்லுகிறத் தைச் சொல்லுகிற தோழியான நீதான் எவ்வளவிலே நிற்கிறா யென்கிறாள்.

[ஊர்ந்தசகடமுதைத்த பாதத்தன்] - இதுக்கு முன்பெல்லாம்; ஶகடாஸுர நிரஸநம்பண்ணினதும், பூதநா ஸ்தந்யபாநம் பண்ணி அவளை நிரஸித்ததும், '' கம்ஸன் வர விட்டவற்றைப் போக்கினது '' என்றிருந்தாள் அவள்; '' எனக்குத் தன்பக்கலிலே ப்ராவண் யத்தை விளைக்கைக்காகச் செய்தான் '' என்றிருக்கிறாளாயிற்று இவள். பருவம்நிரம்பிப் ப்ர ணயியாய் அதில் தேசிகனானபின்பு செய்தவையன்றே இவளுக்குத் தன்பக்கலிலே ப்ரா வண்யம் மிகுகைக்குச் செய்தவையாவது, பால்யத்திலே செய்தவை இவளுக்கு உடலாம் படி யெங்ஙனே? என்னில்,—இவளுக்குத் தன்பக்கல் ப்ராவண்யத்தை விளைக்கை அவ ஞைக்கு ஸத்தாப்ரயுக்தமென்கை. * ''எந்நின்றயோனியுமாய்ப்பிறந்தாய்'' என்று - அவற்றை யொழியவேயும் பின்பு பண்ணின வ்யாபாரங்களுமெல்லாம் தனக்காகப்பண்ணினான் என் றிருக்கிறாளாயிற்று. [ஊர்ந்தசகடம்] - ஊருகிற ஶகடமல்ல; அது செய்வதெல்லாம் செய் தற்றது, இவன் ஜீவநாத்ருஷ்டத்தாலே தப்பினவித்தனை. இரண்டு ஶகடத்தை இரண்

---

வானென்றென்ன என்று அத்யாஹரிப்பது. பரிஹரிக்கிறார் - எல்லாம்செய்தாலும் இத்யாதி. எல்லாம் செய்தாலும் - எத்தனை ஆற்றாமைபட்டாலும். இவள்-தோழி. பழிக்கிறஸமயத்திலே உப காரங்களைச் சொல்லுகிறதுக்கு விரோதமில்லை. ப்ரத்யக தன்னிடத்திலே அத்யந்த ப்ராவண்யத்தை ஜநிப்பிக்கிறதிலே ஹேதுக்களென்கிறார் - இதுபழியென்று இத்யாதி. இது - '' ஊர்ந்தசகடம் '' இத் யாதியைப் பற்ற அவனெங்குத்தான் - அவன் எத்தனை உபகாரங்களைப் பண்ணினான். '' பேர்ந்தும் பெயர்ந்தும் '' இத்யாதியைப்பற்ற - இதுபழியென்று மீளாதபடி இத்யாதி. நான் எவ்வளவிலே நிற் கிறேனென்றது - ஊரார்பழி புகழாமெல்லையிலே நிற்கிற என் நிலை எது என்றபடி. '' ஊரவர் '' என்றத்தைப்பற்ற - இதுபழியென்று இத்யாதி. எவ்வளவிலே நிற்கிறார்கள் என்றது - பகவத் விஷயாவகாஹநத்தையே '' தோஷம் '' என்று சொல்லுகிறவர்கள் நிற்கிற நிலை எது என்றபடி. ''நேர்ந்தவென்தோழி'' என்றத்தைப்பற்ற - அவர்கள் இத்யாதி. நீதான் எவ்வளவிலே நிற்கிறா யென் றது - ஸமாநஸுகதுக்கையான உன்னிலை எது என்றபடி.

''ஊர்ந்த'' என்றுதொடங்கி - அவன் வ்யாபாரங்களைச் சொல்லி, ''என்னை நிறைகொண் டான்'' என்றதுக்கு பாவம் - இதுக்குமுன்பெல்லாம் இத்யாதி. இவள் இவ்வ்யாபாரங்களை ''ஸ்வார் த்தம்'' என்றபோதே - தோழிஇதுக்கு ஹேது அந்யதாவாக நினைத்திருந்தமை அர்த்தாத்ஸித்தம். இது க்கு முன்பெல்லாம் - நாயகி ஸ்வார்த்தமாகச் சொன்னதுக்கு முன்னெல்லாம். அவள்-தோழி. சட ஸ்த்தஶங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் - பருவம் இத்யாதி. இவளுக்குத் தன்பக்கல் இத்யாதி வாக்யத்துக்கு - அவன் தன் ஸத்தையை நோக்கித் தந்ததே ஹேதுவாக ப்ரவணையாகிறாளாகையாலே பால்யாவஸ்த்தையில் வ்யாபாரங்களும் ப்ராவண்ய ஹேதுவாகலாமென்று கருத்து. ஸத்தாப்ரயுக்தம் - பால்ய யௌவநாத்யவஸ்த்தைகளென்கிற வாசியின்றிக்கே ஸ்வரூபப்ரயுக்தம். பலிதம் - எந்நின்ற இத்யாதி. அதாவது - அவதாரந்தொடங்கிப் பின்புண்டான வ்யாபாரங்களெல்லாம் ஆஶ்ரித வஶீகா ரார்த்தமா யிருக்குமென்றபடி. அவற்றையொழியவேயும் - ஜந்மங்களை யொழியவேயும். எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய் - ரூபப்ரகார வ்யவஸ்திதங்களான ஸகலஜந்மங்களிலு மவதீர்ணனானவனே இத்யர்த்தம்.*திருவிருத்தம் முதற்பாட்டு, ''பொய்ந்நின்ற'' இத்யாதி. ''ஊர்ந்த'' என்ற பூதநிர்த்தேஶத் துக்கு பாவம் - ஊருகிற இத்யாதி. புறம்பேயிருக்கிற ஶகடம் இவன் ஶயிக்கிறவுள்ளே யிருக்கைக்கு ஹேதுவேது, அது ஊருகைக்கு ப்ரஸக்தியேது, அசேதநமானவதுதான் ஊரக்கூடுமோவென்ன -

டருகுமிழுத்து நடுவே தொட்டிலேயிட்டு வளர்த்திப்போனள் தாயார்; பாடிகாப்பாரே களவு காணுமாபோலே, காவலாக வைத்த ஶகடமே அஸுராவேஶத்தாலே ஊர்ந்துவந்ததாயிற்று. அசேதநமான ஶகடத்திலே அஸுரர்கள் ஆவேஶித்து நலிவதாக ஊர்ந்துவந்தவித்தனையிறே. [உதைத்தபாதத்தன்] - அதுவும் செய்வதெல்லாம் செய்து, இவனும் அகப்படுவதெல்லா மகப்பட்டு நின்றான்; திருவடிகளினுடைய அவதாநத்தாலே தப்பினவித்தனை. இவனை யடி காத்துத் திரிந்த வித்தனையிறே. [உதைத்தபாதத்தன்] - முலைவரவுதாழ்த்துச் சீறி நிமிர்த்த திருவடிகளுக்கு இலக்காய்த் துகளாய்ப்போன வித்தனையாயிற்று; "ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ" (ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ). நமக்குப்புகலான திருவடிகள்தானே நம் அநிஷ்டங்களையும் போக்கித் தருமாயிற்று. ஶகடாஸுரநிரஸநம் பண்ணினவிது, பருவம் நிரம்பி கம்ஸவதம் பண்ணினத்தோடொக்கச் சொல்லலாம்படியிறே இதுக்குமுன்பே பூதனையை நிரஸித்தசெயல். ஶகடம்வந்து கிட்டினபோது சிலராலே பரிஹரிக்கலாம்; பூதனை தாய் வடிவுகொண்டுவந்து நலியப்புக்கால் பரிஹார மில்லையிறே, ஈன்றாரே நஞ்சிட்டாற்போலே யிருப்பதொன்றிறே. [பேய்முலை இத்யாதி] - பிள்ளைகள் முலையுண்ணப்புக்கால் தாய்மார் முலைக்கீழே முழுசினவாறே பால்சுரக்கும், பின்னைப் பாலையுண்டு உபகாரஸ்ம்ருதியாலே

---

ப்ர:—(உதைத்த பாதத்தன்)— ஶ்ரீவிஷ்ணுபுராணே, பஞ்சமேம்ஶே, [சு] "ஶயாநஶ்ஶகடஸ்யாத: யஶோதயா ஶிஶுஸ்தத: । சிக்ஷேபசரணாவூர்த்வம் ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ॥ க॥ தஸ்யபாதப்ரஹாரேண ஶகடம்பரிவர்த்திதம் । விஶ்வஸ்தகும்பபாண்டம் விபரீதம் பபாதவை॥ உ॥".

---

இரண்டுஶகடத்தை இத்யாதி. வளர்த்திப்போனள் - கண்வளர்த்திப்போனள். பாடிகாப்பார் - க்ராம ரக்ஷகர், தலையாரிகளென்றபடி. அஸுரர்கள் அதிலே யாவேஶித்து வருகைக்கு ஹேதுவேதென்ன - அசேதநமான இத்யாதி. "தானனுவேஷத்தோடே வரில் ஆராய்ச்சிப்படும்" என்று, தெரியாதபடி இதிலே யாவேஶித்து வந்தார்களென்று கருத்து. "பாதத்தன்" என்று - பாதத்துக்கு நிரூபகத்வம் சொன்னதுக்கு ஹாவம் - அதுவும் இத்யாதி. அடிகாத்து என்றது - சாடு; ப்ரதிபதம். "உதைத்த" என்று-ஏதத்கர்த்ருகமாயிருக்க, "திருவடிகளினுடைய அவதாநத்தாலே" என்கிறபடியென்னென்ன - முலைவரவு இத்யாதி. இத்தால்-அபுத்திபூர்வக வ்யாபாரமென்றபடி. முலைவரவுதாழ்த்துச் சீறினதுக்கு ப்ரமாணம் ஸ்தந்யார்த்தீ இத்யாதி. "ஶயாநஶ்ஶகடஸ்யாத: யஶோதயா ஶிஶுஸ்தத:। சிக்ஷேபசரணாவூர்த்வம் ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ । தஸ்யபாதப்ரஹாரேண ஶகடம் பரிவர்த்திதம்" இதி பஞ்சமேம்ஶே. திருவடிகள் அவனுடைய அநிஷ்டத்தைப் போக்கினமையைச் சொன்ன வித்தால் பலிதம் - நமக்கு இத்யாதி. நம் அநிஷ்டங்களையும் போக்கித்தரும் - நமக்கு அநிஷ்டங்களைப் போக்குகிறவனுடைய அநிஷ்டங்களைப் போக்கினவழியாலே நம் அநிஷ்டங்களையும் போக்கித் தருமென்றபடி. மேலுக்கு அவதாரிகை - ஶகடாஸுர இத்யாதி. யத்வா, பூதநாநிரஸநம் முந்தினதா யிருக்க, அத்தை ஶகடாஸுரநிரஸநாநந்தரம் சொல்லுவானென்னென்ன - ஶகடாஸுர இத்யாதி என்னுதல். அதாவது - உத்தரோத்தராதிஶபாதகங்களை நிரஸித்து ஈடுபடுத்தினபடியாலே,ஶகடாபேக்ஷயா அதிக பாதகமாயிருக்கிற பூதநா நிரஸநத்தைப் பின்பு அருளிச்செய்கிறாரென்றபடி. பூதனை "அத்யந்த பாதகை"என்று தோற்றியிருக்குமளவன்றிக்கே,அவளால் வந்தபாதகத்வம் அபரிஹார்யமென்கிறார்- ஶகடம் இத்யாதி. ஈன்றாரே - பெற்றவர்களே. ஈன்றாரே நஞ்சிட்டாற்போலே என்கிற விடத்திலே - "விஷ்யாவிநயாவாவிஸ்தாவெஷவிநயாவஹா । கிம்குர்வஃகஸ்யவாப்ரூமோஶோமராஜா யாம்ஸ்வதஃ" என்றது அநுஸந்தேயம். முழுசினவாறே - முட்டினவாறே. "சார்ந்து" - முழுசி.

முகத்தைப் பார்த்து ஸ்மிதம்பண்ணுமாயிற்று; அப்படியே அவளும் தாயாய் வந்து முலை
கொடுக்கையாலே இவனும் பிள்ளையாயே முலைக்கீழே முழுசி முலையுண்டு, உபகாரஸ்ம்ருதி
யாலே முகத்தைப்பார்த்து அதரத்தில் பழுப்புத்தோற்ற ஸ்மிதம் பண்ணியாயிற்று முலையுண்
டது. * "மழலைமென்னகையிடையிடையருளா வாயிலேமுலையிருக்கவென்முகத்தே"
என்னக்கடவதிறே. † "உயிரைவற்றவாங்கி யுண்டவாயான்" என்கிறபடியே - முலைப்
பாலோடேகூட விரங்கி உயிரையும் சுரக்கும்படியாகவாயிற்று முலையுண்டது. [என்னை
நிறைகொண்டான்] - ஒரு வ்யாபாரத்தாலே இரண்டு ஸ்த்ரீவதம் பண்ணினான். தன்னை
ஆசைப்பட்டாரில் உகவாதார்க்கே நன்றாயிற்று; அவளை நற்கோலை பாகக் கொன்றான், என்னை
உயிர்க்கொலையாகக் கொன்றான். அவனுடைய வ்யாபாரங்களிலே யொன்று குறைதல்,
நான் இழந்தவற்றிலே யொன்று குறைய இழத்தல்செய்யிலன்றோ நீ சொல்லுகிற ஹிதவசநம்
கேட்கவல்லேனாவது. ஆகில், இங்ஙனேத்த தசைகளுண்டானால் அவ்விஷயத்தை மறந்து
லோகயாத்ரையை யந்வேஷித்துப் புறம்பு ஏதேனு மொன்றைக்கொண்டு போதுபோக்கி
யிருக்கவேண்டாவோ, எல்லாம் செய்தாலும் இழக்கலாவதொன்றோ நிறையென்ன,—
[பேர்ந்தும் பெயர்ந்தும் இத்யாதி] - மறக்கையாவது ஸ்மரிக்கையிலே யொன்றாகவேணுமே
நான் ஆறியிருக்கைக்கு. ‡ "ஏது செய்தால் மறக்கேன்" என்னக்கடவதிறே; நாட்டார் அபி

---

பழுப்பு - சிவப்பு. ஸ்மிதம்பண்ணி யுண்டதுக்கு ப்ராமாணம் - மழலை இத்யாதி. இது * பெருமாள்
திருமொழி, ஏழாந்திருமொழி, ஏழாம்பாட்டு, "தூழகனே" இத்யாதி. மழலை இத்யாதிக்கு
அர்த்தம்-வாயிலே முலையிருக்கச்செய்தே, முலை சுரக்கும்படியாக என்முகத்திலே இடையிடை
யிலே மழலைச் சிரிப்பாகச் சிரியாவென்று. "சுவைத்த" என்றதுக்கு ப்ராமாணம்-உயிரைவற்ற இத்யாதி.
ப்ராணனைப் பாலோடொக்க வற்றும்படியாக புஜித்தவாயையுடையவன் இத்யர்த்தः. † திருமொழி,(க, ௩)
முற்றமூத்திலே, (௧). "நிறை" என்று - அடக்கமாய், ஸ்த்ரீகளுக்கு அஸாதாரண தர்மமாகையாலே,
அத்தைக் கொள்கை - ஸ்த்ரீத்வத்தை முடிக்கையென்று பலிப்பது; அத்தை யருளிச் செய்கிறார் - ஒரு
வ்யாபாரந்நாலே இத்யாதி. ஒருவ்யாபாரத்தாலே - பேய்முலை சுவைக்கையாலே. "இரண்டு ஸ்த்ரீவதம்
பண்ணினான்" என்கைக்கு, பூதனையை முடித்தாற்போலே தன்னை முடிக்கவில்லையே; அடக்கத்தைக்
கொண்ட ளைவன்றோவென்ன - தன்னை இத்யாதி. விவரணம் - அவளை இத்யாதி. "ஊர்ந்தபாடம்"
இத்யாதியையுங்கூட்டிக்கொண்டு, "நிறை" என்றதுக்கு - ஸாகல்யபரமாக அர்த்தாந்தரம் - அவ
னுடைய இத்யாதி. இழக்கலாவதொன்றோ - இழக்கத்தக்கதோவென்றபடி. பேர்ந்தும்பெயர்ந்தும்-
போயும்வந்தும்; அதாவது - விஸ்லேஷித்தும் ஸம்ஸ்லேஷித்தும்; அவனோடன்றியோர்சொல்லிலேன்-
அவனோடு ஸம்பந்தியாமல் ஒருவார்த்தையுடையே னல்லேன் இத்யர்த்தः. அதாவது - ஸம்ஸ்லேஷித்த
போதோடு விஸ்லேஷித்த போதோடு வாசிபற அவனையொழிய எனக்கு ஒரு வார்த்தை யில்லையென்ற
படி. இத்தால்பலிதம் - ஸம்ஸ்லேஷதசையிலும் விஸ்லேஷதசையிலும் அவனைமறக்கப்போகாதென்று.
மறக்கச் சொல்லுகிறவளைக்குறித்து, "விஸ்லேஷதசையிலே மறக்கப்போகாது" என்னும் இவ்வளவே
சொல்லவமைந்திருக்க, "பெயர்ந்தும்" என்று - ஸம்ஸ்லேஷதசையிலும் மறக்கப்போகாதென்று
சொல்ல ப்ரஸக்தியேதென்ன; த்ருஷ்டாந்தார்த்தமென்கிறார் - மறக்கையாவது இத்யாதி. அதாவது,
மறக்கையாகிறது - இதரவிஷய ஸ்மரணமாகையாலே, அநுபூதவிஷயத்தை மறக்கையும் - இதரவிஷ
யத்தை ஸ்மரிக்கையிலே யொன்றாகவேணும்; அப்படி இதரவிஷய ஸ்மரணரூபமான விஸ்மரணம்
ஸம்ஸ்லேஷதசையில் இல்லாதவோபாதி, விஸ்லேஷதசையிலுமில்லையிறே; அது உண்டாகவேணுமே
நான் ஆறியிருக்கைக்கென்று - இவ்வாக்யத்துக்குக் கருத்து. அப்படி ஸம்ஸ்லேஷ தசையிற்போலே
விஸ்லேஷதசையிலும் மறக்கப்போகாதோவென்ன; ஸம்வாதம் - ஏதுசெய்தால் இத்யாதி. எத்தைச்
செய்தால் மறக்கலாம்; கூடினால்தான் மறக்கலாமோ, மறக்கலாமாகில் கூடித்தான் பார்ப்போமென்ற
படி. ‡ திருமொழி - ஒன்பதாம்பத்து, மூன்றாந்திருமொழி, மூன்றாம்பாட்டு. "விஸ்லேஷாவஸ்தையில்

மத விஷயங்களோடு கலந்தபோது அவற்றை நினைத்து, பேரவிருந்தபோது அவற்றை மறந்திருப்பர்கள், கலந்தவிஷயத்தினுடையவும் பிரிந்தவிஷயத்தினுடையவும் தண்மையாலே; இது போகத்தில் விஸஜாதீயமான விஷயமாகையாலே, பிரிந்தபோது மறக்கலாயிருந்ததில்லை, இனிக் கூடித்தான் பார்ப்போமோ மறக்கலாமாகில் என்கிறாள். கூடினாலும் மறக்கலாமோ? என்னில்,—அது செய்யலாமன்றுயிற்று பிரிந்தபோது மறக்கலாவதென்று வ்யதிரேகோக்தி. [பேர்ந்தும்பெயர்ந்தும்] - போயும்வந்தும். [அவனோடன்றியோர்சொல்லிலேன்] - "அவனைமற, அவனைநினை" என்றே நீ சொல்லுவது, ஆகையாலே அவனையொழிய எனக்கு வேறொரு சொல்லின்றிக்கே யிருந்தது. இவள் இப்படி சொன்னவாறே, நிஷேதிக்கிற தோழி யுகந்தாள் - "நாம் இவளை அவனோடே சேர்க்கப்படும்பாடும், அப்படி சேர்ப்பித்தநாமே இவளை மறப்பிக்க யத்நித்தாலும் மறவாதபடி அவகாஹிப்பதே" என்று உகந்தாள்; இவள், நிஷேதிக்கிற உக்தியை விட்டு இவள் நெஞ்சைக் கண்டாள் [தீர்ந்தவென்தோழி] - தாய்மார்சொல்லுகிற ஹித வசநத்தை நீயும் சொல்லுகையாலே, "நீயும் அவர்களோடொக்க நிஷேதிக்கிறாய்" என்றிருந்தேன், உன்நினைவு இதுவாகப்பெறுவதே, நீ நீயாம்படியே யிருந்தாய், வரவிரு என்கிறாள்; "ராவணன்வரவிட்டஆள்" என்று ஶங்கித்திருந்தவள், "பெருமாள்பக்கலினின்றும் வந்தவன்" என்று அறிந்தபின்பு அவனைக்கொண்டாடினாற்போலே; "அர்ஹஸேசகபிஶ்ரேஷ்ட்டமயாஸமபிபாஷிதும்" (அர்ஹஸேசகபிஶ்ரேஷ்ட்டமயாஸமபிபாஷிதும்)-

---

ப்ர:—(தீர்ந்தவென்தோழி)—ஸாந்தரகாண்டம் [நக] ஸர்க்கம் ஸீதா, "அர்ஹஸேசகபிஶ்ரேஷ்ட மயாஸமபிபாஷிதும்। யத்யஸி ப்ரேஷிதஸ்தேந ராமேண விதிதாத்மநா ॥கo॥ ப்ரேஷயிஷ்யதி துர்த்தர்ஷோ ராமோநஹ்யபரீக்ஷிதம். । பராக்ரமமவிஜ்ஞாய மத்ஸகாஶம்விஶேஷத: ॥கக॥" (ஸவிஹிஸாவஸா என்கிற அவர்கள்படியாயிருந்ததீ, நீ என்கிறாள்).

---

மறக்கப்போகாது" என்னாதே, "எதுசெய்தால்மறக்கேன்" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - நாட்டாரென்று தொடங்கி, கூடித்தான்பார்ப்போமோ மறக்கலாமாகில் என்னுமளவும். கலந்தவிஷயத்தினுடையவும் பிரிந்தவிஷயத்தினுடையவும் என்றது - கலந்தவிஷயமென்றும் பிரிந்தவிஷயமென்றும் இரண்டில்லாமையாலே, கலந்து பிரிந்தவிஷயத்தினுடைய வென்றபடி. தடஸ்த்தஶங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் - கூடினாலும் இத்யாதி. "பேர்ந்தும்பெயர்ந்தும்" இத்யாதிக்கு - விலக்ஷண விஷயமாகையாலே ஸம்ஶ்லேஷஸமயத்திற்போலே விஶ்லேஷஸமயத்திலும் மறக்கப் போகாதென்று ஒரு தாத்பர்யம் கீழேயருளிச்செய்து, ஸம்ஶ்லேஷதசையோடு விஶ்லேஷதசையோடு வாசியற நீ அவனுக்கு ஸ்மாரிகையானவழியாலும் அவனைமறக்கப்போகாதென்று தாத்பர்யாந்தரம் - அவனைமற இத்யாதி. அன்றிக்கே, "ஓர் சொல்லிலேன்" என்னாதே, "அவனோடன்றி" என்று விஶேஷித்ததுக்கு பாவமாதல். அதாவது - "கலவியில் அவனை நினை, பிரிவில் அவனை மற" என்றிறே நீ சொல்லுவது; "அவனைமற" என்று சொன்னதும் அவனுக்கு ஸ்மாரகமா யிருக்குமென்றபடி. விவரணம் - நாமிவளை இத்யாதி. இவளை - நாயகியை. இவள் - ஸகியை. உக்தியைவிட்டு இவள் நெஞ்சைக் கண்டாள் - "அஹ்ருதயோக்தி" என்று தோழி நெஞ்சை யறிந்தாளென்றபடி. தீர்ந்தவென்தோழி - என்கிறாளென்று கூட்டுவது. நீ நீயாம்படியேயிருந்தாய் என்றது - எனக்கு நாயகன் விஷயத்தில் ப்ராவண்யம் உனக்கு அபிமதமாம்படி யிருக்கையிறே ஸ்வரூபம், ஆகையாலே நீநீயாம்படியே யிருந்தாயென்றபடி. வரவிரு - வந்திரு. முந்தற வெறுத்திருந்தவள், பின்பு ஆநுகூல்யத்தை யறிந்து கொண்டாடினதுக்கு த்ருஷ்டாந்தம் - ராவணன் இத்யாதி. கொண்டாடினபடியைக் காட்டுகிறார் - அர்ஹஸேச இத்யாதி. "யத்யஸிப்ரேஷிதஸ்தேநராமேணவிதிதாத்மநா" இத்யுத்தரார்த்தம், ஸாந்தய

"ஸகீபிஸ்ஸாகமாஸ்வ" (ஸகீபிஸ்ஸாகமாஸ்வ) என்கிற அவர்கள்படியாயிருந்ததீ நீயேன்கிறுள். "ஸமாத்வாதமஸதத்ராஹம்" (ஸமாத்வாதமஸதத்ராஹம்) என்கிறதும் உன்னோடே சொல்லலாயிருந்தது. அத்தோழிதானும், "பிறர்சொல்லுகிற ஹிதவசநமும் இவள்சேவியிற்படும்படியோ இவள்தான் நின்றநிலே" என்று அறிகைக்காகச் சொன்னுளித்தனையிறே. ஊரார்பழிக்கு அஞ்சியன்றோ நான் விலக்குகிறதென்ன,—[என்செய்யும் இத்யாதி] - ஆகில் உனக்கு வார்த்தைசொல்ல வடுப்பது இப்படியேகாண், "நாட்டார் பழிசொல்லுவர்கள்" என்று சொல்லாதே "என் நினைவு இருந்தபடி இது" என்று சொல்லலாவதுண்டாகிற் சொல்லிக்காணு யென்கிறுள். ஊரார் பழிகொண்டு காரியமேன், உன்னெஞ்சிற் குறையில்லாமையேயன்றோ எனக்கு வேண்டுவேது என்கிறுள். (௩)

## நான்காம் பாட்டு.

ஊரவர்கவ்வையெருவிட்டு அன்னைசொல்நீர்படுத்து
ஈரநெல்வித்தியுளைத்த நெஞ்சப்பெருஞ்செய்யுள்
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த
காரமர்மேனி நங்கண்ணன்தோழிகடியனே ?

ப்ர:—(ஸமாத்வாதமஸதத்ராஹம் என்கிறதும் உன்னோடேசொல்லலாயிருந்தது)—ஸ்ரீராமாயணே[௩௩] ஹநுமந்தம் ப்ரதி ஸீதா, "ஸமாத்வாதமஸதத்ராஹம்ராவணஸ்ய நிவேசநே । ஸுக்ரீவநாமானுஷோமாது ஸக்ஷோஷ்ஜீ ||".

காண்டே ஹநுமந்தம் ப்ரதி ஸீதா. "ஸமாத்வாதமஸதத்ராஹம்ராவணஸ்ய நிவேசநே । ஸுக்ரீவநாமானுஷோமாது ஸக்ஷோஷ்ஜீ" இதிச தத்ரைவ. "யாஸகீ ஹிஹாஷிதா - ஊஹ்வே" என்றதுக்குஹாவம் - ஸகீஹி: இத்யாதி. அதாவது-பெருமாள் "தோழிமாரோடேயிரு" என்றருளிச்செய்த தோழிமாரோபாதியாயிருந்தாய் நீயென்றபடி. அவர்கள்படியாய் - தோழிமார்படியாய். "ஸஹ, சஹி" என்கிறஉபஸர்கார்த்தம்-ஸமாத்வாதமஸ இத்யாதி. என்கிறதும் - என்கிற ரஹஸ்யமும். உன்னோடே - திருவடியோடே. "தீர்ந்தவென்தோழி" என்னும்படியான இவள் "பழிக்கு அஞ்சவேணும்" என்பானென்னென்ன - அத்தோழிதானும் இத்யாதி. "தீர்ந்தவென்தோழி" என்று இவள் இப்படி கொண்டாடினவாறே, "என்னைக்கொண்டாடுகிறது கொண்டுகார்யமென், ஊரார் பழிசொல்லுகிறுர்களே" என்ன என்றிவ்வளவும் அவதாரிகையாகக்கொண்டு, அவள் சொன்னதுக்கு உத்தரம் - என்செய்யுமூரவர்கவ்வை யென்று. இதுக்கர்த்தம் - ஊரார்பழிகொண்டு கார்யமென்? என்று. "ஊரவர்கவ்வை-என்செய்யும்" என்கையாலே பலிதம் - ஆகில் உனக்கு இத்யாதி. இப்படியேகாண் - இப்படியோகாண்இத்யர்த்த:. தீர்ந்தவென்தோழி - என்னோடு ஒரு நெஞ்சாம்படி யறுதியுடைய தோழி. கவ்வை - பழி. "ஸகீபிஸ்ஸாகமாஸ" என்கிறதுக்கு ஆகாரம் கண்டுகொள்வது. ஊர்ந்த இத்யாரப்ய, தீர்ந்தவென்தோழி - ஊரவர்கவ்வை - என்செய்யு மித்யந்வய:. (௩)

ஆ.—(ஊரவர்கவ்வை.) "இப்படி தன்னைப்பிரிந்து அத்யந்தம் அவஸந்நையா யிருக்கச்செய்தே, தன்னுடைய லோபத்தாலே தன்னை உனக்குக்காட்டித் தாராதேயிருக் கிற அவனை யாசைப்படுகிறதுதான் என்" என்று தோழிசொல்ல; ப்ரதிபந்தக ஸஹஸ்ராங்க ளுளவாயிருக்கச்செய்தே, அவற்றையே வர்த்தகமாகக்கொண்டு தன்திருவடி களிலே நிரவதிகமான அபிநிவேஶத்தை எனக்குவிளைவித்த காரமர்மேனி நங்கண்ண னையே! தோழீ லுப்தனென்று சொல்லுகிறதென்கிறாள்.

ஒ.—நாலாம் பாட்டில், இப்படி தன்னைப்பிரிந்து து:கப்படா நிற்க, வாராத நிர்க்ருணனை 'நீ என்செய்ய ஆசைப்படுகிறாய்?' என்ன, 'தன்பக்கலிலே எனக்கு அதி மாத்ர ப்ரேமத்தை விளைப்பித்த பரமோபகாரகனையே நீ நிர்க்ருணனென்று சொல்லு வது' என்று தோழியை கர்ஹிக்கிறாள்.

[ஊரவர் என்று தொடங்கி] - ஊரார்சொல்லும் பழியாகிற எருவையிட்டுத் தாயார் சொல்லும் ஹிதவசநமாகிற நீரைப்பாய்ச்சி ஸங்கமாகிற நெல்லைவித்தி முளைத்த நெஞ்சாகிற பெரிய செய்யிலே. [பேரமர்காதல் என்று மேலுக்கு] - பெரிதாய்க் கால தத்வமுள்ளதனையும் கிடையாவிட்டாலும் விடாதகாதலைக் கடல்போலே விளைவித்த வர்ஷுகமான மேகம்போலே ஶ்ரமஹரமான நிறத்தையுடையனாய் நாமிட்ட வழக் கான க்ருஷ்ணன்.

ப.—அநந்தரம், தன்பக்கலிலே அபிநிவேஶத்தை வளரும்படி க்ருஷிபண் ணின உபகாரஶீலனை, அநுபகாரகரைப்போலே குறையச்சொல்லக்கடவையோவென்று; தன்னைமீட்கைக்காக அவனை யியற்பழித்ததோழியைக் குறித்துச் சொல்லுகிறாள்.

ஊரவர் - ஊரார், கவ்வை - அலராகிற, எரு-எருவை, இட்டு-இட்டு, அன்னை- தாயாருடைய, சொல் - நிரந்தரஹிதவசநமாகிற, நீர்-நீரை, படுத்து - நிறுத்தி, ஈரம்- ஆசையாகிற, நெல்-நெல்லை, வித்தி-விரைத்து, முளைத்த - அதுமுளைத்த, நெஞ்சம்- நெஞ்சமாகிற, பெரும்-பெரிய, செய்யுள் - விளைநிலத்துக்குள்ளே, பேர்-மிகவும்பெருத்து, அமர்-ஊர்ப்பூசலையுடைத்தான, காதல்-அபிநிவேஶத்தை, கடல்புரைய - கடல்போலே ஸம்ருத்தமாக, விளைவித்த - பலிக்கும்படிபண்ணின, கார் - வர்ஷுகவலாஹக ஸ்வபா வத்தை, அமர்-உடைத்தான, மேனி-திருமேனியையுடையனாய், நம்-நமக்கு பவ்யனான, கண்ணன்-க்ருஷ்ணன், தோழி - (முன்பு அவன்குணத்தைச்சொல்லி மூட்டின) தோழீ! கடியனே-(இன்று அவன், குறைசொல்லி யியற்பழிக்கும்படி) கடியனானானே? பேரமர்- பெரியவமர்த்தியுமாம்.

இ.—நாலாம்பாட்டில், "இவளை எத்தைச்சொல்லி மீட்கலாவது" என்று பார்த்து "ஊரார்கிடக்க, உன்னோடே கலந்துவைத்து நிர்க்ருணரைப்போலே வாராத அவன்தானோ நன்றாகச் செய்தான்" என்ன; இவர்கள்பழி நமக்கு உத்தேஶ்யமாம்படி ப்ராவண்யத்தை விளைத்தவனைக் குறைசொல்லக் கடவையோ வென்கிறாள்.

[ஊரவர்கவ்வை யெருவிட்டு] - ஊரார் சொல்லுகிற பழியை ப்ரேமத்துக்கு எருவாக இட்டு. ப்ராதிகூல்ய நிவ்ருத்தி பிறந்து இவ்விஷயத்திலே கைவைத்தவன்றோ பழிசொல்லத் தொடங்கினார்கள். 'விபீஷணஸ்து தர்மாத்மா ந து ராக்ஷஸசேஷ்டித:'

என்றாளிறே பொருத்தி. நான் மறக்கப்பார்த்தாலும் அவர்கள் ஸ்மாரகராய் அவத்யகாராகாநின்றார்கள். இவர்களாலேயிறே எனக்கு தரித்திருக்கலாயிற்று. [அன்னைசொல் நீர்படுத்து] - தாயார்சொன்ன ஹிதவசனத்தையே நீராக நிறுத்தி. ஊரார் பழிசொல்லப் புக்க பின்பிறே தாய்மாரும் அறிந்தது. எருவாகிறது ஒருகால் இட்டுவிடுமித்தனையிறே, நீர் எப்போதும் வேணும்; அகத்துக்குள்ளேயிருந்து எப்போதும் சொல்லாநிற்கும் இவள், ஊரார் ஒருகால் சொல்லி விடுமித்தனை. [ஈரநெல்வித்தி] - ஸங்கமாகிற நெல்லைவித்தி. ஸங்கத்துக்கும் அவன்அடியென்றிருக்கிறாள். [முளைத்த] - வித்திலும், முளைக்கும் போது அவன் வேணுமென்றிருக்கிறாள். "ஜீவகஜயஸ்ஸ்ஸவ்ய". [நெஞ்சப்பெரும் செய்யுள்] - ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே த்ரிபாத்விபூதிஸத்ருஶமாம்படி பண்ணி. [பேரமர்காதல்]-ஊரார்பழியும் தாயார்ஹிதவசனமும் கேளாதபடியான காதல். அமர்ந்த காதல் - தர்ம்யநுபந்தியானகாதல். பெரிதான அமரை விளைத்தகாதல். ஊரார்பூசலாக் கினகாத லென்னவுமாம். ஈரம்-ஸங்கம். காதல்-காமம். "ஸ்ஹ்ருதஸ்ஸ்ஜாயதேகாம:" [கடல்புரைய விளைவித்த] - "ஸமுத்ரஇவகாம்பீர்யே" என்ற கடலொப்பாமித் மாட்டாத காதலென்கை. "கடல்புரைய" என்றார் முதல்; அநந்தரம் "கடலின்மிகப் பெரிதால்" என்றார்; பின்னை, "மண்திணிஞாலமு மேழ்கடலும் நீள்விசும்பும் கழியப்பெரிதால்" என்றார்; முடிவிலே, "அதனிற்பெரிய வென்னவா" என்றார்; இதிறே காதல் பெருகினபடி. இதிறே, *பொய்ந்நின்றஞானத்திற்குப் பின்பு இவ்வளவும்வர விளைத்துக்கொண்ட கார்யம். [காரமர்மேனி] - எருவும் நீருமுண்டானாலும் வர்ஷம் வேணுமிறே. வர்ஷுக வலாஹகம்போலே ஶ்ரமஹரமான வடிவு. [நங் கண்ணன்] - விரூபனானாலும் விடவொண்ணாத பவ்யதை. இவ்வடிவும் பவ்யதையு மாயிற்று புறம்புள்ளாரோட்டைத் தொக்கையறுத்ததும், அபரிச்சிந்நமானகாதலை விளைத்ததும். [நங்கண்ணன்] - க்ருஷ்ணனென்றால் "பெண்களுக்குக்கையாள்" என்று ப்ரஸித்தமிறே. [தோழிகடியனே] - இவ்விஷயத்திலே மூட்டுகைக்கு க்ருஷிபண்ணின நீ, இப்படி ப்ராவண்யத்தை விளைத்தவனை "நிர்க்க்ருணன்" என்னக்கடவையோ? அவன் நீர்மைசொல்லிப் பொருந்தவிடுகையும், குற்றம்சொல்லி மீட்கையும்உனக்கே பரமாவதே! தாய்மார்வார்த்தைபோலே இராநின்றதீ உன்வார்த்தையும்!

ஈடு.— நாலாம்பாட்டு. "என்செய்யுமூரவர்கவ்வை" என்றாள்; ஊரார்சொல் லும்பழியேயாய், அவன்தான் நமக்கு உடலானானே அவர்கள் சொல்லும்பழி பொறுத்திருக் கைக்கு; ஆனபின்பு அவன்கடியன்காணென்றாள்; ஏதேனுமொன்றைச் சொல்லியாகிலும்

நாலாம்பாட்டு.-ஊரவர் இத்யாதி. "என்செய்யுமூரவர்கவ்வை" என்று கீழிற்பாட்டிற் சொன்னவநந்தரம், "கடியனே" என்கிற பிரிநிலையாலே - அவன்கடியனல்லாமையைச் சொல்லு கைக்கு ப்ரஸக்தியெது; அது தோழிசொன்னது கொண்டென்னில், "தீர்ந்தவென்தோழி" என்று- இவள்ப்ராவண்யம் கண்டுகெக்குமவள் "கடியன்" என்று சொல்லுகைக்கடியெது; அவன் முகங்காட்டா திருக்க, "கடியனல்லன்" என்று சொல்லக்கூடுமோ; கடியனல்லாமையை ஸாதிக்கிறவிவள், அவன் முகங்காட்டாதிருக்க, ஊரார்பழிமுதலானவற்றாலே தன்பக்கல் ப்ராவண்யத்தைவிளைத்த இவ்வளவு மாத்ரத்தைச் சொல்லுகிறதுக்குக் கருத்தெது; என்கிற ஶங்கைகளின்மேலே யருளிச்செய்கிறார் - **என்செய்யுமூரவர்கவ்வை என்றாள் இத்யாதி.** இவ்வாக்யத்தால் - "அவன் கடியனல்லாமையைச் சொல்லுகைக்கு ப்ரஸக்தியெது" என்கிற ஶங்கை பரிஹ்ருதம். ஏதேனுமொன்றை இத்யாதி வாக்

மீட்கவேணுமே அவளுக்கு, "அவன் நிர்க்க்ருணன்காண்" என்ன; "கெடுவாய் நீசொல்லும் வார்த்தையேயிது, அவன் நமக்கு என்னகுறைசெய்தான்" என்ன, "ஊரவர்பழிசொல்லிலும் மீளாதபடியான ப்ராவண்யமுண்டான விடத்திலும் இத்தசையில்வந்து முகங்காட்டிற்றிலன் கண்டாயே" என்ன; அவன் இப்போது வந்து முகங்காட்டிற்றிலகிலும், தான் முகங்காட்டாதபோதும் தன்னையொழிய நமக்கு மற்றொன்றால் பொருந்தாதபடி பண்ணினானே! அவன் செய்தபடி பொல்லாதோவென்கிறாள்.

[ஊரவர் இத்யாதி] - இதெல்லாம் செய்தாய் நீயோ. ப்ராதிகூல்ய நிவ்ருத்தியுண்டான வன்றுதொடங்கி ஊரவர் பழிசொல்லத் தொடங்கினார்கள்காணும். "**விபீஷணஸ்து தர்மாத்மா**" (விபீஷணஸ்துதர்மாத்மா) - என்றார்களிறே தங்களைவிட்டுப்போருவதற்குமுன்னே; இவன் இக்குடியிலுள்ளார்படியல்லன், இவனுக்கு வாசியுண்டு; அந்த வாசிதன்னைச் சொல்லுகிறது 'தர்மாத்மா' வென்று. "மறக்குடி யறஞ்செய்யக்கெடும்"

**ப்ர:**—(விபீஷணஸ்து தர்மாத்மா என்றார்களிறே தங்களைவிட்டுப்போருவதற்கு முன்னே)—ஆரண்யகாண்டே, [௧௭] ஸர்க்கே ச்லோகா:, "ஸஹ ஸர்வேஷு ஸர்வேஷு ராக்ஷஸீகாமரூபிணீ । அரண்யம் விசசாரைகா ஸர்வேஷு ஸமயஸ்தா ॥ ௨௨ ॥ ராவணோ நாம மே ப்ராதா பலீயாந் ராக்ஷஸேச்வர: । வீரோ விச்ரவஸ: புத்ரோ யதி தே ச்ரோத்ரமாகத: ॥௨௩॥ ப்ரவ்ருத்தநித்ரஸ்து ஸதா கும்பகர்ணோ மஹாபல: । விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டித: ॥ ௨௪ ॥ ப்ரக்யாதவீர்யௌ சரணே ப்ராதரௌ கரதூஷணௌ ।

---

யத்தாலே - "இவள் ப்ராவண்யங்கண்டிருக்குமவள் 'கடியன்' என்கைக்கடியேது" என்கிற சங்கை பரிஹ்ருதம். அவன்நிர்க்க்ருணன்காண் என்ன என்றது - "அவன்கடியன்காண்" என்றதின்நிகமநம். நிர்க்க்ருணனென்றது - "கடியன்" என்கிறத்தோடே பர்யாயம். கெடுவாய் இத்யாதி வாக்யத்தாலே - உத்தரப்ரத்யுத்தரமுகேந அந்த நிர்க்க்ருணதையை த்ருடீகரிக்கிறார். அவன் இப்போதுவந்து இத்யாதி வாக்யத்தாலே - "அவன் முகங்காட்டாதிருக்கச்செய்தே 'கடியனல்லன்' என்று சொல்லக்கூடுமோ, ப்ராவண்யத்தைவிளைத்த இவ்வளவுமாத்ரத்தைச் சொல்லுகிறவிதுக்குக் கருத்தேது" என்கிற சங்காத்வயமும் பரிஹ்ருதம். ஏதேனுமொன்றை இத்யாதி வாக்யத்துக்கு - தோழிக்கு இவள் ப்ராவண்யம் கண்டிருக்குமது உண்டேயாகிலும், "இவளுடைய அதிமாத்ரப்ராவண்யம் ஸத்தையையுமழிக்குமோ" என்கிற அதிசங்கையாலே சொல்லக்கூடுமென்று கருத்து.

ஊரவர்கவ்வைதொடங்கி, "கடல்புரையவிளைவித்த" என்னுமளவுக்கும் பாவம்-இதெல்லாம் இத்யாதி. விரையாக ரூபித்த ஸஞ்சத்துக்கு அநந்தரபாவியான ஊரவர்பழியை, விரைப்பதற்கு முன்னே இடக்கடவ எருவாக ரூபிக்கலாமோவென்ன - ப்ராதிகூல்ய இத்யாதி. அதாவது - ஸங்கமுண்டானது கண்டு பழிசொல்லுகிறதன்று, அவன்பக்கல் அத்வேஷமுண்டானதுகொண்டே பழி சொல்லுகிறார்களென்றபடி. ப்ராதிகூல்ய நிவ்ருத்திமாத்ரத்திலே பழிசொன்னாருண்டோ வென்ன- விபீஷணஸ்து இத்யாதி. "ப்ரவ்ருத்தநித்ரஸ்து ஸதா கும்பகர்ணோ மஹாபல:। விபீஷணஸ்து தர்மாத்மா நது ராக்ஷஸசேஷ்டித:" இத்யாரண்யகாண்டே ராமம் ப்ரதி சூர்ப்பணகா. இங்கு, தர்மாத்மாவென்று - ஹிம்ஸாதி ப்ராதிகூல்யநிவ்ருத்தி மாத்ரம் சொல்லுகிறது. துஸப்தார்த்தம் - இவன்இக்குடியில் இத்யாதி. "தர்மாத்மா-ஸநாதநதர்மமான பெருமாளை ஆத்மாவாகவுடையவன்" என்றும் சொல்லுவர்கள். தர்மாத்மாவென்றால் - அதுபழியோவென்ன - மறக்குடி இத்யாதி. மறக்

என்றதிறே; "நதுராக்ஷஸசேஷ்டிதः" (நதுராக்ஷஸசேஷ்டிதः) - ஜாதிமாத்ரமே இவன்பக்கல் உபஜீவிக்கலாவது. ஊரார்சொல்லுகிற பழியை இவளுடைய ப்ரேமத்துக்கு எருவாக இட்டான். ஊரார் பழிசொல்லிற்றிலர்களாகில், இவள்தானும் கைவாங்கியிருக்குங்காணும்; இவள் "மறப்பேன்" என்னுமன்றும், மறக்கவொண்ணாதபடி ஊரார் ஸ்மாரககோடியிலே நிற்பர்களாயிற்று. [அன்னை இத்யாதி] - தாயாரும் இதுக்குமுன்பெல்லாம், "என்மகள்" என்றேயிருந்தாள், ஊரார் பழிசொல்லப்புக்க பின்பாயிற்று இவள்அறிகிறது. அன்னைசொல்லுண்டு - தாயாருடைய ஹிதவசநம், அத்தை நீராகப்பாய்ச்சி. எருவாவது- அடியிலே ஒருகாலேயிட்டுவிடுவதிறே, நீர் மாறாமல் பாய்ச்சவேணுமே; ஊரார் ஒருகால் சொல்லிவிடுமித்தனையே, தாயார் அகத்துக்குள்ளேயிருந்து எப்போது மொக்க ஹிதஞ்சொல்லாநிற்குமிறே. [ஈரநெல் இத்யாதி] - ஸங்கமாகிறநெல்லை வித்தி. இவள், ஸங்கமிருக்கும்படி வ்யுத்பத்திபண்ணிற்றும் இவ்விஷயத்திலேயாயிற்று; *"மூலையோமுழுமுற்றும் போந்தில - பெருமான் மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகமிவள்பரமே" என்று- பால்யாத்ப்ரப்ருதி வேறொன்றறியாள். புறம்பே சிலவிஷயங்களிலே ஸங்கமுண்டாய் விரக்திபிறக்க வேண்டாவாயிற்று இவளுக்கு. ஸ்வவிஷயஜ்ஞாநத்துக்கு உபகாரகமான மூலஸுக்ருதமும் அவன்தானே யாயிற்று. [முளைத்த] - எருவுமிட்டு நீரும்பாய்ச்சினாலும் முளைக்கும்போதும் அங்குரஶக்தி யுண்டாம்போதும் அவன் உண்டாக்கவேணுமே;

---

குடி - கிராதவம்ஶம். அறம்-தர்மம். ஶப்தார்த்தம் - ஊரார் இத்யாதி. பழி எருவானபடி எங்ஙனேயென்ன; பயிர் எருவிலே வேரூன்றுமாபோலே ப்ராவண்யவர்த்தகமாகையாலே யென்கிறார் - ஊரார் பழி இத்யாதி. விவரணம் - இவள்மறப்பேன் இத்யாதி. தாய் அறிந்தபின்பு ஊராரறியவேண்டியிருக்க, ஊரார்பழியைத் தாயாருடைய ஹிதவசநமாகிற நீர் பாய்ச்சுமதுக்குப் பூர்வபாவியான எருவாக ரூபிக்கலாமோவென்ன - தாயாரும் இத்யாதி. 'என்மகள் என்றேயிருந்தாள் என்றது-"மாத்ருகுணமன்றோபுத்ரியதும், ஆனபின்பு, என்னைப்போலே இவளும் மர்யாதாதிக்ரமம்பண்ணாள்" என்றேயிருந்தாளென்றபடி. ஶப்தார்த்தம் - அன்னை சொல்லுண்டு இத்யாதி. அன்னைசொல்லை எருவாகவும், ஊரார்பழியை நீராகவும் ரூபியாதொழிவானென்னென்ன - எருவாவது இத்யாதி. அதாவது - அர்த்தஸ்வபாவத்தைப்பற்ற இப்படியே ரூபிக்கவேணுமென்றபடி. ஏதத்விவரணம்-ஊரார் இத்யாதி. ஸாமாந்யேந "ஈரம்" என்றாற்போருமோ, இன்னவிஷயத்தில் ஈரமென்று விஶேஷிக்கவேண்டாவோவென்ன - இவள்ஸங்கம் இத்யாதி. வ்யுத்பத்திபண்ணிற்றும் - பரிஶீலநம் பண்ணிற்றும். "ஈரநெல் வித்திமுளைத்த" இத்யாதிகள் காரமர்மேனிக்கு விஶேஷணமாகையாலே - இவ்விஷயத்திலே வ்யுத்பத்திபண்ணினது ஸ்ப்புடம். உக்தத்துக்கு ப்ரமாணம் - மூலையோ இத்யாதி. யௌவநஸூசகமான மூலையானவை மிகவும் முழுக்கத்தோற்றினவில்லை, ஸ்வாமியானவனுடைய மலையோ திருவேங்கடமென்று ஸந்தைசொல்லுவாரைப்போலே பலகாலும் அப்யஸிக்கிறபாசுரம் இவன்தலையிலே கிடப்பதொன்றே இத்யர்த்தः. * திருவிருத்தம் - அறுபதாம்பாட்டு. இத்தால் அல்லாதாரில் வ்யாவ்ருத்தி - புறம்பே இத்யாதி. பகவத்விஷய ஸங்கத்துக்கடி ஸுக்ருதமாயிருக்க, "ஈரநெல்வித்தி" என்று - அவனை ஹேதுவாகச் சொல்லலாமோவென்ன - ஸ்வவிஷய இத்யாதி. இவர்க்கு மூலஸுக்ருதமும் அவனேயென்றபடி. கீழும் மேலுமெல்லாம் அவன்க்ருஷியை யருளிச்செய்கையாலே, "முளைத்த" என்றது - முளைப்பித்தவென்றபடி. ஸாதநமுண்டானால் ஸாத்யம் தன்னடையே ஸித்தியாதோ, இவன் முளைப்பிக்கவேணுமோவென்ன - எருவும் இத்யாதி. அங்குரஶக்தி - அங்குரிப்பிக்குமஶக்தி. "ஸாதநஸம்பத்தியுண்டானாலும் ஸாத்யஸித்தியவனதீனை" என்றதுக்கு ப்ரமாணம் _ ஶரீராரோக்யம் இத்யாதி. "ஶரீராரோக்யமைஶ்வர்யம் ஹோமாம்ஶ்ரேயாம்ஸுகாநு। ஸுதாதி யுஶ்ச யாதாம்ஸர்வம் ஸர்வதா ஹரிः" இதி பாகவதே. "ஶரீராரோக்யமை

"ஶரீராரோக்யமித்யாதி" (ஶரீராரோக்யமித்யாதி)- ஸாதநங்களையுஞ் சொல்லி, அவற்றுக்குப் பலமான ஸுகந்தன்னையும் தனித்துச்சொல்லி, இரண்டுக்கும் அவன்கடாக்ஷம் வேணுமென்றதிறே. சிறியத்தைப் பெரியது நலியுமாபோலே, ஒருவன்பண்ணின ஸுக்ருதத்தினுடைய பலத்தை வேறொருவன் பறித்துக்கொள்ளாமே, அவன்தானே புஜிக்கும்படி பண்ணும்போதும் அவன்கடாக்ஷம் வேணுமே. [நெஞ்சப்பெருஞ்செய்யுள்] - ஸம்ஶ்லேஷவிஶ்லேஷங்களாலே புடைபடுத்தி, நித்யவிபூதியோபாதி பரப்புடைத்தாம்படி பெருக்கினதாயிற்று. நெஞ்சமாகிற பெரிய செய்யிலே. ஊரார் அலராகிற எருவையிட்டு, தாயாருடைய நிரந்தரஹிதவசநமாகிற நீரைநிறுத்தி, ஆசையாகிற நெல்லை வித்திமுளைத்த நெஞ்சமாகிற பெரிய விளைநிலத்துக்குள்ளே. [பேரமர் இத்யாதி] - ஊரார் சொல்லும் பழிக்கும் தாயாருடைய ஹிதவசநத்துக்கும் மீளாதபடியான காதலாயிற்று. இங்கே "கடல்புரைய" என்றது, †"கடலில்மிகப்பெரிதால்" என்றுநின்றது, ‡ "அதனில் பெரியவென்னவா" என்று - ஈஶ்வரன்தன்னை விளாக்கொலை கொள்ளும்படியான காதலென்றது; ஆக, * பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர விளைத்துக்கொண்ட காரியம் இதுவாயிற்று. கைங்கர்யத்துக்குப் பூர்வக்ஷணவர்த்தியா யிருக்குமிறே பரமபக்தி; அது உண்டாகவேணுமிறே அவ்வருகு போம்போது,அங்கே போகக்கொண்டு அங்குள்ளாரது ஒருபடியாய் இவரது ஒருபடியா யிருக்கவொண்ணாதே. முதலிலே * மயர்வறமதிநலமருளி

---

ப்ர:—(முளைத்த)—ஸ்ரீவிஷ்ணுவாராணெ, வூயவெஂமெ, நவமெ,லக்ஷ்மீம் வூகிஜநூ:, "ஶரீராரோ஗்யமைஶ்வர்யமரிவக்ஷஜயஸுவம். தெவிக்ஷ்வதுஷ்டிதுஷ்டாநாம் வாராஷாணாம் நதாமஹ்॥௧௨௫॥ க்ஷம் ஶதாஸவமொகாநாம் தெவதெவொஹரி: விதா। க்ஷயெதவிஷ்ணுநாவாதெஜமதாகவும்வராவரு॥"

---

ஶரீராரோ஗்யமைஶ்வர்யமரிவக்ஷஜயஸுவம். தெவிக்ஷ்வதுஷ்டிதுஷ்டாநாம் வாராஷாணாம் நதாமஹ்" இதி ப்ரதமேம்ஶே நவமே லக்ஷ்மீப்ரதி இந்த்ர:. இதுக்கர்த்தம் - ஸாகஸாதநங்களையும் இத்யாதி. பிராட்டிக்கும் ஈஶ்வரனுக்குமுண்டான அபேதத்தைப்பற்ற, பிராட்டிவிஷயமான இஶ்ஶ்லோகம் இவ்விடத்துக்கு ஸம்வாதமாகக் குறையில்லை. ஶரீராரோக்யமைஶ்வர்யம் அரிவக்ஷஜய: என்று - ஸாதநங்கள், ஸுகமென்று - தத்பலத்தைச் சொல்லுகிறது. "ஸுகத்துக்கும் அவன் வேணும்" என்கிற நிபந்தநமேதென்ன - சிறியத்தை இத்யாதி. அணுவான நெஞ்சை "பெருஞ்செய்" என்னலாமோவென்ன - ஸம்ஶ்லேஷ இத்யாதி. புடைபடுத்தி-விஸ்தரிப்பித்து. ஸப்தார்த்தம் - நெஞ்சமாகிற இத்யாதி. "பேரமர்காதல்" - பெரியதாய்ப் பொருந்தின காதலென்று விவக்ஷித்து அர்த்தம் - ஊரார் இத்யாதி. "கடல்புரைய" என்றால், "கடலில்மிகப்பெரிதால்" இத்யாதியோடு விரோதியாதோவென்ன - இங்கே கடல் இத்யாதி. இத்தால் பொய்ந்நின்றஞானந்தொடங்கி முனியே நான்முகனளவும் உத்தரோத்தரம் பக்தி அபிவ்ருத்தமாக விளைகையாலே விரோதமில்லையென்றபடி. இவ்வளவும் - அதனிற்பெரியவென்னவா என்னுமளவும்; முனியேநான்முகனளவும் என்றபடி. "கடல்புரைய" என்றது உபலக்ஷணமென்று கருத்து இதுவாயிற்று - இப்பக்தியாயிற்று. அவன் க்ருபையை ஸாதநமாகப்பற்றின இவர்க்கு பக்தியை விளைக்கிறது எதுக்கென்ன - கைங்கர்யத்துக்கு இத்யாதி. ஹேத்வந்தரம் - அது உண்டாக இத்யாதி. அங்கேபோனால் அது ஆவஶ்யகமோவென்ன - அங்கே இத்யாதி. போகக்கொண்டு - போனாலென்றபடி. இப்போது விளைத்ததேதென்ன - முத

† திருவாய்மொழி-௭,௩,௬.
‡ திருவாய்மொழி-௧0, ௧0, ௧0.

னதுதன்னையே இவ்வளவாகப் பெருக்கினுனாயிற்று. பெரிதாய் அமர்ந்த காதலாயிற்று. தர்ம்யநுபந்தியான காதல். அன்றிக்கே, பெரிய அமரை விளைக்கக்கடவதான காதல். ஊர்ப் பூசலைவிளைத்த காதலிறே. † காமவேள் மன்னுஞ்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்கிற காத லென்னுதல். ‡(ஈரம் - ஸங்கம். காதல் - காமம்.) "ஈரம்" என்றதுக்கும், "காதல்" என்ற துக்கும் வாசியேன்? என்னில்,—" ஸங்காத்ஸஞ்ஜாயதே காமஃ " (ஸங்காத்ஸஞ்ஜாய தேகாமஃ) என்று - அதிலே ஓரவஸ்த்தாவிஶேஷமிறே; பூர்வாவஸ்த்தையைப்பற்ற, மேல் பிறக்கும் அவஸ்த்தாவிஶேஷந்தான் த்ரவ்யாந்தரமென்னலாயிறே யிருப்பது. [காரமர் மேனி] - அடியிலே எருவுமிட்டு நீருமபாய்ச்சினுலும், மேல்வர்ஷியாதாகில் அப்பயிர் தலை குளிர்ந்திராதிறே; வடிவாலேயாயிற்று வர்ஷித்தது. வர்ஷுகவலாஹகம்போலே ஶ்ரமஹர மான வடிவு. [நங்கண்ணன்] - வெறும்வடிவிற் பசைகண்டு அகப்படுமவளன்று, அக வாயில் தண்ணளியும் உண்டாகவேணுமாயிற்று. க்ருஷ்ணனென்றால் "பெண்களுக்கு ஶேஷபூதன்" என்று ப்ரஸித்தமிறே. வடிவையும் தந்து தன்னையும் நமக்குத்தந்த க்ருஷ் ணன். [தோழீ] - நீதான் ஆராய் இவ்வார்த்தை சொல்லுகிறாய். இவ்விஷயத்திலே இப்படிபொருந்தவிட்ட நீயே மீட்கப்பார்த்தாலும் மீளாதபடியான ப்ராவண்யமுண்டாம் படி பண்ணினுனாகில், இனி அவன் என்செய்வான். இரண்டுமுனக்கேபணியோ. "நீர்மை யுடையவன்" என்று பொருந்தவிடுகையும் உனக்கே பணியாய், "நிர்க்க்ருணன்" என்று அகற்றப்பார்க்கையும் உனக்கே பணியாயோ இருப்பது! முன்பு நீர்மையுடையவனாகச் சொல்லப்பட்டவன், இன்று பழிக்கும்படி கடியனானனே? (ச)

---

லிலே இத்யாதி. ஶப்தார்த்தம் - பெரிதாய் இத்யாதி. அமரை - யுத்தகார்யமான பூசலை. இது இரண்டாமர்த்தம். மூன்றின அர்த்தத்துக்கு, அமர்ந்தகாதல் - நர்ம்யநுபந்தியானகாதல். அப்படி இவள் காதல் ஊர்ப்பூசலை விளைக்குமோவென்ன - ஊர்ப்பூசலை இத்யாதி. ஊர்ப்பூசல்-ஊரார்சொல் லும்பழி. அமரென்று யுத்தமாய், யுத்தத்தை விளைக்கிறகாதலென்று விவக்ஷித்து, மூன்றுமர்த்தம்-காம வேள் இத்யாதி. காமத்தைவிளைக்கும் மந்மதன் தன்னுடைய பொருந்தின சிலையிடத்துப் புஷ்பபாணங் களைத் தொடுத்தெய்கிற இத்யர்த்தஃ. எய்கிற காதலென்றது-யுத்தத்தை விளைக்கிற காதலென்றபடி. இது பெரியதிருமடலிலே. ஆக, "அமர்"என்றதக்கு-பொருந்தியிருக்கையும், யுத்தகார்யமானபூசலும்,யுத்தமு மென்று அர்த்தத்ரயம். ஜிஜ்ஞாஸுப்ரஶ்நத்தை யநுவதித்துப்பரிஹரிக்கிறார்-ஈரமென்றதுக்கும்இத்யாதி. ஈரம்-ஸங்கம். காதல் - காமம். ஸங்கத்தினுடைய அவஸ்த்தை காதலானல், "ஸங்கம், காதல்" என்கிற வ்யவஹாரங்கூடுகிற வழியென்னென்ன - பூர்வாவஸ்த்தையை இத்யாதி. " த்யாயதோவிஷ யாநுபும்ஸஸ்ஸங்கஸ்தேஷூபஜாயதே ॥ ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமஃகாமாத்க்ரோதோபி ஜாயதே " இதி ஸ்ரீகீதாயாம் த்விதீயே॥சுஉ॥காரமர்-மேகத்தோடொத்த. பயிர் தலைகுளிர்ந்து- பயிர்தலைசெழித்து.மேகத்ருஷ்டாந்தமாகத் திருமேனியைச்சொன்னதுக்குஹாவம்-வடிவாலேஇத்யாதி. அகவாயில்தண்ணளியும் - மநஸ்ஸில் குளிர்த்தியும். "கண்ணன்" என்றால் தண்ணளிதோற்றுமோ வென்ன - க்ருஷ்ணனென்றால் இத்யாதி. "நம்-காரமர்மேனி, நம்-கண்ணன்" என்று கூட்டி ஹாவம்- வடிவையும் இத்யாதி. நீதானாராய் இத்யாதி வாக்யாநந்தரத்திலே இரண்டுமுனக்கேபணியோ இத் யாதி வாக்யத்தை யநுஸந்தித்து, அநந்தரம் "கடியன்" என்றதுக்கு ஹாவமாக - இவ்விஷயத்திலே இத்யாதி வாக்யம் அநுஸந்தேயம். இனி என்செய்வான் - இனி என்ன செய்யவேணும். விவரணம்- நீர்மை இத்யாதி. "கடியனே" என்ற ஏகாரம் - பிரிநிலையாய், அன்றே யென்றபடி. க்ரமேணார்வயஃ.

† பெரியதிருமடல்-சச. ‡ குண்டலிதக்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.

# ஐந்தாம் பாட்டு.

---

கடியன்கொடியன்நெடியமால் உலகங்கொண்ட
அடியன் அறிவருமேனிமாயத்தன் ஆகிலுங்
கொடியவென்னெஞ்சம் அவனென்றேகிடக்குமெல்லே
துடிகொளிடைமடத்தோழி! அன்னையென்செய்யுமே?

ஆ.—(கடியன்.) நீ சொன்னபடியே அவன் லுப்தன், நிர்க்ருணன், துஷ்ப்ரபன், வஞ்சகன், துரவகமஸ்வரூப ஸ்வபாவசேஷ்டிதன், மற்றும் ஶதஸஹஸ்ரதோஷங்களை யுடையவனாகிலும், கொடிய என்நெஞ்சம் அவனென்றேகிடக்கும், என்னே! ஒரு நெஞ்சினுடைய அபிநிவேஶமேயிது என்று பிராட்டி அருளிச்செய்ய; தோழியானவள், "இப்படி அபிநிவேஶிக்கை ஈடோ, அன்னைமார் பொடியில் செய்வதென்" என்ன; விரஹாக்நியாலே தக்தராயிருக்கிற நம்மை எத்தைச்செய்வதென்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், நான் சொன்னபடி குணவானன்றிக்கே நீ சொல்லுகிறபடியே நைர்க்ருண்யாதி அநேக தோஷங்களை யுடையனேயாகிலும் என்னுடைய நெஞ்சு அவனையல்லது அறியாது என்கிறாள்.

[கடியன் என்று தொடங்கி] - ஸ்வகார்யபரனாய் பிறர் நோவறியாதே ஒருவர்க்கும் எட்டாதானாய் வஞ்சகனாய் துர்ஜ்ஞேய ஸ்வபாவனாய் இருந்தானேயாகிலும். [கொடிய என் என்று தொடங்கி] - அதிலோகமான என் நெஞ்சு அவனையல்லது அறியாதேயிருக்கும். [எல்லே] - தோழியைக்குறித்து ஸம்போதந வசநம். [துடிகொள் இடைமடத்தோழி] - ப்ரணயகதைகள் அறிகைக்கு ஈடான வைலக்ஷண்யத்தை யுடையையாய்வைத்து என்னை இப்படி நலியலாமோ? என்று கருத்து. [அன்னை என் செய்யுமே] - 'இங்ஙனே நீ துணிந்தால் தாயார் பொடியாளோ?' என்னில்,—அவள் பொடிந்து செய்வதென்?

ப.—அநந்தரம், நீ இயல்பழித்தபடியே குணஹீநனாகிலும், என் நெஞ்சு என்னை அநங்யார்ஹமாக்கின அவனையொழிய அறியாதென்கிறாள்.

கடியன் - (ஸ்வகார்யத்தில் எதிர்த்தலைபாராமல் ஶீக்ரப்ரவ்ருத்திபண்ணும்) கடுமையையுடையனாய், கொடியன் - (அக்காரியம் தலைக்கட்டினால் புரிந்துபாராமல் போம்) கொடியவனாய், நெடிய - (போகப்புக்கால் விலக்கவரிதாம்படி) பெரிய, மால் - மேன்மையை யுடையனாய், உலகம் - லோகமடங்க, கொண்ட - தன்னதேயாம்படி எதிர்த்தலைக்கு ஒன்றும் ஒட்டாமல் அநங்யார்ஹமாக்கி, அடியன் - காற்கடைக்கொள்ளும் வஞ்சகனாய், அறிவு - ("ஹாஹு, க்ஷுதி ஈநு" என்று) விவேகிக்க, அரு - அரிதாம்படி, மேனி - அழகாலேமயக்கும், மாயத்தனாகிலும் - ஆஶ்சர்யத்தையுடையவனேயாகிலும், கொடிய - (லோகமர்யாதையன்றியே, குற்றஞ்சொல்லிமீட்கவரிதாம்படி) கொடிதான, என் - என், நெஞ்சம் - நெஞ்சமானது, அவனே - (கீழ்சொன்ன ஸ்வபாவவிஶேஷங்களை யுடைய) அவனே தஞ்சம், என்று - என்று, கிடக்கும் - கிடவாநிற்கும், எல்லே - )தான் முற்பாடனாய் மேல்விழுகையாலும், புறம்புள்ள உறவில் பற்றறுக்கையாலும்

அதிசயித வ்யாமோஹத்தாலும், அநந்யார்ஹமாம்படி தன்காற்கீழே இட்டுக்கொள்ளுகையாலும், நம்மளவிற்பண்ணின உபகாரம் பரிச்சேதிக்கவரிதான வடிவையுடைய ஆச்சர்யபூதனுகையாலும், இக்குணங்களையுடையவனென்று நினைத்திராநின்றது ;) எல்லே! இதொருநெஞ்சின் ஸ்வபாவமிருந்தபடியே! துடி - துடியினழகை, கொள் - கொள்வதான, இடை - இடையையும், மடம் - மடப்பத்தையுமுடைய, தொழி - தோழீ, (நீ இந்த ப்ரணயதாரையில் வாசியறியும் ஆபிரூப்யாத்மகுணங்களை யுடையையாயிருக்க நிஷேதித்தது தாயார் நியமநத்துக்கு அஞ்சியிறே), அன்னை - அவள், என் - எத்தை, செய்யும் - செய்வது. எல்லேயென்பது - என்னேயென்றாய், ஆச்சர்யமாதல். தோழியை, எல்லேயென்று-ஸம்போதித்ததாதல். மால்-பெருமையும் வ்யாமோஹமும்.

இ.—அஞ்சாம்பாட்டில், நான் சொல்லுகிறபடியே குணவானன்றிக்கே, நீ சொல்லுகிறபடியே குணஹீநனுனாலும் என் நெஞ்சம் அவனையல்லது அறியாது; உனக்கு அதில் ஒருபலமில்லை என்கிறாள்.

[கடியன்] - அவன் குணஹாநியை உன்னிற்காட்டில்அறிந்த நான் சொல்லக்கேளென்கிறாள். [கடியன்]-ஸ்வகார்யபரன். எதிர்த்தலைபாராதே மேல்விழுந்து சடக்கெனக் கலக்குமவன். [கொடியன்]- எதிர்த்தலையில் நோவுபாராதே பிரியவல்லவன். "நாவஜநம் ஸஹந" என்று வேறொன்று தோற்றாத தசையிலே பிரிவைப் ப்ரஸங்கித்துப் பிரியவல்லவன். [நெடியமால்] - "பிரியப்புகாநின்றான்" என்றுஅறிந்தால் அநுஸரிக்கவொண்ணாய் எட்டப்போகாதவன். மாலென்று - பெருமை. நெடுமையால் - அதின் மிகுதி. கைப்புகுந்தாலும், "இவ்வளவு" என்று பரிச்சேதிக்க அரிதாயிருக்கை. [உலகங்கொண்டவடியன்] - ஸகலலோகங்களையும் தன்கீழே இட்டுக்கொள்ளவல்ல திருவடிகளையுடையவன். கொடுத்தவனுக்கு ஓரடியும் சேஷியாதபடி கொள்ளுமவன். ஸர்வஸ்வதாநம் பண்ணுவாரைப்போலே வந்து, ஸர்வஸ்வாபஹாரம்பண்ணும் வஞ்சகன். [அறிவருமேனிமாயத்தன்.] - வடிவைக்கண்டால் "ஸர்வஸ்வதாநம்பண்ண இருக்கிறானே, ஸர்வஸ்வாபஹாரம்பண்ண இருக்கிறானே" என்று தெரியாதபடி ஆச்சர்யஸ்வபாவன். "என்னுடைய ஆத்மாத்மீயங்கள் உன்னது" என்று சொல்லிவைத்து, இத்தலையிலுள்ளவற்றை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணினவன். [ஆகிலும்] - அங்ஙனேயாகிலும். [கொடிய என்நெஞ்சம்] - உல்லோகமான நெஞ்சு. குணங்கண்டால் பற்றவும், தோஷங்கண்டால் விடவுமிறே லோகத்திற் கண்டறிவது ; தோஷங் காணக்காண மேல்விழும் நெஞ்சு. நீ சொல்லமாட்டாததுவும், ஸிசுபாலாதிகள் சொல்லுமதுவும் சொல்லமாட்டேனே? அவனை விடுகைக்குறுப்பாமாகில். [அவனென்றே கிடக்கும்]-"இத்தோஷங்களையுடையவனன்றோ என்று தத்ஸம்பந்தத்தாலே மேல்விழாநிற்கும்" என்று பிள்ளான்; "விசேஷணங்களில் தாத்பர்யமின்றிக்கே, விசேஷ்யத்திலே யூன்றாநின்றது ; என் நெஞ்சுக்கு மாயாவாத ருசியுண்டோ! அறிகிறிலேன்" என்பர் ஜீயர். இத்தால் - குணநிபந்தநமன்று அவனோட்டை ஸம்பந்தம், ஸத்தாப்ரயுக்தமென்கை. [எல்லே] - ஆச்சர்யமாதல், தோழியை ஸம்போதிக்கிறாளாதல். தன்னைக் கைகடந்தபடியைக் கண்டு முகம் மாறின தோழியை, வாராயென்று கையைப்பிடிக்கிறாள். [துடிகொள் இத்யாதி]-ப்ரணயகதைகள் அறிகைக்கிடான வடிவழகையும் குணத்தையும் உடைய நீ மடலை நிஷேதிக்கக்கடவையோ? [அன்னை என் செய்யுமே] - "நான் விலக்குகிறேனல்லேன், தாயார்

வெறுக்கும்'' என்று சொல்லுகிறேனென்ன; உன்வார்த்தை கேளாத நானோ தாயார் வார்த்தை கேட்கப்புகுகிறேன், அந்நிலை கழிந்ததில்லையோவென்கிறாள்.

ஈடு.— அஞ்சாம்பாட்டு. நீ "அவனுக்கு நீர்மையில்லை, நிர்க்க்ருணன்'' என்று யாகிலும், அச்சொலவுக்கு ஒரு ப்ரயோஜனமில்லைகாண், நீ அவனுக்கு குணஹாநி சொல்லுவது என்னை மீட்கைக்காகவிறே, அதுவும் நான் அவனைப்பற்றுகைக்கு உறுப்பாகச் சொன்னாயானவித்தனை என்கிறாள்.

[கடியன் இத்யாதி] - அவனுக்குக் குணஹாநிசொல்லும்போதும் நானேசொல்ல வேணுங்காண்; நீ மூட்டிக்கடக்கநின்றாயித்தனைபோக்கி, அவனைக்கலந்துஉட்புகநின்ற வென்றனைத்தெரியுமோ உனக்குஅவனை; ஆனபின்பு அவைதன்னையும் நான் சொல்லக்கேளென்கிறாள். [கடியன்] - கூரியன். கடுமை - கூர்மை. ஸ்வகார்யபரன். தனக்கு ஒரு கார்யமுண்டானால், எதிர்த்தலையி லளவுபாராதே மேல்விழுந்துவந்து கலக்குமவன். [கொடியன்] - தான் மேல்விழுந்துவந்து கலக்கச்செய்தே "பிரியேன்'' என்னவல்லன். ஸம்ஶ்லேஷத்தினுடைய மத்யத்திலே பிரிவைநினைத்தவன் இனிச்செய்யமாட்டாத தொன்றுண்டோ? †"பேதைநின்னைப்பிரியே னினியென்றகன்றான்'' - கலக்கச்செய்தே மற்றொன்றை நினைக்கவல்லவனுக்கு இனிச்செய்யவரிய தொன்றுண்டோ? [நெடியமால்] - மாலென்று - பெருமை. நெடுமையால் நினைக்கிறது - அதின்மிகுதியையாய், அறப்பெரியவன். இத்தால் - கைபுக்கிருக்கச்செய்தேயும் அளவிடவொண்ணாதபடி யிருக்குமவனென்கை. "பிரியநினைக்கிறான்'' என்று அறியாநிற்கச்செய்தேயும் ‡"சேண்குன்றம்சென்று

---

அஞ்சாம்பாட்டு-கடியன் இத்யாதி. கீழே "கடியனே'' என்று அநப்யுபகம்யவாதத்தாலே நைர்க்ருண்யத்தைப் பரிஹரித்து, இங்கே, "கடியன் - ஆகிலும்'' என்று அப்யுபகம்யவாதத்தாலே பரிஹரிக்கிறாளென்கிறார் - நீ அவனுக்கு இத்யாதி. ப்ரயோஜநமில்லாமையைக் காட்டுகிறார் - நீ அவனுக்குக்குண இத்யாதி. "கடியன்'' என்று தோழிசொன்ன மாத்ரத்தை யநுவதியாதே, "கொடியன்'' என்றுதொடங்கி அநேககுணஹாநி சொன்னதுக்கு பாவம்-அவனுக்கு இத்யாதி. என்னைப்பற்ற நீயறிந்தபடி யென்னென்ன - நீமூட்டி இத்யாதி. "ஸ்வகார்யபரன்'' என்றதுக்கு விவரணம் - தனக்கு இத்யாதி. எதிர்த்தலையிலளவு - எதிர்த்தலையில் மார்த்தவம். "கடியன்'' என்றதோடே "கொடியன்'' என்றதும் ஏகார்த்தமாகிலும் - பிரியவருளிச்செய்ததுகொண்டு வெறுப்பிலே தாத்பர்யபேதம் - தான்மேல்விழுந்து இத்யாதி. "பிரியேன்'' என்றது குணமாமத்தனையொழிய, குணஹாநியன்றேயென்ன - ஸம்ஶ்லேஷத்தினுடைய இத்யாதி. அதாவது - "பிரியேன்'' என்றதும் பிரிவை நினைத்தாகையாலே, அது குணஹாநியாமித்தனை யென்றபடி. அப்படி கலக்கிறபோது "பிரியேன்'' என்று சொல்லுமோவென்ன - பேதைநின்னை இத்யாதி. முக்தையான உன்னை இனிப் பிரியேனென்று வ்யதிரேகமுகத்தாலே பிரிவை ப்ரஸங்கித்து அகன்றானித்யர்த்தம். இது "எதுசெய்தால் மறக்கேன்மனமே'' என்கிற பாட்டிலே, பூர்வமேவலிகிதம். இப்பாசுரத்துக்கு பாவமாதல், "ஸம்ஶ்லேஷத்தினுடைய'' இத்யாதி வாக்யவிவரணமாதல் - கலக்கச்செய்தே இத்யாதி. மற்றொன்றை - பிரிவை. 'செய்ய வரிய தொன்றுண்டோ' என்றதுக்குக் கருத்து-முகங்காட்டாதே யிருந்து முடித்தேவிடுமென்று. தாத்பர்யம் - இத்தால் இத்யாதி. அளவிட - தன்மேன்மையைப் பரிச்சேதிக்க. அளவிடவொண்ணாமையை வ்யதிரேக த்ருஷ்டாந்தஸஹிதமாகக் காட்டுகிறார் - பிரியநினைக்கிறன் இத்யாதி உம்பர்நம்பும்சேண்குன்றம் இத்யாதிக்கு-தேவர்கள் விரும்பும் உயர்ந்த சிகரத்தைச்சென்று கிட்டி யழியாப்பொருள்படைக்கைக்கு அறுதியிட்ட சிக்கெனவென்ற

---

† திருமொழி-க, ௩, ௩.

‡ திருவிருத்தம்-அ.

பொருள்படைப்பான் கற்றதிண்ணனவு'' என்ன வொண்ணுதபடியா யிருக்கை. மேல் விழுந்துவந்து கலவாநிற்கச்செய்தே பிரியநினைத்தால், அத்தை யறியச்செய்தேயும், "நீ பிரிய நினைத்தாய்'' என்று மடிபிடித்துக் காற்கட்டி விலக்கவொண்ணுதபடியாயிருக்கை. [உல கங்கொண்டவடியன்] - பிறருடைமையைத் தனக்காக்க நினைத்தால், பின்னையும் அவர் களுக்கு ஓரடியும் சேஷியாதபடி பண்ணுமவன். அவர்களைப் பின்னை பாதாளத்திலே தள்ளுமவன். * பாதாளங்கலவிருக்கை கொடுக்குமவன். ஒன்றைக்கொள்ளப்பார்த்தால், அவர்களுக்கு ஒன்றும் சேஷியாதபடிகொள்ளுந் திருவடிகளையுடையவன். [அறிவரு மேனி] - கிட்டினல், "இத்தலைக்கு ஸர்வஸ்வத்தையும் தரநினைக்கிருனே, ஸர்வஸ்வாப ஹாரம்பண்ண நினைக்கிருனே'' என்று அறியவொண்ணுதபடியான வடிவையுடையவன். "என்னுடைய ஆத்மாத்மீயங்களடைய நீயிட்டவழக்கு'' என்பாரைப்போலே சொல்லியா யிற்று இத்தலையில் ஆத்மாத்மீயங்களை யபஹரிப்பது. தன்னையும் தன்னுடைமையையும் இவளிட்டவழக்காக்கி, பின்னையாயிற்று இவளைத்தனக்காக்கிற்று. [மாயத்தன்] - "நானும் என்னுடைமையும் நீயிட்டவழக்கு'' என்ற இவ்வுக்தியை யநுஸந்தித்து அதிலே நெஞ்சு அபஹ்ருதமாயிருக்க, அவ்வளவிலே கண்ணிலே மணலைத்தூவி யகலவல்லவன். [ஆகி லும்] - நீ சொல்லிச்சொல்லமாட்டாதவையும், ஸபாலாதிகள் சொல்லமாட்டாதவையு மெல்லாம் நான்சொல்லவல்லேனிறே அவைவிடுகைக்குறுப்பாகப்பெற்றேனுகில். [கொடிய வென்னெஞ்சம்] - உல்லோகமாய் லோகவிஸஜாதீயமான நெஞ்சு. நாட்டாருக்கு, குணம் பற்றுகைக்குப் பற்றுசாய் தோஷம் விடுகைக்கு உடலாயிறே யிருப்பது; அங்ஙனன்றிக்கே, குணஹாநிதானே பற்றுகைக்கு உடலாம்படியான என்நெஞ்சம். [அவனென்றேகிடக் கும்] - இதுக்குப் பிள்ளான் பணிக்கும்படி,—"இத்தோஷங்களவனினவன்றே'' என்று; அவன் கடியனென்ருல், அவன்கடுமை இப்போதே காணவேணும்; கொடியனென்ருல்,

---

*றிங்தோ மித்யர்த்தঃ. திருவிருத்தம் "காண்கின்றனகளும்'' இத்யாதி. "கடியன், கொடியன்'' என் கிற பதத்வயத்தில் அர்த்தத்தை யநுஸந்தித்துக்கொண்டு கீழ்வாக்யத்தை விவரிக்கிருர் - மேல் விழுந்து இத்யாதி. அதாவது - ஸ்ரீவைஷ்ணவர்களைத் தலைமகளுகச் சொல்லுகிற "காண்கின்றன களும்'' என்கிற பாட்டிலே, திருமலை யுத்தேஸ்யமாகப்போகிற ஸ்ரீவைஷ்ணவர்களை 'போ கவொண்ணுது' என்று நிஷேதித்தாற்போலே, பெருமதிப்பனுகையாலே நிஷேதிக்க வொண்ணு தென்று கருத்து. மடிபிடித்து - நிர்ப்பந்தித்து. இது குணமாயிருக்க, குணஹாநிசொல்லுகிற ப்ர கரணத்துக்கு அநுகுணமாக ஸாவம் - பிறருடைமையை இத்யாதி. பாதாளத்திலே தள்ளிறுமே வென்ன-பாதாளம் இத்யாதி. *பேயாழ்வார் திருமொழி (ச,க,எ.)கலவிருக்கை-ஒலக்கமிருக்கை. இத்தால் ப்ரக்ருதத்துக்கு அநுகுணமாக ஸாவம் - ஒன்றை இத்யாதி. தன்பக்கல் நிறந்தொடக்க மானவை யொன்றும் சேஷியாதபடி யபஹரிக்கையாலே இப்படி சொல்லுகிருளென்றபடி. அறிவரு மேனி - அறியவரிய ஸ்வபாவத்தை யுடையவன். அர்த்தஸரீரமென்ருல் அர்த்தஸ்வபாவமென்ருப் போலே, மேனியென்றதும் ஸ்வபாவம். ஸப்தார்த்தம் - கிட்டினல் இத்யாதி. இது என்கொண்டு சொல்லுகிருளென்ன - என்னுடைய இத்யாதி. விவரணம் - தன்னையும் இத்யாதி. ஆகிலும்- ஈத்ருஸதோஷ முண்டானலும். பலிதமாதல், "ஆகிலும் - அவனென்றே கிடக்கும்'' என்று கூட்டி ஸாவமாதல்-நீசொல்லி இத்யாதி. அவை-தோஷங்கள்.உல்லோகமாய்-உல்லோகமாகையாலே லோக விஸஜாதீயமான நெஞ்சென்றபடி. லோகவிஸஜாதீயத்வம் எப்படியென்ன - நாட்டார் இத்யாதி. பிள் ளான் நிர்வாஹத்துக்கு, இத்தோஷங்கள், "அவனென்றேகிடக்கும்'' - அவனினவன்றே - அவனு டையவைகளன்றே என்று ஈடுபட்டுக் கிடக்குமென்றபடி. அதாவது - குணம் உபாதேயமாகைக் கீடானஹேது, தோஷத்துக்கு முண்டிறே யென்கிறபடி. ப்ராப்தஸேஷிகதத்வேந, விஸேஷணங் களான தோஷங்களும் உத்தேஸ்யமென்று கருத்து. ஈடுபடுகையை யுபபாதிக்கிருர் - அவன்கடிய*

அவன்கொடுமை இப்போதே காணவேணும்; அவன் துஷ்ப்ராபனென்றால், அவன் துஷ்ப்ராபனானபடியை இப்போதே காணவேணும்; அவன் ஸர்வஸ்வாபஹாரியென்றால், அவன் ஸர்வஸ்வாபஹாரம் பண்ண, நான் இழந்திருக்கக்காணவேணும்; அவன் துர்ஜ்ஞேயனென்றால், அவன் துர்ஜ்ஞேயதை இப்போதே யறியவேணுமென்றும். அன்றிக்கே, [அவனென்றே கிடக்கும்] - என்நெஞ்சுக்கு மாயாவாதருசி உண்டாகிலு மறியேன். அதாவது - விஶேஷணாம்ஶத்தில் தாத்பர்யமின்றிக்கே விஶேஷ்யத்துக்கு அவ்வருகு அறிகிறதில்லை. இத்தால் - அவன் குணநிபந்தநமன்று அவனோட்டை ஸம்பந்தம்; ஸத்தாப்ரயுக்தமென்கை. [எல்லே] - என்னே! இதோராஶ்சர்யமிருக்கும்படியே! அன்றிக்கே, "உன்னை மீட்க நினைத்த நான் சொன்னபடியன்றிக்கே யொழிந்தபின்பு, இனி நீ நினைத்தபடி நினைத்திரு" என்று போகப் புக்காள் தோழி; இங்ஙனேவாராய் என்று அவளைக் கையைப்பிடித்து அழைக்கிறாளென்றுமாம். இவள் இப்படிசொன்னவாறே, "இது ஒருப்ரேமஸ்வபாவமிருந்தபடியென்?" என்று அவளுக்கு ஒருவிகாரம் பிறந்தது; அத்தைக்கண்டு [துடிகொளிடைமடத்தோழீ] - என்கிறாள். துடியோடொத்திருந்துள்ள இடையையும், ஆத்மகுணத்தையுமுடையதோழீ! உன்வடிவுக்கும் குணத்துக்கும் என்பக்கலுண்டான ஹாவபந்தத்துக்கும் ஈடாக வார்த்தை சொல்லப்பாராய். நான் அது அறியாமலும் வேண்டாமையும் சொல்லுகிறேனோ, தாய் சொல்லுமதுக்கு அஞ்சிக்காண் நான் இப்படி சொல்லுகிறதென்ன, [அன்னை யென்செய்யுமே] - உன்சொல் கேளாத நான், இனித் தாய்ச்சொல்லோ கேட்கப்புகுகிறது வாக்யார்த்தாநந்தரே நினைப்பது—*அநஸூயை பிராட்டியைப்பார்த்து "ஸ்த்ரீகளுக்கு தைவம் பர்த்

ப்ர:—(அநஸூயை பிராட்டியைப்பார்த்து 'ஸ்த்ரீகளுக்கு தைவம் பர்த்தாவே காணும்' என்ன இத்யாதி)—[Grantha-script verses; illegible]

னென்றால் இத்யாதி. என்றும் - என்றுமாம். இரண்டாம்பக்ஷத்தில், "கடியன்" இத்யாதி விஶேஷணாம்ஶத்தில் தாத்பர்யமின்றிக்கே, அவனென்றே கிடக்கும்- விஶேஷ்யத்துக்கு அவ்வருகறியாதே கிடக்குமென்றபடி. த்விதீயநிர்வாஹம் நஞ்ஜீயரது. மாயாவாதருசியாவது - மாயாவாதிகளைப் போலே விஶேஷணாம்ஶத்தை யாதரியாதே விஶேஷ்யரூப ப்ரஹ்மஸ்வரூபமாத்ரத்தை யாதரிக்கை. உண்டாகிலுமறியேன் - உண்டோவறியேன். "எல்லே" என்றது - ஆஶ்சர்யமென்னுதல், வாராயென்னுதல். இதுக்கு அர்த்தம் - இதோராஶ்சர்யம் இத்யாதி. இதோராஶ்சர்ய மிருக்கும்படியே யென்றது - தோஷமுண்டாயிருக்கவு மவனைவிடாதே யிருக்கையைப்பற்ற. இவள் இப்படி சொன்னவாறே யென்றது - "அவனென்றேகிடக்கும்" என்று சொன்னவாறே யென்னுதல், "எல்லே" என்று சொன்னவாறே யென்னுதல். ஒருவிகாரம் - ஶரீரத்திலே துவட்சி. துடி - வாத்யவிஶேஷம். "மடம்" - ஆத்மகுணம். அதாவது - பவ்யதை. தாத்பர்யாந்தரம் - உன் வடிவுக்கும் இத்யாதி. உன் வடிவுக்கும் - ப்ரணயகதைகளறியும் உன்வடிவுக்கும். அதாவது - நீயும் உன் நாயகனோடே ஸம்ஶ்லேஷித்து அத்தாலே துவண்ட இடையையுடையையாயன்றோ
பிறர் நோவுகண்டால் "ஐயோ' என்றிரங்குகைக்கீடான தயாதிகுணத்துக்கும். "தோழீ" என்றத்தைப்பற்ற - ஹாவபந்தத்துக்கும் என்றது. நான் அது அறியாமலும் வேண்டாமையு மென்றது - என்வடிவும் குணமுமறியாமலும், உன்பக்கல் ஸ்நேஹமில்லாமையு மென்றபடி. வாக்யார்த்தாநந்தரே நினைப்பதென்றது - மேலே, அநஸூயை இத்யாதி வாக்யங்களாற் சொல்லப்போகிற அர்த்தங்

தாவேகாணும்'' என்ன, அநந்தரம் பிராட்டி லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டிருந்தாள்; ''நான் இவர்பக்கல் ப்ரவணையாயிருக்கிற இருப்புக்கடி - பெருமாள்பக்கலுண்டான குணத்தாலே, என்றிறே நாட்டார் நினைத்திருப்பது ; தைவயோகத்தாலே அவர்க்கு குணமுண்டானதித் தனை போக்கி, குணஹீநருமாய் விரூபருமானாலும் நான் அவரை விடமாட்டாதே யிருக்கு மிருப்பைக் காட்டலாயிற்றிறே அவரைக் குணங்களோடு வ்யதிரேகித்து வைக்கப்பெற்ற தாகில்'' என்றருளிறே. ஒருவிஷயத்திலே ஸாவபந்தமுறைத்திருப்பார் வார்த்தையாயிற்று இது. ''வேம்பின்புழுவேம்பன்றியுண்ணாது'' - குணாதிகவிஷயத்தில் சொல்லுகிற வார்த்தை யாகில், ''கரும்பின்புழுகரும்பன்றியுண்ணாது'' என்னவேண்டாவோ? என்னில்,—''அவ னுக்கு இந்நன்மைகள் இல்லையேயாகிலும் நான் அவனை விடமாட்டேன்'' என்கிற ஸாவபந் தத்தில் உறைப்புத்தோற்றும்படி வ்யதிரேகித்துச் சொல்லுகிறதல்லது, குணாதிகவிஷயத்தில்

உ௫॥ ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம் பரமம் தைவதம் பதி: ।'' [௧௧௮] உத்தரம் ஸா த்வேவமுக்தா வைதேஹீ த்வநஸூயயா(அ)ந ஸூயயா । ப்ரதிபூஜ்ய வசோ மந்தம் ப்ரவக்துமுபசக்ரமே ॥ ௧॥ நைததாச்சர்யமார்யாயா யந்மாம் த்வமநுபாஷஸே । விதிதம் து மமாப்யேதத் யதா நார்யா: பதிர்குரு: ॥ ௨॥ யத்யப்யேஷ பவேத்பர்த்தா மமார்யே வ்ருத்தவர்ஜித: । அத்வைதமுபசர்த்தவ்யஸ்ததாப்யேஷ மயா பவேத் ॥ ௩॥ கிம் புநர்யோ குணச்லாக்ய: ஸாநுக்ரோசோ ஜிதேந்த்ரிய: । ஸ்திராநுராகோ தர்மாத்மா மாத்ருவத் பித்ருவத் ப்ரிய: ॥ ௪॥''

ரித்தனை'' என்கிற அடியில் அவதாரிகா வாக் கனை, ''நான்பற்றுகைக்கு உறுப்பாகச்சொன்னதாயானவித்தனை'' என்கிற அடியில் அவதாரிகா வாக் யத்துக்கு அநந்தரே யநுஸந்திப்பதென்றபடி. அப்போதைக்கு, ''குணஹாநியுண்டானாலும், அது விடுகைக்கு உறுப்பன்றிக்கே பற்றுகைக்குறுப்பு'' என்னுமதுக்கு ஸம்வாதம் - அநஸூயை இத்யாதி என்று வாக்யஸங்கதியாகக்கடவது. ''ஸ்த்ரீணாமார்யஸ்வபாவாநாம் பரமம் தைவதம் பதி:'' என்றத்தைப்பற்ற - ஸ்த்ரீகளுக்கு இத்யாதி. இதுக்குக்கருத்து - நீர் அவரழகிலே தோற்றுவந்தீ ரித்தனைபோக்கி, ''ப்ராதுர்பூதம்'' என்று வந்தீரன்றிறேயென்று. ''யத்யப்யேஷ பவேத்பர்த்தா'' ஸ்நேஹம் ப்ரவக்துமுபசக்ரமே'' என்றத்தைப்பற்ற - லஜ்ஜித்துக்கவிழ்தலையிட்டு என்றது. நாட்டார்நினைத்திருப்பது-நீ நினைத்திருப்பது. அநஸூயை அப்படி நினைத்திருந்தமைக்கு நியாமகம் - ''ஸுவ்ருத்தம் வ்யக்ஷநம் த்ருஷ்ட்வா லக்ஷ்மணாகரஜம் ஹரி'' என்றது ; திஷ்ட்யா - ஸௌபாக்யவசேந. ஸாக்யமாவது - ராமஸௌந்தர்யம். பிராட்டியருளிச்செய்த இத்தால் - பெருமாள்பக்கல் தமக்குண் டான ப்ராவண்யம் குணக்ருதமன்றிக்கே ஸ்வரூப ப்ரயுக்தமென்றதாயிற்று. ''அத்வைதமுபசர்த்தவ்ய'' ''கிம் புநர்யோ வஜிதேந்த்ரிய:'' என்றத்தைப்பற்ற-குணஹீநருமாய் விருபருமானாலும் என்றது. ''கிம் புநர்யோ குணச்லாக்ய:'' என்றதுக்கு ப்ரதிகோடித்வேந ஸாவம் - அவரைக்குணங்களோடு இத்யாதி. உத்தரத்திலே - குணஹீநருமாய் விருபருமானாலும் என்கையாலே - ப்ரஸ்நத்திலும், இவரழகிலே தோற்றுவந்தாயென்னுமது விவக்ஷிதமிறே. ப்ராப்தவிஷயகதமானாலும் குணஹாநி பற்றுகைக்கு உறுப் பாமோ வென்ன - ஒருவிஷயத்திலே இத்யாதி. இதுவென்றது - வக்ஷ்யமாணப்ரமாணத்தை ''குணஹாநி பற்றுகைக்குறுப்பு'' என்னுமதுக்கு ப்ரமாணாந்தரம்-வேம்பின் இத்யாதி. வேம்புக்கிட்டுப் பிறந்த புழுவானது வேம்பன்றியுண்ணாது, அப்படியே சேஷபூதனான நான் பின்னும் உன் திருவடிக ளல்லது வேறொன்றைக்கிட்டேன் இத்யர்த்த:. திருமொழி, பதினோராம்பத்து, மாற்றமுளவில் ஏழாம்பாட்டு. தடஸ்த்தஸங்கையை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் - குணாதிக இத்யாதி. இந்நன்மை களில்லையேயாகிலும் என்றது - கடன்மல்லைக்கிடந்த கரும்பான தான் வேம்பாயிருந்தானேயாகிலு மென்றபடி. வ்யதிரேகித்துச்சொல்லுகிறது - போக்யதையைமாறுடி விரஸமாகச் சொல்லுகிறது.

இதுஉண்டாயிட்டன்றிறே. என் ஸ்வரூபத்தைப்பார்த்தால் நான் உன்னை விடமாட்டேன், நீ நீயன்றிக்கேயிருந்தாலும் என்னுல் விடப்போகாது. (ரு)

---

# ஆரும்பாட்டு.

---

அன்னையென்செய்யிலென்? ஊரென்சொல்லிலென்? தோழிமீர்!
என்னையினியுமக்காசையில்லை யகப்பட்டேன்
முன்னையமரர்முதல்வன் வண்துவராபதி
மன்னன் மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே.

*ஆ.—(அன்னை.) ஸ்வரூபவதஏவ நிரஸ்த ஸமஸ்தஸாம்ஸாரிக ஸ்வபாவராய் அஸ்கலிதஜ்ஞாநரான சேஷசேஷாசந வைநதேயாத்யஸங்க்யேய பரமஸூரிகளாலே அநவரதபரிசரிதசரணயுகளனுயிருந்துவைத்து, அதிக்ஷுத்ர மநுஷ்யஸஜாதீயதயாஅவதீர்ணனுய் வண்துவராபதித்திருநகரியிலே ஆச்ரிதபரமஸுலபனுய்க்கொண்டு எழுந்தருளியிருந்த ஸ்ரீவஸுதேவர்திருமகனுடைய கல்யாணகுணங்களாகிற வலையுள்ளே யகப்பட்டேன்; இனி என்னை அன்னையென்செய்யிலென், ஊரென்சொல்லிலென்; தோழிமீர், என்னையினியுமக்காசையில்லை யென்கிறுள்.*

*ஒ.—ஆரும்பாட்டில், "நீ இப்படி துணியில் தாயார் ஜீவியாள், அத்தாலே ஊரார் பழிசொல்லுவர்" என்று தோழிமார் சொல்ல; க்ருஷ்ணனுடைய குணசேஷ்டிதாதிகளிலே நான் அகப்பட்டேன், இனி யார் என்செய்யில் என்? என்கிறுள்.*

*[அகப்பட்டேன் என்று மேலுக்கு] - 'இனி ஆசையில்லை யென்கிறதென்?' என்னில்,—முன்னையமரர்முதல்வனுய்வைத்து வண்துவராபதிக்கு மன்னனுய் ஸ்ப்ருஹணீயமான திருநிறத்தையுடைய ஸ்ரீவஸுதேவர்திருமகனுடைய வீக்ஷிதகுணசேஷ்டிதாதிகளாகிற வலையுள்ளே தப்பவொண்ணுதபடி அகப்பட்டேன்.*

---

*"அடியேன் நான்" என்றதுக்கு அர்த்தம் - என்ஸ்வரூபத்தை இத்யாதி. "உன்சேவடியன்றி நயவேன்" என்றதுக்கு வ்யதிரேகேணர்த்தம் - நீ நீயன்றிக்கே இத்யாதி. நிரதிசயபோக்யனுன நீ விரஸனுயிருந்தாலு மென்றபடி. எல்லே துடிகொளிடைமடத்தோழி, கடியன் இத்யாரப்ய, அவனென்றேகிடக்கும்; அன்னையென்செய்யும் இத்யந்வயஃ. அயோத்யாகாண்டே, "த்ருக்ஷ்ணா ஜ்ஞாதிஜநம் ஸீதே மாநஸ்யாஸ்து மாநிநி । கரோஷம் வதோஷம் ஜிஹ்வாக்ஷோதஹஸி" இத்யாரப்ய, "ஸ்வீணாமயம் ஸ்வபாவோநாம் வரமம் தெய்வதம் பதிஃ" இத்யநஸூயயோக்தாவீதாதாப்ரத்யாஹ, "ஸாகேவலம் ஸ்ரீதாவெவெஷ்ஹீ கநஸூயாநஸூயயா। ப்ருதிபூஜ்யவசோத்தம் ப்ருவக்ஷூமஸ்வக்ருதெம। நைதஷாயுயமயாயாயநாஜகவமநஹாஷவெ। விதிதஜூமமாவெப்ரத ந்ருயாநாயமஃ பதிமுமமஃ। யத்ரெப்ஷவஹ்தமு மாயெமுவ்ருத்தவஜிமுதஃ। கவெஅயமமவவதவ்ருஷயாவெப்ரஷயாஹவெகு। கிம்வாநயெமாமணஜ்ராவ்ய ஸாநகெராஸொஜிதெநியஃ।" இத்யாதி.* (ரு)

ப.—அநந்தரம், அவனுடைய ஆகர்ஷகமான ஸ்வபாவங்களிலே யகப்பட்டேன், என்னை நீங்கள் ஆசையறவமையுமென்று, திரளவந்த தோழிமாரைக்குறித்துச் சொல்லுகிறாள்.

தோழிமீர் - (ஸமாநஸுகதுக்கைகளான) தோழிமீர்! முன்னை - ப்ரதமஜரான, அமரர்-நித்யஸூரிகளுக்கு, முதல்வன் - ப்ரதாநனான மேன்மையையுடையனாய், வண்-நிரதிசயஸம்பத்தையுடைய, துவராபதி - ஸ்ரீமத்த்வாரகைக்கு, மன்னன் - நிர்வாஹகனான நீர்மையையுடையனாய், (இரண்டுமில்லாதவன்றும் விடவொண்ணாத), மணி-நீலரத்நம்போலே தர்சநீயமான, வண்ணன் - ஆபிரூப்யத்தை யுடையனாய், வாசுதேவன் - (அழகில்லையாகிலும் விடவொண்ணாத அநுரூபமான ஆபிஜாத்யத்தையுடைய) வஸுதேவதநயனானவனுடைய, வலையுளே - (இப்படி நாலுபாடும்கண்ணியான ஆகர்ஷகசேஷ்டிதரூபமான) வலைக்குள்ளே தப்பவொண்ணாதபடி, அகப்பட்டேன் - அகப்பட்டேன்; இனி-ஆனபின்பு, என்னை - (மீட்கவரிய) என்னைப்பற்ற, உமக்கு - (மீட்கநினைத்திருக்கிற) உங்களுக்கு, ஆசை - விதேயையாக ஆசைப்படவேண்டுவது, இல்லை-இல்லை; (ஆசையாலே), அன்னை-தாயார், என்-எது, செய்யில்-செய்யில், என்-என்? ஊர்-ஊரவர், என்-எது, சொல்லில்-சொல்லில், என் - என்? அவள்செய்யும் ப்ரியத்தோடு அப்ரியத்தோடுவாசியில்லை, அவர்கள் சொல்லும் குணத்தோடு தோஷத்தோடு வாசியில்லையென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், தோழிமாரெல்லாரும் வந்து, "நீ இப்படி செய்யில் தாயார் முடியும், அத்தாலே ஊரார் பழிசொல்லுவர்கள்கிடாய்" என்ன,—க்ருஷ்ணனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே யகப்பட்டேன், எல்லார்க்கும் என்பக்கல் நசையறவமையுமென்கிறாள்.

[அன்னையென்செய்யிலென்] - இதில் "தாயார்பொறாள்" என்ன, பொறாதே செய்வதென்? என்றது; இதில்-"'அவள்என்செய்யும்" என்றுவ்யவஸிதையானாள்' என்றால், "அவள் ஜீவியாள் கிடாய்" என்ன; ஜீவிக்கிலென், முடியிலென்? என்கிறாள். இப்படி தாயை உபேக்ஷித்தால் ஊரார் பழிசொல்லுவர்கள் என்ன; ஊரார் பழிசொல்லிலென்? குணகதநம் பண்ணிலென்? "ஶ்வாநவ: கிம் கரிஷ்யதி". ஜீவிப்பார்க்கன்றோ இவர்களைக்கொண்டு கார்யமுள்ளது. "எல்லாரையும் உபேக்ஷித்தாலும் எங்கள் வார்த்தையைக் கேட்கவேண்டாவோ" என்ன- [அகப்பட்டேன்] - என்னைக் கடல்கொண்டது. எனக்காயிருக்கிற உங்களுக்குமாகாத படி யகப்பட்டேன். என்கார்யம் நான்நினைத்தபடியாகிலன்றோ உங்கள் வார்த்தை கேட்டு மீளுவது. [என்னை] - "தாயார் பிழைப்பாள், ஊரார் பழிசொல்லுவர்கள்கிடாய்" என்ன, மீளாதவென்னை. [இனி உமக்காசையில்லை] - இவ்விஷயத்திலே மூட்டுகையன்றிக்கே, மீட்கப்பார்க்கில் பின்பு உங்களுக்கு என்பக்கல் நசையில்லை. [முன்னை இத்யாதி]- பெரியார் சிறியார் என்றின்றிக்கே எல்லாரையும் ஆழப்பண்ணும் கடலிலே யகப்பட்டேன். "யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:" என்கிற நித்யஸூரிகளுக்கும் ஸத்தாஹேதுவாயிருக்கிற மேன்மையை யுடையவன். [வண்துவராபதி மன்னன்]- அம்மேன்மையைத் தப்பிலும் தப்பவொண்ணாத நீர்மையை யுடையவன். "பதினாறாமாயிரவர் தேவிமார் பணிசெய்ய" என்று பெண்களுக்கு ஓலக்கங்கொடுத்திருக்கிற இருப்பு, நித்யஸூரிகள் ஓலக்கத்துக்கும் அவ்வருகே யொன்றிறே. அது மேன்மைக்கு

முடிசூடியிருக்கிற இருப்பு, இது நீர்மைக்கு முடிசூடியிருக்கிற இருப்பு. நாயகன்பக்கல் பதினாறாயிரம்பேர் மடலெடுக்கை தவிரிலன்றோ நான் மடலெடுக்கை தவிருவது. [மணி வண்ணன்] - நீர்மையைத்தப்பினாலும் தப்பவொண்ணாத வடிவழகு. ப்ராணயிநி துவக்குண்பது வடிவழகிலேயிறே. [வாசுதேவன்] - அதிற்காட்டிலும் ஆபிஜாத்யத்திலேயாயிற்று அகப்பட்டது. "ஸ்நுஷாஹஸ்ராயஸ்யாஹம் ஸத்ருஶோ ஸந்த்யதாவிநः". [வலையுளே - அகப்பட்டேன்] - நோக்கிலும் முறுவலிலும் அகப்பட்டேன். முகப்பில் அநுகூலம்போலே தோற்றி பந்துக்களோட்டைத் தொற்றையறுத்து, வ்யதிரேகத்தில் முடியவொண்ணாதிருக்கை.

ஈடு.—ஆறும்பாட்டு. கீழ், "அன்னை என்செய்யும்" என்று - "நீ செய்கிற இத்தைப் பொறாள்கிடாய்" என்ன,—அவள் பொறாதே செய்வதென்? என்னுமளவிலே நின்றது. இதில் - நீ இப்படி வ்யவஸிதையானபடியறிந்தால், அவள் ஜீவியாள்கிடாய் என்ன; அவள் ஜீவிக்கிலென்? முடியிலென்? என்கிறாள்.

[அன்னை யென்செய்யிலென்] - அவள்ஜீவிக்கிலென், முடியிலென் என்கிறாள். "குரவः கிம் கரிஷ்யந்தி" (குரவஃகிங்கரிஷ்யந்தி) - முடியாதே யிருப்பார்க்கன்றோ இது பரிஹரிக்க வேண்டுவது. கையற்றார்க்கு இதுகொண்டு காரியமென். [ஊரென் சொல்லிலென்] - "தாயாருடைய நாசம் ஒருதலையாகவும் மீளாதபடியாய், இவள் நாய

---

ப்ர:—(அன்னையென்செய்யிலென்) — ஹரிவம்ஶே (கஅ) ககரோணஸஹயோராம் ப்ரதி ஶஹுதः க்ருஷ்ணஸ்ய விரஹஸஹநாநோவிகாः, "ஷராணஸஹிதः ப்ரயாதஸ்து ஶ்ரநிவர்ணः । ரமணாரஹஸ்யோவிநஶ்யதாஸ்ய வாரணே॥உக॥ குராணாஹதோவக்தும் கிம் ப்ரவீயநः க்ஷமே । குரவः கிம்கரிஷ்யந்தி ஓஷாநாம் விரஹாதிநா॥உஉ॥"

---

ஆறும்பாட்டு. - அன்னை இத்யாதி. கீழே "அன்னையென்செய்யுமே" என்றதுக்கும், "அன்னையென்செய்யிலென்" என்றதுக்கும் பேதந்தோற்ற அருளிச்செய்கிறார் - கீழ் அன்னையென் செய்யும் இத்யாதி. இது - பதாவதாரிகை. தோழிமாரெல்லாரும் வந்து "நீ இப்படிசெய்யில் தாயார்முடியும், அத்தாலே ஊரார்பழிசொல்லுவர்கள்கிடாய்" என்ன; க்ருஷ்ணனுடைய ஸ்மிதவீக்ஷணாதிகளிலே யகப்பட்டேன், எல்லார்க்கும் என்பக்கல் நசையறவமையுமென்கிறாளென்று பாட்டுக்கு அவதாரிகை கண்டுகொள்வது. என்னுமளவிலேநின்றது - கீழ் அன்னையென்செய்யும் என்று என்று அந்வயிப்பது.

இப்படிசொன்னபேருண்டோ? என்ன - குரவः இத்யாதி. "தாயார் ஜீவிக்கிலென் முடியிலென்" என்கிறதுக்கு "குரவः கிம்கரிஷ்யந்தி" என்கிறவிது ப்ரமாணமானபடியென்? என்ன; குரவःகிம்கரிஷ்யந்தி என்று - குருக்களை அதிலங்கித்தபோதே, அவர்கள் தங்கள் ப்ரவ்ருத்தியடியாக நலித்தாலும் அத்தையும் அநாதரித்திருப்பர்களென்று இப்படி தாத்பர்யம் விவக்ஷிதமாகையாலே, இவ்விடத்துக்கு ப்ரமாணமாகக் குறையில்லை. "கிம்கரிஷ்யந்தி" என்றதுக்கு ஸாவம் - முடியாதே இத்யாதி. "ஓஷாநாம்" என்ற பூதார்த்தத்துக்கு ஸாவம் - கையற்றார்க்கு இத்யாதி. "வாசுதேவன்வலையுள் - அகப்பட்டேன், அன்னையென்செய்யிலென்" என்றதுவும், "விர

கனுடைய ஸௌந்தர்யாதிகளிலே ப்ரவணையானாள்'' என்று ஊரார் பழிசொல்லுவர்கள் கிடாய் என்ன ; [ஊரேன்சொல்லிலேன்] - அவர்கள் பழிசொல்லிலேன், குணகீர்த்தநம் பண்ணிலேன். * ''கோல்லை'' என்னுதல், '' குணம்மிக்கனள் '' என்னுதல், இத்தனை யன்றோ அவர்கள் பழிசொல்லுவது. [தோழிமீர் இத்யாதி]- ''தாய் என்செய்யிலேன், ஊர் என்சொல்லிலேன்'' என்று நீங்கள் மேல்விழுந்து என்னை இவ்விஷயத்திலே ப்ரவணை யாக்குகை யன்றிக்கே, ''தாய் பிழையாள், ஊரார் பழிசொல்லுவர்கள்'' என்று இத்தைப் பழியாகச் சொல்லுமளவானபின்புங்களது. [என்னை] - † '' தாய்வாயிற்சொற்கேளாள் தன்னாயத்தோடணையாள்'' என்கிறபடியே, ''தாயார் பிழையாள், ஊரார் பழிசொல்லு வர்கள்'' என்றால் மீளாதபடி இவ்விஷயத்திலே ப்ரவணையாயிருக்கிற என்னை. [இனி]- உங்கள்சொல்லும் கேளாதபடி கைகழிந்தபின். [உமக்கு] - ''இதுபழி'' என்று மீட்கப் பார்க்கிறவளவிலே நிற்கிற உங்களுக்கு. [ஆசையில்லை] - இனி என்பக்கல் உங்களுக்கு நசையறவமையும். [தோழிமீர்] - இதுக்குமுன்பெல்லாம், ''தோழீ'' என்று - உயிர்த் தோழி யொருத்தியையும் பார்த்து வார்த்தைசொல்லிப்போந்தாள்; இப்போது இவளுடைய வ்யவஸாயாதிசயத்தைக் கண்டவாறே, ''ஆளோருவார்த்தை சொல்லியாகிலும் மீட்க வேணும்'' என்று ஆயவெள்ளமெல்லாம் திரண்டது; அத்தாலே - தோழிமீர் ! என்கிறாள். [அகப்பட்டேன்] - ''இப்போது 'ஹிதம்' என்கிற புத்தியாலே ஒருவார்த்தை சொன்னோமே யாகிலும், ஊரார்க்கும் தாய்மார்க்கும் இவ்வருகே எங்களுக்கு ஒரு வாசிநினைத்திருக்க வேண்டாவோ உனக்கு'' என்ன,—அதப்படியே, அதில்குறையில்லை ; என்னைக் கடல் கோண்டது காணுங்கோள், நான் என்செய்வேனென்கிறாள். [முன்னை இத்யாதி] - ''சிறி யார், பெரியார்'' என்று வாசியின்றிக்கே எல்லாரையுமொக்க ஆழப்பண்ணும் கடலிலே

ஹாஸ்நா - ஊஹாநாம்ஸ: - ப்ரவ: கிம்கரிஷ்யதி'' என்றதும் - கீர்த்தம். பழிசொல்லி லென் என்னாதே, ''என்சொல்லிலென்'' என்றதுக்கு பாவம் - அவர்கள் இத்யாதி. இத்தால் - பழி யோபாதி அவர்கள் குணகீர்த்தநமும் அநாதரணீயமென்றபடி. ''என்சொல்லிலென்'' என்றால் - பழிசொல்லிலேன் குணகீர்த்தநம்பண்ணிலேன் என்று காட்டுமோ ? என்ன; ப்ரமாணகதநமுகேந உக்தார்த்த விவரணம் - கோல்லை இத்யாதி. வரம்பழிந்தாளென்று கர்ஹிப்பர்களோ, அதிவிலக்ஷண விஷயத்தையறிந்து மேல்விழும்படியான குணாதிசயத்தை யுடையவளென்று கொண்டாடுவர்களோ இத்யர்த்த:. சோல்லுமளவானபின்புங்களது - சொல்லுமளவு - உங்களது - ஆனபின்பு என்று அந்வயிப்பது. அநந்தரம், உங்களுக்கு என்பக்கல் ஆசையில்லையென்று கூட்டிக்கொள்வது. தாய் வாயில் இத்யாதி-தாயான என்வார்த்தைகேளாள், தன்தோழிமாருடன்சேரா ளித்யர்த்த:. † திருமொழி அஞ்சாம்பத்து, அஞ்சாந்திருமொழி, நாலாம்பாட்டு. கீழெல்லாம் ''தோழீ'' என்று - ஒருத்தியைச் சொல்லி, இங்கே - பலரைச்சொல்லுவானென் ? என்ன - இதுக்குமுன்பு இத்யாதி. ஆயவெள்ளம் - தோழிஸமூஹம். ஒருவாசிநினைத்திருக்கவேண்டாவோ என்றதுக்கு - மீட்கையிலே நசைபண்ண வேண்டா என்னலாமோ, அல்லாதாரில் ப்ரியவிஷயமான எங்கள்வார்த்தை கேட்கவேண்டாவோ என்று கருத்து. ''வண்துவராபதிமன்னன்'' என்றத்தையுங்கூட்டி பாவம் - சிறியார் இத்யாதி. ''முன்னையமரர்'' என்றத்தைப்பற்ற - பெரியார் என்றது. ஆழப்பண்ணும் - அமிழ்த்தும். இத்தால் - யோக்யதையுடையாரோடு யோக்யதையில்லாதாரோடு வாசியற ஈடுபடுத்தும் விஷயமென்கை. அப்படி எல்லாரையும் ஆழப்பண்ணுமோ ? என்ன - ரூபௌதார்ய இத்யாதி. ''ஸத்ருணாம் ராமசந்த்ர ஸம்பூர்ணம் । ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்

* திருவாய்மொழி-௬, எ,

யன்றே நான் அகப்பட்டது. "ரூபௌதார்யகுணை:" (ரூபௌதார்யகுணை:) - ரூபமென்கிறது - வடிவழகை. ஔதார்யமென்கிறது - அத்தை எல்லார்க்கும் அநுபவிக்கலாம்படி ஸர்வஸ்வதாநம்பண்ணிக்கொண்டிருக்கை. குணமாவது - கொள்ளுகிறவனிலும் தாம் தாழநின்றுகொடுக்கும் ஶீலம். தன்மேன்மைதோற்றவிருந்து கொடுக்குமன்று ஆள்பற்றுதிறே; அதுக்காகத் தாழநின்றுயிற்றுத் தன்னைக்கொடுப்பது. "பும்ஸாம்" (பும்ஸாம்) - அந்த ஸௌந்தர்யமும் ஔதார்யமும் ஶீலமும் வயிரவுருக்காயிற்று, அவையெல்லாம்பட்டுமேத்தை வன்னெஞ்சரையும் படுத்தவற்றுயிற்று. அன்றியே, "ப்ரக்ருதி புருஷர்கள்" என்றுற்போலேயாய், அசித்விலக்ஷணரெல்லாரையும் ஈடுபடுத்தவற்றென்னவுமாம். "த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) - கண்ணுக்கு மநஸ்ஸஹகாரம் வேண்டாதே, கண்ணைப் பின்செல்லுமத்தனை நெஞ்சு. தாய்வேறு, கன்றுவேறுக்கும் விஷயமிறே. [முன்னையமரர்] - "யத்ரருஷய:ப்ரதமஜாயே புராணா:" (யத்ரருஷய:ப்ரதமஜாயே புராணா:) என்னும்படி இருக்கிறவர்கள். [முதல்வன்] - நித்யஸூரிகளுக்கும் ஸத்தாஹேதுவாயிருக்கிற மேன்மையுடையவன். நித்யாநுபவம் பண்ணுவார்க்கும் நித்யஸ்ப்ருஹாவிஷயமான விஷயத்திலேயன்றே நான் அகப்பட்டது. [வண்துவராபதிமன்னன்] - முதன்மை தோற்ற ஓலக்கங்கொடுத்துக்கொண்டிருக்கிற, துறையல்லாதத்திலேயோ

---

ப்ர:—(முன்னையமரரித்யாதி)— ஸ்ரீராமாயணே அயோத்யாகாண்டே (௩) "ஸநாதநம் ராமம் தீர்கபாஹும் பருஹோமுகம்॥உஅ॥ ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம் । ஸர்வாபிதவா: ஸமாநந்த்யம் ஹாஸ்யமநுபஸ்யோஜா: ॥௨௯॥ ததஸ்தவ ஸம்ஸாராணாம் வஸ்யாநோஜா நராயிவ:॥உகூ½॥"

(முன்னையமரர்)—யஜுஷி - சுஷ்வம் [கூஉ] யத்ரருஷய: ப்ரதமஜாயே புராணா: ।

ஹாரிணம்" இத்யயோத்யாகாண்டே. ஆள்பற்றுதிறே - ஆள்கிடையாதிறே. "பும்ஸாம்" என்று - புமான்களைச் சொல்லுதல், அசித்வ்யாவ்ருத்தரான சேதநரெல்லாரையுஞ் சொல்லுதல். த்விதீயார்த்தம் இவ்விடத்துக்கு அபேக்ஷிதம். "பும்ஸாம்" என்று விஶேஷிப்பானென், ஸ்த்ரீகளை ஈடுபடுத்தாதோ? என்ன - அந்தஸௌந்தர்யமும் இத்யாதி. வயிரவுருக்கு - வயிரத்தைப்போலே கடிநமான ஹ்ருதயத்தையு முருக்கும். வயிரம் - வஜ்ரம். பலிதம் - அபலைகள் இத்யாதி. வன்னெஞ்சர் - கடிநஹ்ருதயர். ஸர்வேந்த்ரியங்களும் ப்ரதாநமான மநஸ்ஸைப் பின்செல்லுகையாலே, சித்தத்ருஷ்ட்யபஹாரிணமென்னவேண்டாவோ? என்ன - கண்ணுக்கு இத்யாதி. அதுக்கு ஹேதுவேதென்ன - தாய்வேறு இத்யாதி. கரணங்களுக்கு ப்ரதாநமாகையாலே, மநஸ்ஸை - தாயென்றும், மற்றைக்கரணங்கள் மநஸ்ஸைப் பின்செல்லுகையாலே, அவற்றை - கன்றென்றும் சொல்லுகிறதென்றபடி. இவ்வர்த்தத்துக்கு - "சுஷஹாரிணம்" என்கிறதிலே நோக்கு. ஸ்ரீபரதாழ்வானையும் கைகேயியையும் வேறுக்கிற்றிறே. புராணா: என்றது - புராவி நவா: என்றுய், பகவதநுபவத்தில் க்ஷணந்தோறும் புதியர் என்றபடி. முதல்வனென்றது - நித்யஸூரிகளுக்கு அபூர்வபோக்யனுயிருந்து அவர்கள்ஸத்தையை நிர்வஹிக்குமென்னுதல்; முதல்வனென்றது - ஆதியென்றுய், ஆதீயத உதப்ராதி: என்கிற வ்யுத்பத்தியாலே, நித்யஸ்ப்ருஹாவிஷயமானவன் என்னுதல்.

ராயமரர்முதல்வனுயிருந்துவைத்து, வண்துவராபதியிலே மன்னனு யிருக்கிறுனென்று விவபூர்த்தம் - முதன்மைதோற்ற இத்யாதி. பெண்களுக்கு உடம்புகொடுக்கையாலே வந்த வேறு

நான் இழிந்தது; பெண்களுக்கு உடம்புகொடுத்திருக்கிற நம் துறையிலேயன்றே நான் இழிந்தது. † "பதினாறாமாயிரவர் தேவிமார்பணிசெய்யத் துவரையென்னுமதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர் மன்னுகோயில்" என்னக்கடவதிறே. [மன்னன்] - மேன்மை தோற்ற ஓலக்கங்கொடுத்துக்கொண்டிருக்கிறவிடமே நன்றாய்விட்டது நீர்மைதோற்றவிருக்கிற விடத்தில் விழுகிற பிரம்புகளிற்காட்டில். [மணிவண்ணன்] - அவ்விரண்டு மில்லையே யாகிலும் விடவொண்ணுததாயிற்று வடிவழகு. ப்ரணயித்வ துவக்குண்பது வடிவழகிலே யிறே. [வாசுதேவன்] - வடிவழகில்லையே யாகிலும் விடவொண்ணுதாயிற்றுக் குடிப்பிறப்பு. "ஸ்நுஷா தஶரதஸ்யாஹம்" (ஸ்நுஷாதஶரதஸ்யாஹம்) - பிராட்டி, தனக்குப் பேற்றுக்குடலாக நினைத்திருப்பது "சக்ரவர்த்தி மருமகள்" என்னுமித்தையேகாணும். "ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉" (ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉) - எங்கள்மாமனாருண்டாகில் எனக்கு இவ்விருப்பு இருக்கவேணுமோ? ஶத்ருக்களும் ஜீவிக்க, ஜீவித்தவரோ அவர். [முன்னையமரர் இத்யாதி] - அவனுடைய ஸௌசீல்யத்தோடு நீர்மையோடு, ஊராருடையபழியோடு புகழோடு வாசியற்றாற்போலே, அவன்மேன்மையோடு ஸௌலப்யத்தோடு வாசியற இரண்டும் ஆகர்ஷகமாயிருக்கிறதாயிற்று இவர்க்கு. [வலையுள் - அகப்பட்டேன்] - அப்போதுவானதிலன்றிக்கே, அவன் என்னைக்குறித்து நோக்கினநோக்கிலும்

---

(வாசுதேவன்)—ஸுந்தரகாண்டே [௩௩] 'காகஸ்ய' இதி ஹநுமதா ப்ருஷ்டா ஸீதா ஸ்வவ்ருத்தாந்தம் ப்ரதிப்ராஹ, "துஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந꞉ । ஸீதா நாம்நாஹம் நாம்நா ச பார்யா ராமஸ்ய தீமத꞉ ॥" ஸ்நுஷா தஶரதஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉ ॥ கரு ॥ [illegible] ॥ கசு ॥"

---

பாட்டையுடையனாயிருக்குமதுக்கு ப்ரமாணம் - பதினாறாமாயிரவர் இத்யாதி. துவரை - த்வாரகை. "மன்னன்" என்றது - பெண்களுக்கு முகங்கொடுத்துக்கொண்டிருக்கையால்வந்த வேறுபாட்டையுடையவன் என்றபடி. வண்துவராபதிமன்னன் - நிரவதிக ஸம்பத்தையுடைய த்வாரகைக்குப் பதியாய் ராஜாவான மேன்மையுடையவனென்னுதல்; வண்துவரையாகிற பதிக்கு - திவ்யதேசத்துக்கு மன்னனாயிருக்குமவனென்னுதல். வண்துவராபதியிலே யிருக்கச்செய்தே மன்னனாயிருக்கிறானென்ற வெறுப்பிலேயாக தாத்பர்யாந்தரம் - மேன்மை தோற்ற இத்யாதி. அவ்விரண்டும் - "முன்னையமரர்முதல்வன். வண்துவராபதிமன்னன்" என்றுசொன்ன முதன்மையும், நீர்மையும். அவைகளிலும் வடிவழகு ஆகர்ஷகமோ? என்ன - ப்ரணயித்வ இத்யாதி. குடிப்பிறப்பு விடவொண்ணாதிருக்குமோ? என்ன - ஸ்நுஷா இத்யாதி. "துஹிதா ஜநகஸ்யாஹம் வைதேஹஸ்ய மஹாத்மந꞉ । ஸ்நுஷா தஶரதஸ்யாஹம் ஶத்ருஸைந்யப்ரதாபிந꞉" இதி ஸுந்தரகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. ஸம்பந்தாந்தரங்களைச் சொல்லாதே, சக்ரவர்த்தி ஸம்பந்தத்தை யிட்டுச்சொல்லுகிறதுக்கு பாவம் - பிராட்டி இத்யாதி. தாத்பர்யம் - எங்கள்மாமனார் இத்யாதி. தாத்பர்யாந்தரத்துக்காக மீளவும் ப்ரதீகோபாதாநம் - முன்னை இத்யாதி. நீர்மையன்றோ ஈடுபடுத்துகைக்குடல், மேன்மை சொல்லுவானென்? என்ன - அவனுடைய இத்யாதி. "கடியன்கொடியன்" இத்யாதியையும், "நங்கண்ணன்தோழிகடியனே" இத்யாதியையும்பற்ற - ஸௌசீல்யத்தோடு நீர்மையோடு என்றது. "ஊரென்சொல்லிலன்" என்றத்தைப்பற்ற - ஊராருடைய இத்யாதி. அப்போதுவானதிலன்றிக்கே - ஸௌந்தர்ய ஸௌலப்யாதிகளிலன்றிக்கே. அப்பொதுவானதென்றது - "வண்

---

† பெரியாழ்வார்திருமொழி-ச, க, ச.

ஸ்மிதத்திலுமன்றோ நான் அகப்பட்டது. ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர் வலையாக அபிநயித்துப்பாடாநிற்க, திருக்கண்களைக் காட்டியருளினார் எம்பெருமானார்; †"கமலக் கண்ணனென்னும் நெடுங்கயிறு" என்னக்கடவதிறே. அநுகூலம்போலேயிருந்து தப்பாதபடி யகப்படுத்திக்கொள்ளும் நோக்கிலே அகப்பட்டேன். (சு)

## ஏழாம் பாட்டு.

வலையுளகப்படுத்து என்னைநன்னெஞ்சங்கூவிக்கொண்டு
அலைகடற்பள்ளியம்மானை ஆழிப்பிரான்தன்னைக்
கலைகொளகலல்குல்தோழி! நங்கண்களாற்கண்டு
தலையில்வணங்கவுமாங்கொலோ? தையலார்முன்பே.

ஆ.—(வலையுள்.) இப்படி தன் நிலைமையை மெய்யாகச் சொன்னபின்பு, "இனி இவளால் ஒருசெயலில்லை" என்றுகொண்டு இவளுடைய அத்யவஸாயத்தைத் தோழியிசைந்தபின்பு, அவளைக்குறித்து ; தன்னுடைய ஸ்வரூபரூபகுண சேஷ்டிதங்களாகிற வலையுள்ளே என்னை யகப்படுத்தி, என்னுடைய நெஞ்சைக் கூவிக்கொண்டு, ஆரும் செல்லவொண்ணாததொரு திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஆழிப்பிரான் தன்னை, கலைகொளகலல்குல்தோழி, அவனுக்குக் குணஹாநி சொல்லுகிற இந்தத்தையலார்கண்ணெதிரே நங்கண்களால்கண்டு தலையில்வணங்கவுமாங்கொலோ வென்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், அவனைக் குணஹாநிசொல்லுகிறவர் வாயடங்கும்படி நாம் அவனை வரக்கண்டு, வந்த உபகாரத்துக்காகத் தலையாலே வணங்கவல்லோமே என்கிறாள்.

[வலையுள் என்று தொடங்கி தன்னுடைய குணசேஷ்டிதா என்னை அகப்படுத்திக்கொண்டு தானென்றால் என்னிற்காட்டிலும் ப்ராவண்யத்தையுடைய நெஞ்சைத் தன்பக்கலிலே அழைத்துக்கொள்ளுவதும்செய்து அவலைகளுக்குச் செல்லவொண்ணாதபடி அலையெறிகிற கடலுள்ளே கண்வளர்வதும்செய்து கண்டார்க்கு அதிஸ்ப்ருஹணீயமான திருவாழியையுடைய ஸர்வேஸ்வரனை. [கலைகொளகலல்குல்

---

துவராபதிமன்னன்" என்றத்தைப்பற்ற. "வலை" என்றால் ஸ்மித வீக்ஷணாதிகளைச் சொல்லுமோ? என்ன - ஆழ்வார் இத்யாதி. திருக்கண்களைக்காட்டியருளினது - ஸ்மிதத்துக்கும் உபலக்ஷணம். எம்பெருமானார் அப்படிகாட்டுகைக்கு நியாமகமேதென்ன - கமலக்கண்ணனென்னும் இத்யாதி. கார்த் தண்கமலக்கண்ணனென்னும் நெடுங்கயிறுபடுத்து - மேகத்திலே ஸ்ரமஹரமான தாமரைபூத்தாற் போலேயிருக்கிற திருக்கண்களாகிற நெடியபாஸத்திலே யகப்படுத்தி இத்யர்த்தஃ. †நாய்ச்சியார் திருமொழி, பதினொராந்திருமொழி, நாலாம்பாட்டு. "என்னும்" என்றதுக்கு பாவம் - அநுகூலம்போலே யிருந்து என்றது. "நெடுங்கயிறு" என்றதுக்கு பாவம் - தப்பாதபடி இத்யாதி. தோழிமீர். முன்னை யமரர் என்று தொடங்கி, வலையுள் - அகப்பட்டேன், அன்னையென்செய்யிலென், ஊரென்சொல்லிலென், என்னையினியுமக்காசையில்லை இத்யந்வயஃ. பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து, ஒன்பதாந்திருமொழி, நாலாம்பாட்டு, "பதினாறுமாயிரவர்" இத்யாதி. பதினாறாயிரம் தேவிமார்கள் பரிசர்யைபண்ண, த்வாரகையென்று ப்ரஸித்தமாயிருந்துள்ள திருப்படைவீட்டிலே அவர்களுக்கு நாயகராய்க்கொண்டு தம்முடைய வ்யாவ்ருத்திதோற்றவிருந்த மணவாளர் என்று அர்த்தம். (சு)

தோழி] - அவனுடைய தர்ஶநம் தனக்கு அநுகூலமாகையாலே கொண்டாடி ஸம்போதிக்கிறாள்.

ப.—அநந்தரம், ஆஶ்ரயணார்த்தமான க்ஷீரார்ணவஶயநத்தையுடைய ஸர்வேஶ்வரனை நாட்டார்முன்பே நாம்கண்டு ஆதரிக்கக்கூடுமோவென்று அந்தரங்கையான தோழியைக்குறித்து உரைக்கிறாள்.

என்னை - என்னை, வலையுள் - தன்னுடைய ஆகர்ஷககுணசேஷ்டிதங்களிலே, அகப்படுத்து - அகப்படுத்தி, நல்-(என்னிலும் தன்பக்கல்) நலத்தையுடைய, நெஞ்சம்-நெஞ்சை, கூவிக்கொண்டு - அடியறுத்தழைத்துக்கொண்டவனாய், (அந்தநெஞ்சு தன் பக்கலிலே ப்ரவணமாகைக்கடியாக திரைக்குள்ளே கிடப்பாரைப்போலே), அலை-அலைகிற, கடல்-கடலுக்குள்ளே, பள்ளி-ஏகாந்தமாகப் பள்ளிகொள்வானாய், எம்மானை-அக்கிடையழகைக்காட்டி என்னை அடிமைகொண்டஸ்வாமியாய், ஆழி-(அவ்வழகைக் காத்தூட்டும்) திருவாழியையுடைய, பிரான்தன்னை - மஹோபகாரகனானவனை, கலை-பரிவட்டவுடையழகை, கொள் - உடைத்தாய், அகல்-விஸ்தீர்ணமான, அல்குல்-அல்குலையுடைய, தோழி-தோழீ! (இருவருமொக்க), நம்-நம், கண்களால் - கண்களாலே, கண்டு-கண்டு, தையலார் - பழிசொல்லுகிறதையலார், முன்பே-முன்பே, (அவன்வந்த உபகாரந்தோன்ற), தலையில் - தலையாலே, வணங்கவும்-வணங்கவும், ஆங்கொலோ-ஆகக்கூடுமோ?

இ.—ஏழாம்பாட்டில், அவன்குணஹாநிசொன்னார் வாயடங்கும்படி நாம் அவனைக் கண்டு, வந்த உபகாரத்துக்காக தலையாலே வணங்கவல்லோமோவென்று உயிர்த்தோழிக்குச் சொல்லுகிறாள்.

[என்னை - வலையுளகப்படுத்து] - தன்னுடைய குணசேஷ்டிதங்களாலே என்னை யகப்படுத்திக்கொண்டு, "இயற்றுவாயெம்மொடு நீ கூடி" என்னும்படி, தானென்றால் என்னிலும் அதிப்ரவணமான நெஞ்சை யழைத்துக்கொண்டு, எட்டவொண்ணாதபடி க்ஷோபிதமான கடலிலே கண்வளர்ந்தருளினான். [ஆழிப்பிரான் தன்னை] - எட்டாதபடி இருந்தாலும் கையும்திருவாழியுமான சேர்த்தியழகு விடவொண்ணாதாயிருக்கிறபடி. ஏதேனுமொருபடி கிட்டியாகிலும் பெறவேண்டும்படியிருக்கை. [கலைகொள் இத்யாதி] - அவளுடைய தர்ஶநம் தனக்கு அநுகூலமாயிருக்கையாலே கொண்டாடி ஸம்போதிக்கிறாள். கலையையுடைத்தாய் அகன்ற நிதம்பத்தை யுடையளாகை. உன்வடிவழகுபோலே யிருக்கவேண்டாவோ வார்த்தை யென்கை. அன்றிக்கே, மடியிலே கிடந்து வார்த்தை சொல்லுகிறாளாகவுமாம். பிரிந்தபோது ஹிதம்சொன்னாளேயாகிலும், காணும்போது நாலுகண்ணாலும் காணவேணும்; தனிகாணமாட்டாளாயிற்று. வந்தவுபகாரத்துக்கு நாமும் அவன்பக்கலிலே வணங்கக்கூடவற்றோ. "அவன் தானேவரவிருக்கையன்றிக்கே தான் மேல்விழுந்தாள், அவன் வந்திலன்" என்கிற ஸ்த்ரீகள்முன்னே. அவன் குணஹாநியைச் சொல்லி க்ஷேபவசனங்களைப் பண்ணுகிறார்முன்னே என்றுமாம். ப்ரணயிநி வணங்கப்பெறுமோ? என்னில்,—ஶிஷ்டாசாரமுண்டு, "கௌஸல்யாஶ்வை ஸுமித்ராம் ச ப்ரணம்ய பரமேஶ்வரீம். ஸீதா வவந்தே..." "தோழிமீர், என்னையினியுமக்காசையில்லை" என்று-தாய்மாரோபாதி கழித்தாள் கீழே; "தீர்ந்தவென்தோழி" என்ற உயிர்த்தோழியாகையாலே இவளை ஸம்போதிக்கிறாள்.

ஈடு.—ஏழாம் பாட்டு. அவன் மஹாணஹாநிசோல்லுகிற ஸ்த்ரீகள் வாயடங்கும்படி நாம் அவனைவரக்கண்டு, அந்த உபகாரத்துக்காகத் தலையாலே வணங்கவல்லோமே யென்கிறாள்.

[வலையுளகப்படுத்தேன்னை இத்யாதி] - என்னை, தப்பாதபடி ஸ்மிதவீக்ஷணாதிகளிலே யகப்படுத்தி. [நன்னெஞ்சம் இத்யாதி] - தானேன்றால், † "நேஞ்சேயியற்றுவாயெம்மோடுநீகூடி" என்று - நான் பிற்பாடையாம்படி என்னிற்காட்டிலும் முற்படும்படியான நெஞ்சைத் தன்பக்கலிலே நோடித்துக்கோண்டு. [அலைகடல் பள்ளியம்மானை]- "ஸ்ரீமத்த்வாரகையிலேயிருக்கில், 'பேண்களுக்கு ஓலக்கங்கோடுத்தவிடம்' என்று ப்ராப்தி சோல்லிக்கோண்டுவேரும்" என்று எட்டவோண்ணாதநிலத்திலே பின்னையும் போய்ப் புக்கான். [அலைகடல்] - பேண்பிறந்தார்க்குக் கணிசிக்கவோண்ணாதபடி க்ஷோபித மான கடலாயிற்று. [அலைகடற்பள்ளியம்மானை] - மஹாதநம் கைப்பட்டவாறே கடலோடத்தோடங்கினான். [ஆழிப்பிரான் தன்னை] - "புகவோண்ணாத நிலத்திலே புக்கான்" என்று விடவோண்ணாதபடியாயிற்றுக் கையுந்திருவாழியுமான அழகு. கடலோடியாகிலும் பேறவேண்டியாயிற்றிருப்பது. [கலை இத்யாதி] - நல்லபரிவட்டத்தை யுடைத்தான அகன்ற நிதம்பப்ரதேசத்தையுடைய தோழீ! உன்வடிவுபோலே அநுகூலமாயிருக்கவேண்டாவோ உன்வார்த்தையும்? அன்றிக்கே, அவள்மடியிலேகிடந்து சோல்லுகிறாளாகவுமாம். "தோழிமீரேன்னையினியுமக்காசையில்லை" என்றாள் கீழே; "தோழி நங்கண்களாற்கண்டு" என்று ஸம்போதியாநின்றாள் இங்கே, இதுதன்னில் சேர்த்தியேன்? என்னில்,—தாய்மார் சோல்லுகிற வார்த்தையை இவர்களும் சோல்லுகையாலே, "என்னையினியுமக்காசையில்லை" என்றாள்; இதுவேயாயிருப்பாரைவிட்டு, "தீர்ந்தவேன்தோழி"

---

ஏழாம்பாட்டு.—வலையுள் இத்யாதி. "நங்கண்களால்கண்டு தலையில் வணங்கவும்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - அவன்தூணஹாநி இத்யாதி.

"வலையுளகப்படுத்து" என்றது - அநுவாதம். "உள்" என்றதுக்கு அர்த்தம் - தப்பாதபடி யென்று. நெஞ்சுக்கு நன்மையாவதேதென்ன - தானேன்றல் - இத்யாதி. தான்-ஈஶ்வரன். நேஞ்சேயியற்றுவாயெம்மோடுநீகூடி - என்னிலும் முற்படும்படியான என்றத்தோடே யந்வயம். முற்பட்டுப் பதறுகிற நெஞ்சே! முற்பட்டுநிற்கிற நீ பிற்பட்ட என்னோடேகூடிக் கார்யத்தை நடத்து இத்யர்த்தஃ. இது †பெரிய திருவந்தாதி, முதற்பாட்டு, "முயற்றி" இத்யாதி. நோடித்துக்கோண்டு-இங்கிதமாக அழைத்துக்கொண்டு. கீழே "வண்துவராபதிமன்னன்" என்றது, இங்கே "அலைகடல்பள்ளியம்மானை" என்றது, இதுக்குக் கருத்து - ஸ்ரீமத் இத்யாதி. பின்னையும்போய்ப்புக்கானென்றது-"நாமவயபூஜ ஊ ஹ த்ருஜ" என்றத்தை நினைத்து. விஶேஷணத்துக்கு ஹாவம்-பேண்பிறந்தார்க்கு இத்யாதி. கணிசிக்க - அபேக்ஷிக்க. "நன்னெஞ்சம் கூவிக்கொண்டு" என்றத்தையுங்கூட்டி ஹாவாந்தரம்-மஹாதநம் இத்யாதி. கடலோடத்தோடங்கினான் - ஓடவர்த்தகத்துக்குத் தொடங்கினானென்று த்வநி; கடலோடியாகிலும் - ஸமுத்ரத்திலே விழுந்தாகிலும்; ஸாஹஸம்பண்ணியாகிலும். கலையின்றிக்கேயிராதே; "கலைகொள்" என்று விஶேஷிக்கிறதென்? என்ன-நல்ல இத்யாதி. அதாவது - உடையழகாலே ஹோக்யமாயிருக்கிற ஆகாரத்தைப்பற்ற விஶேஷிக்கிறதென்றபடி. அல்குலை வர்ணித்ததுக்கு ஹாவம் - உன்வடிவு இத்யாதி. தாத்பர்யாந்தரம் - அன்றிக்கே அவள் மடியிலே இத்யாதி. அதாவது - அதின்மார்தவத்தாலுண்டான ஸௌக்யத்தைக்கண்டு, "இதொரு நிதம்பமிருந்தபடியே" என்று கொண்டாடுகிறாளென்றபடி. கீழே - உறவறச்சொல்லிவைத்து, பின்னையும் "தோழி" என்று ஸம்போதிக்கக்கூடுமோவென்று ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - தோழிமீர் இத்யாதி. இதுவேயாயிருப்பாரை - தாய்மார்நினைவேநினைவாயிருப்பாரை. ஹிதம்சொல்லுமது

என்னலாம்படி நெஞ்சுகலந்து ஒருநீராயிருக்கிற உயிர்த்தோழியைப் பார்த்து வார்த்தை சொல்லுகிறள். [நங்கண்களாற்கண்டு] - இப்போது இவள் ஹிதஞ்சொன்னளேயாகிலும், காணும்போது நாலுகண்ணலேகாணும் காண்பது; அல்லது இரண்டுகண்ணலுங் காணவேண்டாள். [தலையில் இத்யாதி] - "பிரிந்தவிடத்தில், தன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குச்போரும்படி அவன்தானே வரப்பார்த்திருந்திலள், அவனும் வரவுதாழ்த்தான்" என்று பழிசொல்லுகிற இவர்கள்முன்பே அவனும்வந்து, அந்த உபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமாகத் தலையாலே வணங்கப்பெறவல்லோமோ? இத்திருவாய்மொழியை ஆழ்வான் ராஜேந்த்ர சோழனில் ஸந்த்யாஸதஸ்ஸிலே நிர்வஹியாநிற்க, ஆமருவிநிரைமேய்த்தான்நம்பியார் என்று நூறுவயஸ்ஸுபோந்திருப்பாரொருவர் நடுங்க நடுங்க எழுந்திருந்துநின்று, "ஆழ்வான், தலைமகள் தலையாலேவணங்கப்பெறுமோ" என்ன. "பெறும், ஶிஷ்டாசாரமுண்டுகாணும்: ஸ்ரீஜநகராஜன்திருமகள் அநுஷ்டித்தாள்காணும் "ஶிரஸாவாஹிவாதய" (ஶிரஸா சாபிவாதய) என்று." "கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்திதாஜநகாதய:" (கர்மணைவஹிஸம்ஸித்தி மாஸ்த்திதாஜநகாதய:) என்று ஜநககுலத்திலுள்ளார்க்குமேலில்லையிறே ஆசாரத்துக்கு. "கௌஸல்யேத்யாதி" (கௌஸல்யேத்யாதி) - நாட்டில் ஸ்த்ரீகள் 'இங்கிருக்கும் நாளைக்கு நமக்குரக்ஷகனாய்ப் பின்பு நரகத்தில் புகாதபடி பரிஹரிக்கைக்கும் ஒருபிள்ளைவேணும்' என்று நோன்புநோற்றுப் பெறுவர்கள்; அங்ஙனன்றிக்கே, எங்கள் மாமியார் தன்நெஞ்சிலுண்டான வகலத்தாலே, 'லோகத்துக்காக ரக்ஷகனாகவல்லானொரு பிள்ளையைப் பெறவேணும்' என்று நோன்புநோற்றுப் பெற்றார்; அவர்நினைவு தப்பவோ, அந்தலோகத்துக்குள் அந்தர்ப்பூதையல்லேனோ நான். இனி, 'நாட்டில் ஸ்த்ரீகள் சார்த்

---

ப்ர:—(தலையில்வணங்கவுமாங்கொலோ)— ஸுந்தரகாண்டே ஷட்த்ரிம்ஶஸர்கே ஹநுமந்தம் ப்ரதி ஸீதாவசநம், "வத்ஸ ஹிரண்யகர்ப்பஸ்ய ஸுக்ருதைர் ஹுதாஶநஸ்ய ச | ஸுக்ருதைர்வாஸவஸ்ய அஸ்ய ராஜ்யம் ஸமுபகல்பதாம் ॥ ருசு ॥ இத்யுக்த்வா விரராம ஸீதா ... ॥ ருரு ॥ கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவேயம் மநஸ்விநீ | தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய ॥ ருசு ॥".

இவளுக்குண்டே; ஆனபின்பு, "நங்கண்களாற்கண்டு" என்று - அவளுக்கும் காட்சியிலே அந்வயமுண்டாகச் சொல்லக்கூடுமோ? என்ன - இப்போது இத்யாதி. அதாவது - ஹிதஞ்சொல்லுகை அப்ராதயமாய், நாயகவிஷயத்தில் இவளுக்குண்டான ப்ராவண்யம் அபிமதமாகையாலே காட்சியில் இவளுக்கும் அந்வயமுண்டாகச் சொல்லலாமென்றபடி. நாலுகண்ணலேயென்கையாலே - புருஷகார புரஸ்ஸரமாக ஸேவிக்கவேண்டுமென்று ஸ்வாபதேஶம். இத்தால் - * வேதம்வல்லார்களை முன்னிட்டொழிய அவனைக்காணாரென்றபடி. இரண்டுகண்ணாலும் - கடைக்கண்ணாலும் இடைக்கண்ணாலும். "தலையில்" என்று - பஞ்சமி. "தையலார் முன்பே - தலையில் வணங்கவுமாங்கொலோ" என்று அந்வயித்து பாவம் - பிரிந்தவிடத்தில் இத்யாதி. தலைமகள் வணங்கலாமோ? என்கிற ஶங்கையிலே ஆழ்வான் பரிஹாரத்தையருளிச்செய்கிறார் - இத்திருவாய்மொழியை இத்யாதி. தலைமகள்-உத்தம நாயகி. பிராட்டி செய்தது ஶிஷ்டாசாரமோ? என்ன - கர்மணைவஹி இத்யாதி. இந்த ஶ்லோகத்துக்கு அடியேதொடங்கி அர்த்தம் அருளிச்செய்கிறார்— கௌஸல்யா இத்யாதி. "கௌஸல்யா லோகபர்த்தாரம் ஸுஷுவேயம் மநஸ்விநீ| தம் மமார்த்தே ஸுகம் ப்ருச்ச ஶிரஸா சாபிவாதய" இதி ஸுந்தரகாண்டே அஷ்டத்ரிம்ஶே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. "மநஸ்விநீ-கௌஸல்யா லோகபர்த்தாரம்-யம் ஸுஷுவே" என்று அந்வயித்து பாவம் - நாட்டில் இத்யாதி.

தாக்கள் ஸமர்த்தரானபோது ஆதரித்தும், அஸமர்த்தரானபோது உபேக்ஷித்தும் போரக்கடவர்களாயிருப்ப தோன்றுண்டு; நீர் எல்லாவவஸ்த்தையிலும் அவரை யாதரித்துப்போருங்கிடீர்' என்று அவர் என்னைக்குறித்துச் சொல்லிவிட்டார்; நானும் அப்படியே செய்துபோரா நிற்க, கிண்ணகத்தில் குமிழிக்கீழே சாவிபோமாபோலே, தாம் என்னுடைய ரக்ஷணத்தில் நெகிழநின்றது அவர்நினைவு ஸங்குசிதமாகவோ என்று சொன்னேனென்று சொல்லு. "தம்மமார்த்தே ஸம்ப்ருச்ச" (தம்மமார்த்தேஸம்ப்ருச்ச) - எங்களுடைய ரக்ஷணத்துக்கு நாங்கள் ப்ரார்த்தித்துப் பெறவேண்டுவதொன்றில்லையிறே அதுவும் அவர்நினைவில் உண்டாகையாலே, இனி, க்ரமப்ராப்திபற்றுமையாலுள்ளதிறே இப்போதுபடுகிறது. தாமுளராக எங்களுடையரக்ஷணம் தப்பாதிறே; ஆனபின்பு, தம்முடைய உண்மையை ஆஶாஸிக்கையிறே இனி எங்களுக்குள்ளது, அங்குத்தைக்கு ஒரு குறைகளில்லையே யென்று கேட்டேனென்று சொல்லு. "ஶிரஸாவாபிவாதய" (ஶிரஸாசாபிவாதய)- நாட்டாரளவன்றிக்கே, தாம் விஶேஷித்து எங்களைக் கைப்பிடிக்கையாலுண்டான வாசி நாங்கள் பெறுதபின்பு, நாட்டாரோபாதியாகிலும் பெறக் குறையில்லையிறே. இனி நாட்டார் பெறுவது பெறப்பார்த்தால், அவர்கள் தம்பக்கல் செய்யுமத்தையும் செய்யவேணுமிறே; ஆனபின்பு, நாங்கள் எங்கள் தலையாலே தந்திருவடிகளிலே வணங்கினேமென்று நீ எனக்காக அவர் திருவடிகளிலேவிழு என்றும் அருளிச்செய்தாள்." "இதுதான் ப்ரணய

---

"மநஸ்விநீ" என்கிற விப்ரத்யயம் - ஶமாவிலேயாக விவக்ஷித்து, நெஞ்சிலுண்டானவகலத்தாலே என்றது. "மநஸ்விநீ" என்றது - ஹேதுகர்ப்பவிஶேஷணம். மநஸ்விநியாகையாலே யென்றபடி. **அவர்நினைவுதப்பவோ** - அவர்நினைவுதப்பலாமோ? "உம்மையொழிந்த லோகத்துக்கெல்லாம் பர்த்தாவாகவேணும்" என்று கோன்புநோற்றுப்பெற்றுரென்றுலோ? என்ன; என்பக்கல் அவர் ஸ்நேஹித்திருக்கையாலே அது கூடாதென்கிறுள் - இனிநாட்டில் இத்யாதி. நீர் அப்படிசெய்யாமையாலே யானுலோ? என்ன - **நானும்அப்படியே** இத்யாதி. **கிண்ணகம்** - ப்ரவாஹம். **குமிழி** - ப்ரவாஹோத்பத்திஸ்த்தாநம். என்னை அங்கே அழைத்துக்கொள்ள வேணுமென்று சொல்லாதே, "ஸம்ப்ருச்ச" என்பானென்? என்ன - **எங்களுடைய** இத்யாதி. "ஶிரஸாவாபிவாதய" என்று - தன்பேற்றுக்குடலாக அஞ்சலிபண்ணுமது சேருமோ? என்ன - இனிக்ரமப்ராப்தி இத்யாதி. **ஆஶாஸிக்கை** - மங்களாஶாஸநம்பண்ணுகை. **எங்களுக்குள்ளது** என்றவநந்தரம், ஆகையாலே யென்றுகூட்டுவது. "ஶிரஸாவ" என்ற சஶப்தத்துக்கு ஶாவம் - **நாட்டாரளவன்றிக்கே** - இத்யாதி இத்தைவிவரிக்கிறது - **இனிநாட்டார்பெறுவது** இத்யாதி. இத்தால் - பத்நீத்வப்ரயுக்தமான ப்ரணயரோஷத்தாலன்றிக்கே, "ஸுஹம் ஶிஷ்யாவஶாஸீவ" என்கிறபடியே ஶேஷத்வாநுகுணமாகச் சொன்னுளென்றபடி. "மநஸ்விநீ கௌஸல்யாயோகக்ஷேமம் ஸம்ப்ருச்ச, தம்மமார்த்தே ஶிரஸாபிவாதய, ஸம்ப்ருச்ச" என்று அந்வயம் விவக்ஷிதம்; இதுக்கு நியாமகம் - "ஸம்ப்ருச்ச" என்றதுக்கு அருளிச்செய்த அர்த்தத்துக்கு அநந்தரம், "ஶிரஸாவாபிவாதய" என்றதுக்கு இப்படி அர்த்தமருளிச்செய்கை அநுபபந்நமாகையால். "தலைமகள் தலையாலே வணங்கும்" என்றதுக்கு - "தீவினைதீரவரம் வேண்டிநான்தொழுதென்று விளம்புவாய்" என்று கம்பனும், "தெய்வம்தொழாள் கொழுநன்தொழுதெழுவாள்" என்று வள்ளுவனும் சொன்னத்தை ஸம்வாதமாகக் கண்டுகொள்வது. "ஶிரஸாவாபிவாதய" என்றது - ப்ரணயரோஷத்தாலே சொன்னதாகையாலே, இத்தை ஶிஷ்டாசாரமென்னலாமோ? என்ன - **இதுதான்** இத்யாதி. இத்

ரோஷம் தலையெடுத்துச் சொல்லுகிற வார்த்தையோ, அபேக்ஷைதோற்றச் சொல்லுகிற வார்த்தையோ'' என்ன, ''கீழ் - திருவடிவந்தபோது ப்ரணயரோஷத்தாலேவந்த சிவிட்குத் தோற்றச் சொன்னவார்த்தைகளடைய மாறும்படி குளிர அவன் வார்த்தைசொல்ல, அநந்தரம் திருவுள்ளத்திலே ஒருப்ரஸாதம் பிறந்து, ப்ராப்தியில்லாமையால்வந்த அநவாப்தியுங்கிடக்க அருளிச்செய்கிற பாசுரம்'' என்று அருளிச்செய்தார். (எ)

## எட்டாம்பாட்டு.

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்து மருதிடை
போய்முதல்சாய்த்துப் புள்வாய்பிளந்துகளிறட்ட
தூமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை எந்நாள்கொலோ ?
யாமுறுகின்றதுதோழி! அன்னையர்நாணவே.

*ஆ.—(பேய்முலை.) பூதநா ஶகட யமளார்ஜுந குவலயாபீட ப்ரப்ருத்யாஶ்ரிதவிரோதி நிரஸநைக ஸ்வபாவனாயிருந்தவனை ''குணஹீநன்'' என்றுசொல்லுகிற அன்னையர், '' இவனையாகாதே ப்ரணயித்வ வாத்ஸல்யகாருண்யாதி குணரஹிதனென்று சொல்லுவது '' என்று லஜ்ஜித்துத் தலையெடுக்கமாட்டாதேயிருக்கும்படி, எந்நாள் கொலோ யாமுறுகின்றது தோழி யென்கிறாள்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், மஹோபகாரகனானவனை 'குணஹீனன்' என்று சொல்லுகிற தாய்மார் ''இவனையாகாதே 'நாங்கள் குணஹீநன்' என்று சொல்லிற்று'' என்று லஜ்ஜிக்கும்படி என்றோ நாம் அவனைக்காண்பது? என்கிறாள்.*

*[பேய்முலை என்றுதொடங்கி] - பூதனை தொடக்கமான விரோதிவர்க்கத்தைப் போக்கி அது பாத்தம் போராமை ஸ்மிதம்பண்ணுகையாலே வெளுத்த திருமுத்தையும் சிவந்த திருப்பவளத்தையுமுடைய திவ்யாஸ்யத்தையுமுடையனாய் இப்படி உபகாரக*

*ப.—அநந்தரம், அநாயாஸேந அகிலவிரோதியையும் நிவர்த்திப்பிக்குமவனை காண்கிட்டுவது என்றோ வென்கிறாள்.*

*பேய் - பேயின், முலை - முலையை, உண்டு - உண்டு, சகடம் - ஶகடத்தை, பாய்ந்து - பாய்ந்து, மருது - மருதின், இடை - நடுவே, போய் - போய், முதல் - வேர் பறித்து, சாய்த்து-விழவிட்டு, புள் - பகாஸுரனாகிற பக்ஷியின், வாய்-வாயை, பிளந்து - பிளந்து, களிறு - குவலயாபீடத்தை, அட்ட - நிரஸித்தவனாய், (விரோதிகளினுடைய பற்றுசறுதியாலே ஸாவஜ்ஞனாக ஸ்மிதம்பண்ணுகையாலே), தூ - வெளுத்த, முறுவல் - முறுவலொளியையும், தொண்டை - தொண்டைப்பழம்போலே சிவந்த, வாய் - அதரஶோபையையும், பிரானை - ஆஶ்ரிதைகளான கோபிமாரை அநுபவித்த உபகாரகனை, தோழி - தோழீ! அன்னையர் - (அவனைக் குற்றஞ்சொன்ன) அன்னையர், நாண - லஜ்*

*தால் - கேவலம் ப்ரணயரோஷமடியாகச் சொன்ன வார்த்தையல்லாமையாலே பரிஷ்டாசாரமென்று தாத்பர்யம். க்ரமேணாந்வயஃ.* (எ)

ஜிக்கும்படியாக, யாம் - நாம், உறுகின்றது - கிட்டுவது, எந்நாள்கொலோ - என்று யிருக்கிறதோ? நாம் கிட்டினால் அவர்கள் நாணுமித்தனை யென்றுகருத்து.

இ.—எட்டாம்பாட்டில், மஹோபகாரகனான இவனை "குணஹீநன்" என்கிற தாய்மார், "இவனையோ குணஹீநனென்கிறது" என்று லஜ்ஜிக்கும்படி என்றோ நாம் அவனைக் காண்பதென்கிறாள்.

[பேய்முலை இத்யாதி] - பூதனையுடைய முலைவழியே ப்ராணனை முடித்து, அந்த அவஸாதத்தைத் தப்பி; ரக்ஷையாக நிறுத்தின சகடந்தானே அஸுராவேசத்தாலே மேல்விழ, அத்தை நிரஸித்து; தவழ்ந்துபோகாநிற்க முன்னேநின்ற யமளார்ஜுநங்கள் நடுவேபோய், அவ்வாபத்தைத் தப்பி; தன்னைக்கொண்டு தப்புகையன்றிக்கே அஸுராவிஷ்டமான குருந்தை வேரோடே பறித்து; வகாஸுரனை நிரஸித்து; குவலயாபீடத்தை முடித்த. [தூமுறுவல்] - பெருமிடுக்கையுடையவையா யிருக்கச்செய்தேயும் ஒன்றுக்கும் பாத்தம் போராமையாலே ஸ்மிதம்பண்ணினான். வெளுத்த தந்தபங்க்தியும், ஆதொண்டைப்பழம்போலேயிருக்கிற திருவதரத்தையு முடையனாய், எனக்கு உபகாரகனானவனை; இவள் தலைமைக்கு "பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி" என்று தமிழர்சொன்ன வகைபோய், அவன் தன்னை நோக்கினதுக்கு இவள் எழுதிக்கொடுக்கிறாளிறே. மடலையெடுத்து அழிக்க நினைக்கிறவள் "உபகாரகன்" என்பானென்? என்னில்;—அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக் கொள்ளுகையொழிய, அழிக்க நினைக்கிறாளோ. காணுமத்தனையேயாம்படியாகத் தன்னை நோக்கிவைத்தான், நாமென்றோகிட்டுவது. [யாம்] - பேறிருவர்க்கும் ஒத்திருக்கிறபடி. "மோகஸ்ய ஸுஹாவாஸ ராவவொயிமஹிஷ்யத்". [அன்னையர் நாணவே] - அவனுக்கு குணஹாநி சொல்லுகிற தாய்மார் லஜ்ஜிக்கும்படி. இவள்தான் அவனைப்பெற்றுத் தனக்குவரும் லாபமொழிய, "இவனையோ நாம் இப்படி சொல்லிற்று" என்று அவர்கள் லஜ்ஜித்துக் கவிழ்ந்து நிற்கை யுத்தேச்யமென்றிருக்கிறாள்.

ஈடு.—எட்டாம்பாட்டு. மஹோபகாரகனை "குணஹீநன்" என்று சொல்லுகிற தாய்மார், "இவனையாகாதே நாம் குணஹீநனென்றது" என்று லஜ்ஜிக்கும்படி என்றோ நாம் அவனைக் காண்பதென்கிறாள். அவன் தன்ஸத்தையையுண்டாக்கி, நம் ஸத்தையைத்தந்தான்; நாம் அவன்ஸத்தையாலுண்டானபலம் பெறுவதென்றோவென்கிறாள்.

[பேய்முலை இத்யாதி] - பூதனையால்வந்த ஆபத்தைத்தப் தப்பி; உணர்ந்து நோக்கவொண்ணாதபடி, ரக்ஷகமாகவைத்த சகடம் அஸுராவேசத்தாலே யூர்ந்துவர, அத்தை அநாயாஸேந முறித்து; தவழ்ந்துபோகாநிற்க, நிர்விவரமாக வழியிலேநின்ற மருது

எட்டாம்பாட்டு. - பேய்முலை இத்யாதி. "பேய்முலையுண்டு" இத்யாதியைப்பற்ற - மஹோபகாரகனை இத்யாதி. "நாணவே" என்றத்தைப்பற்ற - லஜ்ஜிக்கும்படி என்றது. அவன் மஹோபகாரகனான்படியை விவரியாநின்றுகொண்டு, கீழ்வாக்யத்தை விவரிக்கிறார் - அவன்தன் ஸத்தை இத்யாதி. பலமாவது - உறுகை. அதாவது - கிட்டுகை.

உணர்ந்து நோக்கவொண்ணாதபடி ரக்ஷகமாகவைத்த - ரக்ஷகமாக வைத்ததாகையாலே உணர்ந்துநோக்கப்போகாதென்றபடி. அநாயாஸேந - ஒருமுக்தன் செய்த வ்யாபாரமாகையாலே, "பாய்ந்து" என்று - போரப்பொலியச்சொன்ன தித்தனைபோக்கி, வஸ்துதஃ அநாயாஸேந முறித்தானென்றபடி. "மருது" என்ற ஏகவசநத்தைப்பற்ற - நிர்விவரமாக என்றது. த்விதீயார்த்தத்துக்கு,

களின் நடுவேபோய். [முதல்சாய்த்து] - தான் அவற்றைத் தப்பிப்போனவளவேயன்றிக்கே அவைதன்னை வேரோடே பறித்துவிழவிட்டேன்னுதல்; அன்றிக்கே, குருந்தத்தைப் பறித்துப்போகட்டேன்னுதல். ஶகாஸுரனை வாயைக்கிழித்து, குவலயாபீடத்தை முடித்த. [தூமுறுவல்தோண்டைவாய்ப்பிரானை] - ப்ரதிபந்தகமாய்வந்தவைதான் ப்ரவலமாயிருக்கச்செய்தேயும், தன்வீரத்துக்கு அவை பாத்தம்போராமையாலே ஸ்மிதம்பண்ணி நின்றபடி. தூய்தானதந்தபங்க்தியையும், தோண்டைபோன்றவதரத்தையு முடையவனை. வேண் முறுவலையும், சிவந்தவதரத்தையுமுடைய உபகாரகனை. இப்போது அவனையழிக்க நினைத்து மடலேடுக்கிறளாகில் அவன் பண்ணினவுபகாரத்தைச் சோல்லுவானேன்? என்னில்,—இதிறே இவள்தான் அவனையழிக்கநினைத்தபடி - அச்சமுறுத்தி முகங்காட்டுவித்துக் கோள்ளப்பார்க்கிற வித்தனைபோக்கி, அவனையழிக்கையுத்தேஶ்யமாய்ச் செய்கிறதன்றிறே. [பிரானை] - "அவ்வுபகாரங்களேல்லாம் தனக்காகச்செய்தது" என்றிருக்கிறள். தமிழரது ஒருஸங்கேதமுண்டு, அதாகிறது - "பூத்தருபுணர்ச்சி, புனல்தருபுணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி, என்று. பூத்தருபுணர்ச்சியாவது - இவள் 'உத்யாநவநத்திலே பூக்கோய்ய' என்று புறப்பட்டுப் பூக்கொய்யாநிற்க, அருங்கோம்பிலேட்டாதேநின்றபூவை இவள் ஆசைப் பட்டால், அத்தை, தன்னைப்பேணுதே ஏறிப்பறித்துக்கோடுக்க, 'இவன்தன்னைப்பேணுதே தன்நினைவைத்தலைக்கட்டினன்' என்று அதுக்குத்தன்னைக்கோடுக்கை. புனல்தருபுணர்ச்சி யாவது - புதுப்புனலாடப்போய் நீரிலேயிழிந்து விளையாடாநிற்க, அமிழ்ந்தவதில்நின்று மேடுத்து ஏறவிட்டதுக்காகத் தன்னைக்கோடுக்கை. களிறுதருபுணர்ச்சியாவது - வீதியிலே நின்று விளையாடாநிற்க, யானையின்கையிலே யகப்படப்புக, அதின்கையில்நின்றும் மீட்டதுக்குத் தன்னைக்கோடுக்கை" என்று ஒருமர்யாதைகட்டினர்கள்; இவனைநோக்கினதுக் காக இவள் தன்னை அவர்களுக்காககவிறே சோல்லிற்று; அவ்வளவன்றிக்கே, இவள் தலைமையிருந்தபடி - அவன் தன்னைத்தப்புவித்த உபகாரத்துக்கு அநந்யார்ஹமாக எழுதிக் கோடுக்கிறள். அங்கு ஓரோவுபகாரத்துக்கிறே அவ்வவர்க்காக்குவது, இந்த எல்லாவுப காரங்களையும் பண்ணிறல் அவனுக்காக்காதோழியவோண்ணுதிறே. [என்நாள்கோலோ யாமுறுகின்றதுதோழி] - அவன்தன்னை யுளருக்கிவைத்தான், இனி நாம் அவனைக்கிட்டு

---

"முதல்" என்று - பூண்டாய், அத்தாலே - குருந்தத்தைச் சொல்லுகிறது. குருந்தம் - குருக்கத்தி. ஶகாஸுரனை இத்யாதிக்கு-"புள்வாய்பிளந்துகளிறட்ட" என்று ப்ரதிசுங் கண்டுகொள்வது. பாத்தம் பாத்ரம், விஷயமென்றபடி. "முறுவல்" என்றதுக்கு - ஸ்மிதமாக அர்த்தமருளிச்செய்து, தந்தபங்க்தியாக அர்த்தாந்தரம் - தூய்தான இத்யாதி. "முறுவல்" என்று - தந்தத்தைச்சொன்னது, "தந்தமும் முறுவலும் தட்டமும்பல்லாம்" என்றத்தைப்பற்ற. ப்ரதபார்த்த விவரணம் - வேண்முறுவல் இத்யாதி. இதிறேயென்றது - வக்ஷ்யமாணத்தை. "வக்ஷ்யமாணம்" என்றத்தை உபபாதிக்கிறர் - அச்சமுறுத்தி இத்யாதி. இத்தால் - அவன் உபகாரங்களைச் சொல்லத் தட்டில்லையென்று கருத்து. அவன் செய்த படிகளைச் சொல்லி, "என்நாள்கொலோயாமுறுகின்றது" என்றதுக்கு பாவம் - அவ்வுபகாரங்களேல் லாம் இத்யாதி. தனக்காகச்செய்தது - எனக்குத் தன்பக்கலிலே ப்ராவண்யம் விளைக்கைக்காகச் செய்தது. அவன் தன்னைநோக்கினத்தையே இவள்தனக்கு உபகாரமாகச் சொல்லுகையாலே வ்யாவ்ருத்திகாட்டுகிறர் - தமிழர் இத்யாதி. புதுப்புனல் - நூதநப்ரவாஹம். இவனைநோக்கினதுக் காக - நாயகியானவள் தன்னை நோக்கினதுக்காக. இவள் - நாயகி. தலைமை - ஶ்லாக்யதை. இன்னம் ஓராகாரத்தாலே வ்யாவ்ருத்தி - அங்கு இத்யாதி. "யாம்" என்று - தோழியையுங்கூட்டிச் சொன்னதுக்கு பாவம் - ஶோகஸ்யா இத்யாதி. "ஶோகஸ்யாஸ்ய கதாபாரம் ராகவோऽயமே ஷ்யதி । ஶ்வஸந்நிவ ஸிம்ஹாக்ஷோ ஹதநந்தநஸாமஹரிய:" இதி ஸுந்தரகாண்டே

வது என்றே? [தோழி] - "ஶோகஸ்யாஸ்யகதாபாரம் ராகவோதிகமிஷ்யதி" (ஶோகஸ்யாஸ்யகதாபாராம் ராகவோதிகமிஷ்யதி) என்றுபோலேகாணும் தோழிதானிருப்பது. இப்போது அவனை ஸ்பர்ஶித்து நம்ப்ரயோஜநம்பெற ஆசைப்படுகிறோமல்லோம், [அன்னையர்நாணவே] - "பிரிந்தவநந்தரம் அவன்தானே வருமளவும் ஆறியிருந்திலள், அவன்தான் வரவுதாழ்த்தான்" என்று இரண்டுதலைக்கும் பழிசொல்லுகிற தாய்மார் முன்பே; "நாம் இத்தலைமடலேடுக்குமளவாம்படி பிற்பாடராளேமாகாதே" என்று, "ஹ்ரீரேஷாஹிமமாதுலா" (ஹ்ரீரேஷாஹிமமாதுலா) என்கிறபடியே அவன் லஜ்ஜித்துவந்து நிற்கிறபடியைக்கண்டு, "இவனையோ நாம் இவ்வார்த்தைசொல்லிற்று" என்று அவர்கள் லஜ்ஜித்துக் கவிழ்தலையிடும்படியாக. (அ)

## ஒன்பதாம்பாட்டு.

> நாணும்நிறையுங்கவர்ந்து என்னைநன்னெஞ்சங்கூவிக்கொண்டு
> சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்தன்னை
> ஆணையென்தோழி! உலகுதோறலர்தூற்றி ஆம்
> கோணைகள்செய்து குதிரியாய்மடலூர்துமே.

*ஆ.—(நாணும்.) நாணும்நிறைவுங்கவர்ந்து என்னை நன்னெஞ்சங் கூவிக்கொண்டு, ஒருவர்க்கும் செல்லவொண்ணாத திருநாட்டிலே எழுந்தருளியிருக்கிற தேவபிரான்தன்னை அயர்வறுமமரர்களுங்கூடத் தேறுதலொருபடி, தோழீ, ஆணை, அவனையுலகுதோறலர்தூற்றி, மற்றும் செய்யலாம் மிறுக்குக்களெல்லாம்செய்து குதிரியாய் மடலூர்துமென்கிறாள்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், தன்னெஞ்சிலே மடலூரவேணுமென்று துணிந்த துணிவை வ்யக்தமாகத் தோழிக்கு வாய்விடுகிறாள்.*

---

*ப்ர —(பேய்முலையித்யாதி)— (எந்நாள்கொலோயாமுறுகின்றதுதோழி) —*
தத்ருவஸ்ய த்ரிஸஹஸ்ரம் ஸ்வவிரஹஜநிதம் ராகவஸ்ய ஶோகவேகம் ஸநந்தநாவாஸ்ஸ்வா உத்விதா வீதா "ஶோகஸ்யாஸ்யகதாபாரம் ராகவோதிகமிஷ்யதி। ஸ்வஸேநஃ வசிஷ்டாஜ்ஞோ ஸஞ்சநஸ்ஸமரே யயௌ॥௫॥".

ஶரண்யகாண்டஶ்லோகஃ"வ்ரீடிதஞ்சாஸ்வஜ்ஞோஸோஹ்ரீரேஷாஹிமமாதுலா। யதீதஶ்ஶோதஸம்விக்ஷ்ய ராகவஸ்யேயராகவஸ்ய தஃ॥கூ॥"

---

ஸப்தத்ரியபோ ஸஹஸ்ரம்தம்ப்ரதிவீதா. இத்தால் - ஸமதுஃகையாகையாலே அவளையுங்கூட்டிச் சொல்லுகிறாளென்றபடி. மேலுக்கு அவதாரிகை - இப்போது இத்யாதி. "வ்ரீடிதஞ்சாஸ்வஜ்ஞோஸோ ஹ்ரீரேஷாஹிமமாதுலா। யதீதஶ்ஶோதஸம்விக்ஷ்ய ராகவஸ்யேயராகவஸ்ய தஃ" இத்யாரண்யகாண்டே தஶமே ஸர்கஃ. பேய்முலையுண்டு என்று தொடங்கி, பிரானை- தோழி, அன்னையர்நாணவே - எந்நாள்கொலோ யாமுறுகின்றது இத்யந்வயஃ. (அ)

[நாணும் நிறையும் என்று தொடங்கி] - லஜ்ஜையையும் அடக்கத்தையும் நிஶ்ஶேஷமாகப் போக்கி அவ்வழியே தானென்றால் மிகவும் ப்ரவணமான என்னுடைய நெஞ்சையும் தன்பக்கலிலே அழைத்துக்கொண்டு மிகவும் தூரமானதிருநாட்டிலே யிருக்கிற அயர்வறுமமரர்களதிபதியை. [ஆணை என்று தொடங்கி] - வாயால் நிஷேதியா நின்றுவைத்தே, 'இவள் இத்தனையும் செய்துமுடிப்பதுகாண்' என்று உகந்திருக்கிற தோழியை ப்ரீதியாலே என்தோழீ என்று ஸம்போதித்து உன்ஆணையே உலகுதோறும் அவனைப்பழிதூற்றிச் செய்யலாம் மிறுக்குக்களெல்லாம்செய்து தடையில்லாதே மடலூரக்கடவேன்.

ப.—அநந்தரம், என்னை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி எட்டாமலிருக்கிறவனை, ஸர்வலோகமும் பழிக்கும்படி மடலூரக்கடவேனென்று தோழிக்குத் தன்னெஞ்சை வெளியிடுகிறாள்.

என்னை - என்னை, நாணும்-லஜ்ஜையையும், நிறையும்-பூர்த்தியையும், கவர்ந்து-அபஹரித்து, நல் - ஸ்நேஹாதிசயமான, நெஞ்சம் - நெஞ்சையும், கூவிக்கொண்டு - அழைத்துக்கொண்டு, ("விஶ்லேஷதஃவ்யஶ்லேஷஷு ஸம்ஶ்லேஷதஃவ்யஶ்லேஷஷு" என்கிறபடியே), சேணுயர் - மிகவும் உயர்ந்த, வானத்து - (பரமாகாஶஶப்தவாச்யமான) பரமபதத்திலே, இருக்கும் - இருப்பானை, தேவர்-ஸூரிகளுக்கு, பிரான்தன்னை - (இங்குப் பண்ணின ப்ரவ்ருத்திகளை ப்ரகாஶிப்பிக்கும்) ஸர்வாதிகனானவனை, என் - எனக்குவிதேயையான, தோழி - தோழீ! ஆணை-உன்னாணையே, உலகுதோறு - ஸர்வலோகங்களிலும், அலர்-பழி, தூற்றி-(ப்ரஸித்தமாம்படி) தூற்றி, ஆம்-என்னால் செய்யலாம், கோணைகள்-மிறுக்குக்களடங்க, செய்து - செய்து, குதிரி-ஒருவர்க்கடங்காத நாணமற்றபெண், ஆய்- ஆய்க்கொண்டு, மடல் - மடல், ஊர்தும் - ஊரக்கடவேன். குதிரி - நாணைப்பெண், கோணை - மிறுக்கு.

இ.— ஒன்பதாம்பாட்டில், தன்னெஞ்சில் வ்யவஸாயத்தைப் பிறர்க்காக மறைத்துப் போந்தாள் இதுக்குமுன்பு, அத்தைத் தோழிக்கு வாய்விடுகிறாள்.

[நாணும்நிறையுங்கவர்ந்து] - அகம்விட்டுப் புறப்படக்கடவதன்றிக்கே யிருக்கிற லஜ்ஜையையும், அகவாயிலுள்ளது வாய்விடக்கடவதன்றிக்கேயிருக்கிற மடப்பத்தையும் அபஹரித்து. [என்னை] - அவையே நிரூபகமான என்னை. [நன்னெஞ்சம் கூவிக்கொண்டு] - அவற்றுக்கு ஆஶ்ரயமாய் என்னிலும் தன்பக்கலிலே ப்ரவணமான நெஞ்சையும் அபஹரித்து. [சேணுயர் இத்யாதி] - மிகவும் உயர்ந்த பரமபதத்திலே கொடுபோயிருக்கும். இந்த்ராதிகள் குடியிருப்புப்போலன்றிக்கே ஸர்வாதிகமாயிறே பரமபதமிருப்பது. "இவள் தன் த்வரையாலே, திருப்பாற்கடலிலே கிடக்கில் திரையிலேயடியிட்டு வரக்கூடும்" என்று நினைத்து, நம்முடைய த்வரையாலும் சென்று கிட்டவொண்ணாதேஶத்திலே யிருந்தான். [தேவபிரான்] - இங்குநின்றும் கொடுபோன வொடுக்கு மாடுகளை அங்குள்ளார்க்குப் பாரித்துக்கொண்டிருக்கிறபடி. "நாம் ஸம்ஸாரத்திலே போய்ப் பெற்றது இது" என்று காட்டுகிறபடி. [தன்னை] - ஸர்வோத்க்ருஷ்டனை நான் அழிக்கப்புகுகிறபடி பாராய். [ஆணை] - "பகட்டுகிறாளித்தனைபோக்கிச் செய்துமுடிக்கப் புகுகிறாளோ" என்று தோழியிருக்க; உன்ஆணை என்கிறாள். [என்தோழி] - "இவள் இத்தனையும் செய்துமுடிப்பதுகாண்" என்கிற ஊதோற்ற தோழியிருக்கிறபடியைக்

கண்டு, 'என்தோழி' என்று உகக்கிறாள். "[ஆணை - என்]" - என்று சொல்லுவாருமுண்டு. நீ என் நினைவைப் பின்செல்வாயானால் இனித் தடையென்? என்கிறாள். நீ என்வழியே பொழுகுவாயானால், நிவாரகருண்டோ? [உலகுதோறலர்தூற்றி] - ஒரு லோகமாத்ரத்திலே பழிசொல்லிவிடுவேனோ, பரமபதமெல்லையாகப் பழித்துக் கொடு செல்லுகிறேன். அலர் - பழி. என்னை ஊரார் பழிசொல்லும்படி பண்ணினானாகில், தன்னை லோகமாகப் பழிசொல்லும்படி பண்ணுகிறேன். [ஆங்கோணைகள் செய்து] - என்னாலான மிறுக்குக்கள்செய்து.கோணை-மிறுக்கு. அதாவது-மடல்கொண்டு புறப்பட்டவாறே எதிரேவரும், சென்று கும்பிடக்கடவேன். [குதிரியாய்] - குதிரியென்று - தடையில்லாப்பெண். குதிரியாய் - அடங்காஸ்த்ரீயாய். குதிரியென்று - ஆபரணமிட்டுவைக்கும்செப்பாய், இவளுக்கு ஆபரணம் - நாணும்நிறையுமிறே, அவை போகையாலே, கேவலசரீரமாத்ரமேயாய்ச் செல்லக்கடவேன். குதிரி-குதிரையையுடையவள். பனைமடலைக் குதிரையாகவுடையவ ளென்றுமாம். [மடலூர்துமே] - இரண்டு தலையையும் நோக்கியிருந்தது அமையும், இனி மடலூர்ந்தே விடக்கடவேன். மடலாகிறது - அபிமதவிஷயத்தை ஒருபடத்திலேயெழுதிப் பனைமடலைக் குதிரையாகக்கொண்டு உடம்பைப்பேணாதே மயிரைவிரித்துக் கண்வாங்காதே பார்த்துக்கொண்டு திரியாநின்றால், ஹோமோபகரணங்கள் கண்டால் அக்நிகல்பமாயிருக்கக்கடவதாய் இப்படி செல்லாநின்றால்; ராஜாக்கள் கூட்டுதல், ஆற்றாமை கூட்டுதல், இரண்டுதலையிலுள்ள பந்துக்களும் கைவிட்டு ஒருவர்க்கொருவர் தஞ்சமாய் முடிகைதானே பேறாகச்செய்யுமதாயிற்று.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நெஞ்சு விம்மல்பொருமலாகாநிற்கவும், தன் ஸ்த்ரீத்வத்தாலே இதுக்குமுன்பு மறைத்துக்கொண்டுபோந்தாள்; இனி "அவனையழிக்கப்புகுகிற நாம் ஆர்க்குமறைப்பது" என்று அதுதன்னையே சொல்லுகிறாள்.

[நாணும்நிறையுங்கவர்ந்து] - ஸத்தாப்ரயுக்தமானத்தையுங் கொண்டான், களவு கலந்தால் வருமத்தையுங்கொண்டான். வாசல்விட்டுப் புறப்படக்கடவதல்லாத லஜ்ஜையையும் கைக்கொண்டு, அகவாயிலோட்டம் தாய்மார்க்கும் சொல்லக்கடவதன்றிக்கேயிருக்கும் அடக்கத்தையும் கைக்கொண்டு. [என்னை] - அவையே நிரூபகமான என்னை. [நன்னெஞ்சங்கூவிக்கொண்டு] - பறித்துக்கொண்ட நாணும் நிறையும் தந்தாலும் இட்டுவைக்கைக்குக் கலமில்லாதபடி; அவற்றுக்கு ஆச்ரயமான, என்னிற்காட்டிலும் தன்பக்கல் ஸாவபந்தத்தில் ஊற்றமுடைய நெஞ்சைத் தன்பக்கலிலே நோடித்துக்கொண்டு. "இவற்றைக்கொண்டு இன்னம் கடலிலேகிடக்கில், இவள் த்வரையிருந்தபடியால் திரைமேலே

---

ஒன்பதாம்பாட்டு.—நாணும்நிறையும் இத்யாதி. கீழெல்லாம் மறைத்துப்போந்தவள், இப்போது "மடலூர்தும்" என்பானென்? என்ன - நெஞ்சு இத்யாதி. விம்மல்பொருமல் - ஆற்றாமையால் வந்த மநோவிகாரம். அதுதன்னையே - மடல்தன்னையே.

கவர்ந்து - அபஹரித்து. நாணுக்கும் நிறைவுக்கும் பேதமேதென்ன - ஸத்தாப்ரயுக்தம் இத்யாதி. களவாகிறது - அகவாயிலோடுகிறத்தை மறைக்கையாய், அதுள்ளது யௌவநத்திலேயாகையாலே, களவென்று - யௌவநத்தைச்சொல்லி, களவுகலந்தாலென்றது - யௌவநம் குடிபுகுந்தாலென்றபடி. கீழ்வாக்யத்வயத்தையும் அடைவே விவரிக்கிறார் - வாசல் இத்யாதி வாக்யத்வயத்தாலே. புறப்படக்கடவதல்லாத - புறப்படப்பண்ணக்கடவதல்லாத. "என்னை" - என்னுடைய. நோடித்துக்கொண்டு - இங்கிதமாகவழைத்துக்கொண்டு. கீழே "அலைகடற்பள்ளியம்மான்" என்று வைத்து, இங்கே "சேணுயர்வானத்திருக்கும்" என்கிறதென்? என்ன - இவற்றைக்கொண்டு இத்யாதி.

யடியிட்டுக் கையும்மடலுமாய் வந்து நிற்கவுங்கூடும்" என்றுபார்த்து, எட்டாநிலத்திலே போய் இருந்தானுயிற்று. [சேணுயர்வானத்திருக்கும்] - சேணென்றும் - உயர்த்தி, உய ரென்றும் - உயர்த்தி; இரண்டாலும்-மிக்க ஒக்கத்தையுடைத்தான, வானத்திலேயிருக்கும். அந்தரஜாதிகளான இந்த்ராதிகள் குடியிருப்பிலன்றிக்கே, பரமபதத்திலே. [தேவபிரான் தன்னை] - இங்கேவந்து கோண்டுபோன நாணும் நிறையுமான ஒடுக்குமாட்டைப் பாரித் துக்கோண்டு, தன்வெற்றி காட்டிக்கோண்டிருக்கிறபடி. "ஸம்ஸாரமண்டலத்திற்போய் நான் பெற்றுக்கோண்டுவந்தவை யிவை" என்று தன்வெற்றி காட்டிக்கோண்டிருக்கிற ஓலக்கம் முந்தறமுன்னம் அதுவாகப்பெற்றோமிறே, ப்ரஹ்மாதிக ளோலக்கம்போலே லாஹாலாஹாதிகளில்வரும் துடிப்பறியாத ஓலக்கமன்றிக்கே. வ்யதிரேகத்தால்வரும் வ்ய ஸநம் அறியார்களேயாகிலும், அந்வயத்தால்வரும் ரஸம் அறிவர்களிறேமுன்னம். [சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான்தன்னை] - அவன்தானும், "ப்ரளயத்துக்கு அழியாதநிலம்" என்னுமித்தனையுமாயிற்று ஏற்றமாக அவ்விடத்துக்கு நினைத்திருப்பது; "விரஹப்ரளயம் ஏறிப்பாயாதவிடமில்லை" என்று அறியமாட்டுகிறிலன்; அறிந்தானுகில் கிடந்தவிடத்தே கிடக்குமே! [தன்னை] - பார்கிடாய் அவ்வோலக்கமும் அவனும் அவ்விருப்பும் என் கையிலே படப்புகுகிறபாடு; இருந்தவிடத்தே இருக்கவொட்டுவேன் என்றிருக்கிறாயோ? இப்போது இங்ஙனே ஒரு வாய்ப்பகட்டுச் சோல்லுகிறாயாகில், அதுசெய்து தலைக்கட்ட வல்லையாகப்புகுகிறாயோ? என்ன, — [ஆணை] - இவள் இப்போது அவனாணை இடு கிறாளோ, தோழியாணையிடுகிறாளோ? என்னில்; — அழிக்கநினைக்கிறவனாணையிடாளே, இனித் தோழியாணையாமத்தனையிறே. இதுக்கு உடன்பட்ட தோழியையொழிய, "வேறு பரதேவதையுண்டு" என்று இராளே இவள்தான். "இது உக்திஸாரமேயாய்ப்போகாமே,

**மிக்கவோக்கம்** *என்கிற விசேஷணத்துக்கு வ்யாவ்ருத்தி* - **அந்தரஜாதி** *இத்யாதி. இது - சாடு. அந்தரத்திலே - ஆகாசத்திலே ஸஞ்சரிக்கிற, ஜாதியென்றும்; நிஹீநஜாதியென்றும். "தேவபிரான்" என்றதுக்கு - நித்யஸூரிகள்பக்கலிலே வெறுப்புத்தோன்ற பாவம் - இங்கேவந்து இத்யாதி. ஒடுக்கு* **மாட்டை** *- முட்டுக்கோல்கொண்டபஹரித்தத்தநத்தை. "தன்னை" என்றதுக்கு பாவம் -* **தன்வெற்றி காட்டிக்கோண்டு** *என்றது. "தேவபிரான்" என்றதுக்கு - நித்யஸூரிகள்பக்கல் ஆதரந்தோன்ற பாவாந்தரம் -* **ஸம்ஸா** *இத்யாதி. அன்றிக்கே, இங்கேவந்து இத்யாதிவாக்யம் - "இருக்கும்" என்றதுக்கு பாவமாய்,ஸம்ஸா இத்யாதிவாக்யம் - "தேவபிரான்"என்றதுக்கு பாவமாதல், கீழ்வாக்ய விவரணமாதல்.* **ஸம்ஸாரமண்டல** *இத்யாதிவாக்யம் -* **ப்ரஹ்மாதிகள்** *இத்யாதிவாக்யாநந்தரே அநு ஸந்தேயம்.* **அதுவாக** *- அந்த நித்யஸூரிக ளோலக்கமாக. அதுவாகப்பெற்றோமிறே யென்று - நித்யஸூரிகளுடைய ஓலக்கத்தைக் கொண்டாடுகைக்கு ஹேதுவேதென்ன -* **ப்ரஹ்மாதிகள்** *இத்யாதி ஆதல்.* **லாபத்தால் வரும்** *துடிப்பாவது - ஈடுபாடு.* **துடிப்பு** *- ஈடுபாடும், க்லேசமும். லாபத்தால் வரும் துடிப்பொழிய, அலாபத்தால்வரும் துடிப்பறிவர்களோ? என்ன -* **வ்யதிரேகத்தால்** *இத்யாதி. அதாவது - அந்வயரஸமறிந்தபோதே, "இம்மகளைப்பெற்றதாயர்" இத்யாதிப்படியே வ்யதிரேகதுக்க மும் பொறுக்கமாட்டார்களென்றபடி. "சேணுயர்வானம்" என்றதுக்கு, "இவற்றைக்கொண்டு" இத்யாதிவாக்யத்திலே - ஒருதாத்பர்யம் அருளிச்செய்து, தாத்பர்யாந்தரம்-* **அவன்தானும்** *இத்யாதி. "அறியான்" என்று எப்படியறிவாய்? என்ன -* **அறிந்தானுகில்** *இத்யாதி. "தேவபிரான்தன்னை" என்றதுக்கு - நித்யஸூரிகள் பக்கலிலும் வெறுப்புத்தோன்ற தாத்பர்யாந்தரம் -* **பார்கிடாய்** *இத்யாதி.* **வாய்ப்பகட்டு** *- ச்ருஹபௌளர்யம். "ஆணை" என்றதுக்கு அர்த்தத்வயம் - ஆணையாதல், தடை யாதல்.* **அழிக்கநினைக்கிறவன்** *- அழிக்கநினைக்கப்பட்டவன். ஆணையிடும்போது ஒருதேவதையாணை இடவேண்டாவோ? என்ன -* **இதுக்குஉடன்பட்ட** *இத்யாதி.* **தோற்றவிருந்தாள் என்றவநந்தரம்**

இவள் இத்தனையுஞ்செய்து தலைக்கட்டப்பெறுவதுகாண்" என்று தன்னினைவு தோற்ற விருந்தாள், "என்தோழி" என்று அவளை அணைத்துக்கொள்ளுகிறாள். அன்றிக்கே, "இவளது கூடப்புகாநின்றதோ" என்றிருந்தாளாய், அவளைப்பார்த்து, "ஆணையென்" என்கிறாளென்னுதல். அவன் என்சொல்வழியே வருமாகில், நீ என்கருத்திலே யொழுகுவுதியாகில், தாய்மார்தொடக்கமானார் வார்த்தைகொண்டு கார்யமில்லையாயிற்றபின்பு, இனித்தடையேன்? என்றுமாம். அவன் இவள்வழியேவருகையாவது என்? என்னில்,—ஸர்வாதிகனுகையாலே அழியவிடானே, இவள்தானே இவள்கருத்திலே நடப்பாளொருத்தியே. [ஆணையென்] - தடையேன்? ஆணை - தடை. [உலகுதோறலர்தூற்றி] - "அஸாதாரண விபூதியிலுள்ளார்தாம் பிறரறியும்படி இரார்களிறே" என்றிருக்கைக்கு, அவ்வோலக்கத்திலே வந்தாலோ! நான்சொல்லுவது; வழியடையப் படப்புகுகிறபாடு பார்கிடாய் என்கையிலே. லோகங்களெங்கும்புக்கு அழிக்கக்கடவேன். அலர் - பழி. என்னை ஊரார் பழிசொல்லும்படி பண்ணினானாகில், தன்னை லோகமாகப் பழிசொல்லும்படி பண்ணுகிறேன். [ஆங்கோணைகள்செய்து] - என்னாலான மிறுக்குக்களையெல்லாம் பண்ணக்கடவேன். கோணை - மிறுக்கு. அதாவது - நான் கையும்மடலுமாய்ப் புறப்பட்டவாறே, "நம்குணநிஷ்ட்டர் படி யிதுவன்றே" என்று குணங்கொண்டாடி அதிலே செலவெழுதக்கடவன்; "அன்று, உன்னைப்பெறுக்கைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுகிறேன்" என்னக்கடவேன். நான் கையும்மடலுமாய்ச் சென்றவாறே அஞ்சி எதிரேபுறப்பட்டு நிற்கக்கடவன், அப்போதாக அவன்காலிலே குனியக்கடவேன். "ருணம்ப்ரவ்ருத்தமிவ" (ருணம்ப்ரவ்ருத்தமிவ) என்னும்படி தோட்டுவிடக்கடவேன், "ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா"(ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம்நக்ருதம்மயா)- என்று புண்படும்படி பண்ணக்கடவேன்.

---

'அத்தை அவள்முகவிகாஸத்தாலேயறிந்து' என்றுகூட்டுவது. "என்" என்கிறபதத்தை - கீழேகூட்டுதல், மேலேகூட்டுதல். அதாவது - "என் - தோழி" என்னுதல், "ஆணை - என்" என்னுதல். **இவளது கூடப்புகாநின்றதோ** - இவளுடையவுத்யோகம் கார்யபர்யவஸாயியாகப்புகாநின்றதா? என, தடையில்லையோ? என்ன - **அவனென்** இத்யாதி. **ஒழுகுவுதியாகில்** - புகுவுதியாகில். **தடஸ்த்த** ஶங்காபரிஹாரமுகேந பூர்வவாக்யவிவரணம் - **அவன்இவள்** இத்யாதி. ஸர்வாதிகனென்றது - "தேவபிரான்" என்றத்தைப்பற்ற. **அலர்தூற்றி** - அபவாதம்சொல்லி. தேவபிரானைப் பழிசொல்லுகிறாளாகில், உலகுதோறலர்தூற்றுகிறது எதுக்கென்ன - **அஸாதாரண** இத்யாதி. **அதாவது** - தோஷத்தையும் குணவதுபாதேயமாகக்கொள்ளுகிற அவ்விபூதியிலன்றிக்கே, குணத்தையும் தோஷமாகக் கொள்ளுகிற உலகுதோறென்றபடி. **தாம்** பிறரறியும்படி இரார்களிறேயென்றது - இவள்செய்கிற நீதி **தங்களுக்கு** அநபிமதமாகிலும், பிறரறியாதபடி அடக்கிக்கொண்டிருப்பார்களிறே என்றபடி. கீழ்வாக்யவிவரணம் - **லோகங்கள்** இத்யாதி. அழிக்கக்கடவேன் - "குணுதிகன்" என்கிற பெருமையையென்றபடி. **அதாவது** - மிறுக்காவது. "கோணைகள்" என்கிற பஹுவசநதாத்பர்யம்-**நான் கையும் மடலும்** இத்யாதிவாக்யத்வயம். **குணநிஷ்ட்டர்படியிதுவன்றே** - ஸௌந்தர்யாதி குணநிஷ்ட்டர் க்ஷணகாலவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாதபடியிதுவன்றோ? காலிலேகுனிந்தால் அவனுக்கு மிறுக்காயிருக்குமோ? என்ன - **ருணம் ப்ரவ்ருத்தம்** இத்யாதி. **தோட்டுவிடுகை** - ஈடுபடுத்துகையும், ப்ரஹரிக்கையும். ப்ரமாணாந்தரம் - ஶிரஸா இத்யாதி. "கோவிந்தேதி யதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம்। ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி" இத்யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம் ப்ரதி ஸஞ்சயோக்தம் க்ருஷ்ணவசநம். "ராஜ்ஞிவ்ருத்ரமிதம் ஸோயமாஸ விதூதக்ஷிண்டபர்வாமதஃ। ஶிரஸாயாசதஸ்தஸ்ய வசநம் ந க்ருதம் மயா॥கதஉ॥" இதி யுத்தகாண்டே[கஉஅ]ராவணவயாநந்தரம் ராமஃ. இதுக்கு அர்த்தம்- பிள்ளை இத்யாதி. காலிலேகுனிந்

பிள்ளைதலையாலேயிரந்த காரியத்தை மறுத்துப்போந்தோ மென்றுரிறே. நான் இத்தைச் செய்தால், அவர் தம்மனிச்சழியாமைக்காக, "தம்மோடு அஸாதாரணஸம்பந்தமுடையார் தங்கள் ஆதரத்தாலே செய்யக்கடவதோன்றன்றே இது" என்னக்கடவன்; "அதன்று இது, நான் ஸாயம்நாநுஷ்ட்டாநம் பண்ணுகிறேன்" என்னக்கடவேன். "நித்யாஞ்ஜலி புடாஹ்ருஷ்டா:" (நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:) என்கிறவிதிலே சேலவெழுதப் பார்ப்பர் அவர்; "அங்ஙனன்று, உன்னுடம்புபெறுகைக்காகச்செய்கிறேன்" என்னக்கடவேன். [குதிரியாய்] - "குந்திரி" என்கிறவித்தை [குதிரி] என்கிறதாய், அதாகிறது - அடங்காஸ்த்ரீயாய், தடையில்லாப்பெண் என்றபடியாய், தடையுடையேனன்றிக்கே என்னுதல்; அன்றிக்கே, குதிரி என்று சேப்பாய்; ஸ்த்ரீகளுக்கு தநமாகிறது - நாணும் நிறையுமிறே, அது இட்டுவைக்கும் கலமாகுமிறே ஶரீரம், அவைபோகையாலே கேவல ஶரீரமாத்ரமேயாய் என்னுதல். பனைமடலைக் குதிரையாகப்பண்ணிக் கையிலேகோள்ளக்கடவது, அத்தையுடையேனாய் என்னுதல். [மடலூர்துமே] - "செய்யக்கடவதாயிற்றபின்பு, இனி, ஒன்றைநினைத்து ஒன்றைச்சோல்லுகிறதேன்?" என்று பார்த்து அதுதன்னையே சோல்லுகிருள். (கூ)

## பத்தாம்பாட்டு.

யாமடலூர்ந்தும் எம்மாழியங்கைப்பிரானுடைத்
தூமடல்தண்ணந்துழாய் மலர்கோண்டுசூடுவோம்
யாமடமின்றித் தேருவுதோறயல்தையலார்
நாமடங்காப்பழிதூற்றி நாடுமிரைக்கவே.

ஆ.—(யாமடலூர்ந்தும்.) யாமடமின்றித் தெருவுதோ றயல்தையலார்நாவுங் கூடமடங்காத பழிகளைத்தூற்றி நாடுமிரைக்க யாம்மடலூர்ந்தாகிலும், எம்மாழியங்கைப் பிரானுடைத் தூமடல்தண்ணந்துழாய் மலர்கொண்டு சூடுவோமென்கிருள்.

---

ததுக்கும் ஈஶ்வரன் செலவெழுதினபடியை த்விவிதமாகக்காட்டுகிறா - நான்இத்தைச்செய்தால் இத்யாதியாலும், நித்யாஞ்ஜலிபுடா இத்யாதியாலும்.(ஹார-ஶோ) "ஶுஶ்ரூஷாநாம லக்ஷ்மணம் ஸுஸ்ரூஷந்தே ஸ்ம ஜீவவாஸிநோ நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா நாநாதேஶவாஸிந:" இத்தைச்செய்தால் - காலிலேகுனிந்தால். மனிச்சு - பௌருஷம். "நஷ்டவ்ய:ஶரணம் ஶேஷீ ஶேஷாநஷ்டார ஶாஶ்வதா: । நஷ்டநஷ்டவ்யாஹாவோயம் நஷ்யோஜநவர்த்திவ்யக்த:" என்றத்தைக்கடாக்ஷித்து - அஸாதாரணபந்தமுடையார் இத்யாதி. தங்கள் ஆதரத்தாலே - "ஸ்வரூபப்ராப்தமன்றோ" என்கிற தங்கள் ஆதரத்தாலே. நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா: என்கிறவிதிலே யென்றது - ப்ராப்யத்வத்திலே யென்றபடி. மூர்ந்தின அர்த்தத்துக்கு, குதிரி - குத்ஸிதஸ்த்ரீயாய், அடங்காப்பெண் என்றபடி; அன்றிக்கே, ஆபரமிட்டுவைக்கும் செப்பென்னுதல்; குதிரையையுடையவள் என்னுதல். "மடலூர்துமே" என்கிற அவதாரணார்த்தம் - செய்யக்கடவதாய் இத்யாதி. ஒன்றைநினைத்து - மடலைநினைத்து. ஒன்றைச்சோல்லுகிறதேன் - "உலகுதோறலர்தூற்றி" என்றுசொல்லுறதென்? அதுதன்னையே - மடலூருகைதன்னையே. க்ரமேணான்வய:. (கூ)

ஒ.—பத்தாம்பாட்டில், இருந்ததேகுடியாக க்ஷோபிக்கும்படி மடலூர்ந்தாகிலும் நிரதிசயபோக்யனானவனைக் காணக்கடவோமென்கிறாள்.

[யாம் என்றுதொடங்கி] - மடலூர்ந்தாகிலும், கையுந்திருவாழியையுங்காட்டி நம்மை இப்பாடுபடுத்தினவனுடைய செவ்வித்திருத்துழாய்மலர்கொண்டு சூடுவோம். [யாம் என்று தொடங்கி] - நாம் ஸ்த்ரீத்வத்தைத் தவிர்ந்து அபந்துக்கள்வாயிலும் புறப்படாத குணஹாநியைத் தெருவுதோறும் ப்ரஸித்தமாகச்சொல்லி ஜகத்தும் க்ஷோபிக்கும்படியாக.

ப.—அநந்தரம், நிரதிசயபோக்யமான அஸாதாரண சிஹ்நங்களையுடையவனை எங்கும்பழிதூற்றி ஜகத்க்ஷோபம் பிறக்கும்படி மடலூர்ந்தேயாகிலும் அவன் மாலையைச்சூடுவோ மென்கிறாள்.

(அத்யந்தாபிநிவேசத்தாலே), யா - ஏதேனுமொருபடியாலும் ஸ்த்ரீத்வாநுரூபமான, மடம்-ஒடுக்கம், இன்றி-இன்றியே, (லோகத்தளவில் பர்யவஸியாதே), தெருவுதோறு-தெருவுதோறும் புக்கு, அயல்-அயலாரான, தையலார்-ஸ்த்ரீகளானவர்கள், நாணா, மடங்கா - ஓவாதேசொல்லும், பழி-பழியை, தூற்றி-தூற்றி, நாடும்-ஸகலஜகத்தும், இரைக்க - க்ஷோபிதமாய்க் கூப்பிடும்படி, யாம் - (மடலூரத்தகாத ஸ்த்ரீத்வத்தையுடைய) நாம், மடல்-(நமக்குஈடல்லாத) மடலை, ஊர்ந்தும் - ஊர்ந்தேயாகிலும், ஆழியங்கை - கையுந்திருவாழியுமானவழகை யநுபவிப்பித்து, எம்-நம்மை வஸீகரித்த. பிரானுடை - உபகாரகனுடைய, தூ-செவ்வியாலேதூய்தான, மடல் - இதழையுடைய, தண்-ப்ரமஹரமாய், அம்-தர்சநீயமான, துழாய் - திருத்துழாய், மலர் - பூந்தாரை, கொண்டு - ("வதிவஹ்ணிதாவீதா" என்கிற கணக்கிலே கையில்மடல்வாங்குகைக்காக) அவன்தர வாங்கி, சூடுவோம் - நந்தலையிலே சூடக்கடவோம். பன்மை - மடலூரத்துணிந்த மர்வோக்தி. யாமடமென்றது - ஏதேனுமொருமடப்பமுமென்றபடி.

இ.—பத்தாம்பாட்டில், இருந்ததேகுடியாக க்ஷோபிக்கும்படி மடலூர்ந்தேயாகிலும், நிரதிசயபோக்யனானவனைக் காணக்கடவோமென்கிறாள்.

[யாமடலூர்ந்தும்] - செய்யக்கடவதல்லாதத்தைச் செய்தேயாகிலும். "தத்தஸ்யஸத்ருஶம்ஸவேத்" என்று இருக்கக்கடவ நாம் மடலூர்ந்தேயாகிலும். இங்கு மடலாகநினைக்கிறது;—பெற்றன்றித்தவிராத வுபேயத்வரையும், அதுக்கடியான உபாயவைலக்ஷண்யாநுஸந்தாநமும், "உபாயந்தன்னாலே பேறு" என்கிற துணிவும், வேறொன்றை யுபாயமாக நினையாமையும், க்ரமப்ராப்தி பற்றாமையும், மடலாய்ச்செல்லுகிறது. [எம்மாழியங்கைப்பிரானுடை] - கையுந்திருவாழியுமான சேர்த்தியழகைக் காட்டி இப்படி மடலெடுப்பித்தவனுடைய. [தூமடல் இத்யாதி] - மடலைக்கொடுபுறப்பட்டால், எதிரேவந்து என்கையில் மடலைவாங்கித் தன்தோளில் மாலையைவாங்கி என்தோளிலே யிடுமிறே அவனுக்கு நிறமுள்ளது; இல்லையாகில், அவன்படும்படிபாராய். செவ்விமாலை சூடக்காண் நான் வேண்டியிருக்கிறது, என்தோளில் மாலைபாராய் சருகானபடி. அத்தலையை யழித்தாகிலும் பெறக்கடவோம். [தூமடல்] - செவ்வித்திருத்துழாய். உனக்கு நிரூபகமான ஸ்த்ரீத்வம் எல்லாவளவிலும் விடாதுகாணென்ன;—[யாமடமின்றி] - லஜ்ஜா சூந்யையாய். [தெருவுதோறு] - லோகமாகத் திரண்டவிடத்தே சொல்லிவிடேன்,

தெருவுகள்தோறும் புகக்கடவேன். [அயல்தையலார்] - "க்ருஹார்ச்சனைகள், அர்ச்சக பராதீனன்" என்றுஞ்சொல்லி மூலைகளிலே யிருக்கவொட்டுவேனோ? [அயல்தையலார்] - அங்கைகளான ஸ்த்ரீகள். [நாமடங்காப்பழிதூற்றி] - அவர்களுக்கு நாப்புரளாத பழியென்னுதல். நாமடங்காதே - வாயோவாதே பழிசொல்லும்படியென்னுதல். [தூற்றி] - ஶிஶுபாலாதிகள்வாக்கில் சேளாததும் கேட்கும்படி. அவன் ஊரவர்கவ்வை பரிஹரியானாகில், நாடாகப் பழிசொல்லும்படி பண்ணுகிறேன். ஜகத்க்ஷோபத்தைப் பண்ணக்கடவேன். இந்நாட்டுக்கு ஒருபேரிறே யுண்டாகப்புகுகிறது. "ஒருத்தி யொருவனைப் படுத்திற்றே; ஒருவன் முகங்காட்டிற்றிலன்" என்னும்படி பண்ணுகிறேன். "ஒருவன் உளனாகில் ஒருத்தியுடம்பு இங்ஙனே யிருக்கவடுக்குமோ, ஜகத்து நிரீஶ்வரம்" என்னும்படி பண்ணுகிறேன். கலந்த என்வார்த்தையிற்காட்டிலோ வடிவில்லாத வேதத்தின்வார்த்தை. எல்லாரையும் நாஸ்திகராம்படி பண்ணுகிறேன். நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும் - தூமடல்தண்ணந்துழாய்மலர்கொண்டுசூடுவோம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஜகத்க்ஷோபம்பிறக்கும்படி மடலூர்ந்தாகிலும், நிரதிஶயபோக்யனானவனைக் காணக்கடவே னென்கிறாள்.

[யாமடலூர்ந்தும்] - செய்யக்கடவதல்லாதத்தைச் செய்தேயாகிலும். "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்றிருக்கக்கடவநாம், மடலூர்ந்தேயாகிலும். இங்கு, மடலாகநினைக்கிறது;—பெற்றன்றித்தரியாத உபேயவைலக்ஷண்யமும், அதுக்கடியான உபாயவைலக்ஷண்யாநுஸந்தாநமும், "அவ்வுபாயந்தன்னாலே பேறு" என்கிறதுணிவும், வேறொன்றை உபாயமாகநினையாமையும், க்ரமப்ராப்திபற்றாதொழிகையும் - மடலாய்ச்செல்லுகிறது. "மடலூர்தும்" என்றாள் கீழ்; "இது உனக்குவார்த்தை

---

ப்ர:—(யாமடலூர்ந்தும்)— ஸாநுராகாஷ்டாங்க [௩௯] ஸந்தேஹம்ஶ்ருதி ஸீதா, "ஶமேரோஸாஸஸுஶ்ஞாகாஷாஜவாஶுாஸஶ்ஞவர்தந் । ஶோஜயெஷ்திகா கூதஸ்தஸ் ஸஷ்ருஶம்ஸவேச்॥௩௦॥"

---

பத்தாம்பாட்டு.—யாமடல் இத்யாதி. "நாடுமிரைக்க - யாமடலூர்ந்தும்" என்றத்தைக் கடாக்ஷித்து-ஜகத்க்ஷோபம் இத்யாதி. "எம்மாழி" இத்யாதியைப்பற்ற-நிரதிஶயபோக்யன் என்றது.

"ஊர்ந்தும்" என்கிற அபிப்ராயத்தம் - செய்யக்கடவதல்லாத இத்யாதி. "யாம்" என்றதுக்கு பாவம் - தத்தஸ்ய இத்யாதி. ஸ்வாபதேஶம் - இங்கு மடலாக இத்யாதி. இங்குமடலாக நினைக்கிறது என்றவநந்தரம், எத்தையென்னில் என்றுகூட்டுவது. மடலென்கிறது - க்ரமப்ராப்தி பற்றாதொழிகையாகிற த்வரையையேயானாலும், தத்தேதுக்களாகையாலே மற்றநாலையும் மடலென்கிறது. உபேயவைலக்ஷண்யம் - உபேயபூதனான ஈஶ்வரனுடைய ஸௌந்தர்யாதி நிபந்தநமான வைலக்ஷண்யம். அதுக்கடியான - பெற்றன்றித்தரியாமைக்கடியான. உபாயவைலக்ஷண்யம் - உபாயபூதனான ஈஶ்வரனுடைய ஸர்வஜ்ஞத்வ ஸர்வஶக்தித்வாதி நிபந்தநமான வைலக்ஷண்யம். துணிவு - ரக்ஷகாந்தரஶூந்யமாக "ஈஶ்வரனாலேயேபேறு" என்கிற அத்யவஸாயம். வேறொன்றை - ஸித்தோபாயவ்யதிரிக்தமான உபாயாந்தரங்களை. உபாயவைலக்ஷண்யாநுஸந்தாநத்துக்கு த்வராஹேதுத்வம் எப்படியென்னில்;—ஜ்ஞாநஶக்த்யாதிவிஶிஷ்டனே உபாயமாகையாலே விளம்பஹேதுவில்லையென்று த்வராஹேதுவாம். உபாயம் அவிளம்ப்யபலப்ரதமானாலும், தனக்கு அத்யவஸாயமில்லாவிட்டால் ஆறியிருக்கலாம்; அத்யவஸாயமுண்டானால் ஆறியிருக்கப்போகாமையாலே துணிவும் த்வராஹேதுவென்றபடி. "மடலூர்ந்தும்" என்ற அபிப்ராயத்தாலே - "மடலூரவொண்ணாது" என்கிறநிஷேதம் ப்ரஸக்தமாகவேண்டுகையாலே, அந்தப்ரஸக்தியைக் காட்டுகிறார் - மடலூர்தும் என்றாள்கீழ் இத்யாதி.

யல்ல ; முதல்தன்னிலே ஸ்த்ரீகள் மடலூரக்கடவதல்லவாக விலக்கிற்று ; அதுக்குமேலே, நீயாகிறாய் "நித்யம்ப்ராணஸமாஹிதா" (நித்யம்ப்ராணஸமாஹிதா) என்கிறபடியே, உன்னையழியமாறியும் அவனுக்கு ஹிதகாமையாயிருப்பாளொருத்தி ; அவன்தான் உன் பக்கல் வருகைக்கு உன்னிற்காட்டில் த்வரித்திருக்கிறானொருவன் ; க்ரமப்ராப்திபற்றாமல் படுகிறாயித்தனை, நீ ஸாஹஸத்திலே ஒருப்படுகிற இது உன்ஸ்வரூபத்தோடுசேராது" என்ன;— அதுபார்க்கவொண்ணாதபடிகாண் எனக்கு அவன்பக்கலுண்டான ப்ராவண்யாதிசய மென் கிறாள். [யாமடலூர்ந்தும்] - இப்படியிருக்கிற என்ஸ்வரூபத்தை அழியமாறியாகிலும் பெறத்தவிரேன். [மடலூர்ந்தும்] - இத்தைச்செய்தாகிலும். செய்யக்கடவதல்லாதது செய்தாகிலும் பெறக்கடவேன். அஹமர்த்தத்தோடு சேராத செயலைச் செய்தேயாகிலும். ப்ரணவத்தில் அஹமர்த்தத்துக்கு வாசகசப்தமிருக்கிறபடியாயிற்று - யாமென்கிறது. அத் தலையையிட்டிறே இவனை நிரூபிப்பது. [எம்மாழி இத்யாதி] - நாராயணசப்தார்த்தம். இவனையிட்டிறே அவனைநிரூபிப்பது. [எம் இத்யாதி] - அவன் கையுந்திருவாழியும்போலே யன்றோ நான் கையும்மடலுமாய்ப் புறப்பட்டால் இருப்பது. நான் கையும்மடலுமாய்ப்

---

ப்ர:—ஸ்ரீஜநககுலஸம்பவா ஹநுமானை நோக்கி, "ராமஸ்ய தயிதாபார்யா நித்யம்ப்ராணஸமாஹிதா । ஜநகஸ்ய குலேஜாதா தேவதாபிவநிந்திதா ॥ உகூ ॥ ஸர்வலக்ஷணஸம்பந்நா நாரீணாமுத்தமாஸ்த்ரியா: । ஸீதாவ்யநுகதாராமம் சசிநம்ரோஹிணீயதா ॥உஎ॥"

---

யத்வா, புநஸ்ச ஒருவைஷ்ணவர் எழுந்தருள, அடியேதொடங்கி ப்ரஸாதிக்கிறார் - மடலூர்துமென் றாள் இத்யாதி என்னுதல். விலக்கிற்று - "கடலன்னகாமத்தராகிலும்" இத்யாதியாலே விலக்கிற்று. உன்ஸ்வரூபத்தோடு - அவனுக்கு அதிசயகரமான உன்ஸ்வரூபத்தோடு. "மலர்கொண்டு சூடுவோம்" என்றத்தைக்கூட்டி, "யாம்" என்றதிலேநோக்காக பாவம் - இப்படி இத்யாதி. என்ஸ்வரூபத்தை - ஸ்த்ரீத்வஸ்வரூபத்தை. இது - "யாம்" என்றபதத்துக்கு தாத்பர்யம். சப்தார்த்தம் - இத்தைச்செய் தாகிலும் என்றது. இத்தை - நிஷித்தமான மடலூருகையை. "மலர்கொண்டுசூடுவோம்" என் றத்தைக்கூட்டி, "மடலூர்ந்தும்" என்றதிலேநோக்காக தாத்பர்யம் - செய்யக்கடவது இத்யாதி. "யாமடலூர்ந்தும்" என்றதுக்கு ஸ்வாபதேசத்திலே பாவம் - அஹமர்த்தத்தோடு இத்யாதி. அதா வது - ப்ரணவோக்தமான சேஷத்வஸ்வரூபத்துக்குச்சேராத ஸ்வப்ரவ்ருத்தியைச் செய்தேயாகிலு மென்றபடி. ப்ரணவத்திற்போலே இங்கு அஹமர்த்தவாசகமான சப்தமேதென்ன - ப்ரணவத்தில் இத்யாதி. ப்ரணவத்தில் அஹமர்த்தத்துக்கு - ப்ரணவோக்தசேஷத்வாஸ்ரயமான அஹமர்த்தத்துக்கு. "ஓங்காரஸ்ஸர்வவாசக:" என்று - ப்ரணவம் ஈஸ்வரவாசகமன்றோ? என்ன - அத்தலையை இத்யாதி. அதாவது - "ராஜபுருஷன்" என்கிறவிடத்தில் - ராஜாவைவிட்டு புருஷனை நிரூபித்தாற் போலே, ஈஸ்வரனையிட்டு இவனை நிரூபிக்கிறதாகையாலே, சப்தப்ராதாந்யத்தையிட்டு ஜீவனைச் சொல்லுகிறதென்னலா மென்றபடி. நாராயணசப்தார்த்தம் என்றதுக்கு தாத்பர்யமேதென்ன - இவனை இத்யாதி. அதாவது - நாரங்களுக்கு அயநமென்று - சேதநனையிட்டு அவனைநிரூபித்த வோபாதி, இங்கும் "எம்" என்று - இத்தலையையிட்டு அவனைநிரூபிக்கிறதென்றபடி. "யாமடலூர்ந் தும்" என்றத்தையும் கடாக்ஷித்து, "ஆழியங்கைப்பிரான்" என்றதுக்கு பாவம் - அவன்கையும் இத் யாதி. கையுந்திருவாழியும்போலே - கையுந்திருவாழியுமாய்ப்புறப்பட்டாற்போலே. இவ்வாக்யத் துக்கு பாவம்-அவன்கையுந்திருவாழியுமாய்ப்புறப்பட்டால் கார்யம் அமோகமாமாப்போலே,நான்கையும் மடலுமாய்ப்புறப்பட்டால் கார்யம் அமோகமாம்படியும் என்று. அன்றிக்கே, அவனுக்குப்போலே தேஜஸ்கரமென்றுமாம். "தூமடல்தண்ணந்துழாய்" இத்யாதியைக் கடாக்ஷித்து, "ஆழியங்கை" என்றதுக்கு பாவாந்தரம் - நான்கையும் இத்யாதி. அதாவது - தனக்கிடுகைக்காகத் திருவாழியைச்

புறப்பட்டால், அஞ்சி எதிரேவந்து தன்கையிலாபரணத்தைவாங்கி என்கையிலேயிட்டு, தன் தோளில் மாலையைவாங்கி என்தோளிலேயிட்டானாகில் குடியிருக்கிறான்; இல்லையாகில் எல்லாங்கூடவில்லையாகிறது. [தூமடல்] - என்தோளில் மாலையைப்பாராய், நான் சேவ்விமாலை சூடவேணுங்காண். விரஹத்தாலே தன்மார்பில் மாலை சருகாயிறேகிடக்கிறது, சேவ்விமாலையுள்ளது அவன்பக்கலிலேயிறே. ஒன்றைச்சோல்லுகிறாயாகில் செய்து தலைக்கட்டப்புகுகிறாயோ, உன் ஸ்த்ரீத்வம் உன்னைக்காற்கட்டுங்காண் என்ன,—[யாமடமின்றி] - அதுவோ! ஸ்த்ரீத்வமில்லாதார்செய்வதை முதலிலே செய்யக்கடவோம். [தெருவு தோறு] - "உலகுதோறலர்தூற்றி" என்றாளே கீழே; அங்ஙன் லோகமாகத்திரண்டத்திலே லோகத்துக்காக ஒருவார்த்தை சோல்லிவிடுவேனோ, தெருவுகள்தோறும்புக்கு, அறியாதாரெல்லாரும் அறியும்படி அலர்தூற்றக்கடவேன். "க்ருஹார்ச்சனைகள், அர்ச்சகபராதீநம்" என்றுஒருமூலைகளிலேபுக்கு இருக்கவோட்டுவேனோ. அயல்தையலாருண்டு- அந்யைகளான ஸ்த்ரீகள்; அவர்கள் நாப்புரளாதபடியான பழிகளையுமெல்லாம் சோல்லி. ஶிஶுபாலாதிகள்வாயில் கேளாதவையுமெல்லாம் என்வாயிலேகேட்கவிறே புகுகிறான். அன்றிக்கே, அவர்கள் நா, மீளாதே உருவப்பழிசோன்னபடியே யிருக்கும்படியான பழிகளைத்தூற்றியென்றுமாம். அன்றிக்கே, நாம் தங்களுக்கடங்காதே மடல்சோண்டு புறப்பட்டபழிதூற்றியென்றுமாம். [நாடுமிரைக்கவே] - அவன் என்னுடைய ஊரவர்கவ்வை பரிஹரித்திலனாகில், நான் தன்னை நாடாக இரைக்கும்படி பண்ணுகிறேன். ஜகத்க்ஷோபம்பிறக்கும்படி பண்ணுகிறேன். "ஒருத்தி ஒருவனைப்படுத்திற்றே! ஒருவன்முகங்காட்டிற்றிலன்" என்னும்படிபண்ணுகிறேன். தத்வபரமானவாக்யங்களும் உபாஸநபரமானவாக்யங்களுமெல்லாம் அழியவிறேபுகுகிறது; "ஒருவன் உளனாகில், ஆசைப்பட்டவள் இப்படிபட இருக்குமோ, ஆனபின்பு நிரீஶ்வரங்காண் ஜகத்து" என்னும்படிபண்ணுகிறேன். அவனோடே

---

சொல்லுகிறாளென்றபடி. ஆபரணத்தை - திருவாழியை. அன்றிக்கே, "ஆழி" என்று - திருவாழி மோதிரமென்றுமாம். எல்லாங்கூட - உபயஸ்வரூபமும். தூமடல் - செவ்வியுடையதளம். "தூமடல்" என்கிறவிஶேஷணத்துக்கு ஹாவம் - என்தோளில் இத்யாதி. தனக்குச்செவ்வியமாலையில்லையோ? என்ன - விரஹத்தாலே இத்யாதி. "மடலூர்ந்தும்" என்றத்தையுங்கூட்டி ஹாவம் - அதுவோ இத்யாதி. அதுவோவென்றது - ஸத்ரீத்வமோ காற்கட்டுவதென்றபடி. முதலிலே - ஸ்த்ரீத்வமில்லாதார் என்று அந்வயிப்பது. ஸ்த்ரீத்வமில்லாதார் - ஸ்வதந்த்ரர். கீழே, "உலகுதோறலர்தூற்றி" என்றுசொல்லியிருக்க, மீளவும் "தெருவுதோறலர்தூற்றி" என்றதுக்கு ஹாவம் - உலகுதோறு இத்யாதி. அலர்தூற்ற - அபவாதம்சொல்ல. "தெருவுதோறலர்தூற்றி" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - க்ருஹார்ச்சனைகள் இத்யாதி. அர்ச்சாவதாரப்ராவண்யத்தைப்போக்கி நாஸ்திகராம்படிபண்ணக்கடவன் என்றபடி. அயல்தையலார் நாமடங்காப்பழிதூற்றி என்று ப்ரதீகம்கண்டுகொள்வது. நாப்புரளாதபடியான - சொல்லக்கூசும்படியான. "அயற்றையலார்" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - ஶிஶுபாலாதிகள் இத்யாதி. த்விதீயார்த்தத்துக்கு, "நாமடங்கா" என்றது - நா மீளாதே என்றபடி. த்ருதீயார்த்தத்துக்கு - "நாம், அடங்கா" என்று பதச்சேதம். அடங்கா - அடங்காதே. தங்களுக்கு - அயல்தையலாரான தங்களுக்கு. இரைக்க - கோஷிக்க. "நாமடங்கா" என்றதின் முந்தின அர்த்தத்வயத்துக்குச்சேர ஹாவம் - அவன்என்னுடைய இத்யாதி. அதாவது - நானும்பழிதூற்றி, நாடுமிரைக்கும்படிபண்ணுகிறேனென்றபடி. "நாடுமிரைக்க" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - தத்வபரமான இத்யாதி. தத்வபரமானவாக்யங்கள் - "நாராயணபரம்ப்ரஹ்ம" இத்யாதிவாக்யங்கள். உபாஸநபரமானவாக்யங்கள் - "நிதித்யாஸிதவ்ய:" இத்யாதிகள். வாச்யபூதன் இல்லாமையாலே அழியவிறேபுகுகிறது என்றபடி. அழியும்படி எப்படி? என்ன - ஒருவன் இத்யாதி. வேதம்

கலந்த என்வார்த்தையொழிய, அடியில்லாத வேதஞ்சொன்னவார்த்தையைக் கேட்பர் களோ? ப்ரமேயஶ்ரேஷ்ட்டமானத்தை அழித்தேன், இனி ப்ரமாணஶ்ரேஷ்ட்டமானது தானேயில்லாதிறே. "ஆசைப்பட்டார்க்குப் பலம் இதுவானபின்பு இனி உபாஸநத்துக்குப் பலமில்லை" என்று கைவாங்கி ஜகத்தடைய நாஸ்திகராம்படிபண்ணுகிறேன். [நாடுமிரைக் கவே - யாமடலூர்ந்தும்] - நாட்டார்சொல்லும்பழிதானே ப்ராரகமிறே. "ஊரவர்கவ்வை எரு" என்றாளே, அதிலேயிறே வேருன்றித்தரிப்பது. (கo)

---

# பதினோராம் பாட்டு.

இரைக்குங்கருங்கடல்வண்ணன் கண்ணபிரான்தன்னை
விரைக்கொள்பொழில் †குருகூர்ச்சடகோபன்‡சொன்ன
நிரைக்கொளந்தாதி ‡யோராயிரத்துளிப்பத்தும்
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகுந்தம்மூரெல்லாம்.

ஆ.—(இரைக்கும்.) ஓதங்கிளருகிற கடல்போலேயிருந்த திருமேனியை யுடைய கண்ணபிரான்தன்னை விரைக்கொள்பொழில் குருகூர்ச்சடகோபன்சொல் நிரைக் கொளந்தாதியாயிரத்துள் இப்பத்தும் உரைக்கவல்லார்க்கு; இத்திருவாய்மொழியைச் சொல்ல, தாங்களிருந்ததேசமே தங்களுக்குத் திருநாடென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி சொல்லவல்லாரிருந்த தேசத்திலே எம்பெருமான் தானேவந்து நித்யஸம்ஶ்லேஷம் பண்ணும் என்கிறார்.

[இரைக்கும் என்று தொடங்கி] - ஓதங்கிளருகிற கடல்போலேயிருந்த திரு நிறத்தையுடையனாய் தண்ணளியையுமுடையனான க்ருஷ்ணனை. [விரைக்கொள்பொழில்] - தாம் வ்யவஸிதரானவாறே 'எம்பெருமானுடையவரவு அணித்து' என்று ஸஞ்ஜாதபரி

---

சொன்னத்தைவிட்டு நம்வார்த்தையைப் ப்ரமாணமாகக்கொள்ளுவர்களோ? என்ன - அவனோடே கலந்த இத்யாதி. வாக்யங்களையழிக்கப்போமோ? என்ன - ப்ரமேயஶ்ரேஷ்ட்டம் இத்யாதி. அதாவது - அந் தரங்கையான நான் இப்படி ப்ரமேயமானவஸ்துவை அழிக்கையாலே, தத்ப்ரதிபாதகமான ப்ரமாணம் அப்ரமாணமாயேவிடுமென்று கருத்து. உபாஸநபரவாக்யங்களை அழிக்கும்படி எப்படி? என்ன - ஆசைப்பட்டார்க்கு இத்யாதி. "நாடுமிரைக்கவே" என்றதுக்கு - ஈஶ்வரவிஷயமாகப்பழிசொல்லு வர்களென்றுசொல்லி, நாயகிவிஷயமாகத் தாத்பர்யாந்தரம் - நாட்டார் இத்யாதி. "நாடுமிரைக்கவே" என்ற அவஷ்டாரணத்துக்கு ஹாவமாதல் - நாட்டார் இத்யாதி. இவ்வாக்யத்துக்கு- "அயல்தையலரர் நாம டங்காப்பழி என்னைத்தூற்றவும், நாடும் என்னையிரைக்கவும், அதுவே ப்ராரகமாக - மடலூர்ந்தும்" என்று அந்வயமுகேந தாத்பர்யமாகக்கண்டுகொள்வது. நாட்டார்பழி ப்ராரகமோ? என்ன - ஊரவர் இத்யாதி. யாமடமின்றி - நாம் ஸ்த்ரீத்வாநுரூபமான ஒடுக்கமின்றிக்கே என்று ஶப்தார்த்தம். லஜ்ஜாஶூந்யராய் என்றபடி. "ஶாகேஸ்யுஷிதாஹாயப்ரா நித்யம்வ்ராணஸோஹிதா" இத்யாதி ஸங்க்ஷேபே. உத்தரார்த்தபூர்வகம் பூர்வார்த்தத்தையநுஸந்திக்கை அந்வயம். (௧0)

---

† 'குருகூரவர்சடகோபன்' என்று உரைக்குப்பாடம்.

‡ 'சொன்னிரை' என்றும் "அந்தாதியாயிரத்துள்" என்றும் ஆறாயிரப்படிக்குப் பாடம்.

மளமான திருச்சோலை, [நிரைக்கொளந்தாதி] - ஸுஸங்கதமான அர்த்தஸப்தங்களை யுடைத்தாகை.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அநுஸந்திக்கவல்லவர்களிருந்த தேசமே பரமபதமாமென்று பலத்தையருளிச்செய்கிறார்.

இரைக்கும் - அலையெறிந்திரைக்கிற, கருங்கடல் - கருங்கடல்போலே அவிவ் ருத்தமான, வண்ணன் - வடிவழகையுடையனாய், பிரான் - அவ்வழகை ஆஸ்ரிதர்க்கு அநுபவிப்பிக்கும் ஸ்வபாவனை, கண்ணன்தன்னை - க்ருஷ்ணனை, விரைக்கொள் - பரிமளோத்தரமான, பொழில் - பொழிலையுடைய, குருகூரவர் - திருநகரியிலுள்ளார்க்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, நிரை - எழுத்தும் அசையும் சீரும் தளையும் அடியும் தொடையும் பாவும் இனமும் இசையும் தாளமும் மற்றுமுள்ள ஶப்தாலங்காரமும், கொள் - உடையதாய், அந்தாதி - அந்தாதியாய், ஓர்- அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியினுள்ளும், இப்பத்தும் - இவை பத்தையும், உரைக்கவல்லார்க்கு - ஶப்தமாத்ரோச்சாரணம் பண்ணுமவர்களுக்கு, தம்- தாந்தாங்களிருந்த, ஊரெல்லாம் - ஊரெல்லாம், வைகுந்தம் - பரமபதமென்னலாம்படி, ஆகும் - ஆநந்தாவஹமாயிருக்கும். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில் இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லாரிருந்த தேசத்திலே அவன்தானேவந்து நித்யஸம்ஶ்லேஷம்பண்ணுமென்கிறார்.

[இரைக்கும்கருங்கடல்வண்ணன்] - க்ஷுபிதமான கடல்போலேயிருக்கிற வடிவழகையுடையவன். மடலெடுப்பித்தவடிவழகு இருக்கிறபடி. "ராவணோ நய" என்றபோது கடல் பயத்தாலே வெருவுண்டாப்போலே, இவள் மடலோலைதுணிந்தவாறே ஸர்வாதிகன் கலங்கினபடி யென்றுமாம், இது அநந்தாழ்வான்வார்த்தை. எப்போதும் கடலின் ஸ்வபாவத்தை யுடையவன். [கண்ணபிரான்] - ஸம்ஶ்லேஷதஶையில் தாழநின்று பரிமாறினபடி. வடிவழகது, ஸ்வபாவமது, மடலூராதொழியப்போமோ? [விரைக்கொள் இத்யாதி] - இவர் வ்யவஸிதரானவாறே "அவன்வரவுஅணித்து" என்று சோலை ஸஞ்ஜாதபரிமளமாயிற்று. [நிரைக்கொளந்தாதி] - இவர்ஆற்றாமையாலே முன்னடிதோற்றாதேயிருந்ததஶையிலே சொல்லச்செய்தேயும், எழுத்தும் சொல்லும் பொருளும் அடியும் தொடையும் பாவும் இசையும் தாளமும் அந்தாதியும் சேரவிழுந்தபடி. ருஷி, ஶோகவேகத்தாலேசொன்னது ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே ஶ்லோகமானாப்போலே, பகவத்ப்ரஸாதமடியாக ஸர்வலக்ஷணோபேதமாயிற்று. இத்திருவாய்மொழியைச் சொல்லவல்லார்க்கு உத்தேஶ்யபூமி பரமபதமாகக்கடவதென்னுதல். இதுசொன்னவர்களிருந்தவிடமே பரமபதமென்னுதல்; அதாகிறது-அவர்களுக்கு இவரைப்போலே மடலெடுக்க வேண்டா, அவன்தானே மடலெடுத்து இவர்களிருந்தவிடத்தே நித்யஸம்ஶ்லேஷம் பண்ணுமென்கிறது.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி அப்யஸிக்கவல்லாரிருந்த தேசத்தே அவன்தானேவந்து நித்யஸம்ஶ்லேஷம் பண்ணுமேன்கிறார்.

---

நிகமம் - இரைக்கும் இத்யாதி. "நிரைக்கொளந்தாதி" இத்யாதியைப்பற்ற - இத்திருவாய்மொழி இத்யாதி.

[இரைக்குங்கருங்கடல்வண்ணன்] - அநந்தாழ்வான் பணித்தானாக நஞ்சீயர் வந்து பட்டருக்கு, "'ஶாபமாநய' (சாபமாநய) என்றபோது கடல் கீழ்மண்கொண்டு மேல்மண்ணேறிந்தாற்போலேயாயிற்று, இவள் 'மடலூர்வன்' என்ற துணிவைக்கேட்டு அவன்தன் ஸர்வாதிகத்வம் கலங்கினபடி" என்று அருளிச்செய்தார். வண்ணனென்றவிது - ஸ்வபாவபரமானபோதைக்காகிறது. [கடல்வண்ணன்] - மடலூர்ந்தாகிலும் பெறவேண்டும்படியான வடிவழகைச்சொல்லுகிறது. ஓதங்கிளர்ந்தகடல்போலே ஶ்ரமஹரமான வடிவையுடையவன். [கண்ணபிரான்தன்னை] - அவ்வடிவை, அவதரித்து எனக்கு உபகரித்த க்ருஷ்ணனை. வடிவழகிது, ஸ்வபாவமிது. [விரைக்கோள்பொழில்] - இவர் கையும் மடலுமாய்ப்புறப்பட்டவாறே, ஊர் ஸஞ்ஜாதபரிமளமானபடி, "அவன்வரவணித்து" என்று. [நிரைக்கோளந்தாதி] - இவர் முன்னடிதோற்றுதே மடலூரச்செய்தேயும், ப்ரபந்தமானது, எழுத்தும் சொல்லும் பொருளும் அடியும் தொடையும் பாவும் இசையும் தாளமும் அந்தாதியும் சேரவிழுந்தபடி. "ஶோகஶ்ஶ்லோகத்வமாகத:" (ஶோகஶ்ஶ்லோகத்வமாகத:) என்று ஶோகவேகத்தாலே சொல்லச்செய்தேயும், ப்ரஹ்மாவின்ப்ரஸாதத்தாலே ஸர்வலக்ஷணோபேதமானாற்போலே; இவர்முன்னடிதோற்றுதபடிகலங்கிச்சொல்லச்செய்தேயும், பகவத்ப்ரஸாதமடியாகப்பிறந்த ப்ரபந்தமாகையாலே லக்ஷணங்கள் சேரவிழத் தட்டில்லையிறே. [உரைக்கவல்லார்க்கு] - மடலேடுக்கவேண்டா, இப்பாசுரமாத்ரத்தைச் சொல்லவமையும். [வைகுந்தமாகுந் தம்மூரெல்லாம்] - அவர்களுக்கு உத்தேஶ்யபூமி பரமபதமாம். அன்றிக்கே, இவர்களுக்கு நாடறியமடலேடுத்துக்கொண்டு புறப்படவேண்டாதே, இவர்களிருந்தவிடங்களிலே அவன் தானேவந்து நித்யஸம்ஶ்லேஷத்தைப்பண்ணுகையாலே, அவர்களிருந்த

---

வண்ணம் - ஸ்வபாவமாதல், வடிவாதல். கீழே "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்றவநந்தரம், "இரைக்குங்கருங்கடல்வண்ணன்" என்றதுக்குக் கருத்தேதென்ன - அநந்தாழ்வான் இத்யாதி. அநந்தாழ்வான்நிர்வாஹத்திலே, வண்ணம் - ஸ்வபாவம். "கண்ணபிரான்" என்றது - க்ஷுபிதமானகடல்போலே கலங்கினஸ்வபாவத்தையுடையவனாய்வந்து கண்ணுக்குவிஷயமான உபகாரகனென்றபடி. வந்து - திருநாராயணபுரத்தில்நின்றும்வந்து. ஆகிறது - அநந்தாழ்வான் நிர்வாஹமென்றபடி. "இரைக்கும்" என்றது - லக்ஷணயா, க்ஷுபிதமென்றபடி. பட்டர்நிர்வாஹம் - மடலூர்ந்தாகிலும் இத்யாதி. வண்ணம் - வடிவு. இப்போது "இரைக்கும்" என்ற விஶேஷணத்துக்கு பாவம் - ஓதங்கிளர்ந்த இத்யாதி. ஓதம் - திரை. இந்தப்பக்ஷத்தில், "இரைக்கும்" இத்யாதிக்கு - வடிவழகிது, ஆஶ்ரிதஸுலபதாஸ்வபாவமிது, எங்ஙனே நான் மடலூராதொழிவதென்றபடி. "இரைக்கும்கருங்கடல்வண்ணன்" என்று - "மாசறுசோதி" என்றத்தைச் சொல்லுகிறது. "கண்ணபிரான்" என்று - "ஆசறுசீலனை" என்றத்தைச் சொல்லுகிறது. கீழ்ச்சொன்ன பதத்வயார்த்தங்கம நம்-வடிவழகு இத்யாதி. ஸ்வபாவமிது என்றவநந்தரம், மடலூராதொழியப்போமோ என்று கூட்டி நிர்வஹிப்பது. நிர்வாஹகரான இவர் நோவுபடாநிற்க, ஊரில் ஸம்ருத்திக்கு அடியேதென்ன - இவர் இத்யாதி. நிரைக்கோள் - லக்ஷணஸம்ருத்தியையுடைத்தான. நிரையென்று - ஒழுங்காய், லக்ஷணஸமூஹமென்றபடி. முன்னடிதோற்றுதே மடலூரச்செய்தே சொன்னது லக்ஷணோபேதமாகக் கூடுமோ? என்ன - ஶோகஶ்ஶ்லோகத்வம் இத்யாதி. "ஸமாக்ஷரைஶ்சதுர்பிர்ய: பாதைர்கீதோ மஹர்ஷிணா। ஸோऽநுவ்யாஹரணாத்பூய: ஶோகஶ்ஶ்லோகத்வமாகத:॥ ௪0॥" இதி பாலகாண்டே த்விதீயே. முந்தின அர்த்தத்துக்கு, "உரைக்கவல்லாரான - எல்லார்தமக்கும் - ஊர்-வைகுந்தமாகும்" என்று ஶப்தநிர்வாஹமாதல்; ஊர் - உத்தேஶ்யபூமி. "வைகுந்தம் - எல்லாம் - தம்மூர்-ஆகும்" என்று ஶப்தநிர்வாஹமாதல். த்விதீயார்த்தத்துக்கு, "தம்

விடந்தானே பரமபதமாம். அவன்ஸந்நிதியுள்ளவிடம் ஸ்ரீவைகுண்டமாகக் குறையில்லை யிறே. இப்பாஸுரமாத்ரத்துக்கு இதுகூடுமோ? என்னவொண்ணாது; இதில்சொல்லுகிற பகவத்குணங்களைப் பார்த்தால், "இந்த உக்திதானும் மிகை" என்னலாம்படியிருக்கும்; இதுகூடாதாகில், பரிபூர்ணஸமாஸ்ரயணத்துக்கும் பலமில்லையாம்; இங்ஙனன்றாகில் புருஷோத்தமன் இதரஸஜாதீயனானானே. (கக)

---

மூரெல்லாம் - வைகுந்தமாகும்" என்று ஸப்தார்த்தநிர்வாஹம். இவர்களிருந்தவிடத்தை வைகுந்தமாகச் சொல்லலாமோ? என்ன-அவன்ஸந்நிதி இத்யாதி. மடலெடுக்கவேண்டும்படி துர்லபமான பலம் இப்பாசுரமாத்ரத்தால் பெறலாமோ? என்ன-இப்பாசுரம் இத்யாதி. "ஸஶ்ரோ த்ரா ஸிஜாவிந:" என்கையாலே, பலமுண்டென்றபடி. பகவத்குணங்களாவன - "ஆசறுசீலனை", "வாசுதேவன்" இத்யாதிகளிற்சொல்லுகிற குணங்கள். இது கூடாதாகில் - பகவத்குணதிக்யத்தாலே பலஸித்தி கூடாதாகில். பரிபூர்ணஸமாஸ்ரயணமாவது - பரமபக்தியுக்தராய் ஆஸ்ரயிக்கை. பலமில்லையாமென்றது - பலகௌரவத்தைப்பார்த்தால் பரிபூர்ணஸமாஸ்ரயணமும் அத்யந்தவிஸத்ருஸமாகையாலே, அதுக்கும் பலமில்லையென்றபடி. "அவன்தான் இவ்வளவை வ்யாஜமாக்கி மஹாபலத்தைக்கொடுக்கும்" என்று சொல்லலாமோ? என்ன - இங்ஙன் இத்யாதி. க்ரமேணாந்வய: (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி:—[illegible]॥.

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி: — "[illegible]॥.

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாசறுசோதிகண்ணன்வந்துகலவாமையால்
ஆசைமிகுந்துபழிக்கஞ்சாமல் ஏசறவே
மண்ணில்மடலூரமாறனெருமித்தான்
உள்நடுங்கத்தான்பிறந்தவூர்.

ஆழ்வார் திருவடிகளே ஸரணம், எம்பெருமானார் திருவடிகளே ஸரணம், ஜீயர்திருவடிகளே ஸரணம்.

---

நான்காந்திருவாய்மொழி—ஊரேல்லாம்: ப்ரவேஶம்.

**ஆ.**—(**ஊரெல்லாந்துஞ்சி.**) இப்படி மடலூருகையிலே அத்யவஸித்திருந்த பிராட்டி மடலூரக்ஷமையல்லாதபடி அத்யந்தம் அவஸந்நையாய்;

**ஒ.**—நாலாந்திருவாய்மொழியில், இப்பிராட்டி தன்தௌர்பல்யத்தாலே மடலூரவும் மாட்டாதிருக்கச்செய்தே, அதுக்குமேலே ராத்ரியும்வந்து சராசரங்களடைய உறங்கி பந்துக்களெல்லாம் இவளார்த்திபொறுக்கமாட்டாதே பரவஶராய் நித்ரிக்கிற தஶையிலே தனிப்பட்டுக்கலங்கி; அநேககல்பமாய் மஹாந்தகாரமாய்த் தனக்குப் பிழைக்கைக்கு அவகாஶம் தாராதிருந்துள்ள ராத்ரியையும், தன்வ்யஸநத்துக்கு ஹேதுவான கொடிய கர்மத்தையும், ஏவம்விதமான தஶைகளிலே உதவக்கடவனான புருஷோத்தமனையும், அவனுடைய தாக்ஷிண்யாதி குணங்களையும், இவற்றையெல்லாம் பலகாலும் சொல்லி; இத்தஶையில் தன்னை 'ஐயோ!' என்று க்ருபைபண்ணியாதல், 'இதுயுக்தமன்று' என்று பொடிந்தாதல் முகங்காட்டுவாரொருவரையும் பெறாதே அத்யந்தம் அவஸந்நையாய் மிகவும் ப்ரலாபித்து முடியப்புகுகிறவள்; ஜகத்ரக்ஷாசிந்தாத்மிகையான யோகநித்ரையைப் பண்ணியிருக்கிறவன் நான் இப்படி அவஸந்நையாக என்னை உபேக்ஷியானென்று யரிக்கிறாள்.

**ப.**—நாலாந்திருவாய்மொழில், கீழ்-தம்முடைய அநுபவாபிநிவேஶத்தாலே ஸத்வராய்க்கொண்டு ஸ்வரூபாநுரூபமான ஸ்வப்ரவ்ருத்தியாலேயாகிலும் அவனைப் பெறுவதாக உத்யோகித்த இவர், அநுபவயோக்யமானகாலம் ஸந்நிஹிதமாயிருக்கச் செய்தேயும் அவன் அஸந்நிஹிதனாயிருக்கையாலே அத்யந்தஆர்த்தராய் ஒருப்ரவ்ருத்தி க்ஷமரல்லாதபடி மிகவும் அவஸந்நராய், விளம்பக்ஷமரல்லாமையாலே, இவ்வவஸ்தையிலே அவன் முகங்காட்டி ரக்ஷிக்கைக்கு உடலான; அகிலஜகத்ரக்ஷணார்த்தப்ரவ்ருத்தியையும், ஆஶ்ரிதப்ரகாஶகமான ஸௌலப்யத்தையும், அநிஷ்டநிராஸகத்வத்தையும், அபீஷ்டலாபத்தாலே புதுக்கணித்த அவயவஶோபாதியாலுண்டான அத்யந்தஔஜ்ஜ்வல்யத்தையும், உபகாரகவிக்ரஹயோகத்தையும், ஸ்த்திரபரிகர்ஷணஶௌர்யத்தையும், ஆகாங்க்ஷாஜநகமான அஸாதாரணசிஹ்நத்தையும், ஆஶ்ரிதார்த்தமாக ஆயுதமெடுத்துக் காரியங்கொள்ளுமாகாரத்தையும், அதிஶயித ஐஶ்வர்யத்தையும், அநந்யார்ஹமாக்கும் அபதாநவிஶேஷத்தையும் அநுஸந்தித்து; "ஏவம்வித ஸ்வபாவனான ஈஶ்வரன் இவ்வவஸ்தையில்வந்து ஸம்ஶ்லேஷித்து ரக்ஷிக்கிறிலன், முடிகைக்கும் யோக்யதையில்லாதபடி பராதீநமான இவ்வாத்மாவை ரக்ஷிக்கும்விரகென்?" என்று, காலவிளம்பம்பொறாமல் ஆர்த்தராய்க் கூப்பிட்டப்ரகாரத்தை; அபிமதநாயகனான ஈஶ்வரனைப்பிரிந்து ஆற்றாமையாலே இரவு நெடுமைக்கிரங்கிக்கூப்பிட்ட நாயகிப்ராசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

**இ.**—நாலாந்திருவாய்மொழியில், "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்று பெரிய த்வரையிறே கீழ்ச்சென்றது; மடலெடுக்கைதான் அவனைப்பெறுகையோபாதி தேட்டமாம்படி ஶைலஹாநிபிறந்து, இவ்வளவிலே ராத்ரிவந்து கைக்கொண்டு, அதுதான் ஸந்த்யாமாத்ரமன்றிக்கே மத்யராத்ரியாய், சராசரங்களடைய வுறங்கி, ஹிதம் சொல்லும் பந்துக்களும் இவளார்த்திபொருக்கமாட்டாமை பரவஶராய்விழுந்து, உசாத்துணையுமின்றிக்கே தனிப்பட்டு; வ்யஸநத்துக்கடியான தன்னுடைய பாபத்தையும், இவ்

ஸமயத்திலும் முடியவொண்ணுதபாரதந்த்ர்யத்தையும் அநுஸந்தித்து; "விஷஸ்ய தா நவித்யேத ஸஸ்த்ரஸ்ய வாவேஸ்மநி ராக்ஷஸஸ்ய" என்று - இத்தனைவிஷந்தருவாரையுங் காண்கிறிலேன், விஷம்போலேநின்று கொல்லுகையன்றிக்கே அப்போதே முடியும்படி ஒருஸஸ்த்ரந்தருவாரையுங் காண்கிறிலேன், அவரைப்பிரித்து உயிர்க்கொலையாக்கும் ராவணக்ருஹத்தில் நற்கொலையாக்கும் பரிகரத்தைத்தருவார் சிலதார்மிகரைக் கிடைக்குமோவென்னும்தசையாய்; ப்ரளயாபத்தசையிலே யுதவும் புருஷோத்தமனுடைய குணங்களை யநுஸந்தித்து, "அவையும் எனக்கு கார்யமாகாதொழிவதே!" என்று வேண்யுத்க்ரமநத்திலே யொருப்பட்ட பிராட்டியைப்போலே முடிவுதேட்டமானதசையிலே, ஈஸ்வரன் "ஜமதக்நக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே யோகநித்ரைபண்ணு நின்றோம்" என்று தன்னுடைய ரக்ஷணோத்யோகத்தை ஸ்மரிப்பிக்க, நம்முடைய ரக்ஷணத்திலே உத்யுக்தனானபின்பு இனியொருதட்டில்லையென்று அவன்குணஜ்ஞாநத்தாலே யரித்துத்தலைக்கட்டுகிறது.

ஈடு.—"நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்று - பெரியதொரு த்வராரஸமாயிறே கீழ்ச்சென்றது, மடலூரப்பெறுகைதான் அவனைப் பெறுகையோபாதி தேட்டமாம்படி லலஹாநிமிக்கது; இனித்தான், மடலூரும்போது அபிமதவிஷயத்தைப்படத்திலேஎழுதவேணுமே, அதுக்குஅவகாசமில்லாதபடி †"ஆழிகொண்டன்றிரவிமறைப்ப" என்கிறபடியே ஆதித்யனை மறைத்தானுதல், தைவயோகத்தால் அஸ்தமித்ததாதல் செய்து ராத்ரியாய், அதுதான் ஸந்த்யாமாத்ரமன்றிக்கே சராசரங்களடங்கும்படி மத்யராத்ரமாய்; பழிசொல்லுவாரோடு, அநுகூலராய் ஹிதஞ்சொல்லி விலக்குவாரோடு வாசியற எல்லாருமொக்க உறங்குகையாலே ஒருவுசாத்துணையுமின்றிக்கே, இவ்வளவிலே, ப்ரளயாத்யாபத்துக்களிலே யுதவும் ஸ்வபாவனுமாய் ஸர்வரக்ஷகனான புருஷோத்தமனுடையகுணங்களை அநுஸந்திக்க, அவைதான் பிரிவிலே அநுஸந்திக்கையாலே மிகவும் ஆற்றுமைக்கு உறுப்பாய், * வேண்யுத்க்ரம

---

ஊரெல்லாம்துஞ்சி ப்ரவேஸ, வர்த்திஷ்யமாணத்தோடே ஸங்கதிக்காக வ்ருத்தகீர்த்தநம் - நாடுமிரைக்கவே இத்யாதி. கீழ்ச்சென்றது என்றவநந்தரம், 'இப்படி த்வரையதிஸயித்தால் பின்னை மடலூராதொழிவானென்? என்னில்' என்று வாக்யத்தைக்கூட்டி நிர்வஹிப்பது. மடலூராதொழிந்ததுக்கு ஹேத்வந்தரம் - இனித்தான் இத்யாதி. ஆழிகொண்டு இத்யாதி - அரசர்கள் காத்துக்கொண்டு நின்றவன்று, திருவாழியைக்கொண்டு ஆதித்யனைமறைக்க இத்யர்த்தம். †பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து, முதல்திருமொழி, எட்டாம்பாட்டு, "நாழிகைகூறிட்டு" இத்யாதி. ஆதித்யனைமறைத்தானுதல் - "இவள்மடலெடுத்தால் தனக்கு அவத்யமாம்" என்னுமத்தாலே ஆதித்யனைமறைத்தானுதல். *மாசறுசோதிப்ரவேஸத்திலே "அச்சமுறுத்தி மூகங்காட்டுவித்துக்கொள்ளப்பார்க்கிறார்" என்கையாலும், *யானேய்நோக்குப்ரவேஸத்திலே "அவனுக்குஅவத்யமென்று மடலெடுக்கைதவிர்ந்தாள்" என்று அருளிச்செய்கையாலும் - மடலெடாமைக்குஅவையும் ஹேதுவாகக்கண்டுகொள்வது. "நள்ளிருளாய்" என்றத்தைப்பற்ற - மத்யராத்ரமாய் என்றது. இருளென்று - ஸம்ஸாரமாகிற காளராத்ரியைச்சொல்லுகிறது; விடிவாவது - பகவத்ஸம்ஸ்லேஷலாபம். "மத்யராத்ரமாய்" என்றதுக்கு விவக்ஷிதம் - பழிசொல்லுவாரோடு இத்யாதி. "ஊரெல்லாம்" என்றத்தைப்பற்ற - பழிசொல்லுவாரோடு என்றது. "அன்னையருந்தோழியரும்" என்றத்தைப்பற்ற - அநுகூலராய்ஹிதஞ்சொல்லி இத்யாதி. "பாரெல்லாமுண்ட" என்றத்தைப்பற்ற - ப்ரளயாத்யாபத்துக்களிலே இத்யாதி. "மண்ணளந்த" இத்யாதியைப்பற்ற - ஸர்வரக்ஷகனான இத்யாதி. குணங்களையநுஸந்திக்க - "குணம்பாடி - ஆவிகாத்திருப்பேனே" என்கிறபடியே குணங்களையநுஸந்திக்க என்றபடி. வேண்

நாதிகளிலே யொருப்பட்டாரோபாதி முடிந்து பிழைக்கவேண்டுமேளவாய், அதுதன்னைப் பெறுகை மடலூரப்பெறுகையோபாதி தேட்டமாய்; † (விட்டது) "விஷஸ்ய தாதா" (விஷஸ்யதாதா) - இத்தனை நற்சரக்குத்தரும் உதாரரை இவ்வூரில்கிடைக்குமோ? "மே" (மே) - உண்டானால்தான் எனக்கு இது ஸம்பவிக்குமோ? "ஶஸ்த்ரஸ்ய வா" (ஶஸ்த்ரஸ்ய வா) - விஷம்போலே சிறிதுபோதுநின்று கொல்லுமதன்றியே கடுகமுடிக்கும் ஶஸ்த்ரத்தைத் தான் தருவாருண்டோ? "வேஶ்மநி ராக்ஷஸஸ்ய" (வேஶ்மநிராக்ஷஸஸ்ய) - பிரித்து வைத்து உயிர்க்கொலையாக நலிகிறவனுடைய ஊரிலே, நற்கொலைக்குப் பரிகரமானத்தைத் தான் தருவாருண்டோ? இப்படிமுடிகை தேட்டமாம்படியிருக்கிறவளவிலே, "நாம் ஸர்வ ரக்ஷகராகையாலே எல்லாருடையரக்ஷணத்துக்குமாகத் திருப்பாற்கடலிலேவந்து சாய்ந் தோம், உம்முடையரக்ஷணத்திலே உத்யுக்தராயிருந்தோம், க்ரமப்ராப்திபற்றாமைப் பதறுகிற வித்தனை" என்கிறவித்தை ஸ்மரிப்பிக்க; அவன் ஸர்வரக்ஷகனாகில், நம்முடையரக்ஷணத் திலே உத்யுக்தனாகில், க்ரமப்ராப்திபற்றாமல் பதறுகிறோமித்தனை, நம்மோபாதியாலுள்ள ரக்ஷணம் நமக்குஸித்தியாதோவென்று அவன்குணஜ்ஞாநத்தாலே தரித்தாராய்ச்செல்லுகிறது. ‡(கீழ் - தம்முடைய அநுபவாபிநிவேஶத்தாலே ஸத்வரராய்க்கொண்டு ஸ்வரூபாநுரூபமான ப்ரவ்ருத்தியிலேயாகிலும் அவனைப்பெறுவதாக உத்யோகித்த இவர், அநுபவயோக்யமான காலம் ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தேயும் அவன் அஸந்நிஹிதனாகையாலே அத்யந்தம் ஆர்த் தராய் ஒரு ப்ரவ்ருத்திக்ஷமரல்லாதபடி மிகவும் அவஸந்நராய், விளம்பாக்ஷமராகையாலே, இவ்வவஸ்தையிலே அவன்வந்து ரக்ஷிக்கைக்கு உடலான குணங்களை ஆர்த்தராய்க் கூப்பிட்ட ப்ரகாரத்தை. அபிமதநாயகனை ஈஶ்வரனைப்பிரிந்து ஆற்றாமையாலே இரவு நெடுமைக்கிரங்கிக் கூப்பிட்ட நாயகிபாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.)

---

ப்ர:—(ஊரெல்லாந்துஞ்சி ப்ரவேஶ:) ஸுந்தரகாண்டே, ஸுஷ்டாவிம்ஶஸர்கே, "ஸாஜீவிதம் க்ஷிப்ரமஹம் த்யஜேயம் விஷேண ஶஸ்த்ரேண ஶிதேந வாபி। விஷஸ்ய தாதா நஹி மேऽஸ்தி கஶ்சிச் சஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய॥ இதீவ தேவீ பஹுதா விலப்ய ஸீதாயவேண்யுத்க்ரதநம் க்ருஹீத்வா। உத்க்ரத்ய வேண்யுத்க்ரதநேந ஶீக்ரமஹம் கமிஷ்யாமி யமஸ்ய மூலம்॥ ஶோகாபிதப்தா ஸா வஹ்வாஸநா விஷண்ண்ரூபா ப்ரதிசிந்தயந்தீ। உபஸ்திதா ஶிம்ஶுபாமாஸஸாத॥"

---

யுக்த்யநாதி இதி - ஆதிஶப்தேந - விஷபக்ஷணம். "மாயும்வகையறியேன்" என்றதைப்பற்ற - அதுதன்னைப்பெறுகை இத்யாதி. அதுதன்னை - முடிகைதன்னை. "வேண்யுத்க்ரதநாதிகளிலே யொருப்பட்டாரோபாதி" என்கைக்கு, அப்படிபிராட்டி முடியத்தேடினளோ ? என்ன - விஷஸ்ய தாதா இத்யாதி. "ஸாஜீவிதம் க்ஷிப்ரமஹம் த்யஜேயம் விஷேண ஶஸ்த்ரேண ஶிதேந வாபி। விஷஸ்ய தாதா நஹி மேऽஸ்தி கஶ்சிச் சஸ்த்ரஸ்ய வா வேஶ்மநி ராக்ஷஸஸ்ய" இதி ஸுந்தரகாண்டே ஷட்விம்ஶஸர்கே. உண்டானல்தான் எனக்கு இது ஸம்பவிக்குமோ என்றது - தாதாவுண்டாகிலும் பாபியான எனக்குத் தாரார் என்னுதல், எனக்குப்பலியாது என்னுதல். "மட லூரப்பெறுகையோபாதி தேட்டமாய்" என்றவாக்யத்தோடே - இப்படிமுடிகை தேட்டமாம்படியிருக் கிற இத்யாதிவாக்யத்துக்கு ஸங்கதி. "யோகுசெய்தபெருமானை" என்றதைப்பற்ற - நாம்ஸர்வரக்ஷக ராகையாலே இத்யாதி. நம்மோபாதியாலுள்ள என்றவிடத்திலே, ஔபாதியென்று - அம்ஶம். நம்முடைய அம்ஶத்துக்குண்டான ரக்ஷணமென்றபடி.

---

† குண்டலித அக்ஷரங்கள் வ்யாக்யாநோக்தாந்வய விருத்தம். ‡ குண்டலித க்ரந்தம் க்வாசித்கம்

# முதற்பாட்டு.

ஊரெல்லாந்துஞ்சி உலகெல்லாம்நள்ளிருளாய்
நீரெல்லாந்தேறி ஓர்நீளிரவாய்நீண்டதால்
பாரெல்லாமுண்ட நம்பாம்பணையான்வாரானால்
ஆரெல்லேவல்வினையேன் ஆவிகாப்பாரினியே.

ஆ.—ஸர்வஜந்துக்களும் ப்ரஸுப்தமாய் ஸர்வலோகமும் அந்தகாரபரிபூரிதமாம்படி ஒருநீளிரவுவந்து எங்கும்முடிகிறதில்லை. இந்ததசையில் அந்தப்பரமகாருணிகனான பாம்பணையான் வாராதொழிந்தான், இனிநான் எங்ஙனே தரிக்கும்படியென்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், ராத்ரியாகிற இம்மஹாபத்தும் செல்லாநிற்க, ஆபத்ஸகனான எம்பெருமான் வருகிறிலன், இனி எனக்கு ரக்ஷகராவாருண்டோ? என்கிறாள்.

[ஊரெல்லாம் என்று தொடங்கி] - ஊரெல்லாம் உறங்குகையாலே சிலருடன் போதுபோக்கப்பெறாமையாலும் லோகமெல்லாம் மஹாந்தகாரமாகையாலே ஒன்றைக்கண்டு காலக்ஷேபம் பண்ணப்பெறாமையாலும் ஜலதத்வமும் ஒலியடங்கி ச்ரவணேந்த்ரியத்துக்கு விஷயமில்லாமையாலும் ஹ்ருதயம் தனிமைப்பட்டு ஆற்றாமை மிகுகையால் பண்டுபோலே நீளிராவாகாதே, எல்லாராத்ரிகளும் ஒரு நெடியராத்ரியாய் அதுக்கு ஓர் அவஸாநம் காணப்பெறுகிறதில்லை. எல்லார்க்கும் ஆபத்ஸகனாய் ஆச்ரிதஸம்ச்லேஷ ஸ்வபாவனானவன் இத்தசையில் வந்து தோற்றுகிறிலன். [ஆர்எல்லே என்றுதொடங்கி]- ஏவம்விதனானவனும்கூட வாராதொழிகைக்கு ஈடான பாபத்தைப்பண்ணின என்னுடைய ப்ராணனை. எல்லே என்று - தோழியுடைய ஸந்நிதியிலே அவளைச்சொல்லும் சொல்லைச் சொல்லுகிறாள். நம் என்றும், எம்என்றும் பலபாட்டிற்சொல்லுகிறது - ஸம்ச்லேஷதசையில் அவன் தனக்குக் கைவந்தபடியை நினைத்து.

ப.—முதற்பாட்டில், ஜகத்தெல்லாம் இருளாம்படி ஏகராத்ரியாய் நீண்டது, ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரன்வந்து ரக்ஷிக்கிறிலன், இனி இவ்வாத்மாவை ரக்ஷிப்பாரார் என்கிறாள்.

(பழிசொல்லும் அயலாரோடு, ஹிதஞ்சொல்லும் தாய்மாரோடு, ஸமதுக்கைகளாய் உசாத்துணையான தோழிமாரோடு வாசியற, ஒருமுகத்தில்தரியாதபடி), ஊர் - ஊராக, எல்லாம் - எல்லாரும், துஞ்சி - உறங்கி, (புறம்பே ஒருபதார்த்ததர்சநத்தாலே தரியாதபடி), உலகெல்லாம் - லோகமடைய, நள் - செறிந்த, இருளாய் - இருளாய், நீர் - நீரென்றுபேர்பெற்றவை, எல்லாம் - எல்லாம், தேறி - (ஜலசாரஸத்த்வங்களினுடைய கோலாஹலமில்லாமையாலே) அலையடங்கித்தெளிந்து, (ஒருசப்தச்ரவணமில்லாதபடியாய்), ஓர் - அஹோராத்ரவிபாகமற்று ஏகாகாரமாய், நீள் - வளர்ந்த, இரவாய் - ராத்ரியேயாய், நீண்டது - ஓரவதிகாணவொண்ணாதபடி நீண்டுவிட்டது; (இவ்வளவில்), பார் - ப்ரளயாபத்தசையானபூமியை, எல்லாம் - எல்லாம், உண்ட - வயிற்றிலேவைத்து ரக்ஷித்தவனாய், பாம்பு - சேஷபூதனான திருவனந்தாழ்வானை, அணையான் - படுக்கையாகக்கொண்டு வடிவுகொடுத்துரக்ஷிக்கையாலே, நம் - நமக்குத் தஞ்சமானவன், வாரான் - வந்துமுகங்காட்டி ரக்ஷிக்கிறிலன், எல்லே - என்னே! இனி - ரக்ஷகன் உதவாத

பின்பு, வல் - (அநுஹவிகாஸ்யமல்லாத) வலிய, வினையேன் - பாபத்தையுடையேனுடைய என்னுடைய, ஆவி - ஆத்மாவை, காப்பார் - ரக்ஷிப்பார், ஆர் - ஆர்? உறங்குகிற ஊரார் காக்கவோ, ஓரிருள்விழுங்கின லோகம்காக்கவோ, ஜடமானஜலதத்வம்காக்கவோ, பாதகமான தீர்க்கராத்ரிகாக்கவோ என்றுகருத்து. எல்லே - என்னேயென்று விஷாதஸூசகம்.

இ.— முதற்பாட்டில், ப்ரளயாபத்ஸகனானவன், என்னை விரகப்ரளயங்கொள்ள, வந்து உதவிற்றிலன்; இனி ஸத்தையை நோக்குவாரார்? என்கிறாள்.

[ஊரெல்லாம்துஞ்சி] - சிலருடன் போதுபோக்கவொண்ணாதபடி ஊராகவுறங்கிற்று. உணர்ந்திருப்பார்சிலரும் உறங்குவார்சிலருமன்றிக்கே, இருந்ததேகுடியாக வுறங்கிற்று. இவள்பிறந்த ஊராகையாலே இவள்தசையை யநுஸந்தித்து ஶோகத்தாலே சோர்ந்து கிடந்தபடி. நாடுபாஸத்திநன்றுபோலே ஒன்றிரண்டுபேராகிலும் உணர்ந்திருக்கப் பெற்றதோ? பழிசொல்லுவாருமின்றிக்கே ஹிதஞ்சொல்லுவாருமின்றிக்கே உசாத்துணையுமின்றிக்கே யிருக்கிறபடி. புறம்புபோய் ஒன்றைக்கண்டு தரித்தாலோ? என்னில்,— [உலகெல்லாம்நள்ளிருளாய்] - ப்ரளயங்கோத்தாற்போலே, பதார்த்தங்களடைய இருள்மறைத்தது. நள்ளிருள் - செறிந்த இருளென்னுதல், நடுஇருளென்னுதல், ஸகல பதார்த்தங்களும் ஒடுங்கிறல் ராத்ரிக்கு அஸாதாரணமான ஒலியென்னுதல். பதார்த்ததர்ஶநம்பண்ணியும் தரிக்கவொண்ணாதபடியாயிற்றென்கை. [நீரெல்லாந்தேறி]- ஜலசரஸத்வங்களும் த்வநியடங்கி, ஶ்ரவணேந்த்ரியத்துக்கு முதலிலே விஷயமில்லையென்கை. ஆக, மூன்றுபதத்தாலும் வாகிந்த்ரியத்துக்கும் சக்ஷுஸ்ஸுக்கும் ஶ்ரவணத்துக்கும் விஷயமில்லையென்கை. பகலில்வந்தால் இந்த்ரியங்கள் ஸ்வஸ்வவிஷயங்களிலே பாலிபாய்ந்து ஆற்றாமைமட்டஞ்செய்யும், அங்ஙனுமொன்றின்றிக்கே ஸர்வேந்த்ரியங்களுக்கும் பிரிந்தவிஷயமொன்றுமேயாய் ஆற்றாமை விஞ்சியிருக்குமிறே. [ஓர்நீளிரவாய் நீண்டதால்] - பகல்விரவின இரவின்றிக்கே இரவேயாகை. மநுஷ்யராத்ரியிற்காட்டில் தேவர்களுடையராத்ரி நீண்டிருக்குமிறே, அதுக்கும் ஓரவதியுண்டு, அங்ஙனும் ஓரவதி காண்கிறிலோம். [பாரெல்லாமுண்ட] - ப்ரளயாபத்தில் தரம்பாராதே எல்லாரையும் ரக்ஷித்தவன். ஜகத்துக்கெல்லாம் வந்தவாபத்துப் போருமாயிற்று இவளுக்குவந்தது. ப்ரளயங்கொள்ளப்புக்க ஜகத்து மடலெடுக்கப்புகமாட்டாமையன்றே ரக்ஷித்தது, தந்தாமால் பரிஹரிக்கவொண்ணாத ஆபத்துக்களில் உதவுமவனன்றோ? அன்று ஒருவர் அர்த்தியாதிருக்க ரக்ஷித்தான், இன்று இரந்ததே குற்றம். [நம்பாம்பணையான்]- "உடம்பிலேயணைய வேணும்" என்பார்க்கு உடம்புகொடுக்குமவன். ஸம்ஸாரிகளுக்குச் செய்யுமதும் பெற்றிலேன், அநந்யப்ரயோஜநர்க்குச் செய்யுமதும் பெற்றிலேன். ஸாமாந்யரக்ஷணமு மில்லையாயிற்று, விஶேஷரக்ஷணமு மில்லையாயிற்று. [நம்]- ஸம்ஶ்லேஷதசையில் கையாளாய்த் தாழநின்று பரிமாறினபடி. அத்தாலே, கூப்பிடுகைக்குவேண்டுவது பண்ணிப்போனானித்தனை. [வாரானால்]- வருகிறிலன். வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கவேண்டா, உடம்பிலே யணைக்கவேண்டா, வந்து முகங்காட்டவமையும். "ஊஷுஷ்வநவஹி நஶ்ஶோகேவேநேஷ்யதி ராகவ: । தஸ்யைவ பஸ்யதோ லோகஸ்ய ஸாக்ஷ்யப்ஷிவஹாஸ்யா:॥". [ஆவிகாப்பார்-ஆர்] - ப்ரளயத்தின்கையிலேயகப்பட்டாரைப்போலே இந்தராத்ரியின்கையிலே யகப்பட்டுக்கிடக்கிற நான் ப்ராணரக்ஷணம்பண்ணவோ? "எம்மில்முன்னவனுக்கு மாய்வராலோ" என்று எனக்குமுன்னே தளருகிற தோழிகாக்கவோ? ஹிதம்சொல்லுகிற தாயார் காக்கவோ?

பழிசொல்லுகிற ஊரார் காக்கவோ? [எல்லே] - என்னே. ஆஶ்சர்யத்திலேயாதல்; தோழிஸந்நிதி யின்றிக்கேயிருக்க, வாஸனையாலே அவளை ஸம்போதிக்கிறாளாதல். [வல்வினையேன்] - ஆபத்ஸகனாய் ஆஶ்ரிதஸம்ஶ்லேஷஸ்வபாவனானவன் உதவாதபடியான மஹாபாபத்தைப் பண்ணினேன். [வல்வினையேனுவி] - விரஹத்துக்குச் சிளையாத ஆவி. பிரிவேஹேதுவாக நூறேபிராயமென்னும் ஆவி. [இனி-ஆர்] - ஆபத்துக்களிலே உதவிப்போருமவன் உதவாதபின்பு, வேறு யார் என்னை நோக்கவோ?

ஈடு.—முதற்பாட்டு. ப்ரளயாபத்திலே வந்து உதவினவன் என்னை விரஹ ப்ரளயங்கோக்க வந்து உதவாதபின்பு, இனி நான்ஜீவிக்கை என்று ஒரு பொருளுண்டோ? என்று தன்ஜீவநத்திலே நசையறுகிறாள்.

[ஊரெல்லாம்துஞ்சி] - ஊரவர்கவ்வை ஸ்ராரகமாக மடலூரவிருந்தோம், இனி ஆர்பழி யாரகமாக நாம் மடலூருவது. சிலர் உறங்கச் சிலர் உணர்ந்திருக்கையன்றிக்கே, எல்லாருமொக்க உறங்கிற்று. திருவடிசெல்லுகிறக்ஷணத்திலே ராக்ஷஸிகளடைய உறங்கினாற்போலே, பழிசொல்லுவாரடங்க உறங்கிற்றாயிற்று. அன்றிக்கே, இவள்பிறந்தவூராகையாலே இவள்தசையைக்கண்டு ஶோகித்து, கோரைசாய்ந்தாற்போலே எல்லாருமொக்க உறங்கினபடியைச்சொல்லிற்றாகவுமாம். நாகபாசத்தினன்றாகில் ஒரு ஸ்ரீஜாம்பவான்மஹாராஜர், திருவடிதொடக்கமானார்தானுணர்ந்திருந்தமையுண்டிறே; இங்கு அங்ஙனுமொருவர் இல்லையாயிற்று. ஆக, பழிசொல்லுவாரோடு ஹிதஞ்சொல்லுவாரோடு உசாத்துணையாவாரோடுவாசியற, எல்லாருமொக்க உறங்கிற்றென்கை. இத்தால் சொல்லிற்றாயிற்று - பழிசொல்லியலைப்பாருங்கூட இல்லாதபடி எல்லாருங்கூட உறங்குகையாலே, சிலருடன் உசாவிக்காலக்ஷேபம்பண்ணவொண்ணாதபடியான தசைபிறந்தபடி சொல்லுகிறது. ஊரெல்லாம் உறங்கிற்றாகில், புறம்பே லோகத்திலேபோயாகிலும் உசாத்துணையாவாருண்டாகில் பார்த்தாலோ? என்ன,—[உலகெல்லாம்நள்ளிருளாய்] - ப்ரளயங்கோத்தாற்போலே லோகமடைய இருளேயாயிற்று. நள்ளேன்று - நடுவாதல், செறிவாதல். நடுவான இருளென்னுதல், செறிவான இருளென்னுதல். அன்றிக்கே, எல்லாப்பதார்த்தங்களினுடையவும் ஒலியடங்கினால் ராத்ரிதனக்கென்னவே யொருத்வநியுண்டு, அத்தைச்சொல்லுகிறதாதல். ஆக, சக்ஷுர்விஷயமாவதொன்று மில்லாதபடியாயிற்றென்கை. [நீரெல்லாம்தேறி] - ஜலசரஸத்வங்களடைய ஆழவிழிந்து, அங்குள்ளத்வநியும் அடங்கிற்று. ஊரெல்லாம்துஞ்சி

---

முதற்பாட்டு.—ஊரெல்லாம் இத்யாதி. "பாரெல்லாம்" இத்யாதியைக்கடாக்ஷித்து - ப்ரளயாபத்திலே இத்யாதி.

ஊரெல்லாம்துஞ்சினால் தனக்குவந்ததேதென்ன - ஊரவர் இத்யாதி. "எல்லாம்" என்றதுக்கு அர்த்தம் - சிலருறங்க இத்யாதி. ப்ரதிகூலரடைய உறங்கினதுக்கு த்ருஷ்டாந்தம் - திருவடி இத்யாதி. அன்றிக்கே, "ஊரெல்லாம்" என்று - தாய்மார் தோழிமார் தடஸ்தரெல்லாரையும் சொல்லுகிறதென்று விவக்ஷித்து, எல்லாருமொக்க அவிஶேஷேண உறங்கக்கூடுமோ? என்ன - அன்றிக்கே இவள்பிறந்த இத்யாதி. ஶோகம் அதிஶயித்தால் உறங்கக்கூடாதாகையாலே, கோரைசாய்ந்தாற்போலே எல்லாருமொக்க மோஹித்துக்கிடக்கிறபடியைச் சொல்லுகிறதென்று கருத்து. ஆக, ப்ரதிகூலரெல்லாம் உறங்கியென்று முந்தின அர்த்தம், தாய்மார்தோழிமார் தடஸ்தரெல்லாரும் உறங்கியென்று த்விதீயார்த்தம். த்விதீயார்த்தத்தில், "எல்லாம்துஞ்சி" என்றத்தாலே ஒருவ்யாவ்ருத்தி அருளிச்செய்கிறார் - நாகபாச இத்யாதி. நாகபாசத்தினன்று - ப்ரஹ்மாஸ்த்ரத்தினன்று உக்தார்த்தத்வயநிகமநம் - ஆகப்பழி இத்யாதி. உசாவுகை - சொல்லுகை. விவரணம் - நடுவான

என்கையாலே - சிலர்வார்த்தைகேட்டுப் போதுபோக்குமதில்லையென்கை. உலகெல்லா மென்று - கண்ணுக்கிலக்காமதொன்றில்லாமையாலே ஒன்றைக்கண்டுபோதுபோக்குமதில்லை யென்கை. நீரெல்லாம்தேறி என்கையாலே - முதலிலே ச்ரவணேந்த்ரியத்துக்கு விஷய மில்லையென்கை. இவைதான் - ஸர்வேந்த்ரியவ்ருத்திகளுக்கும் உபலக்ஷணமாயிருக்கிறது. பகலில்வந்தால் இந்த்ரியங்கள் ஸ்வஸ்வவிஷயங்களிலே பல்லிபற்றுகையாலே ஆற்றாமை அரையாறுபட்டிருக்கும், ராத்ரியில் எல்லா இந்த்ரியங்களுக்கும் பிரிந்தவிஷயமொன்றுமே இலக்காகையாலே ஆற்றாமைகரைபுரண்டிருக்கும். [ஓர்நீளிரவாய்நீண்டதால்] - பண்டும் ராத்ரிநெடுகாநிற்கச்செய்தே பகலும் இரவுமாய்வருமிறே, பகல்விரவாதராத்ரியாய். [நீண்ட தால்] - மநுஷ்யர்களுடைய ராத்ரியிற்காட்டில் தேவர்களுடையராத்ரி நீண்டிருக்குமாகிலும் அதுக்கு அவதியுண்டு, அங்ஙனுமொரு அவதியில்லையாயிருந்தது. [பாரெல்லாமுண்ட] - ப்ரளயாபத்தில் தரம்வையாதே எல்லாரையுமொக்கரக்ஷித்தவன். ப்ரளயாபத்திலகப்பட் டாரெல்லார்க்கும் உண்டான ஆபத்து இவளொருத்திக்கும் உண்டுபோலேகாணும். ப்ர ளயத்தில், சிலாமட்டலடுகைகப்புக்கு அதுவும்மாட்டாத தசையுண்டாயன்றிறே உதவிற்று. தந்தாமால் பரிஹரித்துக்கொள்ளவொண்ணாதபடியான ஆபத்துவந்தால் உதவுமவன். [நம் பாம்பணையான] - உகந்தார்க்கு உடம்புகொடுக்குமவன். திருவநந்தாழ்வானைப் படுக்கை யாகவுடையவன். ஆக, அஸ்ப்ருஷ்டஸம்ஸாரகந்தர் படியுமல்லையாயிற்று, ஸம்ஸாரிகள் படியுமில்லையாயிற்றே! நமக்கென்கிறாள். நித்யஸூரிகளை நித்யாநுபவம்பண்ணுவிக்கும்; ஸம்ஸாரிகளுக்கு அபேக்ஷையின்றிக்கே இருக்கச்செய்தேயும், தான் அறிந்ததாக ஆபந்நரான வாறேவந்து ஆபந்நிவாரணம்பண்ணும், தனக்கொட்டை ஸம்பந்தத்தாலே. [நம்] - ஸம்ஶ் லேஷத்து, கூப்பிடுகைக்குவேண்டுவது கொடுத்தபடியாலே - நம் என்கிறாள். [வாரானால்] - வயிற்றிலேவைத்து ரக்ஷிக்கவேண்டா, உடம்போடே அணையவேண்டா, வந்துமுகங்காட்ட வமையுங்கிடீர். "ஊர்த்வம் வஹ்நிர் நப்ரயாக்ஷஸ்வம் நஷ்டாதிராவ: | தஸ்ஸ்வ

இத்யாதி. நடுவென்று - ஸாராயத்தைச்சொல்லுகிறது. சிலர்வார்த்தைகேட்டு என்றவநந்தரம், 'அதுக்குத் தானும் ப்ரத்யுத்தரஞ்சொல்லவ' என்றுகூட்டுவது; இதுக்கு நியாமகம் - "சிலருடனுசாவ" என்று கீழ் அருளிச்செய்கையாலே. இத்தால் - வாகிந்த்ரியத்துக்கு விஷயமில்லையென்றபடி. ஸர் வேந்த்ரியவ்ருத்திகளுக்கும் - ஸர்வேந்த்ரியவ்ருத்திவிஷயபதார்த்தங்களுக்கும். விஶ்லேஷதுக்கம் திவா ராத்ரவிஶேஷமறஸமாநமாயிருக்க, ராத்ரியில் துக்கம் அதிஶயிக்கைக்கு ஹேதுசொல்லுகிறது - பகலில் வந்தால் இத்யாதி. பல்லிபற்றுகை - பாவிபாயகை. பல்லிபற்றினாற்போலே ஸ்வஸ்வவிஷயங்களை விடாதே பற்றுகை. "ஓர்" என்றதுக்கு பாவம் - பண்டும் இத்யாதி. பண்டும் ராத்ரிநெடுகாநிற்க என்றது - "சேட்பட்டயாமங்கள்" என்றத்தைப்பற்ற. பகலுமிரவுமாய் என்றது - "சுடர்கொளி ராகப்பகல்" என்றததைப்பற்ற. விரவாத - கூடாத. "நீளிரவாய" என்னவமைந்திருக்க, "நீண்ட தால்" என்றுவிஶேஷித்ததுக்கு பாவம் - மநுஷ்யர்களுடைய இத்யாதி. "எல்லாம்" என்றதுக்கு பாவம் - ப்ரளயாபத்தில் இத்யாதி. "ஸஹஸ்ரநாம ஹோமாந்யாய:" என்று எல்லார்க் கும்வந்த ஆபத்தைரக்ஷித்தோம், உமக்கொருவர்க்காகச் செய்யப்போமோ? என்ன; இதுக்குப்பரிஹார ரூபேண வ்யாக்யாதாவின் ஈடுபாடு - ப்ரளயாபத்திலகப்பட்டார் இத்யாதி. "பார்" என்ற அம்சத்தை ஸமாதிக்கு பாவம் - ப்ரளயத்தில் இத்யாதி. இத்தால்பலிதம் - தந்தாமால் இத்யாதி. இவ்விஶே ஷணத்வயத்துக்கும் பாவம் - ஆக இத்யாதி. அவர்கள்பக்கல் இவன் செய்கிறதேதென்ன - நித்ய ஸூரிகளை இத்யாதி. இத்தசையிலும் முகங்காட்டாதிருக்க, "நம்" என்பானென்? என்ன - ஸம்ஶ் லேஷித்து இத்யாதி. கூப்பிடுகைக்குவேண்டுவதென்றது - ப்ராவண்யம். முகங்காட்டினவாறே துக்கம்போமோ? என்ன - ஊர்த்வம் வஹ்நி இத்யாதி. "ஊர்த்வம் வஹ்நிர்நப்ரயாக்ஷவ

ஸ்ய லோகஸ்ய ஸமுத்யந்நிவ பாஸ்கர:" (த்ருஷ்டஏவஹி நஶ்ஶோக மபநேஷ்ய திராகவ: - தமஸ்ஸர்வஸ்யலோகஸ்ய ஸமுத்யந்நிவபாஸ்கர:). [இனி] - இவ்வளவில். [ஆவிகாப்பார் - ஆர்] - ப்ரளயாபத்தில் அகப்பட்டாரோபாதி ஆபந்நையாயிருக்கிற நான் ரக்ஷிக்கவோ, "எம்மின்முன்னவனுக்குமாய்வராலோ" என்கிறபடியே - ' இவளுக்கு அவன் வேணும் ' என்று என்பேற்றுக்கு எனக்குமுன்னே நோவுபடுகிற தோழி ரக்ஷிக்கவோ, ஹிதஞ்சொல்லுகிறதாயார் ரக்ஷிக்கவோ, பழிசொல்லுகிறஊரார் ரக்ஷிக்கவோ? [எல்லே] - ஆஶ்சர்யத்திலேயாதல், தோழியை ஸம்போதிக்கிறளாதல். மேலே "அன்னையரும்தோழியரும்" என்று - அவர்களும் உறங்கினார்களென்னுநிற்கச்செய்தேயும், தன் ஆபத்தே செப்பேடாக "இவ்வளவில் அவள் உணர்ந்திருக்க ஸம்பாவனையுண்டு" என்றுபார்த்து - எல்லே என்கிறாள். [வல்வினையேன்] - ஸர்வரக்ஷகனுமாய், உடம்போடணைந்தாரைப்பிரியாதவனுமாயிருக்கிற அவன் வந்து உதவாதபடியாயிருக்கிற மஹாபாபத்தைப்பண்ணினேன். [வல்வினையேனாவி] - பிரிவே ஹேதுவாக நூறேபிராயமாயிருக்கிற என்னுடைய ஆவியை. "பிரிவுக்குச்சிதையாத இது இனிமுடியப்புகுகிறதோ" என்றிருக்கிறாள். ரக்ஷகனானவன் வந்திலன், எனக்குமுன்னே தோழி நோவுபட்டுக்கிடந்தால், இனிவாயகர் ரக்ஷகராகவோ.

## இரண்டாம் பாட்டு.

ஆவிகாப்பாரினியார்? ஆழ்கடல்மண்விண்மூடி
மாவிகாரமாய் ஓர்வல்லிரவாய்நீண்டதால்
காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாரானால்
பாவியேன்நெஞ்சமே! நீயும்பாங்கல்லையே.

**ஆ.**—(ஆவிகாப்பார்.) ஆழ்கடல்மண்விண்மூடி மாவிகாரமாய் ஓர் வல்லிரவாய்நீண்டது, காவிசேர்வண்ணன் என்கண்ணனும் வருகிறிலன், பாவியேன்நெஞ்சமே, நீயும் எனக்குத்துணையன்றியே போனாய், ஆவிகாப்பாரினியார் என்கிறாள்.

**ஒ.**—இரண்டாம்பாட்டில், இத்தசையிலே க்ருஷ்ணனும் வருகிறிலன், மஹாபாபியான என்னோட்டை ஸம்பந்தத்தாலே, நெஞ்சே, நீயும் பாங்கன்றியே ஒழியாநின்றாய் என்கிறாள்.

---

ஷ்டி ராகவ: । தமஸ்ஸர்வஸ்ய லோகஸ்ய ஸமுத்யந்நிவ பாஸ்கர: ||௧||" இதி ஸ்ரீராமாயணே [அந:] த்ருஷ்டிரேவ ஹி தாம் ஸர்வாணாம் ஶோகநாஶ:. எம்மின் முன்னவனுக்குமாய்வர் - அவன்விஷயமாக ஈடுபடுகிற எனக்கு முன்னே, "இவளுக்கு அவனுதவப் பெறுகிலதில்லை" என்று அவன் பொருட்டு ஈடுபடாநிற்பர்களித்யர்த்த:. "அன்னையரும்தோழியரும்-துஞ்சுவரால்" என்றிருக்க, தோழியை ஸம்போதிக்கக்கூடுமோ? என்ன - மேலேஅன்னையரும் இத்யாதி. செப்பேடு - தாம்ரஶாஸநம். " வல்வினையேன் " என்றதுக்குத்தாத்பர்யாந்தரம் - பிரிவே ஹேதுவாக இத்யாதி. வல்வினையேனுடையாலே நூறேபிராயமாயிருக்கிறவென்னுடைய என்றபடி. "நூற்றுபிராயமாய்" என்று நிஶ்சயிக்கிறது எப்படியென்ன - பிரிவுக்கு இத்யாதி. சிதையாத - இளையாத. "இனி" என்றதுக்கு பாவம் - ரக்ஷகனானவன் இத்யாதி. வாயகர்-பழிசொல்லுமவர்கள். ஊரெல்லாம் என்றுதொடங்கி வாராநால், எல்லே, இனி - வல்வினையேனாவிகாப்பார் - ஆர் என்று அந்வயம்.

[ஆழ்கடல் என்று தொடங்கி] - அபரிச்சேத்யமான கடலையும் பூமியையும் ஆகாசத்தையும் அடையமறைத்து அவ்வளவன்றிக்கே மஹாவிகாரத்தையுடைத்தாய் நூறாயிரம் ஆதித்யர்கள் வந்தாலும் பேதிக்கவொண்ணாதது ஒருராத்ரிவந்து தனக்கு அவஸாநமில்லாதபடியாயிற்று. [காவிசேர்வண்ணன்] - காவிபோலேயிருக்கிற நிறத்தையுடையவன்.

ப.—அநந்தரம், தன்னுடைய ஆஸ்ரூப்யத்தை ப்ரகாஸிப்பித்து ஆஸ்ரித ஸவ்யனான க்ருஷ்ணனும் வருகிறிலன்; நெஞ்சே, நீயும் விதேயமாயிருக்கிறிலை, இனி ப்ராணரக்ஷணம்பண்ணுவாரார் என்று நெஞ்சைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஆழ்-ஆழ்ந்த, கடல்-கடலையும், மண்-பூமியையும், விண்-ஆகாசத்தையும், மூடி-மூடி, (அவ்வளவில்நில்லாதே அகிலலோகத்தையும் விளாக்கொலைகொள்ளும்படி), மா-பெரிய, விகாரமாய்-விகாரத்தையுடைத்தாய்க்கொண்டு, வல்-(அநேகம் ஆதித்யர்களாலும் பேதிக்கவரிதான) சிக்கெனவையுடைத்தான, ஓரிரவாய்-தமோமயராத்ரியேயாய், நீண்டது-முடிவறவளர்ந்தது; காவி-நெய்தலோடு, சேர்-சேர்ந்த, வண்ணன்-நிறத்தையுடையனாய், என்-அங்ஙனம் எனக்கு ஸ்வம்மாம்படிபவ்யனான, கண்ணனும்-க்ருஷ்ணனும், வாரான்-இவ்வளவில்வருகிறிலன்; பாவியேன்-(பவ்யனும் அபவ்யனாம்படியான) பாபத்தையுடையேனான என்னுடைய, நெஞ்சமே-நெஞ்சமே! (அவனைப்போலே), நீயும்-நீயும், பாங்கல்லை-அநுகூலித்திருக்கிறிலை; இனி-ரக்ஷகனான அவனும் உதவாதே உசாத்துணையான நீயும் உதவாதபின்பு, ஆவி-ப்ராணனை, காப்பார்-காப்பார், ஆர்-ஆர்? ஒருவருமில்லையென்று கருத்து.

இ.—இரண்டாம்பாட்டில், இத்தசையில் உதவக்கடவ க்ருஷ்ணனும் வருகிறிலன், நெஞ்சே, நீயும் அபவ்யமாகாநின்றாயென்கிறாள்.

[இனி-ஆவிகாப்பார்-ஆர்] - உதவுமவன் உதவுகிறிலன், நெஞ்சும் பாங்காகிறதில்லை, இனி காப்பார் ஆர்? [ஆழ்கடல்இத்யாதி] - அபரிச்சேத்யமான கடலையும் பூமியையும் ஆகாஸத்தையும் மறைத்து, அவ்வளவிலும் பர்யவஸியாதே மஹத்தான விகாரத்தை உடைத்தாய், நித்யவிபூதியையும் கணிசிக்கிறாப்போலே யிராநின்றது. ஸ்ரீவிஸ்வரூபங்காட்டினாப்போலே. ஸர்வஸக்தி செய்யுமத்தையும் செய்யாநின்றது. அத்விதீயமாய் அதிப்ரபலமான ராத்ரியாய் முடிவுகாணப்போகிறதில்லை. நூறாயிரமாதித்யர்களாலும் பேதிக்கப்போகாத ப்ராபல்யம். இருளுக்கும ராத்ரிக்கும் வாசி தெரிக்கமாட்டாமையாலே - இருளை ராத்ரியென்கிறாள். [காவிச்சேர்வண்ணன்] - 'ஹம்ஸவ்ருந்தவலவத்ராஸம்' என்கிற நிறத்தையுடையவன் - இருளோடு சேர்ந்த நிறமாகையாலே, இருளோடே செறிந்து வரலாங்கிடீர். கம்ஸன் காவலாகவைத்த துஷ்ப்ரக்ருதிகள் கண்படாதபடி இருளிலே வந்து அவதரித்தவன். அன்று தாமஸப்ரக்ருதிகளைப்போக்க வந்தவனுக்கு, இன்று இந்ததமஸ்ஸைப் போக்கலாகாதோ. [என்கண்ணன்] - முன்பு ராத்ரிகளிலே வந்து உதவுமவன். [பாவியேன்நெஞ்சமே] - அவனும் என்னுடையவனாயிறே யுதவாதொழிந்தது, ஆபத்துக்கு உதவாதவனாயனதே, அது உனக்குமொக்குமே. என்கண்ணனை என்னலாம்படியிறே அவன்பவ்யதை. பவ்யனானவனை அபவ்யனாம் பாபத்தைப் பண்ணினேன். [நீயும்பாங்கல்லையே] - ஸேஷியாய் ஸ்வதந்த்ரனானவன் செய்யுமதைப், பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்கிற நீயும் செய்யவேணுமோ. "ப்ரணயித்வத்தை விட்டேன்" என்னலாம், ஸ்வதந்த்ரனாகையாலே; உனக்கு அங்ஙன் இருப்பதொன்றுண்டோ;

ஈடு.—இரண்டாம்பாட்டு. இத்தசையில் க்ருஷ்ணனும் வருகிறிலன்; என்னோட்டைஸம்பந்தத்தாலே, அவனைப்போலே நெஞ்சே! நீயும் பாங்கன்றிக்கே யொழிந்தா யென்கிறாள்.

[ஆவிகாப்பாரினியார்] - உதவுமவன் உதவிற்றிலன், நெஞ்சும் பாங்கன்றிக்கே யொழிந்தது, இனிரக்ஷகரார். கண்ணனும்வாரான் - நெஞ்சமே! நீயும்பாங்கல்லை - ஆவி காப்பாரினியார். [ஆழ்கடல் இத்யாதி] - வ்யாபகபதார்த்தங்களை வ்யாப்யங்களிலே யொன்றுமறைத்தது. அபரிச்சேத்யமானகடல், எல்லாப்பதார்த்தங்களுக்கும் இடங்கொடுக்கக்கடவபூமி, அதுக்கும் அவகாசப்ரதாநம்பண்ணும் ஆகாசம், இவற்றையடையமறைத்து. [மாவிகாரமாய்] - பின்னையும் அவ்வளவில் பர்யவஸிப்பதாயிருக்கிறதில்லை, மஹாவிகாரத்தையுடைத்தாய் நித்யவிபூதியையும் கணிசிக்கிறாப்போலேயிராநின்றது. வைஶ்வரூப்யங்காட்டின ஸர்வஶக்தி செய்வதெல்லாம் செய்யாநின்றது. [ஓர்வல்லிரவாய்] - ராத்ரிக்கும் இருளுக்கும்வாசி புத்திபண்ணியிராமையாலே - இருளை ராத்ரியென்கிறாள். [ஓர்வல்லிரவாய்] - திருவாழியையிட்டுத் துண்டித்து உதவவரிலும் வரவொண்ணாதபடி செறிந்திருக்கை. [நீண்டதால்] - ஒருமுடிவுகாணவொண்ணாது. [காவிசேர்வண்ணன்] - "ஸ்ருஹ்லேந்தீவரபத்ராபம்" (புல்லேந்தீவரபத்ராபம்) என்கிற நிறத்தையுடையவன். இருளோடு ஒருகோவையானநிறம், *இருளன்னமாமேனியிறே. கறுப்பு உடுத்து வருவாரோபாதி வரலாங்கிடீர். [என்கண்ணன்] - கம்ஸன் காவலாகவைத்த துஷ்ப்ரக்ருதிகள் கண்படாதபடி, இருளிலேவந்து உதவினவன். † நள்ளிருட்கண்வந்த வேந்தை பெருமானன்றே. [வாரானால்] - தாமஸபரக்ருதிகளை நிரஸிக்கவருமவன், தமஸ்ஸு

இரண்டாம்பாட்டு.—ஆவிகாப்பார் இத்யாதி. "ஆழ்கடல்" இத்யாதியைப்பற்ற - இத்தசையில் இத்யாதி. நெஞ்சே நீயும் பாங்கன்றிக்கேயொழிந்தாய் என்றது - அவனை அநுஸந்தித்து யார்த்துக்கொண்டிருக்கைக்கு, நீ எனைதுமாயிருக்கிறாயில்லை; "என்னெஞ்சினாருமங்கேயொழிந்தார்" என்று, நீயும் அங்கேயொழிந்தா யென்றபடி.

அந்வயமுகேநதாத்பர்யம் - உதவுமவன் இத்யாதி. தாத்பர்யாநுகுணமாகப் பதாந்வயங் காட்டுகிறார் - கண்ணனும் இத்யாதி. வ்யாபகபதார்த்தங்களாவன - பூதங்கள். வ்யாப்யங்களிலே யொன்று என்றது - ப்ருதிவீகார்யத்வேந வ்யாப்யமான தமஸ்ஸென்றபடி. "தமஸ்ஸு தேஜஃகாயம்" என்றும் சொல்லுவார்கள். வ்யாபகங்களவை? என்ன - அபரிச்சேத்யமான இத்யாதி. "ஆழ்" என்றது - இவ்விடத்தில், அபரிச்சேத்யமென்றபடி. கணிசிக்கிறாப்போலே - ஸ்வாதீநமாக்க அபேக்ஷிக்கிறாப்போலே. வ்யாப்யமானது வ்யாபகங்களை வ்யாபித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - வைஶ்வரூப்யம் இத்யாதி. அதாவது - அர்ஜுனனுக்கு க்ருஷ்ணன் வைஶ்வரூப்யங்காட்டினபோது எங்கும் வ்யாபித்தாப்போலே, இதுவும் எங்கும் வ்யாபித்ததென்றபடி. இப்படிசெய்கிறது இருளாகையாலே, "ஓர்வல்லிருள்" என்னவேண்டாவோ? என்ன - ராத்ரிக்கும் இத்யாதி. "வல்" என்றதுக்கு ஸாவம்-திருவாழியை இத்யாதி. காவி-கருநெய்தல். "ஸ்ருஹ்லேந்தீவரபத்ராபம் சதுர்பாஹும் உதாரஹாஸம் ஶ்ரீவத்ஸவக்ஷஸம் ஜாதம் தத்ருஶாதே நகேஸவம்" [illegible] ப்ரதீயே. பலிதம் - இருளோடு இத்யாதி. இதுக்குப்ரமாணம் - இருளன்ன இத்யாதி. இருளோடொத்த ஶ்லாக்யமானவடிவையுடைய இத்யர்த்தஃ. *பெரியதிருவந்தாதி, இருபத்தாறும் பாட்டு, "யானுமென்னெஞ்சும்" இத்யாதி. இப்படிசொல்லுகிறதுக்கு ஸாவம் - கறுப்புடுத்து இத்யாதி. விஶ்லேஷித்தவனை "என்" என்கிறதென்? என்ன - கம்ஸன் இத்யாதி. அப்படி இருளிலே வந்து உதவினானோ? என்ன - நள்ளிருட்கண் இத்யாதி. செறிந்த இருளிலேவந்துதோன்றின என்னுடையகுலநாதரானவர் இத்யர்த்தஃ. †திருமொழி, ஏழாம்பத்து, அஞ்சாந்திருமொழி, முதற்பாட்டு,

தன்னையே நிரஸிக்கவந்தாலாகாதோ? வந்தானாகில் அப்போதே விடியுமே இவளுக்கு, ‡ பகற்கண்டேன் நாரணனைக்கண்டேனிறே. [பாவியேன்நெஞ்சமே] - உனக்கும் அவனோடொத்த ப்ராப்தியேயிறே. அவன் உதவும் ஸ்வபாவனல்லாமையன்றே உதவாவிட்டது, என்னோட்டை ஸம்பந்தமிறே - என்மார்விலேயணைக்கையிறே அவன் உதவாதொழிகிறது, அது உனக்குமொக்குமிறே. [நீயும்பாங்கல்லையே] - ஓராகாரத்தாலே ஸாஜாத்யமுண்டானால் வேறோராகாரத்தாலே வ்யாவ்ருத்தியுண்டானாலாகாதோ, ஸ்வதந்த்ரனாய் பரதந்த்ரனான அவனோபாதியாகவேணுமோ பாரதந்த்ர்யமேஸ்வரூபமான நீயும். அவனுக்கு ப்ரணயித்வம் தவிர்ந்ததேன்றால் ஸ்வாதந்த்ர்யமேஜீவிக்கும், உனக்கு அங்ஙனேயன்றில்லையே. இருவர் ஹவ்யராயிருந்தால், அவர்களிலே ஒருவன் அஹவ்யனானால் மற்றையவனும் அஹவ்யனாகவேணுமோ. "என்கண்ணனும்வாரானால்," "என்னெஞ்சமே" என்று ஒக்கச்சொல்லலாயிருக்கிறதிறே. (உ)

# மூன்றாம் பாட்டு.

நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமே! நீளிரவும்
ஓயும்பொழுதின்றி ஊழியாய்நீண்டதால்
காயுங்கடுஞ்சிலை என்காகுத்தன்வாராநல்
மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே.

ஆ.—(நீயும்.) மடநெஞ்சமே! நீயும் துணையன்றியேபோனாய். நீளிரவும்ஓயும் பொழுதின்றி ஊழியாய்நீளாநின்றது, ப்ரதிகூலநிரஸநஸ்வபாவமான ஸ்ரீஸார்ங்கத்திருவில்லையுடைய என்காகுத்தன்வருகிறிலன், வாராதொழிந்தால்தான் முடியலாமிறே, 'முடிவன்' என்றால் முடியவொண்ணாதபடி பாபத்தினால் பராதீநையாய்ப்பிறந்தேனென்கிறாள்.

---

"தந்தைகாலில்" இத்யாதி. தாமஸப்ராக்ருதிகள் - கம்ஸாதிகள். வந்தாற்பலமேதென்ன - வந்தானாகில் இத்யாதி. அதுக்குநியாமகமேதென்ன - பகற்கண்டேன் இத்யாதி. இரவுசகலசாதபகலாய்ச் செல்லும்படியானதொரு நல்வடிவைக்கண்டேன், ஒருகாலத்திலும் போக்குவரத்தின்றிக்கேயிருக்கிற உபயவிபூதியுக்தனான நாராயணனாகிற ஆதித்யனைக்கண்டேனித்யர்த்தः. அஜ்ஞாநம்நீங்கி அறிவு பிறந்து ஸவிபூதிகனான எம்பெருமானைக்கண்டேனென்றகருத்து. ‡இரண்டாந்திருவந்தாதி. எண்பத்தோராம்பாட்டு. "என்கண்ணன்" "பாவியேன்நெஞ்சம்" என்றதுக்கு ஹாவம் - உனக்கும் இத்யாதி. ஸம்பந்தமேதென்ன - என்மார்விலே இத்யாதி. கீழே, "நீயும்" என்றசப்தத்துக்கு - ஸமுச்சயமாக அருளிச்செய்து, வ்யாவ்ருத்திபரமாகத் தாத்பர்யார்த்தம் - ஓராகாரத்தாலே இத்யாதி அதாவது - மார்பிலேயணைத்த ஆகாரத்தாலே ஒத்திருந்தாலும், என்னை விஸ்லேஷியாதிருந்த ஆகாரத்தாலே வ்யாவ்ருத்தமானாலாகாதோ? என்றபடி. சப்தத்துக்குத் தாத்பர்யார்த்தம் - ஸ்வதந்த்ரனாய் இத்யாதி. பாதந்த்ரனானநான், ஸ்வதந்த்ரனாய் பாதந்த்ரனானவனைப்போலேயிருந்தால் வரும் அநர்த்தமேதென்ன - அவனுக்கு இத்யாதி. "ஓராகாரத்தாலே" இத்யாதிவாக்யவிவரணம் - இருவர் இத்யாதி. இருவரும் ஹவ்யரென்றதோ? என்ன - என்கண்ணனும் இத்யாதி. ஆழ்கடல் இத்யாரப்ய, நீயும் பாங்கல்லையே,‡இனி - ஆவிகாப்பார் - ஆர் இத்யந்வயः. (உ)

ஒ.—மூன்றும்பாட்டில், ஸகலதுக்கங்களேயும் கெடுத்து உஜ்ஜீவிப்பிக்கும் ஸ்வபாவனன காகுத்ஸ்த்தனும் வருகிறிலன், பரதந்த்ரையாகையாலே முடியவும் விரகு பெறுகிறிலேனென்று இன்னாதாகிருள்.

[நீளிரவு என்றுதொடங்கி] - அபரிச்சேத்யமாம்படி வளர்ந்த ராத்ரி கல்பமாய் வஸ்துதோற்றி ஒன்றும் குறைந்துகாட்டாதே நெடுகிற்று. ப்ரதிகூலரை உஹிக்கும் ஸ்வபாவமாய் ஶர்ஶமாத்ரத்திலே ஹயாவஹமான ஸ்ரீஶார்ங்கத்தையுடையனன சக்ரவர்த்திதிருமகனும் வருகிறிலன்.

ப.—அநந்தரம், அநிஷ்டநிவர்த்தகஶீலனுன சக்ரவர்த்திதிருமகன் வருகிறிலன், பாரதீநையாகையாலே முடியவிரகறிகிறிலேனென்று நெஞ்சைப்பார்த்துச் சொல்லுகிருள்.

நெஞ்சமே - நெஞ்சமே! நீயும் - ஸர்வகார்யத்துக்கும் ப்ரதாநகாரணமான நீயும், பாங்கல்லை - விதேயமாயிருக்கிறிலை; நீள்-பண்டேநீண்டுவருகிற, இரவும்-ராத்ரியும், ஓயும்பொழுது - ஓயுங்காலம், இன்றி-இன்றியே, ஊழிபாய் - கல்பமாய்க்கொண்டு, நீண்டது - வளர்ந்துவிட்டது; காயும் - ஆஶ்ரிதவிரோதிகளைச்சுட்டுப் போகடுவதான, கடு-கடிய, சிலை - ஸ்ரீஶார்ங்கத்தையுடையனை, என்காகுத்தன் - பரோபகாரஶீலமான குடியிலேபிறந்த சக்ரவர்த்திதிருமகன், வாரான் - ஸ்ரீஜநகராஜன்திருமகளுக்கு உதவினுப்போலேவந்து உதவுகிறிலன்; வல்வினையேன் - (அவன் உதவாமைக்கடியான) ப்ரபலபாபத்தையுடையநான், பெண்-(முடியும்போதும் ஸ்வாதந்த்ர்யமில்லாத) பெண்ணுய், பிறந்து - பிறந்து, மாயும்வகை - முடியும்ப்ரகாரம், அறியேன் - அறிகிறிலேன்.

இ.—மூன்றாம்பாட்டில், ஸகலதுக்கங்களேயும்போக்கும் காகுத்ஸ்த்தன் வருகிறிலன், பரதந்த்ரையாகையாலே முடியும்விரகு அறிகிறிலேனென்கிருள்.

[நீயும்இத்யாதி]- 'மநவ' என்கிறபடியே உன்னையொழிய ஒருகார்யம்செய்யவொண்ணுதபடிப்ரதாநமான நீயும் பாங்காகிறிலை. முதலிலேநெடிதானராத்ரியும், முடிவு காணவொண்ணுதே-வளராநின்றுலும் குறைந்துவரலாமிறே அங்ஙனேசெய்யாதே, நிலை பெறுகிறதில்லை. அவ்வளவன்றிக்கே, "ராத்ரி" என்கிற பேரைப்போகட்டு, "கல்ப" என்கிற பேரையுடைத்தாய்; அவ்வளவிலும் தலைக்கட்டாதே நெடுகாநின்றது. [காயும்கடுஞ்சிலை] - ப்ரதிபக்ஷத்தை ஶுஷ்கமாக்குவதாய், பெருமாள்கண்பார்க்கிலும் கண்பாராதஶிலை. "கவசீஹ்யுஹவபவநி:", வில்லையணைக்கவே பணிபோரும்படியிறேயிருப்பது. [என் காகுத்தன்] - பிராட்டிக்கு உதவினது தனக்கு உதவிற்றென்றிருக்கிருள். ஒருநாள் ஓராபத்திலே யுதவினர்க்குப் பின்பு உதவலாகாதோ? "தயரதற்குமகன்தன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாகவே" என்னக்கடவதிறே. இதே "கண்ணனும் வாராஞல்" என்றுள், "அஹிஷிக்தக்ஷத்ரியபுத்ரனல்லேன்" என்று அவன் வரத்தவிர்ந்தாலும், முடிசூடிநோக்கிப்போந்தகுடியிலே பிறந்தார்க்கு வரவேண்டாவோ. 'சினத்தினல்தென்னிலங்கைக் கோமானைச்செற்ற மனதுக்கினியானை" என்றுர்களிறே பெண்கள். இருந்தவிடத்தே சென்று விரோதியைப்போக்கினவன் வருகிறிலன். "கஷியாதாவஹதஹாவ" என்னக்கடவதிறே. [மாயும்வகையறியேன்]- அஹிமதர் வாராவிட்டால் முடிகையிறே ப்ரியம், அதுக்கு விரகறிகிறிலேன். "காஜொஹிஷாாதிகஜி:" என்றுளிறே பிராட்டி. [வல்

விணையேன்] - அவன்வாராமைக்கடியானபாபத்தைப் பண்ணினேன். முடியவும் அரிதான பாபத்தைப் பண்ணினேன். பாபம் மரணஹேதுவன்றிக்கே ஜீவிக்கைக்கு ஹேதுவாயிருக்குமாகாதே, ஜீவிக்கை தேட்டமானபோது அரிதாம், முடிகையும் தேட்டமானபோது அரிதாம், அநிஷ்டாவஹம் பாபமித்தனையிறே. [பெண்பிறந்தே] - முடிகையும் ஜீவிக்கையும் ஸ்வாதீநமல்லாதஜந்மத்தே பிறந்தேன். எல்லாவளவிலும் அவனைநோக்க வேண்டும் ஜந்மமிறே. முடியும்போது, ஆண்பிள்ளையுமாய் ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்தி போல்வார் வேணுமாகாதே.

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஸகலதுஃகங்களையும்போக்கும் ஸ்வபாவனை காகுத்ஸ்தனும் வருகிறிலன், பரதந்த்ரையாகையாலே முடியவும் விரகறிகிறிலே னென்கிறாள்.

[நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமே] - கங்கைக்கு அக்கரைப்பட்டவன்று, இளைய பெருமாளைப்பார்த்து, "பிள்ளாய், நீயும் படைவீடேறப்போ" என்றாரிறே, "வநவாஸம் இவரையொழியவும் தலைக்கட்டலாம்" என்று ப்ரமித்து ; அப்படியே இவரும் தந்திருவுள்ளத்தைப்பார்த்து, "நீயும்பாங்கல்லைகாண்" என்கிறார். "மநவ" (மநஏவ) என்கிறபடியே - நெஞ்சைக்கொண்டேயிறே எல்லாம்பெறவிருக்கிறது, ஆயிருக்கச்செய்தேயும், இன்னாப்பாலே சொல்லுகிறார். [நீளிரவு இத்யாதி] - முதலிலே நெடிதான ராத்ரியானது; அதுக்குமேலே, ஒருமுடிவுகாணவொண்ணாதபடி யிராநின்றது. அடிகாணவொண்ணாத படியுமாய், முடிவுக்கும் ஓரெல்லைகாணவொண்ணாதபடி யிராநின்றது. முடிவுகாணவொண்ணாதிருக்கச்செய்தேயும் அடியற்றிருப்பனவுண்டிறே, இது அப்படியிருக்கிறதில்லை. [ஓயும்பொழுதின்றி] - நின்றவிடத்தில் நின்றும் கால்வாங்கக்கூடவதன்றிக்கே. [ஊழியாய்] - "சாத்தன், கூத்தன்" என்றாற்போலே சிலபேராய், அவர்கள் தாங்கள் ஜீவிக்கப்புக்க

---

மூன்றாம்பாட்டு.—நீயும் இத்யாதி. "காயும்கடுஞ்சிலை" இத்யாதியைப்பற்ற - ஸகல இத்யாதி.

புநஃச "நீயும்பாங்கல்லைகாண்" என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாக பாவம் - கங்கைக்கு இத்யாதி. பிள்ளாய், நீயும் படைவீடேறப்போ என்றாரிறே யென்றது - "அயோத்யாமிதவனவஸம் காமெமுநிமிகஷண। அஹமேகொமஹிஷ்யாமி ஸீதயாஸஹதண்டகாந ॥ கசு ॥" (அயோத்யாகாண்டே, ருக) என்றத்தைப்பற்ற. பாங்கல்லைகாண் - பாங்கன்றிக்கேயொழிந்தாய் காணென்றபடியாய், இத்தால் - உன்னைக்கொண்டு கார்யமில்லையென்று உபேக்ஷிக்கிறாளென்றபடி. "பாங்கல்லைகாண்" என்கிறதென், மநஸ்ஸையொழிய ஒருகார்யமுண்டோ? என்ன - மநவ இத்யாதி. "மநவமநுஷ்யாணாம் காரணம்பந்தமோக்ஷயோஃ। பந்தாயவிஷயா ஸங்கிமுக்த்யைநிர்விஷயம்மநஃ ॥ உஅ ॥" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே, ஷஷ்டே ஸப்தமே. இன்னாப்பு - வெறுப்பு. பாங்கன்றிக்கே யொழிகையாவது - வேறொன்றை யநுஸந்தித்து புரிக்கமாட்டாமை. "நீள்" என்றும், "ஓயும்பொழுதின்றி" என்றும் விஶேஷித்ததுக்கு பாவம் - முதலிலே இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - அடிகாண இத்யாதி. ஆனால், "ஓயும்பொழுதின்றி" என்று - முடிவில்லாமைசொன்னபோதே, அடிகாணவொண்ணாமையும் ஸித்தமன்றோ, "நீளிரவு" என்றுவிஶேஷிக்கவேணுமோ? என்ன - முடிவுகாண இத்யாதி. அதாவது - ஸ்வஸ்வாபத்துக்கு முடிவின்றிக்கேயிருக்கச்செய்தேயும் அடியுண்டாயிருக்குமிறே, அத்தைப்பற்ற விஶேஷிக்கிறதென்றபடி. அடியற்றிருப்பன - அடியுண்டாயிருப்பன. "நீளிரவு" என்று - அடிகாணவொண்ணாதென்றபோதே, முடிவுகாணவொண்ணாமையும் ஸித்தமன்றோ, "ஓயும்பொழுதின்றி" என்றுவிஶேஷிக்கவேணுமோ? என்ன ; ப்ராமஹாவவ்யாவ்ருத்த்யர்த்தம் விஶேஷிக்கவேணுமென்று

வாறே சிறுபேர்தவிர்ந்து, "சோழக்கோனார், தொண்டமானார்" என்று பட்டப்பேர்பெற்று வாழுமாபோலே, ராத்ரியானதுபோய் "கல்பம்" என்னும்பேரை யுடைத்தாகாநின்றது. [நீண்டதால்] - அதுதனக்கும் ஓரவஸாநமுண்டிறே, அதுவுமில்லையாயிற்று இதுக்கு. [காயும் கடுஞ்சிலை இத்யாதி] - ஒருத்தியுடைய நெடிதானராத்ரியைப் பரிஹரிக்கைக்காக வ்யாபரித்த வில்வலியையுடையவனும் வருகிறிலன். ப்ரதிபக்ஷத்தின்மேலே காயாநிற்பதாய், எதிரிகள் பக்கல் பெருமாள்கண்பார்க்கிலும் தான் கண்பாராதபடியான சிலையையுடையவன். அவனுடைய ஶார்ங்கம் என்னளவிற்கண்டிலேன். †(ஶார்ங்கமென்று - பக்ஷபாதத்துக்குப்பேர்.) [என்காகுத்தன்] - பிராட்டிக்கு உதவினதும் "தனக்கு உதவிற்று" என்றிருக்கிறாள். "தயரதற்குமகன்தன்னையன்றி மற்றிலேன்தஞ்சம்" என்று நான் தஞ்சமாகநினைத்திருக்குமவனும் வருகிறிலன். "சினத்தினால் இத்யாதி" - பிராட்டியுடைய விரோதியைப்போக்கினது அவளுக்குக் காரியம் செய்தானாக நினைத்திருக்கையன்றிக்கே, தன்சினம் தீர்ந்தானாயிருக்குமவன். [காகுத்தன்] - கீழே, "கண்ணனும்வாரானால்" என்றது; அபிஷிக்தக்ஷத்ரியபுத்ரரல்லாதார்தாம் தவிருகிறார்கள், முடிசூடி நோக்கும் குடியிலே பிறந்தவனுக்கு வரத்தட்டேன். ககுத்ஸ்த்தகுலோத்பவனானவனும் வாராதொழிவதே! [வாரானால்] - எதிரிகள் வரப்போரவிருக்கையன்றிக்கே, தானே யெடுத்துவிட்டுச் சேன்று பொருமவனும் வருகிறிலன். "**அஹியாதா**" (அபியாதா) - எதிரிகள் வரப்போரவிருக்கை யன்றிக்கே, எடுத்துவிட்டுப் போருகையும் தமக்கேபணியாயிருக்கும். "**ப்ரஹர்த்தாச**" (ப்ரஹர்த்தாச) - தூசித்தலையில்நின்று, "முதல்வெட்டு ஆரது" என்றால், அதில்முற்பாடும் தம்மதாயிருக்கும். "**ஸேநாநயவிஶாரத:**" (ஸேநாநயவிஶாரத:) - தாம்போகாதே, தூசியுமணியும் பேரணியுமாகவகுத்துவிட்டால், ஒக்கநின்று பொருவித்தாற்போலே வென்று மீளும்படி படைகோக்கவல்லவர். [மாயும்வகையறியேன்] - இவன்வாராமையறிந்தால் இனிமுடிகையிறே ஸாதகம், முடியும்விரகறிகிறிலேன். [வல்வினையேன்] - முடிகை ஸாதகமாய்த் தேட்டமானால் அதுவும் கிடையாதபடியான பாபத்தைப்பண்ணினேன். பாபமானது

---

கண்டுகொள்வது. ஒயுகை - முடிகை. ராத்ரியானது - ராத்ரி என்கிற பேரானது. அதுதனக்கும் - அந்தக்கல்பந்தனக்கும். ஒருத்தியுடையநெடிதானராத்ரியென்றது - நெடிதானவிஶ்லேஷ வ்யஸநமென்றபடி. காயாநிற்பதாய் - உஹியாநிற்பதாய். கண்பார்க்கிலும் - தயைபண்ணிலும். சாங்கமென்றது - சாடு; வில்லும், பக்ஷபாதமும். க்ருஷ்ணனன்றோ பெண்களுக்குத்தஞ்சம், பெருமாள் தஞ்சமாயிருப்பரோ? என்ன; பெண்களுடையகார்யம் தன்பேருகச்செய்யுமவராகையாலே தஞ்சமென்கிறாள் - சினத்தினால் இத்யாதி. கோபத்தாலே, அழகியலங்கைக்கு அதிபனைராவணனை நிரஸித்த மனத்துக்கினியானை இதி பாசுரார்த்த:. எடுத்தபாசுரத்துக்கு ஹாவம் - பிராட்டியுடைய இத்யாதி. "காகுத்தன்" என்றதுக்கு ஹாவம் - கீழேகண்ணனும் இத்யாதி. ஶப்தார்த்தம் - ககுத்ஸ்த்த இத்யாதி. "ஊழியாய்நீண்டதால், காகுத்தன்வாரானால்" என்றுகூட்டிஹாவமாதல், தாத்பர்யாந்தரமாதல் - எதிரிகள் இத்யாதி. தான் எடுத்துவிட்டுப்பொருமவனோ? என்ன - அஹியாதா இத்யாதி. "அஹியாதா

ப்ரஹர்த்தாச ஸேநாநயவிஶாரத:। அப்ரத்ருஷ்யஶ்ச ஸங்க்ராமே க்ருத்தைரபி ஸுராஸுரை:॥உகூ॥" ஐத்ரயொத்யாகாண்டே (க). போர - யுத்தம்பண்ண. தூசி - யுத்தம். தூசியுமணியும்-தூசியிலணியும். அணி - இடவணி, வலவணி. பேரணி-பின்னணி. அன்றிக்கே, தூசியும் பின்னணியு மணியுமென்னுதல். தூசி-யுத்தமும், முன்னணியும். அணியாவது-வ்யூஹம். வகுத்து - விபஜித்து. கீழ்வாக்யவிவரணம் - பாபமானது இத்யாதி. புண்யமே ஜீவநஹேது

---

† குண்டலிதம் க்வாசித்கம், ப்ராக்ஷிப்தம்.

விநாஶஹேதுவாகையன்றிக்கே, ஜீவிக்கைக்கு ஹேதுவாவதே! ஜீவிக்கை தேட்டமான போது அரிதாம், முடிகை தேட்டமானபோது அரிதாம், ஏதேனுமாக அநிஷ்டாவஹம் பாபமாமித்தனையிறே. [பெண்பிறந்தே] - பரதந்த்ரஜந்மத்திலே பிறந்தார்க்கு நினைத்த போது முடியப்போமோ. பிறர்க்காக ஜீவிக்கவேண்டும் பரதந்த்ரஜந்மத்திலே பிறக்கைக் கீடான மஹாபாபத்தைப் பண்ணினேன். “**வாவாநாஊகஙஷியஃ**” (பாபாநாமாக ரஸ்ஸ்த்ரியஃ) என்னக்கடவதிறே. “**நவாஸ்ஊதா**” (நசாஸ்யமாதா) - பிராட்டி திருவடியைக்கண்டவநந்தரம், பெருமாள்பக்கல் ப்ரணயரோஷத்தாலே, “இவன் அவர்வர விட்டஆள்” என்று சீறிச் சிலவார்த்தையருளிச்செய்ய; “தேவரீர் எழுந்தருளியிருந்தவிடம் அறியாமலிருந்தாரித்தனையல்லது ஸாவஸந்தத்தில் ஊற்றம்போராமையோ, அறிந்தபின்பு இனித்தாழ்த்தாராகிலன்றோ குற்றமாவது” என்று அச்சிவிட்கு ஆறும்படி சிலவார்த்தை விண்ணப்பம்செய்து; பின்னையுந்தான், “அவரைப்பிரிந்து பத்துமாஸமுண்டே, இவ்வளவும் முடியாமல் தரித்திருந்ததன்றோ தேவரும்” என்று தனக்குக்கருத்து என்னுமிடம் தோற்ற விருந்தான்; அதுவோ உனக்குநினைவு! வாராய், நாட்டார்க்கு, மாதாவென்றும் பிதாவென்றும் ப்ராதாவென்றும் பந்துக்களென்றும் பலதலைத்திருக்கையாலே ஸ்நேஹமானது எங்கும் பாலி பாய்ந்திருக்கும்; பெருமாள் அங்ஙனன்றிக்கே, எல்லார்பக்கல்பண்ணும் ஸ்நேஹத்தையும் என்பக்கலிலே ஒருமடையாகச்செய்து வைக்கையாலே, எல்லாம் செய்தாலும், கடலையணை செய்து விரோதிவர்க்கத்தைக்கிழங்கெடுத்து “தண்ணீர் தண்ணீர்” என்று வருகைதவிரார்; தாபார்த்தன் விடாய்ப்பட்டுப் பந்தலேறவரக்கொண்டு தண்ணீர்ச்சாலுருட்டிக்கிடந்தால் பிழையாதாப்போலே, அவர் இப்படிவரக்கொண்டு நானின்றிக்கே யிருப்பனாகில் பின்னை யவரைக்கிடையாதென்று, அவர்க்காக என்னை நோக்கிக்கொண்டிருந்தேன். அவரைக் கண்ட பிற்றைநாள் நான் இருந்தேனாகிற்காண் நீ இவ்வார்த்தைசோல்லுவ தேன்றருளிறே. “**ஷூத**” (தூத) - முன்பு, “வாநர” என்றாற்போலே சோல்லிப்போந்தவள், இப்போது

---

வொழிய, பாபம் ஜீவநஹேதுவாமோ? என்ன - ஜீவிக்கைதேட்டமானபோது இத்யாதி. “வல்வினையேனுகையாலே - மாயும்வகையறியேன்” என்றுகூட்டி ஸாவம் அருளிச்செய்து, “பெண் பிறந்தே - மாயும்வகையறியேன்” என்றுகூட்டி ஸாவம் - பாதந்த்ரஜந்மத்திலே இத்யாதி. “பெண் பிறந்தே - மாயும்வகையறியேன் - வல்வினையேன்” என்றுகூட்டி ஸாவாந்தரம் - பிறர்க்காக இத்யாதி. அப்படி ஸ்த்ரீஜந்மம் பாபபலமோ? என்ன - **வாவாநாழ** இத்யாதி. அதாவது - பாபபலமாய் பாபஹேதுவுமாய் இருக்குமென்றபடி. “நாஶாநாஊகஙஃகொ்யஃ ஷுஶாவஙிஹவாகஙஃ। வ்ாயீநாஊகஙஹொ்யம் வாவாநாஊகஙஷியஃ” இதி ஊஹாஹாஙெத. பாதந்த்ரஜந்மத்திலே பிறந்தார்க்கு நினைத்தபோதாக முடியப்போகாதென்றதுக்கு ஸம்வாதம் - நவாஸ்ு இத்யாதி. “நவாஸ்ஊதாநவிதாநவாநு ஸெஹாவிஶிஷெ்ாஷியாஸஶோவா। தாவஜு ஹஂஷூதஜிஜீவிஷெயம்யாவதுவ்ுதிஂஶு்ணயாஂவியஸ்ு॥ரு௦॥” இதி ஸாஹூர காண்ெ(ருசு) ஹநூஊஹஂவ்ுதிவீதா. இந்தஸ்லோகத்திலே, “தாவசுஜிஜீவிஷெயழ” என்று-ஜீவநாவயிசொன்னதுக்கு அநுகுணமாக ஸ்லோகாவதாரிகை - பிராட்டி இத்யாதி. நகவாஜி ஹவ்ஸாஜாநீெத ஙாஊஃகஊஶொவநஃ। தெநகவாஂநாநயத்ுாஶ” என்கிற ஸ்லோக தாத்பர்யம்-தேவரீர் இத்யாதி. பின்னையுந்தான் என்றது - வார்த்தைப்பாடு. முழுச்சொல். பலதலைத் திருக்கையாலே - பஹுமுகமாகையாலே. எல்லாம்செய்தாலும் என்றது - என்னைப்பிரிந்து இவ்

அவர்பக்கலுண்டான சிவிட்கு இவ்வளவும் ஏறிப்பாய்ந்து, அவர்வரவிடவந்தவனன்றோ நீயும் என்றருளிறே. [வல்வினையேன்பெண்பிறந்தே - மாயும்வகையறியேன்] - ஸ்வேச்சாதீநமான மரணமாம்போது ஆண்பிறந்த சக்ரவர்த்தி பீஷ்மாதிகளாகவேணுமாகாதே; ஜ்ஞாநவான்களாதல் ஸ்வதந்த்ரராதல் செய்யவேணும், அறிவிலிகளான பெண்பிறந்தார்க்கு நினைத்தபடி முடியப்போமோ. (ங)

## நான்காம் பாட்டு.

பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று
ஒண்சுடரோன் வாராதொளித்தான் இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாய் எங்காரேறுவாரானல்
எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே?

*ஆ.*—(பெண்பிறந்தார்.) நான்படுகிற இந்தமஹாதுக்கத்தைக் காண்கையில் முடிகையே நன்றென்றுபார்த்து ஆதித்யன்வாராதே, தன்னைக்கொண்டு முடிந்தான்; இந்ததசையில் தன்னுடைய காருண்ய ஸௌசீல்யஸௌந்தர்யாதி குணங்களாலே என்னைத்தோற்பித்து எனக்குப் பரமபோக்யனாயிருந்தவன் வருகிறிலன், வாராதொழிந்தால் அளவிறந்தசிந்தைநோய்தீர்ப்பார் ஆர் என்னை யென்கிறாள்.

ஓ.—நாலாம்பாட்டில், கண்டார்க்குப் பொறுக்கவொண்ணாதபடி வ்யஸநப்படாநிற்க, எல்லாருடைய ஆபத்துக்களையும் போக்குவானான திருவுலகளந்தருளின எம்பெருமான் வருகிறிலன். என்னுடைய நிரவதிக சிந்தாவ்யஸநத்தைப் போக்குவார் ஆர்? என்கிறாள்.

[பெண்பிறந்தார் என்றுதொடங்கி] - நான்படுகிற மஹாதுக்கத்தைப் பெண்ணாய்ப்பிறந்தார் படும் மஹாதுக்கம் இனி நான் காணமாட்டேனென்று தான்வரில் நமக்கு ஆச்வாஸகரமான ஒளியையுடைய ஆதித்யன் வாராதே ஒளித்தான். [இம்மண் என்று தொடங்கி] - குணாகுண நிரூபணம்பண்ணாதே எல்லாருடைய ஆபத்துக்களையும்போக்கி ரக்ஷிக்கும் ஸ்வபாவனாய் நிரதிசயஸௌந்தர்யயுக்தனாய் ஜகத்தினுடைய ஆபந்நிவாரணத்தாலே மேநாணித்திருக்கிறவன்.

ப.—அநந்தரம், அபேக்ஷித்தபூமியை யளந்துகொண்ட ப்ரீதியாலே புதுக்கணித்த அவயவாதிசோபையாலே செருக்கனான த்ரிவிக்ரமன் வருகிறிலன், அபரிச்சிந்நமான என்னுடைய சிந்தாரோகத்தைத்தீர்ப்பார் ஆர்? என்கிறாள்.

---

வளவும்தாழ்த்தாலும் என்றபடி. எத்தனைநாட்சென்றாகிலு மென்றுமாம். அவரைக்கண்டபிற்றைநாள் என்றது - அவருடைய அநாதரகர்ப்பமானவ்ருத்தியாலே என்னையுபேக்ஷிக்கைக்குடலான அவருடைய மாநஸவ்யாபாரத்தையறிந்த பிற்றைநாளென்றபடி. ஜ்ஞாநவான்கள் - பீஷ்மாதிகள். ஸ்வதந்த்ரர் - சக்ரவர்த்தி. அறிவிலிகளான - அறிவிலிகளாய் பரதந்த்ரர்களான இத்யர்த்த:. நீளிரவு இத்யாரப்ய வாரானல், நெஞ்சமே, நீயும் பாங்கல்லைகாண், வல்வினையேன் பெண்பிறந்தே - மாயும்வகையறியேன் இத்யர்த்தவய:. (ங)

(பாதந்த்ரைகளாய் ம்ருதுஸ்வபாவைகளான), பெண்-பெண்ணாய், பிறந்தார்-பிறந்தார், எய்தும்-ப்ராபிக்கிற, பெருந்துயர் - துஸ்ஸஹமானமஹாதுக்கத்தை, காண்கிலேன் - காணமாட்டுகிறிலேன், என்று - என்று, ஒண்-உதயகாலத்திலே தர்சநீயமான, சுடரோன் - தேஜஸ்ஸையுடைய ஆதித்யன், ("பீஷோதேதி ஸூர்ய:" என்று ஈச்வராநுவிதாநம்பண்ணிவரும் காலத்திலும்), வாராது-வாராதே, ஒளித்தான் - (ஆராய்ந்தாலும் அறியவொண்ணாதபடி) ஒளித்துப்போனான்; இ-இந்த, மண்-பூமியை, அளந்த-தனக்கேயாம்படி அளந்துகொண்டப்ரீதியாலே, பெரிய-பரந்த, கண்-திருக்கண்களையும், செம்-சிவந்த, வாய் - திருவதரத்தையுமுடையனாய், எம்-(அந்தபூமியைப்போலே இவ்வவயவசோபையாலே) எம்போல்வாரையும் அநந்யார்ஹமாக்கி, (அத்தாலே), கார்-காளமேகம்போலே ச்யாமளமான வடிவையுடையவனாய், ஏறு-(நினைத்ததுமுடித்தப்ரீதியாலே) ருஷபம்போலேசெருக்கனாயிருக்கிற த்ரிவிக்ரமன், வாரான் - வருகிறிலன்; எண்-நினைவுக்கு, பெரிய - (அவ்வருகேவிஞ்சி அவாங்மநஸகோசரமான) பெரிய, சிந்தைநோய் - மநோரதவ்யாதியை, என்னை-என்னை, தீர்ப்பார் - தவிர்ப்பார், ஆர்-ஆர்?

இ.—காலம்பாட்டில், கண்டார்க்குப் பொறுக்கவொண்ணாத வ்யஸநம் செல்லாநிற்க, வரையாதே ரக்ஷிக்கும் ஸ்ரீவாமநன் வருகிறிலன், என்னுடைய சிந்தாவ்யதையைப் போக்குவாராரென்கிறாள்.

[பெண்பிறந்தார்] - பாதந்த்ரைகளாய் ம்ருதுப்ரக்ருதிகளாய்ப்பிறந்த ஸ்த்ரீகள். [எய்தும்பெருந்துயர்] - அநுபவிக்கும் மஹாதுக்கம். பாரதந்த்ர்யத்தாலே முடியவும் மாட்டாதே, மார்த்தவத்தாலே க்லேசமும் பொறுக்கமாட்டாதொழிகை. [காண்கிலேனென்று] - இந்த துக்கத்தைப் பொறுக்கமாட்டேனென்று. ஸர்வரக்ஷகன் பொறுக்குமித்தனைபோக்கி, ரக்ஷணமாத்ரத்திலேயந்வயித்தவர்கள் பொறுக்கவல்லர்களோ; வகுத்தவன் பொறுக்குமித்தனைபோக்கி, அந்யர் பொறுக்கவல்லர்களோ; "உக்ரதப்யாம்ஹே ஸீதாம் ஹரேரவாப்ய புருஷோத்தமோஸி" என்று புருஷோத்தமன் பொறுக்குமித்தனைபோக்கி புருஷர்கள் பொறுக்கவல்லர்களோ. [ஒண்சுடரோன்] - தோற்றத்திலே துக்கநிவ்ருத்தியைப் பண்ணுமவன். [வாராது] - ஈச்வராஜ்ஞையாலே இருந்தவிடத்திவிராதவனும் தோற்றுகிறிலன். [ஒளித்தான்] - ஈச்வரபடர் காணவொண்ணாதபடி மறைந்தான். "இத்தர்மஹாநிகாண்பதில், ஈச்வராஜ்ஞாதிலங்கநத்தால்வந்தது அநுபவிக்கவமையும்" என்றிருந்தான். [இம்மண்ணளந்த] - இப்பூமிக்கு என்ன ஆபத்துண்டாய் அளந்தான். இப்பூமி மஹாபலிகையிலகப்பட்டதெல்லாம் இவள் விரஹத்தின்கையிலே அகப்பட்டாளாயிற்று. பூமியை வரையாதேயளந்தவன். [கண்பெரியசெவ்வாய்] - மஹாபலியாலே நெருக்குண்ட பூமியின்க்லேசம்போகக் குளிரநோக்கின கண்ணிற்பரப்பையுடையனாய், அதின்க்லேசம் போனதினாலுண்டான ப்ரீதியாலே பண்ணின ஸ்மிதத்தாலே சிவந்த அதரத்தையுடையவன். பிறர்ப்ரயோஜநத்துக்கு இரங்குமவன் தன்ப்ரயோஜநத்தை விட்டுவைப்பதே. [எங்காரேறு] - பூமியின்க்லேசம்போனது தன்பேறென்னுமிடம் நிறத்திலேதோற்றி, "இதுகைப்பட்டது" என்று மேனாணித்திருந்தவன். [வாரானால்] - இரக்கவேண்டா, அளக்கவேண்டா, வடிவழகைக்காட்டவமையும். [எண்பெரியசிந்தைநோய்] - வேதங்களுக்கு நிலமல்லாத பகவத்விஷயத்தை யுள்ளபடிபேசினார், தம்முடைய சிந்தாவ்யதை தம்முடையஜ்ஞாநத்துக்கு அவிஷயமாயிற்று. "சுவரிதி ஹ்ருதீ"என்னும

*தொழிய "இவ்வளவு" என்னவொண்ணாது. [தீர்ப்பாரார்] - வரையாதே ஸர்வரக்ஷகனவன் உபேக்ஷித்தபின்பு ஆராலேபோக்கலாம். [என்னையே] - மறக்கவும்மாட்டாதே நினைக்கவும்மாட்டாதேயிருக்கிற வென்னை. இது இவளுக்கேயுள்ளதொன்று.*

**ஈடு.**—நாலாம்பாட்டு. கண்டார்க்குப்பொறுக்கவொண்ணாதபடி வ்யஸநம் செல்லாநிற்க, வரையாதேரக்ஷிக்கும் ஸ்ரீவாமநனும் வருகிறிலன், என்சிந்தாவ்யஸநத்தைப் போக்குவாரார் ? என்கிறாள்.

[பெண்பிறந்தார் இத்யாதி] - பரதந்த்ரஜந்மமாகையாலே முடியவும்பெறாதே, ம்ருதுஸ்வபாவைகளாகையாலே பிரிவும் பொறுக்கமாட்டாதேயிருக்கிற ஸ்த்ரீகள் அநுபவிக்கிற மஹாதுக்கத்தைக் காணமாட்டேனென்று. [ஒண்சுடரோன்வாராதொளித்தான்] - ஸர்வரக்ஷகன்பொறுக்குமித்தனைபோக்கி, ரக்ஷணைகதேசத்திலே அந்வயித்தவர்களுக்குப் பொறுக்கப்போமோ? புருஷோத்தமன் பொறுக்குமத்தனைபோக்கி, புருஷர்களால் பொறுக்கப்போமோ? தன்தோற்றரவிலே ஸகலக்லேசமும் போம்படியான ப்ரகாசத்தையுடையவனும் வாராதேமறைந்தான். வந்திலன் என்னாதே, ஒளித்தானென்கிறது - "*பீ⁴ஷாஸ்மாத்³வாத: பவதே*" (பீஷாஸ்மாத்வாத:பவதே) இத்யாதியாலே பகவதாஜ்ஞையாலே முப்பதுவட்டம்வரவேணுமே; இங்ஙனேயிருக்கிறவன், "ஈச்வராஜ்ஞைமறுத்தால் வேணுமாகில் தலையை அறுத்துவைக்குமித்தனையன்றோ, இக்கொடுமை என்கண்ணால் காணப்போகாது" என்று ஈச்வரபடர் தேடிவந்தாலும் காணாதபடியொளித்தான். *"ஒளியவன்விசும்பியங்குந்

---

**ப்ர:**—*(ஒண்சுடரோன்வாராதொளித்தான்)* — *தைத்திரீயோபநிஷத்* [ஆ-அ] *பீ⁴ஷாஸ்மாத்³வாத: பவதே । பீ⁴ஷோதே³தி ஸூர்ய: । பீ⁴ஷாஸ்மாத³க்³நிஸ்²சேந்த்³ரஸ்²ச । ம்ருத்யுர்தா⁴வதி பஞ்சம: ॥*

---

*நாலாம்பாட்டு.—பெண்பிறந்தார் இத்யாதி. "ஒண்சுடரோன்வாராதொளித்தான்" என்றத்தைப்பற்ற -* **கண்டார்க்கு** *இத்யாதி. "இம்மண்ணளந்த" என்றத்தைப்பற்ற -* **வரையாதே** *இத்யாதி. "எண்பெரியசிந்தைநோய்" இத்யாதியைப்பற்ற -* **என்சிந்தாவ்யஸநத்தை** *இத்யாதி.*

*"இம்மண்ணளந்த" என்றத்தைப்பற்ற வ்யங்க்யமாக வெறுப்பிலே பாவம் - ஸர்வரக்ஷகன் இத்யாதி. "கண்பெரியசெவ்வாய் எங்காரேறு" என்றத்தைப்பற்ற பாவம் -* **புருஷோத்தமன்** *இத்யாதி. இத்தால்தாத்பர்யம் - ரக்ஷணைகதேசத்திலே அந்விதனுமாய் "ஒருசேதநமாத்ரம்" என்று சொல்லப்படுமவனுமான ஆதித்யனுங்கூடப் பொறுக்கமாட்டாதேயிருக்க, ஸர்வரக்ஷகனுமாய் புருஷோத்தமனுமானவன் இத்தைப்பொறுத்திருப்பதேயென்று. ஒண்மைக்குபாவம் -* **தன்தோற்றரவிலே** *இத்யாதி.* **முப்பதுவட்டம்** *- முப்பதுநாழிகைக்கொருவட்டம். தலையையறுத்துவைக்குமித்தனையன்றோ வென்றது - ஒளித்திருக்கச்செய்தேயும் ஈச்வரபடர்வந்தால் இருக்கும் அத்யவஸாயத்தாலே. ஒளித்தானென்றது - ஒளித்தானென்கைக்காக என்றபடியாய்;* **வந்திலனென்னாதே ஒளித்தானென்கிறது** *என்று கீழோடே அந்வயிப்பது. தான்ஒளிக்கும்போது ரதாதி சிஹ்நங்களை வைத்துப்போமோவென்ன, அவற்றோடேயொளித்தானென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம் -* **ஒளியவன்** *இத்யாதி. அதாவது - "சிஹ்நங்களைவைத்துப்போனால் மீளவும் இவற்றில் நசையாலே வரக்கூடும், அப்போதாகப் பெண்பிறந்தார்வ்யஸநம் காணவேண்டிவரும்" என்று அவற்றையுங்கொண்டு மறைந்தானென்று கருத்து. ஒளியவன் இத்யாதிக்கு - ஆதித்யன் ஆகாசத்திலே சஞ்சரிக்கிற தேரும்போயிற்று இதி சப்தார்த்தம்: ஆதித்யனும் போனான், அவன்தேரும் போயிற்றென்றபடி.*திருமொழி, எட்டாம்பத்து, அஞ்சாந்திருமொழி, இரண்டாம்பாட்டு, "***மாரிமாக்கடல்***" இத்யாதி. "ஒளித்தான்" என்றதுக்கு*

தேரும்போயிற்று'' என்னக்கடவதிறே. வரவுக்கு ஸூசகமும் காணவொண்ணுதபடி மறைந்தது; ''ஸோபிரேணார்நலக்ஷ்யதே''(ஸோபிரேணார்நலக்ஷ்யதே), †''சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான்'' என்னுமாபோலே. [இம்மண்ணளந்த] - இப்பூமிக்கு என்னதுயருண்டாய் அளந்துகொண்டான். பூமிக்கு மஹாபலியாலுண்டான இடரளவோ எனக்கு ராத்ரியாலுண்டான இடர். வரையாதே எல்லாரையும் ரக்ஷிக்குமவன். [கண்பெரியசெவ்வாய் இத்யாதி] - க்ருபையால் பெரியனாய் பூமியையளந்து, பூமியிலுள்ளார் விடாய்போம்படி குளிரக்கடாக்ஷித்து, அத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷந்தோற்ற ஸ்மிதம்பண்ணுகையாலே சிவந்த அதரத்தையுடையவனாய். [எம்] - ஸர்வவிஷயமாகப்பண்ணும் ரக்ஷணத்தையே ஸ்வபாவமாக வுடையவனுமாய். [கார்] - இவற்றைரக்ஷிக்கையால் தன்னிறம் பெற்றிருப்பானுமாய். [ஏறு] - ''அதுதன்பேறு'' என்னுமிடந்தோற்ற மேனாணித்திருக்குமவனும் வருகிறிலன். எம் என்று - ஸர்வரக்ஷகனுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே தானும் அந்யதமையாகையாலே சொல்லுகிறாள். என் என்று பாடமானபோது - பண்டு என்னோடே கலந்தத்தாலே தன்னிறம்பெற்று மேனாணித்திருந்தவனென்கை. [வாரானால்] - இரக்கவேண்டா, அளக்கவேண்டா, வடிவைக்காட்டவமையும். [எண்பெரியசிந்தைநோய்] - ''யஸ்யாமதம் தஸ்யமதம்'' (யஸ்யாமதம் தஸ்யமதம்) என்கிறபடியே - வேதாந்தங்கள், நிலமன்று என்று மீண்ட பகவத்விஷயத்தை, இத்தனைபோதும் பேசினார்; தம்முடைய சிந்தாவ்யஸநம் மயர்வறமதிநலமருளப்பெற்ற ஜ்ஞாநத்துக்கும் அவிஷயமாயிராநின்றது. ''எண்பெரியது'' என்னுமித்தனை, ''இவ்வளவு''

ப்ர:—ஸ்ரீவிஷ்ணுபுராணே ப்ரதமாம்சே த்விதீயோத்யாய: [illegible] ப்ரஹ்மாத்யஸ்ஸர்வபூதாநி [illegible] ஸமஸ்தாஸ்ஸம்ப்ரஜாயதே ॥ ௩௦ ॥ ஸர்வத்ர ஸர்வதா [illegible] தேநாவிர்பூதாஸ்ஸோபிரேணார்நலக்ஷ்யதே ॥ ௩௧ ॥

(எண்பெரியசிந்தைநோய்) — கேநோபநிஷதி [௨] ''யஸ்யாமதம் தஸ்யமதம் மதம்யஸ்ய நவேத ஸ: । அவிஜ்ஞாதம்விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ॥''

ஸாவாந்தரம் - வரவுக்கு இத்யாதி. ஸூசகம் - ரதாதிகள். ஸூசகமும் காணவொண்ணாதபடிமறைந்ததுக்கு ப்ரமாணத்வயம்- ஸோபி இத்யாதி. ''ஸர்வத்ர [illegible] தேநாவிர்பூதாஸ்ஸோபிரேணார்நலக்ஷ்யதே'' இதி ப்ரதமாம்சே, த்விதீயோத்யாய:. சுழன்றிலங்கு இத்யாதி - சுழன்றுவருவானாய் ப்ரகாசத்தைப் பண்ணுகிற ஆதித்யனானவன் தேரோடேபோய்மறைந்தான் இத்யர்த்த:. †திருமொழி, ஒன்பதாம்பத்து, நாலாந்திருமொழி, ஆறாம்பாட்டு. ''இ'' என்று விசேஷித்ததுக்கு பாவம் - இப்பூமிக்கு இத்யாதி. அதுவென், மஹாபலியாலே துயரில்லையோ? என்ன - பூமிக்கு இத்யாதி. ''மண்ணளந்த'' என்றதுக்கு பாவம் - வரையாதே இத்யாதி. ''கண்'' என்று - க்ருபையாய், க்ருபையாலே பெரியவனென்னுதல்; பெரியகண்ணை யுடையவனென்னுதல். இவ்விரண்டையும் தந்த்ரேண அருளிச்செய்கிறார் - க்ருபையால் இத்யாதி. ''எம்'' என்ற அஸ்மச்சப்தம் - ரக்ஷணப்ரவ்ருத்தியைச் சொல்லுகிறதாய், அத்தால்பலிதம் - ஸர்வவிஷயமாக இத்யாதி. ''கார், ஏறு'' என்கிற இரண்டுபதங்களுக்கும் பாவம் - தன்னிறம் இத்யாதி. எண்பெரிய - எண்ணுக்ககப்படாத. யஸ்யாமதம் இதி - யஸ்ய அமதம் இதி மதம், தஸ்ய மதம்; யஸ்ய மதம் இதி மதம், ஸ ந வேத தத்த்வம் இதி ய:. இத்தனைபோதும்

என்னப்போகாது. பிரிந்தவிஷயத்துக்கு அநுரூபமாயிறே சிந்தாவ்யஸநந்தான் இருப்பது, அதுக்கு ஓரவதியில்லையே. "தத்ப்ராப்திமஹாது:க" (ததப்ராப்திமஹாது:க). [சிந்தைநோய்தீர்ப்பாரார்] - சிந்தாவ்யஸநம்போமித்தனையேவேண்டுவது, அவனைமறக்கவு மமையும். †"ஏதுசெய்தால்மறக்கேன்" என்னுமவர்களிறே இவர்கள்தான், அவனை மறக்கவுமாம் நினைக்கவுமாம், வ்யஸநம்போமித்தனையேவேண்டுவது. இப்போது மறக்கவும் அமையும் என்றது-மறக்கை உத்தேஸ்யமாய்ச்சொன்னவார்த்தையன்றே; ஓடுகிற வ்யஸநாதிஸயத்தைச்சொன்னபடியிறே. அலாபதசையில் ஸ்ம்ருதிதான் மிகவும் ஆற்றாமைக்கு உடலாயிருக்குமிறே, $"கண்ணன்நாமமேகுழறிக்கோன்றீர்," ‡"காட்டேன்மின்நும்முரு என்னுயிர்க்கதுகாலன்" என்னக்கடவதிறே. [என்னையே] - இவ்வ்யக்தியொன்றுக்குமேயுள்ளதொரு வ்யஸநமாயிற்று. நாட்டார் ஸ்மரித்து து:கநிவ்ருத்திபண்ணிக்கொண்டு போகாநின்றார்களிறே, அதுசெய்யலாமிறே ஸாதநபுத்த்யா இழிந்தார்க்கு, "நிதித்யாஸிதவ்ய:" (நிதித்யாஸிதவ்ய:) என்று - ஸ்ம்ருதிதன்னையே விதியாநின்றதிறே; அவனுடையபடியிலே இழிந்தார்க்கிறே இதுள்ளது. (ச)

## ஐந்தாம் பாட்டு.

---

ஆரென்னையாராய்வார் அன்னையருந்தோழியரும்
நீரென்னேயென்னாதே நீளிரவுந்துஞ்சுவரால்
காரன்னமேனி நங்கண்ணனும்வாரானால்
பேரென்னைமாயாதால் வல்வினையேன்பின்னின்றே.

*ஆ.—(ஆரென்னை.) அன்னையருந்தோழியரும் நீரென்னேயென்னாதே நீளிரவுந்துஞ்சினார், ஆரென்னையாராய்வார்; ஸர்வாவஸ்த்தையிலும் எனக்குத் துணையாயிருக்*

---

*பேசினாரென்றது - "இம்மண்ணளந்த" இத்யாதியாலே பேசினாரென்றபடி. அதுக்கு ஹேதுவேதென்ன - பிரிந்தவிஷயத்துக்கு இத்யாதி. அதுக்கு - ஸர்வப்ரகாரவிலக்ஷணமான பகவத்விஷயத்துக்கு. "விஷயாநுரூபமாயிருக்கும்வ்யஸநம்" என்னுமதுக்கு ப்ரமாணம் - தத்ப்ராப்தி இத்யாதி. "தத்விஷயவிரஹாது: க்ஷீணபுண்யசயா ததா | தத்ப்ராப்திமஹாது:கவிலீநாஸேஷபாதகா | விதயந்தீ" இத்யாதி, வைஷ்ணவே ஸ்ரீவிஷ்ணுபுராணே. சிந்தாவ்யஸநம் மறந்தாலொழியத் தீராதேயென்ன - சிந்தாவ்யஸநத்தை இத்யாதி. "மறக்கையுத்தேஸ்யம்" என்றிருப்பார்களோ? என்ன - ஏதுசெய்தால் இத்யாதி. எத்தைச்செய்தால் மறக்கலாம் இத்யர்த்த:. திருமொழி. இதுக்குஹாவம் - அவனைமறக்கவுமாம் இத்யாதி. வ்யாக்யாநத்தில் இப்படி இல்லாவிட்டாலும் இவ்விடத்தில் இப்படி கொள்ளவேணும். "கூடுகையுத்தேஸ்யம்" என்னுமதொழிய, "மறக்கையுத்தேஸ்யம்" என்னலாமோ? என்ன - இப்போது இத்யாதி. இவ்வாக்யத்துக்கு விவரணமாகவுமாம் - அவனைமறக்கவுமாம் இத்யாதிவாக்யம். மறக்கை தேட்டமாகைக்கு, ஸ்ம்ருதிதான் அப்படி து:கரூபமாயிருக்குமோ? என்ன - அலாபதசையில் இத்யாதி. "அலாபதசையில் ஸ்ம்ருதி ஆற்றாமைக்குடல்" என்னுமதுக்குப்ரமாணம் - கண்ணன் இத்யாதி. க்ருஷ்ணனுடையதிருநாமத்தை அநக்ஷரமதுரமாகச்சொல்லி முடித்துவிட்டிகோள். காட்டாதேகிடிகோள் உங்கள்வடிவை, என்ப்ராணனுக்கு அந்தவடிவு ம்ருத்யுவாயிருக்கும் இத்யர்த்த:. அவதாரணார்த்தம் - இவ்வ்யக்தி இத்யாதி. அல்லாதார்க்கில்லையோ? என்ன - நாட்டார் இத்யாதி. தனக்கும் அப்படி செய்யவொண்ணாதோ? என்ன - அதுசெய்யலாமிறே இத்யாதி. ஸ்ம்ருதிக்கு ஸாதநத்வமுண்டோ? என்ன - நிதித்யாஸிதவ்ய: இதி. அதுசெய்யலாமிறே இத்யாதிவாக்யஸேஷம் - அவனுடைய இத்யாதி. அதாவது - ப்ராப்யபுத்த்யா இழிந்தார்க்கு மறித்திருக்கப்போகாதென்றபடி. படியிலேஇழிந்தார்க்கு - விக்ரஹத்திலே இழிந்தார்க்கு. விக்ரஹாநுபவம்பண்ணுமவர்களுக்கென்றபடி. இதுள்ளது - ஸ்ம்ருதி, வ்யஸநத்துக்குடலாமாகாரமுள்ளது. க்ரமேணாந்வய:. (ச)*

---

† திருமொழி-க, ந, ந. $ திருவாய்மொழி, க, ரு, அ. ‡ திருவாய்மொழி-க, ரு, எ.

கக்கடவ காரன்னமேனி நங்கண்ணனும் வருகிறிலன், வாராதொழிந்தால் இவ்வ்யஸநத்துக்கு ஆஶ்ரயமான என்பேர் முடியப்பெறலாமிறே, நான்முடிந்தபின்பும் என்னுடைய பேரானது முடிகிறதில்லையென்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், துர்த்தஶையிலே உதவக்கடவரான அன்னையரும் தோழிமாரும் ஆராய்கிறிலர்கள், அவர்கள் உதவாதபோது வந்து உதவக்கடவ க்ருஷ்ணனும் வருகிறிலன். நான்போய் ஶப்தாவஶேஷையானேன் என்கிறாள்.

[அன்னையரும் தோழியரும் நீரென்னேயென்னாதே நீளிரவும் துஞ்சுவரால்]-நான் அவஸந்நையானால் உதவக்கடவ நீங்களும் 'நீ என்பட்டாய்?' என்னாதே நான் ஈடுபடுகிற இராவெல்லாம் கிடந்து உறங்காநின்றீகோள். [நீர் என்னே] - 'உன்னுடைய நீர்மைஎன்?' என்று வினவாதே உறங்காநின்றார்கள் என்றுமாம். [கார் என்றுதொடங்கி]-வர்ஷுகமான மேகம்போலே ஶ்ரமஹரமான திருநிறத்தையுடைய க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் முடிந்தபின்பும் என்பேர் என்னை முடிந்தேனாக வொட்டுகிறதில்லை.

ப.—அநந்தரம், உபகாரஶீலமான வடிவையுடைய க்ருஷ்ணனும்வருகிறிலன், நான் நாமாவஶேஷையானேன், என்னையாராய்வார் ஆர் என்கிறாள்.

அன்னையரும் - (பரிவராய்வந்து ஆராயும்) தாய்மாரும், தோழியரும் - (ஸௌஹார்தத்தாலே ஆராயும்) தோழிமாரும், நீர் - இவள்நீர்மை, என்னே- ஏதாயிருக்கிறது, என்னாதே - என்றுநிரூபியாதே, நீள் - தீர்க்கையான, இரவும் - ராத்ரிமுழுக்க, துஞ்சுவர் - உறங்காநின்றார்கள்; (அவர்கள் ஆராயாதவளவிலும் ஆராயக்கடவனாய்), காரன்ன - (அதிஶயிதோபகாரஶீலமான) காளமேகம்போலேயிருக்கிற, மேனி - திருமேனியையுடையனாய், நம் - நமக்குஸ்வயனான, கண்ணனும் - க்ருஷ்ணனும், வாரான் - வந்து ஆராய்கிறிலன்; வல்வினையேன் - (ப்ராப்தராய் ஆராய்வாரும் ஆராயாமைக்கீடான)ப்ரபலபாபத்தையுடையேனான எனக்கு, பின் - பின்பு, நின்று - நின்று, பேர் - நாமமாத்ரம், என்னை - என்னை, மாயாது - முடியவொட்டுகிறதில்லை; (ஆனபின்பு), என்னை - என்னை, ஆராய்வார் - ஆராய்வார், ஆர் - ஆர்? ஒருவருமில்லையென்றபடி. "அத்யந்தாவஸாதம் பிறந்தவளவிலும் இன்னாள்கிடந்தாள்" என்கிற நாமமாத்ரமே ஸத்பாவஸூசகமென்று கருத்து. (வல்வினையேன்பின்னின்று - ஆரென்னையாராய்வார்) என்று அந்வயிக்கவுமாம். நீரென்னேயென்னாதேயென்று - நீர்என்செய்தீரென்னாதேயென்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஆபத்திலுதவும் அன்னையரும்தோழியரும் ஆராய்கிறிலர், அவர்கள் உதவாதபோது உதவும் க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் ஶப்தாவஶேஷையாகாநின்றே னென்கிறாள்.

[ஆரென்னையாராய்வார்] - தன்னைநலிந்த ராக்ஷஸிகளையுங்கூட "அஞ்சாதே" என்று ஆராய்ந்தாளிறே "ஆரென்னையாராய்வார்" என்கிறாள். [அன்னையரும் தோழியரும்] - இவளுடைய அவஸாததிஶயம், தாய்மாரோடு தோழிமாரோடுவாசியறச் சொல்லும்படியாய்விட்டது. என்நினைவேகினைவாயிருப்பார்க்கும், நிஷேதிப்பார்க்கும் வாசியற்றது. [நீரென்னே இத்யாதி] - அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னேயென்னாதே - என்பட்டாயென்னாதே யென்னுதல்; அன்றியே, [நீர்] - இதொரு நீர்மையே அவனுக்குத் தன்னையொழியச் செல்லுவதாயிருக்க, அவனையொழியத் தனக்குச் செல்

லாதபடியாயிருக்கிற இதொருஸ்வபாவமே! [என்னே] - இதோராஶ்சர்யமென்னுதல். [நீளிரவுந்துஞ்சுவரால்] - நெடியராத்ரியெல்லாம், எனக்கு உறங்காதொழிகை ஸ்வபாவமாயிருக்கிறாப்போலே அவர்களுக்கும் உறங்குகையே ஸ்வபாவமாயிற்று. ப்ரதமயோஜனையில், துஞ்சுதிரென்னுமர்த்தத்தைக் காட்டக்கடவது. [காரன்ன] - வர்ஷுகமான மேகம்போலே ஶ்ரமஹரமான வடிவையுடைய க்ருஷ்ணனும் வருகிறிலன். "தாவஸாரா விரஹிஷு" என்று, ஒருநீர்ச்சாவியிலே வர்ஷித்தாப்போலே தோற்றுமவனும் வருகிறிலன். [நங்கண்ணனும்] - பெண்களுக்கேயுதவுமவனும் வருகிறிலன். [பேரென்னை மாயாதால்] - கார்யத்தாலே நான்முடியச்செய்தேயும், "இன்னாள், இன்னாள்" என்கிற பேர் என்னை முடிந்தேனாக வொட்டுகிறதில்லை. அவனோடொத்ததீ யிதுவும், அவன் வாராதவோபாதி இதுவும்போகிறதில்லை. இத்தால் - சென்றற்றநிலையைச் சொல்லுகிறது. ஸப்தாவஶேஷையானேனென்றபடி. [வல்வினையேன்] - முடிகைதேட்டமானவளவிலும் முடியப்பெறாதபாபத்தைப் பண்ணினேன். [பின்னின்றே]-நான்முடிந்தபின்பும் பின்னே நின்று பேர் என்னை முடிந்தேனாகவொட்டுகிறதில்லை. "நாமஶேஷா வ்யாகரவாணி" என்கிறபடியே ஒக்கவந்தால், ஒக்கப்போகலாகாதோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஆபத்தில் உதவும் அன்னையரும்தோழியரும் ஆராய்கிறிலர்கள், அவர்கள் உதவாதபோது உதவும் க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் ஸப்தாவஶேஷையானேனேனென்கிறாள்.

[ஆரேன்னையாராய்வார்] - "தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்பலா" (தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்பலா) - திருவடிசேன்று ராக்ஷஸிகளை நலியப்புக; இவர்கள் ராவணன்சோறுண்டு அவனுக்குப் பரதந்த்ரைகளாகையாலே என்னை நலிந்தார்களாகில், தங்களாலேவந்ததோன்றன்றாகில், அதுதனக்கு நாமும் "பொறுத்தோம்" என்று, நேர்த்தரவுகொடுத்தபின்பு இனி இவற்றை நலிகிறதேன்? என்ன; "ராவணனும்பட்டானாகில் நம்மை நெடுநாள் நலிந்துபோந்த இப்பெண்பயல்களை இப்போது பொறுக்கவேண்டுகிறதேன்?" என்ன,—"துர்பலா" (துர்வலா)-"சிலர்

---

ப்ர—:(ஆரென்னையாராய்வார்)—யுத்தகாண்டே [ககசு] ஹநுமந்தம்ப்ரதி ஸீதா, "ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம் குர்வதீநாம் பராஜ்ஞயா। விதேயாநாம் ச தாஸீநாம் க: குப்யேத் வாநரோத்தம॥" ... தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்பலா॥சு0॥ ... ராக்ஷஸ்யஸ்தர்ஜயந்து மாம் ... ஸ்த்ரீஷு ... வாநரோத்தம॥சஃ॥"

---

அஞ்சாம்பாட்டு.—ஆரேன்னை இத்யாதி. "அன்னையரும்தோழியரும்" இத்யாதியைப் பற்ற - ஆபத்திலுதவும் இத்யாதி.

வ்யாக்யாதாவின் ஈடுபாடு - தாஸீநாம் என்றுதொடங்கி, ஆரேன்னையாராய்வார் என்கிறளிறே என்னுமளவும். "ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம் குர்வதீநாம் பராஜ்ஞயா। தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்பலா" இதி யுத்தகாண்டே ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. "மர்ஷயாமி" என்றதுக்கு அர்த்தம்-அதுதனக்கு நாமும் பொறுத்தோம் என்று. நேர்த்தரவு கொடுத்தபின்பென்றது - "அபயம் ஸர்வபூதேப்ய:" என்றத்தைப்பற்ற. நேர்த்தரவு - செல்லுச்சீட்டு. ராவணனும்பட்டானாகில் என்றதுக்கு - ராவணனாலே தேவரீருக்கு நலிவுவாராமலிருக்கைக்காக முன்பு இவர்களை நலியாமல்விட்டதென்று தாத்பர்யம். பொறுக்கவேண்டுகிறதேன்? என்ன -

நம்மைநலிந்தார்கள்'' என்று நாம் அவர்களை நலியப்புக்கால், அப்போதே அவர்கள் கண் குழிவுகாணமாட்டாதார் பின்புசெய்வதென் பொறுமல். ராவணனும்பட்டு, பெருமாளும் விஜயிகளானபின்பு, இனி இதொழிய வேறொருதேளர்வல்யமில்லையிறே. தன்னைநலிந்த ராக்ஷஸிகளையும், நீங்கள் அஞ்சாதே கோள்ளுங்கோள் என்று - **''பவேயம்ஶரணம் ஹிவ:''** (பவேயம்ஶரணம்ஹிவ:) என்னக்கடவ அவள், இப்போது, தன்னையாராய்வார் தேட்டமாய் - ஆரென்னையாராய்வா ரென்கிறுளிறே. [அன்னையரும்தோழியரும்] - என் தசையைக்கண்டு என்னேடொக்க உறக்கந்துறந்தவர்களோடு, '' உறக்கம்துறக்கக்கடவ தன்று '' என்று நிஷேதிக்குமவர்களோடு வாசியற ஒக்கவேடுக்கும்படியாய் வந்துவிழுந்தது. என் நினைவே நினைவாயிருக்குமவர்களோடு, தங்களுக்கென்ன ஒருநினைவுண்டாய் நியமிக்கத்தக்கவர்களோடு வாசியற்றது. [அன்னையரும்தோழியரும் நீரேன்னேயென்னுதே நீளிர

---

*ப்ர:—தன்னைநலிந்தராக்ஷஸிகளையும் நீங்களஞ்சாதேகொள்ளுங்கோளென்று-பவேயம்ஶரணம்ஹிவ: என்னக்கடவவவள்)*—ஸுந்தரகாண்டே [ரு அ] ஸீதாம் த்ருஷ்ட்வா வாநராமஹோதாஹநுமாந் வாநரவீராநுஷ்டிதஸ்யாவ்ருத்தாந்தகயநந்தரணே, ''வாமமேவம்க்ருஷ்ணாஹ தாஸாம்ஜஸ்யா த்ஸ்ஸாயதி ஜடாவாக்யமப்ரவீத் । ஶ்ருத்வா நம்வாக்ஷதக்ஷிவ்யம்நஸீதாவிநஶிஷ்யதி । ஜநகஸ்யாத்மஜாஸாயீஸ்வா ஷாக்ஶரய ஸ்யச । ஸ்வப்நோவ்யக்த்யயாக்ருஷெடூக்ஷாரணமராமஹேஷிடுண: । ரக்ஷஸாஞ்சவிநாஶாயஹதடுராவஸ்யாஜயாயவ ॥அக॥ சுமஹோத்தவிருத்தாதம்ராவவாஷ்ராக்ஷஸீணம் । சுஹியாவாமவெவெஷஹீமெ தஸிமமராவமெத ॥அஎ॥ யஸ்யாமெஹ்யவம்வியஸ்வெநாஷ:விதாயா: ப்ருஷ்ஶ்யதே । ஸாஷ:வெவிடுவியெமடுசுதாஸுவமெநாத்யநாதமி॥அஅ॥ வுணிவாதவுஸஸநாஹிமெமயில்ஜநகாத்ஜா । சுமெஷாவஸித்ராதம்ராக்ஷஸ்யாமஹமெதாஹயாக ॥அகூ॥ ததஸாஹீ மதீபாமாஹதடு விடுஜயஹவஷிடுதா । சுவொவக்ஷிதத்யம்ஹவெயம்ஶரணம்ஹிவ:॥கூ०॥''

---

நேர்த்தரவுகொடுத்துப் பொறுக்கவேண்டுகிறதென் ? என்ன. கண்குழிவு - தைந்யம். ''ஷாபடுமா'' என்றுல் - மநோதெளர்வல்யமாகவேணுமோ, அஶக்தியைச் சொன்னலோ ? என்ன - ராவணனும் இத்யாதி. இது - மநோதெளர்வல்யம். ஆகவிப்படி தன்னைநலிந்தராக்ஷஸிகளையும் என்று கூட்டி நிர்வஹிப்பது. ''ஷாஸீநாம்'' என்றத்தை - த்விதீயையாக்கிக்கொள்வது. ''ததஸாஹீ மதீபாமா ஹதடுவிடுஜயஹவஷிடுதா । சுவொவக்ஷிதத்யம் ஹவெயம்ஶரணம்ஹிவ:'' இதி ஸுந்தரகாண்டே. ''ஜஹள நித்ராஞ்ச தந்த்ரீஞ்ச'' என்று - இளையபெருமாள் விட்டாப் போலே, உறக்கம்துறந்தவர்கள் - தோழிமார்; நிஷேதிக்குமவர்கள் - தாய்மார். கீழ்வாக்யவிவரணம் - என்னினைவே இத்யாதி. முந்தின அர்த்தத்துக்கு, அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னே யென்னுதே - என்பட்டாய்! என்னுதே, நீளிரவுந்துஞ்சுதிராலென்றபடி. துஞ்சுதிராலென்று - மத்யமபுருஷன். த்விதீயார்த்தத்துக்கு, அன்னையரும் தோழியருமானவர்கள்; நீர் - இதொருநீர்மையே, என்னே - இதொரு நல்லஸ்வபாவமிருக்கும்படியே! என்னுதே நீளிரவும் துஞ்சுவரென்றபடி. துஞ்சுவரென்று - ப்ரதமபுருஷன். முந்தின அர்த்தத்தில், ''நீர்'' என்றதுக்கு ஸ்வாரஸ்யமுண்டு. த்விதீ

வும்துஞ்சுவரால்] - "துஞ்சுவரால் என்னுமிது - துஞ்சுதிரால் என்னும் அர்த்தம்பெற்றுக் கிடக்கிறது" என்று சொல்லுவாருமுண்டு. அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னேயென்றுதே - என்பட்டாய் என்றுதே யென்னுதல். அன்றிக்கே, அன்னையரும் தோழியரும், நீரென்னேயென்றுதே - இதோருநீர்மை இருக்கும்படியே! என்னே! என்றுதே. அவன் தன்னைப் போகட்டுப்போய் வேறுசிலவற்றுலே போதுபோக்கித் தன்னை நினையாதே யிருக்கச்செய்தேயும், தான் அவனையொழியப் போதுபோக்கமாட்டாதேயிருப்பதே! இதோருநீர்மையே! என்னே-இதேன்ன ஆச்சர்யம், என்றுதே - இப்படி சொல்லாதே. "நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீரபேதையார் நட்பு." [நீளிரவும்துஞ்சுவரால்] - எனக்கு உறங்காமையே ஸ்வபாவமாம்படி, நெடிதானராத்ரியெல்லாம் அவர்களுக்கு உறங்குகையே ஸ்வபாவமாய்விட்டது. [காரன்னமேனி] - ஒருநீர்ச்சாவியிலே ஒருபாட்டம் வர்ஷித்தாற்போலே குளிரும்படியான வடிவையுடையவனுமாய், "*தாஸா ஶாவிரஹூ௯ஃ*" (தாஸாமாவிரபூத்) என்கிறபடியே முன்பு உதவிப்போந்தவனும் வருகிறிலன். "தாஸாம்" என்கிறது - அவர்கள் பூர்வாவஸ்த்தையைப் பற்றவிறே. [நங்கண்ணனும்வாராஞல்] - பெண்களுக்கே உதவிப்போந்தவனும் வருகிறிலன். [பேரேன்னைமாயாதால்] - அவனேடு ஒவ்வாநின்றதீ! பேரும். அவன்வருகிறிலன், இதுபோகிறதில்லை. நான் கார்யத்திலே முடிந்தேனுயிருக்கச்செய்தேயும் "இன்னுள், இன்னுள்" என்கிற இப்பேர் என்னை முடிந்தேனுகவொட்டுகிறதில்லை. ஆழ்வாருடையதிருநாமம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸத்தாஹேதுவானுப்போலே இவர்தமக்கும் ஸத்தாஹேதுவானபடி. அடியுடைய பேராகையாலே ஸர்வர்க்கும் தாரகமாயிருக்குமே. இதினுடைய அடியுடைமையிறே எல்லாரும் ப்ரஸாவஹிக்கிறது. [பேரேன்னைமாயாதால்]-ஶப்தாவஶேஷையானேனென்றபடி. [வல்வினையேன்] - நான் முடியச்செய்தேயும் என்னைமுடிந்தேனுகாதபடி பண்ணும்படியான பேரைப்படைக்கும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். [பின்னின்று] - நான் முடியச்செய்தேயும் இப்பேரானது எனக்குப்பின்னும் நின்று முடிந்தேனுகவொட்டுகிற

---

*யார்த்தத்துக்கு - "துஞ்சுவரால்" என்ற பரோக்ஷநிர்த்தேஶ ஸ்வாரஸ்யமுண்டு. விவரணம் -* **அவன் தன்னை** *இத்யாதி. "நீர்" என்று - நீர்மையைச்சொல்லுமோ? என்ன -* நிறைநீர் *இத்யாதி.* **நீரவர்** *கேண்மை - பிறைநிறைநீர, பேதையார் நட்பு மதிப் பின் நீர என்று அந்வயம். இதுக்கு அர்த்தம் - நல்லஸ்வபாவத்தையுடையவர்களோட்டை ஸ்நேஹம், பூர்வபக்ஷத்தில் ப்ரதமாசந்த்ரனுடைய நிறைகிற ஸ்வபாவம்போன்றது; அறிவிலிகளோட்டை ஸ்நேஹம், பூர்ணசந்த்ரனுடைய பின்புண்டான ஸ்வபாவம்போன்றது. அதாவது - க்ஷயிஷ்ணுவென்றபடி. கேண்மையும், நட்பும் - ஸ்நேஹம். பேதையார் - அறிவிலிகள். நீர், நீர்மை - ஸ்வபாவம். பிறை - கலாமாத்ரசந்த்ரன். மதி - பூர்ணசந்த்ரன். "நம்" என்றதுக்கு அர்த்தம் - தாஸாம் இத்யாதி. "தாஸாமாவிரபூச்சௌரி: ஸ்மயமாநமுகாம்புஜ: । பீதாம்பரதர: ஸ்ரக்வீ ஸாக்ஷாந்மந்மதமந்மத: ॥௨॥" இதி ஸ்ரீபாகவதே தஶமே (௩௨). அவன் உதவும்படி அவர்களுக்கு ஆர்த்தியுண்டோ? என்ன - தாஸாம் என்கிறது இத்யாதி. அவனேடொக்கையாவதேதென்ன -* **அவன்வருகிறிலன்** *இத்யாதி.* **வருகிறிலன்** *- வாராமே பாதிக்கிறுன்.* **இதுபோகிறதில்லை** *- போகாமேபாதிக்கிறது.* **இதுபோகாதேசெய்கிறதுதானே** *தென்ன -* **நான்கார்யத்திலே** *இத்யாதி.* **இன்னுள்** *- இப்படிப்பட்டவள். ஸ்வாபதேஶம் -* **ஆழ்வாருடைய** *இத்யாதி. தம்முடையதிருநாமம், அல்லாதார்க்கொழிய தமக்கும் ஸத்தாஹேதுவாகைக்கு ஹேதுவேதென்ன -* **அடியுடைய** *இத்யாதி. அடியுடையவென்று - பாக்யமுடையவென்றுசாடு.* **இதினுடைய** *-* **ஆழ்வார்திருநாமத்தினுடைய.** *தான்போனுல் பேர்நிற்கவொண்ணுதோ? என்ன -*

தில்லை. வருகிறபோது ஒக்கவந்தால், போகிறபோதும் ஒக்கப்போகவேண்டாவோ. "நாமரூபெவ்யாகரவாணி" (நாமரூபேவ்யாகரவாணி), "நாமரூபஞ்சபூதாநாம்" (நாமரூபஞ்சபூதாநாம்) என்று ஒக்கச்சோல்லக்கடவதிறே. முற்படவந்தார்க்கு முற்படப் போகவேண்டியிருக்க, பிற்படவும்போகலாகாதோ? (ரு)

## ஆறும் பாட்டு.

பின்னின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடுமால்
முன்னின்றிராவூழி கண்புதையமூடிற்றால்
மன்னின்றசக்கரத்து எம்மாயவனும்வாரானால்
இந்நின்றநீளாவி காப்பாரார்இவ்விடத்தே.

ஆ.—(பின்னின்ற.) முடிந்தபின்பும் செல்லுகிற விஶ்லேஷ வ்யஸநமொன்றும் பொறுக்கலாயிருக்கிறதில்லை, இந்த ராத்ரியானயுகமானது அவன்வரிலும் அவனைக் காணவொண்ணாதபடி என்கண்ணைமறைத்துக்கொண்டு நில்லாநின்றது, இவ்வநர்த்தமெல்லாம் போம்படி நிரதிஶயதீப்தியுக்தமான திருவாழியை ஏந்திக்கொண்டு அவன்வருகிறிலன், இந்ததசையில் இங்கின்றநீளாவி காப்பாராரென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், விரஹவ்யஸநம் செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனான எம்பெருமானும் வாராதொழிந்தால் முடியப்பெறாதிருக்கிற என்னை ரக்ஷிப்பார் ஆர்? என்கிறாள்.

[பின்நின்ற என்று தொடங்கி] - விடாதேதொடர்கிற காதலாகிற வ்யாதி நெஞ்சை மிகவும்நோவுபடுத்தாநின்றது, ராத்ரியாகிற கல்பம் முன்னேநின்று பதார்த்தங்களும் தோற்றாதபடி கண்ணை மறையாநின்றது. [மன்நின்றசக்கரத்து எம்மாயவனும் வாரானால்] - ஆர்த்தத்ராணார்த்தமாக எப்போதும் கைகழலாநேமியானாய் அத்யாஶ்சர்யபூதனான க்ருஷ்ணன் வருகிறிலன். ஜயத்ரதவதத்திலன்று, தேஜோரூபமான திருவாழி

ப்ர:—(பேரென்னைமாயாதால்)— ஸாநோர்ம்யேஷ்வபூ ... ஸாஹஸ்ரம் ... நாமரூபெவ்யாகரவாணி.

ஸ்ரீவிஷ்ணுபுராணே ... "நாமரூபஞ்சபூதாநாம் க்ருத்யாநாஞ்சப்ரபஞ்சநம் । வேதஶப்தேப்ய ஏவாதௌ ... ஸ:॥ருரு॥"

வருகிறபோது இத்யாதி. வருகிறபோது ஒக்கவந்ததோ? என்ன - நாமரூபெ இத்யாதி. 'பின்னின்றே" என்றதுக்குபாவம் - முற்பட இத்யாதி. அன்னையரும் இத்யாரப்ய, வாரானால், வல்வினையேன் பின்னின்றே - பேரென்னைமாயாதால், ஆரென்னையாராய்வார் இத்யந்வய:. (ரு)

யைக்கொண்டு பகலை இரவாக்கின அத்யாஶ்சர்யபூதனான க்ருஷ்ணன், திருவாழியை யிட்டு இரவைப் பகலாக்கிக்கொண்டு தோற்றுகிறிலன் என்றுகருத்து. [நீளாவிகாப்பார் ஆர்] - துர்த்தஶையிலும் முடியாதே என்னை நோவுபடுத்தாநின்றுள்ள இவ்வுயிராகிற பகையைப் போக்குவார் ஆர்? என்றுமாம்.

ப.—அநந்தரம், அபிநிவேஶமும் ராத்ரியும் நலியாநிற்க, ஸ்த்திரமான ரக்ஷணோபகரணத்தையுடையவன் வருகிறிலன், என்னுடைய ஆத்மாவை ரக்ஷிப்பாராரென்கிறாள்.

பின்-பின்தொடர்ந்து, நின்ற-விடாமல்நடக்கிற, காதல் - அபிநிவேஶமாகிற, நோய் - நோயானது, நெஞ்சம் - (தனக்குப்பிறப்பிடமான) நெஞ்சை, பெரிது - மிகவும், அடும்-அழியாநின்றது; முன்-முன்னே, நின்று - நின்று, இரா-ராத்ரியாகிற, ஊழி-கல்பமானது, கண்-கண்ணானது, புதைய-புதையும்படி, மூடிற்று - மறைத்தது; (இப்படி பின்னும் முன்னும் விரோதியானவளவில்), மன்னின்ற - (ஆஶ்ரிதருடைய வினையைக் கடிகைக்கு) நித்யஸந்நிஹிதமான, சக்கரம் - திருவாழியையுடையனாய், எம்மாயவனும் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களாலே தன்னை என்போல்வார்க்கு ஸ்வம்மாக்கின க்ருஷ்ணனும், வாரான் - வருகிறிலன்; நின்ற - நிரந்தரதுःகாநுபவம்பண்ணாநின்றாலும் அதுக்கிளையாதிருக்கிற, என்-என்னுடைய, நீள்-நித்யமான, இ-இந்த, ஆவி-ஆத்மவஸ்துவை, இவ்விடத்து - இவ்வவஸ்த்தையில், காப்பார் - ரக்ஷிப்பார், ஆர்-ஆர். இந்நின்றவென்று பாடமாய் - இந்தநித்யமான ஆத்மவஸ்துவை யென்றுமாம். நித்யத்வமும் துःகாநுபவத்துக்கு உறுப்பாயிற்றென்று கருத்து.

இ.— ஆறும்பாட்டில், விரஹவ்யஸநம்செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனானவனும் வாராதொழிந்தால், முடியப்பெறாதப்ராணனை ரக்ஷிப்பாராரென்கிறாள்.

[பின்நின்றகாதல்நோய்] - புக்கவிடம்புக்குப் பின்னாட்டிக்கொண்டுதிரிகிற ப்ரேமவ்யாதியானது. இதுக்கு இடைந்தால் வேறு ஒதுங்கநிழலில்லையாயிராநின்றது. [நெஞ்சம்பெரிதடுமால்] - நெஞ்சை மிகவும் நோவுபடுத்தாநின்றது. பாதகம் பாத்யத்தளவன்றென்கை. அக்நிபோல், தனக்கு ஆஶ்ரயமான நெஞ்சை தக்த்யமாக்காநின்றது. [முன்னின்று இத்யாதி] - பதார்த்தங்கள் தோற்றாதபடி முன்னேநின்று ராத்ரியாகிறகல்பம் கண்ணைமறையாநின்றது. ப்ரேமவ்யாதியும் ராத்ரியும் முன்பும்பின்புமாய் க்ருதஸங்கேதங்களாய் நலிகிறபடி. உட்கண்ணுமழிந்து புறக்கண்ணுமழிந்தது. க்ராஹகமுமாய் ப்ரகாஶகமுமான கண்ணை, க்ராஹ்யமானவிருள் மறையாநின்றது. [மன்னின்ற சக்கரம்] - ஆர்த்தத்ராணார்த்தமாக எப்போதும் கைகழலாநேமியானா யிருக்கிறவன். இவ்விருள் போக்குகைக்கு ஆயுதமெடுக்கவேண்டா வென்கை. [எம்மாயவனும்] - ஜயத்ரதவததத்தினன்று, ப்ரகாஶத்ரவ்யமான திருவாழியைக்கொண்டு தமஸ்ஸை யழைக்குமவன். நிவர்த்தகத்தைக்கொண்டு நிவர்த்யத்தை யழைக்குமவனுக்கு, அத்தைக்கொண்டு நிவர்த்யத்தைப் போக்கத்தட்டில்லையிறே. எம்மென்று - க்ருஷ்ணாவதாரத்தில் தமக்குண்டான அஸாதாரண்யத்தைச் சொல்லுகிறார். [வாரானால்] - ப்ரதிஜ்ஞையையழித்து விருத்தத்தை யநுஷ்டிக்கவேண்டா, வந்து வடிவைக்காட்டவமையுமென்கை. வருகைக்கு இச்சையில்லாமைபோக்கி, "வருவோம்" என்றால் அருமையில்லையிறே. [இந்நின்ற நீளாவி] - இப்படியே முடியாதே நோவுபடுத்தாநின்றுள்ள உயிராகிற ஶத்ருவைப் போக்

குவாரார்? முடியுமளவிலும் ஹ்ருதேபிராயமாயிருக்கிற ஆத்மவஸ்துவைப்போக்கி ரக்ஷிப்பாரார்? "அஜ்ஞெஷாயஜோஹோயழ" என்கிறவசனத்தைக்கொண்டு தன்னை முடியாததொன்றாகநினைத்து நலியாநின்றது. "பிரிவிலும்முடியாத என்னுயிர்ப்பகையைநீக்கி, என்னை நோக்குவாரார்" என்று ஒருதமிழன் இட்டுவைத்தான். [இவ்விடத்தே] - ஸர்வரக்ஷகனும் உதவாததசையிலே.

ஈடு.—ஆறும்பாட்டு. விரஹவ்யஸநமும் செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனுனவனும் வாராதொழிந்தால் முடியப்பெறாத ப்ராணனை ரக்ஷிப்பாராரென்கிறாள்.

[பின்னின்றகாதல்நோய்] - புக்கவிடம்புக்கு வடிம்பிட்டுநலிகிற ப்ரேமவ்யாதியானது. இடைந்தோதுங்குகைக்கு ஒரு நிழலில்லாதபடியிருக்கை. [நெஞ்சம்பெரிதடுமால்] - நெஞ்சை மிகவும் நோவுபடுத்தாநின்றது. நெருப்பானது சுருணையைவேவப்பண்ணி, பின்னையிறே புறம்பேபோய்ச்சுடுவது; அப்படியே, தான்கிடக்குமிடத்தை மிகவும் நலியாநின்றதாயிற்று. [முன்னின்று இத்யாதி] - ப்ரேமவ்யாதியும் ராத்ரியாகிற கல்பமும் தன்னிலே ஸங்கேதித்துவந்தாற்போலே இராநின்றது. "நான் பின்னிட்டுவருகிறேன், நீ முன்னே தப்பாமே சூழ்ந்துகோள்" என்றுவருவாரைப்போலே வந்தது. எதிரிகள் எளியராஞல் அவர்கையில் வில்லைப்பறிப்பது க்ஷேபிப்பதாய்க்கொண்டு பரிஹஸிப்பாரைப்போலே, இத்தலையில் எளிமைகண்டு ராத்ரியாகிறவூழி, முன்னேநின்று கண்ணைமறையாநின்றது. உட்கண்ணைக் காதல் மறையாநின்றது, கட்கண்ணை ராத்ரி மறைத்தது. [கண்புதையமூடிற்றால்]-க்ராஹகமுமாய் ப்ரகாஶகமுமாயிருக்கிற சக்ஷுரிந்த்ரியத்தை, க்ராஹ்யமான இருள்வந்து மூடாநின்றது. அன்றிக்கே, இருளோடொத்த நிறத்தையுடையவன் வந்து முன்னேநின்றாலும் காணவொண்ணாதபடி, இராவாகிறவூழி கண்ணைமறையாநின்றதென்னவுமாம். [மன்னின்ற இத்யாதி] - "எப்போதும் கைகழலாநேமியான்" என்

---

ஆறும்பாட்டு.—பின்னின்ற இத்யாதி. "பின்னின்ற" இத்யாதியைப்பற்ற - விரஹவ்யஸநம் இத்யாதி.

"பின்னின்ற" என்றது - போனவிடமெங்கும் பின்தொடர்ந்துநிற்கிறவென்னுதல், எனக்குப்பின்னேநின்றவென்னுதல். முந்தினது - புக்கவிடம் இத்யாதி. அதாவது - ஹிம்ஸிக்கைக்காகப் பின்னே அநுவிதாநம்பண்ணினவென்றபடி. த்விதீயார்த்தம் - நான்பின்னிட்டுவருகிறேன் இத்யாதி வாக்யத்திலே கண்டுகொள்வது. வடிம்பிட்டு - அடிமேலடியிட்டு. "நின்ற" என்றதுக்குஹாவம் - இடைந்து இத்யாதி. இடைந்து - விலங்கி. நோயானல் ஶரீரத்திலேபற்றிப் பின்பன்றோ நெஞ்சையடுவதென்ன - நெருப்பானது இத்யாதி. "பின்னின்றகாதல்" இத்யாதியையுங்கூட்டி ஹாவம் - ப்ரேமவ்யாதியும் இத்யாதி. ஸங்கேதமெப்படியென்ன; விவரணம் - நான்பின்னிட்டு இத்யாதி. இப்போது, "பின்னின்ற" என்றதுக்கு - எனக்குப்பின்னேநின்ற என்று த்விதீயார்த்தம் கண்டுகொள்வது. க்ராஹகமான சக்ஷுரிந்த்ரியத்தை, க்ராஹ்யமான இருள் மறைக்கும்படியென்? என்ன; ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - எதிரிகள் இத்யாதி. இத்தலையில் எளிமைகண்டு - நாயகனைப்பிரிந்து ஶோச்யையாயிருக்கிற படியைக்கண்டு. இருளுக்கும் ராத்ரிக்குமுண்டான ப்ரத்யாஸத்தியாலே - ராத்ரியாகிறவூழி என்கிறது. "நெஞ்சம்பெரிதடுமால், கண்புதையமூடிற்றால்" என்றுகூட்டி ஹாவம் - உட்கண்ணை இத்யாதி. உட்கண்ணை - நெஞ்சென்னும் உட்கண்ணை. கண்புதைய - கண்மறைய. "கண்புதையமூடிற்றால்" என்றதுக்கு அர்த்ததவயம். முந்தினது - க்ராஹகமுமாய் இத்யாதி. அதாவது - இதரவிஷயங்களைக்கண்டு க்ரஹிக்கவொண்ணாதபடி கண்ணைமறைத்ததென்றபடி. த்விதீயார்த்தம் - அன்றிக்கே இத்யாதி. அவன்வந்துமுன்னேநின்றாலும் தெரியாதபடி மறைத்ததென்றபடி. எப்போதும்கைகழலாநேமியான் - ஸர்வகாலமும் கைவிட்டுநீங்காத திருவாழியையுடையவன் இத்

கிறபடியே, ஆஶ்ரிதர்க்கு விரோதிகளுண்டானபோதாக ஆயுதமெடுக்கப்பார்த்திராதே, எப்போதுமொக்கக் கையிலேவிடாதேகொண்டிருக்குமாயிற்று. [எம்மாயவனும்] - ப்ரகாஶத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸை அழைக்கவல்ல ஆஶ்சர்யபூதன். நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தை அழைக்குமவனுக்கு, நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தை நிவர்த்திப்பிக்கத் தட்டுண்டோ? [வாரானால்] - இங்கு ஸங்கல்பம் அழியவேண்டா, வருவதாகநினைக்க வமையும். "ஸம்஭வாம்யாத்மமாயயா" (ஸம்பவாம்யாத்மமாயயா). வருவதாக இச்சிக்க வமையும். "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும், ப்ரகாஶத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸைப் போக்கக்கடவதென்கிற மர்யாதையைக் குலைக்கையுமாகிற இவைவேண்டா, தான்வரவமையும்; நிவர்த்தக ஸ்வபாவத்தாலே நிவர்த்யம் தன்னடையேபோம். [இந்நின்றநீளாவிகாப்பாரார்] - முடியவேண்டுமளவிலே நூறேபிராயமாயிருக்கிற இவ்வாத்ம வஸ்துவை முடித்துநோக்குவாரார். "அச்சேத்யோயமதாஹ்யோயம்" (அச்சேத்யோய மதாஹ்யோயம்) என்கிற வசநத்தைக்கொண்டு நின்று வழக்குப்பேசாநின்றதாயிற்று ஆத்ம

---

(இங்குஸங்கல்பமழியவேண்டா வருவதாகநினைக்கவமையும்)— ஶ்ரீகீதா ஸப்தமேऽத்யாயே, "அஜோऽபி ஸந்நவ்யயாத்மா பூதாநாமீஶ்வரோऽபி ஸந் । ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்஭வாம்யாத்மமாயயா ॥ சா ॥"

(இந்நின்றநீளாவி)—த்விதீயே, "அச்சேத்யோயமதாஹ்யோய மக்லேத்யோऽஶோஷ்ய ஏவ ச । நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதந: ॥ உச ॥"

---

யர்த்த:. பெரியதிருவந்தாதி, கடைசிப்பாட்டு, "இப்போதும்" இத்யாதி. "மன்னின்றசக்கரத்து - எம்மாயவன்" என்றுகூட்டிஸாவம் - ப்ரகாஶத்ரவ்யத்தை இத்யாதி. தமஸ்ஸையழைத்தது - ஜயத்ரத வதத்தினன்று. இத்தைச்சொல்லி, "வாரானால்" என்றதுக்குஸாவம் - நிவர்த்தகத்தையிட்டு இத்யாதி. மன்னின்ற - எப்போதும் பொருந்தியிருக்கிற. "மன்னின்றசக்கரத்தெம்மாயவன்" என்றதுக்கு - "ப்ரகாஶத்ரவ்யத்தை" இத்யாதிவாக்யத்தாலே ஒருஸாவம் அருளிச்செய்து, ஸ்ரீஷ்மனை நிரஸிக்கைக்காக, "ஆயுதமெடேன்" என்றுவைத்து ஆயுதமெடுக்கும் ஆஶ்சர்யபூதனென்று விவக்ஷித்து, "வாரானால்" என்றதுக்குஸாவம் - இங்குஸங்கல்பம் இத்யாதி. ஸங்கல்பமழியவேண்டா - ஸங்கல்பத்தையுமழித்து ஆயுதமெடுக்கையாகிற யத்நமும் வேண்டாவென்றபடி. நினைக்கவமையுமென்றது - வருகைக்குத் தன்இச்சையேயொழிய வேறொரு ஆயாஸமில்லாமையாலே. "இச்சையடியாக அவன் வரும்" என்னுமதுக்கு ப்ரமாணம் - ஸம்஭வாம்யாத்மமாயயா என்று. "ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய ஸம்஭வாம்யாத்மமாயயா" இதி ஶ்ரீகீதாஸப்தமேऽத்யாயே. "வருவதாக நினைக்கவமையும்" என்றதின் விவரணம் - வருவதாக இச்சிக்கவமையும் என்றது. "மன்னின்றசக்கரம்" என்றதுக்குச்சொன்ன ஸாவத்வயத்தையும் நிகமிக்கிறார் - ஆயுதமெடேனென்று இத்யாதி. வரவமையுமோ, இருளைப்போக்க வேண்டாவோ? என்ன - நிவர்த்தகஸ்வபாவத்தாலே இத்யாதி. "இவ்விடத்தே" என்றதுக்கு அர்த்தம் - முடியவேண்டும் இத்யாதி. "இவ்விடத்தே" என்றது - இவ்வவஸ்த்தையிலேயென்றாய், முடியவேண்டுமளவிலே என்றபடி. நூறேபிராயமென்றது - "நீள்" என்றத்தைப்பற்ற. "நீளாவி யாய்க்கொண்டு - நின்ற" என்றதின் பலிதம் - அச்சேத்யோயம் இத்யாதி. "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோऽஶோஷ்ய ஏவ ச । நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம் ஸநாதந:" இதிஶ்ரீகீதாஸத்விதீயே. "நீள்-நின்ற-இ-ஆவி" என்று அந்வயிப்பது. நித்யமாய்நின்ற இவ்வாத்மவஸ்துவையென்றபடி. "நீளாவிகாப்பாரார்" என்னுமது - இத்தைமுடித்துநோக்குவாரார். என்

வஸ்து. இத்தைமுடித்து நம்மைநோக்குவார் ஆர்? என்கிறதென்று இப்படி முறுகச்சொன்னதுதன்னை, ஒருதமிழன் இஸ்ஸப்தத்துக்குத் தாத்பர்யமாக இட்டுவைக்கிறன் "பிரிவிலும் முடியாத என்னுயிர்ப்பகையைநீக்கி, என்னைநோக்குவாரார்" என்று. [இவ்விடத்தே] - ஸர்வரக்ஷகனுனவனுமுதவாத இவ்வவஸ்த்தையில் இனிமுடிந்துபிழைக்கையிறேஸாதகம்.

## ஏழாம் பாட்டு.

காப்பாராரிவ்விடத்துக் கங்கிருளின்நுண்துளியாய்ச்
சேட்பாலதூழியாய்ச் செல்கின்றகங்குல்வாய்த்
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றுனல்
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காளென்செய்கேனோ?

*ஆ.—(காப்பாரார்.) மஹாந்தகார வர்ஷோபேதையாய் முடிவில்லாததொரு யுகமாய்க்கொண்டு செல்லாநின்ற ராத்ரியில், தூப்பாலவெண்சங்குசக்கரத்தன் தோன்றுதொழிந்தான், காப்பாராரிவ்விடத்து, தீப்பாலவல்வினையேன் தெய்வங்காள் என்செய்கேனென்று தன்னுடைய நிரவதிக வ்யஸநத்தாலே கூப்பிடுகிறள்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், ராத்ரியாகிற யுகம் செல்லாநிற்கவும் எம்பெருமான் வந்துதோற்றுதொழிந்தவாறே அநிமிஷராகையாலே உறவுமுறையாரைப்போலே இவ்வவஸ்தையில் உறங்காதே நீர்மையை யுடையருமாகையாலே "தெய்வங்காள் என்செய்கேன்" என்று தன் செயலறுதியாலே சொல்லுகிறள்.*

*[கங்கிருள் என்று தொடங்கி] - ராத்ரி இருளும் சிறுதுளியுமாய் நெடுமை ஸ்வபாவமான கல்பமாய் முடிவின்றிக்கே செல்லுகிற இக்காலத்தில். மருங்குலை 'மருங்கு' என்றாற்போலே கங்குலை 'கங்கு' என்கிறது. [தூப்பால என்றுதொடங்கி] - நிர்மலமாய் வெளுத்திருந்துள்ள ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் ஏந்தி இவ்வந்தகாரமெல்லாம் போம்படி வந்துதோன்றுகிறிலன். [தீப்பாலவல்வினையேன்] - அவன் அங்கீகரியாதபடி பண்ணவற்றான மஹாபாபத்தையுடையேன்.*

*ப.—அநந்தரம், தர்ஸநாகாங்க்ஷாஜநகமான அஸாதாரண சிஹ்நத்தையுடைய ஸர்வேஸ்வரன் வந்துதோன்றுகிறிலன், இந்தமஹாந்தகாரமான ராத்ரியில் என்செய்கேனென்று, உறங்காததைவங்களைநோக்கிக் கூப்பிடுகிறள்.*

*இவ்விடத்து - (ரக்ஷகனுதவாத) இந்தஅவஸ்த்தையில், காப்பார் - ரக்ஷிப்பார், ஆர் - ஆர்? கங்கு - எல்லைநிலமாகச்செறிந்த, இருள் - இருளையும், நுண் - நுண்ணிதான, துளி - பனித்துளியையும், ஆய் - உடைத்தாய், சேண் - அதிதூரமான, பாலது - ஸ்வபாவத்தையுடைய, ஊழியாய் - கல்பமாய்க்கொண்டு, செல்கின்ற - செல்லாநிற்கிற, கங்குல்*

---

னும் அர்த்தத்தைக்காட்டுமோ? என்ன; நீளாவியைக்காக்கையாவது - முடித்துநோக்குகையென்று அர்த்தாத்ஸித்தமென்றுவிவக்ஷித்து, இதுக்கு ஸம்வாதங்காட்டுகிறர் - இத்தைமுடித்து இத்யாதி. உயிர்ப்பகை - ஜீவிக்கையாகிறஸத்ரு. இப்படியாகிலும் ஆத்மாவைமுடிக்கத்தேடுகிறதென்னென்ன - ஸர்வரக்ஷகன் இத்யாதி. க்ரமேணுந்வயஃ. (சு)

வாய் - ராத்ரியிடத்து, தூ - அழுக்கற்ற, பால - ஸ்வபாவத்தையுடைத்தாய், வெண் - வெளுத்த, சங்கு - ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும், சக்கரத்தன் - திருவாழியையு முடையனு னவன், தோன்றான் - ("பன்னெடுஞ்சூழ்சுடர்ஞாயிற்றோடுபான்மதியேந்தி" என்கிற படியே சந்த்ராதித்யர்களைக் கொண்டுவருமாபோலேவந்து) தோன்றுகிறிலன்; தீ - அக்நி போலே, பால - தாஹகஸ்வபாவமாய், வல் - ப்ரபலமான, வினையேன் - பாபத்தையுடை யேனான நான், தெய்வங்காள் - (என்னுடைகண்டு இமைகொட்டாமல் பார்த்திருக்கிற) தேவதைகாள்! என் - எத்தை, செய்கேன் - செய்வேன்? ரக்ஷ்யமான என்னால் ரக்ஷித் துக்கொள்ளவொண்ணாதென்று கருத்து. கங்குல் - எல்லைநிலம். தூய்மை - அழுக்கறுதி. பாலென்று - ஸ்வபாவம்.

இ.—ஏழாம்பாட்டில், ராத்ரியாகிறயுகம் செல்லாநிற்க, அவன்வந்துதோற்றா தொழிகையாலே, அநிமிஷராகையாலே யுறங்காததேவதைகளைக்குறித்து, நான் என் செய்கேனென்கிறாள்.

[காப்பாராரிவ்விடத்து] - ரக்ஷகன் உதவாததசையில் இனி ஸ்வயகர் நோக் கவோ, நாம் நோக்கிக்கொள்ளவோ? அவனத்தை "எனக்கு" என்கையோபாதியிறே, அவனுடையரக்ஷணத்தை நாம் ஏறிட்டுக்கொள்ளுகை. [கங்கிருளினுண்டுளி] - நுண் டுளி-சிறுதுளி. தடித்தவிருளையும் சிறுதுளியையுமுடைத்தாய். [சேட்பால இத்யாதி]- நெடுமையே ஸ்வபாவமாயிருக்கிற கல்பமாய்க்கொண்டு முடிவின்றிக்கே செல்லுகிற ராத்ரி யில். அதவா, மருங்குலை-"மருங்கு" என்னுமாபோலே,கங்குலை-"கங்கு"என்று குறைத் தாய், ராத்ரியில் இருளென்றுமாம்; அப்போது, கங்குல்வாயென்று - காலபரமாய், இக் காலத்திலே யென்னக்கடவது; "ஸஹஸ்ராயு, உமாயு" என்னுமாப்போலே. [தூப்பால இத்யாதி] - இவ்விருளைப்போக்குகைக்கு சந்த்ராதித்யர்கள் சேரவுதித்தாற் போலே கையுமாழ்வார்களுமாய்வந்து தோன்றுகிறிலன். "சந்திரமண்டலம்போல்தாமோ தரன்கையில்" என்றும், "மேருவிற்செஞ்சுடரோன்திருமால்திருக்கைதிருச்சக்கரமொக் கும்" என்றும் சொல்லக்கடவதிறே. அவ்விருளைப்போக்கும்போது இவர்கள் வேணு மென்கை. தூ-தூய்மை. பால-ஸ்வபாவமாக உடைத்தாகை. ரக்ஷணபரிகரங்களை யுரித்து ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனும் வருகிறிலன். [தீப்பாலவல்வினையேன்]-தீமையே ஸ்வபாவமாகவுடைத்தாய், போக்கப்போகாதபடியான பாபத்தைப் பண்ணினேன். ரக்ஷ கனும் அநாதரிக்கும்படி பண்ணின பாபமென்கை. [தெய்வங்காளென்செய்கேனோ] - தேவதைகளுக்கும் இவளுக்கும் அநிமிஷத்வத்தாலே ஒருஸாம்யமுண்டு. அவர்கள்பிறப்பே அநிமிஷர், இவள் விரஹத்தாலே அநிமிஷை. தோழிமாரும் உறங்குகிறஸமயத்திலே இவர்கள் உணர்ந்திருக்கையாலே, தன்ஆர்த்திபொறுக்கமாட்டாமை யுறங்காதிருக்கிறார்க ளாகக்கொண்டு, "இவர்களிற்காட்டில் நமக்கு வேறு உறவுண்டோ" என்று, என் செய்கேனென்று - தன்செயலறுதியை அவர்களுக்கு அறிவிக்கிறாள்.

ஈடு.— ஏழாம்பாட்டு. ராத்ரியாகிறயுகம் செல்லாநிற்க அவன் வந்து தோற் றாமையாலே, அநிமிஷராகையாலே உறங்காத தைவங்களைக்குறித்து, நான் என்செய்வே னென்கிறாள்.

---

ஏழாம்பாட்டு.— காப்பாரார் இத்யாதி. "கங்கிருளின் நுண் துளியாய்" இத்யாதியைப் பற்ற - ராத்ரியாகிற இத்யாதி.

[காப்பாராரிவ்விடத்து] - ரக்ஷகனானவன் உதவாதிருக்க, இவ்வளவில் வாயக ரானார் ரக்ஷகராகவோ. ரக்ஷகனானவன் வரவுதாழ்த்தாலும் இப்புத்தி பிறவாதிருக்கக் கடவ இவள் இப்போது "காப்பாரார்" என்று இவ்வார்த்தைசொல்லும்படிகாணும் பிறந்த தமாவிசேஷம். "ஶரைஸ்துஸங்குலாம் க்ருத்வாலங்காம்" (ஶரைஸ்துஸங்குலாம் க்ருத்வாலங்காம்) - திருவடி, பிராட்டியை; "பெருமாள்பாடேற இனியெழுந்தருளவமை யாதோ?" என்ன; ராக்ஷஸஸங்குலையானவித்தை ராமஶரஸங்குலையாக்கிக்காண் நாம் போவது, வேற்றுமனிசர்முகத்திலே விழித்துப்போகவோ? "பரபுரார்த்தநः" (பரபுரார்த்தநः) - அவரோடேவிரோதித்து இதுக்குமுன்பு ஜீவித்துப்போந்ததும் ஒருபடை வீடேண்டோ? "மாம்நயேத்யதி" (மாம்நயேத்யதி) - "நயாமி பரமாம்கதிம்" (நயாமி பரமாம்கதிம்) என்கிறவர் இரண்டுவோர்த்தைசோல்லுவரோ? "காகுத்ஸ்த்தः" (காகுத்ஸ்த்தः) - இந்த்ராதிகள்விரோதிகளையும் போக்குங்குடியிலே பிறந்தவர் ஸ்வகார்யத்தில் சோரநிற்பரோ? "தத்தஸ்யஸத்ருஶம்பவேத்" (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்)-அவர்க்கு அநுரூபமானவற்றைச்செய்து போகக்கடவநாம், நம்முடைய ஆற்றாமை பரிஹரிக்கைக்காக அவர்க்கு நிறக்கேடானவற்றைச் செய்யவோ? "ராமமஹிஷியை ஒருராக்ஷஸன்பிரிக்க, அவள் ஶபித்துப்போனாள்" என்னுதல், "ஒருகுரங்குமீட்டது" என்னுதல் செய்கையா கிறவிது, அவர்வில்வலிக்கு வசையாங்காண்; அவர்வம்ஶத்துக்குக் கோத்தையாங்காண். அவர்விஷயத்தில் ராவணன்செய்ததத்தை நாமும்செய்யவோ? ராமதநத்தை "என்னது" என்றாரோடு ஒப்பர்களிறே அவருடைய ரக்ஷணத்தைத் தந்தலையிலே ஏறிட்டுக்கொள்ளு மவர்கள். ஏதேனும் ஸயஹேதுக்களுண்டானாலும் அஞ்சாதேயிருக்கக்கடவ இவள் பிரி

---

ப்ர:—(காப்பாராரிவ்விடத்து)—ஸாதுரகாண்டே [௩௯] ஸீதா, "ஶரைஸ்து ஸங்குலாம்" இத்யாதி॥௩௦॥

---

"தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றானல் - கங்கிருளின் நுண்துளியாய் என்று தொடங்கி, இவ்விடத்து - காப்பாரார்" என்று அந்வயித்து க்ஷேபந்தோன்ற ஸாவம் - ரக்ஷகனானவன் இத்யாதி. ஈடுபொடாதல், ஸர்வேஶ்வரன் ரக்ஷகனாயிருக்க "காப்பாரார்" என்னலாமோ? என்கிற ஶங்கையிலேயாதல் - ரக்ஷகனானவன்வா இத்யாதி. இப்புத்தி - ரக்ஷகரார் என்கிறபுத்தி. ரக்ஷகன் வரவுதாழ்த்தாலும் இப்புத்திபிறவாதே, "அவனேரக்ஷகன்" என்று அத்யவஸித்திருந் தாளோ? என்னை; இதுக்கு ப்ரமாணம் - ஶரைஸ்து இத்யாதி. இனியெழுந்தருளவமையாதோ என்றவிடத்தில், இனி என்றதுக்கு ஸாவம் - திருவடி ப்ருஷ்டதம்ஶமாத்ரமாய், "பெருமாள்பாடேற வாரும்" என்ன, "நீ இருக்கிற இவ்வாகாரத்தாலே எப்படிகொண்டுபோகிறாய்" என்ன, விஶ்வ ரூபத்தைக்காட்டி, "இனியெழுந்தருளவமையாதோ" என்ன என்றபடி. "நயேத்யதி" என்கைக்கு, நயிப்பிக்கை நிஶ்சிதமோ? என்ன - நயாமி இத்யாதி. இது வராஹசரமஶ்லோகம். நயிக்கை தஸ்ய ஸத்ருஶமென்றபோதே - நாம் நம்மைநோக்குகை அவர்க்கு அவத்யமென்று விவக்ஷித்து ஸாவம் - அவர்க்கு அநுரூபமானவற்றை இத்யாதி. நிறக்கேடாம் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் - ராமமஹிஷியை இத்யாதி. வசையாம் - கொத்தையாம். "காகுத்ஸ்த்தः" என்றத்தைக்கடாக்ஷித்து சாடு - அவர் வம்ஶத்துக்கு இத்யாதி. வம்சமென்ற - மூங்கிலாய், தநுஸ்ஸைச்சொல்லுகிறது. "அவர்க்கு அநு ரூபமான" இத்யாதி வாக்யவிவரணம் - அவர்விஷயத்தில் இத்யாதி. ராவணன்செயலோபாதி ஸ்வ ரக்ஷணாந்வயம் க்ரூரமோ? என்ன - ராமதநத்தை இத்யாதி. இவ்வார்த்தை சொல்லிற்று - "காப் பாரார்" என்கிற இவ்வார்த்தைசொல்லிற்று. ஸயஹேதுக்களுண்டானாலும் ஸயப்படாதிருந்தாளோ?

வாற்றுமைக்கு அஞ்சினபடியிறே இவ்வார்த்தை சொல்லிற்று. "கஜம்வேத்யாதி, நாஹாரயதி ஸந்த்ராஸம்" (கஜம்வேத்யாதி, நாஹாரயதி ஸந்த்ராஸம்) - ஸ்வரூப ப்ரயுக்தமான ஸ்த்ரீத்வம் போயிற்று. "பாஹுராமஸ்யஸம்ஶ்ரிதா" [பாஹுராமஸ்யஸம்ஶ்ரிதா] - ஸயஹேதுக்களுக்கு அஞ்சுவர்களோ கணையத்துக்குள்ளேயிருப்பார். ஆனைத்திரள்கள் ஸிம்ஹத்திரள்களளவல்லவிறே யிது. [காப்பாராரிவ்விடத்து] - "ரக்ஷ்யமிவை, ரக்ஷகனிவன்," என்று தெளிந்து அறுதியிட்டு, "அம்ம" என்று அப்புத்தட்டியிருந்தவளிறே இப்போது "காப்பாரார்" என்கிறாள்; பிறந்த ஆற்றாமையின் அதிசயம். அவனுடைய ஸர்வரக்ஷகத்வம் ஓர் அச்சாயிறேயிருப்பது, இவர் அல்லிலேகிடந்து நோவுபடுகிறாரிறே. அவனுண்டாயிருக்க, முதலிலே, க்லேசமில்லையிறே ஒருவர்க்கும். [கங்கிருளில்] - கங்கென்று - எல்லையாய், எல்லையான இருளென்னுதல்; [கங்கென்று] - மருங்குலை - "மருங்கு" என்னுமாபோலே, கங்குலை - கங்கென்று குறைத்துக்கிடக்கிறதாய், கங்குலிலிருளென்னுதல். அப்போது, கங்குல்வாய் என்கிற விடம் - "உஶராத்ரம், ஸப்தராத்ரம்" என்றால் - பத்துநாள், ஏழுநாளென்று காலபரமாகிறவோபாதி, இதுவும் - காலபரமாகிறது. [நுண்துளியாய்] - தடித்தவிருளும், நேரிய துளியுமாய். [சேட்பால இத்யாதி] - மிக்கநெடுமையை ஸ்வபாவமாகவுடைத்தான கல்பமாய்க்கொண்டுசெல்லுகிற, கங்குல்வாய் - ராத்ரியிடத்து. தமிழாசாரியன் என்று தமிழர்க்கு அகஸ்த்யனோபாதியாயிருப்பானொருவன், "செல்கின்றநாளகத்து" என்று வ்யாக்யானம் பண்ணிவைத்தான். [தூப்பால இத்யாதி] - இருளைப்போக்கும்போது சந்த்ராதித்யர்கள்

என்ன-கஜம்வா இத்யாதி."கஜம்வாவீக்ஷ்யஸிம்ஹம்வா வ்யாவ்ரவாவநரோத்ரிதா।நாஹாரயதிஸந்த்ராஸம் பாஹுராமஸ்யஸம்ஶ்ரிதா॥௨௦॥"உத்யோகஸ்ரகாண்டம்[கூ௦] உபராயம்வ்ருதிஸம்ஜ்ஞ: .ஸ்த்ரீத்வம்போயிற்று-வீருத்வம்போயிற்று."வரிவொவரோ:" என்றத்தைப்பற்ற-கணையத்துக்குள்ளே என்றது. கணையம்-கோட்டை. அஞ்சாமைக்குஹேதுவேதென்ன-ஆனைத்திரள்கள் இத்யாதி. இது-பாஹுபலம். "கஜம்,ஸிம்ஹம்" என்றது - ஜாத்யேகவசநம். இன்னமும், ப்ரணவத்தில் அகாரத்திலேசொல்லுகிற அவனுடையரக்ஷகத்வத்தையும், மகாரத்தில்சொல்லுகிற தன்னுடைய ரக்ஷ்யத்வத்தையும் அநுஸந்தித்து நிர்ப்பரையாயிருக்குமவள்கிடீர் கலங்கினளென்று ஸ்வாபதேசத்திலே அருளிச்செய்கிறார் - ரக்ஷ்யமிவை இத்யாதி. அம்மவென்று சாடு. "அம்மா" என்று ஹர்ஷப்ரகாசோக்தி; ஸ்வபாவார்த்தம் - அகாரவாச்யனானவனுக்கு மகாரவாச்யனான ஆத்மா ரக்ஷ்யமென்று. அப்புத்தட்டி - தொடைதட்டி; அநுஸந்தித்தென்று ஸ்வபாவார்த்தம். அதிசயம் - அதிசயத்தாலே. ஓரச்சாய் - ஏகரூபமாய் என்றுசாடு; அச்சிலே அந்தர்ப்பூதமான அகாரப்ரதிபாத்யமாயிறே என்று ஸ்வபாவார்த்தம். அல்லிலே - ராத்ரியிலே என்றுசாடு; ஹல்லான மகாரவாச்யஸ்வஸ்வரூபத்தை அநுஸந்தித்து நோவுபடுகிறாளென்று ஸ்வபாவார்த்தம். அகாராதிகளை - அச்சென்றும், ஹகாராதிகளை - ஹல்லென்றும் சொல்லக்கடவதிறே. இத்தால் - அகாரவாச்யனை அநுஸந்தித்து நிர்ப்பரனாயிருக்கவேண்டியிருக்க; மகாரவாச்யனான ஆத்மாவை அநுஸந்தித்து, "நம்மைநாம் எங்கே ரக்ஷித்துக்கொள்ளப்போகிறோம்" என்று நோவுபடுகிறாளிறே என்றபடி. அவன் ரக்ஷகத்வத்தை அநுஸந்தித்தால் க்லேசமியாமலிருக்கக்கூடுமோ? என்ன - அவனுண்டாய் இத்யாதி. முதலிலே-அவனுண்டாயிருக்க என்று அந்வயிப்பது. முதலிலே - ப்ரணவத்திலே. அவனுண்டாயிருக்க - அகாரவாச்யனான அவன் உண்டாயிருக்க. எல்லையானவென்றது - செறிந்தவென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, "கங்குல்வாய்" என்றத்தோடு புநருக்தமன்றோ? என்ன - அப்போது இத்யாதி. முந்தின அர்த்தத்தில் சப்தார்த்தம் - தடித்த இத்யாதி. த்விதீயார்த்தத்தில், "கங்குல்வாய்" என்றத்தை - திவஸரூப காலபரமாகச்சொன்னதுக்கு ஸம்வாதம் - தமிழாசாரியன் இத்யாதி. மற்றைசந்த்ராதித்யர்கள் இவ்

சேரவதித்தாற்போலே யிருக்கிற திவ்யாயுதங்களையுடையவன் வருகிறிலன். அந்தச்சந்த்ராதித்யர்கள் வேணுங்காணும் இவ்விருளைப்போக்கும்போது.†"ஆங்கத்திகிரிசுடரேன்றும்வெண் சங்கம்வானில் பகருமதியேன்றும்" என்று சொல்லக்கடவதிறே. பண்டே இவள்கைகண்டு வைத்தவையிறே இவைதான். இருளோடேசீறுபாறு என்று போக்குவானொருவனும், இருளோடேகண்கலந்துநின்று போக்குவானொருவனு மாயிற்று. [தூப்பாலவெண்சங்கு] - தூய்மையை ஸ்வபாவமாக உடைத்தான வெண்சங்கு. அன்றிக்கே, பாலென்பது-இடமாய், குறைவற்ற இடத்தையுடைத்தாயிருக்கிற. "பெருமுழக்கு" என்னக்கடவதிறே, "[Grantha]" (ஸர்வபூர்ணஜ்ஞாநநிஸ்ஸ்ருதத்வநிஃ) என்னக்கடவதிறே. தூய்மையால் - குறைவறுதலைக் காட்டுமோ? என்னில்;—"அவன் இவ்வர்த்தத்தில் தூயன்காண்" என்கையாகிறது - அதில்குறைவற்றிருக்குமென்கையிறே; லக்ஷணையிருக்கிறபடி. அன்றிக்கே, [வெண்சங்கு]-இத்தாலும், தூய்மையாலும் - வெளுப்பின் மிகுதியைச் சோல்லுகிறதாகவுமாம்; அப்போது பதாந்தர வ்யவதாநத்தாலே அதுதான் யுக்தமல்ல. [தீப்பாலவல்வினையேன்] - தீயஸ்வபாவத்தையுடைத்தாய், பேர்க்கப்பேராதபடி கனவிய பாபத்தைப்பண்ணின நான். அதாவது - ரக்ஷணத்திலேபேக்ஷித்து, ரக்ஷிக்கைக்கு ப்ராப்தனாய், அதுக்கென்னக் கருவி பிடித்திருக்கிறவனுங்கூட உதவாதபடியான பாபமிறே. [தெய்வங்காளேன்செய்கேனோ] - தெய்வங்களோடு இவளுக்கு ஒரு ஸாம்யமுண்டு; அவர்கள் பிறப்பே அநிமிஷர், இவள்தானே "உண்டோகண்கள்துஞ்சுதல்" என்றிருக்கும். இப்போதுதான் இருளுக்கஞ்சியுமுறங்காள்; தன்தசையைக்கண்டதுக்கு அவர்கள் உறங்காதே

---

*விருளைப்போக்கமாட்டார்களோ? என்ன -* **அந்த** *இத்யாதி. "அந்தச்சந்த்ராதித்யர்கள்" என்கைக்கு, திவ்யாயுதங்களைச் சந்த்ராதித்யர்களாகச்சொன்ன இடமுண்டோ? என்ன -* **ஆங்கத்திகிரி** *இத்யாதி. அவனுடைய திருக்கையிலுண்டான அந்தத்திருவாழியை ஆதித்யனென்றும், மற்றைத்திருக்கையிலேந்தின வெளுத்தநிறத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யத்தை ஆகாசத்திலேவர்த்திக்கிற ஒளியையுடைய சந்த்ரனென்றும் இத்யர்த்தஃ. †மூன்றந்திருவந்தாதி, அறுபத்தேழாம்பாட்டு, "ஆங்குமலரும்" இத்யாதி. இந்தச்சந்த்ராதித்யர்கள் வந்தால் இருள்போமோ? என்ன -* **பண்டே** *இத்யாதி. கைகண்டு என்றது - சாடு; கையிலேகண்டென்றும், அநுபவித்தென்றும். லோகத்தில் சந்த்ராதித்யர்கள் இருளைப்போக்கும் ப்ரகாரமேதென்ன -* **இருளோடே** *இத்யாதி.* **சீறுபாறென்றுபோக்குகிறவன்** *- ஆதித்யன்.* **கண்கலந்துபோக்குகிறவன்** *- சந்த்ரன். முந்தினவர்த்தம்; தூய்மையென்றது - வெண்மையாய், வெண்மையே ஸ்வபாவமாகவுடைய வெண்சங்கென்ற. அப்போது, வெண்சங்கென்று - சங்குக்கே ரூபம். த்விதீயார்த்தத்தில், வெண்சங்கென்றது - வெண்மையையுடைய சங்கென்றபடி. இடமுடைமைசொன்னதுக்கு ப்ரயோஜநமேதென்ன -* **பெருமுழக்கு** *இத்யாதி.* "ஸ்வாஜ்ஞயைவ ஸ்ருஷ்டத்வக்ஷ்வாயாநாம் ஹ்ருஷ்யம் ஸர்வபூர்ணஜ்ஞாநநிஸ்ஸ்ருதத்வநிஃ । ஜகத்வாதாஸ வியன்நீஸ்ரம் ஹ்ருஷ்யாரோஸ்யமாத்யெயயா" இதி ஜீரணவசநம். *லக்ஷணௌபசாரிகப்ரயோகம். இத்தாலும் - "வெண்" என்கிற விஶேஷணத்தாலும். மூன்றுமர்த்தத்தில், இடமுடைத்தாய் மிக்கவெண்மையையுடைத்தான சங்கென்று ஶப்தநிர்வாஹம். பதாந்தரமாவது - "பால" என்கிறபதம். "சங்குசக்கரத்தன்" என்றத்தைப்பற்ற -* **அதாவது ரக்ஷணத்திலே** *இத்யாதி.* **கருவி** *- ஆயுதம்.* ***உன்னித்து** *மற்றொருதெய்வந்தொழாதவள் "தெய்வங்காளென்செய்கேனோ" என்கிறதென்? என்ன; த்ரேயாபரிஹரிக்கிறார் -* **தெய்வங்களோடு** *இத்யாதி.* **உண்டோகண்கள்துஞ்சுதல்** *- கண்ணுறக்கமுண்டோ? அதாவது - பகவதநுபவாபிநிவிஷ்டரானார்க்கு ஜ்ஞாநஸங்கோசம்பிறக்கவிரகில்லை என்றுகருத்து. த்விதீயபரிஹாரம் -* **தன்தசையை** *இத்யாதி.* **இப்போதுதான்** *இத்யாதிவாக்யமும் - கீழுக்கேஶேஷம். தோழிமாரைப்பற்ற இவர்கள் தஞ்சமாகைக்கு ஹேதுவே*

யிருக்கிறார்களாகக்கொண்டு, அவர்களைத் தஞ்சமாகநினைத்துக் கேட்கிறாள், சிறையுறவு போலே. தோழிமாருங்கூட உறங்காநிற்கச்செய்தே அவர்கள் உறங்காதிருக்கையாலே, அவர்களிற்காட்டிலும் இவர்களை அண்ணியவுறவாக நினைத்துச்சொல்லுகிறாள். "ஆயும மருலகுந்துஞ்சிலும்" என்று - தாய்மாரோடொக்க எடுக்கக்கடவதிறே தேவதைகளையும். ஆர்த்திமிக்கால் "அம்மே! என்செய்வேன்" என்றாற்போலே இருக்கிறதுகாணும். (எ)

## எட்டாம் பாட்டு.

தெய்வங்காளென்செய்கேன்? ஓரிரவேழூழியாய்
மெய்வந்துநின்று என தாவிமெலிவிக்கும்
கைவந்தசக்கரத்து என்கண்ணனும்வாரானால்
தைவந்ததண்தென்றல் வெஞ்சுடரில்தானடுமே.

*ஆ.—(தெய்வங்காள்.)ஓரிரவு ஏழூழியாய் வந்து எனதாவியை மெலிவிக்கும், கருதுமிடம்பொருது கைநின்றசக்கரத்து என்கண்ணனும் வருகிறிலன், ஹேமந்தகாலத்தில் அதிசீதளமான தென்றல் வெஞ்சுடரில்தானடும், தெய்வங்காள், என்செய்கேனென்கிறாள்.*

*ஒ.—எட்டாம்பாட்டில்,ஒருராத்ரி அநேகம்யுகமாய் மிகவும்வாதியாநின்றது; எம்பெருமானும் வருகிறிலன்; அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றது என்கிறாள்.*

*[மெய் என்று தொடங்கி] - 'முடித்தல்லது போகேன்' என்று வந்து என் ஆத்மாவை மிகவும் நோவுபடுத்தாநின்றது. நினைத்தபடி விதேயமான திருவாழியையுடையனான க்ருஷ்ணனும் வருகிறிலன். துஸ்ஸஹமாம்படி தடவிக்கொண்டுவருகிற குளிர்காற்று அத்யுஷ்ணமான நெருப்பிற்காட்டில் சுடாநின்றது.*

*ப.—அநந்தரம், ஆஸ்ரிதவிரோதிநிவர்த்தநத்தில் ஆயுதமெடுத்துக் காரியங்கொள்ளும் க்ருஷ்ணனும் வருகிறிலன், அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றது, என்செய்வேனென்று அந்ததைவங்களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.*

*தெய்வங்காள் - (உணர்த்தியோடேயிருக்கிற) தைவங்காள்! (ஒரு ப்ரவ்ருத்தி க்ஷமையல்லாத நான் என்னுடையரக்ஷணத்தில்), என்-எத்தை, செய்கேன் - செய்வது? ஓர்-ஒரு, இரவு-ராத்ரி, ஏழு-ஏழு, ஊழியாய்-கல்பமாய்க்கொண்டு, மெய்-புத்திபூர்வகமாக, வந்து - முன்னேவந்து, நின்று - நின்று, (விரஹக்லிஷ்டமான), எனது - என்னுடைய, ஆவி-ப்ராணனை, மெலிவிக்கும் - க்ருஶமாக்காநிற்கும்; கைவந்த - (பகலே "இரவையழைக்க" என்னிலும் நினைவறிந்து காரியஞ்செய்யும்படி) விதேயமான, சக்கரம்-திருவாழியையுடைய,என்,—கண்ணனும் - க்ருஷ்ணன், வாரான் - (அத்தைக்கொண்டு, இந்த*

---

*தென்ன - தோழிமாருங்கூட இத்யாதி. தோழிமாரிலுங்காட்டில் இவர்கள் அண்ணியவுறவோ? என்ன - ஆயும் இத்யாதி. த்ருதீயபரிஹாரம் - ஆர்த்திமிக்கால் இத்யாதி. அதாவது - தன்னிலே பேராகித்துச்சொல்லுகிறாளென்றபடி. கங்கிருளில் இத்யாரப்ய என்செய்கேனோ, இவ்விடத்து - காப்பாரார் இத்யந்வயः.* (எ)

ராத்ரிபோம்படி) வருகிறிலன் ; (அவன்வாராதது அறிந்து), தைவந்த-(நலியவருவாரைப் போலே) தடவுகிற, தண்-குளிர்ந்த, தென்றல்-தென்றலானது, வெம்-வெவ்விய, சுடரில்-அக்நியிற்காட்டிலும், அடும் - சுடாநின்றது. அக்நிபோல என்றுமாம். கைவருகை-நினைத்தபடி காரியங்கொள்ளலாகை. தைவருதல் - தடவுதல்.

இ.—எட்டாம்பாட்டில், ராத்ரியும் பஹுகமாய் ரக்ஷகனும் வாராதிருக்கவும், குளிர்ந்ததென்றலானது நலியாநின்றதென்கிறாள்.

[தெய்வங்காளென்செய்கேன்] - வேறு உறங்காதிருப்பாரில்லாமையாலே, பின்னையும் தன்செயலறுதியாலே சொல்லுகிறாள். [ஓரிரவேழூழியாய்] - கீழ்ச்சொன்ன கல்பம் "ஒருராத்ரிமாத்ரம்" என்னும்படி, ஒருராத்ரிதானே அநேககல்பங்களாகாநின்றது. ஸௌபரி போகத்துக்காக பலவடிவுகொண்டாற்போலே, ராத்ரியும் நலிகைக்காக அநேகம்வடிவுகொண்டது. [மெய்வந்துநின்று] - ப்ரஸங்கத்தாலே வந்துநலிகையன்றிக்கே, புத்திபூர்வமே, "முடித்தல்லதுபோகேன்" என்று ஆக்ரஹமுடையாரைப் போலே நின்று. ராவணன் இடம்பார்த்து வந்தாப்போலே, 'விரஹதசை' என்று அறிந்துவந்து நலியாநின்றது. [எனதாவிமெலிவிக்கும்] - நலிகைக்கு ஆஶ்ரயமில்லாதபடி சென்றற்றவுயிரை நலியாநின்றது. [கைவந்தசக்கரத்து] - நினைத்தபடி விநியோகமான திருவாழியையுடைய. ஸர்வஜ்ஞமான பரிகரத்தையுடையவன்கிடீர். [என்கண்ணனும்] - ஆஶ்ரிதர்க்காகத் தன்ப்ரதிஜ்ஞையை யழியமாறுமவன். [வாரானால்]-கையில்திருவாழியையிட்டு இருளைத்துணித்து தன்வடிவைக் காட்டுகிறிலன். [தைவந்ததண்தென்றல்] - குளிர்ந்தகாலத்திலேவந்த குளிர்ந்ததென்றல். தைவருகையாவது - தடவுகையாய், காந்தனுடைய ஸ்பர்ஶத்துக்கு ஸ்மாரகமான தென்றலென்றுமாம். [வெஞ்சுடரில்தானடுமே]- சுடரென்று - லௌகிகாக்நி, வெஞ்சுடரென்று - அதிற்காட்டில் கொடிய நரகாக்நி, அதிற்காட்டிலும் நலியாநின்றது. நரகாக்நியிற்காட்டில் விஶ்லேஷதஶையில் அநுகூல ஸ்பர்ஶம் கொடியதாயிறேயிருப்பது. அத்யுஷ்ணமான நெருப்பிற்காட்டில் சுடாநின்றதென்கை.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஏகராத்ரி அநேகயுகமாய் மிகவும் நலியாநின்றது, எம்பெருமானும் வருகிறிலன், அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றதென்கிறாள்.

[தெய்வங்காளென்செய்கேன்] - மற்றும் உறங்காதிருப்பாருண்டாகிலிறே அவர்களைப்பார்த்துச்சொல்லுவது. [ஓரிரவேழூழியாய்] - கீழ், "ஊழியாய்" என்றவிடம் - ராத்ரிமாத்ரமாய்நின்று நலிந்ததென்னும்படி, இது அநேககல்பமாய் நலியாநின்றது. ஸௌபரி, போகத்துக்கு அநேகம் வடிவுகொண்டாற்போலே, இது பாதிக்கைக்கு அநேகம் வடிவு கொள்ளாநின்றது. [மெய்வந்துநின்று] - ராவணன் இடம்பார்த்துவந்தாற்போலே விரஹதசையறிந்து நலியாநின்றது. ஈஶ்வரன்மர்யாதை குலைக்கவொண்ணாமை வந்தமாத்ரமன்

---

எட்டாம்பாட்டு.—தெய்வங்காள் இத்யாதி. "ஓரிரவேழூழியாய்" இத்யாதியைப்பற்ற - ஏகராத்ரி இத்யாதி.

மீளவும் "தெய்வங்காள்" என்கிறதென்? என்ன - மற்றும் இத்யாதி. அநேககல்பமாய் நலிந்ததுக்கு த்ருஷ்டாந்தம் - ஸௌபரி இத்யாதி. "வந்துநின்று" என்றதுக்குபாவம் - ராவணன் இத்யாதி. அதாவது - ராவணன் இடம்பார்த்து வந்தாற்போலே, "விரஹதசை" என்று அறிந்து வந்து நலியாநின்றதென்றபடி. "மெய்வந்து" என்றதுக்குபாவம் - ஈஶ்வரன் இத்யாதி. ஈஶ்வரன்

றிக்கே, தனக்கே ஆக்ரஹமுடையாரைப்போலே மெய்யேமுன்னேவந்துநின்று. [எனதாவி மெலிவிக்கும்] - போனவுயிரை மீளக்கொடுத்து நலியவற்றாயிற்று. "சென்றற்றது" என்னும்படியிருக்கிற என்னுடைய ஆவியையுண்டாக்கி நலியாநின்றது; மோர்க்குழம்புகொடுத்துத்தேற்றி, விடுநகங்கட்டி நலிவாரைப்போலே. [கைவந்தசக்கரத்து] - இவ்வ்யஸநத்தைப் பரிஹரிக்கைக்குப் பரிகரமில்லாமல்தான் இருக்கிறானே? அழையாதிருக்கச் செய்தேயும் நினைவறிந்து கையிலேவந்திருக்கும் திருவாழியையுடையவன். அறவிதேயமானபரிகரத்தையுடையவனென்றபடி. ஹாவஜ்ஞனாய்க் கார்யஞ்செய்யும் பரிகரத்தையுடையவன். "ஹாவஜ்ஞ" (பாவஜ்ஞேந) - ஸ்ரீபர்ணசாலைசமைக்கும்போது இளையபெருமாள்; ருஷிகளுக்கு ஓலக்கங்கொடுத்திருக்குமிடம் பண்ணும்படியும், அக்நிசாலைசமைக்குமிடமும், இவையிறே பெருமாள் அருளிச்செய்வது; பிராட்டியுந்தாமும் ஏகாந்தமாக இருக்கும்படிகள் இவருடன் தாம் அருளிச்செய்யாரே, அவையடையக் கருத்தறிந்து செய்வாராயிற்று. அவர் *தூதுசெய்கண்கள்கொண்டு ஒன்றுபேசினால், இவரும் செவிகண்ணாகக்கேட்டுச் சமைக்குமித்தனை. "க்ருதஜ்ஞ" (க்ருதஜ்ஞேந) - வருந்தி இவர்நினைவைப் பின்சென்றமாத்ரமன்றிக்கே; அறுபதினாயிரமாண்டு மலடுநின்று பிள்ளைபெற்றசக்ரவர்த்தி, பெருமாளுக்குப் பொருந்துமிடம்பார்த்து மாளிகைசமைத்து முன்பு செய்துபோந்த கட்டளைகளறிந்து, அப்படியே செய்தாராயிற்று. "தர்மஜ்ஞ" (தர்மஜ்ஞேந) - இதுதான் "தம்பியாயிருந்து இப்படிசெய்தார்" என்று குணமாகையன்றிக்கே, "இதுகர்த்தவ்யம்" என்றுசெய்தார். "உஜ்ஜீவநஹேதுவான அநுஷ்டேயதர்மமிது" என்று செய்தார். "த்வயாபுத்ரேண" (த்வயாபுத்ரேண) - போனஐயர்க்கு நிரயநிஸ்தாரகர் நீரேயிறே. "நாம் உள்ளதனையும் இவருடையரக்ஷணம் இப்படி செல்லுகிறது, நமக்குப்பின்பு இவர்க்கு ரக்ஷகரார், என்

---

ப்ர:—(கைவந்தசக்கரத்து)— ஆரண்யகாண்டே [கரு] பஞ்சவடீப்ரவேசலக்ஷ்மணே நிர்மிதாம் பர்ணசாலாம் த்ருஷ்ட்வா ஸந்துஷ்டோ ராமோ லக்ஷ்மணம் "பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண। த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம॥ உக॥"

---

மர்யாதை - ஈஸ்வரன்கட்டினமர்யாதை. "பேரென்னைமாயாதால்" என்று - சென்றற்றதாகச்சொல்லியிருக்க, "மெலிவிக்கும்" என்கைக்கு ஆஸ்ரயமுண்டோ? என்ன - போனவுயிரை இத்யாதி. "சக்கரத்து" என்றதுக்குபாவம் - இவ்வ்யஸநத்தை இத்யாதி. "கைவந்த" என்றதுக்கு - பாவஜ்ஞ மாய்க் கையிலேவந்த என்னுதல்; "கைவந்த" என்று - முழுச்சொல்லாய், விதேயமான என்னுதல். இவ்வர்த்தத்வயத்தையும் அடைவே அருளிச்செய்கிறார் - அழையாதிருக்க இத்யாதியாலும்அறவிதேயமான இத்யாதியாலும். முந்தினஅர்த்தவிவரணம் - பாவஜ்ஞமாய் இத்யாதி. அப்படி அவன்பரிகரத்தில் பாவஜ்ஞராய்க் கார்யம்செய்தபேருண்டோ? என்ன - பாவஜ்ஞேந இத்யாதி. "பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண। த்வயா புத்ரேண தர்மாத்மா ந ஸம்வ்ருத்த: பிதா மம" இதி ஆரண்யகாண்டே, லக்ஷ்மணநிர்மிதபர்ணசாலாம் த்ருஷ்ட்வா ஸந்துஷ்டோ ராம:. அவர் அருளிச்செய்யாதிருக்க, பாவமறிந்துசெய்யும்படி எப்படி ? என்ன - அவர் இத்யாதி. செவிகண்ணாக - கண்செவியாக. சேஷாவதாரத்வாத் என்றபடி. க்ருதம் ஜாநாதீதி க்ருதஜ்ஞ: என்றுவிவக்ஷித்துபாவம் - வருந்தி இத்யாதி. விவரணம் - உஜ்ஜீவந இத்யாதி. சக்ரவர்த்திக்கு நிரயமாவதேதென்ன - நாம்உள்ளதனையும் இத்யாதி. "கைவந்த" என்றதுக்கு - அறவிதேயமான இத்

செய்யக்கடவது" என்று இதுவேயாயிற்று அவர்க்கு எப்போதும் நெஞ்சாறல்; அவர் செய்யு மவற்றை நீர் செய்கையாலே அவர்க்கு துக்கநிவர்த்தகர் நீரேயிறே. "[Grantha]" (தர்மாத்மா) - ஐயருமொருவரே! தான் பரமதார்மிகர்கிடீர்; தாம் இருந்தநாளும் நமக்கு வேண்டும் ரக்ஷணங்கள்பண்ணி, தாம்போனநாளைக்கும் தண்ணீர்ப்பந்தல்வைப்பாரோ பாதி உம்மைவைத்துப்போவதே! "[Grantha]" (நஸம்வ்ருத்தஃபிதாமம) - நாம் ஐயரை இழந்திலோமிறே, நீர் இழந்தீராகிலித்தனையிறே. "[Grantha]" (ராமஸ்யதக்ஷிணோபாஹுஃ) என்கிறபடியே விதேயமாய்க் காரியஞ்செய்யும் பரிகரத்தையுடையவர். [கண்ணன்] - ஸ்ரீபீஷ்மரைத் தொடருகிறபோது கையிலேவந் திருந்ததிறே திருவாழி. ஸ்ரீபீஷ்மர் நெடும்போது பொருதபடியாலே அர்ஜுநன் இளைத் தான், அவன் இளைத்தவாறே ஸர்வேஶ்வரன் தன்ப்ரதிஜ்ஞையை மறந்தான், தேரில்நின்றும் குதித்துத் திருவாழியைக்கொண்டு தொடர்ந்தான், வந்துகொன்றருளீர் என்கிறான். "[Grantha]" (ஏஹ்யேஹீத்யாதி) - என்றும் ஆணைமறுத்தாலும் சேதமில்லையீ! இச்சீறிச்சிவந்த கண்ணழகை அநுபவிக்கப்பெற்றால். "[Grantha]" (ப்ரஸஹ்ய) - தேவர்க்கும் வீரத்துக்கும் தோலேன், என்கையி லாயுதத்தைப்போகடச்சொல்லித் தலையை யறுத்தருளீர். "[Grantha]" (லோகநாத) - வீரத்துக்குத்தோலேனாகிலும் முதன்மைக் குத் தோற்பனிறே. [என்கண்ணன்] - ஆஶ்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையை அழியமாறுமவ னிறே. ஆஶ்ரிதரிலே ஒருவர்க்குச் செய்தது எல்லார்க்குமாயிருக்குமே. "ஆஶ்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையையழியமாறும்" என்னுமிது தஞ்சமாகவிறே இவனைப்பற்றுகிறார் பற்றுகிறது. தனக்கென்னவும் சிலநியதமாயிருக்குமாகில் இவனைப்பற்றுவார்க்குப் பலமில்லை. [தைவந்த

---

ப்ர:— [Grantha] [உ அ] [Grantha] ॥உச॥ [Grantha] ॥உ௫॥"

---

யாதி. த்விதீயார்த்தத்துக்கும் இளையபெருமாளை உதாஹரணமாக அருளிச்செய்கிறார் - [Grantha] இத் யாதி. அப்படி திருவாழிதான் நினைவறிந்து கைவந்தவிடமுண்டோ? என்ன - ஸ்ரீபீஷ்மரை இத் யாதி. "[Grantha]" என்றத்தைப்பற்ற - என்றும் இத்யாதி. ஆணை மறுக்கையாவது - "ஆயுதமெடேன்" என்ற க்ருஷ்ணனை எடுப்பித்து ஶேஷியினுடைய ப்ரதிஜ் ஞையை யழிக்கை. சேதமில்லை - ஹாநியில்லை. "[Grantha]" இதி [Grantha]. "[Grantha]" இதி பீஷ்மவசநம். "என்" என்றதுக்குபாவம் - ஆஶ்ரிதர்க்காக இத்யாதி. ஆஶ்ரிதர்க்காகச்செய்தால் தமக்கென்? என்ன - ஆஶ்ரிதரிலே இத்யாதி. ப்ரதிஜ்ஞாபரி பாலநமன்றோ தஞ்சம், அத்தையழியமாறுமதுதஞ்சமோ? என்ன - ஆஶ்ரிதர்க்காக இத்யாதி. ஆஶ்ரி தர்க்காகவென்றது - அர்ஜுந ரக்ஷணார்த்தமாக என்னுதல். பீஷ்மனை ஸத்யப்ரதிஜ்ஞனாக்குகைக்காக என்னுதல். "[Grantha]" இத்யாத்யநுஸந்தேயம். இப்படி இராவிட்டால் ஹாநியே தென்ன - தனக்கென்னவும் இத்யாதி. சில என்றது - ஸத்யப்ரதிஜ்ஞாதிகள். "தைவந்த" என்றது -

தண்தென்றல்] - குளிர்ந்தகாலத்திலே வந்த குளிர்ந்த தென்றலென்னுதல்; தைவருகை யாவது - தடவுகையாய், காந்தனுடைய கரஸ்பர்ஶத்துக்கு ஸ்மாரகமாயிராநின்றதாயிற்றுக் குளிர்ந்ததென்றல். "தான்சென்று மண்மகளைத் தைவந்தான்" என்று ப்ரயோகித்தார்களிறே. [வெஞ்சிடரில்தானடுமே] - வெவ்விய சுடரிற்காட்டில் அடுமென்னுதல், சுடர் போலே நலியாநின்றதென்னுதல், லௌகிகாக்நியிற்காட்டில் நரகாக்நிக்குள்ள வாசிபோருமிறே பிரிந்தஸமயத்தில், அநுகூலபதார்த்தத்துக்கு. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளினுண்துளியாய்
அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றாதால்
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால்
நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்? நின்றுருகுகின்றேனே.

ஆ.—(வெஞ்சுடரில்.)வெஞ்சுடரில்தானடாநின்றது வீங்கிருளின் நுண்துளியாய்; அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர் தோன்றுகிறதில்லை, செஞ்சுடர்த்தாமரைக்கண்செல்வனும் வருகிறிலன், இனி நெஞ்சிடர்தீர்ப்பாரார், முடியப்பெறாதே காலதத்வமெல்லாம் நின்று உருகாநின்றேனென்கிறாள்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ராத்ரியும் மிகவும் வாடியாநின்றது. வரக்கடவதான ஸூர்யோதயமும் நமக்கென்றவாறே ப்ரார்த்யமாய்விட்டது, எம்பெருமானே வந்து தோன்றுகிறிலன்,நான் நின்று நோவுபடுமித்தனைபோக்கி என்னுடைய வ்யாதியைப்போக்கக் கடவார் யாருண்டோ இனி? என்கிறாள்.

[வீங்கிருள் என்றுதொடங்கி] - வீங்காநின்றுள்ள இருளையும் நுண்துளியையுமுடைத்தாய்க்கொண்டு ராத்ரியானதுதான் நெருப்பிற்காட்டில் நலியாநின்றது. தோற்றரவிலே இருளைப்போக்கி நம்முடைய க்லேஶஹாநியைப் பண்ணவல்ல அழகிய ஒளியோடேகூடின ஆதித்யனுடைய அழகிய தேரும் தோன்றுகிறதில்லை. [செஞ்சுடர் என்று தொடங்கி] - இங்ஙனே துஸ்ஸஹமானதஶை செல்லாநிற்க, சிவந்த ஒளியையுடைத்தாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற அழகியதிருக்கண்களாலே குளிரநோக்கிக் கொண்டு ஸ்ரிய:பதியானவனும் வந்து தோன்றுகிறிலன்.

ப—அநந்தரம், அதிஶயிதாந்தகாரமான ராத்ரியானது நலியாநின்றது, ஆதித்யரதம் தோன்றுகிறதில்லை, இவ்வளவில் அத்யபங்குரைஶ்வர்யவிஶிஷ்டனான புண்டரீகாக்ஷன் வருகிறிலன், ஶிதிலையாகிற என்னுடைய மநோதுஃகத்தைப்போக்குவாராரென்கிறாள்.

---

தைமாஸத்திலேவந்த என்னுதல், தடவிக்கொண்டுவந்த என்னுதல். தைவருகை - தடவுகையாமோ? என்ன; ப்ரயோகம் - தான்சென்று இத்யாதி. சுடரென்னாதே, "வெஞ்சுடர்" என்றது - நரகாக்நியை. "வெஞ்சுடரில்" என்று - உபமார்த்தேபஞ்சமீ. முந்தினஅர்த்தத்தில், நரகாக்நித்விதீயார்த்தத்துக்கு; நரகாக்நியிலும் சுடுமோ? என்ன - லௌகிகாக்நி இத்யாதி. வாசிபோருமிறே என்றவநந்தரம், 'நரகாக்நியிற்காட்டில்' என்று கூட்டிக்கொள்வது. க்ரமேணாந்வய:. (அ)

வீங்கு - வீங்கிச்சதைத்த, இருள் - இருளையுடைத்தாய், நுண் - நுண்ணியதான, துளி - பனித்துளியை, ஆய் - உடைத்தாய்க்கொண்டு, (ப்ரக்ருதமானராத்ரிதான்), வெம் - வெவ்விய, சுடரில் - நெருப்பிற்காட்டில், அடும் - சுடாநின்றது; (இவ்வளவில், தன் தோற்றரவாலே இருளைப்போக்கும்), அம்-அழகிய, சுடர-சுடரையுடைய, வெய்யோன் - உஷ்ணஹாநுவான ஆதித்யனுடையதான, அணி-அழகிய, நெடு-உத்துங்கமான, தேர் - தேரானது, தோன்றுது - தோன்றுகிறதில்லை; (இவ்வளவில்), செம் - (அதிசயிதைஸ்வர்யஸூசகமாய்ச்)சிவந்த, சுடர்-ஒளியையுடைய, தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண் - கண்ணையுடையனான, செல்வனும் - ஸ்ரீமானும், வாரான் - வருகிறிலன்; (ஆகையாலே), நின்று - ஒருபடிப்பட நின்று, உருகுகின்றேன் - உருகாநின்றேன்; இனி - இனி, நெஞ்சிடர் - என்மநோதுஃகத்தை, தீர்ப்பார் - தீர்ப்பார், ஆர் - ஆர்? வீங்குதல் - தடித்தலாய், செறிதலைச் சொல்லுகிறது. நுண்துளியாய் - நுண்ணியதுளியாய். தான் - வெஞ்சுடரில் - அடாநிற்குமென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ராத்ரி நலியாநின்றது, ஸூர்யோதயமும் ''நமக்கு'' என்றவாறே ப்ரார்த்யமாய்விட்டது, ரக்ஷகனுனவனும் தோற்றுகிறிலன், என்னுடைய மநோதுஃகத்தைப் போக்குவாராரினி வேறென்கிறாள்.

[வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளின்நுண்துளியாய்] - வளர்ந்தவிருளும் சிறுதுளியுமாய், ராத்ரியானது நெருப்பிற்காட்டில் நலியாநின்றது. ராவணன் மாரீசஸஹாயனுய்வந்தாற்போலே, ராத்ரி சிறுதுளியை ஸஹகாரமாகக்கொண்டுவந்தது. இரண்டையும் மோகத்துக்கு வர்யகமாகச் சொல்லக்கடவதிறே. [அஞ்சுடர இத்யாதி] - தன்னுடையதோற்றத்திலே இருளைப்போக்கி துஃகநிவ்ருத்தியைப்பண்ணவல்ல ஒளியோடேகூடின ஆதித்யனுடைய அழகிதான உதயஸூசகமான தேரும் தோன்றுகிறதில்லை. [செஞ்சுடர் இத்யாதி] - இத்தசையிலே, புண்டரீகாக்ஷனை ஸ்ரீயஃபதியும் வருகிறிலன். சிவந்த ஒளியையுடைய தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையுடைய ஸ்ரீயஃபதியும் வருகிறிலன். இந்த ஆர்த்தசையிலே குளிரநோக்கிக்கொண்டு இருவருமாய் வரப்ராப்தமாயிருக்க, அதுகிட்டிற்றில்லை. ஆதித்யன் உதித்தாலும் ராத்ரி வர ஸம்ஹாவனையுண்டு, அஸ்தமியாத ஆதித்யன் வருகிறிலன், ''பகற்கண்டேன்நாரணனைக்கண்டேன்'' என்னக்கடவதிறே. [நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்] - இனி மநோதுஃகத்தைப் போக்குவாரார்? ஆந்தரமான தமஸ்ஸைப் போக்கும்போது அவனேவேண்டாவோ; பாஹ்யதமஸ்ஸையிறே ஆதித்யன் போக்குவது. [நின்றுருகுகின்றேனே - நெஞ்சிடர் தீர்ப்பாரினியார்] - விலக்ஷணவிஷயத்தைப்பிரிந்தால் உள்ளதொன்று இது - உருகி யர்மிலோபமும்பிறவாதே, யரிக்கவும்பெறுதே யுருகாநிற்குமித்தனை.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. ராத்ரியும் நலியாநின்றது, ஸூர்யோதயமும் ''நமக்கு'' என்றவாறே ப்ரார்த்யமாய்விட்டது, - ரக்ஷகனுனவனும் தோற்றுகிறிலன், என்மநோதுஃகத்தை இனிப்போக்குவார் ஆரேன்கிருள்.

---

ஒன்பதாம்பாட்டு.—வெஞ்சுடரில் இத்யாதி. ''வெஞ்சுடரில்'' இத்யாதியைக்கடாக்ஷித்து - **ராத்ரியும்** இத்யாதி. இருளுக்கும் ராத்ரிக்கும் அபேதத்தைவிவக்ஷித்து - **ராத்ரியும் நலியாநின்றது என்றது.**

[வெஞ்சுடரில் இத்யாதி] - ராவணன் மாரீசஸஹாயனாய்க்கொண்டு வந்து தோற்றினாற்போலேயாயிற்று நுண்ணியதுளியோடேசேர்ந்த இருள் வந்து தோன்றினபடி. இரண்டும் லோகத்துக்கு ஏகாந்தமாயிருக்குமிறே. ீ"ஒழுகுநுண்பனி" இத்யாதி - வர்ஷா வில் கைக்குள்ளேயடங்க அணைக்கவேணும். இருள்தானே லோகவர்யகமிறே. [வீங்கிருளின் நுண்துளியாய் - வெஞ்சுடரிற்றானடுமால்] - வளர்ந்தஇருளும், நுண்ணியபனியும், வெவ்வியசுடரிற்காட்டில் அடாநின்றதென்னுதல், வெஞ்சுடர்போலே அடாநின்றதென்னுதல். இவற்றில் ப்ரயாநமேது? என்னில்;—அதுவேணுமோ, "பாயகங்களிரண்டுண்டு" என்னவமையாதோ. இனித்தான் இத்திருவாய்மொழிதன்னில் - ராத்ரி வ்யஸநமிறே சொல்லிப்போருகிறது; ஆனபின்பு, இருளுக்கே ப்ராயாந்யமாக வமையுமிறே. [அஞ்சுடர் இத்யாதி] - இளையபெருமாள் அகலநின்றாற்போலேயாயிற்று இது. தன்னுடைய தோற்றரவிலே து:கநிவ்ருத்தியுண்டாம்படியான அழகிய சுடரையுடைய ஆதித்யனும் வருகிறிலன். [தோன்றுதால்] - ப்ரளயத்தில் அல்பஶேஷமாம்படி நீஞ்சி, "கரையைக்கிட்டினோமோ, கிட்டினோமோ!" என்று பார்ப்பாரைப்போலேகாணும், ராத்ரியெல்லாம் நோவுபட்டு "விடிந்ததோ, விடிந்ததோ" என்று பார்க்கிறபடி. [செஞ்சுடர் இத்யாதி] - "தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" (தஸ்யயதாகப்யாஸம்புண்டரீகமேவம

---

ப்ர:—(செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால்)—ஸாந்தோக்யே [௬] "ய ஏஷோऽந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஶ்யதே ஹிரண்யஶ்மஶ்ரு: ஹிரண்யகேஶ ஆப்ரணகாத் ஸர்வ ஏவ ஸுவர்ண: தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ தஸ்யோதிதி நாம ஸ ஏஷ ஸர்வேப்ய: பாப்மப்ய உதித:"

---

"வெஞ்சுடரிற்றானடும்" இதி - அநுவாத:. லோகவர்யகமாகையாலே இருள்பாயகமாமத்தனையொழிய, துளி பாயகமாமோ? என்ன - இரண்டும் இத்யாதி. "துளிலோகவர்யகம்" என்றதுக்கு ப்ரமாணம் - ஒழுகு இத்யாதி. ஒழுகுநுண்பனிக்கொடுங்கியபேடையை யடங்கவஞ்சிறைகோலித் தழுவுநள்ளிருள்தனிமையிற் கடியதோர்கொடுவினையறியேனே - சொரிகிற நுண்ணிய பனிக்கு ஒடுங்கினபேடையைத் தன்சிறகுக்குள்ளேயடங்கும்படி அழகியசிறகையிட்டுத்தழுவும் நடுவிருளில் தனிமையில் கொடியதாயிருப்பதொரு கடுவினையறியேன் இத்யர்த்த:. ீதிருமொழி, எட்டாம்பத்து, அஞ்சாந்திருமொழி, எட்டாம்பாட்டு, "மழுதிவ்வையகம்" இத்யாதி. இதுக்குத்தாத்பர்யார்த்தம் - வர்ஷாவில் இத்யாதி. லோகவர்யகமிறே என்றவநந்தரம், 'அதுக்குமேலே' என்று கூட்டிக்கொள்வது. வீங்கிருளின் நுண்துளியாய் - வளர்ந்தவிருளும் நுண்ணியதுளியுமாய்க் கூடிக்கொண்டு இத்யர்த்த:. இன் - சாரியைச்சொல். இரண்டாமர்த்தத்துக்கு, உபமார்த்தேபஞ்சமீ. இரண்டைச்சொல்லுகையாலே "இவற்றிலே ப்ரயாநமின்னது" என்கைக்காகத் தடஸ்தஶங்கையை அநுவதித்துப்பரிஹரிக்கிறார் - இவற்றில் இத்யாதி. இனித்தானென்றது - வேணுமாகிலென்றபடி. கீழே "ராவணன் மாரீசஸஹாயனாய்" இத்யாதிக்கு அநுகுணமாக அருளிச்செய்கிறார் - இளையபெருமாள் இத்யாதி. இது - அணிநெடுந்தேர்தோன்றாதே அகலநின்றது. ஆதித்யன் மறைந்ததென்னவுமாம். ரதாபேக்ஷயா ஸூர்யனுக்கர்த்தத:. ப்ராயாந்யமுண்டாகையாலே, தத்ப்ரதாநத்வேந "அஞ்சுடர" இத்யாதிக்குபாவம் - தன்னுடைய இத்யாதி. வாராதென்னாதே, "தோன்றுதால்" என்றதுக்குவாஸனை - ப்ரளயத்தில் இத்யாதி. "அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர் தோன்றுதால்" என்றவநந்தரம், "செஞ்சுடர்த்தாமரைக்கட்செல்வனும்வாராரனால்" என்றதுக்குபாவம்- தஸ்ய யதா கப்யாஸம் இத்யாதி. ௨இயம்ஶ்ருதிஸ்சாந்தோக்யே. இத்தால்பலித்தபாவம் - ஆதித்ய

க்ஷிணீ) என்று ஆதித்யமண்டலத்திலே எழுந்தருளியிருக்கிறவனும் வருகிறிலன். ஆதித்ய னுடைய வரவுக்கு அருணோதயம்போலே இருப்பதொன்றிறே, அவனுடையவரவுக்கு ஆதித்யனுடைய தோற்றரவு. சிவந்தசுடரையுடைய தாமரைபோன்ற கண்களையுடைய ஸ்ரீமானும் வருகிறிலன். ஆதித்யன்வந்தாலும் இருள்வர ஸம்ஹாவனையுண்டிறே, அஸ்தமி யாத ஆதித்யனும் வருகிறிலன், அவனுடையப்ரகாஶமும் ப்ராதேஶிகமாயிருக்குமிறே, உபய விபூதிக்கும் ப்ரகாஶத்தைப்பண்ணுமவனிறே இவன். "பகற்கண்டேன் நாரணனைக்கண் டேன்" என்னக்கடவதிறே. [நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்] - ஆந்தரமான தமஸ்ஸைப் போக்குவாரார்? பாஹ்யமான தமஸ்ஸைப்போக்குமவனிறே அவன்; ஆந்தரமான தமஸ்ஸா கிறது வயிரம்பற்றின இடரிறே; அத்தைப்போக்கும்போது, நிலவனுமாய் அந்தரங்கனுமான வனேவேணுமே.§"ஞானமாகிநாயிறுகி" என்னக்கடவதிறே. [நின்றுருகுகின்றேனே - நெஞ் சிடர்தீர்ப்பாரினியார்] - விலக்ஷணவிஷயத்தில் விஶ்லேஷம், உருகிற்றாய் தர்மிலோபம் பிறக்கவுமொட்டாது, தரிக்கவுமொட்டாது, முடியவுருகினபடியே நிற்குமித்தனை. "இன்ன மொருகால் காணலாமோ" என்னும் நசை முடியவொட்டாது, அப்போதை இழவு ஜீவிக் கவுமொட்டாது. (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம்
சென்றுருகிநுண்துளியாய்ச் செல்கின்றகங்குல்வாய்
அன்றொருகால்வையம் அளந்தபிரான்வாரானென்று
ஒன்றொருகாற்சொல்லாது உலகோவுறங்குமே.

ஆ.—(நின்று.) *நின்று உருகுகின்றேனேபோல நெடுவானம் சென்றுருகி நுண்துளியாய்ச் செல்கின்றகங்குல்வாய், அன்றொருகால் வையம் அளந்தபிரான் வாரா னென்றாகிலும் அவன்திறமாக ஒன்றொருகாற்சொல்லாது உலகோஉறங்குமேயென்கிறாள்.*

---

னுடைய இத்யாதி. அதாவது - ஸ்வமண்டலவர்த்தியான ஈஶ்வரனுடைய வரவுக்கு ஸூசகமான ஆகாரத்தாலே, ஆதித்யனுடையவரவும் ப்ரார்த்யமென்றுகருத்து. ஶப்தார்த்தம் - சிவந்த இத்யாதி. "அஞ்சுடரவெய்யோன்" இத்யாத்யநந்தரம், "செஞ்சுடர்த்தாமரைக்கண்" இத்யாதியைச்சொன்ன துக்கு - ஆதித்யனில் வ்யாவ்ருத்தியைப்பற்றச் சொல்லுகிறதென்று தாத்பர்யாந்தரம் - ஆதித்யன் வந்தாலும் இத்யாதி. இன்னம் ஓராகாரத்தாலே வ்யாவ்ருத்தி - அவனுடையப்ரகாஶம் இத்யாதி. உபயவிபூதிக்கும் ப்ரகாஶத்தைப்பண்ணுமோ? என்ன - பகற்கண்டேன் இத்யாதி. அதாவது, "நாரணனைக்கண்டேன்" என்று - உபயவிபூதிநாதத்வத்தைச்சொல்லி, "பகற்கண்டேன்" என் கையாலே - உபயவிபூதிக்கும் ப்ரகாஶகனென்றபடி. "வாரானால்" என்றத்தையுங்கூட்டி பாவம் - ஆந்தரமான இத்யாதி. ஆதித்யன் இத்தைப்போக்கானோ? என்ன - பாஹ்யமான இத்யாதி. நில வனுமாய் அந்தரங்கனுமானவன் - அந்தரங்கனாகையாலே நிலவனென்றபடி. நிலவன் - தேசிகன். ஆந்தரமான அந்தகாரத்தை இவன்போக்கும் ப்ரகாரமேதென்ன - ஞானமாகி இத்யாதி. அஜ்ஞாநாந்த காரத்தைப்போக்கும் ஜ்ஞாநமுமாய், பாஹ்யாந்தகாரத்தைப்போக்கும் ஆதித்யனுமாய் இதி ஶப்தார்த்தஃ. §திருச்சந்தவிருத்தம் நூற்றுப்பதினொலாம்பாட்டு, "ஈனமாய" இத்யாதி. இத்தால் - "ஞானமாகி" என் றதுக்கு - தான் ஜ்ஞாநஸ்வரூபனாகையாலே இவனுக்கு ஜ்ஞாநத்தையுண்டாக்கி, ஆந்தரமான அஜ் ஞாநாந்தகாரத்தைப்போக்குமென்று கருத்து. வர்த்தமாநநிர்த்தேசத்துக்கு பாவம் - விலக்ஷண இத் யாதி. உருகுகிறதென், முடிந்துபிழைத்தாலோ? என்ன - இன்னம் ஒருகால் இத்யாதி என்னு தல்; "விலக்ஷணவிஷய" இத்யாதிவாக்யவிவரணமாதல். க்ரமேணாந்வயஃ. (கூ)

ஒ.—பத்தாம்பாட்டில், இந்தராத்ரியில் என்னுடைய வ்யஸநத்தைக் கண்டு வைத்தும், அவன்திறமாக ஒருவார்த்தைசொல்லாதே இந்தலோகம் உறங்குவதே ! என்கிருள்.

[நின்று என்றுதொடங்கி] - நிரந்தரமாக உருகுகிற என்னைப்போலே இந்தப் பெரும்பரப்பையுடைய ஆகாசம் தேய்ந்து உருகுகிற சிறுதுளியையுடைய ராத்ரியிலே. [அன்று ஒருகால் என்றுதொடங்கி] - யாத்ருச்சிகமாக அன்றே ஒருகால் பூமியை அளந்தானத்தனை, அது நியதஸ்வபாவமன்று, அத்யந்தநிர்க்ருணன் என்றாகிலும் ஒருவார்த்தையை ஒருகால் சொல்லாதே.

ப.—அநந்தரம், ராத்ரியிலே நான் ஈடுபடாநிற்க, பூமியை அநந்யார்ஹமாக்கின மஹோபகாரகன் விஷயமாக ஒருவார்த்தைசொல்லாதே லோகம் உறங்காநின்றதென்று கூப்பிடுகிருள்.

நின்று - (ஒருகாலொழியாமே) நின்று, உருகுகின்றேனேபோல - உருகாநிற்கிற என்னைப்போலே, நெடு-மஹாவகாசமான, வானம்-ஆகாசம், சென்று - க்ஷயித்துச் சென்று, உருகும் - உருகுகிற, நுண்-நுண்ணிய, துளி-துளிகளை, ஆய்-உடைத்தாய்க் கொண்டு, செல்கின்ற - (இடைவிடாமல்) செல்லுகிற, கங்குல்வாய்-இரவிடத்து, அன்று-(மஹாபலியபஹரித்த) அன்று, ஒருகால்-ஒருகாலத்திலே, வையம் - பூமியை, அளந்த-அளந்த, பிரான் - லோகோபகாரகன், வாரான் - இன்றுவருகிறானே, என்று - என்றாகிலும், ஒன்று - ஒருவார்த்தையை, ஒருகால்-ஒருகால், சொல்லாது - சொல்லாதே, உலகு-லோகம், உறங்கும் - உறங்காநிற்கும், ஓ - "ஓ ! இதுவென்ன கட்டத்தான்" என்று வெறுத்துரைத்தபடி. "வாராதொழிவதே" என்று வெறுத்துரைத்ததாகவுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், இந்தராத்ரியில் என்னுடைய வ்யஸநத்தைக்கண்டு வைத்து, அவன்திறமாக ஒருவார்த்தைசொல்லாதே லோகமாக வுறங்குவதேயென்கிருள்.

[நின்று இத்யாதி]-முடிவின்றிக்கே நிரந்தரமாக உருகுகிற என்னைப்போலே, மஹாதத்வமான ஆகாசம் சென்றற்று நுண்துளியாய் உருகிச்செல்லுகிற ராத்ரியிலே, ஸகலபதார்த்தங்களுக்கும் அவகாசப்ரதாநம்பண்ணும் மஹாதத்வம் அழிகிறபடிக்கு வேறு த்ருஷ்டாந்தமில்லை, என்னைச்சொல்லுமித்தனை. அளவுடையாரெல்லாரும் அழிகிறகாலமாகாதே. [அன்றொருகால் இத்யாதி] - "ஒருகாலத்திலே காதாசித்கமாக பூமியை அளந்தானித்தனை, நியதஸ்வபாவனன்று" என்றாகிலும் சொல்லுகிறாரில்லை. இவள்தான், வரையாதே யளந்துகொண்ட மஹாகுணத்தை விஸ்வஸித்தாயிற்று இந்த ராத்ரியிலும் முடியாதேகிடந்தது. "இந்தமஹாகுணத்தையுடையவன் தன்னாலேவந்த வாற்றாமைக்கு உதவாதொழியுமோ" என்று பார்த்திருந்தாய், "வாரான்" என்று சொல்லவமையும். [பிரான்] - "உபகாரகன்" என்றிறே ப்ரமித்திருக்கிறது, பெருக்காறு வற்றினாற்போலே அக்காலத்திலே வற்றிற்றென்றாகிலும் சொல்லவமையும். [ஒன்று] - அவன் திறமாக ஒருவார்த்தையு மமையும். "கடியன்கொடியன்" என்று அவன்குணஹாநியைச் சொல்லவுமமையும். [ஒருகால்] - ஒருகால் சொல்லவுமமையும். வாரானென்றபோதே முடியாதார்க்கிறே இருகாற்சொல்லவேண்டுவது. [உலகோவுறங்குமே]-"அன்னையரும் தோழியரும்" என்றுஇன்னாதானது லோகமாகச்சொல்லவேண்டும்படியாயிற்று

அதுக்குப்பின் பிறந்த அவஸாதாதிஸமயம். "வாராதவனைநல்லன்" என்னும்படியிருந்ததீ ஸந்நிஹிதரான லோகத்தார்படி.

ஈடு.—பத்தாம்பாட்டு. இந்தராத்ரியில் என்னுடைய வ்யஸநத்தைக்கண்டு வைத்து அவன்திறமாக ஒருவார்த்தைசொல்லாதே லோகமாகவுறங்குவதே! என்கிறாள்.

[நின்று இத்யாதி] - பரப்பையுடைத்தான, ஸகலபதார்த்தங்களுக்கும் அவகாச ப்ரதாநம்பண்ணும் ஆகாசமானது, சென்றற்று நுண்ணியதுளியாய் இற்றுவிழாநின்றது - ஆரைப்போலேயென்றால், — [நின்று உருகின்றேனேபோல] - ப்ரத்யக்ஷித்தத்தையிறே உபமானமாகச்சொல்லுவது. † (மஹாதத்த்வமான ஆகாசம் அழிகிறபடிக்கு வேறு த்ருஷ்டாந்தமில்லை, என்னைச் சொல்லுமித்தனை. அளவுடையாரெல்லாரும் அழிகிற காலமாகாதே.) "யஸ்யஸாஜநகாத்மஜா-அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்று - பெரியவர்களுடைய பெருமையும் தன்ஸம்பந்தத்தாலேயாம்படி யிருக்குமவளிறே. "ஸ்ரிய:பதியாகையாலே ஸர்வாதிகன்" என்னக்கடவதிறே. இப்படிசெல்லுகிற இரவிடத்து. [அன்றொருகால் இத்யாதி] - " 'பிரிவாற்றாமையிலும் ஜீவிக்கைக்குநிமித்தம் அவனுடைய அடிப்பாடு - வரையாதே எல்லாரையுமொக்க ரக்ஷித்தவன், தன்னாலேவந்த ஆற்றாமையைப் பரிஹரியாதிருக்குமோ' என்னுமதிறே, அதுவும் அவனுக்கு, புழுக்குறித்தது எழுத்தானாற்போலே காதாசித்கமாகவந்ததொன்று, அது அவனுக்கு நியதஸ்வபாவமன்றுகாண்" என்றுசொல்லுகிறாரில்லை. [அன்றொருகால்] - அன்று அங்ஙனே ஒருகால்செய்தானித்தனை, அவனுக்கு எற்றைக்கும் நியதமாயிருப்பதொரு ஸ்வபாவமன்றுகாண் என்கிறாரில்லை. [பிரான்] - என்னுமிற்கச்செய்தேயிறே [வாரான்]

ப்ர:—(நின்றுருகுகின்றேனேபோலே)—ஸூரணகாண்டு [௩௭] ராவணம்ப்ரதி ஸ்ரீவ: "அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்யஸாஜநகாத்மஜா । நத்வம்ஸமர்த்தாம்ஹர்த்தும்ராமசாபாஸ்ரயாம்வநே॥" 

பத்தாம்பாட்டு.—நின்றுநந்து இத்யாதி. "சென்றுருகி" இத்யாதியைப்பற்ற - இந்தராத்ரியில் இத்யாதி. அவன்திறமாக - அவன்விஷயமாக. ஒருவார்த்தை - எனக்கு ஒருவார்த்தை.

"சென்று" என்றது - சேன்றற்று என்றதாய், துக்கித்தென்றபடி. தன்னையொழிய வேறு த்ருஷ்டாந்தமில்லையோ? என்ன - ப்ரத்யக்ஷித்தத்தை இத்யாதி. மஹாதத்த்வமான ஆகாசத்துக்கு அணுவான தன்னை த்ருஷ்டாந்தமாகச்சொல்லலாமோ? என்ன - யஸ்யஸா இத்யாதி. "நத்வம்ஸமர்த்தாம்ஹர்த்தும்ராமசாபாஸ்ரயாம்வநே" இத்யுத்தரார்த்தம். ஸூரணகாண்டு ராவணம்ப்ரதி ஸ்ரீவ:. உபபாதகம் - ஸ்ரிய:பதி இத்யாதி. "வையமளந்தபிரான்" என்றதும், "வாரான்" என்றதும் - பரஸ்பரவிருத்தமாகையாலே, இவையித்தனையும் ஜீவநத்தில் நசையறுக்கைக்கு உடலான லோகோக்தியாகக்கூடாமையாலே, "வையமளந்தபிரான்" என்றத்தை - நாயகியினுடைய அபிப்ராயமாக்கி, "அன்றொருகால்" என்றபதத்தை அநுஸந்தித்துக்கொண்டு, "வாரான்" என்ற லௌகிகோக்திக்கு பாவம் - பிரிவாற்றாமையிலும் என்றுதொடங்கி அது அவனுக்குநியதஸ்வபாவமன்றுகாணென்று சொல்லுகிறாரில்லை என்னுமளவும். அடிப்பாடு - திருவடிகளின்ஸாந்நித்யம்; அடிப்பாடு - அவகதியும். விவரணம் - வரையாதே இத்யாதி. என்னுமதிறே என்றவநந்தரம், ஜீவிக்கைக்கு ஹேதுவென்று அத்யாஹார்யம். குறித்தது - குறியிட்டது. இப்படிதொகுத்து அருளிச்செய்த தாத்பர்யத்தைப் பதங்களிலே எறிட்டுக்காட்டுகிறார் - அன்றொருகால் என்றுதொடங்கி, வாராமையேகாண் ஸ்வபாவம் என்கிறாரில்லை என்னுமளவும் எற்றைக்கும் - என்றைக்கும்.

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

என்கிறது. "'லோகத்தையடைய அளந்துகொண்ட உபகாரகனன்றே' என்று நினைக்கிறுயாகில், பெருக்காறு பெருகினற்போலே அது அங்ஙனே ஒருகால் செய்துபோனவித்தனை, வாராமையேகாண் ஸ்வபாவம்" என்கிறரில்லை. [ஒன்று] - "வாரான்" என்னவேண்டா, "வரும்" என்னவுமமையும். "இன்னம்வரும்" என்னும் நசைகொண்டு ஜீவிக்க இருப்பார்க்கிறே "வரும்" என்றே சொல்லவேண்டுவது. "வரும்" என்னவுமாம், "வாரான்" என்னவுமாம். [ஒருகால்] - ஒருகால்சொன்னல் பின்னையும் ஜீவிப்பார்க்கிறே இருகால் மட்டுச்சொல்லவேண்டுவது. "அவன் இனிவாரான்" என்று அறிந்தபோதே மூச்சடங்குமிறே. [உலகு ஓ! உறங்குமே] - "அன்னையரும்தோழியரும் உறங்காநின்றார்கள்" என்று இன்னுதானத்தை, லோகத்தையடைய இன்னுதாம்படிகாணும் அதுக்குப்பின்பு பிறந்த தசாவிசேஷம். பிரிந்தவனேடொத்ததீ! இந்தலோகம். (கo)

---

## பதிஞேராம் பாட்டு.

---

உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானைச்
சிறந்தபொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொல்
நிறங்கிளர்ந்தவந்தாதி ஆயிரத்துளிப்பத்தால்
இறந்துபோய்வைகுந்தம் சேராவாறெங்ஙனேயோ?

ஆ.—(உறங்குவான்.) *ஸ்வாத்மாநுபவஜநித நிரவதிகாநந்த மஹிமப்ரஸக்தஸ்தைமித்யத்தாலே நிஸ்தரங்கமஹார்ணவ ஸத்ருசனை எம்பெருமானைச்சொல்லி அலற்றின இத்திருவாய்மொழியில்சொன்ன ஆர்த்தியை அநுஸந்தித்தார் எங்ஙனே தரிக்கும்படி யென்கிறார்.*

---

*"பிரான்" என்னுநிற்க, "வாரான்" என்னக்கூடுமோ? என்கிற விரோதத்தை அநுவதித்துப்பரிஹரிக்கிறார்* - பிரான்என்னுநிற்க இத்யாதி. *விவரணம்* - லோகத்தை இத்யாதி. "வரும்" *என்றுசொல்லுகையே அபேக்ஷிதமாயிருக்க, "வாரான்" என்றும், "ஒன்று" என்றும்* - இரண்டையும் சொல்லுவானென்? *என்கிறசங்கையிலே அருளிச்செய்கிறார்* - இன்னம்வரும் என்னும் இத்யாதி. *கீழே, "ஒன்று" என்றதுக்கு* - வருமென்னவுமமையும் *என்று அர்த்தமருளிச்செய்து; அங்ஙனன்றிக்கே,* வாரானென்றென்று - *அதாவது - வாரானென்கிற ஒருவார்த்தையை என்று அர்த்தாந்தரத்தைவிவக்ஷித்து, "ஒருகால்" என்றதுக்கு அர்த்தமருளிச்செய்கிறார்* - ஒருகாற்சொன்னல் இத்யாரப்ய, மூச்சடங்குமிறே இத்யந்தேந. *ஆப்தரையன்றேவெறுப்பது, லோகத்தைவெறுக்கிறதென்? என்ன* - அன்னையரும்தோழியரும் *இத்யாதி, "ஓ!" என்றதுக்குபாவம்* - பிரிந்தவனேடு *இத்யாதி. அதாவது - நிர்த்தயமாயிருக்கிறதென்றபடி.* நின்றுருகு இத்யாரப்ய, உலகு - உறங்கும், ஓ! இத்யந்வய:. *நின்றுருகுகின்றேனேபோல* - ஒருகாலுமொழியாமே நின்று உருகாநிற்கிற என்னைப்போலே. *நெடுவானம்சென்றுருகி நுண்துளியாய்ச்செல்கின்றகங்குல்வாய்* - பரப்பையுடைய ஆகாசம் து:கித்து உருகி நுண்ணியதுளிகளையுடைத்தாய்க்கொண்டு இடைவிடாமல்செல்லுகிற ராத்ரியிடத்து. சென்று - *சென்றற்று; து:கித்தென்னுதல், க்ஷயித்தென்னுதல். அன்று - மஹாபலியபஹரித்த அன்று.* ஒருகால் - *ஒருகாலத்திலே.* வாரானென்றென்றேநகாற்சொல்லாது - *வாரானென்றும் வருமென்றும்* ஒருகாற்சொல்லாதே என்னுதல்; *வாரானென்றென்று - வாரானென்கிற ஒருவார்த்தையை,* ஒருகாற்சொல்லாதேயென்னுதல் *என்று ஸப்தார்த்தம்.* (கo)

ஒ.— நிகமத்தில், இத்திருவாய்மொழியில் ஆழ்வார்க்குச்சென்ற ஆர்த்தியை அநுஸந்தித்தார் எங்ஙனே தரிக்கும்படி? என்கிறார்.

[உறங்குவான் என்றுதொடங்கி] - கண்வளருவான்போலே ஜகத்ரக்ஷோபாய சிந்தை பண்ணுகிற ஸர்வேஶ்வரனை. இது - தமக்குத் தரிப்புப்பார்த்தபடி. [சிறந்த பொழில்] - ஸம்ருத்தமான பொழில். நிறம்-பண்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குப் பலமாகப் பரமபதப்ராப்தியை அருளிச்செய்கிறார்.

உறங்குவான்போல் - (படுக்கைவாய்ப்புப்பெற்று) உறங்குகிறவன்போலே, (ஏகாந்தஸ்த்தலமான க்ஷீரார்ணவத்திலே), யோகு - ஜகத்ரக்ஷணசிந்தாயோகத்தை, செய்த - பண்ணிக்கிடக்கிற, பெருமானை - ஸர்வேஶ்வரனைப்பற்ற, சிறந்த - ஸம்ருத்தமான, பொழில் - பொழிலாலே, சூழ்-சூழப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொல்-அருளிச்செய்த, நிறம்-பண், கிளர்ந்த - மிஞ்சின, அந்தாதி - அந்தாதியான, ஆபிரத்துள் - ஆயிரத்துள், இப்பத்தால் - இப்பத்தால், இறந்து - ஶரீரவிஶ்லேஷம்பிறந்து, போய் - அர்ச்சிராதியாலேபோய், வைகுந்தம்-பரமபதத்தில், சேராவாறு - புகாதொழிவது, எங்ஙனே - எங்ஙனே? அத்தேசத்திலே புகுகை யறுதியென்று கருத்து. நிறம்-பண், சந்தமாகவுமாம். இது-கலிவிருத்தம், நாலடித்தாழிசையாகவுமாம்.

இ.—நிகமத்தில், இப்பாசுரங்கேட்டார் இவர்தஶையை யநுஸந்தித்தார் பிழையாரென்கிறார். பரமபதஸித்திசொல்லிற்று - முடிந்தால் புகுமிடம் அதுவாகையாலே சொன்னவித்தனை.

[உறங்குவான் இத்யாதி] - "நம்மால்கார்யமில்லாதவிவர்களால் கார்யமென்?" என்று லோகத்தாரைவிட்டு, "இத்தஶையை விளைத்தவன் இவ்வளவிற்செய்வதென்" என்று அவனை யநுஸந்தித்தார்; ஜகத்ரக்ஷணார்த்தமாகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினபடியை யநுஸந்தித்து, "இப்போது வாராமையாலே வெறுத்தோமித்தனை, நம்முடையரக்ஷணசிந்தை பண்ணிக்கிடக்கிறான் நம்மைக்கைவிடான்" என்று இம்மஹா குணத்தை யநுஸந்தித்து தரிக்கிறார். கண்வளருகை என்று ஒருபேராய், ஜகத்ரக்ஷணோபாயசிந்தைபண்ணுகிற ஸர்வேஶ்வரனை. [சிறந்த இத்யாதி] - இவர் குணாவிஷ்காரத்தாலே தரித்தவாறே, திருநகரியும் தரித்தபடி. விஶ்லேஷத்தில் "ஶுஷ்யந்த்வ்ருக்ஷா:" என்றும், ஸம்ஶ்லேஷத்தில் "அகாலபலிநோவ்ருக்ஷா:" என்றுமிறே யிருப்பது. சிறந்தபொழில் - ஸம்ருத்தமானபொழில். [நிறங்கிளர்ந்தவந்தாதி] - பண்ணிலேகிளர்ந்த வந்தாதி. நிறம்-பண். [இப்பத்தால் இத்யாதி] - இப்பத்தை யநுஸந்தித்தால், எங்ஙனே ஶரீரவிஶ்லேஷம்பிறந்துபோய் பரமபதம்புகாதொழியும்படி. "பேரென்னைமாயாதால்" என்று - முடிகைதேட்டமாய், அதுதானும்பெறாதே இவர்பட்டக்லேஶத்தைப்படாதே, இப்பாஶுரத்தைக்கேட்டுப் பிழையாரென்கை. பகவத்பரருடைய ஆர்த்தியைக்கண்டால் தரிக்கமாட்டாதொழிகையிறே ஸ்வரூபம். இவருடைய ஹாவபந்தமில்லையேயாகிலும், இவர்தஶையை யநுஸந்தித்தால் பரமபதம்புகாதொழிய ஸம்பாவனையில்லையென்கிறது.

ஈடு.—நிகமத்தில், இவர்பாஸுரங்கேட்டார், இவர்தசையை யநுஸந்தித்தார் பிழையார்களென்கிறார். † (பரமபதஸித்திசொல்லிற்று) முடிந்தார் புகலிடம் அதுவாகை யாலே சொன்னவித்தனை.

[உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை] - அவன்வரவுதாழ்க்கையாலே "நம்மைமறந்து உறங்குகிறானே" என்றுசொன்னவித்தனை, அவன் உறங்குகிறிலன்; நம் முடையரக்ஷணசிந்தை பண்ணுகிறானித்தனை. "நித்ராஸிஜாகர்யயா" (நித்ராஸி ஜாகர்யயா). அந்யபரதையைத்தவிர்ந்து நம்முடையரக்ஷணசிந்தை பண்ணுகிறானித்தனை யல்லது, மறந்து உறங்குகிறானல்லன். மேல் உஜ்ஜீவிப்பிக்கவிருக்கிற ஸர்வேஶ்வரன், இவ்வளவிலே தன்படிகளை ஸ்மரிப்பித்தான். [சிறந்தபொழில்] - அவன் ரக்ஷணசிந்தை பண்ணிக்கொண்டு கண்வளர்ந்தருளுகிறபடியை அநுஸந்தித்து இவர் தரித்தவாறே, ஊரும் தரித்தது. விரஹத்தில் "அபிவ்ருக்ஷா:" (அபிவ்ருக்ஷா:) என்றும், வரவணித்தானால் "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்றும் சொல்லலாம்படி யாயிறே யிருப்பது. [நிறங்கிளர்ந்தவந்தாதி] - பண்ணிலேகிளர்ந்த அந்தாதி. [இப்பத்தால் இத்யாதி] - இப்பத்தையும் அநுஸந்தித்தவர்களுக்கு, பகவத்விரஹத்தில் இவரைப்போலே, "பேரேன்னைமாயாதால்" என்று முடிவுதேட்டமாய் நோவுபடமேதுவேண்டா; இத்தை அநுஸந்தித்தவர்கள் பிழையார்கள். இப்பாஸுரத்தைக் கேட்டு பிழைக்கமாட்டாதவர்கள் புகும்தேசம் பரமபதமாகையாலே சொன்னவித்தனை - இவ்விடம். இத்தால் ஒருபலஞ் சொல்லிற்றாகவும் வேணுமிறே, இது என்சொல்லிற்று? என்னில்,—பகவத்விஷயத்தில்

ப்ர:—(சிறந்தபொழில்சூழ்)—அயோத்யாகாண்டே [நுக] உபாயம் ஶ்ருதி ஸாஹ்ஸ்ரீ, "விஷயே தே மஹாராஜ ராமவ்யஸநகர்ஶிதா:। அபி வ்ருக்ஷா: பரிம்லாநா: ஸபுஷ்பாங்குரகோரகா:॥ ச॥"

[ரா-யு-கஉஎ]-ஶ்ருதிஶ்யாமே, ஹரஆஜம் ஶ்ருதிராஜ:, "அகாலபலிநோ வ்ருக்ஷா: ஸர்வே சாபி மதுஸ்ரவா:। பவந்து மார்கே மயிரிமயோத்யாம் ப்ரதி கச்சத:॥ கக॥"

நிகமம். - உறங்குவான் இத்யாதி. "இப்பத்தாலிறந்துபோய்" இத்யாதியின் முந்தின அர்த்தத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - இவர்பாசுரம் இத்யாதி. இவர்பாசுரங்கேட்டார் இவர் தசையை அநுஸந்திப்பரே, ஆகையாலே பிழைபாரென்றபடி. ஆனால், பரமபதஸித்தியைப் பலமாகச் சொல்லுவானென்? என்ன - முடிந்தார் இத்யாதி.

இப்போது, "உறங்குவான்போல்" என்று - அவன் உறங்காமையைச்சொல்லுகிறவிது, "பாம்பணையான்" என்று - தம்மைமறந்து உறங்கினானாகச்சொன்னத்தோடு விரோதியாதோ? என்ன - அவன்வரவு இத்யாதி. விஶ்லேஷது:கதசையில், "உறங்குவான்போல்" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - மேல்உஜ்ஜீவிப்பிக்க இத்யாதி. ஸ்மரிப்பித்தான் - ஆகையாலே சொல்லுகிறாரென்று கருத்து. இவ்வாக்யம் - அவன்வரவு இத்யாதி வாக்யத்துக்குமுன்னே அநுஸந்தேயம். இவர் தரித்த வாறே ஊரும் தரித்ததுக்கு த்ருஷ்டாந்தம் - விரஹத்தில் இத்யாதி. பண்ணிலேகிளர்ந்த - பண் ணிலேசொன்ன. இவ்விடம் - "வைகுந்தஞ்சேராவாறெங்ஙனேயோ" என்றவிடம். பரமபத ப்ராப்தி சொன்னது - அப்ரதாநமென்று அருளிச்செய்து; அங்ஙனன்றிக்கே, முக்யபலம் அதுவாகையாலே சொல்லிற்றென்று தாத்பர்யாந்தரம் - இத்தாலொருபலம் இத்யாதி. "எங்ஙனேயோ" என்றதுக்கு

† குண்டலிதம் க்வாசித்கம்.

அவகாஹித்தவர்களுடைய பாசுரம் கேட்டவர்களுக்கு, ப்ரக்ருதிவிஶ்லேஷாநந்தரம், அவர்கள் ப்ராப்யமாக நினைத்திருக்கும் தேசப்ராப்தி தப்பாதென்கை. ஶ்ரீகவத்ப்ரவணரானார் பாசுரங்கேட்டுப் பொறுக்கமாட்டாதே ஈடுபட்டு ப்ரக்ருதிவிஶ்லேஷம்பிறந்தவர்கள், அவர்களுக்கு உத்தேஶ்யமான தேசத்தைக் கிட்டாதொழியவிரகுண்டோ. [இப்பத்தாலிறந்துபோய் வைகுந்தம்சேராவாறெங்ஙனேயோ] - "நீளிரவாய்நீண்டதால்", "ஒண்சுடரோன் வாராதொளித்தான்" என்று - இங்கேயிருந்து க்லேஶப்படாதே, அஸ்தமியாத ஆதித்யனும் அஸ்தமியாத பகலுமான தேசத்திலே புகப்பெறுவர். (௧௧)

---

*ஶ்ராவம் - ஶ்ரீகவத்ப்ரவணரானார் இத்யாதி. "வைகுந்தம்" என்றதுக்கு ஶ்ராவம் - நீளிரவாய் இத்யாதி. அஸ்தமியாத ஆதித்யனையுடைத்தாகையாலே ஒருஹேகியானபகலென்றபடி. "ஸவிவ்ருக்ஷா:" இத்யாதி, பூர்வமேவலிகிதம். க்ரமேணாந்வய:. (௧௧)*

---

*த்ரவிடோபநிஷத்ஸங்கதி:* — ஸாம்வக்த்ராரம் விதாய ஸ்வகமெஹிர்யாணாரோஹாதிகாஸவிடமாம்ஶ்விஸம்ஜ்ஞயஶ்ரீ। வேஶாதிமாவிரஹிணீவஜஷோஶஷெநுஸ்தஶெரஹாஹ்வயாரஜநிரஹூாதிதாவதஷெ ॥

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:* — ஸுவத்வ்யநஷக்தஞ்ஜாயதஷஷ்லஜநநாஸ்ரீரவீரக்ஷக்தஷ்ரா வொகாநாம் விக்ஷாஶ்ரிதஷஶிதஷ்வெதர ஷெதேஶ்விஷ்வெதேஶ்। வக்ஷாஹ்ஷாஶிதகாக்ஷஜெநயநதாஸம்வதாவாவநகாஸகஷீராவ்ளஶெஷஶாய்ஜமஷவநஹாஷீக்ஷிதொஜ்ஞாயிதேந ॥

---

| | |
|---|---|
| *திருவாய்மொழி நூற்றந்தாதி.* | *ஊர நினைந்தமடலூரவுமொண்ணாதபடி<br>கூரிருள்சேர்க்கங்குலுடன்கூடிநின்று - பேராமல்<br>தீதுசெய்யமாறன்திருவுள்ளத்துச்சென்றதுயர்<br>ஓதுவதிங்கெங்ஙனேயோ.* |

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.*

---

## ஐந்தாந்திருவாய்மொழி—எங்ஙனேயோ : ப்ரவேசம்.

---

***ஆ.*** — *அநுஸந்தபரமபுருஷகுணஸ்மரணத்துக்குங்கூட க்ஷமையல்லாதபடி ராத்ரியில் மதியெல்லாமுள்கலங்கி அத்யந்தம் அவஸந்நையாய், விடிந்தவாறே லப்தஸம்ஜ்ஞையாய், பண்டுகண்டு அநுபவித்தநம்பியுடைய திருநகரியினுடைய அழகையும், நம்பி தம்முடைய ஸௌந்தர்ய ஸௌஶீல்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யநவதிகாதி*

ஸயாஸங்க்யேய கல்யாணகுணங்களேயும், திவ்யபூஷண திவ்யாயுதஜநிதமான அழகையும் ஸ்மரித்து, அந்த ஸ்மரணஜநிதமான ப்ரீதியாலும், தத்ஸம்ஶ்லேஷாலாபநிபந்தநமான அப்ரீதியாலும் விஶிஷ்டையாய் தத்ஸம்ஶ்லேஷார்த்தமாக இருந்து நோவுபடுகிற பிராட்டி, "பரமப்ராப்யனான எம்பெருமான்பக்கல் நீ உன்னுடைய அபிநிவேஶந்தோற்ற இருத்தல், அந்தவிஶ்லேஷஜநிதமான அவஸாதந்தோற்ற இருத்தல், அவன் எழுந்தருளி யிருந்த திருக்குறுங்குடியிலே போக உத்யோகித்தல்செய்யல், 'தன்னையுத்திஶ்ய இவள் இப்பாடுபடாநிற்கச்செய்தே வாராதொழிவதே, ஒருவனுடைய கொடுமையிருந்தபடி யென்?' என்றுகொண்டு இந்தலோகம் அவன்பக்கலிலே நைர்க்ருண்யாதிதோஷத்தை ஸங்கிக்கும், இதுவல்லது நங்குடிக்குப்பழியில்லை; ஆனபின்பு, அவன்தானே ஸம்ஶ்லேஷிக்கக்கண்டு இருக்குமத்தனையல்லது இப்படிபடுகை ஈடல்ல" என்று தன்னைப் பொடிந்து தனக்கு முகங்காட்டாதேயிருந்த தன்னுடைய அன்னைமாரைக்குறித்து; நம்பியுடைய, ஸ்வதஸ்ஸித்தமாயும் அந்யோந்ய ஸம்ஸர்க்கஸித்தமாயும் ஸதாநுபூயமாநமா யிருக்கச்செய்தே அபூர்வவத்விஸ்மயமாவஹமாநமுமாயிருந்த நிரவதிக திவ்ய ஸௌந்தர்ய மும், திவ்யாவயவ திவ்யபூஷண திவ்யாயுதங்களுமெல்லாம் என்நெஞ்சுள்ளும்புகுந்து நிறைந்திருக்கிற இருப்பும், அவற்றில் என்நெஞ்சுவிழுந்து அவையல்லது அறியாதே இருக்கிற இருப்பும் உங்களுக்குத் தெரியாமையிறே நீங்கள் என்னைப் பொடிகிறதென்று சொல்லுகிறாள்.

ஒ.—அஞ்சாந்திருவாய்மொழியில், இப்படி ராத்ரியில் அத்யந்தம் அவஸந்நை யான பிராட்டி, விடிந்தவாறே, செல்லுகிற வ்யஸநம் சிறிது நீங்கி, முன்பு அநுபூதமான நம்பியுடைய ஸௌந்தர்யாதிகளை ஸ்மரிக்கையாலே சிறிதுதரிப்போடேகூட, இப்போது காணப்பெறாத வ்யஸநத்தாலே நோவுபடுகிற இவளை, தோழிமாரும் தாய்மாரும் மற்று முண்டான உறவுமுறையாரும் "நீ இப்படி வ்யஸநப்படுகை ஸ்த்ரீத்வத்துக்கும் ஆபிஜாத் யத்துக்கும் போராது" என்று பொடிய, "நம்பியுடைய அழகிலே நான் அகப்பட்டபடி அறியாமையிறே நீங்கள் என்னைப்பொடிகிறது" என்ன, "நாங்களும் நம்பியைக் கண்டு வருகிறோம், எங்களுக்கு இப்படி அவஸாதம் பிறவாதே ஸுகிகளாயிராநின்றோம், நீ இங்ஙனே படுவானென்?" என்று அவர்கள்கேட்க, "ஸ்நேஹஹீநரான உங்களுக்கு நம்பியுடையவழகும் ஒப்பனையும் திவ்யாவயவங்களின் அழகும் தன்னில்சேர்த்தியும் தோற்றுமோ? அப்படி அறிகைக்கீடான அறிவையும் ஸ்நேஹத்தையும் அவன் எனக் குத் தந்தருளுகையாலே நான் அறிந்தேன்" என்று அவர்களுக்குச்சொல்லி, இப்படிப் பட்ட நம்பியுடைய அழகிலும் வேண்டற்பாட்டிலும் தான் மிகவும் அவகாஹித்து "இது எத்தனையேனும் அளவுடையாரேயாகிலும் அவன்பக்கல் பரிவில்லாதார்க்கு அறிய முடியாதிருக்கப்பெற்றோமே!" என்று ப்ரீதையாய் முடிக்கிறாள்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழ் "உறங்குவான்போல் யோகுசெய்த பெருமான்" என்று - அவனுடைய ஆஶ்ரிதஸம்ரக்ஷணசிந்தாயோகத்தை அநுஸந்தித்து ஆஶ்வஸ்தராய், பூர்வாநுபூதமான, "நல்கியென்னைவிடான்" என்கிறபடியே- தம்மை ஒரு காலும் கைவிடாத நம்பியுடைய வடிவழகு ஸ்ம்ருதிவிஷயமாய் ஆந்தர ப்ரீதியை ஜநிப் பிக்க, பாஹ்யஸம்ஶ்லேஷாலாபத்தாலுண்டான ஆர்த்தியுமொக்க நடக்கச்செய்தே; நம்பி யுடைய அஸாதாரண சிஹ்நாவயவ வைலக்ஷண்யத்தையும், அலங்கார ஶோபையையும்,

ஆஶ்ரிதரைக்காத்தூட்டும் ஆயுதபூர்த்தியையும், பரத்வப்ரகாஶகமான பரிஷ்காரப்ரகாரத்தையும், அதிஶயிதபோக்யமான முகாவயவஶோபையையும், முகாவயவத்தோடுசேர்ந்த ரூபபுஜவைலக்ஷண்யத்தையும், தேஜோமயமாய் உத்துங்கமான திவ்யவிக்ரஹயோகத்தையும், ஸர்வாவயவ ஸௌந்தர்யத்தையும், அஸங்க்யேயாபரணஶோபாவிஶிஷ்டமான அதிஶயிதபோக்யதையையும், அநந்யகோசரமாம்படி ஆந்தரமாகப்ரகாஶிக்கிற அதிஶயிததேஜோவிஶிஷ்டமான ப்ராப்யவேஷத்தையும் அநுஸந்தித்து, இந்த ஆந்தராநுபவப்ரீதியோடே அலாபநிபந்தநமான அப்ரீதியும் ஒக்கநடக்கையாலேஇவரை ஆஶ்வஸிப்பிப்பதாகஉத்யோகித்த ஸுஹ்ருத்துக்களையும் பரிவரையுங்குறித்து ஸ்வதசையை ஆவிஷ்கரித்த ப்ரகாரத்தை; நாயகனைப்பிரிந்த காமிநியானவள், தத்ஸௌந்தர்யாதி ஸ்மரணத்தாலும் தத்லாபார்த்தியாலும் ப்ரீத்யப்ரீதிகள் ஸமமாய்நடக்க, இவள் ஆர்த்தியை மீட்கைக்காக நியமித்த தோழிமாரையும் தாய்மாரையுங்குறித்து, தான் இவ்விஷயத்தில் அகப்பட்டபடியைச்சொல்லி அவர்களுக்கு மறுத்துரைத்தபடியாயிருக்கையாலே கழற்றெதிர்மறை என்கிற துறையாலே யருளிச்செய்கிறார்.

ஈ.—அஞ்சாந்திருவாய்மொழியில், "அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர் தோன்றாதால்" என்று வெறுத்த ஆதித்யனும் உதித்து, ராத்ரிவ்யஸநமும் அந்த ஆதித்யோதயத்தாலே சிறிதுநீங்கி, "அன்னையருந்தோழியரும் நீரென்னேயென்னாதே" என்றுசொன்ன ஹிதஞ்சொல்லுகிற அன்னையருந்தோழியரும் உணர்ந்து, ஹிதஞ்சொல்லுவாரும் உசாத்துணையாவாரு முண்டாகையாலும்; ஒன்றைஸ்மரித்து ஶரிக்கைக்கு "நீயும்பாங்கல்லைகாண்நெஞ்சமே" என்கிறநெஞ்சமும் பாங்காய், முன்பு அநுபூதமான நம்பியுடைய ஸௌந்தர்யாதிகளை ஸ்மரிக்கையாலும் சிறிதுதரிப்புண்டாய், அப்போதுகாணப்பெறாத வ்யஸநத்தாலே விஷாதமுண்டாகையாலே ப்ரீத்யப்ரீதி ஸமமாய்ச்செல்லுகிறது; திருவடி வார்த்தைசொன்னவநந்தரம், பிராட்டி "அம்ருதம் விஷஸம்ஸ்ருஷ்டம் த்வயாவாநரபாஷிதம்" என்று - பெருமாள் தன்னையல்லது அறியாதேயிருந்தாரென்ற வார்த்தையாலே ப்ரீதியும், அவர் தளர்ந்தாரென்ற வார்த்தையாலே அப்ரீதியுமாயிருந்தாப்போலே. பகவத்ஸௌந்தர்யாதிகள் ஸ்ம்ருதிவிஷயமாகையாலே ப்ராப்யருசி நலிகிறபடியைக்கண்டு பந்துக்கள், "இத்தனை அதிப்ராவண்யமாகாது, இது உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்கும் ஆபிஜாத்யத்துக்கும் அவன்தலைமைக்கும் போராது" என்று ஹிதஞ்சொல்லிமீட்கப்பார்க்க, "உங்களுக்கு அபிநிவேஶம்போராமையாலும், நம்பிபடிகள்தோற்றாமையாலும் மீட்கப்பார்க்கிறிகோளித்தனை; நான் மயர்வறமதிநலமருளப்பெறுகையாலே, நம்பியுடைய ஒப்பனையழகிலும் வடிவழகிலும் ஆபரணச்சேர்த்தியிலும் வேண்டற்பாட்டிலும் அகப்பட்டேன், உங்கள்ஹிதவசனத்தாலே மீட்கவொண்ணாது" என்று தன்படிகளைச்சொல்லி, எத்தனையேனும் அளவுடையாரேயாகிலும் பரிவில்லாதார்க்கு அறியமுடியாதா யிருக்கப்பெற்றோமென்று ப்ரீதியோடே தலைக்கட்டுகிறது. * மாசறு சோதியில் - ப்ராப்யத்வரையாலே உபாயாத்யவஸாயம் கலங்கினபடி; * ஊரெல்லாந்துஞ்சியில் - த்வரையுங்கூடக்கலங்கி முடிவு தேட்டமானபடி; இதில் - "ரக்ஷகன் அவனே" என்னுந்துணிவு செல்லாநிற்க, ப்ராப்யருசி நலிகிறது. * ஏழையராவியும் - உருவெளிப்பாடாய் இராநிற்கச்செய்தே, இவ்வளவன்றியே போக்யத்வம் முறுகியிருக்கும்.

ஈடு.—* மாசறுசோதியிலே "நாடுமிரைக்கவே - யாமடலூர்ந்தும்" என்று - மடலூரப் பாரித்தாள்; பாரித்தபடியே தலைக்கட்டப்பெறுமையாலே "* ஊரேல்லாம் துஞ்சி உலகெல்லாம்நள்ளிருளாய், முதலிலே மடலூருகைக்கு விஷயந்தான் இல்லாதபடி பழிசொல்லுவாருங்கூட உறங்கிற்று" என்று வெறுத்தாள்; "அஞ்சுடரவெய்யோன் அணி நெடுந்தேர்தோன்றுதால்" என்று - ஆதித்யோதயத்துக்கு ஸூசகமுங்கூட இல்லையாயிற்றென்று வெறுத்தாள்; "நீயும்பாங்கல்லைகாண்நெஞ்சமே" என்று - ஒன்றைஸ்மரித்து யரிக்கைக்கு விரகற்றதென்றும் வெறுத்தாள். * மாசறுசோதியில்-ப்ராப்யத்வரையாலே உபாயாத்யவஸாயம் கலங்கினபடி, * ஊரேல்லாந்துஞ்சியில் - அத்த்வரையுங்கூடக் கலங்கினபடி. இதில் - "ரக்ஷகன் அவன்" என்னும்தேளிவும் செல்லாநிற்க, ப்ராப்யருசிநலிகிறபடி. இக்குறைகளேல்லாம் தீரும்படி போதும் விடியப்பெற்று, "அன்னையருந்தோழியரும்" என்கிற இழவுதீர, உகப்பாரும் பொடிவாரும் ஹிதஞ்சொல்லுவாருமாகப் பெற்றது. அநந்தரம் பந்துவர்க்கமடைய உணர்ந்து "தீர்ந்தவென்தோழி" என்று இவளுடைய துணிவுகண்டு உகப்பாரும், "தோழிமீரென்னையினியுமக்காசையில்லை" என்னவேண்டும்படி

---

எங்ஙனேயோ ப்ரவேஶ,—கீழில்துஃகமெல்லாம் இதிலே தீர்ந்ததென்கைக்காக, கீழ் துஃகஹேது மூன்றென்கிறுர் - மாசறுசோதி இத்யாதி வாக்யத்ரயத்தாலே. தலைக்கட்டப்பெறுமையாலே என்றவிடத்திலே - தலைக்கட்டப்பெற தபடி ராத்ரியாய் இருள்வந்து மூடி நின்றமையாலே என்று அத்யாஹார்யம். மடலூருகைக்கு விஷயந்தானில்லாதபடி என்றதுக்கு - இவர்கள் பழிசொல்லுமது, அவ்விஷயத்துக்கு ஸ்மாரகமாய் அவ்வழியாலே மடலூருகைக்கு விஷயத்தைக்காட்டிக் கொடுக்குமதொன்ருகையாலே மடலூருகைக்கு விஷயமுண்டு; இவர்கள் பழிசொல்லாதே உறங்குகையாலே மடலூருகைக்கு விஷயமில்லையென்று தாத்பர்யம். ஒன்றைஸ்மரித்து யரிக்கைக்கு விரகற்றது என்றதுக்கு ஹாவம் - மனஸ்ஸு அவன் பக்கலிலே ப்ரவணமாகையாலே வேறொன்றை ஸ்மரித்து யரிக்கைக்கு முடலன்றிக்கே, அலாபதசையாகையாலே அவனைஸ்மரித்து யரிக்கைக்குமுடலன்றிக்கே விரகற்றதென்று. ஆக, பழிசொல்லுவாருங்கூட இல்லாதபடி உறங்குகையாலும், ஆதித்யோதயத்துக்கு ஸூசகமுமின்றிக்கே ராத்ரி வ்யஸநமாகையாலும், நெஞ்சு பாங்கல்லாமையாலும் வெறுத்தாளென்று துஃகஹேது மூன்று. வெறுத்தாள் என்கிற வாக்யத்துக்கு - "இக்குறைகளேல்லாம்" என்றவாக்யத்தோடே ஸங்கதி. நடுவே ஸ்வாபதேஶம் - மாசறுசோதியில் இத்யாதி. த்வரையுங்கூடக்கலங்கினபடி என்றதுக்கு தாத்பர்யம் - மடலெடாதொழிந்தது ராத்ரியில் இருளாலே என்கிறவத்தால், மடலாகிறது - ப்ராப்யத்வரையாகையாலே, இந்த த்வராஜ்ஞாநம் ஸம்ஸ்ருதிகாளராத்ரியநுஸந்தாநஜந்த மஹாவ்யஸநத்தாலே தலைமடிந்து, ஸம்ஸாரதுஃகமே மேலிட்டதென்று. "நிறைந்தவன்பழி நங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள்" என்று - தாயாரானவவஸ்த்தையும், தலைமகளானவவஸ்த்தையும் ஆழ்வார்தமக்கே யுள்ளதொரு அவஸ்த்தையாகையாலே, அத்தைப்பற்ற - இதில் ரக்ஷகன் இத்யாதி. இதில் 'ரக்ஷகன் அவன்' என்னும் தெளிவும் சொல்லாநிற்க ப்ராப்யருசி நலிகிறபடி யென்றது - * மாசறுசோதியிலும் * ஊரெல்லாந்துஞ்சியிலும்போன அத்யவஸாயமும் த்வரையும் இரண்டும் இத்திருவாய்மொழியிலேயுண்டாய்ச் செல்லுகிறதென்றபடி. கீழே * ஊரெல்லாந்துஞ்சியில்வ்யஸநத்துக்குச் சொன்ன ஹேதுக்கள் மூன்றும் இத்திருவாய்மொழியிலே போனபடியை அருளிச்செய்கிறுர் - இக்குறைகளேல்லாம் என்று தொடங்கி, ஸ்வஹகாரியாயிற்று என்னுமளவாக. உகப்பார் - உயிர்த்தோழி. பொடிவார் - தாய்மார். ஹிதஞ்சொல்லுவார் - மற்றைத் தோழிமார். "தோழிமார்களும் அன்னையரும்முனிதிர்" என்று இதுக்குச்சந்தை. உகப்பாரார், பொடிவாரார், ஹிதஞ்சொல்லுவாரார்? என்ன; இத்தைவிவரிக்கிறுர் - அநந்தரம் இத்யாதி. அநந்தரம் - போதுவிடிந்தவநந்தரம். துணிவுகண்டு உகப்பாரும் என்றவநந்தரம், ' "எங்ஙனேயோவன்னைமீர்காளென்னைமுனிவதுநீர்" என்று பொடிவாரும்' என்று கூட்டிக்கொள்வது. ஹிதஞ்சொல்லியலைப்பாருண்டாகை துஃகஹேதுவன்றே, அத்தை அநுகூலமாகச்சொல்லுகிறதென்? என்ன -

ஹிதஞ்சொல்லி யலைப்பாருமாகப்பெற்றது; அவ்வழியாலே அவர்கள் தாங்கள் இவ்விஷயத்துக்கு ஸ்மாரகராவார்களிறே. ஆதித்யனும் உதித்து, பதார்த்ததர்சநம் பண்ணப்பெறுகையாலே வ்யஸநமும் பாலிபாயப்பெற்றது. இவ்வளவு ஆச்வாஸமுண்டானவாறே, நெஞ்சு ஸ்மரித்து தரிகைக்கு ஸஹகாரியாயிற்று. இப்படி ராத்ரி வ்யஸநம்போம்படி போதுவிடியப்பெறுகையாலே ஒருதரிப்புமுண்டாய், அவனை அநுபவிக்கப்பெறாமையாலே ஆற்றாமைக்கு முடலாய் நோவுபட்டேசெல்லாநிற்க, உணர்ந்த பந்துக்களடைய, "நீ இப்படி இவ்விஷயத்திலே அதிமாத்ரப்ரவணையாகிற இது உனக்குக்குடிப்பழி. உன்னுடைய ஸ்த்ரீத்வத்துக்குப் போராது, அவன் தலைமைக்கும் போராது" என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, "இவர்கள் உகந்தருளினநிலங்களில் வாசியறியார்கள்" என்றிருந்தாளிவள், "நீங்கள் சிலர் காட்டக் கண்டிகோளல்லாமையாலே இவ்விஷயத்தை உள்ளபடி அறிந்திலிகோள்; நான் அங்ஙனன்றிக்கே, அவன்தானே மயர்வறமதிநலமருளித் தன்னைக்காட்டக் காண்கையாலே உள்ளபடி கண்டேன்; ஆகையாலே, நம்பியுடைய வடிவழகிலும் ஒப்பனையழகிலும் ஆபரணச்சேர்த்தியிலும் வேண்டற்பாட்டிலும், நான் உங்கள் ஹிதவசநத்துக்கு மீளாதபடி அகப்பட்டேன்" என்று இங்ஙனே தன்படிகளைச் சொல்லாநிற்கச்செய்தே; "ஸ்வயத்நத்தால் காண்பார்க்கு அறியவொண்ணாதபடியாகப் பெற்றோமிறே, இவ்வஸ்துதான் உண்டாகப்பெற்றால் நாம் பெற்றபோது பெறுகிறோம், பிறரறியாதொழியப்பெற்றோமிறே" என்னும் ப்ரீதியோடே தலைக்கட்டுகிறது. ஆக, போதும்விடிந்து ஹிதஞ்சொல்லியலைப்பாரும் உண்டாகப்பெறுகையாலே ஒருதரிப்பும், அதுதான் நினைத்தவிடிவாகப் பெறாமையாலே ஒரு அப்ரீதியும்; அவனை ஸ்மரிக்கப்பெறுகையாலே ஒருப்ரீதியும், அதுதான் அநுபவமாகப் பெறாமையாலே ஒரு அப்ரீதியும்; ஆதித்யனுதித்துப் பதார்த்ததர்சநம் பண்ணப்பெறுகையாலே ஒருப்ரீதியும், அதுதான் அவனைக்காணப்பெறாமையாலே ஒரு அப்ரீதியுமாய்; ப்ரீத்யப்ரீதி ஸமமாய்ச் செல்லுகிறது.

---

அவ்வழியாலே இத்யாதி. அவ்வழியாலே - பழிசொல்லுகிறவழியாலே. த்வதீய த்ருதீய வெறுப்புக்களும் தீர்ந்தமையைக்காட்டுகிறார் - ஆதித்யனும் இத்யாதியாலும், இவ்வளவு ஆச்வாஸம் இத்யாதியாலும். பாலிபாய்கை - நாநாமுகமாகப் பிரிந்துபோகை. இத்துறைகளெல்லாம் இத்யாதி வாக்யநிகமநபூர்வகமாக இத்திருவாய்மொழியில் ப்ரமேயத்தை அருளிச்செய்கிறார் - இப்படி ராத்ரி இத்யாதி. குடிப்பழியென்றது - "நிறைந்தவன்பழி" என்றத்தைப்பற்ற. ஸ்த்ரீத்வத்துக்குப் போராதென்றது - "முன்னின்றாய்" என்றத்தைப்பற்ற. அவன் தலைமைக்கும் போராதென்றது - "சிறந்தகீர்த்தி" என்றத்தைப்பற்ற. "என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்" என்றத்தைப்பற்ற - நீங்கள் சிலர் இத்யாதியும், நான் அங்ஙனன்றிக்கே இத்யாதியும். வடிவழகிலுமென்றது - "நீலமேனி" என்றத்தைப்பற்ற. ஒப்பனையழகிலுமென்றது - "பூந்தண்மாலைத்தண்டுழாயும்" என்றத்தைப்பற்ற. ஆபரணச்சேர்த்தியிலுமென்றது - "மின்னுநூலுங்குண்டலமும்" என்றத்தைப்பற்ற. வேண்டற்பாட்டிலுமென்றது - "பொன்முடியும்" என்றத்தைப்பற்ற. வேண்டற்பாடு - பெருமை. ஸ்வயத்நத்தால் காண்பார்க்கென்றது - "அறிவரியபிரானை" என்கிறபாட்டில் - தம்மைப்போலே பரிவில்லாமையாலே ஸ்வயத்நபரராகச்சொன்ன ஸித்தோபாயநிஷ்டரையாதல், "என்னெஞ்சினால்நோக்கிக்காணீர்" என்கிறபாட்டிற்சொன்ன உபாஸகரையும் ஸ்வக்ருத ஸ்வீகாரபரரையுமாதல். கீழ் வாக்யவிவரணம்-இவ்வஸ்துதான் இத்யாதி. அந்யாபதேசமாவது அப்ரீதிகர்ப்பமாகையாலே, கீழ் மூன்றுவகையாகச் சொன்ன தரிப்பிலே அப்ரீதியுமுண்டென்று, இப்படி ப்ரீத்யப்ரீதிஸாம்யத்தை த்ரேதா உபபாதிக்கிறார் - ஆக போது இத்யாதி. தான்நினைத்தவிடிவாகப் பெறாமையாலேயென்றது † - என்றபடி. அவனை ஸ்மரிக்கப்பெறுகையாலே - வ்ருத்தகீர்த்தநமுகத்தாலே ஸ்மரிக்கப்பெறுகையாலே.

---

† இங்கே இந்த ப்ரதீகத்துக்கு விவரண வாக்யம் காணவில்லை.

* ஏழையராவியும் - உருவெளிப்பாடாயிருக்கச்செய்தே, அதில் இதுக்கு வாசி - அதில், "இணைக்கூற்றங்கொலோ" என்றும், "உய்விடமேழையர்க்கும் அசுரர்க்கும் அரக்கர்கட்கும் எவ்விடம்" என்றும்-வாயகத்வம் உறைத்திருக்கும்; இதில் - கீழ்ப்பிறந்த துஃகநிவ்ருத்தியுண்டாம்படி ஸ்மரித்து யசிக்கவும்பெற்று அதுதான் அநுபவமாகப்பெறுமை யாலே வந்த அப்ரீதியுமாய், இப்படி ப்ரீத்யப்ரீதி ஸமமாய்ச்செல்லுகிறது. ஜாபாலிஹக வானும் வார்த்தைசொல்லி, "ஸ்ரீவஸிஷ்ட்டபகவானும் இக்குடியில்போந்தபடிகளையுமெல் லாம்சொல்லி, "இனி மீண்டு திருவபிஷேகம்பண்ணவமையும்" என்ன, பெருமாள் "அங் ஙன்செய்வதில்லை" என்று முடிய நின்றபடியைக் கண்டவாறே, பௌரஜநங்களெல்லாம் உகப்பதுஞ்செய்தார்கள் வெறுப்பதுஞ்செய்தார்கள்; "ரக்ஷகனைவன் தொடங்கினகார்யத் திலே இப்படிமுடியநின்றவிடம் நம்முடையரக்ஷணத்துக்குமுண்டிறே" என்று உகப்பதுஞ் செய்தார்கள், "அத்தாலே நாம்பெற்றதேன், இப்போது பதினாலாண்டு இழந்திருக்கவேண்டா நின்றதே" என்று வெறுப்பதுஞ் செய்தார்களிறே. திருவடி பிராட்டியைத் திருவடிதொழு தபோது, "நமக்குப் பராக்ரமிக்கைக்குக் கைம்முதலுண்டாகப் பெற்றோமிறே" என்று உகப்பதுஞ்செய்தான், "இவள் அவரைப்பிரிந்து இவ்விருப்பிருப்பதே" என்று வெறுப்பதுஞ் செய்தான். பிராட்டிதான் திருவடிவார்த்தையைக் கேட்டபோது, "அம்ருதம் விஷஸம் ஸ்ருஷ்டம் த்வயாவாநரபாஷிதம்" (அம்ருதம் விஷஸம்ஸ்ருஷ்டம் த்வயாவாநரபாஷி தம்)-என்று பெருமாள் என்னைப்பிரிந்தவிடத்தில் என்னையல்லது அறியார் என்றுசொன்னது எனக்கு இனிதாயிருந்தது, அவர் பிரிவிலே தளராநின்றாரென்று சொன்னபடியாலே வெறுப் பாயிருந்ததென்றாளிறே. அப்படியே இவர்க்கும் ப்ரீத்யப்ரீதி ஸமமாய்ச் செல்லுகிறது.

---

இத்திருவாய்மொழியிலே "வந்தெங்கும்நின்றிடுமே" என்கிற ஸ்வாரஸ்யத்தாலே - உரு வெளிப்பாடாயிருக்கிறதென்று விவக்ஷித்து, *ஏழையராவிக்கும் இதுக்கும் வாசியருளிச்செய்கிறார் - ஏழையராவியும் இத்யாதி. உருவெளிப்பாடாவது - ப்ரத்யக்ஷமாகத்தோற்றுகை. ப்ரீத்யப்ரீதிஸம மாய் உருவெளிப்பாடாய் செல்லுகிறது என்று அத்யாஹாரர்யம். ஆழ்வார்க்கு * முனியே நான்முக னளவும் மாநஸாநுபவமாயிருக்க, உருவெளிப்பாட்டுக்கு வாசியென்? என்னில்; பூர்வாநுபூதரஸத் தைமறந்து ரஸாந்தரமாய்ச் செல்லுகை - மாநஸாநுபவம்; அநுபூதரஸம் அநுவர்த்தியா நிற்கச்செய்தே ரஸாந்தராபேக்ஷைஜநிக்கை உருவெளிப்பாடென்று பேதங்கண்டுகொள்வது. "வ்ருக்ஷேவ்ருக்ஷேச பஶ்யாமி" என்றவிடத்தில் உருவெளிப்பாடு ஸுப்ரயுக்தம்; இங்கு ப்ராவண்யப்ரயுக்தம். ப்ரீத்ய ப்ரீதிரூபவிருத்த தர்மத்வயத்துக்கு ஏகதர்மியில் ஏகதைவஸமாவேஶம் கூடுமோவென்ன; உதாஹர ணத்ரயம் - ஜாபாலி இத்யாதி. அதுக்குஹேதுவேதென்ன - ரக்ஷகனைவன் இத்யாதி. இவ் விடத்திலே - "ததஸ்து தம்ஶ்ருத்வாமஹாவஸிஷ்டம் ஜநோ ஹர்ஷஸமந்வித: । நயாத்யயோத்யாமிதி து:கிதோபவத் ஸ்திரப்ரதிஜ்ஞத்வமவேக்ஷ்ய ஹர்ஷித:"

என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். த்விதீயோதாஹரணம் - திருவடி இத்யாதி. வெறுப்பதும்செய் தான் என்கிற விடத்திலே - உவாச ஶிரஸா ஸாதயந் விக்ஷணாத் ஸர்வா ஹர்ஷேண து:கிதாம்ருஷ்டாமவியுதிதாம்ஶுந:" என்றது அநுஸந்தேயம். த்ருதீயோதா ஹரணம் - பிராட்டி இத்யாதி. நிகமிக்கிறார் - அப்படியே இத்யாதி. "அம்ருதம்விஷஸம்ஸ்ருஷ்டம்த்வயாவாநரபாஷிதம் । யச்ச நாந்யமநா ராம: யச்ச ஶோகபராயண: ॥ உ ॥" இதி ஸுந்தரகாண்டே (௩௭) ஹநுமத்வாக்யம் ஸீதா.

# முதற்பாட்டு.

எங்ஙனேயோவன்னைமீர்காள்! என்னைமுனிவதுநீர்?
நங்கள்கோலத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
சங்கினோடும்நேமியோடும் தாமரைக்கண்களோடும்
செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்னெஞ்சமே.

ஆ.—(எங்ஙனேயோ.) என்னுடையப்ரக்ருதியறிந்திருக்கிற தாய்மாரான நீங்கள், என்னுடைய அவஸாதத்துக்கடியான நம்பியுடைய அழகை இன்னுதாகாதே என்னைப்பொடிகிறபடி எங்ஙனே? நமக்காக நிரதிஶய ஸௌந்தர்யத்தோடே திருக்குறுங்குடியிலே நின்றருளின நம்பியை நான்கண்டபின், சங்குசக்கரங்களோடும் தாமரை போன்ற திருக்கண்மலர்களோடும் சிவந்தகனிபோலேயிருக்கிற திருப்பவளமொன்றோடும் மிகவும் பூணுநின்றது என்னுடைய அந்தঃகரணம் என்கிறாள்.

ஒ.—முதற்பாட்டில், ஆழ்வார்களோடேசேர்ந்த திருமுகத்திலழகை அநுஸந்தித்து என் அந்தঃகரணம் அங்கே மிகவும் ப்ரவணமாகாநின்றது என்கிறாள்.

[எங்ஙனேயோ என்றுதொடங்கி] - என்னுடைய ப்ரக்ருதியறிந்திருக்கிற தாய்மாரான நீங்கள் என்னுடைய அவஸாதத்துக்கு அடியான நம்பியுடைய அழகை இன்னுதாகாதே என்னை முனிகிறபடி எங்ஙனே? [நங்கள்கோலத் திருக்குறுங்குடிநம்பியை] - நமக்காக நிரதிஶயபோக்ய ஸௌந்தர்யத்தோடே திருக்குறுங்குடியிலே நின்றருளின நம்பியை. பாட்டுத்தோறும், 'நான்' என்கிறது - சாபலாதிஶயத்தாலே. நேமி-திருவாழி. [செங்கனிவாய் என்றுதொடங்கி] - சிவந்த கனிபோலேயிருக்கிற திருப்பவளம் ஒன்றோடும் மிகவும் பூணுநின்றது என்னுடைய அந்தঃகரணம்.

ப.—முதற்பாட்டில், நம்பியுடைய அஸாதாரணசிஹ்நமான ஆழ்வார்களிலும், ப்ரதாநமான அவயவஶோபையிலும் என்னெஞ்சு ஸக்தமாய் நடவாநின்றதென்கிறாள்.

அன்னைமீர்காள் - அன்னைமீர்கள்! நீர்-(பெற்ற) நீங்கள், ஒ-ப்ரியஞ்செய்யாதே, என்னை - (நல்லதுகண்டுமேல்விழுந்த) என்னை, ஓ-உகக்கப்ராப்தமாயிருக்க, முனிவது - முனிகிறபடி, எங்ஙனே-எங்ஙனே? நங்கள் - நங்குடிக்கு அஸாதாரணபூதராய், கோலம் - தர்ஶநீயவேஷரான, திருக்குறுங்குடி - திருக்குறுங்குடியில், நம்பியை-கல்யாணகுணபரிபூர்ணரானநம்பியை, நான்-நான், கண்டபின்-அநுபவித்தபின்பு, (அவருடைய ப்ராப்யத்வத்துக்கு அஸாதாரணசிஹ்நமான),சங்கினோடும்-ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும், நேமியோடும்-திருவாழியோடும், தாமரை-தாமரைபோலே தர்ஶநீயமான, கண்களோடும்-திருக்கண்களோடும், செம்-சிவந்த, கனி-கனிபோலே, ஒன்று-அத்விதீயமாயிருக்கிற, வாயினோடும்-திருவதரத்தோடும், என்-என், நெஞ்சம்-நெஞ்சு, செல்கின்றது-ஸக்தமாய் நடவாநின்றது. கோலம் - ஊருக்கு விஶேஷணமுமாம்.

இ.—முதற்பாட்டில், கையிலாழ்வார்களோடே சேர்ந்த திருமுகத்திலழகிலே என் நெஞ்சு ப்ரவணமாகாநின்றதென்கிருள்.

[அன்னைமீர்காளென்னைமுனிவது - எங்ஙனேயோ] - இஸ்ஸௌந்தர்யத்தில்மூட்டின் நீங்களே மீட்கப்பார்க்கிறபடி எங்ஙனேயோ? நீங்கள்கற்பித்தது பலிக்கப்புக்கவாறே பொடியுமத்தனையோ? [நீர்] - என்ப்ரக்ருதியறியும் நீங்கள். [என்னைமுனிவது] - என்னுடைய ப்ராவண்யத்துக்கடியான நம்பியுடைய வடிவழகையன்றோ இன்னுதாவது. உங்களையும்மறந்து என்ப்ரக்ருதியையும்மறந்தால் விஷயத்தையும் மறக்கவேணுமோ. [முனிவது-எங்ஙனேயோ] - கொண்டாடவேண்டும்தசையில் பொடிவதெங்ஙனேயோ? [நங்கள் இத்யாதி] - இக்குடிக்காக முற்றாட்டானநிரதிசயஸௌந்தர்யத்தோடே திருக்குறுங்குடியிலேநின்றருளின நம்பியை. உடையநங்கையார் நம்பியையாஸ்ரயித்தாயிற்று ஆழ்வாரைப் பெற்றது. அநந்தவ்ரதம் அநுஷ்டித்தன்றிறே பெற்றது. "நெடுங்காலமும்கண்ணன்நீண் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற". [கோலத்திருக்குறுங்குடியென்று] - நகரீலக்ஷணங்களையுடைத்தென்று ஊரோடேகூட்டவுமாம். [நம்பியை] - கல்யாணகுணபூர்ணனை. குணங்களால்பூர்ணமான விஷயத்தையன்றோ நான் அகப்பட்டது. திருக்குறுங்குடியிலே புகுந்தபின்பாயிற்று பூர்ணனாயிற்று. [நான்] - சாபல்யத்தாலே பூர்ணையான நான். [கண்டபின்]-மீட்கப்பார்க்கில் ஒக்கவேதுடக்கவேண்டாவோ. [சங்கினோடும் இத்யாதி]- ஒருகலத்திலே யுண்பாரைப்போலே, வாகம்ருதஸாரஸ்யத்தையறியும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே ஸாம்யமுண்டே. ஸ்யாமமானவடிவுக்கு பரபாகமான ஆழ்வார்களோடே யுண்டான சேர்த்தியோடும், இரண்டிலும்வந்து அலைமெறிகிற திருக்கண்களோடும். "விகாஸம், செவ்வி, குளிர்த்தி, நாற்றம்" என்கிறவிவை யுண்டாயிருக்கை. சிவந்தகனி போலேயிருந்த முறுவலொன்றினேடும். விசேஷகடாக்ஷத்தாலே பக்தஹாவரானல் அது தன்பேருக முகங்கொடுக்கும்முறுவல், வேருேரழகை நினைக்கவேண்டாத முறுவல். ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்பவர்த்திக்குமாப்போலே, நெஞ்சு அழகுதோறும் செல்லாநின்றது. [செல்கின்றது] - இன்னமும் தறைகண்டதில்லை. நாங்களும் அவ்வழகை யநுபவித்தன்றோ இருக்கிறதென்ன,—[என்நெஞ்சமே] - அவன்தானேகாட்டக்கண்டு அநுபவித்த என் நெஞ்சு. உங்கள்வார்த்தைகேட்கைக்கு நெஞ்சுடையாரையன்றோ ஹிதஞ்சொல்லி மீட்பது.

ஈடு.—முதற்பாட்டு. திருக்கையிலாழ்வார்களோடே சேர்ந்த நம்பிதிருமுகத்திலழகிலே, என் அந்தஃகரணம் மிகவும் ப்ரவணமாகாநின்றதேன்கிருள்.

[எங்ஙனேயோ இத்யாதி] - ஹிதஞ்சொல்லத் தொடங்கினவாறே தந்தாமை மறக்குமித்தனையோ. ஒன்றைப் பரிஹரிக்கப்பார்த்தால் அதினுடைய நிதாநமறிந்து பரி

---

முதற்பாட்டு - எங்ஙனேயோ இத்யாதி. உத்தரார்த்தத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை- திருக்கையில் இத்யாதி. திருக்கையில் இத்யாதிக்குமுன்னே, தாய்மாரானபேர், "நீ இப்படிசெய்கிறது யுக்தமன்று" என்று நிஷேதிக்க அவர்களைக்குறித்தென்று கூட்டிக்கொள்வது.

"அன்னைமீர்காள் - முனிவது - எங்ஙனேயோ" என்று கூட்டிஹாவம் - ஹிதஞ்சொல்ல இத்யாதி. இந்த ஹாவத்துக்கு "அன்னைமீர்காள்" என்றதிலேநோக்கு. தந்தாமை-"பிரானிருந்தமை காட்டினீர்" என்று ப்ராவண்யஜநகைகளான தந்தாமையென்றபடி. "என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்றுகூட்டி, "என்னை" என்றதிலேநோக்காக ஹாவம் - ஒன்றை இத்யாதி. விவரணம் - என்

ஹரிக்கவேண்டாவோ. என்னுடைய ப்ராவண்யத்தைப் பரிஹரிக்கப்பார்த்தால், எனக்கு இவ்வளவான ப்ராவண்யத்தைவிளைத்த நம்பியுடையஅழகையறிந்து அத்தையன்றேபொடிவது. என்னுடைய நிலைக்கும் உங்களுடைய ஹிதவசநத்துக்கும் என்னசேர்த்தியுண்டு. நம்பியுடைய அழகையறிந்து அநுஹவித்திருக்கிறநீங்கள், அதிலேதுவக்குண்டிருக்கிற என்னை மீட்கப்பார்க்கிறபடி எங்ஙனேயோ? [அன்னைமீர்காள்] - இக்குலதர்மத்துக்கு நான் ஏதேனும் தப்பநின்றதுண்டோ. "பேராளன்பேரோதும் பெரியோரை" என்றும், "யவரேலுமவர்" என்றும் நீங்கள்சொல்லும்வார்த்தைகேட்டு வளர்ந்தவளன்றே நான். தாந்தாம் செய்யுமத்தை வயிற்றிற்பிறந்தார்செய்தவாறே குற்றமாமித்தனையோ. புத்ரர்களாகவுமாம், ஶிஷ்யர்களாகவுமாம், ஹகவத்விஷயத்தில் ஓரடிவரநின்றவர்கள் ஶ்லாகநீயராமத்தனையன்றே. கூரத்தாழ்வார் ஓரளவிலே நங்கையார் திருவடிசார்ந்தவாறே, "இன்னமுமொரு விவாஹம்பண்ணுவோமோ" என்று விசாரித்து, "இதுதான் க்ரமத்தாலேவந்து ஆழ்வானுக்கு விரோதமாய்த் தலைக்கட்டும்; இனித்தான், "ஈநா ஶ்ரீநதிஷெ கு" என்று ஶாஸ்த்ரம் சொல்லாநின்றது; இஶ்ஶாஸ்த்ரார்த்தத்தை அநுஷ்டிப்போமோ! ஹாகவதபரிசர்யையைப்பண்ணுவோமோ" என்று விமர்ஶியா, "அஸ்ஸாமாந்யதர்மத்திற்காட்டில் இவ்விஶேஷதர்மமே ப்ரபலம்" என்று தவிர்ந்தார். [என்னைமுனிவதுநீர்] - என்னை உங்கள்சொற்கேளாதபடி பண்ணின நம்பியழகையன்றே முனிவது. [என்னை] - நம்பியுடையவழகிலே துவக்குண்டிருக்கிற என்னை இதுவே யாத்ரையாயிருக்கிற நீங்கள் விலக்குகிறபடி எங்ஙனேயோ. [நங்கள் இத்யாதி] - † உங்களையறியாவிட்டால் அவ்விஷயத்தையும் அறியாதொழியவேணுமோ என்கிறாள். [நங்கள்] - இக்குடிக்காக முற்றூட்டுப்போலே காணும் நம்பியுடையவழகு. ஸர்வேஶ்வரனைநோக்கி அநந்தவ்ரதம் நோற்றுப் பெற்றவர்

---

னுடைய இத்யாதி. "என்னை - நீர் - முனிவது - எங்ஙனேயோ" என்று கூட்டி ஹாவம் - என்னுடைய நிலைக்கும் இத்யாதி. அதாவது - நான் அதிப்ராவணையாகையாலே, கரைமேலேநிற்கிற உங்கள் வசனங்கொண்டு கார்யமில்லையென்றபடி. "நீர் - என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்றுகூட்டி ஹாவம் - நம்பியுடைய இத்யாதி. ஆக, "நீர்" என்றதுக்கு இரண்டுஹாவம். இவ்வாக்யங்களெல்லாம் "நங்கள்" என்றத்தையும் கடாக்ஷித்து. "அன்னைமீர்காள், நம்பியைநான்கண்டபின்" என்று கூட்டி ஹாவம் - இக்குலதர்மத்துக்கு இத்யாதி. அதாவது - ஹகவத்விஷயப்ராவண்யம் இக்குலதர்மமாகையாலே, நான்செய்ததில் தப்புண்டோவென்றபடி. ஹகவத்ப்ராவண்யம் இக்குலதர்மமோ என்ன - பேராளன் இத்யாதி. அதாவது - ஹாகவதரை ஶ்லாகிக்கையாலே ஸித்தமென்றபடி. இத்தால்பலிதம் - தாந்தாம் இத்யாதி. குற்றமாமித்தனையோ - குணமாமித்தனையன்றே. "முனிவது - எங்ஙனேயோ" என்றுகூட்டி ஹாவம் - புத்ரர்கள் இத்யாதி. "ஹகவத்விஷயத்தில் அவகாஹநங்கொண்டு புத்ரர்கள் ஶ்லாகநீயர்" என்னுமதுக்கு ஸம்வாதம் - கூரத்தாழ்வார் இத்யாதி. கூரத்தாழ்வார் - ஆழ்வான் திருத்தமப்பனார். "஬ஹவாஶீ ஗ஹவொவாவா ந ஹொயஹிக்ஷாகஃ। ஈநா ஶ்ரீநதிஷெ தாஜி நஜகநாவஜி" இதி ஶாஸ்த்ரஸெ. ஸிம்ஹாவலோகநந்யாயேந, "ஒன்றைப் பரிஹரிக்கப்பார்த்தால்" இத்யாதி வாச்யவிவரணம் - என்னையுங்கள் இத்யாதி. "நம்பியுடையவழகை" இத்யாதி வாக்யவிவரணம் - நம்பியுடையவழகிலே இத்யாதி. உங்களை - வடகரான உங்களை. "கோலத்திருக்குறுங்குடிநம்பியை" என்றத்தைப்பற்ற - அவ்விஷயத்தையும் என்றது. "நங்கள்" என்றதின் தாத்பர்யம் - இக்குடிக்காக இத்யாதி. முற்றூட்டு - ஏகஹோகம். பூர்ணஹாரமென்ற ஶப்தத்துக்கு அர்த்தம். இதுக்கு நியாமகமேதென்ன - ஸர்வேஶ்வரனை இத்யாதி. அநந்தவ்ரதம்நோற்

† இவ்விடத்தில், "உங்களையும் என்னையும் அறியாவிட்டால்" என்று பாடம் க்வசித் காண்கிறது.

களைப்போலன்றிக்கே, நம்பியை ஆஶ்ரயித்தாயிற்று இவரைப்பெற்றது. "உடையநங்கை யார் நம்பியையாஶ்ரயித்து ஆழ்வாரைத் திருவயிறுவாய்த்தார்" என்று ப்ரஸித்தமிறே. * நெடுங்காலமும்கண்ணன் நீள்மலர்ப்பாதம் பரவியிறே பெற்றது. கோலமென்கிற இது - நகரத்துக்குவேண்டும் அலங்காரங்களை உடைத்தாயிருக்குமென்று, திருக்குறுங்குடிக்கு விஶேஷணமாதல்; அன்றிக்கே, நம்பிதம்முடைய ஸௌந்தர்யத்தைச் சொல்லுதல். [நம்பியை] - கல்யாணகுணங்களால் பூர்ணமானவிஷயத்திலே அகப்பட்டிருக்கிற என்னை எங்ஙனே மீட்கப்பார்க்கிறபடி. [நம்பியைநான்] - அகப்படுத்துகைக்கு ஸௌந்தர்யஶீலாதிகளால் அத்தலை குறைவற்றிருக்கிறப்போலே யாயிற்று அகப்படுகைக்குச் சாபலத்தால் இத்தலை குறைவற்றிருக்கிறபடி. [கண்டபின்] - நீங்களும் இவ்விஷயத்தைக் கண்டன்றோ ஹிதஞ்சொல்லுகிறது. [கண்டபின்] - ஶ்ருதேஜலே ஸேதுபந்தமன்றோ நீங்கள்செய்கிறது. காண்பதற்குமுன்னே மீட்டிகோளல்லிகோளே, இனிமீட்கப்போமோ? மீட்கப்போகாமல் இப்போதுவந்ததென்? என்ன; கைமேலே ஒருமுகத்தாலே தான் அகப்பட்டபடியைச் சொல்லுகிறாள் [சங்கு இத்யாதி] - நீங்கள் ஹிதஞ்சொல்லுவதுதான் நெஞ்சுடையார்க்கன்றோ. [சங்கினோடும்] - § "செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல்" என்கிற படியே, ஶ்யாமமானதிருமேனிக்குப்பரபாகமான வெளுத்தநிறத்தையுடைத்தான ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடும்; இக்கைக்கு இது ஆபரணமானால், வேறொன்றுவேண்டாதே தானே ஆபரணமாகப்போரும்படியிருக்கிற நேமியோடும். [தாமரைக்கண்களோடும்] - கண்காணக் கைவிட்டுப்போயிற்றுக்காணும். விகாஸாதிகளாலே தாமரைபோலேயிருக்கிற திருக்கண்களோடும். [செங்கனிவாய்] - கண்டபோது, நான் உன்சரக்கன்றோ - "தவாஸ்மி" (தவாஸ்மி) என்றமுறுவலோடும். [ஒன்றினோடும்] - ஸம்ஸாரயாத்ரையை முக்தன் மறக்கு

---

றுப்பெற்றவர்கள் - தேவகீப்ரப்ருதிகள். ப்ரஸித்திமாத்ரமன்றிக்கே இவருக்தியுமுண்டென்கிறார் - நெடுங்காலமும் இத்யாதி. அநேககாலமும் க்ருஷ்ணனுடைய நிரதிஶயபோக்யமான திருவடித்தாமரைகளை ஆஶ்ரயித்துப்பெற்ற இத்யர்த்தః. *திருவிருத்தத்தில், (௩௭) "கொடுங்காற்சிலையர்" இத்யாதி. "கண்ணன்குறுங்குடி" என்று - அங்குநிற்கிறவன் க்ருஷ்ணனுகையாலே, இது ப்ரமாணமாகக் குறையில்லை. "நம்பியைநான்கண்டபின் - என்னை - எங்ஙனே - முனிவது" என்றிகூட்டி பாவம் - கல்யாணகுணங்களால் இத்யாதி. ஸமபிவ்யாஹாரதாத்பர்யம் - அகப்படுத்துகைக்கு இத்யாதி. "கண்ட" என்றதுக்கு பாவம் - நீங்களும் இத்யாதி. விஷயவைலக்ஷண்யத்தைக் கண்டிருந்தும் மீட்கப்பார்க்கிறது யுக்தமோ? என்றபடி. "பின்" என்றதுக்குபாவம் - ஶ்ருதேஜலே இத்யாதி. விவரணம் - காண்பதற்கு இத்யாதி. கைமேலே, ஒருமுகத்தாலே என்றது - சாடு. கைமேலே - திருக்கைகள்மேலேயிருக்கிற ஆழ்வார்களுடையசேர்த்தியழகிலே என்று ஸ்வபாவார்த்தம்; ப்ரத்யக்ஷமாக என்று சாட்வர்த்தம். ஒருமுகத்தாலே - தாமரைக்கண்கள், செங்கனிவாய், இவைகளுடைய ஸௌந்தர்யத்தாலே இதி ஸ்வபாவார்த்தః; ஏகமுகமாக என்று சாட்வர்த்தம். "செல்கின்றதென்னெஞ்சம்" என்றத்தைப்பற்ற - நீங்கள் இத்யாதி. செங்கமலம் இத்யாதி - செந்தாமரையினுடைய அப்போதலர்ந்த செவ்விய மலரின்மேலே மதுபாநம்பண்ணும் அன்னம்போல் இத்யர்த்தః. § நாய்ச்சியார் திருமொழி, "கர்ப்பூரம்நாறுமோ" என்கிறதிருமொழி, ஏழாம்பாட்டு. சாடு - கண்காண இத்யாதி. கண்காண என்று - ப்ரத்யக்ஷமாக என்றுசாடு, கண்களைக்காண என்று ஸ்வபாவார்த்தம். கைவிட்டு - திருக்கைகளைவிட்டு என்று ஸ்வபாவார்த்தம்; விட்டுப்போயிற்று என்று சாடு. முறுவலோடும் - "தவாஸ்மி" என்றபோதுண்டான முறுவலோடும். ஸ்மிதத்தாலல்லது அதரத்தில் பழுப்புத்தெரியாததுகொண்டு, முறுவல் என்று வ்யாக்யாநம்பண்ணிற்று. "ஒன்றினோடும்" என்றத்தை - * செங்

மோபாதி, இவ்வருகுண்டானவற்றோடு அவ்வருகுள்ளவற்றோடு வாசியற எல்லாவற்றையும் மறக்கப்பண்ணவற்றான திருவதரத்தோடும். அன்றிக்கே, ஜாதி, வ்யக்திதோறும் பரிஸமாப்ய வர்த்திக்குமாபோலே, நெஞ்சு அழகுதோறும் செல்லாநின்றது. ஸர்வேஶ்வரனோடு ஸாம்யம்பெற்றதாகிலும் தெரிகிறதில்லை. அவன் வ்யாபியாநிற்கச்செய்தே ஆகாஶ வ்யாப்திபோலன்றிக்கே பதார்த்தங்கள்தோறும் பரிஸமாப்யவர்த்திக்குமாபோலே, இதுவும் அழகுகள் தோறும் பரிஸமாப்ய வர்த்தியாநின்றது. [செல்கின்றது] - இன்னமும் தறைகண்டதில்லை. நாங்களுமெல்லாம் நம்பியுடைய அழகை, அநுபவித்திருக்கிறோமன்றோ, எங்கள்சொல்லு மறுக்கலாகாதுகாண் என்ன; உங்கள்சொல்லை மறுத்தேனேயாகிலும் நம்பியுடையதிருமுகம் மறக்கவொண்ணாதென்கிறாள். எங்களுக்கு இப்படியிராதொழிவானேன்? என்ன,—[என்னெஞ்சமே] - உங்களைப்போலன்றிக்கே, அவன்தானேகாட்டப்பெறுகையாலே முழுக்க அநுபவித்த என்னெஞ்சானது.

[எங்ஙனேயோ இத்யாதி] - ஹேதுவான நம்பியுடைய அழகைப்போடியாதே, என்னைப்போடியக்கூடினபடி எங்ஙனேயோ? ப்ராவண்யமே ஸ்வபாவமாம்படி வளர்த்து வைத்து, இப்போதாகப்போடிகிறபடி எங்ஙனேயோ? முன்பு நீங்கள் கற்பித்துப்போந்து, அதுபலிக்கப்புக்கவாறே போடியுமத்தனையோ? [கோலம்] - உங்கள் ஹிதவசநத்துக்கு மீளாதபடியான ஸௌந்தர்யத்தையுடையவர். [திருக்குறுங்குடிநம்பியை] - பரத்வத்தில் முதன்மையிலேயோ அகப்பட்டது மீளுகைக்கு. [நம்பியை] - குணத்தில் அபூர்த்தியுண்டாய்த்தான் மீளுகிறதோ. [நான்கண்டபின்] - இவ்விஷயத்தில் சாபலமில்லாமல் மீளுகிறேனோ. [சங்கினோடும்] - ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே விஶேஷித்து ஒரு ப்ராப்தியுண்டு காணும் இவளுக்கு, வாகம்ருதச்சுவடறிந்திருக்கையாலே; ஒருகலத்திலே ஜீவிப்பாரைப் போலே. (க)

*கனிவாய்மாத்ரத்தோடே அந்வயித்துபாவம் -* **ஸம்ஸார இத்யாதி.** *இவ்வருகுண்டானவை - சங்கும் நேமியும். அவ்வருகுள்ளவை - அதரத்துக்குமேலாயுள்ள தாமரைக்கண்கள். "ஒன்றினோடும்" என்றத்தை - * சங்குமுதலானவை யெல்லாவற்றிலும் ப்ரத்யேகம் அந்வயித்துபாவாந்தரம் -* **அன்றிக்கேஜாதி இத்யாதி.** *அணுவானநெஞ்சுக்கு அழகுகள்தோறும் வ்யாப்திகூடுமோ? என்ன -* **ஸர்வேஶ்வரனோடு இத்யாதி.** *ஸாம்யத்தை விவரிக்கிறார் -* **அவன் வ்யாபியாநிற்க இத்யாதி.** *வர்த்தமாநார்த்தம் -* **இன்னமும் தறைகண்டதில்லை** *என்று. "தாமரைக்கண்கள், செங்கனிவாய்" என்றதுக்கு ப்ரத்யேகம் தாத்பர்யமருளிச்செய்து, ஸமுதாயேந ரஸோக்தியாகபாவம் -* **நாங்களுமெல்லாம் இத்யாதி.**

*புநஶ்ச ஒரு ஸ்ரீவைஷ்ணவர்க்கு ப்ரஸாதிக்கிறார்-* **எங்ஙனேயோ இத்யாதி.** *"என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்றுகூட்டி பாவம் -* **ஹேதுவான இத்யாதி.** **ஹேதுவான** *- ப்ராவண்ய ஹேதுவான. "அன்னைமீர்காள் - நீர் - என்னைமுனிவது - எங்ஙனேயோ" என்றுகூட்டி பாவம் -* **ப்ராவண்யமே இத்யாதி.** *கீழ்வாக்யவிவரணம் -* **முன்பு இத்யாதி.** *"நீர்" என்றதுக்குபாவமாதல். அல்லாதவற்றுக்கு முன்னே * சங்கைச்சொல்லுவானென்? என்ன -* **ஸ்ரீபாஞ்சஜந்யத்தோடே இத்யாதி.** *நங்கள்கோலம் இத்யாரப்ய, என்னெஞ்சம் - செல்கின்றது, அன்னைமீர்காள், நீர் - என்னை முனிவது - எங்ஙனேயோ இத்யந்வய:.* (க)

## இரண்டாம் பாட்டு.

என்னெஞ்சினால்நோக்கிக்காணீர் என்னைமுனியாதே
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
மின்னுநூலுங்குண்டலமும் மார்பில்திருமறுவும்
மன்னுபூணும்நான்குதோளும் வந்தெங்கும்நின்றிடுமே.

ஆ.—(என்னெஞ்சினால்.) "நம்பிதிருவழகை நாங்கள் அநுபவித்தோமல்லோமோ, நாங்கள் பேசாதிருக்க நீ இங்ஙனே படுகிறதென்?" என்று அவர்கள் பொடிய; என்னை நீங்கள்பொடியாதே, உங்களுக்குக் காணவேணுமாகில் என்னைப்போலே ஸ்நேஹயுக்தமான நெஞ்சை யுடையீராய்க்கொண்டு அநுஸந்தித்தறியுங்கோள். தென்னாட்டுச் சோலைசூழ்ந்த திருக்குறுங்குடி நம்பியை நான்கண்டபின், மின்னாநின்றுள்ள திருயஜ்ஞோபவீதமும் திருக்குண்டலங்களும் திருமார்வில்திருமறுவும் திருவுடம்போடுபொருந்தின திருவணிகலன்களும்திருத்தோளழகும் சுற்றும்வந்துஎன்னைநெருக்காநின்றனஎன்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், நம்பியுடைய திருமார்பிலும் திருத்தோளிலுமுண்டான ஸ்வாபாவிகமான அழகும் திருவணிகலன்களின் அழகும் சுற்றும்வந்து நின்று என்னை நெருக்காநின்றன என்கிறாள்.

[என்னெஞ்சினால்என்றுதொடங்கி]-'நம்பிதிருவழகை நாங்கள் அநுபவித்தோமல்லோமோ, நாங்கள் பேசாதிருக்க, நீ இங்ஙன் படுகிறதென்?' என்று அவர்கள்பொடிய, என்னை, நீங்கள் பொடியாதே உங்களுக்குக்காணவேணுமாகில் என்னைப்போலே ஸ்நேஹயுக்தமான நெஞ்சையுடையீராய்க்கொண்டு அநுஸந்தித்து அறியுங்கோள். [தென் என்றுதொடங்கி] - தென்னாட்டுச்சோலைசூழ்ந்ததிருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின். [மின்னுநூல்] - மின்னாநின்றுள்ள திருயஜ்ஞோபவீதம். [மன்னுபூண்]-திருவுடம்போடு பொருந்தின திருவணிகலன்கள்.

ப.—அநந்தரம், நம்பியுடைய ஒப்பனையழகும் தோளும் ஸர்வதேசத்திலும் வந்துநின்று அநுபவவிஷயமாகாநின்றது என்கிறாள்.

என்னை-என்னை, முனியாதே - நியமித்துவார்த்தைசொல்லாதே, என்னெஞ்சினால் - (அநுபவித்தாலும் குறியழியாத உங்கள் நெஞ்சுபோலன்றியே பாவயுக்தமான) என்னெஞ்சாலே, நோக்கி - அநுபவித்து, காணீர் - பாரீகோள்; தென் - தெற்குத்திக்கிலே, நன்-நன்றான, சோலை - சோலையையுடைத்தான, திருக்குறுங்குடி - திருக்குறுங்குடியில், நம்பியை - நம்பியை, (அவனருளடியாக), நான் -நான், கண்டபின் - கண்டபின்பு, மின்னும் - (வடிவுக்குப்பரபாகமாய் ப்ரஹ்மவர்ச்சஸ) ப்ரகாஶகமான, நூலும் - திருயஜ்ஞோபவீதமும், குண்டலமும் - (இருபாடுமிலங்குகிற) திருமகரகுண்டலங்களும், மார்பில் - (விலக்ஷணமான) திருமார்பில், திரு-கழற்றாத ஆபரணமான, மறுவும் - ஸ்ரீவத்ஸமும், மன்னு - எப்போதும்கழற்றாத, பூணும் - ஆபரணவர்க்கமும், (சதுர்வர்க்கப்ரதமான), நான்கு-நாலு, தோளும்-திருத்தோள்களும், எங்கும்-நான்போனவிடமெங்கும் வந்து-வந்து, நின்றிடும் - நில்லாநின்றன.

இ.—இரண்டாம்பாட்டில், நம்பியுடைய தோளழகும் ஆபரணஸ்ரீயும் ஸர்வதோதிக்கமாக ஜ்வலியாநின்றன என்கிறாள்.

[என்னெஞ்சினால் இத்யாதி] - "நாங்களும் நம்பியையநுபவித்தே ஸ்த்ரீத்வம் கெடாமலிருக்கிறிலோமோ, எங்களுடைய ஹிதவசநம் கேளாதே மறுமாற்றம் சொல்லுகை போராதுகாண்" என்ன,—என்நெஞ்சுபோலே அதிப்ரவணமான நெஞ்சை யுடையீராய் அநுபவித்து அறியுங்கோள் என்னைப் பொடியாதே. என்நெஞ்சை யுடையீராய்க் காணப்பெறுமன்று "பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப்பெறுவரே" என்று உங்களை நீங்களே பொடிவுதிகோள். என் நெஞ்சை இரவலாக வாங்கிக் காணமாட்டிகோளோ? என்னைப் பொடியாதே. "ஊயாஂநவெலெ". [தென்னன்சோலை]-தெற்குத்திக்கிலேயாய் நன்றான சோலையென்னுதல், * தென்னன்கொண்டாடும் சோலையென்னுதல். நம்பியழகுக்குமுன்னே சோலையழகு வந்து வடிம்பிடுகிறபடி. [சோலைத்திருக்குறுங்குடி] - நம்பிக்கு ஆபரணம்போலேயாயிற்று ஊருக்குச் சோலை. [நான்கண்டபின்] - சோலையிலும் ஒப்பனையிலும் ஆழங்காற்படும் நான். [மின்னுநூலும்] - மேகத்திலே மின்னினாற்போலேயிருக்கிற திருயஜ்ஞோபவீதமும். பரந்த மின்திரள் சுழித்தாற்போலேயிருக்கிற திருமகரகுண்டலமும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும் திருமார்விலே கழற்றிச்சாத்தவேண்டாதபடியான ஸ்ரீவத்ஸமும், நாய்ச்சிமாரோடு கலக்கும்போது கழற்றவேண்டாத ஆபரணங்களும். [மன்னுபூண்] - திருவுடம்போடு பொருந்தின திருவணிகலன்கள். கல்பகதரு பணைத்தாற்போலேயாய், ஸஹஸ்ர ஸஹஸ்ரார்ஹங்களான திருத்தோள்களும். [வந்தெங்கும் நின்றிடுமே] - உங்கள் ஹிதவசனங்களைக் கேட்டு அகலநினைத்தாலும் அங்கேயங்கே நில்லாநின்றது. "வ்ருக்ஷேவ்ருக்ஷேவஸ்யாமி" என்கிறது உகப்பார்க்கும் ஒத்தது.

ஈடு.—இரண்டாம்பாட்டு. நம்பியுடையதோளழகும் ஸ்ரீயும் ஸர்வதோமுகமாகநின்று நலியாநின்றதென்கிறாள்.

[என்னெஞ்சினால் இத்யாதி] - நாங்களும் நம்பியை அநுபவித்தே ஸ்த்ரீத்வங் கெடாமலிருக்கிறிலோமோவென்ன,—[என்னெஞ்சினால் நோக்கிக்காணீர்]-நீங்கள் என்னைப் பொடியாதே உங்களையேபொடிந்துகோள்ளும்படி, என் நெஞ்சை இரவலாகவாங்கிப்பார்க்க வல்லிகோளோ. † ([என்னை]) "இவளையாகாதே நாம் இத்தனை சொல்லிற்று" என்று பின்னை உங்களை நீங்களே பொடிந்துகோள்ளுவதிகோள். [முனியாதே] - ' " †கணபுரம் கைதொழும்பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப்பெறுவரே" என்னக்கடவதாயிருக்க, நம்

இரண்டாம்பாட்டு.—என்னெஞ்சினால் இத்யாதி. "மின்னுநூலும்" இத்யாதியைச்சடாக்ஷித்து வ்யுத்க்ரமமாக அவதாரிகை - நம்பியுடைய இத்யாதி. "எங்கும்நின்றிடும்" என்றது - உருவெளிப்பாடாகையாலே, அது வ்யாபகமானமையைப்பற்ற - நலியாநின்றதென்கிறாள் என்றது.

உன் நெஞ்சினால் கண்டவாசியேதென்ன - நீங்கள்என்னை இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - இவளையாகாதே இத்யாதி. "என்னைமுனியாதே" என்றதக்கு - என்னைக்கொண்டாடும்படியென்றாய், அத்தால்பலித்தது - உங்களைமுனிந்துகொள்ளும்படியென்றாக்கி, அர்த்தை ப்ரமாணகதநமுகேந அருளிச்செய்கிறார் - கணபுரம் இத்யாதி. திருக்கண்ணபுரத்தைக் கைதொழுகிற பெண்பிள்ளையை, தன்வயிற்றிற்பிறந்தவள் என்று எண்ணப்பெறுவர்களோ; "தன்வயிற்றிற்பிறந்தாள்" என்கிற அர்த்தத்தைக்கொண்டு நியமிக்கப்பெறுவர்களோ? என்றபடி. †திருமொழி, எட்டாம்பத்து, இரண்டாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு, "முள்ளெயிறேந்தில" இத்யாதி. "என்னெஞ்சினால்

† குண்டலிதம் க்வாசித்கம். வ்யாக்யாந விருத்தம்.

வயிற்றிற்பிறந்த இதுவே ஹேதுவாக, இவள்நின்றநிலேபாராதே நாம்பொடிந்தோமித்தனை யாகாதே' என்று பின்னையும் உங்களை நீங்களே பொடிந்துகோள்ளுவதிகோள். [என் னேஞ்சினல் நோக்கிக்காணீர்] - "ஹக்த்யா ஶாஸ்த்ரவேத்மிஜநார்த்தநம்"(பக்த்யா ஶாஸ்த் ராத்வேத்மிஜநார்த்தநம்) - என்கிறபடியே, ஸஞ்ஜயனைநோக்கி த்ருதராஷ்ட்ரன், நீயும்நானு மொக்க ஶாஸ்த்ரவாஸனைகள் பண்ணிப்போந்தோம், இங்ஙனே இருக்கச்செய்தே எனக்கு உன்பக்கலிலேகேட்டு அறியவேண்டும்படி உனக்கு இவ்வர்த்தத்தில் வைஶத்யமுண்டான படி எங்ஙனே ? என்ன,—எனக்கு வாசிகேளாய், "மாயாம் நஸேவே" (மாயாம் நஸேவே) - நான் வஞ்சநங்கள் செய்துபோரேன். ராஜாவானவனுக்கு ஒரு தாழ்ச்சியும் தனக்கோரு உத்கர்ஷமும் சோல்லுகிறுனைகையாலே - ஹத்ரே என்கிறுன். "நவ்ருதா தர்மமாசரே" (நவ்ருதாதர்மமாசரே) - நான் ஒருநாளும் வ்யர்த்தமாக தர்மங்களநுஷ்ட்டி யேன். "ஶுத்தபாவம் கதஃ" (ஶுத்தபாவம்கதஃ) - நினைவும் சொலவும் சேயலும் ஒருபடிப்பட்டிருப்பன். "ஹக்த்யா" (பக்த்யா) - வரியடைவேகற்று அவனை அறிந்தவ னல்லேன், பக்திஸஹக்ருத ஶாஸ்த்ரத்தாலே அவனை அறிந்தவன் என்றுனிறே. "நாபிஜ்ஞாநாஸிகேஶவம்" (நாபிஜ்ஞாநாஸிகேஶவம்) - என்று தந்தாமுக்கேன்னவும் ஒரு கைம் முதலுடையார்க்கு அவனை அறியப்போகாதேன்றதிறே. அப்படியே நீங்களும் என் நேஞ்சையுடையீராய்க்கோண்டு அறியப்பாருங்கோள். [தேன்னன் இத்யாதி] - நம்பி

ப்ர:—(என்னெஞ்சினல் நோக்கிக்காணீர்) - மஹாபாரதே, உத்யோ [கூஅ] த்ருதராஷ்ட்ரம்ப்ரதிஸஞ்ஜயஃ, "மாயாம் நஸேவேபத்ரம் தே நவ்ருதா தர்மமாசரே । ஶுத்தபாவம் கதோ பக்த்யா ஶாஸ்த்ராத்வேத்மிஜநார்த்தநம் ॥ ரு ॥"

தத்ரைவ [கூஅ] தம்ப்ரதிஸஃ, "வித்யாராஜந்நதேவித்யா மூவித்யா நஹீயதே । வித்யாஹீநஸ்தமோத்வஸ்தோ நாபிஜாநாஸிகேஶவம் ॥ உ ॥"

---

நோக்கிக்காணீர்" என்கையாலே - உங்களுக்கு பக்தியில்லை என்றபடி. பக்தியினலொழிய ஶாஸ்த் ரத்தாலே அவனை அறியப்போகாதோ ? என்ன - ஹக்த்யாஶாஸ்த்ராத் இத்யாதி. இந்தஶ்லோகத்துக்கு அர்த்தமருளிச்செய்கைக்காக அவதாரிகை - ஸஞ்ஜயனை இத்யாதி. பக்திஸஹக்ருத ஶாஸ்த்ரத்தா லன்றிக்கே, கேவலஶாஸ்த்ரத்தால் அறியப்போகாதோ ? என்ன; அறியப்போகாதென்னுமதுக்கு ப்ரமாணந்தரம் - நாபிஜாநாஸி இத்யாதி. "மாயாம் நஸேவேபத்ரம் தே நவ்ருதா தர்மமாசரே । ஶுத்தபாவம் கதோ பக்த்யா ஶாஸ்த்ராத்வேத்மிஜநார்த்தநம்" ; "வித்யாராஜந்நதேவித்யா மூவித்யா நஹீயதே । வித்யாஹீநஸ்தமோத்வஸ்தோ நாபிஜாநாஸிகேஶவம்" இதி பாரதே த்ருதராஷ்ட்ரம்ப்ரதி ஸஞ்ஜயஃ. இஶ்ஶ்லோகத்தில் "ராஜந்" என்றதுக்கு பாவம் - தந்தாமுக்கேன்ன இத்யாதி. அதாவது - பக்திஸஹக்ருதமல்லாத கேவலஶாஸ்த்ரம். பக்தி ஸஹகாரமில்லாதபோது ஶாஸ்த்ரஜ்ஞாநம்முடியாது, ஶாஸ்த்ரஜ்ஞாநமில்லாதபோது அவனை அறியப் போகாதென்று - இஶ்ஶ்லோகத்துக்குத் தாத்பர்யமாகையாலே, தந்தாமுக்கென்னவும் ஒருகைம்முத லுடையார்க்கு அவனை அறியப்போகாதென்றபடி. கைம்முதலாவது - பக்திஸஹக்ருதமல்லாத கேவலஶாஸ்த்ரம். கீழ்வாக்யத்தில் - பக்தியினலொழிய அவனை அறியப்போகாதென்றத்தை விஸ்த ரித்தபடியே, நீங்களும் என் நெஞ்சை யுடையராய்க்கொண்டு அறியப்பாருங்கோ ளென்கிறார் - அப்படியே இத்யாதி. "மின்னுநூலும்" இத்யாதியைக்கடாக்ஷித்து பாவம் - நம்பியுடைய இத்

யுடையவடிவுக்கு ஆபரணம்போலேயாயிற்று ஊருக்குச் சோலை. தெற்குத்திக்கிலேயாய் நன்றானசோலையென்னுதல்; அன்றிக்கே, *"தென்னன்கொண்டாடும்" என்னுமாபோலே யாதல். [நான்கண்டபின்] - ஆபரணச்சேர்த்தியையும் சோலைவாசியையும் அறிந்த நான் கண்டபின். [மின்னுநூலும் இத்யாதி] - மேகத்தில் மின்னினாற்போலேயிருக்கிற திரு யஜ்ஞோபவீதமும், [குண்டலமும்] - பரந்த மின் ஓரிடத்திலே சுழித்தாற்போலேயிருக்கிற திருமகரகுண்டலமும், வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற திருமார்பிலே கிடக்கிற ஸ்ரீவத்ஸமும்; [மன்னுபூணும்] - நாய்ச்சிமாரோடு கலக்கும்போதும் கழற்றவேண்டாதபடியிருக்கிற ஆபரணங்களும். அதாவது - அத்யந்த ஸுகஸ்பர்சமா யிருக்கை. [நான்குதோளும்]-ஆபரணத்துக்காபரணமாய்க் கல்பகதருபணைத்தாற்போலே யிருக்கிற திருத்தோள்கள் நாலும். " ஸர்வபூஷணபூஷார்ஹா: " (ஸர்வ பூஷணபூஷார்ஹா:) என்கிறபடியே. [வந்தெங்கும்நின்றிடுமே] - "உங்கள்ஹிதவசநத் தின்படியே செய்யவேணும்" என்று நான் கடக்கநிற்கவும், அங்கேயும் பலவகையாக வாராநின்றது. * " வ்ருக்ஷேவ்ருக்ஷேசபச்யாமி " (வ்ருக்ஷேவ்ருக்ஷேசபச்யாமி)

---

ப்ர:—(நான்குதோளும்)— கிஷ்கிந்தாகாண்டே [௩] ஸம்வாதீரே, ராம லக்ஷ்மணௌ ப்ரதி ஹநுமதோக்தி, "ஆயதாச்ச ஸுவ்ருத்தாச்ச பாஹவ: பரிகோபமா: । ஸர்வபூஷணபூஷார்ஹா: கிமர்த்தம் நவிபூஷிதா:॥ கசு॥"

ஆரண்யகாண்டே [௬௩] ராவணம் ப்ரதி மாரீச:, " வ்ருக்ஷேவ்ருக்ஷே சபச்யாமி சீரக்ருஷ்ணாஜிநாம்பரம் । க்ருஹீததநுஷம்ராமம் பாசஹஸ்தமிவாந்தகம்

---

யாதி. தென்னன்கொண்டாடும் - தக்ஷிணதிக்குக்கு ப்ரபுவான மலயத்வஜ சக்ரவர்த்தியாலே கொண்டாடப்பட்டவென்றபடி. *பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து. இரண்டாந்திருமொழி, ஏழாம்பாட்டு, "மன்னர்மறுக" இத்யாதி. கீழும்மேலும்கடாக்ஷித்து "நான்" என்றபதத்துக்கு பாவம்- ஆபரணச்சேர்த்தி இத்யாதி. "மன்னு" என்றதுக்குபாவம் - நாய்ச்சிமாரோடு இத்யாதி. மன்னு பூணும் - நித்யமாகப்பொருந்தின ஆபரணவர்க்கமும். " எப்போதும்கழற்றாத ஆபரணவர்க்கமும் " என்று உரை. அத்யந்த ஸுகஸ்பர்சமாயிருக்கை என்கிறவிடத்திலே - "ஸுவஸௌகுமார்ய ... " இத்யாத்யநுஸந்தேயம். ஸர்வபூஷணபூஷார்ஹா:-ஸர்வ பூஷணாநி பூஷயிதும் அர்ஹா: என்றபடி. பலவகையாக - பஹுவகுப்பாக. "வ்ருக்ஷேவ்ருக்ஷேசபச்யாமி" என்கிறவிடத்திலே - பயத்தினாலே தோன்றினபடி, இங்கு - ப்ராவண்யத்தாலே தோன்றினபடி. பலம்-பூமை. "வ்ருக்ஷேவ்ருக்ஷேசபச்யாமிசீரக்ருஷ்ணா ஜிநாம்பரம் । க்ருஹீததநுஷம்ராமம்பாசஹஸ்தமிவாந்தகம்" ஆரண்யகாண்டே, ராவணம்ப்ரதிமாரீச:. தென்னன்சோலை இத்யாரப்ய,வந்தெங்கும்நின்றிடும், ஆகையால் - என்னை முனியாதே - என்னெஞ்சினால்நோக்கிக்காணீர் இத்யந்வய:. ஸ்வாபதேசத்திலே, " அன்னைமீர் " என்று - உபாயாத்யவஸாயநிஷ்ட்டரைச் சொல்லுகிறதாகையாலே, " அறிவரியபிரானை " என்கிற விடத்திற்போலே த்வராநிஷ்ட்டராய் மங்களாசாஸநபரரான தம்முடையநினைவாலே அவர்களை அநு ராகநினைத்து - " என்னெஞ்சினால்நோக்கிக்காணீர் " என்கிறாராதல் ; இவ்வர்த்தம் - "அறிவரிய பிரானை" என்கிறவிடத்திலே ஸ்பஷ்டம். அன்றிக்கே, " அறிவரியபிரானை " என்கிறபாட்டிலே - உபாயாத்யவஸாயநிஷ்ட்டரைச்சொல்லி; இங்கே, "என்னெஞ்சினால்நோக்கிக்காணீர்" என்று - உபா

போலே, உகப்பார்க்கும் உகவாதார்க்கும் ஊலமொன்றாய்விட்டது. நான் எங்கே ஒதுங்குவேன், சொல்லிக்காணிகோள். (உ)

## மூன்றாம் பாட்டு.

நின்றிடுந்திசைக்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர்
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
வென்றிவில்லும்தண்டும்வாளும் சக்கரமும்சங்கமும்
நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும்நீங்காவே.

ஆ.—(நின்றிடும்.) நம்பியுடைய ஸௌர்யாதிகளிலே அகப்பட்டமையறிந்த தாய்மாரான நீங்களும் 'ஸ்தப்தையாகாநின்றாள், அறிவுகெடாநின்றாள், ஸிதிலையாகா நின்றா'ளென்று பொடியாநின்றிகோள். குன்றம்போலே நெடுமாடங்களையுடைய திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின், வெற்றியைக்கொடுக்கும் வில்லுமுதலான திவ்யாயுத வர்க்கம் புறம்புள்ளுமொக்க நிரந்தரமாகத் தோற்றாநின்றனவென்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், நம்பியுடைய ஸ்ரீஸார்ங்கம்தொடக்கமான திவ்யாயுத வர்க்கம் புறம்பும் உள்ளுமொக்க நிரந்தரமாகத் தோற்றாநின்றன என்கிறாள்.

[நின்றிடும்திசைக்கும்நையும் என்று அன்னையரும் முனிதிர்] - நம்பியுடைய ஸௌர்யாதிகளிலே அகப்பட்டமை அறிந்த தாய்மாரான நீங்களும் 'ஸ்தப்தையாகாநின்றாள், அறிவுகெடாநின்றாள், ஸிதிலையாகாநின்றாள்' என்று பொடியாநின்றிகோள். [வென்றிவில்] - வென்றியைக்கொடுக்கும் வில்.

ப.—அநந்தரம், இவ்வழகைக்காத்தூட்டும் ஆயுதவர்க்கம் வஹிரந்தஃப்ரகாஸித்தும் போகிறதில்லையென்கிறாள்.

நின்றிடும் - (ஒருவ்யாபாரக்ஷமையன்றியே) ஸ்தப்தையாய் நில்லாநிற்கும், திசைக்கும் - (சொல்லிற்றறியாதபடி) அறிவழியாநிற்கும், நையும் - (ஆந்தரானுஸந்தாநத்தாலே) ஸிதிலையாகாநிற்கும், என்று - என்றுகொண்டு, அன்னையரும் - பெற்றதாய்மாராய் அடியிலே இப்ப்ரியத்திலே ப்ரவர்த்திப்பித்தநீங்களும், முனிதிர் - அப்ரியவசநங்களைப் பண்ணாநின்றிகோள்; குன்றம் - மலைபோலேயிருக்கிற, மாடம் - மாடங்களையுடைத்தான, திருக்குறுங்குடிநம்பியை - திருக்குறுங்குடிநம்பியை, நான் - ("தம்த்ருஷ்ட்வா" என்கிறபடியே வீரவேஷம்கண்டுகக்கும்) நான், கண்டபின் - அநுபவித்தபின், வென்றி- வென்றியையுடையவான, வில்லும் - வில்லும், தண்டும்-கதையும், வாளும் - வாளும்,

---

கஙு॥ஙச½॥ சுவிராவேஷஹ ராணி வீதஃவஸ்ராவிராவண। ராமோ-ுதழிஷம்ஸவ பூவீரண்ம் வ்ருதிஹாதிமெ॥கரு½॥"

---

ஸகரையும் ஸ்வஹ்தஸ்வீகாரபரரையும் சொல்லுகிறதாதல். ஆக, "அன்னைமீர்" என்றதுக்கு - "அறிவரியபிரானை" என்கிறவிடத்திலும் இவ்விடத்திலுமாக ஸ்வாபதேஸம் த்விவிதமாகக்கண்டுகொள்வது.

சக்கரமும் - சக்ரமும், சங்கமும் = ஶங்கமும், நின்று - ஒருபடிப்படநின்று, கண்ணுள்-என்கண்ணுக்குள்ளே, தோன்றி - தோன்றி, நீங்கா - போகிறனவில்லை; (இப்படிபுறவாயளவன்றியே), நெஞ்சுள்ளும் - நெஞ்சுக்குள்ளே, நீங்கா-நீங்குகிறனவில்லை.

இ.—மூன்றும்பாட்டில், நம்பியுடைய திவ்யாயுதவர்க்கம் உள்ளும்புறம்பு மொக்க தோற்றுநின்ற தென்கிறாள்.

[நின்றிடும் இத்யாதி] - "ஸ்ஜநம்ஹிஜநம்ஶரெரு..." என்று ராமஶரங்களாலே உகவாதார் படுமத்தை முகபேதத்தாலே திவ்யாயுதங்கள் படுத்தாநின்றது; ஸ்தப்தையாக்குவது, அறிவுகெடுப்பது, ஶைதில்யத்தை விளைப்பதாகாநின்றது. ஸ்தப்தையாகாநின்றாள், அறிவுகெடாநின்றாள், ஶிதிலையாகாநின்றாளென்று குற்றமாக நினைத்துப் பொடியாநின்றிகோள். சில ஸ்தம்பநத்தைப் பண்ணும், சில உள்ளறிவைப் போக்கும், சில அறிவுகொடுத்து ஶைதில்யத்தை விளைக்கும். [அன்னையரும்முனிதிர்]-இந்த ஶைதில்யத்துக்கு அடியான நீங்களும் பொடியாநின்றிகோள். இந்தவழகில் உங்களுக்கு அந்வயமில்லையாய்ப் பொடிகிறிகோளோ? ஊராராய்த்தான் சொல்லுகிறிகோளோ? இக்குடிக்காகவுள்ள ப்ராவண்யம் என்னளவிலே வந்தவாறே குறையாமோ? [குன்றம் இத்யாதி] - மலைகளைச் சேரவைத்தாற்போலேயிருக்கிற மாடங்களையுடைய திருக்குறுங்குடி நம்பியை. [நான்] - ஆயுதச்சேர்த்தியிலே ஆழங்காற்படும் நான். வீரபத்நிகள் தோற்குமிறே. [வென்றிவில்லும்] - ஆயுதகோடியிலும் ஆபரணகோடியிலும் முதலிடலாயிறேயிருப்பது. வென்றிகொள்ளும் வில்லும். அல்லாதவற்றுக்கும் வென்றியென்கிறது உபலக்ஷணம். உகப்பாரோடு உகவாதாரோடு வாசியில்லை வெற்றிகொள்ளுகைக்கு. அநுகூலரை ஆபரணமாய் அழிக்கும், ப்ரதிகூலரை ஆயுதமாய் அழிக்கும், ஆகாரத்வயத்தாலும் வெற்றியே ஸ்வபாவமாயிருக்கை. "ஶ...வாவநிஷெவா வெஶ...ஹீகவாஶ...நாமஶெந". [நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா] - மறக்கவொண்ணாதபடி இடைவிடாதே ப்ரத்யக்ஷித்து என்கண்வட்டத்தை விடுகிறனவில்லை. [நெஞ்சுள்ளும் நீங்காவே] - கண்முகப்பே நின்று நலியப்புக்கவாறே கண்ணைப் புதைத்தாள், அகவாயிலும் வந்து ப்ரகாஶிக்கப்புக்கது, உபயாகாரத்தாலும் அநுபவிக்கவல்லள் காணும் இவள்.

ஈடு.—மூன்றும்பாட்டு. நம்பியுடைய திவ்யாயுதவர்க்கம் உள்ளும் புறம்பு மொக்க நிரந்தரமாகத் தோற்றுநின்றதென்கிறாள்.

[நின்றிடும்] - "ஜநம்ஹி ஜநம்ஶரெரு..." (சிந்தம்பிந்நம்ஶரைர்தக்தம்)-என்று ராமஶரங்கள் ஒன்றுசெய்தது மற்றையது செய்யாதாப்போலேயாயிற்று, நம்பியுடைய வழகுகளும். ஒன்று ஸ்தம்பநத்தைப்பண்ணும், ஒன்று அறிவைக்குடிபோக்கும், ஒன்று

மூன்றும்பாட்டு-நின்றிடும் இத்யாதி. "வென்றிவில்லும்" இத்யாதியைப்பற்ற-நம்பியுடைய திவ்யாயுத இத்யாதி. திவ்யாயுதவர்க்கம்-திவ்யாயுதங்களினுடைய சேர்த்தியழகு.

அழகுகளுமென்றது - ஆயுதங்களினுடைய சேர்த்தியால் வந்த அழகுகளுமென்றபடி. அழகுகளும் என்றவநந்தரத்திலே, 'முகபேதத்தாலே படுத்தாநின்றது' என்றுகூட்டி நிர்வஹிப்பது. "ஜநம்ஹிஜநம்ஶரெரு... ...ஶஹவீவிதஃ। ...ஶ... ...ராமேஶரீ...காரிணஃ ॥ ௨௨ ॥" இதி யுத்தகாண்டே ॥ ௯௪ ॥ ...நிரவஸெந. முகபேதத்தாலேபடுத்தும் ப்ரகாரங்களைக்காட்டுகிறார் - ஒன்றுஸ்தம்பநத்தை இத்யாதி. அறிவுகுடி

அறிவைக்கொடுத்து நையப்பண்ணும் ஸ்தப்யையாகாநின்றாள், அறிவுகேடாநின்றாள், ஶிதிலையாகாநின்றாளென்று என்குற்றமாக நினைத்துப் பொடியாநின்றிகோள். [அன்னையரும் முனிதிர்] - தெளிந்திருப்பார்தான் பொடியப்பெற்றதோ. இதுக்கெல்லாம், தாயாயிருக்கிற நீங்கள் இப்படிசெய்யக்கடவதோ. தெளிவதுகலங்குவதாய் இதுதானேயாத்ரையாய்ப்போந்த நீங்களும் முனியாநின்றிகோள். § "ஆழியொடும் பொன்னார்சார்ங்கமுடையவடிகளை யின்னாரென்றறியேன்" என்னுமவர்களிறே. யௌவநத்தில் நீங்கள் செய்துபோந்தது அப்பருவத்தில் நான் செய்தவாறே குற்றமாயிற்றோ. இக்குடிக்காக ஭கவத்ப்ராவண்யமே யாத்ரைபோலேகாணும். [குன்றமித்யாதி] - மலைகளை நெருங்கவைத்தாற்போலேயிருக்கிற மாடங்களையுடைத்தான. [நான்கண்டபின்] - ஆயுதம்பிடித்தபிடியில் வாசியறியும் நான் கண்டபின். வீரபத்நியாகையாலே வாசியறியுமிறே! பெருமாளுக்கு வில்லெடுத்துக் கொடுப்பாள் பிராட்டியிறே. பெருமாள் "வில்லைத்தா" என்ன, கொடுத்து, அவர் கையும்வில்லுமாய் நின்றநிலையைக் கண்டவாறே, "நீர் இப்படி ஸாயுதராய்த் திரியப்புக்கால் உம்மை ருஷிகள் வந்து ஶரணம்புகுவர்கள்; அவர்களுக்கு விரோதிகளான ராக்ஷஸரோடே எதிரிடவேண்டி

---

ப்ர :—(அவர் கையும்வில்லுமாய் நின்றநிலையைக்கண்டவாறே) ஶ்ரீராமாயணே ஆரண்யகாண்டே, நவமஸர்கே "ஸா தீக்ஷ்ணாஸ்யாநாஜ்ஞாதம் ஸ்ருஷ்டிதம் ரவாநத நசு । ஹ்ருதய ப்ரியயா வாவா ஸத பராஜெஹ ஷெய வீஸ ॥க॥ ப்ருதிஜ்ஞாதஸ்த்வயா வீர உண்டகாரண்ய

---

போனால் நையும்படியென் ? என்ன - ஒன்றுஅறிவைக்கொடுத்து இத்யாதி. சஶப்தத்துக்கு஭ாவம் - தெளிந்திருப்பார் இத்யாதி. அதாவது - பூர்வம் இவ்விஷயத்திலே நீங்களும் ஈடுபட்டிறே கிடந்தது, ஆகையாலே தெளிந்திருப்பார்தான் பொடியப்பெற்றதோவென்றபடி. இதுக்கெல்லாம் - இந்தப்ராவண்யாதிகளுக்கெல்லாம். கீழ்வாக்யவிவரணம் - தெளிவதுகலங்குவது இத்யாதி. யௌவநதசையில் தெளிவதுகலங்குவதாயென்றபடி. அப்படி தெளிவது கலங்குவதாயிருப்பர்களோ என்ன - ஆழியொடும் இத்யாதி. தேவத்வஸூசகமான திருவாழியையும், மநுஷ்யத்வைகாந்தமாய் ஸ்ப்ருஹணீயமான ஶ்ரீஶார்ங்கத்தையுமுடைய ஸ்வாமிகளை ; அடையாளம் சொல்லாநிற்கச்செய்தே "இன்னாரென்றறியேன்" என்னுமவர்களிறேயென்றபடி. விஷயவைலக்ஷண்யம் அப்படி கலங்கப்பண்ணுமென்றபடி. § திருமொழி, பத்தாம்பத்து, பத்தாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு, "இன்னாரென்றறியேன்" இத்யாதி. இது பெண்பிள்ளைவார்த்தையானாலும், இங்கு, "அன்னையர்" என்கிறது-அத்யவஸாய நிஷ்டரான ஶ்ரீவைஷ்ணவர்களையாகையாலே, அவர்களுக்கும் தெளிவதும்கலங்குவது முண்டாகையாலே இங்கு ப்ரமாணமாகக்குறையில்லை. "஭கவத்விஷயத்தில் அவகாஹித்தவர்கள் தெளிவது கலங்குவதாவர்கள்" என்னுமதுக்கு ஸ்வாபதேஶவிவக்ஷயா ப்ரமாணமருளிச்செய்து, அந்யாபதேஶ ஸமாதியாலே அருளிச்செய்கிறார் - யௌவநத்தில் இத்யாதி. இவ்வாக்யம் - "தெளிவது கலங்குவதாய்" இத்யாதிவாக்யவிவரணம். யௌவநத்தில் என்றதுக்கு஭ாவம் - த்வரையுண்டானபோது நீங்கள்செய்தத்தை அந்தத்வராவஸ்த்தையிலே நான் செய்தால் குற்றமாயிற்றோவென்று. "தெளிவது கலங்குவதாய் இதுதானே யாத்ரையாய்ப்போந்த" என்றத்தால் பலிதம் - இக்குடிக்காக இத்யாதி. மாடங்களையுடைத்தான - 'திருக்குறுங்குடிநம்பியை' என்று கூட்டிக்கொள்வது. "வென்றிவில்லும்" இத்யாதியைக்கடாக்ஷித்து "நான்" என்றதுக்கு஭ாவம் - ஆயுதம் இத்யாதி. வாசியறிகைக்கு ஹேதுவேதென்ன - வீரபத்நி இத்யாதி. வாசியறிந்து கொடுத்தவிடமுண்டோ என்ன - பெருமாளுக்கு இத்யாதி. (ஶ்ரீராமாயணே அயோத்யாகாண்டே ஸர்கே) "ததஸ்ஸஹதரெதப்ரணீயநாஷீவாயதெதக்ஷணா । ஊஉளவஸீதாதயொஹ பாதெரூஃவஶளவவிஜெளஶாஹள ॥கஅ॥" என்கிறஶ்லோகம்அநுஸந்தேயம். ப்ராஸங்கிகம் - பெருமாள் இத்யாதி. நீரும் நானும் இரண்டிடத்திலேயாகவேண்டி வருமென்றது-பிராட்டிபாசுரத்தி லில்லையாகிலும், "சுவஹ்ஸம்ஜீவிதம்ஜஹ்யாம்க்ஷாம்வாஸீதெதஸஹ

வரும், அது பின்னை சாதிப்பகையாம், பின்னை நீரும் நானும் இரண்டிடத்திலேயாகவேண்டி வரும், ஆனபின்பு, வில்லைப்போகட்டு தாபஸவேஷத்தோடே திரியவமையும்'' என்றாளிறே. பெருமாள்பக்கல் ஸாங்கமிறே இப்படி சொல்லுவித்தது. [வென்றிவில் இத்யாதி] - திவ்யாயுதங்களுக்கு இரண்டிலும் மெய்க்காட்டுண்டுகோணும்; ஆயுதங்களிலும்ஆஹரணங்களிலும். வினைத்தலையிலாயிற்று "ஆயுதம்'' என்றறியலாவது.[வென்றிவில்லும்] - உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற வெற்றியே ஸ்வஹாவமாயிருக்கிற திருவில்லும். "ஸக்ரசாபநிஹேசாபேக்ருஹீத்வாஸத்ருநாஸநே'' (ஸக்ரசாபநிபேசாபேக்ருஹீத்வாஸத்ருநாஸநே) - அநுகூலர்க்குக் கண்டு ஜீவிக்கைக்குமாய், ஸத்ருக்களுக்குப் பிடித்தபிடியிலே முடிகைக்கும் உடலாயிருக்குமிறே. [தண்டும் இத்யாதி] - அதின்ஸ்வஹாவத்தை யுடைத்தான மற்றதிவ்யாயுதங்களும். [நின்றுதோன்றிக்கண்ணுள் நீங்கா]-கண்வட்டத்தைவிடாதேநின்று தோன்றுநின்றது. இவை கண்முகப்பேநின்று நலியப்புக்கவாறே, அஞ்சிக் கண்ணைச்செம்பளித்தவாறே நெஞ்சுக்குள்ளேநின்று ப்ரகாசிக்கத்தொடங்கிற்று [நெஞ்சுள்ளும்நீங்காவே] கீழ் "வந்தெங்கும்நின்றிடுமே'' என்றது, இங்கு உள்ளும்புறம்புமொக்க நலியாநின்றன.

---

வாஸிநாம் । ஜஷீணாம் ரக்ஷணாயஹ்ய வயஸ்ஸம்யதிரக்ஷஸாம் ॥க०॥ ஸசஹீத்ரம்வநம் ஹ்ணகா இதி விஸ்ருதம் । ப்ரஸ்தாய ஸஹஹோத்ரா யஜவாண ஸாஸந:॥கக॥ தத்ஸ்ஸாம் ப்ரஸ்திம் ஹூஷ்டாஷஷிதா கஷம்ஷந: । கவநஷம்ஷிதயத்ரா வெஹவெஸி ப்ருயஸம்ஹிதம் ॥ கஉ ॥ நஹிஷரோவதெவீரமஷநம்ஹணகாநுஸ்ஷக்கி। காரணம்தத்ரவக்ஷ்யாஷிவஹகுஷ்யாஸ்ரூயதாம்ஷஷ ॥ கரு ॥ கூம்ஹிவாணயநஷ்டாணீ ஹ்தாத்ராஸஹவநம்மத:॥கச॥'' இத்யாரஹ்யஹதராரம்ப்ரதிவீதா வஹஷ்ப்ருகாரெண "விஷக்தவாவஸஸ்ரா'' இத்யவாச.

---

கூஷணாழ'' என்று பெருமாள் உத்தரம் சொல்லுகையாலே, பிராட்டிக்கு இப்படி கருத்தென்று ஸித்தம். ஸார்ங்கம் - பக்ஷபாதமும், வில்லும். ப்ரணயிநி, ஸத்ருநிரஸநஹேதுவான ஆயுதங்களைச் சொல்லுவா னென்? என்ன - திவ்யாயுதங்களுக்கு இத்யாதி. அழகுக்கு உடலாகையாலே சொல்லுகிறானென்றபடி. மெய்க்காட்டு - எண்ணிக்கைகொடுக்கை. இரண்டிடத்திலும் அந்வயமுண்டென்றபடி. அது அறியும்படி எங்ஙனே ? என்ன - வினைத்தலையில் இத்யாதி. ஸப்தார்த்தம் - உகப்பாரோடு இத்யாதி. ஸாமாந்யேந வெற்றியைச் சொல்லுகையாலே - உகப்பாரோடு உகவாதாரோடு வாசியற என்றது. இப்படி உஹயகோடியையும் வெல்லுகைக்கு அடியான ஸௌந்தர்யாயுதத்வங்களாகிற ஆகாரத்வயம் திவ்யாயுதங்களுக்குண்டோவென்ன - ஸக்ரவாபநிஹே இத்யாதி. "ஸக்ரவாபநிஹேசாபே க்ருஹீத்வாஸத்ருநாஸநே । ஸ்ரீஜனராமவஸம்வஜனவ்ருஷ ஹஸ்ருஷவிக்ரஜ॥கூ॥இதி கிஷ்கிந்தாகாண்டே த்ருதீயே ஸர்கே. எடுத்த ப்ரமாணத்துக்கு அர்த்தம் - அநுகூலர்க்கு இத்யாதி. "வென்றி'' என்றது - ஸர்வதிவ்யாயுதங்களுக்கும் விஸேஷணமென்கிறார் - அதின்ஸ்வபாவத்தை இத்யாதி. "கண்ணுள்நீங்காதே - நின்று - தோன்றி'' என்று அந்வயித்து அர்த்தம்-கண்வட்டத்தை இத்யாதி. கீழே "வந்தெங்குநின்றிடும்'' என்றத்துக்கும், இங்கே "கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும்நீங்கா'' என்றத்துக்கும் வாசியேதென்ன கீழ்வந்தெங்கும் இத்யாதி. அதாவது - "வந்தெங்கும்'' என்றது - புறம்பெங்குமென்றபடி. இத்தால் பலிதமேதென்ன - நம்பியுடைய இத்யாதி. விவரணம் - அவ்வழகு இத்யாதி. அவர் கையும் வில்லுமாய் நின்றநிலையைக்கண்டவாறே என்கிறவிடத்திலே - ஸதீக்ஷ்ணநாஸ்யநஜாதம்

நம்பியுடையவழகுக்கு உள்ளதெல்லாம் உண்டாயிற்று இவளுக்கும், அவ்வழகு எங்குமொக்க நலிகிறுப்போலேயாயிற்று இவளும் கட்கண்ணாலும் உட்கண்ணாலும் அநுபவிக்கிறபடியும்.

## நான்காம் பாட்டு.

நீங்கநில்லாகண்ணநீர்களேன்று அன்னையரும்முனிதிர்
தேன்கோள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
பூந்தண்மாலைத்தண்டுழாயும் பொன்முடியும்வடிவும்
பாங்குதோன்றும்பட்டும்நாணும் பாவியேன்பக்கத்தவே.

ஆ.—(நீங்கநில்லா) "நம்பியைப்பிரிந்தால் தரிக்கமாட்டாள்" என்று அறிந்த தாய்மாரானநீங்களும், கண்ணநீர்மாறுகிறதில்லையென்று பொடியாநின்றீர்கோள். தேன் களைச்சொரியாநின்ற திருச்சோலையையுடைய திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின், தர்சநீயமாய்க் குளிர்ந்திருந்த திருத்தோள்மாலையும் நிரதிசயதீப்தியுக்தமான திருவபி ஷேகமும் திருவுடம்பும் திருவரைக்குத்தகுதியாய்த்தோற்றுகிற பட்டும் விடுநாணும், கண்டுவைத்து அநுபவிக்கப்பெறாத பாபத்தைப்பண்ணின என்னுடைய பார்ஸ்வத்திலே நின்று என்னை நலியாநின்றனவென்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், திருத்தோள்மாலை திருப்பரிவட்டம் முதலானவை யெல்லாம் என் பார்ஸ்வத்திலேநின்று என்னை நலியாநின்றன என்கிறாள்.

[நீங்கநில்லாகண்ணநீர்களென்று அன்னையரும்முனிதிர்] - 'நம்பியைப் பிரிந் தால் தரிக்கமாட்டாள்' என்று அறிந்த தாய்மாரான நீங்களும் 'கண்ணநீர் மாறுகிற தில்லை' என்று பொடியாநின்றீகோள். வடிவு - திருவுடம்பு. [பாங்குதோன்றும்பட்டு] - திருவரைக்குத்தகுதியாய்த் தோற்றுகிற பட்டு. நாண் - விடுநாண். கண்டுவைத்து அநு பவிக்கப்பெறாத இன்னாப்பாலே 'பாவியேன்' என்கிறாள்.

ப.—அநந்தரம், பரத்வப்ரகாஸகமான நம்பியுடைய வேஷவைலக்ஷண்யமா னது என்பார்ஸ்வஸ்த்தமாகாநின்றதென்கிறாள்.

கண்ணநீர்கள் - (இவள்) கண்ணநீர்கள், நீங்க-போக, நில்லா - நிற்கிறனவில்லை, என்று-என்று, அன்னையரும் - மூட்டினநீங்களும், முனிதிர் - முனியாநின்றீகோள்; தேன் - தேனை, கொள் - உடைத்தான, சோலை - சோலைகளையுடைத்தான, திருக்குறுங் குடிநம்பியை - திருக்குறுங்குடிநம்பியை, நான் - (அவர்மேன்மைகண்டு உகக்கும்) நான், கண்டபின் - அநுபவித்தபின்பு, பூ-அநுபாவ்யமாய், தண்-ஸ்ரமஹரமான, மாலை-மாலா ரூபமாயுள்ள, தண்டுழாயும் - செவ்வித்திருத்துழாயும், பொன் - ஆயிராஜ்யஸூசகமாய் ஸ்ப்ருஹணீயமான, முடியும் - முடியும், வடிவும் - (அம்மாலைக்கும் முடிக்கும் தகுதி யான) வடிவும், பாங்கு - (திருவரைக்குப்) பாங்காய், தோன்றும் - தோன்றுகிற, பட்டு- பட்டுப்பரிவட்டமும், நாணும் - (மேலாபரணமான) விடுநாணும், பாவியேன் - (உள்ளே

---

பூவிதளரவடநகூடம் । ஹநுபாவிநயாவாவாஹத..ராஸிஷவே வீச" இத்யார ண்யகாண்டத்திலே ஒன்பதாம்ஸர்க்கத்தில் ஸ்லோகங்களநுஸந்தேயங்கள். க்ரமேணார்வய: (ரு)

ப்ரகாஶியாநிற்க, கிட்டியநுஹவிக்கப்பெறாத) பாபத்தையுடையேனான என்னுடைய, பக்கத்த - பார்ஶ்வஸ்த்தங்களாகாநின்றன. 'தேங்கொள்சோலை' என்று பாடமாகவுமாம்.

இ.—நாலாம்பாட்டில், ரக்ஷணத்துக்குக் கவித்தமுடியும், தனிமாலையும், பரிவட்டப்பண்பும் முதலானவை பார்ஶ்வத்திலேநின்று என்னைநலியாநின்றனவென்கிறாள்.

[நீங்கநில்லாகண்ணநீர்கள்] - அவன்நீங்க, கண்ணநீர்கள் நீங்குகிறனவில்லையென்னுதல்; பேரநிற்கிறதில்லையென்னுதல். மாற்றநில்லாவென்னுதல்; அப்போது, நீக்கவென்று - வல்லொற்றுகக்கடவது. [அன்னையரும்முனிதிர்] - இவ்விஷயத்திலில்லையானால் ஆநந்தாஶ்ருவுமில்லையோ. [தேன்கொள்சோலை] - தேன்மாறாதசோலை. அச்சோலையில் தேனைமாற்றவல்லிகோளோ என்கண்ணநீரைமாற்றுகைக்கு. இவள்கண்ணநீர்க்கு ஸஹ்யம் ஶோக்யதையாயிற்று. [நான்] - ஸ்வாஹாவிகமான மேன்மையிலே ஈடுபட்டநான். [பூந்தண் இத்யாதி] - தர்ஶநீயமாய்க் குளிர்ந்த திருத்துழாய்மாலையும். உஹயவிபூதிரக்ஷணத்துக்காக 'முதலி' என்று தோன்றும்படி இட்டதனிமாலையும். ஸ்ப்ருஹணீயமான திருவஹிஷேகமும். "உஹயவிஹூதிநாயகன்" என்று கோட்சொல்லுகிற முடியென்கை. [வடிவும்] - அந்தமுடிக்குத்தகுதியான விக்ரஹமும். திருவரைக்குத் தகுதியான பட்டும். [நாண்] - விடுநாண். [பாவியேன்] - உருவெளிப்பாடாய்ச்செல்லாநிற்க, அநுஹவிக்கப்பெறாத பாபத்தைப்பண்ணினேன். அநுபவத்துக்கு விஷயமாகாதொழிந்தால் உள்ளபெரியதிருநாளாய்ச் செல்லவேணுமோ. [பக்கத்தவே] - ஆதிராஜ்யஸூசகமானமுடியும் தனிமாலையும், இவைதான் மிகையென்னும் வடிவும், அதுக்குத்தகுதியான திருப்பீதாம்பரமும் பக்கம்விட்டுப்போகிறதில்லை, அணைக்க எட்டுகிறதுமில்லையென்கை.

ஈடு.—நாலாம்பாட்டு. ரக்ஷணத்துக்குக் கவித்தமுடியும், தனிமாலையும், பரிவட்டப்பண்பும் முதலானவை பார்ஶ்வத்திலே நின்று என்னைநலியாநின்றனவென்றாள்.

[நீங்கநில்லாகண்ணநீர்கள்] - அவன்நீங்க, கண்ணநீர்கள் நீங்குகிறனவில்லை. அன்றிக்கே, நீங்கநில்லா - பேரநில்லாவென்னுதல். "நீக்கநில்லா" என்கிறத்தை - மெலித்து, [நீங்கநில்லா] - என்றுகிடக்கிறதாய், மாற்றநிற்கிறனவில்லை யென்னுதல். [அன்னையரும்முனிதிர்]-உங்கள்கண்களால் ஆநந்தாஶ்ருவும் பாய்ந்தறியாதோ. [தேன்கொள் இத்யாதி]-அச்சோலையில் தேனை வற்றப்பண்ணமாட்டிகோளோ நான் என்கண்ணநீரைமாற்ற. இக்கண்ணநீர்க்கு ஸஹ்யம் அவ்வூரில் ஹோக்யதைபோலேகாணும். [நான்கண்டபின்] - அவனுடைய ஸ்வாஹாவிகமான மேன்மையையறியும் நான் கண்டபின். [பூந்தண் இத்

---

நாலாம்பாட்டு. - நீங்க இத்யாதி. "பூந்தண்மாலை" இத்யாதியைப்பற்ற வ்யுத்க்ரமமாக அருளிச்செய்கிறார் - ரக்ஷணத்துக்கு இத்யாதி.

த்விதீயார்த்தத்துக்கு, "நீங்கநில்லா" என்று - முழுச்சொல்லாய், நீங்குகிறனவில்லையென்றபடி. த்ருதீயார்த்தத்துக்கு, நீக்கவென்றது - தாய்மார் நீக்கவென்றபடி. நீக்க - துடைக்க. உங்கள் கண்களால் இத்யாதிக்கு – தாய்மாரான உங்கள்கண்களால் ஹகவதநுபவஜநிதமான ஆநந்தாஶ்ருவும் பாய்ந்தறியாதோ என்னை இப்படி சொல்லுகைக்குஎன்றபடி. இப்படி சொன்னதுக்கு பலித்தஹாவம்- இக்கண்ணநீர்க்கு இத்யாதி. இத்தால் - "சோலையில் மதுவைத் தானும்நானும் கூடவிருந்து மதுபாநம்பண்ணவேண்டியிருக்க, அத்தை நான் இழந்திருப்பதே" என்னும் ஆற்றாமையாலே கண்ணநீர் பாய்கிறதென்று கருத்து. ஸஹ்யம் – உத்பத்திஸ்த்தாநமான ஸஹ்யபர்வதம். "பூந்தண்மாலை" இத்யாதி மேலையுங்கடாக்ஷித்து "நான்" என்றதுக்கர்த்தம் - அவனுடைய ஸ்வாபாவிகமான இத்யாதி.

யாதி] - உபயவிபூதிக்குமாக முதலியாகவிட்ட, தர்சநீயமாய்க் குளிர்ந்த செவ்வித்திருத் துழாய்த் தனிமாலையும், உபயவிபூதியும் தன்முடியிலே செல்லும்படி கவித்த திருவபிஷேக மும், அம்மாலைக்கும் முடிக்கும் இசைந்த வடிவும்; "இவனே மாலைக்கும் முடிக்குமுரி யான்" என்று படியெடுத்துக்காட்டலாமே. "'வடிவும்' என்பதே!" என்று விஜ்ஞராய்ரு ளுவர். [பாங்குதோன்றும்பட்டும்]-திருவரைசூத்தாற்போலே அங்குத்தைக்குப் பாங்காய்த் தோற்றுகிற திருப்பீதாம்பரமும். [நாணும்]-விநோணும். [பாவியேன்பக்கத்தவே] - அநுப விக்கத்தருதல், உருவெளிப்பாடாய்த் தோன்றுதேயொழிதல் செய்யாதபடியான மஹா பாபத்தைப் பண்ணினேன். அருகேநின்று ப்ரகாசியாநின்றது அநுபவயோக்யமாகப் பெறு கிறதில்லை. அணைக்கத்தருதல், அகலநிற்றல் செய்கிறதில்லை. (ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

பக்கம்நோக்கிநிற்கும்நையுமென்று அன்னையரும்முனிதிர்
தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
தோக்கசோதித்தொண்டைவாயும் நீண்டபுருவங்களும்
தக்கதாமரைக்கண்ணும் பாவியேனுவியின்மேலனவே.

ஆ.—(பக்கம்நோக்கி.) தன்தசையை அநுஸந்தித்து, "ஸர்வதா அருகே வரக்கூடும்" என்று வரஸம்பாவனையுள்ள பார்ச்வத்தைப்பார்த்து நில்லா நின்றாள், பின்னை இங்ஙனே நிற்கமாட்டாதே சிதிலையாகாநின்றாளென்று, என்னோடு பழகியிருக்கிற தாய்மாரானநீங்களும் பொடியாநின்றிகோள். திருக்குறுங்குடிக்குக் கீர்த்தி தகுதியானுப் போலே ஒன்றுக்கொன்று தகுதியாய்த்திரண்ட சோதியையுடைத்தாய், தொண்டை போலே சிவந்திருக்கிற வாயும் புருவத்துக்குத் தகுதியாய்த் தாமரைப்பூப்போலே யிருக் கிற திருக்கண்களும், அவனழைகை நினைத்தால் நோவுபடுகைக்கீடான பாபத்தைபண் ணின என்னை உயிர்நிலையிலே நலியாநின்றனவென்கிறாள்.

ஒ. — அஞ்சாம்பாட்டில், திருக்குறுங்குடிக்குக் கீர்த்தி தகுதியானாற்போலே ஒன்றுக்கொன்று தகுதியாயிருக்கிற திருப்பவளம் முதலான திருமுகத்திலழகுகளானவை என் உயிர்நிலையிலே நலியாநின்றன என்கிறாள்.

[பக்கம்நோக்கிநிற்கும்நையும் என்று அன்னையரும்முனிதிர்] - தன்தசையை அநுஸந்தித்து "ஸர்வதா அருகேவரக்கூடும்" என்று வரஸம்பாவனையுள்ள பார்ச்வத்திலே

---

" பூ-தண்-தண்டுழாயின்-மாலையும் " இத்யந்வய:. " வக்ஷஃஸ்தலாம் [illegible]

[illegible] " இத்யாதி ச்லோகத்தை உட்கொண்டு -

உபயவிபூதிக்கும் இத்யாதி. முடியிலே - திருவபிஷேகத்திலே. படியென்று - த்ருஷ்டாந்தத்துக்கும் திருமேனிக்கும் பேர். வடிவும் என்பதே என்றது - கீழும்மேலும்சொன்ன ஆபரணமத்யத்திலே வடி வையும் ஆபரணகோடியாக அருளிச்செய்வதே யென்றபடி. விஜ்ஞாயநுளுவர் ஜீயர்என்றபடி. " பக்கத்தவே " என்றதுக்கு ஸாவம் - அருகே இத்யாதி. வ்யவகாரார்த்தம் - அணைக்க இத்யாதி. க்ரமேணாந்வய:. (ச)

பார்த்துநில்லாநின்றாள்; பின்னை அங்ஙன் நிற்கமாட்டாதே ஶிதிலையாகாநின்றாள் என்று என்னோடே பழகியிருக்கிற தாய்மாரான நீங்களும் பொடியாநின்றிகோள். [தொக்க சோதித்தொண்டைவாயும்] - திரண்ட சோதியையுடைத்தாய்ச் சிவந்திருக்கிற வாயும். தொண்டை - ஆதொண்டைப்பழம். [தக்கதாமரைக்கண்ணும்] - புருவத்துக்குத்தகுதியாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களும். [பாவியேன்] - அவனழகை நினைத்தால் நோவுபடுகைக்கீடான பாபத்தைப் பண்ணினேன்.

ப·—அநந்தரம், நம்பியுடைய முகாவயவஶோபையானதுஎன் ஆத்மகதமாய்த் தோற்றாநின்றதென்கிறாள்.

பக்கம்-(அவன்வருகைக்கு ஸம்பாவனையுள்ள) பார்ஶ்வத்தை, நோக்கி-நோக்கி, நிற்கும் - நிற்கும், நையும் - (வரக்காணாமையாலே) ஶிதிலையாகாநிற்கும், என்று - என்று இப்படி, அன்னையரும் - (ஸ்நேஹத்தைப்பிறப்பித்த) நீங்களும், முனிதிர் - (ஸ்நேஹம் தவிருகைக்காக) முனிந்து வார்த்தைசொல்லாநின்றிகோள்; தக்க - (பூர்த்திக்குத்) தகுதியான, கீர்த்தி - கீர்த்தியையுடைய, திருக்குறுங்குடிநம்பியை - திருக்குறுங்குடிநம்பியை, நான் - (அவருடைய கீர்த்தியிலே யகப்பட்ட) நான், கண்டபின் - அநுபவித்தபின்பு, தொக்க - திரண்ட, சோதி - ஜ்யோதிஸ்ஸையுடைத்தான, தொண்டை - தொண்டைப் பழம்போலேயிருக்கிற, வாயும் - திருவதரமும், நீண்ட - நீண்ட, புருவங்களும் - திருப் புருவங்களும், தக்க - (அப்புருவத்துக்குத்)தகுதியான நீட்சியையுடைத்தாய், தாமரை - தாமரைபோலே தர்ஶநீயமான, கண்ணும் - திருக்கண்களும், பாவியேன் - நினைத்தபடி அநுபவிக்கப்பெறாத பாபத்தையுடையேனான என்னுடைய, ஆவியின்மேலன- ஆத்மகத மாகாநின்றது.

இ.—அஞ்சாம்பாட்டில், ஒன்றுக்கொன்றுதகுதியான நம்பிதிருமுகத்திலழகுகள் என்னை உயிர்நிலையிலே நலியாநின்றனவென்கிறாள்.

[பக்கம்நோக்கிநிற்கும்] - தன்தசையையேசெப்பேடாக வரஸம்஭ாவனையுள்ள பார்ஶ்வத்தையே பார்த்து நில்லாநின்றாள். "நைஷா பஶ்யதி ராக்ஷஸ்யோ நேமாந் புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபஶ்யதி ॥". [நையும்]- வரக்காணாமையாலே அங்ஙன் இருக்கவும்மாட்டாதே ஶிதிலையாகாநிற்கும். [என்று அன்னையரும் இத்யாதி] - * அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்துவைத்த படியை யறிந்த நீங்களும் பொடியாநின்றிகோள். "வாத்ஸல்யாதஸி ஹ்ருதிஸாஹஸிகம்" என்னும்படியிறே யிருப்பது. [தக்க இத்யாதி] - சொன்னசொன்ன ஏற்றமெல்லாம் தகும்படியான கீர்த்தியையுடைய. [நான்] - அந்தகீர்த்தியே யாரகமாயிருக்கிற நான். [தொக்கசோதி] - திரண்டசோதி. [தொண்டை] - ஆதொண்டைப்பழம். உபமாநத்தை ஶிக்ஷித்துக்கொண்டு இழியவேண்டும்படியான திருவதரம். தேஜஸ்தத்வங்களைத் திரட்டினாற்போலேயிருக்கிற ஆதொண்டைப்பழம் இதுக்கு த்ருஷ்டாந்தமாமித்தனை. உபமாந ரஹிதமாய் நீண்டபுருவங்களும். அப்புருவத்துக்குத் தகுதியாய்த் தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்களும். [பாவியேன்] - அவனழகை யநுஸந்தித்தால் ப்ரியப்படுகை யன்றிக்கே நோவுபடும்படியான பாபத்தைப்பண்ணினேன். [ஆவியின்மேலனவே] - தோற்புரையிலே போகையன்றிக்கே, உயிர்நிலையிலேநின்று நலியாநின்றது. உள்ளு வெளிச்சிறக்கிறாப்போலே புறம்புமாகப்பெற்றோமாகிறிலோம்.

ஈடு — அஞ்சாம்பாட்டு. ஒன்றுக்கொன்று தகுதியான நம்பியுடைய திருமுகத்திலழகுகள் என் உயிர்நிலையிலே நலியாநின்றனவென்கிறாள்.

[பக்கம்நோக்கிநிற்கும்] - அவன்வருகைக்கு ஸம்பாவனையுள்ள பார்ச்வத்தைப் பார்த்துக்கொண்டு நிற்குமாயிற்று; “ நைஷாபச்யதி ராக்ஷஸ்யோ நேமாந் புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபச்யதி”(நைஷாபச்யதிராக்ஷஸ்யோநேமாந்புஷ்பபலத்ருமாந் - ஏகஸ்த்தஹ்ருதயாநூநம் ராமமேவாநுபச்யதி). “நைஷாபச்யதீத்யாதி” (நைஷாபச்யதி இத்யாதி)- ராக்ஷஸீ தர்சநத்தோடு புஷ்பபலத்ரும தர்சநத்தோடு வாசியற்றிருக்கிறதுகாணும் இவளுக்கு. “ஏகஸ்தேத்யாதி” (ஏகஸ்த்த இத்யாதி) - அருகிருந்தவர்களையும் பாராளாயிற்று. அத்திக்கில் வந்து தோற்றுமையாலே நையும். [என்று அன்னையரும் முனிதிர்] - * அறியாக்காலத்துள்ளே அடிமைக்கண்அன்பு செய்வித்தபடியை அறியும் நீங்களும் முனியாநின்றிகோள். “பால்யாத் ப்ரப்ருதிஸுஸ்நிக்த:” (பால்யாத் ப்ரப்ருதிஸுஸ்நிக்த:) என்னும்படியிறே இவள் தன்படி. [தக்க இத்யாதி] -சொன்னசொன்னபடியேல்லாம் தகும்படியிருக்கிற கீர்த்தியையுடைய திருக்குறுங்குடி நம்பியை. [நான்கண்டபின்] - அக்கீர்த்தியே ஜீவநமாக இருக்கும் நான் கண்டபின். [தொக்கசோதித்தொண்டைவாயும்] - சோதிதொக்கதொண்டைபோலேயிருக்கிற திருவதரமும். *“கோலந்திரள்பவளக்கொழுந்துண்டம்” என்னுமாபோலே, தேஜஸ்தத்வம் திரண்டாற்போலேயிருக்கிற தொண்டைபோன்றவாயும். தொண்டையென்பது-கோவை. இத்தை அதரத்துக்கு ஒப்பாகச் சொல்லக்கடவதிறே. [நீண்டபுருவங்களும்] - உபமாநரஹிதமாய், தனக்கு ஓரவதியில்லாமையாலே தன்னினேற்றமே சொல்லும்படியிருக்கிற திருப்புருவங்களும். [தக்கதாமரைக்கண்ணும்] - அதினுடைய செவ்விக்கு அவதியில்லாதாப்போலே

---

ப்ர:—பாலகாண்டே[கஅ] வால்மீகி:, “பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்த்தந: । ராமஸ்ய லோகராமஸ்ய ப்ராதுர்ஜ்யேஷ்டஸ்ய நித்யச:॥ ”

---

அஞ்சாம்பாட்டு.—பக்கம் இத்யாதி. உத்தரார்த்தத்தைத் கடாக்ஷித்து அவதாரிகை - ஒன்றுக்கொன்று இத்யாதி. உயிர்நிலையிலே - மர்மஸ்த்தாநத்திலே.

ஸம்பாவனை - யோக்யதை. அப்படிப் பார்த்துக்கொண்டிருந்தபேருண்டோ? என்ன - நைஷா இத்யாதி. “ நைஷாபச்யதி ராக்ஷஸ்யோ நேமாந் புஷ்பபலத்ருமாந் । ஏகஸ்தஹ்ருதயா நூநம் ராமமேவாநுபச்யதி॥உரு॥” இதி ஸுந்தரகாண்டே (கசு) ஸர்கே. ராக்ஷஸ்ய: என்றது-ஆர்ஷம்; ராக்ஷஸீ:என்றபடி. க்ரூரராக்ஷஸிகளோடே போக்யமான புஷ்பாதிகளை ஸஹபடித்ததுக்குபாவம் - ராக்ஷஸீதர்சநந்தோடு இத்யாதி. அதாவது - தானும் பெருமாளுங்கூட புஷ்பாபசயம்பண்ணுகிறதுக்கு ஸ்மாரகமாய்க்கொண்டு ப்ரதிகூலங்களாகையாலே இவையும்பாதகமென்றபடி.“ராமமேவ” என்கிற அவதாரணத்துக்குபாவம்- அருகிருந்தவர்களையும் இத்யாதி. “அன்னையரும்” என்ற சப்தத்துக்குபாவம்- அறியாக்காலத்துள்ளே இத்யாதி. பால்யத்திலேயே அடிமையிலே ப்ராவண்யத்தை யுண்டாக்குவித்த இத்யர்த்த:. த்ருஷ்டாந்தகதநமுகேந உக்தார்த்தவிவரணம்-பால்யாதித்யாதி இத்யாதி. கீர்த்யதஇதி,கீர்த்தி: என்று-ஸ்துதியைச்சொல்லுகிறது. தொக்க - திரண்ட. கோலந்திரள்பவளக்கொழுந்துண்டம் என்றதுக்கு - ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய ஸாரஸ்யாதிகள் திரண்டதொரு பவளத்தினுடைய கொழுந்தான துண்டமென்று சப்தார்த்தம். “ தொக்கசோதித்தொண்டைவாய் ” என்றாற்போலே, இதுக்கு உபமாநம் சொல்லாமைக்குபாவம் - உபமாநரஹிதமாய் இத்யாதி. இதுக்கு உபமாநமுண்டாகச்சொல்லலாமோ?

அபரிச்சேத்யமாய், அப்புருவங்களுக்குத் தகுதியாயிருக்கிற தாமரைக்கண்ணும். தாமரையை ஒருபோலியாகச்சோல்லில் சோல்லலாமத்தனை. [பாவியேனுவியின்மேலனவே] - உயிர் நிலையிலே நலியா நின்றன. [பாவியேன்] - அகவாயில் வெளிச்சிறப்பழகிது, அப்படியே புறம்பேயும் தோற்றப்பெறுகிறதில்லை, பாவியேன். (ரு)

## ஆறும் பாட்டு.

மேலும்வன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகோடாள்
சோலைசூழ்தண்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
கோலநீள்கோடிமூக்கும் தாமரைக்கண்ணும்கனிவாயும்
நீலமேனியும்நான்குதோளும் என்னேஞ்சம்நிறைந்தனவே.

ஆ.—(மேலும்வன்பழி.) இப்போதன்றிக்கே மேலும் நங்குடிக்கு நிலைநிற்கும் பழியை விளைக்குமிவளென்று, தாயார் நம்பியைக்காண இடங்கொடாதே நோக்காநின்றாள். சோலைகளாலே சூழப்பட்ட திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின், கோலம் கொழுந்துவிட்டதொரு கொடிபோலேயிருக்கிற திருமூக்குமுதலான திவ்யாவயவங்களினுடைய அழகுகள் என்னெஞ்சம்நிறையப் புகுந்து நலியாநின்றனவென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், திவ்யாவயவங்களினுடைய அழகுகள் என் நெஞ்சு நிறையப்புகுந்து நலியாநின்றன என்கிறாள்.

[மேலும்வன்வழி நங்குடிக்கு இவளென்று அன்னைகாணகொடாள்] - இப்போதன்றிக்கே மேலும் நம்குடிக்கு நிலைநிற்கும்பழியை விளைக்கும் இவளென்று தாயார் நமக்கு நம்பியைக்காண இடங்கொடாதே நோக்காநின்றாள். [கோலநீள்கொடிமூக்கு] - கோலம்கொழுந்துவிட்டதொருகொடிபோலேயிருக்கிற திருமூக்கு.

ப.—அநந்தரம், முகஶோபையோடேகூடின ரூபஸௌஜவைலக்ஷண்யம் என் நெஞ்சிலே பூர்ணமாயிற்றென்கிறாள்.

நங்குடிக்கு - (அவன்வரக்காணவிருக்கும்) நங்குடிக்கு, இவள் - (தான்காண த்வரிக்கிற) இவள், மேலும்-(இன்றையளவன்றியே) உள்ளதனையும், வன்-(கழிக்கவரிய) சிக்கென்ற, பழி-பழிதான் ஒருவடிவாயிருக்கிறவளாயிருக்கும், என்று - என்று, அன்னை-தாயாரானவள், காண-நம்பியைக்காண, கொடாள் - இடந்தருகிறிலள்; சோலை - சோலை, சூழ்-சூழ்ந்து, தண்-ஶ்ரமஹரமான, திருக்குறுங்குடி - திருக்குறுங்குடியில், நம்பியை-நம்பியை, நான் - (பழிபுகழாம்படியான ப்ராவண்யத்தையுடைய) நான், கண்டபின் - கண்டபின்பு, கோலம் - அபிரூபமாய், நீள்-நீண்ட, கொடி - கற்பகக்கொடிபோலேயிருக்கிற, மூக்கும்-திருமூக்கும், தாமரை - (அதினுடையபூவென்னலாம்படியாய்த்) தாமரை

---

என்ன - தாமரையை இத்யாதி. இது "தாமரை" என்ற ஏகவசநத்துக்கு பாவமாதல். ஒருபோலியாக - ஒரு ப்ரகாரத்துக்குப் போலியாகவென்றபடி. நலியாநின்றன - ஆகையாலே பாபி என்றபடி. அழகுகள் ஈடுபடுத்துகை நல்லதன்றோ? என்ன - அகவாயில் இத்யாதி. வெளிச்சிறப்பு - ப்ரகாஶம். தக்ககீர்த்தி இத்யாரப்ய, ஆவியின்மேலனவே, பக்கம் நோக்கிநிற்கும் நையுமென்று அன்னையரும் முனிதிர்; பாவியேன் இத்யந்வயஃ. க்ரமேணாந்வயோவா. (ரு)

போலேயிருக்கிற, கண்ணும்-திருக்கண்களும், கனி - (அதின்கனியென்னும்படி) பழுத்த, வாயும் - திருவதரமும், நீலம் - (அதுக்குப்பராஹகமான) நீலநிறத்தையுடைய, மேனியும்-திருமேனியும், (பச்சிலைமரம்பணைத்தாற்போலேயிருக்கிற), நான்கு - நாலு, தோளும் - திருத்தோள்களும், என்-என், நெஞ்சம் - நெஞ்சிலே, நிறைந்தன - நிறைந்தன.

இ.—ஆறும்பாட்டில், நம்பியினுடைய திருமுகத்தில் அவயவசோபைகள் என் நெஞ்சுநிறையப் புகுந்து நலியாநின்றன வென்கிறாள்.

[மேலும் வன்பழி] - இப்போதன்றியே, இக்குடியுள்ளவளவும் ப்ரபலமான பழி. [நங்குடிக்கு] - "தத்ஸ்வஸ்ரூஸம்ஸவேசு" என்றிருக்கும் நங்குடிக்கு. [இவள்-வன்பழி] - பழியைவிளைப்பிக்குமிவளென்கை. தாயார் நம்பியைக்காண இடங்கொடாதே நோக்காநின்றாள். நாட்டார் செய்யுமத்தை நோன்புநோற்றுப்பெற்ற தான் செய்யாநின்றாள். ஸ்ரமஹரமான சோலைசூழ்ந்த திருக்குறுங்குடிநம்பியை. [நான்] - பழி புகழாம்படி யவகாஹித்த நான். [கோலநீள் இத்யாதி] - அழகுமிக்க கொடிபோலேயிருக்கிற மூக்கும். அழகுகொழுந்துவிட்டதொரு கொடிபோலேயிருக்கை [தாமரைக்கண்ணும்]-அக்கொடி பூத்தாற்போலேயாய் தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களும். [கனி வாயும்] - அது ஒருபலத்தை யுண்டாக்கினாற்போலேயாய், கனிபோலேயிருக்கிற திருவதரமும். [நீலமேனியும்] - இவற்றுக்குப் பராகமாய், தாமரையிலைபோலேயிருக்கிற திருமேனியும். [நான்குதோளும்]-கல்பகதருபணைத்தாற்போலே மநோஹரமாய், அவ்வழகைக் காத்தூட்டக்கடவ தோள்களும். [என் நெஞ்சம் நிறைந்தனவே] - ஹிதவசநங் கேட்கைக்கு நெஞ்சில் இடமில்லை.

ஈடு.—ஆறும்பாட்டு. நம்பியுடைய திவ்யாவயவசோபைகள் என்நெஞ்சுநிறையப்புகுந்து நலியாநின்றனவேன்கிறாள்.

[மேலும் இத்யாதி]-இப்போது சிலர் நாலுவார்த்தைசொல்லிவிடுகையன்றிக்கே, மேலும் இக்குடிக்கு உருவநிலைநின்றபழியை விளைக்குமவள் இவளென்று. [அன்னைகாண கொடாள்]-தன்னோடு ஸாம்யமுடையார் சொல்லுகையன்றிக்கே, அடியிலே என்னைப்பெறுகைக்கு நோன்புநோற்றுப்பெற்ற இவளும் இப்படி சொல்லாநின்றாள். [சோலை இத்யாதி]-ஸ்ரமஹரமான சோலையாலே சூழப்பட்ட திருக்குறுங்குடிநம்பியை. [நான்கண்டபின்]-பழி புகழாம்படி இவ்விஷயத்திலே அவகாஹித்த நான் கண்டபின். "பழி" என்று அச்சமுறுத்தி மீட்கவொண்ணாதபடி அவகாஹித்த நான் கண்டபின். [கோலநீள் இத்யாதி]-அழகுமிக்க கொடிபோலேயிருக்கிற திருமூக்கும், அதின்படியேயாயிருக்கிற தாமரைக் கண்ணும். அக்கொடி பூத்தாற்போலேயாயிற்றுத் திருக்கண்களிருப்பது. [கனிவாயும்]-அது ஒருபலத்தையுண்டாக்கினாற்போலேயிருக்கிற கனிவாயும், அத்தாமரையின் இலைபோ

---

ஆறும்பாட்டு.-மேலும் இத்யாதி. "கோலநீள்கொடிமூக்கு" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை - நம்பியுடைய திவ்யாவயவ இத்யாதி.

வன்பழி - வலியபழியை விளைக்கும். கீழெல்லாம் "அன்னைமீர்காள்" என்று- பஹுவசநமாகச்சொல்லி, இங்கே "அன்னை" என்று - ஏகவசநமாகச்சொன்னதுக்குபாவம் - தன்னோடுஇத்யாதி. ஸாம்யமுடையாரென்றது - வளர்த்த தாய்மாரை. "காணக்கொடாள்" - * உட்கண்ணுனை நெஞ்சாலும் காணக்வொட்டாள். "பழி" என்று சொன்னால் மீளவொண்ணாதோ? என்ன - பழிபுகழாம்படி இத்யாதி. கீழ்வாக்யவிவரணம்-பழிஎன்று அச்சம் இத்யாதி. கோலம்-அழகு. அதின்படியேயாயிருக்கிறவென்றது - "கோலநீள் - தாமரைக்கண்" என்றபடி. ஆநுபூர்விக்கு ரஸோக்தியாகபாவம் - அக்

லே நீலமாயிருக்கிற திருமேனியும்; ஒருபெருவெள்ளம்போலேயாயிற்றுத் திருமேனி, அத்தை நீஞ்சுகைக்குச் சிலதெப்பங்கள்போலேயிருக்கிற திருத்தோள்கள்நாலும். [என்னெஞ்சம் நிறைந்தனவே]-உங்களுடைய ஹிதவசநத்துக்கெல்லாம் என்நெஞ்சில் இடமில்லை. (௬)

## ஏழாம் பாட்டு.

நிறைந்தவன்பழிநங்குடிக்கிவளென்று அன்னைகாணகொடாள்
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின்
நிறைந்தசோதிவெள்ளஞ்சூழ்ந்த நீண்டபொன்மேனியொடும்
நிறைந்தென்னுள்ளேநின்றொழிந்தான் நேமியங்கையுளதே.

ஆ.—(நிறைந்த.) ஒருவராலும் போக்கவொண்ணாத வன்பழியை நங்குடிக்கு விளைக்குமிவள் என்று அன்னை காணகொடாள். சிறந்தகீர்த்தித் திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின், நிறைந்த சோதிவெள்ளஞ்சூழ்ந்த ஸௌந்தர்யத்தை மிக்கு விலக்ஷணமான திருமேனியழகும், அல்லாதவழகிற்காட்டில் கையுந்திருவாழியுமான அழகும் என்னெஞ்சிலே வேர்விழுந்ததென்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், நம்பியுடைய திருமேனியில் அழகுவெள்ளம் என்னுடைய நெஞ்சிலே வேர்விழுந்தது என்கிறாள்.

[நிறைந்தவன்பழி] - ஒருவராலும்போக்கவொண்ணாத பழி. [நீண்டபொன்மேனி] - ஸௌந்தர்யத்தைமிக்கு விலக்ஷணமான திருமேனி. [நேமிஅம்கைஉளதே] - அல்லாத அழகிற்காட்டில் கையுந்திருவாழியுமான அழகே ஹ்ருதயத்தை வருத்தாநின்றது என்றுகருத்து.

ப.—அநந்தரம், நிரதிசயதேஜோவிசிஷ்டமாய் உத்துங்கமான ஸ்ப்ருஹணீய விக்ரஹத்தோடே நம்பி என் நெஞ்சுக்குள்ளே கையுந்திருவாழியுமாய் நின்றானென்கிறாள்.

நம்-நம்முடைய, குடிக்கு - குடிக்கு, இவள்-இவள், நிறைந்த - பூர்ணமாய், வன்-ப்ரபலமான, பழி-பழி, என்று - என்று, அன்னை - தாயார், காண-காண, கொடாள் - இடங்கொடுக்கிறிலள்; சிறந்த - சிறப்பையுடைத்தான, கீர்த்தி - கீர்த்தியையுடைய, திருக்குறுங்குடிநம்பியை - திருக்குறுங்குடிநம்பியை, நான் - (அக்கீர்த்யதிசயத்துக்கு அகப்பட்ட) நான், கண்டபின் - அநுபவித்தபின்பு, நிறைந்த - பூர்ணமான, சோதிவெள்ளம் - தேஜோராசியாலே, சூழ்ந்த - சூழப்பட்டு, நீண்ட - உத்துங்கமாய், பொன் - ஸ்ப்ருஹணீயமான, மேனியொடும் - வடிவோடேகூட, என்னுள்ளே - என் நெஞ்சுக்குள்ளே, நிறைந்து - நிறைந்து, நின்றொழிந்தான் - நின்றுவிட்டான்; நேமி-(அஸாதாரணசிஹ்நமான) திருவாழியும், அம்-அழகிய, கை-திருக்கையிலே, உளது - உண்டாயிருந்தது.

இ.—ஏழாம்பாட்டில், நம்பியுடைய திருமேனியில் அழகுவெள்ளம் என் நெஞ்சிலே வேர்விழுந்ததென்கிறாள்.

---

கோடி இத்யாதி. இவ்விடத்திலே "விஜ்ஞாநாவகாசோ அந்யோ ந இச்சாயா:" இத்யாத்யநுஸந்தேயம். நங்குடிக்கு - மேலும்வன்பழி இத்யாரப்ய, க்ரமேணாந்வய:. (௬)

*[நிறைந்தவன்பழி] - அதிமாத்ரமாய் ஒருத்தரால் மீட்கப்போகாத ஐகவத்ப்ராவண்யத்தைச் சொல்லுகிறது. [நங்குடிக்கிவள்] - "வகுத்தவிஷயமேயாகிலும் நாம் மேல்விழுந்துபெறுகை அவத்யம்" என்றிருக்கும்குடி. இங்கு, தாயார்வார்த்தையும் மகள்வார்த்தையும், இரண்டும் இவ்வாழ்வார்வார்த்தையிறே; "பழி" என்று பரிஹரிக்கிறவள் - உபாயத்திற் கொத்தையறுக்கிறாள், பழிபாராதே மேல்விழுகிறவள் - உபேயத்திற் கொத்தையறுக்கிறாள். தாயார் பூர்வார்யத்தை நிஷ்கர்ஷிக்கிறாள், மகள் உத்தரார்யத்தை நிஷ்கர்ஷிக்கிறாள். உபேயருசியாலே செய்கிறவற்றிலே உபாயபுத்திபண்ணித் தவிருகை அர்த்தமன்று, அவற்றில் கர்த்தவ்யபுத்திபண்ணி யநுஷ்டிக்கையும் அர்த்தமன்று; ப்ராப்யருசியடியாய்த் தவிரலாவ தொன்றுமில்லை. உபாயபுத்த்யா த்ருணச்சேதமும் மிகை. பிள்ளைகள்விவாஹார்த்தமாக ஆழ்வான்ப்ரதிபத்தியை யநுஸந்திப்பது. த்ருஷ்டத்தோடு அத்ருஷ்டத்தோடு வாசியென். [சிறந்தகீர்த்தி] - நம்பிக்கு அதிஶயத்தைப் பண்ணுங்கீர்த்தி. [நான்] - அந்தகீர்த்தியோபாதி அவனுக்குச்சிறந்தநான். "யஶஸ்வீ ஜநகாத்மஜா - ஸுஶ்ரேயம்ஹிதத்தேஜஃ". [நிறைந்த இத்யாதி] - அபரிச்சிந்நமான தேஜஸ்ஸினுள்ளே உந்நேயமாம்படியாயிற்று திருமேனியிருப்பது. இத்தேஜஸ்ஸினுள்ளே, வடிவுதான் அபரிச்சேத்யமான போக்யதையையுடைத்தாய் நித்யஸ்ப்ருஹாவிஷயமாயிருக்கை. இந்தவிக்ரஹத்தோடே நெஞ்சுநிறையும்படி நின்றான். அவன்நிறைவைக் குறைக்கிலன்றோ என்பழியைக்குறைப்பது. [நேமியங்கையுளதே] - அல்லாத அழகுகளெல்லாவற்றிலும் மிகுதியாயாயிற்று கையுந்திருவாழியு மிருப்பது. வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியானகையிலே திருவாழியுமானால் மீட்கப்போமோ?*

ஈடு —ஏழாம் பாட்டு. நம்பியுடைய திருமேனியி லழகுவெள்ளம் என்நெஞ்சிலே வேர்விழுந்த தென்கிறாள்.

[நிறைந்த இத்யாதி] - ஆண்டாள் ஒருநாள் பட்டரையும் சீராமப்பிள்ளையையும் காட்டி, "இவர்கள் விவாஹப்ராப்தரானார்கள், பேசாதே இருக்கிறதென்?" என்ன,— "ஆகில், நாளைப் பெருமாள்பாடேபோனவாறே வரக்காட்டு" என்ன, அவர்களையுங்கொண்டு திருமுன்பே நிற்கச்செய்தே, பெருமாள் அருளப்பாடிட்டு, "ஒன்றுசொல்லுவாய்போலே இருந்தாயீ!" என்று திருவுள்ளமாக, " 'இவர்கள் விவாஹப்ராப்தரானார்கள்' என்று சொல்லாநின்றார்கள்" என்ன, "நாமே ஸத்ருஶமானவிடத்திலே ஸம்பந்தித்துத்தருகிறோம்" என்று அருளிச்செய்ய, பிற்றைநாள் மன்னியைக்கொண்டுவந்து நீர்வார்த்தார்கள். ஆக, "அத்தலையாலே வருமதொழிய, தாந்தாம் ஒன்றை ஆசைப்படுகையுங்கூடப் பழி"

*ஏழாம்பாட்டு - நிறைந்த இத்யாதி. உத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - **நம்பியுடைய** இத்யாதி. என்நெஞ்சிலே வேர்விழுந்தது என்றது - "என்னுள்ளே நின்றொழிந்தான்" என்றத்தைப்பற்ற.*

***வன்பழி** - வலிய பழியை விளக்கும். இங்கு, பழியாகச் சொல்லுகிறது - ஸ்வாபதேஶத்திலே, த்ருஷ்டாத்ருஷ்டவிபாகமற அவன்கை பார்த்திருக்கையொழிய ஸ்வயத்நமென்று விவக்ஷித்து, ஸ்வயத்நம் பழியென்னுமதுக்கு ஐதிஹ்யம் - **ஆண்டாள்** இத்யாதி. இத்தால் - ஈஶ்வரனையொழிய த்ருஷ்டார்த்தமாகவும் தானாக ஒரு ப்ரவ்ருத்திபண்ணுகை ஸ்வரூபவிருத்தமென்று தோற்றுகையாலே, அத்ருஷ்டார்த்தமான ஸ்வயத்நம் ஸ்வரூபவிரோதித்வேந அவத்யாவஹமென்னுமது கிம்புநர்ந்யாயஸித்த மென்றபடி. **மன்னியை** - கன்னியை. இத்தால், ப்ரபந்நனுக்கு த்ருஷ்டார்த்தமான ஸ்வயத்நமும் பழியென்றபோதே - ஸ்வயத்நரூபமான உபாயாந்தரங்கள் பழியென்னு*

என்றிருக்குங்குடிகாணும். "அபாதகஸீதஸ்த்வ" (அதபாதகபீதஸ்த்வம்) - "தர்ம புத்ரன் ஒருதடவற்போய்சொல்லி அதுக்கு நரகதர்ஶநம் பண்ணினன்" என்று ப்ர ஸித்தமிறே. அடுத்தடுத்து ராஜஸூயங்களைப் பண்ணினனித்தனைபோக்கி, "நிஷித்தா நுஷ்ட்டாநம் பண்ணினன்" என்று ப்ரமாணப்ரஸித்தியில்லை. "அபாதகஸீதஸ்த்வ" (அதபாதகபீதஸ்த்வம்)-கீழேசெய்துபோந்தவை பாதகமென்றுதோற்றி ஸீதஸீதனானாகில். அஹங்கார மமகாரகர்ஹமான க்ரியாகலாபமடைய, "க்ருஷ்ணனே நங்காரியத்துக்குக் கட வன்"என்று அறிந்தவநந்தரம் பாதகஸமமாய்த் தோற்றிற்றாயிற்று."விமுக்த்யாதி"(விமுக் தேத்யாதி) - உப்பைத்தோட்டுப் புளியைத்தோட்டு நீநின்று சிலவற்றைச்செய்யாதே, புறம் புள்ளவற்றையடையப் போகட்டு,"உடையவனே நங்காரியத்துக்குக்கடவன்" என்று அவன் பக்கலிலே ஹரத்தைப் போகட்டிருக்கப்பார். இப்போது "பழி" என்று பரிஹரிக்கப்பார்க் கிறது இவ்விஷயத்திலுள்ள ப்ராவண்யத்தையிறே; "பழி" என்று பரிஹரிக்கப்பார்க்கிற திருத்தாயாராயும், "பழியென்றுமீளேன்" என்கிற பிராட்டியாயும் ஓடுகிற இவ்விரண்டாகா ரமும் ஆழ்வார்தமக்குப் பிறந்த அவஸ்த்தாவிஶேஷங்களிறே; சரமஶ்லோகத்துக்குக் கீழுள்ள வற்றை அநுஹாஷித்தாற்போலே இருக்கிறதாயிற்று - "பழி" என்று பரிஹரிக்கப்பார்க்கிற திருத்தாயார்வார்த்தையானவிடம்; சரமஶ்லோகத்தில் நிஷ்கர்ஷம்போலே இருக்கிறதாயிற்று- "பழியென்றுமீளேன்" என்கிற இவள்வார்த்தையானவிடம். "பழி" என்று பரிஹரிக்கப் பார்க்கிறவிது - உபாயத்தில் கோத்தையறுக்கிறது; "பழியென்றுமீளேன்" என்கிறவிது -

---

மத்தை ஸித்தவத்கரித்து, அதுக்குப்ரமாணம் - அபா இத்யாதி. "அபாதகஸீதஸ்ய ஸவஹா வெநஹாரத । விமுக்தாந்யஸமாரம்ஹோ நாராயணவராஹவ" இதி ஹாராஹாரதெ ஸ்ரீ விஷ்ணுயஜே யஜுவாஸ்தும் வஞ்சி யஜுதெவதா. பாதகஶப்தம் - நிஷித்தாநுஷ்ட் டாநத்தைச் சொல்லுமதொழிய, உபாயாந்தரத்தைச் சொல்லுமோ? என்ன - தர்மபுத்ரன் இத்யாதி. அதாவது - ஔசித்யத்தாலே, பாதகஶப்தம் - இவ்விடத்தில், உபாயாந்தரங்களைச் சொல்லுகிறதென்ற படி. அபாஶப்தம் - ப்ரஶ்நபரமாய், பாதகஸீதோஸ் - பாதகஸீதஸ்சேத் இத்யர்த்தః. தடவற்போய் ஆஹாஸமானபொய். கீழேசெய்துபோந்தவை - ராஜஸூயாதிகள். கீழ்ச்செய்துபோந்த ராஜஸூயாதி கள் பாதகஸமமாய்த் தோற்றுகைக்கடியேதென்ன - அஹங்கார இத்யாதி. "வி" என்கிற உபஸர்க் கார்த்தம் - உப்பைத்தோட்டு இத்யாதி. அதாவது; "வி" என்கிற உபஸர்க்கத்தாலே - ஸவாஸநத் யாகம் சொல்லுகிறதென்றபடி. * நாராயண ஶப்தார்த்தம் - உடையவனே என்றது. இது தத்புருஷ னில் அர்த்தம். ஸ்வரக்ஷணார்த்தமான யத்நத்தை - "பழி" என்றதாகில்; ஆழ்வார்க்கு ஸ்வரக்ஷ ணார்த்தமான வ்யாபாரமில்லையே, ஆனபின்பு இப்போது ஸ்வாபதேஶத்திலே "நிறைந்தவன்பழி" என்றது எத்தையென்ன - இப்போது இத்யாதி. தடஸ்த்த ஶங்கையை யநுவதிக்கிறார் - பழியென்று பரிஹரிக்கப்பார்க்கிற திருத்தாயார் இத்யாதி. அவஸ்த்தாவிஶேஷங்களிறே என்றவநந்தரம், 'இவ்வுஹயாவஸ்த்தாநுகுணப்ரமாணமெது, இவ்வுஹயாகாரமும் ஒருவர்க்கே கூடும்படிதான் எங்ஙனே' என்று அத்யாஹரிப்பது. இதுக்குப் பரிஹாரம் - சரமஶ்லோகத்துக்கு இத்யாதி. கீழுள்ளவற்றை - கீழ்ச்சொன்ன உபாயாந்தரங்களை. அநுஹாஷித்தாற்போலே - அநுஹாஷித்து நிஷேதித்த பூர்வார்த்தம் போலே. சரமஶ்லோகத்தில் நிஷ்கர்ஷம்போலே யென்றது - அநிஷ்டநிவ்ருத்தி ஆநுஷங்கிகமாகை யாலே, உபேயநிஷ்கர்ஷத்திலே நோக்கான சரமஶ்லோகத்தில் உத்தரார்த்தம்போலே யென்ற படி. ஆக, இவ்வவஸ்த்தாத்வயத்துக்கும் ஸாதகப்ரமாணம் - சரமஶ்லோகத்தில் பூர்வோத்தரார்த்த ங்களென்றும், இவ்வவஸ்த்தாத்வயமும் அத்யவஸாயத்வராரூபாவஸ்த்தாபேதத்தாலே கூடுமென்றும் கண்டுகொள்வது. கீழ்வாக்யத்வயஹஸிதம் - பழியென்று இத்யாதி வாக்யத்வயமும். உபாயத்தில் கொத்தையறுக்கிறதென்றது - ஸித்தோபாயம் சேதநப்ரவ்ருத்தியில் ஒன்றையும் ஸஹியாமையாலே,

உபேயத்தில் கோத்தையறுக்கிறது. ஸ்வரூபமாய் அந்வயித்ததத்தில் மிகுதியாய்க்கழிவதோன்றுண்டோவென்றபடி; "ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே" (ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே) என்கிறவிதில் மிகுதியாய் த்யாஜ்யமாயிருப்ப தோன்றில்லையிறே. உபாயாம்ஸத்தில் வந்தால், "கர்த்தவ்யாம்ஸங்களிலேயும் உபாயபுத்தி பிறக்கிறதோ" என்று துணுக்கென்னவேண்டும்படியாயிருக்கு; உபேயத்தைப்பார்த்தால், "அஹம்ஸர்வம்கரிஷ்யாமி" (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) என்கிறபடியே, விடலாவதோன்றில்லையாயிருக்கும். பழைய நாஸ்திக்யத்தாலே கர்த்தவ்யாம்ஸத்தில் சோம்பிக் கைவாங்கினத்தை, "உபாயவிரோதியான ஆகாரத்தாலே விட்டேன்" என்னுமதுவும் வார்த்தையல்ல; உபேயருசியாலே செய்யுமத்தை, "இவை உபாயமாய் அந்வயிக்கிற் செய்வதேன்?" என்று விடுமதுவும் வார்த்தையல்ல.

---

ப்ர:—சாந்தோக்யே [அ-௧௨] "ஏவமேவைஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபி நிஷ்பத்யதே".

அயோத்யாகாண்டே [௩௧] "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே । அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரத ஸ்வபதஸ்ச தே ॥௨௫॥".

*ஸ்வரக்ஷணார்த்த ப்ரவ்ருத்தி ஸித்தோபாயத்துக்கு அவத்யமாகையாலே, ஸ்வரக்ஷணத்தில் நிவ்ருத்தி - உபாயாம்ஸத்தில் கொத்தையை அறுக்கிறது. உபேயத்தில் கொத்தையைக்கிறதென்றது-"கைங்கர்யம் பெற்றபோது பெறுகிறோம்" என்று ஆறியிருக்கிற இது உபேயமான கைங்கர்யத்துக்குக் கொத்தையாகையாலே,* தத்விஷயார்த்தமான *ப்ரவ்ருத்திக்கடியான ப்ராவண்யம் உபேயத்தில் கொத்தையறுக்கிறதென்றபடி. ஆக, உபாயத்தினுடைய நைரபேக்ஷ்யத்தைப் பார்த்தால் ஸ்வப்ரவ்ருத்தியெல்லாம் கொத்தையாயிருக்கும்; உபேயவைலக்ஷண்யத்தைப் பார்த்தால் த்வரியாதே ஆறியிருக்கை கொத்தையாயிருக்கும்; ஆகையால் இரண்டு கொத்தையையும் அறுக்கிறதென்று ஃபலிதார்த்தம்.* கோத்தை - *அவத்யம். "பழியென்றமீளேன்" என்கிறவிது உபேயத்தில் கொத்தையை அறுத்தாலும், ஸித்தோபாயத்தினுடைய நைரபேக்ஷ்யத்துக்கு ஹஞ்சகமன்றோ? என்ன -* ஸ்வரூபமாய் *இத்யாதி.* ஸ்வரூபமாய்அந்வயித்தத்தில் - *ஸ்வரூபாந்தர்க்கதமாய் அந்வயித்த பரபக்த்யாதிகளில்.* மிகுதியாய்க்கழிவது - *த்யாஜ்யமாய்க்கழிவது. என்றபடிஎன்றது - "பழியென்றமீளேன்" என்றதுக்கு அபிப்ராயமென்றபடி. பரபக்த்யாதிகள் ஸ்வரூபாந்தர்க்கதங்களோ? என்ன-ப்ரமாணசதநமுகேந உத்தரார்த்தவிவரணம் -* ஸ்வேநரூபேண *இத்யாதி.* ஸ்வேநரூபேண - ஸ்வாஸாதாரணாகாரேண. *ஸ்வாஸாதாரணாகாரமாவது - அபஹதபாப்மத்வாதிகள், ஶேஷத்வ பாரதந்த்ர்யாதிகள், பரபக்த்யாதிகளென்றபடி. கீழே, "உபாயத்தில் கொத்தையறுக்கிறது, உபேயத்தில் கொத்தையறுக்கிறது" என்று சொன்ன ஆகாரத்வயமும் மற்றும் ஸித்தோபாயநிஷ்டரா யிருப்பார்க்கும் ஸமாநமாகையாலே, அவர்கள் அநுஷ்டிக்கிற நித்யநைமித்திகரூபமான கர்த்தவ்யாம்ஸங்களில் இவ்வுபயாகாராநுகுணமாக அவர்களுக்கு உண்டாம் ப்ரதிபத்திவிஶேஷங்களைக் காட்டுகிறார் -* உபாயாம்ஸத்தில் இத்யாதி. உபாயாம்ஸத்தில் வந்தாலென்றது - *உபாயாதிகாரமாகிற ஆகாரத்தைப் பார்த்தால் என்றபடி.* உபேயத்தைப்பார்த்தால் - *உபேயாதிகாரத்தைப் பார்த்தால். இப்படி உபேயாதிகாரத்தைப் பார்த்தால் கர்த்தவ்யங்களில் த்யாஜ்யாம்ஸமில்லையாகையாலே, நாஸ்திக்யபுத்த்யாதிகளால் விடுமது அப்ராமாணிகமென்று அருளிச்செய்யாநின்றுகொண்டு உபேயாதிகாராநுகுணமாக ஶிஷ்டாநுஷ்டாநத்தையுங் காட்டுகிறார் -* பழைய இத்யாதி, யாத்ரையிருக்கும்படியிறே இது என்னுமளவாக. உபாயவிரோதியான ஆகாரத்தாலேவிட்டேன் என்னுமதுவும் வார்த்தையல்ல *என்றவனந்தரத்திலே; கர்த்தவ்யாம்ஸத்தில் சோம்பாதிருந்தாலும், "உபாயாங்கதயா ஆஶ்ரமகர்மம் ஶாஸ்த்ரவிஹிதமாகையாலே இது நமக்குக் கர்த்தவ்யம்" என்கிற புத்தியாலே அநுஷ்டிக்குமதுவும் வார்த்தையல்ல,* என்கிற இதுவும் கண்டு

"என்னை எடுக்கவேணும்" என்று அபேக்ஷித்தமை இல்லையிறே; தானேயிறே செய்தான். [உண்டேனும்]-சிலர் இருக்கச் சிலர் அழிகையன்றிக்கே, ஸ்ரஷ்டாக்களோடு ஸம்ஹர்த்தாக்களோடு வாசியற எல்லாரையுமொக்க ப்ரளயங்கொள்ளப்புக, இத்தையடைய வயிற்றிலே வைத்து ரக்ஷித்தேன் நான் என்னாநின்றாள். "அப்போதுவேறுசிலர் ரக்ஷித்தார்கள்" என்கைக்கு மற்றொருவர் உண்டாகைக்கு ஸம்பாவனையுமில்லை. [ஈசன்]-ஸர்வஸ்ரஷ்டாவாய் ஸர்வாந்தர்யாமியாய் ஸர்வாபத்ஸகனான ஸர்வேச்வரன் வந்து ஆவேசித்தானோ, அறிகிறிலேன். "உன்னைக்கேட்டு அறுதியிட வந்தோம், நீயும் ஒக்க விசாரியாநின்றாயீ! நாங்கள் பின்னை நிர்ணயிக்கும்படி என்?† (நாங்கள் தெரியும்படி என்?) நாங்கள் தெளியும்படி நீயே சொல்லாய்" என்ன,—[கடல்ஞாலத்தீர்க்கு] - "வைகுந்தத்தமரர்" என்னுமாபோலே, நித்யஸம்ஸாரிகளாய், பகவத்விஷயம் புதியது உண்டறியாதே போருகிற உங்களுக்கு நான் எத்தைச் சொல்லுவேன். கோலோ என்றவிடம் - ஸம்சயோக்தியல்ல, காணுங்கோளென்று நிர்ணயித்துச் சொல்லுகிறாள். [கடல் இத்யாதி] - இதுதான் நித்யஸூரிகள் சொல்லக்கடவ வார்த்தை; ஆக, நித்யஸூரிகள் சொல்லக்கடவ வார்த்தையை ஸம்ஸாரத்திலேயிருந்து என்மகள் சொல்லுகிற இதுக்கு நான் எத்தைச்சொல்லுவது. (க)

## இரண்டாம் பாட்டு

கற்குங்கல்விக்கெல்லையிலனேயென்னும் கற்குங்கல்வியாவேனும்யானேயென்னும், கற்குங்கல்விசெய்வேனும்யானேயென்னும் கற்குங்கல்விதீர்ப்பேனும் யானேயென்னும், கற்குங்கல்விச்சாரமும்யானேயென்னும் கற்குங்கல்விநாதன்வந்தேறக்கோலோ? கற்குங்கல்வியீர்க்கிவையென்சொல்லுகேன்? கற்குங்கல்வியென்மகள்காண்கின்றவே.

*ஆ.—(கற்குங்கல்வி.) நான்கற்ற வித்யைகளுக்கு ஒருமுடிவில்லையென்னும். எல்லாரும் விரும்பிக் கற்கிற வித்யைகள் நான் இட்டவழக்கென்னும். அவற்றை உண்டாக்கினேன் நானேயென்னும். அவற்றினுடைய தாத்பர்யநிர்ணயம் என்னாலேயென்னும். வித்யாபலம் நானேயென்னும். அப்யஸிக்கப்படும் ஸகலவித்யாவேத்யனான ஸர்வேச்வரன்வந்தேறினானோ? அறிவில்லாத உங்களுக்கு, அறியத்தொடங்கும் பருவத்தையுடைய இவள் அநுஸந்திக்கிறவற்றைச் சொல்ல விரகுண்டோவென்கிறாள்.*

*ஒ.—இரண்டாம்பாட்டில், 'ஸர்வவித்யாவேதநமும் வித்யாப்ரவர்த்தகாதிகளும் நான் இட்டவழக்கு என்னாநின்றாள்' என்கிறாள்.*

*[கற்கும் என்றுதொடங்கி] - நான்கற்ற வித்யாஸ்தலத்துக்கு ஒருமுடிவில்லை என்னும்; எல்லாரும் விரும்பிக்கற்கிற வித்யைகள் நான் இட்டவழக்கு என்னும்; அவற்றை*

---

*"உண்டேனும்" என்று - ரக்ஷணத்தைச்சொல்லுகிறது, ரக்ஷணம் ப்ராரகமாகையாலே. ஏவகாரார்த்தம் - அப்போது இத்யாதி. வைகுந்தத்தமரர் என்னுமாபோலேயென்றது - பரமபதத்தை இருப்பிடமாகவுடைய நித்யஸூரிகளென்று விசேஷித்தாப்போலேயென்றபடி. "கோலோ" என்றதுக்கு - கீழே ஸம்சயோக்தியாக அருளிச்செய்து, நிச்சயோக்தியாகத் தாத்பர்யாந்தரம் - கோலோவென்றவிடம் இத்யாதி. இதுதானென்றது - "கடல்ஞாலம்" இத்யாத்யுக்தியை. க்ரமேணாந்வய:. (க)*

யானே உண்டாக்கினேன் என்னும்; அவற்றினுடைய தாத்பர்யநிர்ணயம் என்னாலே என்னும்; வித்யாஃபலம் நானே என்னும்; அப்யஸிக்கப்படும் ஸகலவித்யாவேத்யனான ஸர்வேஶ்வரன் வந்தேறினானோ? [கற்கும்கல்வி என்றுதொடங்கி] - அறிவில்லாத உங்களுக்கு அறியத்தொடங்கும் பருவத்தையுடைய இவள் அநுஸந்திக்கிற இவற்றைச் சொல்ல விரகுண்டோ?

ப.—அநந்தரம், ஸகலவேதவித்யைகளும் தத்ப்ரவர்த்தகாதிகளும் நானிட்ட வழக்கென்னாநின்றாளென்கிறாள்.

கற்கும் - (புஸ்தகநிரீக்ஷணாதிகளாலன்றியே ஆசார்யமுகத்தாலே) கற்கப்படும், கல்விக்கு - வேதரூபவித்யைகளுக்கு, ("அநந்தாவை வேதா:" என்கிறபடியே), எல்லை- எல்லையை, இலன் - உடையேனல்லேன், என்னும் - என்னும்; கற்குங்கல்வியாவேனும் - அந்தவித்யைகள் எனக்கு ப்ரகாரமாம்படி ஶப்தப்ரஹ்மாத்மகனும் நிற்பேனும், யானே - நானே, என்னும் - என்னும்; கற்குங்கல்வி - அவற்றை, செய்வேனும் - (ஸுப்தப்ரபுத்த ந்யாயத்தாலே ஸ்ருஷ்டிகாலத்திலே யதாபூர்வம்) உண்டாக்குவேனும், யானே - நானே, என்னும் - என்னும்; கற்குங்கல்வி தீர்ப்பேனும் - ஸம்ஹ்ருதிஸமயத்திலே உபஸம்ஹரித்து என்னெஞ்சிலே இட்டுவைப்பேனும், யானே - நானே, என்னும் - என்னும்; கற்குங்கல்விச்சாரமும் - அந்த வித்யாஸாரமான மூலமந்த்ராதிகளும், யானே - நானிட்ட வழக்கு, என்னும் - என்னும்; கற்குங்கல்வி - ஸகல வேதப்ரதிபாத்யனான, நாதன் - ஸர்வேஶ்வரன், வந்தேற - இவளை ஆவேசித்தானாக, கொலோ - கூடுமோ? கற்குங் கல்வியீர்க்கு - இன்று என்பக்கலிலே இதுகற்கும்படியான உங்களுக்கு, கற்குங்கல்வி - இன்று வார்த்தைகற்கும் பருவமான, என்மகள் - என்பெண்பிள்ளை, காண்கின்ற - தான் கண்டு சொல்லுகிற, இவை - இவற்றை, என்-என்னென்று, சொல்லுகேன் - சொல்லுவேன்? "கற்கும்கல்வியென்று - ஸகலவித்யாஸ்த்தாநம்" என்றும் சொல்லுவாருமுளர்.

இ.—இரண்டாம்பாட்டில், ஸர்வ வித்யாவேத்யமும் வித்யாப்ரவர்த்தகத்வாதிகளும் நானிட்டவழக்கென்கிறாள்.

[கற்குங்கல்விக்கெல்லையிலனே யென்னும்] - அல்பகாலத்திலே ஸாந்தீபநியோடே நான் கற்ற பாட்புக்கு எல்லையில்லை யென்னாநின்றாளென்னுதல், "யதோவாசோ நிவர்த்தந்தே" என்று மீண்டது என்னை யென்னாநின்றாளென்னுதல்; கற்குங்கல்வியினுடைய எல்லையினுள்ளே நில்லேனென்னாநின்றாளென்னுதல். [ஆவேனும்]-வித்யைக்கு நிலமன்றியிருக்குமளவன்றிக்கே, எல்லாரும் அப்யஸிக்கிறவித்யைகள் நானிட்ட வழக்கென்னும். "ஸர்வவித்யா" என்னக்கடவதிறே. [செய்வேனும்] - அதிகரிக்கக்கடவ வித்யைகளை ஸுப்தப்ரபோதந்யாயத்தாலே யுண்டாக்குவேன்நானே யென்னும். [தீர்ப்பேனும்] - இவற்றினுடைய தாத்பர்யார்த்தநிர்ணயம்பண்ணுவேன்நானே யென்னாநின்றாளென்னுதல், அத்யாபகரும் அத்யேதாக்களும் இரண்டும்நானேயென்னு மென்னுதல். பரக்கக்கற்றுவைத்தே ஶ்ருதிநிஷ்டா: என்கிறுருமுண்டிறே. தீர்க்கையாவது - அவற்றின்முடிவுகாண்கை. [சாரம்] - வித்யாஸாரமான ஃபலம். [கற்குங்கல்விநாதன்]- ஸகலவித்யாவேத்யனான ஸர்வேஶ்வரன். [கற்குங்கல்வியீர்க்கிவை] - ஃபகவத்விஷய மென்றால் இன்றுகற்கவேண்டியிருக்கிற உங்களுக்கு இவற்றைச்சொல்ல விரகுண்டோ?

அறியத்தொடங்கும் பருவத்தையுடைய இவள் புக்கு அவகாஹிக்கிற நிலங்களை என்னால் பேசலாயோவிருக்கிறது.

௬டு.—இரண்டாம்பாட்டு. ஸகலவித்யாவேதநமும் அவ்வித்யாப்ரவர்த்தகத் வாதிகளும் நானிட்டவழக்கென்கிறாள்.

[கற்கும் இத்யாதி] - அல்பகாலத்துக்குள்ளே ஸாங்கீபநியோடே நான்கற்ற பரப்புக்கு ஓர் எல்லையில்லை என்னாநின்றாள். அன்றிக்கே, "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிற ஶ்ருதிக்கு நிலமன்றிக்கே யிருக்கிறேன் நான் என்னாநின்றாள். கற்கும்கல்வியினுடைய எல்லைக்குள்ளே நிற்கிறேனல்லேன். அன்றிக்கே, $"வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்தவிளக்கை" என்கிறபடியே, வேதாந்தவேத்யன் நான் என்னாநின்றாள் என்னுதல். [ஆவேனும்]-அவற்றுக்கு அவிஷயமானவளவேயோ, அவைதான் என் அதீநமன்றோ. "த்வமேவவித்யா" (த்வமேவவித்யா) என்கிறபடியே.[செய்வேனும்]-அவ்வித்யைகள்தம்மை அவ்வவகாலங்களிலே உண்டாக்குவேனும் நான் என்னாநின்றாள். [கற்குங்கல்விதீர்ப்பேனும்] - அவற்றின் ஸம்ஶயங்களைத் தீர்த்துத் தாத்பர்யநிர்ணயம் பண்ணுவேனும் நான் என்னாநின்றாள். பரக்கக் கற்றுவைத்தே "ஶூந்யமே தத்வம்" என்கிறார் உண்டிறே. அன்றிக்கே, அத்யேதாக்களும் அத்யாபகரும் நானிட்டவழக்கு என்னாநின்றாள் என்றுமாம். தீர்ப்பேனென்னுங்காட்டில் - இவ்வர்த்தத்தைக் காட்டுமோ? என்னில்,—தீர்க்

---

ப்ர:—(கற்குங்கல்விக்கெல்லையிலனே)—தைத்திரீயம் [ஆ] "யதோவாசோ நிவர்த்தந்தே । அப்ராப்ய மநஸா ஸஹ".

---

இரண்டாம்பாட்டு,—கற்கும் இத்யாதி. "கற்குங்கல்வி" என்றதின் த்ருதீயார்த்தத்தைப் பற்ற - ஸகலவித்யாவேதநமும் என்றது.

விவரணம் - கற்குங்கல்வியினுடைய இத்யாதி. த்ருதீயார்த்தத்துக்கு, எல்லையென்று - வேதாந்தமாய், இல்லென்று - இருப்பிடமாய், வேதாந்தத்தை இருப்பிடமாகவுடையவனென்று பலிதார்த்தமாய், வேதாந்தவேத்யனென்று பலிக்கிறது. த்விதீயத்ருதீயார்த்தங்களுக்கு, கற்குமென்றது - எல்லாராலுமென்றபடி. த்விதீயார்த்தத்தை யுபஜீவித்து மேல்பதத்துக்கு அவதாரிகை - அவற்றுக்கு இத்யாதி. "கற்குங்கல்வியாகிறவன் இவனே" என்னுமதுக்கு ப்ரமாணம் - த்வமேவ இத்யாதி. "த்வமேவமாதாச பிதாத்வமேவ த்வமேவபந்துஶ்ச ஸகாத்வமேவ । த்வமேவவித்யா த்ரவிணம்த்வமேவ த்வமேவஸர்வம் மமதேவதேவ". அவ்வவகாலங்களிலே-ஸ்ருஷ்டிகாலங்கள்தோறும். ஸம்ஶயமுண்டாயே தீர்க்கவேணுமே, ஸம்ஶயப்ரஸக்தியேதென்ன - பரக்கக்கற்று இத்யாதி. ஶூந்யமே தத்த்வமென்றது - ப்ரபஞ்சமித்யாத்வம் சொல்லுகிற மாயாவாதிகளுக்கு முபலக்ஷணம். இப்படி கொள்ளவேண்டுகிறது - "வேதத்தில் ஸம்ஶயங்கள்தீர்ப்பேன்" என்கிற பதஸ்வாரஸ்யத்துக்காக. "கற்குங்கல்விதீர்ப்பேன்" என்றதுக்கு ஹ்ருதயாந்தரம் - அத்யேதாக்களும் இத்யாதி. இவ்வர்த்தத்தை - "அத்யேதாக்களும் அத்யாபகரும் நானிட்டவழக்கு" என்கிறவர்த்தத்தை. "தீர்ப்பேனும்" என்றதுக்கு - ஶிஷ்யாசார்யராய் நிர்வஹிக்கிறவனும் நானே யென்று இரண்டாமர்த்தம். ஸாரம்ஶமான ப்ரயோஜநம் - மோக்ஷம். ஓவ்வோக்குழி - பாலரெழுத்திடுகிறவரிக்குழி. அவகாஹிக்கிற என்றது - "காண்கின்ற" என்றதுக்கர்த்தம். "கற்கும்" என்றால் - பூதவர்த்தமாநார்த்தவாசகமாகையாலே, "கற்குங்கல்வீர்க்கு, கற்குங்கல்வியென்மகள்" என்கிறவிடத்தில் வர்த்தமாநார்த்தவாசகமாயிருக்கிறது. வேதாந்த விழுப்பொருளின்மேலிருந்தவிளக்கை - வேதாந்தப்ரதிபாத்யங்களான சீரியவர்த்தங்களுக்கெல்லாம் மேலாயிருந்துள்ள ஸ்வயம்ப்ரகாஶவஸ்துவானவனை. $ பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து, மூன்றாந்திருமொழி, பதினோராம்பாட்டு, "மாலிருஞ்சோலையென்னும்" இத்யாதி. கற்குங்கல்விக்கு

கையாகிறது - அவற்றினுடைய எல்லை காண்கையிறே. [சாரமும்] - அவ்வித்யைகளுடைய ஸாரம்ஸமான ப்ரயோஜநமும் நான் என்னுநின்றாள். [நாதன்வந்தேறக்கோலோ] - ஸகல வித்யாவேத்யனான ஸர்வேஶ்வரன் வந்து ஆவேஶித்தானோ? [கற்கும் இத்யாதி]-இப்போது கற்று அறியவேண்டும்படி, ஶகவத்விஷயத்தில் ஒவ்வோக்குழியிடாதேயிருக்கிற உங்களுக்கு நான் எத்தைச்சொல்லுவது. [கற்கும் இத்யாதி] - சொன்னவார்த்தையைச் சொல்லுமித்தனைபோக்கி, தானாக ஒருவார்த்தை சொல்லமாட்டாத அளவாயிருக்கிற இவள் இவ் விஷயத்திலே அவகாஹிக்கிற எல்லையை, நான் எத்தைச்சொல்லுவது. (உ)

## மூன்றாம் பாட்டு.

காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னும் காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னும், காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னும் காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னும், காண்கின்றகடலெல்லாம் யானேயென்னும் காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ? காண்கின்ற வுலகத்தீர்க்கேன்சொல்லுகேன்? காண்கின்றவென்காரிகை செய்கின்றவே.

*ஆ.—(காண்கின்ற.) அபரிச்சேத்யமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகமும் நானிட்டவழக்கு என்னாநின்றாள். கடல்போலே எப்போதும் தர்ஶநீயமான திருநிறத்தையுடையவன் வந்தேறினானோ? நமக்குத்தெரியாத நிலத்திலேபுக்கு அவகாஹித்து என்மகள் பண்ணுகிற சேஷ்டிதங்கள் நீங்கள் காண்கிறபடிக்கு மேற்பட என்னால் சொல்லலாவதில்லையென்கிறாள்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், 'அபரிச்சேத்யமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகமும் நான் இட்டவழக்கு என்னாநின்றாள்' என்கிறாள்.*

*[காண்கின்ற கடல்வண்ணன்] - கடல்போலே எப்போதும் தர்ஶநீயமான திருநிறத்தையுடையவன். [காண்கின்ற என்றுதொடங்கி] - நீங்கள் காண்கிறபடிக்கு*

---

*என்றுதொடங்கி, கற்குங்கல்வியீர்க்கு - கற்குங்கல்வியென்மகள் காண்கின்ற - இவையென்சொல்லுகேன் இத்யந்வயः. கற்குங்கல்விக்கெல்லையில னென்றதுக்கு - நான்கற்றவேதரூபவித்யைகளுக்கு முடிவில்லாதவனென்னுதல்;எல்லாராலும் கற்கப்படுகிற வேதத்தினுடைய எல்லைக்குள்ளே நிற்கிறேனல்லேனென்னுதல்; எல்லாராலும் கற்கப்படுகிற வேதத்தினுடைய எல்லையை - வேதாந்தத்தை, இல்லாக - இருப்பிடமாக, உடையவனென்னுதல் என்று அர்த்தத்ரயம். த்விதீயத்ருதீயார்த்தங்களுக்கு, கல்விக்கென்றது - கல்வியினுடைய என்றபடி. கல்வி - வித்யை. மேல், "கற்கும்" என்றவற்றுக்கெல்லாம் - எல்லாராலும் கற்கப்படும் என்றே அர்த்தங்கண்டுகொள்வது. செய்வேனும் - உண்டாக்குவேனும். சாரம் - ஸாரம்; ஶலமித்யர்த்தः. கல்விநாதன் - வேதப்ரதிபாத்யனான ஸர்வேஶ்வரன். ஏறக்கொலோ- ஏறினானோ? ஆவேசித்தானோ? இத்யர்த்தः. கற்குங்கல்வியீர்க்கு - இன்றுஎன்பக்கலிலே கற்றறியவேண்டும்படியான உங்களுக்கு. கற்கும்கல்வியென்மகள் - கல்வி - கற்கும் - என்மகள். இன்று வார்த்தை கற்கும் பருவமான என்பெண்பிள்ளை. கல்வி - வார்த்தை, ஜ்ஞாநமும். காண்கின்ற - கண்டுசொல்லுகிறவற்றை; அவகாஹித்துச்சொல்லுகிறவற்றை. என்சொல்லுகேன் - என்னென்றுசொல்லுவேன் இத்யர்த்தः.* (உ)

மேற்பட என்னுல்சொல்லலாவதில்லை. நமக்குத்தெரியாத நிலத்திலேபுக்கு அவகாஹித்த என்மகள் பண்ணுகிற சேஷ்டிதங்கள். "இப்பாட்டில், 'காண்கின்ற' என்கிறனவெல்லாம்ப்ரமாணத்தாலே காணும் காட்சி" என்றும் சொல்லுவர்.

ப.—அநந்தரம், ப்ரமாணஸித்தமான ஜகத்துக்கு ப்ரயோகாரணமான மஹாபூதங்கள் நானிட்டவழக்கென்னுமென்கிருள்.

காண்கின்ற - (ப்ரமாணத்தாலே) காணப்படுவதான, நிலமெல்லாம் - (சரமபூதமான) ப்ருதிவியெல்லாம், யானே - நானே, என்னும் - என்னுநிற்கும்; காண்கின்ற - அப்படிப்பட்ட, விசும்பு - (ப்ரதமபூதமான) ஆகாஶமும், எல்லாம்,—யானே - நானே, என்னும் - என்னுநிற்கும்; காண்கின்ற - தேஜோபதங்களில் ப்ரயாநமாய், வெம் - உஷ்ணஸ்பர்ஶமான, தீ - அக்நியும், எல்லாம்,—யானே - நானே, என்னும் - என்னுநிற்கும்; காண்கின்ற-தத்பூர்வஸாவியாய், இ-ப்ராரகத்வாதிகளாலே ஸங்கிஹிதமான, காற்றெல்லாம் - வாயுக்களும், யானே - நானே, என்னும் - என்னுநிற்கும்; காண்கின்ற - ததநந்தரஸாவியான, கடல் - ஜலதத்வம், எல்லாம் - எல்லாம், யானே - நானே, என்னும் - என்னுநிற்கும்; காண்கின்ற - தர்ஶநீயமாய், கடல் - (அபரிச்சிந்நமான) கடல்போன்ற, வண்ணன் - வடிவையுடைய ஸர்வேஶ்வரன், ஏறக்கொலோ - ஆவேஶித்தானே? காண்கின்ற - காண்கிற, உலகத்தீர்க்கு - லோகமொழிய அறியாத உங்களுக்கு, காண்கின்ற - ஒருவரும்காணவொண்ணுதவற்றையும் காணும்படியாய் அஹரூபையான, என் - என், காரிகை - மகள், செய்கின்ற - செய்கிறவற்றை, என் - என்னென்பதாக, சொல்லுகேன் - சொல்லுவேன்.

இ.—மூன்றும்பாட்டில், அபரிச்சேத்யமான ப்ருதிவ்யாதி பஞ்சபூதங்களும் நானிட்டவழக்கென்கிருள்.

[காண்கின்ற] - காணப்புக்கால் கண்டுமுடியவொண்ணுத பரப்பை யுடைத்தாயிருக்கை. காண்கையாவது - ஶாஸ்த்ரத்தாலே காண்கையென்றுமாம். [காண்கின்ற கடல்வண்ணன்] - கடல்போலேதர்ஶநீயமாய் கண்டுமுடியவொண்ணுத ஹோக்யதையையுடைத்தான திருநிறத்தையுடையவன். [காண்கின்றவுலகத்தீர்க்கு] - நீங்கள்காண்கின்றபடிக்கு மேற்பட உட்புக்கேனுகிலும் என்னுல்பாசுரமிட்டுச் சொல்லலாவதில்லை. கரையிலேநின்றுரோடு உட்புக்காரோடு வாஶியில்லை. நமக்குத்தெரியாத நிலத்திலேபுக்கு அவகாஹித்த என்மகள்பண்ணுகிற சேஷ்டிதங்கள்.

ஈடு.—மூன்றும்பாட்டு. காரணமான ப்ருதிவ்யாதி பூதபஞ்சகங்களும் நானிட்ட வழக்கென்னுநின்று ளென்கிருள்.

[காண்கின்ற இத்யாதி] - காணப்புக்கால் கண்டதாய்த் தலைக்கட்டமுடியாத படியான பரப்பையுடைத்தான பூமியெல்லாம் நானிட்டவழக்கு என்னுநின்று ளென்கிருள். இப்படி இருக்கிறதுதான் கார்யரூபையான ப்ருதிவியிறே, கண்ணுக்குத் தோற்றுகிற இது

---

மூன்றும்பாட்டு.— காண்கின்ற இத்யாதி. கார்யவாசிஶப்தத்தாலே காரணத்தைலக்ஷிக்கிறதென்று விவக்ஷித்து அருளிச்செய்கிருர் - காரணமான இத்யாதி.

வர்த்தமாநநிர்த்தேஶார்த்தம் - காணப்புக்கால் இத்யாதி. காண்கின்ற - காணப்படாநிற்கிற. "காண்கின்ற" என்று - ப்ரத்யக்ஷமாகச்சொல்லுகையாலே, கார்யப்ருதிவியென்று ஸித்தம். அப்படிகண்டு தலைக்கட்டமுடியாதபடியாயிருக்குமோ? என்ன - இப்படியிருக்கிறது இத்யாதி. அன்

இவ்வளவானல், இதுக்குங்கூடக் காரணமாய்த்தான் ஶாஸ்த்ரங்கொண்டு அறியவேண்டும் படியிருக்குமது இவ்வளவல்லவிறே. [காண்கின்ற இத்யாதி]-காணப்புக்கால் கண்டதாய் முடியவொண்ணுதபடியாய், இதுதனக்குங்கூட அவகாஶப்ரதாநம்பண்ணும் ஆகாசமும் நானிட்டவழக்கு என்ணுநின்ருள். [காண்கின்ற இத்யாதி]-அப்படிப்பட்ட தேஜஸ்தத்வமும் நானிட்டவழக்கு என்ணுநின்ருள். ஸ்பர்ஶங்கொண்டு அறியும்படியிருக்கிறகாற்றும் நானிட்ட வழக்கு என்ணுநின்ருள். [காண்கின்ற] - காண்பார்க்குக் கண்டதாய்த் தலைக்கட்டமுடியாத படியான பரப்பையுடைய கடலெல்லாம் நானிட்டவழக்கு என்ணுநின்ருள். காணப்புக்கால் கண்டதாய் மீளவொண்ணுதபடியான கடல்போலே ஶ்ரமஹரமானவடிவையுடைய ஸர்வேஶ்வரன் வந்து ஆவேசித்தானே? [காண்கின்ற இத்யாதி] - நீங்களும் என்னேடொக்கக் காணுநின்றிகோளாகில், உங்களுக்கு நான் என்ன பாசுரமிட்டுச் சொல்லுவது; உங்களோடு என்னேடு வாசியுண்டோ சொல்லவொண்ணுமைக்கு. [காண்கின்ற இத்யாதி] - "யதோவா சோநிவதந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிற அபரிச்சேத்யமான விஷயத்தை யுட்புக்குப் பேசுகிற என்பெண்பிள்ளைசெய்கிற இத்தை நான் சொல்லுவதேன்? (௩)

---

## நான்காம் பாட்டு.

---

செய்கின்றகிதியெல்லாம்யானேயென்னும் செய்வானின்றனகளும்யானேயென்னும், செய்துமுன்னிறந்தவும்யானேயென்னும் செய்கைப்பயனுண்பேனும்யானேயென்னும், செய்வார்களைச்செய்வேனும்யானேயென்னும் செய்யகமலக்கண்ணனேறக்கொலோ? செய்யவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்? செய்யகனிவாயிளமான்திறத்தே.

*ஆ.—(செய்கின்ற.) வர்த்தமான க்ரியைகளும், மேல்வருவதான க்ரியைகளும், பண்டுசெய்த க்ரியைகளும், க்ரியாபலம் புஜிப்பேனும், க்ரியாகர்த்தாக்களை அவற்றில் ப்ரவர்த்திப்பிப்பேனும் நானென்னும். இவள்கண்ணினழகாலும் அவன் ஆவேஶித்தாற்போலே இராநின்றது. சிவந்த கனிபோலேயிருக்கிற வாயையுடையவளாயிருக்கிற சிறுபெண்பிள்ளை யிடையாட்டத்தில் ஆழங்காணமாட்டாதே படுபாடான உங்களுக்கு எத்தைச் சொல்லுவேனென்கிருள்.*

*ஒ.—நாலாம்பாட்டில், 'க்ரியாதிகளெல்லாம் நான் இட்டவழக்கு என்ணுநின்ருள்' என்கிருள்.*

---

*றிக்கே, "காண்கின்ற" என்றதுக்கு அர்த்தத்வயம்,— கண்ணுக்கு விஷயமான கார்யபூமியென்னுதல், ஶாஸ்த்ராதிகளால் காணப்படுகிற காரணபூமியென்னுதலென்று. அதில் கார்யபூமியை யருளிச்செய்தார் -* **காணப்புக்கால்** *இத்யாதியாலே. காரணமானபூமியை யருளிச்செய்கிருர் -* **இப்படியிருக்கிறது** *இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஏதத்த்விதியயோஜநாபிப்ராயேண - அவதாரிகையென்று கண்டுகொள்வது என்றுமாம். "இக்காற்று" என்றது - ப்ராகத்வேந ஸந்நிஹிதமாகையைப்பற்ற. ஆனலும், எங்களைப்பற்ற நீ அந்தரங்கையன்ருே, உன்னலேசொல்லவொண்ணுதோ? என்ன -* **உங்களோடு** *இத்யாதி.* **காண்கின்றவென்காரிகை** *- ஸாக்ஷாத்கரித்த என்பெண்பிள்ளை.* **காரிகை** *- பெண்பிள்ளை.* **க்ரமேணாந்வய:.** (௩)

[செய்கின்றகிதி என்றுதொடங்கி] - வர்த்தமானக்ரியைகளும் மேல்வருவதான க்ரியைகளும் பண்டுசெய்தக்ரியைகளும். [செய்கை என்றுதொடங்கி] - க்ரியாஃபலம் ஹுஜிப்பேனும் க்ரியாகர்த்தாக்களை அவற்றில் ப்ரவர்த்திப்பிப்பேனும். [செய்யகமலக் கண்ணன் ஏறக்கொலோ] - இவள்கண்ணினழகாலும் அவன் ஆவேஶித்தாற்போலே யிராநின்றது. [செய்ய உலகத்தீர்க்கு என்றுமேலுக்கு] - ஆழங்காணமாட்டாதே படு பாடரான உங்களுக்கு எத்தைச்சொல்லுவேன்? சிவந்த கனிபோலேயிருக்கிற வாயை யுடையளாயிருக்கிற சிறுபெண்பிள்ளை யிடையாட்டத்தில். [செய்யகனிவாய்] - அநு காரரஸத்தால்பிறந்த பௌஷ்கல்யத்தைச் சொல்லுகிறது.

ப.—அநந்தரம், ஸர்வக்ரியைகளும் நானிட்டவழக்கென்னு மென்கிறாள்.

செய்கின்ற - செய்யப்படாநிற்கிற, கிதி-(வர்த்தமான) க்ரியையும், எல்லாம்,— யானேயென்னும்,— செய்வான் - மேற்செய்வதாக, நின்றனகளும் - நிற்கிற (ஃவிஷ்யத்) க்ரியையும், யானேயென்னும்,—முன்-முன்பு, செய்து-செய்து, இறந்தவும்-கழிந்த (ஃூத) க்ரியையும், யானே - நானிட்டவழக்கு, என்னும் - என்னும்; செய்கை - இந்த க்ரியையி னுடைய, பயன் - ஃலத்துக்கு, உண்பேனும் - ஃோக்தாவும், யானே - நானே, என்னும்- என்னும்; செய்வார்களை - இக்க்ரியைக்கு அநுஷ்டாதாக்களை, செய்வேனும் - உண் டாக்குவேனும், யானே - நானே, என்னும் - என்னும்; (இது), செய்ய - சிவந்த, கம லம்-தாமரைபோலேயிருக்கிற, கண்ணன்-கண்ணையுடைய ஸர்வேஶ்வரன்,ஏறக்கொலோ- ஆவேஶித்தபடியோ? செய்ய - செவ்வையொழிய அறியாத, உலகத்தீர்க்கு - லோகத் தீர்க்கு, செய்ய - சிவந்த, கனி-கனிபோலேயிருக்கிற, வாய் - அஃரத்தையுடையளாய், இளம்-முக்தமான, மான்-மான்போலே பேதையான இவள், திறத்து - இடையாட்டத்து, இவை - இவை, என் - என்னாக, சொல்லுகேன் - சொல்லுவேன்.

ஈ.—நாலாம்பாட்டில், க்ரியாதிகளெல்லாம் நானிட்டவழக்கென்னாநின்றா ளென்கிறாள்.

[செய்கின்றகிதி] - வர்த்தமான காலத்திலுள்ள க்ரியாஜாதங்கள். [செய்வா நின்றனகள்] - ஃவிஷ்யத்காலத்திலுள்ள க்ரியாஜாதங்களும். [செய்து முன்னிறந்த வும்] - ஃூதகாலத்திற் செய்தற்றவையும். [செய்கைப்பயனுண்பேனும்] - ஸகலகர்மங் களினுடைய ஃலஃோக்தாவும். ''அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் ஃோக்தா'' என்னாநின்றாள். [செய்வார்களைச்செய்வேனும்] - அநுஷ்டாதாக்களை யநுஷ்டிக்கப்பண்ணுவேனும். என்னை ஆஶ்ரயிக்கப்பண்ணுவேனென்னுதல். [செய்யகமலக்கண்ணன்] - இவள்கண்ணி லழகாலும் அவன் ஆவேஶித்தாற்போலே யிராநின்றது. அஸிதேக்ஷணையாகைதவிர்ந்து புண்டரீகாக்ஷன்வடிவை யுடையளாகாநின்றாள். புண்டரீகாக்ஷனுக்கிறே இப்ரவ்ருத்திக ளுள்ளது. [செய்யஉலகத்தீர்க்கு] - ஆழங்காணமாட்டாதே படுபாடரான உங்களுக்கு. செய்ய - செவ்வையுடைய. [செய்யகனிவாயிளமான்திறத்தே] - சிவந்த கனிபோலே யிருக்கிற வாயையுடையளான ஃாலையிடையாட்டத்தில். விவர்ணையாயிருந்துள்ள இவள் அநுகாரத்தாலே, இவளுடைய அஃரம் தன்னிறம்பெற்றிருக்கிறபடியை, அவிக்ருதையா யிருக்கிற நான் எத்தைச்சொல்லுவேன்.

ஈடு.—நாலாம்பாட்டு. காலத்ரயத்திலுமுண்டான க்ரியாஜாதமெல்லாம் நா னிட்டவழக்கென்னுநின்ருளென்கிருள்.

[செய்கின்ற இத்யாதி] - அதில் வர்த்தமாநமான க்ரியாஜாதம், செய்யக்கடவதாய் நிற்கிற க்ரியாஜாதம், முன்புசெய்தற்ற க்ரியாஜாதம், இவையடைய நானிட்டவழக்கு என்னு நின்ருள். [செய்கைப்பயனுண்பேனும்] - "(கிரந்தம்)" (அஹம்ஹிஸர்வயஜ்ஞாநாம்போக்தாச) என்னுநின்ருள். க்ரியாஃலலபோக்தாக்களும் நானி ட்டவழக்கு என்னுநின்ருள். அன்றிக்கே, செய்கையாகிற க்ரியையும், ஃலபோக்தாவும் நா னிட்டவழக்கு என்னுநின்ருள். [செய்வார்களை இத்யாதி] - க்ரியாகர்த்தாக்களை இடுவித்து அவற்றை அநுஷ்டிப்பிப்பேனும் நானென்னுநின்ருள். அன்றிக்கே, அவர்கள் இவற்றைக் கொண்டு என்னையாஶ்ரயிக்கும்படி பண்ணுவேனும் நானென்னுநின்ருள். [செய்ய] - அஸிதேக்ஷணையான ஆகாரம்போய், புண்டரீகாக்ஷன்படியாய்விட்டது. * மையகண்ணு ளான ஆகாரம்போய், * செய்யகோலத்தடங்கண்ணன்படியாய்விட்டது. [செய்யவுலகத் தீர்க்கு]-''சொல்லலாம், ஆகாது'' என்று அறியாதே, '' சொல்லு, சொல்லு '' என்று அலைக் கிற படுபாடரான உங்களுக்கு நான் எத்தைச்சொல்லுவது. [செய்யகனிவாய்] - அநுகார † (ரஸ) த்தாலே ஸம்ஶ்லேஷஸமயத்திற்போலேயிருக்கிற இவள், அதரம் சேவ்விபெற்றுவரும் படி விக்ருதையாய், அதிமுக்தையாயிருக்கிறபடி நான் எத்தைச்சொல்லுவது. பிரிவில் விவர் ணமாகை ப்ராப்தமாயிருக்க, இவளதரம் சேவ்விபெற்றுவருகிறதிறே அநுகாரத்தால்வந்த தரிப்பாலே. சிவந்தகனிபோலேயிருக்கிற அதரத்தையுடையளாய், முக்தமான மான்போலே பேதையான இவளிடையாட்டத்தே. (ச)

---

நாலாம்பாட்டு.—செய்கின்ற இத்யாதி. ''கிதி'' என்று - க்ருதியாய், க்ரியையைச்சொல்லு கிறது.

''செய்கின்ற, செய்வானின்றனகளும், செய்துமுன்னிறந்தவும்'' என்கிற மூன்றுக்கும் - வர்த்தமானஃவிஷ்யத்ஃூத க்ரியாஜாதபரதயா வ்யாக்யாநம் - அதில் இத்யாதி. அர்த்தாந்தரம் - க்ரியா ஃல இத்யாதி. முந்தினவர்த்தத்துக்கு, ''செய்கைப்பயன்'' என்றது - யாகத்தில் ப்ரயோஜநரூபமான ஹவிஸ்ஸென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, ஃலபோக்தாக்களென்று - ஸ்வர்க்காதி ஃலபோக்தாக்க ளென்றபடி. முந்தினவர்த்தத்வயத்திலும் - செய்கையினுடைய ஃலமென்றபடி. த்ருதீயார்த்தத் துக்கு - செய்கையும் பயனுண்பேனுமென்றபடி. செய்கை - யாகாதிக்ரியைகள். த்ருதீயார்த்தத்தில், க்ரியையுமென்றது - க்ரியாமாத்ரமாதல், ''கருமமும்'' என்றவிடத்திற்போலே க்ரியாநுஷ்டாதாக்க ளாதல். ''செய்வார்களைச்செய்வேன்'' என்றதுக்கு அர்த்தத்வயம்;—செய்வார்களை - காம்யமான ஸ்வர்க் காதி ஃலஸாதநகர்த்தாக்களை, செய்வேனும் - தேவதாந்தரங்களை யாஶ்ரயிப்பிப்பேனும் நானென்னுதல் என்று அர்த்தம். இத்தையருளிச்செய்கிருர் - க்ரியாகர்த்தாக்களை இத்யாதி. அன்றிக்கே, செய்வார் களை - மோக்ஷஸாதநமான யஜ்ஞாதிகர்மங்களைச் செய்கிறவர்களை, செய்வேனும் - என்னை யாஶ்ரயிப் பிப்பேனுமென்னுதல். இத்தை யருளிச்செய்கிருர் - அன்றிக்கேயவர்கள் இத்யாதி. அஸிதேக்ஷணை - இத்யாதி வாக்யத்துக்கு - புண்டரீகாக்ஷனுக்கேயிறே இப்ப்ரதிபத்தியுள்ளதென்று கருத்து. விவரணம் - மையகண்ணளான இத்யாதி. ''செய்யவுலகத்தீர்க்கு'' என்றவிடத்தில், செய்யவென்று - செவ்வையாய், படுபாடரான என்றபடி. படுபாடர் - க்ருஹீதக்ராஹிகள். இத்தையருளிச்செய்கிருர் - சொல்லலாம் இத்யாதி. அநுகாரத்தாலே - ஶப்தாநுகாரத்தாலே. அநுகாரத்தாலேயாகவேணுமோ, வாஸ்தவமாகச் சிவந்திருக்கவொண்ணுதோ? என்ன - பிரிவில் இத்யாதி. "(கிரந்தம்) ॥உச॥" இதி கீதா பாஷ்யம். செய்கின்ற என்றுதொடங்கி, உலகத்தீர்க்கு - செய்யகனிவாயிளமான்திறத்து - இவை யென்சொல்லுகேன் இத்யந்வயம். (ச)

---

† குண்டலிதம் க்வாசித்கம்.

## ஐந்தாம் பாட்டு.

திறம்பாமல்மண்காக்கின்றேன்யானேயென்னும் திறம்பாமல் மலையெடுத்தேனேயென்னும், திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னும் திறங்காட்டிஅன்றுஐவரைக்காத்தேனேயென்னும், திறம்பாமல்கடல் கடைந்தேனேயென்னும் திறம்பாதகடல்வண்ணனேறக்கோலோ? திறம் பாதவுலகத்தீர்க்கேன்சொல்லுகேன்? திறம்பாதேன்திருமகளேய்தினவே.

ஆ.—(திறம்பாமல்.) ஒருவர்க்கும் தப்பச்செய்யவொண்ணாதபடி இத்தரவை யெல்லாம் ஒருதுணையின்றிக்கே காக்கின்றேன். சலியாதபடி கோவர்த்தநோத்தரணம் பண்ணினேன். தப்பாதபடி கோலி அஸுரரை முடித்தேன். ஒருவர்க்கும் அறிய வொண்ணாத என்படியை லோகத்திலே ஆவிஷ்கரித்து தர்மபுத்ராதிகள் ஐவரையுங் காத் தேன். நினைத்தபடி தப்பாமல் கடலைக்கடைந்தேனென்னும். ஒருவர்க்கும் தன் ஶாஸ நத்தைத் தப்பவொண்ணாதபடியான ஸர்வேஶ்வரன் ஆவேஶித்தானோ? லக்ஷ்மீஸமை யான என்மகள் ஸகவத்குணங்களிலே தப்பாமே அகப்பட்டபடிகளை, "கேட்டல்லது போகோம்" என்று நிர்ப்பந்திக்கிற உங்களுக்கு என்னென்று சொல்லுகே னென்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், 'ஜகத்ரக்ஷணப்ரமுகமான சேஷ்டைகளெல்லாம் பண்ணுவேன் நான் என்னாநின்றாள்' என்கிறாள்.

[திறம்பாமல் மண்காக்கின்றேன்] - ஒருவர்க்கும் தப்பச்செய்யவொண்ணாதபடி இப்பூமியையெல்லாம் ஒருதுணையின்றிக்கே காக்கின்றேன். [திறம்பாமல் மலையெடுத் தேன்] - சலியாதபடி கோவர்த்தநோத்தரணம் பண்ணினேன். [திறம்பாமல் அசுரரைக் கொன்றேன்] - தப்பாதபடிகோலி அஸுரரை முடித்தேன். [திறம்காட்டி அன்று ஐவ ரைக்காத்தேன்] - இப்படி கோவர்த்தநோத்தரணம்பண்ணி ஒருவர்க்கும் அறியவொண் ணாத என்படியை லோகத்திலே ஆவிஷ்கரித்து தர்மபுத்ராதிகள் ஐவரையும் காத்தேன். [திறம்பாமல் கடல்கடைந்தேன்] - நினைத்தபடி தப்பாமல் கடலைக்கடைந்தேன். [திறம் பாதகடல்வண்ணன்] - ஒருவர்க்கும் தன்ஶாஸநத்தைத் தப்பவொண்ணாதபடியான ஸர் வேஶ்வரன். [திறம்பாத என்றுமேலுக்கு] - 'கேட்டல்லது போகோம்' என்று நிர்ப்பந் திக்கிற உங்களுக்கு எத்தைச்சொல்லுவேன்? லக்ஷ்மீஸமையான என்மகள் ஸகவத் குணங்களிலே தப்பாமே அகப்பட்டபடிகள்.

ப.—அநந்தரம், ஜகத்ரக்ஷணாதி வ்யாபாரமெல்லாம் செய்கிறேன் நானே யென்னு மென்கிறாள்.

திறம்பாமல் - ஆஜ்ஞையை அதிலங்கியாதபடி, மண் - ஜகத்தை, காக்கின்றேன் - ரக்ஷிக்கிறேன், யானே - நானே, என்னும் - என்னும்; (கோரக்ஷணார்த்தமாக), திறம்பாமல் - சலியாதபடி, மலை - மலையை, எடுத்தேனே - எடுத்தேனே, என்னும் - என்னும்; திறம் பாமல் - தப்பாதபடி, அசுரரை - (அரிஷ்டதேநுகப்ரப்ருதிகளான) அஸுரர்களை, கொன்றேனே - கொன்றேனே, என்னும் - என்னும்; திறம் - (விஜயஹேதுவான உபாய) ப்ரகாரங்களை, காட்டி - காட்டிக்கொடுத்து, அன்று - (துர்யோதநாதிகள் எதிரிட்ட) அன்று, ஐவரை - பாண்டவர்கள் ஐவரையும், காத்தேனே - ரக்ஷித்தேனே, என்னும் -

என்னும்; திறம்பாமல் - நினைவு தப்பாதபடி, கடல் - கடலை, கடைந்தேனே - கடைந்தேனே, என்னும் - என்னும்; திறம்பாத - (ஆஸ்ரிதரக்ஷணத்தில்) திறம்புதலில்லாத, கடல்வண்ணன் - கடல்வண்ணனானவன், ஏறக்கொலோ - இவளை ஆவேசித்தபடியோ, (இது). திறம்பாத - "அறியவேணும்" என்கிற நினைவு தப்பாதிருக்கிற, உலகத்தீர்க்கு - லோகத்தீர்க்கு, என் - என்னுடைய, திரு - லக்ஷ்மீஸமாநரூபான, மகள் - பெண்பிள்ளை, திறம்பாது - தப்பாதபடி, எய்தின - ப்ராபித்த ஸ்வபாவங்களை, என் - ஏதாக, சொல்லுகேன் - சொல்லுவேன். திறம்பாதகடலென்று - கரைகடவாத கடலென்றுமாம்.

இ.—அஞ்சாம்பாட்டில், ஜகத்ரக்ஷணாதி சேஷ்டிதங்களெல்லாம் பண்ணுவேன் நானே யென்னுநின்றாளென்கிறாள்.

[திறம்பாமல் மண்காக்கின்றேன்] - ஒருவர்கூறை யெழுவருடுக்கிற ஸம்ஸாரத்திலே ஒருவர்க்கும் தப்பச்செய்யவொண்ணாதபடி, பூமியையெல்லாம் ஒரு துணையின்றிக்கே காக்கிறேனென்னும். "பீஷாஸ்மாத்வாத:பவதே" என்கிற ஆஜ்ஞையாலே சிறியத்தைப் பெரியது தின்னாமே நோக்குகிறேன் நானே யென்னும். சலியாதபடி கோவர்த்தநத்தை எடுத்தேனென்னும். இடையர்மேலாதல் பசுக்கள்மேலாதல் ஒருதுளி விழாதபடி யெடுக்கை. [திறம்பாமலசுரரைக்கொன்றேனே யென்னும்] - தப்பாதபடிகோலி அஸுரரைக் கொன்றேனென்னும். மாரீசனை விட்டது ராவணனுக்குப் பார்வையாக. [திறங்காட்டியன்றைவரைக்காத்தேனே] - லோகத்திலே என்படிகளைக்காட்டி, பகலை இரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும் ஆஸ்ரித பக்ஷபாதத்தை வெளியிட்டு, "நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண" என்கிற அர்ஜுநனை "கரிஷ்யே வசநம் தவ" என்னப் பண்ணி. [திறம்பாமல்கடல்கடைந்தேனேயென்னும்] - திறம்பாமற் கடைகை - தப்பாமல் கடைகை. மந்தரம் கீழேவிழுதல், மேலேகொந்தளித்தல்செய்யாதபடி மஹாதத்த்வத்தைக் கலக்கினேன். தன்ஶாஸநத்தை ஒருவராலும் தப்பவொண்ணாதபடியான ஸர்வேஶ்வரன். [திறம்பாதவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்] - "கேட்டல்லது போகோம்" என்றிருக்கிற உங்களுக்கு லக்ஷ்மீஸமையான என்மகள் பகவத்குணங்களிலே தப்பாதே யகப்பட்டபடிகள். ஹிதஞ்சொல்லி மீட்கவொண்ணாதபடியிறே யகப்பட்டது.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஜகத்ரக்ஷணப்ரமுகமான சேஷ்டிதங்களுமெல்லாம் பண்ணினேன் நானென்னுநின்றாளென்கிறாள்.

[திறம்பாமல் இத்யாதி] - ஒருவர்கூறை எழுவர் உடாதபடி, "பீஷாஸ்மாத்வாத:பவதே" (பீஷாஸ்மாத்வாத:பவதே) என்கிறபடியே, பூமியை நோக்குகிறேன் நானென்னும். ஒரு பசுவின்மேலாதல் ஒரு இடையன்மேலாதல் ஒரு துளிபடாதபடி கோவர்த்தநகிரியை தரித்து ரக்ஷித்தேனும் நானென்னுநின்றாள். அஸுரவர்க்கத்தைத்

---

அஞ்சாம்பாட்டு.—திறம்பாமல் இத்யாதி.

"திறம்பாமல் மண்காக்கின்றேன்" என்றவிடத்திலே, திறம்பாமல் என்றதுக்கு - ஒருவர் நிமித்தமான பயத்தாலே சலியாதபடி என்று அர்த்தம்விவக்ஷித்து - ஒருவர்கூறை இத்யாதி. ஒருவர் கூறை யெழுவருடுக்கையாவது - ஒருவன்கையில்புடவையை ஒருவன்பறிக்க, அவன்கையிலத்தை வேறொருவன்பறிக்க, இப்படி எழுபேராகப் பறித்துடுக்கை. இது-எளியாரை வலியார் பாதிக்கைக்கு த்ருஷ்டாந்தம். இப்படி எளியாரை வலியார் பாதியாதபடி ஸ்வஸ்வமர்யாதையிலே நிறுத்தி பூமியை ரக்ஷிக்கிறேனென்றபடி. "திறம்பாமல் மலை, திறம்பாமல் அசுரரை" என்கிற இரண்டிடத்திலும்,

தப்பாதபடி அறுத்துப்போகட்டேனென்னும். [திறங்காட்டி இத்யாதி] - லோகத்திலே என் படிகளைக் காட்டி; பகலை இரவாக்கியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், ஶத்ருக்களுடைய உயிர்நிலையைக் காட்டியும் இப்படி அன்று பாண்டவர்களை பக்ஷபதித்து ரக்ஷித்தேனும் நானேனென்கின்றாள். "நகாங்க்ஷே விஜயம்க்ருஷ்ண" (நகாங்க்ஷேவிஜயம் க்ருஷ்ண) என்ற அர்ஜுநனை, "கரிஷ்யேவசநம்தவ" (கரிஷ்யேவசநம்தவ) என்னப் பண்ணினானிறே. [திறம்பாமற்கடல்] - ஒருதாழிக்கு உட்பட்ட தயிரை ஒன்றும் பிறிகதிர்ப் படாதபடி கடைவாரைப்போலே, ஸமுத்ரமென்கிற மஹாதத்த்வத்தின் நடுவே மந்தரத்தை நட்டுக் கடைகிறவிடத்துக் கீழேவிழுதல் மேலேகோந்தளித்தல் செய்யாதபடி கடலைக் கடைந்தேனும் நானேனென்னும். [திறம்பாத] - தன் ஶாஸநத்தை ஒருவரால் தப்பவொண்ணாதபடியிருக்கிற அபரிச்சேத்ய ஸ்வபாவனை ஸர்வேஶ்வரன் வந்து ஆவேசித்தானோ? [திறம்பாத] - "கேட்டல்லது கால்வாங்கோம்" என்று இருக்கிற உங்களுக்கு நான் எத்தைச்சொல்லுவது. லக்ஷ்மீஸமையான என்மகள், ஹிதஞ்சொல்லி மீட்கவொண்ணாதபடி ப்ராபித்தவற்றை நான் எத்தைச் சொல்லுவது? ஆழங்காலிலே இழிந்தார்படியைக் கரையிலேநின்றாராலே சொல்லப்போமோ? (௫)

---

## ஆறாம் பாட்டு.

---

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும் இனவேறுகள் செற்றேனும்யானேயென்னும், இனவான்கன்றுமேய்த்தேனும் யானேயென்னும் இனவாநிரைகாத்தேனும்யானேயென்னும், இனவாயர்தலைவனும்யானேயென்னும் இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ? இனவேற்கண்ணல்லீர்க்கிவையென்சொல்லுகேன்? இனவேற்கண்ணியென் மகளுற்றனவே.

---

*திறம்பாமல் என்றதுக்கு - தப்பாமல் என்று அர்த்தம்.* திறங்காட்டி - *பக்ஷபாதப்ரகாரங்களைக்காட்டியென்னுதல்; திறமென்று - ஸமூஹமாய், தத்த்வவிவேகந்தொடங்கி ப்ரபத்திபர்யந்தமான அர்த்தஸமூஹங்களைக்காட்டியென்னுதல். இரண்டர்த்தத்தையும் அடைவே யருளிச்செய்கிறார்* - லோகத்திலே என்படிகளை இத்யாதியாலும், நகாங்க்ஷ இத்யாதியாலும். திறம்பாமல்கடல் - *சலியாதபடி ஸமுத்ரத்தை.* திறம்பாதகடல்வண்ணன் இத்யாதி - *திறம்பாத - அதிக்ரமிக்கப்போகாத.* இது - *கடல்வண்ணனுக்கு விஶேஷணம். திறம்பாதவுலகத்தீர்க்கு - *சலியாதவுலகத்தீர்க்கு.* திறம்பாது- *சலியாமல்.* எய்தின - *ப்ராபித்தன. அவள் ப்ராபித்தத்தை உன்னாலே சொல்லப்போகாதோவென்ன* - ஆழங்காலிலே இத்யாதி. *திறம்பாமல் இத்யாரப்ய, உலகத்தீர்க்கு - என்திருமகள் - திறம்பாது - எய்தின - என்சொல்லுகேன் இத்யந்வய:.* வீஷாஸ்மா ஆதஃபவதெ என்றது - *இவன் நிமித்தமான ஹயத்தாலே காற்றுமுதலானவை ஸ்வஸ்வகார்யஞ் செய்யுமென்றபடி.* "நகாங்க்ஷே விஜயம் க்ருஷ்ண நசராஜ்யம்ஸுகாநிச | கிம்நோராஜ்யேந கோவிந்த கிம்போகைர்ஜீவிதேநவா ||௩௨||" இதி கீதாஸூ்ஸூ்யமே. "நஷ்டோமோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதாந்மயாச்யுத | ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ ||௭௩||" இத்யுஷ்டாதஶே. (௫)

ஆ.—(இனவேய்மலை.) திரள்திரளானமூங்கிலையுடைத்தான ேராவர்த்தந கிரியுாரணம் முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் நானே பண்ணுநின்றேன் என்று நின்றாள். [இனத்தேவர்] - தனித்தனி அநுஹவிக்கமுடியாமையாலே திரண்டிருக்கிற * அயர்வறுமமரர்களதிபதியானவன் ஆவேசித்தானோ? வேல்போலேயிருக்கிற கண்ணை யுடையீராய் அவஹிதராயிருக்கிற உங்களுக்கு, தான்படுகிறபாட்டைப் பிறரைப்படுத்த வல்ல கண்ணழகையுடைய இவளுற்றவிவற்றை என்சொல்லுகேனென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், 'ேராவர்த்தநோத்தரணம் முதலான க்ருஷ்ணசேஷ்டி தங்களெல்லாம் பண்ணினேன் நான் என்று இவள் சொல்லாநின்றாள்' என்கிறாள்.

[இனவேய்மலை]-திரள்திரளான மூங்கிலையுடைத்தான ேராவர்த்தநகிரி. [இனவாயர்தலைவன்] - ஒருதரத்தில் ஆயர்க்கெல்லாம் ப்ரராநன். [இனத்தேவர்] - தனித்தனி ஹகவத்குணங்கள் அநுஹவிக்கமுடியாமையாலும், ஒருவரையொருவர் பிரியமாட்டாமையாலும் திரண்டிருக்கிற அயர்வறுமமரர்கள். [இனவேற்கண் நல்லீர் என்றுதொடங்கி] - வேல்போலேயிருக்கிற கண்ணையுடையீர். கேட்கைக்கு அவஹிதராயிருக்கிறபடி. தான் படுகிறபாட்டைப் பிறரைப்படுத்தவல்ல கண்களையுடைய இவள் உற்ற இவற்றை என் சொல்லுகேன்.

ப.—அநந்தரம், க்ருஷ்ணசேஷ்டிதங்களைச் செய்தேனும் நானேயென்னு மென்கிறாள்.

இனம் - திரளான, வேய் - மூங்கிலையுடைய, மலை - ேராவார்த்தநத்தை, ஏந்தினேன் - எடுத்தேன், யானே - நானே, என்னும் - என்னும்; இனம் - திரளவந்த, ஏறுகள் - ஏழு எருத்தையும், செற்றேனும் - கொன்றேனும், யானே - நானே, என்னும் - என்னும்; இனம் - ஓரினத்தில், ஆன்கன்று - கன்றுகளை, மேய்த்தேனும் - மேய்த்தேனும், யானே - நானே, என்னும் - என்னும்; இனம் - திரள்திரளான, ஆநிரை - பசுக்களை, காத்தேனும் - ரக்ஷித்தேனும், யானே - நானே, என்னும் - என்னும்; இனம் - ஒருதரத்தில், ஆயர் - இடைப்பிள்ளைகளுக்கு, தலைவனும் - நாயகனுயிருப்பேனும், யானே - நானே, என்னும் - என்னும்; இனம் - ஸங்கமான, தேவர் - ஸூரிகளுக்கு, தலைவன் - நிர்வாஹகனான ஸர்வேஶ்வரன், வந்தேறக்கொலோ - ஆவேசித்தபடியோ? இனம் - தன்னில்தான்செறிந்து, வேல்-வேல்போலேயிருக்கிற, கண்-கண்ணழகையுடைய, நல்லீர்க்கு-உங்களுக்கு, வேல் - வேலோடு, இனம் - ஒத்திருக்கிற, கண்ணி - கண்ணையுடைய, என்-என்னுடைய, மகள் - பெண்பிள்ளை, உற்றன - லஹித்த, இவை-இந்த ஸ்வஹாவங்களை, என் - ஏதென்று, சொல்லுகேன் - சொல்லுவேன். இனத்தேவரென்று - ஸாம்யம் பெற்றவரென்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் பண்ணினேன் நானே என்றுநின்றாளென்கிறாள்.

[இனவேய்மலை] - திரள்திரளான மூங்கிலையுடைத்தான ேராவர்நகிரி. மலையைக் கவிழ்த்துப் பிடித்தபோது, அணுக்களைக் கவிழ்த்துப்பிடித்தாற்போலே யிருக்கை. திரளான எருதுகளேழையும் ஊட்டியாக நெரித்தேனும்நானே. "வதஹேமதம்வாஸ" என்று என்னோடொத்தபருவத்திற்கன்றுகள் மேய்த்தேனும் நானே. பருவம்நிரம்பின பசுக்களை மேய்த்தேனும்நானே. ப்ரமத்தில் ப்ராஹ்மசர்யத்தை யநுஷ்ட்டித்துப்

*பின்பு ஶார்ஹஸ்த்யத்திலே இழியுமாப்போலே. என்தரத்திலிடைப்பிள்ளைகளுக்கெல்லாம் தீம்புக்குத்தலைவனும் நானே. [இனத்தேவர்] - பஞ்சவிம்ஶதிவார்ஷிகராயிருக்கையாலே தன்பருவத்தோடொத்த நித்யஸூரிகளென்னுதல், தனியநுபவிக்கமாட்டாமையாலும் ஒருவரையொருவர் பிரியமாட்டாமையாலும் திரண்டிருக்கிற நித்யஸூரிகளென்னுதல். [இனவேற்கண்ணல்லீர்க்கு] - தன்னிலொத்தவேலொழுங்குபோலேயிருக்கிற கண்ணழகையுடைய உங்களுக்கு. கேட்கையிலே அவஹிதராயிருக்கிறபடி. [இனவேற்கண்ணியென்மகள்] - தன்கண்ணுக்கிலக்கானார் படும்பாட்டைத் தான்படுகிறவளுற்றவற்றையென் சொல்லுகேன்.*

ஈடு.—ஆரும்பாட்டு. கோவர்த்தநோத்தரணம் முதலான க்ருஷ்ணசேஷ்டிதங்களெல்லாம் பண்ணினேன் நான் என்னாநின்றாளென்கிறாள்.

[இனவேய்மலை] - அணுக்கனைக் கவிழ்த்துப் பிடித்தாற்போலே, திரள்திரளான மூங்கிலையுடைத்தான மலையை அநாயாஸேந தரித்தேன் நான் என்னாநின்றாள். [இனம்] - ஒன்றிரண்டன்றிக்கே ம்ருத்யுஸத்ருஶமாயிருக்கிற ருஷபங்கள் ஏழையும் ஒருகாலே ஊட்டியாகநெரித்துப்போகட்டேன் நான் என்னும். [இனவான்கன்று] - "வத்ஸமத்யகதம் பாலம்" (வத்ஸமத்யகதம் பாலம்) என்கிறபடியே என்னோடொத்தபருவமான கன்றுகளை மேய்த்தேனும் நானேன்னும். [இனவாநிரை] - முன்பு ப்ரஹ்மசர்யமநுஷ்டித்துப் பின்பு கார்ஹஸ்த்யதர்மம் அநுஷ்டிப்பாரைப்போலே, பால்யத்திலே கன்றுகளைமேய்த்து, பருவம்நிரம்பினபின்பு பசுக்களை மேய்த்தேனும் நானேன்னும். [இனவாயர்] - † "தன்னேராயிரம்பிள்ளைகள்" என்கிறபடியே, என்னோடொத்த பருவத்தில் பிள்ளைகளும் நானுமாய்த் தீம்புசெய்து திரிகிறவிடத்தில், அவர்களில் என்றனைத் தீம்பரில்லையேன்னும். [இனத்தேவர்] - நைரபேக்ஷ்யத்துக்குத் தன்னோடொத்திருக்கிற நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான ஸர்வேஶ்வரன் வந்து ஆவேசித்தானோ? அன்றிக்கே, [இனத்தேவர்] - தனியநுபவிக்கவொண்ணாமையாலே திரள்திரளாயிருக்கிற நித்யஸூரிகளென்னுதல். "அடியார்கள்குழாங்கள்" என்னக்கடவதிறே. [இனவேல்] - வேலொழுங்குபோலே, "இவள்தசை எவ்வளவாய்த் தலைக்கட்டுகிறது" என்று கூர்க்கப்பார்த்துக்கொண்டிருக்கிற உங்களுக்கு நான் எத்தைச்சொல்லுவது. என்றான், சொல்ல அருமையென்? என்ன, [இனவேற்கண்ணி] - தன்கண்ணுக்கிலக்கானார் படுவதைத் தான் படுகிறபடியைச் சொல்லப்போமோ. ‡ "உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே" என்றிறே இவள்கண்ணுக்கு இலக்கானார் படுவது. (சு)

---

*ஆரும்பாட்டு.—இனவேய் இத்யாதி.*

*அணுக்கன் - குடை. இனவேய் - திரளானமூங்கில். "இனவேறுகள்" என்றவிடத்தில், இனமென்றது - ஸத்ருஶமாய், ம்ருத்யுஸத்ருஶமாயிருக்கிற என்றபடி. ஊட்டியென்று - கழுத்தாய், கழுத்துத் தன்கையிலே யகப்படும்படியாக நெரித்தேனென்றபடி. ஊட்டி - ஊணும், கழுத்தும்.* **வான்கன்று** *- பெரியகன்றுகள்.* **இனவாநிரை** *- திரளானபசுக்கூட்டம்.* **நல்லீர்க்கு** *- விலக்ஷணைகளான உங்களுக்கு.* **இனவேற்கண்** *- ஒன்றுக்கொன்று ஒப்பாய் வேல்போலேயிருக்கிறகண்.* **தன்னோராயிரம்பிள்ளைகள்** *- தன்னோடொத்த ஆயிரம்பிள்ளைகளோடே. †பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம்பத்து.* **உயிர்காமின்கள்ஞாலத்துள்ளே** *- ஸம்ஸாரத்திலேயிருக்கிற நீங்கள் உயிரைக்காத்துக்கொள்ளுங்கோள். ‡ திருவிருத்தம், ஆரும்பாட்டு, "தடாவிய" இத்யாதி.* "ஸமஸமாநவயஸ்தைஸ் ஸ்வைஸ் ஸ்வைர்கோபாலதாரகை: । வத்ஸமத்யகதம் பாலம் நீலோத்பலதலச்சவிம் ॥ ௧௧ ॥" *இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே, பஞ்சமாம்ஶே, ஷஷ்டாத்யாயே.* (சு)

## ஏழாம் பாட்டு.

உற்றார்களெனக்கில்லையாருமென்னும் உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும், உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும் உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும், உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும் உற்றாரிலிமாயன்வந்தேறக்கொலோ? உற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யான்? உற்றென்னுடைப்பேதையுரைகின்றவே.

*ஆ.—(உற்றார்கள்.) இஜ்ஜகத்தில் என்படியை யறிந்து எனக்கு பந்துக்களாயிருப்பார் ஒருவருமில்லை. அவர்கள் அப்படியிருந்தமை யறிந்துவைத்தே, எனக்கு உறவாக நினைத்திராதார் ஒருவருமில்லை. சிலர் என்னை ஆஶ்ரயிக்கும்படி பண்ணுவேன். ஆஶ்ரயிக்குமவர்களில் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்கள் வேண்டினவற்றைக்கொடுத்து அகற்றுவேன் நான். அநந்யப்ரயோஜநரானவர்களுக்கு எல்லா பந்துக்ருத்யமும் பண்ணுவேன் நான் என்னும். எத்தனையேனும் அளவுடையார்க்கும் முட்டக்காணவொண்ணாத அத்யாஶ்சர்யபூதனானவன் ஆவேசித்தானோ? ஈடுபட்டு, அத்யந்த பாலையான என் மகள் சொல்லுகிறவற்றை, உறவுமுறையாரான உங்களுக்கு என்னபாசுரத்தாலே சொல்லுவேன் நான் என்கிறாள்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், 'எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்தில் இருக்கும் இருப்பைத் தன்படியாகப் பேசாநின்றாள்' என்கிறாள்.*

*[உற்றார்கள் எனக்கில்லையாரும்] - இஜ்ஜகத்தில் என்படியறிந்து எனக்கு பந்துக்களாயிருப்பார் ஒருவருமில்லை. [உற்றார்கள் எனக்கு இங்குஎல்லாரும்] - அவர்கள் அப்படியிருந்தமை அறிந்துவைத்தே, நான் எனக்கு உறவாகநினைத்திராதார் ஒருவருமில்லை. [உற்றார்களைச் செய்வேனும் யானே] - சிலர் என்னை ஆஶ்ரயிக்கும்படி பண்ணுமவன் நான். [உற்றார்களை அழிப்பேனும்யானே] - ஆஶ்ரயிக்குமவர்களில் ப்ரயோஜநாந்தரபரர்க்கு அவர்கள்வேண்டினவற்றைக் கொடுத்து அவர்களை அகற்றுவேன் நான். என்னுடைய ஸௌந்தர்யாதிகளைக்காட்டி அவர்களை ஈடுபடுத்துவேனும் நான் என்றுமாம். [உற்றார்களுக்கு உற்றேனும்] - அநந்யப்ரயோஜநரானவர்களுக்கு எல்லா பந்துக்ருத்யம் பண்ணுவேனும். [உற்றாரிலிமாயன்] - எத்தனையேனும் அளவுடையார்க்கும் முட்டக்காணவொண்ணாதபடியான அத்யாஶ்சர்யபூதனானவன். [உற்றீர்கள் என்று தொடங்கி] - உறவுமுறையாரான உங்களுக்கு என்னபாசுரத்தாலே சொல்லுவேன் ஈடுபட்டு அத்யந்தபாலையான என்மகள் சொல்லுகிறன.*

*ப.—அநந்தரம், ஜகத்தில் பந்துக்களளவில் அவன்படியெல்லாம் தன்படியாகச் சொல்லாநின்றாளென்கிறாள்.*

*உற்றார்கள் - (ஒருபாதியாலேகிட்டுதல், என்னையுள்ளபடியறிந்துகிட்டுதல் செய்திருக்கும்) பந்துக்கள், எனக்கு - எனக்கு, யாரும் - ஒருவரும், இல்லை - இல்லை, என்னும் - என்னும்; இங்கு - இஜ்ஜகத்தில், (நிருபாதிகஸம்பந்தத்தைப்பார்த்தால், அவர்கள் தாரதம்யம்பாராதே), எல்லாரும் - எல்லாரும், எனக்கு - எனக்கு, உற்றார்கள் - பந்*

துக்களாயிருக்கும், என்னும் - என்னும்; உற்றார்களை - அவர்களை எனக்கு உற்றாராம்படி, செய்வேனும் - பண்ணுவேனும், யானே - நானே, என்னும் - என்னும்; உற்றார்களை - ப்ரயோஜநாந்தரத்துக்காகக் கிட்டினவர்களை, அழிப்பேனும் - (அவற்றைக் கொடுத்து) உறவறுத்துவிடுவேனும், யானே - நானே, என்னும் - என்னும்; உற்றார்களுக்கு - அநந்யப்ரயோஜநராய்க் கிட்டினார்க்கு, உற்றேனும் - எல்லாவுறவுமுறையும், யானே - நானே, என்னும் - என்னும்; உற்றார் - எத்தனையேனும் அளவுடையராகிலும் தன்னை முட்டக்கண்டு கிட்டினார், இலி - இல்லாத, மாயன் - ஆஶ்சர்யபூதன், வந்தேறக்கொலோ - ஆவேசித்தபடியோ? உற்றீர்கட்கு - பந்துக்களான உங்களுக்கு, என்னுடைப்பேதை - அதிபாலையான என்னுடைய பெண்பிள்ளை, உற்று - உள்ளுறக்கண்டு, உரைக்கின்ற - சொல்லுகிற வார்த்தைகளை, என் - என்னபாசுரம், சொல்லி - சொல்லி, சொல்லுகேன் - சொல்லுவேன்?

இ.— ஏழாம்பாட்டில், அவன் ஆஶ்ரிதவிஷயத்திலிருக்கு மிருப்பைத் தன்படியாகப் பேசாநின்றாளென்கிறாள்.

[உற்றார்களெனக்கில்லையாரும்] - ஒருபாதியால்வந்த பந்துக்கள் ஒருவருமில்லையென்னுதல், என்படியையறிந்து எனக்கு ஸ்நேஹிக்கக்கடவார் ஒருவருமில்லையென்னுதல். [உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும்] - "வஸிம்விஶ்வ" என்கிறபடியே பார்த்தால், இஜ்ஜகத்திலெல்லாரும் பந்துக்களென்னுதல்; அவர்கள் இப்படியிருந்தமை யறிந்துவைத்தே, நிருபாதிகபந்துவாய் எல்லார்க்கும் ஸ்நேஹித்திருப்பேனென்னுதல். [உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும்] - சிலரெண்ணையாஶ்ரயிக்கப் பண்ணுவேனும் நானே. [உற்றார்களையழிப்பேனும்யானே] - ப்ரயோஜநாந்தரபரரை ப்ரயோஜநங்களைக்கொடுத்து அகற்றுவேனும்நானே யென்னுதல்; அவர்களை, ஸௌந்தர்யாதிகளைக்காட்டி யழிப்பேனும்நானே யென்னுதல். [உற்றார்களுக்குற்றேனும்] - அநந்யப்ரயோஜநர்க்கு எல்லாவுறவும் நானேயென்னுதல், அநந்யப்ரயோஜநர்க்கு அநந்யப்ரயோஜநனாயிருப்பேனும் நானேயென்னுதல். [உற்றாரிலிமாயன்] - எத்தனையேனும் அளவுடையார்க்கும் முட்டக்காணவொண்ணாதபடியான ஆஶ்சர்யபூதன். ஸ்வயத்நத்தால் ஒருவர்க்கும் கிட்டவொண்ணாதவன். [உற்றீர்கட்கென்சொல்லிச் சொல்லுகேன்யான்] - ஆனாலும், பந்துக்களான எங்களுக்குச் சொல்லவேண்டாவோ? என்னில்,—பந்துக்களாகவமையுமோ, விஷயஞ் சொல்லலாகவேண்டாவோ? உறவுமுறையான உங்களுக்கு, என்னபாசுரத்தைச்சொல்லிச் சொல்லுவேன். பருவம்நிரம்பாத என்பெண் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தைகளை வாய்க்கரையிலே நிற்கிறநான் எத்தைச் சொல்லுவது.

ஈடு.— ஏழாம்பாட்டு. எம்பெருமான் ஆஶ்ரிதவிஷயத்தில் இருக்கிற இருப்பைத் தன்படியாகப் பேசாநின்றாளென்கிறாள்.

[உற்றார்கள் எனக்கில்லை யாருமென்னும்] - எனக்கு ஒருபாதியால்வந்த பந்துக்கள் ஒருவருமில்லை யென்னும். அன்றிக்கே, என்னோட்டை ஸம்பந்தமறிந்து எனக்கு ஸ்நே

---

ஏழாம்பாட்டு.—உற்றார்கள் இத்யாதி.

உபாதியால் - கர்மமாகிறவுபாதியால். த்விதீயார்த்தத்துக்கு - உற்றிருப்பாரென்றாய், ஸ்நேஹிப்பாரென்றபடி. ஸம்பந்தமறிந்து ஸ்நேஹியார்களோவென்ன - வஸிஷ்ட இத்யாதி. கீழிற்பதத்

ஹிக்கக்கடவார் ஒருவருமில்லை யென்னுதல், "பதிம்விஸ்வஸ்ய"(பதிம்விஶ்வஸ்ய)என்று இத்தை ஓதிவைத்தே தேவதாந்தரஹஜநமிறே பண்ணுவது. [உற்றார்கள் எனக்கு இங்கெல்லாருமென்னும்] - எனக்கு நிருபாதிகபந்துக்களல்லாதார் இல்லையென்னும். அவர்கள் இப்படியிருக்கச்செய்தே நிருபாதிகபந்துவாய் எல்லார்க்கும் ஸ்நேஹித்திருப்பனேன்னுதல். [உற்றார்களைச்செய்வேனும் யானேயென்னும்] - அவர்களிலே சிலர் வந்து என்னை ஆஶ்ரயிக்கும்படி பண்ணுகிறேனும் நானேன்னும். [உற்றார்களையழிப்பேனும்]-அவர்களுக்கு ப்ரயோஜநாந்தரங்களிலே ருசியுண்டானால், அந்த ப்ரயோஜநங்களைக் கொடுத்து என்பக்கலினின்றும் அகற்றுவேன் நானேன்னும். அன்றிக்கே, ஆண்டான்பணித்தானாக இளையபெருமாள், "அவர்களை ஸௌந்தர்யாதிகளாலே அழிப்பேனும் நானேன்னாநின்றாள்" என்றும் அருளிச்செய்வர். [உற்றார்களுக்கு உற்றேனும் யானேயென்னும்]-என்பக்கல் அநந்யப்ரயோஜநராய்ப் பரிமாறுவார்க்கு என்றனை யநந்யப்ரயோஜநர் இல்லையென்னுதல். அன்றிக்கே, என்னையே ஸர்வவிதபந்துவுமாகப் பற்றினவர்களுக்கு, நானும் அவர்களையே ஸர்வவிதபந்துவுமாக இருப்பேன் என்னவுமாம். [உற்றாரிலி]-இற்றைக்குமுன்பு ஸ்வயத்நத்தாலே கிட்டினார் ஒருவருமில்லாதபடியிருக்கிற ஆஶ்சர்யபூதனான ஸர்வேஶ்வரன் வந்து ஆவேசித்தானே? [உற்றீர்கள் இத்யாதி]-"இங்ஙன் ஸம்ஶயிக்கக்கடவதோ,பந்துக்களுக்குநிஶ்சயித்துச்சொல்லவேணுங்காண்" என்ன,—உறவுமுறையாரா மித்தனையோ வேண்டுவது, சொல்லலாய்ச் சொல்லவேண்டாவோ. என்ன பாசுரத்தைச் சொல்லிச் சொல்லுவேன்? என்றான், சொல்லவொண்ணாமைக்கு வந்ததேன்? என்னில்,—[உற்று இத்யாதி] - பருவம்நிரம்பாத என்பெண், மறுபாடுருவத்தைத்துச்சொல்லுகிறவற்றை, கரையிலேநிற்கிற நான் எத்தைச்சொல்லுவது. திருத்தாயாரான தசையும் இவர்தமக்கே யுள்ளதோன்றுகில், இங்குச்சொல்லவொண்ணாதபடி கலங்குகை யாவதேன்? என்னில்,—"தனக்கும்தன்தன்மையறிவரியான்" என்று - ஈஶ்வரனை, தன்படி தானும் அறியான் என்று சொல்லுமாபோலே; தம்தசை தமக்குங்கூடப் பேச்சுக்கு நிலமன்றேன்கிறது. (எ)

## எட்டாம் பாட்டு.

---

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னும் உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும், உரைக்கின்றவமரரும்யானேயென்னும் உரைக்கின்றவமரர்கோன்யானேயென்னும், உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும் உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கோலோ? உரைக்கின்றவுலகத்தீர்க்கேன்சொல்லுகேன்? உரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே.

---

*தில் அர்த்தத்வயாநுகுணமாக அர்த்தத்வயம்* - **எனக்குநிருபாதிக** *இத்யாதி வாக்யத்வயத்தாலே.* **என்னை** *ஆஶ்ரயிக்கும்படி பண்ணுகிறேனு மென்றது - "தேஷாம்ஸததயுக்தாநாம்" இத்யாதியைப்பற்ற.* **இளையபெருமாள்** *- ஆண்டான்ஸ்ரீபாதத்திலவர்.* *உற்றார்களுக்குற்றேனும் -* **அநந்ய** *ப்ரயோஜநராய்க்கிட்டினார்க்கு உற்றிருப்பேனுமென்னுதல்; உறுதல் - கிட்டுதல். அன்றிக்கே, உறவுமுறையார்க்கு உறவுமுறையாயிருப்பேனுமென்னுதல். உற்றாரிலி - கிட்டினவர்களில்லாதவன். என் சொல்லிச்சொல்லுகேன் - எந்தபாசுரத்தையிட்டு எந்தவர்த்தத்தைச்சொல்லுவேன்.* **மறுபாடுருவ** *- அப்பாலுருவ. நன்றாக அவகாஹித்தென்றபடி ஸ்வாபதேசத்திலே ஜிஜ்ஞாஸுப்ரஶ்நத்தை யநுவதித்துப் பரிஹரிக்கிறார் - திருத்தாயாரான இத்யாதி.* **தனக்கும்தன்தன்மையறிவரியான்** *- ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான தன்னாலும் தன்னைப் பரிச்சேதிக்கப்போகாதவன். உற்றார்கள் - யாரும் - எனக்கிங்கில்லை - என்னும், இங்கெல்லாரும் - எனக்கு - உற்றார்கள் - என்னும் இத்யாரப்ய, உற்றீர்கட்கு - என்னுடைப்பேதை - உற்று - உரைக்கின்ற - என்சொல்லிச்சொல்லுகேன் இத்யந்வய:.* (எ)

ஆ.—(உரைக்கின்ற.) ஜகத்ப்ரயோஜநராக ஶாஸ்த்ரங்களிற்சொல்லப்படுகிற சதுர்முகப்ரமுவரும் நானிட்ட வழக்கென்றுநின்றாள். காலதத்த்வமுள்ளதனையும் பேசினாலும் பேசிமுடிக்கவொண்ணாத அழகையுடையவன் ஆவேசித்தானோ? அதிலோகமான பேச்சைப் பேசுவதும்செய்து, துஃகஸஹையுமன்றிக்கே யிருக்கிற இவ்விலக்ஷணையான பெண்பிள்ளைக்குப்பிறந்த அவஸாதத்தை "சொல்லு, சொல்லு" என்று நிரந்தரமாகச்சொல்லுகிற லௌகிகரான உங்களுக்கு ஏதென்று சொல்லுவேன் நானென்கிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், 'ஜகத்ப்ரயோஜநராக ஶாஸ்த்ரங்களிற் சொல்லப்படுகிற சதுர்முகப்ரமுவரும் நான் இட்டவழக்கு என்றுநின்றாள்' என்கிறாள்.

[உரைக்கின்றமுகில்வண்ணன்] - காலதத்த்வமுள்ளதனையும் பேசினாலும் பேசிமுடிக்கவொண்ணாத அழகையுடையவன். வார்த்தை அருளிச்செய்யும்போதை யழகைச் சொல்லிற்றாகவுமாம். [உரைக்கின்ற என்று மேலுக்கு] - அதிலோகமான பேச்சைப் பேசுவதும்செய்து துஃகஸஹையுமன்றிக்கேயிருக்கிற இவ்விலக்ஷணையான பெண்பிள்ளைக்குப் பிறந்த அவஸாதத்தை 'சொல்லு, சொல்லு' என்று நிரந்தரமாகச் சொல்லுகிற லௌகிகரான உங்களுக்கு எத்தைச்சொல்லுவேன்?

ப.—அநந்தரம், ஜகத்ப்ரயோஜநராய் ப்ரஹ்மருத்ராதிகளான தேவர்களும் ருஷிகளும் நானிட்ட வழக்கென்னு மென்கிறாள்.

உரைக்கின்ற - ("ஸஶிவஃ" என்று ஶகவத்ப்ரகாரமாகச்) சொல்லப்படுகிற, முக்கண் - த்ரிநேத்ரனாய், பிரான் - ஈஶ்வரனாக ப்ரஸித்தனான ருத்ரன், யானே - எனக்கு ப்ரகாரபூதன், என்னும் - என்னாநிற்கும்; உரைக்கின்ற - ("ஸஊஹா" என்று) சொல்லப்படுகிற, திசைமுகன் - சதுர்முகன், யானே - எனக்கு ப்ரகாரபூதன், என்னும்- என்னும்; (அப்படியே), உரைக்கின்ற - (ஶகவத்விபூதிதயா, "ஊக்ஷாஊயஃ" என்று) சொல்லப்படுகிற, அமரரும் - தஶப்ரஜாபதிகளான தேவர்களும், யானே - எனக்கு விஶேஷதிஶேஷதர், என்னும்-என்னும்; உரைக்கின்ற-("வெஸந்ஃ" என்று) சொல்லப்பட்ட, அமரர்கோன் - (த்ரயஸ்த்ரிம்ஶத்கோடி தேவதாதிபதியான) இந்த்ரனும், யானே - எனக்கு ப்ரகாரபூதன், என்னும் - என்னும்; உரைக்கின்ற - ("ஜெவஷீஞாஷு நாரஊஃ" இத்யாதிகளிலே) சொல்லுகிற, முனிவரும் - ருஷிகளும், யானே - நானிட்ட வழக்கு, என்னும் - என்னும்; உரைக்கின்ற - ("நீலதோயஊயெஷா" என்று வேதாந்தங்களிலே) சொல்லுகிற, முகில் - காளமேகநிபஶ்யாமமான, வண்ணன் - வடிவையுடையவன், ஏறக்கொலோ - ஆவேசித்தபடியோ? உரைக்கின்ற - ("சொல்லு,சொல்லு" என்று) உரைக்கின்ற, உலகத்தீர்க்கு - லோகத்தாரான உங்களுக்கு, உரைக்கின்ற - லோகமர்யாதையல்லாத பேச்சை யுடையளாய், என்,— கோமளம் - ஸுகுமாரமாய், ஒண் - தர்ஶநீயமான, கொடிக்கு - கொடிபோலே ஆஶ்ரயவ்யதிரேகத்தில் தறைப்படும் படியான இவளுக்குண்டான, இவை - இஸ்ஸ்வஶாவங்களை, என் - ஏதாக, சொல்லுகேன் - சொல்லுவேன்.

இ.—எட்டாம்பாட்டில், ஜகத்ப்ரயோஜநராக ஶாஸ்த்ரம்சொல்லுகிற சதுர்முகாதிகளும் நானிட்டவழக்கென்றுநின்றா ளென்கிறாள்.

[உரைக்கின்ற] - வேதத்தில் அர்த்தவாதப்ரதேசங்களிலும் தாமஸபுராணங்களிலும் சொல்லுகிறவன். [பிரான்] - ஸ்வகோஷ்டீப்ரஸித்தி. "ஶஊாணாம்ஶஜ

[ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி]'' என்று ஈஶ்வரனுக்கு ப்ரகாரமாகச் சொல்லப்பட்டவ னென்றுமாம். [உரைகின்ற திசைமுகன்] - ''ப்ரஹ்மணே புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய'' என்று - ருத்ரனுக்கும் ஜநகனை ப்ரஹ்மா நானிட்ட வழக்கென்னும். [உரைக்கின்றவமரரும்] - ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டராய் நித்யஸ்ருஷ்டிக்குக் கடவராக ஶாஸ்த்ரங்களிலே சொல்லப்படுகிற ப்ரஜாபதிகளும் நானிட்ட வழக்கென்னும். [உரைக்கின்ற] - ''ப்ரஹ்மா தக்ஷாதய: காலா:'' என்று பகவத்ப்ரகாரமாகச் சொல்லப்படுகிற வென்றுமாம். [உரைக்கின்றவமரர்கோன்] - ''நமிந்த்ரஶ்ச க்ஷத்ர:'' என்று சொல்லப்படுகிறவனென்னுதல், ''தேவாநாமஸ்மி வாஸவ:'' என்று ப்ரகாரமாகச் சொல்லப்படுகிறவனென்னுதல். [உரைக்கின்ற முனிவரும்] - வேதார்த்தத்தைஸ்மரித்து கர்தவ்யாகர்தவ்யங்களைச்சொல்லும் மந்வாதிகளும் நானிட்ட வழக்கென்னும். [உரைக்கின்றமுகில்வண்ணன்] - ''நீலதோயதமத்யஸ்தா'' என்று வர்ஷாகவலாஹகம்போலே சொல்லப்படுகிறவனென்னுதல், வார்த்தைசொல்லுகிறபோதை யழகைச் சொல்லுதல். [உரைக்கின்றவுலகத்தீர்க்கு] - ''சொல்லவொண்ணாது'' என்றறியாதே ''சொல்லு, சொல்லு'' என்கிற லௌகிகரான உங்களுக்கு என்சொல்லுகேன். [உரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே] - அதிலோகமான பேச்சையுடையளாய், ஸுகுமாரியாகையாலே து:கஸஹையன்றிக்கே, ''பதிஸம்யோகஸுலபம் வய:'' என்று உபக்நத்தோடே சேர்க்கவேண்டும் பருவத்தையுடைய இவளுக்கு ஓடுகிற தசையை. [கோமளவொண்கொடிக்கு] - கொழுந்து விடுகிற அழகையுடைய என்பெண்ணுக்கு.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஜகத்ப்ரதாநரான ப்ரஹ்மாதிகள் நானிட்ட வழக்கு என்றுநின்று ளென்கிறாள்.

[உரைக்கின்ற] - வேதத்திலே பகவத்விபூதியைப் பரக்கச்சொல்லுகிற இடங்களிலே யாதல், அர்த்தவாதப்ரகரணங்களிலே யாதல், தாமஸபுராணங்களிலே யாதல் சொல்லப்படுமவனாய், ஸ்வகோஷ்டிக்கு உபகாரகனான ருத்ரன் நானிட்ட வழக்கு என்றுநின்றாள். ''ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி'' (ருத்ராணும்ஶங்கரஸ்சாஸ்மி) என்று ஈஶ்வரனுக்கு ப்ரகாரமாகச் சொல்லப்பட்டவனென்றுமாம். [உரைக்கின்றதிசைமுகன்] - ''விரூபாக்ஷாய ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய'' (விரூபாக்ஷாய

---

ப்ர :—(உரைக்கின்ற திசைமுகன்) ஸாமவேதே [மஹாநாராயணே] ''ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்டாய ஶ்ரேஷ்டாய அமோகாய அசிந்த்யரூபாய நம:''

---

எட்டாம்பாட்டு.—உரைக்கின்ற இத்யாதி.

''உரைக்கின்ற'' என்றதுக்கு அர்த்தத்வயம் - பரனாகச் சொல்லப்படுகிற வென்னுதல், பகவத்ப்ரகாரபூதனாகச் சொல்லப்படுகிற வென்னுதல். இந்த அர்த்தத்வயத்தையும் அடைவே யருளிச் செய்கிறார் - வேதத்திலே இத்யாதியாலும், ருத்ராணாம் இத்யாதியாலும். பகவத்விபூதியைப் பரக்கச்சொல்லுகிற இடங்களாவன - ''ஸப்ரஹ்மா ஸ ஶிவ: ஸேந்த்ர:'' இத்யாதிகள். அர்த்தவாதப்ரகரணங்களாவன - ''யதக்ஷரம் ருத்ராந்நஶ்ரேயாய தஸ்ய'' இத்யாதிகள். 'ருத்ராணாம் ஶங்கரஶ்சாஸ்மி வித்தேஶோ யக்ஷரக்ஷஸாம் । வஸூநாம் பாவகஶ்சாஸ்மி மேரு: ஶிகரிணாமஹம் ॥ உ௩ ॥'' இதி கீதாஸு, ஊஶவே. ''ப்ரஹ்மண: புத்ராய இத்யாதி - ஸாமவேதே. ''ப்ரஹ்மா தக்ஷாதய: காலஸ்ததைவாகிலஜந்தவ: । விபூதயோ ஹரேரேதா ஜகத: ஸ்ருஷ்டிஹேதவ: ॥ ௩௧ ॥'' இதி ஶ்ரீவிஷ்ணுபுராணே (க-உஉ).

ப்ரஹ்மண: புத்ராய ஜ்யேஷ்ட்டாய ஶ்ரேஷ்ட்டாய) என்கிறபடியே, அவன்தனக்குங்கூட ஜநகனாக ப்ரமாணப்ரஸித்தனாயிருக்கிற சதுர்முகனும் நானிட்டவழக்கென்கிறாள். [அமரர்]- ப்ரஹ்மாவாலே ஸ்ருஷ்டராய், நித்யஸ்ருஷ்டிக்குக் கடவராக ஶாஸ்த்ரங்களிலே சொல்லப் படுகிற தக்ஷப்ரஜாபதிகளும் நானிட்ட வழக்கென்னும். [உரைக்கின்ற அமரரென்று] - "**ப்ரஹ்மதக்ஷாதய:**" (ப்ரஹ்மதக்ஷாதய:) என்று ஏகவத்ப்ரகாரமாகச் சொல்லப் படுகிற என்றுமாம். [உரைக்கின்ற அமரர்கோன்] - "**நகிரிந்த்ர த்வதுத்தர:**" (நகிரிந் த்ரத்வதுத்தர:) என்று சொல்லப்படுகிறவன் என்னுதல். "**தேவாநாமஸ்மி வாஸவ:**" (தேவாநாமஸ்மிவாஸவ:) என்று ப்ரகாரமாகச் சொல்லப்படுகிறவன் என்னுதல். [முனிவரும்] - வேதார்த்தத்தை ஸ்மரித்து, ஜகத்துக்கு கர்த்தவ்யங்களைச் சொல்லும் மந்வாதிகளும் நானிட்டவழக்கென்னும். [முகில்வண்ணன்] - "**நீலதோயதமத்யஸ்தா**" (நீலதோயதமத்யஸ்த்தா) என்று வர்ஷுக வலாஹகமாகச் சொல்லப்படுகிற என்னுதல். வார்த்தை சொல்லுவதாய், கழுத்தே கட்டளையாக நீரைமுகந்து, மின்னி, முழங்கி, வில்லிட்டு வருவதொரு மேகம்போலே வடிவழகையுடைய ஸர்வேஶ்வரன் வந்து ஆவேசித்தானோ! அறிகிறிலேன். [உரைக்கின்ற உலகத்தீர்க்கு]-சிலவற்றைச் சொல்லுமித்தனையாய், "சொல்ல லாம், சொல்லவொண்ணாது" என்று பாராதே, "சொல்லு, சொல்லு" என்றலைக்கிற லௌகிகரான உங்களுக்கு நான் எத்தைச் சொல்லுவது. [உரைக்கின்ற இத்யாதி]-அதுவும் சொல் லியொழிவேனிறே வார்த்தை சொல்லிற்றிலளாகில். கோமளமென்கையாலே - ஸௌகுமார் யத்தைச் சொல்லிற்று. கொடியென்கையாலே - "**பதிஸம்யோகஸுலபம் வய:**" (பதிஸம்யோகஸுலபம்வய:) என்கிறபடியே ஒரு கொள்கொம்போடே சேராதபோது தறைப்படும் பருவமென்கை. (௮)

---

*ப்ர :—(உரைக்கின்ற அமரர்கோன்) ஸம்ஹிதாயாம் த்ருதீயாஷ்டகே, "நகிரிந்த்ர த்வதுத்தரோ ந ஜ்யாயோ அஸ்தி வ்ருத்ரஹந்".*

---

*நகிரிந்த்ர த்வதுத்தர இதி ஸம்ஹிதாயாம் த்ருதீயாஷ்டகே. ஹே இந்த்ர, த்வது த்தர:, கி: - ஶப்த, நேத்யர்த்த:. "வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: । இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா ॥ ௨௨ ॥" இத்யாதி ஶ்ரீகீதாஸூக்தே:. உரைக்கின்றமுனிவரும் - ஶாஸ்த்ரங்களைத் தாந்தாம் சொல்லுகிறமுனிகளும். "உரைக்கின்ற" என்றதுக்கு சொல்லப்படுகிறவென்று கீழெல்லாம் அர்த்தம்; இங்கே, சொல்லுகிறவென்று அர்த்தங் கண்டுகொள்வது. "உரைக்கின்ற" என்றமாத்ரத்துக்கு அர்த்தாந்தரம் - **வார்த்தைசொல்லுவதாய்** இத்யாதி. **கழுத்தே கட்டளையாக** - கண்டபர்யந்தமாக. மேகத்தை வர்ணித்துச்சொன்னது - "முகில்" என்கையாலே அர்த்தாத்ஸித்தம். உரைக்கின்றவுலகத் தீர்க்கு - "சொல்லு, சொல்லு" என்றுரைக்கிற லௌகிகரான உங்களுக்கு. உரைக்கின்ற என் கோமள வொண்கொடிக்கு - உல்லோகமான வார்த்தையைச் சொல்லுகிற, ஸௌகுமாரையாய், தர்ஶநீயமான கொடிபோலேயிருக்கிற என்மகளுக்கு. உண்டான ஸ்வபாவங்களென்று கூட்டுவது. **வார்த்தைசொல் லிற்றிலளாகில்** - பகவத்விபூதியைப் பரக்கச் சொல்லிற்றிலளாகில். ஆகையால் ஈத்ருஶவைபவம் என்னால் சொல்லப்போகாதென்று கருத்து. "பதிஸம்யோகஸுலபம் வயோத்ருஷ்ட்வா ச மே பிதா ॥ சிந்தார்ணவகத: பரம் நாஸஸாதாப்லவோ யதா (௩௬)॥" இத்யயோத்யா காண்டே (௧௧௮) அநஸூயாம் ப்ரதி ஸீதா. உரைக்கின்ற முக்கட்பிரான் இத்யாரப்ய, உலகத்தீர்க்கு - உரைக்கின்ற என் கோமளவொண்கொடிக்கு - என்சொல்லுகேன் இத்யந்வய:. (௮*

## ஒன்பதாம் பாட்டு.

கோடியவினையாதுமிலனேயென்னும் கோடியவினையாவேனும் யானேயென்னும், கோடியவினைசெய்வேனும்யானேயென்னும் கோடிய வினைதீர்ப்பேனும்யானேயென்னும், கோடியானிலங்கைசெற்றேனேயென் னும் கோடியபுள்ளுடையவனேறக்கோலோ? கோடியவுலகத்தீர்க்கிவை யென்சொல்லுகேன்? கோடியேன்கோடியென்மகள்கோலங்களே.

*ஆ.—(கொடியவினை.) கர்மவஶ்யரை நலியுமாபோலே நலியக்கடவதாய், கொடிதானகர்மங்கள் எனக்கொன்றுமில்லை யென்னும். அவை நானிட்ட வழக்கென்னும். ப்ரதிகூலர்க்குக் கொடிதான பாபத்தை விளைப்பேன் நான் என்னும். அநுகூலர்க்குக் கொடிதான வினையைத் தீர்ப்பேனும் நான் என்னும். கொடியானிலங்கையை ஒருபடி யழித்தேனென்னும். ப்ரதிபக்ஷத்துக்குக் கொடியனான பெரியதிருவடியை வாஹநமாக வுடையவன் வந்தேறினானோ? இப்படி படுகைக்கீடான பாபத்தைப் பண்ணின என்னுடைய மகளுடைய ஒருப்பாடுகளை "சொல்லு, சொல்லு" என்று மிகவும் அலைக்கிற உங்களுக்கு என்னென்று சொல்லுவே னென்கிறாள்.*

*ஒ.—ஒன்பதாம்பாட்டில், 'அகர்மவஶ்யத்வப்ரமுகமான ஶக்திகளைத் தன்னினவாகப் பேசாநின்றாள்' என்கிறாள்.*

*[கொடியவினையாதுமிலனே] - கர்மவஶ்யரை நலியுமாபோலே என்னைநலியக் கடவதாய்க் கொடிதானகர்மங்கள் எனக்கு ஒன்றுமில்லை. [கொடியவினையாவேனும்யானே]- அவை நான்இட்டவழக்கு. [கொடியவினைசெய்வேனும்யானே] - ப்ரதிகூலர்க்குக் கொடிதானபாபத்தை விளைப்பேன்நானே. [கொடியவினைதீர்ப்பேனும்யானே] - அநுகூலர்க்குக் கொடிதானவினையைத் தீர்ப்பேனும்யானே. [கொடியான்இலங்கைசெற்றேனே] - லங்கையை ஒருபடி அழித்தேன். கொடியானென்கிற அஸமத்தனையும்-திருத்தாயார் வார்த்தை. [கொடியபுள்] - ப்ரதிபக்ஷத்துக்குக் கொடியனான பெரியதிருவடி. [கொடிய உலகத்தீர் என்றுதொடங்கி] - 'சொல்லு,சொல்லு' என்று மிகவும் அலைக்கிற உங்களுக்கு எத்தைச்சொல்லுவேன்? இப்படிபடுகைக்கு ஈடான பாபத்தைப்பண்ணின என்னுடைய மகளுடைய ஒருப்பாடுகள். கோலங்கள் - தர்ஶநீயப்ரவ்ருத்திகளாகவுமாம்.*

*ப.—அநந்தரம், க்ரூரமான கர்மப்ரகாரங்களெல்லாம் நானிட்டவழக்கென்னு மென்கிறாள்.*

*கொடிய - (கர்மவஶ்யரான பத்தசேதநரைக் கண்ணற்றுநலியும்) கொடுமையை யுடைத்தான, வினை-கர்மம், யாதும்-ஒன்றும், இலன் - ("நமாம்கர்மாணி லிம்பந்தி" என்கிறபடியே) எனக்கில்லை, என்னும் - என்னாநிற்கும்; (அந்தக்ரூரகர்மமானது என் நிக்ரஹமாகையாலே), கொடியவினை - அது, ஆவேனும் - ஆகிறேனும், யானே - நானே - என்னும் - என்னும்; ("தாநஹம் த்விஷத:" என்கிற ப்ரதிகூலரானவரை), கொடியவினை- அந்தக் கர்மங்களிலே மூட்டி, செய்வேனும் - செய்விப்பேனும், யானே-நானே, என்னும்-என்னும்; கொடியவினை - அந்தக் கர்மத்தை, தீர்ப்பேனும் - ("மோக்ஷயிஷ்யாமி" என்று) ஆஶ்ரிதர்க்குப் போக்குவேனும், யானே-நானே, என்னும்-என்னும்; கொடியான்- க்ரூரகர்மாவான ராவணனுடைய, இலங்கை - லங்கையை, செற்றேன் - அழித்தேன், என்னும்-என்னும்; கொடிய - (ஆஶ்ரிதவிரோதிகளுக்கு) ம்ருத்யுஸமனான, புள் - பெரிய திருவடியை, உடையவன் - வாஹநமாகவுடையவன், ஏறக்கோலோ-ஆவேஶித்தபடியோ? கொடிய - ("நமக்கு இது சீலமன்று" என்றிராதே அதிநிர்ப்பந்தம் பண்ணுகிற) கொடு மையையுடைய, உலகத்தீர்க்கு - லோகத்தீர்க்கு, கொடியேன்-(இவளை இப்படி விக்ருதை*

யாகக் காணவைத்த பாபத்தின்) கொடுமையை யுடையேனுன, என்-என்னுடைய, கொடி-கொடிபோலே மெல்லியளான, மகள்-பெண்பிள்ளையினுடைய, கோலங்கள் - தர்ஶநீய சேஷ்டிதங்களான, இவை - இவற்றை, என் - என்னென்று, சொல்லுகேன் - சொல்லுவேன். கொடியபுள்ளென்று - கொடியிலேயான புள்ளென்றுமாம். கோலங்களென்று - ஒருப்பாடாகவுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், அகர்மவஶ்யத்வப்ரமுகமான ஸ்வகதவதுக்திகளை தன்னினவாகப் பேசாநின்றுளென்கிறுள்.

[கொடியவினையாதுமிலனே] - கர்மவஶ்யரைக் கண்ணற்றுநலியும் கர்மங்கள் எனக்கொன்றுமில்லையென்னும். "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி", "நமாம் கர்மாணி லிம்பந்தி". "நாட்டிற்பிறந்துபடாதனபட்டு" என்கிறபடியே - ஐச்சமாய் வருமது தவிர்க்கப்போகாது. [கொடியவினையாவேனும்] - அவை நானிட்டவழக்கென்னும். கர்மமாகிறது என்னுடையநிக்ரஹமன்றோ வென்னும். [கொடியவினைசெய்வேனும்] - ப்ரதிகூலர்க்குக் கொடிதான பாபத்தை விளைப்பேனும் நானே யென்னும். ஆஶ்ரிதர்திறத்தில் விரோயிகளை பாபங்களிலேமூட்டுகை. "தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு". [கொடியவினை தீர்ப்பேனும்]-ஆஶ்ரிதர்க்கு அவஶ்யம் அநுபோக்தவ்யமான கர்மத்தைப் போக்குவேனும் நானே என்னும். "அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்னுநின்றுள். [கொடியானிலங்கை] என்கிறவிடம் - தாயார்வார்த்தை; அவனாலே ஆவிஷ்டையாயிருக்கிறவிவள் இத்தனைமதித்து வார்த்தைசொல்லாளிறே, "சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையையுடையவன்" என்றிருக்குமிறே தாயார். [கொடியபுள்ளுடையவன்]-ஆஶ்ரிதவிரோதிகளுக்கும்ருத்யுவான பெரியதிருவடியை வாஹநமாகவும்த்வஜமாகவுமுடையவன். [கொடிய உலகத்திர்க்கு] - "நமக்குநிலமன்று" என்றறியாதே அதிநிர்ப்பந்தம் பண்ணுகிற உங்களுக்கு. [கொடியேன்கொடியென்மகள்] - இவளை, அநுகரித்து பரிக்கக் காண்கையான மஹாபாபத்தைப்பண்ணின என்மகளுடைய. [கோலங்களே] - தர்ஶநீயமான வ்யாபாரங்களென்னுதல், ஒருப்பாடுகளென்னுதல்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. அகர்மவஶ்யத்வ ப்ரமுகமான பகவதுக்திகளைத் தன்னினவாகப் பேசாநின்று ளென்கிறுள்.

[கொடியவினையாதுமிலனேயென்னும்] - கர்மவஶ்யரைக் கண்ணற்றுநலியும் கர்மங்கள் எனக்கு ஒன்றுமில்லையேன்னும். † "அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி" (அநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி), "நமாம் கர்மாணி லிம்பந்தி" (நமாம்கர்மாணிலிம்பந்தி) என்று அவன்படியைத் தான் சொல்லாநின்றுள். "நாட்டிற்பிறந்துபடாதனபட்டு" என்கிறவிடம்-

† த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வஜாதே । தயோரந்ய: பிப்பலம் ஸ்வாத்வத்த்யநஶ்நந்நந்யோ அபிசாகஶீதி ॥

ஒன்பதாம்பாட்டு.—கொடிய இத்யாதி. தன்னினவாக - தன்னதுகளாக.

"கொடிய" என்றதுக்குபாவம் - கர்மவஶ்யரை இத்யாதி. கண்ணற்று - நிர்த்தயமாக

அநஶ்நந்: இதி, — "த்வா ஸுபர்ணா" இத்யாதி, த்வௌ. ஸுபர்ணௌ - ஶோபநபக்ஷிஸாம்யநௌ. ஶோபநஜ்ஞாநாதிகுணயுக்தௌ. ஸயுஜௌ - ஸமாநவஹநஸ்வபாவகர்மாதிகுணகௌ. ஸகாயௌ - ஶேஷஶேஷிபாவஸம்பந்தயுக்தௌ. அவதாரதசையிலே து:கித்வமுண்டாகச் சொல்லுகிறதேயென்ன - நாட்டில் இத்யாதி. "அகர்மவஶ்யஸ்ய" என்று சொல்லிவைத்து. "கொடியவினைசெய்வேன்" என்கிற இது விருத்தமன்றோ? என்ன - ஆஶ்ரித

ஐச்சிகமிறே. [ஆவேனும்] - நான் இவற்றால் ஸ்பர்மிக்கப்படாதமாத்ரமேயாய், அவை தான் எனக்குப் புறம்பாயிருக்கிறதோ; அப்பாபமாகிறது - என்னுடைய நிக்ரஹமன்றோவென்னும். [செய்வேனும்] - ஆஸ்ரிதவிரோதிகளுக்குக் கொடியதான பாபத்தை விளைப்பேனும் நானே யென்னும். ஆஸ்ரிதவிரோதிகளைப் பாபங்களிலே மூட்டுகை - செய்கையாகிறது. "தாநஹம்த்விஷதக்ரூராந்" (தாநஹம்த்விஷதக்ரூராந்). [தீர்ப்பேனும்]-என்னை ஆஸ்ரயித்தவர்களுக்கு அவைவந்துகிட்டாதபடி, "ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்பேனும் நானேனென்னும். [கொடியானிலங்கை செற்றேனேயென்னும்]-இவ்விடத்தில், "கொடியானேன்கிறவிடம் - திருத்தாயார் வார்த்தை காண்" என்று அருளிச்செய்வர் ஜீயர், எதிரிகளை இவன் ஒன்றாக மதித்திருந்தானாகாமைக்கு; அவனாலே ஆவிஷ்டையிறே இவள். * சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையுடையவன் என்னக்கடவதிறே. [கொடியபுள்] - ஆஸ்ரிதவிரோதிகளுக்கு ம்ருத்யு ஸத்ருமமான பெரியதிருவடியை வாஹநமாகவுடைய ஸர்வேஸ்வரன் வந்து ஆவேசித்தானோ? [கொடியவுலகத்தீர்க்கு] - "கேட்கவேணும்" என்று திரண்டுகிடக்கிற உலகத்தீர்க்கு என்னுதல்; 'மக்யம், அமக்யம்' என்று பாராதே, "சொல்லு, சொல்லு" என்று நிர்ப்பந்தித்து ஸ்வார்த்தபரைகளாயிருக்கிற உங்களுக்கு எத்தைச் சொல்லுவதுஎன்னுதல். [கொடியேன்] - இவள் அநுகரித்துச்சொல்லுகிற பாசுரங்களைக் கேட்கவேண்டும்படியான பாபத்தைப் பண்ணினஎன்மகள் தர்மநீயமான ப்ரவ்ருத்திகளை யென்னுதல், ஒருப்பாடுகளை யென்னுதல். (கூ)

## பத்தாம் பாட்டு.

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னும் கோலமில்நரகமும்யானேயென்னும், கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னும் கோலங்கொளுயிர்களும்யானேயென்னும், கோலங்கொள்தனிமுதல்யானேயென்னும் கோலங்கொள்முகில்வண்ணனேறக்கொலோ? கோலங்கொளுலகத்தீர்க்கேன்சொல்லுகேன்? கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே.

---

விரோதிகளுக்கு இத்யாதி. விவரணம் - ஆஸ்ரிதவிரோதிகளை இத்யாதி. செய்வேனும் - செய்விப்பேனும். அப்படி மூட்டுமோவென்ன - தாநஹம் இத்யாதி. பெண்பிள்ளை ஸர்வேஸ்வரனை அநுகரித்துச்சொல்லுகிறாளாகையாலே, இவள்சொன்னதே அவன்சொன்னதாம் என்றுவிவக்ஷித்து, எதிரிகளை இவன் ஒன்றாகமதித்திருந்தானாகாமைக்கு என்கிறார். அவன் அப்படிகொடியனோ? என்ன - சுரிகுழல் இத்யாதி. அழகியகுழலையும் கனிந்தவதரத்தையுமுடைய பிராட்டியைப்பிரித்த க்ரௌர்யத்தையுடைய இத்யர்த்த:. *திருமொழி, அஞ்சாம்பத்து, எழாந்திருமொழி, எழாம்பாட்டு. "கொடியவுலகத்தீர்க்கு" என்றது, "கொடிய" என்றத்தைநீட்டி, கோடியவென்றாய், கோடுதல் - வளைதலாய், திரண்டுகிடக்கிற உலகத்தீர்க்கு என்றபடி. அன்றிக்கே, கொடியவென்று - க்ரூரரென்றாய், ஸ்வார்த்தபரதையாகிற க்ரௌர்யத்தையுடையவர்க ளென்னுதல். கோலங்கள் - தர்மநீயப்ரவ்ருத்திகளாதல்; கோலுதல் - உத்யோகமாய், ஒருப்பாடுகளென்றபடி. கொடியவினை இத்யாரப்ய, உலகத்தீர்க்கு - கொடியேன்கொடி என்மகள்கோலங்கள் - இவையென்சொல்லுகேன் இத்யந்வய:. "நரோத்தமானி [illegible] ஐதிஹ்யம் [illegible] கச॥" இதிகீதாவசநம். "தாநஹம் த்விஷத:க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் । க்ஷிபாம்யஜஸ்ரமஸுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு॥கக॥" இதிஷோடஸே. "ஸர்வபாபேப்ய:" இத்யஷ்டாதஸே. (கூ)

ஆ.—(கோலங்கொள்.) கலப்பற்ற ஸுகரூபமானஸ்வர்க்கமும், ஸுககந்த மின்றிக்கே துக்கமேயானநரகமும், அபரிச்சின்ந ஸுகரூபமானமோக்ஷமும், கர்மாநுகுண மாக தேவாதிஶரீரப்ரவேஶம் பண்ணக்கடவ ஆத்மாக்களும், விசித்ரகார்யஜநநஶக்தி யுக்தையான ப்ரக்ருதியும் நானிட்டவழக்கு என்று சொல்லாநின்றாள். ஸமஸ்தகல்யாண குணாத்மகனாய், வில்லிட்டுமின்னி தர்ஶநீயமான மேகம்போலேயிருக்கிற திருநிறத்தை யுடையவன் வந்து ஏறினானோ ? அழகிய மாலையையும் மயிர்முடியையுமுடைய என்மக ளுக்குப்பிறந்த அவஸ்த்தைகளை, கேட்கையிலே ஒருப்படாநின்றுள்ள உலகத்தீர்க்கு என்சொல்லுவே னென்கிறாள்.

ஓ.—பத்தாம்பாட்டில், 'ஸ்வர்க்கப்ரமுகமான பதார்த்தங்களெல்லாம் நான் இட்டவழக்கு என்றுசொல்லாநின்றாள்' என்கிறாள்.

[கோலம்கொள்சுவர்க்கம்] - கலப்பற்ற ஸுகரூபமான ஸ்வர்க்கம். [கோலமில் நரகம்] - ஸுககந்தமின்றிக்கே வெறுந்துக்கமேயான நரகம். [கோலம்திகழ்மோக்கமும்]- அபரிச்சின்ந ஸுகரூபமான மோக்ஷமும். [கோலம்கொள்உயிர்களும்] - நாநாவேஷமாக எழுதியணிந்துதோற்றுமவர்களைப்போலே, கர்மாநுகுணமாக தேவாதிஶரீரப்ரவேஶம் பண்ணக்கடவ ஆத்மாக்களும். ஜ்ஞாநாநந்த லக்ஷணமான ஆத்மாக்களென்றுமாம். [கோலம்கொள்தனிமுதல்] - விசித்ரகார்யஜநநஶக்தியுக்தையான ப்ரக்ருதி. ஸமஸ்தகல் யாணகுணாத்மகனாய், இதெல்லாவற்றுக்கும் அடியாயிருக்கிற ஸர்வேஶ்வரன் என்றுமாம். [கோலங்கொள்முகில்வண்ணன்] - வில்லிட்டுமின்னி தர்ஶநீயமான மேகம்போலேயிருக் கிற திருநிறத்தையுடையவன். [கொலங்கொள் என்றுதொடங்கி] - கேட்கையிலே ஒருப்படாநின்றிருந்துள்ள உலகத்தீர்க்கு அழகியமாலையையும் மயிர்முடியையுமுடைய என்மகளுக்குப்பிறந்த இவ்வவஸ்த்தைகளை என்சொல்லுவேன் ?

ப.—அநந்தரம், ஸ்வர்க்கநரகாதிகளான ஸகலஃபலங்களும் நானிட்டவழக் கென்னு மென்கிறாள்.

கோலம் - (தர்ஶநீய) ஸௌந்தர்யத்தையை, கொள் - உடைத்தான, சுவர்க்கமும் - ஸ்வர்க்கமும், யானேயென்னும்,—கோலம்-ஒருவைலக்ஷண்யமும், இல் - இன்றியே, நரக மும் - (துக்கோத்தரமான) நரகமும், யானேயென்னும்,—கோலம் - (நிரதிஶயாநந்த) ரூப வைலக்ஷண்யத்தாலே, திகழ் - விளங்குவதான, மோக்கமும் - மோக்ஷமும், யானேயென் னும்,—கோலம்-இவ்வோபலங்களை, கொள்-பற்றக்கோலும் ஒருப்பாட்டையுடைய, உயிர் களும் - ப்ராணிகளும், யானே - நானே, என்னும் - என்னும்; கோலம் - இவற்றையடை யத் தன்நினைவிலே நிர்வஹிக்கும் ஒருப்பாட்டை, கொள் - உடைத்தாய், தனி - ஸஹா யாந்தர நிரபேக்ஷமான, முதல் - பரமகாரணவஸ்து, யானே - நானே, என்னும் - என்னு நிற்கும்; கோலம் - பசுத்தவடிவும் ஸ்புரிக்கிறமின்னும் நாநாவர்ணமான இந்த்ரதநுஸ்ஸு மானகோலத்தை, கொள் - உடைத்தான, முகில் - மேகம்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையவன், ஏறக்கொலோ - ஆவேஶித்தபடியோ; கோலங்கொள்-"கேட்டல்லது போகோம்" என்று ஒருப்படுகிற, உலகத்தீர்க்கு - உங்களுக்கு, கோலம்-அழகு, திகழ் - விளங்குகிற, கோதை - மாலையையுடைய, என்கூந்தலுக்கு - மயிர்முடியையுடையளான என்பெண்பிள்ளைக்கு, என்-என்னப்ரகாரமாயிருந்தது என்று, சொல்லுகேன் - சொல்லு வேனோ ?

இ.—பத்தாம்பாட்டில், ஸ்வர்க்கப்ரமுகமான பதார்த்தங்களெல்லாம்நானிட்ட வழக்கென்னாநின்றா ளென்கிறாள்.

[கோலங்கொள்சுவர்க்கமும்]-ஸுகரூபமான ஸ்வர்க்கங்களும். நிலைநில்லாமை யாலே முகப்பில்தர்ஶநீயதையைப்பற்றச் சொல்லுகிறது. [கோலமில்நரகமும்] - ஸுக கந்தமின்றிக்கே நிஷ்க்ருஷ்டதுக்கமேயான நரகமும். [கோலந்திகழ்மோக்கமும்] - நிஷ் க்ருஷ்டஸுகமாய் அபுநராவ்ருத்திலக்ஷணமாகையாலே அபரிச்சின்நஸுகமான மோக்ஷ மும். [கோலங்கொளுயிர்களும்] - நாநாவேஷமாகவெழுதியணிந்து தோற்றுவாரைப்

போலே தேவாதிஶரீரப்ரவேஶம்பண்ணுகிற ஆத்மாக்களும். ஜ்ஞாநாநந்தலக்ஷணமான ஆத்மாக்களென்றுமாம். [கோலங்கொள்தனிமுதல்] - விசித்ரகார்யகாரிணியான ப்ரக்ருதியென்னுதல், அப்படிப்பட்ட ஸங்கல்பஜ்ஞாநமென்னுதல், உபயத்தையும் ப்ரகாரமாகவுடையனாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனான ஸர்வேஶ்வரனென்னுதல். [கோலங்கொள்முகில்வண்ணன்] - மின்னி வில்லிட்டு தர்ஶநீயமான மேகம்போலேயிருக்கிற திருநிறத்தையுடையவன். [கோலங்கொளுலகத்தீர்க்கு] - விஷயஸ்வபாவமறியாதே, கேட்கையிலேயொருப்படாநின்ற உங்களுக்கு. [கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே] - அழகுவிளங்காநின்றுள்ள மாலையையும் மயிர்முடியையுமுடைய என்மகளுக்குப் பிறந்த அவஸ்த்தைகளை. தன்மயிர்முடிகண்டார்படும்பாட்டைத் தான்படுகிற இவள்படிகள் பேச்சுக்குநிலமோ ?

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸ்வர்க்கப்ரமுகமான பதார்த்தங்களெல்லாம் நானிட்ட வழக்கென்னுநின்றுளென்கிறாள்.

[கோலங்கோள் இத்யாதி] - ஸுகரூபமான ஸ்வர்க்கம். நிலைநில்லாமையாலே, முகப்பில்தர்ஶநீயதையைப்பற்றச்சொல்லுகிறது. "நரகத்தோடொத்திருக்கச்செய்தே,வாசலிலே கழஞ்சுசெம்மண் பூசியிருக்குமாபோலேகாண்" என்று அருளிச்செய்வர். [கோலமில்]-ஆபாதப்ரதீதியில் அங்ஙனும் ஒன்றின்றியிலே யிருக்கிற நரகமும் நானிட்டவழக்கு என்னுநின்றாள். [மோக்கமும்] - அபுநராவ்ருத்தி லக்ஷணமான மோக்ஷமும் நானிட்டவழக்கு என்னுநின்றாள். "கடல்ஞாலம்செய்தேன்" என்று - ஸ்ருஷ்டிதொடங்கி, மோக்கமும்யானேயென்று - மோக்ஷபர்யந்தமாக ஸ்வகார்யமென்கிறாள். [கோலங்கோள் உயிர்களும்] - நாடகங்கட்டி ஆடுவோரைப்போலே, தேவனாக, மநுஷ்யனாக; இப்படி நாநாவான ஶரீரபரிக்ரஹம் பண்ணுகிற ஆத்மாக்கள் என்னுதல்; ஜ்ஞாநாநந்தலக்ஷணமான ஆத்மாக்க ளென்னுதல். [கோலங்கோள்தனிமுதல்] - இதுக்கெல்லாம் காரணமான மூலப்ரக்ருதியைச் சொல்லுதல், ஸங்கல்பரூபஜ்ஞாநத்தைச் சொல்லுதல். விசித்ரகார்யகாரிணியான ப்ரக்ருதியையும், அப்படிப்பட்ட ஸங்கல்பரூபஜ்ஞாநத்தையும் ப்ரகாரமாகவுடையனாய், ஸமஸ்தகல்யாணகுணாத்மகனை ஸர்வேஶ்வரனென்னுதல்; [கோலங்கோள்முகில்வண்ணன்]-திருமேனிக்கு மேகத்தை ஒப்பாகச் சொல்லும்போது, அலங்கரித்துச் சொல்லவேணுமாயிற்று. மின்னிமுழங்கி வில்லிட்டு வந்து தோற்றினபோதாயிற்று ஒப்பாகச் சொல்லலாவது. [கோலங்கோள் உலகத்தீர்க்கு] -

---

பத்தாம்பாட்டு.—கோலங்கோள் இத்யாதி.

கோலங்கொள்சுவர்க்கம் - ஸுகத்தையுடைய ஸ்வர்க்கம். கோலம் - ஸுகம். பரமபதம் போலே ஸுகரூபமோ? என்ன; மேலே "கோலந்திகழ்மோக்கம்" என்று விஶேஷிக்கையாலே அதில்லையென்கிறார் - நிலைநில்லாமையாலே இத்யாதி. நிலைநில்லாமையாலே - நிலைநில்லாததுமாய், துக்கமிஶ்ரமுமான ஸுகத்தையுடைத்தாகையாலே. முகப்பில்தர்ஶநீயதை - ஆபாததஃ உண்டான தர்ஶநீயதை. "முகப்பில்தர்ஶநீயதையைப்பற்ற" என்றதுக்கு ஆப்தஸம்வாதம் - நரகத்தோடு இத்யாதி. அருளிச்செய்வர் - ஜீயரென்றபடி. கோலமில்நரகமும் - ஸுகலேஶமுமின்றிக்கேயிருக்கிற நரகமும். கோலந்திகழ்மோக்கமும் - நிரதிஶயாநந்தரூபத்வாதி வைலக்ஷண்யத்தாலே விளங்குகிற மோக்ஷமும். அபுநராவ்ருத்திலக்ஷணமான வென்றது - தாத்பர்யார்த்தம். அபுநராவ்ருத்திலக்ஷணமான என்றத்தோடே, ஸுகைகதாநமாயென்ற கூட்டுவது. கோலங்கோளுயிர்களும் - கோலம் - ஶரீரம். தேவாதிநாநாஶரீரங்களையுடைய ஆத்மாக்களும். த்விதீயார்த்தத்துக்கு, "கோலம்" என்று - அழகு. ஆத்மாவுக்கு அழகாவது - ஜ்ஞாநாநந்தங்களை ஸ்வரூபமாகவுடையனாகை. இதுக்கெல்லாம் - ப்ரத்யக்ஷபரித்ருஶ்யமான ஜகத்துக்கெல்லாம். ப்ரக்ருதிக்கும், ஸங்கல்பரூபஜ்ஞாநத்துக்கும் அழகேதென்ன, விசித்ரகார்யகரத்வமென்கிறார் - விசித்ர இத்யாதி. "கோலங்கொள்தனிமுதல்" என்றதுக்கு மூன்றாமர்த்தம் - ஸமஸ்தகல்யாணகுண இத்யாதி. ஆக, "தனிமுதல்" என்று - ப்ரக்ருதியாதல், ஸங்கல்பமாதல், ஈஶ்வரனாதல். ப்ரக்ருதியையும் ஸங்கல்பத்தையும் சொன்னபோது, "கோலம்" என்று - விசித்ரகார்யகரத்வத்தைச்சொல்லுகிறது. ஈஶ்வரனைச்சொன்னபோது, கோலமென்று - கல்யாணகுணங்களைச்சொல்லுகிறது. "கோலங்கொள்முகில்வண்ணன்" என்கிறவிடத்தில், கோலமென்று - பசுத்தவடிவும் ஸ்புரிக்கிறமின்னும் நாநாவர்ணமான யுநஸ்ஸுமான அலங்காரத்தைச் சொல்லுகிறது. கோலங்கோளுலகத்தீர்க்கு - கோலுதலை - ஒருப்பாட்டை, உடைய உலகத்தீர்க்

"கேட்கவேணும்" என்று ஒருப்பட்டிருக்கிற உலகத்தீர்க்கு. அன்றிக்கே, மயிரும் உகிரும் பேணி, உடம்புபேணிவந்து அலங்கரித்துநிற்கிற உங்களுக்கு நான் எத்தைச்சொல்லுவது. [கோலம் இத்யாதி]-அழகியமாலையையும் மயிர்முடியையுமுடைய என்மகளுக்குப் பிறந்த அவஸ்த்தைகளை. இவள்மாலையையும் மயிர்முடியையும்கண்டார் படுகிறபாட்டைத் தான் பட்டு அநுகரித்துச் சொல்லுகிறவற்றை நான் எத்தைச்சொல்லுவது. (கo)

## பதினோராம் பாட்டு.

கூந்தல்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும்குலவாயர்கொழுந் துக்குங்கேள்வன்தன்னை, வாய்ந்தவழுதிவளநாடன் மன்னுகுருகூர்ச்சட கோபன்குற்றேவல்செய்து, ஆய்ந்ததமிழ்மாலையாயிரத்துள் இவையுமொரு பத்தும்வல்லார் உலகில், ஏந்துபெருஞ்செல்வத்தராய்த் திருமாலடியார் களைப்பூசிக்கநோற்றார்களே.

ஆ.— (கூந்தல்.) கூந்தல்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் குலவாயர்கொ ழுந்துக்குப் கேள்வன்தன்னை அநுகாரத்தாலே கிட்டின மன்னுகுருகூர்ச்சடகோபன் வாசிககைங்கர்யமாய் ஆராய்ந்துசொன்ன ஆயிரத்தில் இப்பத்தும் வல்லவர்கள் லோகத் தில் எல்லாரும் கொண்டாடும்படியான பெருஞ்செல்வத்தை யுடையராய், ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு ப்ரியமானவ்ருத்தி பண்ணப்பெறுவரென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இப்பத்தும்வல்லவர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அடிமை செய்யப்பெறுவர் என்கிறார்.

[வாய்ந்த] - ஸாக்ஷாத்கரித்த. [ஆய்ந்த]-ஆராய்ந்துசொன்ன. [உலகில்ஏந்து பெருஞ்செல்வத்தராய்] - லோகத்தில் எல்லாருங்கொண்டாடும்படியான பெருஞ்செல் வத்தையுடையராய். [திருமால் இத்யாதி] - இத்திருவாய்மொழியில் ஆழ்வார்பண்ணின அநுகாரம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியமாயிருக்கையாலே இதுகற்றாரும் ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு ப்ரியமானவ்ருத்திபண்ணப்பெறுவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிகற்றார் ஸர்வலோக ஸம்பாவநீயராய்க் கொண்டு பாகவதகிஞ்சித்காரம்பண்ண இட்டுப்பிறந்தார்களென்று ஫லத்தை யருளிச் செய்கிறார்.

கூந்தல் - ("வாசஞ்செய்பூங்குழலாள்" என்கிறபடியே விலக்ஷணமான) மயிர் முடியை யுடையளாய், மலர் - தாமரைப்பூவில்பிறப்பாலே நிரதிசய போக்யபூதையாய், மங்கைக்கும் - (நித்யயௌவநஸ்வபாவையான) லக்ஷ்மிக்கும், மண்மடந்தைக்கும் - (இவ ளோடொத்த ரூபவைலக்ஷண்யத்தையுடைய) ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும், குலம் - அபிஜாத ரான, ஆயர் - கோபாலர்க்கு, கொழுந்துக்கும் - (ஶிரோபூதையான) நப்பின்னைப்பிராட் டிக்கும், கேள்வன்தன்னை - அபிமதனை ஸர்வேஶ்வரனை யுத்தேசித்து, வாய்ந்த - பாவ நாப்ரகர்ஷத்தாலே தத்பாவத்தைக் கிட்டியிருப்பாராய், வழுதிவளநாடன் - வழுதிவளநாட் டுக்கு நிர்வாஹகராய், மன்னு - ஸ்த்திரையான, குருகூர்-திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், குற்றவேல் - அந்தரங்கவ்ருத்தியாக, செய்து - அநுஷ்ட்டித்து, ஆய்ந்த - ஆராய்ந்துசொன்ன, தமிழ் மாலை-தமிழ்த்தொடையான, ஆயிரத்துள்-ஆயிரத் துள்,இவையுமொருபத்தும்-"இவையுமொருபத்தே!" என்னும்படி விலக்ஷணமான இவை பத்தையும், வல்லார் -(பாவவ்ருத்தியோடே) அப்யஸிக்கவல்லவர்கள், உலகில்-லோகத்தி

---

கென்னுதல்; ஒருப்பாடு - உத்யோகம். அலங்காரத்தையுடைய உலகத்தீர்கென்னுதல். கோலம் - அலங்காரம். ஒருப்பட்டிருக்கிற - யத்நப்பட்டிருக்கிற. கோதை - மாலை. கூந்தல் - மயிர்முடி. "கூந்தலுக்கு" - பிறந்தவவஸ்த்தைகளை என்று கூட்டுவது. இதுக்குபாவம் - இவள்மாலையையும் இத்யாதி. கோலங்கொள் இத்யாரப்ய; உலகத்தீர்க்கு - கூந்தலுக்கு - என்சொல்லுகேன் இத் யந்வயம். (கo)

லே, ஏந்து - ப்ரஸா வஹிக்கும்படியான, பெருஞ்செல்வத்தராய் - ஸ்ரீவைஷ்ணவஸம்பத்தை யுடையராய்க்கொண்டு, திருமால்-ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரனுக்கு, அடியார்களை - ஶேஷபூதரான பாகவதர்களை, பூசிக்க - ஆராதிக்கைக்கு, நோற்றார்கள் - பாக்யம் பண்ணினவர்களாவர்கள். ஏய்ந்தவென்று பாடமாய் - பொருந்தினவென்றுமாம். இது - எண் சீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தை யப்யஸிக்கவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்யப்பெறுவ ரென்கிறார்.

[கூந்தல்இத்யாதி] - "விஷ்ணோ: ஸ்ரீ:" என்று-அவனுக்குநிரவதிகஸம்பத்தான பிராட்டிக்கும், அந்தஸம்பத்துக்கு விளைபூமியான ஸ்ரீபூமிப்பிராட்டிக்கும், வல்லமையான நப்பின்னைப்பிராட்டிக்கும் காந்தனானவனை. இத்தால்-ஒரு அவதாரமாத்ரத்தளவன்றிக்கே உபயவிபூதிநாதனான பூர்ணவிஷயத்திலே அநுகரிக்கிறாளென்று தோற்றியிருக்கிறபடி. [வாய்ந்த] - வாய்க்கையாவது - கிட்டுகை. அதாவது - பாவநாப்ரகர்ஷத்தாலே ஸாக்ஷாத்கரிக்கை. [குற்றேவல்செய்து]-அந்தரங்கவ்ருத்திசெய்து. இவர்பாசுரத்தையே அந்தரங்கவ்ருத்தியாகக் கொள்ளுகை. இவர்தாம் வாசிகமானவடிமைக்கவ்வருகு க்ஷமரல்லர். [ஆய்ந்ததமிழ்மாலை] - ஆராய்ந்துசொன்ன தமிழ்த்தொடை. [உலகிலேந்து பெருஞ்செல்வத்தராய்] - இந்தலோகத்தில் எல்லாருங்கொண்டாடும்படியான ஸ்ரீவைஷ்ணவஸ்ரீயையுடையராய் லக்ஷ்மீபதிக்கு அடியாரானவர்களை ஆராதிக்கப்பெறுவர்கள். அவர்களுக்கு ஆராதநமாகிறது - இவர் அநுகரித்த இப்பாசுரத்தைச்சொல்லுகை. "தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்" என்னக்கடவதிறே. இவர் இவ்வநுகாரத்தாலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியகாரானாற்போலே, இது கற்றாரும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியமானவ்ருத்தியைப் பண்ணக்கடவரென்கை.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி யப்யஸிக்கவல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு அடிமைசெய்யப்பெறுவர்க ளேன்கிறார்.

[கூந்தல்மலர்மங்கைக்கும்] - ஸர்வேஶ்வரனுடைய ஐஶ்வர்யத்துக்கும் ஹேதுபூதையாயிருக்கும் பெரியபிராட்டியார். "விஷ்ணோ: ஶ்ரீ:"(விஷ்ணோஶ் ஸ்ரீ:)என்கிறபடியே, ஸர்வேஶ்வரனுடைய ஸம்பத்தாயிருக்கிற பெரியபிராட்டியார். அதுக்கு விளைபூமியாயிருக்கிற ஸ்ரீபூமிப்பிராட்டி. அதினுடைய பலரூபையாயிருக்கும் நப்பின்னைப்பிராட்டி "ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:"(ஸ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி:).[கேள்வன்தன்னை]-இவர்களுக்குப் பதியாயுள்ளவனை. இத்தால் - ஒரு அவதாரமாத்ரமன்றிக்கே, உபயவிபூதிநாதனை பூர்ணவிஷயத்திலே அநுகரிக்கிறாரென்று தோற்றியிருக்கிறபடி. [வாய்ந்த] - வாய்க்கையாவது - கிட்டுகை. கிட்டின. அநுகாரத்தாலே கிட்டினபடியை நினைக்கிறது. [குற்றேவல்செய்து] - ஆழ்வார் அவன் திருவடிகளிலே அந்தரங்கவ்ருத்திகள் பண்ணினபடியாயிற்று இவைதான். வாசி

---

நிகமம்.—கூந்தல் இத்யாதி. "இவையுமோர்பத்தும்வல்லார் - திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்கள்" என்ற பதத்தைக் கடாக்ஷித்து - அவதாரிகை.

அர்த்தாந்தரம் - விஷ்ணோ:ஸ்ரீ: இத்யாதி. பலரூபை - அநுபவரூபை. ஸ்ரீபூமிநீளைகளோடே கூடியிருக்குமதுக்கு ப்ரமாணம் - ஶ்ரியா ஸார்த்தம் இத்யாதி. ஶ்ரியா ஸார்த்தம் என்றது - பூமிநீளைகளுக்கு முபலக்ஷணம்; 'வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ ॥' ... "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீ: அநபாயிநீ । யதா ஸர்வகதோ விஷ்ணு: ததைவேயம் த்விஜோத்தம" இதி ... "(யதேதி) ஸர்வகதோ விஷ்ணு:, யதா யஸ்ஸர்வ:, ... ததா தஸ்ஸர்வாவேதி ... ஸர்வகதத்வஜ்ஞாநாதிஸர்வகல்யாணகுணாதிரேகஸ: ... ஸர்வகத:, ஸர்வஸக்திவஸ்ராஸ், ... தத்த்வ ... ஸர்வகத

கமாக அடிமைசெய்தபடி யாயிற்று. அநுகாரம் அடிமையானபடி எங்ஙனே? என்னில்,— அப்படியாகத் தட்டேன், கோள்ளுகிறவன்கருத்தாலே. அவனுகப்பேயிறே அடிமையாலும் புருஷார்த்தம். “நம்முடைய விஶ்லேஷத்தில் அநுகரித்துதரிக்கவேண்டும்படி ஸம்ஸாரத்திலே இப்படியுண்டாவதே” என்று திருவுள்ளம்போர வுகக்கும், அது அடிமையாய்த் தலைக்கட்டுமித்தனை. [ஆய்ந்ததமிழ்மாலை] - ஆராய்ந்து சோன்ன தமிழ்த்தோடை ஆயிரத்திலும் இப்பத்தை அப்யஸிக்கவல்லவர்கள். [உலகிலேந்துபெருஞ்சேல்வத்தராய்] - இந்தலோகத்திலே எல்லாரும் கோண்டாடும்படி வைஷ்ணவஶ்ரீயையுடையராய். அன்றிக்கே, “நின்னையேதான்வேண்டி நீள்செல்வம் வேண்டாதான்தன்னையேதான்வேண்டும் செல்வம்” என்கிறபடியே, லோகத்திலே முகந்தெழுபானையான நிரவதிகஸம்பத்தை யுடையராய்க்கோண்டு. [திருமாலடியார்களைப் பூசிக்க நோற்றார்களே]- ஶ்ரீமத்புத்ரர்களை ஆராதிக்கப் பெறுவர்கள். ஶ்ரியஃபதியடியாரை ஆராதிக்கையாவது - இவர் அநுகாரத்தாலே ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியகரரானாற்போலே, இது கற்றார்களும் ஶ்ரீவைஷ்ணவர்களுக்கு ப்ரியகரமானவ்ருத்தி பண்ணப்பெறுவரேன்கை. அதாவது - இவர் அநுகரித்த இப்பாசுரத்தைச் சோல்லுகை. “தோண்டர்க்கமுதுண்ணச்சோன்மாலைகள்சோன்னேன்” என்னக்கடவதிறே. (கக)

---

ஸ்ம்ருதேஶ்ச” இதி ஶ்ரீவிஷ்ணுசித்தீயம். “வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ்ஸஹ.” இதி ஶைவே. *ப்ரத்யக்ஷமாகக் கிட்டினாரோ? என்ன* - அநுகாரத்தாலே இத்யாதி. *ஈஶ்வரனைக்கிட்டின படியை இத்யர்த்த:. அந்தரங்கவ்ருத்தியேதென்ன* - வாசிகமாக இத்யாதி. வாசிகமாக அடிமை செய்தபடியாயிற்று - *அநுகார முகத்தாலே வாசிகமாக அடிமைசெய்தபடியாயிற்று. கொள்ளுகிறவன் கருத்தாலே யடிமையாம்ப்ரகாரமேதென்ன* - அவனுகப்பேயிறே இத்யாதி. *இது அவனுக்கு உகப்பானபடியைக் காட்டுகிறார்* - நம்முடைய இத்யாதி. ஏந்து - *எல்லாராலும் கொண்டாடப்படுகிற வென்னுதல், முகந்தெழுபானைபோலே உத்தரோத்தரம் அபிவ்ருத்தமாய் வருகிற வென்னுதல். முகந்தெழுபானையாவது - ஜலத்தைமுகந்து மேலேயெழுகிற ஏற்றப்பானை. “ஏய்ந்த” என்று பாடமானாலும் - அர்த்தமிதுவே. ஏந்துகை - அங்கீகரிக்கையாய், கொண்டாடுகை. “செல்வம்” என்று - வைஷ்ணவஶ்ரீயாதல், த்ருஷ்டைஶ்வர்யமாதல். இப்பாசுரத்தைச் சொன்னால் அவர்களுக்கு உகப்பாமோ? என்ன* - தோண்டர்க்கு இத்யாதி. நின்னையேதான்வேண்டி இத்யாதி - *உன்னையே வேண்டி நிரவதிகஸம்பத்தைக் காற்கடைக்கொண்டவன் தன்னையே அவஸரப்ரதீக்ஷமாய்ப் பார்த்திருக்கும் ஐஶ்வர்யம்போலே இத்யர்த்த:. நின்னையேதானென்று - முழுச்சொல்லாய், உன்னையேயென்றபடி. வேண்டாதான்தன்னையேதானென்றதும் - முழுச்சொல்லு. வேண்டாதவன்தன்னையேயென்றபடி.* பெருமாள்திருமொழி, *அஞ்சாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு.* (கக)

---

*த்ரவிடோபநிஷத்ஸங்கதி:*—ஶோகாக்ராந்தம் பரிஜிஹீர்ஷு: பூர்வாவிர்பாவாநாம் ஸமுசிதகுணாந் ஸாநுகாரப்ரஸங்கை:। தஸ்ய ப்ராதுர்பவதிரபிமுகாவஸிதாஸ்யேதி தத்த்வாவஹாவிதஶாநாம் நிராஹ ஷஷ்டே ॥

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:*—ஸ்வஸ்ய ப்ரக்யாதஜந்ம ப்ராஸ்தாவிகஸ்வாவதாரகலிதகுண ஸம்பந்நாத்மீயவ்ருத்தைஸ்ஸகநஹிததயா காஷ்ட ஸமுஸ்ஸ்யாதஶ்வ ஸௌஶீல்யாஶாரணார்த்தைஸ்ஸஜநஹிததயா ப்ரஹ்ம ஜன்மாவஸ்தாவதாரைர் ஸர்வேஷ்டதாநோத்ஸாஹி வ்யாஹார நிஶ்சஹேது ஸ்ரீஸ்வாமி யோஸ்ஸ்த்ர மஹாஹ்வி ॥

திருவாய்மொழி நூற்றந்தாதி.

*கடல்ஞாலத்தீசனைமுன்காணமல்நோக்கே*
*உடனவனுகரிக்கலுற்றுத்—திடமாக*
*வாய்ந்தவனுய்த்தான்பேசும்மாறனுரையதனை*
*ஆய்ந்துரைப்பாராட்செய்யநோற்றார்.*

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.*

# ஏழாந்திருவாய்மொழி—நோற்றநோன்பு: ப்ரவேசம்.

ஆ.—(நோற்றநோன்பு.) இப்படி எம்பெருமானுடைய ஸ்வரூபரூபசேஷ்டித ஸர்வைஶ்வர்யோக்திகளை அநுகரித்தத்தினாலும் ஓர் ஆலம்பமலபமாநரான ஆழ்வார், "தன்னை விஶ்லேஷித்து நான் இப்பாடுபடாநிற்கச்செய்தே என்னை எம்பெருமான் உபேக்ஷித்திருக்கிறது, ஸ்வஸம்ஶ்லேஷோபாயரூப கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்களில்லாமையாகாதே" என்று பார்த்து;

ஒ.—ஏழாந்திருவாய்மொழியில், அநுகரித்து தரிக்கப்பார்த்தவிடத்திலும் அதுவும் மிகவும்ஸ்மாரகமாய்க்கொண்டு வ்யஸநஹேதுவானதஶையிலும் எம்பெருமான் வந்துதோற்றி அருளாவிட்டவாறே, 'இவர்தாமே ஜ்ஞாநாத்யுபகரணங்களையுடையர்; அந்தஉபாயங்கள் தலைக்கட்டினவாறே நம்மைவந்து ப்ராபிக்கிறார்' என்று எம்பெருமான் விரைதல்கெட்டிருக்கிறானாகக்கொண்டு எம்பெருமானுக்கு நம்முடையஸ்திதியை விண்ணப்பஞ்செய்ய,நம்முடைய அபேக்ஷிதங்களைச்செய்தருளுமென்றுபார்த்தருளி,கடற்கரையிலே ஸ்ரீஸுக்ரீவமஹாராஜர்தொடக்கமான முதலிகளோடும் இளையபெருமாளோடும் ஸர்வரக்ஷணதீக்ஷிதனாய்க்கொண்டு இருந்தருளின சக்ரவர்த்திதிருமகனை "ராவணோ நாம துர்வ்ருத்த:" என்றுதொடங்கி - தன்னுடையஸ்வரூபத்தை அறிவித்து அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு ஸ்ரீவிபீஷணாழ்வான் ஶரணம்புக்காற்போலே, தன்னுடையாரெல்லாரும்ஸேவைபண்ண, பிராட்டிமாரோடே வீற்றிருந்தருளின வானமாமலையை ஶரணம் புகுகிறார்.

ப.—ஏழாந்திருவாய்மொழியில், கீழில்திருவாய்மொழில் அநுகாரம் ப்ராப்தியோடு தலைக்கட்டமாட்டாமையாலே ஆர்த்தியே அதிஶயித்து, பாவநையால் வந்தஅநுகாரத்தாலே அல்பம் ஆஶ்வஸ்தராய் ப்ரபோதம்பிறந்து, இவ்வளவில்; தன்னைலபிக்கைக்குத் தானே உபாயமான இவன் முகங்காட்டாதொழிந்தது நம்முடைய அநுகாரார்த்தமான பாவநையை உபாஸநமாக நினைத்து, "அதினுடைய சரமதஶையிலே வருகிறோம்" என்று விளம்பித்தானாக அதிஶங்கைபண்ணி, "நம்ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டுக்கொண்டு அபேக்ஷிக்க அவன் ஆபிமுக்யம்பண்ணும்" என்று அறுதியிட்டு; அகிஞ்சநரும் ஆசைப்படும்படியான அவனுடைய ஆஶ்ரிதஸம்ஶ்லேஷ ஸ்வபாவத்தையும், அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், அதிஶயிதபரத்வப்ரகாஶகங்களான அஸாதாரணாகாரங்களையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணப்ரகாரத்தையும், ஆஶ்ரிதவிரோதிகளை அந்தர்ப்பேதம்பண்ணும் ஆகாரத்தையும், ஆஶ்ரிதோபகாரத்தால்வந்த ஔஜ்ஜ்வல்யத்தையும், அகிலஸத்தாஹேதுத்வத்தையும், ஆஶ்ரிதவிரோதி அவனிட்டவழக்கென்னுமத்தையும், விரோதிநிவர்த்தகத்வத்தால்வரும் விஶேஷௌஜ்ஜ்வல்யத்தையும், விரோதிநிவர்த்தகமான உபாயப்ரகாஶகத்வத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்விஶிஷ்டனானநீ, உன்னை ப்ராபிக்கைக்கு ஹேதுவான உபாயாந்தரங்களில் அகிஞ்சநனாய் ஆர்த்தனான எனக்கு உன்திருவடிகளே உபாயமாக உபகரித்த இதற்கு என்னப்ரத்யுபகாரம் பண்ணுவேன்" என்று அலமரும்படி தமக்குப்பிறந்த ஆஶ்வாஸவிஶேஷத்தை, சிரீவரமங்கையிலே ஆஸந்நமாக எழுந்தருளியிருக்கிற வானமாமலையைநோக்கி விண்ணப்பஞ்செய்கிறார்.

**இ.**—ஏழாந்திருவாய்மொழியில், கீழ் - அநுகரித்து யரிக்கப்பார்த்தவிடத்திலும், அதுவும் ஸ்மாரகமாய்க்கொண்டு மிகவும்வ்யஸநஹேதுவாய், இவ்வளவிலும் அவன் வந்துமுகங்காட்டக்காணுமையாலே, "நம்பக்கல் தன்னையநுபவிக்கைக்குப் பரிகரமான ஜ்ஞாநஸக்திகளைத் தன்னைப்பெறுகைக்கு ஸாயநங்களாகநினைத்து; நம் ஆற்ருமையை, உபாயாந்தரநிஷ்டர் அநுஷ்டானதஸையில் உபாயத்தினுடைய துஷ்கரதையாலே படுவதொரு க்லேஸமுண்டு, அதுவாகவித்தைநினைத்து. இவ்வுபாயம் தலைக்கட்டினவாறே நம்மை ப்ராபிக்கிருர்" என்று அவன் ஆறியிருந்தானுகக்கொண்டு அவனுக்குத் தன் நிலையை விண்ணப்பம்செய்யவே தம் அபேக்ஷிதம் கிட்டும் என்றுபார்த்தருளி; தன்பரிகரமடங்கஸேவிக்கப் பிராட்டிமாரோடேவீற்றிருந்தருளின வானமாமலையை, தன்வெறுமையைமுன்னிட்டுக்கொண்டு ஸரணம்புகுகிருர்.

**ஈடு.**—கீழில்திருவாய்மொழியில் - அநுகரித்து யரிக்கப்பார்த்தார், "அநுகரித்து யரிக்கவேண்டும்படியான கலக்கம் பிறந்தவிடத்திலும் வந்து முகங்காட்டிற்றிலன், இதுக்குஅடியேன்? தன்பக்கல் ஆஸாலேஸமுடையார்க்குத் தானேவந்து முகங்காட்டி ரக்ஷிக்கக்கடவ ஸர்வேஸ்வரன் நம்பக்கல்ஆறியிருக்கைக்கு நிபந்தநமேன்?" என்று பார்த்தார்; "இனி இங்ஙனேயாமித்தனை; நம்ப்ரக்ருதி ஸ்வபாவத்தாலே, தன்னுலல்லது செல்லாதபடியாயிருப்பதோர் ஆற்ருமை யுண்டாயிருந்தது; நமக்குஅத்தை 'ஸ்வரூபம்' என்று அறியாதே 'உபாயம்' என்று இருந்தானுகவேணும்" என்று பார்த்து, தங்கையில் ஒன்று இல்லாமையை யறிவித்து அவன் திருவடிகளிலே ஸரணம் புகுகிருர். கடற்கரையில் வெளியிலே, மஹாராஜருள்ளிட்ட முதலிகளோடும், "லக்ஷ்மணம்புண்யலக்ஷணம்" (லக்ஷ்மணம்புண்யலக்ஷணம்) என்கிற தம்பியோடுங்கூட எழுந்தருளியிருக்க, ஸ்ரீவிபீஷணுழ்வான் "ராவணோநாமதுர்வ்ருத்த:" (ராவணோநாமதுர்வ்ருத்த:)என்று ஸ்வநிகர்

**ப்ர.**—யுத்தகாண்டே [கஅ] ஸ்லோகே, "ஸ நராயிவதேவேந்த்ரஸ்ஸர்வலோகநமஸ்க்ருத: ॥ ௬ ॥ ராமம் ஸத்யபராக்ரமம் லக்ஷ்மணம் புண்யலக்ஷணம் । ஜகாம காகுத்ஸ்தாவக்யம் ஸத்வரோதகே: ॥ எ ॥".

தத்ரைவ [கள] "ராவணோநாமதுர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஸ்வர: । தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதிஸ்ருத: ॥ கo ॥ தேநஸீதா ஜநஸ்தாநாத்ருதா ஹத்வா ஜடாயுஷம் । ருத்தா ச விவஸா தீநா ராக்ஷஸீபிஸ்ஸுரக்ஷிதா ॥ கக ॥".

நோற்றநோன்பு ப்ரவேஸ,-ஸங்கத்யர்த்தமாக வ்ருத்தவர்திஷ்யமாணகதநம் - கீழில் இத்யாதி. கீழே - அநுகரித்து யரிக்கப்பார்த்தவர், இங்கே "நோற்றநோன்பிலேன்" என்று-உபாயஸூந்யதையைச்சொல்லுகைக்கடியேதென்ன; ப்ரஸங்கமருளிச்செய்கிருர் - அநுகரித்து இத்யாதி. ஆற்ருமையுண்டாயிருந்ததென்றது "ஆற்றகிற்கின்றிலேன்" என்றத்தைப்பற்ற உபாயமென்றிருந்தானுகவேணுமென்றது-ஆற்ருமையாவது - ஸ்நேஹமாய், ஸ்நேஹபூர்வமநுத்யாநம் - பக்தியாகையாலே, இது உபாயமாகவேணுமென்றிருந்தா னென்றபடி. உபாயமென்றிருந்தானுகவேணும் - என்றதுக்கு நியாமகம் - வ்யவஸ்தாஸ்யஹி வ்யதிஷேய:, ஆகையாலே "நோன்பிலேன்" என்றுசொன்னதுவேயென்றுகருத்து. த்ருஷ்டாந்தகதநமுகேந விஸ்தரஸங்கதி - கடற்கரையில் இத்யாதி. "ஸர்வலோகநமஸ்க்ருத" என்றத்தைப்பற்ற-மஹாராஜருள்ளிட்டமுதலிகளோ

ஷத்தை முன்னிட்டுக்கொண்டுவந்து பெருமாள்திருவடிகளிலே விழுந்தாற்போலே, இவரும்; அவன் கடற்கரையிலே தனியிருந்த இழவுதீர, பிராட்டிமாரோடும் நித்யபரிகரத்தோடுங்கூட சிரீவரமங்கலநகரிலே திருவநந்தாழ்வான்மேலே எழுந்தருளியிருக்கிற வானமாமலைதிருவடிகளிலே; வேரற்றமரம்போலே புகலற்றுவிழுந்து ஶரணம்புகுகிறார். இவர் தாம் என்கொண்டு அவனை வடிம்பிடப்பார்க்கிறது? என்னில்,— அவன் ரக்ஷ்யவிஷயாபேக்ஷியாயிருந்தான், நமக்கு ரக்ஷகாபேக்ஷை யுண்டாயிருந்தது; ஆனபின்பு இதுக்குமேற்பட ஸம்பந்தமுண்டோ?

---

# முதற்பாட்டு.

---

**நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன் ஆகிலுமினியுன்னைவிட்**
**டொன்று**
**மாற்றகிற்கின்றிலேன் அரவினணையம்மானே!**
**சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர்**
**வீற்றிருந்தவெந்தாய்! உனக்குமிகையல்லேனங்கே.**

*ஆ.—எனக்கு இவையொன்றும் அல்லையேயாகிலும், நிரவதிகபோக்யபூதனாயிருந்த உன்னைவிட்டு ஒருபடியாலும் நான் தரிக்கமாட்டாமையாலும், அடியேனை விஷயீகரிக்கைக்காக நீ சிரீவரமங்கலநகரிலே வந்து புகுந்தருளுகையாலும், உனக்கு அடிமையான இவ்வாத்மாவை நீ போகிடில் இழவு உன்னதாகையாலும் அடியேனைப் பொகட்டருளவொண்ணாது; ஆதலால் அடியேனை விஷயீகரித்தருளவேணு மென்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், கர்மாத்யுபாயரஹிதராய் ரக்ஷகாபேக்ஷரான ஆழ்வார், பூர்ணனாய் ரக்ஷ்யவிஷயார்த்தியாயுள்ள எம்பெருமானைக்கண்டு தம்முடைய அபேக்ஷிதம் பெறுகைக்கு உத்யோகிக்கிறார்.*

*[நோற்ற என்றுதொடங்கி]-ஶாஸ்த்ரவிஹிதமாம்படி அநுஷ்டிதமான கர்மமாதல், தாத்ருஶஜ்ஞாநமாதல் உடையேனல்லேன். இவை உண்டானால் உண்டாகக்கடவ பக்தியில்லையென்னுமிது கிம்புநர்ந்யாயஸித்தம். பக்தியில்லையாக்கிற்று - அத்தை உபாயமாக நினைத்திராமை. [இனி என்று தொடங்கி]-அத்யந்தபோக்யனான உன்னைவிட்டு இனி ஒரு க்ஷணமும் தரிக்கமாட்டுகிறிலேன். [அரவினணை என்று தொடங்கி]-அநந்தஶாயியான*

---

டும் என்றது. நித்யபரிகரத்தோடுமென்றது - "கருளப்புட்கொடி" என்றத்தைப்பற்ற. திருவநந்தாழ்வான்மேலேயென்றது - "அரவினணை" என்றத்தைப்பற்ற. "ஆறெனக்கு" இத்யாதியைப் பற்ற - புகலற்று இத்யாதி. என்கொண்டு - என்னஸம்பந்தங்கொண்டு. வடிம்பிடப்பார்க்கிறது - த்வரித்து நிர்ப்பந்திக்கிறது. ரக்ஷ்யவிஷயாபேக்ஷியாயிருந்தானென்றது - "சிரீவரமங்கலநகர்வீற்றிருந்த" என்றத்தைப்பற்ற. ரக்ஷகாபேக்ஷை யுண்டாயிருந்ததென்றது-"ஆற்றகிற்கின்றிலேன்" என்றத்தைப்பற்ற. "ஸர்வலோகஶரண்யாய ராகவாய மஹாத்மநே| நிவேதயத மாம் க்ஷிப்ரம் விபீஷணமுபஸ்திதம்" இதி [illegible]. ததைவ, "ராவணோ நாம துர்வ்ருத்தோ ராக்ஷஸோ ராக்ஷஸேஶ்வரः| தஸ்யாஹமநுஜோ ப்ராதா விபீஷண இதி ஶ்ருதः".

ஸர்வேஶ்வரனுயிருந்துவைத்துச் சேறுனிலங்களில் செந்நெற்கள்நடுவே தாமரை அலரா நின்றுள்ள ஸிரீவரமங்கலநகரிலே உன்வேண்டற்பாடுதோற்றும்படி இருந்தருளின இருப்பைக்காட்டி என்னை அடிமைகொண்டவனே! ரக்ஷ்யவிஷயம் தேட்டமாய்க்கொண்டிருக்கிற உன்னுடைய நீர்மைக்குப் புறம்புஅல்லேன். [உனக்கு மிகையல்லேன் அங்கே]-உன்னுடைய திருவடிகளில் அடிமையொழிய ஒருக்ஷணமும் தரிக்கும்ப்ரக்ருதியல்லேன். இவ்வாத்மா அடிமைசெய்து க்ருதார்த்தமானுல் இத்தால்வந்த ப்ரீதியும் தேவரீருக்கே யென்றுமாம்.

ப.—முதற்பாட்டில், உன்னை லபிக்கைக்கு ஶாஸ்த்ரோக்தங்களான உபாயங்கள் எனக்கின்றியிருக்கச்செய்தே, உன்னையொழியச் செல்லாதபடி அநந்யகதியான நான், ஆஶ்ரிதஸம்ஶ்லேஷத்தாலே உபகாரகனுய் அவஸரப்ரதீக்ஷனுன உனக்குப் புறம் போவென்கிறுர்.

நோற்ற-ஃபலவ்யாப்தமாம்படி அநுஷ்டிதமான,நோன்பு-கர்மயோகம்,இலேன் உடையேனல்லேன்; (ஆகையாலே), நுண்-ஸூக்ஷ்மரூபமான, அறிவு-ஜீவபரவிஷயஜ்ஞாந யோகத்தை, இலேன் - உடையேனல்லேன்; (ஆகையாலே), ஆகிலும் - உபயஸாத்யமான பக்தியின்றிக்கேயிருக்கச்செய்தேயும், இனி-உன்னுடைய குணநுஸந்தாநம் பிறந்தபின்பு, உன்னை-(ரக்ஷணைகஶீலனுன) உன்னை, விட்டு - ஒழிய, ஒன்றும் - ஒருக்ஷணமும், ஆற்ற-ஆற்ற, கிற்கின்றிலேன்-மாட்டுகிறிலேன்; அரவு-ஆஶ்ரிதனுன ஶேஷனை, அணை - அணையாகக்கொண்டு அவனுக்குத் திருமேனியை உபகரித்த, அம்மானே - அஸாதாரணஸ்வாமியாய், சேறு-சேற்றுநிலத்து, தாமரை - தாமரையானது, செந்நெலூடு-செந்நெலோடே கலந்து, மலர்-மலரும்படி தர்ஶநீயமான, ஸிரீவரமங்கலநகர்-ஸிரீவரமங்கலநகரிலே, வீற்று - ஆஶ்ரிதஸம்ரக்ஷணத்தில் அவஸரப்ரதீக்ஷை தோன்றும்படி வ்யாவ்ருத்தமான, இருந்த-இருப்பாலே, எந்தாய் - எனக்கு உபகாரகனுனவனே! அங்கு - அங்கு நீ இருக்கிற இருப்பில், உனக்கு - ரக்ஷணஶீலனுன உனக்கு, மிகை - ரக்ஷ்யவஹிர்பூதன், அல்லேன - அல்லேன்.

இ.—முதற்பாட்டில், எனக்குப் பேற்றுக்குடலாயிருப்பதொரு கைம்முதலில்லை, இல்லாமையாலே ரக்ஷாபேக்ஷையுண்டு; பூர்ணரான தேவர் ரக்ஷ்யவிஷயார்த்தியாயிருந்தீர், ஆகையாலே தேவர் என் அபேக்ஷிதம் செய்தருளவேணுமென்கிறுர்.

[நோற்றநோன்பிலேன்] - நோன்பிலேன் என்னுதே, நோற்ற நோன்பிலேனென்கிறது - ஃபலவ்யாப்தமாம்படி யநுஷ்டிதமா யிருப்பதொரு கர்மமில்லையென்கிறது. என் ஆற்றுமையாலே சிலவுண்டாணுலும், சக்ரவர்த்தியுடைய புத்ரகாமேஷ்டிபோலேயாதல், ஸ்ரீவஸுதேவருடைய அநந்தவ்ரதம்போலேயாதல் ஃபலவ்யாப்தமா யிருப்பதொரு தர்மமில்லை. "நயஜ்ஞநிஷ்டோஸ்மி" என்கிறவிடத்தில் - தர்மமில்லை என்னுதே, தர்மநிஷ்டையில்லை என்றுற்போலே [நுண்ணறிவிலேன்]-அறிவிலேனென்னுதே, நுண்ணறிவிலேனென்றது-ஸ்வரூபஜ்ஞாநபூர்வகமாக பரஸ்வரூபத்தை ஸாக்ஷாத்காரபர்யந்தமாக அறியும் அறிவை யுடையேனல்லேன். கர்மமில்லை யென்றபோதே - தத்ஸாத்யமான ஜ்ஞாநமில்லையென்னுமிடம் அர்த்தஸித்தமாயிருக்க, "ஜ்ஞாநமில்லை" என்றதென்? என்னில்,— பூர்வஜந்மத்திலே கர்மத்தையநுஷ்டித்து, தத்ஃபலமான ஜ்ஞாநம்

இந்தஜந்மத்திலே நைஸர்கிகமாகப் பிறக்கலாமிறே; அத்தாலே சொல்லிற்று. அன்றிக்கே, புராணங்களிலே தனித்தனியே கர்மஜ்ஞாநங்களை ஸாதநமாகச்சொல்லுகையாலே சொல்லிற்றாகவுமாம். பக்தியில்லையென்னுதொழிவானென்? என்னில்,— பக்தியாகிறது - ஜ்ஞாநவிசேஷமாகையாலே, ஜ்ஞாநத்தைச்சொன்னபோதே - அதுவும் சொல்லிற்றாயிற்று. இவையில்லையாகில், முதலில்லாதார் அத்தாலேவரும் பலத்தை இழக்குமித்தனையன்றோ? என்னில்,— [ஆகிலும்]-இங்ஙனேயிருந்ததேயாகிலும். [உன்னைவிட்டொன்றும் ஆற்றகிற்கின்றிலேன்] - ஸாதநாநுஷ்டாநத்தைப்பண்ணி பலம்தாழ்ந்தாரைப்போலே பதறுகின்றேன். ஆற்றாமையன்றோ-பக்தியாகிறது, பக்தியில்லை என்பானென்? என்னில்,- கர்மஜ்ஞாநஸஹக்ருதையாய் சாஸ்த்ரஸித்தையானநூற்படித்த பக்தியில்லை; அவனையொழியச்செல்லாமையுண்டென்கிறார். அத்தைத் தாம் ஸாதநமாகநினைத்திராரிறே. [இனி] - என்பக்கலிலே முதலுண்டானவன்று, அது தலைக்கட்டுந்தனையும் ஆறியிருக்கலாம்; அதின்றிக்கே, நீயே உபாயமானபின்பு விளம்பஹேதுவுண்டாய் ஆறியிருக்கிறேனோ. [இனி] - உன் சரணங்களிலே அவகாஹித்தபின்பு ஒருக்ஷணமும் ஆறியிருக்க க்ஷமனாகிறிலேன். உன்பக்கல் உபாயபாவம் அஸித்தமாய் ஆறியிருக்கிறேனோ, என்பக்கல் ஆகிஞ்சந்யம் அஸித்தமாய் ஆறியிருக்கிறேனோ. என்ஸத்தைக்கு நான்ஹேதுவுமன்று, உபாயத்திலும் எனக்கு அதிகாரமுண்டு. ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத ஸ்வரூபஜ்ஞாநமும், புருஷார்த்தத்தில் ருசியுமே ஸிதாம்சத்தில்வேண்டுவது; ஆனபின்பு ஆறியிருப்போமோவெனகை. [அறவினை இத்யாதி]-இதுக்குக்கீழ்-தம்முடைய வெறுமைசொல்லிற்று; இதுக்குமேல் - அவனுடைய உபாயபாவம் சொல்லுகிறது. அவனைப் பார்த்தாலும் இவர்க்கு இழக்கவேண்டா, தம்முடைய அதிகாரத்தைப்பார்த்தாலும் இழக்கவேண்டா. திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரனைவைத்து, விஸத்ருசமான ஸம்ஸாரத்திலே, ஒருஹேதுவின்றிக்கேயிருக்கப் புகுந்திருக்கிறது என்னைவிஷயீகரிக்கைக்காகவன்றோ. அரவை யணையாகவுடைய ஸர்வேஶ்வரனே! [சேற்றுத்தாமரை] - வரள்தாமரையுண்டாகையாலே - சேற்றுத்தாமரையென்று விசேஷிக்கிறார். செங்நெற்களூடேயலர்ந்த தாமரைகள் செங்நெலுக்குங்கூட நிழற்செய்யாநிற்குமென்கை. வானமாமலைக்கு ஸத்ருசமாயிருந்துள்ள போக்யதையைச் சொல்லுகிறது. [சிரீவரமங்கலநகர்] - பரமபதத்திற்காட்டில் தனக்கு நகரமாக விரும்பி வர்த்திக்கிற தேசம். ஸம்ஸாரிகளுடைய ரக்ஷணத்துக்காக நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [வீற்றிருந்த] - அஜஹத்ஸ்வபாவனுய்வருகையாலே தன் ஐஶ்வர்யத்தாலுள்ள வேறுபாடெல்லாம் தோற்றவிருக்கிறபடி. நீ பரமபதத்திலேயிருந்தாயாகில் நான் ஆறியிரேனோ. உன் பூர்த்தியிற் குறைவுண்டாகில்தான் ஆறியிரேனோ. [எந்தாய்] - அவ்விருப்பு ஸர்வஸாதாரணமாயிருக்கச்செய்தே, இவர் தம்மையெடுக்கைக்காக என்றிருக்கிறார். [உனக்குமிகையல்லேனங்கே] - அங்கே வீற்றிருந்த உனக்குமிகையல்லேன். ரக்ஷ்யவிஷயம் தேட்டமான உனக்குப் புறம்பல்லேன. உன்திருவடிகளில் அடிமையொழிய யரிக்கும் ப்ரக்ருதியல்லேன்; “தவதாஸ்யஸுகைகஸங்கிநாம்” என்கிறபடியே இத்தலையில்பேறால்வந்த உகப்பும் தேவர்க்கே யென்றுமாம். ப்ரீதி உன்பக்கலிலேயானால் இழவும் உன்பக்கலிலேயாகவேண்டாவோ.

ஈடு.—முதற்பாட்டு. எனக்குப் பேற்றுக்கு உடலாயிருப்பதொரு கைம்முதலில்லை, இல்லாமையாலே ரக்ஷகாபேக்ஷையுண்டு; பரிபூர்ணரான தேவர் ரக்ஷ்யவிஷயார்த்தியாய் இருந்தீர், ஆகையாலே தேவரே என் அபேக்ஷை செய்தருளவேணு மென்கிறார்.

[நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்]-"(நதர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நபக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே)" (நதர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நபக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே) என்கிறார். "(நதர்மநிஷ்டோஸ்மி)" (நதர்மநிஷ்டோஸ்மி)-நாட்டார் "இவன் சில செய்யாநின்றான்" என்றிருக்கைக்கும், அதுகண்டு நான் "நமக்குச் சில உண்டாகாதே" என்று ப்ரமிக்கைக்கும், நீ கைவிடுகைக்கும் வேண்டுவதுண்டு; ஃபலத்தோடே வ்யாப்தமாயிருப்பதொன்றில்லை. "(நசாத்மவேதீ)" (நசாத்மவேதீ) - தாச்சீல்யந்தோற்ற இருப்பன், எனக்கு அதுதானுமில்லை. *(ஜ்ஞாநஜ்ஞாநயோர் அந்யதரம்)மிறே, ஆத்மயாதா

---

ப்ர.—(நோற்றநோன்பு இத்யாதி) ஸ்தோத்ரே, யாமுநாசார்யை:, "(நதர்மநிஷ்டோஸ்மி நசாத்மவேதீ நபக்திமாம்ஸ்த்வச்சரணாரவிந்தே | அகிஞ்சநோऽநந்யகதிஶ்ஶரண்ய த்வத்பாதமூலம் ஶரணம் ப்ரபத்யே ||)".

ஸ்ரீவிஷ்ணுபுராணே ஷஷ்டேம்ஶே, [ரு] "(ஸஞ்ஜாயதே யேந ததஸ்ததோஷம் ஶுத்தம் பரம் நிர்மலமேகரூபம் | ஸந்த்ருஶ்யதே வாப்யதிகம்யதே வா தஜ்ஜ்ஞாநமஜ்ஞாநமதோऽந்யதுக்தம் ||)"ருஎ||".

---

முதற்பாட்டு-நோற்ற இத்யாதி. "நோற்றநோன்பிலேன்"என்றத்தைப்பற்ற - எனக்குப் பேற்றுக்கு இத்யாதி. ரக்ஷகாபேக்ஷையுண்டென்றது-"ஆற்றகிற்கின்றிலேன்" என்றத்தைப்பற்ற. ரக்ஷ்யவிஷயார்த்தியாயிருந்தீரென்றது - "சிரீவரமங்கலநகர்வீற்றிருந்த" என்றத்தைப்பற்ற. என் அபேக்ஷைசெய்தருள வேணுமென்றது-மேலிற்பாட்டில் "அருளாய்" என்றத்தைப்பற்ற.

இப்படிசொன்னபேருண்டோ?என்ன-(நதர்ம)இத்யாதி.(ஸ்தோத்ரே).என்கிறாரென்றது-"பேற்றுக்கடியான கர்மஜ்ஞாநங்களில்லை" என்று ஆளவந்தாரருளிச்செய்தாப்போலே இவரும் அருளிச்செய்கிறாரென்றபடி. ஆழ்வார்கருத்தை யநுவிதாநம்பண்ணி ஆளவந்தார் அருளிச்செய்தாரேயாகிலும், புத்திவைஶத்யார்த்தம், இவர் அருளிச்செய்தாப்போலே அவர் அருளிச்செய்கிறாரென்று வ்யாக்யாதாவுக்குச்சொல்லலாமாகையாலே விரோதமில்லை. (தர்மவாநஸ்மி) என்னாதே "(நதர்மநிஷ்டோஸ்மி)" என்றதுக்கு ஹாவம் - நாட்டார் இத்யாதி. இத்தால்-பலஸாதநத்தில் உபக்ரமித்தமாத்ரமொழிய, ஸாதநத்தையநுஷ்டித்து,"பலம்கைவரும்"என்று நிஶ்சயிக்கத்தக்கதில்லையென்றபடி. "(ஆத்மவேதீ ந)" என்றத்துக்கு-ஆத்மவேதந ஸ்வபாவனல்லவென்று பொருளாய், அத்தையெடுத்துக்கழிக்கிறபோதே-அதிலே கிஞ்சிதந்வயமுண்டென்று தோற்றுகையாலே, தாச்சீல்யந்தோற்றவிருப்பன் என்கிறார். இவ்வாத்மவேதநத்தில் கிஞ்சிதந்வயமுண்டென்றதுதான் போராதோ என்கிற ஶங்கையிலே; அல்பஜ்ஞாநம் லௌகிகஜ்ஞாநத்தோடே கூடினதாகையாலே அஜ்ஞாநகல்பமாயிருக்குமென்றதுக்கு ப்ரமாணங்காட்டாநின்றுகொண்டு, "தாச்சீல்யந்தோற்றவிருப்பன் எனக்கு அதுதானுமில்லை" என்றத்தை விவரிக்கிறார் - (தஜ்ஜ்ஞாநம்) இத்யாதி வாக்யத்வயத்தாலே. தாச்சீல்யம் - தத்ஸ்வபாவம். தாச்சீல்யந்தோற்றவிருப்பன் - ஜ்ஞாநஸ்வபாவனுன ஆகாரந்தோற்றவிருப்பன். அதுதானுமில்லை - ஆத்மஜ்ஞாநஶீலதையுமில்லை. (தஜ்ஜ்ஞாந)

த்மயஜ்ஞாந பூர்வகமாயிருக்கும் ஈஶ்வரஜ்ஞாநம் எனக்கில்லை. "நஹக்தி" (நபக்திமாந்)-ஹக்தியில்லை என்று சொல்லவேண்டாவிறே. கீழில் அவை இரண்டும் உண்டானால் வருமதிறேயது [நோற்றநோன்பிலேன்] - நோன்பிலேன் என்னவமையாதோ, "நோற்ற நோன்பிலேன்" என்னவேணுமோ? என்னில்,—ஸாதநங்களைச் சமைய அநுஷ்டித்து, ஃபலத்தோடே வ்யாப்தமாகப் பார்த்திருக்கலாவது ஒன்றில்லை என்கைக்காக. சக்ரவர்த்தி ஸ்ரீவஸுதேவரைப்போலே பேற்றுக்கடியாக நினைத்திருக்கலாவதொன்றில்லை. [நுண்ணறிவிலேன்] - "நதர்மநிஷ்டோஸ்மி" (நதர்மநிஷ்டோஸ்மி) என்கிறவிடத்தில், தர்மமில்லை என்னாதே தர்மநிஷ்டனாகப் பெறுகிறிலேன் என்றாற்போலே, அறிவிலேன் என்னாதே, நுண்ணறிவிலேன் என்கிறது. ஸ்வஸ்வரூபஜ்ஞாநபூர்வகமாகப் பரஸ்வரூபத்தை ஸாக்ஷாத்காரபர்யந்தமாக அறியும்அறிவையுடையேனல்லேன். "நஹக்திமாந்" (நபக்திமாந்) என்றும், $ "நின்கணும்பத்தனல்லேன்" என்றும் எடுத்துக்கழித்தமாத்ரம் இங்கும் எடுத்துக்கழியாதொழிவானேன்? என்னில்,—"உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய" (உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய) என்கிறபடியே, அவையிரண்டுமுண்டானால் வருமதிறே ஹக்தி; அவை இல்லாமையாலே எடுத்துக்கழிக்கவும் வேண்டாவிறே. ஆனால் இவ்வோபாதி, "கர்மமில்லை" என்றபோதே - ஜ்ஞாநமில்லையாகாதோ, அது எடுத்துக் கழிக்கவேண்டுவானேன்? என்னில்,— பூர்வஜந்மத்திலே கர்மம் தலைக்கட்டின வளவிலே ஶரீரவிஶ்லேஷம் பிறந்தால் அநந்தர ஜந்மத்திலே ஜ்ஞாநமுண்டாகக்கடவது. ஹக்தியும் அப்படியானாலோ? என்னில்,—ஜ்ஞாநகர்மங்களிரண்டும் உண்டானால் ஹக்தி கூடியல்லது நில்லாது, ஆனபின்பு இங்கு அப்படியாகவொண்ணாது. "உன்னைவிட்டொன்றுமாற்றகிற்கின்றிலேன்" என்று

---

ஜ்ஞாநதி ஸ்வாத்ம-ஷேஷம் பூர்வமேவலிகிதம் மஹாப்ரவேஶாதௌ. கீழில் அவையிரண்டுமுண்டானால் வருமதிறேயது என்றதுக்கு அநந்தரத்திலே, 'அவையிரண்டுமில்லாமையாலே ஹக்தியுமில்லையென்கிறார்'என்று கூட்டுவது. அப்படி பார்த்திருந்தபேருண்டோவென்ன-சக்ரவர்த்தி இத்யாதி. "நுண்ணறிவிலேன்"என்றதுக்கு, "நவேதவேதீ" என்றத்தை எடாதே, "நதர்மநிஷ்டோஸ்மி" என்றத்தை த்ருஷ்டாந்தமாகவெடுத்தது - இதிலே "நிஷ்டையில்லை" என்னுமது ஶாப்தமாய் வ்யக்தமாயிருக்கையாலேயென்றுகருத்து. "நுண்ணறிவு" என்றதுக்கு ஹாவம் - ஸ்வஸ்வரூபஜ்ஞாந இத்யாதி. நின்கணும்பத்தனல்லேன் - தேவரீரிடத்திலும் ஹக்தியையுடையேனல்லேன். $ திருமாலை, இருபத்தஞ்சாம்பாட்டு, "குளித்து" இத்யாதி. உபயபரிகர்மிதஸ்வாந்தஸ்ய-கர்மஜ்ஞாநங்களாலே அலங்க்ருதமான மநஸ்ஸையுடையவனுக்கு. பூர்வஜந்மவிஹித கர்மஜ்ஞாநங்களாலே அநந்தரஜந்மத்திலே ஹக்தியுமுண்டாகலாமே, ஆனபின்பு அவையுடையவனுக்கே ஹக்திநிஷேதமும் பண்ணலாமேயென்று ஶங்கித்துப்பரிஹரிக்கிறார் - ஹக்தியும்அப்படி இத்யாதி. ஹக்திகூடியல்லது நில்லாதென்றது - "ஹக்திரூஜ்ஞாநவிஶேஷ:" என்றும், "ஞானங்கனிந்தநலம்" என்றும் சொல்லுகிறபடியே, ஜ்ஞாநத்தினுடைய பரிபாகம் ஹக்தியாகையாலே ஜ்ஞாநம் ஹக்திவ்யாப்தமாயேயிருக்குமென்றபடி. ஹக்தியும்அப்படியானாலோவென்னில் - பூர்வஜந்மத்திலே கர்மஜ்ஞாநங்களையநுஷ்டித்து, இந்தஜந்மத்திலே ஹக்தியுண்டானாலோவென்னில். ஜிஜ்ஞாஸுப்ரஶ்நாநுவாதம் - உன்னைவிட்டு இத்யாதி. "ஸ்வதர்மஜ்ஞாநவைராக்யஸாத்யபக்த்யேககோசர:" [illegible]

இவர் சொல்லுகிற இது ஹக்தியன்றோ, "ஸ்நேஹபூர்வமநுத்யாநம்பக்தி:"(ஸ்நேஹ பூர்வமநுத்யாநம்பக்தி: இறே; ஆனபின்பு இது உபாயமானுலோ? என்னில்,—அங்ஙனுேண்ணுதிறே, கர்மஜ்ஞாந ஸஹக்ருதாந்த:கரணனுக்குப் பிறக்கும் பரஹக்தியிறே ஶாஸ்த்ரங்களில் ஸாதநமாசச் சொல்லிப்போருகிறது; இது அங்ஙனன்றிக்கே, அவனநுக்ரஹமடியாக வந்ததாகையாலே இது ஸ்வரூபமா மித்தனை. அங்ஙனன்றிக்கே, புராணங்களிலே தனித்தனியே கர்மஜ்ஞாநங்களை ஸாதநமாகச் சொல்லுகையாலே சொல்லிற்ருகவுமாம். இவையில்லையாகில் முதலில்லாதார் பலிசை இழக்குமத்தனையன்றோ? என்ன,— [ஆகிலும்] - இங்ஙனே இருந்ததேயாகிலும். "ஆற்றகிற்கின்றிலேன்" என்கிற இத்தை - "உபாயம்" என்று இருந்தாராகில், [ஆகிலும்] என்கைக்கு விஷயமில்லை. ஆனால், நீர் இந்நாள்வரையும் ஆறியிருந்தீரே? என்ன;— [இனி] - உன்னையும் அறியாதே என்னையும் அறியாதே இருந்தவன்று இழக்கவமையாதோ, உன் நிறைவும் என் குறைவும் அறிந்த இன்றும் இழக்கவேணுமோ? ஒருவன்கையிலே சோறுமுண்டாய் அவன் இடவோனுமானுல், ஒருவனுக்குச்சோறுமின்றிக்கே பசியனுமானுல் இழக்கவேணுமோ? [இனி]-என்கையிலேயும் ஒன்றுண்டாய் அது சமையுந்தனையும் ஆறியிருக்கிறேனே. ஸத்தையை உபாயத்திலே சிலவேழுதிக் கைவிடப்பார்க்கில் பார்க்கு மித்தனை. அநாதி காலம் மெய்மறந்து இழந்தகாலம் போராதோ, நான் மெய்யாக இசைந்த இன்றும் இழக்க

---

வாஸநாஸௌ ஸ்நேஹபூர்வமநுத்யாநம்" என்றது அநுஸந்தேயம். உத்தரம் - அங்ஙனுேண்ணுது இத்யாதி. "கர்மஜ்ஞாநாங்கிகையாயிருக்கும்ஹக்தி" என்கிறவேதாந்த ப்ரக்ரியையை யுபஜீவித்து அருளிச்செய்தார் - கீழ்; "ஜ்ஞாநஸக்த்யுஜ்ஜிதம் கச்சிஜ்ஜநகாதிஷு ஸம்ஶ்ருதே | கச்சித்ஸக்த்யுஜ்ஜிதம் ஜ்ஞாநம் வ்யாஸேண ஸாதிஷு | கச்சிஜ்ஜ்ஞாநஸக்திப்யாம் ப்ரஹ்லாதவ்யாஸ ஸ்ரயா" என்று - கர்மஜ்ஞாநாதிகளை ப்ரத்யேகம் ஸாதநமாகச்சொல்லுகிற புராணப்ரக்ரியையை யுபஜீவித்து அருளிச்செய்கிறுர் - அங்ஙனன்றிக்கேபுராணங்களிலே இத்யாதி. இந்தப்பக்ஷத்தில்,கர்மஜ்ஞாநராஹித்யம் சொன்னது-ஹக்திராஹித்யத்துக்கு முபலக்ஷணம். "ஸாதநஸாபேக்ஷஸாத்யஸாதநம்" என்றத்தையுட்கொண்டு அருளிச்செய்கிறுர் - முதலில்லாதார் இத்யாதி. பலிசு - வட்டி. இங்ஙனேயிருந்ததேயாகிலும் - நிஸ்ஸாதநனுயிருந்தேனேயாகிலும். கர்மஜ்ஞாநாங்கஹக்தியில்லாவிட்டாலும், "ஆற்றகிற்கின்றிலேன்" என்கிற ஹகவத்ப்ரஸாதமடியாகவந்த ஹக்திதானே ஸாதநமானுலோ? என்ன - ஆற்றகிற்கின்றிலேனென்கிறவித்தை இத்யாதி. விஷயமில்லையென்றது - "ஆகிலும்" என்கிறபதம் வ்யர்த்தமாமென்றபடி. அதாவது - "உபாயாந்தரங்கள் தமக்கில்லை" என்று அருளிச்செய்யக்கூடாதென்றபடி. கீழிற்பதங்களையும் "அரவினணையம்மானே"என்றத்தையும் கடாக்ஷித்து "இனி" என்றதுக்கு ஹாவம் - உன்னையும் இத்யாதி. விவரணம் - உன்னிறைவும் இத்யாதி. அபூர்ணனுக்குப் பூர்ணன்கார்யம்செய்யவேணுமோ? என்ன; வேணுமென்னுமத்தை லௌகிகத்ருஷ்டாந்தத்திலே காட்டுகிறுர் - ஒருவன் இத்யாதி. "நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்" என்கிற பதமாத்ரத்தைக்கடாக்ஷித்து, "இனி" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - என்கையிலேயும் இத்யாதி. "ஒன்றுமில்லை" என்கிறதென், "ஆற்றகிற்கின்றிலேன்" என்கிறஹக்தி உபாயமானுலோ என்று ஈஶ்வராபிப்ராயமாக அருளிச்செய்கிறுர் - ஸத்தையை இத்யாதி. "அரவினணையம்மானே" என்றபதத்துக்கு - அநந்தஶாயித்வம் ஸர்வாதிகலக்ஷணமாகையாலே, பூர்த்திசொல்லுகிறதென்றும்; "அரவினணை" என்று ஶேஷஶாயியாகையாலே பரமஹோக்யுமாய், "அம்மானே" என்று - ஶரீரித்வேந ஶேஷியுமானவனேயென்றும் இரண்டர்த்தம். இந்த இரண்டாமர்த்தத்தைக்கடாக்ஷித்து "இனி" என்றதுக்கு மூன்றும் ஹாவம் - அநாதிகாலம் இத்யாதி. மெய்மறந்தென்றது - சாடு, ஶரீரஶரீரிஹாவஸம்பந்

வேணுமோ? [உன்னைவிட்டு]-நீயும் என்னைப்போலே இருந்தாயாகில் நான் ஆறியிரேனோ, நானும் சிறிது செய்துவரவேண்டும்படியோ நீ இருக்கிறது. [உன்னைவிட்டு] - ப்ராணனை விட்டு ப்ரக்ருதி தரிக்கவற்றோ. [ஒன்றுமாற்றகிற்கின்றிலேன்] - உன்னுடைய ஸ்வரூப ஜ்ஞாநம் எனக்கு தாரணத்துக்கு உடலாயிருக்கிறதில்லை. “தத்தஸ்ய ஸத்ருஶம் பவேத்” (தத்தஸ்யஸத்ருஶம்பவேத்) என்று ஆறியிருக்கைக்கும் ஒருவழியுண்டிறே அவளுக்கு, கடலை அணைசெய்யவும் ராவணனை அழியச்செய்யவும் வேண்டாவிறே இவர்க்கு. [அரவினணையம்மானே] - கீழ் - தம்முடைய அபூர்த்தி சொல்லிற்று; மேல் - அவனுடைய பூர்த்தி சொல்லுகிறது. [அரவினணை] - உன்னுடைய போகப்ராவண்யம் என்னால் ஆறியிருக்கலாயிருக்கிறதோ? நீ பரமபோகியாயிருக்க, என்னால் ஆறியிருக்கப்போமோ? அநந்தஶாயித்வம் - ஸர்வாதிகத்வத்துக்கு லக்ஷணமிறே. அரவை அணையாகவுடைய ஸர்வேஶ்வரனே! இன்-சாரியை. [சேற்றுத்தாமரை இத்யாதி] - வெறும் அரவினணையம்மானாகில் நான் ஆறியிருக்கலாயிற்றே. [சேற்றுத்தாமரை] - பரமபதத்தையும் விஸ்மரிக்கும்படியான தேசம். சேறுகளிலே தாமரைகளானவை செந்நெலூடே, அவற்றுக்கு அணுக்கனிட்டாற்போலே அலராநிற்கும். ராஜாக்கள் எடுத்துவிட்டவிடத்தே பரிகரமும் புகுமித்தனையிறே. [சிரீவரமங்கலநகர்]-“தேவாநாம் பூரயோத்யா” (தேவாநாம்பூரயோத்யா) என்னுமாபோலே. பரமபதத்திற்காட்டில் தனக்கு நகரமாக விரும்பி வர்த்திக்கிறதேசம். ஸம்ஸாரிகளுடைய ரக்ஷணத்துக்காக நித்யவாஸம்பண்ணுகிற தேசம். [வீற்றிருந்த] - “அங்கே இருக்கக்கடவ நமக்கு இவ்விருப்பு இருக்கவேண்டாநின்றதே” என்னும் வெறுப்போடன்றிக்கே, தட்டியிலிருந்தவன் முடிசூடினாற்போலே தன் வேறுபாடு தோற்ற விருக்கை. [எந்தாய்] - அங்குத்தையிருப்பு நித்யஸூரிகளுக்கு ஆனாற்போலே, இவ்விருப்பு எனக்காகவன்றோ இருக்கிறது. சிரீவரமங்கலநகரான - அங்கே -

---

*தத்தைமறந்தென்று ஸ்வபாவார்த்தம்; உடம்புதெரியாதே மோஹித்தென்று சாடு. மெய்யாக - ஶரீரதயா ஶேஷமாகவென்றும், ஸத்யமாகவென்றும் அர்த்தத்வயம். “அரவினணையம்மானே” என்றபதத்தின் - பூர்ணனென்ற முந்தினவர்த்தத்துக்கு அநுகுணமாக, “உன்னை” என்றதுக்கும் - பூர்ணனானவுன்னை யென்று அர்த்தம் விவக்ஷித்து பாவம் - நீயும் என்னைப்போலே இத்யாதி வாக்யத்வயம். பரமபோகியுமாய் ஶேஷியுமானவனென்ற இரண்டாமர்த்தத்துக்கு அநுகுணமாக, போக்யமானவுன்னை யென்று அர்த்தாந்தரம் - ப்ராணனை இத்யாதி. “ஒன்றும்” என்று விஶேஷித்ததுக்கு பாவம் - உன்னுடைய இத்யாதி. பிராட்டிக்கு ஸ்வரூபஜ்ஞாநம் தரிக்கைக்குடலாயிற்றில்லையோ? என்ன - தத்தஸ்ய இத்யாதி. வழியாவது - க்ரமேண விரோதியைப் போக்கவேண்டுகை. த்வரையுண்டாயிருக்கச்செய்தே அவளுக்கு ஆறியிருக்கைக்கும், இவர்க்கு ஆறியிருக்கவொண்ணாமைக்கும் ஹேதுவேதென்ன - கடலை இத்யாதி. “அரவினணையம்மானே” என்றதுக்கு - போக்யதையைப்பற்ற பாவாந்தரம் - உன்னுடைய இத்யாதி. விவரணம் - நீபரமபோகி இத்யாதி. “அரவினணையம்மானே” என்றத்தாலே - பூர்த்தியைச்சொல்லும்படி யெங்ஙனே? என்ன-அநந்தஶாயித்வம் இத்யாதி. அவ்வூரில் தாமரையையும் செந்நெலையும் வர்ணிக்கிறதுக்கு பாவம் - பரமபதத்தையும் இத்யாதி. வர்ணித்ததுக்குத் தாத்பர்யாந்தரம்-ராஜாக்கள் இத்யாதி. அதாவது - ஸர்வேஶ்வரன்வந்து அவதரிக்கையாலே, நித்யஸூரிகளும் தத்ரூபேண வந்து அவதரிக்கையாலே அவனுபாதியுத்தேஶ்யமாய் வர்ணிக்கிறாரென்றபடி. “நகர்” என்றதுக்கு பாவம்-தேவாநாம் இத்யாதி. தட்டி-சிறைச்சாலை. முந்தினவர்த்தத்துக்கு, எந்தையாய் ஸந்நிஹிதனானவுனக்கு மிகையல்லேன் - உன்னுடைய ரக்ஷணத்துக்குப் புறம்பல்லேனென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, உனக்குப் புறம்பாய்த்தோற்றிற்றாகில், அல்லேன் - தரியேனென்றபடி.*

வீற்றிருந்த எந்தாய்! [உனக்கு மிகையல்லேன்] - நித்யவிபூதியிலே நெடுங்கைநீட்டாக இருந்தாயாகில் நான் பூரித்திருக்கலாயிற்றே, எனக்காகவந்தவிடத்தே நான் இழக்கவோ. [அங்கே - வீற்றிருந்த - உனக்குமிகையல்லேன்]-ரக்ஷ்யவிஷயம் தேட்டமான உனக்குப் புறம்பல்லேன். அன்றிக்கே, [உனக்கு மிகையல்லேன்] - "வைதர்ம்யம்நேஹவித்யதே" (வைதர்ம்யம்நேஹவித்யதே) என்று மற்றைப்போதைக்கு நானிரேன். உனக்கு மிகையானபோது அல்லேனுய்விடுவேன். இத்தால் நமக்கு லாபமேன்? என்ன:— [அங்கே] - "தவஸார்த்த ப்ரகல்பதே" (தவசார்த்த ப்ரகல்பதே) என்று; இத்தால் வரும் ப்ரயோஜநமும் தேவரதே. ஸ்தநந்த்ய ப்ரஜையைப் பால்குடித்துவயிறுநிறையக்கண்டு உகக்கும் தாயைப்போலே, சேஷபூதன் ஸ்வரூபம்பெற்று அடிமைசெய்கை சேஷிக்குப் பேறிறே. (க)



## இரண்டாம் பாட்டு.

**அங்குற்றேனல்லேனிங்குற்றேனல்லேன் உன்னைக்காணுமவாவில்**
**வீழ்ந்து நான் எங்குற்றேனுமல்லேன் இலங்கைசேற்றவம்மானே!**
**திங்கள்சேர்மணிமாடநீடு சிரீவரமங்கலநகருறை**
**சங்குசக்கரத்தாய் தமியேனுக்கருளாயே.**

ஆ.—(அங்குற்றேனல்லேன்.) உன் திருவடிமலர்களைப்பெற்றேனல்லேன், பெறுகைக்கீடான உபாயம் உடையேனல்லேன், உன்னைக்காணுமவாவில் வீழ்ந்து நான் இனிமேல் ஒருபாயம் அநுஷ்ட்டிக்க க்ஷமனல்லேன். ஆகிலும் அசோகவநிகையில் பிராட்டியுடைய ப்ரதிபந்தகத்தை அன்றுபோக்கினுப்போலே, அடியேனுடைய ப்ரதிபந்தகத்தையும் நீயே நிர்ஹேதுகமாகப்போக்கி, தமியேனுக்கு அருளாயென்கிறுர்.

ஓ.—இரண்டாம்பாட்டில், திருவடிகளை நான்பெறுமிடத்தில் ப்ரதிபந்தகமுண்டென்னில், அத்தையும் நீயே போக்கி உன்க்ருபையாலே ரக்ஷித்தருளவேணும் என்கிறுர்.

[அங்குற்றேன் என்றுதொடங்கி] - ஸாதநமநுஷ்ட்டித்து முக்திப்ராப்தனுயிருக்கிறேனல்லேன்; ஸாதநாநுஷ்ட்டாநம்பண்ணுகிறேனல்லேன், உன்னைக்காணவேணுமென்னும் ஆசையாலே பலஹீநனுய்த் தளர்ந்து இனி உபாயாநுஷ்ட்டாநக்ஷமனுமல்

நெடுங்கை நீட்டாக - அதிதூரமாக. "உனக்குமிகையானல். தரியேன்" என்னுமத்தை த்ருஷ்டாந்த பூர்வகமாகக் காட்டுகிறுர் - வைதர்ம்ய இத்யாதி. இத்தால் - மிகையாய்த்தோற்ருதே அடிமைகொண்டவித்தால். "அங்கே" என்றதுக்கு அர்த்தாந்தரம்-தவஸ இத்யாதி. சகாரஃ-அவதாரணே. "இவரை யடிமைகொண்டால் அவன்பேருயிருக்கும்" என்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாகக்காட்டுகிறுர்-ஸ்தநந்த்யஇத்யாதி. "க்ஷீராஷேசநஸாரம் வைதர்ம்யம் நேஹவித்யதே| க்ருதார்த்தோஹம் பவிஷ்யாமி தவஸார்த்த ப்ரகல்பதே ||உஉ||" உத்யோகபர்வணி [ருக] ராமம்ப்ரதி லக்ஷ்மணஃ. க்ரமேணுந்வயஃ. (க)

லேன். அங்குவரமாட்டேன், என் அஹிநிவேஶத்தாலே இங்குநிற்கமாட்டேன், பிறரோடு பொருந்துகிறதில்லை யென்றுமாம். சந்த்ரனுக்குத்தோள்தீண்டியான மணிமாடங்களை யுடைத்தான சிரீவரமங்கலமாகிற நகரத்திலே நித்யஸந்நிஹிதனாய் ப்ரதிபந்தகநிராஸத்துக்கு ஈடான ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையு முடையையாயிருக்கிற நீ ராவணனைப்போக்கினாற்போலே என்ப்ரதிபந்தகங்களையும் போக்கி உன்னைப்பெறாதே தனிப்பட்டுக்கிடக்கிற எனக்கு.

ப.— அந்தரம், என்னை அங்கீகரிக்கைக்கு ப்ரதிபந்தகமான அநிஷ்டமுண்டானாலும், அதுக்கு நிவர்த்தகன் நீயாகையாலே, எனக்கு க்ருபைபண்ணி யருளவேணு மென்கிறார்.

அங்குற்றேன் – நிஷ்பந்நோபாயனாய்க்கொண்டு நீ யிருக்கிற ப்ராப்யஸ்தலத்தில் புகுந்தவன், அல்லேன்–அல்லேன்;("உபாயஶூந்யர் ஆறியிருக்கையன்றோவுள்ளது" என்று நிரபேக்ஷனாய்), இங்குற்றேன்-இருந்தவிடத்திலிருக்கிறேன், அல்லேன்-அல்லேன்;உன்னை-(நிரதிஶயபோக்யனான) உன்னை, காணும்–அநுபவிக்கவேணுமென்கிற, அவாவில்-அபி நிவேஶத்திலே, வீழ்ந்து–அகப்பட்டு, நான்–(ஆற்றாமையையுடைய)நான், எங்குற்றேனும்–அந்யபரரான லௌகிகர் நிலையிலொன்றிலும், அல்லேன்–அல்லேன்; இலங்கை–(ஆஶ்ரித விஷத்தில் ப்ரதிபந்தகமான லங்கையை, செற்ற–அழியச்செய்து ப்ராபித்துக்கொண்ட, அம்மானே-அஸாதாரணஸ்வாமியாய், (பிற்பட்டார்க்கு உதவுகைக்காக), திங்கள்-சந்த்ரனோடு, சேர்–சேரும்படி, மணி–மாணிக்யமயமான, மாடம்–மாடங்கள், நீடு–வளர்கிற, சிரீவரமங்கலநகர் – சிரீவரமங்கலநகரிலே, உறை–நித்யவாஸம்பண்ணுமவனாய், சங்குசக்கரத்தாய்-ஆஶ்ரிதவிரோதி நிரஸநகரமாயும் போக்யமாயுமுள்ள ஆயுதவிசேஷங்களையுடையவனே, தமியேனுக்கு–உன்னையொழியத் துணையில்லாத எனக்கு, அருளாய்–(உன் உபகாரஶீலமான) க்ருபையைப்பண்ணி யருளவேணும்.

இ.—இரண்டாம்பாட்டில், "ஆற்றகிற்கின்றிலேன்" என்கிற ஆற்றாமை போருமோ, ப்ரதிபந்தக முண்டே?என்னில்; அதையும், பிராட்டியுடைய விரோதியைப் போக்கினாப்போலே தேவரே போக்கி க்ருபையாலே ரக்ஷித்தருளவேணுமென்கிறார்.

[அங்குற்றேனல்லேன் இத்யாதி.]-ஸாதநமநுஷ்டித்து முக்தப்ராயனாயிருக்கிறேனல்லேன்; ஸாதநாநுஷ்டாநம்பண்ணுமவர்களிலே யொருவனாயிருக்கிறேனல்லேன். மேலும் ஸாதநாநுஷ்டாநம்பண்ண வொண்ணாதபடி ஸௌந்தர்யாதிகளிலே ஈடுபட்டு, உன்னைக்காணவேணுமென்னும் ஆசையாலே பலஹீநனாய்த்தளர்ந்து இனி யுபாயாநுஷ்டாநக்ஷமனுமல்லேன். இது பூர்வர்கள்நிர்வாஹம். அதவா, நீயிருந்தவிடத்தே வந்துகிட்டி உன்னையநுபவிக்கிறவனல்லேன், உன்பக்கலில்நிரபேக்ஷராயிருக்கிற ஸம்ஸாரிகளிலே யொருவனாயிருக்கிறேனல்லேன்,உன்னையொழிய தரித்திருக்கிற ஸம்ஸாரிகளோடு பொருத்தமுடையேனல்லேன். அங்குவரமாட்டேன், அபிநிவேஶத்தாலே இங்கு நிற்கமாட்டேன், பிறரோடு பொருத்தமுடையேனல்லே னென்றுமாம். [இலங்கைசெற்றவம்மானே] - இவ்வளவிற் செய்யவடுப்பதென்? என்ன,—"த்வத்ஸம்ஶ்ரயணஸம்ஸ்லேஷ" என்றிருந்தவள்விஷயத்தில் பண்ணினத்தை என்விஷயத்திலே பண்ணவேணும். [அம்மானே] - ஸர்வஸாதாரணன் ஒருவ்யக்தியிலே செய்தது எல்லார்க்கும் பொதுவன்றோ?

பிராட்டியோடு ஸம்ஸாரியோடு வாசியுண்டோ ப்ராப்தியில், "ஆயிகிஞ்சதஷ்ரவஷெ" என்று இன்று ஆஶ்ரயித்தவன்பக்கல் பக்ஷபாதம் மிக்கன்றோ விருப்பது. பிராட்டி, லங்கையையழித்தல் ராவணனையழித்தல் செய்யிலன்றோ என்விரோயிநிவ்ருத்தியிலே எனக்கு ப்ராப்தியுள்ளது. "நகவாக...ஜஸா" என்றாளிறே. அவதாரத்திற் பிற்பாடரானீரேயென்ன,—[திங்கள்சேர் இத்யாதி] - சந்த்ரபதத்திலேசெல்ல வோங்கின மணிமயமான மாடங்களையுடைத்தான சிரீவரமங்கலநகரிலே, பிற்பாடர்க்கும் இழக்கவேண்டாதபடி நித்யஸந்நிஹிதனாயிருக்கிறவனே. சந்த்ரஸூர்யர்களும் வந்து இளைப்பாறும்தேச மென்கை. ஸந்நிதியுண்டானாலும் ஸஹகாரிகள் வேண்டாவோ? என்ன,—[சங்குசக்கரத்தாய்] - *எப்போதும் கைகழலாநேமியானாயன்றோ இருக்கிறது. "வாவஜாநய" என்னவேண்டாவே. ஸக்திக்கு கர்மஜ்ஞாநஸஹகாரம்போலேயாயிற்று இவனுக்கு திவ்யாயுதங்கள். உபாயம் புஷ்கலமானாலும் அதிகாரிஸம்பத்தியும் வேண்டாவோ? என்ன,—[தமியேனுக்கு] - என்பக்கல் ஸத்தாதிரேகியிருப்பதொன்றுமில்லை யென்னுதல், ஆற்றாமையோடே ஒருதுணையின்றிக்கேயிருக்கிற எனக்கு என்னுதல். செய்யவேண்டுவதென்? என்ன,—[அருளாயே] - ருசிக்குப்பண்ணின க்ருஷியை விரோயிநிவ்ருத்திக்கும் ப்ராப்திக்கும் பண்ணுமித்தனை யென்கிறார்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. "ஆற்றேன்" என்றால் பெற்றதேன், ப்ரதிபந்தகங்கள் இன்னமுண்டே? என்ன;—பிராட்டிக்கு வந்த ப்ரதிபந்தகங்களைப்போக்கினாப்போலே அடியேனுடைய விரோயியையும் போக்கியருளவேணு மென்கிறார்.

[அங்குற்றேனல்லேன்] - முக்தர் இஸ்ஸம்ஸாரத்திலே யுலாவினாப்போலே ஸித்தஸாயநனாய்த் திரிகிறேனல்லேன். [இங்குற்றேனல்லேன்] - இங்கேயிருந்து ஸாயநாநுஷ்டாநம்பண்ணுமவர்களிலே யொருவனாயிருக்கிறேனல்லேன். அன்றிக்கே, [அங்குற்றேனல்லேன்] - "நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்கிறபடியே, உன்னை யநுபவித்து ஸம்ஸாரத்தை நினையாதிருக்கிறேனல்லேன். [இங்குற்றேனல்லேன்] - "மறந்தேனுன்னைமுன்னம்" என்கிறபடியே, உன்னைமறந்து "அவர்தரும் கலவியேகருதி" என்கிறபடியே அதுவே ப்ராப்யமாக இருக்கிறேனல்லேனென்னுதல்.

---

இரண்டாம்பாட்டு.—அங்குற்றேன் இத்யாதி. "இலங்கைசெற்றவம்மானே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை-ஆற்றேன் என்றால் இத்யாதி.

உபாஸகரிலே, ஆரப்தயோகரென்றும் ஆரூடயோகரென்றும் த்விவிதராயிருப்பர்கள்; அவர்களில் ஆரூடயோகர்படி எனக்கில்லையென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - முக்தர் இத்யாதி. ஸித்தஸாயநனென்றது-ஸாயநமெல்லாம் அநுஷ்டித்து, ஃபலாநுபவத்துக்காக அங்கே போகவிருக்கிற ஆரூடயோகனாயென்றபடி. ஆரப்தயோகர்படியை விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - இங்கேயிருந்து இத்யாதி. ஸாயநாநுஷ்டாநம்பண்ணுமவர்களிலே யென்றது - ஸாயநாநுஷ்டாநம்பண்ண ஆரம்பித்த ஆரப்தயோகரிலே யென்றபடி. ஆக, இப்பதத்வயத்தால் - "நோற்றநோன்பிலேன்நுண்ணறிவிலேன்" என்று சொன்ன உபாயஶூந்யதையை முகபேதேந அநுபாஷிக்கிறாரென்றும்; த்விதீயயோஜனைக்கு இப்பதத்வயத்தாலும் - "உன்னைவிட்டொன்று மாற்றகிற்கின்றிலேன்" என்கிறத்தை முகபேதேந அநுபாஷிக்கிறாரென்றும் கண்டுகொள்வது. மறந்தேனுன்னைமுன்னம் - ஸ்பஷ்டோர்த்தஃ. அவர்தரும்கலவியேகருதி - ஸ்த்ரீகள் தருகிற கலவியையே மநோரதித்து. திருமொழி, "வாடினேன்" இத்யாதி. அதுவே - இதரவிஷயமே. இதர

என்றிருப்பார்க்கன்று, லோகத்துக்காக. "[illegible]". அத்விதீயனாய்ப் பழையனானவன். "தாய், தமப்பன்" என்றுதோற்றி மணற்கொட்டகம்போலே யழிந்து போகாதே, அழியாத தாயும்தமப்பனும். "எம்மானுமெம்மனையுமென்னைப்பெற்றொழிந் ததற்பின் அம்மானுமம்மனையும் அடியேனுக்காகிநின்ற நன்மானவொண்சுடர்" என்னக் கடவதிறே. [முழுவேழுலகுமுண்டாய்] - ஆபத்துவந்தவாறே வயிற்றிலேவைத்து நோக் கும் தாயைப்போலே நோக்கினவனே. இன்று அகற்றநினைத்தால், ஸத்தையைநோக்கிப் போந்ததென்? என்கை. [செந்தொழிலவர்] - தொழிலுக்குச் செவ்வையாவது,—ப்ரயோ ஜநாந்தர வ்ருத்தியுமின்றிக்கே, ஸாதநவ்ருத்தியுமின்றிக்கே ஸ்வயம்ப்ரயோஜநமாயிரு க்கை. [வேதவேள்வியறா] - வேதகோஷமும் வைதிகக்ரியாகோலாஹலமும் மாறாதேசெல் லுகை. [அந்தமில்புகழாய்] - பரமபதத்தில் ஸர்வபிபோலே புகழ், இங்கேவந்தபின்பா யிற்று புகழ் அந்தமின்றிக்கே யொழிந்தது. "[illegible]". பரமபதத்தைவிட்டுவந்து இங்கேயார்ஜித்தபுகழை ஒருவ்யக்திக்காக இழக்கிறதென்னென்கை. [அடியேனையகற்றேலே] - "வரவேணும்" என்கிற நிலையும் போய், அகற்றாதொழியவேணுமென்கிறார். இதினுடைய ரக்ஷணத்தில் உன்னையொழிய ப்ராப்தருண்டாய்த்தான் அகற்றுகிறாயோ.?

ஈடு.—ஏழாம்பாட்டு. "அடியேன்தொழவந்தருளே" என்கிறசொல்லோடே வரக்காணாமையாலே, "உபேக்ஷித்தானே" என்று அஞ்சி; என்னையகற்றாதொழியவேணு மென்கிறார்.

'வந்தருளி' இத்யாதிக்கு - "பட்டர், ஸ்ரீபுஷ்பயாக மணித்தானவாறே நஞ்சீய ரைப் பலகாலும் இயல்கேட்டருளுவர்; ஒருகோடையிலே திருவீதியிலே நீரைவிட்டு எழுந் தருளியிருந்து இப்பாட்டை இயல்சொல்லும், என்று ஜீயரையருளிச்செய்து; தாம் இத்தை யநுஸந்தித்திருந்து அநந்தரத்தே தாமும் இப்பாட்டை இயல்சொல்லி, 'யமநியமாதிக்ரமத் தாலே த்யேயவஸ்துவை மநநம்பண்ணிப் புறம்புள்ள பராக்கையறுத்து அநுஸந்திக்கப் புக்காலும் சுக்கான்பரல்போலேயிருக்கக்கடவ நெஞ்சுகள் பதஞ்செய்யும்படி; தார்மிகரா யிருப்பார் இவை சில ஈரச்சொற்களைப் போகட்டுப்போவதே!' என்றருளிச்செய்தார்; நஞ் சீயர் இவ்வார்த்தை யுருத்தோறும் அருளிச்செய்வர்" என்றருளிச்செய்வர்.

---

ப்ர.—(யமநியமாதிக்ரமத்தாலே த்யேயவஸ்துவை மநநம்பண்ணி) - யமநியமா திகளாவன,—யமநியமாஸந ப்ராணாயாம ப்ரத்யாஹாரதாரணா த்யாநஸமாதிகள். இதில், யமமாவது - இதரங்களிலோடுகிற இந்த்ரியங்களை மடைமாற்றுகைக்காக வ்ரத

---

ஏழாம்பாட்டு.—வந்தருளி இத்யாதி. கீழே, "வரவேணும்" என்று ப்ரார்த்தித்தவர், முகங்காட்டாதவனைச் சொல்லுமாபோலே "அகற்றேலே" என்பானென்? என்ன - அடியேன் தொழ இத்யாதி.

"வந்தருளி" என்று - ஈடுபாடுதோன்ற அருளிச்செய்ததுக்கு ஸம்வாதம் - பட்டர் இத் யாதி. பட்டர் என்றதுக்கு - அருளிச்செய்தார் என்றத்தோடே யந்வயம். ஸந்நிதியிலே உபந் யாஸோபயுக்தமான பாசுரங்களைக் கூட்டிக்கொள்ளுகைக்காகக் கேட்டருளுவரென்றபடி. இத்தை - இந்தபாசுரத்தை. சுக்கான்பரல் - சுக்கான்பருக்கை. பதஞ்செய்கை - ம்ருதுவாக் குகை. தார்மிகர் - ஆழ்வார்கள். ஈரச்சொற்கள் - ஆர்த்ரஸ்வபாவமானசொற்கள்.

[வந்தருளி] - நான் அபேக்ஷியாதிருக்க வந்தருளி. த்வீபாந்தரவஸ்துக்களிரண்டிறே ஸங்கதமாகிறது; பரமபதநிலயனானவனும், ஸம்ஸாரத்தை இருப்பிடமாகவுடையவரும், இவ்விருவருமிறே கூடுகிறார்கள். உத்தேச்யவஸ்து இருந்தவிடத்தேற இவன்தான் போகக்கடவனாயிருக்க, அதுபெறாவிட்டால் இருவரும் பாதிப்பாதிவழிதான் வரப்பெற்றதோ. வந்தருளியென்று – நெஞ்சுளுக்கிச் சொல்லுகிறாரிறே. ஆப்பான்திருவழுந்தூ

---

ரப்ரஹ்மசர்யாஹிம்ஸாஸ்தேயாபரிக்ரஹஸத்யங்களை ஸேவிக்கை. இதில், ப்ரஹ்மசர்யமாவது - காமுகனன்றிக்கே, சாஸ்த்ரம்சொல்லுகிறபடியே சுசியாய் ஸ்நாநம்பண்ணின ஸ்வதார்யைபக்கலிலே நிரதனாகை. அஹிம்ஸையாவது - த்ரிவிதப்ரவ்ருத்தியாலும் ஒருவர்க்குத் தீங்குசெய்யாதொழிகை. அஸ்தேயமாவது - எம்பெருமானுக்கு ராஜமகேந்த்ரனான ஆத்மாவைக் களவுகாணாமை. அபரிக்ரஹமாவது - ஸம்ஸாரத்திலே "தனக்கொன்று வேணும்" என்று கோலாமை. ஸத்யமாவது - எல்லார்க்கும் ப்ரியமுமாய் ஹிதமுமாய் ஹிதமுமாயிருக்கும் வார்த்தை சொல்லுகை. இனி, நியமமாவது - இந்த்ரியங்கள் தன்வசமாகைக்காக ஸ்வாத்யாயசௌசஸந்தோஷதபோப்ரஹ்மப்ரணிதாநங்களை யப்யஸிக்கை. இதில், ஸ்வாத்யாயமாவது,—"ஸங்கீர்த்தயேத் ஜகந்நாதம் வேதம்வாபி ஸமீரயேத்" என்று இங்ஙனே திருநாமஸங்கீர்த்தநம் பண்ணுதல்; வேதாத்யயநம் பண்ணுதல் செய்கை. சௌசமாவது - பாஹ்யசுசியும் ஆந்தரசுசியுமென்றிரண்டு. பாஹ்யசுசியாவது - ம்ருஜ்ஜலங்களாலேவரும் சரீரசுசி. ஆந்தரசுசியாவது - ப்ரயோஜநங்கோலாமை. ஸந்தோஷமாவது - பெற்றதுகொண்டு த்ருப்தனாகை. தபஸ்ஸாவது - காயசோஷணார்த்தமான உபவாஸாதி. ப்ரஹ்மப்ரணிதாநமாவது - மநஸ்ஸை பகவத்விஷயத்திலே ப்ரவணமாக்குகை. பகவத்ப்ராப்திகாமபரமானபோது, அஸ்தேயாபரிக்ரஹாதிகளுக்கு - கீழ்ச்சொன்னபடியே அர்த்தமாகக்கொள்ளுவது. வ்யதிரிக்தபரமானபோது, பரஸ்வாபஹாரநிஷித்தத்ரவ்யாதாநாதிகள் அர்த்தமாகக்கொள்ளுவது. ஸ்ரீவிஷ்ணுபுராணே ஷஷ்டாம்சே [எ] யோகாத்யாயே வாண்டிக்யம்ப்ரதிகேசித்வஜ:, "ப்ரஹ்மசர்யமஹிம்ஸாஞ்ச ஸத்யாஸ்தேயாபரிக்ரஹாந் । ஸேவேதயோகீநிஷ்காமோ யோக்யதாம்ஸ்வமநோநயந் ॥௩௬॥ ஸ்வாத்யாயசௌசஸந்தோஷதபாம்ஸி நியதாத்மவாந் । குர்வீதப்ரஹ்மணிததா பரஸ்மிந்ப்ரவணம்மந: ॥௩எ॥ ஏதேயமாஸ்ஸநியமா: பஞ்சபஞ்ச ப்ரகீர்த்திதா: । விசிஷ்டபலதா:காம்யா நிஷ்காமாணாம்விமுக்திதா: ॥௩அ॥". ஆஸநமா

---

"வானவர்கொழுந்து - வந்தருளி" என்கையாலே - அதிதூரவர்த்தியாயிருக்கிறவன் ஸம்ஸாரியான நான் இருந்தவிடத்தேவந்தானென்று ஈடுபட்டமையும், "கொழுந்து" என்கையாலே-அவர்களுக்கும் ஆதரணீயனாகையாலே, சேஷியானவன் சேஷபூதனிருந்தவிடத்தே வந்தானென்று ஈடுபட்டமையுந் தோற்றுகையாலே, இவ்விரண்டையும் உட்கொண்டு அருளிச்செய்கிறார் - த்வீபாந்தரவஸ்துக்கள் இத்யாதி, பாதிவழிதான்வரப்பெற்றதோ என்னுமளவும். விவரணம் - பரமபதநிலயன் இத்யாதி. இப்படி ஈடுபாடாக அருளிச்செய்ததுக்கு சப்தமேதென்ன - வந்தருளி இத்யாதி. அதாவது -"ஸ்வரேதாவ்ருத்திணுடீய:" என்று, தாழ்ந்த ஸ்வரத்தாலே தோற்றுகிறதென்றபடி. நெஞ்சுளுக்கி - ஈடுபட்டு. ஈடுபாட்டுக்கு ஸம்வாதாந்தரம் - ஆப்பான் இத்யாதி. "நெஞ்சிடங்கொண்ட" என்றதுக்கு பாவம் - த்ரவ்யதணங்கள் இத்யாதி,

ர்றையர் கையிலே தாளத்தைவாங்கி "வந்தருளி, வந்தருளி" என்று மேல்போகமாட்டாதே படுவராம். [வந்தருளி] - த்ரவ்யகுணங்கள் சேர்ந்தாப்போலே. த்ரவ்யமாயிருக்கச் செய்தேயும் குணங்களோடொக்கச் சில சேரக்காணாநின்றோமே; † (ஆத்மாவைக்குறித்து ஶரீரமும், ஜ்ஞாநமும்; பரமாத்மாவைக்குறித்து ஜீவாத்மாவும், த்ரவ்யமாயிருக்கச்செய்தே குணவத் அப்ருதக்ஸித்தங்களிறே). [என்னெஞ்சு] - அவனையொழிய விஷயங்களை உகந்துபோந்த நெஞ்சுகிடீர். ஸ்ரீவைகுண்டம் கலவிருக்கையாகவுடையவன் என்னெஞ்சு பெறுகைக்கு அவஸரப்ரதீக்ஷனுவதே! [இடங்கொண்ட] - வந்தாலும் "நெஞ்சுக்கு

---

வது - மநஸ்ஸு இதரவிஷயங்களில் ஓடாமைக்காக "சக்ரம் வஜ்ராஸநம் கூர்மம் பத்³மாஸநம் ததா² | வீராஸநம் ஸ்வஸ்திகம் ச ஸிம்ஹாஸநம் ததா² || ஶார்ங்காஸநம் மௌக்தவத்ஸ்தவ்யாமேதாநி நாம ச" என்று முக்யமாகச்சொல்லுகிற ஆஸநங்களிலே வந்ததோராஸநத்திலே சலியாதிருக்கை. ப்ராணாயாமமாவது - வ்யாயிவாராதபடி "ப்ராணாபாநஸமாநோதா³நவ்யாநா வாயவ: | நாக³: கூர்மஶ்ச க்ருகரோ தே³வத³த்தோ த⁴நஞ்ஜய:" [யோகயாஜ்ஞவல்க்யம் ௪-௪.] என்கிறவாயுவிஶேஷங்களையும், நாடிஸ்தாநாதிகளான வாயுஸ்தாநங்களையும், நிஶ்வாஸோச்ச்வாஸாதிகளான தத்தத்வாயுகர்மங்களையுமறிந்து ரேசககும்பகாதிகளாலே அவற்றை ஜயிக்கை. ப்ரத்யாஹாரமாவது - "ஸ்வபா⁴வேநேந்த்³ரியாண்யேஷு வர்த்தமாநாநி ஸர்வதா³ | தேஷாம் ஸம்ஹ்ருத்ய தோ³ஷாம்ஶ்ச ... நிவேஶநம் ஸமவத்ப்ரத்யாஹார இதீர்யதே" என்று விஷயங்களிலே ஸ்வபாவப்ரவணமான மநஸ்ஸை அவ்விஷயங்களினுடைய தோஷங்களைக்காட்டி மீட்டு ஶுபவத்விஷயத்திலே நிவேஶிப்பிக்கை. தாரணையாவது - "விஷயேஷ்வேவ வைராக்³யாத் ஶுபா⁴ஶ்ரயஸ்ய நிஶ்சல: | ஸர்வாத்மநா ஸம்ரோதோ⁴ யஸ்ஸ தா⁴ரணா ஸ்ம்ருதா" என்று, விஷயதோஷதர்ஶநத்தாலேவருகிற வைராக்யத்தாலும், ஶுபாஶ்ரயத்தோடே பழகுகையாலும் அதினுடையவைலக்ஷண்யத்தை ஈடேற்றுகையாலும் மநஸ்ஸை அதில் நின்றும் கால்பரியாமல் பொருந்தநிறுத்துகை. த்யாநமாவது - அவ்வோவித்யாவிஶேஷங்களிற்சொல்லுகிற குணவிஶிஷ்டவஸ்துவை நிரந்தரமாக யோகாந்தராயங்கள்மேலிடாதபடி த்யாநம்பண்ணுகை ஸமாதியாவது - "ததே³வ ஸ்ம்ருதிஸந்தாநஜநிதார்த²ஷட்கஸம்ஶ: | ஸ்வரூபாகாரஸம்ஸ்தா²நம் ஸமாதி⁴ரபி⁴தீ⁴யதே" என்று த்யாநப்ரகர்ஷத்தாலே உத்தாநாவஸ்த்தையிலும் இவ்விஷயமொன்றுமே தோன்றும்படியானஅித்தவைஶத்யம்.

---

கருமையும் நெய்தலும் சேர்ந்தாப்போலே, என்னோடே பிரியாமல் கலந்தானென்றபடி. இருவரும் த்ரவ்யமாயிருக்க, த்ரவ்யகுணங்கள்போலே சேரக்கூடுமோ? என்ன - த்ரவ்யமாயிருக்க இத்யாதி. ப்ரஹாப்ரஹாவான்களிடத்திலே காணாநின்றோமேயென்றபடி. குணங்களோடொக்க - குணங்கள்போலே. "என்னெஞ்சு" என்கிறவருடைய ஹார்த்தபாவம் - அவனையொழிய இத்யாதி. "வானவர்கொழுந்து" என்றத்தைக்கடாக்ஷித்து, "இடங்கொண்ட" என்றதுக்கு ஈடுபாடாக பாவம் - ஸ்ரீவைகுண்டம் இத்யாதி. "கொண்ட" என்று - அவனுக்கு ப்ரார்த்யமாகத் இவர்நெஞ்சுபெறுகைக்கு ப்ரார்த்திக்கவேணுமோ? என்ன -

† குண்டலிதம் க்வாசித்கம்.

விஷயம்வேறேயுண்டு'' என்பரே. * "ஆவாஸம் த்வஹமிச்சாமி" (ஆவாஸம்த்வஹமிச்சாமி) என்றுநின்றான். [என்னெஞ்சிடங்கொண்ட வானவர்கொழுந்தே] - நித்யஸூரிகளுக்குத் தலையானவன்கிடீர்! நித்யஸம்ஸாரிகளுக்குத்தலையான என்னெஞ்சுபெறுகைக்கு ப்ரார்த்திக்கிறான். [உலகுக்கோர்முந்தைத்தாய்தந்தையே] - அங்கு இரண்டுதலையும் கூடிவருமிறே, இங்கு வெறும் ஒருதலையேயாயிருக்கிறபடி. "பூதாநாம்யோவ்யயஃபிதா" (பூதாநாம்யோவ்யயஃபிதா) - நாலுநாள் மணற்கோட்டகமிட்டு விளையாடுமோபோலே அழியும் தாயும்தமப்பனுமிறே அவர்கள், ஒருநாளும் அழியாத மாதாபிதாக்களிறே இவர்கள். "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ | கச்சத்வமேநம்ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபாஃ" (ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ | கச்சத்வமேநம்ஶரணம் ஶரண்யம் புருஷர்ஷபாஃ). "கச்சத்வம்" (கச்சத்வம்) - ஒருதலையாகாமே நீங்களும் ஆபிமுக்யம்பண்ணப்பாருங்கோள். லோகத்துக்கு அத்விதீயனாய்ப் பழையனான தாயும் தமப்பனுமானவன். [முழுவேழுலகுமுண்டாய்] - மாதாவானவள் பத்துமாஸம் வயிற்றிலேவைத்து யரிப்பது, "பிறந்துவளர்ந்தால் பின்னை நமக்கு துஃகநிவர்த்தகனும்" என்னும் ப்ரயோஜநத்தைப்பற்றவிறே; இவன் அங்ஙனன்றிக்கே, "இவைதான் நோவு

---

ப்ர.—(என்னெஞ்சிடங்கொண்ட) ஶ்ரீராமாயணே உத்தரே, "வநவாஸக்ருதாவ்யாஸவிஸ்ரஸ்தஃ | தக்ஷிணாஶாஹிதேக்ஷணம் ஆவஸ்தாவ்யவீக்ஷ ||௩௨½|| ஸ்வகேவாஹரிஷ்யாமிஸ்வயம்லோகாநுஹாதே | ஆவாஸம்த்வஹமிச்சாமிப்ரதிஷ்டிதமிஹகாநநே ||௩௩½||.

---

வந்தாலும் இத்யாதி. அவன் அப்படி ப்ரார்த்தித்தவிடமுண்டோ? என்ன - ஆவாஸம் இத்யாதி. "ஸ்வகேவாஹரிஷ்யாமிஸ்வயம்லோகாநுஹாதே | ஆவாஸம்த்வஹமிச்சாமிப்ரதிஷ்டிதமிஹகாநநே" உத்தரராமாயணேவத்ஸஶரபங்கம்ப்ரதி ராமஃ. "ஸ்ரீவைகுண்டம்" இத்யாதிவாக்யவிவரணம் - நித்யஸூரிகளுக்கு இத்யாதி. "உலகு" என்ற அசேதநஸமாபிக்குஹாவம் - அங்கு இத்யாதி. அதாவது - "வானவர்கொழுந்து" என்கிறவிடத்திலே இரண்டு தலைக்கும் ஶேஷஶேஷிபாவாதிஸம்பந்தஜ்ஞாநமுண்டாகையாலே - இரண்டுதலையுங்கூடிவருமிறே. "உலகுக்கோர்முந்தைத்தாய்தந்தை" என்கிறவிடத்திலே, லோகத்தார்க்கு அறிவின்றியே ஈஶ்வரன் தானேயறிந்ததாக ரக்ஷிக்கையாலே - வெறும் ஒருதலையேயாயிருக்கிறபடி என்று கருத்து. லோகத்துக்கு அத்விதீயனாய் ப்ரதமஹாவியான மாதாவும் பிதாவுமானவனே இத்யர்த்தஃ. அப்படி ஈஶ்வரன் முந்தையான தாய்தந்தையாயிருக்குமோ? என்ன; ப்ரமாணம் - பூதாநாம் இத்யாதி. இதுக்கர்த்தம் - நாலுநாள் இத்யாதி. இவர்களென்றது-பிராட்டியும் ஈஶ்வரனும். இது- "மாதாவகஸ்மாஜ்ஜீவபிதாஜ்ஜேவோஜநார்தநஃ" இத்யாதிப்ரமாணாந்தரத்தையுட்கொண்டு. "ஈஶ்வரனேலோகத்துக்குமாதாபிதா" என்னுமதுக்குப்ரமாணாந்தரம் - ஸர்வேஷாம் இத்யாதி. "பவித்ராணாம்பவித்ரம்யோ மங்களாநாஞ்ச மங்களம் | தைவதம்தைவதாநாஞ்ச பூதாநாம்யோவ்யயஃபிதா ||" இதிஹாஸஸாரே (ஸஹஸ்ரநாமாத்யாயே). தத்ரைவ ஶ்ரீராமாயணே [கஷ்கூ] "ஸர்வேஷாமேவலோகாநாம் பிதாமாதாசமாதவஃ | கச்சத்வமேநம்ஶரணம் ஶரண்யம்புருஷர்ஷபாஃ ||" இதி வாணவாநுவ்ருத்தி ஶாகல்யேயஃ. இதில்உத்தரார்த்தத்துக்கு அர்த்தம் - ஒருதலையாகாமே இத்யாதி. "உண்டாய்" என்று - போஜநமாகச்சொல்லுகையாலே, இதுதன்பேறயிருக்கும் என்று. லௌகிகையானமாதா

படாதொழியப்பெற்றோமே" என்றுஇதுதன்பேருயிருக்கும். [செந்தொழிலவர்]-*"ஷெஹிஜெ ஷகாஜி"(தேஹிமேததாமி) என்னுதவர்கள். அவனுக்கு ரக்ஷணம்போலேயிறே இவர்களுக்குக் கைங்கர்யம், இங்ஙனன்றாகில் வ்யர்த்தமாமே. அநந்யப்ரயோஜநதையாகிற ஆர்ஜவத்தையுடைய வ்ருத்திவிஶேஷத்தை யுடையவர்களுடைய. [வேதவேள்வியறு] - வேதகோஷமும் வைதிகக்ரியாகோலாஹலமும் மாறாதேசெல்லுகை. ப்ராப்யவிரோதியாதல் ப்ராபகவிரோதியாதல் இல்லாமையாலே, நாய்ச்சிமாருடைய பரிஷ்வங்கத்தோபாதியாய்ச் செல்லாநிற்கும். அபிமதவிஷயத்தை அணைக்கிறதுக்கு வேறொரு ஃபலமுண்டாகிலிறே இதுக்கு வேறொருஃபலமுண்டாய் அவ்வளவில் தலைக்கட்டுவது. [சிரீவரமங்கலநகரந்தமில்புகழாய்]-ஸ்ரீவைகுண்டத்திலே யிருந்தானாகில் புகழுக்கு அந்தமுண்டுபோலே காணும். [அடியேனையகற்றேலே] - தேஶாத்தேஶாந்தரப்ராப்திபண்ணி நீபடைத்த புகழை, "ஓர் அநந்யமதியைக் கைவிட்டாய்" என்றுபழியாக்கித் தலைக்கட்டுவித்துக் கொள்ளப்பாராதே கொள்ளாய். [அகற்றேலே] - அரைக்ஷணம் தாழ்க்கப் பொறுக்கமாட்டாமைச் சொல்லுகிறவார்த்தையிறே. விளம்பம்பொறுதார் சொல்லப்பெறுவர்போலே காணும். [அடியேனை]-இதினுடையரக்ஷணத்திலே உன்னையொழிய ப்ராப்தியுண்டாய்த் தான் அகற்றுகிறாயோ. (எ)



## எட்டாம் பாட்டு.

**அகற்றநீவைத்தமாயவல்லைம்புலன்களாமவை நன்கறிந்தனன்**
**அகற்றியென்னையும்நீ அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய்**
**பகர்க்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே! என்றும்**
**புகற்கரியவெந்தாய்! புள்ளின்வாய்பிளந்தானே!**

---

ப்ர.—யஜுஷி [கா० - க - ப்ர - அ - வ० - அ] "ஷெஹிஜெஷகாஜிஷெகதி ஜெயெஹிநிஷெதஷியெ".

---

வில் வ்யாவ்ருத்தி-மாதாவானவள் இத்யாதி. *செம்மைக்கு-அநந்யபரயோஜநத்வமாக அர்த்தம்-ஷெஹிஜெ இத்யாதி. ஸாதநத்வவ்யுதாஸ ராஹித்யமாக அர்ந்தாந்தரம் - அவனுக்குரக்ஷணம் இத்யாதி. வ்யர்த்தமாமே – அநந்யப்ரயோஜநத்வ விஜஸாதநநிஷ்டைகளுக்கு விருத்தமாமே. "அறு" என்று - நித்யமாகச்செல்லுகைக்குஹேதுவேதென்ன - ப்ராப்ய இத்யாதி. அதாவது-நாய்ச்சிமாருடைய பரிஷ்வங்கம்போலே இதுவும் ஈஶ்வரனுக்கு போக்யமாகையாலே நித்யமாயிருக்குமென்றபடி. இவனுக்கு அபிமதவிஷயஸ்பர்ஶம்போலே போக்யமாகையாலே நித்யமாயிருக்கிறதென்று ஹேத்வந்தரம் - அபிமதஇத்யாதி. அவ்வளவில்தலைக்கட்டுவது - ஃபலவிருத்தியளவிலேநிற்பது. இதுக்கு பாவம் - ஸ்ரீவைகுண்டத்திலே இத்யாதி. "அந்தமில்புகழாய்" என்றத்தை - "அகற்றேலே" என்றத்தோடேகூட்டி பாவம் - தேஶாத் இத்யாதி. தம்மைவிடமாட்டாதே ஸந்நிஹிதனாயிருக்கிறவனை "அகற்றேல்" என்பானேன்? என்ன - அரைக்ஷணம் இத்யாதி. விவரணம் - விளம்பம் இத்யாதி. சிரீவரமங்கலநகரந்தமில்புகழாய் - சிரீவரமங்கலநகரிலே முடிவற்றபுகழையுடையவனாயிருக்கிறவனே. க்ரமேணாந்வய: (எ)

ஆ.—(அகற்ற.) உம்மை யகற்றினேமோ? என்ன,—த்வத்ப்ராப்தி விரோயி தயா பரிஹரிக்கக்கடவதான ஶப்தாதிவிஷயங்கள்கையிலே என்னைவிட்டுவைத்தபோதே யகற்றினையல்லையோ, இப்படி நீ அரியையாவது ப்ரதிகூலர்க்கன்றோ, அநுகூலர்க்கும் அரியையோவென்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், உம்மை யகற்றினேமோ? என்னில்,—'உன் திருவடிகளில் அடிமைக்கு விரோயியான ஶப்தாதிவிஷயங்கள் பரிமாறுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே என்னை யகற்றினையல்லையோ?' என்கிறார்.

[அகற்ற என்றுதொடங்கி] - அத்யாஶ்சர்யமாய் ஒருவராலும் தப்பவொண்ணாதாயிருக்கிற ஐந்து இந்த்ரியங்களும் நீ வேண்டாதாரை அகற்றவைத்தாயென்னுமிடம் நான் அழகிதாக அறிந்தேன். [அகற்றி என்றுதொடங்கி] - 'உமக்கு வந்தது என்?' என்னில்,—'அவை அபுருஷார்த்த'மென்று அறிந்திருக்கிறஎன்னையும் உன்திருவடிகளில் வாராதபடிபண்ணி தப்பிப்புறப்படவொண்ணாதபடியிருக்கிற ஶப்தாதிவிஷயங்களினுள்ளே தள்ளுகிறாயென்று அஞ்சாநின்றேன். மிக்கிருந்துள்ள ஒளியையுடைத்தாய் உயர்ந்திருந்துள்ள மணிமாடங்களையுடைய சிரீவரமங்கைக்கு ராஜாவாயுள்ளவனே! [என்றும் என்றுதொடங்கி] - ஶத்ருக்களுக்கு என்றும் அநபிபவநீயனாய் அவர்களை முடிக்கும் ஸ்வபாவனானவனே! அப்படியே என்னுடைய ப்ரதிபந்தகத்தையும் போக்கவேண்டாவோ?

ப.—அநந்தரம், அகலுகைக்கு ஹேதுவான இந்த்ரியங்கள் நடையாடுகிற ஸம்ஸாரம் உனக்கு விதேயமாயிருக்க, அதிலே வைத்தது அகற்ற நினைத்தன்றோ வென்கிறார்.

அகற்ற - (உன்பக்கல்விமுகரை) அகற்றுகைக்காக, நீ வைத்த - நீ உண்டாக்கி வைத்தவையாய், மாயம் - (ஒன்றோடொன்று சேராத) ஆஶ்சர்ய ஸ்வபாவங்களாய், வல் - (ஒருவராலும்) வெல்லஅரிதான, ஐம்புலன்களாமவை - அஞ்சிந்த்ரியங்களாமவற்றை, நன்கு - (உள்ளபடியே) நன்றாக, அறிந்தனன் - அறிந்தேன்; என்னையும் - (இப்படியறிவுபிறந்து அஞ்சியிருக்கிற) என்னையும், அகற்றி - (உன்பக்கல்நின்றும்) அகற்றி, நீ.—அரு - (கால்வாங்கிக் கரையேற) அரிதான, சேற்றில் - (விஷயங்களாகிற) சேற்றிலே. வீழ்த்திகண்டாய் - தள்ளுவுதியென்றஞ்சாநின்றேன்; பகர் - விளங்குகிற, கதிர் - ஒளியையுடைத்தான, மணி - மாணிக்கங்களையுடைய, மாடம் - மாடங்கள், நீடு - ஓங்கியிருக்கிற, சிரீவரமங்கை - சிரீவரமங்கைக்கு, வாணனே - நிர்வாஹகனாய், (நீ நினையாதார்க்கு), என்றும் - ஒருநாளும், புகற்கு - ப்ரவேஶிக்க, அரிய - அரிய, எந்தாய் - என் ஸ்வாமியாய், புள்ளின் - (நீ நினைத்த கோபிமாருக்கு உன்னைக்கிட்டுகைக்கு விரோயியான) வகாஸுரன், வாய் - வாயை, பிளந்தானே - பிளந்தவனே! இப்படி ஶக்தனாயிருக்க விரோயியைப் போக்காதிருந்தது அகற்ற நினைத்தென்று கருத்து. பகரென்று - விளங்குதல். புகற்கரியவென்று - புகலுதற்கரிய வென்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், உம்மையகற்றினேமோ? இங்குவந்து ஸந்நிஹிதனாய் நிற்கிறது உமக்காகவன்றோ? என்ன,—அடிமைக்கு விரோயியான ஶப்தாதி விஷயங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலேவைத்தபோதே என்னையகற்றினை யல்லையோ வென்கிறார்.

[அகற்ற இத்யாதி] - அத்யாஶ்சர்யமான செயல்களையுடைத்தாய், ஒருவரால் தப்பவொண்ணுதேயிருக்கிற ஐந்திந்த்ரியங்களும், நீவேண்டாதாரையகற்றவைத்தாயென்னுமிடம் வ்யக்தமாக அறிந்தேன். மயர்வறமதிநலமருளப்பெற்றவனுகையாலே அழகிதாக அறிந்தேன். உகவாதாரையன்றோ யகற்றுவது, உமக்கென்? என்ன,—[அகற்றியென்னையும்] - "அவை அபுருஷார்த்தம்" என்று அறிந்த என்னையும். [அருஞ்சேற்றில் வீழ்த்தி கண்டாய்] - புக்கால் கால்வாங்கவொண்ணுத ஶப்தாதிவிஷயங்களிலே தள்ளுகிறுயென்று அஞ்சாநின்றேன். உன்பக்கலிலே ந்யஸ்தபரனான என்னையுமென்றுமாம். நீர் அஞ்சக் கடவீரோ? என்ன; விளம்பஹேதுவின்றிக்கேயிருக்க, விரோதிகிடக்கையாலே அஞ்சாநின்றேன். [பகர்க்கதிர் இத்யாதி]-மிக்கவொளியையுடைய மாணிக்கங்களையுடைய உயர்ந்த மாடங்கள். பகரென்றும்-புகர்; கதிரென்றும்-புகர். மிக்கபுகரென்றபடி. [பகற்கதிர்] - என்று பாடமானபோது - ஆதித்யபதத்தளவும் செல்லவுயர்ந்து ஒளியையுடைய மணிமாடங்கள். [வாணனே] - ஸ்ரீவரமங்கைக்கு நிர்வாஹகனானவனே! பரமபதத்தைவிட்டு இங்கேவந்திருக்கிறது ஆஶ்ரிதர்க்கு கைங்கர்யவிரோதியானப்ரக்ருதிஸம்பந்தத்தையறுக்கைக்காகவன்றோ வென்கை. உகவாதார்க்கு ஒருநாளும் கிட்டவொண்ணுதபடி யிருக்குமவனே. [புகற்கரிய] - புகலுக்கரிய. [எந்தாய்] - அஸாதாரணனுயிருக்கிற என்விஷயத்திலும் அத்தைச்செய்யவோ. [புள்ளின்வாய்பிளந்தானே]-உமக்குக்கிட்டக்குறையென்? என்ன; பகாஸுரனை நிரஸித்தாப்போலே என் ப்ரதிபந்தகங்களைப் போக்கியருளவேணும்.

ஈடு.—எட்டாம்பாட்டு. உம்மை யகற்ற ப்ரஸங்கமென், இங்குவந்து ஸந்நிஹிதராய் நின்றது உமக்காகவன்றோ? என்ன,—அடிமைக்கு விரோதியான ஶப்தாதிகள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலே வைத்தபோதே என்னை யகற்றினுயல்லையோ வென்கிறுர்.

[அகற்றநீவைத்த] - ஸர்வஶக்தியான நீ, உன்னையுகவாதாரகன்றுபோம்படிக்கீடாக, "மம மாயா துரத்யயா" (மமமாயாதுரத்யயா) என்றுகொண்டுவைத்த. [மாயவல்லைம்புலன்களாமவை] - ஆஶ்சர்யமான செயல்களைப் பண்ணக்கடவதாய்த் தப்பவொண்ணுதபடியாயிருக்கிற ஐந்து இந்த்ரியங்களாகிறவை. உன்னை உகவாதார் அகன்றுபோம்படிக்கீடாக ஸர்வேஶ்வரனை நீ வைத்தவை. நீர் எங்ஙனே இது அறிந்தபடி? என்ன,—[நன்கறிந்தனன்]-*மயர்வறமதிநலம் பெறுகையாலே நான் அழகிதாகவறிந்தேன். உகவாதார் அகன்றுபோகைக்கு வைத்தோமாகில்,அதுக்கு உமக்கென்? என்றுன் [அகற்றி என்னையும் நீ யருஞ்சேற்றில் வீழ்த்திகண்டாய்] - உன்னாலல்லது செல்லாதபடியாயிருக்கிற என்னையும் உன்பக்கல்நின்றும் நீ பிரித்து, கால்வாங்கவொண்ணுதபடியான ஶப்

எட்டாம்பாட்டு - அகற்ற இத்யாதி. "அகற்றி யென்னையும் நீ" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - உம்மையகற்ற இத்யாதி. அகற்ற - அகற்றுகைக்கு. ஸந்நிஹிதராயென்றது - ஆத்மநி பஹுவசநமாதல், நீர் ஸந்நிஹிதராம்படி நான் இங்குவந்து நின்றதென்னுதல்.

"நீ - அகற்ற - வைத்தமாயவல்லைம்புலன்களாமவை" என்று அந்வயித்து அர்த்தம்-ஸர்வஶக்தி இத்யாதி. இந்த்ரியங்கள் தப்பவொண்ணுது என்றதுக்கு - மம மாயா துரத்யயா என்றத்தை ப்ரமாணமாகவெடுத்தது - இந்த்ரியங்களும் ப்ரக்ருதிகார்யமாய் அதுக்குள்ளே அந்தர்ப்பூதமாகையாலே. "மாயவல்லைம்புலன்களாமவை - அகற்ற நீ வைத்தவை" என்றுஅந்வயித்து அர்த்தம் - உன்னை யுகவாதார் இத்யாதி. இந்த அந்வயத்திலே யருளிச்செய்கிறுர் - நீர் எங்ஙனே இத்யாதி. "என்னையும்" என்ற ஸமுச்சயத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - உகவாதார் இத்யாதி.

தாதிவிஷயங்களிலே தள்ளப்புகாநின்றாய். அவன்பக்கலிலே கார்யங்கோள்ள நினைக்கிறவர், நிர்டியரைச் சொல்லுமாபோலே கொடிதாகச் சோல்லுவானேன்? என்னில்;—“ நமக்கே பழியாய்வந்து விளையப்புகாநின்றது ” என்று நீர்மையுடையார் காரியஞ்செய்து தலைக்கட்டுவர்களென்று பார்த்து. இவ்வுடம்போடு எனக்கு ஒரு ஸம்பந்தமற்றிருக்க, நீ போதுவான இதிலே வைக்கிறது கைவிடப்பார்த்தன்றோ? [பகர்க்கதிர் இத்யாதி] - †(புகரென்றும், கதிரென்றும் - புகர்.) மிக்கவொளியை யுடைத்தாய், மணிமயமான மாடங்களினுடைய ஔஜ்ஜ்வல்யத்தை யுடைத்தான சிரீவரமங்கைக்கு ப்ரதாநனானவனே.†([பகற்கதிர்] என்று பாடமானபோது-ஆதித்யபதத்தளவும் செல்ல உயர்ந்து ஒளியையுடைய மணிமாடங்கள். பகல் - ஆதித்யன்.) [என்றும் இத்யாதி] - ‡(உகவாதார்க்கு ஒருநாளும் கிட்டவொண்ணாதபடியா யிருக்குமவனே.) நீ, கிட்டாமல் பண்ணுமதும் அழியச்செய்வதும் உகவாதாரையன்றோ. ‡(புகற்கரிய - புகலுக்கரிய. [எந்தாய்] - அஸாதாரணனாயிருக்கிற என் விஷயத்திலும் அத்தைச்செய்யவோ.) [புள்ளின்வாய் பிளந்தானே] - உமக்குக் கிட்டத்தட்டேன்? என்ன,—பகாஸுரனை நிரஸித்தாப்போலே, என்ப்ரக்ருதிஸம்பந்தத்தைப் போக்கியருளாய் வந்துகிட்டும்படி யென்கிறார்.



## ஒன்பதாம் பாட்டு.

புள்ளின்வாய்பிளந்தாய்! மருதிடைபோயினாய்! எருதேழடர்த்த என்
கள்ளமாயவனே! கருமாணிக்கச்சுடரே!
தெள்ளியார்திருநான்மறைகள்வல்லார் மலிதண்சிரீவரமங்கை
யுள் இருந்தவெந்தாய்! அருளாயுய்யுமாறெனக்கே.

ஆ.—(புள்ளின்வாய்.) உன்னுடைய அதிமநோஹர திவ்யசேஷ்டிதங்களாலும், நிரவதிகஸௌந்தர்யத்தாலும் என்னைத்தோற்பித்து உனக்கடிமையாக்கியருளின

நாம் உம்மை விஷயங்களிலே தள்ளினோமோ? என்ன - இவ்வுடம்போடு இத்யாதி. “ பகர் ” என்றும், “ கதிர் ” என்றும் - தேஜஸ்ஸாய், மிக்க தேஜஸ்ஸென்றபடி. “ என்றும் புகற்கரிய ” இத்யாதிக்கு இரண்டு பாவம்,—முந்தினது - நீகிட்டாமல் இத்யாதி. உகவாதாரையன்றே - ‘அஸாதாரணனாயிருக்கிற என் விஷயத்திலும் அத்தைச்செய்யவோ’ என்று கூட்டுவது. த்விதீயதாத்பர்யம் - உமக்கு இத்யாதி. இந்தப் பக்ஷத்தில், “ என்றும் புகற்கரிய வெந்தாய் ” என்று - ஸர்வகாலத்திலும் ஸ்வயத்நத்தால் கிட்ட அரியனென்று விவக்ஷித்து; கிட்டவொண்ணாதது ஸ்வயத்நபரர்க்கன்றோ, உமக்குக்கிட்டத்தட்டேனோன்ன பகாஸுரனை இத்யாதி, என்று கூட்டிக்கொள்வது. பகர்க்கதிர் என்றுதொடங்கி, புள்ளின்வாய் பிளந்தானே, அகற்ற இத்யாரப்ய, வீழ்த்திகண்டாய் இத்யர்வயః. (அ)

† ஒரு ஸ்ரீகோசத்தில், ‘புகர்க்கதிரித்யாதி’ என்று ப்ரதீகமெடுத்து, குண்டலிக்ரந்தங்களிரண்டோடும்சேர்ந்த யதாபங்க்திஸந்நிவேசக்ரந்தமிருக்கிறது. மற்றொரு கோசத்தில் “[பகற்கதிரித்யாதி] மிக்கவொளியையுடைத்தான மணிமாடங்கள். பகல் - ஆதித்யன்” என்று இவ்வளவு க்ரந்தமே இருக்கிறது.

‡ குண்டலிக்ரந்தத்வயம் ப்ராசித்கம். வ்யாக்யாநத்துக்குச் சேராது.

வனே, ஸாங்கஸகலவேதவித்க்ரேஸராராய் த்வச்சரணாரவிந்தயுகளை கோபாயராயிருந்த திவ்யஜநங்களாலே ஸம்ருத்தமான சிரீவரமங்கையுள்ளிருந்தவெந்தாய், அருளாய் உய்யுமாறெனக்கென்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், உன்னுடைய திவ்யசேஷ்டிதாதிகளாலே என்னைத் தோற்பித்து அடிமைகொண்டு என்னுடைய அபேக்ஷிதங்களெல்லாம் செய்கைக்காக சிரீவரமங்கலநகரிலே எழுந்தருளியிருந்த நீ என்னுடைய அபேக்ஷிதம் குறையும் செய்தருளவேணும் என்கிறார்.

[புள்ளின் என்றுதொடங்கி] - புள்தொடக்கமான ப்ரதிகூலங்களெல்லாம் நிரஸிப்பதும்செய்து ஒருவர்க்கும் இன்னபடியிருக்கிறதென்று அறியவொண்ணாத மஹாஶ்சர்யங்களைக் காட்டி என்னை அகப்படுத்திக்கொண்டருளினவனே! [கருமாணிக்கச்சுடர் என்றுதொடங்கி] - நிரதிஶயபோக்யனய்க்கொண்டு வேதாந்தவித்துக்களாய் ஆஶ்ரித விஷயத்தில் நீ வழிதப்பிப்போகிலும் உன்னைத்திருத்தும்படி தெள்ளியார்மிக்கிருந்துள்ள சிரீவரமங்கையுள் இருந்து என்னை அடிமைகொண்டவனே! என் அபேக்ஷிதம் செய்தருளி என்னை உஜ்ஜீவிப்பித்தருளவேணும்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்தாலே அத்யுஜ்ஜ்வலஸ்வபாவனையிருக்கிறநீ, நான் உஜ்ஜீவிக்கும்படி க்ருபைபண்ணியருளவேணு மென்கிறார்.

புள்ளின்வாய்பிளந்தாய் - (ஆஶ்ரிதருடைய ப்ரக்ருதிஸம்பந்தத்தை யழிக்கைக்கு ஸூசகமாக) வகாஸுரனைநிரஸிப்பானாய், மருதிடைபோயினாய்-(த்வந்த்வதுःகத்தைப் போக்குகைக்கு ஸூசகமாக) யமளார்ஜுநநிரஸநம்பண்ணுமவனாய்; (அவஸ்தாஸப்தகங்களையழிக்கைக்குஸூசகமாக), எழெருது - ஸப்தருஷபங்களையும், அடர்த்த - மர்த்திப்பானாய், கள்ளம் - (இப்படியொருவர்க்கும் அறியவொண்ணாதபடி) கூடீமான ஸ்வபாவங்களை, என்-எனக்கு ப்ரகாஶிப்பித்த, மாயவனே-ஆஶ்சர்யபூதனாய், (இந்தவிரோதியை நிரஸித்தப்ரீதியாலே), கரு - கறுத்த, மாணிக்கம் - மாணிக்கத்தின், சுடரே - சுடர் போலேயிருக்கிற வடிவழகையுடையனாய், தெள்ளியார் - (அநந்யரக்ஷ்யமாம்படி தந்தாமுடையஸ்வரூபத்தில்) தெளிவையுடையராய், (தெளிவுக்கு ஊற்றும்படி), திரு - ஸகவத்ஸ்வரூபாதிப்ரதிபாதநமாகிற ஶ்ரீயையுடைத்தான, நால் - நாலு, மறைகள் - வேதங்களினுடைய தாத்பர்யங்களும், வல்லார் - தாங்களிட்டவழக்காம்படியானவர்கள், மலி - நெருங்கிவர்த்திக்கையாலே, தண் - ஸாம்ஸாரிகதாபப்ரஸங்கமில்லாதபடி ஶரமஹரமான, சிரீவரமங்கை - சிரீவரமங்கையின், உள் - உள்ளே, இருந்த - என்னையநுபவிப்பிக்கைக்காக எழுந்தருளியிருந்த, எந்தாய் - உபகாரகனே! எனக்கு - அநந்யகதியான எனக்கு, உய்யும் - உன்திருவடியடிமையைப்பெற்று உஜ்ஜீவிக்கும், ஆறு - ப்ரகாரம், அருளாய் - க்ருபைபண்ணியருளவேணும்.

இ.—ஒன்பதாம்பாட்டில், "அருஞ்சேற்றில்வீழ்த்திகண்டாய்" என்று அஞ்சுகிற உமக்கு நாம் செய்யவேண்டுவதென்? என்ன; ஶக்தனாய் ஸந்நிஹிதனாயிருக்கிறநீ என்விரோதியைபோக்கி, உன்திருவடிகளில்கைங்கர்யத்தைத்தந்தருளவேணுமென்கிறார்.

[புள்ளின்வாய்பிளந்தாய்] - ப்ரதிகூலங்களை நிரஸிக்கும் ஸர்வஶக்தியானவனே. முன்பு தமக்குப்பண்ணின உபகாரங்களைப் பேசி; அப்படியே மேலும் செய்தருளவேணு மென்கிறார். அர்யித்துச் செல்லுவார், முன்புபண்ணின உபகாரங்களை எண்ணுமாபோலே யருளிச்செய்கிறார். வகாஸுரனை யழித்து, யமளார்ஜுநங்களை நிரஸித்து, உன்னைத் தந்தாய். எருதுகளேழையும் நிரஸித்து நப்பின்னைப்பிராட்டியை யுண்டாக்கினாய். உபாய ஸ்வீதனை உன்னை யுண்டாக்கி உபாயபரிக்ரஹம்பண்ணுவார்க்கு புருஷாகாரஸ்வீதையை யும் உண்டாக்கினாய். [என்கள்ளமாயவனே] - ஒருவர்க்குந்தெரியாத ஆஶ்சர்ய சேஷ்டி தங்களை எனக்கு வெளிச்சிறக்கப்பண்ணி என்னை யகப்படுத்திக்கொண்டவனே. "தொடு வேசெய்திளவாய்ச்சியர்கண்ணினுள்" என்னக்கடவதிறே. நப்பின்னைப்பிராட்டிக்கு ஸர் வஸ்வதாநம்பண்ணின நிரதிஶயபோக்யமானவடிவை எனக்குத் தந்தவனே.[தெள்ளியார் இத்யாதி] - தந்தாமுடையரக்ஷணத்தில் தங்களுக்கு ப்ராப்தியின்றிக்கே, "அவனேகட வன்" என்னும்தெளிவு பிறக்கும்படி வேததாத்பர்யம் கைப்பட்டவர்கள். "ரக்ஷ்ணஸ்ய வ யீசகஃ" என்னுமாபோலே, ஆஶ்ரிதவிஷயத்தில் நீ வழிதப்பினாலும் உன்னைத் திருத்தும் படி தெள்ளியார்மிக்கிருந்துள்ள தேசம். நெருங்கிவர்த்திக்கிற தேசம். ஆஶ்ரயணவேளை யில் ஸ்ரீவிபீஷணாழ்வான் தெளிவுபோலேயும், அஶோகவநிகையில் பிராட்டி தெளிவுபோ லேயும் தெளிந்திருக்குமவர்கள். [உள்ளிருந்தவெந்தாய்] - என்னை விஷயீகரிக்கைக்காக, ஸர்வஸ்வதவஸ்து, "புறம்பில்லை" என்னலாம்படி பரிஸமாப்யவர்த்திக்கிறபடி. [எனக்கு- உய்யுமாறு - அருளாய்] - சென்றற்ற எனக்கு உன்திருவடிகளில் கைங்கர்யம் கிட்டும் வகை பண்ணியருளவேணும். கைங்கர்யமென்றும், உய்வகையென்றும், இரண்டில்லை இவர்க்கு. த்வரித்திலராகில் அவன்வைலக்ஷண்யஜ்ஞாந மில்லையாகக்கடவது, இங்கே கால் பாவிற்றாகில் ஸம்ஸாரத்தில்தண்மையில் ஜ்ஞாநமில்லையாகக்கடவது.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "அருஞ்சேற்றில் வீழ்த்திகண்டாய்" என்று அஞ்சுகிற உமக்கு நான்செய்யவேண்டுவதென்? என்ன,—ஶக்தனாய் ஸந்நிஹிதனாயிருக்கிறநீ என் விரோதியைப்போக்கி, உன்திருவடிகளில் கைங்கர்யத்தைத் தந்தருளவேணுமென்கிறார்.

[புள்ளின்வாய் பிளந்தாய்] - கலியர் சோறிட்டநாளை எண்ணுமாபோலே, பண்டு உபகரித்தபடிகளைச் சொல்லுகிறார். [புள் இத்யாதி] - வகாஸுரநிரஸநம்பண்ணி னாய், யமளார்ஜுநங்களைப்பொடிபடுத்தினாய், ருஷபங்களேழையும் ஊட்டியாகநெரித்தாய். [என்கள்ளமாயவனே] - ஒருவர்க்கும்தெரியாத ஆஶ்சர்யமான செயல்களையுடையையாய், அவையெல்லாம் எனக்குத்தெரியும்படிபண்ணி என்னை யகப்படுத்திக்கொண்டவனே. [கருமாணிக்கச்சுடரே] - நப்பின்னைப்பிராட்டியுடைய ப்ரதிபந்தகங்களைப்போக்கி அவ

ஒன்பதாம்பாட்டு.—புள்ளின்வாய் இத்யாதி. "அருளாயுய்யுமாறெனக்கு" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - அருஞ்சேற்றில் இத்யாதி. ஶக்தனாயென்றது - "புள்ளின்வாய்பிளந் தாய்" என்றத்தைப்பற்ற. ஸந்நிஹிதனாயென்றது-"சிரீவரமங்கையுள்ளிருந்த" என்றத்தைப்பற்ற.

அவதாரிகையிலே - விரோதிநிரஸநத்தை ஶக்திமத்த்வத்துக்கு உறுப்பாக அருளிச் செய்து, உபகாரபரமாக ஹாவார்த்தம்-கலியர் இத்யாதி. "என்" என்றதுக்கு ஹாவம்-அவையெல் லாம் இத்யாதி. "என்" என்றத்தை - * கருமாணிக்கச்சுடரிலும் கூட்டி ஹாவம் - அவனுக்குக்

ளுக்குக்கோடுத்த உடம்பின்வாசியை எனக்கும் அறிவித்தவனே. [தேள்ளியார் இத்யாதி] - "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்யச தீமத:" (ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்யச தீமத:) என்கிறபடியே † (ஆஶ்ரிதவிஷயத்தில் நீ வழிதப்பிலும் உன்னைத்திருத்தும்படி தேள்ளியார் மிக்கிருந்துள்ளதேசம். [தேள்ளியார்]) - தந்தாமுக்கும் சிலவுண்டேயாகிலும், அவற்றைப்போகட்டு அவன்கை பார்த்திருக்குமவர்கள். இவர்கள் சைதந்யத்துக்கு விநியோகமிதுவேயிறே. அஶோகவநிகையில் தனியிருப்பில் பிராட்டி தேளிவுபோலேயும் ஆஶ்ரயணவேளையில் ஸ்ரீவிபீஷணாழ்வான் தேளிவுபோலேயும் தேளிந்திருக்குமவர்கள். "ஸுக்ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய" (ஸுக்ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய) என்கிறபடியே - நலியாநின்றாலும் தாய்முகமே பார்த்துக்கிடக்கும் ப்ரஜையைப்போலே, "வத்யதாம்" (வத்யதாம்) என்கிற மஹாராஜரையும், அவரிலுங்கோடிய முதலிகளையும் அழகிதாகப் பார்த்துக்கோண்டிருந்தான். [திருநான்மறைகள்வல்லார்] - நூறுயிரம்வரியேழுதிக்கிடந்தாலும் அவற்றில்போகாதே, தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்கள். $ "மாதவன்பேர்சோல்லுவதேயோத்தின்சுருக்கு" என்றிருக்குமவர்கள். [மலிதண் இத்யாதி] - அவர்கள் நேருங்கிவர்த்திக்கிற ஶ்ரமஹரமான சிரீவரமங்கையிலே அவர்களோடோக்கவிருக்கிற என்னுதனே. [அருளாயுய்யுமாறேனக்கே] - அறச்சேன்றற்றதுகிடாய்; உன்திருவடிகளில் கைங்கர்யத்தைத் தந்தருளவேணும். கைங்கர்யமேன்றும், உய்கையேன்றும் - இரண்டன்று இவர்க்கு. த்வரித்திலராகில் அவன்வைலக்ஷண்யத்தில் ஜ்ஞாநமில்லையாகக்கடவது; இங்கே கால்பாவிற்றுகில் ஸம்ஸாரத்தில்தண்மையில் ஜ்ஞாநமில்லையாகக்கடவது. (கூ)

---

கோடுத்த இத்யாதி. "எருதேழடர்த்த - கருமாணிக்கச்சுடர்" என்றுகூட்டி ஸாவம் - நப்பின்னை இத்யாதி. "தெள்ளியார்" என்றதுக்கு இரண்டுதாத்பர்யம், — முந்தினது - ராமஸ்ய இத்யாதி. அதாவது - ஸ்வவ்யாபாரத்தைவிட்டு அவன்கைபார்த்திருக்குமவர்களென்றபடி. ஜ்ஞாநமுண்டானால் ஸாத்யாநுஷ்டாநம் பண்ணவேண்டாவோ? என்ன—இவர்கள் சைதந்யத்துக்கு இத்யாதி. இரண்டாம்தாத்பர்யம் - ஸுக்ரீவம் இத்யாதி. அதாவது - அவன்தான் நலியும்போதும் அவன் கையைப்பார்த்திருக்கும்படி தெளிந்தஜ்ஞாநத்தை யுடையவர்களென்றபடி. "ராமஸ்யவ்யவஸாயஜ்ஞா லக்ஷ்மணஸ்யச தீமத: । நாத்யர்த்தம் க்ஷுப்யதே தேவீ கங்கேவ ஜலதாகமே ॥ ச ॥" இதி ஸுந்தரகாண்டே, (சகூ). "உவாச வசனம் ப்ராஜ்ஞ: ஸ்வரேண மஹதா மஹான் । ஸுக்ரீவம் தாம்ஶ்ச ஸம்ப்ரேக்ஷ்ய வ்யோமஸ்தோ விபீஷண: ॥ கூ ॥ இதி யுத்தகாண்டே (கஎ). "தாம்ஶ்ச" என்றசப்தார்த்தம் - அவரிலும்கோடியவென்றது. "ஸாது" என்றதுக்கு அர்த்தம் - அழகிதாக வென்றது. "வல்லார்" என்றதுக்கு - தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்களென்று அர்த்தமருளிச்செய்கிறார் - நூறுயிரம் இத்யாதி. ப்ரமாணகதநமுகேந விவரணம் - மாதவன்பேர் இத்யாதி. ஶ்ரிய:பதியானவனுடைய திருநாமத்தைச்சொல்லுகையே வேதப்பரப்பெல்லாவற்றாலும் ஸம்க்ஷேபித்துத் தலைக்கட்டினவர்த்தமென்றபடி. $ இரண்டாந்திருவந்தாதி, முப்பத்தொன்பதாம்பாட்டு, "ஓத்தின்பொருள்" இத்யாதி. "தெள்ளியார்" இத்யாதிக்கு - தந்தாமுடைய ஸ்வரூபத்தில் தெளிவையுடையராய் பகவத்ஸ்வரூபாதி ப்ரதிபாதகமாகிற ஸ்ரீயையுடைய நாலுவேதங்களினுடைய தாத்பர்யத்தை க்ரஹித்திருக்குமவர்களே நெருங்குகிற என்று பதார்த்தம். "எனக்கு" என்கையாலே - "ஸஹிவஸ்" என்னுமாபோலே அறச்சேன்றற்றதுகிடாய் - என்கிறார். "உய்யுமாறு" என்றால் - கைங்கர்யத்தைச்சொல்லுமோ? என்ன - கைங்கர்யமேன்றும் இத்யாதி. க்ரமேணாந்வய:.

† குண்டலிதம் வ்யாக்யாநத்துக்குச் சேராது; க்வாசித்கமும்.

## பத்தாம் பாட்டு.

**ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய் உனக்கோர்கை
மாறுநானொன்றிலேன் எனதாவியுமுனதே
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை
நாறுபூந்தண்டுழாய்முடியாய்! தெய்வநாயகனே!**

ஆ.—(ஆறெனக்கு.) ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் உன் திருவடிமலர்களே யென்றிருக்கும் இவ்வத்யவஸாயத்தை எனக்கு ஸ்வபாவமாம்படி தந்தருளினாய், இதுவே யமையாதோ; இம்மஹோபகாரத்துக்கு உனக்கொரு கைம்மாறு செய்யப்பெறுகிறிலேன். இவ்வாத்மாவைக் கைம்மாறாகத் தந்தாலாகாதோ? என்னில்,—எனதாவியுமுனதே. ஸர்வப்ரகாரத்தாலும் பரிபூர்ணனான உனக்கு என்னாற்செய்யலாவ தொன்றுண்டோ வென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ஏதேனும் துர்த்தசையிலும் ' உன்திருவடிகளே ஶரணம்' என்று இருக்கும்படி என்னைப் பண்ணியருளின இம்மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் இல்லை என்கிறார்.

[எனதாவியும் உனதே] - 'உம்முடைய ஆத்மாவைத் தந்தாலோ ?' என்னில்,— அதுவும் பண்டேஉன்னது. [சேறுகொள்கரும்பு என்று மேலுக்கு] - அதிஸம்ருத்தமான சிரீவரமங்கலநகரிலே நின்றருளின நிரதிஶயபோக்யனுமாய் அயர்வறுமமரர்களதிபதியானவனே! பரிபூர்ணனான உனக்கு அகிஞ்சநனான நான் ஒன்றும் தரப்பெற்றிலேன் என்று கருத்து.

ப.—அநந்தரம், "நம்மைப் பெறுகைக்கு நம் சரணங்களேகாணும் உபாயம்" என்று ப்ரகாஶிப்பிக்க, இவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

எனக்கு - எனக்கு, ஆறு - ப்ராப்திக்குவழி, நின்பாதமே - உன்திருவடிகளே, சரணாக - புகலிடமான உபாயமாக, தந்தொழிந்தாய் - தந்துவிட்டாய், உனக்கு - (இப்படி யுபகாரகனான) உனக்கு, ஓர் - ஒருபடியாலும், கைமாறு - ப்ரத்யுபகாரமாவது, நான் - (அகிஞ்சநனான) நான், ஒன்று - ஒன்று, இலேன் - இன்றியிலே யிராநின்றேன், எனது - என்னுடைய, ஆவியும் - ஆத்மாவும், உனது - (பண்டே) உன்னதாயிராநின்றது; சேறு - சேற்றுநிலத்திலே, கொள் - இடங்கொள்ளுகிற, கரும்பும் - கரும்பும், பெரு - (அதிலும்) பெருக்கவளருகிற, செந்நெலும் - செந்நெலும், மலி - நெருங்கி, தண் - ஶ்ரமஹரமான, சிரீவரமங்கை - சிரீவரமங்கையிலேயிருப்பானாய், நாறு - பரிமளோத்தரமாய், பூ - செவ்வியையுடைத்தாய், தண் - ஶ்ரமஹரமான, துழாய் - திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடியாய் - திருமுடியையுடையனாய், தெய்வம் - நித்யஸூரிகளுக்கு, நாயகனே - நிர்வாஹகனானவனே! உன்னுடைய போக்யதையாலும் ஶேஷித்வத்தாலும் விபூதி பூர்த்தியாலும் ப்ரத்யுபகாரத்துக்கு யோக்யதை யில்லையென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், "அருளாயுய்யுமாறெனக்கே" என்றார், அப்போதே வந்தருளக்கண்டிலர், ஏதேனும் தலையிலும் "உன் திருவடிகளே ஶரணம்" என்றிருக்கும்படி என்னைப்பண்ணின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

[ஆறெனக்கு இத்யாதி] - "ஆறென்று - உபாயம். சரணென்று - உபேயம். உபாயோபேயங்களிரண்டும் உன்திருவடிகளேயாம்படி பண்ணினாய்" என்று பிள்ளான் நிர்வஹிக்கும். "இவையிரண்டிலும் உபாயத்தையே சொல்லுகிறது" என்று பட்டர் நிர்வஹிப்பர். எனக்குபாயம் உன்திருவடிகளேயாம்படி பண்ணித்தந்தாய். ஆறு - உபாயம். "உபாயோ௨ஸ்மி ஜகவாந்" என்கையாலே சரணென்று - உபாயம். எனக்கென்று - உபாயாந்தர நிஷ்டரிற்காட்டில் தமக்குள்ள வேறுபாடுசொல்லுகிறார். "நோற்றநோன் பிலேன்" என்று தொடங்கி - உபாயாந்தரஶூந்யதையை முன்னிட்டு உபாயநிஷ்கர்ஷம் பண்ணுகிற திருவாய்மொழியாகையாலே, அத்தையே நிகமிக்கிறது. அவதாரணத்தால் - ஏகபதத்தை நினைக்கிறது. ஈஶ்வரனைப்பற்றின ஊற்றத்தாலே உபாயாந்தரங்களை நெகிழ்கையொழிய, நாஸ்திக்யத்தாலே விடுமன்று அது விஷயாந்தரப்ராவண்யஹேதுவாம்; ஔஷதஸேவை பண்ணினானொருவன் ஸர்ப்பத்தின்வாயிலே கைகொடுத்தால் நிர்பாயம், ஔஷதஸ்பர்ஶமில்லாதவன் அத்தைச்செய்தால் மரணஹேதுவாம். இத்தெளிவைப்பிறப்பித்த உனக்கு ஸத்ருஶமான ப்ரத்யுபகாரமின்றிக்கே, போலியாயிருப்பதொரு ப்ரத்யுபகாரமும் அகிஞ்சநனான நான் காண்கிறிலேன். உம்மைத் தந்தாலோ? என்ன,—[எனதாவியுமுனதே] - ஸ்வரூபஜ்ஞாநமில்லையாகில் செய்யலாயிற்று. மயர்வற மதிநலமருளப்பெற்றில்லையாகில் ப்ரத்யுபகாரம்பண்ணினேனாய் நெஞ்சாறல்படாதொழியலாயிற்று. "உதவிக்கைமாறு". [சேறுகொள் இத்யாதி] - நீதான் அபூர்ணனானாயாகில் செய்யலாயிற்றே என்கிறார். சேற்றையுடைத்தான கரும்பும், அதுக்கு நிழற்செய்யும்படியான செந்நெலும் மிக்கிருந்துள்ள ஶ்ரமபரிஹாரமான சிரீவரமங்கை. திருத்துழாய் மாலை ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணம். [நாறுபூந்தண்டுழாய்முடியாய்] - பரிமளிதமாய் தர்ஶநீயமான திருத்துழாய். நித்யஸூரிகளுக்கு அதிபதியானவனே. தேஶமது, போக்யமது, குறைவற்றவர்கள் ஸாபேக்ஷராயிருக்கிறார், நான் எங்ஙனே யுபகரிக்கும்படி. நீ குறைவாளனாதல், நான் அகிஞ்சநனன்றிக்கே யொழிதல், நீ உபகரியாதொழிதல், நான் சேதநனன்றிக்கேயொழிதல்செய்யப்பெற்றதோ.

ஈடு.—பத்தாம்பாட்டு. "அருளாயுய்யுமாறெனக்கு" என்றார், அப்போதே வந்தருளக்கண்டிலர்; ஏதேனும் தசையிலும் "உன்திருவடிகளே ஶரணம்" என்றிருக்கும்படி என்னைப் பண்ணியருளின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமில்லை யென்கிறார்.

[ஆறெனக்கு இத்யாதி] - "ஆறென்று - வழி. வழியென்று - உபாயம். † "எவ்வாறு நடந்தனை", "இப்போய்கைக்கேவ்வாறு வந்தாய்" என்னக்கடவதிறே. சர

பத்தாம்பாட்டு.—ஆறெனக்கு இத்யாதி. இந்தப்பாட்டிலும்-ஸந்தோஷம்போலே யிருந்ததேயாகிலும், ப்ரகரணோசிதமாக அநவாப்திதோற்ற அவதாரிகை - அருளாயுய்யுமாறு இத்யாதி. இதுக்கு- "உனக்கோர் கைமாறு நானொன்றிலேன்" என்றதிலே நோக்கு.

"ஆறு" என்று - வழியைக்காட்டுமோவென்ன - எவ்வாறு நடந்தனை இத்யாதி. † பெருமாள்திருமொழி, ஒன்பதாந்திருமொழி, இரண்டாம்பாட்டு "வெவ்வாயேன்" இத்யாதி. எவ்வழியாய் நடந்தாய் இத்யர்த்தம். இப்போய்கைக்கேவ்வாறு வந்தாய் - இந்தப்பொய்கைக்கு எந்தவழி

ணென்று - உபேயம். உபாயோபேயங்களிரண்டும் உன்திருவடிகளேயாம்படி பண்ணித் தந்தாயே" என்று பிள்ளான் பணிக்கும். "இவை இரண்டாலும் - உபாயத்தையே சொல்லுகிறது" என்று ஹட்டர் அருளிச்செய்வர். எனக்கு உபாயம் உன்திருவடிகளேயாம் படி பண்ணித்தந்தாய். ஆறு - உபாயம். "உவாயாமெய௨ுகவாவகஃ" (உபாயார்த்தைக வாசக:) என்கையாலே, சரணென்றும் - உபாயம். எனக்கென்று - உபாயாந்தர நிஷ்ட்டரிற்காட்டில் தமக்குண்டான வேறுபாடு சொல்லுகிறார். "நோற்றநோன்பிலேன்" என்று தொடங்கி-உபாயாந்தரஶூந்யதையை முன்னிட்டுக்கொண்டு உபாயநிஷ்கர்ஷம்பண்ணுகிற திருவாய்மொழியாகையாலே, அத்தையே நிகமிக்கிறது. அவதாரணத்தாலே - *ஏக பதத்தை நினைக்கிறது. ஈஶ்வரனைப்பற்றின வூற்றத்தாலே உபாயாந்தரங்களை நெகிழுகை யொழிய, நாஸ்திக்யத்தாலே விடுமென்று அது விஷயாந்தரப்ராவண்யஹேதுவாம்; ஔஷத ஸேவை பண்ணினானொருவன் ஸர்ப்பத்தின் வாயிலே கைகொடுத்தால் அது நிர்வாயம், ஔஷதஸ்பர்ஶமில்லாதவன் அத்தைச்செய்தால் அது மரணஹேதுவாம். இத்தெளிவைப் பிறப்பித்த உனக்கு ஸத்ருஶமான ப்ரத்யுபகாரங்காணாதை மாத்ரமன்றிக்கே, போலியா யிருப்பதோரு ப்ரத்யுபகாரமும் அகிஞ்சநனான நான் காண்கிறிலேன். என்றிய, உம்முடைய ஆத்மாவைத் தந்தாலோவென்ன, —[எனதாவியுமுனதே] - அதுவும் செய்து நெஞ்சாறல் கெட்டிருப்பனிறே, நீ *மயர்வறமதிநல மருளிற்றிலையாகில் ராஜமஹேந்த்ரன்

---

வந்தாய் இத்யர்த்த:. நாய்ச்சியார்திருமொழி, மூன்றாந்திருமொழி, இரண்டாம்பாட்டு, "இது வேன்" இத்யாதி. பிள்ளான் நிர்வாஹத்தில், "சரண்" என்று - க்ருஹமாய், அத்தால் - உபேயத்தைச்சொல்லுகிறது. ஹட்டர் நிர்வாஹத்திலே ஶப்த நிர்வாஹங்காட்டுகிறார் - ஆறு - உபாயம் என்றுதொடங்கி. சரணென்றும் உபாயம் - என்ற வநந்தரத்திலே, எனக்குபாயம் இத்யாதி வாக்யத்தைச் சொல்லிக்கொள்வது. "எனக்கு உபாயம் உன்திருவடிகளேயாம்படி பண்ணித்தந்தா யென்றது - எனக்குபாயந்தருமிடத்தில் வேறொன்றைத் தாராதே உன் திருவடிகளையே யுபாய மாகப்பண்ணித் தந்தாயென்றபடி." என்று பெரியஜீயர் அருளிச்செய்வர்; ஆகையாலே, ஹட்டர் நிர்வாஹத்துக்கு, "எனக்கு - ஆறுதருமிடத்தில் - நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்று ஶப்தநிர்வாஹம். எனக்கு - அகிஞ்சநனான எனக்கு. "ஆறு, சரண்," இரண்டும் - உபாயபரமாக ஹட்டர் அருளிச்செய்ததுக்கு நியாமகமேதென்ன; ப்ரகரணத்துக்கு அநுகுணமாகையாலே யென்கிறார் - நோற்றநோன்பிலேன் இத்யாதி. ஏகபதத்தை நினைக்கிறது - ஸ்வீகாரத்தில் உபாயஹா வத்தைக் கழிக்கிற ஏகபதத்திலர்த்தத்தை நினைக்கிறது. தான் ஸ்வீகரித்த ஸ்வீகாரமும் உபாய மன்றென்றபோதே - உபாயாந்தரஸாங்கத்யாஜ்யத்வம் கிம்புநர்ந்யாய ஸித்தமென்று விவக்ஷித்து; ஆனால், நித்யநைமித்திககர்மங்களை த்யஜிக்கலாமோ? என்ன - ஈஶ்வரனை இத்யாதி. இது - "அத்தாணிச்சேவகத்தில் பொதுவானது நழுவும்" என்கிற உத்தமாதிகாரி விஷயம். இங்கே - "ஹ்ரூஊகாமெஶவிஜாதி ஸ்ஜாதிநிரஹாழ | நாஸூ௯திநவொமெதி கயம ஸந்யாஶவாஸஹெ" என்றது அநுஸந்தேயம். உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஔஷத ஸேவை இத்யாதி. "ஓர்" என்றதுக்கர்த்தம் - போலியாயிருப்பதொரு என்றது. "உனக்கு" - இத்தெளிவைப்பிறப்பித்தவுனக்கு. போலியாயிருப்பது - ஏகதேச ஸத்ருஶமாயிருப்பது. அத்யல் பமாயிருப்பது மொன்றில்லையென்றபடி. "ஒருபடியாலும் ப்ரத்யுபகாரமாவது அகிஞ்சநனான நான் ஒன்றின்றியிலே இராநின்றேன்" என்று உரையில்ஶப்தார்த்தம். என்றிய - எதுக்குக்லேஶிக்கிறீர். நெஞ்சாறல் - மநோதுஃகம். * மயர்வறமதிநலமருளினால் ஆத்மஸமர்ப்பணம் பண்ணப்போகாதோ? என்ன — ராஜமஹேந்த்ரன் இத்யாதி. அதுவும்செய்து இத்யாதி வாக்யத்வயத்துக்கு ஹாவம்- அத்யந்தபாரதந்த்ர்யஜ்ஞாநமுடையவனுக்கு ஆத்மஸமர்ப்பணம்பண்ணப்ராப்தியில்லை; அப்படி

படியை யெடுத்து "என்னது" என்று வைத்துப் பெருமாளுக்குக் கோடப்பாரோபாதி களவு வெளிப்படுகையிறே ஆத்மஸமர்ப்பணம் பண்ணுகையாவது. உம்மதான ஆத்மாவைத் தந்தாலோவென்ன, - [நின்பாதமே! - எனதாவியுமுனதேயென்று] - நின்பாதமே என்கிற விடத்தை - இங்கே யந்வயித்து, ஶபதமாக்கி நிர்வஹிப்பர் ஆப்பான் திருவழுந்தூரரையர். †(அப்போது; ஆறெனக்கு, சரணை - திருவடிகளாக. எனக்குஉபாயம் திருவடிகளாக.) [சேறுகொள் இத்யாதி] - மிக்க சேற்றையுடைத்தான கரும்பும், அதுக்கு நிழல் செய்யும்படியான செந்நெலும் மிக்குக் குளிர்ந்த சிரீவரமங்கை. [நாறுபூந்தண்டுழாய் முடியாய்] - பரிமளிதமாய் தர்ஶநீயமான திருத்துழாய். இதுக்கெல்லாம் முதலியாக வைத்த வளையத்தை யுடையையாய். எத்தனையேனு மளவுடையார்க்கும் நிர்வாஹகனுயிராநின்றாய், ஆனபின்பு நான் உனக்குஎன்ன ப்ரத்யுபகாரம் பண்ணுவது. நீயோ! கனக்கவுபகரித்துக்கொண்டு நின்றாய், நான் அஜ்ஞனாகப்பெற்றிலேன், இங்ஙனேயானாலும் நான் சிலசெய்து தலைக்கட்டினேனாகவொண்ணாதபடி நீ பரிபூர்ணனாய். உபகாரங்கொள்ளாதார் உண்டுடேத்துத் திரியாநின்றார்கள், அறிவுகேடரானவர்கள் "சில ப்ரத்யுபகாரம் பண்ணினோம்" என்றிராநின்றார்கள்; நீ அபூர்ணனாகில் இவையெல்லாம் சிலசெய்ததாக நினைத்திருக்கலாயிற்றிறே, நீயோ! பூர்ணனாயிருந்தாய்; ஆனபின்பு, ஒன்று செய்து தலைக்கட்டப்போமோ. நித்யஸூரிகளுக்கதிபதியானவனே. தெய்வம் - தேவர்கள். (௧௦)

---

ப்ர.—(நின்பாதமேசரணாக) ஸமஸ்தாஸ்ய, "உபாயேந ஹ்ருதாக்ஷிஶ்ச ஸ்வஶரணேதி த்வயம் । வதஸ்தேஸாம்வ ஸதஸ்ஸேஷ உபாயாஶ்சேஷவாசகா:"

---

யன்றிக்கே, "என்னது" என்று ஸமர்ப்பித்தால் ப்ரத்யவாயம் வருமென்று. ராஜமஹேந்த்ரன்படியாவது - பெரியபெருமாளுடைய திருப்பதக்கம். ஆப்பான்திருவழுந்தூரரையர் நிர்வாஹத்துக்கு, "சரணே - திருவடிகளை, ஆறாகத்தந்தொழிந்தாய், உனக்கோர்கைமாறு நானொன்றிலேன், நின்பாதமே - எனதாவியுமுனதே" என்று அந்வயம். "தெய்வநாயகன்" என்றத்தைக்கடாக்ஷித்து ஸாவம் - இதுக்கெல்லாம் இத்யாதி. இந்தவிபூதிக்கெல்லாமென்றபடி. தெய்வநாயகனென்றது - லீலாவிபூதிக்கும் உபலக்ஷணம். தெய்வநாயகனே - நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனானவனே. பாட்டுக்கெல்லாம் தாத்பர்யம் - நீயோ இத்யாதி. "ஆறெனக்குநின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றத்தைப்பற்ற - கனக்கஉபகரித்துக்கொண்டுநின்றாய் என்றது. "எனதாவியுமுனதே" என்றத்தைப்பற்ற-நான்அஜ்ஞனாகப்பெற்றிலேன் என்றது. "தெய்வநாயகன்" என்றத்தைப்பற்ற-பரிபூர்ணனாய் என்றது. "நீயோ கனக்க" என்றுதொடங்கிக் கீழ்ச்சொன்னவர்த்தத்தை வ்யதிரேகமுகத்தாலே த்ருடீகரிக்கிறார் - உபகாரங்கொள்ளாதார் இத்யாதி. அறிவுகேடரானவர்கள் - * மயர்வறமதிநலமருளப்பெறுத ஸ்வகதஸ்வீகாரபரர். சேறுகொள்கரும்பும் இத்யாரப்ய, தெய்வநாயகனே, எனக்கு - ஆறுதருமிடத்தில் - நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய், உனக்கோர் கைமாறு நானொன்றிலேன், எனதாவியுமுனதே இத்யந்வய:. ஆப்பான்நிர்வாஹத்தில், "சரண்" என்றது - ஶரணமென்றபடியாய், திருவடிகளென்றபடி. "உபாயேந ஹ்ருதாக்ஷிஶ்ச ஸ்வஶரணேதி த்வயம் । வதஸ்தேஸாம்வ ஸதஸ்ஸேஷ உபாயாஶ்சேஷவாசகா:" இதி ஸமஸ்தாஸ்ய. (௧௦)

---

† குண்டலிதம் க்வாசித்கம்.

## பதினோராம் பாட்டு.

**தெய்வநாயகன்நாரணன் திரிவிக்கிரமனடியிணைமிசைக்**
**கோய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்**
**செய்தவாயிரத்துள்ளிவை தண்சிரீவரமங்கைமேயபத்துடன்**
**வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே.**

ஆ.—(தெய்வநாயகன்.) த்ரிவிக்ரமாவதார ஸௌசீல்யஸௌலப்யத்வத்தையுடையனாயிருந்த நாராயணனுடைய திருவடிகளிலே, கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்செய்த ஆயிரத்துள்ளிவை, தண்சிரீவரமங்கைமேயபத்துடன் வைகல்பாடவல்லார் வானோர்க்கு, காலதத்வமெல்லாம் ஸம்ஜித்தாலும் ஆராதபோக்யரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாக இனியராய்க் கொண்டு சொல்லவல்லார் அயர்வறுமமரர்களுக்கு என்றும் போக்யராவர் என்கிறார்.

[தெய்வநாயகன் நாரணன் திரிவிக்கிரமன் அடியிணைமிசை] - ஸர்வேஶ்வரனாய் ஆஶ்ரிதவத்ஸலனாய் ஆஶ்ரிதருடைய அபேக்ஷிதங்களைச் செய்துகொடுக்கும் ஸ்வபாவனான எம்பெருமானுடைய திருவடிகளிலே. [கொய்கொள்பூம்பொழில்சூழ் என்றுதொடங்கி]- நித்யவஸந்தமான பொழிலோடுகூடின திருநகரியையுடைய ஆழ்வார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியைப் பாடவல்லவர்கள் நித்யஸூரிகளுக்கு நிரந்தரபோக்யராவர்களென்று பலத்தையருளிச்செய்கிறார்.

தெய்வம் – நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகனான, நாயகன் - ஸர்வேஶ்வரனாய், நாரணன் – நிருபாதிகஸம்பந்தயுக்தமான வாத்ஸல்யத்தையுடையனாய், திரிவிக்கிரமன் – ஸ்வசேஷவஸ்துவுக்கு அந்யாபிமானம்வாராதபடி அளந்துகொள்ளுமவன், அடியிணை மிசை - திருவடிகளிலே, கொய்கொள் – கொய்துகொள்ளும்படி ஸம்ருத்தமான, பூ - பூக்களையுடைய; பொழில் - பொழில்களாலே, சூழ் - சூழப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் – ஆழ்வார், செய்த - அருளிச்செய்த, ஆயிரத்துள் - ஆயிரந் திருவாய்மொழியினுள்ளே, தண் - ஶ்ரமஹரமான, சிரீவரமங்கை – சிரீவரமங்கையை, மேய – மேவிய, இவை - இவை, பத்து - பத்தையும், உடன் - அர்த்தத்தோடே உடன்பட்டு, பாடவல்லார் – பாடவல்லவர்கள், வானோர்க்கு - பரமபதவாஸிகளுக்கு, வைகல் - எப்போதும், ஆரா - ஆராத, அமுது - அம்ருதம்போலே நித்யபோக்யமாவர்கள். இது - முதலடியும் மூன்றாமடியும் எழுசீராய், அயலடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாகச் சொல்லவல்லார் நித்யஸூரிகளுக்கு என்றும் போக்யராவர் என்கிறார்.

[தெய்வநாயகன் இத்யாதி] – ஸர்வேஶ்வரனாய், ஆஶ்ரிதவத்ஸலனாய், தன்னுடைமைபெறுகைக்கு அர்த்தியாய் அபேக்ஷிதம்செய்துகொடுக்குமவன் திருவடிகளிலே. [கொய்கொள் இத்யாதி] – இவர் உபாயாத்யவஸாயத்தாலே பரித்தவாறே, பொழிலும் நித்யவஸந்தமாயிற்று. [செய்தவாயிரத்துள்ளிவை] – “யதோக்ஷஷ்யாயணாவேதா:” என்கிறபடியே வேதங்கள் அபிஜாதமானபடி. வேதம் ப்ரசேதஸபோலே, அவதாரம்

போலே திருவாய்மொழி. [உடன் - பாடவல்லார்] — ஸாபிப்ராயமாகக் கற்குமவர்கள். [வைகலும் - வானோர்க்காராவமுதே] — ஸர்வகாலமும் நித்யஸூரிகளுக்கு போக்யபூதராவர். அதுக்கடி — "உபாயோபேயங்களிரண்டும் ஈஶ்வரன்" என்றிருக்குமது அவர்களுக்கு அபிமதமாகையாலே.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை ஸாபிப்ராயமாகக் கற்குமவர்கள், நித்யஸூரிகளுக்கு என்றும் போக்யராவரென்கிறார்.

[தெய்வநாயகன்] - ஸர்வேஶ்வரன். [நாரணன்] - தன்னுடைமை இழக்கவிடாத வத்ஸலன். [திரிவிக்கிரமன்] - தன்னையிரந்தார்க்குத் தன்னையழியமாறியும் காரியம்செய்து தலைக்கட்டிக்கொடுக்குமவன். [அடியிணைமிசை] - திருவடிகளிலே [கோய்கொள்பூம்பொழில் † (சூழ்)] - நித்யவஸந்தமானசோலை. † (இவர் உபாயாத்யவஸாயத்தாலே யரித்தவாறே) எப்போதும் கோய்கைக்குப் பக்வமாயிருக்கை. [குருகூர்ச்சடகோபன்] - ஸ்ரீகீதையில்வ்யாவ்ருத்தி. [செய்தவாயிரம்] - அர்த்தம் வேதார்த்தமேயாகிலும், வேதம்போலே தான்றோன்றியன்று. பரத்வம்போலே வேதம், அவதாரம்போலே இதிஹாஸபுராணங்கள், அர்ச்சாவதாரம்போலே திருவாய்மொழி. *செய்தவாயிரமிறே. தமப்பனில்லாதவிழவுதீர சக்ரவர்த்திக்குப் பிள்ளையானுப்போலே. ‡ (ஆயிரம்திருவாய்மொழியினுள்ளே ஶ்ரமஹரமான சிரீவரமங்கையை மேவினபத்தையும்.) [உடன் - பாடவல்லார்] - ஸாபிப்ராயமாகப் பாடவல்லார். இவர்தம் உபாயசூந்யதையை அநுஸந்தித்துப் பாடவல்லார். [வைகலும் - வானோர்க்காராவமுதே] - காலதத்த்வமுள்ள தனையும் நித்யஸூரிகளுக்கு போக்யபூதராகப்பெறுவர். தேவஜாதிகள் அம்ருதம் பெற்று க்ருதார்த்தராமாபோலே, நித்யஸூரிகள் "இவர்களைப்பெற்றோம்" என்று க்ருதார்த்தராவர். ப்ராபகாந்தர நிரபேக்ஷமான பகவத்ருசியையுடைய அவர்கள், ப்ராபகாந்தர நிரபேக்ஷமான பகவத்ருசியையுடைய இவரை விரும்பியிருக்கையாலே;

நிகமம்.—தெய்வநாயகன் இத்யாதி. "உடன்பாடவல்லார் வானோர்க்காராவமுது" என்றத்தைக்கடாக்ஷித்து - அவதாரிகை.

ஸ்ரீகீதையில் வ்யாவ்ருத்தியென்றது-தத்த்வபூதனுடைய உபதேஶமானகீதையைப்பற்ற, தத்த்வதர்ஶி வசநமாகையாலே இதுவிலக்ஷணமென்றபடி. திருவாய்மொழி வேதமாயிருக்க,"செய்தவாயிரம்" என்னலாமோ? என்ன அர்த்தம் இத்யாதி. அதாவது - ஆப்ததமரான ஆழ்வா பக்கலிலே பிறந்தது, அஸ்ம்ருதகர்த்ருகமான வேதத்திற்காட்டிலும் உத்கர்ஷத்துக்கு உடலாயிருக்குமென்று கருத்து. ஆனால், வேதத்தைப்பற்ற இதுக்கு ஆதிக்யமேதென்ன - பரத்வம் இத்யாதி. அர்ச்சாவதாரம்போலேயென்றதுக்கு — ஸர்வாதிகாரமென்று கருத்து. அர்ச்சாவதாரம்போலே என்கிறது எப்படி? என்ன - செய்தவாயிரமிறே யென்று. கீழ் — வேதார்த்தத்தைச்செய்த ஆயிரமென்றருளிச்செய்து, வேதாவதாரமென்று ஸாவாந்தரம் - தமப்பனில்லாத இத்யாதி. இத்தால் - வேதத்துக்கும் இவர்பக்கலிலேவந்து பிறந்து நிறம்பெறவேணுமென்றபடி. விவரணம் - இவர்தம் இத்யாதி "அமுது" என்றதிலேநோக்காகக் கீழ்வாக்ய விவரணம் - தேவஜாதி இத்யாதி, வானோர்க்காராவமுதாகைக்கு ஹேதுவேதென்ன - ப்ராபகாந்தர இத்யாதி. ப்ராபகாந்தரநிரபேக்ஷமான பகவத்ருசியையுடையவர்களென்றது - ஸ்வயம்ப்ரயோஜநமான பகவத்

† ஒரு கோஶத்தில், இந்த குண்டலிக்ரந்தமும், "இருக்கை" என்கிறவிடத்திலே, "இருக்கிறபூக்களையுடைய பொழிலாலேசூழப்பட்ட" என்றும், ப்ரதீகத்தில், "சூழ்" என்றும் காண்கிறது. ப்ராயிகமாக மூலகோஶங்களில் "பொழில்சூழ்குருகூர்" என்றே பாடம் காண்கிறது.
‡ இந்தவாக்யமிருந்தால் - அந்வயாந்தரப்ரதர்ஶகமாயிருக்கிறது.

ப்ராபகாந்தர நிரபேக்ஷராய் இத்தை அநுபவிக்கவல்லரானவர்கள் நித்யஸூரிகளுக்கு போக்யராவர். (௧௧)

ஸூக்தியை யுடையவர்களென்றபடி. கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் - தண் சிரீவரமங்கைமேய - தெய்வநாயகன்தொடங்கி, அடியிணைமிசை - செய்தவாயிரத்துள்ளிவை - பத்தும் - உடன் - பாடவல்லார் - வைகலும் - வானோர்க்காராவமுதே இத்யந்வய:. கொய்கொள் பூம்பொழில்சூழ்குருகூர் - எப்போதும் கொய்துகொள்ளும்படி ஸம்ருத்தமான பூக்களையுடைய தோப்புக்களாலே சூழப்பட்ட திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார் இத்யர்த்த:. தெய்வநாயகன்- நித்யஸூரிகளுக்கு நிர்வாஹகன். அடியிணைமிசை - இரண்டு திருவடிகளின்மேலே. (௧௧)



**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**—[illegible] ॥

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible].

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

நோற்றநோன்பாதியிலேன் உன்றனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குபாயம் உன்றன்பேரருளே — சாற்றுகின்றேன்
இங்கென்னிலையென்னும் எழில்மாறன்சொல்வல்லார்
அங்கமரர்க்காராவமுது.

ஆழ்வார்திருவடிகளே ஶரணம், எம்பெருமானார்திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.



## எட்டாந்திருவாய்மொழி—ஆராவமுதே: ப்ரவேஶம்

---

**ஆ.**—(ஆராவமுதே.) இப்படி சிரீவரமங்கலநகரிலே அலப்யமநோரதராய் அத்யந்தமவஸந்நரான ஆழ்வார், "தமக்கு ப்ராப்யமும் ப்ராபகமும் எம்பெருமான் திருவடிமலர்களே" என்றுள்ள திவ்யஜ்ஞாநத்தைப்பெற்ற இந்தலாபத்தை யநுஸந்தித்து அதனாலே விஸ்ராந்தராய்த் திருக்குடந்தையிலேபோய்ப்புக்கு, அங்கும் எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெறாமையாலே கிடந்து அலற்றுகிறார்.

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி சிரீவரமங்கலநகரிலேபுக்கு ஸ்வாபிலஷிதத்தைப் பெறாமையாலே மிகவும் அவஸந்நரான ஆழ்வார், தமக்கு ஏதேனும்

தசைஶவந்தாலும் எம்பெருமான்திருவடிகளே ஶரணம் என்னும் இஜ்ஜ்ஞாநத்தைப் பெற்றேமென்னும் ப்ரீதியாலே யரித்து; ஸ்ரீபரதாழ்வான், தனக்குப் பெருமானைப்பிரிகையாலேவந்த வ்யஸநமும், பெருமாள் திருமுடிசூடியருளப்பெறுமையாலேவந்த வ்யஸநமும், 'இதுக்கு நிமித்தபூதன் நான்' என்று உண்டான லோகாபவாதத்தாலே வந்த வ்யஸநமும் எல்லாம் பெருமாள்திருவடிகளிலே செல்லத் தீருமென்று மநோரதித்தாற்போலே, 'திருக்குடந்தையிலேசெல்ல நம்மநோரதங்களெல்லாம் பூர்ணமாம்' என்று ஆராவமுதாழ்வார் திருவடிகளிலேவந்துபுகுர; அவரும் திருவாயைத்திறந்து தம்முடைய ஆர்த்திதீர ஒருவார்த்தை அருளிச்செய்தல், திருக்கண்களாலே நோக்குதல், அக்ரூரனை அழைத்துத்தழுவினாற்போலே அழைத்துத் தழுவியருளுதல்செய்யாமையாலும், தம்மை ஸம்ஸாரஸ்தராக அநுஸந்திக்கையாலும் மிகவும் அவஸந்நராய்; எப்போதும் ஸேவியாநின்றாலும் பர்யாப்திபிறவாத அவனுடைய ஸௌந்தர்யாதிகளை மிகவும் அநுஸந்தியாநின்றுகொண்டு ஸ்தநந்தயப்ரஜை ஸ்தந்யார்த்தியாய் நோவுபட்டுத் தாய்க்காற்கீழே செல்ல, அவள் அங்கீகரியாதே உபேக்ஷித்தால் ப்ரஜை கதறுமாபோலே தம்முடைய அபேக்ஷிதம்பெறுமையாலே கூப்பிடுகிறார்.

ரு.—எட்டாந்திருவாய்மொழியில், ஸ்ரீ வானமாமலைதிருவடிகளிலே அநுபவத்தை யபேக்ஷித்து, அவர் தந்திருவடிகளில் உபாயபாவத்தையும் ப்ரகாஶிப்பிக்கக் கண்டு ஸந்துஷ்டராய், பின்பும் அநுபவம் ஸித்திக்கக்காணாமையாலே அவஸந்நரான இவர்க்கு ஆராவமுதாழ்வார் தம்வடிவழகை ப்ரகாஶிப்பிக்க, "அங்கே தம்மபிமதம் தலைக்கட்டிக்கொள்ளலாம்'' என்றுநினைத்து; ஆராவமுதாழ்வாருடைய நிருபாதிக ஸம்பந்தத்தையும், ஸம்பந்தகார்யமான அவதாரௌஜ்ஜ்வல்யத்தையும், அவரையொழியத் தம்மை அநந்யநிரபேக்ஷராக்கினபடியையும், அவருடைய அபரிச்சிந்ந மாஹாத்ம்யத்தையும், மாஹாத்ம்யப்ரகாஶகமான புண்டரீகாக்ஷத்வத்தையும், நித்யஸூரிஸேவ்யமான நிரதிஶயபோக்யதையையும், போக்யதாப்ரகாஶகமான விக்ரஹவைலக்ஷண்யத்தையும், விபரீதபலிக்கிலும் விடாதபடியான தம்முடைய அநந்யகதித்வத்தை ப்ரகாஶிப்பித்தபடியையும், அநுமதியையும்பிறப்பித்து அநுபவிப்பிக்கும் ஆகாரத்தையும், ஆந்தராநுபவவிஷயமான அதிஶயிதஸாரஸ்யத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்ப்ரகாரவிஶிஷ்டரானவர் ஆலோகாலாபாதிகளாலே நம்மை யநுபவிப்பித்திலரே'' என்று பெருந்திஸாக்ஷாத்கார ஸந்நிஹிதரான அவர்தம்மையேநோக்கி அத்யந்தம் ஆர்த்தராய்க்கூப்பிட்டு, எல்லாவஸ்தையிலும் முன்பு ப்ரகாஶிப்பித்த திருவடிகளேயல்லது உபாயமில்லையென்று ப்ரதிபத்திபண்ணித் தலைக்கட்டுகிறார்.

இ.—எட்டாந்திருவாய்மொழியில், இப்படி வானமாமலைதிருவடிகளிலே ஶரணம்புக்கவிடத்திலும் ஸ்வாபிமதம்பெறுமையாலே அவஸந்நரானவர், "எல்லாதசையிலும் அவனேயுபாயம்'' என்னும் ஜ்ஞாநத்தைப்பெற்றோமே! என்று ப்ரீதராய் யரித்தார்; அத்தாலும் ப்ராபித்தாராகாமையாலே அத்தரிப்புச்செல்லநடத்தத் திருக்குடந்தையிலேசென்று, "பரமபதம்கலவிருக்கையாயிருக்க இங்கேவந்து கண்வளர்ந்தருளுகிறது குறைவாளர் குறைதீர்க்கைக்கானபின்பு நம்மபேக்ஷிதம் செய்யாதொழியக்கூடாது'' என்று தம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் மநோரதித்துக்கொண்டு; ஸ்ரீபரதாழ்வான், "தம் ஆர்த்தியெல்லாம் பெருமாள்திருவடிகளிலேசெல்லத் தீரும்'' என்று மநோரதித்துக்

கொண்டுசென்றாப்போலே, ஆராவமுதாழ்வார்திருவடிகளிலேசெல்ல ; "ஶஶக ஶ்ரோதி வக்ஷ்யதி" என்கிறபடியே வினவுதல், குளிரநோக்குதல், அணைத்தல்செய்யாமையாலே, ஸ்தநந்யப்ரஜை முலையைநினைத்து விடாய்த்துத் தாய்பக்கலிலேசெல்ல அவள்முகம் பெறாதே தடுமாறுமாபோலே ; திருவடிகளில் ஸம்பந்தத்தையும், ஸந்நிதியுண்டாயிருக்கிறபடியையும், கிடையாவிடினும் விடவொண்ணாத போக்யதையையும்சொல்லி, கேட்டாரடைய நீராம்படி கூப்பிடுகிறார். ஒருகாற்பண்ணினப்ரபத்தி பலித்ததில்லையென்று, தவிருமவரல்லர் ; மேன்மேலென ஶரணம்புகுமித்தனை. அப்படியிருக்கையாயிற்று - மஹாவிஶ்வாஸமாகிறது. அங்கு ஸ்ரீபரதாழ்வானுக்குப் பெருமாள் முகங்காட்டாவிட்டது, தம்ப்ரதிஜ்ஞைதலைக்கட்டுகைக்காக ; இங்கு ஆழ்வாருக்கு முகங்காட்டாதொழிந்தது, ப்ரபந்தம்தலைக்கட்டுகைக்காகவும், விடாயைப்பிறப்பித்து முகங்கொடுக்கைக்காகவும்.

ஈடு.—சிரீவரமங்கலநகரிலே எழுந்தருளியிருக்கிற வானமாமலை திருவடிகளிலே, வேரற்றமரம்போலேவிழுந்து அநந்யகதிகளாய்க்கொண்டு ஶரணம்புக்கார்; இவர் அப்படி பெரியவார்த்தியோடே ஶரணம்புகச்செய்தேயும் வந்துமுகங்காட்டாதிருக்க; கடலிலமிழ்ந்துவார் அங்கே ஒரு மிதப்புப்பெற்று தரிக்குமாபோலே, "இவ்வளவிலும் 'வேறொன்றாலேபேறு' என்றிருத்தல், மற்றொருவர்வாசலிலேசென்று கூப்பிடுதல்செய்யும் ப்ரமத்தைத் தவிர்த்தானிறே" என்றுகொண்டு தரித்த இதுதான் திருக்குடந்தையளவும் கால்நடைதந்துபோகைக்கு உடலாயிற்று. என்றான், இங்குத் தம்மபேக்ஷிதம் கிட்டாதொழியவும் அங்கேறப்போகவேண்டுவானேன்? என்னில்,—" ஒருகால் ப்ரபத்திபண்ணி

---

ஆராவமுது ப்ரவேஶ,—வ்ருத்தாநுவாதபூர்வகமாக வர்த்திஷ்யமாணஸங்கதி - சிரீவர இத்யாதி. "நோற்றநோன்பிலேன்" இத்யாதியைப்பற்ற - அநந்யகதிகளாய் இத்யாதி. அநந்யகதிகளாயென்றது - பூஜ்யோக்தி. முகங்காட்டாதிருக்க, திருக்குடந்தைக்குப்போகத் தரிப்புண்டானபடி எப்படி? என்ன - கடலில் இத்யாதி. மிதப்பு - தெப்பம். "ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்" என்றத்தைக்கடாக்ஷித்து அருளிச்செய்கிறார் - இவ்வளவிலும் இத்யாதி. இங்கே, வேறொன்றாலேபேறுஎன்றிருத்தல் மற்றொருவர்வாசலிலேசென்று கூப்பிடுதல்செய்யும் என்றிருக்கையாலே, "ஆறெனக்கு" இத்யாதிக்கு - கீழ்மூன்றுயோஜனையும்தவிர, இன்னமும் ஒருபொருளுண்டென்று தோற்றுகிறது. அதாவது - எனக்கு உன்பாதமே உபாயமாகவும் ரக்ஷகமாகவும் தந்தாயென்று. "நின்பாதமே-ஆறாக" என்கையாலே-உபாயாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது; "நின்பாதமே சரணாக" என்கையாலே - ரக்ஷகாந்தரங்களை வ்யாவர்த்திக்கிறது. ஆக, "ஆறு" என்று - ஆகிஞ்சந்யமும், "சரண்" என்று - அநந்யகதித்வமும் பலிக்கிறது. இத்தால்-இவ்வவஸ்தையிலும் ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களுக்கு ஒரு ஹாநிவாராதபடி பண்ணினாயென்றபடி. ஆக, "சரண்" என்றபதத்துக்கு - க்ருஹமும், உபாயமும், திருவடிகளும், ரக்ஷகமுமென்று நாலுயோஜனை. ஆகிஞ்சந்யமாவது - உபாயாந்தரஶூந்யதை. அநந்யகதித்வமாவது - ரக்ஷகாந்தரஶூந்யதை. "உபாயே க்ருஹரக்ஷித்ரோ: ஶப்த: ஶரணமித்யயம்" என்னக்கடவதிறே. என்றான், இந்த இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம் - வஸ்த்வைக்யத்தாலே அங்கிருக்கிறவனும் இவனேயாயிருக்க, இங்கேபலியாவிட்டால் அங்கேபலிக்கக்கூடுமோ; அதுக்குமேலே "ஸக்ருத்கர்த்தவ்யமாய் அமோகமானப்ரபத்தியும் விபலமாயிற்று" என்றுவிஶ்வாஸமாந்த்யத்தாலே ருசியும் நெகிழ்ந்தோவென்னிலென்று. இந்தஶங்காத்வயத்தையும் வ்யுத்க்ரமேண பரிஹரிக்கிறார் - ஒருகால் இத்யாதிவாக்யத்வயத்தாலே. வ்யவஸ்திதமாயிருக்குமிறேயென்றது - ராஜாக்கள் ஆஸா

ணேம், அதுபலித்ததில்லை" என்று நாஸ்திக்யத்தாலே விஸ்வாஸம்குலைந்து ருசியும் நெகிழுமவரன்றே; "ஆஶ்ரிதார்த்தமாக எழுந்தருளியிருக்கிறவன் நங்காரியஞ்செய்து தலைக்கட்டாமையில்லை, 'இன்னவிடங்களிலே செய்யக்கடவோம்' என்று வ்யவஸ்த்திதமாயிருக்குமிறே, ஆனபின்பு, இங்குச்செய்யப்பார்த்திலனாகில் மற்றோரிடத்திலே செய்கிறான்; இனித்தான், ஸ்ரீபரதாழ்வான் 'பெருமாளை மீட்டுக்கொண்டுவந்து திருவபிஷேகம்பண்ண வேணும்' என்று பாரித்துக்கொண்டுசெல்ல, 'பதினாலாண்டும்கழித்தல்லது மீளோம்' என்னும் ஸ்வதந்த்ரனிறே; ஆகையாலே நமக்கு நாலுநாள் தாழ்த்ததேயாகிலும் நங்காரியம்செய்யாமையில்லை" என்றுபார்த்து, "திருக்குடந்தையிலேசென்றுபுகவே நம்மபேக்ஷிதங்களெல்லாம் கிட்டும், நமக்கு ஒருகுறைகளுமில்லை" என்றுபுக; ஸ்ரீபரதாழ்வான் "ராஜ்யத்துக்கு நிமித்தபூதனானேன்" என்றத்தாலே ஒருபுண்பாடும், "'தாயைக்கொண்டு ராஜ்யத்தைவாங்கிப் பெருமாளைக் காடேறப்போகவிட்டான்' என்று நாட்டார் சீறுபாறென்றிருப்பார்கள்" என்றத்தாலேவந்ததோரு பயத்தையு முடையனாய்க்கொண்டு; நான் திருவடிகளிலேசென்றுகிட்டினால், ப்ராதாவல்லேனோ! ஶிஷ்யனல்லேனோ! தாஸனல்லேனோ! என்பக்கல் ப்ரஸந்நராய் க்ருபைபண்ணியருளாதொழிவரோ! என்று பார்த்து; அம்பெய்வார் படைதிரட்டிக்கொண்டுபோமாபோலே திருவயோத்யையிலுள்ளாரில் வ்ருக்ஷங்களகப்பட ஆர்த்தியிலே தன்னில் குறைந்தாரில்லையிறே, நம்மார்த்திகண்டு மீண்டிலராகிலும் ஆர்த்தர்பலரையுங் கண்டால் மீளாமையில்லையென்றுபார்த்து "ஸஹஸ்ரஶஸ்ஸசிவை:" (ஏபிஸ்சஸசிவை:) - என்கிறபடியே இவன்செல்ல; பெருமாளும், "ராஜ்யதந்த்ரங்களிற் குறைப்படாமல் நடத்தாநின்றாயே? காரியங்கள் செய்யுமிடத்தில் மந்த்ரிகளோடேகூடிச் செய்யாநின்றாயே?" என்றாப்போலே இவனுக்கிடமறவார்த்தை கேட்டாப்போலே; இவர்புக்கவிடத்தில் திருக்கண்களை அலரவிழித்துக் குளிரநோக்கியரு

---

ப்ர.—(ஆராவமுதுப்ரவேஶே) ஸ்ரீமத்ராமாயணே [௯0௧]. "ஸஹஸ்ரஶஸ்ஸசிவைர்யுக்தம் ஶிரஸாயாபிநோதயா । ஸூதபுத்ரஸ்ய ஸஹாயாஸ்ய ஸஹஸ்ரஶ: தஸ்மாத்ஸஹஸ்ரஶ: ||௧உ||"

---

ஹேதத்தாலே கார்யம்செய்யுமாபோலவும், நம்பெருமாள் திருமங்கையாழ்வாரபேக்ஷிதம் கோயிலிலேசெய்யாதே திருக்குறுங்குடியிலே செய்தாப்போலவும் தேசம் வ்யவஸ்த்திதமாயிருக்குமிறே யென்றபடி. காலஹேதத்தாலும் கார்யம்செய்யுமென்று ஹேத்வந்தரம் - ஸ்ரீபரதாழ்வான் இத்யாதி. ஆக, இத்தால் - "இன்னானை இன்னதேசத்திலே யங்கீகரிக்கக்கடவோம்" என்றும், "இன்னகாலத்திலே யங்கீகரிக்கக்கடவோம்" என்றும் அவனுக்கு இரண்டு வ்யவஸ்த்தையுண்டாகையாலே, இந்தவிரண்டையும் அறிந்திருக்கிற இவர்; இங்குச்செய்திலனாகில் இன்னமொருதேசத்திலே செய்கிறான், இப்போதுசெய்திலனாகில் வேறொருகாலத்திலே செய்கிறானென்று திருக்குடந்தையிலே புக்காரென்றதாயிற்று. "திருக்குடந்தையிலேபோனால் நம்மபேக்ஷிதங்களெல்லாம் கிட்டும்" என்று இவர்பாரித்ததுக்கும், இதுக்குஅவன்கார்யம்செய்யாமைக்கும்உதாஹரணங்காட்டுகிறார் - ஸ்ரீபரதாழ்வான் ராஜ்யத்துக்கு இத்யாதி. நிமித்தபூதனானேன் என்றது - "ஶ்வா வத்ஸ நிமித்தோ வஸிஷ்ட நவ்யே ஶோஸவ்ய நஷ்ட நஷ்டஸ்ய" என்றத்தைப்பற்ற. பாபமாவது-ராஜ்ய யோக்யஶரீரபரிக்ரஹம்பண்ணின பாபமென்றபடி. திருக்கண்களை அலரவிழித்து என்றுதொடங்கி,

ளுதல், திருப்பவளத்தைத்திறந்து ஒரு வார்த்தையருளிச்செய்தல், அணைத்தல்செய்யக் கண்டிலர் ' ஊஉகூ ுஒெ திவக்ஷுதி" (மாமக்ரூரேதிவக்ஷ்யதி) என்றாப்போலே ப்ரதி கூலர்சோறுண்டுவளர்ந்தவன் மநோரதம்பெற்றானிறே; அப்படியே தம்மையும் கிட்ட வந்து அணைக்கப்பெறுமையாலே மிகவும் அவஸந்நராய், போக்யதையாலும் ஈடுபட்டு ஸௌந்தர்யாதிகளாலும் போரநொந்து, ஸ்தநந்யப்ரஜை தாய்பக்கலிலேகிட்ட முகம் பெறவிட்டால் அலமந்து நோவுபடுமோபோலே அவன்ஸந்நிதியிலே தளர்ந்துகிடந்து கூப்பிட்டு, இன்னமெத்தனைத்திருவாசல் தட்டித்திரியக்கடவேன் என்னும் ஆர்த்தியோடே தலைக்கட்டுகிறார்.



## முதற் பாட்டு.

ஆராவமுதே' அடியேனுடலம்நின்பாலன்பாயே
நீராயலைந்துகரைய உருக்குகின்றநெடுமாலே!
சீரார்செந்நெற்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே!

ஆ.—உன்னோடு பிறரோடு வாசியின்றியே எல்லார்க்குமொக்க ஸர்வகாலமும் அநுபவித்தாலும் ஆராதபோக்யமே, உன்னுடைய நிரவதிக ஸௌந்தர்யாதி கல்யாண குணங்களிலே, அடியேனுடைய அசேதநமான இந்ததேஹமுங்கூட, உன்பக்கலுள்ள நிரதிசயாநுராகத்தாலே நீராயுருகும்படிபண்ணிவைத்து எனக்கு அரியையாயிருக்கிற வனே; சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை ஏரார்கோலந்திகழக்கிடந்தாய், கண்டேன். என்னை உன்திருக்கண்களாலே பார்த்தருளுதல், ஒருவார்த்தை யருளிச்செய்தருளுதல் காண்கிறிலேனென்கிறார்.

ஒ.—முதற்பாட்டில், உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே என்னை நீராக்கா நின்றுள்ள உன்னைக் கண்வளரக்கண்டேனித்தனை, என்னைக்குறித்து ஆலோகநாலாபா திகள்பண்ணியருளக் காண்கிறிலேன் என்கிறார்.

---

செய்யக்கண்டிலர் என்னுமளவும் - "கிடந்தாய்கண்டேன்" என்கையாலே வித்தம். "ஆச்ரி தார்த்தமாக எழுந்தருளியிருக்குமவன் நமகார்யம்செய்யாமையில்லை" என்று அவன் ஸ்வபாவத் தையநுஸந்தித்து, "கிடைக்கும்" என்று போனீரேயாகிலும், அயோக்யரானஉமக்குக் கிடைக் குமோ? என்ன - ஊஉகூ ுஒ இத்யாதி. "ஆராவமுதே, ஏரார்கோலம்" என்றத்தைப்பற்ற- போக்யதையாலும் என்றது. "செந்தாமரைக்கண்ணா" என்றத்தைப்பற்ற - ஸௌந்தர்யாதிக ளாலும் என்றது. "உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ" என்றத்தைப்பற்ற - இன் னமெத்தனை இத்யாதி. 'யொ நஜ ஃ ூயிவீ ௦யெ தமெ ஸவஹூ திஸ ௦ஷூ தாழ | ஷோவ தீணெ ூாஜ மதூயெ ஊஉகூ ுஒெ திவக்ஷுதி ‖ ௧௨ ‖ உதி ஸ்ரீவிஷ்ணு—வ—ாணெவ ஜூ௦௦ஸெ [௧௭].

[ஆராவமுதே] - எப்போதும் அநுபவியாநின்றாலும் த்ருப்திபிறவாதபடி நிரதிஸயபோக்யமானவனே! [அடியேன் என்றுதொடங்கி] - உன்பக்கலுண்டான ஸ்நேஹாதிஸயத்தாலே அசேதநமான என்னுடைய ஸரீரமுங்கூட அத்யந்த ஸிதிலமாம்படி பண்ணுகிற அதிஸிவேஸப்ரகர்ஷத்தையுடையவனே! இப்படி ஸைதில்யத்தை எனக்குப் பிறப்பியாநின்றுவைத்து எட்டாதிருக்கிறவனென்றுமாம். [சீரார்செந்நெல் என்றுதொடங்கி] - மிகவும் கனக்கையாலே அசைந்துவருகிற செந்நெற்கதிர்கள் கவரிவீசினாற்போலேயாயப் பெருநீரையுடைய திருக்குடந்தையிலே என் நாயனை நீ, அழகுசமைந்த ஒப்பனை நிறம்பெறும்படி கிடந்தருளினாய். அது காண்பதும் செய்தேன். செழுநீரென்று - அழகியநீரென்றுமாம்.

ப.—முதற்பாட்டில், உன்னுடைய நிருபாதிக ஸம்பந்தமடியாக உன்னழகாலே எனக்கு நிரதிஸயபோக்யபூதனாய் என்னை ஸிதிலனாம்படி பண்ணுநின்றுகொண்டு திருக்குடந்தையிலே கண்வளரக்கண்டேனென்கிறார்.

எம்மானே - எனக்கு நிருபாதிகஸ்வாமியானவனாய், (அந்தஸம்பந்தமடியாக), ஆரா - (நிரந்தராநுபவம்பண்ணுநின்றாலும்) த்ருப்திபிறவாத, அமுதே - நித்யபோக்யனாயிருந்தனாய்க்கொண்டு, அடியேன் - (இப்போக்யதைக்குத்தோற்று அடிமைபுகுந்த) என்னுடைய, உடலம் - ஸரீரமானது, நின்பால் - உன்பக்கல், அன்பாயே - †அன்புதானே தனக்குவேஷமாய், (அதடியாக), நீராய் - ஜலமயமாம்படி கட்டுக்குலைந்து, அலைந்து - (ஒருநிலையில்நில்லாதே) வ்யாகுலமாய், கரைய - (ஆஸ்ரயமும்தெரியாதபடி) கரையும்படியாக, உருக்குகின்ற - உருகப்பண்ணுகிற்கிற, நெடுமாலே - அபரிச்சின்ந வ்யாமோஹ மாஹாத்ம்யத்தையுடையவனே! சீர் - கனத்தாலே, ஆர் - மிஞ்சின, செந்நெல் - செந்நெற்கதிர்கள், கவரிவீசும் - கவரிவீசினாற்போலேயிருப்பதாய், (அதுக்கடியாக), செழு - ஸம்ருத்தமான, நீர் - ஜலத்தையுடைத்தான, திருக்குடந்தை - திருக்குடந்தையிலே, ஏர் - அழகு, ஆர் - மிஞ்சின, கோலம் - ஒப்பனையானது, திகழ - விளங்கும்படியாக, கிடந்தாய் - கண்வளர்ந்தருளினாய்; கண்டேன் - என்கண்ணாலேகண்டு அநுபவிக்கப்பெற்றேன். நினைத்தபடி பரிமாறப்பெற்றிலேனென்று கருத்து. சீரென்று - அழகாகவுமாம்.

இ.—முதற்பாட்டில், உன்னழகாலே என்னை நீராக்காநின்றுள்ள உன்னைக் கண்வளரக்கண்டேன்; உணர்ந்து குளிரநோக்குதல், அணைத்தல் செய்யக்காண்கிறிலேனென்கிறார்.

[ஆராவமுதே இத்யாதி] - "கிடைத்ததில்லை" என்று ஆறியிருக்கலாம்படியோ உன்வடிவழகு. இத்திருவாய்மொழியில் இவருடையவிடாய்க்கெல்லாம் நிதானமிது. அநுபவியாநின்றாலும் பர்யாப்திபிறவாதபடி நிரதிஸயபோக்யமான விஷயத்தை இழந்திருக்கவோ. நாட்செல்லநாட்செல்ல விடாயைப்பிறப்பிக்கும் விஷயமென்கை. "அப்பொழுதைக்கப்பொழுதென்னாராவமுதமே". தானே தன்னையநுபவிக்கப்பார்த்தாலும், துணைகொண்டிழியவேண்டியிறேயிருப்பது; "ஸஹவைத்ர்யாவிஸாலாக்ஷ்யா". ஸர்வாதிகாரமாய் ஸதாஸேவ்யமாய் ஸம்ஸாரநிவர்த்தகமாயிறே இவ்வம்ருதமிருப்பது. லோகஸாரங்க மஹாமுநிகளை இத்தேஸத்திலே யழைப்பித்த சொல்லிறே. அடியேனென்கிறது -

† "பரிவுதானே" என்றும் பாடம் காண்கிறது.

"யஸ்யாஸ்மி" என்கிற வசநத்தாலன்று; போக்யதைக்குத்தோற்றுச் சொல்லுகிறார். [அடியேனுடலம்]-ஜ்ஞாநகுணகமான ஆத்மவஸ்து அழியுமளவன்றிக்கே, அசேதநமான ஶரீரத்தளவும் செல்லக் கரைகை. ஆத்மவஸ்து உத்தேஶ்யத்திலே ஈடுபட்டு அழியாமைக்குக் கட்டின கரையாயிற்று ஶரீரம், அதுவும் அழிந்ததென்கை. [நின்பால்] - சேதநாசேதநவிபாகமற அழிக்கவல்ல உன்பக்கலிலே. "க்ஷிவ்ருக்ஷாஶ்வஶிஷ்டாநாஂ - உவக வொஷகாநஷ்ஶ்". [அன்பாயே] - அசித்ரவ்யமன்றியே "ப்ரேமத்தையிட்டுச்செய்தது" என்னலாம்படியிருக்கை. அன்னமயமாயிருக்கையன்றிக்கே, ப்ரேமமயமாயிருக்கை. *காதற் குருகூர்ச்சடகோபனிறே. ஶரீரமானது கட்டுக்குலைந்து அன்பாய், அதுதான்போய் நீராயலைந்துகரையும்படி யுருக்கிற்று. [உருக்குகின்ற] - இத்தலையழியாநிற்க அத்தலைமுதலடியிட்டதில்லையாயிருக்கை. [நெடுமாலே] - ஸர்வேஶ்வரனென்னுதல், போக்யதையின் மிகுதியைச்சொல்லுதல், வ்யாமோஹாதிஶயத்தைச்சொல்லுதல். இப்படி ஸம்ஶயித்தைப் பிறப்பியாநின்றுவைத்து எட்டாதிருக்கிறவனென்னுதல், தன்போக்யதையாலே ஸம்ஶயித்தைப்பிறப்பியாநிற்கையென்னுதல், தன்வ்யாமோஹாதிஶயத்தைக்காட்டி, ஸம்ஶயித்தைப் பிறப்பியாநிற்கிறவனென்னுதல். [சீரார் இத்யாதி] - மிகவும் கனக்கையாலே அசைந்துவருகிற செந்நெற்கதிர்கள் கவரிவீசினாற்போலேயிருக்கை. கண்வளருகிறவிடத்தில் பரிசர்யைபண்ணுகிறாப்போலேயிருக்கை. ஶேஷவஸ்துவின்வ்யாபாரத்தை, உடையவன் ஶேஷவ்ருத்தியாக நினைத்திருக்கிறபடி. [செழுநீர்] - ஜலஸம்ருத்தியைச் சொல்லுதல், அழகியநீரென்னுதல். கண்வளருகிறவருடைய ஸௌகுமார்யத்துக்குச் சேரும் ஜலஸம்ருத்தியை யுடைத்தாகை. [ஏரார்கோலம்] - அழகுமிக்கவொப்பனை. [கோலந்திகழ] - இவ்வொப்பனையழகு நிறம்பெறும்படியாயிற்று கண்வளர்ந்தருளிற்று. அல்லாதார்க்குக் கிடந்தபோது வைரூப்யமுறைத்திருக்கும், இங்கு அழகுறைத்திருக்கும்; "ஸஂயாவொயிதஶ்ரீஶாநு". [கிடந்தாய்கண்டேன்]-கண்வளர்ந்தருளுகிறபடி கண்டேன். உணர்ந்து குளிரநோக்குதல் அணைத்தல் இன்சொல்லுச்சொல்லுதல் செய்யப்பெற்றிலேன். கண்ணாலேகாணப்பெற்றேன், நினைத்தபரிமாற்றம் பெற்றிலேன். பரிமாற்றம்பெறாவிட்டால் ஆறியிருக்கலாயிற்றிறே ப்ராப்தியில்லையாகில். வடிவழகோபாதியும் நலியாநின்றது ஸம்பந்தமும். ஸ்தநந்யப்ரஜை 'தாய்' என்றறிந்தால் 'முலை முலை' என்னுமாபோலே, ஸம்பந்தஜ்ஞாநமன்றோ கூப்பிடப்பண்ணுகிறது.

ஈடு.—முதற்பாட்டு. உன்னழகாலே என்னையுருக்குகிற உன்னைக் கண்வளர்ந்தருளக்கண்டேன், குளிரநோக்குதல், அணைத்தருளுதல் செய்யக்காண்கிறிலேனென்கிறார்.

---

முதற்பாட்டு - ஆராவமுதே இத்யாதி. "உருக்குகின்றநெடுமாலே" என்றத்தைப்பற்ற- உன்னழகாலே இத்யாதி. "கிடந்தாய்கண்டேன்" என்றதுக்கு ஶப்தார்த்தம் - கண்வளர்ந்தருளக் கண்டேன் என்றது. தாத்பர்யம் - குளிரநோக்குதல் இத்யாதி.

[ஆராவமுதே] - அநுபவியாநின்றாலும் க்ரமப்ராப்திபற்றாதவிஷயத்தைப்பிரிந்தார் எங்ஙனே ஆறியிருக்கும்படி. முற்பட தர்ஶநமாய், அநந்தரத்திலே அணுகி, பின்னை ஸ்பர்ஶமாய், இப்படியேயிறே அநுபவப்ரகாரங்கள்; அத்தனைக்ரமம் பார்த்திருக்கவொண்ணாதபடியாயிருக்கை. [ஆராவமுதே]-கடலில்உப்புச்சாறுகுடிப்பார்க்கு, வேவயோநியிலே பிறக்கவேணும், ப்ரஹ்மசர்யமநுஷ்டிக்கவேணும், இத்தனைபட்டால் ஸக்ருத்ஸேவ்யமாயிருக்கும்; இது அங்ஙனன்றிக்கே, ஸர்வாதிகாரமுமாய், ஸதாஸேவ்யமுமாய், ப்ரஹ்மசர்யாதி வைகல்யமுண்டானவையும் தானே பரிஹரிக்கக்கடவதாயிருக்கும். உத்தரபூமியிலே லோகஸாரங்கமஹாமுநிகள் வர்த்தியாநிற்க, இங்குத்தைஶ்ரீவைஷ்ணவரொருவன் அங்கேறச்செல்ல, "பிள்ளாய், தக்ஷிணபூமியில் விஶேஷமென்?" என்றுகேட்க, திருவாய்மொழி என்றொரு ப்ரபந்தமவதரித்து, ஶிஷ்டர்கள் பரிக்ரஹித்துப் போரக்கொண்டாடிக்கொடுபோகாநின்றார்கள்" என்ன, "அதிலே உனக்குப்போவதொரு சந்தைசொல்லிக்காணாய்" என்ன, "'ஆராவமுதே' என்கிறவித்தனையும் எனக்குப்போம்" என்ன, "நாராயணாதிநாமங்கள்கிடக்க, இங்ஙனேயுமொரு நிர்த்தேஶமுண்டாவதே" என்று அத்ருப்தராய், "இச்சொல்லுநடையாடுகிறதேசத்தேறப்போவோம்"என்று அப்போதே புறப்பட்டுப்போந்தார். [ஆராவமுதே] - "ஸஹபத்ந்யா" (ஸஹபத்ந்யா) - ஆழங்காலிலேயிழிவார் ஒருகொம்பைக்கோடியைப்பிடித்து இழியுமாபோலே. "பத்ந்யா-ஸஹ" (பத்ந்யா-ஸஹ) - கிண்ணகத்திலிழிவார் தேசிகரைக்கைப்பிடித்துக்கொண்டிழியுமாபோலே, பெருமாள் பெரியபெருமாளை யநுபவிக்கும்போது பிராட்டியைக் கூடக்கொண்டாயிற்றிழிவது. "விஶாலாக்ஷ்யா" (விஶாலாக்ஷ்யா) - இவர்க்குப் பெரியபெருமாள்பக்கலுண்டான ப்ரேமாதிஶயத்தைக்கண்டு, தன்னையணைக்கும்போதையிற்காட்டிலும் உடம்பெல்லாம் கண்ணானபடி. "நாராயணமுபாகமத்" (நாராயணமுபாகமத்) - இவர்நியதியிருக்கிறபடி, இக்கண்ணுக்கிலக்காய் ஆழங்காற்படாதே அவ்வருகுபட்டார். இத்தால் சொல்லிற்றாயிற்று - தான் தன்னையநுபவிக்கும்போதும் கூட்டுத்தேடவேண்டும்படியாயிற்று ஆராமையிருக்கும்படியென்கிறது. [ஆராவமுதே] - இத்திருவாய்மொழியில் இவர்க்குண்டான

---

"ஆராவமுதே" என்றது - அத்ருப்தாம்ருதமென்றபடி. இத்தால்தாத்பர்யம் - அநுபவியாநின்றாலும் இத்யாதி. "க்ரமப்ராப்தியின்னதென்றும், அதுபற்றாத" என்றத்தைபுங்காட்டுகிறார்- முற்பட இத்யாதி. இன்னார்க்கு ஆராவமுதென்னுதல், இன்னபோது ஆராவமுதென்னுதல்செய்யாதே, ஸாமாந்யேந "ஆராவமுதே" என்கையாலே-அதிகாராதிநியமமில்லையென்று வ்யாக்ருத்தி- கடலில் இத்யாதி. இத்திருநாமம் போக்யமென்னுமதுக்கு ஐதிஹ்யம் - உத்தரபூமியிலே இத்யாதி. "ஆராவமுதே" என்றதுக்கு - இதினுடைய போக்யதாதிஶயம் ஈஶ்வரனுக்கும் தனியே யநுபவிக்கப்போகாதென்று தாத்பர்யாந்தரம் - ஸஹபத்ந்யா இத்யாதி. "ஸஹ பத்ந்யா விஶாலாக்ஷ்யா நாராயணமுபாகமத்" ||" உத்யோகாகாண்டம் [௬]. இதுக்குபாவம் - ஆழங்கால் இத்யாதி. கொம்பென்றது - "கொம்புபோற்சீதை" என்றத்தைப் பற்ற. "ஆழங்காலிலே" இத்யாதி வாக்யவிவரணம் - கிண்ணகத்தில் இத்யாதி. நியதியாவது - ஜிதேந்த்ரியத்வம். புநகவ்வுகை - யுத்தத்திலேதோற்றவன் ஆயுதத்தைப்பொகட்டுப் புல்லைக்கவ்வுவன், அத்தைச்சொல்லுகிறது. அதாவது - தோல்விக்கு ஸூசகமான வ்யாபாரத்தைச்சொல்லுகிறது. "ஸ்வரூபப்ரயுக்தமான தாஸ்யமே புத்தேற

ஆற்றாமைக்கெல்லாம் வீஜம் இப்பதமாயிற்று. [அடியேன்] - *மயர்வறமதிநலமருளப் பெற்ற ஸ்வரூபத்தால் சொல்லுகிறாரல்லர், போக்யதைக்குத்தோற்றுப் புறக்கவ்விச்சொல் லுகிறார். "பரவாநஸ்மி" (பரவாநஸ்மி) என்றவர், "குணைர்தாஸ்யமுபாகத:" (குணைர்தாஸ்யமுபாகத:) என்றாப்போலே. [உடலம்நின்பாலன்பாயே] - சேஷத்வம் ஆத்மாவுக்கு ஸ்வரூபமானால் தேஹம் அதுக்கு விரோதியாய் நிற்கும்நிலை குலைந்தது. "அஹம்" (அஹம்) என்றிருக்கக்கடவ இவர்தாம், அடியேனென்றது - விஷயத்தினுடைய போக்யதாதிசயமிறே; அப்படியே சரீரமும் விஷயாதீநமாக அழிந்தபடி. சேஷத்வா காரமான ஆத்மாவைத் தன்வழியேயிழுக்கைதவிர்ந்து, அதன்வழியே தானொழுகும்படி யாயிற்று. ஜ்ஞாநாநந்த ஸ்வரூபனான ஆத்மாவாதல், அதுக்குத்தோள்தீண்டியான ஜ்ஞாந ப்ரஸரத்வாரமான மநஸ்ஸாத லன்றிக்கே, இவற்றுக்கு அவ்வருகான த்வங்மாம்ஸமே தோஸ்த்திமயமான சரீரமும் அழியும்படியாயிற்று. [நின்பாலன்பாயே] - சேதநாசேதந விபாகமற அழிக்கவல்ல உன்பக்கலிலே, அன்புக்கு ஆச்ரயமாகைதவிர்ந்து அன்புதான் ஒருவடிவுகொண்டாற்போலேயிராநின்றது. [நீராயலைந்து] - உடலம் அன்பாய், அன்பு தான் நீராய்க்கொண்டு அலையாநின்றது. முந்தற ச்ரவணமாய், அநந்தரத்தில் மநநமாய், பின்னை பாவனையாய், அது ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய்க்கொண்டு அவ்வடைவிலே வரு கிறதன்றே; விஷயமழிக்க அழிகிறதித்தனையிறே [நீராயலைந்துகரைய] - நீர் தன்பக்கலி லகப்பட்டத்தைக்கரைத்துத் தான் கரையாதிருக்குமாயிற்று; இங்கு அங்ஙனன்று, நீர்தானு யிற்றுக் கரைகிறது. அன்பு நீரானால், நீர்தான் கரையத்தட்டில்லையே. இத்தலையளவுஇது வானால் அத்தலைசெய்கிறதென்? என்னில்,—[உருக்குகின்ற] - அழிக்கைக்கடியிட்டவித் தனையாயிற்று. அழிப்பாளனானவன் "ஆபரணதிகள்" என்றுபாராதே உருக்கியழிக்குமா

---

ப்ர.—(அடியேன்) ஸூந்தரகாண்டே [கரு] "பரவாநஸ்மி காகுத்ஸ்த்த த்வயி வர்ஷசதம் ஸ்த்திதே | ஸ்வயந்து ருசிரே தேசே க்ரியதாமிதி மாம் வத ||எ||."

கிஷ்கிந்தாகாண்டே [ச] "அஹமஸ்யாவரோ ப்ராதா குணைர்தாஸ்யமுபாகத: | க்ருதஜ்ஞஸ்ய பஹுஜ்ஞஸ்ய லக்ஷ்மணோ நாம நாமத: ||கஉ||".

---

யம்" என்றிருக்கிறவருக்கு, போக்யதைக்குத்தோற்று - "அடியேன்" என்கிறவிது சேருமோ? என்ன - பரவாநஸ்மி இத்யாதி. விரோதியாய்நிற்கும் நிலைகுலைகைக்கு ஹேதுவேதென்ன; த்ருஷ்டாந்த பூர்வகமாக அருளிச்செய்கிறார் - அஹம் என்றிருக்க இத்யாதி. "சேஷத்வம் ஆத் மாவுக்கு" இத்யாதிவாக்யவிவரணம் - சேஷத்வாகாரமான இத்யாதி. தானொழுகும்படியாயிற்று என்றவநந்தரம், 'இதினுடைய போக்யதை' என்றுசேஷம். விரோதியானசரீரமும் அழியும் படியாயிற்று என்றொருபாவமருளிச்செய்து, அசேதநமானசரீரமும் அழியும்படியாயிற்றென்று தாத்பர்யாந்தரம் - ஜ்ஞாநாநந்த இத்யாதி. அன்பையுடைத்தென்னாதே, "அன்பாயே" என்ற துக்குபாவம் - உன்பக்கலிலே இத்யாதி. அமூர்த்தமானவன்பு நீராகக்கூடுமோவென்ன; அசேத நமான தேஹம் விஷயவைலக்ஷண்யத்தாலே அன்பானாப்போலே, அமூர்த்தமானவன்பும் நீராயிற் றென்கிறார்-உடலம் இத்யாதி. சாஸ்த்ரம் சொல்லுகிறபடியன்றிக்கே,உடலம்அன்பாய்அன்புநீராய் இப்படி அமர்யாதமாகக்கூடுமோ? என்ன - முந்தற ச்ரவணமாய் இத்யாதி. நீர்கரையக்கூடு மோ? என்ன - அன்புநீரானால் இத்யாதி. வர்த்தமாந நிர்த்தேசத்துக்கு அர்த்தம் - அழிக்கைக்கு இத்யாதி. ஆபரணம்போலே ச்லாக்யமான இவர்திருமேனியை யுருக்கலாமோ? என்ன - அழிப் பாளன் இத்யாதி. அழிப்பாளன் - தட்டான். இவர்திருமேனி ஆபரணமாயிருக்குமோ? என்ன-

போலேகாணும் இவனும் உருக்கியழிக்கிறபடி. *தேசமானவணிகலனு மிவர்கைகூப்புச் செய்கையிறே. ஆழ்வார்க்குள்ளவுடலையுருக்கி யழிக்குமித்தனையோ? என்னில்,—[நெடு மாலே] - எதிர்த்தலையிலழிவுகண்டபின்பிறே இத்தலையிலழிவு. அவனுடைய வ்யாமோ ஹத்தைப்பார்க்கில் இதோன்றும் போராதபடியாயிருக்கும். அவனுடைய அழிவுசொல் லும்போது இனி இவ்வடைவில் வாசகஶப்தமிட்டுச்சொல்லவொண்ணாது, [நெடுமால்] என்னி லென்னுமித்தனை. மாலென்று - வ்யாமோஹம். நெடுமாலென்று - மிக்கவ்யாமோ ஹத்தையுடையனாயிருக்கை. அன்றிக்கே, மாலென்று - பெரியோனென்றபடியாய், அது தானும் ப்ரஹ்மருத்ராதிகளளவோ? என்னில்,—அல்ல, *மனிசர்க்குத் தேவர்போலத் தேவர்க்கும் தேவனென்கிறது. நெடுமாலென்று - ஸர்வேஶ்வரனென்றபடி. அவனுடைய பெருமையும் இவரையழிக்கைக்கு உடலாமித்தனையிறே. [சீரார் இத்யாதி] - மிக்ககனத் தையுடைத்தான செந்நெற்கதிர்களானவை கண்வளர்ந்தருளுகிற அழகைக்கண்டு, பரி சர்யைபண்ணுவாரைப்போலே அசையாநிற்கும். சீர் - கனமும், அழகும் கவரிபோலே வீச. கவரி - சாமரம். அன்றிக்கே, செந்நெலுக்குச் சீர்மையாவது - ஆராவமுதாழ்வார்க்கு அமுதுபடியாகிற சீர்மையாகிலுமாகிறது. அப்போது "அஹமந்நம்" (அஹமந்நம்) என்கிற சீர்மை. [கவரிவீசும்] - "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா:) என்னுமா போலே. அறுத்துநடவேண்டாபோலேகாணும். கருத்தறிந்து அடிமைசெய்வாரைப்போலே. ஶேஷவஸ்துவின் வ்யாபாரமடைய ஶேஷி தனக்கு அடிமையாக நினைத்திருக்கிறபடி. [செழுநீர்] - கண்வளர்ந்தருளுகிற ஸௌகுமார்யத்துக்குப்போரும்படி அழகிதான ஜலஸம் ருத்தியை யுடைத்தான திருக்குடந்தையிலே. செழுநீர் - பெருநீரென்றுமாம். [ஏரார் கோலம் இத்யாதி] - அழகுசமைந்தவொப்பனை நிறம்பெறும்படி கண்வளர்ந்தருளினாய். நாட்டார் உலாவித்திரியும்போது அவயவங்களிலுண்டான பொல்லாங்குகள் மறைந்து ஒன்றுபோலேயிருக்கும், ஓரிடத்திலே யிருத்தல் கிடத்தல்செய்தவாறே வைரூப்யந்தோற் றிக் கண்கொண்டு பார்க்கவொண்ணாதபடியிருப்பார்கள்; இங்கு அங்ஙனன்றிக்கே, "ஸமயாபோதிதஶ்ஶ்ரீமாந்" (ஸமயாபோதிதஶ்ஶ்ரீமாந்) என்று கிடந்தகிடைக்கு ஆலத்தி

---

ப்ர.—(சீரார்செந்நெல்) யுத்தகாண்டே [கஉ௭] "அகாலபலிநோவ்ருக்ஷா ஸஞ்ஜாதா: புஷ்பஶாலிந: । ஸஹஸ்ரஶோ மஹாதேவா ஜகத்ஸ்ருஜ: ॥ கஅ ॥"

---

தேசயான இத்யாதி. அழிக்குமித்தனையோ - தனக்கு ஒருவிக்ருதியில்லையோ என்றுகூட்டுவது. *நெடுமைக்கு அர்த்தம் - அவனுடைய இத்யாதி. ஆனால், "நீராயலைந்துகரைய" என்றாப்போ லே வாசகஶப்தமிட்டுச் சொல்லாதொழிவானென்? என்ன - அவனுடையஅழிவு இத்யாதி. நீர் மைபோலே மேன்மையும் ஈடுபடுத்தக்கூடுமோ? என்ன - அவனுடையபெருமையும் இத்யாதி. "சீர்" என்று - கனமாய், ஆர்தல் - மிகுதியாய், மிக்ககனத்தையுடைய செந்நெலென்னுதல்; "சீர்" என்று - அழகாய், அழகுமிக்க செந்நெலென்னுதல். வர்த்தமானார்த்தம் - அகால இத்யாதி. விவரணம் - அறுத்து இத்யாதி. அசேதநமானசெந்நெல் கவரிவீசக்கூடுமோ? என்ன- கருத்தறிந்து இத்யாதி. அதாவது -*அஹ்ருதஸஹஜதாஸ்யரான ஸூரிகளுடைய அவதாரமா கையாலே கூடுமென்றபடி. இவை அசேதநங்களானாலும் ஶேஷிநினைவாலே யடிமையாகக்கூடு மென்று பரிஹாரார்த்தம் - ஶேஷவஸ்துவின் இத்யாதி. *செழுமை - அழகாதல், ஸம்ருத்தியா தல். "கிடந்தாய்கண்டேன்" என்கைக்கு-கிடக்கிறதிலே அப்படியழகுண்டோ? என்ன; நாட் டாரைப்பற்ற வ்யாவ்ருத்தமாயன்றோ கிடையழகிருப்பதென்கிறார்-நாட்டார் இத்யாதி. "ஶ்ரீமான்"

வழிக்கவேண்டும்படியிருக்கை. "இவனுணரில் செய்வதேன்" என்று வயிறுபிடிக்க வேண்டும்படியிருக்கை. [கிடந்தாய்கண்டேன்] - "[illegible]" ([illegible]) என்கிறபடியே கிடையழகைக் கண்ணாலே காணப்பெற்றேன், நினைத்தபரிமாற்றம் பெற்றிலேன். † (என்னைப்பற்ற) எழுந்திருத்தல், இருத்தல், உலாவுதல், "என்செய்தாய்" என்னுதல், அணைத்தல்செய்யப்பெறுகிறிலேன். [எம்மானே] - "இதுநம்மது" என்று இராதொழியப்பெற்றேனாகில் நான் ஆறியிருக்கலாயிற்றே. வடிவோடொக்க ப்ராப்தியும் என்னை நலியாநின்றது. ப்ராப்தியையிட்டு இப்படி என்னை நலியலாமோவென்கிறார். (௧)

## இரண்டாம் பாட்டு.

எம்மானேயென்வெள்ளைமூர்த்தி! என்னையாள்வானே!
எம்மாவுருவும்வேண்டுமாற்றால் ஆவாயெழிலேறே!
செம்மாகமலஞ்செழுநீர்மிசைக்கண்மலரும் திருக்குடந்தை
அம்மாமலர்க்கண்வளர்கின்றானே! என்னான்செய்கேனே?

ஆ.—(எம்மானே.) எம்பிரானே, [illegible] திவ்யரூபனே, அந்ததிவ்யரூபமதஸௌந்தர்யத்தாலே என்னைத்தோற்பித்து உனக்கடிமையாக்கினவனே, ஆஶ்ரிதபரித்ராணார்த்தமாக இச்சாநுகுண திவ்யரூபவிஶிஷ்டனாய்க்கொண்டு பிறந்தருளுமவனே, நிரதிஶயதீப்தியுக்தனானவனே, திருக்குடந்தையில் தாமரைகளெல்லாம் மலராநிற்கச்செய்தே உன்னுடைய திருக்கண்களாகிற தாமரைகள் அலருகின்றனவில்லை; நான் என்செய்கேனென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தன்திறத்தில் செய்தருளின உபகாரத்தையும் ஆஶ்ரிதவிஷயத்தில் செய்தருளும் உபகாரங்களையும் எம்பெருமானுக்கு அறிவித்து, ஏவம்

என்றதுக்குபாவம் - இவனுணரில் இத்யாதி. "[illegible] (௨௪½)" இதி[illegible] [௩௮] [illegible]. "கிடந்தாய்கண்டேன்" என்றதுக்குபாவம் - எழுந்திருத்தல் இத்யாதி. எழுந்திருத்தலித்யாதி - வாக்யஶேஷமாய்க்கிடக்கிறது. "எம்மானே" என்கிறதுக்கு இரண்டுபாவம்,—முந்தினது - இதுநம்மதென்று இத்யாதி. இரண்டாவது - வடிவோடொக்க இத்யாதி. வடிவோடொக்க - வடிவழகுபோலே. "இதுநம்மதென்று" இத்யாதிவாக்யத்தால் பலிதம் - ப்ராப்தியை இத்யாதி. அதாவது - அப்ராப்தமாகில் ஆறியிருக்கலாம், ப்ராப்தமாகையாலே "இப்போதேபெறவேணும்" என்னும்த்வரையைப் பிறப்பியாநின்றது; இதறிந்து சீக்ரமாக உதவவேணுமென்கை. எம்மானே - ஆராவமுதே என்றுதொடங்கி க்ரமேணார்வய:. "[illegible]", "[illegible]", "[illegible] | [illegible]" இத்யாதி, [illegible]. (௧)

† குண்டலிதம் வ்யாக்யாநத்துக்குச் சேராது; க்வாசித்கம்.

ஸமர்த்தனான நீ என் அபேக்ஷிதம் செய்தருளுகிறிலையென்று அவஸந்நராய், கிம்கர்த்தவ்யதா மூடராய்க் கூப்பிடுகிறார்.

[எம்மானே என்று தொடங்கி] - எனக்கு நாயகனுமாய் என்னோட்டை ஸம்ச்லேஷைகதாரகஸ்வரூபனுமாய் விச்லேஷதசையிலும் நான் அவஸந்நனாகாதபடி உன் குணங்களாலே என்னை நிர்வஹிப்பதும்செய்து ஆச்ரிதர்க்கு ஈடாக தேவமநுஷ்யாதி ஸஜாதீயமாய் அதிச்லாக்யமான எல்லாவடிவையுமுடையையாகவல்லையுமாய், ஆச்ரித பரித்ராணம்பண்ணப்பெற்றதால் நிரதிசயதீப்தியுக்தனுமாய் மேனாணித்திருக்குமவனே! [செம்மாகமலம் என்றுமேலுக்கு] - சிவந்து பெருத்திருந்துள்ள தாமரைப்பூக்கள் பெருநீர்மேலே மலரா நின்றுள்ள திருக்குடந்தையிலே அழகிய தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கண்கள் அலரக்காண்கிறிலேன். நான்செய்வதென்?

ப.—அநந்தரம், ஆச்ரிதார்த்தமாக அநேகாவதாரங்களைப்பண்ணின நீ, உன் கண்ணாலே புரட்டிப்பார்க்கிறிலை; நான் என்செய்வேனென்கிறார்.

எம்மானே - (என்காரியம் நீயிட்டவழக்காம்படி) எனக்குஸ்வாமியாய், என் - எனக்கு ஸத்த்வோத்ரேகம்பிறக்கும்படி, வெள்ளை - பரிசுத்தமான, மூர்த்தி - வடிவை யுடையையாய், (அவ்வடிவழகைக்காட்டி), என்னை - என்ஸத்தைபழியாமல், ஆள்வானே - அநுபவிப்பித்துக்கொண்டுபோருமவனாய், எ - (இப்படி ஆச்ரிதார்த்தமாக தேவாதிகளான) எல்லாவகைகளையுமுடைத்தாய், மா - ச்லாக்யமான, உருவும் - அவதாரவிக்ரஹங்களை, வேண்டுமாற்றால் - இச்சாப்ரகாரத்தாலே, ஆவாய் - அங்கீகரித்து நிற்குமவனாய், எழில் - அவ்வோவிக்ரஹங்களிலழகாலே * யுகம்ஸாம்ஜ்ஞ்ஷிவிக்ஷிதாவஹாரத்தைப் பண்ணி, ஏறே - செருக்கனாயிருக்குமவனாய்வைத்து, செம் - சிவந்து, மா - பெருத்த, கமலம் - தாமரைகள், செழு - ஸம்ருத்தமான, நீர்மிசை - ஜலத்தின்மேலே, கண் - எங்கு மொக்க, மலரும் - மலருகிற, திருக்குடந்தை - திருக்குடந்தையிலே, அ - அந்த, மா - விலக்ஷணமான, மலர் - தாமரைப்பூப்போலேயிருக்கிற, கண் - திருக்கண்கள், வளர்கின்றானே - வளரும்படி கிடக்கிறவனே! நான் - நான், (இதற்கு), என் - என், செய்கேன் - செய்வேன்? எல்லாத்தாமரையும் மலரச்செய்தே, இவையிரண்டுதாமரை என்னைநோக்கி மலருகிறதில்லையென்று கருத்து. "அம்மாமலரென்றது - அழகியபெரியமலர்" என்றும் சொல்லுவர்.

ஈ.—இரண்டாம்பாட்டில், கண்வளரக்கண்டேன், கண்களாலே குளிரநோக்கக் காண்கிறிலேன் என்று முன்புபண்ணின உபகாரங்களைச்சொல்லிக் கூப்பிடுகிறார்.

[எம்மானே] - நீ நினைத்தபடிசெய்யுமித்தனைபோக்கி என்னுடைய ஹிதத்துக்கு நான்கடவேனோ. உடையவன் நினைத்தபடியன்றோ உடைமை. [என்வெள்ளை மூர்த்தி] - ப்ரயோஜநநிரபேக்ஷமாக என்னை விஷயீகரித்தவனே! வெளுப்பாலே சுத்தியைநினைக்கிறது. மூர்த்தி-ரூபமாய், ஸ்வபாவத்தை நினைக்கிறது. சுத்தஸ்வபாவன். எனக்குத் தன்பேறாகவுபகரித்தவன். [என்னையாள்வானே]-உன்னைப்பிரிந்துமுடியும் தசைகளிலே குணஜ்ஞாநத்தாலே ஜீவிப்பித்துப்போந்தவனே! [எம்மாவுருவும்] [எ-உரு, மா-உரு] எவ்வுருவுகொண்டால் ஆர்த்தரக்ஷணம்தலைக்கட்டும், அவ்வுருவைக்கொள்ளும்; அதுதான் அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநமாயிருக்கை. [வேண்டுமாற்றலாவாய்] - இச்சையாலே

என்னுதல். ஆஸ்ரிதர்க் கிடாகவென்னுதல். [எழிலேறே] - நித்யஸூரிகள் நடுவிருப்பிற் காட்டில், ஆஸ்ரிதர்கார்யம் செய்யப்பெறுகையாலே நிரதிஶய தீப்தியுக்தனுப் மேனுணித்திருக்கை. "பலபிறப்பாயொளிவருமுழுநலம்". [செம்மாகமலம்] - சிவந்து பெருத்தகமலம். [செழுநீர்] - ஜலஸம்ருத்தியைச் சொல்லுதல், தர்ஶநீயமென்னுதல். [அம்மாமலர்க்கண்வளர்கின்றனே] - அழகிய தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்கள் அலரக்காண்கிறிலேன். [அம்மாமலர்] - அவற்ருேடு ஸஜாதீயமாயிற்றின இரண்டுபூ அலரச்காண்கிறிலேனென்றுமாம். தம்பக்கல் விஶேஷகடாக்ஷம்பண்ணுகை - இவை மலருகையாவதென்றிருக்கிருர். [என்னன்செய்கேனே] - இவையிரண்டுமலர்ந்தாலல்லது தரியாத நான் என்செய்வேன். இவ்வூரில் புஷ்பங்களடைய மலர்ந்து வண்டுகள் மதுபானம்பண்ணிக் களிக்கச்செய்தேயும், இவையிரண்டும் மலர்ந்தால் அத்தேனைப்பருகவிருக்கிற நான் பட்டினிவிட்டேபோமித்தனையோ.

ஈடு.—இரண்டாம்பாட்டு. இப்படி கூப்பிடச்செய்தேயும் ப்ரதிவசநம்பண்ணுமையாலே, "உம்முடையகார்யம் நீரேசெய்யுமித்தனையன்ருே" என்றிருந்தானுகக்கொண்டு, முன்புபண்ணின உபகாரங்களைச்சொல்லிக் கூப்பிடுகிருர்.

[எம்மானே] - உடைமையோ! உடையவனே உடைமையைநிர்வஹிப்பார். "நீயே உன்கார்யம்செய்து தலைக்கட்டிக்கோள்" என்கைக்கு வெறும் நானேயாயிருந்தேனே. எம்மானே-என்னுதனே! [எம்மானேயென்வெள்ளைமூர்த்தி]- "பதிம்விஶ்வஸ்ய", (பதிம்விஶ்வஸ்ய,) "யஸ்யாஸ்மி" (யஸ்யாஸ்மி) என்கிற ப்ரமாணங்கொண்டறிந்தேனே.

---

இரண்டாம்பாட்டு, - எம்மானே இத்யாதி. பாட்டையெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - இப்படி இத்யாதி. உம்முடையகார்யம் நீரே செய்யுமித்தனையன்ருே வென்றது - ஹலம் உம்மதானபின்பு அதுக்குத்தக்க ஸாதநாநுஷ்டாநமும் நீரே செய்யுமத்தனையன்ருேவென்றபடி.

"எம்மானே - என்னன்செய்கேன்" என்று அந்வயத்தைவிவக்ஷித்து, ஸாதநாநுஷ்டாநம் பண்ணப்போகாதென்கிறவிடத்திலே ஸ்வாமித்வத்தைச்சொல்லுகிறதுக்கு ப்ரயோஜநமேதென்ன - உடைமையோ இத்யாதி. இவ்வாக்யத்துக்கு தாத்பர்யம் - ஸ்வமான என்னைப்பெறுகைக்கு ஸ்வாமியானநீயே ஸாதநாநுஷ்டாநம்பண்ணுமத்தனை யென்றிறே, அத்தையருளிச்செய்கிருர் - நீயே இத்யாதி. வெறும் நானேயாயிருந்தேனே-கேவலம் ஸ்வதந்த்ரனுயிருந்தேனே, உமக்கு ஸ்வமன்ருேவென்றபடி. இவ்விடத்திலே - "யே நாயவஸோஹிஹவஷிமொகே தேநாத்மகாயலாணிவஸாரஹஜெ । காயெஷூஷூதேஷாஂவஹவநிநாயாஶ்ஶ வ்யாஜயொராயயாயாதெ:" என்கிறஶ்லோகம் அநுஸந்தேயம். இது - பாண்டவர்கள் நிமித்தமாக ஸாத்யகி நம்பிமூத்தபிரானைப்பார்த்துச்சொன்னது. அதாவது - ஆரண்யபர்வத்திலே யயாதியினுடைய பெண்ணின்பிள்ளைகள் ஶைப்யன்முதலானுர் நாலுபேர்; இவர்கள், யயாதி ஸ்வர்க்கத்திலேயிருந்து விழுந்தபோது தங்கள் ஸுக்ருதங்களைக்கொடுத்து ஸ்வர்க்கத்திலே யேற்றினுர்களென்றுகதை. "எம்மான்" என்று அறிந்திருக்கச்செய்தேயும் உபாஸகர் ஸ்வயத்நத்தாலே தங்கள்கார்யம் செய்துகொள்ளவில்லையோ? என்ன,—"எம்மானே" என்கிறவிது - ஸாதநாநுஷ்டாநம்பண்ண ப்ராப்தியில்லாமையைச் சொல்லுகிறதென்னுமிடந்தோன்ற அருளிச்செய்கிருர் - பதிம்விஶ்வஸ்ய இத்யாதி. யஸ்யாஸ்மிநதமந்தரேமி,— யஸ்ய - ஸர்வேஶ்வரஸ்ய, தாஸோஸ்மி, தம், நாந்தரேமி - அதிக்ரமிக்கிறேனல்லேனென்றபடி. "வெள்ளை" என்று - வெளுப்பாய், ஶுத்தியைச்சொல்லி, "மூர்த்தி" என்று - ஸ்வரூபமாய், ஶுத்தஸ்வரூபனுகையாலே

பின்னை எங்ஙனே செய்தபடி? என்னில்,—ஸௌஸ்வரூபனுகையாலே, தன்படிகளி லொன்றும் குறையாதபடி எனக்குத் தன்பேறாகத் தானே காட்டக்கண்டேன். சிறிது மயர்வுகிடக்க நீ யருளினுயாகில் நான் ஆறியிருக்கலாயிற்றே. † (மூர்த்தி - ரூபமாய், ஸ்வ ஹாவத்தைநினைக்கிறது. ஸௌஸ்வஹாவனே) [என்னையாள்வானே] - காட்டுகிறபோது தெரியக்காட்டி, பின்னை என்வழியேயாக்கி என்னைக்கைவிட்டாயோ. *அஞ்சிறையமட நாரை, * மாசறுசோதி தொடக்கமான வ்யஸநங்களையும்போக்கி ஜ்ஞானஜ்ஞாநத்தாலே யரிப்பித்துக்கொண்டுபோந்தபடி. [எம்மாவுருவும்] - எனக்காகவும் ஆஸ்ரிதர்க்காகவும் நீபடும்பாடு அறிவுதியே. எவ்வகையாலும் விலக்ஷணமானவிக்ரஹம். அதாவது - "ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய" (ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்ட்டாய) என்கிறபடியே அப்ராக்ருதஜிவ்யஸம் ஸ்யாநமாயிருக்கை. [வேண்மோற்றல்] - "தனக்குவேண்டுருக்கொண்டு" என்கிறபடியே இச்சையாலேயென்னுதல்; ஆஸ்ரிதர் வேண்மோற்றுலேன்னுதல். ‡ "தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவந்தானே" என்னக்கடவதிறே. [எவ்வுருவும்வேண்மோற்றுலாவாய்] - "எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்", ஆஸ்ரிதார்த்தமாக நீகோள்ளாதவடிவுண்டோ. [எம்மாவுருவும்]- எல்லாவடிவும் அவன்கோண்டதாகையாலே ஶ்லாக்யமாயிருக்கிறபடி. அதாவது - "ஆவிர்பூதம்" (ஆவிர்ப்பூதம்) என்கிறபடியே அப்ராக்ருத ஜிவ்யஸம்ஸ்யாநத்தை இதா

ப்ர.—ஸ்ரீகீதாஸாவதாரெ-, "அஜோஅபிஸந்நவ்யயாத்மா பூதாநாமீஸ்வரோஅபிஸந் । ப்ரக்ருதிம்ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாம்யாத்மமாயயா ॥ ௬॥".

ஸ்ரீவிஷ்ணுபுராணெ பஞ்சமெம்ஸெ [௩] "ததொஅகிலஜகத்பத்மபொதாயாச்யுதபாநுநா । தெவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம் மஹாத்மநா ॥௨॥"

எனக்குத் தன்பேறாக * மயர்வறமதிநலமருளினனென்கிறார் - ஸௌஸ்வரூபன் இத்யாதி. "ஒன்றும்குறையாதபடி" என்றத்தை விவரிக்கிறார் - சிறிது இத்யாதி. "எம்மாவுரு" என்றதுக்கு மூன்றுபொருள்,—அதில் முந்தினது; "எம்" என்று - ஷஷ்டீவசநமாய், அதுக்கர்த்தம்- 'எனக்காகவும் இத்யாதி. "எ" என்றதுக்கு - எவ்வகையாலும் என்று இரண்டாமர்த்தம் - எவ் வகையாலும் இத்யாதி. எவ்வகையாலுமென்றது - அப்ராக்ருதமாகையாலும், இச்சாநிபந்தநமா கையாலும், பரார்த்தமாகையாலுமென்றபடி. அவதாரவிக்ரஹத்துக்கு வைலக்ஷண்யமுண்டோ? என்ன - அதாவது இத்யாதி. வேண்மோற்றல் - இச்சித்தப்ரகாரத்தாலே இதிஸப்தார்த்தஃ. தான் இச்சித்தபடியேயென்னுதல், ஆஸ்ரிதர் இச்சித்தபடியேயென்னுதல். ஆஸ்ரிதர் வேண்டின படியே விக்ரஹத்தைக்கொள்ளுமோ? என்ன - தமருகந்தது இத்யாதி. "எ" என்றதுக்கு - எல் லாமானவென்று மூன்றாமர்த்தம் - எவ்வுருவும் இத்யாதி. அதில்ப்ரமாணம் - எந்நின்ற இத்யாதி. ஸகலஜாதிகளிலும் அவதீர்ணனானவனே இத்யர்த்தஃ. மாவுரு - விலக்ஷணவிக்ரஹம். இது - அர்த்தத்ரயத்துக்குமொக்கும். "வேண்மோற்றல் - எம்மாவுருவுமாவாய்" என்று அர்த்தத்ரயத் திலும் அந்வயிப்பது. இச்சித்தபடியே எங்களுக்காக விலக்ஷணமான அவதாரவிக்ரஹங்களையு டையனானவனேயென்று ப்ராதமிகார்த்தம், இச்சையாலே எல்லாவகையாலும் விலக்ஷணமான விக்ரஹங்களையுடையவன் என்று இரண்டாமர்த்தம். அநேகமான விக்ரஹங்களையுடையவனே யென்று மூன்றாமர்த்தமென்று கண்டுகொள்வது. "வேண்மோற்றல்" என்றத்தைக்கடாக்ஷித்து- ஆஸ்ரிதார்த்தமாக இத்யாதி. "மாவுரு" என்றதுக்கர்த்தம் - எல்லாவடிவும் இத்யாதி. இந்த வாக்யம் - திர்யகாதிவிக்ரஹங்கள் ஶ்லாக்யமாயிருக்குமோவென்கிற ஸங்கைக்கு பரிஹாரமாயு

† குண்டலிதம் க்வாசித்கம். ‡ முதல்திருவந்தாதி—௪௪.

ஸஜாதீயமாக்குமித்தனையிறே. “ரூபமந்யத்தரோர்மஹத்” (ரூபமந்யத்தரோர்மஹத்) என்னுமித்தனையிறே. [வேண்டுமோற்றுலாவாய்] - கர்மமடியாக இவன் பிறக்குமாபோலேயிறே அநுக்ரஹமடியாக அவன்பிறக்கும்படி. இருவர்க்கும் பிறவியொக்கும். இவனுக்குக் கர்மக்ஷயம்பிறக்க ஜந்மக்ஷயம்பிறக்கும், இவன்கர்மம் அவன்காலிலே குனியப்போம்; அவனுக்கு நித்யமாய்ச்செல்லாநிற்கும். இனி அவனுக்குக் கர்மமேன்னப்பார்க்கிறது - அநுக்ரஹத்தையிறே, அதுதானும் நித்யமிறே அவனுக்கு. இவனுக்கு இவன்தன்னளவிலே பிறக்கவமையும், அவனுக்கு எல்லார்க்குமாகப் பிறக்கவேணுமே. இவனுக்குக் கர்மமடியாக வந்ததாகையாலே ஸ்வார்த்தமா யிருக்கும், அவனுக்கு அநுக்ரஹ மடியாக வந்ததாகையாலே பரார்த்தமாயிருக்கும். * “பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ ச” (பஹூநிமேவ்யதீதாநி ஜந்மாநி தவச) விறே. தவ ச என்கிறது-உன்னுடையபிறவி மெய்யாயிருக்குமாபோலே என்னுடையஜந்மமும் ஐந்த்ரஜாலிகமன்றுகாண். இப்படியிராதவன்று

---

தத்ரைவ ஶேஷதர்மே [எ]. “ஸஹஸ்ரஶஸ்ஸமஸ்தாஶ் ச நாநாரூபவிசேஷிதாஃ | விஶ்வரூபவிசேஷாஶ்ச ரூபமந்யத்தரோர்மஹத் ‖ எ0½ ‖”.

---

யிருக்கிறது. “அவனுடையவிக்ரஹம் அப்ராக்ருதம்” என்கிறதுக்கு ப்ரமாணம் - ரூபமந்யத் இத்யாதி. “ஸஹஸ்ரஶஸ்ஸமஸ்தாஶ்ச நாநாரூபவிசேஷிதாஃ| விஶ்வரூபவிசேஷாஶ்ச ரூபமந்யத்தரோர்மஹத்” இதி ஶேஷே. “ தேவகீபூர்வஸந்த்யாயாம் ஆவிர்பூதம் மஹாத்மநா” இதிவசநாச். விஶ்வரூபவிசேஷாஃ-விஶ்வத்திலுண்டான ரூபங்களைப்பற்ற விலக்ஷணமாயிருக்கும். இப்படி அழகாலே விலக்ஷணமாய் உபாதாநத்ரவ்யம் ஒன்றாயிருக்குமோ? என்ன, அந்யத் - வேறாயிருக்கும். அதாவது - அப்ராக்ருதமாயிருக்குமென்றபடி. “ஆவாய்” என்ற வர்த்தமாநத்துக்கு அர்த்தம் - கர்மமடியாக இத்யாதி. ஆனால் இருவர்க்கும் வாசியேதென்ன-இருவர்க்கும் இத்யாதிவாக்யத்வயம். கர்மக்ஷயம்பிறக்கைக்குஹேதுவேதென்ன-இவன்கர்மம் இத்யாதி. நித்யமாகச்செல்லுகைக்கு ஹேதுவேதென்ன - இனி அவனுக்கு இத்யாதி. அதுதானும்நித்யமிறேஅவனுக்கு - ஆனபின்பு, அநுக்ரஹத்துக்கு முடிவில்லாமையாலே அநுக்ரஹகார்யமான பிறவியும் நித்யமாய்ச்செல்லாநிற்கு மென்றபடி. அதுதானும் என்ற சப்தம் - ஸ்வரூபநித்யத்வத்தைஸமுச்சயிக்கிறது. நித்யதையாலே வ்யாவ்ருத்தியருளிச்செய்து, பரார்த்ததையாலும் வ்யாவ்ருத்தமென்கிறார்-இவனுக்கு இவன்தன்னளவிலே இத்யாதி. இந்தஸ்வார்த்தபரார்த்ததைகளுக்குஹேதுவேதென்ன-இவனுக்குகர்மம் இத்யாதி. ஈஶ்வரனுடைய அவதாரங்கள் அஸங்க்யாதங்களாயிருக்குமோ? என்ன,—ப்ரமாணம் - பஹூநி இத்யாதி. “பஹூநி மே வ்யதீதாநி ஜந்மாநி தவ சார்ஜுந | தாந்யஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ‖ரு‖” இதி ஶ்ரீகீதாயாம் சதுர்த்தே. ஶ்லோகார்த்தம் - தவ ச இத்யாதி. ஜந்மரஹிதனாயிருக்கிற நீ இப்படி அநேகாவதாரங்களைப் பண்ணுகிறாயென்றால், இது ஐந்த்ரஜாலிகமொழிய ஸத்யமாகக் கூடுமோவென்று அர்ஜுநன் ஶங்கிக்க; உன்னுடைய பிறவி எப்படிஸத்யம், அப்படி இதுவும் ஸத்யமென்றபடி. “ தவ ச ” என்கிறது - த்ருஷ்டாந்தார்த்தமென்கிறது. இப்படியிராதவன்று இத்யாதிவாக்யத்துக்குக் கருத்து - அவதாரங்கள் அஸத்யமானால், அவதாரங்களில் உக்தங்களான “ ஸக்ருதேவ ” இத்யாதிஶ்லோகங்களும் அஸத்யங்களாகையாலே, அவ்வார்த்தைகளை விஶ்வஸித்து நிர்ப்பரனாயிருக்கக்கூடாதென்று. அன்றிக்கே, இப்படி அவன் அநுக்ரஹத்தாலே அநேகாவதாரங்களைப்பண்ணுதபோது, இவனுக்கு “ அவனேரக்ஷகன் ” என்று விஶ்வஸித்து நிர்ப்பரனாயிருக்கவிரகில்லையென்கிறார் - இப்படிஇராதவன்று இத்யாதி. ஆவாய் - ஆகிற

இவனுக்கு மார்விலே கைவைத்துறங்கவொண்ணுதே. [எழிலேறே] - இப்படி ஆச்ரிதார்த்தமாகப் பிறவாநின்றால் பழையபுகரிற் குறைந்துவருமோ? என்னில், [illegible]லாத வெழிலுமுண்டாயிருக்கை. கர்மத்தாலேபிறக்கிலிறே நிறக்கேடாவது. *பலபிறப்பாயொளி வருமுழுநலமிறே. "ஸஉ்ரேயாந்பவதிஜாயமாந:" (ஸஉ்ரேயாந்பவதிஜாயமாநః) ஸவவ என்கிறதிறே - எல்லார்க்கும் பிறக்கப்பிறக்கப் புகர் அழிந்துவரும். இவனொருவனுக்கும் பிறவாநின்றால் புகருண்டாகாநிற்குமிறே. தேசமறியப்புகருண்டாய் நெஞ்சுவேறுத்திருக்குமோ? என்னில்,—"பிறக்கப்பெற்றோம்" என்னும் மேனாணிப்பை யுடையனாயிருக்கும். "பட்டிமேய்ந்தோர்காரேறு" என்கிறபடியே. "வானிளவரசு" என்கிறபடியே அகம்படிவைத்த அரசாயிருக்கும் அங்கு, அச்சேறுப்புத்தீர ஸ்வைரம் ஸஞ்சரிக்கப்போந்தவிடமிறே இது, ஆகையாலே, அங்குநின்றும்போந்து பிறந்தபின்பாயிற்று எழிலேறாயிற்று. அடியறிவார் "பவாந்நாராயணோதேவ:" (பவாந்நாராயணோதேவ:) என்றால், அது

ப்ர.—(எழிலேறே) யஜுஷி, [அஷ் - ௩, ப்ர - ௬, அ - ௧] "[illegible] வாஸா:பரிவீத: ஆகாத்ஸஉஸ்ரேயாந்பவதிஜாயமாந: | தம் தீராஸ: கவய உந்நயந்தி ஸ்வாத்யோமநஸா தேவயந்த:".

யுத்தகாண்டே [௧௨0] ராவணவதாநந்தரம், "உத்திஷ்டாதேவதாநேக [illegible] தேவகார்யம்க்ருதம் த்வயா | [illegible] ||௧0½|| [illegible] ||௧௧½|| [illegible] ||௧௨½|| பவாந்நாராயணோதேவஸ்ஸ்ரீமாந்சக்ராயுதோவிபு: | ஏகஸ்ருங்கோவராஹஸ்த்வம் பூதபவ்யஸபத்நஜித் ||௧௩½||".

வனே. அதுக்கு ஹேதுவேதென்ன - கர்மத்தாலே இத்யாதி. பிறக்கப்பிறக்கப் புகர் அதிசயிக்கைக்கு ப்ரமாணம் - பலபிறப்பாய் இத்யாதி. "ஆத்மாவைப்போலல்ல திவ்யபிறவி" என்றதுக்கு ப்ரமாணம்- ஸஉஸ்ரேயாந் இத்யாதி. இந்தஸ்ருதியிலே - சேதநவ்யாவ்ருத்தி தோன்றுகிறதோ? என்ன - ஸவவ இத்யாதி. இதுக்கர்த்தம் - எல்லார்க்கும் இத்யாதி. "ஏறே" என்கிறபதத்துக்கு அவதாரிகை - தேசமறிய இத்யாதி. மேனாணிப்பு - கர்வம். அவதரித்த விடத்தில் வ்ருஷபம்போலே மேனாணித்திருக்கைக்கு ப்ரமாணம் - பட்டி இத்யாதி. ஸ்வைர ஸஞ்சாரம்பண்ணி அத்தாலே அத்விதீயமான கறுத்த வ்ருஷபம்போலே மேனாணித்திருக்குமவனித்யர்த்த:. நாய்ச்சியார்திருமொழி, பதினாலாந்திருமொழி, முதற்பாட்டு. இதுக்கர்த்தம் - வானிளவரசு இத்யாதி. வானிளவரசு-வ்ருத்தமந்த்ரிகளிறே பாலராஜாவானவன் வர்த்திக்குமாபோலே, பரமபதத்துக்கு இளவரசாயுள்ளவனித்யர்த்த:. பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம் பத்து, ஆறாந்திருமொழி, மூன்றாம்பாட்டு. அகம்படி - பழையபடியார். சேறுப்பு - ஸங்கோசம். வாயை. "இதுவே இஷ்டமாய் மேனாணித்திருக்கும்" என்கைக்கு ஸம்வாதத்தையருளிச்செய்கிறார் - அடியறிவார் இத்யாதி. சூழ்த்துக்கொடுக்கை - ஆணையிட்டுக்கொடுக்கை. "பவாந்நாராயணோதேவஸ்ஸ்ரீமாந்சக்ராயுதோவிபு:| ஏகஸ்ருங்கோவராஹஸ்த்வம்பூதபவ்ய

அஸஹ்யமாய், "ஆத்மாநம்மாநுஷம்மந்யே" (ஆத்மாநம்மாநுஷம்மந்யே) என்றும், "அஹம்வோபாந்தவோஜாத:" (அஹம்வோபாந்தவோஜாத:) என்றும் சூழ்த்துக்கோடுக்கும்படியிறே அவதாரத்திலே மெய்ப்பாடிருக்கும்படி. [செம்மா இத்யாதி]-அவதாரகாலத்திலுதவாதார்க்கும் இழக்கவேண்டாதபடியிறே கோயில்களிலேவந்து கண்வளர்ந்தருளுகிறது. [செம்மாகமலம் இத்யாதி] - பரிமளம் முகத்தேவந்தலையேறிய அதுதானே தோடைகுத்தக்கிடந் துறங்குகிறபடி. சிவந்த பெரியகமலங்களானவை, தர்சநீயமான நீரையமுக்கி மேலேயலருகிறபோது, கடல்நிறமானவடிவையும் அங்குத்தை யவயவங்களையும் காட்டாநின்றன. [செம்மாகமலம்] - அரைக்ஷணத்திலே சேவ்விமாறுகிறதாமரை அங்குத்தைக் கோப்பாகாதிறே, வருந்திச்சோல்லும்போதும் இத்தனையேறிட்டுச் சொல்லவேணுங்காணும். [அம்மாமலர்க்கண் வளர்கின்றானே]-அழகிய தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்கள் அலரக் காண்கிறிலேன். [அம்மாமலர்] - அவற்றோடே ஸஜாதீயமாயிற்றின இரண்டுபூ அலரக்காண்கிறிலேனென்றுமாம். [என்நான்செய்கேனே] - இவையிரண்டு மலர்ந்தாலல்லது யரியாதிருக்கிற நான் என்செய்கேன். திருக்குடந்தையிலே தாமரைகள் அலர்ந்தால் மது்பாநம்பண்ணக்கடவ வண்டுகள் மது்பாநம்பண்ணிக்களியாநின்றன, இத்தாமரைகள் அலர்ந்தால் மது்பாநம்பண்ணக்கடவவண்டு இங்ஙனே பட்டினிகிடந்துபோமித்தனையோ. [என்னான்செய்கேனே]-"இக்கூப்பீடு உருவச்செல்லும்" என்றிருக்கிறாயோ, சென்றற்றதுகிடாய். "இவையொழிய மது்பாநம்பண்ணோம்" என்கையிறே இவர்க்கு இங்ஙன் படவேண்டுகிறது. இனி இவையலருகையாவது-விசேஷகடாக்ஷம்பண்ணுகைகாணும். அவன்கண் விழியாதபோது இவர் கண்விழிக்கமாட்டாரே. (௨)

---

ப்ர.—ஸ்ரீவிஷ்ணுபுராணே வஸுதேவம் ப்ரதி ஸ்ரீக்ருஷ்ணவசநம் [௩௩] "நாஹம்தேவோ நகந்தர்வோ நயக்ஷோ நசதாநவ: । அஹம்வோபாந்தவோ ஜாதோ நைதச்சிந்த்யமதோந்யதா ॥ ௩௨½ ॥".

---

ஸவதஜீஸ'' இதி யுதிஷ்டிரம் ப்ரதி. "ஆத்மாநம்மாநுஷம்மந்யே ராமம்தசரதாத்மஜம்" இத்யாதி. "நாஹம்தேவோ நகந்தர்வோ நயக்ஷோ நசதாநவ:। அஹம்வோபாந்தவோஜாதோ நைதச்சிந்த்யமதோந்யதா" இதிவஸுதேவம்ப்ரதி. கோயில்களிலே என்கிற வசநத்துக்கு-"நாகத்தணைக்குடந்தை" இத்யாத்யநுஸந்தேயம். "செம்மாகமலம்" என்றதுக்கு - போக்யமாயிருக்குமென்று, போக்யதைக்குறுப்பாக பாவம் - பரிமளம் இத்யாதி. அவன் திருமேனிக்கும் திவ்யாவயவங்களுக்கும் போலியாயிருக்குமென்று உபமாநபரமாக பாவாந்தரம் - சிவந்த இத்யாதி. "செம்மா" என்றுவிசேஷித்ததுக்கு பாவம் - அரைக்ஷணத்திலே இத்யாதி. "அம்" என்று - அழகாகவர்த்தம் - அழகிய இத்யாதி. "அ" என்று பூர்வபராமர்சியாக்கி அர்த்தாந்தரம் - அவற்றோடே இத்யாதி. "அம்மாமலர்க்கண்வளர்கின்றானே, என் - செய்கேன்" என்றதுக்கு பாவம் - திருக்குடந்தையிலே இத்யாதி. "நான்" என்றதுக்குபாவம்-இக்கூப்பீடு இத்யாதி. அல்லாதபூக்களில் மதுவைப்பாநம்பண்ணவொண்ணாதோ இவர்க்கென்ன-இவையொழிய இத்யாதி. "க்ஷயோந்யத்ர" என்னக்கடவதிறே. சென்றற்றதுகிடாய்-முடியுமளவாயிற்று கிடாயென்றபடி. ஸ்வாபதேசம் - இனியிவை இத்யாதி. க்ரமேணாந்வய:. (௨)



# மூன்றாம் பாட்டு.

---

**என்னான்செய்கேன்யாரேகளைகண் என்னையென்செய்கின்றாய்**
**உன்னாலல்லால்யாவராலும் ஒன்றும்குறைவேண்டேன்**
**கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தாய் அடியேனருவாணாள்**
**சென்னாளெந்நாளெந்நாள் உனதாள்பிடித்தேசெலக்காணே.**

**ஆ.**—(என்னான்செய்கேன்) என்னாலொருசெயலில்லை, நீயல்லது எனக்கு மற்றொருகதியில்லை, என்னுடைய யத்நத்தாலே உன்திருவடிகளைப் பெறக்கடவனாகவோ! பார்த்தருளுகிறது, உன்னுடைய க்ருபையாலே உன்திருவடிகளைப் பெறுகையொழிய வேறோருபாயத்தால் பெறிலும்வேண்டா; ஆனபின்பு, இனி இவ்வாத்மா உள்ளகாலமும் உன் திருவடிகளைப்பிரியாதேயிருக்கும்படி பார்த்தருளவேணுமென்கிறார்.

ஒ.—மூன்றாம்பாட்டில்; இப்படி கூப்பிட்டவிடத்திலும் ஸ்வாபிலஷிதம் பெருமையாலே ‘நம்முடைய நிர்வாஹம் நாமே செய்துகொள்வோம்’ என்று பார்த்தருளினானாகாதே! என்று நினைத்து; ‘என்னுடைய அபேக்ஷிதங்கள் நீயே செய்தருளவேணும்’ என்கிறார்.

[என் என்றுதொடங்கி] - உன்திருவடிகளைப்பெறுகைக்கு என்னால் செய்யலாவதொரு ப்ரவ்ருத்தியில்லை; உன்னையொழிய வேறு நிர்வாஹகருண்டாக ஸம்பாவனையுமில்லை. என்னை நீயே விஷயீகரிக்கப்பார்த்தருளினாயோ? தானே யத்நம்பண்ணிவருகிறானென்று விடப்பார்த்தருளினாயோ? [உன்னாலென்றுமேலுக்கு]-நானேயத்நம்பண்ணி உன்னைப்பெற அமையுமென்று இருக்கிறாயாகில் என்னுடைய யத்நத்தாலேயாதல் ஹேத்வந்தரங்களாலேயாதல் வரும் ஒன்றால் பரிக்ஷம் ப்ரக்ருதியல்லேன். ‘ஸ்நேஹிகளுக்கு என் புகுருகிறதோ?’என்று அஞ்சவேண்டாதபடி செம்பாலேசெய்த திருமதிள்சூழ்ந்த திருக்குடந்தையிலே கண்வளர்ந்தருளுகிறவனே! என்னுடைய ஆத்மா உண்டாய்ச்செல்லும்நாள் எத்தனைநாளுண்டு? அத்தனைநாளும் உன்திருவடிகளைப்பெற்றுச் செல்லும்படி பார்த்தருளவேணும்.

**ப.**—அநந்தரம், அகிஞ்சநனான நான் உன்னையொழிய வேறொருவராலும் அபேக்ஷையையுடையேனல்லேன்; இப்படியாக்கின நீயே, யாவதாத்மபாவி உன்திருவடிகளிலே யடிமைகொண்டருளப் பார்க்கவேணுமென்கிறார்.

நான் - (கர்த்ருத்வம் ஸ்வாதீநமல்லாத) நான், (ஸ்வரக்ஷணார்த்தமாக), என் - என்னப்ரவ்ருத்தியை, செய்கேன் - பண்ணுவேன்; (வேறு, தந்தாங்காரியம் தாந்தாமறியாத சேதநரில்), களைகண் - ரக்ஷகராவார், யார் - ஆர், என்னை - (அஶக்தனான) என்னை, என்செய்கின்றாய் - (துஶ்ஶகோபாயங்களிலே மூட்டநினைத்திருக்கிறாயோ, உனக்கே பாரமாக ஏறிட்டுக்கொள்ள நினைத்திருக்கிறாயோ), என்செய்யவிருக்கிறாய்? உன்னாலல்லால் - (ஸர்வரக்ஷகனாய்ப்ராப்தனாய் ஶக்தனான) உன்னையொழிய, யாவராலும் - (அரக்ஷகராய் அப்ராப்தராய் அஶக்தரானவர்கள்) ஆரேனுமொருவராலும், ஒன்று - ஒரு, குறையும் - குறையும், (நிரம்புவதாக), வேண்டேன் - வேண்டியிரேன்; கன்-சிக்கெனவு, ஆர் - விஞ்சி

யிருக்கிற, மதிள் - மதிள், சூழ் - சூழ்ந்த, குடந்தை - திருக்குடந்தையிலே, கிடந்தாய் - கண்வளர்ந்தருளினவனே! அடியேன் - உனக்கடியேனான என், அரு - ஆத்மவஸ்து, வாழ் - உஜ்ஜீவிக்கும், நாள் - காலம், செல் - அநுவர்த்திக்கும், நாள் - நாள், எ - எத்தனை, நாள் - நாள், அந்நாள் - அந்நாளெல்லாம், உன - உன், தாள் - திருவடிகளை, பிடித்தே - அவலம்பித்துக்கொண்டே, செல - நடக்கும்படி, காண் - பார்த்தருளவேணும். கன்னென்று - தொழிலுமாம். அருவென்று - அணுரூபமான ஸ்வரூபம்.

இ.—மூன்றாம்பாட்டில், இப்படி கூப்பிட்டவிடத்திலும் அதிமதம்பெருமையாலே, "'தானே ஸாதநாநுஷ்டாநம்பண்ணிவருகிறான்' என்று கைவிட்டிருந்தான்" என்று நினைத்து, என்னபேக்ஷிதம் செய்தருளவேணுமென்கிறார்.

[என்னான் இத்யாதி] - உன் திருவடிகளைப்பெறுகைக்கு என்னாற் செய்யலாவதில்லை. எனக்கும் செயலுக்கும் என்னசேர்த்தியுண்டு. ஒருஊர்பலன்தலையிலே மலையையெடுத்தினாப்போலே யிருக்கையிறே என்னை ஸாதநாநுஷ்டாநத்திலே மூட்டுகையாவது. ஒருஸர்வசக்தி நிர்வஹிக்குமத்தை நான்செய்யவோ. நீர் ஊர்பலராகில்வேறேசிலர் நிர்வாஹகராகிலோ? என்ன,—[யாரேகளைகண்] - ஸ்வரக்ஷணத்தில் அசக்தரானவர்கள் எனக்கு ரக்ஷகராகவோ. அமிழ்ந்துவார் அமிழ்ந்துவாரை எடுக்கவோ. என்னளவும் புகுரநில்லாதவர்கள் எனக்கு ரக்ஷகராகவோ. [என்னையென் செய்கின்றாய்] - நீ உன்னைத்தரப்பார்த்தாயோ, உபாயாந்தரங்களைக்காட்டி யகற்றப் பார்த்தாயோ. "நெறிகாட்டி நீக்குதியோ". [உன்னாலல்லால் இத்யாதி] - நானும் எனக்குக்கடவனாய், பிறரும் சக்தரானவன்றும், உன்னால்வரும் நீயொழிய என்னால்வரும்நீயும் வேண்டா, பிறரால்வரும்நீயும் வேண்டாமென்கை. "[illegible]". [கன்னார் மதிள்] - செம்பாலேசெய்த மதிளென்னுதல்; கன்னென்று - தொழிலாய், தொழில்மிக்கிருந்துள்ள மதிளென்னுதல். "என்புகுருகிறதோ" என்று ஆஶ்ரிதர்க்கு அஞ்சவேண்டாதிருக்கை. அவன்சக்தியை யநுஸந்தித்துத் தமக்கு அவன் மதிளாக நினைத்திருப்பர், அவன் ஸௌகுமார்யத்தைப்பார்த்தால் மங்களாஶாஸநம்பண்ணுமித்தனையிறே. மதிளுக்கு மதிளிடுகிறார். உபாயம் ஸந்நிஹிதமாய் ஸுரக்ஷிதமானால் கொள்ளப்புகுகிறகார்யம் என்? என்னில்,—[அடியேன் இத்யாதி] - என்னாத்மாவுண்டாய்ச் செல்லும்நாள் எத்தனை நாளுண்டு, அத்தனைநாளும் உன்திருவடிகளையே பெற்றுச் செல்லும்படி பார்த்தருளவேணும். [அடியேனரு] - உனக்கு அநந்யார்ஹசேஷமான ஆத்மவஸ்து. தாம்நினைத்த பரிமாற்றம் கிட்டாமையாலே, "அதுக்கடியான அத்யவஸாயங்குலைகிறதோ" என்று அஞ்சி, அதுகுலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறாரென்றுமாம். "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்" என்கிறது குலையாதபடி பார்த்தருளவேணும். அத்யவஸாயமிது, ருசியில்வந்தால் பரமபக்தியுக்தர், விளம்பத்துக்கு அடியென்? என்னில்,—பக்திவிபாகத்துக்காகவும், இவருடைய ப்ரேமம் வழிந்தசொல்லாலே நாட்டைத் திருத்துகைக்கும்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. இப்படி நசையற்றாற்போலே துடித்துக்கிடந்து கூப்பிட்டவிடத்திலும்; குளிரநோக்குதல் வினவுதல் செய்யாமையாலே, பேறு தம்மதானால் பெறுவார்க்கும் சிலசெய்யவேணுமென்று இருந்தானாகக்கொண்டு; நான் என்காரியம் செய்கையென்று ஒன்றுண்டோ, நீசெய்து தலைக்கட்டித் தரவேணுமென்கிறார்.

[என்னான்செய்கேன் யாரேகளைகண் என்னையென்செய்கின்றாய்] - என்மேலே விட்டிருக்கிறாயோ? பிறர்மேலே விட்டிருக்கிறாயோ? நீயேசெய்யக்கடவதாக நினைத்திருக்கிறாயோ? [என்னான்செய்கேன்] - "நான்செய்வது எது" என்று கேட்கிறாரல்லர், நான் செய்து தலைக்கட்டவேதாக நினைத்திருக்கிறவற்றுக்கும் எனக்கும் என்னசேர்த்தியுண்டு. [யாரேகளைகண்]-அமிழ்ந்துகிறார் அமிழ்ந்துகிறாரையெடுக்கவோ. *[illegible] பண்ணுகைக்கும் ஆளல்லாதவர்கள் என்கார்யம்செய்யவோ. [என்னையென்செய்கின்

ப்ர.—(என்னான்செய்கேன்) [illegible] ‖ ௩ ‖".

மூன்றாம்பாட்டு.—என்னான் இத்யாதி. "என்னான்செய்கேன்"இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை - இப்படி இத்யாதி. நசையற்றாப்போலே - தம்முடையப்ராணனில் நசையற்றாப் போலேயென்றபடி.

"என்னான்செய்கேன்" என்று - தம்முடைய செயலறுதியும், "யாரேகளைகண்" என்று - பிறர் ரக்ஷகரல்லாமையும், "என்னையென்செய்கின்றாய்" என்று - அவனைக்கேட்கிறதுமான இம்மூன்றிலும் இவர்க்குண்டான ஹாவத்தை யருளிச்செய்கிறார் - என்மேலே இத்யாதி. "இவன் தானே ஸாதநாநுஷ்டாநம்பண்ணுகிறான், நாமென்" என்று என்மேலேயாக்கி முகங்காட்டாதிருக்கிறாயோ, அஸ்ஸாதநாநுஷ்டாநத்துக்கு நான் க்ஷமனல்லேனென்கிறவிது - என்மேலே விட்டிருக்கிறயோ என்றதுக்கு தாத்பர்யம். "இவன் ஸாதநாநுஷ்டாந க்ஷமனல்லனேயாகிலும் பிறர் இவனை ரக்ஷிக்கிறார்கள்" என்று அவர்கள்மேலேயாக்கி முகங்காட்டாதிருக்கிறாயோ, அவர்கள் ரக்ஷிக்கமாட்டார்களென்கிறவிது - பிறர்மேலே விட்டிருக்கிறயோ என்றதுக்கு தாத்பர்யம். "தன்னிலையும் பிறர்நிலையும் இப்படியானபின்பு நாமேயன்றோ உளோம்" என்று நீயே ரக்ஷிக்கப் பார்த்தாயோ என்கிறவிது - நீயேசெய்யக்கடவதாக நினைத்திருக்கிறயோ என்றதுக்கு ஹாவம். என்னான்செய்கேனென்றது - அநுவாதமன்றிக்கே ப்ரச்நோக்தியுமன்றிக்கே, க்ஷேபோக்தியாய், அஜ்ஞனாய் அசக்தனான நான் என்ன ஸாதநாநுஷ்டாநம் பண்ணுவேனென்றபடி. இத்தைக் காட்டுகிறார் - நான்செய்வது இத்யாதி. என்னசேர்த்தியுண்டு என்கிறவிடத்திலே - ஸ்ரீவசநபூஷணத்திலே, "என்னான்செய்கேன் என்கிறவிடத்திலே இம்மூன்றுமுண்டு" என்றருளிச்செய்த அர்த்தத்ரயமும் விவக்ஷிதம். அதாவது - எம்பெருமான் தம்முடைய ஆர்த்திகண்டு இரங்கக்காணாமையாலே, தன்னைப்பெறுமிடத்தில் சில ஸாதநாநுஷ்டாநம் பண்ணவேணுமென்று இருந்தானாகக்கொண்டு; உபாயாந்தராநுஷ்டாநத்துக்கு யோக்யதையில்லாதபடி அஜ்ஞனாய் அசக்தனான நான் என்செய்கேன்; ஜ்ஞாநம் தந்தோமே? என்னில்,—நீதந்த ஜ்ஞாநத்தாலே ஸ்வரூபபாரதந்த்ர்யத்தை யுணர்ந்து "ஸாதநாநுஷ்டாநம் அப்ராப்தம்" என்றிருக்கிற நான் என்செய்கேன்; ஸ்வரூபத்துக்குச்சேராதாகிலும் உன்னைப்பெறலாமாகில் அதுதன்னை அநுஷ்டிக்கலாயிற்றிறே, ஜ்ஞாநமாத்ரத்தைத்தந்தாயாகில், பக்திரூபாபந்நஜ்ஞாநத்தைத் தருகையாலே ஒன்றையும் அடைவுபட அநுஷ்டிக்க க்ஷமனல்லாதபடி பக்திபரவசனானேன் என்செய்வேனென்றபடி. நீர் அசக்தரானால், சக்தரான தேவதாந்தரங்கள் ரக்ஷகரானாலோ? என்ன - அமிழ்ந்துகிறார் இத்யாதி. அதாவது-அசக்தரென்றபடி. எடுக்கமாட்டாவிட்டால் உசாத்துணையாவர்களோ? என்ன-[illegible] இத்யாதி. அதாவது - அஜ்ஞதையாலும் என்கார்யம் செய்யமாட்டார்களென்றபடி. "என்செய்

ருய்] - * நெறிகாட்டி நீக்குதியோ, நின்பால் கருமாமுகிமேனிகாட்டுதியோ, நீ நினைத்திருக்கிறதேன்? [என்னான்செய்கேன் யாரேகளைகண் என்னையென்செய்கின்ருய்] - என்னையறியாயோ! பிறரையறியாயோ! உன்னையறியாயோ! என்னை நாளுகவன்றே வ்யாஜிபண்ணியிருக்கிறது. [யாரேகளைகண்] - என்னளவுகிட்டாதார் எனக்குரக்ஷகராகவோ. [என்னையென்செய்கின்ருய்] - நீசெய்து தலைக்கட்டப்பார்த்தாயோ? அன்றிக்கே, "ஸாதநாநுஷ்டாநம்பண்ணிவாரும்" என்று நளன் தமயந்திக்கு வழிகாட்டினாப்போலே கைவிடப் பார்த்தாயோ? [என்னான்செய்கேன்] - தாம் கைவாங்கினபடி. [யாரேகளைகண்] - பிறர்பக்கல்நின்றும் கைவாங்கினபடி. [என்னையென்செய்கின்ருய்] - 'மத்யாஜீமாம்நமஸ்குரு' (மாத்யாஜீமாம்நமஸ்குரு) என்னப்பார்த்தாயோ? "மாமேகம்" (மாமேகம்) என்னப்பார்த்தாயோ? [உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்] - நீ

ப்ர—தத்ர நவமே, "மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு | மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம்மத்பராயண: || ௩௪ ||"

கின்ருய்" என்கிற ஸம்புடயம் த்விசிஷ்டமாகையாலே அருளிச்செய்கிறுர்-நெறிகாட்டி இத்யாதி. உபாயாந்தரங்களைக் காட்டி "அவற்றை அநுஷ்டித்துவா" என்று அகற்றப்பார்க்கிருயோ, அன்றிக்கே உனக்கு அஸாதாரணமாய்க் கறுத்து ஸ்லாக்யமான அஞ்சநம்போலேயிருக்கிற திருமேனியைக் காட்டுதியோவென்றபடி. பெரியதிருவந்தாதி, ஆரும்பாட்டு. இப்பதத்ரயங்களிலும் விஜித்த மூன்று ஆகாரங்களாலே - உன் உபேக்ஷையொழிய, வேறு முகங்காட்டாமைக்கு ஹேதுவில்லையென்று இவர்க்கு அபிப்ரேதமென்னுமிடந்தோற்ற அருளிச்செய்கிறுர் - என்னையறியாயோ இத்யாதி. "அஜ்ஞனுய் அஶக்தனுன நான் என்னஸாதநாநுஷ்டாநம் பண்ணுவேன்" என்னுமத்தை வ்யங்க்யமாக அருளிச்செய்கிறுர்-என்னைநாளுக இத்யாதி. என்னை நாளுகவன்றே வ்யாஜிபண்ணியிருக்கிறதென்றது-என்னை' 'அஜ்ஞன், அஶக்தன், அப்ராப்தன்" என்று வ்யாஜிபண்ணியிருக்கவில்லையோ, ஸர்வஜ்ஞனுய் ஸர்வஶக்தியான தேவரீரோபாதி விசாரித்துவிட்டதோவென்றபடி. என்னளவுகிட்டாதாரென்றது - என்னோபாதி உன்ப்ரஸாதத்துக்கு இலக்காகாதாரென்றபடி யென்னுதல், என்னளவு ஜ்ஞாநஹக்திரஹிதரென்னுதல். நளன் தமயந்திக்கு வழிகாட்டுகையாவது - காட்டிலேதமயந்தியை உபேக்ஷிப்பதாகநினைத்து, "ஏஷ பந்தா விதர்பாணாமேஷ யாதி கோஸலாந்" - என்கிறபடியே - இது உங்கள்தமப்பனுர் ஊருக்குப் போகிறவழி, இது நம்முடைய ஊருக்குப்போகிறவழியென்றது. இம்மூன்றுபதத்தாலும் - "அநந்யஸாத்யே ஸ்வாபீஷ்டே மஹாவிஶ்வாஸபூர்வகம்" என்று ப்ரபத்தியை விதிக்கிற ஶ்லோகத்திற்சொன்ன ஆகிஞ்சந்ய அநந்யகதித்வங்களும், "அவனேரக்ஷகன்" என்னுமதுவும் சொல்லிற்று என்னுமிடந்தோற்ற அருளிச்செய்கிறுர்-தாம்கைவாங்கினபடி இத்யாதி. என்னையறியாயோ என்றுதொடங்கி, மாமேகம் என்னப்பார்த்தாயோ என்னுமளவும் - உத்தரோத்தர விவரணமாகவுமாம். "மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு | மாமேவைஷ்யஸியுக்த்வைவமாத்மாநம்மத்பராயண:", இதி ஸாத்யபூர்வகம், நவமே. மத்யாஜீமாம்நமஸ்குரு" என்று ஸித்தோபாயத்தைச் சொல்லுகிறது. கீழ் அநந்யப்ரயோஜநத்தாலே யருளிச்செய்து, அநந்யஸாதநத்தாலே யருளிச்செய்கிறுர், மேல் உன்னாலல்லால் என்று தொடங்கி. அதாவது - தமக்கு உபாயாந்தரங்களிலே ஜ்ஞாநஶக்திகளுமுண்டாய் ரக்ஷகாந்தரங்களுக்கு மோக்ஷப்ரதத்வஶக்தியுமுண்டாகிலும் ஸ்வரூபவிருத்தமாகையாலே தமக்கு வேண்டாவென்கிறுர் - உன்னாலல்லால் இத்யாதியாலே என்று. "உன்னாலல்லால்" இத்யாதிக்கு மூன்றுபொருள். முந்தினது; "என்னான்செய்கேன்" என்கிற பதமாத்ரத்தைக்கடாக்ஷித்து, உன்னால்வரும் உன்னையொழிய உபாயாந்தரங்களால்வரும்

“ மாம் நமஸ்குரு ” (மாம்நமஸ்குரு) என்றால் எனக்கு மோக்ஷமோகாதுகிடாய் பெறுவது உன்னையேயாகிலும் உன்னாலேபெறுமன்று வேண்டேன், என்னாலும் பிறராலும் பெறும் உன்னையும் வேண்டேன். உன்னாலல்லால் என்கிறவித்தை - உபேயவிஷயமாக்கி, “ உன்னையொழிய மற்றொன்றால் எனக்கோரு குறையில்லை ” என்றுசொல்லுவாருமுண்டு [யாவராலும்] - யாவையாலுமென்னுதே, யாவராலுமென்கிறது - “ உபாயபாவம் ஒருசேதநனாலே ” என்றிருக்கையாலே. [ஒன்றுங்குறைவேண்டேன்] – அல்லாதவற்றுக்கும் அபிமதஸித்தியுண்டேயாகிலும், காலன்கொண்டு மோதிரமிடுமாபோலே ஸ்வரூபவிரோதியானது எனக்குவேண்டா. கடல்கடத்தப்பெறவிருத்தல், பித்துப்பெறவிருத்தல் செய்யாத பிராட்டியைப்போலே. அதாவது - இரண்டுதலையையும் அழிக்கையிறே. ஒருவராலும் ஒருகுறை நிரம்புவதாகவேண்டியிரேன். [கன்னார்மதில்சூழ்குடந்தைக்கிடந்தாய்]- இருவருடைய உபாயம் அரண்செய்து கிடக்கிறபடி. “ அவனே உபாயோபேயம் ” என்று அறுதியிட்டவர்கள். அத்தலையில் பரிவாலே அவனைக்காக்கைபணியிறே; * செவ்வடி செவ்விதிருக்காப்பிறே. [கன்னார்மதிள்] - தொழில்மிக்க மதிளென்னுதல், செம்பாலே பெய்யப்பட்ட மதிளென்னுதல். கன்னென்று - தொழிலும், செம்பும், சிக்கெனவும். [அடியேனரு]- உனக்கு அநந்யார்ஹமாய்த்தனக்குஉரித்தல்லாதஇவ்வாத்மவஸ்து. [வாணாள்சென்னாளெந்நாள்]-ஜீவித்துக்கொண்டுசெல்லும்நாள் யாதோருநாள். [அந்நாள்]-அவ்வளவும். [உனதாள்

*உன்னையும் வேண்டேனென்கிறார் - நீ மாம் நமஸ்குரு இத்யாதி. இ அர்த்தத்துக்கு “ யாவராலும் ” என்றது - யாவையாலுமென்றபடி. இரண்டாவது; “ என [illegible] .” யாரேகளைகண்” என்கிற பதத்ரயத்தையும் கடாக்ஷித்து, உன்னாலேபெறும் உன்னையொழிய உபாயாந்தரங்களாலும், ரக்ஷகாந்தரங்களாலும் பெறும் உன்னையும் வேண்டேனென்கிறார் - பெறுவது உன்னையேயாகிலும் இத்யாதிவாக்யத்வயத்தாலே. “ யாவராலும் ” என்ற சப்தத்தாலே - ரக்ஷகாந்தரங்களால் ஸாதிக்கப்போகாதது ஸாதிக்கப்பெற்றாலுமென்றபடி. மூன்றாம்பொருள்; உம்மாலும் பிறராலும் ஸாத்யமல்லாத என்னைவிட்டு, உபயஸாத்யமான ஐஸ்வர்யாதிகளைப் பெற்றுப்போமென்ன - உன்னாலல்லால் என்கிறவித்தை இத்யாதி. சொல்லுவாருமுண்டு என்கையாலே - முந்தினயோஜநாத்வயமே உபாயப்ரகரணத்துக்குச் சேருமென்றபடி. மூன்றாம்யோஜனையில், உன்னையொழிய மற்றொன்றாலென்றது - ப்ராப்யனான உன்னையொழிய வேறோர் ஐஸ்வர்யாதிகளாலென்றபடி. அசேதநமான ஐஸ்வர்யாதிகளை - “ யாவராலும் ” என்றது; “ ப்ராப்யம் ஒரு பரமசேதநம் ” என்கிற வாஸனையாலே அருளிச்செய்கிறாரென்றபடி. முந்தின அர்த்தத்திலே, யாவையாலுமென்று - அசேதநமாகச்சொல்லாதே, “யாவராலும்” என்று சேதநராகச்சொல்லுகிறதென்? என்ன - யாவையாலுமென்னுதே இத்யாதி. பெறுவது நம்மையானால் உபாயாந்தர ரக்ஷகாந்தரங்களாலே நம்மைப்பெற்றால் விரோதமேதென்ன - அல்லாதவற்றுக்கும் இத்யாதி இந்தவாக்யத்துக்கு - “ பெறுவதுன்னையேயாகிலும் ” என்கிறவாக்யத்தோடே ஸங்கதி. காலன்கொண்டு - காலபுருஷதாநம்வாங்கி. அப்படி “என்னாலும் பிறராலும் வருமவனும்வேண்டா” என்றிருந்தபேருண்டோ? என்ன - கடல்கடத்த இத்யாதி. திருவடி கடல்கடத்தவென்றபடி. தான் ஸபித்தென்றபடி. அப்படிசெய்தால் அவனுடைய ரக்ஷகத்வத்துக்கும் தன்னுடைய பாரதந்த்ர்யத்துக்கும் சேராதென்கிறார் - அதாவது இத்யாதி. “கன்னார்மதிள்சூழ்” என்றதுக்குபாவம் - இவருடைய இத்யாதி. அரண்செய்துகிடக்கிறபடி - அவிசால்யமாயிருக்கிறபடி. ஸ்வயத்நநிவ்ருத்தரான இவர் அத்தலைக்கு ரக்ஷைதேடுவானென்? என்ன-அவனே உபாய உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - செவ்வடி இத்யாதி. கன் - செயலும், செம்பும், மம். ஆர்தல் - மிகுதி. உபாயம் ஸங்கிஹிதமானால் கொள்ளப்புகுகிறகார்யமேதென்ன - அடியேனரு இத்யாதி. “உன்னாலல்லால்” இத்யாதியாலே - நீயே உபாயமென்றால், விரோதி*

பிடித்தேசெலக்காணே] - உன்திருவடிகளையேபேற்றுச் செல்லும்படி பார்த்தருளவேணும். காற்கூறும் விடாதபடி பார்த்தருளவேணும். "ஒன்றும்குறைவேண்டேன்" என்றவநந்தரம் வந்து குறைநிரப்பக்கண்டிலர்; இனி அநுபவம்பெற்றபோதுபெற, "உன்னலல்லால் யாவராலும் ஒன்றும் குறைவேண்டேன்" என்கிற இவ்வத்யவஸாயம் குலையாதபடி பார்த்தருளவேணுமென்கிறார். அடிவிடில் அத்யவஸாயம் குலையுமே, அடியேபிடித்து ஜீவித்தவரத்தை விடாரே இப்போதாக. அத்யவஸாயமிது, ருசியில்வந்தால் பரபக்தியுக்தர், விளம்பத்துக்கு அடியேன்? என்னில்,—பக்திவிபாகத்துக்காகவும், இருவருடைய ப்ரேமம்வழிந்த சொல்லாலே நாட்டைத் திருத்துகைக்காகவும். (ரு)



## நான்காம் பாட்டு.

**சேலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லுங்கீர்த்தியாய்!**
**உலப்பிலானே! எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி!**
**நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தாய்' உன்னைக்காண்பான்நான்**
**அலப்பாய் ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவனே.**

ஆ.—(செலக்காண்கிற்பார்.) ஈநவயிகா திஶயாவஹ ஸௌந்தர்ய கல்யாண கு‍ண ஐஶ்வர்யயியே, ஸர்வாத்மாக்களையும் உன்னழகாலே தோற்பித்து அடிமையாக்கிக்கொள்ளவல்ல திருவுடம்பை யுடையவனே, நலத்தால் மிக்கார் குடந்தைக்கிடந்தாய், உன்னைக் காண்பான் நான் அலமந்து "ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்து தோற்றியருளினப்போலே வந்து தோற்றாய்" என்றுகொண்டு ஆகாசத்தைநோக்கி அழுவன்தொழுவனென்கிறார்.

ஓ.—நாலாம்பாட்டில், ஸர்வேஶ்வரனாயிருந்துவைத்து ஆஶ்ரிதர்க்காகத் திருக்குடந்தையிலேவந்து கண்வளர்ந்தருளுகிற உன்னை 'காணவேணும்' என்று அலமந்து காணப்பெறாமையாலே நோவுபடாநின்றேனென்கிறார்.

[செல என்றுதொடங்கி] - எத்தனையேனும் அளவுடையார்க்கும் முட்டப்பரிச்சேதிக்கவொண்ணாதபடியிருந்துள்ள குணப்ரதையையுடையையாய் அவ்வளவுமன்றிக்கே உன் கு‍ணவிபூத்யாதிகளுக்கும் முடிவில்லாதவனே! [எல்லாவுலகுமுடையவொருமூர்த்தி] - ஸமஸ்தலோகங்களையும் ஶேஷமாகவுடைய அத்விதீயனான ஸர்வேஶ்வரனே! 'ஸர்வாத்மாக்களையும் தன் அழகாலே தோற்பித்து அடிமையாக்கிக்கொள்ளவல்ல விலக்ஷணமான திருவுடம்பையுடையவனே' என்றும்சொல்லுவர். [நலத்தால்என்றுமேனுக்கு]- உன்திருவடிகளுக்கு மிகவும் ஸ்நேஹிகளானவர்களைப் பிரியமாட்டாமை அவர்களதான

---

யைப்போக்கி கைங்கர்யத்தைத் தந்தருளவேணுமென்னாதே "உனதாள்பிடித்தே செல்லும்படி பார்த்தருளவேணும்" என்பானென்? என்ன - ஒன்றும்குறைவேண்டேன் என்ற இத்யாதி. "உனதாள்பிடித்தே செலக்காணே" என்றதுக்கர்த்தம் - காற்கூறும் இத்யாதி. இது - சாடு. உனதாள்பிடித்தே செலக்காணேயென்றது - உன்திருவடிகளையேபிடித்துச் செல்லும்படி பார்த்தருளவேணுமென்றபடி. "பிடித்தே" என்ற அவதாரணார்த்தம் - அடிவிடில் இத்யாதி. கீழ் - "உன்னலல்லால்" என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக அருளிச்செய்து, த்ருதீயார்த்தாநுகுணமாக ஸாவாந்தரம் - அடியேபிடித்து இத்யாதி. அதாவது - உன்திருவடிகளே ப்ராப்யமாகச் செல்லும்படி பார்த்தருளவேணுமென்றபடி. க்ரமேணாந்வய:. (ரு)

# பத்தாம் பாட்டு.

**வாராவருவாய்வருமென்மாயா மாயாமூர்த்தியாய்**
**ஆராவமுதாய் அடியேனுவியகமேதித்திப்பாய்**
**தீராவினைகள்தீரவென்னையாண்டாய் திருக்குடந்தை**
**ஊராய்உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ.**

ஆ.—(வாராவருவாய்.) கண்கள் உகக்கும்படிவாராதே என்னெஞ்சுக்குத் தோற்றும்படி வருமவனே, உன்னுடைய நிரவயிக ஸௌந்தர்யநியியான வடிவைக்காட்டி எனக்கு நிரதிஶயபோக்யமானவனே, த்வதேகபோகத்வவிரோயியாய் ஒருவராலும் தீர்க்கவொண்ணாத விரோயிகளைத் தீர்த்தருளினவனே, இப்படி அடியேனை விஷயீகரித்தருளுகைக்கிடாகத் திருக்குடந்தையிலே புகுந்தருளினவனே, உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ வென்கிறார்.

ஓ.—பத்தாம்பாட்டில், திருக்குடந்தையிலேபுகவே நம்முடைய ஸகலது:க்கங்களும்போய் அஶேஷமநோரதங்களும் பெறலாமென்று புக்க ஆழ்வார் அப்படி பெறுமையாலே, 'இன்னம் எத்தனையிடம் தட்டித்திரியக்கடவேன்?' என்கிறார்.

[வாராவருவாய் வருமென்மாயா] - எனக்குப் புறம்புதோற்றாதே உள்ளநுபவிக்கலாம்படியிருக்கிற ஆஶ்சர்யபூதனே! எனக்குப் புறம்பு அநுபவிக்கவொண்ணாதபடியான அருவாய்க்கொண்டுவருமவனே! என்றுமாம். [மாயா என்றுதொடங்கி] - நித்யஸித்தமான வடிவையுடையையாய் நிரதிஶய போக்யனாய்க்கொண்டு என் ஹ்ருதயத்திலே தித்திக்குமவனே! [தீரா என்றுதொடங்கி] - உன்னை யநுபவிக்கைக்கு விரோயியுமாய் ஒருவராலும் தீர்க்கவொண்ணாதேயிருக்கிற வினைகளைத் தவிர்த்து என்னை ஆளுவதும்செய்து என்னை விஷயீகரிக்கைக்காகத் திருக்குடந்தையிலேவந்து புகுந்தருளினவனே!

ப.—அநந்தரம், கண்டு அநுபவிக்கவொண்ணாதபடி அகவாயிலேநின்று நிரதிஶய ஸாரஸ்யத்தை விளைக்கிற உன்னை, அர்ச்சாவதார ஸௌலப்யனாகப்பெற்று அடிமை புகுந்துவைத்து எத்தனைகாலம் அலமரக்கடவேனென்கிறார்.

வாரா-கண்ணிட்டுக்கண்டு அநுபவிக்கலாம்படி வடிவழகோடே நடந்துவாராதே, அருவாய் - அரூபியாய்க்கொண்டு, வரும் - என்னகவாயிலேவந்து தோன்றி, என் மாயா - உன ஆஶ்சர்யகுணங்களை எனக்கு ப்ரகாஶிப்பிக்கிறவனாய், (அந்த அநதராத்மத்வத்தளவன்றியே), மாயா - அபக்ஷயவிநாஶாதிரஹிதமான, மூர்த்தியாய் - நித்யமங்களவிக்ரஹ யுக்தனாய்க்கொண்டு, ஆரா - அநுபவிக்க த்ருப்திபிறவாத, அமுதாய் - அம்ருதம்போலே போக்யபூதனாய், அடியேன் - உனக்கு ஶேஷமான என்னுடைய, ஆவி - ப்ராணாஶ்ரயமான, அகம் - நெஞ்சுக்குள்ளே, தித்திப்பாய் - நிரதிஶய ஸாரஸ்யத்தை விளைப்பானாய், (இந்த ஆந்தராநுபவத்துக்கு அநாதி ப்ரதிபந்தகமாய்), தீரா - ஒருகாலும் தீராத, வினைகள் - பாபங்கள், தீர - நசிக்கும்படியாக, என்னை - என்னை, ஆண்டாய் - வாசிககைங்கர்யங்கொண்டு போந்தவனாய், (அவ்வளவில் நில்லாதே கண்டு அநுபவிக்கலாம்படி), திருக்குடந்தை - திருக்குடந்தையை, ஊராய் - அஸாயாரணதேசமாகவுடையையாய்க்கொண்டு ஸந்நிஹிதனானவனே, உனக்கு - (இப்படி ஸௌலப்ய ஸௌந்தர்ய

விஶிஷ்டனை) உனக்கு, ஆட்பட்டும் - அடிமைப்பட்டிருக்கச்செய்தேயும், அடியேன் - அநந்யார்ஹனாய் அநந்யகதியான நான், இன்னம் - இன்னம் மேலுண்டானகாலத்திலும், உழல்வேனோ - நினைத்தபடி பரிமாறப்பெறாமல் அலமரக்கடவேனோ? இன்னம் எத்தனை உகந்தருளின நிலத்திலே முகங்காட்டி, ஆசைப்பட்டபடி யநுபவிக்கப்பெறாதே க்லேஶிக்கக்கடவேனென்று கருத்து. வாராவருவாயென்று நித்யமான ஆத்மாவுக்கு அந்தர்யாமியாயென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், "திருக்குடந்தையிலேசெல்ல நம்மநோரதங்களெல்லாம் ஸித்திக்கும்" என்றுபுக, அப்படி பெறாமையாலே; இன்னமும் எத்தனையிடம் தட்டித் திரியக்கடவேனென்கிறார்.

[வாரா இத்யாதி] - புறம்பு கண்ணாலேகண்டு அநுபவிக்கவாராதே, மறந்து பிழைக்கவொண்ணாதபடி அகவாயிலே அருவாய்க்கொண்டு ப்ரகாஶிக்கிற ஆச்சர்யபூதனே, அன்றிக்கே, பாஹ்யஸம்ஶ்லேஷம்பண்ணுகைக்கு வாராதே அரூபியாய் வர்த்திக்கும் ஆஶ்சரியபூதனே யென்றுமாம்; "அடியேனுள்ளகமே தித்திப்பாய்" என்று மேலே உண்டாகையாலே, முற்பட்டதுவே நிர்வாஹம். அநாஶ்ரிதர்க்கு அநுபவிக்கவொண்ணாதே ஆஶ்ரிதர்க்கு அநுபவிக்கவாயிருக்குமென்றுமாம். [மாயாமூர்த்தியாய்] - "ஸதைகரூபரூபாய" என்கிற நித்யமங்கள விக்ரஹத்தை யுடையையாய், நாட்செல்ல நாட்செல்ல பர்யாப்திபிறவாத போக்யதாப்ரகர்ஷத்தை யுடையையாய். [அடியேன் இத்யாதி] - உனக்கு ஸ்வமமான என்னெஞ்சினுள்ளே உன் போக்யதையை ஆவிஷ்கரித்து அநுபவிப்பித்தவனே. [தீராவினைகள்] - அநுபவவிநாஶ்யமாய், உன்னையொழிய ஒருத்தராற்போக்கவொண்ணாதே த்வதநுபவவிரோதியான கர்மங்கள்தீர, [என்னையாண்டாய்] - அந்தகர்மங்களைப்போக்கி "அடியேனுள்ளகமேதித்திப்பாய்" என்னும்படி புகுரநிறுத்தினவனே. [திருக்குடந்தையூராய்] - என்னை அடிமைகொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலேவந்து ஸந்நிஹிதனானவனே. பரவ்யூஹவிபவங்களை வ்யாவர்த்திக்கிறது [ஊராய்] - அவ்வூரைத் தனக்கு நத்தமாகநினைத்திருக்கை, [உனக்காட்பட்டும்] - ஸம்ஸாரிகளை யநுபவிப்பிக்கவந்து கிடக்கிற உனக்காட்பட்டும். பரமபதத்திலிருப்பிலேயாதல், அவதாரங்களிலேயாதல் ஆசைப்பட்டேனோ [அடியேன்] - ஆநுடையவஸ்து இங்ஙனேயலமந்துதிரிகிறது. இன்னமும் எத்தனை திருப்பதிகள் தட்டித்திரியக்கடவேன்.

ஈடு.—பத்தாம்பாட்டு. "திருக்குடந்தையிலேபுக, நம் மநோரதமெல்லாம் ஸித்திக்கும்" என்றுசெல்ல, மநோரதித்தபடி தாம் பெறாமையாலே; இன்னமும் எத்தனை திருவாசல் தட்டித் திரியக்கடவேனேன்கிறார்.

[வாராவருவாய்] - வாராதவருவாய். பாஹ்யஸம்ஶ்லேஷம்பண்ணவாராத அரூபித்ரவ்யமாய். [வருமேன்மாயா]-[அருவாய் - வருமேன்மாயா] என்று, [அரு] என்கிற பதத்தை - இங்கேயுங் கூட்டிக்கொள்வது. மறந்துபிழைக்கவொண்ணாதபடி அகவாயிலே யருவாயக்கொண்டு ப்ரகாஶிக்கிற ஆஶ்சர்யபூதனே. [மாயாமூர்த்தியாய்] - நித்யமான

---

பத்தாம்பாட்டு.—வாரா இத்யாதி. "உனக்காட்பட்டும் அடியேனின்னமுழல்வேனோ" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருக்குடந்தையிலே இத்யாதி.

மேலே, "வருமென்மாயா" என்னாநிற்க, "வாராவருவாய்" என்கிறதென்? என்ன - பாஹ்யஸம்ஶ்லேஷம் இத்யாதி. அகவாயிலேயருவாய்க்கொண்டு என்றது - அருவென்று - ஆத்மாவாய், அகவாயிலே தாரகனாய்க்கொண்டு என்றபடி. மாயா - நசியாதவென்றபடி. "மாயா"

திவ்யமங்களவிக்ரஹத்தை யுடையையாய். அல்லாதாருடைய தேஹங்களடைய உத்பத்தி விநாஶங்களை யுடைத்தாயிறேயிருப்பது. [ஆராவமுதாய்]-நிரதிஶயபோக்யனைக்கொண்டு எனக்கு மறக்கவொண்ணாதபடி யிருக்கிறவனே. [அடியேனுவியகமேதித்திப்பாய்] - என்னும் உனக்கு ஸ்வம்மான என்னெஞ்சினுள்ளே உன் போக்யதையை யாவிஷ்கரித்து அநுபவிப்பித்தவனே. [தீராவினைகள்தீர வென்னையாண்டாய்] - அநுபவைகவிநாஶ்யமாய், உன்னையொழிய ஒருவரால் போக்கவொண்ணாத, த்வாநுபவவிரோதியான கர்மங்களைப் போக்குவித்து, “அடியேனுவியகமேதித்திப்பாய்” என்னும்படி புதர நிறுத்தினவனே. “பிணியுமொழிகின்றதில்லை பெருகுமிதுவல்லால்” என்கிறபடியே - * தீர்ப்பாரையாமினி இல்வினைகள் தொடக்கமானவற்றைப்போக்கி என்னை யடிமைகொண்டாயென்றுமாம். [திருக்குடந்தையூராய்] - என்னை யடிமைகொள்ளுகைக்குத் திருக்குடந்தையிலேவந்து ஸந்நிஹிதனானவனே. பரவ்யூஹவிபவங்களை வ்யாவர்த்திக்கிறது. நான் கிட்டாத அம்ஶத்துக்கு நீ கிட்டவந்து கிடக்கிறவனே. ஒருநத்தமில்லாதானொருவனையோ நான்பற்றிற்று. [உனக்காட்பட்டும்] - ஸம்ஸாரிகளை யநுபவிப்பிக்க வந்துகிடக்கிற உனக்காட்பட்டும். [அடியேன்] - ஆருடையவஸ்து இங்ஙன் அலமந்துதிரிகிறது. [இன்னமுழல்வேனோ]-என் ஸர்வஸ்வத்தையும் உன்திருவடிகளிலேபோகட்டு, நீசெய்து தலைக்கட்டக்கடவையாக நினைத்திருக்கிற நான், இன்னம் எத்தனை திருப்பதிகள்புக்குத் தட்டித்திரியக்கடவேனென்கிறார். (௧௦)



## பதினோராம் பாட்டு.

உழலையென்பில்பேய்ச்சிமுலையூடு அவளையுயிருண்டான்
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன்
குழலின்மலியச்சொன்ன ஓராயிரத்துளிப்பத்தும்
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே.

*ஆ.—(உழலை) ஆஶ்ரிதவிரோதி நிரஸநைகபோகனாயிருந்த எம்பெருமானுடைய திருவடிமலர்களையே ப்ராப்யமும் ப்ராபகமுமாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன்,* **வண்**டுவரைப்பெருமானுடைய திருக்குழலோசையிற்காட்டிலும் இனியவாகச்சொன்ன ஆயிரத்துளிப்பத்தும் மழலைதீரவல்லார், மானேய்நோக்கியர்க்கு ப்ரியதமர் போக்யராமாபோலே, எம்பெருமானுக்கு போக்யராவரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழிபத்தும் பழுதறக்கற்கவல்லார் காமிநிகளுக்குக் காமுகரைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவர் என்கிறார்.

---

*என்று விஶேஷிப்பானென்? என்ன - அல்லாதாருடைய இத்யாதி. விஶ்லேஷத்தில் நோவுபடா நிற்க, “ஆண்டாய்” என்கிறதென்? என்ன - அநுபவைக இத்யாதி. “தீர” என்றது - தீரப்பண்ணி யென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு. “வினை” என்று - விஶ்லேஷதுஃகம். விவரணம் - நான்கிட்டாத இத்யாதி. நான்கிட்டாத அம்ஶத்துக்கு நீ கிட்டவந்து கிடக்கிறவனேயென்றது - நீ இருக்கிற பரமபதத்தே நான் கிட்டவேண்டும்படியிருக்க, நானிருக்கிறவிடத்திலே நீ கிட்டவந்து கிடக்கிறவனேயென்றபடி. “ஊராய்” என்றதுக்குபாவம் - ஒருநத்தம் இத்யாதி. தட்டித்திரிகை - ப்ரதிஹதபலனாய்த்திரிகை. வாரா வருவாய் தொடங்கி அடைவே யந்வயம்.* (௧௦)

[உழலை என்றுதொடங்கி] - உழலைபோலேயிருக்கிற எலும்பையுடைய பூதனை யுடைய முலைவழியே அவளுடைய ப்ராணனை வாங்கின அவன் திருவடிகளை தம்முடைய இஷ்டங்கள்பூரிக்கைக்கு உபாயமென்று அத்யவஸித்த ஆழ்வார். தமக்குத் தத்ப்ராப்தி விரோதிநிரஸநம்பண்ணுவானும் அவனையென்று கருத்து. [குழலின்மலிய] - திருக்குழலோசையிலுங்காட்டில் இனிதாக.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை மௌக்த்யந்தீர்ந்து அப்யஸிக்க வல்லவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்க்குக் கமநீயராவரென்று ஃபலத்தை யருளிச்செய்கிறார்.

உழலை - உழலைகோத்தாற்போலேயிருக்கிற, என்பு - எலும்புகளையுடைய, பேய்ச்சி - பேய்ச்சி, முலையூடு - முலையினகவாலே, அவளை - அவளை, உயிருண்டான - ப்ராணாபஹாரம்பண்ணின விரோதி நிரஸநஸ்வபாவனான க்ருஷ்ணனுடையவையாய், அவை - தமக்கு உபாயமாக முன்பு ப்ரகாசிப்பித்த, கழல்களை - திருவடிகளையே, சரணாக - அம்மதஸித்திக்கு உபாயமாக, கொண்ட — வ்யக்திபண்ணிக்கொண்ட, குருகூர்- திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வாரானவர், குழலில் - ஸப்தஸ்வரத் துக்கும் உத்பாதகமான வங்கியத்திலும், மலிய - மிக்கவினிமையை யுடைத்தாம்படி, சொன்ன - அருளிச்செய்த, ஓர் - அத்விதீயமான, ஆயிரத்துள் - ஆயிரந் திருவாய்மொழி யினுள், இப்பத்தும் - இப்பத்தையும், மழலை - தங்கள்மௌக்த்யம், தீர - தீர்ந்து, வல்லார் - வ்ருத்தியோடே சொல்லவல்லவர்கள், மானேய் - மான்போலேயிருக்கிற, நோக்கியர்க்கு - நோக்கையுடைய * மதிமுகமடந்தையரான திவ்யாப்ஸரஸ்ஸுக்களுக்கு, காமர் - ப்ரஹ்மாலங்காரமுகத்தாலே கமநீயராம்படி யாதரிக்கப்படுவர்கள். மானேய் நோக்கியர்க்குக் காமுகரைப்போலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஆதரணீயரென்று த்ருஷ்டாந்தாபிப்ராயமாகவும் சொல்லுவர். குழல் — வங்கியம். இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இப்பத்தை அப்யஸிக்கவல்லார், காமினிகளுக்கு காமுகரைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவரென்கிறார்.

[உழலை இத்யாதி] - உழலைகோத்தாற்போலேயிருக்கிற எலும்பையுடையளான பூதனையுடைய முலைவழியே ப்ராணனைவாங்கினவன். அகவாயில் நீர்மையற்றிருக்குமா போலேயாயிற்று வடிவிலும் பசையற்றிருக்கும்படி. [கழல்கள் இத்யாதி] - விரோதி நிரஸனசீலனுடைய திருவடிகளே இஷ்டஸித்திக்கு உபாயம் என்று அத்யவஸித்த ஆழ்வார். விரோதியைப்போக்குவானும் தன்னைத்தருவானும் அவனேயென்கை. அவ தாரணத்தாலே - ஸஹகாரிநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. "ஸ்வமேவோபாயபூதோ மே பவ", "ஏகம்". [குழலின்மலிய] - திருக்குழலோசையுங்காட்டில் இனிதாக. இவர்பேச்சைக்கேட்டால் பகையரும் இரங்கவேண்டும்படியிருக்கை. ஆனால் அவன் இரங்கி முகங்கொடாதொழிவானென்? என்னில்,—"ஸஹோ த்ராஸம் யுஷ்மத்" என்று கைவிட்ட ஸம்ஸாரத்திலே தன்னை ஆசைப்பட்டுக்கூப்பிடுகிற இது அவனுக்கு ஆகர்ஷகமா யிருக்கையாலே. [மழலைதீரவல்லார்] - "அழுவன்தொழுவன்" என்ற இவருடைய ஸாபிப்ராய வ்ருத்தியோடே கற்கவல்லவர்கள், மானேய்நோக்கியர்க்கு காமுகரைப்போலே, ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவர். த்ருஷ்டாந்தமல்லாதபோது, "அற்ப சாரங்கள்" "தூராக்குழிதூர்த்து" என்று முன்புசொன்னதுக்கும் "பலநீ காட்டிப்படுப்பாயோ"

“கிறிசெய்தென்னைப் புறத்திட்டின்னங் கெடுப்பாயோ” என்று மேற்சொல்லப்படுகிற இவர்படிக்கும் சேராது. த்ருஷ்டாந்தமாகச் சொல்லாதொழிந்தது ஸர்வதா ஸத்ருஶமாகையாலே.

ஈடு.—நிகமத்தில் - இப்பத்தைப் பழுதறக்கற்கவல்லார், காமிநிகளுக்குக் காமுகரைப்போலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவரென்கிறார்.

[உழலையென்பில் இத்யாதி] - உழலை கோத்தாற்போலேயிருக்கிற எலும்புகளையுடைய பூதனைமுலைவழியே அவளுடையவுயிரையுண்டான். [கழல்களவையேசரணாகக் கொண்ட] - விரோதிநிரஸநஶீலனுடைய திருவடிகளையே, அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் உபாயமென்று அத்யவஸித்த ஆழ்வார். விரோதியைப்போக்குவதும் அவனைத்தருவதும் திருவடிகளேயென்கை - அவதாரணத்தால். [கழல்களவையே சரணாகக்கொண்ட] - பலியாவிட்டாலும் தம்மடிவிடாரிறே யிவர். [குழலில் மலிய] - திருக்குழலோசையிற்காட்டிலும் மிஞ்சி, கேட்டார் நோவுபடும்படியாயிருக்கை. * மரங்கள் நின்றும் மதுதாரைகள்பாயவிறே அங்கு, * மரங்களுமிரங்கும்வகை இங்கு; இனி, நாமிரங்குகிற வித்து தன்னேற்றமிறேயிங்குத்தைக்கு. அத்விதீயமான ஆயிரந்திருவாய்மொழியில் இப்பத்தையும். [மழலைதீரவல்லார்] - இளமைதீரவல்லார். அதாவது - “வரிற்போகடேன், கெடில் தேடேன்” என்றிருக்கையன்றிக்கே, இவர்சொன்ன ஆற்றாமையோடே சொல்லவல்லார். “அழுவன்தொழுவன் ஆடிக்காண்பன் பாடியலற்றுவன்” என்றிறே இவராற்றாமை. [காமர்மானேய்நோக்கியர்க்கே]-மானையேய்ந்த நோக்கையுடைய ஸ்த்ரீகளுக்குக் காமுகரைப்போலேயாவர். ஆவதேன்? என்னில்,—“தூராக்குழிதூர்த்து எனைநாளகன்றி

---

நிகமம்.—உழலை இத்யாதி. “மழலைதீரவல்லார்” என்று தொடங்கி மேலைக்கடாக்ஷித்து அவதாரிகை - இப்பத்தை இத்யாதி. பழுதற - மௌக்த்யந்தீர.

உழலைகோத்தாப்போலே யிருக்கிற எலும்புகளையுடைய என்றதுக்கு தாத்பர்யம் - அகவாயில்மாத்ரமன்றிக்கே வடிவிலும் ஒருபசையில்லையென்று. பூதனைமுலையுண்டவன் திருவடிகளை உபாயமாகக்கொண்டதுக்கு ஹாவம் - விரோதிநிரஸந இத்யாதி. அவதாரணத்துக்கு அர்த்தம் - விரோதியை இத்யாதி. கொண்ட - அத்யவஸித்தவென்றபடி. “கொண்ட” என்றதுக்கு ஹாவம் - பலியாவிட்டாலும் இத்யாதி “பூதனையை நிரஸித்தவன்” என்று கீழேசொல்லி, “குழலில்மலிய” என்கையாலே, குழலென்கிறவிது - ஸாமாந்யமேயாகிலும், க்ருஷ்ணன்திருக்குழலோசையென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார்-திருக்குழலோசை இத்யாதி. திருக்குழலோசையைப்பற்ற இதுக்கு ஆதிக்யமேதென்ன; ஸாம்யகதநமுகேந ஆதிக்யமருளிச்செய்கிறார் - மரங்கள்நின்றும் இத்யாதி வாக்யத்ரயேண. பாஶுரஸ்ய ஸ்பஷ்டோர்த்த:. பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம்பத்து, ஆறாந் திருமொழி, பத்தாம்பாட்டு, “கருங்கண்தோகை” இத்யாதி. தன்னேற்றமிறேயென்றது - “மரங்கள்போல் வலியநெஞ்சம்” என்றத்தைப்பற்ற. இளமையாவது - ஔதாஸீந்யம். ஔதாஸீந்யப்ரகாரோபபாதநம் பண்ணுகின்றுகொண்டு, அதின்றிக்கே கற்கையாவது - ப்ரமேயுக்தராய்க் கற்கையென்கிறார் - வரில்போகடேன் இத்யாதி. இவராற்றாமையோடே சொன்னாரோ? என்ன - அழுவன் இத்யாதி. காமுகரைப்போலேயாவரென்றது - ஸ்திரீகளுக்குக் காமுகர்போக்யராமாபோலே, ஈஶ்வரனுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போக்யராவரென்றபடி. இது அவதாரிகைக்குச் சேர்ந்தவர்த்தம். ஆவதென்னென்னிலென்றது - இருந்தபடியே அர்த்தம் சொல்லாமல் த்ருஷ்டாந்தமாகச்சொல்லுவானேன்? என்னிலென்றபடி. ப்ரகரணவிரோதத்தாலே மிறுக்கி யோஜித்தோமென்று-தூராக்குழி இத்யாதிவாக்யத்துக்குத் தாத்பர்யம். ஆனபின்பு, முதல்சொன்

ருப்பன்'' என்றவிவர் இது ஃபலமாகச்சொல்லும்போது கீழோடே வ்யாஹதமாம். ஆனால் சொல்லிற்றுயிற்று என் ? என்றால்,—''மேல் கோடிதானநரகம்'' என்றுநிற்கச்செய்தேயும், விஷயப்ரவணர் அதுபாராதே மேல்விழுமாபோலே, இதுகற்றாரை எம்பெருமானும் ஸ்ரீ வைஷ்ணவர்களும் மேல்விழுந்து போக்யராகக் கொள்ளுவர்கள். இங்ஙனன்றாகில், விப்ரலம்பகர் வார்த்தையாமிறே. இவர் ப்ராமாணிக ரன்றிக்கேயொழிவரே. ப்ரகரணத் துக்கீடாயிறே தலைக்கட்டியிருப்பதும். அவர்களுக்குப்போல் என்றொருபதம் இங்குக் கண்டிலோமீ! என்னில்,—''முற்றுவமை'' என்றொரு லக்ஷணமிருக்கிறபடி. த்ருஷ்டாந் தம் புக்கவிடத்தே தார்ஷ்டாந்திகமும் வரக்கடவது. ''தாவிவையங்கொண்ட தடந்தாம ரைகள்'' என்றுநின்றதிறே. (௧௧)

*னதே நல்லதென்று பரங்காபூர்வகமாக உக்தார்த்தத்தை ஸ்மரிக்கிறார்-ஆனால் இத்யாதி. அவதா ரிகையிற்சொன்ன அர்த்தமன்றிக்கே, மானேய்நோக்கியர் விஷயத்தில் காமுகர் இருக்குமாப் போலே என்று அர்த்தாந்தரம் - மேல்கோடிதான இத்யாதி. தமக்கு இத்தை ஃபலமாகச்சொன் னலன்றே ''ஆராக்குழி'' இத்யாதியோடே வ்யாஹதமாவது, பிறர்க்குத்தை ஃபலமாகச்சொன் னால் விரோதமேதென்ன; த்ரிவிதமாக பரிஹரிக்கிறார் - இங்ஙனன்றாகில் இத்யாதி வாக்யத்ரயத் தாலே. இங்ஙனன்றாகி லென்றது - நான்சொன்னபடி சொல்லாதே, இருந்தபடியே சொல்லி லென்றபடி. ''எம்பெருமானுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் போக்யராவர்'' என்று தார்ஷ்டாந் திகபதமில்லையே யென்ன - த்ருஷ்டாந்தம்புக்கவிடத்தே இத்யாதி என்னுதல், விவரணமாதல். முற்றுவமைக்கு உதாஹரணம் - தாவி இத்யாதி. முற்றுவமை - பூர்ணோபமை. காமர் - காமுகர். க்ரமேணாந்வய:.* (௧௧)



*த்ரவிடோபநிஷத்ஸங்கதி:*— [illegible]

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி:*— [illegible] ||.

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி**

*ஆராவமுதாழ்வாராதரித்தபேறுகளைத்*
*தாராமையாலேதளர்ந்துமிகத் - தீராத*
*வாசையுடனாற்றாமைபேசியலமந்தான்*
*மாசறுசீர்மாறனெம்மான்.*

*ஆழ்வார் திருவடிகளே சரணம், எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.*



# ஒன்பதாந்திருவாய்மொழி—மானேய்நோக்கு : ப்ரவேசம்.

ஆ.—(மானேய்நோக்கு.) திருக்குடந்தையிலே புக்கவிடத்திலும் தம்முடைய அபேக்ஷிதம் கிடையாமையாலே, திருவல்லவாழிலே செல்லத் தம்முடைய மநோரதங்கள் பூரிக்குமென்று அங்கேபோகப்புக்கு, பலஹாநியாலே முட்டப்போகமாட்டாதே மிகவும் அவஸந்நரான ஆழ்வார், எம்பெருமானோடே விஶ்லேஷித்த ஒருபிராட்டி தசையையுடையராய்த் தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி, திருவல்லவாழுக்கு அணித்தாகவிருந்த வூரில், திருச்சோலையும், அங்குத்தைப் பரிமளத்தைக்கொண்டு புறப்படுகிற தென்றலும், அங்குத்தைச் சோலைகளிலே மதுபாநமத்தமானவண்டுகளுடைய இனிதான மிடற்றோசைகளும், வைதிகக்ரியாகோலாஹலங்களும், ஹோமதூமங்களும், மற்றுமுண்டான ஸம்ப்ரமங்களு மெல்லாம் உள்ளுப்புகப்பெறாதே யிருக்கிற தன்னை மிகவும்நலிய அவற்றாலும்நோவுபட்டு, திருவல்லவாழிலேபுக்குப் பரிமாறவாசைப்பட்ட அவளைக் கண்டு "நீநினைக்கிறவிது ஈடல்ல" என்று தோழிமார் நிரோதியாநிற்க, தன் ஆர்த்தியை அவர்களுக்கு ஆவிஷ்கரித்து அவர்களை அநுநயியாநின்றுகொண்டு, திருவல்லவாழிலேபுக்கு நினைத்தபடி பரிமாறவல்லேனேயென்று அவர்களைக் குறித்துச் சொல்லுகிறாள்.

ஒ.—திருக்குடந்தையிலேபுக்கவிடத்திலும் தம்முடைய அபேக்ஷிதம் கிடையாமையாலே மிகவும் அவஸந்நராய், 'இத்தசைக்கும் எம்பெருமான்திருவடிகளே ஶரணம்' என்றுபற்றிச் சிறிது தரித்து, 'திருவல்லவாழிலேசெல்லத் தம்முடைய மநோரதங்கள் பூரிக்கும்'என்றுஅங்கேபுக்கு, பலஹாநியாலே முட்டப்போகமாட்டாதே மிகவும் அவஸந்நரான ஆழ்வார், தம்முடையதசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடே விஶ்லேஷித்துத் திருவல்லவாழூர்க்கு அணித்தாக இருக்கிறாளொரு பிராட்டி, ஏகதத்விததரிதர்கள் ஶ்வேதத்வீபத்திற் செல்லப்பெறாதே அங்குத்தைக்கு அணித்தாக இருந்து, அங்குள்ளார் எம்பெருமானைக்கண்டு படுகிற ஸம்ப்ரமங்களைச் செவியாலேகேட்டு, கண்ணால்காணப்பெறாதே துடிக்குமாபோலே, திருவல்லவாழில் திருச்சோலையும், அங்குத்தைப்பரிமளத்தையும் கொண்டுபுறப்படுகிறதென்றலும், அங்குத்தைத்திருச்சோலைகளில் மதுபாநமத்தமான வண்டுகளுடைய இனிதானமிடற்றோசைகளும், வைதிகக்ரியாகோலாஹலங்களும், ஹோமதூமங்களும், மற்றுமுண்டானநகர ஸம்ப்ரமங்களு மெல்லாம், உள்புகப்பெறாதேயிருக்கிற தன்னை மிகவும்நலிய, அத்தாலும் மிகவும் நோவுபட்டு, திருவல்லவாழிலேபுக்குத் தான் பரிமாற ஆசைப்பட்டபடியைக் கண்டு, 'நீ நினைக்கிறஇது ஈடல்ல' என்று தோழிமார் நிரோதியாநிற்க, தன்ஆர்த்தியை அவர்களுக்கு ஆவிஷ்கரித்து அவர்களை அநுநயியாநின்றுகொண்டு, 'திருவல்லவாழிலே நான்நினைத்தபடியேபுக்குப் பரிமாறவல்லேனே' என்று அவர்களைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ப.—ஒன்பதாந்திருவாய்மொழியில், கீழ் - திருக்குடந்தையிலே ஆராவமுதாழ்வாரை அநுபவிக்கத்தேடித் தாம் நினைத்தபடி பரிமாறப்பெறாமையாலே "இன்னமுழல்வேனோ" என்று ஆர்த்தரானவளவிலும் அவனையொழிய ரக்ஷகரில்லாமையாலும், உகந்தருளின திவ்யதேசமொழிய ப்ராப்யமில்லாமையாலும்; நிரதிஶயபோக்யமாய் ஸம்

ருத்தமான திருவல்லவாழிலே எழுந்தருளியிருக்கிற ஸர்வேஶ்வரன் தம்முடைய திருவுள்ளத்திலே முகங்காட்ட, அவனுடைய ஸ்வபாவவிஶேஷங்களிலே வித்தராய்; நிருபாதிகஶேஷித்வத்தையும், தத்ஸித்தமான உபகாரகத்வத்தையும், அந்த உபகாரகத்வத்தினுடைய நைரந்தர்யத்தையும், உபகாரரூபமான நித்யாஶ்ரிதஸம்ஶ்லேஷத்தையும், நித்யநிரதிஶயபோக்யதையையும், ஆஶ்ரிதோபகாரகமான அர்த்தித்வத்தையும், ஆபத்ஸகத்வத்தையும், வரையாமல் அங்கீகரிக்கும் ஶீலாதிஶயத்தையும், ஆயிக்யஸூசகமான ஆயுயவத்தையையும், அஸாதாரணஸம்பந்தத்தையும் அநுஸந்தித்து, ஏவம்விஶிஷ்டனான ஸர்வேஶ்வரனுடைய அநுபவத்திலே அத்யந்தம் அபிநிவிஷ்டராய், அவ்வநுபவஸித்திக்கு அவன்திருவடியே உபாயமென்கிற விஶ்வாஸத்தையுடையராய்க்கொண்டு; அவன் எழுந்தருளியிருக்கிற, நிரதிஶய ஸர்வப்ரகாரபோக்யதையை யுடைத்தான திருவல்லவாழிலே சென்று அநுபவிக்கக்கூடுமோவென்று ஸுஹ்ருத்துக்களைக்குறித்து அருளிச்செய்த டாசுரத்தை ; அந்த நாயகனோடு கலந்து பிரிந்தாளொருநாயகி "அவன்வர்த்திக்கிற தேசத்திலே புகப்பெறுவோமோ" என்று தோழிமாரைக் குறித்துத் தன்னாற்றாமைகூறின பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

இ.— ஒன்பதாந்திருவாய்மொழியில், திருக்குடந்தையிலே புக்கவிடத்திலும் தம்மபேக்ஷிதம்பெறாமையாலே மிகவும் அவஸந்நராய், "இத்தசையிலும் அவன் திருவடிகளேயுபாயம்" என்று அத்யவஸித்துச் சிறிதுதரித்து, "உகந்தருளினநிலங்களிலே வந்திருக்கிறவிருப்பு ஆஶ்ரிதார்த்தமாக" என்றிருக்கையாலும், தமக்குப்பேறு உகந்தருளினநிலங்களிலே என்றிருக்கையாலும் திருவல்லவாழிலேபோகப்புக்கு, பலஹாநியாலே முட்டப்போகமாட்டாமையாலே நடுவேநோவுபடுகிற தம்முடையதசையை அந்யாபதேஶத்தாலே பேசுகிறார். எம்பெருமானோடேகலந்துபிரிந்தாளொருபிராட்டி, தன் ஆற்றாமையாலே புறப்பட்டுத் திருவல்லவாழுக்கு அணித்தாகச்சென்று கால்நடைதாராதேநோவுபடுகிறவளை, தோழி "அவன்தானேவரக்காணுமதொழிய நீபதறுகை ஸ்வரூபமன்று" என்று விலக்க; அவ்வூரிற்சோலையும், அதில்பரிமளத்தைக்கொண்டுவருகிற தென்றலும், மதுபாநமத்தமான வண்டுகளினுடைய மிடற்றோசையும், வைதிகக்ரியாகோலாஹலமும், ஹோமதூமங்களும், நகரஸம்ப்ரமங்களும் அங்கேயாகர்ஷிக்க, ஏகதத்விதத்ரிதர்கள் ஶ்வேதத்வீபவாஸிகள் அநுபவிக்கிற ஆரவாரத்தைக்கேட்டுத் தாங்கள் அநுபவிக்கப்பெறாமையாலே நோவுபட்டாப்போலே நோவுபட்டு, நிஷேதிக்கிற தோழிமார்களுக்குத் தன் ஆர்த்தியை யாவிஷ்கரித்து அவர்களை அநுவர்த்தியாநின்றுகொண்டு, திருவல்லவாழிலேபுக்கு நினைத்தபடிபரிமாறவல்லேனே யென்று அவர்களைக் குறித்துச் சொல்லுகிறாள்.

ஈடு.—திருக்குடந்தையிலே போய்ப் புக்கவிடத்திலும் தம் அபேக்ஷிதம் பெறாமையாலே திருவல்லவாழேறப்போக வோருப்பட்டு, தம்மபிமதம் ஸித்தியாதவோபாதி அங்கு முட்டப்போகவுங்கூட அரிதாம்படி தமக்குப்பிறந்த அவஸாதத்தை அந்யாபதேஶத்தாலே யருளிச்செய்கிறார். * மாசறுசோதியிலே - இவர்தாம் மடலெடுக்கப்புக்கு, "அவனுக்கு அவத்

---

மானேய்நோக்கு ப்ரவேஶ, ஸங்க்ரஹஸங்கதி - திருக்குடந்தையிலே இத்யாதி.

ஸ்வாபதேஶத்திலே ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - மாசறுசோதியிலே இத்யாதி. அவனுக்கு அவத்யமென்று - அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு அவத்யமென்று என்றபடி. * ஊரெல்லாம் துஞ்சி ப்ரவேஶத்திலே - ஆதித்யன் அஸ்தமிக்கையாலே மடலெடுக்கை தவிர்ந்தாரென்று அருளிச்

யம்'' என்று தவிர்ந்தார்; இங்கு-ஆற்றாமைதோற்ற, கண்டதிருப்பதிகள்தோறும்புக்கு நுழைந்து திரியாநின்றார்; இதுக்கடியேதும் தெரிகிறதில்லை. அங்கு - அவன்ஸ்வரூபம் பரிஹரித்தார், இங்கு - தம்முடையஸ்வரூபம் நோக்கப்பார்க்கிறார்; அங்கு - வடிவிலே யணையவேணுமென்று ஆசைப்பட்டார்; பின்பு இவ்வளவும்வர அவ்வடிவிலே அவகாஹித்தபடியாலே ஆற்றாமைமுறுகி, † ''கோம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர்குற்றேவல்'' என்கிறபடியே அடிமைசெய்ய ஆசைப்படுகிறார். இனி இவர்தமக்குத்தான் ஸம்ஶ்லேஷமாவது - மாநஸாநுபவ மென்றிறே ப்ரவேஶத்திலே அடியிலே சொல்லிற்று; இங்ஙனேயிருக்க, திருவல்லவாழேறப் புறப்பட்டுப்போகையாவதேன்? வந்துவர்க்கம் நிஷேதிக்கையாவதேன்? என்னில்,—அந்த மாநஸாநுபவந்தனக்கு ஒருகலக்கம்வரவமையுமிறே.

எம்பெருமானோடே கலந்து பிரிந்து பிரிவாற்றாமை நோவுபடுகிறாளொருபிராட்டி, தன்னுடைய ஆபிஜாத்யாதிகளையும் பாராதே திருவல்லவாழேறப் புறப்பட்டுப்போகப்புக, இத்தை யறியும் தோழிமார் வந்து '' இதுகார்யமல்ல, நந்தலைமைக்குப் போராதுகாண் '' என்று ஹிதஞ்சொல்லி மீட்கப்பார்க்க, ''இனி நீங்கள் சொல்லுகிறவற்றால் நான்பெற்றதேன்; அவ்வூரில் திருச்சோலையும், அங்குண்டான பரிமளத்தைக் கோய்துகொண்டு புறப்படுகிற

---

*செய்தாரேயாகிலும், இங்கு - அவனுக்கு அவத்யம் என்று தவிர்ந்தாரென்று அருளிச்செய்கையாலே, இதுவு மொரு ஹேதுவாகக் கண்டுகொள்வது.* **இதுக்கடியேதும் தெரிகிறதில்லை** *- என்கிற ஶங்கையை த்வேதா பரிஹரிக்கிறார் -* **அங்கு அவன் இத்யாதியாலும், அங்கு வடிவிலே இத்யாதியாலும்.** **அவன்ஸ்வரூபம் பரிஹரிக்கையாவது** *- அவனுடைய நிருபாதிக ரக்ஷகத்வத்துக்கு ஸ்வப்ரவ்ருத்தி,விருத்தமாகையாலே, ஸ்வப்ரவ்ருத்தியை விட்டாரென்றபடி.* **இங்குத் தம்முடையஸ்வரூபம் நோக்குகையாவது** *- அநுபவமில்லாதபோது ஸத்தைகிடவாமையாலே, திருப்பதிகள்தோறும் புக்காகிலும் அவனை யநுபவித்து ஸத்தையை நோக்கப்பார்க்கிறா ரென்றபடி. இத்தால் - ஸ்வஸத்தையை யுண்டாக்கியே* **அத்தலையைநோக்கவேண்டுகையாலே,** *ஸ்வஸத்தாஸித்த்யர்த்தமாகத் திருப்பதிகள்தோறும்புக்கு அநுபவிக்கப்பார்க்கிறாரென்று பரிஹரித்தாராயிற்று. ''மாசறுசோதியென்செய்யவாய்மணிக்குன்றத்தை''* *என்றத்தைப்பற்ற -* **அங்கு வடிவிலே யணையவேணுமென்று ஆசைப்பட்டார்** *என்றது. ஆசைப்பட்டாரென்றது - ஆசைப்பட்டமாத்ரமாகையாலே ''தத்ஸாந்நித்யம் ஸம்ஸவேஶ''* *என்றிருக்கலாமென்றபடி.* **கோம்மைமுலைகளிடர்தீர** *- கொம்மைமுலை - பெரியமுலை. அதாவது - அநுபவாலாபத்தாலே வீங்கின முலையென்றபடி. இடர்தீர - இவற்றின்க்லேஶந்தீர.* **கோவிந்தற்கோர்குற்றேவல்** *- குற்றேவல் - அந்தரங்ககைங்கர்யம்.* †நாய்ச்சியார்திருமொழி,(கூ. க.) *''அடிகூடுவதென்றுகொலோ''* *என்றத்தைப்பற்ற -* **அடிமைசெய்ய ஆசைப்படுகிறார்** *என்றது.* *ப்ரவேஶத்திலேயென்றது - மஹாப்ரவேஶத்திலேயென்றபடி.* **புறப்பட்டுப்போகையாவதேன்** *- என்றவநந்தரம், 'முடியப் போகமாட்டாதே புறச்சோலையிலே விழுந்துகிடக்கையாவதேன்' என்று கூட்டிக்கொள்வது. இரண்டுக்கும் உத்தரம் - அந்த இத்யாதி.* **அந்தமாநஸாநுபவந்தனக்கு ஒருகலக்கம் வரவமையுமிறே** *யென்றது - திருவல்லவாழேறப்போகிறது - மாநஸாநுபவமாய், முடியப் போகமாட்டாமல் புறச்சோலையிலே* **விழுந்துகிடக்கை** *- மாநஸாநுபவாபாவத்தால் வந்த கலக்கமென்றபடி.* **வந்துவர்க்கம்நிஷேதிக்கையாவதேன்** *- என்ற ஶங்கைக்கு பரிஹாரம் - ஸம்பந்த ஜ்ஞாநோபாயாத்யவஸாய தஶாவிஶிஷ்டராய் நிரூபிக்குமளவில், ஸ்வப்ரவ்ருத்தி, ததேகரக்ஷ்ய ததேகபாரதந்த்ர ஸ்வரூபத்துக்கு விருத்தமாய்த்தோற்றுகையாலே, ஸம்பந்தஜ்ஞாநோபாயாத்யவஸாயதசைகள் வந்துவர்க்க மென்கிறதென்ற.*

*ப்ராஸங்கிகஶங்காபரிஹாரம்பண்ணி, அநந்தரம் விஸ்தரஸங்கதி -* **எம்பெருமானோடே இத்யாதி.** **ஆபிஜாத்யாதிகளையும்** *- என்ற சஶப்தத்தாலே - அவனுடைய ரக்ஷகத்வாதிகுணங்களை ஸமுச்சயிக்கிறது.* **இனிநீங்கள்** *-என்றவிடத்தில், இனியென்றது-வக்ஷ்யமாணத்தைப்பற்ற.* **அவ்வூரில்திருச்சோலையும்** *-இத்யாதி பஞ்சகமும்-''தேனார்சோலைகள்'', ''தென்றல்மணங்கமழும்'', ''பாண்குரல்வண்டு'',''பாடுநல்வேதவொலி'', ''மண்ணும்விண்ணும் தொழநின்ற'' என்றவற்றைப்பற்ற. ''மானேய்நோக்குநல்*

தென்றலும், அங்கே மயூரபாநம்பண்ணிக்களித்துப் பாடாநின்றுள்ள வண்டுகளினுடைய இனிதானமிடற்றோசையும், ஊரிலுண்டான வைதிகக்ரியாகோலாஹலங்களும், நகரஸம்ப்ரமங்களும், இவையெல்லாம், நீங்கள் என்னைமீட்கநினைக்கிறவோபாதி 'அங்கேபோரு போரு' என்று அழையாநின்றது; ஆனபின்பு நீங்கள் சொல்லுகிறவற்றால் பெற்றதேன்" என்று தன்னார்த்தியை அவர்களுக்கு ஆவிஷ்கரித்து அவர்களை அநுநயியாநின்றுகொண்டு; திருவல்ல வாழிலே நான் நினைத்தபடியே போய்ப்புக்குப் பரிமாறவல்லேனேயென்று அவர்களுக்குச் சொல்லுகிறாளாயிருக்கிறது. "இதுதான் நான் அநுபவித்தேன்" என்று ஜீயர்அருளிச்செய்வர்- பட்டர்திருவடிகளை யாஶ்ரயித்துப் பின்பொருகால் மேல்நாட்டுக்கெழுந்தருளி மீண்டு பெரியத்வரையோடே 'திருநாளுக்குதவவேணும்' என்றுவர, திருக்கரம்பன்துறையளவிலே வந்தவாறே அசிந்திதமாக ஆறு பெருகிக்கிடக்க; இராத்திருநா ளெழுந்தருளி இங்குண்டான ஸம்ப்ரமங்களெல்லாம் சேவிப்படுவேதது, வந்துபுகுரப்பெறுதொழிவதாய்க்கொண்டு "போரநோவுபட்டோம்" என்று அருளிச்செய்வர். ஏகதத்விதத்ரிதர்கள் ஶ்வேதத்வீபத்தைச்சென்று கிட்டி, உள்ளுப்புகுகைக்கு யோக்யதையில்லாமையாலே புறம்பேநின்று; அங்குள்ளார் எம்பெருமானைக்கண்டு படுகிற ஸம்ப்ரமத்தைச் செவியாலே கேட்டுநிற்பது, கண்ணால் காணப்போகாதொழிவதாய்க் கிடந்து பட்டாப்போலே † கிடந்து கூப்பிடுகிறாராயிற்று இவரும்.

---

## முதற் பாட்டு.

மானேய்நோக்குநல்லீர்! வைகலும்வினையேன்மெலிய
வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும்
தேனார்சோலைகள்சூழ் திருவல்லவாழுறையுங்
கோனாரை அடியேனடிகூடுவதென்றுகொலோ?

**ஆ.**—*அழகிய நோக்கையுடையீர், தன்னைப் பெறாதே துக்கப்படும்படி மஹாபாபத்தைப்பண்ணின நான் நாடோறும் வ்யஸநபரம்பரைகளாலே மிகவும் அஸங்கையாக, வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் தேனார்சோலைகளாலே சூழப்பட்ட திருவல்லவாழிலே நிரந்தரவாஸம்பண்ணுகிற எம்பெருமானுடைய திருவடிகளிலே அடியேன் போய்ப் புகுவதென்றோ வென்கிறாள்.*

ஒ.—*முதற்பாட்டில், இப்பிராட்டி, தன்னுடைய அவஸாதத்தைக்கண்டு மிகவும் காதரேக்ஷணைகளாய் 'உன் ஹ்ருதயத்தில் ஓடுகிறதென்?' என்று கேளாநின்றிருந்துள்ள தோழிமாரைக்குறித்து, திருவல்லவாழிலே எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய திருவடிகளிலே அடியேன் போய்ப்புகுவது என்றோ? என்கிறாள்.*

---

*லீர்", "நன்னலத்தோழிமீர்காள்" என்றத்தைப்பற்ற - அவர்களை அநுநயியாநின்றுகொண்டு என்றது அங்குத்தை வ்யாபாரங்களும் செவிப்படாநிற்கக் கிட்டப்பெறாமல் ஸமீபத்திலே நோவுபட்டமைக்கு த்ருஷ்டாந்தத்வயம் - இதுதான் இத்யாதி. இதுதானென்றது - அங்குத்தை ஸம்ப்ரமங்கள் செவிப்படாநிற்க, ஸமீபத்திலே கிட்டப்பெறாமல் நோவுபடுகிற இதுதானென்றபடி. திருக்கரம்பன்துறை - உத்தமர்கோயில் துறை. "கரம்பனூருத்தமனை" என்னக்கடவதிறே. ஏகதத்விதத்ரிதர்கள் - ப்ரஹ்மாவின் மாநஸபுத்ரரான ருஷிகள்.*

---

† *'கிடந்துபடுகிறாராயிற்று' என்று பாடாந்தரம்.*

[மானேய் என்றுதொடங்கி] - அழகியநோக்கையுடையீர்! தன்னைப்பெறாதே துக்கப்படும்படி மஹாபாபத்தைப்பண்ணின நான் நாள்தோறும் வ்யஸநபரம்பரைகளி னாலே மிகவும் அவஸந்நையாக ஆகாசமெல்லாம் பூர்ணமாம்படி வளர்ந்து கண்ணுக்கினி தான கமுகிற் பூம்பாளையும் மயூவையுடைத்தான மல்லிகையும் கமழ்வதும்செய்து தேன் மிக்கிருந்துள்ள திருச்சோலைகளாலே சூழப்பட்ட திருவல்லவாழிலே நிரந்தரவாஸம் பண்ணுகிற ஸ்வாமியை. மாணஜிதையாய் 'அடியேன்' என்கிறாள்.

ப.—முதற்பாட்டில், நிரதிசயபோக்யமான சோலையையுடைய திருவல்ல வாழிலே யெழுந்தருளிநிற்கிற நிருபாதிகஸ்வாமிதிருவடிகளைக் கிட்டுவதென்றோ வென்று தோழிமாரைக் குறித்துச் சொல்லுகிறாள்.

மான் - மானின்நோக்கோடு, ஏய் - சேர்ந்த, நோக்கு - நோக்கையுடையீர்க ளாய், நல்லீர் - என்பக்கல் நல்லமே நிரூபகமாயிருக்கிறவர்களே! வினையேன் - (நினைத்த படி அவனைக்கிட்டிப் பரிமாறவொண்ணாத) பாபத்தையுடையேனான நான், வைகலும் - எப்பொழுதும், மெலிய - மெலியும்படியாக, வான் - ஆகாசமெல்லாம், ஆர் - நிறையும் படியாய், வண் - (தன்னோடு சேர்ந்த மல்லிகைக்கொடிக்குத் தன்னுடம்பைக்கொடுக்கும்) வண்மையையுடைய, கமுகும் - கமுகும், மது - (அத்தோட்டைச்சேர்த்தியாலே) மயூ ஸ்யந்தியான, மல்லிகை - மல்லிகையும், கமழும் - பரிமளித்ததாய், தேன் - மயூபரிமளா க்ருஷ்டங்களான வண்டுகளாலே, ஆர் - நிறைந்த, சோலைகள் - சோலைகள், சூழ் - சூழ்ந்த, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுகிற, கோனாரை - நிருபாதிக சேஷியானவரை, அடியேன் - அவருடைய மேன்மைக்குத் தோற்ற) அடியேனான நான், அடி - திருவடிகளிலே, கூடுவது - சேர்வது, என்று கொலோ - என்றாயிருக்கிறதோ? வினையேன்மெலிய என்றவிடம் - வண்கமுகோடே கூட்டவுமாம், திருவல்லாழுறையு மென்றவிடத்தே கூட்டவுமாம்.

இ.—முதற்பாட்டில், தோழிமாரைக்குறித்து, திருவல்லவாழிலேநின்றரு ளினவனுடைய திருவடிகளிலே சென்றுகிட்டுவதென்றோ வென்கிறாள்.

[மானேய்நோக்குநல்லீர்] - மானேய்ந்த நோக்கையும், என்பக்கல் பரிவையு முடையவர்களே! [நல்லீர்]-ரூபவைலக்ஷண்யம்சொல்லிற்றாகவுமாம். காரியப்பாட்டாலே விலக்குகிற தங்கள்படியையும், அவ்வூரில்போக்யதையிலே ப்ரவணையாய் மீளாதபடியான இவள்படியையுங்கண்டு, "என்னாகப்புகுகிறதோ?" என்று காதரேக்ஷணைகளாயிருக்கிற படி. "நான் அவ்வூரிலேபுகும்படி கண்ணாலேகுளிரநோக்கவேணுமென்கிறாள்" என்று பிள்ளான்நிர்வஹிக்கும். [வைகலும்வினையேன்மெலிய] - தன்னை விஸ்லேஷிக்கும்படி மஹாபாபத்தைப்பண்ணின நான், நாள்தோறும் வ்யஸநபரம்பரையாலே அவஸந்நை யாக. ஒருநாள்மெலியப்பொறுக்கமாட்டாத ம்ருதுப்ரக்ருதியானவள்கிடீர்! நெடுநாள் நோவுபடுகிறாள். "ஐகாவலிதகெஶாஹாஂஶதவத்ரு நிஹெக்ஷணாழ்ஶவாஊஂ உாஃவிதாஂ உ்யஷ்வ ாஉாவிவ்யிதஂஉநஃ॥" என்று - ஒருராத்ரியில் வ்யஸநம் திருவடி பொறுக்கமாட்டிற்றிலனிறே. விலக்ஷணவிஷயத்தைப்பிரிந்தால் ஜீவிக்கவுமொண்ணாது, முடியவுமொண்ணாது. [வானார்வண்கமுகும்] - ஆகாசாவகாசமடையும்படி வளருகை. [மெலிய-வானார்வண்கமுகும்] என்னுதல்; [மெலிய-திருவல்லவாழுறையும்] என்னுதல். அவ்வூரில், பரமசேதநனோடு அசித்கல்பமானஸ்த்தாவரங்களோடு வாசியில்லை மெலிவே

நீராகப்பல்குகைக்கு. இவள் மெலியமெலிய அளவ மேலேமேலே பணையாநிற்கை. இவ ளிருந்தசோலை * சுவிவ்ருக்ஷா:, அவன்வர்த்திக்கிறசோலை * சுகாலைவிநொவ்ருக்ஷா:. [வண்கமுகு] - தர்ஸநீயமானகமுகு. அன்றிக்கே, உதாரமானகமுகு. *குலையார்ந்த பழுக் காயும் பசுங்காயும் பாளைமுத்தும் தலையார்ந்தவிளங்கமுகிறே. தன்னோடுசேர்ந்தகொடிக் குத் தன்னைக்கொடுத்துக்கொடுநிற்கை. கமுகு இறுய்த்தல், கொடி தொடர்ந்துகிட்ட வேண்டும்படியிருத்தல் செய்யாதிருக்கை. [மதுமல்லிகை]-கொடியடங்கப் பரப்புமாறப் பூத்துத் தேன்வெள்ளமிடுகை. [கமழும்] - அதின்பரிமளம் இவளிருந்தவிடத்தேவந்து அலையெறியாநிற்கை. [தேனார்சோலைகள்சூழ்]-தேன் வெள்ளமிடுகிற சோலைகள். நித்ய போக்யமான சோலைகள். அவ்வூரில் நிற்கிறவன்றன்னோபாதியும் உத்தேஸ்யமாயி ருக்கை அவ்வூரில்ஸ்த்தாவரங்களும். பரமபதத்தைவிட்டு ஆஸ்ரிதர் உகந்த த்ரவ்யத்தை யதிஷ்ட்டித்து இங்கேவந்து அவதரிக்கையாலே, அங்குள்ளாரும் இவனுக்கு அநுரூபமாக ஸ்த்தாவரஸரீரமாக வர்த்திக்கிறார்களென்றிறே இவர்கள் நினைத்திருப்பது.உகந்தருளின நிலங்களை விடமாட்டாத அடியார்கள்குழாங்களும் அவனுக்கீடாக அங்கேவர்த்திக்கிற படி. இவை கால்வாங்காதேநிற்கிறபோதே, அங்குத்தை "[illegible]" என்கிற ஆகாரமும் ஜீவிக்கிறபடி. [வினையேன்மெலிய-திருவல்லவாழுறையும்கோனாரை] - என்னையொழிய போகத்துக்கு ஏகாந்தஸ்த்தலத்திலே சோலையில் ரஸமநுபவிக்கிறவரை. போகத்துக்கு ஏகாந்தஸ்த்தலத்திலே தனியேயிருப்பதே. [உறையும்] - அங்குத்தை போக்யதையாலே நித்யவாஸம்பண்ணுகிறவரை. போகத்தால்வந்த தௌர்பல்யத்தாலே நான்செல்லமாட்டாதிருக்க, ப்ரீதியாலே அவர் வரமாட்டாதிருக்கிறாரிறே. [கோனாரை யடியேன்] - ஸர்வோதாத்தநாயகர் அவர், அவர்பெருமையிலே தைர்யபங்கம்பிறந்தவள் நான். கோனாரையென்று - நாராயணஸப்தார்த்தம்; அடியேனென்று - ப்ரணவார்த்தம். பிராட்டியானதசையோடு தாமானதசையோடு வாசியற இவர்க்கு ஸேஷத்வம் ஒரு படிப்பட்டிருக்கிறபடி. [அடிகூடுவது] - "அணைக்கவேணும்" என்னும் ஸ்த்தானத் திலே [அடிகூடுவது] என்கிறாரிறே. பிண்டாத்யவஸ்த்தைகளில் ம்ருத்ரவ்யாநு வ்ருத்திபோலே, இவருடைய பாவவ்ருத்திகளெல்லாவற்றிலும் இவர்க்கு ஸேஷத் வம் ஒருபடிப்பட்டிருக்கும். "[illegible]" என்று - தேவாதிஸரீரப்ரவேஸம்பண்ணுநிற்க, தேஹியானவன் ஒருபடிப்பட்டிருக்கு மாப்போலேயாயிற்று இவரும் ஆணபோதோடு பெண்ணானபோதோடு வாசியற ஸேஷபூதராயிருக்கிறபடி. [என்றுகொலோ] - "பதினாலாண்டு" என்று அவதிபெற்ற பின்பும் ஆணுமாய் பிதாவுமான சக்ரவர்த்தி ஜீவித்திலன்; ப்ரணயிநியுமாய் அபலையுமான நான் எங்ஙனே ஜீவிக்கக்கடவேன். அடிகூடுவதென்கிறது - சதுர்த்த்யர்தம். என்று கொலோவென்கிறது - ப்ராப்யத்வரையாலே வாக்யஸேஷத்தால்வந்த ப்ரார்த்தனை.

ஈடு.—முதற்பாட்டு. தோழிமாரைக்குறித்து, திருவல்லவாழிலே நின்றருளின ஸர்வேஸ்வரன்திருவடிகளைக் கிட்டப்பெறுவதென்றோ வென்கிறாள்.

[மானேய்நோக்குநல்லீர்] - "நான் திருவல்லவாழிலே போய்ப்புகும்படி உங்கள்

---

முதற்பாட்டு —மானேய்நோக்கு இத்யாதி. "திருவல்லவாழுறையும்கோனாரையடியே னடி கூடுவதென்றுகொலோ" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை-தோழிமாரை இத்யாதி.

"நோக்கு" என்றத்தை - கடாக்ஷ வாசகமாக்கி, தோழிமாருடைய நோக்கை வர்ணித்ததுக்கு பாவம் - நான் திருவல்லவாழிலே இத்யாதி. "நோக்கு" என்றதுக்கு - நேத்ரவாசகமாக அர்த்

கண்ணாலே குளிரநோக்கி ப்ரஸாதிக்கவேணுமென்கிறாள்'' என்று பிள்ளான் பணிக்கும். [மானேய் நோக்கு நல்லீர்] - மானையேய்ந்த நோக்கையுடையீராய் எனக்கு நல்லவர்களே. ''பிரிவாற்றாமையாலே நோவுபட்டும், சோலையழகிலே ஈடுபட்டும், நம்முடைய ஹிதவசநத்தாலே தளர்ந்துமிருக்கிற இவளுக்கு நம்முடைய நிஷேதவசநம் செவிப்படுமாகில், இவள் மோஹிக்கும்'' என்று நிஷேதகார்யம் தோற்றும்படி காதரேக்ஷணைகளாய்க்கொண்டிருக்க, [மானேய்நோக்கு நல்லீர்] என்கிறாள். இவள்தனக்கு **''அநஸூயவெ''** (அநஸூயவே) என்று இவ்வளவேயிறே வேண்டுவது. **''இதந்துதெ குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி''** (இதந்துதேகுஹ்யதமம்ப்ரவக்ஷ்யாமி) - வைப்பாகவைத்தவையுமெல்லம் சொல்லாநின்றேன்கேள். **''அநஸூயவெ''** (அநஸூயவே)- அத்தலை குறையற்றபின்பு இனி இத்தலை கிடக்குமோ. [வைகலும்வினையேன்மெலிய] - ஒருகால் மெலிந்து ருசித்திருப்பார்க்கன்றோ பிரிவாற்ற லாவது. [வைகலும் - மெலிய] - காலங்கழியக்கழியக் காதல் கழியும்படியிறே விஷயாந்தரங்களை யாதரிப்பார்க்கிருப்பது; மநநம் பண்ணி, பாவனையாய், பின்பு தர்ஸநமாய், ப்ரத்யக்ஷஸமாநாகாரமாய், பின்பு ஸரீரவியோகம் பார்த்திருப்பார் படியிறேயிது. **''தஸ்ய''** (தஸ்ய) - மே; **''அதஸம் பத்ஸ்யே''** (அதஸம்பத்ஸ்யே) என்கிறமேலி லுத்தமனோடே கூடவேணுமே. **''தாவதெவ சிரம்''** (தாவதேவசிரம்)-எனக்கு அவ்வளவேகிடாய் விளம்பம், **யாவந்ந விமொக்ஷ்யே. ''அதஸம்பத்ஸ்யே''**

---

ப்ர:—(வைகலும்வினையேன்மெலிய) — ஸாந்தோக்யே ஷஷ்ட ப்ரபாடகே [கச] ''தஸ்ய தாவதெவ சிரம் யாவந்ந விமொக்ஷ்யெ அத ஸம்பத்ஸ்யெ''. தத்ரைவ [அ-கஉ] ''ஸஷஸம்ப்ரஸாதொஸ்மாச்சரீராத்ஸமுத்தாய பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதெ''.

---

*தாந்தரம் - பிரிவாற்றாமையாலே இத்யாதி. ஈக்ஷணஸப்தம்போலே, ''நோக்கு'' என்கிறதும் - பார்வைக்கும் கண்ணுக்கும் வாசகமாயிருக்கும். கண்ணுக்கு வாசகமானபோது; மானானது பயத்தாலே கலங்கினகண்ணையுடைத்தாயிருக்குமாபோலே, என் துஃகம் கண்டு கலங்கின கண்ணையுடையவர்களென்று ஸப்தார்த்தம். பார்வைக்கு வாசகமானபோது; மானானது ஸ்நேஹமாகத் தன் பேடைகளைப் பார்க்குமாபோலே, என்னையும் ஸ்நேஹமாக நோக்கவேணுமென்றாகக்கடவது. நிஷேதகார்யம் தோற்றும்படி யென்றது - நிஷேதத்தாலேவந்த வ்யஸநம் தோற்றும்படியென்கை. காதரேக்ஷணம் - மான்போல் பார்வை. நிஷேதியாதே தத்கார்யம் தோற்றும்படி யிருக்கிறவர்களை, அப்ரதிஷேதமாத்ரத்தாலே ''நல்லீர்'' என்று கொண்டாடக் கூடுமோ? என்ன - இவள்தனக்கு இத்யாதி. ஸ்லோகார்த்தம் - இதந்து இத்யாதி. ''இதந்துதெ குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாம்யநஸூயவெ । ஜ்ஞாநம்விஜ்ஞாநஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா மொக்ஷ்யஸெऽஸுபாத்॥ க॥'' இதி ஸ்ரீதாபாஷ்யம் நவமெ.*

*அத்தலை இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம் - அதிகாரியான நீ குறையற்றபின்பு நான் வெறுமனேயிருப்பனோவென்று. ''வைகலும் - மெலிய'' என்றதுக்கு பாவம் - ஒருகால் இத்யாதி. விஷயாந்தரங்களைப் பிரிந்தவர்கள் ஆறியிருக்கவில்லையோ, அப்படி இவரும் ருசித்திருக்கவொண்ணாதோ? என்ன - காலங்கழிய இத்யாதி. அதாவது - விஷயாந்தரங்கள் அல்பபோக்யங்களாகையாலே அவர்களுக்கு ஆறியிருக்கலாம், அங்ஙனன்றிக்கே நிரதிஸயபோக்ய விஷயத்தை ஆதரிக்கையாலே இவர்க்கு ருசித்திருக்கப்போகா தென்றபடி. பின்னை இவருடைய பக்தியிருக்கும்படி யென்னென்ன - மநநம் இத்யாதி. இது - இவருடையபக்தி. 'ஸரீரவியோகம்பார்த்திருப்பார்கள்'' என்றதுக்குப்ரமாணம் - தஸ்யெ இத்யாதி. மே என்று - ஸ்ருதியிலில்லாதத்தைக் கூட்டுகிறதுக்கு உபபத்தி - அதஸம்*

(அத்ஸம்பத்ஸ்யே) - அநந்தரத்தே ஸம்பந்நனுகக்கடவேன். அதாவது - *வாஜ்ஜோதி ரூபஸம்பத்ய இறே. இப்படி ஶரீரவிமோக்ஷம் பார்த்திருப்பார்படியிறேயிது. [வைகலும் வினையேன்மெலிய] - தன்னை விஶ்லேஷிக்கும்படி மஹாபாபத்தைப்பண்ணின நான், நாடோறும் வ்யஸநபரம்பரையாலே அவஸந்நையாக. ஒருநாள் மெலியப் பொறுக்கமாட்டாத ப்ரக்ருதியானவள் கிடீர்! நெடுநாள் நோவுபடுகிறாள். திருவடிகண்டுபோந்தவநந்தரம் பிராட்டி பட்டதெல்லாம் படுகிறாளாயிற்று இவளும். ஒரு ராத்ரியில் வ்யஸநம் திருவடிபொறுக்கமாட்டிற்றில்லிறே; "ஐாஈஊஸிதகேஶாந்தாம்" (இமாமஸிதகேஶாந்தாம்)-*மைவண்ணநறுங் குஞ்சியை யுடையவர்க்கும் பேணத்தகும் குழலையுடையவள் கிடீர். "ஶதபத்ரநிபேக்ஷணாம்"(ஶதபத்ரநிபேக்ஷணாம்)-"கமலபத்ராக்ஷ:"(கமலபத்ராக்ஷ:)என்கிறகண்கலாலே கண்டுகொண் டிருக்கத்தக்க கருங்கண்ணையுடையவள்கிடீர். "ஸுகார்ஹாம்" (ஸுகார்ஹாம்) - அவர்மடியிலேயிருக்கத் தகுமவள். "து:கிதாம் த்ருஷ்ட்வா" (து:கிதாம் த்ருஷ்ட்வா)-இவ்விருப்பிருக்கத் தகாதவளைக்கண்டு. "மமாபிவ்யதிதம்மந:" (மமாபிவ்யதிதம்மந:) - ஶோகஹர்ஷங்களுக்கு அழியாத என்னுடையநெஞ்சையும் வருத்திற்றுக்கிடீர். இப்படியேகாணும் இவளுக்கும் இருக்கிறபடி. [வினையேன்] - நாள்செல்ல நாள்செல்ல ஆசைகழியாதபடியான பாபத்தைப் பண்ணினேன். (மெலிய-வானூர்வண்கமுகு மென்னுதல், மெலிய - திருவல்லவாழுறையு மென்னுதல். அவ்வூரில், பரமசேதநனோடு அசித்கல்பமான ஸ்த்தாவரங்களோடு வாசியில்லை மெலிவே வினைநீராகப் பல்குகைக்கு.) [மெலிய] - நீர்ப்பண்டமாய் அழிகிறபடி. [வானூர் இத்யாதி]-இத்தலை மெலிய மெலிய அத்தலை மல்காநின்றது. அவ்வூரிற்சோலைக்கு நீர் இத்தலையில் மெலிவுபோலேகாணும். [வானூர்]-ஆகாசத்

ஸுந்தரகாண்டே [கசு] ஹநூமாந், "இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ரநிபேக்ஷணாம் । ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபிவ்யதிதம் மந:".

*வஜ்ஜோதி* இத்யாதி. ஶ்ருதிக்கு அர்த்தம் - *தாவதேவ* இத்யாதி. *எவ்வளவென்ன* - *யாவந்நவிமோக்ஷ்யே* யென்று. அதாவது இத்யாதிக்கு - *ஹகவத்ப்ராப்தி பூர்வகமாக ஸ்வாஸாதாரண காரத்தை யடைகையென்றபடி.* "தஸ்ய தாவதேவசிரம் யாவந்நவிமோக்ஷ்யே அத ஸம்பத்ஸ்யே" இதி, "ஏஷஸம்ப்ரஸாதோऽஸ்மாச்சரீராத்ஸமுத்தாய பரஞ்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" இதி ஶ்ருதே. *இதென்றது-மெலிவு. இவள் நாள்தோறும் மெலிகிறதுக்கு, மேலே - பிராட்டிமெலிவை த்ருஷ்டாந்தீகரிப்பாராக உபோத்காதம் -* ஒருநாள்மெலிய *இத்யாதி.* திருவடிகண்டுபோந்தவநந்தரமென்றது *- லங்கையிலே போந்து பிராட்டியைக்கண்ட வநந்தரமென்றபடி. விஶ்லேஷதசையிலே பிராட்டி பட்டபடிக்கு ப்ரமாணம் - இமாம் இத்யாதி.* "இமாமஸிதகேஶாந்தாம் ஶதபத்ரநிபேக்ஷணாம் । ஸுகார்ஹாம் து:கிதாம் த்ருஷ்ட்வா மமாபிவ்யதிதம் மந:" *இதி ஸுந்தரகாண்டே. "அஸிதகேஶாந்தாம்" என்றதுக்குஹாவம் -* மைவண்ணம் *இத்யாதி. கறுத்தவர்ணத்தையும் பரிமளத்தையு முடைய திருக்குழலை யுடையவர்க்கென்றபடி.* *திருநெடுந்தாண்டகம், இருபத்தோராம்பாட்டு. பேணந்தகும் - ஆசைப்படத்தகும். ஶதபத்ரநிபம் *என்றது - தர்ஶநீயதையைப் பற்றவாதல், நெய்தலாதல்.* மடியிலேயிருக்க *என்றவிடத்திலே* - "தவாங்கஸமுபாவிஶம்" *என்றத்தை நினைப்பது.* "வினையேன்" *என்றதுக்கு தாத்பர்யாந்தரம் -* நாள்செல்ல *இத்யாதி.* "மெலிய - வானூர்" *என்றுகூட்டியாதல்,* "மெலிய - கோனூர்" *என்றுகூட்டியாதல் ஹாவம் -* இத்தலை *இத்யாதி.* அத்தலை

தைக் கண்சேறியிட்டாற்போலே யிருக்கை. இவளிருக்கிற விடம் * ஸவிவரக்ஷாஃ ஸரீஸூரநாஃ, அவனிருக்கிற விடம் * ஸகாருஹமிநேரவரக்ஷாஃ. [வண்கமுகும்] - தர்ஸநீயமாயிருக்கை. $''குலையார்ந்த பழுக்காயும் பசுங்காயும் பாளைமுத்தும் தலையார்ந்தவிளங்கமுகு'' என்னுமாபோலேயிருக்கை. [வண்கமுகு] - கோடி தொடர வேண்டாதே, தான் கோடிக்கு உடம்புகோடுத்துநிற்கிற ஔதார்யமென்றுமாம். மெய்யே கோடுக்கிற ஔதார்யமிறேயிது. [மதுமல்லிகைகமழும்] - மலட்டுக்கோடியாயிராதே! பூகத்தோடே அணைகையாலே. பரப்பும் பூவாயிருக்கை. மதுவையுடைத்தான மல்லிகைகளின் பரிமளம் இவளிருந்தவிடத்தேவந்து அலையேறிகை. [தேனார்சோலைகள் சூழ்] - இதுக்கு முன்பு சோன்னவையெல்லாம் ஆஸ்ரயமாத்ரமேயாய்த் தேனேமிக்கிருக்கை. வானார் வண்கமுகுகள் தேன்வெள்ளத்திலே யலைந்து, ப்ரளயகாலத்திலே மார்க்கண்டேயன் பட்டதெல்லாம் படாநின்றது. தேன்வெள்ளமிடுகிற சோலைகள் சூழ்ந்த திருவல்லாவாழுறையும் கோனாரை - இருவருங்கூட மதுபாநம்பண்ணிக் களிக்கவேண்டியிருக்க, நான் மெலியத் தாமே மதுபாநம்பண்ணி வர்த்திக்கிறவரை. பாவியேன், இவ்வளவில் ''நசாபிமதுஸேவதே''(நசாபிமதுஸேவதே) என்னவேண்டாவோ. இவர் இவ்வாற்றாமையோடேயிருந்து சோலையைக் கவிபாடுகிறது-உள்ளுநிற்கிறவனோடொக்க இவையும் போக்யமாயிருக்கையிறே. உபாஸ்யவஸ்து,மநஸ்ஸை ப்ரத்யக்ஷவிஷயமாக்கி யநுபவிக்கமாட்டாதார்க்குக் கண்ணுக்கிலக்காக்கிக்கோண்டு நிற்கிறப்போலேகாணும் இவையும். ப்ராப்யனானவனுடைய உபாயபாவத்தில் நிலைபோலே,நித்யப்ராப்யனைக்கோண்டு அங்கேயிருக்கிறவன், ஆஸ்ரிதர் உகந்ததோரு த்ரவ்யத்தைத் திருமேனியாகக்கோண்டு முகங்கோடுத்துக்

---

*யென்றது - தேசத்தையாதல், கோனாரையாதல். ''மெலிய - வண்கமுகு'' என்று கூட்டிபாவம் - அவ்வூரில் இத்யாதி. ''ஆர்'' என்றதுக்கு அர்த்தம் - ஆகாசத்தை இத்யாதி. கண்சேறியிட்டாப்போலே- கபளீகரித்தாப்போலே. இவற்றை இப்படி வர்ணிக்கைக்கு, தானிருக்கிறவிடம் இப்படி இருக்கவில்லையோ? என்ன - இவளிருக்கிற இத்யாதி. அழகாவதேதென்ன - குலையார்ந்த இத்யாதி. ஒருகுலையிலே நிறைந்த பழுக்காயும், ஒருகுலையிலே பசுங்காயும், ஒருகுலையிலே நிறைந்த பாளைமுத்தும் தலைநிறைய வுடைய விளங்கமுகுகளையுடைய பெரியசோலையையுடைய திருநறையூரென்றபடி. $திருமொழி, ஆறும்பத்து, ஒன்பதாந்திருமொழி, எட்டாம்பாட்டு. * வண்மைக்கு அர்த்தாந்தரம் - கோடிதோடர இத்யாதி. சாடு - மெய்யே இத்யாதி. மெய் - ஸரீரமும், ஸத்யமும். மல்லிகையானது மதுவையுடைத்தாம்போது, புஷ்பஸம்ருத்தியுண்டானாலொழியக் கூடாமையாலே யருளிச்செய்கிறார் - மலட்டுக்கோடி இத்யாதி. மதுவை நிரூபகமாகச் சோன்னதுக்கு பாவம் - பரப்பும்பூவாயிருக்கை யென்றது. ''மதுமல்லிகைகமழும்'' என்றுவைத்து, ''தேனார்சோலைகள்'' என்று விஸேஷித்ததுக்கு பாவம்- இதுக்குமுன்பு இத்யாதி. இதுக்குமுன்பு சோன்னவையெல்லாமென்றது - கமுகையும் மல்லிகையையும். ''தேனார்'' என்றத்தால் பலித்தபாவம் - வானார்வண்கமுகுகள் இத்யாதி. சோலையென்றது - கமுகஞ்சோலை. ''மெலிய'' என்றத்தை - ''வானார்'' என்றத்தோடே கூட்டி ஒருதாத்பர்யமருளிச்செய்து, இங்கே, ''மெலிய - திருவல்லவாழுறையும்'' என்று கூட்டி பாவம் - இருவரும் இத்யாதி. இந்தவாக்யம் - ''இத்தலைமெலியமெலிய'' இத்யாதிவாக்யவிவரணமாகக் கண்டுகோள்வது. விஸ்லேஷவ்யஸநத்தாலே நோவுபடுகிறவர் சோலையை வர்ணிப்பானென்? என்ன - இவர் இவ்வாற்றாமை இத்யாதி. அவனோபாதி போக்யமாயிருக்கையாலே வர்ணிக்கிறாரென்று - கீழ் அருளிச்செய்து, நித்யஸூரிகள் இவையாய்வந்து நிற்கையாலும் இச்சோலையை வர்ணிக்கிறாரென்று பாவாந்தரம் - உபாஸ்யவஸ்து இத்யாதி. உபாஸ்யவஸ்து - நிற்கிறப்போலே என்று அந்வயம். ''கண்ணுக்கிலக்காக்கிக்கோண்டு'' என்றதின் விவரணம் - ப்ராப்யனான இத்யாதி. ப்ரபத்திக்கடைத்த நிலம் அர்ச்சாவதாரமாகையாலே - உபாயபாவத்தில்நிலை என்கிறார். கீழ்வாக்ய விவரணம் - நித்யப்ராப்யனை இத்யாதி. நித்யஸூரிகள் இவையாய் நிற்கிறதுக்கு ப்ரமாணமாக, ''ஸஹஸ்ரஸஸஹஜநாஸஃ'' இத்யாதி*

கொண்டு நிற்கிறப்போலே, அங்குள்ளாரும் இங்கேபோந்து ஸ்த்தாவரங்களாயும் ஜங்கமங்களாயும் திர்யக்குக்களாயும் அவனைவிடமாட்டாதே நிற்கிறபடி. நித்யரும் முக்தரும் பத்தரில் ருசியுடையாரும், உகந்தருளின நிலங்களை பற்றியிறே கிடப்பது;† (" அஹ்ருதஸஹஜதாஸ்யாঃ" (அஹ்ருதஸஹஜதாஸ்யாঃ) இத்யாதி). ராமாவதாரத்திலு மொருலக்ஷ்மணாதிகள், வாநரத்வங்களை யடைந்தார்கள், விபீஷணாதிகள் பற்றிக்கிடந்தார்கள்; அதுபோலே. அதிலும் நடையாடித் திரிவார்க்குப் போகைக்கும் யோக்யதையுண்டிறே, அதுவுமில்லையிறே ஸ்த்தாவரங்களுக்கு. ஜநநாதப்ரஹ்மராயர் திருமுடிக்குறையிலே ஒருமரம்வெட்டப்புக, அத்தை எம்பார்கேட்டு "அல்லாளப்பெருமாளே, ஈஶ்வரவிபூதியை அழிக்கப்பார்த்தாயோ" என்ன, இவர் சொல்லும்வார்த்தைகேட்கைக்காக, "ஈஶ்வரவிபூதியல்லாதவிடமுண்டோ" என்ன, "அவைபோலன்றுகாண் இவை; ஸார்வபௌமனுரராஜாவும் மஹிஷியுமாக முற்றூட்டாகக் கூட நீர்வார்த்துஆக்கும்சோலைபோலே, பெருமாளும் பெரியபிராட்டியாருங்கூடக்கைதொட்டாக்குமவைகாண்" என்று அருளிச்செய்தார். உகந்தருளின நிலங்களிலே மெய்யே ப்ரதிபத்தி விளைந்தார்க்கு அங்குள்ளவையெல்லாம் உத்தேஶ்யமாய்த்தோற்றுமிறே. கால்வாங்கியல்லது நிற்கவொண்ணாத ஸம்ஸாரம் ததீயத்வாகாரத்தாலே ஒருகால் உத்தேஶ்யமாகாநின்றதிறே. ப்ரமாணத்தில் பிறக்கும் ப்ரதிபத்திபோலன்றிறே கண்ணுக்கிலக்கானால் இருப்பது, முக்தரோபாதி ப்ரத்யக்ஷஸமாநமிறேஆழ்வார்க்கு ததீயத்வாகாரம். ப்ராமாணிகனுக்கு இங்ஙனல்லது ப்ரதிபத்தி யில்லையிறே. நல்லான் பட்டர் ஸ்ரீபாதத்தை யாஶ்ரயித்து நெடுங்காலம்ஸேவித்து, பின்பு அந்திமதஶையிலே பட்டர் எழுந்தருளி, "என் நினைத்திருந்தாய்" என்ன, "'ஒரு ஸர்வஶக்தியுபகரிக்கும்போது இங்ஙனே கனக்கவாகாதே யுபகரிக்கு மது' என்று நினைத்திருந்தேன்" என்ன, "அதுவேன், உன் தேசத்தைவிட்டு பந்துக்களைவிட்டு நெடுந்தூரம் போந்து இங்ஙனே நோவுபட்டுத் திருவடிசேரக்கிடந்தாயாகில் இங்குபகாரமேன்" என்ன, லே யிருந்து அப்ரஸித்தனாய் விழுந்துபோகக்கடவ என்னை இவ்வளவும்

ஶ்லோகத்தைவிவக்ஷித்து, அதுக்கு அர்த்தம்-நித்யரும் இத்யாதி. ஸஹஸ்பாஸா: - ஸூரிகள். விஶ்வாஸஹா:- பத்தரில் ருசியுடைய முமுக்ஷுக்களென்றபடி. "ஈஶ்வரன் அவதரித்தவிடத்திலே நித்யஸூரிகள்முதலானார் அவதரிப்பர்கள்" என்றதுக்கு அநுஷ்ட்டாநம் காட்டுகிறார் - ராமாவதாரத்திலும் இத்யாதி. லக்ஷ்மணாதிகள் - நித்யர். வாநரத்வங்களையடைந்தார்கள் - தேவர்கள். விபீஷணாதிகள் - முமுக்ஷுக்கள். லக்ஷ்மணாதிகளைப்போலே அவதரியாதே ஸ்த்தாவரங்களாய் அவதரிப்பானென்? என்ன - அதிலும்நடையாடி இத்யாதி. நித்யமுக்தாவதாரமாகையாலே உத்தேஶ்யமென்று - கீழ் அருளிச்செய்து, பகவதபிமதமாகையாலும் உத்தேஶ்யமென்று விவக்ஷித்து, அதுக்கு ஐதிஹ்யம் - ஜநநாத இத்யாதி. திருமுடிக்குறை - பெருமாளுடைய ஶிரோபாகப்ரதேஶமான உபயகாவேரீ மத்யப்ரதேஶம். அல்லாளப்பெருமாளேயென்று - ஜநநாதப்ரஹ்மராயரை ஸம்போதித்தபடி. முற்றூட்டாக - பூர்ணமாக. எல்லார்க்கும் இப்படி ப்ரதிபத்தி பிறவாமைக்கடியேதென்ன - உகந்தருளின இத்யாதி. ப்ரமாண முகேந - மெய்யே ப்ரதிபத்திவிளைந்தார்க்கு என்றபடி. "உத்தேஶ்யமாய்த்தோற்றும்" என்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - கால்வாங்கியல்லது இத்யாதி. உக்தார்த்தத்தை கைமுதிக ந்யாயத்தாலே ஸமர்ப்பிக்கிறார் - கால்வாங்கி இத்யாதி என்னுதல். உத்தேஶ்யமாகாநின்றதிறே - முக்தர்க்கென்றபடி. ஆனால் இவர்க்கும் நமக்கும் வாசியேதென்ன - ப்ரமாணத்தில் இத்யாதி. அதாவது - நமக்கு ப்ரமாணங்கொண்டு அறியவேணும், அது இவருக்கு ப்ரத்யக்ஷமாகத் தோற்றும்; ஆனபின்பு, ப்ரமாணஜந்யபரோக்ஷ ஜ்ஞாநத்தைப்பற்ற ஸாக்ஷாத்காரஜ்ஞாநம் வ்யாவ்ருத்தமென்றபடி. ப்ரமாணத்தாலே ப்ரதிபத்தி விளையக்கண்டவிடமுண்டோ? என்ன; ஐதிஹ்யம் காட்டுவாராக அபிஷ்ட்டிகை - ப்ராமாணிகனுக்கு இத்யாதி. அப்ரஸித்தனாயென்றது - அவனதுவாயென்றபடி. 'ஶரஸ்ஸரஸ்வ

† குண்டலிக்ரந்தம் வ்யாக்யாநத்துக்குச்சேராது; க்வாசித்கம்.

அழைப்பித்து, உம்முடைய திருவடிகளை யாஶ்ரயிக்கப்பண்ணி ருசியை விளைப்பித்து, இத் தேசத்திலே உம்முடைய கண்வட்டத்திலே ஶரீரவியோகமுண்டாம்படி பண்ணினுனே'' என்ன, ''ஆனாலும், தானாகவஹிமாநித்த ஶரீரம் போகாநிற்க நீ இங்ஙன் நினைத்திருந்த தென்கொண்டு'' என்ன, ''ப்ரமாணங்கொண்டு நினைத்திருந்தேன்'' என்றான். கண்ணழி வற்ற வெளிச்சிறப்புடையார்க்கு இங்ஙனேயிறேயிருப்பது. [தேனார்சோலைகள்சூழ்திருவல்ல வாழுறையும்கோனாரை] - இருவராய்க்கொண்டு பரிமாறவேண்டும் தேசத்திலே தனியே நின்றவர்கிடீர். [உறையும்] - அவதாரங்கள்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதொழிகை. [கோனாரையடியேன்] - நாராயண ஶப்தத்திலும் ப்ரணவத்திலும்போலே. அவனைச்சொல் லும்போது தம்மையிட்டல்லது சொல்லப்போகாது; தம்மைச் சொல்லும்போதும் அவனை யிட்டல்லது சொல்லவொண்ணாது. கோனாரையென்றவிடம் - நாராயணஶப்தார்த்தம், அடியேனென்றவிடம் - ப்ரணவார்த்தம். ப்ரணவம் - ஜீவப்ரதாநம், நாராயணஶப்தம் - ஈஶ்வரப்ரதாநம். அடிகூடுவதென்றுகொலோ என்கிறவிடம் - சதுர்த்த்யர்த்தம்; என்று கொலோவென்று - ப்ரார்த்தனையோடே தலைக்கட்டுகிறதிறே. [கோனாரையடியேன்] - நாயகன் ஶ்ரோதாத்தநாயகன், இவள் தைர்யமழிந்தவள். [அடியேனடிகூடுவதென்று கொலோ] - ஸ்வரூபத்துக்கீடாக விஷக்தியிலர்த்தத்தோடே தலைக்கட்டுகிறபடி. எல்லாவள விலும் ஸ்வரூபமழியாதிறே. தாமாகவுமாம், பிராட்டிமார்தசையை ப்ராப்தராகவுமாம், அதுக்கும் அவ்வருகே சில அவஸ்த்தைகளை யுடையராகவுமாம், ஸர்வகாலமும் ஸ்வரூபம் மாறாது; பிண்டத்வ ஘டத்வ கபாலத்வ சூர்ணத்வங்களாகிற அவஸ்த்தாந்தரங்களை ஹஜித் தாலும் ம்ருத்தானவாகாரத்துக்கு அழிவில்லையிறே. தாமானதன்மையில் ''அடிதொழு தெழு'' என்பர்; பரோபதேஶத்தில் ''திண்கழல்சேர்'' என்பர்; தூதுவிடப்புக்கால் ''திரு வடிக்கீழ்க்குற்றேவல்'' என்பர்; பிறரைச் சொல்லப்புக்கால் ''தாட்பட்டதண்டுழாய்த்தாமம்

---

ஸ**ஹாடி-டு**'' இத்யாதி ப்ரமாணங்கொண்டு நினைத்திருந்தேன் - என்றபடி. ''ஆசார்யாபிமா *ரத்தாலே மோக்ஷம்*'' *என்று சொல்லுகிற ப்ரமாணந்தானே,* ''*ஸ்வயத்நமூலமானஶக்தியாலே மோக்ஷம்*'' *என்று சொல்லுகையாலே, நிஶ்சயஜ்ஞாநம் பிறக்கமாட்டாதிறேயென்ன* - **கண்ணழிவற்ற** இத்யாதி. ''*இருவருங்கூட மதுபாநம்பண்ணிக்களிக்க*'' *இத்யாதிவாக்யவிவரணம்* - **இருவராய்க்கொண்டு** இத் *யாதி. நாராயணஶப்தம் - ஈஶ்வரவாசியாய், ப்ரணவம் - சேதநவாசியாயிருக்கையாலே,* **நாராயணஶப் தத்திலும் ப்ரணவத்திலும்போலே** - என்கிறார். ஆனால், *ஈஶ்வரவாசகமான நாராயணஶப்தம் - சேதநனையும், சேதநவாசகமான ப்ரணவம் - ஈஶ்வரனையுஞ் சொல்லுகிறதுக்குக் கருத்தேதென்ன* இவை *ப்ரதியோகியைவிட்டிராமையாலே யென்கிறார்* - **அவனைச்சொல்லும்போது** இத்யாதி வாக் *யத்வயத்தாலே.* ''*நாராயணஶப்தத்திலும் ப்ரணவத்திலும்*'' *என்றத்தை விவரிக்கிறார்* - **கோனாரை** *இத்யாதி. இது சதுர்த்த்யர்த்தமானபடி யென்னென்ன* - **என்றுகொலோ** *இத்யாதி. நாயகியிருந்த விடத்தே நாயகன்வந்து மேல்விழுகையொழிய, நாயகி த்வரிக்கலாமோ? என்ன* - **நாயகன்** *இத்யாதி. ப்ரணவார்த்தம் சொன்னவநந்தரம் சதுர்த்த்யர்த்தம் சொல்லுவானென்? என்ன* - **ஸ்வரூபத்துக்கு** இத் *யாதி. ஶேஷத்வ ஸ்வரூபத்துக்கென்றபடி. வல்லமையானவள், அவனை யணையவேணுமென்னாதே,* ''*அடிகூடுவதென்றுகொலோ*'' *என்பானென்? என்ன* - **எல்லாவளவிலும்** *இத்யாதி. விவரணம்* - **தாமாகவும்** *இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம்* - **பிண்டத்வ** *இத்யாதி.* ''*தாமாகவுமாம்*'' *இத்யாதி வாக்யவிவரணம்* - **தாமானதன்மையில்** *இத்யாதி. மானேய்நோக்கு இத்யாதி க்ரமேணாந்வயః.* ''*மெலிய*'' *என்றத்தை* - * *வானார்வண்கமுகோடே கூட்டுதல்,* ''*உறையுங்கோனார்*'' *என்றத்தோடே* **கூட்டுதல். அதாவது** - *மெலியும்படி வானார்வண்கமுகென்னுதல், மெலியும்படி திருவல்லவாழுறை யும் கோனாரையென்னுதல்.* **வண்கமுகும்** *மதுமல்லிகையும் பரிமளியாநிற்கிற,* **தேனார்சோலைக**

காமுற்றுயே'' என்பர்; கலங்கி மடலெடுக்கு மளவானாலும் ''தலையில்வணங்கவுமாங்கொலோ'' என்பர்; பித்தேறிச்சொல்லும்போதும் ''கண்ணன்கழல்கள் விரும்புமே'' என்னுதல், ''ஏறியபித்தினோடு எல்லாவுலகும் கண்ணன்படைப்பு'' என்னுதல் சொல்லுமித்தனை.

---

## இரண்டாம் பாட்டு.

---

என்றுகொல்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ?
பொன்திகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவித்
தென்றல்மணங்கமழும் திருவல்லவாழ்நகருள்
நின்றபிரான் அடிநீறடியோங்கொண்டுசூடுவதே.

ஆ.—(என்றுகொல்.) என்ப்ரக்ருதியை யறிந்திருக்கிற நீங்கள் என்னை யாச்வஸிப்பியாதே நலிந்து என்ன ப்ரவ்ருத்தி பண்ணுகிறீர்கள். பொன்திகழ் புன்னை புகிழ் புதுமாதவிமேலே யணைந்து தென்றல் மணங்கமழும் திருவல்லவாழிலே நின்றருளின மஹோபகாரகனுடைய பாதரேணுவைச் சூடுவதென்றோ வென்கிறாள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், தன்னுடைய உத்யோகத்தை இசையாதேயிருக்கிற தோழிமாரை அநுநயித்து நான் திருவல்லவாழிலேபுக்கு அவன்பாதரேணுவைச் சூடுவது என்று? என்கிறாள்.

[தோழிமீர்காள் எம்மைநீர்நலிந்து என்செய்தீரோ] - என்ப்ரக்ருதியை அறிந்திருக்கிற நீங்கள் என்னை ஆச்வஸிப்பியாதே நலிந்து என்னப்ரவ்ருத்தி பண்ணுகிறீகோள்? [புதுமாதவி] - புதியதாக அலர்ந்த குருக்கத்தி. [மீதணவி]-மேலேஅணைந்து. [மணங்கமழும்] - நறுநாற்றம்நாறுகிற. [நின்றபிரான்] - இவ்வார்த்திக்கு அணித்தாக வந்துநின்றருளின மஹோபகாரகன்.

ப.—அநந்தரம், நிஷேதமுகத்தாலே தன்னை நலிகிறவர்கள் தங்களையே பார்த்து, புஷ்பவ்ருக்ஷஸம்ச்லேஷத்தாலே தென்றல் பரிமளத்தை ப்ரவஹிக்கிற திருவல்லவாழிலே நிற்கிற உபகாரகனுடைய பாததூளியை சிரஸாவஹிப்பதென் றென்கிறாள்.

தோழிமீர்காள் - (ஸமாநஸுகதுக்கைகளான) தோழிமீர்காள்! எம்மை - (என் அபிமதத்துக்கு உங்களைத் துணையாக நினைத்திருக்கிற) எம்மை, நலிந்து - (நிஷேதித்து) நலிந்து, (உங்கள்பேற்றுக்கும் இழவாம்படி), நீர் - நீங்கள், என் - என்னகாரியம், செய்தீர் - செய்கிறிகோள்; பொன் - பொன்போலே, திகழ் - விளங்கினதாதுகளை

---

ளென்று சப்தார்த்தம். ''நாராஶம்ஸாயவொஹ்யெ ஜ்ஞநவாவிஷயோஷவதெ | யந்த்யம் ஸாவிஹிதம் நித்யம்ஹக்தஸ்ஸாந்திவந்துஷ்'' இதி ஸாத்ராகாண்டே ஸீதாம்ப்ரதிராமோக்திஃ. ''ஸஹ்ருதஸஹஜஞாஸ்யாஃஸம்ப்ரயஸ்ஸஸ்தவந்யாஃ விஜேயாஜேஷா இதஸ்தீஸ்ஸ்யாஃ | ஜேஹிதஜேநாஜதிர்வ்ருக்ஷாவரகாஶ்யஜெ ஸாநியத தீதிஷ்ஷ ப்ராஹ்ஸாரெ ஹ்ராநஜேஷாகஃ'' இதி ஸ்ரீரகுராஜஸ்தவே. (க)

யுடைத்தாயிருக்கிற, புன்னை - புன்னை, மகிழ் - மகிழ், புது - அபிநவமான, மாதவி - குருக்கத்தி, மீது - இவற்றின்மேலிற்பூவோடே, அணவி - அணைந்து, தென்றல் - தென்றலானது, மணம் - பரிமளத்தை, கமழும் - பரப்பாநிற்கிற, திருவல்லவாழ் - திருவல்லவாழாகிற, நகருள் - நகரத்துக்குள்ளே, நின்ற-நின்ற, பிரான் - உபகாரகனுடைய, அடிநீறு - அடிப்பொடியை, அடியோம் - அவன் ஸந்நிஹிதனான உபகாரத்துக்கு அடியோமான நாம், கொண்டு - மோக்ஷத்வாரு ரூபமாக ஸ்வீகரித்து, சூடுவது - ஶிரஸாவஹிப்பது, என்றுகொல் - என்றோ? எம்மையென்று - ஆத்மநிவேஹுவசநம். அடியோமென்று - தோழிமாரையுங்கூட்டிக்கொள்ளுகிறாள்.

இ.—இரண்டாம்பாட்டில், "அதிப்ராவண்யமாகாது" என்று தன்னை நிஷேயிக்கிறதோழிமார்தங்களையே, அவன்பாதரேணுவை நாம்சூடுவது என்று? என்கிறாள்.

[என்றுகொல்தோழிமீர்காள்] - "அதிமாத்ரப்ராவண்யமாகாது" என்று நிஷேயிக்கிறவர்களோடேயே தன்பேற்றுக்கு நாள் அவயியிட்டுத்தருவார்களாகக் கேட்கிறாளிறே. அவர்கள் லோகாபவாதத்தைப்பற்றி நிஷேயிக்கிறார்கள், இவள் தன்பேறு தங்கள்பேறாக நினைத்திருக்கு மைககண்ட்யத்தாலே கேட்கிறாள். [எம்மைநீர்] - அவ்வூரில்புக்கல்லது யரிக்கமாட்டாத என்னை, எனக்கு ப்ரியமேசெய்துபோந்த நீங்கள். [நலிந்தென்செய்தீரோ] - நலிந்து என்னப்ரவ்ருத்தி பண்ணுகிறிகோள். உங்கள்ஸ்வரூபத்துக்குச்சேரச் செய்கிறிகோளோ, என்ஸ்வரூபத்துக்குச்சேரச் செய்கிறிகோளோ. [பொன்திகழ் இத்யாதி] - பொன்போலே திகழாநின்றுள்ள புன்னையென்ன, அதின்படியையுடைத்தான மகிழென்ன, அப்போதலர்ந்த செவ்விக் குருக்கத்தியென்ன, இவற்றின்மேலே யணைந்து பரிமளத்தைக்கொய்துகொண்டு தென்றலானது ஸஞ்சரியாநிற்கை. அவ்வூரில்தென்றல் அங்கே ஆகர்ஷியாநின்றது, நீங்கள் மீட்கப்பாராநின்றிகோள்; தென்றலுக்காவேனோ, உங்களுக்காவேனோ. [எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ] - அவ்வூரில் தென்றலை நலியமாட்டிகோளோ. பொன்திகழ்புன்னைமகிழென்று - சக்ஷுரிந்த்ரியத்துக்கு ஆகர்ஷகமாயிருக்கிறபடி. [தென்றல்மணங்கமழும்] - ஸ்பர்ஶேந்த்ரியத்துக்கும் க்ராணேந்த்ரியத்துக்கும். என்னுடைய ஸர்வேந்த்ரியங்களும் அங்கே அபஹ்ருதமென்கை. "ஷஉஸ்ளமாஸிகவஹடி". [திருவல்லவாழ் இத்யாதி] - கலங்காப்பெருநகரத்தைவிட்டு, நமக்குமுகங்காட்டுகைக்கு அணித்தாகவந்து நித்யவாஸம்பண்ணுகிற மஹோபகாரகன். [அடிநீறு] - திருவடித்தாமரைகளில் தாதையுதிர்த்து அத்தை ஶிரஸாவஹிப்பதென்றோ வென்றாப்போலே யிருக்கிறதாயிற்று இவர்க்கு. [அடியோங்கொண்டுசூடுவதே] - இப்போது நிஷேயிக்கிறவர்களை, அடியோமென்று - அநுஸவத்திலே கூட்டிக்கொள்ளுகிறாள். சூடுவது என்கையாலே - பூச்சூட மயிர்கழுவியிருப்பாரைப்போலே, போக்யதையைச் சொல்லுகிறது.

ஈடு.—இரண்டாம்பாட்டு. நிஷேயிக்கிற தோழிமார்கள்தங்களையே, அவன்பாதரேணுவை நான் சூடுவதென்றென்கிறாள்.

[என்றுகோல்தோழிமீர்காள்] - "அதிமாத்ரப்ராவண்யமாகாது" என்று நிஷேயிக்

---

இரண்டாம்பாட்டு.—என்றுகோல் இத்யாதி. "அடிநீறடியோங்கொண்டுசூடுவது - என்றுகொல்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - நிஷேதிக்கிற இத்யாதி.

அதிமாத்ர இத்யாதி முதல்வாக்யம் - ஶங்கையிலேயாய், மேலிரண்டுவாக்யமும் - அதுக்கு

கிறவர்களையே, தன்பேற்றுக்கு நாள் அவயியிட்டுத் தருமவர்களாகக் கேட்கிருளிறே. அவர்கள் லோகாபவாதத்தைப் பற்றி நிஷேயிக்கிருர்கள்; இவள், தன்பேறு தங்கள்பேருக நினைத் திருக்கு மைககண்டயத்தாலே கேட்கிருள். தோழிமாரிறே - இவளுடைய லாஹாலாஹமேயி றே அவர்களுக்கும் பேறிழவு. [தோழிமீர்காள்] - உங்களுக்கு நான் பெறும்நாள் ஆராய்கை யிலே யன்றே அதிகாரம். [தோழிமீர்காள்] - என்ப்ரக்ருதியை யறியும் உங்களுக்கு என்வழி யே போகவேண்டாவோ. [எம்மை] - உங்கள் கையாலும் காலாலும் துகையுண்கிறவென் னை. [நீர்நலிந்து] - என்னுடைய உஜ்ஜீவநம் எண்ணுகையன்றே உங்களுக்கு யாத்ரை. அவ் வூரிலே புக்கல்லது யரிக்கமாட்டாத என்னை. எனக்கு ப்ரியமேசெய்துபோந்த நீங்கள். [என் செய்தீரோ] - உங்கள் ப்ரக்ருதிக்கு இதுசேர்ந்தோ, என் ப்ரக்ருதிக்குச் சேர்ந்தோ. [தோழி மீர்காள் எம்மைநீர் நலிந்தென்செய்தீரோ] - உங்களுக்கு அவஶ்யம் நலியவேண்டிலுல் தென் றலையன்றே நலிய வடுப்பது. என்னை மீளவொட்டாதே காற்கட்டாநிற்க, நான் மீளும்படி யென். [பொன்திகழ் இத்யாதி] - நலிகைக்கு அவை யமையாதோ. கடிநப்ரக்ருதிகளா யிருப் பார் செய்வதை ம்ருதுப்ரக்ருதிகளாயிருக்கிற நீங்கள் செய்யவோ. [பொன்திகழ்புன்னைமகிழ்] - ‡"புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும்" என்கிறபடியே, பொன்னேடொக்க ப்ரகாஶிக்கிற புன் னை, அப்படியேயிருக்கிறமகிழ். [புதுமாதவி] - அப்போதலர்ந்த குருக்கத்தி. [மீதணவித்தென் றல்மணம்கமழும்] - இவற்றின்மேலே தென்றலானது வந்து அணைந்து பரிமளத்தைக் கொண்டு போந்து கமழாநின்றது. [மீதணவி] - "ஆழவிழியில் பூவில்வெக்கைதட்டும்" என்று மேலே ஸ்பர்ஶித்து, அங்குள்ளதெல்லாம் கொண்டுபோந்து கமழாநின்றது. "பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டః" (பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டః) என்னுமாபோலே - பூவில்கால்படாமே மேலெழுந்த

ப்ர.—(மீதணவித்தென்றல்மணங்கமழும்)—கிஷ்கிந்தாகாண்டே [க] "ஸம்பா தீரெ, "பத்மகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாந்தரவிநிஸ்ஸ்ருதः । நிஶ்வாஸ இவ ஸீதாயா வாதிவாயுர் மநோஹரः॥ எக௰॥"

---

பரிஹாரமாயிருக்கிறது. கேட்கிறளிறே என்றவநந்தரம், இதுக்குக்கருத்தேதென்னில் என்று ஶங்கை யைப் பூரித்துக்கொள்வது. மேல் - அவர்கள் நிஷேதிக்கிறதுக்கும், இவள்கேட்கிறதுக்கும் ஹேதுவை யருளிச்செய்கிருர் - அவர்கள் இத்யாதி வாக்யத்வயத்தாலே. லோகாபவாதத்தைப்பற்றி நிஷேதிக் கிருர்களென்றது - "லோகாபவாதம்கண்டுமீளுவளோ! இவ்விஷயத்திலேயுறைக்க ப்ரவணையா யிருப்பளோ!" என்று பரீக்ஷார்த்தமாக நிஷேதிக்கிருர்களென்றபடி. அவர்களுக்கு ஐககண்ட்ய முண்டோ? என்ன - தோழிமாரிறே என்று. "தோழிமாரிறே" என்றதின்விவரணம் - இவளுடைய இத்யாதி. "தோழிமீர்காள் - என்றுகொல்" என்றுகூட்டிஹாவம் - உங்களுக்கு இத்யாதி. "நலிந் தென்செய்தீரோ" என்றதுக்குஹாவம் - என்ப்ரக்ருதியை இத்யாதி. உங்கள் கையாலும் காலாலும் துகையுண்கிறவென்னையென்றது-உங்கள் ஹிதவசநத்தாலும் தென்றலாலும் பாதைப்படுகிறவென்னை யென்றபடி. கால் - காற்று. "தென்றல்" என்றத்தைக்கடாக்ஷித்து - காலாலும் என்றது. உங்கள் ப்ரக்ருதிக்கென்றது - ப்ரியபரைகளான உங்கள்ப்ரக்ருதிக்கென்றபடி. "எம்மை" என்றதுக்கு ஹாவாந் தரம் - உங்களுக்குஅவஶ்யம் இத்யாதி. ப்ரவர்த்திக்கிற உன்னைநலியாமல், தென்றலைநலிவானென்? என்ன - என்னைமீள இத்யாதி. காற்கட்டாநிற்கவென்றது - சாடு; காற்று பாதியாநிற்கவென்றபடி. பந்தகமாகாநிற்கவென்று சாடு. அவையென்றது - புன்னைமகிழ்மாதவிகளை. அவற்றுக்கொழிய எங் களுக்கு நலியலாகாதோ? என்ன - கடிந இத்யாதி. கடிநப்ரக்ருதிகளென்றது - மரங்களாகையாலே. புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும் - புன்னையானது பொன்னையொத்த தாதுகளை யுதிராநிற்கு மிதி ஶப்தார்த்தः. திருமொழி. கமழாநின்றது - வ்யாபியாநின்றது. கமழுகை - பரம்புகையும், பரியளிக் கையும், வ்யாபிக்கையும். வெக்கைதட்டாமல் மேலே ஸ்பர்ஶித்ததுக்குப்ரமாணம் - பத்மகேஸர

---

‡ திருமொழி—ரு, க, கூ.

பரிமளத்தைக்கொண்டு போருகை. அத்தலையிலுள்ளதடங்கக் கொண்டு, தந்தாமதோன்றும் கோடாதேபோருகை அங்நிலத்திலுள்ள பதார்த்தங்களுக்கெல்லாம் ஸ்வஹாவங்கிடீர்.[பொன் திகழ் புன்னைமகிழ் புதுமாதவிமீதணவித் தென்றல்மணங்கமழும்] - கலம்பகனல்லது சூடப் பொருத ஸுகுமாரரைப்போலேகாணும் தென்றலின்ஸ்வஹாவம். சேருக்கராயிருக்கும் ராஜ புத்ரர்கள் முலைசரிந்தாரை "ஹோகயோக்யைகளன்று" என்று கழிக்குமாபோலே, கழிய அலர்ந்தவற்றைக் கடாக்ஷியாதே போருகிறபடி. பூவில் பரிமளம் தேடுவோரைப்போலேகா ணும் இது பரிமளத்தில் கலம்பகன் தேடுகிறபடி. [தென்றல்மணங்கமழும்] - கண்ணுக்குத் தோற்ற நின்று நலியாமையாலேகாணும் "நோவில்லை" என்றிருக்கிறது.இவர்களுக்கு லாஹா லாஹம் ஒத்திருக்கச்செய்தேயும், ஹிதவுத்திவர்த்திக்கையாலே இவை நெஞ்சிற்படாதிறே. "நீங்கள்தாங்களன்வயத்தில் கூடாவிட்டால் வ்யதிரேகத்திலும் கூடலாகாதோ" என்று கா ணும் இவள்நினைத்திருக்கிறது. இவர்களுக்குப் பேறிழவு ஒத்திருந்தாலும், இவர்கள்இவள்தா ருகமாட்டார்களே, இவளுக்கேவருமவையிறே இவையெல்லாம். [பொன்திகழ்புன்னைமகி ழென்று]-சக்ஷுரிந்த்ரியத்துக்கு ஆகர்ஷகமாயிருக்கிறபடி. [தென்றல்மணங்கமழும்] - ஸ்பர் ஶேந்த்ரியத்துக்கும் க்ராணேந்த்ரியத்துக்கும். [திருவல்லவாழ்நகருள்நின்றபிரான்] - அவ னத்தனைவிடுவதும் செய்திலன். நான் நோவுபடாநிற்க, இவ்வளவிலே ஸ்ரீவைகுண்டத்திலே யிருக்கை யன்றிக்கே, திருவல்லவாழிலே புகுந்து கிட்டவிருக்கு மிதுக்குமேற்பட உபகார முண்டோ. "வஹ்வேதக்ஷ" (பஹ்வேதத்) என்னுமாபோலேகாணும் இவ்வளவில் ஆஶ்வா ஸம். *"ஏகாம்தரணிமாஶ்ரிதேள" (ஏகாம்தரணிமாஶ்ரிதேள)இறே. *"வாஹிவாத"

---

ப்ர:—(திருவல்லவாழ்நகருள்நின்றபிரான்)— யுத்தகாண்டே [ரு] "வஹ்வேதத்தாஶ்சர்யாநவஸ்யாமிஸக்யஸௌதநஜீவிதஞ்ச । யதஹம்ஸாவவாசோராஉபௌ ஏகாம்தரணிமாஶ்ரிதௌ॥௧௦॥"

---

இத்யாதி. "வஹகேஸரஸம்ஸ்ருஷ்டோ வ்ருக்ஷாகுரவிநிஸ்ஸ்ருத: । நிஸ்ஸ்வஸஉவஸீதாயா வாதிவாயுர்ஜநோஹர:" இதி கிஷ்கிந்தாகாண்டே. கேஸரங்களிலே மேலே ஸ்பர்ஶித்து வந்தாப்போலே, இத்தென்றலும் மீதணவிவந்ததென்றபடி. "ஸம்ஸ்ருஷ்ட:" என்றதுக்கு அர்த் தம் - மேலெழுந்தபரிமளத்தை என்று. "மணங்கமழும்" என்றதுக்குஹாவம் - அந்தலையில் இத் யாதி. பலவ்ருக்ஷங்களைச் சொன்னதுக்கு ஹாவம் - கலம்பகன் இத்யாதி. கலம்பகன் - நாநாபுஷ்பங் களால் தொடுத்தது. "புது" என்றதுக்கு ஹாவம் - சேருக்காய் இத்யாதி. "புன்னை" இத்யாதியின் "மணங்கமழும்" என்றதுக்குஹாவம் - பூவில் இத்யாதி. பரிமளத்தில் கலம்பகன் - நாநாபரிமள ஸமுதாயம். எங்களுக்கு நலியக்காண்கிறே மில்லையீயென்ன - கண்ணுக்கு இத்யாதி. கண்ணுக்குத் தோற்றுவிடிலும், க்ராணேந்த்ரியத்துக்கு விஷயமாய் பாதகமாகாதோ ? என்ன - இவர்களுக்கு இத் யாதி. ஹிதபுத்திவர்த்திக்கையாலே தென்றலால் வந்தபாதை நெஞ்சிற்படாதே யிருக்கிறவர்கள் தனக் குக் கூட்டாவர்களோவென்ன - நீங்கள் இத்யாதி. தென்றல் பாதகமாகைக்கு ஹேத்வந்தரம்-இவர் களுக்குப்பேறு இத்யாதிவாக்யத்வயம். அதாவது - ஸம்ஶ்லேஷவிஶ்லேஷப்ரயுக்த ஸுகதுஃகப்ரா ப்தாங்யம் இவளுக்கேயாய், இவளையிட்டு வருமவையிறே தோழிமார்க்கென்றபடி. இவையெல்லாமென் றது - ஸுகதுஃகங்களை. விஶ்லேஷித்திருக்கிறவனை - "பிரான்" என்கிறதென் ? என்ன; தானிருந்த பூமியிலே அவனிருக்கையால் வந்த ஆஶ்வாஸங்கொண்டென்கிறுர் - அவனத்தனை இத்யாதி வாக்யத் வயத்தாலே. ஸம்ஶ்லேஷமின்றிக்கேயிருக்க, இம்மாத்ரத்தையுபகாரமாகக் கொள்ளலாமோவென்ன; பெருமாள் பிராட்டியைப் பிரிந்திருக்கச்செய்தேயும் தாமிருந்தபூமியிலே அவளிருக்கை யடியாக ஆஶ் வஸித்தாப்போலேயென்கிறுர் - வஹ்வேதக்ஷ இத்யாதி. "வஹ்வேதத்தாஶ்சர்யாநவஸ்யாமிஸக்யஸௌ

(வாஹிவாத) என்று - இவர் கையாலே தோடவேண்டாதபடி இடைச்சுவரான கடல் கிடந்ததேயாகிலும், ஒருபடுக்கையிலே யிருப்பாரைப்போலே அவளிருந்த பூமியிலே யிருக்கப்பெற்றேமே என்றாரிறே பெருமாள். காலைப்பிடித்து“நீ இப்படி செய்யவேணும்” என்று வேண்டிக்கொள்ளுகிறாரிறே இவருடைய செல்லாமை. [நின்றபிரானடிநீறடியோங்கொண்டுசூடுவது-என்றுகோல்] - பூவில்சுண்ணம் பெறுவதென்றோ. [அடிநீறடியோங்கொண்டுசூடுவது - என்றுகோலோ] - மயிர்கழுவிப் பூச்சூடவிருப்பாரைப்போலேகாணும். [அடியோம்] - இப்போது பிரியநின்றார்களேயாகிலும் அந்வயத்தில் அநுபவம் இவர்களுக்குமொத்திருக்கிறபடி. அவன்வந்தாலும் இவளுக்குமுன்னே கொண்டாடுவது இவர்களையிறே. [அடியோங்கொண்டுசூடுவது]-“யாவச்சரணாவித்யாதி” (யாவந்நசரணாவித்யாதி)- ஸ்ரீபரதாழ்வானை, “பிள்ளாய், உன்னுள்வெதுப்பு ஆறுவதெப்போது” என்ன; பெருமாளும் தமக்குவகுத்த முடிசூடி, நானும் எனக்குவகுத்த முடிசூடி, இருவரும் முறைதப்பாதே கூடிருக்கநின்றவன்றென்றான். † (அவன் அவரிற்காட்டில் காற்கூறுவிஞ்சப்பெற்றான். “அவர் நாட்டுக்குமுடி சூடுகைக்கு லக்ஷணம் அவர்திருவடிகளிலே, எனக்கு ஶேஷத்வத்துக்கு லக்ஷணம் என் தலையிலே” என்றான். அவருக்கு அடியிலே வகுத்துக்கிடக்கிறதிறே, இவனைப்போலே தலையோட்டில்போறியன்றே. “மாலடிமுடிமேல் கோலமாம் குலசேகரன்” என்றாரிறே - எனக்கு முடி யிவையல்ல; மாலடி - ஸர்வேஶ்வரன்திருவடி, எனக்குவகுத்த முடி.) “கோலமாமென்சென்னிக்கு உன்கமலமன்னகுரைகழல்” என்றிருக்குமவரிறே. (உ)

---

ப்ர:—ஸுந்தரகாண்டே [ரு] “வாஹிவாதயத:காந்தா தாம்ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ । த்வயி மே காத்ரஸம்ஸ்பர்ஶஶ்சந்த்ரே த்ருஷ்டிஸமாகம: ॥ கூ ॥”

(அடியோங்கொண்டுசூடுவதே)—அயோத்யாகாண்டே [கூஅ] சித்ரகூடே ப்ரதிஸந்தேஶஹ:, “யாவச்சரணௌ ப்ராது: பார்த்திவவ்யஞ்ஜநாந்விதௌ । ஶிரஸா தாரயிஷ்யாமி ந மே ஶாந்திர்பவிஷ்யதி ॥ அ ॥”

சேதநஜீவிதம் । யத்தம் ஸாவரோதாந் சேதநாம் ஶ்ரீதான்”, “வாஹிவாதயத:காந்தா தாம்ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ । த்வயி மே காத்ரஸம்ஸ்பர்ஶஶ்சந்த்ரே த்ருஷ்டிஸமாகம:” இதி யாசநம். அஹம், ஸாவரோதஸ்ய சேதநாம் ஶ்ரீதாவிதியஞ்; சேதஞ், காயாந்யஸ்வேதஜம் சேதநஜீவிதம்ஸம்ப்ருதித்யர்த்த:. “சேதஜம்” என்றதேதென்ன - சேதநாம் இத்யாதி. இதுக்கர்த்தம்-வாஹி இத்யாதி. “வாஹிவாத” என்கிறதுக்கு ரஸோக்தி - காலைப்பிடித்து இத்யாதி. காலை - காற்றையென்று ஸ்வபாவார்த்தம். இவ்வாக்யத்துக்குபாவம் - இரக்கும்போதும் சேதநனையிரவாதே அசேதநத்தையிரக்கிறது தன்னுற்றாமையின் அதிஶயமிறேயென்று. “அடிநீறு” என்றதுக்குபாவம்-பூவிற்சுண்ணம் இத்யாதி. “அடிநீறடியோங்கொண்டுசூடுவது - என்றுகொல்” என்றந்வயம். “சூடுவது” என்றதுக்குபாவம் - மயிர்கழுவி இத்யாதி. நிஷேதிக்கிறவர்களையுங்கூட்டிக்கொண்டு - “அடியோம்” என்கிறதென்? என்ன - இப்போது இத்யாதி. தோழிமார்க்கு அநுபவமுண்டோ? என்ன - அவன்வந்தாலும் இத்யாதி. இப்படி ப்ரார்த்திக்கப்பேருண்டோ? என்ன - யாவச்சரணௌ இத்யாதி. இவர்தாம் இப்படியிருப்பரோ? என்ன - கோலமாம் இத்யாதி. தோழிமீர்காள் என்றுதொடங்கி, சூடுவது - என்றுகொலோ என்று அந்வயம். அடியும் நுனியும் கூடியிருக்கிறதுக்கு - “விற்பூட்டு” என்று தமிழர்சொல்லுவர்கள். (உ)

---

† குண்டவிக்ராந்தம் ச்லாகிதம்,

## மூன்றும் பாட்டு.

சூடுமலர்க்குழலீர் ! துயராட்டியேனைமெலியப்
பாடுநல்வேதவொலி பரவைத்திரைபோல்முழங்க
மாடுயர்ந்தோமப்புகைகமழும் தண்திருவல்லவாழ்
நீடுறைகின்றபிரான்கழல் காண்டுங்கொல்நிச்சலுமே?

ஆ.—(சூடுமலர்.) "நாங்கள்நோவுபடில் இவள்மிகவும்நோவுபடும்" என்று தரிப்புத்தோற்ற ஒப்பித்திருக்கிற உங்கள்ஸந்நிதியும் என்னை நலியாநின்றது. பண்டே துக்கப்படுகிற நான் மெலியும்படி பாடாநின்றுள்ள ஸாமவேதத்வநி கடலில் திரைபோலே முழங்க, பார்ஶ்வங்களில் யாகங்களிலே உயரவெழாநின்றுள்ள ஹோமதூமம் நாறுவதும் செய்ய நிரதிஶயபோக்யமான திருவல்லவாழிலே, எத்தனையேனும் பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம்படி நித்யமாக வர்த்திக்கிற மஹோபகாரகனுடைய திருவடிகளை யென்று காணவல்லேன்.

ஒ.—மூன்றும்பாட்டில், தோழிமாரைக்குறித்து, 'திருவல்லவாழிலே நின்றருளின எம்பெருமானுடைய திருவடிகளை என்றுகாணவல்லோமோ ?' என்கிறாள்.

[சூடுமலர்க்குழலீர்] - தாங்கள்நோவுபட்டுக்காட்டில் பிராட்டி மிகவும் நோவு படுமென்று தங்கள்தரிப்புத்தோற்ற ஒப்பித்திருக்கிறவர்களைக்கண்டு உங்களைப்போலே தரித்திருக்கவல்லேனோ என்கிறாள். 'எம்பெருமான் சாத்தினபடியேதந்தருளின மலர்களைக் குழல்களிலே சூடியிருக்கிற உங்கள் ஸந்நிதியும் என்னை நலியாநின்றது' என்றும் சொல்லுவர். [துயராட்டியேனை என்றுதொடங்கி] - பண்டேதுக்கப்படுகிறநான் மெலியும்படி பாடாநின்றுள்ள ஸாமவேதத்வநி கடலில்திரைமுழங்குமாபோலே முழங்க, பார்ஶ்வங்களில் யாகங்களிலுண்டாய் உயர எழாநின்றுள்ள ஹோமதூமம் நாறுவதும் செய்து நிரதிஶயபோக்யமான திருவல்லவாழிலே எத்தனையேனும்பிற்பட்டார்க்கும் அநுபவிக்கலாம்படி காலமுள்ளதனையும் வர்த்திக்கிற மஹோபகாரகனுடைய திருவடிகளை.

ப.—அநந்தரம், வேதகோஷமும் வைதிக க்ரியாதூமமும் மாறாத திருவல்லவாழிலே நித்யவாஸம்பண்ணுகிற நிரந்தரோபகாரத்தைப் பண்ணுமவன் திருவடிகளை நித்யாநுபவம் பண்ணக்கூடுமோ வென்கிறாள்.

சூடு - சூடப்பட்ட, மலர் - மலரையுடைத்தான, குழலீர் - மயிர்முடியை யுடையீரானவர்களே! துயராட்டியேனை - விஶ்லேஷதுக்கிதையானவென்னை, மெலிய - மெலியும்படியாக, பாடு - பாடப்படுவதாய், நல் - ("ஸாமவேதத்வநி" என்று அங்குவர்த்திக்கிற ஸர்வேஶ்வரனுக்குத் திருமேனியோபாதியாம்படி) நன்மையையுடைய, வேதவொலி - ஸாமவேதத்வநியானது, பரவை - ஸமுத்ரத்தினுடைய, திரைபோல் - திரைக்கிளப்பம்போலே, முழங்க - முழங்காநிற்க, மாடு - பரிஸரங்களிலே, உயர்ந்து - யாகங்களிலே கிளம்பி, ஓமப்புகை - ஹோமதூமமானது, கமழும் - ஹவிர்க்கந்தத்தைப்பரப்புவதாய், தண் - ப்ரமஹரமான, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, நீடுறைகின்ற - நிரந்தரவாஸம்பண்ணுகிற, பிரான் - மஹோபகாரகன், கழல் - திருவடிகளை, நிச்சலும் காண்டுங்கொல் - நித்யாநுபவம்பண்ணக்கூடுமோ ?

இ.—மூன்ரும்பாட்டில், தோழிமாரைப்பார்த்து, நாம் அவனை நித்யாநுபவம் பண்ணப்பெறுவதென்றோ வென்கிறுள்.

[சூடுமலர்க்குழலீர்] - "நீங்கள் மயிர்முடியும் மாலையுமாயிருக்கக் காணவல்லேனே" என்று பிள்ளான். தாங்கள் நோவுபட்டுக்காட்டில் இவள் மிகவும்நோவுபடுமென்று தரிப்புத்தோற்றவிருக்கிறபடி யென்கை. முன்பு அவன்விரும்பினபோது சூடினபடியே கழித்துக்கொடுப்பது அவர்களுக்காயிற்று, அது ஸ்மாரகமாய் நலியாநின்றதென்கிறுளென்றுமாம். [பாடுநல்வேதவொலி] - ஈஸ்வரனைப்பாடுகிற பழம்புணர்ப்பான வேதமென்னுதல், கானத்தையுடைத்தான ஸாமவேதமென்னுதல். [நல்வேதம்] - "உளன்சுடர்மிகு சுருதியுள்" என்று ப்ரமாணாந்தரங்களில் உத்கர்ஷமாதல், 'வேதாநாம் ஸாமவேதோஸ்மி' என்னும் உத்கர்ஷமாதல். [துயராட்டியேனைமெலியப்பாடுநல்வேதவொலி] - பண்டே க்லேஶப்படுகிற என்னை மெலியும்படி பாடாநின்றுள்ள ஸாமவேதத்வநி, கடலில்திரைபோல்முழங்க. அவ்வூரில்ப்ராஹ்மணர் ஸ்த்ரீபாலாதிகளோ! அதீதவேதரானவர்கள் இப்போது பாராயணம்பண்ணுகிறது தன்னைநலிகைக்கென்றிருக்கிறுள். [மாடுயர்ந்து இத்யாதி]-பார்ஶ்வங்களிலே உயரஎழாநின்றுள்ள ஹோமதூமங்கள் கமழாநின்றது. வேதபாராயணம்பண்ணுவாரும்,வேத்யாநுஷ்ட்டாதாக்களுமாயிருக்கும்.[நீடுறைகின்றபிரான்]- அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே, பிற்பாடர்க்கும் உதவும்படி, ஶ்ரமஹரமான திருவல்லவாழிலே நித்யவாஸம்பண்ணுகிற மஹோபகாரகன். அவன் நித்யவாஸம் பண்ணாநின்றபின்பு நாமும் நித்யாநுபவம்பண்ணப்பெறவல்லோமோ.

ஈடு.—மூன்ரும்பாட்டு. தோழிமாரைப்பார்த்து, நான் அவனை நித்யாநுபவம் பண்ணப்பெறும் நாள் என்று ? என்கிறுள்.

[சூடுமலர்க்குழலீர்] - "உங்களைச் சூடுமலர்க்குழலாராக நான் காண்பதென்றோ" என்று பிள்ளான். அதாவது - இவள்பூவுக்கிருய்க்க, அவர்கள் பூச்சூடியிரார்களிறே என்றுயிற்று அபிப்ராயம். அங்ஙனன்றிக்கே,அவன்தான் வந்து இவள்பக்கல் பாவபந்தமுறைக்கவுறைக்கக் கோண்டாடுவது இவர்களை யாகையாலே, பெரியதிருநாள்ஸேவித்தார் இரட்டைகள் அழுக்கானாலும் மடிகுலையாமை வைக்குமாபோலே, இவர்களும் அவன்கோடுத்த மாலையிற் செவ்வி யழிந்ததேயாகிலும் மாருதே வைத்துக்கோண்டிருப்பர்களிறே; அது இவளுக்கு ஸ்மாரகமாய் நலியாநின்றது. தேன்றலுக்குப் பிழைக்கிலும் இவர்களுடைய தர்ஶநத்துக்குப் பிழைக்கப்போகிறதில்லை. காலொருகையும் மயிரொரு கையுமாகப் பிடித்து நலிகிறதுகாணும். அவன்தான் வந்தாலும் இவளுக்கு முன்னே விரும்புவதுஇவள்ஸம்பந்தமுடையவர்களையிறே.'தத்ரகாஷாயிண:'(தத்ரகாஷாயிண:)-தந்தாமைப்பேணுமவர்களல்லாமை

---

மூன்ரும்பாட்டு.—சூடு இத்யாதி. "நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல் நிச்சலும்" என்றத்தைப்பற்ற அவதாரிகை - தோழிமாரை இத்யாதி.

சூடுமலர்க்குழலாரானமை வர்த்தமானமாக ஶப்தமிருக்க, பவிஷ்யத்தாக நிர்வஹிப்பானென் ? என்ன - அதாவது இத்யாதி. வர்த்தமானமாக அர்த்தாந்தரம் - அங்ஙனன்றிக்கே இத்யாதி. "மலர்க்குழலீர்" என்று நிரூபகமாகச்சொன்னதுக்கு பாவம் - தேன்றலுக்கு இத்யாதி. சாடுவுக்கு, காலென்றது - கீழிற்பாட்டிற்சொன்ன தென்றலை. மேலொருஸம்வாதம் காட்டுவாராக உக்தத்தையநுவதிக்கிறர் - அவன்தான்வந்தாலும் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - தத்ர இத்யாதி. "தத்ர காஷாயிணோ வ்ருத்தா வேத்ரபாணீஸ்வலங்க்ருதா: । ஊஸர்ப்பணம் ஜநஸ்யாஸ்ய...

யாலே அழுக்குச்சட்டையும் தாங்களுமாயிறே யிருப்பது. "வ்ருத்தாந்" (வ்ருத்தாந்)-தொண்ணூற்றஞ்சுவயஸ்ஸுக்குமேலாய் வீதராகராயிருப்பாரையிறே அந்தஃபுரங்களுக்குவைப்பது. "வேத்ரபாணீந்"(வேத்ரபாணீந்)-பெருமாள் விற்பிடித்தாப்போலே அவர்கள் பிரம்பு பிடித்தபடி. விற்பிடித்து ரக்ஷகரா யிருப்பாரும் பிரம்புபிடித்து ரக்ஷகராயிருப்பாருங்காணும். "ஸ்வலங்க்ருதாந்" (ஸ்வலங்க்ருதாந்.) - பேணுத பரிவட்டங்களையுடையராய் வ்ருத்தருமாயிருந்தார்களாகில் இவர்களுக்கு அலங்காரமாவதேன்? என்னில்;—பெருமாள் சக்ரவர்த்தி மாளிகையிலே போய்த் திருமஞ்சனம்பண்ணி யமுதுசெய்து மீண்டு திவ்யாந்தஃபுரத்திலே எழுந்தருளும்போது, சக்ரவர்த்தியோபாதி, பழையராகையாலும் தங்கள் பரிவாலுமாக இவரை மடியிலே வைத்தணைத்து உச்சியை மோந்துவிடுவர்கள்; அத்தாலே குங்குமக்குழம்பும் கோயிற்சாந்துமாயிருப்பர்கள். பெருமாளுடையவும் பிராட்டியுடையவும் ஒப்பனைபோலன்று இவர்களொப்பனை. அப்படியே இவர்களும் [சூடுமலர்க்குழலீர்] என்னும்படியாயிருக்கிறபடி. [துயராட்டியேனைமெலியப் பாடுநல்வேதவொலி] - எனக்குத் துயரைவிளைக்கைக் கித்தனைபோக்கி, ப்ராஹ்மணர் வேண்டிச் செய்கிறுர்களன்றே. ப்ராஹ்மணராகில் தார்மிகராயிருக்கவேண்டாவோ, ஸ்த்ரீவதம்பண்ணலாமோ. [துயராட்டியேனை] - நலிவார்க்கு ஆஶ்ரயம் வேண்டாவோ. நலிகைக்குத் தென்றலே யமையாதோ. திருவடி மத்ய ராத்ரத்திலே சென்று பிராட்டியைக்கண்டு சிலவார்த்தை விண்ணப்பம்செய்ய, அவள் இவனை "இன்னுன்" என்று அறுதியிடமாட்டாதே; "முன்பு ஸந்யாஸிவேஷங்கொண்டு அவர் பக்கல்நின்றும் பிரித்தாய், இப்போது வாநரவேஷங்கொண்டு சிலவார்த்தைகளைச்சொல்லி நலியாநின்றுய், இவையெல்லாம் உனக்காகாதுகாண்", "ஸந்தாபம்தந்நஶோபநம்" (ஸந்தாபம்தந்நஶோபநம்) - வாராய், நீயும் உன்னையுகந்தாரைப் பிரிந்து நோவுபடுவதிகிடாய். [மெலியப்பாடும்] - கர்த்தவ்யமானுலும் சிலர்க்கு நலிவானல் தவிரவேண்டாவோ. எல்லா

---

க்ஷாநுஸார்ஸரோஹிதாந்॥ந॥" இதி யோத்யாகாண்டே (கஅ). இந்தஶ்லோகத்தில், "ஸ்வலங்க்ருதாந்" என்றபதம் இங்குவேண்டுவது. இப்படியிருக்கிறதெதுக்கென்ன - விற்பிடித்து இத்யாதி. தந்திருமாளிகையிருக்க, சக்ரவர்த்திமாளிகையிலே - அமுதுசெய்து என்கிறதுக்கு நியாமகமேதென்ன; "ஆடியமுதுசெய்யப்பனுமுண்டிலன்" இத்யாதியுண்டென்று கண்டுகொள்வது. "ஸா" என்றதுக்கு அர்த்தம் - பெருமாளுடைய இத்யாதி. "மெலியப்பாடும்" என்றதுக்குஹாவம் - எனக்கு இத்யாதி. "மெலியப்பாடும்" என றதக்கு ஹார்த்தபாவம் - ப்ராஹ்மணராகில் இத்யாதி வாக்யத்வயமும். "துயராட்டியேனை" என்றதுக்குஹாவம் - நலிவார்க்கு இத்யாதிவாக்யத்வயமும். துயர் - துஃகம். இரண்டாலும் நலிவிலிடுமதுக்குத்ருஷ்டாந்தம் - திருவடி இத்யாதி. "ஸந்தாபம் தந்நஶோபநம்" என்றதுக்கு அர்த்தம் - வாராய் இத்யாதி. "ஸ்வம்பரித்யஜ்ய பர்வம்யஃபரிவ்ராஜகரூபவாந் । ஜநஸ்தாநேயோத்ருஷ்டஸ்ஸம்ஸஹவாஸிராவண:॥கரு½॥ உபவாஸக்ருஶாம்தீநாம்காரரூபநிஶாசர । ஸந்தாபயஸிமாம்பூயஸ்ஸந்தாபம்தந்நஶோபநம்॥கசு½॥" இதி ஸுந்தரகாண்டே (நஅ) ராவணபுத்த்யா ஹநுமந்தம்ப்ரதி ஸீதா. "ஸ்வாமிநோபவாதவ்ய:" என்று விதிக்கையாலே கர்த்தவ்யமானத்தைத் தவிரப்போமோ? என்ன - கர்த்தவ்யமானுலும் இத்யாதி. பிராட்டியானவவஸ்த்தையிலும் வேதத்தை ப்ரஸங்கிக்கிற ஸூக்தியை யநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு - எல்லாவளவிலும் இத்யாதி. எல்லாவளவிலுமென்றது - தாமானதன்மையோடு பிராட்டியானதன்மையோடு வாசியற ஸர்வாவஸ்த்தையிலுமென்றபடி. "எல்லாவளவிலும்" என்கைக்கு, தாமானதன்மையிலே வேதத்தைப்ரஸங்

வளவிலும் இவர்க்கு வேதத்திற்கிடக்கிற ப்ராவண்யம் பாரீர், முதல்வார்த்தைதான் * உளன் சுடர்மிகுசுருதியுளிறே. அதாவது - "ஸர்வே வேதா யத்பதமாமநந்தி" (ஸர்வேவேதாயத் பதமாமநந்தி) "ஸர்வே வேதா யத்ரைகம்பவந்தி" (ஸர்வேவேதாயத்ரைகம்பவந்தி) "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்றிறே ப்ரமாணங்கள். [மேலியப்பாடும்] - அவர்களேல்லாம் சமைந்தாலல்லது ஶ்ருகுலாந்நிவ்ருத்தராகார்களிறே ; இவள்தனக்கு, வேதகோஷத்தைக்கேட்டவாறே, நாயகன் பேர்வைத்துப் புணர்த்தபுணர்ப்புகேட்டாற்போலேகாணும் அஸஹ்யமாயிருக்கிறபடி. இருவருங் கூடவிருந்து கேட்கக்கடவதைத் தனியிருந்து கேட்கப்புக்கால் பொறுக்கவொண்ணுதிறே. அவன்பேர்வைத்துப் புணர்த்தாலும், "ஸீதாயாஶ்சரிதம்மஹத்" (ஸீதாயாஶ்சரிதம்மஹத்) என்றிறே புணர்ப்புத்தானிருப்பது. இனித்தான், "ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ" (ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ), "ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்" (ஈஶ்வரீம்ஸர்வபூதாநாம்), "அஸ்யேஶாநா ஜகதோ விஷ்ணுபத்நீ" (அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ)என்று இவையிறே அவன் விரும்பிக்கேட்பது. [பாடுநல்வேதவொலி]-ஈஶ்வரனைப்பாடுகிற பழம்புணர்ப்பான வேத மென்னுதல், கானத்தையுடைத்தான ஸாமவேத மென்னுதல். [நல்வேதம்] - "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்று, ப்ரமாணாந்தரங்களில் உத்கர்ஷமாதல்; "வேதாநாம் ஸாமவேதோஸ்மி" (வேதாநாம்ஸாமவேதோஸ்மி) என்கிற

---

ப்ர:—கடவல்லியாம் [க-உ] ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாம்ஸி ஸர்வாணி ச யத்வதந்தி। யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத்॥

ஹரிவம்ஶே [ஔ-ந-வம்-உக] "சக்ஷுர்விஷ்ணுஸ்ஸர்வஜநாநாம் । ஸங்க்ஷேபாயாவிவார: । ஶ்ருதம் ஶாஸ்த்ராணி யமேகம் ஸம்பவந்தி । ஸர்வே வேதா யமேகம் ஸம்பவந்தி । ஸர்வே ஹோதாரோ யமேகம் ஸம்பவந்தி । ஸாந்தஸீநஶ்ச ஜநாநாம் । சக்ஷுர்விஷ்ணுஸ்ஸர்வஜநாநாம் ஸர்வபூத:॥"

ஸ்ரீகீதாஸு பஞ்சதஶே, "ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ மத்த: ஸ்ம்ருதிர்ஜ்ஞாநமபோஹநஞ்ச । வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ வேதாந்தக்ருத்வேதவிதேவ சாஹம்॥ 15॥"

உத்தரநாராயணே, "ஹ்ரீஶ்சதே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ அஹோராத்ரே பார்ஶ்வே நக்ஷத்ராணி ரூபம்॥"

---

கித்தவிடமுண்டோ? என்ன - முதல்வார்த்தை இத்யாதி. உத்தராஹாகமன்றோ இவனைச்சொல்லுவது, மற்றுள்ளவிடமெல்லாம் இவனைச்சொல்லாதேயென்ன - அதாவது இத்யாதி. யத்பதமென்றது - யாதொருத்தனுடைய ஸ்வரூபமென்றபடி. பத்யதஇதிபதம் - ஸ்வரூபமித்யர்த்த:. "ஸர்வே வேதா:" இத்யாதி கடவல்லியாம். "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" இத்யாதி, ஸ்ரீகீதாயாம். "பாடும்" என்கிற வர்த்தமாநத்துக்கு அர்த்தம் - அவர்களேல்லாம் இத்யாதி. இவளுக்கு வேதம் பாதகமாகிறதேப்படியென்ன - இவள்தனக்கு இத்யாதி நாயகன் புணர்ப்புகேட்டால் நல்லதன்றோ, பாதகமாமோ?என்ன - இருவரும் இத்யாதி. ஈஶ்வரனுக்குத் தன் புணர்ப்பு கேட்கலாமோ? என்ன - அவன்பேர் இத்யாதி. ஆனல் இருவர்புணர்ப்பும் ஸமமாகக்கேட்குமோ? என்ன - இனித்தான் இத்யாதி. புணர்ப்பு - ப்ரபந்தம். ஸ்வரத்தோடேகூடப் பாடாநின்றுள்ள ஸாமவேதத்தி

உத்கர்ஷமாதல். ஸ்வரத்திலே வைகல்யமுண்டாதல், **"வேதாநாம் ஸாமவேதோஸ்மி"** (வேதாநாம்ஸாமவேதோஸ்மி) என்கிறபடியே அந்தரங்கமான வேதமன்றிக்கே யோழிதல் தான் செய்ததாகில்,நான் ஆறியிருக்கலாயிற்றே. [வேதவொலி பரவைத்திரைபோல் முழங்க]- ஓதங்கிளர்ந்த கடல்போலேகாணும் ஸாமத்வநி யிருக்கிறபடி. [முழங்க] - அதில் பர்வமோழிந்தநாள்களும் பகலு மாறியிருக்கலாமிறே. [மாடுயர்ந்தோமப்புகைகமழும்] - ஓத்துச்சோல்லிச் சோல்லாதவிடமெல்லாம் வைதிகக்ரியைகளேயாய்க்கிடக்குமித்தனை. மாடு - பர்யந்தம். [உயர்ந்தோமப்புகைகமழும்]-ஆகாசமடங்கலும்இடமடைத்து,வைமாநிகரை முகம்பார்த்து அநுபவிக்கவோட்டாதபடியெழாநின்றது.[மாடுயர்ந்தோமப்புகைகமழும்]-**"கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:"** (கர்மணைவஹிஸம்ஸித்திமாஸ்த்திதாஜநகாதய:) என்கிறபடியே,ஜ்ஞாநத்தில் தலைநின்றவர்களிறே; இனிஃபலாபிஸந்திபண்ணி யநுஷ்டித்து ஃபலவ்யாப்தமானவாறே மீளுமவர்களன்றே.[கமழும்]-ஹோமதூமமும், ஹவிஸ்ஸுக் கோள்ளவந்துநிற்கிற எம்பெருமானுடைய மாளிகைச்சாந்துமாகக் கமழுகிறபடி. [திருவல்லவாழ்நீடுறைகின்றபிரான்] - அவதாரம்போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே பிற்பாடர்க்கு உதவும்படி ஶ்ரமஹரமான திருவல்லவாழிலே நித்யவாஸம்பண்ணுகிற உபகாரகன். [கழல்காண்டுங்கோல்நிச்சலுமே] - அவன் இங்கே நித்யவாஸம்பண்ணாநின்றால், நாமும் நித்யவாஸம் பண்ணும் தேசத்தில்போய்ப் பேறக்கடவபேற்றைப் பேறவல்லோமே. அங்கும்போனால் **ஸதாபஶ்யந்தி**யிறே. (௩)

---

*னுடைய வேோஷமென்று ஶப்தார்த்தம். "பாடும்" என்கையாலே - ஸ்வரவைகல்யமில்லையென்றபடி. நல்வேதம் - ஸாமவேதம். இதுக்கு ஹார்த்தபாவம் -* **ஸ்வரத்திலே** *இத்யாதி. 'திரையோடேகூடின - பரவையொலிபோலே - பாடுநல்வேதவொலி - முழங்க" என்றந்வயித்துஅர்த்தம் -* **ஓதம்கிளர்ந்த** *இத்யாதி. ஸமுத்ரகோஷத்துக்கு காலவிச்சேதமுண்டு, இதுக்கதுதானு மில்லையென்கிறார் -* **அதில்** *இத்யாதி. இது - "முழங்கும்" என்கிற வர்த்தமாநத்துக்கு அர்த்தம்.* **அதில்** *- ஸமுத்ர கோஷத்திலென்றபடி.* **ஆனால்,** *அநத்யயநங்களிலே ஓதலாமோ? என்னில; - தர்ஶபூர்ணமாஸங்களிலும் யஜ்ஞக்ரியாகோஷமானவை சோல்லலாமென்றபடி. "மாடு" என்றதுக்கு அர்த்தம் -* **ஓத்துச்சோல்லி** *இத்யாதி. ஃபலம் ஸித்தமானால் கர்மாநுஷ்டாநாந்நிவ்ருத்தராகார்களோ, "கமழும்" என்று - வர்த்தமாநமாகச் சோல்லுவானென்? என்ன; - ஜ்ஞாநாதிகராகையாலே ஃபலாபிஸந்தி யில்லையென்கிறார் -* **கர்மணைவஹி** இத்யாதி வாக்யத்வயத்தாலே. ஶப்தார்த்தம்-**ஹோமதூமமும்** இத்யாதி.எம்பெருமானுடைய மாளிகைச்சாந்தென்றது - ஹார்த்தபாவம். "நிச்சலும் - கழல்காண்டுங்கோல்" என்றதுக்கு பாவம் - **அவன்இங்கே** இத்யாதி. காண்கிறமாத்ரம்போருமோ? என்ன - **அங்கும்போனால்** இத்யாதி. கீழ்ப்பாட்டு - "ஶ்ரீயப்ரியாநர்ஹதஸிஷ்யதி" என்றதினர்த்தம்; இப்பாட்டு - "கதாநுஸாக்ஷாத்கரவாணி சக்ஷுஷா" என்றதினர்த்தம். "காவ்யம் ராமாயணம் க்ருத்ஸ்நம் ஸீதாயாஶ்சரிதம் மஹத்। பௌலஸ்த்யவதமித்யேவ சகார சரிதவ்ரத:॥௭॥" இதி பாலகாண்டே(௪). "வேதாநாம் ஸாமவேதோஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ:। இந்த்ரியாணாம் மநஶ்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா॥௨௨॥" இதி பகவத்கீதாயாம் தஶமே. தத்ரைவ த்ருதீயே, "கர்மணைவஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:। லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பஶ்யந் கர்துமர்ஹஸி॥௨௦॥" இதி, க்ரமேணாந்வய:. (௩)

## நான்காம் பாட்டு.

நிச்சலுந்தோழிமீர்காள்! எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ?
பச்சிலைநீள்கமுகும் பலவுந்தெங்கும்வாழைகளும்
மச்சணிமாடங்கள்மீதணவும் தண்திருவல்லவாழ்
நச்சரவினணைமேல் நம்பிரானதுநன்னலமே.

ஆ.—(நிச்சலும்.) பச்சிலைநீள்கமுகும் பலவும் தெங்கும் வாழைகளும் மச்சணிமாடங்களின்மேலே யணவாநின்ற ப்ரமஹரமான திருவல்லவாழிலே நின்றருளின எம்பெருமான், திருவனந்தாழ்வானைப்போலே என்னை அநந்யார்ஹமாக்கிக்கொண்டான், தோழிமாரானநீங்கள் நித்யமாக என்னை யலைத்து என்னப்ரவ்ருத்திபண்ணுகிறீகோ ளென்கிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், 'இங்ஙனேமநோரதிக்கை ஈடன்று' என்றுநிஷேதிக்கிற தோழிமாரைக்குறித்து, 'என்னுடையநற்சீவன் அவன்பக்கலது, உங்களுடையஜல்பம் வ்யர்த்தம்' என்கிறாள்.

[நிச்சலும் என்றுதொடங்கி] - விபரீதமேபலித்துவாராநிற்க, தோழிமாரான நீங்கள் நித்யமாக என்னை அலைத்து என்னப்ரவ்ருத்தி பண்ணுகிறீகோள்? [பலவு] - பலா. [மச்சணிமாடம் என்றுதொடங்கி] - பலநிலமான அழகிய மாடங்களின்மேலே அணவாநின்ற ப்ரமஹரமான திருவல்லவாழிலே நின்றருளித் திருவனந்தாழ்வானைப் போலே என்னை அநந்யார்ஹமாக்கிக்கொண்டவனதாயிற்று.

ப.—அநந்தரம், சோலைகளோடுகூடின மாடங்களையுடைய திருவல்லவாழிலே நித்யாஶ்ரித ஸம்ஶ்லிஷ்டனாய் வர்த்திக்கிற உபகாரகன்பக்கலிலே என்னுடைய ஸ்நேஹமாயிருக்க, நீங்கள் நலிந்து என்னப்ரயோஜநமுண்டென்கிறாள்.

தோழிமீர்காள்-(ப்ரியபரத்வமே ஸ்வரூபமான) தோழிமீர்காள்! எம்மை - (உங்களபிமதம் வலியாதவவஸ்தையையுடைய) எம்மை, நீர் - (ஜீவத்வாக்யைகளல்லாத) நீங்கள், நிச்சலும்-நிரந்தரமாக, நலிந்து-நிஷேதித்துநலிந்து, என் - என்னகாரியம், செய்தீர்-செய்கிறீகோள்? பசு-பசுத்த, இலை-இலையையுடைத்தாய், நீள்-நீண்ட, கமுகும்-கமுகும், பச்சிலைநீள்-அப்படிப்பட்ட, பலவும்-பலவும், தெங்கும்-தெங்கும், வாழைகளும்-வாழைகளும், மச்சு-மச்சுக்களின், அணி - நிரையையுடைத்தான, மாடங்கள்-மாடங்களின், மீது-மேலே, அணவும் - (அவ்வோநிலங்களுக்கு நிழல்செய்யும்படி) அணவின, தண்-குளிர்ந்த, திருவல்லவாழ்-திருவல்லவாழிலே, நஞ்சு-(அநாஶ்ரிதர்க்கு அணுகவொண்ணாதபடி) நஞ்சையுமிழ்கிற, அரவினணைமேல்-திருவரவணையின்மேலே கண்வளர்ந்தருளுகிறபடியை, நம் - நமக்கு ப்ரகாஶிப்பித்த, பிரானது - மஹோபகாரகனிடத்து, (என்னுடைய), நல்-மிகுந்த, நலம் - நலமானது. நற்சீவனென்றுமாம்.

இ.—நாலாம்பாட்டில், "இங்ஙனம் மநோரதிக்கை ஈடன்று" என்று நிஷேதிக்கிற தோழிமாரைக்குறித்து; என்னுடையநற்சீவன் அவன்பக்கலது, உங்களுடைய ஜல்பம் வ்யர்த்தமென்கிறாள்.

[நிச்சலுந்தோழிமீர்காள்] - "கழல்காண்டுங்கொல்நிச்சலும்" என்று - எனக்கு நித்யகைங்கர்யத்திலுள்ள ருசி போரும் உங்களுக்கு என்னைமீட்கையிலுண்டான ருசி. [தோழிமீர்காள்] - உங்களை யாராகநினைத்துத்தான் நிஷேதிக்கிறீகோள். தாய்மார்செய்யக்கடவதைத் தோழிமாரானநீங்கள் செய்யக்கடவீகோளோ. [எம்மை] - உங்கள்சொற்கேளாத என்னை. [நீர்]-உங்கள்சொல்ஜீவியாதிருக்கிற நீங்கள். [நலிந்தென்செய்தீரோ] - அத்தலைக்கு என்னப்ரயோஜநங்கொள்ளுகிறீகோள். செய்துதலைக்கட்டலாவதிலையன்றோ ப்ரவர்த்திப்பது. [நிச்சலும் - நலிந்தென்செய்தீரோ] - "மாசறுசோதியேதொடங்கி விலக்கிப்போருகிறீகோள், என்னப்ரயோஜநம்பெற்றீகோள்" என்று பிள்ளான். [பச்சிலை இத்யாதி] - பசுமைபறாத இலைகளையுடைத்தாய் ஓங்கியிருந்துள்ள கமுகுகளும். அவன் ஸந்நிதியில் வர்த்திப்பார்க்கு பசுமையும் ஓக்கமும் மாறாதிருக்குமென்கை; தனக்கு வைவர்ண்யமும் உருவுதலுமாயிறே யிருக்கிறது. [பலவு]-பலா. [மச்சணிமாடங்கள்] - பலநிலமான மாடங்களின்மேலே யணவாநிற்கக்கடவதாய். மாளிகைக்கு நிழற்செய்தாப்போலேயிருக்கை. [தண்திருவல்லவாழ்] - ப்ரமஹரமானவூர். [நச்சரவு] - ப்ரதிகூலர்க்குக் கிட்டவொண்ணாதபடி அரணுண்டாயிருக்கை. "தீமுகத்துநாகணை" என்கிலாய்க்கிறாளாகவுமாம். திருவநந்தாழ்வான்மேலேசாய்ந்த அழகைக்காட்டி என்னை அநர்ஹமாக்கினவன் பாடது என்னுடைய நற்சீவன். திருவநந்தாழ்வானைப்போலே என்னை அநர்ஹமாக்கினவனென்றுமாம். அவன்பக்கலிலே நற்சீவனாயிருக்க கேவல ஶரீரத்துக்கு ஹிதஞ்சொல்லுகிற இத்தால் ப்ரயோஜநமென்? அவன்பக்கலிலேசென்று ஹிதஞ்சொல்லுங்கோள்.

ஈடு.—நாலாம்பாட்டு. "இங்ஙன் மநோரதிக்கை ஈடன்று" என்று நிஷேதிக்கிற தோழிமாரைக்குறித்து; என்னுடைய நற்சீவன் அவன்பக்கலது, உங்களுடைய ஜல்பம் வ்யர்த்தமேன்கிறாள்.

[நிச்சலும்தோழிமீர்காள்] - தோழிமார் "உனக்கு இத்தனையாகாதுகாண்" என்று பலகாலும் சொல்லுவர்களே, அது ஃபலியாதிருக்கச்செய்தேயும், இவளையிழக்கவொண்ணாதென்று பார்த்துத் திரியவும் சொல்லத்தொடங்கினார்கள்; நீங்கள் நலிகைதவிரீகோளாகில், நானிருந்தவிடத்தேபோய் நலியுங்கோளேன்கிறாள். என்னுடைய நற்சீவனானது அவன்பக்கலிலே யானபின்பு, நீங்கள் சொல்லுகிறவற்றால் என்னப்ரயோஜநமுண்டு. எனக்கு "அவனைக்காணவேணும்" என்னும்ஆசை நித்யமாய்ச்செல்லுகிறாப்போலே, உங்களுக்கும் "என்னைமீட்கவேணும்" என்கிற இவ்வஸ்ஸந்தி மாறாதே செல்லுகிறபடி. [தோழிமீர்காள்] - நீங்கள் நீங்களாய்ச்சொல்லுகிறீகோளோ, தாய்மாராய்ச்சொல்லுகிறீகோளோ. இத்தனை ஸ்வரூபஜ்ஞாநமில்லாதார் உண்டாயிற்றே. ஒன்றுசொல்லுவார்

---

நாலாம்பாட்டு.—நிச்சலும் இத்யாதி. "நம்பிரானதுநன்னலம்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை-இங்ஙன் இத்யாதி.

"நிச்சலும்தோழிமீர்கள் எம்மை நீர்நலிந்தென்செய்தீரோ" என்றதுக்கு ப்ரஸக்தியருளிச்செய்கிறார் - தோழிமார் என்றுதொடங்கி, திரியவும்சொல்லத்தொடங்கினார்கள் என்னுமளவும். "நம்பிரானதுநன்னலம்" என்றத்தைக்கடாக்ஷித்து, "எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ" என்றதுக்கு ஸாவம் - நீங்கள் இத்யாதி. ஏதத்விவரணம் - என்னுடைய இத்யாதி. "கழல்காண்டுங்கொல்நிச்சலுமே" என்றவநந்தரம், "நிச்சலும் - நலிந்து" என்றதுக்கு ஹார்த்தஸாவம் - எனக்கு அவனை இத்யாதி. "தோழிமீர்காள் - நலிந்தென்செய்தீரோ" என்றதுக்கு ஹார்த்தஸாவம் - நீங்கள் இத்யாதி,

தம்மையறிந்தன்றே சொல்லுவது. [எம்மைநீர்] - உந்தாமையழியமாறியும் என்னுடைய ஜீவநமே எண்ணக்கடவநீங்கள், உங்கள்ஹிதவசநம் நெஞ்சிற்பட்டால் ஜீவியாத என்னை. [நலிந்தென்செய்தீரோ] - நான்ஜீவிப்பனோயோ! உங்கள் ஸ்வரூபத்தோடு சேர்ந்தோ. [நிச்சலும்தோழிமீர் இத்யாதி] - "* மாசறுசோதிதொடங்கி இவ்வளவும்வர ஹிதஞ்சொல்லுகிற நீங்கள் என்னப்ரயோஜநம் பெற்றிகோள்" என்றுபிள்ளான். [தோழிமீர்காளெம்மைநீர் நலிந்தென்செய்தீரோ] - தாந்தாம் நலிவுபட்டும் பிறரைநோக்குவார், தாங்களே பிறரை நலியவும்பார்ப்பரோ. [என்செய்தீரோ] - ஒன்றுசெய்வது ஒரு ப்ரயோஜநத்தளவுமன்றே, லாஹாலாஹமறிந்தாலும் கைவாங்கவேண்டாவோ. [எம்மைநீர் நலிந்தென்செய்தீரோ] - ப்ராவண்யத்துக்கு முற்பாடராஞல் ப்ராப்திக்கு முற்பாடராகவேண்டாவோ. [பச்சிலை இத்யாதி] - அந்நிலத்திலே யகப்பட்டாரையும் சிலர் மீட்கநினைப்பரோ. ஹிதஞ்சொல்லுவார் பசுமையுள்ளவிடத்தேயன்றே சொல்லுவது, இங்கு விவர்ணமாயிறே கிடக்கிறது. பிரியாதிருப்பார்க்குப் பசுமைமாறுதிறே. [பலவும்] - பலா. " '[நீள் - கமுகும்] என்றுப் போலே, பலவும் - தெங்கும், வாழைகளும்' என்று (பச்சிலைநீள் என்கிறத்தை -'அவற்றிலேயும்) உய்ந்தபிள்ளை கூட்டும்படிகாணும்" என்று ஜீயர் அருளிச்செய்வர். [மச்சணி மாடங்கள்] - பலநிலங்களையுடைத்தாகையாலே அலங்க்ருதமான மாடங்கள். [மீதணவும்] - செல்வப்பிள்ளைகளுக்கு அணுக்கனிட்டாற்போலேகாணும் கவிந்துகொண்டுநிற்கிறபடி. [தண்திருவல்லவாழ்] - ஶ்ரமஹரமாம்படி சோலைசெய்தவூர். பசுமைமாறாத இலைகளையுடைத்தாய் நீண்டகமுகும், அப்படிப்பட்டபலவும், தெங்கும், வாழைகளும், மச்சுக்களின் நிரையையுடைத்தான மாடங்களின்மேலே, அவ்வோநிலங்களுக்கு நிழல்செய்யும்

*பஹுவசநத்துக்குபாவம் - இத்தனை இத்யாதி. இத்தனையென்றது - இத்தனைபேரென்றபடி. "நீங்கள் நீங்களாய்ச்சொல்லுகிறிகோளோ" என்றதின்பலிதம் - ஒன்றுசொல்லுவார் இத்யாதி. "எம்மை" என்றது - ஆத்மநிபஹுவசநமாகையாலே - என்னை என்கிறார். என்செய்தீர் - என்னப்ரயோஜநம் பெற்றிகோளென்றபடி. "என்செய்தீரோ" என்றதுக்குபாவம் - நான்ஜீவிப்பனோயோ இத்யாதி. "நிச்சலும்" இத்யாதிக்கு பாவார்த்தம் - மாசறுசோதி இத்யாதி. ஆக, "நிச்சலும்" என்றதுக்கு - இந்தத்திருவாய்மொழியிலே பலகாலும் ஹிதஞ்சொல்லி என்செய்தீரோவென்னுதல், * மாசறுசோதி தொடங்கி இவ்வளவும் ஹிதஞ்சொல்லி என்செய்தீரோவென்னுதல். "நீர்நலிந்து"என்றதுக்குபாவம்- தாந்தாம்நலிவுபட்டும் இத்யாதி. என்னுடைய ஸத்தாநாஶமொழிய வேறொருப்ரயோஜநமில்லையென்று - கீழ் அருளிச்செய்து, உங்கள் ஹிதவசநத்துக்கு நான்மீளாதபின்பு உங்களுக்கு ஒரு ப்ரயோஜநமில்லையென்று பாவார்த்தம் - ஒன்றுசெய்வது இத்யாதிவாக்யம். விவரணம் - லாபாலாபம் இத்யாதி. நலியப்ராப்தியில்லையாகில், எதுக்குப்ராப்தியுண்டென்ன - ப்ராவண்யத்துக்கு இத்யாதி. ப்ராவண்யத்துக்கென்றது - ப்ராவண்யத்தை விளைக்கைக்கென்றபடி. "பச்சிலை" என்றுதொடங்கி - அவ்வூரை வர்ணிக்கிறதுக்கு பாவம் - அந்நிலத்திலே இத்யாதி. "பச்சிலை" என்றத்துக்கு பாவம் - ஹிதஞ்சொல்லுவார் இத்யாதி. இங்குப்பசுமையில்லையோ? என்ன - இங்குவிவர்ணமாய் இத்யாதி. அங்குப்பசுமையுண்டாகைக்கு ஹேதுவேதென்ன - பிரியாதிருப்பார்க்கு இத்யாதி. ஈஶ்வரனைப் பிரியாதிருக்கிறமரங்களுக்கென்றபடி. பிரியாதிருப்பார்க்கென்றது - பிரிவால்வரும் வ்யஸநமின்றிக்கேயிருப்பார்க்கென்றபடி. "பலவும்" என்றது - பலாமரமென்றபடி. உய்ந்தபிள்ளைநிர்வாஹத்துக்கு, * நீட்சி கமுகுக்கு விஶேஷணமானப்போலே, பலவுமென்று - பஹுவசநமாய், பலவானதெங்கும் பலவானவாழைகளுமென்னுதல்; அன்றிக்கே, பச்சிலைநீளென்றது - * கமுகுக்கு விஶேஷணமானப் போலே, "பச்சிலைநீள் - பலவும், பச்சிலைநீள் - தெங்கும், பச்சிலைநீள் - வாழைகளும்" என்று கூட்டுதலென்றபடி. பலநிலங்களாவது - தளத்தின்மேல்தளம். மச்சை, அணியாக - அலங்காரமாகவுடைத்தான, க்ருஹங்களென்று ஸமுதாயார்த்தம். மச்சு - மேல்தளம். அணி - அலங்காரம். மேல்தளமென்று*

படி யணவின குளிர்ந்த திருவல்லவாழிலே. [நச்சரவினணைமேல்] - மேலும்சுற்றும் சோலையுண்டானால் கீழும் சோலையுண்டாகவேணுமோ. இங்கும் ஶைத்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்யங்களால் குறையில்லையே. [நச்சரவு] - படுக்கையும் தானேயாய்க்காத்தூட்டவும் வற்றாயிருக்கை. பச்சிலையித்யாதிக்கு - ஹோகிகளாயிருப்பார் விடாதே வர்த்திக்கலாம் தேசம். [நச்சரவு] - இளையபெருமாள் கையும்வில்லுமாய் வெளிக்காவல்நிற்க, பெருமாளும் பிராட்டியுமாய்க் காட்டிலே ரமித்தாப்போலே. * ராகவோ நிர்த்தயஃ இறே, அப்படியே இங்கும் காவலுண்டாயிருக்கிறபடி. அநந்தமுகமான காவலிறே. பெருமாளும் இளையபெருமாளும் பிராட்டியும் ஶ்ருங்கிபேரபுரத்திலே விட்டருளினவன்று ஸ்ரீகுஹப் பெருமாள் இளையபெருமாளைப்பார்த்து, "பெருமாளும்பிராட்டியும் கண்வளராநின்றார்கள், உமக்கீடாம்படி திருவடிகளிலே தலையாம்படி படுக்கைபடுத்தேன்; நாங்கள் காடராய் அங்கேயிங்கேதிரிகையாலே எங்களுக்கு உறக்கம்வாராது, நீர் ராஜபுத்ரராகையாலே ஸுகுமாரர்;'ஹரதாதிகள் வருவர்கள்' என்றஞ்சவேண்டா, நானும் என்பரிக்ரமுமுண்டு, நீர் கண் வளர்ந்தருளும்" என்ன,—"கதம் தாஶரதௌ பூமௌ ஶயாநே ஸஹ ஸீதயா"

(கதம்தாஶரதௌபூமௌஶயாநேஸஹஸீதயா) - வாரீர், மஹாராஜனை சக்ரவர்த்தி அறுபதினாயிரமாண்டு அநபத்யனாய் வருந்திப்பெற்ற ஸுகுமாரரான பெருமாள் தறைக்கிடைகிடக்க, எனக்குக்கண்ணுறங்குமோ; அவர்தாம் வஸிஷ்டாதிகள் கீழே தறையிலேயிருந்து மறிவர், அதுவுமின்றிக்கேயிருக்கிற பிராட்டியோடேகூடக் கிடக்கிறபடிபாரீர்; ஆனபின்பு, எனக்கு உறக்கமுண்டாய் அதுபோகைக்கு அபிஸந்திபண்ணியிருக்கிறேனல்லேன்காணும், உறக்கம் தேட்டமாய்க்கிடையாமையாலேயிருக்கிறேன். [நம்பிரானதுநன்னலமே] - "அஸ்யா தேவ்யா மநஸ் தஸ்மிந் தஸ்ய சாஸ்யாம் ப்ரதிஷ்டிதம்" (அஸ்யாதேவ்யாமநஸ் தஸ்மிந் தஸ்யசாஸ்யாம்ப்ரதிஷ்டிதம்) என்னும்படியே யிருந்ததாகில் நான் ஆறியிரேனோ, இரண்டும் அங்கே யொருதலைத்தபின்பு நான் எங்ஙனே ஆறியிருக்கும்படி. [நம்பிரானது

---

ப்ர:—(நச்சரவினணைமேல்)—ஸங்க்ஷேபே, "ரக்ஷோபலஸமாக்ராந்தாம் ராகவோ நிர்த்தயஃ । தேவமாஸ்வயம் ஸம்ஸாரஸமுத்ரே நிமக்நஸ்ய ஸ்வவ்ஶ ॥௩॥"

---

சொன்னபோதே - பலநிலங்களென்று அர்த்தாத்ஸித்தம். மீது - மேல். அணுக்கன் - குடை. "மீதணவும்" என்று - மேற்சோலையைச்சொன்னபோதே, சுற்றும் என்று அர்த்தாத்ஸித்தம். அரவைச் சோலையாகச்சொல்லுகைக்கடியேதென்ன; குணஸாம்யத்தாலேயென்கிறார் - இங்கும்ஶைத்ய இத்யாதி. "அரவினணை" என்றும், "நஞ்சு" என்றும் விஶேஷித்ததுக்குஹாவம் - படுக்கையும் இத்யாதி. காத்தூட்டவும் வற்றாயிருக்கையென்றது - விரோதிகள் வாராமல் காத்துஸம்ரக்ஷிப்பிக்கவும் வற்றாயிருக்கையென்றபடி. பச்சிலை இத்யாதிக்கு - தாத்பர்யமிதிஶேஷஃ. காத்தூட்டினதுக்கு த்ருஷ்டாந்தம் - இளையபெருமாள் இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம் - ரக்ஷோணா இத்யாதி. இளையபெருமாள் காத்தப்ரகாரத்தைக்காட்டுகிறார் - பெருமாளும் இத்யாதி. "காவல்" என்றப்ரஸங்கத்திலே யருளிச்செய்கிறாராதல். "ராமே" என்னாதே, "தாஶரதௌ" என்றதுக்குஹாவம் - மஹாராஜனை இத்யாதி. "யோ-நித்ரா-ஸுப்தே-கதம்-ஶக்யா" என்று அந்வயித்துஹாவம் - ஆனபின்பு இத்யாதி. அபிஸந்தி - நினைவு. தாத்பர்யம் - அஸ்யாதேவ்யா இத்யாதி. அதாவது - பிராட்டிக்கு மநஸ்ஸு அவர்பக்கலிலேயாய், ப்ராணன் அவள்பக்கலிலேகிடந்ததிறே; எனக்கு அங்ஙனன்றிக்கே, ப்ராணனும் மநஸ்ஸும் அவர்பக்கலிலேயானபின்பு ஆறியிருக்கப்போமோவென்றுகருத்து. இரண்டும் அங்கே யொருதலைத்தபின்பென்றது - பிராட்டிக்குப்போலே, "மநஸ்தஸ்மிந்" என்று - மநோமாத்ர

* 5—4

நன்னலமே] - திருவநந்தாழ்வான்மேலேசாய்ந்த வடிவழகைக்காட்டி என்னை அநந்யார்ஹமாக்கினவன்பாடது என்னுடையநற்சீவன். திருவநந்தாழ்வானைப்போலே என்னை அநந்யார்ஹமாக்கினவனென்றுமாம். அவன்பக்கலிலே நற்சீவனுமிருக்க, கேவலஶரீரத்துக்கு ஹிதஞ்சோல்லுகிற இத்தால் ப்ரயோஜநமேன்; அவன்பக்கலிலேசென்று ஹிதஞ்சோல்லுந்தோள் வேணுமாகில். (௪)

## ஐந்தாம் பாட்டு:

நன்னலத்தோழிமீர்காள்! நல்லவந்தணர்வேள்விப்புகை
மைந்நலங்கோண்டுயர்விண்மறைக்கும் தண்திருவல்லவாழ்
கன்னலங்கட்டிதன்னைக் கனியையின்னமுதந்தன்னை
என்னலங்கோள்சுடரை என்றுகோல்கண்கள்காண்பதுவே

ஆ.—(நன்னலம்.) நான் ஒன்றை யாசைப்பட்டால் அத்தைமுடிக்கும் ஸ்வபாவமன்றோ உங்களது. [நல்லவந்தணர்] - அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களிலே கறுத்தெழுகிற ஹோமதூமங்கள் ஆகாஶாவகாஶமெல்லாம் மறைக்கும்படியான திருவல்லவாழிலேயிருந்து நிரதிஶயபோக்யனுமாய் என்னை ஸர்வஸ்வாபஹரணம் பண்ணின அழகையுமுடையவனை என்னுடையகண்கள் விடாய்தீரக் காணப்பெறுவ

ஒ.—அஞ்சாம்பாட்டில், நான் செய்தபடி செய்ய, என்னுடைய கண்கள் விடாய்தீரக்காணப்பெறுவது என்று? என்கிறாள்.

[நன்னலத் தோழிமீர்காள்]-நான் ஒன்றை யாசைப்பட்டால் அத்தை முடிக்கும் ஸ்வபாவமன்றோ உங்களது? [நல்ல அந்தணர் என்று தொடங்கி]-அநந்ய ப்ரயோ

---

மன்றிக்கே, ப்ராணனும் அங்கே யொருதலைத்தபின்பென்றபடி. "நன்னலம்" என்று - நற்சீவனும், "ப்ராணன் நம்பிரானது" என்றபோதே - மநஸ்ஸு அங்கே ப்ரவணமாயிற்றென்று அர்த்தாத்ஸித்தம். அன்றிக்கே, "நன்னலம்" என்று - ஸ்நேஹமாய், ததாஶ்ரயமானமநஸ்ஸைலக்ஷித்து, "நம்பிரானதே நன்னலம்" என்று அந்வயித்துபாவம் - ஜுஷ்யாஜ்ஜைஷ்யா இத்யாதி என்னுதல். அதாவது - இவள் திருவுள்ளம் அவனிடத்திலேயாய் அவன்திருவுள்ளம் இவளிடத்திலேயா யிருக்கையன்றிக்கே, இரண்டும் அங்கே யொருதலைத்தபின்பென்றபடி. "நச்சரவினணைமேல் நம்பிரானதுநன்னலம்" என்றதுக்கு ஶப்தார்த்தம் - திருவநந்தாழ்வான்மேலே சாய்ந்தருளினவழகைக்காட்டி என்னை யநந்யார்ஹமாக்கினவனிடத்தது என்னுடைய நற்சீவனென்னுதல்; அன்றிக்கே, திருவநந்தாழ்வானைப்போலே என்னை யநந்யார்ஹமாக்கினவனென்னுதல். "நம்பிரானதுநன்னலம் - எம்மைநீர்நலிந்தென்செய்தீரோ" என்று அந்வயித்துபாவம் - அவன்பக்கலிலே இத்யாதி. இத்தால் - நற்சீவன் அவன்பக்கலிலேயாயிருக்க, கேவலஶரீரத்துக்கு ஹிதஞ்சொல்லி என்னப்ரயோஜநமென்றபடி. தோழிமீர்காள், நீர் - எம்மை - நிச்சலும் - நலிந்தென்செய்தீரோ இத்யாரப்யாந்வய:. "க்ஷயம்ஜாஶாஸ்யஸம்ருத்தேஶயாசேநஸஹஸீதயா । ஶக்யாநிஶாரயோகுஞ்ஜீவிதம்வாஸுவாநிவா (கூ)" இத்யயோத்யாகாண்டே மாஹம்ப்ருதிவக்ஷண:. "ஜுஷ்யாஜ்ஜைஷ்யாசேநஸஹஸீதயா வாஸ்யம்ப்ருதிஷ்டித:। சேநயம்ஸமயசேஹ்ராதாசோஹந்தஹ்வேஜீவதி॥ருஉ॥" இதி ஸுந்தரகாண்டே [கரு] ஸர்கே. (௪)

ஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களில் கறுத்து எழுகிற ஹோமதூமங்கள் ஆகாசாவகாசத்தையெல்லாம் மறைக்கும்படியான திருவல்லவாழியிலே யிருப்பதும்செய்து நிரதிசயபோக்யனுமாய் என்னை ஸர்வஸ்வஹரணம் பண்ணின அழகையுடையவனை.

ப.—அநந்தரம், விலக்ஷணரான வைதிகாக்ரேஸரருடைய அக்நிஹோத்ரதூமமானது ஆகாசத்தைமறைக்கும் திருவல்லவாழில் நிரதிசயபோக்யபூதனானவனை நங்கண்கள் காண்பதென்றோவென்கிறாள்.

நன்னலம்-என்னிலும் எனக்குமிகவும்நல்ல, தோழிமீர்காள் - தோழிமீர்காள்! நல்ல - அநந்யப்ரயோஜநராய் அதிப்ரவணரான, அந்தணர் - வைதிகருடைய, வேள்வி-ஆகவதாபாதநரூபமான அக்நிஹோத்ராதிகர்மங்களில், புகை - தூமங்களானவை, மை-மையினுடைய, நலம் - நன்றானநிறத்தை, கொண்டு - கொண்டு, உயர் - உயர்ந்த, விண்-ஆகாசத்தை, மறைக்கும் - தன்னிறமேயாம்படிமறைத்து நிழலைச்செய்கையாலே, தண் - குளிர்ந்த, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே வர்த்திப்பானாய், கன்னல்-கரும்பினுடைய, அம் - கோதற்ற, கட்டிதன்னை - கட்டிபோலே பாஹ்யாப்யந்தரவிஹாரஹிதரஸத்தையுடையனாய், கனியை - அப்போதே நுகரவேண்டும் பக்வபலம்போலே இனியனாய், இன் - இனிமைக்குமேலே, அமுதந்தன்னை - இழந்தஸத்தையையுண்டாக்கும் அம்ருதரூபனாய், (என்னோடு ஸம்ஶ்லேஷித்தகாலத்தில்), என்-என், நலம் - ஆத்மகுணத்தோடு ரூபகுணத்தோடுவாசியற, கொள் - புஜித்து, சுடரை - அத்தாலேயொளிபெற்ற வடிவையுடையனானவனை, கண்கள் - என்னிலும்பெருவிடாய்ப்பட்டகண்கள், காண்பது - தன் னினைவுக்கீடாகக்கண்டு அநுபவிப்பது, என்றுகொல் - என்றோ?

ஈ.—அஞ்சாம்பாட்டில், நான்செய்தபடிசெய்ய, என்கண்களின்விடாய்தீரக் காணப்பெறுவது என்று?என்கிறாள்.

[நன்னலத்தோழிமீர்காள்]-என் அபிமதஸித்திக்கு என்னிற்காட்டில் அபிநிவேசித்துத் தலைக்கட்டுமவர்களன்றோ நீங்கள். [நல்லவந்தணர் இத்யாதி] - அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களில் ஹோமதூமமானது, வெளிறுகழிந்தாப் போலேயிருக்கிற நிறத்தையுடைத்தாய், அந்தரிக்ஷத்தளவன்றியே ஸ்வர்கத்தளவும் செல்லமறைக்கும். அநந்யப்ரயோஜநருடைய ஹோமதூமமாகையாலே, ப்ரயோஜநாந்தரபரர் அப்ஸரஸ்ஸுக்களும்தாங்களுமாய் முகம்பார்க்கவொண்ணாதபடி மறைக்கை. [திருவல்லவாழ்கன்னலங்கட்டிதன்னை] - "சிறுமலையன்" என்னுமாப்போலே. [கன்னலங்கட்டி] - அழகிய கன்னற்கட்டி. [கனியை] - கண்டபோதே நுகரலாம்படியிருக்கை. [இன்னமுதந்தன்னை] - ரஸத்துக்குமேலே, போனவுயிரை மீட்கவற்றாகை. என்னை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி, அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. என்னை யெழுதிக் கொண்டவழகையுடையவனை யென்றுமாம். [என்றுகொல் இத்யாதி] - "நான்பட்டது பட ப்ரஜைஜீவிப்பதுகாண்" என்பாரைப்போலே, என்கண்களின்விடாய் தீருவது என்றோ? என்கிறாள். * முடியானேயிற்கரணங்களிறே, "காணவிரும்புமென்கண்களே" என்று கண்களும்தாமும் தனித்தனியே விடாய்க்கும்படியிறே இவருடையவிடாய். என்னலங்கொள்சுடரை என்கண்களின்விடாய்தீரக் காணப்பெறுவதென்றோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நான் செய்தபடிசெய்ய, இக்கண்களின்விடாய்தீரக் காணப்பெறுவதேன் றென்கிறாள்.

[நன்னலத்தோழிமீர்காள்]-நன்னலமாவது-இவள்பக்கல் இவர்களுக்குண்டான ஸ்நேஹம். தங்கள் கார்யம் தலைக்கட்டிக்கொள்ளுகையன்றிக்கே யிருக்கை. ஆனபின்பு, "தாய்மார் பழிசொல்லுவர்கள்" என்று அஞ்சி என்வழியே உங்களுக்கு ஒழுகாதிருக்கப்போமோ '**வாநராணாம் நராணாஞ்சகதமாஸீத்ஸமாகம:**'(வாநராணும்நராணுஞ்சகதமாஸீத்ஸமாகம:) - குருகுலவாஸம்பண்ணுத திர்யக்குக்களுக்கும், வஸிஷ்ட்டஶிஷ்யர்களான ராஜபுத்ரர்களுக்கும் இதோருசேர்த்தியுண்டானபடி யெங்ஙனே; ஶாஸ்த்ரவஶ்யரிறே குருகுல வாஸத்துக்கு யோக்யர். மேல் இதுக்குஅடிசொல்லுகிறுன்"**ராமஸுக்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத**' (ராமஸுக்ரீவயோரைக்யம்தேவ்யேவம்ஸமஜாயத) - தங்களையும் அறியாதே எங்களையும் அறியாதே இங்ஙனே விழுந்துகொடுநிற்கக்கண்டோமித்தனை. அதாவது- இளையபெருமாள் கையும்வில்லுமாய் உணர்ந்துகொண்டு நின்றுநோக்கக்கடவ அந்த:புரகார்யத்துக்கு அடியேன் வரும்படியன்றே அவர்கள் ஸங்கதரானபடி. இளையபெருமாள் அடிமையில் தப்பிநின்றவளவுக்கும் திருவடியைக்கொண்டு இழையிடவேண்டும்படியாகவிறே அவர் நிலவரானபடி, இளையபெருமாள்பேரநிற்கையிறே பிரியவேண்டிற்று. "**ஏவம்ஸமஜாயத**" (ஏவம்ஸமஜாயத) - தங்களளவிலும் பெருக்கப்பார்த்தார்கள். ஐஶ்வர்யம் அவனுக்குக் காடுபடும்படியிறேபார்த்தது. இப்படியிறே ஸக்யமிருப்பது; இவர்களும் தோழிமாரிறே. [நல்ல வந்தணர்] - அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணர். அவர்கள்கண்டிகோளே அத்தலைக்கு ஈடா

---

*அஞ்சாம்பாட்டு.*—**நன்னலம்** *இத்யாதி.* *"என்றுகொல்கண்கள்காண்பதுவே" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை* - **நான்செய்தபடி** *இத்யாதி.*

*"நலம்" என்றதுக்கு* *பாவம்* - **இவள்பக்கல்** *இத்யாதி.* *"நல்" என்றதுக்கு* *பாவம்* - **தங்கள் கார்யம்** *இத்யாதி.* *"நன்னலம்" என்று - ஸ்வப்ரயோஜநத்தை யபேக்ஷியாத ஸ்நேஹத்தையுடையவர்கள் என்றவளுடைய ஹார்த்தபாவம்* - **ஆனபின்பு** *இத்யாதி.* *தோழிமார்க்கும் இவளுக்குமுண்டான ஸ்நேஹத்துக்கு த்ருஷ்டாந்தம்* - **வாநராணாம்** *இத்யாதி.* *திர்யக்குக்களுக்கு குருகுலவாஸ யோக்யதையில்லையோ? என்ன* - **ஶாஸ்த்ரவஶ்யர்** *இத்யாதி.* **இதுக்கடியென்றது** - *ஸமாகமத்துக் கடியான, "ஏவம்ஸமஜாயத" என்றநிர்ஹேதுகத்வமென்றபடி. "ஏவம்ஸமஜாயத" என்றதுக்கு மூன்றுபாவம்.* **தங்களையும்** *இத்யாதிவாக்யத்வயம் - முந்தினது. அதாவது - அந்த:புரகார்யத்துக்கு அடியேன் வரும்படியன்றே ஸங்கதரானபடி யென்றுகருத்து.* **தங்களையும் அறியாதே** - *இத்யாதிக்கு - தங்கள்பெருமையையும் நங்கள்சிறுமையையும்பாராதே அசிந்திதமாகச்சேரவிழுந்ததென்றபடி.* **அடியேன்வரும்படியன்றேவென்றது** - *"உத்தஃஹ்ருத்வர:கஶ்சிஹரிவிஸுக்ரீவஸஹிபர" என்கிறபடியே எல்லாரிலும் தாழ்ந்த நான் வரும்படியன்றேவென்றபடி.* *"ஏவம்ஸமஜாயத" என்றதுக்கு இரண்டாம்பாவம்* - **இளையபெருமாள் அடிமையில்** *இத்யாதி. அதாவது-ப்ராதாவான இளையபெருமாளுடைய அபராதத்தையும் நான் ஶமிப்பிக்கும்படியென்றுகருத்து.* **நிலவர்** - *அந்தரங்கர். இளையபெருமாள் அடிமையில் தப்பநின்றுரோ? என்ன* - **இளையபெருமாள் பேரநிற்கையிறே** *இத்யாதி. மூன்றும்பாவம்* - **தங்களளவிலும்** *இத்யாதி. அதாவது - தங்களுடைய ஐஶ்வர்யத்தைப்பற்றவும் அதிகமானவைஶ்வர்யத்தையுடையராம்படியென்றுகருத்து. கீழ்வாக்யவிவரணம்* - **ஐஶ்வர்யம்** *இத்யாதி.* **காடுபடும்படியென்றது** - *ஸம்ருத்தமாம்படியென்னுதல், காட்டுக்கெல்லாம் அதிபதியாம்படியென்னுதல்; "ஸுக்ரீவஸகோராஜ்யம்" என்னக்கடவதிறே. "நன்னலத்தோழிமீர்காள்" என்றவநந்தரம், "நல்லவந்தணர்" என்றதுக்குபாவம்* - **அவர்கள்கண்டிகோளே** *இத்யாதி.*

கப்பரிமாறுகிறபடி; ஆனபின்பு, நீங்களும் அப்படியாயிருக்கவேண்டாவோ. அநந்யப்ரயோஜநரான ப்ராஹ்மணருடைய யாகங்களிலுண்டானஹோமதூமமானது, வெளிறுகழித்துக்கொண்டு அந்தரிக்ஷத்தளவன்றியே உயர்விண்மறைக்கும். கறுத்தெழுகிற தூமங்கள், இங்கே கண்ணழிவறப் புண்யங்களை யநுஷ்ட்டித்து ஸம்ஸாரவெக்காயம் தட்டாதபடிபோய் அப்ஸரஸ்ஸுக்களோடே அநுபவிக்கிற வைமாநிகரை முகத்தோடுமுகம்பார்க்க வொட்டாதே மறைக்கிறபடி. மிதுநமாய்க்கலப்பாரை முகத்தோடுமுகம் பார்க்கவொட்டாமை அந்நிலத்திலுள்ளார்க்கு ஸ்வபாவம்போலேகாணும். அவர்கள்புகைத்தலிருக்கிறபடி. [தண்திருவல்லவாழ்கன்னலங்கட்டிதன்னை]-''இன்னமலையின்கட்டி'' என்னுமாபோலே. கரும்பினுடைய கோதற்றகட்டியை. [கனியை] - அவ்வளவும் பார்த்திருக்கவேண்டாதபடி பக்வமானபலமாயிருக்கை. [இன்னமுதந்தன்னை] - உடம்பைப்பூண்கட்டிக்கொடுக்க வற்றாயிருக்கை. அதாவது - போக்த்ருத்வசக்தியைக் கொடுக்கை. [இன்னமுதம்]-தேவர்களுடைய உப்புச்சாறுபோலன்றிக்கே, ஆத்மோஜ்ஜீவநம்பண்ணிக்கொடுக்க வற்றாயிருக்கை. [என்னலங்கொள்சுடரை] - என்னை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி, அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவனை. என்னையெழுதிக்கொண்ட அழகையுடையவனை யென்றுமாம். இத்தலையை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணினமை தன்பேறு என்னுமிடம் வடிவிலே தோற்றும்படியாயிருக்கை. [என்றுகொல் கண்கள்காண்பதுவே]-''நான்பட்டதுபட, ப்ரஜைஜீவிக்கப்பெறுவதுகாண்'' என்பாரைப்போலே, என்கண்களின்விடாய்தீர்வதென்றோ? என்கிறாள். * முடியானேயிற்கரணங்களுடையவரிறே. இந்த்ரியங்களும் தாமும் தனித்தனியே சேதநஸமாதியாலே விடாய்க்குமவரிறே. ''மாஜெ்த்ரூ ஸ்ரோகாஹிகஷி‌ுஜெதை: | ஸம்ஸ்ப்ருஶெயதூ'' (காத்ரைஸ்ஸோகாபிகர்ஷிதை:- ஸம்ஸ்ப்ருஶேயம்)ப்ரஜைகள் ஜீவித்தால் பசிகெடுவாரபிமாநிகளிறே.

## ஆறாம் பாட்டு.

காண்பதெஞ்ஞான்றுகொலோ? வினையேன்கனிவாய்மடவீர்!
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகியெங்கும்
சேண்சினையோங்குமரச் செழுங்கானல்திருவல்லவாழ்
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே.

---

வெளிறு - அஸாராம்ஶம். ''மைந்நலம்'' - நலமானமை. நன்றானகறுப்பென்றபடி. உயர்விண் - ஸ்வர்க்கமென்றபடி. ''முகம்பார்க்கவொட்டாதே மறைக்கிறபடி'' என்றதுக்குஹார்த்தபாவம் - மிதுநமாய் இத்யாதி. சாடு - அவர்கள்புகைத்தல் இத்யாதி. சாடுவுக்கு, பொருமை; தூமமும். ''அமுதம்'' என்றதுக்குபாவம் - உடம்பை இத்யாதி. அதாவது என்றது - பூண்கட்டிக்கொடுக்கையாவதென்றபடி. ''இன்'' என்றதுக்குபாவம் - தேவர்கள் இத்யாதி. ''நலம்'' என்று - நன்மையாய், ஸர்வஸ்வத்தையுமென்றபடி. என்னையெழுதிக்கொண்ட - என்னையநந்யார்ஹமாக்கினவென்றபடி. ''என்னை ஸர்வஸ்வாபஹாரம்பண்ணி'' இத்யாதிவாக்யவிவரணம் - இத்தலையை இத்யாதி. உமக்குக்காணவேண்டாவோ? என்ன - நான்பட்டது இத்யாதி. அசேதநமானகண் விடாய்க்கக்கூடுமோ? என்ன - முடியானேயில் இத்யாதி. விவரணம் - இந்த்ரியங்களும் இத்யாதி. கரணங்கள் விடாய்க்கக்கூடுமென்னுமதுக்கு ப்ரமாணம் - மாஜெத்ரூ: இத்யாதி. கண்களின்விடாய்தீர்ந்தால் தமக்குலாபமேதென்ன - ப்ரஜைகள் இத்யாதி. க்ரமேணாந்வய:. ''யதாதம்வநகதஷவ்யாவமாஜெத்ரூ ஸ்ரோகாஹிகஷிஜெதை: | ஸம்ஸ்ப்ருஶெயம்ஸகாமாஹம்தயாகநகதயாம்யஹம்॥'' இதி ஸுந்தரகாண்டெ (௪௦) ஹநுமந்தம் ப்ரதிஸீதா. (௫)

ஆ.—(காண்பது.) [வினையேன்கனிவாய்மடவீர்] - இப்போது நான் நோவு படாநிற்க, நீங்கள் உருவுதல்தீர்ந்து பண்டுபோலேயிருப்பதே. மாதுர்யாதிசயமாகையாலே நல்லமிடற்றோசையையுடைய வண்டுகளோடுகூட எங்கும் இளந்தென்றலுண்டாய், அத்தாலே அறவுயர்ந்த பணைகளையுடைத்தாய்க்கொண்டு வளராநின்றுள்ள அழகிய சோலையையுடைய திருவல்லவாழிலே நின்றருளின ஸ்ரீவாமநனுடைய மிகவும் ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை நான் காண்பதென்றோவென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், திருவல்லவாழிலே நின்றருளுகிற ஸ்ரீவாமநனுடைய மிகவும் ஸ்ப்ருஹணீயமான திருவடிகளை நான் காண்பது என்றோ? என்கிறாள்.

[கனிவாய் மடவீர்] - இப்போதை உருவுதல் தீர்ந்து பண்டுபோலே நீங்கள் புஷ்டைகளாயிருக்கக் காணவல்லேனே யென்று கருத்து. [பாண் என்று தொடங்கி]-மாதுர்யாதிசயமாகையாலே நல்லமிடற்றோசையோடுகூடின வண்டுகளோடுகூட எங்கும் இளந்தென்றல் உண்டாய் அத்தாலே அற உயர்ந்த பணைகளையுடைத்தாய்க்கொண்டு வளராநின்றுள்ள அழகிய சோலையையுடைய திருவல்லவாழிலே.

ப.—அநந்தரம், பாடுகிறவண்டும் புதுத்தென்றலுமான கடற்கரைச்சோலையையுடைய திருவல்லவாழிலேநிற்கிற, ஆஸ்ரிதார்த்தமாக வர்த்தியான ஸ்ரீவாமநனுடைய போக்யமான திருவடிகளைக் காண்பதென்றோ வென்கிறாள்.

பாண் - கானரூபமான, குரல் - மிடற்றோசையையுடைய, வண்டினொடு-வண்டுகளோடே, பசுந்தென்றலும் - புதுத்தென்றலும், ஆகி-ஆய், எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும், சேண்-உயர்ந்த, சினை-பணைகளையுடைத்தாய்க்கொண்டு, ஓங்கு-வளருகிற, மரம்-மரங்களையுடைய, செழு-தர்ஸநீயமான, கானல் - கடற்கரைச்சோலையையுடைத்தான, திருவல்லவாழ் - திருவல்லவாழிலேநிற்கிற, மாண்-(அர்த்தித்வப்ரகாஸகமான) ப்ரஹ்மசர்யத்தையும், குறள் - வாமநத்வத்தையுமுடைத்தான, கோலம் - தர்ஸநீயவிக்ரஹத்தையுடையனுன், பிரான் - மஹோபகாரகனுடைய, மலர்-மலர்த்தியையுடைய, தாமரை - தாமரைபோலே போக்யமான, பாதங்கள் - திருவடிகளை, கனி - கனிபோலேபழுத்த, வாய் - அதரஸோபையையுடையராம்படி முகமலர்ந்து, மடவீர் - எனக்கு விதேயைகளாய்ப்போந்தவர்களே! வினையேன்-(என்னினைவுக்கிடாகப் பரிமாறப்பெறாத) பாபத்தையுடையேனான நான், காண்பது-காண்பது, என்றுகொலோ - எந்நாளாயிருக்கிறதோ?

இ.—ஆறும்பாட்டில், திருவல்லவாழிலேநின்றருளின ஸ்ரீவாமநனுடைய போக்யமானதிருவடிகளை நான்காணப்பெறுவதென்றோ? என்கிறாள்.

[காண்பதென்றுகொலோ] - பிறக்கும் "ஐயோ!" என்னும் தசையோவிது, கண்கள்செய்தபடிசெய்ய, நான்காணப்பெறுவதென்றோ வென்கிறாள். கன்று வேறு, தாய் வேறாக்கும் விஷயமிறே. "ப்ரஜைபட்டதுபடுகிறது, நான் பசிதீரும்வழியென்" என்பாரைப்போலே. [வினையேன்] - கண்கள் விடாய்க்கன்றிக்கே, என்விடாய்க்கன்றிக்கே அலமாக்கும்படியான பாபத்தைப் பண்ணினேன். [கனிவாய்மடவீர்] - இப்போதை யுருவுதல்தீர்ந்து பண்டுபோலே உங்களைக் காணவல்லேனேயென்றுகருத்து. "வண்ணந்திரிவுமனங்குழைவும்" என்று, இவள் துவண்டிருக்க தத்காலீநவிஸேஷணமாகக்கூடாதிறே. [பாண்குரல் இத்யாதி] - பாண்-பாட்டு. மாதுர்யாதிசயமாகையாலே நல்லமிடற்றோசையையுடைய வண்டோடே. இயலைக்கற்று இசையோடேகூட்டுகையன்

றிக்கை, பாட்டாயிருக்கை. [பசுந்தென்றலுமாகியெங்கும்] - சோலையெங்கும் இளந்தென்றல் ஸஞ்சரிக்கை. பசுந்தென்றல் - கலப்பற்ற தென்றலென்றுமாம். "வஹதெ கேஸரஸம்ஸ்ருஷ்டா வ்ருக்ஷாஸ்ரவிநிஸ்ஸ்ருத: । நிஸ்வாஸஜவஸீதாயா வாயு:...
நோநஸா:". [சேண்சினையோங்குமரம்] - மழையாலே மரங்கள் பணைக்குமாப்போலே. தென்றலாலே உயர்ந்த பணைகளையுடையவாய்க்கொண்டு வளராநின்றுள்ள மரங்களையுடைத்தாகை. பணைக்கு ஓக்கம் - சுற்றிலேவளருகை, மரத்துக்கு ஓக்கம் - மேலே வளருகை. [செழுங்கானல்] - தர்ஸநீயமான கானல். கானலென்று - கடற்கரைச்சோலையாதல், நெய்தல்நிலமாதல். [மாண்குறள்கோலப்பிரான்] - தன்னுடைமைபெறுகைக்குத்தானர்த்தியாய் வடிவைக் குறுகவிட்டு மிக்கவழகையுடையனுய், ஸௌலப்யத்தையும் அழகையும் திருவல்லவாழிலே ஆஸ்ரிதரையநுபவிப்பித்துக்கொண்டு நிற்கிறவனுடைய நிரதிஸயபோக்யமான திருவடிகளை - காண்பதென்ஞான்றுகொலோ. மலர்த்தாமரை - அப்போதலர்ந்த செவ்வித்தாமரை.

ஈடு.—ஆறும்பாட்டு. திருவல்லவாழிலே நின்றருளின ஸ்ரீவாமநனுடைய போக்யமான திருவடிகளை நான் காண்பதென்றோவென்கிறாள்.

[காண்பதென்ஞான்றுகொலோவினையேன்] - ப்ரஜைகள்செய்தபடிசெய்ய, நான் முன்னம் என்பசிதீர்வதென்றோ. [வினையேன்] - லோகவிஸஜாதீயமான பாபத்தைப் பண்ணினேன். காணுமைக்குப்பாபம்பண்ணினுருங்கூடக்காணும்படியான விஷயத்தை, காண்கைக்கு யோக்யதையுண்டாய்வைத்தே காணுதபடியான பாபத்தைப் பண்ணினேன். * மாண்குறட்கோலப்பிரானிறே. [காண்பதென்ஞான்றுகொலோவினையேன்]- நீங்கள்காட்டுகைக்கு த்வரிக்க ஆறியிருக்கக்கடவநான், இன்று "காண்பதென்ஞான்றுகொலோ" என்னும்படியான பாபத்தைப் பண்ணினேன். [கனிவாய்மடவீர்] - உங்களை நான் பண்டுபோலே காண்பதென்றோ. "ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்" (ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தம்)

---

ப்ர:—(கனிவாய் மடவீர்) ஸமவஸ்தாஸம்வஸ்தே, "தேஷாம்ஜ்ஞாநீநித்யயுக்த ஏகபக்திர்விஸிஷ்யதே । ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்ஸசமமப்ரிய: ।".

---

ஆறும்பாட்டு.—காண்பது இத்யாதி. "மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்கள் - காண்பதென்ஞான்றுகொலோ" என்றதைக்கடாக்ஷித்து அவதாரிகை - திருவல்லவாழிலே இத்யாதி.

கீழ் - கண்களின்விடாயைச்சொல்லி, அநந்தரம் தம்விடாயைச்சொன்னதுக்கு ஸாவம் - ப்ரஜைகள் இத்யாதி. தீருவது - தீர்த்துக்கொள்வது. விவரணம் - காணுமைக்கு இத்யாதி. பாபம் பண்ணினுரென்றது - மஹாபலிபோல்வாரை. அப்படி பாபம்பண்ணினவர்களும் அவனைக்கண்டார்களோ? என்ன - மாண்குறள் இத்யாதி. "வினையேன்" என்றதுக்கு ஸாவார்த்தம் - நீங்கள் இத்யாதி. அன்றிக்கே, காணுமைக்கு இத்யாதிவாக்யமும் - ஓரர்த்தமாய், இது - மூன்றுமர்த்தமாதல். இப்பக்ஷத்தில், முந்தினவர்த்தத்துக்கு, லோகவிஸஜாதீயமானவென்றது - * கழிபமிக்கதோர்காதலாயிருக்கை. "கனிவாய்மடவீர்" என்றதை - தத்காலீநவிஸேஷணமாக்காதே ஸவிஷ்யத்தாக நிர்வஹிக்கிறதுக்கடியேதென்ன; இவளதரம் விவர்ணமாயிருக்க, அவர்களதரம் செவ்விபெற்றிருக்கக்கூடாமையாலே யென்பாராக நினைத்து; இவள்விஷயத்தில் இவர்களுக்குண்டான ஸ்நேஹத்தை த்ருஷ்டாந்தபூர்வகமாகக் காட்டுகிறார் - ப்ரியோஹி இத்யாதி. அதாவது - ஜ்ஞாநியானவன்விஷயத்தில் ஈஸ்வரன் மிகவும் ஸ்நேஹித்திருக்குமாபோலே, இவர்களும் இவள்விஷயத்திலே அதிஸ்நிக்தைகளாயிறே

என்னும்படியிறே அவர்களிருப்பது. இவள் * மாசுடையுடம்போடுதலையுலறி வாய்ப்புறம் வெளுத்திருக்க அவர்கள் தங்களைப்பேணியிரார்களே. அவர்கள் பண்டுபோலேயிருக்கக்காண்கையும் இவளுக்கு ப்ரார்த்யமானபடி. [பாண்குரல்வண்டினேடு] - இவற்றின் த்வநியில் வெள்ளோசையாய்க்கழியுண்பதில்லை, பரப்படங்கலும் பாட்டாயிருக்கும். அதாவது-இயல் கற்று இசையோடேகூட்டிற்றன்றே அவற்றுக்கு, பேச்சேதோடங்கி யிசையிறே. "தேன் போலேஇனியபாட்டு" என்னக்கடவதாயிருக்குமதுபோய், வடிவே தேனாய் அதுக்குமேலே பாட்டுமானால் மிகவும் இனிதாயிருக்குமிறே. பாண்குரல்-ராகரூபமானமிடற்றோசை. [பசுந் தென்றலுமாகி யெங்கும்] - கலப்பற்றதென்றலுமாயிருக்கை. பலவிடங்களிலே காலிட்டுவாராதே †தாய்தலையாயிருக்கை. [பசுந்தென்றல்] - இளந்தென்ற லென்றுமாம். [சேண்சினை இத்யாதி] - கவடுகளானவை சுற்றிலேபணைத்திருப்பனவாய் மேலோக்கத்தையுடைத்தான மரங்களையுடைத்தாகையாலே, அழகியசோலையையுடைய. [செழுங்கானல்]-தர்சநீயமான கானல். கானலென்று - கடற்கரைச்சோலையாதல், நெய்தல்நிலமாதல். சேண் - உயர்த்தி. சினை - கவடு. பணைக்கு ஓக்கம்-சுற்றிலேவளருகை. மரத்துக்கு ஓக்கம்-மேலே.[மாண்குறள் கோலப்பிரான்] - தன்னுடைமைபெறுகைக்குத் தான் அர்த்தியாய், பெருவிலையனவடிவைச் சிறுகவிட்டு மிக்கவழகையுடையவனாய், ஸௌலப்யத்தையும் அழகையும் திருவல்லவாழில் ஆஸ்ரிதரையநுபவிப்பித்துக்கொண்டு நிற்கிறவனுடைய நிரதிசயபோக்யமான திருவடிகளை - காண்பதென்ஞான்றுகோலோ. [மலர்த்தாமரைப்பாதங்கள்] - அப்போதலர்ந்த தாமரைபோலே நிரவதிகபோக்யமான திருவடிகளை. அடியிலே இவர்க்குத் தானேயிறே

யிருப்பதென்றபடி. இப்படி அதிஸ்நிக்தகளாகையாலே, இவளதரம் விவர்ணமாயிருக்க அவர்களதரம் நிறம்பெற்றிருக்கக்கூடாதென்கிறார் - இவள் மாசுடை இத்யாதி. இவள் அவனைப்பிரிந்த ஸமயத்திலே அவர்களதரம் உருவினவுறைப்பை யருளிச்செய்கிறார் - அவர்கள்பண்டு இத்யாதி. மாசுடை இத்யாதி-ஸ்நாநமின்றிக்கே அழுக்குடையவுடம்போடே தலைமயிரையுமுதறி அதரமும்வெளுத்து ஏகபுக்தமாய்க் கொண்டு என்றபடி. உலறி - உதறி. அதாவது - மயிரைப்பேணாதே யென்றபடி. குரலென்னாதே, "பாண்குரல்" என்று விசேஷித்ததுக்குபாவம் - இவற்றின் இத்யாதி. வெள்ளோசையாய்-அஸாரமாய். வெள்ளோசை - அஸாரம்ஸம். பாண் - ராகம். பாட்டாயிருக்குமென்றது - ராகமாயிருக்குமென்றபடி. பேச்சேதோடங்கி இசை என்றத்தால்பலிதம் - நிரதிசயபோக்யத்வமென்று விவக்ஷித்து, அதின் சரமாவதி - தேன்போலே இத்யாதி. தேனென்று - வண்டுக்குப்பேர். "எங்கும் - பாண்குரல் வண்டினெடு, எங்கும்-பசுந்தென்றலுமாகி" என்றுகூட்டுவது. பசுந்தென்றல்-செவ்வித் தென்றல் என்று அர்த்தம்விவக்ஷித்து,அதுக்குச்செவ்வியேதென்ன-கலப்பற்ற இத்யாதி. "கலப்பற்ற" என்றத்தை விவரிக்கிறார் - பலவிடங்களிலே இத்யாதி. பலவிடங்களிலே காலிட்டுவாராதேயென்றது - பலஸரீரங்களிலேபட்டு அந்ததர்க்கந்தம் கலசிவாராதேயென்றபடி. தாய்தலைத்தென்றலாயிருக்கையென்றது - மேல்வருகிற தென்றலுக்கெல்லாம் தாயாய், முந்திவருகிறபோதே இங்கேவருமதாயிருக்கையென்றபடி. சினை - கவடு. ஶாகை இத்யர்த்தஃ. சேண் - உயர்த்தி. உயர்ந்தபணைகளையுடைய வென்றபடி. நெய்தல்நிலம் - ஸமுத்ரப்ராந்தம். ஸௌலப்யத்தையும் அழகையுமென்றது - "மாண்" என்றத்தையும், 'கோலம்" என்றத்தையும்பற்ற. வாமனனைச்சொன்னதுக்குபாவம் - தமக்குத் திருவடிகளிலே ருசிபிறந்தது அவன்க்ருபையாலேயென்று திருவுள்ளம்பற்றி-அடியிலே இவர்க்குத் தானேயிறே ருசியையுண்டாக்கினான் என்கிறார். பலபாட்டுக்களிலும் திருவடிகளைச் சொன்னதுக்கு பாவம் - அடிகள் இத்யாதி. கனிவாய்மடவீர், எங்கும் - பாண்குரல்வண்டினெடு - எங்கும் - பசுந்தென்றலுமாகி என்றதொடங்கி, பாதங்கள் - காண்பதென்ஞான்றுகொலோ வினையேன் இத்யந்வயஃ.

† 'தாய்தலைத்தென்றலாய்' என்று பாடாந்தரம்.

ருசியையுண்டாக்கின்றன். "அடிகள், அடிகள்" என்று வாய்புலற்றும்படியிறே திருவடிகளில் போக்யதையிருப்பது. (சு)

## ஏழாம் பாட்டு.

பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல்!பாவைநல்லீர்!
ஓதநெடுந்தடத்துள் உயர்தாமரைசெங்கழுநீர்
மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்துந்திருவல்லவாழ்
நாதனிஞ்ஞாலமுண்ட நம்பிரான்தன்னைநாடோறுமே.

ஆ.—(பாதங்கள்.) தன்மநோரதத்தை நிஷேதியாமையாலே தோழிமாரை யுகந்து ஸம்போதிக்கிறாள். கடல்போலே பெருத்திருந்துள்ள பொய்கைகளிலே வளர்ந்த தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும், ஸ்த்ரீகளுடைய அழகியமுகங்களோடும் கண்களோடும் ஒக்கும்படியான திருவல்லவாழுக்கு நாயகனாய், ஜகத்தையெல்லாம் ப்ரளயத்தில் தன்வயிற்றிலேவைத்துப் பரிஹரித்தருளி, அவ்வளவுமன்றிக்கே ஆஶ்ரிதர்க்கு மிகவும் உபகாரகனானவனுடைய திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழவல்லோமோ

ஒ.—ஏழாம்பாட்டில், திருவல்லவாழில் நின்றருளின எம்பெருமான் திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழவல்லோமே யென்கிறாள்.

[பாவைநல்லீர்] - தன்மநோரதத்தை நிஷேதியாமையாலே தோழிமாரை உகந்து ஸம்போதிக்கிறாள். [ஓதநெடுந்தடம் என்று தொடங்கி] - கடல்போலே பெருத்திருந்துள்ள பொய்கைகளிலே வளர்ந்த தாமரைப்பூவும் செங்கழுநீர்ப்பூவும் ஸ்த்ரீகளுடைய அழகிய முகங்களோடும் கண்களோடும் ஒக்கும்படியான திருவல்லவாழுக்கு நாயகனாய் ஜகத்தையெல்லாம் ப்ரளயகாலத்தில் தன் திருவயிற்றிலே வைத்துப் பரிஹரித்தருளினவன், அவ்வளவன்றிக்கே ஆஶ்ரிதர்க்கு மிகவும் உபகாரகனானவனை.

ப.—அநந்தரம், தர்ஶநீய தடாகங்களையுடைய திருவல்லவாழுக்கு நிர்வாஹகனை ஆபத்ஸகன் திருவடிகளிலணிந்த பூவையாகிலும் தொழக்கூடுமோவென்கிறாள்.

ஓதம்-ஸமுத்ரம்போலே, நெடு-பெருத்த, தடத்துள் - தடாகங்களுக்குள்ளே, உயர்-உயர்ந்த, தாமரை - தாமரையும், செங்கழுநீர் - செங்கழுநீரும், மாதர்கள் - மாதருடைய, வாள்-ஒளியையுடைத்தான, முகமும்-முகத்தழகையும், கண்ணும்-கண்ணழகையும், ஏந்தும்-ஹரிக்கும்படியான, திருவல்லவாழ் - திருவல்லவாழுக்கு, நாதன் - ஸ்வாமியாய், இ-இந்த, ஞாலம் - ஜகத்தை, உண்ட-ப்ரளயங்கொள்ளாதபடி வயிற்றிலேவைத்து நோக்கின அபதாநத்தாலே, நம்-நமக்கு, பிரான்தன்னை - உபகாரகனென்றுதோன்றவிருக்கிறவனை, நாடோறும் - நித்யமாக, பாவை-பாவைபோலே, நல்லீர்-அவயவங்களினுடைய வகுப்பழகையுடைய விலக்ஷணஸ்வபாவைகளே! பாதங்கள் - திருவடிகளின், மேல் - மேலே, அணி-அணிந்த, பூ-பூவையாகிலும், தொழ-தொழ, கூடுங்கொல்-கூடுமோ?

---

"தேஷாம் ஜ்ஞாநீ நித்யயுக்த ஏகபக்திர்விஶிஷ்யதே । ப்ரியோ ஹி ஜ்ஞாநிநோத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய:" இதி ஶ்ரீபகவத்கீதாஸு ஸ்ருதே:. (சு)

இ.—ஏழாம்பாட்டில், அவன்திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழவல்லோமோவென்கிறாள்.

[பாதங்கள் இத்யாதி]-"பாதங்கள்மேலே நித்யமாகப் பூவையணிந்து தொழக் கூடவற்றே" என்று நிர்வஹிப்பர் ஜீயர். அணி-அணிந்து. பூ-பூவை. "பாதங்களைப் பூ மறைத்தலில் அப்பூவையாகிலும் தொழவற்றே" என்று ஒருதமிழன். "ஸ்வாபாவிக மானவழகுக்குமேலே அழகிதாக அலங்க்ருதமான திருவடிகளைக் கூடவற்றே" என்று அருளிச்செய்வர் பிள்ளை. பூ-அழகு. அணி-அலங்காரம். மேலே - பூ-அணி-பாதங்களை. [பாவைநல்லீர்] -இவள்தசையைக்கண்டு விஸ்நிமேஷய க்ஷமைகளன்றிக்கே ஸ்திமிதைகளா யிருந்தபடி. நிமேஷஸ்யாமையாலே யுகந்து ஸம்போஸ்க்கிறளென்றுமாம். [ஓதம் இத் யாதி] - கடல்போலே பெருத்தபொய்கைகளிலே யடியுயரத்தாலேயுயர்ந்த தாமரை களும் செங்கழுநீரும், ஸ்த்ரீகளுடைய ஒளியையுடைத்தான முகத்தையுங்கண்ணையும், ஏந்தும் - ப்ரகாஶிப்பியாநின்றதென்னுதல், தோற்பிக்கு மென்னுதல். [திருவல்லவாழ் நாதன்] - ஸ்ரீவைகுண்டநாதனிலேற்றம். ஒருவர்கூறை யெழுவருடுக்கிற தேஶத்திலே தரிசறவிருக்கிற இடமிறே இங்கு; குறைவற்றவர்களுக்கு ஸந்நிதிபண்ணின மாத்ர மிறே அங்கு. [இஞ்ஞாலமுண்ட] - தன்மேன்மை பாராதே ஆபத்துக்களிலே தளர்ந்தார் தாவளம். [நம்பிரான்] - நம்மை ஸம்ஸாரார்ணவம் கொள்ளாமல் எடுக்குமவன். நம்பி ரான்தன்னை நாடொறும் - பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல்.

ஈடு.—ஏழாம்பாட்டு. அவன்திருவடிகளிலே நித்யமாகப் பூவையணிந்து தொழவல்லோமே யென்கிறாள்.

[பாதங்கள்மேலணிபூந்தொழக்கூடுங்கோல்] - திருவடிகளின்மேலே புஷ்பங் களையணிந்து நமக்குத்தொழக்கூடவற்றே. [பாவைநல்லீர்] - இவளை நிமேஷிக்கைக்கு க்ஷமைகளன்றிக்கே ஸ்திமிதைகளாயிருந்தபடி. எழுதினபாவைபோலே யிருந்தார்கள். நிமேஷியாமையாலே யுகந்து ஸம்போஷிக்கிறளாகவுமாம். [ஓதம் இத்யாதி] - கடல் போலேபெருத்திருந்துள்ள தடாகங்களினுள்ளே, ஓக்கத்தையுடைத்தான தாமரைசெங்கழு நீரானவை, அவ்வூரில் ஸ்த்ரீகளுடைய ஒளியையுடைத்தான முகத்தையும் கண்ணையும் ஜயியாநின்றன. † (ப்ரகாஶிப்பியாநின்றதேன்றபடி.) அன்றிக்கே, திருவோலக்கத்திற்படியே

---

ஏழாம்பாட்டு.—பாதங்கள் இத்யாதி. "நாடொறும் - பாதங்கள்மேலணிபூந்தொழக்கூடுங் கொல்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - அவன்திருவடிகளிலே இத்யாதி.

"பாவைநல்லீர்" என்றதுக்கு மூன்றர்த்தம். அதில் முந்தினது - இவளை இத்யாதி. அதா வது - மரப்பாவைபோலே நிமேஷிக்க க்ஷமைகளன்றிக்கேயிருக்கிற நல்லீரென்றபடி. இரண்டாவது - எழுதினபாவை இத்யாதி. அதாவது - கொல்லிமலையிலெழுதினபாவைபோலே அவயவங்களினுடைய வகுப்பழகையுடைய நல்லீரென்றபடி. மூன்றுவது - நிமேஷஸ்யாமையாலே இத்யாதி. அதாவது - பாவைபோலே பாதந்த்ரைகளான நல்லீரென்றபடி. நல்லீர் - விலக்ஷணஸ்வபாவைகளே. இது அர்த்தத்ரயத்துக்குமொக்கும். பாவை - மரப்பாவையாதல், கொல்லிமலையிலெழுதினபாவையாதல். பாவை - ப்ரதிமை. பாவை என்று - ஸ்த்ரீகளுக்கும்பேர். இப்போது, பெண்களில் நல்லரானவர் களே யென்றபடி, இது மூன்றுமர்த்தத்துக்குச்சேரும். அதாவது - கீழ்ச்சொன்னபடியே பாவை போலே பாதந்த்ரைகளான நல்லீரென்னுதல்; பாவைகளில் - பெண்களில், நல்லரானவர்களேயென்னு தல். ஏந்துகை - ஜயிக்கை. அதாவது - ஸாத்ருஶ்யத்தைவஹிக்கை: த்விதீயார்த்தத்துக்கு, ஏந்துகை -

---

† குண்டலிதம் வ்யாக்யாந விருத்தம்.

அவற்றைத்தள்ளும்படியாயிருக்கை. ‡ (திருவோலக்கத்தில் அலங்காரார்த்தமான தாமரைகளை நிராகரிக்குமென்றபடி.) [யாதர்கள் வாண்முகமும் கண்ணுமேந்தும்] - ஊருக்கும் வயலுக்கும் வாசிதெரிகை அரிதாயிருக்கை. [திருவல்லவாழ்நாதன்] - ஸ்ரீவைகுண்டநாதனிலேற்றம். ஸ்ரீவைகுண்டத்துக்குக் கடவனாயிருக்கிறது - அந்தஃபுரத்துக்குக்கடவனென்கிறமாத்ரமிறே, * ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்ப இருக்கிறவிடமிறே; இது அங்ஙனன்றிக்கே, ஒருவர்கூறையை யெழுவருடுக்கிறதேசத்தில் தரிசறவிருக்கிறவிடமிறே. [இஞ்ஞாலமுண்ட] - மேன்மைபாராதே தளர்ந்தார்தாவளமாயிருக்கும். ஆபத்தே செப்பேடாக வயிற்றிலேவைத்துநோக்கும். அது கதையில் கேட்கவேண்டியிருந்ததோ, [நம்பிரான்] - ஸம்ஸாரப்ரளயங்கொண்ட என்னை எடுத்து இவ்வளவாக்கி யுபகரித்தவன். நாடொறும் - பாதங்கள்மேலணி பூந்தொழக்கூடுங்கொல். (எ)

## எட்டாம் பாட்டு.

நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்?நன்னுதலீர்!
ஆடுறுதீங்கரும்பும் விளைசெந்நெலுமாகியெங்கும்
மாடுறுபூந்தடஞ்சேர் வயல்சூழ்தண்திருவல்லவாழ்
நீடுறைகின்றபிரான் நிலந்தாவியநீள்கழலே.

*ஆ.—(நாடொறும்.) [நன்னுதலீர்] - பூர்ணாங்க வாங்மனஸ வைராக்யமுடைகளாக உங்களைக்காண்பதென்றோ. எப்போதும் பக்வபலமாய் அருகேயிருக்கிற பூத்தபொய்கைகளோடுசேர்ந்த வயல்சூழ்ந்து ப்ரமஹ்ரமான திருவல்லவாழிலே, அநுக்ரஹஸீலனைக்கொண்டு நிரந்தரவாஸம்பண்ணுகிறவனுடைய, குணகுணநிரூபணம் பண்ணாதே எல்லாரையும் அங்கீகரிக்கக்கடவதாய், ஆஸ்ரிதரிருந்தவிடத்திலேசெல்லும் திருவடிகளை ஸர்வகாலமும் இடைவிடாதே தொழக்கூடவற்றோவென்கிறாள்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், ஸர்வகாலமும் இடைவிடாதே அடிமைசெய்யக் கூடவற்றோ? என்கிறாள்.*

*[நன்னுதலீர்] - பூர்ணாங்கவாங்மனஸவைராக்யமுடைகளாக உங்களைக்காண்பதன்றோ? [ஆடுறுதீங்கரும்புவிளைசெந்நெலுமாகி] - எப்போதும் பக்வபலமாயிருக்கை. [மாடு என்றுதொடங்கி] - அருகேகிட்டியிருக்கிற பூத்தபொய்கைகளோடு*

---

*தள்ளுகை. திருவோலக்கத்திற்படியாவது - பரிஷ்டர்களோலக்கத்திலே அபரிஷ்டர்கள்வந்திருந்தால், க்ரமேண கடத்திவிடுகை. முந்தினவர்த்தத்துக்குஉசிதம் - ஊருக்கும் இத்யாதி. அதிஸயமேதென்ன - ஸ்ரீவைகுண்ட இத்யாதி. தரிசு - பாழ்கிடக்கிறநிலம். தனிசர் என்றுபாடமாகில், தனிசர் - குறும்பர். தாவளமென்று - க்ருஹமாய், ஆதாரமென்றபடி. விவரணம் - ஆபத்தே இத்யாதி. பாவைநல்லீர் இத்யாரப்ய, நம்பிரான்தன்னுடைய - பாதங்கள்மேல் - நாடொறும் - பூவை - அணிந்து - தொழக்கூடுங்கொல் இத்யந்வயஃ. ஒருவர்கூறையை யெழுவருடுக்கையாவது - கலஹத்திலே ஒருவர்புடைவையை ஏழுபேர் பறித்துடுக்கையாதல், தாரித்ர்யத்தாலே ஒருத்தன்புடைவையை ஏழுபேருடுக்கையாதல்.* (எ)

---

‡ குண்டலிக்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.

சேர்ந்த வயல் சூழ்ந்து ஶ்ரமஹரமான திருவல்லவாழிலே அநுக்ரஹஶீலனாய்க்கொண்டு நிரந்தரவாஸம்பண்ணியருளுகிறவனுடைய குணாகுணநிரூபணம்பண்ணாதே எல்லாரையும் அங்கீகரிக்கக்கடவதாய் ஆஶ்ரிதர் இருந்தவிடத்திலேசெல்லும் திருவடிகளை.

ப.—அநந்தரம், அழகியவிளைநிலங்களாலே சூழப்பட்ட திருவல்லவாழிலே நித்யவாஸம்பண்ணுகிறவனுடைய, ஸகலஸம்ஶ்லேஷ ஸ்வபாவமான திருவடிகளை நிரந்தராநுபவம் பண்ணக்கூடுமோவென்கிறாள்.

எங்கும் - ஸர்வப்ரதேசத்திலும், ஆடு-ஆடுதலை, உறு-உறும்படி, [illegible]ய, கரும்பும் - கரும்பும், விளை-முதிரவிளைந்த, செந்நெலும் - செந்நெலும், ஆகி-ஆய், மாடு-பரிஸரத்தை, உறு-அணுகின, பூந்தடம் - பூத்ததடாகங்களை, சேர் - சேர்ந்த, வயல்-வயலாலே, சூழ் - சூழப்பட்ட, தண்-குளிர்ந்த, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, நீடுறைகின்ற - நிரந்தரவாஸம்பண்ணுகிற, பிரான் - மஹோபகாரகனுடைய, நிலம் - பூமியை, தாவிய - அளந்துகொண்டு, நீள் - எல்லார்தலையிலும் சென்றுபொருந்தும்படி வளர்த்தியையுடைத்தான, கழல்-திருவடிகளை, நல்-தத்ப்ரணமத்தாலே தர்ஶநீயமாம்படியான, நுதலீர் - நுதலையுடையவர்களே! நாடொறும் - நாடோறும், வீடு - க்ஷணவிச்சேதம், இன்றியே - இன்றியே, தொழக்கூடுங்கொல் - தொழக்கூடுமோ?

இ.—எட்டாம்பாட்டில், ஸர்வஸுலபனானவன் திருவடிகளிலே ஸர்வகாலமும் இடைவிடாதே அடிமைசெய்யக்கூடவற்றேயென்கிறாள்.

[நாடொறும் இத்யாதி] - நாடொறுமென்று - தர்ஶபூர்ணமாஸாதிகளை வ்யாவர்த்திக்கிறது. வீடின்றியேயென்று - நித்யாக்நிஹோத்ரத்தை வ்யாவர்த்திக்கிறது. "ஒழிவில்காலமெல்லாம் உடனாய்மன்னி" என்றிறே இவர்ப்ரார்த்திப்பது. ஆசார்யோபதேஶத்தை விஶ்வஸித்து அபேக்ஷிக்கிற நம்மைப்போலேயன்றியிலே, தாஸ்யம்ரஸித்து ராகத்தாலே யபேக்ஷிக்கிறாரிறே. [நன்னுதலீர்] - அவன் வந்தவுபகாரத்துக்கு அவன் திருவடிகளிலேவிழுந்து [illegible]டைகளான உங்களைக்காண வல்லேனே. நுதல்-நெற்றி. இவனுக்குக்கைங்கர்யத்தில் உகப்புப்போலே, இவள்பேறே தங்களுக்கு உகப்பாயிருக்குமவர்களிறே. நீங்களும் உங்கள் ஸ்வரூபம்பெற்று, நானும் என் ஸ்வரூபம்பெறுவதென்றோ. [ஆடுறுதீங்கரும்பும்] - கரும்புகளும் ஆட ப்ராப்தமாயிருக்கும். தீ-தித்திப்பு. செந்நெலும் அறுக்கப்ராப்தமாயிருக்கும். அவ்வூரில் பதார்த்தங்கள் எப்போதும் பக்வபலமாயிருக்குமென்கை. [மாடு இத்யாதி] மாடு-பர்யந்தம். பர்யந்தத்திலேகிட்டின பூத்ததடாகங்களும், அத்தோடுசேர்ந்த வயலையுடைத்தாய் ஶ்ரமஹரமான திருவல்லவாழிலே நித்யவாஸம்பண்ணுகிற மஹோபகாரகன். பரமபதத்திற்போலே, ஸம்ஸாரிகளுக்கு அடிமையிலே யபேக்ஷைபிறந்தபோது அநுபவிக்கைக்கு நித்யவாஸம்பண்ணுகிறதேசம். குணாகுணநிரூபணம்பண்ணாதே, ஶேஷபூதரிருந்த இடமேயெல்லையாக வளரும் திருவடிகளை - நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்.

ஈடு.—எட்டாம்பாட்டு. ஸர்வஸுலபனானவன் திருவடிகளிலே ஸர்வகாலமும் இடைவிடாதே அடிமைசெய்யக்கூடவற்றேயென்கிறாள்.

---

எட்டாம்பாட்டு.—நாடோறும் இத்யாதி. "நீடுறைகின்றபிரான் நிலந்தாவியநீள்கழல் - நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - ஸர்வஸுலபனான இத்யாதி.

[நாடோறும் இத்யாதி] - நாடோறுமென்று - தர்ஶபூர்ணமாஸாதிகளை வ்யாவர்த்திக்கிறது. வீடின்றியேயென்று - நித்யாக்நிஹோத்ரத்தை வ்யாவர்த்திக்கிறது. "ஒழிவில்காலமெல்லாம்" என்கிறபடியேயிறே இவர் ப்ரார்த்திப்பது. ஆசார்யோபதேஶத்தை விஶ்வஸித்து அபேக்ஷிக்கிற நம்மைப்போலன்றியே, தாஸ்யம்ரஸித்து ராகத்தாலே யபேக்ஷிக்கிறரிறே. [நன்னுதலீர்] - அவன்வந்தவுபகாரத்துக்கு அவன்திருவடிகளிலே விழுந்து ஆனந்தபரவஶையாய் ஸஹ்ருதயைகளாக உங்களைக்காணவல்லலேனே. "தலையில் வணங்கவுமாங்கொலோ" என்று தொழக்கடவளே, அப்போது இவர்களும் தொழுவர்களே; இவளுக்குக் கைங்கர்யத்தில் உகப்புப்போலே, இவள்பேறே தங்களுக்கு உகப்பா யிருக்குமவர்களே. [ஆடுறுதீங்கரும்பும்] - கரும்புகள் எப்போதும் ஆடுகையிலே யுற்றிருக்கை. தீ - தித்திப்பு. செந்நெலும் எப்போதும் அறுக்கைக்குப் பக்வமாய் விளைந்து கிடக்கை. அங்குள்ளவையடைய பக்வஃபலமாய்க்காணு மிருப்பது. [மாடுறுபூவித்யாதி] - அருகேயுற்றிருப்பதாய்ப் பூக்களையுடைத்தான தடாகங்களைச்சேர்ந்த வயல்களாலே சூழப்பட்டிருப்பதாய் ஶ்ரமஹரமான திருவல்லவாழிலே. ஊரைத் தடாகங்கள்சூழ்ந்து, தடாகங்களை வயல்கள்சூழ்ந்திருக்க, இப்படிகளாலே குளிர்ந்துகாணும் ஊர்தானிருப்பது. [நீடு இத்யாதி] - குணகுணநிரூபணம்பண்ணாதே எல்லார்தலைமேலும் பொருந்தும்படி ஸுலபமானதிருவடிகளைக்கொண்டு, அவதாரம்போலே தீர்த்தம்ப்ரஸாதியாதே நித்யவாஸம் பண்ணுகிற உபகாரமே இங்குத்தைக்குத்தன்னேற்றம். நிலந்தாவியநீள்கழல் - நாடோறும் வீடின்றியேதொழக்கூடுங்கொல். (அ)

## ஒன்பதாம் பாட்டு.

கழல்வளைபூரிப்பயாங்கண்டு கைதொழக்கூடுங்கொலோ?
குழலென்னயாழுமென்னக் குளிர்சோலையுள்தேனருந்தி
மழலைவரிவண்டுகளிசைபாடும் திருவல்லவாழ்
சுழலின்மலிசக்கரப்பெருமானது தொல்லருளே.

**ஆ.**—(கழல்வளை.) குளிர்ந்தசோலைகளிலேபுக்கு மதுபாநத்தைப்பண்ணி, குழலோசையென்னவும் யாழோசையென்னவுமாம்படி, முக்தமாய்க் கண்ணுக்கு அழகிய

---

தர்ஶபூர்ணமாஸம் - பக்ஷந்தோறுமிஷ்டி. "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத் தர்ஶபூர்ணமாஸாப்யாம் யஜேத" ; இது - நித்யாக்நிஹோத்ரம். ஒருகால்தொழுதாற்போராதோ, "நாடோறும்வீடின்றி" என்கிறதென்? என்ன - ஒழிவில் இத்யாதி. நமக்கு இப்படி யபேக்ஷை பிறக்கவில்லையேயென்ன ஆசார்ய இத்யாதி. தன்தசையைக்கண்டு உருவியிருக்கிறவர்களை - "நன்னுதலீர்" என்னக்கூடுமோ? என்ன - அவன்வந்த இத்யாதி. தோழிமார் வணங்குவர்களோ? என்ன - தலையில் இத்யாதி. ஆடுறு - ஆலையாடுகைக்கு பக்ஷமாயிருக்கை. ஆடுகையிலே யுற்றிருக்கையென்றது - ஆலையாடுகையிலேயொருப்பட்டிருக்கை. ஃபலிதம் - அங்குள்ளவை இத்யாதி. அதாவது - நாம் சேருகையேதாமஸம், அவன் நம்மையநுபவிப்பிக்குமென்றபடி. மாடுறு - பர்யந்தத்திலேகிட்டியிருக்கை. தண்மைக்குஹேது - ஊரை இத்யாதி. குணகுணேத்யாதி வாக்யத்துக்குக் கருத்து - ஸௌலப்யம் வாமநனுக்கும் இவனுக்கும் ஸமாநம், நீடுறைகின்றதே இங்குத்தைக்குத் தன்னேற்றமென்று. ஆடுறு இத்யாரப்ய, நீள்கழல் - நன்னுதலீர் - நாடோறும் வீடின்றியேதொழக்கூடுங்கொல் இத்யந்வயம். (அ)

வானவண்டுகள் ப்ரீத்யதிஶயத்தாலே இசைபாடாநின்றுள்ள திருவல்லவாழிலே, ப்ரதி கூலநிரஸநத்வரையாலே மிகவும் சுழன்றுவாராநின்றுள்ள திருவாழியை யரித்துக் கொண்டுநின்ற ஸர்வேஶ்வரனை, நம்முடைய கழலுகிறவளைகள் பூர்ணமாகக் கண்டுதொழ லாம்படி அவனருள்கூடவற்றேவென்கிறாள்.

ஓ.—ஒன்பதாம்பாட்டில், நம்முடைய கழலுகிறவளைகள் பூர்ணமாம்படி அவ னைக்கண்டுதொழலாம்படி அவனருள்கடவற்றே யென்கிறாள்.

[குழல் என்றுதொடங்கி] - குளிர்ந்த சோலைகளிலேபுக்கு மது⁴பாநத்தைப் பண்ணி, குழலோசையென்னவும் யாழோசையென்னவுமாம்படி முக்³மாய் கண்ணுக்கு அழகியவான வண்டுகள் ப்ரீத்யதிஶயத்தாலே இசைபாடாநின்றுள்ள திருவல்லவாழிலே நின்றருளுவதும்செய்து ப்ரதிகூலநிரஸநத்வரையாலே மிகவும் சுழன்றுவாராநின்றிருந் துள்ள திருவாழியையுடைய ஸர்வேஶ்வரனுடைய. [சுழலின்மலிசக்கரம்] - சுழலுவது போலத் துளங்காநின்றுள்ள சக்கரமென்னவுமாம். [தொல்அருள்] - ஸ்வாபா⁴விகமான அருள்.

ப.—அநந்தரம், மது⁴பாநமத்தமான வண்டுகளாடும் திருவல்லவாழில் கையுந் திருவாழியுமான ஸர்வேஶ்வரனுடைய க்ருபையானது, நாம் அவனை யநுப⁴விக்கும்படி லப்யையாகவற்றேவென்கிறாள்.

குளிர் - குளிர்ந்த, சோலையுள் - சோலையிலே, தேன் - மதுவை, அருந்தி - பாநம்பண்ணி, மழலை - முக்தங்களாய், வரி - வரியையுடைத்தான, வண்டுகள் - வண்டு களானவை, குழலென்ன - குழலென்றுசொல்லும்படியாகவும், யாழென்னவும் - யா ழென்றுசொல்லும்படியாகவும், இசை - இசை, பாடும் - பாடாநிற்கிற, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே நிற்பானாய், சுழலில் - ஸ்வதேஜோப்ரமணத்தாலே, மலி - மிகைத் திருக்கிற, சக்கரம் - திருவாழியையுடையனான, பெருமானது - ஸர்வேஶ்வரனுடைய, தொல் - ஸ்வாபாவிகமான, அருள் - க்ருபையானது, கழல் - கழலுகிற, வளை - வளை கள், பூரிப்ப - பூரிக்கும்படி, யாம் - நாம், கண்டு - அவனைக்கண்டு, கைதொழ - கை தொழும்படியாக, கூடுங்கொலோ - கிட்டவற்றோ? அருளென்று - உதவியாய், அவ னுடைய உபகாரத்தைக்கண்டு நாம்கைதொழக்கூடுமோவென்றுமாம்.

இ.—ஒன்பதாம்பாட்டில், நம்முடைய கழலுகிறவளைகள் பூரிக்க அவனைக் கண்டு தொழலாம்படி அவனருள்கூடவற்றே யென்கிறாள்.

[கழல்வளை இத்யாதி] - கையில்தொங்காதே கழலுவது இடுவதாகிற வளை. அவன்வந்த ஹர்ஷத்தாலே பூர்ணமாம்படி, விடாய்ப்பட்ட நாம் கண்டுதொழும்படி அவன் இரங்கக்கூடவற்றே. விஶ்லேஷத்தில் வளைகழலுவது தனக்கேயானாலும், காட்சி எல்லார்க் கும் ஒத்திருக்குமிறே. [குழல் இத்யாதி] - குழலென்னவும் யாழென்னவுமாயிருக்கை. "விஷ்ணுநாவஜ்ஞ்யொவீணெ" என்றாப்போலே ஸர்வதா ஸத்ருஶமில்லாமையாலே - கதிர்பொறுக்குகிறாள். நாட்டில் இனியவற்றெல்லாம் சேரக்கேட்டாப்போலேயிருக்கும். குளிர்சோலையிலே குளிருக்கு பரிஹாரமாக மது⁴பாநம்பண்ணி. அருந்தல் - உண்டல். [மழலைவரிவண்டுகள்] - முக்³மாய் தர்ஶநீயமான வண்டுகள் ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடாநின்றுள்ள திருவல்லவாழ். கூட்டும்சொலவுமின்றிக்கே இசையைப்பாடும். [சுழலின் மலிசக்கரப்பெருமான்] - விரோதி⁴நிரஸநத்வரையாலே மிகவும்சுழன்றுவருகிற திருவாழி

*யைக் கையிலேயுடைய ஸர்வேஶ்வரனுடைய. சுழல்வதுபோலத்துளங்கா நின்றுள்ள சக்கரமென்றுமாம். ஸ்வாஹாவிகமான அவன்ப்ரஸாதத்தாலே - கழல்வளைபூரிப்ப யாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ. அவ்வண்டுகள்போலே களித்துஅநுபவிக்கவல்லோமோ.*

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. நம்முடைய கழலுகிறவளைகள் பூரிக்க அவனைக் கண்டுதொழும்படி அவனருள்கூடவற்றேயென்கிருள்.

[கழல்வளைபூரிப்ப] - "வெள்வளை" என்னுமாபோலே, கழல்வளையென்று - வளைக்கு விஶேஷணமாய்விட்டதுகாணும். இவளைக்கைவிடுகையாலேயிறே இதுவிஶேஷணமாகவேண்டிற்று. பூரிப்ப - பூர்ணமாக. அவன்வரில் கைமேலேகாணலாமேயிவற்றை. [யாங்கண்டுகைதொழக்கூடுங்கோலோ] - இதுக்குமேலே க்ரியை. [யாம்] - விஶ்லேஷத்தில் வளைகழலுவது தனக்கேயானாலும் காட்சி எல்லார்க்கும் ஒத்திருக்குமே. [குழலேன்னயாழுமேன்ன] - குழலேன்னவுமாய் யாழேன்னவுமாயிருக்கை. நாட்டிலினியவற்றையெல்லாம் சேரக்கேட்டாப்போலேயிருக்கும். "**விஷ்ணுநாஸத்ருஶோவீர்யேஸோமவத்ப்ரியதர்ஶந:**" (விஷ்ணுநாஸத்ருஶோவீர்யேஸோமவத்ப்ரியதர்ஶந:) என்னுமாபோலே. [குளிர்சோலையுள்தேனருந்தி] - ஶ்ரமஹரமானசோலையிலே குளிருக்குப் பரிஹாரமாகத் தேனைப்பருகி. அருந்தல் - உண்டல். [மழலேவரிவண்டுகள்] - முக்யமாய் தர்ஶநீயமான வண்டுகள், ப்ரீதிக்குப்போக்குவிட்டுப் பாடாநின்றுள்ள திருவல்லவாழ். இதிலேநிற்பானும் [இசைபாடும்] - செருக்கருமாய் ஸுகுமாரருமாயிருப்பார், "மரம்" என்று சந்தநத்தைக்கழித்துப் புழுகுநெய்யையேயிட்டுக்கோண்டு திரியுமாபோலே, இவையும் இயலைவிட்டு இசையையேபாடும். [சுழல் இத்யாதி] - ப்ரதிகூலநிரஸநத்வரையாலே மிகவும் சுழன்றுவாராநின்றுள்ள திருவாழியையுடைய ஸர்வேஶ்வரன். [சுழலின்மலிசக்கரம்] -

---

ப்ர:—(குழலேன்னயாழுமேன்ன)—ஸஜ்ஜவெ, "விஷ்ணுநாஸத்ருஶோ வீர்யேஸோமவத்ப்ரியதர்ஶந: । காலாக்நிஸத்ருஶ: க்ரோதே க்ஷமயாப்ருதிவீ

---

*ஒன்பதாம்பாட்டு.—கழல்வளை இத்யாதி. "கழல்வளைபூரிப்பயாங்கண்டுகைதொழ - பெருமானதுதொல்லருள் - கூடுங்கொலோ" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - நம்முடைய இத்யாதி.*

*விஶேஷணமாகைக்கு ஹேதுவேதென்ன - இவளை இத்யாதி. இவளைக் கைவிடுகையாலே யென்றது - இவளை அவன் கைவிடுகையாலேயென்னுதல், இந்தவளை கையைவிடுகையாலேயென்னுதல். அது பூரிக்கைக்குஹேதுவேதென்ன - அவன்வரில் இத்யாதி. இதுக்குமேலே க்ரியையென்றது - இந்தக்ரியைக்குமேலே யந்வயமென்றபடி. யாழ் - வீணை. குழலேன்னவுமாய் இதி - குழல் போலேயும் வீணைபோலேயுமிருக்கையென்றபடி. "குழலென்னயாழுமென்ன" என்றத்தால்ஃவிதம்-நாட்டில் இத்யாதி. ஒன்றுக்கு அநேகத்ருஷ்டாந்தம் சொன்னவிடமுண்டோ? என்ன - விஷ்ணுநா இத்யாதி. "சுழலின்மலிசக்கரம்" என்றதுக்கு இரண்டுபொருள். அதில் மலி - சுழலில் - சக்கரம் - மிகவும் சுழன்றுவாராநின்றுள்ள சக்கரமென்னுதல்; இத்தையருளிச்செய்கிறார் - ப்ரதிகூல இத்யாதி. இரண்டாவது, உபமார்த்தேபஞ்சமியாய்; சுழல்வதுபோல், மலி - துளங்காநின்றுள்ள, சக்கரமென்னுதல்; இத்தை யருளிச்செய்கிறார் - சுழல்வதுபோல இத்யாதி. மலிதல் - துளங்குதல். துளங்குகையாவது - சலித்தலும், விளங்குதலும். "தொல்லருள்" என்றதுக்கு - அவதாரிகையிலே ஓரர்த்தம், பாட்டின்முடிவிலே ஓரர்த்தம். அவதாரிகைக்குச்சேர; கழல்வளைபூரிப்ப யாங்கண்டுகைதொழும்படி - மழலேவரிவண்டுகள் - குளிர்சோலையுள்தேனருந்தி - குழலென்ன யாழுமென்ன - இசைபாடும் இத்யா*

சுழல்வதுபோலத் துளங்காநின்றுள்ள சக்கரமேன்னவுமாம். [தோல்லருள்] - ஸ்வாஹாவிகமான அருளாலே - கழல்வளேபூரிப்ப யாங்கண்டு கைதொழக்கூடவற்றே. (கூ)

## பத்தாம் பாட்டு.

தோல்லருள்நல்வினையால் சோலக்கூடுங்கோல்?தோழிமீர்காள்!
தோல்லருள்மண்ணும்விண்ணும் தோழநின்றதிருநகரம்
நல்லருளாயிரவர் நலனேந்துந்திருவல்லவாழ்
நல்லருள்நம்பெருமான் நாராயணன்நாமங்களே.

ஆ.—(தொல்லருள்.) தோழிமீர்காள், தன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை ஸம்ஸாரமும் திருநாடுமொக்க அநுஹவிக்கலாம்படியான திருநகரியாய், எம்பெருமான்தன்னிற்காட்டில் அநுக்ரஹஸீலரான ஆயிரவர்தன்னுடைய கல்யாணகுணத்தைக் கொண்டாடும்படியான திருவல்லவாழிலே நின்றருளி, நல்லருளையுடையனுய்க்கொண்டு நமக்கு ஸ்வாமியான நாராயணனுடைய திருநாமங்களை, அவனுடைய ஸ்வாஹாவிகக்ருபையாலே நாம் ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு சொல்லக்கூடவற்றேவென்கிருள்.

ஓ.—பத்தாம்பாட்டில், எம்பெருமானுடைய ஸ்வாஹாவிகமானக்ருபையாலே அவன்தன்னைக்காணப்பெற்று, ப்ரீதியாலே இனிதாய்க்கொண்டு திருநாமங்களைச் சொல்லக்கூடவற்றேரே என்கிருள்.

[தொல்லருள் என்றுதொடங்கி] - தன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை ஸம்ஸாரமும் திருநாடும் ஒக்க அநுஹவிக்கலாம்படியான திருநகரியாயுள்ளது. [நல்லருள் என்றுதொடங்கி] - எம்பெருமான்தன்னிற்காட்டிலும் அநுக்ரஹஸீலரான ஆயிரவர் தன்னுடைய கல்யாணகுணத்தைக் கொண்டாடும்படியான திருவல்லவாழிலேநின்றருளி நல்லஅருளையுடையனுய்க்கொண்டு நமக்கு ஸ்வாமியான நாராயணனுடைய நாமங்களை.

ப.—அநந்தரம், விலக்ஷணபுருஷவாஸஸ்தாநமான திருவல்லவாழில் நிருபாதிகஸம்பந்த விஶிஷ்டனான நாராயணன் திருநாமங்களை, அவன் க்ருபையாலே நாம் சொல்லக்கூடுமோ வென்கிருள்.

தொல் - ஸ்வாஹாவிகமான, அருள் - அவனுடைய உபகாரகத்வத்தை, மண்ணும் - ஸம்ஸாரத்திலுள்ளாரோடு, விண்ணும் - பரமபதத்திலுள்ளாரோடுவாசியற, தொழ - அநுஹவித்துத்தொழும்படி, நின்ற - அவன்வந்துநின்ற, திரு - ஸ்ரீமத்தான, நகரம் - நகரமாய், நல்- ஆஶ்ரிதவிஷயத்தில் அவனிலும்விஞ்சின, அருள்-அருளையுடையரான், ஆயிரவர் - ஆயிரம்புருஷர்கள், நலன் - ஹகவத்ஜ்ஞாநப்ரேமாதிரூபமான நன்மையை, ஏந்தும் - ஧ரிக்கும்படியான, திருவல்லவாழ் - திருவல்லவாழிலே, நல்-நன்றான, அருள் - அருளையுடையவனுய்க்கொண்டு, நம் - நம்மை யநுஹவிப்பிக்கும், பெருமான் -

ரப்ப, தொல்லருளான்து - கூடுங்கொலோ என்று அந்வயமாதல்; தொல்லருளாலே - கழல்வளைபூரிப்ப யாங்கண்டுகைதொழக்கூடுங்கொலோ என்று அந்வயமாதல். 'விஷ்ணுநாஸஹ்யஶோவீரெ்ர்', ஐதர்யாதி ஸஜக்ஷ வெ. (கூ)

ஸ்வாமியாய், நாராயணன்-ஸமஸ்தகுணவிஶிஷ்டனான நாராயணனுடைய, நாமங்கள் - தத்தத்குணவிஶிஷ்டவாசகமான திருநாமங்களை, தோழிமீர்காள் - (திருநாமோச்சாரணத்துக்கு உகந்திருக்கும்) தோழிமீர்காள்! (அவனுடைய), தொல் - ஸ்வாபாவிகமான, அருள் - அருளாகிற, நல்வினையால் - ஸுக்ருதவிஶேஷத்தாலே, சொலக்கூடுங்கொல் - நாம்சொல்லக்கூடுமோ? அருளென்று - உபகாரமாய், அதடியான அவனுடைய நல்ல செயல்களாலே சொல்லி ஏத்தக்கூடுமோவென்றுமாம்.

இ.—பத்தாம்பாட்டில், அவனுடைய ஸ்வாபாவிக க்ருபையாலே திருநாமங்களைச் சொல்லக்கூடவற்றேயென்கிறாள்.

[தொல்லருள் இத்யாதி] - ஸ்வாபாவிகக்ருபையாலேயுண்டான ஸுக்ருதத்தாலே அவனைக்கண்டு திருநாமங்களைச் சொல்லக்கூடவற்றே வென்னுதல்; ஸ்வாபாவிகக்ருபையாலே அவனைக்காணப்பெற்று, ப்ரீதியாலே யுகந்துகொண்டு திருநாமத்தைச்சொல்லக்கூடவற்றே வென்னுதல். நல்வினை - உகப்பு. [தொல்லருள் இத்யாதி] - தன்னுடைய ஸ்வாபாவிகமானசீர்மையை உபயவிபூதியும் அநுபவிக்கும்படி பழையதாகவிரும்பிவர்த்திக்கிறதேசம். நித்யஸூரிகளும், ஸம்ஸாரிகளுக்கு முகங்கொடுத்துநிற்கிற ஶீலவத்தையை இங்கேவந்து அநுபவிப்பர்கள். [நல்லருளாயிரவர்] - "இக்ஷ்வாகுவம்ஶப்ரபவ:" என்கிறபடியே ப்ரஜாரக்ஷணத்தில் அவன்தன்னிற்காட்டிலும் அநுக்ரஹஶீலராயிருக்குமவர்கள். [நலனேந்தும்திருவல்லவாழ்] - அவனுடைய கல்யாணகுணத்தைக் கொண்டாடி வர்த்திக்கு மூரென்னுதல், ப்ரேமத்தாலே மங்களாஶாஸநம்பண்ணி வர்த்திக்கு மூரென்னுதல். [நல்லருள்நம்பெருமான்] - நல்ல அருளையுடையனாய் நமக்கு ஸ்வாமியுமாயிருக்குமவன். நல்லருளாகிறது - வாத்ஸல்யம். வாத்ஸல்யமும், ஸ்வாமித்வமும் - நாராயணஶப்தார்த்தம். அர்த்தத்தையருளிச்செய்து, பின்னை ஶப்தத்தையருளிச்செய்கிறார் [நாராயணன்நாமங்களே] - நாராயணஶப்தம்-புர்மிநிர்தேஶம், இஸ்ஸ்வபாவங்களாலே நிரூபித்த வஸ்துவுக்கு உண்டான குண சேஷ்டிதங்களுக்கு வாசகம் - அல்லாததிருநாமங்கள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. அவனுடைய ஸ்வாபாவிக க்ருபையாலே அவனைக் காணப்பெற்று, ப்ரீதியாலே இனிதாய்க்கொண்டு திருநாமங்களைச் சொல்லக்கூடவற்றே யென்கிறாள்.

[தொல்லருள் இத்யாதி] - அவனுடைய ஸ்வாபாவிகமான அருளாலே. [நல்வினையால்] - அதாவது - அவனைக்காணப்பெற்று, அப்ப்ரீதியாலே, சொல்லக்கூடவற்றே. ஸ்வாபாவிக க்ருபையாலே அவனைக்காணப்பெற்று, ப்ரீதியாலே யுகந்துகொண்டு திருநாமத்தைச்சொல்லக்கூடவற்றேவென்னுதல்; நல்வினை - உகப்பு. அன்றிக்கே, ஸ்வாபாவிகக்ருபையாலுண்டான ஸுக்ருதத்தாலே அவனைக்கண்டு திருநாமங்களைச்சொல்லக்கூட

---

பத்தாம்பாட்டு.—தொல்லருள் இத்யாதி. "தொல்லருள்நல்வினையால் - நாராயணன் நாமங்கள் - சொலக்கூடுங்கொல்" என்றத்தைக்கடாக்ஷித்து அவதாரிகை - அவனுடைய இத்யாதி.

"தொல்லருள்நல்வினையால்" என்றதுக்கு இரண்டுபொருள். முந்தினது - தொல்லருளாலே அவனைக்காணப்பெற்று, அத்தால்வந்த ப்ரீதியாலே திருநாமங்களைச்சொல்லக்கூடுமோவென்று; இத்தை யருளிச்செய்கிறார் - அவனுடையஸ்வாபாவிகக்ருபையாலே இத்யாதி. "தொல்லருளாலே," அவனைக்காணப்பெற்று என்று அத்யாஹரிப்பது. இந்தயோஜனையில், "நல்வினை" என்று - ஸத்கர்ம

வற்றோவென்னுதல். "'நா, நீரற்றிருக்கை பாபஃலமிறே, நா நீருண்டாய்த் திருநாமம் சொல்லவல்லோமே யென்கிருள்' என்று அம்மங்கியம்மாள் வாக்யார்த்தமாகச்சொல்லும்" என்று அருளிச்செய்வர். [தொல்லருள் இத்யாதி] - தன்னுடைய கண்ணழிவற்ற க்ருபையை ஸம்ஸாரத்திலுள்ளாரும் நித்யவிபூதியிலுள்ளாரும் தொழநின்ற மஹாநகரம். [நல்லருளாயிரவர்] எம்பெருமானிலும் ப்ரஜாரக்ஷணத்தில் அநுக்ரஹஶீலராயிருக்கிறவர்கள். [நலன் இத்யாதி] - அவனுடைய கல்யாணகுணங்களைக்கொண்டாடி வர்த்திக்குமூரென்னுதல், ப்ரேமத்தாலே மங்களாஶாஸநம்பண்ணி வர்த்திக்குமூரென்னுதல். [நல்லருள்நம்பெருமான்] - நல்ல அருளையுடையனாய் நமக்கு ஸ்வாமியாயிருக்குமவன். நல்லருளாகிறது - வாத்ஸல்யம். வாத்ஸல்யஸ்வாமித்வங்கள் - நாராயணஶப்தார்த்தம். அர்த்தத்தையருளிச்செய்து பின்னை ஶப்தத்தையருளிச்செய்கிறார் [நாராயணன்நாமங்களே] - நாராயணஶப்தம் - யர்மிநிர்தேஶம் இஸ்ஸ்வபாவங்களாலே நிரூபிதவஸ்துவுக்குண்டான குணசேஷ்டிதங்களுக்கு வாசகம் - அல்லாத திருநாமங்கள். (க0)

## பதினோராம் பாட்டு.

நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல்
சேமங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த
நாமங்களாயிரத்து ளிவைபத்துந்திருவல்லவாழ்
சேமங்கொள்தென்னகர்மேல் செப்புவார்சிறந்தார்பிறந்தே.

---

*மாய், தத்ஃலமான ப்ரீதியைலக்ஷிக்கிறது. இரண்டாமர்த்தம் - தொல்லருளாகிற நல்வினையாலே நாவுக்குநீர்வந்து திருநாமங்களைச்சொல்லக்கூடுமோவென்று; இத்தை யருளிச்செய்கிறார் - நா நீரற்றிருக்கை இத்யாதி. அதாவது - நா நீரற்றிருக்கை பாபஃலமானால், நா நீர்வருகை புண்யஃலமாகையாலே, அவனுடையக்ருபையாகிற ஸுக்ருதத்தாலே நா நீருண்டாய்த் திருநாமம் சொல்லவல்லோமோ வென்றபடி. நல்வினை - ஸுக்ருதம். தொல்லருள் - ஸ்வாபாவிகக்ருபை. அருளென்னுதே, "நல்லருள்" என்று விஶேஷித்ததுக்குபாவம் - எம்பெருமானிலும் இத்யாதி. "நலன்" என்றது - நலமாய், அத்தால் - குணஸமூஹத்தைச்சொல்லி; ஏந்துகையாவது - தரிக்கையாய், அவன்குணங்களைக் கொண்டாடிக்கொண்டிருக்கையென்று மூந்தினவர்த்தம். இரண்டாமர்த்தத்துக்கு, நலனென்று - நலமாய், அதாவது - ப்ரேமமாய், ஏந்துகையாவது - ஏறிட்டுக்கொள்ளுகையாய், ப்ரேமத்தாலே அவனுடைய ரக்ஷகத்வத்தைத் தாங்கள் ஏறிட்டுக்கொண்டு அவனுக்கு மங்களாஶாஸநம்பண்ணுகிற ஊரென்று ஶப்தார்த்தம். நாராயணஶப்தம் ப்ரஸ்துதமானால் அர்த்தகதந நிர்ப்பந்தமுண்டாகையாலே, நாராயணஶப்தார்த்தமாக யோஜிக்கிறார் - நல்லருளாகிறது இத்யாதி. வாத்ஸல்யம் - வ்யுஹாவ்ரீஹி யிலே. ஸ்வாமித்வம் - தத்புருஷனிலே. நாராயணஶப்தமும் திருநாமமன்றோ, இத்தைப்ரதாநமாகச் சொல்லுவானென்? என்ன - நாராயணஶப்தம் இத்யாதி. யர்மிநிர்த்தேசமென்றது - ஸ்வரூபநிரூபகமென்றபடி. இஸ்ஸ்வபாவங்களாலேயென்றது - வாத்ஸல்யஸ்வாமித்வங்களாலேயென்றபடி. குணங்களில்வைத்துக்கொண்டு ஜ்ஞாநாநந்தாமலத்வாதிகள் நிரூபகங்களாய், அல்லாதகுணங்கள் இவற்றாலே நிரூபிதமான ஸ்வரூபத்துக்கு விஶேஷணமானாப்போலே; திருநாமங்களிலும் நாராயணஶப்தம் ஸ்வரூபநிரூபகமாய், அல்லாததிருநாமங்கள் இந்தத்திருநாமத்தாலே நிரூபிதமான வஸ்துவுக்குண்டான குணசேஷ்டிதங்களுக்கு வாசகமாயிருக்குமென்றபடி. தோழிமீர்காள், நலனேந்தும் - நல்லருளாயிரவரையுடைத்தாய் - தொல்லருள் மண்ணும் விண்ணும் தொழநின்றதிருநகரமான - திருவல்லவாழில் நல்லருள் நம்பெருமான் நாராயணன் நாமங்களை - தொல்லருள் நல்வினையால் சொலக்கூடுங்கொல் என்று அந்வயம்.* (க0)

ஆ.—(நாமங்கள்.) நாமங்களாயிரத்தையுமுடையனாய் ஸர்வேஶ்வரத்வேந ப்ரஸித்தனானவன் திருவடிகளிலே, தமக்கு ரக்ஷைபார்த்துக்கொண்ட ஆழ்வார் ஆராய்ந்தருளிச்செய்த ஆயிரந்திருநாமங்கள்போலே குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான ஆயிரத்திலும் இத்திருவாய்மொழியைத் திருவல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலே கூட்டிச்சொல்லவல்லவர், ஸம்ஸாரத்திலேயிருந்துவைத்தே எல்லாரிலும் சிறந்தாரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும்வல்லார் ஸம்ஸாரத்திலேயிருந்துவைத்தே எல்லாரிலும் சிறந்தார் என்கிறார்.

[நாமங்கள் என்றுதொடங்கி] - நாமங்களாயிரத்தையுமுடையனாய் ஸர்வேஶ்வரத்வேந ப்ரஸித்தனானவன் திருவடிகளிலே தமக்கு ரக்ஷைபார்த்துக்கொண்ட ஆழ்வார் ஆராய்ந்து அருளிச்செய்த. [நாமங்களாயிரத்து என்றுமேலுக்கு] - எம்பெருமானுக்குத் திருநாமங்கள்போலே குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான ஆயிரந்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியைத் திருவல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலேகூட்டிச் சொல்லவல்லவர்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியைச்சொல்லவல்லவர்கள் ஐகவதநுஹவ யோக்ய ஜந்மத்தையுடையவர்களென்று ஐலத்தை யருளிச்செய்கிறார்.

நாமங்களாயிரமுடைய - ("பேராயிரங்கொண்டதோர்பீடுடையன் - நாராயணன்" என்கிறபடியே ப்ரயாநநாமமான நாராயணஶப்தத்தினுடைய அம்ஶமான) நாம ஸஹஸ்ரத்தையு முடையனாய், நம்பெருமான் - (அவற்றை யநுபவித்து) "நம்ஸ்வாமி" என்று ஸர்வரும் பற்றும்படியான ஸர்வேஶ்வரனுடைய, அடிமேல் - திருவடிகளின் மேலே, (நினைத்தபடி யநுபவிக்கப்பெறாத அஶிநிவேஶம் நடக்கச்செய்தேயும்), சேமம்-க்ஷேமகரத்வ புத்திரூப வ்யவஸாயத்தை, கொள் - உடையராய், தென்-கட்டளைப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், தெரிந்து - ("இத்திருவடிகளே ரக்ஷகம்" என்று) ஆராய்ந்து விஶ்வஸித்து, உரைத்த - அருளிச்செய்த, நாமங்கள் - அவனுக்குத் திருநாமங்கள்போலே வாசகமான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், இவை - இவை, பத்தும் - பத்தையும், திருவல்லவாழ் - திருவல்லவாழாகிற, சேமங்கொள் - ரக்ஷாயுக்தமான, தென்-அழகிய, நகர்மேல் - திருநகரிவிஷயமாக, செப்புவார் - செப்பவல்லவர்கள், பிறந்து - ஶரீரஸம்பந்தத்தோடே யிருந்துவைத்து, சிறந்தார்-ஐகவதநுஐவமாகிற சிறப்பையுடையராவர்கள். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இப்பத்தும்வல்லார், ஸம்ஸாரத்திலேயிருந்துவைத்தே ஐகவத்ஶுணாநுஐவத்தாலே எல்லாரிலும்சிறந்தவர்களென்கிறார்.

[நாமங்கள் இத்யாதி]-"ஜெவொநாஸேஷஹஸ்வாநு" என்கிறபடியே ஶுண சேஷ்டிதங்களுக்குவாசகமான திருநாமங்களையுடையனாகையாலே ஸர்வேஶ்வரனாக ப்ரஸித்தனானவன். [அடிமேற்சேமங்கொள்] - அவனைப்பெறாதே நோவுபடநோவுபட அவன்திருவடிகளைரக்ஷகமாகப் பற்றும் ஆழ்வார். பிராட்டி ஆற்றாமைமிக்கவிடத்திலும் ராவணனைஶயியாதே, பெருமாள்வரவைப் பார்த்திருந்தாப்போலே. [தெரிந்துரைத்த நாமங்களாயிரத்துள் இவைபத்தும்] - அவனுக்குத்திருநாமங்கள்போலே ஶுணசேஷ்டிதங்களுக்கு ப்ரதிபாதகமான ஆயிரத்திலும் ஆராய்ந்துரைத்த இப்பத்தையும், திரு

*வல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலே கூட்டிச்சொல்லுவார். [தென்னகர்] - ராஜாவையிட்டு - தென்னகரென்னுதல், தெற்குத்திக்கில் நகரென்னுதல். [சிறந்தார் பிறந்தே] - ஒருவனுக்குப்பிறக்கைபோக்கித் தாழ்வின்றிக்கேயிருக்க,஭கவதநு஭வம்பண்ணப்பெறுகையாலே இவர்கள் சீரியர்கள். "சீதனையேதொழுவார்விண்ணுளாரிலும் சீரியரே" - அவனுக்கு உறுப்பாகையாலே முக்தஶரீரத்திலும் ஶ்லாக்யம். ஆஶ்ரிதார்த்தமான ஭கவத³வதாரம்போலே ஶ்லாக்யமென்கை.*

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை யப்யஸிக்கவல்லார் ஸம்ஸாரத்திலே யிருந்துவைத்தே ஭கவத்குணாநு஭வத்தாலே எல்லாரிலும் சிறந்தவர்களேன்கிறார்.

[நாமங்கள்இத்யாதி]-"தேவோ நாமஸஹஸ்ரவாந்"(தேவோநாமஸஹஸ்ரவாந்) என்கிறபடியே, குணசேஷ்டிதங்களுக்கு வாசகமான திருநாமங்களை யுடையனாகையாலே ஸர்வேஶ்வரனாக ப்ரஸித்தனானவன். நம் - ப்ரஸித்தி. பெருமான் - ஸர்வேஶ்வரன். [அடிமேல்சேமங்கோள்] - புறம்புள்ள காற்கட்டுக்களைவிட்டு, அவன்திருவடிகளே தமக்கு ரக்ஷகமாகப் பற்றின ஆழ்வார். [தெரிந்துரைத்தநாமங்களாயிரத்து ளிவைபத்தும்] - அவனுக்குத் திருநாமங்கள்போலே குணசேஷ்டிதாதிகளுக்கு ப்ரதிபாதகமான ஆயிரத்திலும் ஆராய்ந்துரைத்த. ஆயிரந்திருநாமங்களைச்சொன்னால் அவன்குணங்கள் தோற்றுமாப்போலேயிறே இவற்றுக்கும் அவன்குணங்கள் தோற்றும்படி. இவை பத்தையும், திருவல்லவாழாகிற சேமமுடைத்தான தென்னகரிலே கூட்டிச் சொல்லுவார். தென்னகர்- அழகியநகரி. [சிறந்தார்பிறந்தே] - ஒருவனுக்குப் பிறக்கைபோக்கித் தாழ்வின்றிக்கே யிருக்க, அவனுக்கு * பலபிறப்பா யொளிவருமாப்போலே, இவர்களும் இங்கே ஭கவ

---

ப்ர:—(நாமங்களாயிரமுடைய) — ஶ்ரீஹரிவம்ஶே, "ஸஹஸ்ரஶீர்ஷ: புருஷாய ஸ்ரேவாஸ்யஸ்ஸநாதந: । ஸஹஸ்ராஸ்யஸ்ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ர சரணோ விபு: । ஸஹஸ்ர பாஹுஸ்ஸர்வஜ்ஞோ தேவோ நாம ஸஹஸ்ரவாந் । ஸஹஸ்ர கோடிர்தேவோ விஶ்வரூபோ ஹி ஶாஶ்வத: ॥"

*நிகமம்.—நாமங்கள் இத்யாதி. "இவைபத்தும் - செப்புவார் சிறந்தார்பிறந்தே" என்றத்தைக் கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி.*

*"நாமங்களாயிரமுடைய" என்கிறவிது - ஹேதுகர்ப்ப விஶேஷணமென்று திருவுள்ளம்பற்றி - திருநாமங்களையுடையனாகையாலே என்கிறார். "நம்" என்று - ப்ரஸித்தியைச் சொல்லுகிறது. "பெருமான்" என்று - ஸர்வேஶ்வரன். ஆயிரம்பாட்டுக்களில் இவைபத்தென்றதே, "நாமங்களாயிரத்துளிவைபத்தும்" என்பானென்? என்ன,—"நாமங்களாயிரமுடைய" என்றத்தை ஹ்ருதீகரித்து ஭ாவம் - ஆயிரம்திருநாமங்களை இத்யாதி. தோற்றும்படி - ஆகையாலே திருநாமங்களான ஆயிரமென்னக் குறையில்லை என்று அத்யாஹார்யம். சேமம் - திருமதிள் முதலான ரக்ஷை. கூட்டிச் சொல்லுகையாவது - ப்ரதிபாதகமென்கிற நினைவோடே சொல்லுகை. "பிறந்தே - சிறந்தார்" என்று அந்வயிப்பது. ஜந்மத்தையுடையராயிருக்கச்செய்தே ஶ்லாக்யராயிருப்பர்கள். பிறவியில் ஶ்லாக்யதை கூடாதென்னுமத்தையும்; இப்படிக்கொத்த ஜந்மத்தையுடையரா யிருக்கச்செய்தே, ஈஶ்வரனுக்குப் பிறக்கப்பிறக்க குணங்கள் புகர்பெற்று வருமாபோலே, இவர்களும் ஭கவதநு஭வம் பண்ணுகையாலே ஶ்லாக்யரா யிருப்பர்களென்னுமத்தையும் அருளிச்செய்கிறார் - ஒருவனுக்கு இத்யாதி. ஒருவனுக்கு - ஸம்ஸாரிசேதநனுக்கு. பிறக்கைபோக்கி - பிறக்கையைப்பற்ற, ஜந்மத்தைக்காட்டிலும் தாழ்ச்சியின்றிக்கே யிருக்கவென்றபடி. "இங்கே஭கவதநுபவம்பண்ணுகையாலே அவர்கள் சீரியர்" என்றதுக்கு*

நுஸவம்பண்ணுகையாலே சீரியர்கள். † "சீதனையேதொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்னக்கடவதிறே. இப்பத்தை யப்யஸிக்கவல்லார், என்னைப்போலே அவனிருந்ததேசத்திலே போகப்புக்கு, ஶலஹாநியாலே நடுவேழியிலே விழுந்து நோவுபடாதே உகந்தருளின தேசத்திலே புக்கு அநுபவிக்கப் பெறுவர்கள். இவர்கள்ஜந்மங்கள் கர்மநிபந்தநமா யிருக்கச்செய்தே அவனுக்குறுப்பாகையாலே முக்தஶரீரத்திலுங்காட்டில் ஶ்லாக்யம். ஆஶ்ரிதார்த்தமான ஹகவதவதாரம்போலே ஶ்லாக்யமென்கை. (கக)

---

ப்ரமாணம் - சீதனையே இத்யாதி. ஶ்ரீதளஸ்வஹாவனுனவனையே யநுஹவிக்கப்பெற்றவர் நித்யஸூரிகளிலும்,கனத்தவர்களித்யர்த்தஃ. இத்திருவாய்மொழியில் அர்த்தாநுகுணமாக ஃபலமருளிச்செய்கிறார்- இப்பத்தை யப்யஸிக்க இத்யாதி. ஹகவதவதாரம் ஐச்சிகமாகையாலே யொளிவரக்கூடும், கர்மநிபந்தந ஜந்மாக்களான இவர்கள் சிறக்கக்கூடுமோ? என்ன - இவர்கள் ஜந்மங்கள் இத்யாதி. ஸத்ருஷ்டாந்தமாக உக்தார்த்தத்தை ஸ்த்திரீகரிக்கிறார்:- ஆஶ்ரிதார்த்தமான இத்யாதி. நாமங்களாயிரத்துள் இவைபத்தும் திருவல்லவாழ் சேமங்கொள் தென்னகர்மேல்செப்புவார் - பிறந்தே - சிறந்தார் இத்யந்வயஃ. "ஸஹஸ்ர பாஹூ ஸ்ஸர்வஜ்ஞோ தேவோ நாஸஹஸ்ர வாநு। ஸஹஸ்ர கோடிதேவோ விஶ்வாஸ்தொஹாதீ்யதிஃ" இதி ஹாரதே. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி. — கநிஷ்டஃ ஸூதிஹூதஸ்தவாவ வெஹாநுஞுஂஸ்வஸ்த ‡ ஶோஸாவிதா ஶிஷ்யெஸௌ। தஹோஹ்யதாஜிஷய த்தஷ யீஶவாஜள யாயாஂகஷெந்யகயஸ்யவெஶஸதெநுஷ்ௗ॥

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி. — ஸ்வாதிகாஸ்தஂஶ்ரிதாநாஶிவகாரணாஸாஸ்வதஷ ஸஂஶ்லேஷககா ஸ்தவ்யாஸ்வாஜகஹூந்ராகவடவடதயாஜாரணாவஸ்தவகாஃ। ஶிஷ்யஸாநோவஸத்யாஹூஷெஶிஹாரணாஶ்வாவிநாராயண கா ஜத்யாஸஞ்ஶ்ரிதாநாஂஹவதிஹஸிரிதிஸ்வாஹகாரெஸ்தநஜஃ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

மாநலத்தால்மாறன் திருவல்லவாழ்புகப்போய்த்
தானிளைத்துவீழ்ந்தவ்வூர் தன்னருகில் - மேல்நலங்கித்
தன்பமுற்றுச்சொன்னசொலவுகற்பார் தங்களுக்குப்
பின்பிறக்கவேண்டாபிற.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

† திருவிருத்தம்-எக.

‡ (ஶநவெதி) உவமக்ஷணதஜ தீயா.(ஶநஸாயக்ஷஃ-ஶநிஃ)ஜத்யயஃ.

## பத்தாந்திருவாய்மொழி—பிறந்தவாறு : ப்ரவேசம்.

ஆ.—(பிறந்தவாறும்.) இப்படி சிரீவரமங்கலநகர் திருக்குடந்தைத் திருவல்லவாழ்களில் எம்பெருமானோடு யதாமநோரதம் ஸம்ச்லேஷிக்கப்பெறுமையாலே அவஸந்நரான ஆழ்வார்; எம்பெருமான் ஸ்ரீமதுரையிலேவந்து வஸுதேவர்திருமகனாய்ப் பிறந்தருளினபடியையும், ஸகலமநுஜநயநவிஷயதாங்கதனாய்க்கொண்டு வளர்ந்தருளினபடியையும், அசேஷஜநமநோநயநஹாரியாய் அதிதைவாதிமாநுஷமான திவ்யசேஷ்டிதங்களைப் பண்ணினபடியையும், மற்றும் மத்ஸ்யகூர்மாதிரூபேண அவதீர்ணனாய்ச் செய்தருளின திவ்யசேஷ்டிதங்களையும் காணப்பெற்றிலேன்; இனி "அவற்றை அநுஸந்திக்க வேணும்" என்றுபுக்கு மிகவும் சிதிலனாகாநின்றேன்; அந்தசைதில்யத்தைப்போக்கி, அநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்று எம்பெருமானை சரணமாகப் பற்றிமுடிக்கிறார்.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், திருவல்லவாழில் எம்பெருமானோடே பரிமாறவேண்டியிருக்கிறபடிகளை நெடும்போது மநோரதித்து அப்படிபெறாதே மிகவும் அவஸந்நராய், திருவடி ராமாவதாரத்தில் ஸக்தனாயிருக்குமாபோலே பகவத்குணசேஷ்டிதாதிகள் எல்லாவற்றிலும் தனித்தனியே ஸக்தராகையாலே ஸ்நேகத்தில் திருவடியிற் காட்டில் விலக்ஷணரான ஆழ்வார், ஆச்ரிதர் வாழும்படியும், அவர்களுக்கு விரோதிகள் மண்ணுண்ணும்படியுமான க்ருஷ்ணாவதாரத்தையும், மற்றும் எம்பெருமானுடைய திவ்யாவதார சேஷ்டிதங்களையும், ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளையும் அநுஸந்திக்கவென்று புக்கு மிகவும் சிதிலராய்; அந்தசைதில்யத்தைப் போக்கியருளி, தரித்துநின்று தேவரீரை அநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்று எம்பெருமானை சரணமாகப் பற்றி முடிக்கிறார். ஆழ்வார்தாம் எம்பெருமானை விச்லேஷித்திருக்கிறதசையிலே க்ருஷ்ணாவதாரகுணசேஷ்டிதாதிகளும் மற்றுமுண்டான எம்பெருமானுடைய குணசேஷ்டிதாதிகளும் பாதிஸ்த்தமாய்க்கொண்டு மிகவும் நலிய, அவற்றாலே மிகவும் அவஸந்நராய்; இவ்வவஸாதம்தீரும்படி உன்திருவடிகளிலே வந்துசேர்வது என்றென்று எம்பெருமானைக் குறித்துக் கூப்பிடுகிறார் என்றுமாம்.

ப.—பத்தாந்திருவாய்மொழியில், இப்படி திருவல்லவாழிலே யநுபவிக்க ஆசைப்பட்டு அதுகிடையாமையாலே ஆர்த்தராய், "நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன்" என்கிறபடியே அவனுடைய ஸர்வாவதாரஸித்தமான குணசேஷ்டிதங்களை யநுஸந்தித்து, தரிக்கப்பார்த்து; க்ருஷ்ணனுடைய அவதாராதி வ்ருத்தாந்தத்தையும், அஸிமதவிஷயவ்யாபாரத்தையும், பாலசேஷ்டிதங்களையும், த்ரிபுரவாஸிகளான அஸுரவர்க்கத்தினுடைய அந்தர்ப்பேதத்தையும், அதிமாநுஷசேஷ்டிதங்களையும், ஸ்த்தித்யாஸநசயநாதி வ்யாபாரத்தையும், ஆந்தரமாகவும் பாஹ்யமாகவும் ப்ரகாசாப்ரகாசகரத்வத்தையும், ஸர்வாயிகத்வ ஸூசகமான ஸ்ருஷ்டிவ்யாபாரங்களையும், அர்த்தியாயும் தன்னபேக்ஷிதம் தலைக்கட்டிக்கொள்ளு மாகாரத்தையும், ஆச்ரிதவிஷயத்தில் அருந்தொழில் செய்து உபகரிக்கும்படியையு மநுஸந்தித்து, அவைதானே அப்ராப்திதசையில் சைதில்யாவஹமாகையாலே ஆர்த்தராய், "உன்னுடைய சேஷ்டிதாதிகளை நான்நிலைநின்று அநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்" என்று அபேக்ஷித்து, அவன்திருவடிகளிற்பிறந்த

உபாயவிஶ்வாஸம் யாவத்ப்ராப்தி யநுவர்த்தித்தபடியை யருளிச்செய்து, இப்படி உபாய ஸாதனுடைய ஸ்வரூபயாதாத்ம்யத்தை நிரூபித்துத்தலைக்கட்டுகிறார்.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், "திருவல்லவாழிலேபுகவேணும், பரிமாற வேணும்" என்று மநோரதித்தபடி பெருமையாலே மிகவும் அவஸந்நராறென்று நின்றது-கீழ்; இத்திருவாய்மொழியில் - அவனுடைய குணசேஷ்டிதாதிகளை யநுஸந்திக்கப் புக்கு ஶிதிலரானவர்; இஸ்ஸம்ஶயத்தைப் போக்கியருளி, தரித்துநின்று அநுபவிக்க வல்லேனும்படி பண்ணியருளவேணுமென்று ஶரணம்புகுகிறார். திருவடி ராமாவதாரத்திலே ஸக்தனாயிருக்குமாபோலே, இவர் எல்லாவவதாரத்திலுமுண்டான குணசேஷ்டிதாதிகளிலும் ஆழங்காற்படவல்லராயிருப்பர்; "மண்ணை முன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்கள்" என்றாரிறே. திருவடியைப்போலன்றியே, பகவத்ப்ரஸாதமடியாகவந்த ஜ்ஞாநாதிக்யத்தையுடையராகையாலே, திருவடியிற்காட்டில் விலக்ஷணர் இவர். அர்ச்சாவதாரத்திலே தம்மபேக்ஷிதம் பெறநினைத்தவர், அங்குக்கிடையாமையாலே அவதாரங்களிலே போகிறார். விபவங்களிலுமிழந்தார்க்கு இழவுதீர்க்கிற விடமாயிருக்க, அவதாரங்களிலே போருகையாவதென்? என்னில்,—அர்ச்சாவதாரத்தில், அதீந்த்ரியனானதன்னை ஸம்ஸாரிகள்கண்ணுக்கு விஷயமாக்குகையும் ஸர்வாபேக்ஷிதங்களையுங் கொடுக்கையுமொழிய, குளிரநோக்குதல் வினவுதல்செய்யக்கடவதன்றாக ஸங்கல்பித்திருக்கையினாலே, "ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பங்குலையும்படி அதிநிர்பந்தம்பண்ணக் கடவோமல்லோம்" என்று, "ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" என்ற க்ருஷ்ணாவதாரத்திலே போந்தார் ப்ரத்யாஸத்தியாலே. அதுவும் தீர்த்தம்ப்ரஸாதிக்கையாலே, "பல்லிலேபட்டுத் தெறித்தது" என்றுகூப்பிடுகிறார். இது ஆழ்வான்நிர்வாஹம். "உன்னைப்பிரிந்து நோவுபடுகிறஸமயத்திலே உன்னுடைய குணசேஷ்டிதாதிகள் ஸ்ம்ருதிவிஷயமாய்நின்று நலியாநின்றது, இவ்வவஸாதந்தீரும்படி உன் திருவடிகளிலேவந்து சேருவது என்றென்கிறார்" என்று பிள்ளைதிருநறையூரறையருள்ளிட்டார்நிர்வாஹம்.

ஈடு.—"திருவல்லவாழிலே போய்ப்புக்கு அங்குநிற்கிறவனோடே பரிமாறவேணும்" என்று மநோரதித்துக்கொண்டுபோக, கால்நடைதாராமல் நடுவழியிலே விழுந்து கிடந்து கூப்பிட்டார்; இனி "இவ்வளவில் குணாநுபவம்பண்ணியாகிலும் தரிப்போம்" என்று பார்க்க, அதுதானும் பேற்றோபாதியிதாம்படி ஶைதில்யத்தைவிளைப்பிக்க; ஸர்வாவஸ்த்தைகளிலும் - உன்னைப்பிரிந்துநின்றாலும் தரித்துநின்று குணாநுபவம்பண்ணவல்லேனும்படி பண்ணியருளவேணுமென்று அவன் திருவடிகளிலே ஶரணம்புகுகிறார்.

ருஷிகளுக்குண்டான ஸம்ஸாரபயத்தோபாதியும்போருமாயிற்று ஆழ்வார்களுக்கு பகவத்விரஹத்தால்வரும் க்லேஶம்; அவர்கள் தந்தாம்பேற்றுக்குத் தாந்தாம் சிலயத்நம்

பிறந்தவாறுப்ரவேஶே, திருவல்லவாழிலேயென்று தொடங்கி கூப்பிட்டார் என்னுமளவும் உக்தாநுவாதம். இனி இவ்வளவில் என்று தொடங்கி, ஶரணம்புகுகிறார் என்னுமளவாக ஆழ்வான் நிர்வாஹத்திலே ஸங்க்ரஹஸங்கதி. குணாநுபவம் பண்ணியாகிலும் என்ற விடத்திலே- "கோவிந்தன் குணம்பாடி-ஆவிகாத்திருப்பேனே" என்றத்தையும், "க்ருஶம் ஸம்ஶயம் ஹரிஶ்ரேஷ்ட க்ஷிப்ரம் ப்ராப்தும் தே க்ஷம:" இத்யாதியையும் அநுஸந்திப்பது. "ஸர்வாவஸ்த்தைகளிலும்" என்றதின் விவரணம் - பிரிந்துநின்றாலும் என்றது.

மற்றும் பகவத்விஷயத்திலே கைவைத்திருப்பார் பலருமுண்டே, அவர்களுக்கு இவ்வாற்றாமை காண்கிறிலோமே? என்ன - ருஷிகளுக்கு இத்யாதி. இத்தால் - ருஷிகள் முதலானார்க்கு ஸம்ஸார

பண்ணுநிற்பர்கள், இவர்கள் அத்தலையாலே பேருமளவும் அஶோகவநிகையில் பிராட்டியைப்போலே துடியாநிற்பர்கள்; அவர்களுக்குத் தங்கள்தலையிலேயும் சிலகிடக்கையாலே விளம்பம் பொறுக்கலாம், இவர்களுக்கு அங்ஙன் சொல்லலாவதொன்றில்லையாகையாலே கிடந்து அலமாப்பர்கள். "அவனடியாலேநம்பேறு" என்றிருக்கிறவர்களுக்கு ஒரு கண்ணழிவில்லையே சொல்லலாவது. "**நசஸீதா த்வயா ஹீநா நசாஹமபி ராகவ**" (நசஸீதாத்வயாஹீநாநசாஹமபிராகவ) என்கிறபடியே, லாபாலாபங்களில் பிராட்டியையும் தம்மையும் ஏகப்ரக்ருதியாகச் சொன்னரிறே. "**பாவோ நாந்யத்ர கச்சதி**" (பாவோ நாங்யத்ரகச்சதி) என்று, திருவடி ராமாவதாரமொன்றிலும் ஸக்தனாயிருக்குமாபோலே, இவர் எல்லாவவதாரங்களிலும் எல்லாசேஷ்டிதங்களிலும் அகப்பட்டிருப்பாரொருவர். அர்ச்சாவதாரத்திலே தம்மபேக்ஷிதம்பெற ஆசைப்பட்டவர், அதுகிடையாமையாலே அவதாரங்களிலேபோகிறார்; "விபவமுள்ளவிடத்தேசென்றால் சிறிது அபேக்ஷிதம் கிடைக்கும்" என்றிருப்பரே. விபவங்களிலே இழந்தார்க்கும் இழவுதீர்க்கிற விடமாயிருக்க, இத்தைவிட்டு "பெறலாம்" என்று விபவமுள்ளவிடந் தேடிப்போகையாவதேன்? என்னில்,—அர்ச்சாவதாரத்தில், அதீந்த்ரியஞானதன்னை ஸம்ஸாரிகள் கண்ணுக்கு விஷயமாக்குகையும் ஸர்வாபேக்ஷிதங்களையும் கொடுக்கையுமொழிய, குளிரநோக்குதல் வினவுதல் அணைத்தல் செய்யக்கடவதன்றாக ஸங்கல்பித்திருக்கையாலே, "ஸத்யஸங்கல்ப

---

*பயமாத்ரமொழிய பகவத்விரஹத்தால்வரும் க்லேஶமில்லையென்றபடி. இருவரும் பகவத்விஷயத்திலே அந்வயித்திருக்க, அவர்களுக்கு இல்லாமல் போவானென்; ஆழ்வார்களுக்கு பகவத்விரஹக்லேஶமுண்டாவானென்? என்கிற ஶங்கையிலே, இரண்டுக்கும் ஹேதுவை அருளிச்செய்வதாக; ருஷிகளுடையவும் ஆழ்வார்களுடையவும் ப்ரதிபத்திஶரீரத்தை யருளிச்செய்கிறார் - **அவர்கள்தந்தாம்** இத்யாதி வாக்யத்வயத்தாலே. "ஸ்வப்ரயத்நத்தாலேபேறு" என்றிருக்கை-ருஷிகள் ப்ரதிபத்திஶரீரமாகையாலே, "நாம் அநுஷ்டித்தவுபாயம்முற்றி க்ரமத்திலே பலிக்க வேண்டாவோ" என்று அவர்களுக்கு விரஹம் பொறுக்கலாயிருக்குமென்றும்; ஆழ்வார்களுக்கு அவர்களைப்போலே தங்கள்தலையிலேயும் சிலவுண்டாய், அது பக்வமாய்ப்பெறவேணுமென்னு மதில்லாமையாலே விரஹம் பொறுக்கமாட்டார்களென்றும் அருளிச்செய்கிறார் - **அவர்களுக்குத் தங்கள்** இத்யாதிவாக்யத்வயத்தாலே. இவர்களுக்கு அப்படிமுற்றி பலிக்கவேண்டுவதொன்றின்றிக்கே யிருப்பானென்? என்ன - **அவனடியாலே** இத்யாதி. அன்றிக்கே, "இவர்களுக்கு அங்ஙன்" இத்யாதிவாக்யவிவரணமாதல். "அஶோகவநிகையில் பிராட்டியைப்போலே" என்று அவளோடு ஒப்புச்சொல்லலாமோ? என்ன - **நசஸீதா** இத்யாதி. இத்திருவாய்மொழியிலே - க்ருஷ்ணாவதாரம் சொல்லாநிற்க, அவதாராந்தரங்களையும் சொல்லுவானென்? என்ன - **பாவோ நாந்ய** இத்யாதி. "**ஸ்நேஹோமே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: । பக்திஶ்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி**" **உத்தரராமாயணே.** கீழ்மூன்று திருவாய்மொழிகளிலும் - அர்ச்சாவதாரத்தை யருளிச்செய்தவர், அத்தைவிட்டு இங்கே விபவங்களிலே வருவானென்? என்ன - **அர்ச்சாவதாரத்திலே** இத்யாதி. தம்மபேக்ஷிதமாவது - குளிரநோக்குதல், அணைத்தல்முதலானது. ரஸோக்தி - விபவம் இத்யாதி. இழவுதீர்க்கிறவிடமாயிருக்கவென்றது - அவதாரங்களில் பிற்பட்டார்க்கும் அநுபாவ்யமாம்படி ஸதாஸந்நிஹிதமாகையைப்பற்ற. **ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பம்குலையும்படி** என்றவிடத்திலே - "கூரத்தாழ்வான் ஆர்த்தராய் ஶரணம்புக, பெருமாளுமிரங்கி 'மூன்றுநாளைக்குவீடுதந்தோம்' என்ன, 'ஆழ்வான் திருமதிளுக்குப்புறம்பானார்' என்றுகேட்டு உடையவர் ஓடிச்சென்று, 'ஆழ்வான், நாம் இங்கேயிருக்க உமக்குப் பரமபதத்தேபோகவேண்டிற்றோ' என்ன, 'அடியேன் ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்பாலே மறந்தேன்' என்ன, 'ஆகில் நாமும் ஶரணம்புகுந்தால் இன்னம்சிலநாள் ஆழ்வானையிங்கேவைக்க ஒரங்குவர்' என்று திருவாசலளவும்சென்று, 'ஸத்யஸங்கல்பனுடைய ஸங்கல்பத்தைக்*

னுடைய ஸங்கல்பம்குலையும்படி அதிநிர்ப்பந்தம் பண்ணக்கடவோமல்லோம்'' என்று, ''ஸம்ஸ்ப்ருஸ்யாக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே'' (ஸம்ஸ்ப்ருஸ்யாக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே) என்னும் க்ருஷ்ணுவதாரத்திலே போந்தார் ப்ரத்யாஸத்தியாலே. ''இவ்வாழ்வார்களெல்லாரும் க்ருஷ்ணுவதாரமென்றவாறே போரமண்டியிருப்பர்கள், இதுக்குஹேதுவேன்?'' என்று பட்டரைக்கேட்க, ''ஒருவனுக்குதுஃகம் சிலநாள் கழிந்தால் பொறுக்கலாம், அணித்தாளுல் ஆறியிருக்கப்போகாதிறே; அப்படியே; அல்லாத அவதாரங்களைப்போலன்றிக்கே, ஸமகாலமாகையாலே, 'ஒருசெவ்வாய்க்கிழமை முற்பட்டப் பெற்றிலோம், பாவியேன்! பல்லிலேபட்டுத் தெறிப்பதே,' என்னுமிழவாலே வயிறெரித்தலேயாயிருக்கும்'' என்று அருளிச்செய்தார். இனித்தான் ராமாவதாரத்தில், தமப்பன் ஶம்பராந்தகனுய் ஏகவீரனுயிருப்பானொருவன்; பிள்ளைகள்தாங்கள் ஆண்புலிகள், குடிதானே வன்னியமறுத்திருப்பதோருகுடி; இவையெல்லாம் மிகையாம்படி, குணத்தாலே நாட்டையெல்லாம் ஒருமார்வெழுத்தாக்கிக்கொண்டிருப்பர்கள், ஆகையால் எதிரிகள் என்கிற ஶப்தமுமில்லை; இங்கு அங்ஙனன்றிக்கே, தமப்பன் ஒருஸாதுவ்ருத்தன்; பிறந்தது கம்ஸன்சிறைக்கூடத்திலே, வளர்ந்ததும் அவனகத்தருகே; ஸ்ரீப்ருந்தாவநத்திலே, எழும்பூண்கேளகப்பட அஸாம்ரமயமாயிருக்கும், ரக்ஷகரானவர்கள் ஓரடிதாழநிற்கில் பாம்பின் வாயிலே விழும்படியாயிற்று இவன்தன்படிகளிருப்பது, அப்படியாளுல் வயிறெரியாதே

---

ப்ர:—விஷ்ணுபுராணே பஞ்சமேம்ஶே [கஅ] ''விஜ்ஞாபிதோ மஹாவிஷ்ணு த்வயாஹம் யாதவா: | சக்ரதரோ ஸ்ரீதரணநாபேஸிரஸாஹம்ரே: ||க|| ஸோ ஸாஹிதம் புஜயுக்ம ரஞ்ஜக்ருதவிஹிநவானிநா| ஸம்ஸ்ப்ருஸ்யாக்ருஷ்யச ப்ரீத்யா ஸுகாடம்பரிஷஸ்வஜே||உ||''

குலைக்கவேண்டா' என்றுமீண்டருளினர்'' என்றுப்ரஸாதிப்பர். அதாவது - நானொருவன்தோன்றிப் பெருமாளை இரண்டுவார்த்தைசொல்லுவாராகப் பண்ணவோமோவென்றுகருத்து. ''ராமோ த்விர்நாபிபாஷதே'', ''நத்யஜேயம் கதஞ்சந'', ''ஏதத் வ்ரதம் மம'' இத்யாதி. அதிநிர்ப்பந்தம்பண்ணக்கடவோமல்லோம் என்கையாலே - தாம்நிர்ப்பந்தித்தால் செய்வர் என்னுமிடந்தோற்றுகிறது. விஹவார்தரங்களைவிட்டு க்ருஷ்ணுவதாரத்திலே போருகைக்குஹேது - ப்ரத்யாஸத்தியாலே யென்று. ''ப்ரத்யாஸத்தியாலே'' என்றத்தை ஆப்தஸம்வாதமுகேந விவரிக்கிறுர் - இவ்வாழ்வார்கள் இத்யாதி. பட்டரைக்கேட்கவென்றது - பட்டரைநஞ்சீயர்கேட்கவென்றபடி. செவ்வாய்க்கிழமைமுற்படப்பெற்றிலோம் என்றவிடத்திலே - ''ராமேண ஸஹ ஸ்ருத்வா ராமோ ஸோவி ஸோவ்வைஹ நீய காமோ | ஶக்ரஸ்யோருஜநிவிஶ்ருத்யம் வராஹ்ஷஶோயம் ஹரவாநுகாரஶே'' என்றது அநுஸந்தேயம். விஶ்ருத்யம் - சதுர்த்தஶ்யாம். செவ்வாய்க்கிழமை - செவ்வாயினுடையசாரம். ப்ரத்யாஸத்திமாத்ரமன்றிக்கே, பரியவேண்டும் ஹேதுக்களுண்டாகையாலும் க்ருஷ்ணுவதாரத்திலேபோந்தாரென்கிறுர் - இனித்தான் இத்யாதி. வன்னியமறுத்திருப்பதோருகுடி - குறும்பரான ஶத்ருக்களைச் சேதித்திருப்பதொருகுடி. மிகையாம்படி - அதிகமாம்படி. ஒருமார்வெழுத்தாக்கிக்கொண்டிருப்பர்களென்றது - எல்லாரையும் அடிமையாக்கிக்கொண்டிருப்பர்களென்றபடி. ஒருமார்வெழுத்தென்றது - மார்வெல்லாமோரெழுத்தென்றபடி. இவ்விடத்திலே-''யஸ்ய த்விஷந்தோ விவிதா: ஸந்தி ஸங்க்ராமே | தஸ்யாமே ஹநநஞ்சைவ ஹாஸ்யம் தவ தர்ஷயே'' என்கிறது அநுஸந்தேயம். ரக்ஷகரானவர்களென்றது - நம்பிமூத்தபிரானை. இவைகளெல்

செய்வதேன்? இவர்கள்; அக்காலத்திலே உணர்ந்துநோக்கப்பெற்றிலர்கள், அவ்விழவுக்கு இன்றிருந்து நோவுபடுகிறார்கள். அவர்களிலே யொருவரானவிவர் சொல்லுகிறபடியிறேயிது- $"தெரிந்துணர்வு இத்யாதி" - மாயாம்ருகத்தின்பின்னேபோய் இளைத்து மீண்டெழுந்தருளின்போது அடிசுட்டுப் பொறுக்கமாட்டாமையாலே தழைகளைமுறித்துப்போகட்டு அவற்றிலே நின்று ஆறியெழுந்தருளினார் என்று கேட்டு, பாவியேன்! அன்று உதவி அத்திருவடிகளிலே என்தலையை மடுக்கப்பெற்றிலேன், வ்யர்த்தமேபோயிற்றிறே அநாதிகாலமெல்லாம் என்று நோந்தாரிறே. இப்படியேயிறே போனதுக்கு இவர்கள் வயிறெரியும்படி. †"திருநீலமணியார்மேனியோடு என்மனம்சூழவருவாரே" என்றும் வயிறுபிடித்தாரிறே இவர்.

"இவர் அவனுடைய அவதாரங்களையும்,ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையும், ‡"தாயர்மகிழ வொன்னார்தளரத் தளர்நடைநடந்த" என்கிறபடியே, ஆஶ்ரிதரைவாழ்விக்கவும் அநாஶ்ரிதரையழியச்செய்யவும் அடியிட்டு அப்படி வளர்ந்தருளின க்ருஷ்ணாவதாரத்தையும் அநுஸந்தித்து மிகவும் ஶிதிலரானவிவர்; தரித்துநின்று உன்னை யநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்று அவனைஶரணம்புகுகிறார்" என்று ஆழ்வான்பணிக்கும். அன்றியே,'விஶ்லேஷஸமயத்திலே உன்குணங்கள் புத்திஸ்த்தமாய்க்கொண்டு மிகவும் நலிய, அத்தாலே நெருக்குண்டு நோவுபடுகைதவிர்ந்து, உன்திருவடிகளிலேவந்துசேர்ந்து உன்னைக்கிட்டி யநுபவிக்கும்படி பண்ணியருளவேணுமென்று அவனைக்குறித்து அருளிச்செய்கிறார்'

---

*லாம் அதீதகாலங்களிலேயன்றோ, அதுக்கு இப்போது நோவுபடுகிறதென்? என்ன - அக்காலத்திலே இத்யாதி. அப்படி அதீதகாலாபதாநத்துக்கு நோவுபட்டார்களோ? என்ன - அவர்களிலே இத்யாதி. இதுவென்றது - வக்ஷ்யமாணத்தை. பாட்டுக்குஹாவம் - மாயாம்ருகத்தின் இத்யாதி. போனதுக்கு வயிறெரிகைக்கு இவர்தாம் அப்படி பரிவரோ? என்ன - திருநீலமணியார் இத்யாதி.*

*ப்ராஸங்கிகங்களை யருளிச்செய்து தலைக்கட்டினவநந்தரம், இத்திருவாய்மொழிக்கு மூன்றுநிர்வாஹமருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி.மூந்தற இத்திருவாய்மொழி ப்ரமேயங்களையெல்லாம்சேரப்பிடித்துக்கொண்டு ஆழ்வான் நிர்வாஹத்தை யருளிச்செய்கிறார்—இவர்அவனுடைய இத்யாதி "கொப்பூழ்ச்செந்தாமரைமேல்" இத்யாதியைப்பற்ற-ஜகத்ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களையும் என்றது. ஒன்னார் - ஶத்ருக்கள். "வதுவைவார்த்தையுள்" இத்யாதியைப்பற்ற - ஆஶ்ரிதரைவாழ்விக்கவும் இத்யாதி. ஶிதிலரானஇவரென்றது-விரஹதசையில் அநுஸந்தாநமாகையாலேபாதகமாக, ஶிதிலரானவரென்னுதல்; "நினைதொறும் சொல்லுந்தொறும்நெஞ்சிடிந்துகும்" என்றபோக்யதையாலே ஈடுபட்டு ஶிதிலரானவரென்னுதல். "நாகணைமிசைநம்பிரான்" இத்யாதியைப்பற்ற - ஶரணம்புகுகிறார் என்றது "நின்றுநின்றுநினைகின்றேன்" இத்யாதியைப்பற்ற - ஆழ்வான்நிர்வாஹம். "என்கண்கட்குத்திண்கொள்ள" இத்யாதியைப்பற்ற - எம்பார்நிர்வாஹம். "செய்துபோனமாயங்களும்" என்றத்தைப்பற்ற - பிள்ளான்நிர்வாஹம். ஸம்ஸ்ப்ருஶ்ய இத்யாதி - "ஸோப்யநந்யஜஸாஸ்ப்ருஷ்டத்ருஹோநவாணிநா । ஸம்ஸ்ப்ருஶ்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" இதி வசநமோ. தெரிந்துணர்வு இத்யாதி - பெரியதிருவந்தாதி, எண்பத்திரண்டாம்பாட்டு. [தெரிந்துணர்வொன்றின்மையால்] - "ஹரவஷிஷயஜேவாஜோஜேஶூ" என்றிருக்கத்தக்க விஶதஜ்ஞாநம் ஏகதேசமுமில்லாமையாலே. [தீவினையேன்] - அநுபவத்தாலே யடிக்கழஞ்சுபெறக்கடவ காலத்தைப் பாழேபோக்குகைக்கீடான துஷ்கர்மத்தைப்பண்ணின நான். [கரந்துருவிலம்மானை] - மறைத்த ராக்ஷஸரூபத்தையுடைய மாயாம்ருகத்தை. கரக்கை - மறைக்கை. உருவில் - ரூபத்தையுடைய. அம்மானை - அந்தமானையென்றபடி. [அஞ்ஞான்று] - பிராட்டி "பிடித்துத்தாவேணும்"*

---

$ பெரியதிருவந்தாதி, அ௨.. † திருவாய்மொழி - அ, ௩, ௬.

‡ பெரியாழ்வார் திருமொழி - ௧, ௭, ௧௧.

என்று எம்பார் அருளிச்செய்யும்படி. அங்ஙனன்றிக்கே, '' 'ஸர்வேஶ்வரன் க்ருஷ்ணனாய் வந்து திருவவதாரம்பண்ணித் திருவாய்ப்பாடியிலே வளர்ந்தருளாநின்றான்'' என்றுகேட்டு, 'அங்கே யயாமமநோரயம் நமக்குக் கலந்து பரிமாறலாம்' என்று தெற்குத்திருவாசலாலே சென்றுபுக, 'இப்போது இங்ஙனே வடக்கிற்றிருவாசலாலே புறப்பட்டு * தன்னுடைச் சோதியேறவெழுந்தருளினான் ' என்றுகேட்டு விழுந்துகிடந்து கூப்பிடுகிறார் என்று பிள்ளான் பணிக்கும்'' என்றருளிச்செய்வர்.

## முதற் பாட்டு.

பிறந்தவாறும்வளர்ந்தவாறும் பெரியபாரதங்கைசெய்து ஐவர்க்குத்
திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோனமாயங்களும்
நிறந்தனூடுபுக்கெனதாவியை நின்றுநின்றுருக்கியுண்கின்ற இச்
சிறந்தவான்சுடரே! உன்னையென்றுகொல்சேர்வதுவே ?

ஆ.—அகர்மவஶ்யனாயிருந்துவைத்து ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமாக அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தோடேகூட வந்து அவதரித்ததும்; பூதநாதிப்ரதிபக்ஷங்கள் மாயும்படியாகவும், நவநீதசௌர்யாதி திவ்யசேஷ்டிதங்களாலே அநுகூலர் வாழும்படியாகவும், வளர்ந்தபடியும்; பாண்டவர்களுக்காக அபரிச்சேத்யமான பாரதஸேனையை யணிவகுத்தும், ''ஆயுதமெடேன்'' என்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும், தூத்யஸாரத்யாதிகளைப்பண்ணியும், இப்படிசெய்த சீர்மையறியாத தூர்த்தேசத்திலே யிராதே யெழுந்தருளின ஆஶ்சர்யங்களும்; விரஹவ்யஸநத்தாலேயறவவஸந்நமான என்னுடைய ஆத்மாவை மர்மத்திலே புக்கு விடாதேநின்று ஶிதிலமாக்கி முடியாநின்றது; அபரிச்சேத்யமான அழகையுடைய உன்னைக் கிட்டுவதென்றோவென்று எம்பெருமானைக் குறித்துக் கூப்பிடுகிறார்.

ஒ.—முதற்பாட்டில், உன்னுடைய அவதாராதிகள் என்னை மர்மத்திலே தொட்டு ஶிதிலமாக்காநின்றன,இத்தஶையில்யும் நீங்கி ஶரித்துநின்று உன்னை அநுபவிப்பது என்றென்று, இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[பிறந்தவாறும் என்று தொடங்கி] - அகர்மவஶ்யனாயிருந்துவைத்து ஆஶ்ரித ஸம்ஶ்லேஷார்த்தமாக அப்ராக்ருத திவ்யஸம்ஸ்த்தாநத்தோடேகூடவந்து

என்று அர்த்தித்த அக்காலத்திலே. [பின்தொடர்ந்த] - பின்பற்றிப்போன. [ஆழியங்கையம்மானை]- கைகேயிவரத்திலகப்படாத அருகாழிமோதிரத்தோடேகூடின அழகியதிருக்கையையுடைய ஸர்வேஶ்வரனை. [ஏத்தாதயர்த்து] - இளையபெருமாளும் உதவப்பெறாததனிமையிலேயுதவி மங்களாஶாஸநம் பண்ணி ஸ்துதிக்கப்பெறாதே யறிவுகெட்டு. [கீழ்நாள்களெல்லாம்] - கீழ்கழிந்த அநாதிகாலமெல்லாம். [வாளாவிருந்தொழிந்தேன்] - வ்யர்த்தமேயிருந்துவிட்டேனித்யர்த்தః. திருநீலம் இத்யாதி - ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி ஸம்பத்தையுடைத்தாய் நீலரத்நம்போலேயிருக்கிற திருமேனியோடேகூட, ''இவ்வடிவழகுக்கு என்னதீங்குவருகிறதோ'' என்று என்மநஸ்ஸானது ப்ரமிக்கும்படி ஸம்ஸாரத்திலேவருவாரோ இத்யர்த்தః. தாயர்மகிழ இத்யாதி - பெரியாழ்வார்திருமொழி. பெற்றதாயான யசோதையும் அவளோபாதி ஸ்நேஹிகளானவர்களும் ப்ரீதராம்படியாகவும், கம்ஸாதிகளான ஶத்ருக்கள் நஶிக்கும்படியாகவும் தளர்நடைநடந்தவென்றபடி.

பண்ணினபடியாலும், பூதநாதிப்ரதிபக்ஷம் மாய்ந்துபோகும்படியாகவும் நவநீதசௌர்யாதி திவ்யசேஷ்டிதாதிகளாலே அநுகூலர்வாழும்படியாகவும் வளர்ந்தருளினபடியாலும் பாண்டவர்களுக்காக அபரிச்சேத்யமான பாரதஸேனையை அணிவகுத்து 'ஆயுதமெடேன்' என்றுவைத்து ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும், தூத்யஸாரத்யாதிகளைப்பண்ணியும்; இவ்வழிகளாலே ஆஶ்ரிதர்பக்கல் நீயிருக்கும்படிகளைக்காட்டி இப்படிசெய்து உன் சீர்மை யறியாத தூர்தேஶத்திலிராதே எழுந்தருளின ஆஶ்சர்யங்களாலும். [நிறந்தனூடுபுக்கு என்றுமேலுக்கு] - விரஹவ்யஸநத்தினாலே அற அவஸந்நமான என்னுடைய ஆத்மாவை மர்மத்திலேபுக்கு விடாதேநின்று ஶிதிலமாக்கிமுடியாநிற்பதும்செய்து அபரிச்சேத்யமாய் சிறந்திருந்துள்ள இவ்வழகை யுடையவனே! பிரியாதபடி கிட்டுவது என்றென்கிறார் என்றுமாம்.

ப.—முதற்பாட்டில், க்ருஷ்ணனுடைய அவதாராதி சேஷ்டிதங்களை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

பிறந்த - ("அஜாயமாநஃ", "நாராயணாத்", "அஜோபிஸந்" என்கிறபடியே அகர்மவஶ்யனுய்வைத்து அஜஹத்ஸ்வபாவனாய் ஆஶ்ரிதஸம்ரக்ஷணார்த்தமாக இதர ஸஜாதீயனாய்ப்) பிறந்த, ஆறும் - ப்ரகாரமும், வளர்ந்த - (கைக்கீழே காற்கீழே விரோதிகளழியும்படியாகவும், ஆஶ்ரிதாபிமாநித்த த்ரவ்யமே தாரகமாம்படியாகவும்) வளர்ந்த, ஆறும் - ப்ரகாரமும், பெரியபாரதம் - மஹாபாரதத்திலே, கைசெய்து - படையைக்கைவகுத்து, ஐவர்க்கு-பாண்டவர்களைவர்க்கும், திறங்கள்-விஜயோபாயப்ரகாரத்தை, காட்டியிட்டு - ப்ரதர்ஶிப்பித்து, செய்து - (ஆஶ்ரிதர்க்கு உபகரித்தும், அநாஶ்ரிதரை யழியச்செய்தும்) அவதாரகார்யம் சமைந்து, போன-* தன்னுடைச்சோதியேறப்போன, மாயங்களும் - ஆஶ்சர்யப்ரகாரங்களும், நிறந்தன் - மர்மமான ஹ்ருதயப்ரதேஶத்துக்கு, ஊடு - உள்ளே, புக்கு - ப்ரவேஶித்து, எனது-என், ஆவியை - ஆத்மாவை, நின்று நின்று - க்ஷணந்தோறும் நின்றுநின்று, உருக்கி - த்ரவத்ரவ்யமாக்கி, உண்கின்ற - க்ரஸியாநின்றன; இ-எனக்கு நித்யஸந்நிஹிதமாய், சிறந்த - அநுரூபமாய், வான் - அபரிச்சேத்யமான, சுடரே - தேஜஸ்ஸை யுடையவனே! (இந்தஸ்வபாவங்களை ஶிதிலனாகாமல் நின்று அநுபவிக்கலாம்படி), உன்னை - உன்னை, என்றுகொல் - என்றோ, சேர்வது-சேர்வது.

இ.—முதற்பாட்டில், உன்னுடைய அவதாராதிகள் என்னை மர்மத்திலே நலியாநின்றன, தரித்து உன்னை யநுஸந்திப்பதென்று? என்று, இத்திருவாய்மொழியிலர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்கிறார்.

[பிறந்தவாறும்]-இவர்க்குமூன்று அவஸ்தையுண்டு-"எத்திறம்"என்றும்,"பிறந்தவாறும்"என்றும்,"கண்கள்சிவந்து"என்றும்."மூன்றிலும்அவ்வாறுமாஸம்மோஹித்துக்கிடந்தார்"என்றுப்ரஸித்தம்."ஜநிஷ்டை ஏதம் ஜோஷாஜநா" என்று-தோஷஸ்பர்ஶத்தைப் பற்ற ருஷிசொன்னான்; ஆஶ்ரிதர்க்காக கர்ப்பவாஸம்பண்ணினானென்கிற மஹாகுணத்தை இழக்கவொண்ணாதென்று - இவர்,பிறந்தவாறு என்கிறார். அகர்மவஶ்யனாயிருந்துவைத்து ஆஶ்ரிதாநுக்ரஹமேஹேதுவாகப் பிறந்தபடி. அப்ராக்ருதஸம்ஸ்த்தாநத்தை இதரஸஜாதீயமாக்கினபடி. அஜஹத்ஸ்வபாவனாய் வந்துபிறந்தபடி. அவதாரங்களில் ஈடுபடுவாரளவுடையவர்களிறே, "தஸ்யதீராஃபரிஜாநந்தியோநிம்". "பிறந்தவாறு" என்றால்,

"வளர்ந்தவாறு" என்னமாட்டாதே அதுதன்னையே ஆவர்த்தித்து ஈடுபடுகை - வஸிஜாநஷ்யிறே. ஸம்ஸாரிகளுக்கு,பிறக்கப்பிறக்க ஒளிமழுங்குமாபோலே, அவனுக்கேயிறே ஒளிமிஞ்சிவருவது; "ஸஉ ஶ்ரேயாந்ஹவதி ஜாயமாந:", "ஜந்மகர்ம ச மே திவ்யம்" என்று அவன்றானும் மதித்திறேயிருப்பது. [வளர்ந்தவாறும்] - பூதநாதிப்ரதிபக்ஷம் மாயவும்; நவநீதசௌர்யசேஷ்டிதாதிகளாலே அநுகூலர் வாழவுமிறே வளர்ந்தது. பூதநாதிகளுயிர் மாளவும், யசோதாதிகள்வெண்ணெய் மாளவுமிறே வளர்ந்தது. ப்ரதிகூலர் உயிரும், அநுகூலஸ்பர்ஶமுள்ள த்ரவ்யமுமே தாரகமாகவளர்ந்தபடி. [பெரியபாரதம்] - பால்யத்தில் தன்னைநோக்கினான், பக்வனானபின்பு ஆஶ்ரிதரைநோக்கித்திரிந்தான். பிறந்து வளர்ந்து பெரியபாரதம்கைசெய்தென்னுதொழிந்தது - தனித்தனியே ஆழங்காற்படுகிறபடி தோற்றுகைக்காக. [பெரியபாரதம்] - மஹாபாரதமென்கிறார். [கைசெய்து] - அபரிச்சேத்யமான பாரதஸேனையை கையுமணியும்வகுத்து யுத்தம்பண்ணுவித்தபடி. [ஐவர்க்குத்திறங்கள்காட்டியிட்டு] - "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், பகலை இரவாக்கியும், எதிரிகள்மர்மத்தைக் காட்டிக்கொடுத்தும், தூத்யஸாரத்யாதிகளைப் பண்ணியும், ஆஶ்ரிதர்பக்கல் நீபண்ணியிருக்கும் ஓரங்களை வெளியிட்டும். [செய்துபோன மாயங்களும்] - உகவாதார் மண்ணுண்ணும்படியாகவும், உகந்தார் உன்படிகளையநுபவித்துவாழும்படியாகவும் பண்ணி; உன்சீர்மையை யறியாதே ஸஜாதீயபுத்திபண்ணும் தூர்தேஶத்திலிராதே, போன ஆஶ்சர்யசேஷ்டிதங்களும். அவதரித்தவோபாதி ப்ரியம் போரும் இவர்க்கு எழுந்தருளினதுவும். "க்ஷத்ராபாராவதரணம் வ்யுஷிவ்யா: வ்யுஷ்டமாவந:। [illegible]"[நிறந்தனூடுபுக்கு]-தோற்புரையேபோகாதே மர்மத்திலேபுக்கு. துர்யோதநாதிகள்நஶித்துப்போனார்கள், பாண்டவர்கள்ராஜ்யம்பெற்றுப்போனார்கள், இவரை அந்தசேஷ்டிதங்கள் மர்மத்திலேநலியாநின்றது. [எனதாவியை] - விரஹத்தாலே அவஸந்நமான என்னாத்மாவை. எல்லாரும் மஹாபாரதத்திலேகேட்டு தரிக்கிறதிறே. [நின்றுநின்று] - இடைவிடாதே நின்று. [உருக்கி உண்கின்ற] - ஶிதிலமாக்கி முடிக்கின்ற. முடியவுமொட்டாதே ஜீவிக்கவுமொட்டாதே நலிகிறபடி. [இச்சிறந்தவான்சுடரே] - நாட்டுக்கு "பரமபதத்தேறப்போனான்" என்று பேராய், இவருள்ளேபுகுந்தான். தகுதியாய் அபரிச்சேத்யமான அழகையுடையவனே. [உன்னை இத்யாதி] - உன்குணசேஷ்டிதாதிகளாலே யழிகிறவென்னை, நினைத்து தரிக்கவல்லேனும்படி பண்ணியருளவேணுமென்னுதல்; பிரியாதபடி கிட்டுவதென்றென்னுதல். பிறந்தவாறென்றுதொடங்கி - எனதாவியை - உருக்கிஉண்கின்ற என்று நிர்வஹித்துப் போருவது. ஒருதமிழன், [பிறந்தவாற்றாலும் என்றுதொடங்கி - செய்துபோனமாயங்களாலும் - உருக்கியுண்கின்ற - இச்சிறந்தவான்சுடரேயென்று] - அவன்பக்கலிலேயாக்கி

ஈடு.—முதற்பாட்டு. இத்திருவாய்மொழியில் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தை ஸங்க்ரஹேண அருளிச்செய்யாநின்றுகொண்டு; உன்னுடைய அவதாராதிகள் என்னை மர்மத்திலேதொட்டு ஶிதிலமாக்காநின்றன, இஸ்ஸம்ஶ்லேஷம் நீங்கி உன்னை தரித்துநின்று நான் அநுஸந்திப்பதெப்போதென்கிறார்.

---

முதற்பாட்டு.—பிறந்தவாறும் இத்யாதி. "பிறந்தவாறும்" என்று தொடங்கி, "உருக்கியுண்கின்ற; உன்னையென்றுகொல்சேர்வதுவே" என்கிறவற்றைக்கடாக்ஷித்து அவதாரிகை - இத்திருவாய்மொழியில் இத்யாதி.

[பிறந்தவாறும்] - மாதாபிதாக்களுக்குக் காற்கட்டறும்படியிறே பிறந்தது. தன்னைப் பெற்றவர்களுடைய பந்தத்தை அறுத்துக்கொண்டுவந்து பிறப்பாருமுண்டோ. "இவனிறே நமக்குக் காற்கட்டானான்" என்றிருந்தார்கள் அவர்கள்; அது பொறுக்கமாட்டாமை, "உங்களுடைய பந்தம் நான் பொறுக்கமாட்டேன்" என்றுவிட்டான். * தந்தைகாலில் விலங்கறவிறே வந்து தோன்றிற்று - பிறக்கிறபோதே மாதா பிதாக்கள் காலில் க்ரந்தியை சிகித்ஸித்துக்கொண்டுகோணும் பிறந்தது. [பிறந்தவாறும்] - பிள்ளாய்! பிறக்கிறபோதும் ஒரு விளக்கெரிந்தாலாகாதோ, தானே விளக்காகவிறே பிறந்தது. * ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கிறே. [பிறந்தவாறும்] - அகர்மவஶ்யனை தான் கர்மவஶ்யரோடொக்கப்பிறப்பது, பிறந்தால் ஆஶ்ரிதஸம்ரக்ஷணமே தனக்கு ப்ரயோஜனமாயிருப்பது, அவர்கள் ஆபத்துப்படும்காலமே தனக்குப் பிறக்கைக்கும் காலமாவது, பிறவாநின்றால் தன் ஐஶ்வர்யத்திலொன்றும்குறையாமற் பிறப்பது, அப்ராக்ருத ஸம்ஸ்தாநத்தை இதரஸஜாதீயமாக்காநிற்பது, தன்ஜந்மத்தை யநுஸந்தித்தாருடையஜந்மங்கள் போம்படியாயிருப்பது, இவையெல்லாவற்றையும் நினைக்கிறது. "நமக்காக இவர்கள் பிணைபட்டுச் சிறையிருக்கும்படி இவர்களுக்கு இங்ஙனேபிறப்பதே" என்று ஈடுபடாநிற்பதான படிகளையெல்லாம் நினைக்கிறது. [பிறந்தவாறும்] - "ஆவிரபூத்" என்கிறத்தைக்கொண்டு, தோற்றினவாறும் என்னுதொழிவானேன்? என்னில், — ஸம்ஸாரிகள் பத்துமாஸம் கர்ப்பவாஸம்பண்ணுவர்

மேன்மைதோற்றவந்து பிறந்தானென்கிறார் - **மாதாபிதாக்கள்** இத்யாதி. மேன்மைதோற்றவந்து பிறக்கையாலே ஈடுபாட்டுச்சுடலாக அருளிச்செய்கிறார் - **தன்னைப்பெற்றவர்கள்** இத்யாதி. இது - "பிறந்தவாறும்" என்கிறவருடைய ஹார்த்தபாவம். அதாவது - எல்லாரும் தங்களைப் பெற்றவர்களுக்குப் பாசத்தை யுண்டாக்குவர்களொழிய, பாசத்தை யறுத்துக்கொண்டு வந்து பிறப்பாருண்டோ வென்றபடி. "மாதாபிதாக்கள்" இத்யாதி பூர்வோக்தவாக்யவிவரணம் - **இவனிறே** இத்யாதி வாக்யத்வயம். மாதாபிதாக்கள்காற்கட்டு அறும்படி வந்து பிறந்தானோ? என்ன - **தந்தைகாலில்** இத்யாதி. *திருமொழி, எட்டாம்பத்து. அஞ்சாந்திருமொழி, முதற்பாட்டு. ஸ்ரீவஸுதேவர்காலில் விலங்கு கழலும்படி வந்தவதரித்தவிதயர்த்த:. எடுத்தபாசுரத்துக்கு ரஸோக்தியாக அர்த்தம் - **பிறக்கிறபோது** இத்யாதி. **க்ரந்தி** - முடிச்சு. நீர்மையும் தோற்றப்பிறந்தானென்கிறார் - **பிள்ளாய்** இத்யாதி. பிள்ளாயென்றது - வார்த்தைப்பாடு. ஈடுபாட்டிலே. வேறொருவிளக்கில்லையோ? என்ன - **தானே** இத்யாதி. அவன்தான் விளக்கோ? என்ன - **ஆயர்** இத்யாதி. பாசுரஸ்ய ஸ்பஷ்டோர்த்த:. பிறந்ததுமென்னுதே, "ஆறும்" என்றதுக்கு பாவம் - **அகர்மவஶ்யனை** இத்யாதி. இவ்வாக்யத்தில் - "பரித்ராணாய ஸாதூநாம்", "அஜாயமாநோ பஹுதா விஜாயதே", "ஜந்ம கர்ம ச மே திவ்யம்" இத்யாதி ப்ரமாணங்கள் அநுஸந்தேயம். இவர்பந்தம் பொறுக்கமாட்டாதே அவன்நெஞ்சு நொந்திருக்கும்ப்ரகாரத்தை இப்பதத்திலே எறிட்டுக்காட்டுகிறார் - **நமக்காக** இத்யாதி. இந்தவாக்யம் - **நான்பொறுக்கமாட்டேனென்றுவிட்டான்** என்றவநந்தரம் அநுஸந்தேயம். அன்றிக்கே, "தன்னைப்பெற்றவர்களுடைய" இத்யாதிவாக்யவிவரணம் - **நமக்காக** இத்யாதி என்னுதல். ஆவிர்ப்பூதமென்கிறத்தைக்கொண்டு என்றது - "ஆவிரபூத்" என்று ருஷிசொன்னாப்போலேயென்றபடி. **தோற்றினவாறுமென்னுதொழிவானேன்** - இல்லாதபிறவியையிட்டு குணாநுஸந்தாநம்பண்ணலாமோவென்று கூட்டுவது. பரிஹாரம் - **ஸம்ஸாரிகள்** இத்யாதி. அதாவது - ருஷி, "ஆவிரபூத்" என்றது - அவதாரம் ஐச்சிகமென்கைக்காக; இவர், பிறந்தவாறுமென்றது --

களாகில் "ததஶ்ச த்வாதஶேமாஸே" (ததஶ்ச த்வாதஶேமாஸே) என்கிறபடியே பன்னிரண்டுமாஸம் கர்ப்பவாஸம்பண்ணுகையாலும், அவளுக்கு முலை சுரக்கையாலும், முலை பெறுவிடில் இவன்றான் நோவுபடுகையாலும் தன்னைக்கட்டவும் அடிக்கவுமாம்படி எளியனாக்கிவைக்கையாலும் - பிறந்தவாறுமென்கிறார். பகல்கண்டகுழியிலே யிராவிழுவாரைப் போலே, பருவம் முற்றினவளவிலே "எத்திறம்" என்று மோஹித்துவிழக்கடவ இவர் அதுக்குமவ்வருகேபோய் இழிகிறாரிறே கலக்கமிருக்கிறபடி. "எத்திறம்" என்று அங்கே ஆறுமாஸமும், "பிறந்தவாறும்" என்று இங்கே ஆறுமாஸமும் மோஹித்துக்கிடந்தாரென்று ப்ரஸித்தமிறே. ஸ்ரீபரதாழ்வான் ராமவிஶ்லேஷத்தாலே மோஹித்துத் தறைப்பட்டுக் கிடக்க, தாய்மாரடங்கலும்சுற்றும்பார்த்துநிற்க, 'ஶத்ருக்நோ நந்தரஸ்த்தித꞉' (ஶத்ருக்நோ நந்தரஸ்த்தித꞉) என்கிறபடியே - ஸ்ரீஶத்ருக்நாழ்வான் கிட்டவுங்கூட ஹயப்பட்டு ஸ்தப்தனாய் நின்றானிறே; அப்படியே; * நல்லார் நவில்குருகூரிறே, ஜகத்தில் அறிவுடையாரடங்கலும் திரண்டு இவர்படிகளைக்கண்டு அறிவுகெடும்படியிறே இவர் கலங்கிக்கிடந்தகிடை. [வளர்ந்தவாறும்] - வளர்ந்தபடியை யநுஸந்தித்தால் பிறந்தவாற்றிலே கால்வாங்கி இளைப்பாறவேண்டும்படியிறே யிருப்பது. பிறக்கிறபோது சிறைக்கூடத்திலேதான் பிறந்தால்,

ப்ர:—(பிறந்தவாறும்)—ஶ்ரீபாகவதே [ங] 'ததோঽகிலஜக' இத்யாதி [உ].

வால்மீகிராமாயணே [கஅ] "ததஶ்ச த்வாதஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ। நக்ஷத்ரேঽதிதிதைவத்யே ஸ்வோச்சஸம்ஸ்தேஷு பஞ்சஸு॥அ॥ க்ரஹேஷு கர்க்கடே லக்நே வாக்பதாவிந்துநா ஸஹ। ப்ரோத்யமாநே ஜகந்நாதம் ஸர்வலோகநமஸ்க்ருதம்॥ கூ॥ கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம்॥கO॥".

அயோத்யாகாண்டே [அள] ஶ்ரீபரதவாக்யே "ததஸ்ஸ்வஸ்த்ரஹதம் ஶத்ருக்நோঽநந்தரஸ்த்தித꞉। வஸிஷ்டஜ்யோதிர்மாத்ருமத்யஸ்தம் ஜந்மஶோக கர்ஶித꞉॥ச॥".

அவதாரத்தில் மெய்ப்பாட்டுக்காகவென்றபடி. "தேவகீபூர்வஸந்த்யாயாமாவிர்பூதம்" இதி ஶ்ரீபாகவதே. ததஶ்ச த்வாதஶே மாஸே சைத்ரே நாவமிகே திதௌ। நக்ஷத்ரேঽதிதிதைவத்யே ஸ்வோச்சஸம்ஸ்தேஷு பஞ்சஸு" இத்யாதி, "கௌஸல்யாஜநயத்ராமம் ஸர்வலக்ஷணஸம்யுதம்" இதி வால்மீகிராமாயணே. வளர்ந்தவாற்றிலே "எத்திறம்" என்று மோஹிக்கிறவிவர், அதுக்கு அவ்வருகான பிறந்தவாற்றிலேபோவானென்? என்ன - பகல்கண்ட இத்யாதி. இப்படிசொல்லுகைக்கு இரண்டிடத்திலும் மோஹித்தாரோ? என்ன - எத்திறம் இத்யாதி. மோஹித்ததசையில் இவரைநோக்கினார்? என்ன; ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - ஸ்ரீபரதாழ்வான் இத்யாதி. "ததஸ்ஸ்வஸ்த்ரஹதம் ஶத்ருக்நோঽநந்தரஸ்த்தித꞉" இத்யயோத்யாகாண்டே ஶ்ரீபரதவாக்யே. அப்படியே என்றதுக்கு - ஜகத்தில் அறிவுடையார் என்றத்தோடே யந்வயம். நல்லார்நவில்குருகூர் - ஸத்துக்கள் திரண்டிருக்கிற திருநகரியென்னுதல். ஸத்துக்களாலே ஸ்துதிக்கப்பட்ட குருகூரென்னுதல். நவிலுதல் - திரளுதல், ஸ்துதித்தலும். நவிலுகை - பயிலுகையாய், ஸ்துதிக்கையென்றபடி. *திருவிருத்தம், சாற்றுப்பாட்டு. வளர்ந்தவாறிருக்கும்ப்ரகாரம் பிறந்தவாற்றிலும் அதிகமென்கிறார் - வளர்ந்தபடியை இத்யாதி. வளர்ந்தபடியை யநுஸந்தித்து ஈடுபடுகிற ஆழ்வாருடைய ஹார்த்தபாவமாதல், விவரணமாதல் - பிறக்கிறபோது இத்யாதி.

வளருகிறபோது நாட்டாரோடொக்க வளரத்தான்பெற்றதோ. [வளர்ந்தவாறும்] - பூதநாதிகளுயிர்மாளவும், யசோதாதிகளுடைய ஸ்நேஹம் வளரவுமிறே வளர்ந்தது. "தாயர்மகிழ வொன்னார்தளரத் தளர்நடைநடந்து" என்கிறபடியே. * மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய் விழுங்கிப்போய்ப் படிறுபலசெய்திப்பாடியெங்கும் திரியவிறே அவர்கள் உகந்திருப்பது. [வளர்ந்தவாறும்] - இவன் கால் நெடுகநெடுக, ப்ரதிகூலருடலும் மாண்டது, அநுகூலருடலும் மாண்டது; $ "பொட்டத்துற்று" என்றும், ¶ "வெண்ணெய்விழுங்கிவெறுங் கலத்தைவெற்பிடையிட்டு" என்றும் அநுகூலருடலேயிறே மாண்டது. இப்படி ப்ரதிகூலர் மண்ணுண்ணவும், தான் நெய்யுண்ணவும், அநுகூலர் கண்ணுண்ணவுமிறே வளர்ந்தருளிற்று. [பெரியபாரதம்] - "மஹாபாரதம்" என்றிறே ப்ரஸித்தி. [கைசெய்து] - கையுமணியுமாக வகுக்கைதொடக்கமான பூசலுள்ளதெல்லாம் நினைக்கிறது. [ஐவர்க்குத்திறங்கள்காட்டியிட்டு] - அறிவுபிறப்பதற்குமுன்பு ஸத்தையே ப்ரதிகூலநிரஸநத்துக்குடலாயிற்று, ஸஹாவஸ்த்தாநமில்லையிறே திமிரதேஜஸ்ஸுக்களுக்கு; பருவம் நிரம்பினபின்பு அநுகூலர்க்குக் கையாளானபடி. [திறங்கள்காட்டியிட்டு] - தூதுபோயும், ஸாரத்யம்பண்ணியும், "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுத்தும், பகலையிரவாக்கியும், எதிரிகள் உயிர்நிலைகளைக் காட்டிக்கொடுக்கை தொடக்கமானவற்றையெல்லாம் சொல்லுகிறது. [செய்து] - இப்படிசெய்து. [போனமாயங்களும்] - ஆஸ்ரிதரக்ஷணத்துக்காக வந்து பிறந்து அவர்களுடைய ஆபத்துக்களைப்போக்கி யுபகரித்தால், "இது நமக்காகச்செய்தானிறே" என்று இருக்கையன்றிக்கே, இவன்தன்னோடே எதிரிடும்படியான ஸம்ஸாரத்திலேயிராதே,

வளர்ந்ததுமென்னுதே, "ஆறும்" என்றதுக்குஹாவம் - பூதநாதிகள் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் தாயர் இத்யாதி. பெரியாழ்வார்திருமொழி. தீம்புகளாலே தாய்மார்க்கு ஸ்நேஹம் வளருமோ? என்ன - மிடறுமெழுமெழுத்து இத்யாதி. *பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம்பத்து, இரண்டாந்திருமொழி, ஆறாம்பாட்டு. ஓதநாபூபாதிகள்போலன்றிக்கேமிடற்றிலுறுத்தாமல் மெழுமெழுத்துள்ளேயோடும்படி வெண்ணெயை யமுதுசெய்து, புறம்பேபோய்த் தீம்புகள்பலவும்செய்து இத்திருவாய்ப்பாடியெங்கும் திரியவிதயர்த்தம். படிறு - தீம்பு. பூதநாதிகளுயிர்மாள என்றதையும், யசோதாதிகளுடைய ஸ்நேஹம்வளரவும் என்றத்தால்ஹவிதமான நவநீதக்ஷயத்தையும் ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - இவன்கால்நெடுக இத்யாதி. உடலென்று - ஶரீரமும், உத்பத்தியும், ஐஶ்வர்யமும். ப்ரதிகூலருடல் மாண்டதோ? என்ன - பொட்டத்துற்று இத்யாதி. $பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம்பத்து, அஞ்சாந்திருமொழி, முதற்பாட்டு இது. ¶இரண்டாம்பத்து, ஒன்பதாந்திருமொழி, முதற்பாட்டு - வெண்ணெய்விழுங்கி இத்யாதி. [அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப்பொட்டத்துற்று] - ஆக்கிக்குவித்தசோற்றுபர்வதமும், அதின்மேலேவிட்ட தயிரோடையும், நெய்ச்சேறுமுதலானவற்றையடங்கச் சடக்கெனவமுதுசெய்து இத்யர்த்தம். பருப்பதம் - பர்வதம். பொட்ட - சீக்ரமாக. துற்று - அமுதுசெய்து. [வெண்ணெய்விழுங்கியித்யாதி] - தாழிகளில்வெண்ணெயை யமுதுசெய்து, அதிருந்தபாத்ரத்தைக் கல்லிலேயிட்டு உடைத்தென்றபடி. வெற்பு - கல்லு. கண்ணுண்கையாவது - கண்ணாலேயநுபவிக்கை. பெரியபாரதம்கைசெய்து - மஹாபாரதத்திலே படையைக் கைவகுத்தென்று ஶப்தார்த்தம். கைவகுக்கையாவது - வ்யூஹம் பிரிக்கை. கையுமணியும்வகுக்கை - ஸேனையில் வ்யூஹம்பிரிக்கை. ஸத்தாமாத்ரமே ப்ரதிகூலநிரஸந ஹேதுவாமோ? என்ன - ஸஹாவஸ்த்தாநம் இத்யாதி. "பெரிய" இத்யாதிக்கு அவதாரிகை - பருவம்நிரம்பின இத்யாதி. "திறங்கள்" என்றவஹவசநார்த்தம் - தூதுபோயும் இத்யாதி. "திறம்" என்றது - ப்ரகாரம். விஜயோபாய ப்ரகாரமென்றபடி. "செய்து" என்றது - கீழ்ச்செய்தசெயல்களை.

ஓரளவிலே இங்குநின்றும்போன ஆஶ்சர்யசேஷ்டிதங்களும். "க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந: । மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்தாநமுத்தமம் ॥" (க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந: - மோஹயித்வாஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்) - வந்து திருவவதாரம்பண்ணி, அநுகூலர் கார்யங்களடையத் தலைக்கட்டி; ப்ரதிகூலரையடைய முடைகோலுக்கு இரையாக்கி, அநுகூலரையடையக் கண்ணுலேவிழவிட்டு, உபயகோடியையும் நோவுபடுத்தி; இங்கு நின்றும் போய்த் தப்பப்பெறுவதே! என்கிறது. "ஸ்வம்ஸ்தாநமுத்தமம்" (ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்)-இங்குள்ளாரடங்கலும் எதிரம்புகோக்குமாபோலேயிறே அங்குள்ளாரடங்கலும் எதிரேற்கப் போனபடி. [நிறந்தனூடுபுக்கு] - தோல்புரையேபோமதன்று, நிறத்திலே - மர்மத்திலே, நலிகிறபடி. [எனதாவியை] - அல்லாதாரடங்கலும் இவற்றைக்கேட்டு உண்டுடுத்துக் காலம்போக்கித் திரியாநின்றார்களிறே. [ஆவியைநின்றுநின்றுருக்கி] - * அச்சேத்யமுமாய் அதாஹ்யமுமாயிருக்கிற ஆத்மாவை இடைவிடாதே ஶிதிலமாக்காநின்றன. [நின்றுநின்றுருக்கியுண்கின்ற]-அது ஒருகால்செய்து போகச்செய்தேயும் இது உருவநின்று நலியாநின்றது. [இச்சிறந்தவான்சுடரே] - தகுதியாய் அபரிச்சேத்யமான இவ்வழகையுடையவனே. வஸ்து பிறக்கப்பிறக்கவாயிற்றுத் தேஜஸ்ஸு உஜ்ஜ்வலமாவது. [இச்சிறந்த] - பூதகாலமாயிருக்கச்செய்தேயும், இவர்க்கு இது ஸமகாலம்போலேயும் கண்ணுக்கு விஷயமாயிருக்கிறபடி. வான்சுடர் இங்கே வந்தபின்பு சிறந்ததென்றுமாம். பிறந்தவாற்றாலும், வளர்ந்தவாற்றாலும், பெரியபாரதம் கைசெய்து ஐவர்க்குத் திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோன மாயங்களாலும், நிறந்தனூடுபுக்கு எனதாவியை நின்றுநின்று உருக்கியுண்கின்ற - இச்சிறந்தவான்சுடரே என்று, அவன்தனக்கு விஶேஷணமாக்குதல்; உருக்கியுண்கின்றவென்று - குணபரமாக்குதல். அதாவது - பிறந்தவாறென்றுதொடங்கி, மாயங்களும் உருக்கியுண்கின்றன வென்றபடி. இதுவே நிர்வஹித்துப்போருமது. [உன்னை யென்றுகொல் சேர்வதுவே]- நான் ஸ்பரித்துநின்று அநுஸந்திக்கவல்லேனும்படி பண்ணியருளவேணு மென்கிறார். அன்

---

ஓராளவிலே - ஓரவஸரத்திலே. அவதரித்தது குணமொழிய, போனது குணமாய் ஸைதில்யஜநகமாகக் கூடுமோ? என்ன; பரிவாரகையாலே குணமாய்த்தோற்றுகிறதென்கிறார் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களும் இத்யாதி. உக்தத்துக்குப்ரமாணம் - க்ருத்வா இத்யாதி. "க்ருத்வாபாராவதரணம் ப்ருதிவ்யா: ப்ருதுலோசந: । மோஹயித்வாஜகத்ஸர்வம் கதஸ்ஸ்வம்ஸ்தாநமுத்தமம்" இதி ஶ்ரீவிஷ்ணுபுராணே. "கதஸ்ஸ்வம்ஸ்தாநம்" என்றதிலேநோக்கு. முடைகோலுக்கிரையாக்கியென்றது - "பாராவதரணம்க்ருத்வா" என்றதிலே விவக்ஷிதம். "ப்ருதுலோசந:-ஜகத்ஸர்வம்மோஹயித்வா" என்றதுக்கர்த்தம் - அநுகூலரையடைய இத்யாதி. "உத்தமம்" என்றதுக்கு அர்த்தம் - இங்குள்ளார் இத்யாதி. "உண்கின்ற" என்றவர்த்தமாநார்த்தம் - அதொருகால் இத்யாதி. அதென்றது - "பிறந்தவாறும்" என்றுதொடங்கிக் கீழ்ச்சொன்ன சேஷ்டிதங்களெல்லாவற்றையும். "சிறந்த" என்றதுக்கு - தகுதி என்று கீழ் அர்த்தமருளிச்செய்து, மிகுதியாகவர்த்தாந்தரம் - வஸ்து பிறக்க இத்யாதி. "சுடர்" என்று - அழகும், தேஜஸ்ஸும். "இச்சிறந்த" என்று - ப்ரத்யக்ஷமாகச்சொன்னதுக்கு பாவம் - பூதகாலமாய் இத்யாதி. "வான்" என்றதுக்கும், "இ" என்றதுக்கும் அர்த்தாந்தரமாதல், "வஸ்துபிறக்க" இத்யாதிவாக்யவிவரணமாதல் - வான்சுடர் இங்கே இத்யாதி. குணபரமான போது, இச்சிறந்தவான்சுடரே - பிறந்தவாறும்என்றுதொடங்கி, உருக்கியுண்கின்ற; ஆகையாலே, உன்னையென்றுகொல் சேர்வதுவே இத்யந்வய:. கீழ் - மாநஸமாகச் சேருகையை யருளிச்செய்து, எம்பார்நிர்வாஹத்திலே, காயிகமாகச்சேருகையை யருளிச்செய்கிறார் - அன்றிக்கே இத்யாதி. நிறந்

றிக்கே, சேருகையாகிறது - இரண்டுதலையும் சேருகையாய், நான் அநுஸந்தித்து ஶிதிலனாகை தவிர்ந்து உன்னைப் பிரியாதபடி கிட்டப்பெறுவது என்று? என்கிறாராகவுமாம். (க)

## இரண்டாம் பாட்டு:

வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமாவினைவாய்பிளந்ததும்
மதுவைவார்குழலார் குரவைபிணைந்தகுழகும்
அதுவிதுவுதுவென்னலாவனவல்ல என்னையுன்செய்கைநைவிக்கும்
முதுவையமுதல்வா! உன்னையென்றுதலைப்பெய்வனே?

ஆ.—(வதுவை). விவாஹப்ரஸங்கத்திலே ஏறுகளிலே பாய்ந்தபடியும், வஞ்சகமாய்வந்தகுதிரையை வாய்பிளந்தபடியும், மது ஸ்யந்தியான குழலையுடையவர்களோடே திருக்குரவையிலே கலந்தகலப்பும்; உன்செயலானவையாலே, எல்லாசேஷ்டிதங்களும், உன்குணப்ரஸங்கத்திலே நையும் ப்ரக்ருதியான என்னை மிகவும் ஶிதிலமாக்காநின்றன, ப்ரளயத்திலழுந்தின ஜகத்தை யுண்டாக்கினாற்போலே என்னை தரிப்பித்து, உன்னை யநுஹவிக்கவல்லேனும்படி பண்ணியருளவேணுமென்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ஏறுபாய்கைதொடக்கமான ஸகலசேஷ்டிதங்களும் என்னை ஶிதிலனாக்காநின்றன. நான் உன்னை தரித்துநின்று அநுஹவிக்கவல்லேனும்படி பண்ணவேணுமென்கிறார்.

[வதுவை என்றுதொடங்கி] - விவாஹப்ரஸங்கத்திலே எருதுகளிலே பாய்ந்தபடியும், வஞ்சகமாய்வந்த குதிரைவாய் பிளந்தபடியும், மது ஸ்யந்தியான குழலையுடையவர்களுடைய மாலையிலே அவர்களுக்குப்பிரிந்தால் தரிக்கவொண்ணாதபடி கலந்தகலப்பும். [அது என்றுதொடங்கி] - உன்செயலானவையாலே எல்லாசேஷ்டிதங்களும் உன்குணப்ரஸங்கத்திலே நையும்ப்ரக்ருதியான என்னை மிகவும் ஶிதிலமாக்காநின்றன. [முதுவையம் என்றுதொடங்கி] - ப்ரளயகாலத்தில் அழிந்த ஜகத்தை உண்டாக்கினாற்போலே தரித்து உன்னை அநுஹவிக்கவல்லேனும்படி பண்ணவேணுமென்று கருத்து.

ப.—அநந்தரம், அபிமதவிஷயத்தில் உன்னுடைய வ்யாபாரங்கள் என்னை ஶிதிலனாக்காநின்றதென்கிறார்.

வதுவைவார்த்தையுள் - வதுவைகல்யாணவார்த்தை பிறந்தவளவிலே, ஏறு - ஏறுகளை, பாய்ந்ததும் - மேல்விழுந்துகொன்றதுவும், மாயம் - அஸுராவிஷ்டமாய்க்ருத்ரிமமான, மாவினை - கேஶியாகிறகுதிரையை, (கோபிமார் அஞ்சாதபடி), வாய்-வாயை, பிளந்ததும் - பிளந்ததுவும், மதுவை - மதுவை, வார்-வாராவிடுகிற, குழலார் - குழலை

---

தலூடுபுக்கு - மர்மமானஹ்ருதயப்ரதேஶங்களுக்குள்ளே புக்கென்றபடி. நிறம் - மர்மம். நின்று நின்றுருக்கியுண்கின்ற - க்ஷணந்தோறும் இடைவிடாதேநின்று த்ரவத்ரவ்யமாக்கி க்ரஸியாநின்றன. கஸியாநின்றதென்றபடி. ஆவி - ஆத்மா. "சிறந்தவான்சுடரே" என்றவநந்தரம், தரித்துநின்றென்று கூட்டிக்கொள்வது. (க)

யுடையரான பெண்களுடனே, குரவை - குரவை, பிணைந்த - கோத்து, குழகும்-இனிய வ்யாபாரங்களைப் பண்ணினதுவும், அது-அது, இது-இது, உது-உது, என்னலாவன - என்றுவிசேஷித்துச்சொல்லலாவன, அல்ல-அல்ல, என்னை - (உன்னளவில் அதிப்ரவணனை) என்னை, (நிரதிசயபோக்யமான), உன்-உன், செய்கை - செயலானவை, நைவிக்கும் - சிதிலனுக்காநிற்கும்; வையம் - ஜகத்துக்கு, முதுமுதல்வா - ப்ரதாநகாரணபூதனானவனே! உன்னை-உன்னை, என்று-என்று, தலைப்பெய்வன் - கிட்டுவேன்? அழிந்த ஜகத்தையுண்டாக்கினநீ சிதிலனாகிறவென்னை ஸ்த்திரனாக்குவதென்றென்று கருத்து. வதுவை - விவாஹம்.

இ.—இரண்டாம்பாட்டில், "க்ஷயிஷ்ணுஜ்ஜவலாவலே கிங்காயடும்லீதயா" என்கிறவாஸனையாலே, ஐவர்க்குத் திறங்கள்காட்டியிட்டு என்று - ஆச்ரிதர்க்கு உதவினபடிசொல்லிற்று, கீழ்; இங்கு பிராட்டிமார் திறத்துச்செய்த செயல்களைச்சொல்லி; அவை என்னை சிதிலமாக்காநின்றன. நான் தரித்துநின்று அநுபவிக்கவல்லேனும்படி பண்ணவேணுமென்கிறார்.

[வதுவை இத்யாதி] - வதுவை - விவாஹம். [வார்த்தையுள்] - "எருதுகளேழையும் நிரஸித்தார்க்கு இவளைக்கொடுக்கக்கடவோம்" என்றுபிறந்த ப்ரஸித்தி. [ஏறுபாய்ந்ததும்] - எருதுகள்மேலேவிழுந்தபடி, இவர்க்கு ம்ருத்யுவின்வாயிலே விழுந்தாப்போலேயாயிற்றிருக்கிறது; பொய்கையிலே பாய்ந்தாப்போலேயிராநின்றது அவனுக்கு. கருமாரிபாய்ந்தாலாகாதோ என்னும்படியிறே இவன்சௌகுமார்யதை. [மாயமாவினை வாய்பிளந்ததும்] - கப்ஸப்ரேரிதமாய் க்ரித்ரிமவேஷத்தைக்கொண்டுவந்து, சீற்றத்தாலே அங்காந்தது; சிறுபிள்ளைகள் த்வாரங்கண்டால் கைநீட்டும்வாஸனையாலே கையைநீட்டினான், அபூர்வதர்சநத்தாலே விம்மிற்று, பூரித்தவாறே இரண்டுகூறாய்விழுந்தான். ஸ்ரீநாரதபகவான், "ஜஹஜஸதிதழ்" என்றுவந்துவிழுந்தாப்போலேயாயிற்று இவர்க்கிருக்கிறது. "வ்யாதிதாஸ்யோ மஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா। நிபபாத த்விதாபூதோ வைத்யுதேநயதாத்ருமஃ". இத்தால்-ஸ்ரீப்ருந்தாவநத்துக்கு வழியிசங்கும்படி பெண்களுக்கு வன்னியமறுத்துக்கொடுத்தபடி.[மதுவைவார் இத்யாதி]-மதுஸ்யந்தியான குழலையுடையவர்கள்.குரவைக்கூத்திலேயவர்களோடேதன்னையும் ஒருவனாகக்கோத்தபடி. மதுவார்குழலார் என்னவமைந்திருக்கச்செய்தே, மதுவைவார்குழலார் என்றது-" கண்ணையுண்ணீர்மல்க" என்றாப்போலே. [குழகும்] - அவர்களுக்கு, பிரிந்தால் தரிக்கவொண்ணாதபடி கலந்தகலப்பு. தன்மேன்மைபாராதே தாழ்வுசொல்லிக் கீழ்மைசெய்து கலக்கை. [அதுவிது இத்யாதி] - அந்தச்செயல் இந்தச்செயல் உந்தச்செயலென்று விசேஷிக்கவொண்ணாது. நானுமையும் உன்னுடையசேஷ்டிதங்களாகையும் அமையும் என்னை நோவுபடுத்த. அதுவே ப்ரயோஜநம். "இப்பாட்டிற்சொன்ன விரோதிநிரஸநத்தையும், ஆச்ரிதஸம்ரக்ஷணத்தையும், ஸாமாந்யலக்ஷணத்தையும் - அதுவிதுவுதுவென்றுசொல்லுகிறது" என்றுபிள்ளான். [முதுவையமுதல்வா] - ப்ரவாஹரூபேண நித்யமாய், ப்ரளயகாலத்திலழிந்த ஜகத்தை யுண்டாக்கினவனே! அழிந்தவஸ்துவையுண்டாக்கின அருமையுண்டோ உள்ளவஸ்துவை தரிப்பிக்கைக்கு. அழிந்தவஸ்துவையுண்டாக்கினாப்போலே, சிதிலனான என்னை தரித்துநின்று அநுபவிக்கவல்லேனும்படி பண்ணவேணும். [உன்னை இத்யாதி] - உன்னை என்று கிட்டுவதென்றுமாம்.

ஈடு.—இரண்டாம்பாட்டு. ஏறடர்க்கைதொடக்கமான உன்சேஷ்டிதங்கள் என்னை ஶிதிலமாக்காநின்றன. நான் தரித்துநின்று அநுபவிக்கும்படி பண்ணவேணுமென்கிறார். இனி, அல்லாதவவதாரங்களையும் ஆராய்ந்தால் இத்தன்மையவாயிருக்குமிறே, ஆகையாலே அவ்வருகு போகமாட்டார், அடியில் இழியமாட்டார், இனி வளர்ந்தவாறேறப் போமித்தனையிறே; "சீராற்பிறந்து" இத்யாதி. பிறந்தவாறு அவனேசெய்கையாலே இவர்க்கு அங்குச் செய்யலாவதில்லை, இனி அநுகூலர்க்குக் கண்டு பரிகைக்கு விஷயமுள்ளது வளர்ந்தவாற்றிலேயிறே, அவ்வளர்ந்தவாறுதான் இருக்கிறபடிசொல்லுகிறார்.

[வதுவைவார்த்தையுள்] - வதுவை - விவாஹம். [வார்த்தையுள்] - "எருதுகளேழையும் நிரஸித்தார்க்கு இவளைக் கொடுக்கக்கடவோம்" என்றுபிறந்த ப்ரஸித்தி. [ஏறு பாய்ந்ததும்] - ஏறுகளின்மேல் விழுந்தபடிகளையும். இவர்க்கு ம்ருத்யுவின்வாயிலே விழுந்தாப்போலேயாயிற்றிருக்கிறது, பொய்கையிலேபாய்ந்தாப்போலே யிராநின்றது அவனுக்கு. கருமாரிபாய்ந்தாலாகாதோ என்னும்படியிறே அவளுடையபோக்யதை. [மாயமாவினை வாய்பிளந்ததும்] - கம்ஸப்ரேரிதமாய் க்ருத்ரிமவேஷங்கொண்டு வந்ததாயிற்று. க்ருத்ரிம

---

இரண்டாம்பாட்டு.—வதுவை இத்யாதி. "ஏறுபாய்ந்ததும்" இத்யாதி மேலெல்லாம் கடாக்ஷித்து அவதாரிகை - ஏறடர்க்கை இத்யாதி. பிறந்தவாற்றிலேயாதல் அவதாராந்தரங்களிலேயாதல் போகாதே, வளர்ந்தவாற்றிலேபோவானென்? என்ன - இனிஅல்லாத இத்யாதி. இத்தன்மையவாயிருக்கும் - இந்தஸ்வபாவத்தையுடைத்தாயிருக்கும். அதாவது - இப்படியே பரியவேண்டியிருக்குமென்றபடி. அவ்வருகு - அவதாராந்தரங்களில். அடியில் - பிறந்தவாற்றில். அடியில் இழியமாட்டார் - மோஹிப்பிக்கையாலேயென்றுகருத்து. "அவதாராந்தரங்களும் இத்தன்மையவாயிருக்கும்" என்றதுக்கு ப்ரமாணம் - சீரால் இத்யாதி. பெரியதிருவந்தாதி, பதினொரும்பாட்டு. [சீராற்பிறந்து சிறப்பால்வளராது] - சீர்மையோடேபிறந்து உபலாலநத்தோடே வளராதே. அதாவது - சக்ரவர்த்தி வஸுதேவாதிகள் அஶ்வமேதமநந்தவ்ரதம் முதலானவற்றை அநுஷ்டித்து, தத்பலமாகச் சீர்மையோடேவந்துபிறந்து, அவர்கள் ஸ்நேஹோத்தரமாக உபலாலித்துவளர்க்க வளர்ந்தாப்போலே பிறந்து வளராதேயென்றபடி. [பேர்வாமனாக்கால்] - பேரும் "ஶ்ரிய:பதி" என்றாப்போலன்றிக்கே, சிறுமைக்குவாசகமான வாமநனென்னும திருநாமத்தையுடையையாகாதொழிந்தால். [மார்பாரப்புல்கிநீயுண்டுமிழ்ந்தபூமிநீரேற்பரிதே] - நீ அஹிதிவேஷங்தோற்ற மார்வாரவணைத்து வயிறாரவுண்டு வெளிநாடுகாணவுமிழ்ந்த பூமியானது, நீரேற்றிரந்து வாங்கிக்கொள்ளக்கிடையாதோ. [பேராளா] - ஜகத்ரக்ஷணத்தில் நிரவதிகவ்யாமோஹத்தையுடையவனே. [யாமறிய] - நாங்கள் யதாவாக அறியும்படி. [நீ] - ஸர்வஜ்ஞனானநீ. [சூழ்ந்து - சொல்லு] - இத்தை நன்றாக ஆராய்ந்து அருளிச்செய்யவேணுமித்யர்த்த:. மோஹிப்பிக்கையாலே அடியில் இழியமாட்டாரென்று - கீழேயருளிச்செய்து, அங்ஙனன்றிக்கே, பிறந்தவாறு அவனேசெய்ததாகையாலே பரியவிஷயமில்லாமையாலும் அடியிலிழியமாட்டாரென்கிறார் - பிறந்தவாறு அவனே இத்யாதி. அவனே என்கிற ஏவகாரத்தாலே - கர்மத்தை வ்யவச்சேதிக்கிறது. இங்குப்பரியத்தக்கதுண்டோ? என்ன - இனிஅநுகூலர்க்கு இத்யாதி.

"ஏறு" என்று - ஜாத்யேகவசநம். "பாய்ந்ததும்" என்றதுக்குஹார்த்தபாவம்-இவர்க்குஇத்யாதிவாக்யத்வயம். அதாவது - அவன்ஸௌகுமார்யத்தையும் அவற்றின் க்ரௌர்யத்தையும் அநுஸந்திக்கையாலே ம்ருத்யுவின்வாயிலேவிழுந்தாப்போலேயிருந்தது இவர்க்கு; அவனுக்குஅவளோட்டைச்சேர்த்திக்குஹேதுவாகையாலே, பொய்கையிலே பாய்ந்தாப்போலே ஸுகரூபமாய்த் தோற்றிற்றென்றபடி. ஸுகரூபமாய்த்தோற்றுகைக்கு ஹேதுவேதென்ன - கருமாரி இத்யாதி. கருமாரிபாய்கையாவது - காமாக்ஷியினுடைய ஆலயத்திற்குளத்தில் சங்குத்வயமத்யேவிழுகை. மாயமாவினை - மாயாவை. க்ருத்ரிமமான குதிரையை. மா - குதிரை. அஸுரன்குதிரையாய்வருகைக்கு ஹேதுவையருளிச்செய்கிறார் - கம்ஸ இத்யாதி. இவனை நிரஸிக்கையில் பாலக்ரீடைபோலே அநாயாஸேந நிரஸிக்கும்படியை யருளிச்செய்

மாகக் குதிரைவடிவைக்கொண்டு வாயையங்காந்துகொண்டு ஓர் அஸுரன்வந்துதோன்ற, சிறுபிள்ளைகள் த்வாரங்கண்டவிடத்திலே கைநீட்டும்வாஸநையாலே அதின்வாயிலேகையை நீட்டினான்; அபூர்வதர்சநத்தாலே கைவிம்மிற்று, பூரித்தவாறே இரண்டுகூறாய்விழுந்தான். ஸ்ரீநாரதபகவான் "ஜகதஸ்தமிதம்" (ஜகதஸ்தமிதம்) என்றுவந்துவிழுந்தாப்போலே இவர்க்கு இப்போதிருக்கிறது. "வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா | நிபபாதத்விதாபூதோவைத்யுதேநயதாத்ருமஃ" (வ்யாதிதாஸ்யோமஹாரௌத்ரஸ்ஸோஸுரஃக்ருஷ்ணபாஹுநா | நிபபாதத்விதாபூதோவைத்யுதேநயதாத்ருமஃ). இத்தால் - ஸ்ரீப்ருந்தாவநத்துக்கு வழியிசங்கும்படி பெண்களுக்கு வன்னியமறுத்துக்கொடுத்தபடி. [மதுவைவார் இத்யாதி] - மதுஸ்யந்தியான குழலையுடையவர்கள். மதுவைவார்குழலாரென்றது - மதுவார்குழலாரென்றபடி. சொற்பாடு. குரவைகோப்பிலே தன்னையும் ஒருவனாக்கித் தொடுத்தபடி. [குழகும்] - அவர்கள் அபிஸந்தியைக் குலைத்து ஸக்நாபிமாநைகளாகப்பண்ணி, அவர்களோடொக்கத் தான் கலந்தபடி. அதாவது - வேற்றாள் என்னவொண்ணாதபடி, இவர்களிலே ஒருவனென்னலாம்படி புக்கு நின்றானாயிற்று. [அதுவிதுவுதுவென்னலாவனவல்ல] - அதுவாகவுமாம், இதுவாகவுமாம், உதுவாகவுமாம், எனக்கு இதிலொரு நிர்பந்தமில்லை. [என்னையுன்செய்கைநைவிக்கும்] - அச்செயலாகவுமாம், இச்செயலாகவுமாம், உச்செயலாகவுமாம், அதில் எனக்கொரு தாத்பர்யமில்லை; உன்னுடைய சேஷ்டிதங்களாகையும், நானாகையுமே எனக்கு நோவுபடுகைக்குவேண்டுவது. "இத்தால்சொல்லிற்றாயிற்று - இப்பாட்டில் மூன்றர்த்தம் சொல்லாநின்றது, அதாவது - அநுகூலஸம்ச்லேஷமும், ப்ரதிகூலநிரஸநமும், மத்யஸ்த்தரக்ஷணமு

---

கிறார் - க்ருத்ரிமமாக இத்யாதி. "வ்யாதிதாஸ்யஃ" என்றத்தைப்பற்ற - வாயையங்காந்துகொண்டு என்றது. பக்திபூர்வகமாக நிரஸிப்பார் இரண்டுகையாலே நிரஸிக்கவேணுமே, அப்படி சொல்லாதே "க்ருஷ்ணபாஹுநா" என்று ஏகவசநமாகச்சொல்லுகையாலே - அதின்வாயிலே கையைநீட்டினான் என்கிறார். விம்மிற்று - பருத்தது. அவன் பட்டுப்போயிருக்க, "மாயமா" என்கிறதென்? என்ன - ஸ்ரீநாரத இத்யாதி. அப்படி க்ரூரமாய்வந்ததோ? என்ன - வ்யாதித இத்யாதி. ப ஆ ௭ ௰ ௩. கீழ்-நப்பின்னைக்கு உதவினபடிசொல்லிற்று; இங்கு - பெண்களுக்கு உதவினபடி சொல்லுகிறதென்கிறார் - இத்தால் இத்யாதி. இசங்கும்படி - நடக்கும்படி. வன்னியம் - குறும்பு, விரோதமென்றபடி. "மதுவை" என்றதில், ஐகாரம் - அவ்யயம். சொற்பாடு - சொல். அதாவது - அக்ஷரஸங்க்யாபூரணமென்றபடி. "குழகும்" என்றதுக்கு - மேன்மைதோற்றாதபடி ஸஜாதீயனாய்க் கலந்தானென்கிறார் - குரவைகோப்பிலே இத்யாதி. அன்றிக்கே, விடவ்யாபாரத்தாலே பெண்கள் நெஞ்சில் மறத்தைப்போக்கி வசீகரித்துக்கலந்தானென்றர்த்தாந்தரம் - அவர்கள் அபிஸந்தி இத்யாதி. அபிஸந்தியாவது - ப்ரணயரோஷத்தால்வந்தநினைவு. முந்தின அர்த்தவிவரணம் - அதாவதுஇத்யாதி. அதாவதென்றது - அவர்களோடொக்கத் தான் கலக்கையாவதென்றபடி. வேற்றாள் - பரன். அர்த்தத்வயத்துக்கும், "குழகு" என்று - ஸாமர்த்யம். குழகு - விரகும், லீலாவ்யாபாரமும், ஸ்வயதையும். "அதுவிதுவுது" என்றதுக்கு - அல்பாகல்பமத்யமவ்யாபாரமாக அருளிச்செய்கிறார் - அதுவாகவுமாம் இத்யாதி. "அதுவாகவுமாம்" இத்யாதியின் விவரணம் - அச்செயலாகவுமாம் இத்யாதி. அர்த்தாந்தரம் - இத்தால் இத்யாதி. இத்தாலென்றது - "அதுவிதுவுது" என்றவித்தாலென்றபடி. மத்யஸ்த்தரக்ஷணமுமென்றது - நப்பின்னையைப்போலே அந்தரங்கைகளுமன்றிக்கே, கேசியைப்போலே ப்ரதிகூலைகளுமன்றிக்கேயிருக்கிற மதுவைவார்குழலாருடைய ரக்ஷணத்தை. அதுவிதுவுது என்று விசேஷித்துச்சொல்லலாவனவல்லவென்று சப்தார்த்தம். "என்னையுன்செய்கைநைவிக்கும்" என்றவகங்

மானவிவற்றை - அதுவிதுவது என்கிறது" என்னும்பிள்ளான். [முதுவையமுதல்வா] - இவர்தம்மதும் அவ்வளவாகாதேதான். ப்ரளயங்கொண்ட ஜகத்தோபாதியாகாதே இவரும் அழிந்தபடி, இத்தோடொக்க இவரையும் அடிதோட்டமே உண்டாக்கவேண்டியிருக்கிறபடி. பழையதான பூமிக்குக் காரணமேன்னுதல், பூமிக்குப் பழையகாரணமேன்னுதல். [உன்னை யென்றுதலைப்பெய்வனே] - உன்னையநுஸந்தித்து ஶிதிலனுகாதே, தரித்துநின்று அநுஸந்திக்கும்படி பண்ணவேணும். உன்னை வந்துகிட்டப்பெறுவதென்றே என்றுமாம். தலைப் பெய்கை - கிட்டுகை. (உ)

---

## மூன்றும் பாட்டு.

---

பெய்யும்பூங்குழற்பேய்முலையுண்ட பிள்ளைத்தேற்றமும் பேர்ந்தோர்சாடி
செய்யபாதமொன்றால் செய்தநின்சிறுச்சேவகமும் [றச்
நெய்யுண்வார்த்தையுளன்னைகோல்கொள்ள நீயுன்தாமரைக்கண்கள்நீர்
மையவேநிலையும்வந்து என்னெஞ்சையுருக்குங்களே. [மல்க

ஆ.—(பெய்யும்பூங்குழல்.) பூப்பெய்தகுழலையுடைய பூதனையுடைய முலை யுண்ட பிள்ளைத்தனத்திலே யுண்டாயிருக்கிற ரஸஜ்ஞாநமும்; அதுக்குமேலே அஸுராவேஶத்தாலே ஊருகிறதொருஶகடத்தை சிவந்ததிருவடியொன்றாலே உதைத்த சிறுமையிலுண்டான ஆண்பிள்ளைத்தனமும்; நெய்யைக்களவுகண்டான் என்னும் வார்த்தாப்ரஸ்தாவத்திலே ஸ்நேஹிநியான தாயார் கையிலே யொருதுரும்பைக்கொள்ள, அத்யந்தஸுந்தரனுனநீ, உனக்குத்தகுதியாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்கள் அச்சத்தினுலே நீர்மல்கும்படி, " அடிபடுகிறது " என்றுபேகணித்து நின்றநிலையும் வந்து என்னெஞ்சை நீராக்காநின்றனவென்கிறார்.

ஒ.—மூன்றும்பாட்டில், உன்னுடைய பாலசேஷ்டிதங்கள் என்னை மிகவும் கலியாநின்றன என்கிறார்.

[பெய்யும்பூங்குழல் என்றுதொடங்கி]-தன்னை அறியவொண்ணுதபடி யஶோதைப்பிராட்டியைப்போலே ஒப்பித்துவந்த பூதனையுடைய முலையுண்ட பிள்ளைத்தனத்திலே உண்டாயிருக்கிற ரஸஜ்ஞாநமும். பூப்பெய்தகுழலையுடைய - பிள்ளையென்றுமாம். [பேர்ந்து என்றுதொடங்கி] - அதுக்குமேலே அஸுராவேஶத்தாலே உயிர்பெற்று ஊருகிறதொரு ஶகடத்தை சிவந்த திருவடியொன்றாலே உதைத்த சிறுமையிலுண்டான ஆண்பிள்ளைத்தனமும், நெய்யைக்களவுகண்டானென்னும் இவ்வார்த்தாப்ரஸ்தாவத்திலே ஸ்நேஹிநியான தாயார் கையிலே ஒருதுரும்பைக்கொள்ள அத்யந்தஸுந்தரனுன நீ உனக்

---

தரம், "முதுவையமுதல்வா" என்று - காரணத்வம்சொன்னதுக்கு பாவம் - இவர்தம்மதும் இத்யாதி வாக்யத்ரயம். பூர்வவிவரணம் - ப்ரளய இத்யாதிவாக்யத்வயம். அடிதோட்டும் - அடியேதொடங்கி. ஸத்தையேதொடங்கியென்றபடி. "முது" என்றது - * வையத்துக்கு விஶேஷணமாதல். * முதல்வனுக்கு விஶேஷணமாதல். இத்திருவாய்மொழியில், கிட்டுகைக்கு வாசகங்களான ஶப்தங்களெல்லாம்- ஆழ்வான் நிர்வாஹத்தில், மாநஸாநுஸந்தாநபரங்கள்; எம்பார்நிர்வாஹத்தில், காயிகமாகக் கிட்டுகை யென்று கண்டுகொள்வது. (உ)

குத்தகுதியாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற கண்கள் அச்சத்தினாலே நீர்மல்கும்படி 'அடிபடுகிறது' என்று பேகணித்து நின்றநிலையும் வந்து என்னெஞ்சை நோக்காநின்றன.

ப.—அநந்தரம், உன்னுடைய பாலசேஷ்டிதங்களானவை என்னெஞ்சை உருகப்பண்ணாநின்றனவென்கிறார்.

(யசோதைவடிவுகொண்டு ஒப்பித்துவருகைபாலே), பெய்யும் - வைத்த, பூ - பூவையுடைத்தான, குழல் - மயிர்முடியையுடைய, பேய் - பேயின், முலை - முலையை, உண்ட - உண்ட, பிள்ளை - பிள்ளைத்தனத்திலே, தேற்றமும் - வேற்றுமுலையையறிந்த தெளிவும்; ஓர் - அஸுராவிஷ்டமாய்நலியவந்ததொரு, சாடு - சகடம், போர்ந்து - போர்ந்து போய், இற - முடியும்படியாக, செய்ய - சிவந்த, பாதம் - திருவடி, ஒன்றால் - ஒன்றாலே, செய்த - செய்தருளின, நின் - உன்னுடைய, சிறுச்சேவகமும் - பாலபராக்ரமமும்; நெய் - நெய், உண் - அமுதுசெய்த, வார்த்தையுள் - வார்த்தைபிறந்தவளவிலே, அன்னை - தாயானயசோதை,(பரிவாலே கையிலே), கோல் - கோலை, கொள்ள - கொள்ள, நீ - (எல்லாரையும் உன்கோற்கீழே நடத்தும்படி ஸர்வசக்தியான) நீ, உன் - உனக்கு அநுரூபமாய், தாமரை - தாமரைபோலேயிருக்கிற, கண்கள் - கண்களானவை, நீர் - நீர், மல்க - மல்கும்படி, பைய - பூதனைக்கொண்டு ஒடுங்கிநிற்கும், நிலையும் - நிலையும், வந்து - (முற்காலத்திலே செய்துபோனவை இன்று என்னளவும்) வந்து, என் - என்னுடைய, நெஞ்சை - சபலமானநெஞ்சை, உருக்குங்கள் - உருக்காநின்றன.

ஈ.—மூன்றாம்பாட்டில், உன்னுடைய பாலசேஷ்டிதங்கள் என்னை நலியாநின்றதென்கிறார். ப்ரதிகூலருடைய ப்ராணனும், ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யமுமே தாரகமாக வளர்ந்தானென்று - 'வளர்ந்தவாறு' என்றுசொன்னவிடத்தை விவரிக்கிறது இங்கு.

[பெய்யும் இத்யாதி] - பேயின்முலையுண்ட - பெய்யும்பூங்குழல் - பிள்ளையென்னுதல்; பெய்யும்பூங்குழல் - பேயென்னுதல். திருமஞ்சனம்பண்ணி ஒப்பித்து முலைகொடுத்து வளர்த்திவைத்தபிள்ளையென்னுதல்; தன்னை அறியவொண்ணாதபடி, இவன்சோம்பாதபடி எப்போதும் ஒப்பித்திருக்கும் யசோதைப்பிராட்டியைப்போலே ஒப்பித்துவந்த பூதனையென்னுதல். [பிள்ளைத்தேற்றமும்] - ஐச்வரமான ஜ்ஞாநமின்றிக்கே, "தாய்முலையன்று, வேற்றுமுலை" என்றறியும்தெளிவு. அத்யந்தசைசவத்திலும் பிள்ளைகள் முலைவாசியறிவர்களிறே. பிள்ளைத்தனத்தின்மெய்ப்பாட்டினாலே வரும் ரஸஜ்ஞாநமும். "பாதகர்" என்றறியவுமாம், அறியாதொழியவுமாம், சத்ருக்கள்கிட்டினால் முடியக்கடவதானவஸ்துஸ்வபாவத்தாலே முடிந்தாளித்தனை. [போர்ந்து]- அதுக்குமேலேயென்னுதல்; [ஓர்சாடிற - போர்ந்தென்று] - அவன்தன்னோடேயாதல். அஸுராவேசத்தாலே உயிர்பெற்று ஊருகிற சகடம் துகளாம்படிபோர்ந்து. [செய்ய பாதம்] - சிவந்ததிருவடிகள். என்னுடைய ஜீவநத்தைக்கொண்டுகிடீர் விரோதியைப் போக்கிற்று. [ஒன்றால்] - கருவிச்செய்கையன்றிக்கே அநாதரமிருக்கிறபடி. சிறுமையிலுண்டான ஆண்பிள்ளைத்தனமும், ராமாவதாரத்தில் சிறுச்சேவகமும், ஆயுதச்ரமம் பண்ணியும் விச்வாமித்ராதிகளோடே மந்த்ரச்ரவணம்பண்ணியுமிறே; அதிற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கிறபடி. [நெய்யுண் இத்யாதி] - "நெய்யைக்களவுகண்டான்" என்னும்வார்த்தாப்ரஸ்தாவத்திலே, ஸ்நேஹாதிசயத்தாலே தாயார் கையிலே கோலையெடுத்

தாள். எதிரிகளஞ்சும்படி கோல்கொள்ளுமவன்கிடீர்! இவள்கையிற்கோலுக்கு அஞ்சுகிறான். ஶத்ருக்களை அஞ்சப்பண்ணும், ஆஶ்ரிதர்க்குத் தான் அஞ்சும். "தாயெடுத்த சிறுகோலுக்கு" என்னக்கடவதிறே. [நீ]-வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும் அழகையுடையநீ, ஸர்வஶக்தியானநீ யென்றுமாம். [உன்தாமரைக்கண்கள்] - உனக்குத்தகுதியான கண்கள். [நீர்மல்க] - கண்ணிற்பரப்படங்க நீரிலேநிறையும்படி. [பையவேநிலையும்] - அஞ்சி முகத்தைப் பாராநிற்கச்செய்தே, தெரியாதபடி பின்னே கால்வாங்கிநிற்குமென்னுதல்; பேகணித்து நின்றநிலையென்னுதல். [வந்தென்னெஞ்சையுருக்குங்களே] - "ஹ்ருதகாலத்திற்செய்துபோனது" என்றிருக்கவொண்ணுதபடி புக்கவிடம்புக்கு என்னெஞ்சை நீராக்கநின்றன.

ஈடு.—மூன்றாம்பாட்டு. உன்பாலசேஷ்டிதங்கள் என்னை நலியாநின்றதென்கிறார்.

[பெய்யும்பூங்குழற்பேய்முலையுண்ட] - ப்ரதிகூலருடையப்ராணனும் ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ள த்ரவ்யமுமே தாரகமாக வளர்ந்தானென்று - "வளர்ந்தவாறு" என்று சொன்னவிடத்தை விவரிக்கிறது இங்கு. பிள்ளையைத் திருமஞ்சனம்செய்து ஒப்பித்துக் கண்வளரப்பண்ணிக் கடக்கநின்றாள் யஶோதைப்பிராட்டி, அவ்வளவிலேவந்துகிட்டினாள் பூதனை. [பெய்யும்பூங்குழல்] - பிள்ளை என்று அங்கேசொல்லுதல்; அன்றிக்கே, [பெய்யும்பூங்குழல்] - பேய் என்று பூதனையோடேகூட்டுதல். பிணக்கோலமாக ஒப்பித்து வந்தாள்காணும். "பிள்ளையணுங்கவொண்ணுது" என்று தாய்மார் எப்போதும் ஒப்பித்தபடியே இருப்பர்களாயிற்று, இவளும் அப்படியேவந்தாளாயிற்று; * பெற்றதாய்போல்வந்த பேய்ச்சியிறே. வைத்தபூவையுடைய மயிர்முடியுடையபேய். [பேய்முலையுண்டபிள்ளைத்தேற்றமும்] - ஐஶ்வரயமான ஜ்ஞாநமின்றிக்கே, "தாய்முலை" என்றும், "வேற்றுமுலை" என்றும் அறியும்தெளிவு. அத்யந்தஶைஶவத்திலும் பிள்ளைகள் முலைவாசியறிவர்களிறே. இவனும் "தாய்" என்றேநினைத்து உண்டான்கிடீர். [பிள்ளைத்தேற்றமும்] - பால்யத்தில் தெளிவிருக்கிறபடி. அதாவது - யஶோதைப்பிராட்டி முலைகொடுக்க ப்ரீதியினாலேபண்ணும் முக்யஜல்பிதங்களை இவள்பக்கலிலே பண்ணிறையிற்று. "பாலகர்" என்று அறியவுமாம், அறியாதிருக்கவுமாம், ஶத்ருக்கள்கிட்டினால் முடியக்கடவதான வஸ்துஸ்வபாவமிருக்கிறபடி. [பேர்ந்து] - அதுக்குமேலே. [ஓர்சாடிற] - "ப்ரதிகூலம்" என்று ஶங்கிக்கவுமோண்ணுதுகிடீர். பூதனையை, "இன்னாள்" என்று ஆராய்கைக்காகிலும் விஷயமுண்டு, இது ரக்ஷகமாகவைத்ததுகிடீர். யஶோதையைக் கண்டவாறே "இவளார்" என்று ஆராய்ச்சிப்படுமிறே. [ஓர்சாடு] - பாலகத்தில் கோடுமைக்கு இத்தோடொப்பதில்லை

---

மூன்றாம்பாட்டு.—பெய்யும் இத்யாதி. "பெய்யும்பூங்குழல்" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை - உன்பாலசேஷ்டிதங்கள் இத்யாதி.

பெய்யும்பூங்குழல் - வைத்தபூவையுடைத்தான மயிர்முடியையுடையவென்று ஶப்தார்த்தம். "பெய்யும்பூங்குழல்" என்றத்தை - * பிள்ளைக்கு விஶேஷணமாக்குவாராக ப்ரயோஜநங்காட்டுகிறார் - பிள்ளையை இத்யாதி. இவள் ஒப்பித்துவருகைக்கு ஹேதுவேதென்ன - பிள்ளையணுங்க இத்யாதி. அணுக்கம் - பாலவ்யாதி. தாயாய்வந்ததுக்குப்ரமாணம் - பெற்றதாய் இத்யாதி. பாஶராஸ்யஸ்பஷ்டோர்த்தஃ. "உண்ட" என்றதுக்குபாவம் - இவனும்தாய் இத்யாதி. பிள்ளையானால் தேற்றமேதென்ன - பால்யத்தில் இத்யாதி. "தாய்" என்றே நினைத்துண்டானாகில், அவள்முடியக்கூடுமோ? என்ன - பாலகர் இத்யாதி. "ஓர்" என்றதுக்கு அர்த்தம் - ப்ரதிகூலமென்று இத்யாதி. இது பூதனைக்கும் ஒவ்வாதோ? என்ன - பூதனையை இத்யாதி. விஷயமென்றது - யோக்யதையென்றபடி. யோக்யதையெப்படியுண்டு? என்ன - யஶோதையை இத்யாதி. ஆராய்ச்சிப்படும் - விசாரிக்கப்

கிடீர். [இற] - முறிய. ''தளர்ந்தும் முறிந்தும்'' இத்யாதி. [செய்யபாதம்] - சிவந்ததிரு வடிகள். என்னுடையஜீவநத்தைக்கொண்டுகிடீர் விரோதியைப்போக்கிற்று. இவர்க்கு ஜீவநம் அடியிலே கல்பித்திறேகிடப்பது. [ஒன்றால்] - ''இன்னதிருவடி'' என்று நியதி யில்லையிறே. கருவிச்செய்கிறானன்றே. [செய்தநின்சிறுச்சேவகமும்] - நீ சேவகம்செய்ய வடியிட்டபடியும். ராஜகுமாரனாய்ப்பிறந்து, பருவம்நிரம்பி, ஆயுதஶ்ரமம்பண்ணி, வஶிஷ்ட் டாதிகளைப்பின்சென்று, விஶ்வாமித்ராதிகள்பக்கலிலே அஸ்த்ரலாபமுண்டாய், பின்பிறே தாடகாமாரீசஸுபாஹுக்களை நிரஸித்தது ; அதெல்லாம் பருவம்நிரம்புவதற்குமுன்னே, வாயாலும் காலாலுமாயிருக்கிறபடி இங்கு. வாயால் வலியார்க்குத் தாயாரும்வேண்டாவா யிற்றுகாணும். இவனைப்போலே கால்கடியாரில்லை, ஆகையிறே காலிலே கோடிகட்டி வைக்கிறது. ''த்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம் | த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம்'' (த்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம் | த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம்) என் கிறபடியே. அப்போதும் * அவுணனுள்ளத்து எண்மதியுங்கடந்து அண்டமீதுபோயிற்றதும் கடுகித் திருவடிகளிறே. [நெய்யுண் இத்யாதி] - பருவம்நிரம்புவதற்குமுன்பு தான் ப்ரதி கூலரை யஞ்சப்பண்ணுமாபோலேகாணும் பருவம் நிரம்பநிரம்ப அநுகூலர்க்குத் தான் அஞ் சும்படியும். [நெய்யுண்வார்த்தையுள்] - நெய்யைக்குறியிட்டுக்கடக்கவைத்துப்போய் அநந் தரத்திலேவந்துபார்த்தாள், குறியழிந்துகிடக்கையாலே ''நெய்களவு போயிற்று'' என்றாள்; அவ்வளவிலே பையாக்க விழிக்கத்தொடங்கினான் [அன்னைகோல்கொள்ள] - ''மாதா விறேயெடுத்தாள்'' என்னும்விஷாகமறிகிறிலன். அவள்வார்த்தையிறே ''உந்தமடிகள்முனி வர்'' - வாரீர்பிள்ளாய், உங்கள்தமப்பனார் கேட்பராகில் உம்மைப்பொடிவர்; ''உன்னை நான் என்கையிற்கோலால் நொந்திடமோதவுங்கில்லேன்'' - இதுதான் இருக்கிறபடிகண் டீரே; இத்தைக்கொண்டு இனி நீர் ஒன்றும் செய்யாதபடி பண்ணிக்கொள்ளலாமிறே வல்

*பதம். ஸாயுகத்தில்கோடுமைத்து இத்யாதி வாக்யாநந்தரத்திலே, ப்ரதிகூலமென்றுஶங்கிக்க இத் யாதிநாலுவாக்யங்களும் அநுஸந்திப்பது. ''ஓர்சாடு'' என்றது - அத்விதீயமானசாடென்றவிவக்ஷித்து, அதுக்கு அத்விதீயத்வமேதென்ன - ஸாயுகத்தில் இத்யாதி. முறித்ததுக்குப்ரமாணம் - தளர்ந்தும் இத்யாதி. ''இற'' என்றவநந்தரம், ''செய்யபாதம்'' என்கிறவருடையபாவம் - என்னுடைய இத் யாதி. ரஸோக்தி - இவர்க்கு இத்யாதி. நியதியில்லாமைக்குஹேது - கருவி இத்யாதி. அதாவது - தமாகவேணும்'' என்னும்கருவுதலாலே யுதைக்கில், வலத்திருவடியாலே யுதைக்கவேணும்; அங்ஙனன்றிக்கே, அனந்தலிலேயுதைக்கிறானகையாலே, ஏதேனுமொன்றுஅமையுமென்றபடி. சிறுச் சேவகம் - பால்யத்தில்பௌஶர்யம். இவ்விரண்டையும் பால்யத்திலேசெய்கையாலே ராமாவதார வ்யாவ்ருத்தி - ராஜகுமாரனாய் இத்யாதி. இவ்விடத்திலே, வஶிஷ்டாதிகளைப்பின்சென்று அஸ்த்ர லாபமுண்டாய் தாடகையை;விஶ்வாமித்ராதிகள்பக்கலிலே அஸ்த்ரலாபமுண்டாய் மாரீசஸுபாஹுக் களை என்று அந்வயித்துக்கொள்வது ; விஶ்வாமித்ராஸ்த்ரப்ரதாநம் தாடகாநிரஸநாநந்தரமாகையாலே. ''வாயாலும்'' என்றத்தை ரஸோக்தியாலே விவரிக்கிறார் - வாயால்வலியார்க்கு இத்யாதி. கோடி - த்வஜம், இதுக்குப்ரமாணம் - த்வஜாரவிந்த இத்யாதி. திருநெடுந்தாண்டகப்பாசுரத்தையுட்கொண்டு, ''த்ரிவிக்ரம'' என்றதுக்குபாவம் - அப்போதும் இத்யாதி. அப்போதும் - அந்தவவதாரஸமயத்திலும். அவுணனுள்ளத்து இத்யாதி - மஹாபலியினுடைய ஹ்ருதயத்திலுண்டான மநோரதரூபஜ்ஞாநத்தை அதிக்ரமித்து அண்டபித்திக்கு மவ்வருகேபோயிற்றென்கை. பையாக்க—ஐயந்தோற்ற. அன்னை கோல் கொண்ட வநந்தரத்திலே இவன் கண்ணநீர்விழவிட்டது ப்ராந்திகார்யமென்கிறார் - மாதாவிறே இத் யாதி. ப்ராந்திகார்யமென்கிறதென், அவளடியாளோ? என்ன - அவள்வார்த்தை இத்யாதி. ''உந்த*

* 5—9

லார்க்கு, நான் அதுக்கு ஸக்தையாகிறிலேன். * தாயெடுத்த சிறுகோலுக்குளைந்தோடியிறே - ''அச்சமுறுத்துகிறபடியிது, பட்டாலும்நோவாது'' என்றறிகிறிலன். தமப்பனுர் எடுத்தாராகிலும் சிறிது ஆறலாங்காணும், ஹிதகாமராகையாலே அதுப்ராப்தமிறே; உகப்பேபின்செல்லக்கடவ இவள் போடிந்தால் பின்னைப் பொறுக்கப்போகாதிறே. இவள்தான் இப்படி செய்வானேன் ? என்னில்,—ஸ்நேஹமின்றிக்கேயொழிந்தால் இன்னுரேன்றுண்டோ கல்லும் தடியும் கொள்ளுகைக்கு. [நீயுன் தாமரைக்கண்கள்நீர்மல்க] - வெறும்புறத்திலே ஆலத்திவழிக்கவேண்டும்படியிருக்கிற நீ, அதுக்குமேலே கண்களும் கோட்புக்கால் பொறுக்கப்போமோ. †(கோட்புகுகையாவது-ஷாலசூதாதிகள் அஷிநவமாக ஷலவத்துக்களாகை.) [உன்தாமரைக்கண்கள்] - ''ராவவொஹூதிவெஷைஹீ௦'' (ராகவோர்ஹதிவைதேஹீம்) என்கிறபடியே உனக்குத்தகுதியானகண். ''தக்கதாமரைக்கண்'' என்னக்கடவதிறே. [பையவேநிலையும்] - ''அடிக்க'' என்று அவள் கோலையெடுத்தாள்; அவளைப் பார்த்துநின்று கண்ணநீரைவிழவிடாநிற்பது, உடம்புவெளுப்பதாய்ப் பேகணித்துநின்ற நிலையும். அன்றிக்கே, அஞ்சி அவள்முகத்தைப்பார்த்து நிற்கச்செய்தே பின்பே கால்வாங்கக் கணிசித்துமாட்டாதொழிவது, ஊன்றநிற்கமாட்டாதொழிவதாய்த் தறையில்கால்பாவாதபடி பொய்க்க அடியிட்டுக்கொண்டுநின்ற நிலைகாணும். பைய - மெள்ள. [வந்து இத்யாதி] - அச்செயல்கள் என்னை நலியாநின்றன. உனக்கானல் தப்பியாகிலும்போகலாம், அதுவுமொண்ணுதபடி புக்கவிடம்புக்கு வடிம்பிட்நேலியாநின்றன. [பையவேநிலையும் வந்தென்னெஞ்சையுருக்கும்] - என்னை ஓரடிபோகவொட்டாதே காற்கட்டாநின்றதென்கிறுர். [நெஞ்சையுருக்கும்] - இவர்நெஞ்சிலேயடியிட்டபடி. [உருக்கும்] - முதல் நெஞ்சையுருக்கவடியிட்டது. (௫)

---

மடிகள்'' இத்யாதிக்குஅர்த்தம் - வாரீர் இத்யாதி, ஸக்தையாகிறிலேன் என்னுமளவும். மோஹ - அடிக்க. இது திருமொழி, பத்தாம்பத்து, நாலாந்திருமொழி, எட்டாம்பாட்டு. தாய் கோலெடுத்தால் இவன்ஹயப்படுமோ? என்ன,—ப்ரமாணம் - தாயெடுத்த இத்யாதி. உளைந்தோடி - ஈடுபட்டோடி. ஹயப்பட்டோடியென்றபடி. எட்டாம்பத்து, மூன்ருந்திருமொழி, அஞ்சாம்பாட்டு, ''வாயெடுத்த'' இத்யாதி. ''எடுத்த'' என்றதுக்குபாவம் - அச்சம் இத்யாதி. ''சிறுகோல்'' என்றதுக்குஹாவம்- பட்டாலும் இத்யாதி. சிறுகோல் - வைக்கோல். ''தாயெடுத்த'' என்றதுக்கு வ்யாவர்த்யம் - தமப்பனுர் இத்யாதி. ரஸோக்தி - ஸ்நேஹம் இத்யாதி. ஸ்நேஹம் - நெய். கோட்புகுகையாவது - நூதநமாக புஷ்பிதமாகை. அப்படி தகுதியாயிருக்குமோ? என்ன - தக்க இத்யாதி. ''பைய'' என்றது - பொய்க்க என்றபடி. பொய்க்க - மெள்ள. தறையில் கால்பாவாதபடி மெள்ளவடியிட்டென்றபடி. இவ்விடத்திலே - ''ஶாவ்ராவஷெக்ஷயிகூ-தாமஸி'' இத்யாதி குந்தீவசநம் அநுஸந்தேயம். ''உருக்குங்கள்'' என்கிறவைஹவசநார்த்தம்-அச்செயல்கள் இத்யாதி. ''வந்து'' என்றதுக்குஹாவம்- உனக்கானல் இத்யாதி. தப்பியாகிலும்போகலாமென்றது - யஶோதை அபலையாகையாலே தொடரமாட்டாளென்றபடி. சாடு - என்னைஓடி இத்யாதி. காலானது நெஞ்சைக்கட்டாநின்றதென்று ஸ்வஹாவார்த்தம்;நெஞ்சழிந்தால் தப்பப்போகாதிறேயென்றத்வநி. வர்த்தமானுர்த்தம் - முதல்நெஞ்சை இத்யாதி. க்ரமேணுவய: ''ராவவொஹூதிவெஷைஹீ௦ தஹெஷயஸிதெக்ஷணா'' உதிவாநராகாஜ்ஞெ, ஹநமொநு. (௫)

---

† குண்டலிதம் ப்ரகஷிப்தம்.

## நான்காம் பாட்டு.

கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும் கலந்தசுரரை
உள்ளம்பேதஞ்செய்திட்டு உயிருண்டவுபாயங்களும்
வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும்
உள்ளமுள்குடைந்து என்னுயிரையுருக்கியுண்ணுமே.

ஆ.—(கள்ளவேடத்தை.) கண்டாருடையநெஞ்சை அபஹரிக்கும்படியான அழகியவேஷத்தைக்கொண்டு த்ரிபுரத்திலேபுக்கபடியும், அஸுரரோடேசேர்ந்து வைதிகஸ்மரத்தைகளைப்போக்கி அவர்களுக்கு ப்ராணஹாநிபண்ணினவிரகுகளும், கங்கையையரித்த ருத்ரன் த்வதயீநனென்று ப்ரஸித்தமாம்படி நின்றதுவும், அந்தஃகரணத்தையுள்ளேபுக்குக் குடைந்து என் ஆத்மாவை நீராக்கி முடியாநின்றனவென்கிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், பௌத்தாவதாரவ்ருத்தாந்தம் மிகவும் என்னை நலியாநின்றது என்கிறார்.

[கள்ளவேடத்தை என்றுதொடங்கி] - கண்டாருடையநெஞ்சை அபஹரிக்கும்படியான அழகிய வேஷத்தைக்கொண்டு த்ரிபுரத்திலேபுக்கபடியும், அஸுரரோடே சேர்ந்து வைதிகஸ்மரத்தைகளைப்போக்கி அவர்களை ப்ராணஹாநிபண்ணின விரகுகளும், கங்கையினுடைய நீர்வெள்ளத்தை ஜடையிலேயரித்த ப்ரஹாவத்தையுடைய ருத்ரனும் "விஷ்ணுராத்மா" இத்யாதிப்ரக்ரியையாலே த்வதயீநன் என்னுமிடம் ப்ரஸித்தமாம்படி நின்றதுவும். [உள்ளம் என்று தொடங்கி] - அந்தஃகரணத்தை உள்ளேபுக்குக் குடைந்து என் ஆத்மாவை நீராக்கிமுடியாநின்றன.

ப.—அநந்தரம், த்ரிபுரவாஸிகளான அஸுரவர்க்கத்தை அந்தர்மோஹாதிகள் பண்ணிமுடித்தப்ரகாரம் என்னாத்மாவை ஸ்மியிலமாக்காநின்றதென்கிறார்.

(வேதைகவேத்யனுய்வைத்து); கள்ளவேடத்தை -(வேதபாஹ்ய பௌத்தரூபமான) க்ருத்ரிமவேஷத்தை, கொண்டு - கொண்டு, போய்-(அழகாலும் பக்வதையாலும் ஆப்தபுத்திபிறக்கும்படி) போய், புரம்-த்ரிபுரத்திலே, புக்க-புக்க, ஆறும்-ப்ரகாரமும்; அசுரரை - அங்குத்தையஸுரரை, கலந்து - உட்புக்குச்செறிந்து, உள்ளம்பேதம் - சித்தபேதத்தை, செய்திட்டு-பண்ணி, (அவர்களுக்கு உபாஸ்யனைருத்ரன்தன்னாலே), உயிர் - அவர்கள்ப்ராணனை, உண்ட - அபஹரித்த, உபாயங்களும் - விரகுகளும், வெள்ளம் - ஸம்ருத்தமான, நீர்-கங்காஜலத்தை, சடையானும் - ஜடையிலேயுடையருத்ரனும், நின்னிடை - உன்பக்கல், வேறலாமை - ("விஷ்ணுராத்மாஹமவதோஹவஹ்" என்று ஸரீரஸரீரிபாவத்தாலே) அப்ருதக்ஸித்தப்ரகாரமானபடி, விளங்க - ப்ரமாணப்ரஸித்தமாக, நின்றதும் - நின்றதுவும், உள்ளம் - என்னெஞ்சுக்குள்ளே, உள்-ஜ்ஞாநவ்ருத்திகள்தோறும், குடைந்து - அவகாஹித்து, என்-என், உயிரை - ஆத்மாவை, உருக்கி - நீராகவுருக்கி, உண்ணும் - க்ரஸித்துவிடாநின்றன.

இ—நாலாம்பாட்டில்,பௌத்தாவதாரவ்ருத்தாந்தம் மிகவும் என்னைநலியாநின்றதென்கிறார். அநுகூலவிஷயத்திற்களவுசொல்லிற்று, இனி ப்ரதிகூலவிஷயத்தில் தன்னைக்களவுகண்டபடி சொல்லுகிறது.

[கள்ளவேடத்தைக்கொண்டு] - "யதாஹிசோரஸ்ஸதசாஹிபுத்த:" என்கிறபடியே க்ரித்ரிமவேஷத்தைக்கொண்டு, "வேதைஶ்ச ஸர்வைரஹமேவவேத்ய:" என்று வேதார்த்ததத்வஜ்ஞானவன், வேதாப்ராமாணிகவாதிகள்வேஷத்தைக் கொள்ளுகை. பாகத்தாலும் அழகியஸந்நிவேஶத்தாலும், சென்றுபுக்கபோதே "ஆப்தன்" என்று விஶ்வஸிக்கும்படி புக்கபடியும். வைதஹிம்ஸையையும் ஸாமாந்யஹிம்ஸையேயோபாதியாக்கப் புகுகிறவனாகையாலே, பசும்புல்லுச்சாவ மிதியாதே கூசியடியிட்டுப்புக்கபடி. [கலந்து இத்யாதி] - அஸுரர்களோடேசேர்ந்து வைதிகஶ்ரத்தைபோம்படி புத்திகளைமோஹித்து. அவர்களை ப்ராணஹாநிபண்ணிப் பிணமாக்கி, "இன்னார்கொன்றார்" என்று விருதுபிடிக்கும்படி நின்றவிரகுகளும். கங்கையினுடைய நீர்வெள்ளத்தை ஜடையில்தரித்த ப்ரபாவத்தையுடைய ருத்ரனும், "விஷ்ணுராத்மா" என்கிறபடியே ஶரீரவத்பரதந்த்ரனென்னுமிடம் ப்ரஸித்தமாம்படி நின்றதுவும். ருத்ரனையும் தன்னையும் ஸமமாகச்சொல்லலாம்படி த்ரிமூர்த்திமத்யஸ்திதியைச் சொல்லிற்றுகவுமாம். [உள்ளம் என்றுதொடங்கி] - ஜ்ஞாநப்ரஸரணத்வாரமான மநஸ்ஸிலேபுகுந்து, "க்ஷேத்ரஜ்ஞாயசோஷாய" என்கிற ஆத்மாவை நீராக்கிமுடியாநின்றன.

ஈடு.—நாலாம்பாட்டு. வேளத்தாவதார வ்ருத்தாந்தம் மிகவும் என்னை நலியாநின்றதென்கிறார். அநுகூலவிஷயத்தில் களவுசோல்லிற்று - கீழ்ப்பாட்டில், ப்ரதிகூலவிஷயத்தில் களவுகண்டபடிசோல்லுகிறது - இப்பாட்டில்.

[கள்ளவேடத்தைக்கோண்டு] - "யதாஹிசோரஸ்ஸதசாஹிபுத்த:" (யதாஹிசோரஸ்ஸததாஹிபுத்த:) என்கிறபடியே, க்ருத்ரிமவேஷத்தைக்கோண்டு. "வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:" (வேதைஶ்சஸர்வைரஹமேவவேத்ய:) என்று வேதார்த்ததத்வஜ்ஞனவன், வேதாப்ராமாணிக வேஷத்தைக்கோண்டு. கண்டார் நெஞ்சுகளடங்கலும் அபஹ்ருதமாம்படி, கறுத்துநெய்த்தவடிவும் வடிந்தகாதும் இடுக்கின புஸ்தகமுமாய் நின்றநிலையைக்காணும் நினைக்கிறது. "இவன்சோன்னதுக்கு மேற்பட

---

நாலாம்பாட்டு.—கள்ளவேடத்தை இத்யாதி. "கள்ளவேடத்தைக்கொண்டு" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை - வேளத்த இத்யாதி. "ஶாஸ்த்ராணாம் ஸ்வயம் அவதாரணம் நாஸ்த்யேவ ஜநகம்" என்கிற ப்ரகரணத்திலே, தர்மசௌர்யம்பண்ணின வேளத்தாவதாரவ்ருத்தாந்தம்ஸமயில் ஜநகமென்னக்கூடுமோ? என்னில், - கீழ்ப்பாட்டிற்சொன்ன சௌர்யம் ஆஶ்ரிதவிஷயத்திற்செய்ததாகையாலே குணமாய் ஸமயில்ஜநகமானுப்போலே, இப்பாட்டிற்சொன்ன சௌர்யமும் ஆஶ்ரிதவிரோதிநிரஸநத்துக்கு உறுப்பாகையாலே குணமாய் ஸமயில்ஜநகமாகக்கூடுமென்று விவக்ஷித்து, கீழ்ப்பாட்டோடே இப்பாட்டுக்கு ஸங்கதியருளிச்செய்கிறார் - அநுகூலவிஷயத்தில் இத்யாதி வாக்யத்வயத்தாலே. வேளத்தவேஷமென்னாதே, "கள்ளவேடம்" என்று விஶேஷித்ததுக்கு பாவம் - யதாஹி இத்யாதி. "யதாஹிசோரஸ்ஸததாஹிபுத்தஸ்ததாகதம் நாஸ்திகமத்ர வித்தி | தஸ்மாத்தியஶ்ஶக்யதம: ப்ரஜாநாம் ந நாஸ்திகேநாபிமுகோபுத்த: ஸ்யாத்" (ருச) உத்தரகாண்டம் [க0க] ஜாபாலிம்ப்ரதிராம:. "கொண்டு" என்கையாலே - தனக்குச்சேராதத்தை ஏறிட்டுக்கொண்டானென்று விவக்ஷித்து அருளிச்செய்கிறார் - வேதைஶ்ச இத்யாதி. "வேடம்" என்றதுக்குபாவம் - கண்டார் இத்யாதி. "வேடம்" என்று - விக்ரஹஸௌந்தர்யத்தை யருளிச்செய்ததுக்கு பாவம் - இவன்சோன்னதுக்கு இத்யாதி. விக்ரஹ

அர்த்தமில்லை'' என்று, கேட்டார்நெஞ்சிலே தேறும்படியிறே வடிவையிட்டு மயக்கினபடி. [போய்] - அதாவது - ''காலுக்குட்பட்ட க்ஷுத்ரபதார்த்தங்கள் நோவுபடுகிறது'' என்னும் ஹயந்தோற்றப் பொய்க்க அடியிட்டுக்கொண்டு போனபடி. அவர்கள் தாங்கள் ஶாஸ்த்ர விரோதமானவற்றை ப்ரவர்த்தியாநிற்கச்செய்தேயும், முகப்பில்நின்று ஒன்றுபோலேயிருக்க, ''பரஹிம்ஸைபண்ணலாகாது, நிஷித்தத்ரவ்யஸேவைபண்ணலாகாது, க்ருத்ரிமஹாஷணம் பண்ணக்கடவதன்று, விஷயப்ராவண்யமாகாது'' என்றுப்போலே, சிலசொல்லுவர்களாயிற்று; அவையெல்லாம் தோற்றும்படிக்கீடாகப் போனபடி. பெருமாள், ''வனத்துக்கெழுந்தருள'' என்று புறப்பட, ஜாபாலிகன் மீண்டு புகுரும்படிக்கீடாகச் சிலவற்றைச்சொல்ல,

---

*ப்ர:—(பெருமாள் வனத்துக்கு எழுந்தருள என்று புறப்பட ஜாபாலிகன் மீண்டும் புகுரும்படிக்கீடாகச் சிலவற்றைச்சொல்ல)*— ஜாபாலிர்ப்ராஹ்மணோ ந [illegible] ''ஸாது ராகவ மா பூத்தே புத்திரேவம் நிரர்த்திகா | ப்ராக்ருதஸ்ய நரஸ்யேவ ஹ்யார்யபுத்தேஸ்தபஸ்விந: ‖ ௨ ‖ க: கஸ்ய புருஷோ பந்து: கிமாப்யம் கஸ்ய கேநசித் | யதேகோ ஜாயதே ஜந்துரேக ஏவ விநஶ்யதி ‖ ௩ ‖ தஸ்மாந்மாதா பிதா சேதி ராம ஸஜ்ஜேத யோ நர: | உந்மத்த இவ ஸ ஜ்ஞேயோ நாஸ்தி கஶ்சித்தி கஸ்யசித் ‖ ௪ ‖ யதா க்ராமாந்தரம் கச்சந்நர: கஶ்சித்பஹிர்வஸேத் | உத்ஸ்ருஜ்ய ச தமாவாஸம் ப்ரதிஷ்டேதாபரேऽஹநி ‖ ௫ ‖ ஏவமேவ மநுஷ்யாணாம் பிதா மாதா க்ருஹம் வஸு | ஆவாஸமாத்ரம் காகுத்ஸ்த ஸஜ்ஜந்தே நாத்ர ஸஜ்ஜநா: ‖ ௬ ‖ பித்ர்யம் ராஜ்யம் ஸமுத்ஸ்ருஜ்ய ஸ நார்ஹஸி நரோத்தம | ஆஸ்தாதும் காபதம் து:கம் விஷமம் பஹுகண்டகம் ‖ ௭ ‖ ஸம்ருத்தாயாமயோத்யாயாமாத்மாநமபிஷேசய ‖ ௭½ ‖'' இத்யாதி.

*(பெருமாள் சிவிட்கென்று செவியைப் புதைத்து)*—[௧௦௯] ஜாபாலேஸ்து வச: ஶ்ருத்வா ராம: ஸத்யாத்மநாம் வர: | உவாச பரயா ஸூக்த்யா புத்த்யாऽவிப்ரதிபந்நயா ‖ ௧ ‖ பவாந்மே ப்ரியகாமார்தம் வசநம் யதிஹோக்தவாந் | அகார்யம் கார்யஸங்காஶமபத்யம் பத்யஸம்மிதம் ‖ ௨ ‖''

*(உன்னைக்கொண்டு கார்யங்கொண்ட ஐயரையன்றோ வெறுப்பது)*—[௧௦௯] ''நிந்தாம்யஹம் கர்ம பிது: க்ருதம் தத்யஸ்த்வாமக்ருஹ்ணாத்விஷமஸ்தபுத்திம் | புத்த்யாநயைவம்விதயா சரந்தம் ஸுநாஸ்திகம் தர்மபதாதபேதம் ‖ ௩௩ ‖

---

*ஸௌந்தர்யத்தாலே அவர்களை விஶ்வஸிக்கும்படி மயக்குகைக்காக ஈத்ருஶவேஷத்தை பரிக்ரஹித்தானென்றபடி. கள்ளவேடத்தைக்கொண்டு புரம்புக்கவாறுமென்னாதே, ''போய்'' என்று விஶேஷித்ததுக்கு ஹாவம் -* **காலுக்குட்பட்ட** *இத்யாதி.* **பொய்க்க** *- மெள்ள. அவர்கள் வைதிகஶாஸ்த்ரத்தையைக் குலைக்கப்புகுகிறானாகில், அஹிம்ஸாதிதர்மம் தோற்றப்போவானேன்? என்ன -* **அவர்கள்** *இத்யாதி. அவர்களென்றது-பௌத்தரை. அவைதிகமதஸ்தாபகாவதாரசேஷ்டிதம் இவரை ஈடுபடுத்தக்கூடுமோ? என்ன,— ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமாகையாலே கூடுமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தத்வேந ஐதிஹ்யம் -* **பெருமாள்** *இத்யாதி. இவ்வாக்யத்தால் - ''ப்ரதிகூலவிஷயத்தில் களவுகண்டபடிசொல்லுகிறது''*

பெருமாள் சிவிட்கென்று செவியைப்புதைத்து, "வாராய், என்முன்னேநின்று யர்மருசிகுலே யும்படிக்கீடாக நாஸ்திகவாதம்பண்ணுவதே, உன்னைவெறுக்கிறதேன், உன்னைக்கொண்டு கார்யங்கொண்ட ஐயரையன்றோவெறுப்பது" என்ன; "நாயன்றே, நீர் மீண்டெழுந்தருளித் திருவபிஷேகம்பண்ணியருளி ஸ்ரீபரதாழ்வான்கண்ணிலே கண்ணநீரைமாற்றினவாறே, நான் நாஸ்திகனுகைதவிர்ந்து ஆஸ்திகனும்படிபாரீர்" என்ன; அவ்வளவிலே இவனை "ஜாபாலிர்ப்ராஹ்மணோத்தம:" (ஜாபாலிர்ப்ராஹ்மணேத்தம:) - என்றூர்களிறே, நாங்களுமெல்லாம் நூலிட்டிருக்கையாலே, ப்ராஹ்மணரென்று கொள்ளுமித்தனை; ப்ரஹ்ம ஸம்பந்தீ - ப்ராஹ்மண: இறே, ப்ராஹ்மணனாகிறன் - ப்ரஹ்மஸம்பந்தியானவனிறே; அதுள்ளது இவனுக்கேயிறே, இவ்வளவிலே லோகாயதமதத்தை உபந்யஸித்தானொருவ னிறே. [புரம்புக்கவாறும்] - ஊரைக்கிட்டினபின்பு பண்ணின நியதிகளையெல்லாம் நினைக்கிறது. அதாவது - வைபஹிம்ஸையையும் ஸாமாந்யஹிம்ஸையோபாதி யாக்கப் புகுகிறவனுகையாலே, பசும்புல்லும்சாவ மிதியாதே கூசியடியிட்டுப் புக்கபடி. [கலந்து] -

---

(நாஸ்திகனுகைதவிர்ந்து ஆஸ்திகனும்படி பாரீர் என்ன)—[கoகூ] "இதி ப்ருவந்தம் வசநம் ஸரோஷம் ராம: மஹாத்மா நஜீநஸத்வம் । உவாச தத்யம் புந ராஸ்திகஞ்ச ஸ்வஸாம் ச யஸ்வி ப்ரு: ॥ கள ॥ நநாஸ்திகாநாம் வசநம் ப்ரவீம்யஹம் நநாஸ்திகோஹம் நச நாஸ்திகோந । ஸமீக்ஷ்ய காலம் புநராஸ்திகோ ஹவம் பவேயகாலே புநரேவ நாஸ்திக: ॥ கஅ ॥ ஸசாபி காலோயம் உபாகத: ஶநை: யதா நாஸ்திகவாக் உதீரிதா । நிவர்த்தநார்த்தம் தவ ராமகாரணாத் ப்ரஸாதநார்த்தம் மயைததீரிதம் ॥ கக ॥"

என்றத்தை ஸ்த்ரீகரித்தபடி. சிலவற்றைச்சொல்ல வென்றது - "ஸாய ராவவரோஷம் தேவ ப்ரியரேவம் நிராயிர்கா" இத்யாத்யநுஸந்தேயம். செவியைப்புதைத்தென்றது-"ஜகாயர்ம் கா யர்ஸ்ஜாம மவத்யம் வதய்ய ஸ்ஜிதம்" இத்யாதியைப்பற்ற. ஐயரையன்றோ வெறுப்பதென்றது-

நிந்தாமி ஹம் கர்ம பிது: க்ருதம் தத் யஸ்த்வாமகம் ணா ஹிஷமஸ்ய புத்திம் । புத்யாந தேவம் விதயாவராதம் ஸுநாஸ்திகம் யர்வ்யதாபேதம்" என்றத்தைப்பற்ற.

நாஸ்திகனுகைதவிர்ந்து ஆஸ்திகனும்படிபாரீர் என்றது - "நநாஸ்திகாநாம் வசநம் ப்ரவீம்யஹம் நநாஸ்திகோஹம் நச நாஸ்திகோந । ஸமீக்ஷ்ய காலம் புநராஸ்திகோஹவம் பவேயகாலே புநரேவ நாஸ்திக:" இத்யாதியைப்பற்ற. "ஶ்வஸாயதம் ஹரதம் ஜாபாலிர் ப்ராஹ்மணோத்தம: । உவாச ராமம் தர்மஜ்ஞம் தர்மாபேதமிதம் வச:" இத்யயோத்யாகாண்டே ஶஷ்டிதமஸர்கே. எடுத்தஸ்லோகத்துக்கு அர்த்தம் - நாங்களும் இத்யாதி. இவனுக்கு ப்ரஹ்மஸம்பந்தமேதென்ன - இவ்வளவிலே இத்யாதி. இவ்வளவிலேயென்றது - பெருமாள் "நாம் திரும்புவதில்லை, மீண்டுவருமளவும் ராஜ்யத்தைநோக்கிக்கொண்டிரும்" என்று ஸ்ரீபரதாழ்வானை ஆஶ்வஸிப்பிக்கிறவளவிலேயென்றபடி. "புக்கவாறும்" என்றப்ரகாரமேதென்ன - ஊரைக்கிட்டின இத்யாதி. இவ்வர்த்தத்தையென்றது - ஜாபாலியுபந்யஸித்த பௌத்தமதத்தை யென்றபடி. கலக்க

இவர்களிலே யொருவனாய்ப்புக்குநின்று இவ்வர்த்தத்தை உபந்யஸித்தபடி. தன்வார்த்தையை விஸ்வஸிக்கைக்காக இவர்களோடே ஒருநீராய்க்கலந்து பரிமாறினபடி. [அசுரரையுள்ளம்பேதம்செய்திட்டு] - ஆஸுர ப்ரக்ருதிகளான இவர்களுக்கு அவைதிகமதத்தையுபந்யஸித்து வைதிகஸ்ரத்தையைப்போக்கினானாயிற்று. இவர்களுக்கு வைதிகஸ்ரத்தையுண்டோ? என்னில்,—"**அக்நிஹோத்ராஸ்சவேதாஸ்ச ராக்ஷஸாநாம் க்ருஹேக்ருஹே**" (அக்நிஹோத்ராஸ்சவேதாஸ்சராக்ஷஸாநாம் க்ருஹேக்ருஹே) இறே. எல்லார்க்கும் சிலவுண்டாகை தவிராதிறே. தர்மருசியுள்ளவையுண்டாகிலும் குலைந்துபோம்படி மதிபேதங்களைப் பண்ணினானாயிற்று. [உயிருண்டவுபாயங்களும்] - இவர்களுடைய உயிரைப்போக்கின உபாயங்களும். இவர்களுடைய வைதிகஸ்ரத்தையைப்போக்கி ஸவப்ராயராம்படிபண்ணி, நின்றானொரு பிக்ஷுகனுக்குங்கூட மேல்விழலாம்படி அவர்களையடியறுத்து, "நான்செய்தேன்" என்று கவிபாடுவித்துக்கொள்ளலாம்படி பண்ணினபடி. "அவன்செய்தான்" என்று சொல்லாநிற்கச்செய்தேயும் இச்செயலொன்றும் அவன்தலையில் அந்வயியாதபடி சொன்னபடிபாரீர்! "**விஷ்ணுராத்மா பகவதோபவஸ்யாமிததேஜஸ:। தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம்ஸவிஷேஹேமஹேஸ்வர:**" (விஷ்ணுராத்மாபகவதோபவஸ்யாமிததேஜஸ:- தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம்ஸவிஷேஹேமஹேஸ்வர:) - என்கிறபடியேயிறே - சேதநனைக்கொண்டு கார்யங்கொண்டத்தோடு, அசேதநத்தைக்கொண்டு கார்யங்கொண்டத்தோடு, வாசியில்லை. ருத்ரன்தன்னோடு அவன் கையில்வில்லோடு வாசியில்லை இவனுக்கு. காரணாவஸ்த்தையில் சிதசித்துக்களைக்கொண்டு கார்யங்கொண்டவோபாதி யாயிற்று. முன்பு அவன்தானே செய்வானாகக்கொண்டெடுத்துப்பார்த்தானிறே; அதுமுடியாதொழிய, பின்பு இவன் உள்ளீடாய் நிற்கையிறே செய்து தலைக்கட்டவல்லனாயிற்று. பண்டு ஒருராஜா, "ருத்ரதத்த்வமே பரதத்த்வம்"

---

*வேண்டுவானென்? என்ன - தன்வார்த்தையை இத்யாதி. வைதிகஸ்ரத்தையைக் குலைக்கைக் கடியென்? என்னில் - "அஸதாம் யத்ஸ்வபக்ஷஸ்ய ஸதாம் ஸந்தாபகாரணம் । உபேக்ஷிதவ்யம் ந ஸ்யாத் ப்ரஹர்ஷணம் ப்ரஸாரணம்" என்றருளிச்செய்வர். 'அக்நிஹோத்ராஸ்சவேதாஸ்ச ராக்ஷஸாநாம் க்ருஹேக்ருஹே। யாவத்தேஷாம் ராக்ஷஸாநாம் நவித்யதே'. இவனோ ஸம்ஹரித்தான், ருத்ரனன்றோஸம்ஹரித்தவன்? என்ன - இவர்களுடைய இத்யாதி. அடியறுத்தென்றது - ஸலஹாநியைப்பண்ணியென்றபடி. நின்றானொருபிக்ஷுகனுக்குங்கூட - இன்னானென்று பேருமில்லாத பிக்ஷுகனுக்குங்கூடவித்யர்த்த: வ்யாக்யாதாவின் ஈடுபாடு- அவன்செய்தான் இத்யாதி. "ருத்ரன்செய்தான்" என்று ப்ரமாணம்சொல்லாநிற்க, ஸர்வேஸ்வரன் த்ரிபுரதஹநம் பண்ணினானென்கிறது என்கொண்டென்ன; ப்ரமாணங்கொண்டென்கிறார் - விஷ்ணுராத்மா இத்யாதி. "விஷ்ணுராத்மா பகவதோபவஸ்யாமிததேஜஸ:। தஸ்மாத்தநுர்ஜ்யாஸம்ஸ்பர்ஸம்ஸவிஷேஹேமஹேஸ்வர:" இதி ஹோவாசாஸ்தே (கர்ணபர்வணி).*

*சேதநனைகையாலே ருத்ரனுக்கும் இதில் அந்வயமில்லையோ? என்ன - சேதநனை இத்யாதி. விவரணம் - ருத்ரன்தன்னோடு இத்யாதி. சிதசித்விபாகமறக் காரியங்கொள்ளக் கண்டவிடமுண்டோ? என்ன - காரணாவஸ்த்தை இத்யாதி. "தஸ்மாத்-ஸவிஷேஹே" ன்றதுக்கர்த்தம் - முன்பு அவன் இத்யாதி. "தஸ்மாத்" என்றதின் அர்த்த ஸாமார்த்யத்தாலே-முன்பெடுத்துப்பார்க்க, முடியாதொழிந்தது ஸித்தம். "இவன் அந்தராத்மாவாய் நிற்கையாலே செய்தான்" என்றத்தால் ஃபலிதமான ருத்ரோச்ச்ராயஹேதுத்வத்துக்கு ஐதிஹ்யம் - பண்டொருராஜா இத்யாதி. ஒருவரென்றது - ஆழ்*

என்றெழுதி, "எழுத்திட்டுத்தாருங்கோள்" என்ன, அப்படி பலரும் எழுதி யெழுத்திடா நிற்கச்செய்தே; ஒருவர், "வாராய், நீ இவ்வோலைகெடாமே நோக்கிவைத்தாலிறே இவனுடையபரத்வம் ஸாதிக்கலாவது; நீ நினைக்கிற தேவதைக்குண்டான உச்ச்ராயங்கள் 'ஸர்வேஶ்வரனாலே' என்று ப்ரமாணங்கள் சொல்லாநின்றன; ஆனபின்பு, இன்று, நீ சொல்ல, நான் எழுத்திட்டுப்போகிறேன்; நாளை ஒருவிவக்ஷிதன்தோன்றி 'இவன் அஜ்ஞனாயிருந்தானீ!' என்னக்கேட்பதில் இன்று நீ நினைத்தத்தைச் செய்துகொள்ளமாட்டாயோ" என்றார். [உபாயங்களும்]-அப்போதிருந்து சிந்தித்தவற்றையெல்லாம் நினைக்கிறது. [வெள்ளநீர் இத்யாதி] - இதுக்கு ஆளவந்தார் அருளிச்செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி,—"ப்ரஹ்மருத்ரர்கள்நடுவே நின்றதோரு முதல்களவுண்டு, அத்தைச்சொல்லுகிறது" என்றாயிற்று. அதாவது-ருத்ரனையும் தன்னையும் ஸமமாகச்சொல்லலாம்படி த்ரிமூர்த்திமத்யஸ்த்திதியைச் சொல்லுகிறதென்று. இத்தை எம்பெருமானார் கேட்டருளி, "அழகிது, ஆகிலும் அத்தனைதூரம் தேடிப்போகவேணுமோ, இவன்தன்விஷயத்திறே முன்புபண்ணின உபகாரத்துக்கு ஓரளவுண்டோ, இதுதானே யமையாதோ" என்று அருளிச்செய்தார். [வெள்ளநீர் இத்யாதி]-கங்காஜலத்தைத் தன்ஜடையில் ஏகதேஶத்திலே தரித்த ப்ரஹாவத்தையுடைய ருத்ரனும் உன்பக்கல் வேறல்லாதபடிதோற்ற நின்றமையும். அதாகிறது - "ஶரீரஹ ஷிதன்" என்னுமிடந்தோற்றநின்றபடி. இங்ஙன்சொல்லுகிறதேன், ஐக்யமாகக் காண்டாலோ? இத்தையென்னில்,—அங்ஙன் கொள்ளுமன்று "விஷ்ணுராத்மா" (விஷ்ணுராத்மா) என்கிற ப்ரமாணத்துக்கு விஷயமின்றிக்கே யொழியுமே. "நலந்திகழ் சடையான்முடிக்கொன்றைமலரும் நாரணன்பாதத்துழாயுங் கலந்திழிபுனலால் புகர்படு கங்கை". அவனுடைய ஶேஷத்வத்துக்கும் இவனுடைய ஶேஷித்வத்துக்கும் ப்ரமாணம் ஒரு வெள்ளமென்கிறார்காணும். ருத்ரன்ஜடையில் கொன்றையும் ஸர்வேஶ்வரனடியில் திருத்துழாயும் கூடிவந்திழிகிறபடி. [உள்ளமுள்குடைந்து] - என் அந்த:கரணத்தைப் புக்கு அவகாஹித்து, "அச்சேத்யோயமதாஹ்யோயம்" (அச்சேத்யோயமதாஹ்யோயம்) என்கிற ஆத்மாவைப் புக்கு அழித்து நோவுபடுத்தாநின்றது. ஜ்ஞாநப்ரஸரத்வாரமான மநஸ்ஸிலேபுகுந்து ஆத்மாவை நீராக்கிமுடியாநின்றன. (ச)

(உயிரையுருக்கி)—கீதாஸூக்தியை "அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோஶோஷ்ய ஏவச। நித்யஸ்ஸர்வகதஸ்ஸ்தாணுரசலோயம்ஸநாதந: ॥ உச ॥"

*வானை. வ்யாக்யாநார்த்தம் - அப்போது இத்யாதி. முதற்களவாவது - "ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹ்ருதி" என்கிறபடியே யவதரித்து, அவர்களோடே ஸஹபடிக்கலாம்படியிருக்கிற த்ரிமூர்த்திமத்ய ஸ்த்திதியை. முன்புபண்ணினவென்றது - த்ரிபுரதஹநஸமயத்தில் அந்தராத்மாவாகை முதலானவை. எம்பெருமானார் நிர்வாஹத்திலே ஶப்தார்த்தம் - கங்காஜலத்தை இத்யாதி. ப்ரமாணாந்தரவிரோதமுங்காட்டுகிறார் - நலந்திகழ் இத்யாதி. ஒருவெள்ளமென்றது - சாடு. கங்கையென்னுதல், ப்ரவாஹம்போலே அநேகமென்னுதல். இதுக்கர்த்தம் - ருத்ரன்ஜடையில் இத்யாதி. நலந்திகழ் இத்யாதி - பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து, ஏழாந்திருமொழி, இரண்டாம்பாட்டு, "சலம்பொதி" இத்யாதி. நலந்திகழ் இத்யாதிக்கர்த்தம் - திருவடிகள்விளக்கின தீர்த்தத்தை தரித்துக்கொண்டிருக்கிற நன்மை விளங்காநின்ற ஜடையையுடையனான ருத்ரனுடைய ஶிரஸ்ஸில் கொன்றைப்பூவும், அவனுக்கு ஶரீரியும் ஶேஷியுமான நாராயணனுடைய திருவடிகளில் திருத்துழாயுமான இரண்டோடுங்கலந்து ஆகாசத்தினின்றும் பூமியிலே விழுந்து ப்ரவஹிக்கிறஜலத்தால் ஒளியையுடைத்தாயிருந்துள்ள கங்கையென்றபடி. 'உள்ளமுள்" என்றது - மநஸ்ஸூக்குள்ளென்றபடி. (ச)*

# ஐந்தாம் பாட்டு.

---

உண்ணவானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும்
வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும்
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்கள்
எண்ணுந்தோறுமென்னெஞ்சு எரிவாய்மெழுகொக்கும்நின்றே.

ஆ.—(உண்ண.) உண்ணவானவர்கோனுக்கு ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும்; இந்த்ரன் க்ருத்தனாய்வர்ஷிக்க, நாநாவர்ணமான பெரியமலையையெடுத்து மழை காத்ததும்; ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணினதுவும், இப்படிசெய்தருளின ஆஶ்சர்யங்களை யநுஸந்திக்குந்தோறும் என்னுடையமநஸ்ஸு, நெருப்பிலேபுக்க மெழுகுபோலே ஒருகாலேமுடியாதே நின்று உருகாநின்றதென்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஆஶ்ரிதவிஷயமாகச்செய்த சேஷ்டிதங்களும் அநுஸந்திக்குந்தோறும் என்மநஸ்ஸு அறவழியாநின்றது என்கிறார்.

[ஒருப்படுத்த] - சமைத்த. [வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும்] - இந்த்ரன் க்ருத்தனாய் வர்ஷிக்க நாநாவர்ணமான பெரியமலையை எடுத்து மழை அவர்கள்மேல்படாமே காத்ததும். [மண்ணை என்றுதொடங்கி] - ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுவதும்செய்து ஜகதஹ்மாகியான பிராட்டியோடு ஸம்ஶ்லேஷித்து இப்படி செய்தருளின ஆஶ்சர்யங்களை அநுஸந்திக்குந்தோறும் என்னுடைய மநஸ்ஸு நெருப்பிலேபுக்க மெழுகுபோலே ஒருகாலே முடியாதே நின்று உருகாநின்றது.

ப.—அநந்தரம், அதிமாநுஷசேஷ்டிதங்களை அநுஸந்திக்குந்தோறும் என்னெஞ்சு, அக்நிஸகாஶத்தில் மெழுகுபோலே யாகாநின்றதென்கிறார்.

வானவர்கோனுக்கு - ஸபரிகரனான இந்த்ரனுக்கு, உண்ண - பூஜிக்கைக்காக, ஆயர் - (பஶுரக்ஷணதத்பரரான) இடையர், ஒருப்படுத்த - ஶ்ரோத்யோகராய்ச்செய்த, அடிசில் - அடிசிலை, உண்டதும் - (கோவர்த்தநரூபியாய்க்கொண்டு) அமுதுசெய்ததும், வண்ணம் - யாதுக்களாலே நாநாவர்ணமாய், மால்-பெருத்திருக்கிற, வரையை - மலையை, எடுத்து-எடுத்து, மழை-(ஆராதநஹங்கத்தாலே க்ருத்தனான இந்த்ரன் ப்ரவர்த்திப்பித்த) மழையை, காத்ததும் - தடுத்ததும், (இப்படிவிஶேஷவிஷயமன்றியே), மண்ணை - (பூம்யுபலக்ஷிதமான) ஜகத்தை, முன்-ப்ரதமத்திலே, படைத்து - ஸ்ருஷ்டித்து, உண்டு - ப்ரளயம்வந்தவாறே வயிற்றிலேவைத்துநோக்கி, உமிழ்ந்து - (அநந்தரத்திலே) உமிழ்ந்து, கடந்து-(அந்யாபிமாநம்தீரும்படி) அளந்து, இடந்து - (அவாந்தரப்ரளயத்திலே வராஹரூபியாய்) இடந்து, மணந்த - ப்ரளயோத்த்ருதையான பூமியோடே ஸம்ஶ்லேஷித்த, மாயங்கள் - ஆஶ்சர்யகுணசேஷ்டிதங்களுமானவிவை, எண்ணுந்தோறும் - இத்தையநுஸந்திக்கும் காலந்தோறும், என்-என், நெஞ்சு-நெஞ்சானது, நின்று-ஒருபடிப்பட, எரிவாய்-அக்நியிடத்தில், மெழுகொக்கும் - மெழுகுபோலே த்ரவியாநின்றது.

இ.—அஞ்சாம்பாட்டில், ஆஶ்ரிதவிஷயமாகவும் ஸர்வவிஷயமாகவும் பண்ணின சேஷ்டிதங்களை யநுஸந்திக்குந்தோறும் என்மநஸ்ஸு அழியாநிற்குமென்கிறார்.

[உண்ண இத்யாதி] - ஸபரிகரனாக இந்த்ரனுக்கு ருஜுக்களான கோபர் சமைத்தவடிசிலை, "மொவஙு-ழு நோவஹி" என்று அமுதுசெய்ததும். "முன்னிருந்துமுற்றத்தான் துற்றியதெற்றெனவும்". மஹிஷியைப் பிறர்க்குக்கொடுத்தாப்போலேயாயிற்று ஆஶ்ரிதஸ்பர்ஶமுள்ளத்ரவ்யத்துக்கு தேவதாந்தரஸ்பர்ஶம். இந்த்ரன் க்ருத்தனாய் வர்ஷித்தான்; அநுகூலனுக்கு காதாசித்கமாகவந்ததாகையாலே, ராவணாதிகளைப்போலே அழியச்செய்திலன். [வண்ணமால்வரை] - ரூபாதுக்களாலே நாநாவர்ணமான பெரியமலை. இவர்தாம் அதிலே ஈடுபடுகிறார். "பசிக்ராஹத்தாலே வர்ஷித்தானாகில் தானேவிடுகிறான்" என்று ஆந்ருஶம்ஸ்யத்தாலே மலையையெடுத்து, ரக்ஷ்யவர்க்கம் நோவுபடாமல் காத்ததுவும். [மண்ணை இத்யாதி] - "வேண்டா" என்றாலும் தேவதாந்தரஸ்பர்ஶம் தவிர அறியாதவர்கள்விஷயத்திற்செய்யுமவை சொல்லுகிறது. அர்த்தித்வாதிநிரபேக்ஷமாக ஜகத்தை ப்ரதமத்திலே ஸ்ருஷ்டித்து, ப்ரளயாபத்துவந்தவாறே எடுத்துத் திருவயிற்றிலேவைத்துநோக்கி, வெளிநாடுகாண உமிழ்ந்து, மஹாபலியபஹரிக்க எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, பின்பு அவாந்தரப்ரளயங்கொண்ட பூமியை மஹாவராஹமாய் எடுத்து, அதெல்லாம் பூமிக்கு அபிமாநிநியான பிராட்டிக்காகையாலே அவள்விரும்பியணைக்க அவளோடுஸம்ஶ்லேஷித்து, இப்படிசெய்தருளின ஆஶ்சர்யசேஷ்டிதங்களை. [எண்ணுந்தோறும்]-எண்ணப்புகுவது, முடியஅநுஸந்திக்கமாட்டாதொழிவதான பரிவ்ருத்திதோறும். [என்னெஞ்சு] - நாட்டார் இதடங்க அநுஸந்தித்து உண்டுடுத்துத் திரிய, நினைத்தவாறே ஶிதிலமானநெஞ்சானது அக்நியையணைந்தமெழுகுபோலே நின்று உருகாநிற்கும். முடிவதும்செய்யாதே தரிப்பதும்செய்யாதே நிற்கை. எண்ணுகைக்கு அவஸாநமில்லாமையாலே உருகுகைக்கும் அவஸாநமில்லை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஆஶ்ரிதவிஷயமாகவும் ஸர்வவிஷயமாகவும்பண்ணின சேஷ்டிதங்களை யநுஸந்திக்குந்தோறும் என்மநஸ்ஸானது மிகவும் அழியாநின்றதென்கிறார்.

[உண்ணஇத்யாதி] - வானவர்கோனுக்கு-உண்ண - ஆயரொருப்படுத்தவடிசிலுண்டதும். தான் பிறந்துவளருகிறவூரிலே சிலர் வர்ஷார்த்தமாக இந்த்ரனுக்குச் சமைத்த அடிசிலைத் தான் புகுந்து பூஜித்த அதுவும். "நாம்பிறந்துவளருகிறவூரிலே வேறேயும் ஓராஶ்ரயணீயவஸ்துவுண்டாகையாவதேன்?" என்று பொறாமையாலே; "வாரீகோள், இந்த்ரனாகிறானேவன், கண்டறியாதானொருவனே! நமக்கு உபகரிக்கப்புகுகிறான்; ஆனபின்பு, மேகங்களும்வந்து பணியும்படிக்கீடாய், புல்லுந்தண்ணீருமுடைத்தாய், பசுக்களுக்கும் இடங்கொடுத்துநிற்கிற மலையன்றோ நமக்கெல்லாம்கடவது" என்று சொல்ல, இடையராகையாலே சொல்லிற்றைக்கேட்பார்சிலரோ, இனி இவன்தானே சொன்னவை

---

அஞ்சாம்பாட்டு—உண்ண இத்யாதி. "அடிசிலுண்டதும், மழைகாத்ததும்" இத்யாதிகளைக்கடாக்ஷித்து அவதாரிகை - ஆஶ்ரித இத்யாதி.

"ஆயர் - வானவர்கோனுக்கு - உண்ண - ஒருப்படுத்த அடிசிலுண்டதும்" என்று அந்வயிப்பது. ஶப்தார்த்தம் - தான்பிறந்து இத்யாதி. இந்த்ரனுக்கு இட்டத்தைத் தான் புஜிக்கைக்கு ஹேதுவேதென்ன - நாம்பிறந்து இத்யாதி. ஒருப்படுத்த - வோத்யோகாய்ச்சமைத்த இத்யர்த்தஃ எவன் - ஒருவனில்லையென்று க்ஷேபத்திலே. இதுக்குஹேது - கண்டறியாதான் என்றது. காணப்படாதவனென்றபடி. இவன் நாஸ்திகமாகச்சொன்னால் கேட்கிறதென்? என்ன, - ஹேதுத்வயம் - இடையராகையாலே இத்யாதி, இனிஇவன்தான் இத்யாதி. இந்த்ரனுக்கு இடையரிடுகிறவித்தால்

மறுக்கவொண்ணுதபடியாயிருக்குமே; "இம்மலையின்முன்னேயிடுங்கோள்" என்ன, அங்கே கொடுவந்து குவித்தார்கள்; அத்தைத் தான் புக்கிருந்தமுதுசெய்தான். தனக்கு அஸாதாரணராயிருப்பாருடைய த்ரவ்யத்தை வேறேசிலர்க்குக் கொடுக்கையாவது, மஹிஷீஸ்வேதத்தைப் பிறர்க்குக்கொடுத்தமாத்ரமிறே. அவன்தன் பரிகரத்தோடுங்கூட இதுகொண்டுத்ருப்தனுகைவிருக்க, இத்தைத்தான் கைக்கொண்டானுயிற்று. அவன் க்ரோதத்தாலே வர்ஷிப்பிக்கத்தொடங்கினுன் [வண்ணமால்வரை இத்யாதி] - அடைகொண்டு பாழ்போக்குவானெருவனன்றே. "நம்மஹிமதம்பெற்ருேமாகில் என்செய்தால் நல்லது" என்று போகட்டுப் போகாதே, நாநாவானஸாதுக்களையுடைத்தாய் ஒருவரால் கணிசிக்கவொண்ணுத பெரிய மலையை, ஸுகுமாரமான கையைக்கொண்டு ஏழுநாள் ஒருபடியேதரித்து, ஒருபசுவின் மேலேயாதல் ஓரிடையன்மேலேயாதல் ஒருதுளிவிழாதபடி காத்ததும். அவனை நிரஸிக்கலாயிருக்கச்செய்தேயும், "தேவப்ரக்ருதியான இவனை நலிகிறதேன், பசிக்ராஹத்தாலே செய்தானுகில் தானே கையோய்ந்துவிடுகிருன், அவ்வளவும் நம்ரக்ஷ்யவர்க்கத்தை நாம் கடகிட்டுநோக்குவோம்" என்றுஆந்ருஸம்ஸ்யங்கொண்டாடிவிட்டான். "நம்விபூதியைஇவன் நோக்கவல்லன், இவன்கண்ணுடையன்" என்றிறே இவனைத் தான் இங்குத்தைக்கிட்டது, இப்படியிருக்கச்செய்தேயும் இவன்கண்ணறையர்செய்வதைச் செய்தான். [மண்ணை இத்யாதி] - "வேண்டா" என்ருலும் தேவதாந்தரஸஜநம்தவிராதார் ஓர் ஊரளவன்றிக்கே, இருக்கிற ஜகத்திலுள்ளார்விஷயத்திற்செய்யு மவற்றைச்சொல்லுகிறது. அர்த்தித்வாதிநிரபேக்ஷமாக இவற்றையுண்டாக்கி, ப்ரளயாத்யாபத்துக்கள்வர இவைநோவுபடாதபடி வயிற்றிலேவைத்துநோக்கி, "உள்ளேகிடந்து மறைந்துபோகவொண்ணுது" என்றுபார்த்து வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, பின்பு மஹாபலிபோல்வார் அபஹரிக்க எல்லைநடந்து மீட்டுக்கொடுத்து,பின்பு அவாந்தரப்ரளயங்கொண்டபூமியை மஹாவராஹமாய் எடுத்துக்கொண்டேறி, இவையெல்லாம் பிராட்டிப்படுக்கைப்பற்ருகையாலே அவளுக்கு ப்ரியமாகக்செய்து அவளோடேஸம்ஶ்லேஷித்த ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை. [மணந்த] - ஸம்ஶ்லேஷித்த. [எண்ணுந்தோறும்] - அவனுடைய ரக்ஷணத்திலும் பரப்புண்டாகாதே இவருடையபாரிப்பு. எண்ணமாட்டார், எண்ணுதிருக்கமாட்டார், ரக்ஷணத்துக்கு அவன் சமைந்தாப்போலேகாணும் அழிகைக்கு இவர்சமைந்தபடி. [என்னெஞ்சு] - இத்தையநு

---

*தனக்குஹாநியேது, "அவர்களிட்டால் இட்டுப்போகிருர்கள்" என்றிருக்கவொண்ணுதோ? என்ன* - **தனக்குஅஸாதாரண** *இத்யாதி. இந்த்ரனென்னுதே, "வானவர்கோன்" என்றதுககுபாவம்* - **அவன் தன்பரிகரத்தோடும்** *இத்யாதி. மேலுக்கவதாரிகை* - **அவன்க்ரோத** *இத்யாதி. தன்ஶாயமானுலை "பட்டதுபடுகிறது" என்றிருககவொண்ணுதோ? என்ன* - **அடைகொண்டு** *இத்யாதி.* **அடைகொண்டு பாழ்போக்குவான்** - *"ரக்ஷிக்கிருேம்" என்று கைக்கொண்டு கைவிடுவானென்றபடி; யத்வா, ஒரு வன்க்ஷேத்ரத்தை வாங்கிப் பாழேபோக்குவானென்னுதல்; அடையென்று - இலட்டுசமாய, ஸக்ஷ்யவஸ்துவைக்கைக்கொண்டு கைவிடுவானென்னுதல்.* **ஸப்தார்த்தம் - நாநாவான** *இத்யாதி. மலையெடுக்க ஸக்தனுனவன் ஸாபராதனைநிரஸிக்கலாகாதோ? என்ன* - **அவனைநிரஸிக்கலாய்** *இத்யாதி.* **பசிக்ராஹம்** - *பசிக்கோவம்.* **கடகிட்டு** - *பரிசையையிட்டு.* **கடகு** - *பரிசை* **ஆந்ருஸம்ஸ்யங்கொண்டாடுகைக்கு** *இவன்செய்தவுபகாரமேதென்ன* - **நம்விபூதி** *இத்யாதி.* **கண்** - *கண்ணும், தயையும், இது சாடு.* **கண்ணறையர்** - *அந்தா:, க்ருபா ரஹிதாஶ்ச. "மாயங்கள்" என்றது - மாயங்களையென்றபடி.* **எண்ணும்போதென்னுதே,** *'எண்ணுந்தோறும்" என்றதுக்கு பாவம்* - **இவ் ருடைய** *இத்யாதி.* **அதாவது** - *ரக்ஷணத்துக்கு உறுப்பான வ்யாபாரம் அநேகமானுப்போலே, அவற்றைப்பற்றிவருகிற இவர்பாரிப்பும் அநேகமென்றபடி. பாவாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல்* - **எண்ணமாட்டார் இத்**

ஸந்தித்தே நாட்டார் உண்டுடுத்துக் காலம்போக்கா நின்றார்களிறே. [எரிவாய்மெழுகொக்கும்] - அக்நிஸகாஶத்தில் மெழுகுபோலே உருகாநின்றது. [நின்றே] - அது ஒருகாலே யுருகுதல் கரிதல்செய்யுமிறே, இது உருகினபடியே இராநின்றது. (3)

---

## ஆறும் பாட்டு.

---

நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும்நினைப்பரியன
ஒன்றலாவுருவாய் அருவாயநின்மாயங்கள்
நின்றுநின்றுநினைகின்றேன் உன்னையெங்ஙனம்நினைகிற்பன்?பாவி
ஒன்றுநன்குரையாய் உலகமுண்டவொண்சுடரே! [யேற்கு

*ஆ.—(நின்றவாறும்.) ராமக்ருஷ்ணாவதாரங்களில் நின்றருளுகை தொடக்கமாயுண்டான சேஷ்டிதங்களையும், மற்றும் நினைக்கவரியவாய் அநேகப்ரகாரமாய் எனக்குத் தோற்றாநிருக்கிற உன்னுடைய ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களையும், நினைக்கும்படி நின்றுநின்று ஆராயாநின்றேன்; உன்னை எங்ஙனேநினைப்பன். ப்ரளயத்தில் ஜகத்துக்கு வந்த ஆபத்தைநீக்கி உஜ்வலனானநீ, உன்னுடைய குணப்ரஸங்கத்திலே ஶிதிலனாகைக்கீடான பாபத்தைப்பண்ணின என்னுடைய ஶைதில்யம்போய் நான்தரிப்பதொரு நல்விரகுசொல்லவேணுமென்கிறார்.*

ஒ.—ஆறும்பாட்டில், உன்னுடைய ஸகலசேஷ்டிதங்களும் காணப்பெறாத நான் அவற்றைநினைக்கவும் க்ஷமனாகிறிலேன், தரித்துநின்று அநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்கிறார்.

*[நின்றவாறு என்றுதொடங்கி] - ராமக்ருஷ்ணாவதாரங்களிலும் உகந்தருளின கோயில்களிலும் நின்றருளுகை தொடக்கமாக உண்டான சேஷ்டிதங்களையும் மற்றும், நினைப்பார்க்கு ஶைதில்யஹேதுவாகையாலே நினைக்க அரியவாய் அநேகப்ரகாரமாய் எனக்குத் தோற்றாநிருக்கிற உன்னுடைய ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களையும். [நின்று என்று தொடங்கி] - வருந்தி உன்னை நினைக்கப்புகுவன் நினைக்கமாட்டுகிறிலேன். உன்னை நினைக்கும்படி நின்றுநின்று ஆராயாநின்றேன். உன்னை எங்ஙனே நினைப்பேன் என்றுமாம். [பாவியேற்கு என்றுதொடங்கி] - ப்ரளயார்ணவத்திலே இஜ்ஜகத்தையெல்லாம் திருவயிற்றிலேவைத்து பரிஹரித்தருளி "இதுசெய்யப்பெற்றோம்" என்னும் ஹர்ஷப்ரகர்ஷத்தாலே உஜ்வலனான நீ ஜகத்துக்குவந்த ஆபத்தை நீக்கினாற்போலே உன்னுடைய குணப்ரஸங்கத்திலே ஶிதிலனாகைக்கு ஈடான பாபத்தைப்பண்ணின என்னுடைய ஶைதில்யம்போய் நான் தரிப்பதொருநல்விரகு அருளிச்செய்யவேணும்.*

*ப.—அநந்தரம், ஸ்த்தித்யாஸநஶயநாதிவ்யாபாரங்கள் ஒருபடிப்பட நினைக்கலாயிருக்கிறதில்லை, நான் நினைக்கவல்லனாம் ப்ரகாரம் அருளிச்செய்யவேணுமென்கிறார்.*

---

*யாதி. அதாவது - ஈடுபாட்டால் வந்த ஶைதில்யத்தாலே யநுஸந்திக்கமாட்டார், அநுஸந்தியாதபோது தரித்திருக்கமாட்டாமையாலே எண்ணாதிருக்கமாட்டாரென்றபடி. "என்" என்றதுக்குபாவம் - இத்தை இத்யாதி. க்ரமேணாந்வய:.* (ரு)

(திருநூரகம், திருப்பாடகம் திருவெஃகா இவற்றிலே), நின்றவாறும் - நின்றபடியும், இருந்தவாறும் - இருந்தபடியும், கிடந்தவாறும் - கிடந்தபடியும், (அப்படி ஆஸ்ரிதஹ்ருதயங்களிலே "திஷ்டநு" என்றும் "ஆஸே" என்றும் "ஸேதே" என்றும் ப்ரமாணஸித்தமாம்படி வர்த்தித்தபடியாகவுமாம்), நினைப்பு - நினைக்கைக்கு, அரியன - அரியவாயிராநின்றன; (இப்படி), ஒன்று-ஒருபடி, அலா-அல்லாத, உருவாய்-ஆகாரத்தையுடையவனாய், அருவாய - எனக்கு அநுபவிக்கைக்கு உருத்தெரியாத, நின் - உன்னுடைய, மாயங்கள் - ஆஸ்சர்யசேஷ்டிதங்களானவற்றை, நின்றுநின்று - ஸிதிலமான நெஞ்சை ஸையில்யந்தோறும் நின்றுநின்றுவருத்தி, நினைகின்றேன் - முட்டநினைக்கப்பாராநின்றேன்; உன்னை - (ஸைதில்யாவஹசேஷ்டிதனான) உன்னை, எங்ஙனம் - எங்ஙனே, நினைகிற்பன் - ஒருபடிப்பட நினைக்கவல்லேனாவேன்? பாவியேற்கு - (ஸ்த்திரசிந்தைபண்ணமாட்டாத) பாபத்தையுடையேனான எனக்கு, உலகம் - ப்ரளயாபத்திலே யழிகிறஜகத்தை, உண்ட - அமுதுசெய்துநோக்கி, ஒண்சுடரே - அத்யுஜ்ஜ்வலனானவனே! (ஸையில்யார்ணவத்தில் அழுந்தாதபடி "ஸ்திதோஸ்மி" என்னும்படியாக), ஒன்று - அத்விதீயமாயிருப்பதொரு, நன்கு - விலக்ஷணோபாயம், உரையாய் - அருளிச்செய்யவேணும். நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறுமென்று - க்ருஷ்ணாவதாரத்திலே தொட்டிலுக்குள்ளே நின்று இருந்து கிடந்தபடியையுஞ்செல்லுவார்.

ஈ.—ஆறும்பாட்டில், உன்னுடைய ஸகலசேஷ்டிதங்களையும் காணவாசைப்பட்டநான், அவற்றைநினைக்கவும் க்ஷமனாகிறிலேன்; ப்ரளயாபத்தில் ஜகத்தைரக்ஷித்தாப்போலே, அநுஸந்திக்கவல்லேனாம்படி பண்ணவேணுமென்கிறார்.

[நின்ற இத்யாதி] - "ஸ்வஷூஹ்யுபதிஷ்டது", "உடஜோரஜோவஸீ.நஹ", "யோஹம்ஹஜமஹோமஹ" என்று திருக்குரவையிலேநின்றும், பெண்களோடே கழகமிருந்தும், அவர்கள்மடியிலே சாய்ந்தும், அர்ச்சாவதாரத்திலும், "நின்றதெந்தையூரகத்து" இத்யாதி. "நிற்பதுமோர்வெற்பகத்து" நின்றுமிருந்துங்கிடந்தும் உண்டானசேஷ்டிதங்களையும், அவன்நிலையை அநுஸந்தித்தபோது "நிலையாரநின்றான்" என்பர்கள்; இருப்பை அநுஸந்தித்தபோது "பிரானிருந்தமைகாட்டினீர்" என்பர்கள்; கிடையை அநுஸந்தித்தபோது "கிடந்ததோர் கிடக்கை" என்பர்கள். [நினைப்பரிய] - உபக்ரமத்திலே ஸையில்யஹேதுவாகையாலே நினைக்க அரியனவாய். [ஒன்றலாவுருவாய்] - அநேகமான ப்ரகாரங்களாய். [அருவாயநின்மாயங்கள்] - எனக்குத்தோன்றாதிருக்கிற, நின்மாயங்கள் - உன்னுடைய ஆஸ்சர்யசேஷ்டிதங்களையும். [நின்றுநின்று இத்யாதி] - உபக்ரமத்திலே, ஸிதிலனாய் வருந்திவருந்தி நினைக்கிற நான், உன்னை எங்ஙனே நினைத்துத்தலைக்கட்டும்படி. நினைக்கும்படியை நின்றுநின்று ஆராயாநின்றேன், உன்னை எங்ஙனம் நினைகிற்பனென்றுமாம். நினையாதிருக்கமாட்டார் விஷயவைலக்ஷண்யத்தாலே, நினைக்கமாட்டார் ஸையில்யத்தாலே. [பாவியேற்கொன்றுநன்குரையாய்] - உன்குணப்ரஸங்கத்திலே ஸிதிலனாம்படி பாபத்தைப்பண்ணின எனக்கு, தரித்துநின்று அநுபவிக்கைக்கு ஒருநல்விரகுசொல்லாய், நினைக்கவும்வல்லதாய் அத்தாலே அபிமதங்களையும் பெறுநின்றதிறே நாடாக. [உலகமுண்டவொண்சுடரே] - அபேக்ஷையுமின்றிக்கே உபகாரஸ்ம்ருதியுமின்றிக்கே யிருக்கிற பூமியை ரக்ஷித்து, அது உன்பேறாக உகந்தவுகப்பாலே உஜ்ஜ்வலனானவனே.

ஈடு.—ஆறும்பாட்டு. உன்ஸகலசேஷ்டிதங்களையும்காண, விடாய்ப்பட்ட நான் நினைக்கவும் க்ஷமனாகிறிலேன்; ப்ரளாயபத்தில் ஜகத்தைரக்ஷித்தாப்போலே, அநுஸந்திக்க வல்லேனாம்படிபண்ணி என்னைரக்ஷிக்கவேணுமென்கிறார்.

[நின்ற இத்யாதி] - இவர் இவ்விஷயத்திற்படுகிறபாடேல்லாம் நமக்கு இதர விஷயங்களிலே அநுபவஸித்தமிறே, இவ்விஷயத்திலின்றிக்கே யொழிகிறவித்தனை. வடக்கு நின்றும் போரப்பாடவல்லராயிருப்பாரோருத்தர் "பெருமாளைத்திருவடிதொழவேணும்" என்றுவர, ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரையர் தீர்த்தத்தினன்றிராத் திருமாலையைப்பாடிச் சமைந்து பெருமாளை மத்தகஜங்களையேத்துமாபோலேயேத்தி வசமாக்கிக்கணிசங்கொண்டு, "நாயன்றே, தேவர்திருவடிகளுக்குப்போரநல்லானொருத்தன் எழுநூற்றுக்காதமாறுண்டு தேவரை 'திருவடிதொழவேணும்' என்றுவருகிறது; இவனையழைத்துக்கொண்டு ஸம்பாவனைபண்ணியருளவேணும்" என்ன, பெருமாளும் "அப்படியேசெய்கிறோம்" என்று திருவுள்ளமாய் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழ்நின்றும் அவர்நின்றவிடத்தளவும்செல்ல நாலுகோல்தறை திருக்கைத்தலத்திலே எழுந்தருளி, விண்ணப்பஞ்செய்வார்களையெல்லாம் அருளப்பாடிட்டு, "வாரிகோள், இவன்வந்ததூரத்துக்கெல்லாம்போருமோ நாம் இவனுக்குச்செய்த தரம்" என்று திருவுள்ளமானார். இப்படியேயிறே நம்மிழவுகளும் திருவுள்ளத்திலேபட்டவையெல்லாம் ஆறும்படிக்கீடாகமுகந்தந்தருளவல்லபடியும். ஒருநாள் ஸ்ரீவைஷ்ணவவண்ணத்தான் திருப்பரிவட்டங்களை அழகிதாகவாட்டி எம்பெருமானார்க்குக்கொண்டு வந்துகாட்ட, போரத்ருபதராய் இவனையுங்கூடக்கொண்டு பெருமாள்பாடேபுக்கு, "நாயன்றே இவன்திருவரைக்கீடாம்படி இவற்றைத்தோட்டபடி பார்த்தருளவேணும்" என்றுகாட்ட, கண்டு போரவுகந்தருளி எம்பெருமானாரை அருளப்பாடிட்டு, "இவனுக்காக, கம்ஸனுடைய ஈரங்கொல்லி நந்திறத்திற்பண்ணினகுற்றம்பொறுத்தோம்" என்று திருவுள்ளமானார். [நின்றவாறும் இத்யாதி] - லங்காத்வாரத்திலே கையும்வில்லுமாய் நின்றபடியாதல், வாலிவதம்பண்ணிக் கையும்வில்லுமாய் நின்றபடியாதல்; "அவஷ்டப்ய திஷ்டந்தம் ... ஸாஹா" (அவஷ்டப்யசதிஷ்டந்தம்ததர்ஸநுநூர்ஜி

ஆறும்பாட்டு.—நின்றவாறும் இத்யாதி. பாட்டையெல்லாம்கடாக்ஷித்து அவதாரிகை - உன்ஸகல இத்யாதி.

"நின்றவாறும்" இத்யாதியாலே - ப்ரத்யவஸ்த்தையிலும் இவர்படுகிறபோலே, நமக்கு இவ்விஷயத்தில் ஈடுபாடு காண்கிறோமில்லையேயென்ன - இவர்இவ்விஷயத்தில் இத்யாதி. இவர் ஈடுபடுவது ஆஸ்ரிதார்த்தமான செயலுக்காகையாலே, ப்ரஸங்காத், அவன் ஆஸ்ரிதார்த்தமாகச்செய்யும் செயலுக்கு ஐதிஹ்யம் - வடக்குநின்றும் இத்யாதி. தீர்த்தத்தினன்றிரா - தீர்த்தவாரியினன்றிருந்தென்றபடி. பாடிச்சமைந்து - பாடிமுடித்து. கணிசங்கொண்டு - பதங்கொண்டு. ஆறுண்டு - வழியுண்டு. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - இப்படியே இத்யாதி. அநுகூலரானவரைப்போலே ஸாபராதரான நம்மை அங்கீகரிக்கக்கூடுமோ? என்ன, - புருஷகாரபலத்தாலே கூடுமென்னுமதுக்கு ஐதிஹ்யம் - ஒருநாள் இத்யாதி. அன்றிக்கே, "இவன்வந்ததூரத்துக்கெல்லாம்போருமோ" என்கையாலே - ஆயாஸங்கண்டு இரங்குமென்று விசேஷித்து, அப்படி ஆயாஸங்கண்டு இரங்குமோ? என்ன - ஒருநாள் இத்யாதி என்னுதல். தோட்டபடி - வெளுப்பித்தபடி. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணம் - அவஷ்டப்ய இத்யாதி. "அவஷ்டப்ய திஷ்டந்தம் ... । ... ஸாஹா" [உ௫ ½] உ திகிஷிந்தாகாண்டு. [கக] எடுத்தஸ்லோகத்துக்கு அர்த்தம்-வாலிவதம் இத்யாதி. அவரையிடுவித்துக்கொல்லுவிக்கையாவது-

தம்-ஸுபா) - வாலிவதம்பண்ணிக் கையும்வில்லுமாய்க்கொண்டு வென்றிபுனைந்துநின்ற பெருமாளையும், அவரையிடுவித்துக்கொல்லுவித்த தம்பியாரையும், இருவரையும் அநுர்வர்த்தித்து முடிசூடவிருக்கிற மஹாராஜரையுங்கண்டவிவள் "நமக்குமித்ருக்கள்" என்றிராதே, ஸுபஹ்ருதயையானுள் அவர்பக்கல் ஸாங்கத்தாலே. இனித்தான் தண்ணீர்குடிக்ககல்லின ஏரியிலே கல்லைக்சட்டிக்கொண்டு விழுந்துமுடிந்துபோவாரைப்போலே, ஆஸுரப்ரக்ருதியானவாறே முடிந்துபோனுன்வாலி; இவர்செய்தகுற்றமுண்டோ? என்றிருந்தாள். அவர் தம்முயிர்நிலையிலே நலிந்தாரைவிட்டுவைப்பரோ. [இருந்தவாறும்]- "உடஜேராமமாஸீநம்" (உடஜேராமமாஸீநம்) என்றிருந்தவிருப்பும். [கிடந்தவாறும்] - அஞ்ஜலிம்ப்ராங்முக: க்ருத்வாப்ரதிஶிஶ்யேமஹோததே:" (அஞ்சலிம்ப்ராங்முக:க்ருத்வாப்ரதிஶிஶ்யேமஹோததே:) என்கிறபடியே, கடற்கரையிலே கிடந்தகிடையும். ப்ரதிஶிஶ்யே என்கிறதிறே - ஒருகடலோடே யொருகடல் ஸ்பர்த்தித்துகிடந்தாப்போலே யிருக்கையாலே; "கருணையென்னுங்கடல் கருங்கடலைநோக்கிக்கிடந்ததே" என்றானிறே. அதாகிறது - பின்பு விடக்கடவதாகத்தொடுத்த அம்பு முன்புவிடமாட்டாமையில்லையிறே; அப்படிப்பட்ட அம்பிருக்க, தந்தோள்வலிகிடக்க, தரம்போராதார்முகங்காட்டாதேயிருக்கப் பொறுத்துக்கிடந்த கிடையைச்சொல்லுகிறது; நின்றுமிருந்தும்கிடந்தும் என்று திரளச்சொல்லவமையுமாயிருக்க, நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறுமென்கிறுரிறே - தனித்தனியே உளுக்கினபடி. அங்ஙனன்றிக்கே, கோவர்த்தநோத்தரணம்பண்ணி நின்றநிலையாதல், திருக்குரவைக்கு முற்சாமமாகப் பெண்களோடே கழகமிருந்தவிருப்பாதல், ஒரோருத்தர் மடிகளிலே சாய்ந்தபடியாதல். நின்றானுகில் "நிலையாரநின்றான்" என்பார்கள் - "நின்றவன் இருத்தல்சாய்தல் செய்யிற் செய்வதென்?" என்று வயிறுபிடிக்கவேண்டும்படியிறே அதிருப்பது; இருந்தானுகில், "பிரானிருந்தமைகாட்டினீர்" என்னும்படியிருக்கும்; கிடந்தானுகில், "கிடந்ததோர்கிடக்கை" என்பர்கள். "நிற்பதுமோர்வெற்பகத்திருப்பவிண்கிடப்பதும் நற்பெருந்திரைக்கடலுள்" என்கிறபடியே, திருமலையிலே நின்றபடியும், பரமபதத்திலே இருந்த

---

புருஷகாரபூதராயிருக்கை. ஸாங்கம் - பக்ஷபாதமும், வில்லும். கீழ்-கையும்வில்லுமானவழகைக்கண்டு ஸாங்கத்தாலே சுபஹ்ருதயையானுளென்று அருளிச்செய்து, ஆஶ்ரிதபக்ஷபாத ஸ்ரணுநுஸந்தானத்தாலே சுபஹ்ருதயையானுளென்று பாவாந்தரம்-இனித்தான் இத்யாதி. "உடஜேராமமாஸீநம் ஜடாமண்டலதாரிணம்| க்ருஷ்ணாஜிநதரம் தந்வீரவக்ஷவஸநம் ப்ரபும்" [ரா-௬-௧௧] இதி ஶ்ருதே. [உருஃ] "ததஸ்ஸாகரவேலாயாம் தர்பாநாஸ்தீர்ய ராகவ:| அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஶிஶ்யே மஹோததே:" இதி யுத்தகாண்டே. [உக] அவரையும்கடலாகச்சொன்னவிடமுண்டோ? என்ன - கருணையென்னும் இத்யாதி. இந்தக்கம்பன்கவிக்கு அர்த்தம் - அதாகிறது இத்யாதி. உளுக்கினபடி - ஈடுபட்டபடி. கழகம் - ஓலக்கம். தனித்தனியே உளுக்கினபடியைக் காட்டுகிறுர் - நின்றானுகில் இத்யாதி. கிடந்ததோர்கிடக்கையென்பர்கள் என்னுமளவும். நிலையார என்றதுக்கு இரண்டுபொருள் - நின்றவன் இத்யாதி. அதாவது - நின்றவன் இருந்தாற்செய்வதென் என்றும், சாய்ந்தருளிச்செய்வதென் என்றும் இரண்டுபொருள். நிலையாரநின்றான் - நிலைபடியநின்றான். நிலைபொருந்தநின்றானென்றபடி. இந்தப்பாசுரம் திருமொழியில், "குலையார்ந்தபழுக்காயும்" என்கிறபாட்டிலே. இருந்தமை - இருந்தபடியை. இருப்பிலழகையென்றுகருத்து. கிடந்ததோர்கிடக்கைகண்டு—திருமாலை, இருபத்துமூன்றும்பாட்டு, "கங்கையில்" இத்யாதி. இதுக்கு அர்த்தம் - "ஒருக்கணித்தோ மல்லாந்தோ கண்வளர்ந்தருளுகிறது" என்று தெரியாதபடி இருப்பதொரு கிடந்த கிடையழகைக்கண்டு என்றபடி. நிற்பதுமோர் இத்யாதி - அத்விதீயமானதிருமலையிலே நிற்பதுவும்,

படியும், திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியுமாகவுமாம். "நிற்பதுமிருப்பதுங் கிடப்பதுமென்னெஞ்சுளே" என்கிறபடியே, இவர்திருவுள்ளத்திலே * திகழுமணிக்குன்ற மொன்றேயொத்து நின்றபடியும்; "சேவ்வாய்முறுவலோடு எனதுள்ளத்திருந்த வவ்வாயன்றி யானறியேன்" என்னும்படி இருந்தபடியும்; "நின்றுமிருந்துங்கிடந்தும்" என்கிறபடியே, தந்திருவுள்ளத்திலேநின்றபடியும் இருந்தபடியும் கிடந்தபடியுமென்னுதல். அன்றிக்கே, திரு வூரகத்திலே நின்றபடியும், திருப்பாடகத்திலே இருந்தபடியும், திருவெஃகாவிலே கிடந்த படியுமாதல். "நின்றவாறுமிருந்தவாறுங்கிடந்தவாறும்" என்று ஆழ்வார்பாடாநிற்க, "இவை யெல்லாம் தொட்டிலிலே" என்று அருளிச்செய்தார் எம்பெருமானர். தொட்டிற்பழுவைப் பிடித்துக்கொண்டு நிற்கும்படியும், தரித்துநிற்கமாட்டாமை விழுந்திருக்கும்படியும், அது தான் பொறுக்கமாட்டாமை சாய்ந்துகிடக்கும்படியுஞ் சொல்லுகிறது. அதவா, [நின்ற வாறுமிருந்தவாறும்கிடந்தவாறும்] - * போரார்வேற்கண்மடவாள்போந்தனையும் பொய் யுறங்கி, அவள்போனவாறே எழுந்திருந்துநின்றவாறும்; அடியோசைப்பட்டவாறே வந்திருந்த படியும், நிழலாடினவாறே முன்கிடந்ததானத்தேயோராதவன்போல் கிடந்தவாறுமென்று மாம். [நினைப்பரியன] - அது ஒருகால் செய்துபோகச்செய்தேயும் இவர்க்கு இன்றுங்கூட நினைக்கவும் அரிதாயிராநின்றது. "இமையோர்தமக்கும் - செவ்வேநெஞ்சால் நினைப்பரி தால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்" என்றாரிறே முன்பே. [ஒன்றலாவுருவாய்] - இவர்தமக்கு ஒன்றே போருமாகாதே யுள்ளதனையும் நோவுபடுகைக்கு. ஒன்றல்லாத ப்ர காரங்களையுடையவாய். [அருவாயநின்மாயங்கள்] - கண்ணுக்கு அவிஷயமாயிருக்கிற உன் னுடைய ஆஶ்சர்யமான சேஷ்டிதங்களை. [நின்றுநின்றுநினைகின்றேன்] - நினைத்துத்தலைக் கட்டமாட்டார், நினையாதிருக்கமாட்டார். வருந்தி உன்னைநினைக்கப்புகுவன், நினைக்க

---

விண்ணிலே - பரமபதத்திலே இருப்பதும், நன்றாய்ப் பரப்பையும் அலைகளையுமுடைய திருப்பாற் கடலிலே கண்வளர்ந்தருளுவதுமென்றபடி. திருச்சந்தவிருத்தம், அறுபத்தஞ்சாம்பாட்டு. திகழு மணிக்குன்றமொன்றேயொத்துநின்ற விளங்காநிற்கிறதொரு மாணிக்கமலைபோலே நின்றவென்றபடி. செவ்வாய் இத்யாதி - சிவந்ததிருப்பவளத்தின் முறுவலோடே என்னெஞ்சுக்குள்ளேயிருந்த அந்த வாகாரத்தையொழிய வேறொராகாரத்தை அறியேனென்றபடி. நின்றுமிருந்தும்கிடந்துமென்கிற படியே இத்யாதி - பெரியதிருவந்தாதி, முப்பத்தஞ்சாம்பாட்டு. இந்தவாக்யத்தில், கிடந்தும் என் றதுவே இவ்விடத்துக்குவேண்டுவது. ஆழ்வார் என்றது - ஆழ்வார்திருவரங்கப்பெருமாளரைய ரென்றபடி. பழுவை - தொட்டிற்சட்டத்தை. போரார்வேற்கண் இத்யாதி - சிறியதிருமடல். இதுக்கு அர்த்தம் - யுத்தோந்முகமான கூர்மையுடைய வேல்போன்ற கண்களையுடைய யசோதைப் பிராட்டிபோந்தனையும் பொய்யாகநித்ரைபண்ணி. ஆர் - கூர்மை. முன்கிடந்ததானத்தே - முன்பு கிடந்த ஸ்தாநத்திலே. ஓராதவன்போல் - அறியாதவன்போலென்றபடி. ஆக, "நின்றவாறும்" இத்யாதிக்கு ஏழு தாத்பர்யம். நினைக்கவும் அரிதோ? என்ன - இமையோர் இத்யாதி. நித்யஸூரி களுக்கும் நேரே நெஞ்சால் பரிச்சேதித்துநினைக்கவரிது, வெண்ணெயை யமுதுசெய்தானென்று சொல்லுகிற அபக்ருஷ்டவசநம் இத்யர்த்தஃ. திருவிருத்தம், தொண்ணூற்றெட்டாம்பாட்டு, "துஞ்சா முனிவரும்" இத்யாதி. நோவுபடுகைக்கு என்றவநந்தரத்திலே, 'அநேகமானால் சொல்லவேணுமோ' என்று கூட்டிக்கொள்வது. உரு - ப்ரகாரம். மாயங்கள் - மாயங்களை. "நின்றுநின்றுநினைகின்றேன்" இத்யாதிக்கு இரண்டுபொருள் - நினைப்பரியனவொன்றலாவுருவாயருவாயநின்மாயங்களான - நின்ற வாறும் இருந்தவாறும் கிடந்தவாறுமான இவற்றை - தரித்துநின்று அநுஸந்திக்கலாமோவென்று வருந்தியநுஸந்திப்பன்; அவை எனக்கு ஶைதில்யத்தை விளைக்கையாலே உன்னை எங்ஙனேயநுஸந் திக்கவல்லேன்; என்றால் உன்குணங்களை தரித்துநின்று அநுஸந்திக்க முடியாதென்று ஒருபொருள். இதனையருளிச்செய்கிறார் - நினைத்துத்தலைக்கட்டமாட்டார் இத்யாதி நாலுவாக்யத்தாலே. நினைத்

மாட்டுகிறிலேன். அன்றிக்கே, நினைக்கைதான் தேட்டமாய் "நினைக்கலாவதோருவழி யேதோ" என்று ஆராயாநின்றேன். [உன்னையெங்ஙனம்நினைகிற்பன்] - ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமான நீ, நான் உன்னைநினைக்கலாவதொரு வழியிட்டுத்தரவல்லையே. "தொண் டெல்லாம் நின்னடியே தொழுதுய்யுமா கண்டு" - ஶேஷவர்க்கமடங்கலும்- ஐஶ்வர்யார்த்தி கள், ஆத்மப்ராப்திகாமர், பகவத்ப்ராப்திகாமர் இவரடங்கலும் சென்றுகிட்டித் தந்தாம் ப்ரயோஜநங்களைப்பெற்று மீளுகிறபடியைக்கண்டு, "தான்கணபுரந்தொழப்போயினாள்" - நமக்கும் கலந்து பரிமாறி மீளலாமென்றுபோனாள்; "தான்" - விஷயத்தையே பார்க்கு மித்தனையோ, தந்தாமையும் பார்க்கவேண்டாவோ. ஒருப்ரயோஜநத்துக்காகப்போவார்க் கன்றோ அதுகொண்டு மீளலாவது, தன்னையே ப்ரயோஜநமாகப்பற்றிப்போவார்க்கு மீள விரகுண்டோ. இப்படியேயிறே பகவத்ப்ராவண்யமுடையார்படி. [பாவியேற்கு] - என்னையொழிந்தாரடங்கலும் நினைப்பாரும் அபிமதம்பெறுவாருமாய்க்கிடீர்! செல்லுகிறது. "ஸம்ருத்தோயச்சதிஶோபநம்" (ஸம்ருதோயச்சதிஶோபநம்) என்கிறபடியேயிறே நாடடங் கலும். [ஒன்றுநன்குரையாய்] - அர்ஜுநனுக்குச்சொன்னாற்போலே எனக்கும் ஒரு நல் வார்த்தை சொல்லவல்லையே. அவ்வளவாகாதே இவர்தம்மதும். இனி "ப்ராப்திக்கும் விரோதிபோகைக்கும் கடவேன்நான்" என்றானிறே. அவ்வளவேயிறே வேண்டுவது, பின்புவருமவை தன்னடையேவருமவையிறே. ஸ்வஸ்வரூபஸித்தியிறே ப்ராப்யம், ப்ராப்தி

---

துத்தலைக்கட்டமாட்டாரென்றது - "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதுக்கர்த்தம். நினையாதிருக்க மாட்டாரென்றது - "உன்னை எங்ஙனம்நினைகிற்பன்" என்றதுக்கர்த்தம். இக்குணங்கள் ஈடுபடுத் துகையாலே நினைத்துமுடிக்கமாட்டார், அக்குணங்களையொழியச்செல்லாமையாலே நினையாதிருக்க மாட்டாரென்று - நினைத்துத்தலைக்கட்டமாட்டார் இத்வாதிவாக்யத்வயத்துக்கும் தாத்பர்யம். இத்தை விஶதீகரிக்கிறார் - வருந்தி இத்யாதி. ஒன்றலாவுருவாயருவாயின்மாயங்களான - நின்றவாறும் இருந்த வாறும் கிடந்தவாறும் ஶிதிலமாகப்பண்ணுமவை; ஆகையாலேநினைப்பரியன; "உன்னை யரித்து நின்று அநுபவிக்கும் உபாயமேது" என்று பலகாலும் விசாரியாநின்றேன், அது நீயே நிச்சயித் தருளிச்செய்யுமத்தனைபோக்கி, நான் எங்ஙனே நிச்சயிக்கப்புகுகிறேன் என்று இரண்டாமர்த்தம். இத்தையருளிச்செய்கிறார் - அன்றிக்கேநினைக்கைதான் இத்யாதி. "உலகமுண்ட" என்கிறதிலே - "மேல்ப்ரளயம்வரப்போகிறது" என்று ஏற்கவே விசாரித்துரக்ஷிக்கையாலே, ஸர்வஜ்ஞத்வம் தோன்று நின்றது; சிறியவயிற்றிலே பெரியலோகங்களை யடக்குகையாலே, ஸர்வஶக்தித்வம் தோன்றுநின்றது; அத்தைப்பற்ற - ஸர்வஜ்ஞனுமாய் ஸர்வஶக்தியுமானநீ என்கிறார். "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதின் இரண்டாமர்த்தத்துக்கு, "உன்னை எங்ஙனம் நினைகிற்பன்" இத்யாதிக்கு - யரித்துநின்று நினைக்கும்படி சொல்லவேணுமென்றபடி. லோகத்தார் அவனைநினைத்து கார்யங்கொள்ளாநிற்க, இவர்க்கு நினைக்கைதேட்டமாவானென்? என்ன - தொண்டேல்லாம் இத்யாதி. இதுக்கர்த்தம் - ஶேஷவர்க்கமடங்கலும் இத்யாதி. இத்தால் - ப்ரயோஜநாந்தரபரரானவர்களுக்கு ப்ரயோஜநார்த்த மாக நினைக்கலாம், அநந்யப்ரயோஜநர்க்கு ஈடுபாட்டுக்குடலாகையாலே நினைக்கப்போகாதென்றபடி. கீழ்வாக்யவிவரணம் - ஒருப்ரயோஜநத்துக்காக இத்யாதி. தொண்டேல்லாம் இத்யாதி - இப் பாசுரம் திருமொழி, எட்டாம்பத்து, இரண்டாந்திருமொழி, எட்டாம்பாட்டு. உய்யுமாகண்டு - உஜ்ஜீ விக்கும்படிகண்டு. அதாவது - தந்தாமபிமதம்பெறக்கண்டென்றபடி. அர்ஜுநனுக்குச் சொன்னாற் போலேயென்றது - அர்ஜுநனுக்கு "மாஶுச:" என்று சொன்னாற்போலேயென்றபடி. ஆனால், அர்ஜுநனைப்போலே இவர்க்கு ஶோகமுண்டோ? என்ன - அவ்வளவு இத்யாதி. அவ்வளவாகாதே யென்றது - அவ்வளவன்றோவென்றபடி. அர்ஜுநனுக்குச்சொன்னதேதென்ன - இனிப்ராப்திக்கும் இத்யாதி. இனியென்றது - அவன்ஶோகித்தவநந்தரமென்றபடி. சரமஶ்லோகத்தில் "மோக்ஷயி ஷ்யாமி" என்று - விரோதிநிவ்ருத்தியன்றோ சொல்லிற்று, ப்ராப்திசொல்லவில்லையே; ஆனபின்பு

பலமான கைங்கர்யம் சொல்ல வேண்டாவே, ப்ராப்தியளவுமிறே ப்ரமாணம்சொல்லுவது. அவ்வருகுள்ளது ப்ரமாணத்துக்கு விஷயமன்றே. அப்படியே "உனக்கும்நானேகடவேன்" என்று ஒருவார்த்தை சொல்லவல்லேயே. [உலகமுண்டவொண்சுடரே] - உண்டியுடல் காட்டுமே. நினைக்கை குற்றமாய்விட்டதோ. நினைவுங்கூடத் தேட்டமானால் நீயேசெய்து தலைக்கட்டவேண்டாவோ. இவை ஆபத்துங்கூடவறிவிக்கமாட்டாத ஸமயத்திலே நீயே யறிந்து வயிற்றிலேவைத்துநோக்கி, இவ்வுபகாரம் இவையறியாதொழிய, "இது உன்பேறு" என்னுமிடம் வடிவில் புகரிலேதோற்றவிருப்பானொருவனல்லேயோ. [உலகமுண்டவொண் சுடரே] - "உன்பேறாக ரக்ஷித்தாய்" என்று மெய்யேயன்றோ சொல்லுகிறது. (சு)

## ஏழாம் பாட்டு.

ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும் உண்மையோடின்மையாய்வந்துஎன்
கண்கோளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன
எண்கொள்சிந்தையுள்நைகின்றேன் என்கரியமாணிக்கமே! என்கண்கட்
திண்கொள்ளவொருநாள் அருளாயுன்திருவுருவே. [குத்

ஆ.—(ஒண்சுடர்.) ஆஸ்ரிதர்க்கு மெய்யனாய்த்தோற்றியும், அநாஸ்ரிதர்க் குப் பொய்யனாய்க் கைவாராதேயிருக்கிறபடியையும், ஹ்ருதயத்திலே ஸந்நிஹிதனாய்

ஜ்வர்சகும் அவ்வளவுபோருமோ? என்ன, - அநிஷ்டநிவ்ருத்தியைச்சொன்னால் - இஷ்டப்ராப்தி அர்த்தஸித்தமாய்வருகையாலே சொல்லிற்றில்லையென்கிறார் - அவ்வளவேயிறே இத்யாதிவாக்யத் வயத்தாலே. அவ்வளவேயன்றேவேண்டுவதென்றது - விரோதிபோமளவேயிறே வேண்டுவதென்ற படி. பின்புவருமவை ஏதென்ன - ஸ்வஸ்வரூப இத்யாதி. ப்ராப்யமென்றது - ப்ராப்தியென்றபடி. இத்தால் - ப்ராப்தியும் சரமஸ்லோகத்தில் அர்த்தாத் உக்தமென்றுகருத்து. ப்ராப்திமாத்ரகதனம் போருமோ, கைங்கர்யம்சொல்லவேண்டாவோ? என்ன - ப்ராப்திபலமான இத்யாதி. அதாவது - ராகப்ராப்தமாகையாலே ப்ரீதிகாரிதமாய்த்தன்னடையே வருமென்றபடி. அபரிச்சிந்நத்வேந ப்ரமாண விஷயமாகையாலும் சொல்லவேண்டாவென்று பரிஹாராந்தரம் - ப்ராப்தியளவுமிறே இத்யாதி வாக்யத்வயத்தாலே. "உலகமுண்டவொண்சுடரே"-லோகத்தையமுதுசெய்து அத்யுஜ்ஜ்வலனானவனே இதி ஸப்தார்த்த: உலகமுண்டால் ஒண்சுடராகவேணுமோ? என்ன - உண்டி இத்யாதி. உண்டி - போஜநத்தை. "வைராக்யாதிஹோஜநம்" என்னக்கடவதிறே. "உலகம்" என்ற அசேதந ஸமாதிக்கு, "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதின் மூன்றினவர்த்தத்துக்குச்சேர பாவம்—நினைக் கை இத்யாதி. அதாவது - நினைக்கமாட்டாதேயிருக்கிற லோகத்தை ரக்ஷித்தாய், சேதநனானவாசிக்கு நினைக்கிறவென்னை ரக்ஷித்தாலாகாதோ என்றுகருத்து. "நின்றுநின்றுநினைகின்றேன்" என்றதின் தவிதீயார்த்தத்துக்குச்சேர பாவம் - நினைவுங்கூட இத்யாதி. "உலகமுண்டவொண்சுடரே" என்ற துக்கு ஸப்தார்த்தம் - இவையாபத்துங்கூட இத்யாதி. சாடுவுக்காக பதோபாதானம்பண்ணி யருளிச் செய்கிறார் - உன்பேறாக இத்யாதி. மெய் - சரீரமும், ஸத்யமும். நினைப்பரியனவாய் - நின்றவாறும் இருந்தவாறும் கிடந்தவாறுமாய்க்கொண்டு - ஒன்றலாவுருவாயருவாய நின்மாயங்களை நின்றுநின்று நினைகின்றேன், உன்னை எங்ஙனம் நினைகிற்பன், உலகமுண்டவொண்சுடரே, பாவியேற்கு ஒன்று நன்குரையாய் இத்யந்வய:. "க்ஷயாஸ்ஸ்ரமணொகோஸ்ஸ்ஸ்தொயதிஸோஹந: | வாவ க்ஷயஸ்ஸஹவதிஸ்ஸதாம்தகோஹநிஸ:" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே, சுஸாராஹூ காநு ஒதி ஒஹாஸ:. (சு)

வைத்தே என்கண்ணுக்குக் காணவொண்ணாதபடி மறைந்து என்னை நலிகிறநலிவுகளையும் மநோரயிக்கிற மநோரயத்திலே ஶிதிலனாகாநின்றேன். உன்வடிவழகை எனக்கு புஜிக்கத்தந்தருளின நீ, நான் த்ருடமாகக் காணலாம்படி என்னுடையகண்களுக்கு உன்னுடைய திருவுருவை ஒருநாள் அருள்வேணுமென்கிறார்.

ஒ—ஏழாம்பாட்டில், கண்ணால் காணப்பெறாதே, ஆந்தராநுஸந்தானமேயாய் ஶிதிலனாய்ப்போகாதே கண்ணாலேகண்டு யரித்து அநுபவிக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்கிறார்.

[ஒண்சுடர் என்றுதொடங்கி] - ஆஶ்ரிதர்க்கு மெய்யனாய்த்தோற்றியும் அநாஶ்ரிதர்க்குப் பொய்யனாய் கைவாராதேயிருக்கிறபடியையும் ஹ்ருதயத்திலே ஸந்நிஹிதனாய் வைத்தே என்கண்ணுக்குக் காணவொண்ணாதபடி மறைந்து என்னை நலிகிறநலிவுகளையும், [எண்கொள் என்றுதொடங்கி] - மநோரதிக்கிற மநோரதத்திலே ஶிதிலனாகாநின்றேன். உன்வடிவழகை எனக்கு ஹூஜிக்கத்தந்தவனே! த்ருடமாகக் காணலாம்படி என்னுடைய கண்களுக்கு உன்னுடைய திருவுருவை ஒருநாள் அருளவேணும்.

ப—அநந்தரம், பாஹ்யஸம்ஶ்லேஷம்பண்ணி நினைத்தபடி அநுபவிக்கப்பெறாதே மாநஸாநுபவமேயாய் க்லேஶியாதபடி, என்கண்கள் ஸ்திராநுபவம்பண்ணும்படி உன்வடிவைக் காட்டவேணுமென்கிறார்.

உண்மையோடு - என்னகவாயிலே ப்ரகாஶித்து உளனாகிற ஆகாரத்தோடே, இன்மையாய் - புறவாயில் ப்ரகாஶத்தினுடையவில்லாமையை யுடையனாய்க்கொண்டு, வந்து - வந்து, ஒண் - ஒள்ளிய, சுடரோடு - தேஜஸ்ஸோடே ஸஹாவஸ்திதமான, இருளுமாய் - இருளென்னலாம்படி, நின்ற - நின்ற, ஆறும் - ப்ரகாரமும், (அப்ப்ரகாரத்திலே), என் - என், கண் - கண், கொளாவகை - உன்னையநுபவியாதபடி, கரந்து - உள்ளே மறைந்துநின்று, நீ—, என்னை - என்னை, செய்கின்றன - செய்கிறவிவற்றை, எண் - எண்ண வேணுமென்று, கொள் - கொள்ளுகிற, சிந்தையுள் - நெஞ்சோடே, நைகின்றேன் - ஶிதிலனாகாநின்றேன்; என் - என்னுடைய, இந்த ஶைதில்யத்துக்கு ஹேதுவாய், கரிய மாணிக்கமே - நீலரத்நம்போலேயிருக்கிற வடிவையுடையவனே, உன் - உன்னுடைய, திரு - ப்ராப்தமாய் போக்யமான, உரு - ரூபத்தை, (காணவாசைப்பட்ட), என் - என், கண்கட்கு - கண்களுக்கு, திண் - திண்மையையுடைத்தாக, கொள்ள - காணும்படி, ஒருநாள் - ஒருகால், அருளாய் - அருளவேணும். கலந்தென்றுபாடமாய் - கலசியென்றுமாம்.

இ—ஏழாம்பாட்டில், மாநஸாநுஸந்தாநமேயாய் ஶிதிலனாய்ப்போகாமே, கண்ணாலேகண்டு அநுபவிக்கலாம்படி பண்ணவேணுமென்கிறார்.

[உண்மையோடின்மையாய்வந்து - ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும்] - எனக்கு உண்மையோடே ஒண்சுடராயிருக்கும் ஹார்த்தமாக; இன்மையோடே இருளாயிருக்கும் பாஹ்யாபேக்ஷயிலே. அன்றிக்கே, ஆஶ்ரிதர்க்கு உண்மையோடே ஒண்சுடராயிருக்கும், அநாஶ்ரிதர்க்கு இன்மையோடே இருளாயிருக்கும். [என்கண்கொளாவகைநீகரந்துஎன்னைச்செய்கின்றன] - தன்திறத்திற்சொன்ன இரண்டையும் சொல்லுகிறது. என்கண்ணுக்கு விஷயமாய், மறக்கவொண்ணாதபடி நெஞ்சிலே விஶதமாகநின்று என்னை நீசெய்கிறவற்றுக்கு அவதியில்லை. [எண்கொள்சிந்தையுள்நைகின்றேன்] - நினைக்க

*மநோரதிக்கிறவளவிலே ஶிதிலனாகாநின்றேன். [என்கரியமாணிக்கமே] - ஸௌந்தர்யத்தைப்பார்த்து மீளவொண்ணாத வடிவழகு. அவ்வடிவை எனக்கு முற்றூட்டாக்கினவனே [என்கண்கட்கு] - தமக்குமுன்னே "என்றுகொல் கண்கள்காண்பது" என்னும்படி விடாய்க்கும் கண்கள். [திண்கொள்ள] - த்ருடமாகக் காணலாம்படி ஸ்வப்நதர்ஶநம் போலே மாநஸாநுஸவமாத்ரமன்றிக்கே ஸாக்ஷாத்ப்ரத்யக்ஷமாம்படி. [ஒருநாள் நாய்] - விடாயன். "ஒருகால் நாக்கு நனைக்கவேணும்" என்னுமாபோலே. [உன்திருவுருவே] - அப்ராப்த விஷயத்தையோ நான் ஆசைப்படுகிறது. "ஹந்த நாஸ்" என்கிறவடிவையன்றோ.*

ஈடு.—ஏழாம்பாட்டு. மாநஸாநுஸந்தாநமேயாய் ஶிதிலனாய்ப்போகாமே, கண்ணாலேகண்டு அநுபவிக்கவல்லேனாம்படி பண்ணியருளவேணுமென்கிறார்.

[உண்மையோடின்மையாய்வந்து - ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும்] - எனக்கு உண்மையோடே ஒண்சுடராய் நிற்கும் ஹார்த்தமாக; இன்மையோடிருளாயிருக்கும் பாஹ்யாபேக்ஷயில். அன்றிக்கே, ஆஶ்ரிதர்க்குத் தன்படிகளிலொன்றும் குறையாதபடி காட்டிக்கொடுத்து, அவர்களுக்கு "இவ்வளவு" என்று பரிச்சேதிக்கலாம்படி ப்ரகாஶித்து நின்றபடியும்; அநாஶ்ரிதர்க்குத் தன்படிகளிலொன்றும் தெரியாதபடி பண்ணி, அத்தாலே அவர்களுக்கு "இல்லை" என்னும்படி இருளப்பண்ணிக்கொடு நின்றபடியும். ஆஶ்ரிதர்க்கு ஒண்சுடரோடு உண்மையாய்நின்றும், அநாஶ்ரிதர்க்கு இருளோடு இன்மையாய் நின்றும். [வந்தென்கண்கோளாவகைநீகரந்தென்னைச்செய்கின்றன] - இவையெல்லாம்தவிர, என்பக்கல்பரிமாறுகிற வேறுபாடும். ஒண்சுடராதல் இருளாதல், இரண்டத்தொன்றாகப்பெற்றிலேன்; நடுவேநின்று க்லேஶியாநின்றேன். முக்தர்க்குக்கூட்டல்லர், ஸம்ஸாரிகளுக்குக்கூட்டல்லர், அந்தரப்பட்டு நிற்கிறாரிறே இவர்தாம். என்னெஞ்சிலேவந்துபுகுந்து என்கண்ணுக்கு

---

*ஏழாம்பாட்டு.—ஒண்சுடர் இத்யாதி. "எண்கொள்சிந்தையுள்நைகின்றேன், என்கண்கட்குத் திண்கொள்ள" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை* - **மாநஸாநுஸந்தானமேயாய்** *இத்யாதி.*

*"உண்மையோடு - ஒண்சுடராய், இன்மையோடு - இருளாய்" என்று அந்வயித்து, ஸ்வவிஷயமாக அருளிச்செய்கிறார் - எனக்கு இத்யாதியாலே. உண்மையோடொண்சுடரும், இன்மையோடே இருளுமாகிறவிரண்டும் ஏகாஶ்ரயகதமாகக்கூடாமையாலே, அதுகூடுகைக்காக - ஹார்த்தமாக என்றும், பாஹ்யாபேக்ஷயில் என்றும் அருளிச்செய்தது. ஆஶ்ரிதர்க்கு உண்மையோடொண்சுடராய், அநாஶ்ரிதர்க்கு இன்மையோடிருளாய் என்று அந்வயித்து, ஆஶ்ரித அநாஶ்ரிதவிஷயமாக யோஜநாந்தரம் -* **அன்றிக்கே ஆஶ்ரிதர்க்குத் தன்படிகள்** *இத்யாதிவாக்யத்வயத்தாலே. தன்படிகளென்றது - ஶேஷித்வாதிகள். கீழே ஸ்வவிஷயத்திலே,* **ஹார்த்தமாக** *என்றும்,* **பாஹ்யாபேக்ஷயில்** *என்றும் இவர் அருளிச்செய்கைக்கடி - "என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன" என்றுவிஶதமாக ஆழ்வாரருளிச்செய்தவிது. ஆஶ்ரிதாநாஶ்ரிதவிஷயமாகவே, கீழ் அந்வயித்தபடியன்றிக்கே அந்வயபேதேந த்ருதீயதாத்பர்யமாதல்; த்விதீயார்த்தவிவரணமாதல் -* **ஆஶ்ரிதர்க்கு ஒண்சுடரோடு** *இத்யாதி வாக்யத்வயம். ஒண்சுடர் - ஒள்ளியசுடர். அழகியசுடரென்றபடி. "ஒண்சுடர்" இத்யாதியின் த்விதீயார்த்தத்துக்குச்சேர அர்த்தம் -* **இவையெல்லாம்** *இத்யாதி. இவையெல்லாமென்றது - ஆஶ்ரிதவிஷயத்தில் ப்ரகாஶிக்கையும் அநாஶ்ரிதர்க்கு ப்ரகாஶியாமையுமென்றபடி. விவரணம் -* **ஒண்சுடராதல்** *இத்யாதிவாக்யத்வயம்.* **ஆஶ்ரிதர்** *- முக்தர்.* **அநாஶ்ரிதர்** *- ஸம்ஸாரிகள்.* **இத்தால்** *-* **ஆஶ்ரிதர்க்கும்** *அநாஶ்ரிதர்க்கும் கூட்டல்லவென்றபடி. ஶப்தார்த்தம் -* **என்னெஞ்சிலே** *இத்யாதி. "ஒண்சுடரோடு"*

அவிஷயமாம்படி மறையநின்று நீ என்னை நலிகிறவற்றையும். கண்கோளாவகை - கண் க்ரஹியாதபடி. [எண்கோள்சிந்தையுள் நைகின்றேன்] - பெற்ற வம்ஸங்கொண்டு கார்யங் கொள்ளமாட்டுகிறிலேன். கைப்புகுந்ததுகொண்டு மேலுள்ளதுபெற விரகு பார்க்கமாட்டு கிறிலேன். எண்ணப்புக்கு, மநோரதமாத்ரத்திலேமிதிலனுகாநின்றேன். [என்கரியமாணிக்க மே] - சக்ஷுர்விஷயமான பதார்த்தங்களைக்கொண்டு நான் காலம்போக்கமாட்டாமே, உன்வடிவின்சுவட்டை அறிவித்தாயே. [என்கரியமாணிக்கமே] - "இவ்வடிவைப்பிரிந் தார்க்கு ஜீவிக்கவுமாம்" என்று தோற்றியிருந்ததோ. [என்கண்கட்கு] - இவற்றின்விடாய் உனக்குத் தெரியுமிறே; "நான்பெற்றேன்" என்றாலும் ஆறியிராதவையன்றோ ? வேறொன் றிட்டு மறைக்கலாமவையன்றே. [திண்கொள்ள] - மாநஸாநுபவத்தை ப்ரத்யக்ஷஸமாநா காரமாகப் பண்ணினோமே" என்று நீ சொல்லுமது எனக்குவார்த்தையன்றுகிடாய். [திண் கொள்ள] - ஸ்வப்நாநுபவம்போலே மாநஸாநுபவமாகவொண்ணாது, ப்ரத்யக்ஷிக்கவேணும் த்ருடமாக. இங்ஙன் செய்யப்போமோ? என்னில், - சிலர்க்கு ஸதாதர்ஸநயோக்யனுகாநின் றாயே. [ஒருநாளருளாய்] - ஒருநாளமையும்மென்கிறாரல்லர், விடாயின்பெருமை சொல்லு கிறார்; தாபார்த்தன் "ஒருகால் நாக்குநனைக்கவமையும்" என்றாற்போலே. "கிட்டினால் பின்னைவிடும்படிசொல்லுகிறோம்" என்று. [உன்திருவுருவே] - இதேதேனுமுன்னதோ ! நோக்கிக்கொண்டுகிடக்கைக்கு, * நசெந்தராஸேவடி—ஹதாநாடி அன்றோ. (எ)

---

இத்யாதியில் ஸ்வவிஷயமான முந்தினவர்த்தத்துக்கும், "என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய் கின்றன" என்றதுக்கும் அர்த்தபேதமில்லாமையாலே, அநுவாதமாகக்கொள்ளுவது. "நைகின்றேன்" என்றதுக்குபாவம் - பெற்றஅம்ஸம் இத்யாதி. பெற்றஅம்ஸமாவது - மாநஸாநுபவம். காரியங் கொள்ளமாட்டுகிறிலேனென்றது - "இதுண்டாயிற்றே, மேலும் க்ரமத்திலேபெறுகிறோம்" என்று அவ்வளவும் ஆறியிருக்கமாட்டுகிறிலேனென்றபடி. கீழ்வாக்யவிவரணம் - கைப்புகுந்தது இத்யாதி. கைப்புகுந்ததென்றது - மாநஸாநுபவத்தை. ஸப்தார்த்தம் - எண்ணப்புக்கு இத்யாதி. கீழே, நலிகிற வற்றையும் என்றதுக்கு - எண்ணப்புக்கு என்கிறவித்தோடேஸம்பந்தம். எண்கோள் - எண்ணைக் கொள்ளுமளவில். எண்ணப்புக்கென்றபடி. சிந்தையுள் - மநோரதமாத்ரத்திலே இத்யர்த்தஃ. "என்" என்றதுக்குபாவம் - சக்ஷுர்விஷயமான இத்யாதி. "கரியமாணிக்கம்" என்றதுக்குபாவம் - இவ் வடிவை இத்யாதி. "என்கண்கட்கு" என்றதுக்குபாவம் - இவற்றின் இத்யாதிவாக்யத்வயம். தெரியு மிறேயென்றது - ஹ்ருஷீகேஸனுகையாலே தெரியுமிறேயென்றபடி. பெற்றேனென்றாலும் - பெற்றே னென்றுபாவித்தாலும் கண்களின்விடாயின் சரமாவதியாதல், மேலுக்கு அவதாரிகையாதல் - வேறொன் றிட்டு இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - ஸ்வப்நாநுபவம் இத்யாதி. "ஒருநாள்" என்றதுக்கவதாரிகை- சிலர்க்கு இத்யாதி. சிலர்க்கென்றது - நித்யஸூரிகளுக்கென்றபடி. ஆதரம் அல்பமாய் ப்ரார்த்திக் கிறாரோ ? என்ன - ஒருநாளமையும் இத்யாதி. விடும்படி - விட்டுப்போகிறபடி. "உன்" என்ற துக்கு பாவமாதல், பிரிகிலேயேகாரமாக்கி பாவமாதல் - இதேதேனும் இத்யாதி. உண்மையோடின்மை யாய்வந்து - ஒண்சுடரோடிருளுமாய்நின்றவாறும், என்கண்கொளாவகை நீகரந்தென்னைச்செய்கின்றன எண்கொள்சிந்தையுள் நைகின்றேன்; என்கரியமாணிக்கமே, உன்திருவுருவு - என்கண்கட்குத் திண் கொள்ள ஒருநாளருளாய் இத்யந்வயஃ. (எ)

## எட்டாம் பாட்டு.

திருவுருவுகிடந்தவாறும் கோப்பூழ்ச்சேந்தாமரைமேல் திசைமுகன்
கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும்
போருவிலுன்றனிநாயகமவை கேட்குந்தோறுமென்னேஞ்சம் நின்று
அருவிசோருங்கண்ணீர் என்செய்கேனடியேனே. [நேக்கு

ஆ.—(திருவுருவு.) அழகியவடிவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும், திருநாபிகமலத்திலே சதுர்முகனுகிற அதிஷ்டாநத்தினுள்ளே வீற்றிருந்து ஸ்ருஷ்டித்த க்ரமங்களும்,ஒப்பின்றிக்கே விஸஜாதீயமான உன்னுடைய குணசேஷ்டிதங்களைக் கேட்குந்தோறும் என்னெஞ்சம் நெகிழ்ந்து நிற்பதும்செய்து, கண்ணீர் அருவிபோலே சோராநின்றதென்கிருர்.

ஒ—எட்டாம் பாட்டில், உன்குணசேஷ்டிதாதிகளைக் கேட்குந்தோறும் ஶிதிலனுகாநின்றேன், என்செய்கேனென்கிருர்.

[திரு என்றுதொடங்கி] - அழகிய உருவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும் திருநாபிகமலத்திலே சதுர்முகனுகிற அதிஷ்டாநத்தினுள்ளே வீற்றிருந்து ஸ்ருஷ்டித்தசெயல்களும். [பொருவில் என்றுதொடங்கி]-ஒப்பின்றிக்கே விஸஜாதீயமான உன்னுடைய குணசேஷ்டிதங்களைக் கேட்குந்தோறும் என் நெஞ்சம் நெகிழ்ந்து நிற்பதும்செய்து கண்ணீர் அருவிபோலே சோராநின்றது.

ப.—அநந்தரம், உன்னுடைய ஸர்வாதிகத்வ ஸூசகமான ஸ்ருஷ்ட்யாதி வ்யாபாரங்களைக் கேட்குந்தோறெல்லாம் என்னெஞ்சுநெகிழ்ந்து கண்ணீர்சோராநின்றது, நான் என்செய்வேனென்கிருர்.

(காரணமான ஏகார்ணவஜலத்திலே), திரு-அழகிய, உருவு-திருமேனி, கிடந்தவாறும் - கண்வளர்ந்தபடியும், கொப்பூழ் - அந்தவடிவிற்கொப்பூழில், செம் - சிவந்த, தாமரைமேல் - தாமரையின்மேலேயுண்டான, திசைமுகன் - சதுர்முகனுகிற, கருவுள்-கருவுக்குள்ளே, வீற்று - அந்தராத்மாவான வேறுபாடுதோன்றும்படி, இருந்து- இருந்து, படைத்திட்ட - ("அவன்ஸ்ருஷ்டிபண்ணினுன்" என்னும்படி நீ ஜகத்தை) ஸ்ருஷ்டித்த, கருமங்களும் - வ்யாபாரங்களுமாகிற, பொரு-எதிர், இல்-இல்லாத, உன்-உன்னுடைய, தனிநாயகம் - அத்விதீயநாயகத்வ ப்ரகாஶகமான, அவை- அவற்றை, கேட்குந்தோறும்-(ப்ரமாணமுகத்தாலே) கேட்குந்தோறும், என்-என், நெஞ்சம் - நெஞ்சு, நின்று - ஒருபடிப்பட நின்று; நெக்கு - கட்டுக்குலைந்து நெகிழ்ந்து, கண்ணீர் - கண்ணீரானது, அருவி - அருவிபோலே, சோரும் - விழாநின்றது; அடியேன்-(நீயிட்ட வழக்காம்படி பாதந்த்ரனுன) நான்; என் - எத்தை, செய்கேன் - செய்வேன். ஸம்பந்தமுண்டாகையாலே விடமாட்டுகிறிலேன், ஸைஹயில்யம்பிறவாதபடி யத்நிக்கமாட்டுகிறிலேன்.

இ.—எட்டாம்பாட்டில், உன்குணசேஷ்டிதாதிகளை கேட்குந்தோறும் ஶிதிலனுகாநின்றேன், என்செய்கேனென்கிருர்.

[திருவுருவுகிடந்தவாறும்] - அழகியவடிவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும், "கிடந்ததோர்கிடக்கை" என்னுமித்தனைபோக்கி பாசுரமிட்டுப் பேசமுடியாது. அல்லாதார்க்கு உறங்கும்போதழகழிந்திருக்கும், "ஸௌவஸௌவதஃவாருதவஃ" என்று கண்வளர்ந்தருளும்போதாயிற்று அழகுறைத்திருப்பது. [கொப்பூழித்யாதி] - திருநாபிகமலத்திலே சதுர்முகனாகிற அதிஷ்டானத்துக்குள்ளே. "ஸ்ருஷ்டிம் ததஃகரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே" எனகிறபடியே சதுர்முகன் ஆஸனபத்மத்தோபாதியாயிருக்கை. [வீற்றிருந்து] - அவனுக்கந்தராத்மாவாய், ஸர்வநியந்த்ருத்வத்தால்வந்த வேறுபாடு தோற்றவிருந்து. [படைத்திட்டகருமங்களும்] - ஸ்ருஷ்டித்த வ்யாபாரங்களும். ப்ரஹ்மஸ்ருஷ்டியடைய "அவனேசெய்கிறான்" என்னும்படியிருந்தபடி. [பொருவிலித்யாதி] - உபமானமின்றிக்கே அத்விதீயமாய் ஐஶ்வர்யப்ரகாஶகமான குணசேஷ்டிதங்கள் கேட்குந்தோறும். [என்னெஞ்சம்நின்றுநெக்கு] - திண்ணிதான என்னெஞ்சு மலைநெகிழ்ந்தாப்போலே நெகிழ்ந்து கண்ணநீரருவியாய் ப்ரவஹியாநின்றது. [என்செய்கேனடியேனே] - ப்ராப்தியையுணர்ந்தபாதேவிட்டு தரிக்கப்போகிறதில்லை. பரதந்த்ரவஸ்துவாகையாலே பேற்றுக்கும் யத்நம்பண்ணப்போகிறதில்லை.

ஈடு.—எட்டாம்பாட்டு. உன்குணசேஷ்டிதாதிகளைக் கேட்டகேட்டபோதுதோறும் ஶிதிலனாகாநின்றேன், என்செய்கேனென்கிறார்.

[திருவுருவுகிடந்தவாறும்] - காந்திமிக்கவடிவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும். தர்ஶநீயமானவடிவோடே ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும். [கொப்பூழ் இத்யாதி] - ஏகார்ணவத்திலே ஸ்ருஷ்ட்யுந்முகனாய்க் கண்வளர்ந்தருளிப் பின்பு அக்காலம் வந்தவாறேயெழுந்திருந்து இவற்றையெல்லாமுண்டாக்கினான், ப்ரஹ்மஸ்ருஷ்டியளவும்செல்ல அவ்வருகுள்ளதெல்லாம் தானேயுண்டாக்கிப்பின்பு திருநாபியிலேயுண்டான தாமரைப்பூவில் ப்ரஹ்மாவினுடைய வுத்பத்திக்குத்தானாதாரமாய், பின்பவன் தன்னைத் தனக்காதாரமாகக்கொண்டு இவ்வருகுண்டான கார்யவர்க்கங்களையடங்கலுமுண்டாக்கினபடியும். [திசைமுகன்கருவுள்வீற்றிருந்து]-சதுர்முகனாகிற சரீரத்தையதிஷ்டித்துக்கொண்டுநின்று. "ஸ்ருஷ்டிம் ததஃகரிஷ்யாமி த்வாமாவிஶ்ய" (ஸ்ருஷ்டிம்ததஃகரிஷ்யாமி த்வாமாவிஶ்ய)என்கிறபடியே, "ஏதௌ த்வௌ விபுதஶ்ரேஷ்டௌ"(ஏதௌத்வௌவிபுத

---

எட்டாம்பாட்டு.—திருவுருவு இத்யாதி. "தனிநாயகமவைகேட்குந்தோறுமென்னெஞ்சம்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - உன்குணசேஷ்டிதம் இத்யாதி.

திரு - காந்தி. (மிக்க) அர்த்தஸித்தம். உருவு - விக்ரஹம். விவரணம் - தர்ஶநீயமான இத்யாதி. மேலே "கொப்பூழ்" இத்யாதிக்குச்சேர - ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளினபடியும் என்றது. கீழ்வாக்யவிவரணம் - ப்ரஹ்மஸ்ருஷ்டியளவும் இத்யாதி. "கருவுள்வீற்றிருந்து" என்கையாலே - அவன்தன்னைத்தனக்காதாரமாகக்கொண்டு என்றது. அதிஷ்டித்ததுக்கு ப்ரமாணத்வயம் - ஸ்ருஷ்டிம் ததஃ, ஏதௌ த்வௌ இத்யாதி. "ஸ்ருஷ்டிம் ததஃ கரிஷ்யாமி த்வாமாவிஶ்ய ப்ரஜாபதே । ஜகத்ஸ்ருஜ்யஸ்வ ஸர்வேஷு ஸ்வரூபாணி விஹிதாஃ" இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே. "ஏதௌ த்வௌ விபுதஶ்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌ ஸ்ம்ருதௌ । ததாதர்ஶித பந்தானௌ ஸ்ருஷ்டிஸம்ஹாரகாரகௌ" இதி நாராயணீயே நாமநிர்வசநாத்யாயே. "கருவுள்வீற்றிருந்து" என்றதுக்கு

ஸ்ரேஷ்டேன)''இன்ன ஆசனத்தையுடையனாய்க்கொண்டு''என்றாற்போலே. [வீற்றிருந்து]- தன்னைஸ்வர்யத்தால் உள்ள மேன்மை தோன்றவிருந்தபடி. பொற்குப்பியில் மாணிக்கம் போலே.† (அழகியதிருமேனியோடே கண்வளர்ந்தபடியும்,அந்தவடிவில் கொப்பூழில்சிவந்த தாமரையின்மேலேயுண்டான சதுர்முகன் கருவுக்குள்ளே அந்தராத்மாவான வேறுபாடு தோன்றும்படியிருந்து). [படைத்திட்டகருமங்களும்] ஸ்ருஷ்டித்தவ்யாபாரங்களும். [பொரு வில் இத்யாதி]-ஒப்பின்றிக்கே யத்விதீயமாய் ஐஸ்வர்யப்ரகாசகமான உன்குணசேஷ்டி தங்கள் கேட்குந்தோறு மென்னெஞ்சானது மலைநெகிழ்ந்தாப்போலே நெகிழ்ந்து, கண்ணநீர ருவியாய் ப்ரவஹியாநின்றது.

[என்செய்கேனடியேனே]-பரதந்த்ரனானநான் கார்யம்செய்து கொள்ளப்பார்த் திருக்கிறாயோ. வேறொன்றாலேபோதுபோக்கித் தரித்திருக்கவோ, நானெத்தைச்செய்வேன்?

---

## ஒன்பதாம் பாட்டு.

---

அடியைமூன்றையிரந்தவாறும் அங்கேநின்றாழ்கடலுமண்ணும்விண்ணும்
முடியவீரடியால் முடித்துக்கொண்ட முக்கியமும்
நொடியுமாறவைகேட்குந்தோறும்என்னெஞ்சம்நின்றனக்கேகரைந்துகும்
கொடியவல்வினையேன் உன்னையென்றுகொல்கூடுவதே?

ஆ.—(அடியை) மஹாபலி பக்கலிலே மூன்றடியை யிரந்தபடியும், அங்கிலே யிலேநின்றே யிரண்டடியாலே த்ரைலோக்யத்தை யகப்படுத்திக்கொண்டு நீநினைத்ததத்தை முடித்துக்கொண்ட வேண்டப்பாடும், அவற்றைச்சொல்லக் கேட்குந்தோறு மென்னு டைய வந்தக்கரணம் உன்னுடைய ப்ரஸ்தாவமாத்ரத்திலே கரைந்துகும். உன்னையநு ஸந்தித்தால் ஶிதிலனாகைக்கிடான மஹாபாபத்தைப்பண்ணின நான் உன்னை யென்று புரித்தநுபவிப்பதென்கிறார்.

ஒ—ஒன்பதாம் பாட்டில், த்ரைவிக்ரம வ்ருத்தாந்தா நுஸந்தாநத்தாலே மிக வும் ஶிதிலனாகாநின்றேன். நான் யரிப்புடையேனாய் உன்னை அநுபவிப்பது என்று என்கிறார்.

[அடியை என்றுதொடங்கி] - மஹாபலியை மூன்றுஅடியை இரந்தபடியும், அங்கிலேயிலேநின்றே இரண்டடியாலே த்ரைலோக்யத்தை அகப்படுத்திக்கொண்டு நீ நினைத்ததை முடித்துக்கொண்ட வேண்டப்பாடும். [நொடியும் என்றுதொடங்கி] - அவற்றைச்சொல்லக் கேட்குந்தோறும் என்னுடைய அந்தக்கரணம் உன்னுடைய ப்ரஸ்

---

பாவம் - இன்ன ஆசனத்தை இத்யாதி. "வீற்றிருந்து" என்றதுக்கு - பரபாகத்தால்வந்த வழகாக பாவாந்தரம்—பொற்குப்பியில் இத்யாதி. பொற்குப்பியில்மாணிக்கப்போலே - தன்னைஸ்வர்யத்தா லுள்ள மேன்மைதோன்றவிருந்தபடி என்றன்வயித்துக்கொண்டு ஏகதாத்பர்யமாகவுமாம். "தனிநாயக மவை"-ஐஸ்வர்யப்ரகாசகமான வந்தகுணசேஷ்டிதங்களையென்று சப்தார்த்தம். "நெக்கு" - நெகிழ்ந்து. "அடியேன் - என்செய்கேன்" என்றுகூட்டிபாவம்-பாதந்த்ரனை இத்யாதி "அருவிசோருங்கண்ணீர் - என்செய்கேன்" என்றகூட்டிபாவம் - வேறொன்றாலே இத்யாதி. க்ரமேணான்வயஃ. (அ)

---

† குண்டலிதம் க்வாசித்கம்.

தாவமாத்ரத்திலே கரைந்து உகும். உன்னை அநுஸந்தித்தால் ஶிதிலனாகைக்கீடான மஹாபாபத்தைப்பண்ணின நான் உன்னை என்று தரித்து அநுபவிப்பது.

ப.—அநந்தரம், அர்த்தியாயிருந்து மபேக்ஷிதம் தலைக்கட்டிக்கொண்ட வுன்னுடைய வபதாநங்களைக் கேட்குந்தோறெல்லாமென் னெஞ்சுஉருகாநின்றது, ஸ்திரசித்தனுப்படி உன்னைக்கூடுவதென் றென்கிறார்.

(த்ரைலோக்யத்தைய மபேக்ஷியாதே,) மூன்று - மூன்று, அடியை - அடியை, இரந்த - "தரவேணும்" என்று அவன்மருதபடி அபேக்ஷித்த, ஆறும் - ப்ரகாரமும், அங்கு - அவனிசைந்து உதகம்பண்ணின யஜ்ஞவாடந்தன்னிலே, நின்றே - நின்றே, ஆழ் - அகாதமான, கடலும் - சமுத்திரங்களையும், மண்ணும் - சப்தத்வீபையான பூமியையும், விண்ணும் - ப்ரஹ்மலோகபர்யந்தமான ஆகாசத்தையும், ஈரடியால் - இரண்டடியாலே, முடிய - முடியும்படியாக, முடித்துக்கொண்ட - தன்னினைவு தலைக்கட்டிக்கொண்ட, முக்கியமும் - ப்ராதாந்யமுமாகிற, அவை - அவற்றை, நொடியும் - சொல்லும், ஆறு - ப்ரகாரம், கேட்குந்தோறும் - கேட்குந்தோறும், என் - என், நெஞ்சம் - நெஞ்சானது, நின்தனக்கே - அவாப்தஸமஸ்தகாமனுய்வைத்து ஆஶ்ரிதார்த்தமாக அர்த்தியான உன்னுடைய ஶீலஸ்வரூபத்திலே, கரைந்து - கரைந்து, உகும் - ஒழுகிப்போகாநின்றது; வல் - ஒரு ப்ராயஶ்சித்தஸாத்யமன்றியே, கொடிய - அநுபவித்துக்கழிக்கவொண்ணாதே, வினையேன் - அநிஷ்டாவஹமான, ப்ரேமரூபமாயிருக்கிற பாபத்தையுடையேனான நான், (உடைகுலைப்படாதபடி) நிலைநின்றநுபவிக்கும்படியாக, உன்னை - உன்னை, என்றுகொல் - என்றோ? கூடுவது - கூடுவது. (நொடிதல் - சொல்லுதல்.)

இ—ஒன்பதாம்பாட்டில், த்ரைவிக்ரமவ்ருத்தாந்தாநுஸந்தானத்தாலே மிகவும் ஶிதிலனாகாநின்றேன், தரித்துன்னை யநுபவிப்பதென் றென்கிறார்.

[அடியையித்யாதி] - இந்தாணிழந்தது த்ரைலோக்யமிறே. "த்ரைலோக்யத்தையும்தா" என்றால் இசையான், 'அடி' என்றால், உதாரனாகையாலே யிசையக்கூடும். என்று அடியையிரந்தான். ஓரடிக்குச்சிறையிட்டுவைக்க நினைக்கிறானாகையாலே மூன்றையிரந்தான். [இரந்தவாறும்]-தன்னைத் யவனதாக்கித் தானர்த்தியானபடியும். [அங்கே நின்று] - நீரேற்றவிடந்தன்னிலே நின்று. போய்ப்புகுரில், "அக்காலும் வடிவுமன்று" என்று வழக்கு பேசுவர்களிறே. [ஆழ்கடலித்யாதி] - அபரிச்சேத்யமான கடல்களையும், பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியையும் ப்ரஹ்மலோக பர்யந்தமான ஆகாசலோகங்களையும் இரண்டடியாலே முடியும்படியாகத் தலைக்கட்டிக்கொண்ட வேண்டப்பாடும். முக்கியம் - ப்ரயோகமானசெயல். ஸ்வவ்யதிரிக்தங்களையும் திருவடிகளின்கீழே யகப்படுத்துகையால் வந்த ப்ராதாந்யந்தோற்றநின்றபடி. [நொடியுமித்யாதி] - அவைநொடியுமாறு கேட்குந்தோறும். நொடிதல் - சொல்லுதல். நான்சொல்லவேண்டா, குணக்ரஹணம்பண்ணுவார் பாஶுரங்கேட்குந்தோறும். [என்னெஞ்சு நின்றனக்கே கரைந்துகும்]-அவாப்தஸமஸ்தகாமனை நீ ஆஶ்ரிதார்த்தமாக அர்த்தியானநீர்மையை யநுஸந்தித்து, என்மனஸ்ஸு "இதென்னநீர்மை" என்று த்ரவித்து ஶிதிலமாகாநின்றது. [கொடியவல்வினையேன்] - ப்ராயஶ்சித்த ஸாத்யமன்று, அநுபவவிநாஶ்யமன்று. ஶைதில்யஹேதுவான ப்ரேமத்தையிறே - பாபமென்கிறது. "யஶோஸீதநாதா மோஹயாமிஶோகஸாகரெந்தி" என்கிறதிறே யிவர்க்கு ஸ்தானமாயிற்று. உன்னை தரித்தநுபவிப்பதென்றோ?

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. த்ரைவிக்ரமாபதாநத்தையநுஸந்தித்து அத்தாலே ஶிதிலனாகிற நானுன்னையரித்து நின்றநுபவிப்பதென்றென்கிறார்.

[அடியைமூன்றையிரந்தவாறும்] - இவையபேக்ஷிக்கமாட்டாதவன்றும் இவற்றின் ஹிதசிந்தை பண்ணுமளவேயோ, இவையுண்டானாலும் சிறியத்தைத்பெரியது நலியாதபடி நோக்குவானவனென்கிறது. [அடியைமூன்றையிரந்தவாறும்] - நேராய்ப்போகாமே மூன்றையிரந்தபடி. இரண்டடியிரந்தானாகி லவனைச்சிறைசெய்யவிரகில்லையே. [அங்கே நின்று] - கடக்கநாலடிபோனானாகில் "க்ருத்ரிமம்பண்ணினான்" என்று அவனுக்கு வழக்குப்பேசலாமிறே. [ஆழ்கடலித்யாதி] - இவருடையநெஞ்சைக் கரைக்கவடியிடுகிறபடி. பூம்யந்தரிக்ஷாதிகளடங்கலு மிரண்டடியிலேயடங்கும்படிக்கீடாக அளந்து தலைக்கட்டிக்கொண்டபடியும். [முக்யமும்] - முக்யமும் வேண்டப்பாடும். அதாவது - ஆஶிதார்த்தமாகப்பண்ணினவஞ்சனையால் வந்தவேண்டப்பாடிருக்கிறபடி. அன்றியே, ஸ்வவ்யதிரிக்தங்களும் தன்றிருவடிகளின்கீழே யகப்படுகையாலே வந்தவேண்டப்பாடும். [நொடியுமாறித்யாதி] - நொடிதல் - சொல்லுதல். திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தை வ்யாஸாதிகள் சொல்லாநிற்பர்கள், அவர்கள் சொல்லும் ப்ரகாரங்களைக் கேட்குந்தோறும். நான் சொல்லவேண்டா. [என்னெஞ்சம்நின்றனளிகேகரைந்துகும்] - மஹாபலியைப்போலே ஔதார்யம் கொண்டாடுகிறேனல்லேன், இந்த்ரனைப்போலே ராஜ்யமாளுகிறேனல்லேன், என்னுடையமநஸ்ஸானது உன்பக்கலிலே சிதிலமாய் மங்காநின்றது.

[கொடியவல்வினையேன்] - "**யந்நாமஸங்கீர்த்தநதோமஹாபயாத்விமோக்ஷமாப்நோதி**" (யந்நாமஸங்கீர்த்தநதோமஹாபயாத்விமோமக்ஷமாப்நோதி) என்கிறபடியே திருநாமஸங்கீர்த்தநம் மஹாபாதகங்களையும் போக்குமென்று சொல்லாநிற்க, அதுதானே ஶைதில்யஹேதுவாம்படி மஹாபாபத்தைப்பண்ணினேன். [உன்னையென்றுகொல்கூடுவதே] - உன்னைநான் தரித்தநுபவிப்பதென்றோ - அநுபவிப்பவந்துகிட்டுவதென்றோ. (கூ)

---

ஒன்பதாம்பாட்டு.—அடியை இத்யாதி. "அடியைமூன்றை" இத்யாதிகளையும், "என்னெஞ்சம் நின்றனக்கேகரைந்தகும். உன்னையென்றுகொல்கூடுவது" என்கிறபதங்களையும் கடாக்ஷித்தவதாரிகை - த்ரைவிக்ரம இத்யாதி. அபதாநம் - வ்ருத்தமானசேஷ்டிதம்.

கீழிற்பாட்டோடேஸங்கதி இவையபேக்ஷிக்க இத்யாதி. நேராய் - ஸமமாய். இரண்டடியிரந்தால் நேராய்ப்போமோவென்ன - இரண்டடியிரந்தானாகில் இத்யாதி. ரஸோக்தி இவருடைய இத்யாதி. "முடிய" - (அடங்கும்படி) 'முடித்துக்கொண்ட' - (தலைக்கட்டிக்கொண்ட). வேண்டப்பாடு - பெருமை. "அவை" என்றது - (திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தை) "நொடியுமாறு" - (சொல்லும்ப்ரகாரங்களை) "கேட்கும்" என்றதுக்குபாவம் - நான்சொல்லவேண்டாவென்று. நான்சொல்லவேண்டாவென்றது - * என்னெஞ்சுருகைக்கு நான்சொல்லவேண்டா, கேட்டமாத்திரத்திலேயுருகுமென்றபடி. "நின்றனக்கே" என்கிற வவதாரணார்த்தம் - மஹாபலியை இத்யாதி. * கரைந்துருகைக்குஹேது கொடியவல்வினையென்றவிவக்ஷித்து, திருநாமஶ்ரவணத்தாலேயுருகுகை பாபபலமோவென்ன-யந்நாம இத்யாதி. "யந்நாமஸங்கீர்த்தநதோமஹாபயாத்விமோக்ஷமாப்நோதி நஸம்ஶயம் நர: । ஸ்வஸ்வ... ஹரி:", இதி ஸ்ரீவிஷ்ணுதர்மே ... ஸ்தவே. க்ரமேணாந்வய:. (கூ)

## பத்தாம் பாட்டு.

கூடிநீரைக்கடைந்தவாறும் அமுதந்தேவருண்ணவசுரரை
வீடும்வண்ணங்களேசெய்துபோனவித்தகமும்
ஊடுபுக்கெனதாவியையுருக்கியுண்டிடுகின்ற நின்தன்னை
நாடும்வண்ணஞ்சொல்லாய் நச்சுநாகணையானே!

ஆ.—(கூடிநீரை) அசுரர்களோடே கூடிநின்று கடலைக்கடைந்தருளினபடியும்; அதின்பலமான அம்ருதத்தை தேவர்கள்புஜிக்க, அசுரர்களதைவிடும்படியாக ஒரு வடிவைக்கொண்டுபோன விஸ்மயமு முள்ளேபுக்குஎன்னாத்மாவையுருக்கி முடிக்கின்றன. திருவநந்தாழ்வா னுன்னோடு நித்யஸம்ஶ்லேஷம் பண்ணுமாபோலே நானுன்னைப் பூர்ணமாக யரித்து நின்றநுபவிக்கும் விரகுசொல்லவேணு மென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், உன்னுடைய ஸமுத்ரமதநவைசித்ரியத்தை அநுஸந்தித்து ஶிதிலனாகாநின்றேன், யரித்து நின்று உன்னை அநுபவிக்கும்விரகு சொல்லவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

[கூடிநீரை என்றுதொடங்கி] - அஸுரர்களோடே கூடிநின்று கடலைக் கடைந்தருளினபடியும், பலரூபமான அம்ருதத்தைத் தேவர்கள்புஜிக்க அஸுரர்கள் அந்த அம்ருதத்தை விடும்படியாக அவர்களெதிரே ஒருஸ்த்ரீ வேஷத்தைக்கொண்டு அவர்கள்தொடரப்போன விஸ்மயமும். [ஊடுபுக்கு என்றுமேலுக்கு] - உள்ளேபுக்கு என் ஆத்மாவை உருக்கிமுடிக்கிற உன்னை, திருவநந்தாழ்வான் உன்னோடு நித்யஸம்ஶ்லேஷம்பண்ணுமாப்போலே, பூர்ணமாக யரித்துநின்று அநுபவிக்கும் விரகு சொல்லாய்.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதார்த்தமாகவருந்தொழில் செய்துபகரித்த அம்ருதமதநவ்ருத்தாந்தங்களானவை என்னை சிதிலமாக்காநின்றது, உன்னை நிலைநின்றநுபவிக்கும்படி யருளிச்செய்யவேணு மென்கிறார்.

கூடி - தேவாசுரர்களிருவரோடுங்கூடிநின்று, நீரை-க்ஷீரார்ணவஜலத்தை, மத்தும் கயிறுமாதாரமும்முதலான சம்விதாநங்களைப்பண்ணி, கடைந்த - கடைந்த, ஆறும்-ப்ரகாரமும், அமுதும் - அங்குத்தோற்றினவம்ருதமானது, தேவர் - தேவர்கள், உண்ண - உண்ணும்படி, அசுரரை - அசுரர்களை, வீடும் - விடுவிக்கும், வண்ணங்கள் - ப்ரகாரங்களையுடையஸ்திரீவேஷபரிக்ரஹாதிகளை, செய்துபோன - பண்ணிப்போன, வித்தகமும் - விஸ்மயநீயாகாரமும், ஊடு - உள்ளே, புக்கு - புக்கு, எனது - என், ஆவியை - ஆத்மாவை, உருக்கி - நீர்ப்பண்டமாகவுருக்கி, உண்டிடுகின்ற - க்ரஸித்துவிடாநின்றன; நஞ்சு-அநுபவவிரோதிகளை, (அழியச்செய்யும் விஷத்தையுடையனான),நாகம்-திருவநந்தாவாழ்வானோடே, அணையானே - நித்யஸம்ஶ்லிஷ்டனானவனே, நின்றன்னை - உன்னை, நாடும் - நித்யாநுபவம்பண்ணும், வண்ணம் - ப்ரகாரம், சொல்லாய் - அருளிச்செய்யவேணும்.

இ.—பத்தாம்பாட்டில், ஸமுத்ரமதநவைசித்ரியத்தை யநுஸந்தித்து ஶிதிலனாநின்றேன், உன்னை யரித்து நின்றநுபவிக்கும் விரகு சொல்லவேணுமென்று ப்ரார்த்திக்கிறார்.

[கூடி] - "ஶலமொக்கக்கொள்ளக்கடவோம்" என்று அஸுரர்களோடேகூடி, தேவாஸுரர்களுக்கு விரோதமேபோக்கி ஸௌஹார்தமில்லையிறே. "ஸஙா ஐநவெஸு வொஃக்ஷுகா" [நீரைக்கடைந்தவாறும்] - க்ஷீராப்தியையிறேகடைந்தது. ஶலவேளையிலே தேவர்களம்ருதத்தை புஜிக்க, அஸுரர்களம்ருதத்தைவிட்டுப் போம்படிசெய்து. [போன வித்தகமும்] - ஒருஸ்த்ரீ வேஷத்தைக்கொண்டு அவர்கள் தொடரப்போனவிஸ்மயனீயமானசெயலும். "அம்ருத்தத்தைநாய்க்கிடாய்" என்று பின்தொடரும்படியான வடிவையாயிற்றுக்கொண்டது. "ஊயயா லொஹயிகா தாநுவிஷுவஸ்ர உவஊவஸ்தஃ" [ஊடு புக்கு] - தோற்புரையேபோகாதே மர்மத்திலேபுக்கு. "ஊவெஜெஸாயஜோவெஹஸாயம்" என்கிற வாத்மவஸ்துவை. [உருக்கியுண்டிடுகின்ற] - த்ரவத்ரவ்யமாக்கி, முடித்துவிடாதேயொழிகிறவுன்னை. "புருஷோத்தமனிப்படி செய்வதே!" என்கிற குணப்ரஸங்கத்திலே ஶிதிலனாகாநின்றேன், யரித்தநுபவிக்கும்படி ஒரு நல்விரகு சொல்லவேணும். [நச்சு நாகணையானே] - நித்யாநுபவம் பண்ணுகிற திருவநந்தாழ்வானைப்போலே யரித்து நின்றநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்.

ஈடு.—பத்தாம்பாட்டு. ஸமுத்ரமதநவைசித்ர்யத்தை யநுஸந்தித்து ஶிதிலனாகாநின்றேன், உன்னை யரித்துநின்றநுஸந்திக்கவல்லேனும்படி விரகுசோல்லவேணுமென்கிறார்.

[கூடிநீரைக்கடைந்தவாறும்] - "நாம் சமவிபாகம்பண்ணி புஜிக்கக்கடவோம்" என்று அசுரர்களோடேகூடி சமுத்ரத்தைக்கடைந்தபடியும். கடைந்துபிடித்துக்காணு மிவருடைய ஆவியையுருக்கிற்று. [அமுதம்தேவருண்ணவித்யாதி] - ஶலவேளையிலேவந்தவாறே ப்ரயோஜநரூபமான அம்ருதத்தை யநுகூலவர்க்கமான தேவஜாதியேபுஜித்து, ஆசுரப்ரக்ருதிகள் "அம்ருதத்தைநாய்க்கிடு" என்று அத்தைவிட்டு அவர்கள்பின்தோடரும்படிக்கீடாக தர்ஶநீயமான ஸ்திரீவடிவைக்கோண்டுபோன விஸ்மயநீயமான செயலும். "ஊயயா லொஹயிகா தாநுவிஷுவஸ்ர உவஊவஸ்தஃ" (மாயயாமோஹயித்வா தாந்விஷ்ணுஸ்ஸ்

---

பத்தாம்பாட்டு.—கூடி இத்யாதி. "கூடிநீரை" என்றுதொடங்கி "நின்றன்னை நாடும் வண்ணம் சொல்லாய்" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - ஸமுத்ரமதநேத்யாதி.

"கூடி" என்றவிடத்திலே - "ஸஙாஐநவெஸுவொஃக்ஷுகாய தவஜொzஜெ தஹவநு" இத்யாத்யநுஸந்தேயம். தேவர்களுக்குமசுரர்களுக்கும் பரஸ்பரசங்கதி யின்றிக்கேயிருக்க, கூடுகையாவதென்னென்ன; கார்யார்த்தமாகக்கூடியென்கிறார் - நாம் இத்யாதி. நீரை—சமுத்ரத்தை. "நீர்" என்று - சமுத்ரத்துக்கும்பேர். சாடு கடைந்துபிடித்து இத்யாதி. கடைந்து வெண்ணெயைப் பிடித்துருக்கவேணுமென்று சாடுவுக் கர்த்தம்; ஸமுத்ரத்தைக்கடைந் தம்ருதத்தை யெடுத்த செயலாலே யிவருடைய ஆவியையுருக்கி - யென்று ப்ரக்ருதார்த்தம். ப்ரயோஜநரூபமான - சாராம்சமான. "வீடும்" என்றது - விடுமென்றபடி. ஸ்த்ரீவடிவைக்கொண்டதுக்கு ப்ரமாணம் - மாயயா இத்யாதி. "ஊயயா லொஹயிகா தாநுவிஷுவஸ்ர உவஊவஸ்தஃ । ஊஐநவெஹஸஊஊயஜெவெஹஃஷுஊ

திரீரூபமாஸ்த்திதः)"வானவரைப்பெண்ணாகியமுதூட்டும்பெருமானார்". கடைந்தவாற்றாலும் வித்தகத்தாலும். [ஊடுபுக்கு] - தோற்புரையேபோகாதே மர்மத்திலேபுக்கு. [எனதாவியை]- "அச்சேத்யோயமதாஹ்யோயம்" (அச்சேத்யோயமதாஹ்யோயம்) என்கிற ஆத்மவஸ்துவை. [உருக்கியுண்டிடுகின்றநின்றன்னை]-த்ரவத்ரவ்யமாக்கி, முடித்துவிடாதேயொழிகிற உன்னை. "புருஷோத்தமனிப்படிசெய்வதே" என்று இக்குணப்ரஸங்கத்திலே சிதிலனாகாநின்றேன், தரித்தநுபவிக்கும்படி நல்விரகுசொல்லவேணும், உம்மை தரிப்பிக்கப்போமோ நம்மாலென்ன; ஒருவன் பரமபோகியாய்நின்று தரித்து உன்னை யநுபவிக்கப்பண்ணிக் கொடுத்திலையோ; அப்படியேநானும் தரித்துன்னையநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்.

---

## பதினோராம் பாட்டு.

---

நாகணைமிசைநம்பிரான்சரணேசரணமக்கென்றுநாடொறு
மேகசிந்தையனாய்க்குருகூர்ச்சடகோபன்மாற
னாகநூற்றவந்தாதியாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார்
மாகவைகுந்தத்துமகிழ்வெய்துவர்வைகலுமே.

ஆ.—[நாகணைமிசை] சரணம்புக்காரை எம்பெருமானுபேக்ஷிக்க நினைக்கிலுமுபேக்ஷிக்கவொட்டாதே விஷயீகரிக்கப்பண்ணும் ஸ்வபாவனான திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்து, ஆஸ்ரிதவிஷயத்தி லுபகாரகனாயிருந்துள்ள வெம்பெருமானுடைய திருவடிகளே நமக்குசரணமென்று நாள்தோறு மிதொருமனோரதமேயுடையரான ஆழ்வார், தாமுளராகைக்காக பகவத்குண ப்ரேரிதராய்க்கொண்டுசொன்ன ஆயிரத்திலுமிப்பத்தும்கற்றார், ஸ்ரீவைகுண்டத்திலேபோ யெம்பெருமானை நித்யாநுபவம் பண்ணப் பெறுவ ரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும்கற்றார் ஸ்ரீவைகுண்டத்திலேபோய் எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணப்பெறுவர் என்கிறார்.

[நாகணை என்று தொடங்கி] ஶரணம்புக்காரை எம்பெருமான் உபேக்ஷிக்க நினைக்கிலும், உபேக்ஷிக்கவொட்டாதே விஷயீகரிக்கப்பண்ணும் ஸ்வபாவனான திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளுவதும்செய்து. ஆஶ்ரிதவிஷயத்தில் உபகாரஶீலனாயிருந்துள்ள எம்பெருமானுடைய திருவடிகளே நமக்கு ஶரணம் என்று. [நாடோறும்

---

தஸ்ய ஹநः" இதிப்ரதமேம்ஶே நவமே. "உருக்கியுண்டிடுகின்ற - நின்றன்னை" என்று - அவனுக்கு விசேஷணம். வர்த்தமாநநிர்த்தேசத்துக்கர்த்தம் - த்ரவத்ரவ்யம் இத்யாதி. உருக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார் - புருஷோத்தமன் இத்யாதி. அதாவது - "நச்சுநாகணையான்" என்று - ஸர்வாதிகத்வம் ஸூசிதமாகையாலே, "புருஷோத்தமனிப்படி ஸ்த்ரீரூபத்தை பஜிப்பதே" என்று சிதிலனாகாநின்றேனென்றபடி. நச்சுநாகணையானே, கூடிநீரைக்கடைந்தவாற்றாலும், அமுதமென்றுதொடங்கி, வித்தகத்தாலும் ஊடுபுக்கென்றுதொடங்கி, உண்டிடுகின்ற நின்றன்னைநாடும் வண்ணம் சொல்லாயித்யந்வயः. (௧0)

என்றுதொடங்கி] நாள்தோறும் இதொரு மநோரதமேயுடையரான ஆழ்வார் தாம் உளராகைக்காக பகவத்குணப்ரேரிதராய்க் கொண்டு சொன்ன ஆயிரம் திருவாய்மொழியிலும்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிக்குபலமாக பரமபதத்திலாநந்தப்ராப்தியையருளிச்செய்கிறார்.

நாகணைமிசை - திருவநந்தாழ்வான்மேலே கண்வளர்ந்தருளின, நம் - நம்முடைய, பிரான் - ஸ்வாமியானவன், சரணே - திருவடிகளே, சரண் - உபாயம், நமக்கு - நமக்கு, என்று - என்று, நாடொறும் - என்றுமொக்க, ஏகசிந்தையனாய் - மநோரதத்தையுடையராய்க்கொண்டு, குருகூர்ச்சடகோபன்மாறன் - ஆழ்வார், ஆக - தாமுளராகைக்கு, நூற்ற - அருளிச்செய்த, அந்தாதி - அந்தாதியான, ஆயிரத்துள் - ஆயிரத்துள், ஓர் - அத்விதீயமான, இவை - இவை, பத்தும் - பத்தையும், வல்லார் - அப்யசிக்கவல்லவர்கள், மாகம் - பரமாகாசமான, வைகுந்தத்து - ஸ்ரீவைகுண்டத்திலே, வைகலும் - யாவதாத்மபாவியானகாலமெல்லாம், மகிழ்வெய்துவர் - ஆநந்தநிர்ப்பரராயிருக்கப்பெறுவர்கள். நூற்கை - பண்ணுகை. இது - ஆசிரியத்துறை.

இ.—நிகமத்தில், இப்பத்துங்கற்றார் பரமபதத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவரென்கிறார்.

[நாகணை மிசை நம்பிரான்]-அனந்தசாயித்வம் ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, ஸர்வாதிகனேசரண்யனென்கிறது. திருவனந்தாழ்வானுடைய புருஷகாரபாவம் சொல்லுகிறதென்றுமாம். படுக்கையைச்சொல்ல - படுக்கையையுடையாரைச் சொல்லிற்றாயிறே. [நம்பிரான்] - ஆஸ்ரிதவிஷயத்தில் உபகாரசீலனானவன். [சரணே சரணநமக்கென்று] - நமக்குத்திருவடிகளேஉபாயமென்று, அவதாரணத்தாலே உபாய நைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. ஸாம்ஸாரிகஸ்வபாவங்கள் மேலிட்டு விபரீதமேபலியாநின்றாலும், இதொழியவேறொன்றில் கால் தாழாதொழிகை - மஹாவிஸ்வாஸமாகிறது. [நாடொறும் இத்யாதி] - நாள்தோறுமிதுவே மனோரதமானவாழ்வார், பகவத்குணப்ரேரிதராய்த்தாமுளராகைக்காக வருளிச்செய்த ஆயிரத்துளிவையுமோர் பத்தும்வல்லார். [மாகம்] - பரமாகாசம் என்னக்கடவதிறே. [வைகலும்-மகிழ்வெய்துவர்] - குணங்களை நினைத்து சிதிலனாகிறவென்னைப்போலேயன்றியே, ஸரித்தங்கே நின்றுநித்யநுபவம் பண்ணப்பெற்று, பரமபதத்திலே ஆநந்தநிர்பரராகக்கடவர்கள்.

ஈடு.—நிகமத்தில், இப்பத்தும்கற்றார் பரமபதத்திலே போய் நித்யாநுபவம்பண்ணப்பெறுவரென்கிறார்.

[நாகணையித்யாதி] - திருவநந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளே நமக்குபாயம் என்று. அநந்தசாயித்வம்- ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, ஸர்வாதிகனே சரண்யனென்கிறது. (திருவநந்தாழ்வானுடைய புருஷகாரபாவம்

---

நிகமம். நாகணை இத்யாதி. "இப்பத்தும்வல்லார் மாகவைகுந்தத்து" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - இப்பத்தும்கற்றார் இத்யாதி. ஸப்தார்த்தம் - திருவநந்தாழ்வான் இத்யாதி. அவனை உபாயமாக ஸ்வீகரிக்கும்போது த்வயத்திற்போலே புருஷகாரபுரஸ்ஸரமாகவேண்டாவோ

சொல்லுகிறதென்றுமாம்.†) இவனுடையவுபாயஹாவத்தில் புருஷகாரமாகவல்லார் அவள் பரிகரத்திலுள்ளாராகாதே. படுக்கைகிடப்ப தந்தஃபுரத்திலேயிறே. [நம்பிரான்] - ஆஶ்ரிதவிஷயத்திலுபகாரசீலனானவன்.[சரணேசரண் - என்று] அவதாரணத்தாலே- உபாயநைரபேக்ஷ்யஞ்சொல்லுகிறது. ஸாம்ஸாரிக ஸ்வபாவங்கள் மேலிட்டு விபரீதமே பலியாநின்றாலு மப்படியடிக்கழிவு செய்வாரோருவரல்லரேயிவர். இதொழிய வேறொன்றில் கால்தாழாதொழிகை- மஹாவிஶ்வாஸமாகிறது. இத்தால் - * ஏகபதத்திலர்த்தம் சொல்லுகிறது. [நாடோறுமேக சிந்தையனாய்] - புறம்புண்டானசிந்தனைபோய், இவ்விஷயத்திலே ஏகாகாரமான மநோரதமுடையராய். அர்த்தார்ஜநம்பண்ணப்போவாரொரு சிராயைவிஶ்வஸித்து நாலாண்டு பதிற்றாண்டிழியாநின்றார்களிறே, பேற்றின்சீர்மையைப்பார்த்தா லவ்வளவாகிலும் வேண்டாவோ இவ்விஷயத்தில். ஸம்ஸாரஸ்வபாவத்தால் வ்யஸநபரம்பரைகள் வந்தாலும் வ்யவசாயங்குலையாமே போருமதிறே ஸ்வரூபமாவது. [குருகூர்ச்சடகோபன்மாறன்] - அதுக்கெல்லாவற்றுக்கு மடியான பிறப்பிருக்கிறபடி. [ஆகநூற்றவந்தாதி]-தாமுளராகைக்காகச் சொன்னவந்தாதி ஆயிரத்திலு மிப்பத்தை அப்யசிக்கவல்லார். [மாகமித்யாதி] - மஹாகாசமென்று பேரையுடைய ஸ்ரீவைகுண்டத்திலே. [வைகலும் - மகிழ்வெய்துவர்] - காலதத்த்வமுள்ளதனையும் நித்யாநுபவம்பண்ணப்பெறுவர். "அநுசந்தாநத்துக்கு விச்சேதம்வாராதபடி பண்ணியருளவேணும்" என்று ப்ரார்த்திக்கவேண்டும்படியானஸம்ஸாரத்தை விட்டு, பகவதநுபவத்துக்கு விச்சேத மொருநாளுமில்லாத பரமபதத்திலே புக்கநுபவிக்கப் பெறுவர். மா வென்று - மஹத்தை. கம் என்று - ஆகாசம். (கக)

*வென்ன; அதுவுமுண்டென்கிறார் - இவனுடைய இத்யாதி. இத்தால் - திருவநந்தாழ்வானை புருஷகாரமென்றுகருத்து. இவன்பிராட்டிபரிகரமோவென்ன - படுக்கை இத்யாதி. "சரணே" என்கிறவவதாரணத்துக்கிரண்டர்த்தம் - உபாயநைரபேக்ஷ்யமாதல், தம்முடைய மஹாவிஶ்வாஸமாதல், மூன்றினவர்த்தம் - சரணேசரண் இத்யாதி. இரண்டாமர்த்தம் - ஸாம்ஸாரிக இத்யாதி விவரணம் - இதொழிய இத்யாதி. மூன்றினவர்த்தவிவரணம் - இத்தாலேகபதேத்யாதி. இத்தனையருமையுண்டானால் 'த்ரிதஹாவெ..ந" என்றும், "தொழுது - என்னுமிதுமிகை" என்றும் - ப்ரபத்தியை ஸூசகமாகச்சொல்லுவானென்னென்ன - அர்த்தார்ஜந இத்யாதி. சிராய் - மரச்சக்கை. அத்தால் - கப்பலைச் சொல்லுகிறது. "நாடொறுமேகசிந்தையனாய்" என்றதால்பலிதம் - ஸம்ஸாரஸ்வபாவத்தால் இத்யாதி. இத்தால் இது ஸ்வரூபமாகையாலே சாதநத்தி லந்வயியாதென்றபடி. "குருகூர்" என்று விசேஷித்ததுக்குபாவம் - அதுக்கெல்லாவற்றுக்கும் இத்யாதி. "ஆக" - (தாமுளராகைக்காக) "நூற்ற"- சொன்ன "மாகவைகுந்தம்" என்ற புநருக்திபரிஹாரம் பேரையுடையவென்று இத்திருவாய்மொழியின் ப்ரமேயாநுகுணமாக பலமருளிச்செய்கிறார் - அநுசந்தாநத்துக்கு இத்யாதி. "வைகலும்" என்ற பதத்துக்குவாசனை - பகவதநுபவத்துக்கு இத்யாதி. வைகலும் - யாவத்காலமும். மகிழ்வெய்துவர் - ஆநந்தத்தையுடையவர்களென்று சப்தார்த்தம். மகிழ்ச்சி - ஆநந்தம். எய்துகை - ப்ராப்திக்கை. (கக)*

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— [illegible] ॥

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible]

[illegible]

---

| திருவாய்மொழி நூற்றந்தாதி. | பிறந்துலகங்காத்தளிக்கும்போருட்கண்ணவுன்<br>சிறந்தகுணத்தாலுருகுஞ்சீலத் - திறந்தவிர்ந்து<br>சேர்ந்தநுபவிக்குநிலைசெய்யென்றசீர்மாறன்<br>வாய்ந்தபதத்தேமனமேவைகு. |
|---|---|

ஆழ்வார் திருவடிகளேஶரணம், எம்பெருமானார் திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.

ஐந்தாம்பத்து ஸம்பூர்ணம்



# ரு - ஆம் பத்து—பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| சா | 5 | ஸ்வாத ந்த்ர்ய | ஸ்வாதந்த்ர்ய |
| எ | 29 | புறமேபுந்மே | புறமே புறமே |
| க0 | 24 | நுளைத்தல் | துளைத்தல் |
| கக | 11 | வெளிக்கண்டு | வெளிகண்டு |
| ,, | 39 | [illegible] | [illegible] |
| கஉ | 18 | [illegible] | [illegible] |
| கங | 16 | நிரவதி பக்தி | நிரவதிகபக்தி |
| கரு | 3 | உன்னை கயாழிய | உன்னையொழிய |
| ,, | 9 | தோம்றம் | தோன்றம் |
| ,, | 19 | [illegible] | [illegible] |
| ங0 | 12 | ஏவித்தொழும் | மேவித்தொழும் |
| ஙஉ | 24 | ஸ்ஂஸார | ஸம்ஸார |
| ஙஅ | 35 | ஹேறதவேதன்ன | ஹேறதுவேதென்ன |
| சஎ | 1 | யண்டாமொ | யுண்டாமோ |
| ருரு | 7 | டகவிலே | கடலிலே |
| ருசா | 16 | கோண்டாடுகிற | கொண்டாடுகிற |
| ருகூ | 11 | நின்றவ்வுல | நின்றிவ்வுல |
| சாக | 23 | அயாஹரிப்பது | அத்யாஹரிப்பது |
| ,, | 40 | மின் சென்று | பின்சென்று |
| சாங | 20 | இறுப்பதெல்லாம் | இருப்பதெல்லாம் |
| எ0 | 30 | [illegible] | [illegible] |
| எஎ | 33 | அவர்ளுக்கு | அவர்களுக்கு |
| அஉ | 17 | [illegible] | [illegible] |
| கூ0 | 26 | த்வமும் | த்வயமும் |
| கூச | 34 | சோழிமாரும் | தோழிமாரும் |
| கூசா | 2 | அஙந்தரம் | அநந்தரம் |
| கூஎ | 8 | மெருமாள் | பெருமாள் |
| ,, | 23 | [illegible] | [illegible] |
| கூகூ | 16 | கடிவதிறே | கடவதிறே |
| க0க | 39 | பறப்புமாறிற்ற | பரப்புமாறிற்ற |
| கஉ0 | 22 | குறிப்பு | குறப்பு |
| கஉசா | 27 | யிறுக்கவ | யிருக்குமவ |
| கஉங | 28 | ஆபத்தைத்தப் | ஆபத்தைத் |
| கச0 | 33 | ஆபாமிட்டு | ஆபரணமிட்டு |
| கசகூ | 17 | மொழில் | மொழியில் |
| ,, | 37 | பொருக்க | பொறுக்க |
| கருக | 14 | ஸ்வரூபாநு | ஸ்வரூபாநு |
| ,, | 35 | ஊதாவண்டாகிலும் | ஊதாவுண்டாகிலும் |
| கருங | 14 | இருளென்னுதல் | இருளென்னுதல் |
| கஎஉ | 9 | புதையடிமூற்றால் | புதையமூடிற்றால் |
| ககூகூ | 4 | யரிகைக்கு | யரிக்கைக்கு |
| உ0க | 24 | அன்னைமீர்கள் | அன்னைமீர்காள் |
| உ0ச | 26 | என்றிகூட்டி | என்று கூட்டி |
| உகஅ | 6 | ராமவேவாநு | ராமமேவாநு |
| உககூ | 18 | வன் வழி | வன்பழி |
| உஉக | 32 | ஆம் | அம் |
| உஉச | 17 | கொத்தையைக் | கொத்தையறக் |
| ,, | 32 | அநுஷ்டிருக்கிற | அநுஷ்டிக்கிற |
| உஉகூ | 15 | போறிலன் | போகிறிலன் |
| உங0 | 6 | சேலப்பாலும் | சேர்ப்பாலும் |
| உருகூ | 26 | ப்ரயோஜரான | ப்ரயோஜநரான |
| உசாச | 31 | வார்த்மைசொல் | வார்த்தைசொல் |

ஸ்ரீ

# பகவத் விஷயம்

## ஆறாம் பத்து

திருவாய்மொழி மூலமும்

ஆறாயிரப்படி, ஒன்பதினாயிரப்படி, பன்னீராயிரப்படி,
இருபத்தினாலாயிரப்படி, ஈடு முப்பத்தாறாயிரப்படி வ்யாக்யாநங்களும்,
சீயர் அரும்பதவுரை, ப்ரமாணத்திரட்டு, த்ரவிடோபநிஷத்ஸங்கதி,
த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி, திருவாய்மொழி
நூற்றந்தாதி இவைகளுடன்



சே. கிருஷ்ணமாசாரியர் பதிப்பு.



வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியாராலும்,
சே. பார்த்தஸாரதி ஐயங்காராலும்,
பரிசோதிக்கப்பெற்றது.



திருவல்லிக்கேணி,
நோபில் அச்சுக்கூடம்.

ப்ரபவஹு] [1927.

ஸ்ரீ

# திருவாய்மொழி

## ஆறும்பத்து.

### முதல் திருவாய்மொழி—வைகல்: ப்ரவேஶம்.

#### ஆறாயிரப்படி.

(வைகல்பூங்கழிவாய்.) எம்பெருமானோடே கலந்து பிரிந்தாளொருபிராட்டி.

#### ஒன்பதினாயிரப்படி.

ஆறாம்பத்தில், முதல் திருவாய்மொழியில், இப்படி நோற்றநோன்பு தொடங்கி, நாலுப்ரயோகம் ஶரணம்புக்கவிடத்திலும் அவன்வாராமையாலே, "குணவானாய் ஸர்வஜ்ஞனாய் ஸர்வஶக்தியாகையாலே ஸர்வநிர்வாஹகக்ஷமனாயிருக்கிற வெம்பெருமானைத் திருவண்வண்டூரில் ஸம்ருத்தி நம்மைநினையாதபடி பண்ணுகையாலே நம் தஶையறியாமல் வாராதொழிந்தான், அறிவிக்கவரும்" என்றுபார்த்து, தன்பரிஜநங்களில் அவன்பக்கல்போய்வரவல்லாரொருத்தரைக் காணாமையாலே, தன்னாற்றாமைகை கொடுக்கக் கழிக்கரையிலேசென்று, அங்கேவர்த்திக்கின்றன சிலபக்ஷிகளை அத்யாதரம் பண்ணியிருந்து திருவண்வண்டூரில்தூதுவிடுகிறாள்.

#### பன்னீராயிரப்படி.

ஆறும்பத்தில், கீழ் பத்திலே ஈஶ்வரனுடைய வுபாயபாவத்தை ஸப்ரகாரமாக நிரூபித்து, அநந்தரம், இவ்வுபாயஸ்வரூபத்தினுடைய ஸ்வீகாரப்ரகாரத்தையருளிச்செய்வதாக; உபாயஸ்வீகாரம் வ்யுடகரான ஆசார்யர்கள் முகமாக ஸித்திக்கும் ப்ரகாரத்தையும், ஸ்வீகர்த்தாவான அதிகாரியினுடைய பகவதாபிமுக்யம் ஸ்வீகாரத்துக்கு அபேக்ஷிதமென்னுமிடத்தையும், அவடிதகடநாஸமர்த்தனை ஈஶ்வரவிஷயத்தில் பலப்ரதத்வஶக்தியில் ஸம்ஶயமில்லை யென்னுமிடத்தையும், ஆகர்ஷகசேஷ்டிதனைகையாலே ஆஶ்ரயணம் ஸுகரமென்னுமிடத்தையும், தநாஸத்தியை யாசைப்பட்டார்க்கு அந்யபரர்பக்கல் வைராக்யம் அபேக்ஷிதமென்னுமிடத்தையும், ஆத்மாத்மீயபதார்த்தமெல்லாம் அவனிட்டவழக்காம்படியான ஸ்வஸ்வாதந்த்ர்ய நிவ்ருத்தியையும், யாரகாதிகளெல்லாம் தானேயான ப்ராப்யவிஷயத்தில் த்வராயோகத்தையும், த்வரிதனுடைய பராஸக்தியில் வ்யுடகரானார்விஷயத்தில் அத்யந்தாதரத்தையும், பரிபூர்ணமான ப்ராப்ய ப்ராவண்யம் அதிகாரிக்கு விஶேஷணமென்னுமிடத்தையும், ஸர்வரக்ஷகனை ஶரண்யன் பக்கல் ஸப்ரகார ஶரணாகதியையும் அருளிச்செய்து, ஸ்வதஸ்ஸித்தமான வுபாயவிஷயத்தில் ஸ்வீகாரத்தை ஸ்வாநுஷ்டாந பர்யந்தமாக வருளிச்செய்கிறார்.

இதில் முதல்திருவாய்மொழியில், ஆஶ்ரயணம் ஆசார்யோபஜ்ஞமாகையாலே; ஆஶ்ரயணீயனானவன் கையுந்திருவாழியுமான வடிவழகைக் காட்டி யடிமைகொள்ளும் நிருபாதிக ஶேஷித்வஸம்பந்தத்தையும், அந்த ஸம்பந்தமடியான ஆபத்ஸகத்வத்தையும், ரக்ஷகத்வபோக்யத்வவிஶிஷ்டமான ஆதிக்யவிஶேஷத்தையும், அநுபாவ்யாகாரயுக்தமான ஆஶ்ரிதஸௌலப்யதையினுடைய அதிஶயத்தையும், ஹோக்யத்வஶேஷித்வத்தால் வந்த பூர்த்தி விஶேஷத்தையும், தத்கார்யமான ஸூரிநிர்வாஹகத்வத்தையும், அநுபாவ்யஅஸாதாரணமான லக்ஷணங்களையும், விலக்ஷண லக்ஷணங்களாலே ப்ரகாஶிதமான விஶேஷாதிக்யத்தையும், ஆஶ்ரிதஸௌலப்யதைக்கடியான அத்யந்தவ்யாமோஹத்தையும், வ்யாமோஹகார்யமான விரோதிநிரஸந ஸாமர்த்யத்தையுமநுஸந்தித்து, ஏவம்ப்ரகாரவிஶிஷ்டனான ஸர்வேஶ்வரனுடைய ஆஶ்ரயணம் புருஷகாரத்வாரமாகவேணுமென்றறுதியிட்டு, புருஷகாரத்வாநுரூபமான ஸ்வபாவவிஶேஷங்களையுடைய வ்யக்திவிஶேஷமுகத்தாலே ஸ்வதஶையை யறிவித்தப்ரகாரத்தை, விஶ்லிஷ்டநாயகி நாயகனைநோக்கித் தூதுவிடுகிற பாசுரத்தாலே யருளிச்செய்கிறார்.

## இருபத்துநாலாயிரப்படி.

ஆரம்பத்தில், முதற்றிருவாய்மொழியில், * நோற்றநோன்புதொடங்கி நாலுப்ரயோகம் ஶரணம்புக்கவிடத்திலும் தம்முடைய வபேக்ஷிதம் பெற்றிலர். பலத்தோடு அவ்யபிசாரியாய் அவிளம்ப்ய பலப்ரதமானவுபாயத்தை ஸ்வீகரிக்கச்செய்தேயும் அபேக்ஷிதங்கிடையாதொழிவானேன்? என்னில்; இவர்தம்முடைய ஹிதத்தோபாதி ஜகத்தினுடையஹிதத்துக்குங் கடவனாகையாலே ஈஶ்வரப்ரவ்ருத்த்யா தலைக்கட்டிற்றில்லை. அதுபற்றாமையாலே ஆற்றாமைமீதூர்ந்து, கலந்துபிரிந்து பிரிவாற்றாமையாலே திருவண்வண்டூரிலே தூதுவிடுகிறாளொருபிராட்டிபேச்சாலே இவர் தன்தஶையை யருளிச்செய்கிறார். நாயகனானவன் “யஶஸ்வீஜ்ஞாநஸம்பந்ந:” என்று நம்தஶையை யறியுமவனுமாய், “ரிபூணாமபிவத்ஸலம்” என்று - ஶத்ருக்கள்பக்கலிலும் இரங்கும்நீர்மையையுடையவனுமாய் “ஶத்ரூ:ப்ரஹ்லாதவீயஸ்யாஜ்ஞீயஸ்யவிக்ரமை:” என்று - வருமிடத்தில் ப்ரபலப்ரதிபந்தகங்களையும்தள்ளிவரவல்ல ஆண்பிள்ளையுமாயிருக்க, வாராமைக்கடி - திருவண்வண்டூரில் ஹோக்யதையாலே; நம்மாற்றாமையை யறிவிக்கவரும் என்றுபார்த்து தன்பரிகரங்களில் அவன்பக்கல் போய்வரவல்லாரொருவரைக் காணாமையாலே, தன்னாற்றாமை கைகொடுக்க, பிரிந்தாரிரங்கும் நெய்தல்நிலத்திலே புறப்பட்டு, கண்ணால்கண்டபக்ஷிகளைத் தூதுவிடுகிறாள்.

## ஈடு

கீழ் * நோற்றநோன்புதொடங்கி நாலுப்ரயோகம் ஶரணம்புக்க விடத்திலும் தம் அபேக்ஷிதம் பெற்றிலர். பலத்தோடு அவ்யபிசாரியாய் அவிளம்ப்ய பலப்ரதமான வுபாயத்தை ஸ்வீகரிக்கச்செய்தேயும் அபேக்ஷிதங்கிட்டாதொழிவானேன் ? என்னில்;—ஆழ்வாரு

---

**வைகல்பூங்கழிவாய்** ப்ரவேஶே, உக்தத்தை வர்த்திஷ்யமாணத்தோடே ஸங்கதமாக்குகைக்காக வ்ருத்தத்தையருளிச்செய்கிறார் - **கீழ்நோற்றநோன்பு** இத்யாதி. அபேக்ஷிதாலாபத்தை ஶங்கித்து பரிஹரிக்கிறார் - **பலத்தோடு** இத்யாதி. ஹலத்தோடவ்யபிசாரியாவது - ப்ரபத்தியை ப்ரயோகித்தால் பலம் மோஹமாயிருக்கை. இது ஹக்திக்கு முண்டாகையாலே அத்தை வ்யாவர்த்திக்கைக்காக – **அவிளம்ப்யபலப்ரதம்** என்கிறார். அதாவது - பக்தியும் அமோகமாயிருக்கச்செய்தேயும், ப்ராரப்த கர்மாவஸாநத்திலே பலமாகையாலே விளம்ப்ய கார்யகரம்; இது ஶீக்ரபலப்ரதமென்ற

ண்டிய் ஹிதத்தோபாதி ஜகத்தினுடைய ஹிதத்துக்கும் கடவனாகையாலே ஈஶ்வரபுத்த்யா தலைக்கட்டிற்றில்லை.

உகந்தருளின நிலங்கள்தோறும் புக்குத் தட்டித்திரிந்தார், அங்குத் தாம் நினைத்தபடி பரிமாறப்பெற்றிலர், நினைத்தபடி பரிமாறலான அவதாரத்தேறப்போனார், அது காலாந்தரமாகையாலே கிட்டப்பெற்றிலர் ; அதுதானே தளர்த்திக்கு உடலாயிற்று. இனி நித்யஸந்நிதியுமுண்டாய், முகப்பழக்கத்தாலும் குறையற்று, ஶக்தி வைகல்யமுமின்றிக்கேயிருக்கிற இவ்விடமே யமையுமென்று மீண்டார் ; அவ்வநுஸந்தாநந்தான் கால்நடை தந்து போகாதபடி ஈடுபடுத்திற்று, கால்நடைதருவார் காலிலே விழுந்து தூது விடுகிறார். தாம் கீழ் அநுஸந்தித்தவவதாரம் தூதற்குச் சென்று அறிவிக்கவொண்ணாதபடியா யிருந்தது; "இனி அறிவிக்கலாம்படி கிட்ட நின்றாகில் திருவண்வண்டூரிலே யறிவிப்போம்" என்று அங்கே ஆள் விடுகிறார். இவர்க்குப்பிறந்தது ஜ்ஞாநகர்மாநுக்ருஹீதபக்தியன்றே! ஒருவன் ப்ரஸாதமடியாக வந்ததிறே. தந்தலையிலேயும் ஒன்றுண்டாய் "அதுநிரம்பிப்பெறவேணும்" என்று இருக்கிலிறே விளம்பம் பொறுக்கலாவது, அங்ஙனம் சொல்லலாவதொன்றின்றிக்கே யிருந்தது. இவர்தாம் பரிக்ரஹித்த ஸாதநந்தான் விளம்பஸஹமுமன்றே! உபாயாந்தரங்களிற்காட்டில் கால்வாசி யேற்றமுண்டே! இங்ஙனே யடிப்பட்டவுபாயத்தை ஸ்வீகரித்தவர் ஆறியிருக்க மாட்டாரிறே; ஆகையாலே ஆற்றாமை கரைபுரண்டு ஆளிட்டு அறிவிக்கிறார். "ஶரணம்புக்கோமாகில் அத்தலையாலே பேறுமளவும் ஆறியிருப்போம்" என்று தரித்திருக்கவல்ல ப்ரக்ருதியன்றே. ப்ரஹ்மாஸ்த்ரம் வாய்மடியச்செய்

---

*படி. ஈஶ்வரபுத்தியாவது - இவருடைய ப்ரபந்தத்தைக்கொண்டு ஜகத்தைத் திருத்தவேணுமென்கிற நினைவு.*

*கீழ் - ப்ராஸங்கிக ஶங்காபரிஹாரம்பண்ணி, "நோற்றநோன்புதொடங்கி" இத்யாதி வாக்யத்தை விவரியாநின்றுகொண்டு இத்திருவாய்மொழிக்கு ஸங்கதி -* **உகந்தருளின** *இத்யாதி.* **தட்டித்திரிந்தார்** *- "இஶ்ஶரீரத்தோடே யிருக்கச்செய்தே, குளிரநோக்குதல் அணைத்தல் வினவுதல்செய்ய வேணும்" என்று திருப்பதிகள்தோறும் தடுமாறித்திரிந்தாரென்றபடி. அர்ச்சாவதாரத்திலே மீளுகைக்கு ஹேதுத்ரயம் -* **இனி நித்யஸந்நிதியும்** *இத்யாதி. ஆனால், தாம்போகாதே தூதுவிடுவானென்? என்ன -* **அவ்வநுஸந்தாநம்** *இத்யாதி. அவ்வநுஸந்தாநமாவது -* **நித்யஸந்நிதியுமுண்டாய்** *என்றுசொன்ன திருவண்வண்டூரில் எம்பெருமானுடைய குணாநுஸந்தாநம்.* **கால்நடைதருவார்** *- கால்நடையுடையார். அவதாரத்திலே தூதுவிடாதே, அர்ச்சாவதாரத்திலே தூதுவிடுவானென்? என்ன -* **தாம்கீழ் அநுஸந்தித்த** *இத்யாதி. நினைத்தபரிமாற்றம்கிடையாவிட்டால் தூது விடவேணுமோ, "ஶேஷியானவன் செய்தபோது கண்டிருக்கிறோம்" என்று ஆறியிருக்கவொண்ணாதோ? என்ன -* **இவர்க்கு** *இத்யாதி. ஜ்ஞாநகர்மாநுக்ருஹீதபக்தியானால் ஆறியிருக்கைக்கும், பகவத்ப்ரஸாதலப்தையானால் ஆறியிருக்கவொண்ணாமைக்கும் ஹேதுவையருளிச்செய்கிறார் -* **தந்தலையிலே** *இத்யாதி வாக்யத்வயத்தாலே. உபாயாந்தரங்களிற்காட்டில் ப்ரபத்தியினுடைய ஸித்தத்வா விளம்ப்ய பல ப்ரதத்வாதியான ஏற்றத்தை அருளிச்செய்யாநின்றுகொண்டு, இப்படிப்பட்டவுபாயத்தை ஸ்வீகரித்தவராகையாலும் ஆறியிருக்கமாட்டாரென்கிறார் -* **இவர்தாம்** *இத்யாதி வாக்யத்ரயத்தாலே. கால்வாசியென்றதுக்கு - "சரணை" என்றதிலேநோக்கு. ஆகையாலேயென்றது பக்திபரவஶராய் ஸித்தோபாயத்தை ஸ்வீகரித்தவருமாகையாலேயென்றபடி. தம்ப்ரக்ருதியாலும் ஆறியிருக்கமாட்டாரென்று த்ருதீயஹேது -* **ஶரணம்புக்கோமாகில்** *இத்யாதி. கீழ்நாலுப்ரகாரம் ப்ரபத்திபண்ணியும் பெறாதவர் தூதுவிடுகிறதென்? என்ன -* **ப்ரஹ்மாஸ்த்ரம்** *இத்யாதி. ப்ரஹ்மாஸ்த்ரமென்கிறது -*

தேயும் இவர் தூதுவிடுகிறவிது ஜ்ஞாநகார்யமோ சாபலகார்யமோ தெரிகிறதில்லை, ஶ்ருதிக்ளுங்கூட ''யதோவாசோநிவர்த்தந்தே'' (யதோவசோநிவர்த்தந்தே)என்று - பேச்சுக்கு நிலமன்று என்று மீண்ட விஷயத்தை மறுபாடுருவப் பாசுரமிட்டுச் சொல்லவல்ல இவர்க்கு ''அறிவில்லை'' என்னவொண்ணாது; பக்ஷிகளின் காலிலேவிழுகிற இவர்க்கு ''அறிவுண்டு'' என்னவுமொண்ணாது. ஆனால் என்னுவது? எதேன்னில்;— ஜ்ஞாநகார்யமான சாபலமிறே இவரது. இதரவிஷயங்களில் விரக்தியிறே ஜ்ஞாநத்துக்கு ப்ரயோஜநமாகச் சொல்லுகிறது, அந்த, ஜ்ஞாநபலமாயிறே இவ்விஷயத்தில் சபால மிருப்பது. **ஜ்ஞாநஸ்ய வைராக்யம்** ஏயிறே. இனித் தூதுவிடப்பார்த்தால் ஒரு ஐந்த்ரவ்யாகரணபண்டிதனைத் தூதுவிடுகிறதுமன்றே. இத்தால் சொல்லுகிறது - பிராட்டியிலுண்டான ஏற்றமோ ? என்னில்:— அதுவுமுண்டிறே - அவரோருவரையும் அநுஹவிக்கையால் வந்ததிறே அவளுக்குள்ளது,இருவரையுங்கூடவநுஹவிக்கக் கோலுகிற ஏற்றமுண்டிறே இவளுக்கு விஷயாநுகுணமாயிறே கலக்கமிருப்பது. இனித்தான் அத்தலையில்நின்றும்வந்தாக்கே வார்த்தை சொல்லிவிடவேணுமென்னும் நிர்ப்பந்தமில்லையே இவளுக்கு, ராவணஸங்கையில்லாமையாலே; ஆகையாலே கண்ணுற்கண்டாரை யடங்கலும போகவிடுகிருள்.

பிரிந்தார் இரங்குவது நெய்தல் நிலத்திலேயிறே; திருவல்லவாழ், திருவண்வண்டூரென்கிறவையெல்லாம் அந்நிலங்களிறே. தூதுவிடுவார், நாயகன்பக்கலிலே சிலகுணங்கள் கண்டிறேவிடுவது; அவையாவன- இத்தலையில் ஆர்த்தியறியுந்தனை அறிவையுமுடையனுய், அறிந்தால் வருகைக்கீடான நீர்மையுடையனுய், வருகைக் கீடான ஶக்தியுமுடையனுயிருகையிறே; அவையெல்லாம் இவள்தூதுவிடுகிறவிஷயத்திற் குறையில்லை, அறிவில்வந்தால் ''ஜ்ஞாநஸம்பந்த:'' (ஜ்ஞாநஸம்பந்த:)-என்கிறபடியே- அறிவுகொடுத்த வஸிஷ்டாதிக

---

அமோகமான ப்ரபத்தியை, ஜ்ஞாநகார்யமோ சாபலகார்யமோ தெரிகிறதில்லையென்றது - ''ப்ரபத்தி பண்ணியும் வாராதவன் தூதுவிட்டால்வாரான்'' என்கிறவ் வேகமின்றிக்கே, மீளவும் தூதுவிடுகையாலே ஜ்ஞாநகார்யமென்று நிஶ்சயிக்கப்போகாது; அவன்வருகைக்குடலான குணவிஷயகாதயவஸாயம் நெஞ்சிலேகிடக்கையாலே சாபலகார்யமென்றும் நிஶ்சயிக்கப்போகிறதில்லை யென்றபடி. உபயகார்யமுமன்றிக்கே அஜ்ஞாநகார்யமென்றுலோ ? என்ன - **ஶ்ருதிகளும்** இத்யாதி. ஜ்ஞாநகார்யமென்னவொண்ணுமைக்கு ஹேத்வந்தரம் - **பக்ஷிகள்** இத்யாதி. ஶங்காவாக்யம் - **இதரவிஷயங்களில்** இத்யாதி. **ப்ரயோஜநமாகச்சொல்லுகிறது** என்றவநந்தரம், 'சாபலம் ஜ்ஞாநகார்யமென்று சொல்லுகிறபடி யெங்ஙனே' என்று கூட்டிக்கொள்வது. பரிஹாரம் - **அந்தஜ்ஞாந** இத்யாதி. அதாவது - விரக்தியோபாதி பகவத்விஷயத்தில் சாபலமும் ஜ்ஞாநபலமென்றபடி. அந்தஜ்ஞாநபலமென்றது - விரக்திஹேதுவான ஜ்ஞாநபலமென்றபடி. வைராக்யம் ஜ்ஞாநபலமென்னுமதுக்கு ஸம்வாதம் - **ஜ்ஞாநஸ்ய வைராக்யம்** இத்யாதி. சாபலம் ஜ்ஞாநகார்யமென்னுமதுக்கு 'ஜ்ஞாநாநந்தரமாக ஹேதிஸாதிஶய'' இத்யாதி என்று கண்டுகொள்வது. பக்ஷிகள்காலிலேவிழுகிறது அஜ்ஞாநகார்யமென்னுமத்தை ஸோபபத்திகமாக விவரிக்கிருர் - **இனித்தூதுவிட** இத்யாதி. **இத்தா**லென்றது - ஐந்த்ரவ்யாகரணபண்டி**தனை**விடாதே, பக்ஷிகளைவிடுகிற இத்தாலென்றபடி. ஏற்றம் - ப்ரேமாதிக்யம். அதாவது - நாம் ''அஜ்ஞாநமிவர்க்குண்டு'' என்கைக்காகச்சொல்லுகிற இதுதன்னைக்கொண்டே பிராட்டியிலேற்றம் ஸாதிக்கப்பார்த்தால், அதுவுமுண்டென்றபடி. பிராட்டியிலேற்ற முண்டென்கைக்கு ஹேதுவை யருளிச்செய்வாராக, இவளுடையவும் அவளுடையவும் ப்ரதிபத்தியை யருளிச்செய்கிருர் - **இனித்தான் அத்தலையில்** இத்யாதி வாக்யத்வயத்தாலே. இவர் இருக்கிறவிடத்திலே பக்ஷிகளுண்டோ ? என்ன - **பிரிந்தார்** இத்யாதி. அதாவது - அந்யாபதேசஸமாதிக்குச் சேர வருளிச்செய்கிருரென்றபடி. ஆனுல் இவள் நெய்தல்நிலத்திலேயோவிருக்கிருள். திருவண்வண்டூரிலேயன்றோ ? என்ன - **திருவல்லவாழ்**

ஞுக்கு முபகரிக்கவல்லனும்படி யிருப்பானொருவன்,நீர்மையில்வந்தால்''ரிபூணமபிவத்ஸலம்'' (ரிபூணமபிவத்ஸலம்) என்றால் ''ஸஞ்ஜாதபாஷ்ப:'' (ஸஞ்ஜாதபாஷ்ப:) என்னும்படியிறே அதிருப்பது, ஶக்தியில் வந்தால் ''ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:'' (ரஞ்ஜநீயஸ்யவிக்ரமை:) என்று - எதிரிகள்பக்கலிலேகேட்குமத்தனை. இனித்தான், நாயகனுவான் அறிவு நிறைவு ஓர்ப்பு கடைப்பிடி யுடையவனிறே. ' இப்படிப்பட்டகுணங்களை யுடையவனு யிருக்கிறவன் வாராதொழிகைக்குஹேது - அவ்விடங்களிலே ஆர்த்தர் பலருண்டாகையாலே அவர்கள் ரக்ஷணத்திலே யொருப்பட்டு இத்தலையை மறந்தானித்தனை; ரக்ஷணத்திலே யந்வயித்தால் 'அஸ்தமிதாந்யபாவம்'(அஸ்தமிதாந்யபாவம்) என்னும்படியிறே யிருப்பது, ஆனபின்பு ஆர்த்தியை அறிவிக்கவரும்'' என்றுபார்த்தாள். இனி அறிவித்தால் ஆர்த்திக்கு இத்தலையில்மேற்பட்டாரின்றிக்கே யிருக்குமிறே. அறிவிக்குமிடத்தில் தான் கால்நடைதந்துபோகமாட்டாள், தன் பந்துவர்க்கம் தனக்குமுன்னே நோவுபடாரிறே; இனி கால்நடைதந்துபோகவல்லார் வேணுமே; தன் பரிஸரத்தில் வர்த்திக்கிற பக்ஷிகளை '' ஏகதேசவாஸித்வத்தால் வந்த ஸம்பந்தமே நங்கார்யம்செய்து தலைக்கட்டுகைக் குறுப்பு'' என்று பார்த்து, அவற்றின் காலிலேவிழுந்து போகவிடுகிறாள்.

உருத்தோறும், இத்திருவாய்மொழி யருளிச்செய்யப் புக்கவாறே ஜீயர் அருளிச்செய்யும்வார்த்தை - ''பாண்டவர்கள்கார்யத்துக்காகத் தன்னையொக்கி அவர்கள் கழுத்தைக் கட்டிக்கொண்டு கூடத் திரியச்செய்தேயும் அவர்கள்பட்ட வ்யஸநமெல்லாம் படுகிறார்காணு மிவரும்; அவர்கள்தான் ஒருதர்மாபாஸமுண்டு என்றிருக்கையாலே வ்யஸநப்படுகிறார்கள், இவர்க்கு அதுவுமின்றிக்கேயிருக்க என்செய்யப்படுகிறார்'' என்று அருளிச்செய்வர்.

---

*இத்யாதி. திருவல்லவாழை எடுத்தது - அங்குப்போலே திருவண்வண்டூரிலும் புறச்சோலையளவும் போய் அங்கே விழுந்துகிடந்து தூதுவிடுகிறு ளென்கைக்காக. ஸஞ்ஜாதபாஷ்ப: என்னும்படியிறே* **யத்ருப்பது** *- ஸஞ்ஜாதபாஷ்ப: என்று அநுஷ்டானபர்யந்தமாம்படியிறே யதிருப்பதென்றபடி. எதிரிகள்பக்கலிலே யென்றது - ''தான்போலுமென்றெழுந்தான்'' இத்யாதிப்படியே - தன்வீரமொழி யப்பிறர்வீரம் ஸஹியாத ராவணன்பக்கலிலே யென்றபடி. நாயகலக்ஷணம் சொல்லுமளவில் பெருமாள்விஷயமான ப்ரமாணங்களையெடுத்தது - ''ஏறுசேவகனுக்கு'' என்று தூதுக்குவிஷயம் பெருமாளாகையாலே. அந்யாபதேச ஸமாதிக்குச்சேரத்தமிழர் சொல்லுகிற நாயகலக்ஷணமும் இந்தநாயகனுக்குண்டென்கிறார் -* **இனித்தான்** *இத்யாதி. ரக்ஷணத்திலே யொருப்பட்டால் இத்தலையை மறக்க வேணுமோ? என்ன -* **ரக்ஷணத்திலே** *இத்யாதி. அங்கும் ஆர்த்தருண்டே? என்ன -* **இனியறிவித்தால்** *இத்யாதி. தான் போகுதல தோழிமாரைப்போகவிடுதல் செய்யாதே, பக்ஷிகளைத் தூதுவிடுவானென்? என்ன -* **அறிவிக்குமிடத்தில்** *இத்யாதி. உறவல்லாதபக்ஷிகள் தன்கார்யம் செய்யக்கூடுமோ? என்ன -* **தன்பரிஸரத்தில்** *இத்யாதி. ஏகதேச வாஸித்வத்தால் வந்த ஸம்பந்தம் கார்யம்செய்கைக்கு உறுப்பென்றபடி. ஸர்வேஸ்வரனிவரிடத்திலே அதிவ்யாமுக்தனு யிருக்கச்செயதேயும் இவர் அவிச்சிந்நமாக நோவுபடுகிறபடியை யநுஸந்தித்து ஜீயர் ஈடுபட்டருளுகிற ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் -*

**உருத்தோறும்** *இத்யாதி. பாண்டவர்களோடொப்பா ரொருவரோ இவரும்? என்ன -* **அவர்கள்தாம்** *இத்யாதி. தர்மாபாஸங்களைவிட்டு அவன்கைபார்த்திருக்கச்செய்தேயும் இவர்படுகிறதசை யாரைப் போலே யிருக்கிறதென்ன -* **ஸாஹம்** *இத்யாதி. த்ரௌபதி யெல்லாவற்றையும் விட்டு ''அவனே ரக்ஷகன்'' என்றிருந்தாளோ? என்ன - ஹேஹதாவஹி இத்யாதி. ''மஹதி'' என்றதுக்கு ஹாவம் -* **ஆபாஸ** *இத்யாதி. அவனென்றது - ருஷியை. ''ஹரி:'' என்றதுக்கர்த்தம் -* **ஆஸ்ரிதருடைய** *இத்யாதி. ''ஹரி:'' என்றால் விரோதி நிரஸகத்வமாத்ரத்தைக் காட்டுமொழிய,* **தத்ஸ்வபாவத்தைக்**

"[illegible]" (ஸாஹம்கேஶக்ரஹம்ப்ராப்தா - த்வயிஜீவத்யபிப்ரபோ)என்றவள் நிலையிறே இவளது. "[illegible]" (மஹத்யாபதிஸம்ப்ராப்தேஸ்மர்த்தவ்யோபகவாந் ஹரி:)-ஆபாஸரக்ஷகரான பர்த்தாக்களாலும் தன்னாலும் நோக்கிக்கொள்ள வொண்ணாதபடி அவ்வருகுபட்டவாபத்திறே. "[illegible]" (பகவாந்) - பூர்ணரன்றே! அபூர்ணர் கார்யம் செய்யவல்லாரேன்றுகாணும் அவன் நினைவு. "[illegible]" (ஹரி:)-ஆஶ்ரிதருடைய விரோதி நிரஸநமே ஸ்வபாவமாகவுடையவனைப் பற்றினாள். ஜ்ஞாநாதிகுணங்களால் சொன்ன பூர்த்தியிலே ஶக்தியுமுண்டாயிருக்கச் செய்தே "ஹரி:" என்றுவிஶேஷிக்கவேண்டிற்று - அல்லாதார்க்கும் இக்குணங்கள் ஓரோருகால் உண்டாகையாலே; இவனுக்கு அங்ஙனன்று, இது ஸ்வபாவம் என்கைக்காக வேடுத்தது.

---

## முதற்பாட்டு.

---

வைகல்பூங்கழிவாய் வந்துமேயும்குருகினங்காள்!
செய்கோள்செந்நேலுயர் திருவண்வண்டூருறையும்
கைகோள்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
கைகள்கூப்பிச்சோல்லீர் வினையாட்டியேன்காதன்மையே.

*ஆ.—தன்னுடைய நிரவதிக ஸௌந்தர்யத்தாலே என்னுடைய ஸர்வகரணங்களையும் அபஹரித்துப்போய், திருவண்வண்டூரிலுள்ள நிரவதிகைஶ்வர்யத்தாலே என்னை மறந்திருக்கிற எம்பெருமானைக்கண்டு எனக்காக அவனைக் கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன் காதன்மையென்று சிலகுருகுகளை நோக்கி யருளிச்செய்கிறாள்.*

---

காட்டுமோ? என்ன - ஜ்ஞாநாதி இத்யாதி. "[illegible]" இத்யாதி ஸ்தோத்ரே. "[illegible]" இத்யாதி ஸ்ரீஸங்க்ஷேபே. "[illegible]" இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மண:. "[illegible]" இதி யுத்தகாண்டே வைநதேய:. "[illegible]" இதி கிஷ்கிந்தாகாண்டே. "[illegible]" இதி யுத்தகாண்டே ஸம்பாதி ராவண:. "[illegible]" இதி மாலதீமாதவீயே. "[illegible]" இத்யுத்யோகபர்வணி த்ரௌபதீ. தத்ரைவ ஸா, "[illegible]",

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டி சிலகுருகுகளைநோக்கி, திருவண்வண்டூரிலேசென்று என்னுடையதசையை எம்பெருமானுக்கு அறிவியுங்கோளென்கிறாள்.

[வைகல் என்றுதொடங்கி] - நாள்தோறும் அழகிய கழியிலேவந்து மேய்கிற குருகினங்காள். இத்தால் - தன்னுடைய அபேக்ஷிதங்களைச் செய்துமுடிக்கவேண்டும் படி தன்னோடு அவற்றுக்குள்ள கண்ணழிவு சொல்லிற்று. [செய்கொள்செந்நெல் என்று தொடங்கி] - ஓரோமுதலே செய்யை விழுங்கும்படியான செந்நெல் உயர்ந்த திருவண் வண்டூரிலே உறைவதுசெய்து கையுந்திருவாழியுமானவழகையும் முறுவலையுங்காட்டி என்னைத்தோற்பித்திருக்கிறவனைக் கண்டு. [கைகள் என்றுதொடங்கி] - "இங்குநின்றும் போனோம்" என்று வேண்டப்பாடடியாதே உசிதவிநயங்களைப்பண்ணி, பிரிந்தால் தன்னைப்போலேயன்றிக்கே தரியாதபடியான பாபத்தைப்பண்ணின வென்காதன்மை சொல்லுங்கோள். கைகள்கூப்புகை - சிறகுவிரிக்கை, காதன்மை - ஆசைப்பாடு.

ப.—முதற்பாட்டில், "நம்மைத் தன்னழகைக்காட்டி அநந்யார்ஹமாக்கிக் கொண்ட சேஷியானவன் திருவண்வண்டூரில் ஸம்ருத்தியாலே அந்யபரனாயிருக்கிறானாக்கூடும்" என்றுநினைத்து, ஸந்நிஹிதமான சிலகுருகுகளைத் தூதாகப்போகவிடுகிறாள்.

வைகல் - என்றுமொக்க, பூ-அழகிய, கழிவாய் - கழியிலே, வந்து-என்கண் முகப்பேவந்து, மேயும் - மேய்கிற, குருகினங்காள் - குருகினங்காள்! செய்-செய்யை, கொள் - விளாக்கொலைகொள்ளுகிற, செந்நெல் - செந்நெலானது, உயர்-மிகவும்வளருகிற, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே, உறையும் - நித்யவாஸம்பண்ணுகிறபானாய், (ஆஸ்ரிதர்க்கநுபாவ்யமாம்படி), கை-கையிலே, கொள் - இடங்கொண்ட, சக்கரம்-திருவாழியையுடையனாய், என் - அவ்வழகாலே யென்னை வசீகரித்து எனக்கு போக்யமாக்கித்தந்த, கனி-கனிபோன்ற, வாய் - அதரசோபையையுடையனாய், பெருமானை-(இப்படி என்னைஅநந்யார்ஹமாக்கிக்கொண்ட) பரமசேஷியானவனை, கண்டு-கண்டு, கைகள் கூப்பி - அவனுடையசேஷித்வத்துக்குத் தகுதியாம்படி சேஷத்வாநுரூபவ்ருத்தியைப் பண்ணி, வினையாட்டியேன் - விஸ்லேஷஹேதுவான பாபத்தையுடையேனான என்னுடைய, காதன்மை - அபிநிவேசாதிசயத்தை, சொல்லீர் - சொல்லுங்கோள். குருகுகை கூப்புதல் - அநுவ்ருத்திரூபமானசிறகசைத்தல். இத்தால் - ஸாடகருடைய ஸமானதேசவர்த்தித்வத்தால்வந்த ஸந்நிதியும், உத்தேஸ்யவிஷயாநுவ்ருத்தியும் தோற்றுகிறது.

இ.—முதற்பாட்டில், குருகுகளைநோக்கி, அவன்பக்கலிலேசென்று என்னுடையதசையை யறிவியுங்கோ ளென்கிறாள்.

[வைகல்] - நாள்தோறும் - நாயகவ்யாவ்ருத்தி. காதாசித்கமாகக்கலந்து பொகட்டுப்போனவனைப்போலன்றிறே நாள்தோறும்முகங்காட்டுகிற நீங்கள், [பூங்கழிவாய்] - தர்ஸநீயமான கழியென்னுதல், பூத்தகழியென்னுதல். [கழிவாய்] - கழியிடத்து, கழியிலே. பிரிந்தவன் ஸாயகனாகையன்றியே, இருந்ததேசமும் ஸாயகமாகை. இருவர் கூடவநுபவிக்குமிடம் தனித்தால் ம்ருத்யுஸமமாயிறே இருப்பது. [வந்து] - வழிபரிக்கும் தேசத்திலேவந்து உதவினாற்போலேயிறே நீங்கள்ஸந்நிதிபண்ணினபடி. "வஹ்நீரோ ஹநு-மாந்தாஸஜ்ஜதஃ" ஆளிட்டு அறிவிக்கவேண்டும்தசையிலே நீங்களேவந்து. [வந்துமேயும்] - நான் அபேக்ஷியாதிருக்க, "ஸ்வேஹ்ஸஸ்ஸம்ஸ்ரிதஃ" என்னுமா போலேயிறே நீங்கள்செய்தது. என்கார்யம்செய்தபின், இனி உங்கள்கார்யம் செய்ய

வேண்டாவோ, இவள்கார்யம் இங்கேவந்து மேய்கை. [மேயும்குருகினங்காள்] - உப வாஸக்ருஶையாயிருக்கிற என்கார்யம் புஷ்கலமாயிருக்கிறவுங்களுக்குச் செய்யவேண் டாவோ. இரவு உண்டார்க்கு உண்ணாதார்கார்யம் செய்கை பரமன்றோ. [இனங்காள்] - இருவராயிருப்பார்க்குத் தனியர் கார்யம் செய்யவேண்டாவோ. பெருமாள் தனிமையிலே மஹாராஜரும் பரிகரமும் தோற்றினாற்போலேயாயிற்று தனிமையிலே இவைவந்து முகங்காட்டினபடி. [செய்கொள் இத்யாதி] - வாராமல் கால்தாழப்பண்ணிற்று அவ்வூரில் போக்யதையாயிற்று, அவன்குற்றமன்று. ‘‘ஸ்யாமாம் ஹ்ராவஸ்ஸுமொவிநஃ’’. [செய்கொள் செந்நெல்] - ஒருமுதலே ஒருசெய்யைக்கொள்ளும். [உயர்] - செய்க்கு வரம்பென்று ஒருமர்யாதையுண்டு, அதுவுமில்லையிறே ஆகாஶத்துக்கு, உயராநிற்குமித்தனை. [திரு வண்வண்டூர்] - பரமபதவ்யாவ்ருத்தி. [உறையும்] - அவதாரவ்யாவ்ருத்தி. [கைகொள் சக்கரம்] - கைக்கடங்கலும்தானேயாபரணமாயிருக்குமென்னுதல், கையிலேகொண்ட திருவாழியென்னுதல். [என்கனிவாய்] - முறுவலையெனக்கு முற்றூட்டாக்கினவன். [பெருமான்] - திருவபரத்தில்பழுப்புக்கும், கையுந்திருவாழியுமான ஶேர்த்திக்குமாயிற் றிவளெழுதிக்கொடுத்தது. ராஜபுத்ரர்கள்கையிலே இடைச்செறி கடைச்செறிக்குத்தோற் பாரைப்போலே. [கண்டு] - காட்சியிலெனக்கு முற்பாடராகப் பெறுநின்றிகோளிறே. இவளைப்பற்றினார்க் கிவளினுமேற்ற முண்டிறே. ‘‘ஏத்தியிருப்பாரை வெல்லுமே’’ ‘‘வஷவ-ஷாணிஸ்ரீஸாநு’’. [கைகள்கூப்பி] - ‘‘அவனுக்கு மறுக்கவொண்ணாத அஞ் ஜலியைப்பண்ணுங்கோள், பலத்தோடுவ்யபிசரியாத செயலைச்செய்யுங்கோள்’’ என்று பூர்வர்கள் நிர்வஹிப்பர்கள்; பத்தாம்பாட்டிலேயாயிற்றின்னாப்பு ப்ரஸங்கிப்பது. பட்டர் பத்துப்பாட்டிலுமின்னாப்புத்தோற்ற நிர்வஹித்தருளுவர். ‘‘முன்புபோலே’’ என்றி ருந்தே பெரிய முதலிகள், கும்பிடுங்கோள். கும்பிட்டவாறே முகம்பார்ப்பர், பின்னை முகம் மாறுவதற்கு முன்னே என்தஶையைச் சொல்லுங்கோள். [கைகள்கூப்பி] - கைகள் கூப்புகையாவது - சிறகுகளைவிரிக்கை. [சொல்லீர்] - ஒருமஹாபாரதத்துக்குப்போரு மிறே. [வினையாட்டியேன் காதன்மை-சொல்லீர்] - பிரிந்தாலவனைப்போலன்றியேபரிக்க மாட்டாதபடி பாபம்பண்ணினவென்காதன்மை சொல்லீர். அவன் ‘‘வேண்டேன்’’ என் றாலும் விடமாட்டாதபடியான பாபம். வந்த ஆளின்கையிலே வார்த்தைசொல்லிவிடுகை யன்றிக்கே, திர்யக்குகளைக்குறித்து தூதுவிடவேண்டும்படி பாபத்தைப் பண்ணினேன். காதன்மையென்றவாறே - தம்மளவென்றிராமே, என்னுடையகாதன்மை. வன்னெஞ்சர் காதல்போலன்றிறே மெல்லியலார்காதல். மெல்லியலார்காதலளவல்லாதவென் காதன்மை சொல்லீர். சொல்லின் தாழ்வே, வரவுதப்பாதென் றிருக்கிறாள்.

ஈடு—முதற்பாட்டு. சிலகுருகுகளைநோக்கி, திருவண்வண்டூரிலேசென்றெம்பெரு மானுக் கேன்தசையை யறிவியுங்கோ ளென்கிறாள்.

[வைகல்]-உங்கள்தனை நீர்மையுடையார் சிலரோடே கலக்கப் பெறுமையிறே எனச்கிப்பிரிவு விளைந்தது; அவ்விழவெல்லாம் உங்களைக்கொண்டு தீரலாம்படியாயன்றோ

---

முதற்பாட்டு, வைகல் இத்யாதி. ‘‘குருகினங்காள், திருவண்வண்டூருறையும் - பெரு மானைக்கண்டு - சொல்லீர்வினையாட்டியேன் காதன்மை’’ என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - சில இத்யாதி.

‘‘வந்து’’ என்றத்தைக்கடாக்ஷித்துஹாவம் - உங்கள்தனை இத்யாதி. ‘‘வைகல் - வந்து’’ என்றதுக்குஹாவம் - ஒருகால் இத்யாதி. நாடோறும் பூங்கழியிடத்துவந்து. அதாவது - நானிருந்த

வேணக்கிருக்கிறது. ஒருகால் கலந்து போகட்டுப்போனவவனைப் போலன்றிக்கே நீங்களேப் போதும் இங்கே வர்த்திக்கப்பெற்றேனே! உங்கள் நீர்மையில் ஏற்றமிருந்தபடியேன். [வைகல்] - நாடோறும். [பூங்கழிவாய்] - அழகியகழியிடத்து. பூத்த கழியிடத்தென்னவுமாம். ரக்ஷகனானவன் கைவிடுவது, ஸாதகவர்க்கங்களானவை மிகைப்பதான இவ்வளவிலே நீங்கள் முகங்காட்டுவதே. அழகியசோலை, குளிர்ந்த தென்றல், இனியபரிமளந்தொடக்கமான இவையுமுண்டிறே. பிரிந்தவனே ஸாதகனாகையன்றிக்கே, இருந்த தேசமும் ஸாதகமாகை. [வந்து] - * "ஸம்பாதீரே ஹநூமதா ஸஹ்ருத:" போலே, ஆளிட்டறிவிக்குந் தசையிலே நீங்களே வந்து. வழிபறியுண்டவிடத்தே தாய்முகங் காட்டினாற்போலே காணும் பிராட்டியைப்பிரிந்து நோவுபடுகிறசமயத்திலே திருவடி வந்து முகங்காட்டினபடி. (ஹநுமதா) தளர்ந்து "ஆவாரார்துணை" என்று தடுமாறுகிறசமயத்திலே, வெற்றித்தழும்புசுமந்த ஆண்பிள்ளையோடே கூடப்பெற்ற தென்கிறது. (வாநரேண) ஸந்யாஸிவேஷங்கொண்டு வந்து பிரிவைவிளைத்து நலிவுபண்ணுமவனைப்போலன்றிக்கே, செவ்வியானொருவனோடே சேரப்பெறுவதே. (ஹ) ருஷிகொண்டாடுகிறார். போகத்துக்குச் சேர்த்துக்கொள்ளுகிறோம், ஸத்தைநோக்குவாரைப்பெற்றோமிறே! என்று ஹ்ருஷ்டனாகிறன். [வந்து] - அவனைப்போலே தூதர்க்கும் ஆளிட்டழைக்க வேண்டாதொழியப் பெற்றோமே ஆளிட்டழைக்க வேண்டுகிறதிறே யவனை. ஒருகலத்திலேயோக்கவுண்டு ஒரு படுக்கையிலேகிடந்து தூதுபோவாரைப்போலேகாணும் இவற்றின்படி. [மேயும்]-**க்ருதே ஹஸ்த ஸங்கிதம்**" (க்ருஹேபுக்தமஸங்கிதம்) என்னும்படியிருக்கை. [குருகினங்காள்] - "**தர்ஸிதாநி களத்ராணி**"(தர்ஸிதாநிகளத்ராணி)என்கிறபடியேஇதொருசேர்த்தியிருந்தபடியேன்.[வந்துமேயுமித்யாதி]-கிருபாபிகஸாங்கவமுடையார்பக்கலிலே ஸார்யாபுத்ராதிகளோடேசென்று "சோறிடும்" என்று ஸேவிப்பாரைப்போலேகாணும் இவற்றின்படி. குருகினங்காள் - கைகள்கூப்பிச்சொல்லீரென்று க்ரியை. பண்டை முதலிகள், "பத்தாம்

---

*விடத்தே வர்த்தித்துக்கொண்டு புஜிக்கிற குருகினங்களென்ற ஸப்தார்த்தம். "பூத்தகழியிடத்து" என்றதுக்குபாவம்-ரக்ஷகனானவன் இத்யாதி. ஸாதகவர்க்கங்களவையென்ன, அழகியசோலை இத்யாதி. இத்தால்ஹலிதம் - பிரிந்தவனே இத்யாதி. ஸாதகவர்க்கங்கள் மிகைப்பதான இத்தசையிலிவை முகங்காட்டினதுக்கு த்ருஷ்டாந்தம் - ஸம்பா இத்யாதி. "ஸம்பாதீரே ஹநூமதா ஸஹ்ருதா வாநரேண ஹ" இதி ஸங்க்ஷேபே. "ஸம்பாதீரே-ஸஹ்ருத:"என்றதுக்குபாவம்-வழிபறி இத்யாதி. வெற்றித்தழும்புசுமந்தவென்றது - "ஹநூமதா" என்றத்தைப்பற்ற. கொண்டாடுகிறதுக்கு ஹேதுவேதென்ன - போகத்துக்கு இத்யாதி "ஆளிட்டறிவிக்கவேண்டும் தசையிலே" இத்யாதிவாக்யவிவரணம் - அவனைப்போலே இத்யாதி. அவனைப்போலேயென்றது - நாயகனையும் உங்களையிட்டழைக்குமாபோலே யென்றபடி. தூதர்க்குமென்றது-தூதரானவுங்களுக்குமென்றபடி. அன்றிக்கே, திருவடியை இளையபெருமாளையிட்டுப் பெருமாளழைப்பித்தாற் போலே என்னுதல். "மேயும்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் - ஒருகலத்திலே இத்யாதி. அதாவது - "ஏகஸ்த ஸ்ருதிவாஸஸ" என்கிறபடியே - அர்ஜுநனும் க்ருஷ்ணனும் ஒருகலத்திலேபுஜித்து ஒரு படுக்கையிலேகிடந்து க்ருஷ்ணன் தூதுபோனாற்போலேயென்றபடி. "க்ருதாதிதிஸத்க்ருதஸ்ய க்ருஹேபுக்தமஸங்கிதம் । தர்ஸிதாநிகளத்ராணிஸஹாஸநம்கிரீடினா" இதி மஹாபாரதே க்ருஷ்ணம்ப்ரதிகர்ண:. "வந்து, மேயும், இனங்காள்" என்ற பதச்சேர்த்திக்குபாவம்*

பாட்டிலே - ப்ரணயரோஷந்தோற்றச்சொல்லுகிறாள் " என்று நிர்வஹிப்பர்கள். "பாட்டுத்தோறும் - கிலாந்தோற்றச்சொல்லுகிறாள் " என்று பட்டரருளிச்செய்யும்படி. [வந்து மேயுங்குருகினங்காள் - கைகள்கூப்பிச்சொல்லீர்] - என்றும் பிறர்க்குபகரிக்கவே தேடித்திரியுமித்தனையோ, உங்கள்கார்யமும் செய்யவேண்டாவோ. †(இவள்கார்யமிங்கேவந்து மேய்கை. இவற்றின்கார்யமங்கே சென்றுசொல்லுகை.) * உபவாசக்ருசையாயிருக்கிற என்கார்யம் புஷ்கலராயிருக்கிற உங்களுக்குச் செய்யவேண்டாவோ. [செய்கொள்செந்நெல்] - இத்தலையை நினைக்கலாம்படியோ அங்குத்தை போக்யதையிருக்கிறபடி. * "[illegible]" இறே யவன்படி. அத்தேசத்தில் போக்யதையிலே அகப்பட்டிருக்கிறவன் நம்மைநினைக்கப்புகாநின்றானே [செய்கொள்செந்நெல்] - ஒரு முதலேசெய்யை விழுங்கும்படியாயிருக்கை. [உயர்] - அங்குவரம்பில்லாமையாலே முடிய உயராநிற்குமத்தனை. "[illegible]" (அஹமஹம்) என்பாரளவும் செல்லத்தாநுயராநிற்குமத்தனை. [திருவண்வண்டூருறையும்] - "செய்துபோனமாயங்களும்" என்று கூப்பிடவேண்டாதபடியாயிருக்கை. அதாவது - அவதாரவ்யாவ்ருத்தி. [கைகொள்சக்கரத்து] - செந்நெலின்படியாயிருக்கை. கைக்கெல்லாம் தானே ஆபரணமாயிருக்கை. [என்

ப்ர:—(வைகலித்யாதி) —ஸம்க்ஷேபே, "[illegible]॥"

(செய்கொள்செந்நெல்)—விஷ்ணுபுராணே [illegible]॥

யஜுஷி (தை-ஸ்ரு.௧௦)—"[illegible]"

நிருபாதிக இத்யாதி. பாந்தவமுடையார் - தர்மபுத்ராதிகள். புஜிப்பாரைப்போலேயென்றது - க்ருஷ்ணனைப்போலேயென்றபடி. பட்டர்நிர்வாஹத்துக்கு நியாமகம் - "உணர்த்தலூடலுணர்ந்து" என்று ப்ரணயரோஷத்தை ப்ரஸங்கிக்கிறபாட்டு. கிலாம் - ப்ரணயரோஷம். "வந்துமேயும் குருகினங்காள், கைகள்கூப்பிச்சொல்லீர்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - என்றும் இத்யாதி. பிறர்க்குபகரிக்கையாவது - வந்துமேய்கை. பிறர்க்கென்றது - தனக்கென்றபடி. உங்கள் கார்யமென்றது - தூதுபோய் வடிப்பிக்கை. "செய்கொள்" இத்யாதி தேசவர்ணனத்துக்குபாவம் - இத்தலையை இத்யாதி. அங்குத்தை போக்யதையிலே ஸக்தனு யிவ்விடத்தை நினையாதிருக்குமென்கைக்கு ப்ரமாணம் - [illegible] இத்யாதி. "[illegible]" இதி பஞ்சமேம்மே. த்ருஷ்டாந்தத்திற்சொன்னத்தை தார்ஷ்டாந்திகத்திலேயுங்காட்டுகிறார் - அந்தேசத்தில் இத்யாதி - "செந்நெல்" என்ற ஏகவசநார்த்தம் - ஒருமுதலே இத்யாதி. அங்கென்றது - ஆகாசத்திலென்றபடி. "உறையும்" என்றதுக்குபாவம் - செய்துபோன இத்யாதி. செந்நெலைப்போலே கையைமறைத்துக்கொண்டிருக்கிறதோவென்ன - கைக்கெல்லாம் இத்யாதி. முற்றூட்டு - பூர்ணமாகபுஜிப்பிக்கை. "கனிவாய் -

† குண்டலிக்ரந்தம் ஸ்வாசித்கம் வ்யாக்யாநத்துக்குச் சேராது

கனிவாய்] - முறுவலையெனக்கு முற்றூட்டாக்கினவன். [பெருமான்] - வாய்க்கரையிலே எனக்கு ஜீவநத்தையிட்டு என்னை எழுதிக்கொண்டவன். [கைகொள்சக்கரத்தென்கனிவாய்ப்பெருமான்] - ராஜபுத்ரர்கள் கையிலிடைச்செறி கடைச்செறிக்குத் தோற்றிருக்குமா போலே. [பெருமான்] - திருவபரத்தில் பழுப்புக்கும் கையுந்திருவாழியுமான சேர்த்திக்கு மாயிற்று இவளெழுதிக்கொடுத்தது. [கண்டு]-நானநுபவிக்கப்பாரித்த துறைகளெல்லாம் நீங்கள் காணவிறேபுகுகிறது. இவளைப்பற்றினார்க்கிவளிலும் பேறு முற்பட்டிருக்குமிறே. ஸ்ரீ விஹீஷணுதிகள் பக்கலிலேகண்டுகொள்வது. [கைகள்கூப்பி] - இத்தலையில் ராஜகுலங்கொண்டு மேன்மை யடித்திராதேகிடிகோள். அவர் பழையவரல்லர், பெருமதிப்பர்கிடிகோள், தொழுதுகொடுநில்லுங்கோள். "தலையில் வணங்கவுமாங்கொலோ" என்றிருக்குமவளிறே யிவள்தான், இவள்பரிகரமுமப்படியேயிறே. [சொல்லீர்] - தொழுதவநந்தரம் முகம்பார்த்துக்கொடுநிற்பர், பின்னை யுங்களுக்கு வேண்டினபடிசொல்லுங்கோள். ப்ரணயித்வத்திலே சிறிதுகோத்தையுண்டானாலும் தானுனதன்மைபோகாதே. [சொல்லீர்] - இத்தலையில் வைவர்ண்யந்தொடக்கமான ஆற்றாமையடங்கலும் உங்கள் பாசுரத்தில் அவனறியும்படி சொல்லுங்கோள். ஒரு பாசுரமிட்டுச் சொல்லவேண்டாவோவென்னில்; [காதன்மை-சொல்லீர்] காதன்மையென்றவாறே-தம்மளவிலே யித்தலைக்குள்ளதென்றிருப்பர்; "ஸத்ருஶ விஷயமானுல், வினையுமவையும் ஸத்ருஶமாயிருப்பது" என்றிறே யவரிருப்பது. அல்லாத ஏற்றங்களோபாதியிறே ஆற்றாமையில்வந்தால் இருக்கும்படியுமித்தலைக்கு.[வினையாட்டியேன்காதன்மை - சொல்லீர்] - அவர் "இவ்வூர்க்கவ்வூர்காதம்" என்றிருந்தால், அப்படியே "இவ்வூர்க்கவ்வூர்காதம்" என்றிருக்கமாட்டாத பாபத்தைப்பண்ணின என்னுடையகாதல். தமக்கித்தலையை யொழியச் செல்லும்படியாயிருந்தாலும், எனக்கத்தலையை யொழியச்செல்லாதபடியான பாபத்தைப்பண்ணினேன். அங்குநின்றும் வந்தார்க்கு வார்த்தைசொல்லிவிடவும் பெற்றிலேன்.[வினையாட்டியேன் காதல்சொல்லீர்]-வன்னெஞ்சர்காதல்போலன்றிறே மேன்

---

*பெருமான்" என்றுகூட்டிஹாவம் - **வாய்க்கரையிலே** இத்யாதி. வாய்க்கரை - அபரம். "கைகொள் சக்கரம் பெருமான்" என்றுகூட்டிஹாவம் - **ராஜபுத்ரர்கள்** இத்யாதி. இடைச்செறி கடைச்செறியாவது - ஒருவிரலிலேகீழும்மேலுமிடுகிற மோதிரங்கள். இவளஹிமதாலாஹத்தாலே நோவுபடாநிற்க இவளைப்பற்றினார்க்குப் பேறுமுற்படக்கூடுமோவென்ன, **இவளைப்பற்றினார்க்கு** இத்யாதி. "ஸீதாஸமாராயநிவேஶ" இத்யாதியான ஆநுகூல்யமாத்ரத்தை - பற்றுகையாகவெண்ணி- 'ஸ்ரீவிஹீஷணுதிகள்பக்கலிலேகண்டுகொள்வது' என்கிறுர்: ஆதிசப்தத்தாலே- திருவடியைச்சொல்லுகிறது. * **வஸிஷ்஠ம்மொஹநமுநேதஃ** இறே. இவள்பரிகரங்களுக்குக் கைகூப்பம்வணுமோவென்ன - **தலையில்** இத்யாதி. இது - பூர்வர்கள் நிர்வாஹத்திலே. உன்னையுபேக்ஷித்தவன் நாங்கள் தொழுதவாறே முகங்காட்டுமோவென்ன - **ப்ரணயித்வத்திலே** இத்யாதி. தானுனதன்மையாவது - அஞ்சலிவஶ்யதையாதல், க்ருபாபாரதந்த்ர்யமாதல். 'ஒருபாசுரமிட்டுச்சொல்லவேண்டாவோவென்னில் காதன்மைசொல்லீர்' என்றவாக்யத்தைய நுசந்தித்தவநந்தரம், **இத்தலையில் வைவர்ண்யம்** இத்யாதிவாக்ய மநுசந்தேயம். அப்படியிருக்குகைக்குஹேதுவேதென்ன - ஸத்ருஶவிஷயம் இத்யாதி. "அவரிருப்பர்" என்கிறதென், **வஸ்துஸ்த்திதியுமப்படியன்றோ**வென்ன - **அல்லாதவேற்றங்கள்** இத்யாதி. அல்லாதவேற்றங்களாவன - "ஸவிதேக்ஷணா" என்கிறது முதலானவை. "வினையாட்டியேன்" என்றதுக்கு - பிராட்டியில் வ்யாவ்ருத்தியாகஹாவாந்தரம் - **அங்குநின்றும்** இத்யாதி. உக்தார்த்தத்வயத்தையுமடைவே விவரிக்கிறுர் - **வன்னெஞ்சர்** இத்யாதி வாக்ய த்வயத்தாலே. இத்தால் -*

னெஞ்சர் காதல்; மெல்லியலார் காதலளவல்லாத வென்காதல் சொல்லீர். சொல்லுவார் தாழ்வே; வரவுதப்பா தென்றிருக்கிருள்.

## இரண்டாம் பாட்டு.

காதல்மென்பேடையோடு உடன்மேயுங்கருநாராய்!
வேதவேள்வியொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர்
நாதன்ஞாலமெல்லாமுண்டநம்பெருமானைக்கண்டு
பாதம்கைதொழுதுபணியீர்அடியேன்திறமே.

ஆ.—(காதல்) பரமகாருணிகனாய் ஆஶ்ரித வத்ஸலனாயிருந்த திருவண்வண்டூர் நாதனைக்கண்டு, பாதம் கைதொழுது பணியீரடியேன் திறமென்கிருள்.

ஒ.—இரண்டாம்பாட்டில், பரமகாருணிகனான திருவண்வண்டூர் நாயனுக்கு என்திறத்தை யறிவியுங்கோளென்று சில நாரைகளைக்குறித்துச் சொல்லுகிருள்.

[காதலென்று தொடங்கி] - விரஹவ்யஸநஸஹமல்லாதபடி ஸ்நேஹத்தை யுடைத்தாய் அதுக்குமேலே, விஶ்லேஷிக்கில் முடியும்படியானமார்த்வத்தை யுடைத்தான பேடையையிழவாமைக்காக அத்தோடு பிரியாதேமேய்கிற கருநாராய். [வேத வேள்வி என்றுதொடங்கி] - வேதகோஷங்களும், வைதிகமானயாகங்களிலுண்டான. ப்ரேஷாதிகோஷங்களும் மிக்கிருந்துள்ள திருவண்வண்டூருக்கு நாயனாய் ப்ரளயங்கொள்ளுகிற ஜகத்தையெல்லாம் திருவயிற்றிலேவைத்து உபகரித்தருளினசெயலாலே நம்மை அடிமைகொண்டிருக்கிறவனைக்கண்டு. [பாதமென்றுதொடங்கி]-கைதொழுகைபோராது, முதலிகளாயிருப்பர், தீர்க்கப்ரணமத்தைப்பண்ணி. எம்பெருமான் பக்கலிலேபோகிறன சிலவாகையாலே, அடியேனென்கிருள்.

ப.—அநந்தரம், ஆபத்ஸகனான அந்தசேஷியைக்குறித்து, பேடையோடே மேய்கிற நாரையைப் போகவிடுகிருள்.

காதல் - ப்ராவண்யாதிசயத்தாலே, மென் - பிரிவுபொறுக்கமாட்டாத மென்மையையுடைய, பெடையோடு - பேடையோடே, உடன்-கூட, மேயும்-மேயாநிற்கிற, கரு - ஶ்யாமளமான நிறத்தையுடைய, நாராய் - நாராய், வேதவொலி - வேதகோஷமும், வேள்வியொலி - வைதிகக்ரியாகோலாஹலமும், முழங்கும் - முழங்கும்படியாய், தண் - ஸாம்ஸாரிகதாபம் தட்டாத குளிர்த்தியையுடைய, திருவண்வண்டூர் - திருவண்வண்டூருக்கு, நாதன் - ஸ்வாமியாய், ஞாலமெல்லாம் - ஸகலஜகத்தையும், உண்ட-ப்ரளயங்கொள்ளாமல் வயிற்றிலேவைத்துநோக்கின ஆபத்ஸகத்வத்தை, நம் - நமக்கு ப்ரகாசிப்பித்த, பெருமானை - பெரியவனை, கண்டு - நான் காண்கைக்குறுப்பாக முன்னே கண்டு, பாதம் - அவன் திருவடிகளைக்குறித்து, கைதொழுது - அஞ்சலி பண்ணி, அடியேன்-அவனுக்கு சேஷபூதையான என், திறம்-இடையாட்டமாக, பணியீர்-வார்த்தை சொல்லுவீராகவேணும்.

பன்மை - பெடையோடேகூட்டிச் சொல்லுகிறது. பணியீரென்று - கௌரவந் தோற்றுகிறது. அடியேனென்று - வடகவிஷயமாகவுமாம். இத்தால் - வடகருடைய அபிமதஸாஹசர்யமும், ஆபிரூப்யமு முத்தேஶ்யமென்று கருத்து.

---

பெருமாள் காதலையும் பிராட்டிகாதலையும்பற்ற, உபயாநுபவத்தாலேபிறந்த இவர்காதல் வ்யாவ்ருத்தமென்றபடி. மெல்லியலார் ம்ருதுஸ்வபாவைகள். வைகல் பூங்கழிவாய்தொடங்கி அடைவே யந்வயம்.

தீர்வதோருவண்ணம் மாற்றங் கோண்டருளீர்] - என்க்லேஶம் தீருவதோருப்ரகாரம் வார்த்தைகோண்டு வந்தருளிச் செய்யவேணும். தூதுவிடுகிற தான் ஜநகராஜன் திருமகளாகவுமாம், விடுகிறது திர்யக்குக்களையாகவுமாம், ஹகவத்விஷயத்தில்வடகரா யிருப்பாரை இங்ஙனல்லது சோல்லவோண்ணாதுகாணும். (மையல் - ப்ரமமும், க்லேஶமும், மோஹமும்.)

## ஏழாம் பாட்டு.

ஒருவண்ணஞ்சென்றுபுக்கு எனக்கோன்றுரையோண்கிளியே !
செருவோண்பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத்திருவண்வண்டூர்
கருவண்ணஞ்செய்யவாய் செய்யகண்செய்யகைசெய்யகால்
செருவோண்சக்கரஞ்சங்கு அடையாளந்திருந்தக்கண்டே.

**ஆ.**—(ஒருவண்ணம்) திருவண்வண்டூரில் சோலைகளுடையவும், தாமரைத் தடாகங்களினுடையவும் அதிமநோஹரமான வழகுகளிலே அகப்படாதே யொருவண்ணம் சென்றுபுக்கு, என்னோடுள்ள கலவியாலே புதுக்கணித்த திருநிறத்தையும் திருப்பவளத்தையும் திருக்கண்களையும் திருக்கைகளையும் திருவடிகளையும் திருவாழியையும் திருச்சங்கையும் தனக்கு திவ்யசிஹ்நமாகவுடையனா யிருந்தவனைத் திருந்தக்கண்டு எனக்கொன்றுரை யொண்கிளியே! என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், "நாங்களவனை யறியும்படியெங்ஙனே" என்றுகேட்ட கிளிகளைக்குறித்து அவனுடைய அடையாளங்களைச்சொல்லி, இவ்வடையாளப்படியே அவனை அழகிதாகக்கண்டு எனக்காக அவனுக்கொரு வார்த்தை யறிவியுங்கோளென்கிறாள்.

[ஒருவண்ணம் சென்றுபுக்கு] - ஐஶ்வர்யதரங்கங்களாலே புகுகையரிது, ஆகிலும்வருந்தி ஒருபடிசென்றுபுக்கு அவ்வூரில் ஹோக்யதையாலே அவ்வளவும்சென்று புகுகையரிது, ஆகிலுமொருபடிசென்று புக்கென்றுமாம். [எனக்கொன்றுரையொண் கிளியே]-உன்னுடைய ஸஹசரத்தோடே கலக்கையாலே அழகுபெற்றிருக்கிற கிளியே! எனக்காக அவனுக்கு ஒருவார்த்தை அறிவிக்கவேணும். [செருவென்று தொடங்கி] - இசலிபூக்கும் பொழிலையுடைத்தாய் அப்பொழிலினுதிர்ந்த தாதுகளாலே சிவந்த பர்யந்தங்களையுடைய, திருவண்வண்டூரிலே. [கருவண்ணமென்றுமேலுக்கு] - என்னை விஶ்லேஷித்ததுக்காக வாட்டமில்லாத திவ்யாவயவங்களையுடையனாய் யுத்தத்தில் உஜ்ஜ்வலமான திருவாழியையும் ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் தனக்கு திவ்யசிஹ்நமாகவுடையனாயிருந்தவனை வ்யக்தமாகக் கண்டு.

---

ஃவாராமஂவூஉக்ஷிணஃ । ந்யெஷயஉயொத்ஸாஉரூஷ்டிஃ ரவஸீதெகிதக்ஷதஃ" இதி ஸங்க்ஷேபே. சொல்லீரென்னாதே, "அருளீர்" என்றதுக்கு ஹாவம் - தூதுவிடுகிற இத்யாதி. புன்னை மேலுறை பூங்குயில்காள், போற்றியானித்யாரப்ய, கண்டு - மையல்தீர்வதொருவண்ணம் - மாற்றங் கொண்டருளீ ரித்யந்வயஃ. மையல் - வ்யாமோஹமும், க்லேஶமும், ப்ரமமும். மாற்றம் – மறுமாற்றம், ப்ரத்யுத்தரம். (கூ)

ப.—அநந்தரம், அஸாதாரண உர்ஸநீய லக்ஷணனுனவனைக்குறித்து ஒரு கிளியைப் போகவிடுகிறுள்.

ஒண்-வடிவழகாலே யவனையொப்புச் சொல்லலாம்படியான வைலக்ஷண்யத்தை யுடைய, கிளியே - கிளியே, செரு - பரஸ்பர ஸ்பர்ஶங்களுக்களைப்போலே யிசலிபிசலி, ஒண்-அழகிய, பூ-பூக்களையுண்டாக்கும், பொழில் - பொழில், சூழ்-சூழ்ந்து, அந்தப் புஷ்பபராகத்தாலே, செக்கர்-செக்கர், வேலை-காலத்தையுடைத்தான, திருவண்வண்டூர்-திருவண்வண்டூரிலே, (பொழிலின் ஹோக்யதையிலகப்படாதே), ஒருவண்ணம் - ஒருபடி, சென்று - சென்று, புக்கு-புக்கு, (அந்த அமரர்பெருமானுடைய), கரு-ஶ்யாமளமான, வண்ணம் - வடிவும், செய்ய - சிவந்த, வாய் - வாயும், செய்ய-செய்ய, கண்-கண்ணும், செய்ய-செய்ய, கை-கையும், செய்ய-செய்ய, கால்-காலும், செரு-இவ்வழகுக்கு ஹோக்தாக்களானுருடைய விரோயிநிரஸநத்திலே யுத்யுக்தமாய், ஒண்-ஹோக்யமானவேஷத்தை யுடைத்தான, சக்கரம் - திருவாழியும், சங்கு-ஸ்ரீபாஞ்சஜந்யமுமாகிற, அடையாளம் - அடையாளங்களை, திருந்த - அபரோக்ஷித்து, கண்டு - கண்டு, எனக்கு - அப்படிகாண வாசைப்பட்டிருக்கிறவெனக்கு, (இனிதாக), ஒன்று-ஒருவார்த்தை, உரை-சொல்லவேணும். கண்டபடிவந்தெனக்கொருவார்த்தை சொல்லவேணுமென்றுமாம். இத்தால் - வுடகருடைய பகவத்ஸமாநாகாரதை தோற்றுகிறது.

இ.—ஏழாம்பாட்டில், சிலகிளிகளைக்குறித்து, அவனுடைய அடையாளங்களைச்சொல்லி, இவ்வடையாளப்படியே கண்டெனக்காக வொருவார்த்தை சொல்லுங்கோளென்கிறுள்.

[ஒருவண்ணம் சென்றுபுக்கு] - வழியிலே நெஞ்சையபஹரிக்கும் ஹோக்யதையையுடைத்து, அதில் கால்தாழாதேயொருபடி சென்றுபுக்கு; "ஸதூஷஞ வாஶ ஆராமஸீதீத்" என்னுமாபோலே, ஐஶ்வர்யதரங்கங்களாலே புகுகையரிது, வருந்திபுக்கென்னவுமாம். இப்போது முதலிகள், பிரப்புவந்துவிழும், அதுக்காகப் பிற்காலியாதே மேல்விழுங்கோளென்கை. [எனக்கு] - "நிவேதயதஶமாஂ" என்கிறபடியே வடிவைக் காட்டுகிறுள். அங்குத்தை வார்த்தை கேட்டாலல்லது யரிக்கமாட்டாத வெனக்கு. [ஒன்றுரை] - ஒரு நல்வார்த்தை சொல்லு [ஒண்கிளியே] - ஸஹசரத்தோடே கூடியிருக்கையாலே யழகுபெற்றிருக்கிறகிளியே! மௌக்த்யமும் பேச்சும் வாயிற்பழுப்பும் வடிவிற்பசுமையும் அவனோடு போலியாயிருக்கையாலே, உன்னைக்கண்டு கொண்டிருக்க வமைந்ததென்றுமாம். [செருவொண்பூம்பொழில்] - செருவை விளைப்பதாய் உர்ஸநீயமான பூம்பொழில், "என்னைப்பாராதே பூவைப்பார்த்தாய், உன்னுடம்பு பூநாறிற்று, வேற்றுடம்பு" என்று மிதுநங்களைச் சீறுபாறென்னப்பண்ணுமென்னுதல்; "சலங்கொண்டு மலர்சொரியும்" என்று இசலியிசலிப்பூக்களைச் சொரியாநிற்குமென்னுதல். [செக்கர்வேலை] - பொழிலினுதிர்ந்த தாதுக்களாலே சிவந்த பர்யந்தங்களையுடைத்தென்னுதல். கடற்கரையாகையாலே சிவந்த மணலீட்டையுடைத்தென்னுதல். [கருவண்ணமித்யாதி] - உனக்கு வழியில் விடாயெல்லாங்கெடும்படி வர்ஷுக வலாஹகம் போலே யிருக்கிற திருநிறத்தையும் அதுக்கு பரபாகமாய்த் தாமரைத்தடாகம் பரப்புமாறப் பூத்தாப்போலேயிருக்கிற அவயவங்களையும் காணவிறே புகுகிறது. கலவியோடு பிரிவோடு வாசியற ஒருபடிப்பட்டிருக்கிறவரை. [கருவண்ணம்] - கண்டார்க்குவிடாய் கெடும்வடிவு. [செய்யவாய்] - அவ்வடிவிலே யிழிந்தவர்கள் துவக்குண்ணும்முறுவல்.

[செய்யகண்] - அநங்யார்ஹமாக்குங்கண். [செய்யகை] - அநங்யார்ஹமானுரை யணைக்குங்கை. [செய்யகால்] - ஸபர்ஶத்துக்குத்தோற்று விழுந்திருவடிகள். [செருவொண் சக்கரம் சங்கு] - அஸ்த்ராநேஹய ஶங்கைபண்ணி யுஜ்ஜ்வலமான திவ்யாயுதங்கள். "இன்னுரென்றறியேன்." என்று கிட்டினுரைமதிகெடுக்கும் திவ்யாயுதங்கள். [அடையாளம்] - திவ்யாவயவத்தோபாதி திவ்யாயுதங்களும் அஸாதாரண சிஹ்நமாகை. "யாநிராஜஸ்ய விஹ்நாநி லக்ஷணஸ்யயாநிவை". [திருந்தக்கண்டே] - என்னைப் போலே மாநஸமாகவன்றிக்கே, வ்யக்தமாகக்கண்டு.

ஈடு.—ஏழாம்பாட்டு. சிலகிளிகளைக்குறித்து, அவனடையாளங்களைச்சொல்லி, இவ்வடையாளப்படியேகண்டு எனக்காக வொருவார்த்தை சொல்லுங்கோளென்கிறுள்.

[ஒருவண்ணம்சென்றுபுக்கு] - இதுக்கிரண்டுபடியாக வருளிச்செய்வர். இத்தலையில் தனிமைநினையாதேபோய் நிற்கையாலே, போரமுதலிகளாயிருப்பர்; மேன்மேல னப்பிரம்புகள்விழும், அத்தைப்பொறுத்துப்போய்ப் புகுங்கோள். அன்றியே, வழியிலே நெஞ்சையபஹரிக்கும் போக்யதையையுடைத்து; அதில் கால்தாழாதே வருந்தி யொருபடி சென்றுபுக்கு. "ஸததந்த்ரபுரத்வாரம்ஸமதீத்ய" (ஸததந்த்ரபுரத்வாரம்ஸமதீத்ய) "பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு" என்னுமாபோலே. "ஸாம்ஸிசஸ்புல்லாநிநதீம்சவிமலோதகாம் । நிரீக்ஷமாணா" (ஸாம்ஸிசஸ்புல்லாநிநதீம்சவிமலோதகாம் । நிரீக்ஷமாணு) இத்யாதி. வழியைப்பாராதே போனுர்களென்கை. "கார்யவஶாஜ்ஜக்மு:" (கார்யவஶாத் - ஜக்மு:) கார்யவஶராய்க்கொண்டு போனுர்கள். அப்படியே போக்யதை யளவிறந்திருக்கையினுலே, இவற்றில் கால்தாழாதே போய்ப் புகுகை சாலப்பணியாயிருக்கும். [எனக்கு]-பரிஹவத்துக்கு உங்களுக்கிருக்கலாம்படியோ! நானிருக்கிறது. "ஏஹிபஶ்யஶரீராணி" (ஏஹிபஶ்யஶரீராணி) 'நிவேதயத'

ஏழாம்பாட்டு.—ஒருவண்ணம் இத்யாதி. "ஒண்கிளியே, கருவண்ணம் செய்ய வாய் தொடங்கி, திருந்தக்கண்டு - எனக்கொன்றுரை" என்கிறவற்றைக்கடாக்ஷித்தவதாரிகை - சிலகிளிகளை இத்யாதி.

பட்டர்நிர்வாஹம் - இத்தலையில் இத்யாதி. பூர்வர்கள் நிர்வாஹம் - அன்றியே இத்யாதி. போக்யதையாலேகடந்துபோகவொண்ணுமைக்கு ப்ரமாணத்ரயம்-ஸததந்த்ரபுர இத்யாதி. (அதீத்ய) என்னுதே, (ஸமதீத்ய) என்கையாலும், (கடந்து) என்கையாலும் - போக்யதையாலே, கடந்து போகையிலுள்ள வருமைதோற்றுகிறது. "ஸததந்த்ரபுரத்வாரம்ஸமதீத்யஜநாகுலம் । த்விதீயாம் கக்ஷ்யாமாஸாத்ய" இத்யயோத்யாகாண்டே ராமாஹ்வாநார்த்தம் ஸுமந்த்ர:. தத்ரைவ,ம்ருதேதஶரதேபரதாஹ்வாநார்த்தம் கச்சந்தோ தூதா:. "ஸாம்ஸிசஸ்புல்லாநி நதீம்சவிமலோதகாம் । நிரீக்ஷமாணாஜக்முஸ்தே தூதா:கார்யவஶாத்த்ருதம்" "நிரீக்ஷமாணா:" என்னுநிற்க, (பாராதேபோனுர்கள்) என்கிறதென்கொண்டென்ன; மேலே, "கார்யவஶாத்த்ருதம்" என்றிருக்கையாலே, பார்த்துவைத்தும் அதிலந்வயமில்லாமல் - வழியில் போக்யதையிலே ஈடுபடாதேபோனுர்களென்கிறுர் - கார்யவஶாத் இத்யாதி. 'பொன்னியலுமாடக்கவாடங்கடந்துபுக்கு' பொன்னுலே பண்ணப்பட்டமாடங்களில் வாசற்கதவுகளைக் கடந்துள்ளேபுக்கென்றபடி. பெரியதிருமடல். சாலப்பணியாயிருக்கும் - மிகவும் ப்ரயாஸமாயிருக்கும். பிரம்புகள் விழாநிற்கப்போகப்போமோவென்ன; பட்டர்நிர்வாஹத்திலே யருளிச்செய்கிறுர் - பரிபவத்துக்கு இத்யாதி. அதாவது - என்னுர்த்தியைக் கண்டால், அவன்பண்ணுகிற பரிபவங்கண்டு

(நிவேதயதமாம்) என்கிறபடியே வடிவைக்காட்டுகிருள். என்னைக்கண்ட வுங்களுக்கு, ஹோக்யதையிலே நெஞ்சுசெல்லுதல், பரிஹவங்கண்டிருய்த்தல் செய்யலாம்படியோ விருக்கிறது. பிறர்காரியம் செய்வார்க்கவை பார்க்கவேண்ணுமோ. [ஒன்றுரை] - ஒருவார்த்தை சொல்லு. அன்றியே, என்னுற்றுமையாலே சொல்லுகிறேனத்தனை, இருகால்மட்டுச் சொல்லுகை மிகையாம்படிகிடிகோளவனிருப்பதென்றுமாம். ஹோக்யதையாலே கால் கட்டுப்பட்டு நின்றுனித்தனை. ஆர்த்தவிஷய மொருதலையானுல், ஹோக்யதையிலே நெஞ்சுசெல்லுதல், மறுத்துச்சொல்லப் பொறுத்தல்செய்யவல்ல விஷயமன்றுகிடிகோள். [எனக்கொன்றுரை] - என்னிடையாட்டமொன்றுசொல்லுங்கோள். [ஒண்கிளியே] - மௌக்த்யமும் பேச்சும் வாயில் பழுப்பும் வடிவில் பசுமையுமவனோடு பொலியர் யிருக்கையாலே உன்னைக் கண்டுகொண்டிருக்க வமைந்திருக்க, கைப்புகுந்த வுங்களையுமிழக்கப் புகுகிறேனித்தனையிறே. [செருவ்வாண்பூம்பொழில்சூழ்] - செருவை விளைப்பிப்பதாய் அழகிதான பூம்பொழிலாலே சூழப்பட்டிருக்கை. அங்குமிதுநமாய் வர்த்திப்பார்க்கெல்லாம் நித்யவிப்ரதிபத்தியாய்ச் செல்லாநிற்குமத்தனை. அதாவது - "என்னைப்பாராதே பூவை யமைந்திருக்கப்பார்த்தாய்; †(அமைந்திருக்கப்பார்க்கையாவது - நாயகனைப்பாராதே "நமக்குப்பூவேயமையும்" என்றுபார்க்கை.) நான் பறிக்க நினைத்த பூவைப்பறித்தாய், அணைப்பதற்குமுன்னே யுன்னுடம்பு பூ நாறிற்று" என்றிப்படி சீறுபாறேன்று செல்லாநிற்குமத்தனை. "சலங்கொண்டு மலர் சொரியும்" என்கிறபடியே இசலிப்பூக்குமென்றுமாம். [செக்கர்வேலைத்திருவண்வண்டூர்] - இளமணலெக்கல்களிலே விழுந்த பூக்களின் தாதுக்களாலும் சுண்ணங்களாலும் சிவந்த

---

உங்களுக்குப் பிற்காலிக்கலாயிருக்கிறதோ? என்றபடி. "எனக்கு" என்கிறவித்தால் - ஆர்த்திதோற்றமோவென்ன; "ராக்ஷஸோ வா மனுஷ்யோ வா ஸந்நிஹிதம் ராவணே" என்கிறபடியே வேஷங்கண்டபோதே யார்த்தியுந் தெரியுமென்னுமத்தை ப்ரமாணகதநமுகேந ஊர்ஜிப்பிக்கிறுர் - ஸஹிவஸ்ய இத்யாதி. "ஸஹிவஸ்யஸரீராணி நிஹந்தாஸாவிதாதநாம். ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராணி ப்ராஹ்மணாநாம் மஹாத்மநாம்" இத்யாரண்யகாண்டே ராமம்ப்ரதிருஷய:. "ஸர்வலோகஸரண்யாய ராகவாய மஹாத்மநே। நிவேதயதமாம்க்ஷிப்ரம் விபீஷண முபஸ்திதம்" இதியுத்தகாண்டே விபீஷண:. பட்டருடையவும் பூர்வர்களுடையவும் நிர்வாஹத்வய விவரணம் - **என்னைக்கண்ட** இத்யாதி. பரிபவாதிகள் பாராமலுங்காரியம் செய்யவேண்டுகிறதென்னென்ன - **பிறர்காரியம்** இத்யாதி. பிறர்காரியம்செய்வார்க்கு - பரோபகாரஸீலர்க்கு. "ஒன்றுரை" என்றதுக்குமுந்தினவர்த்தம் - "வாவாயஸஹோவாநஹி" என்னுமாபோலே யொருவார்த்தை மாத்ரம் சொல் என்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, ஒருகால்சொல்ல வமையுமென்றபடி. இப்படிஸாலபனுல், இத்தனைநாளாக உன்னையுபேக்ஷித்து வாராமலிருப்பானென் என்ன - **போக்யதையாலே** இத்யாதி. "எனக்கு" என்றதுக்கு - பாட்டினவதாரிகையிலே 'எனக்காக' என்றருளிச்செய்து, இங்கேயர்த்தாந்தரம் - **என்னிடையாட்டம்** இத்யாதி. இடையாட்டமாவது - வைவர்ண்யம், கார்ஸ்யந் தொடக்கமானவை. இடையாட்டம் - வ்யாபாரம். * ஒண்மைக்குயர்த்தமருளிச்செய்துகொண்டு, அதில் இவளுக்கு விவக்ஷிதமான ஹார்த்தபாவத்தை யருளிச்செய்கிறுர் - **மௌக்த்யமும்** இத்யாதி. செரு - யுத்தம். ஆர்க்குச்செருவைவிளைப்பிக்குமென்ன - **அங்குமிதுநம்** இத்யாதி. "செரு" என்றதுக்கு - ஸ்பர்த்தையாகவர்த்தாந்தரம் - **சலங்கொண்டு** இத்யாதி. இஸலியிஸலிமலரைச்சொரிகிற வித்யர்த்த:. திருமொழி மூன்றும்பத்து ஒன்பதாந்திருமொழி முதற்பாட்டு,—**சலங்கொண்டவிரணியன்** இத்யாதி. சலம் - வலம். "செக்கர்வேலை" - (சிவந்தபர்யந்தம்) வேலைசிவந்திருக்கைக்கடியேதென்ன - **இளமணல்** இத்யாதி. தாது - உள்ளிதழ். சுண்ணம் - ரஜஸ்ஸு. அப்படி அகவாயிலுள்ள

பர்யந்தங்களை யுடைத்தாயிருக்கை. கடற்கரையாகையாலே சிவந்தமணலீட்டை யுடைத் தேன்னுதல். இவையெல்லாவற்றாலும் - ஹோகயோக்யமான தேசமென்றபடி. [கருவண்ணம்] - இத்தலையை யஙங்யார்ஹமாக வெழுதிக்கோண்ட வடிவிருக்கிறபடி. [செய்யவாய்] - அதுதான் மிகையாம்படி, "நானுனக்கு" என்றாற்போலே சோல்லப்புக்கு விக்கின திருப்பவளம். [செய்யகண்] - "அது உக்திமாத்ரமன்று, அகவாயிலுமுண்டு" என்றுதோற்றுகிற திருக்கண்கள். அகவாயிலுள்ளதுக்கெல்லா மானைத்தாளிறே திருக்கண்கள். அத்தை க்ரியாபர்யந்தமாக அநுஷ்டிக்கிறதிருக்கைகள். அவையத்தனைக்கும் தோற்றுவிழும் துறை, திருவடிகள். [செருவோண்சக்கரம்சங்கு] - இவ்வடிவழகையெல்லாம் காத்தூட்டவற்றுமாய், அஸ்யாநேஹயஙங்கைபண்ணி யுத்தோங்முவமாய்,கைகழியப்போய்நின்றுரக்ஷிப்பதும், கைவிடாதே வாய்க்கரையிலேநின்று ரக்ஷிப்பதுமான திவ்யாயுதங்கள். கிட்டினுரை "இன்னாரேன்றறியேன்" என்று மதிமயங்கப்பண்ணுவிக்கும் திவ்யாயுதங்கள். [அடையாளம்] - திவ்யாவயவத்தோபாதி திவ்யாயுதங்களும் அஸாதாரண சிஹ்நமாகை. "யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச யாநி வை"(யாநிராமஸ்யசிஹ்நாநிலக்ஷ்மணஸ்யச யாநிவை)[திருந்தக்கண்டே]என்னைப்போலேமாநஸமாகவன்றிக்கே வ்யக்தமாகக்கண்டு. இவ்விஷயத்தில் காட்சியிறேப்ரயோஜநம், அது உங்களுக்கு முற்படப்பேற்றதே. பிராட்டிகார்யம் செய்தால், அவளுக்குமுன்னே இவனுக்குப்பேறு முற்பட்டிருக்குமிறே. *வஸிஷ்டே ஹநூமதி இறே. [திருந்தக்கண்டே] இத்தலையில்வைவர்ண்யங்கண்ட நெஞ்சாறலெல்

---

ப்ர:—(திருந்தக்கண்டே)—ஸுந்தரகாண்டே [க] "ஹர்ஷஸ்வஸ்திவத ஸ்வ இத்யாதி॥ கரு॥ உத்தம்ய ஸ்ரீ திஹ்ருஷ்டா ஜ்ஞாநாந்வஸம்வஸிஷ்டஸஜே। ஹநூ ஸஜ்ஜஹாரதாநம் ஸ்மரதகாயதுஜேவாமதஃ॥கச॥"

---

துக்கு ப்ரகாஶகமாயிருக்குமோவென்ன - அகவாயில் இத்யாதி. ஆனைத்தாள் - த்வாரம். அத்தை - அகவாயிலுண்டான ஸ்நேஹத்தை. க்ரியாபர்யந்தமாகவென்றது "ஸோவ்யம்வஜவஜ்ராவ" இத்யாதிப்படியேயெடுத்தணைக்கை. "செரு" என்றதுக்கர்த்தம் - இவ்வடிவழகை இத்யாதி. காத்தூட்டுகைக்காகவும் அஸ்யாநேபடஙங்கையாலும் யுத்தோங்முகமாயென்றபடி. காத்தூட்டுகையாவது - அநுபவிதாக்களுக்கு விரோதியைப்போக்கி யநுபவிப்பிக்கை. வாய்க்கரை - மேலெழவென்றும், வாயருகென்றுமர்த்தத்வயம். * ஒண்மைக்கர்த்தம் - கிட்டினுரை இத்யாதி. திவ்யாவயவங்களோடே திவ்யாயுதங்களை ஸஹபடித்ததெதுக்கென்ன - திவ்யாவயவத்தோபாதி இத்யாதி. திவ்யாவயவங்களை சிஹ்நமாகச்சொன்னவிடமுண்டோவென்ன - யாநிராமஸ்ய இத்யாதி. "யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச வாநர। தாநி பூயஸ்ஸமாசக்ஷ்வ ந மாம் ஶோகஸ்ஸமாவிஶேத்" இதிஸீதாவாக்யே; "யாநி ராமஸ்ய சிஹ்நாநி லக்ஷ்மணஸ்ய ச யாநி வை। லக்ஷிதாநி வைதேஹ்யா ஸர்வாண்யேதாநி மே" இதிஹநூமாந் ஸுந்தரகாண்டே. "ராமஃ கமலபத்ராக்ஷஃ" என்று ப்ரதிவசநமிருக்கையாலே, இங்கு, சிஹ்நமென்றது-அவயவங்களை. 'திருந்தக்கண்டு' என்றதுக்கர்த்தத்வயம். முந்தினது ப்ரத்யக்ஷமாகக்கண்டென்று; அத்தையருளிச்செய்கிறார் - என்னைப்போலே இத்யாதி. வ்யக்தமாகக்கண்டென்றது - ப்ரத்யக்ஷமாகக்கண்டென்றபடி. அநுபவித்தென்னாதே, "கண்டு" என்றதுக்குபாவம் - இவ்விஷயத்தில் இத்யாதி. முற்பட்டதெங்கேயென்ன - வஸிஷ்ட இத்யாதி. "திருந்தக்கண்டு" என்றதுக்கர்த்தாந்தரம் - இத்தலையில் இத்யாதி. அதாவது - ப்ரத்யக்ஷத்திலுமென்னைக்கண்ட விழவெல்லாம் தீரும்படி, விஶ்லேஷவ்யஸந ரஹிதனாயிருக்கிறவனை நன்றாகக் கண்டென்றபடி. விவரணம்-ஸமைக இத்யாதி "ஸமைகாந்தவாந்தவாயவிஷண்ணவைவர்ண்ய"

லாம் தீரும்படி, கலவியிலும் பிரிவிலு மொருபடியாயிருக்கும் வடிவைக்காண்கிறிகோளிறே. "ஸதைகரூபரூபாய" (ஸதைகரூபரூபாய) என்று உக்திமாத்ரமாய்ப்போகை யன்றிக்கே, அத்தை யநுஷ்டாநபர்யந்தமாக்கிக்கொண்டிருக்கிற வடிவைக்காணுங்கோள்.

## எட்டாம் பாட்டு

திருந்தக்கண்டெனக்கொன்றுரையாய் ஒண்சிறுபூவாய்!
செருந்திஞாழல்மகிழ் புன்னைசூழ்தண் திருவண்வண்டூர்
பெருந்தண்தாமரைக்கண் பெருநீண்முடிநாற்றடந்தோள்
கருந்திண்மாமுகில்போற் றிருமேனியடிகளையே.

ஆ.—(திருந்த) ஸ்வஸம்ஶ்லேஷ ஜநிதமான வழகு தானிருக்கும்படியைச் சொல்லுகிறாள்.

ஒ.—எட்டாம்பாட்டில், நானவனுடைய வழகுகளைக் கேட்டால் மறுத்தெனக்குச்சொல்லலாம்படி திருந்தக்கண்டு எனக்காக வொரு வார்த்தை சொல்லவேணுமென்று பூவையை நோக்கிச் சொல்லுகிறாள்.

[ஒண்சிறுபூவாய்]-அங்குப்போக விடுகைக்கீடான வடிவழகையும் வடிவில் லாவவத்தையு முடையையானபூவாய். [பெருந்தண்தாமரையென்று தொடங்கி] - பெருத்து குளிர்ந்திருந்துள்ள தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையும் அவ்வூருக்கு ராஜாவாகைக்குத் தகுதியான திருவபிஷேகத்தையும், பெருத்தநாலு திருத்தோள்களையும், கறுத்து திண்ணிதான மஹாமேகம்போலேயிருக்கிற திருமேனியையுமுடையனாய் இவ் வடிவழகேயாயுள்ளே யொருநீர்மையின்றிக்கே முதலியாயிருக்கிறவனை.

ப.—அநந்தரம், ஆதிக்யஸூசகலக்ஷணங்களை யுடையவனைக் குறித்து ஒரு பூவையைப் போகவிடுகிறாள்.

ஒண்-ஊர்ஜஸ்யமாய், சிறு - "புலன்கொள்மாண்" என்றவடிவுபோலே சிறும் பித் தநுபவிக்கலாம்படி சிறுகினவடிவையுடைய, பூவாய் - பூவாய்! செருந்திஞாழல் மகிழ் புன்னை - செருந்தி தொடக்கமான நாநாவித புஷ்ப வ்ருக்ஷங்களாலே, சூழ்-சூழப்பட்டு, தண்-ஶ்ரமஹரமான, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரில், பெரு - அதிவிசாலமாய், தண்-குளிர்ந்த, தாமரை-தாமரைபோலேயிருக்கிற, கண்- திருக்கண்களையும், (விஶ்வாதிராஜ்ய ஸூசகமாய்,) பெரு-பெரிய, நீள்-வளர்த்தியையுடைய, முடி - திருவபிஷேகத்தையும், தடம்-சுற்றுடைத்தாய்ப்பணைத்த, நால் - நாலு, தோள்-திருத்தோள்களையும், கரு-ஶ்யாமளமான நிறத்தை யுடைத்தாய், திண்-காலாந்தரத்தே வேற்று நிறமாகை யன்றியே ஸ்த்திரமான, மாமுகில்போல் - மஹா மேகம்போலே யிருக்கும், திருமேனி -

வெ" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. ஒண்கிளியே, செருவொண்பூம்பொழிலென்றுதொடங்கி, திருவண்வண்டூர் - ஒருவண்ணம்சென்றுபுக்கு, கருவண்ணமித்யாரப்ய, திருந்தக்கண்டு - எனக்காக வொன்றுரையென்னுதல்; என்னிடையாட்டத்தைச் சொல்லுங்கோளென்னுதல். திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே. ஒருவண்ணம் - ஒருபடி.

திருமேனியையுமுடைய, அடிகளை - ஸர்வஸ்வாமியானவரை, (அவருடையநினைவை), திருந்த - திருந்த, கண்டு - கண்டு, எனக்கு - அவரபிப்ராயம் அறியவாசைப்பட்டிருக்கிற வெனக்கு, ஒன்று - ஒருவார்த்தை, உரையாய் - சொல்லவேணும். ஞாழல் - பச்சைநிற மாயிருப்பதொரு லதாவிசேஷம். இத்தால் - ஹடகருடைய வடிவில்ஸௌக்ரஹத்வமும், யதாத்ருஷ்டார்த்தவாதித்வமும் உத்தேஶ்யமென்று கருத்து.

இ.—எட்டாம்பாட்டில், ஒருபூவைநோக்கி, அந்தரங்கையான வெனக்கு வந்து சொல்லலாம்படிகண்டு ஒரு மறுமாற்றங்கேட்டுவந்து சொல்லாயென்கிறாள்.

[திருந்தக்கண்டு]-பிறர்க்குச் சொல்லலாம்படி விஶதமாகக் கண்டு. [எனக்கு]- நீவந்து சொல்லும் வார்த்தைகேட்டால் தரிக்கவிருக்கிறவெனக்கு. ஒரு வார்த்தைகேட்டு வந்து சொல்லாய். [ஒண்சிறுபூவாய்] - அழகுக்குக்கிளியோடொத்து, பால்யமும் அத் தால்வந்த லாகவமுமிதுக்கேற்றம். போகவிடுகை மிகையென்னும்படி கண்டு கொண் டிருக்குமழகை யுடைத்தாய், தூதுபோகைக்கு கார்யகாலத்திலே வடிவைச்சிறுக்க வேண் டாதபடி. ஏற்கவே ஶ்ரமம்செய்திருக்கிற லாகவத்தையுமுடைத்தாகை. [செருந்தியித் யாதி] - அவனுடைய போக்யதையேயன்றிக்கே போகஸ்த்தாநமே யமைந்திருக்கை. போக்தாக்களளவன்றிக்கே பெருத்து, ஶ்ரமஹரமாய்; விகாஸம், செவ்வி, குளிர்த்தி, இவற்றையுமுடைத்தான திருக்கண்கள். [பெருநீண்முடி] - நித்யஸித்தமான உபயவிபூ திக்கும் கவித்தமுடி. "திருவண்வண்டூர்க்கு நிர்வாஹகன்" என்றுசூடின முடியென்று மாம். "யஸ்யஸாஜநகாத்மஜா அப்ரமேயம் ஹி தத்தேஜ:" என்கிறபடியே இவள்தன் னைத் தோற்பித்துச்சூடின முடியென்னுதல் [நாற்றடந்தோள்] - கல்பகதரு பணைத் தாற்போலே நாலாய் சுற்றுடைத்தான தோள். ஶ்ரமஹரமான நிறத்தையுடைத்தாய் ஸ்தி ரமாய் அபரிச்சின்னமான மேகம்போலே யிருக்கும் வடிவு. நிறமேயாய், அகவாய்திண்ணிய தாயிருக்கிறபடி யென்றுமாம். [அடிகளையே] - அவ்வடிவைக்கண்டால் "ஸர்வநிர்வாஹ கன்" என்று தோற்றி யிருக்கை. அகவாயில் நீர்மையின்றிக்கே முதலிகளாயிருக்கிற வரையென்றுமாம்.

ஈடு.—எட்டாம்பாட்டு. சில பூவைகளைக்குறித்து; மீண்டுவந்தெனக்குச் சொல் லலாம்படி வ்யக்தமாகக்கண்டு, ஒருமறுமாற்றம் கேட்டுவந்து சொல்லவேணுமென்கிறாள். காணவொண்ணுமைக்கு வேண்டும் ஹேதுக்களைச் சொல்லிவைத்துத் திரியவும், திருந்தக் காணுங்கோ ளென்கிறாளிறே.

[திருந்தக்கண்டு] - நான் சொன்ன வடையாளத்திலொன்றும் குறையாமற்காணுங் கோள், உங்களுக்கென்றுகாணுதே, பிறர்க்குச் சொல்லலாம்படிகாணுங்கோள். [எனக்கு]-

---

எட்டாம்பாட்டு.—திருந்த இத்யாதி. "திருந்தக்கண்டெனக்கொன் றுரையாயொண்சிறு பூவாய்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - **சிலபூவைகளை** இத்யாதி. மறுமாற்றம் - ப்ரத்யுத்தரம். "திருந்தக்கண்டு" என்றதுக்குக் கீழிற்பாட்டிற்சொன்ன விரண்டுபொருளிங்குமாகவொண்ணுதோ, அத்தைவிட்டு, (மீண்டுவந்தெனக்குச்சொல்லலாம்படி வ்யக்தமாகக்கண்டு) என்றுயோஜிக்கிறதுக்கு ஹேதுவேதென்ன - **காணவொண்ணுமைக்கு** இத்யாதி. காணவொண்ணுமைக்கு ஹேதுக்களாவன - "பெருந்தண்டாமரைக்கண்" இத்யாதிகள். 'காணவொண்ணுமைக்குவேண்டும் ஹேதுக்களை - திரியவும் - சொல்லிவைத்து' என்றந்வயிப்பது. "பெருந்தண்டாமரைக்கண்" என்றதொடங்கி, 'திருமேனி யடிகளை - திருந்தக்கண்டு' - என்றந்வயமாகையாலே 'திரியவும் - சொல்லிவைத்து' என்கிறார். காண் கிறதிலே திருத்தமேதென்ன - **நான்சொன்ன** இத்யாதி. ஒன்றும் குறையாமல் காண்கிறவிதுக்கு

உங்கள் சொற்கேட்டு ஃரிக்கவிருக்கிற வெனக்கு. [ஒன்றுரையாய்] - எனக்கவன்படிக ளெல்லாம் சொல்லவேண்டா, ஒன்றுசொல்லவமையும். ஸோகத்துக்கன்றே யிவள் தேடுகிறது, ஸத்தை நோக்குகைக்கிறே பார்க்கிறது. "யாநிராஜவஸ்யவிஹாநி" என்றால், உள்ளபடியெல்லாம் சொல்லவற்றாயிருக்கை. அத்தலையைத் திருந்தக்கண்டு எனக் கொன்று சொல் லென்னவுமாம். எனக்காகவொன்றுசொல்லென்னவுமாம். ஆக, இவ்வி ரண்டாலும் - ஆசார்யன்வார்த்தைகேட்டு ஃரித்தல், அவனபிமாநத்தாலே ஃரித்தலொழிய வேறொன்றில்லையென்றபடி. [ஒண்சிறுபூவாய்] - உங்களொருப்பாடு கண்டேனுக்கு நான் அபேக்ஷிக்கை மிகையாயிருந்ததீ! பிறர்காரியம்செய்யவடிவுகொண்டாற்போலே யிராநின்றதீ! உங்களுத்யோகம். [சிறுபூவாய்] - கடல்கடக்கும்போதொருவடிவாய், எதிரிகள் படை வீட்டில்புகும்போ தொருவடிவாயிருக்கவேண்டாதபடிகாணு மிவற்றின் வடிவில் லாவவ மிருக்கிறபடி. ஒண்மை - கண்டுகொண்டிருக்கவேண்டும் அழகு: [செருந்தியித்யாதி] - அவன்பாடு செல்லவேண்டாதே, ஸோகஸ்த்தாநமே யமைந்திருக்கை. வாராமை யவன் குற்றமன்று, நிலப்பண்பு கிடிகோள். [செருந்திஞாழல்மகிழ் புன்னைசூழ்] - காற்கட்டோன் றிரண்டாகிலன்றோ வரலாவது; அவை நாலுபாடும் சூழ்ந்து நிற்க அவனாலே வரப்போமோ. ஒரு திக்குக்கொன்றே அமைந்திருக்கிறது காணும். (ஞாழல் - பசுமை நிறமாயிருப்பதொரு லதாவிசேஷம்.) [பெருந்தண்டாமரைக்கண்]-போக்தாக்களளவல்லாதபடி பெருத்து ஶ்ரமஹரமாய்; விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளந்தொடக்கமானவற்றை யுடைத்தா

ப்ரயோஜநம் அருளிச்செய்கிறாதல், விவரணமாதல் - உங்களுக்கு இத்யாதி. "ஒன்றுரையாய்" என்றத்தைக்கடாக்ஷித்து, "எனக்கு" என்றதுக்கர்த்தம் - உங்கள் சொற்கேட்டு இத்யாதி. தாத்பர்யம் - எனக்கவன் இத்யாதி. ஒன்றுசொன்னால் போருமோவென்ன - போகத்துக்கு இத்யாதி. * ஒண்மைக்கர்த்தம் - யாநிராஜவஸ்ய இத்யாதி. அதாவது - "யாநிராஜவஸ்யவிஹாநி" என்று கேட்டால், "ராஜாஜ்ஜைவ ஶ்ராக்ஷ:" என்றுதொடங்கி திருவடிசொன்னாற்போலே யிதுவும் சொல்லவற்றென்றபடி. ஒண்மை - ஸாமர்த்யம். "எனக்கவன்படிகளெல்லாம்" இத்யாதிவாக்யோப ஸம்ஹாரம் - அத்தலையைத்திருந்த இத்யாதி. ஆக, "எனக்கொன்றுரையாய்" என்றதுக்கு, அவதாரிகையிலே ஓரர்த்தமும், இங்கே இரண்டர்த்தமுமாகக்கண்டுகொள்வது. அதாவது - எனக்கொரு மறுமாற்றங்கொண்டுவந்து சொல்லென்றும், அடையாளங்களிலேயொன்று சொல்லென்றும், எனக்காக அவனோடேயொன்று சொல்லென்று மர்த்தத்ரயம். எனக்காக வொன்றுசொல்லெனவுமாமென்றது - எனக்காக ஈஶ்வரனோடே ஒன்றுசொல்லெனவுமா மென்றபடி. உத்தமான வர்த்தத்வயத்துக்கும் ஸ்வாபதேஶம் - ஆக இத்யாதி. * சிறுமைக்குபாவம் - உங்களொருப்பாடு இத்யாதி. ஒருப்பாடு - உத்யோகம். விவரணம் - பிறர்காரியம் இத்யாதி. இத்தால் திருவடியில் வ்யாவ்ருத்தி - கடல் கடக்கும் இத்யாதி. கடல்கடக்கும்போதொரு வடிவென்றது - "உபயோஜநவிஸ்தீர்ணஸ்தாதிம் மஹேந்த்ரஜநோபமதா। ஹாயாவாநராராஜஸ்யஸஹோஷ்ணு ஸஹ்யமுஷ்ய த" என்றத்தைப்பற்ற எதிரிகள் படைவீட்டில் புகும்போ தொருவடிவாயென்றது - "ஸப்ரேக்ஷ்யவாஸம்மஹேந்த்ராகூள ஜெஹஸம்ஸம்க்ஷிவ்யரோர்: । ஸூக்ஷம்மஸகோஸ்ஸநுவஸவோ வாஜதஜமஹநம:" என்றத்தைப்பற்ற. அவன்பாடுசெல்லவேண்டாதேயென்றது - அவனவயவங்களளவும் போகவேண்டாதேயென்றபடி. தாத்பர்யாந்தரம் - வாராமை இத்யாதி. நிலப்பண்பு - நிலஸ்வபாவம். நாலு வ்ருக்ஷங்களைச்சொன்னதுக்கு, இரண்டாம் பாவாநுகுணமாகத் தாத்பர்யம் - காற்கட்டி இத்யாதி வாச்யத்வயம். செருந்தி இத்யாதி நாலினுடைய ஏகவசநத்துக்குபாவம் - ஒருதிக்குக்கு இத்யாதி. செருந்தி - கோங்கு. ஞாழல் - லதாவிஶேஷ:. போக்தாக்களளவல்லாதபடி யென்றது - இந்தபோக்

யிருக்கை: [பெருநீண்முடி] - உபயவிபூதிக்கும் கவித்தமுடியையுடையவனென்னுதல். உபயவிபூதியோகத்துக்கு மேலேயிறேயவ்வூர்க்குக்கடவனென்னுதல். அன்றியே, "யஸ்ய ஸாஜநகாத்மஜா" என்றுகொண்டிவள் தன்னைத்தோற்பித்துச்சூடின முடியேன்னுதல். [பெருநீள்] - பெரியவளர்த்தி. [நாற்றடந்தோள்] - அவளையணைந்து அத்தாலே கல்பகதரு பணைத்தாற்போலேயிருக்கிற. (நாலாய்ச்சுற்றுடைத்தாயிருக்கிற) திருத்தோள். [கருந்திணித் யாதி] - கறுத்துத் திண்ணியதாயிருப்பதோரு மஹாமேகம்போலேயாயிற்று வடிவிருப்பது. அன்றிக்கே, ஶ்ரமஹரமான நிறத்தையுடைத்தாய், ஸ்த்திரமாய் அபரிச்சேத்யமான மேகம் போலே இருக்கும் வடிவு. நிறமித்தனையுங்கிடீர் மேகத்துக்கோப்பு, அகவாயில் திண்மை யிவர்க்குத்தன்னேற்றம். கறுத்து அகவாய் திண்ணியதாயிருப்பதோரு மேகம் பேறிலாயிற் றிவர்க்கோப்பாவதுநேரே. [திருமேனியடிகளையே] - வேறேன்று சொல்லவேண்டாதபடி வடிவுகண்டபோதே "இவனேயிதுக்கெல்லாம் கடவன்" என்று தோன்றும்படியிருக்கை: அன்றிக்கே, அவ்வடிவைப்படைத்துத் தமக்கென்றிருக்கிற ஸ்வாமிகளை.

---

## ஒன்பதாம் பாட்டு.

---

அடிகள்கைதொழுது அலர்மேலசையும்அன்னங்காள்
விடிவைசங்கொலிக்குந்திருவண்வண்டூறையும்
கடியமாயன்தன்னைக் கண்ணனைநெடுமாலைக்கண்டு
கொடியவல்வினையேன் றிறங்கூறுமின்வேறுகொண்டே.

**ஆ.**—(அடிகள்) சென்றால் எங்களுக்குக் காலமாயிருக்குமோ வென்ன; நீங் கள் செல்லுமளவிலே திருப்பள்ளி யுணர்ந்தருளும் காலமாம், திருப்பள்ளியுணர்ந்தருளின வாறே, ஆஶ்ரிதருடைய ஸமஸ்த து:க்ஙவங்களையு மொருக்ஷணத்திலே போக்கியருளும் ஸ்வ பாவனும் ஆஶ்ரிதஸுலபனுமிருந்தவனைக்கண்டு, கொடியவல்வினையேன் திறம் கூறுமின் வேறுகொண்டென்கிறாள்.

ஒ.—ஒன்பதாம் பாட்டில், நீங்கள் திருவண்வண்டூரிலே சென்று அவனைக் கண்டக்கால் ஓலக்கத்திலே விண்ணப்பம் செய்யாதே ஏகாந்தத்திலே அடியேன் திறத் தை யறிவியுங்கோளென்று சில வன்னங்களைக் குறித்துச் சொல்லுகிறாள்.

---

யதையை அநுபவிக்கிறவர்க்கு, எல்லாம்வேண்டா, ஏகதேசமே யமையும்படியென்கை. "பெருநீண் முடி" என்றதுக்கு பாவத்ரயம் - உபயவிபூதிக்கும் இத்யாதி வாக்யத்ரயத்தாலே "திருவண்வண்டூ - பெருநீண்முடி" என்று கூட்டி; யிரண்டாம்பாவம் - உபயவிபூதியோகத்துக்கும்மேலே இத்யாதி. உசந் தருளினநிலம், த்ருதீயவிபூதி. "தடம்" என்றதுக்குபாவம்- அவளை இத்யாதி. "கருந்திண்" இத்யாதிக் கர்த்தத்வயம் பூர்வர்கள் நிர்வாஹத்திலே. முந்தினது - கறுத்து இத்யாதி. திண்மையாவது - நித்யத் வயம். * திண்மையை - உநுக்காரிநூமாக்கி, பட்டர்நிர்வாஹத்திலே யர்த்தாந்தரம் - நிறமித்தனையும் இத்யாதி. விவரணம் - கறுத்தகவாய் இத்யாதி. "திருமேனி" என்றவநந்தரம், "அடிகள்" என்ற துக்குபாவம் - வேறேன்று இத்யாதி. பட்டர் நிர்வாஹம் - அன்றிக்கே யவ்வடிவை இத்யாதி. தமக் கென்றிருக்கை - ஸ்வார்த்தமென்றிருக்கை. ஒண்சிறுபூவாயித்யாதி, அடிகளை - திருந்தக்கண்டெனக் கொன்றுரையாயித்யர்வய:. திருவண்வண்டூ ரென்றது - திருவண்வண்டூரிலேயென்றபடி. (அ)

[அடிகளென்று தொடங்கி] - பூக்களிலே ஸம்ச்லேஷத்தாலே அசைகிற அன்னங்காள்! திருப்பள்ளியெழுச்சிசங்கங்கள் இங்கே கேட்கும்படி த்வநியாநின்றுள்ள திருவண்வண்டூரிலே எழுந்தருளியிருப்பதும் செய்து தன்னைப் பிரிந்தார், நோவறியக் கடவனன்றிக்கே வஞ்சகனாய் ஒருவர்க்கும் கிட்டாமையே ஸ்வரூபமான க்ருஷ்ணனைக் கண்டு திருவடிகளை கையாலேதொழுது. விடிவை சங்கென்று - திக்ருக்ஷுக்களை யாஹ்வானம் பண்ணுகிற சங்கத்வநியையுடைய ப்ரபாதஸமயமென்றுமாம். [கொடியவல்வினையேன்] - அவனுபேக்ஷிக்கிலுமவனாலல்லது செல்லாத மஹாபாபத்தையுடையேன்.

ப.—அநந்தரம், ஆச்ரிதவிஷயத்தி லத்யந்த வ்யாமுக்தனானவனைக்குறித்து விலக்ஷணங்களான சில வன்னங்களைப் போகவிடுகிறாள்.

தறையில் பாவாதபடியான செருக்காலே, அலர்மேல்-பூவின்மேலேயிருந்து, அசையும் - தூங்குமெத்தையி லிருப்பாரைப்போலே காற்று†வளத்திலே அசைகிற, அன்னங்காள் - அன்னங்காள்! விடிவை-விடிவுக்குப்ரகாசகமான, சங்கு-சங்கு, ஒலிக்கும்-முழங்குகிற, திருவண்வண்டூர் - திருவண்வண்டூரிலே, உறையும் - வர்த்திப்பானாய், கடிய - தான் நினைத்த காரியத்திலே எதிர்த்தலையிலும் முற்பாடனான கடுமையையுடையனாய், மாயன்றன்னை - எதிர்த்தலையகப்படும்படியான ஆச்சர்யசேஷ்டிதங்களை யுடையனாய், கண்ணனை - அவ்வளவி லத்யந்த நியாம்யனான ஸௌலப்யத்தையுடையனாய், நெடுமாலை - அதுக்கடியான வதிசயித வ்யாமோஹத்தையுடையனானவனை, கண்டு - உங்கள் பெருமையாலே மேலெழ நினைத்திராதே யுள்ளூறக்கண்டு, அடிகள் - அவன்திருவடிகளை யுத்தேசித்து, கைதொழுது - அநுவ்ருத்திகளைப்பண்ணி, கொடிய - அத்யந்தபரிதாப ஹேதுவாய், வல்-அதிப்ரபலமான, வினையேன் - ப்ராவண்யரூபமான பாபத்தையுடையேனான என், திறம் - இடையாட்டமாக, வேறு கொண்டு - ஏகாந்தத்திலே யிடங்கொண்டு, கூறுமின் - வார்த்தை சொல்லுங்கோள். இத்தால் - தூதருடைய ஜந்மோத்கர்ஷமும், விலக்ஷண ஸமாநஸம்ச்லேஷத்தால் வந்த செருக்கும் தோற்றுகிறது.

ஈ.—ஒன்பதாம்பாட்டில், சில அன்னங்களைக்குறித்து, நீங்கள் சென்றால் ஏகாந்தத்திலே "நக்ஷத்ரநாதஸ்ய" என்றார்முன்னாக என்னிடைபாட்டத்தை யறிவியுங்கோளென்கிறாள்.

[அடிகள் கைதொழுது] - திருவடிகளைக் கையாலேதொழுது அவனுக்கு மறுக்கவொண்ணாதே யிரங்கவேண்டும் செயல்களைச்செய்து. [அலர்மேலித்யாதி] - ஸம்ச்லேஷத்தாலே பூவிலே யசையாநின்றுள்ள அன்னங்காள்! அன்னங்களின் செருக்கிருக்கிறபடி. என்காலும் பூவிலேபொருந்தப்பண்ணினாலன்றோ உங்களுக்கு இது ஏற்றமாவது, அக்நியிலே கால்வைப்பாரைப்போலே என்கால் பூவிலேபொருந்துகிறதில்லை. [விடிவை]- விடிவுகள்தோறும், ப்ரஹாத ஸமயங்கள்தோறும் சங்கத்வநியாய்ச் செல்லாநிற்கும். ஆசையுடையாரைக்காண, சங்கத்வநியாலே யழைக்கிறுப்போலேயிருக்கை. அவ்வோகாலங்களுக்கடைத்தவை யெல்லாம் மாறிக்கிடக்கிறதிறேயிங்கு. விடியாதவூரிலே யென்னைவைத்து, விடியுமூரிலே யிருக்கிறவன். [கடிய] - துர்யோதநாதிகளை அழியச் செய்யுமிடத்தில் கடியனாய், பாண்டவர்களுக்காகப் பகலையிரவாக்குகை முதலானவாச்சர்ய சேஷ்டிதங்களைப் பண்ணுமவனை. அவர்களுக்குக் கையாளாய் நிற்குமவனை. அவ்வளவிலும் பர்யாப்தனன்றிக்கேயிருக்கிற வ்யாமுக்தனை அன்றிக்கே, பிறர்நோவறியா

† 'வாக்கிலே' என்றும் சில கோசங்களில் காண்கிறது.

ளுய் கலக்கிறபோது "பிரியேன்" என்றுவைத்துப் பிரியவல்லவனை, கலக்கும்போது தாழநின்று பரிமாறி, பின்னையெட்டாதவனை யென்றுமாம். [கொடியவல்வினையேன்]- அவனுபேக்ஷித்தாலும் விடமாட்டாத மஹாபாபத்தையுடையேன். நாட்டார்க்காஶ்வாஸ ஹேதுவான ஸம்ஶ்லேஷத்ப்ரத்யாஸத்தி ஸூசகமாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பாவனமான விஷயமெனக்கு பாபஹேதுவாவதே! "ஶோசாம்ருதஸோசேத்ராவி," "யஸ்ய ஸ்ரீ த்ருநதோசஹாஸயாதிஶோக்ஷோநோதிநஸம்ஶயஸ்ய:" என்கிற விஷயமிவ ளுக்கு ஸயஹேதுவாயிராநின்றது. [திறங்கூறுமின்] - ஒருமஹாஹாரதமிறே. [வேறு கொண்டே-கூறுமின்]-ஓலக்கத்திலன்றிக்கே ஏகாந்தத்திலே "நகஸ்ஶிஸாவராயதி" என்பார்கூடவிருக்க, அறிவிபுங்கோள். † "ஹம்ஸகாரண்டவாகீர்ணாம் வந்தே கோதாவரீம் நதீம் | ஸதாஸ்கேஷாம் காகத்விஜஂவவநஸேவ்யவீஸ".

ஈடு - ஒன்பதாம் பாட்டு. சிலவன்னங்களைக் குறித்து; ஏகாந்தத்திலே "நகஸ்ஶிஸாவராயதி" (நகஸ்சிந்நாபராத்யதி) என்பார் முன்பாக என்னிடையாட்டத்தை யறிவியுங்கோ ளென்கிருள்.

[அடிகள் கைதொழுது] - திருவடிகளைக் கையாலேதொழுது. அவனுக்கு மறக்கவொண்ணுத செயலைச் செய்து. [அடிகள் கைதொழுது - கூறுமின்] - நீங்களும் பரக்கச் சொன்னிகோளாய் அவனும் பராக்கடித் திருந்தாளுகையன்றிக்கே, சேவிப்படும்படி பண்ணிச் சொல்லுங்கோள். வரவுதாழ்த்ததென்ளு, வஸ்துவஸ்த்வந்தரமாகாதிறே. வந்தேறியான ப்ரணயித்வத்திலிறே சிறிது நழுவநிற்கலாவது, ஸ்வரூபாந்தர்க்கதையான க்ருபைக் கழிவில்லையிறே. அது ஸத்தையுள்ளதனையும் விலை செல்லுமிறே. [அலர்மேலசையுமன்னங்காள்] - நான் பூக்காணவிறுய்க்கும்படியாயிருக்க, உங்களுக்குப் பூவிலே க்கால்பொருந்துகை பொருமோ? நான் தறைக்கிடைகிடக்க, உங்களுக்கிது ஹோகமாய்த் தலைக்கட்டுமோ? என்னையும் * மென்மலர்ப்பள்ளி பொறுப்பித்தாலன்ருே உங்களுக்கிது ஹோகமாவது. [அலர்மேலசையு மன்னங்காள்] - உங்கள் செயலுக்கவளுல் வாராதொழியவொண்ணுது. உங்களுக்குச் சேர்த்தல்லது ஸ்வரூபஸித்தியில்லை. ஆனபின்பு, நானிக் கிடைகிடக்க ப்ராப்தியுண்டோ? ஸம்ஶ்லேஷத்தாலே பூவிலே அசையாநின்றுள்ள அன்னங்காள்! [விடிவையித்யாதி] - புறப்பட்டவாறே ஶங்கத்வநி சேவிப்படுகிறதிறே. இங்குப்

ஒன்பதாம்பாட்டு.—அடிகள் இத்யாதி. "அன்னங்காள், திறங்கூறுமின் வேறுகொண்டு" என்கிறபதங்களைக் கடாக்ஷித் தவதாரிகை - சிலவன்னங்களை இத்யாதி. "வேறுகொண்டு" என்றத்தைப்பற்ற - ஏகாந்தத்திலே இத்யாதி.

"அடிகள்கைதொழுது - கூறுமின்" என்று விசேஷித்ததுக்கு ஸாவம் - நீங்களும் இத்யாதி. உன்னையுபேக்ஷித்துப்போனவன் தொழுதால் வருமோவென்ன - வரவுதாழ்த்த இத்யாதி. விவரணம் - 'வந்தேறி'யானவித்யாதிவாக்யத்வயம் க்ருபைக்கழிவில்லாமையைக் காட்டுகிருர் - அது ஸத்தை இத்யாதி. "அலர்" என்றதுக்கு ஸாவம் - நான் பூக்காண இத்யாதி. "மேல்" என்றதுக்குஸாவம் - நான் தறை இத்யாதி. விவரணம் - என்னையும் இத்யாதி: * அசைகையை - நடையாக்கியர்த்தம் - உங்கள்செயலுக்கு இத்யாதி. செயலுக்கென்றது - நடைக்கென்றபடி. "ஸாவூஸஞீ" இத்யாத்யநுஸந்தேயம்- "அன்னங்காள்" என்றதுக்கு ஸார்த்தஸாவம் - உங்களுக்கு இத்யாதி. அதாவது - ஆர்த்தையான நானிருக்கிறவிடத்திலே வந்திருக்கிற வுங்களுக்கு என்னை யவனேடே சேர்த்தாலொழிய ஸ்வரூபஸித்தி யில்லையென்றபடி. அவ்வூருக்கு வழியறியும்படி யென்னென்ன - புறப்பட்டவாறே இத்யாதி. அவ்வூர் சங்கொலிக்குமென்றவாறே - இவ்

† ஆரண்ய காண்டே, (கரு).

போலே கிடக்கிறதன்றேயங்கு, அங்குமிங்குப்போலேயாகில் வாராளோ. விடிவை - விடிவுகள் தோறும். [விடிவைசங்கோலிக்கும் திருவண்வண்டூர்] - பகலுமிரவுமாய்க்காணு மவ்வூர்செல்லுகிறது. ''ஜீவநுவஸநு'' (ருதூந்பஹநு) என்கிறபடியே-காலம்கூறிட்டு அவ்வோகாலத்துக் கடைத்த உபகரணங்களைக்கொண்டு காணும் அவனநுபவிக்கிறது; இல்லையாகில் ''ஜீவநு'' என்னவேண்டாவிறே.''வஸந்தாநு''என்னவமையுமிறே.[விடிவை சங்கொலிக்கும்] - விடியாவிரவிறே யிவளிருக்கிறவிடம். [திருவண்வண்டூருறையும்] - விடியாதவூரிலே யென்னைவைத்தான், விடியுமூரிலே தானிருந்தான். அவன் யாதோரிடத்திலே நின்றால், அவ்விடம் விடியுமத்தனையிறே. * பகற்கண்டேன் நாரணனைக்கண்டேனிறே. [கடியமாயன்றன்னை] - ஆஸ்ரிதவிரோதிகளை யழியச்செய்யுமிடத்தில் கண்பாராத ஆஸ்சர்யத்தையுடையவனை. [கண்ணனை] - ஆஸ்ரிதர்க்குத் தான் கையாளாக நின்று தன்னைக் கொடுக்குமவனை. [நெடுமாலை] - இத்தனையும் செய்தாலும், ''ஒன்றும் செய்யப் பெற்றிலோம்'' என்னும் வ்யாமோஹத்தை யுடையவனை. அன்றிக்கே, கடிய மாயனென்றது - தன்னைப்பிரிந்தார்படும் நோவறியாத கொடுமையையுடையவனை. [கண்ணனை நெடுமாலை]-ஸௌந்தர்யம் காதாசித்கம், க்ரூரதன்மையேகிடிகோள் பெருத்திருப்பது.இனியெளியனானதுவும் வேண்டிச் செய்தானல்லன், இத்தலையை நலிகைக்காகச் செய்த செயல்கிடிகோள். [கொடியவல்வினையேன்] - நாட்டார்படி யல்லாத பாபத்தைப் பண்ணினேன். அல்லாதார்வினை பகவத் ப்ரத்யாஸத்தியாலேபோமிறே, ப்ரத்யாஸத்திதான் பாதகமாம்படியான பாபத்தைப் பண்ணினேன். [திறம் - ஒருமஹாஸாரதமிறே. [கூறுமின்வேறுகொண்டே] - சேவிப்படாதபடி ஓலக்கத்திலே சொல்லாதே, ஏகாந்தத்திலே சொல்லுங்கோள். அதாவது - அவனு மவளுமா யிருந்தவிடத்திலே சொல்

---

*ஆருக்கில்லையென்னுமர்த்தை வித்தவக்ஷரித்து ஸார்த்தஸாவம் - இங்குப்போலே இத்யாதி. இங்குப்போலேயென்றது - இங்கு * நீளிரவாய் சங்கத்வநி யில்லாமல் கிடக்கிறாற்போலே யென்றபடி. ''இங்குப்போலே கிடக்கிறதன்று'' என்கிறதுக்கு நியாமகமேதென்ன - அங்கும் இத்யாதி. ''விடிவை'' என்றதுக்குஸாவம் - பகலும் இத்யாதி. இத்தால் - காலாநுகுணபோகோபகரணங்களைக்கொண்டநுபவிக்கிறாரென்று விவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் - ''ஜீவநுவஸநு'' இத்யாதி.*

*இதுக்கு நியாமகமேதென்ன - இல்லையாகில் இத்யாதி. இல்லையாகிலென்றது - ''காலத்துக் கடைத்த போகோபகரணங்கள்கொண்டுபுஜித்தார்'' என்னுமது கூடாதாகிலென்றபடி. அவ்வூரிலே விடிவையென்கையாலே - இவளிருக்கிறவிடத்திலே விடிவில்லையென்கிறார் - விடியா இத்யாதி. ''விடிவைசங்கொலிக்கும் - திருவண்வண்டூருறையும்'' என்றுகூட்டி. அதுக்கு ஸார்த்தஸாவம் - விடியாதவூரிலே இத்யாதி. இது விடியாதவூராகைக்கும், அது விடியுமூராகைக்கும் ஹேதுவேதென்ன - அவன் யாதோரிடத்திலே இத்யாதி. அவனிருந்தவிடம் விடிந்ததென்றதுக்கு ப்ரமாணம் - பகல் இத்யாதி. பூர்வர்கள் நிர்வாஹத்திலே - ஆஸ்ரிதவிரோதிகளை இத்யாதி. பட்டர் நிர்வாஹத்திலே - அன்றிக்கேகடிய இத்யாதி. காதாசித்கமாயாகிலும் ஸௌந்தர்யமுண்டேயென்ன - இனியெளியனானதுவும் இத்யாதி. கொடுமை - க்ரௌர்யம். கடியமாயன்தன்னை - கடினனான ஆஸ்சர்யபூதனையென்று பதார்த்தம். ''கொடியவல்வினையேன்'' என்று விசேஷித்ததுக்கு ஸாவம் - நாட்டார் இத்யாதி. விவரணம் - அல்லாதார் இத்யாதி. ப்ரத்யாஸத்தி - பகவத் ஸமாஸ்ரயணம். ''திறம்'' என்றதுக்கு - அவதாரிகையிற்சொன்ன வர்த்தமொழிய, இங்கே - வ்யஸநஸமூஹமென்று கண்டுகொள்வது. திறம் - ஸமூஹம். ''வேறுகொண்டே - கூறுமின்'' என்றத்தால் பலிதம் - சேவிப்படாதபடி இத்யாதி. வேறுகொண்டு - ஏகாந்தமானவிடங்கொண்டென்று பதார்த்தம். ஏகாந்தத்திலே என்றால் - அவனுமவளுமானவிடத்திலேயென்று காட்டுமோவென்ன;*

லுங்கோளேன்கை. அதாவது - "என்திருமார்வற்கேன்னே" என்றும், "திருமாலார்க்கேன் பிழைத்தாள்" என்றும், "மாதரைத்தம்மார்வகத்தேவைத்தார்க்கு" என்றுமிறே யிவர்தமக்குப் பாசுரம். [வேறு கோண்டே - கூறுமின்] - "ஸீதாஸமக்ஷம்காகுத்ஸ்தம்" (ஸீதா ஸமக்ஷம்காகுத்ஸ்தம்) என்கிறபடியே அத்தை ஜீவிப்பிக்கு மவள் ஸந்நிதியிலே சொல்லுங்கோள். நல்வார்த்தைசொல்லுவாரு மவனுமான விடத்தே சொல்லுங்கோள்.

## பத்தாம் பாட்டு.

வேறுகோண்டு உம்மையான்இரந்தேன் வேறிவண்டினங்காள்!
தேறுநீர்ப்பம்பை வடபாலைத்திருவண்வண்டூர்
மாறில்போரரக்கன் மதிள்நீறெழச்சேற்றுகந்த
ஏறுசேவகனர்க்கு என்னையும்உளளேன்மின்களே.

**ஆ.**—(வேறுகொண்டு) தன்னுடைய புஜபலத்தாலே ஸகல ஜந்துஜாதமும் சுபரித்ராதமாய்ச் செல்லாநிற்கச்செய்தே, திருவண்வண்டூரிலுள்ள தன்னுடைய நிரவதிக ஸம்ருத்தியாலே என்னை மறந்த அவனுக்கு, தனக்கு ரக்ஷணீயையாயிருப்பாள் நானுமொருத்தியுளளென்று சொல்ல வேண்டுமென்று சில வண்டுகளை யபேக்ஷிக்கிறாள்.

**ஓ.**—பத்தாம்பாட்டில், சில வண்டுகளைக்குறித்து, "எல்லாரோபாதியும் நம்மையுஞ் சொல்லுகிறாள்" என்றிராதே என்கார்யமுங்களுக்கே பாரமாகக்கொண்டு, ப்ரதிகூலநிரஸனங்களெல்லாம் பண்ணி அநுகூல பரித்ராணமும்பண்ணி பரிபூர்ண மனோரதனாயிருக்கிறவனுக்கு, தனக்கு ரக்ஷணீயை நானுமொருத்தியுளேனென்று சொல்லுங்கோளென்று, "அவன் மறந்திருந்தான்" என்னுமின்னுப்பாலே சொல்லுகிறாள். [வெறிவண்டினங்காள்] - பரிமளத்தையுடைய வண்டினங்காள்! [தேறுநீரென்றுதொடங்கி] - என்னைப்போலே கலங்கியிராதேதெளிந்தநீரையுடைய பம்பை வடபார்ஶ்வத்திலே. [மாறில்போர்]-எதிர்இல்லாதபோர். [ஏறுசேவகனுர்க்கு] - எங்கும்மேற்பட்ட ஆண்பிள்ளைத்தனத்தை யுடையரா யிருக்கிறவர்க்கு.

**ப.**—அநந்தரம், ஆஶ்ரிதவ்யாமோஹகார்யமான விரோயிநிரஸந ஸாமர்த்யத்தை யுடையவனைக் குறித்துச் சிலவண்டுகளைப் போகவிடுகிறாள்.

---

மூன்றுதாதிலு மிவளோட்டைச் சேர்த்தியை முக்தகண்டமாகச் சொல்லுகையாலே இங்கும் அதுவேயர்த்தமாகவேணு மென்கிறார்-அதாவது என்றிருமார்வற்த இத்யாதி. இவளோட்டைச்சேர்த்தியிலே சொன்னால் கார்யம் அறுதியாகப் பலிக்குமென்னுமத்தைக் காட்டுகிறாரென்னுதல், "அவனுமவளுமாய்" இத்யாதி வாக்யவிவரணமாதல் - ஸீதாஸமக்ஷம் இத்யாதி. வார்த்தை ஜீவிக்கும் ப்ரகாரத்தைக்காட்டுகிறார்-நல்வார்த்தைஇத்யாதி.கீழ்வாக்யவிவரணமாதல். 'நகுஶ்சிந்நாபராத்யதி' என்ற நல்வார்த்தை என்றபடி. அலர்மேலசையுமென்று தொடங்கி, நெடுமாலைக்கண்டு, அடிகள் கைதொழுது, வேறுகொண்டு, கொடிய வல்வினையேன் திறங்கூறுமினித்யன்வய 8 "ராக்ஷஸ்ய ஸீதயாஸார்த்தம் விஜஹாரபஹூந்ருதூந்" இத்யாதி பாலகாண்டே. (சு)

† 'உளன்' என்று இருந்தால் வாக்யாந்வயம் ஸுலபமாயிருக்கும் பாடம் காண்க.

வெறி " ஸுஹாஸஃவிஸதி " என்று முக்தனுக்கு * அமரர்சென்னிப் பூவான ப்ரஹ்மகந்தப்ராப்திபோலே, உங்கள் போகவிஷயமான பூவில் பரிமளம் ஸங்க்ர மிக்கும்படியான வடிவை யுடைய, வண்டினங்காள் - வண்டினங்காள் ! உம்மை - உங் களை, வேறுகொண்டு - இதர ஸஜாதீயபுத்தி பண்ணுதே அத்யந்த வ்யாவ்ருத்த புத்தி பண்ணி, யான் - உங்கள் வ்யாவ்ருத்தியே தஞ்சமென்றிருக்கிற நான், இரந்தேன் - உத் தேஶ்யனுனவன் பக்கல் பண்ணும் ப்ரார்த்தனையை, அவனைச் சேர்த்துத்தரும் உங்கள் பக்கலிலே பண்ணினேன். (விரஜைக்கக்கரையான தேஶம்போலே), தேறு - தெளிந்த, நீர் - நீரையுடைய, பம்பை - பம்பைக்கு, வடபாலை - வடகரையான, திருவண்வண்டூர்- திருவண்வண்டூரில், மாறு - எதிர், இல் - இல்லாத, போர் - யுத்தத்தை யுடையனுய், அரக்கன் - யுத்தக்ரௌர்ய ஹேதுவான ராக்ஷஸஜந்மத்தையுடைய ராவணன், மதிள் - அரணுகவிட்ட மதிளை, நீறெழ - பொடிப்பொடியாம்படி, செற்று - அழித்து, உகந்த - அத்தாலே " க்ருதக்ருத்யர் " என்னும்படி யுகந்திருப்பாராய், ஏறு - அநுகூல ப்ரதி கூலவிபாகமற வெல்லார்க்கும் ஸம்ப்ரதிபந்நமான ஸம்ருத்தியையுடைத்தான, சேவக னுர்க்கு - பராக்ரமாதிஶயத்தையுடையவர்க்கு, உளள் - தாம் சேவகஞ்செய்து விரோதி நிரஸநம்பண்ணிப் பெற்றவளொழிய இவளுமொருத்தியுளளென்று, என்னையும் - என் னையும், என்மின்கள் - சொல்லுங்கோள். அவளை யொழிய வென்னையு மிதுக்கு முன்பு ஸத்தையோடேயிருந்தாளென்னுங்கோள் என்றுமாம். இத்தால்-யஶஸாஸிஃ - ஸஹாஸிஃ என்கிறபடியே, வடகருடைய ஸ்கவதநுஸ்வ ப்ரஜ்ஞையால் வந்த ஸௌரப்யந்தோற்று கிறது. வெறியென்று - தேஜஸ்ஸாய், ஔஜ்ஜ்வல்யமாகவுமாம்.

இ.— பத்தாம் பாட்டில், " சில வண்டுகளைக்குறித்து, அவர், இத்தலையில் ஸத்தையுமில்லை என்றிருப்பர், அவளுமுளளென்று சொல்லுங்கோளென்கிருள் " என் றருளிச் செய்வராளவந்தார். " இத்தலையில்லை யாகிலத்தலை யுண்டாகக்கூடாது ; பெண் பிறந்தார் கார்யமெல்லாம் செய்தோம் என்று ஸ்மரித்திருக்கிறவர்க்கு, ரக்ஷயவர்கத் திலே நானுமொருத்தி யுண்டென்று சொல்லுங்கோளென்கிருள் " என்று எம்பெரு மானுரருளிச்செய்வர்.

[வேறுகொண்டும்மையானிரந்தேன்] - "அல்லாதாரோபாதி" என்றிராதே, விஶேஷித்தென்கார்யமுங்களுக்கே பரமென்றிருந்தேன். தன்பெருமையைப் பார்த் திலள், இவற்றின் சிறுமையைப் பார்த்திலள், செல்லாமையைப் பார்த்திரக்கிருள். " விஶேஷண தாஸஸ்ரீ வோ ஹநுமத்ப்ரயுக்ஷவாநு." [வெறிவண்டினங் காள்] - பரிமளம் ஒரு வடிவுகொண்டாற்போலே யிருக்கை. உங்கள் வடிவில் பரிமள மே பாதேயம்போன்று இருந்ததீ, என் உடம்பையும் இப்படியாக்கினுலன்றோ உங்களு டம்பால் ப்ரயோஜனம் பெற்றிகோளாவது. [தேறு நீர்ப்பம்பை] - என்னைப்போலே கலங்கி யிருக்கும் இங்குத்தைப்பதார்த்தங்களொழிய, தெளிந்த பதார்த்தங்களைக் காண் கிறிகோளிறே, " வெஷஸுரூவிஶெளாதகாஃ " என்கிறபடியே, தெளிந்திறே அங் குத்தை பதார்த்தங்களிருப்பது ; " உவதவெளாதகாநஷுஃ " என்றிறே இங்குத் தையவை யிருப்பது. [வடபாலை] - வடபார்ஶ்வத்திலே. கடலுக்குத் தென்பாலிருக் கிற பிராட்டியைப்போலேயாயிற்று இவளிருக்கிற இருப்பு. [மாறில் இத்யாதி] - எதிர் இல்லாதபோரை யுடையனுய், பரபலத்தையும், புஜபலத்தையும் உடைய ராவணனையும்

அவனரணாக இட்டமதிளையும் துகளாகச் செற்று. [உகந்த] - ''ருஷிகள் குடியிருப்புப் பெற்றோம், பிராட்டியோடே கூடப்பெற்றோம், லங்கைவிபீஷண விஷயமாகப் பெற்றோம்'' என்றுகந்த. [ஏறுசேவகனார்க்கு] - எங்கும்மேற்பட்ட ஆண்பிள்ளைத்தனத்தை யுடையவர்க்கு ''ரஜநீயஸ்யவிக்ரமெ:'' என்று எதிரிகள் மேல்எழுத்திட்ட வீரம். ''ரயவயட்ரஸ்ஸஜத:'' என்று வீரர்கள் கொண்டாடின வீரம். [என்னையுமுளளென்மின்களே] - உம்முடையரக்ஷ்யவர்க்கத்திலே யின்னமொருத்தி நோவுபடாநின்றாளென்னுங்கோள்.

அவர் இத்தலையில் ஸத்தையுமில்லை யென்றிருப்பர், அவளுமுளளென்று சொல்லுங்கோ ளென்கிறாள்'' என்று ஆளவந்தாரருளிச்செய்வர். ''இத்தலை யில்லையாகி லத்தலை யுண்டாகக் கூடாது; 'பெண் பிறந்தார் காரியமெல்லாம் செய்தோம்' என்று க்ருத க்ருத்யரா யிருக்கிறவர்க்கு, ரக்ஷ்யவர்க்கத்திலே நானுமொருத்தியுண்டென்று சொல்லுங்கோ ளென்கிறாள்'' என்று எம்பெருமானார் அருளிச்செய்வர்.

[வேறுகொண்டு] - திக்குக்கள்தோறும் முதலிகளைப் போகவிடா நிற்கச்செய்தே திருவடி கையிலே திருவாழிமோதிரங் கொடுத்துவிட்டாப் போலேகாணும். ''விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந்'' (விஶேஷேணதுஸுக்ரீவோஹநூமத்யர்த்தமுக்தவாந்) என்றாற்போலே. [உம்மை] - இரந்தார் காரியம் செய்தன்றி நிற்க மாட்டாத வுங்களை. [யான்] - அவனுடைய முதலிரப்புப்போலேகாணுமிவளதும். [யானிரந்தேன்] - அவன்தானிரக்க விருக்குமவளிறே. இவள் பக்கலிலே தாழநிற்பான

பத்தாம்பாட்டு.—வேறுகொண்டு இத்யாதி. ''வண்டினங்காள், என்னையுமுளளென்மின்கள்'' என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - சிலவண்டுகளை இத்யாதி. ''உளள்'' என்றதுக்கர்த்தம் - உண்டாயிருக்கிறாளென்றிறே; இது வெறுமனே சொல்லக்கூடாமையாலே, அவன் ''இல்லை'' என்று நினைத்தானாகவேணுமென்று திருவுள்ளம்பற்றி - ஸத்தையில்லையேன்றிருப்பர் என்கிறார். அப்போது ''என்னையும்'' என்கிற உம்மைத்தக்கு - நிறந்தொடக்கமானவையில்லாதவோபாதி ஸத்தையுமில்லையென்றர்த்தமாகத் திருவுள்ளம்பற்றி - ஸத்தையுமில்லையேன்றிருப்பர் என்கிறார். ஆளவந்தார்நிர்வாஹத்துக்கு, ''உளள்'' என்கிறபதத்துக்கு ஸ்வாரஸ்யமுண்டு; * உம்மைத்தத்துக்கும், ''மாறில்போர'' என்றதொடங்கி ''ஏறுசேவகனார்க்கு'' என்கிறதுக்கும் ஸ்வாரஸ்யமில்லை. எம்பெருமானார் நிர்வாஹத்திலே, இவையிரண்டுக்கும் ஸ்வாரஸ்யமுண்டு; ''உளள்'' என்கிறபதத்துக்கு ஸ்வாரஸ்யமில்லை.

''வேறுகொண்டு'' என்றதுக்கு - வ்யாவ்ருத்தமாகபுத்திபண்ணி. அதாவது - அல்லாத பக்ஷிகளிற்காட்டில் விசேஷித்துகார்யம்செய்ய ஸமர்த்தமென்று நிஶ்சயித்தென்றர்த்தம் விவக்ஷித்து, அதுக்கு த்ருஷ்டாந்தம் - திக்குக்கள்தோறும் இத்யாதி. த்ருஷ்டாந்தாந்தரம் - விஶேஷேண இத்யாதி. ''விஶேஷேண து ஸுக்ரீவோ ஹநூமத்யர்த்தமுக்தவாந் । ஸ ஹி தஸ்மிந் ஹரிஶ்ரேஷ்டே நிஶ்சிதார்த்தோऽர்த்தஸாதநே'' இதி கிஷ்கிந்தாகாண்டே. அவனுடைய முதலிரப்புப் போலேயென்றது - ''யஸ்ய ப்ரஸாதே ஸததம்'' என்றிருக்கக்கடவவவன், ''வாநரேந்த்ரஸ்ய ப்ரஸாதமபிகாங்க்ஷதே'' என்றிரந்தாற்போலே, ஸர்வராலும் ஆஶ்ரயிக்கப்படும் பெருமையையுடைய விவளும் திர்யக்குக்களையிரக்கிறவிதுவும் என்றபடி. அவன்தான் தன்னை யிரக்கவிருக்குமவளிறே யித்தையிரக்கிறாளென்று தாத்பர்யாந்தரம் - அவன்தான் இத்யாதி. இவளவனையிரக்க ப்ராப்தமாயிருக்க, அவனிவளையிரக்குமோவென்ன - இவள்பக்கல் இத்யாதி. அவற்றிலுமிவை

வனுயிற்று. வேறுகொண்டிவற்றை யிரக்கவேண்டுவா னேன்னேன்னில்; அவற்றிலுமிவை பதஸ்த்தமாகையாலே; இன்னமொன்று - ஸம்ப்ரீதியுமின்றிக்கே, வளையத்தேயிருந்து வார்த்தை சொல்லவும்வற்றே; "தேனுண்ணும் வண்டேபோல் பங்கிகள்" என்றும் - அவனுக்குத் தலையான த்ருஷ்டாந்தமாகவும் சொல்லுவதிவற்றையிறே. [வேறுகொண்டு உம்மை யானிரந்தேன்] - நம்மாசார்யர்கள் வ்யாபக மந்த்ரங்கள் மூன்றிலும் த்வயத்தையே யாதரிக்குமாபோலே. இவைதான் ஷட்பதங்களுமே. [வெறி வண்டினங்காள்] - உங்களுக் கென்கார்யம் செய்தல்லது நிற்கவொண்ணுதாயிருந்தது. கலவியாலுண்டான வேறு பாடடங்கலும் வடிவிலே தோன்றும்படியா யிருந்தது. வெறி - பரிமளம். பரிமளத்தை யுடைத்தாயிருக்கை. தனித்துப்போனுலும் வழிக்கு பாதேயம் போந்திருந்ததீ. உடம்பை மோந்துகொண்டு போகவமைந்து காணுமிருக்கிறது இனங்காள் என்கையாலே - இவை தனக்குப் பிரிவில்லையிறே. "ஸர்வகந்த:" (ஸர்வகந்த:) என்கிற விஷயத்தோடே யணைந்த விவளுக்கு இவற்றின்பரிமளங்கண்டு ஆம்சர்யப்படும்படிகாணும்வாசனையுங்கூட மறந்தபடி: [தேறுநீர்ப்பம்பை] - இவ்வூரெல்லையைக் கழிந்தவாறே தெளிந்த பதார்த்தங்களையும் காண்கிறிகோளிறே. இவளிருந்தவிடத்தில் அடையக்கலங்கியிறே கிடக்கிறது. "உபதப்தோதகாநத்ய:" (உபதப்தோதகாநத்ய:) "தாயார்த்தனுக்கு நீரிலே விழுந்தால் தாபமாறும்" என்னு மிவ்வாசனையைக் கொண்டு, "ராமவிஸ்லேஷத்துக்கும் இது பரி

---

பதஸ்த்தமாகையாலேயென்றது - அந்தப்பக்ஷிகளைப்பற்றவு மிவற்றுக்குக்காலதிகமாகையாலே என்றபடி; பதருதேகார்யம் செய்யுமதாகையாலே யென்றும், த்ருதீயதாத்பர்யம் - தேனுண்ணும் இத்யாதி. பெரியாழ்வார்திருமொழி ஒன்பதாந்திருமொழி இரண்டாம்பாட்டு, "செங்கமலப்பூவில்" இத்யாதி. இதுக்கர்த்தம் - மதுபானம்பண்ணுகிற வண்டுகள்போல சுருண்டதிருக்குழல்களென்ற. பங்கி - குழல். தலையானத்ருஷ்டாந்தம் - ஶ்ரேஷ்டமான த்ருஷ்டாந்தமென்றும், தலைமயிருக்கு த்ருஷ்டாந்தமென்றும் அர்த்தத்வயம். ஆக, இவற்றை யிரக்கைக்கு ஹேதுத்ரயம். "அவற்றிலுமிவை பதஸ்த்தம்" என்னுமதுக்கு ஸ்வாபதேஶம் - நம்மாசார்யர்கள் இத்யாதி. மூன்றிலுமென்றது - மூன்றையும்பற்ற வென்னுதல்; மூன்றிலும் திருமந்த்ரத்தையாதரிக்குமாபோலே யென்னுதே, த்வயத்தையென்றது - த்வயம் திருமந்த்ரவிவரணமாகையாலே வ்யாபகமாகநினைக்கதென்னுதல். இவற்றுக்கு த்வயஸாம்யமெத்தாலேயென்ன - இவைதான் இத்யாதி. (ஷட்பதங்களும்) என்கிற சப்தம் - த்வயமும் ஷட்பதமென்கிறத்தை ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகிறது. "இனங்காள்" என்றதுக்குபாவம் - உங்களுக்கு இத்யாதி. அதாவது - நான் உபேக்ஷிதையாயிருக்க உங்களுக்கு போகம் ரஸியானமையாலே, என்காரியம் செய்தல்லது நிற்கவொண்ணுதென்றபடி. "வெறி" என்றதுக்குபாவம் - கலவியால் இத்யாதி. "வெறி" என்றதுக்குத் தாத்பர்யாந்தரம் - தனித்து இத்யாதி. விவரணம் - உடம்பை இத்யாதி. "தனித்துப்போனுலும்" என்பானென், விஶ்லேஷமில்லையோவென்ன - இனங்காள் இத்யாதி. தனக்கும் "ஸர்வகந்த:" என்கிறவனோடே கலந்தமுண்டே, அத்தைமோந்துகொண்டு தரித்திருந்தாலோவென்ன - ஸர்வகந்த இத்யாதி. "தெளிந்தநீரையுடையபம்பை" என்றதுக்குஹார்த்தபாவம் - இவ்வூரெல்லையை இத்யாதி. "இவ்வூரெல்லையைக்கழிந்தவாறே" என்கைக்கு, தானிருக்கிறவிடம் அப்படி யிருக்கவில்லையோவென்ன - இவளிருந்த இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - உபதப்த இத்யாதி. "உபதப்தோதகா நத்ய: ப்லவகா நிஷ்ப்ரபாஸ்ஸவாஸ் பரிஶுஷ்கபலாஶாநி வநாந்யுபவநாநிச." "உபதப்தோதகா:" என்றதுக்கு - "ஸுஶீதோதகா:" என்றர்த்தமாகையாலே, கரையிலுங்கூட என்கிறார். "ப்லவகா நிஷ்ப்ரபாஸ்ஸவ - உபதப்தோதகாநி" இத்யன்வய:. நிலைநீர்கள்தான்குளிரவற்றேவென்றது - ஆற்றுநீரோடுகிற தாகையாலே சுடக்கூடும், இது மேற்சுட்டாலும் உள்குளிர்ந்திருக்கும் ஆகையாலே, தாபமாறுமென்று

ஹாரமாமோ'' என்று ஜலத்திலே விழுவதாகக் கொண்டுசெல்ல, கரையிலுங்கூடக்கிட்ட வரிதாயிருந்தது. ''நிலைநீர்கள்தான் குளிரவற்றோ'' என்று பார்த்தார்கள், அவையுமப்படி யேயா யிருந்தன. ''பல்வலாநிஸராம்ஸிச'' (பல்வலாநிஸராம்ஸிச) வ்ருக்ஷங்களோடு வஸிஷ்ட்டாதிகளோடு வாசியற அழியுமாபோலே. இப்படியே யிறே யிவளிருக்கிறவிடம். [வடபாலைத் திருவண்வண்டூர்] - வடபாலை - வடபார்ச்வத்திலே. ஊருமாறுமின்னப்ர தேசந்தே யென்னுமிடம் நெஞ்சிலேபட்டுக் கிடக்கிறபடிகாணும் இவர்க்கு. கடலுக்குத் தென்பாலிருக்கிற பிராட்டியைப்போலேயா யிற்றிவளிருக்கிற விருப்பு. [மாறில் இத்யாதி] அறிவிப்பார் தாழ்வே; பின்பு விரோதியென்று கிடப்பதொன்றில்லை. [மாறில்போரரக்கன்] - வீரப்பாட்டுக்குத் தலையான சக்ரவர்த்தி திருமகனுர்''நமக்குஇவனெதிரியாகப்போருமோ'' என்று மதிக்கும்படியாகப் பிறந்த பையல். வரபலபுஜபலங்களாலே யெதிரில்லாத போரையுடைய ராவணனையும், அவன் தனக்கரணாக இட்டமதிளையும் துகளாம்படியழியச்செய்து ஹ்ருஷ்டராயிருக்கிற. [ஏறுசேவகனுர்க்கு]-(†எங்குமோர்பேர்பட்ட ஆண்பிள்ளைத்தனத்தையுடையவர்க்கு. [உகந்த] ''ருஷிகள்குடியிருப்புப்பெற்றோம், பிராட்டியோடே கூடப்பெற்றோம், லங்கையை விபீஷணவிதேயமாக்கப் பெற்றோம்'' என்று உகந்த). அல்பம் வரவுதாழ்த்த தென்ன, எதிரிகள் மதித்துமேலெழுத்திட்ட வீரப்பாட்டுக்குக் குறைசொல்ல வொண்ணு திறே. ''ரதசர்யாஸம்மத:'' (ரதசர்யாஸஸம்மத:) என்று வீரர்கள் கொண்டாடினவீரமிறே. [என்னையுமுளளென்மின்களே] - இன்னமும் நோவுபடகிறுண்டென்று சொல்லுங்கோள். ஆளவந்தாரருளிச் செய்ததாகத் திருமாலையாண்டான் பணிக்கும்படி '' 'இத்தலையைப் பிரிந்தாரி லிருப்பாரில்லை' என்றிருக்கையாலே வாராதொழிந்தா ரத்தனை, இத்தலையில் ஸத்தையுள்ளமையை யறிவியுங்கோள்'' என்று. இத்தை எம்பெருமானுர் கேட்டருளி, ''அழகிது; ஆகிலும், 'இன்றியமையாமை'' என்று தமிழரதோரு ப்ரவாத முண்டு; அதாகிறது - ஒருதலையுண்டானுலொரு தலையின்றிக்கே யிராது; இரண்டு தலையு முண்டாதல், இரண்டுதலையு மின்றிக்கே யொழித லித்தனையாயிற்று. அதில், தாமுளராகை யாலே இத்தலையுமுண்டென்கை நிஸ்சிதம்; ஆனபின்பு, ப்ரதிகூலித்தாரைக் கிழங்கெடுத்

பார்த்தார்கள் என்றபடி. அவையுமப்படியேயாயிருந்தனவென்றது - ஆதித்யகிரணங்களாலன்றிக்கே, தனக்கே ராமவிரஹத்தால் வந்த தாபமாகையாலே எங்குமொக்கச் சுட்டிருந்தனவென்றபடி. ''ஸராம்ஸி'' என்னுதே, ''பல்வலாநி''என்றதுக்குஹாவம்-வ்ருக்ஷங்களோடு இத்யாதி. இத்தால்- உத்க்ருஷ்டரான வஸிஷ்ட்டாதிகளோடு, அபக்ருஷ்டமான வ்ருக்ஷங்களோடு வாசியற ராமவிரஹத்தால் வந்ததாபம்ஸமமாயிருக்குமாபோலே;சிறுகுழிகளோடுபெரியகுழிகளோடுவாசியறராமவிஸ்லேஷத்தாலே யழிந்ததென்கை இவருடைய ஸார்வஜ்ஞ்ய விஷயமாக வ்யாக்யாதாவின் ஈடுபாடு-ஊருமாறும் இத்யாதி. ஆளவந்தார் நிர்வாஹத்திலே ஹாவம் - அறிவிப்பார் இத்யாதி. ''மாறில்போரரக்கன்'' என்று விசேஷித்ததுக்கு ஹாவம் - வீரப்பாட்டுக்கு இத்யாதி. ''மாறில்போர்'' என்றதுக்கர்த்தம் - வரபல இத்யாதி. ஏறுசேவகனுர்க்கு-ஶத்ருகோஷ்டியிலும் ஏறும்படியான ஆண்பிள்ளைத்தனத்தை யுடையவர்க் கென்றபடி. ''உகந்த'' என்றது - ''ருஷிகள் குடியிருப்புப்பெற்றோம், பிராட்டியோடேகூடப்பெற் றோம், லங்கைவிபீஷண விதேயமாகப்பெற்றது'' என்றுகந்தவென்றபடி. மாறு - எதிர். ''கடியன் கொடியன்'' என்று - அவனை வெறுக்கிறவிவள், இங்கே ''ஏறுசேவகனுர்'' என்றுகொண்டாடுகிற தென்னென்ன - அல்பம் இத்யாதி. அப்படி மேலெழுத்திட்டார்களோவென்ன - ரதசர்யாஸ இத்யாதி ''கஜஸ்கந்தேऽஶ்வப்ருஷ்டே ச ரதசர்யாஸு ஸம்மத: । நாநாவிதேஷு ஶஸ்த்ரேஷு ஶிக்ஷிதோ ரத:'' இதி பாலகாண்டே ஸம்மத: - ஶத்ருஸம்மதமான வீரத்தை

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

துப் போகட்டு அநுகூலித்தார் தலையிலே முடியை வைத்து க்ருதக்ருத்ய ராய், 'இனிக் கர்த்தவ்யஶேஷமில்லை' என்றிருக்கிறவர்க்கு, இன்னமும் ரக்ஷ்யவர்க்கமொன்றுண்டென்று சொல்லுங்கோள்'' என்று.

## பதினோராம் பாட்டு.

---

மின்கொள்சேர்புரிநூல்குறளாய் அகல்ஞாலம்கொண்ட
வன்கள்வனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொன்ன
பண்கொளாயிரத்துள்இவைபத்தும் திருவண்வண்டூர்க்கு
இன்கொள்பாடல்வல்லார் மதனர்மின்னிடையவர்க்கே.

**ஆ**.—(மின்கொள்.) இப்பிராட்டி, ஒருபடியாலும் விரஹவ்யஸநமாற்றவும் முடியாததொரு தசையை வரச்செய்தேயும் எம்பெருமானெழுந்தருளாதொழிந்தவாறே, தன்னழகாலே மஹாபலியைத்தோற்பித்து அவன் அகல்ஞாலங்கொண்ட வன்கள்வனடி மேற்சொன்ன இத்திருவாய்மொழியைவல்லார், மின்னிடையவர்க்கு மதனர்போக்யமா மாபோலே எம்பெருமானுக்கும் ஸ்ரீவைஷ்ணவர்க்கும் போக்யமாவரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இப்பத்தும் வல்லவர்கள் காமிநிகளுக்கு காமுகர் போக்யராமாபோலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு போக்யராவரென்கிறார்

[ மின்னென்று தொடங்கி. ]—மின்னையென்று திருமார்வுக்குச் சேர்ந்திருந்துள்ள திருயஜ்ஞோபவீதத்தையுடைய ஸ்ரீவாமநனாய் இம்மஹாப்ருதிவியையெல்லாம் அளந்துகொண்ட மஹாவஞ்சகன் திருவடிகளிலே. வாமநவ்ருத்தாந்தகதநத்தாலே மின்னிடைமடவாருக்காகத் தோற்றுகிற தோற்றரவை ஸூசிப்பிக்கிறது. [இன்கொள் பாடல் ] - இனியபாடல்.

**ப**.—அநந்தரம், இத்திருவாய்மொழியை யப்யஸித்தவர்கள் ஸ்புரத்ஸ்வபாவரான பாகவதவிஷயத்துக்கு உகப்புக்குறுப்பாவரென்று பலத்தையருளிச்செய்கிறார்.

மின் - ஒளியை, கொள் - உடைத்தாய், சேர்-திருமேனிக்கும் ப்ரஹ்மவர்ச்சஸத்துக்கும்சேர்ந்த, புரிநூல் - திருயஜ்ஞோபவீதத்தையுடைய, குறளாய்-வாமநனாய், அகல்-விஸ்தீர்ணமான, ஞாலம்-பூமியை, கொண்ட - அநந்யார்ஹமாக்கிக்கொண்டவனாய், வன் - கொடுக்கிறவனோடு நாட்டாரோடுவாசியற இசையும்படி ப்ராபல்யமான, கள்வன் - வஞ்சனத்தையுடையவன், அடிமேல் - திருவடிகள் விஷயமாக, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், பண் - பண்ணனது, கொள் - இயலைத்தனக் குள்ளேயாக்கிக்கொள்ளும்படியான, ஆயிரத்துள் - ஆயிரத்துள்ளே, திருவண்வண்டூர்க்கு- திருவண்வண்டூர்க்கேயாய், இன் - இனிமையை, கொள் - உடைய, பாடல் - பாடலான,

---

யுடையவரென்றபடி. எம்பெருமானார் நிர்வாஹத்திலே - இன்னமும் இத்யாதி. இத்தலையைப்பிரிந்தாரி லிருப்பாரில்லை யென்றிருக்கையாலே என்றது - ஸ்வவைலக்ஷண்ய ஜ்ஞாநத்தாலே. "இன்றியமை யாமை" என்றதுக் கர்த்தம் - இரண்டுதலையும் இத்யாதி. வெறிவண்டினங்காள், வேறுகொண்டும்மை யித்யாரப்யாந்வயஃ. (௧0)

இவைபத்தும் - இவைபத்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், மின்-மின்போலே ஸ்ப்புரிக்கிற, இடையவர்க்கு-மத்யாவயவத்தை யுடையவர்களுக்கு, மதனர்-மதநஹேது வாவர். இத்தால் - ப்ரமாணஶரீரத்தில் மத்யமாவயவஸ்த்த மான அநங்யஶரணத்வ ஔஜ்ஜ்வல்யத்தையுடைய ஸாமவதர்க்கு ஹர்ஷஹேதுவாவரென்று கருத்து. இது, கலித்துறை.

இ.—நிகமத்தில், இப்பத்தும் வல்லவர்கள், காமிநிகளுக்கு காமுகர் ஹோக்யராமாபோலே, ஸர்வேஶ்வரனுக்கு ஸ்ப்ருஹாவிஷயமாவரென்கிறார்.

[மின்கொள் சேர்புரிநூல்குறளாய்] - மின்னைவென்று ஶ்யாமமான திருமேனிக்கு பரபாகமான சேர்த்தியையுடைத்தான திருயஜ்ஞோபவீதத்தையுடைய ஸ்ரீவாமநனாய். [அகல்ஞாலம்கொண்ட] - விநீதமாய் ஆகர்ஷகமான வடிவைக்காட்டி யிசைவித்து, பூமிப்பரப்பைத் தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்ட. [வன்கள்வன்] - தன்னுடைமையை யவனதாக்கி அவன்தந்தானும்படி பண்ணின மஹாவஞ்சகன் திருவடிகளிலே. வாமநவ்ருத்தாந்தகதநம் - மின்னிடை மடவாருக்காகத் தோற்றுகிற தோற்றரவுக்கு ஸூசகம். இதில் பிறந்த ப்ரணயரோஷம் மின்னிடைமடவாராகைக்கு வாமநனாய்வந்து தோன்றக் கிழக்குவெளுத்தபடி. மஹாபலியை யர்த்தியாய்ச்சென்று வஞ்சித்துப் பூமிப் பரப்பையடையத் தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்டாற்போலே யாயிற்று ப்ரணய கோபத்தாலே "அல்லோம்" என்றவர்களைத் திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்டபடி. [பண்கொளாயிரம்] - "ஈழம்பிரம்புகொண்டது" என்னுமாபோலே, பண்மிகுந்திருக்கை. [இன்கொள்பாடல்]-'வாமெஷெயெவயோ॰ரா' என்கிறபடியே இயலுமிசையுமினிதாயிருக்கை. [வல்லார்] - இத்தையப்யஸிக்கவல்லவர்கள். [மதனர்மின்னிடையவர்க்கே]- மின்னிடையவர்க்கு மதனர் ஸ்ப்ருஹாவிஷயமாமாபோலே, இவர் தூதுவிடுகிற விஷயத்துக்கு ஹோக்யராவர். "அற்பசாரங்க ளவைசுவைத் தகன்றொழிந்தேன்", "தூராக்குழி தூர்த்தெனைநாளகன்றிருப்பன்" என்று விஷயப்ராவண்யம் விநாஶபர்யாயமென்னுமவர், இத்தை யுத்தேஶ்யமாகச் சொல்லாரிறே. ஸர்வதாஸாம்யமுள்ளவிடத்தில் அது தன்னையே சொல்லக்கடவது.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழி வல்லவர்கள், காமிநிகளுக்கு காமுகர் ஹோக்யமாமாபோலே ஸர்வேஶ்வரனுக்கு ஸ்ப்ருஹாவிஷயமாவரேன்கிறார்.

[மின்கொள் சேர்புரிநூற்குறளாய்] - மின்னைவென்று ஶ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான சேர்த்தியுடைய திருயஜ்ஞோபவீதத்தையுடைய ஸ்ரீவாமநனாய். இப்போதிது சோல்லுகிறது - அவன் ஸர்வஸ்வத்தையுங் கோடுக்கும்படி விநீதவேஷத்தோடே போய்ப் புக்கபடி. "பகற்கண்டேன்" என்கிற தோற்றரவுக்குக் கிழக்குவெளுக்கிறபடி.

---

நிகமம் - மின்கோள் இத்யாதி. "இவைபத்தும் வல்லார் மதனர் மின்னிடையவர்க்கு" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழிவல்லவர்கள் இத்யாதி.

ஶப்தார்த்தம் - மின்னை இத்யாதி. கொள்கை - க்ரஸிக்கை. மஹாபலிபக்கலிலே யகல் ஞாலங்கொள்ளப் பார்க்கிறவிடத்திலே திருயஜ்ஞோபவீதத்தைச்சொல்லுகிறதுக்குபாவம் - இப்போது இத்யாதி. அதாவது - மஹாபலியைப்போலே யிவளையும் ஸர்வஸ்வாபஹாரம் பண்ண அவன்புக்கபடி யென்று இதுக்கு ஹார்த்தபாவம். * மின்னிடைமடவாராஸங்கமாக வாமநனைச் சொல்லுகிறதுக்கு பாவம் - பகற்கண்டேன் இத்யாதி. அதாவது - * மின்னிடைமடவாரில் தோற்றரவுக்கு உபக்ர

தூதுவிடுகைக்குங்கூட ஶக்தனல்லாதமை தோற்ற இரப்பாளனாய், இத்தலையைப் பிரிந்து வந்த சிறும்புதலெல்லாம் வடிவிலேதோற்ற நின்றபடி. [அகல் ஞாலங்கொண்ட வன்கள் வனடிமேல்] - பூமிப்பரப்படங்கலும்அவனுக்கொன்றும்தோங்காதபடி அபஹரித்த மஹா வஞ்சகன் திருவடிகளிலே. * மின்னிடைமடவார்க்குக் கீழக்குவேளுக்கிறபடி; அதாவது- மஹாபலியினுடைய துர்மாநத்தைப்போக்கி ஒன்றொழியாமல் கைக்கொண்டாற்போலே, ப்ரணயரோஷத்தாலேவந்த இவளுடைய அபிமாநத்தைப் போக்கிச் சேரவிட்டுக் கொண்டபடி. எதிரியாய் வந்தவனுடைய துர்மாநத்தைப் போக்கினப்போலன்றிறே ப்ரணயிநியுடைய மாநம். அதுஅழிக்கலாம், இதுஅழிக்கவொண்ணாதே.நிர்விஷயமாகக் கோபிக்கிறவர்கள் இலக்குப்பெற்றால் மிகைக்குமத்தனையிறே. அவன் ஸந்நிதியிலு மழியாத தோன்றிறேயிது. (குருகூரித்யாதி) [பண்கொளாயிரம்] - "ஈழம்பிரம்புகொண்டது" என்னுமாபோலே பண்ணேமிக்கிருக்கை. [இன்கொள்பாடல்வல்லார்] - இனிதான பாடலை வல்லார். இதுக்குபலஶ்ருதி வேண்டாகாணும்; இதுதன்னையே யினிதாகச்சொல்லவமையும். [மதனர்மின்னிடையவர்க்கே] - காமிநிகளுக்குக்காமுகரேவ்வளவு, இத்தை யபி கரிக்கவல்லவர்கள் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு அவ்வளவாவர்; இங்ஙனன்றாகில், "பலநீ காட்டிப்படுப்பாயோ," "புறத்திட்டின்னங் கெடுப்பாயோ" என்று சொல்லுகிற விவர், ஸ்த்ரீகளுக்கு போக்யராவரேன்கிறாரன்றே; காமிநிகளுக்குக் காமுகரைப்போலே அபிமத விஷயத்துக்கு போக்யராவரேன்கிறார்; காலைச் சொல்லப்புக்குத் தாமரையைச் சொல்லா

---

*மித்தபடிசொல்லுகிறதென்று கருத்து. "மின்கொள்சேர்புரிநூல்குறளாய்" என்கிற பதத்வயத்துக்கும் ஹார்த்தபாவம் - தூதுவிடுகைக்கும் இத்யாதி. சிறும்புதல் - ஸங்கோசம்: வடிவில் கார்ஶ்ய மித்யர்த்த:. * மின்னிடைமடவாராஸந்நமானவிடத்திலே "வன்கள்வன்" என்றதுக்கு ஹாவம் - மின்னிடை இத்யாதி. "அகல்ஞாலங்கொண்ட" என்கிறவிது - இவளுடைய துர்மாநத்தைப்போக்கி இவளோடே ஸம்ஶ்லேஷித்தமைக்கு த்யோதகமென்கிறார் - அதாவதுமஹாபலி இத்யாதி. அபலையினுடைய அபிமாநத்தைப்போக்கினதுக்கு எதிரியினுடைய அபிமாநத்தைப்போக்கினது த்ருஷ்டாந்தமாகமாட்டாதேயென்ன?—அதிலுமதிகமென்கிறார் - எதிரியாய் இத்யாதி. இது அதிகமானபடி யெங்ஙனேயென்ன - அதுஅழிக்கலாம் இத்யாதி. அழிக்கவொண்ணாதென்கிறதென், முகங்காட்டின அபிமாநமழியாதோவென்ன - நிர்விஷயமாக இத்யாதி. அதாவது - ப்ரணயரோஷத்தினுடைய உபக்ரமாவஸ்த்தையிலே போனாற்போமித்தனையல்லது, அதுமுற்றினால் முகங்காட்டினாலும் போகாது; அதிஶயிக்குமென்றபடி. விவரணம் - அவன்ஸந்நிதியிலும் இத்யாதி. பண் - காநம். ஈழம் - த்வீபவிஶேஷம். பிரப்புகொண்ட தென்கையாவது - பிரம்புமிகுந்ததென்கை. 'இன்கொள்' என்ற வினிமைக்குபாவம் - இதுக்கு இத்யாதி. அவதாரிகாநுகுணமாகவர்த்தம் - காமிநிகளுக்கு இத்யாதி. அவதாரிகைக்குச்சேர; ஸர்வேஶ்வரனுக்கும் (ஸ்ரீவைஷ்ணவர்களுக்குமவ்வளவாவர்) என்று கூட்டுவது. இருந்தபடியே யர்த்தமாகாதோவென்ன - இங்ஙனன்றாகில் இத்யாதி. என்கிறாரன்றேயென்றது - ஸ்த்ரீகளுக்கு போக்யராவரென்கிறாரென்னக்கூடாதிறே என்றபடி. அபிமத விஷயமென்றது - ஈஶ்வரனையும் ஸ்ரீவைஷ்ணவர்களையும். ஆனால், மதனர்போலென்னாதே, "மதனர்" என்கிறதென்னென்ன; பரிஹாரம் - காலைச்சொல்லப்புக்கித்யாதிவாக்யத்ரயம். சொல்லாநின்றதிறே - "தாவிவையங்கொண்ட" என்கிறவிடத்திலேயென்றபடி. அங்குத் தான்சொல்லுகைக்கு கருத்தேதென்ன - ஸ்வபுத்யா இத்யாதி. "தாமரையன்னபொன்னாரடி" என்று - தாமரைப்பூப்போலே என்கிறவிடங்களுமுண்டே என்ன - அதுபோலஎன்றும் இத்யாதி. மின்கொள்சேர்*

நின்றதிறே; ஸர்வதாஸத்ருஶமானவற்றுக்கு உபமாநந்தன்னையே சொல்லக்கடவது; "அதுபோல" என்றும் "அதுதான்" என்றும் சொல்லக்கடவதாயிருக்கும்.

---

*இத்யாரப்ய, பண்கொளாயிரத்துள் - திருவண்வண்டூர்விஷயமாயிருக்கிற - இவைபத்துமான - இன்கொள்பாடல்வல்லார் மின்னிடையவர்க்கு - மதனரென்றந்வயம். மதனர் - காமுகர். (௧௧)*

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**— "[illegible] ॥"

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**— [illegible] ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

வைகல்திருவண் வண்டூர் வைகுமிராம னுக்கென்
செய்கைதனைப் புள்ளினங்காள்! செப்புமென —கைகழிந்த
காதலுடன்றூதுவிடுங் காரிமாறன்கழலே
மேதினியீர்! நீர்வணங்குமின்.

*ஆழ்வார்திருவடிகளேஶரணம், எம்பெருமானார்திருவடிகளேஶரணம், ஜீயர்திருவடிகளேஶரணம்.*

# இரண்டாந்திருவாய்மொழி—மின்னிடைமடவார்: ப்ரவேஶம்.

ஆ.—(மின்னிடைமடவார்கள்.) "இப்படி தன்னை நான் நெடுங்காலம் விஶ்லேஷித்திருக்கச்செய்தேயும் தூதப்ரேஷணம் பண்ணச் செய்தேயும் எம்பெருமான் எழுந்தருளாதொழிகிறது என்னுடைய நிகர்ஷாநுஸந்தாநத்தாலே யென்னை யுபேக்ஷித்து, அவர்கள்பக்கலுள்ள ப்ரேமாதிஶயத்தாலே அவர்களைவிஶ்லேஷிக்கில் தரிக்கமாட்டாமையாலே" என்று நிஶ்சயித்து அத்யந்த மவஸந்நையாய் ப்ரணயகோப யுக்தையுமாய், அந்த ப்ரணயகோபத்தாலே தோழிமாரோடும் கிளிகள்பூவைகளென்றுள்ள தன்னுடைய லீலோபகரணங்களோடுங்கூட, "இனிநாம்அவன்வந்தாலும் அவனைக் கடாக்ஷிக்கவுங் கடவோமல்லோம்" என்று சமயமிட்டுக்கொண்டு, அவனெழுந்தருளினாலும் வந்தணுகவொண்ணாததொருபடி யநுபவநீயையாயிருக்க; எம்பெருமானும் இவளைப் பிரிந்த நிரவதிக வ்யஸநத்தாலே அத்யந்த மவஸந்நனாய்வந்து, இவளுடைய தோழிமா ரநுபவநீயைகளாயிருக்கையாலே அவர்களைச் சென்றணுகி அவர்களைப் புருஷகாரமாகக்கொண்டு இவளுடைய திருவடிகளிலே விழுந்து ஸ்வாபராத⁴த்தை க்ஷமிப்பித்து ஸம்ஶ்லேஷித்து தா⁴ரணம்பண்ணுதல், தன் திருநாமங்களைக்கற்பித்து வளர்த்த இவளுடையகிளிகள் பூவைகளென்றுள்ள லீலோபகரணங்களினுடைய வநுபவநீயதையாலே அவற்றைச் சென்றெடுத்துத் தன் திருநாமங்களைச்சொல்லுவித்து அவைசொல்லக்கேட்டாஶ்வஸித்தல், இப்பிராட்டி தன்னுடைய அநுபவநீயதையாலே இவளை வந்தணுகி யிவளோடே ஸம்ஶ்லேஷித்து தா⁴ரணம்பண்ணுதல் செய்யப்பெறாமையாலே ஆத்மதா⁴ரணக்ஷமனன்றியே, ஆத்மதா⁴ரணார்த்தமாக, ஸ்வஸம்ஸ்பர்ஶவிஸம்வாதாக்ஷமமான இவளுடையபந்து கழல்களென்ற அசேதநமான லீலோபகரணங்களையெடுத்து அவற்றை ஸர்வகாத்ரங்களாலும் ஸ்பர்ஶித்தும் ப்ரேக்ஷணம்பண்ணியு மாஶ்வஸித்து லப்தாத்மதா⁴ரணனாயிருந்த யபாங்கவீக்ஷணத்தாலே பார்த்து;

ஒ.—இரண்டாந் திருவாய்மொழியில், மாசறுசோதி* தொடங்கி வைகல்பூங்கழிவாயகப்பட வ்யஸநபரம்பரையாலே மிகவும்நோவுபட்டு,ஓராஶ்வாஸம் பெறாதேயிருக்கிற இப்பிராட்டி, "இனி அவன்வரினும், அவனோட்டை ஸம்ஶ்லேஷம் விஶ்லேஷாந்தமாயல்லதிராது; இனி, ஸம்ஶ்லேஷித்து மீளவும்விஶ்லேஷித்து து:கபரம்பரைகளை யநுபவிப்பதிற்காட்டில் ஸம்ஶ்லேஷியாதொழியவேமுடிதும்: முடியவே இந்த விஶ்லேஷது:க மநுபவியாதொழியலாம்" என்று, ப்ரணயரோஷத்தாலேதுணிந்து, "நாமிங்ஙன் இலையகலப்படுக்க, அவன்றான் வாராநின்றானே" என்று சிந்தித்து, "நான்தன்னை விஶ்லேஷித்து நெடுங்காலம் து:கப்படுகையாலும், களித்து ஶரணம்புகிலும் பொறுக்கமாட்டாத தன்திருவடிகளிலே பெரியவார்த்தியோடே நாலுப்ரயோகம் ஶரணம் புகுகையாலும், மிகவுமாற்றாமையோடே திருவண்வண்டூரிலே தூதப்ரேஷணம் பண்ணுகையாலும், அவன்வரவை ஸூசிப்பிக்கிற நன்னிமித்தங்களாலும், அவன்றான் நமக்குஅநபிமதமாயிருக்கப் போனாற்போலே தன்வரவு அநிஷ்டமாயிருக்க வருவானொருவனாகையாலும், நம்முடைய பாக்யவைகல்யத்தாலும் அவன் வரவுதப்பாது" என்று பார்த்து,

தங்களுடைய லீலோத்யானத்திலே யதிமனோஹரமாயிருப்பதொரு மண்டபத்திலே எம்பெருமானுக்குத் தங்கள்பக்கல் வந்தணுகவொட்டாதபடி அநாதரமாகிற கன்மதிளையிட்டுக் கொண்டு, தன்னுடைய கிளிதொடக்கமான லீலோபகரணங்களையும் அவனுக்கெட்டாதபடி பண்ணிக்கொண்டு, தோழிமாரும் தானும் கழகமாகவிருந்து, "அவன் வந்தாலும் அவனைக்கடாக்ஷித்தல் அவனோடு ஸம்பாஷித்தல் செய்யக்கடவோமல்லோம்: அவனோடே விஶ்லேஷித்துப் பட்ட வ்யஸநந்தீர அவனெதிரே முடியவேணும்" என்னும் மனோரதத்தோடே அந்யபரைகளைப்போலே யிருக்க; "வேறுகொண்டும்மை யானிரந்தேன்" என்று கூப்பிட்ட பிராட்டியுடைய த்வநியைக்கேட்டு, த்ரௌபதியை துஶ்ஶாஸநாதிகள் ஸபையிலே நலியா நிற்க அவள் "கோவிந்த" என்று கூப்பிட்ட ஆர்த்தத்வநியைக் கேட்டாற்போலேயும், ஶரதல்பகதரான ஸ்ரீபீஷ்மர் உஶீரையை அநுஸந்தித்த போதுபோலேயும் மிகவும் கலங்கின எம்பெருமான், "நம்மைப் பிரிந்தவள் இங்ஙனே நோவுபட நாமுதவப்பெறுதொழிவதே, நமக்குப் பும்ஸ்த்வமாவதென்?" என்று லஜ்ஜாபயங்களினாலே விஹ்வலனாய் மிகவும் விந்நனாய்க்கொண்டு, இவளோடே ஸம்ஶ்லேஷித்தல்லது தரிக்கமாட்டாதானாய் இவளிருந்தவிடத்துக்கு அதி த்வரிதமாகவந்து, இவள் ப்ரணயகோபத்தாலே அணுகவொண்ணாதபடியிருக்கிற இருப்பைக் கண்டு, "ஸாபராதரான நாம் அநபிமததஶையிலே கண்காணநேரேசென்று இசைவின்றிக்கே மேல்விழில், ம்ருதுப்ரக்ருதியாகையாலே மாந்தும்; ஆனபின்பு இவளுடைய ஹ்ருதயகாலுஷ்யத்தைப்போக்கி ஸம்ஶ்லேஷித்து இவளையும் தரிப்பித்து நாமுமுளோமாம் விரகேதோ?" என்று நிரூபித்து, "ஸுஹ்ருதஶ் ஸாந்த்வ ஸ்ரீரா..." என்னும்படியாலே அநுவர்த்தித்துத் திருத்திக்கொள்ளுகிறோம்" என்றொருபடி நிலைநின்று, தன் திருமேனியோடு விகல்பிக்கலாயிருப்பதொரு சோலையினுள்ளிட்டு அவளுக்கும் தோழிமார்க்கும் தெரியாதபடி ப்ரத்யாஸந்நமாகச்சென்று, அவர்களைக் காணப்பெறுதேவிடாய்த்த தன் திருக்கண்களாரளவும் நின்று கண்டருளி; இப்பிராட்டியுடையவும் தோழிமாருடையவும் ஆலோகாலாபாதிகளைப் பெறுமையாலும், இவளுடைய லீலோபகரணமான கிளிபூவைகளுடைய ஸம்ஸ்பர்ஶமதுராலாபஶ்ரவணங்களைப் பெற்று ஆத்மதாரணம் பண்ணப்பெறுமையாலும், இப்பிராட்டி தன்னிற்காட்டிலும் தன் பக்கலிலே பரிவுடைத்தாகையாலே தனக்கிவளோட்டை ஸம்ஶ்லேஷத்துக்குப்புருஷகாரமாகநினைத்த தோழிமாருள்ளிட்ட பரிஜனமும் இவள் தன்னிற்காட்டிலும் வைமுக்யம்பண்ணியிருக்கையாலும், "க்ஷணமபி தேய விநா ஜீவாமி..." என்னும் கணக்காலே க்ஷணகாலமும் எம்பெருமான் தனக்கிவளையொழியத் தரிப்பரிதாய்ச் செல்லாநிற்க; இப்பிராட்டியும் தோழிமாரும் "ஸௌந்தர்யாநுகாரணாத்" என்னுமாபோலே அவனுடைய ஸௌந்தர்யதரங்கங்களாலே தாங்களிருந்த வுத்யாநமெல்லாம் மயிற்கழுத்துச் சாயலாகையாலும், ஆலாங்கட்டிபோலேயும் வர்ஷதாரைபோலேயும் அவனுடைய கடாக்ஷங்கள் தங்கள்மேலே நிரந்தரமாகப்பட்டதினாலே புளகிதகாத்ரைகளாகையாலும், அவனை "ப்ரத்யாஸன்னன்" என்றறிந்து ப்ரணயகோபமறமிக்கு, அவன்பக்கல் வராநிற்ப்பவர்களாயிருக்க; அவனும் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளையும் தன்னுடைய ஆற்றாமையையுமாவிஷ்கரித்துஊடல்தீர்த்து இப்பிராட்டியோடே ஸம்ஶ்லேஷித்து முடிக்கிறான்.

ப — இரண்டாந்திருவாய்மொழியில், "இப்படி வடகோபஜ்ஞமாகவாஶ்ரயிக்க வுத்யோகித்தவர், அநாதிகாலம் ஹக்வத்வேஷத்தாலே விமுகரான தம்மை ஈஶ்வரன் ஸ்வயத்நத்தாலே யபிமுகராக்கிக்கொண்டபடியை யாராய்ந்து; இந்த அபிமுகீகரணத்துக்கடியான வவனுடைய விரோதி நிவர்த்தகத்வத்தையும், ஆகர்ஷகமான அவயவஶோபையையும், அபேக்ஷாப்யபேக்ஷாபகத்வத்தையும், அவடிதகடநா ஸாமர்த்யத்தையும், ஆஶ்ரிதகார்யார்த்தமான பரிகரவத்தையையும், ஸர்வலோக நிர்வாஹகத்வத்தையும், ஆஶ்ரிதஸம்ரக்ஷணத்தி லத்யந்தாபிநிவேஶத்தையும், அதிஶயிதஜ்ஞாநதையையும், அபிமததமமான முகஶோபையையும், அகிலப்ரகாரரக்ஷணத்தையு மநுஸந்தித்து; இந்த ஸ்வபாவவிஶேஷங்களாலே, ஸ்வரூபாந்விதமன்றியே தமக்குவந்தேறியான வைமுக்யத்தைக்கழித்து அபிமுகீகரித்துக்கொண்ட ஆகாரத்தை, ப்ரணயரோஷத்தாலே விமுகையாய் "அவன்வந்தாலும் முகங்கொடேன்" என்று தோழிமாரோடேகூட லீலாப்ரஸங்கத்தாலே அந்யபரதாஸ்ராவணைபண்ணியிருக்கிற கோபிகையை யநுநயித்து ஊடல் தீர்த்து ஆபிமுக்யம்பண்ணுவித்துக்கொண்டு ஸம்ஶ்லேஷித்த ஆகாரமாகிற அந்யாபதேசத்தாலே யருளிச்செய்கிறார்.

இ.—இரண்டாந்திருவாய்மொழியில், மாசறுசோதிதொடங்கி * வைகல் பூங்கழிவாயளவும் வர வ்யஸநபரம்பரையாலே நோவுபட்டு ஓராஶ்வாஸமும் பெறாதே யிருக்கிறவிவள், "நெடுநாள் விஶ்லேஷத்தாலே நோவுபடுகையாலும், களித்து ஶரணம் புகுரிலும் பொறுக்கமாட்டாதவன் திருவடிகளிலே நாலுப்ரயோகம்ஆர்த்தியோடே ஶரணம் புகுகையாலும், தூதுவிடுகையாலும், அவன் வரவை ஸூசிப்பிக்கிற நிமித்தங்களாலும், தனக்கநபிமதமாயிருக்கப் போனப்போலே தன் வரவு அநிஷ்டமாயிருக்க வருவானொருவனாகையாலும், நம்முடைய பாக்யவைகல்யத்தாலும் வரவு தப்பாது" என்று நிஶ்சயித்து, "வந்தாலும் அவனோட்டை ஸம்ஶ்லேஷம் விஶ்லேஷாந்தமாயல்லதிராது; இன்னம் ஸம்ஶ்லேஷித்து து:கபரம்பரைகளை அநுபவிப்பதிற்காட்டில் முகம்பழகின வாற்றாமையோடே அவன் கண்முகப்பே முடிந்துபோகை நன்று" என்று ப்ரணயரோஷத்தாலே நிஶ்சயித்து, தன்னுடைய லீலோத்யாநத்திலே மநோஹரமாயிருப்பதொரு மண்டபத்திலே அவனுக்குக்கிட்டவொண்ணாதபடி அநாதரமாகிற கன்மதிளையிட்டு அந்யபரைகளைப்போலே தோழிமாரும் தானும் கழகமாகவிருந்து, கிளிதொடக்கமான தன்னுடைய லீலோபகரணங்களையும் அவனுக்கெட்டாதபடி யொருங்கவிட்டிருக்க; "வேறுகொண்டும்மையானிரந்தேன்" என்று கூப்பிட்ட த்வநியைக் கேட்டு, த்ரௌபதியினுடைய ஆர்த்தத்வநியைக்கேட்டபோது போலேயும் ஆனையினுடைய ஆர்த்தநாதம் செவிப்பட்டபோதுபோலேயும் ஶரதல்பகதரான ஸ்ரீபீஷ்மரை யநுஸந்தித்தபோதுபோலேயும் மிகவும் கலங்கி, "நம்மைப்பிரிந்திவள் நோவுபட, நாம்உதவப்பெறுதொழிவதே!" என்று லஜ்ஜாபயவிஹ்வலனாய்க்கொண்டு, இவளோடே கலந்தல்லது தரிக்கமாட்டாதவனாய் இவளிருந்த விடத்துக்கு அதூரவிப்ரக்ருஷ்டமாக வந்து, இவள் ப்ரணயகோபத்தாலே அணுகவொண்ணா திருக்கிறபடியைக்கண்டு, "ஸாபராதரான நாம் அநபிமததசையிலே யிசைவின்றிக்கேயிருக்கக் கண்காணச்சென்று மேல் விழில், ம்ருதுப்ரக்ருதியாகையாலே மாந்தும்; ஆகையாலே 'ஸஹஸா துஸ்ஸுரணைமாஶ்ரு' என்னும்படியாலே யநுவர்த்தித்து இவளுடைய ஹ்ருதயகாலுஷ்யத்தைப் போக்கிக் கலக்க

வேணும்" என்று பார்த்து தன் திருமேனியோடே விகல்பிக்கலாவதொரு சோலையினுள்ளிட்டு அவளுக்கும் தோழிமாருக்கும் தெரியாதபடி கிட்டச்சென்று கண்களாலே விடாய் கெடுமளவும் நின்று கண்டு; இவளுடைய ஆலோகாலாபாதிகள் பெற்று ஆத்மதாரணம் பண்ணப்பெறுமையாலும், இவளோட்டை கலவிக்கு புருஷகாரமாக நினைத்ததோழிமாரும்இவளிற்காட்டில் விமுகைகளாகையாலும், "க்ஷணவிரஹமபி து:ஸ்ஸஹம்" என்று க்ஷணமாத்ரமுமிவர்களை யொழியத் தரிப்பரிதாய்ச் செல்லாநிற்க; தோழிமாரும்இவளும்"ஸௌந்தர்யதர்சனக்ஷமா" என்னுமாபோலே அவன்வடிவழகாலே உத்யானமெல்லாம் மயிற்கழுத்துச்சாயலாகையாலும், ஆலாங்கட்டிபோலேயும் வர்ஷதாரைபோலேயும் அவன் கடாக்ஷம் தங்கள் மேலே நிரந்தரமாகப்பட்டதிறலே புளகிதகாத்ரைகளாகையாலும் "ஸந்நிஹிதன்" என்றறிந்து ப்ரணயகோபம் மிக்கு முகங்களை மாறவைத்திருக்க, அவனும் தன் ஸௌந்தர்யாதிகளையும் தன்னாற்றாமையையும் ஆவிஷ்கரித்து ஊடல்தீர்த்து இவர்களோடே கலந்து பொருந்தினானாயிருக்கிறது.

ஈடு.—இவ்வாழ்வாராகிறார், ஸம்ஸாரபயத்தாலும் பகவத் ப்ராவண்யத்தாலும் கைங்கர்யருசியாலும் வ்யதிரேகத்தில் தரியாமையாலும், பகவத்விஷயத்தில் கைவைத்தா ரெல்லாருடைய படியு முடையரா யிருப்பர். "போய்நின்றஞானமும் பொல்லாவொழுக்கு மழுக்குடம்பும்" என்கையாலே பத்தர்படியுண்டென்னவுமாயிருந்தது; "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்றுகொண்டு - அதுபொருந்தாதபடியிருக்கையாலே; முமுக்ஷுக்கள்படியுமாயிருந்தது, "வழுவிலாவடிமைசெய்ய வேண்டுநாம்" என்று-கைங்கர்யத்தாலல்லது தேஹயாத்ரை செல்லாமையாலே, முக்தர்படியுண்டென்னலாயிருந்தது; "நின்னலாலிலேன்காண்" என்று - அதுதான் ஸத்தாப்ரயுக்தமாயிருக்கையாலே நித்யரோடொக்கச் சொல்லலாயிருந்தது; ப்ரணயரோஷத்தாலே யூடுகையாலே பிராட்டிமாரோடொக்கச் சொல்லலாயிருந்தது. "விஷ்ணுநா ஸத்ருசோ வீர்யே ஸோமவத் ப்ரிய

ப்ர.—மின்னிடைமடவார் ப்ரவேசம், ஸம்க்ஷேபம், "விஷ்ணுநா ஸத்ருசோ வீர்யே ஸோமவத் ப்ரியதர்சந: । காலாக்நிஸத்ருச: க்ரோதே க்ஷமயா ப்ருதிவீஸம: ॥ ௧அ ॥

மின்னிடைமடவார்ப்ரவேசம், இப்படி கீழ்விட்டதூதர்சென்று அவனுக்கறிவித்து அவனும் வாராநிற்க, வருமளவும்பற்றாமல் ஆற்றாமைமுறுகி ப்ரணயரோஷம் தலையெடுத்து அத்தாலே, 'அவன்வந்தாலு மவனோடே ஸம்ச்லேஷிப்போம் அல்லோம்' என்றிருக்கிறவிவளை, அவனும்வந்து தன் ஸௌந்தர்யாதிகளாலே இத்தலையிலூடலைத்தீர்த்து ஸம்ச்லேஷித்தபடி சொல்லுகிறதென்று - மேல்சொல்லப்புகுகிற ஸங்கதியை யுட்கொண்டு, ப்ரணயரோஷத்தாலே யூடுவார்கள் பிராட்டிமாரன்றோ, ஆழ்வார்க்குக்கூடுமோவென்ன; இவர்க்கெல்லார்படியு முண்டாகையாலே கூடுமென்கிறார்-இவ்வாழ்வார் இத்யாதி. இவ்வாழ்வாராகிறாரென்றது - ஆழ்வாரென்றபடி. பகவத்விஷயத்தில் கைவைத்தாரெல்லாருடையவென்றது - முமுக்ஷுக்கள் முக்தர் நித்யர் பிராட்டிமாருடையவென்றபடி. ஸம்ஸார பயந்தொடக்கமான வாகாரங்களை முமுக்ஷுக்கள் முதலானார்பக்கலிலே இவர்சந்தைகளாலேஉர்ப்பிப்பிப்பதாகத்திருவுள்ளம்பற்றி, ஸம்ஸாரபயம்பிறப்பதுபண்டுஸம்ஸாரியாயிருந்துபகவத்ஸமாச்ரயணம்பண்ணினவனுக்கே யாகையாலே, ப்ராஸங்கிகமாக, பத்தர்படியுமுண்டென்னுமத்தையிவர்சந்தையாலே தர்ச்பிப்பிக்கிறார்-போய்நின்றஞானம் இத்யாதி. அநந்தரம், முமுக்ஷுக்களுடையஸம்ஸாரபய மிவர்க்குண்டென்கிறார்-இந்நின்றநீர்மை இத்யாதி. முக்தருடைய கைங்கர்யருசியு முண்டென்னுமத்தைஉர்ப்பிப்பிக்கின்றார்-வழுவிலா இத்யாதி. நித்யருடைய வ்யதிரேகத்தில் தரியாமையுமுண்டென்னுமத்தை உர்ப்பிப்பிக்கிறார் - நின்னலால் இத்யாதி. பிராட்டிமாருடைய பகவத்ப்ராவண்யமு மிவர்க்குண்டென்னுமத்தை உர்ப்பிப்பிக்கிறார்—ப்ரணயரோஷத்தாலே இத்யாதி. இத்தைப் பிற்பாடுவிவரித்

**ஶந:**'' (விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே ஸோமவத்ப்ரியதர்ஶந:) - என்று பெருமாளுடைய ஓரோ ஸ்வபாவங்களுக்கு ஸகலபதார்த்தங்களையு மோப்பாகச்சொல்லுமா போலே, அல்லாதார்படியடங்கலும் இவருடைய ஓரோ அவஸ்த்தைக் கோப்பா மத்தனை. இதுதான் பால்யாத்ப்ரப்ருதியிறேயிவர்க்கு; ''அறியாக் காலத்துள்ளே அடிமைக்கணன்புசெய்வித்து'' என்றும், ''முலையோமுழுமுற்றும்போந்தில - பெருமான்மலையோ திருவேங்கடமென்று கற்கின்றவாசகம்'' என்றும் சொல்லுகிறபடியேயிறே இவர் பருவம் நிரம்புவதற்குமுன்னும் இருக்கிறபடி. இனி * ஏறுளுமிறையோனிலே அவன் வேண்டாத நானுமென்னுடைமையும் வேண்டா என்றார் ; * மாசறுசோதியிலே எனக்குறுப்பல்லாத அவனும் அவன்விபூதியும்வேண்டா என்றுஅழிக்கப்பார்த்தார்; *பிறந்தவாற்றிலே யரித்துநின்று குணநுஸந்தாநம்பண்ணவல்லேனும்படி பண்ணியருளவேணு மென்று ஶரணம்புக்கார்; அப்பெரியவார்த்தியோடேகூடத் தூதுவிட்டார்; விட்ட ஆள் சென்று அத்தலைப்பட்டு அவனுக்கறிவிக்க,அவனும்இழவாளனாய் ஆனைக்கருள்செய்யவந்து தோற்றினாற்போலே பதறிநடந்துவாராநிற்க, அவ்வளவு பற்றாமே கிடந்து துடித்தலமந்து, ''இனிஇவ்வளவில் நாம் செய்யஅடுப்பதென்?''என்றுபார்த்து, ''முடிந்துபிழைக்கைக்குமேற்பட்ட பரிஹாரமில்லை''என்றுபார்த்துஅறுதியிட்டுமுடியப்பார்க்கிறாள். அதுஇவள்ஸங்கல்பித்தபோதாக முடியலாயிராதிறே; அங்ஙன் செய்யலாமன்று, இவள் * ஏறுளுமிறையோனில் 'வேண்டா' என்றபோதே போமிறே. இனிஹோகத்துக்கு அவன்வரவு வேண்டினவோபாதி முடிவுக்கும் அவன்வரவு வேண்டியிருந்தது. பிரிவில் குணநுஸந்தாநம்பண்ணி யரிக்கலாம்: அவன் ஸந்நிதியில்அவனையொழிய அரைக்ஷணம் முகம்மாறியிருக்குமதுக்குமேற்பட முடிவுஉண்டோ? அவன்பேரநின்றுஇத்தலையைப்பண்ணினமிறுக்கடங்கலும்,அவன்ஸந்நிதியிலே தான்முடிந்து அவனையே நோவுபடுத்தப் பார்க்கிறாள். அவன்வரவிலே அல்பம்தாழ்க்க, ப்ரணயரோஷம் தலையெடுத்து, ''இனியிருந்துஜீவிக்கும்ஜீவநம்வேண்டா'' என்று முடியப் பார்க்கிறாளிறே பிரிவுபொறுக்கமாட்டாமை.*'' *ப்ராணயாத்ராஹிஸா நாத்ரவஸிஷ்டிக்ஷேபராவவம்* ''

---

* ஜயோயஷ்காரணே, [ஸ] ஸாதஶைத்ருஸம்விஹ்ரா வீதாவிபாவவக்ஷஸம் ।
ப்ராணயாத்ராஹிஸா நாத்ர வஸிஷ்டிக்ஷேபராவவம் ॥ உ ॥

---

*தது - ப்ரகரணமிதுவாகையாலே, அதுக்குச்சேரப்பிராட்டியோடே ஸர்வதாஸாம்யம் சொல்லவேண்டு கையாலே. ஒருத்தருக்கே யெல்லாருடைய படிகளு முண்டாகக்கூடுமோவென்ன - விஷ்ணுநா இத்யாதி. கீழுக்தமான ஆகாரங்கள்அல்லாதஆழ்வார்களுக்கும்உண்டே, இவர்க்கு வாசியேது? என்ன-* **இதுதான்** *இத்யாதி. பால்யந்தொடங்கி ஹகவத்ப்ராவண்ய முண்டென்னுமதுக்கு ப்ரமாணம்* **''அறியாக்காலத்துள்ளே''** *இத்யாதி. இப்படி, ஊடுகைக்கு யோக்யதையை ஸாதித்து, ப்ராஸங்கிகசங்கா பரிஹாரங்களும் பண்ணினவநந்தரம்,ஏறுளுமிறையோன்தொடங்கி வ்ய்லேஷவ்ய ஸநமாகையாலே ஊடுகிறாளென்று கீழோடுஇத்திருவாய்மொழிக்கு ஸங்கதி -* **இனியேறுளும்** *இத்யாதி. முடியப்பார்க்கிறதென், முடிந்துவிடலாகாதோவென்ன -* **அதுஇவள்** *இத்யாதி வாக்யத்வயம். ஆனபின்பு, அவன்வந்தே முடியவேணுமென்கிறார் -* **இனிபோகத்துக்கு** *இத்யாதி. பிரிவன்றோமுடிகைக்குறுப்பு; அவன்வரவு முடிகைக்கு உறுப்போ? என்ன -* **பிரிவில்** *இத்யாதி. தான்முடியப்பார்க்கிறாளென்றார் கீழ்; அவன் தன்னைமுடிக்கப்பார்க்கிறாளென்று ஹாவாந்தரம் -* **அவன்பேரநின்று** *இத்யாதி.ஆனால்அவனிடத்திலே த்வேஷத்தாலே செய்கிறாளோவென்ன -* **அவன்வரவிலே** *இத்யாதி. ப்ரணயரோஷத்தாலே இப்படி ஊடினபேருண்டோ?என்ன—* **ப்ராணயாத்ர** *இத்யாதி. இதுக்கர்த்தம் -* **அவரோடு** *இத்யாதி. ப்ர*

(ப்ரணயாச்சாபிமாநாச்சபரிசிக்ஷேபராகவம்) என்கிறபடியே. அவரோடுண்டான சிரபரிசயத்தாலும் கலவியாலும், "என்னுடையவரன்றே" என்கிறவேண்டற்பாட்டாலும்,பெருமாளை மேலிட்டு வார்த்தைசொன்னாள்: என்சொன்னாளென்னில்:—"**கிம்த்வாமந்யத வைதேஹ: பிதா மே மிதிலாதிப: | ராமஜாமாதரம் ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்**" (கிம்த்வாமந்யதவைதேஹ: பிதாமேமிதிலாதிப: | ராமஜாமாதரம்ப்ராப்ய ஸ்த்ரியம் புருஷவிக்ரஹம்)என்று வாரீர், ஒருவனுக்குஆற்றுவோருத்திஉண்டோ?என்னையொருத்தியையும் நோக்கமாட்டாமையே வைத்துப்போகப்புகுகிறது ! இதுதன்னை எங்களய்யர் கேட்கில் போர வெறுப்பர்; ஒருபெண்பெண்டாட்டி ஆணுடையுடுத்து என்மகளைக் கைப்பிடித்துக்கொண்டு போனவித்தனையாகாதே என்றிராமே கடுகக்கொண்டுபோகப் பாரும். "**ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய**" (ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய)-பிறருயர்த்திகண்டால் பொறுக்கவேண்டாவோ? நான் "உம்மோடேகூடப்போர" என்று புறப்பட்டு நாலடி இட்டால்,எனக்குஅத்தால்வரும்ஏற்றங்கண்டு பொறுக்கமாட்டாமையாலுண்டான கோபாஸூயைகளைப் போகடும். "**புக்தசேஷமிவோதகம்**" (புக்தமேஷமிவோதகம்)- இதுவும் அப்படியாகாதே தான். ப்ரணயிகள் கோஷ்டியிலிங்ஙனேகாணும் பரிமாற்றம் - ப்ரணயிநிகளுக்குஉண்டான தன்னேற்றம்தன்னதாயிருக்கவேண்டாவோ?"**நயஸ்வமாம் வீர**"

---

[ரா—௬—௨௯—௬] **ஈர்ஷ்யாரோஷௌ பஹிஷ்க்ருத்ய புக்தசேஷமிவோதகம் | நயஸ்வமாம் வீர விஸ்ரப்த: பாபம் மயி ந வித்யதே ‖ ௭ ‖**

---

கர்ஷேண நய: ப்ரணய:என்றாய், "**நீஜ ப்ராவணே**" என்கிறதாதுவாலே சிரபரிசயத்தையும் அத்தாலுண்டானகலவியையும்சொல்லுகிறது. வேண்டற்பாடு-பெருமை. அபிமாநமாவது-வேண்டற்பாடு. சிரபரிசயம்பண்ணினவன் விட்டுப்போகப்புக்கால் கோபமாமிறே; ஆகையாலே, சிரபரிசயம் மேலிட்டுவார்த்தைசொல்லுகைக்குஹேது; ஏகதத்வமென்னலாம்படி கலந்தவன் விட்டுப்போகப்புக்கால் கோபமாமிறே; ஆகையாலே, கலவியும், மேலிட்டுவார்த்தைசொல்லுகைக்குஹேது. * அபிமாநமாவது - "என்னுடையவரன்றே" என்கிறபெருமை; ஆகையாலே, தனக்குப்பரதந்த்ரராயிருந்தவர் விட்டுப்போகப்புக்கால் கோபமாமாகையாலே, இதுவும் மேலிட்டுவார்த்தைசொல்லுகைக்கு ஹேதுவென்றபடி. மேலிட்டுவார்த்தைசொல்லுகையாவது - வீரனானவனை காபுருஷனாக்கிவார்த்தைசொல்லுகை. (வாரீர் என்றுதொடங்கி, போரவெறுப்பர் என்னுமளவாக) "**கிம்த்வாமந்யத**" இத்யாதிஸ்லோகத்துச்சவதாரிகை. 'ஒருபெண்பெண்டாட்டியென்றுதொடங்கி' ஸ்லோகார்த்தம். '**வைதேஹ: - மிதிலாதிப: - மே பிதா - ராமஜாமாதரம்-த்வாம்-புருஷவிக்ரஹம் ஸ்த்ரியம் ப்ராப்ய கிம் அமந்யத**'' இத்யந்வய:. அமந்யதகிம் - மந்யேதகிமித்யர்த்த:; எண்ணுமோவென்றபடி. ஊடினதுக்குப்ரமாணந்தரம் - **ஈர்ஷ்யா** இத்யாதி, **புக்தசேஷம்** இத்யாதி, **நயஸ்வமாம்** இத்யாதி ப்ரமாணத்ரயமும். "ஈர்ஷ்யாகோபங்களைத்தள்ளிப்போகடும்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - பிறநயர்த்தி இத்யாதி. 'உனக்குயர்த்தியேது' அதுகண்டு நாமென்செய்கிறோம்? என்ன - நான்உம்மோடே இத்யாதி. ஈர்ஷ்யை - பொறாமை. "**ஈர்ஷ்யா பரோத்கர்ஷாஸஹநம் க்ரோதோ ரோஷ இதி**" என்னக்கடவதிறே. இதுவுமென்றது-ஈர்ஷ்யாரோஷங்களை. 'அப்படியாகாதேதான்'- **புக்தசேஷோதகவத் த்யாஜ்ய**யன்றேவென்றபடி. உன்னுயர்த்தி கண்டால் பொறுக்கவேண்டுவானேன்னென்ன; - உம்முடைய ப்ரணயித்வஸித்திக்காக என்கிறார் - ப்ரணயிகள் இத்யாதிவாக்யத்வயத்தாலே. இங்ஙனேகாணுமென்றது - மேல்வாக்யத்திலர்த்தத்தைப் பராமர்சிக்கிறது. "**வீர - மாம் நய**" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - என்னை இத்யாதி.

(நயமாம்வீர)-என்னை அறியாதாப்போலேஉம்மையும்அறிந்திலீராகில்,நான் சொல்லக்கேளும். உமக்கோருதுறைகளு மில்லை காணும்; என்னைக்கோடுபோகப் பாரும். "விஸ்ரப்தஃ" (விஸரப்தஃ) - தந்தாமை யறியாவிட்டால் ஆப்தர்வாயிலே கேட்டறியவேணுங்காணும். "பாபம்மயிநவித்யதே" (பாபம்மயிநவித்யதே)-போகடும்; இங்ஙனன்றாகில்,நீரென்னை யிங்கே நிறுத்திப்போனால், நீர் மீண்டுவருந்தனையும் தரித்திருக்கைக்குவேண்டும்ஹேது எனக்கில்லைகாணும். இப்படியிறே ப்ரணயரோஷம் தலையெடுத்தாலிருக்கும்படி. இன்ன மிவ்வளவேயோ? இவர்தாம் இலக்காகச் சொன்னவையிறேயிவை. இவர்வரவிட்டஆளின் முன்பேயும்* "குஶலீயதிகாகுத்ஸ்த்தஃ கிம்நுஸாகரமேகலாம் | மஹீம்தஹதிகோபேந யுகாந்தாக்நிரிவோத்தித:" (குஶலீயதிகாகுத்ஸ்த்தஃ கிம்நுஸாகரமேக லாம் | மஹீம்தஹதிகோபேந யுகாந்தாக்நிரிவோத்தித:)என்னுமவளிறே. "காகுத்ஸ்த்தஃ" (காகுத்ஸ்த்தஃ) - பரபரிபவம் பொறுத குடியிலேயன்றோ தாம் பிறந்தது; "பிறர்க்குவந் தவை பரிஹரிக்குமத்தனையல்லது, தமக்குவந்தது பரிஹரிக்கலாகாது" என்றிருக்கிறாரோ? "கிம்நுஸாகரமேகலாம்மஹீம்தஹதி" (கிம்நுஸாகரமேகலாம்மஹீம்தஹதி)."த்ர வத்ரவ்யத்துக்கு ஓரம்பும் கடிநத்ரவ்யத்துக்குஓரம்பும் வேணும்" என்றிருக்கிறாரோ? கடலில் நீரே நெய்யாக எரிக்கவல்ல அம்புடையவரன்றோ. ஒக்கக் கைப்பிடித்தவளாகிலும் பரி வட்டம் பேணியிருக்கும்படிவைத்தாரிறே; ராஜாக்களுக்கு பூமியும் ஸ்த்ரீபோலேயிறே; ஈஶ்வரர்கள் ஸ்ருஷ்டித்தபடி கிடப்பது இவர் கண்சிவக்குமளவுமாகாதேயென்றும், "யதாஹம்ஸஹஸாக்ருத்ஸ்நம் ஸஹஸராஜ்யம் ஸர்வபாவம்ரணம் நயத:ஸஹா தி" (தர்

*ஸாந்த்ரகாண்டே ஷட்த்ரிம்ஶே ஸநந்தனம் ப்ரதிவசநம், "ஶிஷ்ட்ராய காஶ்மீரயோ யதாதாஸத்யவதய: । ஶக்ஷணஶஹோதேஜா வாதிநந்த வயந: ॥ கஉ ॥

---

என்னையறியாதாப்போலே உம்மையுமறிந்திலீராகி லென்றது - "ஜநாநந்தாவிவொஞூகள்", "அகிலகில்லேனிறையும்" என்கிற என் ஸ்வரூபத்தை யறியாதாப்போலே, "ஶக்தாஃஶூஷ்யாத வீர்யஸ்" என்கிற உம்மையும் அறிந்திலீராகிலென்றபடி. விஶ்லேஷத்தில் தரிக்கைக்குஹேது-பாப மென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - போகடும் இத்யாதி. போகடும் - விடுமென்றபடி. உக்தார்த் தத்தை ப்ராக்ருதத்திலே ஏறிடுகிறார் - இப்படி இத்யாதி. இவர்தாம்இலக்காக - பெருமாள்முன்னிலை யாக. 'ஆளின்முன்பேயும் - என்னுமவளிறே' இதிவாக்யாந்வய:. "காகுத்ஸ்த்தஃ" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - பரபரிபவம் இத்யாதி வாக்யத்வயமும். தஹியாமைக்குஹேது நம்பக்கலுபேக்ஷை யொழிய, தம்முடையஅம்பு இரண்டையும் தஹிக்கமாட்டாமையில்லையென்கிறார் - த்ரவத்ரவ்யத்துக்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே. இரண்டுக்கும் வேறே அம்பு வேண்டாவோவென்ன - கடலில்நீரே இத் யாதி. இப்படியிருக்க, தாம் தஹியாதிருந்தது, என்பக்கல் ஸ்நேஹமில்லாமை என்று கருத்து. "மேகலாம்" என்றதுக்கு ஹார்த்தபாவம் - ஒக்கக்கைப்பிடித்த இத்யாதி. ஈஶ்வரர்களான ப்ரஹ் மாதிகள் ஸ்ருஷ்டித்தத்தை இவராலே யழிக்கப்போமோ வென்ன - ஈஶ்வரர்கள் இத்யாதி. இது - "கோபேந" என்றதுக்குபாவம். "காகுத்ஸ்த்தஃ - குஶலீயதி-உத்தித: - யுகாந்தா

மாபதேஸாத்யஜதஸ்சராஜ்யம் மாம்சாப்யரண்யம்நயதஃபதாதிம்) - என்கிறபடியே பித்ரு வசநபரிபாலநம் பண்ணப் போந்தாரோ? என்னை நலிகைக்காகப் போந்தாரத்தனையிறே என்றும்-இப்புடைகளிலே சொன்னவை அநேகமிறே. இவளும் * மாசறுசோதிதொடங்கிப் போர நோவுபட்டு, அது தன்னை * வைகல்பூங்கழிவாயளவும் வரப் பாடாற்றி, அவ்வள விலும் வரக்காணாமையாலே தூதுவிட்டு, தூதவாக்யமத்தலைப்பட்டு மீளுவதற்குமுன்னே பற்றுதபடி பதறி, ''இனி அவன்றான்வந்தாலும் ஸம்ஸ்லேஷமாய் அதுவிஸ்லேஷாந்தமா யல்லதுஇராது; ஆனபின்பு, அவன்வந்து கலந்துபிரிந்தகோள்வாய் பொறுக்க அரிதாயிருக்கும்; அநந்தரம் பிரிவாகிற புதுக்கோமுற்றவன்வந்து முதன்மைகொண்டாடுமதில், முகம்பழகின வ்யஸநமே யமையும்'' என்று ஆற்றாமை தோற்றவிருந்தாள். எங்ஙனே யிருந்தாளோவென் னில்?—''ஹிமஹதநளிநீவநஷ்டஶோபா'' (ஹிமஹதநளிநீவநஷ்டஶோபா)- பன் னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக் கலந்துபோந்த விவளுக்கு வந்தேறியானபிரிவிறே: அத்தாலே அழகழிந்திருந்தாள். ''வ்யஸநபரம்பரயா'' (வ்யஸநபரம்பரயா)- பிரிவோ பாதி கலவியும் வந்துகழியப்பெற்றதில்லை. ''அதிபீட்யமாநா'' (அதிபீட்யமாநா)- ஆஸ் ரயத்தினளவல்லாதபடியாயிருக்கை. ''ஸஹசரரஹிதேவசக்ரவாகீ'' (ஸஹசர ரஹிதேவசக்ரவாகீ)- வருமளவும்உணர்ந்து பொறுத்திருக்கமாட்டாதிருக்கை. அவற்றின்படி யங்ஙனேயிறே: ''ஜநகஸுதா'' (ஜநகஸுதா)-''இவைவரும்'' என்று வளரப்பெற்ற தில்லை. ''க்ருபணாம்தஶாம்ப்ரபந்நா'' (க்ருபணாம்தஶாம்ப்ரபந்நா)- கீழ்ச்சொன்ன விவையொன்றும் ஒப்பாகமாட்டாது,சிலசொல்லிற்றுமித்தனை. இவளும்அப்படியே,''முகம் பழகினவாற்றாமையோடே யிருந்து முடியவமையும்; இனி, அவன் வரவுநமக்குவேண்டா'' என்றிருக்கிறாள். இவள்தானிப்படி பாரிக்கைக்கு அவன்றான் வாராநின்றானோவென்னில்?- அவன் வரவுக்கு ஸூசகமான நன்னிமித்தங்கள் அநேகமுளவாயிருந்தன. ''பக்ஷீச''

---

ந்ருபிவ, கொவெந-ஸாமரவெஷாம்ஹீடி, உஹதிகிம்ந'' - தஹியாரோ. தஹியாமை யாலே ப்ரணயித்வமில்லை என்றபடி. அன்றிக்கே, ஈஸ்வரஸத்தையுண்டானால் ஜகத்தை தஹியாரோ, ஆஸ்ரிதபரிபவம் பொறுப்பரோவென்னுதல்; ''ஆயிஜீவத்ருவி'' இதிவத். 'என்றும், என்றும்' என் றது தாத்பர்யாந்தரமல்ல: இப்படியுமிப்படியும் சொன்னாளென்றபடி. பிராட்டி நெடுநாள் விஸ்லே ஷித்துஊடினாள், இவளிப்படி நெடுநாள் நோவுபட்டாளோவென்ன -இவளும் மாசறுசோதி இத்யாதி. கோள்வாய் - புதுப்புண். புதுக்கோமுற்றவன் - புத்ததிகாரி. எங்ஙனேயிருந்தாளோவென்னிலென் றது - இவளாற்றாமை தோற்றவிருந்த ஆகாரம் ஆரைப்போலே யிருந்ததென்னில்என்றபடி. ஹிம ஹதமாவதற்கு முன்பு தாமரையோடை நன்றாயிருந்தவோபாதி, இவளும் திருவயோத்யையி லிருக்கிற நாள் பன்னிரண்டுஸம்வத்ஸரமும் ஒருவிக்கமறக் கலந்தாளென்று - ''நஷ்டஶோபா'' என்றதுக்கு ஹாவமருளிச்செய்கிறார்- பன்னிரண்டாண்டு இத்யாதி. தண்ணீர்த்துரும்பறவென்றது-'ஸமா த்வாதஶ' என்கிறவிடத்தில், '' க்ராம்யதர்மாநுபவஸம்யோகே '' என்று, அத்யந்தஸம்யோகே விஹித த்விதீயையைப்பற்ற. '' பரம்பரயா '' என்றதுக்கு ஹாவம் - பிரிவோபாதி இத்யாதி. ''அதி'' என்கிற உபஸர்க்கார்த்தம் - ஆஸ்ரயத்தின் இத்யாதி. ''சக்ரவாகீ'' என்றதுக்குஹாவம்- வருமளவு இத்யாதி. கீழ்ச்சொன்னவிவையென்றது - நளிநீசக்ரவாகிகளை. 'அவன்றான் வாராநின்றானோவென் னில்' என்கிற ஶங்கைக்குஅஞ்சு பரிஹாரம் அருளிச்செய்கிறார் - அவன்வரவுக்கு இத்யாதி. அண்டஜ மென்னாதே, 'பக்ஷீ' என்றதுக்குஹாவம் - சிறகைவிரித்தது என்று. ''க்ராஷ்டுநிஶ்சய:'' என்னாதே,

(பக்ஷீச)- பக்ஷியானது சிறகை விரித்தது. † (பக்ஷத்தையுடைத்தேன்கிறவிஶேஷணத்துக் கிதுவேயிறேகருத்து.) ''ஶாகாநிலய:'' (ஶாகாநிலய:) - உலர்ந்தகோம்பிலன்றிக்கே, பசுமையையுடைத்தான பணையிலேயிருந்தது. வ்ருக்ஷத்தை வலமாகவந்து, தழைத்தபணையிலே நற்றரிக்கஇருந்தது. ''ப்ரஹ்ருஷ்ட:'' (ப்ரஹ்ருஷ்ட:)-அங்குள்ள பலாதிகளை புஜிக்கையாலுண்டான ஹர்ஷம் வடிவிலே தோற்றும்படி இருந்தது. ''புந:புநஸ்சோத்தமஸாந்த்வவாதீ'' (புந:புநஸ்சோத்தமஸாந்த்வவாதீ)-மேன்மேலென நல்வார்த்தைகள் சோல்லத் தொடங்கிற்று. அதுக்கு மேலே, ''ஸுஸ்வாகதாம்வாசமுதீரயாந:'' (ஸுஸ்வாகதாம்வாசமுதீரயாந:)- இவ்வளவல்லகிடாய்அத்தலைபட்டது என்று சோல்லுமாபோலே யிருந்தது. ''புந:புநஸ்சோதயதீவ'' (புநபுநஸ்சோதயதீவ) - வரவு நிஶ்சிதமான பின்பு, குளித்தலோப்பித்தல் செய்யாதிருக்கிறது என்னென்று சோல்லுமாபோலே யிருந்தது. ''ஹ்ருஷ்ட:'' (ஹ்ருஷ்ட:)-வந்தால் பிறக்கும் வேறுபாடுதோற்ற உடம்புமயிர்எறிந்திருந்தது. ' ததாகதாம்'' (ததாகதாம்)- ''ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்ச''(ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்ச)- என்றுகோண்டு ப்ரஹ்மாவின் ப்ரஸாதத்தாலே யுள்ளபடியேல்லாம் தோற்றக்கடவதாகப் பெற்றுடையனுன ருஷிக்குப் பாசுரமிட்டுச் சோல்லவோண்ணுதபடி யிருக்கிற படி. ''தாம்''(தாம்)-தர்மிக்குமேற்பட அவ்வருகோன்றின்றிக்கேயிருக்கை. ''வ்யதிதாம்'' (வ்யதிதாம்) - கீழ்ச்சோன்னவை ப்ரக்ருதியாய், வ்யஸநமுள்ளது மேலேயேன்று தோற்றும்படியாய்இருந்தாள்; ''ஸமாத்வாதஶதத்ராஹம்'' (ஸமாத்வாதஶதத்ராஹம்) என்று பன்னிரண்டாண்டு கலந்துபிரிந்த இவளுக்கு அதோன்றுந்தோற்றுதே து:கத்தையிட்டு நிருபிக்கவேண்டும்படியா யிருந்தாள். '' அநிந்திதாம் '' (அநிந்திதாம்)- அத்தலையைப் பிரிந்தா லிருக்கக்கடவபடியே யிருந்தாள் இப்படி யிராத வன்று நிந்திதையேயாகாதே. '' வ்யபேதஹர்ஷாம் '' (வ்யபேதஹர்ஷாம்) - ''ஹர்ஷம் குடிபுகுந்துபோயிற்று '' என்று தேரியாதா யிருக்கை. '' ஶநை:ஶநைஸ்தாம் ''

''ஶாகாநிலய:'' என்றதுக்குஹாவம் - உலர்ந்த இத்யாதி. நன்னிமித்தமாகையாலே ததுபயுக்தத்தையுங்கூட்டிக்கொண்டு, ''நிலய:'' என்கிற பதத்துக்கு ஹாவம்-வ்ருக்ஷத்தை இத்யாதி. பக்ஷியானது இரையெடுத்தால் நல்ல லக்ஷணமிறே, ஆகையாலே யருளிச்செய்கிறுர் - அங்குள்ளபலாதிகளை இத்யாதி. * உத்தமஸாந்த்வவாதியாகையாவது - பெருமாள் சீக்ரத்திலே வருகிறுரென்கை. '' ஸாந்த்வவாதீ - இவ உதீரயாந: - இவ '' என்று இவ ஶப்தத்தை - கீழிற்பதங்களிலுங் கூட்டுவது. வந்தால்பிறக்கும் வேறுபாடென்றது - பெருமாள்வந்தால் பிராட்டிக்குப் பிறக்கும் ஸந்தோஷமென்றபடி. ''ரஹஸ்யஞ்சப்ரகாஶஞ்சயத்வ்ருத்தம்தஸ்யதீமத:। ராமஸ்யஸஹஸௌமித்ரே ராக்ஷஸாநாஞ்சஸர்வஶ:'' இதி பாலகாண்டே. ததாகதாம் - வாசாமகோசரமான தசையை யடைந்தவளென்றபடி. தாமென்றது - ஸ்வரூபமாத்ரவாசி. '' வ்யதிதாம் '' என்றதுக்கு - * ஆதிகர்மணிக்த ப்ரத்யயமாய், வ்யஸநோபக்ரமத்தைச்சொல்லுகிறது என்றர்த்தம் அருளிச்செய்கிறுர் - கீழ்ச்சோன்னவை இத்யாதி. ப்ரக்ருதியாயென்றது - ஸ்வஸ்த்த தசையாயென்றபடி. ''வ்யதிதாம்'' என்றதுக்கு நிருபகமாக ஹாவாந்தரம் - 'ஸமாத்வாதஶ' இத்யாதி. 'அத்தலையைப்பிரிந்தால்' இத்யாதிக்கு- உத்தமநாயகனைப் பிரிந்தாலிருக்கக்கடவபடியே இருந்தாளென்று கருத்து. உபஸர்க்கார்த்தம் - ஹர்ஷம்குடிபுகுந்து இத்யாதி. ''ஶநை:ஶநைஸ்தாம்'' என்கைக்கு - இத்தசையிலழகுண்டோவென்ன - மண்

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

(பரிதீநமாநஸாம்)-ஹர்ஷம்வந்தாலும் ஆம்ரயமுமின்றிக்கேயிருக்கை. 'ஸாஹா' (ஸாபாம்)-மண்தின்றுவந்த நகடபோலன்றிறே குணதிகவிஷயத்தைப் பிரிந்தால் இருக்கும்படி; கடலேறிவடிந்தாற்போலே யிருக்கிற அவ்விருப்புதனக்கே ஆலத்திவழிக்கவேண்டும்படி யிருக்கை. ''நிமித்தாநிஸாஹாநிபேஜிரே'' (நிமித்தாநிஸாபாநிபேஜிரே)- நிமித்தங்களானவை இத்தலைக்கு நன்மைசொல்லித் தந்தாம் ஸ்வரூபம் பெற்றன. ''நரம்ஸ்ரீயாஜுஷ்டமிவோபஜீவிந:'' (நரம்ஸ்ரீயாஜுஷ்டமிவோபஜீவிந:)- ஸாக்ஷால்லக்ஷ்மிக்குக் கிஞ்சித்கரித்து ஸ்வரூபம்பெற்றன; என்போலவென்னில்?—அர்த்திகளாயிருப்பார் உதாரர் பக்கலிலேசென்று தந்தாம் ப்ரயோஜநம் பெற்று ஹ்ருஷ்டராமாபோலே. இப்படியாயிருந்தன நிமித்தங்களின்அளவு. இனி, அவனளவு பார்த்தால், ''ஆர்த்தோவாயதிவாத்ருப்த:'' (ஆர்த்தோவாயதிவாத்ருப்த:)-ஆர்த்தனாய் ஸரணம்புகவுமாம்; அன்றிக்கே, நாம் திருநாமங்களைச் சொன்னால் சேவகர் நம்மை ஆக்ஷேபித்துச் சொல்லுமாபோலே செருக்காலே சொல்லவுமாம். இங்ஙன் விகல்பிப்பானேன்? ஆர்த்தனுக்கன்றோ பலப்ராப்தியுள்ளது? மற்றையவனுக்குஉண்டாகச் சொல்லுகிறவிடம் ப்ரஸித்தமன்றிறே யென்னில்?—இஸ்ஸ்லோகத்தால், ஸரணாகதலக்ஷணம் சொல்லுகிறதல்ல: ஸரண்யலக்ஷணம் சொல்லுகிறது. இவனுடைய ஆர்த்திதானுமுபாயத்தில்அந்வயியாதிறே; ஆனபின்பு அவனோடிவனோடு வாசியில்லை. ''தன்தசையறிந்து, 'நமக்கோருகைம்முதலில்லையாயிருந்தது' என்று தன்குறையை

தின்றுவந்த இத்யாதி. இங்கே - ''கூவஸ்ஜீம் ஹயாஜெவீம் ஸவஹாபாஸ:.'' என்றதநுஸந்தேயம். நகடு - வைவர்ண்யமும், ஸோபையும், வ்யாதியும். விவரணம் - கடலேறி இத்யாதி 'ஆலத்திவழிக்கவேண்டும்படி' என்றவிடத்திலே- ''அலமருகின்றனவாழியரோ''என்றதநுஸந்தேயம். ''ஸாஹாநி - நிமித்தாநி - பேஜிரே'' என்றந்வயித்தர்த்தம் - நிமித்தங்களானவை இத்யாதி. ''ஹஜவெஸவா'' என்கிறதாதுவாலும், ''ஸ்ரீயாஜுஷ்டம் - நரமிவ'' என்றத்ருஷ்டாந்தபலத்தாலும் ''ஸ்வரூபம்பெற்றன'' என்றது. இப்படியந்வயித்தே, ''நிமித்தங்களானவை ஸுபத்வத்வங்களையடைந்தன'' என்றுகொள்ளுமளவில், ''தயாமதா'' இத்யாதிகாரகங்களுக்குஅந்வயமின்றிக்கேயொழியும்;ஆகையாலே ஸவம்ஹ்ருதாம்ஹவ என்றுஅத்யாஹரித்து யோஜிக்கவேணும். இப்படியுமோருருவிலே அருளிச்செய்தார். ''நிமித்தங்களானவை'' இத்யாதி வாக்யவிவரணம் - ஸாக்ஷால்லக்ஷ்மிக்கு இத்யாதி. நிமித்தங்கள்மாத்ரமன்றிக்கே, அவன் க்ருபாவிஶிஷ்டனாகையாலும் வரவுதப்பாதென்று த்விதீயபரிஹாரம் - ஆர்த்தோவா இத்யாதி. ''த்ருப்தனுவான் - ஸம்ஸாரதோஷ பகவத்வைலக்ஷண்ய ஜ்ஞாநயுக்தனாய் ஸதாசார்யஸமாஶ்ரயணபூர்வகமாக 'ஈஶ்வரனேயுபாயோபேயம்'என்றுஅத்யவஸித்து, தேஹாந்தரம் ஸஹியாமல்ஏதத்தேஹாவஸாநத்தளவும் ஆறியிருக்குமவனாயிருக்க, 'சேவகர்நம்மையாக்ஷேபித்துச் சொல்லுமாபோலே' என்று லகூகரிப்பானென்'' என்றுகேட்க;—''ஸரண்யவைபவ ப்ரகரணமாகையாலே நஹிநிந்தாந்யாயேந லகூகரிக்கிறார்'' என்றருளிச்செய்வர். அன்றிக்கே, த்ருப்தியின் சரமாவதியான அஹ்ருதயோக்தியாகச்சொல்லுகிற அதிகாரியைச் சொல்லுகிற தென்னுதல்; ''ஸவதிவாஸெவயெநகெநாவிஹூகாரேண அயம்வகாஸவு'' இத்யாத்யநுஸந்தேயம். 'இங்ஙன்விகல்பிப்பானேன்' என்றதுக்குக்கருத்து - இருவர் ப்ரபத்தியும் நெடுவாசிப்பட்டிருக்க, ''ரக்ஷிதவ்ய:'' என்கிற ஏகபலவிஷய விகல்பங்கூடுமோவென்னி லென்றபடி. என், விகல்பிக்கைக்குக் குறையேதென்ன - ஆர்த்தனுக்கன்றோ இத்யாதி. 'ப்ரஸித்தமன்றிறே' என்கையாலே - அபுத்திபூர்வகமாக ஏககரணத்தாலே ப்ரபத்தி பண்ணுகிற சரமாவதி த்ருப்தன்? அவிவக்ஷிதனென்று கருத்து. ஸரண்யலக்ஷணஞ் சொல்லுகிறதுகொண்டு ஆர்த்தனையும் த்ருப்தனையு மொக்கச்சொல்லலாமோவென்ன - இவனுடைய இத்யாதி. ஆர்த்தனோடு ஸாம்யஞ்

அறிவிக்கவும் மாட்டாதபடியாயிருந்தான்; ஆனபின்பு, இவனுக்கு நாமே யாகாதேயுளோம்'' என்று திருவுள்ளம் இவன்பக்கலூன்றியிருக்கும். **''பரேஷாம்ஶரணாகத: அரி:''** (பரேஷாம்ஶரணாகத: அரி:) - ஶத்ருக்களில் வைத்துக்கொண்டு ஶரணாகதனான ஶத்ரு வாயிற்றிவன். அதேதென்னில்;— '' ஶரணம் '' என்கிற உக்தியைச் சொல்லு கையாலே ஶரணாகதன் என்னவுமாய், அகவாயில்இல்லாமையாலே ஶத்ருவென்னவுமா யிருக்கை. அன்றிக்கே, பூர்வவ்ருத்தத்துக்கு அநுதாப மில்லாமையாலும், இப்போது ' ஶரணம் ' என்கிற ஶப்தத்தைச் சொல்லுகையாலும், இரண்டும் சொல்லலா யிருக்கை. ''கொன்றேன்-அன்றே வந்தடைந்தேன் '' என்னுமாபோலே. **''ப்ராணாந்பரித்யஜ்ய''** (ப்ராணாம்பரித்யஜ்ய)-ப்ராணங்களை யொருதலையாகவிட்டு.**''ப்ராணாநபி''**என்னவேண் டாவோவென்னில்?—அவன்சொன்ன சொலவுக்கு இதொன்றும் போராமையாலே அது வேண்டாவாயிற்று. **''ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா''** (ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா) - சிக்ஷித மநாவாய் இருக்குமவனால் இத்தனையும்செய்யப்படும். அறிவுடையார்க்கித்தனையும் செய்தல் லது நிற்கவொண்ணாது. இதிறேயவன்படி. ''இப்படி, களித்து 'ஶரணம்' என்றாலும் பொறுக்கமாட்டாதவன், * மாசறுசோதியேதொடங்கிப் போரமிறுக்கப்பட்டு நாலுப்ரயோகம் அடுத்து ஶரணம்புக்கு, அவ்வளவிலும் முகங்காட்டாதொழியச் செய்தேயும் தூதுவிட்டு, 'இப்படி இம்மிறுக்குக்களெல்லாம்பட்டது நம்மையுத்தேசித்திறே' என்றிருக்கும்'' என்றிருக் கையாலும், இவ்வளவும்வர இவள்தான் முடியாதே கிடக்கையாலும், அவன் ஸ்வபா வத்தை விஸ்வஸித்திருக்கையினாலும், அவன்வரவுக்கு த்யோதகமான ஸந்நிமித்தங்கள் அநேகங்களுண்டாகையினாலும், இதேல்லாங்கிடக்க ''நம்முடைய பாக்யஹாநிதான் அவனை நம்முன்னே கொண்டுவந்து நிறுத்தும்'' என்றிருக்கையினாலும்,''பிரிவுஅநிஷ்டமான உசையிலே போகவல்ல நிர்லஜ்ஜன் வரவஅநிஷ்டமானஉசையிலேமுன்னேவந்துநிற்கவும்

---

சொல்லி, ஆதிக்யஞ்சொல்லுகிறார் - தன்தசை இத்யாதி. ''கூடகர்ணவாயஷிவாக்யஸ்த:'' என்று- ஆர்த்தனையும் ப்ரதிஜ்ஞைபண்ணி, '' பரேஷாமபி ஶரணாகத: அரி: '' என்று கொண்டு த்ருப்தன் படியைச்சொல்லுகிறது ; இஶ்ஶ்லோகம் - ஶரண்யன்படியைச் சொல்லுகிற தாகையாலே. அதென்னென்னிலென்றது - ஶரணாகதத்வமும் ஶத்ருத்வமும் விருத்தமன்றோவென்ற படி. லோகபரிபாடியாலே கீழருளிச்செய்து, ஶாஸ்த்ரபரிபாடியாலேபரிஹாராந்தரம் - அன்றிக்கே பூர்வவ்ருத்தத்துக்கு இத்யாதி. மூன்றாம்பரிஹாரம் - கொன்றேன் இத்யாதி. அதாவது - ''பரே ஷாம் - அபிஸந்து - ஶரணாகத:'' என்றந்வயித்து, பிறர்க்கும் ஶத்ருவாய்க்கொண்டு ப்ராயஶ் சித்தாதிகள் பண்ணாதே ஶரணாகதனானவென்றபடி கொன்ற உதிரக்கைகழுவாதே உடனேவந் தடைந்தேனித்யர்த்த:. திருமொழி முதற்பத்து ஒன்பதாந்திருமொழி மூன்றாம்பாட்டு. ஒருதலையாக - தனக்கே பரமாக வென்றபடி. இவனிலும் ப்ராணங்களதிகமன்றோ என்றசங்கித்து, ஶரணாக் திக்கு ப்ராணங்கள் ஸத்ருஶமாகாமையாலே யென்று பரிஹரிக்கிறார் - ப்ராணாநபி இத்யாதி. விவரணம் - அறிவுடையார்க்கு இத்யாதி. ஶரணாகதிவைஶத்தி லறிவுடையார்க்கென்றபடி. 'இனி யவனளவுபார்த்தால்' என்று கீழ்ச்சொன்னவாக்யத்துக்கு 'இதிறேயவன்படி' என்றவாக்யத்தோடே யந்வயம். இஶ்ஶ்லோகத்தாற்சொன்ன குணநிஶ்சயத்தை கிம்புநர்ந்யாயத்தாலே இவர்பக்கலிலேயேறிட் டுக்காட்டுகிறார் - இப்படிகளித்து இத்யாதி. மூன்றாம்ஹேது - இவ்வளவும் வர இத்யாதி. கீழ்ச் சொன்ன நன்னிமித்தங்களையும், ''கூடகர்ணவா'' இத்யாதியாற்சொன்ன அவன்குணநிஶ்சயத்தையும் வ்யுத்க்ரமமாக அநுவதிக்கிறார் - அவன்ஸ்வபாவத்தையித்யாதி யாலே. அவன் ஸ்வபாவத்தை - க்ரு பாவைஶிஷ்ட்யஸ்வபாவத்தை. நாலாம்ஹேது - இதேல்லாங்கிடக்க இத்யாதி. அஞ்சாம்ஹேது - பிரிவநிஷ்டமான இத்யாதி. முன்னேவந்துநிற்கிறதெதுக்கென்ன - இன்னமுமொருகால் இத்யாதி.

வல்லன்'' என்றிருக்கையிலும், ''இன்னமுமொருகால் கலந்துபிரிந்து நம்மைமுடிக்க வேணும்'' என்றிருக்கையிலும், ''வரவுதப்பாது'' என்று அவன் வரவை நிஶ்சயித்து- தோழிமாருந்தானுமாக ''இனி அவன் வந்தாலு மவனுக்கு முகங்கொடுத்தல் வார்த்தை சொல்லுதல் செய்யக்கடவோமல்லோம்'' என்று ஸங்கல்பித்து, ''அவனறியாததோரிடத்தே போயிருக்கவேணும்'' என்று பார்த்து; காயாம்பொழிலாய் அதிலே விளையாடுசூழலாய் அதின் நடுவே அதி மநோஹரமாய் இருப்பதோரு மண்டபமாய், அதிலே இவர்களெல்லாருங்கூடிக் கழகமாகவிருந்து, வந்தாலு மவனுக்கு இட்டீடுகோள்ளுகைக்குப் பற்றுசில்லாதபடி பூவை கிளிதொடக்கமான அசேதநமாயும் சேதநமாயுமுள்ள லீலோபகரணங்களை ஊரழிபூசலில் அரணுள்ள கோட்டைகளிலே சரக்குவாங்குவாரைப்போலே ஓரிடத்தே திரளவாங்கி, இனி இவர்கள் மறந்தவை ஏதேனுமுண்டாகில் அதுபெற்று அவனுக்கு ஸத்தையுண்டாக வேண்டும்படியாய், இப்படி யிவர்கள் சமயமிட்டு, வந்தாலும் அனுக்குப் புகுரவோண்ணாத படி அநாதரமாகிற கன்மதிளை உரக்கவிட்டு, அவனுடைய ஸர்வஜ்ஞத்வங்கொண்டு காரியங் கொள்ளுகைக்கு ஒருவழியில்லாதபடியும் ஸர்வஶக்தித்வங்கொண்டு வ்யாபரிக்கவோண் ணாதபடியாகவும் இவர்கள் வ்யவஸ்தை பண்ணியிருந்து - க்ருஷ்ண வ்ருத்தாந்தம் சொல்லு வார் ''கச்சித்ஸ்மகுஶலீ க்ருஷ்ண:'' (கச்சித்ஸ்மகுஶலீக்ருஷ்ண:) - என்று இப்பிதற்றுத் தானேன் என்று- ''அதவாகிந்ததாலாபை:'' (அதவாகிந்ததாலாபை:)- என்பாராய், ஆஸுரப்ரக்ருதிகளான உகவாத ஹிரண்யாதிகள் கோஷ்டிகளில் திருநாமம் சொல் லுகை அஸஹ்யமாமோபாதி, இவர்கள் கோஷ்டியிலும் உகவை தலைமண்டையிட்டு, திரு நாமஞ்சொல்லில் நெஞ்சு சிவிட்கேன்னும்படியாய்க் கோண்டிருந்தார்கள்இவர்கள். இதுஇத் தலையிருந்தபடி. இனி, அத்தலை இருந்தபடியேன்னேன்றால்; ''வேமுகோண்டு உம்மையா னிரந்தேன்'' என்கிற ஆர்த்தநாதம் சேவிப்பட்டது. ''ஶாசிஶ்ரவா:'' (ஶாசிஶ்ரவா:)

---

அன்றிக்கே, * இன்னுயிர்ச்சேவல் ப்ரக்ரியையாலே ஆரும்ஹேதுவாதல். கீழ்ச்சொன்ன ஹேதுக்க ளைந்தும் கர்மவிஶேஷத்தாலே விபலமாய், வாராதிருக்கையே நியதமென்னுமத்தைத் தோற்றுவிக் கிறது - வந்தாலும் என்கிற சப்தம். காயாம்பொழில் - காசாங்தோப்பு. விளையாடுசூழல் - மணற் குன்று. கழகம் - ஸமூஹம். இட்டீடுகொள்ளுகை - வார்த்தையிட்டு வார்த்தைகொள்ளுகை. 'பூவை கிளிதொடக்கமான - சேதநமாயும் அசேதநமாயும்' என்றந்வயிப்பது. அசேதநமான லீலோபகரணங் களாவன - பந்து, கழல்தொடக்கமானவை. பூவை - கறுத்தகிளி. ஊரழிபூசல் - ஊரழியும்படியான சண்டை. ஆனால், ''என்னுடைய பந்தும்கழலும்தந்துபோகு'' என்று - அவன்கையிலே யிருக்கிற தாகச் சொல்லாநின்றதேயென்ன - இனிஇவர்கள்மறந்தவை இத்யாதி. உரக்க - திருடமாக. 'ஸர்வ ஜ்ஞத்வங்கொண்டு' இத்யாதிக்குஹாவம்-அவனுக்குமுன்னே யேலக்கோலிச்செய்கிறாளாகையாலே அது கொண்டு கார்யங்கொள்ள வழியில்லை. அந்த:புரமாகையாலே ஸர்வஶக்தித்வங்கொண்டு கார்யமில்லை யென்றபடி. கச்சித்ஸ்மகுஶலீக்ருஷ்ண: என்று க்ருஷ்ணவ்ருத்தாந்தம் சொல்லுவார் ' அதவாகிந்த தாலாபை: என்று - இப்பிதற்றுத்தானேன் என்பாராய் என்றந்வயிப்பது. உகவை - உகப்பு. சிவிட்கு - அஸஹ்யம். இவர்களிப்படி யிருந்தார்களாகில் அவனென்செய்தானென்னும்ஆகாங்க்ஷையை யநுவதிக்கிறார் - இனியித்தலை இத்யாதி. கீழே, விட்ட ஆள்சென்று அவனுக்கறிவிக்க, அவனு மிழவாளனும் வருகிறானென்றார்; இங்கே, தூதரைக்குறித்துச்சொன்ன ஆர்த்தநாதம் செவிப்பட்டு வருகிறானென்றார்; இவையிரண்டுக்கும் சேர்த்தியென்னென்னில்; தூதர்சென்றறிவிக்க, வருகிறா னென்றும்; இவளார்த்தநாதம் கேட்டுவருகிறானென்று மிரண்டுஸங்கதியாக யோஜித்துக்கொள்வது: இங்கேயிருந்துகூப்பிட்டால் கேட்குமோவென்ன - ஶாசிஶ்ரவா இத்யாதி. இதுக்கர்த்தம் - நல்லது

நல்லதுசேவிப்படுமேவனிறே.இவ்வளவில் ஆறியிருக்குமவனன்றே; ‘பரமாபதமாபந்ந:’ (பரமாபதமாபந்ந:)-என்றுகொண்டு ஸ்ரீகஜேந்த்ராழ்வானுடைய ஆர்த்தநாதம் சேவிப்பட்ட போது “அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம்| அவாஹநபரிஷ்க்ரியம்” (அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம் அவாஹந

[illegible]

காருண்மையால, [illegible] “இதுஇவ்வளவுகளல்லன்று. இதுக்கடியேன்?” என்று திவ்யாந்த:புரம் கைநெருக்கும்படியாய், ஸாவஜ்ஞனை பெரிய திருவடியைப் பண் செய்தேறப்பெறாதே வெறும்புறத்தேமேற்கோண்டு “பகவதஸ்த்வராயை நம:” (பக வதஸ்த்வராயைநம:)-என்றுஅறிவுடையார் ஈடுபடும்படிவந்து தோற்றினாற்போலவும்; த்ரௌப

---

இத்யாதி. செவிப்பட்டால் மெள்ளவரவொண்ணுமோவென்ன - இவ்வளவில் இத்யாதி. ஆர்த்த நாதம் கேட்டு த்வரித்துவந்ததுக்கும், ஆறியிராமைக்கும் க்ரமேணமூன்றுத்ருஷ்டாந்தம்-பரமாபதம் இத்யாதி. “பரமாபதமாபந்நோ மநஸாசிந்தயத்தரிம் | ஸ து நாகவர: ஸ்ரீமாந் நாராயண பராயண:” இதிமஹாபாரதே. தத்ரைவ ஸஹஸ்ரநாமாத்யாயே, “[illegible] விஶ்ருத:”இதி. “[illegible]” இதிபஞ்சமேம்சே பலபத்ரம்ப்ரதிதேராப்ய:. “ஆர்த்தோ வா யதி வா த்ருப்த: பரேஷாம் ஶரணாகத: | அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய: க்ருதாத்மநா” இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே. “[illegible]” “[illegible]” இதி ஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதி ஸீதா. தத்ரைவ ஹநூமாந், “[illegible]” “[illegible]” “[illegible]” “[illegible]” “[illegible]” இத்யாதி. ‘அஸ்வீக்ருதப்ரணீதமணிபாதுகம் கிமிதிசாகுலாந்த:புரம் | அவாஹநபரிஷ்க்ரியம் பதகராஜமாரோஹத: கரிப்ரவரப்ரும்ஹிதே பகவதஸ்த்வராயை நம:” இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. ‘கிமிதி’ என்றதினர்த்தம் - ‘திவ்யாந்த:புரம் கைநெருக்கும்படி’ என்றது. பண்செய்து - அலங்கரித்து.

தியை துஶ்ஶாஸநன் நலிகிறபோது ரக்ஷகராக ப்ரஸித்தரான பர்த்தாக்கள்ஐவரிருக்க, "கோவிந்தேதியதாக்ரந்தத்" (கோவிந்தேதியதாக்ரந்தத்) என்று நம்மை ரக்ஷகராக நினைத்துக் கூப்பிட, "தூரவாஸிநம்" (மாம்தூரவாஸிநம்)என்று 'நான் ஸந்நிஹிதனாய்உதவப்பெற்றிலேன் அவளாபத்துக்கு' என்றுநொந்து, "அவள் தனக்கு அடுக்கும்படி செய்தாள், நான்அவதரித்தே அவதாரப்ரயோஜநமொன்றும் பெற்றிலேன்" என்று இழவாளனாய், தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து இவள் குழலையும் முடிப்பித்து விரோதிவர்க்கம் கிழங்கெடுத்துப் போகட்டு * தன்னுடைச் சோதியேற எழுந்தருளுகிறபோதும் "நாதிஸ்வஸ்தமநா:" (நாதிஸ்வஸ்தமநா:) என்று திருவுள்ளம் புண்பட்டாற்போலவும்; "ஶரதல்பகதோபீஷ்ம: ஶாம்யந்நிவ ஹுதாஶந: மாம் த்யாதி புருஷவ்யாக்ரஸ்ததோ மேதத்கதம்மந:" (ஶரதல்பகதோபீஷ்மஶ் ஶாம்யந்நிவ ஹுதாஶந: மாம் த்யாதி புருஷவ்யாக்ரஸ்ததோ மேத்தத்கதம்மந:) என்றுகொண்டு ஶரதல்பகதரான ஸ்ரீபீஷ்மர்க்கு முற்பாடராய் உதவ வேண்டியிருக்கப் பிற்பாடரானோம் என்று நோவுபட்டாற்போலவும்; "தேநதேதமநுவ்ரதா:" (தேநதேதமநுவ்ரதா:) என்று என் முற்பாடு கண்டுஅநுவர்த்திக்கக்கடவர்கள் முற்பாடராம்படி நாம் பிற்படுவதே என்றிருக்கும் அவனிறே;இப்படிகளாலே திருவுள்ளம்போர விரங்கி, "ப்ரஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹி மமாதுலா யதீத்ருஶை: ஶரஹம் விப்ரைருபஸ்தேயைருபஸ்த்தித:" (ப்ரஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹிமமாதுலா யதீத்ருஶைரஹம்விப்ரை ருபஸ்த்தேயைருபஸ்த்தித:)-என்று தண்டகாரண்ய பரிஸரவர்த்திகளான ருஷிகளுடைய ஆர்த்திக்கு முற்பாடராய் உதவப்பெற்றிலோமென்னும் இழவாலே லஜ்ஜித்து, அவர்களைக் காலைக்கட்டிப் பொறுப்பித்துக் கொள்ளும் அவனிறே; இனி "வ்யஸநேஷு மநுஷ்யாணாம்" (வ்யஸநேஷுமநுஷ்யாணாம்)-என்று ஸாமாந்யத்திலே இருக்கும்படிகண்டால், ப்ரணயிநி ஒருதலையானால் சொல்லவேண்டாவிறே. "நாம்கிட்டி நின்று கையைக் காலைப்பிடிக்க வேண்டும் விஷயம் ஒரு திர்யக்கின் காலிலே

'விரோதிவர்க்கம் கிழங்கெடுத்து - இவள்குழலையும்முடிப்பித்து - தர்மபுத்ரன் தலையிலே முடியையும் வைத்து' என்றந்வயிப்பது. "கோவிந்தேதியதாக்ரந்தத் க்ருஷ்ணா மாம் தூரவாஸிநம் । ருணம் ப்ரவ்ருத்தமிவ மே ஹ்ருதயாந்நாபஸர்பதி" இதிமஹாபாரதே. "நாதிஸ்வஸ்தமநா:" என்றது ப்ரமாணத்திரட்டிலே கண்டுகொள்வது. "ஶரதல்பகதோபீஷ்ம: ஶாம்யந்நிவ ஹுதாஶந: । மாம் த்யாதி புருஷவ்யாக்ரஸ்ததோ மேதத்கதம் மந:" இதி மஹாபாரதே. "மாம் த்யாதி" என்று அவன்முற்பாடுசொல்லி, "தத:" என்கையாலே, ததஶ்ஶப்தம் - ஹேதுபரமன்று, ஆநந்தர்யபரமென்றபடி. "பிற்பாடரானோமென்று நோவுபட்டாற்போலவும்" என்றவநந்தரம், பிற்பாட்டுக்கு நோவுபடுமவனிறே என்றத்யாஹரிப்பது. பிற்பாட்டுக்கு நோவுபடுமென்னுமதுக்கு ப்ரமாணத்வயம்-தேநதேத இத்யாதி, ப்ரஸீதந்து இத்யாதி. "ஸமேத்ய ப்ரதிநந்த்யைநம் ஸுமித்ரா சரிதா வுணா ஸர்வே நாஸ்மாகம் தேநதேதமநுவ்ரதா:" இத்யயோத்யாகாண்டே. "ப்ரஸீதந்துபவந்தோமே ஹ்ரீரேஷாஹிமமாதுலா । யதீத்ருஶைரஹம் விப்ரை ருபஸ்த்தேயைருபஸ்த்தித:" இத்யாரண்யகாண்டே. திருவயோத்யாவாசிகளுக்கு முந்தற க்ருபைபண்ணினபின்பிறே அவர்கள் இவரிடத்திலே ஸ்நேஹித்தது; அத்தையுட்கொண்டு, இவன் பிற்பாட்டுக்கு நோவுபடும்ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார் - என்முற்பாடுகண்டு இத்யாதி. "ப்ரஸீதந்து" என்றதுக்குஹாவம் - காலைக்கட்டி இத்யாதி. இவளார்த்திக்குஅவன் நோவு

விழும்படி நாம் பிறப்படுவதே! நமக்கினியொரு பும்ஸ்த்வமாவதேன்? நாம் அங்கு இனிப்போய்ச் செய்வதேன்? இங்கிருந்து செய்வதேன்?'' என்றுகொண்டு தமோறி, இத்தலையோடே கலந் தல்லது தரிக்கமாட்டாதாளாய், இவர்களிருந்தவிடத்துக்கு அநுராவிப்ரக்ருஷ்டமாகவந்து, ப்ரணயகோபத்தாலே அணுகவொண்ணாதபடியிருக்கிற இருப்பைக்கண்டு, ''இத்தலையில் அபிஸந்தியைக் குலைத்து நாம் கூடினோமாம்படியேன்?'' என்று சிந்தித்து, ''அழகுகொண்டு வெல்லுவோம்'' என்று பார்க்கில், ஸௌந்தர்யம்கொண்டு தண்ணீர் வார்ப்பாரில்லை யிக் கோஷ்டியில்; ''அஸிதேக்ஷணா'' (அஸிதேக்ஷணா) என்கிற தன்னேற்றம் உண்டிறே இத்தலைக்கு; இனி, ''மேன்மைகொண்டுவெல்லுவோம்'' என்று பார்க்கில், அந்தஃபுரத்தை ஆனைக்காலிட்டுத் துகைப்பித்து புஜிக்கவொண்ணாதே; இனி இவ்விஷயத்தைப் பெறு கைக்குத் தாழ்ச்சியேயிறே பரிகரம்: அது இத்தலையின் கடாக்ஷம் பெறுதிருக்க ப்ரவர்த் திக்குமன்று நிஷ்ப்ரயோஜநமிறே; இனி இத்தனையும் செய்தால், ஆசையற்றுப் போகைக் குத் திருவடிகள்பெறாதே; இசைவின்றிக்கே இருக்க, மேல்விழமாட்டானே; இனி விழுக் காடுபோராதே மேல்விழுமன்று, ம்ருதுப்ரக்ருதியாகையாலே இழக்கவழிலும் வருமே; இனி, சேர்ந்து குளிர்ந்த தண்ணீர் ஸந்நிஹிதமாயிருக்க, பெருவிடாயனானவன் அழிஞ்சுக்காடேறப் போகமாட்டானே; அதாவது-''இவன் அல்பம்தாழ்த்தான்'' என்று வெறுத்து, ''புகுருவானல் லன் நம்கோஷ்டியில்'' என்றிருக்கிற இவர்களைவிட்டு நாட்டாரோடே உறவுபண்ணப் போவானன்றே; இனி ''ஒருபடிபொருந்தினோமாம்விரகேன்?'' என்று கடல்கடந்த திருவடி பட்டதெல்லாம் பட்டு, '' 'ராஜாதஶரதோநாம' '' (ராஜாதஶரதோநாம) என்னும் அள வன்றே; இனிச்செய்யவடுப்பதேன்? என்று ''ஏவம்பஹுவிதாம்சிந்தாம்'' (ஏவம் பஹுவிதாம்சிந்தாம்) என்று மநோரதித்து, ''நந்தலையும் அவர்கள்காலுங்கிடந்ததாகில் காலைக்

---

படும் ப்ரகாரத்தை யருளிச்செய்கிறார்- இனி வ்யவஸ்நேஷு இத்யாதி. ப்ரவிதந்து என்றது-ஈலாம் த்ருஷ்டாந்தமாகவுமாம். மேல் ஈஶ்வரன்செய்யும் ப்ரகாரங்களை விஸ்தரேண அருளிச்செய்கிறார் - நாம் கிட்டிநின்று இத்யாதி. 'இப்படிகளாலே திருவுள்ளம்போரவிரங்கி - நாயகிட்டிநின்று கையைக்காலைப் பிடிக்க' என்று அந்வயித்துக்கொள்வது. இப்படிகளாலேயென்றது - பூர்வோக்தத்ருஷ்டாந்தத்துற படி களாலே யென்றபடி. வேண்டுமவிஷயம்-நாயகி. ஒருதிர்யக்கு-தூதுவிட்டபக்ஷி. இருக்கிறவிருப்பை- கழகமிருக்கிற விருப்பை. தண்ணீர்வார்ப்பாரில்லை என்றது - துப்புவாரிலலை என்றபடி. அப்படி ஸௌந்தர்யத்தில அதிஶயோவென்ன- அஸிதேக்ஷணா இத்யாதி. ''ராமஶ்வோ ஹம்ஸ்த்வெவஹம் தவேக்ஷயஸிதேக்ஷணா''. 'ஆனைக்காலிட்டு' இத்யாதிக்குக்கருத்து-ரஸிகத்வபங்கமாமென்று. ஆனைக்காலிட்டுத் துகைப்பிக்கையாவது - பலாத்காரம்பண்ணுகை. 'ஆனைக்காலிட்டு அழித்து' என்றும் பாடமுண்டு; அதுக்கும் - கீழ்ச்சொன்னதேயர்த்தம். இவ்விடத்திலே - ''ஸவிதாவநிதாஶ்வெவஸ்யஶ்வோமதாவரா । ஸ்நாதாக்ருஷ்ணோதாரஸாவிரஸாஹவெஸ'' என்கிறது அநுஸந்தேயம். ஆனால் தாழ்ச்சிசெய்துவிடுகிறதுக்கென்னென்ன - அதுஇத்தலையின் இத்யாதி. அது- தாழ்ச்சி. ஆனால், ''ஸஹாய்யம்'' என்றுவிட்டுப்போகிறதுக்கென்னென்ன - இனி இத்தனையும் இத்யாதி. இத்தனையும் செய்தாலென்றது - இப்படியானாலென்றபடி. பலாத்காரத்தாலே மேல்விழ வொண்ணாதோவென்ன - இசைவின்றிக்கே இத்யாதி. ம்ருதுப்ரக்ருதிகளாகையாலே-மாநிநிகளாகை யாலேயென்றபடி. அத்தாலே முடிவர்களென்றுகருத்து. இவர்களிசையாவிட்டால் வேறபிமதவிஷ யங்களில்லையோ, அங்கேறப்போகவொண்ணாதோவென்ன; ஒண்ணாதென்னுமத்தை ஸநிதர்ஶநமாக வருளிச்செய்கிறார் - 'இனிச்சேர்ந்து' இத்யாதிவாக்யத்வயத்தாலே. அழிஞ்சுக்காடு-பாலைநிலம். திருவடி யைப்போலே திருநாமஸங்கீர்த்தநம் பண்ணினாலோவென்ன - ராஜா தஶரத இத்யாதி. '' ஏவம்பஹு

கட்டிப் பொருத்திக்கொள்ளுகிறோம்'' என்று அறுதியிட்டான். தலையான உபாயமிதிற்காட்டில்இல்லையே: இதுதான் அடியிலே கண்டதொன்றிறே. ஆக, இப்படி அறுதியிட்டு, தன்னிறத்தோடு ஒக்க விகல்பிக்கலாவதொரு சோலையுள்ளிட்டு அவளுக்கும் தோழிமார்க்கும் தெரியாதபடி கிட்டச்சென்று, அவர்களைக் காணப்பெறுதே விடாய்த்தவன் கண்களாரளவும் நின்று விளைநீரடைத்துக்கொண்டு க்ருதார்த்தனாய் நின்றான். ஆலோகாநந்தரம் ஆலாபாதிகளிலே ஶ்ரத்தை வர்த்திக்குமிறே, அதுவும்பெற்றிலன் ; அவ்வளவிலும் தனக்கு ப்ராணதாரகமான இவர்களுடைய பூவை கிளிதொடக்கமானவற்றினுடைய இனியபேச்சைக் கேட்கப்பெறுமையாலும் மிகவும் தளர்ந்து;"தானும் அவளுமானாலவளிற் காட்டிலும் தன்பக்கல் ப்ரேமமிரட்டித்திறே தோழிமாரிருப்பது; பிரிவிலும் அப்படியே'' என்றிருந்தான்; அவர்கள் அங்ஙனன்றிக்கே அவளிற்காட்டிலும் கோபமதிஶயித்திருந்தார்கள். "ஸப்ராதுஶ்சரணௌகாடம்"(ஸப்ராதுஶ்சரணௌகாடம்) என்று புருஷகாரம் முன்னாகத் தன்பக்கல் புகுந்தார்க்குத்தன்திருவுள்ளம்இரங்கும்படிதான்அறியுமேஇங்குஅப்படியேஅவர்கள்புருஷகாரமாகவும்பெற்றதில்லை;இனிஇத்தலையிலிசைவுண்டானாலும்அவர்களிசையாதவன்றுஅழைக்கவும் போகாதே; "த்த்தமஸ்யாபயம்மயா'' (த்த்தமஸ்யாபயம்மயா) என்றாலும், "வத்யதாம்"(வத்யதாம்) என்றவர்தம்மையிட்டே "ஆநய" (ஆநய)என்னவேண்டிற்றிறே; அவ்வழிகளாலும் ஒருமுகம்பெற்றிலன். "நஜீவேயம்க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்றும், "க்ஷணேபிதேயத்விரஹோதிது:ஸஹ:"(க்ஷணேபிதேயத்விரஹோதிது

---

ஸ்ஸஹ:விஶ்லேஷஸைம்யசுதானாமபி:। ஸம்ஸ்ரவேரயதாபுரம் ... ராஜஸ்ஸுதாஜாநாரஸ்யநாரஸ்ரவக்கேஷுரவாஜிஸாநு। பஞ்சஶ்யேஷேஹா...திஜஸ்ஸரரஸ்தமநாயஶா:'' இதிஹநுமாந். ராஜாதஶரதோநாமஎன்னுமளவன்றேயென்றது-பிராட்டியைப்போல திருநாமங்கேட்டு மீளும் அளவன்று என்னுதல், பிராட்டிக்கு ராவணபயமொழிய ப்ரணயரோஷ மில்லையென்னுதல். இத்தால் கோபம்தீருமோவென்ன - தலையான இத்யாதி. இது, சாடு; தலையான-ஶ்ரேஷ்டமான. இதுதான் அறிந்தபடியெங்ஙனேயென்ன-இதுதானடியிலே இத்யாதி; அதாவது - "தமேவஶரணம்கத:" என்ற காகத்தை க்ருபையாலே ரக்ஷிக்கையாலே அடியிலே கண்ட தொன்று என்றபடி. விளைநீரடைக்கையாவது - விளையுமளவுக் கொருகாலே நீரகட்டுகை. ஸமாதாநம்பண்ணுகைக்குத் தோழிமாரில்லையோவென்ன - தானுமவளுமானால் இத்யாதி. அப்படியேயென்றிருந்தானென்றது - ஸ்நிக்தைகளாய் புருஷகாரமாவர்களென்றிருந்தானென்றபடி. அங்ஙனன்றிக்கே - தான் நினைத்தபடியன்றிக்கே இத்யர்த்த:. "புருஷகாரபூர்வகமாகப்பற்றினால் கார்யகரமாம்'' என்றுதானறிந்தபடியென்னென்ன-ஸப்ராது: இத்யாதி. அதாவது-இளையபெருமாள் தம்மைப்பின் செல்லுகைக்கு உறுப்பாகப் பிராட்டியைப்புருஷகாரமாகமுன்னிடத் தான் இரங்கி அவரைக்கூட்டிக்கொண்டுபோனத்தையறிந்திருக்குமவனாகையாலே என்றுகருத்து. அஹேதுகமாகநாயகிதனக்கேயிசைவுஉண்டானாலோவென்ன - இனியித்தலையில் இத்யாதி. இசையாதவன்று அழைக்கப்போகாதோ வென்ன - த்த்தமஸ்ய இத்யாதி. "ஆநயைநம்ஹரிஶ்ரேஷ்ட த்த்தமஸ்யாபயம்மயா । விபீஷணோவா ஸுக்ரீவயதிவாராவணஸ்ஸ்வயம்" இதி யுத்தகாண்டே ஸுக்ரீவம்ப்ரதிராம:. "வத்யதாமேஷ தீவ்ரேண தண்டேந ஸசிவைஸ்ஸஹ । ராவணஸ்ய ந்ருஶம்ஸஸ்ய ப்ராதா ஹ்யேஷ விபீஷண:"இதி ஸுக்ரீவ:. அவ்வழிகளாலும் என்றது - பூவைகிளிதொடக்கமானவற்றினுடைய பேச்சு, தோழிமாருடைய புருஷகாரபாவம், நாயகியினுடைய இசைவு ஆகிற வழிகளாலுமென்றபடி. ஆனால் "மெள்ளப்பெறுகிறோம்" என்றாறியிருந்தாலோவென்ன - நஜீவேயம் இத்யாதி. "நஜீவே

ஸ்ஸஹ:)என்றும் க்ஷணமாத்ரவிஶ்லேஷமும்பொறுக்கமாட்டாதவன், அவர்கள்ஸந்நிதியிலே முகம்பெறுமேநின்றுபிழைக்கமாட்டானே. இனிஇவன்தன்அணுகுதலாலே இவர்களிருந்த விடம்அடங்கலும்"ஶோபயந்தண்டகாரண்யம்"(ஶோபயந்தண்டகாரண்யம்) என்கிற படியே மயிற்கழுத்துச்சாயலாய், இவனுடைய நிரந்தரகடாக்ஷபாதத்தாலே புளகிதகாத்ரைகளாய், இவனுடைய கடாக்ஷபாதத்தா லுண்டான மைத்யம் இவர்களுடையப்ரணய ரோஷத்தால் வந்த கோபாக்நியும் விரஹாக்நியுமன்றாகில் பொறுக்க வரிதாம்படியாய்; கோபந் தான் அவன் ஸந்நிதியிலே மிகைத்து வாரா நிற்குமிறே, இவ்வோலக்ஷணங்களைக்கொண்டு இவன் வந்தமையை நிஶ்சயித்துத் தங்களிலே ஒருமித்து முகம் மாறியிருக்க; இவனும் அவ்விருப்பைக்கண்டு எதிரிகளிட்ட மதிளாகிலிறே முறித்துப் புகலாவது; கிட்டப் பெறுமையாலும் ஸந்நிதியாலும் ஆற்றுமை கரைபுரண்டு கால்தறையில் பாவாதபடியாய்க்கொண்டு தடுமாறிவருகிற சமயத்திலே, இவனுடைய ஜீவநாத்ருஷ்டத்தாலே இவர்கள் மறந்துபோன பந்தும் கழலும்இவன்காலிலேதாக்க; அப்போது, இருட்டறைகளிலேதடவிக்கொண்டுவோராநின்றால் உறியும் வெண்ணெயும் கையிலே தாக்கினுல் ஹ்ருஷ்டனுமாபோலே பெரிய ஹர்ஷத்தோடே விழுந்து இவற்றை எடுத்துக்கொண்டு, அத்தலையில் பண்ணின வ்யாமோஹம் அடங்கலும் இதிலேதோற்றும்படி கண்களிலே ஒற்றிக்கொள்வது தலையிலே வைத்துக்கொள்வதாய், பிராட்டி திருவாழிமோதிரங்கண்டு பட்டதெல்லாம் பட்டான். "க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா"(க்ருஹீத்வாப்ரேக்ஷமாணுஸா)-"ராவணன்மாயையாலேவந்ததோ?"என்னும் பயத்தாலே முற்படக் கண்வைக்கமாட்டாதே யிருந்தாள்: "அத்தலையாலேவந்தது" என்று தெளிந்த பின்பு கண்மாறவைக்க வரிதாம்படியா யிருந்தாள். 'அத்தலையாலேவந்தது' என்று தெளிந்தபின்புகண்மாறவைக்கைஅரிதாம்படியாய்இருந்தார்கள். "ஸா ப்ரேக்ஷமாணா" (ஸா - ப்ரேக்ஷமாணு) - "பஶ்யதேவி" (பஶ்யதேவி) என்றுகொண்டு முன்பு

---

யம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" இதிராமஃ. 'க்ஷணமபி தே' இத்யாதி ஸ்தோத்ரே, "ஸக்ருத்த்வதாகார விலோகநாஶயா" இத்யாதி. இப்படி இவன் தடுமாறுகிறவிடத்தில் அவர்கள் செய்ததென் னென்ன - இனியிவன்றன்அணுகுதலாலே இத்யாதி. இவன் வந்தத்தை மூன்று வழியாலே அறிந்து த்ருடப்ரக்ருதிகளாய் முகம்மாறியிருந்தார்க ளென்றபடி. அகன்றிருந்தாலன்றோ கோபம், ஸந்நிஹிதனுயிருந்தால் கோபம்சமியாதோ வென்ன - கோபந்தான் இத்யாதி. இது மூன்றும்ஹேது. இவ்வோலக்ஷணங்களைக்கொண்டென்றது - தாங்களிருந்தவிடம் மயிற்கழுத்துச்சாயலாகையும், தாங்கள் புளகிதகாத்ரைகளாயிருக்கையும், மிகைத்துவருகிறகோபத்தையுடையராகையுமாகிற லக்ஷணங்களைக் கொண்டென்றபடி. இவ்வளவில் அவன்செய்ததென் என்ன-இவனும் அவ்விருப்பை இத்யாதி. கிட்டப்பெறுமையாலுமென்றது - அவர்களோடே கலக்கப்பெறுமையாலுமென்றபடி. கலக்கப்பெறுவிட்டாலும், தூரஸ்தனுயிருந்தானுகில் பொறுத்திருக்கலாம்: ஸமீபத்திலேயிருந்து, கலக்கப்பெறுவிட்டால் பொறுக்கவொண்ணுதிறே: அத்தைப்பற்ற 'ஸந்நிதியாலும்' என்கிறுர். "வநகேஸரகுஞ்ஜரம் பஶ்யைநம் ஶோபயந்தண்டகாரண்யம் ..." இதி ஆரண்யகாண்டேமாரீசஃ. பிராட்டி யப்படிபட்டாளோ வென்ன - க்ருஹீத்வா இத்யாதி. "க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்த்து: கரவிபூஷணம் । பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதா(அ)பவத்" இதி ஸுந்தரகாண்டே. வர்த்தமாநநிர்த்தேசத்திலே நோக்காக ஹாவம் - ராவணன் இத்யாதி. "ஸா" என்றதிலேநோக்காகஹாவம் - பஶ்யதேவி இத்யாதி. "வாநரோ(அ)ஹம் மஹாபாகே தூதோ ராமஸ்ய தீமத: । ராமநாமாங்கிதம் சேதம் பஶ்ய தேவ்யங்குலீயகம்"

பார்வைக்கு க்ருஷி பண்ணவேண்டும்படியிருந்தவள்தானே, கண்மாறவைக்கைக்கு க்ருஷி பண்ணவேண்டும்படியாயிருந்தாள். "ப⁴ர்த்து:கரவிபூ⁴ஷணம்" (பர்த்துஃகரவிபூஷணம்)-முதல்கைப்பிடிக்கிறபோதுஉறுத்தினபடியைநினைத்தாள். 'கரவிபூ⁴ஷணம்'(கரவி பூஷணம்)-அணிமிகுதாமரைக்கையிறே. ஆபரணத்துக்குஆபரணங்காணும் "ப⁴ர்த்தாரமிவ" (பார்த்தாரமிவ)-இவன்இத்தைத் திருக்கையிலேகொடுத்தவாறே, இத்தோடே சேர்ந்த விரலையும்தோளையும் நினைத்தாள்; அந்நினைவுதான், தான்இக்கரையில்ஆளாகவும்அவர்அக்கரையிலாளாகவும், கடல்இடையிலேகிடக்கிறதாகவும்அறிந்திலள்; ஒரு படுக்கையிலே கூடவிருந்ததாக நினைத்தாள்; ஒருசூது சதுரங்கங்களிலே தோற்றுத்தன்கையிலிருந்ததாகநினைத்தாள். "இவ" (இவ)என்கிறான்ருஷி, ஜநநீஸமாதியாலே; இவளுணர்ந்தாலென்படக்கடவள்என்று. 'ஜாநகீ' (ஜாநகீ)-ஸோகஹர்ஷங்களுக்குஇளையாதகுடியிலேபிறந்தவள். "முதி³தாப⁴வத்"(முதிதா பவத்)-ஹ்ருஷ்டையானாள். அப்படியேயாயிற்றுஇவனும் இவைபெற்றபின்பு. ஸம்ஸாரி, முக்தனானால் அவனுடைய லீலோபகரணமும் போகோபகரணமும்ஸமமாய்த்தோற்றக்கடவது; ஆகாராந்தரமான ஸ்ம்ருதியில்லையே: ததீயத்வாகாரத்தாலே நித்யவிபூதியோடொக்கத் தோற்றுமித்தனை; அப்படியே இவளுடைய லீலோபகரணமும் போகோபகரணமாய்த் தோற்றக் கடவது. அவற்றிலே அவன்பண்ணும் வ்யாமோஹத்தைக்கண்டார்கள். "நம்மைப்பிரிந்த பின்பு ஸத்தையோடே குறியழியாமே யிருக்கக்கடவ இவன் இவையெல்லாம் நம்மை யுத்தேசித்துச்செய்கிறானாகக்கூடாம்; இங்ஙனே யாகவேணும்:—"நம்மைப்பிரிந்தபின்பு போய்ச் சிலரோடே கலந்தான்; அவர்களையும் பிரிந்தான்; அவ்வாற்றாமையோடே இங்குவந்தான்; இவற்றை 'அவர்களுடைய லீலோபகரணமாயிருக்கும்' என்று ப்ரமித்தானித்தனை, இது நம்பக்கல் வ்யாமோஹமுடையனாய்ச் செய்கிறானல்லன்" என்றுகொண்டு, இவர்களிருக்க, அவனும் தன்னழகாலும் குணங்களாலும் தன் செல்லாமைகளாலும் தாழ்ச்சிகளாலும் இத்தலையில் ஊடலைத்தீர்த்து ஸம்ஶ்லேஷித்தபடி சொல்லுகிறது - இத்திருவாய்மொழி.

---

*கரம்", பூ⁴ஷணம் என்னாதே, "விபூ⁴ஷணம்" என்கையாலே, ஆபரணபூதமானகரத்துக்கும் ஆபரணமென்கிறார் - அணிமிகு இத்யாதி. "ஸ்ரீ ஹஸ்தாப⁴ரணம் ஸம்ப⁴ர்த்தா" என்றந்வயம். திருவாழிமோதிரமன்றோ கையிலிருக்கிறது? இத்தாலே பர்த்தாவை ஸம்ப்ராப்தையானாள் என்னக் கூடுமோவென்ன; பாவநாப்ரகர்ஷத்தாலே பர்த்தாவை ஸம்ஶ்லேஷித்ததாக நினைத்தாளென்கிறார். இவனித்தை இத்யாதி. கூடவிருந்ததாகநினைத்தால், அவன் திருக்கையில் மோதிரம் தன்கையில் வருவானென்னென்ன - ஒருசூது இத்யாதி. ஆனால், பர்த்தாரமேவ ஸம்ப்ராப்தா என்னவமைந்திருக்க, "இவ" என்றுசொல்லுவானென்னென்ன - இவனென்கிறன் இத்யாதி. "இவ" என்றதுக்குஇரண்டு தாத்பர்யம்: முந்தினது - தாயாருடைய ஸம்ஶ்லேஷப்ரகாரத்தை ஸ்ப்புடீகரிக்கவொண்ணாமையாலே இவ என்கிறான் என்று; இத்தையருளிச்செய்கிறார் - 'ஜநநீஸமாதியாலே' என்று. த்விதீயதாத்பர்யம் - இவளுணர்ந்தால் இத்யாதி. அதாவது - இந்தபாவனைகுலைந்தால், "இவர்களறியும்படி இருந்தோமோ" என்று லஜ்ஜித்து நோவுபடப்புகுகிறாளோ என்றபடி. இவளுணர்ந்தால் இத்யாதி வாக்யம் - வ்யாக்யாதாவின் ஈடுபாடாதல். பிராட்டி, போகோபகரணமான திருவாழிமோதிரத்தை யாதரித்தாள்; இவன் லீலோபகரணங்களை போகோபகரணங்களாக ஆதரிக்கிறதென்னென்ன; அதுவும் "இவளுடையது" என்கிற ஆகாரத்தாலே போகோபகரணம்போலே யவனுக்குத்தேஶ்யமாயிருக்குமென்னுமத்தை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - ஸம்ஸாரி இத்யாதி. அவனுடையஎன்றது - ஈஶ்வரனுடையஎன்றபடி. ஆகாராந்தரமென்றது - கர்மநிபந்தநமான ஆகாரமென்றபடி. தங்களுடைய பந்துமுதலானவற்றிலே அபிநிவேஶம்பண்ணுகிற இவனைக்கண்டு இவர்கள்செய்ததென் என்ன.*

இனி, இத்திருவாய்மொழிதன்னை, பூர்வாசார்யர்கள், "பகவத்விஷயத்தில் ஸாபத்ந்யந் தோற்ற வார்த்தைசொல்லுகை ஶேஷத்வலக்ஷணமன்று, * வளவேழுலகிற்படியாலே அயோக்யதாநுஸந்தாநம் பண்ணுகிறார்" என்று நிர்வஹிப்பர்கள். இத்தைப் பட்டர் கேட்டு, "என்சொன்னாரானார்கள்! இவர்க்கு பகவத்விஷயத்திலுண்டான ருசிக்கு ப்ரகாசகம் இத்திருவாய்மொழியாயிருக்கும்: இதுக்கு வேறே யொருவழியிடவேதே! ஆனபின்பு இதுவே பொருளாமித்தனை" என்றருளிச்செய்தார். ஹரிஷ்யாமிஸபாந்தவம்'' (ஹரிஷ்யாமிஸ பாந்தவம்) என்று மஹாராஜரோடே பெருமாளுக்குக்கிலாய்க்கைக்கும் உறவுண்டாயிற்றிறே.

## முதற் பாட்டு.

மின்னிடைமடவார்கள் நின்னருள்சூடுவார் முன்புநானதஞ்சுவன்
மன்னுடையிலங்கை அரண்காய்ந்தமாயவனே!
உன்னுடையசுண்டாயம் நானறிவன் இனியதுகொண்டுசெய்வதென்?
என்னுடையபந்தும் கழலும் தந்துபோகுநம்பீ!

**ஆ.**—"நிரவதிக ஸௌந்தர்ய குணயுக்தைகளாய் உன்னருள்சூடப் பிறந்தவர்களுடைய பந்தும்கழலுமல்லகாண் இவை: என்னுடைய பந்துங்கழலும்" என்ன; "ஆனாலென்?" என்ன, "என்னுடைய பந்துங்கழலும் எடுத்து விளையாடுகிற இத்தை அவர்கள் காணில் செய்வதென்" என்ன; "அஸந்நிஹிதைகளாயிருக்கிற அவர்கள் காண்கைக்குபாயமென்?" என்ன, "நான் அஸந்நிஹிதையாயிருக்கச் செய்தே, நீ அவர்களோடே கலந்து பரிமாறிற்றுஎல்லாம் எங்ஙனே கண்டபடி; அப்படியே அவர்களும் காணுவர்களிறே" என்ன; "கண்டால்தான் வருவதென்?" என்ன, "தங்கள் கடாக்ஷதாரகனாயிருந்த உன்னை உபேக்ஷிப்பாரென்று பார்த்து நான் அஞ்சாநின்றேன்" என்ன; "உனக்கென்னோடு உறவில்லையாகில் வருகிறதென்?" என்ன, "என்னுடைய க்ருபையாலே உனக்கு அநிஷ்டம் வருகிறது; என்றஞ்சுகிறேன் அத்தனை உறவினாலல்ல" என்றிவள் சொல்ல, "இப்படி அஸம்பாவிதங்களை ஆசங்கிக்கிறதென்? அந்யோந்யதேசே வருகைக்கு ப்ரஸங்க

அவற்றிலே இத்யாதி. தன்னழகாலுமென்றது - "தாமரைப்புரைகண்ணிணையும்" இத்யாதியைப்பற்ற. "நம்பீ" என்றத்தைப்பற்ற 'குணங்களாலும்' என்றது. தன்செல்லாமைகளாலுமென்றது - "எம்குழறுபூவையொடும்," "மையிற்பாவைபறிப்பது" என்றத்தைப்பற்ற. தாழ்ச்சிகளாலுமென்றது - "உணக்கிநீவளைத்தால்" என்றத்தைப் பற்ற, இனி, இத்திருவாய்மொழிக்கு ஸ்வாபதேஶமிரண்டு வகையாக வருளிச்செய்கிறார் - இனி இத்திருவாய்மொழிதன்னை இத்யாதி. 'ஶேஷத்வலக்ஷணமன்று' என்றதுக்குக்கருத்து - "உன்றன் திருவுள்ளமிடர்கெடுந்தோறும் நாங்கள் வியக்கவின்புறுதும்" என்றிருக்கிறவிவர், ஸ்ரீவைஷ்ணவர்களோடேகலந்தத்தைத் தமக்கு அஸஹ்யமாகச் சொல்லுகை ஶேஷத்வ விருத்தமென்று. இதுவேபொருளாம் இத்தனையென்றது - இத்திருவாய்மொழியிற்சொல்லுகிற ப்ராவண்யகார்யமான ப்ரணயரோஷமே ஸ்வாபதேஶத்திலும் பொருளாமென்றபடி. ப்ராவண்யாதிஶயத்தாலே ப்ரணயரோஷமாகச்சொன்ன இடமுண்டோவென்ன - ஹரிஷ்யாமி இத்யாதி. கிலாய்க்கைக்கும் - ப்ரணயரோஷம்பண்ணுகைக்கும் என்றபடி. "ஸகஸ்வஸ்ரீ ... ஹரிஷ்யாமிஸ பாந்தவம்" இதி கிஷ்கிந்தாகாண்டே ...

முண்டோ? உன்பக்கலுள்ள ப்ரேமாதிஶயத்தாலே உன்னைப்பிரிந்து தரிக்கமாட்டாமை யாலே வந்தேன் அத்தனை" என்று அருளிச்செய்ய, "என்பக்கலுனக்கு ஸ்நேஹமானது பொய்யிறே" என்ன; "நானுரேனும் ஒருவரோடே பரிமாறினால் அவர்கள்பக்கல் பொய் யான ஸ்நேஹத்தைப் பண்ணுமவனோ?" என்றருளிச்செய்ய, "உனக்காரேனும் ஒருவர் திறத்திலே மெய்யான ஸ்நேஹமுண்டாகில் அவர்களை 'இன்னார்' என்று சொல்லிக்காண்" என்ன ; "அஶோகவனிகையிலே யிருந்த ஸ்ரீஜநகராஜர்தநயைதிறத்து நான் பண்ணின ஸ்நேஹம் மெய்யன்றோ" என்றருளிச்செய்ய, "அதுவும் பொய்யே"என்றிவள் சொல்ல; "அவள்பக்கலுள்ள ஸ்நேஹம் பொய்யாகில் அவளுக்காக லங்கையை அழிக்கக்கூடுமோ?" என்றருளிச் செய்ய, "அதுஎன்னை அகப்படுத்துகைக்குச் செய்த வஞ்சனையென்னுமிடம் அறியேனோ? ஆதலால்,என்னுடைய பந்துங்கழலும் தந்து, அங்கேபோகு நம்பி!" என்று சொல்லுகிறாள்.

ஒ.—முதற்பாட்டில், இப்பிராட்டியும் தோழிமாரும் வரங்மறந்து, அசேதந மாகையாலே தானாக இருக்கவும் அறியாத பந்தையும், கழலையும் தன்னுடைய ஜீவனு ஊஷத்தாலே கண்டெடுத்துக்கொண்டு " ஶ்ரீஹஸ்தாவ்ருதேக்ஷணாஸா " என்னும் படியாலே திருக்கண்களாலே யவற்றை நிரந்தரமாக நோக்கித் திருவுடம்பில் எங்கும் படும்படியணைத்துக்கொண்டு, இப்பிராட்டியை ஸ்பர்ஶிக்கப்பெறுமையாலுள்ள வ்யஸந மெல்லாந்தீர விளைநீரடைத்துக்காள்ளுகிறபடியைக்கண்டு, "இது நம்மோட்டை ஸ்நேஹத் தாலே பிறந்ததாகில்இத்தனைகாலம் தாழ்க்கக்கூடாதாகையாலே,மற்றும்சிலர் பக்கலிலே ஸ் நேஹத்தைப்பண்ணி அவர்களோடேகலந்து பிரிந்து பிரிவாற்றாமையாலே கலங்கி, நம்மை 'அவர்கள்'என்று ப்ரமித்து, நம்முடையபந்தையும்கழலையும் அவர்களினவாகக் கொண்டா ஶ்வஸிக்கிறான்" என்று நிரூபித்து, அவனைக்குறித்து, உன்னை இப்படி கலங்கப்பண்ண வல்ல நிரவதிக ஸௌந்தர்யத்தையும் ஆத்மகுணத்தையுமுடையாராய்"உன் அருள் சூடப் பிறந்தவர்கள் இத்தை அறியிற்செய்வதென்?" என்ன, "அவர்கள் அஸந்நிஹிதைக ளன்றோ, காணும்படியெங்ஙனே?" என்ன, "அவர்களோடு நீ கலந்து பரிமாறினபடியை அஸந்நிஹிதையாய் வைத்தே நான்எங்ஙனே யறிந்தபடி? அப்படியே யவர்களும் அறிவர்; ஆதலால் அவர்கள் காணச்செய்கிற செயலன்றே இது" என்ன,"அங்ஙனேயானால் வருவ தென்?" என்ன, "தத்கடாக்ஷைகதாரகனாயிருக்கிற உன்னை அவர்கள் கடாக்ஷியாதொழிவ ரென்று அஞ்சாநின்றேன்"என்ன, "என்னோடு உனக்குஉறவுஇல்லையாகில் நீ அஞ்சுகிற தென்?" என்ன, "சிலர் அனர்த்தப்படக்கண்டால் 'ஐயோ' என்னும்போது உறவுவேணுமோ?" என்றுஇவள் அருளிச்செய்ய ;"இப்படி அதிசங்கை பண்ணுகிறதென்,எனக்கு வேறொரு ஸ்ப்ருஹணீயவிஷயமுண்டோ? உன்னுடைய கடாக்ஷமேயன்றோ எனக்கு தார கம்"என்ன, "அது பொய்யிறே" என்ன, "என்னோடு பரிமாறுவார்திறத்தில் நான் பொய் செய்வதுண்டோ?" என்ன, "நீ யார்திறத்தில் மெய்செய்தாய்?" என்ன, "ஸ்ரீஜநகராஜன் திருமகளுக்காக ஏகதாரவ்ரதனாய் * உண்ணாதுறங்கா தொலிகடலையூடறுத்துச் சென் றிலங்கையை யழித்தது பொய்யோ?" என்ன, "அதுவும் அவளுக்கு ஸ்நேஹித்துச் செய் தாயில்லை: ஒருத்திக் கொருமெய் செய்யவே எல்லாரும் மெய்யனென்று உன்னை விஶ்வ ஸித்துஉனக்ககப்படுவரென்றுசெய்தாயத்தனை" என்ன," ஆகில்,உன்னைஅகப்படுத்துகைக் காக அச்செயல்களைச்செய்தாலோ?"என்ன,"நான் அது வஞ்சனமென்னுமிடம் பண்டே யறிவன்: அத்தை இனி என்பக்கல் ஆவிஷ்கரித்து ப்ரயோஜனமில்லை: அபூர்வைகள் பக்க

விலே போ'' என்ன,போகாதேபின்னையும் பந்தையும்கழலையும்இவன்விரும்பப்புகளன்னை உன்னருள்சூடப் பிறந்த மின்னிடைமடவார்களாக ப்ரமித்து, என்னுடைய லீலோப கரணங்களையும் அவர்களினவாகக் கருதி இவற்றைக் கொண்டு ஆஸ்வஸிக்கிறாய்; இவை அவர்களுடையன அல்ல,என்னுடைய பந்தும் கழலும் இவை;இவற்றைத்தந்து அவர்கள் உன்னை உபேக்ஷியாமே அவர்கள் இருந்த இடத்தேற ஈண்டெனப்போகு நம்பீ என்று எம்பெருமானை முகம்பாராதே இருந்து அருளிச்செய்கிறாள்.

ப.—முதற்பாட்டில், இவள், தன் லீலோபகரணங்களையும் மறையவைத்துத் தோழிமாரையும் விமுகைகளாம்படிபண்ணி இருக்கிறவளவில், தன் பாக்ய விஶேஷத் தாலே இவள் விஸ்மரித்து, அசேதநமாகையாலே தான் போகமாட்டாத பந்தையும் கழலையும் எடுத்துக்கொண்டு அவற்றிலே அத்யாதரத்தைப்பண்ணி, "நாம்முன்பு பெண்பிறந் தார்க்கு உதவி விரோதிநிரஸநம் பண்ணின ஆகாரத்தை ஆவிஷ்கரித்து, அபிமுகியாக்கக் கடவோம்'' என்று நினைத்துநிற்க, "அவை எங்களது: நீ நினைத்தவர்களது அன்று காண்; தந்துபோ'' என்று அவனோடு உறவற வார்த்தை சொல்லுகிறாள்.

(உன்னைத் தம்தாம்பக்கலிலே அபிநிவேசிக்கும்படி பண்ணுகிற), மின்-மின் போலே நுடங்கும், இடை-இடையை யுடையராகையாலே ரூப சோபையில் குறைவற்று, மடவார்கள் - மடப்பம்முதலான ஆத்மகுணங்களையும் உடையவர்களாய்க்கொண்டு, (இவ் விரண்டும் உண்டாயிருக்கச் செய்தே என்னைப் போலன்றியே), நின்-உன், அருள்- அருளை, சூடுவார் - தலைக்கொண்டிருக்கும் அவர்களின், முன்பு - ஸந்நிதியிலே, நான்- அவர்கள் அளவில் நீ பண்ணின வ்யாபாரம் அறிந்திருக்கிற நான், அது - நீ இங்குப்பண் ணும் அதிக்ரமங்கள் அவர்களறிந்து நீ ஶிதிலனும்படி உனக்குமுகப்ரதாநம்பண்ணாதே வெறுப்பரென்கிற இத்தைப்பற்ற, அஞ்சுவன் - அஞ்சாநிற்பன்; மன்னுடையிலங்கை அரண்காய்ந்த - நமக்குன்னையொழிய வேறு சிலருண்டோ! நாம்முன்பு ஏகதாரவ்ரத ராய் அவர்களுக்கு வந்த இடையூறு கழித்துக்கொடுத்தமை கேட்டு அறியாயோ! என்ன, மாயவனே - "பெண்பிறந்தார்க்கு உதவுமவன்'' என்று இளநெஞ்சாய் அகப்படுகைக்குச் செய்த க்ருத்ரிமசேஷ்டிதத்தையுடையவனே! (அது), உன்னுடைய - உன்னுடைய, சுண்டாயம் - ஸ்வார்த்தபரதை யென்று, நான்-புறம்புள்ளாரைப் போலன்றியே உன் நினைவறியும் நான், அறிவன் - அறிவன்; இனி-இனி, (ஒருபேதைக்குப் பொய்குறிக்குமா போலே, என்பக்கல்), அது-அது, கொண்டு - கொண்டு, செய்வது - செய்யலாவது, என்- உண்டோ? நம்பீ - நானொருத்தியுமே அல்லாதபடி, ("பதினாறுமாயிரவர் தேவிமார்'' என்று ப்ரஸித்தமான பூர்த்தியை உடையவனல்லையோ? அவர்கள் வெறுதபடிபோக ப்ராப்தம்: போமிடத்தில்), என்னுடைய - என்னுடைய மமதாந்தர்ப்பூதமான, பந்தும்- பந்தையும், கழலும் - கழலையும், தந்து - தந்து, போகு-போ. "விமுகருடைய மமதா விஷயம் த்யாஜ்யமாக நினைத்திருக்கும்'' என்றிருந்தாள் இவள்; "இவள்வைமுக்யம் ப்ரணயக்ருதமாகையாலே இவளோடு ஸம்பந்தித்தவஸ்து உத்தேஶ்யம்'' என்றிருந்தான் அவன். செந்நூலும் கருநூலும் வெண்ணூலுமிட்டுச் சமைத்த பந்தையும் ஐந்துகழலையும் அவனுதரித்தது - இவருடைய குணத்ரயாத்மக ஶரீரமும் இந்த்ரியங்கள் ஐந்தும் தன் விஷயமாக்க நினைத்து: இவள் அது தரச்சொன்னது - உன்னைக் கிடையாவிட்டால் பழைய ஶரீரேந்த்ரியங்கள் அமையுமென்றுநினைத்து. சுண்டாயம் - ஸ்வார்த்தபரத்வம்.

இ.—முதற்பாட்டில், இவர்கள் மறைக்க மறந்து, அசேதநமாகையாலே இருக்கஅறியாத பந்தையும்கழலையுமெடுத்துக்கொண்டு "ஹ்ருஹீத்வா வ்ருக்ஷணாஸா" என்கிறபடியே இவற்றிலே பண்ணுகிற அத்யாதரத்தைக்கண்டு, "இவனுடன் வார்த்தை சொல்லாதே இருக்கிறதென்?" என்று "இவை நீ நினைக்கிறவர்களுடையனவன்று காண்: எங்களுடையன காண் : இவற்றைத்தந்து, அவர்கள் உன்னைஉபேக்ஷியாபே அவர்களிருந்த விடத்திலே போ" என்கிறாள்.

[மின்னிடைமடவார்கள் நின்னருள் சூடுவார் முன்பு] - பந்திலும் கழலிலும் பண்ணுகிற அபிநிவேசத்தைக் கண்டு, "இது நம் பக்கல் ப்ரேமத்தாலே வந்ததாக மாட்டாது, வேறே சிலரோடே கலந்து பிரிந்து பிரிவாற்றாமையாலே கலங்கி, நம்மை அவர்களாக ப்ரமித்து பந்தையும் கழலையும் அவர்களினவாகக் கொண்டாஸ்வஸிக்கிறான்" என்று பார்த்து, உன்னை இப்படி கலங்கப் பண்ணவல்லவழகையும் ஆத்ம குணத்தையுமுடையவர்கள் முன்பே இதென்ன காரியம் செய்கிறாய் என்கிறாள். [மின்னிடை]- தேக குணத்துக்கு உபலக்ஷணம். [மடவார்கள்]-நாண், மடம், அச்சம், பயிர்ப்பு முதலானவை ஆத்ம குணங்களுக்கு உபலக்ஷணம். தன்னோடு கலக்கிறபோது "இதோரழகே! இதோர் ஆத்ம குணமே!" என்று கொண்டாடும்படியைக் கண்டு, "இவன் புக்கவிடமெங்கும் சொல்லும்படி இதுவிறே" என்று கல்பித்துச் சொல்லுகிறாள். மடவார்களென்கிற பஹுவசனத்தாலே—ஒருவர்க்கு உற்றாறுயிராத பரபரப்பைச் சொல்லுகிறாள்.

"இதுவென்?, அவர்களார்?" என்ன, [நின்னருள் சூடுவார்]-உன்னுடைய ப்ரஸாதத்துக்குப்பாத்ரபூதைகள். எங்களை அவர்களாக ப்ரமித்து முன்னடிதோற்றாதபடி பண்ணினவர்கள்: அவர்கள் ஸந்நிதியிலே இதென்ன காரியம்செய்கிறாய். "இவள்:விமுகையாகைதவிர்ந்து வார்த்தை சொல்லுமவளானால், மற்றுள்ளது பார்த்துக் கொள்ளுகிறோம்" என்று அத்தை இசைந்து, "அவர்களிங்குண்டோ?" என்றான்; அவர்களோடு கலந்தபடியை அஸந்நிஹிதையான நானறிந்தபடி கண்டாயே; அப்படியேயவர்களும் அறிவர்கள் காண்: உன்னைப்போலே அந்யபரைகளோ அவர்கள்? செய்யாதொழியில் அத்தனையல்லது செய்தது மறைக்க வொண்ணாதுகாண். "அங்ஙனேயானால் வருவதென்?" என்ன; [நானதஞ்சுவன்] - "அஞ்சவேண்டுகிறதென்" என்ன, "பசு கிணற்றிலே விழுந்தால், 'ஐயோ!' என்பாரில்லையோ?, அவர்கள் கடாக்ஷமேதாரகமாக இருக்கிற உன்பக்கலிலே வைமுக்யத்தைப் பண்ணுவர்கள். "அத்தால் வருவதென்" என்ன, 'நீ துடிப்புதீ; அது நான் காணமாட்டேன்'. அவர்கள்பக்கல் முகம்பெறாதே நிற்கும் தடுமாற்றத்தை 'அது' என்கிறாள். "என்னோடு உறவில்லையாகில் அஞ்சுகிறதென்?" என்ன, "பராநர்த்தம் பொறுக்கமாட்டாதொழிகைக்குஉறவுவேணுமோ? உன்னைப்போலே பராநர்த்தமே போதுபோக்காக இருக்கிறவர்களோ நாங்கள்?" என்ன, "இப்படி அதிசங்கை பண்ணுகிறதென்? உன்னையொழிய வேறுசிலர் உண்டோ எனக்கு?" என்ன, "அதுபொய்யிறே" என்ன, "நான் ஆர்திறத்திலே பொய்செய்தேன்" என்ன, "நீ ஆர்திறத்திலே மெய்செய்தாய்" என்ன;—[மன்னுடை இத்யாதி]-"ஏக தாரவ்ரதனாய் * உண்ணாதுறங்காதொலிகடலையூடறுத்துச் சென்றொருத்திக்காக இலங்கையையழித்தது பொய்யோ?" என்ன, அதுவும் "சினத்தினாற்றென்னிலங்கைக் கோமானைச் செற்ற மனத்துக்கினியானை" என்று, இளிம்பராயிருப்பார் அகப்படுகைக்காகச் செய்தாய் இத்தனை. [மன்னுடை இலங்கை]-ராவணபாலிதையான லங்கை. ஆரேனுக்

கும் ரக்ஷிக்கலாம் அரணுடைய வூர்; வெளி நிலத்திலும் ரக்ஷிக்கவல்ல ராவணன். [அரண் காய்ந்த]-அவ்வரணைபழித்து மூலையடியே வழிபோம்படி பண்ணினவன். [மாயவனே]-க்ருத்ரிமசேஷ்டிதங்களைப் பண்ணுமவனே! "அது சிலரை அகப்படுத்துகைக்குச் செய்ததாகில், உன்னை அகப்படுத்துகைக்கு ஆகாதோ" என்னில்;—[உன்னுடைய சுண்டாயம் நானறிவன்] - உன்னுடைய க்ருத்ரிமலீலையென்னுமிடம் நானறிவன். [இனி அது கொண்டு செய்வதென்] - நானறிந்த பின்பு அத்தை முன்னிட்டு என் பக்கல் ப்ரயோஜநமில்லை; அபூர்வைகள் பக்கலிலே போவென்ன, "கைப்பட்டத்தைச் செய்பலாவதில்லையிறே" என்று பந்தையும் கழலையுங்கொண்டு, "போகிறோம்" என்று போகப்புக்கான் : [என்னுடைய பந்துங்கழலும்] - இவை யாரதாக நினைத்துக்கொண்டு போகிறாய்? நீ நினைக்கிறவர்களதல்ல காண்; என்னுடையபந்தும் கழலும்கிடாய்; ஸ்வரூபத்தைப் பார்த்தாலும் மமகாரம் த்யாஜ்யம்; 'அக்ஷரத்வம் ஹேயம்' என்கிற படியே; ப்ரணயதாரையில் வந்தாலும் 'உன்னது, என்னது' என்கைக்கு மேலில்லை உறவறுதிக்கு: தானே பொகட்டுப்போம்" என்று 'என்னுடைய' என்கிறாள். அவனும் * 'யதேஷ்யதிதஸ்யதஸ்ய' அன்றோ? ஸ்வரூபஜ்ஞாநமுடைய உன்னுடைய மமகார விஷயம் அடங்கலும் 'என்னதன்றோ' என்று போகத்தொடங்கினான்; [தந்து போகு]-"உயிரை வைத்துப்போ" என்பாரைப்போலே. "அவன் மாட்டான்" என்று அறிந்து மர்மஜ்ஞையாகையாலே 'தந்து போகு' என்கிறாள். "இவர்கள் தொட்டளைந்தது" என்றிறே அவனாதரிக்கிறது: இவளும் அவன் தொட்டளைந்தவற்றைக் கொண்டு தரித்துக் கிடக்கைக்காக 'தந்து போகு' என்கிறாள். "நான் தருவேனோ? இவையொழிய எனக்குச் செல்லுமோ?" என்றான். [நம்பீ] - முதலிகளன்றோ; உமக்குப் புக்கவிடம் எங்கும் பந்தும் கழலும் அன்றோ, "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி" என்கிறபடியே அபிமதவிஷயங்களொன்றிரண்டோ? நடக்கலாகாதோ? ஸூத்துக்குப்பொருள் சொல்லுகையன்றிக்கே, உக்திப்ரத்யுக்தியாலே நினைவைச்சொல்லுகிற இதுவிறே இத்திருவாய்மொழிக்குக் கருத்து. திருப்பாவைக்கு "எல்லேயிளங்கிளியே" என்கிற பாட்டுப் போலே, இத்திருவாய்மொழியும் ஸாவப்ரயாநமென்னும் இடத்தைக் காட்டுகிறதாயிற்று.

ஈடு.—முதற்பாட்டு. இப்படி வரவுதாழ்த்ததும் இத்தலையை ஒழியச்செல்லுவதாயன்றிறே; கடுக வந்துகொண்டு நின்றான், பந்தையும் கழலையும் எடுத்துக்கொண்டான், அலப்யலாபமென்று தோற்றும்படி நின்றான், இத்தலையில் பண்ணக்கடவ வ்யாமோஹம் அடங்கலும் இவற்றின்பக்கலிலே பண்ணினான். அவன்படுகிற அலமாப்பைக் கண்டு, "இவையெல்லாம் நம்மைக்குறித்துச் செய்கிறானல்லன், தான் கலந்துபிரிந்தவர்களுடைய உபகரணங்களாகக் கொண்டு செய்கிறான் இத்தனை; இவனுடன் வார்த்தை சொல்லாதே இருக்

---

முதற்பாட்டு.—மின்னிடை இத்யாதி. இத்தனை வ்யாமோஹம் பண்ணுகிறவன் வாராதிருப்பானென் என்ன - இப்படிவரவுதாழ்த்தது இத்யாதி. 'செல்லுவதாயன்றிறே' என்ற அநந்தரம், ப்ராவண்யம் விளக்கைக்காக இறே: அதுவிளைந்தவாறே 'கடுக வந்துகொடு நின்றான்' என்று கூட்டிக்கொள்வது. 'இப்படிவரவுதாழ்த்ததும்' என்றுதொடங்கி, 'காரைச்சுமந்ததொரு மின்னின்றதீ என்ன' என்னுமளவும் பாட்டில் தாத்பர்யத்தையும் ஸூசிப்பியாநின்றுகொண்டு, "மின்னிடைமடவார்" என்றபதத்துக்கவதாரிகை அருளிச்செய்தபடி. 'காரைச் சுமந்ததொரு மின்னின்றதீ!' என்றது - அலகபாரத்தைச்சுமந்ததோரிடை இருந்ததீஎன்றபடி. "காரைச்சுமந்ததொரு மின்னின்றதீ!" என்று அவன் தங்களைவர்ணித்ததுக்கு இவர்கள்ப்ரதிவசநத்வேந "மின்னிடைமடவார்" என்றதுக்கு

கிறதேன்'' என்று, ''வாராய்! நீ நினைக்கிறவர்களது அன்றுகாண் இவை; உனக்கு உபேக்ஷா விஷயமான எங்களதுகாண் இவை, இவற்றைத்தந்து அவர்கள்பக்கலிலேறப்போ'' என்ன.

''ஓம், அதுசெய்கிறேன்,†(இங்ஙனே)-காரைச்சுமந்ததோரு மின் நின்றதீ!''என்ன [மின்னிடைமடவார்கள்] என்கிறார்கள் - '' அவர்கள்பாடேறப்போகிறவன் இடையிலே இதோன்றைச் சொன்னான், அது தான் நிலைநில்லாது '' என்று பார்த்து ''வாராய்! நீ உபேக்ஷித்ததோருவிஷயத்திலே இத்தனை கால் தாழ்ந்தால், உன்னை விரும்பியிருப்பார் அநேகராகையாலே போரநேருக்குண்புதி கிடாய். அவர்கள் தங்கள்படி இருந்தபடியேன்தான்? இதோரு தேஹகுணமும் ஆத்மகுணமும் இருக்கும்படியே! [மின்னிடை] - மற்றும் தேஹகுணத்துக்குஉபலக்ஷணம். [மடவார்கள்] இது-நாண், மடம், அச்சம், பயிர்ப்பு முதலான ஆத்மகுணங்களுக்கும் உபலக்ஷணம். மடவாரென்கிற பஹுவசநத்தாலே - ஒருவர்க்கு உற்றாருயிராமை சொல்லுகிறது. நீ அதஸ்மிம்ஸ்தத்புத்தி பண்ணும்படி பண்ணுவிப்பதே அவர்கள் சிலர். இவனுடைய அலமாப்பைக்கோண்டே அவர்களுடைய வைலக்ஷண்யத்தை அநுமிக்கிறாளிறே. பாவியேன், உன்னை இங்ஙனே இடையிலே பிச்சேறித் துடிக்கப் பண்ணினார் ஆரோ? [மின்னிடைமடவார்கள்] - இவனோடு ஸம்பந்தமுடையாருடைய தேஹ குணங்களையும் ஆத்மகுணங்களையும் ஸாபாஶ்ரயமாக நினைத்திருந்தபடி தோற்ற வார்த்தை சொன்னபடியேன் தான்! ப்ரணயரோஷம் புறவாயிலே செல்லா நிற்கச் செய்தேயும், அகவாயில் நினைவு இதிறே. அகவாயிலும் த்வேஷமேயானாலும் வஸ்துஇருந்தபடி சொல்லவேணுமே; த்வேஷத்தாலேசோல்லு மன்றும் † '' தராணௌரவை

† ப்ர.—[முதற் பாட்டு] - [மின்னிடை மடவார்கள்] - ஶ்ராணுகாணெ [கசு] ஜநஸாகேநஹாதரம் வரம்ஹுகிஶமுவடிணவா, '' ஐகி ஹாதவடிவ ஸுகவா கூஐஷவ விஶேஷதஃ। தத்ருஶமுவடிணவாவாக்யம் ஷபாஷிஜ

இரண்டு தாத்பர்யம். அதில், அவன்சொன்னவார்த்தை அஸ்த்திரமாகையாலே, உன்னுடைய மின்னிடைமடவார்களல்லோம் நாங்கள் என்று முந்தினபாவம்; அத்தைஅருளிச்செய்கிறார் - அவர்கள் பாடேற இத்யாதி. இடையிலே நடுவேஎன்றும், இடையிலேஎன்றும் அர்த்தத்வயம். இத்தனைகால் தாழ்ந்தாலென்றது - எங்கள்பக்கல் ஸ்நேஹமின்றிக்கே தாமஸித்தாலென்றபடி. போரநேருக்குண்புதிகிடாயென்றது - ''நீ அந்யாஸக்தன்'' என்று அவர்கள் உன்னை முகம்பாராமையாலே போர நோவுபடுவுதி கிடாய் என்றபடி. ''மின்னிடைமடவார்'' என்றுவர்ணித்ததுக்கு பாவம் - அவர்கள் தங்கள் இத்யாதி. படி - வடிவு. விவரணம் - இதோரு இத்யாதி. ஆத்மகுணம் - பவ்யதைதொடக்கமானவை. உற்றாருயிராமை - பொருந்தினவருயிராமை. ''மின்னிடைமடவார்'' என்றதுக்கு - இவன் அபிமத விஷயங்களோடே கலந்து பிரிந்துவந்து தங்களைக்கண்டு அவர்களாக ப்ரமித்துச்சொல்லுகிறானென்று த்விதீயதாத்பர்யம் - நீ அதஸ்மிந் இத்யாதி. ''மின்னிடைமடவார்கள்'' என்று அவர்கள் வைலக்ஷண்யத்தை இவர்கள் அறிந்தபடியென்என்ன - இவனுடைய இத்யாதி. அலமாப்பாவது - அதஸ்மிம் ஸ்தத்புத்தி பண்ணுகை. '' நீ அதஸ்மிம்ஸதத்புத்தி'' இத்பாதிவாக்யத்துக்கு ஶ்லோக்தியாக விவரணம்— பாவியேன் இத்யாதி. இடையிலேபிச்சேறி - நடுவேப்ராந்தென்றும், இடையைக்கண்டு பிச்சேறி என்றும் அர்த்தத்வயம். பதோபாதாந பூர்வகமாக ஸ்வாபதேஶம் - மின்னிடைமடவார்கள் இவனோடு ஸம்பந்தம் இத்யாதி. நினைத்திருந்தபடி - ஆழ்வார் நினைத்திருந்தமை என்றபடி. ப்ரணயரோஷம் செல்லாநிற்க, ஸாபாஶ்ரயமாக நினைக்கக்கூடுமோ? என்ன - ப்ரணயரோஷம்புறவாயிலே இத்யாதி. பட்டர் நிர்வாஹத்திலே ப்ரணயரோஷமன்றோ, ஶ்லாகிக்கலாமோ? என்ன - அகவாயிலும் இத்யாதி. ஶத்ருஶத்ருஷ்டாந்தமாக விவரணம் - த்வேஷத்தாலே இத்யாதி. ''தராணௌரவைஸம்வை

ஸம்வஹள '' (தருணௌரூபஸம்பந்நௌ) என்றல்லது சொல்லவொண்ணுதே. [மின்னிடைமடவார்கள்] - தங்கள் பாடுகிட்டினுல், “ இதோரிடையே ! இதோருதுண மே!'' என்று அவனுழங்கால்படும் துறையறியுமே; ''அப்படியேயிறே இவன்போனவிடத்தி லும்'' என்றிருக்கிருர்கள். இங்ஙனன்ருகில் எதிர்த்தலையைக் கண்டு சொல்லுகிருளன் றே. இப்படி இருப்பாருமுண்டோ புறம்பே என்ன, [நின்னருள்சூடுவார்] - உன்னுடைய ப்ரஸாதத்துக்கு பாத்ரபூதைகளாயிருப்பார். இவ்வளவில் “ உன்தலையிலே கால்வைக்கப் பிறந்தார்'' என்றுசொல்லவிறேஅடுப்பது; அங்ஙன்சொல்லுமன்று ; அது அவனுக்குஇடமாமே: அதாவது - இவள்காலைத் தன்தலையிலே எடுத்துவைத்துக்கொள்ளுமேன்கை. உறவுதோற் ருமல் இருக்கிறவள் அங்ஙன்சொல்லாளிறே. பாவபந்தம் அடியாகவந்த கலவியாகை யாலும், நினைவும்அத்தலையாலே வந்ததாகையாலும், அவன்வார்த்தையாகநடுவேயொன்றில்லை யேயாகிலும் இடையீடுபொறுக்கக்கடவது. ஆனுலென்? அவர்களிங்கு இல்லையேயென்ருன். [முன்பு] - எங்களை அவர்களாகநினை. நாங்கள்காண் அவர்களேன்கிருள். அவையெல்லா மிங்கேயிறே'' என்னவேண்டியிருக்க, தனக்கு வேறே சிலர் உண்டாகச் சொல்லுவானேன்? என்னில் ; பல கேட்க நினைத்திருக்கிறவன் ஒருவார்த்தையோடே தலைக்கட்டானே;

---

ஸவீக்ஷ ॥ ௧௩ ॥ தாருணௌரூபஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ । புண்டரீகவிஶாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ ॥௧௪॥ ஃபலமூலாஶநௌ தாந்தௌ தாபஸௌ ப்ரஹ்மசாரிணௌ । புத்ரௌ தஶரதஸ்யாஸ்தாம் ப்ராதரௌ ராமலக்ஷ்மணௌ ॥ ௧௫ ॥ ஶரண்யௌ ஸர்வஸத்த்வாநாம் ஶரண்யௌ ஸர்வதந்விநாம் । தேவாநாம் தேவதௌ ச ஹத்வாஸ்த்ரீ ஸதா ॥ ௧௬ ॥

---

ருபஸம்பந்நௌஸுகுமாரௌமஹாபலௌ । புண்டரீகவிஶாலாக்ஷௌசீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ

இத்யாரண்யகாண்டே ஹரம்ப்ரதி சூர்ப்பணகா. அவர்கள் வைலக்ஷண்யத்தை இவர்கள் அறிந்தபடி என்? என்கிறசங்கைக்குப் பரிஹாராந்தரம் - தங்கள்பாடு இத்யாதி. ''அநுமிக்கிருள்'' என்று கொள் ளாதவர்களுக்கு அநிஷ்டப்ரஸஞ்ஜநம் பண்ணுகிருர் - இங்ஙனன்றகில் இத்யாதி. 'உறவுதோற்ருமல்' இத்யாதி வாக்யாந்தரம், 'அங்ஙன்சொல்லுமன்று' இத்யாதிவாக்யம் அநுஸந்திப்பது. ப்ரத்யுத்தரமாக அவன் வார்த்தை இல்லாமலிருக்கப் பரிஹரிக்கக் கூடுமோ? என்ன - பாவபந்தம் இத்யாதி. அதாவது- ஸ்நேஹபூர்வகமான கலவியாகையாலே பாவகர்ப்போக்தியாயிருக்கும் என்றபடி. நினைவும் அத்தலை யாலே வந்ததாகையாலும் என்றது - இவர்கள்சொலவும் அவன்வார்த்தைக்கு ப்ரத்யுத்தரமாகையாலும் என்றபடி அதாவது - ப்ரணயதாரையில் விதக்தைகள் சொல்லுகிற வார்த்தையாகையாலே, இவர்கள் சொலவு நாயகனுடையநினைவை அநுவிதாநம்பண்ணி அவ்வுக்திக்கு ப்ரத்யுக்தியாயிருக்கும் என்றபடி. நினைவென்றது - நினைவின்கார்யமானசொலவை நினைவென்று - சொலவைச்சொல்லுமோ? என்ன; - '' 'இந்தவார்த்தையை அங்கேநினைப்பிடு' என்ருல் - அங்கேசொல்லென்றபடியிறே'' என்று அருளிச்செய்வர். இடையீடு பொறுக்கக்கடவதென்றது - நடுவே அவன்வார்த்தையை அத்யாஹரித் துக் கொள்ளக்கடவது என்றபடி. ஆனுலென்றது - அவர்கள் ''அந்யாஸக்தன்'' என்று முகம்மாறி யிருந்தாலென்றபடி, பூர்வவாக்யவிவரணம் - நாங்கள்காண் இத்யாதி. அதாவது - உன்னுடைய வ்யாபாரங்களெல்லாம் நாங்களறிந்தாற்போலே, நீஇங்குச் செய்தவையும் அவர்கள் அறிவர்கள் என்றபடி. அவையெல்லாம் இத்யாதி சங்காவாக்யத்துக்குபாவம்—வேறேசிலருண்டாகச்சொல்லுகை ப்ரணயித் வத்துக்குச் சேராதென்று. இதுவார்த்தை இட்டு வார்த்தைகொள்ளுகைக்காகச் சொன்னது அத்தனை யொழிய, தனக்கு வேறேசிலருண்டென்று சொன்னவார்த்தை அன்று என்று பரிஹரிக்கிருர் - பல கேட்க; இத்யாதி வாக்யத்வயத்தாலே. நான் ஒளித்துச்செய்கிறவை அவர்களறிவர்களோ? என்ன -

இட்டீடுகொள்ளுகையிறே இவன்தனக்கு தாரகம். [முன்பு] - நீ செய்யுமவை யெல்லாம் மறைக்கப் போகாதுகாண். நீ அங்குச்செய்தவை எல்லாம் கண்டாயே நாங்கள் அறிந்தபடி; இப்படியே, நீ இங்குச் செய்யுமவையெல்லாம் அவர்கள் அறிவர்கள் காண். அவர்களுக்கு உன்னைப்போலே வேறு அந்யபரதை இல்லைகாண். உன்னைப் போலே நினையாதே கொள்ளாய் அவர்களை. உன்னைக் கலந்து பிரிந்தார் உன்னை ஸாக்ஷாத் கரித்தபடியே இருப்பர்கள்காண்; ''பிரிந்தொன்றுநோக்காது தம்முடைய பின்னே திரிந்துழலும் சிந்தனையார்'' என்றிறே இருப்பது. அவர்களுக்கு வேறுவிஷயமில்லாமையாலே ஸர்வ காலத்துக்கும் ஸ்ம்ருதிவிஷயம் நீயேகாண். ஆனாலென்? உங்களுக்கு என்னோடொரு ஸம் பந்தமில்லைஆனபின்புஅத்தால்வருவதொன்றில்லையே?என்றான்: [நாணதஞ்சுவன்]-உன்னைப் போல் அல்லோம்காண் நாங்கள். நீ இங்கே சிறிதுபோது கால்தாழ்த்துப் போனால், அவர்களுன்னை அரைக்ஷணம் முகம்மாறினால், நீ பொறுக்கமாட்டாமல் கிடந்து துடிக்கும்துடிப்பு நான் காணமாட்டேன்: கலந்துபிரியவல்லாயும் துடிப்பக்காணவல்லாயும் நீயேகாண்; பரார்த்தங் கண்டால் பொறுக்கமாட்டோங்காண் நாங்கள். உன்னோடு உறவு இல்லையேயாகிலும் நீ படும் அலமாப்புக்கண்டால் பொறுக்கமாட்டோம்;சிலர் கிணற்றிலே விழுந்தால் ஒரு குரல் கூப்பிடும்போது உறவுவேணுமோ? அவர்கள் பக்கல் முகம்பெறாதே நிற்கும் தடுமாற்றத்தை 'ஆற்றேன்'என்கிறாள்.அரைக்ஷணம் இத்தலையையொழிய ஜீவிக்கமாட்டாதே செல்லாமையையுடைய என்னைப்பொய்யனாக்கிப் புறம்பாக்கி வார்த்தைசொல்லுவதே! என்றான்.

---

நீ செய்யுமவை இத்யாதி. ''எங்களையவர்களாகநினை'' என்ற வாக்யவிவரணம் - நீஅங்கு இத்யாதி வாக்யத்வயம். அவர்களுக்கு வேறுபராக்கில்லையோ? என்ன - அவர்களுக்கு இத்யாதி. அந்யபரதை இல்லாமைக்கு ஹேது உன் வைலக்ஷண்யம் என்கிறார் - உன்னைக்கலந்து இத்யாதி. பகவதேக பரதைக்கு ப்ரமாணம் - பிரிந்தொன்று இத்யாதி. வேறொன்றைப்பாராதே தம்முடையபின்னே இடைவிடாமல் திரிந்து தடுமாறுகிற மநஸ்ஸை உடையவர்களென்றபடி. பெரியதிருவந்தாதி ஐம்பதாம் பாட்டு. நம்மைக்கலந்துபிரிந்தார் நம்மை ஸாக்ஷாத்கரித்தபடியே இரு என்ன - அவர்களுக்கு வேறுவிஷயம் இத்யாதி. கீழில் பதத்தையும் அநுசரித்து, ''நாணதஞ்சுவன்'' என்றதுக்கு அவதாரிகை - ஆனல் இத்யாதி. ஆனாலென்றது - அவர்களறிந்தாலென்றபடி. அத்தால் வருவது ஒன்றில்லையே என்றது - அவர்கள் முகம்பாராமையால் வரும் வ்யஸநம் உங்களுக்கில்லையே என்றபடி. இதுக்கு உத்தரமாக - நீ இங்கேசிறிதுபோது இத்யாதிவாக்யத்தைச்சொல்லிக் கொண்டு, அநந்தரம் உன்னைப்போலல்லோங்காண்நாங்கள் என்கிறவாக்யம் அநுஸந்திப்பது. துடிப்புக்காண மாட்டாமைக்குஅடி ஏதென்ன, - எங்கள் ப்ரக்ருதிஸ்வபாவம் என்கிறார்கள். உன்னைப்போலல்லோம் காண்நாங்கள் என்ற இத்தைவிவரிக்கிறாள் - கலந்து பிரியவல்லாயும் இத்யாதிவாக்யத்வயத்தாலே. துடிப்பென்றது - ''அது'' என்றத்தைப்பற்ற. கலந்து பிரியவல்லாயும் இத்யாதிவாக்யம் - ''நாணதஞ்சுவன்'' என்றதுக்கு ப்ரதிகோடித்வேந பாவமாயிருக்கிறது. ''ஆனாலென்? உங்களுக்கு என்னோடு ஒரு ஸம்பந்தமில்லையானபின்பு.'' என்கிற ஶங்கைக்குப் பரிஹாரமேதாயிற்று என்ன - உன்னோடு உறவில்லையே இத்யாதி. இந்தவாக்யம், நீயிங்கேசிறிதுபோது இத்யாதிவாக்யத்துக்கு விவரணமாயிருக்கிறது. உறவில்லாத இடத்திலே தயை உதிக்குமோ? என்ன - சிலர்கிணற்றிலே இத்யாதி. ''மின்னிடை'' இத்யாதிக்கு - மின்போலே நுடங்குமிடையையும் ஆத்மகுணங்களையும் உடையராய், உன்னருளை ப்ரஸாவஹிக்கும்அவர்கள் ஸந்நிதியில் நீ பண்ணின வ்யாபாரம் அறிந்திருக்கிற நான், நீ இங்குப்பண்ணும் அதிக்ரமங்களை அவர்கள் அறிந்து நீ ஶிதிலனாம்படி உனக்கு முகங்கொடாதே வெறுப்பர் என்கிறத்தைப் பற்ற 'அஞ்சாநின்றேன்' என்று பாவார்த்தம். ''மன்னுடையிலங்கை'' இத்யாதிக்குஅவதாரிகை - அரைக்ஷணம் இத்தலையை இத்யாதி. ''மின்னிடைமடவார்'' என்று - எங்களையவர்களாக ப்ரமித்தாய் என்கையாலே, பொய்யனாக்கி என்றது. ''நின்னருள்சூடுவார்'' என்கை

[மன்னுடையிலங்கையரண்காய்ந்தமாயவனே]-"என்தான்? நீ பொய்யனல்லையோ?" என்றாள். "நான் என்னோடே பரிமாறினரில் இதுக்குமுன்பு ஆர்க்குப் பொய்செய்தேன்?" என்றான்; "நீதான் ஆர்க்கு மெய் செய்தாய்" என்றாள்; "என்தான், "உண்ணாதுறங்கா தொலிகடலையூடறுத்து" என்று, ஏக தாரவ்ரதனாய்க்கொண்டு நான் பட்டதெல்லாம் பொய்யோ?" என்றான். "அதுதான் நீ வேண்டிச்செய்தாயோ? ஒருதுறையிலே ஒருமெய் பரிமாறுவிடில், நமக்கு மேல் உள்ளதெல்லாம் ஒருதொகையில் அகப்படாதென்று செய்தாயத்தனையன்றோ? அபலைகளைஅகப்படுத்திக்கொள்ள இட்டவழியன்றோ?" [மன்னுடையிலங்கையரண்காய்ந்த] - நிலமிதிதா னெதிரிகள் மண்ணுண்ணும்படியாய், அதுக்கு மேலே "லங்காம்ராவணபாலிதாம்" (லங்காம்ராவணபாலிதாம்) என்றுகொண்டு, ஸிம்ஹங்கிடந்த முழஞ்சுபோலே பையலுணர்ந்து நோக்குகிற ஊரையழியச்செய்த. [மன்னுடை] - மன்னனையுடைய. [மாயவன்]-க்ருத்ரிம வ்யாபாரத்தைஉடையவன். "அழகிது: ஒருமெய்யுமுண்டாகச்சொன்னாயே; அத்தைஇங்கே செய்தேனானலோ? மேலுள்ளதும் எல்லாமாகைக்காக" என்றான். [உன்னுடைய சுண்டாயம் நானறிவன்]-அது உனக்குச் செய்யலாவது செவ்வேபரிமாறும் அவர்களோடேகாண்; நீசெய்கிறவையெல்லாம் பண்டே எனக்கு ஜ்ஞாதங்காண்; நீ செய்கிறவையெல்லாம் "மெய்" என்றிருப்பாள் ஸ்ரீஜநகராஜன் திருமகள்காண்; உன்னுடைய க்ருத்ரிம லீலைகளெல்லாம் நானறிவன். சுண்டாயம்-ஸ்வார்த்தபரத்வம். "அறிந்தேன், அறியாவிடிலேன்? ப்ரவ்ருத்தமாயிற்றே" என்றான்: [இனியதுகொண்டுசெய்வதென்]-"ஸாத்யமாயிற்றுஅதிறே" என்றான்: "சாத்யாம்ஸத்துக்குஒருப்ரயோஜநம் கண்டிலோமீ" என்றாள். † (அதாவது - நானறிந்த பின்பு உன்க்ருத்ரிமத்தை முன்னிட்டு என்பக்கல் ப்ரயோஜநமில்லையென்கை. அவனும் ஒன்றைநினைத்து, "ஆகில் எனக்கு ஸாத்யாம்ஸம்தான் இல்லையோ?" என்றான்; †(என்றவநந்தரத்தே கைப்பட்ட பந்தையும் சழலையும்கொண்டுபோகப்புக்கான்) [என்னுடையபந்துங்கழலும்]-கைப்பட்ட பந்தையும் கழலையும் போரவிரும்பப் புக்கான். "பாவியேன், நீ எங்கே செய்யக்கடவத்தை எங்கேசெய்கிறாய்? அவை நீ நினைக்கிறவர்களதன்று காண்: அவைஎன்னது காண்" என்றாள். "அதுதான், மெய்யே" என்றான்: இவன் விருப்பத்துக்கு அதுதானேயிறே

---

யாலே, புறம்பாக்கி என்றது. "மாயவன்" என்றது - சரம உக்த்யபிப்ராயத்தாலே யாகையாலே, தத்பூர்வபாவியான உக்திகளை அருளிச்செய்கிறார் - "என்தான்? நீ பொய்யன்" இத்யாதி. அபலைகளை இத்யாதி வாக்யம் - சரம உக்த்யபிப்ராயமான "மாயவன்" என்கிறதுக்குத் தாத்பர்யம். தொகை - ஸங்க்யை. ஸப்தார்த்தம் - நிலமிதி இத்யாதி. நிலமிதி - நிலத்தின் ஸ்வபாவம். வீரக்ஷேத்ரம் என்றபடி. முழஞ்சு - புதர். "உன்னுடையசுண்டாயம்" என்றதுக்கு அவதாரிகை - அழகிது இத்யாதி. ஆனால், நீ எப்படிக்கொத்தவள் என்ன - நீ செய்கிறவை இத்யாதி. செவ்வே பரிமாறும் அவர்கள் ஆர்? என்ன - நீசெய்கிறவை இத்யாதி. ஸப்தார்த்தம் - உன்னுடைய இத்யாதி. ப்ரவ்ருத்தமாயிற்றே என்றது - ஆலோகாலாபாதிகள் ப்ரவ்ருத்தமாயிற்றே என்றபடி. ஏதத்விவரணம் - ஸாத்யமாயிற்று அதிறே என்றான் என்றது. இதுக்கு அநந்தரம், இனி அதுகொண்டுசெய்வதென்? என்றது அநுஸந்தேயம். ஒருப்ரயோஜநங்கண்டிலோமீ என்றது - ஸம்பாஷணாதிகளாற் பெற்ற ப்ரயோஜநம் ஒன்றுங் கண்டிலோமீ என்றபடி. அதாவது - ஸம்ஶ்லேஷம்வாராதென்றபடி. ஒன்றை நினைத்தென்றது - கைப்பட்ட பந்தையும் கழலையும் நினைத்தென்றபடி. கைப்பட்டபந்தையும் இத்யாதி வாக்யாநந்தரே - என்னுடையபந்துங்கழலும் என்றது அநுஸந்தேயம். மெய்யேயென்றது - மெய்யோவென்றபடி. மெய்யானாலென்? என்ன - இவன்விருப்பத்துக்கு இத்யாதி. அதெப்

† குண்டலீக்ராந்தத்வயம் க்வாசித்கம்.

வேண்டுவேது; "யஸ்யைதே தஸ்ய தத்தநம்" (யஸ்யைதேதஸ்யதத்தநம்) என்று மற்றையது அநந்தரத்தே வருமிறே. †(அதாவது-ஸ்வரூபஜ்ஞாநமுடைய உன்னுடைய மமகாரவிஷயம் அடங்கலும் என்னதன்றோ என்று போகத்தொடங்கினான்.) இனிப்ரவேசத்திலே, "முடியப்பார்க்கிறாள்" என்று சொல்லிற்று ஒன்றுண்டு: அது - இப்பதத்திலே தோற்றுகிறது. அவன் ஸந்நிதியிலே "என்னது" என்று சொல்லுகைக்கு மேற்பட்ட முடிவில்லை இறே; *"த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யு:" (த்வ்யக்ஷரஸ்துபவேந்ம்ருத்யு:) இறே. "மாமகா: பாண்டவாஶ்சைவ" (மாமகா:பாண்டவாஶ்சைவ) - என்கிறவிடத்துக் தச் சிறியாத்தான் சொல்லும்படி - "என்னுடையவர்களென்றும் பாண்டவர்களென்றும் பிரித்தான், அது இறே விநாஶபர்யந்தம் ஆக்கிவிட்டது" என்று. இதுதான் தத்த்வகதையேஅன்று, ப்ரணயகோஷ்ட்டியிலும்; கலவியிலேவந்தால் "உன்னது, என்னது" என்கையிறே உறவறுகையாவது. [என்னுடைய பந்துங்கழலும்] - "ஆத்மேத்யேவ து க்ருஹ்ணீயாத்" (ஆத்மேத்யேவதுக்ருஹ்ணீயாத்) என்கிறபடியே ஒன்றையொன்று உபாசியாநிற்கச்செய்தே, தன்னை உபாசித்ததென்று சொல்லலாம்படியிறே இரண்டுவஸ்துவுக்கும் ப்ரத்யாஸத்தி இருந்தபடி. ஸ்வரூபம் விஶதமானால், "நான்" என்னவுமாய் "அடியேன்" என்னவுமாய்க்காணும் இருப்பது. [தந்துபோகு நம்பீ] - நீ இங்கே கால்தாழாநின்றாய்: இதுக்கோரு தாத்பர்யம் அறியாதே உன்னையுபேக்ஷிக்கத் தொடங்குவர்கள்: அதுக்குமுன்னே போ. [நம்பீ] - முகப்பழக்கமும் இன்றிக்கேஇருந்தது; முதலியாருமாயிரா நின்றீர்: கடுகப்போகப் பாரும். "கண்டகாட்சி புல்லெழுந்துபோனபடி

*படி என்ன.- யஸ்யைதே இத்யாதி. "த்ரயம் ஸ்வாய நாராஜநுஹாரஸ்ஜாவஸஸ்யயா ஹாத: । யத்ரஸஸ்யிமஹஷீ யஸ்யைதே தஸ்ய தத்தநம்" இத் யுத்யோகபர்வணி த்ருதராஷ்ட்ரம் ப்ரதிவிதுர:. யஸ்யைதே இத்யாதிவாக்யத்துக்கு - இவர்கள் அவனுடையவர்கள், ஆனால் இவர்களது அவனுடையதாயிறே என்று கருத்து. மற்றையது என்றது - ஶேஷபூதனுடைமை ஶேஷியதாகை என்றபடி. அதுநான்மெய்யே இத்யாதி வாக்யத்ரயமும் - "தந்துபோகு" என்றதுக்கு அவதாரிகை. இப்பதத்திலே என்றது - "என்னுடைய" என்றபதத்திலே என்றபடி. அதெப்படி என்ன - அவன் ஸந்நிதி இத்யாதி. "என்னது" என்றால், முடிவாம்படி எங்ஙனே? என்ன; அஹங்கார மமகாரங்கள் விநாஶகரமென்று ஶாஸ்த்ரஞ்சொல்லுகையாலே என்கிறார் - த்வ்யக்ஷரஸ்து இத்யாதி "த்வ்யக்ஷரஸ்து பவேந்ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்ம ஶாஶ்வதம் । மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் ந மமேதி ச ஶாஶ்வதம்"' இதி பகவச்சாஸ்த்ரே. அஹங்கார மமகாரங்கள் விநாஶகரமென்னுமதுக்கு ஸம்வாதம் - மாமகா இத்யாதி. "தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: । மாமகா: பாண்டவாஶ்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய" இதி பகவத்கீதாஸு ப்ரதமே. இதுதான் ஸ்வாபதேஶத்தில் அன்றிக்கே அந்யாபதேஶத்திலும் விநாஶகரமென்கிறார் - இதுதான் தத்த்வ இத்யாதி. தத்த்வகதையிலே "என்னது" என்கை-உறவறுகையானால், உறவறாதப்ரகாரம் ஏதென்ன?—ஆத்மேத்யேவ இத்யாதி. அதாவது - சேதநன் ஈசுவரனை உபாசியாநிற்கச்செய்தே தன்னையே உபாசித்தது என்னலாம்படியன்றோ ஶரீரஶரீரிபாவத்தால் வந்த ப்ரத்யாஸத்தி இருக்கிறபடி; இப்படிஶரீரபூதனாய் அவன் அபிமாநத்திலே அந்தர்ப்பூதனையிருக்கை உறவறாமையாவது என்றபடி. "ஆத்மேத்யேவ து க்ருஹ்ணீயாத் ஸர்வஸ்ய தந்நிஷ்பத்தே:" இதி வாக்யகாரவசநம். ஆனாலும், அவன் அபிமாநத்திலே அந்தர்ப்பூதனாயிருக்கும் ஆகாரம்தோற்றுவது - அடியேன் என்றாலன்றோ? என்ன- ஸ்வரூபம் இத்யாதி. "போகு" என்றதுக்கு ஹாவம் - நீ இங்கே இத்யாதி. "நம்பீ" என்றத்தால் பலிதமான தாத்பர்யம் - முகப்பழக்கம் இத்யாதி. முன்பு முகப்பழக்கமில்லையோ? என்ன - கண்டகாட்சி இத்யாதி. பெரியமுதலியார் - ஆள

யிறே இவள் இங்ஙன் சொல்லுகிறது " என்று பெரியமுதலியார்வார்த்தை. என்னுடைய பந்துங்கழலும் என்றவிடம் - அவன்போகடுகைக்குச் சொன்னவார்த்தை. தந்துபோகு என்ற விடம் - அவன்விரும்பினவையொழியத் தனக்குச்செல்லாது என்னுமிடந் தோற்றுகிறது. [நம்பீ] - "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி" (ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி) என்று உமக்குப் போனவிடம்எங்கும் கொண்டாட்டத்தால் குறையில்லை, எங்களுக்கு உம்மைக் கிடையாது; இனி உம்முடைய கரஸ்பர்ஶம் உண்டாய்ப் போகட்டவை கொண்டாகிலும் எங்களுக்கு ஜீவித்துக் கிடக்கவேணும்; ஆனபின்பு அவற்றை எங்களுக்குத் தந்துபோம். "உயிரைவைத்துப்போம்" என்பாரைப் போலே. இவன் இவை கைவிட்டுப் போகமாட்டான் என்று அறிந்து, மர்மஜ்ஞை ஆகையாலே 'தந்துபோ' என்கிறாள்.

---

## இரண்டாம் பாட்டு.

---

போகு†நம்பீ! உன் தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும்
ஆகுலங்கள்செய்ய அழிதற்கேநோற்றேமேயாம்?
தோகைமாமயிலார்கள் நின்னருள்சூடுவார் செவியோசைவைத்தெழ
ஆகள்போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே.

*ஆ.—(போகுநம்பீ) - இப்படி எம்பெருமானை உத்தேஶ்ய தான் சொன்ன வார்த்தைகளாகிற அம்ருதவர்ஷத்தாலே அவன் உஜ்ஜீவித்து ப்ரதிஶயப்ரீதியுக்தனுமாய், புதுக்கணித்த திருக்கண்களையும் திருப்பவளத்தையும் உடையனுமாயிருந்த விடத்தில், இதுவெல்லாம் அவர்களாகக் கருதி இவனுக்கு வந்ததாகக்கொண்டு, 'இவ்வழகை ஆசைப்பட்டுப்பெறாதே அவஸன்னைகளாய் மாயப்பிறந்தவர்கள்காண் நாங்கள்; இவ்வழகைக்கண்டு வாழப்பிறந்தவர்கள் அல்லோம்; தோகை மாமயிலார்கள் நின்னருள் சூடுவார்; நீயும் அங்கேபோய் அவர்களோடேகலந்து பரிமாறு' என்று இவள்சொல்ல,*

---

ப்ர.—ஸ்ரீ விஷ்ணுபுராணே பஞ்சமேம்ஶே ஏகத்ரிம்ஶோऽத்யாயே, "ஏகஸ்மிந்நேவ கோவிந்த: காலே தாஸாம் மஹாமுநே । ஜக்ராஹ விதிவத் பாணீந் ப்ருதக்கேஹேஷு தர்மத: ॥ ௧௭ ॥ ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி ஶதமேகம் ததோதிகம் । தாவந்தி சக்ரே ரூபாணி பகவாந்தேவகீஸுத: ॥ ௧௮ ॥

*வந்தார். "என்னுடைய பந்தும் கழலும் தந்துபோகு" என்கிறவளுடைய ஹார்த்தபாவம்— என்னுடைய பந்தும் இத்யாதி. விவரணம் - ஷோடஶ இத்யாதி. "ஷோடஶஸ்த்ரீஸஹஸ்ராணி ஶதமேகம் ததோதிகம் । தாவந்தி சக்ரே ரூபாணி பகவாந் தேவகீஸுத:" இதி பஞ்சமேம்ஶே. "தந்துபோகு" என்றதுக்கு - ஸ்வ ஸத்தை தரிக்கைக்காகத் தந்துபோ என்கிறாளென்று கீழ் அருளிச்செய்து, அவன் போகாமைக்காகச் சொல்லுகிறாள் என்று பாவாந்தரம் - உயிரைவைத்து இத்யாதி. மன்னுடையிலங்கை - ராஜாவையுடைய லங்கை. மன் - ராஜா. சுண்டாயம் - க்ருத்ரிமமும், லீலையும், ஸ்வார்த்தப்ரவ்ருத்தியும். கழல் - கழற்சோடி. (௧)*

---

† 'நம்பி' என்றும் பாடமுண்டு.

பின்னையும் அவனெழுந்தருளாதே நின்றவாறே, 'போனால், அவர்களைச் சந்திக்கைக்கு உபாயம் அறியாமே நிற்கிறாயோ? ஆகில், நல்லதோர் உபாயமுண்டு; அது என்னென்னில்? பசுக்களைக் கழியப்போகவிட்டு அவற்றை அழைக்கிறாயாய்* ஆய்ச்சியர்க்கேஊதும் அத்தீங்குழலைப் போயிருந்து ஊது' என்று சொல்லுகிறாள்.

ஒ.—[போகுநம்பீ] - இப்பிராட்டி ''போகுநம்பீ'' என்று முதல் சொன்ன வார்த்தையைக்கேட்டு, அவனும் ''போவோம்'' என்று சிறிது கிட்டவர, ''உறவு உடையாரைப்போலே எங்களைத்தீண்டாதே கடக்கநில்லும்'' என்ன, தன்னைக்கிட்டவேண்டா என்றுஇவள்நிஷேதித்த நிஷேயவசனத்தைக்கேட்டு,கமர்பிளந்தவிடத்திலேஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே இவனுக்குத் திருக்கண்களிலும் திருப்பவளத்திலும் பிறந்த புதுக்கணிப்பைக்கண்டு அவர்கள் ஈடுபட, அத்தைக்கண்டு''ஈடுபடா நின்றுவைத்து, என்னோடு உறவில்லை என்கிறபடி எங்ஙனே?'' என்றுஅவன் அருளிச்செய்ய, ''நாங்கள் உன் அழகைக்கண்டால்ஈடுபட்டுஸம்ஶ்லேஷிக்கும்உறவைஉடையவர்களல்லோம்;உன்னழகைக் கண்டு ஈடுபட்டு ஶிதிலைகளாய்ப்போகப் பிறந்தோமித்தனை'' என்று பராங்முகிகளாய் நிற்க, எம்பெருமானும் ''நீங்கள்ஆராலாகிறீர்; இதொரு மயிர்முடியிருந்தபடியென்?'' என்ன, ''போலியைக்கண்டு ப்ரமிக்கும்படி உன்னை இப்படிப் பிச்சேற்றும் மயிர்முடியை உடையராய் உனக்கு ஶத்ருசைகளாயிருக்கும் அவர்களோடேபோய் ஸம்ஶ்லேஷி''என்ன, ''அவர்களைச் சந்திக்கவல்ல விரகுபெறுந்தனையும் இங்ஙனே யிருக்கிறோம்'' என்ன, ''நீ உனக்கு அபிமதைகளாயிருக்கிறவர்களை விஶ்லேஷித்து நோவுபட்டிராதே அவர்களோடே ஸம்ஶ்லேஷிக்கைக்கு உபாயஞ்சொல்லக்கேளாய்; 'அதென்?' என்னில், குழலை ஊதி அக்குழலோசைவழியே அவர்களையடைய மெய்க்காட்டுக்கொண்டு அவர்களோடே ஸம்ஶ்லேஷி'' என்ன, அவனும், ''பெண்களையொழிக்கைக்குக் குழலூதுகிறான்' என்பர்;அது ஈடன்று'' என்ன, ''நீ மேய்க்கிற பசுக்களைக்கடக்கவிட்டு அவற்றை அழைக்கிறாயாகப் பெண்களெல்லாம்வந்துதிரளுகைக்குநீர்வாய்ப்பான நிலங்களிலேபோய் இருந்து குழலூதி அவ்வழியாலே அவர்களையழைத்து அவர்களோடே ஸம்ஶ்லேஷி'' என்கிறாள்.

ப.—அநந்தரம், இவள், போகச்சொன்னவிடத்திலும் போகாதே இவளைப் பார்த்து மந்தஸ்மிதம் பண்ணினஅதிலே ஶிதிலசித்தையாய்; எங்களைநலியாதே, உன்னபிமதைகள் இருந்த பரிஸரத்திலேபோய் அவர்கள்வருகைக்கு ஈடாக இருந்து குழலை

நம்பீ - (எங்களையொழியக் குறைவாளன் அன்றியே) பூர்ணனை நீ, போகு - (''போ'' என்றுசொல்லப்போகாதிருக்கிறதென்? எங்கள் அருகினின்றும்)போ: உன்- இங்கேநின்று எங்களைப் பார்ப்பது முறுவலிப்பது ஆகிற உன்னுடைய, தாமரைபுரை - தாமரைபோலே ஊர்ஶநீயமான, கண்ணிணையும் - கண்களும், செம் - சிவந்த, வாய்- வாயிலே பரக்கிற, முறுவலும் - முறுவலும்(கண்டு உகக்கும்படி பாக்யம்பண்ணினவர்கள் அன்றியே), யாம் - நாங்கள் (நின்றநிலையைக்குலைத்து), ஆகுலங்கள் - அலமாப்புக்களை, செய்ய - பண்ண, அழிதற்கு - அழிந்துவிடுகைக்கு, நோற்றோமே - நோற்றே வைத்தவர்கள் அல்லோமோ, (உங்களை அழிக்கைக்கோ? நான்வந்தது, உங்கள் மயிர்முடிகண்டு உகந்தேன்அத்தனையன்றோவென்னில்;-அவர்கள் நாங்கள்அல்லோங்காண்), தோகை-தோகைவிரித்த,மா-நல்ல,மயிலார்கள் - மயில்போலேஅலைந்த குழலைஉடையவர்கள், நின்-உன்னுடைய, அருள்-அருளை, சூடுவார் - சூடுமவர்களல்லவோ, (அவர்கள் அஸந்நிஹிதைக

என்றோ? என்னில்; - அவர்கள்), ஓசை - த்வநி, செவிவைத்து - கேட்டு, எழ-எழுந்திருந்துவரும்படியாக, ("அவர்களைக்குறித்தூதுகிறான்" என்று நாட்டுக்குத்தெரியாதபடி), ஆகள்-பசுக்களை, போகவிட்டு-தூரத்திலேபோகவிட்டு, (அழைப்பாரைப்போலே), போய்-அங்கேபோய், இருந்து - இருந்து, குழல்-குழலை, ஊது-ஊது. "அதுவுமிங்கே யாகாதோ" என்றிராதேகொள்என்று கருத்து.

இ.— இரண்டாம்பாட்டில், "தந்துபோகு நம்பீ!" என்றாள்; அவனும் 'போவோம்'என்று கிட்டவரநின்றான்;ப்ரணயயாத்ரையில் வ்யவஹாரமும் ப்ரதிபத்தியும் வ்யுத்பத்திவேளையிற்போலன்றிறே இயலறியும் அவனுகையாலே, "'வார்த்தை சொல்லோம்' என்றிருந்தவள் வார்த்தைசொல்லக்கடவளாய் 'போ' என்றாளாகில், இனிச்செய்வதென்?" என்று வர நின்றான். [போகுநம்பீ] - என்கிறாள். நீர் பரபரப்பாய் முதலிகளாயிருப்புதிர்; உறவு உடையாரைப்போலே தீண்டாதேபோம், எத்தனைபேரைத் தீண்டினீரென்று அறியோம்: எங்கள்மேல் புடைவைபடாமே போம்; முற்பட "போகுநம்பீ" என்றவாறே வரநின்றான்; பின்பு "போகுநம்பீ" என்றவாறே தொட்டான். [உன் தாமரைபுரை கண்ணிணையும் செவ்வாய்முறுவலும்] - இவளுடைய அம்ருதோபமமான நிஷேதவசனம் கேட்டவாறே, ஒரு நீர்ச்சாவியிலே ஒருபாட்டம் மழைவிழுந்தாற்போலே அவயவங்கள் விக்ருதமாயிற்றின. "ஸஹோத்ராஸாஜுஷ:" என்றுகிட்ட உபேக்ஷிக்கக்கிடையாத ஸம்ஸாரத்திலே இவ்வளவு அவகாஹித்து ப்ரணயரோஷத்தாலே "போ" என்பாரைப்பெற்றால் விக்ருதனைச் சொல்லவேணுமோ? [தாமரைபுரை கண்ணிணையும்] - விகாஸம், செவ்வி, குளிர்த்தி, பரிமளம் இவற்றை உடைத்தாகை. [செவ்வாய்முறுவலும்] - ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டு அயாத்தில் பழுப்பெறித்துத் தோற்ற ஸ்மிதம்பண்ணி நின்றநிலை. [ஆகுலங்கள்செய்ய வழிதற்கே நோற்றோமேயாம்]- இவளுடையநிஷேதவசனத்தாலேஅவனுக்குப்பிறந்தவிகாரம்இவர்களுக்கு ஈடுபடுகைக்கு உறுப்பாயிற்று. அவனுக்கு ஒன்றிரண்டு அவயவமாயிற்று விக்ருதமாயிற்று: இவர்களுக்கு ஸர்வாவயவங்களும் ஶிதிலமாயிற்று; அணு அழிக்குமாபோலன்றிறே விஷ அழிக்குமது. "போகுநம்பீ" என்று உறவற்ற வார்த்தைக்கும், "அழிதற்கே நோற்றோமேயாம்" என்கிறவிதுக்கும் ஒருசேர்த்தி இல்லையீ! என்ன, [நோற்றோமேயாம்] - "உன்னழகைக்கண்டு ஈடுபட்டு ஸம்ஶ்லேஷிக்கும்உறவுஉடையவர்கள்அல்லோம் நாங்கள்: இங்ஙனே அழிந்து போம்படி பாபத்தைப்பண்ணினார் சிலர்காண்!பிரிவு கலவிக்குஉறுப்பாமவர்களன்று: ஆற்றாமையோடே முடிந்துபோவார் சிலர்காண்! "ஈதுராவவிஶ்லேஷகாவிவாவெஷ்ரஜஜக்ஷதா" என்னுமவர்களல்லோம்; "ஷக்ஷதம்ஹஷஹஜ்ஜதெ" என்று முடிந்து போமவர்கள்" என்று தாங்களழிந்தபடி நேராக அவனறியாதபடி முகத்தைத் திரியவைத்து நின்றார்கள். அதுதான் அவன் பாக்யஹலமாயிற்று; பெருக்காற்றை எதிர்செறிப்பாரைப்போலே கண்ணுங்கண்ணீரும் பேணுதவடிவும் கண்டால் இவன் ஆற்றமாட்டானே; "கிமெதுதவநெத்ராஹ்ராஷ்" என்று- கண்டார்க்கு ஆற்றவொண்ணுதவிருப்பை இவன்தானே கண்டால் பாடாற்றவல்லனோ? [தோகைமாமயிலார்கள்] - "இதொருமயிர்முடி இருக்கும்படியே!" என்றான்; நீ போலி கண்டு ப்ரமிக்கும்படி மயிர்முடி உடையார்ஆரோ? "அங்ஙனே சிலருண்டோ?" என்ன, [நின்னருள்சூடுவார்] - உன்னோடே ஸம்ஶ்லேஷித்துப் பிரிவிலே இப்படி பிச்சேறும்படி பண்ணினவர்கள். "அவர்களைப் பிரிந்து நோவுபடாதே அவர்களோடே ஸம்ஶ்லேஷி"

என்ன, ''அவர்களைக்கிட்டுமளவும் இங்ஙனே இருக்கிறேன்'' என்று திகைத்திருந்தான்; '''அவர்களோடேகிட்டும் விரகென்?' என்றிருக்கிறாயாகில், அவர்களைக்கிட்டும் விரகு சொல்லுகிறேன், கேள்'' என்ன, ''அதெது?'' என்ன-[செவியோசை வைத்தெழ குழலூது] - '''எங்களுக்கே ஒருநாள்வந்து ஊத உன்குழல் இன்னிசை போதராதே' என்று குழல்ஊதுகை என்ன, ''பெண்களோட்டைக் கலவி என்ன - பர்யாயம், அது ஈடன்று'' என்ன, அதுக்கு உபாயம் சொல்லுகிறோம்:- [ஆகள்போகவிட்டுக்குழல்ஊது]- பசுக்களைக் கைகழியவிட்டுக் குழல் ஊது. கண்டார்க்குப்பசுமறிக்கக் குழல்ஊதுகிறாயாய், அதுக்கு ஸ்வாபதேசம் - பெண்களை அழைக்கையாக ஊது. ''செவியோசை வைத்தெழுகை ஃபலமாய், குழல்ஊதுகை உபாயமாயிருந்தது; அதுதான் அபிமதவிஷயத்தைப்பற்றவன்றோ செய்வது; இங்கே இருந்து ஊதுகிறேன்'' என்று குழலைவாங்கி ஊதினான். [போயிருந்தே - குழலூது] - ஒன்றைச்சொல்ல ஒன்றைச்செய்கிறதென்? உனக்கு அபிமதைகள் திரளுகைக்கு நீர்வாய்ப்பான நிலங்களிலேபோயிருந்து ஊதாய்.

ஈடு — இரண்டாம்பாட்டு. நோக்குப் பெறுதவன் முகம் பார்க்கப் பெற்றான்; வார்த்தை கேட்கப் பெறுதவன் 'போ' என்னவும் பெற்றான்; இனி இதுக்கு மேற்பட க்ருதார்த்தனாகை இல்லையிறே. ''போ என்றால் அவ்வார்த்தையேயன்றிறே இவன் புத்தி பண்ணுவது; அதில் அகவாயில் ஓடுகிறதும் அறியும் அவனிறே''. ''இன்னம் என் கையகத்தீங்கு ஒருநாள் வருதியேல் என்சினம் தீர்வனானே'' என்று இதனை உய்ந்தபிள்ளை பாடாநிற்கச்செய்தே, காலாலே உதைப்பது கையாலே தள்ளுவதாய் அபிநயித்துக்காட்டினார்; இத்தை எம்பார் கேட்டருளி, ''அங்ஙனன்று: அதுபின்னைப் பெற்றானாகில் அவன் நெடுநாள் ப்ரார்த்தித்துக் கிடந்ததன்றோ; ஆனபின்பு, அதன்று பொருள்'' என்று முகத்தைத் திரிய வைத்துக் காட்டினார். ''நீயகலநின்று பண்ணினவை எல்லாம் உன்ஸந்நிதியிலே உன்னைப் பண்ணுவேன் என்கிறாள்'' என்று அருளிச் செய்தார். எம்பார் தாம் பாஹ்யவிஷயங்களில் ருசி இல்லாமையாலே பதார்த்தஜ்ஞானம் இன்றிக்கே இருப்பர்: இப்படி இருக்கையாலே '''ஸ்த்ரீகளுக்குஅஸாதாரணமான சிஹ்நங்களெங்ஙனேயிருக்கும்படி?' என்றுசிங்கப்பிரானைக்

---

இரண்டாம்பாட்டு - போதுநம்பீ இத்யாதி. இவர்களாலே திரஸ்க்ருதனாயிருக்க, ''தாமரை புரைகண்ணிணையும் செவ்வாய்முறுவலும்'' என்று ப்ரீதியால்வந்த நேத்ரவிகாஸமும் மந்தஸ்மிதமும் உண்டாகக் கூடுமோ? என்ன - நோக்குப்பெறுதவன் இத்யாதி. ஆனாலும் ''போகு'' என்று தள்ளாநிற்க, க்ருதார்த்ததைகூடுமோ? என்ன - போஎன்றால் இத்யாதி - திரஸ்காரமே க்ருதார்த்ததைக்கு ஹேது என்னுமதுக்கு ஸம்வாதம் - இன்னமென்கையகத்து இத்யாதி. அன்றிக்கே, நோக்குப் பெறுவிடில் அக்ருதார்த்தனாய் இருக்குமென்னுமதுக்கு ஸம்வாதமாதல். இன்னமென்கையகத்து இத்யாதிக்கு - நீ நியத ஸ்வபாவனல்லாமையாலே என்கையிலேயும் ஒருநாளகப்படக் கூடுமிறே. ஆனபின்பு இன்னமென்கையிலே இங்கொருநாள் வந்தகப்பட்டாயாகில் என் கோபம் தீருவன் நான் என்று ஸப்தார்த்தம். பெருமாள்திருமொழி, ஆறாந்திருமொழி, எட்டாம்பாட்டு, ''என்னைவருக'' இத்யாதி. 'அதுபின்னைப்பெற்றானாகில்' என்றவிடத்திலே - ''[illegible]'' என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். கீழ்வாக்யத்துக்கு பாவம் - நீஅகலநின்று இத்யாதி. எம்பார்க்கு இவ்வர்த்தம் அறியக்கூடாதென்கைக்காக அவருடைய இதர விஷயவைராக்யத்தை அருளிச்செய்கிறார் - எம்பார்தாம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. இப்படி விரக்தராயிருக்கிறவர், ஶ்ருங்காரவிதக்தரிலுங்காட்டில் இத்திருவாய்மொழியில் ப்ரௌடராய் அரு

கேட்டருளினுர்'' என்று ப்ரஸித்தமாயிருக்கும்; இப்படி இருக்கிறவர்தாம் * மின்னிடை மடவார் அருளிச்செய்யப்புக்கால், ''இந்த ஸந்யாஸி பிரட்டுப்பாடத்தோடங்கினுர்'' என்பராம்பிள்ளையுறங்காவில்லிதாசர். இவருடைய பகவத்விஷயத்தில்அவகாஹநம்இருக்கும்படி! ஒரு க்ஷேத்ரவிஷயத்திலேநாலுநாள் வாசனை பண்ணினுர்கள் போரவிதக்தராய் இராநின்றுர்கள், அவ்வளவு அல்லவிறே ஸமஸ்தகல்யாணகுணுத்மகனேடே நெடுநாள் வாசனை பண்ணினுர்க்கு இருக்கும்படி. எம்பார் ''[illegible]

[போகுநம்பீ] - '' போகுநம்பீ '' என்று முன்பே சொல்லச்செய்தே, திரியவும் சொல்லும்போது ஒன்று இரண்டடி வரவிட்டுக் கிட்ட நின்றுகவேணுமிறே. வாரீர்! எத்தனைபேரைத் தீண்டிவந்தீரென்று தெரியாது; புடைவைபடாமே கடக்கநில்லும் என்றுள். ''போ'' என்ன வரநிற்கக்கடவன், ''தீண்டாதேகோள்ளும்'' என்றால் என்படுமோ? [நம்பீ] - எளியார் செய்வதை நீர் செய்யக்கடவீரோ? நீர் நிரபேக்ஷரன்றே? [நம்பீ] - எங்கள்பக்கலில் இப்படி கால்தாழ்க்க நீரேதேனும் குறைவாளரோ ? நாங்கள் வேண்டியிருந்ததோ உமக்கு? ''உயிரினுற் குறைவிலம்'' என்று * ஏருளுமிறையோனிலே, தம்மை அழிக்கப்பார்த்தார்; அது அவனுண்டாகையாலே அழிந்ததில்லை; * மாசறுசோதியிலே - அதுக்கடியான அவன்தன்னை அழிக்கப்பார்த்தார்; இங்கு - அவன்வரக்கோள்ள, ''போ'' என்னுநின்றுர்; இதுக்கடி என்னேன்று அறிகிறிலோம். இவர்கள் இப்படி [நம்பீ] என்று சொல்லி இருக்கையாவது - இக்கோஷ்டிக்கு அநர்ஹனுகையிறே' தாழ்ச்சியே மேன்மையாம் இடத்தில் முதன்மை கோண்டாடுகை போராதே. [உன்தாமரைபுரைகண்ணிணையும் சேவ்வாய் முறுவலும்] - காணப்பெறுதே விடாய்த்து உருவின கண்களும், கண்டு சேவ்விபெற்றுக் குளிர்ந்தன; அகவாயில் ஹர்ஷத்துக்குப் போக்காக ஸ்மிதம் பண்ணவும் பெற்றுன். இவர்

---

ளிச்செய்யும் வார்த்தைகளுக்கு ஹேது அருளிச்செய்கைக்கு உபோத்காதம் - **இப்படியிருக்கிறவர்தாம்** இத்யாதி. இதுக்கு ஹேதுவருளிச்செய்கிறுர் - **இவருடைய** இத்யாதி. அவகாஹித்தால் தெரியுமோ ? என்ன - ஒருக்ஷேத்ர இத்யாதி. ஆழ்வார் ப்ரணயரோஷத்தாலே ஊடி ''போகு'' என்கிற இத்தை அநுஸந்தித்த எம்பாருடைய ஈடுபாடு - **எம்பார் வாவேன்பாரையும்** இத்யாதி.

முதல் ''போகுநம்பீ'' என்றவாறே வந்தான்: அவனைமீளவும் ''போகுநம்பீ'' என்றுசொல்லுகிறதுக்கு ஸாவம் - **வாரீர்** இத்யாதி. **என்படுமோவென்றது** - தீண்டிவிடுமென்றபடி. '' நம்பீ '' என்றதுக்கு - பூர்ணரென்றர்த்தம் அருளிச்செய்கிறுர் - **எளியார்** இத்யாதிவாக்யத்வயத்தாலே ; எளியார் - சப்பரர். * மின்னிடைமடவாரால் பூர்ணரென்றர்த்தாந்தரமாதல், கீழ்வாக்யவிவரணமாதல் - **எங்கள்பக்கலில்** இத்யாதி. இவர் ப்ராவண்யாதிஶயம் என்னென்று வ்யாக்யாதாவின் ஈடுபாடு - **உயிரினுல்** இத்யாதி. இதுக்கடி என்னென்றறிகிறிலோம் என்றது - நெடுநாள்பட விஶ்லேஷிக்கையாலே ப்ரணயரோஷம் தலையண்டையிட்டுச் சொல்லுகிற வார்த்தையன்றே? என்றபடி. ''கடியன் கொடியன்'' என்றுற்போலே சொல்லாதே, ''நம்பீ'' என்கிற இது - கொண்டாட்டமாயிருக்க, உறவறச்சொல்லுகிற வார்த்தையோ? என்ன - **இவர்கள்இப்படி** இத்யாதி. இதுக்கு உபபத்தி - **தாழ்ச்சியே** இத்யாதி. விஶ்லேஷவேளையிலே இவன் கண் விகஸிதமாகைக்கு ஹேத்வந்தரம் - **காணப்பெறுதே** இத்யாதி. முந்தினஹேது - அவர்களுடைய நோக்குப் பெருமையாலே உருவிக்கிடந்தவன் அவர்கள் தன் முகம்பார்க்கப் பெறுகையாலே ஸந்தோஷித்தான் என்று; இத்தை அருளிச்செய்தார் - அவதாரிகையிலே. இவர்கள் ப்ரஸந்நராகாதேயிருக்க, ஹர்ஷம் பிறக்கும்படி என் ? என்ன - **இவர்**

கள் நிஷேதவசனமாகிற அம்ருதபாநத்தாலே அவனுக்குப்பிறந்த வேறுபாடு இருக்கிறபடி. "வா" என்பாரையுங்கூடக் கிடையாத ஸம்ஸாரத்திலே "போ"என்பாரைக்கிடையாதிறே. ஒருப்ரயோஜநத்துக்காகவும் தன்னைவேண்டுவார் இன்றிக்கே இருக்கிறவிடத்தே, தன்னையே ப்ரயோஜநமாகப்பற்றி இப்படிப் படுவாரைக் கிடையாதிறே. [ஆகுலங்கள்செய்ய] - ஆகுலம்-பூசலும், வருத்தமும், து:கமும். ஹேது இரண்டாயிருக்கச்செய்தே, ஸர்வகரணங்களும் அழியாநின்றது. அவனுக்கு ஒன்றிரண்டாயிற்று விக்ருதமாயிற்று; இவர்களுக்கு ஸர்வாவயவங்களும்விக்ருதமாயிற்று. அணுஅழிக்குமாபோலன்றிறேவிஹாஅழிப்பது. "வாரீகோள்! உங்களுக்கென்னேடு ஒன்றில்லை என்னுநின்றீகோள்: ஹாவபந்தம் உடையாரைப்போலே வார்த்தை சொல்லாநின்றீகோள்: வ்யாஹதமாயிருந்ததீ! 'போகுநம்பீ' என்னுநின்றீகோள்: 'ஆதலங்கள்செய்ய' என்னுநின்றீகோள்: இதுக்கடியேன்?" என்றான். "வாராய்!நாங்கள்தாம் ஹாவபந்தமுண்டாய்ச் செய்கிறோம் என்றிருக்கிறாயோ?சந்த்ரதர்ஶநத்தில் சந்த்ரகாந்தம்உருகுகிறதுஎன்னஹாவபந்தமுண்டாய்? "அவஶ்யமநுபோக்தவ்யம்" (அவஶ்யமநுபோக்தவ்யம்) என்கிற விதியைத்தப்பவோண்ணுமோ?" [அழிதற்கேநோற்றோமேயாம்]-எங்களுக்கிது ப்ரக்ருதிகாண். இளைய பெருமாள் காடேறப் போகாத அன்றன்றோ எங்களால் அழியா திருக்கலாவது? "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய" * (ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய) இறே. நோன்பாகிறது - பூர்வஜந்மத்தில் உள்ளதிறே. இவர்கள் இப்படி சொன்னவாறே, "அவ்வழிவு ஸம்ஶ்லேஷார்த்தமிறே" என்று பார்த்து, அவன், "நம் தர்ஶநத்திலே இத்தனை வேறுபாடு உண்டான பின்பு மேலுள்ளதெல்லாம் செய்துகொள்ளீகோளோ!" என்றான்; அதுவோ உன்நினைவு! நாங்கள் அவர்களல்லோம் காண்! நாங்கள் இங்ஙனே அழிந்தேபோக நோற்றோம் காண்!

---

ப்ர.—அயோத்யாகாண்டே[௪௦] "ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய ஸ்வநுரக்தஸ்ஸுஹ்ருஜ்ஜநே। ராமே ப்ரமாதம் மாகார்ஷீ: புத்ர ப்ராதரி கச்சதி। ரு॥"

---

கள்நிஷேத இத்யாதி. வேறுபாடு - விக்ருதி. விம்ஹாவலோகநந்யாயேந "போகுநம்பீ" என்றதைக்கடாக்ஷித்து ஹாவம் - வாவென்பாரையும் இத்யாதி. அதுவா, நிஷேதவசநத்தாலே விகாரம் வரக்கூடுமோ? என்ன - வாவென்பாரையும் இத்யாதி என்னுதல். விவரணம் - ஒருப்ரயோஜநத்துக்கு இத்யாதி. "ஆதலங்கள்" என்கிற பஹுவசநார்த்தம் - ஹேதுவிரண்டாய்இத்யாதி. ஹேது இரண்டு என்றது - கண்ணும் செவ்வாயும். ஆதலம் - விகாரம். விவரணம் - அவனுக்கு இத்யாதி. இதுக்குஹேதுவேதென்ன - அணு இத்யாதி. கீழெல்லாம்கடாக்ஷித்து மேலுக்கு ஸங்கதி - வாரிகோள் இத்யாதி. கீழுக்தத்தை விசதீகரிக்கிறார் - போகுநம்பீ இத்யாதி. "அழிதற்கே" என்றதிலே நோக்காக ப்ரத்யுத்தரம் - வாராய் இத்யாதி. பாவபந்தமின்றிக்கே ஒழிய உருகக் கூடுமோவென்ன, கூடுமென்னுமதுக்கு த்ருஷ்டாந்தம் - சந்த்ரதர்ஶநத்தில் இத்யாதி. ஆனால் இது வருவானென்? என்ன - அவஶ்யம் இத்யாதி. "அவஶ்யமநுபோக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம்। நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி" "அழிதற்கேநோற்றோமே" என்கிற அவதாரணத்துக்கு அர்த்தம் - எங்களுக்கிது ப்ரக்ருதிகாண் என்று. இதுக்கு த்ருஷ்டாந்தம் - இளையபெருமாள் இத்யாதி. அவர் காடேறப்போனதுக்கு ப்ரமாணம் - ஸ்ருஷ்டஸ்த்வம் இத்யாதி. "அவஶ்யமநுபோக்தவ்யம்" என்கிறவாக்யவிவரணம் - நோன்பாகிறது இத்யாதி. "அழிதற்கே" என்கிற அவதாரணத்திலே நோக்காக சங்கித்து பரிஹரிக்கிறார் - இவர்கள்இப்படி இத்யாதி. மேலுள்ளதெல்லாம் இத்யாதிக்கு கருத்து - காண ஸைதில்ய ஜநக கர்மம் தானே

[யாம்] - உன்னைப்பிரிந்தால் கலக்கைக்கு நோற்றார் வேறேசிலர் காணேன்கிறாள். நெடும் போது இவர்கள்பேச்சுக்கேட்கையால் உண்டான ஹர்ஷந்தோற்றப் பார்த்துக்கோடு நின்றான்: "நம் ஓர்ஶநம் இவனுக்குஆஶ்வாஸஹேதுவாய் இருந்தது" என்று, முகத்தைமாறிப் பின்னோக்கி இருந்தாள்; அவ்வளவில் அவன் நெஞ்சிலே மயிர்பாடு உண்டாயிற்று. [தோகை மாமயிலார்கள்]- "நம்வைவர்ண்யமும் கண்ணீரும் இவன் காண்பானல்லன்: தைவயோகத்தால் காணுமவற்றை நம்மால் செய்யலாவதில்லையிறே" என்றுத் திரிய இருந்தாள்; அதுதானே இவனுக்குக் கார்யமாயிற்று. † (பெருக்காற்றை எதிர்சேறிப்பாரைப் போலே, கண்ணுங்கண்ணீரும், பேணுதவடிவுங்கண்டால் அவன் ஆற்றமாட்டானே.) முறுவலுக்கும் கண்ணுக்கும் இலக்காய் அழிந்து போகாதே, திரியவிருந்ததும் நின்றுஅநுஹவிக்கைக்குஉடலாயிற்று. "நங்கார்யம் தலையாகப்போயிற்று" என்று இருக்கிறானிறே அவன். "**ஊரூஹ்யாசூரம்ஸாத்யபாஹூஹ்யாஞ்சபயோதரௌ**"(ஊருப்யாமுதரம்சாத்யபாஹூப்யாஞ்சபயோதரௌ) என்றுகோண்டு 'அவனுடைமை ஆசுரப்ரக்ருதிகள் காணவோண்ணுது' என்று மறைக்கக் கடவ அவள், "இவன்தான்காணவோண்ணுது" என்று மறைக்கும்படி காணும், ப்ரணயகோபம் தலைமண்டை இட்டபடி. [தோகைமாமயிலார்கள்] - "**நீலநாகாபயாவேண்யா**" (நீலநாகாபயாவேண்யா) என்று, பேணுத குழலிருக்கிற

---

*ப்ர.—[தோகைமாமயிலார்கள்]—ஸுந்தரகாண்டே [கக]* "தடேதாஶ்ய ஹெஷ வவெவெஷ ஹீரராவணம் ராக்ஷஸாதிபம்। ஶ்ராவெவதவராரோஹாஷ்ஹாதெக்ஷடை யஶா॥உ॥ ஊரூஹ்யாசூரம்ஸாத்யபாஹூஹ்யாஞ்சபயோதரௌ உபவிஷ்டா விஶா லாக்ஷீரூதந்தீவரவர்ணிநீ ॥ ந ॥ தஶஶீர்ஷஸ்வெவெஷ ஹீம் ரக்ஷிதாம் ராக்ஷ ஸீகணை:। தஶநீநாம் தூ:வாதநாம் நாவம்ஸஸாகிவாணவெ ॥ ச ॥

---

*ஸம்ஶ்லேஷத்தை உண்டாக்சாதோ? என்ற. "யாம்" என்றதுக்கு வ்யாவர்த்யம் - உன்னைப்பிரிந் தால் இத்யாதி. முகம்மாற வைத்ததுக்கு இரண்டு ஹேது - "தாமரைபுரைகண்ணிணையும் செவ் வாய்முறுவலும்" என்றத்தைக்கடாக்ஷித்து மூந்தினது - நம்தர்ஶநம் இத்யாதி. மயிர்பாடு - மயிரின் வைலக்ஷண்யம். "ஆகுலங்கள்செய்யவழிதற்கே நோற்றோமேயாம்" என்றத்தைக் கடாக்ஷித்து, பின் னோக்கியிருந்ததுக்கு த்விதீயஹேது - நம் வைவர்ண்யமும் இத்யாதி. பின்னோக்கியிருந்தாலும் ஹோச்யமான மயிர்முடி காண்பனே என்ன - தைவயோகத்தால் இத்யாதி. திரியவிருந் தாள் - திருப்பி யிருந்தாள். கார்யமானபடியைக் காட்டுகிறார் - முறுவலுக்கும் இத்யாதி. அதா வது - இவனுடைய முறுவலுக்கும் கண்ணுக்கும் இலக்காய் இவன் அழியாதே தரித்துநின்று மயிர்முடியை அநுஹவிக்கைக்கு உடலாயிற்று என்னுதல். "ஆகுலங்கள்" என்ற விக்ருதியிலே இவர்களுக்கும் கண்ணீரும் முறுவலும் உண்டென்று ஸித்தம். ரஸோக்தி - நங்கார்யம் இத்யாதி. இவர்கள் அவனுக்கு ஹோச்யமான அவயவங்களை மறைக்கலாமோ? என்ன - ஊரூஹ்யாஂ இத்யாதி. அன்றிக்கே, வ்யாக்யாதாவின் ஈடுபாடாதல். ஊரூஹ்யாசூரஞ்சாத்யபாஹூஹ்யாஞ்சப யோதரௌ। உபவிஷ்டாவிஶாலாக்ஷீரூதந்தீவரவர்ணிநீ" இதி ஸுந்தரகாண்டே. "நீலநாகாபயாவேண்யா ஜகநம்கதயைகயா। நீலயாநீரதாபாயேவநராஜ்யா உஹீஜிவ" இதி ஸுந்தரகாண்டே. 'ஆனார் ஆகிடுக'என்றது - ஸ்நேஹிகளாகவுமாம், தத் ரஹிதராக வுமாமென்னுதல்; முன்னோக்கியிருந்தாலுமாம், பின்னோக்கியிருந்தாலுமாம், நமக்கு அதுகொண்டு*

படியைக் கண்டான்; "நீங்கள்முன்னமானாராகிடுக: இதொருமயிர்முடி இருந்தபடி என் தான்!" என்றான். இவள்தான் ஓதிநல்லளாயிருக்குமே; இவன் கூழை ஆகையாலே கொண்டாடுமே. *குழல் கூழை ஓதி இறே. †(குழலென்றும் கூழையென்றும், ஓதியென்றும் மயிர்முடி இறே.) எங்கள் மயிர்முடியைக்கண்டு தந்தாம் மயிர்முடிஎன்று ப்ரமிக்கும்படிபண்ணுவதே அவர்கள் சிலர்! அபிமதவிஷயத்தைப் பிரிந்தால் கண்டதெல்லாம் அதுவாய்த்தோற்றுமிறே என்றார்கள். தோகைவிரித்த நல்லமயில்போலே அலைந்தகுழலை உடையவர்கள். "அங்ஙனே சிலருண்டோ?" என்றான். [நின்னருள்சூடுவார்] - உன்னோடு ஸம்ஶ்லேஷித்துப் பிரிவிலே இப்படிப் பிச்சேறும்படிப் பண்ணினவர்கள். அவர்களைப்பிரிந்து நோவுபடாதே அவர்களோடே ஸம்ஶ்லேஷி. "ஆனாலதுக்கேன்? அவர்களைப்பெறுகைக்கு ஒருவிரகு பெறுந்தனையும் நான் இங்ஙனே சற்றுப்போது இருந்துபோகிறேன்" என்றான்; உனக்கு இங்ஙன் விரகற்றுப் போகவேண்டுமோ? நீ கைகண்டத்தை ப்ரயோகி; "அதேது?" என்ன [செவியோசைவைத்தெழக் குழலூது] - "எங்களுக்கே ஒருநாள் வந்தூத உன்குழலின்னிசைபோதராதே" என்று இருக்குமவர்கள்; நீகுழலூதினால் அதுசென்று செவிப்படும்: அநந்தரத்தே வருவர்கள் காண். ஸர்ப்பயாகத்தில் ஸர்ப்பங்கள் வந்துவிழுமாபோலே, நீ குழலூதவே பெண்களடங்கலும் உன்காற்கீழேவந்துவிழுங்காண்! "குழலோசைகேட்பதுஎப்போது?" என்று செவிகொடுத்துக்காண் அவர்களிருப்பது; உன்னைப்பிரிந்தார் ஸர்வகரணங்களும் உன்மேலே வைத்திருப்பார்கள்காண். "தூவலம்புரியுடையதிருமால் தூயவாயில் குழலோசைவழியே கோவலர்சிறுமியர் இளங்கோங்கை குதுகலிப்ப உடலுள்அவிழ்ந்தெங்கும் காவலும்கடந்து

---

கார்யமில்லை என்னுதல். அவனிப்படி கொண்டாடுகைக்கு அடி - இவள் குழலில் வைலக்ஷண்யம் என்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - இவள்தான் இத்யாதி. ஓதிஎன்று - குழலும், அத்யயநமும். இப்படி விலக்ஷணையான இவளுடைய வைலக்ஷண்யத்தை நன்றாக அறியும் அவனாகையாலே கொண்டாடினான் என்னுமத்தை ரஸோக்தியாகக் காட்டுகிறார் - இவன்கூழை இத்யாதி. கூழைஎன்று - மயிரில் வைலக்ஷண்யம் அறிந்தவனும், சபலனும். இச்ஶப்தத்வயமும் - கேஶவாசி என்கிறதுக்கு நிகண்டு - 'குழல்கூழையோதியிறே' என்று. அவர்கள் வைலக்ஷண்யத்தால் அன்றிக்கே, இவன் ப்ராவண்யத்தாலும் ப்ரமிக்கிறான் என்று ஹேத்வந்தரம் - அபிமத இத்யாதி. தோகையுடைத்தாய் ஶ்லாக்யமான மயில்போலேஇருக்கிற அலகபாரத்தை உடையவர்களென்று ஶப்தார்த்தம். தோகை - பிஞ்சம். கீழ்வாக்யத்துக்கு பலிதம் - அவர்களைப்பிரிந்து இத்யாதி. கைகண்டது - அநுபூதமானது. கையிலேயிருந்த குழலென்று சாடு. நான்குழலூதினால், அந்யபரைகளானவர்களுக்கு இது செவிப்படுமோ? என்ன - எங்களுக்கே இத்யாதி. இதுக்கர்த்தம் - நீ ஸர்வஸாதாரணனானபின்பு உன்குழலும் ஸர்வஸாதாரணமாயிருக்க, எங்களுக்கே ஒரோவிடங்களிலே ஒருநாள் நாங்கள் கேட்கவந்தூதவேணுமென்றால் நீ யூதிலும் இசை புறப்படாதபடி ஆயிற்று குழலின் ஸ்வபாவம் என்று. விவரணம் - ஸர்ப்பயாகத்தில் இத்யாதி. ஸர்ப்பயாகம்பண்ணினவன் - ஜநமேஜயன். "எங்களுக்கேயொருநாள்" இத்யாதிவாக்ய விவரணம் - குழலோசைகேட்பது இத்யாதி. அதுக்கடி - அவர்களுக்கு உன்விஷயத்தில் உண்டான ப்ராவண்யம் என்கிறார்கள் - உன்னைப்பிரிந்தார் இத்யாதி. குழலோசையிலே ஈடுபட்டு அவர்கள் வருவர் என்றதுக்கு ப்ரமாணம் - தூவலம்புரி இத்யாதி. 'தூவலம்புரிஉடைய திருமால்'-நினைவறிந்து கார்யம்செய்யவல்ல சுத்தியையுடைத்தான வலம்புரியையுடைய ஶ்ரிய:பதியானவனுடைய. 'தூயவாயில்குழலோசைவழியே' - தன் உக்தி விஶேஷங்களாலே அநுகூலரை வாழப்பண்ணும் சுத்தியையுடைய திருப்பவளத்திலே வைத்தூதுகிற திருக்குழலோசைவழியே. 'கோவலர்சிறுமியர்'-கோரக்ஷணத்தில் ஸமர்த்தரானவர்களுடைய சிறுபெண்கள். 'இளங்கொங்கை குதுகுலிப்ப'-பரிணதமான முலைகளானவை தங்களைப் பிற்பாடராக்கி "நாங்கள் முன்னே போகிறோம்" என்று கௌதூஹலம்பண்ண. 'உடலுளவிழ்ந்து'-ஶரீரமும் மநஸ்ஸும் கட்டுக்குலைந்து.

கயிறுமாலையாகிவந்து கவிழ்ந்துநின்றனர்'' என்று நீ குழலூதப்புக்கால் நிற்பாருண்டோ? உன் காற்கீழேவந்து விழுவர்காண்! அத்தைச்செய் என்றாள். ''அதேனக்கோரு விரகன்று; 'கோங்கு நறுங்குழலார்களோடு குழைந்து குழல்இனிதூதிவந்தாய்' என்று ஒத்த தரத்தில் பெண்களுந்தானும் கலக்கைக்காக அவர்களை அழைத்துக் குழலூதாநின்றான் என்பர்கள்; நான் குழலூதுகை பெண்களையழைக்கையென்று ப்ரசித்தம்; அதேனக்கீடன்று'' என்றான்; ஆகில் உனக்கோரு நல்விரதுசொல்லக்கேள்: [ஆகள்போகவிட்டு] - பசுக்களைக்கைகழிய விடுவது, அநந்தரத்தே குழலையூதுவதா? ''அறியாதார் பசுக்களை மறிக்கவூதினனென்றிருப்பர்கள்; அதறிந்துபோரும் பெண்கள் உன்பக்கலிலே வந்துகிட்டுவர்கள். இதுதான் உனக்கு ஜாத்யுசிதவ்ருத்தியுமிறே. * தீங்குழலூதிற்றும் நிரைமேய்த்ததுமிறே. ஆனபின்பு அத்தைச்செய்'' என்றாள். ''அநுஷ்ட்டேயமான உபாயஸ்வரூபம் இருக்கும்படி அறிந்தோம்: அநுஷ்ட்டாநப்ரகாரத்துக்கூடான உபதேசம்பெற்றோம்; இனி உபேயாம்சத்தில் கைப்படாதது இல்லை; இனி நமக்கோருகுறையில்லை'' என்றுபார்த்து, அவ்விடந்தன்னிலே இருந்து ஊதப்புக்கான். இனித்தான் வித்யதிக்ரமம் பண்ணும்அவனன்றே; ''தோகைமாமயிலார்கள் - செவியோசைவைத்தெழ'' என்றிறே இவர்கள்சொல்லிற்று; ''இன்னவிடத்தே'' என்றுசொல்லிற்றிலர்களே! இங்கே இருந்துஊதத்தொடங்கினான். ''அதுவோ பார்த்தபடி; நீ துடியாமைக்குஒருவிரதுசொன்னோமாகில் அத்தை இங்கே கோள்ளப் பார்த்தாயோ?''[குழலூதுபோயிருந்தே] - உனக்குப் பெண்கள் படும் வாய்ப்புள்ள இடங்களிலேபோயிருந்துஊதப் பாராய்! [தோகைமாமயிலார்கள்]-இவன் ஓதியுணர்ந்தவனுகையாலே கோண்டாடத் தொடங்கினான்; ''இவன் ஓதியுணராமலிறே நங்குழலை இப்படிக் கோண்டாடுகிறது'' என்று, ''இது ப்ராமகவாக்யம்'' என்று அவர்கள் அந்யதாகரிக்கிறார்கள். தலையானபேச்சையிறே இவர்கள் அந்யதாகரிக்கிறது. [செவியோசைவைத்தெழ] - குழலோசையைச் செவியிலே வைத்துக்கோண்டேழ. [ஆகள் போகவிட்டுக் குழலூது] -

---

எங்கும்காவலும்கடந்து-எங்குமுண்டான காவல்களை யெல்லாம் கடந்து. கயிறுமாலையாகி வந்து - கயிற்றிலே ஒழுங்குபடச் சேர்த்த மாலைகள்போலே நிரைநிரையாகவந்து. கவிழ்ந்துநின்றனர் - இவனைக் கண்டவாறே லஜ்ஜித்துக் கவிழ்தலையிட்டுநின்றார்களென்கை. பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம் பத்து, ஆறாந்திருமொழி, முதற்பாட்டு, ''நாவலம்'' இத்யாதி. ப்ரச்நோப ஸம்ஹாரம்-நீர் ஓழுதாத இத்யாதி. ''ஆகள்போகவிட்டு'' என்றதுக்கு அவதாரிகை - அதேனக்கு இத்யாதி. ''குழல் இனிதூதி - கொங்குநறுங்குழலார்களோடு குழைந்து - வந்தாய்'' என்றந்வயம். இனிதாகக்குழலூதி, பரிமளத்தையும் அழகையுமுடைய குழலையுடையவர்களோடே ஒருநீராகக் கலந்துவந்தாய் இத்யர்த்தஃ. கொங்கு - பரிமளம். நறு - அழகு. பெருமாள்திருமொழி, ஆறாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு, ''மங்கலநல்'' இத்யாதி. இதுக்குஹாவம் - ஒத்ததரத்தில் இத்யாதி. இதுக்காகப் பசுக்களை மேய்த்துக் கொண்டு திரியவோ? என்ன - இதுதானுனக்கு இத்யாதி. ஜாத்யுசிதவ்ருத்தியென்னுமதுக்குப் ரமாணம் - தீங்குழல் இத்யாதி. 'அநுஷ்ட்டேயமான'என்றுதொடங்கி, 'இங்கே கொள்ளப் பார்த்தாயோ' என்னுமளவும் - ''போயிருந்து'' என்றதுக்கு அவதாரிகை. உபாயஸ்வரூபம் - குழலூதுகை. அநுஷ்ட்டானப்ரகாரம் - ஆகள்போகவிடுகை. அநுஷ்ட்டாநம் - உபாயத்தைச்செய்கை. இவர்கள்சொன்ன மாத்ரத்திலே ஊதவேணுமோ என்ன - இனித்தான் வித்யதிக்ரமம் இத்யாதி. வாய்ப்பு - விவித்தி. புநஃச, ஒரு ஸ்ரீவைஷ்ணவர் எழுந்தருள அவருக்காகவாதல், ரஸோக்திக்காகவாதல் பதோபாதாநம் - தோகைமாமயிலார்கள் இத்யாதி. ஓதியுணர்ந்தவன் - மயிரில்வைலக்ஷண்யம் அறிந்தவன், அபூர்வ ஜ்ஞாநவான் என்றும்; ஓதியுணராமல் - எங்கள்குழலென்று அறியாமலென்றும், அத்யயநம்பண்ணி அறியாமலென்றும் அர்த்தத்வயம். ப்ராமகவாக்யம் என்றது - ப்ராந்தவாக்யம் என்றபடி. தலையான என்றது - சாடு; ஸ்லாக்யமான என்றும், தலைவிஷயமான என்றும். குழலூதினால், பசுக்கள் மேய்கை

பசுக்களைப்போகவிட்டுக்குழலூது. ஊதவே, உன்னினைவும் முடிந்து பசுக்களின் வயிறும் நிறையும். "செவியோசை வைத்தெழுகை ஒலமாய், குழலூதுகை உபாயமா யிருந்தது; அதுதான் அபிமதவிஷயத்தைப்பற்றியன்றோ செய்வது ; இங்கே இருந்துஊதுகிறேன்" என்று குழலைவாங்கி ஊதினான். [போயிருந்தே - குழலூது] - ஒன்றைச் சொல்ல, ஒன்றைச்செய்யாதே; உனக்கபிமதைகள் திரளுகைக்கு நீர்வாய்ப்புள்ள நிலங்களிலே போயிருந்துஊதாய். (உ)

## மூன்றாம் பாட்டு.

**போயிருந்துநின்புள்ளுவம் அறியாதவர்க்குஉரைநம்பீ! நின்செய்ய**
**வாயிருங்கனியுங்கண்களும் விபரீதம்இந்நாள்**
**வேயிருந்தடந்தோளினார் இத்திருவருள்பெறுவார்யவர்கொல்?**
**மாயிருங்கடலைக்கடைந்த பெருமானாலே.**

ஆ.—(போயிருந்து.)—இப்படிஇவன், மேன்மேலன இவளுடைய அம்ருதோபமமான வார்த்தைகளைக் கேட்டதினாலே வந்த நிரவத்யகப்ரீதியாலே அத்யத்புத நிரவத்யக ஸௌந்தர்யமயமான திருப்பவளத்தையும் திருக்கண்களையுமுடையனாய்க் கொண்டு விநீதனாய் அருளிச்செய்ய;

இவற்றையெல்லாம் உன்னுடைய க்ருத்ரிமம் அறியாதார்க்குப் போயிருந்து சொல்லென்று அவனை உபாலம்பித்துவைத்து ; உன்னுடைய திருக்கண்களினுடையவும் திருப்பவளத்தினுடையவும் அழகுஇருந்தபடியென்? கண்டுங்கேட்டும் அறியாததொருபடியான இவ்வழகு, திருப்பாற்கடலிலே அம்ருத மதந ஸமயத்திலே அவதீர்ணையாய் அம்ருத ஸீகராலங்க்ருதையாய் ஸௌந்தர்ய ஸௌகந்த்ய ஸௌகுமார்ய லாவண்ய யௌவநாத்யபரிமிதோதார குணபரிபூர்ணையாய் ஸர்வ திவ்யபூஷண பூஷிதையாய் ஸர்வேஸ்வரேஸ்வரியான பெரியபிராட்டியோடு அன்றுகலந்த கலவியாலும் பிறந்ததில்லை; இப்படி பெரிய பிராட்டியிற்காட்டிலும் உனக்கபிமதைகளாய் உன்னை புஜிக்கப்பிறந்தவர்க ளாரோ? என்கிறாள்.

ஒ.—[போயிருந்து] - "'குழலூது போய்' என்று என்னைச் சொல்லுவானென்? நான் ஜாத்யுசிதமான வ்ருத்தியாகையாலே குழல் ஊதுகிறேனித்தனைபோக்கி, வேறு சில்லரை அழைக்கைக்காகவோ குழல் ஊதுவது? நான் உன்னையல்லது அறிவேனோ?" என்று அருளிச்செய்ய; "உன்னுடையபொய் அறியும் எங்கள்பக்கல் விலை செல்லாது. உன்பொய்யில் புதியதுஉண்டறியாத அபூர்வைகள் கோஷ்டியிலேபோய் இருந்து சொல்லு" என்று பிராட்டி உபாலம்பிக்க, தன்னைக்குறித்து இவள் மேன்மேலனசொல்லுகிற அம்ருதோபமமான வார்த்தைகளைக் கேட்டதினாலே பிறந்த நிரவத்யக

தவிர்ந்து வருமிறே; வந்தால் அவற்றுக்குப் பட்டினி யாகாதோ என்ன-ஊதவே உன் நினைவும் இத்யாதி. உன்னினைவு முடிந்தென்றது - உன்னினைவுதலைக்கட்டி என்றபடி. நினைவுதலைக்கட்டுகை யாவது - அபிமதைகளான பெண்களும்வருகை. "அநுஷ்டேயமான" இத்யாதி வாக்யவிவரணம் · செவியோசை வைத்தெழுகை இத்யாதி. (உ)

ஹர்ஷப்ரகர்ஷத்தாலே அத்யாஶ்சர்யமாம்படி திருக்கண்களிலும் திருப்பவளத்திலும் பிறந்த அழகைக்கண்டு, "எங்களை யாராகக் கருதி இப்படி ஹ்ருஷ்டனாகிறாய்?" என்ன, "நீங்கள் ஆரானால் ஆகிறீர்; இது ஒருதோளழகு இருந்தபடி என்?" என்ன, அல்பஸா த்ருஶ்யத்தைக்கண்டு இவன் இப்படி ப்ரமிக்கும்படியான தோளழகு உடையராய் அம்ருதமதந ஸமயத்தில் பெரிய பிராட்டியாரோடு ஸம்ஶ்லேஷித்தபோதும் பிறவாத பௌஷ்கல்யத்தை இவனுக்குப் பிறப்பித்து இப்படி இவனுக்கு ஸ்ப்ருஹணீயதமைகளாய் இருக்கிறவர்கள் ஆரோ? என்கிறாள். அம்ருத மதநத்தில் தன்கையில் கடல்பட்டத்தை இவன்தன்னைப் படுத்தினவர்கள் ஆரோ? என்றுமாம்.

ப.—அநந்தரம், "போயிருந்து - குழலூது" என்றவாறே புகுரவிருந்து சில உபச்சந்தநவாக்யங்களைச் சொல்லி, போகச்சொல்லுகிறபோதை ஹஸ்தசேஷ்டையைக்கொண்டாட; அக்ஷோப்யமான கடலையும் க்ஷுபிதமாம்படி பண்ணின உன்னை இப்படி ப்ரமிக்கும்படி தங்கள்தோள்களாலே கலக்கினார் ஆரோ? என்கிறாள்.

(வேறேசிலரும் உண்டாய் அங்கேபோயிருக்கவும் சொல்லுகிறதென்? உங்களையொழிய ஆருண்டு எனக்கு? இருப்பிடமும் உங்கள் ஸந்நிதியல்லவோ? என்ன; ஆஸந்நமாகப் புகுந்திருக்கிற இவ்விருப்பைத் தவிர்ந்து), நம்பீ - ("கள்வம்பொதியறை" என்னும்படி களவால்) பூர்ணனான நீ, போய் - (எங்கள் பரிஸரத்தில் நின்றும்) போய், இருந்து- (உன்னபிமதைகள் பரிஸரத்திலே) இருந்து, நின்-உன்னுடைய, புள்ளுவம் - களவு, அறியாதவர்க்கு - அறியாதார்க்கு, உரை- (இந்தக் கள்ளவார்த்தைகளைச்) சொல்லு; (எங்களளவில்) நின் - உன்னுடைய, செய்ய-சிவந்த, வாய் - அதரமாகிற, இரு - ஶ்லாக்யமான, கனியும் - கனியும், கண்களும் - (பிறரையழிக்கையே ஸ்வபாவமாயிருக்கும்) கண்களும், (முன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கையன்றியே), இந்நாள் - இப்போது, விபரீதம் - பாதகமாயிராநின்றன. (இவ்வளவில் உன்னுடைய நிஷேதார்த்தமான எங்களுடைய ஹஸ்தசேஷ்டையைக் கொண்டாடாதே; நீ கொண்டாடும் தோளழகை உடையவர்களல்லோம் நாங்கள்); மா-அகாதமாய், இரு - விஸ்தீர்ணமான, கடலை - கடலை, கடைந்த - கடைந்த, பெருமானாலே - அதிஶயிதசக்தியான இவன்தன்னாலே, இத் திருவருள் - நெஞ்சு கலங்கி வாய்விட்டுக்கொண்டாடும்படியான அருளை, பெறுவார் - பெற்றிருப்பாராய், (அதுக்கடியான), வேய் - வேய்போலே, இரு - சுற்றுடைத்தாய், தட - நெடிதான, தோளினார்-தோளையுடையவர்கள், யவர்கொல்-ஆர்?— அவர்களைக்கண்டேனாகில், உன்னோபாதி நானும் கொண்டாடலாயிற்றேயென்று ப்ரணயரோஷத்தாலே வினவினாள் என்று கருத்து.

இ.—மூன்றாம்பாட்டில், "'குழலூது போயிருந்து' என்று என்னைச் சொல்லுகிறது என்? சிலரை அழைக்கைக்காகவோ குழல் ஊதுவது? ப்ராஹ்மணர்க்கு ஸந்த்யாவந்தநம்போலே ஜாத்யுசிதவ்ருத்தியன்றோ?" என்ன, "இவ்வஸங்கத பாஷணங்களை இங்கே இருந்து சொல்லாதே, போ" என்கிறாள்:—[போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்குஉரை] - உன்பொய்யிலே பழகின எங்கள்பக்கல் உன்பொய் விலை செல்லாது; இங்கு நின்றும்போய், உன்பொய் அறியாதவர்கள் கோஷ்டியிலே இருந்து சொல்லு. நினைவுஒன்றும் சொலவு ஒன்றுமான உன்னைஅறியாதே ப்ரமிக்கைக்கு பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களுண்டே! [நம்பீ] - "நமக்கு அங்ஙனே சிலருண்டோ? நான்

உன்னை ஒழிய அறிவேனோ?" என்ன, "உமக்கு அநேகர் அன்றோ? பூர்ணர் அல்லீரோ?" என்ன; தன்னைக்குறித்து இவள்சொல்லுகிற அம்ருதோபமமான வார்த்தையைக்கேட்டு விக்ருதனானான். [நின்செய்யவாயிருங்கனியுங் கண்களும் விபரீதமிந்நாள்] - பக்வபலம் போலே போக்யமாய்ச் சிவந்த அதரத்தையும், ப்ரேமத்தாலே குதறிச்சிவந்த திருக்கண்களையும் கொண்டு, என்னை யாராகப்ரமித்து ஹ்ருஷ்டனாகிறாய்? "உன்புள்ளுவம் அறியாதவர்க்குஉரை" என்ற ப்ரஸங்கத்திலே, நீ இப்படிபடும்படி யிருப்பதே சிலர்! [விபரீதமிந்நாள்] - "நாங்கள் முன்பு ஒருநாளும் இச்செவ்வி கண்டறியோமீ!" என்ன;

"அவைகிடக்க, இதொருதோளழகு இருந்தபடிஎன்!" என்றான். [வேயிருந்தடந்தோளினார்] - "பசுமைக்கும் செவ்வைக்கும் மூங்கில்போலேயாய் நீண்டு சுற்றுடைத்தாய் உன்னை இப்படி ப்ரமிக்கும்படிபண்ணின தோளழகை உடையார் ஆரோ?" என்ன, "எனக்கு அப்படி இருப்பார்ஆர்?" என்ன; [இத்திருவருள் பெறுவார்] - ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனான உனக்கு அந்யபராஜ்ஞானம் பிறக்கும்படி பண்ணினவர்கள். செய்யவாயிருங்கனியுமென்கிறவிடம் - அவன்பக்கல் இவர்களுக்குண்டான பாவபந்தம் சொல்லுகிறது. வேயிருந்தடந்தோளினார் என்கிறவிடம்அவனுக்குஇவர்கள்பக்கலுண்டான பாவபந்தம்சொல்லுகிறது. [யவர்கொல்]-உனக்கு இப்படி ஸ்ப்ருஹணீயதமைகளாயிருக்குமவர்கள் ஆரோ? இவன்பக்கல் ப்ரணயரோஷத்தாலே சொல்லுகிறார்கள்; தன்னைப் போக்கி இவனோடு கலந்தவர்களைத் தனக்கு உத்தேஶ்யர் என்றிறே இவர் இருப்பது. [மாயிருங்கடலைக்கடைந்த பெருமானாலே] - கடலைக்கடைந்து பிராட்டியை லபித்த போதும் கண்டிலோமீ இச்செவ்வி! அகாதமாய்ப் பரந்த கடல் உன்கையிலே பட்ட பாட்டைத் தங்கள்கையிலே படும்படிபண்ணினார் ஆரோ? என்னவுமாம். * மந்தரம் நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறு கொண்ட சுந்தரத்தோளுடையவுன்னை மறுகப்பண்ணின தோளழகையுடையார் ஆரோ? என்னவுமாம்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. " 'குழலூது போயிருந்து' என்றிறே என்னைச் சொல்லுகிறது; உக்தமானது தன்னை அநுஷ்டிக்கும் அத்தனையிறே. இனித்தான் 'உனக்குப் பெண்கள்படும் நீர்வாய்ப்புள்ள இடங்களிலே போயிருந்து ஊது' என்றிறே நீங்கள் சொல்லிற்று; அழகிது, இத்தனையிறே. நீர்வாய்ப்புள்ளவிடந்தான் எது? அத்தைச்சொல்லலாகாதோ?"

---

மூன்றாம்பாட்டு—போயிருந்து இத்யாதி. கீழ்ப்பாட்டிலே, "குழலூதுபோயிருந்து" என்றவநந்தரம், "போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்குரை" என்றதுக்குஸங்கதி. குழலூதுகையைவிட்டு வார்த்தைசொல்லப்புக்கான் என்றது, இதுஸாப்தமான ப்ரமேயம். அப்படி சொன்ன வார்த்தைதான் இரண்டு. அதாவது - "நீர்வாய்ப்புள்ளவிடமேது" என்றொருவார்த்தை; இத்தை அருளிச்செய்கிறார் - 'குழலூது போயிருந்து என்றிறே' என்றுதொடங்கி, 'இனியபேச்சிலே கைவைத்தான்' என்னுமளவும். "நான்சிலரை யழைக்கைக்காகவோ குழலூதுவது? எனக்கது ஜாத்யுசிதவ்ருத்தியன்றோ?" என்று இரண்டாம்வார்த்தை; இத்தை அருளிச்செய்கிறார் - நான்செய்தபடி செய்கிறேன் இத்யாதி. ஆக, "நீர்வாய்ப்புள்ளவிடமேது" என்றும், "நான்குழலூதுகை ஜாத்யுசிதவ்ருத்தியாகையாலே பெண்களை அழைக்கைக்கு ஸாதநமாகமாட்டாது" என்றும்வார்த்தைசொல்லப்புக்கான்; "போயிருந்து நின்புள்ளுவம் அறியாதவர்க்கு உரை நம்பி" என்கிறார்கள் என்றுஸங்கதி. 'குழலூது போயிருந்து என்றிறே' என்றது 'போயிருந்து - குழலூது என்றிறே' என்றபடி. 'உக்தமானது தன்னை அநுஷ்டிக்கும் அத்தனையிறே என்றது - நீங்கள்சொன்னத்தை நான்செய்யும் அத்தனையிறே என்றபடி. இவர்கள்சொன்னதேதென்ன? அத்தை விஶதீகரிக்கிறார் - இனித்தான் இத்யாதி. பெண்கள் படும்-பெண்களகப்படும். நீர்வாய்ப்புள்ளவிடங்களிலே- பலிக்குமிடங்களிலே. பேச்சு குழலில் இனி

என்று இரண்டடி உட்புகுரவிட்டு நற்றரிக்க இருந்து, குழலில் இனியபேச்சிலே கைவைத்தான். குழலோசைபோலன்றிறே பேச்சில் இனிமை இருக்கும்படி! "நான் செய்தபடி செய்கிறேன், 'செவியோசை வைத்தெழ-குழலூது போயிருந்து' என்றுநீங்கள் சொன்னஇதுக்குக் கருத்து எனக்குப் போச்சுதில்லை; இதேனக்கு ஜாத்யுசிதவ்ருத்தி அன்றோ?" என்றான்.

[போயிருந்து நின் புள்ளுவம் அறியாதவர்க்குஉரை நம்பீ]-உன்போய்யிலேபழகின எங்கள்பக்கல் உன்போய் விலைசெல்லாது; இங்குநின்றும் போய் உன் போய் அறியாதவர்கள் கோஷ்ட்டியிலே இருந்துசொல்லு. நினைவொன்றும் சொலவொன்றுமான உன்னை அறியாதாரையும் கிடைக்குமிறே; பஞ்சலக்ஷங்குடியில் பெண்களுண்டாகையாலே. உன்போய்யை "மெய்" என்றிருக்கும் அவர்களுக்கன்றோ இதெல்லாம் சொல்லுவது? "போய்கேட்டிருந்தேன்" என்று இருப்பாரையும் கிடைக்குமே. [நம்பீ] - பூர்ணர் அல்லீரோ! உமக்கு எங்களைப் பெறுமல் இருந்தீரோ? தன்னைக்குறித்து இவர்கள்சொல்லுகிற அம்ருதோபமமான நிஷேதவசநங் கேட்டவாறே அவன்முகத்திலே ஒருல்லாஸம் பிறந்தது. [நின்செய்யவாயிருங் கனியும் கண்களும் விபரீதமிந்நாள்] † (உன்னுடைய சிவந்த அதரமாகிற ஶ்லாக்யமான கனியும், பிறரையழிக்கையே ஸ்வபாவமாயிருக்கும் கண்களும் முன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கை அன்றிக்கே,இப்போது பாதகமாயிராநின்றது.)நாங்கள் இதுக்குமுன்பு ஒருநாளும் இச்சேவ்வியும் வேறுபாடுங் கண்டறியோம்: இவையிருந்தபடி என்? என்றார்கள். "கழுத்துக்குமேலே ஒன்றைச்சொல்லுகிறிகோளித்தனையன்றோ! அது கிடக்கிடுங்கோள்; இதொரு தோளழகுஇருந்தபடியேன்?" என்றான். [வேயிருந்தடந்தோளினார் இத்திருவருள் பெறுவார் யவர்கோல்?] - ஆரேனும் தோளழகைக்கண்டு, தந்தாம் தோளழகென்று ப்ரமிக்கும்படிக்கு ஈடான தோளழகுஉடையாராரோ? † (பசுமைக்கும் சேவ்வைக்கும் மூங்கில்போலேயாய் நீண்டு சுற்றுடைத்தான தோளையுடையவர்கள்.) [இத்திருவருள்பெறுவார் யவர்கோல்] - நீ கிடந்து இப்படி துடிக்கும்படி பண்ணவல்லராவதே அவர்கள் சிலவர்! செய்யவாயிருங்கனியும் கண்களும்'என்ற விடம் - அவன்பக்கல் இவர்களுக்கு உண்டான ஹாவ

---

*தாயிருக்குமோ என்ன - குழலோசைபோல் இத்யாதி. போச்சுதில்லை - தெரியவந்ததில்லை. 'செய்தபடிசெய்கிறேன்' என்றது - சொன்னபடி செய்கிறேன் என்றபடி.*

*"நின் புள்ளுவம் அறியாதவர்க்கு" என்றதுக்கு வ்யாவர்த்யம்-உன்போய்யிலே இத்யாதி. என்புள்ளுவம் அறியாதபேருண்டோஎன்ன - நினைவொன்றும் இத்யாதி. பலிதம் - உன்போய்யை இத்யாதி. போய்யை 'மெய்'' என்றிருப்பாருண்டோ? என்ன-போய்கேட்டு இத்யாதி. புல்லாணி எம்பெருமான் போய்கேட்டிருந்தேனே-புல்லாணிஎம்பெருமானுடையபோய்யைக்கேட்டு தரித்திருந்தேன் இத்யர்த்தஃ. திருமொழிஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "வில்லாலிலங்கை" இத்யாதி. "நமக்கு அங்ஙனேசிலருண்டோ,நானுன்னையொழிய அவறிவனே?" என்கிறவனுடைய உக்தியை உட்கொண்டு சொல்லுகிறார்கள் - பூர்ணர் இத்யாதி. 'எங்களைப்பெறுமல்' குறைவாய் 'இருந்தீரோ' என்றுகூட்டுவது. புள்ளுவம் - போய். "நின்செய்யவாய்" இத்யாதிக்கு அவதாரிகை - தன்னைக்குறித்து இத்யாதி. வாயாகிற இருங்கனி - பக்வபலம். " இந்நாள் " என்றுவிசேஷித்ததுக்குபாவம் - நாங்கள்இதுக்கு முன்பு இத்யாதி. இச்செவ்வியும், வேறுபாடும் என்றிரண்டாகச்சொல்லிற்று - "இருங்கனியும், விபரீதம்" என்றத்தைப்பற்ற. "விபரீதமிந்நாள்" என்றது - முன்புபோலே ஹ்ருத்யமாயிருக்கை யன்றிக்கே, இப்போது பாதகமாயிராநின்றன என்றபடி. கழுத்துக்குமேலே என்றது - "வாய், கண்கள்" என்றத்தைப் பற்ற; அஹ்ருதயமென்று சாடு. தோளழகு கழுத்துக்குக் கீழேயாகையாலே - ஸஹ்ருதயமென்றுத்வநி. வேயிருந் தடந்தோளினார் - மூங்கில்போலேநீண்டு சுற்றுடைத்தான தோள்களையுடையவர்கள் இத்யர்த்தஃ. தங்களுக்கு அந்யோந்யமுண்டான ஹாவ பந்தத்தை இருவரும்*

---

† குண்டலிதம் க்வாசித்கம்.

வந்தம் சோல்லுகிறது ; வே யிருந்தடந்தோளினர் என்றவிடம்—இவனுக்கு அவர்கள் பக்கலுள்ள ஹாவபாவந்தம் சொல்லுகிறது. இவர்களுக்குத் தன்பக்கல் ஹாவபாவந்தம் தன் முகேந அறிந்தான்அவன்: தங்கள்பக்கல் இவனுக்குண்டானஹாவபாவந்தம்கைமேலே கண்டுவிட்டார் அவர்கள். [யவர்கோல்] - உனக்கு இப்படி ஸ்ப்ருஹணீயதமைகளாய் இருக்குமவர்களாரோ ? இவன்பக்கல் ப்ரணயரோஷத்தாலே சோல்லுகிறளத்தனை போக்கி, இவனோடு கலந்தாரைத் தனக்கு உத்தேஸ்யரேன்றிறே இவளிருப்பது. [மாயிருங்கடலைக்கடைந்தபெருமானாலே - இத்திருவருள்பெறுவார்யவர்கோல்] - '' மந்தரம்நாட்டி அன்று மதுரக்கோழுஞ்சாறுகோண்ட சுந்தரத்தோளுடையான்'' என்றுசோல்லுகிற தோளழகுடையவன் விரும்பும்படியான தோளழகு படைப்பதே! தன் தோளழகு கண்டு பெண் பிறந்தார் அடங்கலும் படும்பாட்டையடங்கலும் இவன்தன்னைப் படுத்தும்படியான தோளழகுடையார் உண்டாவதே!பேரியவன் கையிலே பேரியதுபட்ட பாடுஅடங்கலும் தங்கள் கையிலே இவன்படும்படி பண்ணவல்லராவதே ! [illegible] வாதத:'' என்று கோண்டு அது ஊமைக்கூறனாகப் பட்டதெல்லாம் படுகையிறே. அன்றிக்கே, மந்தரத்தைநட்டுக் கடலைநேருக்கிக் கடைந்து பேரியபிராட்டியாரை லபித்தவன்றும் இவ்வேறுபாடு கண்டிலோமீ! பழையாரைப் பெற்றாற்போலன்றிறே புதியாரைப் பெற்றால் இருக்கும்படி.

(௩)

---

## நான்காம் பாட்டு.

---

ஆலினிளிலையேழுலகுமுண்டு அன்று நீகிடந்தாய் உன்மாயங்கள்
மேலைவானவரும்அறியார்இனிஎம்பரமே?
வேலினேர்தடங்கண்ணினார் விளையாடுசூழலைச் சூழவேநின்று
காலிமேய்க்கவல்லாய்! எம்மைநீகழறேலே.

---

*அறிந்தபடி எங்ஙனே? என்ன இவர்களுக்கு இத்யாதி. தன்முகேந என்றது - தன்னுடையமுகத்தாலே என்றபடி. அதாவது - தன்னுடைய முகத்தைக் கொண்டாடுகையாலே அறிந்தானென்றபடி; அவர்கள்வார்த்தையைக் கொண்டறிந்தான் என்றும். கைமேலே என்றது - சாடு; ப்ரத்யக்ஷமாக என்றும், தோளழகைக் கொண்டாடுகையாலே என்றும். இது - ''வேயிருந்தடந்தோளினார்'' என்றத்தைப் பற்ற. ''மாயிருங்கடலை'' இத்யாதிக்கு மூன்றுபாவம். முந்தினது - மந்தரம்நாட்டி இத்யாதி. துர்வாஸஸ்ஸாபோபஹதரான அன்று மந்தரபர்வதத்தைக் கடலிலேநட்டு அம்ருதமாகிற செவ்விய ஸாரம்ஸத்தைக்கொண்ட அழகியதோளுடையவன் இத்யர்த்த꞉. நாய்ச்சியார் திருமொழி. ''சுந்தரத்தோளுடையான்'' என்றதுக்குபாவம் - தன்தோளழகு இத்யாதி. இது - கீழ்வாக்யவிவரணம். ''பெருமான், மாயிருங்கடல்'' என்றத்தைக்கடாக்ஷித்து த்விதீயதாத்பர்யம் - பேரியவன் இத்யாதி. 'கையிலே இவன்படும்படி என்றது - தோளழகிலே இவன் ஈடுபடும்படி என்றபடி. விவரணம் - வைகுண்ட இத்யாதி. ஊமைக்கூறன் - அநக்ஷரமாகச்சொல்லுகை. த்ருதீயதாத்பர்யம் - அன்றிக்கே இத்யாதி. முந்தினவிரண்டுபாவமும் - ''வேயிருந்தடந்தோளினார்'' என்றத்தைக்கடாக்ஷித்து. மூன்றாம்பாவம் - ''நின்செய்யவாயிரு'' இத்யாதியைக் கடாக்ஷித்து. பெரிய பிராட்டியாரைப் பெற்றத்தைப் பற்ற இவர்களைப் பெற்றதுக்கு ஏற்றமேது என்ன - பழையாரை இத்யாதி. மாயிருங்கடலை - அகாதமாய், விஸ்தீர்ணமானகடலை இத்யர்த்த꞉.*

(௩)

† சிலகோஸங்களிலே 'வாதத꞉' என்று காண்கிறது.

ஆ.—(ஆலினீளிலை) "நம்முடையவிளம்பமிறே இவளுடைய இவ்வதிமாஙகைக்குக் காரணம்" என்று பார்த்து, "நான் பரதந்த்ரன் அல்லேனோ? எனக்குப் பசுமேய்க்கப் போகவேண்டாவோ? நீ நினைத்தபோதே வரலாயிருக்குமோ? ஆகையாலே விளம்பித்தேன்; மற்றொன்றால் விளம்பித்தேன் அல்லேன்" என்று இவனருளிச் செய்ய; ஸர்வலோகங்களையும் அமுதுசெய்து ஓராலிலையிலே கண்வளர்ந்தருளின இம்மஹாஸ்சர்யத்தையுடைய உனக்கு "பசுமேய்க்கப் போனேன்" என்கிற ஒரு பொய்யை, கேட்டார்க்கு "மெய்" என்றிருக்கும்படி சொல்லுகை ஆஸ்சர்யமோ? "பசுமேய்க்கப்போனமை பொய்யோ?" என்னில்,—வேலினேர் தடங்கண்ணினார் விளையாடும் மணற்குன்றுகளிலே நின்றோ காலி மேய்ப்பது! இந்தப்பொய்கள் எங்களுக்குச் சொல்லவேண்டா என்கிறாள்.

ஒ.—[ஆலினீளிலை] - "நாம் தாழ்கையிறே இவள்இப்படிநினைக்கைக்கு ஹேது" என்று பார்த்து, "நான் எனக்கு உரியேனோ? பசுக்களின்பின்னே போகவேண்டாவோ? நினைத்தபடி வரலாயிருக்குமோ? பசுக்களுடைய ரக்ஷணார்த்தமாகப் போக வேண்டுகையாலே தாழ்த்தேனத்தனை; மற்று விளம்பஹேதுவில்லை" என்று அவன் அருளிச்செய்ய; எல்லா லோகங்களையும் திருவயிற்றிலேவைத்து வடதளத்திலே கண் வளர்ந்தருளுகையாகிற ஆஸ்சர்யசேஷ்டிதத்தை யுடைய உனக்கு "'பசுமேய்க்கப் போனேன்' என்ற அஸத்யத்தை, கேட்டார்க்கு "ஸத்யம்" என்று தோற்றும்படி சொல்லுகை விஸ்மயமோ?" என்று இவள் அருளிச்செய்ய, "நான் பசுக்களைமேய்க்கப் போனமை அஸத்யமோ?" என்று அருளிச்செய்ய, "பெண்களுடைய நோக்கிலே அகப்பட்டு அவர்களைவிட்டுப் போகமாட்டாதே அவர்கள் விளையாடுகிற மணற்குன்றுகளிலே நின்றோ பசுமேய்ப்பது? இப்பொய்களை எங்களையொழியப் புறம்பேசொல்" என்கிறாள். பசுக்கள் மேய்க்கைக்கு ஸம்பாவனையில்லாத வேலினேர்தடங் கண்ணினார்விளையாடுகிற மணற்குன்றுகளிலே நின்று பசுக்களை வயிறுநிரம்பும்படி பண்ணவல்லன் என்று வடதளஶயநம்போலே இருப்பதோர் ஆஸ்சர்யோதாஹரணம் சொல்லிற்றாகவுமாம்.

ப.—அநந்தரம், "ஜாத்யுசிதமாகப் பசுக்களை மேய்க்கப்போகச் சிறிதுவிளம்பித்தவளவிலே இப்படி அந்யபரனாகச் சொல்லலாமோ?" என்று அடர்த்து வார்த்தை சொல்ல, "கூடாதது கூடும்படி செய்யவல்ல உனக்கு எது சொல்லவொண்ணாதது?" என்கிறாள்.

ஏழுலகும் - ஸமஸ்தலோகங்களையும், உண்டு -(சிறுவயிற்றிலே அடங்கும்படி) அமுதுசெய்து, ஆலின்-("இன்னவிடத்திலே பூளைத்தது" என்று தெரியாததோர்) ஆலினுடைய, நீள்-(முகிழ்விரிந்து) நீளுமளவான, இலை-இலையிலே, அன்று-(ஸர்வலோகமும் ப்ரளயங்கொண்ட)அன்று, நீ-("ப்ரளயத்திலேவிழுவோம்"என்றறியாத பௌக்த்யத்தையுடைய)நீ, கிடந்தாய் - நிஸ்ஸங்கமாகக் கிடந்தவன் அல்லையோ! (ஏவம்விதமான), உன்-உன்னுடைய, மாயங்கள் - க்ருத்ரிம சேஷ்டிதங்களை, மேலை-அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான, வானவரும் - நித்யஸூரிகளும், அறியார் - (* ஓர் மாயையினால் ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப் போத விட்டிருந்தவர்களாகையாலே) அறியார்கள்; இனி - இனி, எம்-(இதுக்கு) நாங்கள் பாசுரமிட்டுச் சொல்லுகை, பரமே - பரமோ? (அதுகிடக்கிடீர்), வேலின்நேர் - வேல்போலே ஆளழிக்கும்படியான, தடம் - பெரிய, கண்ணினார் - கண்களை யுடையவர்கள் (கண்வட்டம் விடமாட்டாமையாலே), விளையாடு-அவர்கள்விளையாடு

கிற, சூழலே - மணற்குன்றை, சூழ-சூழ, நின்றே-நின்றே, காலி-காலிகளை, மேய்க்கவல் லாய் - வயிறுநிறையமேய்க்கவல்ல அவடிதவடநாஸமர்த்த னன்றோ? (ஆகையாலே), எம்மை - இக்ருத்ரிமம் அறிந்த எங்களை, நீ-நீ, கழறேல் - (காலிமேய்க்கப் போன என்னைக் களவுசொன்னேன் என்று சொல்லுகையாவதென்?'' என்று) மேலிட்டு வார்த்தை சொல்லாதேகொள்.

இ.—நாலாம்பாட்டில், ''அரைக்ஷணம் தாழ்த்தோமென்று அஸங்கதஹாஷணங்களைச் சொல்லுகிறதென்? நான் பரதந்த்ரன் அல்லேனோ? மாதாபிதாக்கள் 'போய்ப் பசுக்களைமேய்' என்று நியமித்தால் உங்கள்பக்கல் வரப்போமோ? இதொழிய, வேறுவிளம்பஹேதுவில்லை'' என்ன, ''அவடிதங்களை வடிப்பிக்கை நீவல்லதொன்று அன்றோ?'' என்கிருள். [ஆலினிலையேழுலகுமுண்டு] - சிறுவடிவைக்கொண்டு ஸகல லோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ஒருபவனை ஆலந்தளிரிலே கண்வளர்ந்தாய். [நீளிலை] - ''ஆலம்பேரிலை'' என்னுமாபோலே விபரீத லக்ஷணையாய், சிற்றிலை என்றபடி. [அன்று] - வெறும் ப்ரளயமொழியப் பரிவருமின்றிக்கே இருந்த அன்று. இப்படி அவடிதங்களைச் செய்யவல்ல உனக்கு ''பசு மேய்க்கப்போனேன்'' என்று இவ்வஸத்யத்தை, கேட்டார்க்கு ''ஸத்யம்'' என்னும்படிசொல்லுகை விஸ்மயமோ? ''நான் அரைக்ஷணம் தாழ்த்த கோபத்தாலே 'அஸத்யன்' என்றிகோள்; எல்லாரும் அறியாரோ என் அஸத்யம்!'' என்ன, [உன்மாயங்கள் மேலை வானவரும் அறியார்] - உன்னுடைய க்ருத்ரிமங்கள் ஆக்கனை ப்ரஹ்மாதிகளே அன்றிக்கே, நித்யஸூரிகளும் அறியார்கள்; * சூட்டுநன்மாலைகள் தூயனவேந்திக்கொடு நிற்கச்செய்தே, ஈட்டிய வெண்ணெய்தொடுவுண்ணப்போருமவனல்லையோ! பழையாரை விடுகை உனக்குப் பழையதாய்ப்போருவதொன்று அன்றோ? [இனிஎம்பரமே] - இப்படி ஒருத்தர்க்கும் நிலமல்லாதக்ருத்ரிமத்தை அபலைகளான நாங்கள் அறியவோ? ''பழங்கிணறு கண்வாங்குகிறதென்? அது கிடக்கிடாய். நான் பசுமேய்க்கப்போனமை அஸத்யமோ?'' என்ன,-[வேலிநேரித்யாதி]- ''பெண்கள் திரள இருக்கிற மணற்குன்றிலேயோ உன்னைப்பசுமேய்க்கச் சொல்லிற்று?'' என்கிருள். [வேலினேர்தடங்கண்ணினர்] - ஓர் ஆளும் ஒருநோக்கும்நேரான கண்ணழகை உடையவர்கள். அவர்கள்நோக்கிலே அகப்பட்டு உன்கண்ணுக்கு இரையிட்டாயித்தனையன்றோ? [விளையாடுசூழலைச் சூழவேநின்று] - கண்ணுக்கிட ஒரு துரும்பில்லாத இடத்திலேயோ பசுமேய்ப்பது? [சூழவேநின்று] - அவர்கள் கண்வட்டத்தை விடாதேநின்றோ பசுமேய்க்கச் சொல்லிற்று! இப்பொய்களை எங்களையொழியச் சொல்லாய் என்கிருள். [காலிமேய்க்கவல்லாய்] - மணற்குன்றிலே பசுக்களை வயிறு நிரப்ப வல்லவன் என்று, வடஉளஸயநம்போலே இருப்பதொன்றிறே இதுவும். வல்லாயென்று-ஸாமர்த்யம்தோற்ற வார்த்தை சொன்னவாறே, மிகைத்து வார்த்தைசொன்னன்:[எம்மை நீகழறேலே] என்கிருள்; ஆற்றுமைக்கு உதவாததுக்குமேலே, மிகைவார்த்தை சொல்லாதேகொள். [எம்மை] - உன்னைப்பிரிந்த ஆற்றுமையாலே நோவுபடுகிற எங்களை. [நீ] - பிரிவால்நோவு இன்றிக்கே எங்களை நோவுபடுத்துகிற நீ. [கழறேலே] - மிகை வார்த்தை சொல்லாதேகொள். ஆற்றுமைக்கு உதவினர்க்கன்றோ வாயுள்ளது?

ஈடு—நாலாம்பாட்டு. "நான் சொன்னவைஎல்லாம் இவர்கள் அந்யதாவாக புத்திபண்ணுகிறது, நம்மையொழியச் செல்லாமை பிறந்து நாம்அரைக்ஷணம் தாழ்த்தது பொறுக்கமாட்டாமை இறே" என்றுபார்த்து, "நீங்களென்னை இங்ஙனேசொல்லலாமோ? நான் பித்ராதிகளுக்குப் பரதந்த்ரனன்றோ? அவர்கள் என்கையிலே கோலைத்தந்து'நீ போய்ப் பசுமேய்த்துவா' என்றால், என்னால் மாட்டேனென்னப்போமோ?" என்றான் ; பித்ராதிகளுக்குப் பரதந்த்ரராய்க்கொண்டு பசுமேய்ப்பார் மேய்க்கும்படியிதுவோ? நீசெய்யுஞ்செயல் சேர்ந்திருக்கிலிறே, நீ சொல்லுஞ்சொலவும் சேர்ந்திருப்பது.

[ஆலினிளிலையேழுலகுமுண்டுஅன்றுநீகிடந்தாய்] - ஓராலிலையாவது, அதுதான் முகிழ் விரியாதஅளவாயிருப்பது; அதிலே, ஏழுலகங்களையும் வயிற்றிலேவைத்து, ஒரு யசோதாதிகளுங்கூட உதவாததசையிலேகண்வளர்ந்தருளினாய். ஜகத்தையடங்கலும் வயிற்றிலேவைத்து, சிறுவடிவைக்கொண்டு ப்ரளயத்திலே தனியேகிடக்கவல்லவனன்றோ நீ ! அஸங்கதங்களை ஸங்கதமாகச்செய்யவல்ல ஸாமர்த்த்யமுடைய உனக்கு இவைஎல்லாம் சேரச் சொல்லுகை பொருளோ ? நீ சொல்லுகிறவை ப்ரணயிகள்கோஷ்ட்டியில் பரிமாறுவதல்ல காண்; "[grantha] " (பிதாநாமமூர்த்தம்ஶிரோரோக꞉) என்றும், "[grantha]" (குரவ꞉கிம்கரிஷ்யந்தி) என்றுங்காண்இங்குப் பரிமாறுமவை. " அன்னையென்செய்யிலென் ? ஊர் என்சொல்லிலென் ? " என்றிறே இங்கிருப்பது. "[grantha]" (தத்தாநாம்விரஹாக்நிநா) இதுக்கு நீர்சொரியவல்லவர்களோ அவர்கள்? அவர்களை மறைத்து வந்து கிட்டக்கடவ எங்களுக்கு இவை

---

ப்ர.—[நாலாம்பாட்டு] [கழறேல் ஐதீ்ாதி] [மழறுதேன் மொழியார்கள்] [grantha] ॥ ௪௩ ॥

---

நாலாம்பாட்டு.—ஆலினிளிலை இத்யாதி. ப்ரணயரோஷத்தாலே ஊடுகிறஇடத்திலே, பெண்களிருக்கிற மணற்குன்றிலே அவன் பசுமேய்த்த ப்ரகாரத்தையும், வடதளசயநத்தையும் சொன்னதுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - நான்சொன்னவையெல்லாம் இத்யாதி. இத்தால் - இவர்கள் ப்ரணயரோஷம் தீருகைக்காக, தான் தாழ்த்ததுக்கு பித்ராதிகள் வினைதடியாகப் பசுமேய்த்தபடியை அவன்சொல்ல, அத்தை அஸங்கதோக்தியாகப் பரிஹாஸம்பண்ணுகிறவர்கள், "இவன்சொல்லும் அதுஅஸங்கதோக்தி"என்னுமதுக்கு உறுப்பாக, அஸங்கதவ்யாபாரமான வடதளசயநத்தை முன்னிடுகிறார்கள் என்றபடி: செய்யுஞ்செயலென்றது - "ஆலினிளிலை" இத்யாதியைப்பற்ற.

நீளிலைஎன்றது - நீளுகிறஇலையென்றாய், முகிழ்விரியாத சிற்றிலைஎன்றபடி. ஒரு யசோதாதிகளுங்கூட உதவாத தசையிலேஎன்றது - பரிவரில்லாத தசையிலே என்றபடி.விவரணம்-ஜகத்தை இத்யாதி. ஹலிதம் - அஸங்கதங்களை இத்யாதி. பொருளோ - அருமையோ என்றபடி. இது அஸங்கதமானபடியைக்காட்டுகிறார்-நீ சொல்லுகிறவை இத்யாதி. அதாவது - "பித்ராதிகளுக்குப் பரதந்த்ரன்" என்று சொல்லுமவை ப்ரணயிகள்கோஷ்ட்டியில் பரிமாறுமவை அன்றென்றபடி. ப்ரணயிகள் கோஷ்ட்டியில் பரிமாறும்படி எங்ஙனே ? என்ன - [grantha] இத்யாதி. "[grantha]"இதி பஞ்சமேமே [18, 22]. ப்ரமாணார்த்தம்-அன்னையென் இத்யாதி.மாத்ராதிகளை த்ருணீகரிக்கலாமோ ? என்ன - [grantha] இத்யாதி. கீழ்வாக்யத்துக்குஹலிதம் - அவர்களைமறைத்து இத்யாதி. நீங்கள்

வார்த்தையல்ல காண்! † ("நான் அரைக்ஷணம் தாழ்க்க,கோபத்தாலே 'அஸத்யன்' என்றி கோள்; எல்லாரும் அறியாரோ என்அஸத்யம்" என்ன), [உன்மாயங்கள் மேலைவானவரும் அறியார்] - உன்னுடையக்ருத்ரிமங்கள், ஆக்கனை இந்த்ராதிகள்அன்றிக்கே நித்யஸூரி களும் அறியார்கள். "ப்ரஹ்மாபிநவேத நாராயணம்ப்ரபும்" (ப்ரஹ்மாபிநவேத நாராயணம்ப்ரபும்)என்கிறபடியே அறியாமைக்கு அவர்களும் ஒத்திருக்கச்செய்தே, உகந்தா ரைக் காற்கடைக்கொள்ளுகிற ப்ரகரணமாகையாலே நித்யஸூரிகளைநிதர்சநமாகச்சொல் லுகிறது; "சூட்டுநன்மாலைகள் தூயனவேந்தி" என்றுகொண்டு அவர்கள் ஸமாராதநத்துக்கு வேண்டுவனகொண்டுநிற்க, * ஈட்டியவெண்ணெய் தொடவுண்ணப்போந்ததிறே; அது தன்னையும் விட்டிறே அடலாயர்தங்கொம்பினுக்குக் கோட்டிடையாடிற்று. பழையாரை யெல்லாம் காற்கடைக் கொள்ளுகிற ப்ரகரணமாயிற்றிறே. நவப்ரியைகளை விரும்புவா ரைப்போலேகாணும். [இனியெம்பரமே] - நித்யஸூரிகளோடு ஒக்கத் தங்களையும் ஸமாநாதிகரிக்கிறார்கள். அவர்களுக்கு நிலமல்லாதது எங்களால்அளவிடப்போமோ? அவையெல்லாம் எங்களையொழியச் சொல்லாய். "என்தான்? நான்பசுமேய்த்தமை இல்லை யென்கிறிகோளோ? அறிந்திலோமென்கிறிகோளோ? நான்சொன்னது பொய் என்கிறி கோளோ?" என்றான்; அவையெல்லாம் அப்படியேயானாலும் நீதான் பசுமேய்க்கும்படி இப்படியேயோ? [வேலினேர்தடங்கண்ணினார் விளையாடுசூழலைச்சூழவேநின்றுகாலிமேய்க்க வல்லாய்] - பெண்களுடைய கண்களிலேதுவக்குப்பட்டு அவ்வருகு போகமாட்டாதே நின்றுபோலேகாணும் பசுமேய்ப்பது! ஹோத்தாக்கள் அளவல்லாதபடி பரப்பையுடைத் தாய், ஓராளுமோருநோக்கும்நேரான கண்ணையுடையராயிருக்கை. "கார்த்தண்கமலக் கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தென்னை, ஈர்த்துக்கொண்டுவிளையாடும் ஈசன்தன்னைக்கண் டீரே" என்று, தன்கண்ணழகைக் கண்டபெண்கள்படும்பாடெல்லாம்இவன்தன்னை அவர் கள்படுத்தவல்லவர்கள். [விளையாடுசூழலைச்சூழவேநின்று காலிமேய்க்கவல்லாய்] - "உன் வயிறும்நிறைத்துப்பசுக்களின்வயிறும் நிறைத்தல்லது வாராதேகோள்" என்றன்றோ பித்ராதி

---

"பொய்" என்கிறப்போலே, எல்லாரும் "பொய்" என்றார்களோ? என்ன - உன்னுடைய க்ருத்ரிமங் கள் இத்யாதி. "மேலைவானவரும்" என்று விசேஷிக்கவேணுமோ? ப்ரஹ்மாதிகளும் அறியா ரென்னவொண்ணாதோ? என்ன - ப்ரஹ்மாபி இத்யாதி. நித்யஸூரிகளைக் காற்கடைக்கொண் டானோ? என்ன - சூட்டுநன்மாலைகள் இத்யாதி. கோட்டிடை - கொம்பின்நடுவே. "உகந்தாரைக் காற்கடை" இத்யாதிவாக்யவிவரணம் - பழையாரை இத்யாதி. 'பழையார்' என்கிறது - இங்கே, ஊடுகிறவர்களை. 'புதியார்' என்கிறது - அவன்மின்னிடைமடவாரை. நித்யஸூரிகளை வஞ்சித்தாற் போலே எங்களையும் வஞ்சித்தாய் என்று ஹ்ருதம் - நித்யஸூரிகளோடொக்க இத்யாதி. 'ஸமாநாதி கரிக்கிறார்கள்' என்றது - அறியாமையில் ஸாம்யத்தைப்பற்ற. அவையெல்லாம் என்றது - மாயங்க ளெல்லாம் என்றபடி. அதாவது - "மாதாபிதாக்களுக்குப் பரதந்த்ரன்" என்றுதொடங்கிச்சொல்லுகிற வார்த்தைகள் என்றபடி. வேலினேர் - வேலோடு ஸத்ருஶமான இத்யர்த்தஃ. தாத்பர்யார்த்தம் - பெண் களுடைய இத்யாதி. "வேலினேர்" என்ற பதத்துக்கு ஹார்த்தமுவம் - கார்த்தண்கமலம் இத்யாதி. மேகத்திலே ஶ்ரமஹரமான தாமரைபூத்தாற்போலே இருக்கிற திருக்கண்களாகிற பாசத்திலே அகப் படுத்தி, என்கார்யம் என்புத்த்யதீநமல்லாதபடி என்னைத் தன்பக்கலிலே இழுத்துக்கொண்டு, இதுவே லீலையாகஇருக்கும் ஈசனைக் காணப்பெற்றாருண்டோ? இத்யர்த்தஃ. நாச்சியார்திருமொழி, பதி ஞலாந்திருமொழி, நாலாம்பாட்டு. "வேலினேர்" இத்யாதிக்கு இரண்டுதாத்பர்யம்; முந்தினது - பித்ருவசந பரிபாலநத்துக்காகவானால் மணற்குன்றிலேவந்து பசுமேய்ப்பார்களோ! இது, பொய் என்று;

கள்உன்னைச்சொல்லிவிட்டது? "இன்னவிடத்தேநின்று பசுமேய்" என்றேரு ப்ரதேஶநியமம்பண்ணிவிட்டார்களோ? அவர்கள் நியமித்ததொழியச் செய்யப்பார்த்தால் அது இங்குச் செய்யலாகாதோ? கண்ணுக்கிடஒருதுரும்பும் இன்றியே, அவர்கள் விளையாடுகிற மணற்குன்றுகளைச்சூழநின்று மேய்க்கவேணும்போலே காணும். பசுக்கள்மேய்க்கைக்கு ஸம்பாவனையில்லாத இடங்களிலே இவற்றின் வயிறுகளைநிறைத்துக்கொடுபோகையினாலே, கீழில் அகடிதகடநாஸாமர்த்த்யம்போலே இதுவுமோர் ஆஶ்சர்யஞ் சொல்லுகிறதாகவுமாம். [வல்லாய்] - உன்னை யாரேனும் நியமித்தாலும் நீ நினைத்ததுசெய்து தலைக்கட்டவல்லான் ஒருத்தனன்றே! என்கிறாள். இவர்கள்சொன்ன மர்மம் புத்திபண்ணாதே, "நம்முடைய ஸாமர்த்த்யந்தோற்றச் சொல்லாநின்றார்கள்" என்று, தன்மேன்மை தோற்றச் சிலசொல்லப் புக்கான்; "இவன்அழியும்படி நெடும்போதுசிலவார்த்தைசொன்னோம்; இன்னும் சில சொல்லுவானுக்கு"என்று இருந்தாள்."ஐதீவ"(இதீவ)-கீழேநெடும்போதுசிலபாசுரமிட்டுச் சொல்லிக்கொடு போந்தான்; ப்ரணயதாரையில் ஓடமேது ருஷிகளாயிருப்பார்க்கு நிலமன்றே. இப்புடைகளிலே—என்கிறான். "தெவீ" (தேவீ) - வல்லபைகளுடைய பரிமாற்றம் கடக்க நிற்பார்க்குத் தெரியாதிறே. "வசநம்மஹார்த்தம்" (வசநம்மஹார்த்தம்)- கடக்க நிற்பார்க்கேயன்று: தேசிகரானவர்கள் தங்களுக்கும் தெரியாதபடியாயிருக்கை. "தம்வாநரேந்த்ரம்"(தம்வாநரேந்த்ரம்)-இவனோடு ஒக்கக்கடவார்ஒருத்தருமில்லை, ஶேஷத்வத்துக்கு முடிசூட்டினார்மஹாராஜரேயாகிலும், பாரதந்த்ர்யத்தின்எல்லையிலே நின்றான்இவனென்கை. இவ்வளவிலே இவள்முகம்பார்த்து வார்த்தை சொல்லப்பெற்றிலரிறே அவர். "மதுரார்த்தம்" (மதுரார்த்தம்) - அபூமியென்னக் கைவாங்கவொண்ணாதபடியா யிருக்கை.

---

*இத்தை அருளிச்செய்கிறார் - உன்வயிறும்நிறைத்து இத்யாதி. "விளையாடுசூழல்" என்றத்தைக் கடாக்ஷித்துஹார்த்தஹாவம் - இன்னவிடத்தே இத்யாதி. கீழ்ச்சொன்ன வ்யங்க்யங்களுக்கு ஹலிதம் - அவர்கள்நியமித்ததொழிய இத்யாதி. ஏதத்விவரணம் - கண்ணுக்கிட இத்யாதி. பசுக்கள்மேய்க்கைக்கு ஸம்பாவனையில்லாத இடங்களிலே இவற்றின் வயிறுகளை நிறைத்துக்கொண்டு போகையினாலே, கீழ் அகடிதகடநா ஸாமர்த்யம்போலே இதுவும் ஓராஶ்சர்யம் என்று "வேலினோ" இத்யாதிக்கு இரண்டாம்ஹாவம் - பசுக்கள்மேய்க்கைக்கு இத்யாதி. மூந்தினஹாவத்துக்குச்சேர "வல்லாய்" என்றதுக்கர்த்தம் - உன்னையாரேனும் இத்யாதி. ஆகையாலே உங்களோடும் ஸம்ஶ்லேஷிக்கலாம் என்றபடி. த்விதீயஹாவத்துக்குச்சேர "வல்லாய்" என்றதுக்கு - அகடிதகடநாஸமர்த்தன் என்றர்த்தங் கண்டுகொள்வது. த்விதீயார்த்தத்துக்குச்சேர மேலுக்கவதாரிகை - இவர்கள்சொன்ன இத்யாதி. மர்மமென்றது - வ்யங்க்யமாகச் சொன்னவார்த்தையை யென்றபடி. மூந்தினவர்த்தத்துக்குச்சேர அவதாரிகாந்தரம் - இவனழியும்படி இத்யாதி. இவனழியும்படியென்றது - இவன் நிருத்தரனாம்படி என்கை. சொல்லுவானுக்கென்றது - சொல்லக்கடவனென்றபடி. இதுக்குத்ருஷ்டாந்தம் - ஐதீவ இத்யாதி. இதுக்கு ஹேதுவேதென்ன - 'தெவீ' என்று பதஸங்கதி. இவன் சொன்னவார்த்தை விரக்தனுக்கே யன்றிக்கே, உட்புகுந்தநாயகனுக்குந் தெரியாதென்கிறார் - கடக்க இத்யாதி. தேஶிகர் - பெருமாள். வாநரேந்த்ரமென்னாதே, "தம்வாநரேந்த்ரம்" என்றதுக்குஹாவம் - இவனோடொக்க இத்யாதி. இவனோடொக்கக் கடவார் ஒருத்தருமில்லையென்றது - பெருமாளுக்கு ப்ரத்யாஸந்நன் என்னுமதுகொண்டிறே; அது மஹாராஜருக்கும் இல்லையோவென்ன - ஶேஷத்வத்துக்கு இத்யாதி. அதெப்படி என்ன - இவ்வளவிலே இத்யாதி. அதாவது - மஹாராஜர்க்குப்போலே யதேஷ்ட விநியோகார்ஹத்வம் மாத்ரமன்றிக்கே, யதேஷ்ட விநியுஜ்யமாநரான திருவடி வாநரேந்த்ரரென்றபடி. அவரென்றது - மஹாராஜரை: அபூமியென்னவென்றது - "மஹார்த்தம்" என்றத்தைப் பற்ற. ஸாரஸ*

"உக்த்வா"(உக்த்வா) - அவனும் அவனுடையவர்களும் வாழும்படி வார்த்தைசொன்னாள். "ஶ்ரோதும்ப்நஸ்த்ஸ்யவசோபிராமம்" (ஶ்ரோதும்புநஸ்த்ஸ்யவசோபிராமம்) - "அழிந்தாரையாக்கவல்லன்" என்னுமிடங்கண்டாள்; தானழிச்சதலைஉண்டாம்படி வார்த்தைசொல்லவல்லமை கேட்கவேணுமென்றிருந்தாள். "ராமார்த்தயுக்தம்" (ராமார்த்தயுக்தம்)- ராமப்ரயோஜநயுக்தம்; தன்கார்யம்செய்து தலைக்கட்டவல்லானொருத்தன், "விரராம"(விரராம)-நெடும்போதுதான் வார்த்தைசொல்லுகையினாலும்,ஸ்வாமிவார்த்தைசொல்லும்போது மேலிட்டு வார்த்தைசொல்லவொண்ணாமையினாலும் பேசாதேயிருந்துஅவனுக்கு அவகாச ப்ரதாநம் பண்ணினாள். "ராமா"(ராமா)-இவ்விட்டுநீட்டுகையொழிய வார்த்தை சொல்லாதே யிருக்கிறபோதை அழகைஅவர்தாம் காணப்பெற்றிலோம். இவனும்அடர்த்து வார்த்தைசொன்னான். [எம்மை நீ கழறேலே]-வாராய்! நோவுபடுத்தி நலிந்தார் முடிக்கவும் தேடுவர்களோ? [எம்மை]-உன்னைப்பிரிந்து ஆற்றாமைநோவுபடுகிற எம்மை. [நீ]-ஒருகாலமும் பிரியாத நீ. பிரிவால் வரும்நோவுஇன்றிக்கே இருக்கிற நீ. [கழறேலே] - விசாய்ந்து வார்த்தை சொல்லாதேகோள்; நீ இங்ஙன் மேலிட்டு வார்த்தை சொல்லப்பெறாய் காண். நீயும் நாங்களுமானால் எங்களை நீயடர்த்து வார்த்தைசொல்ல என்ன ப்ராப்தியுண்டு? சேதநரைப்போலே வந்து வார்த்தைசொல்லுவதே! அதிலேவைத்து மிகைத்து வார்த்தைசொல்லுவதே. ஆற்றாமைக்கு உதவினார்க்கன்றோ வாயுள்ளது! (ஏ)

---

மாகையாலே, "நிலமன்று" என்று விடப்போகாதிருக்கையென்றகருத்து. அவனுடையவர்களுமென்றது - திருவடியும், திருவடியுடையபெருமாள் மஹாராஜர் தொடக்கமானவர்களும் என்றபடி. தான் பெருமாளை ப்ரணயரோஷத்தாலே அழித்த வார்த்தைக்கு இவன் ஸமாதாநம் பண்ணவல்லனென்கிற இது அறிந்தபடி எங்ஙனேயென்ன - அழிந்தாரை இத்யாதி. அதாவது - வேண்யுத்க்ரதநத்திலே ஒருப்பட்டு முடியப்புக்க தன்னை யுண்டாக்குகையாலே, அழிந்தாரை ஆக்கவல்ல னென்னுமிடம் கண்டாளென்றபடி. இப்படியாகையாலே 'தானழிச்சதலை' என்றகூட்டிக்கொள்வது. தானழிச்சதலை என்றது - "நிர்த்தயர், ஸ்வார்த்தபரர்" என்று தானழித்தபெருமாளை என்றபடி. உண்டாம்படி வார்த்தைசொல்லுகையாவது - நிர்த்தோஷராம்படி வார்த்தைசொல்லுகை. ராமப்ரயோஜநயுக்தம்- ராமனுகிற ப்ரயோஜந யுக்தமென்றபடி. ரக்ஷியானவனை ஸமாதாநம்பண்ணுகை ரக்ஷபூதனுடைய கார்யமாகையாலே, தன்கார்யம் செய்து தலைக்கட்டவல்லானென்றது. அது - "தஸ்ய" என்றதுக்கர்த்தமானால் ஸ்வரஸம். வெறுமனேயிருந்ததுக்கு ப்ரயோஜநம் - நெடும்போது இத்யாதி ஸ்வாமி வார்த்தை யென்றது - ஸ்வாமியுடையவார்த்தை யென்றபடி. இவவிட்டு நீட்டுகையொழியவென்றது - இவள் வார்த்தை சொல்லுகிறபோதை அழகை திருவடிசொல்லக் கேட்கையன்றிக்கே யென்றபடி. (இவனும் சிலசொல்லுவானுக்கென்றிருந்தாள் - - இவனுமடர்த்துவார்த்தைசொன்னான்) என்று கீழோடே ஸங்கதி. விவரணம் - பிரிவால்வரும் இத்யாதி. விசாய்ந்து - மேலிட்டு. மேலிட்டுவார்த்தை சொல்லவொண்ணாதோ என்ன, ஸாபராதனான உனக்கு அதுக்கு யோக்யதையில்லைகாண் என்கிறார் - நீஇங்ஙன் இத்யாதி. "எம்மைநீ" என்கிறபதங்களையுங்கூட்டி உக்தார்த்தவிவரணம் - நீயும் நாங்களும் இத்யாதி. ஸாபராதனான நீயும், து:கிதைகளான நாங்களுமானாலென்றபடி. சேதநரைப்போலே என்றது - எங்களைச் சைதந்யம் உள்ளவர்களைப்போலே எண்ணி என்றபடி. "இதீவதேவீவசநம் மஹார்த்தம் தம்வாநரேந்த்ர:மதுரார்த்தமுக்த்வா। ஶ்ரோதும்புநஸ்தஸ்யவசோபிராமம் ராமார்த்தயுக்தம் விரராமராமா" இதி ஸுந்தரகாண்டே. (ஏ)

# ஐந்தாம் பாட்டு.

கழறேல்நம்பீ! உன்கைதவம் மண்ணும்விண்ணும் நன்கறியும்திண்சக்கர
நிழறுதோல்படையாய்!உனக்குஒன்றுஉணர்த்துவன்நான்
மழறுதேன்மொழியார்கள்நின்னருள்சூடுவார் மனம்வாடிநிற்க எம்
குழறுபூவையொடும் கிளியோடும்குழகேலே.

ஆ.—(கழறேல்) - இப்படி தன்னை உத்திஶ்ய மேன்மேல் இவள் சொன்ன வார்த்தைகளையே தனக்குப் பற்றுசாகக் கொண்டு, இவளுடைய கிளிகளையும் பூவைகளையும் எடுத்து அவற்றைக்கொண்டு திருநாமங்களைச் சொல்லுவித்து ஆஶ்வஸியா நின்றுகொண்டு, "என்பக்கல் பொய்யுண்டோ?" என்று தானருளிச்செய்ய, "உன்னுடைய பொய்யை அறியாதாருண்டோ? பகலை இரவாக்கவல்ல னல்லையோ? அது நிற்க, ஒரு ஹிதம் சொல்லக்கேள்! அதேதென்னில்; - உன்திருநாமங்களைக் கேட்க இருந்தாயாகில், நின்னருள்சூடுவார் மனம்வாடி நிற்க இங்கேநின்று எங்களுடைய பூவைகளையும் கிளிகளையும் உன்திருநாமங்களைச் சொல்லுவித்துக்கொண்டு கேளாதே; உன்னுடைய மழறுதேன் மொழியார்களைச் சொல்லுவித்துக்கொண்டு கேள்!" என்கிறாள்.

ஒ.—[கழறேல் நம்பீ] . "நான் சொன்னவையெல்லாம், பொய்யைமெய்யாக உபபாதித்தேனாக, என்னை க்ருத்ரிமனாக்குவதே!" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, பிராட்டியும், முதன்மையடித்து "எங்களை அஹிஹவித்து வார்த்தைசொல்லாதே கொள்ளும் உம்முடைய க்ருத்ரிமம் ஸகலலோகப்ரஸித்தமன்றோ?" என்ன, அவனும், "நான் பொய்யனென்னுமிடத்துக்கொரு ஸாக்ஷிகாட்டிக்காண்!" என்ன, "ஜயத்ரதவதத்தினன்று பகலையிரவாக்கவேணுமென்று நீர் ஒருபொய்யிலே துணிய, அதுக்குப் பெருநிலைநின்று அத்தை முற்றததலைக்கட்டவல்ல உம்முடையகையில் திருவாழியைக் கேட்டுக்கொள்ளும்!" என்ன, அவன் மேல்சொல்லலாவது காணாமையாலே நிருத்தரனாயிருக்க; "நீ இன்னாதாயிராதே உனக்கு ஒருஹிதம் சொல்லக்கேள்!" என்ன, அவனும், "இது ஒருபேச்சில் இனிமையிருக்கும்படியே!" என்று கொண்டாட, போலியைக்கண்டு பிச்சேறும்படியான பேச்சழகையுடையவர்கள் மனம்வாடாமே அங்கே போவென்று இவள் பேசாதேயிருக்க, "நீபேசாதே யிருந்தாயேயாகிலும் எனக்கு தாரகம் இவற்றின் பேச்சே அமையும்" என்று இவளுடைய பூவையையும் கிளியையும் இவன் உபலாளிக்க; இவள் "நீ நினைக்கிறவர்களினஅல்ல: எங்களின: இவற்றோடே குழகாதேகொள்" என்கிறாள்.

ப.—அநந்தரம், "உன்பொய்க்குப் பெருநிலைநிற்கும் பரிகரத்தையுடைய நீ, அஹ்ருதயமாக எங்கள்பேச்சைக் கொண்டாடுவது: இனியபேச்சையுடைய எங்கள் பூவையையும் கிளியையும் கொண்டாடுவதாகாதே கொள்" என்கிறாள்.

நம்பீ-("பொய்நம்பி" என்னும்படி பொய்யாலே) நிறைந்தவனான நீ, கழறேல்- ("என்னைப் பொய்செய்தேன் என்கையாவதென்?" என்று) மேலிட்டுவார்த்தை சொல்லாதேகொள்; திண் - (பகலைஇரவாக்கின பொய்க்குப் பெருநிலை நிற்கும்) திண்மையை

யுடைய, சக்கரம் - திருவாழியாகிற, நிழறு - தேஜஃப்ரஸாரியான, தொல் படையாய் - அஸாதாரணாயுதத்தை யுடையவனே ! உன்-உன்னுடைய, கைதவம் - க்ருத்ரிமசேஷ்டிதங்களை, மண்ணும் - (அந்த மஹாபாரத ஸமரத்திலே) பூமியில் திரண்ட ராஜலோகங்களோடு, விண்ணும் - ஊர்த்வலோக வாஸிகளான தேவர்களோடு வாசியற, நன்கு - நன்றாக, அறியும் - அறியும்; (ஆனபின்பு), உனக்கு - உனக்கு, நான் - நான், ஒன்று - ஒன்று, உணர்த்துவன் - அறிவிக்கக்கேள்; (எங்கள்வார்த்தை இனிமை கொண்டாடாதே; நாங்கள் அவர்களல்லோம்); நின்-உன்னுடைய, அருள்-அருள், சூடுவார் - சூடுகைக்கு இட்டுப்பிறந்தவர்களாய், மழறு - அஹ்ருவமான, தேன் - தேன்போலே யிருக்கிற, மொழியார்கள் - மொழியையுடையவர்கள், மனம் - நெஞ்சானது, வாடி - செவ்வியழிந்து விஷண்ணமாம்படி, நிற்க-நிற்க, எம்-(அவர்களதன்றியே) எங்களதாயிருப்பதாய், குழறு-(அவர்களைப்போலே உனக்குத் தெளிய வார்த்தைசொல்லமாட்டாதே,) அநக்ஷர ஸரஸமான குழறுதலையுடைத்தான, பூவையொடும் - பூவையோடும், கிளியோடும் - கிளியோடும், குழகேல் - லீலாரஸம் கொண்டாடாதேகொள். இங்கு, பூவையும் கிளியுமென்றது- ஆஶ்ரிதர்க்கு உசாத்துணையாகைக்கு யோக்யமான வ்யவஹாரத்தை யுடைத்தாய் தத்தேகரக்ஷ்யமான ஶிஷ்யவர்க்கத்தை ஸூசிப்பிக்கிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், "அஸங்கதங்களைச் செய்தேனென்றும், பொய்யை மெய்யாக உபபாதித்தேனென்றும் என்னை க்ருத்ரிமனாக்குவதே!" என்ன, [கழறேல் நம்பி] - முதலிகளென்று அஸிஷ்வித்து வார்த்தை சொல்லாதே கொள்ளும். "நெஞ்சில் மறமுடையார் சொல்லுமது வார்த்தையன்று; உங்களையொழிய ஸாக்ஷிஉண்டோ?" என்ன, [உன்கைதவம்மண்ணும் விண்ணும் நன்கறியும்] - உன் க்ருத்ரிமம் உபயவிபூதியும் நன்றாகவறியும். தானும் அவனுமானால் உபயவிபூதியும் தன்பக்ஷத்திலே நிற்குமென்றிருக்கிறாளாதல், * வாயுந்திரையுகளிற்படியே யெல்லாரும் தன்னைப்போலே இழவாளரென்று இருக்கிறாளாதல். "இதெல்லாம் வேண்டா; நான்பொய்யன் என்னுமிடத்துக்கு ஒரு ஸாக்ஷி காட்டிக்காண்!" என்ன, [திண்சக்கரநிழறுதொல் படையாய்] - உன் பரிகரத்திலே காட்டுகிறேன்; ஜயத்ரயவத்தினன்று "பகலை இரவாக்கவேணும்" என்று ஒருக்ருத்ரிமத்திலே துணிய, அதுக்குப் பெருநிலைநின்ற திருவாழியைக் கேட்டுக்கொள். [திண்சக்கரம்] - விஶ்லேஷிப்பிக்கப்போகாதவன். உன்னிலும் களவில் திண்ணியவன் என்றுமாம். [நிழறு] - இவனுடைய களவுக்கு நிழறுசெய்து கொடுக்குமவன். [தொல்படை]- * கைகழலா நேமியானிறே. [உனக்கொன்றுணர்த்துவன் நான்] - வார்த்தைமுட்டி நிருத்தரனாய் நின்றான்: "இவனையுண்டாக்கிக் காரியம் கொள்ளவேணும்" என்று பார்த்து, "உனக்கொரு ஹிதம் சொல்லக்கேள்!கலங்கின உன்னைத்தெளியும்படி வார்த்தை சொல்லக்கேள்!" என்ன, அவனும் "இதொரு பேச்சில் இனிமை இருந்தபடி என்?" என்றான்; இவள் சொல்லும் அர்த்தத்தில் தாத்பர்யமில்லையே அவனுக்கு.

[மழறுதேன் மொழியார்கள்]-போலிகண்டு இப்படி உன்னைப்பிச்சேறப்பண்ணினவர்கள் ஆரோ? [மழறுதேன்] - மழலைத்தேன். கலங்கின தேன்போலே இருந்துள்ள பேச்சழகையுடையவர்கள். "ஆரோ" என்றவாறே "நீங்களேயன்றோ" என்று தங்கள் தலையிலே ஏறிடப்புகுகிறானே என்று, 'நின்னருள் சூடுவார்' என்கிறாள். [மனம்வாடி நிற்க] - உன்உகப்புக்கு இலக்கானவர்கள் ஆஶ்ரயமழிந்த தளிர்போலே நெஞ்சுவாடி

நிற்க. அதாவது - * மாசறுசோதிதொடங்கி நெடுகப் பிரிவாலே நோவுபட்டு, முடியவும் பெறாதே ஸம்ச்லேஷிக்கவும்பெறாதே யிருக்கிற என்னைப்போலேயன்றியே அனிச்சம் பூப்போலே இருக்கிறவர்கள் நெஞ்சு உலர்ந்துநிற்க இங்கிராதேபோ என்று பேசாது இருந்தாள். "உன்பேச்சிலும் இவற்றின் பேச்சன்றோ எனக்கு ப்ராகம்" என்று, இவளுடைய பூவையையும் கிளியையும் கொண்டாடத்தொடங்கினான்; சிலரை ஆதரிக்கையாவது - அவர்களுடைமையை ஆதரிக்கையிறே. [எம்குழறுபூவையொடுங்கிளியோடுங்குழகேலே] - பாவீ! எங்களினகாணிவை: நீ நினைக்கிறவர்களின அல்ல. [குழறுபூவை] - அநக்ஷர ஸரஸமாகப் பேசுகையாலே, கலங்கின உனக்குத் தெளியவார்த்தை சொல்லவல்லவையும் அன்று; அவற்றோடே, குழகாதேகொள் - செறியாதேகொள்.

ஈடு—அஞ்சாம்பாட்டு. "ஸ்நேஹிகளாயிருப்பார்க்குக் குற்றத்தைக்குணமாகக் கொள்ளவுமாம்: நிஸ்ஸ்நேஹிகளுக்கு குணந்தன்னையே குற்றமாகக் கொள்ளவுமாம்: விஷயாநுகுணமாயிறே குணதோஷங்கள் இருப்பது; ஆகையாலே, நான் சொன்னவை எல்லாம் இப்போது இத்தலைக்குக் குறையாய்த் தோற்றுமிறே; ஆனாலும் மத்யஸ்த்தர்சொன்னதிறே அர்த்தமாய்த் தலைக்கட்டுவது" என்றான்.

[கழறேல்நம்பீ] - அது முன்னம் செய்தபடிசெய்ய: நீர்தாம் முதன்மைகொண்டாடி அஹிஹவித்துவார்த்தைசொல்லாதேகொள்ளும்எங்களை. [நம்பீ] - ப்ராபவங்கொண்டு அஹிமதம் சாதிக்கவொண்ணாதுகாணும்! 'நெஞ்சில் வெறுப்புடையார்சொல்லுமது வார்த்தையன்று; உங்களையொழிய ஸாக்ஷியுண்டோ?' என்ன, [உன்கைதவம் மண்ணும் விண்ணும் நன்கறியும்] - உன் க்ருத்ரிமம் எங்களளவன்று: ஸகலலோக ப்ரஸித்தங்காண். * வாயுந்திரையுகளில் வாஸனையாலே "ஜகத்தையெல்லாம் தம்மைப்போலே நினைத்திருக்கும்" என்றிருக்கிறார். ஸம்பந்தம் அவிசிஷ்டமானால் அங்ஙன் நினைத்திருக்க ஒருதட்டில்லையிறே. அன்றிக்கே, சேஷியொருவனானால் சேஷவஸ்துக்களெல்லாம்ஒருமிடறா யிருக்குமிறே; ஒரு

அஞ்சாம்பாட்டு.—கழறேல் இத்யாதி. "உன்கைதவம் மண்ணும்விண்ணும் நன்கறியும்" என்கிறபதத்துக்கிடாக "மத்யஸ்த்தர் வேணும்" என்ற அவன் சொல்லுகிறதாக அவன்வார்த்தையை யூஹித்து; "அதுக்கு வேறு மத்யஸ்த்தரைத் தேடவேணுமோ? அந்தரங்கைகளான நாங்கள் சொன்னது போராதோ?" என்று சொல்லுவர்களாக எண்ணி, "நீங்கள் சொன்னது நமக்கு விஸ்வஸநீயமாயிராது" என்கைக்குறுப்பான உபபத்தியைப் பலவார்த்தைகளாலே தர்சிப்பியாநின்றுகொண்டு, இப்படியாகையாலே மத்யஸ்த்தர் சொன்னதே அர்த்தமாவதென்கிறான் என்றருளிச்செய்கிறார் - ஸ்நேஹிகளாயிருப்பார்க்கு இத்யாதி. ஆகையாலேயென்றது - லோகபரிபாடி அதுவாகையாலே யென்றபடி. குறையாய்த் தோற்றுமிறே என்றது - "அஸங்கதங்களைச்செய்தேன்" என்றும், "பொய்யைமெய்யாக உபபாதித்தேன்" என்றும் இவ்வழியாலே குறையாய்த் தோற்றுமிறே யென்றபடி. ஆனாலுமென்றது - நீங்கள் சொன்னவார்த்தை விஸ்வஸநீயமானாலுமென்றபடி.

கழறுகை - அஹிஹவித்து வார்த்தைசொல்லுகை. இது - கீழிலநுவாதம். மத்யஸ்த்தரைக்கொண்ட ஹிமதம்ஸாதித்துக்கொள்ளுகிறபோது ஸாதித்துக்கொள்ளுகிறோம்: நீ எங்களை அஹிஹவித்து வார்த்தைசொல்லாதே கொள்ளென்கிறாள் - அதுமுன்னம் இத்யாதி. அதுமுன்னமென்றது - மத்யஸ்த்தர் சொன்னதென்றபடி. முதன்மை - பாரத்வம். "உன்கைதவம்" இத்யாதிக்கவதாரிகை - நெஞ்சில் இத்யாதி. நான் க்ருத்ரிமனென்றதுக்கு உங்களையொழிய ஸாக்ஷியுண்டோ என்று கூட்டுவது. நான் "க்ருத்ரிமன்" என்றுசொன்னால், எல்லாரும் அப்படி சொல்லுவர்களோ என்ன - வாயுந்திரை இத்யாதி. அப்படி நினைக்கக்கூடுமோ என்ன - ஸம்பந்தம் இத்யாதி. உபயவிபூதியும் தன்பக்ஷத்திலே நிற்கையாலே "க்ருத்ரிமன்" என்று சொல்லுவர்களென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - அன்றிக்கே

வனுக்குப் பல அடிமை உண்டானால் தங்களில் எல்லாரும் ஒத்திருப்பர்களிறே க்ருதஸங்கேதிகளாய். மண்ணிலுள்ளாரும் விண்ணிலுள்ளாரும் அழகிதாக அறியும். விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடுவாசியற அறியும். "இவ்விடையாட்டம் இரண்டும் அறியாதாரையோ ஸாக்ஷியாகச்சொல்லுவது? * அறிவினால்குறைவில்லாத அகல்ஞாலமன்றோ இது!" என்றான். [விண்ணும்நன்கறியும்] - "ஆனாலும், அவர்களிலே ஒருத்தரைச் சொல்லச்சொல்லுங்கோள் பொய்யென்று" என்றான்; ஆனால், உனக்குப்பக்ஷபதித்திருக்கும் அவர்களிலே ஏற்றுகிறோம் கைமேலே: [திண்சக்கரநிழறுதொல்படையாய்] - குற்றந்தன்னையே குணமாகக்கொள்ளுவாரைக்கேள்! உன் க்ருத்ரிமத்துக்குப் பெருநிலைநிற்பார்க்கன்றோ தெரிவது! உன் நினைவு அறிந்து கையிலேவந்திருப்பது: "பகலையிரவாக்கவல்லையோ?" என்று கேட்டால் "ஓம்" என்றுகொண்டு ஆதித்யனைமறைப்பது; இப்படியேயிறே அவனுடைய வர்த்தநம். [திண்சக்கரம்] - அப்பொய்யிலவனைப் பேதிக்கிலும் இவனைப்பேதிக்க வொண்ணாதாயிருக்கை. ஸ்வதந்த்ரனானகையாலே கார்யாநுகுணமாக ஏறிட்டுக்கொள்ளும்அவன்: இவனுக்கு அதில்லையிறே. [நிழறுதொல்படையாய்] - நிழறுகையாவது - நடத்துகை. அதாவது - நிறங்கொடுக்கையாய், அஸத்ய ப்ரதிஜ்ஞனாயிருக்கச் செய்தே ஸத்யப்ரதிஜ்ஞனானால் பிறக்கும் கார்யத்தைப் பிறப்பித்துக் கொடுக்கை. [தொல்படையாய்] - இப்படிக்குப் பழையனாய்ப் போருகை. இவள் இப்படி சொன்னவாறே "ஸ்வபக்ஷத்திலே சிலர் இப்படிநமக்குண்டாவதே!" என்று, சொல்லலாவதுகாணாமல் கவிழ்தலையிட்டான். [உனக்கு ஒன்றுணர்த்துவன்நான்]- வாராய்! நீ சொலவற்றிருக்கவேண்டா; உனக்கு நான் நல்லதொரு ஹிதஞ்சொல்ல வாஎன்றாள். இது செவிகொடுத்துக் கேட்டானாகில், இதுக்குச் சொல்லலாவதொரு மறுமாற்றமில்லை; தனக்கு மேல்வார்த்தைசொல்லுகைக்கு ஒருபோக்கடியு

---

*சேஷி இத்யாதி. விவரணம் - ஒருவனுக்கு இத்யாதி. விவரணம் - விசேஷஜ்ஞர் இத்யாதி. கீழே "விண்" என்று - உபரிதநலோகவிவக்ஷயா அருளிச்செய்து, நித்யவிபூதிவிவக்ஷயா அர்த்தாந்தரம் -* **இவ்விடையாட்டம்** *இத்யாதி. இடையாட்டம் - வ்யாபாரம். அறிவினாற் குறைவில்லா அகல்ஞாலமென்றது - "நமக்கு ஜ்ஞாநமில்லை" என்று, குறைவு படவும் அநுதபிக்கவும் அறியாத அகல்ஞாலமென்றபடி. 'ஏற்றுகிறோம்கைமேலே' என்றது - சாடு; ப்ரத்யக்ஷமாக இசைவிக்கிறோமென்று சாடுவுக்கு அர்த்தம்; கையில் திருவாழியைக்கொண்டு அறிவிப்பிக்கிறோம் என்று ஸ்வஹாவார்த்தம். குற்றந்தன்னையே குணமாகக் கொள்ளுவாரைக் கேளென்றது - தோஷத்தை யதாவாக அறிந்திருக்கச்செய்தேயும், நாட்டார் "தோஷம்" என்று நினையாதே, "குணம்" என்றுகொள்ளும்படி மறைக்கும் அவர்களைக் கேளென்றபடி. விவரணம் - உன்க்ருத்ரிமத்துக்கு இத்யாதி. அதாவது - உன் க்ருத்ரிமத்துக்கு ஸஹாயம் பண்ணுவார்க்கன்றோ உன் தோஷத்தை மறைக்கும் ப்ரகாரம் தெரிவதென்றபடி. பெருநிலைநிற்பார் - ஸஹாயம்பண்ணுவார். பெருநிலை நிற்கும்படியைக் காட்டுகிறார் - உன்நினைவறிந்து இத்யாதி. கையிலேவந்திருப்பதென்றது - பீஷ்மநிரஸநத்துக்காகக் கையிலேவந்திருப்ப தென்றபடி. * திண்மைக் கர்த்தம் -* **அப்பொய்யில்** *இத்யாதி. பேதிக்கவொண்ணாமைக்கு ஹேதுவேதென்ன -* **ஸ்வதந்த்ரன்** *இத்யாதி. இவனுக்கதில்லையிறே என்றது - பாரதந்த்ரனானகையாலே பேதிக்கப்போகாதென்றபடி. நடத்துகையாவது - பெருநிலைநிற்கை. அர்த்தாந்தரம் -* **அதாவது நிறங்கொடுக்கை** *இத்யாதி. அதாவதென்றது - நிழறுகையாவதென்றபடி. 'கார்யத்தைப் பிறப்பித்து' என்றவிடத்திலே - "ஸம்ருத்தவேஷாய" இத்யாத்யநுஸந்தேயம். இப்படிக்கென்றது - இவ்வாகாரங்களுக்கென்றபடி. திண்ணிதான திருவாழியாகிற தேஜஸ்கரமான அஸாதாரணாயுதத்தை யுடையவனே! என்று ஸப்தார்த்தம். நல்லதொரு ஹித மென்றது - க்ருத்ரிமங்களைப் பண்ணாதே அங்கேறப் போ என்கையாதல், க்ருத்ரிமங்களைப்பண்ணினேனென்று சொல்லிவிடு என்கையாதல், 'மறுமாற்றமில்லை'*

மில்லை; †(இவனுக்குப் போக்கடியாவது - ‘‘நான் ஸ்வதந்த்ரன்’’ என்றுசொல்லுகையிறே.) இதெல்லாங் கிடக்கச்செய்தே பேசாதேபுகா ‘‘இதொரு பேச்சின்இனிமை யிருந்தபடி யென் ?’’ என்றான். [மழறுதேன்மொழியார்கள்] - பாவியேன், நீ யாருடைய பேச்சை யாருடைய பேச்சென்று ப்ரமிக்கிறாய்! மழறுதேன் - மழலைத்தேன். கலங்கின தேன்போலே இனியபேச்சுக்களையுடையராயிருக்கை. இவன் ஸந்நிதிமாறாமையாலே கலக்கமும் மாறாதே யிருக்குமே. ‘‘அவையெல்லாம் இங்கேயிறே’’ என்னுமே அவன். [மொழியார்கள்] - எத்தனைபேர் உனக்கு? [நின்னருள்சூடுவார்] - ஆரேனும் பேச்சைக்கேட்டுத் தங்கள் பேச்சென்று ப்ரமிக்கும்படி பண்ணவல்லவர்கள். ஓருக்தியாலே ‘ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ:’ (ஸ்திதோஸ்மிகதஸந்தேஹ:) என்னும்படி வார்த்தைசொல்லவல்ல உன்னை ஓருக்தியாலே கலங்கப்பண்ணவல்லவர்கள். ‘‘அதுக்கென்?’’ என்றான்; ‘‘அவர்களெங்களைப் போலல்ல காண்; நீ ப்ரயோஜந நிரபேக்ஷமாக இங்கே நிற்கச் செய்தேயும், இத்தை அறிந்துவைத்தும் க்ஷணமாத்ரவிஶ்லேஷம் பொறுக்கமாட்டாமையாலே அவர்கள் மநஸ்ஸு வாடுங்காண்! ஆஶ்ரயத்தை யிழந்த தளிர்போலேகாண் அவர்கள் நெஞ்சு வாடும்படி. ‘கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள் தங்குமேல் என்னாவி தங்கும்’ என்றிருக்குமவர்களிறே அவர்கள்; அவ்வளவில் நீ உதவப்பெறாமையாலே போர நோவுபடுவர்கள்; அதுகண்டால், நீ பொறுக்கவல்லையோ?’’ என்றுசொல்லிப் பேசாதேயிருந்தாள். ‘‘உங்கள்பேச்சிலும் எனக்கு ப்யாரகம் இவற்றின்பேச்சன்றோ!’’ என்று அவர்களைவிடாப் பூவையையும் கிளியையும் கொண்டாடப் புக்கான்; சிலரை ஆதரிக்கையாவது - அவர்களுடைமையை ஆதரிக்கை யிறே. அவற்றை ஆதரித்து வார்த்தைகொள்ளப் புக்கவாறே, வாராய்! அவைதான் நீ ஆரினவென்றிருக்கிறாய்? அவை நீ நினைக்கிறவர்களதன்று காண்! [எம்குழறுபூவையொடும் கிளியொடும் குழகேலே] - அவை உனக்குவார்த்தைசொல்லுகிறனவல்லகாண்! அவற்றுக்குஅது ஸ்வபாவங்காண்! [குழகேலே]- நாங்கள் அந்யமாக வார்த்தை சொல்லச்செய்தேயும் கண்டாயே நீ அநந்யகதித்வந்தோற்ற வார்த்தைசொல்லுகிறபடி; அப்படியே இவற்

---

*என்றது - திருவாழியாலே ஆதித்யனை மறைக்கையாலே, ‘‘க்ருத்ரிமத்தைப்பண்ணவில்லை’’ என்று சொல்லலாவதொரு ப்ரத்யுத்தரமில்லையென்றபடி. ‘போக்கடியும் இல்லை’ யென்றது - தான் அஸத்யவாதி என்னுமதுக்கு ப்ரத்யுத்தரமில்லாதபின்பு, இவர்களோடிட்டிடுகொண்டு வார்த்தைசொல்லுகைக்கு அவகாசம் இல்லையென்றபடி. ‘இதெல்லாங் கிடக்கச்செய்தே’ என்றது - ‘உணர்த்துவன் நான்’’ என்றால், ‘‘அதெது’’ என்றுகேட்குதல், ப்ரத்யுத்தரம்சொல்லுதல் செய்கையாகிற இதெல்லாங் கிடக்கச்செய்தே என்றபடி. பேசாதேபுகா - பேசாதேயிருந்து. மழலைத்தேன் - இளந்தேன். அர்த்தாந்தரம் - கலங்கின இத்யாதி. கலங்குகைக்கு ஹேதுவெதென்ன - இவன்ஸந்நிதி இத்யாதி. ‘‘மொழியார்கள்’’ என்றதுக்கு அவதாரிகை - அவையெல்லாம் இத்யாதி. ‘‘மழறுதேன்’’ என்றதினர்த்தத்வயத்துக்கும்சேர ஹாவம் - ஆரேனும்பேச்சை இத்யாதி வாக்யத்வயமும் என்னுதல்; கீழ்வாக்யத்துக்கு ஹவிதம் - ஒருக்தியாலே இத்யாதி என்னுதல். ஒருக்தியாலே - ‘‘[illegible]’’ என்கிற உக்தியாலே இத்யர்த்த:. ‘எங்களைப்போலல்லகாண்’ என்றது - நெடுநாள்பிரிந்து நோவுபட்டு, ஜீவிக்கவும் மாட்டாதே முடியவும்மாட்டாதே யிரித்திருக்கிற எங்களைப்போலல்லகாண் என்றபடி. விவரணம் - நீ ப்ரயோஜந இத்யாதி. ‘‘வாடிநிற்க’’ என்றதுக்குஹாவம் - ஆஶ்ரயத்தை இத்யாதி. க்ஷணமாத்ரம் விஶ்லேஷம்பொறுக்கமாட்டாமல் வாடுகைக்கடியேதென்ன - கொங்கைமேல் இத்யாதி. நாச்சியார்திருமொழி. பாசுரஸ்ய ஸ்பஷ்டோர்த்த:. இவர்களைவிட்டுப் பூவைகிளிகளையாதரிக்கிறது என்னென்ன - சிலரை இத்யாதி. ‘‘எம்’’ என்றதுக்குஹாவம் - வாராய் இத்யாதி. ‘‘குழறுபூவை’’ என்றதுக்குஹாவம் - அவை இத்யாதி. ஸ்வஹாவமானபடி எப்படியென்ன - நாங்கள்அந்யமாக இத்*

ரின்பேச்சும் அந்யார்த்தங்காண்! ([குழறுபூவை] - அநக்ஷரஸ்ரஸமாகப்பேசுகிற பூவை. குழகுதல் - லீலாரஸங் கொண்டாடுகை.) (ரு)

## ஆறாம் பாட்டு.

குழகிஎங்கள்குழமணன்கொண்டு கோயின்மைசெய்துகன்மமொன்றில்லை
பழகியாமிருப்போம் பரமேயித்திருவருள்கள்?
அழகியார் இவ்வுலகுமூன்றுக்கும் தேவிமை தகுவார் பலருளர்
கழகமேறேல் நம்பி! உனக்கும் இளைதேகன்மமே.

ஆ.—(குழகி.)-முற்பட இவளையணுகக்கூசியிருந்த எம்பெருமான், இப்படி இவள் தன்னைக்குறித்துச் சிலவார்த்தைகளைச் சொன்னவாறே, அதுவேபற்றாசாக நிர்ப்பயனாய்ச் சென்றணுகி, இவள்பாடேயிருந்த குழமணனை எடுத்தருள; "குழகியெங்கள் குழமணன்கொண்டு அடிக்கழிவு செய்தால் உனக்கென்ன ப்ரயோஜநமுண்டு?" என்று இவள்சொல்ல, "என்னுடைய ஆத்மதாரணார்த்தமாக எடுத்தேன்" என்று அவனருளிச்செய்ய, "நாங்கள் இப்பொய்களுக்குப் பழையோமல்லோமோ! உன்னுடைய இந்த நிரவதிகமான அபிநிவேசத்துக்கு நாங்கள் விஷயமாகப்போதுவோமோ?" என்று இவள் சொல்ல, "நீ யல்லது மற்றெனக்கு ஸ்ப்ருஹணீயவிஷயமுண்டோ?" என்று அவனருளிச்செய்ய, "த்ரைலோக்யத்திலுள்ளாரிலும் அழகியார் உனக்கே தேவிமைக்குறுப்பாயிருப்பார் எத்தனைபேருளர்! அதுநிற்க; நீ முந்தற எங்கள்பரிஷத்திலே வந்தேறாதே கொள்: இது உனக்கும் இளையதான கன்மம்" என்கிறாள்.

ஒ.—[குழகி] - முந்தற இப்பிராட்டியும் தோழிமாரும் அநஹிஸவநீயைகளாயிருக்கையாலே அணுகக் கூசியிருந்த எம்பெருமான், தன்முகமுத்ரையாலும் ஸவிநயமாய் ஸாவமர்ப்பமான பேச்சுக்களாலும் கலங்கி மருந்திடுபட்டாரைப்போலே இவர்கள் நிஷேதிக்கமாட்டாதேயிருக்க அதுவேபற்றாசாகக்கொண்டு நிர்ப்பயனாய்ச்சென்று அணுகி இவள்பாடேஇருந்த குழமணனை எடுத்தருள, குழகி "எங்கள் குழமணன் கொண்டு அடிக்கழிவுசெய்தால் உனக்கு என்ன ப்ரயோஜநமுண்டு?" என்ன, அவனும் "எனக்கு இனி இதுவேப்ரயோஜநம்; ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநமுண்டோ?" என்ன, "நாங்கள் இப்பொய்களுக்குப் பழையோம் அல்லோமோ? உன்னுடைய நிரவதிகமான அபிநிவேசத்து நாங்கள் விஷயமாகப் போருவுதோமோ?" என்று பிராட்டி அருளிச்செய்ய, "நீயல்லது எனக்கு ஸ்ப்ருஹணீயவிஷயமுண்டோ?" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, "அழகியார் இவ்வுலகு மூன்றுக்கும் தேவிமைதகுவார் பலர்உளர்: அங்கே போ" என்று இவர்கள் சொல்ல, "அங்கே போவோம்" என்று இவர்களிருந்தகோஷ்டியில் நடுவேவந்துபுகுரப்புக, "முதலிகளாயிருக்கிற உமக்குச் சிறுப்பெண்கள்கழகத்திலே புகுருகை ஈடென்னப்போராது" என்ன, "எனக்கு முதலித்தனம்வேண்டா; நான் பயலி

யாதி. அந்யமாக - வேறாக; உறவற என்றபடி. குழகேலே - ஆதரித்து வார்த்தைகொள்ளாதேகொள். குழறுகை - அநக்ஷர ஸரஸமாகச் சொல்லுகை. "ஸ்ரீஶோவஸிமதவஸநெ ஊ:ஶுரிஷெ்வவநஹவ" இதி பகவத்கீதா ஶ்லோகஷ்டாதஶே. (ரு)

யாய்ப் போகவே அமையும்'' என்று அவன் அருளிச்செய்ய, *''தீமைசெய்யும் சிரீதரனை உனக்கும் இதுவாலிஸப்ரவ்ருத்தி'' என்கிறாள்.

ப.—அநந்தரம், மேலுணித்துக் குழமணனையெடுத்த அவனைக்குறித்து, ''உன்னுடைய ஈஸ்வரத்வம் எங்களோடேகாட்டாதே;அதுக்குத்தகுவாரோடேகாட்டு'' என்கிறாள்.

குழகி எங்கள் குழமணன் கொண்டு - விளையாட்டிலே எங்கள் குழமணனையெடுத்துக்கொண்டு, கோயின்மைசெய்து - கைப்பட்ட ப்ரியத்தாலே மேன்மை பாவித்தால், ஒன்று-ஒரு, கன்மம்-காரியம், இல்லை-இல்லை; (உம்முடைய ஸரஸங்களும் மேன்மையும்), யாம் - நாங்கள், பழகி - பண்டேபழகி, இருப்போம் - இருப்புதோம்; இ-இந்த, திரு - அதிஶயிதமான, அருள்கள் - அருள்களானவை, பரமே - நாங்கள் பொறுக்கவல்லவை யல்ல; அழகியார்-(அதுக்கநுரூபமான) அழகையுடையாராய், இ-(உம்முடைய ஸர்வேஶ்வரத்வத்துக்கு விஷயமான) இந்த, உலகுமூன்றுக்கும் - லோக த்ரயத்துக்கும், தேவிமை - உம்மோடொக்கமுடிசூடுகைக்கு, தகுவார் - தகுதியாயிருப்பார், பலர் - (ஜெஸஹஸ்ர'' என்னும்படி) அநேகம்பேர், உளர் - உளர்; நம்பீ-பரிபூர்ணமானமேன்மையையுடைய உனக்கு அவர்கள்திரளல்லவோ தகுவது! கழகம் - எங்கள் திரளில்வந்து, ஏறேல் - ஏறுதேகொள்; உனக்கும் - (பிறர்க்குத்தீமைசெய்கையே ப்ரக்ருதியான)உனக்கும்,கன்மம் - இந்தச்செயல், இளைது - பால்யஸூசகம். கழகம்- திரள், குழமணனென்று - ஆஶ்ரிதருடைய லீலாபரிகரமும் அவனுக்கபிமதமென்று ஸூசிப்பிக்கிறது.

இ—ஆறும்பாட்டில், முன்பு இவளும் தோழிமாரும் அநபிஸ்வீகைகளாயிருக்கையாலே அணுகக்கூசினவன், தன்னுடைய முகவிகாரத்தாலும் ஸ்மிதவீக்ஷணாதிகளாலும் ஹாவமர்ப்பமான தாழ்ந்த பேச்சுக்களாலும் இவர்கள் மருந்திடுபட்டாப்போலேயாய் இவனைநிஷேதிக்கமாட்டாத ஊமையிலே நிர்ப்பயனாய்ச்சென்று அணுகி, இவர்கள் பாடே இருந்தகுழமணனைமேல்விழுந்து எடுத்துக்கொண்டான். [குழகி எங்கள் குழமணன்கொண்டு] - பாவீ! இது ஆரதாகஎடுத்தாய்? எங்களதுகாண்; நீ நினைக்கிறவர்களதன்றுகாண்! என்கிறாள். '' எங்களது என்றவாறே பொகட்டுப்போம் '' என்று சொன்னாள்; அதுதானே அவனுக்குவிருப்பத்துக்கு உடலாயிற்று. ''எங்கள் அநுமதி வேண்டாவோ உனக்கு?'' என்ன, ''எனக்குநிவாரகர்உண்டோ? நான்செய்தது செய்யலாமித்தனையன்றோ''என்ன, [கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை] - நிவாரகர் இல்லையென்று,அடிக்கழிவானசெயல்களைச்செய்தால் உனக்கு ஒருகார்யமில்லை; நீ நினைக்கிறவர்களது அல்லாமையாலே உனக்கு ஒன்றும்வாயாது;எங்களநுமதி இல்லாமையாலும் ப்ரயோஜநமில்லை. ''ப்ரயோஜநமில்லையாவதென்? இதுதானே ப்ரயோஜநம்; ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநமுண்டோ?''என்ன, [பழகியாமிருப்போம்] - இப்பொய்களுக்குப்பழையோம் அல்லோமோ? [பரமேயித்திருவருள்கள்]—'''உங்களுடைய லீலோபகரணம் எனக்கு ஹோமோபகரணமன்றோ? இதுஒழியவேறொரு ப்ரயோஜநம்உண்டோ?'என்று நீசொல்லுகிற அநுநிவேஶமெல்லாம் எங்களளவோ? இதுக்கு நாங்கள் விஷயமாகப்போருமோ? போலிகண்டுப்ரமிக்கும்படி உன்னைப்பண்ணினவர்கள் பக்கலிலேபோ''என்ன, ''அவர்கள் ஆர்? அங்ஙனேயும் சிலருண்டோ!'' என்ன, ''அவர்களைச்சொல்லித்தருகிறோம்:[அழகியா

ரிவ்வுலகுமூன்றுக்கும்] -'த்ரைலோக்யராஜ்யம் ஸகலம்ஸீதாயா நாப்நுயாத்கலாம்'' என்றிருக்குமவர்கள். [தேவிமைதருவார்] - உனக்குப் பட்டத்துக்குரியராய் இருக்குமவர்கள். ''ராவணோ ஹத:இதி' என்று உனக்குஸத்ருசைகளாயிருப்பார். [பலருளர்]- ஒருவரிருவர் அல்லர். ஓரடிப்பாடரல்லீரே! பரப்பரன்றோ நீர்!! அவர்கள் பக்கலிலே போம்'' என்ன, ''போவோம்''என்று இவர்கள்திரளிலே வந்து புகுரப்புக, [கழகமேறேல்]-''எங்கள்திரளிலேவாராதேகொள்''என்ன,''எனக்குக்குற்றமென்?''என்ன, [நம்பீ]- ஸமஹாமாத்யாத்மகுணோபேதர்திரளிலேயன்றோநீர்புகுவது! அவர்களன்றோஉம்மைக்கிட்டஉரியார்; சிறுப்பெண்கள்திரளிலே புகுகை ஈடன்று'' என்ன, ''ஆனால் நாம் செய்ததுக்கு நிவாரகர் உண்டோ?''என்ன, [உனக்குமிளைதேகன்மமே]-* தீமைசெய்யும் சிரீதரனை உனக்கும் இது வாலிப்ப்ரவ்ருத்தி என்கிறாள். ''ஸர்வேஶ்வரனாய் அவாப்தஸமஸ்தகாமனானஅவனைச் சில பெண்கள் 'எங்கள்திரளிலே புகுராதேகொள்'என்ன, புகமாட்டாதே பேகணித்துநின்ற இந்த ஆஶ்ரிதபாரதந்த்ர்யத்தை, உத்கர்ஷம்சொல்லப்பொறாதஸம்ஸாரத்திலே தங்களைஒழிய ஆர் விஶ்வஸிக்க எழுதியிட்டுவைத்தார்கள்'' என்றுபட்டர் அருளிச்செய்தார்.

ஈடு.—ஆறாம்பாட்டு. தங்களகவாயிலோடுகிறது தெரியாமல் மறைத்துக்கொண்டு அநஸூஹவனீயைகளா யிருக்கிற இப்பிராட்டியையும் தோழிமாரையுங்கண்டு,அவன் தன்முகமுத்ரைகளாலும், பாவகர்ப்பமான உக்திகளாலும், அத்தை அநுவதித்தாற்போலேயிருக்கிற விலாஸசேஷ்டிதங்களாலுமாக இவர்கள் அபிசந்தியைக்குலைத்து, இனி இவர்கள் நான் சொன்னவையெல்லாம் ''வேண்டா'' என்னமாட்டாதவர்க ளென்னும்படி வாய்மாளப் பண்ணி, அவ்வளவிலேசென்று இவளுடைய லீலோபகரணமான குழமணனை எடுத்துக் கொண்டான்.

[குழகியெங்கள்குழமணன்கொண்டு] என்கிறார்கள். குழகுகையாவது - யுவாக்களாயிருக்கும் அவர்கள், எதிர்த்தலை தங்களுக்கு அஹ்வயமானால் அவர்களைச் சேரவிட்டுக் கொள்ளுகைக்காகப் பண்ணும் சேஷ்டிதங்களுக்குப்பேர். மேன்மையாலேயாகவுமாம், கீழ்மையாலேயாகவுமாம்: ஏதேனுமாக இவ்வளவுகிட்டிநின்று அவர்கள்நினைவைக்குலைத்துக் குழமணனை எடுத்துக்கொள்ளும்படியாகக் கைப்புகுந்தானிறே. [எங்கள்குழமணன் கொண்டு] - அதுதான் நீ யாரதென்று இருக்கிறாய்? அது நீ நினைக்கிறவர்களதல்ல காண்; அது எங்களது. உனக்குஇதினால் ஒருகார்யமில்லை. '''எங்களது' என்றவாறே போகட்டுப்

---

ஆறாம்பாட்டு.—குழகி இத்யாதி. ''குழகியெங்கள் குழமணன்கொண்டு'' என்கிறபதத்திலே நோக்காக அவதாரிகை - தங்களகவாயில் இத்யாதி. ''குழகியென்றது:குபாவம் - தன்முக இத்யாதி. அத்தை - அந்தபாவத்தை. அநுவதிக்கை - ஸூசிப்பிக்கை. 'சொன்னவையெல்லாம்' என்றது - செய்தவையெல்லாமென்றபடி. 'வாய்மாளப்பண்ணி' என்றது - ஈடுபடுத்தியென்றபடி.

''குழகி'' என்றால் - 'முகமுத்ரைகளாலும்' என்றுதொடங்கிச்சொன்ன இவையெல்லாங் காட்டுமோ? என்ன - குழகுகையாவது இத்யாதி. ''குழகி'' என்கிறஇது - ஸாமாந்யஶப்தமாகையாலே, கீழ்ச்சொன்னவற்றையெல்லாம் காட்டும் என்றுகருத்து. ''கோயின்மைசெய்து'' என்கிற பதத்தாலே - மேன்மைதோற்றியிருக்க, முகமுத்ரைதொடக்கமானவற்றால் குழமணன்கொள்ளுகிறபடி எங்ஙனே? என்ன - மேன்மையாலே இத்யாதி. குழமணன் - மரப்பாச்சி. ''எங்கள்'' என்ற வந்தரம்''கொண்டு'' என்கிறபதத்துக்கு வாஸனை - எங்களதென்றவாறே இத்யாதி. கோயின்மை

போம்'' என்று சொன்னார்கள்; அதுதானே அவனுக்குப் பற்றுகைக்குஉடலாயிற்று. ''எங்களநுமதிவேண்டாவோவுனக்கு? '' என்ன, ''எனக்கு நிவாரகருண்டோ! நான்செய்வது செய்யலாமித்தனையன்றோ? '' என்ன, [கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை] - நீசெய்கிற அடிக்கழிவால் உனக்கொரு ஃபலமில்லை. கன்மமென்று - கன்மஃபலத்தை நினைக்கிறது. ஆராய்ச்சியில்லாதவிடத்தே செய்யுமவற்றைச் செய்யாதே கொள்ளாய். அவை செய்தாலும்ஆமிறே உனக்கொருப்ரயோஜநமுண்டாகில். கோயின்மைசெய்கை யாகிறது - இவர்கள் இசைவின்றிக்கே யிருக்க இவர்கள் லீலோபகரணங்களை எடுத்துக்கொள்வது, அவர்கள் வேண்டவேண்டக் கொடாதொழிவதாய் மிறுக்குப்பண்ணுகை. [கன்மமொன்றில்லை] - நீ போகிறவிடத்துக்கு இவை கொண்டுபோகவொண்ணாது; உனக்கு இவைதான் வேண்டா: இனி எங்களுக்கோ அநபிமதம்; ஆனபின்புஇச்செயலாலென்ன ப்ரயோஜநமுண்டு? இவைகொண்டுபோனால், தங்களதல்லாமையாலே அவர்கள் முகம் பாரார்களே; நீ ஆதரித்தவிஷயத்தினதல்லாமையாலே உனக்குவேண்டா, எங்கள் இசைவோடேகொடு போகாமையாலே எங்களுக்கு ப்ரியமன்றே! ஆனபின்பு, இத்தால்வருவதொரு பேறில்லை காணென்றார்கள். '' அதுகிடக்க; நான் முன்னம் உங்களோடேகககண்டன்; எனக்கும் ஒருப்ரயோஜநமில்லை, இத்தை ஸாதநமாகக்கொண்டு சாதிக்கவேண்டுவதோர் அர்த்தங் கண்டு வைத்திலேன்; இதுதானேயிறே எனக்குப்ரயோஜநம்; ப்ரயோஜநத்துக்கு ஒருப்ரயோஜநமுண்டோ?'' என்றான்; அங்ஙனேயானவன்று அநவஸ்த்தைவரத்தொடங்குமிறே. [பழகியாமிருப்போம்] - இப்போய்களுக்குப் பழையோமல்லோமோ! எங்களுக்கன்றுகாண் இவை சொல்லுவது! நீசொல்லும் பொய்யெல்லாம் ''மெய்'' என்றிருப்பார்க்குச்சொல்லாயென்றார்கள். அவனும், '' இத்தலையையொழிய எனக்குச்செல்லாது '' என்னுமிடந் தோற்றச் சிலக்ரியைகளைப் பண்ண, [எம்பரமேயித்திருவருள்கள்] - நீ எங்களளவல்லாத அபிநிவேஶத்தைப்பண்ணி, குளப்படியிலே கடலை மடுத்தாற்போலே நீசெய்கிறவை யெல்லாம் எங்களால்பொறுக்கப்போமோ? நீசெய்கிறவையெல்லாம் பொறுக்கவல்லார் வேறே சிலவர்களென்றார்கள். '' அவர்களார் ?'' என்றான்: [அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும்] -

---

*யாவது - நியாமகர்கீழடங்காத ஆகாரமாகையாலே - 'நீசெய்கிற அடிக்கழிவால்' என்கிறார்கள். அடிக்கழிவு - அடைவுகேடு. கோயின்மைசெய்து - மேன்மைபாவித்துஇத்யர்த்த:. குழகி - வசீகரண வ்யாபாரங்களைப்பண்ணி என்று ஶப்தார்த்தம். கன்மம் - கர்மம். ''கன்மம்'' என்றால் - பலத்தைக்காட்டுமோ? என்ன -* **கன்மமென்று** *இத்யாதி. ''கோயின்மைசெய்து'' என்றபதத்துக்கர்த்தம் -* **ஆராய்ச்சி** *இத்யாதி. 'ஆராய்ச்சியில்லாதவிடத்தே' என்றது - அராஜகதேஶத்திலேயென்றபடி. ''கன்மமொன்றில்லை'' என்றதுக்கர்த்தம் -* **அவைசெய்தாலும்** *இத்யாதி. ''கோயின்மைசெய்து'' என்று இவர்கள் சொல்லுகைக்கு அவன்செய்தகோயின்மையேதென்ன -* **கோயின்மைசெய்கையாகிறது** *இத்யாதி. ''ஒன்று'' என்றதுக்குபாவம் -* **நீபோகிறவிடத்துக்கு** *இத்யாதி. அடைவே கீழ்வாக்யவிவரணம் -* **இவைகொண்டுபோனால்** *இத்யாதி. மேலிற்பதத்துக்கவதாரிகை -* **அதுகிடக்க** *இத்யாதி. 'அதுகிடக்க' என்றது - எனக்கு உங்கள்பக்கல் ஸ்நேஹமில்லையென்றதுகிடக்கவென்றபடி. 'அங்ஙனேயானவன்று' - ப்ரயோஜநத்துக்குப்ரயோஜநம் கல்பிக்குமன்று. 'அநவஸ்த்தை'யாவது - அதுக்கும் ப்ரயோஜநம், அதுக்கும்ப்ரயோஜநமாகை. ''பழகியாமிருப்போம்'' என்றதுக்கு ஹார்த்தபாவம் -* **எங்களுக்கன்றுகாண்** *இத்யாதி. ''எம்'' என்றத்யாஹரித்து - 'எம்பரமே' என்கிறார். ''அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும்'' - உலகுமூன்றும் விலையாகப்போரும்படி அழகியாரென்றுவிவக்ஷித்து, அதுக்கு ப்ரமாணம் -* **த்ரைலோக்யராஜ்யம்** *இத்யாதி. ''த்ரைலோக்யராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத்கலாம்'' இதிஸாந்தா*

“த்ரைலோக்ய ராஜ்யம் ஸகலம் ஸீதாயா நாப்நுயாத் கலாம்” (த்ரைலோக்ய ராஜ்யம்ஸகலம்ஸீதாயாநாப்நுயாத்கலாம்) - மூன்றுலோகத்தையும், அத்தோடே விஶ்வ ஶப்தவாச்யனானவன்தன்னையுங்கூட ஒருதட்டாக்கினால், பிராட்டியுடைய ஒருகலா மாத்ரத்துக்கு எடை நிற்கமாட்டாது. “அவர்களெங்ஙனேயிருப்பர்கள்?” என்றான்: [தேவிமைதகுவார்]-“உனக்குப் பட்டங்கட்டப்போரும்படியாயிருப்பார்”என்ன, “ஆனால்,எனக்கு உபேக்ஷிக்கைக்கும் சிலர்வேணுமே!” என்றான்: [பலருளர்] - உனக்குப்போகடுகைக்கும் விஷயமங்கே உண்டேன்கிறார்கள். ஒருத்தனுக்கொன்று ஸ்வபாவமானால், அது வேறே ரிடத்தே போங்காட்டில் குலையாதிறே; அப்படியே, அங்குள்ளாரையும் போகடுகை இவனுக்கு ஸ்வபாவமென்னுமிடந்தோற்றச் சொல்லுகிறாள். “ஓரடிப்பாடரல்லீரேநீர்; பரப்பரல்லீரோ! அவர்கள்பக்கலேறப்போம்” என்ன, “ஆனால், அங்குப் போம்வழியும், போனாற்செய்யும்படிகளும் எல்லாம் கேட்டுப்போகவேணுமே; இனித்தான் அந்தேவாஸிகளுக்கிறே ஒன்று சொல்லுவதும்; “பரிப்ரஶ்நேந ஸேவயா” (பரிப்ரஶ் நேநஸேவயா) என்றிறே கேட்பார்படி; ஆனபின்பு, நாலடிகிட்டநின்று கேட்கவேணும்” என்று திரளிலேவந்து புகுரப்புக்கான்: [கழகமேறேல்நம்பீ] - அவர்கள்முன்னமானாராகிடுகே; †ஏறிட்டுக்கொள்ளுவதுஎங்களுக்குப் பரமோ?நீர் முன்னம் எங்களோலக்கத்தில் புகுராதேகொள்ளும். இவ்விடத்தே பட்டரருளிச்செய்வதொரு வார்த்தையுண்டு:—“ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் உபயவிபூதியுக்தனாய் ஸர்வாதிகனாய் ஸர்வநியந்தாவாயிருக்கிற ஸர்வேஶ்வரன் நாலிடைப்பெண்களிருந்தவிடத்தே புக்கல்லது நிற்கமாட்டாத செல்லாமை விளைய அவர்கள் ‘நீயிங்குப்புகுராதேகோள்’ என்ன, விலங்கிட்டாற்போலே பேரவும் திரியவும் மாட்டாதே தமோறிநின்றானேன்கிற ஸௌஶீல்யம் † (தங்களையுமிவர்களையுமொழிய)

காண்டே. [16;14] * ஸகலஶப்தத்துக்கர்த்தம் - விஶ்வஶப்தவாச்யனை இத்யாதி. ‘கலாமாத்ரத்துக்கு என்றது - அழகிலே கலாமாத்ரத்துக்கென்றபடி. அவர்களெங்ஙனேயிருப்பர்களென்றது - அவர்கள் நமக்கு உபேக்ஷாவிஷயமாயிருப்பர்களோ? ஆதரவிஷயமாயிருப்பர்களோ? என்றபடி. தேவிமை - தேவியாகைக்கும். ஆனாலென்றது - அவர்களெனக்கு ஆதரவிஷயமானாலென்றபடி. உபேக்ஷிக்கிறதுக்குத் தாங்களே விஷயமித்தனையொழிய, அங்குள்ளாரை இவன்போகடுமோ? என்ன - ஒருத்தனுக்கு இத்யாதி. “அழகியார்” இத்யாதிக்கு - இவ்வுலகம்மூன்றும் விலையாம்படியான அழகையுடையராய்; தேவியாகைக்கும் தகுதியாயிருப்பார் அநேகம்பேருளர் என்று ஶப்தார்த்தம். தேவியாகைக்கும் - பட்டமஹிஷியாகைக்கும். “மூன்றுக்கும்” என்றது - மூன்றுமென்றபடி. “அழகையுடையராய்த் இந்தலோகத்ரயத்துக்கும் ஒக்கமுடிசூடுகைக்குத் தகுதியாயிருப்பார் அநேகம்பேருளர்” என்று இருந்தபடியே உரையில் ஶப்தார்த்தம். “பலர்” என்றதுக்குஃபலிதம் - ஓரடிப்பாடர்இத்யாதி. அதாவது - உபேக்ஷாவிஷயமும் உண்டென்றபடி. ஓரடிப்பாடர் - ஸங்குசிதர். தூரவிருந்துகேட்கவொண்ணாதோ? என்ன - இனித்தான் இத்யாதி. அந்தேவாஸியானால் கிட்டவரவேணுமோ? என்ன, பரிப்ரஶ்நேஇத்யாதி. “தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா । உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்த்வதர்ஶிந:” இதி பகவத்கீதாஸு [4;34]. ‘ஏறிட்டுக்கொள்ளுவதெங்களுக்குப் பரமோ’ என்றது - இதுக்குமுன்பில்லாத ஆசார்யத்வத்தை ஏறிட்டுக்கொள்ளுகை எங்களுக்குப் பரமோவென்னுதல்; போம்வழியும் போனால்செய்யும்படிகளும் சொல்லுமத்தை ஏறிட்டுக்கொள்ளுகை எங்களுக்குப் பரமோவென்னுதல். இவர்கள் “கழகமேறேல்” என்றவாறே அவன்ஸ்தப்தனாய்நின்றபடியை அநுஸந்தித்து பட்டர்ஈடுபாடு - இவ்விடத்தேபட்டர் இத்யாதி. இது - ப்ராஸங்கிகம். ‘நாலிடைப்பெண்கள்’ என்றது - “ஆய்ச்சியோம்” என்றத்தைப்பற்ற, வ்யாஸாதிகள் என்றது - க்ருஷ்ணவ்ருத்தாந்தத்திலே ஈடுபட்டவர்களாகையாலே. ஆதிஶப்தத்தாலே - ஆழ்வார்களைச்சொல்லு

† ஏறிட்டுக்கொள்ளாதது என்றும் பாடமுண்டென்பது அடையவளைந்தானரும்பதத்தாலேற்படுகிறது.

ஆரறிந்து கோண்டாட வ்யாஸாதிகளெழுதியிட்டுவைத்துப்போனார்களோ?'' என்றருளிச் செய்வர். ''ஸர்வநியந்தாவானவன் சிலர்க்கு நியமிக்கலாம்படி எளியனானான்'' என்றால், ''இதுமெய்'' என்று கைக்கொள்ளுவாரைக் கிடையாதிறே. ஶாஸ்த்ரங்களெல்லாம் ஈஶ்வரேஶித்தவ்யவிபாகம்பண்ணி ஒருங்கவிடாநிற்க, அத்தலையித்தலையாகச் சொல்லுகிறதிறே இது! 'சாதுகோட்டியுட்கொள்ளப்படுவார்' என்றுசொல்லுவது - வைஷ்ணவர்களுடைய திரளிலே ஒருவன்வந்துபுகுந்தால் துர்மாநத்தாலே மலையிட்டமுக்கினாற்போலே இருக்கையன்றிக்கே, நீரும்நீரும் கலந்தாற்போல இவன் புகுந்தமை தெரியாதபடியிருந்து, அவர்கள்இடங்கொடுத்து அவர்கள் பரிக்ரஹிக்கையிறே ஒருவனுக்கு நன்மையாவது; இது இவர்களுக்கேயன்றியே, அவனுக்குமொத்திருக்கிறபடி; ''ஸபாபிராம: பரிஷத்கதஶ்ஶநைர்ப்புபூஷயாஸக்தமநாபபூவஹ'' (ஸசாபிராமஃபரிஷத்கதஶ்ஶநைர்ப்புபூஷயாஸக்தமநாபபூவஹ) - பெருமதிப்பராய்ப் பாட்டறிந்து கோண்டாடுகைக்குப் போரும்படி பேரறிவாளரான வித்வஜ்ஜநங்களும் தாமுமாகப் பேரோலக்கமிருந்து பிள்ளைகளைப் பாடவிட்டுத் தாம் ஸிம்ஹாஸநஸ்த்தராயிருந்தார்; இவர்கள் தாழவிருக்கத் தாமுயரவிருந்த இடம் தமக்கு அநபிமதமாகையாலே ஸிம்ஹாஸநத்தினின்றும் மெள்ள இழிந்து, தெரியாதபடி இவர்கள் நடுவே புகுந்திருந்தார். அது என்னேன்னில்:-ராஜா எழுந்திருந்தால் ஓலக்கம் கிளம்புமிறே; தாம் எழுந்திருந்தவாறே ஓலக்கம் கிளம்புகிறதாகக்கருதி, மெள்ளப்புகுந்திருந்தா ரேன்கிறது. இங்ஙன்வேண்டுவானேன்? என்னில்; அநுபுபூஷயா என்னுதல், ஸக்ததயா என்னுதல்-'இவர்களோடேகூடியிருந்து அநுபவிக்கைக்காக' என்னுதல், 'தாமுளராகைக்காக' என்னுதல். [நம்பீ] - உமக்கும் எங்களுக்கும் உள்ள நேர்வோசிபாரீர்! உமக்கொன்று கேட்கவேண்டும்படியாயிருந்ததோ? முதலிகளாயிருக்கிற உமக்கு நாங்களிருக்கிற இடத்தே

கிறது. ''ஆரறிந்துகொண்டாட'' என்பானென்? கொண்டாடுவாரில்லையோ? என்ன, ஸர்வநியந்தாவானவன் இத்யாதி. 'ஶாஸ்த்ரஞ்சொன்னால் மெய் என்றுகொள்ளலாமே' என்ன - ஶாஸ்த்ரங்களெல்லாம் இத்யாதி. 'ஒருங்கவிடுகை' யாவது - ஒருதலைப்படவிடுகை. 'அத்தலையித்தலையாகச் சொல்லுகிறதிறே' என்றது - நியந்த்ருநியாம்யபாவத்தையாருடி, அவனை நியாம்யனாயும் இவர்களை நியந்த்ரிகளாயும் சொல்லுகிறதிறேயென்றபடி. ''சழகமேறேல்'' என்கையாலே - ஸ்ரீவைஷ்ணவகோஷ்ட்யந்தர்ப்பாவம் ஶேஷபூதர்க்கேயன்றிக்கே ஶேஷியானவனுக்கும் உத்தேஶ்யமென்கிறார் - சாதுகோட்டி இத்யாதி. ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளிலேபுகுந்தால் அவர்கள் ஸஹ்ருதயமாக பரிக்ரஹிக்கும்படியாவர்கள் இத்யர்த்த:. பெரியாழ்வார்திருமொழி, மூன்றாம்பத்து, ஆறாந்திருமொழி சாற்றுப்பாட்டு - ''குழலிருண்டு'' இத்யாதி. ''உட்கொள்ள'' என்றதுக்கு பாவம் - வைஷ்ணவர்களுடைய இத்யாதி. 'துர்மாநத்தாலே' - வருகிறவனுடைய துர்மாநத்தாலேயென்றபடி. 'அப்படி ஒத்திருக்குமோ? என்ன - ஸபாபி இத்யாதி. ''ததஸ்து தௌ ராமவச: ப்ரசோதிதாவகாயதாம் மார்கவிதாநஸம்பதா ! ஸபாபிராம: பரிஷத்கதஶ்ஶநைர்ப்புபூஷயாஸக்தமநாபபூவஹ'' இதிபாலகாண்டே. [4;31½] ''ஶநை:'' (ஶநை:) - என்றதுக்கர்த்தம் - தெரியாதபடியென்று: 'அதுவென்? என்னில்' என்றது - ஸிம்ஹாஸநத்திலிருந்தவர்க்கு இங்ஙன்வேண்டுவானென் என்னில் என்றபடி 'இங்ஙன்வேண்டுவானென்னென்னில் என்றது - மெள்ளவாகிலும்இவர்கள்நடுவே புகுரவேண்டுவானென்? ஸிம்ஹாஸநத்திலேதானே யிருந்துவிட வொண்ணாதோ! என்றபடி. 'அநுபுபூஷயா'என்றவிஸர்க்கத்தைக்கூட்டினது - ''யாதநுஶீலநவபவஸம்பூய:'' என்கிறந்யாயத்தைப்பற்ற. உக்தபர்த்தத்வயவிவரணம் - இவர்களோடே இத்யாதிவாக்யத்வயம். 'தாமுளராகைக்காக' என்றது - ''ஸக்ததயா'' என்கிற யாதுவைப்பற்ற. தாத்பர்யாந்தரம் - முதலி

புகுருகைபோருமோ? என்றார்கள். "அழகிது! நான் முதலியாகிலும் ஆகிறேன்; பயலியாகிலும் ஆகிறேன்; என்னைத்தான் அறிகையில்லையோ! * 'தீமைசெய்யும்சிரீதரன்' என்றன்றோ என்னைச்சொல்லுவது? ஆனபின்பு, நாலுபெண்களிருந்தவிடமெங்கும் தீம்புசெய்கை எனக்கு ஸ்வரூபமன்றோ?" என்றான். [உனக்கு மிளைதேகன்மமே]- தீம்புசெய்கையிலே சமைந்திருக்கிற உனக்குங்கூட இதுவாலிசம். தீமைசெய்வார்க்கும் ஒருப்ராப்திவேண்டாவோ? (சு)

## ஏழாம் பாட்டு.

**கன்மமன்றுஎங்கள்கையில்பாவைபறிப்பது கடல்ஞாலமுண்டிட்ட**
**நின்மலா ! நெடியாய்! உனக்கேலும்பிழைபிழையே**
**வன்மமேசொல்லிஎம்மைநீவிளையாடுதி அதுகேட்கில்என்னைமார்**
**தன்மபாவமென்னார் ஒருநான்றுதடிபிணக்கே.**

**ஆ**—(கன்மமன்று.) - இப்படி அவன் நிவார்யமாணனாயிருக்கச்செய்தேயும் இவளுடைய பரிஷத்திலேபேறி இவளுடைய கையிற்பாவையைப் பறித்தருள, "எங்கள் கையிற்பாவை பறிப்பது உனக்கவத்யாவஹமாம்; அநந்ய ப்ரயோஜநனாய்க்கொண்டு ஸர்வாத்மாக்களையும் வயிற்றிலேவைத்து மஹாகுணத்தை விளைத்தாற்போலே, இத்தீமையும் உனக்கு மஹாவத்யத்தைவிளைக்கும்" என்று இவள்சொல்ல, அதன்மேலே பணிமொழிகளை இவன் அருளிச்செய்ய, "இங்ஙனே அதிதுஸ்ஸஹமான வார்த்தைகளையே சொல்லி எம்மைநீவிளையாடுதி; அதுகேட்கில் என்னைமார் இதுகூடும்கூடாது என்று பாராதே உன்னையுபேக்ஷித்து ஒருநாளும் கடாக்ஷிப்பதும் செய்யார்" என்கிறாள்.

ஒ.—[கன்மமன்று] - இவர்கள்கழகத்திலே ஏறப்புக்கு இவர்களாலே நிவார்யமாணனாய் ஏறப்பெறாதொழிந்த எம்பெருமான், செய்யலாவது காணாமையாலே, அவர்களுடைய லீலோபகரணமான பாவையைச் சென்றெடுக்கக்கணிசிக்க, அத்தையறிந்து பிராட்டியும் தோழிமாருமாகப் பாவையைச் சென்றெடுக்க, அத்தை இவன்தான் அவர்கள் கையினின்றும் பறிக்கப்புக, அவர்களும் எங்கள் கையில் பாவையைப்பறிப்பது உனக்குப் போராதென்றுசொல்ல, அவனும் "பஹுகுணனானவெனக்கு அல்பதோஷம் தோற்றப்படுமோ?" என்றுஅருளிச்செய்ய; அவர்களும் நிர்ஹேதுகமாக ஜகத்தை ப்ரளய காலத்திலே திருவயிற்றிலேவைத்து பரிஹரிக்கை†தொடக்கமான அபரிச்சேத்யமஹா குணங்களையுடையையாயிருந்தாயேயாகிலும் அக்குணங்களுக்கு நிறம்தருமாபோலே இப்போராச்செயலும் உனக்குஅவத்யாவஹமென்று அருளிச்செய்ய, அதுக்குமேலே சில பணிமொழிகளை எம்பெருமான் அருளிச்செய்ய, "இப்படிபொறுக்கவொண்ணாத வார்த்தைகளைச்சொல்லி எங்களோடே நீவிளையாடுதி: அதுகேட்கில் என்னைமார்கூடும் கூடாதென்று நிரூபியாதொழிவர்கள்," என்ன, "ஆனால்தான் வந்ததென்?" என்ன, "ஒருநாளாக அவர்க

---

களாய் இத்யாதி. பயலி - பாலிசன். பாலிசமாவானென்? என்ன - தீமைசெய்வார்க்கும் இத்யாதி. பாலிசம் - சப்பளை. கன்மம் - கர்மம். இந்தக்கார்யமென்றபடி 'தீமைசெய்யும்சிரீதரன்' - தீம்புசெய்யும் ஸ்ரீதரனித்யர்த்த꞉. நாச்சியார்திருமொழி, இரண்டாந்திருமொழி, முதற்பாட்டு - "நாமமாயிரம்" இத்யாதி. "கழகம் - திரள். இளைது - பால்யஸூசகம்" என்றுஉரையிலர்த்தம். (சு)

† தொடக்கமானவையென்று இருக்கலாமெனத் தோன்றுகின்றது.

ளுக்கும் உனக்கும் விப்ரதிபத்தியாய்முடியும்'' என்கிறுள். ஐம்மார் - ஆணுடன் பிறந்தார்.

ப.—அநந்தரம், ப்ரயோஜநநிரபேக்ஷமாக ஸர்வலோகத்தையும் ரக்ஷிக்கும் பெருமையையுடைய உனக்கு, எங்களை ஸ்பர்ஶித்துக் கையில் பாவையைப்பறிக்கிற இது கார்யமன்று என்கிறுள்.

எங்கள் - எங்கள், கையில் - கையிலிருக்கிற, பாவை - பாவையை,, பறிப்பது- தீண்டிப்பறிப்பது, கன்மம் - காரியம், அன்று - அன்று; கடல் - ப்ரளயார்ணவத்திலே அழுந்துகிற, ஞாலம் - ஜகத்தை, உண்டிட்ட - அமுதுசெய்து வயிற்றிலேவைத்து ரக்ஷித்து, நின்மலா - அதுதானே ப்ரயோஜநமாம்படியான ஔஜ்ஜ்வல்யத்தையுடையையாய்! நெடியாய் - (''இன்னமும்செய்ததுபோராது'' என்று அவற்றை வெளிநாடுகாட்டி ரக்ஷிக்கும்) பெருமையையுடையவனே! உனக்கும் - இப்படிப்பட்டஉனக்கும், பிழை - (இப்படி அபலைகளா யிருப்பாரைத் தீண்டிப்பறித்தா யென்கிற)பிழை, பிழையே - அவத்யமாயேவிடும்; நீ-(இப்படிபெரியையாயிருக்கிற) நீ, வன்மம் - (''நாஙுங்களைஸ்பர்ஶிக்கலாமோ? அன்றுஆரைநினைத்திருந்திகோள்'என்றுபூர்வஸம்ஶ்லேஷஸ்மரணத்தைப்பண்ணுவித்து எங்களுக்குநினைக்கவும் சொல்லவுமொண்ணுத) மர்மங்களை, எம்மை - எங்களை நோக்கி, சொல்லி - சொல்லி, விளையாடுதி - லீலைகொண்டாடாநின்ருய்; என்னைமார் - எங்களுடைய ஆணுடன்பிறந்தார், அதுகேட்கில் - அதுகேட்பராகில், தன்மபாவம் - தர்மமும்பாபமுமென்று, என்ஞர் - நிரூபியார்கள்; ஒருநான்று - ஒருநாள் வரையிலே வந்து, தடி-தடியையெடுத்து, பிணக்குஆம் - பிணங்கும்படியாம். என்னைமார் - ஆணுடன் பிறந்தார். என்னைமார் என்கிறது - ஸஹஜமான தூர்மாநதம்பமதாதிகள் பகவத்விரோதிகளென்று ஸூசிப்பிக்கிறது. 'பாவை' என்கிறது - ஆஶ்ரிதவிஷயத்தில் பரதந்த்ரமான அசித்வஸ்துவும் ஈஶ்வரனுக்கு உத்தேஶ்ய மென்று ஸூசிப்பிக்கிறது.

இ.—ஏழாம்பாட்டில், ''கழகமேறேல்நம்பி'' என்று - தங்கள் திரளிற்புகுரவொட்டிற்றிலர்கள்; அவனும் செய்யலாவதுகாணுமையாலே அவள்கையிற் பாவையைக் கடாக்ஷித்தான்; '' ஸ்ருக்ஷிதஜநாஸுகோஸஹ: '' என்று நினைவறியுமவர்களாகையாலே எல்லாருங்கூட அத்தைப்பற்ற, இவன் அத்தை அவர்கள் கையினின்றும் பறிக்கப்புக்கான். [கன்மமன்றெங்கள் கையிற் பாவைபறிப்பது]-எங்கள்கையிற் பாவைபறிப்பது கார்யமன்று, நீ நினைக்கிறவர்களது அல்லாமையாலே உனக்கொரு ப்ரயோஜநமில்லை. எங்கள் அநுமதியில்லாமையாலே பறிக்கப்போகாது. தன்னுடைய ஶக்திகொண்டு அழிக்கலாவது எதிரிகளாகிலிறே! அபலைகள் கையில் அதுபறிக்க ஶக்தனல்லனே. ஒருகலத்திலே உண்பாரைப்போலே அவர்கள்கையிலும் தன்கையிலுமாக இருக்கிலிறே ப்ரயோஜநமுள்ளது. '' ப்ரயோஜநமில்லாமையே அன்று, உனக்குகுணஹாநியாய் வரும்'' என்ன, ''பஹுகுணனை எனக்கு அல்பதோஷம் தோற்றப்படுமோ?'' என்ன, [கடல்ஞாலமுண்டிட்ட நின்மலாநெடியா யுனக்கேனும்பிழைபிழையே] - நிர்ஹேதுகமாக ப்ரளயாபத்திலே ஜகத்தைவயிற்றிலேவைத்து நோக்கினவனுய், ''ஶுக்ஶஶுஜவநிஃஶஃ'' என்கிறபடியே ஹேயப்ரத்யநீகனுய், ''யதோவாவோநிவத்ஃதெ'' என்று அபரிச்சேத்ய மஹாகுணனுயிருந்த உனக்கு வந்ததாகிலும், பிழையானது பிழையேகாண். லோகத்துக்கு ப்ரகாஶகனுன சந்த்ரனுக்கு உண்டானமறுவும் லோகப்ரஸித்தமன்றோ! குணங்கள் புக்கவிடமெங்கும் குணஹாநியும் புகுங்காண். குணங்கள் உனக்கு நிறந்

தருமாபோலே இ க்ஷாத்ரப்ரவ்ருத்தியும் உனக்கு அவத்யாவஹங்காண் என்ன, மேற் சொல்லலாவது கண்டிலன்; அவர்கள் செவியிலே, "இன்னது சொன்னான்" என்று அநுபாஷிக்க வொண்ணாதாயிருப்பதொன்றைச் சொன்னான். அதாவது - ப்ரணய வேளையிற் பணிமொழிகள்: [வன்மமே சொல்லியெம்மை நீ விளையாடுதி] - நினைக்கவுங் கூடக் கூசவேண்டும் நெஞ்சறிந்த வார்த்தையைச் சொல்லி எங்களோடே விளையாடுதி. இவன்ஹோமபுஜியாலே நோக்கழியச்சொன்ன வார்த்தையே தங்களுக்கு அவனோடு ஸாவபந்தம் இல்லையென்று தோற்றுகைக்காக அஸத்ஸமமாக்கி 'விளையாடுதி' என்றாள். "எங்களோடு விளையாட முறை உண்டோ?" என்ன, "பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களிலும் எனக்கு விளையாட்டு முறையில்லாதார் உண்டோ?" என்ன:— [அது கேட்கிலென்னைமார் தன்மபாவமென்னார்] - என்பந்துக்கள் அத்தைக்கேட்கில் கூடும் கூடாதென்று நிரூபியார்கள். என்னைமார் - தமையன்மார்-ஐம்மார், ஆணுடன் பிறந்தார். "வேலைப்பிடித்தென்னைமார்களோட்டி லென்னவிளையாட்டோ?" என்னக்கடவதிறே: வந்யூக்களுக்கு உப லக்ஷணம். உன்னோடு ஸாவபந்தம் இல்லை என்றறியாதே, உன்னுடைய சளப்ரவ்ருத்தியை "மெய்" என்று, "ஸம்ஶ்லேஷம் வ்ருத்தம்" என்று மேவிடுவர்கள். 'நிரூபித்துச்சொல்லுகை - தர்மம், நிரூபியாதே சொல்லுகை - பாபம்' என்னாதே கேட்டமாத்ரத்திலே பொறார்கள். "அவர்கள் அறியப்புக்கா நின்றார்களோ?" என்ன, "பிறந்ததொன்று நாளோட்டத்திலே அறியார்களோ?" என்ன, "ஆனால்தான் வருவதென்?" என்ன. [ஒரு நான்று] - ஒருநாளாக உன்னோடே விவாதமாய் முடியுமென்கை. [தடிபிணக்கே] - இடையர் பெருமிடுக்கரை அழியச்செய்யும்போதும் தடியாலே அழிக்குமித்தனை.

ஈடு.---ஏழாம்பாட்டு. ஸர்வோபாயங்களையும் அநுஷ்ட்டித்து ஸ்ரீபரதாழ்வான் தன்பக்கல் பட்டதெல்லாம் தான் இவர்கள் பக்கலிலே பட்டான். "விநிவர்த்தயிதும் பலாத்" (விநிவர்த்தயிதும்பலாத்) என்று மீட்கையிலே போர வருந்தினானிறே. "ஶேஷே புரஸ்தாச்சாலாயா யாவந்மே ந ப்ரஸீததி" (ஶேஷ்யேபுரஸ்தாச்சாலாயா யாவந்மேநப்ரஸீததி) - தாமேயிரங்கி மீளும்படிபண்ணுகிறேன்; அதுதான் கேட்டார்வாய் கேட்கவேணுமோ? 'ஶாஸ்தா' என்றானிறே. அப்படியே இவனும்ஸர்வோபாயங்களையும் ப்ரவர்த்திப்பித்தவிடத்திலும் அணுகவொண்ணாதபடி கடுமைதோற்ற இருந்தார்கள்; "இனிச் செய்யலாவதென்?" என்றுபார்த்தான்; "பலத்தாலே கார்யங்கொள்ளுவோம்" என்றுநிஶ்சயித்து, இவர்கள்பாவையை எடுப்பானாகக் கணிசித்தான்; "ப்ரக்ஷிதஜ்ஞாஸ்தகோ

ஏழாம்பாட்டு.—கன்மம் இத்யாதி. "கன்மமன்றெங்கள்கையில் பாவைபறிப்பது" என்றதிலேநோக்காக அவதாரிகை - ஸர்வ இத்யாதி. 'ஸர்வோபாயங்களையும்' என்றது - தாய்மாரையிட்டும், வஸிஷ்ட்டாதிகளையிட்டும், சொல்லிவைக்கை தொடக்கமானவற்றை. 'ஸ்ரீபரதாழ்வான் பட்டதெல்லாம்' என்றதுக்குப்ரமாணம் - விநிவர்த்தயிதும் இத்யாதி. ப்ரமாணாந்தரம் - ஶேஷ்யே இத்யாதி. "ஸவ்யாபாரஞ்சவிநிவர்த்தயிதும் பலாத் । லக்ஷ்மணாய ப்ராணாம் ஸாயம் காமவதி நா" "ஸாஹாஸோ நிராலோகோயதுநஹீநே நாயா இஹ! ஶேஷ்யேபுரஸ்தாச்சாலாயாயாவந்மேநப்ரஸீததி" இத்யயோத்யாகாண்டே. இதுக்குபாவம் - தாமேயிரங்கி இத்யாதி. கணிசிக்கை - உபக்ரமிக்கை. அவன்கணிசித்தபடியை இவர்களறிந்தபடியெங்ஙனே? என்ன - ப்ரக்ஷிதஜ்ஞா இத்யாதி. "இங்கிதஜ்ஞாஸ்தமேயா:

† சளம்-ஸஸ்ய

ஸஹரா: '' (ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா:) என்று நினைவறியுமவர்களாகையாலே, எல்லாருங்கூடவைத்த பாவையைச் சென்றெடுத்துக்கொண்டார்கள்; அதுதான் ''நங்கார்யம்'' என்றே இருந்தான். ''ப்ருதக்ப்ரயத்நாபேக்ஷிதமின்றிக்கே ஒழியப்பெற்றோம்'' என்று பார்த்தான். திருக்குரவைபோலே ஆளுக்காளாய்நின்று கைப்பிடிக்க வேண்டாவாயிருந்தது; ''நல்லவாய்ப்பு'' என்று இவர்கள் பாவையைச் சென்றுபற்றினான்.

[கன்மமன்று] - வாராய்! உனக்கிதுகார்யமன்று கிடாய் என்கிறார்கள். ''ஏன்தான் இதுகார்யமன்றிக்கே ஒழிவானேன்?'' என்றான். [எங்கள்கையிற்பாவைபறிப்பது] - ''இதுதான்ஆரதென்றிருக்கிறாய்? நீ நினைக்கிறவர்களதன்றுகாண்! இதெங்களதுகாண்!!'' என்றார்கள். ''அதுதான் மெய்யே!'' என்றான்; *யதஸ்ய ததஸ்ய தஜ்ஜநம் இறே. † (இவர்கள் ஸ்வரூபஜ்ஞராகையாலே இவனுடையவர்களிறே). இவர்கள் ''எங்களது'' என்கையிறே அவன்விருப்பத்துக்கடி. ''இவர்களது'' என்னுமிடம் அறுதியிட்டுக்கொள்ளுகையிலேயிறே அவனுக்குத் தாத்பர்யம்; நீ நினைக்கிறவர்களதன்று என்கையிறே இவர்களுக்குத் தாத்பர்யம். [எங்கள்கையில் பாவைபறிப்பது]-இவர்கள்கையிலே பாதிகொடுத்துப்போலே காணும்பறிப்பது! அவர்கள்விட்டுக் கடக்கநிற்கும் அதிலொருப்ரயோஜநமில்லையே; அத்தையவர்கள் ஒருதலைபற்றத் தானு மொருதலை பற்றுமன்றிறே ஒருகலத்திலே உண்பாரைப்போலே ஹோ[illegible]மாயிருப்பது. [கையில்பாவைபறிப்பது] - கிடக்கிறதெல்லாங் கிடக்க, எங்கள்கையிற் பாவைபறிப்பது கன்மமன்று. செய்யக் கடவதல்லாதத்தைச் செய்யாநின்றாய்; உனக்கு இத்தாலொரு ப்ரயோஜநமில்லைகாண் என்றார்கள். ஆக, இத்தால் ஃலித்ததென்? என்னில்;—ஒருவைஷ்ணவன் ''என்னது'' என்றபிமாநித்துக் கைப்பிடித்தால் ''அவன் விரும்புவது'' என்றபடி. '' 'செய்யக்கடவதல்லாதத்தைச் செய்யாநின்றாய்' என்று நீங்கள் சொல்லுவானேன்? செய்யக்கடவதுக்கும் செய்யக்கடவதல்லாததுக்கும் வரம்புகட்டினேன் நானன்றோ!'' என்றான். [கடல்ஞாலமுண்டிட்ட] - ப்ரளயாத்யாபத்திலே இவற்றை

---

ப்ரேக்ஷிதஜ்ஞாஸ்துகோஸலா: | [illegible] ணாவயா:''. ''எங்கள்'' என்று - பஹுவசநமாய், ''பாவை'' என்று - ஏக வசநமாயிருக்கையாலே - எல்லாருங்கூடவைத்தபாவையை இத்யாதி. கார்யமானபடியெங்ஙனே? என்ன - ப்ருதக்ப்ரயத்ந இத்யாதி. அபேக்ஷிதமென்றது - அபேக்ஷையென்றபடி. விவரணம் - திருக்குரவை இத்யாதி.

மெய்யானால் தனக்குப்ரயோஜநமேதென்ன-யதஸ்ய இத்யாதி. ஆகையாலே, 'இவர்களதென்னுமிடம்' என்று கூட்டிக்கொள்வது. இவர்கள் ''எங்களது'' என்றதுக்குபாவமேதென்ன - நீநினைக்கிற இத்யாதி. ''எங்கள்'' என்றபஹுவசநத்துக்கும், '' பாவை '' என்ற ஏக வசநத்துக்கும், ''பறிப்பது'' என்கிற வர்த்தமானத்துக்கும் ஃலிதார்த்தம் - இவர்கள்கையிலே இத்யாதி. இவன் ஶக்தனன்றோ? பாதி கொடுக்கிறதென்? என்ன - அவர்கள்விட்டு இத்யாதி. விவரணம் - அந்தையவர்கள் இத்யாதி. ''கையில்'' என்றதுக்குபாவம் - கிடக்கிறதெல்லாம் இத்யாதி. ''வாராயுனக்கு'' இத்யாதிவாக்யத்திலே, ''கன்மம்'' என்று - கார்யமாக விவக்ஷித்தருளிச்செய்து, கர்மபலத்தை விவக்ஷித்தருளிச்செய்கிறார் - செய்யக்கடவதல்லாதத்தை இத்யாதி. 'ஆகஇத்தால்' என்றது - ''எங்களது'' என்றதேஹேதுவாக அவன் மேல்விழுந்து வந்துபறிக்கிறஇத்தால் என்றபடி. 'பலித்ததென்னென்னில்' என்றது - ஸ்வாபதேசத்தில்எந்தஅர்த்தம் சொல்லிற்றாயிற்றென்னில்என்றபடி. ''கன்மமன்று'' என்றதின் முந்தினவர்த்தத்துக்குச்சேர மேலிற்பதத்துக்கு அவதாரிகை-செய்யக்கடவதல்லாதத்தை இத்யாதி. வரம்புகட்டுகையாவது - கடலாலேசூழப்பண்ணுகை. வரம்புகட்டினபடியைக் காட்டுகிறார் - ப்ரளயாத்யாபத்திலே இத்யாதி. நாயகியின் ஹார்த்தபாவத்தை வ்யாக்யாதா அருளிச்

---

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

யெல்லாமெடுத்து வயிற்றிலேவைத்து நோக்கிற்றிலேனோ? இவர்களளவும் அப்படியேயாகாதே தான். இவன்சென்று பறித்திலனாகில் அழியுமளவாகாதே அவர்களது. அது அவஸ்த்தாந்தரத்தை பஜித்தாகிலும் கிடக்குமிறே; இவர்களுக்கிவனையொழிந்தவன்று ஸத்தாநாசமிறேயுள்ளது! "ஆபத்ரக்ஷகனன்றோநான்! ஆனபின்பு, நான் செய்யுமவையெல்லாம் ப்ரயோஜநநிரபேக்ஷமாயன்றே இருப்பது; ஆகையினால் எனக்கிதுதானேயிறே ப்ரயோஜநம்! ப்ரயோஜநத்துக்கு ப்ரயோஜநம் வருமன்று அநவஸ்த்தையாமிறே; இத்தை ஸாதநமாக நினைத்திருக்கிலிறே நான் வேறேயொன்றை ப்ரயோஜநமாக ஸாதித்துக்கொள்வது!" என்றான்; நீ இங்ஙன்சொல்லுமது வார்த்தையன்றுகாண்; எங்களிசைவின்றிக்கேயிருக்க, நீ பலத்தாலே பறிக்கிறஇதுக்கு "ஆபத்ரக்ஷகன்" என்றுசொல்லுகிறஇது, நிர்வஹணமாகமாட்டாதுகாண்; ஆனபின்பு,உனக்கு குணஹாநியேகாண்மேற்படுவது"என்றார்கள். [நின்மலாநெடியாய்!] "பஹுகுணனானஎனக்கு ஒருதோஷம் கிடக்குங்காட்டில் அது தெரியாநின்றதோ?" என்றான். [நின்மலா! நெடியாய்!] - நிர்மலனான சந்த்ரனுக்குமன்றோ மறு கிடக்கிறது! ஆனபின்பு, குணம்ப்ரகாசிக்குமிடமெங்கும் குணஹாநியும் ப்ரகாசிக்குங்காண்!! ஹேயப்ரத்யநீகனாய் அபரிச்சேத்ய மஹாகுணனானவனே! [உனக்கேலும்பிழைபிழையே] - அபரிச்சேத்யமான குணங்களையுடையையா யிருந்தாயேயாகிலும், குணஹாநி குணஹாநியாயே கிடக்குங்காண். இவர்கள் இப்படி சொன்னவாறே, இதுக்கோரு மறுமாற்றம் காணாமையாலே, பிறர்க்குப் பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதபடி இவர்கள் செவியிலே சிலவற்றைச் சொல்லப்புக்கான்: "வன்மமேசொல்லி" என்கிறார்கள். தங்கள்நெஞ்சும் அவன்நெஞ்சும் அறியுமத்தனை; வாசாவ்யவஹரிக்கவொண்ணாது † (ப்ரணயவேளையில்பணிமொழிகள்). [எம்மை நீவிளையாடுதி] - நீ மர்மம்சொல்லும்போது, சொல்லுகிறஉன்னையும் கேட்கிற எங்களையும் அறிந்தன்றோசொல்லுவது. ("இவன்சொன்னமர்மமெது" என்று எம்பாரைச்சிலர் கேட்க, *"மயர்வறமதிநலமருளப்பெற்றவர் பாசுரமிடமாட்டாமல் 'வன்மம்' என்றுநின்றார்; என்னைப்பாசுரமிடச்சொல்லுகிறீகோளோ?" என்றருளிச்செய்தார்.) [விளையாடுதி] - அவன்தன்னையழியமாறி ஒருமர்மம்சொன்னானாகுன்; இவர்கள் அத்தையெல்லாம் விளையாட்டாக்குகிறார்கள்; நெஞ்சிலில்லாதவை சொல்லுகிறவத்தால் உனக்கென்ன ப்ரயோஜநம்

செய்கிறார் - இவர்களளவும் இத்யாதி. விவரணம் - இவன்சென்று இத்யாதி. இவர்களளவுமப்படியே ஆகாதேதானென்றது - இவர்கள்தசையும் ஜகத்தின்படியன்றோவென்றபடி. பூமியோடு ஸாம்யமன்றிக்கே ஆதிக்யமருளிச்செய்கிறார் - அதுஅவஸ்த்தாந்தரத்தை இத்யாதி. "கன்மம" என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேர, "கடல்ஞாலமுண்டிட்ட" என்றதுக்கு இரண்டாம்அவதாரிகை-ஆபத்ரக்ஷகனன்றோ இத்யாதி. இந்தவவதாரிகாத்வயத்துக்கும்சேர, "கடல்ஞாலமுண்டிட்ட" என்றதுக்கு பாவம் - எங்களிசைவின்றிக்கே இத்யாதி. அதாவது, இசைவின்றிக்கே இருக்கப்பறிக்கையாலே உனக்கொருப்ரயோஜநமில்லையென்று த்விதீயஸங்கதிக்குபரிஹாரம்; பலத்தாலே பறிக்கிறஇதுஉனக்குக் கார்யமன்றென்று முந்தினஸங்கதிக்கு பரிஹாரம். "பிழைபிழையே" என்றத்தை - "கடல்ஞாலமுண்டிட்ட, நின்மலா, நெடியாய்" என்றபதத்ரயத்திலும் அந்வயிப்பது. நின்மலா - ஹேயப்ரத்யநீகனானவனே. நெடியாய் - பெரியோனே; ஸமஸ்தகல்யாணகுணாத்மகனே. உனக்கேலும் பிழைபிழையே - இப்படிப்பட்டஉனக்கும் அபலைகளைத் தீண்டிப்பறிக்கிற இதத்தப்பு அவத்யமாயேவிடுமென்று பரமார்த்தம். சிலவற்றையென்றது - ப்ரணயவேளையிற் பணிமொழிகளை. வன்மம் - மர்மம். அந்தவன்மமேதென்ன - தங்கள்நெஞ்சும் இத்யாதி. சுலஸஉஸ்வ என்றபடி. 'சொல்லுகிறவுன்னையும்' இத்யாதிக்குக்கருத்து-உனக்குமெங்களுக்கும் உறவுஉண்டானாலன்றோ ஹாஸ்யம்பண்ணலாவது. உறவில்லாதவிடத்திலே ஹாஸ்யம்பண்ணலாமோவென்று. விளையாட்டாக்குகைக்குஹேதுவேதென்ன - நெஞ்சி

† குண்டலி க்ரந்தத்வயம் ப்ரக்ஷிப்தம்.

உண்டேன்கிறுர்கள். திரியவும் சிலவற்றைச்சோல்லப்புக்கான்: [அதுகேட்கிலேன்னேமார்] - சோல்லுகிறவையெல்லாம் எங்கள்பந்துக்கள் கேட்பர்களாகில் சாலத் தப்பாய்விடுங்கிடாய். என்னேமார் - ஆணுடன்பிறந்தார். [தன்மபாவமேன்னுர்] - உன்பக்கலெங்களுக்கு ஹாவ ஷந்தமில்லே என்னுமிடம் அறியார்கள். நீ மேல்விழுகிறத்தைக் கண்டு, "இதுசெய்யலாம், இதுசெய்யவொண்ணுது" என்றுபாராதே நலிவர்கள்கிடாய். "ஆனுலேன்? அவர்கள் அது அறியாநின்றுர்களோ? அவர்களிங்கில்லேயே!" என்றுன். [ஒருநான்று] - அதுவோ! முதலிலே தவிரில் அறியாதொழியுமத்தனேபோக்கி, எல்லாம் செய்தாலு முண்டானுலொரு நாள்வரையிலே அறிவர்கள்காண். "அழகிது; அறிந்தால்தான் வருவதேன்?" என்றுன். [தடிபிணக்கே] - பின்னேக்குத்தும் பூசலுமாயன்றே தலேக்கட்டுவது. ராமாவதாரத்தில் ஸர்வவ்யாபாரங்களும் விற்கோண்டே வ்யாபரிக்குமாபோலே, க்ருஷ்ணுவதாரத்திலே தடிகோண்டே கார்யங்கோள்ளுமத்தனே. (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

பிணக்கியாவையும்யாவரும் பிழையாமல்பேதித்தும்பேதியாததுஓர்
கணக்கில்கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்த்தியினுய்! [தோமை
இணக்கிஎம்மைஎம்தோழிமார் விளேயாடப்போதுமினேன்னப்போந்
உணக்கிநீவளேத்தால் என்சோல்லாருகவாதவரே!

*ஆ.—(பிணக்கி.)-"இப்படி இவன் க்ருத்ரிமம்செய்து நம்மை இங்கிருந்து விளேயாடவொட்டானுகில், நாமிங்குநின்றும் போவோம்" என்று பார்த்துத் தன் தோழிமாரோடேகூடப் போகப்புக, "நான்போகவொட்டேன்" என்றுஇவன் தங்களே வளேத்தருள, "அறியாதே விளேயாடப்போந்த எங்களே உன்னுடைய நிரவதிக ஸௌந்தர்யத்தாலே இழுவித்துக்கோண்டு, ஸர்வேஶ்வரனுன நீ வளேத்தால், உன்னே உகவாதவர்உனக்கென்ன பழிசொல்லார்? உனக்கெங்களோடே ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமென்றும் சொல்லுவரிறே! ஆனபின்பு இதுஈடல்ல"என்று அவனே உபாலம்பிக்கிறுள்.*

*ஒ.—[பிணக்கியாவையும்.]-"நாமிருக்கிலிறே இங்கு இவனுக்கு நம்மை நலியலாவது; நாம் போவோம்" என்று தோழிமாரும்தானும்போக உபக்ரமிக்க, எம்பெருமானும் அவர்கள் போகிற வழியைக்கொண்டு அவர்களேப் போகவொட்டாதே வளேக்க, அவர்களும் சேதநாசேதநங்களே தேவதிர்யங்மனுஷ்யாதி விஹாரங்களே ஒழிந்து ஒன்றும் படிகலசி, "அழித்தது ஸ்ருஷ்டித்தது" என்று தெரியாதபடி, ஸம்ஹாரகாலத்துக்கு முன்பு இருந்தபடிகளில் ஒருவாசிபடாதபடி ஸ்ருஷ்டித்து இதில் ஓராயாஸப்படாதபடி*

---

லில்லாதவை இத்யாதி. திரியவும் சிலவற்றையென்றது-பஞ்சலக்ஷங்குடியிற்பெண்களும் எனக்குஉறவன்றே?என்கை. என்னேமாரென்றது - வந்துக்களுக்குமுபலக்ஷணம். "தன்மபாவமென்னுர்" என்றதுக்குபாவம் - உன்பக்கல் இத்யாதி. பாவபந்தமென்றது - ஸம்ஶ்லேஷமென்றபடி. ஸம்ஶ்லேஷமுண்டென்று நிரூபித்துச்செய்கை - தர்மம், நிரூபியாமல்செய்கை - பாபம். இரண்டும்பாராதே யடிப்பர்களென்றபடி. தடியேன்? ஆயுதமில்லேயோவென்ன - ராமாவதாரத்தில் இத்யாதி. என்னேமார் - ஆணுடன்பிறந்தார். தமையன்மாரென்றபடி. தடிபிணக்கு-தடிச்சண்டை. (எ)

மஹாப்ரபாவமான விலக்ஷணஸங்கல்ப ரூபஜ்ஞாநத்தையுடைய ஸர்வேஶ்வரனான நீ, 'தோழிமார் தங்களோடே கூடிக்கொண்டு விளையாடப் போருங்கோள்' என்ன அறியாதே போந்த எங்களை உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே நெருக்கி எங்களைப் போக வொட்டாதொழிந்தால் இத்தை ஸஹியாத உன்னுடைய மின்னிடைமடவார் இம்மாத்ரத்தையே கொண்டு, யோக்யதையாலே, "ஸம்ஶ்லேஷம் வ்ருத்தம்" என்று சொல்லி உன்னை உபேக்ஷிப்பார் என்கிறாள்.

ப—அநந்தரம், "இவன் ஸந்நிதியிலிருக்கிலன்றோ மர்மம் சொல்லுவது?" என்றுபோகத்தேட, இவர்கள் போகிறவழியைக் கட்டித்தகைந்த அவனைநோக்கி; "எல்லாம் அறிவீர் ஈதேயறியீர்" என்று ஸர்வஜ்ஞனான நீ யெங்களைத் தகைந்தால்உகவாதார் என் சொல்லாரென்கிறாள்.

யாவரும் யாவையும் - ஸகல சேதநாசேதநங்களையும், பிணக்கி-(ஸம்ஹ்ருத்ய வஸ்த்தையிலே நாமரூபவிபாகாநர்ஹதமாம்படி) கலசி, (ஸ்ருஷ்டியில்வந்தவாறே), பிழையாமல் - (அவ்வோ சேதநருடைய கர்மங்களுக்கு ஸாங்கர்யம்) பிறவாதபடி, பேதித்தும்-தேவதிர்யகாதிபேதத்தைப் பண்ணினவிடத்தும், பேதியாதது - (தத்கததோஷத்தால்) ஸ்வரூபத்துக்கு பேதம்வாராதபடி,ஓர் - அத்விதீயமாய், கணக்குஇல் - அபரிச்சிந்நமான, கீர்த்திவெள்ளம் - கீர்த்திஸமுத்ரத்தையுடைத்தாயிருக்கிற, கதிர் - ப்ரபாரூபமான, ஞாநம் - ஸங்கல்ப ரூப ஜ்ஞாநத்தை, மூர்த்தியினாய் - வடிவாகவுடையவனே! எம் - ஸஜாதீயைகளாய் ஸமாநதுःகைகளான, தோழிமார் - தோழிமார், எம்மைஇணக்கி - நாங்கள் இசையும்படி வார்த்தைசொல்லி, 'விளையாட- விளையாட, போதுமின்-போங்கோள்' என்ன - என்றுலீலையை வ்யாஜமாகச் சொன்னபடியாலே,போந்தோமை - (நீ இங்கு நிற்பதறியாதே லீலாபரைகளாய்) வந்த எங்களை, உணக்கி - உண்ணவுமொட்டாதே உணங்கும்படிபண்ணி, நீ-நீ, வளைத்தால் - தகைந்தால், (இச்செய்திகண்டு),உகவாதவர்-உகக்க மாட்டாத நாட்டார், என் - என்ன, சொல்லார் - சொல்லார்? உகவாதவர் - உன்னுடைய மின்னிடை மடவாரென்றுமாம். இங்கு, இணக்கி எம்தோழிமாரென்றது ஸாஜாத்யத்தாலே கலந்து லீலாரஸ வ்யபதேஶத்தாலே பகவத்விஷயத்திலே மூட்டும் பாகவதவிஷயத்தை ஸூசிப்பிக்கிறது.

இ.—எட்டாம்பாட்டில், "நாம் இங்கிருக்கிலிறே இவனுக்கு மர்மங்களைச் சொல்லி நலியலாவது; நாம் போவோம்" என்று, எல்லாருங்கூடப் போகப்புக்கார்கள்; இவர்கள் போகிறவழி ஓரடிப்பரப்பாய் ஒழுகப்போகவேண்டுகையாலே, வழியைக்கட்டியிருவிலங்காகக்கிடந்தான்; அவனைப்பார்த்து வார்த்தை சொல்லுகிறார்கள்:—[பிணக்கி இத்யாதி]. [யாவையும்யாவரும் - பிணக்கி] - சேதநாசேதநங்களை ஜீவாஜீவிபாகமற்று "தமஏகீபவதி" என்று தன்னோடே அவிபக்தமாம்படி கலசி. [பிழையாமல் பேதித்தும்] - ஸ்ருஷ்டிகாலத்திலே ஒருத்தன் கர்மம் வேறொருவன் அநுபவியாதபடி, பேதித்தும் - ஸ்ருஷ்டித்து மென்றபடி. [பேதியாததோர் கணக்கில் கீர்த்திவெள்ளக் கதிர்ஞான மூர்த்தியினாய்] - ஸம்ஹாரகாலத்தில், அசித்கதமான ஸூக்ஷ்மபரிணாமம், சேதநகதமான அஜ்ஞாநம்: ஸ்ருஷ்டிகாலத்தில், அசித்கதமான ஸ்வரூபாந்யதாபாவம், சேதநகதமான ஸ்வபாவாந்யதாபாவம்: ஆக, இப்பேதங்கள் ஒன்றுமின்றிக்கே ஏகரூபமாய் அத்விதீயமாய் அநவதியான ஏகரூபத்வமாகிற கீர்த்தி ஸமுத்ரத்தை யுடையையாய்,

ப்ரஹ்மரூபமான ஸங்கல்பஜ்ஞாநத்துக்கு ஆச்ரயமானவனே! இத்தால் - விச்லேஷதசையில் கலக்கமும், ஸம்ச்லேஷதசையில் ஹேமரூபவிக்ருதியு மின்றிக்கே ஏகரூபனென்கை. [இணக்கி இத்யாதி] - "உன்னோட்டை கலவி அபாயம்" என்று அறியாத எங்களை உன்னோடே சேர்த்து. இவ்வளவாக விளைத்தவர்களைச் சொல்லாதே உன்னைச் சொல்லுகிறதென்? ஸ்ரீவத்விஷயத்தில் வைமுக்யம் பிறக்கால் உபகாரகரைக் கொண்டாடுமென்னும் அர்த்தமிறே உள்ளோடுகிறது. "நித்யாயதீயவரணஸ்மரணஃசீயம்"; [எங்தோழிமார்] - ஸஜாதீயராயிறே சேர்ப்பது. [விளையாடப்போதுமி னென்னப் போந்தோமை] - "க்ருஷ்ணனுண்டு" என்றறிந்தோமாகில்,வாரோம்; இவ்வகப்பாட்டை அறிந்திருந்தோமாகில் வாராதொழியலாயிற்று. "அத்தால் வந்ததென்?" என்ன, [உணக்கி நீ வளைத்தால்] - உணக்குகையாவது - தரிக்கமாட்டாதே துவளும்படி பண்ணுகை. உன்முகம் பார்த்து அநுபவிக்கப்பெறுமையாலே தரிக்கமாட்டுகிறிலோம்; நீ வளைக்கையாலே போகமாட்டுகிறிலோம். [என்சொல்லாருகவாதவரே] - நீயும் நாங்களுமாக இருக்கக்கண்டால் உகவாதவர் என்சொல்லார்? "உங்கள் ஸந்நிதிமாத்ரமேயன்றோ உள்ளது: இதுக்குச் சொல்லுவதெத்தை?" என்ன, யோக்யதையாலே 'ஸம்ச்லேஷம் வ்ருத்தம்' என்று உன்னுடைய மின்னிடைமடவார்கள் உபேக்ஷிப்பர்கள்; பிரிவாற்றுமையாலே கண்ணுஞ்சுழலை இடுகிறவர்கள் எத்தைச் சொல்லார்? உன்மேன்மையையும் குணவத்தாப்ரதையையும் இழக்கக்கிடாய்புகுகிறாய். ஆப்பான், "இவனை இவர்கள் கடந்துபோனார்களாகிற் செய்வதென்?" என்ன, ஜீயர், "அது ஆர்க்கு அழகு?" என்று அருளிச்செய்தார். நின்றார்களாகில் நினைத்தது பெற்றானாகிறான்; கடந்து போனார்களாகில் ஸம்ச்லேஷார்த்தமான க்ருஷி தலைக்கட்டிற்றுகிறது.

ஈடு.—எட்டாம்பாட்டு. கிட்டிநின்று இவர்களைச் சிலமிறுக்குக்களைப் பண்ணப் புக்கான்; "இங்கே யிருக்கிலன்றோ இதெல்லாம் வேண்டுவது" என்றுபார்த்து, ஒருவரொருவராகப் போகப்புக்கார்கள்; "இதுவோ பார்த்தபடி!" என்று வழியைப்பற்றி இருவிலங்காகக்கிடந்தான். உத்யாநமாகையாலே வழி ஓரடிப்பாடாயிருக்குமிறே. இப்பாட்டை ஜீயர் அருளிச்செய்யாநிற்கச்செய்தே ஆப்பானிருந்தவர் "இவர்களிவனைக் கடந்துபோனார்களாகிற்செய்வதேன்?" என்றுகேட்க, "அது ஆர்காரியம்? பின்னை இரண்டத்தொன்று ஸித்திக்கும் என்றன்றோ அவன்தான்கிடந்தது!" என்றருளிச்செய்தார். † (நின்றார்களாகில் நினைத்தது பெற்றானாகிறான்; கடந்துபோனார்களாகில் ஸம்ச்லேஷார்த்தமான க்ருஷி தலைக்கட்டிற்றுகிறது.)

நீ வழியைப்பற்றிக் கிடவாநின்றாய்; நீசெய்கிறவையெல்லாம் உறவுஉண்டாய்ச் செய்கிறாயென்றிருப்பர்கள்கிடாய்; நீஸர்வவிஷயமாகப்பண்ணும் லீலைக்கோரளவுஉண்டோ?

எட்டாம்பாட்டு.—பிணக்கி இத்யாதி. "உணக்கிநீவளைத்தால்" என்றிருக்கையாலே - இவன் அவளைவளைத்துக்கிடக்கும்போது, இவன்மிறுக்கடியாக இவர்கள்போகப்புக்கார்களாகவேணுமென்கிறார் - கிட்டிநின்று இவர்களை இத்யாதிவாக்யத்வயத்தாலே. மிறுக்குக்களை - நிஷ்ட்டுரோக்திகளை. இருவிலங்கு - பெருவிலங்காதல், இரட்டைவிலங்காதல். வேறுவழியில்லையோ? என்ன - உத்யாநம் இத்யாதி. இரண்டத்தொன்றஎன்றது - தகைவுபட்டு நிற்கையாதல், கடந்துபோம்போது ஸ்பர்சமாதல்; ஸ்பர்சித்தல்லது போகக்கூடாதிறே.

"பிணக்கி" என்றுதொடங்கி, "பேதியாதது" என்னுமளவுக்கும் அவதாரிகை - நீவழியைப் பற்றி இத்யாதி. "பேதித்தும் பேதியாதது" என்றதுக்கு ஹார்த்தபாவம் - அப்படியே இத்யாதி.

† குண்டலிதக்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.

உன்னையொழிந்த வஸ்துக்களெல்லாவற்றுக்கும் கோடிவிகாரத்தைப்பண்ணி, அவிக்ருதனுயிருப்பானொருவனிறே; அப்படியே எங்களை விக்ருதராகப்பண்ணி நீ அவிக்ருதனுயிராநின்ருய்! [யாவையும்யாவரும் - பிணக்கி] - தன்பக்கல்பொருந்துகைக்கு நினைவில்லாதவற்றையும், நினைவாலே பொருந்ாதவற்றையுங்கூட்டி, **‘‘தமஃபரேதேவ ஏகீபவதி’’** (தமஃபரேதேவ ஏகீபவதி) என்று தன்னோடு அவிபக்தமாம்படி கலசி. [பிழையாமல் பேதித்தும்] - தப்பாமல் பிரித்தும். வயிற்றிலே வைத்துப்புறப்படவிடுதல், ஸம்ஹரித்துப்புறப்படவிடுதல். ஓரோக்ஷோபங்களிலே யமர்ந்தநிலங்களிலே குடிவாங்கிப் பின்புதெளிந்தவாறே ஸ்வஸ்த்தாநங்களிலேபுகுந்து, விட்டகார்யங்களிலே அதிகரிப்பாரைப்போலே. ஒருத்தன் பண்ணினகர்மம் வேறொருத்தன்சென்று புஜியாதபடி தன்பக்கலினின்றும் பிரித்தும். [பேதியாததோர்கணக்கில் கீர்த்திவெள்ளக்கதிர்ஞானமூர்த்தியினாய்] - கார்யாவஸ்த்தமானதுவே காரணாவஸ்த்தமானாலும், அசித்கதமான ஸௌக்ஷ்மபரிணாமம், சேதநகதமான அஜ்ஞாநம், ஸ்ருஷ்டிகாலத்தில் அசித்கதமான ஸ்வரூபாந்யதாபாவம், சேதநகதமான ஸ்வபாவாந்யதாபாவம், ஆக இப்பேதங்கள் ஒன்றும் இன்றிக்கே. ஏகரூபமாய், அத்விதீயமாய், அநவதியான கீர்த்தி ஸமுத்ரத்தை யுடைத்தாய், ப்ரபாரூபமான ஸங்கல்பரூபஜ்ஞாநத்துக்கு ஆஶ்ரயமானவனே! *எல்லாப்பொருள்களுக்கும் வித்தாய் முதலிற்சிதையாத மனஞ்செய் ஞானமிறே. இத்தால் - விஶ்லேஷதஶையில் கலக்கமும், ஸம்ஶ்லேஷதஶையில் போகரூபவிக்ருதியுமின்றிக்கே ஏகரூபனென்கை. [கணக்கில் கீர்த்திவெள்ளம்] - ‘‘இப்படிப்பட்ட குணங்களை அளவிடுவோம்’’ என்றுபார்த்தாருண்டாகில் இளைத்துக் கால்வாங்கும்படி இருக்கை. [கதிர்ஞானமூர்த்தியினாய்] - இப்படி கூட்டுவனகூட்டிப் பிரிப்பன பிரித்தாலும், ஜ்ஞாநத்துக்கொரு குறைவற்றிருக்கை. [கதிர்ஞானமூர்த்தியினாய்] - கார்யங்கொண்டதென்று மழுங்காதிருக்கை: கார்யங் கொள்ளக்கொள்ளப் புகர்த்துவருகை. [கதிர்ஞானமூர்த்தி

---

*நீ அவிக்ருதனுயிராநின்ருயென்றது - விஶ்லேஷத்தால் வந்தகலக்கமும், ஸம்ஶ்லேஷத்தால்வந்த போகரூபவிக்ருதியும் இன்றிக்கேயிராநின்ருயென்றபடி. அசேதநங்களை முந்தறச்சொல்லி சேதநரை அநந்தரம்சொன்னதுக்குபாவம் - தன்பக்கல் இத்யாதி. அதாவது - இரண்டுவஸ்துக்களுக்கும் பொருந்தாமை ஸமானமாகையாலே அசேதநங்களோடே சேதநரையுங்கூட்டி அருளிச்செய்கிருரென்றபடி. நினைவாலேயென்றது - நினைவு உண்டாயிருக்கச்செய்தேயென்றபடி. கூட்டியென்னாதே, ‘‘பிணக்கி’’ என்றதுக்குபாவம் - தமஃபர இத்யாதி. பிணக்கி - கலசி. மஹாப்ரளயபக்ஷத்திலே, பிணக்குகை - கலக்கை; அவாந்தர ப்ரளயபக்ஷத்திலே, பிணக்குகை - வயிற்றிலேவைக்கையென்று கண்டுகொள்வது. இதுக்குச்சேர அர்த்தத்வயம் - வயிற்றிலே இத்யாதிவாக்யத்வயம். ‘வயிற்றிலேவைத்துப்புறப்படவிடுதல்’ என்றதுக்கு த்ருஷ்டாந்தம் - ஓரோக்ஷோபங்களிலே இத்யாதி. ஸம்ஹரித்துப்புறப்பட விடுதலென்றபக்ஷத்தில், ‘‘பிழையாமல்’’ என்றதுக்கர்த்தம் - ஒருத்தன் இத்யாதி. பிரிக்கை - ஸ்ருஷ்டிக்கை. ‘‘பேதியாதது’’ என்றதுக்கர்த்தம் - ‘கார்யாவஸ்த்தம்’ என்றுதொடங்கி, ‘ஆக இப்பேதங்களொன்றுமின்றிக்கே’ யென்னுமளவும். கார்யாவஸ்த்தமானதுவேயென்றது - கார்யாவஸ்த்த ப்ரஹ்மஸ்வரூபமென்றபடி. காரணாவஸ்த்தையில் ‘அசித்கதமான ஸௌக்ஷ்மபரிணாமம்’ என்றுகூட்டுவது. ஏகரூபனுமாய் அத்விதீயனுமாய், கீர்த்திஸமுத்ரத்தையுடையனுமாயென்று திருத்துவது. ஸ்வரூபாந்யதாபாவமாகிறது - ஸ்தூலபரிணாமம். இது - ஸௌக்ஷ்மபரிணாமம் என்றதுக்கு ப்ரதிகோடி. ஸ்வபாவாந்யதாபாவமாகிறது - ஜ்ஞாநவிகாஸம்; இது - ‘சேதநகதமானவஜ்ஞாநம்’ என்றதுக்குப்ரதிகோடி. ‘‘பேதியாதது’’ என்றத்தால் பலிதம் - ‘ஏகரூபமாய்என்று. ‘‘ஓர்’’ என்றுதொடங்கி உண்டானபதங்களுக்கெல்லாம் பதார்த்தம் - அத்விதீயமாய் இத்யாதி. ‘‘பேதித்தும் பேதியாதது’’என்றதுக்குப்ரமாணம்- எல்லப்பொருள்களுக்கும் இத்யாதி. ‘‘கணக்கில்’’ என்றதுக்குபாவம் - இப்படிப்பட்ட இத்யாதி. ‘‘கதிர’’ என்றுவிஶேஷித்ததுக்குபாவம் - ‘இப்படி கூட்டுவன’ இத்யாதிவாக்யத்ரயத்தாலே. ‘‘இப்படி*

யினாய்] - ஜ்ஞாநஸ்வரூபனாயுள்ளவனே! [இணக்கியித்யாதி] - நீ செய்கிறவற்றால் ப்ரயோஜந முள்ளது நீ யிருந்தவிடத்தே நினைத்துத் தேடிவந்தாருண்டாகிலன்றே! [இணக்கி] - இசையும்படி வார்த்தைசொல்லி. "அவ்விடம் க்ருஷ்ணன் வாராத விடம்" என்றுகிடீர் சொல்லிக்கொண்டுபோந்தது. [எம்மை] - உன்னோட்டைக்கலவி அபாயம் என்றறியாத எங்களை. [எந்தோழிமார்] - உன்னைவெறுக்கிறதேன்? உன்பக்கல் குற்றமுண்டோ? சேர்த்தாராலேவந்ததுகிடீர்! பகவத்விஷயத்தில் வைலக்ஷண்யம் நெஞ்சிலேபட்டால் உபகாரகரைக்கொண்டாடுமேன்னும் அர்த்தமிறே உள்ளோடுகிறது. "நித்யம் யதீயசரணௌஶரணம்மதீயம்" (நித்யம்யதீயசரணௌஶரணம்மதீயம்) என்று இங்கோடு அங்கோடு வாசியற அவர்களாலே வருமதிறே. [எந்தோழிமார்]-ஸஜாதீயராயிறேசேர்ப்பது. [விளையாடப்போதுமி னென்னப்போந்தோமை] - அவர்கள் உனக்குப் பெருநிலை நிற்பதறியப் பெற்றிலோம். சோலவுக்குமேல்அகவாய் ஆராயப்பெற்றிலோம். "நீயுண்டு" என்றறிந்தோமாகில் இவ்விடமென்று நினையோம்; "அவர்களுனக்குப்பார்வை" என்னுமிடம் அறியப்பெற்றிலோம். "போகடுங்கோள்; ஆனாலென்? அவர்கள்சொல்லப்போந்திகோளாகில் உங்களுக்கு வந்த அநர்த்தமேன்?" என்றான்: [உணக்கிநீவளைத்தால்]-உணக்குகையாவது - ஶரிக்கமாட்டாதே துவளும்படி பண்ணுகை. எங்களுக்கு இதுக்குமேல் வருவதேன்? கால்வாங்கிப்போகப் பெறுகிறிலோம்; கிட்டிநின்று முகம்பார்த்து அநுபவிக்கப்பெறுகிறிலோம். இதுகாணவேண்டாதவர்கள் என்சொல்லுவர்கள்? "எத்தைச் சொல்லுவது: என்னை 'ஈஶ்வரன்' என்றிகோளாகில், உங்களை 'இடைச்சிறுபெண்கள்' என்றிகோளாகில், இனி எத்தைச்சொல்லுவது?" என்றான். "நீ ஸர்வேஶ்வரனானஇதுவும், நாங்கள்இடைப்பெண்க

கூட்டுவன" இத்யாதிவாக்யவிவரணம் - 'கார்யங்கொண்டது 'இத்யாதிவாக்யத்வயம். ஞானமூர்த்தியினாய்" என்றதுக்கு - ஸங்கல்ப ரூபஜ்ஞாநத்துக்குஆஶ்ரயமானவனென்று கீழ்அருளிச்செய்து, ஸ்வரூபபரமாகவர்த்தாந்தரம் - 'ஜ்ஞாநஸ்வரூபனாயுள்ளவனே' என்று; ஏததர்த்தகதநார்த்தம் பதோபாதாநம் - கதிர்ஞானமூர்த்தியினாய் என்று. "பேதியாததோர் கணக்கில்சீர்த்திவெள்ளம்" என்றபதங்கள் - யோஜநாத்வயத்திலும், ஸ்வரூபவிசேஷணங்கள். "இணக்கி" என்றதுக்கு ஹார்த்தபாவம் - நீ செய்கிற இத்யாதி. விவரணம் - அவ்விடம் இத்யாதி. இணக்கி - இசையும்படிவார்த்தைசொல்லி. 'கலவி அபாயமென்றறியாத' என்றது - கலவியாகிறஅபாயம் வருமென்றறியாத என்றபடி. "எம்" என்றதுக்குபாவம் - உன்னை இத்யாதி. ஸ்வாபதேஶம் - பகவத்விஷயத்தில் இத்யாதி. ஆஶ்ரயணதசையிலொழிய போகதசையிலும் ஆசார்யன்வேணுமோ என்ன - நித்யம்யதீய இத்யாதி. "ஈத்ருஶவாத்ருஶாவா" என்றதுக்கர்த்தம் - இங்கோடு இத்யாதி. தோழிமாராகவேணுமோ சேர்க்கைக்கென்ன - ஸஜாதீயராய் இத்யாதி. "விளையாடப்போதுமினென்னப்போந்தோமை"என்றதுக்கு ஹார்த்தபாவம்- அவர்கள்உனக்கு இத்யாதி. பெருநிலை-ஸஹாயம். "விளையாடவாருங்கோள்"என்னுநிற்க, இவனுக்குப் பெருநிலையென்று சொல்லுகிறபடி எங்ஙனேயென்ன - சோலவுக்கு இத்யாதி. அகவாயாராய்ந்தால் நீங்கள் செய்வதென்?என்ன - நீயுண்டென்று இத்யாதி. "உனக்குப்பெருநிலைநிற்பது" என்றத்தை விவரிக்கிறார்-அவர்கள்உனக்கு இத்யாதி.பார்வை-பக்ஷிக்ரஹணஸாதநமான பக்ஷிமுதலானது .உணக்கி- துவளப்பண்ணி. "உணக்கி" என்றதுக்குபாவம் - எங்களுக்கு இத்யாதி. "பிணக்கியாவையும் யாவரும், விளையாடப்போதுமின்" என்றபதத்வயத்தையுங்கடாக்ஷித்து யோக்யதையில்லையென்கிறார் - என்னை ஈஶ்வரன் இத்யாதி. அதாவது - ஸர்வாதிகனான எனக்கு அதிக்ஷுத்ரைகளான உங்களோடு ஸம்ஶ்லேஷயோக்யதையில்லாமையாலே அபவாதவசநயில்லை என்றகருத்து. அவன்சொன்னதுக்கு உத்தரம் - நீ ஸர்வேஸ்வரனானஇதுவும் இத்யாதி. இதச்சபாவம் - ஸர்வேஶ்வரனுடைமைத்தும் நப்பின்னைப்பிராட்டியைக் கைப்பிடிக்கையாலே, இடைப்பெண்களானதுவே ஹேது என்றபடி. ஹலி

ளான இதுவுமேயிறே சொல்லுகைக்கு ஹேதுவும்." ஈஶ்வரனோடேக்கப் பழிசொல்லுகைக்கு இவர்கள்தாம் ஒரு நப்பின்னைப்பிராட்டிபோல்வார்ஆகாதேதான். "அது என்தான்? என்னோடு உங்களுக்கு ஹாவபந்தமில்லை என்றுநின்றிகோளாகில் இத்தால் வருவதேன்?" என்றான்: [என்சொல்லாருகவாதவரே] - "உன்பக்கல் எங்களுக்கு ஹாவபந்தமில்லை" என்று அறிவார்களோ உகவாதார்? நீ அல்பம்கால்தாழ்த்த இதுவே ஹேதுவாக "ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாயிற்று" என்றார்களோ? வளைக்கிற உன்னையும், வளைப்புண்கிற எங்களையும் அறிந்தோ அவர்கள் வார்த்தைசொல்லுவது? [என்சொல்லாருகவாதவரே] - உன்னுடைய மின்னிடைமடவார் உன்னை நெகிழ வார்த்தை சொல்லுவர்கள். பிரிவாற்றமல் கண்ணுஞ்சுழலையிடுகிறவர்கள் எத்தைச் சொல்லார்? (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

---

உகவையால்நெஞ்சமுள்ளுருகிஉன்தாமரைத்தடங்கண்விழிகளின்
அகவலைப்படுப்பான் அழித்தாயுன்திருவடியால்
தகவுசெய்திலைஎங்கள்சிற்றிலும் யாமடுசிறுசோறுங்கண்டு நின்
முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே.

**ஆ.**—(உகவையால்.)-தன்னை எம்பெருமான் இப்படி வளைக்கச் செய்தேயும் அவனைக் கடாக்ஷியாதே யிருந்து தன் தோழிமாரோடேகூடச் சிற்றிலிழைத்துச் சிறுசோறிட்டு விளையாடாநிற்க, இவளுடைய கடாக்ஷமல்லது தனக்குஆத்மதாரணம் இல்லாமையாலே, "ஏதேனுமொருபடியால் இவள் நம்மைக் கடாக்ஷிக்கஅமையும்" என்று பார்த்து, இவள் தன்னைப்பார்த்தருளும்படியாக இவளுடைய சிற்றிலைத் தன்னுடைய திருவடிகளாலேயழித்தருள, இவளும் அவனுடைய திருமுகத்தைப்பார்த்து அவனுடைய திருக்கண்களினழகாலே வஶீக்ருதையாய், "உன்பக்கலுள்ள ப்ரீத்யதிஶயத்தாலே நெஞ்சுருகிக்கொண்டு உன் தாமரைத்தடங்கண் விழிகளாகிற வலையிலே நாங்கள் அகப்படுகைக்காக, எங்கள் சிற்றிலும் யாமடுசிறுசோறும் உன்திருவடியா லழித்தருளினாய்; நாங்கள் விளையாடுகிறபடியைக் கண்டு உகந்துகொண்டு நிற்கமாட்டிற்றில்லை; ஒன்றும் க்ருபையில்லையாகாதே?" என்றுகொண்டு, தன்னுடைய அத்யவஸாயத்தை, எம்பெருமான் தன்னழகாலே அழித்ததாக அவனையின்னாதாகிறாள்.

ஒ.—[உகவையால் நெஞ்சமுள்ளுருகி] - எம்பெருமான் தன்னைப் போகவொட்டாதொழிய, அவனைக் கடைக்கணியாதிருந்து, தானும் தோழிமாரும் சிற்றிலிழைக்கை தொடக்கமான லீலாவிநோதவ்யாஜத்தாலே அநபரைகளைப்போலே யிருக்க,

---

தம் - ஈஶ்வரனோடேக்க இத்யாதி. த்விதீயாவதாரிகையாகப் பழிசொல்லாமைக்கு ஹேத்வந்தரம் - அது என்தான் இத்யாதி. விவரணம் - நீ அல்பம் இத்யாதிவாக்யத்வயமும். கீழ், உகவாதாரென்று - லௌகிகராகவருளிச்செய்து, அர்த்தாந்தரம் - உன்னுடையமின்னிடை இத்யாதி. இந்தப்பக்ஷத்தில் பழிக்குவிஷயம் - ஈஶ்வரன். வளைக்கிறஇவனையும் வளைப்புண்கிற இவர்களையும் அறிந்தால் "பாவபந்தமில்லை" என்று நிஶ்சயிக்கலாயிருக்க, அதுசெய்யாதே "பாவபந்தமுண்டு" என்றுசொல்லுகிறபடி எங்ஙனே? என்ன - பிரிவாற்றமல் இத்யாதி. (அ

இவளுடைய வீக்ஷிதாதிகளையொழியத் தான் யரிக்கக்ஷமனல்லனாகையாலே, இவள்கடாக்ஷிக்கைக்காக இவளுடைய சிற்றிலையும் சிறுசோற்றையும் தன் திருவடிகளாலே சிதற, சிற்றிலழித்த சீற்றத்தாலே தன்னுடைய ஸங்கல்பத்தைமறந்து, அவன்முகத்தைப் பார்த்து அவன் கண்ணழகிலே ஈடுபட்ட பிராட்டி, "நாங்கள் ப்ரீத்யதிசயத்தாலே நெஞ்சு உருகி தாமரைத்தடாகம்போலே மனோஹரமான உன்னுடைய திருக்கண்களின் நோக்காகிற வலையுள்ளே அகப்படும்படி பண்ணுகைக்காக எங்கள் சிற்றிலையும், நாங்கள் அடுகிற சிறுசோற்றையும் உன் திருவடிகளாலே அழித்தருளினாய்; எங்களுடைய லீலாவிநோதங்களைக்கண்டு ப்ரீதனாய் உன்னுடைய முகவொளிதிகழ முறுவல்செய்து நின்றிலை; இங்ஙனே செய்தவிடம் தக்கோர்மைசெய்தா யல்லை" என்றுசொல்லி, "எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷியேன்" என்று தான்பண்ணின ஸங்கல்பத்தையும் அவன் தன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே ஶிதிலமாக்கினபடியைச்சொல்லி அவனை இன்னாதாகிறாள்.

ப.—அநந்தரம், இவன் தகைந்தவாறே கடக்கப்போய்ச் சிற்றிலிழைக்க, "நம்மை அநுவர்த்தித்துப்போகாதே அநாதரித்தார்கள்" என்கிற சீற்றத்தாலே சிற்றிலை யழிக்க, நாங்கள் உன்முகஶோபையைப் பார்த்திருந்து சிற்றிலிழையாதபடி இத்தை யழித்தாயே! என்றின்னாதாகிறாள்.

உகவையால் - அகவாயிலுகப்பாலே, நெஞ்சம் - நெஞ்சானது, உள்ளுருகி - உள்ளுருகி, உன் - உன், தாமரை - தாமரைபோலேயிருக்கிற, தட - பெரிய, கண் - கண்ணினுடைய, விழிகள் - பார்வைகளாகிற, வலை - வலைக்குள்ளே, அகப்படுப்பான் - அகப்படுத்துகைக்காக, எங்கள் - எங்கள், சிற்றிலும் - சிற்றிலையும், யாம் - நாங்கள், அடு-அடுகிற, சிறுசோறும் - சிறுசோற்றையும், கண்டு - கண்டு, நின் - உன்னுடைய, முகம் - திருமுகத்தில், ஒளிதிகழ - ஒளிதிகழும்படி, முறுவல் - முறுவல், செய்து - செய்து, நின்றிலை - பார்த்துக்கொண்டுநில்லாதே, உன் - உன், திருவடியால் - திருவடிகளாலே, அழித்தாய் - அழித்தாய்; தகவுசெய்திலை - இதிலோர் இரக்கமறச்செய்தாய். இத்தால் - ஆஶ்ரிதருடைய லீலாவிபூதியிற் பாரிப்பை அழிக்குமென்னுமிடம் தோற்றுகிறது.

இ.—ஒன்பதாம்பாட்டில், "'போகவொட்டேன்' என்றால், நினைத்தபரிமாற்றம் பெற்றாலன்றோ இவனுக்கு ப்ரயோஜநமுள்ளது; ஒருதேச விசேஷத்திலே முக்தர் ஸம்ஸாரிகளோடு உறவற்றிருக்குமாபோலே, அந்யபரதை பண்ணுவோம்" என்று சிற்றிலிழைக்கத் தொடங்கினார்கள்; இவர்களுடைய வீக்ஷிதாதிகளையொழியத் தனக்குச் செல்லாமையாலே, இவர்கள் கடாக்ஷிக்கைக்காகச் சிற்றிலையும் சிறுசோற்றையும் தன் திருவடிகளாலே அழித்தான்; அத்தாலே இவர்களுக்குச் சீற்றம்பிறந்து, தங்கள் ஸங்கல்பத்தை மறந்து அவன்முகத்தைப்பார்த்துச் சொல்லுகிறார்கள்: [உகவையால் நெஞ்சமுள்ளுருகி] - பிரிந்து நெஞ்சைப் புண்படுத்துகையால்வந்த உருகுதல் ஒழிய, எங்களுகவையால் நெஞ்சமுள்ளுருகி. [உன் தாமரைத்தடங்கண்விழிகளின் அகவலைப்படுப்பான்] - தாமரைத்தடாகம்போலே மனோஹரமான உன்னுடைய கண்ணில் நோக்காகிற வலையுள்ளே அகப்படுத்துகைக்காக. த்ருஷ்டிவஶ்யத்தாலேயிறே அநந்யார்ஹமாக்குவது. [அழித்தாயுன் திருவடியால்] - உன்சிற்றிலழிக்கவேண்டும் பரிகரம் அமையாதோ இதுக்கு? ஜகத்ஸம்ஹாரம் பண்ணுவது ஸங்கல்பத்தாலேயிறே. ஸங்கல்பத்தாலே

யாதல், கையாலேயாதலழிக்கலாகாதோ? [தகவுசெய்திலை] - நிர்க்ஷயர்செய்வதைச் செய்தாய். பிரிந்தபோதே ப்ரணயித்வம் போயிற்றிறே. நீர்மையுடையார் செய்வதும் செய்திலை. "நான்செய்த குறையென்?" என்ன:—[எங்கள் சிற்றிலுமித்யாதி] - எங்கள் லீலைகளைக்கண்டு ப்ரீதனாய், நின்முகவொளிதிகழ முறுவல்செய்து நிற்க, நாங்கள் சிற்றிலைத் தொட்டுக்கொண்டிருந்து கடைக்கண்ணாலே உன்னைப் பார்த்துக்கொண்டிருக்க வைத்திலையே. முழுக்கப்பார்க்கில் எல்லாரோபாதியுமாமே. ப்ரணயியைப்பார்ப்பது கடைக்கண்ணாலேயிறே. உன்னுடைய லீலைபோலே என்றிருந்தாயோ எங்களுடைய லீலையை? கர்மநிபந்தநமாகையாலே த்யாஜ்யமிறே இது. "உன்னோடு ஸம்ஶ்லேஷியேன்" என்று நான்பண்ணின ஸங்கல்பத்தை அழகாலே அழித்தாய்; லீலைகளைத்திருவடிகளாலே அழித்தாய் என்று இன்னாதாகிறாள்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. "இவன் 'போகவொட்டேன்' என்று வளைத்துக் கிடந்ததுக்கு ப்ரயோஜநமுள்ளது இவனுக்கு நினைத்தபடி பரிமாறப் பெற்றாலன்றோ? ஒரு தேசவிசேஷத்திலே முக்தர் ஸம்ஸாரிகளோடு உறவற்றிருக்குமாபோலே இவன்முகம் பாராதேயிருக்கிறோம்" என்றத்யவஸித்துப் பேசாதே யிருந்தவாறே, "தன்னை நினைத்துக்கொண்டிருந்தோம் என்றிருக்கும்இவன்" என்று "அந்யபரதைதோற்றச் சிற்றிலிழைப்போம்" என்று இழைக்கப்புக, "என்னைப்பாராதே இருப்பதுமன்றிக்கே சிறிது அந்யபரதை பண்ணுவதே!" என்று சிற்றிலையும் சிறுசோற்றையும் தன்திருவடிகளாலே அழிக்க, அத்தாலே அவர்களுக்குச் சீற்றம்பிறந்து, தங்கள் ஸங்கல்பத்தை மறந்து அவன்முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறார்கள். அவனுடைய அபிமதசித்திக்கும் ஸாதநம் திருவடிகள்காணும். அடியுடையார்க்கெல்லாம் சாதித்துக்கொள்ளலாமே.

[உகவையால் நெஞ்சமுள்ளுருகி) - வாராய்! உன்ப்ரவ்ருத்தி வ்யர்த்த ப்ரவ்ருத்திகாண்; பிரிந்து நெஞ்சைப் புண்படுத்துகையாலே வந்த உருகுதலொழிய, எங்களுக்கு உகவையால் நெஞ்சமுள்ளுருகிப் பண்ணவிறே நீ பார்த்தது; அதுசெய்யப்போகாது. [உன்தாமரையித்யாதி] - பகற்கண்டகுழியிலே விழவிட்டகப்படுத்துவான்; த்ருஷ்டிபந்தத்தாலேயிறே அநந்யார்ஹமாக்குவது. தாமரைபோலே பரிமளத்தையும் குளிர்த்தியையும் சிவப்பையு முடைத்தாய், போக்தாக்களாலுண்டறுக்கவொண்ணாத போக்யதா ப்ரகர்ஷத்தையுடைய திருக்கண்களின் நோக்காகிற வலையுள்ளே அகப்படுத்துகைக்காக. [அகவலை] - வலைக்குள்ளே. அகவலை - அகவியவலை என்றுமாம். *கண்ணென்னும் நெடுங்கயி

ஒன்பதாம்பாட்டு - உகவை இத்யாதி. "அழித்தாயுன் திருவடியால்" என்றத்தைக்கடாக்ஷித்து, தத நுகுணமாக அவதாரிகை - இவன்போகவொட்டேன் இத்யாதி. சிற்றில் - சிறியக்ருஹம். ரஸோக்தி - அவனுடைய இத்யாதிவாக்யத்வயமும். அடியுடையார்க்கு - ஐஶ்வர்யமுடையார்க்கென்றும், திருவடிகளையுடையார்க்கென்றும் அர்த்தத்வயம்.

இவனுடைய ஸங்கல்பவாக்யத்தைச் சொல்லுமவர்களுடைய உட்கருத்தை இவர்கள் வார்த்தையாலே அருளிச்செய்கிறார் - வாராய் இத்யாதி. இவனுடைய ப்ரவ்ருத்திதன்னையும், அது வ்யர்த்தமானபடியையும் அடைவே சொல்லுகிறார்கள் - பிரிந்து இத்யாதிவாக்யத்வயத்தாலே. உகவை - உகப்பு. "உன்தாமரைபுரைகண்ணிணையும் செவ்வாய் முறுவலுமாகுலங்கள்செய்ய" என்றத்தைப் பற்ற - 'பகற்கண்டகுழியிலே' என்றது. கண்ணாலே அகப்படுத்துமோ? என்ன - த்ருஷ்டிபந்தத்தாலே இத்யாதி "தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும்" என்னக்கடவதிறே. விழி - நோக்கு. "வலை - அகப்படுப்பான்" என்னுதல் - "அகவிய - வலைப்படுப்பான்" என்னுதல். படுப்பான் - படுத்துகைக்காக இத்யர்த்தம். அகவியவலை - நெடியவலை. அப்படிநெடியவலையாயிருக்குமோ? என்ன - கண்

றிறே கண்ணிலே யகப்பட்டால், ஜ்வரஸந்நிபதிதரைப்போலப் பிதற்று மித்தனையிறே ; ‘ தாமரைக்கண்ணனை விண்ணோர்பரவுந்தலைமகனை ” என்கிறபடியே. [அழித்தாயுன் திருவடியால்] - ஸங்கல்பத்தாலழிக்கலாவது தன்சிற்றிலிறே; இவர்களுடைய சிற்றில் ஸ்பர்ஶித்தழிக்கவேணுமே: உன்சிற்றிலழிக்கும் பரிகரமமையாதோ இதுக்கு? ஜகதுபஸம்ஹாரம் பண்ணுவது ஸங்கல்பத்தாலேயிறே. ஶேஷபூதனுக்குத் திருவடிகள் உத்தேஶ்யமானவோபாதி, ப்ரணயிநிகளுக்கும் திருவடிகளுத்தேஶ்யமாயிறேயிருப்பது. [அழித்தாய்] - வெறுஞ் சிற்றிலையன்றுகாண் நீ யழித்தது ; எங்களகவாயையும் அழித்தாய்காண் ; * சிற்றிலோடெங்கள் சிந்தையும் சிதைத்தாய்காண். காலாலே சிற்றிலையழித்து, கண்ணாலே யெங்களபிஸந்தியையும் அழித்தாய்காண் என்கிறார்கள். [தகவுசெய்திலை] - க்ருபையுடையார் செய்வதைச்செய்திலை. பிரிந்தபோதே ப்ரணயித்வம்போயிற்றிறே ; இனிக்கண்ணுடையார் செய்வதும் செய்திலை. கண்படைத்ததுக்கு ப்ரயோஜநம் நல்லதுகண்டுகோண்டிருக்கவன்றோ ? * உன்முகத்தனகண்களல்லவே ! “நான் செய்தகுறையென்?” என்ன,- [எங்கள்சிற்றிலித்யாதி] - உன் ஸ்ருஷ்டிபோலே அநுபாதேயமோ எங்கள்ஸ்ருஷ்டி? உபாதேயமன்றோ ? “என்னுடைய ஸ்ருஷ்டி அநுபாதேயமானபடியென் ? உங்கள்ஸ்ருஷ்டி உபாதேயமானபடியென் ?” என்னுமே அவன் ; உன்னைப்போலே நெருப்பும் காற்றும் அன்னலுந் துன்னலுமாகவிட்டு கர்மாநுகுணமாக ஸ்ருஷ்டித்ததோ இது ? * வண்டல் நுண்மணல் தெள்ளி யாம் வளைக் கைகளால் சிரமப்பட்டதன்றோ இது! [யாமடுசிறுசோறுங் கண்டு]- நீ யடுசிறுசோறு நிர்மால்யத்தோபாதி புறம்பு ஒருத்தர்க்கு புஜிக்கலாகாது; நீயே புஜிக்கு மத்தனை ; † (அத்தாபரமாத்மாவிறே). நாங்களடுசிறுசோறு *மூடநெய்பெய்து முழங்கை வழி

---

ணென்னும் இத்யாதி. கண்களாகிற நெடியகயிறென்றபடி. நாச்சியார்திருமொழி, “கார்த்தண்” இத்யாதி. அப்படி கண்ணழகிலே ஈடுபடுவர்களோவென்ன - கண்ணிலே இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - தாமரைக்கண்ணனை இத்யாதி. ஸங்கல்பத்தாலே அழிக்கவொண்ணாதோ ? என்ன - ஸங்கல்பத்தால் இத்யாதி. ‘‘திருவடியால் - அழித்தாய்” என்றவர்களுடையஹார்த்தபாவம் - உன் சிற்றில் இத்யாதி. அவன்சிற்றில் - ஜகத்தென்னுமத்தையும், அழிக்கும் பரிகரம் - ஸங்கல்பமென்னுமத்தையும் வ்யக்தமாக அருளிச்செய்கிறார் - ஜகதுபஸம்ஹாரம் இத்யாதி. ப்ரணயிநியானவள் காலாலென்னாதே, “திருவடியால்” என்று பூஜ்யமாகச்சொல்லுவானேன்? என்ன - ஶேஷபூதனுக்கு இத்யாதி. ஹார்த்தபாவம் - வெறுஞ்சிற்றிலை இத்யாதி. விவரணம் - சிற்றிலோடு இத்யாதி. நாச்சியார்திருமொழி. சிதைத்தாய் - அழித்தாய் இத்யர்த்த꞉. அழித்தப்ரகாரமேதென்ன - காலாலே இத்யாதி. ப்ரணயிநி க்ருபைசெய்திலையென்னலாமோ? என்ன - பிரிந்த இத்யாதி. தகவு - க்ருபை. ‘‘தகவு” என்றதுக்கு அர்த்தாந்தரம் - இனிக்கண்ணுடையார் இத்யாதி. தகவு - ந்யாயம்: ஏகார்த்தமாதல். கண்ணுடையாரென்றது - ஶ்லேஷம்; கண்ணுக்கும், தயைக்கும்பேர். விவரணம் - கண்படைத்ததுக்கு இத்யாதி. இரண்டாமர்த்தத்துக்கு, கண்படைத்தார்க்கு யோக்யமானது செய்திலையென்று பாவார்த்தம். நல்லதுகாணாதபோது கண்படைத்ததுக்கு ப்ரயோஜநமில்லையோ ? என்ன - ‘உன்முகத்தனகண்களல்லவே’ என்று. உன்முகத்திலிருக்கிறவை கண்களல்லவோ இத்யர்த்த꞉. நாச்சியார்திருமொழி. “எங்கள்சிற்றில்” என்றதுக்கு வாஸநை - உன்ஸ்ருஷ்டிபோலே இத்யாதி. அன்னல் - வெய்யில். துன்னல் - சிறுதிவலை. ‘வண்டலித்யாதி’ - நாச்சியார்திருமொழி; “குண்டுநீர்” இத்யாதி. பாசுரத்துக்கர்த்தம் - வண்டலிலுள்ள நுண்ணியமணலைத்தெள்ளி தூர்ப்பலைகளான நாங்கள் வளையையுடைய கைகளாலே க்லேஶப்பட்டிட்டதன்றோவென்று. “யாமடு” என்றதுக்கு பாவம் - நீ யடு இத்யாதி. நீயேபுஜிக்குமத்தனையென்றது - ‘யஸ்ய ப்ரஹ்ம ச க்ஷத்ரஞ்ச உபே பவத ஓதந꞉’ என்றத்தைப்பற்ற. ‘மூடநெய்பெய்து’ இத்யாதிக்கு-பால்சோறு மூடநெய்யைவிட்டுக் கலந்து முழங்கை வழியிலே நெய்பெருகும்படி கூடியிருந்தென்றர்த்தம். ஸ்வாபதேஶத்தில், அவன்சிற்றிலாவது - லீலா

வாரக் கூடியிருந்து புஜிக்குமதன்ரே? [கண்டு நின்முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலேயே] - எங்களுடைய லீலாவிநோதங்கண்டு ப்ரீதனாய், உன்னுடைய முகவொளிதிகழ மந்தஸ்மிதம்பண்ணி நிற்கமாட்டிற்றிலையே; இங்ஙன்செய்தவிடம் தக்கோர்மை செய்தாயல்லையே என்று இன்னாதாகிறார்கள். [தகவுசெய்திலை] - நாங்கள் சிற்றிலிழைக்கிறோமாகப் பாவித்துக் கடைக்கண்ணாலே உன்முகவொளியையும் முறுவலையும் கண்டுகொண்டிருக்கவொட்டிற்றிலையே. முழுக்கப்பார்க்கில் எல்லாரோபாதியுமாமே: ப்ரணயியைப் பார்ப்பது கடைக்கண்ணாலேயிறே? எங்ஙனே பாராதேயிருந்து சிற்றிலிழைத்தார்கள்தான்!

---

## பத்தாம் பாட்டு.

---

நின்றிலங்குமுடியினாய்! இருபத்தோர்கால்அரசுகளைகட்ட
வென்றிநீள்மழுவா!வியன்ஞாலம் முன்படைத்தாய்! [சுடர்!
இன்றிவ்வாயர்குலத்தை வீடுய்யத்தோன்றியகருமாணிக்கச்
நின்தன்னால்நலிவேபடுவோம் என்றும் ஆய்ச்சியோமே.

ஆ.—(நின்றிலங்கு.) இப்படி - எம்பெருமானுடைய அழகாலும் ஸ்வவிஶ்லேஷஜநித நிரவதிகாவஸாதத்தாலுமாகத் தன்னுடைய ஊடலெல்லாந்தீர்ந்து, தன்னை யகப்படுத்தின அவனுடைய அழகையும் ஸௌர்யகாருண்ய வாத்ஸல்யாதிகுணங்களையும் பேசி, இப்படியே குணவானா யிருந்துவைத்து, விஶ்லேஷபரம்பரைகளாலே எங்களை யென்றும் இங்ஙனே நலிவேசெய்துபோனாய்; ஆய்ச்சியோமாய்ப்பிறந்து நாங்கள் உன்னாற்பட்டது உன்னைப்பிரிந்தார்படும் வ்யஸநம் அறியாத நீ யறியாய்காண் என்கிறாள்

ஒ.—[நின்றிலங்கு முடியினாய்] - அந்யபரைகளாய் நேராகப்பாராதேயிருந்த இப்பிராட்டியும் தோழிமாரும் நேரப்பார்க்கைக்காக, இழைக்கிறசிற்றிலைத் திருவடிகளாலே அழித்தருள, அவ்வந்யாயப்பாடறிவிப்பாரைப்போலே, அவனைத் திருவடிகளை தொடங்கித்திருமுடியளவும் நோக்குகையாலே அவனுக்குப்பிறந்த வழகையும், மேன்மையையும், தாங்கள் இவனோடேஸம்ஶ்லேஷிப்போமல்லோமென்று அபிஸந்திபண்ணியிருக்க அத்தை அழித்த ப்ரஸங்கத்தாலே இருபத்தொருபடிகால் க்ஷத்ரியகுலத்தையெல்லாம் கோலியறுத்த ஆண்பிள்ளைத்தனத்தையும், பண்டு ப்ரளயகாலத்தில் அஸத்கல்பமான ஜகத்தை உண்டாக்கினாற்போலே இடைச்சாதியடையத் தலையெடுக்கும்படிவந்து திருவவதாரம் பண்ணியருளின உபகாரத்தையும் பேசாநின்றுகொண்டு ஊடல்தீர்ந்து, அவனோடு ஸம்ஶ்லேஷித்து, ஏவம்வியனான உன்னால் இடைப்பெண்களான நாங்கள் நலிவேபடப் பிறந்தோமென்று தங்களுடைய ஆர்த்தியெல்லாந்தீரத் தாங்கள்பட்டநோவை அறிவிக்கிறாள்.

---

விபூதி. "எங்கள்சிற்றில்" என்றுதொடங்கி, "நின்றிலை - தகவுசெய்திலை" என்றந்வயித்துஹாவம் - எங்களுடைய இத்யாதிவாக்யத்வயம். திகழுகை - ப்ரகாசிக்கை. தக்கோர்மை - க்ருபை, ந்யாயமும். இன்னாதாகை - வெறுக்கை. கீழ்வாக்யவிவரணம் - நாங்கள்சிற்றில் இத்யாதி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - எங்ஙனே இத்யாதி. (கூ)

ப.—அநந்தரம், "முகவொளிதிகழமுறுவல்செய்து நின்றிலையே" என்று முகம்பார்த்து வார்த்தைசொன்னவளவிலே தங்களகவாயில் மறந்தீர்ந்து, தங்களை பஹுமுகப்ரவ்ருத்தியாலே அவனுபிமுக்யம் பண்ணுவித்தபடியை நினைத்து, ஸர்வப்ரகார ரக்ஷகனை! உன்னாலே நாங்கள்இப்படிநலிவுபடுவதே! என்று ஸமாஹிதையாய் வார்த்தை சொல்லுகிறாள்.

(ஸமஸ்த ஜகத்ரக்ஷணத்துக்கும் ஒருநாளும் தாழ்வில்லாமையாலே), நின்று - நிலைநிற்க, இலங்கு - விளங்குகிற, முடியினாய் - திருவபிஷேகத்தையுடையையாய், இருபத்தோர்கால் - இருபத்தொருபடிகால், அரசு - ராஜாக்களை, களைகட்ட - உன்மூலநம் பண்ணின, வென்றி - வென்றியையுடைத்தான, நீள் - பெரிய, மழுவா - மழுவையுடையையாய்! வியல் - விஸ்தீர்ணமான, ஞாலம் - ஜகத்தை, முன் - ஸ்ருஷ்டிகாலத்திலே, படைத்தாய் - உற்பாதித்தவனாய், இன்று - இக்காலத்திலும், இ - இந்த, ஆயர்குலம் - இடைக்குலமானது, வீடு - தங்கள்குடியோடே, உய்ய - உஜ்ஜீவிக்கும்படியாக, தோன்றிய - அவதீர்ணனான, கருமாணிக்கச்சுடர் - நீலரத்ந ப்ரபோஜ்ஜ்வலமான வடிவையுடையவனே! நின்தன்னால் - (இப்படி ஸர்வப்ரகாரரக்ஷகனாகையினாலே எங்களுக்கு நாயகனுமாய் எங்கள்மறத்தையும் அழித்து அழிந்தஸத்தையுமுண்டாக்கி எங்களோடுறவும் உடையையாய் அநுபாவ்யமான வடிவையுமுடைய) உன்னாலே, ஆய்ச்சியோம் - அறிவில்லாத இடைக்குலத்திலே பிறந்த நாங்கள், என்றும் - என்றும், நலிவு - நலிவு, படுவோமே - படும்படியாவதேயென்று ஸமாஹிதையானபின்பு முன்புபட்ட நலிவை நினைத்துச் சொன்னளாகிறது

"நானதஞ்சுவன்" என்று முதற்பாட்டிலேவந்த ஒருமைக்குப்பின்பு வந்த பன்மையெல்லாம் - ஆத்மநிபஹுவசந மாதல், தோழிமார்களைபுங்கூட்டி அவர்களுக்காகச் சமைந்துசொன்னதாதல்.

இ.—பத்தாம் பாட்டில், லீலையைத் திருவடிகளாலேஅழித்த சீற்றத்தாலே முன்புத்தையவற்றை மறந்து, அவ்வந்யாயப்பாட்டைஅறிவிப்பாரைப்போலே, "இவனை முகம்பாரோம்" என்ற ஸங்கல்பமழிந்து முகத்தைப் பார்த்தார்கள்; நெஞ்சில் மறமெல்லாம்போய் அந்தத்திருவடிகளை தொடங்கித் திருமுடியளவும்பார்க்க, அத்தாலே அவனுக்குப்பிறந்த விஶ்லேஷத்தைச்சொல்லுகிறாள்: [நின்றிலங்கு முடியினாய்] - என்னைத் தோற்பிக்கையாலே நிலைநின்று விளங்காநின்ற திருவபிஷேகத்தை உடையவனே! அபிஷிக்தக்ஷத்ரியர் விஜயாபிஷேகம் பண்ணினாற்போலே, எங்களைத் தோற்பித்த பின்பு முடியும் நற்றரித்து விளங்குவதுஞ்செய்த தென்கை. இத்தலையில் ஸத்தை உண்டாம் அத்தாலே ரக்ஷகத்வம் நிலைநின்றபடி. [இருபத்தோர்கால் இத்யாதி] - "உங்களபிஸந்தியைக்குலைத்து முகம்பார்க்கப் பண்ணினோமிறே" என்ன, உன்னோடு எதிரிட்டாரில் உன்னைவென்றாருண்டோ? இருபத்தோர்படிகால் க்ஷத்ரியகுலத்தைக் கோலியறுத்த ஆண்பிள்ளையல்லையோ? எதிரிகளை மழுவாலே அழித்தாற்போலே, அநுகூலரை அழகாலே அழிப்புதி. "பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" என்று ஆண்களை அழிக்கக்கடவநீ, அபலைகளை அழிக்கச்சொல்லவேணுமோ? [வியன்ஞாலமுன்படைத்தாய்] - ப்ரளயத்திலே உருமாய்ந்து கிடந்த பூமியை உண்டாக்கினாற்போலேயிறே ப்ரணயரோஷத்தாலே அழிந்த எங்களை உண்டாக்கினபடி. வியன் - விஸ்மயம். ப்ரளயங்கொண்ட பூமியை எடுத்தாற்போலேயிறே விரஹப்ரளயங்கொண்ட எங்களை எடுத்த

படி. அங்கு விலக்குவாரில்லாமையாலே செய்யலாம்; நிஷேயிக்கச்செய்தேயன்றோ உண்டாக்கிற்று. [இன்று இத்யாதி] - இன்று இவ்விடைச்சாதி ஸபரிகரமாக உஜ்ஜீவிக்கும்படி தோன்றினவன். விடுய்ய - ஸபரிகரமாக உய்ய. [கருமாணிக்கச்சுடர்] - ப்ரணயரோஷத்தாலேஇருய்த்திருக்கிற எங்களை மேல்விழுந்து உன்னழகை அநுபவிப்பித்தவனே! [நின்தன்னால் நலிவே படுவோமென்றும்]-இவ்வநுபவம் ஸ்வப்நகல்பமாய், ஆற்ருமையிறே யெங்களுக்கு நிலைநின்று போருவதென்று தாங்கள் பட்டநோவை அறிவிக்கிருர்களென்னுதல்; "ஜிதஜெ" என்றும், "தோற்றேம்மடநெஞ்சம்" என்றும் தாங்கள் தோற்றபடியை அவன்தனக்குச் சொல்லுகிருர்களாகவுமாம். [ஆய்ச்சியோமே] - இடக்கையும் வலக்கையும் அறியாத நாங்கள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. "நின்முகவொளிதிகழமுறுவல்செயதுநின்றிலேயே" என்று விழுக்காடறியாதே வாய்தப்பச் சொல்லிக்கொண்டு நின்ருர்கள்; காலால் அழித்தது சிற்றிலையன்றே: இவர்கள்நெஞ்சில் மறத்தையேயிறே; அந்த மறம் போனவாறே மேல் நோக்கி பாதாதிகேசாந்தமாகப் பார்த்தார்கள்; தங்களை ஜயிக்கையாலுண்டான ஹர்ஷம் வடிவிலேதோற்றும்படி நின்ருன்; அவ்வடிவில் பிறந்தவேறுபாட்டைச் சொல்லுகிருர்கள்.

[நின்றிலங்குமுடியினுய்] - இவர்களை ஜயிப்பதற்குமுன்பு தலைச்சுமையாய்க் காணும் கிடந்தது; இப்போதாயிற்று நற்றரித்து ஒளிவிடத் தொடங்கிற்று. சில ராஜாக்கள் தந்தாமெதிரிகளை யழித்து வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் பண்ணி நிற்குமாபோலே, முன்பே முடிசூடியிருக்கச்செய்தேயும் இவர்களைத் தோற்பிப்பதற்குமுன்பு அஸத்ஸமமாய்க் காணும் இருந்தது. ராவணுதிகளை ஜயித்ததுக்குச் சூடினமுடிபோலல்லவிறே ப்ரணயிநிகளை ஜயித்ததுக்குச்சூடின முடியிருப்பது; இவர்கள் அபிஸந்தியைக் குலைத்துப் பொருந்தவிட்டுக் கொண்டபின்பு காணும் மேன்மையையுடையனுய் உஜ்ஜ்வலனுமாய் முடியும்நற்றரித்தது. "அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் க்ருதக்ருத்ய:" (அபிஷிச்யச லங்காயாம்ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் க்ருதக்ருத்ய:)- "ஸ்ரீபரதாழ்வானைப்போலே 'நான் முடிசூடேன் நீர்முடிசூடும்' என்று முடிக்குஇருய்க்கிற் செய்வதேன்?" என்று உடம்புவெளுத்

பத்தாம்பாட்டு.—நின்றிலங்கு இத்யாதி. "நின்றிலங்குமுடியினுய்" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை - நின்முகம் இத்யாதி. 'விழுக்காடறியாதே'யென்றது - மேல் ஸம்ஶ்லேஷிக்குமதறியாதேயென்றபடி. வாய்தப்பச்சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன - காலாலழித்தது இத்யாதி. இந்தப்பாட்டுக்கவதாரிகை - அந்தமறம் இத்யாதி.

ஸுஸ்திரமாய் ப்ரகாசியாநிற்கிற முடியையுடையவனே என்று பதார்த்தம். இப்போது ஸுஸ்திரமாய் ப்ரகாசியாநிற்கிறதென்கையாலே-இதுக்குமுன்பு அதில்லையென்று தோற்றிற்றிறே; அத்தையருளிச்செய்யாநின்றுகொண்டு, "நின்றிலங்கு" என்கிறத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிருர் - இவர்களை இத்யாதி வாக்யத்வயத்தாலே. "நின்று, இலங்கு" என்கிறபதத்வயத்துக்குமர்த்தம்- 'நற்றரித்து ஒளிவிடத்தொடங்கிற்று' என்று. உக்தத்துக்குத்ருஷ்டாந்தம் - சிலராஜாக்கள் இத்யாதி. வீராபிஷேகம் - அபிமந்யுவுக்கும், விஜயாபிஷேகம் - அர்ஜுநனுக்குமாக விஹாரங்கண்டுகொள்வது. அபலைகளைஜயித்து முடிசூடினுனென்றது அதிசயமோ? என்ன - ராவணுதிகளை இத்யாதி "நின்று, இலங்கு, முடியினுய்" என்றபதத்ரயார்த்தத்தையும் அவரோஹணக்ரமத்தாலே விவரிக்கிருர் - இவர்கள்அபிஸந்தியை இத்யாதி. இவர்களைப்பொருந்தவிட்டுக்கொண்டு அத்தாலே க்ருதார்த்தனுயிருந்ததுக்கு த்ருஷ்டாந்தம் - அபிஷிச்ய இத்யாதி. "அபிஷிச்ய க்ருதக்ருத்ய:" என்கிறதென்? அபிஷேகம்பண்ணுகிற தருந்தலோவென்ன - ஸ்ரீபரதாழ்வானை இத்யாதி. உடம்புவெளுத்திருந்த பெரு

துக்காணும் இவரிருந்தது; "ஒருபடி அத்தலைச்சுமையைக் கழித்துப்போந்தோம்; இதுவும் தலைச்சுமையாகிற் செய்வதேன்?" என்று. இக்ஷ்வாகுவம்ஶ்யர்க்குப் பணியிறே முடிக்கு இருக்கை. அடிக்கு இருயாதிருக்கையும் முடிக்குஇருக்கையுமிறே ஸ்வரூபம். "அதுகிடக்க; உங்கள் அஹிஸங்யியைக்குலைத்து உங்களைவென்றோமிறே" என்றான். [இருபத்தோர்காலித்யாதி] - மிடுக்கரான ராஜாக்களை இருபத்தோருபடிகால்வென்ற உனக்கு அபலைகளான எங்களை வெல்லுகை பெரியபணியோ? "எனக்கு" என்றிருப்பாரையும் உனக்காக்கிக்கொள்ளவல்ல உனக்கு உனக்கேயாயிருப்பாரை வெல்லுகை பெரியஏற்றமோ? ஆசுரப்ரக்ருதிகளாய் நாட்டைப் பட அடித்துத்திரிகிற க்ஷத்ரியகுலத்தைக் கிழங்கெடுத்த மிடுக்கனே! களைகட்டுகையாவது - எடுத்துப் போகடுகை. ராஜாக்களை வென்றவுனக்கு இடைச்சிகளை வென்றேயென்பது ஓரேற்றமோ? † (ராஜாக்களை யுந்மூலமாம்படிபண்ணின வெற்றியையுடைத்தான பெரியமழுவையுடையவனே!) [வியன்ஞாலமுன்படைத்தாய்]-ப்ரளயத்திலே உருமாய்ந்துகிடந்த பூமியையுண்டாக்கினாற்போலேயிறே ப்ரணயரோஷத்தாலேயழிந்த எங்களையுண்டாக்கினபடி. வியன் - விஸ்மயம். ப்ரளயங்கொண்ட பூமியையெடுத்தாற்போலே, விரஹப்ரளயங்கொண்ட எங்களை யெடுத்தபடி. அங்கு விலக்குவார்இல்லாமையாலே செய்யலாம்; "கழகமேறேல்" என்று நிஷேதிக்கச்செய்தேயன்றோ உண்டாக்கிற்று? [இன்றித்யாதி] - "பஹு ஸ்யாம்" (பஹுஸ்யாம்) என்று போதுவானஸ்ருஷ்டி தேடிப்போகவேணுமோ? இவ்விடைக்குலத்தேவந்து பிறந்து, இன்று இவ்விடைச்சாதியை ஸபரிகரமாக வடிவைக் காட்டி ரக்ஷித்தவனன்றோ? ஆஶ்ரிதவிஷயத்திற்பண்ணின ஓரம் தன் பேறு என்னுமிடம் வடிவிலேதோன்றும்படிகாணும்இருக்கிறது. [வீடேய]-"ஸவா த்ருவள த்ருஹமண:"

---

மாளுடைய வுட்கருத்தை யருளிச்செய்கிறார் - ஒருபடிஅத்தலை இத்யாதி. 'உடம்புவெளுத்துக்காணும் இவரிருந்தது' என்றவாக்யத்தை - மேலில்வாக்யத்திலும் கூட்டிக்கொள்வது. ஸ்ரீபரதாழ்வான் முடிக்கிருய்த்தால்இவர்க்கு முடிக்கிருய்க்கவேணுமோ? என்ன - இக்ஷ்வாகு இத்யாதி. ஸ்ரீவிபீஷணும் வானை இக்ஷ்வாகுவம்ஶஜ ரென்றது - "க்ஷுவ்யாஹிஜக்ஷு நராக்ஷஸா நாம்வயாவஷு" என்றத்தைப்பற்ற. அவர்கள்தான் முடிக்கிருய்க்கைக்குஅடி யேதென்ன, ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்த வரப்பெண்கிறார் - அடிக்கிறயாது இத்யாதி. அதுகிடக்கவென்றது - "நின்றிலங்குமுடியினாய்" என்றெண்ணைக்கொண்டாடுகிறது கிடக்க என்றபடி. "உங்களைவென்றோம்"என்று சொன்னவனுக்கு மூன்றுவகையாகவுத்தரம் சொல்லுகிறார்கள் - மிடுக்கரான இத்யாதியாலும், எனக்கென்றிருப்பாரை இத்யாதியாலும், ராஜாக்களை இத்யாதியாலும். அதாவது - காயிகமும்மாநஸமும் ஜாதிப்ரயுக்தமுமான தோல்விகளென்றபடி. ஶப்தார்த்தம் - ஆசுரப்ரக்ருதிகளாய் இத்யாதி. இருபத்தொருதலைமுறை ராஜாக்களை யுந்மூலநம்பண்ணினவெற்றியையுடைத்தான பெரியமழுவை யுடையையாய் இத்யர்த்தம். தங்கள் ப்ரணயரோஷத்தைப்போக்கிச் சேர்த்துக்கொண்டபடி சொல்லுகிறவிடத்திலே ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறதுக்குபாவம் - ப்ரளயத்திலே இத்யாதி. தங்களுக்கு ப்ரளயமுண்டோவென்ன - ப்ரளயங்கொண்ட இத்யாதி. முன்படைத்தாய் - மஹாப்ரளயாந்தத்திலே படைத்தாயென்றபடி. வியன் ஞாலம் - விஸ்மயநீயமான பூமியென்னுதல், விஸ்தீர்ணமான பூமியென்னுதல். ஜகத்ஸ்ருஷ்டியத்தனை அருமையுண்டோவென்ன, அதிலும் இது அதிகமென்கிறார் - அங்குவிலக்குவார் இத்யாதி வாக்யத்வயத்தாலே. "கருமாணிக்கச்சுடர்"என்றதுக்கு மூன்றுபாவம். தன்வடிவழகாலே இடைக்குலத்தை வசீகரித்தவனென்று பூர்வபாவியாக ஒருபாவம்; இத்தையருளிச்செய்கிறார் - ஸபரிகரமாக இத்யாதியாலே. இத்தை உஜ்ஜீவிப்பித்தபின்பு அவன்வடிவு புகர்பெற்றதென்று அபரபாவியாக இரண்டாம் பாவம்; இத்தையருளிச்செய்கிறார் - ஆஶ்ரிதவிஷயத்தில் இத்யாதி. இடைக்குலத்தை உஜ்ஜீவிப்

(ஸபுத்ரபௌத்ரஸ்ஸகணஃ) என்கிறபடியே ஸபரிகரமாகவுய்ய. [தோன்றிய] - ஆவிர்ப் பவித்த. ப்ரணயரோஷத்தாலே "சேரோம்" என்றிருக்கிற தங்களைச் சேர்த்தபடியாலே 'கரு மாணிக்கச்சுடர்' என்கிறார்கள். [நின்தன்னாலித்யாதி] - சத்ருக்களாய் முடிந்துபோகப் பெறாதே, ஸம்ஸாரிகளாய் அந்யபரராய்ப்போகப் பெறாதே,நீ நலியவும் நாங்கள்நோவுபடவு மாம்படி சமைந்துவிட்டதிறே! இரண்டுதலையுங்கூடி மேல்விழுந்தணைத்துக்கொண்டு நின்று சொல்லுகிற வார்த்தையிறே. இவ்வளவும் தங்கள் வெற்றியேயிறே சொல்லிப்போந் தது; இப்போதிறே தங்கள்தோல்விக்குஇசைந்தது. †(இவ்வநுபவம் ஸ்வப்நகல்பமாய்ஆற் றாமையிறே எங்களுக்கு நிலைநின்று போருவதென்று, தாங்கள் பட்டநோவை யறிவிக்கிறார்க ளென்னுதல்; அன்றிக்கே, "ஜிதந்தே" (ஜிதந்தே) என்றும், "தோற்றோம்மடநெஞ்சம்" என்றும் தாங்கள் தோற்றபடியை அவன்றனக்குச் சொல்லுகிறார்களாகவுமாம்.) [நலிவேபடு வோம்] - இதுதான் எங்களுக்கு மெய்யாகப்புகாநின்றதோ? எங்களுடையதேயிறே எங் களுக்கு ஸித்தித்துவிடுவது. இவர்களுடையதாவது - "கூடிலும் நீங்கிலும் யாம்மெலிதும்" என்று மெலிவேயாயிருக்கை. [ஆய்ச்சியோமே] - இடக்கையும் வலக்கையும் அறியாத நாங்கள். (கo)

பித்தவனாய், எங்கள் ப்ரணயரோஷந்தீர்க்கையாலே யுஜ்ஜ்வலனானவனே என்று மூன்றும்ஸம்போதநம்; இத்தையருளிச்செய்கிறார் - ப்ரணயரோஷத்தாலே இத்யாதி. பூர்வபாவியான அர்த்தவிவரணமாதல். "கருமாணிக்கச்சுடர்" என்று - ஸம்புத்தி. "நின்தன்னால் நலிவேபடுவோம்" என்றவர்களுடைய ஹார்த்தபாவமாதல், "நலிவே" என்ற அவதாரணத்துக்குபாவமாதல் - சத்ருக்களாய் இத்யாதி. "அரசு களைகட்ட வியன்ஞாலம்" என்றபதங்களைப்பற்ற - சத்ருக்களாய் என்றும், ஸம்ஸாரிகளாய் என்றும் அருளிச்செய்தது. இத்தால் - ராஜாக்களையும் ஸம்ஸாரிகளையும் வ்யாவர்த்திக்கிறதென்று கருத்து; "நலிவேபடுவோம்" என்றது - ப்ரணயரோஷத்தாலே சொல்லுகிற வார்த்தையோ? என்ன - இரண்டுதலையும் இத்யாதி. இதுக்குநியாமகமேதென்ன - இவ்வளவும் இத்யாதி. ஸம்ஶ்லேஷம் ஸித்தித்திருக்க, "என்றும் - நலிவேபடுவோம்" என்பானேன்? என்ன - இதுதான் இத்யாதி. என் றும் - ஸர்வகாலமும். "நலிவேபடுவோம்" என்று - தங்கள் துஃகம்சொல்லுகிறார்களாதல், தோல்வி சொல்லுகிறார்களாதல்; முந்தினது - 'சத்ருக்களாய்' இத்யாதிவாக்யத்திலேகண்டுகொள்வது. அதா வது - ஸம்ஶ்லேஷமல்பமாய், தாங்கள் பட்டநோவே அதிகமென்றறிவிக்கிறார்களென்றபடி. தோல்வி சொல்லுகிறது - 'இவ்வளவும் தங்கள்வெற்றியேயிறே' இத்யாதிவாக்யத்திலே கண்டுகொள்வது. 'கூடிலும்நீங்கிலும்யாமெலிதும்' - திருவிருத்தம்பதினாரும்பாட்டு, "பலபலவூழிகளாய்" இத்யாதி. 'கூடிலும்நீங்கிலும்யாமெலிதும்' என்றதுக்கர்த்தம் - கூடில் "மேல்பிரிவுவருகிறதோ?" என்னும்பயத் தாலும், நீங்கில் விஶ்லேஷவ்யஸநத்தாலும் மெலிவுதோமென்றபடி. ஆய்ச்சியோம் - அறிவில்லாத இடைக்குலத்திற்பிறந்தநாங்கள், என்றும் - நலிவேபடுவோம் இத்யந்வயஃ. "நானதஞ்சுவன்" என்ற ஏகவசநத்துக்குப் பின்புசொன்ன பன்மையெல்லாம் - ஆத்மநி பஹுவசநமாதல், தோழிமாரையுங்கூட் டிக்கொண்டாதல். (கo)

## பதினோராம் பாட்டு.

ஆய்ச்சியாகியஅன்னையால் அன்றுவெண்ணெய்வார்த்தையுள்சீற்றமுண்
கூத்தஅப்பன்தன்னைக் குருகூர்ச்சடகோபன் [டழு
ஏத்தியதமிழ்மாலை ஆயிரத்துள்இவையுமோர்பத்து இசையோடும்
நாத்தன்னால்நவிலஉரைப்பார்க்கு இல்லைநல்குரவே.

ஆ.—(ஆய்ச்சியாகிய.) - அதிஸ்நேஹிநியான யசோதைப்பிராட்டி, "வெண்ணெய்களவுகண்டாய்" என்று பொடிந்தபோதுபோலே, ஆழ்வார் தாம் ப்ரணயகோபத்தாலே "எம்பெருமானோடு கலப்பேனல்லேன்" என்றுஅகல, அது பொறுக்கமாட்டாமே தளர்ந்த தளர்த்தியை அநுஸந்தித்து இனியராய் அவ்வெம்பெருமானை ஏத்தின இத்திருவாய்மொழியை, இப்பாவவ்ருத்தியின்றிக்கே சொன்னார்க்கும், எம்பெருமான் ஸந்நிஹிதனாயிருக்கச்செய்தே †பிறங்கித் தாம்பட்ட து:கம் படவேண்டா வென்கிறார்.

ஒ.— [ஆய்ச்சியாகிய அன்னையால்] - அதிஸ்நேஹிநியான யசோதைப் பிராட்டி 'வெண்ணெய் களவுகண்டாய்'என்று பொடிந்தபோதுபோலே ஆழ்வார் தாம் ப்ரணயகோபத்தாலே "எம்பெருமானோடே கலப்பேனல்லேன்" என்றகல, அதுபொறுக்க மாட்டாமை தளர்ந்த தளர்த்தியை அநுஸந்தித்து இனியராய், எம்பெருமானை ஏத்தின இத்திருவாய்மொழியை இப்பாவவ்ருத்தியின்றிக்கே வாங்மாத்ரத்தாலே சொன்னார்க்கும் எம்பெருமான் ஸந்நிஹிதனாய் இருக்கச்செய்தே † பிறங்கி ஆழ்வார் தாம்பட்ட துக்கம் படவேண்டாவென்கிறார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியைச்சொல்லுமவர்களுக்கு பகவதலாபரூபமான தாரித்ர்யமில்லையென்றுபலத்தை யருளிச்செய்கிறார்.

ஆய்ச்சியாகிய - இடைக்குலத்திலேபிறந்த, அன்னையால் - யசோதையாகிற தாயாராலே, அன்று—, வெண்ணெய்வார்த்தையுள் - வெண்ணெய்க்களவு வார்த்தை பிறந்தவளவிலே, சீற்றமுண்டு-சீறப்பட்டு,அழு - அழுதுதோப்புக்கண்டமிட்ட,கூத்தன்-கூத்தையுடையவனான, அப்பன்தன்னை - லோகோபகாரகனை, குருகூர்ச்சடகோபன் - ஆழ்வார், ஏத்திய - ஸ்தோத்ரரூபமாகவருளிச்செய்த, தமிழ்மாலை - த்ராவிட ஸந்தர்ப்பரூபமான, ஆயிரத்துள்ளும் - ஆயிரத்துள்ளும், இவை - (விமுகரை அபிமுகராக்கிக் கொண்ட அத்விதீயமான) இவை, ஓர்பத்தும்-பத்தையும், இசையொடும் - இசையோடே கூட, நாத்தன்னால் - நாவுக்கு ப்ரயோஜநமாக, நவில - செறிய, உரைப்பார்க்கு - உரைப்பார்க்கு, நல்குரவு - பகவதலாபமாகிற தாரித்ர்யம், இல்லை - இல்லை. இது - ஆசிரியத்துறை.

இ.—நிகமத்தில், இப்பத்தை ஸாதரமாகக்கற்குமவர்கள், நான் பட்ட க்லேசம் படார் என்கிறார்.

[ஆய்ச்சியாகிய அன்னையால்] - அன்னையென்று பொதுவிலே சொன்னால் தேவகிப்பிராட்டிபக்கலிலும் ஏறு மென்று; 'ஆய்ச்சியாகிய' என்று விசேஷிக்கிறார். முலையுண்டு வளர்ந்த விடத்திலேயிறே அச்சமுள்ளது! [அன்று வெண்ணெய் வார்த்தையுள் சீற்றமுண்டு] - வெண்ணெய் களவுபோயிற்றென்கிற வார்த்தையிலே "இவனே

† பிறங்கல்-செறிதல். ஸஞ்சரித்தல்

செய்தான்" என்று தாயார் பொடியப் பொடியுண்டு கண்ணும் கண்ணீருமாய் நின்றாற் போலேயாயிற்று, இன்று இவர்கள் "திரளிற்புகுரவேண்டா" என்றபோது நின்றநிலே. [அழுகூத்தவப்பன்] - அழுகிறதசையில் கால்மாறியிட்டபோது வல்லாராடினாற்போலே யிருந்தபடி. [அப்பன்தன்னை] - அந்நிலையைக்காட்டிச் சேர்த்துக்கொண்டு தம்மையுண்டாக்கினபடி. [குருகூர்ச்சடகோப னேத்திய தமிழ்மாலை] - ப்ரணயரோஷம் போனவாறே, "போகுநம்பீ" என்றும், "புள்ளுவம்பேசாதே" என்றும் சொன்னவை வைத்திற்றுய்விட்டது. [இவையுமோர் பத்து] - அத்விதீயமானபத்து; ஆஸ்ரிதரோடுண்டான ஸௌஹார்த்தத்தை வெளியிட்ட பத்து. [இசையொடும்] - வாங்மாத்ரத்தாலே. [நவில உரைப்பார்க்கு] - ஸாதரமாகச் சொல்லுவார்க்கு. [இல்லை நல்குரவே] - தூதுவிட்டு, அவன் வரக்கொண்டு, "புகுரவொட்டோம்" என்று பட்ட க்லேசம் படவேண்டா. சோறும் புடைவையும் கிடைக்கு மென்கிறதன்று: ஸௌஹவத்தாரித்ர்ய மில்லை யென்கிறது. "சென்றேன்றி நின்ற திரு" என்கிறபடியே அவன் தானேவந்து மேல்விழ, நித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழியை ஸாதரமாகச் சொல்ல வல்லார்க்கு பகவத்தாரித்ர்ய மில்லை யென்கிறார்.

[ஆய்ச்சியாகியஅன்னையால்]-க்ஷத்ரியஸ்திரீ யொருதாயும் இடைச்சி யொருதாயுமாகையாலே, போதுவறுத்து இடைச்சியாகிய தாயாலேயென்கிறார். தேவகிப்பிராட்டியாரடிக்கில் இத்தனை நோவாதுகாணும். "தாயெடுத்தசிறுகோலுக்குளைந்தோடி" என்கிறபடியே "இவள் நம்மை யதட்டுவேதே!" என்றுஉளைந்திறே கிடப்பது. தைவமறியத் தாயாண்டே யிறே தேவகியார்பக்கலுள்ளது ; முலைச்சுவடறிந்ததும் முகம்பழகிற்றும் வளர்ந்ததுமெல்லாம்இங்கேயிறே. [அன்றுவெண்ணெய்வார்த்தையுள்]-ஊரிலே "வெண்ணெய்களவு போயிற்று" என்றார்கள்; அவ்வளவிலே "நாமிறே இதுக்குஇலக்கு" என்று அழப்புக்கான். "மடம் மெழுகுவாரார்" என்ன,"அஸ்ரோத்ரியன்" என்றார்கள்; "இப்பரப்பெல்லாம் என்னாலே மெழுகப்போமோ ?" என்றான், அதுபோலே. ஆரேனுமேதேனும் செய்யிலும் இவனைச் சொல்லும்படியிறே இவன்தீம்புதான்; "பல்லாயிரவர் இவ்வூரில்பிள்ளைகள்தீமைகள் செய்வாரேல்லாம் உன்மேலன்றிப்போகாது" என்னும்படியிறே யிருப்பது. [சீற்றமுண்டழு

நிகமம் - ஆய்ச்சி இத்யாதி. "நவிலவுரைப்பார்க்கில்லைநல்குரவு" என்றத்தைக் கடாக்ஷவதாரிகை - இத்திருவாய்மொழியை இத்யாதி. 'பகவத்' அநுபவ 'தாரித்ர்யம்' என்று கூட்டுவது.

அன்னையாலென்னுதே, "ஆய்ச்சியாகியவன்னை" என்று விசேஷித்ததுக்குபாவம் - க்ஷத்ரியஸ்த்ரீ இத்யாதி. "இடைச்சியாகிறதாய்" என்றதுக்குக் கருத்தேதென்ன - தேவகிப்பிராட்டியார் இத்யாதி. யசோதைப்பிராட்டியடித்தால் நோமோ? என்ன - தாயெடுத்த இத்யாதி: திருமொழி எட்டாம்பத்து மூன்றாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "வாயெடுத்த" இத்யாதி. உளைந்து - ஈடுபட்டு, பயப்பட்டென்றபடி. சிறுகோல் - வைக்கோலென்றபடி. மாத்ருத்வம் உபயஸாதாரணமாயிருக்க, அவளடித்தால் பொறுக்கப்போகாதென்கைக்குஹேதுவேதென்ன - தைவமறிய இத்யாதிவாக்யத்வயம். வெண்ணெயுண்டழுவென்னுதே "வார்த்தையுள் அழு" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஊரிலே இத்யாதிவாக்யத்வயத்தாலே. தன்னை யென்னுதிருக்க, ப்ரஸங்கமாத்ரத்தாலே தன்மேலே யாரோபித்துக்கொள்ளுகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - மடம்மெழுகுவார் இத்யாதி. தன்னையென்னுதிருக்கத் தன்பேரிலே ஏறிட்டுக்கொண்டுஅவன் அழுகைக்கு ஹேதுஏது? என்ன - ஆரேனும் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - பல்லாயிரவர் இத்யாதி. பஞ்சலக்ஷங்குடியான இவ்வூரில் தீமைசெய்யுமவர்களான பிள்ளைகள் அநேகமாயிரம்பேர்களிறே. 'எல்லாமுன்மேலன்றிப்போகாது' - தாம்தாம்செய்த

கூத்தவப்பன்தன்னை] - தாயார் போடியப் போடியுண்டழுகிற தசையில் "பையவேநிலை யும்" என்கிறபடியே நிற்கிற நிலை வல்லாராடினாற்போலே இருந்தபடி. அன்றிக்கே, அழுகையாகிற கூத்தையுடைய மஹோபகாரகனை யென்றுமாம். இதுஒன்றுக்கு நிதர்சந மாகச்சொல்லுகிறது: "போகுநம்பீ" என்றும், "கழகமேறேல்நம்பீ" என்றும் இவர்கள் சொன்னபோது நிரபேக்ஷனானவன் கால்வாங்கிப் போகமாட்டாதே நின்ற நிலைக்கு த்யோதகம். [அப்பன்தன்னை] - அந்நிலையைக் காட்டிச் சேர்த்துக்கொண்டு தம்மையுண்டாக்கின படி. [குருகூர்ச்சடகோபன் ஏத்தியதமிழ்மாலை] - ப்ரணய ரோஷத்தாலே "போகுநம்பீ" என்றும், "கழகமேறேல்நம்பீ" என்றும், "உன்புள்ளுவமறியாதவர்க்குஉரைநம்பீ" என்றும் சொன்னவையெல்லாம் அந்தரோஷம்போனவாறே ஏத்தாய்விட்டது. [ஆயிரத்துள்இவையுமோர்பத்து] - ஆஸ்ரிதரோடுண்டான ஸாவபந்தத்தை வெளியிட்ட அத்விதீயமான பத்து. [இசையோடும்]-வாங்மாத்ரத்தாலே. [நவிலவுரைப்பார்க்கு] - ஸாதரமாகச்சொல்லுவார்க்கு. [இல்லைநல்குரவே] - தாரித்ர்யமில்லை. அதாவது-தூதுவிட்டு, அவன்வரக்கொண்டு "புகுரவோட்டோம்" என்று பட்ட க்லேசம்படவேண்டா. சோறும் புடைவையும் கிடைக்குமென்கிறதன்று;பகவத்தாரித்ர்யமில்லையென்கிறது;"உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையு மெல்லாங்கண்ணன்" என்றிருக்கிற இவருடைய நல்குரவிறே யாகையாலே. அதிகாராநுகூலமாயிறே அந்நபாநாதிகளுமிருப்பது. "உண்டியேயுடையேயுகந்தோடு மிம்மண்டலத்தோடுங்கூடுவதில்லையான்" என்கிறவர்கள் இத்தை ஐஸ்வர்யமாக நினையார்களே. "சென்றேன்றிநின்றதிரு" என்கிறபடியே, அவன் தானேவந்து மேல்விழ நித்யாநுபவம்பண்

---

*தீமைகளை நீசெய்தாய் என்று உன்மேலே வையாநின்றார்கள். ஆகையாலே அவர்கள் செய்கிற தீமைகளெல்லாம் உன்மேலே ஏறுமதொழியப் புறம்புபோகாது என்றபடி. பெரியாழ்வார்திருமொழி. சீற்றமுண்டு - தாயாலே கோபிக்கப்பட்டு. அழுகை கூத்தாகமாட்டாமையாலே, அழுகிறபோது "பையவேநிலையும்" என்கிறபடியே நிற்கிற நிலையென்கிறார்-தாயார்போடிய இத்யாதி. அதாவது-"ந்ருத்யதீவ தர்ம" [ரா.ஸு.உ.௨0,௨௧] என்கிறபடியே தமக்குஆகர்ஷகமாயிருக்கையாலே-"கூத்து"என்கிறாரென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு ஸாவம்-ஸர்வ நியந்தாவானவனுக்கு ரோதநயோக்யதையில்லாமையாலே யழுகிறானாக பாவித்தானென்றபடி. இப்போது,"அழுகூத்தவப்பன்"என்று வர்ணிக்கிறதென்? என்ன - இதுஒன்றுக்கு இத்யாதி. "அப்பன்" என்றதுக்கு உபகாரகனென்று கீழருளிச்செய்து, 'ஜநகன் என்றர்த்தாந்தரம் - அந்நிலையைக்காட்டி இத்யாதி. ப்ரணயரோஷத்தாலே திரஸ்கரித்து வார்த்தைசொல்லாநிற்க, "ஏத்திய" என்கிறதென்? என்ன - ப்ரணயரோஷத்தாலே இத்யாதி. அதாவது - தம்முடையரோஷம்போய் அவனைக்கண்டவாறே, ஸ்தோத்ரம்பண்ணினாற் பிறக்கும் ப்ரீதி அவனுக்குண்டாகையாலே "ஏத்திய" என்கிறாரென்றபடி. "இவையுமோர்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஆஸ்ரிதரோடு இத்யாதி. 'வாங்மாத்ரத்தாலே' யென்றது - அர்த்தஸஹிதமாகவன்றிக்கே யென்றபடி. நவிலுகை - விரும்புகை. 'பகவத்தாரித்ர்ய மில்லையென்கிறது' என்றவநந்தரம் - அதாவது இத்யாதிவாச்யமநுஸந்தேயம். ஐஸ்வர்யதாரித்ர்யம் இல்லையென்கிறதோவென்ன - சோறும் இத்யாதி. சோறும் புடைவையும் கிடைக்குமென்றாலோவென்ன - உண்ணும்சோறும் இத்யாதி. கீழ் அந்வயத்தாலே யருளிச்செய்து, வ்யதிரேகத்தாலே அருளிச்செய்கிறார் - உண்டியே இத்யாதி.சோறுபுடைவைமுதலான ப்ராக்ருதபோகங்களையேவிரும்பிக்கொண்டு திரிகிற இஜ்ஜகத்தோடும் கூடுவதில்லை இத்யர்த்தஃ. பெருமாள்திருமொழி. நல்குரவில்லையாகிற் பெறுகிறதேதென்ன - சென்றேன்றி இத்யாதி. தானேவந்து மேல்விழுந்து ஒருநாளும் விடாதேநிற்கும் பகவானாகிற ஸம்பத்தென்றபடி. நான்முகன் திருவந்தாதி அறுபத்தோராம்பாட்டு "மனக்கேதம" இத்யாதி. "நல்குரவு" என்று முழுச்சொல்லு- அழகூத்த இத்யாதி. "அழுகூத்தவப்பன்" என்றதின் முந்தின வர்த்ததிலே "முழுதும்வெண்ணெய்" இத்யாதியை யோஜித்துக்கொள்வதென்றபடி. பெருமாள்திருமொழி, ஏழாங்*

ணப்பெறுவர்கள். 'அழுகூத்தவப்பன்' என்கிறவிடத்திலே "முழுதும் வெண்ணெ யளைந்து தொட்டுண்ணும்" என்கிற பாட்டை யோஜித்துக்கொள்வது.

---

*திருமொழி, எட்டாம்பாட்டு. 'முழுதம்வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும் முகிழிளஞ் சிறுத் தாமரைக்கையும்' - வெண்ணெயிலுண்டான ஆதராதிஶயத்தாலே குடத்தில் வெண்ணெயெல்லா வற்றையுமளைந்து, "மாளுமோ" என்னும் சாபலத்தாலே தொட்டுண்கிற இளந்தளிர்போலேயும் தாமரைப்பூப் போலேயும் இருக்கிற சிறுக் கையும். 'எழில்கொள் தாம்புகொண் டடிப்பதற்கெள்கு நிலையும்' - அவன் திருமேனியில் ஸ்பர்ஶத்தால் வந்த காந்தியையுடைய தாம்பைக்கொண் டடித்ததுக்கு ஈடுபட்டுநிற்கும்நிலையும். 'வெண்டயிர்தோய்ந்தசெவ்வாயும்'- வெளுத்த தயிர்படிந்த சிவந்த திருப்பவள மும். 'அழுகையும்' - "கள்ளனுக்குவதே நம்மை" என்றழுகையும். 'அஞ்சிநோக்கு மந்நோக்கும்' - அழப்புக்கவாறே "வாய், வாய்" என்ன, அத்தாலே பயப்பட்டுப் பார்த்துக்கொடுநிற்கும் அந்தநோக் கும். 'அணிகொள்செஞ்சிறுவாய்நெளிப்பதுவும்' - அழாதிருக்கவும்மாட்டாதே யழவும்மாட்டாதே அழ கிய சிவந்த சிறுத்திருப்பவளத்தை நெளிக்குமதுவும். 'தொழுகையும்' - அபராதபரிஹாரார்த்தயாகப் பண்ணுகிற அஞ்சலியும். 'இவைகண்டவசோதை' - இவற்றை யிங்கே ஸாக்ஷாத்கரித்த யசோதைப் பிராட்டி. 'தொல்லையின்பத்திறுதிகண்டாளே - பரமபதத்தில் நிரவதிகமான ஆநந்தத்தினவதி கண் டாளிறே இத்யர்த்தஃ. தொல்லை - பெருமை. 'வெண்ணெய்வார்த்தையுள் - அன்று - ஆய்ச்சியாகிய வன்னையால் - சீற்றமுண்டழுகூத்தவப்பன்தன்னை' என்றந்வயிப்பது. வெண்ணெய் களவுபோன வார்த்தை பிறந்தவளவிலே இடைச்சியாகிற தாயாலே கோபிக்கப்பட்டழுகிற கூத்தை யுடைய உப காரகனையென்று ஶப்தார்த்தம்.* (கக)

---

**த்ரவிடோபநிஷத்ஸங்கதி.**—தாவதிஐம்பெஸஹநு வுணயெந ரோஷாத்க்ருஷ்ணஸோமதவிகஸ்யாவிநிந்த்ரு । தெநவஸ்தூநெநாஶயிநாதிதீ யெ ஸாவ்ஜோகித்திவஸ்ந் நீயஸோஹிதொZஹஞ்சஃ ॥

---

**த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.**—வஞ்ஜணூகஸாஹொவநா ரீஜநவஸ்ஹதயாஜொபநாஹம்வஶாஹ்நெராயாமெஶயகஸாஹுஸி ஸஹதயா ஶ்ரீஶீவஹகஸாஃ । நிஹெூராஷொத்தூஹாவாஞிரவயிகயஶஸஅஶீகாஶி உஜ்கா்ணோக்ஷவவஸெஶூயாவஸயஶீஸாதீத்ராஹகஷ்ணஶாஸிஃ॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

*மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று*
*தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த்தான்தள்ளி - உன்னுடனே*
*கூடேனென்றூடுங் குருகையர்கோன்தாள் தொழுவே*
*நாள்தோறும் நெஞ்சமேநல்கு.*

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளேஶரணம்.

# மூன்றுந்திருவாய்மொழி—நல்குரவும்: ப்ரவேஶங்கள்.

ஆ.—(நல்குரவும்.) - இப்படி "எம்பெருமான்திறத்துப் படுவோமல்லோம்" என்று இருந்த ஆழ்வார், தம்மோடே ஸம்ஶ்லேஷிக்கைக்காகத் திருவிண்ணகரிலே எழுந்தருளின எம்பெருமானுடைய நிரவதிகஸௌந்தர்யத்தாலும் ஸ்வஸம்ஶ்லேஷாலாபஜநிதமான அவஸாதத்தாலும் நிவ்ருத்த ப்ரணயகோபராய் அவனோடே ஸம்ஶ்லேஷித்து, தத்ஸம்ஶ்லேஷஜநித நிரவத்யகப்ரீதியாலே, ஸஸம்ப்ரமமாக அந்தத் திருவிண்ணகரிலே தாம் அவனைக்கண்டு ஸம்ஶ்லேஷித்தபடியையும், கீழ் ப்ரஸ்துதமான ஜகதைஶ்வர்யத்தையும், அசேஷதோஷ ப்ரத்யநீகத்வ ஸௌந்தர்யாத்யஸங்க்யேய கல்யாணகுணங்களையும் பேசுகிறார்.

ஒ.—மூன்றுந்திருவாய்மொழியில், இப்படி ப்ரணயகோபம் தலையெடுத்து "ஸர்வப்ரகாரத்தாலும் எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷிப்போமல்லோம்" என்றிருந்த தம்மை, தன்னுற்றாமையையும் தன்னழகையுங்காட்டிச் சேர்த்துக்கொண்டு ஸம்ஶ்லேஷித்தபடியைக் கண்டு, "'தன்னோடு சேர்வோமல்லோம்' என்பாரையும் சேர்த்துக்கொள்ளவல்ல திருவிண்ணகரப்பனுடைய விருத்த கடநாஸாமர்த்யம் இருந்தபடியென்?" என்றுவிஸ்மிதராக, இப்ரஸங்கத்தாலே "இன்னமும்பாரீர்" என்று தன்னுடைய விருத்த விபூதிகத்வத்தைக் காட்டியருளக்கண்டு, பண்டு "தன்னைப்பிரிந்து மஹாவஸாதத்துக்கு உதவிற்றிலன்" என்றின்னாதான ஆழ்வார், இப்படி உபகாரகனைக்கொண்டு தானே தமக்கு ப்ராப்யமும் ப்ராபகமும் மற்றுமெல்லாமாய் இருக்கிறபடியையும், அவனுடைய விருத்த விபூதிகத்வத்தையும், அகிலஹேயப்ரத்யநீகத்வத்தையும், மற்றுமுண்டான ஸௌந்தர்யாதிகளையும் ப்ரீதராய்க்கொண்டு பேசுகிறார்.

ப.—மூன்றுந்திருவாய்மொழியில், இப்படிவிமுகரான தம்மைஅபிமுகராம்படிபண்ணிக்கொண்ட விருத்தாகாரப்ரஸங்கத்தாலே, பரஸ்பரவிருத்தமான பதார்த்தங்களைத் தனக்கு விபூதியாக வடிப்பித்துக்கொண்டு நிற்கவல்ல ஈஶ்வரனுடைய அவடிதகடநாசக்தியை யபரோக்ஷித்து, அதுக்கடியான ஸர்வவ்யாபகத்வத்தையும், இதரவிஸஜாதீயதையையும், உஜ்ஜ்வல கீர்த்தித்வத்தையும், அதிஶயித க்ருபாயோகத்தையும், லீலாவிபூதிநிர்வாஹகத்வத்தையும், ஆஶ்ரிதாநுபாவ்யமான ஔஜ்ஜ்வல்யத்தையும், ஸர்வலோகஶரண்யத்வத்தையும், ஆஶ்ரிதபவ்யதையையும், நிருபமோபகாரகத்வத்தையும், அஸாதாரண ரக்ஷகத்வத்தையும் அநுஸந்தித்து, இவ்வோவாகாரங்களாலே அவடிதங்களை வடிப்பிக்கவல்லவன், நித்யஸம்ஸாரிகளான நம்மையும் நித்யஸூரிகளோடே சேர்க்கவல்லவனென்று அவனுடைய ஃபலப்ரதத்வஶக்தியை யநுஸந்தித்து, தாம் கண்டபடியே உபதேசித்தருளுகிறார்.

இ.—மூன்றுந்திருவாய்மொழியில், கீழ்ப்ரணயரோஷத்தாலே "அவனோடு ஸம்ஶ்லேஷிப்போமல்லோம்" என்றிருந்ததம்மைத்தன்னுற்றாமையையும் அழகையுங்காட்டிச்சேர்த்துக்கொண்டபடியைக் கண்டுவிஸ்மிதராக, "நீர் இது ஒன்றுகொண்டோவிஸ்மிதராகிறது? நாம் சேராதவற்றையெல்லாம் சேர்த்து ஆளவல்லோம் காணும்" என்று தன்விருத்தவிபூதிகத்வத்தைக்காட்டக் கண்டு, முன்பு "பிரிவாலேவந்த அவஸாதத்துக்கு உதவிற்றிலன்" என்று வெறுத்தவர், "ஸர்வகதனைப் தத்மதஸௌஷைரஸப்ஸ்

ப்ருஷ்டனுய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனுன இவனே நமக்கு ப்ராப்யமும் ப்ராபகமும் மற்றுமுள்ள ஸர்வவியபந்துவும்'' என்று அவன்பெருமையை அநுஹவித்து ப்ரீதராய்க்கொண்டு பேசுகிருர். நித்யஸம்ஸாரியாய்ப்போனவன்றும் * மயர்வறமதிநலத்தை நிர்ஹேதுகமாக அருளி என்னைப்பொருந்தவிட்டுக் கொண்டான்; * வளவேழுலகில் அயோக்யதையை அநுஸந்தித்து அகலப்புக, தன்நீர்மையைக்காட்டிச் சேர்த்துக்கொண்டான் ; இப்போது ப்ரணயரோஷத்தாலே அகன்று முடியப்புக, தன்னுடைய ஸர்வஶக்தியோகத்தாலே சேரவிட்டுக்கொண்டான். அவைபோலன்றிறே ப்ரணயரோஷம்: அகலவொண்ணுதே அணுகவொண்ணுதே இருப்பதொன்றிறே. இத்தாற்சொல்லிற்றுயிற்று - "அகன்று முடிந்துபோவோம்'' என்பாரையும் "உடையவன் முடியவிட்டுக்கொடான்'' என்கிறது. முதல் திருவாய்மொழியிலே, பாத்வத்தை அநுஸந்தித்து, *பத்துடையடியவரிலே ஸௌஶீல்யத்தை அநுஸந்தித்தார்; இங்கு, *மின்னிடைமடவாரிலே ஸௌலப்யத்தை அநுஸந்தித்து, இத்திருவாய்மொழியிலே பாத்வத்தை அநுஸந்திக்கிருர். இப்படி கண்ணழிவற்ற மேன்மையும் நீர்மையுமுள்ளது இவனுக்கேயென்று அநுஸந்தித்து ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பேசுகிருர்.

ஈடு.—" 'இப்படி தாழநின்றவன் ஸர்வேஶ்வரனேன்கிருர்'என்று பிள்ளான் பணிக்கும்'' என்றருளிச்செய்வர். அதாகிறது - யாவையும்யாவரும்பிழையாமல் - பிணக்கி'' என்று கீழே ப்ரஸ்துதமான ஸர்வேஶ்வரத்வத்தை அருளிச்செய்கிருர் என்று. "இதிலே ஒருவாசிதோற்ற பட்டரருளிச்செய்வர்'' என்று சீயரருளிச்செய்வர். அதாவது - "சேரோம்'' என்ற அபிஸந்தியைக் குலைத்துத் தம்மைச் சேரவிட்டுக்கொண்ட ஆஶ்சர்யத்தைக்கண்டு விஸ்மிதராகிருரேன்று. சேரவிட்டுக்கோண்டபடிதான் அநேகமிறே: முதல்தன்னிலே தம்மையும் அறியாதே அவனையும் அறியாதே யிருக்க, தன்படிகளையறிவித்துக் கூடவிட்டுக்கோண்டான் ; உள்ளே புகுர நின்று ஸ்வ நிகர்ஷத்தையும் அவனுடைய உத்கர்ஷத்தையும்அநுஸந்தித்து"நாம்அங்குத்தைக்குஅயோக்யர்''என்றுஅகல,தன்சேல்லாமையைக்காட்டிப்

---

நல்குரவுப்ரவேஶே, கீழே நீர்மையைச்சொன்னவர், இங்கே ஸர்வேஶ்வரத்வத்தைச்சொல்லுவானென்?என்கிற சங்கையிலே,பெரியவனெளிமையே குணமாவதென்கிற விவக்ஷையாலே பரத்வத்தைச் சொல்லுகிருரென்னுமத்தை ஆப்தஸம்வாதமுகேந ஊர்ஜிப்பிக்கிருர்-இப்படிதாழநின்றவன் இத்யாதி. இப்படிதாழநின்றவனென்றது - "போருநம்பீ," "கழகமேறேல்நம்பீ'' என்னலாம்படி தாழநின்றவனென்றபடி. தாழநின்றவன் காபுருஷன் அன்று; 'ஸர்வேஶ்வரன்' என்கிருர்-என்றுகூட்டுவது. விவரணம்- அதாகிறது இத்யாதி. ஒருவாசிதோற்றவென்றது-பாத்வப்ரதிபாதகமா யிருக்கச்செய்தே விருத்தவிபூதிகத்வத்தை யருளிச்செய்கையாலேஒருவிசேஷந்தோற்றவென்றபடி.'இதிலேயொருவாசிதோற்ற' என்கையாலே இவ்வர்த்தத்தை யங்கீகரித்தமை தோற்றுகிறது. அதாவது இத்யாதிவாக்யத்துக்கு தாத்பர்யம் - இதில் ஸர்வேஶ்வரத்வத்தைச்சொல்லுகிருராகில் உபயவிபூதிக்கும் நிர்வாஹகனென்கிற இவ்வளவைச்சொல்லவமைந்திருக்க, "நல்குரவும்செல்வும்'' என்றுதொடங்கி இத்திருவாய்மொழி முடிய விருத்தவிபூதிகத்வத்தை யருளிச்செய்கிறதுக்கு ப்ரயோஜநம் அடைவுபடாமையாலே, ப்ரணயரோஷத்தாலே "சேரோம்''என்று முடிந்துபோகப்புக்க தம்மைத் தன்னுடையசக்திவிசேஷத்தாலே சேரவிட்டுக்கொண்டமைக்கு த்யோதகமாக விருத்தவிபூதிகத்வத்தைக் காட்டித்தந்தானென்று. கீழேயும்சேரவிட்டுக்கொண்டதில்லையோ ? அதில் இதுக்கு வாசியேது? என்ன, வாசியை அறிவிப்பாராக அதிஷ்டிகை - சேரவிட்டு இத்யாதி. அவற்றினுடைய ஸ்வரூபங்களை விசதமாக ஊர்ஜிப்பியாநின்று

போருந்தவிட்டுக்கோண்டான்; †(*வளவேழுலகிலே.) இனி, அவைபோலன்றிறே இது ; ஒன்ருல் பரிஹரிக்கலாமதன்றே. அகலில் குற்றம், அணுகில் குற்றமா யிருப்ப தோன்றிறே! ஜாதிசண்டாளனைநோக்கினுல் ப்ராயஸ்சித்தமுண்டு; ப்ரணயாபராதசண்டாளர்க்கு அதுவு மில்லை. ஆக, இப்படிகளாலே தன்சேல்லாமையைக்காட்டி அவன்போருந்தவிட்டுக் கோண்டபடியைக்கண்டு விஸ்மிதராகிற இவர்க்கு, "இவ்வளவல்லகாணும் நம்முடைய ஆஸ்சர்யங்க ளிருக்கும்படி; லோகத்தில் தன்னில்தான் சேராத விருத்தபதார்த்தங்களுமெல் லாம் நம்மோடே சேர்ந்திருக்கிறபடி பாரீர் ; ஆனபின்பு, நம்மோடுசேராதாரில்லைகாணும்!" என்று தன்னுடைய விருத்தவிபூதிகத்வத்தைக் காட்டிக்கோடுக்கக் கண்டு, "இது இருந்த படி என் ?" ‡ கோடுத்த சைதந்யத்தைக்கோண்டு அகலுகைக்குஉடலாயிருக்கிற இவற்றை யெல்லாம் கூடவிட்டுக்கோடு நிற்கிற படிகளும்,—இனிநிமித்தமானது உபாதாநமாகமாட் டாது; உபாதாநமானது நிமித்தமாகமாட்டாது; இங்ஙனேயிருக்க—இவையெல்லாம் தானு யிருக்கிறபடியையும், இவற்றோடேகூடியிருக்கச்சேய்தேயும் இவற்றில்தோஷங்கள் தனக்கு ஸ்பர்ஸியாமலிருக்கிறபடியையும், தோஷந்தட்டாமல் கடக்கவிருக்கையன்றிக்கே நியந்தா வாயிருக்கிறபடியையும்,—இனி நாட்டில் ப்ராப்யமானது ப்ராபகமாகமாட்டாது: ப்ராபக மானது ப்ராப்யமாகமாட்டாது; இங்ஙனேயிருக்க—ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் தானேயா யிருக்கிறபடியையும், மற்றும் இவனுடைய ஸௌந்தர்யஸீலாதிகளையும் அநுஸந்தித்து, 'இப்படி உபகாரஸீலனுன ஸர்வேஸ்வரன் திருவிண்ணகரிலேவந்து ஸந்நிஹிதனுனன். இவ

கோண்டு, அவற்றிலுமிதுவே யரிதென்கிருர் - முதல்தன்னிலே இத்யாதிவாக்யங்களாலே. 'முதல் தன்னிலே' இத்யாதிக்கு - * மயர்வற மதிநலமருளிச்சேரவிட்டுக்கொண்டமையிலே நோக்கு. 'உள்ளே புகுர' இத்யாதிக்கு - * வளவேழுலகிலே நோக்கு. 'இனியவைபோலன்றிறே' இத்யாதிவாக் யத்துக்குக் கருத்து - தன்ஸ்வரூபாதிகளையும் தனக்கு இவர்பக்கலுண்டான வ்யாமோஹத்தையும் அறியாதே யகன்ற இவரை அவற்றை யறிவித்துக் கூடவிட்டுக் கொண்டதாகையாலே, கீழ்ச்சொன்ன இரண்டும் ஸுலபம்; இது, தன்பக்கல் பாவபந்தம் முருடுகொளுந்தி அகன்ற வராகையாலே ஒருஹேதுக்களாலும் பரிஹரிக்கப்போகாதாகையாலே யரிதுஎன்று. இதுபரிஹரிக்கப் போகாதென்னுமத்தை ஸ்திரீகரிக்கிருர் - அகலில் இத்யாதி. "பாவியேன்மனத்தே" என்றத்தைக் கடாக்ஷித்து. ஈஸ்வரன் மேல்விழாநிற்க முகம் மாறியிருந்த இது, நிஷ்க்ருதியில்லாத பாபமென்கிருர் - ஜாதிசண்டாளனை இத்யாதிவாக்யத்தாலே. நோக்கினுல் - திருத்தப்பார்த்தால் இத்யர்த்தஃ. 'ப்ர ணயாபராத' இத்யாதிவாக்யத்துக்குபாவம் - நாயகவிஷயத்தில் நாயகிக்கு உண்டான ப்ரணயகோபத் துக்கு பரிஹாரமில்லையென்று. ப்ரணயத்தாலேபிறந்த கோபமாகிற அபராதத்தாலே பாபிஷ்ட்டரான வர்க்கு ப்ராயஸ்சித்தமில்லையென்று பாபார்த்தம். "ப்ரணயாபராதசண்டாளன் என்று ஈஸ்வரனைச் சொல்லுகிறதென்னில்; - அதுசேராது: 'பாவியேன் மனத்தேயுறைகின்ற' என்கையாலே ஆழ்வார் ப்ரணயகோபந்தன்னையே சொல்லுகிறது" என்றருளிச்செய்வர். 'ஆக'வென்றது - கீழ் சேரவிட்டுக் கோண்டத்தைப்பற்ற; இது அவுடிதமாயிருக்கச்செய்தேயு மென்றபடி. இப்படிகளாலேயென்றது - கீழில் திருவாய்மொழியிற்சொன்ன ப்ரகாரங்களாலேயென்றபடி. 'விஸ்மிதராகிறஇவர்க்கு - காட்டிக் கொடுக்க' என்றந்வயம். "எண்ணமாய்மறப்பாய்" என்றத்தைப்பற்ற- கோடுத்த சைதந்யத்தை இத் யாதி. "பெய்தகாவுகண்டீர்" என்றத்தைப்பற்ற - இனிநிமித்தமானது இத்யாதி. "அல்லனுய்" இத் யாதியைப்பற்ற - இவற்றோடு இத்யாதி. "பாஞ்சுடர்" என்றத்தைப்பற்ற - தோஷந்தட்டாமல் இத் யாதி. "என்சரண், என்னையாளுடை" என்றத்தைப்பற்ற - இனிநாட்டில் இத்யாதி. "பொன்னப் பன்" இத்யாதியையும், "தந்தனன் தனதாள்நிழல்" என்றத்தையும்பற்ற-ஸௌந்தர்யஸீலாதிகளையும் என்றது. "என்னப்பனெனக்காயிகுளாய்" என்றத்தைப்பற்ற - பாமபந்துக்களில்லை என்றது.

† குண்டலிதம் க்வாசித்கம். ‡ இங்கு 'என்று' என்பதை அத்யாஹரித்து, 'அநுஸந்தித்து' என்பதனோடு அந்வயிக்கவேணுமென்று தோன்றுகின்றது.

வல்லது நமக்கு பரமபந்துக்களில்லை' என்று அறுதியிட்டு, 'இவன்திருவடிகளல்லது பற்றில்லை' என்று பேசுகிறாரா யிருக்கிறது.

முதல்திருவாய்மொழியிலே பரத்வாநுபவம்பண்ணி, மூன்றாந்திருவாய்மொழியிலே ஸௌலப்யத்தை யநுஸந்தித்து "எத்திறம்" என்றுகிடந்தார். இங்கு, "போகு நம்பீ" என்று தள்ளச்செய்தேயும் கால்வாங்கமாட்டாதே நின்ற நீர்மையை அநுஸந்தித்து, அதுக்குஎதிர்த்தட்டான பரத்வத்தை அநுஸந்திக்கிறார்; * மயர்வறமதிநலமருளப்பெற்றவரிறே; மேன்மையை அநுஸந்திப்பது நீர்மையை அநுஸந்திப்பதாமத்தனையிறே.

## முதற் பாட்டு.

நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய்
வெல்பகையும்நட்பும் விடமும்அமுதமுமாய்ப்
பல்வகையும்பரந்த பெருமான்என்னையாள்வானைச்
செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே.

*ஆ.—தாரித்ர்ய ஸம்பந் நரக ஸ்வர்க்காஸ்நேஹ ஸ்நேஹ விஷாம்ருத ப்ரப்ருதி விவிதபதார்த்தாந்தராத்மபூதனாய், ஸர்வேஶ்வரனா யிருந்துவைத்து என்னோடே ஸம்ஶ்லேஷித்த எம்பெருமானை, தத்கைங்கர்ய ரதித்வஸம்பத் ஸம்ருத்த திவ்யஜந பரிபூர்ணமான திருவிண்ணகரிலே கண்டேனென்கிறார்.*

*ஓ.—முதற்பாட்டில், விருத்த விபூதிகனான ஸர்வேஶ்வரனைத் திருவிண்ணகரிலே காணப்பெற்றேன் என்கிறார். [நல்குரவும்] - தாரித்ர்யமும். [வெல்பகையும் நட்பும்] - வெல்லப்படும் பகையும் உறவும். [பல்வகையும் பரந்தபெருமானென்னை யாள்வானை] - இப்படி விபூதி முகத்தாலே பலபடியும் விஸ்த்ருதனான ஸர்வேஶ்வரனா யிருந்து வைத்து "நான் அல்லேன்" என்று அகலப்புகத் தான் மேல்விழுந்து என்னை சேர்த்துக்கொண்டு அடிமைகொள்ளுகிறவனை. [செல்வம்மல்கு] - ஸம்பத்து மிருகை.*

*ப.—முதற்பாட்டில், ப்ரீத்யப்ரீதிஹேதுவான விருத்தார்த்தங்களை விபூதியாகவுடைய ஸர்வவ்யாபகனைத் திருவிண்ணகரிலே கண்டேனென்கிறார்.*

நல்குரவும் - பதார்த்தஸங்கோசரூபதாரித்ர்யமும், செல்வும்- † தத்விகாஸரூபமான ஸம்பத்தும், நரகும் - துக்கஸ்த்தாநமானநரகமும், சுவர்க்கமும் - சுகஸ்த்தாநமான ஸ்வர்க்கமும், ஆய்-ஆய், வெல் - எதிர்த்தலையைச்சாய்க்கும், பகையும் - ஶாத்ரவமும், நட்பும் - அதுக்கெதிர்த்தட்டானமைத்ரமும், விடமும் - முடிக்கும்விஷமும், அமுதமும்- உஜ்ஜீவிப்பிக்கும் அம்ருதமும், ஆய்-ஆய், (இப்படி), பல்வகையும் - பலவகையாலும், பரந்த - வ்யாப்தனான, பெருமான் - ஸர்வாதிகனாய், என்னை - இவ்வாகாரத்தையெனக்கு

"கழல்களன்றி மற்றோர்களைகணிலம்" என்றத்தைப்பற்ற - இவன்திருவடிகளல்லது இத்யாதி.

'பரத்வத்தையநுஸந்திக்கிறார்' என்றவநந்தரம், 'இப்படி வ்யுத்க்ரமமாக அருளிச்செய்கிறதுக் கடியேதென்னில்?' என்று கூட்டுவது. மேல்பரிஹாரம் - மயர்வற இத்யாதி. அதாவது - மயர்வற மதிநல மருளப்பெற்றவராகையாலே ஶ்ராவண்யாதிசயத்தாலே யருளிச்செய்கையாலே தோஷமில்லை யென்றபடி.

† 'தத்ஸம்பத்திரூபமான ஐஶ்வர்யமும்' என்றும் பாடம்.

ப்ரகாசிப்பித்து, ஆள்வானை - (அடிமைகொண்ட) ஸ்வாமியானவனை, செல்வம் - பகவதநுபவஐஸ்வர்யம், மல்கு - மிகாநிற்கிற, குடி - ஸஜ்ஜநஸமவாயத்தையுடைய, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, கண்டேன் - அபரோக்ஷிக்கப்பெற்றேன். ஆயென்கிறது - ப்ரதிபதம் சேர்த்துக்கொள்வது.

இ.—முதற்பாட்டில், விருத்தவிபூதிகனான ஸர்வேஶ்வரனைத் திருவிண்ணகரிலே காணப்பெற்றேன் என்கிறார். [நல்குரவும்] - தாரித்ர்யமும். [செல்வும்] - அதுக்கு எதிர்த்தட்டான ஐஶ்வர்யமும். [நரகும்] - து:காநுபவம் பண்ணும் நரகமும். [சுவர்க்கமும்] - ஸுகாநுபவம் பண்ணும் ஸ்வர்க்கமும். [வெல்பகையும்] - ஸமாதானத்தால் மீளுமதன்றிக்கே வென்றேவிடவேண்டும் பகையும். [நட்பும்] - அதுக்கு எதிர்த்தட்டான உறவும். [விடமும்] - முடித்தேவிடக்கடவதானவிஷமும். [அமுதமும்] - முடியாதபடியும் காத்து போக்யமுமாயிருக்கும் அம்ருதமுமாய். அநிஷ்டமான தாரித்ர்யாதிகளோடு இஷ்டமான ஐஶ்வர்யாதிகளோடு வாசியற ததீயத்வாகாரேண இவர்க்கு உத்தேஶ்யமாயிருக்குமிறே. இதில் தோஷாம்ஶம் அஸஹ்யம்அன்றோ? என்னில்,- தன்னை தேஹவிஶிஷ்டனாக அநுஸந்தித்தபோது த்யாஜ்யமாம்; ஶேஷத்வவிஶிஷ்டனாக அநுஸந்தித்தபோது உபாதேயமாகக்கடவது. ராஜபுத்ரனுக்குப் பிதாவினுடைய ஓலக்கத்தோடு சிறைக்கூடத்தோடு வாசியற "பிதாவின் ஐஶ்வர்யம்" என்றிருக்குமிறே.

[பல்வகையும் பரந்த] - இப்படி விபூதிமுகத்தாலே பலபடியும் விஸ்த்ருதனானவன். 'நாந்தோஸ்தி மம திவ்யாநாம் விபூதீநாம் பரந்தப' என்று என்விபூதிக்கு எல்லையில்லையென்றிறே தானும்சொல்லுவது. [பரந்தபெருமானென்னையாள்வானை] - ஸர்வமுதனானது தமக்காக என்றிருக்கிறார்; ஒருவனைப்பிடிக்கை சுட்டி ஒரூரை வளைவாரைப்போலே. இப்படி ஸர்வமுதனான பெருமையையுடையனுப்வைத்து, ப்ரணயரோஷத்தாலே அகன்று முடியப்புக்கவென்னைத் தாழநின்று சேர்த்துக்கொண்ட உபகாரகனை என்றுமாம். [செல்வம்மல்குகுடி] - நிரவதிகஸம்பத்தை உடையதேசம். பிறிந்து தூதுவிட வேண்டாதே, ப்ரணயரோஷத்தாலே கிட்டவொட்டோம்" என்று வ்யஸநப்படவேண்டாதே நித்யாநுபவம் பண்ணலாமிடமென்கை. "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" என்கிறபடியே இடைவிடாதநுபவிக்கிற அநுபவஸ்ரீயிறே ஸம்பத்தாகிறது. [திருவிண்ணகர் கண்டேனே] - ஓரிடத்திலேகாண ஆசைப்பட்டு ஓரிடத்தேகாண்கையன்றிக்கே, தூதுவிட்ட அர்ச்சாவதாரத்திலே கண்டு அநுபவிக்கப்பெற்றேன்.

ஈடு,—விருத்தவிபூதிகனான ஸர்வேஶ்வரனைத் திருவிண்ணகரிலே காணப்பெற்றேனென்கிறார்.

[நல்குரவும் செல்வும்] - தாரித்ர்யமும், , அதுக்குஎதிர்த்தட்டான ஐஶ்வர்யமும். [நரகும்சுவர்க்கமும்] - து:கைகதாநமான நரகமும், ஸுகைகதாநமான ஸ்வர்க்கமும். [வெல்பகையும்நட்பும்] - ஸமாதாநத்தாலே மீளுமதன்றியிலே வேன்றே விடவேண்டும்பகையும், அதுக்குஎதிர்த்தட்டான உறவும். [விடமும் அமுதமுமாய்] - முடித்தே விடுவ

---

முதற்பாட்டு.— நல்குரவு இத்யாதி. நல்குரவுதொடங்கி, "திருவிண்ணகர்க்கண்டேனே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - விருத்த இத்யாதி.

அம்ருதம் போக்யமாமதொழியப் போனவுயிரை மீட்கவற்றாயுமிருக்குமோ? என்ன - போனவுயிரை இத்யாதி. அதாவது - அம்ருதத்துக்கு இரண்டாகாரமுமுண்டென்றபடி. இஷ்டமான

தானவிஷமும், போனவுயிரை மீட்கவற்றன அம்ருதமுமாய். போனவுயிரைமீட்டுத் தான் போக்யமுமாயிறே அம்ருதமிருப்பது. அநிஷ்டமான ஊரிதர்யாதிகளோடு இஷ்டமான ஐஸ்வர்யாதிகளோடுவாசியற ததீயத்வாகாரத்தாலே இவர்க்கு உத்தேஶ்யமாயிருக்குமிறே. 'ஆய்' என்றது, ப்ரதிபதம் சேர்த்துக்கொள்வது. [பல்வகையும் பரந்தபெருமான்] - ஜ்ஞாநாதிகளுன தானுங்கூட விபூதியைப்பேசப்புக்கு "நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே" (நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே) என்று இளைத்துக் கைவாங்கினத்தை, இத்தனை ப்ரேமத்தில் கனமுடைய இவர்க்குச் சொல்லப்போகாதிறே. ஆனாலும் சிறிதுபேசினாராகவும் வேணுமிறே. வஸ்துதனக்கு விஶேஷணத்தையொழிய ப்ரதீதியில்லையிறே; "நிர்விஶேஷம்வஸ்து" (நிர்விஶேஷம்வஸ்து) என்று விஶேஷணரஹிதமாக மாயாவாதம்சொல்லுகிறானன்றே. அங்ஙனேயாகில், மோக்ஷஶாஸ்த்ரந்தான் வேண்டாவே. வஸ்துஸத்பாவங் கொள்ளும்போது விஶேஷணம் வ்யாவர்த்தகமாயல்லதிராது. ஒன்றுக்கொன்று விஶேஷணமாம்போது அந்யயோகவ்யவச்சேதம்பண்ணிக்கொண்டல்லது விஶேஷணமாகமாட்டாது; இங்கு இவனுக்கு ஸ்வவ்யதிரிக்தங்களடங்கலும் விஶேஷணமாயிருக்கையாலே அந்யயோகவ்யவச்சேதம்பண்ணவொண்ணாது; ஆனால், விருத்தவிஶேஷணங்கள் ஏகவ்யக்தியிலே ஸங்கதமாகிறபடி எங்ஙனே? என்னில்,—அயோகவ்யவச்சேதம் பண்ணிக்கொண்டு ஸங்கதமாகிறது. இவர்தாம் அவனை அநுபவிக்கவாகில்இழிகிறது,இவ்விருத்தவிஶேஷணங்களைச் சொல்லுகிற இவற்றால் ப்ரயோஜநமேன்? என்னில்,—அவனையுள்ளபடிகண்டு அநுபவிக்க

---

ஐஶ்வர்யாதிகளையொழிய அநிஷ்டமான ஊரிதர்யாதிகளைச்சொல்லுவானென்? என்ன - அநிஷ்டமான இத்யாதி. யத்வா, பிள்ளான்நிர்வாஹத்திலே, பரத்வத்தைச்சொல்லுகிறாராகில் விருத்தவிபூதிகத்வம் சொல்லுவானென்? என்ன - அநிஷ்டமான இத்யாதி. என்னுதல். இன்னம் சிலவற்றைச்சொல்லாதே, "பல்வகையும்பரந்த" என்றதிரளச்சொல்லுவானென்? என்ன - ஜ்ஞாநாதிகளுன இத்யாதி. ;;ஹந்ததேகதயிஷ்யாமி விபூதீராத்மநஶ்ஶுபா: । ப்ராதாந்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்த்யந்தோவிஸ்தரஸ்யமே"இதி பகவத்கீதாஸுதஶமே. ஆனால், முதலிலே "பல்வகையும் பரந்த" என்னாதே சிலவற்றைப்பிரித்துச் சொல்லுவானென்? என்ன - ஆனாலும் இத்யாதி. அதாவது - சொல்லவொண்ணாதென்னும்போது, சிலசொல்லிப்பின்னை "முடியாது" என்னவேணுமிறேயென்றபடி. அதுவேண்டுவானென்? என்ன - வஸ்துதனக்கு இத்யாதி. விஶேஷணமின்றியிலே வஸ்து ப்ரதீதமாகவொண்ணாதோ? என்ன, அது மாயாவாதிகளுக்கொழிய இவர்க்கு பக்ஷமன்றென்கிறார் - நிர்விஶேஷம் இத்யாதி. "நிர்விஶேஷமேவஸ்து" என்றால் விரோதமேதென்ன? அங்ஙனேயாகில் இத்யாதி. அதாவது - "ஸவிஶேஷவஸ்துவிஷயத்வாத்ஸர்வப்ரமாணாநாம்" என்கையாலே மோக்ஷஶாஸ்த்ரமும் ஸவிஶேஷப்ரஹ்மப்ரதிபாதகமொழிய நிர்விஶேஷவஸ்து ப்ரதிபாதகமல்லாமையாலே, மோக்ஷஶாஸ்த்ரம் வ்யர்த்தமாமென்றபடி. வஸ்துதனக்கு விஶேஷணத்தையொழிய ப்ரதீதியில்லையென்றார் கீழே; அதுக்குஹேதுவை யருளிச்செய்கிறார் - வஸ்துஸத்பாவம் இத்யாதி. ஸ்வேதர வ்யாவ்ருத்தத்வேந வஸ்துவை யங்கீகரிக்கவேண்டுகையாலேயென்றபடி. "விஶேஷணத்தை வ்யாவர்த்தகமாகவுடையதே வஸ்து" என்றால், "நல்குரவும்" என்கிறவிடத்தில் அதுசொல்லப்போகாதென்று ஶங்கிக்கிறார்- ஒன்றுக்கொன்று இத்யாதி வாக்யத்ரயத்தாலே. அந்யயோகவ்யவச்சேதத்துக்கு உதாஹரணம்-பார்த்த ஏவ தநுர்த்தர: என்று. அயோகவ்யவச்சேதத்துக்கு உதாஹரணம்- ராமோ தநுஷ்மாநேவ என்று. விஶேஷணமாவது - அந்யயோக வ்யவச்சேதத்வாரா ஸ்வேதரங்களிற்காட்டில் ஸ்வாஶ்ரயத்தை வ்யாவர்த்திப்பிக்குமது என்றபடி. இங்கு அந்யயோகவ்யவச்சேத முண்டோ? என்ன - இங்கு இவனுக்கு இத்யாதி. அயோகவ்யவச்சேதமாத்ரமென்று கருத்து. கீழே, "அநிஷ்டமான ஊரிதர்யாதிகள்" என்ற வாக்யத்தை ஶங்காபரிஹார பூர்வகமாக விவரிக்கிறார் - இவர்தாம் அவனை

வேணுமே. ராஜபுத்ரனுக்கு ராஜாவினுடைய ஹேகஸ்த்தாநமான ஓலக்கத்தோடு சிறைக்கூடத்தோடு வாசியற "என்பிதாவினைஸ்வர்யம்" என்றிருக்குமிறே. இவர் தமக்கு இங்குண்டான அநுஸந்தாநம், முக்தனுக்கு லீலாவிபூத் யநுஸந்தாநம்போலேயிறே.†"நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்னுநிற்கச்செய்தே, முக்தனுக்கு லீலாவிபூதி ததீயத்வாகாரத்தாலே உத்தேஶ்யமாகாநின்றதிறே; இவர்க்கும் அப்படி முக்தரோடொக்க ததீயத்வாகாரமொழிய ஆகாராந்தரஸ்ம்ருதி இல்லாதபடி, இங்கேயிருக்கச்செய்தே * மயர்வறுத்துக் கொடுத்தான். ஸ்வஸம்பந்தத்தாலே பார்த்தபோது கால்வாங்கியல்லது நிற்கவொண்ணாதபடி த்யாஜ்யமாய்த் தோற்றும்; ஜ்ஞாநாஜ்ஞாநங்களுக்குப் பொதுவான இவ்விருப்பைக்கழித்து, அதுக்குக் கலக்கமில்லாத தேசத்திலேபோகையிலே த்வரிக்கக்கடவனிறே. [பல்வகையும் பரந்தபெருமான்] - இப்படி விபூதிமுகத்தாலே பலபடியாக விஸ்த்ருதனானவன். [பரந்தபெருமா னென்னை யாள்வானை] - இந்த வ்யாப்தியெல்லாம் தம்மை யகப்படுத்தவென்றிருக்கிறார்: ஒருவனை அகப்படுத்தநினைத்தார் ஊரை வளையுமாபோலே. [செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே]-மருபூமியிலே பொய்கை கண்டாற்போலே. [செல்வம்மல்குகுடி] - மிக்கஸம்பத்தையுடைத்தான குடிகளையுடைத்தான திருவிண்ணகர். "லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:" (லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:) என்னுமாபோலே ஸம்பந்த மொத்திருக்கச்செய்தே கடக்கக்கிடந்த ஸ்ரீ பரதாழ்வானைப்போலன்றிக்கே, கிட்டநின்றுஅடிமைசெய்யும்இளையபெருமாளைப்போலே[திருவிண்ணகர்க்கண்டேனே] - "காணவேணும்" என்னுமாசையோடே யிருந்து தேஹாந்தர ப்ராப்திபண்ணி தேசாந்தரத்திலே போய்க் காண்கையன்றிக்கே,பசித்தவிடத்தே சோறுபெறு

†ப்ர.—ஶாந்தோக்யே, [அ-கஉ]"ஜக்ஷத் க்ரீடந் ரமமாண: ஸ்த்ரீபிர்வா யாநைர்வா ஜ்ஞாதிபிர்வா நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்"

இத்யாதி. ஹேயமான இத்தைக்கூட்டி அநுபவிக்கும்போது தத்ஸ்வரூபமாயிராதோ? என்ன - ராஜபுத்ரனுக்கு இத்யாதி. ததீயத்வாகாரத்தாலே உத்தேஶ்யமாவது முக்தனுக்கன்றோ? என்ன - இவர் தமக்கு இத்யாதி. "அவன் தானே நினையான்" என்றுசொல்லுகிறதே! என்ன - நோபஜநம் இத்யாதி. ஆக, இத்தால்- கர்ம நிபந்தநமான ஆகாரத்தாலே ஸ்மரியான்; ததீயத்வாகாரத்தாலே உத்தேஶ்யமென்று அநுபவிக்குமென்றபடி. அதுஇவர்க்குத் திருமேனியோடே யிருக்கச்செய்தே கூடுமோ? என்ன - இவர்க்கும் அப்படி இத்யாதி. ஆனால், "இந்நின்றநீர்மையினியாமுறாமை" என்று த்யாஜ்யமாகச் சொல்லுவானென்? என்ன - ஸ்வஸம்பந்தத்தாலே இத்யாதி. த்யாஜ்யமாகச் சொன்னதுக்கு ஹேத்வந்தரம் - ஜ்ஞாநாஜ்ஞாநங்களுக்கு இத்யாதி. "பரந்தபெருமான்" என்று - வ்யாப்தியைச்சொன்னவநந்தரம், "என்னையாள்வான்" என்றதுக்கு பாவம் - இந்தவ்யாப்தியெல்லாம் இத்யாதி. இவரொருத்தரை யாளுகைக்கு ஸமஸ்த வ்யாப்தி வேணுமோ? என்ன - ஒருவனை இத்யாதி. திருவிண்ணகர் - திருவிண்ணகரிலேயென்றபடி. "கண்டேனே"என்றதுக்குபாவம் - மருபூமியிலே இத்யாதி. "குடி"என்றது-தேஶவாஸிகளை. மிக்கஸம்பத்தாவது ஏது?என்ன-லக்ஷ்மண இத்யாதி. "ஸர்வப்ரியகரஸ்தஸ்ய ராமஸ்யாபி ஶரீரத: । லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்நோ பஹி:ப்ராண இவாபர:"இதி பாலகாண்டே. [கஅ;உஅ] ஶ்லோகத்துக்கு பாவம் - ஸம்பந்தம் இத்யாதி. "திருவிண்ணகர்க்கண்டேன்" என்றவருடைய ஹார்த்தபாவம் - காணவேணும் இத்யாதி. ஆசைப்பட்டவிடத்தே அநுபவிக்கப்பெற்ற பேருண்டோ? என்ன-நான்சேன்று இத்யாதி. வைமுக்

மாபோலே ஆசைப்பட்டவிடத்தே அநுஹவிக்கப்பெறுகை. "நான்சென்று நாடி நறையூரிற் கண்டேன்" என்னுமாபோலே. (க)

## இரண்டாம் பாட்டு.

கண்ட இன்பம்துன்பம் கலக்கங்களும்தேற்றமுமாய்த்
தண்டமும்தண்மையும் தழலும் நிழலுமாய்க்
கண்டுகோடற்கரிய பெருமான்என்னையாள்வானூர்
தெண்திரைப்புனல்சூழ் திருவிண்ணகர்நன்னகரே.

**ஆ.**—(கண்டஇன்பம்.) - உபலப்யமான ஸுகதுஃக காலுஷ்ய ப்ரஸாத நிக்ர ஹாநுக்ரஹ சீதோஷ்ணத்யங்யோந்ய விருத்த வஸ்த்வந்தராத்மஹூதனுய், ஸுதுர்த்தர் ஶனுயிருந்த ஸர்வேஶ்வரனை நான் கண்ணாலேகண்டு அடிமை செய்யும்படி புகுந்தருளின திருநகரி திருவிண்ணகரென்று திருநகரியை அநுஹவிக்கிறுர்.

ஒ.—இரண்டாம்பாட்டில்,விருத்தமான விஹூதிவிஸ்தாரங்களையுடையனுய் ஸ்வபாஹூவலத்தால் ஒருவராலும் காணவொண்ணுதபடி அறப்பெரியனுயிருந்து வைத்து என்னை அடிமைகொள்ளுகிறவனுடைய ஊரான திருவிண்ணகர் அவனுடைய திவ்யநகரங்களெல்லாவற்றிலும் நல்ல நகரம் என்கிறுர். [கண்டவின்பம்] - பரிச்சின்ன ஸுகம். [தண்டமும் தண்மையும்] - கொடுமையும் தண்ணளியும், [தழலும் நிழலும்] - உஷ்ணிக்கும் நெருப்பும் குளிரும் நிழலும்.

ப.—அநந்தரம், அந்த ப்ரீத்யப்ரீதிரூப ஸுகதுஃகங்களை அநுபந்தித்துவரும் பதார்த்தங்களை விஹூதியாகவுடையனுய், தத்ஸஜாதீயதயா த்ரஷ்டுமஶக்யனுன ஸர்வேஶ்வரனுக்கு அஸாதாரணதேஶம் திருவிண்ணகரென்கிறுர்.

கண்ட - லோகத்ருஷ்டமான, இன்பம்துன்பம் - ஸுகதுஃகங்களையும், கலக்கங்களும் - துஃகமடியாகவரும் சித்தவ்யாகுலதைகளும், தேற்றமும் ஆய் - ஸுகமடியாக வரும் தெளிவுகளுமாய், தண்டமும் - (அக்கலக்கமடியாகவருப) கோபமும், தண்மையும் - (தேற்றமடியாக வரும்) ப்ரஸாதமும், தழலும் -(கோபஸமமான ஔஷ்ண்யத்தையுடைய) அக்நியும், நிழலும் - (ப்ரஸாதஸமமான ஶைத்யத்தையுடைய) நிழலும், ஆய் - ஆய், கண்டுகோடற்கு - ஸ்ஜாதீயதயா காண, அரிய - அரியனுயிருக்கிற, பெருமான் - ஸர்வேஶ்வரனுய், என்னை - என்னை, ஆள்வான் - அடிமைகொண்டவன், ஊர் - ஊர், தெண் - தெளிந்தும், திரை - திரைக்கிளப்பத்தையுமுடைய, புனல் - ஜலத்தாலே, சூழ் - சூழப்பட்ட, திருவிண்ணகர் - திருவிண்ணகராகிற, நல்நகர்-ஊர்ஶ்நீய நகரம்.

**இ.**—இரண்டாம்பாட்டில், ஸ்வயத்நத்தால் ஒருவர்க்கும் காணவொண்ணுத பெருமையையுடையனுய் வைத்து, என்னை அடிமைகொள்ளுகிறவன் ஊரான திருவிண்ணகர் ஸர்வவிலக்ஷணமென்கிறுர்.

---

யம் பண்ணித்திரிந்த நான் தேடிச்சென்று திருநறையூரிலே காணப்பெற்றேனென்றபடி. திருமொழி ஆரும்பத்து, எட்டாந்திருமொழி, "மான்கொண்ட" இத்யாதி. (க)

*[கண்ட இன்பம்] - பரிச்சின்னஸுகம். ப்ரத்யக்ஷஸித்தமன்றிக்கே ஶாஸ்த்ரஸித்தமாய் அபரிச்சிந்நமான ஸுகத்திலேயிறே தமக்கு அந்வயம். [துன்பம்] - அதுக்கு எதிர்த்தட்டான துக்கம். [கலக்கங்கள்] - அஜ்ஞாநங்கள். [தேற்றம்] - ஜ்ஞாநம். [தண்டம்] - கோபம். [தண்மை] - ப்ரஸாதம். [தழலும்] - உஷ்ணத்தைப்பண்ணும் அக்நியும். [நிழலும்] - ஶீதஸ்வபாவமான நிழலும். [கண்டுகோடற்கு அரிய பெருமானென்னையாள்வானூர்] - ஸ்வயத்நத்தாலேகாண ஆசைப்பட்டார்க்கு அரியனாயிருக்கிறவன்கிடீர், தான் மேல்விழுந்து என்னைக்காண ஆசைப்படுகிறான்; கண்டுகொள்வதற்கரிய ஸர்வேஶ்வரனாய் என்னை அடிமைகொண்டவனூர். [தெண்திரை இத்யாதி] - தெளிந்ததிரையை யுடைத்தான ஜலத்தாலே சூழப்பட்ட திருவிண்ணகர். பரமபத முத்தேஶ்யமானவாறே விரஜையுமுத்தேஶ்யமாமாபோலே, அவ்வூர் உத்தேஶ்யமானவாறே அங்குள்ள ஜலஸம்ருத்தியும் உத்தேஶ்யமாயிருக்கிறதிறே இவர்க்கு. [நன்னகரே] - * கலங்காப் பெருநகரம் இதுக்கு ஸத்ருஶமன்று; விடாய்த்தவிடத்திலே விடாய்தீரலாம்படி இருக்கிற ஏற்றமுண்டிறே இதுக்கு.*

**ஈடு.**—இரண்டாம்பாட்டு. ஸ்வயத்நத்தாலே ஒருவர்க்கும் காணவொண்ணாத பெருமையையுடையவனாய்வைத்து என்னை அடிமைகொள்ளுகிறவன் ஊரான திருவிண்ணகர் ஸர்வவிலக்ஷண மேன்கிறார்.

[கண்டஇன்பம்] - ''ஐங்கருவிகண்டவின்பம்'' என்னுமாபோலே பரிச்சிந்ந ஸுகம். [துன்பம்] - நாமபேதமாத்ரமாய் அத்தோடொத்த து:கம். [கலக்கங்களும்தேற்றமுமாய்] - இதரவிஷயங்களினுடையஅலாபத்தால் வரும் கலக்கமும் அவற்றினுடைய லாபத்தால் வரும் தேற்றமும். [தண்டமும்தண்மையும்] - கோபமும், ப்ரஸாதமும். [தழலும்நிழலுமாய்] - உஷ்ணத்தைப் பண்ணக்கடவதான அக்நியும், ஶைத்யத்தைப் பண்ணக்கடவதான நிழலுமாய். [கண்டுகோடற்கரிய பெருமான்] - இவையெல்லாவற்றாலும் அவனுடைய அபரிச்சேத்யதை சொல்லிற்றாயிற்று. இவருடைய ஜ்ஞாந வைஶத்யமிருந்தபடி என்தான்! இங்கே சில விஶேஷணங்களைச் சொல்லா, கண்டுகோடற்கரிய பெருமானென்று அவனைச் சொல்லாநின்றார்; கீழே சிலவற்றைச்சொல்லா, ''பல்வகையும் பரந்தபெருமான்'' என்றுநின்றார்; இதென்ன அநுஸந்தாந க்ரமந்தான்! இவனையொழிந்ததொருவஸ்துவுக்கு ஸத்பாவமின்றிக்கேயிருக்கிறபடியிறே. நல்லாரும் நம்பி ஸ்ரீஸேநா

---

*இரண்டாம்பாட்டு.—**கண்டஇன்பம்** இத்யாதி. ''கண்டுகோடற்கரிய'' இத்யாதிமேலெல்லாம் கடாக்ஷித்தவதாரிகை - **ஸ்வயத்நத்தாலே** இத்யாதி.*

*இன்பமென்றதே, ''கண்டஇன்பம்'' என்றதுக்குபாவம் - ஐங்கருவி இத்யாதி. ''இன்பம் துன்பம்'' என்று ஒக்கவெடுக்கையாலே - மோக்ஷாபேக்ஷயாவிரண்டும் து:கமாயிருக்குமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - **நாமபேதமாத்ரம்** இத்யாதி. 'இவையெல்லாவற்றாலும்' இத்யாதி, ''கண்டு கோடற்கரிய'' என்றதுக்கவதாரிகையிற்சொன்ன அர்த்தமொழிய இதுவுமோரர்த்தமென்று கண்டுகொள்வது. இவையெல்லாவற்றாலுமென்றது - * கண்டஇன்பந்தொடங்கி உக்தமான இவையெல்லாவற்றாலுமென்றபடி. அதாவது - '' இவ்வளவு '' என்று எல்லைகாணமுடியாதவிபூதிவிஸ்தாரத்தையுடைய ஸர்வேஶ்வரனென்றபடி. ''கண்டஇன்பம்'' என்றுதொடங்கி, ''தழலும் நிழலும்'' என்று - விஶேஷ்யவிஶேஷணங்களைப் பிரிய நினையாதே சொல்லிக்கொடுபோந்து, ''கண்டுகோடற்கரியபெருமான்'' என்று - விஶேஷ்யமானவனை அருளிச்செய்தபடியை அநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு - **இவருடைய** இத்யாதி. வைஶத்யமாவது - ஸர்வமும் ப்ரஹ்மாத்மகத்வேந தோற்றுகை. விவரணம் - **இங்கேசில** இத்யாதி. இவ்வநுஸந்தாநக்ரமத்துக்கடியேது? என்ன - **இவனையொழிந்தது** இத்யாதி.*

பதிதாஸருங் கூடத் திருமலைக்குப் போகாநிற்க, ஸ்ரீஸேநாபதிதாஸர் தண்டையிட்டுத்துறைறை யடிக்க, நல்லார் "அர்த்தகாமநிமித்தமான த்வேஷம் இத்தோடின்றிக்கேயிருக்க, நிர்நிபந் தநமாக ஈஶ்வரவிபூதியை நலிவதே!" என்ற வார்த்தையை நினைப்பது. †(ஸ்வயத்நத்தால் கண்டுகோடற்கரிய ஸர்வேஶ்வரன்). [என்னையாள்வானூர்] - என்னை இழக்கமாட்டா மல் * மின்னிடைமடவாரில் மிறுக்கெல்லாம்பட்டு என்னைஅடிமைகொண்டவனூர். [தெண்திரையித்யாதி] - தெளிந்த திரைகளையுடைத்தான புனல்களாலே சூழப்பட்ட திரு விண்ணகராகிற நன்னகர். [தெண்திரைப்புனல்சூழ்] - திவ்யநதியானவிரஜைக்குப் போலி யான ஆறும்உண்டாகப்பெற்றது. அங்கிருக்கிறவன் இங்கேவந்துநின்றால் அங்குள்ளவை யெல்லாம் இங்கே உண்டாகத்தட்டில்லையே. [திருவிண்ணகர்நன்னகரே] - இவ்வளவில் முகங்காட்டாத ஸ்ரீவைகுண்டமும் ஒருதேஶமாயிற்றதோ? அவன் விரும்பினவிடம் ப்ரா ப்யபூமியாமித்தனையிறே. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய்
நிகரில்சூழ்சுடராய்இருளாய் நிலனாய்விசும்பாய்ச்
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான்
புகர்கோள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே.

*ஆ.—(நகரமும்.)-நகரஜநபத ஜ்ஞாநஅஜ்ஞாந தமஃப்ரகாஶஅவநிமஹந ஸர்வ நியந்தாவாயிருந்த, சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர் சேர்ந்தபிரானுடைய நிரவதிக காருண்யமல்லது மற்று உஜ்ஜீவநோபாயமில்லையென்று, தமக்கு உஜ்ஜீவநோபாயமான காருண்யகுணத்தை அநுபவிக்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், திருவிண்ணகர்சேர்ந்த பிரானுடைய கல்யாண குணங்களை ஒழிய ஒருவர்க்கும் உத்தாரகமில்லை என்கிறார்.*

[நகரமும் நாடுகளும்] - சிறுமை பெருமையாலே விரோதஞ்சொல்லிற்று. [நிலனாய் விசும்பாய்] - ரூபியான நிலனும் அரூபியான விசும்பும்ஆய். [புகர்கொள்

---

ஜ்ஞாநாதிகர்க்கு ப்ரஹ்மாத்மகமாய்த் தோற்றுமென்றதுக்கு ஐதிஹ்யம் - நல்லாரும் இத்யாதி. திரு விண்ணகரை பரமபதத்தோடொத்ததாக மேலேயருளிச்செய்கையாலே, இங்குத்தையில் ஆறும் விரஜை யோடொத்ததென்கிறார் - திவ்யநதியான இத்யாதி. இவ்விடத்தைப் பரமபதமென்றும், இங்குத்தை யாற்றை விரஜையென்றும் சொல்லுவானென்? என்ன - அங்கிருக்கிறவன் இத்யாதி. திருவிண்ண காகிறநன்னகரென்று - கீழ் அருளிச்செய்து, திருவிண்ணகரே நன்னகரென்றர்த்தாந்தரம் - இவ் வளவில் இத்யாதி. பரமபதமே நன்னகரமொழிய, இத்தைநன்னகரமாகச் சொல்லலாமோ? என்ன- அவன்விரும்பினவிடம் இத்யாதி. யத்வா, லீலாவிபூதியிலிருப்பு பரமபதம்போலே உத்தேஶ்யமா மோ? என்ன - அவன்விரும்பின இத்யாதி. திருவிண்ணகரான நன்னகர் - என்னையாள்வான் ஊரென்னுதல்; என்னையாள்வான் ஊரான திருவிண்ணகரே நன்னகரென்னுதல். (உ)

---

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

கீர்த்தி] என்றது - திருநாட்டிற்காட்டில் திருவிண்ணகரிலே புகுந்தபின்பு அவனுடைய கல்யாண குணங்கள் நிறம்பெற்றபடி.

ப.—அநந்தரம்,ஜ்ஞாநாஜ்ஞாநாநுவந்திபதார்த்தங்களைவிஹூதியாகவுடைய ஸர்வேஶ்வரனுடைய உஜ்ஜ்வலமான குணப்ரதையையொழிய வேறு ஒருவர்க்கும் உத்தாரகமில்லையென்கிறார்.

நகரமும் - விசேஷஜ்ஞப்ரசுரமான நகரமும், நாடுகளும் - அவிசேஷஜ்ஞப்ரசுரமான நாடும், (தத்ததாகாரஹேதுவான), ஞானமும்-ஜ்ஞாநமும், மூடமும்-மௌக்த்யமும், ஆய்-ஆய், (அந்த ஜ்ஞாநாஜ்ஞாந ஸாம்யத்தையுடைத்தாய்), நிகர் - ஒப்பு, இல் - இன்றியே, சூழ்-பரந்த, சுடர் - ப்ரகாஶமும், ஆய்-,இருள் - (தத்விதமான) இருளும், ஆய்-ஆய், நிலன் - (இருளுக்கு ஸ்த்தாநமான) பூமியும், ஆய்-, விசும்பு-(ப்ரகாஶஸ்த்தாநமான) ஆகாஶமும், ஆய்-ஆய், சிகரம் - சிகரங்களையுடைத்தான, மாடங்கள் - மாடங்கள், சூழ்-சூழ்ந்த, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த - பொருந்திவர்த்திக்கிற, பிரான் - ஸர்வேஶ்வரனுடைய, புகர் - ஔஜ்ஜ்வல்யத்தை, கொள் - உடைத்தான, கீர்த்தி - குணப்ரதையை, அல்லால் - ஒழிய, யாவர்க்கும் - ஸர்வர்க்கும், புண்ணியம் - உஜ்ஜீவநஹேதுவானஸுக்ருதம், இல்லை - இல்லை.

இ.—மூன்றாம்பாட்டில், திருவிண்ணகர் அப்பனுடைய கல்யாணகுணங்களையொழிய வேறு ஒருவர்க்கும் உத்தாரகமில்லை என்கிறார். [நகரமும்நாடுகளும்] - சிறுமை பெருமையால்வந்த விரோதமாதல்; நாகரிகர் ஹோமப்ரயாநராய் உத்க்ருஷ்டராயிருப்பர்கள்; நாட்டிலுள்ளார் அபக்ருஷ்டராய் தேஹதாரணமாத்ரமேப்ரயோஜநமாயிருக்குந்தாழ்வு உண்டு ; அத்தால்வந்த விரோதமாதல். [ஞானமும் மூடமுமாய்] - ஜ்ஞாதாக்களும் அஜ்ஞருமாய். [நிகரில் சூழ்சுடராயிருளாய்] - ஒப்பின்றிக்கே சூழப்பட்ட ப்ரபையையுடைத்தான தேஜஸ்ஸாய், அதுக்கு எதிர்த்தலையான தமஸ்ஸாய். [நிலனாய் விசும்பாய்] - கடிநமான பூமியாய், அச்சமான ஆகாஶமாய். [சிகரமாடமித்யாதி] - சிகரங்களைச் சேரவைத்தாற்போலே இருக்கிற மாடங்கள் சூழ்ந்த திருவிண்ணகரிலே நித்யவாஸம்பண்ணுகிற உபகாரகன். [புகர்கொள்கீர்த்தி] - ஸத்பாவமேயிறே பரமபதத்திலுள்ளது; அந்தகாரத்தில் தீபம்போலே புகர்பெற்றது, இங்கேயிறே கீர்த்தி. [அல்லாலில்லையாவர்க்கும் புண்ணியமே] - * மின்னிடைமடவாரில் இறாய்த்த நமக்கே அன்றியே, இதில் இழியாதார்க்கும் கீர்த்தியல்லது உஜ்ஜீவந ஸாதநமில்லை.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருவிண்ணகரப்பனுடைய கல்யாண குணங்களையொழிய வேறு ஒருவர்க்கும் உத்தாரகமில்லை யென்கிறார்.

[நகரமும் நாடுகளும்] - ஹோமப்ரதாநராய் ஸுகித்திருக்கும் நகரத்திலுள்ளார், கர்ஷகராய்க்கொண்டு தேஹயாத்ரை போக்கியிருக்கும் நாட்டிலுள்ளார். அன்றிக்கே, பரிச்

மூன்றாம்பாட்டு.— நகரமும் இத்யாதி. "திருவிண்ணகர்சேர்ந்தபிரான் புகர்கொள்கீர்த்தி" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - திருவிண்ணகரப்பனுடைய இத்யாதி. 'ஒருவர்க்கும் - வேறு - உத்தாரகமில்லை' என்றந்வயிப்பது. கீழிற்பாட்டிலே "நன்னகர்" என்று - ப்ராப்யத்வமும், இப்பாட்டிலே, "யாவர்க்கும்புண்ணியம்" என்று - ப்ராபகத்வமும் சொல்லுகிறது.

விருத்தவிபூதிகத்வம் சொல்லுகிற இதிலே "நகரமும் நாடுகளும்" என்கிறாரிறே; இதுக்கு விரோதமேது? என்ன; - இரண்டுவகையாகவிரோதமுண்டென்கிறார் - போகப்ரதானராய் இத்யாதி

சிந்நமாயுள்ளவையும், அபரிச்சிந்நமாயுள்ளவையும் என்றுமாம். [ஞானமும் மூடமுமாய்] - பதார்த்தஸ்வபாவத்தையுள்ளபடி க்ரஹிக்கக் கடவதான ஜ்ஞாநமும், அத்தைவிருத்தமாக ப்ரதிபத்தி பண்ணக்கடவதான அஜ்ஞாநமும். [நிகரில்சூழ்சுடராயிருளாய்] - உபமாந ரஹிதமாய்க் கொண்டு எங்கும் வ்யாபித்து நிற்கிற தேஜஸ்ஸாய், அதுக்கு எதிர்த்தட்டான அந்யகாரமாய். [நிலனாய் விசும்பாய்] - ரூபவதியான பூமியும், அரூபியான ஆகாஶமுமாய். கடிநையான பூமியும், அச்சமான ஆகாசமுமாய் என்றுமாம். [சிகரமித்யாதி] - பர்வத சிகரங்களைக் கொண்டுவந்து சூழ வைத்தாற்போலே யிருக்கிற மாடங்களாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே பொருந்திநிற்கிற உபகாரகன். [புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை] - பரம பதத்தில் புகழ் மழுங்கியாகாதே கிடப்பது; அங்குள்ளாரில் தன்னிற்குறைந்தாரில்லையே; "மம ஸாதர்ம்யமாகதா:" (மமஸாதர்ம்யமாகதா:), "பரமம் ஸாம்யமுபைதி" (பரமம்ஸாம்யமுபைதி), "தம்மையேயொக்கவருள்செய்வர்" என்று தன்னோடு ஸாம்யா பந்நராயிறே அங்குள்ளாரிருப்பது. துறைவாளர்க்கு முகங்கொடுத்தாலிறே புகழ் நிறம்பெறு வது? [யாவர்க்கும் புண்ணியமே] -† (*மின்னிடைமடவாரிலிருய்த்த நமக்கேயன்றிக்கே) ஸர்வர்க்கும் உத்தாரகம் அதுவல்லதில்லை. தாந்தாம்தேடிக் கொள்ளுமவையெல்லாம் கழுத் துக்கட்டியா மத்தனை; *மின்னிடைமடவாரில் - அவன்வர, "வேண்டா" என்று முடிந்து போகப்புக்கதிறே; இவன் பார்க்குமுபாயம் இவனுக்கும் கழுத்துக்கட்டியாம்; அவன் காட்டுமுபாயம் அவனுக்கும் காற்கட்டாம்; இதிறே உபாயத்தில் அடிப்பாடு.

---

வாக்யத்ரயத்தாலே. "நிலனாய்விசும்பாய்" என்றதுக்கும் இரண்டுவகையாக விரோதமருளிச்செய்கிறார் - ரூபவதியானஇத்யாதி வாக்யத்வயத்தாலே. *கீர்த்தியாவது - தயாதிகுணங்கள். "திருவிண்ணகர் சேர்ந்தபிரான் புகர்கொள்கீர்த்தி" என்கையாலேஹாவம் - பரமபதத்தில் இத்யாதி. மழுங்குகைக்கு ஹேதுவேது? என்ன - அங்குள்ளாரில் இத்யாதிவாக்யத்வயம். இங்குப்புகருண்டாகைக்குஹேது - தாழ்ந்தார்க்கு முகங்கொடுக்கையாலேயென்கிறார் - துறைவாளர்க்கு இத்யாதி. "இதம் ஜ்ஞாநமுபாஸ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா: । ஸர்கேபி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யதந்தி ச" இதிபகவத்கீதாயாம் சதுர்த்தஶே.[2] "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" இதி முண்டோப நிஷதி. 'தம்மையேயொக்கவருள்செய்வர்' - தம்மோடு ஸாம்யாபத்தியைத் தந்தருளுவர் இத்யர்த்த:. திருவாய்மொழி பதினோராம்பத்து மூன்றாந்திருமொழி அஞ்சாம்பாட்டு, "தம்மையேநாளும்வணங்கி" இத்யாதி. ஸர்வர்க்குமென்றது - *மின்னிடைமடவாரில் இருய்த்த நம்மோடு, இதிலிழியாதஅல்லாதா ரோடு வாசியற எல்லார்க்குமென்றபடி. "யாவர்க்கும் புண்ணியம்-இல்லை" என்றந்வயம். வேறுஉபாய மில்லையென்கிறதென்? உபாயாந்தரங்களுண்டேயென்ன - தாந்தாம் இத்யாதி. அப்படி கழுத்துக் கட்டியோ? என்ன - மின்னிடை இத்யாதி. "ஸ்வயத்நம் ப்ரதிபந்தகம், அவன்கீர்த்தியேயுபாயம்" என் கிறஇத்தால் - இவன்பார்க்கிற வுபாயத்தினுடைய பந்தகத்வத்தையும், அவன்காட்டு முபாயத்தினுடைய ஏற்றத்தையும் அருளிச்செய்கிறார் - இவன்பார்க்கும் இத்யாதிவாக்யத்ரயத்தாலே. அவனுக்கும் காற் கட்டாமென்றது - "போகுநம்பீ" என்றாலும் போகமாட்டாமையை நினைத்து. அடிப்பாடு - பதவி.(௩.)

## நான்காம் பாட்டு.

புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென் றிவையாய்
எண்ணமாய்மறப்பாய் உண்மையாய்இன்மையாய்அல்லனாய்
திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான்
கண்ணனின்னருளேகண்டுகொண்மின்கள்கைதவமே.

ஆ —(புண்ணியம்.) - புண்யபாப தத்பலஸூசிதஅஹிமதவிஷய ஸம்ஸ்லேஷ விஸ்லேஷ ஸ்மரணவிஸ்மரண ஹாவாஹாவாதி ஸகலபதார்த்தாந்தர்யாமிதயா வ்யாப்தனாயிருந்துவைத்தே தத்கததோஷை ரஸம்ஸ்ப்ருஷ்டனாயிருந்த, திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர் சேர்ந்த பிரானுடைய க்ருபையாலே ஸகலபுருஷார்த்த ஸாதநஸூசித கரணகளேபரப்ரப்ருதி ஸர்வபதார்த்தங்களும் ஸ்ப்ருஷ்டமான இவ்வர்த்தம் திருவிண்ணகரிலே ப்ரத்யக்ஷிக்கலாமென்கிறார்.

ஒ —நாலாம்பாட்டில், புண்யபாப ரூபாதியால் எம்பெருமானுக்கு விஶேஷணத்வேந தோற்றுகிற விபூதியெல்லாம் அவன் க்ருபையாலே உண்டாயிற்று ; இது பொய்யல்லாமை ஆராய்ந்து பார்த்துக்கொள்ளுங்கோள் என்கிறார்.

[புணர்ச்சி பிரிவு] - புண்யபாப ஃபலரூபமான ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்கள். அல்லனாயென்கிறது - புண்யபாபாதிகளுக்கு நியாமகனாய் அவற்றுக்கு வஶ்யனன்றிக்கேயிருக்குமென்கிறது. இன்னருளென்கிறது ஒருகாரணமறப்பண்ணும் க்ருபை.

ப.—அநந்தரம், கீழ்ச்சொன்ன புகர்கொள் கீர்த்தியாவது - புண்யபாபாநுபந்தி பதார்த்தவிபூதிகனான க்ருஷ்ணனுடைய நிர்ஹேதுகக்ருபை யென்கிறார்.

புண்ணியம்பாவம் - இஷ்டாநிஷ்ட ஹேதுவான புண்யபாபங்கள், புணர்ச்சி பிரிவு - தத்க்ருதமான தத்தத்ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்கள், என்று - என்று, இவை ஆய்-இவையாய், எண்ணம் - ஸம்ஸ்லேஷவிஸ்லேஷகணனையும், ஆய் —, மறப்பு ஆய்-விஸ்மரணமுமாய், உண்மை ஆய்இன்மை ஆய்-தத்ததநுரூப வஸ்துக்களுடைய ஸத்பாவாஸத்பாவங்கள் ஆய்வைத்து, அல்லன்ஆய் - தத்தத்கர்மவஶ்யனன்றியே இருப்பானாய், திண்ணம் - ஸ்த்திரமான, மாடங்கள் - மாடங்கள், சூழ்-சூழ்ந்த, திருவிண்ணகர்-திருவிண்ணகரிலே, சேர்ந்த - சேர்ந்த, பிரான் - ஸர்வாதிகனான, கண்ணன் - க்ருஷ்ணனுடைய, இன்-அதிஶயித போக்யமாம்படி அநந்யப்ரயோஜநமான, அருளே - க்ருபையையே, கண்டுகொண்மின்கள் - கீழ்ச்சொன்ன உத்தாரக கீர்த்தியாகக்கண்டுகொள்ளுங்கோள். கைதவமே - இது கைதவமோ? பரமார்த்தமென்று கருத்து.

இ.—நாலாம்பாட்டில், இவ்விபூதியடங்க அவன் க்ருபையாலே உண்டாயிற்று: இது பொய்யல்லாமை பார்த்துக்கொள்ளுங்கோள் என்கிறார். [புண்ணியமித்யாதி] - ஸுகதுக்கஹேதுவான புண்யபாபங்களும், தத்ஃபலஸூசிதமான அபிமதஸம்ஸ்லேஷ விஸ்லேஷங்களும், அநுகூலவிஷயமான எண்ணமும், ப்ரதிகூலவிஷயமான விஸ்ம்ருதியும், ஸத்பாவாஸத்பாவங்களுமாய். [அல்லனாய்] - புண்யபாபங்களை அநுபவியாநிற்கச்செய்தே † தான்அகர்மவஶ்யனாய். [திண்ணமித்யாதி] - ப்ரளயத்திலும் அழியாத மாடங்கள். [பிரான் கண்ணன்] - அவ்வவதாரத்துக்குப் பிற்பட்டஎன்னைப்

பெறுகைக்காகத் திருவிண்ணகரிலேவந்து நிற்கிற க்ருஷ்ணனான உபகாரகன். [இன்னருளே]-தன்பேறாகப்பண்ணும் க்ருபையாலே இதுஅடங்கவுண்டாயிற்று.[கைதவமே]-இதில் அபூர்வாதமுண்டோ? இல்லையிறே. [கண்டுகொண்மின்கள்] - ஆராய்ந்துகொள்ளுங்கோள்.

ஈடு.—நாலாம்பாட்டு. புண்யபாபாதியாய் எம்பெருமானுக்குவிசேஷணத்வேந தோற்றுகிற விபூதியெல்லாம் அவன்க்ருபையாலே உண்டாயிற்று என்கிறார், [புண்ணியம்பாவம்] - ஸுகஸாதநமான புண்யம், து:கஸாதநமான பாபம். [புணர்ச்சிபிரிவு] - புண்யபலமான ஸம்ஶ்லேஷம், பாபபலமான விஶ்லேஷம். [எண்ணமாய் மறப்பாய்] - அபிமதவிஷயத்தில் ஸ்ம்ருதி, அநபிமத விஷயத்தில் விஸ்ம்ருதி. [உண்மையா யின்மையாய்] - அஸ்திஶப்தவாச்யமுமாய், நாஸ்திஶப்தவாச்யமுமாய். ஸத்பாவாஸத்பாவ மென்னுதல். சேதநாசேதநங்களென்னுதல். [அல்லனாய்] - புண்யபாபாதிகளுக்கு நியாமகனாய், அவற்றுக்கு வஶ்யனன்றிக்கே யிருக்குமென்கிறது. [திண்ண மித்யாதி] - "வாஸுதேவக்ருஹம்த்வேகம் நப்லாவயதி ஸாகர:" (வாஸுதேவக்ருஹம்த்வேகம்நப்லாவயதிஸாகர:) என்கிறபடியே, ப்ரளயகாலத்துக்கும்அழியாதபடி திண்ணிதான மாடங்களாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே சேர்ந்து நிற்கிற உபகாரகனான க்ருஷ்ணன். [இன்னருளே] - புண்யபாபாதிகளாய்க்கொண்டு அவனுக்கு விபூதியாய்த் தோற்றுகிறவையெல்லாம் அவனுடைய க்ருபையாலே உண்டாயிற்று. பாபமும் அவன் க்ருபையாலேயோ என்னில்?— அதுவும்அப்படியே; சேதநனுடைய பூர்வ கர்மாநுகுணமாக ப்ரவர்த்திப்பிக்கையினாலே அதுவும் அவன் க்ருபையாலேயாமத்தனை. எல்லாம் செய்தாலும், தீமை அவன்க்ருபையாலே வரக்கூடுமோ என்னில்?—தீயத்தைக்காட்டி வேதுப்பி நல்வழிபோக்குகையினாலே கூடுமிறே. [இன்ன

---

நாலாம்பாட்டு.—புண்ணியம் இத்யாதி. "புண்ணியம்பாவம்" என்றுதொடங்கி, "கண்ணனின்னருளே" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - புண்ய பாபாதியாய் இத்யாதி.

"உண்மை, இன்மை" என்கிற தர்மவாசகஶப்தத்துக்கு - தர்மிபரத்வம் ஸ்வரஸமன்றென்று 'ஸத்பாவாஸத்பாவமென்னுதல்' என்கிறார். "அஸ்திஶப்தவாச்யமுமாய்" இத்யாதியின் விவரணம் - 'சேதநாசேதநங்களென்னுதல்' என்று. "புண்ணியம்" என்று தொடங்கி, "அல்லனாயிருக்கிறவன் - கண்ணன்" என்று வாக்யபேதம்பண்ணி, ஏவம்விதமானவையெல்லாம் அவன்க்ருபையாலேயுண்டாயிற்றுஎன்றுஅந்வயம் விவக்ஷித்துஅர்த்தம்-புண்யபாபாதிகளாய் இத்யாதி. தீமை அவன்க்ருபையாலே வரக்கூடுமோ? என்றது - தீமை அவன் நிர்ஹேதுகவிஷயீகாரத்தாலே வரக்கூடுமோவென்றபடி. அதுவும் ஹிதரூபமாகையாலே கூடுமென்று பரிஹரிக்கிறார் - தீயத்தை இத்யாதி. 'தீயத்தைக்காட்டி' என்றவிடத்திலே - "ஸுஹ்ருதிவ நிமஜ்ஜாவெஜ்ஜூ:" இத்யாத்யநுஸந்தேயம். 'கண்டுகொண்மின்கள்' ஶாஸ்த்ரங்களிலே இதி ஶேஷ:. "கைதவமே" என்கிற ஸ்வரத்துக்கர்த்தம் - நான்சொல்லுகிற இத்யாதி. இந்தஅர்த்தத்தில், ஏகாரம் - †பிரிநிலையிலே. கைதவமே - கைதவமோ. இது கபடமோ என்றபடி. பரமார்த்தமென்று கருத்து. கைதவம் - கபடம். த்விதீயார்த்தத்துக்கு, கைதவமென்று - க்ருத்ரிமமாய், க்ருத்ரிமமாவது - க்ருதகமாய் பண்ணப்பட்டவையடங்கலும் என்றபடி. இப்படி விசேஷணமாய்த் தோற்றுகிற புண்யபாபாதிகளெல்லாம், புண்ணியமென்றுதொடங்கி, அல்லனாய்க்கொண்டிருக்கிற திண்ணமாடங்கள் தொடங்கி, கண்ணனுடைய நிர்ஹேதுகக்ருபையாலே யுண்டாயிற்று; கைதவமேயென்று கார்யாஶத்தை அத்யாஹரித்துக் கொள்வது. அன்றிக்கே, கைதவமென்று

---

† வினாவகையால் எதிர்மறையிலே என்று இருக்கலாம்.

ருள்] - நிர்ஹேதுக விஷயீகாரம். [கைதவமே] - நான்சொல்லுகிற இதில் அர்த்தவாதமில்லை. [கண்டு கோண்மின்கள்] - நீங்களும் எல்லாங் கண்டுகொள்ளுங்கோள்; அன்றிக்கே, [கைதவமே] - க்ருதகமென்றபடியாய், பண்ணப்பட்டவை யடங்கலும் அவனுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்தாலே. (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

கைதவம்செம்மை கருமைவெளுமையுமாய்
மெய்பொய்இளமைமுதுமை புதுமைபழமையுமாய்
செய்ததிண்மதிள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தபிரான்
பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே.

**ஆ.**—(கைதவம்.) - ஆர்ஜவாநார்ஜவ வீதநீல ஸத்யாஸத்ய யௌவநவார்த்தக நவத்வாநவத்வாதிரூபனான எம்பெருமான் ப்ரஹ்மாதி ஸ்தம்பபர்யந்த நிகிலஜந்து பரிபூர்ணமான ஸர்வலோகங்களுக்கும் ரக்ஷக னென்கிறார்.

**ஒ.**—அஞ்சாம்பாட்டில், சிறியார் பெரியார் என்னாதே எல்லார்க்கும் ரக்ஷகன் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் என்கிறார். [பெய்தகாவு கண்டீர் பெருந்தேவுடை மூவுலகே] - ப்ரஹ்மாதிபிபீலிகாந்தமான ஸகல ஜந்துக்களும் அவனுக்கினசோலை. எல்லாவையுமொக்க ஸ்யாவரமாகப் பேசுகையாலே தந்தாமுடைய ஸர்வ நிர்வாஹகத்வமும் ஹ்ரவஉயீநமென்று கருத்து.

**ப.**—அநந்தரம், உத்க்ருஷ்டாபக்ருஷ்ட ரூப ஸமஸ்தவஸ்துப்ரகாரகனான ஸர்வேஶ்வரனுக்கு ஸகலஜகத்தும் லீலோத்யாநமென்கிறார்.

கைதவம் - (அபக்ருஷ்டமான) கௌடில்யமும், செம்மை - (உத்க்ருஷ்டமான) ஆர்ஜவமும், (தத்தத்ஸத்ருஶமான), கருமை வெளுமையும்ஆய் - கருமை வெளுமையும் ஆய், மெய்பொய் - அப்படிஉத்க்ருஷ்டாபக்ருஷ்டரூப ஸத்யாஸத்யங்கள், இளமை முதுமை - யௌவநவார்த்தகங்கள், புதுமைபழமையும்ஆய்- அபிநவத்வ ஜீர்ணதைகளும் ஆய், செய்த - தொழிற்படச்செய்யப்பட்டு, திண் - திக்கெனவையுடைத்தான, மதிள் - மதிளாலே, சூழ்-சூழப்பட்ட, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த - சேர்ந்த, பிரான் - ஸர்வேஶ்வரன், பெய்த - வைத்த, காவுகண்டீர் - லீலோத்யாநங்கிடிகோள், பெருந்தேவு - ப்ரஹ்மாத்யுத்க்ருஷ்ட தேவதைகளை, உடை - உடைத்தான, மூவுலகு - த்ரைலோக்யமும்.

**இ.**—அஞ்சாம்பாட்டில், சிறியார் பெரியார் என்னாதே ஸர்வர்க்கும் ரக்ஷகன் திருவிண்ணகர் சேர்ந்த பிரான் என்கிறார். [கைதவம்] - க்ருத்ரிமம். [செம்மை] - ஆர்

---

க்ருதகமான இந்தலோகமெல்லாம் - புண்ணியமென்ற தொடங்கி, கண்ணனுடைய நிர்ஹேதுக க்ருபையாலேயுண்டாயிற்று என்றஅநந்யாஹாரேண யோஜித்துக்கொள்ளுதல். "[illegible] ॥ [illegible]" இதி பஞ்சமேம்மே. [௬அ-௧] (௪)

ஜவம். [கருமை வெளுமை] - கறுப்பும் வெளுப்பும். [மெய் பொய்] - ஸத்யாஸத்யம். [இளமை முதுமை] - பால்யவார்த்தகம். [புதுமை பழமை] - அத்யதனமும் புராதனமும். [செய்ததிண்மதிள்] - புதிதாகச் செய்தாற்போலே தொழிலை யுடைத்தாய்த் திண்ணிதான மதிள். [பெருந்தேவுடை மூவுலகு - பெய்த காவுகண்டீர்] - ப்ரஹ்மாதி ஸ்தாவராந்தமான ஜந்துக்கள் அவனுக்கின சோலை. மூவுலகு - மேலும் கீழும் நடுவும். பெய்தகாவு - உண்டாக்கின சோலை. ஸர்வரையும் ஸ்தாவரமாகச் சொல்லுகையாலே, ஸர்வருடைய ரக்ஷணமும் பகவததீநம் என்கை. மின்னிடை மடவாரில்—"பொருந்தோம்" என்றதுவும் ஸ்வாதீநமன்றென்கை.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. சிறியார் பெரியா ரென்னுதே ஸர்வர்க்கும் ரக்ஷகன் திருவிண்ணகர் சேர்ந்த பிரா னென்கிறார்.

[கைதவம்செம்மை] - அநார்ஜவார்ஜவங்கள். [கருமைவெளுமை] - கறுப்பு வெளுப்பு. [மெய்பொய்] - ஸத்யாஸத்யம். [இளமை முதுமை] - பால்யவார்த்தகம். [புதுமைபழமை] - அத்யதநமும், புராதனமும். [செய்தவித்யாதி] - காலம் செல்லச் செய்தேயும் இப்போது செய்தாற்போலே யிருக்கிற தொழிற் புதுமையைச் சொல்லுகிறது. †(சிக்கெனவை உடைத்தான மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலே சேர்ந்த ஸர்வேஶ்வரன்) [பெய்தகாவுகண்டீர்] - வைத்தாக்கினசோலைகிடீர். (காவு-சோலை.) [பெருந்தேவுடை மூவுலகே] - ஈஶ்வராபிமாநிகளான தேவர்களையுடைத்தான த்ரைலோக்யம். (மூவுலகு - மேலும் கீழும் நடுவும்.) இத்தால் சொல்லிற்றாயிற்றென் என்னில்?—அச்சோலையானது தனக்கு வேண்டும் ரக்ஷையையறிவிக்கமாட்டாதிறே; நின்றவிடத்தே நின்று வாடிக்காட்டுகையும், பின்பு வைத்தாக்கினவனே அதுக்குவேண்டும் ரக்ஷைபண்ண வேண்டுகையும் இத்யாதிகளை யுடைத்தாகை; அப்படியே ஈஶ்வரேஶிதவ்ய விபாகமற அவன் புத்த்யதீநமேன்றபடி. (*மின்னிடை மடவாரில் "பெருந்தோம்" என்றதுவும் ஸ்வாதீநமன் றென்கை.)

அஞ்சாம்பாட்டு.—கைதவம் இத்யாதி. "பெரியதேவதைகளை யுடைத்தான த்ரைலோக்யமும் அவனுண்டாக்கினசோலை" என்கையாலே ஃபலித்தபாவம் - சிறியார் இத்யாதி. "மூவுலகு" என்றத்தைப்பற்ற - சிறியார் என்றது. பெரியார் என்றது - "பெருந்தேவுடை" என்றத்தைப்பற்ற.

வார்த்தகம் - வ்ருத்தத்வம். "எல்லாமாய்க்கொண்டிருக்கிற திருவிண்ணகர்சேர்ந்தபிரான் பெய்தகாவு" என்கையாலே, ஸ்வரூபைக்யமன்று; கார்யகாரணபாவத்தாலே ஸமாநாதிகரிக்கிறதென்றதாயிற்று. பெய்தல் - இடுதல். இத்தால் - "பெய்தகாவு" என்றத்தாலென்றபடி. உத்தரார்த்தத்தை ப்ரக்ருதத்திலேயதிதேசிக்கிறார் - அப்படியே இத்யாதி. (ரு)

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம்.

## ஆறும் பாட்டு.

மூவுலகங்களுமாய்அல்லனாய் உகப்பாய்முனிவாய்
பூவில்வாழ்மகளாய்த் தவ்வையாய்ப் புகழாய்ப்பழியாய்
தேவர்மேவித்தொழுந் திருவிண்ணகர்சேர்ந்தபிரான்
பாவியேன்மனத்தே உறைகின்றபரஞ்சுடரே.

.—(மூவுலகங்களுமாய்.)-நிஷ்லலோக ததந்தர்வர்த்தி ப்ரீத்யப்ரீதி லக்ஷ்ம் யலக்ஷ்மீ கீர்த்யகீர்த்தி ப்ரப்ருதி கல்யாணஹேய ஸகலபதார்த்தாந்தராத்மபூதனாய், கல்யாணபதார்த்தாந்தர்வர்த்திதையாலே யாதொருபடி தோஷந்தட்டாதேயிருக்கும், அப்படியே ஹேயபதார்த்தாந்தர்வர்த்திதையாலும் நிர்த்தோஷனாயிருக்கும், அதெங்ஙனே யறிந்தபடி என்னில்? - ஸமஸ்தஹேயாஸ்பதமான என்னுடைய நெஞ்சிலேபுகுந்து வைத்து ஒருதோஷமுந்தட்டாதே நிரதிசய தீப்தியுக்தனாயிருக்கையாலே என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், "நான் அல்லேன்" என்னச் செய்தே தன்னுடைய குணசேஷ்டிதங்களைக் காட்டி மறக்க வொண்ணாதபடி என்னோடே கலந்து அத்தாலே கிருதார்த்தனாய் அத்யுஜ்வலனாயிருக்கிறவன் திருவிண்ணகர் சேர்ந்தபிரான் கண்டீர் என்கிறார். [அல்லனாய்] - அவ்வளவன்றிக்கே மற்றும் விலக்ஷணமான விபூதிகளையுடையனாய். [பூவில் வாழ் மகளாய்த்தவ்வையாய்] - ஸ்ரீயும் அஸ்ரீயும் ஆய். [புகழாய்ப் பழியாய்]-கீழ்ச் சொன்னஇரண்டையு முடையவர்களுக்கு வரும்இரண்டையுஞ் சொல்லுகிறது. [தேவர்மேவித் தொழுந்திருவிண்ணகர்]-அயர்வறுமரர்களுக்கும் வந்து தொழும் படியான திருவிண்ணகர். எம்பெருமான் மேல்விழச்செய்தே, தாம் "அல்லேன்" என்றிருந்த இருப்பை நினைத்து'பாவியேன்' என்கிறார்.

ப—அநந்தரம், விலக்ஷணாவிலக்ஷண பதார்த்தங்களை விபூதியாகவுடைய ஸர்வேஶ்வரன் ஆஶ்ரிதபவ்யதையால்வந்த ஔஜ்ஜ்வல்யத்தை உடையவனென்கிறார்.

மூவுலகங்களும்ஆய் - (ஸ்ருஜ்யத்வ கர்மவஶ்யத்வ குணத்ரயாத்மகத்வாதிகளாலே அவிலக்ஷணமான) த்ரைலோக்யமும்ஆய், அல்லன்ஆய் - தத்ப்ரதிபடநித்யவிபூதியுக்தனும்ஆய், உகப்பு ஆய்முனிவு ஆய்-அப்படிவிலக்ஷணாவிலக்ஷணாத்மகராகத்வேஷங்களையும்ஆய், பூவில்வாழ்மகளாய் - ப்ரீதிஹேதுவான லக்ஷ்மியையும்ஆய், தவ்வை ஆய் - அப்ரீதிஹேதுவான ஜ்யேஷ்டையையும்ஆய், (தத்தத்கார்யமான), புகழ்ஆய் - புகழையும்ஆய், பழிஆய் - பழியையும் ப்ரகாரமாகவுடையனாய், (இந்தவிபூதியோகத்தாலே வந்த நீர்மையை யநுபவிக்கைக்காக), தேவர் - ஸூரிகள், மேவி-பொருந்தி, தொழும் - தொழாநிற்கிற, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த-சேர்ந்த, பிரான் - ஸர்வேஶ்வரன், பாவியேன் - தான் மேல்விழுந்துவரினும் வைமுக்யம்பண்ணும் பாபத்தையுடையேனான என், மனத்தே-நெஞ்சிலே, உறைகின்ற - நித்யவாஸம் பண்ணா நின்றுகொண்டு, பரஞ்சுடர் - அத்தாலே நிரதிஶய ஔஜ்ஜ்வல்யத்தையுடையனானான்.

இ.—ஆறும்பாட்டில், "நானல்லேன்" என்னச்செய்தேயும் தன்குணசேஷ்டிதங்களைக்காட்டி, மறக்கவொண்ணாதபடி கலந்து அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறான்

திருவிண்ணகர் சேர்ந்த பிரான்கிடீர் என்கிறார். [மூவுலகங்களுமாய்] - க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகம். [அல்லனாய்] - இவற்றைச்சொல்லி, அல்லனா யென்கையாலே, இவ்வளவன்றிக்கே அஸாதாரணமான நித்யவிபூதியையுடையனாய். [உகப்பாய் முனிவாய்] - ராகத்வேஷங்களாய். [பூவில் வாழ்மகளாய்த் தவ்வையாய்] - ஸ்ரீயும் அஸ்ரீயுமாய். தவ்வை - அஸ்ரீ. [புகழாய்ப்பழியாய்] - பிராட்டி கடாக்ஷத்தாலே வந்த புகழாய், அஸ்ரீஸம்பந்தத்தாலே வந்த பழியாய். [தேவர் மேவித் தொழும் திருவிண்ணகர்] - நித்ய ஸூரிகள் நித்யவிபூதிபோலே பொருந்தித் தொழும். ப்ரஹ்மாதிகள் வரை நாற்றம் பொறுக்க மாட்டாத தேசத்திலே, திருவிண்ணகரின் நீர்மையை அநுபவிக்க நித்யஸூரிகள் படுகாடு கிடக்கிறபடி. [திருவிண்ணகர் சேர்ந்த பிரான்] - திருவிண்ணகரிலே நித்யவாஸம் பண்ணுகிறஉபகாரகன். நித்யஸூரிகள் மேல் விழ இருக்கிறவன் தான் மேல்விழ, "அல்லேன்" என்றிருந்த படியை நினைத்து "பாவியேன்" என்கிறார்.

[மனத்தே உறைகின்ற] - 'போகுநம்பீ' என்று சொல்லிற்று, என் நெஞ்சை விடமாட்டாதவனைக் கிடீர்! [பரஞ்சுடரே] - நித்யஸூரிகளோடு கலந்ததிற் காட்டில் கிடீர் என்னைப்பெற்ற பின்பு பிறந்த புகர். "நின்றிலங்கு முடியினாய்" என்றதிறே.

ஈடு.—ஆறும்பாட்டு. "நானல்லேன்" என்னச்செய்தே தன்குணசேஷ்டிதங்களைக்காட்டி மறக்கவொண்ணாதபடி கலந்து அத்தாலே உஜ்ஜ்வலனாயிருக்கிறவன் திருவிண்ணகரிலே நின்றருளின ஸர்வேஶ்வரன்கிடீ ரென்கிறார்.

[மூவுலகங்களுமாய்] - த்ரைலோக்யத்துக்கும் நிர்வாஹகனாய். க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகமென்றும். [அல்லனாய்] - அல்லாத உபரிதநலோகங்களுக்கும் நிர்வாஹகனாய். இவற்றைச்சொல்லி, அல்லனாயென்கையாலே - இவ்வளவன்றிக்கே அஸாதாரணமான நித்யவிபூதியையுடையனாயென்றும். [உகப்பாய்முனிவாய்] - அநுக்ரஹ நிக்ரஹங்களாய். [பூவில்வாழ்மகளாய்த்தவ்வையாய்] - ஸ்ரீயுமஸ்ரீயுமாய். தவ்வை - அஸ்ரீ. [புகழாய்ப்பழியாய்] - ஸ்ரீயினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும்புகழ். தவ்வையினுடைய கடாக்ஷமுடையார்க்கு வரும்பழி. [தேவரித்யாதி] - இந்த்ராதிகள் இங்குள்ளாருடைய ஹவிஸ்ஸூ கொள்ளும்போது மூன்றுயோஜநம் அவ்வருகேநின்று முகத்தைத் திரியவைத்துவாங்கி சர்த்திபண்ணியாயிற்றுப்போவது; அப்படியிருக்கிறவர்களுடைய கந்த

---

ஆறும்பாட்டு.—மூவுலகம் இத்யாதி. "பாவியேன்" என்றத்தைப்பற்ற - நானல்லேன் என்னச்செய்தேயென்றது. "மனத்தேயுறைகின்ற" என்றத்தைப்பற்ற - தன்குணசேஷ்டிதங்களை இத்யாதி. "பரஞ்சுடர், திருவிண்ணகர் சேர்ந்தபிரான்" என்றத்தைப்பற்ற - அத்தாலே உஜ்ஜ்வலனாய் இத்யாதி.

அர்த்தாந்தரம் - க்ருதகம் இத்யாதி. க்ருதகமாவது - அவாந்தரப்ரளயத்திலேயழிந்து ஸ்ருஷ்டிகாலத்திலே பண்ணப்படுமது. இது கீழேழுலோகமும் மேல்மூன்றுலோகமும். அக்ருதகமாவது - அவாந்தரஸ்ருஷ்டியில் பண்ணப்படாதது. இதுஜநஸ்தபஸ்ஸத்யலோகங்கள். க்ருதகாக்ருதகமாவது - அவாந்தரப்ரளயத்தில் குடிவாங்குகையாலே க்ருதகமென்றும், க்ருஹங்களுக்கு ஸ்வரூபநாஶமில்லாமையாலே அக்ருதகமென்றும் சொல்லப்படும் மஹர்லோகம். "[Grantha text illegible] விநஶ்யதி" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. [உ-எ-கக-உ0] அர்த்தத்வயத்துக்கு மநுகுணமாக "அல்லனாய்"

மும் பொறுக்கமாட்டாத நித்யஸூரிகள், திருவிண்ணகர்பூமியிலேயாகையாலே இங்கே வந்து பொருந்திவர்த்தியாநிற்பர்கள். அப்படிப்பட்ட திருவிண்ணகரிலே நித்யவாஸம்பண்ணுகிற உபகாரகன். [பாவியேன்மனத்தே] - * மின்னிடைமடவாரில் அவன்மேல் விழத் தாம்இருய்த்தபடியைநினைத்து, 'பாவியேன்' என்கிறார். நித்யஸூரிகள் தன்பக்கலிலேவந்து மேல்விழ, அத்தைத் தள்ளித் தான் என்பக்கலிலேவந்து மேல்விழாநிற்கக் கிடீர் நான் ''அல்லேன்'' என்றது. [மனத்தேயுறைகின்ற] - இப்போது நித்யஸூரிகளும் அந்த இருப்புங் கிடக்கக் கிடீர் என்னெஞ்சிலேபுகுந்து நித்யவாஸம்பண்ணிநின்றான். [பரஞ்சுடரே] - தனக்குப்புறம்புண்டான வாஸஸ்த்தாநங்கள் கிடக்க, என்னெஞ்சிலே புகுந்துநின்றது எனக்குக் கார்யஞ்செய்தானாயிருக்கையன்றிக்கே, ''தன்பேறு'' என்று தோற்றும்படி உஜ்ஜ்வலனானான். *மின்னிடைமடவாரில் - ''இவரையிழக்கிறோமோ?'' என்று வந்தஊருவுதல்தீர, இவரைப் பெற்றபின்பு அத்தாலே ''நின்றிலங்குமுடியினாய்!'' என்கிறபடியே வடிவிலேபிறந்த வேறுபாடு இருக்கிறபடி. (சு)

## ஏழாம் பாட்டு.

பரஞ்சுடர்உடம்பாய் அழுக்குப்பதித்தஉடம்பாய்
கரந்தும் தோன்றியும் நின்றும் கைதவங்கள் செய்தும்விண்ணோர்
சிரங்களால் வணங்கும் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்
வரங்கொள்பாதமல்லால்இல்லை யாவர்க்கும்வன்சரணே.

**ஆ.**—(பரஞ்சுடர்.) - *நிரவயிக தேஜோமய திவ்யரூபனாய், ஸமஸ்தஹேயாஸ்பத ஸர்வஜகச்சரீரனாய், ஸமஸ்தஹேயரஹிதனாய், துர்விஜ்ஞேயனாய் ஆச்ரிதார்த்தமாகப் பிறந்தருளியும் அவர்களோடு ஸம்ஶ்லேஷித்தும் ப்ரதிகூலர்க்குக் கைதவஞ்செய்தும், விண்ணோர் சிரங்களால் வணங்கும் திருவிண்ணகர்சேர்ந்த பிரானுடைய திருவடிகளல்லது ஒருவர்க்கும் ஆத்மரக்ஷகமில்லையென்கிறார்.*

*ஒ.—ஏழாம்பாட்டில், எத்தனையேனுமளவுடையார்க்கும் வலிய புகல் அவனல்லதில்லையென்கிறார். [பரஞ்சுடருடம்பாய்] - அப்ராக்ருதமான திருவுடம்பை யுடையனாய். [அழுக்குப்பதித்த வுடம்பாய்] - ஜகச்சரீரனாய். [கரந்துந்தோன்றியும் நின்றும் கைதவங்கள்செய்தும்] - அதீந்திரியனாயும் கண்காணவந்து திருவவதாரம்பண்ணியும் ஆச்ரிதர்க்காக அத்திருவுடம்போடே நெடுநாள் வர்த்தித்தருளியும் இப்படி ஸுலபனாய் வைத்து, தன்னை உகவாதார்திறத்து வஞ்சநங்கள் பண்ணியும்.*

---

*என்றதுக்கும்அடைவே யர்த்தத்வயம் - **அல்லாத** இத்யாதி வாக்யத்வயத்தாலே. ''தண்டமும், தண்மையும்'' என்றத்தோடு புநருக்தமாகையாலே, அநுக்ரஹநிக்ரஹங்களாயென்றது - அவற்றின்கார்யமான ப்ரீத்யப்ரீதிகளைச் சொல்லுகிறது. ''மேவித்தொழும்'' என்றதுக்குபாவம் - இந்த்ராதிகள் இத்யாதி. பூமியிலேயாகையாலே யென்றது - பூமியிலேயிருக்கையாலே பூமியுத்தேஶ்யமென்றபடி. ''பாவியேனென்றது - * மின்னிடைமடவாரிலே இருய்த்தபடியைநினைத்து'' என்பானென்? என்ன - நித்யஸூரிகள் இத்யாதி. ''உறைகின்ற'' என்ற வர்த்தமாநார்த்தம் - இப்போது நித்யஸூரிகள் இத்யாதி. கீழ்வாக்யவிவரணம் - மின்னிடை இத்யாதி.* (க)

ப.—அநந்தரம், ஆஶ்ரிதஅநாஶ்ரிதவிஷயமான ஆகாரபேதத்தையுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளே ஸர்வர்க்கும் ப்ரபலாஶ்ரயமென்கிறுர்.

பரஞ்சுடருடம்புஆய் - ஆஶ்ரிதாநுஸாவ்யமான அப்ராக்ருதவிக்ரஹத்தையும், (அநாஶ்ரிதர்க்கு அநுஸாவ்யமான), அழுக்கு - ஹேயதையால், பதித்த - பூர்ணமான, உடம்புஆய் - ஜகதாகாரத்தையும் உடையனுய், கரந்தும் - (அநாஶ்ரிதவிஷயத்தில்) ப்ரகாசியாதேயும், தோன்றியும் - (ஆஶ்ரிதவிஷயத்தில்) ப்ரகாசித்தும், நின்றும் - (ப்ரகாசிக்கும் விஷயத்தில்) ஸ்த்திரனுயும், கைதவங்கள் செய்தும் - (இதரவிஷயத்தில்) அஸ்த்திரனுயும், ஆய் - இருப்பானுய், விண்ணோர் - ப்ரஹ்மருத்ராதிகள்,(ஸ்வாபிமத ஸித்த்யர்த்தமாக), சிரங்களால் - தந்தாந்தலைகளாலே, வணங்கும் - வணங்கும்படி, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த - சேர்ந்த, பிரான் - ஸர்வேஶ்வரனுடைய, வரம் - ஸமாப்யதிக ஊரித்ரமான ஶ்ரைஷ்ட்யத்தை, கொள் - உடைய, பாதம் - திருவடிகள், அல்லால்- ஒழிய, யாவர்க்கும் - ஸர்வசேதநர்க்கும், வன் - அஸயஸ்த்தலமாம்படி ப்ரபலமான, சரண் - புகலிடம், இல்லை - வேறில்லை.

இ.—ஏழாம்பாட்டில், எத்தனையேனும் அளவுடையார்க்கும் வலியபுகல் அவனல்லதில்லை யென்கிறுர்.

[பரஞ்சுடருடம்பாய்] - நிரவதிக தேஜோரூபனுய்: அப்ராக்ருதமான திருமேனியையுடையனுய். “தெஜஸாம்ராஶிமூர்ஜிதம்” [அழுக்குப்பதித்த வுடம்பாய்] - ஜகச்சரீரனுய். [கரந்தும்] - “யமாத்மா ந வேத” என்று அவற்றுக்கு அத்ருஷ்டனுய்க்கொண்டு அந்தராத்மாவாய் நின்றும். [தோன்றியும்] - “ஸம்பவாமி யுகே யுகே” என்று ராமக்ருஷ்ணுத்யவதாரங்களைப் பண்ணியும். [நின்றும்] - அவ்வோவிடங்களிலே பதினோராயிரமாண்டு நூறுண்டு நின்றும். [கைதவங்கள்செய்தும்] - தன்படிகள் ஶிஶுபாலாதிகளுக்குத் தோற்றுதபடிபண்ணியும், ஆஶ்ரிதர்க்குத் தோற்றும்படி பண்ணியும். கைதவம் - வஞ்சநம். [விண்ணோர் இத்யாதி] - ப்ரஹ்மாதிகள் தலையாலே வணங்கும்படி திருவிண்ணகரிலே நித்யவாஸம் பண்ணுகிற உபகாரகன். [வரங்கொள் இத்யாதி] - வரையாதே எல்லார்க்கும் ஆஶ்ரயிக்கலாம்படியான ஶ்ரேஷ்டமான திருவடிகள். [யாவர்க்கும் வன்சரணே] - சிறியார்பெரியார் என்று அன்றிக்கே எல்லார்க்கும் தஞ்சமானபுகல் வேறில்லை. அல்லாதவை ஓட்டைஓடத்தோடே ஒழுகலோடமாய்க் கழுத்துக்கட்டியாயிறே யிருப்பது.

ஈடு.—ஏழாம்பாட்டு. எத்தனையேனும் அளவுடையார்க்கும் வலியபுகல்அவனல்லதில்லை யென்கிறுர்.

[பரஞ்சுடருடம்பாய்] - சுத்தஸத்த்வமயமான அஸாதாரண திவ்யவிக்ரஹத்தையுடையனுய். “தெஜஸாம்ராஶிமூர்ஜிதம்” (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்). [அழுக்குப்

---

ஏழாம்பாட்டு—பரஞ்சுடர் இத்யாதி. “வரங்கொள்பாதமல்லாலில்லை” இத்யாதியைப்பற்ற அவதாரிகை - எத்தனையேனும் இத்யாதி. மேலே “அழுக்குப்பதித்தவுடம்பாய்” என்ற - ஹேயமாய் ரஜஸ்தமோ மிஶ்ரமான உடம்பைச் சொல்லுகையாலே, சத்ப்ரதிகோடித்வேந விவக்ஷித் தருளிச்செய்கிறுர் - சுத்தஸத்த்வ இத்யாதி. நிரவதிக தேஜோரூபமான திருமேனியை யுடையவனென்று பரப்தார்த்தம். இதுக்குப்ரமாணம் - தெஜஸாம இத்யாதி. தோன்றுதபடிநிற்கிறவன் தோன்றுகிறதெனுக்

பதித்தவுடம்பாய்] - குணத்ரயவஶ்யமான ஜகச்சரீரனுய். [கரந்தும்] - இவற்றுக்கு அந்தராத்மாவாய்ப் புக்கு நிற்கச் செய்தே, "யமாத்மா ந வேத" (யமாத்மா ந வேத) என்று இவற்றுக்குத் தோன்றுதபடி நின்று, இவற்றின் ஸத்தையை நோக்கியும். [தோன்றியும்]- *காணவாராயென்றென்று கண்ணும் வாயும் துவர்ந்திருப்பார்க்குக் காணலாம்படி ராம க்ருஷ்ணுத்யவதாரங்களைப் பண்ணியும். [நின்றும்]-நூறுண்டு பதினேராயிரமாண்டு நின்றும். அவ்விடங்களிலே, [ஊகதவங்கள் செய்தும்] - க்ருத்ரிமங்களைப்பண்ணியும். அதாவது - அவதரித்துநிற்கச்செய்தே தன்படிகள் சிசுபாலாதிகளுக்குத் தோற்றுதபடி பண்ணியும், ஆஶ்ரிதர்க்குத் தோற்றும்படிபண்ணியும். [விண்ணேரித்யாதி] - ப்ரஹ்மாதிகள் 'தலைபடைத்தப்ரயோஜநம் பெற்றோம்' என்று வணங்கும்படி திருவிண்ணகரிலே நிற்கிற உபகாரகன். [வரங்கோள்பாதமல்லாலில்லை] - எத்தனையேனும் தண்ணியாரும் கிட்டலாம்படி ஶ்ரேஷ்ட்டமான திருவடிகளல்லது. [யாவர்க்குமித்யாதி] - எத்தனையேனும் கிழார் கிழார்க்கும் அதுவல்லது வலியபுகலில்லை. அவனை யொழிந்த ஶரண்யரடங்கலும் இவனைக் கொண்டு முழுகும்பேர்; இவனைக் கொண்டு கரையேற்றவல்ல வலியபுகல் அவன்திருவடிகளல்லதில்லை. அடியே பிடித்து ஜீவிக்கில் ஜீவிக்குமத்தனை. (எ)

---

## எட்டாம் பாட்டு.

வன்சரண்சுரர்க்காய் அசுரர்க்குவெங்கூற்றமுமாய்
தன்சரண் நிழற்கீழ் உலகம் வைத்தும் வையாதும்
தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்
என்சரணென்கண்ணன் என்னையாளுடை என்னப்பனே!

ஆ.—(வன்சரண்.) - தன் திருவடிகளை ப்ராபிக்கைக்கு விரோதியான ஸமஸ்த பாபங்களையும் போக்கி ஆஶ்ரிதரைத் தன் திருவடிகளின் நிழலிலே வைத்தருளும் ஸ்வபாவனுய், ஆஶ்ரிதவிரோதிகளைத் தன் திருவடிகளிற் சேராதே அவர்களுக்கு அதிபயங்கர ம்ருத்யுபூதனுயிருந்த எம்பெருமான், தென்திசைக்குப் புகலிடமாகத் திருவிண்ணகரிலே புகுந்தருளியிருந்து எனக்கு ப்ராப்யமாய், எனக்கு த்ருஷ்டியாய் என்னைக் கொண்டு ஸர்வஶேஷவ்ருத்தியுங் கொண்டருளி எனக்கு ஸ்வாமியானுன் என்கிறுர்.

ஒ.—எட்டாம்பாட்டில், எனக்கு ஶரணமான மாத்ரமேயல்ல; மற்றுமெல்லாம் திருவிண்ணகர் சேர்ந்தபிரான் என்கிறுர். [தன்சரணிழற்கீழ்உலகம்வைத்தும்

---

ப்ர.—[பரஞ்சுடருடம்பாய்]—ப்ருஹதாரண்யகே, "யஸ்யாத்மா ஶரீரம்யமாத்மா நவேத"

---

காக? என்ன - காணவாராய் இத்யாதி. அவ்விடங்களிலே - ராமக்ருஷ்ணுத்யவதாரங்களிலே. ஆஶ்ரிதர்க்கு - அர்ஜுநாதிகளுக்கு வணங்குகிறது தலையாலேயாயிருக்க, "சிரங்களால்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ப்ரஹ்மாதிகள் இத்யாதி. வரங்கொள் - வரமான. திருவடிகளுக்கு ஶ்ரேஷ்ட்டதையேதென்ன - எத்தனையேனும் இத்யாதி. கிழார்கிழார்க்கும் - பெரியவர்க்கும் பெரியரானவனுக்கும். கிழார் - பெரியவர். "வன்சரண்" என்றதுக்கு பாவம் - அவனையொழிந்த இத்யாதி. ரஸோக்தி - அடியே இத்யாதி. திருவடிகளையேபிடித்தென்றும், முதலிலே பிடித்தென்றும். (எ)

வையாதும்] - அநந்யப்ரயோஜநரை பரிக்ரஹித்தும் அல்லாதாரை பஹிஷ்கரித்தும். [தென் சரண் திசைக்கு] - தெற்குத்திக்குக்கு சரணாக. [என் கண்ணன்] - எனக்குஸுலபன். [என்னையாளுடை யென்னப்பனே] - என்னை அடிமைகொண்டு உபகரித்தவன்.

ப.—அநந்தரம், அநுகூல ப்ரதிகூல விஷயங்களான ஸ்வபாவங்களையுடைய ஸர்வேஶ்வரனாய் ஆஶ்ரிதஸுலபனான க்ருஷ்ணன் எனக்கு அஸாதாரணமான புகலிடமென்கிறார்.

சுரர்க்கு - அநுகூலமான தேவர்களுக்கு, வன் - அப்ரதிஹதமான, சரண் - புகலிடம், ஆய் - ஆய், அசுரர்க்கு - ப்ரதிகூலரான அசுரர்களுக்கு, வெம் - க்ரூரமான, கூற்றமும் - ம்ருத்யுவும், ஆய் - ஆய், உலகம் - தாத்ருஶ விஷயத்தை யுடைய லௌகிகரை, தன் - தன், சரண்நிழல்கீழ் - பாதச்சாயையிலே, வைத்தும் - ஒதுக்கியும், வையாதும் - ஒதுக்காதும், ஆய் - இருப்பானாய், தென்திசைக்கு - தெற்குத் திக்குக்கு, சரண் - புகலிடமான, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த - சேர்ந்த, பிரான் - ஸர்வேஶ்வரனாய், என் - என்னை யங்கீகரிக்கைக்காக, கண்ணன் - க்ருஷ்ணனாய், என்னை ஆளுடை - என்னை யடிமைகொண்ட, என்னப்பன் - ஸ்வாமியானவன், (ஸர்வப்ரகாரத் தாலும்), என் - எனக்கு, சரண் - ஸாதாரணமான புகலிடம்.

இ.—எட்டாம்பாட்டில், எல்லார்க்கும் புகலென்ற மாத்ரமன்றிக்கே, எனக்கு விஶேஷித்துப் புகல்என்கிறார்; எனக்குப் புகலான மாத்ரமன்றியிலே மற்றுமெல்லாம் திருவிண்ணகர் சேர்ந்தபிரான் என்கிறார். [வன்சரணித்யாதி] - தேவஜாதிக்குத் தன்னை யழியமாறி ரக்ஷிக்கும்புகலாய், தத்ப்ரதிகூலர்க்கு வெங்கூற்றம் - "அந்தகன் தண்ணீர்" என்னும்படியான கூற்றமாய், தன்பாதச்சாயையிலே அநந்யப்ரயோஜநரை வைத்தும் அல்லாதாரை பஹிஷ்கரித்தும். [தென்சரண்திசைக்கு] - "தக்ஷிணாதிக் க்ருதா யேந ஶரண்யா லோகஸாக்ஷிணா" என்கிறபடியே தெற்குத்திக்குக்கு ஶரணமான. [என் சரண்] - எனக்குப் புகலானவன். [என் கண்ணன்] - எனக்குஸுலபனானவன். [என்னை யாளுடையென்னப்பனே] - என்னை அடிமைகொண்டு போகிறவன், எனக்கு உபகாரகன்.

ஈடு.—எட்டாம்பாட்டு. எனக்குப் புகலான மாத்ர மன்றிக்கே மற்றுமெல்லாம் திருவிண்ணகர்சேர்ந்தபிரா னென்கிறார். † (எல்லார்க்கும் புகலென்றமாத்ரமன்றிக்கே, எனக்கு விசேஷித்துப்புகலென்கிறு ராகவுமாம்.)

[வன்சரண்சுரர்க்காய்] - தேவர்களுக்காகத் தன்னை அம்புக்கு இலக்காக்கி அவர்களைநோக்கும் வலியரக்ஷகனாய். [அசுரர்க்கு வெங்கூற்றமுமாய்] - ஆஸுரப்ரக்ருதிகளுக்கு "அந்தகன்தண்ணீர்" என்னும்படி வெவ்வியகூற்றமுமாய். [தன்சரணித்யாதி] -

---

எட்டாம்பாட்டு.—வன்சரண் இத்யாதி. "என்சரணென்கண்ணன்" இத்யாதியைக்கடாக்ஷித்து அவதாரிகை-எனக்குப்புகலான இத்யாதி. கீழிற்பாட்டில்-எல்லார்க்குப்புகலென்றார்; இதில் - எனக்குப் புகலானமாத்ரமன்றிக்கே ஸர்வவிதபந்துவுமென்கிறாரென்றபடி. தேவர்களுக்கு ஶரணன ப்ரகாரத்தைக் காட்டாநின்றுகொண்டு ஶப்தார்த்தம் - தேவர்களுக்காக இத்யாதி. "வெங்கூற்றம்" என்றதுக்குபாவம் - ஆஸுரப்ரக்ருதிகளுக்கு இத்யாதி. அந்தகன் தண்ணீரென்னும்படியென்றது -

---

† குண்டலிதக்ரந்தம் ப்ரக்ஷிப்தம்.

தன்னுடைய பாதச்சாயையுள்ளே, அநுகூலரான அர்ஜுநாதிகளையிட்டுக்கொண்டும், ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே, ப்ரதிகூலரான துர்யோதநாதிகளைப் புறம்பிட்டும். [தென்சரண் திசைக்கு] - "ஒக்ஷிணாஷிக்க்ரூதாயெந ஶரண்யாவாணுகஃண்ணா" (தக்ஷிண திக்க்ருதாயேநஶரண்யாபுண்யகர்மணு) என்கிறபடியே, "தென் - திசைக்கு - சரண்"-தெற்குத்திக்குக்குப் புகலிடமான திருவிண்ணகரிலே கிட்டின உபகாரகன். [என்சரண்] - எனக்குப் புகலிடம். [என்கண்ணன்]-எனக்கு ஹவ்யனுனவன். [என்னை யாளுடை] - என்னை யடிமைகொள்ள உரியவன். [என்னப்பன்] - எனக்கு உபகாரகன். உலகமென்பது - உயர்ந்தோர்மாட்டு. (அ)

---

## ஒன்பதாம் பாட்டு.

என்னப்பன்எனக்காயிகுளாய் என்னைப்பெற்றவளாய்
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பன்என்னப்பனுமாய்
மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்சேர்ந்தஅப்பன்
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன்தனதாள்நிழலே.

*ஆ.—(என்னப்பன்.)-*சுட்டுரைத்த நன்பொன்னொளியையும் அத்புஜ்ஜ்வலமான ரத்நத்தினொளியையு முடைத்தான திருவுடம்பை யுடையனுய், அழகியனுய்த் தன்னொப்பாரின்றியே யிருந்த திருவிண்ணகர் சேர்ந்தஅப்பன், தன்னழகாலே எனக்கு ஸ்வாமியாய், தன்னுடைய ஸௌஶீல்யத்தாலே பெற்றதாயும் வளர்த்ததாயும் பண்ணக்கடவ ஸ்நேஹத்தை என்பக்கலிலே பண்ணி, ஸ்வவிஶ்லேஷஜநிதமான என்னுடைய நிரவயிக ஸந்தாபமெல்லாம் போம்படி அதிஶீதளமாய் ம்ருதஸஞ்ஜீவநமான தன் திருவடிகளின் நிழலை எனக்குத் தந்தருளினுனென்கிறுர்.*

---

ப்ர. —[வன்சரண்இத்யாதி]—[தென்சரண்திசைக்கு]— ஶ்ரண்யகாண்ட-[கக] "நிஶ்ஹ்யதாவஸாநேத்ய ஸொகாநாம் ஹிதகாஶ்யா । ஒக்ஷிணாஷிக்க்ருதாயெந ஶரண்யாவாணுகஃண்ணா ॥ தவெஷ்யதஷாஶ்ரவேஷம் ஞுஹாவாஷ்யஷ்யராக்ஷவெஸ: । ஷிஶியம் ஒக்ஷிணா ஶ்ராவா ஷ்ரூஶ்யதெநொவஹாஜ்யதெ॥ அஉ॥"

---

*ம்ருத்யுவானவன் குளிர்ந்தவனென்னும்படியென்கை. "தென் - திசைக்கு - சரண்" என்றந்வயம். ஸப்ரமாணமாக இதுக்கர்த்தம் - ஒக்ஷிணா இத்யாதி. "ஒக்ஷிணாஷிக்க்ருதாயெந ஶரண்யா வாணுகஃண்ணா । தவெஷ்யதஷாஶ்ரவேஷம்ஞுஹாவாஷ்யஷ்யராக்ஷவெஸ:" இத்யாரண்யகாண்டே. என்னையாளுடை - என்னையாளுடையவனித்யர்த்தம். "உலகம்" என்றது - அநுகூலரான அர்ஜுநாதி வர்சகபாமோ? என்ன - உலகமென்பது இத்யாதி. உயர்ந்தோர்மாட்டு - பெரியோரிடத்திலே வாசகமாய்க்கொண்டு வர்த்திக்கு மென்றபடி. (அ)*

ஒ.—ஒன்பதாம்பாட்டில், என்னுடைய ப்ரமமெல்லாந்தீரும்படி தன்னுடைய பாதச்சாயையை எனக்கு, "நானல்லேன்" என்ன, வலியத்தந்தா னென்கிறார்.

[என்னப்பனெனக்காய்] - எனக்கு உறுதியான என்பிதாவாய்.

[இகுளாய்] - தோழியாய். [பொன்னப்பன் மணியப்பன் முத்தப்பனென் னப்பனுமாய்] - பொன்னும்மணியும் முத்தும்போலேயும் போக்யனாய், எனக்கு அவ் வளவன்றிக்கே மிகவும் உபகாரகனாய். [திருவிண்ணகர் சேர்ந்தவப்பன்] - என்போல் வார்க்குளெளியனாம்படி திருவிண்ணகரிலே வருகையாகிற உபகாரத்தைப்பண்ணினவன். [தன்னொப்பாரில்லப்பன்] - உபகாரகனாமிடத்தில் தனக்கு ஒப்பில்லாதவன்.

ப.—அநந்தரம், பரஸ்பரவிருத்தாகாரமான ஸந்துவர்க்கமும் ஸப்ருஹணீய வஸ்துக்களும் தனக்கு ப்ரகாரமாக வுடையனான தன்னுடைய உபகாரகத்வத்துக்கு ஒப்பில்லாத ஸர்வேச்வரன், தன்னுடைய பாதச்சாயையை எனக்குத் தந்தருளினா னென்கிறார்.

எனக்கு - எனக்குஅஸாதாரணனாய்,என் - ஸத்தாஹேதுவாயிருந்துள்ள, அப் பன் - பிதா, ஆய் - ஆய், இகுள் - அந்தபும்ஸ்த்வத்துக்கு விருத்தமான ஸ்த்ரீத்வத்தை யுடைய செவிலித்தாயானவள், ஆய் - ஆய், என்னைப் பெற்றவள் ஆய் - அவளைப்போலே வளர்த்து விடுகையன்றிக்கே பெற்றவளான வேறுபாட்டையுடைய நற்றாயாய், பொன் அப்பன் - பொன்போலே தன்னுடையஸ்ப்ருஹணீயதையை ப்ரகாசிப்பித்தும், மணி அப்பன்-(அதிற்காட்டில் ஔஜ்ஜ்வல்யத்தாலும் மஹார்ஹதையாலும் வேறுபட்ட) ரத்நம் போலே தன்னுடைய தேஜஸ்ஸினைதயை ப்ரகாசிப்பித்தும், முத்து அப்பன்-(அதிற்காட்டில் நீர்மையாலும் குளிர்த்தியாலும் வ்யாவ்ருத்தமான) முத்துப்போலே தன் சீதளமான நீர்மையை ப்ரகாசிப்பித்தும், என்அப்பன் உம் - (இப்படி பஹுமுகமாக) எனக்குபகார கனும், ஆய் - ஆய், மின்ன - ஒளிவிடும்படி, பொன் - பொன்னான, மதிள் - மதிளாலே, சூழ் - சூழப்பட்ட, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, சேர்ந்த - வர்த்திக்கிற, அப் பன் - ஸர்வஸ்வாமியாய், (இப்படி ஸர்வப்ரகாரோபகாரகத்வத்துக்கு), தன் - தனக்கு, ஒப்பாரில் - ஒப்பில்லாத, அப்பன் - மஹோபகாரகனானவன், தன் - தன், தாள் - திரு வடிகளின், நிழல் - நிழலை, தந்தனன் - எனக்குத் தந்தருளினான்.

இ.—ஒன்பதாம்பாட்டில், எனக்கு ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகனாய், தன்பாதச்சாயையை, "அல்லேன்" என்ன, வலிய எனக்குத் தந்தானென்கிறார். [என்னப்பனெனக்காய்]-"ஜநிதா சோபநேதா ச யஸ்து வித்யாம் ப்ரயச்சதி" என்கிறபொதுவன்றிக்கே, எனக்கேஆன பிதாவாய். [இகுளாய்] - தோழியாய். இது தமிழர் நிர்வாஹம். நம் முடையவர்கள் "செவிலித்தாய்" என்று நிர்வஹிப்பர்கள். தாய்க்குத்தோழியாயிருக்கு மிறே செவிலித்தாய்; அத்தைச்சொல்லுகிறது. [என்னைப் பெற்றவளாய்] - உடம்பு நொந்து பெற்றவளாய். [பொன்னப்பன் இத்யாதி] - பொன்னும்மணியும் முத்தும்போலே எனக்குஉபகாரகன். [மின்னப்பொன் இத்யாதி] - மின்னாநின்ற பொன்மதிள்சூழ்ந்த திருவிண்ணகரிலே நித்யவாஸம் பண்ணுகையாகிற உபகாரத்தைப் பண்ணினவன். [தன் னொப்பாரில்லப்பன்] - உபகாரகரில் தன்னோடொப்பாரில்லாத உபகாரகன். ப்ரணய ரோஷத்தாலே நான் அகலப்புக, தாழநின்று பொருந்தவிட்டுக்கொண்டவன். [தந்த

னன் தனதாள்நிழலே] - தன்தாள்நிழல் தந்தான்; தன் பாதச்சாயையைத்தந்தான். "அழித்தா யுன்திருவடியால்" என்கிறபடியே என்மனோரதத்தைத் திருவடிகளாலே அழித்துத் தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்டான்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. எனக்குஸாரணமான மாத்ரமல்ல, மற்றுமெல்லாம் அவனேயென்கிறார். எனக்கு ஸர்வப்ரகாரத்தாலும் உபகாரகனாய், தன் பாதச்சாயையை, "அல்லேன்" என்ன, வலிய எனக்குத் தந்தானேன்கிறார்.

[என்னப்பனெனக்காய்]-எனக்கு அஸாதாரணனாய் ஸத்தாஹேதுவாயுள்ளபிதாவாய். க்ஷாமகாலத்திலே ப்ரஜையை விற்றுண்ணும் தமப்பனைப்போலன்றியே, தன்னை யழியமாறியும் என்னைநோக்கக்கடவ பிதாவாய். [இகுளாய்] - இகுளையென்று தோழிக்குப்பேராய், அத்தைக்குறைத்து, இகுளேன்றுகிடக்கிறது. இத்தால் சோல்லிற்றாயிற்று - எனக்கு வ்ருத்தகீர்த்தநம்பண்ணுகைக்குத் தோழியுமாய். [என்னைப்பெற்றவளாய்]-வளர்த்துக்கோள்ளியான தாயைப்போலன்றியே, பத்துமாஸம் வயிற்றிலேவைத்து நோக்கிப்பெற்ற தாயாய். [பொன்னப்பனித்யாதி] - வேறே ஹோக்யமாய்க்கொண்டு உபகாரகமாவன சில வஸ்துக்களுள;எனக்குஅவ்வோமுகங்களேல்லாம்தானாய்நின்றுஉபகரித்தவன்.†(பொன்னும் மணியும் முத்தும்போலே எனக்குபகாரகன்.) [மின்னப்பொன்னித்யாதி] - மின்னாநின்றுள்ள பொன்மதிளாலே சூழப்பட்ட திருவிண்ணகரிலேநின்ற உபகாரகன். [தன்னொப்பாரில்லப்பன்] - சிலர்க்கு ஒன்றை உபகரிக்குமிடத்தில், தன்னோடொக்க உபகரிக்கவல்லார் இல்லாதபடியான மஹோபகாரகன். இதுக்குச் சீயரருளிச்செய்யும்படி; - "மின்னிடை மடவாரிலே அவன்வந்துமேல்விழ, 'நீ எனக்குவேண்டா' என்று நான் தள்ளத்தள்ள; நீஉனக்கு ஹிதமறிந்தாயோ? நான்உனக்குவேணுங்காண் என்றுதன்னையெனக்குத்தந்தவன்" என்று. [தந்தனன் தனதாள்நிழலே] - "உன்னையொழிந்தவெய்யிலே யெனக்கமையும்" என்று நான் அகலப்புக, "அழித்தாயுன்திருவடியால்" என்று தன்னுடைய திருவடிகளாலே என்மமதையைப்போக்கி, பாதச்சாயையை எனக்குத்தந்தான். அடிபட்டவாறே, "எனக்கு" என்று வைத்தவற்றையும் போகவேர்களே. (கூ)

---

ஒன்பதாம்பாட்டு.—என்னப்பன் இத்யாதி. "என்னப்பனெனக்காயிகுளாய்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - எனக்கு ஸாரணம் இத்யாதி. "தந்தனன் தனதாள்நிழல்" என்றத்தைப்பற்ற அவதாரிகாந்தரம் - எனக்கு ஸர்வப்ரகாரத்தாலும் இத்யாதி.

என்னப்பனென்னாதே, "எனக்கு"என்று விசேஷித்ததுக்குஹாவம் - க்ஷாமகாலத்திலே இத்யாதி. எனக்கேயான வென்னப்பனையென்று ஸப்தார்த்தம். "இகுளாய்" - இகுளையாயென்றபடி. "பெற்றவள்" என்றதுக்குவாஸனை - வளர்த்துக்கோள்ளி இத்யாதி. 'ஹோக்யமாய்க்கொண்டு'- சுகத்தைக்கொடுத்து. 'உபகாரகமாவன' என்று கூட்டுவது. "தன்னொப்பாரில்லப்பன்" என்கைக்கு - அல்லாதாரிற்காட்டில் இவன்பண்ணின உபகாரமேதென்ன-இதுக்குச் சீயர் இத்யாதி. "தந்தனன்" என்கையாலே - வலியவே தந்தா னென்கிறார். நிழலுக்கு ப்ரதிகோடிக்கேக 'வெய்யில்' என்றது. "திருவடிகளாலே மமதையைப்போக்கினான்" என்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - அடிபட்டவாறே இத்யாதி. அடியென்று - திருவடிகளுக்கும், ப்ரஹாரத்துக்கும் பேர். (கூ)

---

† குண்டலிக்ராந்தம்க்வாசித்கம்.

## பத்தாம் பாட்டு.

நிழல்வெய்யில்சிறுமைபெருமைகுறுமைநெடுமையுமாய்
சுழல்வனநிற்பனமற்றுமாய் அவையல்லனுமாய்
மழலைவாய்வண்டுவாழ்திருவிண்ணகர்மன்னுபிரான்
கழல்கள் அன்றிமற்றோர்களைகணிலங்காண்மின்களே.

ஆ.—(நிழல்.)-ச்சாயாதபஅல்பமஹத் தீர்க்கஹ்ரஸ்வ சராசரங்களை ப்ரகாரமாகவுடையனாய், மதுரமாகப்பாடுகிற வண்டுகள்வாழுகிற திருவிண்ணகர் என்னோடு ஸம்ஶ்லேஷிக்கப்பெற்ற தேச மாகையாலே "இனி ஆத்மாந்தமாக இவ்விடத்தை விடேன்" என்றுஎழுந்தருளியிருந்த எம்பெருமானுடைய திருவடிகளல்லது நமக்கு மற்றொரு கதியில்லை. அவனுடைய கடாக்ஷம் பெறுவதற்குமுன்பு என்னுடைய ஸத்தையில்லாமையாலும், அவன் கடாக்ஷித்தருளினவாறே நானுளனாகையாலும் நமக்கு அவனல்லது கதியில்லை என்னுமிடம் எல்லார்க்கும் ப்ரத்யக்ஷிக்கலா மென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், அவனுடைய திருவடிகளல்லது மற்றொருரக்ஷகமில்லை என்னுமிடத்தை புத்திபண்ணுங்கோ ளென்கிறார். [சிறுமை பெருமை] - அணுத்வ மஹத்த்வங்கள். [குறுமைநெடுமை]-நடுவுள்ள ஹ்ரஸ்வதீர்க்கங்கள். [சுழல்வனநிற்பன]-ஸ்தாவரஜங்கமங்கள். [அவையல்லனுமாய்] - இவற்றில்இவனுக்கு வ்யாப்திகர்மநிபந்தநமல்லாமையாலே தன்பக்கல் அவற்றின்தோஷம் தட்டாதொழிகை. [மழலைவாய் வண்டு] - இனியமிடற்றோசையையுடைய வண்டு.

ப.—அநந்தரம், இப்படி பரஸ்பரவிருத்தாகாரமான ஸகலசராசரங்களையும் விபூதியாகவுடைய ஸர்வேஶ்வரன் திருவடிகளல்லது வேறுரக்ஷகமுடையோ மல்லோம்; இத்தை நிரூபித்துக்கொள்ளுங்கோ ளென்று உபதேசித்து முடிக்கிறார்.

நிழல் - தாபஶாந்திகரமானசாயையும், வெய்யில் - தாபகரமான ஆதபமும், சிறுமை - சிறுமைக்கெல்லையான அணுத்வமும், பெருமை - பெருமைக்கெல்லையான மஹத்த்வமும், (மத்யமபரிமாணங்களிலுண்டான), குறுமை - ஹ்ரஸ்வத்வமும், நெடுமையும் - தீர்க்கத்வமும், ஆய் -, சுழல்வனநிற்பன - சராசராத்மகமான, மற்றும் - மற்றுமுள்ள பதார்த்தங்களும், ஆய்—,(இப்படி ஸர்வஶரீரியாகநிற்கச்செய்தே), அவை - அவற்றினுடைய ஸ்வபாவத்தை, அல்லனும் - உடையவனல்லாதவனும், ஆய்—, மழலை - முக்தமான, வாய் - வாக்வ்யவஹாரத்தையுடைய, வண்டு - வண்டுகள், வாழ் - ஸ்வஹோக்யலாபத்தாலே வாழும்படியான, திருவிண்ணகர் - திருவிண்ணகரிலே, மன்னு-நித்யவாஸம்பண்ணுகிற, பிரான் - ஸர்வேஶ்வரனுடைய, கழல்கள் - திருவடிகளை, அன்றி - ஒழிய, மற்று - வேறு, ஓர் - ஒரு, களைகண் - ரக்ஷகவஸ்துவை, இலம் - உடையோமல்லோம்; காண்மின்கள் - (இது) நிரூபித்துக்கொள்ளுங்கோள்.

இ.—பத்தாம்பாட்டில், அவனுடைய திருவடிகளல்லது வேறு ரக்ஷகமில்லையென்று புத்திபண்ணுங்கோள் என்கிறார். [நிழல் வெய்யில்] - சீதஹேதுவான நிழலும், உஷ்ணஹேதுவான வெய்யிலும். [சிறுமை பெருமை]-அணுத்வமஹத்த்வங்கள். [குறுமை

நெடுமை]-மத்யமபரிமாணவஸ்துக்களிலுண்டான ஹ்ரஸ்வதீர்க்கங்கள். [சுழல்வனநிற்பன]- ஸ்தாவரஜங்கமங்கள். [மற்றுமாய்] - அநுக்தமான ஸர்வமுமாய். [அவையல்லனுமாய்] - தத்கததோஷரஸம்ஸ்பர்ஶ ரஹிதனாயிருக்கை. [மழலைவாய் வண்டுவாழ் திருவிண்ணகர்] - மழலைப்பேச்சையுடைய வண்டுகள் தந்தாம்அபிமதங்கள்பெற்று வாழ்கிற வூர். [மன்னு பிரான்இத்யாதி]-நித்யவாஸம்பண்ணுகிற உபகாரகன்திருவடிகளல்லது வேறுபுகல்இல்லை. "மாமேகம்ஶரணம் வ்ரஜ" என்கிறவ னன்றிக்கே, திருவடிகள்தானே தஞ்சமென்கை. [காண்மின்களே] - இத்தை எல்லாரும் புத்திபண்ணுங்கோள்.

ஈடு —பத்தாம்பாட்டு. அவன்திருவடிகளல்லது மற்று ரக்ஷகமில்லை யென்னு மிடத்தை புத்திபண்ணுங்கோ ளென்கிறார்.

[நிழல் வெய்யில்] - சீதஹேதுவான நிழலும், உஷ்ணஹேதுவானவெய்யிலும். [சிறுமைபெருமை] - அணுத்வமஹத்த்வங்கள். [குறுமைநெடுமை] - மத்யமபரிமாணத்தி லுண்டான ஹ்ரஸ்வதீர்க்கங்கள். [சுழல்வனநிற்பன] - ஜங்கமஸ்த்தாவரங்கள். [மற்று மாய்] - அநுக்தஸமுச்சயம்; சொல்லப்படாததெல்லாமாய். [அவையல்லனுமாய்] - அவற் றுக்குஅந்தர்யாமியாய் நிற்கச்செய்தே அவற்றின்தோஷம் தட்டாதபடிநிற்குமென்று கீழே சொல்லிற்றிறே; இனியிங்குஎன்? என்னில்,—அவற்றுக்கு வரும் அவஸ்த்தைகளையு முடைய னல்லனாய்என்றபடி. அவையாவன - சேதநகதமாயுள்ள ஸுகித்வ து:கித்வாதிகளும், அசேதநகதமான பரிணாமாதிகளும். [மழலைவாய்வண்டுவாழ்] - பருவத்தில் இளமை யாலே இனியபேச்சுக்களை யுடைத்தான வண்டுகள் வர்த்தியாநின்றுள்ள திருவிண்ண கரிலே நித்யவாஸம்பண்ணுகிற உபகாரகன்திருவடிகளையொழிய வேறுரக்ஷகரையுடையோ மல்லோம். [கழல்களன்றிமற்றோர்களைகணிலம்]-"மாமேகம்ஶரணம்வ்ரஜ" (மாமேகம் ஶரணம்வ்ரஜ) என்னுமவனன்றிக்கே, திருவடிகள்தானே தஞ்சமேன்கை. [காண்மின் களே] - இது அர்த்தவாதஞ் சொல்லுகிறேனன்று; நீங்களும் பாருங்கோள்.

---

## பதினோராம் பாட்டு.

---

காண்மின்கள்உலகீர்! என்று கண்முகப்பேநிமிர்ந்த
தாளிணையன் தன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார்
கோணையின்றிவிண்ணோர்க்கு என்றுமாவர்குரவர்களே.

---

பத்தாம்பாட்டு.—நிழல் இத்யாதி. "கழல்களன்றிமற்றோர்களைகணிலம்" இத்யாதியைப் பற்ற அவதாரிகை - அவன் திருவடிகளல்லது இத்யாதி.

"சிறுமைபெருமை" என்றுசொல்லி, "குறுமைநெடுமை" என்கையாலே மத்யமபரிமாணம் என்கிறது. கீழும் "அல்லனாய்" என்றது, இங்கும் "அல்லன் - ஆய்" என்றது; இரண்டுக்கும் பேத மென்னென்னிலென்றபடி. கீழ் - அகர்மவஶ்யதைசொல்லிற்று, இங்கு - தத்கார்ய ஸுகது:காஸாஹித் யஞ் சொல்லுகிறதென்றபடி. மன்னுபிரானன்றியென்னாதே, "கழல்களன்றி" என்றதுக்குஹாவம் - மாமேகம் இத்யாதி. அதாவது— திருவடிகளாலே ததீயரைச்சொல்லி, ஈஶ்வரனன்றிக்கே ததீயாபி மானமே உத்தாரகமென்கை. 'பாருங்கோள்' மநஸ்ஸி லென்றபடி. (௪௦)

ஆ.—(காண்மின்கள்.)-ஆஸ்ரிதஅநாஸ்ரிதவிபாகமின்றியே ஸர்வாத்மாக்களுங் கண்டு வாழுங்கோளென்று அவர்கள் கண்முகப்பே நிமிர்ந்த தாளிணையன்தன்னைக் குருகூர்ச்சடகோபன் சொன்ன ஆயிரத்துள் எம்பெருமானுடைய ஸர்வநியந்த்ருத்வத்தைச் சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார் * அயர்வறுமமரர்களுக்கு நிஸ்ஸம்ஶயமாக ப்ரதமபூஜ்யராவரென்கிறார்.

ஒ.—நிகமத்தில் இத்திருவாய்மொழிவல்லார்அயர்வறுமமரர்களுக்குஶ்லாக்யராவர் என்கிறார். [காண்மின்களுலகீரென்று கண்முகப்பே நிமிர்ந்ததாளிணையன் தன்னை]- லோகத்திலுள்ள எல்லீரும் கண்டு க்ருதார்த்தராகுங்கோள் என்று அவர்கள் கண்ணெதிரே வளர்ந்த திருவடியையுடையவனை. [ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும் வல்லார்] - ஆயிரம் திருவாய்மொழியிலும் அவனுடைய ஜகந்நிர்வாஹகத்வத்தைச் சொன்ன இத்திருவாய்மொழிவல்லார். [கோணையின்றி] - பிறக்கு இன்றிக்கே. [குரவர்கள்] - கௌரவ்யர்.

ப —அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் ஸூரிகளுக்கு நித்யகௌரவ்யராவர்களென்று ஃபலத்தை யருளிச்செய்கிறார்.

உலகீர்-லோகத்தீர்! காண்மின்கள் - இத்தைக்காணுங்கோள், என்று-என்று, கண்முகப்பே - பரஸ்பர விருத்தரானவர்கள் கண்ணெதிரே, நிமிர்ந்த - வளர்ந்த, தாளிணையன்தன்னை - திருவடிகளை யுடைய த்ரிவிக்ரமாபதானத்திற்போலே பரஸ்பரவிருத்த பதார்த்தங்களிலே பலவகையும் பரந்த ஸர்வேஶ்வரனை, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்ததாய், ஆணை - ஃபகவதாஜ்ஞாரூபமாயிருக்கிற, ஆயிரத்து - ஆயிரத்தில், திருவிண்ணகர் - திருவிண்ணகர் விஷயமான, பத்தும் - பத்தையும், வல்லார் - வல்லவர்கள், கோணை - ஒருபிறக்கு, இன்றி - அற, விண்ணோர்க்கு - நித்யஸூரிகளுக்கு, என்றும் - என்றும், குரவர்கள் - கௌரவ்யர், ஆவர் - ஆவர்கள். இது - கலிவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி வல்லார் நித்யஸூரிகளுக்கு கௌரவ்யரென்கிறார்.

[காண்மின்கள் இத்யாதி] - நோக்குவித்யை காட்டுவாரைப்போலே; இதோராஶ்சர்யம் பாருங்கோளென்று லௌகிகர் எல்லாருடையவும் கண்ணெதிரே வளர்ந்ததிருவடிகளையுடையவனை. “உங்கள்தலையிலே திருவடிகளை வைக்க வாருங்கோள்” என்றுவிசைவாரில்லையே. [குருகூர்ச்சடகோபன்சொன்ன]- இந்த ஸௌலப்யத்தை அநுஸந்தித்தவர் சொன்ன வார்த்தையாகையாலே ஆப்தமென்கை. [ஆணையாயிரத்து] - “ஶ்ருதிஸ்ஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா” என்கிறபடியே ஆயிரத்திலும், ஜகந்நியமனத்தைச்சொன்ன, திருவிண்ணகரை விஷயமாக உடைய பத்து. இத்தை அப்யஸிக்கவல்லார். [கோணையின்றி] - பிறக்கின்றிக்கே, நித்யஸூரிகளுக்கு என்றுமொக்க கௌரவ்யராவர்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழிவல்லார் நித்யஸூரிகளுக்கு நாள் தோறும் கௌரவ்யராவரென்கிறார்.

---

நிகமம் —காண்மின்கள் இத்யாதி. “பத்தும்வல்லார் - விண்ணோர்க்கென்றுமாவர்குரவர்கள்” என்கிற பதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழி இத்யாதி.

[காண்மின்களுலகீரேன்று கண்முகப்பேநிமிர்ந்த தாளிணையன்தன்னை] - "உங்கள்தலையிலே நான்காலைவைக்கக்கோடுவோருங்கோள்" என்றால் இசையாரேன்று பார்த்து, நான் காட்டப்புகுகிறதோரு விஸ்மயம் பாருங்கோள் என்பாரைப்போலே இவர்கள் கண்முகப்பே நிமிர்ந்த திருவடித்தாமரைகளையுடையவனை. [காண்மின்கள்] - இதோருவிஸ்மயம் என்ன வேண்டிற்றுக் காணும் "தலையிலேயடிபடப்புக்கவாறே இருப்பர்கள்" என்று. [குருகூர்ச்சடகோபன்சோன்ன] - இந்தஸௌலப்யத்தை யநுஸவித்தவர்சோன்ன வார்த்தையாகையாலே ஆப்தமேன்கை. [ஆணையாயிரத்து] - ஈஶ்வரனுடைய ஜகதநுஶாஸநத்தைச்சோன்ன இத்திருவாய்மோழிவல்லார். விண்ணோருண்டு - நித்யஸூரிகள், அவர்களுக்கு காலதத்த்வமுள்ளதனையும், குருக்களாவர் - கௌரவ்யராவர். இதில், கோணையில்லை - ஒருமிறுக்கில்லை. ஆவதேன்? அஸ்ப்ருஷ்டதோஷ கந்தரான நித்ய ஸூரிகளுக்கு, நித்யஸம்ஸாரியானவன் இத்தைக் கற்குங் காட்டில் கௌரவ்யனும்படி யேங்ஙனே? என்னில்,—அங்கேயிருந்துவைத்தே ததீயத்வாகாரத்தாலே லீலாவிபூத்யநுஸந்தாநம்பண்ணி ஹ்ருஷ்டராம் நிலையுள்ளது முக்தர்க்காகையாலே, இங்கேயிருந்தேயவர்கள் அநுஸந்தாநத்தைப் பண்ணுகிற இவனை, "ஸம்ஸாரத்தே யிருந்துவைத்தே நம்படி யோருவனுக்குஉண்டாவதே!" என்று கோண்டாடியிருப்பர்கள். (கக)

---

*கண்முகப்பேநிமிர்ந்தவென்னுதே, "காண்மின்களுலகீர்" என்று விசேஷித்ததுக்குஹாவும் - **உங்கள்தலையிலே** இத்யாதி. சாடுவாக உக்தார்த்தவிவரணம் - இதோரு இத்யாதி. தூரபிமாநிகளாகையாலே - 'இருப்பர்கள்' என்றபடி. அடி - திருவடிகளும், ப்ரஹாரமும். இந்த ஸௌலப்யத்தை - திருவுலகளந்தருளின ஸௌலப்யத்தை. ஆணை - ஜகந்நியமநம் "ஆயிரத்து - ஆணை - திருவிண்ணகர்ப்பத்து" என்றந்வயிப்பது: ஜகந்நியமநத்தை ப்ரதிபாதிக்கிற பத்தென்றபடி. விவரணம் - 'கௌரவ்யராவர்' என்று. மிறுக்கு - அநுபபத்தி. ப்ரஸக்தஸ்யஹிப்ரதிஷேதஃ அன்றோ! அநுபபத்திக்கு ப்ரஸக்தி யேது? என்ன,—ப்ரஸக்தியை ஶங்கித்துப் பரிஹரிக்கிறார் - அஸ்ப்ருஷ்ட இத்யாதி. குரவர்கள் - குருக்கள்.* (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி.— "[illegible]"

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.— [illegible]

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

*நல்லவலத்தால்நம்மைச் சேர்த்தோன்முன்நண்ணாரை*
*வெல்லும்விருத்தவிபூதியனென்று—எல்லையறத்*
*தானிருந்துவாழ்த்துந்தமிழ்மாறன்சொல்வல்லார்*
*வானவர்க்குவாய்த்தகுரவர்.*

*ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.*

---

## நான்காந்திருவாய்மொழி—குரவை - ப்ரவேஶங்கள்.

**ஆ.**—(குரவை.) இப்படி திருவிண்ணகரில் எம்பெருமானைக்கண்டு, அவனுடைய ஸர்வநியந்த்ருத்வ ஸௌஶீல்ய ஸௌந்தர்யாதி கல்யாணகுணங்களை அநுபவித்து நிரதிஶய ப்ரீதியுக்தராய் ஸம்ஹ்ருஷ்டாந்தரான ஆழ்வாரைக்கண்டு எம்பெருமான் ப்ரீதனாய் * பிறந்தவாற்றில் இவருடைய இழவெல்லாந் தீரும்படி, தன்னுடைய திவ்யாவதாரந் தொடங்கித் திருநாட்டில் எழுந்தருளுகை பர்யந்தமாக நடுவுள்ள ஸர்வதிவ்யசேஷ்டிதங்களையுங் காட்டியருளக் கண்டநுபவித்து, ததநுபவஜநித நிரவதிக நிர்வ்ருதியாலே, பரிபூர்ண மநோரதனானே னென்கிறார்.

ஒ.—நாலாந் திருவாய்மொழியில், ராமவ்ருத்தாந்தத்தில் திருவடியைப் போலே க்ருஷ்ணவ்ருத்தாந்தத்திலே ஸக்தரான ஆழ்வார், தாம் ப்ரணயகோபத்தாலே * மின்னிடைமடவாரில் ''எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷிப்பேனல்லேன்'' என்று மிறங்கின தம்மை ''ஆவேன்'' என்னப் பண்ணியருளின உபகாரத்தை * நல்குரவிலே அநுஸந்தித்து, * மாசறுசோதியில் ''சேணுயர்வானத்திருக்கும்'' என்கையாலே - தூரஸ்தனென்று இன்னாதான ஆழ்வார், அணியவா யெண்ணிமுடிக்கவொண்ணாதனவாயுள்ள க்ருஷ்ண வ்ருத்தாந்தங்களைக் காட்டியருளக்கண்டு, ''தொல்லருணல்வினையால் சொலக் கூடுங்கொல்'' என்று மநோரதித்தபடியே இனிதாகப்பேசி அநுபவிக்கிறார். * பிறந்தவாற்றில் - பலஹாநியாலே பேசமாட்டிற்றிலர்; * குரவையாய்ச்சியரில் - ப்ரீதியாலே எல்லா சேஷ்டிதங்களையும் தரித்துப்பேசுகிறார்.

ப.—நாலாந் திருவாய்மொழியில், கீழ் - விரு[illegible]யோகத்தாலே தன் அகடிதகடநாசக்தியைக்காட்டி''ஃபலப்ரதாநஸமர்த்தன்''என்கிற ப்ரதிபத்தியைப்பிறப்பித்த ஸர்வஸ்மாத்பரனுடைய ஸ[illegible]மத்வஸூசநார்த்தமாக அவனுடைய அநந்தஶாயித்வத்தையும், ஆஶ்சர்ய ஆகாரவத்தையையும், அதிஶயித ஔஜ்ஜ்வல்யத்தையும், அப்ராக்ருதவிக்ரஹவத்தையையும், ஆர்த்திகளுக்கபேக்ஷிதகரத்வத்தையும், அந்யாபிமாந நிவர்த்தகத்வத்தையும், அதிஶயிதபோக்யாகாரத்தையும், ஆர்த்தியாயும் அபேக்ஷிதந் தலைக்கட்டிக் கொள்ளும்படியையும், அஸாதாரணசிஹ்நயோகத்தையும், பரஞ்ஜ்யோதிஸ்ஸ்வரூபவத்தையையும் அநுஸந்தித்து, 'ஏவம்ப்ரகாரனான க்ருஷ்ணனுடைய மநோஹாரியான அகிலசேஷ்டிதங்களையும் இங்கேயிருந்து அநவரதாநுபவம் பண்ணப்பெற்ற எனக்கு ஆர் இனி நிகராவர்?' என்று ஹ்ருஷ்டராய்க்கொண்டு, அவனுடைய ஸ[illegible]த்வத்தை ப்ரதிபாதித்தருளுகிறார்.

**இ.**—நாலாந்திருவாய்மொழியில், * பிறந்தவாற்றிலே - [illegible]ணங்களையரித்து நின்று அநுபவிக்கவல்லனும்படி பண்ணியருளவேணுமென்று ஶரணம்புக்கார்; திருவண்வண்டூரிலே தூதுவிட்டார்; அவன் வரக்கொண்டு * மின்னிடைமடவாரிலே ப்ரணய ரோஷத்தாலே அகலப்புக்க தம்மைச் சேரவிட்ட உபகாரத்தை அநுஸந்தித்தார், ''ஸர்வ நியந்தாவான மேன்மையையுடையவன் என்னைத் தாழநின்று பொருந்தவிட்டுக்கொள்வதே!'' என்று உபகாரஸ்ம்ருதியாலே ஏத்தினார்; இதில் - க்ருஷ்ணாவதாரசேஷ்டிதங்களை அநுஸந்தித்து ப்ரீதராகிறார். 'பாவோ நாந்யத்ர கச்சதி''என்று - திருவடி ராமாவதாரத்திலே ப்ரவணனாயிருக்குமாபோலே இவரும் க்ருஷ்ணாவதாரத்திலே ப்ரவண

ராயாயிற்றிருப்பது. * மாசறுசோதியிலே, "சேணுயர்வானத்திருக்கும்" என்று - தூரஸ்ய னென்று இன்னுதான இழவுதீர இந்த லோகத்திலே ஸ்ரீப்ருந்தாவநத்திலே பெண்களோடே பரிமாறின பரிமாற்றத்தைக் காட்டிக்கொடுக்க அநுஸந்தித்து ப்ரீதராகிருர். * மானேய்நோக்கிலே, "தொல்லருணல்வினையால் சொலக்கூடுங்கொல்" என்று - நாக்கு நீர்வந்து திருநாமம்சொல்லுவது என்றேறவென்று ஆசைப்பட்ட இழவுதீர க்ருஷ்ண குணங்களை அநுபவித்துப் பேசி ப்ரீதராகிருர். * சன்மம்பலபலவிலையும் "ஓர் குறைவிலன்" என்ருர்; 'இதிலும் "என்ன குறைவு எனக்கு" என்ருர். அதுக்கும் இதுக்கும் வாசிஎன்? என்னில், - அங்கு ஸம்ஸாரிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தனுகப்பெற்றேன் என்ருர்; இதில் குணநுபவப்ரீதிப்ரகர்ஷத்தாலே, எனக்கு ஒருகுறைவுஇல்லை யென்கிருர்.

ஈடு:—இத்திருவாய்மொழியில் ஆழ்வார் ஸ்ரீவால்மீகிபகவானேடொப்பர். அவனும் ராமாவதாரமல்லது போக்கியறியான்; அவனுடையப்ரபந்தமும் அப்படியே; இவரும் க்ருஷ்ணவதாரமல்லதறியார்; இத் திருவாய்மொழி - க்ருஷ்ண வ்ருத்தாந்தமொழிய வேறொன்றைச் சொல்லாது. "ஹாவொநாந்யத்ரகச்சதி" (பாவோநாந்யத்ரகச்சதி) என்றுகொண்டு 'பரதமையுங் கூட வேண்டேன்' என்ற திருவடியைப் போலேயாயிற்று இவரும் க்ருஷ்ணவதாரமொழிய வேறொன்று அறியாதபடி.

"சேணுயர் வானத்திருக்கும் தேவபிரான்" என்கிறபடியே-கிட்டிநின்று அநுபவிக்கப் பெற்றிலோமேன்கிற இழவுதீர, பூமியிலேயாகப்பெற்றது; "தோல்லருணல்வினையால் சொலக்கூடுங்கோல்?" என்றிறே இவர் ஆசைப்பட்டது; அதாவது - நா நீர்வந்து திருநாமம்சோல்லுகையாகிறது ஸுக்ருதபலமிறே. *பிறந்தவாற்றில் இவர்க்கு உண்டான இழவெல்லாம் தீரும்படி ஸ்ரீப்ருந்தாவநவ்ருத்தாந்தத்தைக் காட்டிக் கோடுக்கக் கண்டு, அது பூதகாலமாய்த் தோற்றுகையன்றிக்கே ஸமகாலம்போலே கிட்டிநின்றநுபவிக்கிருர். * மின்னிடைமடவாரிலே - "அல்லோம்" என்று அகன்று முடிந்து போகப்புக்க தம்மை "ஆவோம்" என்னப்பண்ணிச் சேரவிட்டுக்கோண்டபடியை யநுஸந்தித்து, இப்படி வல்லார் இவனல்லதில்லைகிடீரேன்று தலைக்கட்டுகிருரா யிருக்கிறது. * சன்மம்பலபலவிலும் இப்படி யிருப்பதோரு ஹர்ஷமுண்டே; அதில்இதுக்கு வாசியேன்? என்னில் - அங்கு - இதர வ்யா

---

குரவையாய்ச்சியர்ப்ரவேஸே; இத்திருவாய்மொழியிலே, க்ருஷ்ணகுணங்களிலே ஈடுபட்டுப் பேசுகிற இவர்க்கும், க்ருஷ்ணகுணைக ப்ரதிபாதகமான இத்திருவாய்மொழிக்கும் த்ருஷ்டாந்தமாக, ஸ்ரீவால்மீகிபகவானையும் ஸ்ரீராமாயணத்தையும் அருளிச்செய்கிருர் - 'இத்திருவாய்மொழியென்று தொடங்கி, வேறொன்றைச்சொல்லாதென்னுமளவும்'. விவரணம் - அவனும் இத்யாதி. த்ருஷ்டாந்தாந்தரம் - ஹாவொநாந்யத்ர இத்யாதி." ஸெஹாவேரொராஜநு ஸயிநிதய்ம்ஹு திஷ்டிதஃ। ஹக்திஸ்நியதாவீரஹாவொநாந்யத்ரஹஸதி" இத்யுக்தாஸ்ரீராமாயணே.

இத்திருவாய்மொழியில் * மாசறுசோதிதொடங்கி, * மின்னிடைமடவார் - அளவுமுண்டான வ்யஸநங்களெல்லாந்தீர அநுபவிக்கிருரென்கிருர் - சேணுயர் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. பூமியிலேயாகப்பெற்றதென்றது-அவதரிக்கப்பெற்றதென்றபடி. 'ஸுக்ருதபலமிறே' ஆகையாலே ஆசைப்பட்டபடியே திருநாமங்கள் சொல்லப்பெற்றதென்றபடி. பிறந்தவாற்றில் இவர்க்குண்டான இழவெல்லாம் என்றது - யரித்துநின்றநுபவிக்கமாட்டாத இழவெல்லாமென்றபடி. * மின்னிடைமடவாரோடு இதுக்கு ஸங்கதியேதென்ன - மின்னிடைமடவாரிலே இத்யாதி. 'தலைக்கட்டுகிருராயிருக்கிறது' - * நல்குரவிலே தலைக்கட்டுகிருராயிருக்கிறதென்றபடி. * மின்னிடைமடவார்க்கும் இதுக்கும் நேரே

ருத்தி மாத்ரத்தால் உண்டான ஜ்ஞாநலாபத்தால் வந்த ஹர்ஷம்; இங்கு - அவன் தன் குணங்களை நேரே இவரை நெருங்கியநுஹவிப்பிக்க, ஸ்வவஶரல்லாதபடி அநுஹவித்து ஹ்ருஷ்டராய் வாய்விடுகிறார்.

---

## முதற் பாட்டு.

---

குரவையாய்ச்சியரோடுகோத்ததும் குன்றமொன்றேந்தியதும்
உரவுநீர்ப்பொய்கை நாகங்காய்ந்ததும் உள்பட மற்றும்பல
அரவில் பள்ளிப்பிரான்தன் மாயவினைகளையேயலற்றி
இரவும்நன்பகலுந் தவிர்கிலம்என்னகுறைவுஎனக்கே

*ஆ.—நாகபர்யங்கஶாயியான பரமபுருஷன் ஸ்ரீவஸுதேவர் திருமகனாய் வந்து பிறந்தருளி, ப்ரணயிஜநஸம்ஶ்லேஷைகபோகனாகையாலே திருவாய்ப்பாடியிற் பெண்பிள்ளைகளோடே திருக்குரவைகோத்து ஸம்ஶ்லேஷித்தருளினபடியையும், ப்ரணயிஜந பரித்ராணார்த்தமாகையாலே தத்ஸம்ஶ்லேஷத்திற்காட்டிலும் தனக்கு போக்யமான கோவர்த்தநமஹாகிரி ஸமுத்தரணமும், விஷாநலஜ்வாலாநஹிஹவநீய மஹாஹ்ரத நிவாஸி காளிய நிரஸநப்ரப்ருத்யாஶ்சர்ய ஸர்வதிவ்ய சேஷ்டிதங்களையும் அநுஹவித்து, அவ்வநுஹவஜநிதப்ரீதியாலே அப்ராக்ருதிங்கதனாய் அவற்றையேயலற்றி இரவுநன்பகலும் நான்தவிர்கிலன்; எனக்கு இனி என்னகுறை யுண்டு என்கிறார்.*

*ஒ.—முதற்பாட்டில், 'ப்ரீதிபூர்வகமாக இரவும்பகலும் க்ருஷ்ணசேஷ்டிதங்களை அநுபவிக்கப்பெற்றேன்: எனக்கு இனி என்னகுறை யுண்டு?' என்கிறார்.*

*உரவுநீராவது - விஷஜலம், வலியநீர் என்றுமாம். [அரவில்பள்ளிப்பிரான்] - திருவவதாரம்பண்ணுகைக்காகத் திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவன். * நாகணைமிசை நம்பிரான் ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகிறது. [மாயவினைகள்] - ஆஶ்சர்யமான சேஷ்டிதங்கள். [இரவுநன்பகலும்] - எம்பெருமானைப்பெற்று அநுபவிக்கிற காலமாகையாலே நன்றான இரவும் பகலும்.*

*ப.—முதற்பாட்டில், 'அவதாரகந்தமான அநந்தஶாயித்வத்தை யுடையனான க்ருஷ்ணனுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்களை ப்ரீதிப்ரேரிதராய்க்கொண்டு சொல்லி அவிச்சிந்நமாக நடக்கப்பெற்றோம்; நமக்கென்னகுறை உண்டு?' என்கிறார்.*

ஆய்ச்சியரோடு - ஆய்ச்சியரோடேகூட, குரவை - திருக்குரவையிலே, கோத்ததும் - (எல்லாப்பெண்களும் தன்கைகோத்தாரம்படி வகைமாலைபோலே இடையிடையே தன்னைக்கலந்து) கோத்ததும், (இந்தப்பெண்களோட்டை ரஸத்துக்கு விலக்காக வந்த மழையைத் தடுக்கைக்காக), ஒன்று - ஒரு, குன்றம் - மலையை, ஏந்தியதும் - எடுத்தேழுநாள் அநாயாஸேந யரித்துக்கொண்டு நின்றதும், உரவு - முதிர்ந்த, நீர் -

---

ஸங்கதி; நல்குரவு ப்ராஸங்கிகம். மேலேயும் இப்படிப்பட்ட ஹர்ஷமுண்டே; இதுக்கு வாசி யேதென்கிற ஶங்கையையநுவதித்துப் பரிஹரிக்கிறார் - சன்மம்பல இத்யாதி. இதரவ்யாவ்ருத்தியாவது - * சொன்னால்விரோதத்தில் திருந்தாத ஸம்ஸாரிகளில் தமக்கு உண்டான வ்யாவ்ருத்தி.

ஜலத்தையுடைத்தான, பொய்கை - பொய்கையில், நாகம் - காளியனை, காய்ந்ததும் - முனிந்து நியமித்தப்ரகாரமும், உள்பட - முதலாக, மற்றும் - மற்றும், பல - பலவாய், ("[illegible]" என்கிறபடியே அவதாரார்த்தமாக), அரவில்பள்ளி - கண் வளர்ந்தருளின நாகபர்யங்கத்தை, பிரான்தன் - விட்டுவந்த உபகாரகனை க்ருஷ்ண னுடைய, மாயம் - ஆஸ்சர்யங்களான, வினைகளையே - சேஷ்டிதங்களையே, அலற்றி - ப்ரீதிபரவசனாய்க்கொண்டு சொல்லி, நன் - குணைகதநத்துக்கு உறுப்பான நன்மையை யுடைய, இரவும் - இரவும், பகலும் - பகலும், தவிர்கிலம் - ஓய்கிறிலோம்; நமக்கு - நமக்கு, என்ன - என்ன, குறை - குறைவு, உண்டு - உண்டு? அநுஹாவ்யஸங்கோசத் தால் வரும் குறையுண்டோ? அநுபவவிச்சேதத்தால் வரும் குறையுண்டோ என்று கருத்து. "[illegible] வனக்கு" என்றும் பாடஞ்சொல்லுவர்.

இ.—முதற்பாட்டில், அஹோராத்ரம் க்ருஷ்ணசேஷ்டிதங்களை ப்ரீதிபூர்வக மாக அநுபவிக்கப்பெற்ற எனக்கு என்னகுறை உண்டு என்கிறார்.

[குரவையாய்ச்சியரோடு கோத்ததும்] - * மின்னிடைமடவாரிலே அகலப் புகத் தாழநின்று பொருந்தினபடி, இடைப்பெண்களோடே பொருந்தினாற்போலே இருக் கிறதாயிற்று. தன்னோடே அவர்களைக்கோக்கையன்றியே, அவர்களோடே தன்னைக் கோத்தபடி. பஞ்சலக்ஷங்குடியில் பெண்களோடே கலந்த ப்ரீதிஉண்டாயிற்று இவ ரோடேகலந்த ப்ரீதி. கோக்கை - தொடுக்கை, கைகோத்துக்கொண்டு ஆடுங்கூத்திறே- குரவைக்கூத்தாவது. [குன்றமொன்று இத்யாதி] - அவர்களை அநுஹவிக்கையன்றிக்கே, அவர்களுக்குவந்த ஆபத்தைப் போக்கினபடி. இந்த்ரன் பரிக்ராஹத்தாலே அழியவர்ஷிக் கத்தொடங்கினவாறே, முன்னேநின்றதொருமலையை எடுத்து ரக்ஷித்தபடி. [ஏந்திய தும்] - ஏழுவயஸ்ஸிலே ஏழுநாள் ஒருபடிப்பட மலையை எடுத்துக்கொடு நிற்கச்செய்தே யும், ஆஸ்ரிதார்த்த ப்ரவ்ருத்தியாகையாலே வருத்தமற்றிருந்தபடி. [உரவுநீர்]-வலியை உடைத்தான நீர். விஷத்தாலே பாதகமான வலியாதல், முதுநீர்ஆகையாலே வலிய நீர் என்னுதல். உரவு - விஷமென்னுதல், வலியென்னுதல். [நாகங்காய்ந்ததும்] - "பெண்களோட்டை ஜலக்ரீடைக்குவிரோதி" என்று காளியனை ஓட்டினதுவும். [உள் பட மற்றும்பல] - இவைமுதலான சேஷ்டிதங்களுக்குத் தொகையில்லை. * பிறந்தவாற் றில் - பலஹாநியாலே சொல்லமாட்டிற்றிலர்: இங்கு - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பரித் துச்சொல்லமாட்டாதொழிகிறார். [அரவிற்பள்ளிப்பிரான்] - அவதரிக்கைக்காகத் திருப் பாற்கடலிலே கண்வளர்ந்தருளினவன். ஆஸ்ரிதவிரோதியான ஸர்ப்பத்தைப் போக்கி னான், அஜ்ஜாதியிலே ஒருவனுக்கு உடம்பு கொடுத்தான்: ஜாதிப்ரயுக்தமன்று நிரஸநம், ஆஸ்ரிதவிரோதி யென்று. * பிறந்தவாற்றில் * நாகணைமிசைநம்பிரானை ப்ரத்யபி ஜ்ஞைபண்ணுகிறார். [மாயவினைகளையேயலற்றி] - ஆஸ்சர்யசேஷ்டிதங்களை ப்ரீதி யாலே அடைவுகெடச்சொல்லி. [இரவுநன்பகலும்] - நல்ல இரவும் நல்லபகலும்: "சுடர் கொளிராப்பகல்" என்று - விரஹத்தில் அக்நிகல்பமான அஹோராத்ரம்போலன் றிறே. [தவிர்கிலம்] - விடுகிறிலேன். [என்னகுறை வெனக்கே] - காலஹேதமுள்ள தேசத்திலேயிருந்து ஏகரூபமாக அநுஹவிக்கப்பெற்ற எனக்கு "ஒருதேசத்திலே போக வேணும்" என்னுங் குறையுண்டோ?

ஈடு.—முதற்பாட்டு. அஹோராத்ரம் க்ருஷ்ணகுணங்களை ப்ரீதிபூர்வகமாக அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி ஒருகுறையில்லை என்கிறார்.

[குரவையாய்ச்சியரோடுகோத்ததும்] - * பிறந்தவாறும் என்றாற்போலேதொடங்கி ஓரவதாரம்முன்னாக இழியாதே, இதிலேஇழிவானேன்? என்னில்,—*மின்னிடைமடவாரிலுண்டான தம்முடைய ப்ரணயரோஷத்தைப்போக்கித் தம்மைச் சேரவிட்டுக்கொண்டபடி, திருக்குரவையிற் பெண்களோடேகலந்து அவர்களை அநுபவிப்பித்தாற்போலே யிருக்கையாலே, அதுமுன்னாகப் பேசுகிறார். தாம் அநுஸந்திக்கிலிறே ஓரடைவாகஇழிவது! அவனநுபவிப்பித்தபடியே பேசுகிறாராகையாலே; திருக்குரவையிற் பெண்களோடுண்டான கலவியையாயிற்று இவர்க்குமுதலிலே காட்டிக்கொடுத்தது. பஞ்சலக்ஷங்குடியிற் பெண்களெல்லாரோடுங்கலந்த ப்ரீதியுண்டாயிற்று, இவரொருவரோடே கலந்த ப்ரீதி. தன்செல்லாமையாலே இடைப்பெண்களுடைய மாலையிலே தன்னை அப்ரதாநனுக்கிக்கொண்டு கோத்ததும். ''குரவைபிணைந்தகுழகும்'' என்றுஆசைப்பட்டபடியே அநுபவிக்கிறார், பெண்களுடைய மாலையிலே இடையீடாகத் தன்னைக்கோக்கிறபோது, ''விஜாதீயனொருவன்கலந்தான்'' என்று தோற்றாதபடி அவர்களோடே யொரு நீராகக் கலந்தபடி. பெண்களும் பெண்களுமிறே கைகோத்துவிளையாடுவார். திருக்குரவையில் இவனையொழியப் பெண்களுக்குச் செல்லாதாப்போலே காணும் * மின்னிடைமடவாரில் ஆழ்வாரையொழிய இவனுக்குச் செல்லாமைவிளைந்தபடி. கோக்கை - தொடுக்கை. கைகோத்துக்கொண்டாடும் கூத்திறே - குரவைக்கூத்தாகிறது. [குன்றமொன்றேந்தியதும்] - ஸ்வர்க்கம் என்றுகொண்டு ஒரு போகபூமியாய், அங்கே அப்ஸரஸ்ஸுக்களோடே கழகமிருந்து புண்யபலாநுபவங்கள்பண்ணி ஸுகப்ரதாநனா யிருப்பான் இந்த்ரனென்றொருவன் உண்டிறே; அவ்வநுபவத்தைப் பூமியிலே ஒருபருவத்திற்பெண்களோடேகூட ஸ்வைரமாக அநுபவித்திருக்கிற இருப்பைக் கண்டு, அது பொறுக்கமாட்டாமை அஸூயையைவர்த்தித்து, ''நமக்கிட்ட சோற்றை யுண்டான்'' என்று ஒரு வ்யாஜமாகக் கல்வர்ஷத்தை வர்ஷிப்பித்தான்; அப்போது கைக்கு எட்டிற்றொருமலையையெடுத்துத் தரித்துக்கொண்டு நின்றபடி. ஒருவன் இங்கே ஒருநாள் மூக்குப் புதைக்குங் காட்டில், ''நம்முடைய ஹோமம் பதுந்துபோகப்புகாநின்றது'' என்றுஅஞ்சி அவரை உவரை வரவிட்டுக் கலக்குமவனிறே. ''இப்படி யநுபவிக்கிறான் ஸர்

---

முதற்பாட்டு.—குரவை இத்யாதி. ''அரவில் பள்ளிப்பிரான் தன் மாயவினைகளையேயலற்றி'' இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை - அஹோராத்ரம் இத்யாதி.

இதிலே - திருக்குரவையின் வ்ருத்தாந்தத்திலே. கீழ்ஶங்கைக்குப்பரிஹாராந்தரம் - தாம் அநுஸந்திக்கிலிறே இத்யாதி. அவன்தான் இத்தைமுந்தறஅநுபவிப்பானென்? என்ன - பஞ்சலக்ஷம் இத்யாதி. ''ஆய்ச்சியரோடு'' என்றஅப்ரதாநேத்ருதீயைக்கு பாவம் - தன்செல்லாமையாலே இத்யாதி. ஆய்ச்சியர்க்கு உண்டான அப்ராதாந்யம் தனக்கு உண்டாம்படி கோத்தானென்று கருத்து. * பிறந்தவாற்றில் இழவும் இதிலேதீருகிறதென்கிறார் - குரவைபிணைந்த இத்யாதி. ''கோத்ததும்'' என்றதுக்குபாவம் - பெண்களுடைய இத்யாதி. விவரணம் - பெண்களும் இத்யாதி. ''குரவையாய்ச்சியரோடு கோத்ததும் என்ற பதப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம்'' - திருக்குரவையில் இத்யாதி. கீழிற்பதத்தையுங்கூட்டி ''குன்றமொன்றேந்தியதும்'' என்றதுக்குபாவம் - ஸ்வர்க்கமென்று இத்யாதி. ''ஒன்று'' என்றதுக்குபாவம் - கைக்கெட்டிற்று இத்யாதி. இந்த்ரன் அப்படி அஸூயாளுவோ? என்ன - ஒருவன் இங்கே இத்யாதி. மூக்குப்புதைக்கை - ப்ராணாயாமம்பண்ணுகை. அவரை உவரையென்றது - அப்ஸரஸ்ஸுக்களையென்றபடி. ஸஜாதீயரிடத்திலொழிய ஸர்வேஶ்வரனிடத்திலே அஸூயைபிறக்குமோ? என்ன - இப்படி அநுபவிக்கிறான் இத்யாதி. அறியமாட்டாமைக்குஹேது

வேஶ்வரன்'' என்று அறியானிறே; இவன் தன்னை மநுஷ்யஸஜாதீயனுக்கிவைத்துக் கொண்டிருக்கையாலே. அன்றைக் கல்வர்ஷத்தில் பசுக்களுக்கும் இடையர்க்கும் வந்த ஆபத்தைத் தீர்த்தாற்போலேயாகாதே, இவர்க்கும் *மின்னிடைமடவாரில் வந்த ஆபத்துத் தீர்த்தபடியும். [ஏந்தியதும்] - பரார்த்தமாகையாலே கைக்குழராஹரணம்போலேயாயிற்று. அது தான் வருத்தமற்றிருந்தபடி. பூ ஏந்தினற்போலே யிருந்தது. ஏழுவயஸ்ஸிலே ஏழுநாள் ஒருபடிப்பட தரித்துக்கொண்டிறே நின்றது! [குன்றமொன்றேந்தியதும்] - ''இப்படி ஏழுவயஸ்ஸிலே ஏழுநாள் யரித்ததுக்கு என்செய்வோம் நாம்'' என்று ஒருவர் நெஞ்சாரல்படாதபடி ஸகோத்ரியாய் நின்றிறே இவன் இவற்றை ரக்ஷித்தது. [உரவுநீர்] - தறைகாணவொண்ணுமையாலுண்டான ஆழத்தையுடைத்தான மிடுக்கையுடைய நீரென்னுதல்; அன்றியே, காளியன்விஷத்தாலே ஒருவர்க்கும் கிட்டவொண்ணுத வலியேன்னுதல்; முதுநீராகையாலே வலியநீர்என்னுதல்; † (விஷத்தாலே பாதகமான வலியேன்னுதல்.) உரவு - விஷமென்னுதல். [நாகங்காய்ந்ததும்] - நாகத்தையோட்டியதும். பாம்படித்து மேலிட்டுக் காணும் பெண்களோடே ஜலக்ரீடை பண்ணிற்று. [உள்படமற்றும்பல] - இவைமுதலான சேஷ்டிதங்களுக்கு ஓர்எண்ணில்லை. * பிறந்தவாற்றில் - வலஹானியாலே சொல்லமாட்டிற்றிலர்; இங்கு உகப்புத் தலைமண்டையிட்டுச் சொல்லமாட்டுகிறிலர். மற்றும்இப்படி பெண்களோட்டைக் கலவிக்கு விரோயிகளான தண்ணீர்த்துரும்பறுத்தவை அநேகங்கள். [அரவில்பள்ளிப்பிரான்]-நாட்டார்உறக்கம் தமோகுணபிபூதமாய் ஸ்வார்த்தமாயிருக்கும்; இவன் உறக்கம் பிறருடைய ரக்ஷணார்த்தமாயிருக்கும். * உறங்குவான்போல் யோகுசெய்தபெருமான்இறே. உறங்கினுகில் பரரக்ஷணத்துக்கு உடலாயிருக்கும் ; உணர்ந்திருந்தானுகிலும் அப்படியே; இதேன்ன உபகாரந்தான் ! [அரவிற்பள்ளிப்பிரான்] - கீழ் ஒருபாம்போடுண்டான சேராமை சொல்லிற்று ; இங்கு ஒருபாம்போடுண்டான சேர்த்தி சொல்லுகிறது. அங்கு - ஹோமுத்தைக் காற்கடைக்கொண்டமை சொல்லிற்று; இங்கு ஹோமப்ராவண்யம்

ன்ன - இவன்தன்னை இத்யாதி. இந்தபதப்ரயோகத்துக்கு ஹார்த்தஹாவம் - அன்றைக்கல்வர்ஷத்தில் இத்யாதி. யரித்தென்னதே, ''ஏந்தியதும்'' என்றதுக்குஹாவம் - பரார்த்தம் இத்யாதி. ''கைக்குழராபரணம்''என்றத்தை விவரிக்கிருர் - பூ இத்யாதி. வருத்தத்துக்கு ப்ரஸக்தியேதென்ன - ஏழுவயஸ்ஸிலே இத்யாதி. பரார்த்தமாக யரித்ததினெல்லையை சாடுவாக அருளிச்செய்கிருர் - இப்படிஏழ் இத்யாதி. ஸகோத்ரியாய் - ஸகோத்ரனுயென்றும், ஸஜ்ஞாதிவர்க்கனென்றும். கோத்ரம் - குலமும், பர்வதமும். ''உரவு'' என்று - மிடுக்காய், அத்தை மூன்றுவகையாக அருளிச்செய்கிருர் - தறைகாண இத்யாதிவாக்யத்ரயத்தாலே. முதுநீர் - பழையநீர். அத்தால் - லகுவாயிராதே பலத்தையுடைத்தாயிருக்குமென்றபடி. அர்த்தாந்தரம் – 'விஷமென்னுதல்' என்ற. உரவுநீர் - விஷமிஶ்ரஜலமென்று த்விதீயார்த்தம். ''குரவையாய்ச்சியரோடு'' என்றத்தோடேகூட்டி ரஸோக்தியாகஹாவம் - பாம்படித்து இத்யாதி. காளியனைமேலிட்டடித்துக்காணு மென்றபடி. * பிறந்தவாற்றிற்போலே இங்குவலஹானியில்லையே; சேரச்சொல்லாதே, ''மற்றும்பல'' என்கிறதென் ? என்ன - பிறந்தவாற்றில் இத்யாதி. மற்றுமிப்படி என்றது - கோவர்த்தகோத்தாணம் காளியமர்த்தநம்போலே பின்னையுமிப்படி என்றபடி. விரோதிகளான தண்ணீர்த்துரும்பறுத்தவையென்றது - தண்ணீர்த்துரும்புபோலே விரோதிகளானவற்றைப்போக்கின வ்யாபாரங்களென்றபடி. உணர்ந்தஸமயத்திலொழிய, நித்ராஸமயத்திற்செய்கிற உபகாரமேதென்ன - நாட்டாருறக்கம் இத்யாதி வாக்யத்வயம். இவனுறக்கம் பரரக்ஷணார்த்தமாயிருக்கு மென்னுமதுக்கு ப்ரமாணம் - உறங்குவான் இத்யாதி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - உறங்கினுகில் இத்யாதிவாக்யத்ரயமும். ''நாகங்காய்ந்ததும், அரவில்பள்ளிப்பிரான்'' என்ற பதத்வயத்தையுங்கூட்டிஹாவம் - கீழ்ஒருபாம்போடு இத்யாதி வாக்யத்வயத்தாலே. ரஸோக்தியாக பூர்வவாக்யத்வயவிவரணம் - அங்கு இத்யாதி வாக்யத்வயம். போகம் - ஸர்ப்பத்தினுடலும், அநு

சொல்லுகிறது ப்ரதிகூலனுன காளியனைப் பறக்கவோட்டினான்; அநுகூலனுனவனைப் படுக்கையாகக்கொண்டான். இவன்தான் அநந்தமுகமாக அநுகூலிக்கும்; அவனும் அநந்த முகமாக அடிமைகொள்ளும். * ஆயிரம் பைந்தலைய அனந்தனிறே. [அரவிற்பள்ளிப் பிரான்] - அவதாரங்களுக்குஅடி திருப்பாற்கடலாகையாலே அத்தைச்சொல்லுதல்; அன்றியே, "நாகணைமிசைநம்பிரான்சரணேசரண்" என்றத்தை ப்ரத்யபிஜ்ஞை பண்ணுகிறுராதல். [தன்மாயவினைகளையேயலற்றி] - அவனுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்களையே வாய்விட்டு ஸ்தோத்ரம்பண்ணி. [இரவுநன்பகலும் தவிர்கிலம்] - பகவதநுபவத்துக்கு உறுப்பாகாதஅன்றிறே * சுடர்கோள் இராப்பகலா யிருப்பது; அநுபவயோக்யமான காலமாகையாலே - நல்ல இரவும் நல்லபகலுமென்கிறுர். விஶ்லேஷித்தபோதிறே நெருப்பையுருக்கி எறட்டினாற்போலே யிருப்பது. [என்னகுறைவு எனக்கே] - "நகாலஸ்தத்ர வைப்ரபு:" (நகாலஸ்தத்ரவைப்ரபு:) என்று கொண்டு பகலும் இரவும் நடையாடாததொரு தேஶவிசேஷந்தேடி அநுபவிக்கைக்குப் பட்டைப்போதிசோறு கட்டவேண்டும்படி குறைவாளனுயிருந்தேனே? ஏகாகாரமான அநுபவமிறே அங்குள்ளது; "விஜஹாரபஹூந்ருதூந்" (விஜஹாரபஹூந்ருதூந்) என்கிறபடியே, அவ்வோகாலங்கள்தோறுமுண்டான அநுபவவிஶேஷங்களை புஜிக்கப்பெற்ற எனக்குஒருகுறையுண்டோ? பரத்வாநுபவமிறே யங்குள்ளது: ஶீலகுணநுபவமுள்ளது இங்கேயிறே. (க)

பவமும், இரண்டும் பாம்பாயிருக்க, இப்படிசெய்கைக்கு ஹேதுவேதென்ன - ப்ரதிகூலனுன இத்யாதிவாக்யத்வயம். இவன்அநுகூலிக்கும் ப்ரகாரமேதென்ன இவன்தான் இத்யாதி. இவன்இப்படி யநுகூலிக்கையாலே அவனும் பஹுமுகமாகவடிமைகொள்ளுமென்கிறுர் - அவனும் இத்யாதி. அநந்தமுகமுண்டோவென்ன-ஆயிரம்பைந்தலைய இத்யாதி. விஸ்த்ருதமான ஆயிரந்தலைகளையுடைய அனந்தனென்றபடி. பெரியாழ்வார்திருமொழி, நாலாம்பத்து மூன்றுந்திருமொழி பத்தாம்பாட்டு - "ஆயிரந்தோள்பரப்பி" இத்யாதி. க்ருஷ்ணவதாரமல்லது பேசாதிருக்கிற இவர் க்ஷீராப்திநாதனைச்சொல்லுவானென்? என்ன - அவதாரங்களுக்கு இத்யாதி. ப்ரத்யபிஜ்ஞைபண்ணுகிறுராதலென்றது - †அங்கலாபத்தோடே அநுஸந்தித்த இழவுதீர, இங்கேதரித்துநின்றநுபவிக்கிறுரென்றபடி. அஹோராத்ரங்களுக்கு நன்மையேதென்ன; - பகவதநுபவத்துக்குஉறுப்பாகையால் வந்த நன்மையென்னுமத்தை அந்வயவ்யதிரேகங்களாலே தர்ஶிப்பிக்கிறுர்-பகவத்இத்யாதிவாக்யத்வயத்தாலே. "சுடர்கொள்இராப்பகல்" என்றதுக்குஅர்த்தம் - விஶ்லேஷித்து இத்யாதி. சுடரென்று - அக்நியாய், "அக்நியை எறட்டினாற்போலேயிருக்கிற இராப்பகல்" என்றுஇங்கே இப்படி யருளிச்செய்கையாலே இதுவும்ஓரர்த்தமாகக் கண்டுகொள்வது. பட்டைப்பொதிசோறு-பாக்குப்பட்டையிற்கட்டுகிறசோறு. அதுக்கடியேதென்ன - ஏகாகாரமான இத்யாதி. காலக்ருதபரிணமமில்லாமையாலே ஏகாகாரமானவென்றபடி. இரண்டாம் பாவம் - பரத்வாநுபவம் இத்யாதி. "காலம்ஸபசதே தத்ர நகாலஸ்தத்ரவைப்ரபு:" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே. தவிர்கிலம் - ஒவுகிறிலோமென்றபடி. (க)

---

† பிறந்தவாற்றிலே, நாகணைமிசைநம்பிரான் என்று திருவனந்தாழ்வானைப் புருஷகாரமாகக் கொண்டு குணநுபவம்பண்ணவேணுமென்று ப்ரார்த்தித்த அத்திருவனந்தாழ்வானுடைய அங்கத்தின் லாஞம்.

## இரண்டாம் பாட்டு.

**கேயத்தீங்குழலூதிற்றும்நிரைமேய்த்ததும் கெண்டையொண்கண்**
**வாசப்பூங்குழல்பின்னைதோள்கள்மணந்ததும் மற்றும்பல**
**மாயக்கோலப்பிரான்தன் செய்கைநினைந்துமனங்குழைந்து**
**நேயத்தோடுகழிந்தபோதுஎனக்குஎவ்வுலகம்நிகரே ?**

**ஆ.**—(கேயத்தீங்குழல்.)—சேதநாசேதநஸமஸ்தவஸ்துக்களும் நீராயுருகும்படி குழலூதிக்கொண்டு, * திவத்திலும் பசுநிரைமேய்ப்பு உகந்து நிரைமேய்த்தருளின படியையும், பசுமேய்க்க எழுந்தருளின ஆயாஸத்தால் வந்த ஶ்ரமமும் நப்பின்னைப் பிராட்டியைப் பிரிகையால்வந்த ஸந்தாபமும் தீருகைக்கு ஶிஶிரோபசாரமாக அவளுடைய நிரதிஶய ப்ரேமகர்ப்பாதி ஶீதளதிவ்யாவலோகநாம்ருத வர்ஷாபிஷிக்தனாய் ததீய புண்யகந்தவாஸிதாநந்ததிகந்தராள கபரீபரிமளாநுபவநிரதனாய்க்கொண்டு அவளுடைய நிரதிஶய ஸுகஸ்பர்ஶமான திருத்தோள்களோடே புணர்ந்ததும் உள்பட மற்றுமுள்ள ஸர்வதிவ்யசேஷ்டிதங்களையும் நினைந்து மனங்குழைந்து இப்படி ஸ்நேஹத்தோடே காலத்தைப்போக்கப்பெற்ற எனக்குத் திருநாட்டிலேதான் ஸத்ருஶருளரோ? என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், ''தொல்லருணல்வினையால் சொலக்கூடுங்கொல்'' என்று ப்ரார்த்தித்தபடியே பெறுகையால், திருநாட்டில்தான் என்னோடு ஒப்பாருண்டோ வென்கிறார். [கேயத்தீங்குழலூதிற்றும்] - ஶாநத்தோடே இனியகுழலை ஊதிற்றும். [நிரைமேய்த்ததும் கெண்டையொண்கண்வாசப்பூங்குழல் பின்னைதோள்கள் மணந்ததும்]-பசுமேய்த்துவந்த இளைப்புத்தீரும்படி அவனைத் தன்னுடைய முக்யமான அழகிய கண்களாலே அம்ருதத்தை வர்ஷித்தாற்போலே குளிரநோக்கித் திருக்குழலில் பரிமளம் அவன் திருமேனியெல்லாம் வெள்ளமிடும்படிதழுவின நப்பின்னைப்பிராட்டியுடைய தோள்களிலே கலந்ததுவும். [மாயக்கோலப்பிரான்] - நப்பின்னைப்பிராட்டியோட்டை ஸம்ஶ்லேஷத்தாலே அத்யாஶ்சர்யமான அழகையுமுடையனாய் அநுக்ரஹஶீலனாயிருக்கை. [நேயத்தோடு கழிந்தபோது] - இனிமையோடே போன காலம்.

ப.—அநந்தரம், ஆஶ்சர்யமான ஆகாரத்தையுடையனான க்ருஷ்ணனுடைய, நினைத்தார்நெஞ்சை நெகிழப்பண்ணும் சேஷ்டிதங்களை ஸஸ்நேஹாநுஸந்தாநம்பண்ணிக் காலமெல்லாம்போகாநின்றது; நித்யாநுபவம்பண்ணுகிற விலக்ஷணதேஶம் எனக்குஸத்ருஶமோ ? என்கிறார்.

(பெண்கள்நெஞ்சு வஶீக்ருதமாகைக்காக), கேயம்-(தாழ்ச்சிதோற்றின)கேயங்களைவைத்து, தீம்-இனிதாம்படி, குழல் - குழல், ஊதிற்றும் - ஊதினதும், (அக்குழல் வழியே பெண்கள்வருமோபாதி பசுக்களும்வரும்படி யக்குழலையூதி), நிரை-நிரை, மேய்த்ததும் - மேய்த்ததும், கெண்டை - கெண்டைபோலே, ஒண் - முக்யமான, குழல்-திருக்குழல்களையுடைய, பின்னைதோள்கள் - நப்பின்னைப்பிராட்டி திருத்தோளோடே, மணந்ததும் - ஸம்ஶ்லேஷித்த இதுவும், மற்றும் - பின்னையும், பல - ஹ்ருத்யமாய்க்கொண்டு பலவாயிருப்பனவான, மாயம்கோலம் - ஆஶ்சர்யரூபத்தையுடையவனான, பிரான்தன் - க்ருஷ்ணனுடைய, செய்கை - நித்யாநுஸந்தேயசேஷ்டிதங்களை, நினைந்து - நினைத்து,

மனம் - நெஞ்சு, குழைந்து - நெகிழ்ந்து, நேயத்தோடு - ஸ்நேஹத்தோடே, போது - போதுகள், கழிந்த - போகாநின்றன; எனக்கு - எனக்கு, எ-எந்த, உலகம் - லோகந் தான், நிகர் - ஒப்பு ஆவது? பரமபதந்தான்ஒப்போ? என்று கருத்து.

இ.—இரண்டாம் பாட்டில், ''தொல்லருணல் வினையால் சொலக்கூடுங்கொல்'' என்று ப்ரார்த்தித்தபடியே பெறுகையாலே, திருநாட்டிலேதான்என்னோடுஒப்பாருண்டோ? என்கிறூர். [கேயத்தீங்குழல் ஊதிற்றும்]-கேயமென்று காநம்: தீங்குழல்-இனியகுழல். ''பரதந்த்ரனைப்பசுமேய்க்கப்போகையாலே வரவுதாழ்த்தேன்இத்தனை''என்றாற்போலே சிலபாசுரங்களை நெஞ்சைவருத்தும் இசையோடேகூட்டிப்பெண்கள் நெஞ்சில்மறம்மாறும் படி குழல்ஊதிற்றும். [நிரைமேய்த்ததும்]-அக்குழலோசையே ப்ராரகமாக வளருமவை யாயிற்று பசுக்கள்; பெண்களும் அக்குழலோசைவழியேசேருமவர்கள்; ஒன்றைக்கொண்டு எல்லாக்காரியமும் செய்யவல்லவனிறே. [கெண்டை இத்யாதி] - பசுமேய்த்தவிடாய்தீரு வது நப்பின்னைப்பிராட்டிதோளோடே அணைந்தாயிற்று. நப்பின்னைப்பிராட்டி முக்யமான அழகியகண்ணாலே குளிரநோக்கி, அழகிய திருக்குழலில் பரிமளத்தாலே திருமேனியை வாஸிதமாக்கி, பசுமேய்த்துவந்த ஶ்ரமந்தீர. '' ஹதஶ்ராமம்வரிஷஸ்வஜெ '' என்கிற படியே அணைக்க, அவள்தோளோடே கலந்ததும். [மற்றும்பல] - மற்றுமுண்டான பிராட்டிமாரோடே கலந்தபடி. [மாயக்கோலப்பிரான்] - நப்பின்னைப்பிராட்டியோட் டைக் கலவியால்வந்த ஒற்றுமஞ்சளும் மாளிகைச்சாந்துமான அத்யாஶ்சர்யமான ஒப்ப னையையுடையனாய் உபகாரஶீலனானவனுடைய. [தன்செய்கை யித்யாதி] - க்ருஷ்ண சேஷ்டிதங்களை நினைத்து அத்தாலே நெஞ்சுநெகிழ்ந்து. [நேயத்தோடு கழிந்தபோது]- இனிமையோடே கழிந்த காலம். [எனக்கெவ்வுலகம் நிகரே] - ஒருதேஶவிசேஷத்திலே தான் எனக்குஎதிருண்டோ ? ஸ்மர்த்தவ்யவிஷயஸாரஸ்யத்தாலே அநுபவவேளையிற் போலே ஸ்ம்ருதிவேளையிலும் இனிமையோடே செல்லக்கடவதானால் எனக்குஎங்கே எதிர் ?

ஈடு—இரண்டாம்பாட்டு. ''தொல்லருணல்வினையால் சொலக்கூடுங்கொல்'' என்று ப்ரார்த்தித்தபடியே பெறுகையாலே திருநாட்டிலேதான் என்னோடொப்பாருண்டோ? என்கிறூர்.

[கேயத்தீங்குழலூதிற்றும்]-கேயமென்று பாட்டு: தீமென்று இனிமை; இனிமையை யுடைய பாட்டென்றபடி. தான்நினைத்த பெண்களுடையபேரைவைத்துப்புணர்த்துச்சுவைப் பாட்டாகவைத்துஊதிற்றும். [நிரைமேய்த்ததும்]-பெண்களையழைக்கைக்கும் பசுமேய்க்கை க்கும் ஒன்றே பரிகரம்; குழலையூதவே பசுக்கள்வயிறுநிறையும். சக்ரவர்த்தித்திருமகனுக்கு வில்லு கைவந்திருக்குமாபோலேயாயிற்று, க்ருஷ்ணனுச்குக் குழல் கைவந்திருக்கும்படி.

---

இரண்டாம்பாட்டு.—கேயத்தீங்குழல் இத்யாதி. ''நேயத்தோடு கழிந்தபோது எனக்கெவ் வுலகம்நிகர்'' என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை-தொல்லருள் இத்யாதி.

பாட்டுக்களை வைத்து இனிதாகக் குழலூதினதும் என்று ஸப்தார்த்தம். கேயம் - கேயம். காநமென்றபடி. ஊதுகைக்கு விஷயங்காட்டுகிறூர்—தான் நினைத்த இத்யாதி. சுவைப்பாட்டாக - ரஸவத்காநமாக. கீழ்ப்பதத்தையுங்கூட்டி பதச்சேர்த்திக்குபாவம் - பெண்களை இத்யாதி. பெண் களை அழைக்கைக்கொழிய, பசுமேய்க்கைக்கும் பரிகரமாகக்கூடுமோ? என்ன - குழலை இத்யாதி. குழ லொழிய வ்யாபாராந்தரமில்லையோ? என்ன - சக்ரவர்த்தி இத்யாதி. '' நிரைமேய்த்ததும்'' என்றத்

[கேண்டையித்யாதி]- கரவதத்தின்அன்றுபிராட்டி "ஹதூராஂவரிஷஸ்வஜெ"(பர்த்தாரம்பரிஷஸ்வஜே)என்றுஅணைத்தாற்போலேயாயிற்று,பசுமேய்த்துவந்த ஶ்ரமமெல்லாம் போம்படி நப்பின்னைப்பிராட்டி முக்யமான அழகிய கண்ணாலே குளிரநோக்கி அழகியதிருக்குழலில் பரிமளத்தாலே திருமேனியை வாஸிதமாக்கித் தன்தோளோடே யணைத்ததுவும். [கேண்டையோண்கண்] - கேண்டைபோலே அதிமுக்யமாய்அம்ருதத்தைவர்ஷித்தாற்போலே குளிரநோக்குகிற கண்கள். [வாசப்பூங்குழல்] - * வாசஞ்செய்பூங்குழலிற்காட்டிலும் போலிவையுடைத்தான தன்னேற்றமுடைய குழலையுடையவள். [பின்னை தோள்கள் மணந்ததும்]-அவளுடைய தோள்களுடனே கலந்ததுவும். மணத்தல்-கலத்தல். "தோளி" என்கிறபடியே இவளுக்குஅழகு கைவிஞ்சியிருக்குமே. [மற்றும்பல] - மற்றைப்பிராட்டிமாரோடு கலந்தபடி. சக்ரவர்த்தித்திருமகனுக்கு அத்யயநம், ஆசார்யஸேவை அஸ்தரஶஸ்த்ராப்யாஸங்களுண்டாமாபோலே,இவனுக்கு எல்லாமிவையேயிறே. [மாயக்கோலப்பிரான்]-நப்பின்னைப்பிராட்டியோடேகலந்த ஒற்றுமஞ்சளுந்தானுமான அத்யாஶ்சர்யமான ஒப்பனையுடைய வுபகாரகன். [மாயக்கோலப்பிரான்]-நப்பின்னைப்பிராட்டியோடு கலந்தாற்போலே, அல்லாதபிராட்டிமார் "கோங்கைமேல்குங்குமத்தின் குழம்பழியப் புகுந்தொருநாள், தங்குமேலென்னுவிதங்கும்" என்றிருக்குமவர்களுடைய திரு முலைத்தடத்தில் குங்குமக் குழம்பும் கோயிற்சாந்துமாய் நின்ற அழகைச் சொல்லவுமாம். [தன்செய்கைநினைந்து மனங்குழைந்து நேயத்தோடேகழிந்தபோது] - அவன்சேயல்களை நினைத்தவாறே நெஞ்சு தன்வசமின்றியழியும்படி. "நினைதோறும் - நெஞ்சிடிந்துகும்" என்றிறேயிருப்பது. [நேயத்தோடு கழிந்தபோது] - ஸ்மர்த்தவ்யவிஷயரஸ்யதையாலே ஸ்மரணந்தான் இனிதாய்க் கழிந்த

ப்ர.—[கெண்டை இத்யாதி]—ஆரண்யகாண்டே,[ந௦] "தஂத்ருஷ்ட்வாஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவஹ்ருஷ்டாவைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜெ॥ ௩௯॥"

தையுங் கூட்டிஹாவம் - கரவதத்தின் இத்யாதி. ஶப்தநிர்வாஹம் - கேண்டைபோலே இத்யாதி. கெண்டைபோலே அழகிய கண்களையும், பரிமளத்தையுடைத்தாய் அழகிதான குழலையுமுடைய நப்பின்னைப் பிராட்டியுடைய தோள்களுடனே ஸம்ஶ்லேஷித்ததுமென்று ஶப்தார்த்தம். வாசஞ்செய்கிற குழலென்னுதே, "வாசந்தாணைகுழல்" என்கையாலே - பிராட்டி திருக்குழலிற்காட்டிலும் நப்பின்னைப்பிராட்டி திருக்குழலுக்குஏற்ற முண்டென்கிறார் - வாசஞ்சேய் இத்யாதி. வாசம் - பரிமளம். பொலிவு - ஸம்ருத்தி. பூவென்று - அழகு. அவயவாந்தரங்களிருக்க, "தோள்கள்" என்று விஶேஷித்ததுக்குஹாவம் - தோளி இத்யாதி. கைவிஞ்சியிருக்கும் - தோளிலே விஞ்சியிருக்குமென்றும், அதிகமாயிருக்குமென்றும் அர்த்தத்வயம். இவனுக்கு வேறு அத்யயநாதி வ்யாபாரமில்லையோ? இதுவோ க்ருஷி? என்ன - சக்ரவர்த்தி இத்யாதி. "பின்னைதோள்கள் மணந்ததும்" என்றத்தோடேகூட்டி, "மாயக்கோலம்" என்றதுக்குஹாவம் - நப்பின்னை இத்யாதி. "மற்றும்பல" என்றத்தோடே கூட்டி ஹாவாந்தரம் - நப்பின்னைப்பிராட்டியோடு கலந்தாற்போலே இத்யாதி. "நேயம்" என்று - ஸ்நேஹமாய், இனிமையை லக்ஷிக்கிறது. அப்படி நெஞ்சு ஶிதிலமாமோ? என்ன - நினைதோறும் இத்யாதி. அநுபவத்தாலுண்டாகக்கடவ ப்ரீதி, ஸ்மரணத்தாலே கூடுமோ? என்ன - ஸ்மர்த்தவ்யவிஷய இத்யாதி. நேயத்தோடு கழிந்தபோது-ஸ்நேஹத்தோடே போதுகள் போகாநின்றனவென்று ஶப்தார்த்தம். நித்யாநுஹவம்பண்ணுகிற நித்யஸூரிகளைப்பற்றத் தமக்குஅதிசயம்ஏது? என்ன-அநுபவவேளை இத்யாதி. எவ்வுலகம் நிகரே - எந்தலோகந்தானொப்பாவது? பரமபதந்தானொப்போவென்று நிஜஶப்தார்த்தம்; ஆனாலும், "உலகம்" என்று லோகத்திலுள்ளாரைச் சொல்லி, எனக்கு எந்த லோகத்திலுள்ளார் தான்

போது. நேயம் - நேசம். [எனக்கேவ்வுலகம்நிகரே]- ஒருதேஶவிஶேஷத்தில்தான் எனக்கு எதிருண்டோ? அநுஸவவேளைபோலே ஸ்ம்ருதிவேளையிலும் இனிமையோடே செல்லக்கடவதானல் எனக்குளங்கே எதிர்? ஆகாஶவாயர்எனக்குஎதிரோ!வாய்-இடம்.பரமாகாஶமென்கிற பரமபதமாகிற இடத்திலுள்ளார்தான் எனக்குஒப்பாரோ!! உலகமென்பது உயர்ந்தோராகையாலே, ஸூரிகளென்றபடி. (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

நிகரில்மல்லரைச்சேற்றதும் நிரைமேய்த்தும், நீள்நெடுங்கைச்
சிகரமாகளிறட்டதும் இவைபோல்வனவும்பிறவும்
புகர்கோள்சோதிப்பிரான்தன் செய்கைநினைந்துபுலம்பிஎன்றும்
நுகரவைகல்வைகப்பெற்றேன் எனக்குஎன்னினிநோவதுவே?

ஆ — (நிகரில்.)-பசுமேய்த்தருளி விளையாடினாற்போலே அநாயாஸேந செய்தருளின அதிபலபராக்ரம மல்ல கிரிவராஸத்ருஶ நிரவயுகவல குவலயாபீட ப்ரப்ருதி ப்ராதிகூலநிரஸந ஸ்வரூப ஸர்வதிவ்ய சேஷ்டிதங்களையும் அநுசந்தித்து, அவ்வநுசந்தாந ப்ரீதியாலே அப்ரக்ருதிங்கதனைக்கொண்டுஅலற்றி அநுஸவிக்கப்பெற்ற எனக்குஇனி ஒருநோவுமில்லை யென்கிறார்.

ஒ.—மூன்றாம் பாட்டில், க்ருஷ்ணசேஷ்டிதங்களை அநுபவித்துக்கொண்டு எனக்குக் காலமெல்லாம் போகப்பெற்றேன்; "இன்னது பெற்றிலேன்" என்று நோவ வேண்டுவதில்லை யென்கிறார். [நிகரில்மல்லரைச்செற்றதும் நிரைமேய்த்ததும்] - தங்கள்மிடுக்குக்கு லோகத்தில் ஒப்பின்றிக்கே யிருக்கிற மல்லரைச்செற்றது பசுமேய்த்தாற்போலே வருத்தமில்லாத லீலாமாத்ரமே. [புகர்கொள்சோதி] - ப்ரதிகூலநிரஸநத்தாலே ஒளிபெற்ற தேஜஸ்ஸு. [நுகர வைகல் வைகப்பெற்றேன்]-அநுபவிக்கைக்கு ஈடாகக்காலம்நெடுகப்பெற்றே னென்றுமாம்.

ப—அநந்தரம், நிரதிஶயஔஜ்ஜ்வல்யவிஶிஷ்டனை க்ருஷ்ணனுடைய நித்யாநுஸாவ்யசேஷ்டிதங்களை அநுஸவிக்கைக்கு உறுப்பாகக் காலம் நெடுகப்பெற்றேன்; எனக்குஎதுக்கு நோவுபடவேணு மென்கிறார்.

(மிடுக்குக்கு), நிகர் - ஒப்பு, இல் - இல்லாத, மல்லரை - மல்லரை, செற்றதும் - கொன்றதும், (விரோதிகள் தன்னை "எளியன்" என்று நினைத்திருக்கும்படி),

ஒப்பு; பரமபதத்திலுள்ளவர்கள் தான் ஒப்பர்களோ? என்றுஅர்த்தங்கண்டுகொள்வது. "எவ்வுலகம்" என்றால் - தேசத்தைக் காட்டுமதொழிய, ஸூரிகளைக் காட்டாதேயென்ன;—"மஞ்சா꞉க்ரோஶந்தி" என்கிற ந்யாயத்தாலே காட்டுமென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - ஆகாஶ இத்யாதி. ஆகாசத்தைப் பார்த்து வாயைத் திறந்துகொண்டிருக்கிறவர்கள்; தரித்ரரென்றபடி. "ஆகாசவாயர்" என்றதுக்கு வாஸ்தவமான அர்த்தத்தையருளிச் செய்கிறார்-வாய் இத்யாதி வாக்யத்வயத்தாலே. இன்னமொருவழியாலே, உலகம் என்றது ஸூரிகளைக் காட்டுமென்கிறார் - உலகமென்பது இத்யாதி. உயர்ந்தோர் – உத்க்ருஷ்டர். ஆக, உலக மென்று - லோகத்திலுள்ளாரென்னுதல், பெரியோரென்னுதலென்றபடி. (உ)

நிரை - பசுவின்பின்னே, மேய்த்ததும் - கோல்கொண்டுபோய் மேய்த்ததுவும், (அந்த கோபாலதசையிலே); நீள் - உத்துங்கமாயிருப்பதாய், நெடு - நெடிய, கை - கையையுமுடைத்தாய், சிகரம் - பர்வதசிகரம்போலே ப்ரபலமாய், மா - (ஆகரத்திற்பிறப்பாலே) ஶ்லாக்யமான, களிறு - யானையை, அட்டதும் - அழித்ததுவும், இவைபோல்வனவும்- இவைபோலே யநுபாவ்யமுமாய், பிறவும் - மற்றும் பலவாயிருப்பனவுமாய், புகர்கொள் சோதி - அத்யுஜ்ஜ்வலதேஜோரூபனை, பிரான்தன் - க்ருஷ்ணனுடையதான, செய்கை- சேஷ்டிதங்களை, நினைந்து - அநுஸந்தித்து, புலம்பி-வாய்விட்டலற்றி,என்றும் - நாடோறும், நுகர - புஜிக்கும்படியாக, வைகல் - காலம், வைக - மிகவும் நெடுக, பெற்றேன்-; இனி - இனி, எனக்கு - எனக்கு, என் - எதுக்கு, நோவது - நோவவேணும்? அநுபவ காலமில்லாமல்நோகிறேனோ? அநுபவம் ஸரஸமல்லாமல்நோகிறேனோ? என்று கருத்து.

இ.—மூன்றும்பாட்டில், க்ருஷ்ணசேஷ்டிதங்களை அநுபவித்துக்கொண்டு காலம் போக்கப்பெற்ற எனக்கு ஒருவிஶ்லேஷமாகிறநோவு இல்லை என்கிறார். [நிகரில் மல்லரைச்செற்றதும்] - மிடுக்குக்கு ஸத்ருஶமின்றிக்கே இருக்கிற மல்லரைச்செற்றதும். க்ஷத்ரிய ஜந்மத்துக்கு அநுரூபமாக விரோதிநிரஸநம் பண்ணினதும். [நிரைமேய்த்ததும்] - கோபஜந்மத்துக்கு அநுரூபமாகப் பசுமேய்த்ததும். பசுமேய்த்த அநாயாஸத்தோபாதியாயிற்று, மல்லரைலீலையாக நிரஸித்ததும். [நீள்நெடுங்கை]- வீப்ஸையாலே அறநெடிய கையென்கை: கடக்கப்போனாலும் எட்டிப்பிடிக்க வல்ல கை. அவன் அதுக்குத் தப்பின பின்பும் இன்று இவர் வயிறுபிடிக்கிறார். [சிகரமாகளிறட்டதும்] - பர்வதஶிகரம்போலே உரத்துப்பெருத்திருக்கிற குவலயாபீடத்தை நிரஸித்ததும். [இவைபோல்வனவும் பிறவும்]- இவைபோலே மற்றுமுண்டான கேசிநிரஸநாதிகளும். [புகர்கொள்சோதி] -விரோதி நிரஸநத்தாலே ஒளிபெற்ற தேஜஸ்ஸு. [பிரான்] - உபகாரஶீலன். [தன்செய்கையித்யாதி] - தன் சேஷ்டிதங்களை அநுஸந்தித்து நாள்தோறும் அடைவுகெடக்கூப்பிட்டு. [நுகரவைகல்வைகப்பெற்றேன்] - அநுபவத்தோடே காலம் கழியப்பெற்றேன் என்னுதல்; அநுபவிக்கலாம்படி காலம் நெடுகப்பெற்றேன் என்னுதல். [எனக்கென் இனி நோவதுவே]- ப்ரீதிப்ரேரிதனாய் அநுபவிக்கிற எனக்கு இப்படி காலம் நித்யமானபின்பு, விஶ்லேஷமாகிற நோவு உண்டோ?

ஈடு—மூன்றும்பாட்டு. க்ருஷ்ணசேஷ்டிதங்களையே அநுபவித்துக்கொண்டு காலம் போக்கப்பெற்ற எனக்கு "இன்னது பெற்றிலேன்" என்று நோவவேண்டுவதில்லையென்கிறார்.

[நிகரில் மல்லரைச் செற்றதும்]-மிடுக்குக்கு ஸத்ருஶமின்றிக்கே யிருக்கும் மல்லரைச்செற்றதும்.† ஶ்ரவ்ய ஸேவையாலே ம்ருதுஸ்வபாவராயிருப்பார்இரண்டுபிள்ளைகளிறே: அலக்ஷ்யலக்ஷணங்களாலும் ஶஸ்த்ராஸ்த்ர ஶிக்ஷைகளாலும் மலைபோலே திண்ணிதான தோளையுடைய மல்லரைப் பொடிபடுத்தினார்கள்; புழுக்குறித்தது எழுத்தானாற்போலே இங்

மூன்றும்பாட்டு—நிகரில் இத்யாதி. "நுகரவைகல்வைகப்பெற்றேன்" இத்யாதியைக் கடாக்ஷித்து அவதாரிகை - க்ருஷ்ணசேஷ்டிதங்களை இத்யாதி.

"நிகரில்" என்கையாலே - இவர்களை ஜயித்தது ஆஶ்சர்யமென்கிறார்- ஶ்ரவ்ய இத்யாதி. மூக்ப்ராணல் அவர்கள் பொடிபடும்படி யெங்ஙனே? என்ன - புழுக்குறித்தது இத்யாதி. வாய்த்துக்

† கோஸேவையாலேஎன்று பாடமிருக்கலாம்.

னுனே வாய்த்துக்கொண்டு நிற்கக்கண்டதித்தனை; இல்லையாகில் சில முக்யருடைய வ்யாபார மாகமாட்டாதிறே. “ந ஸமம் யுத்தமித்யாஹு:” (ந ஸமம் யுத்தமித்யாஹு:) என்று கொண்டு ஸர்வரும் அஞ்சும்படியிறே அற்றைச்செயல். “ஏவிற்றுச்செய்வானேன்றெதிர்ந்து வந்த மல்லரை”-ஸ்வதந்த்ரராய்வந்து மேல்விழிலிறே “முடியாது” என்றுகைவாங்கலாவது? கம்ஸனுக்குப் பரதந்த்ரராய் வருகையாலே இங்குத் தோற்றார்களாகில் அவன் அங்கே தோள்களைக் கழிக்குமாயிற்று; ஆனபின்பு, “கோழைகளாய்க் கோலையுண்பதில் புகழோடே முடிய வமையும்” என்று மேலிட்டார்கள். “சாவத்தகர்த்தசாந்தணிதோள்சதுரன்”-கூனி சாத்தி விட்ட சாந்து குறியழியாமேகாணும் அவர்களோடுவ்யாபரித்தது. மல்லரோடேகூட ஸர்வாவயவங்களும் பொருந்தி வ்யாபரியாநிற்கச்செய்தே, சாத்தின சாந்து குறியழிந்ததில்லைகாணும். கூனி சாத்திவிட்ட அநந்தரத்திலே பெண்கள் கண்ணாலே இலச்சினையிட்டு விடுகையினாலே இவனாலழிக்கவும் போகாதிறே. இவர்கள் கண்ணாலே இலச்சினையிடுகையாவது- அவன்தோளிலே சேலும்கயலுமிடுகையிறே. இவன் மல்லரோடே அழித்தானாகிலும், “மற்றெங்கேனும் அழித்தான்” என்றிறே அவர்கள் இருப்பது. இது அழித்துப்போனானாகில், பின்பு பெண்கள் கோஷ்டிக்குஆளாகானே. ஏன்று எதிர்ந்துவருகையாவது - பொரக்கடவோமென்று நெஞ்சிலே துணிந்துவருகை. [நிரைமேய்த்ததும்] - முதற்பிறவிக்கூடாகச் செய்த செயலும், இரண்டாம் பிறவிக்கூடாகச்செய்த செயலும்: க்ஷத்ரியஜந்மத்துக்கூடாம்படி மல்லரோடே யுத்தம்பண்ணினான்; கோபஜந்மத்துக்கு ஸத்ருஶமாம்படி பசுக்களை மேய்த்தான். பசுமேய்த்தபோதை ஆயாஸமாகாதே, மல்லரோடு பொருதபோதுமுள்ளது. [நீள்நெடுங்கைச் சிகரமாகளிறட்டதும்] - மல்லர்க்குத் தப்பிலும் தப்பவொண்ணாதுகிடீர் இதுக்கு. [நீள்நெடுங்கை]-தூரப்போய்த்தப்பவொண்ணாதபடி கையாலே வளைத்துக்கொள்ளவற்றாயிருக்கை. ‘நெடுங்கை’ என்னாநிற்கச்செய்தே, ‘நீள்நெடுங்கை’ என்கிறதிறே-இதின்

---

*கொண்டு - வித்தித்துக்கொண்டு. வாய்த்ததென்று சொல்லவேணுமோ? இவர்கள் நிரஸித்தார்களென்ன வொண்ணாதோ? என்ன - இல்லையாகில் இத்யாதி. ஆகையாலே ‘ந ஸமம் யுத்தம்’ என்று கூட்டுவது. பரதந்த்ரராய் வருகையாலும் ஏதந்நிரஸநம் அவடிதமென்றுவிவக்ஷித்து, அதுக்குப்ரமாணம்-ஏவிற்று இத்யாதி. ஏவினத்தைச் செய்கைக்காக வுத்யோகித்தெதிர்ந்து வந்த மல்லரைக் குற்றுயிராக்கிவிடாதே முடியும்படியாகத் தகர்த்த. சாந்தால் அணியப்பட்ட தோளையுடைய சாதுர்யமுடையவனுடைய லீலை இத்யர்த்த: பெரியாழ்வார் திருமொழி, நாலாம்பத்து, இரண்டாந்திருமொழி ஆறும்பாட்டு. “ஏவிற்றுச் செய்வான்” என்றதுக்கு அர்த்தம்-ஸ்வதந்த்ரராய் இத்யாதி. “சாவத்தகர்த்த” என்றவநந்தரம், “சாந்தணி தோள்சதுரன்” என்கையாலே - சாந்தழியாமல் பொருதபடியாயிற்று. இவனுடைய ஸாமர்த்த்யமென்று வ்யாக்யாதாவின் ஈடுபாடு - கூனி இத்யாதி. மேலெழுந்தவாரியாக இவர்களோடே யுத்தம் பண்ணுகையாலே சாந்தழியாதிருந்ததென்றாலோ? என்ன - மல்லரோடே இத்யாதி. குறியழியாமைக்கு ஹேதுவேதென்ன கூனிசாத்திவிட்டவநந்தரத்திலே இத்யாதி. இலச்சினை - அடையாளம். இலச்சினையிடுவதாவது எது? என்ன - இவர்கள்கண்ணாலே இத்யாதி. சேலும்கயலுமிடுகையாவது - தத்துல்யங்களான கண்களாலே பார்க்கை. மல்லயுத்தத்திலழிந்தால் இவர்கள்செய்வதேதென்ன - இவன்மல்லரோடே இத்யாதி. இவர்களிப்படியிருந்தால் இவனுக்கு ஹாநியேதென்ன - இதுஅழிந்து இத்யாதி. விவரணம் - க்ஷத்ரிய இத்யாதி. பதச்சேர்த்திக்கு தாத்பர்யாந்தரம் - பசுமேய்த்த இத்யாதி. “மிகவும் பெரிய கையையுடைய ஆனை” என்றதுக்கு ஹார்த்தபாவம்-மல்லர்க்கு இத்யாதி. அதுக்குஹேது - தூரப்போய் இத்யாதி. “வளைத்துக்கொள்ளவற்று” என்னுமதுக்கு ப்ரஸக்தமேது? என்ன-நெடுங்கையென்னா நிற்க இத்யாதி. “சிகரமாகளிறு” என்றதுக்கு ஹார்த்தபாவம் - ஒருகை இத்யாதி “பர்வ*

பெருமை யிருக்கிறபடி! [சிகரமாகளிறட்டதும்]-ஒருகை வேணுமோ? இதுதன்னைக் காண வமையாதோ? "ஆனைமாமலை" என்னக் கடவதிறே. பர்வதசிகரம்போலே யாயிற்றுப் பெருத்திருக்கிறபடி. [அட்டதும்]-முடித்ததும். [இவைபோல்வனவும்பிறவும்]-இவை தொடக்கமான கேசிநிரஸநாதிகளும். [புகர்கொள்சோதி]-குவலயாபீடநிரஸநத்துக்கு அநந்தரம்வடிவிற்பிறந்த ஒளிபெற்ற தேஜஸ்ஸு. [பிரான்] - உபகாரசீலன். "ஸக்யஃ பஶ்யத" (ஸக்யஃ பஶ்யத) என்னும்படி யிருக்குமிறே. "ஸ்வேதாம்புகணிகாசிதம்" (ஸ்வேதாம்புகணிகாசிதம்) - ஆனையோடே போருதாலும் இங்ஙனேயோ வேர்ப்பது? முலையாகிற மலையோடு போருதத்தோடு ஆனையாகிறமலையோடு போருதத்தோடு வாசியில்லைகாணும் இவனுக்கு. [தன்செய்கை நினைந்து புலம்பி]-உபகாரசீலனானவனுடைய சேஷ்டிதங்களை அநுஸந்தித்து, அதுஉள்ளடங்காமை புலம்பி. [என்றும் நுகரவைகல்வைகப்பெற்றேன்] - நாடோறும் புஜித்துக்கொண்டு, வைகலானது வைகப்பெற்றேன்: காலமானது கழியப்பெற்றேன். வைகலென்பது - காலம். வைகுகையாவது - கழிகை. அன்றிக்கே, அநுபவிக்கைக்குப்போரும்படி காலமானது நெடுகப்பெற்றே னென்றுமாம். அப்போது, வைகுகையாவது - நெடுகுகை. [எனக்கேன் இனி நோவதுவே]-"காலம் நெடுகுவது குறுகுவதாகாத இடந்தேடி யநுபவிக்கப்பெற்றிலேன்" என்கிற அத்ருப்தியுண்டோ எனக்கென்கிறார். [எனக்கேன் இனி நோவதுவே] - அவனுக்கு வரும் நோவிறே, இவர்க்கு நோவாவது ; அது கழியப்பெற்றதிறே. இவர்நோவு போக்கும் அவனுக்கு வரும் நோவிறே. இவர்க்கு நோவாவது: அதுபோகவே இவர்க்கு நோவு போயிற்றதாமிறே. உயிருக்கு வரும் நோவு உடம்புக்கு நோவாமிறே. (௲)

*தசிகரம்போலே பெருத்திருக்கும்" என்றதுக்கு ப்ரமாணம் - ஆனை இத்யாதி. ஒளிபெற்ற தேஜஸ்ஸென்றது - மிக்கதேஜஸ்ஸென்றபடி. உபகாரசீலனென்றது - புகர்கொள்சோதியை உபகரித்தவனென்றபடி. ஆர்க்குஉபகரித்தான்? என்ன; - மதுரையிற் பெண்களுக்கு உபகரித்தானென்று விவக்ஷித்து, அவர்கள் அதிலே ஈடுபட்டு இருந்தமையைச் சொன்ன ப்ரமாணத்தை அருளிச்செய்கிறார் - ஸக்ய இத்யாதி. "ஸக்யஃ பஶ்யத க்ருஷ்ணஸ்ய முகமத்யருணேக்ஷணம் । கஜயுத்த க்ருதாயாஸ ஸ்வேதாம்புகணிகாசிதம்" இதிபஞ்சமேம்ஸே. [20-54] "பஶ்யத" என்கையாலே - உபகாரந் தோற்றுகிறது. 'இங்ஙனேயோவேர்ப்பது?' என்றது - தங்கள் கலவியாலே வேர்க்கக் கண்டிருக்கையாலே, தங்கள்முலையிலே ஸம்ஶ்லேஷித்தாற்போலேயோ? என்றபடி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - முலையாகிற இத்யாதி. புலம்பி - அக்ரமமாகக்கூப்பிட்டு. "நிகரில்" இத்யாதியைக் கடாக்ஷித்து ஹ்ருதயம் - அவனுக்குவரும் இத்யாதி. அவனுடைய நோவு இவரதாமோ? என்ன; - த்வேதா பரிஹரிக்கிறார் - இவர்நோவு இத்யாதி வாக்யத்ரயத்தாலே.* (௲)

---

† திருவாய். 8, 4, 1.

## நான்காம் பாட்டு.

**நோவ ஆய்ச்சிஉரலோடார்க்க இரங்கிற்றும், வஞ்சப்பெண்ணைச்**
**சாவப்பாலுண்டதும் ஊர்சகடமிறச்சாடியதும்**
**தேவக்கோலப்பிரான்தன் செய்கைநினைந்து மனங்குழைந்து**
**மேவக்காலங்கள்கூடினேன்எனக்குஎன்னினிவேண்டுவதே?**

**ஆ.**—(நோவ ஆய்ச்சி.) - உரலோடே கட்டிவைக்கலாம்படி ஆஶ்ரிதர்க்குப் பரமசுலப னான படியும், தத்விரோதி பூதநா ஶகடநிரஸநம் பண்ணினபடியும், தொடக்க மாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களை ஸ்நேஹத்தோடே அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி வேண்டுவதுஉண்டோ ? என்கிறார்.

**ஒ.**—நாலாம்பாட்டில், யசோதைப்பிராட்டிக்கு அத்யந்தம்பவ்யனாய் அவ் விருப்பிலே ப்ரதிகூலரை மாய்த்த க்ருஷ்ணனை, அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி அவாப்தவ்யம் இல்லை என்கிறார். [தேவக்கோலப்பிரான்] - ஊருகிற சகடத்தைத் தப் பாதபடி நிரஸித்திருந்த அப்ராக்ருதமான அழகை உடையான்.

**ப.**—அநந்தரம், அப்ராக்ருதவிக்ரஹனான க்ருஷ்ணனுடைய பாலசேஷ்டித ங்களை அநுபவிக்கைக்குக் காலங்கூடப்பெற்றேன்; எனக்குஇனி அபேக்ஷிதமுண்டோ? என்கிறார்.

நோவ - நோம்படியாக, ஆய்ச்சி - ஆய்ச்சியானவள், உரலோடு - உரலோடு, ஆர்க்க - இறுகக்கட்ட, இரங்கிற்றும் - அதுக்கு ஈடுபட்டிருந்ததுவும், வஞ்சம் - (தாய் வடிவுகொண்டு) வஞ்சகையாய்வந்த, பெண்ணை - பேய்ச்சியை, சாவ - சாம்படியாக, பால் - முலைப்பால், உண்டதும் - அமுதுசெய்ததுவும், ஊர் - அசுராவேசத்தாலே ஊர்ந்துவரு கிற, சகடம் - சகடமானது, இற - முறியும்படி, சாடியதும் - திருவடிகளாலே பாய்ந் ததுவுமாயுள்ள, தேவக்கோலம் - அப்ராக்ருத விக்ரஹயுக்தனான, பிரான்தன் - க்ருஷ்ண னுடைய, செய்கை - சேஷ்டிதங்களை, நினைந்து - அநுசந்தித்து, மனம் - நெஞ்சு, குழைந்து - நெகிழ்ந்து, மேவ - பொருந்தும்படியாக, காலங்கள் - காலங்கள், கூடினேன் - சித்திக்கப்பெற்றேன்; எனக்கு - எனக்கு, என் - எது, இனி - இனி, வேண்டுவது - அபே க்ஷிதமாக உண்டு ? நித்யாநுபவமே புருஷார்த்தம் என்று கருத்து.

**இ.**—நாலாம்பாட்டில், ஆஶ்ரிதபவ்யனான இருப்பிலே ப்ரதிகூலரைமாய்த்த க்ருஷ்ணனை அநுபவிக்கப்பெற்ற எனக்கு அவாப்தவ்யம் உண்டோ என்கிறார். [நோவ] - தாயார்க்கு ப்ரேமம்உள்ள அளவும் சீற்றம் உண்டிறே. இவர் தம்திருமேனியிலே கட் டினாற்போலே நோவுபடுகிறார். [ஆய்ச்சியுரலோடார்க்க இரங்கிற்றும்] - தாயார்கட்டின கட்டுக்கு ப்ரதிக்ரியை இல்லாமையாலே நோவுபட்டு ஹீதனாய் இருந்ததும். ஆஶ்ரித கர்மபந்தமும் ப்ரதிகூலர் பந்தித்தபந்தமுமிறே அறுக்கலாவது. [வஞ்சமித்யாதி] - தாய் வடிவு கொண்டுவந்த பூதனை முடியும்படி நச்சுப்பாலுண்டதும், ஶர்பணகையைப்போலே பின்பிருந்து பூசல்விளைக்கவையாதே முடிக்கப்பெற்றபடி. [ஊர்சகடமித்யாதி] - பரி ஹாரமாகவைத்த சகடம் அஸுராவேசத்தாலே வந்து நலியப்புக, திருவடிகளாலே

துகளாம்படி சாடியபதும்; முலைவரவுதாழ்த்துத் திருவடிகளை நிமிர்த்தமாத்ரத்திலே சகடாஸுரன் அழிந்தபடியாலே - சாடியது என்கிறார். [தேவக்கோலப்பிரான்] - விரோதியை அழிக்கையால்வந்த அப்ராக்ருதமான அழகை எனக்கு உபகரித்தவன். அவன் சேஷ்டிதங்களை அநுபவித்து நெஞ்சுநெகிழ்ந்து இச்சேஷ்டிதங்களோடே பொருந்தும்படி காலங்களைக்கூடப்பெற்றேன்; இனி, எனக்கு வேண்டுவதுஎன்? இவ்வநுபவத்தோடே காலம் செல்லப்பெற்ற எனக்கு அவாப்தவ்யம் உண்டோ ?

ஈடு:—நான்காம்பாட்டு. ஆஶ்ரிதபவ்யனென இருப்பிலே ப்ரதிகூலரை மாய்த்த க்ருஷ்ணனையநுபவிக்கப் பெற்ற எனக்கு அவாப்தவ்யமுண்டோ? என்கிறார்.

[நோவஆய்ச்சி உரலோடார்க்க இரங்கிற்று] - சீயர்இப்பாட்டை இயலருளிச்செய்யப் புக்கால் "நோவ" என்றருளிச்செய்யும் அழகுகாணும். நோவவென்கிறார்காணும் ஆழ்வார், தம்திருமேனியிலே கயிறுஉறுத்தினாற்போலே. [ஆய்ச்சிஉரலோடார்க்கஇரங்கிற்றும்] - ஒருத்வேஷமுண்டாய்க் கட்டுகிறாளல்லளிறே, ஸ்நேஹகார்யமான கோபமாகையாலே ஸ்நேஹமுள்ளளவும் இடைநிற்குமிறே கோபமும். * தாயெடுத்த சிறுகோலுக்குளைந்தோடியிறே,'விளியாவார்க்கவாப்புண்டு விம்மியழுதான்':வாய்விட்டழமாட்டாததிறே இவரை வருத்துகிறது. †(விளியாவார்க்க-கோபித்துக்கட்ட.)[ஆய்ச்சியுரலோடார்க்க] -"தறியார்ந்தகருங்களிறேபோலநின்று தடங்கண்கள்பனிமல்குந் தன்மையானை" - ஒரு மத்தகஜத்தைத் தறியோடே சேர்த்தாற்போலேகாணும் இவன் கட்டுண்டு நின்ற நிலை! ஓர்அபலை கட்டின கட்டுஅவிழ்த்துக்கொண்டுபோகமாட்டாதே, நின்றழுகையே ஸ்வபாவமா யிருந்தபடி. "யதிஶக்நோஷி" (யதிஶக்நோஷி) என்றாளிறே.[உரலோடார்க்கஇரங்கிற்றும்]-உர

---

நாலாம்பாட்டு.—நாவ இத்யாதி. "நோவவாய்ச்சி" இத்யாதியையும், "வஞ்சப்பெண்ணை" இத்யாதிகளையும், "எனக்கென்னினிவேண்டுவது" என்றத்தையும் கடாக்ஷித்தவதாரிகை - ஆஶ்ரித இத்யாதி.

ப்ராஸங்கிகம் - சீயர் இத்யாதி. நோவஎன்று அருளிச்செய்யும் அழகுகாணும் என்றது - நோவவென்று சீயர் ஈடுபட்டு அநுஸந்திக்கும்போது நன்றாயிருக்குமென்று நம்பிள்ளை அருளிச்செய்வரென்றபடி. சீயர் ஈடுபட்டதுக்கு பாவம் - நோவவென்கிறர் இத்யாதி. ப்ரியபரையானவள் நோவக் கட்டுவானேன்? என்ன - ஒரு த்வேஷம் இத்யாதி. இடைநிற்குமிறே - ஶத்ருஶமாயிருக்குமிறே. எவ்வளவு ஸ்நேஹமுண்டு, கோபமும் அதுக்குஒத்திருக்கு மென்றபடி. இத்தால் - கோபாதிஶயத்தாலே நோவக்கட்டினாள் என்னுதல். தாயார் மெள்ளக் கட்டினாலும் பொறுக்க வொண்ணாமையாலே நோவாயிருக்குமென்னுதல்; இந்தவர்த்தத்துக்கு ஸூசகம்-தாயெடுத்த என்கிற ப்ரமாணம். ப்ரியபரையான தாய் பரிபவித்தால் பொறுக்கமாட்டாமல் கிந்நனும் ப்ரகாரத்துக்குத் திருமொழியில் ப்ரமாணத்ரயம் - தாயெடுத்த, விளியாவார்க்க, தறியார்ந்த இத்யாதி. உளைந்தோடி - பயப்பட்டோடி. விளியாவார்க்கவாப்புண்டு - அழைத்துக்கட்டக்கட்டுண்டு, விம்மியழுதான் - விக்கியழுதான் இத்யர்த்தః. "விம்மி" என்றதுக்கு பாவம் - வாய்விட்டு இத்யாதி. விம்மியழுதானோ? என்ன - தறியார்ந்த இத்யாதி. தறியோடே சேர்ந்த கறுத்த ஆனைபோலே நின்று தடங்கண்களினின்றும் நீர் பெருகுகையை ஸ்வபாவமாகவுடையவன் இத்யர்த்தః. "தறியார்ந்த"இத்யாதிக்குஅர்த்தம்-ஒருமத்தகஜத்தைஇத்யாதி. "தன்மையானை" என்றதுக்குஅர்த்தம்-ஓரபலைஇத்யாதி. தாயெடுத்தவித்யாதி:எட்டாம்பத்து மூன்றாந் திருமொழி அஞ்சாம்பாட்டு, "வாயெடுத்த" இத்யாதி. விளியாவார்க்கவித்யாதி:ஆறாம்பத்து ஏழாந் திருமொழி நாலாம்பாட்டு, "ஒளியாவெண்ணெய்" இத்யாதி. தறியார்ந்தவித்யாதி: இரண்டாம்பத்து பத்தாந்திருமொழி ஆறாம்பாட்டு, "உறியார்ந்த" இத்யாதி. அவிழ்த்துக்கொண்டு போகமாட்டாததுக்கு ப்ரமாணம் - யதிஶக்நோஷி இத்யாதி. "யதிஶக்நோஷிகச்சத்வமதிசஞ்சலசேஷ்டித" இத்யாதி

லோடேகட்ட இரங்கிற்றும்: துர்யோதநாதிகளுடைய பந்தமாகிலிறே அறுக்க விரகு சிந்திப்பது. [இரங்கிற்றும்] - மாநஸபீடையை அநுசந்தித்தபடி. இரக்கம் - ஈடுபோடு. [வஞ்சப்பெண்ணைச் சாவப்பாலுண்டதும்] - கேட்டேன்! பேய்த்தாய்பக்கலிலும் அங்ஙனிருந்தானாகில் என்படக்கடவதுதான்? [சாவப்பாலுண்டதும்] - சூர்ப்பநகியைப்போலே அங்கஹாநியைப் பண்ணிவிட்டுப் பூசலிலிளப்பியாதே முடித்துவிடப் பெற்றபடி. [பாலுண்டதும்] - யசோதைப்பிராட்டிமுலை யுண்ணும்போதும் தான்உயிர்பெற உண்ணுமாபோலேகாணும் இவள்முலை யுண்கிறபோதும் தான்உயிர்பெற முலையுண்டபடி. * பெருமுலையூடுயிரைவற்ற வாங்கியுண்டவாயானிறே. இவன் பிள்ளையாயே முலையுண்டானத்தனை; வஸ்துஸ்வ ஹாவத்தால் ப்ரதிகூலர் முடிந்ததித்தனையிறே. [ஊர்சகடமிறச்சாடியதும்] - ப்ரேரகர் வேண்டாதபடி தானே வந்து நலிந்தபடி. ஒருமநுஷ்யவடிவுகொண்டு வந்து நலியிலிறே பரிஹரிக்கலாவது. இத்தால் சொல்லிற்றாயிற்று - ஸஹாயாந்தர நிரபேக்ஷமாக பாதகத்வத்தில் உறைப்புச் சொன்னபடி. [இறச்சாடியதும்]- "தளர்ந்தும் முறிந்தும் சகடவசுரர் உடல் வேறுப் பிளந்து" என்று சொல்லக்கடவதிறே. [சாடியதும்] - அநாயாஸேந திருவடிகளை நிமிர்க்கச்செய்தேயும், ஒருமுக்தனுடைய வ்யாபாரமாகையாலே போரப் பொலியச் சொல்லுகிறார். "பேர்ந்தோர் சாடிறச் செய்யபாதமொன்றால் செய்த நின்சிறுச்சேவகமும்" என்னக்கடவதிறே. [தேவக்கோலப்பிரான்] - ப்ராக்ருத ஸஜாதீயனாய்நின்றுசெய்யவும் பெற்றதில்லையே. அதிபால்யத்திலே செய்த செயலாகையாலே அப்ராக்ருதமா யிருப்பதோர்

---

ப்ர.—[நோவஇத்யாதி]—[ஆய்ச்சியுரலோடார்க்க] — வஙுஙெ௨ெஶ [கூ]
"ஜாநுாஶெவெவொஜஶெஸவஙாவுத்ரெவயுநாஜ~ஸ~ஙெவமெ। கூஹஷணிகிஷ்ஷுகூ௨ூணஶாஊ ஶெஜ௨ஷிூதா॥கச॥ யதிஶஙொநஷிமவுஷவதஶிவஙுஷவெஷிுத । ஐதுருஸஙாயநிஜஂ கூ௨ூ ஶாவகாஶ கூ~டு~ஂவிதீ॥கரு॥"

---

பஞ்சமேம்ப்ஸே. இரங்குவானென்? அவிழ்த்துக்கொண்டு போகவொண்ணாதோ? என்ன - துர்யோதநாதிகள் இத்யாதி. "வஞ்சப்பெண்ணை" இத்யாதிக்கு ஹார்த்தஹாவம் - கேட்டேன் பேய்த்தாய் இத்யாதி. அங்ஙனிருந்தானாகிலென்றது - தாய்பக்கல்போலே யிருந்தானாகிலென்றபடி. "சாவ" என்றதுக்கு வாஸனை - சூர்ப்பநகியை இத்யாதி. "உண்டதும்" என்றதிலே ரஸோக்தி - யசோதை இத்யாதி. தாய்முலை யுண்ணும்போது தன்னுயிர்பெறவுண்டான், பேய்முலையுண்ணும்போது அவளுயிரைத் தான்பெறவுண்டானென்றபடி. உயிர்பெற வுண்டதுக்கு ப்ரமாணம் - பெருமுலை இத்யாதி. திருமொழி மூன்றாந்திருமொழி முதற்பாட்டு, "முற்றமூத்து" இத்யாதி. பாசுரஸ்ய ஷஷ்டோர்த்தஃ. இவன் முக்தனாய் முலையுண்டால் அவள் முடியக்கூடுமோ? என்ன - இவன்பிள்ளையாயே இத்யாதி. "ஊர்" என்றதுக்குஹாவம் - ப்ரேரகர் இத்யாதி. "சகடம்" என்று - அசேதநமாகச்சொல்லுகையாலே, அபரிஹார்யமான ஆபத்தென்கிறார் - ஒருமநுஷ்யவடிவு இத்யாதி. மநுஷ்யவடிவென்றது - பூதனையைக் கடாக்ஷித்து. "ப்ரேரகர்" இத்யாதிவாக்யத்தால் பலிதம் - இத்தால் இத்யாதி. இத்தாலென்றது - "ஊர்" என்கிறஇத்தாலென்றபடி. முறியச் சாடினத்துக்கு ப்ரமாணம் - தளர்ந்தும் இத்யாதி. சாடியதும் - உதைத்ததும். "சாடியதும்" என்று இத்தைப் பெருக்கச்சொல்லுவானென்? என்ன - அநாயாஸேந இத்யாதி. போரப் பொலியச் சொன்னதுக்கு ப்ரமாணம் - பேர்ந்தோர் இத்யாதி. "சிறுச்சேவகம்" என்றதிலே நோக்கு. "தேவக்கோலம்" என்றதுக்கு பாவம் - ப்ராக்ருத இத்யாதி. அதாவது - ப்ராக்ருத ஸஜாதீயனாயிருக்கச்செய்தேயும் வ்யாபாரம்அதிமாநுஷமாயிருக்கிறதென்றபடி. விவரணம் - அதிபால்யத்திலே இத்யாதி. மேவுகை - அநந்ய ப்ரயோஜநனாகை. 'உடைகுலைப்

ஒப்பனைபோலேயிருக்கிறபடி. † (அப்ராக்ருதமான அழகை எனக்கு உபகரித்தவன். கோலம் - ஒப்பித்த விக்ரஹம்.) [தன்செய்கைநினைந்து மனங்குழைந்துமேவக்காலங்கள் கூடினேன்]-அவனுடைய சேஷ்டிதங்களை யநுஸந்தித்து அகவா யுடைகுலைப்பட்டு அநந்ய ப்ரயோஜநனாய்க் கொண்டு காலம் போக்கப்பெற்றேன். நெஞ்சு நெகிழ்ந்து சேஷ்டிதங்களோடே பொருந்தும்படி காலங்களைக் கூடப்பெற்றேன். [எனக்கென்னினிவேண்டுவதே] - இனி அவாப்தவ்ய மொன்றில்லை யென்கிறார். (௪)

---

## ஐந்தாம் பாட்டு.

---

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும் வீங்கிருள்வாய்
பூண்டுஅன்றுஅன்னைபுலம்பப்போய் அங்கோராய்க்குலம்புக்கதும்
காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சஞ்செய்ததும்
ஈண்டுநான்அலற்றப்பெற்றேன் எனக்கென்னஇகலுளதே?

ஆ:—(வேண்டி) - பூபாரநிர்ஹரணார்த்தமாக பூமியிலேவந்து திருவவதாரம் பண்ணி யருளவேணுமென்று தேவர்கள்அர்த்திக்கத் தான் ஆசைப்பட்டுக்கொண்டு ஸ்ரீ வஸுதேவர் திருமாளிகையிலேவந்து பிறந்தருளினபடியையும், "துராத்மாவானகம்ஸன் காணிற்செய்வதென்?" என்று ஸ்ரீவஸுதேவரும் தேவகிப்பிராட்டியும் பயப்பட்டு அலற்ற அவர்களுடைய பயம்போம்படியாக அதிபஹுளதமஃபூர்ணமான மத்யராத்ரத்திலே தன்னுடைய சதுர்ப்புஜ திவ்யரூப திரஸ்காரபூர்வகமாகத் திருவாய்ப்பாடியிலே யெழுந்தருளினபடியும்,அங்கே கம்ஸப்ரப்ருதி ப்ரதிகூலர் அறியாதபடி வளர்ந்தருளிக் கஞ்சனைத் துஞ்ச வஞ்சஞ்செய்ததும், இவையெல்லாவற்றையும் இங்கேயலற்றப்பெற்றேன்; எனக்கு இனிஒரு து:கமுண்டோ? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருவவதாரம் பண்ணியருளின பின்பு கம்ஸன் அறியாதபடி வளர்ந்து கம்ஸனை மாய்த்தபடி இன்றுஇருந்து அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி ஒருமிடியில்லை யென்கிறார். எதிர்உண்டோ என்றுமாம். [வேண்டித்தேவரிரக்க வந்து பிறந்ததும்] - தேவர்கள் இரக்கத் தானேஅபிநிவிஷ்டனாய்வந்து பிறந்ததும். இருளிலேவந்து பிறந்தான் என்றுமாம். கம்ஸபயத்தாலும், "விஸ்லேஷிக்கிறேன்" என்னும் வ்யஸநத்தாலும் கட்டிக்கொண்டு தாயார் கதற இருளிலேபோனான் என்னவுமாம். [ஈண்டு நானலற்றப்பெற்றேன்] - ஸமகாலத்திலேயிருந்து பயப்படாதே இப்போது நிர்பயனாய் இனிதாக அநுபவிக்கப்பெற்றேன்.

ப.—அநந்தரம், அர்த்திதார்த்தகரனான க்ருஷ்ணனுடைய அவதாரப்ரமுக கம்ஸவதபர்யந்த சேஷ்டிதங்களை இங்கே அநுபவிக்கப்பெற்ற எனக்குஎன்ன விரோதம் உண்டென்கிறார்.

---

பட்டு'—குலையென்று - கரையாய், கரையுடையப்பட்டென்றபடி; நெஞ்சுநெகிழ்ந்தென்றபடி. மேவ - அநந்யப்ரயோஜநனாய்ப் போரும்படியாகவென்றபடி. தேவக்கோலப்பிரான்தன் - அப்ராக்ருதவிக்ரஹ யுக்தனாய் உபகாரசீலனான க்ருஷ்ணனுடைய இத்யர்த்த:. (௪)

தேவர் - தேவர்கள், இரக்க-, வேண்டி - தன்னிச்சையாலே, வந்து - (க்ஷீரார்ணவத்தில் நின்றும்) வந்து, பிறந்ததும் - அவதரித்ததுவும், அன்று - அப்போதே, அன்னை - பெற்றதாயாரான தேவகியானவள், பூண்டு - (கம்ஸ பயத்தாலே) எடுத்தணைத்து, புலம்ப - கூப்பிட, வீங்கு - செறிந்த, இருள்வாய் - இருளிடத்திலே, போய்-, அங்கு - கம்ஸவிஷயமானதேசந்தன்னிலே, ஓர் - (அவனுக்கு அஞ்சாமல் மறைத்து வைத்துநோக்கும்படி) அத்விதீயமான, ஆய்க்குலம் - இடைக்குலத்திலே, புக்கதும் - ப்ரவேசித்ததுவும், காண்டல்-அந்தக்கம்ஸனுடையகாட்சி, இன்றி - இல்லாதபடி, வளர்ந்து-, கஞ்சன் - கம்ஸன், துஞ்ச - முடியும்படியாக, வஞ்சம் - வஞ்சனை, செய்ததும் - செய்ததுவும், ஈண்டு - இங்கேயிருந்து, நான் - நான், அலற்ற - வாய்விட்டுச்சொல்ல, பெற்றேன் - பெற்றேன்; எனக்கு - எனக்கு, என்ன - என்ன, இகல் - விரோதம், உளது - உண்டு? உண்டாகில் கம்ஸன்பட்டது படுமென்று கருத்து.

இ.—அஞ்சாம்பாட்டில், அவதரித்து, கம்ஸன் அறியாதபடி வளர்ந்து கம்ஸனை மாய்த்தபடியை இன்று இருந்து அநுபவிக்கப்பெற்ற எனக்கு எதிர் இல்லையென்கிறார்.

[வேண்டி இத்யாதி] - தேவர்கள் அர்த்திக்க, வேண்டிவந்து தன்னுகப்பாலே பிறந்ததுவும். "விதாரஂஶொவயாாஸ", "ஸஂஶ்ரூஷெஜதாஂ ஸுராவராவஶ:", வஶிஷ்டாணாயவஸாய-ஞநாடு." [வீங்கிருள்வாய்] - வளருகிற இருளிலே. வீங்கிருள்வாய் பிறந்ததும் என்னுதல், வீங்கிருள்வாய் ஆய்க்குலம் புக்கதுவும் என்னுதல். "வீங்கிருளினுண்டுளியாய்" என்று பயஹேதுவானஇருள் அன்றிக்கே, பயநிவ்ருத்திக்கு உடலான இருளிறே. [பூண்டன்றுஅன்னைபுலம்ப] - பிறந்த அன்றே தேவகியார், முன்பே ஆறுபிள்ளைகளை இழக்கையாலும், வாத்ஸல்யத்தாலும், கம்ஸபயத்தாலும் திருவடிகளைக் கட்டிக்கொண்டு கதற. [போய்] - முலைச்சுவடு அறியாமையாலே இவனுக்குப் போகலாமிறே. [அங்கோராய்க்குலம்புக்கதும்] - அத்தசையிலே அஞ்சினன் புகலிடமாயிருப்பது ஓர் இடைச்சேரி உண்டாவதே! கம்ஸனுக்குக் குடிமக்களாய் இருக்கச்செய்தேயும் "அவனுக்குஅநிஷ்டம்" என்று பாராதே மறைத்துவைத்து அடைக்கலம் நோக்கவல்ல ஊர். [காண்டலின்றி வளர்ந்து] - கம்ஸன் வஞ்சித்து வரக்காட்டின துஷ்ப்ரக்ருதிகள் அறியாதபடி வளர்ந்து. [கஞ்சனைத்துஞ்சவஞ்சம் செய்ததும்] - கம்ஸன் அழைத்து வஞ்சிக்கநினைக்க, அவன் நினைவை அவன்தன்னோடே போக்கினதுவும். ராமாவதாரம்போலே "செவ்வைப்பூசல் அல்லது அறியான்" என்று இராமையிறே பிழைத்தது. [ஈண்டுநான் அலறப்பெற்றேன்] - இங்கேஇருந்து அநுபவித்து ப்ரீதியாலே அடைவுகெடப் பேசப்பெற்றேன். ஈண்டு - இங்கு என்றபடி: இப்போது என்னவுமாம்; இக்காலத்திலே:அதாகிறது-தேவகியாரையும் ஸ்ரீவஸுதேவரையும்போலே ஸமகாலத்திலே இருந்து வயிறு எரியாதே, கம்ஸவிஜயபர்யந்தமாக இக்காலத்திலே அநுபவிக்கப்பெற்றேன். [எனக்கென்ன இகலுளதே] - எனக்கு என்ன எதிர்உண்டு என்னுதல், எனக்கு என்ன க்லேஶம் உண்டு என்னுதல். இகல் - யுத்தம்:யுத்தத்தாலே வரும் க்லேஶமாதல், யுத்தத்தில் வரும் எதிர் ஆதல்.

ஈடு:—அஞ்சாம்பாட்டு. அவதரித்து கம்ஸனையறியாதபடிவளர்ந்து கம்ஸனை மாய்த்தபடியை இன்றுஇருந்தநுஹவிக்கப்பெற்ற எனக்கு ஓரெதிரில்லை யென்கிறார்.

[வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும்] - தேவரிரக்க வேண்டி வந்துபிறந்ததும். "எங்களளவறியாதே ஒருவனுக்கு வரங்கொடுத்து அவனையுயரப்பார்த்தோம்: எங்களுக்குக் குடியிருப்பு அரிதாயிற்று" என்று தேவஜாதி கப்படங்கட்டிக்கொண்டு செல்ல "பிதாமம் ரோசயாமாஸ" (பிதரம்ரோசயாமாஸ) என்கிறபடியே தான் அர்த்தியாய்வந்துபிறந்ததுவும். "ஆத்மமாயயா"(ஆத்மமாயயா)என்னும்படியிறே; ஆத்மேச்சயா என்றபடி; "மாயா வயுநம் ஜ்ஞாநம்" (மாயா வயுநம் ஜ்ஞாநம்). இரக்கிறவர்களளவுபார்த்தல், தன்னளவு பார்த்தல் செய்கையன்றிக்கே வந்து பிறந்தபடிகாணும்,இவரைவருத்துகிறது. தான்இரப்பாளனுய்க் காரியஞ்செய்யுமவன், பிறந்தால் பொறுக்கமாட்டானிறே. [பிறந்ததும்வீங்கிருள் வாய்] - "மத்யராத்ரே கிலாதாரே ஜாயமாநே ஜநார்த்தநே" (மத்யராத்ரே கிலாதாரேஜாயமாநேஜநார்த்தநே) என்னும்படியிறே. "இவனும் விழுக்காடறியாதே யகப்பட்டுக்கொடுகின்றான், கம்ஸபயமும் ப்ராப்தமாயிராநின்றது, இருளாலேயிறே நாம் பிழைத்தது! இனி இவ்விருளைச் சரணம்புகுமித்தனையிறே" என்று பிள்ளையுறங்காவில்லிதாஸர் பணிப்பராம். * ஊரேல்லாந்துஞ்சியில் கூற்றமான இருள்இவர்க்கு இப்போது ஆதரத்துக்கு விஷயமாயிற்றிறே. வீங்கிருள்வாய் பூண்டன்றன்னை புலம்பப்போய் என்றுமாம்; "மக்களறுவரைக் கல்லிடைமோத விழந்தவள்"என்கிறபடியே பெற்றுப்பெற்றுஇழந்தவளாகையாலே,

---

அஞ்சாம்பாட்டு.—வேண்டி இத்யாதி. "காண்டலின்றிவளர்ந்து" இத்யாத்யுத்தரார்த்தத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - அவதரித்து இத்யாதி.

தேவர்களிரக்கும் ப்ரகாரத்தைக் காட்டுகிறார் - எங்களளவு இத்யாதி. கப்படம் - கார்ப்பண்யஸூசகபடவிசேஷம், கப்பரையும். "வேண்டி-வந்து" - அர்த்தியாய்வந்தித்யர்த்த:. "தேவதா: ஸர்வா: த்ரஷ்டாநம் வரதம் விபும் । பிதாமம் ரோசயாமாஸ தஸ்யாஹமமிதம் ப்ரபும்" பாலகாண்டே. "வேண்டி வந்து" என்றதுக்கு - இச்சித்துவந்தென்றர்த்தாந்தரம் - ஆத்மமாயயா இத்யாதி. இதுக்கர்த்தம் - ஆத்மேச்சயா என்றபடி என்று. மாயா ஶப்தம் - இச்சா வாசகமாமோ? என்ன - மாயா வயுநம் இத்யாதி. "தேவர்" என்றதுக்கு பாவமாதல், "வந்து பிறந்ததும்" என்றதுக்கு ஹார்த்தபாவமாதல் - இரக்கிறவர்கள் இத்யாதி. இரக்கிறவர்களளவாவது - "ஈஶ்வரோஹம்"என்றுஇருக்கிற துர்மாநாதிதோஷம்: தன்னளவாவது - தன்பெருமை. இருவாளவும் பாராமல்வந்து பிறக்கைக்குஅடியென்? என்ன - தானிரப்பாளனுய் இத்யாதி. "வீங்கிருள்வாய்" - ப்ரவ்ருத்தமான இருளிலே. வளருகிற இருளிலேயோபிறந்தான்? என்ன - மத்யராத்ரே இத்யாதி. "மத்யராத்ரே கிலாதாரே ஜாயமாநே ஜநார்த்தநே । ஸிந்தவோ ஜநயாமாஸு: வர்ஷ வர்ஷிதா வொதிஜ" இதி பஞ்சமேம்ஶே த்ருதீயே. இருளென்னுதே, "வீங்கிருள்", என்று ஶ்லாகித்ததுக்கு ஸம்வாதம் - இவனும் இத்யாதி. இருளை சரணம்புகுமித்தனையென்றது - இருளை உத்தேஶ்யதாபுத்திபண்ணி வணங்குமத்தனையென்றபடி. *ஊரெல்லாந்துஞ்சியிலே, "வீங்கிருளினுண்டுளியாய்" என்று இருளுக்குஅஞ்சினபடியையும், இப்போது கொண்டாடுகிறபடியையும் அநுஸந்தித்து வ்யாக்யாதா ஈடுபடுகிறார் - ஊரேல்லாம் இத்யாதி. "வீங்கிருள்வாய்" என்றத்தை - கீழ்மேலுங் கூட்டுவது. அன்று - பிறந்தஅன்று. காலைப்பூண்டுகொண்டு புலம்புகைக்கு ஹேதுவேது? என்ன - மக்களறுவரை இத்யாதி. பிள்ளைகளறுவரையும் கம்ஸன் கல்லிடைமோத, அவர்களையிழந்த தேவகிப்

இவனையும்இழக்கிறேமோ!'' என்று விரஹகாதரதையாலே காலைப்பூண்டுகிடந்து கூப்பிடப் போய். பிள்ளைபக்கல் வாத்ஸல்யத்தாலே இவள் கூப்பிட, இவன் முலைச்சுவடறியாமை யாலே போனபடி. வீங்கிருள் - வளர்கிறஇருள். [அங்கோராய்க்குலம்புக்கதும்] - அவ் வவஸ்த்தையிலே இடையிலே வளருகைக்குஓர் அஞ்சினான்புகலிட முண்டாவதே! [ஆய்க் குலம்]-''கம்ஸன்வாயகன்'' என்று பயப்படவறியாதவர்கள்.''குடிவாய்உடன்படவிருந்தா னாகில் இருக்கிறான், இல்லையாகில் உழக்கோலாலே தகர்க்கிறோம்'' என்றிருப்பர்கள். [காண்டலின்றிவளர்ந்து]- கம்ஸனும் அவன்வரக்காட்டின பாபுகவர்க்கமும் காணாதபடி வளரப்பெறுவதே! [கஞ்சனைத்துஞ்ச வஞ்சம் செய்ததும்] - ஸ்ரீநாரதபகவான் அறிவித்த பின்பு ஒருபோதுதாழாதேவந்து, அவன்தான் நினைத்தவஞ்சனையை அவன்தன்னோடே போக்கினதும். கம்ஸன் முடியும்படியாக வஞ்சனைசெய்தது, ராமாவதாரம்போலே ''செவ் வைப்பூசலல்லதறியேன்'' என்றிராமையிறே [ஈண்டுநானலற்றப்பெற்றேன்] - தேவகியா ரைப்போலே ஸமகாலத்திலேயிருந்து பயப்படாதே,இப்போது பயங்கெட்டிருந்து அநுபவிக் கப்பெற்றேன். ஈண்டு - இப்போது. [எனக்கென்ன இகலுளதே] - கம்ஸன்பட்டபின்பு எனக்கு ஶத்ருக்களுண்டோ? இகல் - சத்ரு. † (எல்லாரும் ஶேஷபூதராகையாலே தமக்கு சத்ருவில்லை. அவனும் நாராயணனாகையாலே அவனுக்கு சத்ருவில்லை. இனி யிவர் சத்ருக்கள் பகவத்விமுகரிறே.) கம்ஸனைமுடித்தபடியை இன்றுஇருந்து அநுபவிக்கப் பெற்ற எனக்குஇனி ஒரு மிடியில்லை என்கிறு ராகவுமாம். (ரு)

---

## ஆறும்பாட்டு.

---

இகல்கோள்புள்ளைப்பிளந்ததும் இமிலேறுகள்செற்றதுவும்
உயர்கோள்சோலைக்குருந்தொசித்ததும் உட்படமற்றும்பல
அகல்கோள்வையமளந்தமாயன் என்னப்பன்தன்மாயங்களே
பகலிராப்பரவப்பெற்றேன் எனக்கென்னமனப்பரிப்பே?

ஆ.—(இகல்கொள்.) - கம்ஸப்ரேரித ப்ரதிகூல விஹங்கவிசேஷ தூர்த்தம வ்ருஷ குந்தருபாஸுரநிரஸந ப்ரப்ருதி பரமபுருஷ திவ்யசேஷ்டிதங்களை ஸர்வ காலமும் வத்தப்பெற்ற நான் அவாப்தஸமஸ்தமநோரதனானேன் என்கிறார்.

ஓ.—ஆறும்பாட்டில், க்ருஷ்ணனுடைய ப்ரதிகூலநிரஸந பரம்பரைகளை அநுபவிக்கப்பெற்ற எனக்கு இனி ஒரு மனோதுக்கம் இல்லை என்கிறார். [இகல்கொள் புள்ளைப்பிளந்ததும்] - எதிரிட்டபுள்ளைப் பிளந்ததும். இமில்என்று கருத்தைச்சொல்லு

---

பிராட்டியுடையவென்றபடி. பெரியாழ்வார்திருமொழி, அஞ்சாம்பத்து, மூன்றாந்திருமொழி, ''துக்கச் சுழலை'' இத்யாதி. காலைப்பூண்டு - க்ருஷ்ணனுடையகாலைப்பூண்டு. இவள்கூப்பிடுகிறதுக்கும் அவன் போனதுக்கும் ஹேதுவேதென்ன - பிள்ளைபக்கல் இத்யாதி. ''ஓர்'' என்றதுக்கு ஹார்த்தபாவ மாதல், ஈடுபாடாதல் - அவ்வவஸ்த்தையிலே இத்யாதி. அஞ்சினான்புகலிடம் - பயஸ்த்தன்புகுமிடம். பயப்படவறியாமையின் எல்லையைக்காட்டுகிறார் - குடிவாயுடன் இத்யாதி. குடிவாய்உடன்படவிருந்தா னாகிலென்றது - குடிமக்களோடொத்திருந்தானாகிலென்றபடி. குடிவாய் - குடிமக்கள். உழக்கோல் – தாற்றுக்கோல். நாரதபகவான்சொன்னது கம்ஸனோடே. மிடி - க்லேஶம். (ரு)

கிறது. [உயர்கொள்சோலைக்குருந்தொசித்ததும்] - ஸ்ப்ருஹணீயமாம்படி உயர்ந்து தழைத்துநின்ற குருந்தின்வடிவைக்கொண்ட அஸுரனை முடித்ததும்.

ப.—அநந்தரம், பூர்வாவதாரத்திலே அபிமாந நிவர்த்தகமான த்ரைவிக்ரமத்தைப் பண்ணின க்ருஷ்ணனுடைய விரோதிநிரஸந வ்யாபாரங்களை அஹோராத்ர விபாகமற அநுபவிக்கப்பெற்றேன்; எனக்குஎன்ன மநோதுக்கமுண்டென்கிறார். இகல் - யுத்தத்திலே, கொள் - ஒருப்பட்டுவந்த, புள்ளை - பகாசுரனை, பிளந்ததும் - வாயைக்கிழித்ததுவும், இமில் - (செருக்கடியான) பிசலையுடைய, ஏறுகள் - ஏறுகளை, செற்றதுவும் - செறுத்துக் கொன்றதுவும், உயர் - உயர்த்தியை, கொள் - உடைத்தாய், சோலை - தழைத்த, குருந்து - குருந்தை, ஒசித்ததும் - முறித்ததுவும், உட்பட - முதலாக, மற்றும் - பின்னும், பல - விரோதிநிரஸநரூபமாய்க்கொண்டு பலவாயுள்ளனவாய், அகல் - விஸ்தாரத்தை, கொள் - உடைய, வையம் - பூமியை, அளந்த - அளந்து மஹாபலியபிமாநத்தை யழித்துக்கொடுத்த, மாயன் - ஆஸ்சர்யபூதனான த்ரிவிக்ரமனாய், என் - அவ்வவதாரத்தோடுண்டான ஐக்யத்தை யெனக்கு ப்ரகாஸிப்பித்த, அப்பன்தன் - மஹோபகாரகனான க்ருஷ்ணனுடைய, மாயங்கள் - ஆஸ்சர்யசேஷ்டிதங்களை, பகல்இரா - பகலோடிரவோடு வாசியற, பரவ - ஸ்துதிக்க, பெற்றேன் - பெற்றேன்; எனக்கு -, என்ன-, மனப்பரிப்பு - மநோதுக்கம் உண்டு? பகவதநுபவகாலம் பழுதுபோகிலிறே மநோதுக்கமுள்ளதென்று கருத்து.

இ.—ஆறும்பாட்டில், க்ருஷ்ணனுடைய ப்ரதிகூல நிரஸந பரம்பரையை அநுபவிக்கப்பெற்ற எனக்கு ஒருமநோதுக்கம் இல்லை என்கிறார்.

[இகல்கொள் இத்யாதி] - யுத்தோத்முகனான பகாஸுரனைப்பிளந்ததும். பக்ஷிவேஷத்தாலே வந்து எதிரிட்டானாயிற்று பகாஸுரன்; அவனை அநாயாஸேந பிளந்தான். [இமிலேறு இத்யாதி] - கண்டார்க்கு பயாவஹமான கருத்துக்களையுடைய ரிஷபங்களை நிரஸித்ததும். இமில் - கருத்து. [உயர்கொள் இத்யாதி] - ஓங்கித்தழைத்திருந்துள்ள குருந்தை முறித்ததும்; தர்ஸநீயமான ஸ்தாவரவேஷத்தைக் கொண்டு வந்த மஹாஸுரனை முடித்ததும். [உட்படமற்றும்பல] - கன்றும் விளவாயும் வந்த அஸுரர்முதலாக வேறும்நிரஸித்தவை அநேகங்கள். இந்த திர்யக்ஸ்தாவரங்களை நித்யஸூரிகள் கைங்கர்யத்துக்காக பரிக்ரஹிப்பர்கள்; இங்கு ப்ராதிகூல்யத்துக்குஉறுப்பாகக் கொண்டவடிவுகளிறே இது. இதுக்கு பாபப்ராசுர்யம் அடி; அதுக்குஇச்சைஅடி. [அகல் கொள்இத்யாதி] - பரப்பைஉடைத்தானபூமிஅடங்கலும் தன்திருவடிகளின்கீழேயிட்டுக் கொண்ட ஆஸ்சர்யத்தை யுடையவன். வரையாதே நீண்டும் ஸ்வபாவ ஸாம்யத்தாலே சொல்லுகிறது. [என்னப்பன்] - இவ்வபதாநம் தமக்குஉதவ ஃலித்தது என்று இருக்கிறார். [மாயங்களே] - ஆஸ்சர்யசேஷ்டிதங்களையே. [பகலிரவு இத்யாதி] - இரவோடு பகலோடு வாசியற அநுபவித்து ப்ரீதியாலே அடைவுகெடப்பேசப்பெற்றேன். [எனக்கென்ன மனப்பரிப்பே] - எனக்குஎன்ன மநோதுக்கமுண்டு. பரிவு என்கிறத்தை சந்தஸ்ஸுக்குச்சேர 'பரிப்பு' என்று சொல்லுகிறது.

ஈடு.—ஆறும்பாட்டு. க்ருஷ்ணனுடைய ப்ரதிகூல நிரஸந பரம்பரையை அநுபவிக்கப் பெற்ற எனக்குஒரு மநோது:கமில்லையென்கிறார்.

[இகல்கொள்புள்ளைப்பிளந்ததும்] - (இகல் - யுத்தம்.) கேவலம் புள்மாத்ர மாய்வந்து தோற்றுகை யன்றிக்கே, யுத்தோந்முகமாய்க்கொண்டு எதிரிட்ட புள்ளை நிரஸித்ததும். அசுராவேசத்தோடே வரச்செய்தேயும் ' பாதிக்கவருகிறது ' என்று பிறரஞ்சாத வடிவு கொண்டு வந்தபடி. * பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்வேந்தது. [இமிலேறுகள் செற்றதுவும்] - ககுத்தையுடைத்தான வ்ருஷபங்களைச் செற்றதுவும். [உயர்கொள்சோலைக் குருந்தொசித்ததும்] - ஓக்கத்தை யுடைத்தாய்ச் சோலைசெய்துநின்ற குருந்தை முறித்ததும். ''முக்யராயிருப்பார்க்குஆகர்ஷகமாயிருக்கும்'' என்று தழைத்துநின்றது; ''இனியித்தைமுறித்துக் கார்யங்கொள்வோம்'' என்று பொடிபடுத்தினன். [உட்படமற்றும்பல] - இப்புடையிலே மற்றுமுண்டான ப்ரதிகூலநிரஸநங்கள் அநேகமிறே. [அகல்கொள்வையமித்யாதி]- பரப்பையுடைத்தான பூமியடங்கலும் அநாயாஸேநவளர்ந்த ஆஶ்சர்யபூதனை உபகாரகனுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்களையே. [பகலிராப்பரவப்பெற்றேன்] - நாட்டார் அபிமத விஷயங்களை புஜிக்கைக்கு ' பகல் இரா ' என்று கூறிட்ட காலம்இரண்டும் இவ்விஷயத்திலே அநுபவிக்கப்பெற்ற எனக்கு, இரவுபகல் புறம்பே விஷயங்களை யநுபவிப்பாருடைய மநோது:கமுண்டோ? பரிவென்று - து:கம். அதிலே ஒரு †ஒற்றெழுத்தேறினும் அவ்வர்த்தத்தையே காட்டக்கடவது. (சா)

## ஏழாம் பாட்டு.

மனப்பரிப்போடு அழுக்குமானிடசாதியில்தான்பிறந்து
தனக்குவேண்டுருக்கொண்டு தான்தனசீற்றத்தினைமுடிக்கும்
புனத்துழாய்முடிமாலைமார்பன் என்னப்பன்தன்மாயங்களே
நினைக்கும்நெஞ்சுடையேன் எனக்கினியார்நிகர்நீள்நிலத்தே ?

ஆ.—(மனப்பரிப்போடு.) - ப்ரணதஜநஸமீஹித நிர்வர்த்தநவிஷய மநோரதத்துணைக்கொண்டு, அசேஷதோஷாஸ்பத மநுஷ்யஜாதியிலே ஸ்வாஸாதாரண திவ்ய ரூபத்தோடே வந்துபிறந்தருளி, ஸ்வாபிமத த்விபுஜ சதுர்ப்புஜாதிரூபங்களை யாஸ்த்தாநம்பண்ணிக்கொண்டு விரோதிநிரஸநம்பண்ணி பரிபூர்ண மநோரதனுகையாலே,

ஆறும்பாட்டு-இகல் இத்யாதி. ''இகல்கொள்'' என்று தொடங்கி, ''மற்றும்பல'' என்னுமளவுங் கடாக்ஷித்தவதாரிகை-க்ருஷ்ணனுடைய இத்யாதி. ''எனக்கென்ன மனப்பரிப்பு'' என்றத்தை எனக்கொரு மநோது:கமில்லையென்கிறாரென்றது. இகல் - யுத்தம். புள்ளென்னுதே, ''இகல்கொள் புள்'' என்று விசேஷித்ததுக்கு பாவம்-கேவலம் இத்யாதி. ''புள்'' என்றதுக்கு பாவம்-அசுராவேச இத்யாதி. அஞ்சாத வடிவுகொண்டு வந்ததுக்கு ப்ரமாணம் - பள்ளத்தில்மேயும் இத்யாதி. நீர்த்தாழ்வுகளிலே இரைதேடித் திரிகிற பகமாகிற பக்ஷியின் வடிவைக்கொண்டுஇத்யர்த்த:.பெரியாழ்வார் திருமொழி, இரண்டாம்பத்து, அஞ்சாந்திருமொழி, நாலாம்பாட்டு. சோலை செய்து நிற்கைக்கு ஹேது வேதென்ன - முக்யராய் இத்யாதி. ''பகலிரா'' என்று விசேஷித்ததுக்கு பாவம்-நாட்டார் இத்யாதி. கூறிடுகையாவது - அபிமதவிஷயங்களுக்குக் கொடுக்கைக்குஉறுப்பாக அர்த்தார்ஜநம்பண்ணுகைக்குப் பகலையும், அவற்றை அநுபவிக்கைக்கு ராத்ரியையும் அவச்சேதிக்கை யென்றபடி. (சா)

அதிபரிமள துலஸீமாலாலங்க்ருதனுயிருந்த எம்பெருமானுடைய ஆஶ்சர்ய திவ்யசேஷ்டிதங்களையே நினைக்கும் நெஞ்சாகிற மஹாநிதியையுடையனுன என்னேடொக்க இந்த லோகத்தில் அந்யனுண்டோ? என்கிருர்.

ஒ.—ஏழாம்பாட்டில், ஆஶ்ரிதருடைய நோவு பொறுக்கமாட்டாமை அப்ராக்ருத திவ்யஸம்ஸ்தாநத்தோடேகூட தானேவந்து பிறந்தருளி, ஆஶ்ரிதவிரோதி நிரஸநத்தைப் பண்ணியருளினவனுடைய சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு ஆர் நிகர் நீள்நிலத்து? என்கிருர். [தனக்கு வேண்டுருக்கொண்டு] - தனக்கு அபிமதமான த்விபுஜசதுர்புஜாதிரூபங்களைக்கொண்டு. [தான் தனசீற்றத்தினை முடிக்கும்]-ஆஶ்ரிதருடையவிரோதிகளைப் போக்கினல் அவர்களுக்கு ஒரு காரியஞ்செய்தானுயன்றிகே தன்னுடைய சீற்றத்தை முடித்தானுயிருக்கும். [புனத்துழாய் முடிமாலை மார்பன்] - ஆஶ்ரிதருடைய விரோதிகளைப்போக்கித் திருமஞ்சனமாடியருளி ஒப்பித்த அழகிய திருத்துழாய்மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலும் உடையவன்.

ப.—அநந்தரம், அதிஶயித போக்யாகாரனை க்ருஷ்ணனுடைய ஆஶ்ரிதவிரோதிநிரஸநார்த்தமான அவதாரவைலக்ஷண்யத்தை அநுஸந்திக்கும் நெஞ்சையுடைய எனக்கு பூமியில் ஸத்ருஶருண்டோ? என்கிருர்.

("ஹ்ருஶம்ஸவதிது:கித:" என்கிறபடியே ஸம்ஸாரிகள் படுகிற து:வத்தைக்கண்டு பரது:வாஸஹிஷ்ணுத்வரூபமான), மனம்பரிப்போடு - நெஞ்சில துஃவத்தோடே, அழுக்கு - ஹேயமான, மாணிடசாதியில் - மநுஷ்யஜாதியிலே, தான்-(ஹேயப்ரத்யநீகனுன) தான், பிறந்து - தத்ஸஜாதீயனுய்ப் பிறந்தவிடத்திலும், தனக்கு வேண்டு - தன் இச்சாநுரூபமான, உரு - அபிமதவிக்ரஹங்களை, கொண்டு - பரிக்ரஹித்து, தான் - (ஆஶ்ரிதவாத்ஸல்யத்தையுடைய)தான், (ஆஶ்ரிதவிரோதி நிரஸநததாலே), தன-தன், சீற்றத்தினை - சீற்றம், முடிக்கும் - முடிப்பானுயிருப்பானுய், புனம்-தன்னிலத்தில் நின்றுற்போலே செவ்விபெற்ற, துழாய்-திருத்துழாய் மாலையையுடைத்தான, முடி-திருமுடியையும், மாலை- அந்தத்திருமாலையையுடைததான, மார்பன் - திருமார்பையுமுடையனுய், என் - அவ்வழகையெனக்கு ப்ரகாசிப்பித்த, அப்பன்தன் - உபகாரகனுனவனுடைய, மாயங்கள் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை, நினைக்கும - நினைக்கும்படி விதேயமான, நெஞ்சு-நெஞ்சை, உடையேன் - அஸாதாரணமாகவுடையேனுன, எனக்கு - எனக்கு, இனி-இனி, நீள்நிலத்து-இந்தமஹாப்ருதிவியில், நிகர் - ஒப்பார், ஆர்-ஆர்?

இ.—ஏழாம்பாட்டில், ப்ரதிகூலர் அநுகூலரை நலியுமது பொறுக்கமாட்டாமை அவதரித்து, அவர்களை அழியச்செய்யும் சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு பூமியில் எதிர்இல்லை என்கிருர். [மனப்பரிப்போடு] - "நமக்கு அநர்ஹ போஷமாயிருக்கிற இவ்வஸ்து, தேஹஸம்பந்தத்தாலே பஹுமுவமாக நோவுபடுவதே!" என்னும் மநோதுக்கத்தோடேயாயிற்று திருவவதரித்தது. [அழுக்குமானிடசாதியில்] - ப்ரஹ்மாதிகளுங்கூட அருவருக்கும் மனுஷ்யஜாதியிலே. [தானபிறந்து] - ஹேயப்ரத்யநீகனுன தான் அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தாநத்தோடே ஸஹவாஸம் பண்ணிக்கொண்டு அவதரித்து. "ஜாநந்ஷேஷா ஜெஜ்ஜே". தன்ஜந்மத்தை அநுஸந்திக்க, ஸம்ஸாரிகளுடைய ஜந்மஸம்பந்தம் போம்படியான தான்பிறந்து. [தனக்கு வேண்டுருக்கொண்டு] - சதுர்புஜனுவது, த்விபுஜனுவது, கோபாலனுவது, வைஶ்வ

ரூப்யத்தைக் கொள்வதாகை. இவைதான் ஆஶ்ரிதார்த்தமாகையாலே தனக்கு அபிமதமாயிருக்கும். [வேண்டுரு] - ஐச்சம் என்றுமாம். [தான் தனசீற்றத்தினை முடிக்கும்] - ஆஶ்ரிதவத்ஸலனான தான் ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கி, அத்தாலே தன்சினம் தீரத்தானாய் இருக்கும். ப்ரஜையை நலிந்தவர்களைத் தாய் 'தனக்குஶத்ரு' என்று இருக்குமாபோலே. [புனத்துழாய் முடிமாலைமார்பன்] - ஆஶ்ரிதவிரோதிகள் போகப்பெற்றவத்தாலே ஒப்பித்திருக்கிறபடி. [தன்மாயங்களே] - அவனுடைய ஆஶ்சர்யசேஷ்டிதங்களையே இடைவிடாமல் அநுஸந்திக்கும் நெஞ்சுடையேன். ''காரணம் பந்தமோக்ஷயோ:'' என்கிறபொதுமை தவிர்ந்து, அஸாதாரணமான நெஞ்சைப்பெற்றேன். [எனக்கு இனியார் நிகர் நீள்நிலத்தே] - பஞ்சாஶத்கோடி விஸ்தீர்ணையான பூமியில் எனக்கு எதிர் ஆர்?

ஈடு.—ஏழாம்பாட்டு. ப்ரதிகூலர் ஆஶ்ரிதரை நலியுமது பொறுக்கமாட்டாமை அவதரித்து அவர்களை யழியச்செய்யும் சேஷ்டிதங்களை நினைக்கும் நெஞ்சுடைய எனக்கு பூமியில் நிகரில்லை யென்கிறார்.

[மனப்பரிப்போடு அழுக்கு மானிடசாதியில்தான் பிறந்து] - நாட்டாரை அழுக்குடம்பு கழிக்கும் தான்கிடீர் அழுக்கு மானிடசாதியிலே வந்து பிறந்தான். ப்ரஜை கிணற்றிலேவிழுந்தால் எடுக்க வருந் தாய் நெஞ்சுநோந்துவந்து எடுக்குமாபோலே, ''இவற்றுக்கு உதவப்பெற்றிலோம்'' என்னும் திருவுள்ளத்தில் தளர்த்தியோடே வந்து பிறக்கை. [தான் பிறந்து] - ஹேயப்ரத்யநீகனான தான் அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்த்தாநத்தோடே கர்ப்பவாஸம் பண்ணிக்கொண்டவதரித்து: பிறக்கைக்குக் கர்மம்பண்ணிவைத்தவருங்கூட அருவருக்கும் ஜந்மத்திலே கிடீர் அகர்மவஶ்யனான தான்பிறந்தது; இதுக்கடி காருண்யமிறே. [தனக்கு வேண்டுருக்கொண்டு] - அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தானத்தை யுடையனாய்க்கொண்டு. அப்படி பிறந்தால் ஒருபடிப்பட்டிருக்கப் பெற்றேமோ!. ''த்விபுஜோவா சதுர்ப்புஜோவா'' (த்விபுஜோவா சதுர்ப்புஜோவா) என்னும்படியிறே பட்டபடி. ஈஶ்வரத்வத்தைக் கைகழிய விட்டபின்பிறே இவனுக்கு இங்கு இடங்கொடுத்தது. இவைதான் ஆஶ்ரிதார்த்தமாகையாலே தனக்கபிமதமாயிருக்கும். ஐச்சமென்றுமாம். [தான் தனசீற்றத்தினைமுடிக்கும்]-

ஏழாம்பாட்டு - மனப்பரிப்பு இத்யாதி. ''மனப்பரிப்போடழுக்கு'' என்று தொடங்கி, ''நினைக்கும் நெஞ்சுடையேன்'' இத்யாதிகளைக் கடாக்ஷித்து அவதாரிகை - ப்ரதிகூலர் இத்யாதி.

''தான்'' என்றதுக்கு பாவம் நாட்டாரை இத்யாதி. நாட்டாரை யென்கிறது ''ஹேயமான வுடம்பைக் கழிக்கவேணும்'' என்று ப்ரார்த்திக்கிற முமுக்ஷுக்களை. ''மனப்பரிப்போடு'' என்றதுக்கு ஸத்ருஷ்டாந்தமாக பாவம் - ப்ரஜை இத்யாதி. இவற்றுக்கென்றது - தனக்கு அநந்யார்ஹஶேஷமாய் வைத்து நோவுபடுகிற இவற்றுக்கென்றபடி. ''தான்'' என்றதுக்கு - அகர்மவஶ்யனான தான் என்று அர்த்தாந்தரம்-பிறக்கைக்கு இத்யாதி. ''தனக்கு வேண்டுருக்கொண்டு'' என்றதுக்கு இரண்டர்த்தம். † அப்ராக்ருத திவ்ய ஸம்ஸ்தாநத்தை யுடையனாய்க்கொண்டு என்னுதல்; த்விபுஜனுதல் சதுர்ப்புஜனுதல வேண்டினபடியாய்க்கொண் டென்னுதல். ஒரு படிப்பட்டிருக்க வில்லையோ? என்ன - த்விபுஜோவா இத்யாதி. சதுர்ப்புஜனானவன் த்விபுஜனாகைக்கு அடியேதென்ன - ஸம்ஸாரத்தினுடைய கொடுமை யென்கிறார்-ஈஶ்வரத்வத்தை இத்யாதி. ''மனப்பரிப்போடு'' இத்யாதிக்கு - ''ஸம்ஸாரிகளுடைய து:க தர்ஶநத்தால் வந்த மநோது:கத்தோடே, ஹேயமான மநுஷ்ய ஜாதியிலே, ஹேயப்ரத்யநீகனான தான் தத்ஸஜாதீயனாய்ப் பிறந்து, அவ்விடத்திலும் தன் இச்சாநுரூபமான அபிமதவிக்ரஹங்களை பரிக்ரஹித்து'' என்று உரையிலே பதார்த்தம். கைகழியவிட்ட என்றது - ஶ்லேஷம்; கைகளைக்கழியவிட்ட என்றும், கைகழியும்படிவிட்ட என்றும். இதுக்கு - ''உபஸம்ஹர விஶ்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம்''

ஆஸ்ரிதவிரோதி போக்கினானாயிருக்கையன்றிக்கே தன்சினந் தீர்ந்தானாயிருக்கை; மாதா வானவள், ப்ரஜையை நலிந்தவர்களைத் தான் நலிந்து தன்சினந்தீருமாபோலே. **கோபஸ்யவஶமேயிவாந்**'' (கோபஸ்யவஶமேயிவாந்). [புனத்துழாய்முடிமாலைமார்பன்] - ஆஸ்ரிதவிரோதிகளைப் போக்கித் திருமஞ்சனம்பண்ணியொப்பித்து, திருமேனியின் ஸ்பர்ஶத்தாலே தன்னிலத்திலே நின்றாற்போலே செவ்விபெற்றிருக்கிற திருத்துழாய்மாலையைத் திருமுடியிலும் திருமார்பிலுமுடையனாய், அவ்வொப்பனையாலே என்னையெழுதிக்கொண்டான். [தன்மாயங்களே நினைக்கும்நெஞ்சுடையேன்] - ''*காரணம்பந்தமோக்ஷயோ:*'' (காரணம்பந்தமோக்ஷயோ:) என்று பொதுவாகையன்றிக்கே, அவனுடைய ஆஸ்சர்ய சேஷ்டிதங்களையே அநுஸந்திக்கும் நெஞ்சையுடையேன். [எனக்குஇனியார்நிகர் நீள்நிலத்தே]- பூமி பரப்புடைத்தேன்னா, எனக்குஒப்பாருண்டோ ? பரமபதத்தையொன்றாக நினைக்கிறிலர்; தம்மைப்போலே கவிபாடியடிமைசெய்வாரில்லாமையாலே, ஸம்ஸாரத்தேயிருந்து கவிபாடியடிமைசெய்யப்பெற்ற எனக்கு, பூமியில்லார் எதிருண்டோ ? என்கிறார். (எ)

---

## எட்டாம் பாட்டு.

---

> நீணிலத்தோடுவான்வியப்ப நிறைபெரும்போர்கள்செய்து
> வாணனாயிரந்தோள்துணித்ததும் உட்படமற்றும்பல
> மாணியாய்நிலங்கொண்டமாயன் என்னப்பன்தன்மாயங்களே
> காணும்நெஞ்சுடையேன் எனக்கினியென்னகலக்கமுண்டே ?

*ஆ.—(நீள்நிலத்தொடு.) - வாணவிஜய ப்ரமுகமான க்ருஷ்ணசேஷ்டிதங்களையும், மற்றும் ஸ்ரீவாமநனுடைய ஆஸ்சர்யசேஷ்டிதங்களையுமே யநுஸந்திக்கும் நெஞ்சுடையேனான எனக்கு இனி கலக்கமுண்டோ ? என்கிறார்.*

*ஒ.—எட்டாம்பாட்டில், வாணவிஜய ப்ரமுகமான க்ருஷ்ணசேஷ்டிதங்களையே அநுஸந்திக்கும் நெஞ்சையுடைய எனக்கு இனி கலக்கம் உண்டோ ? என்கிறார். [காணும் நெஞ்சுடையேன்] - அநுஸந்திக்கும் நெஞ்சுஉடையேன்.*

*ப.—அநந்தரம், அர்த்தியாயும் அபேக்ஷிதந்தலைக்கட்டிக்கொள்ளுமவனுடைய வாணயுத்தப்ரமுகசேஷ்டிதங்களை அநுஸந்திக்கும் நெஞ்சையுடைய எனக்கு ஒரு கலக்கமுண்டோ ? என்கிறார்.*

*ஜிதக்ரோத:*'' என்றதிலே நோக்கு. ''*தனசீற்றத்தினை*'' என்றதுக்குவாஸனை - ஆஸ்ரிதவிரோதி இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம்-மாதாவானவள் இத்யாதி. ஆஸ்ரிதவிரோதிகளைத் தன் விரோதிகளாக நினைத்துச் சீறின விடம் உண்டோ? என்ன-கோபஸ்ய இத்யாதி. ''தஸ்மாத்... ... ... கோபஸ்ய வஶமேயிவாந்'' இதி யுத்தகாண்டே. ருக-கசுசு ''புனத்துழாய்-மாலையை - முடியிலேயும் - மார்பிலேயுமுடையவன்'' என்றந்வயம். ''மாயங்களே'' என்றவதாரார்த்தம்-காரணம் இத்யாதி. ... காரணம்பந்தமோக்ஷயோ: இத்யாதி. கீழே ''எனக்கெவ்வுலகம் நிகர்'' என்றாரே; இங்கே ''நீள்நிலத்து'' என்பானென்? என்ன-பரமபதத்தை இத்யாதி அதுக்கடியேதென்ன-தம்மைப் போலே இத்யாதி. (எ)

நீள்-பெரிய, நிலத்தொடு - பூமியோடே, வான் - ஆகாசமும், வியப்ப - விஸ்மயப்படும்படியாக, நிறை - (வாணனொருவனுமே யெதிராயிருக்கப் படைத்துணைக்கு வந்த தனித்தனியே ப்ரதாநரான ருத்ரஸுப்ரஹ்மண்யாதிகளோடேகூட) பஹுபரிகர பூர்ணமான, பெரும்போர்கள் - மஹாயுத்தங்களை, செய்து - பண்ணி, வாணன் - பாணனுடைய, ஆயிரந்தோள் - (யுத்தகண்டூதிப்ரசுரமான) ஆயிரந்தோள்களையும், துணித்ததும்-துணித்ததுவும், உட்பட - முதலாக, மற்றும்—, பல - பலவாயுள்ளவையாய், மாணியாய் - (அர்த்தியான) ப்ரஹ்மசாரியாய், நிலம் - பூமியை, கொண்ட - பரிக்ரஹித்த, மாயன் - க்ருத்ரிமனாய், என்-அந்தக்ருத்ரிமத்தை யெனக்கு ப்ரகாசிப்பித்த, அப்பன்தன்- உபகாரகனான க்ருஷ்ணனுடையதான, மாயங்கள் - ஆஶ்சர்யசேஷ்டிதங்களை, காணும்- அபரோக்ஷித்தநுபவிக்கும், நெஞ்சு - நெஞ்சை, உடையேன்-;இனி-,எனக்கு-,என்ன-, கலக்கம்-, உண்டு - உண்டு? அவிதேயசித்தர்க்கு இறே ஸ்வரக்ஷணே ஸ்வாந்வயஅந்யரக்ஷ்யத்வாதிகளாலுள்ள கலக்கமுள்ளது.

இ.—எட்டாம்பாட்டில், பாணவிஜய ப்ரபூவமான க்ருஷ்ணசேஷ்டிதங்களை அநுஸந்திக்கும் நெஞ்சுடைய எனக்கு ஒருகலக்கமில்லையென்கிறார். [நீணிலத்தொடு வான்வியப்ப] - பரப்பையுடைத்தான பூமியில் உள்ளாரோடே தேவர்களுங்கூட விஸ்மயப்படும்படி பராபிபவஸாமர்த்யத்தையுடைய தேவர்களோடு, எளியரான மநுஷ்யர்களோடு வாசியற ஆஶ்சர்யப்படும்படி இருக்கை. "ராஜ நீயஸூவிக ஜெ௨:" என்று எதிரிகளுங்கூட விஸ்மயப்படும்படி இருப்பது. [நிறை பெரும்போர்கள்செய்து] - வலிதாய்ப் பெரிதான யுத்தத்தைப்பண்ணி. [வாணன் இத்யாதி] - அப்ராப்தவிஷயத்திலே அஞ்ஜலிபண்ணினதுக்கு ப்ராயஶ்சித்தம் பண்ணுவாரைப்போலே பாணனுடைய பாஹுவநத்தை ச்சேதித்ததும். உஷை பித்ருஹீநையாகாமைக்காக இறே கொல்லா

[உட்பட மற்றும்பல] - "பாணனைரக்ஷிக்கிறேன்" என்று எறட்டுக் ...., பசுவும்குட்டியும் தானுமாக முதுகிட்டுப்போனபடியும், "க்ஷ்டி க்ஷ ஷெஹாவா ஹெரா ஜா நெகவா०வ ரா ஷொத்ஜெ" என்று முதுகிலே அம்பு தைத்தபின்பு ஸர்வேஶ்வரனை அறிந்தபடியும்; வேறும் அநேகம். [மாணியாய் நிலங்கொண்ட] - ஆஶ்ரித ரக்ஷணத்திலே, அர்த்தியாய்த்தன்னை அழியமாறி ரக்ஷித்தவன். [மாயன்]-தன்னுடைமையைப் பிறரதாக்கி இரந்து, சிறுகாலைக்காட்டிப் பெரியகாலாலே அளந்துகொண்டும், தன் அழகாலும் ஶீலத்தாலும் ஶுக்ராதிகள் வார்த்தை செவிப்படாதபடி மஹாபலியை எழுதிக்கொண்டும், இப்படி ஆஶ்சர்யசேஷ்டிதங்களை யுடையவன். [என்னப்பன்] - அவர்கள் தலையிலே திருவடிகளைவைத்த இது தம்பேறாக நினைத்திருக்கிறபடி. இப்படி தனித்தனியே அநுபவித்துமுடிக்கவொண்ணாத ஆஶ்சர்யசேஷ்டிதங்களையேஅநுஸந்திக்கும் நெஞ்சையுடையேன். [காணும் நெஞ்சு] - அநுஸந்திக்கும் நெஞ்சு. "நெஞ்சென்னும் உட்கண்" என்னக்கடவதிறே. அங்ஙனன்றியே, "*முடியானேயிற் கரணங்களையுடையாராகையாலே, மநஸ்ஸு சக்ஷுரிந்த்ரியவ்ருத்தியையும் லஷிக்கவற்றானபடி சொல்லுகிறது" என்று பிள்ளான் பணிக்கும். [எனக்கினிஎன்னகலக்கமுண்டே] - இதர தேவதைகளை "ரக்ஷகர்" என்று இருக்கிற கலக்கமும், ஈஶ்வரனுடைய ர ...ில் அதிஶங்கைபண்ணும் கலக்கமும், "தனக்குத்தானே கடவன்" என்கிற கலக்கமும்இல்

ஈடு.—எட்டாம்பாட்டு. பாணவிஜயப்ரமுகமான க்ருஷ்ணசேஷ்டிதங்களையே அநுஸந்திக்கும் நெஞ்சையுடைய எனக்கொரு கலக்கமில்லை என்கிறார்.

[நீள்நிலத்தோடுவான்வியப்ப] - பூமியிலுள்ளாரோடு ஸ்வர்க்கத்திலுள்ளாரோடு வாசியற விஸ்மயப்பட. கண்டதுக்கெல்லாம் ஆஸ்சர்யப்படும் மநுஷ்யரோடொக்க, ஒன்றுக்கும் விக்ருதராகாதே தந்தாமைப் போரப்பொலியநினைத்திருக்கும் தேவர்களும் விஸ்மயப்படும்படி. கும்பிடுவாரோடு கும்பிடுகொள்ளுவாரோடு வாசியறும்படியாக "வியப்ப" என்று மேலேகிடக்கையாலே, * மஞ்சா:க்ரோசந்திபோலே யிருக்கிறது. [நிறைபெரும்போர்கள் செய்து] - குறைவற்ற மஹாயுத்தத்தைப்பண்ணி. அதாவது - ஈஸ்வராபிமாநிகளான ருத்ராதிகளும் கெட்டோடும்படியான போரைச்செய்து. † (பஹுவிதபரிகரபூர்ணமான மஹாயுத்தங்களைப்பண்ணி). [வாணனாயிரந்தோள் துணித்ததும்] - வகாதவிஷயங்களை யநுவர்த்தித்த தோள்களைக்கழித்தபடி. "இவன் கரபாதை ஆற்றமாட்டாமல் கண்டார் காலிலெல்லாங் குனிந்துதிரியாநின்றான்" என்றுஅக்கரத்தைக்கழித்துவிட்டான். [வாணனித்யாதி] - "கைகழியப்போய் ருத்ரனை யாஸ்ரயித்தான், இவன் கரபாதையாற்றுமை" என்று அத்தைப் படைக்கடைத்துவிட்டான். [வாணனித்யாதி] - வாணன் தேவதாந்தரபஜநம்பண்ணுகையிறே அவனுக்கு இங்ஙன்கைபிழைப்பாடுவந்தது" என்று நாட்டார் கைவந்தபடி செய்கைக்காகச் செய்தான். "ஈஸ்வராய" என்றிறே தேஹஸம்பத்தியைக் கொடுத்தது. ஈஸ்வரன் கைவந்தபடி செய்யாதவர்களைக் கைமேலே தண்டிக்கை ப்ராப்தமிறே. ஸர்வேஸ்வரன் தன்னை ஆஸ்ரயிக்கைக்காக இவனோடே கைசெய்திறே அடியிலேவிட்டது. " அத்தை

---

*எட்டாம்பாட்டு - நீள்நிலத்தோடு இத்யாதி. "வாணனாயிரந்தோள் துணித்ததும்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - பாணவிஜய இத்யாதி.*

*பூமியில் இத்யாதி "மஞ்சா:க்ரோசந்தி" என்றாற்போலே- "நீள்நிலம், வான்" என்கிறதென்று கருத்து. அவர்களுக்கு வாசி யேதென்ன - கண்டதுக்கெல்லாம் இத்யாதி வாக்யத்வயம். "நிலம், வான்" என்கிற ஸப்தம் - தேவமனுஷ்யர்களை வஹிக்கும்படி என்? என்ன - வியப்ப இத்யாதி. "நிறை" - பரிகரபூர்ணமான. தலையையறுதே தோள்களைக் கழிப்பானென்? என்ன - வகாத இத்யாதி- வகாத விஷயங்களை - அப்ராப்த விஷயங்களை. "அப்ராப்த விஷயங்களை யநுவர்த்திக்கைக்கடி - யுத்த கண்டூதியால் வந்த செருக்கு" என்று அத்தைக் கழித்துவிட்டானென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச் செய்கிறார்- இவன் கரபாதை இத்யாதி. கரம்-இறையும், கையும். "வகாத விஷயங்களை" இத்யாதி வாக்யத்தை விவரியா நின்றுகொண்டு, கரத்தைக் கழித்தது திவ்யாயுதங்களாலே என்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்- கைகழியப்போய் இத்யாதி. படையென்று - ஆயுதமும், சேனையும். படைக்கடைத்துவிட்டான் - திருவாழிக்குச் செலவிட்டானென்றும், சேனைக்குச் செலவிட்டானென்றும். அடைத்துவிடுகை - செலவிடுகை. "அப்ராப்த விஷயத்தை யாஸ்ரயித்த கைகள்" என்று இவற்றை சேதித்தால் நாட்டார் கைவந்தபடி தொழுகைக்கு உறுப்பாயிருக்குமென்று செய்தானென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்-வாணன் இத்யாதி. கைபிழைப்பாடு-கைகள்அவனைவிட்டுப்போகை. கைவந்தபடி - கைக்குத்தகுதியானபடி. கைவந்ததெதுக்காக? என்ன-ஈஸ்வராய இத்யாதி. அப்ராப்த விஷயத்தைத் தொழுத கைகளை ஈஸ்வரன் சேதிக்கை யபர்யாயமாயிராதென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - ஈஸ்வரன் இத்யாதி. கைவந்தபடி - சொன்னபடியென்று சாடுவுக்கர்த்தம். கைமேலே - ப்ரத்யக்ஷமாகவென்றும், ஸத்ய: என்றும் சாடு; கையை சேதிக்கவென்று ஸ்வபாவார்த்தம். "ஸம்ஸாராய நிவேதிதாய" என்கிற ஸ்லோகார்த்தத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார்- ஸர்வேஸ்வரன் இத்யாதி. கைசெய்தென்றது - கையை இவனோடே கூட்டியென்றும், அலங்கரித்தென்றும். சாஸ்த்ரவஸ்யனன்றிக்கே, யுத்த கண்டூதியாலே வந்த அஹங்காரமுடையவனாகையாலே*

மதித்திலன், இவன்அறக்கைவிஞ்சினன்'' என்று தண்டித்துவிட்டான். தேவதாந்தரத்தை யாஶ்ரயித்துக் கையிலே ஃலம்பெற்றுவிட்டான். ஹ ஃவத்ஸமாஶ்ரயணம் பண்ணுகைக்குக் கைம்முதலில்லாமைவிட்டானன்றே. † (ருத்ரனையாஶ்ரயித்ததோன்றுமேயிறே அவனைக் கைதப்பிற்று.) [உட்படமற்றும்பல] - அவனுக்கும் பெருநிலைநின்றாரையும் முதுகுகாட்டும்படி பண்ணுவித்தபடி: ''க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ'' (க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ)-என்று பின்பிறே அவன் இவனையுள்ளபடியறிந்தது. [மாணியாய்நிலங்கொண்ட மாயன்] - பேறில் ஜீவிப்பானுய்ப்பெருவிடில் முடிவானும்படியாய், இரப்பிலே தழும்பேறின வடிவைக்கொண்டு. இவர் அவ்வவதாரத்தில் கால்வாங்குகிறு ரல்லர்; கண்ணழிவற்ற அழகாலும், வரையாதே யெல்லாரையும் தீண்டுகையாலும், ஆஶ்ரிதவிஷயத்தி லோரத்தாலும், செய்யும் ஆனைத்தொழில்களாலும் க்ருஷ்ணவதாரத்தோடொத்திருக்கையாலே ஸ்ரீவாமநாவதாரத்தை அநுஃவிக்கிறுர். [நிலங்கொண்டமாயனென்னப்பன்] - ''திருவுலகளக்க'' என்றுஔநவ்யாஜத்தைபிட்டு அளந்துகொண்டது தம்மையென்றிருக்கிறுர். [அப்பன் தன்மாயங்களே காணும் நெஞ்சுடையேன்] - '' '* முடியானேயிற்கரணங்களையுடைய ஆழ்வாராகையாலே, நெஞ்சுதானேநினைக்கவும்வற்றாய்க் காணவும் வற்றாயிருக்கும்' என்று பிள்ளான்பணிக்கும்'' என்றருளிச்செய்வர். அதவா, ''கட்கண்'' என்றும், ''உட்கண்'' என்றும் சொல்லுகிறபடியே நெஞ்சுதன்னையும் கண்ணாகச்சொல்லக்கடவதிறே; அதாகவுமாம். [எனக்கினியென்னகலக்கமுண்டே] - ''இவ்விஷயத்தைக் காணப்பெற்றிலோம்''

ப்ர.—[நீள்நிலத்தொடு இத்யாதி]—[உட்படமற்றும்பல]—வஶுதைஂபெரு த்ருயஸிஂபெரு, ''ஹிரெபைாஹாவநெதந்தாகூாஸுஂயோவஸிஉநஃ । உாஉாகூாபைஷாணநாஶாய விஜ்ஞாதஸிவாாஙிஷா॥௬௧॥ ஸஉவெதூாஹமெரவிநூஂஸாஹுவஸிவபுஉாஉாவதிஃ । விஜொகூாவாணஂஜொஉபுணூஜூஉாஸூாவவஷிபுணூ॥ ௪௦॥ ாஉஜ்ஃ॥ கூஷ்ணகூஷ்ண உஹாவாஹொஜாநெகூாஂவாாஷொதுஉஂ । வபெருஶஂவபுாஉோதாநஉநாஷிநியநஂவாபு॥௪௧॥

இவன் கையைக் கழித்துவிட்டான் என்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறுர் - அத்தை மதித்திலன் இத்யாதி. கைவிஞ்சினன் - கைக்கடங்காதவனானனென்றும், கைகளாலே அதிகனானனென்றும். அவன் பண்ணின தேவதாந்தரபஜநத்துக்கு கரச்சேதமே ஃலமாய்விட்டதென்னுமத்தைரஸோக்தியாக அருளிச்செய்கிறுர் - தேவதாந்தரத்தை இத்யாதி. கையிலே ஃலம் பெற்றுவிட்டான் - ஸத்யஃலம்பெற்றுவிட்டானென்றும், கரச்சேதமாகிற ஃலம்பெற்றுவிட்டானென்றும். இக் கைகள் பகவத்ஸமாஶ்ரயணார்ஹமல்லாமைவிட்டானன்று ; கர்வத்தாலே விட்டானென்னுமத்தையும் ரஸோக்தியாக அருளிச்செய்கிறுர்-பகவத்ஸமாஶ்ரயணம் இத்யாதி. கைம்முதலில்லாமை - மூலதநமில்லாமை என்றும், முதலிலே கையில்லாமலென்றும். விட்டானன்றே - கர்வத்தாலே விட்டானென்றபடி. பெருநிலை நின்றாரையும் - ஸஹாயமாய் நின்ற ருத்ராதிகளையும். ''ஶக்ராத்ஞாநிவெஶ'' என்னும்படியிருக்கிறவன் ஸர்வேஶ்வரனோடு எதிரிடுவானென்? என்ன - க்ருஷ்ண க்ருஷ்ண இத்யாதி. ''க்ருஷ்ண க்ருஷ்ண உஹாவாஹொஜாநெகூாஂவாாஷொதுஉஂ । வபெருஶஂவபுாஉோதாநஉநாஷிநியநஂவாபு'' இதி,ருத்ரஃபஞ்சமேம்ஶே த்ரயஸ்த்ரிம்ஶே. ''மாணியாய்'' என்றதுக்கர்த்தம்-பேறில் இத்யாதி. க்ருஷ்ணவதார ஸக்தரான இவர் வாமநாவதாரத்தே போவானென்? என்ன - இவ்வவதாரத்தில் இத்யாதி. அதுக்கடியேதென்ன - கண்ணழிவற்ற இத்யாதி. நெஞ்சாலே காணக்கூடுமோ? என்ன-முடியானேயில் இத்யாதி. பரிஹாராந்தரம் - கட்கண்என்றும் இத்யாதி. । ''நெஞ்

என்கிறகலக்கம்எனக்குண்டோ ? அதவா, தேவதாந்தரங்களை "ரக்ஷகர்" என்றிருக்கிற கலக்கமும், ஈஶ்வரனுடைய ரக்ஷணத்திலே அதிசங்கைபண்ணும் கலக்கமும், "தானே தனக்குக்கடவன்" என்னும் கலக்கமும்இல்லை. (அ)

---

# ஒன்பதாம் பாட்டு.

---

கலக்கஏழ்கடல்ஏழ்மலை உலகேழுங்கழியக்கடாய்
உலக்கத்தேர்கொடுசென்றமாயமும் உட்படமற்றும்பல
வலக்கையாழி இடக்கைச்சங்கம் இவையுடைமால்வண்ணனை
மலக்குநாவுடையேற்கு மாறுளதோ இம்மண்ணின்மிசையே ?

**ஆ.**—(கலக்க.) - வைதிகபுத்ராநயநார்த்தமாக எழுந்தருளுகிற படியைக் கண்டு ப்ரீத்யதிஶயத்தாலே சேதநாசேதந ஸமஸ்த வஸ்துக்களும் க்ஷுபிதமாம்படி, ஸர்வலோகங்களையுங் கழிய அநாயாஸேந திருத்தேரைத் திருநாட்டிலே செல்லக்கடாவி யருளின ஆஶ்சர்யமுட்பட மற்றுமுள்ள ஸர்வதிவ்யசேஷ்டிதங்களையும், ஆஶ்ரிதவாத்ஸல்யைக ஸ்வபாவனுகையாலே தத்விரோதி நிரஸநார்த்தமாக சங்க சக்ராதி ஸர்வதிவ்யாயுதங்களையும் ஏந்திக்கொண்டிருக்கிற அழகையும், எம்பெருமானையுங்கூட ஈடழிக்கும்படி * செவிக்கினிய செஞ்சொல்லால் ஏத்தப்பெற்ற என்னோடு ஒப்பாருளரோ இந்த லோகத்தில் ? என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ஸர்வேஶ்வரனை மலங்கப்பண்ணும் நாவீறுடைய எனக்கு, பூமியில் எதிர்உண்டோ ? என்கிறார். [கலக்கவேழ் கடலேழ் மலையுலகேழுங் கழியக்கடாய்] - ஏழுகடலையும் ஏழுமலையையும் ஏழுலோகங்களையும் கழியத்தறையிலே நடத்தினாற்போலே ஒக்கநடத்தி. இவையெல்லாம் கலங்க என்றுமாம். ஆவது - அதிருகை. உலக்க - முடிய. [மால்வண்ணனை]!- கறுத்த திருநிறத்தை உடையவனை.

ப.—அநந்தரம, பாதவஅஸாதாரணசிஹ்ந யுக்தனான க்ருஷ்ணனுடைய வைதிகபுத்ராநயந ப்ரமுவமான அதிமாநுஷசேஷ்டிதங்களை ஸ்துதிக்கும் நாவையுடைய எனக்கு இப்பூமியில் எதிராவாரார் ? என்கிறார்.

ஏழ்-ஏழு, கடல் - கடலையும், ஏழ்-ஏழு, மலை-மலையையும், ஏழ்-ஏழு, உலகும் - லோகத்தையும், கலக்க - (ஜலஸ்த்தலவிபாகம் தெரியாதபடி)பொருந்தும்படியாக, கழிய- அண்டகபாலத்துக்கவ்வருகே போம்படியாக, கடாய் - நடத்தி, (காரணமான அவ்யக்த பர்யந்தமாக), தேர் - கார்யைகதேசமான தேரை, கொடு - கொண்டு, உலக்க - முடிய, சென்ற - சென்ற, மாயமும் - ஆஶ்சர்யமும், உட்பட - முதலாக, மற்றும் - மற்றும்,

---

முட்கண்" என்னக்கடவதிறே. "என்ன கலக்கம்" என்றதுக்கு பாவம் - இவ்விஷயத்தை இத்யாதி. பாவாந்தரம்-அதவா இத்யாதி. முன்னிரண்டு கலக்கமும் - வைராணனுக்கு. மூன்றாம் கலக்கம் - மஹாபலிக்கு. (அ)

பல - (வைதிகபுத்ரர்களுடைய ஸஶரீராநயநாவிளம்பாகமநரூபமான) பல சேஷ்டிதங்களையும், (பரத்வசிஹ்நமான), வலக்கை ஆழி இடக்கை சங்கம் இவை - வலக்கையில் திருவாழியும் இடக்கையில் திருச்சங்குமாகிற இவ்வஸாதாரணசிஹ்நங்களையும், உடை - உடைய, மால்வண்ணனை - ஶ்யாமளவிக்ரஹயுக்தனை, மலக்கும் - ஹர்ஷப்ரகர்ஷத்தாலே யலமாக்கும்படிபண்ணும், நா - நாவீறு, உடையேற்கு - உடைய எனக்கு, இ-இந்த, மண்ணின் - பூமியின், மிசை - மேலே, மாறு - எதிர், உளதோ - உண்டோ? ஈஶ்வரனுக்கு மநோஹாரியான வாக்கையுடையார் வேறுபூமியிலில்லையென்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், வைதிகபுத்ராநயநந்தொடக்கமான அபதானங்களையுடைய ஸர்வேஶ்வரனை மலக்கும் நாவீறுடைய என்னோடு ஒப்பாருண்டோ? என்கிறார். [கலக்க இத்யாதி] - ஏழுகடலையும் ஏழுமலையையும் ஏழுலோகங்களையும் கழிய. தறையிலே நடக்கிறாற்போலே நடத்தி நீருக்கும்மலைக்கும் ஆகாசத்துக்கும் வாசிதெரியாதபடி நடத்தி. சலங்கவென்றாய் - எங்கும்ஒக்க அதிநடத்தினென்றுமாம். [உலக்க இத்யாதி] - தமஸ்ஸுக்கு அவ்வருகே செல்லமுடியத் தேரைக்கொண்டு சென்ற ஆஶ்சர்யம். உலக்க - முடிய. கார்யரூபமான தேரைக் காரணத்திலே கார்யாகாரம் குலையாமல் நடத்தின ஆஶ்சர்யம். [உட்பட மற்றும்பல] - வைதிகபுத்ரர்களை இத்தேசத்தில்நின்றும் கொடுபோருகையும், போனசெவ்வியிலே கொடுவந்து கொடுக்கையும், ப்ராதஸ்ஸவநத்துக்குப்பின்பு மாத்யந்திநஸவநத்துக்கு முன்னே இது அடங்கச்செய்கையும். [வலக்கையாழி இத்யாதி] - “ தேஜஸாவரஶோயாதா ஶூலவத்ரமஹாயுதஃ” என்று - ஸர்வாயிகவஸ்துவுக்கு லக்ஷணமாயிற்று திவ்யாயுதங்கள். வலக்கையிலே திருவாழியும் இடக்கையிலே ஸ்ரீபாஞ்சஜந்யமும் இவற்றையுடையவனுமாய், கறுத்தநிறத்தை உடையவனை. “ ‘மால்வண்ணனை’ என்ன அமைந்திருக்க, திவ்யாயுதங்களைச்சொல்லுவானென் ?” என்று கஞ்சனூர்வண்டுவரைப் பெருமாள் பட்டரைக்கேட்க, “அவிக்ருதவஸ்துவுக்கு லக்ஷணமிறே திவ்யாயுதங்கள்” என்றார். [மலக்கு நாவுடையேற்கு] - “ஸ்வாக்ஷநாஹஃ” என்கிற ஸர்வாயிகவஸ்துவை விக்ருதமாக்கும்நாவீறுடைய எனக்கு. சோளேந்த்ரஸிம்ஹனை யுளுக்காக்கப்பண்ணவல்ல நாவைப்படைத்த எனக்கு. [மாறுளதோ] - பூமியில்எதிர்உண்டோ? ஈஶ்வரன் உளுக்காக்கும்படி கவிசொல்லவல்லார் தம்மையொழியச் சிலவர் இல்லாமையாலே, வேறு என்னோடு ஒப்பார்இல்லை என்கிறார்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. வைதிகபுத்ராநயந முதலான அபதாநங்களையுடைய ஸர்வேஶ்வரனை மலக்கும் நாவீறுடைய என்னோடு ஒப்பாருண்டோ ? என்கிறார்.

[கலக்கவேழ்கடலேழ்மலையுலகேழும்கழியக்கடாய்] - ஏழ்கடலேழ்மலையுலகேழும் கலக்க கழியக்கடாய். கலக்க - ஒக்க: அதாவது - தேரைநடத்துகிறபோது நீரோடு மலையோடு தறையோடு வாசியற ஒக்கநடத்தினபடி. அன்றிக்கே, கலக்க - ஏழ்

ஒன்பதாம்பாட்டு —கலக்கஇத்யாதி.பூர்வார்த்தத்தைக்கடாக்ஷித்துஅவதாரிகை-வைதிக இத்யாதி. “மலக்குநாவுடையேற்கு” இத்யாதியைப்பற்ற - மலக்கும் நாவீறுடைய இத்யாதி.

“ஏழ்கடலேழ்மலையுலகேழையும் கழிய நடத்துகிறபோது - கலக்க - கடாய்” என்று ப்ரதமத்ருதீயார்த்தங்களுக்கு அந்வயம். ஒக்கநடத்துகையாவது - நீருக்கும்மலைக்கும் ஆகாசத்துக்கும்

கடல் என்று கடலுக்குவிசேஷணமானபோது, க்ஷோஹத்தை யுடைத்தான கடல் என்றபடி. அங்ஙனுமன்றிக்கே, ஏழ்கடலேழ்மலையுலகேழையும் கழியநடத்துகிறபோது அதிர நடத்தியேன்றுமாம். [உலக்கத்தேர்கோடுசென்றமாயமும்] - கார்யமான தேரைக் காரணமான மூலப்ரக்ருதியிலே நடத்துகிறவிடத்தில் அழியாதபடி நடத்தின ஆஸ்சர்யமும். உலக்க-முடிய. [உட்படமற்றும்பல] - வைதிகபுத்ரர்களை இத்தேசத்தினின்றும் கொண்டு போருகையும், போனசெவ்வியிலே கொடுவந்து கொடுக்கையும், ப்ராதஸ் ஸவநத்துக்குப் பின்பு மாத்யந்திநஸவநத்துக்கு முன்பே இதடங்கச்செய்கையும். [வலக்கை யித்யாதி] - இவ்விடத்தை பட்டரருளிச்செய்யாநிற்கச்செய்தே கஞ்சனூரில் வண்டுவரைப்பெருமாளிருந்தவர், "'மால்வண்ணனை மலக்கு நாவுடையேன்' என்னவமையாதோ, 'வலக்கையாழியிடக் கைச்சங்கமிவையுடை'என்கிற இதுக்குத்தாத்பர்யமேன் ?" என்ன:— "சோளேந்த்ரசிங்கனை யுளுக்காக்கப்பண்ணுகிறேன் என்கிறார்காண்!" என்றருளிச்செய்தார். ஸர்வாயிக வஸ்துவுக்கு லக்ஷணமிறே சங்க சக்ரங்கள். "அவாக்யநாதர:" (அவாக்யநாதர:) என்கிற ஸர்வாயிகவஸ்துவை விக்ருதமாக்கும் நாவீறுடையேனென்கிறார். [மால்வண்ணனை] - கறுத்த நிறத்தையுடைய ஸர்வேஶ்வரனை. [மலக்குநாவுடையேற்கு] - இவருக்தியில் கலங்குமாகாதே அவன்தான். இவர் கலங்கிச்சொல்லச் சமைந்தாற்போலே யாகாதே அவனும் கலங்கிக் கேட்கச் சமைந்தபடி. [மாறுளதோ இம்மண்ணின்மிசையே] - பரமபதத்தில் அநுபவம் வாய்ப்புகுநீராகையாலே அத்தை யொன்றாகநினைத்திருக்கிறிலர். † (இனியுண்டாகில் பூமியிலே; அதிலுமில்லையேன்கிறார்.) [இம்மண்ணின்மிசை - மாறுளதோ] - "ஒப்புண்டு, இல்லை"என்று அதிசங்கைபண்ணுகைக்குத்தான் விஷயமுள்ளது நித்யவிபூதியிலேயன்றோ ? (க)

*தறைக்கும் வாசிதெரியாதபடி நடத்துகை. கழிய - அதிக்ரமிக்கும்படி. த்விதீயார்த்தத்துக்கு, கலக்கத்தை - க்ஷோபத்தை உடையவென்றபடி. ப்ரஸங்காதைதிஹ்யம் - இவ்விடத்தை இத்யாதி. சோளேந்த்ரசிங்கனென்று - பெருமாளுடைய ஆனை. உளுக்காக்க - இருக்கும்படி. அதாவது ஈஸ்வரனென்கிற மத்தகஜமானது படிந்துகொடுக்கும்படி பண்ணுகிறேனென்றபடி. "வலக்கையாழி" இத்யாதியாலே - சங்கசக்ர விசிஷ்டனான ஆகாரந் தோற்றுமதொழிய, பெருமை சொல்விற்றில்லையே? என்ன - ஸர்வாயிக இத்யாதி. "சோளேந்த்ர" இத்யாதிவாக்யத்தால் ஃலிதம் - அவாக்யநாதர [illegible]. "மால்" - கறுப்பு. இவருக்திமாத்ரத்திலே ஸர்வாயிகன் கலங்குமோ? என்ன-இவருக்தியில் இத்யாதி. ஸர்வாயிகன் கலங்குகைக்கு ஹேது - வ்யாமோஹமென்று விவக்ஷித்து, அதுக்கு இவர் தம்மை த்ருஷ்டாந்தமாக்கிக்கொண்டருளிச்செய்கிறார்-இவர் இத்யாதி. உபயவிபூதியிலும்ஒப்பில்லையென்னாதே,"மண்மிசைமாறில்லை" என்பானென்? என்ன-பரமபதத்தில் இத்யாதி. வாய்ப்புகுநீர்-வாயளவுஜலம். அதாவது - உன்மஸ்தகாநுபவமென்றபடி, பரிஹாராந்தரம் - ஒப்புண்டு இத்யாதி. ஆக, "மண்ணின்மிசை - மாறுளதோ" என்றதுக்கு - பரமபதத்திலநுபவம்உன்மஸ்தகமாய், யரித்திருந்தநுபவிக்கப் போகாமையாலே யத்தைவிட்டு, யரித்திருந்தநுபவிக்கலான இந்தவிபூதியில் எனக்கெதிருண்டோ ? என்கிறாரென்று மூந்தின பாவம். "இம்மண்ணின் மிசை - மாறுளதோ" என்கையாலே - "எதிருண்டு, இல்லை" என்று சங்கிக்கைக்கு விஷயம் பரமபதத்தில் உண்டானால் உண்டித்தனை யொழிய, இங்கில்லையென்கிறார் என்று இரண்டாம்பாவம். மலக்குநாவுடையேற்கு - அலமாக்கும்படி பண்ணுகிற நாவீறுடைய எனக்கு என்று ஸப்தார்த்தம்.* (க)

## பத்தாம் பாட்டு.

மண்மிசைப்பெரும்பாரம்நீங்க ஓர்பாரதமாபெரும்போர்
பண்ணிமாயங்கள்செய்து சேனையைப்பாழ்பட நூற்றிட்டுப்போய்
விண்மிசைத்தன தாமமேபுக மேவியசோதிதன்தாள்
நண்ணிநான்வணங்கப்பெற்றேன் எனக்கார்பிறர்நாயகரே?

ஆ.—(மண்மிசை.)—பூபாராவதரணார்த்தமாக சுதர்ஸநேந பாஸ்கராச்சாதநாதிகளைப் பண்ணியருளி மஹாபாரதயுத்தத்தைப் பண்ணுவித்து ஸர்வஸேனையையும் நசிப்பித்து ப்ரதிகூலவிஜய ஜநிதநிரதிஶய தேஜஃபரிவ்ருதனாய்க்கொண்டு ஸ்வகீய திவ்ய பரம வ்யோமத்திலே எழுந்தருளின எம்பெருமானுடைய ஸர்வதிவ்யாவதாரங்களையும் ஸர்வ திவ்யசேஷ்டிதங்களையும் ஸர்வதிவ்யகல்யாணகுணங்களையும் ஸர்வகாலமும் அநுபவிக்கப்பெற்ற என்னில் மேற்பட்டாருண்டோ? என்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், ஸம்ஸாரத்தினுள்ளேவந்து திருவவதாரம் பண்ணியருளி, நிரபாயமான திருநாட்டிலே போய்ப்புக்கபடியை அநுபவிக்கப்பெற்ற எனக்கு வேறு சில நிர்வாஹகர் வேண்டும்படி குறையுடையேனல்லேன் என்கிறார். [மாயங்கள் செய்து] - ஜயத்ரதவதத்தினன்று திருவாழியாலே ஆதித்யனை மறைக்கை தொடக்கமான மஹா ஆஶ்சர்யங்களையுடையவனை. [நூற்றிட்டு] - மந்த்ரித்து.

ப.—அநந்தரம், பூபாரநிர்ஹரணார்த்தமாக பாரதசமரத்தைப் பண்ணிப்போய் ஸ்வாஸாதாரணதாமத்தை ப்ரவேசித்த பரஞ்ஜ்யோதிஸ்ஸ்வரூபனான க்ருஷ்ணன் திருவடியைக்கிட்டி யநுபவிக்கப்பெற்றேன்; எனக்கு வேறுநியாமகருண்டோ? என்கிறார்.

மண் - பூமியின், மிசை - மேலே, பெரு - (விஶ்வம்பரையானவளுக்கும் பொறுக்க அரிதாம்படி) பெரிதான, பாரம் - பாரம், நீங்க - நீங்கும்படியாக, ஓர் - அத்விதீயமான, பாரதம் - பாரதம், ஆ - ஆகிற, பெரு - பெரிய, போர் - யுத்தத்தை, பண்ணி - உண்டாக்கி, மாயங்கள் - (சங்கல்பம்குலைந்து ஆயுதமெடுக்கை பகலையிரவாக்குகை தொடக்கமான) ஆஶ்சர்யசேஷ்டிதங்களை, செய்து - செய்து, சேனையை - எல்லாச்சேனையும், பாழ்பட - பாழ்படும்படிக்கீடாக, நூற்றிட்டு - சூழ்ந்து முடித்து, போய் - வந்தகார்யம் சமைந்தவாறே யெழுந்தருளி, விண்மிசை - பரமாகாசத்திலே, தன - தனக்கஸாதாரணமான, தாமமே - வாஸஸ்தாநத்திலே, புக மேவிய [மேவி - புக்க] சென்றுப்ரவேசித்த, சோதிதன் - ஜ்யோதிஸ்ஸ்வரூபனான க்ருஷ்ணனுடைய, தாள் - திருவடிகளை, நண்ணி - கிட்டி, நான் -, வணங்க - சேஷவ்ருத்திபண்ண, பெற்றேன் - பெற்றேன்; எனக்கு - (இப்படி கைங்கர்ய ஸாம்ராஜ்யத்தைப்பெற்று * ஸ்வராட்டான) எனக்கு, பிறர் - வேறு, நாயகர் - நியாமகர், ஆர் - ஆர்? நான் * அநந்யாதிபதியன்றோவென்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், ஸம்ஸாரத்திலேவந்துஅவதரித்து நிரபாயமாகப் பரமபதத்திலே புக்கபடியை அநுஸந்திக்கப்பெற்ற எனக்கு வேறு சிலர் நிர்வாஹகர் வேண்டும்படி குறையுடையவனோ நான்? என்கிறார். [மண்மிசைப் பெரும்பாரம்நீங்க] - த்ரிபாத்விபூதியிலே, "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவாஃ" என்கிறபடியே கனத்

தார் உண்டாய் இருக்கச்செய்தேயும் பாரமில்லையிறே, அஹங்காரஸ்பர்ஶமுடையார் இல்லாமையாலே. ஆகையிறே - மண்மிசைப் பெரும்பாரம் என்று விசேஷிக்கிறது. [பெரும்பாரம்] - விஶ்வம்பரை பொறுக்கவொண்ணாதிருக்கை. [ஓர் பாரதம்] - மஹாபாரதம்: அதாகிற பெரும்போரை விளைத்து. [மாயங்கள்செய்து] - பகலை இரவாக்கியும், "ஆயுயம் எடேன்" என்று ஆயுயம் எடுத்தும். [சேனையைப்பாழ்பட] - உபய ஸேனையிலும் உள்ள பூபாரம் அடங்க வெறுந்தறையாம்படி. [நூற்றிட்டு] - மந்த்ரித்து. "யஸ்ய மந்த்ரீ ச கோபதா" என்னக்கடவதிறே. "ஆயுதம் எடுக்கவொட்டோம்" என்கையாலே, சூழ்பாலே அழித்தான்.

[போய் விண்மிசை] - பொய்யாஸனம் இடுவார், பரிபவிப்பாரான தேஶத்தை விட்டுப்போய், பரிவரேயான பரமபதத்திலே. [தனதாமமேபுக மேவியசோதி] - "ஸ்வஸ்தாநமாஸ்தாய" என்கிறபடியே தனக்கு அஸாதாரணமான ஸ்தாநத்திலே போய்ப்புக்கான். அவன் திருவடிகளைக்கிட்டி நான் அநுபவிக்கப்பெற்றேன்; எனக்கு வேறு நியந்தாக்கள் உண்டோ? புருஷார்த்த காஷ்டையாக ததீயரை நினைத்திருக்கையாலே, அவர்களைப் பிறர் என்கிறிலர்.

ஈடு.—பத்தாம்பாட்டு. அபாயபஹுளமான ஸம்ஸாரத்திலே வந்தவதரித்து, நிரபாயமாகப் பரமபதத்திலேபோய்ப் புக்கபடியை யநுஸந்திக்கப்பெற்ற எனக்கு வேறே சிலர் நிர்வாஹகர் வேண்டும்படி குறையுடையவனோநான் என்கிறார்.

[மண்மிசைப்பெரும்பாரம்நீங்க] - 'விஶ்வம்பரை' என்றும், 'க்ஷமை, பொறை' என்றும் பேரையுடைத்தாய்ப் டரிக்கக்கடவதான பூமியாலும் பொறுக்க வொண்ணாதபடியிறே துர்வர்க்கம்திரண்டபடி. த்ரிபாத்விபூதியில் "யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:" (யத்ரபூர்வேஸாத்யாஸ்ஸந்திதேவா:) என்கிறபடியே—கனத்தாருண்டாயிருக்கச்செய்தேயும், பாரமில்லையிறே அஹங்காரஸ்பர்ஶமுடையாரில்லாமையாலே. தங்கள்பாரத்தை அவன்தலையிலே வைத்திருக்கும் அவர்களிறே யவர்கள். [ஓர் பாரதமாபெரும்போர்பண்ணி]-அத்விதீயமான மஹாபாரதமாகிற மஹாயுத்தத்தைப்பண்ணி. [மாயங்கள்செய்து] - பகலையிரவாக்குவது, "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுப்பது, எதிரியுடைய மர்மத்தைக்காட்டிக்கொடுப்பதுஆனவை தொடக்கமானவற்றைச் செய்து. [சேனை

---

ப்ர.—[மண்மிசைஇத்யாதி]—பாரா ஷஷ்டீ, "தேஹநாகம் ஸஹி ஸாதநஸ்ஸந்தி யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:".

---

பத்தாம்பாட்டு.—மண்மிசை இத்யாதி. "போய்விண்மிசைத்தனதாமம்" இத்யாதிகளையும், "நண்ணிநான்" இத்யாதிகளையுங் கடாக்ஷித்தவதாரிகை - அபாயபஹுள இத்யாதி.

பாரமென்னாதே "பெரும்பாரம்" என்றதுக்குபாவம் - விஶ்வம்பரை இத்யாதி. இத்தைப்பற்ற மும்மடங்குத் திரளுண்டாயிருக்கவும் நித்யவிபூதிபொறுத்திருக்கவில்லையோ? அத்தைப் பற்ற இதுக்குபாரமேது? என்ன - த்ரிபாத்விபூதி இத்யாதி. இத்தால் - இங்கு "பாரம்" என்கிறது-ஜடபாரமல்ல, அஹங்காரஸ்பர்ஶமே பாரமென்றபடி. நித்யஸூரிகளுக்கு அஹங்காரஸ்பர்ஶமில்லையோ? என்ன - தங்கள் இத்யாதி. த்ரிபாத்விபூதி இத்யாதி வாக்யத்வயமும் - "மண்மிசை" என்றவிசேஷித்ததுக்குபாவம். "ஓர் - மா பாரதப்பெரும்போர்பண்ணி" என்று அந்வயிப்பது. "மாயங்கள் என்கிற

யைப்பாழ்படநூற்றிட்டு] - சேனை வேறுந்தரையாம்படி மந்த்ரித்து. "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச" (யஸ்யமந்த்ரீசகோப்தாச) என்னக்கடவதிறே. "ஆயுதமெடுக்கவொட்டோம்" என்கையாலே, சூழ்ச்சியாலே யழித்தான். [போய்விண்மிசைத்தனதாமமேபுகமேவியசோதி தன்தாள்]-ப்ரதிகூலரை நிரஸித்ததுக்கு மேலேயன்றே இவர்களிருந்த நிலத்திலிராதே பரமபதத்திலேபோய்ப்புகப்பெற்றபடி! என்று உகக்கிறார். போய்யாஸநமிடுவோர், பரிபவிப்பாரான இந்நிலத்தைவிட்டுப்பரிவரேயான பரமபதத்தேறப் போகப்பெறுவதே!*(வந்தகார்யம் சமைந்தவாறே யெழுந்தருளி, பரமாகாசத்திலே தனக்கஸாதாரணமான வாஸஸ்த்தாநத்திலே சென்று ப்ரவேசித்த ஜ்யோதிஸ் ஸ்வரூபனுன க்ருஷ்ணனுடைய திருவடிகளை.) "க்ருத்வா பாராவதரணம்" (க்ருத்வாபாராவதரணம்) இத்யாதி. ப்ருதிவ்யாঃ - பாராவதரணம் - க்ருத்வா - ப்ருதுலோசநঃ - மோஹயித்வாஜகத்ஸர்வம் - ப்ரதிகூலரை யடங்கலும் உழவுகோலாலேவிழவிட்டு, அநுகூலரையடங்கலும் கண்ணாலேவிழவிட்டுப்போனான். "கதஸ் ஸ்வம் ஸ்த்தாநமுத்தமம்" (கதஸ்ஸ்வம்ஸ்த்தாநமுத்தமம்)- விண்மிசைத்தனதாமமேபுக. "உத்தமம்" - கம்ஸாதிகள்துர்யோதநாதிகளால்வரும்அச்சமின்றியே, தனக்குப்பரிவரானவர்களிருக்கிற நிலத்திலேபோய்ப்புகப்பெற்றபடி. ஒருதீர்த்தத்தினன்று நாயிறுபோது ஆண்டானும் எம்பாரும் தங்களிலேசந்தித்து, "அஹங்காரமமகாரதூஷிதராயிருப்பார் பத்துக்கோடிபேர்நடுவே, அதிஸுகுமாரமான திருமேனியைக்கொண்டு பத்துநாளெழுந்தருளி, நிரபாயமாகப்புக்கருளப் பெற்றபடி கண்டதே!" என்று ஒருவரையொருவர் தண்டனிட்டுத் தழுவிக்கொள்ளாநிற்க, சீயர் கண்டேன் என்றருளிச்செய்வர். [நண்ணிநான் வணங்கப்பெற்றேன்]-காலயவநன் ஜராஸந்தன் தொடக்கமானாரைப்போலே எதிரிட்டுக்கிட்டுகையன்றிக்கே, முறையாலேகிட்

---

ப்ர.— [சேனையைப்பாழ்படநூற்றிட்டு] — ஸபாபர்வணி, [ரு-சஅ] த்ருதராஷ்ட்ரঃ, "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தநঃ । ஹரிஸ்த்ரைலோக்ய நாத ஸ்ஸ கிம் தஸ்ய ந நிர்ஜிதம்॥ உ०॥"

---

பஹுவசநத்துக்குபாவம் - பகலே இத்யாதி. மந்த்ரித்ததுக்குப்ரமாணம்—யஸ்யமந்த்ரீ இத்யாதி. "யஸ்ய மந்த்ரீ ச கோப்தா ச ஸுஹ்ருச்சைவ ஜநார்த்தநঃ" இத்யாதி மஹாபாரதே ராஜஸூயே த்ருதராஷ்ட்ரঃ. மந்த்ரிக்கிறதென், திருவாழியாலே ஸம்ஹரிக்கவொண்ணுதோ? என்ன-ஆயுதமெடுக்க இத்யாதி. சூழ்ச்சி - உபாயமும், விசாரமும், க்ருத்ரிமமும். 'போய்" என்று விசேஷித்ததுக்குபாவம் - ப்ரதிகூலரை இத்யாதி. அங்கே போனதுக்குஉகக்கைக்குஇங்குப் பொல்லாங்கேதென்ன-போய்யாஸநம் இத்யாதி. பூபாரத்தைப்போக்கி ஸ்வஸ்த்தாநத்திலேபோனதுக்கு ப்ரமாணம் - க்ருத்வா இத்யாதி. "க்ருத்வா பாராவதரணம் ப்ருதிவ்யாঃ ப்ருதுலோசநঃ । மோஹயித்வா ஜகத்ஸர்வம் கதஸ் ஸ்வம் ஸ்த்தாநமுத்தமம்" இதி மௌஸல பர்வணி. அந்வயிக்கிறார்-ப்ருதிவ்யா இத்யாதி. ஶ்லோகார்த்தம் - ப்ரதிகூலரை இத்யாதி. அதில், ஸ்வஶப்தார்த்தம் - விண்மிசை இத்யாதி. "உத்தமம்" என்றதுக்கர்த்தம் - கம்ஸாதிகள் இத்யாதி. ஸ்வஸ்த்தாநத்திலே போகப்பெற்றது உகப்பாயிருக்குமென்னுமதுக்கு ஸம்வாதம் - ஒரு தீர்த்தத்தினன்று இத்யாதி. நாயிறுபோது-அஸ்தமிக்கிறபோது, "வணங்கி-நான் நண்ண - பெற்றேன்" என்றந்வயித்துபாவம் - காலயவந இத்யாதி. "எனக்கு - பிறர்-ஆர்-நாயகர்" என்றந்வயமாய் - எனக்கு வேறொருவரார் நியாமகரென்று ஶப்தார்த்தம். "எனக்கார் பிறர்

டப்பெற்றேன். [எனக்காரீபிறர்நாயகரே] - அவனுடைய அவதாரந் தொடக்கமாக, நடுவுள்ள அபாயங்களைத்தப்பி ஆஸ்ரிதரைவாழ்வித்துத் தனக்கமர்ந்த நிலத்தேபோய்ப் புக்கபடியளவும் அநுபவிக்கப்பெற்ற எனக்குஆர்தான் நியாமகர்? என்கிறார். "பயிலுந்திருவுடையார் யவரேலும்" என்கிறத்தை மறந்தார்போலேயிருந்தது; அவர்களைப் பிறராகநினையாரிறே.(ய)

---

## பதினோராம் பாட்டு.

---

நாயகன்முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகுந்தன்
வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம்
கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன
தூயவாயிரத்துஇப்பத்தால் பத்தராவர்துவளின்றியே.

**ஆ.**—(நாயகன்.)—கீழ்இரண்டுதிருவாய்மொழியாலும்சொன்ன அர்த்தத்தை நிகமிக்கிறது.

நிகிலபுவநநிமநோந்தரணநியந்த்ருத்வ நிர்த்தோஷத்வாதிகளாலே அவகதஸர்வேஸ்வரத்வத்தையுடையனாய், ப்ரணதபோக்யபூதாஸங்க்யேய திவ்யாவதார திவ்ய சேஷ்டிதவிசிஷ்டனான எம்பெருமானைச்சொன்ன ஆயிரத்துள் இத்திருவாய்மொழி வல்லவர்களை, இத்திருவாய்மொழிதானே நிகிலப்ரதிபந்தக நிரஸநபூர்வகமாகப் பரமபுருஷசரணாரவிந்தவிஷயாநந்யப்ரயோஜந நித்யஸித்த நிரவதிக பக்தியுக்தராக்குமென்கிறார்.

ஒ.—நிகமத்தில், க்ருஷ்ணசேஷ்டிதங்களைப் பேசின இப்பத்தும் கற்றார், ஆழ்வார்தம்மைப்போலே க்ருஷ்ணனுக்கே பக்தராவர் என்கிறார்.

"நாயகன் முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகுந்தன், வாயகம்புகவைத்துமிழ்ந்தவையாய் அவையல்லனுமாம்கேசவனென்றது - கீழில் திருவாய்மொழியையும் இத்திருவாய்மொழியையும் அநுபாஷிக்கிறது" என்றுஞ்சொல்லுவர். [தூயவாயிரத்திப்பத்தால்] - ஆயிரம் திருவாய்மொழியிலும் க்ருஷ்ணசேஷ்டிதங்களைப் பேசின இத்திருவாய்மொழியால். துவள் - குற்றம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியின் ஸம்பந்தத்தாலே பகவதநந்யபக்தியுக்தராவரென்று பலத்தை யருளிச்செய்கிறார்.

முழுவேழுலகுக்கும் - ஸமஸ்த லோகங்களுக்கும், நாயகன் - நிர்வாஹகன், ஆய் - ஆய், முழுவேழுலகும் - நிர்வாஹ்யமான லோகத்தை, (ப்ரளயங்கொள்ளாதபடி),

---

நாயகர்" என்கிறதெத்தாலே? என்ன - அவனுடைய இத்யாதி. ததீயர் தமக்குநாயகராயிருக்க, இங்ஙனேசொல்லலாமோ? என்ன, த்வேதா பரிஹரிக்கிறார் - பயிலும் இத்யாதி வாக்யத்வயத்தாலே. அதாவது - இவ்வநுபவஜநிதப்ரீத்யதிஸயத்தாலே "யவரேலும்" இத்யாதியைமறந்தாரென்றும்; அவர்களை ஈஸ்வரனோபாதியாக நினைத்திருக்குமதொழிய வ்யதிரிக்தராக நினையாராகையாலே, இங்கு, 'பிறர்' என்கிறது ததீய வ்யதிரிக்தரையென்றும் தாத்பர்யத்வயம். போய் - இங்குநின்றும்போய், விண்மிசை - பரமாகாசத்திலே, தனதாமமே-தனக்கு அஸாதாரணஸ்தாநத்திலே, புகமேவிய-சென்றுப்ரவேசித்த, சோதிநன்தாள் - ஜ்யோதிஸ்ஸ்வரூபனான தன்திருவடிகளை இதி ஸப்தார்த்தஃ. (௧௦)

தன்-தன், வாயகம் - வாய்க்குள்ளே, புக-புக, வைத்து - வைத்து, உமிழ்ந்து-உமிழ்ந்து, (அவற்றுக்கந்தராத்மாவாய்க்கொண்டு), அவைபாய் - ததாத்மகனாய், அவையல்லனும் - தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனும், ஆம் - ஆன, கேசவன்-கேசிஹந்தாவாயுள்ள க்ருஷ்ணன்,அடியிணைமிசை-திருவடிகள் விஷயமாக,குருகூர்ச்சடகோபன்-ஆழ்வார், சொன்ன-அருளிச்செய்த, தூய-நிரவத்யமான, ஆயிரத்து - ஆயிரத்து, இப்பத்தால் - (அவதார சரித ப்ரகாசகமான)இப்பத்தால்,துவளின்றிப்பத்தராவர்-(க்ருஷ்ணன்விஷயத்தில்)அநந்ய ப்ரயோஜந பக்தியுக்தராவர். துவளின்றி - குற்றமின்றி. இது-அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், க்ருஷ்ணசேஷ்டிதங்களைப் பேசின இப்பத்தைக்கற்றார், தம்மைப்போலே க்ருஷ்ணபக்தராவர் என்கிறார். [நாயகன் இத்யாதி] - ஸகல சேதநாசேதநங்களுக்கும் நியந்தாவாய், ப்ரளயாபத்திலே வயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நெருக்குப்படாமே வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, ஸர்வாவஸ்தையிலும் அவற்றை ப்ரகாரமாக உடையனாய், அவற்றின் பக்கலிலே நிற்கச்செய்தேயும் அசித்கதமான பரிணாமமும் சேதநகதமான துக்கித்வாதிகளும் தன்பக்கல் தட்டாதபடிநிற்கும். இதிறே - கீழில் திருவாய்மொழியில் சொன்னது. அத்தை அநுபாஷிக்கிறது. [கேசவன்] - கேசிஹந்தா!என்கையாலே, இத்திருவாய்மொழியில் க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையிறே சொல்லிற்று. ஆக, இரண்டு திருவாய்மொழியையும் அநுபாஷிக்கிறது என்னுதல்; "க்ருஷ்ண வ்ருஷ்ணிகா நாமோத்ததி:" என்கிறபடியே க்ருஷ்ணவிஷயமே சொல்லுகிறது என்னுதல். [குருகூர் இத்யாதி] - ஆப்தரான ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரத்திலும். [தூயவாயிரத்திப்பத்தால்] - தூய்மையாவது, க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தில் கலப்பற்றிருக்கை. [துவளின்றியே - பத்தராவர்] - துவள் - குற்றம். அதாவது - பரத்வத்திலே நெஞ்சு செல்லுகை. அத்தைத்தவிர்ந்து, க்ருஷ்ணாவதாரத்திலே ப்ரவணராகப்பெறுவர். திருவடி ராமாவதாரத்திலே ப்ரவணனாய் இருக்குமாபோலே.

ஈடு.—நிகமத்தில் - கிருஷ்ண சேஷ்டிதங்களைப் பேசினஇப்பத்துங் கற்றார், தம்மைப்போலே கிருஷ்ணபக்தராவரேன்கிறார்.

[நாயகனித்யாதி] - ஸகல சேதநாசேதநங்களுக்கும் நியந்தாவாய், ப்ரளயாபத்தில் திருவயிற்றிலேவைத்து ரக்ஷித்து, உள்ளிருந்து நெருக்குப்படாமே வெளிநாடுகாணப் புறப்படவிட்டு, ஸர்வாவஸ்த்தையிலும் ஸகலபதார்த்தங்களும் "தான்" என்கிற சொல்லிலே அடங்கும்படி அவற்றை ப்ரகாரதயா ஶரீரமாகவுடையனாய், இப்படியிருக்கச்செய்தே தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனானை. [கேசவனடியிணைமிசை] - கேசிஹந்தாவான ஸர்வேஶ்வரன்திருவடிகளிலே. "கீழிற்றிருவாய்மொழியிற் சொன்ன ஸர்வேஶ்வரத்வத்தையும், இத்திருவாய்மொழியிலே - கேசிஹந்தாவான க்ருஷ்ணனுடைய அவதாரத்தையும் அநு

---

நிகமம் – நாயகன் இத்யாதி."இப்பத்தால் பத்தராவர்" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை— க்ருஷ்ணசேஷ்டிதங்களை இத்யாதி.

"முழுவேழுலகுக்கும் – நாயகன் – ஆய்" இத்யந்வய:. ஒன்று குறையாத ஏழுலகுக்கும் நாயகனாயித்யர்த்த: - க்ருஷ்ணாவதாரத்தைச் சொல்லுகிற இடத்திலே ஸர்வேஶ்வரத்வம் சொல்லுவானென்? என்ன – கீழில் திருவாய்மொழி இத்யாதி. அதாவது–"நாயகன்முழுவேழுலகுக்குமாய்"என்று தொடங்கி, "அவையல்லனுமாய்" என்னுமளவும் - *நல்குரவிற்சொன்ன ஸர்வேஶ்வரத்வத்தையும், "கேசவன்" என்ற - *குரவையாய்ச்சியரிற்சொன்ன க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையுமநுவதித்துத் தலைக்

பாஷித்துத் தலைக்கட்டுகிறது'' என்று சொல்லுவர். ''க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம்'' (க்ருஷ்ணஏவஹிலோகாநாம்) என்கிறபடியே, க்ருஷ்ணவிஷயமே சொல்லுகிற தென்னுதல். [தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர் துவளின்றியே]-இப்பத்தையும் அப்யஸித்தவர்கள் ஆழ்வாரைப்போலேயாவர். இப்பத்தையுடைத்தாகையாலே தூய்மை யுடைத்தான ஆயிர மென்னுதல்; அன்றிக்கே, ஆயிரத்திலும் வைத்துக்கோண்டு, க்ருஷ்ண வ்ருத்தாந்தத்தைச் சொல்லுகையாலே, தூய்மையையுடைத்தான இப்பத்தென்னுதல். [துவளின்றியே - பத்தராவர்] - துவளாவது குற்றம். அதாவது - அவதாராந்தரங்களிற் போகாதே க்ருஷ்ண வ்ருத்தாந்தத்திலே கால்தாழ்வர். (கக)

---

கட்டுகிற தென்னுதல்; ''க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய:'' என்று - க்ருஷ்ணனையே ஸகல ஜகத்ஸர்க்க ஸ்திதி ஸம்ஹார கர்த்தாவாகச் சொல்லுகையாலே *குரவையாய்ச்சிய ரிற்சொன்ன க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையே யநுபாஷித்துத் தலைக்கட்டுகிறுரென்னுதல் என்றபடி. க்ருஷ்ணவிஷயமே யென்றது - இப்பாட்டெல்லாம் க்ருஷ்ணவ்ருத்தாந்தத்தையே, சொல்லுகிறதென்னுதல் என்றபடி. குற்றமேதென்ன - அவதாராந்தர இத்யாதி. ''க்ருஷ்ண ஏவ ஹி லோகாநாம் உத்பத்திரபி சாப்யய: । க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்,'' இதி ராஜஸூயே பீஷ்ம: ஸபா-[௩அ-உ௩] (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி. — ''ஆநந்த்யம் ஶீதலத்வம் மநஸி ஜநயதே க்ருஷ்ணஸ்ய வீர்யாவஸிதாந்யஹாநி ஶாதயேந । இத்தம் வாராஹ்யஸந்தேஹ ப்ரஶமிதவாநு ஸந்தி ஸ்தம்பாஸ்தோஷி நந்தாத்யவஷ்வதாநயேஷு॥''

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி·— ராஸக்ரீடாதிக்ருஷ்ணசேஷ்டிதவிவிதஸந்தர்ஶிகாவாசநைந ஸ்தம்பநைஸ்ஸந்தோஷைர் நாஶ்ரவீபூர்ண நாஶாஹாரா ஜஜநநந்தே: கம்ஸசைத்யாதிஸம்ரோதை: । ஸ்ராத்மாநப்ராவணித்வாதிஷு ஸுரஸஜந வோதநாஶேஷ ப்ரஶஸ்திதாத்ர்யாகசேஷ்டவித்வம் ஹரிரிதி கதயந் ஸக்ராவமந்யதாராகதய ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

குரவைமுதலாம்கண்ணன் கோலச்செயல்கள்
இரவுபகலென்னுமல் என்றும் - பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன் தன்
சொல்தேனில் நெஞ்சே துவள்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# ஐந்தாந்திருவாய்மொழி—துவளில் - ப்ரவேசங்கள்.



ஆ.—(துவளில்.)-இப்படி எம்பெருமான் திருவிண்ணகர்தொடக்கமாகவுள்ள திருநகரிகளிலே எழுந்தருளியிருந்த இருப்பையும், அவனுடைய திவ்யாவதாரங்களையும், திவ்யசேஷ்டிதங்களையும், ஸௌந்தர்யாதி ஸர்வகல்யாணகுணங்களையும் அநுஸந்தித்த ப்ரீதியையும்,அவனோடு பாஹ்யஸம்ச்லேஷம்பெறாமையாலே வந்தநிரவதிக வ்யஸநத்தையும் அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். ஒருபெண்பிள்ளை "திருத்தொலைவில்லி மங்கலத்தில் எம்பெருமானைக்காணவேணும்" என்று ஆசைப்பட்டுப் பெறாமையாலே அத்யந்தம்அவஸந்நையாய், அவனுடைய ஸௌந்தர்யாதி குணங்களையும் திவ்யசிஹ்நங்களையும் திவ்யசேஷ்டிதங்களையும் திருத்தொலைவில்லிமங்கலத்தையும் சொல்லி அலற்றுகிறபடியைக்கண்டு இவளுடைய திருத்தாயாரும் பந்துக்களும் "இவளையிழக்கிறோம்" என்னும் பயத்தாலே "இவளுக்கு அவன்பக்கலுள்ள அபிநிவேசத்தை நிவர்த்திப்பிக்கவேணும்" என்று இவளுடையதோழியை அபேக்ஷிக்க, இவளும் அவர்களை நோக்கி,

ஓ.—அஞ்சாந்திருவாய்மொழியில், * குரவையாய்ச்சியரில் க்ருஷ்ணகுணசேஷ்டிதங்களை அநுபவித்த ப்ரீதிப்ரகர்ஷத்தாலே பரவசராய், செல்லுகிற ப்ரீத்யநுபவம் கலங்கி நோவுபடுகிற ஆழ்வார் * பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர பகவத்குணசேஷ்டிதாதிகளிலே ஈடுபட்டிருக்கிற தம்முடைய ஊமையை அநுஸந்தித்து, இத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். இப்படி * குரவையாய்ச்சியரிலே க்ருஷ்ணகுணசேஷ்டிதாதிகளை அநுஸந்தித்து மிகவும் ப்ரீதராய், பாஹ்யஸம்ச்லேஷத்திலே அபேக்ஷைபண்ணி, அதுபெறாமையால் தமக்கு ஓடுகிற ஊமையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார் என்றுமாம். திருத்தொலைவில்லி மங்கலத்தில் ஸம்பத்திலும், அங்கு நின்று அருளுகிற தேவபிரானுடைய திருவழகிலும் அகப்பட்டு, பண்டுபழகின பழக்கத்தின் மிகுதியாலே மிகவும் ப்ரவணசித்தையாய் இருக்கிற பிராட்டிபடியைக்கண்டு, இவளுக்கு அவன்பக்கல் உண்டான அதிமாத்ரப்ராவண்யத்தைத் தவிர்க்கையிலே உபக்ராந்தைகளான திருத்தாய்மாரைக்குறித்து, இப்பிராட்டியுடைய கருத்தறிவாளொருதோழி, "இவள் திருத்தொலைவில்லிமங்கலங்கண்ட அன்றுதொடங்கி அரவிந்தலோசனனை ஒழியப் புறம்புள்ள தொற்றெல்லா மற்று, அவனே எல்லாமுமாகக்கொண்டு அவன் பக்கலிலே இவளுடைய மநோவாக்காயங்கள் மிகவும் ப்ரவணமாயிற்று ; இப்படி விளையும்படியான இவள் ப்ரக்ருதியை அறிந்துவைத்து இவளைத் திருத்தொலைவில்லிமங்கலத்திலே நீங்களேகொண்டுபுக்கு அங்குத்தைப்படி காட்டிக்கொடுத்து, இனி மீட்கநினைத்தால் முடியுமோ? ஆனபின்பு, இவள்பக்கலில் ஆசையறுங்கோள்" என்கிறாள்.

ப.—அஞ்சாந்திருவாய்மொழியில், கீழே - இப்படி க்ருஷ்ணசேஷ்டிதங்களிலே அவகாஹித்து அத்யந்தம் ஹ்ருஷ்டரான இவ்வாழ்வாருடைய மாநஸாநுபவம் முதிர்ந்து பாஹ்யஸம்ச்லேஷஅபிநிவேசத்தைப் பிறப்பிக்க, அபிநிவேசாநுரூபாநுபவாலாபத்தாலே அவஸந்நராய், பூர்வாநுபூதமான ஸர்வேச்வரனுடைய அஸாதாரண சிஹ்நயோகத்தையும், விலக்ஷணநுஹாவ்யத்வத்தையும், ரக்ஷணார்த்தப்ரவ்ருத்திகளையும், ஊர்ஜிதவிக்ரஹயோகத்தையும், ஆபரணஔஜ்ஜ்வல்யாதிகளையும், ஸௌகுமார்ய ஸௌந்தர்யத்தையும், உதாரஸ்வபாவத்தையும், ஆதிக்யஸூசகமான அரவிந்தாக்ஷத்வத்தையும்,

விரோதி நிவர்த்தகத்வத்தையும், வ்யாமோஹாதிசயத்தையும் அநுஸந்தித்து, ஏவம்வித ஸ்வபாவனானவன்விஷயத்திலே அத்யந்தப்ரவணரான இவருடையநினைவை, பூர்வாநுபவ ப்ரவர்த்தகரான பரிவர்தாங்களை அவஸாத பரிஹாரார்த்தமாக நிஷேதிக்கத் தேட, இவருடைய ப்ரக்ருதியறிந்த ஸுஹ்ருத்பூதரானவர்கள், "அடியில் ப்ரவர்த்தகரான நீங்களே நிவர்த்தகரானால் இவர்க்கு அஹ்ருத்யகராவதே ஃபலம்" என்றுசொல்லி, அதுக்கடியான இவருடைய பகவத்ப்ராவண்யாதிஶயவிகாரங்களை யறிவித்த ப்ரகாரத்தை, திருத்தொலைவில்லிமங்கலத்திலே தேவபிரானை அநுபவித்து ஈடுபட்டாளொருநாயகியினுடைய ஈடுபாட்டைக்கண்டு, அடியிற் கூடக்கொண்டுபோய்த் திருவடிதொழுவித்த தாய்மார் இவளீடுபாடு சமிக்கைக்காக இவள்நினைவை நிஷேதிக்கத்தேட, இவள் நெஞ்சறிந்த தோழியானவள், "அடியிலே இவளைமூட்டினபோதே ஆசையற்று மூட்டினிகோளன்றோ? இனி இவள்பக்கல் ஸங்கத்தை விடுங்கோள்" என்றுசொல்லி இவளுடைய ப்ராவண்யவிகாரப்ரகாரங்களை யறிவித்த பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—அஞ்சாந்திருவாய்மொழியில், "கீழே க்ருஷ்ணாநுபவத்தைப் பண்ணினார். அந்தப்ரீதி உள்ளடங்காமையாலே பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷைபிறந்து, அது பெறாமையாலே தமக்குப்பிறந்த பாரவஶ்யத்தை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார்" என்று பூர்வர்கள் நிர்வாஹம். பட்டர், "கீழ் நிரவதிகப்ரீதியாய்ச் சென்றது: அதுக்கும் இதுக்கும்சேர்த்தி இங்ஙனாக வொண்ணாது; தண்ணீர்குடியாநிற்க விக்கினால் ரஸாநுபவம்கலங்கி நோவுபடுமாபோலே, செல்லுகிற ப்ரீத்யநுபவங்கலங்கிப்பிறந்த பாரவஶ்யாதிஶயத்தை அருளிச்செய்கிறார்" என்று அருளிச்செய்வர். அதாவது - *பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர பகவத்விஷயத்தில் பூர்ணாநுபவமின்றிக்கே இருக்கையாலே தமக்குப்பிறந்த ப்ராவண்யாதிஶயத்தை அருளிச்செய்கிறார்.

இத்திருவாய்மொழிக்குக் கீழ் எல்லாம் - ஸர்வேஶ்வரனைப்பேசினார்; இத்திருவாய்மொழியில் - தம்மைப்பேசுகிறார். "யதோவாசோநிவர்த்தந்தே" என்கிற விஷயத்தை விளாக்கொலைகொண்டு பேசுகைக்குத் தாமல்லது இல்லாதாப்போலே, இவ்விஷயத்தில் தம் அபிநிவேஶத்தைப் பேசுகைக்கும் தாம்அல்லது இல்லையாயிற்று. தலைமகளாயும் திருத்தாயாராயும் தோழியாயும் பிறந்த அவஸ்தைகள்அடங்க இவர்தமக்கே பிறந்த தஶாவிசேஷம் என்னும்படியிறே இவர் ப்ராவண்யாதிஶயம். "ப்ராவண்யத்தை விளைக்கிற திருத்தாயாரும் தோழியும் நிஷேதிக்கிறது 'ஸாபராஸ்யா' என்றிறே" என்று, இவள்மேல் விழுகிறது ப்ராப்யவைஶ்யாலே. இந்த ப்ராவண்யத்தை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். திருத்தொலைவில்லிமங்கலத்திலே நின்றருளின தேவபிரானுடைய அழகிலும் அவ்வூரில் ஸம்பத்திலும் ப்ரவணசித்தையாய் இருப்பாள் ஒரு பிராட்டியை "அதிப்ராவண்யம் ஆகாது" என்று மீட்கநினைத்த திருத்தாய்மாரை, இவள் கருத்து அறிந்த தோழி, "உங்களுக்கு இவளை மீட்கமுடியாது" என்கிற பாசுரத்தாலே அருளிச்செய்கிறார். ஜநகராஜன் திருமகள் அவதரித்தவளவிலே ஜ்யௌதிஷிகரைக் கேட்க, "ஸார்வபௌமனுக்குப்புகக்கடவள்: கனக்க ஜீவிக்கும்: நடுவே வநவாஸக்லேசமும் அநுபவிக்கக்கடவள்" என்றார்கள்; அதுபோலே "இவளுக்கும் ஓர் அபம்ருத்யு உண்டு; அதாவது:—திருத்தொலைவில்லிமங்கலத்தில் இவளைக் கொண்டுபோகாதொழியில் இவள் ஜீவிக்கும்" என்றார்கள். அவ்வூரில் கொண்டு புகாதபடி அல்லாமையாலே

கொண்டுபுக்கார்கள் ; அங்கே அவகாஹித்தபடியைக்கண்டு மீட்கப்புக, "இனி இவளை மீட்கமுடியாது; நீங்களும் இவள்வழியே ஒழுகப்பாருங்கோள்" என்று தோழிவார்த்தையாய்ச் செல்லுகிறது. இத்தால் - சேஷத்வம் ஸத்தாப்ரயுக்தமானவோபாதி, ப்ராவண்யமும் ஸத்தாப்ரயுக்தம் என்னும் இடத்தை நிர்வஹிக்கிறதாயிற்று.

ஈடு.—இத்திருவாய்மொழிக்குக் கீழும்மேலும் எல்லாம் எம்பெருமானைக் கவிபாடினார் ; இத்திருவாய்மொழியில் தம்படி சொல்லுகிறார். ஸிம்ஹாவலோகந ந்யாயத்தாலே * பொய்ந்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர தமக்கு பகவத்விஷயத்திலுண்டான ப்ராவண்யாதிசயத்தை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். "இத்திருவாய்மொழி - ஆழ்வார் ப்ரக்ருதிசொல்லுகிறது" என்று நம்முதலிகளெல்லாரும் போர விரும்பி யிருப்பர்கள். பகவத்ப்ரஸாதத்தாலே லப்தஜ்ஞாநராய் "யதோவாசோநிவர்த்தந்தே" (யதோவாசோநிவர்த்தந்தே) என்கிற விஷயத்தை மறுபாடுருவப்பேசின தாமே வேணுமாகாதே தம்படி பேசும் போதும்.

ஸ்ரீஜநகராஜன்திருமகள் பிறந்த ஸமயத்திலே ஜ்யோதிர்வித்துக்களையழைத்து, "இவள் ஜீவிக்கும்படிகளென் ?" என்றுகேட்க :'இவள் ஜீவிக்கும்படிகளில் ஒருகுறையில்லை ; ஸார்வபௌமனையிருப்பானொருவனைக் கைப்பிடிக்கவுங்கடவள் ; இங்ஙனே யிருக்கச்செய்தேயும் வநவாஸரஸம் அநுபவிக்கக்கடவள்'' என்றார்கள் ; அப்படியே இப்பெண்பிள்ளை பிறந்தபோது இவள் திருத்தாயாருள்ளிட்டார் நிதாநஜ்ஞராயிருப்பாரையழைத்து, "இவள் ஜீவிக்கும்படிக ளெங்ஙனே ?" என்று கேட்க, "எல்லாம் நன்றாய்த் தலைக்கட்டக்கடவது; ஆனாலும் இவளுக்கோர் அபம்ருத்யுவுண்டு ; அதுதப்பினாளாகில் ஸுகமேஜீவிக்கும். அதாவது - திருத்தொலைவில்லிமங்கலத்திற் கொடுபோகாதே ஒழியப்பெறி லிவளைக்

துவளின்மாமணிப்ரவேசமே, ஸங்க்ரஹமாக ஸங்கதி அருளிச்செய்கிறார் - இத்திருவாய்மொழிக்கு இத்யாதிவாக்யத்வயத்தாலே. "சிந்தையாலும்" இத்யாதியையும், "முன்னம்நோற்ற" இத்யாதியையும், "பின்னைகொல்" இத்யாதியையுங்கடாக்ஷித்து-தம்படிசொல்லுகிறார் என்றது. தம்படியேதென்ன - ஸிம்ஹாவலோகந இத்யாதி. பொய்ந்நின்றஞானந்தொடங்கி யென்றது-"கைதொழுத அந்நாள்தொடங்கி" என்றத்தைப்பற்ற. தூரப்போகிறஸிம்ஹம், முன்புபோனத்தையெல்லாம் பார்த்துக்கொண்டு அப்பால் போமாபோலே, கீழிற்றிருவாய்மொழிகளிலுள்ள ப்ராவண்யத்தை யிங்கே பேசுகையிறே - ஸிம்ஹாவலோகந ந்யாயமாவது. "தம்படிசொல்லுகிறார்" என்றதுக்கு ஸம்வாதம் - இத்திருவாய்மொழி இத்யாதி. தம்படிகளைத்தாமேசொன்னால் ஆத்மஶ்லாகையாகாதோ? என்ன - பகவத்ப்ரஸாத இத்யாதி. அதாவது - "யதோவாசோநிவர்த்தந்தே" இத்யாதிப்படியே ஆப்தர்த்தமாகச்சொல்லுகையாலே விரோதமில்லையென்றபடி.

"பிரானிருந்தமைகாட்டினீர்" என்று - "திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபோனால் இவளுக்கு அநர்த்தம்வரும்"என்று அறிந்திருக்கச்செய்தேயும் நீங்கள் காட்டிக்கொடுத்திகோளென்கிறாளிறே. தாய்மாரைப்பார்த்துத் தோழியானவள், "அங்கேபோனால் இவளுக்கநர்த்தம்வரும்" என்று தாய்மாரெத்தாலேயறிந்தார்கள்? என்ன; அறிந்தமையை ஸநிதர்ஶநமாக அருளிச்செய்கிறார் - ஸ்ரீஜநகராஜன் இத்யாதி. இவ்விடத்திலே, "ஸுயவாவிஹோவு ராஜஸ்வு ராஹணாநாம் யோஶ் தம் । வஶாவித்ருஷ்ஷகவஷ்யம்கியஶவவந் । லக்ஷணிஹே ராஜாகிஷ் ஶஸ்வாஹம்வவநம்ருஹை । வநவாஸகஷ்தோஹா நித்ருவேஹோவஷ" இதி அயோத்யாகாண்டோக்த ஸீதாவாக்யமநுஸந்தேயம். இப்படி அறிந்திருக்கச்செய்தே கொண்டுபோவா

கிடைக்கும்'' என்றார்கள். இவள்ஜீவியாதொழியிலும் திருத்தொலைவில்லிமங்கலத்தில் கொடுபோகாதொழியவல்ல குடியன்றே; ''இவளங்கேபுக்கு முடியவமையும்'' என்றிருப்பார் சிலரிறே. பிராட்டி வநவாஸரஸம் அநுபவியாத அன்றிறே இவள் திருத்தொலைவில்லிமங்கலத்தில் புகாதொழியவல்லளாவது? ஸ்ரீநளர் வார்த்தையைநினைப்பது († ஸ்ரீவாநரவீரர்கள், ''மலையைக்கொண்டு கடலையணைசெய்கை ஸம்பாவிதமோ'' என்ன:—) ஸ்ரீநளர், ''பெருமாள் காடேற எழுந்தருளுகையும், பிராட்டியை ரக்ஷஸ்அபஹரிக்கையும், பெருமாள் சோகிக்கையும் ஸம்பாவிதமோ? ஏதாகிலும் வருமவை தப்பாதிறே'' என்றார். இது ஸ்ரீராமாயணத்திலுண்டானவிடத்தே கண்டுகொள்வது.) தேஹாத்மாபிமாநிகளாயிருப்பார்க்கு எத்தனையேனும் அறிவு பிறந்தாலும் ''[illegible]'' என்கிற நிலை மாற்றப்போகாதாற்போலே, இவரையும் ஸர்வப்ரகாரத்தாலும் உகந்தருளின நிலங்களிலேநின்றும் த்ருஷ்டத்தில்குறைசொல்லி மீட்கப்போகாது. க்ஷுத்ரவிஷயப்ரவணராயிருப்பார் ''அதர்மம்'' என்றும், ''பழி'' என்றும், ''மேல்நரகம்'' என்றும் சொன்னால் மீளார்களிறே. இங்கு குணாதிகவிஷயமாகையாலே ஒருகுறைசொல்லி மீட்கப்போகாதே. ''குறைசொல்லுவோம்'' என்று நினைக்கிலும் குணாதிக்யத்தைச்சொல்லு மத்தனையிறே. அதுபின்னை ப்ராவண்யத்துக்கு உடலா மத்தனையிறே. பழியுமுண்டாயிடுக, மதிப்புக்கேடும்வருக; ஆனாலும் அதுகண்டு மீளமாட்டாத அத்யவஸாயமிறே இவளது. அங்ஙனேயாகிலும், இவர்கள் இவ்விஷயத்தில் நின்றும்

---

னென்? என்ன - இவள்ஜீவியாதொழியிலும் இத்யாதி. அக்குடியிலுள்ளார்படியேதென்ன - இவளங்கேபுக்கு இத்யாதி. குடிஸ்வபாவமன்றிக்கே, தைவ கல்பிதமாகையாலும் தவிரவொண்ணாதென்னுமத்தை ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - பிராட்டி இத்யாதி. '[illegible]', என்றதுக்குஸம்வாதம் - ஸ்ரீநளர் இத்யாதி. ''இதுக்கு - பெரியஜீயர்காலந்தொடங்கி ஸம்ப்ரதாயமில்லை; ஆனாலும் ராமாநுஜம்பிள்ளை அருளிச்செய்வதோரர்த்தமுண்டு'' என்று அருளிச்செய்வர். அதாவது - ஸமுத்ரராஜன் தோன்றினவளவிலே, ''விஸ்வகர்மாவின் மகனான நளன் சேதுபந்தனத்துக்கென்று கல்பிதனாயிருக்கிறான். அவனைக்கொண்டு என் பக்கலிலே சேதுபந்தநம் பண்ணிக்கொள்ளும்'' என்று சொல்லிப்போனவளவிலே, பெருமாள் திருவடிகளிலே நளன்வந்து ஸேவித்து, ''ஸமுத்ரராஜோக்தி ஸத்யமே: நான் சேதுபந்தநம் பண்ணவல்லேன்'' என்றுசொன்ன வார்த்தையை நினைப்பதென்றபடி. அதாவது - ''[illegible] நல: ஸ்தா। அஹம் ஸேதும் கரிஷ்யாமி விஸ்தீர்ணே வருணாலயே॥ பிது: ஸாமர்த்யமாஸ்தாய தத்த்வமாஹ மஹோததி:'' என்றவார்த்தை. அங்கேகொண்டுபுக்காலும், அவ்விஷயத்துக்கு ஏதேனுமொரு குறைசொல்லி மீட்கவொண்ணாதோ? என்ன - தேஹாத்மா இத்யாதி. அத்யவஸாயமிறே யிவளதென்னுமளவும். அதுக்கடியேதென்ன - க்ஷுத்ரவிஷய இத்யாதி. 'மீளார்களிறே' க்ஷுத்ரவிஷயங்களினின்றும்இதிசேஷம். த்ருஷ்டத்திற்குறையாவது - ஐஸ்வர்யத்திற் குறை. த்ருஷ்டத்திற் குறைசொல்லி மீட்கப்போகாவிட்டாலும், விஷயத்திற்குறைசொல்லி மீட்கவொண்ணாதோ? என்ன - இங்குகுணாதிக இத்யாதி. குணாதிகவிஷயமாகிலும் ''கடியன்கொடியன்'' என்றாற்போலே சிலகுறைகளைச் சொன்னாலோ? என்ன - குறைசொல்லுவோமென்று இத்யாதி. ''அவனென்றேகிடக்கும்'' என்றத்தைப்பற்ற - அதுபின்னை இத்யாதி. ப்ராவண்யத்தால் மீட்கப்போகாதமாத்ரமன்றிக்கே, அத்யவஸாயாதிசயத்தாலும் மீட்கப்போகாதென்கிறார் - பழியுமுண்டாயிடுக இத்யாதி. அங்ஙனேயாகிலுமென்றது - குடிதானே அங்கேகொண்டுபோய் மூட்டுகையாலும் தைவவசத்தாலும் இவளுடைய ப்ராவண்யத்தாலும்

இவளை மீட்கப் பார்க்கிறது என்? என்னில்,— "பருவம்நிரம்பாதிருக்கச்செய்தேயும் நம்மா லல்லாத அதிமாத்ரப்ராவண்யம் இவளுக்கு விளையாநின்றது; அது இவளையிழக்கவிற்செய் வதேன்?"என்னும் அச்சமாயிற்றுஇவர்களுக்கு ஓடுகிறது. இனித்தான் அதிமாத்ரப்ராவண் யம் ஸாதகர்கையிலே கிடக்கக்காண்கையாலே "இவள்ஸாதநபுத்த்யாப்ரவர்த்திக்கிற்செய்வ தேன்?" என்னும்பயத்தாலே மீட்கவும்பார்ப்பரே: "இப்ப்ராவண்யம் ஸ்வரூபாதிரேகி யாகிலிறே ஸாதநத்தில் அந்வயிப்பது" என்றிறேயிருப்பதிவள். "ஸ்வரூபபேதத்துக்கு இசைந் தால் ஸ்வரூபாநுரூபமான கார்யங்களுக்கு இசையவேண்டாவோ?" என்றுகாணும் இவள் கருத்து. சேஷிக்கு உபாயபாவம் ஸ்வரூபாநுபந்தியானபின்பு, சேஷபூதனுக்கும் ப்ராவண் யம் ஸ்வரூபாநுபந்தியாகக்கடவதிறே. இனித்தான் கீழில்திருவாய்மொழியோடு இத்திரு வாய்மொழி ஸங்கதமானபடியேன்? என்னில்:—க்ருஷ்ணகுணாநுபவத்தைப் பண்ணாநிற் கச்செய்தே, குடிக்கிறதண்ணீர் விக்கி அதுதானே பாரவஶ்யத்தை விளைப்பிக்குமாபோலே, அவ்வநுபவந்தானே ரஸாந்தரத்தேமூட்டத் தமக்குப்பிறந்த அவஸாதத்தை யந்யாபதேசத் தாலே பேசுகிறார். அதாவது - * போய்நின்றஞானந்தொடங்கி இவ்வளவும்வர, பக வத்விஷயத்தில் பூர்ணாநுபவமின்றிக்கே யிருக்கையாலே, தமக்குப்பிறந்த ப்ராவண்யாதி ஶயத்தை அருளிச்செய்கிறார். அன்றிக்கே, கீழநுபவித்த அநுபவந்தான் மாநஸாநுபவ மாத்ரமாய், பாஹ்யஸம்ஶ்லேஷாபேக்ஷை பிறந்து, அது பெருமையால்வந்த கலக்கத்தை யந்யாபதேசத்தாலே பேசுகிறார் என்றுமாம். இப்பெண்பிள்ளை ப்ரக்ருதியறியச்செய்தேயும் தாய்மார்விழுக்காடறியாமையாலே திருத்தொலைவில்லிமங்கலத்திலேகொடுபுக, அவள் "அர விந்தலோசந" என்பது, "தேவபிரான்" என்பது: நீர்மையைச்சொல்லுவது, மேன்மை யைச்சொல்லுவது, ஒப்பனைவாசியறிந்தமைதோற்றச்சொல்லுவதாய் வாய்வெருவ, இவள் நிலைஇருந்தபடியால் "இவளைக் கிடைக்கமாட்டாதாகாதே" என்று தாய்மார் வெறுத்துத் தோழிபாடேவந்து, "இவள்படி யுனக்குத்தெரியாமையில்லை: இவளைமீட்கலாம் விரகு

*அத்யவஸாயத்தாலும் இப்படி அபரிஹரணீயமாயிருக்கச்செய்தேயு மென்றபடி. ஸ்வாபதேசத்திலே மீட்கப்பார்க்கிறதுக்கு ஹேத்வந்தரம் - இனித்தான் இத்யாதி. "அதிமாத்ரப்ராவண்யம் ஸ்வரூபவிருத்த மாகிற்செய்வதென்?" என்கிறபயம் மகளுக்கும் ஒவ்வாதோ? என்ன - இப்ப்ராவண்யம் இத்யாதி. ஸ்வரூபாதிரேகியென்றது - தசேகரக்ஷபத்வரூப ஸ்வரூபாதிரிக்தமாகிலிறேயென்றபடி. "ஸ்வரூபாதி ரேகியன்று" என்றதுக்குக்கருத்தேதென்ன - ஸ்வரூபபேதத்துக்கு இத்யாதி. ஸ்வரூபபேதத்துக் கென்றது - "அவன்சேஷி, நாம்சேஷபூதர்" என்கிறஸ்வரூபபேதத்துக்கென்றபடி. கார்யங்களுக் கென்றது-ப்ராவண்ய தத்கார்யகைங்கர்யங்களுக்கென்றபடி. இவளுக்குஇப்படி கருத்தானாலும், வஸ்து கத்யாஸாதநத்தி லந்வயியாதோ? என்ன - சேஷிக்கு இத்யாதி. கீழ்-எல்லாத்திருவாய்மொழிகளோடும் ஸங்கதியருளிச்செய்து, கீழிற்றிருவாய்மொழியோடு இத்திருவாய்மொழிக்கு ஸங்கதியேதென்று சங் கித்து, அத்தையிரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - இனித்தான் இத்யாதி. இந்தஸங்கதித்வயமும் அடியிலே யநுஸந்தேயம். முந்தினசங்கதி - பட்டர்நிர்வாஹம்; இரண்டாவது - பூர்வர்கள்நிர்வாஹம். ரஸாந்தரத்தேயென்றது - மோஹத்திலேயென்றபடி. அர்ச்சாவதாரகுணாநுபவத்திலேயென்னுதல். "இவள் அங்கேபுக்கு முடியவமையுமென்றிருப்பாளிலளிறே" என்கிறவாக்யத்தோடேயாதல், "இவ ளைக்கிடைக்குமென்றார்கள்" என்கிறவாக்யத்தோடேயாதல். 'இப்பெண்பிள்ளை' இத்யாதிவாக்யத்துக்கு ஸங்கதி. ஜ்யோதிர்வித்துக்கள் சொன்னபின்புஇவர்கள் செய்ததென்? என்ன-இப்பெண்பிள்ளை இத் யாதி. "அரவிந்தலோசந," "தேவபிரான்" என்றத்தைப்பற்ற - நீர்மை, மேன்மை என்றது. ஒப்பனை வாசியென்றது - "இழைகொள்சோதி" என்றத்தைப்பற்ற. 'வாய்வெருவ' என்றது - "நாடொறும் வாய்வெரீஇ" என்றத்தைப்பற்ற. நீங்களே இவளுக்கு ப்ராவண்யத்தையுண்டாக்கியென்றது - "ப்ரா*

சொல்லவேணும்'' என்ன; தோழி, "நீங்களே இவளுக்கு ப்ராவண்யத்தையுண்டாக்கி இப்போதாக இவளைமீட்க ஆசைப்படுகிற இத்தால் ப்ரயோஜநமென்? ஏற்கவே பரிஹரிக்கப் பெற்றதில்லை; இனி இவள்பக்கல் நசையறுங்கோள்; இவளை நிஷேதிக்கப்பாராதே நீங்களும் ஸஹகரித்து இவள் உஜ்ஜீவிக்கும்படி பண்ணப்பாருங்கோள்!'' என்கிறாள். தாய்மார்கேட்கத் தோழியிறேசொல்லுகிறாள்: பகவத்விஷயத்துக்கு "பழையார், புதியார்'' என்றில்லை; தேசிகர்சொல்ல ஆதரமுடையார் கேட்குமித்தனை. "**ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:**'' (ஆசசக்ஷேதஸத்பாவம்லக்ஷ்மணஸ்யமஹாத்மந:) என்று இளையபெருமாள்படியை ஸ்ரீபரதாழ்வானுக்கு ஸ்ரீகுஹப்பெருமாளிறேசொல்லுகிறார். "**ஆசசக்ஷே**'' (ஆசசக்ஷே) - வாக்இந்த்ரியத்துக்கு நிலமல்லாததும் சொல்லலாமாகாதே. "**அத**'' (அத) - ஸ்ரீபரதாழ்வான் ஸ்வபாவம் அறிந்தபின்பு. "**ஸத்பாவம்**'' (ஸத்பாவம்)-"**பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்த:**'' (பால்யாத்ப்ரப்ருதிஸுஸ்நிக்த:) என்றும், "**பரவாநஸ்மி**'' (பரவாநஸ்மி) என்றும், ஸத்தையோடே வ்யாப்தமான ஸ்வபாவத்தைச் சொன்னான். "**லக்ஷ்மணஸ்ய மஹாத்மந:**'' (லக்ஷ்மணஸ்யமஹாத்மந:) - கடலைக் கையாலேயிறைக்கத்தொடங்கினான். "**பரதாயாப்ரமேயாய**'' (பரதாயாப்ரமேயாய) - "இன்னாரின்னார்க்குபதேசிக்க'' என்றில்லையாகாதே. "**குஹோ கஹநகோசர:**'' (குஹோகஹநகோசர:) - காட்டில் மரங்களில் வாசியறியுமவர் இவர்கள் நிலையறியும்படி நிலவரானார். அன்றிக்கே, ராமவிரஹத்தாலே ஒருதூற்றடியிலேகிடந்தவன், தேசிகரைப்பெற்றவாறே தலையெடுத்துப்புறப்பட்டானென்றுமாம். † ("ப்ராப்யத்வரையினுடைய முறுகுதலுக்கடியான அதிமாத்ரப்ராவண்யம், ஆஶ்ரயமழியும்படிவருதல் உபாயத்திலே முதலிடேல் செய்யுமாகில் அவத்யகரமாய்முடியும்'' என்றுபார்த்து, "இத்தை உபாயாத்யவஸாயாநுகுணமாக அமைத்து நடத்தவேணும்'' என்றுகருதி ஸம்பந்தஜ்ஞானத்தோடேசேர்ந்த உபாயாத்யவஸாயம் பார்த்தவிடத்து முதலிலே ப்ராப்யத்வராஸஹித

---

ப்ர. —[துவளின்மாமணிப்ரவேஶம்]—பாலகாண்டே [கஅ] "பால்யாத்ப்ரப்ருதி ஸுஸ்நிக்தோ லக்ஷ்மணோ லக்ஷ்மிவர்தந: । ராமஸ்ய லோகராமஸ்ய ப்ராதுர்ஜ்யேஷ்டஸ்ய நித்யஶ:॥" ஆரண்யகாண்டே [கரு] "பரவாநஸ்மி காகுத்ஸ்த த்வயி வர்ஷஶதம் ஸ்திதே । ஸ்வயம் து ருசிரே தேஶே க்ரியதாமிதி மாம் வத॥"

---

னிருந்தமைகாட்டினீர்'' என்றத்தைப்பற்ற. "இனி - உமக்காசையில்லை'' என்றத்தைப்பற்ற - ஏற்கவேபரிஹரிக்கப்பெற்றதில்லை என்றதும், நசையறுங்கோள் என்றதும். மேல்இதிலே ஸ்வரூபாநுரூபமானவர்த்தம் ஶிக்ஷிப்பதாக அதிஷ்டிகை - தாய்மார் இத்யாதி. வயோதிகரான தாய்மார்க்கு பாலையானதோழிபக்கலிலே பகவத்விஷயங்கேட்கலாமோ?என்ன - பகவத்விஷயத்துக்கு இத்யாதி. இவ்வர்த்தத்துக்கு அநுஷ்டாநங்காட்டுகிறார் - ஆசசக்ஷ இத்யாதி. "ஆசசக்ஷேத ஸத்பாவம் லக்ஷ்மணஸ்ய மஹாத்மந: । பரதாயாப்ரமேயாய குஹோ கஹநகோசர:'' இத்யயோத்யாகாண்டே. [அசு-க]ஶ்லோகத்துக்கர்த்தம்- வாகிந்த்ரியஇத்யாதி. "மஹாத்மந:'' என்கையாலே - நிலமல்லாமைதோற்றுகிறது. ஆங்க்ஷதர்த்தத்திலேயாய் "சொல்லலாமாகாதேயென்றது' ஈஷத் சொன்னானென்றபடி. "ஸத்பாவம்'' ஸத்தயாவ்யாப்தோ பாவஸ்ஸத்பாவ:. பாவசப்தம்-ஸ்வபாவவாசி. ஸத்தையோடு வ்யாப்தமானஸ்வபாவமாவது-பெருமாள்பக்கல் ப்ரேமமும் பாரதந்த்ர்யமும். "பால்யாத்ப்ரப்ருதி

மாக குணுதிகவிஷயத்திலே யவகாஹித்து அத்வரைதன்னை இவ்வவஸ்த்தாபந்நை யாக்கினபின்பு, உபாயாத்யவஸாயத்தின்கீழ் இத்தை யமைக்கப்போகாது ; இனித்தான் ப்ராப்தவிஷய ப்ராவண்யம் ஸ்வரூபமாகையாலே அவத்யகரமன்று: ஶ்லாக்யமாமித்தனை'' என்று தாம் அநுஸந்தித்தருளினுர்.)

---

## முதற்பாட்டு.

---

> துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலந்தொழும்
> இவளைநீர் இனி அன்னைமீர்! உமக்காசையில்லைவிடுமினே
> தவளவொண்சங்குசக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும்
> குவளையொண்மலர்க்கண்கள்நீர்மல்க நின்றுநின்று குமுறுமே.

ஆ.—நிரவத்ய நிரதிஶய விவிதமணிவர நிகர விரசித ஸௌதோபேதமான திருத்தொலைவில்லிமங்கலத்தைத் தொழுகையே ஸ்வபாவமாயிருக்கிற இவள், அவனுடைய அதிநிர்மலமாய் அதிரமணீயமாயிருந்த திருச்சங்கு திருவாழியாகிற திவ்யசிஹ்நங்களையும், புண்டரீகலோசநங்களையும் சொல்லி யலற்றி, அத்தாமரைகளின்நிழலிலே வளரக்கடவ குவளைபோலேயிருந்த அழகியகண்கள் நீர்மல்க நின்றுநின்று குமுறாநிற்கும்; இவளை யாசைப்படவேண்டா என்கிறுள்.

ஒ.—முதற்பாட்டில், திருத்தாய்மாரைக்குறித்து இவளுடைய தோழியானவள், இவள் ப்ரக்ருதி அறிந்துவைத்து இவளுக்குத் திருத்தொலைவில்லிமங்கலத்தைக் காட்டின நீங்கள் ஹிதோபதேசம்பண்ணிஞல் உங்களுக்கு ஒரு ப்ரயோஜநம் இல்லை என்கிறுள்.

[துவளில்மாமணி] - பழிப்பற்று ஶ்லாக்யமான மணி. [தொழுமிவளை] - தொழுகையே ஸ்வபாவமான இவளை. [தவளவொண்சங்கென்று மேலுக்கு]-அதிதவளமாய் அழகிதாயிருக்கிற ஸ்ரீபாஞ்சஜந்யம் என்றும் திருவாழிஎன்றும் தாமரைத்தடாகம் போலேஇருக்கிற திருக்கண்கள் என்றும்சொல்லிப்பின்னையும் இவற்றை "காணவேணும்" என்றுசொல்ல உபக்ரமித்து, மாட்டாதே குவளைபோலே இருக்கிற அழகிய கண்கள் நீர்மல்கும்படியாக தன்னுடைய துஃகத்தை வாய்விட்டுச் சொல்லமாட்டாதே நிரந்தரமாகக் குமுறுநின்றுள்.

ப.—முதற்பாட்டில், அரவிந்தலோசநன் எழுந்தருளியிருக்கிற திருத்தொலைவில்லிமங்கலத்தை அநுபவித்து, அவனுடைய அஸாதாரணசிஹ்நங்களிலே யகப்பட்ட இவளை இனி யாசைப்படவேண்டுவதில்லை, விடுங்கோளென்று தாய்மாரைக்குறித்துத் தோழி சொல்லுகிறுள்.

---

ஸாந்த்ரஶௌரக்ஷணாக்ஷிவ்யூநஃ'' இத்யாதி. "வரவாநவ்ஶிகாக்ஷதக்ஷயிவஷடிரும தம்வூதெ'' இத்யாதி, ஆரண்யகாண்டே [கரு-எ].

துவள்இல்-நிர்த்தோஷங்களாய், மா - மஹார்க்கங்களான, மணி - மாணிக்கங்களாலே சமைந்த, மாடம் - மாடங்களானவை, ஓங்கு - உயர்ந்திருக்கிற, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை, தொழும் - தொழாநிற்கிற, இவளை - இவளை, நீர்-அடியிலே கொடுபோய்க்காட்டின நீங்கள், இனி-இவள்அதிமாத்ர ப்ரவணையானபின்பு, அன்னைமீர் - "பெற்றவர்களான நமக்கு நியமிக்கலாம்" என்றிருக்கிற, உமக்கு - உங்களுக்கு, ஆசை - நியமநத்திலாசைப்படுகை, இல்லை - இல்லை; விடுமின் - "விதேயை" என்றிருக்கிறத்தை விடுங்கோள்; (அதுக்கடியென்? என்னில்), தவளம் - வெளுத்த நிறத்தையுடைத்தாய், ஒண்-ஔஜ்ஜ்வல்யமான, சங்கு - திருச்சங்கு, சக்கரம் - திருவாழி, என்றும் - என்றும், தாமரை - தாமரைபோலேயாய், தடம் - அத்யந்த விசாலமான, கண் - திருக்கண்கள், என்றும் - என்றும், (அர்த்தோக்தியளவிலே), குவளை - நெய்தலினுடைய, ஒண்-அழகிய, மலர்-பூப்போலேயிருக்கிற, கண்கள் - கண்களானவை, நீர்-நீர், மல்க-விஞ்சும்படி, (தளர்த்தியாலே,) நின்றுநின்று- (ப்ரதிக்ஷணம்ஆத்மயாரணம் பண்ணி) நின்று நின்று, குமிறும் - நெஞ்சில் நினைவை வாய்விட்டுச் சொல்லமாட்டாதவார்த்தியாலே உள்ளே குமுறுநிற்கும். "உகும், இறும்" என்று †பதவ்யாஸமாய், "த்ரவத்ரவ்யமாய், தளர்ந்து விழாநிற்கும்" என்றும் சொல்லுவர். தவளவொண் சங்குசக்கரமென்று- வெளுப்பும் ஒண்மையும், சங்குக்கும், சக்கரத்துக்கும்அடையாகவுமாம். குவளை-நெய்தல்.

இ.—முதற்பாட்டில், இவள் ப்ரக்ருதி அறியாதே திருத்தொலைவில்லிமங்கலத்தைக் காட்டினபின், உங்கள் ஹிதவசநத்துக்கு இவள் மீளுமோ? என்கிறாள்.

[துவளில் மாமணிமாடம்] - குற்றமற்று இருக்கையாலே பெருவிலையனான மணியாலேசெய்த மாடம். மணிக்குதோஷாபாவம் - வந்து கழிந்ததன்றிக்கே ப்ராகபாவமும் அன்றிக்கே, அத்யந்தாபாவமாயிருக்கை. முக்தனுடைய அபஹதபாப்மத்வாதிகள்போலன்றிக்கே, ஈஶ்வரனுடைய அபஹதபாப்மத்வாதிகள்போலே யிருக்கை. திவாராத்ரவிபாகம் பண்ணவொண்ணாதபடி ப்ரகாஶமான மாடம். [ஓங்கு] - ஆகாஶாவகாஶம் அடையும்படியான மாடம். கலந்து பிரிகிறபோது, 'ஊரேது?' என்ன; - அணிமை சொல்லுகைக்காக, " அவ்வூரில் மாடங்களின் நிழலன்றோ இது?" என்றாளாயிற்று. [தொலைவில்லிமங்கலந் தொழுமிவளை] - வைஶ்லேஷிகங்களிலே தொழுதவள்அல்லள்; அது தன்னிலும், உள்ளுநிற்கிற அரவிந்தலோசநன் அளவாகிலன்றோ மீட்கலாவது; அவனோடு ஸம்பந்தமுள்ளவிடம் எங்கும்புக்கு அவகாஹித்தவளை மீட்கப்போமோ? விஷயம் பரோக்ஷமாய் "எட்டாதுகாண்" என்று மீட்கவோ? "ப்ரத்யக்ஷவிஷயம், பரிச்சின்னம்" என்று மீட்கவோ? [தொழுமிவளை] - ஜ்ஞாநாநந்தங்களுக்கு முன்னே நிரூபகமிறே பாரதந்த்ர்யம்; தொழுகையே நிரூபகமாயிருக்கிறவள். "ஊர்ஸ்வா ஹம்ஸ்வாஸ்வைவஸ்ய," "ஹ்ராஜ்ஞிம்வஹஹாஸீந்வ". ஒன்றை உருகுபதத்திலே பிடித்தால், வலித்தாலும் அப்படியே உருவநிற்குமாயிற்று. [நீர்]- இவளுடைய ப்ராவண்யத்திலே ஸாதநவ்ருத்திபண்ணுகிற நீங்கள். [இனி]-இவளுக்கு இவ்வூரைக்காட்டினபின்பு. [அன்னைமீர்]-ப்ராப்த யௌவனையானாலும், "பெற்றோம்" என்கிற ப்ராப்தியைக்கொண்டு மீட்கப்போமோ? அவ்வருகுபட்டாலும் நியந்த்ருதையைக்கொண்டு மீட்கவோ? [உமக்காசையில்லை] - வகுத்தவன் கைக்கொண்டால் உமக்கு ஆசையில்லை. [விடுமினோ]-ஹிதம்

† பதவ்யாஸம் - பதப்பிரிவு.

சொல்லுகிறத்தை விடுங்கோள். அநுகூலிக்கப்பாருங்கோள். பெற்ற எங்களை "விடுங் கோள்" என்கிறது எத்தைக்கொண்டு? என்ன,-[தவளவொண்சங்கு இத்யாதி.]- ஶ்யாமமான திருநிறத்துக்கு பரபாகமான திருநிறத்தையுடைய ஸ்ரீபாஞ்சஜந்யம்.[ஒண்சங்கு]- "உண்பது சொல்லி லுலகளந்தான் வாயமுதம்" என்று-பிராட்டிமாரும் ஆசைப்பட்டுச்சீறு பாறென்னும் செல்வையுடையவன். [சக்கரம்]-அங்ஙன் ஒருவிஶேஷணமிட்டுச் சொல்லவொண்ணாத திருவாழி. [என்றும்] - "இவற்றைக்காணவேணும்" என்னுதல், "இவற்றோடே வரவேணும்" என்னுதல் சொல்லமாட்டுகிறிலள், வைலக்ஷண்யாதியாலே. [தாமரைத்தடங்கணென்றும்] - தாமரையை ஒருவகைக்கு ஒப்பாகச் சொல்லலாய், போக்தாக்கள் அளவன்றிக்கே இரண்டாழ்வார்கள் அளவும் அலையெறிகிற திருக்கண்கள். 'என்றும் என்றும்' என்கையாலே - துர்பலன் மலையை எடுத்தாற்போலே இருக்கிறபடி. [குவளை இத்யாதி] - குவளையும் ஒப்பாகமாட்டாத அழகிய கண்கள் நீர்மல்கும்படியாக; தாமரைத்தடங்கண் நீர்மல்க ப்ராப்தமாயிருக்க, இவள் கண்ணீர்பாய்வதே! இவள் "ஜிதந்தே" என்பது கண்ணநீராலே ஆயிற்று. "ஜிதம் தே புண்டரீகாக்ஷ" - இவளை மீட்கப்போமோ? [நின்றுநின்று குமிறுமே] - கன்றைக் கிட்டக்கட்டிவைத்தால் ஸுரபிபடுமாபோலே படாநின்றாள். பெருவெள்ளத்தில் சுழிக்குமாபோலே அகவாயில் உள்ளது வெளியிடமாட்டாதே நின்று சுழிக்கிறபடி. "உகும், இறும்" என்றாற்போலே சிலர் சொன்னார்கள்; அவர்கள் இவளுக்கு ஓடுகிற பாவவ்ருத்தி அறியாமையாலே சொல்லுகிறார்கள். இவள் இப்படி அவகாஹித்தபின்பு, மீட்கப்பாராதே பின்செல்லப் பாருங்கோள் என்கிறாள்.

ஈடு.—முதற்பாட்டு. இவள் ப்ரக்ருதியறியாதே திருத்தொலைவில்லிமங்கலத்தைக் காட்டினபின்பு உங்கள் ஹிதவசநத்துக்கு இவள் மீளுமோ? என்கிறாள்.

[துவள் இத்யாதி] - "உனக்குஇப்போதுஉதவாதபடி தூரஸ்த்தம்" என்னுதல், "பூதகாலத்தில் அவதாரங்கள்" என்னுதல், உகந்தருளின நிலங்களிலே உள்ளுநிற்கிறவனளவிலே ப்ரவணையாதல் செய்தாளாய் மீட்க நினைக்கிறீகோளோ? அசலிட்டுத் திருத்தொலைவில்லிமங்கலத்தை விரும்புகிற இவளை யெங்ஙனேமீட்கும்படி? சரமாவதியிலே நிற்கிற இவளை ப்ரதமாவதியிலேநிற்பார் மீட்கவோ? துவளென்பது - குற்றம்: அதின்றிக்கே யிருக்கை. அவ்வூர்ச்சரக்கிலே குற்றமுண்டாகிலன்றே இவளைமீட்கலா

முதற்பாட்டு—துவளில் இத்யாதி. "உமக்காசையில்லைவிடுமினோ" என்றதிலே நோக்காக அவதாரிகை - இவள்ப்ரக்ருதி இத்யாதி.

"தொலைவில்லிமங்கலம்தொழுமிவளை" என்றுவைத்து, "உமக்காசையில்லை" என்ற தோழியுடைய ஹார்த்தபாவம் - உனக்கிப்போது இத்யாதிவாக்யத்வயம் அதாவது - பரத்வத்திலே ப்ரவணையானாளாகில் "உனக்கிப்போதுஉதவாதபடிதூரஸ்த்தம்" என்று மீட்கலாம்; அவதாரத்திலே ப்ரவணையானாளாகில் "பூதகாலத்திலேயுள்ளதொன்று" என்று மீட்கலாம்; அங்குநிற்கிற எம்பெருமானிடத்திலே ப்ரவணையானாளாகில் "ப்ரத்யக்ஷவிஷயம்பரிச்சிந்நம்" என்றுமீட்கலாம்; இவற்றையெல்லாம் பஹிர்த்தளமாக்கித் திருத்தொலைவில்லிமங்கலத்திலே ப்ரவணையான இவளை மீட்கவிரகுண்டோ? என்றபடி. அசலிட்டு - தேவபிரானையும் புறம்பாக்கி யென்னுதல்; அவனுக்குஅசலாகவிட்டு-ததீயமென்றென்னுதல். "தொலைவில்லிமங்கலம்தொழுமிவளை - நீர்" என்றுகூட்டி ஹார்த்தபாவம் - சரமாவதி இத்யாதி. "குற்றமில்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - அவ்வூர் இத்யாதி, "இல்" என்று - அத்

வது? குற்றமுண்டாய்க் கழிந்ததல்ல. ஜீவபரர்களிருவர்க்கும் அபஹதபாப்மத்வாதிக ளுண்டா யிருக்கச்செய்தே ஜீவாத்மாவுக்கு ஹேயமுண்டாய் பகவதநுக்ரஹத்தாலே கழி யும்:பரமாத்மா ஹேயஸம்ஸர்க்காநர்ஹனுயேயிருக்கும்; அப்படியேயாயிற்று, அவ்வூரில் மாடங் களில் ரத்நங்களும். [மாமணி] - ஒளியேயல்ல, பெருவிலையனுமாயிருக்கும். [ஓங்கு]- அவ்வூரில் மாடங்களின்நிழலீடு திருநகரியளவும் வந்துகாணுமிருப்பது. "இடமணித்து" என்றுபோலேகாணும் நாயகன் பிரிந்தது. மாளிகையின் நிழற்கீழேயிட்டு வைத்துக்காணும் பிரிந்தது. அவன் பிரிந்தபோது தொடங்கி அவ்வூரையும் அவ்வூரில் மாடங்களையும் அவற் றில் மாணிக்கங்களையும் பார்த்து, வைத்தகண் வாங்கமாட்டாதே யிருந்தாள்போலே காணும். [தொலைவில்லிமங்கலம்] - துருப்புக்கூடாக அவ்வூரையன்றே இவள் உகந் தது. [தொழுமிவளை] - "கறுத்திருக்கும், வெளுத்திருக்கும்" என்னுமாபோலே, தொழுகை நிரூபகமாயிருக்கை. "ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநம்" (ப்ராஞ்ஜலிம்ப்ரஹ்வமாஸீநம்) என்னுமாபோலே; "கணபுரங்கைதொழும்பிள்ளை" என்னுமாபோலே. [இவளை] - இவளை மீட்கப்பார்ப்பதே, இவள்படியை புத்திபண்ணியன்றே மீட்பது! [தொழுமிவளை]- இவள்படி கைமேலே காணநிற்கச்செய்தே நீங்கள் மீட்கத் தேடுகிறபடி யெங்ஙனே? [இவளை நீர்] - பழிசொல்லப் பணைக்கிறவள் இவள், பழி பரிஹரிக்கப்பார்க்கிறீகோள் நீங் கள். [இனி] - தொழுகை தேஹயாத்ரையாதற்குமுன்னேயன்றே மீட்கப்பார்ப்பது. [அன்னைமீர்]-பகவத்விஷயத்திலே யவகாஹிக்க என்றேன்றில்லையோ? நியந்த்ரு நியாம்ய

---

ப்ர.—[தொழுமிவளை]—அயோத்யாகாண்டே [ச] "ஐதே3வ ஸூ3மந்த்ரா ஸ்த்ரீபுராணாம் ஸ3தாரைஸ் வீக்ஷ। ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநமபி4வீக்ஷ்ய ஸ்மயந்நிவ ॥ ௬௨॥ லக்ஷ்மணோऽயாஹாய ப்ரஸாதிதம்வஸுந்தராம் । அத்யம்பு3நாதா2நம் கார்யம்ஸ்ரீராஜவஸிதா ॥ ௬௩॥"

*யந்தாபாவத்தைச் சொல்லுகிறதென்கிறார் - குற்றமுண்டாய் இத்யாதி. உக்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஜீவபரர்கள் இத்யாதி. "துவளில்" என்கையாலே-ஒளியுண்டென்று ஸித்தம். ஓககததின் சரமாவதி - அவ்வூரில் இத்யாதி. இத்தால் பலித்தபாவம் - இடம்அணிந்தென்று இத்யாதி. விவரணம் - மாளிகை இத்யாதி. கீழெல்லாவற்றையுங் கடாக்ஷித்து, "தொழும்" என்றவர்த்தமாநத்துக்குபாவம் - அவன் பிரிந்த இத்யாதி. "தொலைவில்லிமங்கலந்தொழுமிவளை - ஆசையில்லை" என்றதுக்கு ஹார்த்தபாவம் - துருப்பு இத்யாதி. துருப்புக்கூடு - தூர்ருப்பொலி. அதாவது - இன்னார்இனியாரென்னுதே அவ் வூரிலெல்லாரையும் விரும்பினுள் என்றபடி. "தொழுமிவளை" என்று விசேஷித்ததுக்குபாவம் - கறுத் திருக்கும் இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்த த்வயம் - 'ப்ராஞ்ஜலிம்' இத்யாதி. "ஐதே3வஸூ3மந்த்ரா ஸ்த்ரீபுராணாம் ஸ3தாரைஸ் வீக்ஷ। ப்ராஞ்ஜலிம் ப்ரஹ்வமாஸீநமபி4வீக்ஷ்ய ஸ்மயந்நிவ" இத் யயோத்யாகாண்டே. திருமொழி 'கணபுரம்' இத்யாதி. பூர்வமேவார்த்தோ விதிதஃ. "தொழுமிவளை— ஆசையில்லை" என்றதுக்கு ஹார்த்தபாவம் - இவளை இத்யாதிவாக்யத்ரயத்தாலே. அதில் சாடு - இவள் படி இத்யாதிவாக்யத்வயம். படி - சரீரமும், ப்ரகாரமும். கைமேலே - ப்ரத்யக்ஷமாகவென்று சாடு. "இவளைநீர்" என்றதுக்கு ஹார்த்தபாவம் - பழிசொல்ல இத்யாதிவாக்யத்வயம். 'தொழுமிவளை - இனி" என்றுகூட்டிபாவம் - தொழுகைதேஹயாத்ரை இத்யாதி. "தொழுமிவளை - அன்னைமீர்" என்றுகூட்டிபாவம் - பகவத்விஷயத்திலே இத்யாதி. அவகாஹிக்கவென்றேன்றில்லையோ? என் றது - அவகாஹித்தாரை மீட்கப்போகாதென்கிற தொன்றில்லையோ? என்றபடி. ஆனாலும், பெற்ற*

ஹாவமேயோ வேண்டுவது; பெற்றவர்களென்று, அஶக்யங்களிலே மிழியக்கடவதோ? [உமக்காசையில்லை] - ப்ராப்தயௌவனைகளானுர்பக்கல் பெற்றவர்களுக்கு ப்ராப்தி யுண்டோ? புக்கவிடத்தே ப்ரவணையாகாநிற்க, பெற்ற ப்ராப்திகொண்டுமீட்கவோ? [விடுமினோ]-இவ்வளவில் நீங்கள் கைவாங்கவமையும். பெற்றதாய்மார் "விடுமின்" என்னுங் காட்டில்விடார்களிறே ; பின்னையும் நிர்ப்பந்திக்க, வேண்டா, இவளுக்கு ஓடுகிற ரஸத்தைக் கண்டுகொடுநிற்கப் பாருங்கோள் : இவளுடைய அநுபவத்துக்குத் தண்ணீர்த் துரும்பாகாதே இத்தைக்கண்டுகொடுநிற்க வமையுமென்கிறாள். எங்களை "ஆசைப்படவேண்டா, விடுங்கோள்" என்றதேன்? என்னில்:—இவள் பேச்சிலும் நினைவிலும் நீங்களாதல் நானுதலுண்டோ? † (உங்களையாதல் என்னையாதல், சொல்லுதல் நினைத்தல் செய்கிறாளோ;) "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச" (த்யக்த்வாபுத்ராம்ஸ்சதாராம்ஸ்ச) என்னும் நிலையன்றோ இவளது! [தவளவோண்சங்கு] - ஶ்யாமமான திருமேனிக்குப் பரபாகமான வெண்மையையுடைத்தாய், "உண்பதுசொல்லில் உலகளந்தான்வாயமுதம்" என்கிற அழகையுடைத்தான சங்கு. [சக்கரம்] - அங்ஙனம்ஒரு விசேஷணமிட்டுச் சொல்லவொண்ணாத அழகையுடைய சக்கரம். [என்றும்] - "இவற்றைக்காணவேணும்" என்னுதல்; "இவற்றோடேவரவேணும்" என்னுதல் சொல்லமாட்டுகிறிலள், பலஹாநியாலே [தாமரைத்தடங்கணென்றும்]- அந்த ஆழ்வார்களளவும் வந்துஅலையெறிகிற திருக்கண்கள். தாமரையை யொருவகைக்கு ஒப்பாகச்சொல்லலாய், ஹோத்தாக்களளவன்றிக்கே யிருக்கிற திருக்கண்கள். [என்றும் என்றும்] - ஒருமலையெடுத்தாற்போலே, சொல்லுக்குச்சொல்லு தளர்ந்து நடுநடுவே விச்சேதித்தாயிற்றுச் சொல்லுவது. திவ்யாயுதங்களையும் கண்ணழகையுங் காட்டியாகாதே இவளைத்தோற்பித்தது. [குவளையித்யாதி] - இக்கண்களைக்கண்டால் * தாமரைத்தடங்கணன்றோ நீர்மல்கவடுப்பது? கண்ணும்கண்ணநீருமாய் இவளிருக்கிற இருக்கை கண்டுகொண்டிருக்கவன்றோ உங்களுக்கு அடுப்பது? "ஶ்ருத்வாऽபிதேநு

ப்ர.—யாஜ்ஞவல்க்யர் [௧௭] "மோக்ஷம் ப்ராப்தவதோ ஹ்யேவ ஸம்ஸாரஸ்ய நிவர்தநம் । த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராஜ்யம் ஶரணம் கதஃ ॥௧௪॥"

---

எங்கள் வார்த்தை கேட்கவேண்டாவோ? என்ன - பெற்றவர்களென்று இத்யாதி. என்று - என்றமாத்ரத்திலே. "உமக்காசையில்லை" என்றதுக்குபாவம் - ப்ராப்தயௌவனைகள் இத்யாதி. ப்ராப்தியில்லையோ? என்ன - புக்கவிடத்தே இத்யாதி. மேலுக்கவதாரிகை - பெற்றதாய்மார் இத்யாதி; கண்டுகொடுநிற்க வமையுமென்கிறாளென்னுமளவும் விவரணம் - இவளுடைய இத்யாதி. அவதாரிகாந்தரம் - எங்களை இத்யாதிவாக்யத்வயம். "த்யக்த்வா புத்ராம்ஶ்ச தாராம்ஶ்ச ராஜ்யம் ஶரணம் கதஃ" இத்யாதிவிஶேஷணஃ. உண்பதுசொல்லில் இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி. ஸ்பஷ்டோர்த்தஃ. "தாமரை" என்றுசொல்லிவைத்து, "தடங்கண்" என்கையாலே - இது ஸத்தாலோபமானமென்கிறார்-தாமரையை இத்யாதி. இது - ஶப்தார்த்தமும். திவ்யாயுதங்களையும் திருக்கண்களையும் வர்ணிக்கிறதுக்கு பாவம் - திவ்யாயுதங்களையும் இத்யாதி. "குவளையொண்மலர்" என்கிற விசேஷணத்துக்கு பாவம் - இக்கண்களை இத்யாதி. முந்தினவவதாரிகைக்குச்சேர "கண்கணீர்மல்க" என்றதுக்குபாவம்-கண்ணுங்கண்ணநீரும் இத்யாதி. இவ்வாகாரம் தர்ஶநீயமாயிருக்குமோ? என்ன - ஶ்ருத்வா இத்யாதி. "ஶ்ருத்வாऽபிதேநு தேநோक्तं வாக்யம் ஸம்யக்ஸமாஹிதஃ । ததா வைராக்யம் ... " இதி ஸ்ரீவிஷ்ணுதத்வே. ஶ்லோகத்துக்குபாவம்-

ஆ...'' (ஆஹ்லாதஶீதநேத்ராம்பு:) இத்யாதி.ஸதாதர்ஶநத்துக்குஒருதேசந்தேடிப்போக வேண்டாகாணும். குவளைப்பூப்போலே அழகியகண்கள் நீர்மல்க. அவள் தன்னுடைய ஸ்த்ரீத்வத்தைக் காற்கடைக்கொள்ள, நீங்கள் எங்ஙனே மீட்கப்பார்க்கும்படி? கண்ண நீர்பாய்கையாவது - ஸ்த்ரீத்வமழிகையிறே. [நின்றுநின்றுகுமிறுமே] - பேச்சுப்போய்க் கண்ணநீராய், கண்ணநீர்போய்த் தமோறுகிற அவஸ்த்தையிலே மீட்கப்போமோ? ராஜ கோஷ்ட்டியிலே "உகும், இறும்" என்று சிலர் பொருள் சொல்ல, விக்ரமசிங்கனென்பா னொருவன், "அங்ஙனல்ல, கன்றைக்கடக்கக் கட்டிவைத்தால் முலைக்கண் கடுத்துப் பசு அலமந்து படுமாபோலே, உள்ளோடுகிற க்லேஶம் வாய்விடமாட்டாதே நோவுபடுகிற இவ ளுக்கு இதுவார்த்தையோ?" என்றான். பெருவெள்ளத்தில் சுழிக்குமாபோலே, அகவாயி லுள்ளது வெளியிடமாட்டாள். உள்ளேநின்று சுழிக்கிறபடி. தொலைவில்லிமங்கலந் தொழுமென்கையாலே - காயிகவ்யாபாரம் சொல்லிற்று; தவளவொண்சங்குசக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும் என்று சொல்லுகையாலே - வாசிகவ்யாபாரம் சொல்லிற்று; குமிறு மென்கையாலே - மாநஸவ்யாபாரம் சொல்லிற்று. (க)

---

## இரண்டாம் பாட்டு.

---

குமிறுமோசைவிழவொலித் தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்கு
அமுதமென்மொழியாளை நீருமக்குஆசையின்றியகற்றினீர்
திமிர்கொண்டாலொத்துநிற்கும்மற்றிவள் தேவதேவபிரானென்றே
நிமியும்வாயொடுகண்கள்நீர்மல்க நெக்கொசிந்துகரையுமே.

ஆ.—(குமிறும்.) - கம்பீர விவித மங்களவாத்ய ப்ரகோஷித ஜநகோஷத்தை யுடைத்தான மஹோத்ஸவம் செல்லாநிற்கத் திருத்தொலைவில்லிமங்கலத்திலேகொண்டு புக்கீர்கோள்; அன்றுதொடங்கி விரஹவ்யஸநத்தாலே சித்ரார்பிதையைப்போலே ஒரு சேஷ்டிதக்ஷமையன்றியேநின்று, அதிமதுர ஸ்வரமாக,தேவதேவபிரானென்றே சொல் லிச்சொல்லிக்கொண்டு அழுதுநெக்கொசிந்து நீராயுருகாநிற்கும்; ஆதலால் அங்கேகொண்டு புக்கு வலிய இழந்தீர்கோள்; இனி இவளை யாசைப்பட்டால் கிடைக்குமோ? என் கிறாள்.

ஸதாதர்ஶநத்துக்கு இத்யாதி. இரண்டாமவதாரிகைக்குச் சேரபாவம் - அவள்தன்னுடைய இத்யாதி. காற்கடைக்கொண்டபடி யெங்ஙனே? என்ன - கண்ணநீர் இத்யாதி. "நின்று நின்று" என்றதுக்கு பாவம்-பேச்சுப்போய் இத்யாதி. "தமோறுகிறவவஸ்த்தை" என்றதுக்கு ஸம்வாதம்-ராஜகோஷ்ட்டி யிலே இத்யாதி. "உகும், இறும்" என்றபக்ஷத்திலே ஶப்தார்த்தம்; உகும் - உக்கிப்போகாநின்றாள், இறும் - மறியாநின்றாள்என்று குமிறுகையாவதேதென்ன - பெருவெள்ளத்தில் இத்யாதி. குமிறும் - உள்ளேநின்றுசுழியாநிற்குமென்றபடி. "நின்றுநின்று" - ப்ரதிக்ஷணம்ஆத்மபூரணம்பண்ணிநின்று. "உகும், இறும்" என்றதுக்கு - "த்ரவத்ரவ்யமாய்த் தளர்ந்தவிழாநிற்கும்" என்று உரையில் ஶப்தார்த் தம். "சிந்தையாலும்" இத்யாதிக்குச்சேர, கரணத்ரயமு மங்கேப்ரவணமானபடி சொல்லுகிறதென் கிறார் - தொலைவில்லி இத்யாதிவாக்யத்ரயத்தாலே. 'அன்னைமீர், நீர் - தவளவொண்சங்கு'என்று தொடங்கி, குமிறும்; ஆகையாலே - 'தவளில்'என்றுதொடங்கி, விடுமினோ இத்யந்வய:. (க)

ஒ.—இரண்டாம்பாட்டில், இவளைத் திருத்தொலைவில்லி மங்கலத்திலே திருநாளிலே கொடுபுகுவார் உண்டோ? என்கிறாள். [குமிறுமென்று தொடங்கி] - எழுத்தும்சொல்லும் பொருளும் தெரியாதே ஒன்றாய்எழுகிற த்வநியை உடைத்தான திருநாளில் ஆரவாரத்தை உடைத்தான திருத்தொலைவில்லிமங்கலத்திலே தான் அறியாதிருக்கிற இவளை, நீங்களே கொடுபுக்கு. [அமுதமென்று தொடங்கி] - இவளுடைய இனியபேச்சுக்கள், கேட்க ஆசையில்லாமையாலே நீங்கள் இவள் அகலும்படி பண்ணினிகோள். [திமிர்கொண்டாலொத்துநிற்கும்] - ஸ்தப்மையானாற்போலே இருக்கும். [மற்றென்று தொடங்கி] - பின்னையும் இவள் திருத்தொலைவில்லிமங்கலத்தில் எம்பெருமானுடைய திருநாமத்தைச் சொல்லவென்று உபக்ரமித்து முடியச்சொல்லமாட்டாதே கண்கள் நீர்மல்கி உள்ளோடுகிற அவஸாதத்தின் மிகுதியாலே ஸிதிலையுமாய் நீராகாநின்றாள். நிமிகை - உதடுநெளிக்கை.

ப.—அநந்தரம், நித்யசூரிகளுக்கு அநுபாவ்யனான தேவபிரானெழுந்தருளியிருக்கிற திருத்தொலைவில்லிமங்கலத்திலே மஹோத்ஸவத்திலே கொண்டுபுக்கு இவளையகலும்படி பண்ணினிகோளென்கிறாள்.

குமிறும் - கம்பீரமான, ஓசை - நாநாவிதகோஷத்தையுடைய, விழவொலி - உத்ஸவகோலாஹலத்தையுடைத்தான, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லி மங்கலத்திலே, கொண்டு - கொண்டு, புக்கு - புக்கு, அமுதம் - அம்ருதம்போலே ஸரஸமாய், மென் - ம்ருதுவான, மொழியாளை - பாஷணத்தையுடையஇவளை, நீர் - (இவள்வார்த்தையினிமையறிந்து போந்த) நீங்கள், உமக்கு - உங்களுக்கு, ஆசை - (அதில்)ஆசை, இன்றி - இல்லாமையாலே, அகற்றினீர் - (உங்களோடு)உறவற்றகலும்படி பண்ணினிகோள்; (இவள் உறவறுதியறிந்தபடியென்? என்னில்;) இவள் - இவள், திமிர்கொண்டாலொத்து - திமிர்கொண்டாற்போலேயாய், நிற்கும் - பேசாதேநில்லாநிற்கும்; மற்று - மற்று, (இவள் வார்த்தைசொல்லில்), தேவர் - தேவர்களான நித்யசூரிகளுக்கும், தேவர் - தேவர்களான விஷ்வக்ஸேநாதிகளுக்கும், பிரான் - தன்னை யநுபவிப்பித்துக்கொண்டிருக்கிற மஹோபகாரகன், என்றே - என்கிற அர்த்தோக்திமாத்ரத்திலே, நிமியும் - நெளிந்த, வாயொடு - வாயையுடையளாய், கண்கள் - கண்கள், நீர் - நீர், மல்க - மல்கும்படியாக, நெக்கு - கட்டுக்குலைந்து, ஒசிந்து - தளர்ந்து, கரையும் - நீர்ப்பண்டமாகாநின்றாள். நிமிதல் - நெளிதல்.

இ.—இரண்டாம் பாட்டில், அவ்வூரில் கொண்டுபுக்கதுக்குமேலே, திருநாளிலேகொண்டு புகுவார் உண்டோ? என்கிறாள். [குமிறுமோசை விழவொலி] - ஓத்துச்சொல்லுவார், ஸங்கீர்த்தனம் பண்ணுவார், பாடுவாராய், எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டு எழுகிற த்வநியையுடைய திருநாளில் ஆரவாரம். [தொலைவில்லிமங்கலங் கொண்டுபுக்கு] - பரமபதத்திலே கொண்டுபுக்கிர்கோளாகிலும் மீட்கலாயிற்று. [கொண்டுபுக்கு] - இவள் அறியாதிருக்க, நீங்களே கொண்டுபுக்கு. [அமுதமென்மொழியாளை] - இவள் பேச்சைக்கேட்டால் போன உயிரும் மீளுமாயிற்று. [மென்மொழி] - அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி; ஸ்ரவணயோக்யமாயிராதே அம்ருதம். [நீருமக்காசையின்றி யகற்றினீர்] - "ஹா-ராஹா-ராவோ" என்று இவள் பேச்சைக்கேட்க ஆசைப்பட்டிருக்குமவன் பெற்றுப்போனான்; நீங்கள் ஆசை

இல்லாமையாலே அகற்றினிகோள். தந்தாமுக்கு அநர்த்தத்தைத் தாம்தாமே விளைத்துக் கொள்ளுவார் உண்டோ? அகற்றுகையாவது - அகலும்படி பண்ணினிகோள் என்கை. அதாவது - இவ்வூரிலே புக்கபின்பு இவர்களோடே வார்த்தை சொல்லத்தவிர்ந்தாளாயிற்று. [திமிர்கொண்டா லொத்து நிற்கும்] - ஸ்தப்தையானாற்போலே நிற்கும். வ்யாபாரக்ஷமையன்றியே இராநின்றாள். "ஸர்வாஸ்ஸம்பந்நகாமாஸ்யுஸ்ஸர்வாஸ்ஸ்யு:" என்கிறபடியே பரிபூர்ண ஜ்ஞாநரைப்போலே இராநின்றாள். [மற்றிவள்] - வேறு இவள் வார்த்தைசொல்லப் புக்காளாகில். [தேவதேவபிரானென்றே] - இங்கே கண்டாலும், "*அயர்வறுமமரர்களதிபதி இங்கேவந்து ஸுலபனானான்" என்றாயிற்று இவள் ஸங்கல்பண்ணுவது. [என்றே நிமியும்] - அந்த சீலவத்தையைச் சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே உதடு நெளிக்கும். உதடுநெளிக்கிற வாயோடே கண்ணநீர்மல்க. [நெக்கு] - ஶிதிலையுமாய். [ஓசிந்து] - பரவசையுமாய். [கரையும்] - நீராகாநின்றாள். [நெக்கொசிந்து கரையுமே] - பெருவெள்ளத்தில் கரையானது நெகிழ்ந்து ஓட்டுவிட்டு ஓசிந்துபோசிந்து அவயவியாகாதபடி கரைந்து போமாபோலே யழிந்துபோகாநின்றாள். இப்படி இவள் கரையாநிற்க, வன்நெஞ்சரான நாம் இதுக்குப்பாசுரமிடுவது, மீட்கத் தேடுவது ஆகாநின்றோமிறே!

ஈடு.—இரண்டாம்பாட்டு. அவ்வூரில் கொடுபுகவேண்டினால், திருநாளிலே கொடுபுகுவாருண்டோ? என்கிறாள்.

[குமிறுமோசைவிழவொலி]- "தேஷாம்புண்யாஹகோஷோத கம்பீரமதுரஸ்வந: | அயோத்யாம்பூரயாமாஸ தூர்யநாதாநுநாதித:" (தேஷாம்புண்யாஹகோஷோத கம்பீரமதுரஸ்வந:- அயோத்யாம்பூரயாமாஸதூர்யநாதாநுநாதித:) என்று, ஓத்துச்சொல்லுவார், ஸங்கீர்த்தநம்பண்ணுவார், பாடுவார், இயல்விண்ணப்பஞ் செய்வாராய், எழுத்தும் சொல்லும் பொருளும் தெரியாதபடி விரவிக்கொண்டெழுகிற த்வநியையுடைய திருநாளில்ஆரவாரம். பாவியேன்! இத்த்வநி செவிப்பட்டால் சொண்டுமீளவன்றோ அடுப்பது! "இவ்விடம் பிள்ளைகொல்லி" என்று கூப்பிடுமோபோலேகாணும் த்வநியிருக்கிறது. அவ்வூரும் திருநாளும் அங்குள்ளார்படுகிறதுங் கண்டுவைத்து இவளைக்கொண்டு புகுவாருண்டோ? [கொண்டுபுக்கு] - இவளை அறியாதிருக்க நீங்களேகொண்டுபுக்கு. [அமுதமென்மொழியாளை] - இவள்மொழி, கேட்டார்க்கு நித்யத்வத்தைக்கொடுக்குமே இவ்வினியபேச்சைக் கேளாதபடி ஹாக்யஹீநைகளாவதே நீங்கள். அதாவது - அவ்வூரிலே

---

இரண்டாம்பாட்டு.—குமிறும் இத்யாதி. "குமிறுமோசைவிழவொலி" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - அவ்வூரில் இத்யாதி.

குமிறுமோசையுண்டாகைக்கடியேதென்ன - தேஷாம் இத்யாதி. "தேஷாம்புண்யாஹகோஷோதகம்பீரமதுரஸ்வந:| அயோத்யாம்பூரயாமாஸதூர்யநாதாநுநாதித:" இத்யயோத்யாகாண்டே[கூ-அ]. "குமிறும்" என்றதுக்கர்த்தம்-எழுத்தும் இத்யாதி. "கொண்டுபுக்கு" என்றதுக்குபாவம் - பாவியேன் இத்யாதி. "குமிறுமோசை" என்றதுக்குபாவம் - இவ்விடம் இத்யாதி. "கொண்டுபுக்கு" என்னுமளவாக பதப்ரயோகத்துக்கு பலித்தபாவம் - அவ்வூரும் இத்யாதி. அம்ருதத்தினுடைய, நித்யத்வப்ரதத்வம், போக்யத்வமாகிற ஆகாரத்வயத்தையும்பற்ற பாவத்வயம்-இவள்மொழி இத்யாதிவாக்யத்வயத்தாலே. திருவாய்மொழியைக்கேட்டார்க்கு புநராவ்ருத்தியில்லாத ஸ்தாநமுண்டாமென்று - ஸ்வாபதேசம். 'அதாவது அவ்வூரிலே' இத்யாதிவாக்யத்துக்கு

புக்கபின்பு இவர்களுடன் வார்த்தைசொல்லத்தவிர்ந்தாளாயிற்று. ''மதுராமதுராலாபா'' (மதுராமதுராலாபா) என்னும்படிகாணுமிருப்பது. இதுகேட்க ஆசைப்பட்டிருக்குமவன் பெற்றுப்போனான். [மென்மொழி] - அம்ருதத்தில் வ்யாவ்ருத்தி. ஸ்ரவணயோக்ய மாயிராதே அம்ருதம்: வேணுமாகில் ரஸ்யதைக்கு ஒருசொல்லுக்கு நிற்கிறது, மாதுர்யம் இதுக்கேயுண்டு இத்தனை. [நீருமக்காசையின்றி யகற்றினீர்] - இவள் பேச்சுக்கேட்டுப்போருகிற நீங்களே உங்களுக்குஇவள் வழிபடாதபடி பண்ணினிகோள். [திமிர்கொண்டா லொத்து நிற்கும்] - ''ஸ்தப்தோஸி'' (ஸ்தப்தோஸி) என்னுமாபோலே, அநுபாவ்யவிஷயத்தை யநுபவிக்கவும்மாட்டாதே ஸ்திமிதையாய் நில்லாநின்றாள். ''ஸ்தப்தோஸ்யுத'' (ஸ்தப்தோஸ்யுத) என்கிறபடியே, பரிபூர்ணஜ்ஞாநரைப்போலே யிராநின்றாளென்றுமாம். [மற்றிவள்] - இவள்இதுக்குமேலேவார்த்தைசொல்லில். [தேவதேவபிரானென்றே] - இங்கே கண்டாலும் *அயர்வறுமமரர்களதிபதி யிங்கேவந்து ஸுலபனானானென்றாயிற்றுஇவள்புத்தி பண்ணுவது. நாயகனுடைய மேன்மைக்குத்தோற்றுவார்த்தைசொல்லுகிற இவளை மீட்கப் போமோ? [என்றேநிமியும்] - ''அப்பெரியவள்இப்படி ஸுலபனாய் சீலவானாவதே!'' என்று, அந்தசீலவத்தையைச்சொல்லப்புக்குத் தலைக்கட்டமாட்டாதே உதடுநெளிக்கும். உதடு

---

ப்ர.—[அமுதமென்மொழியாளை] - ஸுந்தரகாண்டே [கஅ] ''மதுரா மதுராலாபா கிமாஹ மம பாமினீ। மத்விஹீநா வராரோஹா ஹநுமந் கதயஸ்வமே॥''

ப்ர.—[திமிர்கொண்டாலொத்துநிற்கும்]—சாந்தோக்யே [அ-க] ''ச்வேதகேதுர்ஹாருணேய ஆஸ । தம் ஹ பிதோவாச ச்வேதகேதோ வஸ ப்ரஹ்மசர்யம் நவை ஸோம்யாஸ்மத்குலீநோऽநநூச்ய ப்ரஹ்மபந்துரிவ பவதீதி ॥ ஸஹ த்வாதசவர்ஷ உபேத்ய சதுர்விம்சதி வர்ஷஸ் ஸர்வாந் வேதாநதீத்ய மஹாமநா அநூசாநமாநீ ஸ்தப்த ஏயாய । தம் ஹ பிதோவாச॥ ச்வேதகேதோ யந்நு ஸோம்யேதம் மஹாமநா அநூசாநமாநீ ஸ்தப்தோஸ்யுத தமாதேசமப்ராக்ஷ்யோ யேநாச்ருதம் ச்ருதம் பவத்யமதம் மதமவிஜ்ஞாதம் விஜ்ஞாதமிதி.''

---

பாவம் - தொலைவில்லிமங்கலத்திலே கொடுபுகுகையாலே யங்கே ப்ரவணையாய் இவர்களோடே வார்த்தைசொல்லத்தவிர்ந்தாளாகையாலே, அம்ருதமான இவள்பேச்சைக் கேட்டுக்கொண்டிராதே அங்கே கொடுபுக்கு இவள்பேச்சை யிழந்திகோளிறேயென்கிறாளென்றபடி. 'வார்த்தை போக்யமாயிருக்குமோ ? என்ன - மதுரா இத்யாதி. ''மதுராமதுராலாபா கிமாஹ மம பாமினீ'' இத்யாதி, சுந்தரகாண்டே ராமர். 'நீருமக்கு ஆசையின்றி' என்கையாலே ப்ரதிகோடித்வேந பாவம் - இது கேட்க இத்யாதி. வ்யாவ்ருத்தி யெத்தாலே? என்ன - ஸ்ரவண இத்யாதி. மொழியாகையாலே ஸ்ரவணயோக்யமா யிருக்கும் இதுஎன்றபடி. ''ஸ்தப்தோஸி'' என்கிற லௌகிகபரிபாஷையாலேசீழ்பாவமருளிச்செய்து, ஸ்ருத்யுபஜீவநேநார்த்தாந்தரம்-ஸ்தப்தோஸ்யுத இத்யாதி. அன்றிக்கே, ''ஸ்தப்தோஸ்யுத'' என்கிறஸ்ருதிக்கே இரண்டர்த்தமாய், அதாவது - ''யத்ஞாநாத்ஸ்துதி'' என்கிறபடியே அநுபவத்தால் ஸ்தப்ததையாதல், ஜ்ஞாநபூர்த்தியாலே பரபரப்பற்றிருக்கிற ஸ்தப்ததையாதல். இந்த இரண்டர்த்தத்தையும் அருளிச்செய்கிறார் - ஸ்தப்தோஸி என்னுமாபோலே இத்யாதி வாக்யத்வயத்தாலே. நம்முடைய புத்த்யதீநமா யிருக்கிறவனை - ''தேவதேவபிரான்'' என்கிறதென் ?

நெளிக்கிற வாயோடே கண்கள்நீர்மல்க. [நெக்கு] - சிதிலையுமாய். [ஓசிந்து] - பரவசை யாய். [கரையும்] நீராகாநின்றாள். [நெக்கோசிந்துகரையுமே] - பெருவெள்ளத்தில் கரை யானது நெகிழ்ந்து ஒட்டுவிட்டோசிந்து போசிந்து அவயவியாகாதபடி கரைந்துபோமா போலே, ஓரவயவியாக்கிக்காணவோண்ணாதபடி கரைந்துபோகாநின்றாள். (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

கரைகோள்பைம்பொழில்தண்பணைத் தொலைவில்லிமங்கலங்கொண்டுபுக்
உரைகொளின்மொழியாளைநீர் உமக்காசையின்றியகற்றினீர் [கு
திரைகோள்பௌவத்துச்சேர்ந்ததும் திசைஞாலந்தாவியளந்ததும்
நிரைகள்மேய்த்ததுமேபிதற்றி நெடுங்கண்ணீர்மல்கநிற்குமே.

ஆ.—(கரைகொள்.) - அதிமநோஹர ஸுமநோஹராபிராமாதிசீதள விடப விராஜித வகுள சம்பகாதி தருநிகர பரிவ்ருத பர்யந்தத்தை யுடைத்தான தொலைவில்லி மங்கலத்திலே கொண்டுபுக்க அன்றுதொடங்கி, அவனைப் பிரிந்த வ்யஸநத்தாலே அப்ர க்ருதிஸ்தையாய்க்கொண்டு, அத்யந்த மதுரமான சொற்களாலே, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளினபடியும், இந்தலோகத்தை யளந்தருளினபடியும், பசுமேய்த்தருளின படியும், முதலாகவுள்ள திவ்யசேஷ்டிதங்களையே யலற்றித் தன்னுடையதிருக்கண்கள் பரப்புமாறும்படி நீர்மல்கி நிற்கும். ஆகலால், அங்கே கொண்டுபுக்கு இவளை வலிய இழந்திகோ ளென்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், திருத்தொலைவில்லிமங்கலத்துக்குக் கொடுபோகிற நீங்கள், திருச்சோலையில் உள்ளிட்டுக்கொடுபோய்க் கெடுத்திகோள்! என்கிறாள். [கரை யென்று தொடங்கி] - திருப்பொருநற்கரையை விழுங்கிக் குளிர்ந்த திருச்சோலையையும் ஸ்ரமஹரமான நீர்நிலத்தையுமுடைய திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொண்டுபுக்கு. [உரைகொள் இன்மொழியாளை] - "ஒருத்தி பேச்சே!" என்று நாடெல்லாம் உரைக் கும்படி யிருந்த இன்மொழியாளை. பொருளின்றி உரையே கொள்ளப்படும் மழலை வார்த்தை யுடையாள் என்றுமாம். [திரைகொள்என்று தொடங்கி] - தன்னுடைய ஸந்நிதாநத்தாலேகளித்துத் திரைமோதாநின்றுள்ள திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தரு ளினபடியும் திக்குக்களோடுகூடின ஜகத்தையெல்லாம் அநாயாஸேந வளர்ந்து அளந்து கொண்டருளினபடியும் பசுமேய்த்தருளினபடியு மாகிற ஆஸ்ரிதார்த்தப்ரவ்ருத்திகளையே அடைவுகெடச்சொல்லித் தன்கண்ணிற் பரப்பெல்லாம் நீர்மல்கப் பிதற்றவும்க்ஷமையன் றிக்கே நிற்கும்.

---

என்ன - இங்கேகண்டாலும் இத்யாதி. "தேவதேவபிரான்" என்றவளுடைய ஹார்த்தபாவம் - நாய கனுடைய இத்யாதி. "நெக்கு, ஒசிந்து, கரையும்" என்ற மூன்றையும் த்ருஷ்டாந்தத்திலே காட்டு கிறார் - பெருவெள்ளத்தில் இத்யாதி. 'திமிர்கொண்டால்' என்றதொடங்கி, 'ஆசையின்றி யகற்றினீர்' இத்யந்வயஃ.

(உ)

---

ப.—அநந்தரம், ரக்ஷணார்த்தமான ப்ரவ்ருத்திகளையுடைய ஸர்வேஶ்வரன் வர்த்திக்கிற சோலையையும் கழனியையுமுடைய தேசத்தைக் காட்டினிகோ ளென்கிறாள்.

கரை - திருப்பொருநற்கரையை, கொள் - விழுங்கும்படியான, பை - பரந்த, பொழில் - பொழிலையும், தண் - குளிர்ந்த, பணை - நீர்நிலத்தையுமுடைய, தொலைவில்லி மங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்திலே, கொண்டு - கொண்டு, புக்கு - புக்கு, உரை கொள் - லோகமெல்லாங் கொண்டாடும்படியான, இன் - இனிய, மொழியாளை - மொழியையுடையவளை, நீர் - (இவள்வார்த்தை வாசியறியும்) நீங்கள், உமக்கு - உங்களுக்கு, ஆசை - அதில்ஆசை, இன்றி - இன்றியே, அகற்றினீர் - தூரஸ்த்தையாம்படி பண்ணினிகோள்; (அதுவென்னென்னில், அர்த்திகள் கூக்குரல் கேட்கும்படி), திரை - ஸ்வஸ்பர்ஶத்தாலே கிளம்பினதிரையை, கொள் - உடைய, பௌவத்து - கடலிலே, சேர்ந்ததும் - (அவன்ஆஶ்ரிதரக்ஷணார்த்தமாகக்) கண்வளர்ந்தருளினபடியையும், திசை-திக்குக்களோடுகூடின, ஞாலம் - பூமியை,(அநாயாஸேந), தாவி-கவட்டித்து, அளந்ததும்-அளந்துகொண்டு அநந்யார்ஹமாக்கினபடியையும், நிரைகள் - பசுத்திரள்களை, மேய்த்த துமே - மேய்த்தபவ்யதையையுமே, பிதற்றி - (பரவசையாய்க்கொண்டு)பிதற்றி, (தன்னுடைய), நெடு-நெடிய, கண் - கண்கள், நீர் - நீர், மல்க - மகும்படி, நிற்கும் - ஸ்தப்தையாகாநிற்கும்.

இ.—மூன்றாம்பாட்டில், திருநாளிலேதான் கொண்டு போகிறிகோள்: திருச்சோலை யுள்ளிட்டு இவளைக் கொண்டுபோய்க் கெடுத்திகோள்! என்கிறாள். [கரை கொள் இத்யாதி] - திருப்பொருநற்கரையை விழுங்கிப் பரந்து இருந்துள்ள சோலையையும் நீர்நிலங்களையும் உடைத்தான திருத்தொலைவில்லிமங்கலத்திலே இவளைக் கொண்டு புக்கு. போகிற நீங்கள் திருச்சோலையூடே கொண்டுபோக வேணுமோ? [உரைகொள் இன்மொழியாளை] - கேட்டாரடங்க "இது ஒரு பேச்சே!" என்று கொண்டாடும்படியான இனியமொழியை யுடையவள் என்னுதல்; அர்த்தத்தில் இழியவேண்டாதே, ஶப்தமே அமைந்திருக்கும் என்னுதல். "பாலேய் தமிழரிசைகாரர் பத்தர் பரவுமாயிரம்" என்று, நின்றார் நின்ற துறைகளிலே ஈடுபடும்படி இருக்கை. மாற்றும் உரையும் அற்றபேச்சு என்னுதல். உரை என்று - ஸ்ரீராமாயணமாய், அது குத்துண்ணும்படி இருக்கும் என்னுதல். [உமக்காசையின்றி யகற்றினீர்] - அவ்வூரிலே கொடுபுகுகையும், இவள்பக்கல் நசையறுகையென்றும் பர்யாயமன்றோ. இவளை வேண்டாமை யிறே கொடுபுக்கது. [திரைகொள் பௌவத்துச் சேர்ந்ததும்] - வ்யூஹவிபவங்களையும் இங்கே அநுபவிக்கும்படியிறே இவள் அவகாஹித்தது. ஸ்வஸ்பர்ஶத்தாலே திரைக்கிளர்த்தியையுடைத்தாய்க் களித்து வருகிற திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளிற்றும். பரமபதத்தைவிட்டு, ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கைக்காக வந்துகிடக்கிற நீர்மையிலே ஶிதிலையாகாநின்றாள்.

[திசைஞாலம் இத்யாதி] - "மஹாபலியாலே பூமி அபஹ்ருதையாயிற்று" என்று கேட்டவாறே அப்படிக்கையில் பொருந்தாதே, திக்குக்களோடேகூடின பூமியை அநாயாஸேந எல்லை நடந்துகொண்டதும், அது பாதசையென்னும்படி கோபஸஜாதீயனாய்க் கையிலே கோலைக்கொடுத்து "பசு மேய்த்துவா" என்னலாம்படியான நீர்மையையும் அநுஸந்தித்து: இப்படிப்பட்ட ஆஶ்ரிதார்த்தப்ரவ்ருத்திகளை "ஜாஊ௨ஹ்ஷுஜஷ தஃ"

என்கிறபடியே அடைவுகெடச்சொல்லி. [நெடுங்கண்ணீர்மல்க] - இக்கண்ணில் பரப்படைய நீர்மல்கும்படி. [நிற்குமே] - பிதற்றவும் க்ஷமையன்றிக்கே ஸ்தப்தையாய் இராநின்றாள்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருநாளிலே தான் கொண்டுபோகவேண்டினால், திருச்சோலையுள்ளிட்டுக் கொடுபுகுவாருண்டோ? என்கிறாள்.

[கரைகொள்பைம்பொழில்] - திருப்பொருநற்கரையைப் பொழில் விழுங்கியிருக்கை. கரையைப் பொழில்கொண்டாற்போலே, இவளைக் குணங்கொண்டபடி. அத்திருச்சோலையை யுங்களுடைய ஹிதவசநத்தாலே பேர்த்துக்கொடுபோமன்றன்றே இவள் நிலையை யுங்களால் பேர்க்கலாவது! பரந்த பொழிலையும் குளிர்ந்த நீர்நிலங்களையுமுடைய திருத்தொலைவில்லிமங்கலத்திலே கொடுபுக்கு. [உரைகொள்இன் மொழியாளை] - "வாசெ மெயெவசஉயஈவ" (பாட்யேகேயேசமதுரம்)என்னும் ஸ்ரீராமாயணம் குத்துண்ணும்படியான பேச்சென்னுதல்; அர்த்தத்திலிழியவேண்டாதே, "உரையேயமையும்" என்னும்படியான பேச்சென்னுதல். †(பரவ்யூஹவிபவங்களையும்இங்கேயநுபவிக்கும்படியிறே இவள்அவகாஹித்தது) "இதோருரையே! - பேச்சே!" என்று நாட்டார் கொண்டாடும்படியானபேச்சென்னுதல். அப்பேச்சில் வாசியறிந்து அநுபவிக்கமாட்டாதே, நீங்களே யாசையின்றி அகற்றினிகோள். [உரைகொள்இன்மொழி] - மாற்றும்உரையும் அற்றபேச்சென்னுதல்; உரை - அடைவுசொல். [உமக்காசையின்றியகற்றினீர்] - அவ்வூரிலே கொடுபுகுகையும், இவள் பக்கல் நசையறுகையென்றும் பர்யாயம். ஆயிட்டு, "இவளைவேண்டா" என்றன்றே கொடுபுக்கதென்கிறாள். [திரைகொளித்யாதி] - ஸ்வஸந்நிதாநத்தாலே கிளராநின்றுள்ள திரைகளையுடைத்தான திருப்பாற்கடலிலே ப்ரஹ்மாதிகள் கூக்குரல் கேட்கும்படியாகக் கண்வளர்ந்தருளினதுவும், இவர்களார்த்திகேட்ட பின்பு இந்த்ராதிகளுக்குக் குடியிருப்புப் பண்ணிக் கொடுக்க அடியிட்டபடியும். [திசைஞாலம்தாவியளந்ததும்] - திக்குக்களோடே கூடின பூமியைஇரப்பாளனாயிரந்து அநாயாஸேந வளர்ந்துஅளந்தபடியும். [திசைஞாலம்தாவியளந்ததும்] - "இந்த்ராதிகளை ரக்ஷிக்கவேணும்" என்றஆசையோடேகாணும் பூமியைஅளந்தது.

---

மூன்றாம்பாட்டு.—கரைகொள் இத்யாதி. "கரைகொள் பைம்பொழிற்றண்பணை" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - திருநாளிலே இத்யாதி.

"கரைகொள்" என்கிறவிடத்திலே, கொள்கை - க்ரஹிக்கையாய், க்ரஸிக்கையைச்சொல்லுகிறது. பதப்ரயோகத்துக்கு ஹார்த்தபாவம் - கரையை இத்யாதி. பணை - நீர்நிலங்கள். குணங்கொண்டபடியென்றது - "நிரைகள் மேய்த்ததுமேபிதற்றி" என்றத்தைப்பற்ற. "பொழில்" என்றதிலே நோக்காக ஹார்த்தபாவாந்தரம் - அத்திருச்சோலையை இத்யாதி. "உரைகொள்" என்றதுக்கு அஞ்சார்த்தம். முந்தினதுக்கு, உரை - ஸ்ரீமத்ராமாயணம்; இத்தை யருளிச்செய்கிறார் - ஸ்ரீராமாயணம் குத்துண்ணும்படியான என்று. இரண்டாவது - அர்த்தத்தில் இத்யாதி. அதாவது - உக்தியே நெஞ்சை யபஹரிக்கும்படியான என்றபடி. உரை - உக்தி. மூன்றாவது - இதோருரையே இத்யாதி. அதாவது - லௌகிகஶ்லாகோக்தியை யுடைய என்றபடி. உரை - லௌகிகருடைய ஶ்லாகோக்தி; கொள்கை - உடைத்தாகை. நாலாவது - மாற்றும் இத்யாதி. உரையென்று - மாற்று; கொள்கை - ஜயிக்கை. அஞ்சாமர்த்தம் - உரைஅடைவுசொல் என்று. அதாவது - இப்பாட்டில் "கரை, உரை, திரை, நிரை" என்றாற்போலே சொன்னவை. கொள்கை - உடைத்தாகை. நாங்களகற்றினோமோ? என்ன - அவ்வூரிலே இத்யாதி. ஆயிட்டு - ஆனபின்பு. மேலுக்கவதாரிகை - இவர்களார்த்தி இத்யாதி. ஸப்தார்த்தம் - திக்குக்களோடே இத்யாதி. "திசை" என்றதிலே ரஸோக்தி - இந்த்ராதிகளை

ஆசை - திக்கு. "இவன்திருவடிகளாலே நம்மை ஸ்பர்சிக்கவேணும்" என்றாசைப்பட்டுக் காணும் கிடக்கிறது பூமி. படுகை - உடைத்தாகை. பூமியினுடைய ஆசையாவது - திக்குப்பட்டிற்றயிருப்பது. அவ்வளவன்றிக்கே, அறிவுகேட்டுக்குத் தலையான பசுக்களோடே சேர்ந்து வர்த்தித்தபடியுமேசோல்லி யடைவுகெடக்கூப்பிட்டு. [நெடுங்கண்ணீர்மல்க] - இக்கண்ணில் பரப்படங்கலும் பரப்புமாற ஜலதத்த்வமுண்டாவதே! [நிற்குமே]-பிதற்றவும் க்ஷமையன்றிக்கே, கண்ணநீர்மல்குகை "ஸ்வஸ்த்ததசை" என்னும்படி ஸ்தப்தையாய் நில்லாநின்றாள். (ங)

---

## நான்காம் பாட்டு.

---

நிற்கும்நான்மறைவாணர்வாழ் தொலைவில்லிமங்கலங்கண்டபின்
அற்கமொன்றும்அறவுருள் மலிந்தாள்கண்டீர் இவளன்னைமீர்!
கற்குங்கல்வியெல்லாம்கருங்கடல்வண்ணன் கண்ணபிரானென்றே
ஒற்கமொன்றுமிலள்உகந்துகந்து உள்மகிழ்ந்துகுழையுமே.

*ஆ.—(நிற்கும்.) - அபௌருஷேய நிர்த்தோஷாசேஷ வேதவேதார்த்த ப்ரவர்த்தகரான திவ்யஜநங்கள் வேதவேத்யமான பகவத்ஸ்வரூபரூப குணவிபூதிகளை ஸாக்ஷாத்கரித்துக்கொண்டு வாழுகிற திருத்தொலைவில்லிமங்கலத்தைக் கண்டபின், ஸ்த்ரீத்வ ப்ரயுக்தமான மர்யாதையைக்கடந்து ஒருவர்க்கும் விதேயையன்றியே, சொல்லும்சொல்லெல்லாம் கருங்கடல்வண்ணன் கண்ணபிரானென்றே எப்போதும் சொல்லி, ஒரு ஸ்ராந்தியுமின்றியே அவன் திருநாமங்களைச் சொல்லச்சொல்ல மேல்மேல் வந்த ப்ரீதிபரம்பரையாலே அத்யந்தம் அவஸந்நையாகாநின்றாள்; இப்படி அவன் திறத்தில் அபிநிவிஷ்டையான இவளை என்னால் நிவர்த்திப்பிக்கவொண்ணாதென்கிறாள்.*

*ஒ.—நாலாம்பாட்டில், திருத்தொலைவில்லிமங்கலத்தையும், அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமஷ்டியையும் யாதொருநாள் கண்டாள், அன்றுதொடங்கித் தடை நிற்கை தவிர்ந்தாள் என்கிறாள் [நிற்குமென்று தொடங்கி] - அபௌருஷேயமாய் நித்யமான வேதங்கள் தாங்களிட்ட வழக்காகையாலே வ்யாஸபதஞ்செலுத்தவல்லராயுள்ளவர்கள் அந்த வேதார்த்தபூதனான எம்பெருமானைப்பெற்று வாழுகிற திருத்தொலை*

---

இத்யாதி. ஆசையோடேயென்றது - ஶ்லேஷம். இன்னமும் ஒருவழியாலே ரஸோக்தி - இவன் இத்யாதி. திக்குப்பட்டிறே - அடைவுபட்டிறே இத்யர்த்தம். ஸ்வபாவார்த்தம் - திக்கையுடைத்தாகை. "நெடு" என்றதுக்கு பாவம் - இக்கண்ணில் இத்யாதி. திரைகொளென்றுதொடங்கி, அகற்றினீரித்யந்வயம். பௌவம் - கடல். "வாநரைஶ்ச மஹாகாயை: ஸர்வைஶ்சைவ ஸ்வலங்க்ருதை: । ஜாதிஸ்ரீஜாதிஸம்பந்நை: ஸுக்ரீவஸஹிதை:" இதி பாலகாண்டே [ச-அ]. (ங)

வில்லிமங்கலத்தைக் கண்டபின் ஒன்றும் தடைநில்லாள்; அன்னைமீர்! இவள் நம்மைக் கைகடந்தாள்கிடிகோள். [கற்குமென்று தொடங்கி] - சொல்லுஞ் சொல்லெல்லாம் திருநாமங்களேயாய்ச் செல்லாநின்றாள். வருத்தம் ஒன்றும் இன்றிக்கே அத்திருநாமங்கள்வழியே அவன் அழகையும் அவன் குணங்களையும் அநுஸந்தித்து மேன்மேலென ப்ரீதையாய் அந்தஃகரணமும் ப்ரீதமாய் அந்த ப்ரீத்யதிஶயத்தாலே அழியாநிற்கும்.

ப.—அநந்தரம், ஶ்ரஶநீய விக்ரஹவிஶிஷ்டனான க்ருஷ்ணனுடைய விலக்ஷண புருஷாவாஸமான திருத்தொலைவில்லிமங்கலத்தைக் கண்டபின்பு ஒருவர்க் கடங்காதபடி கைவிஞ்சினளென்கிறாள்.

நிற்கும் - நித்யமாய், நால் - நாலுவகைப்பட்ட, மறை - வேதங்களுக்கு, வாணர் - நிர்வாஹகரானவர்கள், வாழ் - (பகவதநுபவத்தாலே) வாழாநிற்கிற, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை, கண்டபின் - கண்டபின்பு, அற-மிகவும், அற்கம் - அடக்கம், ஒன்றும் - ஒன்றும், உறாள் - உறுகிறிலள்; இவள் - இவள், மலிந்தாள் - கைகழியவிஞ்சினாள்; (இவள்இப்படியாய்ப்படி), அன்னைமீர்-பெற்றுவளர்த்த நீங்கள், கண்டீர் - கண்டிகோளிறே! கற்கும்-(இவள்)அப்யஸிக்கும், கல்வி-வார்த்தை, எல்லாம்-எல்லாம், கரு-ஶ்யாமளமான, கடல் - கடல்போலேயிருக்கிற, வண்ணன் - வடிவையுடையவனாய், கண்ணன் - ஆஶ்ரிதபவ்யனானக்ருஷ்ணனாகிற, பிரான் - மஹோபகாரகன், என்றே-என்று, (அவனுடைய ரூபவைலக்ஷண்யத்தையும் ஆத்மகுணத்தையும் சொல்லி), ஒன்றும் - ஒருப்ரகாரத்தாலும், ஒற்கம் - ஒடுக்கம், இலள் - இலளாய்க்கொண்டு, உகந்துகந்து - அந்தகுணாநுஸந்தாநத்தாலே மேன்மேலுமுகந்து, (அத்தாலே), உள் - நெஞ்சிலே, மகிழ்ந்து - ஆஹ்லாதம் மிக்கு, குழையும் - அது அடியாக சிதிலையாகாநிற்கும். அற்கம்-அல்குதலாய், அடங்குதலென்றபடி. ஒற்கம் - ஒல்குதலாய், ஒடுங்குதல் என்றபடி.

ஈ.—நாலாம்பாட்டில், அவ்வூரையும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவர்களையும் கண்டபின், தடைநிற்கை தவிர்ந்தாள் என்கிறாள். [நிற்கு நான்மறை] - அபௌருஷேயமாய் நித்யமான வேதங்கள். [வாணர்] - வேதங்கள் தாங்களிட்ட வழக்காய்ச் செல்லுகையாலே வ்யாஸபதஞ் செலுத்தவல்லவர்கள். [வாழ்தொலைவில்லிமங்கலம்] - வேத தாத்பர்யபூதனானவனைக்கண்டு நித்யாநுபவம்பண்ணுகிற வூர். "ஸாயுஜ்யாமெஹ்யாமஹாவஹீத" என்னுமளவன்றிக்கே, "யோமாகஸாயுஜ்யமாஜோநெஹ" என்று ஆரூடயோகராயிருக்குமவர்கள். [கண்டபின்] - அவ்வூரில் ஸ்ரீவைஷ்ணவர்களும் அவனுமான சேர்த்தியைக் காட்டிக்கொடுத்துக் கெடுத்திகோள். [அற்கமொன்றும் அறவுறாள்]: அற்கம் - அல்குதல், அடங்குதல், தாயார்சொல் வழிவருமத்தை ஒன்றையும் அறவிட்டாள். [மலிந்தாள் கண்டீரிவள்] - இவளுடைய ஸம்பவத்ப்ராவண்யம் எனக்குத் தெரியாதபடி விஞ்சினாள்கிடிகோள். [அன்னைமீர்!] - மீட்கத்தேடுகிற உங்களோடு, இவள் கருத்தறிந்தேனாய்ச் சொன்ன என்னோடு வாசியில்லை தெரியாமைக்கு. நித்யஸூரிகள் யாத்ரை ஸம்ஸாரிகளுக்குத் தெரியிலன்றோ நமக்கு இவள் அளவுதெரிவது? [கற்குங்கல்வி இத்யாதி] - சொல்லும் சொல்லெல்லாம் திருநாமமேயாய், அதுதன்னிலும், வடிவழகுக்கும் ஆஶ்ரிதபாரதந்த்ரியத்துக்கும் வாசகமான திருநாமங்களையே சொல்லாநின்றாள். "க்ருஷ்ணனாகில் ஆஶ்ரிதபாரதந்த்ரன்" என்று ப்ரஸித்தமிறே. [பிரான்] - உபகாரஶீலன். [என்றே ஒற்கமொன்றுமிலள்] - திருநாமங்களை இடைவிடாதே

நெடுமாலென்றே - அவன் வ்யாமோஹாதிசயத்தைச்சொல்லி, நின்று-, கூவும் - அழையா நின்றாள்; (அவ்வளவேயன்றிக்கே அந்த வ்யாமோஹமடியாக), அவன்-, முன்னி-முற்பாடனாய், வந்து-, நின்றிருந்து - நிற்பதிருப்பதாய், உறையும் - நித்யவாஸம்பண்ணுகிற, தொலைவில்லிமங்கலம் - திருத்தொலைவில்லிமங்கலத்தை, சென்னியால் - தலையாலே, வணங்கும் - வணங்காநிற்கும்; (தான் சொல்லுமதிலும்), அவ்வூர்த்திருநாமம் - அவ்வூர்த் திருநாமத்தை, கேட்பதே-பிறர்சொல்லக்கேட்கையே, சிந்தை - நினைவாயிராநின்றாள்।

இ.—பத்தாம்பாட்டில், அவனுலல்லது செல்லாதபடியான இவளுடைய ப்ராவண்யாதிஶயத்தைக்கண்டு, பிராட்டிமாரிலே ஒருத்தியோ! என்று சங்கிக்கிறாள். [பின்னைகொல்] - "நப்பின்னைப்பிராட்டி பிறந்திட்டாளோ? அங்ஙனன்றியே, ஸ்ரீபூமிப்பிராட்டி பிறந்திட்டாளோ? எல்லார்க்கும் இவ்வேற்றங்களைக்கொடுக்கும் பிராட்டிதானே பிறந்திட்டாளோ?" என்பர்கள் பூர்வர்கள். ஸர்வேஶ்வரனுக்கு ஸம்பத்தாயிருக்குமவள் பிறந்தாளோ, அதுக்கு விளைபூமியாயிருக்குமவள் பிறந்தாளோ, அவ்விளைபூமியினுடைய ஸ்வரூபமாயிருக்குமவள் பிறந்தாளோ? அங்ஙனன்றியே, அவர்களுக்கும் இவள்படி இல்லாமையாலே அவர்களோடு ஒப்பன்று; லோகமெல்லாம் வாழ்கைக்கு இவள் ஒருத்தி பிறந்தாளோ என்றுமாம். "விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே" என்றாற்போலே நாய்ச்சிமார்பக்கலிலும் ஒருவகைக்குஒப்புச்சொல்லலாம்படியிருக்கையாலே கதிர்பொறுக்குகிறாள். "உபௌ நஶேஷாணாம்ஸாயுஜ்யநாம்யஸ்ஸஹாஸவஸ" என்கிறபடியே எல்லார்க்கும் இவரை ஒப்பாகச்சொல்லலாம்; இவர்க்கு ஒப்பாவார் ஒருவருமில்லை. [என்னமாயங்கொலோ] - இவள் திருநாமத்தைச்சொல்லிக் கூப்பிடாநின்றாள், இது என்ன ஆஶ்சர்யமோ? இவ்விபூதியிலே இங்ஙனேயிருப்பாரையும் காணலாமாகாதே! அவன் தன்பக்கல் பண்ணின வ்யாமோஹாதிஶயத்தைச் சொல்லிக் கூப்பிடாநின்றாள். [முன்னி இத்யாதி] - தன்னுடைய வ்யாமோஹத்துக்கு அவன் க்ருஷிபண்ணினபடி. முற்பாடனாய்வந்து, அவன் நிற்பதிருப்பதாய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணாநிற்கும் ஊர். பசியன் சோறுதாழ்த்தால் படுமாபோலே. [சென்னியால் வணங்கும்] - தன்கரங்கள் கூப்பித்தொழுகையும் ப்ரார்த்யமானபடி; இருந்தவிடத்தே இருந்து தலையைச்சாய்க்கும்படியானாள். இவள் அகவாய் ஓடுகிறது அவ்வூர்த்திருநாமங்கேட்கையிலே. "திருநாமத்தைக் கேட்கவல்லேனே" என்றாயிற்று இவள் மனோரதம். "இவள் வாயாலே சொல்லக்கடவ திருநாமத்தை நாம் சொல்லிக் கெடுக்கக்கடவோமல்லோம்" என்று அவ்வூர் என்கிறாள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. அவனுலல்லது செல்லாத இவளுடைய ப்ராவண்யாதிஶயத்தைக் கண்டு, பிராட்டிமாரிலே யொருத்தியோ? என்று சங்கிக்கிறாள்.

[பின்னைகொல்] - பின்னை பிறந்திட்டாளோ? அங்ஙனன்றியே, ஸ்ரீபூமிப்பிராட்டி பிறந்திட்டாளோ? அன்றிக்கே, எல்லார்க்கும் இவ்வேற்றங்களைக் கொடுக்கும்

---

பத்தாம்பாட்டு—பின்னைகொல் இத்யாதி. "பின்னைகொல்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - அவனுலல்லது இத்யாதி.

"பிறந்திட்டாள்" என்றத்தை - மூன்றுபேரிடத்திலும் அந்வயித்தர்த்தம் - பின்னைபிறந்திட்டாளோ என்று தொடங்கி. இவ்வேற்றங்களையென்றது - இவளுக்குண்டான ஏற்றங்களையென்ற

பிராட்டிதானே பிறந்திட்டாளோ? ஸர்வேஶ்வரனுடைய ஸம்பத்தாயிருக்குமவள் பிறந் திட்டாளோ? அஸ்ஸம்பத்துவிளையும் பூமியாயிருக்குமவள் பிறந்தாளோ? அவ்விளைபூமியி னுடைய ஃலரூபமாயிருக்குமவள் பிறந்தாளோ? அங்ஙனன்றிக்கே, [பிறந்திட்டாளோ] - அவர்களுக்கு இவள்படி யில்லாமையாலே அவர்களோப்பன்று; லோகமெல்லாம் வாழு கைக்கு இவளொருத்தி பிறந்தாளோ! என்றுமாம். "விஷ்ணுநாஸத்ருஶோவீரியே" (விஷ்ணுநாஸத்ருஶோவீர்யே) என்றாற்போலே, நாய்ச்சிமார் பக்கலிலேயும் ஓரோவகைக்கு ஒப்புச் சொல்லலாயிருக்கையாலே கதிர்பொறுக்குகிறாள். "உபமாநமஶேஷாணாம் ஸாதூநாம்யஸ்ஸதாபவத்" (உபமாநமஶேஷாணாம்ஸாதூநாம்யஸ்ஸதாபவத்) என்கிற படியே இவரை எல்லார்க்கும் ஒப்பாகச் சொல்லலாய் இவர்க்குஒப்பாவார் ஒருவரு மில்லைகாணும். [என்னமாயங்கொலோ] - ஹ்மவத்விபூதியில் கூடாததில்லையாகாதே! இதேன்ன ஆஶ்சர்யந்தான்! [இவள் நெடுமாலேன்றே நின்றுகூவும்] - தன்பிச்சைக் காற் கடைக்கொண்டு, அவன் பிச்சைச்சொல்லிக் கூப்பிடாநின்றாள். [ஆல்] - ஆஶ்சர்யத்திலே, அசை. [முன்னி இத்யாதி] - தன்னுடைய வ்யாமோஹத்துக்கும் அவன் க்ருஷிபண்ணின படி. முற்பாடனாய்வந்து அவன் நிற்பதிருப்பதாய்க்கொண்டு நித்யவாஸம் பண்ணுகிறவூர். பசியன், சோறுதாழ்த்தால் படுமோபோலே. [சென்னியால்வணங்கும்] - *தன்கரங்கள் கூப்பித்தொழுகையும் ப்ரார்த்யமானபடி. இருந்தவிடத்தேயிருந்து தலைசாய்க்கும்படி யானாள். [அவ்வூர் இத்யாதி] - அவ்வூர்த் திருநாமங்கேட்கச் செவிதாழ்க்கையிலே இவ ளுக்கு மநோரதம். இவள், அவ்வூரேன்கிறது - பெண்பிள்ளை சொன்னாற்போலே யிராமை. ஆனால்ஒருகால் சொன்னாளே? என்னில், "அது வறைமுறுகலாகையிறே பின்பு தவிர்ந்தது" என்றருளிச்செய்வர்.

(கo)

---

படி. கீழ்வாக்யத்தை ஒருவிசேஷந்தோற்ற வ்யுத்க்ரமமாகவிவரிக்கிறார் - ஸர்வேஶ்வரனுடையஇத்யாதி. கீழே - மூன்றுபிராட்டிமாரிடத்திலும் "பிறந்திட்டாள்" என்றத்தை யந்வயித் தருளிச்செய்து, அங்ங னன்றிக்கே, "பிறந்திட்டாள்" என்றத்தை ப்ரத்யேகபதமாக்கி அர்த்தாந்தரம் - அங்ஙனன்றிக்கே இத்யாதி. முந்தின அர்த்தத்தில், மூவரையும் ஒப்பாகச் சொல்லுவானென்? என்ன - விஷ்ணுநா இத்யாதி. "ஓரோவகைக்கு" என்கிறதென்? ஸர்வதாஸாம்யம் சொன்னாலோ? என்ன - உபமாநம் இத்யாதி. இது - இரண்டாமர்த்தத்துக்கு அநுகுணம். த்விதீயார்த்தத்திலே, தோழியின்ஈடுபாடு - பகவத்விபூதியில் இத்யாதி. அதாவது - அதிவிலக்ஷணையான இவள் இந்த விபூதியிலே திருவவ தரிக்கையாலே, பகவத்விபூதியில் இதென்ன ஆஶ்சர்யமென்று கருத்து. மாயம் - ஆஶ்சர்யம். உறையு மென்னாதே, "நின்றிருந்து" என்று விசேஷிக்கிறதுக்குபாவம் - பசியன் இத்யாதி. இத்தால் - நிற்பதிருப்பதாகிற இரண்டையும் ஏகஸ்தலத்திலே செய்தானென்கையாலே, ஈஶ்வரனுக்கு ஆழ் வாரை யநுபவிக்கையில் உண்டான விடாயெல்லாந் தோற்றுகிறதென்றபடி. ப்ரார்த்யமானபடி யென்றது - கையெடுத்துத் தொழுகைக்கும் பலமில்லாதே போயிற்று என்றபடி. செவிதாழ்க்கையிலே இவளுக்கு மநோரதமென்றது - பலஹாநியாலே கேட்கைதானும் ப்ரார்த்யமாய்விட்டதென்றபடி. வறைமுறுகல் - கருகிப்போகை. அஸாரமென்றபடி. இவள் நெடுமாலென்றே நின்றுகூவும்; முன்னி வந்தவன் இத்யாரப்ய, கேட்பதுசிந்தை; பின்னை கொல் என்றுதொடங்கி, பிறந்திட்டாள்; என்னமாயங் கொலோ? என்றந்வயம். "யஸ்ஸாத்ருஶ்யஸமுத்ரிக்தாநாமாகாரஸூயா। உபமாநமஶேஷாணாம்" இத்யாதிப்ரதமேம்ஸே,பஞ்சதஶே.

(கo)

## பதினோராம் பாட்டு.

சிந்தையாலுஞ்சொல்லாலுஞ் செய்கையினாலுந்தேவபிரானையே
தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர்சடகோபன்
முந்தையாயிரத்துள் இவை தொலைவில்லிமங்கலத்தைச்சொன்ன
செந்தமிழ்ப்பத்தும்வல்லார்அடிமைசெய்வார் திருமாலுக்கே.

ஆ.—(சிந்தையாலும்.) - வாங்மநஃ காயவ்ருத்திகளாலே தேவபிரானையே தந்தைதாயென்றடைந்த குருகூர்ச்சடகோபன் சொன்ன ஸகலவேதஸாரபூதமான ஆயிரந்திருவாய்மொழியிலும் ஸாரபூதமான இத்திருவாய்மொழியை வல்லார், எம்பெருமானுக்கும் பிராட்டிக்கும் அபிமத ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணுவா ரென்கிறார்.

ஒ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் கருத்தை வ்யக்தமாக்கா நின்றுகொண்டு, இத்தைக்கற்றவர்கள் இதுக்கு அநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவர் என்கிறார். [சிந்தையால் என்று தொடங்கி] - மநோவாக்காயங்களினால் திருத்தொலைவில்லிமங்கலத்தில் எம்பெருமானையே எல்லா உறவுமுறையும் என்று பற்றுவதும் செய்து, திருநகரியில் உள்ளார்க்கு ஸர்வவிதமுமான ஆழ்வார் அருளிச்செய்த. [முந்தையாயிரம்] - அர்த்தப்பழமையாலே பழையதான ஆயிரம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை அப்யஸிக்கவல்லவர்கள் ஸ்ரீயஃபதிக்கு நித்யகைங்கர்யபரராவர்கள் என்று ஃபலத்தை அருளிச்செய்கிறார்.

தேவபிரானையே - தேவபிரானையே, (ஹிதபரத்வத்தாலும் ப்ரியபரத்வத்தாலும்), தந்தை - தந்தையும், தாய்-தாயும், என்று - என்று அறுதியிட்டு, (இத்திருவாய்மொழியிற்சொன்ன கணக்கிலே), சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் - கரணத்ரயத்தாலும், அடைந்த - ஆஶ்ரயித்தவராய், வண் - “அன்னையாயத்தனாய்” என்கிற ஸ்ரீமதுரகவிகளைப்போலே தம்மைப்பற்றியிருக்கிற, குருகூரவர் - திருநகரியிலுள்ளார்க்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், முந்தை - பழையதான வேதார்த்தத்துக்கு ப்ரகாஶகமான, ஆயிரத்துள் - ஆயிரந்திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு, தொலைவில்லிமங்கலத்தை - திருத்தொலைவில்லி மங்கலத்தைப்பற்ற, சொன்ன- அருளிச்செய்த, செம் - அர்த்த ப்ரகாசநத்தில் ஆர்ஜவத்தையுடைய, தமிழ் - தமிழான, இவைபத்தும் - இப்பத்தையும், வல்லார் - அப்யஸிக்கவல்லவர்கள், திருமாலுக்கு - ஸ்ரீயஃபதியான ஸர்வேஶ்வரனுக்கு, அடிமைசெய்வார் - அடிமைசெய்யுமவர்களாவர். இது-எழுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழியில் கருத்தைச் சொல்லிக்கொண்டு, இது கற்றவர்கள் இதுக்கு அநுரூபமான கைங்கர்யத்தைப் பண்ணப்பெறுவர் என்கிறார். [சிந்தையாலும் இத்யாதி] - மநோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட அவன் பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறபடி. “இரங்கி” என்றும், “மணிவண்ணவோவென்று கூவுமால்” என்றும், “தன்கரங்கள் கூப்பித்தொழும்” என்றும் - மூன்றாலும் இவர்க்கு உண்டான ப்ராவண்யாதிஶயமிறே இத்திருவாய்மொழியில் சொல்லிற்று. [தேவபிரான்

இத்யாதி] - * அயர்வறுமமரர்களதிபதியாய்வைத்துத் திருத்தொலைவில்லி மங்கலத்திலே ஸுலபனாய் இருந்தவனையே ஸர்வவிதபந்துவுமென்று, அப்படியே பற்றுவதும் செய்தவர். [வண்குருகூரவர்சடகோபன்] - அவனே தமக்கு ஸர்வவிதபந்துவுமானாற்போலே, அவ்வூரிலுள்ளார் "ஆழ்வாரே எல்லாஉறவுமுறையும்" என்றாயிற்று இருப்பது. "அன்னையாயத்தனாய்" என்னும் ஸ்ரீமதுரகவிகளைப்போலே. [முந்தையாயிரம்] - பழையதான வேதார்த்தத்தை அருளிச்செய்கையாலே, ஸர்வேஶ்வரன் இதரஸஜாதீயனானாற்போலே வேதமும் தமிழாய்வந்து இவர்பக்கலிலே அவதரித்தபடி. [செந்தமிழ்] - செவ்வியதமிழ், பசுந்தமிழ். அர்த்தத்தை விஶதமாகக்காட்டுமது. இப்பத்தை அப்யஸிக்கவல்லார் ஸ்ரிய:பதிக்கு அடிமைசெய்யப்பெறுவர்.

ஈடு.—நிகமத்தில், இத்திருவாய்மொழியிற்கருத்தை வ்யக்தமாக்காநின்றுகொண்டு, இத்தைக் கற்றவர்கள் இதுக்குஅநுரூபமான கைங்கர்யத்தைப்பண்ணப்பெறுவர் என்கிறார்.

[சிந்தையாலும் இத்யாதி] - மனோவாக்காயங்கள் மூன்றும் ஒருபடிப்பட அவன் பக்கலிலே ப்ரவணமாயிருக்கிறபடி. "இரங்கி" என்றும், "மணிவண்ணவோ" என்றும், "தன்கரங்கள் கூப்பித்தொழும்" என்றும், மூன்றுலும் - இவர்க்குண்டான ப்ராவண்யாதிஶயமிறே இத்திருவாய்மொழியிற் சொல்லிற்று. [தேவபிரானித்யாதி] - *அயர்வறுமமரர்களுக்கு அதிபதியாயிருந்துவைத்துத் திருத்தொலைவில்லிமங்கலத்திலே ஸுலபனாயிருந்தவனே ஸர்வவிதபந்துவுமென்று அறுதியிட்டபடியே பற்றுவதும் செய்தவர். [வண்குருகூரவர்சடகோபன்] - அவனே யிவர்க்கு ஸர்வவிதபந்துவுமானாற்போலே, அவ்வூரிலுள்ளார் ஆழ்வாரையே எல்லாவுறவுமுறையாகப் பற்றியாயிற்றிருப்பது. "அன்னையாயத்தனாய் எனையாண்டிடும் தன்மையான்" என்றும், "மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்ஸர்வம்" (மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்ஸர்வம்) என்றும் சொல்லுகிறபடியே இருப்பர்கள். [முந்தையாயிரம்] - பழையதான வேதார்த்தத்தை யருளிச்செய்கையாலே. ஸர்வேஶ்வரன் இதர ஸஜாதீயனாய் அவதரித்தாற்போலே, வேதமும் தமிழாய் வந்து இவர்பக்கலிலே அவதரித்தபடி. [செந்தமிழ்] - செவ்வியதமிழ், பசுந்தமிழ். அர்த்தத்தை விசதமாகக்காட்டுவது. இத்தை அப்யஸிக்கவல்லார் ஸ்ரியஃபதிக்கு அடிமை செய்யப்

நிகமம்.—சிந்தையாலும் இத்யாதி. "பத்தும்வல்லாரடிமைசெய்வார் திருமாலுக்கு" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - இத்திருவாய்மொழியில் இத்யாதி. கருத்தையென்றது - கரணத்ரய ப்ராவண்யத்தை. இது "சிந்தையாலும்" இத்யாதியைக்கடாக்ஷித்து.

"சிந்தையாலும்" இத்யாதியாலே கரணகார்யங்களையிட்டு, கரணங்களைலக்ஷிக்கிறது. உக்தத்தையன்றோ நிகமிப்பது. கரணத்ரயப்ராவண்யம் கீழுக்தமோ? என்ன - இரங்கி இத்யாதி. "வண்குருகூர்" என்று - * மஞ்சாக்ரோசந்திபோலே, குருகூரிலுள்ளாரைச்சொல்லுகிறது. "அவர்" என்கிற தச்சப்தம் - ப்ரக்ருதபராமர்சியாகையாலே, கீழுக்தமான தந்தைதாயைச்சொல்லுகிறது. வண்மை - அழகு. ஆக, வண்குருகூரிலுள்ளார்க்கு, அவர்சடகோபன் - தந்தைதாயான சடகோபனென்று ஸப்த நிர்வாஹம் விவக்ஷித்தருளிச்செய்கிறார் - அவனேயிவர்க்கு இத்யாதி. அப்படியிருப்பர்களோ? என்ன - அன்னையாய் இத்யாதி. மாதாவும்பிதாவும் என்னையடிமைகொள்ளுமாசார்யனுமாகையே ஸ்வபாவமாகவுடையவர் இத்யர்த்தம். தாம் இப்போதருளிச் செய்ததாயிருக்க, "முந்தையாயிரம்" என்கிறதென்? என்ன - பழையதான இத்யாதி. பரிஹாராந்தரம் - ஸர்வேஶ்வரன் இத்யாதி. "பழையதான

பெறுவர். பெருமாளும் பிராட்டியும் சேரவிருக்க இளையபெருமாள் அடிமைசெய்தாற் போலே, விஶிஷ்டவேஷத்திலே அடிமைசெய்யப்பெறுவர். (கக)

---

வேதார்த்தத்துக்கு ப்ரகாசகமானவாயிரம்'' என்றுஉரையில் ஸப்தார்த்தம். ஸத்ருஷ்டாந்தமாக விவரணம் - பெருமாளும் இத்யாதி. (கக)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி. — [illegible]

---

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி· — [illegible] ॥ கூச॥

---

**திருவாய்மொழி நூற்றந்தாதி.**

துவளறுசீர்மால்திறத்துத்தொன்னலத்தால்நாளுந்
துவளறுதன்சீலமெல்லாஞ்சொன்னான் - துவளறவே
முன்னமனுபவத்தில்மூழ்கிநின்றமாறனதில்
மன்னுமுவப்பால்வந்தமால்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

# ஆறுந்திருவாய்மொழி: மாலுக்கு - ப்ரவேசங்கள்.

ஆ.—(மாலுக்கு.)-இப்படி * மரங்களும்இரங்கும்வகை ''மணிவண்ணவோ'' என்றுகூப்பிட்டும் அவனைக் காணப் பெறுமையாலே மோஹதசாபந்நையாய், ஆத்மாத்மீயங்களை இழந்து அத்யந்தமவஸந்நையான இவளைக்கண்டு திருத்தாயார் இவளிலும் அதிமாத்ரவ்யஸநாபிபூதையாய்க்கொண்டு, எம்பெருமானுடைய குணசேஷ்டிதங்களுக்குத் தோற்று இவளிழந்தவற்றைச்சொல்லி அலற்றுகிறாள்.

ஒ.—ஆறுந்திருவாய்மொழியில், கீழில் திருவாய்மொழியில் பிறந்த வ்யஸநம் முறுகடியிடுகையாலே இப்பிராட்டியும் மோஹித்து, அது பொறுக்கமாட்டாமை இவளுடைய தோழியும் மோஹித்ததசையிலும், இவளை ஜீவிப்பிக்கைக்கு விரகுகளை மநோரதிக்கையாலே தரித்திருக்கிற திருத்தாயாரானவள், இவளுடைய வலயாதிகள் காணக்காண ஶிதிலமாய்ப்போகிறபடியைக்கண்டு, அவற்றைத் தனித்தனியே சொல்லி ஶோகிக்கிறாள்.

ப.—ஆறுந்திருவாய்மொழியில், இப்படிகரணத்ரயத்தாலும் பகவத்விஷயத்திலே ப்ரவணரான இவர், ப்ராவண்யஜநகனுனஅவனுடைய ஆஶ்ரித வ்யாமோஹப்ரகாஶகமான ஆகாரவிஶேஷங்களையும், அவர்களுக்கு போக்யமான ஆயுயாதிபூர்த்தியையும், ரக்ஷணப்ரகாரத்தையும், ஸர்வப்ரகாரரக்ஷோபகாரகத்வாதிஶயத்தையும், ப்ரமாணப்ரஜாநாதி ரக்ஷணப்ரகாரத்தையும், ஆகர்ஷகமான அவயவஶோபையையும், அவயவஶோபையோடுகூடின ஆபரணஶோபையையும், விரோதிநிரஸநஸ்வபாவத்தையும், அபேக்ஷிதஸித்தியால்வந்த அத்யந்தோச்ச்ராயத்தையும், ஶேஷித்வபோக்யத்வாதியுக்தமான ஸர்வாத்மபாவத்தையும் அநுஸந்தித்து, ஏவம்பூதஸ்வபாவனான ஸர்வேஶ்வரன்விஷயத்தில் தமக்குப்பிறந்த நிரவதிகப்ராவண்யக்ருதமான பாரவஶ்யாதிஶயத்தாலே, ஆத்மீய பதார்த்தங்களெல்லாம் அவனிட்டவழக்காம்படி அவற்றில் ஸ்வாம்யநிவ்ருத்தி தமக்குப் பிறந்தபடியைக்கண்ட பரிவர் வித்தராய்ச் சொன்னபாசுரத்தை, நாயகன்பிரிவாற்றாத நாயகியினுடைய ஆபரணஶோபையோடு ஆரூப்யத்தோடு ஆத்மகுணத்தோடு வாசியற அழிந்துவருகிறபடியைக்கண்ட செவிலி இரங்கின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ.—ஆறுந்திருவாய்மொழியில், கீழ் இவளுக்குப்பிறந்த உஶைமுற்றி வ்யஸநம் அதிஶயிக்கையாலே மோஹங்கதையாய், அதுபொறுக்கமாட்டாமையாலே இவளுடையதோழியும் மோஹிக்க, இத்தசையிலும் இவளை ஜீவிக்க விரகுகளை மநோரதிக்கையாலே தரித்திருக்கிற திருத்தாயார், இவளுடைய வலயாதிகள் காணக்காண ஶிதிலமாய்ப்போகிறபடியைக்கண்டு, அவற்றைத் தனித்தனியே சொல்லிக்கூப்பிடுகிறாள். நகரபத்தநாதிகள் வேவப்புக்கால், ''அதுவிழுந்தது, உதுவிழுந்தது'' என்னுமாபோலே, விரஹாக்நியாலே தன்மகள் இழந்தவற்றைச் சொல்லுகிறாள். கீழில் திருவாய்மொழியில்- அலாபதசையோபாதி, ''கிடையாது'' என்றும் விடமாட்டாதபடி தன்னுடைய மநோவாக்காயங்கள் இவ்விஷயத்திலே அதிப்ரவணமானபடி சொல்லிற்று; இதில் - அந்த அலாபத்தால் வந்த பாரவஶ்யத்தைச் சொல்லுகிறது.

ஈடு·—கீழ் இவளுக்குப்பிறந்த ஹைமுற்றி வ்யஸநம் அதிமயிக்கையாலே மோஹங்கதையாய்க்கிடக்க, அதுகண்டு ஆற்றாளாய் இவளுடைய தோழியும் மோஹிக்க, இத்தசையிலும் இவளை ஜீவிப்பிக்க விரகுகளை மநோரதிக்கையாலே தரித்திருக்கிற திருத் தாயார் இவளுடைய வலயாதிகள் காணக்காண சிதிலமாகிறபடியைக்கண்டு, அவற்றைத் தனித்தனியே சொல்லிக்கூப்பிடுகிறாள். ஒரோநகர பத்தநாதிகள் வேவப்புக்கால், "ஒரு மாடம் முறிந்தது, மாளிகை முறிந்தது" என்பாரைப்போலே. (விரஹாக்நியாலே தன் மகள் இழந்தவற்றைச் சொல்லுகிறாள்). கீழ்த்திருவாய்மொழியில் அலாபஉவையாய், "கிடை யாது" என்றாலும் விடமாட்டாதபடி தம்முடைய மநோவாக்காயங்கள் அவ்விஷயத்திலே அதிப்ரவணமானபடிசொல்லிற்று; இதில், அந்த அலாபத்தால் வந்த பாரவஶ்யத்தைச் சொல்லுகிறது. "நெடுமாலென்றே நின்றுகூவுமால்" என்று தன் வ்யாமோஹத்தைக் காட்டியாயிற்று இவளையிப்படி விளைத்தது; பெரியவன் தாழநின்றால் பொறுக்கவொயிரா திறே. "ராவவெணாஹயெதெஷஙத:" (ராகவேணுபயேதத்தே ஸந்நத:) என்று இவன் தறைப்படும்படியிறே அவன் வ்யாமோஹம் இருப்பது.

(த்வராநுகுணமான அநுபவஅலாபத்தாலே ஆற்றாமைமுறுகி, கீழ்ச்சொன்னதசை கலங்கி, ஸம்பந்தஜ்ஞாநமும் தரிப்புக்கு உறுப்பாகையன்றிக்கே தளர்த்திக்கு உறுப்பாய்விட, உபாயாத்யவஸாய மித்தனையும் கலங்காமலிருந்து, ப்ராப்யஅலாபநிபந்தநமான பாரவஶ்யத் தாலே, *ஏறாளுமிறையோனில் - தாம் "வேண்டா" என்று உபேக்ஷித்த ஆத்மாத்மீயங்க ளெல்லாம், தன்னடையே அழிந்து செல்லுகிறபடியை அநுஸந்திக்கிறார்.)

## முதற்பாட்டு.

மாலுக்கு வையமளந்தமணாளற்கு
நீலக்கருநிற மேகநியாயற்கு
கோலச்செந்தாமரைக் கண்ணற்குஎன்கோங்கல
ரேலக்குழலி இழந்ததுசங்கே.

*ஆ.—எம்பெருமானுடைய ஆஶ்ரிதவாத்ஸல்யத்துக்கும், ஆஶ்ரிதார்த்தமான த்ரைலோக்யவிக்ரமணரூப திவ்யசேஷ்டிதத்துக்கும், ஸ்நிக்தமாயதிகம்பீரமாய் வார்ஷிக*

---

*மாலுக்குப்ரவேஶ; கீழ் - தோழிவார்த்தையாயிருக்க, இதில் - தாய்வார்த்தையாகைக்கு ஹேதுவேதென்கிற சங்கையிலே ஸங்கதி-கீழ்இவளுக்கு இத்யாதி. இதுக்கு த்ருஷ்டாந்தம் - ஒரோ நகரம் இத்யாதி. 'சிதிலமாகிறபடியைக்கண்டு' என்றவநந்தரம், 'ஒரோநகரபத்தநாதிகள்' இத்யாதி வாக்யத்தை அநுஸந்திப்பது. நகரம் - ராஜதாநி. பத்தநம் - பேட்டை. "வேவப்புக்கால்" என்றதுக் கநுகுணமாக, விரஹாக்நியாலே தன்மகளிழந்தவற்றைச் சொல்லுகிறாளென்று தார்ஷ்டாந்திகம் கண்டு கொள்வது. கீழ்த்திருவாய்மொழியும் இதுவும் - விஶ்லேஷமாயிருக்க, அதிற்காட்டில் இதுக்குவாசியே தென்ன - கீழ்த்திருவாய்மொழியில் இத்யாதி. இதுக்குஹேதுவேதென்ன - நெடுமால் இத்யாதி. அவன்வ்யாமோஹங்கண்டால் இவளுக்குஇப்படி ஈடுபடவேணுமோ? என்ன - பெரியவன் இத் யாதி. இத்தை ஸத்ருஷ்டாந்தமாகக்காட்டுகிறார் - ராவவெண இத்யாதி. "ராவவெணாஹயெதெஷஙதொராவணாநுஜ: । விபீஷணோமஹாப்ராஜ்ஞோ ஹ்ருதிம் ஸமேவொக்ஷ தகாண்டே, [கக-க].*

மான காளமேகத்தினுடைய நிறத்தையும் குளிர்த்தியையும் பெருமையையும் அழகையு முடைத்தான திருமேனிக்கும், மேகத்திலே அழகியதொரு தாமரைத்தடாகம்போலே யிருந்த திருக்கண்களுக்கும்தோற்று, அந்தநிரவதிகஸௌந்தர்யத்தையுடையனான எம் பெருமானையுங்கூடத் தோற்பிக்கும் திருக்குழலழகையுடையளான என் பெண்பிள்ளை, தன்னுடைய சங்கு இழந்தா ளென்கிறார்.

ஒ.— முதற்பாட்டில், இவள் திருவுலகளந்தருளின எம்பெருமானுடைய குணசேஷ்டிதாதிகளிலே அகப்பட்டு வளையிழந்தாள்என்கிறாள். [மாலென்றுதொடங்கி]- ஆஸ்ரிதவிஷயத்தில் மிகவும்வ்யாமுக்தனாய் அதிமாநுஷசேஷ்டிதங்கள்பண்ணி ஆஸ்ரித ருடைய அபேக்ஷிதங்களை முடித்துக் கொடுத்த இச்செயலாலே இவளை அகப்படுத்தி இவளுக்குபோக்தாவானவனுக்கு.[நீலக்கருநிறமென்றுதொடங்கி]- அறநெய்த்துக்கறுத்த நிறத்தையுடைய மேவம்போலே ஸ்ரமஹரமானநிறத்தையும் அதினுடைய ஔதார்யாதி களையும் உடையனாய் ஆஸ்ரிதருடைய அபேக்ஷிதம்முடித்துக் கொடுக்கப்பெற்ற ஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே அழகுபெற்ற திருக்கண்களையும் உடையவனுக்கு, விஶேஷணந்தோ றும் 'அவனுக்கு' என்கிறது,தனித்தனியே ஈடுபடுத்துகையாலே. [என்னென்று தொட ங்கி] - ஏலம்போலே நறுநாற்றத்தைக் கமழாநின்ற குழலையுடைய என்மகள்.

ப.—முதற்பாட்டில், வ்யாமோஹகார்யமான வ்யாபாராதிகளையுடையவனுக்கு நிரதிஶயபோக்யமான வேஷத்தையுடைய பெண்பிள்ளை வளையிழந்தா ளென்கிறாள்.

மாலுக்கு - ஆஸ்ரித வ்யாமோஹநிரூபிதஸ்வரூபனாய், (அந்தவ்யாமோஹமடி யாக), வையம் - பூமியை, அளந்த - (வேறொருவர் அபிமாநியாதபடி) அளந்து அநந்யார் ஹமாக்கி, மணாளற்கு - அவ்வபதாந ப்ரகாசநத்தாலே தனக்கு போக்தாவாய், (அந்த போகவ்யாமோஹமடியாக), நீலம் - ஸ்நிக்தமாய், கரு - கருத்த, நிறம் - நிறத்தை யுடைத்தான, மேகநியாயற்கு - மேகத்தோடு ஸமாநந்யாயமான ஆகாரத்தையுடையனாய், (அந்தவ்யாமோஹப்ரகாசகமாய்), கோலம் - உர்ஶநீயாகாரமாய், செம் - சிவந்த,தாமரை- தாமரைபோலும், கண்ணற்கு - கண்ணையுடையனானவனுக்கு, என் - என்னுடைய, கொங்கு - தேனையுடைத்தாயுள்ள, அலர்-மலரையுடைத்தாய், ஏலம் - ஏலம்போலே ஸ்ரமஹரகந்தமான, குழலி - குழலையுடையவள், இழந்தது-, சங்கு- சங்குவளை. பதந் தோறும், அவனுக்கவனுக்கென்கிறது - தனித்தனியே அகப்படுத்துந் துறை என்கைக் காக; இப்படி மேலும் காண்பது.

இ.—முதற்பாட்டில், இவள் ஸ்ரீவாமநப்ராதுர்பாவத்தில் குணசேஷ்டிதாதி களிலே அகப்பட்டு வளையிழந்தாள் என்கிறாள்.

[மாலுக்கு] - "நீ எனக்குவேண்டா" என்று அகன்று முடியப்புகுகிற ஊமை யிலே தன்செல்லாமையைக் காட்டிப் பொருந்தவிட்டுக்கொண்ட வ்யாமோஹத்தை உடை யவனுக்கு. அவன் தன்பிச்சைக்காட்டியாயிற்று இவளைப் பிச்சேற்றிற்று. [வையமளந்த மணாளற்கு] - உகவாதாரையுங்கூட, தன்னை இரப்பாளனாக்கித் தன்திருவடிகளின்கீழே யிட்டுக்கொண்ட வ்யாமோஹத்தாலே அநந்யார்ஹமாக்கித்தனக்குபோக்தாவானவனுக்கு. [நீலக்கருநிறமேகநியாயற்கு] - நெய்த்துக்கறுத்தநிறத்தையுடைய மேவுஸ்வபாவர்க்கு. ப்ரயோஜநநிரபேக்ஷமாகக் கொடுக்கையும், கொடுக்கப்பெறாதபோது உடம்புவெளுக்கை

யும், வ்யாமோஹமின்றிக்கே ஒழிந்தாலும் விடவொண்ணுத வடிவும் ஔதார்யமும் இருக்கிறபடி. [கோலச்செந்தாமரைக்கண்ணற்கு] - தர்ஶநீயமாய் வாத்ஸல்யத்தாலே சிவந்து விகாஸாதிகளை யுடைத்தான திருக்கண்களை யுடையவனுக்கு. "தாமரைத்தடங்கண் விழிகளின் அகவலைப்படுப்பான்" என்று கண்ணாலேயாயிற்று அகப்படுத்திக்கொண்டது விசேஷணந்தோறும் தனித்தனியே 'அவனுக்கு' என்று, தனித்தனியே அகப்பட்ட துறைகளைச் சொல்லுகிருள். தன்மகள்மேல் பட்ட காமபாணங்களை எண்ணுகிருள்காணுந்தாயார்! ஏலம்போல்கமழாநின்றுள்ள நறுநாற்றத்தையுடைய மயிர்முடியை யுடைய என்மகள். கொங்கு - பரிமளம். இவள் மயிர்முடி ஒன்றுக்கும் தோற்றுக் குமிழி நீருண்ணுமவன்கிடீர் இவளை அழித்தான்; பங்களப்படைகொண்டு, தனிவீரஞ் செய்வாரை அழிக்குமாபோலே. [இழந்தது சங்கே] - இவளுக்குத்தோற்று அவன் இழக்கும‌த்தை இவள் இழந்தாள். சங்கு - வளை.

ஈடு.—முதற்பாட்டு. இவள் ஸ்ரீவாமநப்ராதுர்பாவத்தில் குணசேஷ்டிதங்களிலேயகப்பட்டு வளையிழந்தா ளென்கிருள்.

[மாலுக்கு] - மின்னிடைமடவாரிலே, நீ எனக்கு வேண்டா வென்ன, நீஎனக்கு வேணுமென்று தமோறி நின்றநிலையைக் காட்டியாயிற்று இவளை இப்பாடு படுத்திற்று. ஸர்வேஶ்வரனை உத்கர்ஷந்தோற்ற நின்றனுகில் இப்பாடுபடாள்கிடீர்! (வ்யாமோஹத்தை யுடையவனுக்கு). [வையமளந்தமணாளற்கு] - உகவாதாரையுங்கூட விடமாட்டாத வ்யாமோஹம். "அழித்தா யுன்திருவடியால்" என்று இவளையும் தன்காற்கீழேயிட்டுக்கொண்டானிறே. அச்செயலுக்குஎழுதிக்கொடுத்தாள் இவளொருத்தியுமேயிறே; "மூவடிமண்கொண்டளந்த மன்னன்சரிதைக்கே மாலாகிப் பொன்பயந்தேன்" என்கிருள்: அவனிரந்து மண்பெற்றான், இவளுகந்து பொன்பெற்றாள். உகப்பாலே பெறுமது உரைபெற்றிருக்குமே. [மணாளன்]- போக்தா.[நீலக்கருநிறமேகநியாயற்கு] - நெய்த்துக்கறுத்தநிறத்தை யுடைய மேகஸ்வபாவற்கு நியாயம்-ஸமம், ஒப்பு.ப்ரயோஜந நிரபேக்ஷமாகக் கொடுக்கை

முதற்பாட்டு.—மாலுக்கு இத்யாதி. "வையமளந்தமணாளற்கு, இழந்ததுசங்கு" என்கிற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - இவள் ஸ்ரீவாமந இத்யாதி.

"மாலுக்கு" - வ்யாமுக்தனுக்கு. அந்த வ்யாமோஹந்தான்வதென்ன - மின்னிடை இத்யாதி. வ்யதிரேகித்துஹாவம் - ஸர்வேஶ்வரனை இத்யாதி. "வையமளந்த"என்றதுக்கு ஹாவம் - உகவாதாரையும் இத்யாதி வாக்யத்வயம். அதாவது - விமுகரான சேதநரையும் விடமாட்டாதே திருவுலகளந்தருளி யவர்களை ஶேஷமாக்கிக்கொண்டாற்போலே, ப்ரணயகோபத்தாலே விமுகையான இவளையும் "அழித்தாயுன் திருவடியால்" என்று அந்தமறத்தை மாற்றித் தனக்குஶேஷமாக்கிக்கொண்டானென்றபடி. "மணாளற்கு"என்றதுக்குஹாவம் - அச்செயலுக்கு இத்யாதி. மணாளன் - நாயகன். அப்படி எழுதிக்கொடுத்திருப்பளோ? என்ன - மூவடி இத்யாதி. மஹாபலிபக்கலிலே மூவடி மண் இரந்துகொண்டளந்த மன்னனுடைய செயலுக்கே வ்யாமுக்தையாய் விவர்ணையானேன் இத்யர்த்தம். திருமொழி ஒன்பதாம்பத்து நாலாந்திருமொழி இரண்டாம்பாட்டு. "மூன்னங்குறளுருவாய்" இத்யாதி. இப்பாசுரத்துக்கு ரஸோக்தியாகபாவம்-அவனிரந்துஇத்யாதி வாக்யத்வயத்தாலே. உரைபெற்றிருக்கையாவது, உரையென்று - மாற்றாய், மாற்றேறி யிருக்குமென்னுதல்; உரையென்று - கொண்டாட்டச்சொல்லாய், லௌகிகருடையகொண்டாட்டத்தை யுடைத்தாயிருக்கும் என்னுதல். "நியாயம்" என்று ஸ்வபாவமாக அருளிச்செய்து, அர்த்தாந்தரம் - நியாயம் ஸமம்ஒப்புஎன்ற. ஸ்வபாவமான போது, மேகம்போன்ற ஔதார்யாதிகளையுடையவற்கென்றும், ஒப்பானபோது, மேகம்போன்றவடிவை யுடையவற்கென்றும் அர்த்தங்கண்டுகொள்வது. மேகஸ்வபாவமேதென்ன - ப்ரயோஜந இத்யாதி.

யும், கொடுக்கப்பெறுதபோது உடம்பு வெளுக்கையும். வ்யாமோஹமின்றியே யொழிந் தாலும் விடவொண்ணுத வடிவும் ஔதார்யமுமிருக்கிறபடி. [நீலக்கருநிறமேகநியாயற்கு]- மஹாபலியைவடிவைக்காட்டிஅபஹரித்தாற்போலேகாணும் இவளையும் வடிவைக்காட்டி அபஹரித்தபடி. இவள் பிச்சேறுகைக்கிட்ட மை யிருக்கிறபடி. *மைப்படிமேனியிறே. [கோலச் செந்தாமரைக்கண்ணற்கு] - ஊர்ஸ்நீயமாய், வாத்ஸல்யத்தாலே சிவந்து, விகா ஸாதிகளையுடைத்தான திருக்கண்களையுடையவனுக்கு. ''தாமரைத்தடங்கண்விழிகளின் அகவலைப்படுப்பான்''என்று கண்ணுலேயாயிற்று அகப்படுத்திக்கொண்டது. விசேஷணந் தோறும் அவனுக்குளன்று தனித்தனியே யகப்பட்ட துறைகளைச் சொல்லுகிருள். [மால்இத்யாதி]-தன்மகள்மேல்பட்ட அம்புகளையெண்ணுகிருள்; இதோருகுத்து, இதோரு வெட்டு, இதோரம்பு என்று. [என்கொங்கலரேலக்குழலி] - மதுஸ்யந்தியாநின்றுள்ள பூவையுடைத்தாய், நறுநாற்றத்தையுடைத்தான குழலையுடைய என் பெண்பிள்ளை. கொங் கென்பது - தேன். அலரென்பது - பூ. ஏலம் - நறுநாற்றம். இவள் மயிர்முடியொன்றுக்குந் தோற்றுக் குமிழிநீருண்ணுமவன்கிடீர் இவளையழித்தான்! பங்களப்படைகொண்டு, தனி வீரம் செய்வாரை யழிக்குமாபோலே. [இழந்ததுசங்கே] - இவள் மயிர்முடிகண்டு அவ னிழக்கக்கடவத்தை இவ ளிழந்தாள். சங்கு - வளை. (க)

---

நெய்த்து - பளபளத்து. ''மாலுக்கு''என்ற பதத்திலேநோக்காக அர்த்தத்வயத்தையுங்கூட்டிபாவம் - வ்யாமோஹமின்றியே இத்யாதி. ''வையமளந்தமணாளற்கு'' என்றத்தோடே ''நீலக்கருநிறம்'' இத் யாதியைக்கூட்டிபாவம் - மஹாபலியை இத்யாதி. ''நீலக்கருநிறம்''என்ற விசேஷணத்துக்கு பாவம் - இவள்பிச்சேறுகைக்கு இத்யாதி. திருமேனி கறுத்திருக்குமோ ? என்ன - மைப்படிமேனி யிறே என்று. அஞ்சநத்தின்வடிவுபோலேயிருக்கிற திருமேனி இத்யர்த்தஃ. கண்ணைச்சொன்னதுக்கு பாவம் - தாமரை இத்யாதி. ஓரிடத்திலே, ''அவனுக்கு'' என்னவமைந்திருக்க, ப்ரதிபதம் ஷஷ்ட்யந்த மாகச்சொன்னதுக்குபாவம் - விசேஷணந்தோறும் இத்யாதி. அதாவது - ''மாலுக்கு'' என்று தொடங்கி - வ்யாமோஹகுணத்திலும், சேஷ்டிதத்திலும், விக்ரஹத்திலும், கண்ணழகிலும் தனித் தனியே யகப்பட்டதுறைகளைச்சொல்லுகிருளென்றபடி. ''மாலுக்கு'' என்றுதொடங்கி, ''கோலச் செந்தாமரைக்கண்ணற்கு''என்னுமளவாக இவற்றைச்சரங்களாகநிரூபிக்கிருர் - நன்மகள்மேல் இத் யாதி. ரீத்யந்தரேணநிரூபணம் - இதோருகுத்து இத்யாதி. அம்பென்றது - கண்ணை. இரண்டாலும் - குணசேஷ்டிதங்கள் ஈடுபடுத்தும் என்றபடி. நறுநாற்றம் - ஸுகந்தம். ''மாலுக்கு'' என்றுதொடங்கி - குணம், சேஷ்டிதம், வடிவழகு, அவயவஸௌந்தர்யம், என்றுஅநேகத்தைச்சொல்லி; ''ஏலக்குழலி'' என்று - இவளுக்குஒன்றுசொன்னதுக்குபாவம் - இவள் மயிர்முடி இத்யாதிவாக்யத்வயத்தாலே. பங்களப்படை - கூளப்படையான கூட்டுப்படை. பங்களப்படையென்றது -''மாலுக்கு'' இத்யாதி பாற்சொன்னகுணாதிகளை. தனிவீரம்செய்வாரென்றது - *கொங்கலரேலக்குழலியை. ''தனிவீரம் செய்வாரைப் பங்களப்படைகொண்டு அழிக்குமாபோலே'' என்றுஅந்வயிப்பது. ''கொங்கலர்'' இத்யாதி விசேஷணங்களுக்குபாவம் - இவள் மயிர்முடிகண்டு இத்யாதி. (க)

# இரண்டாம் பாட்டு.

சங்குவில்வாள்தண்டு சக்கரக்கையற்கு
செங்கனிவாய்ச் செய்யதாமரைக்கண்ணற்கு
கொங்கலர்தண்ணந்துழாய் முடியானுக்குஎன்
மங்கையிழந்தது மாமைநிறமே.

ஆ.—(சங்கு.) - அளந்தருளுகிறபோது வளர்ந்த ரதாங்க ஶங்க ஶார்ங்காதி திவ்யாயுதங்களை ஏந்தின வழகுக்கும், ஸ்வசரணநளிந யுகளஸம்ஸ்பர்ஶோஜ்ஜீவிதமான ஸர்வாத்மாக்களையுங்கண்ட ஹர்ஷத்தாலே புதுக்கணித்த திருப்பவளத்துக்கும் திருக்கண்களுக்கும், த்ரைலோக்யவிக்ரமணுபாஸிதஶ்ரமாபநோதநார்த்தமாக *அயர்வறுமமரர்கள் அதிபரிமளதுலஸீமாலைகளைக்கொண்டு ஒப்பித்தருளின அழகுக்குந்தோற்று, என்மங்கை மாமை நிறமிழந்தா ளென்கிறாள்.

ஒ.—இரண்டாம் பாட்டில், திருவுலகளந்தருளின எம்பெருமானுடைய ஸ்ரீபஞ்சாயுத தாரணத்தாலேவந்த அழகிலே அகப்பட்டு என்மகள் தன்னுடைய அழகிய நிறத்தை இழந்தாள் என்கிறாள் [சங்கென்று தொடங்கி] - திருப்பவளத்தில் அழகும் திருக்கண்களில் அழகும்போலே தகுதியான ஸ்ரீபஞ்சாயுதங்களைத் திருக்கையிலே தரித்த அழகையுடையவனுக்கு. இவை ஸர்வாயுதங்களுக்கும் உபலக்ஷணம். [கொங்கலர்] - பரிமளம்மிகுகை.

ப —அநந்தரம், போக்யமான ஆயுதாதிபூர்த்திகளையுடையவனுக்குத் தன் நிறத்தையிழந்தாளென்கிறாள்.

சங்கு வில் வாள் தண்டு சக்கரம் - த்ரைவிக்ரமாபதாநத்தில் உச்ச்ரிதமாய்த் தோன்றின ஸ்ரீபஞ்சாயுதத்தையுடைய, கையற்கு - திருக்கையையுடையனாய், (தாத்காலிகபோக்தாக்களுக்கு அநுபாவ்யமாய்), செம் - சிவந்த, கனி - கனிபோலேயிருக்கிற, வாய்-திருவதரத்தையும், செய்ய - சிவந்த, தாமரை - தாமரைபோலும், கண்ணற்கு - கண்ணையுமுடையனாய், கொங்குஅலர் - பரிமளவிகாஸியாய், தண் - ஶ்ரமஹரமாய், அம்-தர்ஶநீயமான, துழாய் - திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடியானுக்கு-திருமுடியையுடையனானவனுக்கு, என்மங்கை- அவன்ஈடுபடும் பருவத்தையுடைய என்பெண்பிள்ளை, இழந்தது - இழந்தது, மாமைநிறம் - பெண்மைக்குஅஸாதாரணமான மாமைநிறத்தை. கொங்கு - தேனுதல், பரிமளமாதல்.

இ —இரண்டாம் பாட்டில், திருவுலகளந்தருளினபோதை திவ்யாயுதங்களின் அழகிலே அகப்பட்டுத் தன்னுடைய அழகியநிறத்தை இழந்தாள் என்கிறாள்.

[சங்குவில்வாள் இத்யாதி] - ஸ்ரீபஞ்சாயுதங்களின் சேர்த்தியழகிலேயாயிற்று இவள் ஈடுபட்டது. இவளுடைய நிறங்கொள்ளுகைக்கு எத்தனை ஆபரணம்வேணும்? ஸ்மிதமும் நோக்கும்போலே ஆயுதச்சேர்த்தியும் தகுதியாய் இருக்கிறபடி. [கொங்கலர்] - பரிமளம் ப்ரவஹிக்கிற குளிர்ந்த திருத்துழாய் வளையத்தை யுடையவனுக்கு. ஆபரணம்! அவயவங்கள்! ஒப்பனை! எத்தனை செயல்வேணும், இவள் நிறங்கொள்ளு

*கைக்கு? [என்மங்கை] - தன்பருவத்தாலே இவற்றையடங்கத் தோற்பிக்குமவள் கிடீர். மாமை என்றும், நிறம் என்றும் - பர்யாயம்; இவ்விடத்தில் நிறம்என்றது அழகாய், நிறத்தில் அழகை இழந்தாள்.*

ஈடு.—இரண்டாம்பாட்டு. திருவுலகளந்தருளினபோதை திவ்யாயுதாதிகளில் அழகிலேயகப்பட்டுத் தன்னுடைய அழகிய நிறத்தை யிழந்தா ளென்கிறாள்.

[சங்குவில்த்யாதி] - ஸ்ரீ பஞ்சாயுதங்களின் சேர்த்தியழகிலேயாயிற்று இவள் ஈடுபட்டது. இவளுடைய ஓராபரணம் வாங்குகைக்கு எத்தனையாபரணம் பூண்டு காட்டினான்? கைக்குமேல்ஐந்துங்காட்டிக்காணும் இவளுடையஆபரணம் வாங்கிற்று. ஆபரண கோடியிலும் ஆயுதகோடியிலும்இருபுடைமெய்க்காட்டிறே இவைதாம்! [செங்கனிவாய்ச் செய்யதாமரைக் கண்ணற்கு] - கையிலே யொன்றையரித்துக்காட்டி ஆகர்ஷிக்கவேண்டி யிருந்ததோ? ஸ்மிதமும் நோக்குமமையாதோ நலிகைக்கு? [கொங்கலரித்யாதி] - மது ஸ்யந்தியான திருத்துழாய்மாலையை, ஆதிராஜ்யசூசகமான திருவபிஷேகத்திலே யுடைய வனுக்கு. வைத்த வளையத்தைக் காட்டிக்காணும் இவள்நிறத்தை யபகரித்தது. ஆபரண சோபை அவயவசோபை ஒப்பனையழகு, எத்தனை செய்யவேணும் இவள்நிறங் கொள்ளுகைக்கு. [என்மங்கை] - தன்பருவத்தாலே இவற்றையடையத் தோற்பிக்குமவள் கிடீர் நிறமிழந்தாள்! மாமைநிறம் - அழகியநிறம். மாமை - அழகு. அழகிய நிறத்தை யிழந்தாள். (உ)

---

## மூன்றாம் பாட்டு.

---

நிறங்கரியானுக்கு நீடுலகுண்ட
திறங்கிளர்வாய்ச் சிறுக்*கள்வரவர்க்கு
கறங்கியசக்கரக் கையவனுக்குஎன்
பிறங்கிருங்கூந்தல் இழந்ததுபீடே.

**ஆ.**—*(நிறங்கரியானுக்கு.)-ஸர்வலோகங்களையும் அமுதுசெய்தருளின சுவடு காணலாயிருந்த திருப்பவளத்தில் அழகுக்கும், ஸகலஜந மநோநயநஹாரியான அந்தச் சிறிய வடிவு தனக்கும், திருவடிவினுடைய நீலவநம்போலே யிருந்த நிறத்துக்கும்,*

---

*இரண்டாம்பாட்டு.—சங்கு இத்யாதி. மேலிற்பாட்டுக்கள்தோறும் ஓரோவவதாரங்கள் சொல்லுகையாலே, ததநுகுணமாக இப்பாட்டையும் - கீழிற்பாட்டில் அவதாரத்தோடேசேர்த்து, "சங்கு வில்வாள்" இத்யாதியைக்கடாக்ஷித்தவதாரிகை - திருவுலகு இத்யாதி.*

*ஹலிதம் - இவளுடைய இத்யாதி. ஓராபரணமென்றது- * மாமைநிறத்தை. சாடு - கைக்கு மேல் இத்யாதி. கைக்குமேல்ஐந்துங்காட்டியென்றதுக்கு - திருக்கைகளிலிருக்கிற பஞ்சாயுதங்களைக் காட்டியென்று ஸ்வபாவார்த்தம்; குறடுகீறியாடுகிறவளவிலேஅஞ்சுக்கு இலக்காயொருபருக்கையிருந்தால், "கைமேலேயஞ்சுபோட்டுவெட்டுகிறேன்" என்றுஓட்டமோடி அப்படியேபோகட்டு அத்தைவாங்குகை யென்று சாடுவுக்குஅர்த்தம். இவற்றுக்கு ஆயுதத்வமொழிய ஆபரணத்வமுண்டோ? என்ன - ஆபரண கோடியிலும் இத்யாதி. இருபுடைமெய்க்காட்டு - உபயகோட்யந்வய:. உபயஸேனையிலும் ஆள்காட்டுகையென்று ஸப்தார்த்தம். அலருகை - ப்ரவஹிக்கை. "சங்கு வில்வாள்" என்றுதொடங்கி மூன்றுக்கும் பேஷகயந பூர்வகமாகபாவம் - ஆபரணசோபை இத்யாதி. (உ)*

---

* 'கள்வனவற்கு' என்றுவழங்குவர்.

ப்ரணத பரித்ராண தத்விரோதிநிரஸநங்களிலே எப்போதும் ஸத்வரமான திருவாழியை யேந்தின திருக்கையினழகுக்குந் தோற்று, நீலரத்நங்களுடைய ஒளிகள் திரண்டாற் போலே விளங்குகிற திருக்குழலையுடையவளான என்பெண்பிள்ளை, தன்பெருமையை யிழந்தாளென்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், ஆலிலையிலே கண்வளர்ந்தருளினவனுடைய ஸௌந்தர்யாதிகளிலே அகப்பட்டு, என்பெண்பிள்ளை தன்னுடைய பெருமையை இழந்தாள் என்கிறாள் [நீடுலகுண்டதிறங்கிளர்வாய்ச் சிறுக்கள்வரவர்க்குஎன்றுதொடங்கி] - இம் மஹாலோகத்தையெல்லாம் திருவயிற்றிலே வைத்துக்கொண்டமை தெரியும்படியான திருப்பவளத்தையுமுடையனாய் தான்சிறுத்து ஒருவர்க்கும் பரிச்சேதிக்கவொண்ணாத அத்யாஶ்சர்யசேஷ்டிதங்களை யுடையவனுக்கு. ப்ரதிபக்ஷத்தை மாய்க்கையில் உண்டான த்வரையாலே எப்போதும் சுழன்றுவாராநின்றுள்ள திருவாழியைத் திருக்கையிலே உடையனானக்ருஷ்ணனுக்கு, [என் பிறங்கிருங்கூந்தல்] - வளர்ந்து பெருத்து இருந்துள்ள கூந்தலையுடைய என்பெண்பிள்ளை.

ப.—அநந்தரம், வடதளஶாயித்வப்ரமுக ரக்ஷணப்ரகாரத்தை யுடையவனுக்குத் தன் பெருமையை யிழந்தாளென்கிறாள்.

(வடதளத்திலே கண்வளரும்போது), நிறம்கரியானுக்கு - ஶ்யாமளமான வடிவையுடையனாய், நீடுஉலகு - மஹாலோகங்களை, உண்ட - அமுதுசெய்த, திறம் - ப்ரகாரம், கிளர் - தோற்றுகிற, வாய் - திருப்பவளத்தை யுடையனாய்க்கொண்டு, சிறு - சிறுவடிவிலே, கள்வரவர்க்கு - பெரியலோகத்தை மறைத்து வைத்தவனாய், (இப்படி ப்ரளயாபத்தில் ரக்ஷித்தாற்போலே ப்ரளயங்கழிந்து வெளிநாடு கண்டவளவிலும்), கறங்கிய - (ஜகத்விரோதிகளை யழிக்கையிலுண்டான உத்யோகத்தாலே) சுழன்றுவருகிற, சக்கரம் - திருவாழியையுடைய, கையவனுக்கு - கையை யுடையவனுக்கு, என் பிறங்கு இருங்கூந்தல் - வளர்ந்து கதிர்த்த மயிர்முடியை† யுடைய என் பெண்பிள்ளை, இழந்தது-, பீடு - பெருமை. பீடென்று - பெருமையாய், மதிப்பைச் சொல்லுகிறது.

இ.—மூன்றாம்பாட்டில், வடதளஶாயிபடிகளிலே அகப்பட்டுத் தன்பெருமையை யிழந்தாள் என்கிறாள்.

[நிறங்கரியானுக்கு] - ஶ்ரமஹரமானவடிவிலேயாயிற்று இவள் தோற்றது. "நீலக்கருநிறமேக நியாயற்கு" என்ன வேண்டாவாயிற்று, நிறத்துக்கு ஒப்பாகமாட்டாமையாலே. [நீடுலகு] - பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற்றிலேவைத்த ப்ரகாரத்தைக் கோட்சொல்லாநின்ற திருவதரத்தையுடைய. "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே" என்னக்கடவதிறே. ரக்ஷகத்வ ப்ரகாஶகமான திருவதரம். [சிறுக்கள்வரவர்க்கு] - சிறியவடிவிலே பெரிய லோகங்களைவைத்து, ஒருவர்க்கும் பரிச்சேதிக்கவொண்ணாத சேஷ்டிதத்தை யுடையவனுக்கு. வடிவுக்குச்சேராத சேஷ்டிதம், சேஷ்டிதத்துக்குச் சேராதவடிவு. தன்னுடைய ரக்ஷகத்வத்தையும் அகடிதகடநா ஸாமர்த்யத்தையும் காட்டியாயிற்று, இவளை அகப்படுத்திற்று. விரோதிநிரஸந த்வரையாலே சுழன்றுவாராநின்ற திருவாழியைக் கையிலேயுடையவனுக்கு. வடிவழகும் ரக்ஷகத்வமுமன்றியே ரக்ஷணத்தில் உத்யுக்தபரிகரத்தை யுடையவன் என்கை. [என்பிறங்கிருங்கூந்தல்] - சுற்றுடைத்தாயொழுகு நீண்ட மயிர்முடியை யுடையவள். பிறங்கு

† 'ப்ரகாசமாய்ப் பெருமைபொருந்திய கூந்தலையுடைய' என்றுபாடாந்தரம்.

என்று பெருமை; இருமைஎன்றும் பெருமை; சுற்றுடைமையிலும், ஒழுகுநீட்சியிலு மாய் இருக்கிறது. கூந்தல் - மயிர்முடி. எதிர்த்தலையைத்தோற்பிக்கும் கூந்தலை உடையவள்கிடீர் தன் பெருமையை இழந்தாள்! "யஸ்யாஸ்ஸாஜநகாத்மஜாப்ரஸு ஜ்ஞேயம் ஹித தேஜஸ:" என்று அவனுக்கும் ஏற்றத்தைக்கொடுக்கும் பெருமையைக் கிடீர் இவள் இழந்தது! பீடு - பெருமை.

ஈடு.—மூன்றாம்பாட்டு. வடதளஸாயிபடிகளிலே அகப்பட்டு இவள் தன் பெருமையை யிழந்தாளென்கிறாள்.

[நிறங்கரியானுக்கு] - "இழந்ததுமாமைநிறம்" என்றாள்; அந்நிறமும் அவன் பக்கலிலே கிடக்கையாலே இரட்டித்துக் காட்டிற்று வடிவு. தன்னிறத்துக்குமேலே ஒருநிறம் உண்டாயிற்று. "நீலக்கருநிறமேகநியாயற்கு" என்னவேண்டாவாயிற்று; நிறத்துக்குஒப்பாகமாட்டாமையாலே. நெய்த்துக்குளிர்ந்து ஸ்ரமஹரமான வடிவு தன்னையே சொல்லுகிறாள். [நீடுலகுஇத்யாதி]-பரப்பையுடைத்தான பூமியைத் திருவயிற்றிலே வைத்த ப்ரகாரத்தைக் கோட்சொல்லாநின்ற திருவதரத்தையுடைய. கிளருகை - சொல்லுகை: "வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே" என்னக்கடவதிறே. ரக்ஷகத்வப்ரகாசகமான திருவதரம். [சிறுக்கள்வரவர்க்கு] - சிறுவயிற்றிலே பெரியலோகங்களை வைத்து,பரிச்சேதிக்க வொண்ணாத சேஷ்டிதத்தை யுடையவனுக்கு. [நீடுலகுண்டதிறங் கிளர்வாய்] - வேறொருவர்வாயால் கேட்கவேண்டாதே, இவன் வாயாலே சொல்லக் கேட்கலானபடி. [சிறுக்கள் வரவர்க்கு] - வடிவில் சிறுமையும், ரக்ஷகத்வத்தில் பாரிப்புமிருக்கிறபடி. தன்னுடைய ரக்ஷகத்வத்தையும் அகடிதகடநாஸாமர்த்யத்தையுங் காட்டியாயிற்று, இவளையகப்படுத்திற்று. [கறங்கியசக்கரக்கையவனுக்கு] - கறங்குகை-சுழலுகை: விரோதிநிரஸநத்வரையாலே எப்போதும் சுழலாநின்றுள்ள திருவாழியைத் திருக்கையிலே யுடையவனுக்கு: தான் ரக்ஷகனானவளவன்றியே, பரிகரமும் ரக்ஷணத்திலே உத்யுக்தமாயிருக்கிறபடி. அவன் கைப்பிடித்தார் எல்லாரும் ரக்ஷணத்வரையுடையராயிறே யிருப்பது. ஸ்ரீ பாஞ்சஜந்யாழ்

---

மூன்றாம்பாட்டு.—நிறம் இத்யாதி. "நீடுலகுண்ட" என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - வடதள இத்யாதி. "நிறங்கரியானுக்கு" என்றதுக்குபாவம்-இழந்தது இத்யாதி. அதாவது, கீழே "நீலக் கருநிறமேகநியாயற்கு" என்று - மேகத்தை ஒப்பாகச்சொல்லிப்பார்த்தால், அதுஒப்பாகமாட்டாமையாலே மேகத்தைவிட்டு, "நிறங்கரியான்" என்று - "நீலக்கருநிறம்" என்றத்தையே சொல்லுகிறாரென்றபடி. இரட்டித்துக்காட்டுகையாலே ஒப்பில்லையென்றபடி. விவரணம் - தன்னிறத்துக்கு இத்யாதி. இதுக்கு நியாமகமேதென்ன - நீலக்கருநிறம் இத்யாதி. அதுக்கு ஹேதுவேதென்ன - நிறத்துக்கு இத்யாதி. தாத்பர்யஸித்தார்த்தம் - நெய்த்து இத்யாதி. திருவதரத்தாலே - திருவாயைச் சொல்லுகிறது. அப்படி கோட்சொல்லுமோ? என்ன - வையமேழும் இத்யாதி. இத்தால்பலிதம் - ரக்ஷகத்வ இத்யாதி: சிறியவனாயிருக்கச்செய்தே களவேதென்ன; - பாலனாயிருக்கச்செய்தே அபரிச்சிந்நமான அதிமாநுஷசேஷ்டிதங்களை யுடையனாகை யென்கிறார்-சிறுவயிற்றிலே இத்யாதி. ரஸோக்தி- வேறொருவர் இத்யாதி. பலிதமாதல், தாத்பர்யாந்தரமாதல் - வடிவில் இத்யாதி. ரக்ஷகத்வத்தில் பாரிப்புஎன்றது - "நீடுலகுண்ட" என்றத்தைப்பற்ற. "கறங்கிய" என்கிறவிசேஷணத்துக்குபாவம்- தான்ரக்ஷகனான இத்யாதி. அல்லாதாரில்இவனுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறார் - அவன் கைப்பிடித்தார் இத்யாதி. அதாவது - அல்லாதார் ஒருவனுக்கு ஒன்றைக் கொடுக்கப்புக்கால் பரிகரங்கள் விக்நம்பண்ணுவர்களிறே: இவனுக்குஅங்ஙனில்லை யென்றபடி; ஆனால், ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானுக்கு ரக்ஷணத்வரை காணுமே? என்ன - ஸ்ரீபாஞ்சஜந்யாழ்வானும் இத்யாதி. மூந்தினவர்த்

வானும், "ஒருவினையுண்டாகவற்றே, நாம் வாய்க்கரையிலேயிருந்து ஓசையைவிளைத்து வினைதீர்க்க!" என்று ப்ரார்த்தியாநிற்கும். [என்பிறங்கிருங்கூந்தல்] - சுற்றுடைத்தாய்ஒழுகு நீண்ட மயிர்முடியையுடையவள். மிகவும் பெரிய குழலையுடையவளென்றுமாம். இருமை- பெருமை. இங்குப் பெருமையாவது - நீட்சி. பிறங்குதல் - மிகுதி. கூந்தலென்கிறது-மயிர். "ஐம்பால் கூந்தல் குழல்" என்றிவை பர்யாயம். எதிர்த்தலையைத் தோற்பிக்கும் குழலையுடையவள்கிடீர் தன்பெருமையிழந்தாள். பீடு - பெருமை. "யஸ்யஸாஜ நகாத்மஜா-அப்ரமேயம்ஹிதத்தேஜ:" (யஸ்யஸாஜநகாத்மஜா - அப்ரமேயம்ஹிதத்தேஜ:) என்று அவனுக்கும் பெருமையைக் கொடுக்கும் பெருமையைக்கிடீர் இவளிழந்தது. (ங)

## நான்காம் பாட்டு.

பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு
மாடுடைவையம்அளந்தமணாளற்கு
நாடுடைமன்னர்க்குத் †தூதுசெல்நம்பிக்குஎன்
பாடுடையல்குல்இழந்ததுபண்பே.

*ஆ.—(பீடுடை.)-நிகிலஜந்துஜாதஅபேக்ஷிதஅபேக்ஷ புருஷார்த்த ஸாதந பூத கரணகளேபராத் யுபகரண நிர்மாணநுகுண ஜ்ஞாந சக்தியுக்த சதுர்முக ஸ்ருஷ்டிஹேது பூத காருண்யத்துக்கும், குணவகுணவிபாகமின்றிக்கே ஸர்வாத்மாக்களும் தன்திருவடிகளை ஸம்ஸ்பர்சித்து நின்ற நின்றவிடங்களிலே கண்டு ப்ரீயராம்படி இந்தலோகத்தை அளந்தருளின ஸௌசீல்யகுணத்துக்கும், ஸர்வப்ரகார ஸமாச்ரிதரான பாண்டவர்கள் ஸார்வபௌமராம்படி அவர்களுக்கு தௌத்யம்பண்ணி அதுவே தனக்குஏற்றமாயிருக்கிற ஆச்ரிதவாத்ஸல்யத்துக்குந் தோற்று, என்பாடுடையல்குல் தன் சீர்மையை யிழந்தாளென்கிறாள்.*

*ஒ.— நாலாம்பாட்டில், சதுர்முகனுக்கு ஸ்ரஷ்டாவாய் வைத்து தன் மேன்மைபாராதே ஆச்ரிதாபிமதங்களைச் செய்தருளும் மஹாகுணத்தை யுடையவனுக்கு, என் பெண்பிள்ளை தன்னுடைய நீர்மை இழந்தாள் என்கிறாள் [மாடென்று தொடங்கி] - வஸுமதியான பூமியை இந்த்ரன் இழந்தான் என்று பார்த்து, அவனுக்கு*

**ப்ர —ஸ்ரீராமாயணே ஸுந்தரகாண்டே [ருள] ஸ்ரீஹநுமத்வசநம், "அப்ரமேயம்ஹிதத்தேஜோயஸ்ய ஸாஜநகாத்மஜா । நத்வம்ஸமர்த்தாம்ஹர்தும் ராமேவாச்ரயாம்வநே॥"**

---

*தத்தில், பிறங்குதல் - சுற்றுடைமை; சுற்றுடைமையாவது - உருட்சி; இருமை - ஒழுகுநீட்சி. த்விதீயார்த்தத்துக்கு, பிறங்குதல் - மிகுதி; இருமை - பெருமை. "கூந்தல் - மயிர்" என்றதுக்கு நிகண்டு - ஐம்பால்இத்யாதி. குழலை வர்ணித்ததுக்குபாவம்-எதிர்த்தலையைஇத்யாதி. ஈடுபாடு - யஸ்ய இத்யாதி.*

---

*† தூதுசெய்நம்பிக்கு என்று பன்னீராயிரப்படியின் பாடம்.*

வாங்கிக் கொடுத்தருளுகைக்காகப் பண்ணின க்ருத்ரிமசேஷ்டிதத்தாலே தன்னை அகப்படுத்தினவனுக்கு. [நாடென்று தொடங்கி] - நாடுடைய ராஜாக்களான பாண்டவர்களுக்கு தூதக்ருத்யம்பண்ணி அத்தாலே பரிபூர்ணனானவனுக்கு. இடமுடைத்தான கடிப்ரதேசத்தை யுடைய என் பெண்பிள்ளை.

ப —அநந்தரம், ஸ்ரஷ்ட்ருத்வாதிகளான ஸர்வப்ரகாரோபகாரகத்வத்தை யுடையவனுக்குத் தன்னுடைய அஸாதாரணஸ்வபாவத்தை யிழந்தாளென்கிறாள்.

பீடு - ஸ்ரஷ்ட்ருத்வாநுரூபமான ஜ்ஞாநாதிகுண வைபவத்தை, உடை - உடைய, நான்முகனை - சதுர்முகனை, படைத்தானுக்கு - ஸ்ருஷ்டித்தவனாய், மாடுடை - வசுமதியான, வையம் - பூமியை, அளந்த - அளந்த அபதாநத்தாலே, மணாளற்கு - தன்னை யநந்யார்ஹையாக்கும் போக்தாவாய், நாடு-நாட்டுக்கு, உடை-கடவ, மன்னர்க்கு-ராஜாக்களான பாண்டவர்களுக்கு, தூது - தூதக்ருத்யத்தை, செய் - அநுஷ்டித்து, நம்பிக்கு-அத்தாலே பரிபூர்ணனானவனுக்கு, என் பாடுஉடைஅல்குல் - விஸ்தாரத்தை யுடைத்தான அல்குலையுடைய என் பெண்பிள்ளை, இழந்தது-, பண்பு - தன்னஸாதாரண ஸ்வபாவம். மாடு - தநம், பாடு - பரப்பு, பண்பு - ஸ்வபாவம்.

இ.—நாலாம்பாட்டில், சதுர்முகஸ்ரஷ்டாவான பெருமையைப் பாராதே ஆஸ்ரிதார்த்தமான மஹாகுணத்தை யுடையவனுக்கு இவள் தன்நீர்மையை இழந்தாள் என்கிறாள். [பீடுடை இத்யாதி] - சதுர்தச புவநத்தையும் ஸ்ருஷ்டிக்கவல்ல பெருமையையுடைய சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவனுக்கு. மாடென்று - தநம், வஸுமதியானபூமி என்னுதல்; மாடென்று இடமாய், பரப்பையுடைத்தான பூமிஎன்னுதல். திருவுலகளந்தருளின க்ருத்ரிமசேஷ்டிதத்தாலே தன்னை அநந்யார்ஹையாக்கினவனுக்கு. நாடுடையராஜாக்களான பாண்டவர்களுக்கு தூதக்ருத்யத்தைப்பண்ணி, அத்தாலே பூர்ணனானவனுக்கு. [நாடுடை] - நாடுடையார் வேறே சிலராக்கி, அவர்களுக்கு ஏவலாளாய்த்திரியும். [நம்பிக்கு] - "இன்னார்தூதன் எனநின்றான்" என்று அச்செயலாலே இட்டசட்டை பீறும்படியாய் இருக்கை. அடியிலே ஜகத்தை யுண்டாக்கி, அபஹரித்தார் உண்டாகில் எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, அத்தை ஆஸ்ரிதர்க்கு ஆக்குகைக்கு இழிதொழில்செய்து, அந்நீர்மையைக்காட்டி இவள் நீர்மையை அபஹரித்தான். [என்பாடுடையல்குல்] - இடமுடைத்தான கடிப்ரதேசத்தை உடையவள். பாடு-இடம். "வம்ஸஹாவம்ஸநவஸாயம்ஃ" என்று ஸஜாதீயரையும் அழிக்கும் வடிவழகு. அவன் வம்ஸவாம்ஸஷ்ஷிவித்தாவஹாரியாய் இருக்கிறாப்போலே. பண்பு - நீர்மை.

ஈடு.—நாலாம்பாட்டு. சதுர்முக ஸ்ரஷ்டாவானமேன்மையைப் பாராதே ஆஸ்ரிதார்த்தமான மஹாகுணத்தை யுடையவனுக்கு இவள் நீர்மையை யிழந்தாளென்கிறாள்.

[பீடுடையித்யாதி] - சதுர்த்தச புவநத்தையும் ஸ்ருஷ்டிக்கவல்ல பெருமையை யுடைய சதுர்முகனை ஸ்ருஷ்டித்தவனுக்கு. பீடு - பெருமை. [மாடுஇத்யாதி] - மாடு -

---

நாலாம்பாட்டு.—பீடுடை இத்யாதி. "பீடுடைநான்முகன்" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை - சதுர்முக இத்யாதி.

சதுர்முகனுக்குப் பீடேதென்ன - சதுர்த்தச இத்யாதி. "மணாளற்கு" என்றதுக்கர்த்தம் - அநந்யார்ஹமாக்கினவற்கு என்றது. நாடுடைமன்னர் துர்யோதநாதிகளாயிருக்க, இவர்களை "நாடுடை

தநம். வசுமதியான பூமியென்னுதல்; மாடென்று - இடமுடைமையாய், பரப்பையுடைய பூமியென்னுதல். திருவுலகளந்தருளின க்ருத்ரிமசேஷ்டிதத்தாலே தன்னை யநந்யார்ஹமாக்கினவற்கு. [நாடுஇத்யாதி] - நாடுடைய ராஜாக்களான பாண்டவர்களுக்குத் தூதுபோய் அத்தாலே பூர்ணனானவனுக்கு. பகவதபிப்ராயத்தாலே, அவர்களை நாடுடைமன்னரென்கிறார்காணும், "இருக்கைக்குமொரு குறிச்சியுங்கொடோம்" என்று ராஜ்யம் பண்ணுகிறார்கள் துர்யோதநாதிகளாயிருக்க: "அபிஷிச்ய ச லங்காயாம்" (அபிஷிச்யச லங்காயாம்) இத்யாதிவத். [நம்பிக்கு] - *இன்னார்தூதன் என நின்ற செயலாலே இட்டசட்டை பீறும்படியிருக்கை. அடியிலே ஜகத்தையுண்டாக்கி, அபஹரித்தாருண்டாகில் எல்லைநடந்து மீட்டுக்கொண்டு, அத்தை ஆஶ்ரிதர்க்குஆக்குகைக்கு இழிதொழில்செய்த இந்நீர்மையையுங்காட்டி இவள் நீர்மையை யபஹரித்தான். [என்பாடையல்குல்] - இடமுடைத்தான நிதம்ப ப்ரதேசத்தையுடையவள். பாடு - இடம். "பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" (பும்பாவம்மந ஸாயயு:) ஸஜாதீயரையழிக்கும் வடிவழகு. அவன் *பும்ஸாம்த்ருஷ்டி சித்தாபஹாரியானாற்போலே. பண்பு-நீர்மை. (ச)

## ஐந்தாம் பாட்டு.

பண்புடைவேதம் பயந்தபரனுக்கு
மண்புரைவையம் இடந்தவராகற்கு
தெண்புனற்பள்ளி எம்தேவபிரானுக்குஎன்
கண்புனைகோதை இழந்ததுகற்பே.

*ஆ.—(பண்புடை.)-தன்னுடைய ஸ்வரூபரூபகுண ப்ரதிபாதகமாகையாலே தன்னிலுஞ்சீரியதான வேதங்களை ப்ரஹ்மாதிதேவர்களுக்குக் கொடுத்த பரமௌதார்ய*

---

**ப்ர.**—[*பீடுடைஇத்யாதி*]—[*நாடுடைமன்னர்க்கு*]— ஸ்ரீ ராமாயணே,
"அபிஷிச்ய ச லங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம் । க்ருதக்ருத்யஸ்ததா ராமோ விஜ்வர: ப்ரமுமோத ஹ॥ அரு॥"

---

*மன்னர்" என்கிறதென்? என்ன* - பகவதபிப்ராயத்தாலே இத்யாதி. குறிச்சி - குப்பம். *ஆஶ்ரிதகார்யம் செய்ததாலே பூர்ணனாயிருக்குமோ? என்ன* - அபிஷிச்ய இத்யாதி. "க்ருதக்ருத்ய:" என்றதிலேநோக்கு. "தூதுசெல்" என்றவநந்தரம், "நம்பி" என்றதுக்குபாவம் - இன்னார் இத்யாதி. இன்னாருடைய தூதனென்னும்படிநின்றஇத்யர்த்த:. "பீடுடை" இத்யாதி பதத்ரயத்துக்கும்பாவம் - அடியிலே இத்யாதி. *அல்குலைக்கொண்டாடுகிறதுக்கு பாவம்* - பும்பாவம் இத்யாதி. *ஸஜாதீயரையழிக்கக்கூடுமோ? என்ன* - அவன் இத்யாதி. "ரூபௌதார்யகுணை: பும்ஸாம் த்ருஷ்டிசித்தாபஹாரிணம்" இதி *மஹாபாரதே*. பண்பு-நீர்மை. அஸாதாரணஸ்வபாவ இத்யர்த்த:. (ச)

த்துக்கும், பூமிப்பிராட்டியை எடுத்தருளி அவளோடே ஸம்ஸ்லேஷித்தருளின ஸ்ரீ வராஹமான திருவடிவில் அழகுக்கும், திருநாட்டிலே எழுந்தருளியிருக்கிற இருப்பைக் கண்டு அநுபவிக்கிற * அயர்வறுமமரர்களையுங்கூடத் தோற்பித்து அடிமையாக்கவல்ல திருப்பாற்கடலிலேபிராட்டியோடேகூடக் கண்வளர்ந்தருளுகிற அழகுக்குந் தோற்று, தர்ஶநீயமான திருக்குழலையுடைய என்பெண்பிள்ளை, தன்னுடைய கற்பிழந்தாளென்கிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், வேதப்ரதாநாத்யுபகாரங்களைப் பண்ணினவனுக்கு என்மகள் கற்பிழந்தாள் என்கிறாள்

[பண்பென்று தொடங்கி.] - தன்னை ப்ரதிபாதிக்கவற்றான வேதத்தை ப்ரஹ்மாவுக்காக ஆவிஷ்கரிப்பதுஞ்செய்து எல்லாரிலும் பரனாய் மண்மிக்க ப்ருதிவியைஇடந்த ஸ்ரீவராஹமானவனுக்கு. மண்மிகுதி சொல்லிற்று, எடுக்கையில் அருமைதோற்றுகைக்காக. [தெண்புனல் என்று தொடங்கி] - கண்வளர்ந்தருளுகைக்கு ஈடாம்படி ஸ்வச்சமான நீர்வெள்ளத்தையுடைத்தான ஏகார்ணவத்திலே கண்வளர்ந்தருளாநின்று ப்ரஹ்மாதி தேவர்களுக்கும் ஸ்ருஷ்ட்யாத்யுபகாரகனானவனுக்கு, கண்டாருடைய கண்ணைப்பிணிக்கவல்ல அழகையுடைய என்பெண்பிள்ளை தன்னுடைய கல்வியை இழந்தாள்.

ப.—அநந்தரம், வேதப்ரதாநாதியான ரக்ஷணப்ரகாரத்தையுடையவனுக்குக் கற்பிழந்தா ளென்கிறாள்.

பண்பு - பகவத்ஸ்வரூபாதிகளை யதாவத்ப்ரகாசிப்பிக்கும் ஸ்வபாவத்தை, உடை-உடைய, வேதம்-வேதத்தை, பயந்த - ப்ரஹ்மாதிகளுக்குஉண்டாக்கிக்கொடுப்பானாய், பரனுக்கு - தத்ப்ரதிபாத்யனானபரனாய், மண்-மண்ணின், புரை - மிகுதியையுடைய, வையம் - பூமியை, இடந்த - இடந்தெடுத்த, வராகற்கு - வராஹவேஷத்தையுடையனாய், தெண்-தெளிந்த, புனல் - புனலையுடைத்தான ஏகார்ணவத்திலே, பள்ளி-ஜகத்ரக்ஷணசிந்தைபண்ணிக்கிடப்பானாய், (அந்த ரக்ஷணசிந்தையாலே), எம் - எம்மேயல்வாரோடு, தேவர் - ப்ரஹ்மாதிகளோடுவாசியற, பிரானுக்கு - உபகாரகனானவனுக்கு; என்கண்புனைகோதை - கண்டார்கண்களைப்புனைந்துகொள்ளும் மாலையழகையுடைய என்பெண்பிள்ளை, இழந்தது-, கற்பு-தன்னறிவுடைமை. கற்பு-அறிவுடைமை.

இ.—அஞ்சாம்பாட்டில், வேதப்ரதாநம் முதலான உபகாரங்களைப் பண்ணினவனுக்கு என்மகள் கற்பிழந்தாள் என்கிறாள்.

[பண்புடை வேதம்] - ஈஶ்வரனை உள்ளபடியே காட்டித்தரும் சீர்மையையுடையவேதம். [பயந்த] - ப்ரஹ்மாவை ஓதுவிக்கை. [பரனுக்கு]-வேதப்ரதிபாத்யனாகையாலும், ப்ரஹ்மாவுக்கு வேதசக்ஷுஸ்ஸைக்கொடுக்கையாலும் ஸர்வஸ்மாத்பரனானவனுக்கு. அறிவு இழந்தார்க்கு அறிவுகொடுக்குமவன் கிடீர் இவள்அறிவை அழித்தான்! [மண்புரைவையம்] - மண்மிக்கபூமி. [இடந்தவராகற்கு] - பிறருடைய ஸ்வரூபஸித்யர்த்தமாகத் தன்னை அழிய மாறுமவன். "மானமிலாப்பன்றியாந்தேசு" என்னக்கடவதிறே. மண்மிகுதி சொல்லிற்று - எடுக்கையில் அருமை தோற்றுகைக்காக. [தெண்புனற்பள்ளி] - தெளிந்தபுனலை யுடைத்தான ஏகார்ணவத்தைப் படுக்கையாக வுடைய

வன். முதலிலே ஸ்ருஷ்ட்யுந்முவனாய் ஸ்வச்சமான நீரையுடைய ஏகார்ணவத்திலே ஜகத்ரக்ஷணோபாயசிந்தைபண்ணிக்கொண்டு கண்வளர்ந்தருளுமவன் என்கை. [தேவ பிரானுக்கு] - ப்ரஹ்மாதிகளுக்கு ஸ்ருஷ்ட்யாத்யுபகாரகனானவனுக்கு என்னுதல்; அயர்வறுமமரர்களதிபதி கிடீர் ஒருவர் இல்லாதாற்போலே ஸ்ருஷ்ட்யுந்முவனாய் இருக்கிறான் என்னுதல். [என்கண்புனை கோதை] - கண்டார் கண்களை ஆபரணமாகவுடைய மயிர்முடி. அதாகிறது - கண்டார்க்கு வைத்த கண் வாங்கவொண்ணாதபடி கண்ணைப் பிணிக்கவற்றாயிருக்கை. "கண் என்று - பீலிக்கண்ணாய், அத்தைப்புனைந்த கோதை என்று, ஜாத்யுசிதமான ஆபரணம்" என்றான் ஒருதமிழன். [இழந்தது கற்பே] - ஸர்வர்க்கும் ஜ்ஞாநப்ரதனான தனக்குங்கூட அறிவுகொடுக்குமவள் அறிவைக் கிடீர் இழந்தது! கற்பு - கல்வி: அதாவது-ஜ்ஞாநம்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. வேதப்ரதாநம் முதலான உபகாரங்களைப் பண்ணின வனுக்கு என்மகள் கற்பிழந்தா ளென்கிறாள்.

[பண்புடைவேதம்] - ஈச்வரனை உள்ளபடியே காட்டித்தரும் நீர்மையை யுடைய வேதம். [பயந்த] - ஸுப்தப்ரபுத்தந்யாயத்தாலே ப்ரஹ்மாவை யோதுவிக்கை. [பரனுக்கு] - "யொ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம் யொ வை வெதாம்ஶ்ச ப்ரஹி ணொதி தஸ்மை" (யோப்ரஹ்மாணம் விததாதிபூர்வம் யோவைவேதாம்ஶ்சப்ரஹிணோதிதஸ்மை) என்கிறபடியே - ப்ரஹ்மாவுக்கு வேதசக்ஷுஸ்ஸைக் கொடுக்கையாலும், வேதைகஸமதிகம்யனாகையாலும் ஸர்வஸ்மாத்பரனானவனுக்கு. அறிவிழந்தார்க்கு அறிவு கொடுக்குமவன்கிடீர் இவளறிவை அழித்தான். [மண்புரைவையம்] - மண்மிக்கபூமி. [இடந்தவராகற்கு] - மண்ணோடு விண்ணோடு வாசியற, தன்முகேந ரக்ஷித்தபடி. பிறருடைய ஸ்வரூபஸித்த்யர்த்தமாகத் தன்னையழிய மாறுமவன். அழிவுக்கு இட்ட வடிவுக்கு ஆலத்திவழிக்கவேண்டும்படியிறே இருப்பது. "மானமிலாப்பன்றியாந்தேசு" என்னக்கடவ

அஞ்சாம்பாட்டு.—பண்பு இத்யாதி. "பண்புடைவேதம்" இத்யாதிபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - வேதப்ரதாநம் இத்யாதி. "கீழிற்பாட்டிலே - "யொ ப்ரஹ்மாணம் விதயாதி பூர்வம்" என்றத்தையும், இப்பாட்டிலே - "யொ வை வெதாம்ஶ்ச ப்ரஹிணொதி தஸ்மை" என்றத்தையுஞ்சொல்லுகிறது" என்றருளிச்செய்வர். வேதத்துக்குப்பண்பேதென்ன - ஈச்வரனை இத்யாதி. பயந்த - ஸ்ருஷ்டித்த: "உண்டாக்கிக்கொடுத்த" என்று உரையில்சப்தார்த்தம். நித்யமான வேதத்தைப்பயக்கையாவதேதென்ன - ஸுப்தப்ரபுத்த இத்யாதி. "பண்புடைவேதம்" என்றத்தைப் பற்ற - வேதைகஸமதிகம்யனாகையாலும் என்றது. "பண்புடைவேதம்பயந்தபரனுக்கு - கற்பிழந்தாள்" என்ற தாயாருடைய ஹார்த்தபாவம் - அறிவிழந்தார்க்கு இத்யாதி. "புரை" என்று - மிகுதி. மண்மிகுகையாவது - அதிகடிநமாயிருக்கை. கீழிற்பதத்தையுங்கூட்டி "இடந்தவராகற்கு" என்றதுக்கு ரஸோக்தி - மண்ணோடு இத்யாதி. மண்ணை, தன்முகேந ரக்ஷிக்கையாவது - திருவயிற்றிலேவைத்து ரக்ஷிக்கை. விண்ணை, தன்முகேந ரக்ஷிக்கையாவது - ஹம்ஸமுகேநவேதோபதேசம்பண்ணி ரக்ஷிக்கை. ஜுகுப்ஸநீயமாய் விரூபமான வராஹவேஷத்துக்குக் கற்பிழக்கக்கூடுமோ? என்ன - பிறருடைய இத்யாதி. குணத்துக்கு ஈடுபட்டாள் என்றபடி. குணத்துக்கேயன்றிக்கே, அழகுக்கும் ஈடுபட்டா ளென்கிறார் - அழிவுக்கு இத்யாதி. அழிவுக்குஇட்டவடிவாவது - தன்மேன்மையைவிட்டு நீர்மையைக் கொள்ளுகைக்கு ஈடாகக்கொண்ட வராஹவேஷம். ஆலத்திவழிக்கை - ஆலத்தியெடுக்கை. த்ருஷ்டிதோஷபரிஹாரம் பண்ணுகையென்றபடி. அப்படி யழகியதாயிருக்குமோ? என்ன - மானமிலா இத்

மண்மிசுதிசொல்லிற்று - எடுக்கையில் அருமை தோற்றுகைக்காக. [வராகற்கு] - அல்லாத ரக்ஷணம்போலன்றியே முக்யமான ரக்ஷணம்இதிறே எல்லார்க்கும் ஏற; "எயிற்றிடை மண்கோண்ட எந்தை யிராப்பகலோதுவித்தென்னைப் பயிற்றிப்பணிசெய்யக் கோண்டான்" என்று இவளோட்டையார்க்கு ஜ்ஞாநப்ரதாநம்பண்ணினவன் இவளை அறிவழித்தான். [தெண்புனற்பள்ளி] - தெளிந்தபுனலையுடைய ஏகார்ணவத்தைப் படுக்கையாகவுடையவன். அழிந்த ஜகத்தை ஸ்ருஷ்டித்து, ஸ்ருஷ்டரான சேதநர்க்கு அறிவுகொடுக்கக் கிடக்கிறவனுக்கு. ஸத்தையே பிடித்துண்டாக்கி அறிவுகொடுக்கக் கடவ அவன்கிடீர் உண்டான அறிவை வாங்கிக்கொள்ளுகிறான்! [எம்தேவபிரானுக்கு] - ப்ரஹ்மேஶாநாதிகளுக்கும் உபகாரகனானவனுக்கு. "ஈஶ்வரோஹம்" என்றிருந்தாளாகில் அறிவிழக்கவேண்டாகிடீர்! [என்கண்புனைகோதை] - கண்டார்கண்கள் பிணிப்புண்கையாலே, அவற்றை ஆபரணமாகவுடைய மயிர்முடியை யுடையவள். அதாவது - வைத்த கண் வாங்கவொண்ணாதிருக்கை. கண்களுக்கு விஷயம் தலையாய்விட்டது. [இழந்தது கற்பே] - ஸர்வர்க்கும்

*யாதி. தேசு - தேஜஸ்ஸு. பூமிக்கு காடிந்யம்சொன்னதுக்கு ப்ரயோஜநம் - மண்மிசுதி இத்யாதி. கீழ்ச்சொன்ன ரக்ஷணம்போலே தேஹத்தைப்பூண்கட்டிக்கொடுக்கையன்றிக்கே, ஶ்லோகத்வயஉபதேஶமுகேந ஸம்ஸாரார்ணவத்தில் நின்றும் கரையேற்றும் அவதாரமென்று விவக்ஷித்து ரஸோக்தி - அல்லாத ரக்ஷணம் இத்யாதி. முக்யமான - முகத்தாலுண்டான; ஶ்ரேஷ்டமான என்றர்த்தத்வயம். எல்லார்க்குமேறவென்றது - எல்லார்க்கும் ஸம்ஸாரார்ணவத்தில்நின்றும் கரையேறுகைக்கென்று ஸ்வபாவார்த்தம்; எல்லாரும்சம்மதிக்கவென்றுசாடு. "வராகற்கு - அறிவிழந்தாள்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - எயிற்றிடை இத்யாதி. தன்னுடைய திருவெயிற்றின் இடையிலே பூமியையெடுத்த என்ஸ்வாமியானவன் அஹோராத்ரவிபாகமற ஓதுவித்து: அதாவது - தன்னுடைய சேஷித்வாதிகளையும் தம்முடையசேஷத்வாதிகளையும்அறிவித்தென்றபடி. பயிற்றி - அநுஷ்டாநபர்யந்தமாக்கி. பணிசெய்யக்கொண்டான் - "நித்யகைங்கர்யங்கொள்ளக்கடவோம்" என்று திருவுள்ளத்தாலே அறுதியிட்டுக்கொண்டான்என்றபடி. இவளோட்டையார்க்கென்றது - பெரியாழ்வாரை. "தெண்புனற்பள்ளி" என்றதுக்குபாவம் - அழிந்தஜகத்தை இத்யாதி. அழிந்தஜகத்தை ஸ்ருஷ்டித்தென்றது - "நான்முகனைப்படைத்தானுக்கு" என்றத்தைப்பற்ற. இத்தைச்சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவமாதல், பலிதமாதல் - ஸத்தையேபிடித்து இத்யாதி. "எம்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம்-ஈஶ்வரோஹம் இத்யாதி. 'அறிவிழக்கவேண்டாகிடீர்' என்றவநந்தரம், 'அச்செயலுக்குத்தோற்று எம் என்கையாலே அறிவிழந்தாள்'என்று கூட்டிக்கொள்வது. புனைகை - பிணிப்புண்கை. நாயகனுடையகண்ணை ஆபரணமாகவுடைய மயிர்முடியென்று விவக்ஷித்து, அத்தை ஸஹேதுகமாகக்காட்டுகிறார் - கண்டார் இத்யாதி. கண்கள்பிணிப்புண்ணுதபோது மயிர்முடிக்கு ஆபரணமாகக்கூடாமையாலே, பிணிப்புண்கையாலே என்றது அர்த்தாத்ஸித்தம். பிணிப்புண்கையாவதேதென்ன - அதாவது இத்யாதி. "கண்டார் கண்ணைப்புனைந்துகொள்ளும்கோதை" என்று உரையில் ஸப்தார்த்தம். "இழந்தது" என்கைக்கு, இவளறிவுக்கேற்றமேதென்ன - ஸர்வர்க்கும் இத்யாதி. "வேதாம்ஶ்ச ப்ரஹிணோதி" என்றத்தைப்பற்ற - ஸர்வர்க்கும் ஜ்ஞாநப்ரதனென என்றது. அவனுக்கும் அறிவுகொடுக்கும்படியான அறிவு இவளுக்குண்டோ? என்ன - அபிஜ்ஞா இத்யாதி. "தேவகார்யம் ஸ்வஸாக்ஷாத் ஸ்வாக்ஷாத்தஜ்ஞா ஹ்ருஷிவேதநா। அபிஜ்ஞாராஜயோஷாணாம் ராஜவம்ஶஸ்ய தீக்ஷிதே" இதி அயோத்யா காண்டே. பிணிப்புண்கையாவது - கட்டுண்கை. 'ஸப்தப்ரயுத்தர்யாயத்தாலே' என்கிறவிடத்திலே- "ஸம்ஸ்காரோ ச்ருதிஸஞ்சோஷவிஷயஸ்த ஹேஷஷ்டதஸ்யாஸிதம் ஶம்பவம் நாவேதத்த நஹஷ்நிவஹெஷவ்யாக்ஷ்யஷ்ருர்வ்ருஷஹ। ஸோதஷ்ட்வஸிம்ஹவ ப்ரவஜநதாயஷ்ரா*

ஜ்ஞாநப்ரதனை தனக்குங்கூட அறிவுகொடுக்கும் இவள்அறிவைக்கிடீர் இழந்தது! "அபி ஜ்ஞாராஜயசஃராணாடி" (அபிஜ்ஞாராஜதர்மாணும்). கற்பு-கல்வி, அதாவது-ஜ்ஞாநம்.

---

## ஆறும் பாட்டு.

---

கற்பகக்காவன நற்பலதோளற்கு
பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு
நற்பலதாமரை நாண்மலர்க்கையற்கு என்
விற்புருவக்கொடிதோற்றதுமெய்யே.

**ஆ.**—(கற்பகக்காவன.)-*திருப்பாற்கடலிலே பிராட்டியோடே ஸம்ஸ்லேஷித்தருளுகையாலே ஒரு கற்பகச்சோலை தழைத்தாற்போலே யிருக்கிற திருத்தோள்களின் அழகுக்கும், கற்பகச்சோலையிலே ஒரு தாமரைக்காடு அலர்ந்தாற்போலே யிருந்த திருக்கைகளின் அழகுக்கும், நிரதிஶய தேஜோமய கநக கிரிவரஸத்ருஶமான திருவபிஷேகத்தில் அழகுக்கும், ஸ்ரீஶார்ங்கம் வளைந்தாற்போலே யிருந்த திருப்புருவத்தையுடையவளான இவள், தன்திருமேனி தோற்றாள் என்கிறாள்.*

*ஒ.—ஆறும்பாட்டில், ஏகார்ணவஶாயியான எம்பெருமானுடைய திவ்யாவயவ ஸௌந்தர்யத்திலே அகப்பட்டு என்பெண்பிள்ளை தன்னுடைய மெய்யிழந்தாள் என்கிறாள். [கற்பகக்காவென்று தொடங்கி] - ஒருசாயல் கற்பகச்சோலைபோலேயாய் அவ்வளவன்றிக்கே நன்றான பல திருத்தோள்களையுடையனாய் ஒளியை யுடைய பொன்மலைபோலேயாய் அழகியதாய் திருமுடிக்கு அநுகூலமான திருவபிஷேகத்தை உடையவனுக்கு. திருவபிஷேகம் - ஸர்வாபரணங்களுக்கும் உபலக்ஷணம். [நற்பலவென்று தொடங்கி] - அழகியதாய் பலவாய் செவ்வித்தாமரைப்பூப்போலே யிருக்கிற திருக்கைகளை யுடையவனுக்கு வில்போலேயிருக்கிற புருவத்தையுடைய என்னுடைய பெண்பிள்ளை உடம்பு இழந்தாள்.*

*ப.—அநந்தரம், ஆகர்ஷகமான அவயவசோபையையுடையவனுக்குத் தன்னுடையஸ்வாதீந ஶரீரத்தையிழந்தா ளென்கிறாள்.*

---

ப்ர.—[இழந்ததுகற்பே]—கயோயஸ்ராகாண்டே, [உசு] "தெவதெஹீ வாவிதஹவஸ்ம்நஶாஸ்ராவதவஸிநீ। தஷெவஹஸ்ரிதஸ்யாஶயளவஶாஜ்யாபிஷெவநடிாங॥ தெவகாரும்ஹஸாக்ஷவாக்ஷதஜா ஹஷ்டிவெதநா। அபிஜ்ஞாராஜயசஃராணாம்ராஜவாத்தூம்ஹ்தீக்ஷதெ॥சு॥ ஹவிவெஶாய ராஜோவஸவெஸஹஸவிஸஷிதடி। ஹஹஷ்ஜநவஸம்வணாம்ஹியாகிஸிஜவாஜாவஃ॥ரு॥"

---

வஹ்தத்விதம்ஶாவஸஸஹதகஃதஹகாநு வஹவியவெஜாஃஹரோணம்தஃ" என்கிற ஸ்ரீரங்கராஜஸ்தவஸ்லோகம்அநுஸந்தேயம். (௫)

தோல்சீரைநன்னெஞ்சே, யோவாதவூணாகவுண்'' என்னக்கடவதிறே. மாறாதேபுஜிக்கலாவதும், மாளாததும் இதிறே; ''அப்போழுதைக்கப்போழுதென்னாராவமுதம்'' என்றும், ''கோள்ளமாளாவின்பவேள்ளம்'' என்றுமிறேயிருப்பது. [எம்பெருமான்] - இவற்றிலாகாத தோன்றில்லைகிடீர், இவையெல்லாம்வகுத்தஅவனேயாயிருக்கை. இவள் ஸந்நிதியேயமையுங்கிடீர் எங்களுக்கு. [என்றென்றே] - இதொழிய வேறொன்றை ''தாரகம்'' என்றிருக்கில் இறே மற்றொன்றைச்சொல்லுவது. இது தன்னையே மாறாதே சொல்லி, ஒருகால் இத்தைச்சொல்லிப் பின் பூணுறக்கத்தாலே போதுபோக்கலாம் விஷயமன்றே. [கண்கள்நீர்கள்மல்கி] - இவர்களுடைய உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையும் எல்லாமிருக்கிறபடி. இவள் முகத்தாலேகாணும் இவர்களுக்கு ஜீவநம். தன்ஜீவநத்துக்குப் போகிறவள் எங்கள் ஜீவநத்தைக்கொண்டு போகவேணுமோ? ஒருவன் பகவத்குணவித்தனாய்க் கண்ணுங் கண்ணநீருமாயிருக்க, அவனைக் கண்டுகொண்டிருக்கவாகாதேயடுப்பது. ''அழுநீர்துளும்ப வலமருகின்றன வாழியரோ'' என்று சேதநராகில் மங்களாசாஸநம்பண்ணக்கடவது. நஞ்சீயர், ''பிள்ளைதிருநறையூ ரரையரோடே மூன்று திருவாய்மொழிகேட்டேன், அதில் எனக்கோரு வார்த்தைகளும் போகாது; ஒரு திருவாய்மொழியை ப்ரஸ்தாவியா அவர்ஸிதிலராய்க் கண்ணுங்கண்ணநீருமாய் இருக்குமிருப்பை நினைத்திருப்பன்'' என்று அருளிச்செய்வர். ''ஆஹ்லாதசீதநேத்ராம்பு:'' (ஆஹ்லாதசீதநேத்ராம்பு:) - விரஹத்தாலே

---

நின்றுமொருகாலும் மாறாதசெயலையுடைய சார்ங்கத்தையுடைத்தான சக்ரவர்த்தித்திருமகனுடைய ஸ்வாபாவிகமான சௌர்யவீர்யாதி கல்யாணகுணங்களை, ஔபாதிகபந்துக்களுக்கும் நிருபாதிக பந்துவுக்கும் வாசியறியவல்ல நெஞ்சே! நித்யபோகமாக புஜி இத்யர்த்த: பெரியதிருவந்தாதி எழுபத்தெட்டாம்பாட்டு, ''துணைநாள்'' இத்யாதி. ''ஓவாதவூண'' என்றதுக்குபாவம் - மாறாதே இத்யாதி. மாறாததுமாய் மாளாததுமாயிருக்குமோ? என்ன; இரண்டுக்குமடைவே ப்ரமாணத்வயம் - அப்போழுதைக்கு இத்யாதி. ''எல்லாங்கண்ணன்'' என்றவநந்தரம், ''எம்பெருமான்'' என்றவிசேஷித்ததுக்குபாவம் - இவற்றில் இத்யாதி. இத்தால் - ஸ்த்ரீகளோபாதி அப்ராப்தமாய்க்கழியுண்கிற விஷயமன்று; ப்ராப்தவிஷயம்இவனென்கைக்காக - ''எம்பெருமான்'' என்கிறதென்றபடி. இவையெல்லாமென்றது - ''உண்ணுஞ்சோறு'' இத்யாதிகளை. ''உண்ணுஞ்சோறு'' இத்யாதிக்கு, ''கண்கணீர்கள்மல்கி'' என்றத்தைக்கடாக்ஷித்து ஹார்த்தபாவம் - இவள்ஸந்நிதியே இத்யாதி. வ்யாப்தைக்குபாவம - இதொழிய இத்யாதி. அவதாரணத்துக்கர்த்தம் - இதுதன்னையே இத்யாதி. மாறாதேசொல்லுகைக்கு ஹேதுவேதென்ன - ஒருகால் இத்யாதி. மகளுடையதேஹயாத்ரைசொன்னவநந்தரம், ''கண்கணீர்கள்மல்கி'' என்கையாலே - இவளுக்கிவள் கண்ணநீர் தேஹயாத்ரையென்று வ்யக்ஷித்தருளிச்செய்கிறார் - இவர்களுடைய இத்யாதி. தான் * மயர்வறமதிநலமருளி ஜ்ஞாதாகத் திருத்துகையாலே இவள்திருத்தினதாமேயல்லாமிவள்கண்ணுங்கண்ணநீருமாயிருக்கிற விருப்பையே தங்களுக்கு தாரகாதிகளாக நினைத்திருப்பார்களென்னுமிடந்தோற்ற 'இவர்களுடைய' என்று பஹுவசநமாக அருளிச்செய்கிறார். ''இவள் கண்ணும் கண்ணநீருமாயிருக்கிற இருப்பே இவர்களுக்கு தாரகாதிகள்'' என்னுமத்தை ஸ்வாரஸ்யத்தாக அருளிச்செய்கிறார் - இவள்முகத்தாலே இத்யாதி. இவள்கண்ணுங் கண்ணநீருமாயிருக்கிற இருப்பையிழந்த க்லேசாதிசயந்தோற்றச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - தன்ஜீவநத்துக்கு இத்யாதி. இதுக்கு ஸ்வாபதேசம் - ஒருவன் இத்யாதி. கண்டுகொண்டிருக்கிற மாத்ரமன்றிக்கே மங்களாசாஸநமும் பண்ணவேணுமென்கிறார் - அழுநீர் இத்யாதி. 'சேயரிக்கணழுநீர்துளும்பவலமருகின்றன' - சிவந்த வரியையுடையகண்கள் ப்ரேமத்தால்வந்த வுள்ளழிவாலே யழுதநீர்துளும்ப, ஆற்றாமையாலே நின்றவிடத்தில் நில்லாதே யலமாவாநின்றன. 'வாழியரோ' இது நித்யமாய்ச்செல்லவேணுமென்று மங்களாசாஸநம்பண்ணுகிறாளென்றபடி. திருவிருத்தம் இரண்டாம்பாட்டு, ''செழுநீர்'' இத்யாதி. ''கண்ணுங்கண்ணநீருமாயிருக்கிறவிருப்பைக் கண்டுகொண்டிருக்கையே புருஷார்த்தம்'' என்னு

கோதித்துப்புறப்படும் ஶோகாஶ்ருபோலன்றிக்கே, பகவதநுபவஜநிதமான ஹர்ஷப்ரகர்ஷத்தாலே குளிர்ந்த கண்ணீரை யுடையனுவது. “வாஷ்பகண்டுதகாத்ரவாந்” (புலகீக்ருதகாத்ரவாந்) உடம்படைய மயிரேறிந்திருப்பது. “பரகுணாவிஷ்ட:” (பரகுணவிஷ்டஃ) - பகவத்குணவிஷ்டனுவது, தைவாவிஷ்டரைப்போலே. அவன், “ஸர்வதேஹிபி: த்ரஷ்டவ்ய:” (ஸர்வதேஹிபிஃ - த்ரஷ்டவ்யஃ) - அவன் தேஹபரிக்ரஹம் பண்ணினுர் எல்லார்க்கும் த்ரஷ்டவ்யன். தேஹபரிக்ரஹம் பண்ணினதுக்கு ப்ரயோஜநம் இவனைக்காண்கையாயிற்று. “ஸதா-த்ரஷ்டவ்ய:” (ஸதா - த்ரஷ்டவ்யஃ) ஸதா தர்ஶநம் பண்ணுகைக்கு ஒரு தேசவிசேஷம் தேடிப்போக வேணுமோ? அநந்தாழ்வான் சோழகுலாந்தகனிலே க்ருஷிபண்ணியிருக்கிருனெரு ஸ்ரீவைஷ்ணவனைக் கண்டு, “உம்முடைய ஊர் எது?” என்று கேட்க, ‘என்னூர் திருக்கோளூர்” என்ன, “அங்குநின்றும் போந்ததென்?” என்ன, “தேஹயாத்ரை நடவாமேபோந்தேன்” என்ன, “அவ்வூரில் கழுதையை மேய்த்து ஜீவிக்கமாட்டிற்றிலையோ? நிலைநின்ற ஜீவனத்தைவிட்டுப் போந்தாயாகாதே!” என்றுனும். [கண்ண னெம்பெருமானென்றென்றே கண்கள் நீர்கள்மல்கி] - இந்த பாவநா ப்ரகர்ஷத்தாலே பெற்றுற்போலேயிருந்து ஆநந்தாஶ்ரு புறப்படுகிறபடி யாகவுமாம்; இவ்வநுஸந்தாநத்தாலே கண்ணீர்மல்கி என்னவுமாம். [மண்ணினுள் இத்யாதி] - மண்ணினுள் புகழ்சேர் திருக்கோளூரே. விண்ணில் ஓரூர் விசேஷிக்கவேண்டும்படியாயிராதிறே. [அவன்சீர்வளம் மிக்கவனூர்] - அவனுடைய கல்யாணகுணங்களையும் நிரவதிகஸம்பத்தையுமுடையவனுடைய வூரையும். “ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா” (ஸோஶ்நுதேஸர்வாந்காமாந்ஸஹப்ரஹ்மணு) என்று அவனேடு அவன்குணங்களோடு வாசி

---

ப்ர.—[அவன்சீர்வளமிக்கவனூர்]—தைத்திரீயகே [ஆ - க] “ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம। யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந். ஸோऽஶ்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபஶ்சிதேதி॥”

---

மதக்கு ஸம்வாதம் - நஞ்சீயர் இத்யாதி. இதுக்குப்ரமாணம் - ஆவிர்பூத இத்யாதி. “ஆவிர்பூதமுதாஶ்ருவாஷ்பகண்டகிதகாத்ரவாந்। ஸதா பரகுணாவிஷ்டோ த்ரஷ்டவ்யஸ்ஸர்வதேஹிபி:” இதி ஸ்ரீவிஷ்ணுதத்த்வே. கீழே, ‘வாசுதேவஸ்ஸர்வம்’ இத்யாதிப்ரமாணம் கீதாஸம்ஸப்தமே, “பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே। வாஸுதேவஸ்ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:” இதி. தேஹபரிக்ரஹம்பண்ணினவர்களுக்கு இவன் த்ரஷ்டவ்யனுகவேண்டுவானென்? என்ன - தேஹபரிக்ரஹம் இத்யாதி. “யாகாதிகளெல்லாம் ஈஶ்வரனேயாயிருக்கும்” என்றதுக்குசம்வாதம் - அனந்தாழ்வான் இத்யாதி. இந்த ஐதிஹ்யத்திலே ‘நிலைநின்ற ஜீவநத்தைவிட்டுப்போந்தாய்’ என்றதுக்கு இப் தத்திலேநோக்கு. இங்குச்சொல்லுகிற கண்ணநீர் ஆநந்தாஶ்ருவென்று விவக்ஷித்து, விஶ்லேஷதசையில் ஆநந்தாஶ்ருவாகக்கூடாமைதே? என்ன - இந்த பாவந இத்யாதி. இவ்வநுஸந்தாநத்தாலே கண்ணீர்மல்கி என்னவுமாம் என்றது - விஶ்லேஷதசையில் அநுஸந்தாநமாகையாலே ஶோகாஶ்ரு மல்கியென்னவுமாம் என்றபடி. “மண்ணினுள் - புகழ்சேர்” என்று விசேஷிக்கிறதென்? என்ன - விண்ணில் இத்யாதி. அதாவது, பரமபதமெல்லாம் அவனுக்கு பரதந்த்ரமாகையாலே விசேஷிக்கவேண்டா; இங்கு சாதாரணமாகையாலே விசேஷிக்கிறது என்றபடி. அவன்

யற ப்ராப்யமாகிறவோபாதி அவன் விரும்பினதேசமும் ப்ராப்யாந்தர்க்கதமாகக் கடவதிறே. [அவன் சீர்] - அவன் கல்யாணகுணங்கள். அவையாகிறன, அவன் தன்திறத்தில் தாழ நிற்கும் நிலைகள். [வளம்மிக்கவனூர்] - பரமபதம் கலவிருக்கையோபாதி உகந்த விஷயத்தைப் பெறும்இடமிறே ஊராகிறது! *கிம்கார்யம் ஸீதயாமமவிறே. பரமபதத்திற்காட்டிலும் ஆஶ்ரிதர்இருந்தஇடமிறே ஊராகிறதும், அவன் திருவுள்ளத்துக்குப் பொருந்தியிருப்பதும். [வளம்மிக்கவன்] - ப்ரணயதாரையில் விதக்யன் என்றுமாம். இப்போது வைதக்த்யமாவது தானிருந்தவிடத்தே இவள் வரும்படி இத்தலையை யழித்தபடி. [வினவி] - "திருக்கோளூரேத்தனை யிடம்போரும்" என்று எதிரே வந்தாரைக்கேட்டு, அவர்கள் "இன்னதனை யிடம் போரும்" என்ன, அதுதானே வழிக்கு பாதேயமாகப் போகை. "பாதேயம்புண்டரீகாக்ஷ" (பாதேயம்புண்டரீகாக்ஷ) இத்யாதி. பூவலரும்போதைச் செவ்விபோலே "திருக்கோளூரேத்தனையிடம்போரும்" என்றுகேட்கும்போதைத் திருப்பவளத்தில் செவ்வி காணப் பெற்றிலேன் என்று காணும் திருத்தாயார் தான்நோவுபடுகிறது. [என் இளமான் புகுமூர் திருக்கோளூரே] - என்வயிற்றிற் பிறப்பாலும், இவள் ப்ரக்ருதியாலும் அவ்வூரிலல்லது புகாள் என்கிறாளாயிற்று. தாய் வழிகொண்டே ஸ்வபாவங்கள் அறுதியிடலாமாகாதே. பெருமாளைக்கண்டல்லது தரிக்கமாட்டாதானாய் வருகிற ஸ்ரீபரதாழ்வானைக் கண்டுவைத்தேயும், த்ரிகாலஜ்ஞான ருஷியுங்கூட, "கச்சிந்நது ஷ்டோவ்ரஜஸி" (கச்சிந்நதுஷ்டோவ்ரஜஸி) என்று தாயாரையிட்டு வழக்குப்பேசுவித்துக் கொண்டு இவரைக் காடேறப்

---

குணங்களோபாதி அவனூரும் ப்ராப்யமாயிருக்குமோ? என்ன - ஸோஸ்நுத இத்யாதி. இந்த ஶ்ருதிக்கு, இங்கு ஸௌலப்யஸாஹித்யம் விவக்ஷிதம். இங்கு இவளுக்கு விவக்ஷிதகுணங்கள் எவை? என்ன - அவையாகிறன இத்யாதி. "ஊர்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - பரமபதம் இத்யாதி. கலவிருக்கை - ஓலக்கமிருக்கை. பரமபதத்தைக்காட்டிலும் இதுக்கதிசயமேது? என்ன - உகந்த இத்யாதி. உகந்தவிஷயம் அங்கில்லையோ? என்ன - கிம்கார்யம் இத்யாதி. அதாவது, அவர்களிற்காட்டில் இன்று ஆஶ்ரயித்தவர்களே அவனுக்கு மிகவும் உகந்தவர்களென்று கருத்து. "கிம்கார்யம் ஸீதயா மம" இத்யாதி யுத்தகாண்டே. இத்தால்பலிதம் - பரமபதத்தில் இத்யாதி. கீழ், "வளம்" என்று - ஸம்பத்தாக அருளிச்செய்து, சாமர்த்யமாக அர்த்தாந்தரம் - ப்ரணயதாரையில் இத்யாதி. ப்ரணயதாரையில் மிக்க ஸாமர்த்யத்தையுடையவன் என்றபடி. போகிறது திருக்கோளூராகில், வெறுமனேபோகாதே வினவிக்கொண்டுபோகிறதுக்கு ப்ரயோஜநமேது? என்ன - திருக்கோளூர் இத்யாதி. வினவுகிறது பாதேயமாயிருக்குமோ? என்ன - பாதேயம் இத்யாதி. "ஹ்ருதா ... தேவாஸ் ... பாதேயம் புண்டரீகாக்ஷநாம ஸங்கீர்த்தநாம்ருதம்". வினவி - உசாவிக்கொண்டு; சொல்லிக்கொண்டு என்றபடி. புகுமூர் என்னாதே "... - புகுமூர்" என்று - வினவுகிறதைச்சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் - பூவலரும் இத்யாதி. "திருக்கோளூரிலேபுகும்" என்று எதுகொண்டு நிஶ்சயிக்கிறது? என்ன - என்வயிற்றில் இத்யாதி. இவள் ப்ரக்ருதியாலுமென்றது - "இளமான்" என்ற ம்ருதுப்ரக்ருதியாகையாலும் என்னுதல்; "உண்ணுஞ்சோறுமுதலானவையெல்லாங் கண்ணன்" என்னும் ப்ரக்ருதியாகையாலும் என்னுதல். தன்வயிற்றிற் பிறப்பாலே அவ்வூரிலேபோனமையை நிஶ்சயிக்கும்படி யெங்ஙனே? என்ன - தாய்வழி இத்யாதி. அப்படி தாய்வழிகொண்டு அறுதியிட்டபேருண்டோ? என்ன - பெருமாளை இத்யாதி. 'கீழ்வயிற்றிற்கழலை'-அடிவயிற்றில் வ்ரணம். கீழ்வயிற்றிற் கட்டிபோலே பாதகமாமென்று கருத்து. சம்வாதாந்தரம் - பதார்த்தஸ்வபாவங்களை இத்யாதி. "கச்சிந்நது ஷ்டோவ்ரஜஸி" என்

போகவிட்டாயாகில், இன்னம் "பெருமாள் இருக்கில் கீழ்வயிற்றில் கழலையாகிறது" என்று அங்குப்போய் நலியத் தேடுகிறாயல்லையிறே என்றானிறே; அவன்படிகள் காணாநிற்கச் செய்தேயும் மாத்ருஸம்பந்தங்கொண்டு சங்கித்தானிறே; பதார்த்த ஸ்வபாவங்களைக் கொண்டு பத்தும்பத்தாக நிமித்தங்களை யறியக்கடவரா யிருப்பர்களாயிற்று வேடர்; இங்ஙனே யிருக்கச்செய்தேயும், தம் எல்லையிலே இவன்வந்து புகுந்ததுக்கு ஹ்ருஷ்டராய் "அடிச்சேரியிலே வந்துபுகுவதே!" என்பது; "ஆனாலும், ராஜாக்களாயிருப்பார் வன்னியர்பற்றிலே புகும்போது கேள்விகொண்டன்றோ புகுருவது" என்றாற்போலே யிருக்க வெளிறும்காழ்ப்புமாகச் சொல்லி, தாய்வழியை நினைத்து அசிர்த்தாரிறே ஸ்ரீகுஹப்பெருமாளும். அப்படியே இவளும் தன்வயிற்றிற்பிறந்த சுத்தியே ஹேதுவாக "திருக்கோளூரிலேபுகும்" என்றறுதியிடுகிறாள். ராமாஸ்த்ரம் இலக்குத்தப்புமோ! என்மகள புகுமூர் அதுவேயென்கிறாள். [இளமான்] - இப்பருவத்தில்இவளைத தலக்கறுக்கும்போது அவ்வூரில் அவனையாகவேண்டாவோ? [என்னிளமான்] - க்ரமப்ராப்தி பற்றாதவள். தன் மாாத்தவம் பாராதே பதறிக்கொண்டு போனாள். [புகுமூர்] - காட்டுத்தீயிலே யகப்பட்டவன் பொய்கையும் பொழிலுந் தேடிப் புகுமாபோலே, ஸம்ஸாரமாகிற பாலைநிலத்தில் காட்டுத்தீயிலே யகப்பட்டவனுக்கு உகந்தருளின நிலங்களானவை பொய்கையும் பொழிலும்போலேயிறே. புகுமூரென்கையாலே புக்கார்போகும் ஊர் அன்றென்கை. எம்பெருமானார் தெற்கேயெழுந்தருளாநிற்க, எதிரே வருகிறாள் ஒருபெண்பிள்ளையைக் கண்டு "எங்குநின்றும்?" என்ன, "திருக்கோளூரில்நின்றும்" என்ன, "அவ்வூரில்புக்கபெண்களும் போகக்கடவராயிருப்பர்களோ!" என்றருளிச்செய்தார். 'என்னிளமான் - மண்ணினுள் - புகுமூர் திருக்கோளூரே - இது திண்ணம்' இவள் போய்ப்புகுமூர் திருக்கோளூரே, இது நிஸ்சயம். இவ்வூரில் பிள்ளைகளைக் காணவிட்டால், கோயிலுக்குள்ளே தேடும் அத்தனையிறே.

---

றது குஹவசநமாயிருக்க, இத்தைச்சொடுத்தது, பரத்வாஜபகவானுக்கும் கருத்து இதுவாகையாலே அடிச்சேரி - அடியாருடையகுப்பம். வெளிறு - அஸாரம். காழ்ப்பு - ஸாரம். வாயமும பருஷமுமாகச் சொல்லி என்றபடி. அசிர்த்தார் - சங்கித்தார். "கச்சித் ந தோஷோ வநஜஸ்ய ஸேநா ரக்ஷிதும் ஜநாநாம் ஹந்தும் ஸமஸாரோ ஜதீஸு மாகு" இதிப்ரதம் ப்ரதிகுஹம். 'கீழ்வயிற்றிற்கழலை' இத்யாதிவாக்யம் - "கச்சித் ந தஸ்யா பாபஸ்ய பாபம் கர்த்தும் இஹேச்சஸி। அகண்டகம் போக்தும் மநா ராஜ்யம் தஸ்யா நுஜஸ்ய" இத்யாதி பரத்வாஜ வசநத்தைக்கடாக்ஷித்து. "என்" என்றதுக்கு பாவம் - ராமாஸ்த்ரம் இத்யாதி. "இளமான்" என்றதுக்கு மூன்று பாவம் - இப்பருவத்தில் இத்யாதி. தலக்கு - லஜ்ஜை. "புகுமூர்" என்கிறதுக்கு ஸ்வாபதேசத்திலே பாவம் - காட்டுத்தீயிலே இத்யாதி. "புகுமூர்" என்றதுக்கு வ்யாவர்த்யமாதல், "புகும்" என்றவார்த்தமாநத்துக்குபாவமாதல் - புகுமூர் என்கையாலே இத்யாதி. "போகுமூரன்று" என்றதுக்கு ஸம்வாதம் - எம்பெருமானார் இத்யாதி. இவள்போனத்தைக் காணதிருக்கிறதுவள் "திண்ணம்" என்கிறதெங்ஙனே? என்ன - இவ்வூரில் இத்யாதி. 'உண்ணும்சோறு' என்றுதொடங்கி, 'கண்கணீர்கள்மல்கி' இருக்கிற - 'என்னிளமான்' - 'அவன்சீரையும் வளமிக்கவனூரையும்' வினவிக்கொண்டு - 'மண்ணினுள் புகுமூர்- திருக்கோளூரே' இதுதிண்ணம் இத்யந்வயஃ. (க)

# இரண்டாம் பாட்டு.

**ஊரும் நாடும் உலகமுந் தன்னைப்போல் அவனுடைய**
**பேரும்தார்களுமேபிதற்றக் கற்புவானிடறி**
**சேரும் நல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே**
**போருங்கொல்? உரையீர் கொடியேன்கொடிபூவைகளே!**

*ஆ.*—(ஊரும்நாடும்.) - அவனுடைய கல்யாண குணங்களையும் திவ்ய சிஹ்நங்களையும் நிரவதிகமான ஆர்த்தியோடே கூப்பிடுகிற தன்னுடைய ஆர்த்தஸ்வரத்தைக்கேட்டு ஊரும் நாடும் உலகமுந் தன்னைப்போலே அத்யந்தம் அவஸந்நமாய்க்கொண்டு அத்திருநாமங்களையும் திவ்ய சிஹ்நங்களையுமே சொல்லிக் கூப்பிடும்படியாகக் கூப்பிடுகிற இவள், அந்த வ்யஸநம் பொறுக்மாட்டாமையாலே துரதிக்ரமமான தன்னுடைய ஸ்த்ரீத்வத்தை த்ருணவதமந்யமானையாய்க் கொண்டு போகட்டு, நல்வளம்சேர்பழனத் திருக்கோளூர்க்கே போய்ப்புகும் ..ாக்யஹீனையான என்னுடைய பெண்பிள்ளை உங்களை நினைத்தாகிலும் ஒருகால் வருமேயென்று அவளுடைய பூவைகளைக் கேட்கிறாள்.

*ஒ.*—இரண்டாம்பாட்டில், திருக்கோளூரிலேபுக்க என் பெண்பிள்ளை மீள வருமோ? சொல்லீகோளென்று பூவைகளை திருத்தாயார் கேட்கிறாள். [அவனுடைய பேருந்தார்களுமேபிதற்ற] - தன்படியைக்கண்டு அவனுடைய திருநாமங்களையும் சிஹ்நங்களையும் அடைவுகெட்டுப் பிதற்றும்படிபண்ணி. [கற்புவானிடறி] - கடக்க வரிதான தன்மர்யாதையை த்ருணம்போலே போகட்டு. [சேருநல்வளமென்று மேலுக்கு] - நல்ல ஸம்பத்தையுடைய திருக்கோளூர்க்கே போய்ச்சேரும் என் பெண்பிள்ளை, பூவைகாள்! உங்களைக்காண என்றாகிலும் வருமோ? சொல்லீகோள். [போருங்கொல்] - போகவல்லளோயோ என்றுமாம். இப்பெண்பிள்ளையைப் பிரிந்த இன்னாப்பாலே 'கொடியேன்' என்கிறாள்.

*ப.*—அநந்தரம், ஸர்வலோகப்ரஸித்தமாம்படி அவனுடைய நாமாதிகளை ப்ரவர்த்திப்பிக்கும் இவள், நிரதிசயபோக்யமான திருக்கோளூரிலே போய்ப்புக்கு மீண்டுபோருமோ? என்று, அவளுடைய லீலோபகரணமான பூவைகளைக் கேட்கிறாள்.

ஊரும் - (தானிருந்த) ஊரும், நாடும் - (அத்தோடே சேர்ந்த) நாடும், உலகமும் - (நாட்டோடணைந்த) லோகமும், தன்னைப்போல் - தன்னைப்போலே, அவனுடைய - அவனுடைய, பேரும் - பேரையும், தார்களும் - தாரையும், பிதற்ற - (பஹுமுகமாகப்) பிதற்றும்படியாக, வான் - ஆகாசவத் அநதிலங்க்யமான, கற்பு - ஸ்த்ரீத்வ மர்யாதையை, இடறி - கடந்து, நல் - விலக்ஷணமான, வளம் - ஸம்ருத்தியோடே, சேர் - சேர்ந்து, பழனம் - நீர்நிலங்களையுடைத்தான, திருக்கோளூர்க்கே - திருக்கோளூருக்கே, சேரும் - சென்று சேருமவளாய், கொடியேன் - தன்னைப்பிரிகைக்கு ஈடான கொடுமையையுடைய என்பெண்பிள்ளையாய், கொடி - உபக்னாபேக்ஷமான கொடிபோலே அவனைக்கிட்டியல்லது தரிக்கமாட்டாதவள், போருங்கொல் - மீண்டு போருமோ? பூவைகளே - பூவைகாள்! (என்னைப்போலன்றே உங்களுக்குச் சொல்லிப் போகக்கூடுமிறே) உரையீர் - சொல்லுங்கோள்.

ஆ.—இரண்டாம்பாட்டில், திருக்கோளூர்க்கே புக்க என்மகள் வருமோ? சொல்லீகோளென்று பூவைகளைக்கேட்கிருள்.

[ஊரும்] - தானிருந்த ஊரும். [நாடும்]-அத்தோடு சேர்ந்தநாடும். [உலகமும்] - அத்தோடேசேர்ந்த லோகமும். ராமாவதாரத்திலும் ஒருஊரிறே திருந்திற்று; இங்கு, "ஜொகெுவ தீணஃவஈஜாயஃஸஜஹ ஹக்ிஹோமாய" என்கிறபடியேயாயிற்று திருந்திற்று. [தன்னைப்போல்] - இவ்விஷயத்தில் தன்னைப்போதி ஹாவபந்தம் உண்டாம்படி திருத்துகை. அங்கே, பரமஸாம்யாபந்நரைத்தேடிப் போகிருளாகில், தான் திருத்தவேண்டாதே. [அவனுடைய பேருந்தார்களுமே] - "அரவிந்தலோசநன்" என்றும், "மட்டவிழ் தண்ணந்துழாய்" என்றும், "விரைமட்டலர் தண்துழாய்" என்றுஞ் சொல்லாநிற்கை. [பிதற்ற]-ப்ரீதிப்ரேரிதராய் அக்ரமமாகச்சொல்லுகை. "ஜாஜெஹருஷஹ்ஜஊ தஃ" என்கிறபடியே. இப்படி, லோகமடங்க அக்ரமமாகச் சொல்லும்படிபண்ணி. [கற்புவாணிடறி] - வாணனகற்பை இடறி. வலிதானமர்யாதையை மதியாதே என்னுதல்; வலிய அறிவை என்னுதல். கடக்க அரிதானமர்யாதையை த்ருணம்போலே அதிலங்கித்து. [சேரும் இத்யாதி] - தகுதியான நல்ல ஸம்பத்தையும் நீர் நிலங்களையுமுடைய திருக்கோளூர்க்கே புகுருமோ. தன் மனஸ்ஸு அங்கே முற்பட்டுநிற்கையாலே, வந்து புகுரவல்லளோ? என்கிறாள். திருக்கோளூர்க்கே புக்கவள் மீளுமோ? என்றுமாம். [கொடியேன்] - இவளைப்பெறுகைக்கு ...க்யத்தைப்பண்ணி வைத்து, தனியே புறப்பட்டுப்போன இவளளவு உங்களைக்கேட்டு அறியவேண்டும்படி பாபத்தைப்பண்ணினேன். [கொடி] - உபக்நத்தையொழியத் தரியாதவளை. அவ்வூரில் புக்கல்லது தரிக்கமாட்டாள் என்கை. [பூவைகளே - உரையீர்] - சொல்லாதொழிகைக்குப்பெற்ற குற்றமில்லையே உங்களுக்கு? நான் ஹிதம்சொல்லுகையாலே மறைத்தாளாகிலும், இன்னவிடத்துக்குப்போகிறேன் என்றும், அங்குப்போனால் செய்யுமவையும் உங்களுக்குச் சொல்லிப் போகக்கூடுமிறே; சொல்லீகோள்! அறிவித்துப் போனளாகில் ராமாவதாரத்தில்போலே லோகமாகப் பின்தொடருமிறே.

ஈடு.—இரண்டாம்பாட்டு. திருக்கோளூர்க்கே போய்ப்புக்க என் பெண்பிள்ளை மீளவருமோ? சொல்லீகோள்! என்று பூவைகளைத் திருத்தாயார் கேட்கிருள்.

[ஊரும்நாடும் இத்யாதி] - இவ்விருப்பில் என்னகுறையுண்டு? இங்கே ஒரு குறையுண்டாய், அங்கே அதுதீரப்போனளோ? இங்கே, * போதயந்தஃபரஸ்பரம்பண்ணுகைக்கு ஆளில்லாமை "யத்ரவ...வெஃஸாய்ராஸஹிஜெவாஃ" (யத்ரபூர்வேஸாத்

ப்ர.—[ஊரும்நாடும்இத்யாதி]—ஸீதாஸாஉஶஜெ, "ஜவிதாஜெதவுாணா வொயயஹஃவாஸஹா । கூயஹஹூஜெஂ நித்யஂ தாஷுஷிவாஜெஷிவ॥ கூ॥"
வஈஈஷவ...ஜெகு, "தெஹ நாகஂஜெஹிஜெநஸவஜெ । யத்ரவ...வெஃஸாய்ராஸஹிஜெவாஃ"

---

இரண்டாம்பாட்டு.—ஊரும் இத்யாதி. "திருக்கோளூர்க்கேபோருங்கொல்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - திருக்கோளூர்க்கே இத்யாதி. இந்த அவதாரிகை மூன்றும் அர்த்தத்தைக் கடாக்ஷித்து.

தாத்பர்யார்த்தம் - இவ்விருப்பில் இத்யாதி. விவரணம் - இங்கே இத்யாதி. "தன்னைப்போல்" என்றதுக்குஹாவம்-நிரஞ்சந இத்யாதி, "ஊரும்நாடும்" இத்யாதிக்கு தாத்பர்யவிவத்தார்த்தத்தை-

யாஸ்ஸந்திதேவா:) என்றொரு தேச விசேஷந்தேடிப்போனுரோ? "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" (நிரஞ்ஜந:பரமம்ஸாம்யமுபைதி) என்று அவன் அங்குள்ளாரைத் தன்னோடு ஸாம்யாபந்நராம்படி பண்ணினாற்போலேயாகாதே, இங்குள்ளாரை இவள் தன்னோடொக்கப் பண்ணினபடி. [ஊரும்நாடும் உலகமுந்தன்னைப்போல்] - தானிருந்த வூரும், அத்தோடு தோள்தீண்டியான நாடும், அத்தோடுசேர்ந்த லோகமும். ராமாவதாரத்திலும் ஒருநாரேயிறே திருந்திற்று; இங்கு ஸம்ஸாரமாகத் திருந்திற்றுக்கிடீர்! என்கை. இன்று நம் மளவும் வரவேறிப்பாயும்படியிறே இவள் ஸம்பந்தம் வெள்ளமிட்டபடி. "லோகேவதீர்ண பரமார்த்த ஸமக்ர பக்தியோகாய" (லோகேவதீர்ணபரமார்த்தஸமக்ரபக்தியோகாய) என்னும்படியே எல்லாமேடுகளிலும் ஏறிற்றென்கை. [ஊரும்நாடுமித்யாதி] - 'காலை யெழுந்திருந்து கரிய குருவிக்கணங்கள் மாலின்வரவுசொல்லி' ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே திர்யக்குக்களுங்கூட எழுந்திருந்து, அவன் இவள்பக்கல் பிச்சேறிவரும்படியைச் சொல்லா நின்றன. தானிருந்தவிடத்தே செல்லவேண்டுமேவன் இவளிருந்த இடத்தேற வரும்படியைச் சொல்லி. தன்னைப்போல் அவனுடைய [பேருந்தார்களுமேபிதற்ற]-அவன் *மயர்வற மதிநலமருளவந்த பிதற்றிறேயிவளது! இவள்தான் அடியாகவந்த பிதற்றிறே யிவர்களது! [பிதற்ற]-நினைத்துச் சொல்லுகையன்றியே, பகவத்குணங்களிலே யவகாஹித்து உணர்த்தியற்றுச் சொல்லும்படியாகப்பண்ணி. [அவனுடைய பேருந்தார்களும்] - "சங்கென்னும் சக்கரமென்னும் துழாயென்னும்" என்பது, "தேவதேவபிரான்" என்பது, "விரைமட்டலர் தண்டுழாய்" என்பதாகை. [பிதற்ற] - "ஸ்ரூதோ தாயமேவ நாராயண ஸஹஸ்ரநாமஸு"

ப்ர.—மாண்டூக்யோபநிஷத் [க-க] "யதா பச்ய: பச்யதே ருக்மவர்ணம் ... நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி"

ஸ்தோத்ரரத்நம், "ஸங்கோசயேத் ... லோகேவதீர்ண பரமார்த்த ஸமக்ர பக்தியோகாய நாதமுநயே யமிநாம்வராய"

"இவ்விருப்பில" இத்யாதி வாக்யத்ரயத்தாலே யருளிச்செய்து, பூர்வார்த்தம் - தானிருந்த இத்யாதி. இத்தால் வ்யாவ்ருத்தி - ராமாவதாரத்திலும் இத்யாதி. அப்படி திருந்திற்றோ? என்ன - இன்றுநம் மளவும் இத்யாதி. இப்படி ஸம்ஸாரமாகத்திருந்துகையாலே ஆழ்வார் க்ருபைக்கு மேட்டுமடையாயிருப்பாரில்லை என்னுமத்தை ஸப்ரமாணமாக அருளிச்செய்கிறார் - லோகேவதீர்ண இத்யாதி ஸ்தோத்ரே. லோகே - பகவத்பக்திக்கு மேட்டுநிலத்திலே. 'அவதீர்ணபரமார்த்த ஸமக்ரபக்தியோகாய' அவதரிக்கப்பட்ட பரமார்த்த ஸமக்ரபக்தியோகத்தையுடையவர் என்றபடி. திருந்தினதின் சரமாவதியைக்காட்டுகிறார் - காலை இத்யாதி. நாச்சியார்திருமொழி, ஒன்பதாந்திருமொழி, எட்டாம்பாட்டு; இதுக்கர்த்தம் - ப்ராஹ்ம இத்யாதி. "மாலின்" என்றது - வ்யாமுக்தனுடையவென்னுதல், பெரியோனுடையவென்னுதல். அதில் முந்தினவர்த்தம் - அவன் இவள்பக்கல் பிச்சேறிவரும்படி இத்யாதி. இரண்டாமர்த்தம் - தானிருந்தவிடத்தே இத்யாதி. * மயர்வறமதிநலம்பெற்ற தன்னைப்போலே பிதற்றுகைக்கு ஹேதுவேதென்ன - அவன்மயர்வற இத்யாதி. இத்தால் - அவன் * மயர்வறமதிநலமருளினது இவளொருத்தி யளவிலே சுவரிவிட்டது; இவள் * மயர்வறமதிநலமருளினதெல்லார்க்குமாய் விட்டதென்று - இவ்வாக்யத்துக்கு தாத்பர்யம். "பிதற்ற" என்றதுக்கர்த்தம் - நினைத்து இத்யாதி. "பேருந்தார்களும்" என்றதுக்கர்த்தம் - சங்கென்னும் இத்யாதி. "உணர்த்தியற்றுச்சொல்லும்படி" என்றதுக்குப்ரமாணம் - ஸ்ருதோயம் இத்யாதி. "ஸ்ரூதோ தாயமேவ நாராயண ஸஹஸ்ரநாமஸு"

ஜல்பதஃ" (ஸ்ருதோயமர்த்தோராமஸ்ய ஜாமதக்ந்யஸ்யஜல்பதஃ) என்கிறபடியே. [கற்புவானிடறி] - வானான கற்பையிடறி. ஒருவரால் கடக்கவொண்ணாத மர்யாதையைக்கடந்து மலைபோலேயிருக்கிற மர்யாதையை, காற்கீழே அகப்பட்டதொரு க்ஷுத்ரபாஷாணத்தை இடறுமாபோலே இடறி. பெரு வெள்ளமானது சிறுக்கரைகளோடு பெரியகரைகளோடு வாசியற ஏறுமாபோலே, நாண், மடம், அச்சம் தொடக்கமானவற்றை மதியாதே போகை. [கற்புவானிடறி] - "வலியவறிவை யென்னுதல்; பெரியஜ்ஞானத்தை யென்னுதல்" என்றும் சொல்லுவர்கள். அப்போது, கற்பென்று - கல்வியாய், அத்தாலே அறிவைச்சொல்லி, வானென்று - வலியைச்சொல்லிற்றுகிறது. அன்றிக்கே, கற்பென்று - கல்வியாய், அத்தாலே ஜ்ஞாநமாய், வானென்று - பெருமையாய், பெரியஜ்ஞாநத்தை யென்றுமாம். அபிநிவேசத்துக்கு ஓரளவு உண்டாகிலிறே ஓரளவிலே தடை நிற்பது. "காவலுங்கடந்து" என்னக்கடவதிறே. "யயௌசகாசித்ப்ரேமாந்தா" (யயௌசகாசித்ப்ரேமாந்தா) - ஒருத்திபுறப்பட்டுப்போனாள். இவளைக் கொண்டுபோனார் ஆர்? என்னில்: ப்ரேமத்தாலே வந்த இருட்சி வழிகாட்டப் போனாள். "க்ரூரவஃகிங்கரிஷ்யந்திதக்தாநாம்விரஹாக்நிநா" (க்ரூரவஃகிங்கரிஷ்யந்திதக்தாநாம்விரஹாக்நிநா) - "குருக்கள்கிடாய்" என்ன, வெந்துவிழுகிறதுக்கொரு குடநீர் சொரியவல்லர்களோ? [சேருமித்யாதி] - இங்கே அசல்காக்க இருக்கிறவள் அங்கே தன் வயிறுவளர்க்கப் போவதே! இங்கே பிறர் திருந்தும்படியிருக்கிற இவளங்கே திருந்தினவிடந் தேடிப் போவதே! தன்னைக்கண்டு பிறர் வாழவிருக்கிற இவள், தான் அவனைக்கண்டு வாழப்போவதே! [சேருநல்வளமித்யாதி] - ஸத்ருஶமான நல்ல ஸம்பத்துச்

---

ஜல்பதஃ। நாபஹஸ்யஞ்சவைவஷ்டுஃக்ஷணதெவாயநஸ்ய" இதி மோக்ஷதர்மே. ஜல்பதஃ என்று - அக்ரம பாஷணத்தைச்சொல்லுகிறது; ஜாமதக்ந்யஸ்யராமஸ்ய, ஜல்பதஃ - ஜல்பத்தில் நின்றும், அயமர்த்தஃஸ்ருதஃ என்றபடி. 'ஜல்பதஃ என்கிறபடியே' என்றவநந்தரம், அக்ரமமாகச்சொல்லும்படிபண்ணி என்று அத்யாஹார்யம். பிதற்ற - பிதற்றும்படிபண்ணி. "வானான - கற்பு" என்று - வலியமர்யாதையாய், மர்யாதைக்கு வலிமையேதென்ன - ஒருவரால் இத்யாதி. கடக்கவொண்ணாத மர்யாதையை - குலைக்கப்போகாத ஸ்த்ரீத்வத்தையென்றபடி. கீழ்வாக்யத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரியாநின்றுகொண்டு, "இடறி" என்றதுக்குபாவம் - மலைபோலே இத்யாதி. அலிலால்யமான மர்யாதையை அதிக்ரமித்தஅக்குத்ருஷ்டாந்தம் - பெருவெள்ளம் இத்யாதி. கீழே, "கற்பு' என்று - மர்யாதையாக அருளிச்செய்து, ஜ்ஞாநமாக அர்த்தாந்தரம் - வலியவறிவை இத்யாதிவாக்யத்வயம். இவ்வாக்யத்வயத்தில், "கற்பு" என்றதுக்கர்த்தபேதமில்லை. "வான்" என்றதினர்த்தத்வயத்தையும் அடைவே விவரிக்கிறார் - அப்போது இத்யாதி. மர்யாதையை அதிக்ரமிக்கலாமோ? என்ன - அபிநிவேசத்துக்கு இத்யாதி. மர்யாதாதிக்ரமத்துக்கு ஸம்வாதத்வயம் - காவலுங்கடந்து இத்யாதி. ஸ்பஷ்டோர்த்தஃ. பெரியாழ்வார்திருமொழி, "நாவலம்பெரிய" இத்யாதி. 'காசித்க்ருஷ்ணேதி க்ருஷ்ணேதி ப்ரோக்த்வாலஜ்ஜாமுபாயயௌ। யயௌசகாசித்ப்ரேமாந்தா தத்பார்ஶ்வமவிலம்பிதம்" இதி பஞ்சமேம்ஶே [௧௩] த்ரயோதஶே சத்ரைவாஷ்டாதஶே, "க்ரூரப்ரேணாஸ்ய தோவக்த்ரம் ஸம்வீக்ஷிதஃக்ஷமோ। க்ரூரவஃகிங்கரிஷ்யந்திதக்தாநாம்விரஹாக்நிநா" [௨௨] இதி. 'யயௌசகாசித்" இத்யாதிக்கர்த்தம்-ஒருத்தி இத்யாதி. காவலைக்கடந்த ப்ரகாரத்தைக்காட்டுகிறார்-நாவ இத்யாதி. "ஊரும்நாடும்" இத்யாதியைக்கடாக்ஷித்து "போருங்கொல்" என்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - இங்கேயசல் இத்யாதிவாக்யத்வயத்தாலே. காக்க - ரக்ஷிக்க. "இங்கேயசல்காக்க" இத்யாதியின் விவரணம் - தன்னைக்கண்டு இத்யாதி. "போருங்கொல்" என்றதுக்குமூன்றார்த்தம். "சேரும்" என்றது - நல்வளத்துக்கு விசேஷணமாதல்; "சேரும்-கொடி" என்னு

சேர்ந்திருப்பதாய், நீர்நிலங்களையு முடைத்தாயிருக்கிற திருக்கோளூர்க்கே. [திருக்கோளூர்க்கே போருங்கொல்] - போருங்கொல்என்றது புகுங்கொல் என்றபடி. அன்றியே, இவளுக்கு முன்னே தன் நெஞ்சு முற்பட்டபடியாய், அங்கேயிருந்து அவள்வழியில் ஒருகுறைகளின்றி யிலே வருமோ? என்கிறாளாகவுமாம். அன்றியே, 'நல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே-சேரும் - கொடி, பூவைகாள்!-போருங்கொல்உரையீர்!' என்றுதல். அதாவது மீண்டு புறப் பட்டு வரவல்லளோ? சொல்லிகோள்! [கொடியேன்] - இவளைப் பெறுகைக்கு ஸாக்யம் பண்ணிவைத்து, இவ்வளவுஉங்களைக்கேட்கவேண்டும்படியான பாபத்தைப்பண்ணினேன். [கொடி] - உபக்நத்தையொழியில் தறைப்படும். * கோல்தேடியோடுங் கொழுந்ததே போன் றதே மால்தேடியோடும் மனமிறே. [கொடியேன்கொடி] - பெற்ற என்னையும்விட்டு வேறே யுமோர் அபாஸ்ரயமுண்டாம்படியான பாபத்தைப்பண்ணினேன். பெற்ற தாயாரை விட் டகலுகை குடிஸ்வபாவம்போலே காணும். (*கள்வன்கொல்லிலும், *நல்லதோர் தாமரைப் பொய்கையிலுமுண்டிறே.) [பூவைகாள் - போருங்கொல்-உரையீர்] - பெற்றதாயாரைவிட லாம்; அத்தனையல்லது, பிறந்தாரைக் கைவிடப் போகாதென்றிருக்கிறாள்காணும் தன்னை யிட்டு. போக்குவரத்து எனக்கன்றே சொல்லலாகாது, உங்களுக்குஒதுக்காதே சொல்லுமே. வயிற்றிற் பிறந்தாரை ஒளிப்பாரில்லையே: [உரையீர்] - அவள் சொல்லிப்போகச்செய்தே இவை சொல்லாதிருக்கிறன என்றிருக்கிறாள். [போருங்கொல்] - என்கிற ஸம்ஸயத்துக்கடி, பாவியான நான் இருக்கையாலே மீளாதொழியவுங்கூடுமே, நீங்களிருக்கையாலே மீளவுங் கூடுமிறே; என் பாபமே ப்ரபலமாய் வாராதொழியுமோ? உங்களைப்பார்த்து வருமோ? சொல்லிகோள்! அறிவித்துப் போனாளாகில் ராமாவதாரத்திற்போலே லோகமாகப் பின் தொடருமிறே; * சுற்றமெல்லாம் பின்தொடர இறே போயிற்று!

---

*தல். த்ருதியார்த்தவிவரணம் - மீண்டுபுறப்பட்டு இத்யாதி. ஆக, புகுங்கொல், வருங்கொல், மீண்டு புறப்பட்டுவரவல்லளோ என்று மூன்றர்த்தம். "உபக்நத்தையொழியில் தறைப்படும்" என்றதுக்கு ப்ரமாணம் - **கோல்தேடியோடும்** இத்யாதி. ஸர்வேஸ்வரனைத் தேடிவிடாதே பதறிச்செல்லுகிற என்னுடைய மநஸ்ஸானது, கொம்பைத்தேடிப் படர்ந்துசெல்லுகிற கொழுந்துபோல இராநின்றது என்றபடி. இரண்டாந்திருவந்தாதி இருபத்தேழாம்பாட்டு. "கொடி" என்றதுக்கர்த்தாந்தரம் - **பெற்ற வென்னையும்** இத்யாதி. 'பெற்றதாயாரைவிட்டகலுகை' இத்யாதிக்கு - "பெற்றதாயாரைவிட்ட கன்று" என்றதிலே நோக்கு. பெற்ற தாயானதனக்குச் சொல்லாளோ, இவற்றைக் கேட்கிறதென்? என்ன - **பெற்றதாயாரைவிடலாம்** இத்யாதி. தன்னையிட்டென்றது - தன்மகளுக்குத்தான் மறை யாதே சொல்லுமாபோலே, தான் வளர்த்த இவற்றுக்கு மறையாதே சொல்லிப்போயென்று கேட்கிறா ளென்றபடி. தாத்பர்யார்த்தம் - **போக்குவரத்து** இத்யாதி வாக்யத்ரயம். "உரையீர்" என்று நியமிக் கிறதென்? என்ன - **அவள்சொல்லி** இத்யாதி. "போருங்கொல்" என்று சம்ஸயிக்கிறதென்? என்ன - **போருங்கோல் என்கிற** இத்யாதி. போருங்கொலென்று சம்ஸயிக்கிறதென்றது - வருமோ? என்று சம்ஸயிக்கிறதென்றபடி. மகள்தான் அறிவித்துப்போகாதொழிவானேன்? என்ன - **அறிவித்து** இத் யாதி. ராமாவதாரத்தில் பின்தொடர்ந்தார்களோ? என்ன - **சுற்றமெல்லாம்** இத்யாதி. பந்துவர்க்க மெல்லாம் பின்தொடரவித்யர்த்தஃ. பெருமாள்திருமொழி, எட்டாந்திருமொழி ஆறும்பாட்டு. கொடி யேன்கொடி - கொடுமையையுடைய என்னுடைய கொடிபோன்ற பெண்பிள்ளை இத்யர்த்தஃ. பூவைக ளென்றது - பூவைகாளென்று சம்போதநை. 'பூவைகாள்! ஊரும்நாடும்' என்றுதொடங்கி, பிதற்றும் படிபண்ணி 'வானுன - கற்பை - இடறி - நல்வளஞ்சேர் பழனத் திருக்கோளூர்க்கே - சேரும் - கொடியேன்கொடி - போருங்கொல், உரையீர்', இத்யந்வயஃ. "அறிவென்கிறது - தத்வத்தை; ஜ்ஞாந மென்கிறது - உபாஸநத்தை. அன்றிக்கே, அறிவென்கிறது - திருவாய்மொழியிற்பிறந்த ஜ்ஞாநம்; ஜ்ஞாநமென்கிறது - வேதாந்தஜ்ஞாநமென்றபடி" என்று சில ஸ்ரீகோஸத்திலிருக்கிறது.* (உ)

## மூன்றும் பாட்டு.

பூவைபைங்கிளிகள் பந்துதூதைபூம்புட்டில்கள்
யாவையுந்திருமால் திருநாமங்களேகூவியெழும் என்
பாவைபோய் இனித் தண்பழனத்திருக்கோளூர்க்கே
கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணொடு என்செய்யுங்கொலோ?

ஆ.—(பூவை.) - லீலார்த்தமாகக் கொண்டுவந்த சுகசாரிகாதி லீலோபகரணங்களைக்கண்டால் வரும் லீலாரஸமும், தனக்குப் பிராட்டியோடே ரமமாணனான எம்பெருமானைக் காணுமதுவே யாகையால், அவனை நினைத்துக் காணப்பெறாமையாலே அவன்திருநாமங்களைச் சொல்லிக்கூப்பிடச் சொல்லி அதினுடைய மாதுர்யத்தாலும் குளிர்த்தியாலும் உஜ்ஜீவித்திருக்கிற என் பெண்பிள்ளை திருக்கோளூரிலே போய்ப்புக்கு, இனித்தன்னுடைய மநோரதமெல்லாம் பரிபூரணமாம்படி யிருக்குமோ? அன்றியே, தன்னுடைய கண்ணநீரும் அழுகையுமேயாய் நிற்குமோ என்கிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், திருக்கோளூர் ப்ரத்யாஸத்தமனால் எங்ஙனே உடைகுலைப்படக்கடவள் என்கிறாள்.

[பூவையென்று தொடங்கி] - பூவை பந்துமுதலான அழகிய லீலோபகரணங்களைக்கண்டால் ஸ்ரீபரதாழ்வானுக்கு ராஜ்யங்கண்டாற்போலே இவளுக்கு அஸஹ்யமாய் அவற்றாலுள்ள ரஸமும் பகவந்நாமோச்சாரணத்தாலேயாய் உஜ்ஜீவிக்கும் என்மகள். [போயினியென்று மேலுக்கு] - இதுக்குமேலே ஸ்ரமஹரமான நீர்நிலங்களையுடைய திருக்கோளூர்க்கேபோய், என் பாவை, எம்பெருமானுடைய ப்ரத்யாஸத்தியாலே உடைகுலைப்பட்டு, தான் நெடுநாள் அவனைப்பிரிந்து பட்டபாடும், அவன் கைவிட்டிருந்தபடியையும் நினைத்து கோவைப்பழம்போலேயிருக்கிற திருப்பவளம்துடிப்ப மிக்கிருந்துள்ள நீரையுடையகண்ணும் இவளுமாய் என்படக்கடவளோ?

ப.—அநந்தரம், தன்னுடைய லீலோபகரணங்களாலுள்ள ரஸமெல்லாம் திருநாமோச்சாரணத்தாலே பிறக்கும்படியாயிருக்கிற இவள், திருக்கோளூரிலே புக்கு அவன் தன் நினைவுக்கிடாகப் பரிமாறாமையாலே கண்ணுங்கண்ணீருமாய் எங்ஙனே க்லேசப்படுகிறாளோ? என்கிறாள்,

(லீலோபகரணமான) பூவை-பூவைகள், பை - பச்சுத்த, கிளிகள் - கிளிகள், பந்து - பந்து, தூதை - தூதை, பூ - பூவிடும், புட்டில்கள்-, யாவையும்-,(இவையெல்லாவற்றாலுமுள்ள ரஸம்பிறக்கும்படி), திருமால் - திருமாலுடைய, திருநாமங்களே - திருநாமங்களையே, கூவி - உச்சரித்து, எழும் - அத்தாலே யுஜ்ஜீவிக்கும்படியான, என் - என், பாவை - பெண்பிள்ளையானவள், இனி - இத்திருநாமோச்சாரண ரஸங்கிடக்கச் செய்தே பின்னையும், தண்-குளிர்ந்த, பழனம் - பழனங்களையுடைய, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, போய் - போய், (அவன் எதிர்வந்து) ஸ்வாகதாதிகளைப் பண்ணி ஆலோகாலாபாலிங்கநாதிகளாலே ஆஸ்வாஸிப்பியாமையாலே), கோவை - கோவைப் பழம்போலேயிருக்கிற, வாய் - அதரம், துடிப்ப - துடிப்ப, மழை - வர்ஷம்போலே தாராளமான நீரையுடைத்தான, கண்ணொடு - கண்களோடே நின்று, என்செய்யுங்

கொலோ - என்செய்கிறாள்களோ? யாவற்றையும் திருமால் திருநாமங்களைச்சொல்லு மென்றுமாம்.

இ.—மூன்றாம்பாட்டில், திருக்கோளூர் ப்ரத்யாஸந்நமானால் எங்ஙனே உடைகுலைப்படக்கடவள் என்கிறாள்.

[பூவை]-கிளியிலே அவாந்தரபேதம். [பைங்கிளி] - பச்சைக்கிளி, பூம்புட்டில்கள். [யாவையும்] - தன்னுடைய லீலோபகரணங்களான யாவையாலும் பிறக்கும் ரஸமெல்லாம் அவனுடைய திருநாமத்தாலே பிறக்குமாயிற்று இவளுக்கு. அவனுடைய லீலோபகரணங்களோபாதியும் போருமாயிற்று இவளுடைய லீலோபகரணங்கள். [திருமால் திருநாமங்களே கூவியெழும்] - ஐவந்நாமங்களைச்சொல்லி உஜ்ஜீவிக்கும்; திருநாமச்சுவடறிந்தபின்பு லீலோபகரணதர்மம், ஸ்ரீபரதாழ்வானுக்கு ராஜ்யதர்ம நம்போலே அஸஹ்யமாயிருக்கும். இவளுடைய லீலோபகரணங்கள் அவனுக்கு போகோபகரணங்களாயிருக்கும். "இந்த லீலோபகரணங்கள் திருநாமத்தைச் சொல் விற்றாளோ?" என்று பெற்றிகேட்க, "பந்துதூதை பூம்புட்டில்களில் வருது" என்று பிள்ளை பரிஹரித்தார். அவற்றைத் திருநாமத்தைச்சொல்லி அழைத்தாளானலோ என்னில்: அது, "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்றிருக்கிறதுக்குச் சேராது. [திருமால்] - இவள் திருநாமம் சொல்லும்போது த்வயத்தில்படியே ஸ்ரீமந்நாராயணன் என்றாயிற்று சொல்லுவது. [என்பாவை] - நிரு பாயிகஸ்த்ரீத்வத்தை யுடையவள். [போயினி] - லீலோபகரண ரஸமும் திருநாமமே யானவிருப்பை விட்டு. அங்கு என்ன வேற்றமக்கத்துக்குப் போனாள். [தண்பழனம்] - ஶ்ரமஹரமான நீர் நிலங்களையுடைய ஊர். [கோவையாய் துடிப்ப] - கலக்கிறபோது தானே மேல்விழுந்து கலந்தபடியும், "பிரியேன், பிரியில்தரியேன்" என்று கலந்தபடியும், பிரிந்தபடியும், வரவுதாழ்த்தபடியும், தனிவழியேதான் செல்லவிருந்தபடியும், சென்றபின்பு, "ஹ்ரீ ரேஷா ஹி ஶோ த ஆ" என்று லஜ்ஜாவிஷ்டனாய்க் காலைப்பிடியா தொழிந்தபடியும், இவற்றை நினைந்து கோவைப்பழம்போலேயிருக்கிற அதரம்துடிக்க, மிக்கநீரையுடைய கண்ணோடே என்படுகிறாளோ? தனிவழியே போனாள், நான்கூடப் போகப்பெற்றிலேன்! என்கிறாள்.

ஈடு.—மூன்றாம்பாட்டு. திருக்கோளூர் ப்ரத்யாஸந்நமானால் எங்ஙனே உடைகுலைப்படக்கடவள் என்கிறாள்.

[பூவையித்யாதி] - வேறொன்றைக்கொண்டு போதுபோக்கவேண்டும்பருவத்திலும் திருநாமத்தையே கொண்டு ஜீவித்திருக்குமவள்கிடீர் போனாள்! இங்கிருந்தநாள் மற்றொன்று தாரகமாய், அங்கேபோய் அவனாலே தரிக்கப்போனாளோ. பூவைதொடக்கமான லீலோப கரணங்களால் பிறக்கும் ஹர்ஷமெல்லாம் த்வயத்திற்படியே ஸ்ரிய:பதியென்கிற திருநாமத்

மூன்றாம்பாட்டு —பூவை இத்யாதி. "கோவைவாய்துடிப்ப மழைக்கண்ணொடு என்செய்யுங்கொலோ" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - திருக்கோளூர் இத்யாதி.

"கூவியெழும்என்பாவை" என்னுமளவுக்கும் தாத்பர்யசித்தார்த்தம் - வேறொன்றை இத்யாதி. விவரணம் - இங்கிருந்த இத்யாதி. "பூவை" இத்யாதிக்கு பூர்வ பக்ஷார்த்த த்வயந்தவிர, சித்தாந்தார்த்தம் இரண்டு. அதில்முந்தினது - பூவைதொடக்கமான இத்யாதி. புட்டில்கள் - புட்டில்களாகிற, யாவையும் - யாவையால்பிறக்கும் ஹர்ஷமெல்லாமென்றபடி. எ மன் பாவை - உண்டாகாநின்

ணைச்சொல்லி அத்தாலேயுண்டாகாநின்றது. " 'ஊரும்நாடு முலகமுந்தன்னைப்போல்' என்கிறபடியே, இவைதாம் திருநாமத்தைச் சொல்லிற்றுளலாகாதோ" என்று பெற்றி நம் பிள்ளையைக்கேட்க, "அதுக்குவ்யபிசாரமுண்டு, 'பந்துதூதை' என்கிறவிடத்தே தட்டுப் பிறக்கும்" என்ன, "அங்ஙனேயிறே" என்று இசைந்துபோனர். அவன் திருநாமங்களை இவற்றுக்கிட்டு அழைத்ததானலோ? என்னில்; "(உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும்) எல்லாங்கண்ணன்" என்றிருக்கிற அதிமாத்ர ப்ராவண்யத்துக்கு இதுசேராது. [பூவையித்யாதி] - திருநாமச்சுவடறிந்தபின்பு லீலோபகரணதர்மநம் இவளுக்கு அஸஹ்யமாயிருக்கும்; ஸ்ரீ பரதாழ்வானுடைய ராஜ்யதர்மநம் அவனுக்கு அஸஹ்யமானப்போலே. சக்ரவர்த்திக்கு ஶாஸ்த்ரார்த்தங்கள் பண்ணின அன்று நாயிறுபாடு, "கைகேயிபண்ணின கஶ்மலத்துக்கு நாமும் கீழோலையிட்டோமென்று நாட்டார் நினைத்திருப்பதொன்றுண்டு; அத்தோஷம் நமக்கில்லை என்றறிவிக்கவேணும்" என்றுபுக்கான். ராஜலோகமடங்கலும்திரண்டு "கர்த்தாவானவனை இழந்தோம்; அநந்தரம் ப்ராப்தரானவர் காடேறப்போய்க்கொடுநின்றார், இனிராஜபுத்ரர்களில் நின்றாரைக்கொண்டு நிர்வஹிக்குமத்தனையிறே" என்றுபார்த்து, மங்களாவஹமான தூர்யகோஷங்களையும் பண்ணிக்கொண்டிருந்தார்கள். இத்த்வநி செவிப்பட்டபோது *கருமாணிக்கமலையில் பிராட்டி ஸ்வயம்வரத்துக்கு மணமுரசு அறைந்தபோது தோழி பட்டதெல்லாம் பட்டான். "விலலாபஸபாமத்யே" (விலலாபஸபாமத்யே)

---

ப்ர. —[பூவை இத்யாதி]—அயோத்யாகாண்டே, [அஉ] "ஸபாஷஷாயவாவாகமஹம்ஸஸ்ரோயவா । விலலாபஸபாமத்யே ஜகஹேபுவம்ரோஹிதம் ॥ உசிதவ்யஹாரஸ்யவிஷ்ணுாஸாதஸ்யயீதஃ । யசேவுரயதஸ்யகோ ராஜ்யதிரோஹரேக ॥ கக ॥ கயம்தஶரதாஜாதொஜ்யேஷ்டாஜ்யாவஹாரகஃ । ராஜ்யம்வாஹம்வராஸ்யதுகம் வக்துவிஹாஹூவி ॥ கஉ ॥ ஜ்யேஷ்டஶ்ரேஷ்டஶ்யதாத்ர்மீவநஹஷோவதஃ । வுயமஹூதிகாகமொஷாராஜ்யம்ஶாயோயயா ॥ கந ॥ சநாரஜ்ஜேஷ்டஸமஷ்யம்கந்யாவோவஹம்யதி । உகாகமிணாஹம்யோக்ஷவேயம்கமவாம்ஸநஃ ॥ கச ॥ யக்ஷிாத்ராகத்தம்வாவம்நாஹம்தஷவிரோவயே । உஹஸ்லாவநஷமஷும்நஸ்யாஜிக்ருதாஜமிஃ ॥ கரு ॥

---

றுள்ள என் பாவையென்றபடி. கூவி - சொல்லி, எழுகை - உண்டாகை. பெற்றிநிர்வாஹத்துக்கு, கூவி - கூவும்படிபண்ணி, எழும் - சந்தோஷிக்கும், என்பாவையென்றபடி. த்ருதீயார்த்தத்துக்கு, யாவைக்கும் திருமால்திருநாமங்களையிட்டழைத்து சந்தோஷிக்கும் என்பாவை என்றபடி. இதுசேராது என்றது, வேறொன்றால் காலக்ஷேபம்பண்ணுகை சேராதென்றபடி. சித்தாந்தார்த்தத்திலிரண்டாவது - திருநாமச்சுவடு இத்யாதி. அதாவது - திருமால் திருநாமங்களைக்கூவி "மாற்பால்" இத்யாதிப்படியே பூவைதொடக்கமான யாவையையும் இகழும் என் பாவை என்றபடி. எழுகை - த்வேஷிக்கை. "எள்கலிராகம்" என்னக்கடவதிறே; கூவுகை - அநுஸந்திக்கை. பூவை - கிளியில் அவாந்தரபேதம். தூதை - சிறுசோறுசமைக்கும் பானைச்சட்டி. பூப்புட்டில்கள் - பூப்பெட்டிகள். உத்தரார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - ஸ்ரீபரதாழ்வானுடைய இத்யாதி. ஸ்ரீபரதாழ்வானுக்கு அஸஹ்யமாயிருந்ததுக்கு ப்ரமாணோபாதாநம் பண்ணுவாராக, அதுக்கவதாரிகை - சக்ரவர்த்தி இத்யாதி. சாஸ்த்ரார்த்தங்கள் - உத்தரக்ரியைகள். நாயிறுபாடு - ப்ராதஃகாலத்திலே. 'புக்கான்' சதஸ்ஸிலே இதிசேஷஃ. கர்த்தா - தசரதன். ப்ராப்தரானவர் - பெருமாள். மணமுரசு - மங்களவாத்யம். அறைகை - அடிக்கை.
"ஸபாஷஷாயவாவாகமஹம்ஸஸ்ரோயவா । விலலாபஸபாமத்யே ஜகஹேபுவ்

தனியிடத்திலன்றே பறிகொடுப்பது. தனக்கு சேஷத்வமிறே ஸ்வரூபம்; ஸ்வரூபத்தையிறே அபஹரிக்கநினைக்கிறது! "ஜகர்ஹே ச" (ஜகர்ஹேச) ஸந்த்யாவந்தநத்துக்குப் பிற்பட்டாரை சிஷ்டகர்ஹைபண்ணுமாபோலே. "புரோஹிதம்" (புரோஹிதம்) இக்குடிக்கு நாங்கள் கைவாங்கியிருக்க, நீ முன்னேடிக் காரியங்கள் நடத்தக் கடவதாகச் சமைந்தபடி சாலவழகிதாயிருந்தது. "ஸபாமத்யே ஜகர்ஹே" (ஸபாமத்யேஜகர்ஹே) "நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்" (நியமாதிக்ரமம்ரஹஸிபோதயேத்) என்கிற நிலையைக்குலைத்தான்; (புரோஹிதத்வமாகிற) ஹேது கழிகையினாலே. "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய" (ராஜ்யஞ்சாஹஞ்சராமஸ்ய) சேஷவஸ்துக்களிலே ஒன்றையொன்று ஆளுமோ? அங்ஙனேயாமன்று; ராஜ்யந்தானெனக்கக் கடவதாறலோ? "தர்மம் வக்துமிஹார்ஹஸி" (தர்மம்வக்துமிஹார்ஹஸி) - லோகத்திலே தமப்பன்மாரையும் தமையன்மாரையும் அழியச்செய்து தாந்தாம் ராஜ்யத்தைக் கைக்கொண்டு போருவதொன்றுண்டு; "அது இந்த வ்யக்தியிலுஞ்செய்யும்" என்றிராதேகோள்ளாய்; என் ப்ரக்ருதியறிந்து அதுக்கீடாக வார்த்தை சொல்லப்பாராய். "கதம் தஶரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:" (கதம்தஶரதாஜ்ஜாதோபவேத்ராஜ்யாபஹாரக:) - அவர் பிரிந்த அநந்தரம் முடியவல்லவன் வயிற்றிலே பிறந்தேனும்படி எங்ஙனே? அவர்போகட்டுப்போன ராஜ்யத்தை நான் அபஹரித்தால். "நமஸ்யாமி க்ருதாஞ்ஜலி:" (நமஸ்யாமிக்ருதாஞ்ஜலி:)- அப்ராப்தம் அவன்சொல்லச்சேவி தாழ்த்ததுக்கு அபவாதப்ராயஶ்சித்தம்பண்ணுகிறான். [என்பாவையோயினி] - என் புத்த்ய

---

புரோஹிதம்" இத்யயோத்யாகாண்டே. "ஸபாமத்யே" என்றதுக்குபாவம்-தனியிடத்தில் இத்யாதி. அதாவது - காட்டிலே பறிகொடுப்பாளாகில் நான் திரளிலேபறிகொடுத்தேன் என்றபடி. இவர்கள்பறித்ததேது? என்ன - தனக்கு சேஷத்வம் இத்யாதி. இவன்கர்ஹித்த ப்ரகாரத்தை ஸத்ருஷ்டாந்தமாக உபபாதிக்கிறார் - ஸந்த்யாவந்தநத்துக்கு இத்யாதி. சிஷ்டகர்ஹை பண்ணுமாபோலேயென்றது - சிஷ்டர்கர்ஹைபண்ணுமாபோலேயென்றபடி. புரோஹிதம்பஶ்யதீதி - புரோஹித: என்றுவிவக்ஷித்துபாவம் - இக்குடிக்கு இத்யாதி. "ஸபாமத்யே" என்றத்தை - கீழே கூட்டியருளிச்செய்து, மேலேயுங்கூட்டிபாவம் - நியமாதிக்ரமம் இத்யாதி. ஹேது - குருத்வ ஹேது. "ராஜ்யஞ்சாஹஞ்ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி । கதம் தஶரதாஜ் ஜாதோ பவேத் ராஜ்யாபஹாரக:" அசேதநமான ராஜ்யத்தையுந் தன்னையும் சேஷமாகச் சொல்லுகிறவனுடைய ஹார்த்தபாவம் - சேஷவஸ்துக்களிலே இத்யாதி. அங்ஙனேயாமன்று என்றது - சேஷவஸ்துக்களிலே யொன்றையொன்று நியமிக்குமதாறலென்றபடி. "தர்மம் வக்துமிஹார்ஹஸி" என்றதுக்குபாவம் - லோகத்திலே இத்யாதி. "இஹ" என்றதுக்குபாவம் - என்ப்ரக்ருதி இத்யாதி. இஹ - மயி என்றபடி. நீர் நம்மை வெறுக்கிறதென்? உம்முடையதாயார் "உமக்கு" என்று ராஜ்யத்தைவாங்கிப் பெருமாளைக்காட்டிலே போகவிடாநிற்கஎன்ன - நமஸ்யாமி இத்யாதி. "யச்சிஷ்டாக்ருதம் பாபம் நாஹம் தத் அபிரோசயே । இஹஸ்தோ வந்தனம் மூர்த்னா நமஸ்யாமி க்ருதாஞ்ஜலி:" இப்போது நமஸ்காரத்துக்கு ப்ரஸக்தமேதென்ன - அப்ராப்தம் இத்யாதி. அபவாத ப்ராயஶ்சித்தமாவது - "தன்னிடத்தில் பாபமில்லாவிட்டாலும் லோகாபவாதமுண்டானால் ப்ராயஶ்சித்தம்பண்ணவேணும்" என்று சாஸ்த்ரஞ்சொல்லுகையாலே ப்ராயஶ்சித்தம்பண்ணுகிறானென்றபடி. "வ்ருத்தாவ்ருத்தாவஸ்தஸ்ய ஶிஷ்யஸ்ய புத்ரஸ்ய வா நியமாதிக்ரமம் ரஹஸி போதயேத்" இதி ஆபஸ்தம்பதர்மே. "பாவை" என்று - மரப்பாவையாய், அதுபோலே பாதந்த்ர்யானவனென்று சொல்லி, அநந்தரம் "போய்" என்கிறவனுடைய ஹார்த்தபாவம் - என் புத்த்யதீநம் இத்யாதி. த்விதீ

தீநமான வ்யாபாரத்தையுடையவள் கிடீர் என்னையொழியப் புறப்பட்டுப்போனாள். நிருபாதிகமான ஸ்த்ரீத்வத்தையுடையவளென்றுமாம். [இனி - போய் - லீலோபகரணங்களாற் கொள்ளும் கார்யமும் அவனேயாம்படியான இந்தப்ராவண்யத்துக்குமேலே அங்குப்போய்ப் பெறுவது என்னுகைப்போனாளோ? [தண்பழனத்திருக்கோளூர்க்கே] - ஸ்ரமஹரமான நீர் நிலங்களையுடைய திருக்கோளூர்க்கே. [கோவைவாய்துடிப்ப] - கோவைப்பழம்போன்ற சிவப்பையுடைத்தான அதரமானது ஸ்ப்புரிக்க. "பிரியேன்' என்றுபிரிந்தாய்; 'வருகிறேன்' என்று வந்திலை; என்னைத்தனியேயிட்டுவைத்தாய்; நான்வருமளவும்இருந்தாய்" என்றாற் போலேயிருக்கச் சில சொல்லநினைக்குமே; அதுதோற்றும்படி உதடுநெளிக்கிறபடி. [கோவை வாய்துடிப்ப மழைக்கண்ணொடு] - நினைத்தததுசொல்லித் தலைக்கட்ட வொட்டாநின்றதோ கண்ணநீர்! உடைகுலைப்பட்டுக் கண்ணநீராலே தலைக்கட்டாநின்றாள். "உக்த்வார்யேதி ஸக்ருத்தீநம் புநர்நோவாச கிஞ்சந" (உக்த்வார்யேதிஸக்ருத்தீநம்புநர்நோவாசகிஞ்சந) என்னும்படியே. [என்செய்யுங்கொலோ] - சொல்லமாட்டாள். தவிரமாட்டாள், அழாதொழியமாட்டாள்; எங்ஙனே படுகிறாளோ? நம்மையும் பிறரையும்விட்டு அவன்திருநாமங்களை அநுஹவிக்கிறபோதை அழகுகாணப்பெற்றோம்! அவன்தன்னையே கண்டநுஹவிக்கிற போதை அழகுகாணப்பெற்றிலோமே. அநுஸந்தாநவேளையிற்போலன்றிறே கண்டால்பிறக்கும் விகாரங்கள்; "காமனுடல்கொண்ட தவத்தாற்குமையுணர்த்த வண்டலம்பும் தாரலங்கல் நீண்முடியான் தன்பெயரே கேட்டிருந்தங்காரலங்கலானமையால் - கண்டுவணங்கினார்க்கென்னாங்கொல்" என்றிறேயிருப்பது. அலாபத்தோடேயிருக்கும் இருப்புக்கண்டேன், லாபத்தோடேயிருக்கும் இருப்புக்காணப்பெற்றிலேன் என்கிறாள்.

*யார்த்தத்துக்கு, பாவை யென்று - ஸ்த்ரீத்வம். "பூவை" இத்யாதியின் மூன்றாமர்த்தத்தைக்கடாக்ஷித்து, "இனி" என்றதுக்குபாவம் - லீலோபகரணங்களால் இத்யாதி. துடிக்கைக்குஹேதுக்கள் - பிரியேனென்று இத்யாதி. ஆனால் அத்தைச்சொல்லாமல் உதடுநெளிக்கிறதென்? என்ன-நினைத்தது இத்யாதி. உடைகுலைப்பட்டென்றது-அவன்எதிரேவந்ததுக்கு ஈடுபட்டென்றபடி. "மழைக்கண்ணொடு" என்றது - ஹர்ஷாஸ்ருவை. சொல்லமாட்டாளமக்கு ப்ரமாணம்-உக்த்வார்ய இத்யாதி. "ஹர்ஷாஹி தஸ்யோதாராஜவஸ்யாஸ்த்ராஹேராவண: । உக்த்வார்யேதி ஸக்ருத்தீநம் புநர்நோவாசகிஞ்சந" இத்யயோத்யாகாண்டே. [கக-௩அ] நாலாமர்த்தத்தைக்கடாக்ஷித்துபாவம் - நம்மையும் இத்யாதி. அநுஸந்தாநதசையைப்பற்ற, கண்டபோதைக்கதிசயமேதென்ன - அநுஸந்தாந வேளையில் இத்யாதி. இதுக்கு ஸம்வாதம் - காமனுடல் இத்யாதி: நாலாந்திருவந்தாதி எழுபத்தெட்டாம்பாட்டு, "கண்டுவணங்கினார்க்கு" இத்யாதி. இதுக்கர்த்தம் - காமனுடைய சரீரத்தை தக்தமாக்கின, தப:-க்ரௌர்யத்தையுடைய ருத்ரனுக்கு மஹிஷியான உமையானவள். "ஸம்ஸேவ்யதேவ" இத்யாதி ப்ரஸ்நரூபேண ஸர்வேஸ்வரனை ஸ்மரிப்பிக்க, வண்டுகள் தேன்வெள்ளத்திலே அலையாநிற்கிற பூமாலையையுடைய ஆதிராஜ்ய ஸூசகமான நீண்டதிருவபிஷேகத்தையுடைய ஸர்வேஸ்வரனுடைய திருநாமத்தைக்கேட்டு அதுக்குள்ளீடான குணங்களை யநுசந்தித்துக்கொண்டிருந்த தசையிலே சூடின மாலைபோலே துவண்டபடிகண்டால், ஸாக்ஷாத்கரித்து வணங்கினவர்களுக்கு எந்த விக்ருதி பிறக்குமோவென்றபடி. தார் - புஷ்பம். அலங்கல் - மாலை. அங்கு - கேட்டிருந்தசமயத்தில், ஆர்தல் - சூடுதல், ஆய்ந்து - அநுசந்தித்து. அலம்புகை - அலைகை. "நம்மையும் பிறரையும்" இத்யாதி வாக்யவிவரணம் - அலாபத்தோடே இத்யாதி. 'பூவை'என்றுதொடங்கி, திருநாமங்களை கூவியெழும்படியாயிருக்கிற 'என்பாவை' - இனித் தண்பழனத்திருக்கோளூர்க்கே போய் - கோவை வாய்துடிப்ப-மழைக்கண்ணொடு-என்செய்யுங்கொலோ' இத்யந்வய:. (ரு.)*

## நான்காம் பாட்டு.

கொல்லையென்பர்கொலோ? குணம்மிக்கனளென்பர்கொலோ?
சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியுள்ளாருமெல்லே!
செல்வம்மல்கி அவன்கிடந்த திருக்கோளூர்க்கே
மெல்லிடைநுடங்க இளமான்செல்ல மேவினளே.

ஆ.—(கொல்லை.) - ஐஸ்வர்யத்தால் ஸம்ருத்தமாய்க்கொண்டு அவன் கண்வளர்ந்தருளுகிற திருக்கோளூர்க்கே, முக்த்யையானவள் மெல்லிடை நுடங்கப் போனாள்; மர்யாதையைக்கடந்தாளென்று லோகத்தார் இவளுக்குக் குற்றமாகச்சொல்வரோ? அன்றியே, திருக்கோளூரிலே ஒருத்திக்குள்ள அபிநிவேசமிருக்கும்படியென்! என்று மஹாகுணமாகச் சொல்வரோ? அங்ஙனே, குணமாகச்சொல்லுகை ஸம்பவிக்குமோ? பரகதமான குணத்தையும் தோஷமாகவே காண்கிற லோகஸ்பாவமிருந்தபடியென்! என்று இன்னாதாகிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், சிறுகுவார்களான நம் சேரியில் உள்ளாரும் அயற்சேரியில் உள்ளாரும் அந்யஸ்த்ரீகளும் இவளுடைய வ்ருத்தாந்தத்தைக்கண்டு குணஹீநையென்பரோ? இம்மஹாகுணத்தை அறிந்து கொண்டாடுவரோ? என்கிறாள். [கொல்லை] - வரம்புகடந்தாள். [செல்வம் மல்கி என்று மேலுக்கு] - ஸம்பத்தாலே மிக்கு அவன் கண்வளர்ந்த திருக்கோளூர்க்கே அத்யந்தமுக்தையான பெண்பிள்ளை தன்னுடைய ம்ருதுவான இடைதுவளப் போய்ப்புக்காள்.

ப.—அநந்தரம், நிரதிசயைச்வர்யவிசிஷ்டனானவனுடைய திருக்கோளூர்க்கே போக ஒருப்பட்டுவிட்டாள்; இவளை ஊரார் என்ன சொல்லுவர்களோ? என்கிறாள்.

செல்வம்மல்கி - அதிசயிதஐச்வர்யத்தையுடையவனாய்க்கொண்டு, அவன் - அவன், கிடந்த - கண்வளர்ந்தருளின, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, மெல் - மெல்லிய, இடை - இடையானது, நுடங்க - நுடங்கும்படி, இள - முக்தமான, மான் - மான்போலேயிருக்கிறஇவள், (தன்பலஹாநியையும் பருவத்தையும் பாராதே), செல்ல - போகையிலே, மேவினள் - நெஞ்சுபொருந்திப்போய்விட்டாள்; சில்லை - சிறுகிடுகையே ஸ்வபாவமான, வாய் - வாயையுடையவர்களாய், பெண்டுகள் - ஆஸந்நைகளானபெண்களும், அயற்சேரி - அயற்சேரியில், உள்ளாரும் - உள்ளாரும், கொல்லை - வரம்பழிந்தாள், என்பர்கொலோ - என்று கர்ஹிப்பர்களோ? குணம்மிக்கனள் - (அதிசயிதமாய் அநுரூபமான விஷயத்தையறிந்து மேல்விழும்படியான விலக்ஷண) குணாதிசயத்தையுடையவள், என்பர்கொலோ - என்று கொண்டாடுவர்களோ? எல்லே - எல்லே! இதென்னாயிருக்கிறதோ என்று விஷாதசூசகம்.

இ.—நாலாம்பாட்டில், இவளை நாட்டார் குணஹீநை என்பர்களோ, குணாதிகையென்று கொண்டாடுவர்களோ? என்கிறாள். [கொல்லை] -வரம்பழிந்த நிலம். அவன்தானே வரவிருக்கக்கடவ மர்யாதையை அழித்துப்போனாள் என்பர்களோ? குணாதிக

விஷயத்துக்குப்போரும்படி செய்தாள் என்று கொண்டாடுவர்களோ? "தத்ரஸ்வஸ்ரமஹம் ஸவேஸ" என்கிற வசநத்தைப் பார்த்து ச்லாகிப்பர்களோ? இவளுடைய ருசி விஷயத்துக்கு அநுரூபமாயிருந்தது என்பர்களோ? விதியைப்பார்த்து ச்லாகிப்பர்களோ? காம வசநத்தைப்பார்த்து 'நன்று' என்பர்களோ? "நகாமகலுஷம் சித்தம் மம"- விரக்தரானநீர் காமபரவசரான எங்களை என்படுத்துகிறீர் என்றாளிறே, தாரை இளையபெருமாளை. ஸ்வரூபத்தைப் பார்த்து ச்லாகிப்பர்களோ, விஷயத்தைப் பார்த்து உகப்பர்களோ? [சில்லை இத்யாதி] - சிறுகுவாரிகளான நம் சேரியில் உள்ளாரும், அயற்சேரியாரான அந்யஸ்த்ரீகளும்: வசநபரரானவர்களும், அவர்களுக்கு உடலன்றியே "இருந்தவூரி லிருக்கும் மாணிடர் எத்தவங்கள் செய்தார்கொலோ" என்னும் ச்லாகிக்கிறவர்களும். [எல்லே] - என்னே என்று ஆச்சர்யமாதல்; சொல்லுகிறவர்களைக்குறித்து ஸம்போதநமாதல். [செல்வம்மல்கி] - "இவர்கள் சொல்லிற்றுச் சொல்லுகிறார்கள்" என்று அவள் செய்வது செய்தாள். ஸம்பத்தானது கரைபுரண்டு வரும்படியான தேசம். [அவன் கிடந்த] - தன்பெருமையைப் பாராதே, ஆர்த்த ரக்ஷணார்த்தமாகவந்துகண்வளர்ந்தருளுகிற தேசம். [மெல்லிடை நுடங்க] - இவளும் தன் ஸ்வரூபத்தை அறிந்திலள்; தன் இடையை அறிந்தாளாகில் போக்கிலே ஒருப்படுமோ? ம்ருதுவான இடைநுவள. [இளமான்] - முக்த்தையானபெண். தன்மார்த்தவத்தையும், வழியில் அருமையையும், அவன் ஸ்வரூபத்தையும் அறியமாட்டாத மௌக்த்யம். [செல்ல மேவினள்] - இவள்போக்கிலே ஒருப்பட்டாள்; கொல்லையென்பர் கொலோ?

ஈடு.— நாலாம்பாட்டு. இவளைக்கண்ட நாட்டார், குணஹீநையென்பர்களோ? குணாதிகையென்று கொண்டாடுவர்களோ? என்கிறாள்.

[கொல்லையென்பர்கொலோ] - இவள் வாசல்கடந்து புறப்படக்கடவதல்லாத மர்யாதையைக் குலைத்தாள்: இவள் நிஷித்தாநுஷ்டாநம் பண்ணினாள்: இவள் வரம்பழிந்த செயல்களைச் செய்தாள்என்பர்களோ? கொல்லையென்று - வரம்பில்லாததுக்குப்பேர். [குணம்மிக்கனளென்பர்கொலோ]-குணாதிகவிஷயத்துக்குப் போரும்படி செய்தா ளென்பர்களோ? [கொல்லையென்பர்கொலோ குணம்மிக்கனளென்பர்கொலோ] - இவள் வித்யதிக்ர

---

நாலாம்பாட்டு.—கொல்லை இத்யாதி. "கொல்லை" என்றதொடங்கி, "அயற்சேரியுள்ளாரும்" என்னுமளவுங் கடாக்ஷித்தவதாரிகை - இவளைக்கண்ட இத்யாதி.

"கொல்லை" என்கிறதுக்கு -'வரம்பழிந்தசெயல்களைச்செய்தாள்' என்றர்த்தமாக்கி, அது தான் இன்னதென்னுமத்தை விசதமாக அருளிச்செய்கிறார் - இவள்வாசல் இத்யாதி. வரம்பழிந்த செயலாவது - வாசல்கடந்து புறப்படுகையும், நிஷித்தாநுஷ்டாநம்பண்ணுகையும் என்றபடி. இத்தால்வருகிற பொல்லாங்குஎது? என்ன; குடிக்கு நிலைநின்றபழியாய்விளையுமதாகையாலே, 'இவள் நிஷித்தாநுஷ்டாநம்பண்ணினாள்' என்கிறது. இனி, "கொல்லை" என்றதுக்குசப்தார்த்தம் - இவள் வரம்பழிந்த இத்யாதி. "கொல்லை" என்றால் இவ்வர்த்தத்தைக்காட்டுமோ? என்ன - கொல்லையென்று இத்யாதி. மர்யாதாதிலங்கநம்பண்ணினவளை - "குணாதிகை" என்று சொல்லுகிறபடியெங்ஙனே? என்ன - குணாதிக இத்யாதி. குணம்மிக்கனளாகையாவது - குணாதிகவிஷயத்துக்கீடாக ப்ராவண்யத்தைப் பண்ணுகையென்றபடி. "கொல்லை" இத்யாதிக்குஸ்வாபதேசம் - இவள்வித்யதிக்ரமம் இத்யாதி. அதாவது - தானேபோகையாலே அநந்யோபாயத்வவிருத்த ஸ்வயத்ந ஸாத்யோபாயாந்தரத்யாகவிதாயகமான "வ்ரஜ" என்கிறவிதியை யதிக்ரமித்தாளோ? என்றபடி. வித்

மம்பண்ணினுள் என்பர்களோ: அன்றிக்கே ஸித்தாந்தந்தன்னையே சொல்லுவர்களோ? ஓரளவிலேநின்று நிஷேதித்தவற்றைக்கொண்டு, இது அப்ராப்தம் என்பர்களோ; ருசிஸ்வஹாவத்தாலும் விஷயஸ்வஹாவத்தாலும் இது ப்ராப்தமென்பர்களோ? ஸாதநவிதியளவிலே நின்று தடுமாறுவர்களோ: ஸ்வஸ்வரூபத்தைப்பார்த்துத் தெளிவர்களோ? உபாயாம்சத்தைப் பற்றிநின்று, இதுகடவதல்ல என்பர்களோ: ப்ராப்தாவின் ஸ்வரூபத்தையும் ப்ராப்யஸ்வரூபத்தையும்பார்த்து, இது கடவதென்பர்களோ? அந்யநிஷேதபூர்வகமான ஸ்வரூபஜ்ஞாநம் பிறந்தால், புறப்பட ப்ராப்தியில்லை; ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யாநுஸந்தாநம்பண்ணினுல், போய்ப்புக்கல்லது நிற்கவொண்ணுது. விதியைப்பார்த்து கர்ஹிப்பர்களோ: காமவசநத்தைப் பார்த்து நன்றென்பர்களோ? "நகாமதந்த்ரே தவபுத்திரஸ்தி" (நகாமதந்த்ரேதவபுத்தி ரஸ்தி)-'விரக்தரானநீர்காமபரவசரானஎங்களை என்படுத்துகிறீர்?' என்ருளிறே தாரை, இளைய பெருமாளை. [சில்லைவாய்ப்பெண்டுகள்] - சிலுகுசிலுகு என்னும் ஸ்த்ரீகள். விஷயாதீந

---

தாந்தந்தன்னையே யென்றது - ஏதத்விவரணவாக்யங்களிலே, "ருசிஸ்வபாவத்தாலும் விஷயஸ்வபாவத்தாலும் ஸ்வஸ்வரூபத்தைப்பார்த்தாலும்" என்றுசொல்லப்படுகிற இவனுடைய ப்ராவண்யாதிசய விஷயவைலக்ஷண்ய ஶேஷத்வஸ்வரூப மாகிற ஹேதுத்ரயத்தாலும் இதுப்ராப்தமென்கிற ஸித்தாந்தந் தன்னையேயென்றபடி. உக்தகோடித்வயவிவரணம் - ஓரளவிலே என்றுதொடங்கி மேலெல்லாம். அதில், அவனிருந்ததேசத்தேறப்போகையாகிறஇது, விதயதிக்ரமமும் ஸித்தாந்தமு மாகிறபடி யெங்ஙனே? என்ன - ஓரளவிலே இத்யாதி. ஓரளவிலேயென்றது - ததேகோபாயத்வ ததேகரக்ஷ்யத்வாதிகளிலே என்றபடி நிஷேதித்தவற்றைக்கொண்டு என்றது - ஸ்வப்ரவ்ருத்தி ஸ்வரூபவிருத்தமென்று நிஷேதிக்கிற "ஸ்வயத்நாத் ஸ்வஸ்தி" இத்யாதி ப்ரமாணங்களைக்கொண்டு என்றபடி. சித்தாந்தமாகைக்குஇரண்டுஹேது அருளிச்செய்கிருர்-ருசிஸ்வபாவத்தாலும்' இத்யாதி. ருசிஸ்வபாவமாவது - விஷயத்திலுண்டான ஆதராதிசயம். விஷயஸ்வபாவமாவது - குணாதிகவிஷயமாகை. "ஓரளவிலே" இத்யாதிவாக்யவிவரணம் - ஸாதநவிதியளவிலே இத்யாதி. ஸாதநவிதியளவிலேநின்று தடுமாறுவர்களோ? என்றது - ஸாதநவிதியளவிலேநின்று நிஷேதித்தத்தைக்கொண்டு தடுமாறுவர்களோ என்றபடி. ஸ்வஸ்வரூபத்தைப்பார்த்துத் தெளிவர்களோ? என்றது - சேஷத்வம் சேஷிக்கு அதிஶயகரத்வமாகையாலே, ஸ்வரூபத்தைப்பார்த்துத் தெளிவர்களோ என்றபடி. "ஸாதநவிதி" இத்யாதிவாக்யத்வயவிவரணம் - உபாயாம்சத்தை இத்யாதி. ப்ராப்தாவின் ஸ்வரூபத்தையுமென்றது - சேஷிவிஷயப்ராவண்யமே வடிவான ஸ்வரூபத்தையு மென்றபடி. கீழுக்தமான தெல்லாவற்றாலும் பலிதம் அந்யநிஷேத இத்யாதி. ஸ்வயத்நநிஷேதபூர்வகமான பாரதந்த்ர்ய ஸ்வரூபஜ்ஞாநம்பிறந்தால் என்றபடி. ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யாநுஸந்தாநம் பண்ணினுலென்றது - த்வராஸ்வரூபோத்தம்பகமான ப்ராப்யவைலக்ஷண்யாநுஸந்தாநம் பண்ணினுலென்றபடி. புநஶ்ச, அந்யாபதேஶஸமாதியாலேயருளிச்செய்கிருர் - விதியைப்பார்த்து இத்யாதி. "கடலன்னகாமத்தராகிலும்மாதர் - மடலூரார்" இத்யாதிவிதியைப்பார்த்தென்றபடி. காமவசநமாவது - "காஷாயி ஹீநதந்த்ராயா திஸ்ஸந்த ஸாஹஸிகா" என்கிறஇது. காமவசநத்தை - காமசாஸ்த்ரத்தை. காமசாஸ்த்ரத்தைப்பார்த்தால் "நன்று" என்று தோற்றுமோ? என்ன - நகாமதந்த்ர இத்யாதி. "நகாமதந்த்ரே தவபுத்திரஸ்தி ஸம்வேத்ய யாநுப்ருத்ய வஶம்வதோஹம் । நதேஶகாலௌ ஹி யதார்ஹ ந்யாயவைக்ஷ தேகாமதந்த்ர ப்ரஸக்தஸ்த்யாதி" இதி லக்ஷ்மணம்ப்ரதி தாரா. (கூ-கநசு) இதுக்குபாவம்-விரக்தரானஇத்யாதி. தந்த்ரம்-ஶாஸ்த்ரம். நீர் காமஶாஸ்த்ரஜ்ஞராகிலன்ரே நான்செய்தது நன்றென்று புத்திபண்ணக் கடவீர் என்று கருத்து. சிலுகுசிலுகென்னும் ஸ்த்ரீகள் - பஹுஜல்பம்பண்ணும் ஸ்த்ரீகளென்றபடி. சில்லைவாய்ப்பெண்டுகள் - சிலுகிடுகையே ஸ்வபாவமான வாயையுடைய ஸ்த்ரீகளித்யர்த்தம். சிலுகிடுகை - சண்டையிடுகை. சிலுகு - சண்டை. அவர்களாரென்ன - விஷயாதீநம் இத்யாதி. அதா

மாய்வருமத்தையும் வசநஸித்தம் என்றிருக்குமவர்கள். உபாயபுத்த்யா வருமவற்
லிறே விதிக்குவிஷயமுள்ளது ; குணப்ரேரிதராய்ப்போமிடத்தில் விதி கோசரியாதே
[அயற்சேரியுள்ளாரும்] - (சிலுகுவாய்ச்சிகளான நம்சேரியிலுள்ளாரும் அயற்சேரியாரான
அந்யஸ்த்ரீகளும்.) இவளிருந்ததுஓரூர்வாசியுங்கூட இல்லாதவர்கள். [எல்லே] - கீழ்
அவர்களை ஸம்போதித்ததாதல், இதோராஸ்சர்யமிருந்தபடி யேன்! என்றதாதல். [செல்வ
மித்யாதி] - அவன்வரவை அஸத்ஸமமாக்கினாள். முற்பாடனாய்வந்தவனை, தான் நாலடி
யிட்டுப் பிற்பாடனாம்படி பண்ணினாள். அவன்ஸ்வரூபத்தை யழித்தாள். பரவ்யூஹாதிகளை
விட்டு இங்குவந்துகிடக்கிறது இவளுக்கு முற்பாடனாய் உதவுகைக்குஇறே. [செல்வம்மல்க
யவன்கிடந்ததிருக்கோளூர்க்கே] - நிரவதிக ஸம்பத்தானது கரைபுரளும்படியாக அவன்
வந்து கண்வளர்ந்தருளுகிற திருக்கோளூர்க்கே. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணத்திலே
அந்வயித்தாலிறே நியந்தாவினுடைய ஐஸ்வர்யம் ப்ரகாசிப்பது! [அவன்கிடந்த] - அவன்
வரவுபார்த்து இவளிருக்கையன்றிக்கே, இவள்வரவுபார்த்து அவன் அவஸரப்ரதீக்ஷனாய்க்
கிடக்கிறபடி. [மெல்லிடைநுடங்க] - அவன் ஸ்வரூபஜ்ஞாநமில்லாவிட்டால், தன்ஸ்வரூப
ஜ்ஞாநமோதான் இவளுக்குஉண்டாயிருக்கிறது. இவளுக்கு விமுக்காடறியாமை எங்குமொத்
ததுகிடீர்! தன்னிடையை யறிந்தாளாகில் தான் புறப்பட்டுப்போமோ? நடுவே அறியாமல்
புகுந்தபிழையிறே. [மெல்லிடைநுடங்க] - ம்ருதுவான இடையானது துவளும்படியாக

---

வது - ராகப்ராப்தமாய் வருமவற்றையும் "யூாயீத" "உவாஸீத" இத்யாதி வசநஸித்தோபாஸ
நத்திலே அந்வயிக்கும்என்றிருக்குமவர்களென்றபடி. அப்படி நினைத்திருக்கவேணுமோ? என்ன -
உபாயபுத்த்யா இத்யாதி. "கொல்லை" என்கிறவர்கள்-சில்லைவாய்ப்பெண்டுகள்; "குணம்மிக்கனள்"
என்கிறவர்கள் - அயற்சேரியுள்ளாரென்று கொள்ளுமளவில், 'இவளிருந்ததோரூர்வாசியுங்கூட இல்
லாதவர்கள் என்றவாக்யத்தோடு வ்யாஹதமாம்; ஆகையால், இரண்டுதிறத்தாரும் "கொல்லை" என்
றும் "குணமிக்கனள்" என்றும் சொல்லுவர்களோவென்றபடி. 'சில்லைவாய்ப்பெண்டுகள்" என்
கிறது - அத்யவஸாயநிஷ்டரை. இவர்களுக்கு அசலானத்வராநிஷ்டரை - "அயற்சேரியுள்ளார்"
என்கிறது. கீழில்அவர்களையென்றது - கீழிற்பாட்டிற்சொன்ன பூவைதொடக்கமானவற்றையாதல்;
தன்கீழில்அவர்களையென்றாய், விதேயரான அண்டையிலிருக்கிறவர்களையாதல்; சில்லைவாய்ப்பெண்டு
கள் தொடக்கமானாரையாதல். "திருக்கோளூர்க்கே - செல்லமேவினள்" என்றதாயாருடைய ஹார்த்த
பாவம் - அவன்வரவை இத்யாதிவாக்ய சதுஷ்டயமும். விவரணம் - முற்பாடனாய் இத்யாதி. இத்
தால்பலிதம - அவன்ஸ்வருபத்தை இத்யாதி. அவன்தான் இவளுக்கு முற்பாடனாகைக்கோ வந்த
தென்ன - பரவ்யூஹாதிகளை இத்யாதி. "செல்வம்" என்று - ஸம்பத்தாக அர்த்தம் - நிரவதிக இத்
யாதி. ரக்ஷ்யவர்க்கத்தினுடைய ரக்ஷணசமுத்த ஐஸ்வர்த்தாந்தரம் - ரக்ஷ்யவர்க்கத்தினுடைய இத்யாதி.
ஏகார்த்தபாவமாம்; அப்படியாது, பரமபதத்திலும் ஸம்பத்துண்டாயிருக்க, இங்கே கரைபுரளுகையாவ
தேதன்ன - ரக்ஷ்யவர்க்க இத்யாதி என்ற வாக்யசங்கதி. 'அவன்கிடந்த' என்கிற பதத்துக்கு
ஹார்த்த பாவம் - அவன்வரவு இத்யாதி. அவன்வரவுபார்த்து இவளிருக்கையன்றிக்கே என்றது -
சேஷியினுடையவரவை ஆசைப்பட்டு அவனிருந்தம்தசத்திலல இவள் ப்ராப்திக்கு ஏற்ற ப்ராப்தம்; அப்படி
யிருக்கையன்றிக்கே என்றபடி. "அவன்கிடந்த" என்றவநந்தரம், "மெல்லிடைநுடங்க" என்கிறவளு
டையஹார்த்தபாவம் - அவன்ஸ்வரூபஜ்ஞாநம் என்று தொடங்கி.இது - ஸ்வாபதேசம். அவன் ஸ்வரூப
ஜ்ஞாநமாவது - அவனுடையநிருபாதிகரக்ஷகத்வஜ்ஞாநம். தன் ஸ்வரூபஜ்ஞாநமாவது-ஸ்வபாரதந்த்ர்ய
ஸஹ பாரதந்த்ர்யஜ்ஞாநம். எங்குமொத்ததென்றது - அவன்ஸ்வரூபத்திறம்பாமே தன்ஸ்வரூபத்திலும்
ஒத்ததென்றபடி. அதெப்படியென்ன - தன்னிடையை இத்யாதி. சாடு - நடுவே இத்யாதி. "மெல்
லிடைநுடங்க - செல்லமேவினள், அவன்கிடந்த" என்கிறவளுடையஹார்த்தபாவம் - இவ்விடையை
இத்யாதி. 'எதிரேபுறப்பட்டுவரவேண்டாவோ' - செல்வக்கிடப்பாலேகிடந்தானென்றபடி. இது -

இவ்விடையைக்கொண்டு இவள் நடக்கப்புக்கால் எதிரே புறப்பட்டு வரவேண்டாவோ? [இளமான்] - போகிறவழியில் மிறுக்கும், தன்ப்ரக்ருதியும் அறிந்து மீளவல்ல பருவமல்லகிடீர்! [செல்லமேவினளே] - போகவொருப்பட்டாள். இவள்கையிலும் இவர்கள்கையிலுமன்றிறே ப்ராப்தி கிடப்பது; அது அவன்கையதிறே; இத்தலையில் துணிவேயிறேயுள்ளது. கீழே - "போனாள்" என்னாநின்றாள், இங்கே - "போக்கிலேயொருப்பட்டாள்" என்னாநின்றாள்; இதுசேரும்படியென்? என்னில்:- இவள் போகையிலே ஒருப்பட்டபோதே போய்ப்புக்காளன்றோ? என்கிறாள். [இளமான் செல்லமேவினள் - கொல்லையென்பர்கோலோ, குணம்மிக்கனளென்பர்கோலோ] - அவள்கைகழிந்து கோடிநின்றாள்: இனியிருந்த நாம் என்கேட்கிறோமோ? இங்கிருந்தநாள் நம்முடைய ஹிதவசநங்கேட்கிலன்றோ வழியி

---

"செல்வம்மல்கி" என்றதின் மூந்தினஅர்த்தத்திலே பாவமாகயோஜிப்பது. ரக்ஷணசம்பத்தானபக்ஷத்தில், அவன் ரக்ஷணோத்யுக்தனாய் முற்பாடனாயிருக்க, தான் நாலடியிட்டு அவன்வரவை யஸத்ஸமமாக்கினாளென்று தன்மகளைவெறுத்து அவனைக்கொண்டாடுகிறாளென்று கண்டுகொள்வது. ஏகார்த்த பக்ஷத்தில், பேதமில்லை; செல்வக்கிடப்பாலே கிடந்தாளென்று கீழ்ச்சொன்னபடியேகண்டுகொள்வது. போனாளென்னாதே, "ஒருப்பட்டாள்" என்கிறதென்? என்ன - இவள்கையிலும் இத்யாதி. அதாவது - சேதநனாகையாலே இவனிடத்தில் உத்யோகமாத்ரமேவேண்டுவது; ப்ராப்திக்கு உபாயம் அவன்நினைவாகையாலே, இவனுக்கும் பிறர்க்கும் ப்ராப்தியில்லையென்றபடி. ஆனால் இவனுக்குச் செய்யத்தக்கதேதென்ன - இந்நிலையில் இத்யாதி. 'கீழேபோனாளென்னாநின்றாள்' இத்யாதி சங்காபரிஹாரவாக்யங்களுக்கு - பாதிவழிபோனாள் என்கையிலே தாத்பர்யம். அதெங்ஙனேயென்னில்:— இத்திருவாய்மொழியின் ப்ரவேசத்திலே, "படுக்கையைப்பார்த்தவிடத்தில் வெறும்படுக்கையாய்க்கிடந்தது" என்றிருக்கையாலும்; * பொன்னுலகாளீர் ப்ரவேசத்திலே, "புறச்சோலையிலேகிடந்து தூதுவிடுகிறாள்" என்கையாலும், ஒருப்பட்டாளென்றது-பாதிவழிபோனாளென்றபடி இப்படி அந்வயித்த ஆக்குஹார்த்தபாவம் - அவள்கைகழிந்து இத்யாதி. வழியிலுள்ளார்பழிகேட்கில் மீளாளோ? என்ன - இங்கிருந்தநாள் இத்யாதி. ஆனால்எந்தவார்த்தைகேட்குமென்ன - இவள்வழிப்பட்டால் இத்யாதி. நல்வழியிலுள்ளார் - * சில்லைவாய்ப்பெண்டுகள். பெருவழியானார் - அயற்சேரியுள்ளார்: 'செல்வம்மல்கி' என்றுதொடங்கி, மேவினள்; 'சில்லைவாயென்று' தொடங்கி, 'அயற்சேரியுள்ளாரும் - கொல்லையென்பர்கொலோ குணம்மிக்கனளென்பர்கொலோ, எல்லே' இத்யந்வய:. "சில்லைவாய்ப்பெண்டுகள்" இத்யாதிக்கு - அப்பு அரும்பதத்திற்சொன்ன ஸ்வாபதேசம் - "சில்லைவாய்ப்பெண்டுகளென்கிறது - அத்யவஸாயநிஷ்டரை; அயற்சேரியுள்ளாரென்கிறது - அத்யவஸாயநிஷ்டர்க்கு அசலான த்வராநிஷ்டரை" என்று. அப்படி, அயற்சேரியுள்ளாரை த்வராநிஷ்டரென்றுகொள்ளுமளவில், 'இவளிருந்ததோரூர் வாசியுங்கூட இல்லாதவர்கள்' என்றவாக்யத்தோடும், பாட்டுமுடிவிலே, 'இவள்வழிப்பட்டால் நல்வழியிலுள்ளார்வார்த்தை கேட்குமதொழியப் பெருவழியானார் வார்த்தைகேளாள்' என்கிறவாக்யத்தோடும் வ்யாஹதமாயிருக்கிறது; இதுக்கு பரிஹாரம் யோஜித்துக்கொள்வது. இங்ஙனன்றிக்கே இருபத்துநாலாயிரத்திலே, "சில்லைவாய்ப்பெண்டுகள் அயற்சேரியுள்ளாரும்" என்கிறஇதுக்கு - நஞ்சேரியிலுள்ளாரும் அயற்சேரியாரான அந்யஸ்த்ரீகளுமென்று பொருள் அருளிச்செய்து, இதுக்கு ஸ்வாபதேசமாக, "அயற்சேரியுள்ளாரும்" என்கிறவிதுக்கு-வசநபரரானவர்களு மென்றருளிச்செய்து, "சில்லைவாய்ப்பெண்டுகள்" என்கிறவிதுக்கு - அவர்களுக்கு உடலன்றியே, இருந்தவூரிலிருக்கும் மானிடரெத்தவங்கள்செய்தார்கொலோ" என்னும் ப்ரேமார்த்ரசித்தருமென்று ஸ்வாபதேசமாக அருளிச்செய்தார். இதிலேயும், பாட்டின்முடிவிலே 'இவள்வழிப்பட்டால் நல்வழியிலுள்ளார்வார்த்தை கேட்குமதொழியப் பெருவழியானார்வார்த்தைகேளாள்', என்றிருக்கிறது; இவற்றையெல்லாம் அநுஸந்தித்து, 'சிலுகுசிலுகென்னும் ஸ்த்ரீகள்' என்கிறஇத்தை, "இவளுடையகுணத்திலேயீடுபட்டு அலவலைகளைப்போலே கொண்டாடுகிற நஞ்சேரியிலுள்ளாரைச்சொல்லுகிறது" என்றும்; 'விஷயாதீந

லுள்ளார் பழிகேட்பது அவள். இவள் வழிப்பட்டால் நல்வழியிலுள்ளார் வார்த்தை கேட்குமதோழியப்பெருவழியானுர் வார்த்தைகேளாள். (ச)

## ஐந்தாம் பாட்டு.

மேவிநைந்துநைந்துவிளையாடலுருள்என்சிறுத்
தேவிபோய்இனித்தன்திருமால்திருக்கோளூரில்
பூவியல்பொழிலுந் தடமுமவன்கோயிலுங்கண்டு
ஆவியுள்குளிர எங்ஙனேயுகக்குங்கோல்இன்றே?

**ஆ.**—(மேவிநைந்து.)-பிள்ளையாய் விளையாடும் பதமாகுல் பிள்ளைகளோடே விளையாடுகையில் ஆதரமின்றியே, எம்பெருமானைக் காணவேணும்" என்றுசைப்பட்டுப் பெருமையாலே நைந்துநைந்திருந்த என்சிறுத்தேவி போய் இனித்தன் திருமால் திருக்கோளூரில் பூவியல் பொழிலையும் அதுக்குள்ளே தாமரைத்தடாகங்களையும் அதுக்குள்ளே யவன்கோயிலையுங் கண்டு, தன்னுடைய நிரவதிக ஸந்தாபமெல்லாம் போய் ஆவியுள் குளிர இன்று எங்ஙனே உகக்கிருளோ? நான் அந்த ஸம்ருத்தியைக்காணப்பெற்றிலேன் என்கிருள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருக்கோளூர்க்கு அணித்தான திருச்சோலையையும் அங்குள்ள பொய்கைகளையும் அவன் கோயிலையும் கண்டால் எங்ஙனே உகக்குமோ? என்கிருள்

[மேவி யென்றுதொடங்கி] - அவனுடைய குணசேஷ்டிதாதிகளை அநுஸந்தித்து மிகவும் ஶிதிலையாய் விளையாட்டுகளிலும் மூளாள். ப்ராப்தயௌவனையன்றிக்கேயிருக்கிற பருவத்தில் இப்படி விலக்ஷணையாயிருக்கிற இப்பெண்பிள்ளை இதுக்குமேலே தனக்கு ஸர்வஸ்வமான ஸ்ரீய:பதியுடைய திருக்கோளூரிலே போய். [பூவியல் பொழில்] - என்றும் பூத்திருக்கும்பொழில். [ஆவியுள் குளிர] - மிகவும் கமர்பிளந்திருக்கிற ஹ்ருதயம் உள் குளிரும்படி.

**ப.**—அநந்தரம், ஸ்ரீய:பதியானவனுடைய விலக்ஷண போகஸ்த்தாநத்தைக் கண்டுஎங்ஙனே ப்ரியப்படுகிருளோ? என்கிருள்.

மேவி - (அவனுடைய ஸௌந்தர்யஶீலாதிகளை) நெஞ்சாலேகிட்டி, நைந்து நைந்து - க்ஷணந்தோறும் ஶிதிலையாய், விளையாடல் - விளையாடுகையிலும், உருள் - பொருத்தமற்றிருப்பாளாய், என்சிறுத்தேவி - பருவம்நிரம்பாத சிறுமையையுடையளாயிருக்கச்செய்தே வாசியறியும்படியான திவ்ய ஸ்வபாவத்தை யுடையளான என்பெண்பிள்ளை, போய் - இங்குநின்றும்போய், தன்-தனக்கஸாதாரணனை, திருமால்- ஸ்ரீமானுடைய, திருக்கோளூரில் - திருக்கோளூரில், பூ-பூவை, இயல் - இயல்பாகவுடைத்தான, பொழிலும் - பொழில்களையும், தடமும் - (பொழிலுக்குச் செவ்விகொடுக்கும்) தடாகங்களையும், அவன்-(லக்ஷ்மியோடே) அவன்வர்த்திக்கிற, கோயிலும் - போகஸ்த்தாநமான

மாய்வருமத்தையும் வசநவிஷயமென்றிருக்குமவர்கள் என்கிறவாக்யத்தை - "'அயற்சேரியுள்ளாரும்' என்கிறபதத்துக்கவதாரிகை" என்றும் நிர்வஹிப்பர்கள். (ச)

கோயிலையும், (நினைத்து முன்பு சிதிலையானவள்), இனி-இனி, கண்டு - காணப்பெற்று, ஆவி-ப்ராணாஶ்ரயமான, உள்-நெஞ்சு, குளிர-குளிரும்படியாக, இன்று-(தனக்கு நல்விடிவான) இன்று, எங்ஙனே - எங்ஙனே, உகக்குங்கொல் - உகக்கிறாளோ ?

இ.— அஞ்சாம்பாட்டில், திருக்கோளூரில் சோலையையும் பொய்கைகளையும் அவன்கோயிலையும் கண்டால் எங்ஙனே உகக்குமோ ? என்கிறாள்.

[மேவி] - அவனுடைய ஸௌந்தர்யஶீலாதிகளிலே நெஞ்சை வைத்து. [நைந்து நைந்து] - "நினைதோறும் சொல்லுந்தோறும் நெஞ்சிடிந்துகும்" என்று ஶிதிலையாக நின்றாள். [விளையாடலுறாள்] - பருவத்துக்கு அநுரூபமான வ்யாபாரத்தை விட்டாள். "மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு" என்கிறபடியே அத்தலையைப் பற்றியாயிற்று இதில் உள்ளவற்றை விட்டது. [என்சிறுத்தேவி] - த்யாஜ்யோபாதேயவிபாகம், பருவம் நிரம்பாதவளவிலே இடர் உண்டாயிற்று! "வொஷ்ாக ஒூஷ்ூதிவஷைஹிூஃ" என்கிறபடியே, பருவம் நிரம்பாதிருக்கப் பிராட்டிமாரோடு ஒக்கச்சொல்லலாம்படி இருக்கிறபடி. [இனி-போய்] - இதிற்காட்டில் அங்கு என்ன? ஏற்றங்கழுண்டாய்ப்போனாள். "தஸ்யஸஜ்ஶஸஹவெஷ" என்றிருக்கமாட்டிற்றிலள். [தன்திருமால் திருக்கோளூரில்] - தனக்கு ஸர்வஸ்வமான ஸ்ரீய:பதி கண்வளர்ந்தருளுகிறவூரிலே:பிராட்டியோபாதி தன்பக்கல் வ்யாமுக்தனானவன் வர்த்திக்கிறவூரிலே என்றுமாம். [பூவியல் பொழிலும்] - நித்யவஸந்தமான பொழிலும். [தடமும்] - அதுக்குள்ளாகப் பரப்புமாறப்பூத்த தடாகங்களும்; அதுக்குள்ளாக அவன் கோயிலும் கண்டு. இங்கேயிருந்து அநுஸந்தித்து நோவுபட்டவள் காணப்பெறுகிறாளே! [ஆவியுள்குளிர] - கமர்பிளந்த ஹ்ருதயம் மறுநனையும்படி. [எங்ஙனேயுகக்குங்கொல்] - எங்ஙனே ப்ரியப்படுகிறாளோ? இங்கேயிருந்து நினைத்துப்பட்ட க்லேஶத்தைக்கண்ட நான், அந்த அநுபவப்ரீதி காணப்பெற்றிலேன். [இன்றே] - எனக்கு அவளைப்பிரிந்த ஶோகமேயாய்ச் செல்லுகிறது, அவளுக்கு நல்விடிவாய்ப் ப்ரீதியோடே செல்லுகிற திறே.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. திருக்கோளூரில் சோலைகளையும் அங்குள்ள பொய்கைகளையும் அவன்கோயிலையுங் கண்டால் எங்ஙனே யுகக்குமோ? என்கிறாள்.

[மேவி] - பகவத்குணங்களிலே நெஞ்சைவைத்து. [நைந்துநைந்து] - ஆஶ்ரயங்களை யழிக்கும் பதார்த்தம்போலே குணங்கள் தானழிக்குமே: "நினைதோறும்சொல்லுந்தோறும்" இத்யாதி. இவள்மேவிற்று நிர்க்குணமாயிருப்பதோரு விஷயத்தோடன்றே; *உயர்வறவுயர்நலமுடையவனோடே யன்றோ. [மேவி] - இங்கிருந்தநாளும் எங்களோடு பொருத்தமில்லைகிடீர். [நைந்துநைந்து] - நைந்துமீளமாட்டாள்; தரித்திருக்கமாட்டாள். [விளையாட

அஞ்சாம்பாட்டு.—மேவி இத்யாதி. "திருக்கோளூரில்பூவியல்பொழிலும்" இத்கடாக்ஷித் தவதாரிகை - திருக்கோளூரில்சோலை இத்யாதி.

மேவினால் நையவேணுமோ? என்ன - ஆஶ்ரயங்களை இத்யாதி. அழிக்கும்பதார்த்தம் - அக்நி. அப்படி குணங்களழிக்குமோ? என்ன - நினைதோறும் இத்யாதி. "மேவி" என்றால் - ஈஶ்வரனோடொழிய, குணங்களோடும் மேவியென்று காட்டுமோ? என்ன - இவள்மேவிற்று இத்யாதி. "மேவி" என்றதின் வ்யதிரேக சித்தமானவர்த்தம் - இங்கிருந்த இத்யாதி. அவனோடு மேவியென்கையாலே - இங்கிருந்தநாளும் எங்களோடு பொருத்தமில்லையென்றபடி. வீப்ஸைக்கர்த்தம் -

லுருள்] - பருவத்துக்கு அநுரூபமான வ்யாபாரத்தைவிட்டாள். விளையாடுகையைத்தவிர்ந்து மேவி நைந்தாளன்று கிடீர்; இவ்விஷயத்திலே அவகாஹித்து, புறம்புள்ளவற்றை விட்டாளத்தனை. "மாற்பான்மனஞ்சுழிப்பமங்கையர்தோள்கைவிட்டு"-பகவத்குணங்கள் கொண்டுமூழ்க, புறம்புள்ளது கைவிட்டாள். நல்லதும்தீயதுமானால், தீயதுபோலன்றிறே நல்லது பண்ணிக்கொள்ளும்படி. "வரஶாத்மநியொரக்தொவிரக்தொவரஶாத்மநி"(பரமாத்மநி யோரக்தோ விரக்தோऽபரமாத்மநி) "மனைப்பால்பிறந்தார் பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம் துறந்தார்தொழுதாரத்தோள்" என்னுமாபோலே. [மேவிநைந்துநைந்து விளையாடலுருள்] - மௌக்த்யம் மாறி விதக்ஷையானாளல்லள். "ஶப்தாதிகள்ஹேயம்" என்று ஶாஸ்த்ரத்தாலேயறிந்து அவற்றைவிட்டு, "஭கவத்விஷயம்நன்று" என்று கைவைத்தாளன்று. [என்சிறுத்தேவி] - தன்திருமால் என்று மேலே, பெரியதேவியைச் சொல்லுகையாலே, 'சிறுத்தேவி' என்று விசேஷிக்கிறாள். [என்சிறுத்தேவி] - பருவம் நிரம்பாதிருக்கச்செய்தேயும் பட்டங்கட்டின ப்ரதாநமஹிஷிகளோடொக்கச் சொல்லலாயிருக்கை. "என்பெண்பிள்ளை" என்கிற ப்ரதிபத்தியில்லைகாணும் இவள்தனக்கு. "பிள்ளையைப்பிள்ளையென்றெண்ணப்பெறுவரே" - இவளுக்கு ஹிதஞ்சொன்ன நாக்கைக் கழுவவேணுமென்கிறாள். [இனி - போய்] - வேறே சிலகொண்டு போதுபோக்கவேண்டும் பருவத்திலே, அவற்றை விடும்படியான பாகம்பிறந்த இதுக்குமேலே ஓர்ஏற்றஂகமுண்டாகப்போனாளோ? [இனி] - இங்கேயிருக்கச்செய்தே *நோபஜநம்ஸ்மரந்நிதம் பிறந்ததாகில், இனி அங்குப்

---

ப்ர.—[மேவிநைந்துநைந்துவிளையாடலுருள்]— பாஹஸ்பத்யஸ்ம்ருதௌ, "வரஶாத்மநியொரக்தொவிரக்தொऽவரஶாத்மநி। ஸவெஷணாவிநிர்முக்தஸ்ஸஹெக்ஷம்ஹொகமர்ஹதி"

[இனி - போய்]—ஶாந்தோக்யே, [அ-கஉ] "ஜக்ஷத்க்ரீடந்ரமமாணஸ்ஸ்த்ரீபிர்வாயாநைர்வாஜ்ஞாதிபிர்வாநோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்"

---

நைந்துமீள இத்யாதி. தாத்பர்யசித்தார்த்தம் - பருவத்துக்கு இத்யாதி. லோகத்தில் நாயகிகளில் வ்யாவ்ருத்தி சொல்லுகைக்காக அதிஷ்டிகை - விளையாடுகையை இத்யாதி. பின்னையெப்படியிருந்தாள்? என்ன - இவ்விஷயத்திலே இத்யாதி. இதுக்குப்ரமாணம் - மாற்பால் இத்யாதி. "மாற்பால்மனஞ்சுழிப்ப" என்றதுக்கர்த்தம் பகவத்குணங்கள் இத்யாதி. மற்றைப்படியானாலோ? என்ன - நல்லதும் இத்யாதி. ப்ரமாணாந்தரம் - பரமாத்மநீ இத்யாதி. பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதௌ, "ஸவெஷணாவிநிர்முக்தஸ்ஸஹெக்ஷம்ஹொகமர்ஹதி" இத்யுத்தரார்த்தம். "அத்தோள் - தொழுதார் - மனைப்பால்பிறந்தார் பிறந்தெய்தும்பேரின்பமெல்லாம்துறந்தார்" இத்யந்வயஃ. அந்த அழகிய தோளைத்தொழுதவர்கள், மனையிடத்தில் பிறந்தவர்கள் பிறந்து ப்ராபிக்கும் நிரவதிகாநந்தம் எல்லாவற்றையும் பரித்யஜித்தவர்களாவரித்யர்த்தஃ. இரண்டாந்திருவந்தாதி நாற்பத்திரண்டாம்பாட்டு. "நினைப்பன்திருமாலை" இத்யாதி. லோகத்தில் நாயகிகளில் வ்யாவ்ருத்தி தன்னைச் சொல்லுகிறார் - மௌக்த்யம் மாறி இத்யாதி. ஸ்வாபதேசம் ஶப்தாதிகள் இத்யாதி. இத்தால் - இதர முமுக்ஷுக்களில் வ்யாவ்ருத்த ரென்றபடி. "சிறுத்தேவி" என்றதுக்கு தாத்பர்யாந்தரம் - பருவம் இத்யாதி. தன்வயிற்றில் பிறந்தவளை பெண்ணென்னாதே, "தேவி" என்கிறதென்? என்ன - என்பெண்பிள்ளை இத்யாதி. இப்படி ப்ரதிபத்தி பண்ணினாருண்டோ? என்ன - பிள்ளையை இத்யாதி. (திருமொழி) இதுக்குபாவம் - இவளுக்கு இத்யாதி. "இனி" என்றதுக்கு பாவம் - வேறேசில இத்யாதி. ஏற்றஂகம் - ஏறினவிலை. அதிசயமாகவென்றபடி. இத்தை ஸத்ருஷ்டாந்தமாக விவரிக்கிறார் - இனி யிங்கே

போய் அநுபவிப்பதுண்டோ? [தன்திருமால்திருக்கோளூரில்] - அவள்பக்கல்இருக்குமா போலேயாகாதே இவள்பக்கலிலும் அவன்இருக்கும்படி. லோகத்தில் ஶேஷஶேஷிபாவம் போலன்றிறே ப்ரணயினிபக்கல் பரிமாற்றம். "பதிம் விஶ்வஸ்ய" (பதிம் விஶ்வஸ்ய) என்கிறபடியே ப்ரமாணத்தைப்பார்த்துப் பரிமாறவொண்ணாதிறே அபிமதவிஷயத்தில். தனக்கு ஸர்வஸ்வமான ஸ்ரீயப்பதி கண்வளர்ந்தருளுகிற வூரிலே. [பூவியல்பொழிலும்] - தழையும்தண்டும் கொம்பும்கொடியுமாய்த் துராலாயிராதே, வெறும் பூவேயாயிருக்கை. நித்ய வஸந்தமான சோலை. (பூவையியல்வான) [தடமும்] - அப்பொழிலை வளர்ப்பதாய்ப் பரப்புமாறப் பூத்த தடாகமும். [அவன்கோயிலுங்கண்டு] - "மாமணிக்கோயிலேவணங்கி" என்கிறபடியே, அவனிலும் அவன் விரும்பி வர்த்திக்கிற கோயிலையும் கண்களாரக்கண்டு. திவ்யாத்ம ஸ்வரூபத்துக்கு ப்ரகாசகமான திவ்யமங்களவிக்ரஹம்போலே, அவையிரண்டுக்கும் ப்ரகாசகமான கோயில். கோயிலைக் கண்டபோதே உள்ளுண்டான வஸ்துவையும் அறுதியிடலாயிருக்கை. உள்ளில் பொன்னுக்குத்தக்க செப்பாயிருக்குமிறே. [கண்டு] - இங்கேயிருந்து மாநஸாநுபவமாத்ரமாய் க்லேஶப்பட்டவள் கண்ணாரக்கண்டு. "பிள்ளை திருநறையூரரையரும் பட்டருமாக உள்ளே ப்ரதக்ஷிணம்பண்ணாநிற்க, இட்ட அடி மாறியிடமாட்டாதே கண்களாலே பருகுவாரைப்போலே பார்த்து வாழ்ந்துகொண்டு போகிறபடியைப் பின்னேநின்று கண்டநுபவித்தேன்" என்று நஞ்சீயர் அருளிச்செய்வர். ஆச்சானும் ஆண்டானுமாகக் கிழக்கே நடக்கிறபோது, திருப்பேருக்குக்கிழக்குப் போகவும் மாட்டாதே, ஏறித் திருவடி தொழவும் மாட்டாதே, திருப்பேர்நகரான்கோயிலைப் பார்த்துக்கொண்டு இருந்தார்களாம். [ஆவியுள்குளிர] - இவ்விடத்தைப் பட்டர் அருளிச் செய்யாநிற்கச் செய்தே மேலெழ அருளிச்செய்தாராய், சீராமப்பிள்ளையிருந்தவர் "சீயா! எம்பார் அருளிச் செய்யும்போது 'ஆவியுள்குளிர' என்று முகந்துகொண்டருளிச்செய்யும்படி கேட்டறிகை யில்லையோ?" என்றருளிச் செய்தார். கமர்பிளந்த பராப்பட்டங்களும் மறுநனையும்படியா

---

யிருக்க இத்யாதி. அதாவது - ஸம்ஸாரத்தைவிட்டுப் பரமபதத்திலேபோன முக்தனுக்குப்பிறந்த ஜ்ஞா நம் இவளுக்கு இங்கேயிருக்கச்செய்தே பிறந்தால், இனி அங்கேபோய் அநுபவிப்பதொன்றுண்டோ? என்றபடி. "திருமால்" என்றதுக்கு - திருவினிடத்திற்போலே தன்பக்கலிலும் வ்யாமுக்தனாயிருக்கிறவனென்று அர்த்தம் விவக்ஷித்துபாவம்-அவள்பக்கல் இத்யாதி. அவள்பக்கல் - பெரியபிராட்டியார் பக்கல். ஆஶ்ரிதர் எல்லாரையும்பற்றத் திருவுக்குமாலானபடி எப்படி? என்ன - லோகத்தில் இத்யாதி. ஆகையாலே, பதிம்விஶ்வஸ்ய என்று கூட்டுவது. "பூவியல்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - தழையும் இத்யாதி. "பூவியல்" என்கிற வர்த்தமாநார்த்தம் - நித்யவஸந்தமானசோலை என்று. பூவியல் - புஷ்பிதமாகையே ஸ்வபாவமான. இது - பொழிலுக்கும் தடத்துக்கும்விசேஷணம். பொழிலுக்கநந்தரம் தடத்தைச்சொல்லுகையாலே-'அப்பொழிலைவளர்ப்பதாய்' என்கிறார். கோயிலென்னாதே, "அவன்கோயில்" என்று விசேஷித்ததுக்கு பாவமாதல்; அவனைக்கண்டென்னாதே, "கோயிலுங்கண்டு" என்றதுக்கு பாவமாதல் - மாமணிக்கோயிலே இத்யாதி. 'தஞ்சைமாமணிக் கோயிலேவணங்கி'-திருமொழி, (1, 1, 6). "மணிக்கோயில்" என்றதுக்கர்த்தம் - திவ்யாத்ம இத்யாதி. இத்தால் பலிதம் - கோயிலை இத்யாதி. இவ்வர்த்தத்தை லௌகிக த்ருஷ்டாந்தத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் - உள்ளில் இத்யாதி. "கண்டு" என்கிற பதத்துக்கு வாஸனை - இங்கே இத்யாதி. அவன் கோயிலைக் கண்ணால்காண்கையே புருஷார்த்தம் என்கைக்கு ஐதிஹ்யத்வயம் - பிள்ளைதிருநறையூர் இத்யாதி. கிழக்கே நடக்கிறபோது - திருக்குடந்தைக்கு எழுந்தருளுகிறபோதுஎன்றபடி. ஏறி-போய். சீயாவென்றது - பூஜ்யவாசி. முகந்துகொண்டு - மண்டியநுபவித்துக்கொண்டு. முகந்துகொள்ளுகை - மண்டியநுபவிக்கை. முகந்துகொண்டருளிச்செய்த இத்தால் பலிதம் - கமர்பிளந்த இத்யாதி.

யிருக்கை. [எங்ஙனேயுகக்குங்கோல்] - இவள்பருவம் நிரம்பாதிருக்கச்செய்தே புறம்புள்ள வற்றைவிட்டு அவனை அநுஸந்தித்து சிதிலையாகிறபோது அவ்வழகுகண்டு அநுபவிக்கப்பெற்றேன்; அவனைக்கண்டநுபவிக்கிறபோதைஅழகு நான் கண்டுவோழப்பெற்றிலேன் என்கிறாள் [இன்றே] - எனக்கு சோகத்தாலே சூந்யமாய்க்கிடக்கிற இன்று அவளுக்கநுஹவத்தாலே அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லுகிறதே! ஒருநாளிலே இப்படியாவதே! நாள்வாசி யற்றிருந்ததிறே விஷயாதீநமாய் வருகையாலே. (ரு)

---

## ஆறும் பாட்டு.

---

இன்றுஎனக்குஉதவாதகன்ற இளமான்இனிப்போய்
தென்திசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்றுதன்திருமால் திருக்கண்ணுஞ் செவ்வாயுங்கண்டு
நின்றுநின்றுநையும் நெடுங்கண்கள்பனிமல்கவே.

ஆ.—(இன்றுஎனக்கு.) - இன்று தன்னைப்பிரிந்து வ்யஸநப்படுகிற எனக்குத் துணையாகாதே என்னைப்பொகட்டுப்போன என் இளமான், இனிப்போய்த் தென்திசைத் திலதமனைய திருக்கோளூர்க்கே சென்று அவன் கோயிலுள்ளேபோய், தனக்குப்பிராட்டியோடுள்ள ஸம்ஶ்லேஷத்தாலே புதுக்கணித்த திருக்கண்களையும் திருப்பவளத்தையுங்கண்டு நிரவதிகப்ரீதியாலே விகஸிதமான இவளுடைய கண்களையும் ஆனந்தஜமான கண்ணநீரையும் ஆனந்தாஸதமான ஶைதில்ய பரம்பரையையும் காணப்பெற்றிலேனென்கிறாள்.

ஒ.— ஆறும்பாட்டில், திருக்கோளூரிலேசென்று எம்பெருமானுடையஸ்நேஹபஹுமானமான வீக்ஷிதாதிகளைக்கண்டு ப்ரீதிப்ரகர்ஷத்தாலே மேன்மேலென ஶிதிலையாகக் கடவளாகாதே யென்கிறாள்.

[இன்றுஎன்று தொடங்கி] - தன்னைப்பிரிந்து நோவுபடுகிற எனக்கு இத்தஶைக்கு துணையன்றிக்கேபோன சிறுப்பெண்பிள்ளை எனக்கு உதவாததுக்குமேலே தெற்குத்திக்குக்குத் திலகம்போலேயிருக்கிற திருக்கோளூரிலேபோய்ப்புக்குப் பெரியபிராட்டியார்பக்கல்போலே தன்பக்கல் ப்ரணயியானவன்.

ப.—அநந்தரம், அவனுடைய திவ்யாவயவஸௌந்தர்யத்தை அநுபவித்து ஹர்ஷத்தாலே ஶிதிலையாமிறேயென்கிறாள்.

எனக்கு - (தன்னைப்பிரிந்துநோவுபடுகிற) எனக்கு, இன்று - இப்போது, உதவாது - உதவாதே, அகன்ற - கைகழியப்போன, இளமான் - சிறுப்பெண்பிள்ளையானவள், போய்-வருந்தி வழிநடந்துபோய், தென்திசை - தெற்குத்திக்குக்கு, திலதம்அனைய-

---

''எங்ஙனேயுகக்குங்கொல்'' என்றது-பெறுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் - இவள்பருவம் இத்யாதி. ''இன்றே'' என்கிற ஸவாத்தநுபாவம் - எனக்கு இத்யாதிவாக்யத்ரயமும். நாள்வாசி - நாளின் குணம். விஷயாதீநமாய் வருகையாலேயென்றது - தனக்கபிமதையான பெண்ணைப்பிரிகையாலும், அவளுக்கபிமதனான நாயகனை அவள் பெறுகையாலுமென்றபடி, (ரு)

திலகம்போலே யலங்காரமான, திருக்கோளூர்க்கே - திருக்கோளூரிலே, சென்று - ப்ரவேசித்து, இனி-இனி (புக்கபின்பு), தன்-(ஸ்வாபிமத ஸம்ச்லேஷத்தைத் தனக்கு ப்ரகாசிப்பித்துத்) தன்னையுற்றாரோடு உறவறுத்த, திருமால் - ஸ்ரீமானுடைய, திரு-ஸாதராபிவீக்ஷணம்பண்ணுகிற, கண்ணும் - கண்களையும், செம்-ஸாநுநயமான ஸ்வாகதாதிவசநத்தாலே உஜ்ஜ்வலரூபமான, வாயும் - அதரத்தையும், கண்டு - கண்டு, (தன்னுடைய), நெடு-நெடிதான, கண்கள் - கண்களானவை, பனிமல்க - ஆநந்தாச்ருபூர்ணமாம்படி ஹர்ஷாதிசயத்தாலே, நின்றுநின்று - ப்ரதிக்ஷணம், நையும் - சிதிலையாகாநிற்குமிறே.

இ—ஆறாம்பாட்டில், அவனுடைய ஸ்நேஹபஹுமாந வீக்ஷிதாதிகளைக் கண்டு ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சிதிலையாகக்கடவளாகாதே யென்கிறாள்.

[இன்றெனக்கு உதவாதகன்ற] - தன்னைப்பிரிந்து நோவுபடுகிற இத்தசையில் துணையின்றிக்கேயிருக்கிற எனக்கு உதவாதே கைகழியப்போன. தன்னைப்பிரிந்து நோவுபடுமன்று உதவுகைக்கன்றோ தன்னைப்பெற்றது; இத்தசைக்கு உதவாளாகில், இனி எற்றைக்கு உதவ இருக்கிறாள்? "ஐஸ்வர்யாஸவணோ நஹவஸஸ்யாஜிராவவத்" [இளமான்] - "உதவப்பெற்றிலோம்" என்று அநுதபிக்கவும் அறியாத பருவம். [இனிப்போய்] - பெற்றாளை விடும்படி அவ்விஷயத்திலே அவகாஹித்த இதுக்குமேல் என்ன ஏற்றம் பெறப்போகுள்? பெற்றாளைவிட்டுப் பற்றுமதிறே ப்ராவண்யத்துக்கு எல்லை. [தென்திசை இத்யாதி] - தெற்குத்திக்குக்குத் திலகமான திருக்கோளூரிலேசென்று. பலஹாநியாலேபோய்ப் புகுகையில் உண்டான அருமையைச் சொல்லுகிறது. [தன்திருமால்] - "விதாஸோ தாவஸோயவ:" என்று நிருபாதிகவைப்யத்தைக் காட்டியாயிற்று ஸோபாதிகவைப்யத்தை அறுத்தது. [திருக்கண்ணும்] - நெடுநாள் பிரிந்துபட்ட விடாய் தீர பஹுமாநத்தோற்ற நோக்கும் கண். [செவ்வாயும்] - ஸாபராயனேன் என்று தாழ்வுதோற்றச்சொல்லும் அதரமும். [கண்டு] - "நொவஜநம்ஸஸாஹிஷம்ஸஸீஸ" என்னும்விஷயத்தையிறே கண்டது. [நின்றுநின்று நையும்] - ப்ரீதிப்ரகர்ஷத்தாலே காணக்காண சிதிலையாகாநின்றாளிறே. [நெடுங்கண்கள் பனிமல்கவே] - கண்களின் பரப்படங்கலும் ஆநந்தாச்ருவாலே பூர்ணமாகிறதிறே.

௬—ஆறும்பாட்டு. அவனுடைய ஸ்நேஹபஹுமாநவீக்ஷிதாதிகளைக் கண்டு ப்ரீதிப்ரகர்ஷத்தாலே சிதிலையாகக்கடவளாகாதே யென்கிறாள். இவள்தான்உகப்பது அங்கேபுக்குத் தரித்துநிற்கவல்லளானலிறே. "எங்ஙனேயுகக்குங்கொல்" என்றாள் கீழிற்பாட்டில்; இங்ஙனேயுகக்குமென்கிறாள் - இப்பாட்டில்; மகள் காணப்புகுகிறவிஷயத்தை யநுஸந்திப்பது, தன்மகள்படியை யநுஸந்திப்பதாய்த் திருத்தாயார் படுகிறபாடு என்தான்!

---

ஆறாம்பாட்டு— இன்று இத்யாதி. கீழே, "எங்ஙனேயுகக்குங்கொல்" என்றத்தோடேசேர அவதாரிகாத்வயம் அருளிச்செய்கிறார்: முந்தினதுக்கு, 'இவள்தானுகப்பது' இத்யாதிவாக்யாநந்தரம்; 'அவனுடையஸ்நேஹ' இத்யாதிவாக்யம் அநுஸந்தேயம். இரண்டாவது, 'எங்ஙனேயுகக்குங்கொல்' என்றாள் இத்யாதி அவதாரிகாத்வயமும், "தன்திருமால்திருக்கண்ணும்" இத்யாதியைக்கடாக்ஷித்து. பாட்டுக்களில் பூர்வோத்தரார்த்தங்களிலே தாயாரினுடைய ஸ்வபாவங்களையநுஸந்தித்து, வ்யாக்யாதாவின்சுடுபாடு - மகள்காண இத்யாதி.

[இன்று எனக்கு உதவாதகன்ற] - பிள்ளைபெற்று வளர்க்கிறது ஆபத்துக்கு உதவுகைக்கன்றே? தன்னைப்பிரிந்த இத்தனிமைக்கும் இத்தசைக்கும் மேற்பட எனக்கோர் ஆபத்துண்டோ? இன்றெனக்கு உதவாதொழிவதே! "[illegible]" (அதோநுகிம்து:கதரம்ஸோஹமிக்ஷ்வாகுநந்தநம் இமாமவஸ்த்தாமாபந்நோநேகபஶ்யாமிராகவம்) - நான் நெடுங்காலங்கூடி வருந்தித் தம்மைப்பெற்றது, தம்மைப்பிரிந்து நான் இவ்வவஸ்த்தையைப் ப்ராபித்த இற்றைக்கன்றே ? இன்று தம்மை நான் காணுதொழிவதே என்றானிறே ! [எனக்குதவாது] - சக்ரவர்த்தியில் தனக்குண்டானவாசி: "நின்றுதூங்குகின்றேன்" என்னுமாபோலே; அல்லாத தாய்மாரைப்போலேயோ நான் தனக்கிருப்பது? தன் உகப்பே எனக்கு உகப்பாக இருக்குமவளன்றே நான். இவளுடைய அபிமதவிஷயத்துக்கு வடகையுந்தானேயிறே. "பிரானிருந்தமை காட்டினீர்" என்று, "அன்னையும் அத்

ப்ர. —[இன்றெனக்குதவாதகன்ற]—[illegible], [illegible] [illegible]: "[illegible] । [illegible] ॥ உரு ॥ [illegible] । [illegible] ॥ உசு ॥ [illegible] । [illegible] ॥ உஎ ॥

இன்று எனக்கு உதவாதகன்ற - தன்னைப்பிரிந்துநோவுபடுகிற இத்தசையில், துணையின்றிக்கேயிருக்கிற எனக்கு உதவாதே என்கைகழியப்போன என்று ஶப்தார்த்தம். இதுக்குஹார்த்த பாவம் - பிள்ளைபெற்று இத்யாதிவாக்யத்ரயமும். உனக்குஆபத்தேதென்ன - தன்னைப்பிரிந்த இத்யாதி. "தன்னைப்பிரிந்த இத்தனிமைக்கும் இத்தசைக்கும் உதவவன்றோ தன்னைப்பெற்றது" என்கை வ்யாஹதமன்றோ ? என்ன; கலக்கம்அப்படிசொல்லுவிக்குமென்னுமிடத்துக்கு ஸம்வாதம் - அதோநுகிம் இத்யாதி. "[illegible]" இதி தஶரத ப்ரலாப:. இஶ்ஶ்லோகார்த்தம் - நான் இத்யாதி. சக்ரவர்த்தியில் இவளுக்கு வாசியாவது - அவன்பிரிந்தவுடனே முடிந்தான்; இவள்முடியவும்பெறாதே தரிக்கவும்பெறாதேயிருக்கை. இதுக்குத்ருஷ்டாந்தம் - நின்று இத்யாதி. நாய்ச்சியார்திருமொழி, ஒன்பதாந்திருமொழி, ஒன்பதாம்பாட்டு - "கோங்கலரும்பொழில்" இத்யாதி. 'கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில் கொன்றைகள்மேல்' - கோங்கலரா நின்றுள்ள சோலையையுடைய திருமாலிருஞ்சோலைமலையில் கொன்றைகளின்மேலே; 'தூங்கு †பொன்மாலைகளோடு உடனாய்நின்று தூங்குகின்றேன்' - நாலாநின்றுள்ள ஸ்ப்ருஹணீயமான மாலைகளோடே ஸத்ருஶையாய் நின்று தடுமாறுகின்றேன். கோங்கு - தேனும், பரிமளமும். அலருகை - ப்ரவஹிக்கையும், விகஸிக்கையுமென்று ஶப்தார்த்தம். இதுக்கு தாத்பர்யம் - கொன்றைமாலையாகையாலே அழகர்க்குமாகாது; அதுதான் திருமலையிலுள்ளதாகையாலே சைவரையும் பறிக்கவொட்டார்கள்; ஆக, இரண்டிடத்துக்குமாகாதே கிடந்து நாலுமாபோலே, நானும் தம்மோட்டை ஸம்பந்தமேஹேதுவாக பந்துக்களுக்கும் ஆகாதே தாமும் அங்கீகரிக்கப்பெறாதே நடுவேநின்று தடுமாறுகின்றேனென்ற ஆண்டாளைப்போலே, இவளும் தன்னோடே கூட இருக்கவும் பெறாதே முடியவும்பெறாதே நோவுபடாநின்றேன் என்கிறாளென்றபடி. "எனக்கு" என்றதுக்கு, கீழ், 'சக்ரவர்த்தியில்' வ்யாவ்ருத்தியாக அருளிச்செய்து, இங்கே 'அல்லாத தாய்மாரில்' வ்யாவ்ருத்தியாக அர்த்தாந்தரம் - அல்லாததாய்மாரை இத்யாதி. அவர்களைப்பற்ற விசேஷமேதென்ன - தன்னுகப்பே இத்யாதி. இதுக்குநியாமகமேதென்ன - இவளுடைய இத்யாதி. இதுக்குப்ரமாணம் - பிரான் இத்யாதி. இப்படி வடகையாயிருக்கச்செய்தே தனக்கு உதவாதேபோவானென்? என்ன ;

† 'பூமாலை' என்று பாடாந்தரம்.

தனுமென்று அடியோமுக்கு இரங்கிற்றிலள்'' - பிள்ளைகாள்! போகட்டு நினைப்பார் பழியிட்டுப் போகவேணுமோ? அடியாரை நியாமகரென்னவேணுமோ? வழிக்குத்துணையாவாரை நிவாரகர் என்று போகடுவதே! [அகன்ற] - இப்படி கைகழியப் போவதே! ஒருதேசத்தே நின்றுதான் உதவாதொழியப்பெற்றேனோ ? [இளமான்] - ''போகட்டது தாயையிறே'' என்றறிந்து மீளமாட்டாத பருவங்கிடீர்! இவளைநான் வெறுக்கிறதென்? பருவம் அதுவானால் செய்யலாவதுஉண்டோ ? [இனிப்போய்] - உறவுமுறையாரில் தாய்க்கு மேற்பட்டார் இல்லையிறே ! இப்படி தாயுங்கூடப் புறம்பாம்படி அவன்பக்கலிலேபிறந்த ஹாவபாவத்துக்குமேலே ''அவ்வருகேயொன்றுண்டு'' என்று போனாளோ? வந்தேறியைக் கைவிட்டால், ஸ்வதஸ்ஸித்தமானதுக்குச் செய்யவேண்டுவதொன்றுண்டோ ? [தென்திசை இத்யாதி] - ''தெற்குத்திக்கு'' என்றுகொண்டு, ஆர்யர்களிகழ்ந்த ம்லேச்சபூமியிறே: இங்ஙனேயிருக்கச் செய்தே, ஓர் ஆபரணந்தானே எல்லா ஆபரணங்களுக்கும் நிறங்கொடுக்கவற்றுமா போலே, திருக்கோளூருண்டாகையாலே திக்காக ஶ்லாக்யமானபடி. ''[Grantha text]'' (தக்ஷிணாதிக்க்ருதாயேநமஸ்ரண்யாபுண்யகர்மணா) என்னுமாபோலே. [திருக்கோளூர்க்கேசென்று] - திருத்தாயார்க்கு அரிதாய்த் தோற்றுகிறபடி. அவளுக்கு வழிப்போக்கோடு, ஊரில்புகுதியோடு, அவன் தன்னைக் காணுமத்தோடு வாசியற எல்லாம் உத்தேஶ்யமாயிருக்குமிறே. அர்ச்சிராதிகதியோடு, பரமபதத்தோடு, அங்குப்புக்கால் ஸதாஸர்ஶநம்பண்ணுமவனோடு வாசியற ப்ராப்யாந்தர்க்கதமாகக் கடவதிறே. [தன்திருமால்] - ''[Grantha text]'' (ஸர்வேஷாமேவலோகாநாம்பிதாமாதாசமாதவ:) - இங்கு விட்ட உறவெல்லாம் அங்கே உண்டாயிருக்கிறபடி. அவனுடைய ப்ராப்யவேஷந்தான் லக்ஷ்மீபதியாயாகாதேயிருப்பது.

''தாய் நமப்பகுனால் நம்முடைய அபிமதவிஷயத்துக்கு ப்ரதிபந்தகரன்றோ ?'' என்னும் அதிசங்கையாலே போனாளென்னுமதுக்கு ஸம்வாதம் - அன்னையும் இத்யாதி. இதுக்குபாவம் - பிள்ளைகாள்! இத்யாதி பிள்ளைகாளென்றது - வார்த்தைப்பாடு. ''அடியோமுக்கு'' என்றதுக்குபாவம் - அடியாரை இத்யாதி. ஏதத்விவரணம் - வழிக்குத்துணை இத்யாதி. அடியோமை எங்களுக்குத் தாயுந்தந்தையும் என்று பெரிய [illegible] இரங்கிற்றிலள் இதி ஸப்தார்த்தம். திருமொழிமூன்றாம்பத்து, ஏழாந்திருமொழி, ஏழாம்பாட்டு. ''அகன்ற'' என்கிறபதத்துக்கர்த்தம் இப்படி இத்யாதி. அதாவது - நாமிருக்கிற ஊரிலேயிராதே தூரதேசத்திலேபோவதே என்றபடி. தூரத்திலேபோன அளவு சுமேல்லுகிறதென் ? இருக்கிறவூரிலே உதவாதிருந்தால் நல்லதோ? என்ன; 'அதுநல்லதன்றோ' என்கிறாள் - ஒருதேசத்தே இத்யாதி. ஏகதேசஸ்தையானால் மீளவருமென்று பாரித்திருக்கலாம், அது இல்லாதபடி. தேசாந்தரஸ்தையானாளென்றபடி. மகளென்னுதே, ''இளமான்'' என்றதுக்குபாவம் - போகட்டது இத்யாதி. பலிதம் - இவளைநான் இத்யாதி. ''அகன்று - இனிப்போய்'' என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - உறவுமுறையார் இத்யாதி. ஹாவபாவமுண்டானாலும் அநுபவ கைங்கர்யங்களுக்காகப் போகவேண்டாவோ? என்ன - வந்தேறியை இத்யாதி. வந்தேறியை - ஔபாதிகபந்துக்களான தாய்முதலானாரை. ''நிலத்தனை'' என்றதுக்குபாவம் - தெற்குத்திக்கு என்று இத்யாதி. இதுக்குத்ருஷ்டாந்தம் - தக்ஷிணாதிக் இத்யாதி. போய் என்னாதே, ''சென்று'' என்கிறதுக்குபாவம் - திருத்தாயார்க்கு இத்யாதி. திருத்தாயார்க்கரிதாய்த்தோற்றினால், போகிறபெண்ணுக்கும் அரிதாயிராதோ? என்ன - அவளுக்கு இத்யாதி. வழியேதொடங்கி உத்தேஶ்யமாயிருக்குமென்றபடி. வழியேதொடங்கி உத்தேஶ்யமாகக்கூடுமோ? என்ன - அர்ச்சிராதி இத்யாதி. ''திருமால்'' என்று அவனையும்சொன்னதுக்குபாவம் - இங்குவிட்ட இத்யாதி. கீழே - ''அகன்ற'' என்றபதத்தோடேகூட்டி பாவமருளிச்செய்து, ''கண்டு'' என்கிறபதத்தைக்கடாக்ஷித்து தாத்பர்யாந்தரம் - அவனுடைய இத்யாதி. அவனே

விஶிஷ்டவேஷத்திலல்லது ப்ரதிபத்திபண்ணவறியாள். [திருக்கண்ணும்செவ்வாயுங்கண்டு]- "இவள் முற்படும்படி நாம் பிற்பாடராவதே!" என்று பொறைகொள்ளுகைக்குக் குளிர நோக்குகிறநோக்கும், சிலசொல்லப்புக்குத் தமோறுகிற திருப்பவளமும் இருக்கிறபடி. அவனுடைய * கோவைவாய்துடிப்ப மழைக்கண்கள் இருக்கிறபடி. [நின்றுநின்று நையும்]- நாட்செல்லநாட்செல்ல இற்றிற்றுவிழும். கண்டால் முன்புத்தைப்பிரிவை நினைக்கஅறியாள்: எதிர்த்தலை படுகிறது கண்டு ஈடுபடுகிறபடி. "காணுங்காற்காணேன் தவறுயகாணுக்கால், காணேன்தவறல்லவை" என்றிறே இருப்பது. (அதாவது - நாயகனான வுன்னைக்காணும் போது தப்பானது கண்டறியேன். காணாதபோது தப்பல்லாததுகண்டறியேன்.) [நெடுங்கண்கள்பனிமல்கவே] - இக்கண்ணில் பரப்படங்கலும் பரப்புமாறும்படி ஜலதத்வம் உண்டாவதே! [நின்றுநின்றுநையும்] - மாறாதே சிதிலையாகாநின்றாள். கிண்ணகத்தில் இளகின கரைபோலே உடைதலைப்படுகிறபடி. [நெடுங்கண்கள் பனிமல்கவே] - நெஞ்சுக்குமையில்யம்போலேகாணும் கண்ணுக்குக் கண்ணநீர். காணப்புகக்கொண்டு கண்ணநீர் பகை கொண்டாடாநின்றது. ஆநந்தாஶ்ருவோடு ஶோகாஶ்ருவோடு வாசியில்லையிறே: விலக்குமதெல்லாம் வ்யவதாயகமாகக்கடவது; "த்ரஷ்டவ்ய:" (த்ரஷ்டவ்ய:) என்னும் விஷயத்தை நான் அநுபவிக்கப்பெற்றிலேன். (கூ)

---

ப்ராப்யனுனலாகாதோ? "லக்ஷ்மீபதியாய்" என்கிறநிர்ப்பந்தமேதென்ன - விஶிஷ்ட இத்யாதி. திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டால் பரிசிலையாகவேணுமோ? என்ன - இவள் முற்படும்படி இத்யாதி. இத்தால் - இவள்பக்கள் அவனுக்குண்டான வ்யாமோஹாதிஶயங்தோற்றுகிறதென்கிறார் - அவனுடைய இத்யாதி. வீப்ஸைக்கர்த்தம் - நாட்செல்ல இத்யாதி. விட்டுப்போனவனைக்கண்டால் வெறுக்கும் தொழிய, ஈடுபடக்கூடுமோ? என்ன - கண்டால் இத்யாதி. "பிரிந்தவனைக்கண்டபோது அவன் தோஷம்தோற்றாது" என்கைக்குக் குறள் - காணுங்கால் இத்யாதி. "காணுங்கால் - தவறுய - காணேன்; காணுக்கால் - தவறல்லவை - காணேன்" என்றந்வயம். இதுக்கர்த்தம்: அவனைக்கண்டால் தோஷமானவை காணேன். காணவிட்டால் தோஷமல்லாதவை காணேன் என்று. தவறு - குற்றம். "நெடுங்கண்கள்" என்றுவைத்து, "பனிமல்க" என்றதுக்குபாவம் - இக்கண்ணில் இத்யாதி. "ஜலதத்வமுண்டாவதே" என்கைக்குஇவளறிந்தபடியென்? என்னில்; இவள்ப்ரக்ருதியைவிட்டு வர்த்தவத்கரிக்கிறாள் என்றுகருத்து. வர்த்தமாநார்த்தம் - மாறாதே இத்யாதி. இதுக்குத்ருஷ்டாந்தம் - கிண்ணகத்தில் இத்யாதி. "நையும்" என்றத்தையுங்கூட்டிப்பதச்சேர்த்திக்குபாவம் - நெஞ்சுக்கு இத்யாதி. "கண்டு - பனிமல்க" என்றபதச்சேர்த்திக்குபாவம் - காணப்புகக்கொண்டு இத்யாதி. ஆநந்தாஶ்ரு நல்லதன்றோ? அத்தை "பகை" என்னலாமோ? என்ன - ஆநந்தாஶ்ருவோடு இத்யாதி. "கண்டு" என்று தொடங்கி - இவள்படிகளைச்சொல்லுகிற தாயாருடைய ஹார்த்தபாவம் - த்ரஷ்டவ்ய இத்யாதி. (கூ)

## ஏழாம் பாட்டு.

மல்குநீர்க்கண்ணோடு மையலுற்றமனத்தனளாய்
அல்லும்நன்பகலும்நெடுமாலென்றழைத்து இனிப்போய்
செல்வம்மல்கிஅவன்கிடந்ததிருக்கோளூர்க்கே
ஒல்கியோல்கிநடந்து எங்ஙனேபுகுங்கொலோசிந்தே?

ஆ.—(மல்குநீர்.) - எம்பெருமானைக்கண்டு ஸம்ஶ்லேஷிக்கைக்காக க்லுப்தமாக வரும் அந்தகாலமெல்லாம் அவனோடு ஸம்ஶ்லேஷிக்கப் பெறாமையாலே கண்ணீர் மல்கி, நெடுமால்! நெடுமால்! என்றழைத்து, இனி, இவள் தன்னுடைய விரஹவ்யஸநத்தாலும் ஸௌகுமார்யத்தாலும் அதிமாத்ரம் அவஸந்நையாய் பரிம்லாநையாய்க்கொண்டு, செல்வம்மல்கி அவன்கிடந்த திருக்கோளூர்க்கே நடந்துபோய்ப் புகும்படியைக் காணப்பெற்றிலேன் என்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், இவள் ப்ரக்ருதி மார்த்தவத்தையும் எம்பெருமானைப் பிரிந்து ஶிதிலையாயிருக்கிறபடியையும் அநுஸந்தித்து, இவள்புக்கால் படும்படியை அநுஸந்திக்கவேண்டுவது அவள் அவ்வளவும்சென்று புகவல்லளாகில்லீறே என்கிறாள்.

[மல்கு என்று தொடங்கி] - ஶோகத்துண ஸ்மரணத்தாலே நீர்துளும்பாநின்ற கண்ணையும் அநுஸந்தாநம்பண்ணவொண்ணாதபடி அறிவுகெட்ட மநஸ்ஸையும் உடையவளாய், அல்லாதார்க்குப்போலே வ்யர்த்தமே போகிறகாலமெல்லாமையாலே, ஶ்லாக்யமான பகலும் இரவும் அதிவ்யாமுக்தனே! என்று கூப்பிட்டு இதுக்குமேலே ஒரு புருஷார்த்தம் தேடிப்போய். [செல்வம் மல்கி என்று மேலுக்கு] - ஐஶ்வர்யம்மிக்கு அவன் கிடந்த திருக்கோளூர்க்கே தன்னுடைய ஶைலஹாநியாலே தளர்ந்து வாடிவாடி எங்ஙனேபோய்ப் புகக்கடவள்?

ப.—அநந்தரம், இவள்காண்கைக்கும் உகக்கைக்கும் அடியான அதிஶயித வ்யாமோஹத்தையுடையவனை வாய்புலற்றிக்கொண்டு வருந்தி நடந்துபோய் எங்ஙனே அவ்வூரிலே புகுவது? என்கிறாள்.

மல்கு - (விரஹத்தாலே)மிக்க, நீர் - நீரையுடைத்தான, கண்ணொடு - கண்களோடே, மையல் - ப்ரமத்தை, உற்ற - அடைந்த, மனத்தனள் ஆய் - நெஞ்சையுடையளாய், (இப்படி பாஹ்யாப்யந்தர கரணங்கள் அவிதேயமாயிருக்க, ப்ராவண்யவாஸநாதிஶயத்தாலே), நன்-(அவனைச் சொல்லுகைக்குறுப்பான) நன்மையையுடைய, அல்லும்-இரவும், பகலும் - பகலும், நெடுமால் - அதிஶயிதவ்யாமோஹத்தை யுடையவனே! என்று - என்று, அழைத்து - கூப்பிட்டு, இனி - அவ்வார்த்திக்குமேலே, ஒல்கி-ஒடுங்கி, ஒல்கி - அசைந்து, நடந்து - நடந்து, ஓசிந்து - தளர்ந்து, போய் - போய், செல்வம் மல்கி - அபிவ்ருத்தைஶ்வர்யனாய்க்கொண்டு, அவன் - அவன், கிடந்த - கண்வளர்ந்தருளின, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, எங்ஙனே - எங்ஙனே, புகுங்கொல் - புகக்கடவளோ? ஓசிவு-தளர்த்தி, ஒல்குதல் - ஒடுக்கமாய், அசைதல்.

இ.—ஏழாம்பாட்டில், இவள் ப்ரக்ருதிமார்த்தவத்தையும், பிரிவால் வந்த சைதில்யத்தையும் அநுஸந்தித்து, இவையெல்லாம் அவ்வளவும் செல்லப்போகவல்லளாகிவிடுமே என்கிறாள்.

[மல்குநீர் இத்யாதி] - பகவத்குண ஸம்ருதியாலே நீர்மல்கின கண்களையும், அநுஸந்திக்கவொண்ணாதபடி அறிவுகெட்ட மநஸ்ஸையும் உடையளாய், உள்ளும்புறம்பு மொக்க இருண்டுகிடக்க, எங்ஙனேபோம்படி? கண்ணநீராலே பதார்த்த தர்சநமில்லை: திக்ப்ரமமுண்டாம்படியாக வாய்இருண்டது. நல்ல இரவும் நல்ல பகலும், மநஸ்ஸஹ காரமுமின்றிக்கேயிருக்க, அதிவ்யாமுக்த்தனே! என்று கூப்பிடாநின்றாள். இழவிலும் அவ்விஷயத்தையே சொல்லிக் கூப்பிடுகையாலே ப்ரலாபமான காலம் என்கிறாள். தன் வ்யாமோஹத்தைக் காட்டியிறே இவளை யலவலையாக்கிற்று. [இனிப்போய்]-அஹோ ராத்ரம் அவன் வ்யாமோஹத்தை அநுபவிக்கிற இவ்விடத்தைவிட்டு என்ன ஏற்றம் பெறப்போனாள்? "யயௌவக்ஷஸ்தலே ஹரே:" என்கிறபடியே இருட்சி கைகொடுக்க விறே போயிற்று. [செல்வம்மல்கி யவன்கிடந்த] - ஐஶ்வர்யம் மிறுங்க அவன்கிடந்த தேசம். "ஸ்ரீஸாநுஷக்தவக்ஷஸ்த்வத: வாரந்தவ:" என்ற கிடையழகு காணவாயிற்று இவள் போயிற்று. "கிடந்ததோர் கிடக்கை" என்னக்கடவதிறே. சாய்ந்தபோதாயிற்று அழகுமிக்கிருப்பது. [ஒல்கி யொல்கி] - ஒதுங்கியொடுங்கி; ஓரடியிடும்போது நடுவே பல கால் இளைப்பாறவேண்டும்படியிருக்கை. [ஒசிந்து] - துவண்டு எங்ஙனே போய்ப் புகக்கடவள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. இவள் ப்ரக்ருதிமார்த்தவத்தையும் பிரிவில்வந்த சைதில்யத்தையும் அநுஸந்தித்து, இவையெல்லாம் அவ்வளவும் செல்லப்போகவல்லளானவிறே யென்கிறாள். நாம் இலையகலப்படுக்கிறோமத்தனையொழிய, இவள் போய்முடியப் புகா நின்றாளோ?

[மல்குநீர்க்கண்ணொடு மையலுற்றமனத்தனளாய்]- "என்றேனும் கட்கண்ணாற் காணாத அவ்வுருவை நெஞ்சென்னும் உட்கண்ணேற்காணும்" என்னும்இரண்டுமொழிய

ஏழாம்பாட்டு.—மல்குநீர் இத்யாதி. "ஒல்கியொல்கி நடந்து - ஒசிந்து" என்கையாலே - ப்ரக்ருதிமார்த்தவம். "மல்குநீர்க்கண்ணொடுமையலுற்றமனத்தனளாய்" என்கையாலே - பிரிவில்வந்த சைதில்யம். இவையெல்லாமென்றது - கீழிற்பாட்டிற்சொன்ன அநுபவாதிகள். "எங்ஙனேபுகுங் கொல்" என்றத்தைப்பற்ற - அவ்வளவும்செல்ல இத்யாதி. 'போகவல்லளானவிறே - நாமிலையகலப் படுக்கிறோமத்தனையொழிய இவள் - முடிய - போய் - புகாநின்றாளோ - என்கிறாள்' என்றது அந்வயிப்பது. அன்றிக்கே, கீழ்வாக்யவிவரணமாதல் - நாம்இலையகல இத்யாதி. 'முடிய - போய் - புகாநின்றாளோ' என்றந்வயிப்பது.

"மல்குநீர்க்கண்" என்றும், "மையலுற்றமனம்" என்றும் விசேஷித்ததுக்குஹார்த்தபாவம் - என்றேனும் இத்யாதி. அதாவது - ஒருவற்குப்போம்போது பாஹ்யசக்ஷுஸ்ஸாலேயாதல் ஆந்தர சக்ஷுஸ்ஸாலேயாதல் போகவேணும்; இவையிரண்டும் இவளுக்குப்போகவொண்ணாதபடி பரவசமான பின்பு, இவள்எங்ஙனேபோகப்புகுகிறாள்? என்றுகருத்து. என்றேனும் - ஒருநாளும், கட்கண்ணால் காணாதஅவ்வுருவை - பாஹ்யசக்ஷுஸ்ஸால் காணவொண்ணாத வந்தத்திருமேனியை; நெஞ்சென்னு முட்கண் - நெஞ்சாகிற ஆந்தரத்ருஷ்டியானது; உணர்ந்து - அவன்படிகளையறிந்து. 'காணுமேல்' - ஸாக்ஷாத்கரிக்குமாகில்இத்யர்த்த:. பெரியதிருவந்தாதி இருபத்தெட்டாம்பாட்டு - "அன்றேநங்கண்"

இவளெங்ஙனேபோனபடி? கண் - மல்குநீர்க்கண்ணுமிற்று; மனம் - மையலுற்றமனமா யிற்று. அகவாயும் இருண்டு புறவாயும் இருண்டிருக்க, இவள்எங்ஙனேபோனபடி? கண்ண நீராலே கண்தோற்றுது; ப்ரேமாந்தையாகையாலே நெஞ்சு இருண்டதோற்றுது. [மல்குநீர்க் கண்ணொடுமையலுற்றமனத்தனளாய்] - இரண்டுக்கும் இரண்டும் நிருபகமாயிருக்கிறபடி. [மையலுற்றமனத்தனளாய் நெடுமோல் என்றழைத்து] - நெஞ்சொழியவே தான் கூப்பிட்டது. [அல்லு நன் பகலும்]- பகவத்விஷயத்திலே அவகாஹித்துக் கூப்பிடுகிற காலமாகை யாலே, நல்லிரவும்நன்பகலும்என்கிறாள். நாட்டார் க்ஷுத்ரவிஷயங்களை ஆசைப்பட்டுக் கூப்பிடாநிற்க, "எல்லாங்கண்ணன்" என்று கூப்பிடுகிறநாளிறே. [நெடுமால்என்றழைத்து]- அவன் தன்பக்கல் பிச்சேறியிருக்கும்படியைச் சொல்லிக்கூப்பிட்டு. [இனிப்போய்]-அவன் தன்பக்கல் பண்ணும் வ்யாமோஹத்தைச் சொல்லிக் கூப்பிடும் இதுக்குமேலே தன் வ்யா மோஹங்காட்டப்போனாளே. கண்ணுந்தோற்றுதே நெஞ்சும் பழியுண்டிருக்கும் இதுக்கு மேலே, இனிப்போய், வேறேயொன்றுண்டோ அநுபவிப்பது? [செல்வம்மல்கி அவன் கிடந்ததிருக்கோளூர்க்கே] - எதிரே பாதிவழிவந்து முகத்திலேவிழித்து உடம்பிலே அணைத் துக்கொண்டு போகாதேயொழிந்தது ஐஸ்வர்யச்செருக்கிறே!ஐஸ்வர்யத்தால்வந்த செருக்குஅன் றாகில் இவ்வரவு அவனன்றோவருவான்? வழியேபிடித்து வாழ்ந்துகொண்டுபோகலாயிருக்க, செருக்காலே இழந்தா னென்கிறாள். [செல்வம்மல்கியவன்கிடந்த] - "ஸமயாபோதி தஃஶ்ரீமாந்" (ஸமயாபோதிதஶ்ஶ்ரீமாந்) என்கிறபடியே, அழகுமிக்குக்கிடந்த என்னவு மாம். [அவன்கிடந்த] - "ஸுகஸுப்தஃ" (ஸுகஸுப்தஃ) என்ற கிடையழகுகாண வாயிற்று இவள் ஆசைப்பட்டுப்போயிற்று: "கிடந்ததோர்கிடக்கை" என்னக்கடவதிறே. [அவன்கிடந்த] - அவன்வரவு பார்த்து இவள் இருக்கையன்றிக்கே, இவள்வரவு பார்த்து அவன்கிடக்கும்படியாவதே! [ஒல்கியோல்கிநடந்து]-ஓரடியிலே பத்தடியிட வேண்டும்படியா யிருக்கை. [ஒசிந்து] - துவண்டு. [ஒல்கியோல்கிநடந்து - ஒசிந்து - எங்ஙனேபுகுங்கொல்] - ஒடுங்கியொடுங்கிநடந்து, அதுபோறாமல் துவண்டு, எங்ஙனே புகக்கடவளோ? [நடந்தெங்

இத்யாதி. இரண்டும்போகவொண்ணாமைக்கு இலக்கேதென்ன - கண் மல்குநீர் இத்யாதி. விவ ரணம் - அகவாயும் இத்யாதி உபயமும்இருளுகைக்கு ஹேதுவேதென்ன - கண்ணநீராலே இத் யாதி. இப்படியிருக்குமது காதாசித்கமோ? என்ன - இரண்டுக்கும் இத்யாதி. மநஸ்ஸு ப்ராந்தி யையடைந்தால் அழைக்கக்கூடுமோ? என்ன - நெஞ்சொழிய இத்யாதி. விஶ்லேஷித்துக்கூப்பிடுகிற அஹோராத்ரங்களுக்கு நன்மையேதென்ன - பகவத்விஷயத்திலே இத்யாதி. அப்படி நல்லநாளோ? என்ன - நாட்டார் இத்யாதி. "மல்குநீர்" இத்யாதியோடேகூட்டி, "இனி" என்றதுக்கு பாவார்த்தம் - கண்ணுந்தோற்றுதே இத்யாதி. "அவன் - செல்வம்மல்கி - கிடந்த" என்கிற வெறுப்பால்வந்த ஹார்த்தபாவம் - எதிரே இத்யாதி. "செருக்கு" என்றதுக்கு நியாமகமேதென்ன - ஐஸ்வர்யத்தால் இத்யாதி. "எதிரே பாதிவழி" இத்யாதிவாக்யவிவரணம் - வழியேபிடித்து இத்யாதி. 'செல்வம்" என்றதுக்கு, அழகாகஅர்த்தாந்தரம் - ஸமயா இத்யாதி. "வாயஸேந தத்ஸ்தேநபலவக்நிஹ ஶாநயா। ஸமயாபோதிதஃஶ்ரீமாநுஸுகஸுப்தஃபரந்தபஃ" இதிஹநுமந்தம் ப்ரதிஸீதா. [ஸு-கா-அ-உசு] "செல்வம்" என்றதின் த்விதீயார்த்தத்துக்குச்சேர பாவம்-ஸுகஸுப்த இத்யாதி. அவன்கிடக்கை ஆகர்ஷகமாயிருக்குமோ? என்ன-கிடந்ததோர்கிடக்கை இத்யாதி. "செல்வம்" என்ற தின் முந்தினவர்த்தத்துக்குச்சேர பாவம் - அவன்வரவு இத்யாதி. வீப்ஸையாலே பலித்ததாத்பர்யம்- ஓரடியிலே இத்யாதி. "நடந்து எங்ஙனேபுகுங்கொல்" என்கிறவிடத்தில் வ்யதிரேகஸித்தமான பாவம் - நடந்திலளாகில் இத்யாதி. நடந்திலளாகில் போய்ப்புகலாம் என்றது - நடவாதபோதெப்படி புகப்போகாதோ, அப்படியே நடந்தாலும் போய்ப்புகமாட்டாள் என்றபடி. நடந்தால்போகமாட்

னனேபுகுங்கோல்] - நடந்திலளாகில், போய்ப்புகலாமென்றிருக்கிருள்காணும். * அன்ன மென்னடைப்பூங்குழலியாகையாலே, இவ்வன்னநடைகொண்டு புகமாட்டாள் என்றிருக்கிருள். (ஐ

---

## எட்டாம் பாட்டு.

---

ஒசிந்தநுண்ணிடைமேல் கையைவைத்துநொந்துநொந்து
கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச்செல்லுங்கொல் ?
ஒசிந்தவொண்மலராள்கொழுநன்திருக்கோளூர்க்கே
கசிந்தநெஞ்சினளாய் எம்மைநீத்தஎம்காரிகையே.

**ஆ.**—(ஒசிந்த.) - வண்டாலே துகையுண்ட பூமாலைபோலே எம்பெருமானோடுள்ள கலவியாலே ஒசிந்ததிருமேனியையுடைய பிராட்டியோடே திருக்கோளூரிலே அவன் கண்வளர்ந்தருளுகிறபடியைக் காணவேணுமென்னும் ஆசையாலே என்னை பொகட்டுப்போன என் காரிகை, வ்யஸநத்தாலே மெலிந்தநுண்ணிடைமேலே ச்ரமாதிசயத்தாலே கையைவைத்து நொந்துநொந்து கண்ணீர்துளும்ப, அவ்வபிநிவேசமே துணையாக, அவ்வூரிலேபுக்குமுடியவல்லளேயோ? என்கிருள்.

ஒ.—எட்டாம்பாட்டில், திருக்கோளூரில் ஸங்கத்தாலே என்னைப் பொகட்டுப்போன என்பெண்பிள்ளை, அஸ்ஸங்கமே துணையாக அங்கேபோய்ப் புகவல்லளேயோ! என்கிருள்.

[ஒசிந்த என்று தொடங்கி] - துவண்டு நுண்ணிதாயிருக்கிற இடைமேலே தன்னுடைய ச்ராந்தியாலே கையைவைத்து மிகவும் அவஸந்நையாய். [ஒசிந்த ஒண் மலராள் கொழுநன்] - தன்னோட்டை ஸம்ச்லேஷத்தாலே துவண்ட திருமேனியையுடைய பெரிய பிராட்டியார்க்கு நாயகனானவன். இத்திருவாய்மொழியில், பலவிடத்திலும் "என்பெண்பிள்ளை" என்று சொல்லுகைக்குக் காரணம்:—அவள் நசையற்றாலும் அவள்மேல் தனக்கு நசையறுமை.

ப.—அநந்தரம், நிரதிசயபோக்யபூதையான லக்ஷ்மிக்கு நித்யாபிமதனானவனுடைய வூரிலே ஸக்தையாய் என்னைவிட்டவள், தத்ஸங்கமே ஸஹாயமாக அங்கேசென்று புகவல்லளோ? என்கிருள்.

ஒசிந்த - (ரஸிகப்ரமரோபபுக்தையான புஷ்பாவளிபோலே ஸம்போகத்தாலே) துவண்ட, ஒண் - வைலக்ஷண்யத்தையுடைய, மலராள் - பத்மவாஸிநிக்கு, கொழுநன் - (அபிமததமனான) நாயகனுடைய, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, கசிந்தநெஞ்சினளாய் - ஆர்த்ரசித்தையாய், எம்மை - என்னை, நீத்த-விட்ட, எம்காரிகை - அழகுடையான என்பெண்பிள்ளை, ஒசிந்த - பண்டேதளர்ந்த, நுண்-மெல்லிய, இடைமேல் -

---

டாளோ ? என்ன - அன்னமென்னடை இத்யாதி. அன்னம்போன்ற ம்ருதுவான நடையையுடையவளாய், தர்சநீயமான குழலையுடையவள் என்றபடி. திருமொழி பதினோராம்பத்து இரண்டாந்திருமொழி அஞ்சாம்பாட்டு - "அன்னமுனிவதும்" இத்யாதி. (எ)

இடையின்மேலே, (தன் இளைப்பாலே), கையை-கையை, வைத்து-வைத்து, (அதுதானே யடியாக), நொந்துநொந்து - மேன்மேலும் நொந்து, கசிந்தநெஞ்சினளாய் - நெஞ்சிலீரப் பாடே துணையாகவுடையளாய், கண்ணநீர் - கண்ணநீர், துளும்ப - அலையும்படி, செல் லுங்கொல் - சென்றுவிடக்கூடுமோ?

இ.—எட்டாம்பாட்டில், திருக்கோளூரில் ஸங்கத்தாலே என்னைப் பொகட் டுப்போனவள், அஸ்ஸங்கமே துணையாக அங்கேபோய்ப் புகவல்லளோ? என்கிறாள்.

[ஒசிந்த நுண்ணிடைமேல்] - தொட்டார்மேலே தோஷமான நொய்ம்மை. அதுக்குமேலே ஸ்தநபாரத்தாலே வந்த துவட்சி. அதின்மேலே, [கையை வைத்து] - ஶ்ராந்தியாலே இடையிலே கையைவைத்தாள்; அது பொறுமையாலே ஶ்ராந்திஹேது வாயிற்று. [நொந்து நொந்து] - மிகவும் அவஸந்நையாய். பலஹாநியைப் பரிஹரிக் கைக்காக விளைவதறியாதே செய்தாள்; அத்தாலே பலஹாநியை விளைத்தாளாய்விட் டது. [கசிந்த நெஞ்சினளாய்]-நெஞ்சில் பலஹாநியிருக்கிறபடி. [கண்ணநீர் துளும்ப]- நெஞ்சை நோவுபடுத்துகிற வகை யிருக்கிறபடி. [செல்லுங்கொல்] - அங்கேபோய்ப் புகவல்லளோ? [ஒசிந்த ஒண்மலராள் கொழுநன்] - வண்டாலே ஆத்தஸாரமான புஷ் பம்போலே, நித்யஸம்ஶ்லேஷத்தாலே துவண்டிருக்கிற பிராட்டிக்கு நாயகன். இரு வருடையவும் சேர்த்தியாயிற்று இவளைக் கொண்டுபோயிற்று. அவனுடைய ப்ரண யத்வமிறே இவளையிருக்க வொட்டாதொழிந்தது. திருக்கோளூரிலே ஸங்கத்தைப்பண் ணின நெஞ்சையுடையவளாய். [எம்மை இத்யாதி] - என்னைப் பொகட்டுப்போன என் பெண்பிள்ளை தன்னை ஸங்கஸித்துப்போனபின்பும் தன் சாபலத்தாலே ஒருதலைவிடா தொழிகிறாள். [கசிந்த நெஞ்சினளாய் எம்மைநீத்த எங்காரிகை - கசிந்தநெஞ்சினளாய் செல்லுங்கொல்] - அங்குத்தை ஸங்கம் என்னோட்டை உறவறுக்குமித்தனையோ! அங்கேகொடுபோகவும்வற்றோ!

ஈடு.—எட்டாம்பாட்டு. திருக்கோளூரில் ஸங்கத்தாலே என்னைப்போகட்டுப் போன என்பெண்பிள்ளை, அஸ்ஸங்கமே துணையாகப் போய்ப் புகவல்லளேயோ? என்கிறாள்.

[ஒசிந்தவித்யாதி] - இவள் நடவாதேயிருந்தாலும், நினைத்தால் வயிறெரிய வேண்டும்படி கிடீர் இடையிருப்பது! [நுண்ணிடைமேல் கையை வைத்து] - நடுவோன் றில்லையென்று அறிகிறிலள். தன் கையை வைக்கவும் பொறுதிறே தன்னிடைதான்; "மின் னையும் வஞ்சியையும் வென்றிலங்குமிடையாள்" என்று, அவன் கூடப்போகச்செய்தேயும் அஞ்சவேண்டும்படியான இடையிறே. ஒசிந்து - துவண்டு. நுண்ணிதாய் நேரிதான இடை. பலசொல்லியென்? நடுவோன்றில்லை என்கை. அதாவது - "இற்றது, முறிந்ததுஇப்போது,

எட்டாம்பாட்டு—ஒசிந்த இத்யாதி. "ஒசிந்தவொண்மலராள்கொழுநன்" இத்யாரப்ய, "எங் காரிகை" என்னுமளவும் சடாக்ஷித்து - திருக்கோளூரில் ஸங்கத்தாலே இத்யாதி. "கசிந்தநெஞ்சின ளாய்க் கண்ணநீர் துளும்பச்செல்லுங்கொல்" என்றதைச்சடாக்ஷித்து - அஸ்ஸங்கமே துணையாக இத்யாதி.

"துவண்டு நுண்ணியவிடை" என்கிறவருடைய ஹார்த்தபாவம் - இவள் நடவாதே இத் யாதி. நுண்மையைச் சொல்லுகிறவருடைய ஹார்த்தபாவம் - நடுவோன்றில்லை இத்யாதி. இத்தால் பலிதம் - நன்கையை இத்யாதி. அதுக்குஹேதுவேதென்ன - மின்னையும் இத்யாதி. மின்னையும்வஞ் சிக்கொம்பையும் தோற்பித்து விளங்காநின்ற இடையையுடையவ ளென்றபடி. திருமொழி- "அன்னை யும்" இத்யாதி (3,7,7). விசேஷணத்வயோபாதானத்துக்குபாவம் - பலசொல்லி இத்யாதி: ஆறு

பின்னை" என்று பயப்படவேண்டும்படியாயிருக்கை. [ஒசிந்தநுண்ணிடைமேல் கையை வைத்து] - இப்படி விழுக்காடறியாதார்உண்டோ! நாயகன் கைவைக்கப்போறுக்குமத்தனை போக்கித் தன்கைவைக்கப்போறுக்குமோ? *தோடுங்காலோசியும்இடையிறே. அடியே பிடித்துக் கரோபத்ரவம் கனத்திறேயிருப்பது. [கையைவைத்து]-மலைவைத்தேன்னுமாபோலே. [நொந்துநொந்து]-கைவாங்கமாட்டாள்; நோவாதிருக்கமாட்டாள். ஸஹஜஶத்ருக்களோடே கூடி ஜீவித்துக்கிடக்கலாம்; வந்தேறிகள்கீழ்பிழைக்கவோண்ணாதிறே! [நொந்துநொந்து] - மிகவும்நொந்து: முதலிலே அஹாவத்திலே நிலையான இடையிலே ஸ்தநபாரங்கோண்டு ஆற்றவோண்ணாதிருக்க, வந்தேறியான கைகோண்டு போறுக்கவோண்ணுமோ? [கசிந்தநெஞ்சினளாய்]-இடையினுடைய நோய்ம்மைசொல்ல, நெஞ்சோதான் சாலப்பருத்திருக்கிறது? நெஞ்சில் ஈரமிருக்கிறபடி. [கண்ணநீர்துளும்ப] - இது தனக்கும் ஊற்றிறே அது.[செல்லுங்கோல்] - இனி ஸர்வதா மீளாளிறே. வழியில் மிறுக்குக்கள் கழித்துப்புகவல்லளோ? [ஒசிந்த இத்யாதி] - பிரிந்தார்துவட்சிசோல்லுகைக்குக் கலந்தாரோ தான் துவளாதேயிருக்கிறார்? வண்டாலே ஆத்தஸாரமாயிருக்கிற பூப்போலேகாணும் நித்யஸம்ஶ்லேஷத்தாலே துவண்டிருக்கும்படி. ஒண்மலராள் கோழுநன்உண்டு, அவளுடையவல்லபன்: அவனுடைய திருக்கோளூர்க்கே. [கசிந்தநெஞ்சினளாய்] - ஸஸ்நேஹமான மநஸ்ஸையுடையளாய். பற்றுகைக்கு அவ்வூரேயாகவமையும், விடுகைக்குத்தாயாகவமையும். [ஒண்மலராள்கொழுநன் திருக்கோளூர்க்கே கசிந்தநெஞ்சினளாய்] - அவனுடைய ப்ரணயித்வத்திலே அகப்பட்ட

---

லொன்றுமில்லையோ? என்ன - அதாவது இத்யாதி. 'இப்போது பின்னை - இற்றது, முறிந்தது' என்று அந்வயிப்பது. "கையைவைத்து" என்றதிக்குபாவம் - இப்படி இத்யாதி. விழுக்காடு - மேல் வரும் கார்யம். அப்படி தன் கை பொறுதிருக்குமோ? என்ன - தோடுங்கால் இத்யாதி. தொடுமளவில் முறியுமிடை இத்யர்த்தஃ. திருவிருத்தம், "கொடுங்காற்சிலையர்" என்கிறபாட்டு. இதுக்குசாடு - அடியே பிடித்து இத்யாதி. * பொய்ந்நின்றஞானமே பிடித்தென்றபடி: சாம் - பகுதியம். "வைந்து" என்றதுக்குபாவம் - மலைபை இத்யாதி. வீப்ஸைக்குபாவம் - கைவாங்க இத்யாதி. மாட்டாமைக்கு ஹேதுவேதென்ன - ஸஹஜ இத்யாதி. ஏதத்விவரணம் - முதலிலே இத்யாதி. ஒசிந்த துவண்ட நுண்ணிடைமேல் - ஸூக்ஷ்மமான இடையின்மேலே இத்யர்த்தஃ. கசிந்தநெஞ்சினளாய் - ஆர்த்ரமான நெஞ்சையுடையளாய் இத்யர்த்தஃ. "கசிந்த" என்று - நெஞ்சினுடைய ஆர்த்ரதையைச்சொல்லுகிறவளுடையஹார்த்தபாவம் - இடையினுடைய இத்யாதி. நொய்ம்மை - ஸௌக்ஷ்ம்யம். காயபலமில்லையென்கைக்கு மநோபலமுண்டாயிருக்கிறதோ? என்றபடி. "நொந்துநொந்து" என்றும், "கசிந்த நெஞ்சினள்" என்றும் - காயபலமும், மநோபலமுமில்லையென்கிறது. "கசிந்த" என்றதுக்கர்த்தம் - நெஞ்சில் ஈரம் இத்யாதி. கசிவு - ஈரம். இதுதனக்கும் - கண்ணநீர்தனக்கும். அது - மநஸ்ஸை. மீளுகை ப்ரார்த்யமாயிருக்க, "செல்லுங்கொல்" என்கிறதென்? என்ன-இனி ஸர்வதா இத்யாதி. கசிந்தநெஞ்சினளாகையாலே, மீளாள் என்றபடி. ஒசிந்தவொண்மலராள்கொழுநன் - துவண்டிருப்பாளாய் அழகியதாமரைப்பூவை இருப்பிடமாகவுடையளான பெரியபிராட்டியாருக்கு வல்லபனானவனுடைய என்றுசப்தார்த்தம். பிராட்டியினுடைய துவட்சிசொல்லுகிறதுக்குபாவம் - பிரிந்தார் இத்யாதி. "வைஶ்லேஷிகஸ்ஸாம்ஶ்லேஷிகஸ்ஸந்தாபோ ஹி ஸதா" என்றத்தைபுட்கொண்டருளிச்செய்கிறார் - வண்டாலே இத்யாதி. "திருக்கோளூர்க்கேகசிந்த நெஞ்சினளாய் எம்மைநீத்த" என்கிற பதங்களால் பலித்தபாவமாதல், "திருக்கோளூர்க்கே" என்கிற அவதாரணத்துக்கு பாவமாதல் - பற்றுகைக்கு இத்யாதி அதாவது - ப்ராவண்யத்துக்கவதி ததீயபர்யந்தம்செல்லுகை, விரக்திக்கவதி தாயாரையும் விடுகை என்றபடி. "ஒண்மலராள்கொழுநன்" என்றதுக்கு இரண்டுபாவம். ப்ரணயித்வமாக முந்தினது - அவனுடைய இத்யாதி. ஸர்வாதிகத்வமாக இரண்டாம்பாவம் - ஒண்மலராள் இத்யாதி. இவளுக்கு.

வள் இனி மீளப்புகுகிறளோ? ஒண்மலராள்கொழுநன்என்று அவனுக்கு ஏற்றம் இருக்கிற படி. * திருமகளார் தனிக்கேள்வனென்னும் பெருமையுடையபிரானர். [எம்மைநீத்தவெங் காரிகையே] - அவளுக்கு இங்குள்ள மமகாரங் கழியக்கழிய, அதுதானே ஹேதுவாகா நின்றது திருத்தாயார்க்குப் பற்றுகைக்கு. பகவத்விஷயத்திலே அவகாஹிக்கையும்,வ்யதிரிக்த ங்களை விடுகைக்கெல்லை இவ்வளவாகையும், இப்படிவிட்டால் பின்பு அவர்கள் தாங் களே உத்தேஶ்யரென்னும் இடமுஞ் சொல்லுகிறது. புறம்புள்ளவற்றை விடப்பண்ணுவித் துக்கொண்ட விஷயத்தில் ஜ்ஞாநலாபமிறே இவளுக்குவேண்டுவது! இவள்ஸம்பந்தமே யிறே திருத்தாயார்க்கு வேண்டுவது! [கசிந்தநெஞ்சினளாய் எம்மைநீத்தவெங்காரிகை - ஒசிந்த ஒண்மலராள் கொழுநன் திருக்கோளூர்க்கே - கசிந்தநெஞ்சினளாய்க் கண்ணநீர்துளும்பச் செல்லுங்கொல்]-இவள் என்னைவிடும்படி பண்ணிக்கொண்ட விஷயத்தில் ப்ராவண்யமா னது அவ்வூரில் ப்ரவேசத்தையும் பண்ணிக்கொடுக்கவற்றன்றோ? 'எம்மைநீத்த' என்று நிஶ்ச யித்தாள்; 'செல்லுங்கொல்' என்று ஸம்ஶயியா நின்றாள்; ப்ரேமம் இரண்டையும் பண்ணிக் கொடுக்குமிறே: பாரவஶ்யத்தை விளைத்து இடையிலே போகடிலும்போகடும்; அன்றிக்கே, கொண்டுபோய்ப் போகடிலும் போகடுமிறே. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

காரியம்நல்லனகள் அவைகாணில் என்கண்ணனுக்கென்று  
ஈரியா யிருப்பாள் இதெல்லாங்கிடக்க இனிப்போய்  
சேரிபல்பழிதூஉய்இரைப்பத் திருக்கோளூர்க்கே  
நேரிழை நடந்தாள் எம்மையொன்றும்நினைத்திலளே.

*ஆ.—(காரியம்.) - அதிமநோஹரமான போக்யவஸ்துக்களைக்காணில், இவை யெல்லாம் என்கண்ணனுக்கென்று சொல்லாநிற்கும் இப்பெண்பிள்ளை, தனக்காக நாங்கள் கொண்டுவந்த போக்யபதார்த்தங்களையும் எங்களையும் ஒரு த்ருணமாக நினையாதே போகட்டு, லோகமெல்லாம் "இவள் தனியேபோனளோ" என்று பழிசொல்லி இரைக்கும்படியாகத் திருக்கோளூரிலே போனாள் என்கிறாள்.*

---

*நிர்வாஹகனுடையேற்றமோ? என்ன - திருமகளார் இத்யாதி. நீத்த - விட்ட. அவள் தன்னைவிடா நிற்க, இவள் "என்னுடையவள்" என்னக்கூடுமோ? என்ன - அவளுக்கு இத்யாதி. "கசிந்தநெஞ்சின ளாய், எம்மைநீத்த, வெங்காரிகை" என்கிற பதத்ரயத்துக்கும் ஸ்வாபதேசம் - பகவத்விஷயத்திலே இத்யாதி. உத்தேஶ்யர் - விடப்பட்டவர்களுக்கு உத்தேஶ்யரென்றபடி. "விடப்பட்டவர்களுக்கு விட்டவர்கள் உத்தேஶ்யர்" என்றுநின்றீர்; அவர்களுக்கு பகவத்ஜ்ஞாநலாபம்வேண்டாவோ? என்ன, அது மகளுக்கே: தாயார்க்கு இவள்ஸம்பந்தமேவேண்டுவதுஎன்கிறார் - புறம்புள்ளவற்றை இத்யாதி வாக்யத்வயத்தாலே. "கசிந்தநெஞ்சினளாய்" என்ற த்விருக்திக்கு ப்ரயோஜநங்காட்டுவதாக அந்வயங் காட்டுகிறார் - கசிந்தநெஞ்சினளாய் இத்யாதி. இந்த அந்வயத்தால் மாத்ருத்யாகத்துக் கொரு கசிவும், திருக்கோளூரில் ப்ரவேசத்துக் கொரு கசிவுமென்று த்விருக்திக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - இவள் என்னை இத்யாதி. த்யாகத்தை நிஶ்சயித்து, ப்ரவேஶத்தை ஸம்சயிக்கிறதுக்கு பரிஹாரமருளிச் செய்வாராக அதுதன்னை அநுபாஷிக்கிறார் - எம்மைநீத்த இத்யாதி. 'ஸம்சயியாநின்றாள்' - இதுக்கு ஹேதுவேதென்னில் என்று கூட்டுவது. பரிஹாரம் - ப்ரேமம் இத்யாதி. "இரண்டையும்" என் றது எவை? என்ன - பாரவஶ்யத்தை இத்யாதி. (அ)*

ஒ.—ஒன்பதாம்பாட்டில், எம்பெருமான் பக்கலிலே அத்யந்தம் ப்ரவணையாயிருக்கிற இவள், சேரியில் உள்ளார் சொல்லும்பழியே வழிக்கு பாதேயமாகக்கொண்டு திருக்கோளூர்க்கேபோனுள் என்கிருள்.

[காரியமென்று தொடங்கி] - முதலிலே ஒன்றும் அநுஸந்திக்கமாட்டாள்; அங்ஙனே இருக்கச்செய்தே, விலக்ஷணமான அவ்வவ பதார்த்தங்களை ஒருகால் அநுஸந்தித்தாளாகில் என் க்ருஷ்ணனுக்கு என்று மேலொன்றும் சொல்லமாட்டாதே நீராகா நிற்குமவள் இங்குஅவனை நினைத்திருக்கும்இருப்புகள் எல்லாம் தவிர அதுக்குமேலே ஒரு புருஷார்த்தம் தேடி. [சேரியென்று தொடங்கி] - தங்கள் சேரியிலுள்ளார் பலபழிகளைச் சொல்லி கோஷியாநிற்கத் திருக்கோளூரிலே பெண்பிள்ளை போனுள். திருக்கோளூர்க்குப் போகையாலே - தன் பெண்பிள்ளையேயாகிலும், நடந்தாளென்று ஸபஹுமானமாகச் சொல்லுகிருள். [எம்மையென்று தொடங்கி] - எம்மை தனக்கு ப்ரதிகூலகோடியிலும் நினைத்திலள்.

ப.—அநந்தரம், நல்லது கண்டால் தனக்கு ஸாலபனுன க்ருஷ்ணனுக்கு என்றிருக்குமவள், ஊரார்சொல்லும் பழியை மதியாதேபோனுளென்கிருள்.

நல்லனகள் - நன்ருய், காரியம் - செய்திப்பாட்டையுடைத்தான, அவை - பதார்த்தங்களானவற்றை, காணில் - காணில், என் - எனக்குபவ்யனுன, கண்ணனுக்கு - க்ருஷ்ணனுக்கு, என்று - என்று, ஈரியாய் - ஆர்த்ரஸ்வபாவையாய், இருப்பாள் - இருப்பாளாய், நேர் - மெல்லிய, இழை - ஆபரணத்தையுடையளான இவள், இது - ததர்த்தமாகத் தான் ஸங்கல்பித்த இவ்விபூதி, எல்லாம் - எல்லாம், கிடக்க - கிடந்த, இனி - பின்னையும், போய் - விட்டுப்போய், சேரி - சேரியில்உள்ளார், பல் - பலவகையும், பழி - பழி, தூஉய் - தூற்றி, இரைப்ப - கோஷியாநிற்க, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, நடந்தாள் - நடந்துசென்ருள்; எம்மை - என்னையும், ஒன்றும் - ஒருபடியும், நினைத்திலள் - நினைத்திலள். ஊராராகவும் நினைத்திலள்; உடன்பாடையாகவும் நினைத்திலள் என்று கருத்து.

இ.—ஒன்பதாம்பாட்டில், அவன்பக்கல் அத்யந்தம் ப்ரவணையாயிருக்கிற இவள், சேரியிலுள்ளார்பழியே பாதேயமாகத் திருக்கோளூர்க்கே போனுள் என்கிருள்.

[காரியம் நல்லனகள் அவைகாணில்] - பதார்த்தங்களில் நன்றானவற்றைக் காணில். [என் கண்ணனுக்கென்று] - ஒன்றிலும் கண்வைப்பதில்லை ; கண்டாளாகில், எனக்காகத் தன்னை யோக்கிவைத்த க்ருஷ்ணனுக்கென்னும். [ஈரியாயிருப்பாள்] - "க்ருஷ்ணனுக்கு" என்றால் மேலொன்றுஞ்சொல்லமாட்டாதே, அவன் குணங்களை அநுஸந்தித்து நீராயிராநின்ருள். ஈரித்திருக்கும் - ஆர்த்ரஹ்ருதையையாயிருக்கும். [இதெல்லாங்கிடக்க] - விலக்ஷணபதார்த்தர்சநத்தில் "அவனுக்கு" என்கை, அவன் குணாநுஸந்தாநத்தாலே விக்ருதையாகை, இவற்றை அளவிறந்தஸம்பத்தாக நினைத்திருக்கிறாள் இவள். கண்டத்தை "எனக்கு" என்று இராதே, "அவனுக்கு" என்றிருக்கையிறே ஸம்பத்து. [இனிப்போய்] - ஸாவஹாத்தியாலே †துஷ்டனுமவனுக்கொன்று செய்யப் புறப்பட்டுப்போனுளோ? இத்தலையிலுள்ளதொன்றில்லை, அவனுக்கு வேண்டுவதொன்றில்லை,"சேரியிலுள்ளார்பழிகளைச்சொல்லி, கடல்கிளர்ந்தாற்போலேகோஷிக்க. [பல்பழி] - போகநினைத்தாள்," புறப்பட்டாள்," "தனிவழியே போனுள்," "தாயைப் பொகட்டுப்

† துஷ்டன்-மகிழ்பவன்.

போனாள்," "குலத்தைப் பார்த்திலள்," "அவனைப் பார்த்திலள்" என்றாற்போலே. [நேரிழை இத்யாதி] - திருக்கோளூரிலே போகையாலே போனாள் என்னாதே, நடந்தாள் என்கிறாள்; வயிற்றிற்பிறந்தாரேயாகிலும் ஸ்ரீபகவத்விஷயத்திலே போரடிவரநின்றால் ஸம்பாவித்து வார்த்தைசொல்ல வேணும்என்கை. [எம்மையொன்றும் நினைத்திலளே] - வழித்துணையாக நினைத்திலள்; அங்கே நின்று எதிர்கொள்ளுவாரிலே ஒருத்தியாக நினைத்திலள்; பழிசொல்லுவார் கோடியாகவும் நினைத்திலள்; "ஸ்ரீமுரவஞ் கிம்கரிஷ்யதி" என்றும் நினைத்திலள்.

எ௫.—ஒன்பதாம்பாட்டு. அவன்பக்கலிலே அத்யந்தப்ரவணையாயிருக்கிற இவள், சேரியிலுள்ளார்சொல்லும்பழியே பாதேயமாகத் திருக்கோளூர்க்கே போனாளென்கிறாள்.

[காரியம்நல்லனகள் அவைகாணில்] - முதலிலே காண்பதில்லை; பதார்த்தங்களில்நல்லதுகாணில், தன்னை எனக்காக ஒக்கிவைத்த க்ருஷ்ணனுக்குஎன்னப்புக்கு அந்த ப்ரஸ்தாவத்திலே நெஞ்சுநெகிழா, பின்புஅதுதானும் மாட்டாதேயிருக்கும். "த்ருஷ்ட்வாபலம்வா புஷ்பம்வா" (த்ருஷ்ட்வாபலம்வாபுஷ்பம்வா) என்று அவன் சொல்லுமவையெல்லாம் இவள்சொல்லுகிறபடி. நல்லதுகண்டால், "அவனுக்கு" என்று இருக்குமதுக்குமேலே அவ்வருகேயொன்று தேடிப்போனாளே! இவளுக்காகத் திருக்கோளூரிலே வந்து, தன்னை இவளுக்கோக்கிவைத்தபடி. [இதெல்லாங்கிடக்க]-"ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய" (ஸர்வாந்போகாந்பரித்யஜ்ய) என்னுமாபோலே. "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன்" என்றும், *ஊரும்நாடும்உலகமுந்தன்னைப்போல்அவனுடைய பேருந்தார்களுமே பிதற்றக் கற்புவானிடறியும், * பூவைபைங்கிளிகள் பந்துதூதை பூம்புட்டில்கள் யாவையும் திருமால் திருநாமங்களே கூவியெழுந்தும், * காரியம்நல்லனகள் அவை காணில் என்கண்ணனுக்குஎன்று ஈரியாயிருக்கும் இதெல்லாங்கிடக்க-இந்தநிரவதிக ஸம்பத்துக்கிடக்க. [இனிப்போய்] - "தனக்கு" என்கிற ப்ரதிபத்தி மாத்ரத்திலே உண்டறுக்க மாட்

ஒன்பதாம்பாட்டு - காரியம் இத்யாதி. "கண்ணனுக்கென் றீரியாயிருப்பாள், சேரிபல்பழி தூஉய் இரைப்ப" இத்யாதிகளைக்கடாக்ஷித்தவதாரிகை - அவன்பக்கலிலே இத்யாதி.

ப்ரியத இதிகாரியமென்று, கார்யசப்தத்தாலே - பதார்த்தங்களைச்சொல்லுகின்றது. நல்லனகளவைகாணில் - நன்றானவற்றைக்காணில் என்றபடி. ஒக்கிவைக்கை - ஆக்கிவைக்கை. அவன் சொல்லுமவையெல்லாம் - அவன் தன்னைப்பிரிந்து சொல்லுமவையெல்லா மென்றபடி. "த்ருஷ்ட்வாபலம்வாபுஷ்பம்வா யச்சாந்யத்ஸுமனோஹரம். ஸஹஸாஸோஹாவிஸ்யேதே த்வம் ஸ்வஸம் ஸாஹிஹாஷிதே" இதி ஸீதாம்ப்ரதி ஹநுமான். "இனி" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் - நல்லதுகண்டால் இத்யாதி. "என்கண்ணன்" என்கைக்கு அவன்செய்தவுபகாரமேதென்ன - இவளுக்காக இத்யாதி. "இதெல்லாங்கிடக்க" என்றதுக்குஇரண்டர்த்தம்: முந்தினது,'ஸர்வாந்போகாந்' இத்யாதி. அதாவது - "ஸர்வாந்போகாநுபரித்யஜ்ய" என்னுமாபோலே, லீலோபகரண போகோபகரணங்கள் முதலான ப்ராக்ருதப்ராக்ருதங்களெல்லாங் கிடக்கவென்றபடி. "உண்ணுஞ்சோறு" என்றதொடங்கி, கீழிற்பாட்டுக்களிற்சொன்ன பகவத்ப்ராவண்யமெல்லாங்கிடக்க என்று. இரண்டாமர்த்தம்-'உண்ணுஞ்சோறு' இத்யாதி. முந்தினவர்த்தத்துக்கு, "எல்லாம்" என்று - அநுக்தமானவற்றைச்சொல்லுகிறது. "கிடக்க" என்றதுக்குபாவம் - இந்தநிரவதிக இத்யாதி. "நல்லது கண்டால் அவனுக்கென்றிருக்கும் அதுக்குமேலே" என்னாநின்றாய், இம்மாத்ரமே யமையுமோ? அவற்றைக் கொடுக்க வேண்டாவோ? என்ன - "தனக்கு"என்கிற இத்யாதி. உண்டறுக்கமாட்டாதவனுக்கு-த்ருப்

டாதவனுக்கு ஒன்றுகொடுத்துக் குறைதீரப்போனுளே. ''தே-பூயிஷ்டா''(தே-பூயிஷ்ட்டாம்) என்றிறே அவனிருப்பது. அவன்படியை நினைத்தால், இவளுக்கு இங்கேயிருக்க அமையாதோ? [சேரிபல்பழிதூஉயிரைப்ப] - போகடும்வழித்துணைபெற்றவாறே போனுளைத் தனை. ஒருவர் இருவரன்றே! இனியோருவர் சொல்லிற்றொருவர் சொல்லார்களிறே. [பல்பழி தூஉயிரைப்ப] - தன்னை அவனுக்குஆக்கிவைத்தாள்; பின்னையதுதானும் மாட்டிற்றிலள்; புறப்பட்டுப்போனுள்; தாயைப்பார்த்திலள்; ஊரார்பழிபார்த்திலள்; இத்தனையும் செய்தால் அவன்தான் எதிரேவரப்பெற்றதில்லை என்று இப்புடைகளிலே ஒருகோடியிறே சொல்லுவது. † ''அலரெழிலாருயிர்நிற்கும்'' என்று வழிக்கு யாரகமாமிறே. [நேரிழை நடந்தாள்]-கடைப் பணிக்கூட்டங்கண்டு கொண்டு பின்னேபோகவாகாதேதான் இவள்ஆசைப்படுகிறது. [நடந் தாள்] - தன் பெண்பிள்ளையேயாகிலும், ''திருக்கோளூரிலேபோக'' என்றுநாலடி புறப்பட்ட இவளை இங்ஙனல்லது சொல்லவொண்ணுதிறே. தன்மகளை யெங்ஙனே கனக்க நினைத்திருக் கிருள்தான்! வயிற்றிற்பிறக்கவுமாம், ஶிஷ்யர்களாகவுமாம்: ஭கவத்விஷயத்தில் ப்ரத்யா ஸந்நர்உத்தேஶ்யராமத்தனை. ஒருநாள் நம்பிள்ளையை, சீயர், கோஷ்டியிலே வைத்துப் போரக்கொண்டாடியருளி, ''தன் சிஷ்யனைத்தான் கொண்டாடாநின்றான்'' என்றிராதேகிடீர் கோள்! 'கணபுரங்கைதொழும்பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப்பெறுவரே' என்று பண்டு சொன்னுரும்உண்டுகிடீகோள்'' என்றருளிச்செய்தார். அம்முணியாழ்வான், தன் சிஷ்யனைத் தான் தண்டனிடாநிற்குமாம்; ''இதுவென்?'' என்றுகேட்க, ''அல்லாத வைஷ்ணவர்களை வ்ருத்தத்தாலே அறியவேணும்; இவர்கள் நானறிய வைஷ்ணவர்கள் என்றுஆதரிப்பன்'' என் றான். [எம்மையொன்றும் நினைத்திலளே] - வழிக்குத் துணையாகத்தான் கொடுபோகா விட்டால், ஸ்மரிக்கத்தானுகாதோ? [ஒன்றும் நினைத்திலளே] - எதிர்கோள்வாரிலே சிலராக வாதல், வழித்துணையாவாரிலே சிலராகவாதல், ஏதேனும் ஓராகாரத்தாலேதான் நினைக்க

தனுய் ''இவனுக்கொன்றும் செய்யப்பெற்றிலோம்'' என்று இழவுபட்டிருக்குமவனுக்குஎன்றபடி. ''இப் படியவனிருக்கும்'' என்னுமதுக்குப்ரமாணம்-தே பூயிஷ்ட்டாம் (யஜுர். காட. ப்ர-க. 4) இத்யாதி; இத்தால்பலிதம் - அவன்படியை இத்யாதி. ''நடந்தாள்'' என்றத்தையுங்கூட்டிபாவம் - போகடும் இத்யாதி. அதாவது- பழிதூவுகை; இவள் ''மறப்பேன்'' என்றவன்றும் மறக்கவொண்ணுதபடி அவனை ஸ்மரிக்கைக்கு ஹேதுவாகையாலே, இது, இவளுக்கு வழித்துணையாய்ப்போகைக்கு ஹேதுவாயிற்று என்று கருத்து. போகடும் - கொடுபோய்விடும். ''சேரி'' என்றதுக்குபாவம் - ஒருவரிருவர் இத்யாதி. சேரி-ஊராக என்றபடி. ''பல்பழி'' என்றதுக்குபாவம் - இனியொருவர் இத்யாதி. ஒருவர்சொல்லிற் றொருவர் சொல்லாமையைக் காட்டுகிறார் - தன்னையவனுக்கு இத்யாதி. பழி வழிக்குத்துணையோ? என்ன - அலரெழில் இத்யாதி. அலர் - பழி, எழில் - கிளம்பினுல். நேரிழை - ஶ்லாக்யமான ஆபா ணத்தையுடையவள் இத்யர்த்த: ''நேரிழை'' என்று ஆபரணத்தை வர்ணித்ததுக்குக் கருத்தேதென்ன - கடைப்பணி இத்யாதி. கடைப்பணிக்கூட்டம் - ஆபரணங்களினுடைய நுனிகூடினவிடம். பணி - ஆபரணம். கடை - நுனி. பிடரியில் கொக்குவாய்முதலான பூஷணங்களென்னுதல். தன்மகளை, போனுளென்னுதே ''நடந்தாள்'' என்று கௌரவித்துச்சொல்லுவானேன்? என்ன - தன்பெண் பிள்ளை இத்யாதி. தாயாரானவள் தன்மகளைஉத்தேஶ்யதாபுத்திபண்ணிக் கொண்டாடுகிறபடியை அநுஸந்தித்து வ்யாக்யாதாவின் ஈடுபாடு - தன்மகளை இத்யாதி. எல்லாமானுலும், தன்மகளைத்தான் கொண்டாடலாமோ? என்ன - வயிற்றில் இத்யாதி. சிஷ்யர்களை பகவத்ஸம்பந்தங்கொண்டு உத் தேஶ்யதாபுத்திபண்ணிக் கொண்டாடுமதுக்கு ஐதிஹ்யத்வயம் - ஒருநாள் இத்யாதி. ''நினைத்திலள்'' என்றதுக்குபாவம் - வழிக்குத்துணையாக இத்யாதி. 'ஒன்றும்'' என்றதுக்குபாவம் - எதிர்கோள் வாரிலே இத்யாதி. வழித்துணையாவார் - பழிசொல்லுவார். அவள் நினைத்தால் தனக்குப்ரயோஜநம்

† குறள்-1141.

லாகாதோ? ''அத்தலையில் நினைவே கார்யகரமாவது'' என்றிருக்கிறாள். ஐகவதாஸத்தியுடையாருடைய அபிமாநமே உத்தேஶ்யம். (௯)

---

## பத்தாம் பாட்டு.

---

**நினைக்கிலேன்தெய்வங்காள்! நெடுங்கணிளமான் இனிப்போய்**
**அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை**
**தினைத்தனையும்விடாள் அவன்சேர்திருக்கோளூர்க்கே**
**மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே.**

**ஆ.**—(நினைக்கிலேன்.) - தன் திருக்கண்களின் அழகாலே ஸர்வலோகங்களையுந்தோற்பித்து அடிமையாக்கிக்கொண்டிருக்கிறவனுடைய திருக்கண்களைக் கண்டல்லது ஒரு க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டாதிருக்கிற நெடுங்கண் இளமான்; இனி இது குடிப்பழி என்னுமிடமொன்றும் நினையாதே, அவன்சேர் திருக்கோளூர்க்கே போய்ப்புக்காள்; இவளைப்பிரிந்த வ்யஸநாதிஶயம் நினைக்கவும் கூடுகிறதில்லையென்று சொல்லி, பின்னையும் தன்செயலறுதியாலே தெய்வங்காள்! என்று கூப்பிடுகிறாள்.

ஒ.—பத்தாம்பாட்டில், குடிக்கு வரும் பெரும்பழியைப்பாராதே திருக்கோளூரிலேயுக்கு அவனை ஒருகாலும் விடுகிறிலள் என்கிறாள்.

[நினைக்கிலேன்]-புகுந்த வ்ருத்தத்தை நினைக்கவும் க்ஷமையாகிறிலேன். தெய்வங்காள்! என்று தன்னாற்றாமையாலே சொல்லுகிறாள். [நெடுங்கணென்று தொடங்கி]-விஶாலமான திருக்கண்களை யுடைய சிறுபெண்பிள்ளை இங்கிருக்கிற இருப்புக்குமேலே ஸர்வேஶ்வரத்வ ஸூசகமான அழகிய திருக்கண்களை யுடையவனை ஒருக்ஷணமும் விடுகிறிலள். [அவன் என்று தொடங்கி] - குடிக்குவருகிற பெரும்பழியையும் பாராதே இத்தையெல்லாம் கடலிலே கவிழ்த்து அவன் கண்வளர்ந்தருளுகிற திருக்கோளூர்க்கே போனாள்.

ப.—அநந்தரம், அகிலஜகத்ஸ்வாமியான அரவிந்தலோசநனை ஏகதேஶமும் விடாளாகக்கொண்டு குடிப்பழியும்பாராதே அவ்வூரிலே புக்குவிட்டாளென்கிறாள்.

தெய்வங்காள் - தெய்வங்காள்! நினைக்கிலேன்- (இவளுடைய அதிப்ரவ்ருத்தி) நினைக்கமாட்டுகிறிலேன்; நெடு - (அவன்பெருமையை எல்லாம் தன்னகவாயிலேயாக்கும்படி) பெரிய, கண் - கண்ணையுடையளாய், (பருவத்தைப்பார்த்தால்), இளம்-முக்தமான, மான் - மான்போலேயிருக்கிற இவள், இனி - (தன்கண்ணழகு தனக்குண்டாயிருக்கப்) பின்னையும், போய் - போய், அனைத்துலகும் - ஸர்வலோகத்துக்கும், உடைய - ஸ்வாமியானமைக்குத் தகுதியான, அரவிந்தலோசநனை - அரவிந்தலோசநனை, தினைத்தனையும் - சிறிதுபோதும், விடாள் - விடாளாய்க்கொண்டு, அவன் - அவன், சேர் - வர்த்திக்கிற, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, செல்லவைத்தனள் - சடக்கெனச்சென்றாள்;

---

வதென்ன - அத்தலையில் இத்யாதி. இது - ஸ்வாபதேசம். இத்தால் பலிதமாதல், விவரணமாதல் - ஐகவதாஸக்தி இத்யாதி. (௯)

(தான் செல்லுகை), மனைக்கு-குடிக்கு, வான்-மிக்க, பழி - பழியென்றும், நினையாள் - நினைக்கிறிலள், செல்லவைத்தனள் என்று லோகோக்தியாலே கடுகச்சென்றாள் என்று கருத்து.

இ.—பத்தாம்பாட்டில், குடிக்கு வரும் பெரும்பழியை நினையாதே திருக்கோளூரிலேபுக்கு அவனையொருகாலும் விடுகிறிலள் என்கிறாள். [நினைக்கிலேன்]- புகுந்த வ்ருத்தாந்தத்தை நினைக்கில் ஆழங்காலாயிராநின்றது. [தெய்வங்காள்] - தன்னோடொக்க உறங்காமையாலே தெய்வங்களைக் கூட்டிக்கொள்ளுகிறாள். [நெடுங்கண்] - போக்தாக்கள் அளவல்லாத கண்.

[இளமான்] - "தன்கையிலே ப்ரஹ்மாஸ்த்ரம்" என்று அறியாதபருவம். [இனிப்போய்] - ஸர்ப யாகத்திற்போலே அவன் தான் வந்துவிழும்படியான கண்ணைப்படைத்த இவள், தான் போகை மிகையென்கை. உபயவிபூதியுக்தனென்னுமிடத்தைக் கோட்சொல்லுகிற கண்களையுடையவனை. இவள் நெடுங்கண்இளமான்; அவன் அரவிந்தலோசனன். அவன் கண் ஸர்வேஶ்வரத்வஸூசகம் ; அவனையுங்கூட விளாக்குலைகொள்ளும் கண் இவளது. [நினைத்தனையும் விடாள்] - க்ஷணகாலமும் விடாள் இங்கிருந்துபட்ட க்லேசத்தாலே, அங்கு அநுபவிக்கப்புக்கால், "பிரியேன்" என்னவும் நெஞ்சை விட்டுக்கொடாள். அவன் பொருந்திவர்த்திக்கிற திருக்கோளூர்க்கே. [செல்லவைத்தனள்] - புகுகையிலே ஒருப்பட்டாள் என்னுதல், "நவவாநாராவர்தயே" என்று தான் மீளாதபடி புகுகையாலே நாம் அங்கே செல்லும்படி வைத்தாள் என்னுதல். [மனைக்குவான்பழியும் நினையாள்] - குடிக்குவரும் வலியபழியும் நினைக்கிறிலள். இவள்போய் அவனைப்பெறுகை குடிக்கு நிலைநின்ற பழியென்றிருக்கிறாள்.

ஈடு.—பத்தாம்பாட்டு. இக்குடிக்குவரும் பெரும்பழியைநினையாதே, திருக்கோளூரிலேபுக்கு அவனையொருகாலும் விடுகிறிலளென்கிறாள்.

[நினைக்கிலேன்] - கடலைக்கரைகாணவொண்ணாதிறே. தன்னைப்போகட்டுப் போனபடி, வழியில் மிறுக்குக்கள், அங்குப்புக்கால் இவள்படும்பாடுகள் அநேகங்களிறே. [தெய்வங்காள்] - இத்தை, "கோலை" என்பார் முகம்பார்த்துச் சொல்லவொண்ணாதே. பழிசொல்லாமையையும், சிறையுறவுபோலே தன்னோடொக்க உறங்காமையையும்பார்த்துச் சொல்லுகிறாள். [தெய்வங்காள் - நினைக்கிலேன்] - செயலற்றுக் கைவாங்கிச்சொல்லுகிற வார்த்தையிறே. [நெடுங்கணிளமான்இனிப்போய்] - விமுக்காடறியாமையாலே புறப்பட்டுப்

பத்தாம்பாட்டு - நினைக்கிலேன் இத்யாதி. "மனைக்குவான்பழியும் நினையாள், திருக்கோளூர்க்கே - போய் - அரவிந்தலோசனனைத் நினைத்தனையும்விடாள்" என்கிற பதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை - இக்குடிக்கு இத்யாதி.

நினைக்கவொண்ணாமைக்கடி, இவள்படி அபரிச்சின்னமாகையென்கிறார் - கடலை இத்யாதி. காணவொண்ணாமைக்கு இவள் வ்யாபாரங்கள் கடல்போலே அபரிச்சின்னமோ? என்ன - தன்னைப் போகட்டு இத்யாதி. அநந்யதேவதையான இவள் "தெய்வங்காள்" என்று இவற்றைப்பார்த்துச் சொல்லுகிற தென்? என்ன - இத்தை'கோலை' இத்யாதி. இவற்றைப்பார்த்துச்சொல்லுகைக்கு ஹேதுவேதென்ன-பழிசொல்லாமையையும் இத்யாதி. கதிசூந்யதையாலே சொல்லுகிறாளென்று பரிஹாராந்தரம் - செயலற்று இத்யாதி. "இளமான்" என்றதுக்குபாவம் - விழக்காடு இத்யாதி. விழுக்காடு - மேல்வருமது. "அனைத்துலகுமுடைய" என்றதைக்கடாக்ஷித்து "நெடுங்கண்" என்றதுக்கு

போனுள் அத்தனைகிடீர்! இக்கண்ணுக்குஇலக்கானவர்கள், ஸர்ப்பயாகத்தில் ஸர்ப்பங்கள் சுருண்டுவந்துவிழுமாபோலே தந்தாம் முதன்மையோடேவந்து விழவேணுங்கிடீர்! [இனிப் போய்] - ஆர் செய்யக்கடவத்தை யார்தான்செய்கிருர்? கண்படைப்பாளும்தானுய்ப் புறப் பட்டுப்போவாளுந் தானுவதே! இத்தலை ப்ரவர்த்தியாமைக்கு ஸ்வரூபமேயமையுமாகாதே. [அனைத்துலகுமுடைய அரவிந்தலோசநனை] - இவ்வளவே கிடீர் அவன்கண்ணுக்குத் தோற்றிருப்பது. ஒருபய விபூதிமாத்ரங்கிடீர் அவன்கண்ணுக்கூடபட்டிருப்பது; அவன்தன்னை யும் தோற்பிக்கும்கண்ணிறே இவளது. அவன்அனைத்துலகுமுடைய அரவிந்தலோசநன்; இவள் நெடுங்கண்இளமான். அவன், தானும் தன்விபூதியும் இவள்கண்ணிலே ஒருமூலை யிலே அடங்கும்படியாயிருக்கை. கண்ணில்அல்லாத பரப்பும் இவள்பருவமும் குமர்கிடந்து போமத்தனை. [தினைத்தனையும்விடாள்] - நெகிழ்த்தணைக்கவும்போருள். இங்கிருந்துபட்ட க்லேசத்தாலே "நின்னைப்பிரியேன்" என்றுசொல்லவும் நெஞ்சுகொடாள். காரியப்பாட் டாலே பிரியிலும் நெஞ்சொழிந்து கேட்கவேணுமே. [மனைக்குவான்பழியும்நினையாள்] - மனைக்கு வலியபழியும்நினைக்கிறிலள். அஸிமதஸாதநம் அல்லாதவளாவேயன்று, விரோதி என்றிருக்கிருள். "இத்தலையாலே சேல்லுமதுபழி" என்றே யிருந்தபடிபாரீர்! "அயபாதக ஸீ தஸ்வம்ஸவஹுஸாவெநஹாரத" (அதபாதகபீதஸத்வம்ஸர்வபாவேநபாரத) - அடுத் தடுத்து ராஜஸூயமே பண்ணிப்போந்தவனுக்கு ஒருதடவற்பொய்க்காக நரக தர்ஶநம்

பாவம் - இக்கண்ணுக்கு இத்யாதி. ஸர்ப்பயாகம்பண்ணினவன் - ஜநமேஜயன். "இனி" என் கையாலே - இவளுக்குப்போக ப்ராப்தியில்லை, அவனுக்கே ப்ராப்தியென்றுபாவமருளிச்செய்கிருர் - ஆர்செய்ய இத்யாதி. "ஆர்செய்யக்கடவத்தை" என்கிறதென்? இவளுக்குப்போக ப்ராப்தியில்லையோ? என்ன - கண்படைப்பாளும் இத்யாதி. "இனிப்போய்" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - இத்தலை இத் யாதி. ஸ்வரூபமென்றது - ஸ்வரூபஜ்ஞாநமென்றபடி. அதாவது "நெடுங்கண்" என்கையாலே - ஸ்வயத்நநிவர்த்தக அத்யந்தபாரதந்த்ர்யஜ்ஞாநத்தைச் சொல்லுகிறதென்றபடி. இவள்கண்ணழகிலே ஜகத்விபரிவிஷ்டமாயிட்டிருக்குமென்று விவக்ஷித்து, அவன்கண்ணழகை லக்ஷரிக்கிருர் - இவ்வளவே இத்யாதி. இத்தைவிவரிக்கிருர் - உபய இத்யாதி. இவள்கண்ணுக்கேற்றமேதென்ன - அவன்தன்னை யும் இத்யாதி. அவன்கண்ணில் 'குறைத்தலையும் இவள்கண்ணிலேற்றத்தையும்' பதங்களிலே ஏறிட்டுக் காட்டுகிருர் - அவன்அனைத்துலகும் இத்யாதி. "நெடுங்கண்" என்றதுக்குவாஸனை - அவன்தானும் இத்யாதி. ஒருமூலையிலே யடங்கிறுல், மற்றை யிடமோ? என்ன-கண்ணில்அல்லாத இத்யாதி.'குமர் கிடந்துபோம்' என்றது குமரென்று - குமரியாய், குமரிபோலே யநுபவயோக்யமல்லாதேபோம்என்ற படி. "தினைத்தனையும்" என்றதுக்குபாவத்வயம் - நெகிழ்ந்தணைக்கவும் இத்யாதிவாக்யத்வயமும். தினைத்தனையும் - அத்யல்பகாலமும் விடாளென்றபடி. "சிறிதுபோதும்விடாள்" என்று உரையில் ஸப்தார்த்தம். நெஞ்சுகொடுத்தால்தோஷமேது? என்ன - காரியப்பாட்டாலே இத்யாதி. அதாவது - கார்யவஶாத் பிரியப்பார்த்தாலும், "பிரிவுஹிதம்" என்று இவள்நெஞ்சிலே படுத்தியே பிரியவேண் டுகையாலே, அநுபவத்தைவிட்டு அத்தைக்கேளாளென்றபடி. காரியப்பாடு - கார்யவசம். மனைக்கு வலியபழியாவது - குடிக்குவருகிற வலியபழியென்றபடி. "பழியும்" என்ற ஸப்தார்த்தம் - அஸிமத இத்யாதி. வ்யாக்யாதாவின் ஈடுபாடு - இத்தலையாலே இத்யாதி. ஸ்வயத்நம் ஸ்வரூபவிருத்தம் என்றதுக்குப்ரமாணம் - அயபாதக இத்யாதி. "அயவாதகஸீதஸ்வம்ஸவஹுஸாவெநஹாரத । விஶோகாத்யஸாரஜே நாராயணவரோஹவ" இதி மஹாபாரதே தர்மஸூநும்ப்ரதி தர்ம தேவதா. பாதகமென்றால் - நிஷித்தத்தைச் சொல்லுமதொழிய, உபாயாந்தரத்தைச்சொல்லுமோ? என்ன; இங்கு, பாதகமென்கிறது - ஸ்வயத்நரூபமான உபாயாந்தரங்களையே, நிஷித்தத்தையல்ல என்னுமதுக்கு உபபத்தி அருளிச்செய்கிருர்-அடுத்தடுத்து இத்யாதி. தடவற்பொய் - ஆபாஸமானபொய்,

பண்ணுமளவாய் நின்றவனையிறே இப்படியுபதேசிக்கிறது. ஸத்கர்மத்தோடு அஸத்கர்மத்தோடு வாசியற விரோதியாய், க்ருஷ்ணனே அபாஸ்ரயம் என்னுமிடத்தைத் தோற்றுவிக்கிறது. “ விமுக்தாங்கஸமாரம்ப: ” ( விமுக்தாங்கஸமாரம்ப: ) அசேதநக்கிரியைகளைப்பற்றிக் கொண்டு நாலாதேகோள். “ நாராயணபரோபவ ” (நாராயணபரோபவ) உனக்கு வகுத்தவன்தன்னையே பற்றப் பார். [செல்லவைத்தனளே] - போகையிலே நெஞ்சைவைத்தாளென்னுதல், நமக்குமெல்லாங்காண அங்கேயானாளென்னுதல். அதாவது-தான்அங்கே செல்லவொருப்பட்டாளென்னுதல்; தான்மீளாதபடி புகுகையாலேநாம்அங்கே செல்லும்படி வைத்தாளென்னுதல். (கம)

## பதினோராம் பாட்டு

வைத்தமாநிதியாம்மதுசூதனையேயலற்றி
கொத்தலர்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன
பத்துநூற்றுள் இப்பத்துஅவன்சேர்திருக்கோளூர்க்கே
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே.

ஆ.—(வைத்தமாநிதி.) - ஆழ்வார், விஸ்லேஷமாகிற ஆபத்துக்குத் தமக்கு வைப்பாகவைத்த மஹாநிதியாயிருந்த எம்பெருமானையே அலற்றிச்சொன்ன இத்திருவாய்மொழியை, திருக்கோளூர்க்கே ப்ரவணமான மனஸ்ஸையுடையராய்க்கொண்டு சொல்லுவாரிட்ட வழக்காம் திருநாடென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இப்பத்தும் வல்லார் இட்டவழக்காய் இருக்கும் திருநாடு என்கிறார். [வைத்த மாநிதியாம் மதுசூதனையேயலற்றி] - ஆபத்ஸகாயமாக வைப்பாகக் கொள்ளலாம்படி வைத்த மஹாநிதிபோலேயிருக்கிற ப்ரதிகூலநிரஸநஸ்வபாவனான

---

ஆனால், புண்யஹீநோ என்னாதே, “பாதகஸ்து” என்பானென்னென்னில் - [illegible] யாதி. அப்ரஸ்துதம் - ப்ரஸ்நார்த்தத்திலேயாய், பாதகஸ்தோய [illegible] போகையிலே தன்னெஞ்சைவைத்தாளென்னுதல்-நாமங்கேசெல்லும்படி தன்னெஞ்சை அங்கே வைத்தாளென்னுதல் என்றபடி. முந்தினவர்த்தத்திலே, நெடுங்கண்ணிளமானிவள்போய் - மனைக்குவான்பழியும் நினையாதாளாய்க்கொண்டு - அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும் விடாதே யிருக்கவேணுமென்று, அவன்சேர்திருக்கோளூர்க்கே - தான்செல்லவொருப்பட்டாள்; தெய்வங்காள்! நினைக்கிலேனித்யந்வய:. த்வீதியார்த்தத்திலே, நெடுங்கண்ணிளமானிவள் - அவன்சேர்திருக்கோளூர்க்கே, மனைக்குவான்பழியும் நினையாதவளாய்க்கொண்டு - போய், மீளுகைக்கு யோக்யதையுங்கூடவில்லாதபடி அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனைத் தினைத்தனையும்விடாள்; நாம் அங்கே செல்லும்படி வைத்தாள்; தெய்வங்காள்! நினைக்கிலேனித்யந்வய:. “பழியும்” என்று ஸமப்ரத்தத்தாலே - அபிமத ஸாதநமல்லாதவளவேயன்றென்று சொன்னதிருத்தாயாரே, ‘தினைத்தனையும்விடாள்’’ என்று அபிமதஸித்தியைச்சொல்லும்போது, ஸ்வவசநவ்யாஹதியன்றோவென்னில்; “முந்துற இவள் போகிற போது ஸ்வயத்நநிவர்த்தநார்த்தமாகச் சொன்னாளேயாகிலும், அவன்குணத்தைப்பார்த்து ‘அபிமத ஸித்தி தப்பாது’ என்றிருக்குமவளாகையாலே இங்ஙனேசொல்லக்குறையில்லை” என்று பரிஹரித்தருளுவர். (கம)

எம்பெருமானையே சொல்லி ஆர்த்தியோடேகூப்பிட்டு. [கொத்தலர் பொழிலென்று மேனுக்கு] - தாம் விரஹதசையை அநுஸந்திக்க க்ஷமரல்லாதபடி பகவத்விஷயத்திலே ஏகாக்ரராகையாலே தமக்குப்பிறந்த தேற்றத்தாலே ஸம்ருத்தமான திருநகரியுடைய ஆழ்வார் அருளிச்செய்த ஆயிரம்திருவாய்மொழியிலும் திருக்கோளூரிலே அருளிச்செய்த இத்திருவாய்மொழியை புத்திபூர்வகமாகச் சொல்லவல்லார்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியை ஸஹ்ருதயமாகச் சொல்ல வல்லவர்கள், பரமபதத்துக்கு நிர்வாஹகராவரென்று ஃபலத்தை அருளிச்செய்கிறார்.

வைத்த - சேமித்துவைத்த, மாநிதியாம்-மஹாநிதிபோலே, (நிரதிசயப்ராப்யபூதனாய்), மதுசூதனை - போகப்ரதிபந்தகவிரோதிநிரஸநசீலனானவனை, அலற்றி-(அலாபநிபந்தனமான) ஆர்த்தியாலேயலற்றி, கொத்து - பூங்கொத்து, அலர் - அலருகிற, பொழில் - சோலையாலே, சூழ் - சூழப்பட்ட, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், சொன்ன - அருளிச்செய்த, பத்து - (ஓரோ அர்த்தவிசேஷங்களுக்கு வாசகமான) பத்தான, நூற்றுள் - நூற்றினுள்ளும், இப்பத்து - ப்ராப்யத்வப்ரகாசகமானவிப்பத்தை, அவன் - அவன், சேர் - வர்த்திக்கிற, திருக்கோளூர்க்கே - திருக்கோளூர்க்கே, சித்தம் - நெஞ்சை, வைத்து - வைத்து, உரைப்பார் - சொல்லவல்லார், திகழ் - ஏகரஸாநுபவஜௌஜ்ஜ்வல்யத்தையுடைத்தாய், பொன் - ச்லாக்யமான, உலகு - பரமபதத்தை, ஆள்வார் - தாங்கள் நினைத்தபடி நிர்வஹிக்கப்பெறுவர்கள். இது - கலித்துறை.

இ.—நிகமத்தில், இப்பத்தும் வல்லார் இட்ட வழக்கு பரமபதமென்கிறார். [வைத்த இத்யாதி] - "உண்டு" என்ன உயிர்நிற்கக்கடவதாய் அநாயாஸபோக்யமாய் இஷ்டவிநியோகார்ஹமான மஹாநிதிபோலேயாய், விரோதிநிரஸநஸ்வபாவனானவனைச் சொல்லி ஆர்த்தியாலே கூப்பிட்டு. [கொத்தலர்] - நித்யவஸந்தமான திருநகரி. விரஹத்தை அநுஸந்திக்க க்ஷமமல்லாதபடி அவன்பக்கலிலே ஏகாக்ர சித்தராகையாலே பிறந்த தேற்றத்தாலே ஊருக்குப்பிறந்த ஸம்ருத்தி. [பத்துநூற்றுள்இப்பத்து] - கிழிகிழியாகக் கொடுப்பாரைப்போலே. அவன் பொருந்திவர்த்திக்கிற திருக்கோளூர்க்கே நெஞ்சைவைத்துச் சொல்லுமவர்கள். [திகழ்பொன்னுலகாள்வாரே] - "தனிவழியே போனாள்" என்று கரையவேண்டாதபடி, அர்ச்சிராதிகணம் வழிநடத்தப் பரமபதத்திலேயுக்குநித்யாநுபவம் பண்ணப்பெறுவர்கள்.

ஈடு.—நிகமத்தில் இப்பத்தும்கற்றார் இட்டவழக்கு திருநாடு என்கிறார்.

[வைத்தமாநிதியாம்] - இவள் தனிவழிபோகைக்கும் தாயாரை விடுகைக்கும் ஹேது விருக்கிறபடி. தநம் சஞ்சிதமாயிருக்க, எடுத்தழித்துக்கேடுத்து ஜீவியாதே ஆறியிருப்பாரில்லையே. [வைத்தமாநிதி] - "எய்ப்பினில்வைப்பினைக் காசினைமணியை" என்கிற

நிகமம் - வைத்தமாநிதி இத்யாதி. "இப்பத்து, சித்தம்வைத்துரைப்பார்" இத்யாதிகளைக் கடாக்ஷித்தவதாரிகை - நிகமத்தில்இப்பத்தும் இத்யாதி.

இப்போது "வைத்தமாநிதி" என்று அவனுடைய போக்யதையைச்சொல்லுகிறதுக்கு பாவம் - இவள்தனிவழி இத்யாதி. நிதியிருந்தால்இப்படி போகவேணுமோ? என்ன - தநம் இத்யாதி. இவனை "நிதி" என்கைக்கு ஹேதுவேதென்ன - எய்ப்பினில் இத்யாதி. இளைத்தவேளையில் நிதியா

படியே தளர்ந்தார் தாவளமாய், எய்ப்பினில்வைப்பாய், ''உண்டு'' என்ன உயிர்நிற்கும் படியாய், உடையவன்காலிலே எல்லாரும் விழும்படியாய், உடையவனுக்குஅறவிட்டு ஜீவிக்கலாய், ''அறவிட்டுஜீவித்தான்'' என்றுஏசாதபடியுமாய், அவன்தனக்குப் பெருமதிப்பைக்கொடுப்பதுமாய், உடையவனுக்குஒன்றுக்கும் கரையவேண்டாதபடியாய், எல்லாம் தன்னைக்கொண்டே கொள்ளலாய், எல்லா ரஸங்களும் போகங்களும் தன்னைக்கொண்டே கொள்ளலாய், ஏவமாதிகுணங்களை யுடைத்தாயிருக்கையைப்பற்ற நிதி யென்கிறது. மாநிதி யென்றது - மஹார்க்கமான நிதியென்றபடியாய், அத்தால், தன்னைக்கொண்டே எல்லாங் கொள்ளாநின்றால் தனக்கொரு குறையற்றிருக்கை. அல்லாதநிதி மாண்டுநிற்குமே. [மதுசூதனையேயல்லற்றி] - இந்நிதியைக்காத்தூட்டுவதும் தானேயென்கிறது. உத்தேஸ்யமானது தானே விரோதியையும்போக்கி யநுபவிப்பிக்கவற்றாயிருக்கை. [கொத்தலர்பொழில்] - ''[illegible]'' (ஸர்வஞ்சகுஸலம்க்ருஹே) என்னுமாபோலே, ஸ்ரீபரதாழ்வான் பெருமாள்பக்கலிலே நெஞ்சை வைக்கவைக்க, அத்தைக்கண்டு ''அவர்வரவணித்து'' என்று திருவயோத்யை தளிரும் முறியுமானாற்போலே, விரஹத்தையநுஸந்திக்க

---

யிருக்குமவனை; காசினை - பொன்போலே ஸ்ப்ருஹணீயனானவனை; மணியை - ரத்நம்போலே ஸ்லாக்யனானவனை இத்யர்த்தஃ. எய்ப்பு - இளைப்பு. காசு - பொன். திருமொழி, ''பேய்முலைத்தலைநஞ்சுண்ட'' இத்யாதி. தளர்ந்தார் தாவளமாகையாலே எய்ப்பினில்வைப்பாயென்றபடி. தளர்ந்தார் தாவளமாய் - ஆபந்நர்க்கு ரக்ஷகமாய்: ஆதாரமாய்என்றுமாம். ''[illegible]'' இத்யாதியைப்பற்ற - உண்டென்ன இத்யாதி. அதாவது - ''தநமுண்டு'' என்றால் போன ப்ராணனும் வருமாபோலே, ''ஈஸ்வரனுளன்'' என்றால் நஷ்டப்ராயமான ஆத்மஸத்தையும் தரிக்கும்படியாயென்றபடி. ''[illegible]'', ''[illegible]'' இத்யாதியைப் பற்ற - உடையவன்காலிலே இத்யாதி அறவிட்டு ஜீவிக்கலாயென்றது- இவன்ஈஸ்வரனையுபதேசிக்க உபதேசபாத்ரபூதனான சிஷ்யனுபகாரஸ்ம்ருதியாலே யதாசக்தி ஸமர்ப்பிக்க, அத்தை ஸ்வீகரித்து ஜீவிக்கலாயென்றபடி. அறவிட்டு ஜீவிக்கையாவது - விற்றுஜீவிக்கை. இவ்விடத்திலே - ''[illegible]'' என்றது அநுஸந்தேயம். அறவிட்டு ஜீவித்தானென்று ஏசாதபடியுமாயென்றது- புத்ராதிகளைவிற்று ஜீவித்தால் நிந்திப்பர்கள்; நிதியைவிற்றுஜீவித்தால் நிந்திப்பாரில்லையே; அப்படியே, தங்களாதரத்தாலே ஸிஷ்டர்கள் ஸமர்ப்பித்தத்தை வாங்கிஜீவித்தால் நிந்தியாதபடியாயிருக்குமென்கை. ''[illegible]'' இத்யாதியைப்பற்ற - அவன்தனக்குப்பெருமதிப்பை இத்யாதி. அதாவது, நிதியுடையவனுக்கொருவர்க்கும்அஞ்சாதபடி அது பெருமதிப்பைக்கொடுக்குமாபோலே, ஸர்வேஸ்வரனையாஸ்ரயித்தவர்களுக்கு யமாதிகளுக்கும் அஞ்சவேண்டாதபடியான பெருமதிப்பைப்பண்ணிக் கொடுக்குமதாயிருக்கு மென்றபடி. ''[illegible]'' ''[illegible]'' இத்யாதியைப்பற்ற - ஒன்றுக்குங்கரைய இத்யாதி. இந்நிதியையுடையவனுக்கு, ''நன்மையைச்செய்தோமில்லை, தீமையைச்செய்துவிட்டோம்'' என்றுபயப்படவேண்டாதபடி யிருக்குமென்றபடி. ''[illegible]'' என்றத்தைப்பற்ற - எல்லாம்தன்னை இத்யாதி. ஏதத்விவரணம் - எல்லாரஸங்களும் இத்யாதி. ''[illegible]'' என்றத்தைப் பற்ற- தனக்கொருகுறை யற்றிருக்கை என்றது. 'மஹார்க்கம்' என்றதற்கு - அக்ஷயத்வத்திலேநோக்கு. காத்தூட்டுவதுவென்றது - விரோதிவாராமல் காத்து புஜிப்பிக்குமதும்என்றபடி. விவரணம் - உத்தேஸ்யமானது இத்யாதி. இத்தால் - ப்ராப்யமானது தானே ப்ராபகமுமென்றபடி. கொத்தாக விகஸியாநின்ற பொழிலென்று ஸப்தார்த்தம். தாம்விஸ்லேஷத்தாலே து:கியாநிற்க, சோலை இப்படி

க்ஷமரல்லாதபடி அவன்பக்கலிலே ஏகாக்ரசித்தராகையாலே பிறந்த தேற்றத்தாலே திருநகரியும் தளிரும் முறியுமானபடி. இத்தலையிலே யித்தனைத்வரையுண்டானால் அத்தலையில் பலத்துக்குக்கண்ணழிவுண்டோ? "அபிவ்ருக்ஷா:" (அபிவ்ருக்ஷா:) என்கைதவிர்ந்து, "அகாலபலிநோவ்ருக்ஷா:" (அகாலபலிநோவ்ருக்ஷா) என்னும்படியாயிற்று. [பத்து நூற்றுள்இப்பத்து] - கடலில் அம்ருதம்போலே, ஆயிரத்திலும் வைத்துக்கொண்டுஇப்பத்து. [அவன்சேர்இத்யாதி] - அவன்பொருந்திவர்த்திக்கிற திருக்கோளூர்க்கே நெஞ்சைவைத்து. [உரைப்பார்] - சொல்லுவார். [திகழ்பொன்னுலகாள்வாரே] - ஒருத்திகூப்பிட, ஒருத்தி தனியேபோகையன்றிக்கே, நித்யாநுபவம்பண்ணலாம் நிலத்திலே புகப்பெறுவர். தனிவழிபோகாதே, அர்ச்சிராதிகணம்சேவிக்க விலக்ஷணமான தேசத்தே போய்ப்புகப்பெறுவர்.

---

*யாகக்கூடுமோ? என்ன; த்ருஷ்டாந்தங்காட்டுகிறார்-ஸர்வஞ்ச இத்யாதி. இவர்க்கு ஆற்றாமையுண்டானால் அவன் வரவணித்தாகவேணுமோ? என்ன - இத்தலையிலே இத்யாதி. அதாவது, * யாதானும்பற்றி நீங்குகிறவனநுகூலித்தால் * எதிர்சூழல்புக்குத் திரிகிறவனுக்குக் கண்ணழிவுண்டோ? என்றபடி. அத்தலையில் பலத்துக்கென்றது - அத்தலையால் வருகிறபலத்துக்கென்றபடி. கண்ணழிவு - விளம்பமும், குறையும். அவன்வரவணித்தானால் கொத்தலர்பொழிலாகிறதுக்கு ப்ரமாணம் - அபிவ்ருக்ஷா இத்யாதி. "திகழ்" என்றதுக்குபாவம் - ஒருத்தி இத்யாதி. விவரணம் - தனிவழி இத்யாதி. ஸர்வஞ்ச குஸலம் க்ருஹேயென்று வருகிறவிடத்துக்கெல்லா மிவ்விடத்தில் பரிஹரித்தாற்போலே பரிஹாரங் கண்டுகொள்வது. "வநஸ்பதி [illegible] ஸம்ருத்தோ [illegible] தீக்ஷதே । [illegible] ஸ்ய ஸுஹ்ருத்க்ருஹே" இதி ப்ரதிப்ராயாணே ராமம்ப்ரதி பாரத்வாஜ:.*

---

*த்ரவிடோபநிஷத்ஸங்கதி.* — [illegible] ॥

---

*த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.* — [illegible] ஸ்ரீஸம்பந்தே [illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

உண்ணுஞ்சோறுமுதலொருமூன்றும் எம்பெருமான்
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள் - பண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பாற்போமாறன்
பொன்னடியே நந்தமக்குப்பொன்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர் திருவடிகளே ஶரணம்.

# எட்டாந்திருவாய்மொழி—பொன்னுலகு ப்ரவேசங்கள்.

ஆ —(பொன்னுலகாளீரோ.) - திருக்கோளூரிலே போய்ப்புக்கு எம்பெருமானோடு ஸம்ஶ்லேஷித்ததெல்லாம் மநோரதமாத்ரமாய், பழையபடியே எம்பெருமானைக் காணப்பெறாமையாலே தத்விரஹ ஸஹமாநராய், அந்யாபதேசத்தாலே ஒரு பிராட்டியாய் அவனைக்குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறார்; இப்படித் திருக்கோளூரிலே எழுந்தருளின பிராட்டியோடுள்ள சிலகால ஸம்ஶ்லேஷ ஜநிதாநவதிகாநந்த மஹார்ணவாந்தர்நிமக்நனான எம்பெருமான், அந்த ஆனந்தவெள்ளம் தனக்கு அஸாத்யமானவாறே-அது ஸாத்மிக்கைக்காக விஶ்லேஷித்து நெடுங்காலமெழுந்தருளாதிருந்தவாறே, தத்விஶ்லேஷத்தாலே அத்யந்தம் அவஸந்நையானபிராட்டி, தன்னுடைய ஆற்றாமையாலே அவனைக்குறித்துச் சிலபக்ஷிகளைத் தூதாகவிடுகிறாளென்றுமாம். “திருக்கோளூரிலே போய்ப்புகவேணும்” என்று புறப்பட்ட இப்பிராட்டி, தன்னுடைய அவஸாதத்தாலே பின்னைப்போக க்ஷமையன்றியே, அங்கே உத்யாநத்திலேயிருந்து எம்பெருமானைக் குறித்து தூதப்ரேஷணம்பண்ணுகிறாளென்றுமாம்.

ஒ.—எட்டாந்திருவாய்மொழியில், வாஹ்யாநுஸந்தாநம்பண்ண கூடிய க்ஷமரல்லாதபடி, மோஹம்செல்லுகையாலே அந்தஃகரணம் எம்பெருமான் பக்கலிலே மிகவும் ப்ரவணமாய் அவன்குணங்களை நெடும்போது அநுபவிக்கையாலே, பெருவிடாய் தட்டி நோவுபட்டவர்கள் நீரிலே முழுகித்தரித்தாற்போலே விஶ்லேஷ வ்யஸநத்தால் வந்த ஶைதிலம் நீங்கி தரித்து, ஸ்ரீப்ரஹ்லாதாழ்வானைப்போலே ஜமத்வ்ருத்தாந்தாநுஸந்தாநக்ஷமரான ஆழ்வார், பழையபடியே தமக்கு எம்பெருமானோடு உண்டான விரஹத்தை அநுஸந்தித்துத் தம்முடைய தசையை அந்யாபதேசத்தாலே பேசுகிறார். “திருக்கோளூர் ஏறப்போக” என்று தன்னுடைய நகரோபவநத்தளவுஞ்சென்று தன்னுடைய ஶைதிலத்தாலே போகமாட்டாதிருக்கிற இப்பிராட்டி, பின்னையும் அவன் வரக்காணாமையாலே “வாராதொழிகைக்குநிபந்தநம் தன் ஐஶ்வர்யப்பரப்பாலே: தான் ஆஶ்ரிதரோடு ஏகரஸனாகையால் அறிவிக்க வரும்” என்று பார்த்து, அவனை ப்ராபிக்கைக்குத் தன்தசையை அவனுக்கு அறிவிக்கையொழிய மற்றோருபாயம் காணாதே, அங்குள்ள பக்ஷிகளையடைய, பெருமாள் பிராட்டிக்குத் தம்மெதிர்கண்ட முதலிகளையடைய தூதப்ரேஷணம்பண்ணினாற்போலே, எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் நிலங்களில் எங்கேனும்புக்காகிலும் அவனைக்கண்டு என் ஆர்த்தியையறிவித்து என்[illegible]த்தைத் தீர்க்கவேணும் என்கிறாள்.

“திருக்கோளூரில் ஸம்ஶ்லேஷம் சிலகாலம்சென்று தைவயோகத்தாலே விஶ்லேஷம்பிறக்க, தூதுவிட்டுச் செல்லுகிறது” என்றும் சொல்லுவர்.

ப.—எட்டாந்திருவாய்மொழியில், கீழே - ப்ராப்யவிஷயத்தில் அதித்வரிதரான இவர்க்கு, த்வராநுரூபமான ப்ரவ்ருத்தியில் யோக்யதையில்லாமையாலே வடகமுகத்தாலே ப்ராபிக்கையிலே அபேக்ஷைபிறந்து, வடநாநுரூபமான அவனுடைய ஸ்ருஷ்டத்வாத்யாகாரத்தையும், அநுபாவ்யமான அஸாதாரணசிஹ்நத்தையும், ஆஶ்ரித விரோதிநிவர்த்தநத்தையும், அதிஶயிதபுருஷாநுபாவ்யமான போக்யதாவைலக்ஷண்யத்

த்தையும் ஔதார்யஸ்வபாவத்தையும், அத்யந்தபவ்யதையையும், அஸிஷ்ருபனாய் அகிலாத்ம பூதனானவனுடைய அநிஷ்டநிவர்த்தகத்வத்தையும், ஸர்வாதிகத்வத்தையும், அந்த பரத்வத்தோடுகூடின ஸௌலப்யாதிஶயத்தையும், உபயப்ரகாசகமான ஸ்ரீய:பதித்வத்தையும் அநுஸந்தித்து, "ஏவம்விதஸ்வபாவனான ஸர்வேஶ்வரனைவடிப்பித்த மஹோபகாரத்தின் ப்ரீத்யதிஶயத்தாலே ஐஹிகாமுஷ்மிக ஸகலபதார்த்தங்களும் வடகருக்கு ஸமர்ப்பணீயம்" என்கிற அதிப்ராயிதார்த்தத்தை, நாயகனான ஈஶ்வரனைப்பிரிந்து ஆற்றாமையாலே தூதுவிடத்தேடின நாயகி, தூதுபோகிற பக்ஷிகளைக்குறித்து ப்ரத்யுபகார ப்ரதர்ஶநம் பண்ணின பாசுரத்தாலே அருளிச்செய்கிறார்.

இ—எட்டாந்திருவாய்மொழியில், "கீழில்திருவாய்மொழியிலே திருத்தாயார் எங்ஙனேபுகுங்கொல்? என்று நொந்ததுவே பலித்தது; தன் சாபலத்தாலே புறப்பட்டு முடியப்போகமாட்டாமையாலே தன்னுடைய நகரோபவநத்தளவிலே தளர்ந்து கிடந்து, அவ்வளவிலும் வரக் காணாமையாலே தன் தசையை அவனுக்கு அறிவிக்கையொழிய மற்றொருபாயம் காணாமையாலே கண்ணால் கண்ட பக்ஷிகளைத் தூதுவிடுகிறாள்" என்று பட்டர் நிர்வஹிப்பர். பிள்ளான், "திருக்கோளூரிலே சென்று ஸம்ஶ்லேஷம் வ்ருத்தமாய் தைவயோகத்தாலே விஶ்லேஷம் பிறக்கத் தூதுவிடுகிறாள்" என்று நிர்வஹிக்கும். கீழ் இரண்டு திருவாய்மொழி மோஹமும் உணர்த்தியுமாய், இதில் தூதப்ரேஷணமாயிருக்கிறது. மயர்வற மதிநலமருளப்பெற்ற இவர்க்கு மோகமாவது-வேறொரு விஷயங்களில் அந்த:கரணம் நிவ்ருத்தமாய் மநஸ்ஸுக்கு அவனே விஷயமாய் அவன் குணங்களையே அநுபவிக்கை: அதாவது-ஶரீரியான அவனே ஜ்ஞாநத்துக்கு விஷயமாய்த் தன்னைமறக்கை. உணர்த்தியாவது - "ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார" என்ற ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வானைப்போலே தம்மையும் உணர க்ஷமராய், ஜகத்வ்ருத்தாந்தத்தையும் அநுஸந்திக்க க்ஷமராயிருக்கை.

இனி, நெடும்போது அவன் குணங்களை அநுஸந்திக்கையாலே தரித்து வேறொன்றநுஸந்தாநக்ஷமராய் வைலக்ஷண்யாதி நீங்கி, தன்னுடைய தசையை அந்யாபதேசத்தாலே அருளிச்செய்கிறார். அஞ்சிறைய மடநாரையில் அபாயஸஹத்வம் பற்றாசாகத் தூதுவிட்டாள். வைகல்பூங்கழியில் 'ஸர்வரக்ஷகனானவன் திருவண்வண்டூரில் ஸோக்யதையாலே கால்தாழ்ந்தானித்தனை; நம் ஆர்த்தியை அறிவிக்க வரும்' என்று அவன் ஸர்வரக்ஷகத்வம் பற்றாசாகத் தூதுவிட்டாள்; இதில், 'தன் ஐஶ்வர்யப் பரப்பாலே மறந்திருந்தானத்தனை; ஆஶ்ரிதரோடு ஏகரஸனாயிருக்கும்' என்று, ஐகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள். "தக்கோர்மை பற்றாசாகத் தூதுவிடுகிறாள்" என்று பிள்ளான் பணிக்கும்.

ஈடு.—கீழில் திருவாய்மொழி இரண்டும் மோஹமும் உணர்த்தியுமாய், இதில், தூதப்ரேஷணமாயிறே யிருக்கிறது; *மயர்வறமதிநலம் அருளப்பெற்ற இவர்க்கு

பொன்னுலகாளீர் ப்ரவேஶே: ஆழ்வாருடைய மோஹப்ரபோதாவஸ்தைகள் நாட்டாருடைய மோஹப்ரபோதாவஸ்தைகளிற் காட்டில் வ்யாவ்ருத்தமென்கைக்கு உறுப்பாக அதிஷ்டிக்கை - கீழில் திருவாய்மொழி இத்யாதி. ஜ்ஞாநாதிகரான இவர்க்கு ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி ஸஹபடிதமான மோஹங்கூடுமோ? என்ன - மயர்வற இத்யாதி. இவரது ஜாக்ரதாதி ஸஹபடித

"[illegible]" (மரணார்த்தஸம்பத்திः) என்னும் மோஹமில்லையே; இனி இவர்க்கு மோஹமாவது - பாஹ்யபதார்த்தாநுஸந்தாநக்ஷம ரன்றிக்கே விஷயங்களில்நின்றும் அந்தःகரணம் நிவ்ருத்தமாய், மநஸ்ஸுக்கு அவனே விஷயமாய், அவன் குணங்களையே அநுபவிக்கை: அதாவது - ஶரீரியானவனே ஜ்ஞாநத்துக்கு விஷயமாய்த் தன்னை மறக்கை. கீழ்-"[illegible]" (அஹம்மநுரபவம்) என்றும், "[illegible]

---

ப்ர.—[பொன்னுலகாளீர்]—[illegible]. [மயர்வற மதிநல மருளப்பெற்ற இவர்க்கு [illegible] என்னும் மோஹம் இல்லையே]—[illegible] [illegible] [[illegible]] [illegible]

[illegible]

---

மான மோஹமன்று என்றபடி. புருஷனுக்கு ஜாக்ரத் ஸ்வப்ந ஸுஷுப்தி மூர்ச்சா மரணங்களென்று அஞ்சு அவஸ்தைகளுண்டு; அதில் ஜாக்ரத்தசையாவது - பாஹ்யேந்த்ரியங்களும் அந்தःகரணமும் ஸ்வஸ்வவிஷயங்களை க்ரஹிக்கிற தஶை. ஸ்வப்நாவஸ்தையாவது - பாஹ்யேந்த்ரியங்களடங்கி மநஸ்ஸு மாத்ரம் ஸஞ்சரித்து, இந்த சரீரத்தோடொத்த சரீராந்தரங்களையும் பகல் காண்கிற விஷயங்களோடு துல்யங்களானவிஷயங்களையும் ஈஶ்வரன் ஸ்ருஷ்டிக்க, அதடியாக அபிஷேக சிரச்சேதபர்யந்தம் காண்கை. ஸுஷுப்தியாவது-பாஹ்யேந்த்ரியங்களும்மநஸ்ஸும்அடங்கி உச்ச்வாஸநிஶ்வாஸங்களாலே ப்ராணன்மாத்ரம் ஸஞ்சரித்து, ஜாக்ரத்தசையிலே ஸ்வஸ்வவிஷயங்களிலே இந்த்ரியங்கள் வ்யாப்ருதங்களாகையால் வந்த இளைப்பெல்லாம் மாறும்படி புரீதத்என்கிற நாடியிலே பரமாத்மாவின் ஸ்வரூபத்திலே சேர்ந்து, அவனாலே ஆப்யாயிதனாகை. மூர்ச்சையாவது - ஸூக்ஷ்மப்ராண தேஹஸம்பந்தாவஸ்திதி. மரணமாவது - ஸர்வப்ராணதேஹஸம்பந்தோபரதி. "ஈத்ருஶமான மரணத்துக்குப் பாதியவஸ்தையாயிருக்கும்மூர்ச்சை" என்று வேதாந்தத்திலே சொன்னதையுட்கொண்டு "[illegible]" என்கிறார். இவருடைய மோஹலக்ஷணத்தை யருளிச்செய்கிறார்-இனியிவர்க்கு இத்யாதி. மாலுக்குவையத்திலும், உண்ணுஞ்சோற்றிலுமுண்டானமோஹத்தையும் உணர்த்தியையும் ஸத்ருஷ்டாந்தமாகக் காட்டுகிறார் - கீழ்அஹம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. கீழ்-மாலுக்குவையத்தில். உணர்த்தியாவது - உண்ணுஞ்சோற்றிலுணர்த்தியாவதென்றபடி. "[illegible]" இதிப்ருஹதாரண்யகேசதுர்த்தே ப்ராஹ்மணே. "[illegible]" இத்யாதி.

*ஶகவாதநஷவஸ்ய*'' (ஸர்வகத்வாதநந்தஸ்ய) என்றும் சோல்லுகிறநிலேபோலே. உணர்த்தியாவது- ''*ப்ரஹ்லாதொஸ்மீதிஸஸ்மார*'' (ப்ரஹ்லாதோஸ்மீதிஸஸ்மார) என்கிற ஸ்ரீ ப்ரஹ்லாதனைப்போலே தம்மையுமுணர க்ஷமராய் ஜகத்வ்ருத்தாந்தத்தையும் அநுஸந்திக்க க்ஷமராகை. நிர்க்குணமான விஷயத்திலேயன்றே இவர்அவகாஹித்தது; குணாதிகவிஷயத்திலேயிறே. ஶேஷிபக்கலிலே அநுஸந்தாநமானால் ஶேஷபூதனானதன்னையும் காணுமிறே. கீழ், நெடும்போது அவன் குணங்களை அநுஸந்திக்கையாலே ஶரித்து பலஹாநிநீங்கி பாஹ்யபதார்த்தாநுஸந்தாந க்ஷமரானார்; அவ்வளவிலே, இவர் ஶரித்தவாறே பழைய அலாபமே தலையெடுத்து ஒரு பிராட்டி ஊஶையை ப்ராப்தராய் அந்யாபதேஶத்தாலே பேசுகிறார்.

கீழில் திருவாய்மொழியில், திருத்தாயார்''எங்ஙனே புகுங்கோல்?''என்றுநோந்ததுவே பலித்து, தன் சாபலத்தாலே புறப்பட்டாள் முடியப்போய்ப்புகமாட்டாமை தன்னுடைய நகரோபவநத்திலே விழுந்து கிடந்து, அவ்வளவிலும் அவன் வரக்காணாமையாலே, கண்ட பக்ஷிகளைத் தூதுவிடுகிறாள். ('''செல்ல வைத்தனளே' என்றது-செல்லுகையிலே யொருப்பட்டாளென்றதாய், முட்டப்போகாமல் கிடந்து ஜகரஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள்'' என்று பட்டர்.) தனிவழியே புறப்பட்டுப் போம்படியாய் விழுந்த இவளுக்குத் தூதுபோவாரில்லையே; உண்டானாலும் இவள்தனக்கு முன்னே ஈடுபட்டுக் கிடப்பர்களே; இனித் தன்பரிஸரத்தில்வர்த்திக்கிற பக்ஷிகளுக்கு மேற்படக் கால்நடை தந்துபோக வல்லாரில்

---

ப்ர.—ஸ்ரீவிஷ்ணுபுராணே [க-கக] ப்ரஹ்லாதவசிதே, ''யதஸ்ஸர்வம் யதஸ்ஸர்வம் ஸர்வதஶ்ச யஸ்‌ ॥அச॥ ஸர்வகத்வாதநந்தஸ்ய ஸஏவாஹமவஸ்தித: மத்தஸ்ஸர்வமஹம் ஸர்வம் மயி ஸர்வம் ஸநாதநே ॥அரு॥ ஏவமேகாந்தயோகேந ஸாதாத்ஸம்ப்ருத: । ப்ரஹ்லாதோஹமிதிஸ்ம்ருதிம்ஸமாப்ய ॥அசு॥ [உ௦] ஏவம் ஸம்விஜ்ஞாய விஷ்ணோ: ஸ்வேநாத்மநா பிதா । தஸ்ய தஸ்யைவாத்மஸம்ஜ்ஞேநவாதாநமேவஸ்ம ॥க॥ விஸஸ்மார ததாத்மாநம் நாந்யத்கிஞ்சிஜ்ஜநாநதா ॥கக॥''

---

''க்ஷீணாஸ்வஜஸ்ரமத்யந்த தோஷேணாக்ஷ்யாணாம் । ப்ரஹ்லாதொஸ்மீதிஸஸ்மார புநராத்மாநமாத்மநா'' இத்யாதிச ப்ரதமேம்ஶே. பாலுக்குணைவயத்திலே விஷயம்நிரவதிகபோக்யமாகையாலும் தாமும் நிரவதிகப்ரேமயுக்தராகையாலும் ஏகாக்ரமான அநுபவம்செல்லாநிற்க, உண்ணாஞ்சோற்றில் தம்மையுணர்ந்து அநுஸந்திக்கக்கூடுமோ? என்ன - நிர்க்குணமான இத்யாதிவாக்யத்ரயம். அதாவது-அவனுடைய ஶேஷித்வமும் குணமாகையாலே, அத்தை அநுஸந்தித்தால் ஶேஷித்வப்ரதிஸம்பந்திதயேந ஶேஷபூதரான தம்மையுங் காணலாமென்றபடி. இப்படி, கீழில்திருவாய்மொழிகளுக்கு ஸ்வாபதேஶம் அருளிச்செய்து, இத்திருவாய்மொழிக்கு ஸங்க்ரஹ ஸங்கதி - அவ்வளவிலே இத்யாதி. 'அவ்வளவிலே'யென்றது - தம்மையும் ஜகத்வ்ருத்தாந்தத்தையும் அநுஸந்திக்க க்ஷமரான வளவிலே என்றபடி.

விஸ்தரஸங்கதி—கீழில்திருவாய்மொழியில் இத்யாதி. ஒருகார்யத்துக்குப் போவார் தம்ஶக்தியறிந்து புறப்படுமத்தனையொழிய, ஸாஹஸத்தாலே புறப்படக்கடவதோ? என்ன - தன்சாபலத்தாலே இத்யாதி. பக்ஷிகளைத் தூதுவிடுகிறதென்? வேறுசிலரில்லையோ? என்ன - தனிவழியே இத்யாதி. ''மங்கைமார் முன்பு'' என்று மேல்சொல்லுகிற தோழிமாரில்லையோ? என்ன -

லையே; இவ்வளவில் நீங்கள் என் ஈசையை அறிவிக்கவேணுமென்று அவற்றின் காலிலே விழுகிருள். * அஞ்சிறைய மடநாரையில்—என்னை நினைத்தானத்தனை, தன்னை மறந்தானென்றாள்; இத்தலையில் அபராதம் பாராதே, அத்தலையில் அபராத ஸஹத்வம் பற்றுசாக, அபராத ஸஹத்வத்தைப் பார்த்து வருவதென்று ஆள்விட்டாள். வைகல் பூங்கழிவாயில் - இருவரையும் அவ்வூரில் ஸோக்யதை மறக்கப்பண்ணிற்று என்றாள்; விஶேஷஜ்ஞனுகை யாலே ஆர்த்தியை அறிவிக்கவருமென்று ஆர்த்தரக்ஷணம் பற்றுசாகத் தூதுவிட்டாள். இத்திருவாய்மொழியில் - வாராமைக்குஅடி பரப்பனுகையென்று பார்த்தாள்; "தன்மன்னு நீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்" என்கிறபடியே அஸாதாரணமானதன்றிறே வடிவு; ஆஶ்ரிதரோடு ஏகரஸனுகையிறே என்று பார்த்து ஐகரஸ்யம் பற்றுசாகத் தூதுவிடுகிருள். பலபாட்டுக்களிலும் "இதுவோ தக்கவாறு என்கையாலே, ஆந்ருஶம்ஸ்யம் பற்றுசாகத் தூதுவிடுகிருள்" என்று பிள்ளான் பணிக்கும்படி. "[illegible]" (புஞ்ஜா நாமாநுஷாங்போகாங் ஸர்வகாமஸம்ருத்திநீ ஸமாத்வாதஶதத்ராஹம்) என்கிறபடியே பன்னிரண்டாண்டு தண்ணீர்த்துரும்பறக் கலந்து பிரிந்த பிராட்டியைப்போலே, அங்கேபுக்கு நெடுங்காலம் அவனை யநுபவித்துப் பிரிந்து தூதுவிடுகிருள்' என்று பிள்ளான். "புறப்பட்டவள் முடியப்போகமாட்டாதே நகரோபவநத்திலே கிடந்து தூதுவிடுகிருள்" என்று பட்டர்அருளிச்செய்யும்படி. "[illegible]" (ஜீவந்தீம்மாம்யதாராமஸ் ஸம்பாவயதிகீர்த்திமாங்)-பரபரிபவம் பொருத குடிப்பிறப்புடையவரிறே.

---

உண்டானுலும் இத்யாதி. இவ்வளவில் - தோழிமாரும் உதவாத தசையில். கீழ் இருகால் தூதுவிட்டாளே; அதுக்கும்இதுக்கும் வாசியேதென்ன - அஞ்சிறை இத்யாதி. என்னை - ஸாபராதையான என்னை. தன்னை - அபராதஸஹனுன தன்னை. அவன் மறக்கைக்கு ஹேது, நம்முடைய அபராதமென்று கீழே சொல்லி, வருகைக்கு ஹேது அபராதஸஹத்வமென்கிருள் - இத்தலையில் இத்யாதி. வைகல்பூங்கழிவாய் ப்ரவேஶத்திலே "ஆர்த்தரக்ஷணத்திலே யாருப்பட்டு இத்தலையை மறந்தான்" என்ருர்; இங்கே 'ஸோக்யதை மறக்கப்பண்ணிற்று' என்ருர். இதுவுமொரு நிர்வாஹமென்று கண்டுகொள்வது. ஸோக்யதைக்கு ஶப்தம் - "சிறந்தசெல்வம்" என்று. இருவரையுமென்றது - பிரிந்தால் தரித்திருக்கப்போகாத ஸௌலக்ஷண்யத்தையுடையதன்னையும், "நவஸீதா" என்று பிரிந்தால் தரித்திருக்கவொண்ணுத ஆர்த்தியையுடைய என்னையுமென்றபடி; "நஜீவேயம்க்ஷணமபி" என்னும் தன்னையுமென்றுதல். மறந்தானுகில் வருகைக்கும் பற்றுசேதென்ன - விஶேஷஜ்ஞன் இத்யாதி. விஶேஷஜ்ஞனுகையாலேயென்றது - ஸ்வவைலக்ஷண்யத்தையும் இவள் ஆர்த்தியையும் அறியுமவனுகையாலே என்றபடி. பரப்பனுகையென்றது - "மூன்னுலகங்களெல்லாம்படைத்த" என்றதைப்பற்ற. வருகைக்குப்பற்றுசேதன்ன - தன்மன்னுநீள் இத்யாதி அஸாதாரணமானதன்றிறே - "[illegible]" அன்றோ என்றபடி. விவரணம் - ஆஶ்ரிதரோடு இத்யாதி. 'ஐகரஸ்யம் பற்றுசாகத் தூது விடுகிருள்" என்று பட்டர் நிர்வாஹமென்று கருத்து. நிர்வாஹாந்தரம் - பல இத்யாதி. அங்கே புக்கு - திருக்கோளூரிலே புக்கு. "தினைத்தனையும்விடாள்" என்றத்தைப்பற்ற - "நெடுங்காலமவனையநுபவித்து" என்றது. 'கீழ்த்திருவாய்மொழியில்" இத்யாதிவாக்யத்திலே, முடியப் போகமாட்டாளென்றருளிச் செய்திருக்க, 'புறப்பட்டவள் முடியப்போக மாட்டாதே' இத்யாதி வாக்யத்திலும் இதுதன்னையே அருளிச்செய்கிறது, பிள்ளான் நிர்வாஹத்திலும் பட்டர்நிர்வாஹமே முக்யமென்று தோற்றுகைக்காக. ஸம்ஶ்லேஷமுண்டானுல் ஒருதிருவாய்மொழி யருளிச்செய்வர்; அதுகாணுமையாலே, பட்டர் நிர்வாஹமே இத்திருவாய்மொழிக்கு முக்யமென்னுமிடம் ஸம்ப்ரதி

அதிலே தமக்குவந்த அவத்யம் பரிஹரிக்கச்சொல்லவேண்டாவே. கடலையணைசெய்து ராவணாதிகளை நிரஸித்துத் தாம் வரக்கொள்ள, இத்தலை வெறுந்தரையாய்க் கிடவாமே செய்ய நினைத்தாராகில் ஏற்கவே பரிஹரித்துத் தம்புகழைநோக்கிக்கொள்ளச்சொல்லென்று சொன்னாளிறே; அப்படியே இவளும் தன்தசையை அறிவித்து விடுகிறாளாயிருக்கிறது.

---

## முதற் பாட்டு.

---

பொன்னுலகாளீரோ? புவனிமுழுதாளீரோ?
நன்னலப்புள்ளினங்காள் வினையாட்டியேன்நான் இரந்தேன்
முன்னுலகங்களெல்லாம்படைத்தமுகில்வண்ணன்கண்ணன்
என்னலங்கொண்டபிரான்தனக்கு என்நிலைமையுரைத்தே.

*ஆ.*—மத்ஸம்ஶ்லேஷைக தாரகபோஷக போக்யனாய் மதநீநஸ்வரூபரூப விபவஐஶ்வர்யனாய்க்கொண்டு என்னோடு ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷிக்கிறான் என்னுடைய ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டு என்னைத்தோற்பித்துத் தனக்கடிமையாக்கிக்கொண்ட எம்பெருமான் தன்னைப்பிரிந்து நான் படுகிற வ்யஸநத்தைச்சென்று சொல்லவேணுமென்று புள்ளினங்களைக் குறித்துச்சொல்ல, அவை பின்னையும் போகாதிருந்தவாறே, "அவன் நம்முடைய அபேக்ஷிதஞ்செய்யாதொழியிற் செய்வதென்?" என்று போகாதிருந்தனவாகக்கொண்டு, அவன் பரமகாருணிகனாகையாலும் ஆஶ்ரித வத்ஸலனாகையாலும் நம் அபேக்ஷிதஞ் செய்தருளும்; ஆதலால், என்னுடைய தசையைச் சொல்லவேணுமென்று சொல்லி, அவற்றின் பக்கலுள்ள ப்ரீத்யதிஶயத்தாலே, திருநாட்டையும் லீலோபகரணமான அண்டங்களையுமடங்க இவைசெய்கிற உபகாரத்துக்குக் கைம்மாறாகக்கொடுத்து, பின்னையும் நிரூபித்து இவைசெய்கிற மஹோபகாரத்துக்குக் கைம்மாறாகப்போராது என்றுபார்த்து, பரமதயாளுக்களான உங்களுடைய நிரவதிக தயையாலே, தாத்ருஶாஸாதாரணமான என்னுடைய தஶையைச்சென்று சொல்லவேணுமென்று ப்ரார்த்திக்கிறாள்.

*ஓ.*—முதற்பாட்டில், எம்பெருமானுக்கு என்னுடைய ஸ்திதியை அறிவித்து, அவனுடைய பரமபதத்தையும் ஸம்ஸாரவிபூதியையும் நான்தர ஆளவேணு

---

பந்தம். பிள்ளான் நிர்வாஹத்திலே, ஆந்ருஶம்ஸ்யம் பற்றாசாகத் தூதுவிட்டாருண்டோ? என்ன - ஜீவந்தீம் இத்யாதி. "ஜீவந்தீம் ராமயாராஜ ஸம்ஹாவய திக்கிகிரோது! ததயாஹந நாவ வெவ்ராவாவாய ஈவோ ந ஹி" இதிஸீதா. இதுக்குபாவம் - பரபரிபவம் இத்யாதி. இதுக்கு "தீர்த்திமாந்" என்றதிலே நோக்கு. "ஜீவந்தீம்" என்றதுக்குபாவம் - கடலே இத்யாதி. பிள்ளான் நிர்வாஹத்துக்கு, "தினைத்தனையும்விடாள்" என்ற திருத்தாயார் மநோரதமே பலித்து, அங்கே புக்கநுபவித்தாள் என்று கருத்து. "எங்ஙனேபுகுங்கொல்" என்றதைப்பற்ற - பட்டர் நிர்வாஹம், "செல்லவைத்தனள்" என்றதுக்கு - செல்ல ஒருப்பட்டாளென்றர்த்தம் விவக்ஷிதம். பட்டர்க்கு ஹ்ருதயம் - முடிகிறபாட்டிலே ஸம்ஶ்லேஷமுண்டானால், ஆடியாடியில் முடிவிலே ஸம்ஶ்லேஷந்தோற்றச்சொல்லி, அந்தாமத்தன்பிலே அத்தைவிசதீகரித்தாற்போலே, மேலிற்றிருவாய்மொழியிலே விசதீகரிப்பர்; அதில்லாமையாலே ஸம்ஶ்லேஷமில்லை என்று.

மென்று சில புள்ளினங்களைப் பிராட்டி யிரக்கிறாள். [நன்னலப்புள்ளினங்காள்] - அழகிய நீர்மையையுடைய புள்ளினங்காள். [வினையாட்டியேன்] - கையிலகப்பட்டவனை விட்டு உபேக்ஷணம்பண்ணுகைக்கிடான பாபத்தைப்பண்ணின நான் இரந்தேன்.

[முன்னென்றுதொடங்கி] - ஸ்ருஷ்டிகாலத்தில் தரதமபாவம் பாராதே ஸகல லோகத்தையும் உண்டாக்கின பரமோதாரனுமாய் அக்குணசேஷ்டிதாதிகளாலே என்னை ஸர்வஸ்வஹரணம்பண்ணி அடிமைகொண்ட க்ருஷ்ணனனவனுக்கு.

ப.—முதற்பாட்டில், தன்னுடைய காரணத்வாதி ஸ்வபாவங்களைக்காட்டி என்னை வசீகரித்துக்கொண்டவனுக்கு என்னுடைய அவஸ்தையைச்சொல்லி, அதுக்குப் பரிசிலாக உபயவிபூதியும் நீங்களிட்டவழக்காம்படி நிர்வஹிக்கவேணுமென்று சிலபுள்ளினங்களைச் சொல்லுகிறாள்.

நன்னலம் - * அர்த்தித்தார்க்குக் காரியஞ்செய்கைக்கடியான விலக்ஷணஸ்நேஹாதியுக்தங்களாய், புள்ளினங்காள் - (ப்ரவ்ருத்திஹேதுவான பக்ஷத்வயாந்வயத்தையுடைய) புள்ளினங்காள்! வினையாட்டியேன் - பிரிந்து தூதுவிடுகைக்கடியான பாபத்தையுடைய, நான் - நான், இரந்தேன் - அவன் விஷயத்திலாஶ்ரிதர்பண்ணும் ப்ரார்த்தனையை உங்கள்பக்கலிலே பண்ணினேன்; (எதுக்காகவென்னில்?)— முன் ப்ரதமத்திலே, உலகங்கள் - லோகத்தை, எல்லாம் - எல்லாம், படைத்த - ஸ்ருஷ்டித்து, (ஸ்ருஷ்டமான லோகத்துக்கு ரக்ஷகமாய்), முகில் - காளமேகநிபமான, வண்ணன் - திருமேனியையுடையனாய், கண்ணன் - ஆஶ்ரிதர்க்கு சுலபனாய், (அந்தஆகாரங்களாலே), என்-என்னுடைய, நலம் - விலக்ஷணாகாரங்களை யடங்க, கொண்ட - ஸ்வாதீனமாக்கிக்கொண்ட, பிரான் தனக்கு - உபகாரகனுக்கு, என் - என்னுடைய, நிலைமை - அவஸ்தையை, உரைத்து - சொல்லி, (அதடியாகச் சேர்ந்திருக்கிற நாங்களிருவரும் பரிசிலாகத்தந்த), பொன் - நித்யஸ்ப்ருஹணீயமான, உலகு - பரமபதத்தையும், - ஆளீரோ? புவனி - பூமியுபலக்ஷிதமான, முழுது - ஸகல லீலாவிபூதியையும், ஆளீரோ - ஆளுங்கோள்.

பின்பு இவ்விபூதித்வயமும் நீங்களிட்டவழக்கன்றோ என்றுகருத்து. இனங்காளென்றது - ஸங்கபாஹுள்யமும் கார்யோபயுக்தம் என்றிருந்தபடி.

இ.—முதற்பாட்டில், சிலபுள்ளினங்களைக்குறித்து, என்னுடைய ஸ்திதியை அவனுக்கு அறிவித்து அவனுடைய உபயவிபூதியையும் நான் தர ஆளவேணுமென்று இரக்கிறாள். [பொன்னுலகு இத்யாதி] - ஈஸ்வரவிபூதியானது விஶ்லேஷைசமயத்தில் அவனையும் தன்னையும் சேர்ந்தார்க்குப் பரிசிலாகக்கண்டதென்றிருக்கிறாள். உபயவிபூதியும் ஒருமிதுனத்துக்கு போக்ஷமிறே. அவ்வவஸ்தைபிறந்தால் சொல்லலாமிறே. நித்யவிபூதியைக் கொடுத்துப் பின்பு லீலாவிபூதியைக் கொடுக்கிறாள். இவளுக்கு இதினும் நித்யவிபூதி விதேயமாயிருக்கிறபடி. அவன் அடியில்காட்டிக்கொடுத்த அடையும் இதிறே; "அயர்வறுமமரர்களதிபதி", "இலனதுடையனிது" என்றதிறே தான்பெற்ற அடைவிலே கொடுக்கிறாள். விலக்ஷணமான நித்யவிபூதியைக் கொடுத்துவைத்து லீலாவிபூதியைக்கொடுப்பானென்? என்னில்:— பண்ணினவுபகாரத்திலே கலங்கிக்கொடுக்கிறாள்; "சுவராவதிபூநாமயாவயாவஹஷ்டிவிபூஷாயிநாடீ" என்றுரைப்போலே. [ஆளீரோ] - உங்கள் விபூதியை அராஜகமாகவிட்டுவைக்கிறதென்? ஆளிகோளோ! தான்கொடுத்ததாக நினைத்திருக்கிறிலள். [நன்னலப்புள்ளினங்காள்] - அழகிய நீர்மையையுடைய

புள்ளினங்காள். "இருவருமான சேர்த்தியை ஒழிய வேறுமொன்றைத் தரவோ?" என்று சிரித்திருந்தன; "ஸ்வாயத்த ஸ்யாத்ராஜ்யாத யோதிஷ்டாக: । ஸத த்ருத்விஜயிநம் ராமம் ஸத்யாதிஷ்டிதம்॥" [புள்]-நீர்மையோபாதி மமதபரிகரமும் உண்டாகப்பெற்றது. [இனங்காள்] - ப்ரேரிப்பாநும் அருகே உண்டென்கை. "திக்ஷு ஸர்வாஸு மார்கதே" என்று எல்லாத்திக்கிலும் போகவிடலாம்படி திரளாக விருந்தபடி யென்றுமாம். [வினையாட்டியேன்] - கைப்பட்டவனைவிட்டு உங்கள்காலிலே விழும்படியான பாபத்தைப்பண்ணினேன். [நானிரந்தேன்]-"யாசிதஸ்வரக்ஷிதா:" என்று, அவன் இரந்து தூதுவிடும்படி அறிவுதிகோளிறே உபயவிபூதியும் கொடுத்தாலும் "விலைத்ருப்யம்" என்று, இரப்புக்குக்காரியம் செய்கிறிகோளென்றுமாம். *ஸ்ருஜஸ்ராம வாஸ்யுயிவம் உதாரத தத்ரய்ம்ஸுக்ரந இறே. நாங்கள் சொன்னவார்த்தையை அவன்கேட்குமோ? என்ன; [முன்னுலகம் இத்யாதி] -ஸ்ருஷ்டிகாலத்தில் வரையாதே ஸகல லோகங்களையும் உண்டாக்கினவன். அழிந்தவற்றையுண்டாக்கினவன் உண்டான வஸ்துவை அழிக்குமோ? உண்டாக்குமிடத்தில் காமிடாதவன் "தன்னைப் பெற வேணும்" என்றிருப்பாரைக் கைவிடுமோ? [முகில்வண்ணன்] - தாமிட்டாலும் விட வொண்ணாதவடிவு. தன்பேறாகக் கொடுக்குமவன் என்றுமாம். [கண்ணன்] - ஆச்ரிதர்க்குத் தன்னைக் கையாளாக்குமவன்; என்னை ஸம்ச்லேஷதசையில் பண்ணினவன். என்னை அநந்யார்ஹமாக்கின உபகாரகன். என்னுடைய ஸ்த்ரீத்வத்தை அழித்து, தூதுபோகைக்கு உங்கள் காலிலேவிழும்படி பண்ணினவனுக்கு. [என் நிலைமையுரைத்து] - அவன்படிக்குப் பாசுரமிட்டுச் சொன்னாள்: தன்படிக்குப் பாசுரமில்லை யென்கிறாள். [என்நிலைமை]-"ஸஹிவர்ணமயீராணி" என்று தன்வடிவைக் காட்டுகிறாள். "யதாவாவோநிவதேதே" என்கிறவிஷயத்துக்குப் பாசுரமிட்டவள், தன்னுற்றாமைக்குப் பாசுரமிடமாட்டுகிறிலள். உரைத்து "வாவாயாசுவோஸ்தி" என்று ஒருவார்த்தை நேரவமையும்.

ஈடு.—முதற்பாட்டு. சில புள்ளினங்களைக் குறித்து, எம்பெருமானுக்கு என் தசையை அறிவித்து விபூதித்வயத்தையும் நான்தர நீங்கள் ஆளவேணுமென்று இரக்கிறாள்.

[பொன்னுலகாளீரோ] - ஈச்வரவிபூதியானது விச்லேஷ தசையில் அவனையும் தன்னையும் சேர்த்தார்க்குப் பரிசிலாகக் கண்டதென்றிருக்கிறாள். உபய விபூதியும் ஒரு மிதுநத்துக்கு சேஷமிறே. அவ்வவஸ்தை பிறந்தால் சொல்லலாமிறே. ஸர்வேச்வரனிருக்க இவ்விடம் அராஜகமாய்க் கிடக்கிறதென்றிருக்கிறாள். ப்ரக்ருதிஸம்பந்த மற்று ஒரு

முதற்பாட்டு - பொன்னுலகு இத்யாதி. "புள்ளினங்காள், பிரான்தனக்கென்னிலைமையுரைத்து - பொன்னுலகாளீரோ" என்கிறபதங்களைக்கடாக்ஷித்தவதாரிகை-சில இத்யாதி.

ஈச்வரனதானவிபூதியைக் கொடுக்கைக்கு இவளுக்கு ப்ராப்தியுண்டோ? என்ன; த்ரேதா பரிஹரிக்கிறார். அதில் முந்தினது-ஈச்வரவிபூதியானது இத்யாதி. இரண்டாவது-உபயவிபூதியும் இத்யாதி. மூன்றாம் பரிஹாரம் - அபிமதனைப்பிரிந்துஇத்யாதி மேல்வாக்யத்திலே கண்டுகொள்வது. பரிசில் - உபஹாரம். "ஸஹ்யாஸ்சைவ சேஷம் ஹி விபூதிர் ஹயாத்திகா" என்று மிதுந சேஷமானால் பிராட்டிக்குக் கொடுக்கலாமொழிய இவருக்குக்கொடுக்கலாமோ? என்ன - அவ்வவஸ்தை இத்யாதி. அவ்வவஸ்த்தை-பிராட்டி தசை. "ஆளீரோ" என்றதுக்கு பாவம்-ஸர்வேச்வரன் இத்

தேசவிசேஷத்திலே போய் அநுபவிக்குமத்தை இங்கேயிருந்தே கொடுக்கிறாள். ப்ரக்ருதி யோடே கொடுப்பாரும் ப்ரக்ருதி ஸம்பந்தத்தை அறுத்துக் கொடுப்பாருமாய் இருக்கிறபடி. ஒருவரை யொருவர் பிரிந்து துழாவுகிற ஸமயத்திலே கொடுக்கை இருவர்க்கும் ஒக்கும். சேர்க்கைக்காக உடம்பிழப்பாரும் உடம்போடே கூடிநின்று சேரவிடுவோருமாயாகாதே இவர்களிருப்பது. [பொன்னுலகாளீரோ, புவனிமுழுதாளீரோ] - உங்கள் விபூதியும் நான் பட்டது படவேணுமோ? அபிமதனைப் பிரிந்து வடகரைத்தேடித் திரிகிற இவள், வடிப்பிப்பார்க்கு உபய விபூதியையும் கொடுக்கிறாளிறே, அவனை நினைத்திருந்த கனம். கலந்தபோதுதன்னையும்தன்னுடைமையையும்இவளுக்காகப்பிரிந்தபோது மாறுவானொரு புல்லியனோடன்றே இவள் கலந்தது. தன் அஸந்நிதியிலும் இவள் தான் இப்படி உபய விபூதியையும் இஷ்டவிநியோகார்ஹமாக்கும்படியிறே, அவன்தன்னையும் தன்னுடைமை யையும் இவளுக்கு ஆக்கிவைத்தபடி. அருளாளப்பெருமாளெம்பெருமானார் நோவிலே, பிள்ளையுறங்காவில்லிதாஸரைக்கொண்டு ஆழ்வான்புக, "ஆழ்வான் பண்ணின நெஞ்சாறல் ஆறுவது ஆளவந்தார் ஸ்ரீ பாதத்தேறப் போனாலிறே" என்ற வார்த்தையை நினைப்பது. (அதா வது ஆழ்வான், பெருமாள் திருவடிகளிலே ஒரு வார்த்தை விண்ணப்பஞ் செய்தாராகில் அபிமத ஸித்தியாம் என்கை.) [பொன்னுலகாளீரோ, புவனிமுழுதாளீரோ] - ஒருவில் லெருதுகளோபாதி உபய விபூதியும் தன்னைச்சேர்ப்பார்க் கேன்றிருக்கிறாள். (அதாவது,

---

*யாதி. "பொன்னுலகு" என்கிற பதத்துக்கு வாஸனை-ப்ரக்ருதிஸம்பந்தம் இத்யாதி. இங்கேயிருந்தே யென்றது - இங்கேயிருக்கச்செய்தேயுமென்றபடி. இப்படி இவளைப்போலே பெரியவுடையார்க்கும் பெருமாள்கொடுத்தாரென்று விவக்ஷித்து, அவரில் இவளுக்கு வாசியருளிச் செய்கிறாராதல் மேல்வாக் யத்தால் ஹலிதமாதல் - ப்ரக்ருதியோடே இத்யாதி. ப்ரக்ருதியோடே கொடுப்பாருமென்றது - ஆழ் வாரை. ப்ரக்ருதிசம்பந்தத்தை யறுத்துக்கொடுப்பாருமென்றது - "[illegible]" என்ற கொடுத்த பெருமாளை. கொடுக்கிறதில் வாசியுண்டானவோபாதி, கொடுக்குங்காலத்துக்கும் வாசி யுண்டோ? என்ன - ஒருவரை இத்யாதி. காலத்துக்கு வாசியில்லையென்றபடி. இத்தால் - பெருமா ளோடே ஸாம்யமுண்டென்று கருத்து. துழாவுகிற - தடுமாறுகிற. இவர்களிப்படிகொடுக்கைக்கு ஹேதுவேதென்ன - சேர்க்கைக்காக இத்யாதி. இவர்கள் - பக்ஷிகளும், பெரியவுடையாரும். இத்தால் - பெரியவுடையார்சேர்க்கைக்காக உடம்பை யிழக்கையாலே யத்தையறுத்துக்கொடுத்தார்; இவையுடம்போடேநின்று சேரவிடுகையாலே அத்தோடே கொடுக்கிறாளென்றபடி. "ஆளீரோ" என்கிறஸ்வரத்துக்கு பாவம் - உங்கள்விபூதியும் இத்யாதி. ஈஸ்வரவிபூதியைக் கொடுக்கைக்கு இவளுக்கு ப்ராப்தியேதென்கிற சங்கைக்கு மூன்றும் பரிஹாரம் - அபிமதனை இத்யாதி. நினைத் திருந்த கனமாவது- கலந்தபோது தன்னையும் தன்னுடைமையையும் கொடுத்ததைநினைத்தகனமென்ற படி. "[illegible]" என்று போகதசையிற் சொன்னதைக்கொண்டு கொடுக்கலாமோ? என்ன-கலந்தபோது இத்யாதி. புல்லியன்-க்ஷுத்ரன். ஆனாலும், அவன் ஸந்நிதி வேண்டாவோ? என்ன- தன்அஸந்நிதியிலும் இத்யாதி. தன்னையும் தன்னுடைமையையும் இவரிட்ட வழக்காக்கி இவர்க்கு பரதந்த்ரனாயிருக்கையாலே, இவர்க்குக்கொடுக்கலாமென்னுமத்தை [illegible] முகத்தாலே தர்சிப்பிக்கிறாராதல், இப்ப்ரசங்கத்திலே ஆசார்யனுக்கு மோக்ஷப்ரதத்வமுண்டென்கைக் கைதிஹ்யமாதல் - அருளாளப்பெருமாள் இத்யாதி. ஆழவான்பண்ணின நெஞ்சாறலென்றது - ஆழ்வான் பரமபதப்ராப்தாநஸக்தராயிருக்க, இவ்வவஸ்த்தையைக் கண்டுகொண்டிருந்ததால்வந்த நெஞ் சாறலென்றபடி. நெஞ்சாறல்-மனோதுக்கம். ஸ்வாசார்யரான எம்பெருமானாரிங்கே யெழுந்தருளியிருக்கை யாலே, ஆளவந்தார் ஸ்ரீபாதத்தேறப்போனாலிறே என்றது. "ஈஸ்வரவிபூதியானது" இத்யாதி முக்கின பரிஹாரவாக்யவிவரணம் - ஒருவில்லெருது இத்யாதி. அதாவது வில்லுமெருதும் பிராட்டிக்கும் நப்பின்னைப்பிராட்டிக்கும் கந்யாசுல்கமானாற்போலே, விபூதித்வயமும் சேர்ப்பார்க்கு சுல்கமென்ற*

வில்லேருதுகளை நிரஸிக்கை அவர்களுடைய ஸம்ஸ்லேஷத்துக்கு ஹேதுவானாற்போலே, இவை உபயவிபூதியும் ஆளுகை அவனுடன் ஸம்ஸ்லேஷத்துக்கே ஹேதுவென்ருள் என்றபடி.) [ஆளீரோ] - ஸ்வத்வம் ஒருவர் பண்ணிக் கொடுக்கவேண்டாதிருக்கிறபடி. "ஆநயைநம் ஹரிச்ரேஷ்ட" என்ருரிறே பெருமாள்; அப்படியே அவற்றுக்கும் "தூதுபோக" என்று முகங்காட்டினபோதே கொடுத்தற்றது. அவன் கார்யஞ் செய்கிற இவற்றுக்கு அவனை யறிவித்துக் கொடுக்க வேண்டாவிறே. இவள்தானும் அவன் கார்யமிறே செய்கிறது. இவை தூதுபோகவே தான் உளளாம்; தான் உளளாகவே ஸவிபூதிகனான எம்பெருமானுளனும். இனி, இவள் தன் படுக்கைப்பற்றிறே கொடுக்கிறதும் [ஆளீரோ]- உங்கள்கார்யமே செய்ய வொண்ணுது: என் கார்யமுஞ் செய்யவேணும். இவள்கார்யஞ் செய்கையாவது, இவற்றை யாளுகையிறே. "இவர்தான் உபயவிபூதியையும் கொடாநின்ருளாகில், அவன் வந்தால் தானும் அவனும் எங்கேயிருப்பது?" என்ன, "இக்குருவி காட்டினவிடத்தே" என்று அநந்தாழ்வான் வார்த்தை. [பொன்னுல காளீரோ - புவனிமுழுதாளீரோ]- கைப்பட்டத்தைக் கொடுத்திறே மற்ருென்று தேடிக்கொடுப்பது. தனக்காக்கின அடைவே கொடுக்கிருள் நித்ய விபூதியைக் கொடுத்திறே லீலாவிபூதியைக் கொடுத்தது; 'அயர் வறுமமரர்களதிபதி' என்ற பின்பிறே, 'இலனதுடையனிது' என்று,லீலாவிபூதியோகஞ் சொல்லிற்று. இங்கே யிருந்தாலும் ஜ்ஞாநம் பிறந்தால் அணித்தாய்த் தோற்றுவது அவ்விடமிறே: "அக்கரையென்னு மனத்தக்கடலுளழுந்தி யுன்பேரருளா லிக்கரையேறி யிளைத்து" என்று, அது இக்கரையாகவும், இது அக்கரையாகவும் சொல்லா நின்ருர்களிறே. "மாக வைகுந்தங் காண்பதற் கென்மனமேக மேண்ணும்" என்றிறே யிருப்பது. ப்ராப்தி ஊமையி

*ளென்றபடி. "ஆளீரோ" என்கைக்கு, நீ எங்களுக்குத் தந்தாயோ? என்ன - ஸ்வத்வம்இத்யாதி. இது - "ஆளீரோ" என்ற† பூதநிர்த்தேசத்துக்குபாவம். அதுக்கு ஹேதுவேதென்ன- ஊத்தமஸ்ய இத்யாதி. அதாவது-"ராகவம் சரணம் கத:" என்றபோதே பெருமாள் அபயங்கொடுத்தாரென்றபடி. "ஒருமிதுனத்துக்குசேஷம்" என்ற த்விதீயபரிஹாரத்திலே, அவனுக்கும் சேஷமாகையாலே அவனுக்கறியாதே கொடுக்கலாமோ? என்ன - அவன்கார்யம் இத்யாதி. ஸ்வார்த்தமாகவன்ருே தூதுபோகச்சொல்லுகிறது: அவன்கார்யமோ இது? என்ன - இவள்தானும் இத்யாதி. அதெப்படியென்ன - இவைதூது இத்யாதி. 'தானுளளாகவே' இத்யாதிக்குஸம்வாதமாக - "உபஜீவிதஜாயஞ்ச ராகவஸ்ய மஹாத்மந:" இத்யாத்யநுஸந்தேயம். "அபிமதனைப்பிரிந்து" இத்யாதி த்ருதீயபரிஹாரவிவரணமாதல், ஏதத்வாக்யோபஜீவநேந 'அவனுக்கு அறியாதே கொடுக்கலாமோ?' என்கிற சங்கைக்கு பரிஹாராந்தரமாதல் - இனி யிவள்தன் படுக்கை இத்யாதி. "என்றிவர் மூவராளுமுலகமும்மூன்றே" என்றத்தைப்பற்ற - படுக்கைப் பற்று என்றது. "உங்கள் விபூதியும்" இத்யாதிவாக்யத்தால் பலிதமாதல், "ஆளீர்" என்கிறவிதுக்கு ஹார்த்தபாவமாதல் - உங்கள்கார்யம் இத்யாதி. முந்தற, தானிருந்த லீலாவிபூதியைக் கொடாதே, முற்பட "பொன்னுலகாளீரோ" என்பானென்? என்ன - கைப்பட்டத்தை இத்யாதி. இந்த ஹஸ்தகதத்வத்தை த்ரேயா காட்டுகிருர். முந்தினது - தனக்காக்கின இத்யாதி. ஆக்கினவடைவேதென்ன - நித்யவிபூதியை இத்யாதி. இதுக்கு ஸூசகஸப்தம் - அயர்வறும் இத்யாதி. இரண்டாம் ப்ரகாரம் - இங்கேயிருந்தாலும் இத்யாதி. அப்படி அவ்விடம் அணித்தாய் தோற்றிற்ருே? என்ன - அக்கரையென்னும் இத்யாதி. ஸம்ஸாரமென்கிற அநர்த்தாவஹமான ஸமுத்ரத்துக்குள்ளேயழுந்தித் தறைப்பட்டு, உன்னுடைய நிரவதிக க்ருபையாலே பரமபதமாகிற இக்கரையிலேயேறி ப்ராப்திகிடையாமையாலே இளைத்திருந்தேனித்யர்த்த:. பெரியாழ்வார் திருமொழி (ரு,ரு,எ.) அப்படி அணித்தாய்த் தோற்றுகைக்கு ஹேதுவேதென்ன-மாகவைகுந்தம்*

† பூ(ஹ)தநிர்த்தேசம்—ஸித்தமானதுபோலக் கூறுகையென்றபடி.

லும் முற்பட்டிருப்பது அவ்விடமேயிறே; ததீயத்வாகாரத்தாலே யொருகால் உத்தேச்யமா மிறே இவ்விடம். "ஞொவஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்" (நோபஜநம்ஸ்மரந்நிதம்சரீரம்) என்று நிற்கச் செய்தேயும், அவனுடைய ஐச்வர்யத்திற் குறையநுபவிக்க வொண்ணு தென்று ததீயத்வாகாரேண ஒருகால் உபாதேயப்ரதிபத்தி உண்டு இத்தனையிறே. இல்லையாகில், 'புவனிமுழுதாளீரோ!' என்று, ஆகாராந்தரப்ரதிபத்தியுண்டாகில் கட்டடங்க உத்தேச்யமாய்த் தோற்ருதிறே. [பொன்னுலகாளீரோ-புவனி முழுதாளீரோ] - அடிமைக்கு அடைத்தேற்றலாயிறே இவ்விடந்தானிருப்பது; அவ்விடம் அடிமையாலல்லது செல்லாத விடமாயிறே யிருப்பது. தூதுபோனாரது பரமபதம், அதுடையாரது லீலாவிபூதி. [புவனிமுழுதாளீரோ] - உத்தேச்யமான நித்யவிபூதியைக் கோடுத்தவள், த்யாஜ்ய மான லீலாவிபூதியைக் கோடுப்பானேன்? என்னில்: இவை பண்ணுகிற உபகாரத்தை நினைத்து, 'இன்னது கோடுப்போம்' என்றறியாமல் கலங்கி. பண்டு கலங்கினாரும் இப்படியே செய்தார்கள்:- "அபராவர்த்திநாம்யாஸ யாஸ பூமிப்ரதாயிநாம்" (அபராவர்த்திநாம்யாச யாச பூமிப்ரதாயிநாம்) என்று சொன்னார்கள். ப்ரீதி அளவு பட்டிருக்கிலிறே தெளிந்திருப்பது. "ஹிரண்யம்வா ஸுவர்ணம்வா ரத்நாநிவிவிதாநிவா।

---

ப்ர.—[பொன்னுலகாளீரோபுவனிமுழுதாளீரோ] — க்ருதஜ்ஞ்யகாம்யெஷ்ஷஷ்டிதவெஜடாயுஷம்ப்ருதிராஜ:, "யாமதிர்ஜ்ஞுஶீலாநாஞொஹிதாமெஶ்யாமதி:॥ ௨௯॥ அபராவர்த்திநாம்யாஸ யாஸவபூமிப்ருதாயிநாம் । யோகஶம்ஸநாஜ்ஞாநொதாமஹ்யலொகாநநுத்தமாந॥ ௩0॥ ஹ்ய ராஜஶோபாவஸ்வஸம்ஸ்யாதஸ்யயோவ ஜ॥௩௭॥ யுதிஷ்டிராம்யெ [௧௧௯] ராவணவயாநந்தரொராஜவிஜயம் விஜ்ஞாவஸ்யஸ்ஷ்டிகம் ஹநுமதேஷம்ப்ருதிஸீதா, நஹிவஶ்யாமிதஸ்ஸளஷ்யவ்யஷிவ்யாமவிவாநா । ஸஷஶ்யம் ஶஸுவி யாவ்யாமெநதவஶாதாமஹவெதஸ்ஸஹ॥௧௯॥ ஹிரண்யம்வாஸுவர்ணம்வாரத்நாநிவிவிதாநிவா । ராஜ்யம்வாத்ரிஷுலொகேஷு நைததர்ஹதிபாஷிதம்॥௨0॥

---

இத்யாதி. அதாவது - ப்ராப்யத்வரையாலே எப்போதும் அவ்விடத்தையே நினைத்துக்கொண்டிருக்கை யாலே யதுஅணித்தாய்த்தோற்றமென்றபடி. மூன்றாம் ப்ரகாரம் - ப்ராப்திதசையிலும் இத்யாதி. ப்ராப்திதசையிலிவ்விடம் உத்தேச்யமன்ருே? என்ன - ததீயத்வாகாரத்தாலே இத்யாதி. "ஒருகால்" என்கிறதென்? ஸர்வதா உத்தேச்யமானாலோ? என்ன - நோபஜநம் இத்யாதி. "ததீயத்வாகாரேண உத்தேச்யம்" என்கிறதென்? வஸ்துத: உத்தேச்யமென்றாலோ? என்ன - இல்லையாகில் இத் யாதி கட்டடங்கஎன்றது - 'முழுது" என்றத்தைப்பற்றி. ஆக, இப்படி ப்ராகாரத்ரயத்தாலும் ஹஸ்த கதமானத்தை மூந்தறக்கொடுக்கிறாளென்றொரு பரிஹாரமருளிச்செய்து பரிஹாராந்தரம்- அடிமைக்கு இத்யாதி. அடைத்தேற்றல் - பேட்டிமையும், விரோதியும், ஆசந்நகமும். மூந்தற நித்யவிபூதியைக் கொடுப்பானென்? என்கிற சங்கைக்கு த்ருதீயபரிஹாரம் - தூதுபோனாரது இத்யாதி. அதாவது - ப்ரதாநத்தைக்கொடுத்தால் அப்ரதநம் தன்னடையே ததீநமாமென்றபடி. அன்றிக்கே 'தனக்காக்கின வடைவே' இத்யாதிவாக்யந்தொடங்கி, 'தூதுபோனாரது பரமபதம்' இத்யாதிவாக்யத்தோடே அஞ்சுபரி ஹாரமாதல். இப்படி கலங்கிக்கொடுத்தபேருண்டோ? என்ன, உதாஹரணத்வயம் - பண்டு இத்யாதி. இப்படி கலங்குகைக்கு ஹேதுவேதென்ன - ப்ரீதி இத்யாதி. "த்ரிஷுலொகேஷுராஜ்யம்" என்றதிலே ஹிரண்யாதிகள் அந்தர்ப்பூதமாயிருக்க, பிரித்துச்சொன்னது கலக்கத்தின் கார்ய மென்றபடி. அபராவர்த்திநாமிதி. "யாமதிர்யஜ்ஞஶீலாநாம்ஆஹிதாக்நேஶ்யயாமதி:। அபராவர்த்திநாம்யாஸ யாஸவபூமிப்ரதாயிநாம் । யோகஶம்ஸநுஜ்ஞாதொமஹ்யலொகாநநுத்தமாந்" இதி ஜடாயுஷம்ப்ரதி ராம:. "ஹிரண்யம்வாஸுவர்ணம்வா ரத்நாநிவிவிதா

ராஜ்யம்வா த்ரிஷு லோகேஷு நைதத³ர்ஹதி பா⁴ஷிதும்'' (ஹிரண்யம்வா ஸுவர்ணம்வா ரத்நாநிவிவிதாநிவா | ராஜ்யம்வா த்ரிஷு லோகேஷு நைததர்ஹதி பாஷிதம்) என்று கலங்கினளிறே. இருவரும் கோடுக்கலாம்படி ஒரு மிதுநத்துக்கு ஶேஷமாயிறே உபயவிபூதியு மிருப்பது.

[நன்னலப்புள்ளினங்காள்] - அவனிலும் உங்களுக்குண்டான நீர்மையில் ஏற்றமிருந்தபடியென்? இவ்வளவில் ஆளிட்டழைக்கும்படி கடக்கவிராதே, நீங்கள் முன்னம் கிட்டநின்று முகங்காட்டப் பெறுவதே! உங்கள்படி யிருந்தபடி கண்டேனுக்கு; ஸர்வஸ்வத்தையும் எனக்குத்தந்து தூதுபோம்படியா யிருந்ததீ ! ''அவனுக்குக் குணங்களி லேற்றம் ஆஶ்ரயத்தாலே'' என்றிருந்தோம்; அது உங்கள்பக்கலிலேயாகாதே என்கிறாள். உங்கள் நீர்மை யறியாதே, என் செல்லாமையாலே ''அத்தைக்கோள், இத்தைக்கோள்' என்றுநலிந்தேனிறே! ''கு³ணாஸ்த்வய்யேவஶோப⁴நா:'' (குணாஸ்த்வய்யேவஶோபநா:) என்னுமவனும் புறம்பானுன், உங்களைப் பார்க்க. ''உங்கள் தரத்துக்கு அதுஅறுகும் தாளிப்பூவு மிறே'' என்பராம் பிள்ளையமுதனார். உங்களுக்கு நான் சில செய்தேனோ! வெறும் உங்கள் நீர்மையாலே செய்ததத்தனையிறே. பாண்டவர்களுக்குத் தூதுபோன க்ருஷ்ணனையும், ஆள வந்தார்க்குப் பச்சையிட்ட மணக்கால்நம்பியையும்போலே இருந்ததீ யுங்கள்படி! [நன்னலப் புள்ளினங்காள்]-அழகிய நீர்மையையுடைய புள்ளினங்காள் என்னுதல், மிக்கஸ்நேஹத்தை

---

ப்ர.—[நன்னலப்புள்ளினங்காள்]—தமேவம் ப்³ருவதம் ஸீதா, ''ஶ்லாக⁴நீயோ நிலஸ்யத்வம் புத்ர: பரமதா⁴ர்மிக: ॥ உஎ ॥ ப³லம் ஶௌர்யம் ஶ்ருதம் ஸத்த்வம் விக்ரமோ தா³க்ஷ்யமுத்தமம் । தேஜ: க்ஷமா த்⁴ருதி: ஸ்தை²ர்யம் விநீதத்வம் நஸம்ஶய:॥ ஏதே சாந்யே ச ப³ஹவோ கு³ணாஸ்த்வய்யேவ ஶோப⁴நா:॥ உஅ॥

---

நிவா । ராஜ்யம்வா த்ரிஷு லோகேஷு நைதத³ர்ஹதி பா⁴ஷிதும்'' இதிராவணவதாநந்தரம் ராமவிஜயம் விஜ்ஞாப்யஸ்த்திதம் ஹநுமந்தம்ப்ரதிஸீதா. 'த்ரிஷு லோகேஷு ராஜ்யம்வா' என்று - த்ரைலோக்யத்தையும் கொடுக்கைக்கு இவளுக்கு ப்ராப்தியுண்டோ? என்ன - இருவரும் இத்யாதி. இருவருமென்று - சக்ரவர்த்தித்திருமகனும், ஸ்ரீஜநகராஜன் திருமகளும்.

''நலம்'' என்றதுக்கு நாலர்த்தம்: க்ருபையாதல், ஔதார்யமாதல், குணஸமுதாயமாதல், ஸ்நேஹமாதல். க்ருபாபக்ஷத்திலே, ''நல்'' என்கிறபதத்தாலே- ஈஶ்வரக்ருபையை வ்யாவர்த்திக்கிறதென்கிறார்-அவனில் இத்யாதி. அவன்க்ருபையைப்பற்ற எங்கள்க்ருபைக்கேற்றமேதென்ன-இவ்வளவில்இத்யாதி. ஆளிட் டழைக்கும்படியென்றது - இளையபெருமாளையிட்டு மஹாராஜரை அழைப்பித்தாற்போலே யழைப்பிக் கும்படி இராதேயென்றபடி. ஔதார்யபக்ஷத்தை அருளிச்செய்கிறார்- உங்கள்படி இத்யாதி. குணஸமு தாயபக்ஷத்திலே, 'நல்' என்று ஈஶ்வரகுணத்தையும் திருவடிகுணத்தையும்வ்யாவர்த்திக்கிறதென்கிறார் - அவனுக்குக்குணங்களில் இத்யாதியாலும், குணாஸ்த்வய்யேவ இத்யாதியாலும். ''தேஜ: க்ஷமா த்⁴ருதி: ஸ்தை²ர்யம் விநீதத்வம் நஸம்ஶய: । ஏதே சாந்யே ச ப³ஹவோ கு³ணாஸ்த்வய்யேவ ஶோப⁴நா:'' இதி ராவணவதாநந்தரம் மாருதிம்ப்ரதிஸீதா. ஆஶ்ரயத்தாலே யென்றது - ஈஶ்வர னாஶ்ரயமாகையாலே யென்றபடி. க்ருபாபரமான முந்தின அர்த்தவிவரணம் - உங்கள் நீர்மை இத்யாதி. ''உபயவிபூதியையுமாளீர'' என்கிறது நல்லதன்றோ, நலிவோ? என்ன - உங்கள்தரத்துக்கு இத்யாதி. அறுகு - அறுகம்புல்லு. தாளிப்பூ - நீர்த்தாளிப்பூ. ஏதத்விவரணம் - உங்களுக்கு இத்யாதி. ஸ்நேஹ பக்ஷத்தை அருளிச்செய்கிறார் - பாண்டவர்களுக்கு இத்யாதி. ''சுயஶேஷி'' என்று பாண்டவர்களுக் குத் தூதுபோனது ஸ்நேஹகார்யமிறே. க்ருபாஸ்நேஹபக்ஷங்களை விவரிக்கிறார் - அழகிய இத்யாதி.

யுடைய புள்ளினங்காள் என்னுதல். “இருவருமான சேர்த்தியொழிய வேறுமோன் றைத்தரவோ ?” என்று சிரித்திருந்தன; “அர்த்த தஸ்ஸமயா ப்ராப்தா தேவராஜ்யாதயோ குணா: | ஹதஸ்த்ரும் விஜயிநம் ராமம் பஶ்யாமி ஸுஸ்த்திதம்” (அர்த்த தஸ்ஸமயாப்ராப்தா தேவராஜ்யாதயோ குணா: | ஹதஸத்ரும் விஜயிநம் ராமம்பஶ்யாமி ஸுஸ்த்திதம்) (பெருமாள் விஜயிகளாய்க்கொண்டிருக்கப் பார்த்தவர்களுக்கு தேவராஜ் யாதிநன்மைகள் தன்னடையே வந்ததிறே.) [நன்னலம்]- “அஹஞ்ச ரகுவம்ஶஶ்ச” (அஹஞ்ச ரகுவம்ஶஶ்ச) இத்யாதி - “நஜீவேயம் க்ஷணமபி” (நஜீவேயம் க்ஷணமபி) என்றிருக்கிற நானும் என்னையொழிய ஜீவியாதபடியிருக்கிற பிள்ளை பரத னும்,இருவர்க்கும் உஜ்ஜீவந ஹேதுவான பிள்ளையும். “வைதேஹ்யா:” (வைதேஹ்யா:)- இவையெல்லாம் தருமென்கைக்காக. “தர்மத: பரிரக்ஷிதா:” (தர்மத:பரிரக்ஷிதா:)- நீ செய்ததுக்கொரு ப்ரத்யுபகாரம் பண்ணலாமோ?வேறும் அறவனுகையாலே செய்தாய்அத் தனை. “உனக்கென்செய்கேன்” என்று காலதத்வமுள்ளதனையும் உழைக்கும்படியிறே நீ செய்தது. [புள்] - இந்நீர்மையில்ஏற்றமுடைய உங்களுக்கே கமநஸாதநமான பக்ஷபாத முண்டாகப் பெறுவதே! “பிரிந்தாரைச் சேர்க்கை திர்யக்குக்களின் கார்யம்” என்றிருக்கி ருள்,ராமாவதாரத்தில் வாஸனையாலே. [இனங்காள்]-“நகஶ்சிந் நாபராத்யதி” (நகஶ்சிந் நாபராத்யதி) என்பாருங் கூடவுண்டாயிருக்கிறபடி. [இனங்காள்] - உடலுமுயிருங்கூடக் கிடக்கப் பெறுவதே! “அக்ரதஸ்தேகமிஷ்யாமி” (அக்ரதஸ்தேகமிஷ்யாமி) என்று முன் நடப்

---

தர்மேத்ய [௧௧௬] தாம்ஸ்ருதி ஸ:, “தவைவத உவாசவஸந்ததௌ ஸர்வஸஹ ஸிஷ்யைவ | ரத்நவான் வில்யா தஸ்தாவத்தேவராஜ்யாபிஷிக்தோ உர*| அர்த்த தஸ்ஸமயா ப்ராப்தா தேவராஜ்யாதயோ குணா: | ஹதஸத்ரும் விஜயிநம் ராமம் பஶ்யாமி ஸுஸ்த்திதம் உ௭||”

---

வாக்யத்வயத்தாலே. ஸ்நேஹபக்ஷத்தில், “நன்னலம்” என்றபதத்துக்கவதாரிகை - இருவருமான இத் யாதி. அப்படி இருவருமான சேர்த்தியே உத்தேஶ்யமாய், “வேறொன்றுவேண்டா” என்று சொன்ன பேருண்டோ? என்ன - “அர்த்த தஸ்” இத்யாதி. “அர்த்த தஸ்ஸமயா ப்ராப்தா தேவராஜ்யாதயோ குணா: | ஹதஸத்ரும் விஜயிநம் ராமம்பஶ்யாமி ஸுஸ்த்திதம்” இதி ஸம்தாம்ப்ராதி மாருதி:. க்ருபாபக்ஷத்திலே, இப்படி ஶ்லாகித்தபேருண்டோ? என்ன - “அஹஞ்ச” இத்யாதி. “அஹம்ச ரகுவம்ஶஶ்ச லக்ஷ்மணஶ்ச மஹாபல: | வைதேஹ்யா ஹஸ்தேநாத்ய தர்மத: பரிரக்ஷிதா:” இதி யுத்தகாண்டே ஹநூமந்தம் ப்ரதிராம:. இதுக்கர்த்தம்- “நஜீவேயம்” இத் யாதி. ரகுவம்ஶஶ்ச என்றது - பரதாழ்வானை. ‘இவையெல்லாம் தருமென்றது’- இவளுண்டாகில் தாங்க ளுண்டாய் இவ்லையாகில் இல்லாதபடியான வைலக்ஷண்யத்தையுடையவளென்று தோற்றுகிறது வைதேஹ்யா: என்கையாலே யென்றபடி. அறவன் - தார்மிகன். உழைக்கும்படி - தடுமாறும்படி. இஸ்ஸலோகத்தில் “தர்மத:பரிரக்ஷிதா:” என்றது வேண்டுவது. “புள்” என்றதுக்குபாவம்- இந்நீர்மையில் இத்யாதி. வார்த்தைசொல்லமாட்டாத திர்யக்குக்கள் சேர்க்கக்கூடுமோ? என்ன - பிரிந்தாரை இத்யாதி. “இனம்” என்று - மிதுநமென்னுதல்; ஸமூஹமென்னுதல் மிதுநமென்ற பக்ஷத்திலே - தனக்கு புருஷகாரமுண்டென்று பாவமாதல், தன்னைப்போலே விஶ்லேஷத்திருக்கை யன்றிக்கே பரஸ்பரம் ஸம்ஶ்லேஷித்திருக்கப்பெறுவதே யென்று பாவமாதல். இந்தபாவத்வயத்தையும் அருளிச்செய்கிருர் - நகஶ்சித் இத்யாதிவாக்யத்வயத்தாலே. விவரணம் - “அக்ர த:” இத்யாதி. “பாபாநாம் வா ஶுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம | கார்யம் கருணமார்யேண

பாருங்கூட இருக்கப்பெற்றபடி [இனங்காள்] - "[illegible]" (திக்ஷு ஸர்வாஸு மார்கந்தே) என்று, எல்லாத்திக்கிலும் போகவிடலாம்படி திரளவிருக்கிறபடி யென்றும். [வினையாட்டியேன்] - கைப்புகுந்தவனைக் கைகழியவிட்டு உங்கள்காலிலே விழும்படியான பாபத்தைப் பண்ணினேன். உங்களுக்குக்குணங்கள் ஸ்வரூபமானாற்போ லேயிறே எனக்கு ஹாக்யஹாநி ஸ்வரூபமானபடி. [நான்] - "[illegible]" (தர்மத:பரிரக்ஷிதா:) என்றிருப்பான்அவன்கிடீர்! ஸ்ரீஜநகராஜன் திருமகளான வேண்டற் பாட்டோடே யாகாதே தான் தூதுவிடுகிறது இவள்! [நானிரந்தேன்] - அத்தலை பித்தலையான படி. [இரந்தேன்] - கீழே, அவன் திருவடிகளிலே நாலுப்ரயோகம் ஶரணம்புக்கார்; இப் போது ததீயர்பக்கலிலே ப்ரபத்திபண்ணுகிறார்: அது தப்பிலும் இது தப்பாதிறே. இதுக்கு வேறு விலக்கடி யில்லையே. * ப்ரார்த்தநா மதியிறே ஶரணாகதியாகிறது. அவ்யபிசாரியான உபாயத்தைப் பற்றுகிறாள். [இனங்காள் - இரந்தேன்] - மிதுநமாயிருப்பார்க்கு இரந்தார் வாசி தெரியுமிறே. ஶரணாகதர்க்குத் தன்னுயிரைக் கொடுக்குமவையே. நன்னலப்புள்ளினங்

[நானிரந்தேன்] [illegible] "[illegible]"

ணநகஶ்ரீவராய்"இதி யுத்தகாண்டே ஹநூமந்தம் ப்ரதிஸீதா. "[illegible]" இத் யயோத்யாகாண்டே ராமம்ப்ரதி ஸீதா. ஸஹஹபக்ஷத்தையருளிச்செய்கிறார்- "திக்ஷு ஸர்வாஸு" இத்யாதி. "[illegible]" இதி ஸுந்தரகாண்டே ஹநூமாந். "இரந்தேன்" என் றத்தைக்கடாக்ஷித்துபாவம் - கைப்புகுந்தவனை இத்யாதி. "நன்னலம்" என்றத்தைக் கடாக்ஷித்து பாவம் - உங்களுக்கு இத்யாதி. "நான்" என்றதுக்கு வ்யாவர்த்யம் - "[illegible]" இத்யாதி. "நான்" என்று தன்னைப்போரப்பொலிய அபிமானிக்கிறது, ஸ்ரீஜநகராஜன் திருமகளான பெருமையை நினைத்தன்றோ என்று வ்யாக்யாதாவின் ஈடுபாடு - ஸ்ரீஜநகராஜன் இத்யாதி. "[illegible]" இத்யாதிவாக்யவிவரணம் - அந்தலை இத்யாதி. இரந்தேன் என்றதுக்கு ஸ்வாபதேஶம் - கீழே இத்யாதி. அத்தைப்பற்ற இதுக்குவாசியேதென்ன - அதுதப்பிலும் இத்யாதி. "[illegible]" இத்யாத்யநுஸந்தேயம். தப்பாமைக்குஹேதுவேதென்ன - இதுக்கு இத்யாதி. அதாவது- ஹரிவிஷயத்துக்குஸ்வாதந்த்ர்யமாகிறவிலக்கடியுண்டு; ததீயவிஷயத்துக்குஅதில்லையென்றபடி. விலக் கடி - ப்ரதிபந்தகம். "இரந்தேன்" என்றால் - ப்ரபத்தி வாசகமாமோ? என்ன - ப்ரார்த்தநாமதி இத்யாதி. "[illegible]" இதி பகவச்சாஸ்த்ரே. பக்தியாதிகளைவிட்டு ப்ரபத்தியிலேயிழிகைக்குஅடி, ப்ரபத்தி யமோகமாயிருக்கை யாலேயென்று, விவக்ஷித்தருளிச்செய்கிறார் - அவ்யபிசாரியான இத்யாதி. "இனங்காள்" என்று - மிதுநத்தை ஸம்போதித்து, "இரந்தேன்" என்கிறவளுடைய ஹார்த்தபாவம் - மிதுநமாய் இத்யாதி. "தெரியும்" என்கைக்கு ந்யாயகமேதென்ன - ஶரணாகதர்க்கு இத்யாதி. இவ்விடத்திலே - "[illegible]

களன்றியே படுகோலக்காரர்க்கும் இரங்கவேண்டும்படியிறே என்னுடைய தசை. [நன்னலப்புள்ளினங்காள் - இரங்தேன்] - ஶரண்யதை குறைவற்றிருந்தபடி யென்தான்! [நானிரங்தேன்] - அவனிறே "ஸுக்ரீவம் ஶரணம் கத:" (ஸுக்ரீவம்ஶரணம்கத:) என்று திர்யக்கின்காலிலே முற்பட விழுந்தான்; பின்பிறே இவள், "ததாகுருத யாம்மயி" (ததாகுருத யாம்மயி) என்றது. [வினையாட்டியேன் நானிரங்தேன்]-எல்லாங்கொடுத்தாலும் அவற்றுக்கு ஒன்றும் செய்ததாகத்தோற்றுதே பல்காட்டுகிருள். அவர்கள் பண்ணுகிற உபகாரம்அளவுபட்டிருக்கிலிறே ஸத்ருஶமாக ஒன்று தேடிக்கொடுக்கலாவது. எல்லாங் கொடுத்தாலும், "க்ருத்ஸ்நாம்வா ப்ருதிவீம் தத்யாந் நதத்துல்யம் கதஞ்சந" (க்ருத்ஸ்நாம்வா ப்ருதிவீம்தத்யாந் நதத்துல்யம்கதஞ்சந) என்று "செய்ததுபோராது" என்னும் இதுவேயிறே நெஞ்சில் பட்டுக்கிடப்பது. "தஸ்மை நத்ருஹ்யேத்"(தஸ்மைநத்ருஹயேத்) என்னுமளவில் நிற்குமதன்றே; "க்ருதமஸ்ய ஜாநந்" (க்ருதமஸ்யஜாநந்). அங்குநின்றும் மீண்டாலிறேயதுதான்வேண்டுவது;

---

*தம் ப்ரதிஜக்ராஹ ஹர்ஷாத் ப்ராஹ தபூர்வமிதம் வச: । ஸர்வதா ஸர்வபாவேந ஸுக்ரீவம் ஸர்வநிஶ்சயாத் விபோஜந:" என்றதுவும், "ஸ்ரீப்ரபதே தஸ்மிந் வந்தே ஶரணார்த்திமதா: । ஸுவிசஸ்யமாந்யாயம் ஸைஸ்யாம்ஸநிஸ்பந்தித:" என்றதுவும் அநுஸந்தேயம். "நல்னலப்புள்ளினங்காள் இரங்தேன்" என்னவமைந்திருக்க, "வினையாட்டியேன்" என்று - தன் தைந்யத்தைச் சொல்லுகிறவளுடைய ஹார்த்தபாவம் - நன்னலப்புள் இத்யாதி. இவள் ப்ரபத்திபண்ணுகைக்கு இவர்கள் தான் ப்ரபத்தவ்யரோ? என்ன - ஶரண்யதை இத்யாதி. 'ஶரண்யதை குறைவற்றிருந்தபடியென்றது' "நலம்" என்று - வாத்ஸல்யாதிகளையும், "புள்" என்ற சிறகாலே - ஜ்ஞாநாதிகளையும், "இனம்" என்று - புருஷகாரத்தையும் நினைத்து, "இனங்காள்" என்று - ஸ்ரீமத்பதார்த்தத்தையும், "நன்னலப்புள்" என்று - நாராயணபதார்த்தத்தையும், "இரங்தேன்" என்று - "ஶரணம், ப்ரபத்யே" என்ற பதத்வயார்த்தத்தையும், "நான்" என்று-உத்தமனாலே யாக்ஷிப்தனான அதிகாரியையும் சொல்லுகிறது. "அத்தலை இத்தலையானபடி" என்றதின்விவரணம் - அவனிறே இத்யாதி. 'விதாயஸ்ய வராஹ் ராவஸீஹ்யாரண்யாயதுவதஸ்யு: । தஸ்ய புத்ர: ஶரண்யஸ்ய ஸுக்ரீவம் ஶரணம் கத:" இத்யாதி கிஷ்கிந்தாகாண்டே. "யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரை: ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குருத யாம்மயி" இதி ஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதி ஸீதா. "பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ" என்றவநந்தரம், "வினையாட்டியேன்" என்று - தன்தைந்யத்தைச் சொல்லுகையாலே பலிதமானதோர் அர்த்தவிசேஷம் - எல்லாங்கொடுத்தாலும் இத்யாதி. பல்காட்டுகிறதென்? ஸத்ருஶப்ரத்யுபகாரம்பண்ணுகிறதுக்கென்? என்ன - அவர்கள் இத்யாதி. இவ்விடத்திலே, 'பஹுவிதாந் ப்ரதாநஸ்யைவ ஸௌவர்ணவிந ஶக்யதே । ப்ரதிப்ரதாநமேவாத்யா வக்தும் க்ருதஜ்ஞ:ராக" என்றது அநுஸந்தேயம். இத்தால் - அவர்கள்பக்கல் இவளுக்குண்டான க்ருதஜ்ஞதை ப்ரகாஶிக்கிறதென்னுமத்தை ப்ரமாணபூர்வகமாக அருளிச்செய்கிறார்- எல்லாங்கொடுத்தாலும் இத்யாதி. "யோதத்யாத் ஸமவஜ்ஞாநம் காரயாஷைவஸேவநம் । க்ருத்ஸ்நாம்வா ப்ருதிவீம் தத்யாந் நதத்துல்யம் கதஞ்சந". இத்தால் பலிதம் - தஸ்மை நத்ருஹ்யேத் இத்யாதி; ஆசார்யத்ரோஹாபாவமே போராது: உபகாரஸ்ம்ருதியும் வேணுமென்றபடி. "யஸ்மாத் தர்மாநாசிநோதி ஸ ஆசார்யஸ் தஸ்மை ந த்ருஹ்யேத் கதாசந ஸஹி வித்யாதஸ்தம் ஜநயதி தச்ச்ரேஷ்டம் ஜந்ம" இத்யாத்யாபஸ்தம்பதர்மே. "யஶ்சக்ஷுஷா த்ருஷ்டி வியோகணாதவஸ்ஸம் சவ்யேஷு ஸம்ப்ரயச்சந் । தம் மந்யேத பிதரம் மாதரஞ்ச தஸ்மை ந த்ருஹ்யேத் க்ருதமஸ்ய ஜாநந்" இத்யுத்யோகபர்வணி த்ருத*

(அவன் செய்த உபகாரத்தினின்றும் மீண்டாலிறே த்ரோஹநிஷேதம் சொல்லவேண்டுவது). இதெல்லாம் சொல்லவேணுமோ? அவன்தான் வரும் ஸ்வபாவனுகிலன்றே நாங்களறிவிப்பதென்னில்; என் பாக்யஹாநியாலே இழந்தேனத்தனை போக்கி, அவன் படியைப் பார்த்தால் இழக்கவேணுமோ என்கிருள் [முன்னுலகம் இத்யாதி]- அழிந்தவற்றை அடியே பிடித்துண்டாக்குமவன்கிடீர்! இத்தலையுமழிந்திறே கிடக்கிறது. ஆர் பிரிவுக்குச் சளைத்துத் தளர்ந்து தூதுவிட, இவற்றையுண்டாச்கிற்று? வெறும் தன்க்ருபையாலே செய்தானித்தனையிறே! பண்டு இவனுக்கு ஆர்த்தரக்ஷணம் பண்ணுகைக்குத் தூதுவிடவேண்டா கிடீர்! [முன்னுலகங்களேல்லாம் படைத்த முகில்வண்ணன்] - ஜலஸ்தல விபாகம்பாராதே "பஹுஸ்யாம்"(பஹுஸ்யாம்) என்கிற ஸங்கல்பஜ்ஞாநத்தாலே ஏற்கவே யிவற்றையுண்டாக்கினவன். [முகில்வண்ணன்] - தரமிட்டாலும் விடவொண்ணுத வடிவு; தன்பேறுகக் கொடுக்குமவன் என்றுமாம். [முகில்வண்ணன்கண்ணன்] - ஜகத்காரணத்வத்துக்கும் அவதாரத்துக்கும் அடியான ஔதார்யாதி குணங்களைச் சொல்லுகிறது அன்றிக்கே, அப்ராக்ருததிவ்ய ஸம்ஸ்தாநத்தோடே வந்து அவதரித்தபடியைச் சொல்லிற்றுகவுமாம். [என்னலங்கொண்ட பிரான்]- இதொரு பழங்கிணறு கண்வாங்குகிறதேன்? என்னை ஸர்வஸ்வாபஹாரம் பண்ணின வுபகாரகன்; உங்கள் காலிலேவிழும்படி பண்ணினவன். இப்போது அகலவிருந்ததொழியப்பண்டுசெய்தவையெல்லாம் சாலநன்று கிடீர்! எங்களோடு கலப்பதுக்கு முன்பு போர நீர்மையுடையான்; இப்போது வடிவழகே கிடீர் உள்ளது. [முகில்வண்ணன்

---

*ராஷ்ட்ரம் ப்ரதி ஸநத்ஸுஜாதஃ. "முன்னுலகங்களெல்லாம்" என்றத்துக்கவதாரிகை- அங்குநின்றும் இத்யாதி. மீண்டாலிறேயென்றது போனகார்யம்செய்து நாங்கள் அங்குநின்றும் மீண்டாலிறே யென்றபடி. "அவன்படியைப்பார்த்தால்" என்கைக்கு, அவன்படியேதென்ன - அழிந்தவற்றை இத்யாதி. "உலகம்" என்றதுக்கு பாவம் - ஆர்பிரிவுக்கு இத்யாதி. "முன்" என்றதுக்கு பாவம் - பண்டு இவனுக்கு இத்யாதி. "எல்லாம்" என்றதுக்குபாவம் - ஜலஸ்தல இத்யாதி. "வண்ணம்" என்றதுக்கு - வடிவாகவிவக்ஷித்தர்த்தம் - தரமிட்டாலும் இத்யாதி. தரமிட்டாலுமென்றது - தாரதம்யம்இட்டுரக்ஷித்தாலுமென்றபடி. வண்ணமென்று - ஸ்வபாவமாகவிவக்ஷித்து ஔதார்யபரமாக அர்த்தாந்தரம் - தன்பேறுக இத்யாதி. வண்ணமென்று - ஔதார்யத்தைச்சொன்ன பக்ஷத்துக்குச்சேர, "முன்னுலகங்களெல்லாம்படைத்த" என்றத்தோடுகூட்டி, "கண்ணன்" என்றதுக்கு பாவம் - ஜகத்காரணத்வத்துக்கு இத்யாதி. இத்தால் "படைத்த" என்றதுக்குஹேது சொல்லிற்றுயிற்று. ஔதார்யஞ்சொன்னது - குணங்களுக்கெல்லாம் உபலக்ஷணம். "முன்" என்றது - முற்பாடனுயென்னுதல், முன்பெல்லாமென்னுதல். "வண்ணன்" என்றதுக்கு - வடிவென்ற அர்த்தத்துக்குச்சேர, "கண்ணன்" என்றதுக்கர்த்தம் - அன்றிக்கே அப்ராக்ருத இத்யாதி. "அவன்வரும்" என்கிறதுக்கு ஜகத்ஸ்ருஷ்டிபண்ணினுனென்று முன்புத்தைகதையைச் சொல்லவேணுமோ? என்னைத்தனக்காக்கினதேபோராதோ "அவன்வரும்" என்று நிச்சயிக்கைக்கு? என்கிருள் - இதொருபழங்கிணறு இத்யாதி. கண்வாங்குகை - தூரெடுக்கை. அவனைப்பிரிந்து க்லேசிக்கிறதசையில் "உபகாரகன்" என்கிறவளுடைய பாவத்தை த்வேதாவருளிச்செய்கிறூர் - உங்கள்காலிலே இத்யாதிவாக்யத்வயத்தாலே. அதாவது, லோகத்திலுள்ளார் தன்னை மறந்துஉண்டுடுத்துத்திரியாநிற்க, எனக்குத் தன்பக்கல்ப்ராவண்யத்தையுண்டாக்கி, உங்கள்காலிலே விழப்பண்ணின வுபகாரகனென்று - முந்தினபாவம். இப்போதகலவிருந்தானேயாகிலும், ஜகத்ஸ்ருஷ்டிபண்ணி யவதரித்து என்னைவசீகரித்து என்னோடேகலந்து இப்படி யநேகமுபகாரங்களைப் பண்ணினவனென்று - இரண்டாம்பாவமென்று பேதங்கண்டுகொள்வது. "இப்போதகலவிருந்த" இத்யாதி வாக்யவிவரணம் - எங்களோடு இத்யாதிவாக்யத்வயமும். கலப்பதுக்கு முன்பென்றது - கலந்துபிரிந்ததுக்கு.*

என்னலங்கொண்ட] - அம்மேகம் வர்ஷிக்கும் இடமாகாதே, முகக்கும் இடமானேன். [தனக்கு என்னிலைமை] - அவன் வருவானாகிலும், நாங்கள் சொல்லுவதே தென்னில், 'என்னிலைமை' என்று - தன்வடிவைக் காட்டுகிறாள்; "ஏஹிபஶ்யஶரீராணி" (ஏஹி பஶ்யஶரீராணி) என்னுமாபோலே. என்னைக்கண்ட நீங்களே பாசுரமிட்டுச்சொல்லுமத்தனை. ஜகத்காரணத்வம், அவதாரம், தன்பக்கல்பண்ணினவிசேஷகடாக்ஷம் இவை யெல்லாம் கண்ணழிவறச்சொன்னாள்; அவன்குணங்களிலே யவகாஹித்த தன்படி தன்னாலும் பேசப்போகிறதில்லை; தனக்குந் தன்தன்மை யறிவரியானைப்போலே. [உரைத்து] - தனக்குங்கூட நிலமல்லாத தன்படியை இவை பாசுரமிட்டுச் சொல்லவற்றாகக்கொண்டிருக்கிறாள். கரைமேலே நிற்கையாலே அவற்றுக்குச்சொல்லலாமிறே. "உரைத்து, கொண்டு வாருங்கோள்" என்றொழிவானேன்? என்னில்; - "ஈஶ்வரக்ருத்யம் நமக்குபரமோ" என்றிருக்கையாலே; இவனுக்குப்பணி குறையை யறிவிக்கையிறே: மேலுள்ளதெல்லாம் அவன்பணியிறே. [என்னிலைமையுரைத்து - பொன்னுலகாளீரோ] - ஆர்த்தநாதம் கேளாதபடிபண்ணி ஜீவிக்கப்பாருங்கோள்! சக்ரவர்த்தி பெருமாளை முடிசூட்டப் பாரித்த போது, ருஷிகள் ராக்ஷஸராலே நோவுபடுகையாலே ராஜ்யம்திருவுள்ளத்தில் பொருந்தாமை புறப்பட்டுப் போனாரிறே; அப்படியே ஸ்த்ரீவதமும் ஆர்த்தத்வநியுங் கேட்டால் இவை உபயவிபூதியையும் ஆளமாட்டாதென்றிருக்கிறாள். (௧)

---

முன்பென்றபடி. ஔதார்யபரமான அர்த்தத்தையுட்கொண்டு வெறுப்பாக பாவம் - அம்மேகம் இத்யாதி. வடிவைக்காட்டினபேருண்டோ? என்ன - ஏஹி இத்யாதி. "ஏஹிபஶ்யஶரீராணி முநீநாம்பாவிதாத்மநாம்" இத்யாதி. "அவனுக்கு நாங்கள் என்சொல்ல?" என்றுகேட்டவற்றுக்கு வடிவைக்காட்டினது பரிஹாரமாமோ? என்ன - என்னைக்கண்ட இத்யாதி. "நீங்களேபாசுரமிட்டுச்சொல்லுமத்தனை" என்கிறதென்? தனக்குப்பாசுரமிட்டுச் சொல்லவொண்ணாதோ? என்ன - ஜகத்காரணத்வம் இத்யாதி. "முன்னுலகங்களெல்லாம்" இத்யாதியைப்பற்ற - ஜகத்காரணத்வம் இத்யாதிகள். தன்னாலும்பேசப்போகாதத்தை இவற்றுக்கு உரைக்கக்கூடுமோ? என்ன - தனக்குங்கூட இத்யாதி. அதாவது - இவளுடைய ப்ரதிபத்திவிசேஷம் இருக்கிறபடியென்றுகருத்து. பரிஹாராந்தரம் - கரைமேலே இத்யாதி. அதாவது - தன்னைப்போலே யவகாஹியாமையாலே சொல்லலாமென்றபடி. ஆனால்இவனுக்குச்செய்ய வடுப்பதேதென்ன - ஸ்வாபதேஶம் - இவனுக்கு இத்யாதி. "என்னிலைமையுரைத்து - பொன்னுலகாளீரோ" என்று - கார்யம்செய்துசமைந்தால் கைக்கூலி கொடுப்பாரைப்போலே கூலிகொடுக்கிறாளோ? என்ன - ஆர்த்தநாதம் இத்யாதி. ஆர்த்தநாதங்கேட்டாலாளமாட்டாதோ? என்ன - ஸத்ருஷ்டாந்தமாக வருளிச்செய்கிறார் - சக்ரவர்த்தி இத்யாதி. "யஶ்ஶுஶ்ரூஷணாதி" இத்யாதி ஸநத்ஸுஜாதவசநத்துக்கர்த்தம்:— யஃ - ஆசார்யஃ, அவிதத்தேந - மந்த்ரேண, அத்ருஃம்குர்வந், அம்ருதம்ஸம்ப்ரயச்சந் - அநிஷ்டநிவ்ருத்திம் இஷ்டப்ராப்திஞ்சகுர்வாணஸ்ஸந், கர்ணாவாஸ்த்ருணோதி - ஸதுபதேசத்தாலே கர்ணங்களைப்பரப்புகிறான். தஸ்மை ந த்ருஹ்யேத்: அவ்வளவன்றிக்கே, க்ருதமஸ்யஜாநந் - க்ருதஜ்ஞனாயிருக்கவும்வேணு மென்றபடி. நன்னலப்புள்ளினங்காளித்யாரப்ய, உரைத்து, பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ இத்யந்வயஃ. என்னலம் - என்னுடைய விலக்ஷணாகாரங்கள். என்னிலைமை - என்னவஸ்த்தையை. (௧)

## இரண்டாம் பாட்டு.

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்புஎன்கையிருந்து
நெய்யமர்இன்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ?
கையமர்சக்கரத்து என்கனிவாய்ப்பெருமானைக்கண்டு
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்! விரைந்தோடிவந்தே.

ஆ.—(மையமர்.)-ஒரு தாமரையிலே ஒரு தாமரை பூத்தாற்போலே திருக்கையும் திருவாழியும் சேர்ந்திருக்கிற அழகாலும், திருவாழியைக்கண்ட ப்ரீதியாலே புதுக்கணித்த திருப்பவளத்தின் அழகாலும் என்னை யடிமையாக்கினவனுடைய அழகைக்கண்டு, நீங்கள் ஸம்ருத்தராய், பின்னை அவளுக்கு உன்பக்கலுள்ள ஸ்நேஹம் மெய்யான ஸ்நேஹமென்று அவனுக்குச் சொல்லி, அவன் அருளிச்செய்யும் வார்த்தைகளை நான்முடிவதற்கு முன்னே விரைந்தோடிவந்து எனக்குச்சொல்லி என்னை யரிப்பித்து, என்னுடைய தோழிமாரெல்லாரும் உங்களுடைய ஸம்ருத்தியைக்கண்டு ஆசைப்படும்படி என் கையிலேயிருந்து அவன் திருநாமங்களை நான் கற்பிக்கக் கற்று வாழிகோளென்று தன் கிளிகளை நோக்கிச் சொல்லுகிறாள்.

ஓ.—இரண்டாம் பாட்டில், எம்பெருமானுக்கு என்னுடைய ஸ்திதியை அறிவித்துவந்து நானும் தோழிமாரும் கொண்டாடுங் கொண்டாட்டத்தை அங்கீகரிக்க வேணுமென்று சில கிளிகளை இரக்கிறாள். [மையமர் என்று தொடங்கி] - உங்கள் வரவாலே அதிப்ரீதைகளாகையாலே மிகவுங்கறுத்து ஒளியையுடைத்தாய்ப் பெருத்திருந்துள்ள கண்களையுடைய மங்கைமார் ஸந்நிதியிலே என் கையிலேயிருந்து பாலோடும் நெய்யோடுங்கூடின அடிசிலே என்றும்மேவி எங்களை உஜ்ஜீவிப்பிக்கவேணும். [கையமர் சக்கரமென்று மேலுக்கு] - திருக்கையிலே மிகவும் பொருந்தியிருக்கிற திருவாழியையுமுடையனாய் கனிந்திருக்கிற திருப்பவளத்தையுமுடையனாய், அவ்வழகாலே என்னை அடிமைகொண்டவனைக் கண்டு அவன் வருவதற்குமுன்னே கடுகவந்து தன் திருமேனியில் உண்டான த்ருடஸம்ப்லேஷத்தில் அபிநிவேசத்தைச் சொல்லி.

ப.—அநந்தரம், அநுபாவ்யசிஹ்நயுக்தனானவனுக்கு என்னுற்றாமையையறிவித்துவந்து என்தோழிமாரெதிரே நான்உங்களைப்பண்ணும் ஆதரத்தை யங்கீகரிக்க வேணுமென்று, சிலகிளிகளைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

கிளிகாள் - (வடிவழகாலும் வார்த்தையினிமையாலும் இரண்டுதலைக்கும் ஆதரணீயமான) கிளிகாள்! கையமர்சக்கரம் - கையுந்திருவாழியுமான சேர்த்தியையுடையனாய், கனி - பக்குவபலம்போலே போக்யமான, வாய் - அதரசோபையை யுடையனாய், என் பெருமானை - என்னையடிமைகொண்ட ஸ்வாமியானவனை, கண்டு - (முற்பாடு காணப்பேறுடைய நீங்கள்) கண்டு, (* குணம்பாடி ஆவி காத்திருக்குமவளன்றியே), மெய்-உடம்போடே, அமர்- செறியவேண்டும், காதல் - அபிநிவேசத்தை, சொல்லி-,(அவன் ஆதரித்தான் என்று கூடவரகினையாதே), விரைந்து - ஸத்வரசித்தராய், ஓடிவந்து - சடக்கென வந்து, (உங்கள் வார்த்தைக்கு அநந்தரம் அவன் வரவறுதியாகையாலே என் புதுக்

கணிப்புக்கண்டு தங்களையொப்பித்து நிற்கையாலே), மை-மை, அமர் - பொருந்தி, வாள்-ஒளியையுடைத்தான, நெடு - நெடிய, கண் - கண்ணையுடையராய், மங்கைமார்முன்பு - (பருவத்தாலுமொத்திருக்கிற) தோழிமார் ஸந்நிதியிலே, (அவர்கள் தாங்கள் ஆதரிக்கக் கண்டிருக்கையன்றிக்கே அவன்கையாலே பிடித்த), என்-என், கை-கை, (உங்களுக்குப் பாதபீடமாம்படி), இருந்து - இருந்து, நெய் - நெய்யோடே, அமர்-சேர்ந்த, இன்-மதுரமான, அடிசில் - அடிசிலை, பாலொடு - பாலோடுங்கூட, நிச்சல் - நித்யமாக, மேவீர் - ஸ்வீகரிக்கவேணும்.

இ.—இரண்டாம் பாட்டில், என்னுடைய் ஆற்றாமையை அவனுக்கு அறிவித்துவந்து, நானும் என்தோழிமாரும் கொண்டாட அத்தையங்கீகரிக்க வேணுமென்று சிலகிளிகளை அர்த்திக்கிறாள்.

[மையமர் இத்யாதி] - இவர்கள் வரவால்வந்த ப்ரீதியாலே "அவன்வரவு தப்பாது" என்று இவர்கள் அலங்கரிக்க, அத்தாலே அலங்கரித்து ஒளியையுடைத்தாய்ப் பெருத்திருந்துள்ள கண்களையுடையவர்கள் என்னுதல்; இவள்தான் * மையகண்ணாள்: ஆகையாலே ரூபஸாம்யம் தோழிமார்க்கும் உண்டாயிருக்கையாலே சொல்லுதல். [மங்கைமார்] - அவனுக்கு * தன்னோராயிரம் பிள்ளைகள்போலே இவளுக்கும் தன்பருவத்தில் தோழிமார் உண்டாயிருக்கிறதாயிற்று. [முன்பு] - எல்லாரும் சூழவிருந்து கொண்டாட. [என் கையிருந்து] - அவர்கள் ஆதரிக்க விட்டுக்கொடேன். அவர்கள் ஓலக்கமிருக்குமத்தனை, என் கையிலே யிருக்கவேணும். [என் கையிருந்து] - தன் கையை மதித்தபடி. "அடிச்சியோந்தலைமிசை நீயணியாய்" என்கிறது அவனுக்கும் உண்டாகையாலே, அவன் தலையிலே இருக்கக்கடவ கை. அத்தை உங்களுக்குப் பாதபீடமாக்கக் கடவேன்; உபயவிபூதியையும் கொள்ளுங்கோள் என்றாள் - நீம்; உபயவிபூதியுக்தன் தலையிலே இருக்கக்கடவ கையை உங்களுக்குப் பாதபீடமாக்கக்கடவேன் என்கிறாள் — இதில். [நெய்யமர் இத்யாதி] - நெய்யோடும் பாலோடும்கூடின அடிசில். "நெய்யிடை நல்லதோர் சோறு" என்கிறபடியே அர்ப்பமிப்பாமாப் பால்முடிவான சோறு. [இன்னடிசில்] - "எல்லாங்கண்ணன்" என்றிருக்கிறவள் இவையுகப்பது தேடிக்கொடுக்கிறாள். பகவத்விஷயத்தில் உபகாரகர்க்கு "யஃ ஜேஃ வாஸாஸேஷாஸ்வதி" என்னுமளவு போராது; அவர்கள் உவப்பது தேடியிடவேணும் என்கை. [நிச்சல்] - பகவத்விஷயத்தில் வாசியறியவறிய, உபகாரகனைக் கொண்டாடுமித்தனையிறே. [மேவீரோ] - ஸ்வீகரியீரோ? என்பேறாக ஸ்வீகரிக்கவேணுமென்கை. "உபாயநாநி ஸாத்வாய ஸுமாநிவஹமாநிவ" என்று திருவடியை முதலிகள் கொண்டாடினாற்போலே. [கையமர் சக்கரத்து] - "கைகழலாநேமியான்" என்கிறபடியே கையுந்திருவாழியுமான சேர்த்தியையும் முறுவலையுங்காட்டி என்னை அநந்யார்ஹையாக்கினவன். பிரிந்து போகிறபோது "இவள்ஸத்தை கிடக்கவேணும்" என்று பண்ணின ஸ்மிதத்துக்காயிற்று இவள் தோற்றது. ராஜபுத்ரர்கள் கையில் இடைச்சரி கடைச்சரிக்குத் தோற்று எழுதிக் கொடுப்பாரைப்போலே, கையுந்திருவாழியுமாயிருந்த சேர்த்திக்குத் தோற்றபடி. "திருவாழிக்கு நித்யவாஸம் பண்ணும்படி கையைக்கொடுத்து என்னை முறுவலாலே தோற்பித்து எட்டாதபடி எழநின்றான்" என்றுஞ்சொல்லுவர்கள். [கண்டு] - எனக்குமுன்னே நீங்கள் கண்படைத்த லாபம் பெறவிறே புகுகிறீகோள்,

[மெய்யமர் காதல்சொல்லி] - திருமேனியிலே அணையவேண்டும்படியான காதல்; என்னுடம்போடே அணையவேண்டும் காதல் என்றுமாம். "மாமௌஷாஸ்தோகாலிகஸ்யி-ஷ்தெஷ: ஸம்ஸ்பர்ஸேயத்" என்னக்கடவதிறே. "குணஜ்ஞாநத்தாலே யரிக்குமவளன்று என்று சொல்லுங்கோள்" என்று சீயர் அருளிச்செய்வர். பிள்ளான் "தம்மைப்போலே பொய்யாய் நிலைநில்லாத காதலன்று என்று சொல்லுங்கோள்" என்று பணிக்கும். [கிளிகாள் விரைந்தோடிவந்தே] - பிராட்டியைக்கண்டு மீண்டவநந்தரம், முதலிகள்வந்து பெருமாளை உகப்பித்தாற்போலேயும், திருவடிவந்து ஸ்ரீபரதாழ்வானை உகப்பித்தாற்போலேயும், நீங்கள் முன்பே வரவேணும். நீங்களும்அவனும் கூடவந்து வாய்புகுநீராகாமே, முன்பே உங்களைக்கொண்டாடி ப்ரீதிஸாத்மித்தால், பின்பு அவன் வரவாம்படி வரவேணும்.

ஈடு.— இரண்டாம்பாட்டு. சிலகிளிகளைக்குறித்து, என் ஆற்றாமையை அவனுக்கு அறிவித்துவந்து, நானும் என்தோழிமாருங் கொண்டாட அத்தை அங்கீகரிக்க வேணும் என்கிறாள். [மையமர் இத்யாதி] - முதற்பாட்டில், அவன்பதங்கொடுத்தாள்; அதுக்குமேலே ஒருபதந் தேடிக்கொடுக்கிறாள் இப்பாட்டில். அவன்பதமாகிறது - உபய விபூதியையுங் கொடுக்கையிறே; அதுக்குமேலான பதமாகிறது - அவனாலே விரும்பப்படும் தன்னைக்கொடுக்கை. தன்னைக்கொடுக்குமிடத்திலும், "பின்னை முன்னே" என்னாதே, எல்லாருங்காணக் கைமேலேயிறே கொடுக்கப்புகுகிறது.

[மையமர்வாணெடுங்கண் மங்கைமார்முன்பென் கையிருந்து] - அவன்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவாரைப் போலேயோ, என்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவார் இருப்பது! அந்தஃபுரத்தில் வர்த்திப்பாரெல்லாரும் ஒருபடிப்பட்டிருக்கிறபடி: ஒரு கண் பார்வையாயிருக்கிறபடி. "தம்மையே நாளும் வணங்கித்தொழுவார்க்குத் தம்மையே ஒக்க அருள்செய்வர்" என்கிறபடியே, இவளும் தன்னோடு ஸர்வதாஸாம்யங் கொடுத்து வைத்தபடி. [மையமர்]-"அஸிதேக்ஷணா" (அஸிதேக்ஷணா), "கருந்தடங்கண்ணி" என்று சொல்லுகிற ஏற்றமெல்லாம் இவர்களுக்குமுண்டிறே. தன்னைப்போலே ஸ்வாபாவிகமான கண்ணில் கறுப்பைச்சொல்லிற்றாதல்; அன்றிக்கே, மங்களார்த்தமாக இடும்

இரண்டாம்பாட்டு.—மையமர் இத்யாதி. "கிளிகாள்! மெய்யமர்காதல்சொல்லி - வந்து - மங்கைமார்முன்பு" என்றுதொடங்கி, "மேவீரோ" என்கிறபதத்தளவும் கடாக்ஷித்தவதாரிகை - சில கிளிகளை இத்யாதி. "பொன்னுலகாளீரோ" இத்யாதியைப்பற்ற, இப்பாட்டுக்கோர் ஏற்றம் அருளிச்செய்கிறார் - முதற்பாட்டில் இத்யாதி. அவன் பதமாவது - உபயவிபூதிநாயகத்வம்; மங்கைமார் முன்பு என்றதுக்குபாவம் - பின்னை இத்யாதி.

அவன்பாடு தரம்பெற்றார் - திருவடி. அவனைக்கொண்டாடினபேர் - விருபரான வர்நரங்கள் என்றபடி. என்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவார் இருப்பதென்றது - இவள் * அஸிதேக்ஷணையாகையாலே இவளோடு ஸாம்யாபந்நராயிருப்பர்கள் என்றபடி. தன்பாடு தரம்பெற்றாரைக் கொண்டாடுவார்க்கு வாசியேதென்ன - அந்தஃபுரத்தில் இத்யாதி. ஒருபடிப்பட்டதின் விவரணம் - ஒருகண் பார்வை இத்யாதி. சாடுவுக்கு, எல்லாரும் ஒருகண்ணாலே பார்க்கலாம்படி இருப்பர்களென்று; ஸ்வாபாவிகமான அர்த்தம், எல்லாரும் அஸிதேக்ஷணைகளென்று. எல்லார்கண்ணும் இவள் கண்ணைப்போலே இருக்கக்கூடுமோ? என்ன-தம்மையேநாளும் இத்யாதி,திருமொழி(11,3,5.) தம்மையே யொக்க அருள்செய்வர்- தம்மோடுஸாம்யாபத்தியைக் கொடுப்பர் என்றபடி. தனக்குண்டாயேஸாம்யாபத்திகொடுக்கவேணுமே? என்ன - அஸிதேக்ஷணா இத்யாதி. "மை" என்று - கறுப்பாதல்,

மையைச் சொல்லிற்றுதல். இவள் அலாபத்தில் இவர்கள் மையெழுதியிருக்கக்கூடாதிறே; நீங்கள்வந்தால் இவர்கள்கண்களி லிருக்கும்படி பாரீகோள்! வாள் - ஒளி. அதுவும் அழிந்திறேகிடக்கிறது. இவள்வடிவு புகரழிந்துகிடக்க, இவர்கள் கண்களில் ஒளியுண்டாகக் கூடாதே. [நெடுங்கண்] - கண்ணில் பரப்படங்கலும் ஸப்ரயோஜநமாவது அப்போதா காதே. இல்லையாகில், தலைச்சுமையோபாதியாமிறே, "காணுதார் கண்ணென்றும் கண்ணல்ல" என்கிறபடியே. [மையமர்வாணெடுங்கண்] - உங்கள்வரவால்வந்த ப்ரீதியாலே "அவன்வரவுதப்பாது" என்றுநான் அலங்கரிக்க, அத்தாலேயலங்கரித்து ஒளியையுடைத் தாய்ப் பெருத்திருந்துள்ள கண்களையுடையவர்கள் என்னுதல். [மங்கைமார்]- அவனுக்குத் * தன்னேராயிரம்பிள்ளைகளைப்போலே இவளுக்குத் தன்பருவத்தில் தோழிமார் உண்டா யிருக்கிறபடி. [மங்கைமார்] - முக்தர் பஞ்சவிம்சதிவார்ஷிகரா யிருக்குமாபோலே. [மங்கைமார்முன்பு] - பின்பு இருக்கவொட்டார்களே! [மங்கைமார்] - ஒருவர் இருவரன்றே. எல்லாரும்தனித்தனியே "என்முன்பே, என்முன்பே" என்பர்களே! "ஹநூமந்தம் மஹாத்மாநம் பரிவார்யோபதஸ்திரே" (ஹநூமந்தம்மஹாத்மாநம்பரிவார்யோபதஸ்திரே) என்று ஓலக்கமாகஇருந்து திருவடியைக்கொண்டாடினாற்போலே. "மஹாத்மாநம்", (மஹாத்மாநம்) - நாலுபேர்சூழவிருந்துகொண்டாடினார் என்கிற இதுதான் தரமோ இவனுக்கு? "உபாயநாந்யுபாதாய மூலாநி ச ஃபலாநி ச"(உபாயநாந்யுபாதாயமூலா

---

ப்ர —[மங்கைமார்முன்பு]— ஸாந்த்வநகாலே, [ஸு] த்ருஷ்டா ஸீதேதி ம்ருதம் ஸநந்தம் ப்ரத்யுத்யவாநரவீரா:, "ததஸ்தம் ஸத்த்வஸம்பந்நம் வாநரா வாநரர்ஷபா:॥௩௧॥ ஹநூமந்தம் மஹாத்மாநம் பரிவார்யோபதஸ்திரே । பரிவார்ய ச தே ஸர்வே பராம் ப்ரீதிமுபாகதா:॥௩௨॥ ப்ரஹ்ருஷ்டவதநாஸ்ஸர்வே கபயோ ரோமஹர்ஷிதா: । உபாயநாந்யுபாதாய மூலாநி ச ஃபலாநி ச॥௩௩॥ ப்ரத்யர்ச்சயந் ஹரிஸ்ரேஷ்டம் ஹரயோ மாருதாத்மஜம்॥

---

அஞ்சநமாதல். த்விதீயார்த்தத்தில், இவள் தளர்ந்திருக்க இவர்களுக்கு இவ்வாகாரங்கூடுமோ? என்ன - இவள் அலாபத்தில் இத்யாதி. அழிந்துகிடப்பானென்? என்ன - இவள்வடிவு இத்யாதி. மையுமொளியும் இவர்கள்வந்தால் உண்டாகலாம், தைர்க்யமுண்டாமென்கிறது கூடாதே? என்ன - கண்ணில்பரப்படங்கலும் இத்யாதி. அப்போதாகாதேயென்றது - தூதுபோய்த்திரும்பிவந்த உங்களைக்கண்டபோதாகாதே என்றபடி. இல்லையாகில் என்றது - இவர்கள் வாராவிட்டால் என்றபடி. அப்படிதலைச்சுமையாமோ? என்ன - காணாதார் இத்யாதி. பகவத்பாகவதர்களைக் காணாதபோது கண்படைத்ததுக்கு ப்ரயோஜநமில்லை என்றபடி. கண்டாமே யென்று - மேல்போந்தி. திருமொழி பதினோராம்பத்து, "நீணுகம்சுற்றி" இத்யாதி. "நீங்கள்வந்தால்" இத்யாதிவாக்யவிவரணம் - உங்கள் வரவால்வந்த இத்யாதி. பஹுவசநார்த்தம் - அவனுக்கு இத்யாதி "மங்கை" என்று, பருவம் சொன்னதுக்குபாவம் - முக்தர் இத்யாதி. "முன்பு" என்றதுக்குவ்யாவர்த்யம் - பின்பு இருக்க இத்யாதி. "மங்கைமார்முன்பு" என்ற பஹுவசநத்தோடே கூட்டி பாவம் - ஒருவர் இருவரன்றே இத்யாதி. இப்படிகொண்டாடினபேருண்டோ? என்ன - ஹநூமந்தம் இத்யாதி. "மஹாத்மாநம்" என்றதுக்குபாவம் - நாலுபேர் இத்யாதி. * ஆத்மசப்தம் - ஸ்வபாவவாசியாய், விக்ரமாதிமாஹாத்ம்யத்தைச்சொல்லுகிறது. அவன்கார்யம்செய்தவனுக்கு உண்டான ஸத்காரங்களெல்லாம் இங்கும் உண்டென்கிறார் - உபாயநாநி இத்யாதிநாலுவாக்யத்தாலே. "ததஸ்தம் ஸத்த்வஸம்பந்நம் வாநரா வாநரர்ஷபா: । ஹநூமந்தம் மஹாத்மாநம் பரிவார்யோபதஸ்திரே" இத்யாதி, "உபாய

நிசபலாநிச) என்று ஹலமூலாதிகளைக்கொடுத்து ஸம்ப்ரமித்தார்களிறே முதலிகள்; அப்படியே நெய்யமர் இன்னடிசிலென்று இங்கும் எல்லாமுண்டாயிருக்கிறபடி. ''பேஜிரேவிபுலாநநா:' (பேஜிரேவிபுலாநநா:) உண்டிறே அங்கு இங்கு மையமர்வாணெடுங்கண் எல்லார்க்குமுண்டாயிருக்கிறபடி. [என்கையிருந்து] -''ஏகம்து:கம்ஸுகஞ்சநௌ'' (ஏகம்து:கம்ஸுகஞ்சநௌ) என்று, ஸமாநஸுகது:கைகளாய் இருந்தார்களேயாகிலும், பசித்தாரேயுண்ணவேணுமிறே! அப்படியே, அவர்கள் ஓலக்கமிருக்குமத்தனை; இருப்பிடம் என்கையாகவேணும். அவன் திருமுடிக்கு ஆபரணமான என்னுடைய கையை உங்களுக்குப் பாதபீடமாக்குகிறேன். ''ததௌபாஹுலதாம்ஸ்கந்தே'' (ததௌபாஹுலதாம்ஸ்கந்தே) என்னுமாபோலே - அவனுக்கு ஸர்வஸ்வதாநம் பண்ணும் கை. பர்யங்கவித்யையிற்சொல்லும் படுக்கையில் இருப்புப்போலும் அன்றுகாதே, இவள்கையில் இருப்பு. இவள் ''அணிமிகுதாமரைக் கை'' என்னுமது அவனுக்கும் உண்டிறே. மெய்யமர்காதல்சொல்லி, கிளிகாள்! விரைந்தோடி வந்து, என் கையிருந்து நெய்யமர் இன்னடிசில் நிச்சல் பாலோடுமேவீரோ! என்கிறாள். அதுவென்? போகிறபோதே லாலநம்பண்ணி விட்டாலோ? என்னில்; அதுக்குக் கைமுதலுண்டாகவேணுமே? ''காத்ரைஸ்ஶோகாபிகர்ஶிதை:'' (காத்ரைஸ்ஶோகாபிகர்ஶிதை:) என்றும், * இட்டகாலிட்டகையளாயுமிறே இவள்கிடக்கிறது; இனித்தான் கொண்டாடுகைக்கு ஓலக்கமிருப்பாரும் வேணுமே! ''எம்மின்முன்னவனுக்குமாய்வராலோ''

---

ஸுந்தரகாண்டே, [௨௦] ''யதா தம் புருஷவ்யாக்ரம் காத்ரைஸ்ஶோகாபிகர்ஶிதை: । ஸம்ஸ்ப்ருஶேயம் ஸகாமாஹம் ததா குரு தயாம் மயி ॥ ௩॥''

---

நாந்யா வாதாயநே(அ)பவந்நிவம்நிவ । ப்ருத்யா(உ)பயநுஹரிஶ்ரேஷ்டம் ஹரயோ ராமதாத்மஜம்'' ஏதருபரி; ''ததோ த்ருஷ்டம் ஹநூமந்தம் ஜாம்பவந்தமுவாநரா: । பரிவார்ய ப்ரஹ்ருஷிதா பேஜிரேவிபுலாநநா:'' இதி ஸுந்தரகாண்டே [௫௭-௪௭] வர்திதாம் த்ருஷ்ட்வா ப்ரத்யாகதம் ஹநூமந்தம்ப்ரதிஅங்கவாநரா: ''என் கையிருந்து'' என்றதுக்குபாவம் - ஏகம்துகம் இத்யாதிவாக்யத்ரயம். ''க்ஷயம் வயஸ்யோஸ் ஸம்ப்ராப்தௌ ஏகம் து:கம் ஸுகம் ச நௌ ।ஸுக்ரீவம் ராகவோ வாக்யமித்யுவாச ப்ரஹ்ருஷ்டவத்'' இதி கிஷ்கிந்தாகாண்டே [௫-௧௮]. ''என் கை'' என்று விசேஷிக்கிறதென்? அல்லாதார் கையைப்பற்ற உன்கைக்குஏற்றம் ஏதென்ன - அவன் திருமுடிக்கு இத்யாதி. அவனுக்கு ஸிரஸாவாஹ்யமாம்படி ஆதரணீயமாயிருக்குமோ? என்ன - ததௌ இத்யாதி. ''பரிவ்ருத்திஶ்ச ஸௌமித்ரே ஸுக்ரீவஸ்ய ஸமீபதா: । ததௌ பாஹுலதாம் ஸ்கந்தே மோக்ஷயந்தி வாநராந்:'' இதிபஞ்சமேம் ஸோத்ர யோதஸே (௫௪). அதாவது; வைத்தாள் என்றதே, ''ததௌ'' என்கையாலே - சிரகாலமாசைப்பட்டவனுக்கு ஸர்வஸ்வதாநம்பண்ணினாள் என்றபடி. ''என் கையிருந்து'' என்று - இவற்றுக்கு இத்தைக் கனத்த ப்ரயோஜநமாகச்சொன்னதுக்கு பாவம் - பர்யங்க இத்யாதி. ''அணிமிகு தாமரைக்கை'' என்று - அவன்கையன்றோ இவளுக்காபரணம்; இவள் கை அவன்தலைக்காபரணமோ? என்ன - இவள்அணிமிகு இத்யாதி. அதாவது; ''அணிமிகு தாமரைக்கை'' என்கிறபாட்டிலே - அவன் கையைத் தன்தலைக்கு ஆபரணமாக ப்ரார்த்தித்தால், அவனும் இவள்கையைத் தன் திருமுடிக்காபரணமாக ப்ரார்த்திக்குமென்னுமது அர்த்தசித்தமென்று கருத்து. அர்த்தாநுகுணமாக அந்வயம் - மெய்யமர் இத்யாதி. உக்தார்த்தத்தில் சங்காநுவாதம் - அதுவென் இத்யாதி. இவள் ''இட்டகாலிட்டகை,'' என்னும்படி தளர்ந்திருக்கையாலே அதுக்கு இருப்பிடமாக்க சக்தியில்லையென்னுமிடத்தை ஸ்லோகத்தியாலே அருளிச்செய்கிறார் - அதுக்குக்கைமுதல் இத்யாதி. நாயகனைப்போலேயுடம்பைக்கொடாதே, நெய்யமரின்னடிசில் முதலானவற்றைக் கொடு

என்றிறே அவர்களுங் கிடக்கிறது. [நெய்யமர் இத்யாதி]-"ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து" (ஏஷஸர்வஸ்வபூதஸ்து) என்று கோடுக்கைக்கு உடலில்லையே இவளுக்கு. நெய்யோடே கூடின இனிய அடிசிலை நாள்தோறும் பாலோடேகூட நான்தர, அத்தை ஸ்வீகரித்து நீங்கள் என்னை உஜ்ஜீவிப்பிக்கவேணும். "உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாங்கண்ணன்"என்றிருக்கக்கடவ இவள், இவை உகப்பதுதேடி இடுகிறாளிறே. இத்தால் சோல்லிற்றாயிற்று என்? என்னில்; - ஹகவத்விஷயத்தில் உபகாரகராயிருப்பார்க்கு, "உண்பதிலோருகை பகுந்திட்டோமாகில் செய்யலாவதுண்டோ?" என்று கைவாங்குமதல்ல; அவர்கள்விரும்பினவையே தேடியிடவேணும் என்னுமிடம் சோல்லிற்று. "யதந்ந: புருஷோ பவதி" (யதந்ந:புருஷோபவதி) என்னலாவது அவன்பக்கல். [நிச்சல்] - சேர்ப்பதோருநாளே, இவர்களுக்குப்பின்பு அநுஹவம் நித்யமாயிருக்கிறபடி. "அத்ர பரத்ர சாபி நித்யம் யதீயசரணௌ ஶரணம் மதீயம்" (அத்ரபரத்ரசாபிநித்யம்யதீயசரணௌஶரணம்மதீயம்) என்னுமாபோலே. [கையமர்சக்கரத்துஎன்கனிவாய்ப்பெருமானைக்

[நெய்யமரின்னடிசில்]— அயோத்யாகாண்டே [௱௩] [illegible] இதம் புங்க்ஷ்வ மஹாராஜ ப்ரீதோ யதஶநா வயம் । யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ்தஸ்ய தேவதா:॥௩௰॥"

பானென்? என்ன - ஏஷஸர்வஸ்வ இத்யாதி. அதாவது அவன்ஸ்வதந்த்ரனாகையாலேகொடுத்தான்; இவள்பரதந்த்ரையாகையாலே நாயகனுக்கொழியப் பிறர்க்குஉடம்புகொடுக்கப்போகாதிறேஎன்றபடி. ஆனால், கீழே "என் கையிருந்து" என்றும், மேலிற்பாட்டில் "என்குழல்மேலொளிமாமலரூதீரோ" என்றும் சொல்லலாமோ? என்னில்; என் கையிருந்தென்றது - "[illegible]" என்ற ருக்மிணிப்பிராட்டியைப்போலே நமஸ்கரிக்கிறேன் என்றபடி; என்குழல்மேலொளிமாமலரூதீரோவென்றது - "தலையல்லால் கைமாறிலேனே" என்றும், "தலையில்வணங்கவுமாங்கொலோ" என்றும் அவனை வணங்குகிறதலையாலே உங்களை வணங்குகிறேனென்றபடி. ஆகையாலே, அந்யாபதேசத்துக்கு விரோதமில்லை; ஸ்வாபதேசத்துக்கு, சேதநேஸ்வரர்களுக்கு ஆழ்வார் போக்யராகையாலே இந்தசங்கையில்லையென்று கண்டுகொள்வது. நெய்யோடேகூடின அடிசிலைப்பாலோடேகூடக்கொடுக்கையாவது - ப்ரதமத்திலே ஆஜ்யமிஸ்ரமானஅடிசிலைப் பரிமாறிப் பின்பு பாலோடேபரிமாறுகை. யேவுதல் - உண்டல். அதுபுஜிக்கை தன்பேறாகையாலே, உஜ்ஜீவிப்பிக்கவேணும் என்கிறாள். "தாரக போஷக போக்யங்களெல்லாமவன்" என்றிருக்கிற இவளிப்படி சொல்லக்கூடுமோ? என்ன - உண்ணுஞ்சோறு இத்யாதி, ஸ்வாபதேசத்தில் பலித்ததேதென்ன - இத்தால் இத்யாதி. "யதந்ந: புருஷோ பவதி" என்றிருக்கிறதே? என்ன - யதந்ந இத்யாதி. "இதம் புங்க்ஷ்வ மஹாராஜ ப்ரீதோ யதஶநா வயம் । யதந்ந: புருஷோ பவதி ததந்நாஸ்தஸ்ய தேவதா:" இதி அயோத்யாகாண்டே ராம:. அநுபவம் நித்யமாகைக்குஹேது - இவளுடைய க்ருதஜ்ஞதை இங்கோடு அங்கோடு வாசியற எப்போதும் உண்டாகையாலே என்கிறார் - அத்ரபரத்ர இத்யாதி. "கண்டு" என்றபதத்தோடே "நெய்யமரின்னடிசில்" என்றத்தையுங்கூட்டி, அத்தால்பலித்தவர்த்தம் - உண்டாரை இத்யாதி. "[illegible]" என்று கண்டபோதே த்ருப்திபிறக்கையாலே 'உண்

கண்டு] - உண்டாரை உண்ணப்பண்ணுவிக்கத்தேடுகிறாளிறே. இத்தால் சொல்லிற்று, இவர்க்குமுன்னே இவருடைய அம்ருதமதும் இவரைப் பற்றினார்க்கு முற்பட்டிருக்கிறபடி; "வேறாகவேத்தியிருப்பாரை வெல்லுமே மற்றவரைச்சாத்தியிருப்பார் தவம்" [கையமர் சக்கரம்] - * எப்போதும் கைகழலா நேமியானுமிருக்கை. [என்கனிவாய்] - கையுந்திருவாழியுமான அழகைக் காட்டுவது, முறுவலைக் காட்டுவதாய், என்னை அநந்யார்ஹையாக்கினவன், பிரிந்துபோகிறபோது, "இவள் ஸத்தைகிடக்கவேணும்" என்று பண்ணின ஸ்மிதத்துக்காயிற்று தோற்றது. [என்கனிவாய்]-திருவாழிக்கு முற்றூட்டாயிற்றுத் திருக்கை: தமக்குமுற்றூட்டு திருப்பவளம். அவன்ஜீவநத்தை நித்யமாக்கினான், என்ஜீவநத்தைக் காதாசித்கமாக்கினான். அவனுக்கே கையடைப்பாயிற்றே. கைமேலேயிடுமே. [கண்டு] - எனக்குப்போலே ஸ்ம்ருதிவிஷயமாமளவன்றிறே உங்களுக்கு. இவற்றின்கண்ணுலேகாணுதல், இவற்றைக்காணுதலிறே இவளுக்கு; * தாம்ஸ்ப்ருஷ்ட்வாவாதல், * சந்த்ரேத்ருஷ்டிஸமாகம: ஆதல்; தொட்டாரைத்தொடுதல், கண்டாரைக் காணுதலிறே இவளுக்கு. [மெய்யமர்காதல்சொல்லி] - திருமேனியிலே அணையவேண்டும்படியான காதல் என்னுதல்; என்னுடம்போடு அணையவேண்டும்படியான காதல் என்னவுமாம். "காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை: ஸம்ஸ்ப்ருஶேயம்" (காத்ரைஶ்ஶோகாபிகர்ஶிதை: ஸம்ஸ்ப்ருஶேயம்)

*டாரை' என்கிறது. "கண்டு" என்றதுக்கு ஸ்வாபதேஶம் - இத்தால் இத்யாதி. இதுக்குப்ரமாணம் - வேறாக இத்யாதி. ஸ்ரீநருஸிம்ஹத்தை வ்யாவ்ருத்தமாக ஏத்தியிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களை ஜயித்திருக்குமே, அந்த ஸ்ரீவைஷ்ணவர்களை அபாஶ்ரயமாகப்பற்றி யங்கே ந்யஸ்தபராராயிருக்கும் சரமாதிகாரிகளுடைய இந்நிஷ்டைக்கடியான பகவத்விஷயீகாரமாகிற தபஸ்ஸென்றபடி. நாலாந்திருவந்தாதி, "மாறாய தானவனை" இத்யாதி. "அமர்" என்கிறவர்த்தமாநத்துக்கர்த்தம் - எப்போதும் இத்யாதி. நேமி - திருவாழி. "என்" என்றத்தை * சக்கரத்தோடும் * கனிவாயோடுங்கூட்டி பூர்வபாவியாகபாவம் - கையும் இத்யாதி. "என்கனிவாய்" என்று அபரபாவியாக பாவம் - பிரிந்து இத்யாதி. "கையமர்சக்கரம், என்கனிவாய்" என்றுவிசேஷிக்கிறவளுடைய ஹார்த்தபாவம் - திருவாழிக்கு இத்யாதிவாக்யத்வயம். முற்றூட்டு - பூர்ணாநுபவம். "அமர்" என்கிற வர்த்தமாநத்தைக்கடாக்ஷித்து, "என்" என்கிறவளுடையபாவம் - அவன் ஜீவநத்தை இத்யாதி. "கையமர்" என்கிறத்தை உபஜீவித்து ஸ்லோக்தி - அவனுக்கே இத்யாதி. கையடைப்பாயிற்றேயென்றது - முற்றூட்டாகக் கொடுத்தானென்று, ஸ்வபாவார்த்தம்; சாடுவுக்கு, கையிலேயடைக்கப்பட்டதென்றபடி. "கண்டு" என்கிறதுக்கு வ்யாவர்த்யம் மூன்றுவிதமாக அருளிச்செய்கிறார் - எனக்குப்போலே இத்யாதிவாக்யத்ரயத்தாலே இவற்றின்கண்ணுலேகாணுதலென்றது - இவை யிங்குநின்றும்போய் அவனைக்கண்டால் தான்கண்டாற்போலேயிருக்குமென்றபடி. இவற்றைக் காணுதலென்றது - அவனைக்கண்ட இவற்றைக்காணுதல் என்றபடி. இந்த இரண்டாம் அர்த்தத்துக்குப்ரமாணம் - தாம்ஸ்ப்ருஷ்ட்வா இத்யாதி. "வாஹிவாத யத: காந்தா தாம்ஸ்ப்ருஷ்ட்வா மாமபி ஸ்ப்ருஶ | த்வயி மே காத்ரஸம்ஸ்பர்ஶஶ் சந்த்ரே த்ருஷ்டிஸமாகம:" இதி யுத்தகாண்டே ராம: (ரு-ஞ). இத்தால் - "தாம்ஸ்ப்ருஷ்ட்வா மாமபிஸ்ப்ருஶ" என்று பிராட்டியோட்டை ஸ்பர்ஶம் வாயுத்வாரா ஸத்வாரகமானாற்போலே, காட்சியும் ஸத்வாரகமென்றுகருத்து; இதுக்கு, 'சந்த்ரே த்ருஷ்டிஸமாகம:' என்றதுசேரும். தொடுதவசநத்துக்கர்த்தம் - தொட்டாரை இத்யாதி. "மெய்யமர்" என்றது - அவன் திருமேனியோடே எனக்கணையவேண்டும்படியான என்னுதல்; என்னுடம்போடே தான் அணையவேண்டும்படியான என்னுதல். இந்த அர்த்தத்வயத்தையும் அடைவேயருளிச்செய்கிறார் - திருமேனி இத்யாதிவாக்யத்வயத்தாலே. த்விதீயார்த்தத்துக்குப்ரமாணம் - காத்ரை: இத்யாதி. அர்த்தத்வயஃபலிதம் - நம்ஸத்தை இத்யாதி.*

என்னக்கடவதிறே, "நம் ஸத்தை கிடக்கக்கிடக்குமிறே" என்றுதல், "குணஜ்ஞாநத்தாலே யரித்திருக்கிறுள்" என்றுதல் நினைத்திருக்குமதல்லவென்று சொல்லுங்கோள். அங்ஙனேயும் யரித்திருந்தார் உண்டிறே; மாயாஶிரஸ்ஸைக்காட்டினவன்றும், பிராட்டி, லௌகிகரோடொக்கக் கண்ணநீர் விழவிட்டு, "அதுவேயாகிலும் அவருளராகிலல்லது நம் ஸத்தை கிடவாது" என்று தன்னைக்கொண்டு அறுதியிட்டு யரித்திருந்தாளிறே. "அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" (அநந்யாராகவேணுஹம் பாஸ்கரேணப்ரபாயதா) இறே; ஆதித்யன் உண்டாகிலல்லது ப்ரபையுமில்லையிறே. இங்ஙனேயிருக்கச் செய்தே ஒரு ஹேதுக்களாலே வரும் ஸங்கோசவிகாஸங்களேயிறே யுள்ளது. த்ரவ்யமாயிருக்கச்செய்தேயும் ப்ரகாரமாம் ஆகாரமுண்டே. அப்படியேயன்றிறே இங்கு; உடம்பிலே யணைந்து பிரிந்தார்க்கு உடம்பை அணைத்தல்லது நிற்கவொண்ணுதிறே. [மெய்யமர்காதல்]- "தம்மைப்போலே பொய்யுமாய் நிலைநில்லாதகாதலன்று எங்களது என்று சொல்லுங்கோள்" என்று பிள்ளான் பணிக்கும். அன்றிக்கே, [மெய்யமர்காதல்] - ஆத்மாநுபந்தியான காதல். மெய்யென்று ஆத்மாவாய், ஆத்மாவோடே பொருந்தினகாதல் என்றுமாம். "மெய்ம்மையே மிகவுணர்ந்து" என்கிறவிடத்தில், மெய்யென்கிறது ஆத்மாவையிறே. ஸத்யமான காதல் என்றபடி. [சொல்லி] - தந்தாமுக்கு இல்லாதவை பிறர்வாயிலேகேட்

---

[மெய்யமர்காதல்]—ஸுந்தரகாண்டே, [௨௧] ராவணம் ப்ரதிவீதா, "சக்யா லோபயிதும் நாஹமைச்வர்யேண தநேந வா । அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா ॥ ௧௫ ॥"

---

குணஜ்ஞாநத்தாலே யரித்திருந்தமைக்குப்ரமாணம் - "தஸ்மிம்ஸ்ஸர்வே ஸமாஹிதா குணா:" "நாதஸ்ய யத்ம்க்ஷமஹ்யதே தேவீ" இத்யாதிகள். அவன் ஸத்தை கிடக்க யரித்திருந்தபேருண்டோ? என்ன, அருளிச்செய்கிறுர் - அங்ஙனேயும் இத்யாதிவாக்யத்வயத்தாலே. 'அதுவேயாகிலும்' என்ற அபி ஶப்தம் - நிரர்த்தகமாய், அந்தசிரஸ்ஸாகிலுமென்றபடி. அப்படி அவனுண்டானபோது உண்டாய் இல்லையானபோது இல்லையாம்படி அவிநாபூதையோ? என்ன - அநந்யா இத்யாதி. சுந்தரகாண்டே ராவணம்ப்ரதிவீதா; "சக்யா லோபயிதும் நாஹமைச்வர்யேண தநேந வா" இதி பூர்வார்த்தம். "பாஸ்கரேண ப்ரபா யதா" என்றத்தால் ஃபலிதம் - ஆதித்யன் இத்யாதி. ப்ரபைபோலே அப்ருதக்ஸித்தையானவளுக்குப் பிரிவுவாக்கூடுமோ? என்ன - இங்ஙனே இத்யாதி. அதாவது - அப்ருதக்ஸித்தையாகிலும் தேவஸ்த்ரீகள்சிறையை விடுவிக்கைக்காக அவதாரத்தில் மெய்ப்பாட்டாலே விஶ்லேஷமாகத்தோற்றினவித்தனை; வஸ்துத: இல்லையென்றுகருத்து. ஸங்கோசவிகாஸங்களென்றது - ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களென்றபடி. ஜாதிகுணங்களுக்கொழிய த்ரவ்யத்துக்கு அப்ருதக்ஸித்த விசேஷணத்வங்கூடுமோ? என்ன - த்ரவ்யமாய் இத்யாதி. அப்படியேயன்றிறே என்றது - அவன்ஸத்தையாலே ஜீவித்தல், குணஜ்ஞாநத்தாலேஜீவித்தல் செய்யும்படியன்றிறே இங்கென்றபடி: யத்வா, சித்த்ரவ்யத்துக்கும் அசித்த்ரவ்யத்துக்குமவிநா பாவமுண்டோ? என்ன - த்ரவ்யமாயிருக்கச் செய்தே இத்யாதி. ஆக, இவ்வளவும் அவன் ஸத்தைகிடக்கக்கிடக்குமென்கிறத்தை விஸ்தரேண வுபபாதித்து, அவளிற்காட்டில் இவளுக்குண்டான வ்யாவ்ருத்தியை அருளிச்செய்கிறுர் - அப்படியேயன்றிறே இங்கு என்று. திருமேனியோடேயணைந்தே ஸத்தைதரித்திருக்கவேண்டும்படியிருக்கைக்கு அடி ஏதென்ன - உடம்பிலே இத்யாதி. மூன்றும் அர்த்தம் - தம்மைப்போலே இத்யாதி. நாலாம் அர்த்தம் - ஆத்மாநுபந்தியானகாதல் என்று. கீழ்வாக்யவிவரணம்-மெய்யென்று இத்யாதி. "மெய்" என்று - ஆத்மாவைச்சொல்லுமோ? என்ன - மெய்ம்மையே மிகவுணர்ந்து இத்யாதி. இது திருமாலையில், "மெய்ம்பொருள்" என்கிறபாட்டில். மூன்றும் அர்த்தவிவரணம் - ஸத்யமானகாதலென்ற

டறியும் இத்தனையிறே. தமக்கு உண்டாகில் இப்படி தூதுவிடப் பார்த்திராரே. காட்சிக்கு மேலே ஓரேற்றம்போலேகாணும் தன் தசையை அவனுக்கு அறிவிக்கை. [கிளிகாள்! விரைந்தோடிவந்தே] - பிராட்டியைக் கண்டு மீண்ட அநந்தரம் முதலிகள்வந்து பெருமாளை யுகப்பித்தாற்போலவும், பெருமாள் மீண்டெழுந்தருளுகிறபோது திருவடி முன்னேவந்து ஸ்ரீ பரதாழ்வானையுகப்பித்தாற்போலவும், நீங்கள் முன்னேவரவேணும். [கிளிகாள்! விரைந்தோடி வந்தே] - அறிவித்துக் கூட வரவிராதே கிடிகோள். திருவடி பிராட்டியைத் தேடிப்போகிற போது பண்ணின அஸிஸந்திகளெல்லாம் இக்கரையிலே கழித்துப் பின்பு லங்கையிலே போய்ப்புக்கு எங்குந்தேடி, அவளைக்கண்டு, அநந்தரம் "இக்காட்சியால் ப்ரோஜநமுள்ளது அவ்வாஸ்ரயமுள்ளபோதே சென்றறிவிக்கிலிறே" என்று ஒருநாளே வந்தானிறே; அதுக்கடி, போகிறபோது இவராற்றாமையைக்காண்கையாலே, "நாம்வருமளவும் இவரைக் கிடைக்கை யரிது" என்றிருந்தான்; பெருமாள்தாமும், "பிள்ளாய்! நீயிருக்கிறபோதைத் தரிப்புக்கொண்டு நீபோனாலும் இப்படியிருப்பன் என்றிராதேகிடாய்; என்னளவறிந்து கார்யஞ்செய்" என்று ரிறே. [விரைந்தோடிவந்தே] - நீங்கள் முற்படவந்த ப்ரீதி ஸாத்மித்தால், பின்பு அவன் வரவாகவேணும். அவனுடனே கூடவரில் வாய்புகுநீராய் உங்களைக்கொண்டாடவொண் ணாது; ஆனபின்பு, நான் முறைகெடாமல் அநுபவிக்கும்படி வாருங்கோள்! உபகாரகரான உங்கள் காலிலே முற்படவிழுந்தபின்பு அவன்காலிலேவிழும்படி பண்ணுங்கோள். ஆகை யிறே, நம் முதலிகள் குருபரம்பரைமுன்னாக த்வயாநுஸந்தாநம்பண்ணுகிறது. இனித்தான் ஶிஷ்யனுக்கு ஆசார்யாநுவர்த்தநம்பண்ணலாவது அவன் தேஹபரிக்ரஹம்பண்ணியிருக்கிற நாளிலேயிறே; பின்புள்ளதெல்லாம் பகவதநுபவத்திலே அந்வயிக்குமிறே இருவர்க்கும். அவன் "எனக்கு" என்னும்நாளிலேயிறே, இவன் "உனக்கு" என்று கொடுக்கலாவது ?

---

படி என்று. ஆக "மெய்யமர்" என்கிறதுக்கு பலிதார்த்தம். "என்காதல்சொல்லி" என்கையாலே, தமக்கு அகில்லை என்று பாவம் - தந்தாமுக்கு இத்யாதி. அவர்க்கில்லையென்னுமதுக்கு நியாமகம் - தமக்குஉண்டாகில் இத்யாதி. பாவாந்தரம் - காட்சிக்குமேலே இத்யாதி. "கண்டு" என்றகாட்சிக்கு மேலே, அவனோடேபேசுகையும் இவற்றுக்கேற்றம் என்றபடி. விரைந்தோடிவருகிறதுக்கு ப்ரயோஜநம் - பிராட்டியை இத்யாதி. விரைந்தோடிவருவானென் ? அவனோடேகூடவந்தாலோ ? என்ன - அதுக்குமுன்னே என்மத்தை அறியுமென்னுமத்தை தர்ஶிப்பிப்பதாக அதிஷ்டிகை - அறிவித்து இத்யாதி. நீங்கள் அவனோடேகூடவந்தால் என் ஸத்தையழியும்; ஆனபின்பு, என்னை தரிப்பிக்கைக் காக ஶீக்ரமாகவாருங்கோள் என்னுமத்தையுட்கொண்டு அதுக்குத்ருஷ்டாந்தம் - திருவடிபிராட்டியை இத்யாதி. அஸிசந்திகளெல்லாமென்றது - மஹாராஜரோடே "ஒருமாசத்திலேவருகிறோம்" என்றாற் போலே யுண்டானதுகள் என்றபடி. இக்கரையிலே - கடலுக்குஇக்கரையிலே. விரைந்தோடி வரச் சொல்லுகிறதென் ? அவனோடேகூடவந்தாலோ ? என்கிற ஶங்கைக்கு த்விதீயபரிஹாரம் - நீங்கள் முற்பட இத்யாதி. த்ருதீயபரிஹாரம் - அவனுடனே இத்யாதி. வாய்புகுநீராய் - உங்கள் ஸ்தகாநுபவ மாய். "முறைகெடாமல்" என்கைக்கு, முறையேதென்ன - உபகாரகரான இத்யாதி. இந்தமூன்றும் பாவத்துக்கு த்வேதாஸ்வாபதேஶம்; அதில்மூந்தினது - ஆகையிறே இத்யாதி. அதாவது; குருபரம்பரா பூர்வகமாக ஈஶ்வரனை சேவிக்கவேண்டுகையாலே முன்னேவரச்சொல்லுகிறாளென்றபடி. இரண்டாம் ப்ரகாரம் - இனித்தான் இத்யாதி வாக்யத்ரயமும். அதாவது - பகவத்ப்ராப்த்யநந்தரம் அநுவர்த்தநங் கூடாமையாலும், உங்களை நான் அநுவர்த்திக்கும்படி முன்னே வரவேணுமென்கிறாளென்றபடி. 'கிளி காள்! மையமர்சக்காத்து' என்று தொடங்கி, 'கண்டு மெய்யமர்காதல்சொல்லி - விரைந்தோடிவந்து - 'மையமர்வாள்' என்று தொடங்கி, பாலொடு மேவீரோ இத்யந்வயஃ மைபொருந்தி ஒளியையுடைத்தான நெடியகண்ணையுடைய என்று ஶப்தார்த்தம்.

## மூன்றாம் பாட்டு.

ஓடிவந்தென்குழன்மேல் ஒளிமாமலருதீரோ?
கூடியவண்டினங்காள்! குருநாடுடையைவர்கட்காய்
ஆடியமாநெடுந்தேர்ப்படை நீறெழச்செற்றபிரான்
சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டே.

ஆ.—(ஓடிவந்து.) - ராஜ்யப்ராப்தராய் ஸமாஶ்ரிதருமான பாண்டவர்கள் பக்கலுள்ள வாத்ஸல்யத்தாலே, த்ரைலோக்யவிஜயோபகரணபூதமாய் அத்யுந்நதமாயிருந்த திருத்தேரிலேநின்று அவர்களுக்கு ஸாரத்யம்பண்ணி தத்விரோதிகளை நிரஸித்தருளின ஸமயத்திலே, பரமபக்தியுக்தரான திவ்யஜநங்கள் ஶிரோபசாரமாகச் சாத்தியருளப்பண்ணின திவ்யகந்தமான திருத்துழாய்மதுவைப் பாநம்பண்ணி, அத்தூமதுவாய்களைக் கொண்டோடிவந்து, அம்மதுவையும் அதிஶீதளமான திவ்யகந்தத்தையும் என் குழல்மேல் ஒளிமாமலர்களிலே வர்ஷிக்கவேணும்; வர்ஷிக்கவே, அம்மலர்களும் அலர்ந்து புதுக்கணிக்கும்; * என்னிறம் பண்டுபண்டுபோலொக்கும், கெண்டையொண்கணுந்துயிலும் என்று, பரஸ்பர ஸம்ஶ்லேஷைகபோகமான வண்டுகளை நோக்கிச் சொல்லுகிறாள்.

ஒ.—மூன்றாம்பாட்டில், இனமாயிருக்கிற வண்டுகளைக்குறித்து, எம்பெருமானுக்கு என்னுடைமையை அறிவித்துவந்து என்தலைமேலே வர்த்தியுங்கோள் என்கிறாள்.

[ஒளிமாமலருதீரோ] - உங்கள் வரவாலே தளிர்த்திருக்கிற என்னுடைய குழலில் ஒளியையுடைத்தாய்ப் பெருத்திருக்கிறபூவில் மதுவைப் பாநம்பண்ணிரோ. [குருநாடுடைஐவரென்று மேலுக்கு] - குருநாடுடைய யர்மபுத்ராதிகளுக்காக மனோஹரமாம்படி ஸஞ்சரியாநின்றுள்ள குதிரைபூண்ட பெரியதேரையே உபகரணமாகக்கொண்டு ஸேனையைப் பொடியாம்படிமுடித்த மஹோபகாரகன் சூடியருளின திருத்துழாயில் மதுவைப் பாநம்பண்ணுகையாலே ஶுத்தமாய் தேனையுடைய வாய்களோடேகூட.

ப.—அநந்தரம், என்பக்கலினின்றும் செல்லுகையாலே ஆஶ்ரிதவிரோதிநிவர்த்தகனான க்ருஷ்ணன் ப்ரஸாவஹித்த புதுக்கணிப்போடேவந்து, "அவன்வருகிறான்" என்றலங்கரித்திருக்கிற என்குழலிற்பூவை யூதுங்கோளென்று சிலவண்டினங்களைப்பார்த்துச் சொல்லுகிறாள்.

கூடிய - பரஸ்பரம்செறிந்த, வண்டினங்காள் - வண்டினங்காள்! குருநாடுடை - குருக்ஷேத்ரநிர்வாஹகரான, ஐவர்கட்குஆய் - பாண்டவர்கள்ஐவர்க்குமாக, ஆடிய-ரமணீயகதியான, மா - குதிரைகளையும், நெடு - ஓங்கின, தேர் - தேர்களையும், படை - ஸேனையையும், நீறுஎழ - தூளிசேஷமாம்படி, செற்ற - அழித்த, பிரான் - மஹோபகாரகனான க்ருஷ்ணன், சூடிய - திருக்குழலில்சாத்தின, தண் - ப்ரமஹரமான, துளபம் - திருத்துழாயிலேயிருந்து, உண்ட - பாநம்பண்ணின, தூ - தெளிந்த, மது - மதுவையுடைத்தான, வாய்கள் - வாயை, கொண்டு - உடையீர்களாய்க்கொண்டு, ஓடிவந்து - சடக்கெனவந்து, (அவனுக்கு ஸர்வப்ரகாரபோக்யமான) என் - என், குழல்மேல் - குழ

வின்மேலில், ஒளி - செவ்வியையுடைத்தாய், மா - ச்லாக்யமான, மலர் - பூவில், ஊதீர் - மதுபாநோத்யோகந்தோன்றும்படி ஊதவேணும்.

இ.—மூன்றாம்பாட்டில், சிலவண்டுகளைக்குறித்து, அவனுக்கு என் தசையை அறிவித்துவந்து என்தலைமேலே வர்த்தியுங்கோள் என்கிறாள்.

[ஓடிவந்து] - முன்பே அவற்றின்வார்த்தைகேட்கையில் உண்டான த்வரையாலேயாதல், அவற்றைஅநுபவிக்கையில் உண்டான த்வரையாலேயாதல், சடக்கென வரவேணும் என்கிறாள். [என்குழல்மேல்] - அவனோடு ஹோமஸாம்யமுண்டாம்படிபண்ணக்கடவேன். அவன் தனக்குத்தூதுபோனவர்களுக்கு ததிமுகன்காத்திருக்கிற காவற்காட்டை அழிக்கக்கொடுத்தானித்தனையிறே; அவன் காவற்காட்டை அழிக்கத்தருகிறேன் உங்களுக்கு என்கிறாள். "ஸஹஸைவாப்யயிஷ்யாமி யாஷ்மாகம் வஸிவதிந:" என்று திருவடியைப்பற்றி அழிக்கவும்வேண்டாவிறே: இவளுடைய * வநஷண்டவத்ஸூக்ஷ்மஇதஸூ இருக்கிறபடி. உங்களுடையவரவாலே தளிர்த்திருக்கிற என்னுடைய குழலில், ஒளியை உடைத்தாய் ச்லாக்யமானமலரில் மதுவைப் பாநம்பண்ணீரோ. [ஊதீரோ] - மதுவின்ஸம்ருத்தியாலே, கிண்ணகத்தில்இழிவாரைப்போலே இழியமாட்டாதேநின்று பறக்கிறபடி. உங்கள் கார்யமுமாய் பரரக்ஷணமுமானால் ஆறியிருக்கிறதென் என்கை. [கூடிய வண்டினங்காள்] - மஹாராஜரைப்போலே படைதிரட்டவிராதே, என்னுடைய ரக்ஷணத்திலே ஒருப்பட்டு முன்பே திரண்டிருக்கப்பெற்றதிறே. [குருநாடுடைஐவர்கட்காய்] - நாடுடையவர்கள் ஐவருமேயென்றிருக்கிறாள்: துர்யோதநாதிகள் கிடந்தாளை கண்டேறினவித்தனை [ஐவர்கட்காய்] - "நாடுடைமன்னர்" என்கிறபடியே ராஜ்யமுடையவர்கள் அவர்கள். "நாமவர்களுக்குக் கையாளாய் வ்யாபரிக்கிறோம்" என்றாயிற்று அவன் நினைத்திருப்பது; அவன்நினைவிறே இவளுக்குநினைவு. [ஆடியமாநெடுந்தேர்] - மனோஹரமாம்படி ஸஞ்சரியாநின்ற குதிரைபூண்ட பெருந்தேரை உபகரணமாகக்கொண்டு: "ஸாரதிஸ்யந்தநே" என்னக்கடவதிறே. [படைநீறெழச்செற்ற] - ஆயுதமெடாமைக்கு அநுமதிபண்ணுகையாலே, தேர்க்காலாலே ஸேனையைத் துகளாக்கினான். [பிரான்] - அவனுக்கு பாரார்த்யமாக வ்யாபரிக்கையேஸ்வரூபம், தாழ்த்தது ஔபாதிகமென்றிருக்கிறாள். [சூடிய தண்டுளபமுண்ட] - ஸாரத்யம்பண்ணும்போது வைத்த வளையத்திலே மதுபாநம்பண்ணின: அவதாரங்களில் ஏதேனுமொன்றிலே வளையம்வைக்கிலும் அவ்வவஸ்தையை ப்ராபித்து அநுகூலிக்கிறது, திருத்துழாயாகக்கடவது. [தூமதுவாய்கள்கொண்டே] - அப்படி மதுவைப் பாநம்பண்ணுகையாலே, மதுமாய்த் தேனையுடைய வாய்களோடேகூட; இனிதானபேச்சையுடைத்தாயிருக்கை என்றுமாம், வாய்-வார்த்தை; "ஜுஷ்டாவஸீதா" என்றாற்போலே. என்னையும் மதுபாநம்பண்ணுவித்து நீங்களும் மதுபாநம் பண்ணுங்கோள்.

ஏடு.—மூன்றாம்பாட்டு. சிலவண்டுகளைக்குறித்து, அவனுக்கு என் தசையை அறிவித்துவந்து என்தலைமேலே வர்த்தியுங்கோள் என்கிறாள்.

---

மூன்றாம்பாட்டு.—ஓடிவந்து இத்யாதி. "வண்டினங்காள்! பிரான்சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டு - ஓடிவந்தென்குழல்மேலொளிமாமலரூதீரோ" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - சிலவண்டுகளை இத்யாதி.

[ஓடிவந்து] - கடுக வரவேணும். என்னளவுகண்டுபோகிற உங்களுக்கு, நானுள்ளபோதே வந்துஉதவவேணும். அன்றிக்கே, அவற்றையநுபவிக்கையில் உண்டான த்வரையாலேயாதல், சடக்கெனவரவேணுமென்கிறாள். [என்குழல்மேல்] - பேரளவுடையார்படும் ஈடுபாட்டைக் கண்டு, தன்குழல்வீறு தானறிந்திருக்குமே. "சூடியதண்ணுளப முண்ட தூமதுவாய்கள்கொண்டு ஓடிவந்தென்குழல்மேல் ஒளிமாமலரூதிரோ" என்பானேன், கார்யஞ்செய்து சமைந்தால் கைக்கூலி கொடுப்பாரைப்போலே? என்னில்; இவற்றுக்கு இவள்குழலில் விஷயமுண்டாகவேணுமே. இப்போது, மது மாறிச்சருகாயிறே கிடக்கிறது; இவைமீண்டாலிறே இத்தலையில்செவ்விபிறப்பது. [என்குழல்மேல்] - அவனுக்குத் தூதுபோய்வந்தாரிற்காட்டில் இவளுக்குத் தூதுபோனார்க்குஉண்டானதன்னேற்றம் இருக்கிறபடி. அங்கு மஹாராஜருடைய மதுவநமிறேயழிந்தது; இங்கு அவன் காவற்காட்டை உங்களுக்குத் தருகிறேனேன்கிறாள். * அளகாடவியிறே. தலையான பரிசிலிறே இதுதான் ருஷ்ய முகப்ரப்ருதிகளுடைய விலக்குகையும் இல்லையிறே யிங்கு சாந்தஞன திருவடியிறே "அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம்பரிபந்திந:" (அஹமாவாரயிஷ்யாமியுஷ்மாகம்பரிபந்திந:) என்றான். பிராட்டியைக்கண்டு உவந்தமையறியாதேயிருக்கச்செய்தேயும் மதுவநம் அழிந்தமையைக்கண்டு, மஹாராஜருடைய வால் ருஶ்யமூக பர்வதத்திலே யறைந்ததிறே. "நம்மோடு பண்ணிப்போன ஸமயம் அதிக்ரமித்திருக்கச்செய்தேயும் மதுவநமழிக்கும்போது பிராட்டியைக் கண்டார்களாகவேணுமிறே." "பிராட்டியைக்கண்டஹர்ஷம், நடுவில் மதுவநமன்றாகில் ராஜபுத்ரர்கள் முதுகோடேபோம்" என்று பட்டரருளிச்செய்வர். [என் குழல்மேலொளிமாமலரூதிரோ] - என்றும் இவள்குழலில் மதுபானம் பண்ணப்பெறுவது வண்டுகளேயாகாதே. *தூவியம்புள்ளுடைத் தெய்வ வண்டாதல்இவையாதல். அவனேயோ ஸாம்யாபத்திதரவல்லான், நானும் உங்களுக்கு அவனோட்டை ஸாம்யாபத்தியைத்தருகிறே

"விரைந்தோடிவந்தே" என்கிறவிடத்தில் முந்தினவர்த்தத்தை அநுபாஷித்துக்கொண்டு. உங்களுக்குப்பிரிந்திருக்கப்போகாதென்று ஆர்த்தாந்தரம் - என்னளவு இத்யாதி வாக்யத்வயத்தாலே. அவற்றை - அளகங்களை. "என்குழல்மேல" என்று - தன்குழலைத் தானே கொண்டாடலாமோ? என்ன - பேரளவு இத்யாதி. அளவுடையாரென்றது - ஈஶ்வரனை. "தோகைமாமயிலார்கள்" என்று கொண்டாடுமென்றபடி. விஷயம் - மது. சருகு தலையிலென்றது - சாடு. "என்குழல்மேலொளிமாமலரூதிரோ" என்றதால் பலிதார்த்தம் - அவனுக்கு இத்யாதி. அந்த ஏற்றமேதன்னை - அங்கு இத்யாதி. இது காடோ? என்ன - அளக இத்யாதி. அவனுக்குத்தூதுபோய்வந்தார்க்குக் கொடுத்த வ்யபஹாரத்தைப்பற்ற இது ப்லாக்யமென்னுமத்தை ரஸோக்தியாக அருளிச்செய்கிறார் - தலையான இத்யாதி. பரிசில் - உபஹாரம். இன்னமொருவழியாலே யதிற்காட்டில் இதுக்குண்டான ஏற்றமருளிச் செய்கிறார் - ருஷ்யமுக இத்யாதி. அதாவது மஹாராஜருடைய காவற்காட்டைப் புகுகிறதுக்கு ப்ரதிபந்தகமுண்டு; இங்குஅதில்லையென்றபடி. அங்குவிலக்கினாருண்டோ? என்ன - சாந்தஞன இத்யாதி. "ஸ்ருஷ்டம் ஸமஶாஸ்த்ரவிஶ்யம் மதுவஸேவ்யதாம் வாநரா: । அஹமாவாரயிஷ்யாமி யுஷ்மாகம் பரிபந்திந:" இதி மதுவநே வாநராந்ப்ரதிஹநுமான் (சுஉ-கூ). ப்ரா ங்கிகம் 'பிராட்டியை' என்றுதொடங்கி, 'பட்டர் அருளிச்செய்வர்' என்னுமளவும். அறியாதிருக்கச் செய்தே, அறைகிறதுக்கு அடி ஏதென்ன - நம்மோடு இத்யாதி. ரஸோக்தி - என்றும் இத்யாதி. வண்டுகளேயோ மதுபானம்பண்ணுவது? என்ன - தூவியம் இத்யாதி. 'தலையானபரிசிலிறே' என்றத்தைவிவரிக்கிறார் - அவனேயோ இத்யாதிவாக்யத்ரயத்தாலே: ஸாம்யாபத்தியென்றது - ஸமாந போகத்வம். அதாவது - அவனுக்குபோக்யமானகுழலை யுங்களுக்கும் அநுபவிப்பிக்கிறேனென்றபடி "ஸோஶ்நுதே" என்கிறஶ்ருதிக்கு - இவ்விடத்திலே, போக்த்ருஸாஹித்யம் விவக்ஷிதம். ஸப்

னேன்கிருள். "ஸோம்நுதே" என்கிறபடியே, உங்களேயும் அவனேயும் ஒருகலத்திலே யூட்டுகிறேனேன்கிருள். தலேயான ஊணிறே. [என்குழல்மேலொளிமாமலரூதிரோ]-உங்கள் வரவாலே தளிர்த்திருக்கிற என்னுடையகுழலில், ஒளியையுடைத்தாய் ஶ்லாக்யமான மலரில் மது-வைப் பாநம்பண்ணீரோ? [ஊதீரோ]-மதுவின் ஸம்ருத்தியாலே,கிண்ணகத்தில் இழிவாரைப்போலே தனித்து இழியமாட்டாதே நின்றுபறக்கிறபடி. உங்கள் கார்யமுமாய் பரரக்ஷணமுமானல் ஆறியிருக்கிறதேன்? என்கை. [கூடியவண்டினங்காள்] - மஹாராஜரைப்போலே படைதிரட்டவேண்டாவிறே யுங்களுக்கு. என்னுடைய ரக்ஷணத்திலே யொருப்பட்டு முன்பே திரண்டிருக்கப்பெற்றதிறே. இளேயபெருமாள் கிஷ்கிந்தாத்வாரத்திலே சென்று குணகீர்த்தனம்பண்ணின பின்பிறே படைதிரட்டிற்று! [குருநாடுடைஐவர்கட்காய்] - பிறர்மஹிஷிகள் குழல்பேணுமையைக்கண்டு வருந்துமவன்கிடீர்; "மைத்துனன்மார் காதலியை மயிர்முடிப்பித்தவர்களேயே மன்னராக்கி" என்கிறபடியே. ராஜ்யமுடையார் பாண்டவர்களே; நாம் அவர்களுக்கு ஏவல்தேவை செய்துநிற்கிருேமென்றுயிற்று அவன்நிணேத்திருப்பது. [குருநாடுடைஐவர்] - துர்யோதநாதிகள் கிடந்தானே சண்டேறினவோபாதியிறே. "நாடுடைமன்னர்" என்கிறபடியே ராஜ்யம் அவர்களதே. "துர்யோதநாதிகள் ராஜ்யம்பண்ணுகை வல்லடி" என்றிருக்கும் பகவதபிப்ராயத்தாலே சொல்லுகிருர்; அவன்நிணேவேயிறே இவர்க்கும்நிணேவு. [ஆடியமாநெடுந்தேர்] - மநோஹரமாம்படி ஸஞ்சரியாநின்ற குதிரைபூண்ட பெருந்தேரை உபகரணமாகக்கொண்டு. "உஹூ

---

தார்த்தம் - உங்கள் இத்யாதி. "ஊதீரோ" என்றதுக்கு பலிதார்த்தம் - பாநம்பண்ணீரோ என்றது. சாப்தமானவர்த்தம் - மதுவின் இத்யாதி. "ஊதீரோ" என்கிறஸ்வரத்துக்குபாவம் - உங்கள்கார்யமும் இத்யாதி. உங்கள்கார்யமென்றது - அங்கேபோய் அறிவிக்கையை. பரரக்ஷணமென்றது-மதுபாநம் பண்ணுகையை. "கூடிய" என்றதுக்குபாவம் - மஹாராஜரை இத்யாதிவாக்யத்வயம். படைதிரட்டுமிடத்தில் பின்னேயுமொரு விளம்பமுண்டென்னுமத்தை ரஸோக்தியாலே அருளிச்செய்கிருர் - இளேயபெருமாள் இத்யாதி. 'குணகீர்த்தநம்' அவருடையகுணங்களேச்சொல்லிப் புகழுகை என்றது ரஸோக்தி; கிஷ்கிந்தையை ஶ்லிகொள்ளுகையென்று வாஸ்தவமான வர்த்தம். நாங்கள் அறிவித்தால் வருமோ? என்ன - பிறர்மஹிஷிகள் இத்யாதி. அதாவது - தன்மஹிஷியிடத்தில் சொல்லவேண்டாவிறேயென்றபடி. அப்படிவருந்திருமோ? என்ன - மைத்துனன்மார் இத்யாதி. மைத்துனன்மாரான பாண்டவர்களுக்கு அஸாதாரணதையான த்ரௌபதியைக்குழல்முடிப்பித்து, அந்தப்பாண்டவர்களேயே ராஜாக்களாக்கி என்றபடி. பெரியாழ்வார் திருமொழி, நாலாம்பத்து, ஒன்பதாந்திருமொழி, ஆரும் பாட்டு. "நாடுடையவர்" என்றும், "குருநாடுடையவர்" என்றும் பதத்தைப்பிரித்து ப்ரதமம், "நாடுடையவர்" என்றதுக்கர்த்தம் அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, அவர்களோ நாடுடையவர்கள்? க்ருஷ்ணனன்றே? என்ன; இதுக்கு உத்தரம் - ராஜ்யமுடையார் இத்யாதி. குருநாடுடையவர்கள் துர்யோதநாதிகளன்றே? என்ன - துர்யோதநாதிகள் இத்யாதி. 'கிடந்தானே' இத்யாதிக்குக் கருத்து - பாகன் அநுமதியின்றியிலே கிடந்த ஆனேயிலே தானேறிஞல் அதிஞலே தள்ளுண்ணுமாபோலே, அவர்களும் அமர்யாதமாக ராஜ்யம்பண்ணுகையாலே ப்ரஷ்டராவர்களென்று. அவர்கள் "எங்களது" என்றுநிணேத்திருக்க, "கிடந்தானேகண்டேறினவோபாதி" என்கிறது எத்தாலே? என்ன - நாடுடை இத்யாதி. செய்துதலேக்கட்டவல்ல ஈஶ்வரன்படி நிணேத்திருந்தாலும், அவர்களானாநிற்க இவர்க்குஇப்படி யருளிச்செய்யலாமோ? என்ன-அவன்நிணேவே இத்யாதி. சஞ்சரிக்கிறவென்றதே, "ஆடிய" என்றதுக்கு வாஸனை - மநோஹரம் இத்யாதி. "மா" என்று - குதிரை: நெடுமை - பெருமை. "நெடுந்தேர்" என்றதுக்கு ப்ராமாணம் மஹாந்த் இத்யாதி. 'மஹாந்த் ஸ்வஶ்வைஸ்ஸம்பூர்ணம் ஸ்வசக்ரத்வஜ ஸம்பந்நம் . . .'

*திஸ்யந்தநேஸ்த்திதௌ*" (மஹதிஸ்யந்தநேஸ்த்திதௌ) என்னும்படியிருக்கிற தேரைக் கொண்டு. [படைநீறெழச்செற்றபிரான்] - ஆயுதமெடாமைக்கு அநுமதிபண்ணுகையாலே, தேர்க்காலாலே ஸேனையைத் துகளாக்கினுன். [செற்றபிரான்] - தன்னையழிய மாறியும் பரோபகாரம் பண்ணுகையே ஸ்வஹாவமாகவுடையவன். தாழ்த்தது ஔபாதிகமென்றிருக் கிருள். [செற்றபிரான்] - அர்ஜுநாதிகளும் ஶஸ்த்ரங்களோபாதியிறே; "*மயைவைதே நிஹதா:பூர்வமேவ*" (மயைவைதேநிஹதா:பூர்வமேவ) என்று தானே யருளிச் செய்தானிறே. [சூடியதண்டுளபமுண்ட] - ஸாரத்யம்பண்ணுகிறபோது வைத்த வளையத் திலே மதுபாநம்பண்ணுகிற வண்டுகள். அவதாரங்களில் ஏதேனுமொன்றாலே வளையம் வைக்கிலும், அவ்வவஸ்த்தையை ப்ராபித்தநுகூலிக்கிறது திருத்துழாயாகக்கடவது. [தூமது வாய்கள்கொண்டே]-அவ்வளையத்தில் மதுவைப்பாநம்பண்ணிசுத்தமாய்இனிதான வாய்க ளைக்கொண்டு;இனிதானபேச்சையுடைத்தாயிருக்கையென்றுமாம்.[தூமதுவாய்கள்கொண்டு -ஓடிவந்தென்குழல்மேலொளிமாமலருதீரோ]-"*வாஹிவாத*" (வாஹிவாத) - சாக்ஷுஷ மல்லாமையாலே நீ பெற்றபேறு என்? "*த்வயிமேகாத்ரஸம்ஸ்பர்ஸ:*" (த்வயிமேகாத்ர ஸம்ஸ்பர்ஸ:) - நம்முடைய கரணங்களுக்குஸ்பர்ஸம்உன்பக்கலிலேயாயிற்றே. நமக்குத் தோட்டாரைத் தோட்டாயிற்றே. "*சந்த்ரே த்ருஷ்டிஸமாகம:*" (சந்த்ரேத்ருஷ்டிஸமாகம:) தர்ஸநத்தோடொத்ததிறே எனக்கு ஸ்பர்ஸமும். அற்றதுபோருந்தும்படி வார்த்தைசொல்ல

---

*தா:" இதி கீதாஸப்ததயே(கச). தேரைக்கொண்டு நிரூபிக்கிறதென்? திருவாழியில்லையோ? என்ன - ஆயுதம் இத்யாதி. "பிரான்" என்றதுக்கர்த்தம் - தன்னை இத்யாதி. தன்னையழிய மாறுகையாவது - தன்னுடைய ஸர்வாதிகத்வத்தையழித்து ஸாரதியாய் நிற்கை. "செற்றபிரான்" என்று - இத்தையே நிரூபகமாகச்சொல்லுகையாலே 'ஸ்வபாவமாகவுடையவன்' என்கிறார். இப்போது வாராதிருக்க, "பிரான்" என்கிறதென்? என்ன - தாழ்த்தது இத்யாதி. இவனேசெற்றான், அர்ஜுநாதிகளன்றோ? என்ன - அர்ஜுநாதிகளும் இத்யாதி. இவனேசெற்றானென்னுமதுக்கும், அவர்கள் சஸ்த்ரங்களோ பாதியென்னுமதுக்கும் ப்ரமாணம்-மயைவைதே இத்யாதி. "தஸ்மாத்த்வமுத்திஷ்ட யஶோ லபஸ்வ ஜித்வா ஶத்ரூந் புங்க்ஷ்வ ராஜ்யம் ஸம்ருத்தம் । மயைவைதே நிஹதா: பூர்வமேவ நிமித்தமாத்ரம் பவ ஸவ்யஸாசிந்" இதி கீதாஸப்ததயே[கூக]. "செற்றபிரான் சூடியதண் டுளபமுண்ட" என்கையாலே பலித்தபாவம் - ஸாரத்யம் இத்யாதி. க்ருஷ்ணாவதாரத்தில் திருத்துழா யுண்டோ? என்ன-அவதாரங்களில் இத்யாதி. "சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டு" என்றதுக்கு இரண்டர்த்தம்; அதில்முந்தினது - அவ்வளையத்தில் இத்யாதி. திருத்துழாய்மதுவைப் பாநம் பண்ணுகையாலே பரிசுத்தமாய் இனிதானவாய்களைக்கொண்டென்றபடி; இந்த அர்த்தத்துக்கு, "உண்ட" என்றது - உண்கையாலேயென்றபடி. "மது" என்றது - இனிதானவென்றபடி. இரண் டாமர்த்தம் - இனிதானபேச்சை இத்யாதி. அதாவது - திருத்துழாய்மதுவைப் பாநம்பண்ணி பரி சுத்தமாய், இனிதாயிருப்பனவான - அவன்வரவுக்கு சூசகமான - வார்த்தைகளைக்கொண்டென்றபடி; இந்தபக்ஷத்தில், "வாய்கள்" என்று - வாய்களிலிருக்கிற வார்த்தைகளை லக்ஷிக்கிறது. முந்தினவர்த்தத் துக்கு ஸம்வாதம் - வாஹி இத்யாதி. "வாத" என்றதுக்குபாவம்-சாக்ஷுஷம் இத்யாதி. சாக்ஷுஷ மல்லாமையாலே நிர்ப்பயமாகவேண்டினவிடங்களிலே போகலமென்றபடி. "த்வயிமேகாத்ரஸம் ஸ்பர்ஸ:" என்கையாலே, பிராட்டியை ஸாக்ஷாத் அநுபவிக்கப்பெறாமையால் வந்த இழவுதோற்று கிறதென்கிறார் - நம்முடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே. "வாத" என்று - வாயுவை ஸம்போ தித்துவைத்து, "சந்த்ரே த்ருஷ்டிஸமாகம:" என்பானென்? என்னில் - தர்ஸநத்தோடு இத்யாதி. அதாவது - சந்த்ரதர்ஸநம் தாரகமாமோபாதி, உன்னுடைய ஸ்பர்ஸமும் தாரகமென்கைக்காக வென்ற*

வல்ல வாயைக்கொண்டு. "த்ருஷ்டாஸீதா" (த்ருஷ்டாஸீதா) என்றாற்போலே. என்னையும் மது பாநம்பண்ணுவித்து நீங்களும் மதுபாநம்பண்ணுங்கோள்.

## நான்காம் பாட்டு.

தூமதுவாய்கள்கொண்டுவந்து என்முல்லைகள்மேல்தும்பிகாள் !
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்போய்செய்தகன்ற
மாமதுவார்தண்டுழாய்முடி வானவர்கோனைக்கண்டு
யாமிதுவோதக்கவாறு? என்னவேண்டுங்கண்டீர் நுங்கட்கே.

ஆ.—(தூமதுவாய்கள்) - நீங்கள் பூமதுவுண்ணச் செல்லில், ஹாக்யஹீனையான எனக்கு "ஸம்ஶ்லேஷம்" என்றோர் இந்த்ரஜாலத்தைக்காட்டி, என்னை யகன்று திருநாட்டிலே திருமாமணிமண்டபத்திலே, * அயர்வறுமமரர்கள் திவ்யபரிஷத்திலே, * குணார்த்தாஸ்யமுபாஸதராயிருந்த அவர்களாலே யலங்க்ருதனாயிருந்த அவனைக் கண்டு, அவன் திருக்குழலில் திருத்துழாயின் மது வெள்ளத்தை உங்கள் தூமதுவாய்கள் கொண்டுபருகிப்பின்னை 'உம்மையொருத்தி இன்று ஆசைப்பட்டுக்கூப்பிடாநிற்க, அவளை நினையாதிருக்குமிதுவோ உம்முடைய க்ருபையாவது?' என்று அவர் ஸந்நிதியிலே சொல்ல வேணுமென்று, தனக்குப் பரமஸுஹ்ருத்துக்களாய்த் தன் முல்லைகளிலே வந்திருந்த தும்பிகளை நோக்கிச்சொல்லுகிறாள்.

ஒ.—நாலாம்பாட்டில், என்னை நோவுபடுத்திப்போந்து எட்டாநிலத்திலே ஓலக்கமிருந்து வளையம்வைத்து போதுபோக்கி ஓரஞ்செய்கையோ நாம் தக்கோரானபடியென்று, திருநாட்டிலேசென்று எம்பெருமானுக்குச் சொல்லவேணுமென்று சில தும்பிகளைக்குறித்து அருளிச்செய்கிறாள்.

[தூமதுவென்று தொடங்கி] - நான் வளர்க்கிற முல்லைகளிலே வர்த்திக்கிற தும்பிகாள்! உங்களுடைய இனிய பேச்சுக்களோடே அங்கேசென்று. [பூமதுவுண்ணச்செல்லில்]-பூக்களில் மதுபாநம் பண்ணப்போகில். [வினையேனையென்று தொடங்கி]-என்னோடே ஸ்வப்நகல்பமான ஸம்ஶ்லேஷத்தைப்பண்ணி விஶ்லேஷித்து, அத்தாலே க்ருதக்ருத்யனாய், திருக்குழலில் செவ்வியாலே மிகவும் மதுதாரைகள் பாயாநின்றுள்ள திருத்துழாயாலே அலங்க்ருதமான முடியையுடைய * அயர்வறுமமரர்கள் தன்னுடைய

---

படி. அன்றிக்கே, 'ஸ்பர்ஶத்தோடொத்ததிறே யெனக்கு தர்ஶநமும்' என்றுபாடமாகில் - அவளோட்டை ஸ்பர்ஶம் உன் பக்கலிலே ஸத்வாரகமானாற்போலே. தர்ஶநமும் எனக்கு ஸத்வாரகமாயிற்றென்று வாயுவை த்ருஷ்டாந்தீகரிக்கிறது. த்விதீயார்த்தத்தில், வாய்க்குத்தூய்மையேதென்ன - அற்றது இத்யாதிவாக்யத்வயத்தாலே: "ஷஷ்டோவிஜஹௌரொஷதே" என்ற த்ரௌபதிவார்த்தையாலே மாம்பழமானது கொம்பிலேயொட்டிற்றிறே. இந்த த்விதீயார்த்தத்தில், "தண்டுளபமுண்ட" என்றத்தோடு தட்டுப்படுகையாலே, தத்பரிஹாரார்த்தமாக 'வார்த்தைசொல்லவல்லவாயைக்கொண்டு' என்கிறார். 'கூடியவண்டினங்காள் குருநாடுடை' என்று தொடங்கி, 'வாய்கள்கொண்டு - ஓடிவந்தென் குழல்மேலொளிமாமலரூதீரோ' இத்யந்வயஃ. (ந)

அழகையும் குணங்களையும் கொண்டாட இருக்குமவனைக்கண்டு. போகத்தில் அபர்யாப்தியாலே வினையேன் என்கிறாள். பொய் - ஸ்நேஹிப்பாரைப்போலேகாட்டி வஞ்சிக்கை.

ப.—அநந்தரம், ஸூரிபோக்யமான வைலக்ஷண்யத்தையுடையவனைக்கண்டு, உம்முடையதகவுடைமையிதுவோ? என்று சொல்லவேணும் என்று சிலதும்பிகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

என் - நான்வளர்த்துப்போருகிற, முல்லைகள் - முல்லைகளின், மேல் - மேலே வர்த்திக்கிற, தும்பிகாள் - தும்பிகாள்! தூ-தூய, மது - மதுவை நிரூபகமாகவுடைத்தான, வாய்கள் - வாய்களை, கொண்டு - கொண்டு, வந்து-வந்து, பூ-(அம்முல்லைகளில்) பூவின், மது-மதுவை, உண்ண-உண்ண, செல்வில் - செல்ல நினைத்திகோளாகில், (அவை வாடிக்கிடக்கிற அவஸ்த்தையிற்செல்லாதே), வினையேனை - விஸ்லேஷஹேதுவான பாபத்தையுடையேனான என்னை, பொய் - க்ருத்ரிமஸம்ஸ்லேஷத்தை, செய்து - பண்ணி, அகன்ற - அகன்றவனாய், (இப்பிரிவுதானே செந்தலிப்புக்கு உறுப்பென்னலாம்படி), மா-பெருவெள்ளமான, மது-மது, வார் - ஒழுகுகிற, தண்-குளிர்ந்த, துழாய் - திருத்துழாயாலே யலங்க்ருதமான, முடி - திருமுடியையுடையனாய்க்கொண்டு, வானவர் - நித்யஸூரிகளுக்கு, கோனை-நிர்வாஹகனாயிருக்கிறவனை, கண்டு-கண்டு, நுங்கட்கு-(இவ்வவஸ்த்தையிலே ஸங்கிஹிதங்களான) உங்களுக்கு, (அவனுடைய மேன்மைக்குத் தகுதியாம்படி லோபசாரமாக), யாம்-நாம், இதுவோ - இம்மேன்மைகொண்டாடி யிருக்குமதுவோ? தக்கவாறு - தகவுடையோமானபடி? என்னவேண்டுங்கண்டீர் - என்று சொல்லவேணுங் காணுங்கோள்! அப்போதிறே, என்னோபாதி இம்முல்லையும் செந்தலித்து மது பாநம் பண்ணலாவது என்றுகருத்து.

இ.—நாலாம்பாட்டில், என்னை நோவுபடுத்திப்போய் எட்டாத நிலத்திலே ஓலக்கமிருக்கை தக்கோர்மையோ? என்று திருநாட்டிலேசென்று சொல்லுங்கோள்! என்று சில தும்பிகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

[என் முல்லைகள்மேல் தும்பிகாள் - தூமதுவாய்கள் கொண்டுவந்து] - நான் வளர்க்கிற முல்லைகளின்மேலே வர்த்திக்கிற தும்பிகாள்! இவள் உறாவுகையாலே, போனி நீர்வார்ப்பாரில்லாமையாலே உறாவின முல்லைகளின் மேலே பட்டினிவிடுகிறவையிறே; என்னோடொக்க நோவுபடப் பிறந்த நீங்கள். என் பரிஸரத்தில் முல்லைகள் என்றுமாம். இவள் வர்த்திக்கிற எல்லையடங்கச் சருகாயிறே கிடக்கிறது. மது க்தமாய் இனிதான பேச்சுக்களைக்கொண்டு சென்று: வாவு செலவைக் காட்டுகிறது. [பூமதுவுண்ணச் செல்வில்] - மது வ்ரதங்களாகையாலே பூவுள்ளவிடந்தேடி மது பாநம் பண்ணப்போகக்கடவீகோளிறே; மது வுள்ளது அங்கேயாகையாலே, பூக்களில் மது பாநம் பண்ணப்போகில். [வினையேனைப் பொய்செய்தகன்ற] - "பிரியேன், பிரியிற்றரியேன்" என்ற பொய்யை மெய் என்று ப்ரமிக்கும்படியான பாபத்தைப் பண்ணின என்னை, "ராமோ த்விர்நாபி பாஷதே" என்னுமவன் இரண்டுவார்த்தை சொல்லும்படியான பாபத்தைப்பண்ணினேன். [பொய்செய்து] - இந்திரஜாலமென்றும், கனவென்றும், கலவியென்றும் பர்யாயமிறே. [அகன்ற] - தன்பேறாகக் கலந்து பொகட்டுக் கைகழியப் போனபடி. [மாமது வார் தண்டுழாய்முடி] - திருக்குழலில் செவ்வியாலே மிகவும் மது தாரையை

யுடைத்தான திருத்துழாயாலே அலங்க்ருதமான திருமுடியையுடையவன். [அகன்ற மாமதுவார் தண்டுழாய்முடி] - இவள் பரிஸரமடங்கச் சருகாய்க்கிடக்கப் பிரிவே ஹேதுவாக அவன் வைத்த வளையம் மடிச் சொரிகிறதிறே. [வானவர்கோனைக் கண்டு] - அவ்வழகை நித்யஸூரிகளை அநுபவிப்பித்துக் கொண்டிருக்கிறவனை. புதியாரை நேர்வுபடவிட்டு, பழையார்க்கு ஓலக்கங்கொடுத்துக்கொண்டு இராநின்றான்; "ஆயிகிஷி ஆவது" என்கிறவிது உக்திமாத்ரமாய் விட்டதிறே. [கண்டு] - நீங்கள் முன்பே காணப்பெறுகிறீர்களிறே. [யாமிதுவோதக்கவாறு] - நாம் தக்கோரானபடி இதுவோ? என்னுங்கோள். ஸ்த்ரீவயம் பண்ணிப்போந்து, பிரிவறியாத அந்தரங்கர்க்கு ஓலக்கங்கொடுத்து ஆந்ருஶம்ஸ்யங்கொண்டாடியிருக்கும்அதுவோ தக்கோர்மை! [என்னவேண்டுங்கண்டீர்] - அப்பேரோலக்கத்திலே பெரிய மதிப்பனைக்கண்டுவைத்து, "இப்படி சொல்லவேணுமோ?" என்னாதே இவ்வார்த்தை இத்தனையும் சொல்லவேணும். "வாவாயஜேவா வைஹி". [துங்கட்கே] - கலந்துவைத்துப் பொகட்டுப்போனவனிற் காட்டில், ஆற்றாமையிலே முகங்காட்டின உங்களுக்கு இத்தனையும் செய்யவேண்டாவோ?

ஈடு.—நாலாம்பாட்டு. என்னைநோவுபடுத்திப்போய் எட்டாநிலத்திலே ஓலக்கமிருக்கை தக்கோர்மையோ? என்று திருநாட்டிலேசென்று சொல்லுங்கோள்! என்றுசில தும்பிகளைக்குறித்துச்சொல்லுகிறாள்.

[தூமதுவாய்கள்கொண்டுவந்து] - பரிசுத்தமாய் இனிதானபேச்சை யுடைய வாயைக்கொண்டு சென்று. வந்தென்றது - சென்றென்றபடி. ஆர்த்தர்க்கு உஜ்ஜீவநஹேது வாய் இனிதுமான பேச்சைக்கொண்டு. [என்முல்லைகள்மேல் தும்பிகாள்] - உடன்கேடராயொக்கப் பட்டினிவிட்டுக்கிடப்பாரைப் போலேயிறே நீங்கள் கிடக்கிறது. இவள்குழலில் பூவோடொக்க, உத்யாநத்திலுள்ள பூக்களும் சருகாயிறேகிடப்பது; "அபிவ்ருக்ஷா: பரிம்லாநா:" (அபிவ்ருக்ஷா:பரி ம்லாநா:) என்னுமாபோலே. [பூமதுவுண்ணச்செல்லில்] - மதுவ்ரதங்களாகையாலே பூவுள்ளவிடந்தேடி மதுபாநம்பண்ணப்போகக்கடவிகோளிறே. இவள்பரிஸரத்தி லுள்ளவையிறே உருவிக்கிடப்பன; அங்குள்ளவையெல்லாம் செவ்வி பெற்றிருக்குமிறே; * மாமதுவார் தண்டுழாய்முடி வானவர்கோனிறே. அவர்களில் இவ

---

நாலாம்பாட்டு.—தூமது இத்யாதி. "தும்பிகாள்! வினையேனைப்பொய்செய்தகன்ற - வானவர்கோனைக் கண்டுயாமிதுவோதக்கவாறென்னவேண்டுங்கண்டீர்" என்கிறபதங்களைக் கடாக்ஷித்தவதாரிகை - என்னை இத்யாதி. தக்கோர்மை - தயை. தும்பியாவது - ப்ருங்கஜாதியில்அவாந்தரம்.

* தூய்மையும் இனிமையும் வாய்களுக்கில்லாமையாலே 'பேச்சையுடைய' என்று அர்த்தாத் ஸித்தம். "பூமதுவுண்ணச்செல்லில்" என்றிருக்கையாலே 'வாயைக்கொண்டுசென்று' என்றது. "இதுவோ தக்கவாறு?" என்றதுக்கநுகுணமாக "வாய்" என்றதுக்கு - பேச்சாக அர்த்தாந்தரமாதல்; "பரிசுத்தமாய்" இத்யாதிவாக்யவிவரணமாதல்; அன்றிக்கே, வார்த்தைக்குத் தூய்மையாவதேதென்ன என்கிற சங்கையிலேயாதல் - ஆர்த்தர்க்கு இத்யாதி. முல்லைகள்மேல் தும்பிகாளென்னாதே, "என் முல்லைகள்மேல் தும்பிகாள்" என்றுவிசேஷிக்கிறதுக்குபாவம் - உடன்கேடராய் இத்யாதி. ஒக்கப் பட்டினிவிடுவானென்? இவள்முல்லையில் மதுவில்லையோ? என்ன - இவள்குழலில் இத்யாதி. உத்யாநத்திலுள்ள பூக்களென்றது - இவள் பரிசரத்திலுண்டானதோப்பில் பூக்களென்றபடி. இவள் பூ சருகானால் உத்யாநத்திற் பூ சருகாகவேணுமோ? என்ன - அபிவ்ருக்ஷா இத்யாதி. மதுவுண்ணச் செல்லவேணுமோ? என்ன - மதுவ்ரதங்கள் இத்யாதி. அவனுக்கும் விரஹது:கமுண்டாகையாலே அங்கு மதுவற்றியிராதோ? என்ன - இவள் பரிசரத்தில் இத்யாதி. "செவ்விபெற்றிருக்கும்" என்

னுக்கு வாசி, கவித்தமுடியும்இட்டமாலையுமே யிறே. இங்குள்ள வண்டுகள்போலே பட்டினிகிடக்க வேண்டாவிறே அங்குள்ளார்க்கு. [மாமதுவார்தண்டுழாய்] - விரஹத்திலும் ஊற்றுமாறாதவிடங்காணும் அவ்விடம். [பூமதுவுண்ணச்சேல்லில்] - இவள், தன்குழலிற் பூவும்வாடி மதுவும்வற்றினபின்பு இனி இவ்விபூதியிலுண்டாகமாட்டாதேன்றிருக்கிறாள்; இனி விபூதிமான்பக்கலிலே யுண்டாகில் உண்டாமத்தனை யென்றிருக்கிறாள். [வினையேனை] - அவன் என்பக்கற் பேசின பேச்சுக்களையும் வ்யாமோஹத்தையும் "மெய்" என்றிருக்கும்படியான பாபத்தைப் பண்ணின என்னை. [வினையேனைப்போய்செய்து] - "கடுகப்பிரியில்இடிவிழுந்தாற்போலே இவள்முடியும்" என்றுபார்த்து, "நின்னைப்பிரியேன், பிரியிலுமாற்றேன்" என்றாற்போலேயிருக்க, அவன் பிரிவைபுணர்த்தினான்; நான் அதுக்குத் தாத்பர்யம் அறியாமைகெட்டேன். அறிந்தேனாகில், போகாதபடி காற்கட்டலாயிற்றுக் கிடீர்! [போய்செய்து] - ஸம்ஸ்லேஷத்தில் அபர்யாப்தியிருக்கிறபடி. சிரகாலம்ஜீவிக்கச் செய்தேயும் "ஒருஸ்வப்நமாய்ப்போயிற்று" என்னக்கடவர்களாயிற்று, விஸ்லேஷத்தோடே வ்யாப்தமாகையாலே. கனவென்றும், இந்திரஜாலமென்றும், பொய்யென்றும் - அபர்யாப்தமான ஹோகத்தைச் சோல்லக்கடவது. [போய்செய்தகன்ற] - அகலுகைக்கு இட்டவழியிருக்கிறபடி. "கலக்க" என்று பேரையிட்டு, பர்யாப்தமாகக்கலவாதே வஞ்சித்து அகன்ற. [மாமதுவார்தண்டுழாய்முடி] - இங்குள்ளதும் அங்கேயாகையாலே மயா இரட்டித்திருக்குமிறே. தலையானமதுவுமே அதுதான். ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்களில் ஒருபடிப்பட்டிருக்கும் அவனைக்கண்டு. [வானவர்கோனைக்கண்டு] - தந்தாமைப்பேணுவார்க்கு உடம்புகொடுத்

---

றதுக்குறிமாமகமேதென்ன - மாமதுவார் இத்யாதி: "தண்டுழாய்முடி" என்றவிசேஷணத்துக்கு பாவம் - அவர்களில் இத்யாதி. அதாவது - முடியுடையவரானாலும், திருத்துழாயோடேகூடின முடியில்லையென்றபடி. "மாமதுவார்" இத்யாதியைக்கடாக்ஷித்து, "வானவர்கோன்" என்றதுக்கு பாவம் - இங்குள்ள இத்யாதி. "மா" என்றதுக்குபாவமாதல், "வார்" என்றதுக்குபாவமாதல் - விரஹத்திலும் இத்யாதி. அவன்பக்கல்செல்லுகிறதென்? இவள்பரிசரத்திலில்லையாகிலும் இவ்விபூதியிலில்லையோ? என்ன - இவள்தன் இத்யாதி. பேசினபேச்சுக்களாவன - "பேதைநின்னைப்பிரியேன்" என்கிறபேச்சுக்கள், வ்யாமோஹமாவது - காலைக்கையைப்பிடித்துப் பரிமாறினவ்யாமோஹம். "பேசினபேச்சு" இத்யாதிகளையும், அத்தை "மெய்" என்றிருக்கும்ப்ரகாரத்தையும் விவரியாநின்று கொண்டு, பிரியநினைக்கிறவன் வெறுமனேபோகவொண்ணாதோ? இப்படிசொல்லிப்பிரியவேணுமோ? என்கிறசங்கையையும் பரிஹரிக்கிறார் - கடுகப் பிரியில் இத்யாதி. அறிந்தாற்செய்வது என்? என்ன - அறிந்தேனாகில் இத்யாதி. "பொய்செய்து" என்றதுக்கு - "நின்னைப்பிரியேன்" இத்யாதி மித்யாபாஷணங்களைப்பண்ணி யென்று கீழ் அருளிச்செய்து, அபர்யாப்தமானகலவியாக அர்த்தாந்தரம் - ஸம்ஸ்லேஷத்தில் இத்யாதி. "ஸோ ஆஉ ... " இத்யாதிப்படியே சிரகாலம்ஸம்ஸ்லேஷித்துப்பிரிந்தாள்" என்றது பிள்ளான்நிர்வாஹமாயிருக்க, அபர்யாப்தமான கலவியென்கிறதென்? என்ன - சிரகாலம் இத்யாதி. "பொய்" என்று - அபர்யாப்தமானகலவியைச்சொல்லுமோ? என்ன - கனவென்றும் இத்யாதி. ஆனால், கலப்பானென்? என்ன - அகலுகைக்கு இத்யாதி. அதாவது - கலவியாலொழியப்பிரிவுகூடாமையாலே, துஃகப்படுத்துகைக்குஇட்டவழியென்றபடி. விவரணம்-கலக்கவென்று இத்யாதி. "மாமது" என்றதுக்குபாவம் - இங்குள்ளதும் இத்யாதி. ரஸோக்தி - தலையான இத்யாதி. இத்தால் பலிதம் - ஸம்ஸ்லேஷவிஸ்லேஷங்களில் இத்யாதி. "வானவர்கோன்" என்கிறவனுடையஹார்த்தபாவம் - தந்தாமை இத்யாதி. தந்தாமைப்பேணுகையாவது - அவன் இங்குவந்தால் ஸ்வாநுபவ விச்சேதம் வருமென்றிருக்கை. விவரணம் - த்வயி இத்யாதி. "யாம்" என்றதுக்கு

திருக்கும் அவனைக்கண்டு. "[illegible]" (த்வயி கிஞ்சித்ஸமாபந்நேகிம்கார்யம்ஸீதயாமம) என்றத்தைத்தவிர்ந்து, பழைய உறவுகொண்டாடி யிருக்கிறவனைக் கண்டு. [யாம்] - ஸாபராதனைகையாலே தன்குற்றத்தை யநுஸந்தித்து, ஓலக்கமிருக்கிறனைகப் பராக்கடித்து அநபிபவநீயனாயிருக்கும்; முதன்மைகண்டு கூசாதே நின்று நம்மைக்காணு மென்பது. இப்படி சம்போதித்தவாறே முகம்பார்க்கவேண்டிவரும்; அவன் பார்த்த முகம் மாறுவதற்குமுன்னே, இதுவோ தக்கவாறு என்பது. "[illegible]" (ஆந்ருஸம்ஸ்யம்பரோதர்ம:) என்று சிலர்க்குச்சோல்லிவைத்தீரே. "[illegible]" (நைவதம்ஸாந்நமஸகாந்), "[illegible]" (நமாம்ஸம்ராகவோபுங்க்தேநசாபிமதுஸேவதே) என்றவையெல்லாம் வடிவிலே கண்டோமிறே. [இதுவோ தக்கவாறு] - ஸ்த்ரீவதம்பண்ணி வளையம்வைத்து ஓலக்கங்கோடுத்திருக்கையோ தக்கோர்மையாவது? [என்னவேண்டுங் கண்டீர்] - இவ்வோலக்கத்தையும் இவன்மேன்மையையுங்கண்டு "இத்தையெங்ஙனே யழிக்கும்படி?" என்று நீங்கள் ஆந்ருஸம்ஸ்யங் கோண்டாடவோண்ணாது; அவ்வளவில் என்னைப்பார்த்துச்சோல்லுங்கோள். [நுங்கட்கே] - அவனல்லாத உங்களுக்கு இத்தனையும்

---

ப்ர.—[தூமதுவித்யாதி]—[வானவர்கோனைக்கண்டு]—[illegible] [சுக] "[illegible] ॥ரு॥"

[இதுவோ தக்கவாறு]—[illegible] [கூஅ] [illegible] ॥கூ௯॥ [illegible] ॥சு॥

---

ஹார்த்தபாவம் - ஸாபராதனைகையாலே இத்யாதி. நம்மைக்காணுமென்றது - உம்மைக்காணுமென்றபடி. "தக்கவாறு-இதுவோ" என்கைக்கு, இவர் தயாளுவென்கிறவிடம் எப்படியறிந்தாள்? என்ன - ஆந்ருஸம்ஸ்யம் இத்யாதி. "[illegible]" இதி ஸுந்தரகாண்டே ஹநூமந்தம்ப்ரதி ஸீதா. சிலர்க்கு - பிராட்டிக்கு. "தக்கவாறு" என்று ஸ்வபாவமாக்கி, "மாமதுவார்தண்டுழாய்முடி" என்றத்தைக்கடாக்ஷித்து, உன் ப்ரணயித்வஸ்வபாவம்இதுவோ? என்கிறாள்-நைவ தம்ஸாந் இத்யாதி. "[illegible]" இதி ஸுந்தரகாண்டே ஸீதாம்ப்ரதிமாருதி:. [ரு௩-௪௩]

வடிவிலே கண்டோமிறேயென்றது - * மாமதுவார்தண்டுழாய் முடியனாயிருக்கையைப் பற்ற. க்ருபாபரமாக்ஙி, "வினையேனை" இத்யாதியைக்கடாக்ஷித்துபாவாந்தரம்-ஸ்த்ரீவதம் இத்யாதி. கீழே 'ஆந்ருஸம்ஸ்யம்' இத்யாதிவாக்யம் - இவ்வர்த்தசேஷமாகக் கண்டுகொள்வது. என்னுங்கோளென்னாதே, "என்னவேண்டுங்கண்டீர்" என்றதுக்கு பாவம்-இவ்வோலக்கத்தை இத்யாதி. "நுங்கட்கு" என்றதுக்குபாவம்-அவனல்லாத இத்யாதி. அவனல்லாதஉங்களுக்கு என்றது - நிர்க்குணனையவனைப்போலன்றிக்கே

செய்யவேணும். இல்லையாகில், இவ்வளவிலேமுகங்காட்டின உங்களுக்கும் அவனுக்கும் வாசியில்லை. [நுங்கட்கே] - என்முல்லைகள்மேல் தும்பிகளன்றோ! உங்கள்ஜீவநம் நீங்களே நோக்கிக் கொள்ளவேணும்: அவன் ஸ்த்ரீவதம்பண்ணி ஸ்வரூபஹாநிபாராதேயோலக்கங் கொடுத்திருந்தான்; நான்பாடோடிக்கிடந்தேன்; இனி உங்கள்ஸ்வரூபஹாநி நீங்களே பரிஹரித்துக்கொள்ளுங்கோள். (ச)

## ஐந்தாம் பாட்டு.

நுங்கட்குயானுரைக்கேன்வம்மின் யான்வளர்த்தகிளிகாள்!
வெங்கட்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த
செங்கண்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை
எங்குச்சென்றாகிலுங்கண்டு இதுவோதக்கவாறு? என்மினே.

ஆ.—(நுங்கட்கு.) - க்ரூராவலோகந காலாநல ஸத்ரு ப்ரதிகூல ஜாலனான பெரியதிருவடி திருத்தோளிலே ஏறியருளி வந்து என்னோடே ஸம்ஶ்லேஷித்து விஶ்லேஷிக்கிறபோது, அதிஶீதளமாய் ம்ருதஸஞ்ஜீவநமானதிவ்யகடாக்ஷங்களாலும் அதிமதுரமான பணிமொழிகளினாலும் திருமேனியில் அழகாலும் ஆத்மாநுரூபமான பரிஷ்வங்கத்தாலும் என்னுடைய மநஃப்ரப்ருதி ஸகல கரணங்களையும் அபஹரித்துக் கொண்டுபோனவனைத் திருநாட்டிலே சென்றாகிலுங்கண்டு, உம்முடைய தக்கவாறு இதுவோ? என்று சொல்லவேணுமென்று, தான்வளர்த்த கிளிகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

ஒ.—அஞ்சாம்பாட்டில், திருநாடாகவுமாம், மற்றேதேனும்அவனுகந்தருளின தேசங்களாகவுமாம், எங்கேனும் போயாகிலும் அவனைக்கண்டு தம்முடைய தக்கோர்மையிருக்கும்படி இதுவோவென்னுங்கோள்என்று, தன்னுடைய கிளிகளைக் குறித்துச் சொல்லுகிறாள்.

[வெங்கட்புள்ளென்று தொடங்கி] - ப்ரதிகூலர்க்கு பயங்கரமான த்ருஷ்டியையுடைய பெரிய திருவடியை நடத்திக்கொண்டுவந்து, தன்னை விஶ்லேஷித்தால் தரியாதபடியான பாபத்தைப்பண்ணின என்னுடைய நெஞ்சை நிஶ்ஶேஷமாகப் பறித்துக் கொள்வதுஞ்செய்து, அதனால் பிறந்த ஹர்ஷப்ரகர்ஷத்தாலே சிவந்த திருக்கண்களையுடையனாய் காளமேகம்போலே ஶ்ரமஹரமான திருநிறத்தையும் சிவந்த திருப்பவளத்

---

தயாளுக்களான உங்களுக்கு என்றபடி. விவரணம் - இல்லையாகில் இத்யாதி. த்விதீயதாத்பர்யம் - என்முல்லைகள்மேல் இத்யாதி. ஏதத்விவரணமாதல், மூன்றாம்பாவமாதல் - அவன்ஸ்த்ரீவதம் இத்யாதி. அதாவது - முல்லைகள்மேலே வர்த்திக்கிற என் தும்பிகளாகையாலே, என்விஷயமான உங்கள் பாரதந்த்ர்ய ஹாநி வாராதபடி உங்களுக்கு ஜீவநமான என்னைநோக்குங்கோள் என்றபடி. பாடோடிக்கிடக்கை - ஒருவாக்காகப் படுத்துக்கொண்டிருக்கை. 'என்முல்லைகள்மேல் தும்பிகாள்! பூமதுவுண்ணச்செல்லில் - தாமதுவாய்கள்கொண்டுவந்து - வினையேனை'யித்யாரப்ய, 'கண்டு - நுங்கட்கு யாமிதுவோதக்கவாறென்ன வேண்டுங்கண்டீர்' என்றந்வயம். 'யாமிதுவோதக்கவாறு - நாம் இம்மயன்மை கொண்டாடியிருக்குமதுவோ தக்கோர்மையுடையோமானபடி. தக்கோர்மை - தயை. என்னவேண்டுங்கண்டீர் - என்றுசொல்லவேணுங்காணுங்கோள்' என்றபடி. (ரு)

தையும் உடையனாய் அர்த்தித்தது கொடுக்கும் மாத்ரமன்றிக்கே, தானே அபேக்ஷிதங்கள் அறிந்துகொடுக்கும் விலக்ஷண கல்பகமுமாயிருந்தவனை. என்னை ஸர்வஸ்வஹரணம் பண்ணி, விஶ்லேஷிக்கிறதசையிலே என்னை அநுநயிக்கைக்காக வடிவழகைக்காட்டிக் கண்ணாலே நோக்கி முறுவல்செய்து தன்னையும் தன்னுடைமையையும் எனக்காகத் தந்தவனுக்குஎன்றுமாம்.

ப.—அநந்தரம், உதார ஸ்வபாவனானவனை எங்கேனுயாகிலும் போய்க்கண்டு, இதுவோ தகுதியென்று சொல்லுங்கோள் என்று தான்வளர்த்த சிலகிளிகளைப் பார்த்துச் சொல்லுகிறாள்.

(பிரிந்த அவன் பரிகரம்போலே செருக்கடியாதே), யான் - நான், வளர்த்த- (வளர்க்க) வளர்ந்த, கிளிகாள்-! வம்மின்-(அதிபரிசயத்தாலே அநாதரித்திராதே) வாருங்கோள்; யான்-(வளர்த்த உங்களாலே பயன் பெறவிருக்கிற) நான், நுங்கட்கு - (நானுண்டாகில் உண்டாம்படியான) உங்களுக்கு, உரைக்கேன் - (நீங்களே யறிந்துசெய்யும் காரியத்தைச்) சொல்லுகிறேன்; வெம் - ப்ரதிபந்தகங்களை யழலவிழிக்கும், கண் - கண்ணையுடைய, புள் - பெரியதிருவடியை, ஊர்ந்து - (தன்னுடைய த்வரைதோன்றும்படி) நடத்திக்கொண்டு, வந்து - (என்பக்கலிலே) வந்து, வினையேனை - இன்று பிரிந்திருக்கைக்கடியான பாபத்தையுடையேனான என்னை, (நானுமறியாதபடி), நெஞ்சங்கவர்ந்த - சித்தாபஹாரம் பண்ணினவனாய், (அவ்வபஹாரஹேதுவான அந்த), செம்-சிவந்த, கண்- திருக்கண்ணையும், கருமுகிலை - (அதுக்கு பரபாகமாய்ப் * பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போலே பெரியதிருவடி திருத்தோளிலே பொருந்தவிருக்கிற) காளமேக நிபமான ரூபத்தையுடையனாய், செய்ய - (நினைத்தது முடித்த ப்ரீதியாலே) சிவந்த, வாய்-அதர சோபையையுமுடையனாய், செழுங்கற்பகத்தை - (இவ்வழகைத் தன்பேறாக அநுபவிப்பிக்கைபாலே) விலக்ஷணகல்பகம்போலே மஹோதாரனானவனை, எங்காகிலும் - பரவ்யூஹ விபவாதிஸ்தலங்க ளெங்கேனுமாகிலும், சென்று - சென்று, கண்டு-கண்டு, இதுவோ- இவளை சித்தாபஹாரம்பண்ணித் தனிமைப்படுத்தின இதுவோ, தக்கவாறு - தகுதி, என்மின் - என்று சொல்லுங்கோள்!

இ.—அஞ்சாம்பாட்டில், தன்னுடைய கிளிகளைக்குறித்து, எங்கேனும் போயாகிலும் அவனைக்கண்டு இதுவோ உம்முடைய தக்கோர்மையிருக்கும்படி யென்னுங்கோள் என்கிறாள்.

[நுங்கட்கு] - "ஸகலம் ஹ்யுபலம் ஸர்வம் வக்ஷு நள" என்றிருக்கும் உங்களுக்கு. [யான்] - என் ஸர்வபாரங்களையும் உங்கள்மேலே வைத்திருக்கிறநான். [உரைக்கேன்]- என்காரியம் நீங்களே உணர்ந்து செய்யக்கடவிகோளாயிருக்க, வார்த்தை சொல்லுகிறது என் ஆற்றாமையாலேயிறே. [வம்மின்]-என்காரியத்துக்கு உபாயசிந்தை பண்ணியிருக்கிற உங்களுக்கு ஒருவிரகுசொல்ல வாருங்கோள். [யான்வளர்த்த கிளிகாள்] - அவன் பரிகரம்போலே செருக்கியிருக்கப்பிறந்திகோளோ நீங்கள்? ரக்ஷகர் தேட்டமான தசையிலே ரக்ஷணத்திலே ப்ரவர்த்தியாதே செருக்கடித்திருக்கலாமோ? தன்னைத் தோற்றி ரக்ஷ்யரக்ஷக நியதிபற்றநதிறே. [வெங்கட்புள்ளூர்ந்து வந்து] - ப்ரதிகூலர்க்கு பயங்கரமான த்ருஷ்டியையுடைய பெரிய திருவடியை நடத்திக்கொண்டுவந்து, வழியில் உண்டான ப்ரதிபந்தகங்களைப் போக்கவல்லவனென்னுதல், எண்பாராதே பிரித்துக் கொண்டுபோனவனென்னுதல். "ஸக்ருத் ப்ராப்த ப்ராஹ்லாதய:". [வினையேனை] - பிரிந்

தால் தரிப்பரிதான பாபத்தைப்பண்ணினவென்னை. [நெஞ்சங்கவர்ந்த] - நெஞ்சை நிஶ்ஶேஷமாக அபஹரித்த; நாட்டார்க்கு மநோவிகாஸஹேதுவான விஷயம் என்னெஞ்சை யழிக்கும்படியாவதே! [செங்கட்கருமுகிலை] - கண்ணாலே குளிரநோக்கி, மேருவைக் கினிய வொரு காளமேகம் பணிந்தாற்போலே தன் வடிவைக்காட்டியாயிற்று நெஞ்சை அபஹரித்தது. [செய்யவாய்ச் செழுங்கற்பகத்தை] - அவ்வளவன்றியே, முறுவல்செய்து தன்னையும் தன்னுடைமையையும் எனக்காக்கியாயிற்று நெஞ்சை அபஹரித்தது. அன்றியே நெஞ்சை அபஹரித்தஹர்ஷத்தாலே திருக்கண்ணும் விகஸிதமாய், காளமேகம்போலே வடிவுங்குளிர்ந்து, அதுக்கு பரபாகமாய்ச் சிவந்த திருப்பவளத்தையும் உடையனாய், தானே அபேக்ஷித்துத் தன்னைக்கொடுக்கும் விலக்ஷண கல்பகமாயிருந்தவனை. [எங்குச்சென்றாகிலுங் கண்டு] - கீழ், "வானவர்கோனைக் கண்டு" என்கையாலே, ஓலக்கத்திலன்றிக்கே ஏகாந்தஸ்தலத்திலே சென்றாகிலும் வார்த்தை சொல்லுங்கோள். அங்ஙனன்றியிலே, "கூடுநெவஹியெஶெநஶஷிஷ்ராவிலைா யழ" என்கிறபடியே, "பரமபதத்திலே கண்டிலோம்" என்று மீளாதே வ்யூஹவிபவாதிகள் எங்குந்தேடியாகிலும் கண்டு சொல்லுங்கோள். [இதுவோ தக்கவாறென்னினே] - ஸ்யாநபேக்ஷமுண்டாகிலும் பாசுரமிதுவே. சீர்மைகொண்டாடி யிருப்பார்க்கு இதல்லது மர்மமில்லை; இத்தைச் சொல்லுங்கோள்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. தன்னுடைய கிளிகளைக்குறித்து எங்கேனும் போயாகிலும் அவனைக்கண்டு, இதுவோ உம்முடையதக்கோர்மையிருக்கும்படி! என்னுங்கோளென்கிறாள்.

[நுங்கட்குயானுரைக்கேன்] - தனக்குமுன்னே ஆற்றாமையோடேயிறே அவையிருக்கிறது; ஆருக்குச் சோல்லும் வார்த்தையை யாருக்குச் சோல்லுகிறது? ஆற்றாமை சோல்லுவியாதது இல்லையிறே. [நுங்கட்குயானுரைக்கேன்] - உங்களுக்குச் சோல்லுமதல்ல; நான் சோல்லுமதல்ல. வ்யஸநத்துக்கு அபிமாநிகளிருக்க, வேறே சிலர் வார்த்தை சோல்லுமாபோலே. [வம்மின்] - "இவளை ஜீவிப்பித்தோமாம் விரகேதோ?" என்று சிந்திக்கிற உங்களுக்குஒருவிரகுசோல்ல வாருங்கோள். [யான்வளர்த்தகிளிகாள்] - என்வயிற்றிலே பிறந்த உங்களுக்கு அவன் பரிகரம் போலே சேருக்கடித்திருக்கக் காலமுண்டோ?

---

அஞ்சாம்பாட்டு.—நுங்கட்கு இத்யாதி. "எங்குச்சென்றாகிலுங்கண்டு" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - தன்னுடைய இத்யாதி.

"நுங்கட்கு" என்கிறஸ்வரத்துக்குபாவம் - ஆருக்குச்சொல்லும் இத்யாதி. அதாவது - என்னாற்றாமையைக்கண்டு என்கார்யத்திலே ஒருப்படாதிருப்பார்க்குச் சொல்லுமத்தை, அதிலேயொருப்பட்டிருக்கிற உங்களுக்குச்சொல்லவேணுமோ? என்றபடி. அப்படிசொல்லுகைக்கு இவற்றுக்காற்றாமையுண்டோ? என்ன - தனக்குமுன்னே இத்யாதி. முன்னேயிருக்கிற இந்தவாக்யம் - ஆருக்குச்சொல்லும் இத்யாதி வாக்யாநந்தரம் அநுஸந்தேயம். ஆனால்சொல்லுவானென்? என்ன - ஆற்றாமை இத்யாதி. "ஆருக்குச்சொல்லும்வார்த்தை" என்கிறத்தை யநுவதித்துக் கொண்டு, "யானுரைக்கேன்" என்கிறஸ்வரத்துக்குபாவம் - உங்களுக்கு இத்யாதி. விவரணம் - வ்யஸநத்துக்கு இத்யாதி. வேறேசிலரென்றது - வேறேசிலர்க்கு என்றபடி. கிளிகள் வ்யஸநாபிமாநிகளாகையாலே வார்த்தைசொல்லவேண்டாதே தானே கார்யம்செய்யுமாகில், "வம்மின்" என்றழைப்பானென்? என்ன - இவளை இத்யாதி. "யான்வளர்த்த" என்கிறதுக்குபாவம் - என்வயிற்றிலே இத்யாதிவாக்யம். அவன்பரிகரம்போலே என்றது - "வெங்கட்புள்" என்றத்தைக்கடாக்ஷித்து. 'உங்களுக்குச்

செருக்கடித்திருக்கப்பிறந்திகோளோ! [நுங்கட்கு] - "ஏகம்து:கம் ஸுகஞ்சநௌ" (ஏகம்துகேம்ஸுகஞ்சநௌ) என்றிருக்கிற உங்களுக்கு. [யான்] - உங்கள்மேலே என் ஸர்வபரங்களையும் வைத்திருக்கிற நான். [உரைக்கேன்] - நீங்களறியாததுண்டாய்ச் சொல்லுகிறேனல்லேன்; ஆற்றாமையாலே சொல்லுகிறேன். [வம்மின்] - முன் கை முக் காதமாய் இருக்கிறபடி. [யான்வளர்த்த] - *நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலோடுமேஊட்டி வளர்த்த. [கிளிகாள்] - "வளர்த்ததனுல்பயன்பெற்றேன்" என்கிறபடியே, அவன்திரு நாமங்களை நீங்கள் சொல்லக் கேட்டிருக்கவும் அமையுமிறே; அதுதானே "கண்ணன்நாமமே குழறிக்கோன்றீர்" என்கிறபடியே, ஆற்றாமைக்கு உடலாகையிறே யுங்களை அவன்பக்கல் போகவிடத் தேடுகிறது. [வெங்கட்புள் இத்யாதி] - வெவ்வியதான கண்ணையுடைத்தான புள்ளை நடத்திக்கொண்டுவந்து, வருகிறபோதே வழியில் ப்ரதிபந்தகங்களைப் போக்குகை யிலே சினத்த கண்ணையுடையவன் என்னுதல்: அன்றியே, பிரித்துக்கொண்டு போகிறபோது கண்பாராதே பிரித்துக்கொண்டுபோன கொடுமையைச் சொல்லுதல்: "அக்ரூர: க்ரூரஹ்ருதய:" (அக்ரூர: க்ரூரஹ்ருதய:) என்னுமாபோலே. [வெங்கட்புள்ளூர்ந்துவந்து] - பட்டங்கட்டின ஆனையிலேயேறி அபிமதவிஷயத்தைக் கிட்டும் ராஜபுத்ரனைப்போலே. "அருளாழிப்புட்கடவீ ரவர்வீதியொருநாள்" என்றிறே அடியில் தூதுவிட்டது, அப்படியே வந்தபடி. [வினையேனை] - அவனைப்போலே இரண்டுநெஞ்சு படைக்கப்பெறாத பாபத் தைப்பண்ணினேன்; ஸம்ஶ்லேஷத்தில்அழிகைக்கும், விஶ்லேஷத்தில் தரிக்கைக்கும் இரண்டு நெஞ்சுண்டாகப் பெற்றிலேன் [நெஞ்சங்கவர்ந்த] - நாட்டார்க்கு மநோவிகாஸ ஹேதுவான விஷயம் என்னெஞ்சை யழிக்கும்படியாவதே! ஸாரக்ராஹியாய்க் கோதை யிட்டு வைத்துப்போனுன்; பூக்கொண்டு புட்டில் போகடுவாரைப்போலே. அறமணத்திறே இவர் நெஞ்சிருப்பது; "பூசும்சாந்தென்னெஞ்சம்" என்னும்படி. [செங்கட்கருமுகிலை] - கண் லே குளிரநோக்கி, வடிவைமுற்றூட்டாக்கி நின்றநிலை. அங்ஙனன்றிக்கே, இத்தலை

சொல்லுமதல்ல, நான்சொல்லுமதல்ல" என்றதுக்குஹேதுவருளிச்செய்வதாக மீளவும் பதோபாதாந பூர்வகமாக ஸப்தார்த்தம் - ஏகம்துகம்இத்யாதி. "உங்களுக்குச்சொல்லுமதல்ல" என்றதுக்குஹேது வருளிச்செய்து, "நான்சொல்லுமதல்ல" என்றதுக்குஹேதுவருளிச்செய்கிறார் - உங்கள்மேலே இத் யாதி. "ஆற்றாமைசொல்லுவியாததில்லையிறே" என்றத்தை - "உரைக்கேன்" என்கிறபதத்திலே ஏறிட்டருளிச்செய்கிறார் - நீங்கள் இத்யாதி. கிளி கைமேலேயன்றோ இருப்பது; ஆயிருக்க, "வம் மின்" என்கிறதென்? என்ன - முன்கை இத்யாதி. "யான்வளர்த்தகிளிகாள்" என்று சம்போதிக்கிற வனுடையஹார்த்தபாவம் - வளர்த்ததனுல் இத்யாதி. இது "மூலைக்கதிரை" என்கிறபாட்டிலே. பயன் - ப்ரயோஜநம். கேட்டிருக்கவமைந்தால்போகவிடுகிறதென்? என்ன - அதுதானே இத்யாதி. அதுதானே - திருநாமந்தானே. கண்ணினுடையவெம்மைக்கு அடியை இரண்டுவகையாக அருளிச் செய்கிறார் - வருகிறபோது இத்யாதிவாக்யத்வயத்தாலே. இதுக்கு உதாஹரணம் - அக்ரூர: இத் யாதி. "அக்ரூர: க்ரூரஹ்ருதய: ஶீக்ரம் நயதி கேஶவம் । ஸர்வதா துர்பலா யோஷித் தஸ்யா வாஸம் நஜாயதே" இதி பஞ்சமேம்ஶே அஷ்டாதஶே [௩0]. "புள்ளூர்ந்து வந்து-நெஞ்சங்கவர்ந்த" என்று கூட்டிபாவம் - பட்டங்கட்டின இத்யாதி. புள்ளூர்ந்துவரவேணுமோ? என்ன - அருளாழி இத்யாதி. "வினையேன்" என்றதுக்குஹார்த்தபாவம் - அவனைப்போலே இத் யாதி. விவரணம் - ஸம்ஶ்லேஷத்தில் இத்யாதி. சரீரத்தைவிட்டுநெஞ்சைக்கவருவானென்? என்ன- ஸாரக்ராஹி இத்யாதி. புட்டில் - பெட்டி. நெஞ்சு பூவானபடியென்? என்ன - அறமணத்து இத் யாதி. இதுக்குப்ரமாணம் - பூசுஞ்சாந்து இத்யாதி. "செங்கட்கருமுகிலை" என்றதுக்கு - பூர்வபாவி யாகவும் பரபாவியாகவும் அர்த்தத்வயம் - கண்ணாலே இத்யாதிவாக்யத்வயத்தாலே. முந்தினவர்த்தத்

யோடேவந்து கலந்தபின்பு, அத்தலைக்குவந்த பௌஷ்கல்யத்தைச் சொல்லவுமாம். அன்றிக்கே, பிரிவை ப்ரஸங்கித்துக் கண்ணாலே குளிரநோக்கி, அவன் விளைநீரடைத்துக்கொண்டு நின்ற படியாகவுமாம். [செய்யவாய்] - சாடுசேதங்கள் சொல்லப்புக்கு ஸ்மிதம்பண்ணுகிற வாய். [செழுங்கற்பகத்தை] - விலக்ஷணமான கல்பகத்தை: வைலக்ஷண்யமாவது தானே யபேக்ஷித்துத் தன்னைக்கொடுக்கை. கல்பகம் தன்னைக் கொடுக்கமாட்டாதே அபேக்ஷிக்க வும்மாட்டாதே; இவன்தன்னைக்கொடுக்க வல்லவனிறே. தான் கடக்கவிருந்தாலும் தன் விபூதித்வயத்தையும் நான் நினைத்தார்க்குக் கொடுக்கும்படி எனக்குத் தந்தவனை. [எங்குச் சென்றாகிலுங்கண்டு] - ("வானவர்கோனை" என்றதிறே) "ஆள் வாராநின்றது" என்று கேட்டு ஓலக்கத்தைக் கிளப்பாக் கடக்கப்போய்த் திரைவளைத்துக் கொண்டிருப்பர். அன்றிக்கே, புகைபுக்கவிடமெங்கும் புகுங்கோள்; பரவ்யூஹவிபவார்ச்சாவதாரங்கள்; "யமாத்மாநவேத" (யமாத்மாநவேத) என்றருளிச்செய்திருக்கும் இடமெங்கும்புக்கு. "அநேநைவஹிவேகேந கமிஷ்யாமிஸுராலயம்" (அநேநைவஹிவேகேந கமிஷ்யாமிஸுராலயம்) என்கிறபடியே. "பரமபதத்தில் கண்டிலோம்" என்று மீளவொண்ணாதே. [இதுவோதக்கவாறென்மினே] - ஸ்த்தாநபேதம் உண்டானாலும் பாசுரமிதுவே. பிறர்நெஞ்சையும் அபஹரித்துத் தன்னெஞ்சையுங் கொண்டு கடக்கவிருக்கையோ தக்

---

ப்ர — [எங்குச்சென்றாகிலுங்கண்டு] — ஸுந்தரகாண்டே, "வாநராநுவாநரச்ரேஷ்ட உத்பபாத வேகவாந் । யதா ராகவநிர்முக்த: சர: ச்வஸநவிக்ரம: ॥ மத்யேத லங்காம் ராவணபாலிதாம் । நஹித்ரக்ஷ்யாமியதி தாம் லங்காயாம் ஜநகாத்மஜாம் ॥ அநேநைவஹிவேகேந கமிஷ்யாமிஸுராலயம் ॥ ௪௦ ॥"

---

தில், "கருமுகில்" என்று - ஔதார்யம். மூன்றாம்பாவம் - அன்றிக்கேபிரிவை இத்யாதி. வாயில் சிவப்புத்தோற்றுவது ஸ்மிதத்தாலே யென்னுமத்தை ஸஹேதுகமாக அருளிச்செய்கிறார் - சாடு சதங்கள் இத்யாதி. வைலக்ஷண்யமாவது - வ்யாவ்ருத்தியென்றுவிவக்ஷிதம். இது கல்பகத்துக் கில்லையோ? என்ன - கல்பகம் இத்யாதி. "செழுங்கற்பகம்" என்றதுக்கு - ஸம்ஶ்லேஷதசையில் தானேயர்த்தியாய்த் தன்னைக்கொடுக்குமென்று அருளிச்செய்து, விஶ்லேஷதசையில் விபூதித்வயத்தையும் நான்நினைத்தார்க்குக்கொடுக்கும்படி எனக்குத்தந்தவனென்று, தாத்பர்யாந்தரம் - தான்கடக்க இத்யாதி. "எங்குச்சென்றாகிலும்" என்றதக்கு முந்தினவர்த்தம் - பரமபதத்தில் ஓலக்கத்திலிராதே அந்தஃபுரத்திலே யிருந்தாலும் அங்கேசென்றாகிலும் என்று விவக்ஷித்து, ஓலக்கமாயிராதே ஏகாந்தமாக அவனிருக்கைக்குஹேதுவருளிச்செய்கிறார்-ஆள்வாரா நின்றது இத்யாதி. இது-கீழிற்பாட்டில்"வானவர்கோனைக்கண்டு" என்றதுக்குச்சேரும் அர்த்தாந்தரம்-அன்றிக்கே புகைபுக்கவிடம் இத்யாதி. புகை புக்கவிடம்-ஈஶ்வரஸம்பந்தமுள்ளவிடம். விவரணம்-பரவ்யூஹ இத்யாதி. கீழே, "வானவர்கோனைக்கண்டு" என்றுவைத்து, இங்கே "எங்குச்சென்றாகிலும்" என்றதுக்கு பாவம் - அநேநைவஹி இத்யாதி. "நஹித்ரக்ஷ்யாமியதி தாம் லங்காயாம் ஜநகாத்மஜாம் । அநேநைவஹிவேகேந கமிஷ்யாமி ஸுராலயம்" இதி ஸுந்தரகாண்டே ப்ரதமே. அதாவது - "பரமபதத்திலேகண்டிலோம்" என்று மீளாதே, அநேநைவஹிவேகேந கமிஷ்யாமிஸுராலயம் என்றுதிருவடி, பிராட்டியையிலங்கை யிலேகண்டிலனாகில் இந்த வேகத்தோடே ஸ்வர்க்கத்தே போகிறேனென்றாற்போலே, நீங்களும் அவனிருக்கிற ஸ்த்தலங்களெங்கும் போங்கோளென்றபடி. ஸ்த்தாநபேதத்தோபாதி வார்த்தையும் பேதித்திருக்குமோ? என்ன - ஸ்த்தாநபேத இத்யாதி அதாவது - க்ருபாஸ்வபாவம் ஓரிடத்திலும் பேதியாதென்றபடி. "நெஞ்சங்கவர்ந்த" என்றத்தைக்கடாக்ஷித்து, "இது" என்றதுக்கர்த்தம் - பிறர்நெஞ்

கோர்மையாவது? அவனுக்கு ஆந்ருஶம்ஸ்யமில்லை யென்கையாவது - ധர்மியை யில்லை யென்கை யிறே. ധர்ம்யநுப்ரவிஷ்டையான க்ருபையும் எங்கள்பக்கல் காணாமையாலே தமக்கு அதுவுமில்லையென்று சொல்லுங்கோள். நீர்மைகொண்டாடியிருப்பார்க்கு இதல்லது மர்மமில்லை; இத்தையே சொல்லுங்கோள். (ரு)

---

# ஆறாம் பாட்டு.

---

**என்மின்னுநூல்மார்வன் என்கரும்பெருமான்என்கண்ணன்**
**தன்மன்னுநீள்கழல்மேல்தண்துழாய் நமக்கன்றிநல்கான்**
**கன்மின்களென்றுஉம்மையான் கற்பியாவைத்தமாற்றஞ்சொல்லி**
**சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே!**

ஆ — (என்மின்னுநூல்மார்வன்.) - இதுவோ தக்கவாறென்று சொல்ல வேணுமென்று தான் வளர்த்த பூவைகளை யபேக்ஷிக்க, பின்னையும் அவை போகாதிருந்தவாறே, "நம் அபேக்ஷிதம் அவன்செய்தருளாவிடிற் செய்வதென்?" என்று போகாதிருந்தனவாகக்கொண்டு, ஸ்வகீய அஸங்க்யேய திவ்யபூஷண பூஷிதமான திவ்யரூபத்தையும் தன்னையும் எனக்கே போக்யமாகப் பரிகல்பித்துக்கொண்டிருக்கிற என் கண்ணன், தன் மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்; ஆதலால் ஈண்டச்செல்லுங்கோளென்கிறாள்.

ஒ.—ஆறும்பாட்டில், ஆஸ்ரிதரோடு ஏகரஸனாகையாலே நம் அபேக்ஷிதங்கள் செய்வானொருவன்; அவன்பாடே சென்று, இதுவோ தக்கவாறுஎன்று அவனுக்குஅறிவியுங்கோளென்று சில பூவைகளைக் குறித்துச்சொல்லுகிறாள்.

[என்மின்னுநூலென்று தொடங்கி] - தன்னுடைய திருமார்வில் விளங்குகிற திருயஜ்ஞோபவீதத்தையும் தன்திருநிறத்தையுங் காட்டி என்னை அடிமைகொண்டு எனக்கு ஸ்நேஹியான க்ருஷ்ணனுய் ஆஸ்ரிதர்இருந்தவிடத்தளவும் செல்லுமதான தன் திருவடிகளில் மன்னின திருத்துழாயில் செவ்வி நமக்கல்லது வேறொருவர்க்கும் கொடான். [கன்மின்களென்று மேலுக்கு] - என்கருமம் நானே தலைக்கட்டவேண்டி, இதுக்கு உங்களைத் தூதாகவிடவேண்டும்படியான பாபத்தைப் பண்ணின நான் வளர்த்த சிறுபூவைகாள்! இதுவோ தக்கவாறென்று உங்களைக் கற்பித்துவைத்த பாசுரங்களைச் சொல்லிச் செல்லுங்கோள்.

ப.—அநந்தரம், ஸர்வப்ரகாரஸவ்யனான க்ருஷ்ணன்திருவடிகளில் திருத்துழாய் நமக்கன்றித் தாரான்; நான்உங்களைக் கற்பித்துவைத்த வார்த்தைகளைச் சொல்லுங்கோளென்று தான் வளர்த்த சிலபூவைகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

---

சையும் இத்யாதி. பலகாலும் "இதுவோ தக்கவாறு" என்றதுக்கு பாவத்தை யிரண்டுவகையாகஅருளிச்செய்கிறார் - அவனுக்காந்ருஶம்ஸ்யம் இத்யாதியாலும், நீர்மைகொண்டாடி இத்யாதியாலும். விவரணம் - ധர்ம்யநுப்ரவிஷ்டையான இத்யாதி. தக்கோர்மை - தயை. இதுவோ தக்கவாறென்மினே - நெஞ்சையபஹரித்துக் கடக்கவிருக்கையோ தகவுடையபடியென்று சொல்லுங்கோளென்று ஸப்தார்த்தம். தக்கவாறு - தகவுடையபடி; தயையுடையபடி. க்ரமேணாந்வய:. (ரு)

தீ-(நான்உங்கள்காரியம் செய்கையன்றியே உங்களைக்கொண்டு காரியங்கொள்ள வேண்டும்படி) க்ரூரமான, வினையேன் - (பாபத்தையுடையேனான) நான், வளர்த்த - வளர்த்த, சிறு-முக்த்யமான, பூவைகளே - பூவைகாள்! என் மின்னுநூல்மார்வன் - திருமேனிக்கு பரபாகமாம்படி மின்போலே விளங்குகிற திருயஜ்ஞோபவீதத்தையுடைய திருமார்பை என்னை யநுபவிப்பித்தவனாய், என் கரும் பெருமான் - (இவ்வவயவசோபா மாத்ரமன்றியே ஸமுதாயமான) ஶ்யாமளவிக்ரஹத்தை எனக்கநுபவிப்பித்து என்னை யடிமைகொண்ட ஸ்வாமியானவனாய், என் - எனக்கு ஸர்வப்ரகாரத்தாலும் நியமிக்கலாம் படி ஸவ்யனான, கண்ணன் - க்ருஷ்ணனானவன், தன் - தன்னுடையதாய், நீள்-ஆஶ்ரித ரிருந்தவிடத்தளவும் செல்லும், கழல் - திருவடிகளின், மேல்-மேலே, மன்னு-மன்னின, தண்-ஶ்ரமஹரமான, துழாய் - திருத்துழாயை, நமக்கு - நமக்கு, அன்றி - அன்றி, நல்கான் - உகந்து (வேறொருவர்க்குக்) கொடான். கன்மின்கள் - கற்கும்படியிருங்கோள்! என்று - என்று, உம்மை - (முக்த்யமாய்ச் செருக்கடித்திருக்கிற) உங்களை, (நிர்ப்பந்தித்து), யான் - (உங்களைக்கொண்டு காரியங்கொள்ளவிருக்கிற) நான், கற்பியாவைத்த - ("என் மின்னுநூல்மார்வன்" என்று தொடங்கி "நல்கான்" என்றஇடமீறாகக்) கற்பித்துவைத்த, மாற்றம் - வார்த்தையை, சொல்லி - சொல்லி, செல்மின்கள் - செல்லுங்கோள்!

இ.—ஆறும்பாட்டில், ஆஶ்ரிதரோடு ஏகரஸனாகையாலே நமக்கு அபேக்ஷிதங்கள் செய்யும் அவன்பாடேசென்று, இதுவோ தக்கவாறு என்னுங்கோளென்று சில பூவைகளைக் குறித்துச்சொல்லுகிறாள்.

[என்மின்னுநூல்மார்வன்] - மேகத்திலே மின்னினாற்போலே சாத்தின திருயஜ்ஞோபவீதத்தைக் காட்டி, என்னை அநந்யார்ஹையாக்கினவன். [என் கரும் பெருமான்] - அதுக்கு பரபாகமான வடிவை எனக்காக்கி என்னை அடிமைகொண்டவன். [என் கண்ணன்] - இங்ஙன் பிரித்துச்சொல்லவேண்டாதபடி தன்னை எனக்குக் கையாளாக்கினவன். [தன்மன்னுநீள் கழல்மேல் தண்துழாய் நமக்கன்றி நல்கான்] - அவனுடைய ஐகரஸ்யம் சொல்லுகிறாள். ஆஶ்ரிதர் இருந்தவிடத்தளவும் செல்லும் திருவடிகள் என்னுதல்: அளவிறந்த போக்யதையையுடைய திருவடிகளென்னுதல். திருவடிகளிலே பொருந்தி ஶ்ரமஹரமான திருத்துழாயில் செவ்வி நமக்கல்லதுகொடான். இனியதுகண்டால் "ஸ்வார்யம்" என்றிராதே "ஹக்தாநாம்" என்றிருக்குமவன். அதாகிறது-ஆஶ்ரிதரோடு ஏகரஸனாயிருக்கை. [கன்மின்களென்று]- நீங்கள் அபேக்ஷியாதிருக்க, நான் சொல்லுங்கோள் என்று. [உம்மை யான்] - ரக்ஷ்யங்களான உங்களை, ரக்ஷகையான நான். [கற்பியாவைத்த மாற்றம்] - கற்பித்துவைத்த மாற்றம். "தண்துழாய் நமக்கன்றி நல்கான்" என்கிற மாற்றத்தை யென்னுதல்: "இதுவோ தக்கவாறு" என்று கற்பித்த மாற்றத்தை என்னுதல். [சொல்லிச்சென்மின்கள்] - அவனுக்கு மறுமாற்றத்துக்கு அவகாஶமில்லாதபடி "கிட்டினால்" என்றிராதே வழியே பிடித்துச் சொல்லிக்கொண்டு செல்லுங்கோள். [தீவினையேன் வளர்த்த சிறுபூவைகளே] - என்காரியம் நானே தலைக்கட்டவேண்டி, இதுக்கு உங்களைத்தூதாக விடவேண்டும்படி பாபத்தைப் பண்ணினேன். நானும் அவனுங்கூட உங்களுக்கு அபிமதம் தேடித்தருகையொழிய, என் அபிமதத்துக்கு உங்களைப் போகவிடும்படியான பாபத்தைப் பண்ணினேன் என்றுமாம்,

ஈடு.— ஆரும்பாட்டு. ஆஶ்ரிதரோடு ஏகரஸனாகையால் நம் அபேக்ஷிதங்கள் செய்யுமவன்பாடேசென்று, இதுவோ தக்கவாறென்னுங்கோளென்று சிலபூவைகளைக்

[என்மின்னுநூல்மார்வனித்யாதி] - தன்திருமேனியிலே சாத்தச்செய்தே என்னெஞ்சிலே இட்டாற்போலே ப்ரகாசிக்கிற திருயஜ்ஞோபவீதத்தைக்காட்டி என்னை யநந்யார்ஹையாக்கினவன். என் சரக்கானவன் கடக்கவிருக்குங்காட்டில் என்சரக்கைப் பிறர்க்காக்குமோ? [என்மின்னுநூல்மார்வன்] - திருயஜ்ஞோபவீதத்திலழகை ஸ்மரிப்பித்து என்னெஞ்சில் இருளையறுத்தவன். தன்திருமார்வில் சாத்தினநூலைக்காட்டி என்னை நூலிலே வரப்பண்ணினான். [என்கரும்பெருமான்] - மேகத்திலேமின்னினாற்போலே அந்தத் திருயஜ்ஞோபவீதத்துக்குப் பரபாகமானவடிவை எனக்காக்கி என்னையடிமைகொண்டவன். [என்கண்ணன்] - இப்படிகளாலே என்னைச்சேர்த்துத் தன்னை எனக்காக்கினவன். என், என், என் என்று பதங்கள்தோறும் சொல்லுகையாலே - ஒப்பனையழகிலும், வடிவழகிலும், ஸௌலப்யத்திலும் தனித்தனியே ஈடுபட்டபடி. [தன்மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய் நமக்கன்றி நல்கான்]-எல்லாஞ்செய்தாலும், "பக்தாநாம்" (பக்தாநாம்) என்றிருக்கிறத்தைப் பிறர்க்குஆக்கான். இத்திருவாய்மொழிக்கு நிதாநமான பாட்டிறேஇது. ஆஶ்ரித பரதந்த்ரனாகையாலே, "ஆஶ்ரிதர்க்கு ஸ்வமமான பின்பு அறிவிக்கவரும்" என்று ஐகரஸ்யம்பற்றாசாகத் தூதுவிடுகிறதிறே. [தன்-நீள்கழல்மேல்-மன்னு - தண்டுழாய் நமக்கன்றிநல்கான்] - போக்யதையளவிறந்த திருவடிகளிலே பொருந்தி பரமபோக்யமான திருத்துழாயை ஸர்வதா பிறர்க்கு ஆக்கான். "மயிஜீவிதமாயத்தம்ராகவஸ்யமஹாத்மந:" (மயிஜீவிதமாயத்தம்ராகவஸ்யமஹாத்மந:) - தன்மையும் தன்முடைமையையும் எனக்காக்கினவர். இதுதான் தன் ஸ்வபாவங்கொண்டு சொல்லுகிறாளல்லள்; அவர் ஸ்வபாவாநுஸந்தாநத்தாலே சொல்லு

---

*ஆரும்பாட்டு.—என் இத்யாதி. "தண்டுழாய்நமக்கன்றிநல்கான்" என்றத்தைப்பற்ற- ஆஶ்ரிதரோடு இத்யாதி. "கற்பியாவைத்த" என்றத்தைப்பற்ற - இதுவோ தக்கவாறு என்றது.*

*"என்" என்றத்தை மின்னுநூலோடேகூட்டிபாவம் - தன்திருமேனியிலே இத்யாதி. "என்" என்றத்தை "மார்வன்" என்றத்தோடேகூட்டிபாவாந்தரம் - என்சரக்கானவன் இத்யாதி. என்சரக்கையென்றது - தண்டுழாயை. "மின்னு" என்றதுக்கு பாவம் - திருயஜ்ஞோபவீதத்தில் இத்யாதி மூன்றும்பாவமாதல். ஈடு - தன்திருமார்வில் இத்யாதி. நூலிலேவரப்பண்ணினான்-சாஸ்த்ரவஶ்யனாக்கினான். நூல் - சாஸ்த்ரம். கீழ்ப்பதத்தையுங்கூட்டி, "என்கரும்பெருமான்" என்றதுக்கு பாவம் - மேகத்திலே இத்யாதி. இப்படிகளாலே யென்றது - ஒப்பனையழகு, வடிவழகுகளாகிறபடிகளாலேயென்றபடி. "என், என், என்," என்கிறபதாவ்ருத்திக்குபாவம்- என்னென்னென்னென்று இத்யாதி. உபேக்ஷித்திருக்கிறவளை - "நமக்கன்றிநல்கான்" என்பானென்? என்ன - எல்லாம்செய்தாலும் இத்யாதி. ப்ராஸங்கிகம் - இத்திருவாய்மொழிக்கு இத்யாதி. "பக்தாநாம்" இத்யாதிவாக்யவிவரணம் - ஆஶ்ரித இத்யாதி. "நமக்கன்றிநல்கான்" என்கிறவ்யதிரேகோக்தியாலே - நமக்கே தருமென்றலிதம். திருத்துழாயைச்சொன்னது, விக்ரஹாதிகளுக்கும் உபலக்ஷணம். "ஆஶ்ரிதபாரதந்த்ரம்" என்றதுக்குஸம்வாதம் - மயிஜீவிதம் இத்யாதி. "மயிஜீவிதமாயத்தம்ராகவஸ்யமஹாத்மந: | ஸ்ரீதுர்ணாம்ஹோவாயோர்தஸ்யராஜகுமாரஸ்ய" இதி ஸுந்தரகாண்டே ஹநூமந்தம் ப்ரதி ஸீதா(37 57.)ஶ்லோகத்துக்கெல்லாம்பாவம்-தம்மையும் இத்யாதி. "மஹாத்மந:" என்றதுக்கர்த்தம் இதுதான் இத்யாதி. தன்ஸ்வபாவமாவது - ஸௌந்தர்யாதிஸ்வபாவங்கள். அவன்ஸ்வபாவமாவது - க்ருபா ப்ரணயித்வங்கள். ஆஶ்ரிதர்க்குக்ருபையாலே வஶ்யனுமென்கைக்குஸம்வாதம்-கிம்புநர் இத்யாதி.*

கிறாள்; "கிம்வா ஈஜுஷிமயொஜநஃ" (கிம்புநர்மத்விதோஜநஃ) - என்றவிடத்துக்குச் சொல்லுவதொரு வார்த்தையுண்டிறே. அருளாளப்பெருமாளெம்பெருமானாருடைய அந்திம தசையிலே, "திருவுள்ளத்திலோடுகிறதேன்?" என்ன, "ஒருபக்ஷி பெருமாளுடைய திருவுள்ளத்தைப் புண்படுத்தினபடியேன் என்றுகிடந்தேன் என்றார்" என்று. இதுக்குக்கருத்தாகப் பிள்ளையருளிச்செய்யும்வார்த்தை - "நாம் பண்ணின சரணாகதியானமையாலே பலத்தோடு அவ்யபிசாரியாகமாட்டாது; இனி ஶரண்யன்நீர்மையிலேற்றத்தாலே நமக்குஒருகுறையில்லை யென்கிறது" என்று. (பெருமாளைப்புண்படுத்துகையாவது - ஸ்ரீவிபீஷணாழ்வானை ஶரணாகத்யநந்தரத்திலே கைக்கொள்ளாமல், "வஃயதாம்" [வத்யதாம்] என்று அல்பம் தாமஸம் பிறக்கையாலே, "கபோதத்தோபாதி நாம் ரக்ஷிக்கப்பெற்றிலோம்" என்றிருக்கை.) [நமக்கன்றிநல்கான்] - தனித்து, இனியது ஆஶ்ரிதரையொழிய புஜிக்கமாட்டான். [கன்மின்களென்றும்மை யான் கற்பியாவைத்த] - நெஞ்சொழிந்தபோது, தனக்கு தாரகமான வற்றைக் கற்பித்துவைக்கும். நம்முதலிகள் ஓரோஸந்தானங்களாக "சிறியார், பெரியார்" என்னாதே த்வயத்தை யப்யஸிப்பித்துவைக்குமாபோலே. ரக்ஷ்யங்களான வுங்களை, ரக்ஷகையான நான், கற்பியாவைத்த - அப்யஸிப்பித்துவைத்த. [மாற்றம்] - அதாகிறது "நமக்கன்றிநல்கான்" என்று எல்லாவவஸ்தையிலும் உங்களுக்கு 'நான் சொல்லிவைக்கும்அதாதல்; "இதுவோதக்கவாறேன்று சொல்லுங்கோள்" என்றதாதல். [சொல்லிச்சென்மின்கள்] - வழிக்கு பாயேயங் காணுமது, அங்கேபோனால் சொல்லப்பார்த்திராதே கிடி

ப்ர.—யாஃகாணெ [கஅ] கூயவூஜா நவூகாரணெ, "ஶ்ரீயதெ ஹி கபோதெந ஶத்ரு ஶரணாகதஃ। அர்சிதஶ்ச யதாந்யாயம் ஸ்வைஶ்ச மாம்ஸைர் நிமந்த்ரிதஃ ॥ உசஅ ॥ ஸஹி தம் ப்ரதிஜக்ராஹ பார்யாஹர்தாரமாகதம்। கபோதோ வாநரஶ்ரேஷ்ட கிம் புநர்மத்விதோஜநஃ॥ உருஉ॥

"ஸஹிதம் ப்ரதிஜக்ராஹ பார்யாஹர்தாரமாகதம்। கபோதோ வாநரஶ்ரேஷ்ட கிம் புநர்மத்விதோஜநஃ" இதி யுத்தகாண்டே அபயப்ரதாநப்ரகரணே. புண்படுத்தினபடியென்றது - ஒருதிர்யக்கு தன்னையழியமாறி இப்படி ரக்ஷித்தால், நாம் "ப்ராணாந் பரித்யஜ்ய" என்னுமதொழிய, சேதநனைவாசிக்கேற்றமாக ஒன்று செய்யப்பெற்றிலோமென்று புண்படுத்தினபடியென்றபடி. 'நாம்பண்ணின' இத்யாதிக்குக்கருத்து - ஶரணாகதாநுகூல்யாதிகளாலன்றிக்கே சரண்யமான கபோதகுணாதிசயத்தாலே பலசித்தியானாற்போலே, நமமுடைய ஆநுகூல்யஸங்கல்பாதிகளாலன்றிக்கே சரண்யகுணாதிஶயத்தாலே பலிக்குமயன்று. அவ்யபிசாரியாகமாட்டாது - பலத்தோடே கூட்டுவிக்கமாட்டாதென்றபடி. நல்குதல் - கொடுத்தல் என்றர்த்தமாக்கி, பிறர்க்காக்கான் என்றாரேல்; இங்கே நல்குதல், ஸ்நேஹித்தலாக அர்த்தாந்தரம் - தனித்துஇனியது இத்யாதி. இப்பக்ஷத்தில் ஸப்தார்த்தம் - நம்மையொழியவிருப்பானென்று. அன்றிக்கே, ஐசுவர்யமாவதேதென்ன - தனித்துஇனியது இத்யாதி என்னுதல். இவளுக்குக் கற்பிக்க அவஸரமுண்டோ? என்ன - நெஞ்சொழிந்த இத்யாதி. நெஞ்சொழிந்தபோது - நெஞ்சுஸ்வஸ்தயானபோதென்றபடி. இதுக்குத்ருஷ்டாந்தம் - நம்முதலிகள் இத்யாதி. ஸந்தானங்களாகவென்றது - புத்ரபௌத்ராதிகளெல்லார்க்கு மென்றபடி. "மாற்றம்" என்றது - ஐசுவர்யமாதல், க்ருபையாதல். "சொல்லிச்சென்மின்கள்" என்றதுக்குபாவம் - வழிக்கு இத்யாதி. பாவாந்தரம் - அங்கேபோனால் இத்யாதி. அதாவது - அவன் வைலக்ஷண்யத்தைக்கண்டால் வாயெழாதேபோகிலும்போம்; ஆகையாலே ப்ரஹதமாகச்சொல்லிக்கொண்டுபோங்கோளென்றபடி. அவகிடக்கிடுங்கோளென்றது - நீங்கள் அங்கேபோகிறது;நான்சொன்ன வார்த்தையைச்சொல்லு

கோள். (அவனுக்கு மறுமாற்றத்துக்குஅவகாசமில்லாதபடி) போகிறபோதே சொல்லிக்கொடு போங்கோள். [தீவினையேன்] - அவைகிடக்கிடுங்கோள்; என்னுடையபாபமிருந்தபடி பாருங்கோள், புத்ரவிக்ரயரோபாதியானேன். அவனும் நானும் கூடவிருந்துஉங்களைக் கொண்டாடுகையன்றிக்கே, உங்களைக்கொண்டு கார்யங்கொள்ளும்படியான பாபத்தைப் பண்ணினேன்.வயிற்றிற்பிறந்தாரை யிடுவித்து அஹிமதனையழைத்துக்கொள்ளுகையோபாதி புன்மையில்லையே. (ரு)

---

## ஏழாம் பாட்டு.

---

பூவைகள்போனிறத்தன் புண்டரீகங்கள்போலுங்கண்ணன்
யாவையும்யாவருமாய் நின்றமாயனேன்னாழிப்பிரான்
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கேன்மாற்றஞ்சோல்லி
பாவைகள்!தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே.

ஆ — (பூவைகள்.) - நான்வளர்த்த சிறுபூவைகளினுடைய நிறம்போலே யிருந்த திருநிறத்தையும், புண்டரீகங்கள் போன்றிருந்த கண்களையும், அக்கண்களாலே ஸூசிதமான சேதநாசேதந ஸமஸ்த வஸ்துக்களினுடைய நியமநரூபாஸ்சர்யத்தையும், என்னைத்தோற்பித்து அடிமையாக்கின திருவாழியையேந்தின அழகையும், திருக்கைத் தழும்பாலே ஸூசிதமான மதுகைடபாதி ப்ரதிகூல நிரஸந திவ்யசேஷ்டிதங்களையும் அடையாளமாகவுடையனாயிருந்த எம்பெருமானுக்கு என் மாற்றஞ்சொல்லி என்னிழவை நீங்களேதீர்க்கத் திருமத்தனை; என்னாலொரு செயலில்லையென்று, தன்னுடைய நிரவதிக வ்யஸநத்தாலே கலங்கித் தன்பாவைகளை ப்ரார்த்திக்கிறாள்.

ஒ.—ஏழாம்பாட்டில், "சேதநங்களை உபேக்ஷணம் பண்ணினவிடத்தில் கார்யகரமாகாதே, எம்பெருமான் கைவிட்டாற்போலே கைவிடுகைக்கு ஹேது சேதநங்களாகையோ?" என்று பார்த்து, அசேதநமான பாவைகளை, என் [illegible]வத்தைக் கெடுக்கவல்லிகோளே என்று ப்ரார்திக்கிறாள். [பூவைகளென்று தொடங்கி] - நிரதிஶயபோக்யனாய் ஸர்வாந்தராத்மாவாய்நின்றுவைத்து தத்தத்தொஷரஸப்ஸ்ப்ருஷ்டனுகையாகிற ஆஸ்சர்யத்தையுடையனாய் கையுந்திருவாழியுமான அழகாலே என்னைத் தோற்பித்து அடிமைகொள்வதுஞ் செய்து, ஆஶ்ரிதவிரோதிகளைப்போக்கும் ஸ்வபாவனானவனுக்கு. [வினையாட்டியேன்] - உங்களைக்கொண்டு கார்யம் தலைக்கட்டவேண்டும் படியான பாபத்தைப் பண்ணினேன். முதலிலே உங்களைப் பற்றுமைக்கடியான பாபத்தைப்பண்ணினேன் என்றுமாம். பாசறவென்பது - வைவர்ண்யங்களோடு பற்றுதல் என்றுமாம்.

---

மது, அவன்வருமது, இதெல்லாம் கிடக்கிடுங்கோளென்றபடி. "தீவினையேன்" என்றதுக்கர்த்தாந்தரம் - அவனும் இத்யாதி. "புத்ரவிக்ரயரோபாதி" இத்யாதி வாக்யவிவரணம் - வயிற்றில் இத்யாதி; வசார்த்தமாதல். தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே, என்மின்னு நூலென்று தொடங்கி, சென்மின்கள் இத்யந்வயம். (ரு)

ப.—அநந்தரம், அபிரூபனாய் அகிலாத்மபூதனாய் ஆஸ்ரிதவிரோதி நிவர்த்தகனானவனுக்கு என் வார்த்தையைச் சொல்லி என் வைவர்ண்யத்தைத் தீர்க்கவல்லிகோளோ? என்று தன்னார்த்த்யதிஸயத்தாலே "அசேதநங்கள்" என்று பாராதே சில பாவைகளைக்குறித்துச் சொல்லுகிறாள்.

பூவைகள்போல்- பூவைப்பூக்கள்போலே (தர்ஸநீயமான), நிறத்தன்-நிறத்தையுடையவனாய், (அதுக்குபரபாகமாம்படி), புண்டரீகங்கள்போலும் - புண்டரீகங்கள் போலேயிருக்கிற, கண்ணன் - கண்களையுடையனாய், (இவ்வஸாதாரணவிக்ரஹத்தளவன்றியே), யாவையும் - ஸகலாசேதநங்களையும், யாவரும் - ஸகலசேதநரையும், ஆய்-சரீரமாகக்கொண்டு தத்ததாகாரேண அவஸ்த்திதனாய், நின்ற- தத்கததோஷைரஸம்ஸ்ப்ருஷ்டனாம்படி, மாயன் - (ஆஸ்சர்யசக்தியுக்தனாகையாலே கலந்திருக்கச்செய்தே) கழலநிற்க வல்லனாய், என் ஆழிப்பிரான் - கையுந்திருவாழியுமான வடிவழகை யடியிலே எனக்கநுபவிப்பித்த மஹோபகாரகனாய், மாவை - (அநுபவிக்கிற கோபிமார்க்கு ப்ரதிபந்தகமான) கேஸியை, வல் - ப்ரபலமான, வாய் - வாயை, பிளந்த - கிழித்தவனாய், மதுசூதற்கு - (விரோதிநிரஸநம் ஸ்வபாவஸித்தமான) மதுசூதநனானவனுக்கு, என்மாற்றம் - கிளிகளுக்கும் பூவைகளுக்கும் சொன்ன என்வார்த்தையை, சொல்லி - சொல்லி, பாவைகள்- (பக்ஷிகள்போலே பறந்துபோகாதே என் ஆர்த்திகண்டு பொறுத்தேயிருக்கிற) பாவைகாள்! வினையாட்டியேன் - உங்களைக்கொண்டு காரியங்கொள்ளவேண்டும் பாபத்தையுடைய என், பாசறவு - நிறத்தில் பசுமையழிவை, தீர்க்கிற்றிரே-தீர்க்கவல்லிகோளோ?

இ.—ஏழாம்பாட்டில், "பரமசேதநன் பொகட்டுப்போனான் சைதந்யலேஸமுடைய பக்ஷிகள் பறந்துபோயினவும் அந்யபரமாயினவும் ஆயிற்றின; இதுக்கு ஹேது-சேதநங்களாகையோ?" என்று பார்த்து, அசேதநமானபாவையை யிரக்கிறாள். [பூவைகள் இத்யாதி]- பூவைப்பூப்போலே யிருக்கிற நிறத்தையுடையவன். வடிவில் ஹோக்யதையிருக்கிறபடி. பிரிந்தாருடம்பிலே வைவர்ண்யம் குடிபுகுரும்படியான வடிவு. அகவாயில் தண்ணளியெல்லாம் தோற்றும்படியான கண்ணழகையுடையவன்; பிரிந்தாவைப் பாவைகளின் காலிலே விழவிடுங் கண்ணிறே. [யாவையும் யாவருமாய்நின்ற] - சேதநாசேதநங்களுக்கு ஆத்மாவாய் நின்றவன். "தத நு ப்ரவிஸ்ய ஸச்சத்யச்சாபவத்". ஸம்ஸ்லேஷதஸையில் ஏகவஸ்து என்னலாம்படி கலக்கவல்லவன். [மாயன்] - ஏகவஸ்து என்னலாம்படி கலக்கச்செய்தே தத்தத்தோஷஸம்பந்தமில்லாத ஆஸ்சர்யஹேதன்: கலந்து பிரிந்தவநந்தரம் "இத்தலையில் ஸ்பர்ஸகந்தமுமில்லை" என்று தோற்றும்படியிருக்குமவன். [என்னாழிப்பிரான்] - கையுந்திருவாழியுமான சேர்த்தியைக்காட்டி என்னைத்தோற்பித்த வுபகாரகன். * அழுக்குப்பதித்தவுடம்பிற் காட்டில் பாஞ்சுடருடம்புக்குண்டான வாசி சொல்லுகிறது. [மாவை யித்யாதி] - தன்னையநுபவிக்கைக்கு விரோதியைப் போக்குவானும் தானே யென்கிறது; கேஸிவாயிலே அகப்பட்டார்தாம் போலே. [மதுசூதற்கு] - விரோதிநிரஸநம் காதாசித்கமன்று, ஸ்வபாவஸித்தமென்கை. விரோதிநிரஸநம் க்ருஷ்ணாவதாரந்தொடங்கியன்று, முதலே தொடங்கி வருகிறதென்கை. [என்மாற்றஞ்சொல்லி] - "தண்டுழாய்நமக்கன்றி நல்கான்" என்று ஆஸ்ரிதரோடு ஏகரஸனென்கிற பாசுரத்தைச் சொல்லி. பாவைகள்! வினையாட்டியேன் பாசறவு தீர்க்கவல்லிகோளே? நம்உருமையைக்கண்டு வைத்து

பக்ஷிகள் பறந்துபோயிற்று? நம்முடைமையைக்கண்டு "என்னைய் விழுகிறதோ?" என்று ஸ்தப்யையாயிருந்தன பாவைகள் என்றிருந்தாள். [வினையாட்டியேன்] - இருவருங் கூடவிருந்து கொண்டாடக்கடவ உங்களைத் தூதுபோகவிடும்படியான பாபத்தைப் பண்ணினேன். [பாசறவு] - பசுமையறுகை, வைவர்ண்யமும் குடிபுகுருகை, பந்துக்களோட்டைப் பற்றறுதியைச் சொல்லுமாம்.

ஈடு.—ஏழாம்பாட்டு. "பரமசேதநன் போகட்டுப்போனான்; சைதந்யலேசமுள்ளபக்ஷிகள், பறந்துபோவனவும் அந்யபரமாவனவு மாயிற்று; இதுக்குஹேது-சேதநங்களாகையோ?" என்றுபார்த்து, அசேதநமான பாவையையிரக்கிறாள். அசேதநமுங்கூட எழுந்திருந்து கார்யஞ்செய்யவேண்டும்படி காணும் இவள் அவஸ்த்தை.

[பூவைகள்போல்நிறத்தன்] - ஆண்பெண்ணும்படியான நிறம்படைத்தவன். "**பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்**" (பும்ஸாம்த்ருஷ்டிசித்தாபஹாரிணம்) என்னும்படியே, பேற்றுக்குப் பாவையின்காலிலே விழும்படியான வடிவுபடைத்தவன். பூவைப்பூப்போன்றவடிவை யுடையவன். [புண்டரீகங்கள்போலுங்கண்ணன்] - ஒருபூ ஒருபூப்பூத்தாற்போலேகாணும் வடிவும் கண்ணுமிருக்கிறபடி; காயாம்பூ தாமரை பூத்தாற்போலே யிராநின்றது. சேதநாசேதநவிபாகமறக் காற்கீழே விழும்படியான கண் படைத்தவன். [யாவையும்யாவருமாய்நின்றமாயன்] - சிலரோடு கலக்கும்போது அவர்கள் தாங்களாய்க் கலக்குமவன். சேதநாசேதநங்களுக்கு ஆத்மாவாய்நின்றவன், "**தத்ருப்ரவிஸ்யஸச்சத்யச்சாபவத்**" (தத்நுப்ரவிஸ்யஸச்சத்யச்சாபவத்): ஸம்ஸ்லேஷதசையில் "ஏகவஸ்து" என்னலாம்படி கலக்கவல்லவன். [மாயன்] - அவர்களாய்க் கலவாநிற்கச் செய்தே, தனக்கு அங்கோரு தோற்றற்றுப்போருமவன்; ஸர்வாந்தர்யாமியாயிருக்கச்செய்தே, "**அநஸ்நந்நந்யோ அபிசாகஸீதி**" (அநஸ்நந்நந்யோ அபிசாகஸீதி) என்று, இவற்றின் தோஷம் தன்பக்கல் தட்டாதபடியிருக்கை. ஜகதாகாரனாய்க்கொண்டு இவர்களோடு பிரித்து ப்ரதிபத்திபண்ணவொண்ணாதபடி நிற்கச்செய்தே, அசித்தினுடையபரிணாமமாதல்,

---

ஏழாம்பாட்டு.—பூவைகள் இத்யாதி. இதெல்லாம் - சைதந்யமுள்ள பக்ஷிகளை யிரந்தவள், இப்போது அசேதநத்தை யிரக்கிறதென்? என்ன - பரமசேதநன் இத்யாதி. அசேதநத்தை யிரந்தால் அது கார்யஞ்செய்யமாட்டுமோ? என்ன, த்வேதா பரிஹரிக்கிறார் - அசேதநமுங்கூட இத்யாதியாலும், அப்ராதிவேதமாத்ரத்தைக்கொண்டு இத்யாதி முடிவில் வாக்யத்தாலும்.

இப்போதுவடிவழகைச்சொல்லுகிறதுக்குபாவம் - ஆண்பெண்ணும்படியான இத்யாதி. அப்படிவடிவு ஆணைப்பெண்ணாக்குமோ? என்ன - பும்ஸாம் இத்யாதி. பாவாந்தரம் - பேற்றுக்கு இத்யாதி. ஸப்தார்த்தம் - பூவைப்பூ இத்யாதி. வடிவுக்கும் கண்ணுக்கும் புஷ்பத்தை ஸாம்யஞ்சொல்லுகையாலே ரஸோக்தி - ஒருபூ இத்யாதி. விவரணம் - காயாம்பூ இத்யாதி. இக்கண்ணழகைச் சொல்லுகிறதுக்குபாவம் - சேதநாசேதநவிபாகம் இத்யாதி. அதாவது - "**ஸஸ்த்வஜநோ ஹர:**" என்கிறபடியே, சேதநாசேதநவிபாகமற எல்லாம் தன்காற்கீழே விழும்படியான கண்படைத்தவனென்னுதல்; ஸத்த்வஸப்தம் - அசேதநங்களுக்கும் உபலக்ஷணம். அன்றிக்கே, சேதநாசேதநவிபாகமற எல்லார் காற்கீழிலும் நான் விழும்படியான கண்படைத்தவனென்னுதல். "ஆய்நின்ற" என்றதுக்குபாவம் - சிலரோடு இத்யாதி. சப்தார்த்தம் - சேதநாசேதநங்களுக்கு இத்யாதி. இதுக்கு ப்ரமாணம் - தத்ஸ்ரு இத்யாதி. இப்போது "யாவையும்யாவருமாய்" என்றதுக்குபாவம் - ஸம்ஸ்லேஷ இத்யாதி. "மாயன்" என்றதுக்சர்த்தம் - ஸர்வாந்தர்யாமி இத்யாதி. விவரணம் - ஜகதாகாரனாய் இத்யாதி. பதப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் - என்னேடே இத்யாதி. "ஆழிப்பிரான்" என்றதுக்

மிறே: அதுசெய்யும்போது, குலாலனானவன் மண்ணும்நீரும் சேதுகுங்கூட்டிச் சேரத் துகைத்து வடாதிகளாய்க்கொண்டு பரிணமிப்பிக்குமாபோலே, ஜலத்தையுண்டாக்கி, அது த்ரவீபூதமாயிருக்கையாலே அத்தோடேசடினமானபதார்த்தத்தைக்கூட்டி, பின்னையும் நெகிழ்ந்திருக்கையாலே அத்தைச் சிறிதுவலிக்கைக்காக தேஜ꞉பதார்த்தத்தையுண்டாக்கி, அதுதான்மிகைத்துத் தீயுமளவானவாறே அத்தையாற்றுகைக்குக் காற்றையுண்டாக்கி, அது, தனக்கு ஸஞ்சரிக்கைக்காக அவகாசப்ரதாநம்பண்ணும் ஆகாசத்தையுண்டாக்கி. இவ்வளவும் ப்ரதமஸங்கல்பந்தன்னையே கொண்டு அண்டஸ்ருஷ்டியைப்பண்ணிநின்றது; இனி, பெரியதோருமாளிகையைச் சமைத்து இருள்உறைய விட்டுவைக்கவொண்ணாதிறே; அதுக்கு இரண்டுவிளக்கிட்டாற்போலேசந்த்ரசூர்யர்களையுண்டாக்கி. நீர்க்களிப்புஅறுகைக்கும் ஆப்யாயநத்துக்குமாக இருவரையுமுண்டாக்கினபடி. [சிவனாய் அயனானாய்] - அண்டாந்தர்வர்த்திகளாய்க்கொண்டுநின்று, ஒருவன் மனைந்துகொண்டுவர ஒருவன் அழித்துக்கொடுவரும்படி ப்ரஹ்மருத்ரர்களையுண்டாக்கி. ருத்ரனைமுற்படச் சொல்லுவானேன் ? என்னில், அப்யயபூர்விகையாயிறே ஸ்ருஷ்டியிருப்பது. ''நீராய்நிலனாய்'' என்றத்தோடோக்க. ''சீரார் சுடர்களிரண்டாய்''-என்கையினாலே, ''𑌯𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌾𑌶𑌰𑍀𑌰𑌂-𑌯𑌸𑍍𑌯𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌶𑌰𑍀𑌰𑌂'' (யஸ்யாத்மாஶரீரம்-யஸ்யப்ருதிவீஶரீரம்) என்கிறபடியே, சேதநாசேதநங்களிரண்டும் அவனுக்கு ஶரீரவத் பரதந்த்ரமென்னுமிடஞ் சொல்லுகிறது. 'சீரார்சுடர்களிரண்டாய்' என்றும், 'சிவனாயயனானாய் என்றும்' ஸமாநாதிகரிக்கையாலே ஏஶிதவ்யங்களோடு ஈஶ்வராபிமாநிகளோடுவாசியற தத்பரதந்த்ரமென்னுமிடஞ் சொல்லிற்று; ஜகத்ஸ்ருஷ்டிபண்ணிற்று ஸ்வப்ராப்திக்காகவன்றோ? ஸ்வப்ராப்தியைப் பண்ணித்தந்தானென்றோ நீ ஒருகாரியம் செய்தாயாவது? ஸ்ருஷ்டிக்குப்ரயோஜநமாவது - நித்யது꞉கியானவனை * அந்தமில்பேரின்பத்தே

---

கார்யங்கொள்ள வேணுமதுக்கு த்ருஷ்டாந்தம் - அதுசெய்யும்போது இத்யாதி. பூதபஞ்சகங்களையும் சொல்லுகிறவிடத்திலே ஸ்ருஷ்டிக்ரமத்தாலேயாதல் அப்யயக்ரமத்தாலேயாதல் சொல்லாதே, 'நீராய் நிலனாய்' என்று தொடங்கிச்சொல்லுகிற அடைவுக்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - அதுத்ரவீபூதமாய் இத்யாதி. சேதுகு - கூளம். அண்ட ஸ்ருஷ்டியைச் சொன்ன அநந்தரம், சந்த்ரஸூர்யர்களைச் சொல்லுகிறதற்கு ப்ரயோஜநம் அருளிச்செய்கிறார் - இனிப்பெரியதோரு இத்யாதி இருளுறைய - அந்தகாரம் வர்த்திக்க. அந்தகார நிவ்ருத்யர்த்தமாக சந்த்ரனாதல் ஸூர்யனாதல் போதாதோவென்ன, இரண்டுபேரையும் சொன்னதுக்கு ஹேது அருளிச்செய்கிறார் - நீர்க்களிப்பு இத்யாதி. இது - 'சீர்' என்றதுக்கர்த்தம். ருத்ரனை இத்யாதிக்கு - ஸ்ரஷ்டாவைச் சொல்லாதே ஸம்ஹர்த்தாவான ருத்ரனை முற்படச் சொல்லுவானென்? என்னில் என்றபடி. 'நீராய் நிலனாய்' இத்யாதிக்கு அநந்தரம் சந்த்ரஸூர்யர்களைச் சொன்னதுக்கும், சந்த்ரஸூர்யர்களுக்கு அநந்தரம் ப்ரஹ்ம ருத்ரர்களைச் சொன்னதுக்கும் பாவம் - 'நீராய் நிலனாய்' என்றுதொடங்கி தத்பாரதந்த்ரமென்னும் இடஞ்சொல்லிற்றென்னுமளவும். ஈஶிதவ்யங்களென்றது - சந்த்ராதித்யர்களை. 'நீராய் நிலனாய்' இத்யாதிக்கு இரண்டு பாவம்; அதாவது - ஜகச்சரீரியாயிருக்கிற இருப்பைக்காட்டி மாத்ரம் போராது, அஸாதாரண விக்ரஹத்தையும் காட்டவேணுமென்னுதல்; ஸ்ருஷ்டிக்கு ப்ரயோஜநம் ஸ்வமுக்திஶ்ய அன்றோ? அதைப் பெறவேண்டாவோ என்னுதல். முந்தின பாவத்தை - அவதாரிகையாலும், 'இது அறியாமல்' இத்யாதி வாக்யத்தாலும் அருளிச்செய்து, இரண்டாம்பாவத்தையருளிச்செய்கிறார் - ஜகத்ஸ்ருஷ்டி இத்யாதி. ப்ரயோஜநம்நீபெறவேண்டாவோ' என்னுமளவும் உத்தரோத்தர விவரணம். 'அதுகிடக்க' என்றது - என்னுடைய து꞉கநிவ்ருத்திகிடக்கவென்றபடி. சக்ஷுர்விஷயமான மாத்ரத்தையன்றிக்கே ஸ்ருஷ்

கோடுபோய் வைக்கையன்றே. அதுகிடக்க, இத்தையுண்டாக்கினதுக்கு ப்ரயோஜநம் நீ பெறவேண்டாவோ? "நீராய்நிலனாய்த்தீயாய்க்காலாய் நெடுவானாய்ச் சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனாய்" என்று - இவர்தமக்கு ஈஶ்வரவ்யாபாரம் அடங்கலும் மனையடைவே எண்ணுவாரைப்போலே அதிப்ரகாசமாயிருக்கிறபடி. [கூராராழிவெண்சங்கேந்தி]- ஸ்ரீபாஞ்சஜந்யத்தில் வெண்மையோபாதி திருவாழியில் கூர்மையும் இவர்க்குஆகர்ஷகமாயிருக்கிறபடி. [கூராராழி] - ப்ரதிபக்ஷத்தைத் துணிக்கத்துணிக்கச் சாணையிலேறிட்டாற்போலே கூர்மை மிக்கிருக்கிறபடி. அஸாதாரணவிக்ரஹத்துக்கு லக்ஷணமோதான் கையுந் திருவாழியுமாயிருக்கை! [கொடியேன்] - எனக்குஇங்ஙனேஒருநிர்ப்பந்தமுண்டாவதே! என் ஸ்வரூபத்துக்குவிருத்தங்கிடீர் நான்பண்ணுகிறது! ஸ்ரீபரதாழ்வானைப்போலே போகட்டவிடத்தே கிடக்கவல்ல ப்ரக்ருதியாகப்பெற்றிலேன்; இளையபெருமாளைப்போலே, "நில்" என்ன, 'குருஷ்வ' (குருஷ்வ) என்றுநிர்ப்பந்திக்கும் ப்ரக்ருதியாவதே! [வாராய்]-ஆசைப்பட்டாலும் நடக்கவல்லார் வருமித்தனையிறே; "வாராய்" என்னுங்காட்டில் வந்துகோடுதிரியப்போமோ? என்னில்: [ஒருநாள்] - (நானுளனாகைக்காக.) விடாயர் "ஒருகால் நாக்குநனைக்கத்துளிதண்ணீர்" என்னுமாபோலே. [மண்ணும் விண்ணும்மகிழவே] - எனக்காக வந்திலையாகிலும் உன்விபூதியழியாமைக்கு வா என்கிறார். "மானவிச்சோலைபோலே ஆவதழிவதான இதுபோனால்என்செய்யவேணும்?" என்றிருக்கிறாயாகில், அவ்விபூதியும் அழியுங்கிடாய்; இதுஅழியவே அதுவும் அழிந்ததாமிறே; அதுவும்இருக்கச்செய்தேயன்றே,இது அழிய "ஸைகாகீநரமேத" (ஸைகாகீநரமேத) என்றது. இனித்தான் ப்ரளயத்துக்கழியாதென்னுங்காட்டில், ஆர்த்திக்கும்அழியாதென்றதாகாதே! [மகிழவே] - அழிகைதவிர்ந்து தரிக்கைக்காக.

(க)

---

யாதிவ்யாபாரங்களையும் அருளிச்செய்கையாலே - இவருடைய ஜ்ஞாநவைசத்யத்தையநுஸந்தித்து, வ்யாக்யாதா ஈடுபடுகிறார் - நீராய் இத்யாதி. "வெண்சங்கு" என்றாற்போலே அழகுக்கு உடலான விசேஷணத்தைச்சொல்லாதே, கூர்மையைச்சொல்லுகிறதென்? என்ன - ஸ்ரீபாஞ்சஜந்யத்தில் இத்யாதி. "ஆர்" என்றதுக்கர்த்தம் - ப்ரதிபக்ஷத்தை இத்யாதி. அஸாதாரணவிக்ரஹத்தை யாசைப்படுகிறவர் "கூராராழிவெண்சங்கேந்தி" என்பானென்? என்ன - அஸாதாரண இத்யாதி. லக்ஷணமோதான்என்றது - லக்ஷணமாயிருக்குமென்றபடி "அஸாதாரணவிக்ரஹத்தைக்காட்டவேணும்" என்கிறவர், "கொடியேன்" என்று, சொல்லுகிறதுக்குபாவம் - எனக்குஇங்ஙனே இத்யாதிவாக்யத்வயம். ஸ்வரூபத்துக்கு - பாரதந்த்ர்யஸ்வரூபத்துக்கு. ஸத்ருஷ்டாந்தமாகவிவரணம் - ஸ்ரீபரதாழ்வானை இத்யாதி வாக்யத்வயத்தாலே. "வரவேணும்" என்று ஆசைப்படுகிறதென்? தாம் போகவொண்ணாதோ? என்ன - ஆசைப்பட்டாலும் இத்யாதி. ஒருநாளமையுமோ? என்ன - விடாயர் இத்யாதி. "மண்ணும் - மகிழ - வாராய்" என்றமாத்ரத்துக்குபாவம் - எனக்காக இத்யாதி. எனக்காக - என் ஸத்தையழியாமைக்காக. மானவிச்சோலையாவது - மஹாநவமியில் அலங்காரம். நித்யவிபூதியழியக்கூடுமோ? என்ன - இதுஅழியவே இத்யாதி. இதுக்குநியாமகங்காட்டுகிறார் - அதுவும் இத்யாதி. பரிஹாராந்தரம் - இனித்தான் இத்யாதி. அவ்விபூதியழிகையாவது - அஸத்ஸமமாயிருக்கை. "மகிழ" என்றது - "வஷ்டுணஸீஜம் ஷு திஸஹுஹஷு" என்றவிடத்திற்போலே,தரிக்கவென்றபடி. 'நீராய்' என்றுதொடங்கி, 'அயனாய், இதறிவன், இதுபோராது, கூராராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் - மண்ணும்விண்ணும்மகிழ - வாராய்' என்றந்வயம்.

(க)

## இரண்டாம் பாட்டு.

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி
மண்ணும்விண்ணுங்கொண்டமாய அம்மானே!
நண்ணியுனைநான்கண்டு உகந்துகூத்தாட
நண்ணியொருநாள் ஞாலத்தூடேநடவாயே.

ஆ.—(மண்ணும்.) ஸ்ரீவாமநனாய்வந்து பிறந்தருளி உன்னுடைய நிரவதிக ஸௌந்தர்யமாகிறபலத்தாலே மஹாபலியை ஜயித்து லோகங்களைக் கொண்டருளிற்று, இவ்வண்டாந்தர்வர்த்திகளான ஆத்மாக்களும், திருநாட்டிலுள்ள திவ்ய புருஷர்களும் ப்ரீதராகைக்கன்றோ? ஆதலால் அவர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக, மோசாகாங்க்ஷித மான என்னுடைய காத்ரங்களாலேஉன்னை ஸ்பர்சித்து உன்னழகையும் உன்நடையையும் கண்ணாலே கண்டுஉகந்து அந்தப்ரீத்யதிசயத்தாலே நான் கூத்தாடும்படி வந்தொருநாள் ஞாலத்தூடே நடவாய் என்கிறார்.

ஒ.—இரண்டாம்பாட்டில், "நீர் சொன்னபடியே செய்யலாவது திருநாட்டிலேபோனால் காணும்" என்னில், ஸம்ஸாரத்திலே ஸ்ரீவாமநனாய் வந்துபிறந்தருளி உன்னுடைய அழகை எல்லார்க்கும் புஜிக்கக்கொடுத்தருளினாய் ஒருவனல்லையோ? ஆன பின்பு, அடியேனுடைய அபேக்ஷிதம் இங்கே செய்தருளவேணுமென்கிறார். [மண்ணுமென்று தொடங்கி] - அழகைக்கண்டு லோகங்களெல்லாம் உஜ்ஜீவிக்கும்படி வாமநனாய் அழகாகிற பலத்தைக்காட்டி ப்ருதிவ்யாதி ஸகல லோகங்களையும் அளந்துகொண்ட அத்யாஸ்சர்யசேஷ்டிதனே! [நண்ணியுனையென்று மேலுக்கு] - மாநஸாநுஸந்தாநமாத்ரமன்றிக்கே நான் உன்னைக் கிட்டிக் கண்டு அத்தாலே உகந்து கூத்தாடும்படி ஸம்ஸாரத்துள்ளே எனக்கு ப்ரத்யாஸந்நமாக ஒருநாள் வந்து உலாவியருளவேணும்.

ப.—அநந்தரம், மஹாபலிக்கு உன்னழகைக் காட்டி அகிலலோகத்தையும் அநந்யார்ஹமாக்கிக்கொண்ட ஆஸ்சர்யசக்தியையுடைய நீ, நான் கண்டுஉகக்கும்படி இந்த விடத்திலே வரவேணு மென்கிறார்.

மண்ணும் - பூமியும், விண்ணும் - ஊர்த்த்வலோகமும், மகிழ - உகக்கும்படியாக, குறளாய் - (பெரியவடிவைச் சிறுக்கின) வாமநனாய், (அர்த்தித்த அநந்தரம் கையிலே நீர்விழுந்தவாறே வளர்ந்து), வலம் - ஸர்வசக்தியோகத்தை, காட்டி - ப்ரகாசிப்பித்து, மண்ணும் - பூமியையும், விண்ணும் - ஊர்த்த்வலோகத்தையும், கொண்ட - அளந்துகொண்ட, மாயம் - ஆஸ்சர்யசேஷ்டிதத்தையுடைய, அம்மானே - ஸ்வாமியானவனே! உனை - (ப்ரயோஜநாந்தரபரர்க்கு ப்ரகாசிப்பித்த வடிவழகையுடைய) உன்னை, நான் - (கண்டல்லது நிற்கமாட்டாத சாபல்யத்தையுடைய) நான், நண்ணி - (அந்த வடிவழகோடே) கிட்டி, கண்டு - (மாநஸஸாக்ஷாத்காரமின்றியே) கண்ணாலே கண்டு, உகந்து - ப்ரீதனாய், கூத்தாட - கூத்தாடும்படியாக, நண்ணி - (யஜ்ஞவாடத்திலே வந்தாற்போலே நீதானே) வந்து கிட்டி, (எனக்காகவும்), ஒருநாள்—, ஞாலத்தூடே - பூமியிலே, நடவாய்- நடந்துவரவேணும்.

இ.—இரண்டாம்பாட்டில், "நீர் சொல்லுகிறது ஒருதேச விசேஷத்திலே கொடுபோய்க் காட்டுமதுகாணும்" என்ன, "நீ இங்கே கொடுவந்து காட்டிற்றிலையோ?" என்கிறார்.

[மண்ணும் இத்யாதி] - ஹிம்யந்தரிக்ஷாதி ஸகல லோகங்களிலும், விசேஷஜ்ஞர் உகக்கவும், அவிசேஷஜ்ஞர் "வஷெ-ுணவீஜஂவ்ருகிஸஜ்ஹஷ-ு" என்கிறபடியே செவ்விபெறவும். [குறளாய்] - நித்யஸூரிகள் அநுபவிக்கும் வடிவை ஸம்ஸாரிகள் கண்ணாலே அநுபவிக்கலாம்படி கோடியைக்காணியாக்கினபடி. பால் சென்றதனையும் ரஸிக்குமாபோலே போக்யதை மிக்கிருக்கிறபடி. "கூராராழி வெண்சங்கேந்தி" என்கிற வடிவிற்காட்டில் ஆகர்ஷகமாயிருக்கிறபடி. [வலங்காட்டி] - அம்புக்குச் செல்லாத விடமாகையாலே அழகாகிற பலத்தைக்காட்டி அழித்து. [மண்ணும் விண்ணுங் கொண்ட] - மஹாபலியாலே அபஹ்ருதமான த்ரைலோக்யத்தையும் இந்த்ரனுக்கு வாங்கிக்கொடுத்த. கொண்டவென்றது - இந்த்ரன்பேறு தன்பேறாய் இருக்கிறபடி. பிறந்தவன்றே ப்ரஹ்மசாரியாய், கொடுத்து வளர்ந்த கையைக்கொண்டுஇரந்து,சிறுகாலைக் காட்டி அபஹரித்துப் பெரிய காலாலே அளந்துகொண்ட ஆச்சர்யங்கள். [அம்மானே]- இதெல்லாம் வேண்டிற்றுஉடையவனாகையிறே. [நண்ணி]-மாநஸாநுபவமாத்ரமன்றிக்கே கிட்டி. [உனை நான்] - கண்டல்லது நிற்கவொண்ணாத உன்னைக் காண்கையிலே சபலனான நான். ப்ரதிகூலனுக்குக் காட்டினவடிவு அநந்யப்ரயோஜநனுக்கு அரிதாவதே. [கண்டுகந்து கூத்தாட] - மஹாபலியைப்போலே கொடுக்கலாவதில்லை, இந்த்ரனைப் போலே கொள்ளவேண்டுவதில்லை; கண்ணாலே கண்டு ஹ்ருஷ்டனாய், ஹர்ஷத்துக்குப் போக்குவிட்டுஆடும்படியாக.கொள்வதும்அழகே,அவன் கொடுப்பதும்அழகே.[நண்ணி]- நான்இருந்தவிடத்தேவந்துகிட்டி, மஹாபலிக்குக்காட்டினவோபாதிஒருநாளமையும்;நானிருந்தஸம்ஸாரத்திலே மஹாபலி யஜ்ஞவாடத்திலே உலாவினாற்போலே உலாவவேணும்.

ஈடு.—இரண்டாம் பாட்டு. "வாராய் என்று நிர்ப்பந்தித்தல்ல காணும், நம்மைக் காண்பது! உம்மை ஒருதேசவிசேஷத்திலே யழைத்துக்காணும் காட்டுவது"என்ன, அவ்வடிவுதன்னையே இங்கே கொடுவந்து இதரஸஜாதீயமாக்கிக் காட்டிற்றிலையோவென்கிறார்.

[மண்ணும் விண்ணும் மகிழக்குறளாய்] - இவ்வளவில் ஸ்ரீவாமநனாய் வந்து தோற்றிற்றிலையாகில், உபயவிபூதியும் அழியுமாகாதே ஒருபாட்டம் மழைவிழுந்தால் பதார்த்தங்களடையச் செவ்விபெறுமாபோலே உகவாதாரும் மகிழும்படியன்றோ வந்து தோற்றிற்று.

---

இரண்டாம்பாட்டு.—மண்ணும் இத்யாதி. "ஞாலத்தூடேநடவாயே" என்ற பதத்தைக் கடாக்ஷித்துஈஸ்வராபிப்ராயத்தையருளிச்செய்கிறார் - வாராயென்று இத்யாதி. "மண்ணும்விண்ணும் மகிழ" இத்யாதியைக்கடாக்ஷித்து அதுக்கு உத்தரம் அருளிச்செய்கிறார் - அவ்வடிவுதன்னை இத்யாதி.

"மண்ணும்விண்ணும்மகிழக்குறளாய்" என்றதுக்குஹார்த்தபாவம்-இவ்வளவில் இத்யாதி. இவ்வளவிலென்றது - மஹாபலி கையிலேயகப்பட்ட இவ்வளவிலே யென்றபடி. "மகிழ" என்றதுக்குபாவம் - ஒருபாட்டம் இத்யாதி. ஒருபாட்டம் - ஒருவெள்ளம்; ஒருபாறல். "வஷெ-ுணவீஜஂவ்ருகிஸஜ்ஹஷ-ு" என்றத்தைக் கடாக்ஷித்து 'ஒருபாட்டம்மழை'யென்றது இத்தால்; "மகிழ"

[வலங்காட்டி] - ஔதார்யமென்றொரு குணலேசங் கிடக்கையாலே ராவணாதிகளைப் போலே அம்பாலே யழிக்கப்போகாதே; அழகாகிற பலத்தைக் காட்டி வாய்மாளப் பண்ணினபடி. சுக்ராதிகளுடைய நிரோதமுண்டாயிருக்கச் செய்தேயிறே யழகுக்குத் தோற்றுக் கொடுத்துக்கொண்டு நின்றபடி. [குறளாய்] - கோடியைக் காணியாக்கினாற்போலே முகந்துகொள்ளலாயிருக்கை. [மண்ணும்விண்ணுங்கொண்ட] - பூம்யந்தரிக்ஷாதிகளைக் காற்கீழே யிட்டுக்கொண்ட. இந்த்ரனுக்குக் கொடுத்தவென்னாதே, கொண்ட என்கிறது - அவன்ஆஸுரப்ரக்ருதியாகையாலே அவன்பக்கல் தானேகொண்டானாகக்கொண்டபடியும், ஆஸ்ரிதனான இந்த்ரனுடைய அவிபாகரஸத்தாலும். [மாயவம்மானே]-ஸ்ரிய:பதியானவன் அர்த்தியானபடியும், வடிவழகைக் காட்டி வாய்மாளப் பண்ணினபடியும், “கொள்வன் நான் மாவலி” என்றாற்போலே சில முக்தஜல்பிதங்களைப் பண்ணினபடியும், சிறுகாலைக் காட்டிப் பெரியகாலாலே யளந்தபடியுந் தொடக்கமான ஆஸ்சர்யங்களைச் சொல்லுகிறது. [அம்மானே] - ஜெவாநாஂஷாநவாநாஞ ஸாஉாநூஉயிஜெவதஂ” (தேவாநாம் தாநவாநாஞ்சஸாமாந்யமதிதைவதம்) என்கிற பொதுவான ஸ்வாமித்வமிறே அங்ஙன் செய்ய வேண்டிற்று? [நண்ணியுனை நான்கண்டுகந்து கூத்தாட] - இந்த்ராதிகளைப்போலேயெனக்கு ராஜ்யாபேக்ஷையில்லைகாண்! நீ பண்ணித்தந்த வெளிச்சிறப்பாலே த்ருப்தனாகிறிலேன். நானுன்னைக் கிட்டிக் கண்டு உகந்து கூத்தாடும்படி வரவேணும். வருகைக்குண்டான வ்யாபாரம் அவன் தலையது; வந்தால் உகக்கையிலே இவர்க்கந்வயம். [நான் கண்டுகந்து கூத்தாட] - மஹாபலியைப்போலேஒன்றுகொடுக்க இருக்கிறேனல்லேன்; இந்த்ரனைப் போலே ஒன்று கொள்ள இருக்கிறேனல்லேன்; ‘எனக்கு’ என்றுஇருப்பாரோடும், ‘என்னது’ என்றிருப்பாரோடுமோ நீ கொடுத்துக்கொண்டு பரிமாறுவது? உன்னையே கண்டுஉகப்பார்க்கு உன்னைக் காட்டலாகாதோ? “ஸஂஹ ஜெஷுூஷாஜெரவிநவ

என்று - ப்ரீக்கையைச்சொல்லுகிறது. “மகிழ” என்றதுக்கு ப்ரீதியாக அர்த்தாந்தரம் - உகவாநாம் இத்யாதி. வகார்த்தமாதல், வலங்காட்டுகிறதென்? ஹிம்ஸித்தாலோ? என்ன - ஔதார்யம் இத்யாதி. “வாய்மாளப்பண்ணி” என்கிறதென்? “கபடம்” என்றறியாதே கொடுத்தானென்றாலோ? என்ன - சுக்ராதிகள் இத்யாதி. “குறளாய்” என்று - வாமநத்வம் சொல்லாநிற்க, “அழகைக்காட்டினான்” என்னக்கூடாதே யென்ன - கோடியை இத்யாதி. முகந்துகொள்ளலாயிருக்கை - நிரம்பித் தநுபவிக்கலாயிருக்கை. மண்ணையும் விண்ணையும் மஹாபலிபக்கலிலே வாங்கிக்கொண்ட என்றர்த்தாந்தரம்விவக்ஷித்து, அப்போது, வாங்கிக்கொடுத்தவென்னாதே, “கொண்ட” என்றதுக்குஹேது த்வயம்- இந்த்ரனுக்கு இத்யாதி. ‘அவிபாகரஸத்தாலும்’ என்கிறவிடத்திலே-“காஶ்யபஸ்ய கரே ஜலம் ... ஸமஸ்த ... ” என்கிறது அநுஸந்தேயம் “மாயன்” என்றதுக்குபாவம் - ஸ்ரிய:பதி இத்யாதி. அவனை நிரசியாமல் அளந்தது ஸம்பந்தத்தாலே யென்கிறார் - தேவாநாம் இத்யாதி: ஜிதந்தாயாம். அங்ஙன் செய்யவேண்டிற்றென்றது - வலங்காட்டிவாங்கவேண்டிற்றென்றபடி. தாத்பர்யார்த்தம் - இந்த்ராதிகளை இத்யாதி. ஆதிசப்தத்தாலே-மஹாபலியை நினைக்கிறது. ‘ராஜ்யாபேக்ஷையில்லைகாண்’-பின்னையெதிலே யபேக்ஷையென்ன? உகந்துகூத்தாடுகையிலேயபேக்ஷையென்றபடி. “கண்டு” என்றதுக்கு பாவம் - நீ பண்ணித்தந்த இத்யாதி. “உகந்து” என்றதுக்குபாவம் - வருகைக்கு இத்யாதி. அதாவது - நீ வருகைக்கு ஸாதநாநுஷ்டாநம் பண்ணுமவனல்லேன், நீ வந்தத்தைக்கண்டுஉகக்கிறதிலே எனக்குஅந்வயமென்றபடி. “நான்” என்றதுக்குபாவம் - மஹாபலியை இத்யாதி. பங்க்யந்தரேண பாவம் - எனக்குஎன்று இத்யாதி. எனக்குஎன்றிருப்பான் - இந்த்ரன். என்னதுஎன்றிருப்பான்- மஹாபலி. அப்படியுகப்பரோ? என்ன-ஸஂஹ ஜெ இத்யாதி. “ஸஂஹ ஜெஷுூஷாஜெரவிந

தஷ்ஸ்வரஜம்யநீ'' (ஸம்ப்ரமைஸ் துஷ்யகோவிந்த ஏதந்ந:பரமம்தநம்) என்கிற இதிலேயிறே இவர்க்குஅந்வயம். [நண்ணி] - நானிருந்த விடத்தே நீ வந்துகிட்டி. [ஒரு நாள்] - பின்பொருநாள் அச்செயல் செய்யலாகாதோ? மண்ணும்விண்ணும் மகிழநடக்க லாவது அசுரன் முன்பேயோ? அநந்யப்ரயோஜநர்முன்பு நடக்கலாகாதோ? [ஞாலத்தூடே நடவாயே] - நடையழகில் வாசிகண்டு அதிலே ஈடுபடாதே, ஔதார்யங்கொண்டாடி யிருக்கும் அவன்முன்னேயோ நடக்கலாவது? நடையழகில் உள்மானம் புறமானங்கண்டு அதுவேஜீவநமாயிருக்கிற என்முன்னே நடக்கலாகாதோ? (௨)

---

## மூன்றும் பாட்டு.

---

ஞாலத்தூடேநடந்தும்நின்றும் கிடந்திருந்தும்
சாலப்பலநாள் உகந்தோறுயிர்கள்காப்பானே!
கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே
சாலப்பலநாள் அடியேனின்னுந்தளர்வேனோ?

*ஆ.—(ஞாலத்தூடே) - வாமநனும் சக்ரவர்த்தித் திருமகனும் ஸ்ரீவஸுதேவர் திருமகனும் மற்றும் அஸங்க்யேயங்களான திருவவதாரங்களைப்பண்ணி ஸகல மநுஜ நயந விஷயதாம் கதனாய், அசேஷமநோநயநஹாரி திவ்யசேஷ்டிதாநி குர்வாணனாய்க்கொண்டு ஸர்வாத்மாக்களையும் யுகந்தோறும்ரக்ஷித்தருளுகிற பரமகாருணிகனே! நீ பிராட்டியோடேகூட எழுந்தருளியிருக்கிற இருப்பையும், உன்னழகையும், உன்னுடைய திவ்யசேஷ்டிதங்களையும் நானொருத்தனும் ஸர்வகாலமும் காணப்பெறாதே தளருமித்தனையோ? என்கிறார்.*

*ஒ.—மூன்றாம்பாட்டில், ''யாத்ருச்சிகமாக ஒருகால் அங்ஙனே அவதரித்தோமத்தனை'' என்னவொண்ணாதே, யுகந்தோறும் ராமக்ருஷ்ணாதிரூபேண வந்து திருவவதாரம் பண்ணியருளினவிடங்களிலும் ஸஞ்சாராதிகளான மநோஹாரி சேஷ்டிதங்களைப்பண்ணி ஜகத்தை ரக்ஷிக்கை உனக்கு ஸ்வபாவமாயிருக்க, நான் உன்னைக் காணப்பெறாதே இன்னமும் நெடுநாள் நோவுபடக்கடவேனோ வென்கிறார். [கோலத்திருமாமகளோடு உன்னைக்கூடாதே] - பெரியபிராட்டியாரோடிருந்தருளுகிற உன்னைக்கண்டு அடிமை செய்யப்பெறாதே.*

---

ஸதஷ்ஸ்வரஜம்யநீ। சக்ருயாவாவிசேஷிணக்ஷ்ஸ்ரவேஷுயிதம்க்ஷீ:'' இதிமஹாபாரதே ச்ருஷ்ணம்ப்ரதி விதுர:. அச்செயல் - முன்பொருநாள் அசுரனுடைய யஜ்ஞவாடத்திலே நடக்கையாகிற அச்செயலென்றபடி. விவரணம் - மண்ணும்விண்ணும் இத்யாதி. அவன்முன்னே நடந்தோம், உம்முடையமுன்னே நடந்திலோமென்று வெறுக்கிறதென்? அவனைக்காட்டிலும் உமக்கு வாசியேதென்ன:—அவன்சக்ஷுஹ்ருதயன், நான் ஆர்த்ரஹ்ருதயனென்கிறார் - நடையழகில் இத்யாதி வாக்யத்வயத்தாலே. உள்மானம் புறமானமென்றது - உள்ளிற்சிவப்பும் புறத்திற்கறுப்புமான பரபாக ரஸத்தையென்றபடி. க்ரமேணாந்வய:. (௨)

---

ப.—அநந்தரம், அகிலப்ரகாரத்தாலும் ஆஸ்ரிதஸம்ரக்ஷணார்த்தமான வ்யாபாரத்தையுடைய உன்னை, ஸஹதர்மசாரிணியான லக்ஷ்மியோடேகூட அநுபவியாதே இங்ஙனேயுள்ளதனையும் தளரக்கடவேனோ என்கிறார்.

உகந்தோறு - யுகந்தோறும், ஞாலத்தூடே - பூமியிலேயவதரித்து, நடந்தும்- “வஹ்ராவஸாயாதஜெ” என்று நடந்தருளியும், நின்றும் - (“கவஷூஹ்வகிஷூஜ்தஂஊ ஊஶஹ்யநாாஜிஹ்தழ” என்று வில்லைக் கோத்துப்பிடித்து) நின்றும், கிடந்தும் - (“ஷூதிஶிஶெஹ்ஜஹொஊயெஃ” என்று கடலுக்கெதிரே யொருகடல் கிடந்தாற்போலே) கண்வளர்ந்தருளியும், இருந்தும் - (“ஹவஊஹெஸயஜஹ்ராஸதயாஸஹாாவவஃ”) என்று பிராட்டியோடேகூட இனிதாக எழுந்தருளியிருந்தும், சாலப்பலநாள் - (“ஊஶவஷஹ்ஸஹஸராணிஊஶவஷஹ்ஶதாநிவ” என்கிறபடியே) அநேக காலம், உயிர்கள் - ப்ராணிகளை, காப்பானே - ரக்ஷித்துக்கொண்டு போருமவனே! கோலம் - (“விஷெஹ்ஹாநாாஷிவாஂஷெவகஶொஷ்ஷாzதநஸநாழ”) என்று நீ கொண்ட வடிவுக்கு ஈடானஆவிருப்யத்தையுடையளாய்க் கொண்டு அவதரிக்கும், திருமாமகளோடு - லக்ஷ்மியோடே கூடியிருக்கிற, உன்னை-, கூடாதே - கிட்டியநுபவியாதே, (அநாதிகாலமிழந்தவோபாதி), சாலப்பலநாள் - மேலுள்ளகாலமெல்லாம், (உறவறியாதிருக்கையன்றிக்கே), அடியேன் - (உறவறிந்த) நான், (விஷயபரனாய் ருசியில்லாதிருக்கையன்றியே), இன்னும் - ருசிபிறந்தபின்பும், தளர்வேனோ-அநுபவாலாபத்தாலே ஈடுபடக்கடவேனோ?

இ.—மூன்றாம்பாட்டில், “அது சற்றுப்போதுகாட்டாறு பெருகுமாபோலே செய்தோமத்தனை” என்ன; அது காதாசித்கம் என்னவொண்ணாதபடி யுகந்தோறும் ராமக்ருஷ்ணதிருபத்தாலே வந்து அவதரித்து ரக்ஷிக்கை உனக்கு ஸ்வபாவமாயிருக்க, நான் நோவுபடக்கடவேனோ? என்கிறார்.

[ஞாலத்தூடே. இத்யாதி] - “கஶதஃஷூயயளாாஜஃ” என்றும், “சுயஊாஶாயிவீஹ்ஶொாாஜொநாஜஹாவஸஃ। விஷஜஹ்ராநாஷாஷிவெணவவாாவஸாயாதஜெ” என்றும் சொல்லுகிறபடியே நடந்தும், “கவஷூஹ்வதிஷூஜ்தஂ ஊஊஶஹ்யநாாஜிஹ்தஂ” என்கிறபடியே நின்றும், “வொஹாஂஹாஜஹஷொஹாஸஜவய..யாஶிவஸஷிஊநஃ। சுஜூவிஂஷூாஜூவஃ கூகவாஷூதிஶிஶெஹ்ஜஹொஊயெஃ” என்கிறபடியே கிடந்தும், “உடஜொாஜஜாவஸீநழ” என்கிறபடியே ருஷிகள் ஆஸ்ரமங்களிலேயிருந்தும். [சாலப்பலநாள்] - ஒருநாள்செய்து போகையன்றிக்கே பதினோராயிரமாண்டும், நூறாண்டும். [உகந்தோறு] - “ஸஂஹவாஜியாஷெயாஷெ” என்கிறபடியே. [உயிர்கள் காப்பானே] - சிறியார் பெரியார் என்னாதே ஸர்வரக்ஷகன் அல்லேயோ? சிலர் கூப்பிட ஜகத்ரக்ஷணம்பண்ணுகை ரக்ஷகத்வத்துக்குக் குறைவன்றோ? என்னை ஒருவனையும் ஒழியவிட்டு உன்னுடைய ஸர்வரக்ஷகத்வத்தை இழக்கவிறே புகுகிறது. [கோலத்திரு இத்யாதி] - பிராட்டியோடேகூடவிருக்கிற வுன்னைக்கிட்டி அடிமைசெய்யப்பெறாதே, மாதா பிதாக்களைச் சேரக்காணுமாபோலே. ஒரு மியாநமிறேப்ராப்யம். மாதாபிதாக்களை அகன்று ஸ்தந்ந்யப்ரஜைஜீவிக்கவற்றோ? இருவருஞ்சேர்ந்த சேர்த்தி பேற்றுக்குஉறுப்பாயன்றோ இருப்பது; “ஸஹஊயஜஹ்வரீதவ” என்னக்கடவதிறே. [சாலப்பலநாள்] -

*அநாதிகாலமிழந்த நான் அநந்தகாலமிழக்கவோ? முறையறியாத காலமிழந்தேனாகில், முறையறிந்த காலமு மிழக்கவோ? ருசிபிறவாத காலமிழந்தேனாகில், ருசிபிறந்தபின்பும் இழக்குமித்தனையோ?*

ஈடு.—மூன்றாம்பாட்டு. ஜகதாகாரனான வடிவுகாட்டினது எனக்குப்போராது; அஸாதாரணமான விக்ரஹத்தைக் கோடுவந்து காட்டவேணுமென்றார்; அது உமக்குக் காட்டுவது ஒருதேசவிசேஷத்தே கொடுபோய்க்காணு மென்ன, அதுதன்னை இங்கே கொண்டுவந்து இதரஸஜாதீயமாக்கிக் காட்டிற்றிலையோ என்றார். அதொருநாள் சற்றுப் போது காட்டாறு பெருகினாற்போலே செய்தோமென்ன, "அது காதாசித்கம்" என்ன வொண்ணாதபடி யுகந்தோறும் ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ரக்ஷிக்கை உனக்கு ஸ்வபாவமாயிருக்க, நான் நோவுபடக் கடவேனோ என்கிறார்.

[ஞாலத்தூடேநடந்தும்] - ஸதாதர்ஶநம்பண்ணுவார்முன்னே நடக்கக்கடவ நடையை, காதாசித்கமாகவந்தாலும்கடாக்ஷியாதார்முன்னே கிடீர் நடந்தது! அந்யர் முன்னே நடக்குமாபோலே. "அக்ரதஃப்ரயயௌராமஃ" (அக்ரதஃப்ரயயௌராமஃ) என்றும், "அயதாஶரதிர்வீரோ ராமோநாமமஹாபலஃ । விஷ்ணுர்மாநுஷரூபேணசசாரவஸுதாதலே" (அததாஶரதிர்வீரோ ராமோநாமமஹாபலஃ | விஷ்ணுர்மாநுஷரூபேணசசாரவஸுதாதலே) என்றும் சொல்லுகிறபடியே நடந்தும். வடதேசத்தின்றும் போரப் பாடவல்லராயிருப்பா ரொருத்தர் "பெருமாளைத் திருவடிதொழ வேணும்" என்றுவர, ஆழ்வார்திருவரங்கப் பெருமாளரையர் ஒருதீர்த்தத்தின்அன்றுஇராத் திருமாலையைப்பாடிச்சமைந்து; பெருமாளை யொருமத்தகஜத்தைக் கைவசப்படுத்துமா போலே ஏத்திவசமாக்கிக் கணிசங்கொண்டு, "நாயன்தே! தேவரீர்திருவடிகளுக்குப் போர நல்லானொருவன் தேவரைத்திருவடிதொழ நெடுந்தூரமுண்டு வந்திருக்கிறது; இவனை யழைத்துக்கொண்டு ஸம்பாஷணைபண்ணியருளவேணும்" என்ன, அவரைப் பெருமாள் அருளப்பாடிட்டு, திருப்புன்னைக்கீழினின்றும் அவர் நின்றவிடத்தே திருக்கைத்தலத்தேயெழுந்தருளி, விண்ணப்பஞ்செய்வார்களை யருளப்பாடிட்டு, "வாரீகோள்! நாம் இவன் வந்த தூரத்துக்கு

*மூன்றாம்பாட்டு.—ஞாலத்தூடே இத்யாதி. கீழிற்பாட்டுக்களில் அவதாரிகைகளை நிகமித்துக்கொண்டு இப்பாட்டுக்கவதாரிகை இடுகிறார் - ஜகதாகாரனான இத்யாதி. "உகந்தோறுயிர்கள் காப்பானே, அடியேனின்னும்தளர்வேனோ" என்றத்தைக்கடாக்ஷித்து - யுகந்தோறும் இத்யாதி. "காப்பானே" என்றத்தைப்பற்ற - ஸ்வபாவமாயிருக்க என்றது.*

*"ஞாலத்தூடே" என்றதுக்குபாவம் - ஸதாதர்ஶநம் இத்யாதி. கடாக்ஷியாதார்முன்னே நடந்ததுக்குத்ருஷ்டாந்தம் - அந்யர் இத்யாதி. "நடந்தும்" என்றதுக்குபாவம் - அக்ரத இத்யாதி. "அக்ரதஃப்ரயயௌராமஃஸீதாமத்யே ஸுமத்யமா । ப்ருஷ்டதஸ்து தநுஷ்பாணிர் லக்ஷ்மணோ நுஜகாம ஹ" இத்யாரண்யகாண்டே [கக-க] "அயதாஶரதிர்வீரோ ராமோநாமமஹாபலஃ। விஷ்ணுர்மாநுஷரூபேண சசாரவஸுதாதலே" இத்யாரண்யபர்வணி பீமஸேநம்ப்ரதிஹநூமாந். ஆஶ்ரிதபுருஷகாரத்தைப் புரஸ்கரித்து "காணவேணும்" என்று அபேக்ஷித்தால் அவர்களுக்காக நடக்கக்கடவ அவன், ஒருவர் அபேக்ஷியாதிருக்கத் தானே வந்துநடந்தாலும் கடாக்ஷியாதார் முன்னேகிடீர் நடந்தது! என்று விவக்ஷித்து, அப்படியாஶ்ரிதர்க்காக நடக்குமோ? என்ன - வடதேசத்தில் இத்யாதி. தீர்த்தத்தினன்றுஇரா - தீர்த்தத்தினன்றுஇருந்து. சமைந்து - முடித்து. கணிசங்கொண்டு - சபதங்கொண்டு. "சொன்னபடி*

எல்லாம்போருமோ செய்ததரம்?'' என்று திருவுள்ளமானார்; அப்படியேயிறே நம்மிழவுகளும் திருவுள்ளத்தேபட்டு, அவையெல்லாம் ஆறும்படி முகம் தந்தருளும்படியும். [நின்றும்] - ''அவஷ்டப்ய சதிஷ்டந்தம் ததர்ஸ தநுரூர்ஜிதம் | ராமம் ராமாநுஜம் சைவ பர்த்துஸ் சைவாநுஜம் ஸுபா'' (அவஷ்டப்யசதிஷ்ட்டந்தம் ததர்ஸதநுரூர்ஜிதம் | ராமம்ராமாநுஜம்சைவபர்த்துஸ்சைவாநுஜம்ஸுபா) - தன்பர்த்தாவைக் கோன்ற பெருமானை ''தப்பச்செய்தீரே'' என்கையன்றிக்கே, இவரது குற்றமுண்டோ? தம்மையாஸ்ரயித்தவர்கள் விரோதிபோக்கத்தவிர்வர்களோ? இவனும் அநுகூலித்தானாகில் ரக்ஷியாரோ? தண்ணீர்க்குடிக்கக்கல்லின ஏரியிலே தலைகீழதாகவிழுந்து சாவாரைப்போலே தன்குற்றத்தாலே கெட்டானத்தனைகிடீ ரேன்றுளிறே! இப்படி உகவாதாருடைய ஸ்த்ரீகளுக்கும் ஆகர்ஷகமாம்படியிறே கையும்வில்லுமாய்நிற்கும் நிலையிருப்பது! [கிடந்தும்]-''பாஹும் புஜகபோகாபம் உபதாயாரிஸூதந:'' (பாஹும்புஜகபோகாபமுபதாயாரிஸூதந:) - கடலையநுவர்த்தித்துக் கிடக்கிறகிடைதானே லங்கை குடிவாங்கவேண்டும்படியிருக்கை. ''அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிஸிஸ்யே மஹோததே:'' (அஞ்ஜலிம்ப்ராங்முக:க்ருத்வாப்ரதிஸிஸ்யேமஹோததே:) - ப்ரதிஸிஸ்யே என்கிறதாயிற்று. கடல் தன்னைப்போர அளவுஉடைத்தாக நினைத்திருக்குமாயிற்று, அதுக்காக ஒருகடல் ஒருகடலோடே ஸ்பர்த்தித்துக் கிடந்தாற்போலேயிருக்கை; † ''கருணையங்கடல் துயின்றனன் கருங்கடல் நோக்கி'' என்னும்படியிறே. [இருந்தும்]-''உபவிஷ்டம் ஸ்வலங்க்ருதம்'' (உபவிஷ்டம்ஸ்வலங்க்ருதம்) என்றும், 'உடஜே ராமமாஸீநம்'' (உடஜேராமமாஸீநம்) என்றும்

ப்ர.—[நின்றும்]—கிஷ்கிந்தாகாண்டே [கசு] ''அவஷ்டப்ய சதிஷ்டந்தம் ததர்ஸ தநுரூர்ஜிதம் | ராமம் ராமாநுஜம் சைவ பர்த்துஸ் சைவாநுஜம் ஸுபா || உ௫ ||''

[இருந்தும்] அயோத்யாகாண்டே [கசு] அபிஷேகஸர்கே, ''தம் வைஸ்ரவணஸங்காஸம் உபவிஷ்டம் ஸ்வலங்க்ருதம் | ததர்ஸ ஸூத: பர்யங்கே ஸௌவர்ணே ஸோத்தரச்சதே || அ || வராஹருதிராபேண ஸுசிநா ச ஸுகந்திநா | அநுலிப்தம் பரார்த்யேந சந்தநேந பரந்தபம் || க || ஸ்திதயா பார்ஸ்வதஸ்சாபி வாலவ்யஜநஹஸ்தயா | உபேதம் ஸீதயா பூயஸ் சித்ரயா ஸஸிநம் யதா || க0 ||''

செய்கிறோம்'' என்று ப்ரதிஜ்ஞை பண்ணுவித்துக்கொண்டுஎன்றபடி. ப்ராஸங்கிகம் - அப்படியே இத்யாதி. ''நடந்தும்'' என்று பதச்சேதம். நிற்கிறநிலையாவது இன்னதென்றும், அதுதான ஆகர்ஷகமாயிருக்கும் என்னுமத்தையும் அருளிச்செய்கிறார்- அவஷ்டப்ய இத்யாதி. கிஷ்கிந்தாகாண்டே, ''ஸுபா'' என்றதுக்குபாவம் - தன்பர்த்தாவை இத்யாதி. உக்தார்த்தத்துக்கு நிதர்ஸநம் - தண்ணீர் இத்யாதி. * மரதகமணித்தடமாகையாலே இவருடைய ஏரியிறே. ''கிடந்தும்'' என்றதுக்குபாவம்-பாஹும் இத்யாதி. யுத்தகாண்டே. ''அரிஸூதந:'' என்றதுக்குபாவம் - கடலை இத்யாதி. ''ப்ரதி'' என்றதுக்குபாவம் - கடல்தன்னை இத்யாதி. 'ப்ரதி'' என்றது - ப்ரதிரிதி யென்றபடி. போரவளவுடைத்தாகவென்றது - ''மஹோததே:'' என்றத்தைப்பற்ற. இவர்கடலோ? என்ன, கம்பன்பாசுரம் - கருணைக்கடல் இத்யாதி. ''இருந்தும்'' என்றதுக்குபாவம் - உபவிஷ்டம் இத்யாதி:— ''தம் வைஸ்ரவணஸங்காஸம் உபவிஷ்டம் ஸ்வலங்க்ருதம் | ததர்ஸ ஸூத: பர்யங்கே ஸௌவர்ணே ஸோத்தரச்சதே'' இத்யயோத்யாகாண்டே அபிஷேகமஹோத்ஸவே. சித்ரகூடே, 'உட

† கம்பராமாயணம், வருணனை வழிவேண்டுபடலம், 5. இப்பகுதி ''கருணைக்கடல் கருங்கடலைநோக்கிக் கிடந்தது'' என்று காணப்படுகிறது.

சொல்லுகிறபடியே யிருக்கை. "திருவயோத்யையிலிருக்கும் பேரோலக்கம்சிறியது" என்னும்படியிறே தனியிடத்தில் ஓலக்கமிருந்தபடி. அவ்வோலக்கத்தில் கிட்டும் தம்பிக்கும் கிட்டவொண்ணாதபடியிறே இவ்வோலக்கமிருந்தபடி; "**அபிதஃபாவகோபமம்**" (அபிதஃபாவகோபமம்)- நெருப்பு எரியாநின்றால் கிட்டப்போகாதாப்போலே அநபிபவநீயரா யிருந்தவிருப்பு. [சாலப்பலநாள்] - உன்னுடைய ரக்ஷணம் அநாதியன்றோ? அன்றிக்கே, நூறாண்டு, பதினோராயிரமாண்டென்றுமாம். [உகந்தோறு]-'**ஸம்பவாமியுகேயுகே**' (ஸம்பவாமியுகேயுகே) என்னுமாபோலே. [உயிர்கள்] - ஒருதிருவடி, திருவநந்தாழ்வான், பிராட்டிக்காக அன்றுகிடீர், ஸர்வாத்மஸம்ரக்ஷணமன்றோ உன்னது! [காப்பானே] - இவர்களுக்குஅழித்துக்கொள்ளுகைபணியானாற்போலேயிறேயவனுக்கும் நோக்குகை பணியானபடி. நான் கைவாங்கினேன், இனிக் காவற்சோர்வுபடாமல் வேணுமாகில் நோக்கிக் கொள். "**ராமலக்ஷ்மணகுப்தாஸாஸுக்ரீவேணசவாஹிநீ**" (ராமலக்ஷ்மண குப்தாஸாஸுக்ரீவேணசவாஹிநீ) - கடற்கரையிலே விட்டபோது பெருமாளை நோக்கு

---

*ப்ர.*—[காப்பானே]— யுகாந்தர, ஸம்ப்ரேக்ஷ்ய ஸமுத்தாரணா நந்தரே, "யாதுஸம்தஸ்ரஸ்ய ப்ரஸம்ஸ்தாரணாநிவ । வயிஷ்யதிவாஸீம் ஜ்ஞாதேக்ஷிஜ்ஞாதே க்ருயஃ॥ உ அ॥ வநக்ஸாநமதாய க்ருயக்ஷாரஃவாஸாஷேஷ் ஸாஃ । ஜொகவாஜொவஜாஸஸாஃ க்ருதாஸாதுஜவிக்ஷாஃ॥ ௨௯॥ ராமோஜாஸ ரயிஸ்ரீஜாநுலக்ஷ்மணஸுவிபீஷணஃ॥ஸாஹீ வஸுஹோதேஜாஜோஹநு ஸஜவிக்ஷஃ॥௩௦॥ வநதேஸக்ஷாஃவாஸீம்ஜ்ஞாம்ஸவ்யாகாராம்ஸதோரணா॥ உத்ராடிஸம்க்ராயிதாம் ஸவெஷ்டிஷ்ஞாவாநராஃ॥ ௩௧॥ ராமலக்ஷ்மணகுப்தாஸாஸுக்ரீவேணசவாஹிநீ । பஹுஷவஷாயஷ்டிஷ்டதாராஸம்வெஷ்டிரவிஸாராஸாஜொஃ॥ ௩௨॥"

---

ஜொராஜாஸீநம்ஜடாஜணியாரிணீ॥ க்ருஷ்ணாஜிநயாம்தம்தாவிரவஷ்டவாஸஸம் । ஷஷஸம்ஷ்டராஜாஸீநஜஹீதஃவாவகோபஜம்" [௬௬-௨௫]. "அபிதஃபாவகோபமம்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் - திருவயோத்யையில் இத்யாதி அதுஎங்ஙனேயென்ன, விவரிக்கிறார் - அவ்வோலக்கத்தில் இத்யாதி. ஸ்ருதிக்ருதமான பதந்தன்னை யெடுத்தருளுகிறார் - அபித இத்யாதி. கல்பந்தோறும் செய்தருளும்படியைப் பற்றவாதல், ஓரோவவதாரங்களிலே நெடுங்காலம் எழுந்தருளும்படியைப் பற்றவாதல் - "சாலப்பலநாள்" என்கிறார் என்றர்த்தத்வயம் - உன்னுடைய இத்யாதி வாக்யத்வயத்தாலே. "பரித்ராணாயஸாதூநாம்" இத்யாதி, "ஸம்பவாமியுகேயுகே" இதி பகவத்கீதாஸு. "உயிர்கள்" என்றபஹுவசநத்துக்குபாவம் - ஒருதிருவடி இத்யாதிவாக்யத்வயம். "காப்பானே" என்று நிரூபகமாகச் சொன்னதுக்குபாவம்-இவர்களுக்கு இத்யாதி. அவனை "காப்பானே" என்கையாலே, தாம் கைவாங்கினமையை வித்தவத்கரித்தருளிச்செய்கிறாராதல்; "காப்பானே" என்கிற ஸம்போதநத்துக்குபாவமாதல் - நான்கைவாங்கினேன் இத்யாதி. இவன் ஸ்வரக்ஷணத்தில் கைவாங்கினால் அவன்ரக்ஷிக்குமோ? என்ன; அதுக்கு உதாரணம் - ராமலக்ஷ்மண இத்யாதி. "ராமலக்ஷ்மணகுப்தாஸாஸுக்ரீவேணவாஹிநீ। பஹுஷவஷாயஷ்டிஷ்டதாராஸம்வெஷ்டிரவிஸாராஸாஜொஃ" இதி யுத்தகாண்டே ஸமுத்ரதாரணாநந்தரே. இதுக்கர்த்தம்-கடற்கரையிலே இத்யாதி. ஸுக்ரீவேணச ஸஹிதாவாஹிநீ - ராமலக்ஷ்மணகுப்தாஸதீ - ஸர்வைரபி ஸுராஸுரைஃ - துர்த்தர்ஷதரா பபூவேத்யந்வயஃ. ச ஶப்தத்தாலே - அநுக்தரான மைந்தாதிகளை

கைக்கு, தம்பியார், மஹாராஜர், மைந்தத்விவிதர்கள் உள்ளிட்ட முதலிகளெல்லோரும், லங்கையிலேகிட்ட, ஆகாசமெல்லாம் வெளிக்காவலடைத்து, நிதிநோக்குவாரைப்போலே பெருமாளை நோக்கிக்கொண்டுகிடக்க, இவர்கள் இத்தனைவரும் கண்சோர்ந்தவளவிலே, பெருமாள், தாம் கையும் வில்லுமாய்க்கொண்டு இவர்களுக்குப் புறம்பேநின்றுஉலாவினார் இறே. அவன் நோக்குகைக்கு இத்தலை கண்செம்பளிக்கும் அத்தனையிறே வேண்டுவது. நாம் அவனுக்கு ரக்ஷகராக நினைத்திருக்குமது ப்ரமமிறே: உணர்ந்து பார்த்தால் ரக்ஷகனாக வல்லான் அவனேயிறே. [கோலத்திருமாமகளோடுஉன்னைக்கூடாதே] - தாயும்தமப்பனுங்கூட விருக்கக் கிட்டப்பெறாதே ஸ்தநந்தயப்ரஜை நாக்குலட்டிக்கிடந்து துடிக்குமாபோலேயிருக் கிறதுகாணும்! "அநந்யா" (அநந்யா) என்கிறபடியே அவனும் அவளுமான சேர்த்தியிறே இவர்க்கு ப்ராப்யம். [இன்னம்தளர்வேனே - சாலப்பலநாள்] - முன்பு அநாதிகாலமிழந்த நான் இன்னம் அநந்தகாலமிழக்கவோ? [அடியேன்]-அதுகிடக்க, "உன்னாலேயிழந்தாய்" என்றுசொல்லிக் கைவிடலாமென்றிருக்கிறாயோ? [இன்னம்தளர்வேனே] - "ஒருமிது நம் எனக்கு ப்ராப்யம்" என்றுஅறிந்த பின்பும் தளருமத்தனையோ? "நீ ரக்ஷகன்" என்றறியா தொழிதல், "வேறுஎனக்கு ரக்ஷகமுண்டு" என்றிருத்தல், "நான்எனக்குரக்ஷகன்" என்றிருத் தல், "லக்ஷ்மீஸநாதமான வஸ்துப்ராப்யம்" என்றறியாதொழிதல், "எனக்கு நான்உரியேன்" என்றிருத்தல் செய்தேனோ இழக்கைக்கு. ருசிபிறந்தபின்பு இழக்கவோ? இப்பாட்டால் - அகா ரார்த்தத்தை ஸக்ரமமாக வ்யாக்யாநம்பண்ணுகிறார். "அவ-ரக்ஷணே" (அவ-ரக்ஷணே)

---

*ஸமுச்சயிக்கிறது. கண்சோர்ந்தவளவிலே - கண்ணசைந்தவளவிலே.* * *லக்ஷ்மணசப்தார்த்தம் - 'கையும் வில்லுமாய்க்கொண்டு' என்றது "ராஜஸ்வ ரக்ஷிணோவாஹ்ம்" என்றதிறே. 'கண்சோர்ந்த வாறே யுலாவினார்' என்கையாலே, இவன் ஸ்வயத்நத்தைக் கைவிடுகையே யவன் ரக்ஷிக்கைக்குஉட லென்கிறார் - அவன்நோக்குகைக்கு இத்யாதி. கண்செம்பளிக்கை - கண்மூடுகை. அதாவது - ஸ்வ யத்நத்தில் நிவ்ருத்தனாகை. பரிவரானமஹாராஜரை ஸ்வயத்நபரர்கோடியிலே கூட்டலாமோ? என்ன - நாம்அவனுக்கு இத்யாதிவாக்யத்வயம். அதாவது - நாம் கூட்டினதல்ல, வஸ்துகத்யாபாயவ விக்குமென்றபடி: ப்ரமமிறே என்றது - பக்திபாரவஸ்யமடியாகவந்த ப்ராந்தியிறே என்றபடி. பிராட்டியுமவனும் ஸந்நிஹிதனாயிருக்கத் தளருகிறதுக்கு த்ருஷ்டாந்தம் - தாயும்தமப்பனும் இத் யாதி. உன்னைக்கூடவென்னாதே, "கோலத்திருமா மகளோடுன்னை" என்கிறதென்? என்ன - அநந்யா இத்யாதி. "இன்னும்" என்கிறதுக்கு, "சாலப்பலநாள்" என்றத்தைக்கடாக்ஷித்துபாவம் - முன்பு அநாதி இத்யாதி. "அடியேன்" என்றதுக்கர்த்தம் - அதுகிடக்க இத்யாதி. அதாவது - உன்ரக்ஷணத் திலே நீயந்வயியாதே இழந்தாயென்றுகருத்தாதல், ஶேஷத்வஜ்ஞாநமுண்டானபின்பு "ஸ்வதந்த்ரன்" என்று கைவிடப்போகாதென்றபடி யென்னுதல். அதுகிடக்க - நீ நோக்காமையாலே யிழந்தஅது கிடக்கவென்றபடி. "இன்னும்" என்றதுக்கு, "சாலப்பலநாள்" என்றத்தைக்கடாக்ஷித்து, கீழ் - பாவ மருளிச்செய்து, "கோலத்திருமாமகள்" என்றத்தைக்கடாக்ஷித்து தாத்பர்யாந்தரம் - ஒருமிதுநம் இத் யாதி. கீழிற்பதங்களெல்லாவற்றையுங்கடாக்ஷித்து "தளர்வேனே" என்றதுக்குபாவம் - நீ ரக்ஷக னென்று இத்யாதி. "காப்பானே" என்றதிலே - வேறுரக்ஷகரில்லாமையும் அர்த்தஸித்தம். "தளர் வேனே" என்றத்தைப்பற்ற - நானேனக்கு இத்யாதி. "திருமாமகள்" என்றத்தைப்பற்ற - லக்ஷ்மீ ஸநாதம் இத்யாதி. "அடியேன்" என்றத்தைப்பற்ற - எனக்குநான்உரியேன் இத்யாதி. "இன்னம்" என்றதுக்கு மூன்றுமர்த்தம் - ருசிபிறந்த இத்யாதி. அகாரார்த்தப்ரகாஶகம் இப்பாட்டென்கிறார் - இப்பாட்டால் இத்யாதி. அகாரார்த்தத்தையென்றது - அகாரார்த்தமான ரக்ஷகத்வத்தை யென்றபடி. அகாரம் ரக்ஷகத்வவாசியாம் க்ரமமேதென்ன - அவ ரக்ஷண இத்யாதி. "அகாரார்த்தத்தைஸக்ரம*

இறேயாது. ரக்ஷிக்குமிடத்தில், ஸர்வப்ரகாரமாக ரக்ஷிக்கவேணும்; அதுதான் ஸர்வகாலமும் ரக்ஷிக்கவேணும்; அப்படி ரக்ஷிக்குமிடத்தில் ஸர்வரக்ஷகனுகவேணும்; இப்படி வரையாதே ரக்ஷிக்குமிடத்தில், "நகஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி) என்னுமவளும், "என்னடியார்அதுசெய்யார்" என்னும் அவனுங்கூட்டவாயிற்று; ஆகையாலே, அகாரம் - மிதுநத்துக்குவாசகமாயிற்று. ஞாலத்தூடே இத்யாதியாலே - ஸர்வப்ரகாரரக்ஷகத்வஞ் சொல்லிற்று; சாலப்பலநாள் இத்யாதியாலே - ஸர்வகாலரக்ஷகத்வஞ் சொல்லிற்று; உயிர்கள் என்கையாலே - ஸர்வரக்ஷகத்வஞ் சொல்லிற்று; 'கோலத்திருமா மகளோடுன்னைக் கூட' என்கையாலே - ஶ்ரியஃபதியேப்ராப்யம் என்றது. அகாரவிவரணமான திருமந்த்ரார்த்தமுஞ் சொல்லுகிறது; 'கோலத்திருமாமகளோடுன்னை' என்கையாலே - ப்ரஹ்மஸ்வரூபஞ்சொல்லிற்று; 'அடியேன்' என்கையாலே - 'ப்ரத்யகாத்ம ஸ்வரூபஞ் சொல்லிற்று;' 'உயிர்கள்காப்பான்' என்கையாலே - உபாயஞ் சொல்லிற்று; 'உன்னைக்கூட' என்கையாலே - ஃபலஞ்சொல்லிற்று; 'உன்னைக்கூடாதே - தளர்வேனே' என்கையாலே - விரோதி சொல்லிற்று.

---

## நான்காம் பாட்டு.

---

> தளர்ந்தும்முறிந்துஞ் சகடவசுரர்உடல்வேறு
> பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே!
> கிளர்ந்துபிரமன்சிவன் இந்திரன்விண்ணவர்சூழ
> விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே.

**ஆ.**—(தளர்ந்தும்) - ஶகடாஸுர நிரஸநம் பண்ணினாற்போலே, உன்னைக் காண்கைக்கு விரோதியான என்பக்கலுள்ள பாபங்களை நிஶ்ஶேஷமாக நீயே நிரஸித்

---

மாக" என்றதை விவரிக்கிறார் - ரக்ஷிக்குமிடத்தில் இத்யாதி. "ரக்ஷிக்குமிடத்தில் ஸர்வப்ரகாரமாக" இத்யாதியை ஶப்தத்திலே ஏறிட்டுக்காட்டுகிறார் - ஞாலத்தூடே இத்யாதியாலே. 'ஶ்ரியஃபதியே ப்ராப்யமென்றது' என்றவிடத்திலே - அகாரம்ப்ராப்யப்ராபகவாசகமென்னுமதுக்கு ப்ரமாணத்வேந, "ஸர்வரக்ஷாநுவிதா காரணத்வம்விஹிதம் । ரக்ஷகத்வஞ்யாத்வ்யாஸ்வஷ்டித்வம்ப்ரதிபாதித: । ஶ்ரீஶத்வம்ஸாம்யதாவ்யாஜ்யதேவதாத்தந: । ரக்ஷகத்வம் ஸர்வாயத்வம்வேக்ஷாவிஶேஷிதம் । ஸ்ஹீக்ஷாயாநிஜாநத்வாத்காரணத்வம்தநிதம் । ஶேஷித்வமேவோபாயத்வம்க்லிப்தாத்ப்ராப்யத்வம்ப்ரதிபாதித: । ஶ்ரீஶத்வம்ஸமுத்யோதக்ஷமாத்வேயத்வமுபாயதா" என்றது அநுஸந்தேயம். உபாயபரமானபோது, (நகஶ்சிந்நாபராத்யதி) என்று புருஷகாரபூதையான "கோலத்திருமாமகளோடு - காப்பானே" என்று மேலேகூட்டுவது; உபேயபரமானபோது, "கோலத்திருமாமகளோடு - உன்னை" என்று பதக்ரமம்; ரக்ஷணவாசியான அகாரத்தினுடைய அர்த்தப்ரகாஶகம் திருமந்த்ரமென்று திருவுள்ளம்பற்றி - அகாரவிவரணமான திருமந்த்ரம் என்கிறார். திருமந்த்ரார்த்தம் சொல்லுகிறபடி யெப்படி? என்ன - கோலத்திருமாமகளோடு இத்யாதி. 'திருமந்த்ரார்த்தம்சொல்லுகிறது' என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, அர்த்தபஞ்சகத்தையும் யோஜிக்கிறது - திருமந்த்ரம் அர்த்தபஞ்சக ப்ரதிபாதகமாகையாலே. க்ரமேணாந்வய:. (௩)

தருளி மதுஜ்ஜீவநார்த்தமாக எழுந்தருளுகிறபடியைக்கண்டு ப்ரஹ்ருஷ்டரான சதுர்முக பசுபதி ப்ரப்ருதி ஸமஸ்த ஸுரகண பரிவ்ருதனாய், யுகபதுதித திவாகரஶத ஸஹஸ்ர தேஜஸ் ஸத்ருஶமான உன்னுடைய திருமேனியில் தேஜஸ்ஸாலே ஸகலலோகங்களும் விளங்கும்படி, ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோற்றினாற்போலே ஒருநாள் காண வாராய் விண்மீதே! என்று கூப்பிடுகிறார்.

ஒ.—நாலாம்பாட்டில், ப்ரதிபந்தகங்கள் உண்டாகில் அவற்றை நீக்கியருளி என்னார்த்தி தீரும்படிவந்து தோற்றியருளவேணும் என்கிறார்.

[தளர்ந்தென்று தொடங்கி] - ஶகடாஸுரனுடைய ஶரீரம் கட்டுக்குலைந்தும் முறிந்தும் வேறாகப்பிளந்து ஸ்வரூபமுங் காணவொண்ணாதபடி மாய்ந்துபோம்படி திருவடியை ஆளுகையாலே ஜகத்துக்குடைய ஸ்வாமியானவனே! [கிளர்ந்து பிரமனென்று மேலுக்கு] - ஐஶ்வர்யங்களாலே அந்யபரரான ப்ரஹ்மாதி தேவர்களெல்லாம் பெரிய கிளர்த்தியோடே வந்துசூழ்ந்து ஜயஸ்துதிபண்ண ஆகாஶமெல்லாம் அழகுவெள்ளமிடும்படி ஒருநாள் இங்கேவந்து தோற்றியருளவேணும்.

ப.—அநந்தரம், ப்ரபலமான சகடாசுரனைநிரஸித்த நீ, வருகைக்கு விரோதியுண்டாகிலும் அத்தைப்போக்கி நான் காணும்படி வரவேணு மென்கிறார்.

சகடவசுரர் - சகடாசுரனுடைய, உடல் - உடலானது, தளர்ந்தும் - கோப்புக் குலைந்தும், முறிந்தும் - நடுவேமுறிந்தும், வேறு - வேறும்படி, பிளந்து - பிளந்து, வீய - உருமாயும்படியாக, திருக்கால் - திருவடியை, ஆண்ட - காரியங்கொண்ட, பெருமானே - ஸ்வாமியானவனே! கிளர்ந்து - (தங்கள் ஈஶ்வராபிமாநத்தைப்போகட்டு ஸாதரமாக)உத்யுக்தராய், பிரமன் - ப்ரஹ்மாவும், சிவன் - ருத்ரனும், இந்திரன் - இந்த்ரனும், விண்ணவர் - தேவர்களும், சூழ - சூழ்ந்துசேவிக்க, விளங்க - (அவர்களுக்கு நாயகனான) ஔஜ்ஜ்வல்யந்தோன்றும்படி, (ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்கு வந்தாற்போலே), ஒருநாள் -, விண்மீது - ஆகாசத்தின்மேலே, காண - கண்ணுக்குத் தோற்றும்படி, வாராய் - வரவேணும்.

இ.—நாலாம்பாட்டில், "நாம் வரநினைத்தாலும் ப்ரபலப்ரதிபந்தகங்கள் உண்டே?" என்ன, ஶகடாஸுரனிலும் வலிதோ என்ப்ரதிபந்தகம்? என்கிறார்.

[தளர்ந்தும் இத்யாதி] - 'சகடவசுரருடல் - தளர்ந்தும் முறிந்தும்' - ஶகடாஸுரனுடைய ஶரீரம் கட்டுக்குலைந்தும், 'ஊர்ஜம் ஸ்ஜம்' என்கிற க்ரமமன்றிக்கே ஒருகாலே முறிந்து: வேறும்படிபிளந்து உருமாய்ந்து போம்படி திருவடிகளை ஆண்டு ஶேஷியான உன்னைத்தந்தவனே. முலைவரவுதாழ்த்துத் திருவடிகளை நிமிர்க்கத் தாகளாய்ப்போயிற்று. பிள்ளைத்தனத்தாலே அவன் அகப்பட்டான். திருவடிகளின் அவயாநத்தாலே பிழைத்தவித்தனை. [கிளர்ந்து இத்யாதி] - ஈஶ்வராபிமானிகளான ப்ரஹ்மாதிகள் பெரிய கிளர்த்தியோடே ஜயஸ்துதிகளைப் பண்ணிக்கொண்டு சூழ்ந்து ஸேவிக்க. [விளங்க]- ஆகாஶாவகாஶமெல்லாம் அழகுவெள்ளமிட என்னுதல்; ஆதித்யஸகாஶத்தில் நக்ஷத்ராதிகள்போலே அவர்கள் ஒளி கீழ்ப்படவென்னுதல். [ஒருநாள்] - ஆனைக்கு வந்துதோற்றினாற்போலே ஒருநாள் வந்தருளவேணும்.

ஈடு.—நாலாம்பாட்டு. 'தளரக்கடவீரல்லீர்; உம்முடையதளர்த்தி பரிஹரிக்கக் கடவோமாகிலும் ப்ரதிபந்தகம் கனத்திராநின்றதுகாணும்' என்ன; 'ஓம், அப்படியே:சகடாசுரனிலுங்காட்டில் வலியதிறே என்னுடையவிரோயி?' என்கிறார். 'உன் கால்கண்டபோதே போகாதோ' என்கிறார். "அடிபடிற் செய்வதேன் ?" என்று * சும்மெனாதே கைவிட்டோடுமிறே.

[தளர்ந்தும்இத்யாதி] - சகடாசுரன் கட்டுக்குலையா, முறியா, உடல் வேறாகப் பிளந்துவீய; "[illegible]" (சிங்கம்பிங் நம்மாரைர்தக்தம் ப்ரபக்நம்ஸஸ்த்ரபீடிதம்) என்கிறபடியே. பின்பு, துகளுங்காணவொண்ணாதபடியாகை. சகடாசுரநிரஸநம்பண்ணினானென்று திரளச்சொல்லவமைந்திருக்க, 'தளர்ந்தும்', 'முறிந்தும்' என்று தனித்தனியே சொல்லுகிறாரிறே, ப்ரதிபக்ஷநிரஸநமாகையாலே அவ்வோவவஸ்த்தைகள் தமக்குஇனிதாயிருக்கையாலே. [திருக்காலாண்ட] - அடியாரையாண்டால் ஆபத்துக்கு உதவுவர்களிறே. இவன் மௌக்த்யத்தாலே யொன்றுமறியாதே கிடக்க. திருவடிகள் கிடீர் நம்மை நோக்கிற்று! என்கிறார். 'ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ' (ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ) - என்கிறபடியே முலைவரவுதாழ்த்தவாறே அனந்தலிலே திருவடிகளை நிமிர்த்தான்; அவ்வளவிலே போடிபட்டவித்தனை: "உருளச்சகடமதுறக்கில் நிமிர்த்தீர்" என்று இவனும் அறிந்துசெய்தானல்லன். தன்னையுணர்ந்து பரிமாறும்போது திவ்யாயுதமும், அவையுதவாதபோது கையும், அதுவும்உதவாதபோது திருவடிகளுமாயிருக்கிறபடி. நம்முடைய ஆபத்துக்களுக்கே யன்றிக்கே, அவனுடைய ஆபத்துக்கும் திருவடி

நாலாம்பாட்டு.—தளர்ந்தும் இத்யாதி. "தளர்ந்தும்முறிந்தும்சகடவசுரர்" இத்யாதியைக் கடாக்ஷித்தவதாரிகை - தளரக்கடவீரல்லீர் இத்யாதி. 'ஓம், அப்படியே' இத்யாதிவாக்யத்துக்கு ஹாவம்-சகடாசுரனைநிரசித்தஉனக்கு என்ப்ரதிபந்தகத்தைப் போக்குகையில்அருமையுண்டோ? என்று. "திருக்காலாண்டபெருமான்" என்றத்தைக்கடாக்ஷித்து ரஸோக்தி - உன்கால்கண்ட இத்யாதிவாக்யத்வயம். கால் - காற்றும், திருவடிகளும். அடிபடில் - திருவடிகள்படில் என்று ஸ்வஹாவார்த்தம். சும்மெனாதே - மூச்சுவிடாதே.

குலையா - குலைந்து. முறியா - முறிந்து. இம்மூன்றுக்கும் ப்ரமாணம் - [illegible] † இத்யாதி. "வீய" என்றதுக்கர்த்தம் - பின்பு துகளும் இத்யாதி. திருக்காலாலேயழிக்கவென்னாதே, "திருக்காலையாண்ட" என்றதுக்கு ரஸோக்தி - அடியாரை இத்யாதி. ஈஶ்வரன்நிரஸிக்க, திருவடிகள்நிரஸித்ததென்கிறதென் ? என்ன - இவன்மௌக்த்யத்தாலே இத்யாதி. உக்தார்த்தத்துக்குப்ரமாணம் - ஸ்தந்யார்த்தி இத்யாதி. "[illegible] ஸ்தந்யார்த்தீப்ரருரோதஹ । [illegible]" இதி பஞ்சமேம்ஶேஷஷ்டே. அனந்தலிலே திருவடிகளைநிமிர்த்ததுக்கு ப்ரமாணம் - உருளச்சகடம் இத்யாதி. திருமொழிபத்தாம்பத்து எட்டாந்திருமொழிமூன்றாம்பாட்டு— "கருளக்கொடி" இத்யாதி. சகடமது - சகடமானது, உருள-முறியும்படி, உறக்கில் - உறக்கத்திலே, நித்ராஸமயத்திலே, நிமிர்த்தீர் - திருவடிகளைநிமிர்த்தீரென்றபடி. திவ்யாயுதங்களிருக்கத் திருவடிகளாலேநிரஸிக்கிறதென் ? என்ன - தன்னையுணர்ந்து இத்யாதி. கையுமென்றது - ‡"[illegible]" என்றத்தைப்பற்ற. திருவடிகளுதவுவது நம்முடையஆபத்துக்கன்றோ ? என்ன - நம்முடைய இத்யாதி. "திருக்காலாண்ட" என்றதுக்கு ஹலிதமாதல். அவன் திருமேனிக்கு வந்த ஆபத்தைப்போக்குகையாலே அவனுடைய ஆபந்நிவ்ருத்திக்கு உறுப்பாகிறது; ஆஶ்ரிதவிரோதியைப்போக்

† [ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் 94, 22.] ‡ ஸ்ரீவிஷ்ணுபுராணம் 5, 16, 14.

களேகாணும் உதவுவது! திருமேனிதான் ஆஸ்ரிதார்த்தமாகையாலே, அவர்கள் விரோதி போகைக்கும் அதுதானே யுறுப்பாயிருக்கை. [பெருமானே] - அன்று ஶேஷியையுண்டாக்கினஉனக்குஇன்று ஶேஷவஸ்துவை உண்டாக்குகை பெரியபணியோ? அவன் ப்ரகாரியானல், ப்ரகாரமாயுண்டாமதிறே யிது. [கிளர்ந்துஇத்யாதி] - "கும்பிடுநட்டமிட்டாடி" என்கிறபடியே அநந்யப்ரயோஜநரைப்போலே, அவஸராய்க்கொண்டு ப்ரஹ்மருத்ராதிகள், ப்ரதாநரோடுஅப்ரதாநரோடு வாசியறக் கிண்ணகம்சுழித்தாற்போலேசூழச் சூழப்பட்டு, இருட்டில் விளக்குப்போலே "தேஜஸாம் ராஶிமூர்ஜிதம்" (தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்) என்கிறபடியே தேஜஸ்ஸேவடிவான திருமேனியைக்கொண்டு, ஒருநாள் ஆனைக்குவந்து தோற்றினாற்போலே, ஆகாசமடங்கலும் இடமடைக்கும்படி வந்துதோற்றவேணுமென்கிறார். [விளங்க] - இவன் ஸந்நிதியில் ப்ரஹ்மாதிகள் தேஜஸ்ஸு "தமஸ்ஸு" என்னும்படி யிருக்கிறபடி. [ஒருநாள்] - "நூறாண்டு, பதினோராயிரமாண்டு" என்றுஅர்த்தித்தேனே! [காணவாராய்] - * நீணகர்நீளெரிவைத்தருளாயென்கிறேனே ! [விண்மீதே] - இங்கே வந்தவதரிக்கச் சொல்லுகிறேனே !

(ச)

---

## ஐந்தாம் பாட்டு.

---

விண்மீதிருப்பாய்!மலைமேல்நிற்பாய்!கடற்சேர்ப்பாய்!
மண்மீதுழல்வாய்!இவற்றுள் எங்கும்மறைந்துறைவாய்!
எண்மீதியன்றபுறவண்டத்தாய்!எனதாவி
உள்மீதாடிஉருக்காட்டாதேயொளிப்பாயோ?

ஆ.—(விண்மீது.) - திருநாட்டிலும் திருமலையிலும் திருப்பாற்கடலிலும் மற்றும் பூமியிலுள்ள திருநகரிகளிலும், இவற்றிலும் அண்டாந்தர்வர்த்திகளான ஸ்தாவரஜங்கமாத்மக ஸர்வவஸ்துக்களிலும், அஸங்க்யேயமான அண்டாந்தரங்களிலுள்ளும், என்னாத்மாவினுள்ளும் எங்கும் ஆஸ்ரிதார்த்தமாக ஸந்நிஹிதனாயிருந்துவைத்து, எனக்கொருத்தனுக்கும் உன்திருவடிவைக் காட்டாதொளிக்கலாமோ பார்த்தருளிற்றென்கிறார்.

---

கினபடியெங்ஙனே? என்ன - திருமேனிதான் இத்யாதி. அதாவது - திருமேனி ஆஶ்ரித ஸ்வம்மாகையாலே, அத்திருமேனிக்குவந்த ஆபத்தைப் போக்குகையே ஆஶ்ரிதர்ஆபத்தைப்போக்குகையென்றபடி. "பெருமான்" என்றதுக்கு பாவம் - அன்றுஶேஷியை இத்யாதி. சகடாசுரனுடைய சரீரமான தட்டுக்குலைந்து முறிந்துவேறும்படி பிளந்தருமாய்ந்துபோம்படி திருவடிகளையாண்டசேஷியானவனேயென்று ஶப்தார்த்தம். அப்படி பெரியபணியில்லையோ? என்ன - அவன்ப்ரகாரியானல் இத்யாதி. உத்தரார்த்தத்துக்குஶப்தார்த்தம்- கும்பிடுநட்டமிட்டு இத்யாதி. இவனை - "விளங்க" என்கையாலே- ப்ரஹ்மாதிகள் தேஜஸ்ஸு 'தமஸ்ஸு'என்றுஸித்தம். கிளர்ந்து - ஸாதரோத்யுக்தராய். "சுவ - ஙிவ - ஙிவஸம்ஸாநம் தெஜஸாம் ராஶிமூர்ஜிதம்" இதி ப்ரதமேம்ஶே நவமே. க்ரமேணைக்வயுக். 'நீணகர்நீளெரிவைத்தருளாய்'-பெரியநகரமானலங்கையிலே யுண்டுவளரும்படி அக்நியைப்ரக்ஷேபிக்கவேணுமென்றர்த்தித்தென்றபடி. திருவிருத்தம், தொண்ணூற்றிரண்டாம்பாட்டு - "பேணலம்" இத்யாதி.

(ச)

---

ஓ.—அஞ்சாம்பாட்டில், ஸர்வத்ரஸந்நிஹிதனுய், ஹ்ருதயத்திலும் ஸ்பஷ்டதரமாக ப்ரகாஶியாநின்று வைத்து, என் கண்ணுக்கு விஷயமாகத் தோழிந்தால் நான் தரிக்கவல்லேனே? என்கிறுர்.

[விண்ணென்று தொடங்கி] - திருநாட்டிலே பேரோலக்கமாகவிருந்து திருநாட்டிலுள்ளாரும் ஸம்ஸாரத்திலுள்ளாரும் ஒக்கஅநுபவிக்கலாம்படி திருமலையிலே நின்றருளி திருப்பாற்கடலிலே தேவாதிகளுக்கு ஸமாஶ்ரயணீயனுய் வந்து கண்வளர்வதுஞ் செய்து ஆஶ்ரிதார்த்தமாக ஸம்ஸாரத்தில் வந்து திருவவதாரம் பண்ணி உலாவியருளுமவனே! [இவற்றுளெங்கும் மறைந்துறைவாய்]-ஸகலபதார்த்தங்களினுள்ளும் அவற்றினுடைய ஹிதார்த்தமாகத் தெரியாதபடி ஆத்மதயா நிற்குமவனே! [எண்மீதியன்ற புறவண்டத்தாய்]-அஸங்க்யேயமான பாஹ்யாண்டங்களிலும் உள்ளவனே! [எனதாவியுள் மீதாடி]- என் உள்ளே மிகவும் பரகாஶித்து வைத்தே.

ப.—அநந்தரம், பரத்வாத்யவஸ்தா பஞ்சகத்தாலும் ஆஶ்ரிதரையநுபவிப்பிக்கிற நீ, என்னெஞ்சிலே ப்ரகாசிப்பித்து உன்வடிவைக்காட்டாதே மறைக்கலாமோ? என்கிறுர்.

(நித்யாஶ்ரிதர்க்கநுபாவ்யனுய்க்கொண்டு), விண்மீது-(மேன்மைக்கெல்லையான) பரமபதத்திலே,இருப்பாய் - (ஸர்வஸ்மாத்பரனுய்க்கொண்டு) இருக்குமவனுய்,(தாழ்ந்தார்க்குமுகங்கொடுக்கைக்காக), மலைமேல்-(நீர்மைக்கெல்லைநிலமான) திருமலையிலே, நிற்பாய்-(அர்ச்சாரூபேண)நிற்குமவனுய், (ப்ரஹ்மாதிகளுக்காஶ்ரயணீயனுகைக்காக), கடல்-திருப்பாற்கடலிலே, சேர்ப்பாய் - (அநிருத்தரூபேண வ்யூஹித்துக்)கண்வளர்ந்தருளுமவனுய், (அளவிலிகளானுரை அழகாலே வசீகரிக்கைக்காக ராமக்ருஷ்ணுதிவிபவரூபேண), மண்மீது - பூமியிலே அவதரித்து, உழல்வாய் - (அங்குள்ளாரோடு ஸஜாதியனுய்) ஸஞ்சரிக்குமவனுய், இவற்றுள் - இஜ்ஜகத்தில், எங்கும் - ஸமஸ்தபதார்த்தங்களிலும், மறைந்து - (அந்தராத்மபூதனுய்)இந்த்ரியகோசரனன்றியே, உறைவாய்-வர்த்திப்பானுய், எண் - ஸங்க்யைக்கு, மீது - மேலே, இயன்ற - போகக்கடவதான, புறம் - புறப்புண்டான, அண்டத்தாய் - அண்டங்களிலுமுளனுன நீ, எனது - என்னுடைய, ஆவியுள்-(ப்ராணுஶ்ரயமான) நெஞ்சுக்குள்ளே, மீதாடி - மிகவும் நடையாடிவிட்டு, உரு - வடிவை, காட்டாதே - கண்ணுக்கிலக்காக்காதே, ஒளிப்பாயோ - மறைக்கக்கடவையோ?

இ.—அஞ்சாம்பாட்டில், ஸர்வத்ரஸந்நிஹிதனுய் என் ஹ்ருதயத்திலும் ஸ்பஷ்டமாக ப்ரகாஶியாநின்றுவைத்து, என் கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தால் நான் தரிரேனே வென்கிறுர்.

[விண்மீது இத்யாதி] - பரமபதத்திலே நித்யஸூரிகளுக்கு அழகோலக்கங்கொடுத்துக் கொண்டிருக்கிறவனே! நித்யஸூரிகளுக்கும் ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க அநுபவிக்கலாம்படி திருமலையிலே நின்றருளினவனே! திருமலையில் நிலைபோலே ப்ரகாஶிக்கிறதாயிற்று, இவர்க்கு பரமபதத்திலிருப்பு. பரமபதத்தில் மேன்மையுமறியாதே, திருமலையில் நீர்மையுமறியாதேஇருக்கிற ப்ரஹ்மாதிகளுக்கு ஆஶ்ரயணீயனுகைக்கும்அநுபவிப்பிக்கைக்காகவும் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினவனே! அத்தனையளவில்லாத ஸம்ஸாரிகளுக்காக ஸஜாதீயனுய்வந்து அவதரித்து மார்விலே அம்பேற்று ஶோகமோஹங்களை அநுபவித்து ரக்ஷிக்குமவனே! காண்கையும் அஸஹ்யமாயிருப்பார்க்கு முகந்தோற்றுதபடி

நின்று ஸகலபதார்த்தங்களினுடைய ஸத்தையைநோக்கினவனே! அஸங்க்யேயமானவாஹ்யாண்டங்களுக்கும் இப்படி ரக்ஷகனானவனே! என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே மிகவும் ப்ரகாசித்து என்னுதல், அந்தர்பஹிஸ்ச்வர்த்தித்து என்னுதல். [உருக்காட்டாதே - ஒளிப்பாயோ] - "ஹஸ்தாநாம்" என்கிற வடிவை எனக்குக் காட்டாதே மறையாநின்றால் ஜீவிப்பனோ?

ஈடு.—அஞ்சாம்பாட்டு. ஸர்வத்ர ஸந்நிஹிதனாய் என்ஹ்ருதயத்திலும் ஸ்பஷ்டமாக ப்ரகாசித்துவைத்து, என்கண்ணுக்கு விஷயமாகாதொழிந்தால் நான் தளரேனோ? என்கிறார்.

[விண்மீதிருப்பாய்] - ஸதாதர்சநம்பண்ணும்படியான பாகம்பிறந்தவர்களுக்குக் காட்சிகொடுத்திருக்கும்படி. இவர்க்கு இங்குத்தையிற்காட்டிலும் பரமபதத்திலிருப்புக் காணும் முற்படத் தோற்றுகிறது. [மலைமேல்நிற்பாய்] - நித்யஸூரிகளையும் நித்யஸம்ஸாரிகளையும் ஒருதுறையிலே நீருண்ணப்பண்ணுகிறவிடம். இங்குள்ளாரும்தன்னிலையில் வாசியறியும்படி ருசிஜநகனாய்நின்றபடி. *வேங்கடத்தாடு கூத்தனிறே. [கடற்சேர்ப்பாய்] - கால்நடைதந்துபோகவல்ல ப்ரஹ்மருத்ராதிகளுக்காகத் திருப்பாற்கடலிலே வந்துசாய்ந்தபடி. விண்மீதிருப்பாயென்று - இருப்பில்வீறுசொன்னார்; மலைமேல்நிற்பாயென்று - நிலையில்வாசிசொன்னார்; [கடற்சேர்ப்பாய்] - கிடையழகு திருப்பாற்கடலிலே பர்யவஸிதம். [மண்மீதுழல்வாய்] - அவ்வளவுபோகமாட்டாத ஸம்ஸாரிகளுக்காகஅவதரித்து, அவர்கள் கண்வட்டத்திலேதிரியுமவனே! [உழல்வாய்] - "தாம்பாலாப்புண்டாலும் அத்தழும்புதானிளக்ப் பாம்பால் ஆப்புண்டுபாடற்றாலும்' என்கிறபடியே அநுகூலராய்க்கட்டுவாரும் ப்ரதிகூலராய்க்கட்டுவோருமான ஸம்ஸாரமிறே. [இவற்றுளேங்கும்மறைந்துறைவாய்] - கண்ணாலே காணில் சிவிட்கென்னுமவர்களுக்கு, அவர்கள்காணவொண்ணாதபடி மறைந்துவர்த்திக்குமவனே! விஷயப்ரவணமான ப்ரஜை "தாய்முகத்திலேவிழியேன்" என்றால், தான்மறைய

---

அஞ்சாம்பாட்டு —விண்மீது இத்யாதி. "உருக்காட்டாதேயொளிப்பாயோ" என்னுமளவும் கடாக்ஷித்தவதாரிகை - ஸர்வத்ர இத்யாதி.

தாத்பர்யம்-ஸதாதர்சநம் இத்யாதி. இங்கே ஸந்நிஹிதமான அர்ச்சாவதாரத்தைத்தொடங்கியருளிச்செய்யாதே முற்பட "விண்மீதிருப்பாய்" என்கிறதென்? என்ன - இவர்க்கு இத்யாதி. "மலை" என்றதுக்கு பாவம்-நித்யஸூரிகளையும் இத்யாதி. "நிற்பாய்" என்றதுக்கு பாவம் - இங்குள்ளாரும் இத்யாதி. இந்நிலை ருசிஜநகமோ? என்ன - வேங்கடத்து இத்யாதி. திருமலையிலே நின்றருளினவனுக்கு திருவேங்கடமுடையான் நின்றருளினநிலை வல்லார் ஆடினாற்போலேயிருக்கையாலே - ஆடுகூத்தனுக்கென்கிறதென்றபடி. திருமொழி இரண்டாம்பத்து முதற்றிருமொழி - "கூடியாடி" இத்யாதி. "இருப்பாய், நிற்பாய், கடல்சேர்ப்பாய்" என்றதுக்கு பாவம் - விண்மீதிருப்பாய் என்று இத்யாதி. விஹவரூபஸஞ்சாரத்தை - திரிவாயென்னுதே, "உழல்வாய்" என்று - து:கரூபஸஞ்சாரமாகச்சொல்லலாமோ? என்ன - தாம்பால் இத்யாதி. "வெண்ணெய்களவுகண்டான்" என்று யசோதை தாம்பாலே கட்டக் கட்டுண்டாலும், அத்தழும்புதான் அத்யாபாஸமென்னும்படி ப்ரதிகூலனான காளியனாலேகட்டுண்டு து:கப்பட்டாலுமென்று ஸப்தார்த்தம். பெரியதிருவந்தாதி பதினெட்டாம்பாட்டு. இளக - இரட்டிக்கும்படியாகவென்றமாம். பாடற்றாலும் - து:கப்பட்டாலும். ஆக, இத்தால் அநுகூலையான யசோதை, ப்ரதிகூலனானகாளியனென்கிறஇருவராலும் இவனுக்குதுக்கமேயாகையாலே - "உழல்வாய்" என்றுவிசேஷிக்கிறதென்றபடி. "மறைந்து" என்றதுக்குவாஸநை-கண்ணாலேகாணில் இத்யாதி. சிவிட்கென்னும்-கோபிக்கும்; அசூயைப்படுமென்றுமாம். "மறைந்துவர்த்திக்கையுபகாரம்" என்னுமத்தை லௌகிகத்ருஷ்டாந்தத்தாலேதர்சிப்பிக்கிறார் - விஷயப்ராவண

நின்று அவனுகந்தாரையிட்டு ரக்ஷிக்குந் தாயைப்போலே. அதாகிறது - சிசுபாலாதிகள் நறுகுமுறுகுஎன்றால், அவர்கள்கண்ணுக்குத்தோற்றாதபடி அந்தர்யாமியாய்நின்று நோக்கும்படி. [எண் மீதியன்ற புறவண்டத்தாய்] - எண்ணுக்குமேலேவர்த்திக்கிற மற்றுள்ளவண்டங்களிலும்இப்படி வர்த்திக்கிறவனே! "கொடிகொடிஶதாநிச" (கோடிகோடிசதாநிச) இறே. [எனதாவி யுள்மீதாடி] - என்ஹ்ருதயத்தினுள்ளே குறைவற ஸஞ்சரித்தென்னுதல், என்னாத்மாவுக்குள்ளும் புறம்பும் ஸஞ்சரித்தேன்னுதல். [உருக்காட்டாதே யொளிப்பாயோ] - வடிவுகாணப்பெறாவிட்டால், மறந்துபிழைக்கவும்பெறாதொழிவதே. குணஜ்ஞாநத்தாலே தரிப்பார்க்கன்றோ வடிவுகாணாதொழிந்தாலும் தரிக்கலாவது? (ரு)

---

## ஆறும் பாட்டு.

---

பாயோரடிவைத்து அதன்கீழ்ப்பரவைநிலமெல்லாம்
தாய் ஓரடியால் எல்லாவுலகுந்தடவந்த
மாயோன்! உன்னைக்காண்பான்வருந்தியெனைநாளும்
தீயோடுடன்சேர்மெழுகாய் உலகிற்றிரிவேனோ?

**ஆ.**—(பாயோரடிவைத்து) - என்னை யுன்திருவடிகளிலே சேர்க்கவேணுமென்று, லோகவிக்ரமணவ்யாஜத்தாலே, விலையில்லாததொரு பதார்த்தங்கெடுத்துத் தேடுவாரைப்போலே பெரிய வருத்தத்தோடே உன் திருவடியாலே என்னைத் தேடிக்கொண்டு திரிந்தஉன்னை நான் காணவேணுமென்று ஆசைப்பட்டு* "எங்குற்றாய் எம்பெருமான்!" என்று வருந்தித் தேடிக்காணப்பெறாதே, மோகாக்நியாலே தீயோடுடன்சேர்மெழுகுபோலே ஈஹ்யமாநனாய் இவ்வுலகத்திலே நான் உள்ளதனையும் திரியுமத்தனையோ? என்கிறார்.

ஓ.— ஆறும்பாட்டில், "காண்கைக்கு இவர்தாம் அயோக்யர்" என்று உபேக்ஷித்தருளினாகக்கொண்டு, யோக்யாயோக்யதைபாராதே லோகத்தையெல்லாம் அளந்துகொண்ட உன்னால் இழக்கப்படுவாருண்டோ? என்கிறார். [பாயோரடியென்று தொடங்கி] - ஓர் அடியைப் பரம்பவைத்து அவ்வடிக்கீழேயாம்படி கடலோடுகூடின நிலத்தையெல்லாம் அநாயாஸேந கடந்து மற்றையொருஅடியாலே எல்லாலோகங்களும்

மான் இத்யாதி. த்ருஷ்டாந்த விஸ்தாரத்தை தார்ஷ்டாந்திகத்திலே காட்டுகிறார் - அதாயாதி. நறுகுமுறுகு - பொறாமை; ஶப்தாநுகாரம். இப்படிவர்த்திக்கிறவனே - பரத்வாதிபஞ்சப்ரகாரனாய்க்கொண்டுவர்த்திக்கிறவனேயென்றபடி. அண்டங்கள் அநந்தங்களோ? என்ன, ப்ரமாணம் - கொடிகொடிஇத்யாதி "ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராணாம் ஸஹஸ்ராண்யயுதாநிச । ஈத்ருஶாநாம் ததாத்ரா கொடிகொடிஶதாநிச" இதித் த்விதீயேம்ஶே. [எ-உஎ] முந்தினவர்த்தத்துக்கு, "மீது" என்று - மிகுதியாய், குறைவறுதிலைச்சொல்லுகிறது; த்விதீயார்த்தத்துக்கு, "மீது" என்று -மேலாய், புறம்பென்றபடி. "ஆவியுள்மீதாடி" என்றதுக்குவாஸனை - மறந்துபிழைக்கவும் இத்யாதி. வடிவுகாணாவிட்டால் குணநுஸந்தாநத்தாலே தரிக்கவொண்ணாதோ? என்ன, குணஜ்ஞாநத்தாலே இத்யாதி. இப்பாட்டில் - பரத்வாதிபஞ்சகத்தையுஞ் சொல்லுகிறது. (ரு)

உஜ்ஜீவிக்கும்படி தடவின ஆஸ்சர்யபூதனே! [உன்னையென்று தொடங்கி] - இப்படி ஸுலபனான உன்னைக் காணவேணுமென்று நெருப்பிலேபட்ட மெழுகுபோலே நோவுபட்டு முடியவும்பெறுதே திரிவேனே?

ப.—அநந்தரம், போக்யாபோக்யவிபாகமில்லாதபடி அசேஷ ஸம்ஸ்லேஷ ஸ்வபாவனான உன்னைக்காணவேணுமென்று, அக்நிஸகாஸத்தில் மெழுகுபோலே ஶிதிலனாய்த் திரியக்கடவேனே என்கிறார்.

ஓர்-ஒரு, அடி - திருவடியை, பாய் - பரப்பி, வைத்து - வைத்து, அதன்கீழ் - அதின் கீழேயாம்படி, பரவை - ஸமுத்ரையான, நிலமெல்லாம் - ஸகல பூமியையும், தாய் - தாவி, ஓர்-மற்றையொரு, அடியால் - திருவடியாலே, உலகு - ஊர்த்வலோகம், எல்லாம் - எல்லாவற்றையும், தடவந்த - மேலேதடாவின, மாயோன் - ஆஸ்சர்ய பூதனே! உன்னை - உன்னை, காண்பான் - காணவேணுமென்று, எனை நாளும் - எல்லாக் காலத்திலும், வருந்தி - க்லேசித்து, தீயோடு - தீயோடே, உடன்-கிட்ட, சேர்-சேர்ந்த, மெழுகாய் - மெழுகின் ஸ்வபாவத்தையுடையேனாய், உலகில் - நாட்டிலே, திரிவேனோ - (முடியவும்பெறுதே ஸ்திரமாயிருக்கவும்பெறுதே) அலமாக்கக்கடவேனோ? தடவருதல் - உள்ளேவளைத்துக்கொள்ளுதலுமாம்.

இ.—ஆறும்பாட்டில், 'காண்கைக்குத் தாம்அயோக்யர்' என்று உபேக்ஷித் தானாக நினைத்து, போக்யாயோக்யதை பாராதே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்த உன்னால் இழக்கப்படுவார் உண்டோ? என்கிறார்.

[பாயோரடிவைத்து] - ஓரடியை, பாய்வைத்து - பரம்பவைத்து, [அதன்கீழ் பரவை நிலமெல்லாந்தாய்] - அத்திருவடியின்கீழே கடல்சூழ்ந்த பூமியையெல்லாம் அளந்துகொண்டு. [ஓரடியால்] - மற்றை ஓரடியால். [எல்லாவுலகுந்தடவந்த] - ஸகல லோகங்களையும் ஸ்பர்ஸித்த; தடவந்த - தடவின. தென்றல்பட்டாற்போலே உஜ்ஜீவிக் கும்படி இருக்கை. [மாயன்] - ஆஸ்சர்யபூதனே! இதெல்லாம் தன்பேறுகச்செய்த வ்யாமோஹத்தை யுடையவனென்கை. [உன்னைக்காண்பான் வருந்தி] - என்னைக் கிட்டுகைக்கு வருந்தித்திரிந்த உன்னைக் காணவேணுமென்று நான் வருந்தி; அத்தலை யித்தலையாய். [எனைநாளும்] - அநேககாலமும். ஒருநாள் என்னுசையை ஆவிஷ்கரித்து விட்டேனோ? [தீயோடுடன்சேர் மெழுகாய்] - அக்நிஸகாஸத்தில் மெழுகுபோலே தூரவிருந்து அழியாதிருத்தல், அக்நியிலேபுக்கு நஶித்தல்செய்யப்பெறுதே யிருக்கை. நசையின் ஸ்வபாவத்தாலும் விஷயஸ்வபாவத்தாலும் ஶைதில்யம் நித்யமாயிருக்கை. [உலகிற்றிரிவேனோ] - ஜீவிக்கவும்பெறுதே முடியவும்பெறுதே, யாதநாஶரீரம்போலே குளிர்ந்த வழியில்லாத தேசத்தே எத்தனைநாள் தட்டித்திரியக்கடவேன்?

ஈடு.—ஆறும்பாட்டு 'உம்முடைய அபேக்ஷிதம் செய்யக்கடவோம். அதில் ஒரு குறையில்லை; ஆனாலும், ப்ரயோஜநம் உம்மதானபின்பு நீரும் சிலயத்நம்பண்ண வேணுங்காணும்' என்ன; இந்தமர்யாதை என்றதோடங்கிக்கட்டிற்று என்கிறார். அன்

ஆறும்பாட்டு.—பாயோர் இத்யாதி இப்போது தாம் அவனைப்பெறுதே கூப்பிடுகிற இவர் "பாயோரடி" இத்யாதியாலே - திருவுலகளந்தருளின அபதானஞ் சொல்லுகிறதுக்கு அநுகுணமாக ஸங்கதி - உம்முடைய இத்யாதி:

றியே, காண்கைக்குத் தாம்அயோக்யர்என்று உபேக்ஷித்தானுகனைத்து, யோக்யதாயோக்யதை பாராதே எல்லார்தலையிலும் திருவடிகளை வைத்த உன்னாலேயிழக்கப்படுவார் உண்டோ? என்கிறாராகவுமாம்.

[பாயோரடிவைத்து] - சேதநர்தலையிலே திருவடிகளைவைக்கிறபோது, அவர்கள் எவ்வளவு வருந்தினார்கள்? வஸிஷ்ட சண்டாள விபாகம்பாராதே வெறும்உன்க்ருபையாலே செய்தருளினாய் அத்தனையன்றோ! [பாயோரடிவைத்து]-ஓரடியைப் பாவிவைத்து. [அதன்கீழ்] - அத்திருவடியின்கீழே. [பரவைநிலமெல்லாம்தாய்] - கடல்சூழ்ந்தபூமிப்பரப்படங்கலும், தாவி - அளந்தேன்றபடி. ஸங்கல்பத்தாலே செய்தானல்லனே, திருவடிகளைப் பரப்பிப் பின்பிறே யளந்துகொண்டது * பரக்கவைத்து அளந்துகொண்ட பற்பபாதனிறே! [ஓரடியாலெல்லாவுலகுந்தடவந்த] - மற்றைத்திருவடியாலே ப்ரஹ்ம லோகத்தளவும் சென்று ஸ்பர்சித்த. [எல்லாவுலகும்] - நடுவுள்ள லோகங்களெல்லாம். [தடவந்த] - தென்றல் உலாவினாற்போலே. [மாயோன்] - தன்னுடைமையைஸ்பர்சிக்கைக்குத் தான் வ்யாமோஹம்பண்ணுமவன். [உன்னைக்காண்பான் வருந்தி] - என்னளவில் வந்தவாறே என்னை இரப்பாளனுக்குகிறாயோ? அந்தலையித்தலையாயிற்றே? [எனைநாளும்] - அநேககாலம். * மயர்வறமதிநலமருளியபின்பு ப்ராப்தியளவும்செல்ல இடையிலுண்டான நாலு நாளும், * அவனெதிர்சூழல்புக்குத் திரிந்த நாளோபாதி பரப்பாய்த் தோற்றுகிறபடி. [தீயோடுடன்சேர்மெழுகாய்] - அக்நியிலேப்ரவேசித்துக் கரிந்துபோகவும்பெறாதே, தூரவிருந்து அழியாதிருக்கவும்பெறாதே, உருகுவது வலிப்பதாகிறபடி. மாநஸாநுபவத்தாலே யுருகுவது வலிப்பது,பாஹ்யஸம்ஶ்லேஷம்பெறாமையாலே உருகுவது வலிப்பதாய்ச்செல்லுகிறபடி. நசைவலிக்கப்பண்ண, ஆசையுருகப்பண்ணச்செல்லுகிறபடி. [உலகில்திரிவேனோ] - ஒன்றில்ஜீவித்தல், ஒன்றில்முடிதல்செய்யப்பெறாதே, குளிர்ந்தவழியில்லாததேசத்திலே யாதநாஶரீரம்போலே நானொருவன் இங்ஙனேதிரிவதே! (௬)

"பாயோரடிவைத்து" என்றதுக்கு ஹார்த்தபாவம் - சேதநர் இத்யாதி. எவ்வளவுவருந்தினார்களென்றது - எந்த ஸாதநாநுஷ்டாநம்பண்ணி ப்ரயாசப்பட்டார்களென்றபடி. "எல்லாம்" என்றதுக்குபாவம்-வஸிஷ்ட இத்யாதி. பாவிவைத்து-பரப்பிவைத்து. பரவைநிலமெல்லாம்தாயென்னாதே, "பரப்பிவைத்து" என்றுவிசேஷித்ததுக்குபாவம் - ஸங்கல்பத்தாலே இத்யாதி. அதாவது - பத்தும்பத்தாகச் செய்தானென்கைக்காக விசேஷிக்கிறதென்றபடி "பரப்பியளந்துகொண்டு" என்றதுக்கு ப்ரமாணம் - பரக்கவைத்து இத்யாதி. திருச்சந்தவிருத்தம் - "குரக்கினப்படை" இத்யாதி; ஸ்பஷ்டோர்த்த:. பற்பம் - பத்மம். தடவந்த - தடவின. தடவினஎன்கையாலே - ஸ்வஸ்பர்ஶத்வம் தோற்றுகிறது. நடுவுள்ளவென்றது - பூமிக்கும் அண்டகபாலத்துக்கும் நடுவுள்ளவென்றபடி- "தடவந்த" என்றதுக்குபாவம் - தென்றல் இத்யாதி. உத்தரார்த்தத்தில் தம்முடைய ஆர்த்தியைச் சொல்லுகிறதுக்குபாவம்-என்னளவில் இத்யாதிவாக்யத்வயம். அல்பகாலமன்றோ எழுந்தருளியிருந்தது. "எனைநாளும்" என்கிறதென்? என்ன - மயர்வற இத்யாதி. விஶ்லேஷ வ்யஸநமயாலே பரப்பாய்த்தோற்றுகிறதென்றபடி. "உடன்" - சமீபம். தீயோடுசேரென்னாதே, "உடன்சேர்" என்றதுக்குபாவம் - அக்நியிலே இத்யாதி. "உருகுவது வலிப்பது" என்றத்தைவிவரிக்கிறார் - மாநஸாநுபவத்தாலே இத்யாதி. அதாவது - ஒருகுணத்தை மாநஸமாக அநுபவித்தால் அது குணாந்தரத்திலே ஆசையைப் பிறப்பிக்கும்; அப்போதே அக்குணாநுபவம் பெறாமையாலே உருகுவது; அது லபித்தவாறே தரிப்பதென்றபடி. விக்ரஹபாஹ்ய ஸம்ஶ்லேஷம் பெறாமையாலுண்டான ஆசையாலேயுருகுவது. "ஒருகால்காணலாமோ" என்னும் நசையைவிளைத்து விக்ரஹவைலக்ஷண்யம் முடியவொட்டாமைபாலேவலிப்பதென்றபடி. விவரணம் - நசை இத்யாதி. நசையாவது - கிடைக்குமோ என்னுஞ்சாபலம். ஆசையாவது - அநுபவாலாபத்தில் தரியாமையைவிளைக்கும் அபிநிவேஶம். (௬)

## ஏழாம் பாட்டு.

உலகில்திரியுங்கருமகதியாய் உலகமாய்
உலகுக்கேயோராயிருமானாய் ! புறவண்டத்து
அலகில்பொலிந்த திசைபத்தாயஅருவேயோ
அலகில்பொலிந்த அறிவிலேனுக்கருளாயே.

ஆ.—(உலகில்திரியும்) - ஸ்வாமிமதபுருஷார்த்த ஸாதநத்வேந அநுஷ்டேயமாநமாயிருந்த யாகாதி ஸர்வக்ரியைகளும், அந்தக்ரியாநுஷ்டாநாநுகுணமான லோகமும், அந்தலோகத்திலே வர்த்தமாநராய் க்ரியாநுஷ்டாதாக்களான ஆத்மாக்களும், அண்டாத்பஹிர்வர்த்தமாநராய் கர்மஹிரஸங்குசித ஜ்ஞாநராய் அஸங்க்யேயராயிருந்த முக்தாத்மாக்களும், இதெல்லாம்உன்ஸங்கல்பாயத்தமன்றோ? ஆதலால், என்னாலொரு செயலில்லை; த்வதீயஸ்வரூபோபாய விஷயஜ்ஞாந மொன்றுமின்றியேயிருக்கிற எனக்கு உன்னுடைய நிரவதிகக்ருபையாலே உன்னைக்காட்டியருளாய்! என்கிறார்.

ஒ.—ஏழாம்பாட்டில், "நீரும் சிறிது யத்நம் பண்ணவேணுங்காணும்" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, எல்லாரையும் ரக்ஷிக்கக்கடவையாக ஸங்கல்பித்திருக்கிற உன்னுடைய ஸங்கல்பத்துக்கு நான்புறம்போ? என்கிறார் [உலகில் என்று தொடங்கி]- லோகத்துக்கு புருஷார்த்தாத்யுபாயமாய்க்கொண்டு லோகத்தில் பரிமாறுகிற புண்யபாபரூபக்ரியைகளுக்கும் விலக்ஷணரான கர்மாநுஷ்டாதாக்களுக்கும் நிர்வாஹகனானவனே! இருந்ததே குடியாக எல்லார்க்கும் ஆத்மதயாநின்று நிர்வஹிக்கிறவனே! [புறவண்டத்தென்று தொடங்கி] - ப்ரக்ருதி விநிர்முக்தமாய் எண்கடந்த தன்னுடைய ஜ்ஞாநப்ரபையாலே ஸர்வகதரான ஆத்மாக்களுக்கும் நிர்வாஹகனானவனே! உன்னையும் உன்னுடைய விபூதிபூதசேதநாசேதநங்களையும் பரிச்சேதிக்கிலும் பரிச்சேதிக்கமுடியாத அறிவுகேட்டையுடைய எனக்கு க்ருபைபண்ணியருளவேணும். நீ ஸர்வநிர்வாஹகனாகையாலும் நான் அறிவுகேடனாகையாலும் நீயேயருளவேணுமென்று கருத்து.

ப.—அநந்தரம், கர்த்ருக்ரியாரூபயான லௌகிக ஸமஸ்தவஸ்துவுக்கும் அந்தராத்மபூதனான நீ, உன்னைப்ராபிக்க விரகு அறியாதஎனக்கு க்ருபைபண்ணியருளவேணுமென்கிறார்.

உலகில் - லோகத்தில், திரியும் - வ்யாபரிக்கிற, கருமம் - கார்யரூபமான, கதி - உபாயங்களுக்கு, ஆய் - நிர்வாஹகனாய், உலகம் - அவ்வுபாயகர்த்தாக்களான லௌகிகாதிகாரிகளுக்கு, ஆய் - (அந்தராத்மதயாநின்று) ப்ரவர்த்தகனாய், (இப்படிப்ரவர்த்தகத்வமாத்ரமன்றியே), உலகுக்கு - ஸர்வலோகங்களுக்கும், ஓருயிரும் - ஏகாத்மாவாயும், ஆனாய் - நிற்பானாய், புறவண்டத்து - அண்டாத்பஹிர்வர்த்திகளாய், அலகில்பொலிந்த - அஸங்க்யேயஸ்வரூபராய், (ஜ்ஞாநதர்மத்தாலே), பத்து-பத்து, திசை-திக்கிலும், ஆய-வ்யாப்தரான, அருவே - முக்தாத்மாக்களை ப்ரகாரமாகவுடையவனே! அலகில்பொலிந்த - எண்ணிறந்த, அறிவிலேனுக்கு - அறிவுகேட்டையுடையேனாகையாலே உன்னைப்பெறவிரகறியாத எனக்கு, அருளாய் - (ஸாதநமும்நீயேயாய் ஹலமும்நீயேயாம்படி) க்ருபைபண்ணியருளவேணும். ஓவென்கிற அசை - ஆர்த்தியால்வந்த கூப்பீட்டைக் காட்டுகிறது.

இ.—ஏழாம்பாட்டில், "பேறு உம்மதமான பின்பு, நீரும் சிறிது யத்நம் பண்ணவேணுங்காணும்" என்ன, 'ஸர்வமும் த்வதீநமாயிருக்க, அதுக்குப்புறம்போ நான் என்கார்யம் செய்கைக்கு?" என்கிறார்.

[உலகில் இத்யாதி] - லோகத்தில் பரிமாறுகிற ஸாதநமான கர்மம் நீயிட்ட வழக்காய் [உலகமாய்] - அநுஷ்டாதாக்களும் நீயிட்ட வழக்காய். [உலகுக்கேயோருயிருமானாய்] - ஒருசரீரத்தை ஒருசேதநன் ஆத்மாவாய் அபிமாநிக்குமாபோலே, ஸகல பதார்த்தங்களுக்கும் ஏகாத்மாவானவனே! "அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா". ஸகலஜ்ஞனை தானே கர்த்தாவும் கர்மமும் உபகரணங்களுமாயிருக்கை. [புறவண்டத்து] - அண்டப்புறத்து, அஸங்க்யேயராய் ஜ்ஞாநப்ரபையாலே ஸர்வஜ்ஞரான முக்தாத்மாக்களுக்கு நிர்வாஹகனானவனே! [அலகில்பொலிந்த அறிவிலேனுக்கு] - சேதநர்க்குத் தொகையுண்டாகிலும் என்னறிவுகேட்டுக்கு எண்ணில்லை. [அருளாயே] - என்னளவு இதான பின்பு நீயே க்ருபைபண்ணி யருளுமித்தனையன்றோ? அறிவையுண்டாக்கி, அத்தைப் பக்வமாக்கி, அதின்பலமான உன்னையும் தந்தருளவேணும்.

ஈடு.—ஏழாம்பாட்டு. '"உலகில்திரிவேனோ" என்கிற உறைப்பாலுண்டான ஸ்வாதந்த்ர்யம் உம்முடையதலையிலேகிடந்ததே!' என்ன, 'ஸாதநமும்ஸாதகரும் த்வததீநமான பின்பு, இவ்வாற்றாமை எனக்கு ஸ்வரூபமாயந்வயிக்குமித்தனையன்றோ?' என்கிறார். அன்றியே, 'பேறுஉம்மதானபின்பு நீரும் சிறிது யத்நம்பண்ணவேணுங்காணும்' என்ன,'ஸர்வமும் த்வததீநமாயிருக்க, அதுக்குப்புறம்போ நான்என்கார்யம்செய்கைக்கு?' என்கிறாராகவுமாம்.

[உலகில்திரியும்கருமகதியாய்] - லோகத்தில்பரிமாறுகிற கர்மமாகிற ஸாதநமாய். உன்னையொழிய பலப்ரதாநம்பண்ணவல்லதொன்றுண்டோ? [உலகமாய்] - அநுஷ்டாதாக்களோதான் ஸ்வதந்த்ரராயிருக்கிறார்? † உலகமென்பதுஉயர்ந்தோர்மாட்டிறே; லோகத்திலுள்ளார்க்கு என்றும்வருமிறே. [உலகுக்கேயோருயிருமானாய்] - ஒருசரீரத்தை ஒரு சேதநன் ஆத்மாவாய் அபிமாநித்திருக்குமாபோலே, ஸகலபதார்த்தங்களுக்கும் ஏகாத்மாவா

---

ஏழாம்பாட்டு.—உலகில் இத்யாதி. "உலகில்திரியும்"இத்யாதி முதலடியைக் கடாக்ஷித்தவதாரிகை - உலகில்திரிவேனோ இத்யாதி. உறைப்பாலுண்டான ஸ்வாதந்த்ர்யம் - ஆற்றாமையாலுண்டான பதற்றம். 'கிடந்ததே' - அதுஸாதநமாகாதோ? என்ன என்றபடி. ஸாதநமும் ஸாதகருமென்றது- "கருமகதியாயுலகமாய்" என்றத்தைப்பற்ற. கீழிற்பாட்டிலே ஸாதநாநுஷ்டாநம்பண்ணவேண்டாவோவென்ற ஶங்கையை யநப்யுபகம்யவாதத்தாலே பரிஹரித்தார்; இப்பாட்டில் - அப்யுபகம்யவாதத்தாலே பரிஹரிக்கிறாரென்று விவக்ஷித்து, யோஜநாந்தரம் - அன்றியே பேறு இத்யாதி.'ஸர்வமும் த்வததீநமாயிருக்க' இத்யாதிக்குக் கருத்து - உன்னுடைய க்ருபையைப்பார்த்தால் ஸாதநம் அநுஷ்டிக்க வேண்டுவதில்லை யென்றார் கீழ்; அப்படி யநுஷ்டிக்கவேண்டிற்றேயாகிலும், ஸாதநாநுஷ்டாதாக்களும்அநுஷ்டிக்கிறஸாதநமும் உன் அதீநமாகையாலே எனக்கொரு ஸ்வாதந்த்ர்யமில்லை; நான் அத்யந்தபாரதந்த்ரனானபின்பு ஸாதநம்அநுஷ்டிக்க ப்ராப்தியில்லையென்கிறாரென்று-ஹ்ருதம் - உன்னையொழிய இத்யாதி. "உலகமாய்" என்ற ஸாமாநாதிகரண்யத்துக்குபாவம் - அநுஷ்டாதாக்களோ இத்யாதி. 'உலகம்" என்றால் - அநுஷ்டாத்ருவாசகமாமோ? என்ன - உலகமென்பது இத்யாதி. உயர்ந்தோர்மாடு - சேதநவாசி. "ஜ்ஞாத்வா கெளராஶி" இதிவத். பரிஹாராந்தரம் - லோகத்தில் இத்யாதி.'கர்மமும்கர்த்தாவும் அவனாகைக்குநிபந்தநமேதென்ன; ஶரீரஶரீரிபாவமென்கிறார் - உலகுக்கே யோருயிருமானாய் என்று. அதாவது - ஸர்வாத்மாவாகையாலே ஸர்வமும் த்வததீநமாயிருக்குமென்ற

† திவாகரம், மக்கட்பெயர்த் தொகுதி.

ணவனே! "அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா" (அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தா). ஸலபூதனானதானே, கர்த்தாவும் கர்மமும் உபகரணங்களுமா யிருக்கை. இரண்டும் உன்தலையிலேகிடந்தால், உன்னையொழியஎங்ஙனே நான் ஜீவிக்கும்படி? [புறவண்டத்து]-அண்டாத்பஹிஃ என்றபடி. [அலகில்பொலிந்ததிசைபத்தாய அருவேயோ] - அஸங்க்யேயராய், எம்பெருமான் ஸ்வரூபத்தாலே வ்யாபிக்குமாபோலே ஜ்ஞாநத்தாலே பத்துத்திக்கிலும் வ்யாபித்திருப்பாராய் ரூபித்ரவ்யம்போலே கண்ணுக்குவிஷயமன்றிக்கே அரூபியாயிருக்கிற ஆத்மாக்களுக்கு நிர்வாஹகனானவனே! முக்தரோதான் ஸ்வதந்த்ரராயிருக்கிறார்? அங்கும்பத்துத்திக்காயிருக்குமோ? என்னில்: இங்கேயிருந்துஅநுஸந்திக்கிறஇவர்க்குச் சொல்லத்தட்டில்லையே. அங்ஙனன்றிக்கே, முக்தர் லீலாவிபூத்யநுஸந்தாநம் பண்ணும்போதுஇங்குள்ளபடியே ப்ரதிபத்திபண்ணுவர்களிறே. [அலகில்பொலிந்தஅறிவிலேனுக்கு] - பகவத்ஸ்வரூப ரூபகுண விபூதிகளைப் பரிச்சேதிக்கிலும் தம் அறிவுகேடு பரிகணிக்கப் போகாதென்கிறார். * மயர்வறமதிநலமருளப்பெற்றவர் வார்த்தையிறே! [அருளாயே] - பரிகாரமுண்டானபின்பு அருளக்குறையென்? † "அநந்ததம்பாத்ரமிதம்தயாயாஃ" (அநந்ததம்பாத்ரமிதம்தயாயாஃ) என்னுமாபோலே.

(எ)

---

## எட்டாம் பாட்டு.

---

அறிவிலேனுக் கருளாய் அறிவாருயிரானாய்!
வெறிகொள்சோதிமூர்த்தி! அடியேனெடுமாலே!
கிறிசெய்தென்னைப் புறத்திட்டுஇன்னங்கெடுப்பாயோ?
பிறிதொன்றறியாவடியேன் ஆவிதிகைக்கவே.

ஆ. - (அறிவிலேனுக்கு.) - என்னை யுள்ளபடி அறிவார்க்கன்றோ நான் என்னைக் காட்டிக்கொடுப்பது? என்னில், த்வதேகாத்மபராணராகையாலே, அவர்களுக்கு உன்னைக் காட்டிக்கொடுக்கை ப்ராப்தம்; அறிவிலேனுக்குச் செய்தருளுகையன்றோ குணமாவது? ஆதலால், உன்னுடைய நிரதிஶய ஔஜ்ஜ்வல்ய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிஅபரிமிதோதாரகுணஸாகரமான உன்திருமேனியைக் கேவலம் உன்க்ருபையாலே

---

படி. "உலகுக்கேயோருயிருமானாய்" என்றதுக்கு ஹார்த்தபாவம் - இரண்டும் இத்யாதி. இரண்டுமென்றது - கர்மமும் கர்த்தாவும். உன்தலையிலேகிடந்தால் - த்வததீநமானால். உலகுக்கேயோருயிராகையாலே யுலகமாயென்றபடி. "அலகிற்பொலிந்த" - எண்ணிக்கையிலேபூர்ணரான. அலகு - ஸங்க்யை. "திசைபத்தாய"-தர்மபூதஜ்ஞாநத்தாலேபத்துத்திக்கிலும் வ்யாப்தரான. "அருவேயோ"-ஆத்மாக்களைப்ரகாரமாகவுடையவனே! "புறவண்டத்து" - அண்டாத்பஹிர்வர்த்திகளாயென்றபடி. தாத்பர்யார்த்தம். "புறவண்டத்து" இத்யாதியாலே - ப்ராக்ருதிபத்தசேதநரைச்சொல்லுகிறதென்னுதல், முக்தரைச்சொல்லுகிறதென்னுதல். இங்குள்ளபடியேயென்றது - இங்குள்ளார் அநுஸந்திக்கும்படியேயென்றபடி. ஸர்வஜ்ஞராயிருக்க, "அறிவிலேனுக்கு" என்கிறதென்? என்ன - மயர்வற இத்யாதி. அதாவது - ஸர்வஜ்ஞராகையாலே ஆகிஞ்சந்யம்தோற்றச்சொல்லுகிறாரென்றபடி. "அறிவிலேனுக் கருளாய்" என்றதுக்கு ஹார்த்தபாவம் - பரிகாரம் இத்யாதி. பரிகாரம்-ஆகிஞ்சந்யம். "ஆகிஞ்சந்யம், ப்ரபத்திபரிகாரம்" என்றதுக்கு - ‡ "அகிஞ்சநஸ்ய அகிஞ்சநஸ்ய பரிகாரஃ" இத்யாத்யநுஸந்தேயம். இதுக்கு ஸம்வாதம் - அநந்ததம் இத்யாதி.

(எ)

† ஸ்தோத்ரரத்நே. ‡ வரதராஜஸ்தவே - அஉ.

யெனக்குக் காட்டியருளவேணுமென்று அபேக்ஷிக்க; தது த்தரக்ஷணத்திலே செய்தருளக் காணாமையாலே அதிமாத்ர வீதராய், நெடுங்காலமெல்லாம் உன்னைக் காணப்பெறாதே விஶீர்ணனும்படி எனக்கு அரியனான நீ, "உன்திருவடிகளல்லது மற்றொரு ப்ராப்யமும் ப்ராபகமு மில்லை" என்றிருக்கிற இவ்வறிவுங்கூடக் கலங்கும்படி, உன்னைக்காட்டாதே என்னை வஞ்சித்து, ஶப்தாதிவிஷயங்களைக் காட்டி என்னை இன்னங் கெடுக்கவோ பார்த்தருளிற்று? என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், சடக்கெனத் தம் அபேக்ஷிதம் பெறாமையாலே, உன்னாலல்லது செல்லாதிருக்கிற என்னைக் கிறிசெய்தகற்றி அந்தரப்படுத்தவோ பார்த்தருளிற்று? அங்ஙனே செய்யாதே என்னை உன்க்ருபையாலே ரக்ஷித்தருளவேணும் என்கிறார். [அறிவிலேனுக்கருளாய்அறிவாருயிரானாய்] - அறிவிலேனுக்கு அருளுகிறது வன்றோ உன் குணவத்தை? அறிவாரை உயிராகவுடையனாயிருக்கை உனக்கேற்றமோ? அறிவில்லையாகில்அருளக்கடவதோவென்னில்,—"அறிவில்லாதார்க்குஅருளுகையன்றோ அருளுகையாவது! அறிவுடையார்க்கு அருளுகை யேற்றமோ" என்றுஞ்சொல்லுவர். [வெறிகொள்சோதி மூர்த்தியடியேனெடுமாலே] - அதிபரிமள தேஜோரூபமான திரு வடிவை யுடையையாய் வைத்து, அவ்வழகிலே யகப்பட்ட எனக்கு எட்டாதிருக்கிற வனே![கிறியென்று தொடங்கி] - உன்னாலல்லது மற்றொன்றால் செல்லாதிருக்கிற நான் ப்ரமிக்கும்படி ஏதேனுமொரு விரகுகளைப்பண்ணி இன்னமும் புறம்பே போகவிட்டு என்னைமுடிக்கவோ பார்த்தருளிற்று!

ப.—அநந்தரம், தேஜோமய விக்ரஹத்தையுடைய நீ அவ்வடிவை எனக்கு அநுபவிப்பியாதே, ஸாம்ஸாரிகவிஷயங்களிலே தள்ளி இன்னம் கெடுக்கத் தேடுகிறாயோ? என்கிறார்.

அறிவார் - அறிவுடையாரான விலக்ஷணர்க்கு, உயிர் - தாரகன், ஆனாய்-ஆய், (அவர்களை தரிப்பிக்கும்படியான), வெறிகொள் - ஸர்வகந்தமாய், சோதி-தேஜோமயமா யுள்ள, மூர்த்தி - திவ்யவிக்ரஹத்தையுடையனாய், அடியேன் - உனக்கே அநந்யார்ஹ னாம்படி என்னைப்பண்ணி உன்பக்கலிலே சபலனாம்படிபண்ணின, நெடுமாலே-அதிஶயித வ்யாமோஹத்தை யுடையனானவனே! அறிவிலேனுக்கு - (அந்தவடிவை யநுபவிக் கைக்கு) விரகறியாத எனக்கு, அருளாய் - உன்க்ருபையாலே யநுபவிப்பித்தருள வேணும்; (அங்ஙனன்றியே), கிறிந்து - உன்னையொழிய, ஒன்று - கத்யந்தரம், அறியா- அறியாதே, அடியேன் - (நீயிட்டவழக்கான ஸ்வரூபத்தையுடையேனான) என்னுடைய, ஆவி - நெஞ்சு, திகைக்க - கலங்கும்படியாக, கிறி - விரகாலே, செய்து - ருசியைஜநிப் பித்து, (அதுக்கீடானஅநுபவம்தாராதே), என்னை - (வடிவழகில் வாசியறிந்த) என்னை, புறத்து - பாஹ்யவிஷயங்களிலே, இட்டு - அகப்படுத்தி,(அநாதிகாலமிழந்தது போரா மல்), இன்னம் - (அபிநிவேஶம் பிறந்த) இன்றும், கெடுப்பாயோ - கெடுக்கத்தேடுகி றாயோ? வெறிகொள்சோதியென்று - கண்வெறியோடும்படி மிக்கதேஜஸ் என்றுமாம்.

இ.—எட்டாம்பாட்டில், "அருளாய்" என்றபோதே தம்அபேக்ஷிதம்பெறா மையாலே, இன்னம் என்னையகற்றி அந்தரப்படுத்தப் புகுகிறாயல்லையிறே? என்கிறார்.

[அறிவிலேனுக்கருளாய்] - உன்னைக்கிட்ட முதலில்லாத எனக்கு அருளாய், 'அறிவில்லையாகில் அருளக்கடவதோ?' என்ன, ஸர்வஜ்ஞரான நித்யஸூரிகளுக்கு க்ருபை

பண்ணவோ? தளர்ந்தவிடமன்றோ க்ருபைக்கு விஷயம்! * பொய்ந்நின்ற ஞானத்தை உடைய எனக்கு * ஞானப்பிரானான நீ க்ருபைபண்ணியருளாய். [அறிவாருயிரானாய்] - உன்னையுள்ளபடி யறிவார்க்கு தாரகனாகை உனக்கேற்றமோ? "பக்தாவி" என்கிற படியே, அறிவார்க்கு உயிராமவன் என்னுதல்; "ஜ்ஞாநீத்வாத்மைவ" என்கிறபடியே, அறிவாரை உயிராகவுடையவன் என்னுதல். [வெறிகொள் சோதிமூர்த்தி] - "அருளோம்" என்றாலும் விடவொண்ணாத வடிவையுடையவனே! அதிபரிமளிதமாய் தேஜோரூபமானவடிவு. "ஸர்வகந்த:", "தேஜஸாம்ராஶிமூர்ஜிதம்." [அடியேன் நெடுமாலே] - சேர்ந்து குளிர்ந்த தண்ணீரை விடாயர்க்கு எட்டாதபடி வைப்பாரைப் போலே, அவ்வடிவிலே தோற்ற எனக்கு எட்டாதிருக்கிறவனே! என்பக்கல் வ்யாமோஹத்தைப் பண்ணினவனென்றுமாம். [கிறிசெய்து என்னை] - எனக்கு முன்புசெய்த தித்தனையும் விரகுஅடித்ததாம்இத்தனையிறே. அநந்யமதியாயிருக்கிறவென்னை ப்ரமிக்கும்படி ஒரு விரகுபண்ணி: அதாகிறது - பேறு உன்னதானபின்பு க்ருஷியும் உன்னதாக வேண்டாவோ என்கை. [புறத்திட்டு] - உனக்கு அசலாம்படி விஷயங்களிலே தள்ளி. [இன்னங்கெடுப்பாயோ] - அநாதிகாலமிழந்தது போராதோ? உன்சுவடறிந்த பின்பும் உனக்கு அசலாகவோ? "அறிவிலேன்" என்றாலும், "அருளாய்" என்றாலும் கெடுக்குமித்தனையோ? "ஸாஸிநாஶாய்கணஸ்ய": விஷயப்ராவண்யமென்றும், விநாஶமென்றும் பர்யாயமிறே. [இன்னங்கெடுப்பாயோ] - பேறு அவனாலேயானால் இழவும் அவனாலே என்னலாமிறே; ஸ்தநந்யயப்ராஜை கிணற்றிலே விழுந்தால் "தாயார் தள்ளினாள்" என்னுமாபோலே. [பிறிதொன்றறியாவடியேன்] - அநந்யகதியாய் உன்னை பார்த்திருக்கிற நான். [ஆவிதிகைக்கவே] - நெஞ்சு கலங்கும்படியாக.

ஈடு. — எட்டாம்பாட்டு. "அருளாய்" என்ற வாயோடே வந்தருளாக்கண்டிலர்: தன்பக்கல்நின்றும்பிரித்து என்னைக்கைவிடப் பார்த்தானாகாதே யென்கிறார்.

[அறிவிலேனுக்கருளாய்] - "நின்னருளேபுரிந்திருந்தேன்" என்னுமாபோலே உன்னருளொழிய வேறொன்றறியாத எனக்கு அருளவேணும். "அவ்வருளல்லனவருளுமல்ல" என்றிறே இவரிருப்பது. * வையகத்துப்பல்லாரருளும்பழுதிறே. (பொய்ந் நின்ற ஞானத்தையுடைய வெனக்கு * ஞானப்பிரானானநீ க்ருபைபண்ணியருளாய்.) [அறிவாருயிரானாய்] - அறிவார்க்கு உயிரானவனே! என்னுதல்; அறிவாரை உயிராகவுடையவனே! என்னுதல். "ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்" (ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்)

ப்ர.—[அறிவிலேனுக்குஇத்யாதி]—[அறிவாருயிரானாய்]—கீதாஸா[ஏ] "உதாரா:ஸர்வஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்। ஆஸ்தித:ஸஹியுக்தாத்மா மாமேவாநுத்தமாங்கதிம்॥"

---

எட்டாம்பாட்டு.—அறிவிலேனுக்கு இத்யாதி. "இன்னங்கெடுப்பாயோ" என்றதைக் கடாக்ஷித்தவதாரிகை - அருளாயென்று இத்யாதி.

அப்படி வேறொன்றறியாரோ? என்ன-அவ்வருளல்லன இத்யாதி. அந்த அருளையொழிய மற்றுண்டானவை அருளல்லவென்றபடி. 'நின்னருளேபுரிந்திருந்தேன்' - உன்னுடையக்ருபையையே யாதரித்திருந்தேனித்யர்த்தம். புரிந்து - ஆதரித்து. இதாருடைய அருள் ஸாதநமன்றோ? என்ன - வையகத்து இத்யாதி. ஜகத்திலுள்ளபலருடைய ப்ரஸாதமும்வ்யர்த்தமித்யர்த்தம். முதற்றிருவந்தாதி

என்கிறபடியே, ''த்விதீயம்மேந்தராத்மாநம்'' (த்விதீயம்மேந்தராத்மாநம்)என்கிறபடியே. [வெறிகோள்சோதிமூர்த்தி] - அருளாதொழிந்தாலும் விடவொண்ணாதவடிவழகு: ''ஸர்வகந்த:'' (ஸர்வகந்த:) என்னுமதிறே. பரிமளத்தை யுடைத்தாய், நிரவதிகமான தேஜஸ் ஸையுடைத்தான வடிவழகையுடையவனே ! [அடியேன்நெடுமாலே] - எனக்கு இப்போது எட்டாதிருக்கிறவனே! என்னுதல்; வடிவழகைக் காட்டி எனக்கு வ்யாமோஹத்தை விளைத்தவனே! என்னுதல். [கிறிசெய்து] - நீஇப்போது உதவாமையாலே, முன்பு செய்தவையெல்லாம் விரகுஅடித்தாயென்று தோற்றுநின்றதுகிடாய் ! [என்னைப்புறத்திட்டு] - பிராட்டியைஅசோகவநிகையிலே வைத்தாற்போலே, பகவத்குணங்கள் நடையாடாத ஶப்தாதிவிஷயங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்திலேபோகட்டு. [இன்னங்கெடுப்பாயோ] - முன்புஇழந்ததுபோராதோ? ''ஸம்ஸாரம்த்யாஜ்யம்'' என்றும், ''பகவத்குணங்கள் நன்று'' என்றும் அறிந்தபின்பும் கெடுப்பாயோ? ''புத்திநாஶாத் ப்ரணஶ்யதி''* (புத்திநாஶாத் ப்ரணஶ்யதி)இறே.[பிறிதொன்றறியா இத்யாதி] - அநந்யகதியாய் அநந்யபரனுமிருக்கிற என்னை மநஸ்ஸு கலங்கும்படி கிறிசெய்து என்னைப்புறத்திட்டு இன்னங்கெடுப்பாயோ? (அ)

---

''முதலாவார்'' இத்யாதி. ''அறிவிலேனுக்கு'' என்றது-அநுவாதமன்று, பகவத்வ்யதிரிக்த விஷயாஜ்ஞதையைச்சொல்லுகிறது. த்விதீயார்த்தத்துக்கு ப்ரமாணத்வயம்- ஜ்ஞாநீது இத்யாதி. ''உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்'' இதி பகவத்கீதாஸு. ''லக்ஷ்மணோ லக்ஷ்மீஸம்பந்நோ பஹிப்ராண இவாபர: । த்விதீயம்மேந்தராத்மாநம் த்விதீயம் ஶ்ரீரிவாபரா'' இத்யயோத்யாகாண்டே லக்ஷ்மணம்ப்ரதிராம:.(ஶ-ஶஙு) 'அருளாய்'என்றவநந்தரம்வடிவழகைச்சொன்னதுக்கு பாவம்-அருளாதொழிந்தாலும் இத்யாதி. ''திருமேனிபரிமளயுக்தம்'' என்னுமதுக்குப்ரமாணம்-'ஸர்வகந்த:'இத்யாதி. பதார்த்தம்-பரிமளத்தை இத்யாதி. மூன்றினவர்த்தத்துக்கு, ''மால்'' என்று-பெருமையாய், ''நெடு'' என்றும் - பெருமையாய், அறப்பெரியோனென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு, மிக்கவ்யாமோஹத்தையுடையவனென்றபடி. ''மால்'' என்று - வ்யாமோஹம்- வ்யாமோஹத்தை விளைத்த நம்மை ''கிறிசெய்து'' என்கிறதென்? என்ன - நீ இப்போது இத்யாதி. விரகுஅடித்தாயென்றது - எனக்கு ஸம்ஸாரத்திலும் பொருந்தாதே நீயும் முகங்காட்டாதே துடிக்கும்படி பண்ணப்பார்த்தாயென்றபடி. நடையாடாத - நடையாடாதேயென்றபடி. முன்னைப்பற்ற இன்றைச்சு விசேஷமே தென்ன - ஸம்ஸாரம் இத்யாதி. விஷயங்கள் நடையாடுகிற ஸம்ஸாரத்தேவைத்தால் கேடெதென்ன-, புத்திநாஶாத் இத்யாதி. அதாவது - விஷயத்யாநத்வாரா நாஶபர்யவஸாயியாமென்றபடி. 'த்யாயதோ விஷயாந் பும்ஸ: ஸங்கஸ்தேஷூபஜாயதே'' இத்யாரப்ய. ''ஸ்ம்ருதி ப்ரம்ஶாத் புத்திநாஶோ புத்திநாஶாத் ப்ரணஶ்யதி''இதி கீதாஸு. (ஶஙு). ''பிறிதொன்றறியா, அடியேன்'' என்ற பதத்வயார்த்தம் - அநந்யகதியாய் அநந்யபரனுமாய் என்று. அநந்யபரத்வம் அநந்யப்ரயோஜநத்வம். அறிவாருயிரானாய்என்றதொடங்கி, நெடுமாலே, பிறிதொன்றறியாவடியேனை கிறிசெய்துஎன்னைப்புறத்திட்டுஇன்னங்கெடுப்பாயோ? அறிவிலேனுக்கருளாய் இத்யந்வய:. (அ)

## ஒன்பதாம் பாட்டு.

ஆவிதிகைக்க ஐவர்குமைக்குஞ்சிற்றின்பம்
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ?
தாவிவையங்கொண்ட தடந்தாமரைகட்கே
கூவிக்கொள்ளுங்காலம் இன்னங்குறுகாதோ?

ஆ.—(ஆவிதிகைக்க.) - ஶப்தாதி விஷயஸுகம் புருஷார்த்தமன்றோ? அத்தையநர்த்தரூபமாகச் சொல்லுவானென்? என்னில்;

ஜ்ஞாநஸங்கோசஹேதுவாய்துக்கவஹுளமாய்அத்யல்பமாய்அத்யந்தம்அஸ்திரமாயிருக்கையாலே வைஷயிகஸுகம்அபுருஷார்த்தமாகையாலே அந்தவிஷயங்களைக்காட்டி உன்னையிழப்பித்து என்னைத் தறைப்படுத்தாதே, லோகமெல்லாம் நிறையும்படி மலர்ந்த உன்திருவடிகளாகிற தாமரைத்தடாகத்திலே என்னைவாங்கியருளா யென்றுஅபேக்ஷிக்க, அப்போதே செய்தருளாமையாலே, "அக்காலம் வந்தால் செய்கிறோம்" என்றுஞைக்கொண்டு, அக்காலம், இக்காலமெல்லாம் முடிந்தாலும் வரக்கடவதொன்றோ! என்று கூப்பிடுகிறார்.

ஓ.—ஒன்பதாம்பாட்டில், கிறிசெய்து முடிக்கையாவது - வைஷயிகஸுகங்களைக்காட்டி உன் திருவடிகளில் வாராதபடி பண்ணுகையென்கிறார்.

[ஆவியென்று தொடங்கி] - மநஸ்ஸு கலங்க ஐந்திந்த்ரியங்களும் நலியுஞ்செய்யும்படியான ஶப்தாதிவிஷயாநுபவமாகிற க்ஷுத்ரஸுகத்தைக் காட்டி அவற்றோடுபொருந்தாதபடியாய் அவற்றுக்குப்பாங்கானநிலத்திலேயிருக்கைக்குஈடானபாபத்தைப்பண்ணின என்னை இன்னம் முடிக்கப்பார்க்கிறாயோ? [தாவியென்றுதொடங்கி] - த்வதேகபாரகனுய்வைத்து உன்னைப்பெறாதே நான்முடியும் ஊரையாளுலும் அநாயாஸேந நீ எல்லார்க்கும்கொடுக்கும் நிரதிஶயபோக்யமான திருவடிகளிலே அழைத்தருளும் காலம் அணித்தாகாதோ?

ப.—அநந்தரம், உனக்குவிதேயமான விஷயேந்த்ரியங்கள் நடையாடுகிற தேசத்திலேவைத்து என்னைமுடிக்கத்தேடுகிறாயோ? உன்திருவடிகளிலே யழைத்துக்கொள்ளுங்காலம் அணித்தாகாதோ? என்கிறார்.

ஆவி-நெஞ்சு, திகைக்க - கலங்கும்படியாக, ஐவர்-ஐந்திந்த்ரியங்களும், குமைக்கும்-"தா, தா" என்றுபிடிக்கிற, சிறு-அல்பஸாரமான, இன்பம் - விஷயஸாரஸ்யத்தை, பல - பஹுமுகமாக, காட்டி - ப்ரகாசிப்பித்து, நீ - (இவற்றைக்கழிக்கவல்ல சக்தியையுடைய) நீ, பாவியேனை - (நிரதிஶயாநந்தயோக்யனுப் வைத்து நித்ய துக்கதேசத்திலே வர்த்திக்கும்படி)பாபியான என்னை, படுப்பாயோ - முடிக்கநினைக்கிறாயோ? வையம் - பூமியை, தாவி - அநாயாஸேநயாம்படியளந்து, கொண்ட - கொண்ட, தடம் - நிரதிஶயபோக்யமான, தாமரைகட்கு - திருவடித்தாமரைகளிலே (நான்)அந்வயிக்கும்படி, கூவிக்கொள்ளும்-(என்னை)அழைத்துக்கொள்ளும், காலம் - காலம், இன்னம் - ("விஷயாந்தரஸ்ஸர்கம் விநாஶஹேது" என்னும் அவஸ்த்தைபிறந்த) அளவிலும், குறுகாதோ?—

இ.—ஒன்பதாம் பாட்டில், "புறத்திட்டு இன்னங்கெடுப்பாயோ?" என்ற இடத்தை விவரித்துக்கொண்டு, உன்திருவடிகளிலேயழைத்துக்கொள்ளும் காலம்இன்னங் கிட்டாதோ? என்கிறார்.

[ஆவிதிகைக்க] - நெஞ்சுகலங்கும்படி. [ஐவர் குமைக்கும்] - பஞ்சேந்த்ரியங் களும் விஷயங்களிலேமூட்டி நலியும்படியான. 'ஐவர்' என்று சேதநஸமாதியாலே சொல்லுகிறது, நலிவின் மிகுதியாலே. [சிற்றின்பம்] - பகவத்விஷயத்தை இழப்பிக்க வேண்டுவதுண்டாய் தன்பக்கல் அநுபவ்யமொன்றும் இன்றிக்கேயிருக்கும் க்ஷுத்ர ஸுகத்தை. [பாவியேனை]- அந்தமில் பேரின்பத்துக்குஇட்டுப்பிறந்துவைத்து ஶப்தாதி கள் நடையாடுகிற தேஶத்திலேயிருக்கும்படி பாபத்தைப்பண்ணின என்னை, "வீவிலின்ப மிகவெல்லைநிகழ்ந்தனன்" என்றிவரிறே இங்ஙனே சொல்லுகிறார். [பல]-"பைதல்சைசு; நோய் மூக்கைசு" என்று தம்மளவன்றியே அநேகமாயிருக்கை. [நீ காட்டிப்படுப் பாயோ]-ரக்ஷகனானநீ காட்டிமுடிக்கப்பார்க்கிறாயோ? ஶப்தாதிவிஷயங்களினுடைய தர்ஶந மாத்ரத்திலே முடியும்படியாயிற்று, இவர் ஶைவத்குணங்களிலே நைந்தபடி. நாம் காணு விடில் முடியும்படியான விஷயங்கள், இவர்க்குக் காணில் முடியும்படியாயிற்று. [தாவி இத்யாதி] - வரையாதே எல்லார்க்குங்கொடுக்கும் நிரதிஶயபோக்யமான திருவடிகளிலே யழைத்துக் கொள்ளுங்காலம் இன்னங் குறுகாதோ? விஷயாந்தரதர்ஶநமாத்ரத்திலே முடியும்படியானாலும் அணித்தாகாதோ? தாவிவையங்கொண்டவென்கிறது - உபாயாம் ஶம். தடந்தாமரைகளென்கிறது - உபேயாம்ஶம். 'கூவிக்கொள்ளுங்காலம்' என்று தாம் சென்று காண்கையன்றிக்கே தானே அழைத்துக்காட்டுகை முறையாகையாலே கிட்டும் ப்ரகாரம் சொல்லுகிறது.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. உம்மைஇங்குக்கெடுத்ததேன்? என்ன, 'கண்ட காட்சியிலே இழுத்துக்கொள்ளக் கடவதான விஷயங்கள் பரிமாறுகிறவிடத்தே வைத்தா யாகில், இனிக் கெடுக்கையென்று ஒன்றுண்டோ? என்கிறார். என்னைஇங்கேவைத்தபோதே, குழியைக்கல்லி மண்ணையிட்டுஅமுக்கப்பார்த்தாயன்றோ?' என்கிறார். "தாநஹம் த்விஷத꞉ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் | க்ஷிபாமி" (தாநஹம்த்விஷதக்ரூராந்ஸம்ஸாரேஷு நராதமாந் ! க்ஷிபாமி) என்னும்படியே.

[ஆவிதிகைக்க]-இந்த்ரியங்களுக்குக் கந்தமானமநஸ்ஸு கலங்க [ஐவர் குமைக் கும்] - சேதநஸமாதியாலே சொல்லுகிறது, நலிவின்மிகுதியாலே. ஒரு துர்ப்பலனைப்பற்றி ஐஞ்சுபேர் நலியுமாபோலே, "என்விஷயத்தைக்காட்டு" என்று தனித்தனியேநலிகிறபடி. இப்படி நலிந்தாலும் †ஆஸ்வாதமுண்டாகி லாமிறே. [சிற்றின்பம்] - முள்ளிப்பூவில்தேன்

ஒன்பதாம்பாட்டு — ஆவி இத்யாதி. "பலநீகாட்டிப்படுப்பாயோ" என்றத்தைப்பற்ற - உம்மைஇங்கு இத்யாதி. "பாவியேனை" என்றத்தைப்பற்ற - என்னைஇங்கே இத்யாதி. ஸம்ஸாரத் திலேவைக்கை நிக்ரஹகார்யமோ? என்ன - தாநஹம் இத்யாதி. பகவத்கீதாஸு. "க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு" என்று மேல்.

தாமொருவராயிருக்க ஐந்திந்த்ரியங்கள் நலிகிறதுக்கு த்ருஷ்டாந்தகதநபூர்வகமாக அவை குமைக்கும் ப்ரகாரத்தையும் அருளிச்செய்கிறார் - ஒருதுர்ப்பலனை இத்யாதி. "சிற்றின்பம்" என்ற துக்கு அவதாரிகை - இப்படிநலிந்தாலும் இத்யாதி. ஆஸ்வாதமில்லையோ? என்ன - முள்ளிப்பூவில் இத்யாதி. "அல்பரஸம்" என்றதுக்குப்ரமாணம் - அற்பசாரங்களிறே என்று. அல்பமாகிலுமுண்

† ஆஸ்வாதம் - சுவை.

போலே. * அற்பசாரங்களிறே. தேவரையகற்ற, வேண்டுவேதுண்டாய், அநுபவிக்கலாவது ஒன்றுஇன்றிக்கேயிருக்கை. [பாவியேனை] - அந்தமில்பேரின்பத்துக்கு இட்டுப்பிறந்த நான் சிற்றின்பத்திலே அந்வயிக்கும்படியாவதே. "வீவிலின்பமிகவெல்லைநிகழ்ந்தனன்" என்றவ ரிறே இங்ஙனேசொல்லுகிறார். [பல] - ஒன்றிலேகால்தாழப்பண்ணவல்லவிஷயமில்லையே. [நீகாட்டிப்படுப்பாயோ] - ரக்ஷகனானநீ காட்டி முடிக்கப்பார்க்கிறாயோ ? [காட்டிப்படுப் பாயோ] - நாட்டார் "காணுவிடிற்பிழையோம்" என்றிருக்கிறவிஷயம் இவர்க்குதர்ஶநமாத் ரத்திலே மோஹிக்கும்படியாயிருக்கிறதிறே. அசுணமாவென்று சிலபக்ஷிகளுண்டு; அவை பிடிகொடாதுஒன்றுக்கும் ; அவைபிடிக்கநினைத்தார் முற்படப்பாடுவார்கள்; அதுகேட்டு நெஞ்சுநெகிழும்; அநந்தரம்பறையையடிப்பார்கள்; இதில்வன்மையாலே பட்டுக்கிடக்குமாம். அதுபோலே, இவர்ஸகலத்துணங்களிலே நைந்தபடி, இதரவிஷயதர்ஶநத்தாலே முடியும் படியானார். நெடுநாள்அநுபவித்துப்போந்தாலும், கடக்கவிருந்தவன்று "நாம்இன்னதுஅநு பவித்தோம்"என்றுஸ்மரிக்கைக்குஒன்றுஇன்றிக்கேயிருக்குமிறே; இங்ஙனேயிருக்கச்செய்தே யும் அவற்றில் ஶ்ரத்தைபண்ணுகிறது பாபாதிஶயமிறே. [தாவியீத்யாதி] - அந்யபரோக் தியிலே ப்ராப்யநிஷ்கர்ஷம்பண்ணுகிறார். [தாவி வையங்கொண்ட] - நினைத்ததுதலைக் கட்டவல்லனென்னும் ஶக்தியோகஞ் சொல்லுகிறது. பூமிப்பரப்படங்கலும் அநாயாஸேந அளந்துகொண்டபடி. [தடந்தாமரைகட்கே] - போக்யதையளவிறந்த திருவடிகளிலே. இத்தால் - ப்ராப்யஞ்சொல்லுகிறது. கூவிக்கொள்ளுங்காலம் என்கையாலே - ப்ராபக வேஷஞ் சொல்லுகிறது. இன்னம் குறுகாதோ என்கையாலே—ருசிவேஷஞ் சொல்லுகிறது. இதரவிஷயதர்ஶநம் முடியும்படியாய், உன்திருவடிகளில் போக்யதையறிந்து விடமாட் டாதவளவுபிறந்தபின்பு இன்னம்தாழ்க்குமத்தனையோ ? பிள்ளானுடைய அந்திமதசை யிலே நஞ்சீயர் நோவறியப்புக்கிருக்க, "கூவிக்கொள்ளுங்கால மின்னங்குறுகாதோ ?" என்று பலகால்சொல்ல, இத்தைக்கேட்டுச்சீயர்அழ, "சீயரே! நீர் கிடந்தழுகிறதென் ? அங்குப்போய்ப் பெறப்புகுகிறபேறு இதிலும் தண்ணிது'என்று தோற்றியிருந்ததோ ?" என்று புணித்தான். (கூ)

---

டோ? என்ன - தேவரை இத்யாதி. அழுவா, "சாரங்கள்" என்றதுக்குஅர்த்தம் - தேவரை இத்யாதி. "அற்பம்" என்றதுக்குஅர்த்தம்-அநுபவிக்கலாவது இத்யாதி என்னுதல். "பாவியேன்" என்றதுக்கு ஹாவம்-அந்தமில் இத்யாதி. அந்தமில்பேரின்பத்துக்கிட்டுப்பிறந்து சிலநாளநுபவித்தாரோ? என்ன வீவிலின்பம் இத்யாதி. "பல" என்றதுக்குஹாவம் - ஒன்றிலே இத்யாதி. "படுப்பாயோ" - முடிப் பிப்பாயோவென்றபடி. "காட்டிப்படுப்பாயோ" என்கையாலே - தர்ஶநமாத்ரமே விநாஶஹேதுவென் றத்தைப்நுஸந்தித்து, வ்யாக்யாதாவின் ஈடுபாடு - நாட்டார் இத்யாதி. இதரவிஷயங்களில் அந்வய மொழியதர்ஶநமாத்ரமே விநாஶஹேதுவாமோ ? என்ன - அசுணமா இத்யாதி. "சிற்றின்பம்" என்றத்தைக்கடாக்ஷித்துஹாவம் - நெடுநாள் இத்யாதி. "பாவியேனை" என்றத்தைக்கடாக்ஷித்து இங் ஙனே இத்யாதி. ஆக, "பாவியேன்" என்றதுக்குஅர்த்தத்வயம்: அதாவது,-முந்தினது, கீழ் 'அந்தமில் பேரின்பத்துக்கு' இத்யாதிவாக்யம்; 'இங்ஙனேயிருக்கச்செய்தேயும்' இத்யாதிவாக்யம் - இரண்டாவது. அந்யபரோக்தியிலே - "கூவிக்கொள்ளுங்காலம்" இத்யாதியானகாலாவதியைக்கேட்கிறபாசுரத்தாலே, "தடந்தாமரைகட்கே" என்று திருவடிகளேப்ராப்யமென்று, நிஷ்கர்ஷம்பண்ணுகிறாரென்றபடி; இப் போது, திருவுலகளந்தருளின அபதாநத்தைச்சொல்லுகிறதுக்குஹாவம் - நினைத்தது இத்யாதி. தடம்- பெருமை. "இன்னம்" என்றதுக்குஹாவம்-இதர இத்யாதி. இப்படிகூப்பிட்டபேருண்டோ? என்ன- பிள்ளானுடைய இத்யாதி. (கூ)

# பத்தாம் பாட்டு.

குறுகாநீளா இறுதிகூடாஎனையூழி
சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும்
மறுகாலின்றிமாயோன்! உனக்கேயாளாகும்
சிறுகாலத்தையுறுமோ? அந்தோ! தெரியிலே.

ஆ.—(குறுகா.) - வைஷயிகஸுகம் அல்பாஸ்த்திரத்வாதிதோஷ துஷ்டமாகையாலே உமக்கு அபேக்ஷிதமன்றாகில், ப்ராசுர்யஸ்த்திரத்வாதிஅநேககுணயுக்தமான கேவலாத்மாநுபவலக்ஷண ஸுகத்தை ப்ராப்யமாகக் கொள்ளலாகாதோவென்னில்; - கேவலாத்மாநுபவஸுகம் துக்காஸம்பிந்நமாய் நித்யஸித்தமாய் நிரவதிகமாவது த்வத்கைங்கர்ய ஸுகம் க்ஷணிகமாய் அத்யல்பமாவது ஆகிலும், அந்தஆத்மாநுபவ ஸுகம் ஒரு தட்டும் இந்தக் கைங்கர்ய ஸுகம் ஒருதட்டுமானால், இத்தைக் கைவிட்டு அத்தைப்பற்றுகை யுறுமென்றிருப்பாரோ அறிவுடையார்? இப்பொருள் உபபாதநீயமோ? அந்த வைஷயிக ஸுகத்தினுடைய அல்பாஸ்த்திரத்வாதி தோஷகீர்த்தநம் பண்ணிற்று அநபேக்ஷிதத்வ ஹேதுவாக வன்று; ஸ்வரூபநிரூபணம்பண்ணின இத்தனை. வைஷயிகஸுகம் அநபேக்ஷிதமாகைக்கு ஹேது, த்வத்கைங்கர்ய வ்யதிரிக்தமாகை. ஆதலால், அந்த வைஷயிக ஸுகத்தையும் கைவல்ய ஸுகத்தையும் ஒழிய, த்வதநந்யார்ஹ சேஷத்வரூப ஸம்பத்தை எனக்குத் தந்தருளவேணுமென்று எம்பெருமானை ப்ரார்த்தித்து முடிக்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், வைஷயிகஸுகத்தை "அல்பம், அஸ்திரம்" என்றிருந்தீராகில், அநந்தமாய் ஸ்திரமான கைவல்யபுருஷார்த்தத்தைப்பற்றினாலோவென்னில்; அத்தைத உன்திருவடிகளில் கைங்கர்யமல்லாமையால் "வேண்டா" என்றேனத்தனை; அப்படியே கைவல்யமும் வேண்டேனென்கிறார் [குறுகாவென்று.] - இப்பாட்டுக்கு - ஸ்வரூபத்துக்கு காலத்ரயாயிஸத்தாலேயாதல் ஸங்கோசவிகாஸங்களையுடைத்தன்றிக்கே அபரிச்சேத்யமாயிருக்கிற ஆத்மாநுபவஸுகம் கைவந்தாலும் அந்த ஸுகமானது பின்னையாக்கடவதன்றிக்கே ஒரு க்ஷணமாத்ரம் உன்திருவடிகளிலுண்டான கைங்கர்யஸுகத்தை ஒக்குமோ அநுஸந்திக்கும்பக்ஷத்தில்? அத்யந்த விஸத்ருசமன்றோ, ஒக்குமோ என்றுசொல்லவேண்டின மூசிப்பாலே அந்தோ! என்கிறார்.

ப.—ஆத்மாவின், விலக்ஷணமான ஆத்மாநந்தாநுபவ லாபமும், அதிஸயித வைலக்ஷண்யத்தையுடைய உனக்கு சேஷமாயிருக்கும் அல்பகாலத்துக்கு ஸத்ருசமோ? என்கிறார்.

குறுகாநீளா - ஸ்வரூபகதமான ஸங்கோசவிகாஸமின்றியே, இறுதிகூடா - முடிவும் இன்றியே, (நித்யமாகையாலே), எனையூழி - ஸர்வகாலத்திலும், சிறுகா பெருகா - க்ஷயவ்ருத்திகளுமின்றியேயிருக்கிற, அளவில் - ஸ்வபாவதபரிச்சேதரஹிதமான, இன்பம் - ஆத்மாநந்தம், சேர்ந்தாலும் - பெற்றாலும், மாயோன் - அல்பகாலாநுபவமும் அதிஸயித விலக்ஷணமாம்படியான ஆஸ்சர்யத்தை யுடையவனே! தெரியில் - நிரூபித்துப்பார்க்கில், மறுகால் - பின்னையொருகாலும், இன்றி - இன்றியே, உனக்கே-,

ஆள் ஆகும் - அடியேனைக்கொண்டு சேஷத்வரஸத்தை யநுபவிக்கும், சிறுகாலத்தை - அத்யல்பகாலத்தை, அந்தோ - ஐயோ ! உறுமோ - ஒக்கவற்றோ ? அந்தோவென்று - ஒவ்வாதென்று சொல்லவேண்டுவதே ! என்னும் விஷாதத்தைக் காட்டுகிறது.

இ.—பத்தாம்பாட்டில், வைஷயிகஸுகத்தை "அல்பம், அஸ்திரம்" என்றீராகில், அதிற்காட்டில் அதிகமாய் ஸ்திரமான கைவல்யத்தைப்பற்றினாலோ வென்னில்?- 'அல்பம் அஸ்திரமென்றது, ஸ்வரூபகதநம்பண்ணின இத்தனை. ப்ராப்தமான கைங்கர்யத்தைப்பற்ற இரண்டும் அப்ராப்தம்' என்கிறார்.

[குறுகா நீளா] - ஸ்வதஸ் ஸங்கோசவிகாஸங்க ளில்லை. [இறுதிகூடா] - முடிவின்றிக்கே. [எனையூழிச் சிறுகாபெருகா] - காலோபாதிகமான ஸங்கோசவிகாஸங்களுமின்றிக்கேயிருக்கை. [அளவிலின்பம் சேர்ந்தாலும்] - இப்படி ஐஸ்வர்யத்திற்காட்டில் அதிகமாய் நித்யமான ஆத்மாநுபவஸுகத்தைப் பெற்றாலும். [மறுகாலின்றி] - ஒருகால் லபித்தக்கால் மறித்தொருகாலின்றிக்கே. [மாயோன்] - அல்பகாலமானாலும் ஐஸ்வர்ய கைவல்யங்களைவிட்டுப் பற்றவேண்டும்படி ஆச்சர்யகுணயோகத்தை யுடையவனே! [உனக்கே யாளாகும் சிறுகாலத்தையுறுமோ] - உனக்கே யடிமைபாதும் அல்பகாலத்தை ஒக்குமோ? "கைவல்யம் வேண்டா" என்கிறதும் அப்ராப்தியாலே: கைங்கர்யாபேக்ஷையும் ப்ராப்தியாலே. [அந்தோ] - கைங்கர்யத்துக்கும் இதரபுருஷார்த்தத்துக்கும்உண்டான நெடுவாசி உபதேசிக்கவேண்டுவதே! [தெரியில்] - ஆராயப்புகில்; ஆராயாதொழிந்தபோது அதுவும் புருஷார்த்தம் என்றிருக்கலாம்.

ஈடு.—பத்தாம்பாட்டு. "ஐஸ்வர்யாதிகள் அல்பாஸ்த்திரங்கள்" என்று "வேண்டா" என்கிறீராகில், அவ்வளவன்றிறே; அநந்தமமாய் ஸ்திரமுமாயிருக்குமிறே ஆத்மாநுபவம் ! அத்தை யநுபவித்தாலோ ? என்ன, 'நீ சொன்னது உபபத்தியாகிற் செய்யலாயிற்று; "அவை அல்பம், அஸ்த்திரம்" என்றவிடம் - ஸ்வரூபகதநம் பண்ணினேனத்தனை: உன்னுடைய போக்யதையைச்சொல்லிற்றும் ஸ்வபாவமிருந்தபடி சொன்னேனத்தனை; "அது தீது" என்றுவிட்டும், "இது நன்று" என்றுபற்றுகிறேனுமல்லேன்; உன்னைப் பற்றிற்றும் நீயாகையாலே, அவற்றைவிட்டதும் நீயல்லாமையாலே' என்கிறார். வகுத்த விஷயத்திலே குண ஸௌந்தர்யாதிகளும் உண்டாகப்பெற்றே னித்தனை.

[குறுகாநீளா] - ஸ்வதஸ் குறுகுகையும் நீளுகையுமின்றிக்கே யிருக்கை. [இறுதிகூடா] - நிரந்வயவிநாஸமின்றிக்கே யிருக்கை. [எனையூழியித்யாதி] - காலோபாதியால் வரும் ஸங்கோசவிகாஸங்களின்றிக்கேயிருக்கை. [அளவிலின்பஞ்சேர்ந்தாலும்] - இங்ஙனேயிருக்கையாலே முடிவின்றிக்கேயிருக்கிற ஆத்மாநுபவஸுகத்தைப்ராபித்தாலும். [மறுகாலின்றி]-பகவதநுபவமானதுஒருகால்அநுபவித்தால் மற்றைப்போதின்றிக்கேயிருப்பது. [மாயோன்] - மீண்டின்றிக்கேயொழிந்தாலும் விடவொண்ணாத கல்யாணகுண

பத்தாம்பாட்டு.—குறுகா இத்யாதி "உறுமோ"என்றத்தைக் கடாக்ஷித்தவதாரிகை - ஐஸ்வர்யாதிகள் இத்யாதி: அல்பாஸ்த்திரங்களென்றது - "சிற்றின்பம்" இத்யாதியைப்பற்ற. நீயாகையாலே - ப்ராப்தசேஷியாகையாலே யென்றபடி. நீயல்லாமையாலே - அப்ராப்தங்களாகையாலே யென்றபடி. இப்படிப்ராப்தாப்ராப்ததையே த்யாகஸ்வீகாரஹேதுவானால், "மாயோன்" என்று - ஸௌந்தர்யசீலாதிகளைச் சொல்லுவானென்? என்ன-வகுத்த இத்யாதி. "பலநீகாட்டிப்படுப்பாயோ" என்கையாலே - ஐஸ்வர்யாதிகள்வேண்டா என்றதுவிவித்தம். ஸ்வதஸ்என்கையாலே-ஸம்ஸாரதசையில்

யோகஞ்சொல்லுகிறது. [உனக்கேயாளாகும் சிறுகாலத்தையுறுமோ] - ''உன்திருவடிகளிலடிமையேபுருஷார்த்தம்'' என்றிருக்குமது, மறித்தின்றியிலே யிருப்பது, அதுதான் க்ஷண காலமாவது ; இங்ஙனேயிருந்தாலும் அளவிலின்பஞ்சேருகை யுறுமோ ? இத்தைப்பார்க்க. [அந்தோ] - பர்வத பரமாணுகளுக்கு இருந்த வைஷம்யஞ் சொல்லும்படியாவதே! [தெரியிலே] -தோற்றிற்றுச்சொல்லிற் செய்யலாவ தில்லை: ஆராய்ந்து சொல்லுமன்று இங்ஙனல்லதில்லை. இவ்வர்த்தம் உபதேசகம்யம்ஆவதே!

(க௦)

## பதினோராம் பாட்டு.

தெரிதல்நினைதல் எண்ணலாகாத்திருமாலுக்கு
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன்
தெரியச்சொன்னஓராயிரத்துளிப்பத்தும்
உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே.

**ஆ.**—(தெரிதல்.) - விபிஸிவஸநகாதிகளுடைய ஸ்ரவணமநந நிதித்யாஸநங்களுக்குஅபூமியாய் ஸ்ரிய:பதியாயிருந்த எம்பெருமானுக்குரிய தொண்டர் தொண்டர் தொண்டன் சடகோபன்சொன்ன வாயிரத்துள், கண்ணுற்கண்டதிற்காட்டிலும் விசதமாம்படி சொன்ன இத்திருவாய்மொழியை வல்லார்களை, இத்திருவாய்மொழிதானே அவன் குணங்களுக்குத்தோற்று அடிமையாம்படி பண்ணுமென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இப்பத்துங்கற்றவர்கள் எம்பெருமானுக்கு அந்தரங்கிங்கராவரென்கிறார்.

[தெரிதலென்று தொடங்கி] - ஸ்ரவணமநநாதிகளாலே பரிச்சேதிக்க முடியாத ஸ்ரிய:பதிக்கு அஸாதாரணசேஷத்வ பர்யவஸாநபூமியான ஆழ்வார். [தெரியவென்று தொடங்கி] - கரதலாமலகம்போலே யெல்லார்க்கும் அறிந்துகொள்ளலாம்படி அருளிச்செய்த ஆயிரம் திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழி.

பாலத்வயுவத்வாதிரூபா பாதிக ஜ்ஞாநஸங்கோச விகாஸவ்யாவ்ருத்தி. ''குறுகாநீளா'' என்று - ஸாந்வயவிநாசமில்லையென்கிறது: ஸாந்வயவிநாசமாவது - அவயவஸங்காதாத்மகமான சரீரத்தோடேயந்விதனாயிருக்கச்செய்தே பால்யாதிஅவஸ்தாகமாக பூர்வகமான யௌவநாதிஅவஸ்தாஹாக்த்வம். நிரந்வயவிநாசமாவது சரீரநாசம். இப்போது இவ்விரண்டும் இல்லாவிட்டாலும் காலாந்தரத்திலேதான் உண்டோ? என்னமாற்றாமலிருக்கிற இத்யாதி என்ற ஸங்கதி. இவ்விடத்திலே - ''நஜாயதே ம்ரியதே வா கதாசித்'' இத்யாத்யநுஸந்தேயம். காலோபாதியால் வரும் ஸங்கோசவிகாஸங்களின்றிக்கே யிருக்கையாவது - கல்பாதியிலே தோற்றிக் கல்பாந்தத்திலே விநாஸமாமாகார மின்றிக்கேயிருக்கை. இங்ஙனேயென்றது - கீழுக்த ப்ரகாரங்களை. ''உனக்கேயாளாகும்'' என்றதைப்பற்ற - 'பகவதநுபவமானது' என்கிறது. ''மறுகாலின்றி'' என்றதுக்கர்த்தம் - ஒருநால் இத்யாதி. ''மற்றைப்போதின்றிக்கே யிருப்பது'' என்றதின் விவரணம் - மறுத்தின்றியிலேயிருப்பது என்று. ''தெரியில்'' - விசாரிக்கில். ''சிறுகாலம்'' என்றதுக்கர்த்தம் - க்ஷணகாலமாவது என்று. ''அந்தோ'' என்றதுக்கு ஹாவாந்தரமாதல், ''உறுமோ'' என்றதுக்கு ஹாவமாதல் - இவ்வர்த்தம் இத்யாதி. 'மாயோன், உனக்கேயாளாகும் மறுகாலின்றி - சிறுகாலத்தை - குறுகாநீளா' என்று தொடங்கி, 'இன்பம் சேர்ந்தாலும் - தெரியில் - உறுமோ; அந்தோ!' என்றந்வயம். உறுமோ - ஒக்கவற்றோ. சிறுகாலத்துக்கொப்பாகமாட்டுமோ? என்றபடி.

(க௦)

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழிதன்னோடு அந்வயமுடையாரை ஸர்வ ரக்ஷகனுக்கு அநந்யார்ஹஶேஷபூதராக்குமென்று, ஃபலத்தையருளிச்செய்கிறார்.

தெரிதல் - (ஶ்ரவணத்தாலே) தெளிந்து, நினைதல் - (மநநத்தாலேப்ரதிஷ்டிதமாம்படி) நினைத்து, எண்ணல் - (நிதித்யாஸநத்தாலே த்ருவையான) ஸ்ம்ருதியைப் பண்ணினாலும், ஆகா - பரிச்சேதிக்கவொண்ணாத, திருமாலுக்கு - ஸ்ரீய:பதியானவனுக்கு, உரிய தொண்டர் - அநந்யார்ஹஶேஷபூதரானார்க்கு, தொண்டர் - ஶேஷபூதரானார்க்கு, தொண்டன் - ஶேஷபூதரான, சடகோபன் - ஆழ்வார்,(ஃபகவத்வைலக்ஷண்யத்தையும் இதர வைலக்ஷண்யத்தையும்), தெரிய - விசதமாக, சொன்ன - அருளிச்செய்த, ஓர் ஆயிரத்துள் இப்பத்தும் -, (அப்யஸித்தவர்களை), உலகமுண்டாற்கு - ஸர்வ ரக்ஷகனுக்கு, உரியதொண்டர்—அநந்யார்ஹஶேஷபூதர், ஆக்கும் -. இது - கலித்துறை.

ஈ.—நிகமத்தில், இப்பத்தும் கற்றவர்கள் ஸர்வேஶ்வரனுக்கு அந்தரங்க கிங்கரராவரென்கிறார்.

[தெரிதலித்யாதி] - ஶ்ரவணமநநநிதித்யாஸநங்களால் பரிச்சேதிக்கமுடியாத ஸ்ரீய:பதிக்கு. ஸ்ரீய:பதியை க்ஷுத்ரனால் பரிச்சேதிக்க முடியாதென்கை, [உரிய இத்யாதி] - ஸ்ரீய:பதிக்கு அஸாதாரணமான தாஸ்யத்துக்கு பர்யவஸாநபூமியான ஆழ்வார். இவருடைய அஹம்புத்தியிருக்கிறபடி. * பயிலுஞ்சுடரொளிக்குப் பின்புததீயஶேஷத்வபர்யந்தமாயாயிற்று, இவருடைய அஹமர்த்தம் இருப்பது. இவ்வாழ்வருகையிறே - அநந்யார்ஹஶேஷத்வமாவது. [தெரியச்சொன்ன] - இதயபுருஷார்த்தங்களில் அல்பாஸ்திரத்வாதிகளையும், ஃபகவத்விஷயத்திலுடைய வைலக்ஷண்யத்தையும் வ்யக்தமாகச் சொன்ன. [உலகமுண்டாற்கு - உரியதொண்டராக்கும்] - இத்திருவாய்மொழிதானே ஸர்வரக்ஷகனுக்கு அந்தரங்கபரிகர மாக்கும்.

ஈடு.—நிகமத்தில் - இப்பத்தும் கற்றவர்கள் ஸர்வேஶ்வரனுக்கு அந்தரங்க கிங்கரராவரென்கிறார்.

[தெரிதலித்யாதி] - ஶ்ரவணமநநநிதித்யாஸநங்களாலே பரிச்சேதிக்க முடியாத ஸ்ரீய:பதிக்கு. †“நாயமாத்மா ப்ரவசநேந”(நாயமாத்மாப்ரவசநேந) இத்யாதி - கேவலஶ்ரவணாதிகளுக்கு அவிஷயமாயிருக்கும்; அல்லாதபோது இவைதான் அநுபவமாய் நிற்குமிறே.

நிகமம்.—தெரிதல் இத்யாதி. “உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கு” என்றதனால் கடாக்ஷித்தவதாரிகை - இப்பத்தும் இத்யாதி.

ஶப்தார்த்தம். ஶ்ரவணமநந இத்யாதி. “தெரிதல்” என்று - ஶ்ரவணம். “நினைதல்” என்று - மநநம். “எண்ணல்” என்று - நிதித்யாஸநம். ஶ்ரவணாத்யவிஷயத்வேப்ரமாணம் - நாயம் இத்யாதி. ஆனால், ‡“த்ரஷ்டவ்ய: ஶ்ரோதவ்ய:” இத்யாதிவாக்யத்தோடே விரோதியாதோ? என்ன - கேவல இத்யாதி. அதாவது $“ந வேதயஜ்ஞாத்யயநைர் ந தாநை:” என்கிற அத்யயநநிஷேதம் - ஹிரண்யோபயோகரஹிதகேவல பூமிவிஷயமானவோபாதி, “நாயமாத்மா” இத்யாதிவாக்யம் - ப்ரீதிரூபமன்றிக்கே ஶுஷ்கமான கேவலஶ்ரவணாதிகளுக்கு விஷயமன்றென்னுமிடத்தைச் சொல்லுகிறது; “த்ரஷ்டவ்ய:” இத்யாதிஶ்ருதி - ப்ரீதிரூபமான ஶ்ரவணாதிகளுக்கு விஷயமாயிருக்குமென்னுமிடத்தைச் சொல்லுகிறதென்றுகருத்து. கேவலஶப்தம் - ப்ரீதிரூபத்வாபாவபரம். கேவல ஶ்ரவணாதிகளன்றிக்கே ப்ரீதிரூபஶ்ரவணாதிகளானாலோ? என்ன - அல்லாதபோது இத்யாதி. அதாவது - கேவலஶ்ரவணாதிகளன்றிக்கே ப்ரீதிரூபமானபோது, ஸாக்ஷாத்காரஸமானாகாரமான அநுபவரூபமாயிருக்குமென்றபடி. ஶ்ரவணாத்யவிஷயத்வத்துக்கு ஶ்ரிய:பதித்வம் அடியோ? என்ன -

† க. உப. 1. 2. ‡ ப்ருஹ. உப - 4, 4. $ யஜுர் காண. 5, ப்ர. உ., பஞ் - 36.

[திருமாலுக்கு]-இதுக்குஅடி ஸ்ரீயப்பதியாகை: அதிரேஸர்வாதிகவஸ்துவுக்கு அடையாளம். [திருமாலுக்குரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன்]-ஸ்ரீயப்பதியான ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹஶேஷபூதரான ஆழ்வார். ஸம்ஸாரஸ்வஹாவாநுஸந்தாநம் பண்ணின கொடுமையாலும்,பகவத்விஷயத்திலே அவகாஹித்த கனத்தாலும், பெருவிடாயன் மடுவிலே விழுமாபோலே ஶேஷத்வத்தினுடைய எல்லையிலே விழுகிறார். இதுஇவருடையஅஹம்பத்தியிருக்கிறபடி. தேஹாத்மாபிமாநியானபோது தேஹத்திலே அஹம்புத்தியைப்பண்ணும்; "தேஹாத்வ்யதிரிக்தம்ஒன்றுண்டு" என்று அறிந்தபோது ஆத்மாவிலே அஹம்புத்தியைப் பண்ணும்; தன்னை ஸ்வவச்சேஷபூதனாக அநுஸந்தித்தபோது ப்ரகாரமாத்ரத்திலேநின்று ஐஶ்வர்யாதிகளைக்கொண்டுபோம், 'ஶேஷத்வமே புருஷார்த்தம்" என்றுஅறிந்தபோது தன்னை ததீயசேஷத்வபர்யந்தமாக அநுஸந்திக்கக்கடவன். * பயிலுஞ்சுடரொளிக்குப்பின்பு ததீயசேஷத்வபர்யந்தமாயாயிற்று, இவருடைய அஹமர்த்தம் இருப்பது. இவ்வளவுவருகையிறே - அநந்யார்ஹஶேஷத்வமாவது.[தெரியச்சொன்னஇத்யாதி] - பகவத்வைலக்ஷண்யத்தையும், ஸம்ஸாரத்தினுடைய தோஷத்தையும் விசதமாகச்சொன்ன பத்தும். [உரியதொண்டராக்கும் உலகமுண்டாற்கே] - ஸர்வரக்ஷகனான ஸர்வேஶ்வரனுக்கு அநந்யார்ஹஶேஷமாக்கும் இத்திருவாய்மொழி. [உரியதொண்டராக்கும்] - ஸம்ஸாரம் நன்றுமாய் ஹகவத்விஷயம் தீதானாலும் அத்தை விடமாட்டாதவர்கள். (கக)

அதிரே இத்யாதி. இப்போது தம்மை சரமாவதிஶேஷமாக அருளிச்செய்கைக்குக் கருத்தேதென்ன - ஸம்ஸார இத்யாதி. இத்தாற்பலிதம் - "ஆத்மாவுக்கு ததீயசேஷத்வமே நிரூபகமென்று தோற்றுகிறதென்கிறார் - இது இவருடைய இத்யாதி. மற்றார் தேஹாதிகளிலே அஹம்புத்தியைப் பண்ணுகிற்க இவரிப்படி ப்ரதிபத்திபண்ணுகைக்குஅடியேது? என்ன-தேஹாத்ம இத்யாதி நாலுவாக்யம். இப்படி ததீயசேஷத்வத்தையிட்டு நிரூபிக்கை மற்றதிருவாய்மொழிகளிற் காணேமேயென்ன - பயிலும் இத்யாதி. ஆனால் ஈஶ்வரசேஷத்வப்ரதிபாதகப்ரமாணவிரோதம் வாராதோ? என்ன - இவ்வளவு இத்யாதி. "உரிய" என்றதுக்கு அர்த்தம் - ஸம்ஸாரம் இத்யாதி. அதாவது குணக்ருததாஸ்யமன்றிக்கே ஸ்வரூபப்ரயுக்ததாஸ்யயுக்தராக்குமென்றபடி. "உரிய" என்றது - யோக்யமான என்றபடி. (கக)

த்ராமிடோபநிஷத்ஸங்கதி. — [illegible]

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி. — [illegible]

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

நீராகிக்கேட்டவர்கணெஞ்சழியுமாலுக்கு
ஏரார்விசும்பிலிருப்பரிதா - வாராத
காதலுடன்கூப்பிட்டகாரிமாறன்சொல்லை
ஓதிடவேயுய்யுமுலகு.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

# பத்தாந்திருவாய்மொழி—உலகமுண்ட—ப்ரவேஶங்கள்.

ஆ—(உலகமுண்டபெருவாயா.) - இப்படி திருநாட்டிலே கேட்கும்படி கூப்பிட்டழைத்தும் அவனைக் காணப்பெறாமையாலே, "இனி இவனைக் காண்கைக்கு உபாயம் இவன்திருவடிகளை ஶரணம்புகுகை போக்கி மற்றொன்றுமில்லை" என்று பார்த்து, இவனுடைய காருண்ய வாத்ஸல்யாதி குணங்களைப் பற்றாசாகச் சொல்லிக்கொண்டு, பிராட்டி புருஷகாரமாக ஸர்வலோகஶரண்யனான திருவேங்கடமுடையான் திருவடிகளை ஶரணம் புகுகிறார்.

ஒ.—பத்தாந்திருவாய்மொழியில், இப்படி ஸ்ரீ வைகுண்டநாதனுங்கேட்கும் படி பெரியவார்த்தியோடே கூப்பிடச்செய்தே ஸர்வரக்ஷகனானவன் தான்வந்து தோற்றியருளாவிட்டவாறே மிகவும் அவஸந்நரான ஆழ்வார், ஸ்ரிய:பதியாய் அயர்வறுமமரர்களதிபதியாய்வைத்துத் தன்னுடைய காருண்யவாத்ஸல்யாதி கல்யாண குணங்களாலே தேவமநுஷ்யாதி ஸஜாதீயனாய்வந்து திருவவதாரம்பண்ணி ஆஸ்ரிதருடைய விரோதி நிரஸநம்பண்ணி அவர்களை ரக்ஷிக்கக்கடவனாய், அதுக்கீடான பரிகரத்தை யுடையனாய், ஆஸ்ரிதர்க்கு அணித்தாகத்திருமலையிலே நின்றருளுவதுஞ்செய்து, ஜ்ஞாநஶக்த்யாதி காரியாதிகார்ய விஶேஷங்களை அபேக்ஷியாதே ரக்ஷகனாயிருந்துள்ள திருவேங்கடமுடையான் திருவடிகளிலேவிழுந்து "ஸஹ ராத்ரா ஶரணம் கத:" என்னும்படியாலே இளையபெருமாள் பிராட்டிமுகமாகப் பெருமாளை ஶரணம்புக்காப்போலே தத்கைங்கர்யைகப்ரயோஜநராய்த் தம்முடைய ஆற்றாமையாலே அநந்யாதிகராய், பெரியபிராட்டியாரை புருஷகாரமாகக்கொண்டு ஶரணம் புகுகிறார்.

ப.—பத்தாந் திருவாய்மொழியில், கீழ் - தமக்குப் பிறந்த ப்ராவண்யாதிஶயத்தாலே புருஷார்த்த வைலக்ஷண்ய நிபந்தநமான ஆர்த்தி பிறந்து கூப்பிட்டவர், "ஃபலஸித்திக்கு ஶரண்யனானவன் திருவடிகளையொழிய உபாயமில்லை" என்று அறுதியிட்டு, ஶரண்யத்வப்ரகாசகமான அகில ஜகத்ரக்ஷணாகாரத்தையும், அஶேஷவிரோதி நிவர்த்தநத்தில் அத்யுஜ்ஜ்வல பரிகரயோகத்தையும், ரூபகுண ஸாரஸ்யத்தாலுண்டான உத்துங்கா நுபாவ்யதையையும், ஜகத்விரோதிகளுக்குத் திங்குவிளைக்கும் ஸ்ரீமத்தையையும், ஆஸ்ரிதரக்ஷணார்த்தமான அநாயாஸவ்யாபாரத்தையும், அதிஶயிதஜ்ஞாநர்க்கும் ஆராத்யனாம்படியையும், ஸர்வஸாதாரண ஸாரஸ்யாதிஶயத்தையும், ஸாவபோதரான ஸம்ஸாரிகளுக்கும் ஸாதராஶ்ரயணீயனாம்படியையும், அதிஶயித போக்யமான அவயவ சோபையையும், ஆஶ்ரயணீயத்வாகாரத்தையும் அநுஸந்தித்து, இப்படி ஶரண்யனான திருவேங்கடமுடையான்விஷயமாக ஸக்ரம ஸமக்ர ஶரணாகதியைப்பண்ணித் தலைக்கட்டுகிறார்.

இ.—பத்தாந்திருவாய்மொழியில், இப்படி பெரிய வார்த்தியோடே பரமபதத்திலே கேட்கும்படி கூப்பிடச்செய்தேயும் ஸர்வரக்ஷகனானவன் வந்து முகங்காட்டாமையாலே மிகவும் அவஸந்நரானவர், ஸ்ரிய:பதியாய் நித்யஸூரிகளுக்குத் தன் குணங்களை அநுபவிக்கக் கொடுத்துக்கொண்டிருக்கிற பெருமையையுடையனாயிருக்கச் செய்தேயும் ஸம்ஸாரிகள் நோவுபடுகிறபடியைக்கண்டு காருண்யவாத்ஸல்யாதிகளை ஹேதுவாக இதர ஸஜாதீயனாய் இங்கேவந்து அவதரித்து "பரித்ராணாய ஸாதூநாம்" என்

கிறபடியே ரக்ஷித்து "இதுக்குப் பிற்பட்டார் இழக்கவொண்ணாது" என்று பார்த்துத் திருமலையிலே நித்யவாஸம்பண்ணி, தன் திருவடிகளை ஆஶ்ரயிப்பார்க்கு க்ஷேமகாலாயி கார்யங்களிலே ஶேஷங்களை அபேக்ஷியாதே ருசியே அடியாக ஆஶ்ரயிக்கலாம்படி நிற்கிற திருவேங்கடமுடையான் திருவடிகளிலே, "ஸ ப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய" என்று இளையபெருமாள் பிராட்டிபுருஷகாரமாக ஶரணம்புக்காப்போலே, தம்மாற்றாமையாலே அலர்மேல்மங்கை முன்னாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார். ஶரண்யவிஷயத்தில் ஶரணாகதிக்கே வ்யாப்தியாகையாலே, ஒன்பது பாட்டாலும் - அவனுடைய ஶரண்யதையைச்சொல்லி, பத்தாம்பாட்டிலே ஶரணம்புக்கு முடிக்கிறார்.

ஈடு.—கீழில்திருவாய்மொழியில் - ப்ராப்யவேஷமிருக்கும்படி குறைவறச்சொன்னார்; இத்திருவாய்மொழியில் - ப்ராபகவேஷம்குறைவறச்சொல்லுகிறார்; கீழில் அதில் உபாயப்ரஸங்கமுண்டேயாகிலும், ப்ராப்யப்ரதானமாகக் கடவது; இதில் உபேயப்ரஸங்கம் உண்டேயாகிலும், ப்ராபகப்ரதானம். கீழில்திருவாய்மொழி திருமந்த்ரம்போலே: இத்திருவாய்மொழி சரமஶ்லோகம்போலே. இரண்டும் ஒன்றிலேயுண்டிறே என்னில்?—அது, பக்தியோகத்தாலே வருமதிறே; அவஸ்தாந்தரங்களைப் பற்றிவரும் இரண்டும் இரண்டாயேயிருக்கக் கடவதிறே. பெரியஆர்த்தியோடே பரமபதத்திலே கேட்கும்படி கூப்பிடச்செய்தேயும் ஸர்வரக்ஷகனானவன் வந்து முகங்காட்டாமையாலே மிகவும் அவஸந்நரானவர், ஸ்ரிய:பதியாய் அவாப்தஸமஸ்தகாமனாய் உபயவிபூதியுக்தனாய் ஸமஸ்த கல்யாணகுணாத்மகனாய் "வைகுண்டே து பரே லோகே ஶ்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: । ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ" (வைகுண்டேது பரே லோகே ஸ்ரியாஸார்த்தம்ஜகத்பதி: ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்ப்பாகவதைஸ்

---

உலகமுண்ட ப்ரவேஶம். ஸங்க்ரஹஸங்கதி - கீழில்திருவாய்மொழியில் இத்யாதி. அதாவது, இத்திருவாய்மொழியிலே ஶரணம்புகுகிறாரென்று ஸங்கதி சொல்லுகையாலே, ஶரணாகதனான ஸம்பந்தம் முக்தனிற்காட்டில் ஏற்றம் - ப்ராப்யப்ராபகங்கள் இரண்டும் அவனேயென்னுமது என்று விவக்ஷித்து, ஈஶ்வரனுடைய ப்ராப்யப்ராபகத்வத்தை - கீழில்திருவாய்மொழியிலும் இத்திருவாய்மொழியிலும் அருளிச்செய்கிற [illegible], என்றபடி. ப்ராப்யவேஷம் குறைவறச்சொன்னாரென்றது - "கோலத்திருமாமகளோடுன்னை," "தடந்தாமரைகட்கே" என்றத்தைப்பற்ற. "அகலகில்லேன்" இத்யாதியைப்பற்ற 'ப்ராபகவேஷம்' என்றது. கீழில்திருவாய்மொழியிலே, "காப்பானே" என்று - உபாயத்வமும், இத்திருவாய்மொழியில், "ஊற்றேறுளமுதே" என்று - உபேயத்வமும் சொல்லிற்றில்லையோ? என்ன - [illegible] இத்யாதி. இரண்டும் உண்டானாலும் ஒன்றிலே ப்ரதானமாயிருக்குமதுக்கு த்ருஷ்டாந்தம் - கீழில்திருவாய்மொழி இத்யாதி. திருமந்த்ரமென்றது - ப்ராப்யப்ரதானமான திருமந்த்ரமென்றபடி. சரமஶ்லோகமென்றது - ப்ராபகப்ரதானமான சரமஶ்லோகமென்றபடி. 'இரண்டுமொன்றிலே' இத்யாதிக்குக் கருத்து - ப்ராப்யத்வப்ராபகத்வங்கள் இரண்டும் நித்யமாகையாலே, பால் மருந்தாமாபோலே, ப்ராப்யத்வதசையிலும் ப்ராபகத்வம் ஈஶ்வரனிடத்திலே யுண்டாயிருக்க, அது - ப்ராப்யபரம்; இது - ப்ராபகபரமென்று விபஜிக்கக்கூடுமோ? என்னிலென்று. 'அது பக்தியோகத்தாலே' இத்யாதிவாக்யத்துக்குக் கருத்து - ப்ராப்யமே ப்ராபகமாகவல்ல பக்தியோகத்தாலே இரண்டும் ஏகவஸ்துவிலே எப்போதும் உண்டானாலும், சேதநனுடைய வரணதசை ப்ராப்திதசையாகிற அவஸ்தாபேதத்தாலே ப்ராப்யத்வ ப்ராபகத்வங்களிரண்டும் க்ரமிகமாகையாலே இப்படி விபஜிக்கக் குறையில்லையென்று. விஸ்தரஸங்கதி - பெரிய இத்யாதி. அதிகாரி நியதியாவது - தசரதவஸுதேவாத்யதிகாரி

ஸஹ) என்கிறபடியே - ஸ்ரீவைகுண்டத்திலே நித்யஸூரிகளுக்குக் காட்சிகொடுத்துக் கொண்டிருக்கக்கடவ ஸர்வேஸ்வரன், "பலரும் நம்மையிழக்க, நாம் கேடுங்கை நீட்டாக இருக்கவொண்ணாது" என்று பார்த்தருளி ராமக்ருஷ்ணாத்யவதாரங்களைப்பண்ணி ஸம காலத்திலுள்ளார்க்குத் தன் குணசேஷ்டிதங்களைக் காட்டி அநுபவிப்பித்தும், அக்காலத்திலும் பிற்பாடரான ஸம்ஸாரிகளுக்கும் இழக்கவேண்டாதபடி ருசிஜநகனையக்கொண்டு திருமலையிலே நாய்ச்சிமாருடனே கூடநின்றருளின படியைக்கண்டு; அதிகாரிநியதி, காலநியதி, அங்கநியதி என்றாற்போலே சொல்லுகிற நிர்ப்பந்தங்கள் ஒன்றுமின்றிக்கே ஆச்ரயிக்கலாம்படியிருக்கிற ஸௌசீல்யத்தைக் கண்டு, திருவேங்கடமுடையான் திருவடிகளிலே, பெரியபிராட்டியார் முன்னிலையாகத் தம்முடைய அநந்யகதித்வத்தை விண்ணப்பஞ்செய்து சரணம்புக்குத் தம்முடைய அத்யவஸாயத்தை அறிவிக்கிறார். கீழேயும் பலவிடங்களிலே - ப்ரபத்தி பண்ணினார்; அவ்விடங்களிலே - "ராஜமஹிஷி புக்கவிடத்தே நிருபகுமாரங்களும் புகக்கடவது" என்கிற ந்யாயத்தாலே, லக்ஷ்மீஸம்பந்தஞ் சொன்னார்; இங்கு அது தன்னையே வாய்விடுகிறார் கீழில் ப்ரபத்திகள் திருமந்த்ரம்போலே: இது த்வயம்போலே. திருமந்த்ரத்திலும் லக்ஷ்மீஸம்பந்தத்துக்கு வாசகமானசப்தங்களுண்டாயிருக்கச்செய்தே, முக்தகண்டமாகச் சொல்லிற்று த்வயத்திலேயிறே; அதுபோலே இத்திருவாய்மொழி. "தாவதார்த்திஸ்ததா வாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம்" (தாவதார்த்திஸ்ததா வாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம்.) [தாவதார்த்தி:] (தாவதார்த்தி) - "இழந்தது பெறவேணும்" என்னுமதுவும் அவ்வளவே. [ததா வாஞ்சா] (ததாவாஞ்சா) - அப்ராப்த விஷயத்தில் பண்ணும் சாபலமும் அவ்வளவே. [தாவந்மோஹ:] (தாவந்மோஹ:) - தேஹத்தையும் ஆத்மாவையும் ஏகீகரித்ய புத்தி பண்ணுகை [ததா ஸுகம்] (ததா

ப்ர. — [உலகமுண்டப்ரவேசம்] — ஸ்ரீவிஷ்ணுபுராணே ப்ரஹ்லாதம் ப்ரதி பகவத்வசனம் "தாவதார்த்திஸ்ததா வாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம் । யாவந்ந யாதி சரணம் த்வாமசேஷாகநாசநம் ॥" [illegible]

நியதி. காலநியதியாவது - க்ருதாதிநியதி. அங்கநியதியாவது - [illegible] ப்ரவேசம் சரணம்புக்காரே, அதுக்கும் இதுக்கும் வாசியென்னென்ன [illegible] சாப்தமாகச்சொல்லுகை. உக்தார்த்தத்துக்கு த்ருஷ்டாந்தம் - [illegible] த்வயவிவரணம் - திருமந்த்ரத்திலும் இத்யாதி. வாசக சப்தம் - [illegible] அர்த்தஸாமர்த்யத்தாலே ஜ்ஞாபகமான என்றபடி. 'வாசகமானசப்தங்கள்' [illegible] பதங்களைக் கடாக்ஷித்து. ப்ரபத்திதான் மோக்ஷப்ரதமோ? என்ன; மோக்ஷ [illegible] ஸாதகம் என்னுமதுக்கு ப்ரமாணம் - தாவதார்த்தி: இத்யாதி. "தாவதார்த்திஸ்ததா வாஞ்சா தாவந்மோஹஸ்ததாஸுகம் । யாவந்ந யாதி சரணம் த்வாமசேஷாகநாசநம்" [illegible] ஸ்ரீவிஷ்ணுபுராணே பகவந்தம்ப்ரதிப்ரஹ்லாதவசனம். "க்ஷுத்த்ருட்ஜ்வராஸுகம்" [illegible] சதுஷ்டய விஷயம் - இஸ்ஸ்லோகம். 'அவ்வளவே' என்றது - அவனை ஆச்ரயிக்குமளவே என்றபடி. 'இழந்தது பெறவேணும்' இத்யாதியாலே - ஆர்த்தனைச்சொல்லுகிறது. அதாவது - ப்ரஷ்டைச்வர்ய காமனைச்சொல்லுகிறதென்றபடி. 'வாஞ்சா' என்று ஐச்வர்யகாமனுடைய வாஞ்சையைச்

ஸுகம்), "ஏஷஹ்யேவாநந்தயாதி" (ஏஷஹ்யேவாநந்தயாதி)-என்கிறதுக்கு விரோதமாய்வரும் ஸ பகங்களும் அவ்வளவே. "யாவந்நயாதிஶரணம் த்வாமஶேஷாகநாஶநம்" (யாவந்நயாதிஶரணம் த்வாமஶேஷாகநாஶநம்)-ஐஶ்வர்யம் ஆத்மப்ராப்தி பகவத்ப்ராப்திவிரோதி இவையெல்லா முன்னைக் கிட்டமேளவேயிறே நிற்பதென்கிறது. இப்படியே தம்முடைய ஸகலவிரோதிகளும் போய்த் தம்முடைய ஸகலாபேக்ஷிதங்களும் கிடைக்கைக்கு ஒரு குறையில்லையென்று, ஸதா ஸந்நிஹிதனை திருவேங்கடமுடையான் திருவடிகளிலே சரணம் புகுகிறார். இனித் தான், சரணாகதி ஃபலப்ரதையாமிடத்தில் ஶரண்யன் பக்கலிலே பண்ணவும்வேணும்; தான் அதிகாரியாகவும் வேணும். வ்யதிரிக்த விஷயங்களிலே பண்ணுமிடத்தில் அதுதானே ஹாநஹேதுவாகக் காணாநின்றோமிறே. இங்ஙனேயிருக்கச்செய்தேயும் அவ்வோவிடங்களிலேயும் ஃபலிக்கிற இது, இவ்விஷயத்தில் ஃபலியாநின்றதென்னுமிடம் கிம்புநர்ந்யாயஸித்தம். இனித் தான் அதிகாரியாமிடத்தில், மெய்யே அநந்யகதியாகவும் வேணும்; ஶரணம்புகா, ஃபலித்ததில்லையென்று, "அஸமர்த்தம்விஜாநாதி" (அஸமர்த்தம்விஜாநாதி) என்பாராகாது. "மயர்வறமதிநலமருளினன்" என்று, அநந்தரத்திலே மடலெடுத்துக்கொண்டு புறப்படுவோர்வேணும். பண்ணின ப்ரபத்திக்கு

---

சொல்லுகையாலே, அர்த்தார்த்தியைச்சொல்லுகிறது. அப்ராப்தவிஷயத்திலென்றது, அபூர்வ ஐஶ்வர்யத்திலென்றபடி. மோஹமென்றது - ஆத்மப்ராப்திகாமனுக்கும் ஆத்மாநுபவவிரோதியான தேஹாத்மாபிமாநரூபமான அஜ்ஞாநம். ஸர்வேஶ்வரன் திருவடிகளை ஆஶ்ரயித்தால் அதுபோகையாலே, ஆஶ்ரயிக்குமளவேயவனுக்கு அந்தஅஜ்ஞாநமுள்ளது என்றபடி. இத்தால் - ஜிஜ்ஞாஸுவைச் சொல்லுகிறது. "ஸுகம்" என்றது - பகவத்ப்ராப்திகாமனுக்கு ஆத்மாநுபவைஶ்வர்யாநுபவ ஸுகங்கள் விரோதியாகையாலே. ஸர்வேஶ்வரனை யாஶ்ரயித்தால் அதுபோகையாலே, ஆஶ்ரயிக்குமளவே அந்தஸுகமுள்ளதென்றபடி. இத்தால் - ஜ்ஞாநியைச்சொல்லுகிறது. விரோதமாய்வரும் ஸுகங்களுமென்றது - ஜ்ஞாநிக்கு பகவதநுபவகாமனாவிரோதிகளான ஐஶ்வர்யாத்மாநுபவ ஸுகங்களுமென்றபடி. [illegible] அநுவதித்துக்கொண்டு "அஶேஷாகநாஶநம்" என்றதுக்கர்த்தம்-ஐஶ்வர்யம் இத்யாதி. "ஆதிபூ, வாரூா" என்கிற இரண்டிலும் அதிகாரிபேதமுண்டாகிலும், [illegible] 'ஐஶ்வர்யம்' என்கிறார். 'விரோதி' என்ற பதத்தை - ஐஶ்வர்ய விரோதி ஆத்மப்ராப்தி விரோதி பகவத்ப்ராப்தி விரோதி என்றெல்லாவற்றிலும் அந்வயிப்பது. இத்திருவாய்மொழியிலே, "உலகமுண்டபெருவாயா" இத்யாதிகளாலே - ஶரண்யஸ்வரூபத்தையும், "குலதொல்லடியேன்" இத்யாதிகளாலே - அதிகாரிஸ்வரூபத்தையும் சொல்லி ஶரணம்புகுகிறது; ஶரணாகதிஃபலஸாத்யத்துக்கு இரண்டும் அபேக்ஷிதமாகையாலே என்கிறார் - இனித்தான் இத்யாதி. ஶரண்யன்பக்கலிலே என்றது - குறைவிலென்றபடி. குணவிரஹிதவிஷயத்திலே பண்ணினதேல், ஃபலஸாதகமன்றிக்கே அநர்த்தமேயாமென்கிறார் - வ்யதிரிக்த இத்யாதி. ஹாநஹேதுத்வம் - "[illegible]" என்று ஶரணம்புக்க சக்ரவர்த்தி விஷயமாகச் [illegible] பக்கலிலே கண்டுகொள்வது. பகவத்வ்யதிரிக்தரான சிபி கபோதம் முதலானோர் பக்கலிலே ஃபலப்ரதைகளாகவும் காணாநின்றோமேயென்ன - இங்ஙனே இத்யாதி. அவ்வோவிடங்களிலேயும் என்றது - சிபிகபோதாதிவிஷயங்களிலேயுமென்றபடி. "தான் அதிகாரியாகவும்வேணும்" என்றதனை உபபாதிப்பதாக உபக்ரமிக்கிறார் - இனித்தான் அதிகாரியாமிடத்தில் இத்யாதி. அநந்யகதியல்லாதார்க்கு ஃபலவ்யாப்தமாகாதென்னுமதத்தை ப்ரமாணமுகத்தாலே தர்ஶிப்பிக்கிறார் - ஶரணம்புகா இத்யாதி. பின்னை யார் அதிகாரிகளாகவேணும்? என்ன, ஆழ்வார் போல்வார் ஆகவேணுமென்கிறார் - மயர்வற இத்யாதி. அதாவது - "அருளினன்" என்று - க்ருபையையே உபாயமாக அத்யவஸித்து, உடனே ஃபலியாவிட்டாலும் ஸ்வப்ரவ்ருத்தியிலே அந்வயிக்கையன்றிக்கே, "மடலெடுத்

ஷலந் தாழ்த்ததேன்று வேறேபோக்கடியுடையார்க்குக் காரியமாகாதிறே. "[illegible]" (ஸாகரம்ஶோஷயிஷ்யாமி பத்ப்யாம் யாந்து ப்லவங்கமா:) என்று அவன் தாழ்த்ததுவே ஹேதுவாக, ஜலதத்த்வத்தை யழித்துப் போகட்டு மற்றைநாலையுங்கொண்டு கார்யங் கோள்ளுகிறேன் என்ருரிறே. [[illegible]] (க்ஷமயாஹிஸமாயுக்தம்) - " 'ஒரு பெண்பெண்டாட்டி எனர்ந்த என் றத்தை ஸ்வீகரிக்கை யாவதேன்?' என்று ராஜ்யத்தைப் போகட்டுப் பொறுத்துப் போந்தார்; இங்கே வருணனை வழிவேண்டி அவன் முகங்காட்டிற்றிலன் என்று, சீறிக் காலைக் கையைக் கட்டாநின்ருர்; இது இருந்தபடி யேன்?" என்ருற்போலே யிருந்தார்கள் முதலிகள். (க்ஷமைக்குவிஷயமுண்டு, ஈத்ருஶஜநத்தில் க்ஷமை யோண்ணுதேன்கிருர்.) "இவன் வந்திலன்" என்று நாம் சீறவோண்ணுதபடி, வாலி புறப்படுகிறபோது தாரைவந்து காற்

---

ப்ர—[illegible]

---

கிறேன்" என்று அச்சமுமுத்தி அவனாலே கார்யங்கொள்ளுவாராகவேணு மென்றபடி [illegible] ஸ்வரூபவிருத்த மானாலும், அவனைக்கொண்டே தம்முடைய கார்யத்தைத் தலைக்கட்டிக் கொள்ளுகை யாலே அநந்யகதித்வத்துக்கு பங்கமில்லை என்று திருவுள்ளம்பற்றி '[illegible]வார் வேணும்'என்கிருர். "[illegible]" என்பார் அதிகாரிகளுறுக்கு [illegible]தென்ன - பண்ணின இத்யாதி. வேறே போக்கடி யுடையார் ஆர்என்ன, [illegible] - ஸாகரம்இத்யாதி. "[illegible]" இதி யுத்தகாண்டே. "[illegible]" என்றதிலே நோக்காக அவதாரிகை - ஒருபெண்பெண்டாட்டி. இத்யாதி. [illegible] தாத்பர்யம் - பரிபவித்தது இருவர்க்கும் ஒத்திருக்கச்செய்தே அவளிடத்திலே க்ஷமைபண்ணினதேன்? இங்கு "க்ஷமைபண்ணவேண்டோம்" என்கிறதென் ? அங்கு க்ஷமைபண்ணினாலும் இங்கும் க்ஷமைபண்ண வேண்டாவோ ? என்று. காலைக் கையைக் கட்டுகையாவது-விற்காலைப் பிடிக்கையும், விரற்சரட்டைக் கட்டுகையு மென்றபடி. கால் - விற்கால். கை - விரற்சரடு. கையென்று - விரற்சரட்டைச்சொல்லு மோ? என்ன; "கைபுடைகோதைகைக்கட்டியாகும்" என்று நிகண்டு. அதாவது - கையென்றும், புடையென்றும், கோதையென்றும், கைக்கட்டிக்குப்பேர் என்றபடி. கைக்கட்டி - விரற்சரடு. சாடு வுக்கு, ஸ்புடம்: 'இருந்தார்கள் முதலிகள்' என்றவநந்தரம், முதலிகளுடைய சங்கைக்கு பரிஹாரம் அத்யாஹார்யம். அதாவது - கைகேயி ஸமுத்ரத்தைப்போலே அஸமர்த்தனாகநினைக்கவில்லை; அபலை யாகையாலே, ராஜ்யத்தை யாசைப்பட்டாள் இத்தனை; ஆகையாலே க்ஷமைபண்ணிவிட்டுவந்தோம்;

வது - இவர்கள்ஜீவநஹேதுவான காலத்தைநலிகை. [தீவாய்வாளி]- பெருமாள் தொடுத்து விடும்போதாயிற்று அம்பு என்றறியலாவது; படும்போது நெருப்புப் பட்டாற்போலேயிருக்கை. ஸ்ரீஶார்ங்கத்தில் நாணியைக்கழிந்தபோதே,காலாக்நி கவடுவிட்டாற்போலேஎரிந்துகொண்டு செல்லாநிற்கும். குணஹீநமானுலிருக்கும்படியிறே இது. "தீப்தபாவகஸங்காஶை:" (தீப்தபாவகஸங்காஶை:)-படும்போதிருக்கும்படி. "ஶிதை:" (ஶிதை:)-பட்டமைதெரியாதேதோளையுருவிஅவ்வருகேவிழக்காணுமித்தனை."காஞ்சநபூஷணை:"(காஞ்சநபூஷணை:)இவற்றுக்குஆகாரத்வயமுண்டாயிருக்கிறபடி."சரங்களாண்டதண்டாமரைக்கண்ணனுக்கன்றி என்மனந்தாழ்ந்துநில்லாது''என்கிறபடியே அநுகூலர்க்குஅகப்படுகைக்கும்அது தானேயாயிருக்கிறபடி."நத்வாம்ச்சாமி" (நத்வாம்ச்சாமி)இத்யாதி-இவ்வழகுக்குஇலக்காய் வாழ்ந்துபோகலாயிருக்க, எதிரிட்டுமுடிந்துபோக நான் இச்சிக்கிறிலேன். நீ எண்ணியிருக்கிறது நான்அறிகிறிலேனிறே. இருத்திப்பிடித்தவில்லும், தெரித்துப்பிடித்தபகழியுமாய்க்கொண்டு நிற்கும்போது அபிராமராயிறே யிருப்பது; அவ்வழகைக்கண்டுஅநுபவிக்கமாட்டாதே, தண்ணீர் குடிக்கச்சல்லினஏரியிலே தலைகீழதாகவிழுந்து முடிவாரைப்போலே,*தயரதன்பெற்றமரதக மணித்தடத்தைஎதிரிட்டு முடிந்துபோக நான்காணமாட்டுகிறிலேன். [வாளிமழைபொழிந்த சிலையா]-"ஶரவர்ஷம்வவர்ஷஹ" (ஶரவர்ஷம்வவர்ஷஹ)என்கிறபடியே. பாட்டம் பாட்டமாக வர்ஷித்தபடி. [திருமாமகள்கேள்வா] - விரோதிகளைப் போக்கினதுகண்டுஉகந்தணைக்குமவளைச் சொல்லுகிறது. "பர்த்தாரம்பரிஷஸ்வஜே" (பர்த்தாரம்பரிஷஸ்வஜே) என்னுமவள்."தம்த்ருஷ்ட்வா"(தம்த்ருஷ்ட்வா)-வெறும்புறத்திலேஆலத்திவழிக்கவேண்டும்படி

---

என்கையாலே - ஶரீரம் உருவழியாதிருந்தமை தோற்றுகிறது. ஜீவநஹேதுவான காலத்தையென்றது - ஆயுஸ்ஸையென்றபடி. "தீவாய்" என்றதுக்கும், "வாளி" என்றதுக்கும்வாஸநை - பெருமாள் இத்யாதி. விவரணம் - ஸ்ரீஶார்ங்கத்தில் இத்யாதி. கவடுவிட்டாற்போலே - கிளைவிட்டாற்போலே. சாடு - குணஹீநம் இத்யாதி. "தீவாய்வாளி" என்றதுக்குப்ரமாணம் - தீப்த இத்யாதி. "தீப்தபாவகஸங்காஶை: ஶிதை: காஞ்சநபூஷணை:। நத்வாம்ச்சாமி ஸம்த்ருஷ்டும் ராகவேண நிஷூதிதம்॥" இதி யுத்தகாண்டே ராவணம்ப்ரதி விபீஷணஃ. [கசு, உஉ] 'படும்போது' அகங்கல்பமாய் 'இருக்கும்படி' என்றுகூட்டுவது. ஐஶ்வர்யத்தின் எல்லையை யருளிச்செய்கிறார் - பட்டமை இத்யாதி. ஆகாரத்வயமாவது - "ஶிதை:" என்கையாலே ஆயுதத்வமும், காஞ்சனபூஷணை: என்கையாலே போக்யத்வமும். போக்யத்வம் ஆர்க்கென்ன - சரங்களாண்ட இத்யாதி. திருமொழி ஏழாம்பத்து மூன்றாந்திருமொழி நாலாம்பாட்டு, "சரங்களாண்ட" இத்யாதி. அம்புகளையுடைத்தான புண்டரீகாக்ஷனை ஸர்வேஶ்வரனுக்கல்லது வேறுசிலர் விஷயமாக என்னுடைய ஹ்ருதயத்தில் ருசி பிறவாதென்றபடி. தண்டாமரைக்கண்போலே சரங்களும் போக்யமென்றபடி. "நத்வாம்ச்சாமி" என்றதுக்கு பாவம் - நீயெண்ணி இத்யாதி. நான் அறிகிலேனென்கையாலே - உன்னுடையநினைவு எனக்குத்தெரியாதென்றபடி. "ராகவேண" என்றதுக்கர்த்தம் - இருத்தி இத்யாதி - பகழி-அம்பு, தெரித்து - அடுத்து. "ராகவேண - ஶரீரேணாபி ஸம்த்ருஷ்டும் நேச்சாமி" என்கையாலே ஃபலித்த பாவம் - அவ்வழகை இத்யாதி. இவர் ஏரியோ? என்ன - தயரதன் இத்யாதி. "மழைபொழிந்த" என்றதுக்குவாஸநை - ஶரவர்ஷம் இத்யாதி. "ததோ ராமோ மஹாதேஜா ராவணாயாபியுயாத । ஆவிஷ்ய ராக்ஷஸம் ஸைந்யம் ஶரவர்ஷம் வவர்ஷஹ" இதியுத்தகாண்டே. (கூச - கஅ) "வாளிமழைபொழிந்தசிலையா" என்றதுக்கு அநந்தரம் "திருமாமகள்" என்றதுக்குபாவம்-விரோதிகளைப்போக்கினது இத்யாதி. அப்படியணைத்

யான அழகையுடையவரை, எதிரிகளைவென்ற வீரக்கோலத்தோடே கண்டாள். "ஶத்ரு ஹந்தாரம்" (ஶத்ருஹந்தாரம்) - தந்திருமேனியிலே ஒருவாட்டம் வாராமே, அவர்களைக் குற்றுயிராக்கி விடுவதுஞ்செய்யாதே, துண்டித்துஅடுக்கினவரை. முன்பு திருவயோத்யையிலிருந்த நாள், "இவர் வேட்டைக்குப் போனவிடத்தே இன்னபடியும் இன்னபடியும் பொருதார்; இன்னபுலியைக்குத்தினர்'' இன்னஸிம்ஹத்தைக் குத்தினர் என்றாற்போலே வந்யாக்கள் சொல்லக்கேட்கு மத்தனையிறே; இங்குப் பூசலுக்குப்புகுகிறபோதேபிடித்து மேலுள்ளவ்யாபாரங்கள் அடங்கலுங் கண்டாள். "மஹர்ஷீணாம் ஸுகாவஹம்" (மஹர்ஷீணாம் ஸுகாவஹம்) - ருஷிகளுடைய விரோதிகளைப்போக்கி, அவர்களுக்குக் குடியிருப்புப்பண்ணிக் கொடுத்தவரை. தங்கள் தபோபலத்தாலே வெல்லலாயிருக்க, தங்கள்ஹரத்தைப் பெருமாள்தலையிலேபோகட்டு முறை யுணர்ந்து கொண்டிருக்குமவர்களுக்கு. "கர்ப்பபூதாஸ்தபோதநா:" [கர்ப்பபூதாஸ்தபோதநா:]-தந்தாம் கைம்முதலழிய மாறாதேயிருக்குமவர்கள். தபோதநராயிருக்கச்செய்தே கர்ப்பபூதராயிருப்பர்கள். தந்தாமுக்கென்ன இயற்றியுண்டாயிருக்கச்செய்தே சர்ப்பாவஸ்த்தையில் ஜநநியறிந்து ரக்ஷிக்குமத்தனையிறே; அப்படியே அவனேயறிந்து ரக்ஷிக்கஇருக்குமவர்கள். அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமும் இவளுக்குப்ரியமாகச்செய்யுமவையிறே "பபூவ" (பபூவ) - பதினாலாயிரம்முரட்டு ராக்ஷஸரோடேதனியேநின்று பொருகிறஇத்தைக்கண்டுஅஞ்சி, "இதென்னாய் விளையுமோ?" என்றுஸத்தையழிந்துகிடந்தாள்; இப்போதுஉளளானாள். "பூஸத்தாயாம்" (பூஸத்தாயாம்). "ஹ்ருஷ்டா" (ஹ்ருஷ்டா) - ஸத்தையுண்டானால் உண்டாமதுவும்

---

தாளோ? என்ன - பர்த்தாரம் இத்யாதி. "தம் த்ருஷ்ட்வா ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம் । பபூவ ஹ்ருஷ்டா வைதேஹீ பர்த்தாரம் பரிஷஸ்வஜே" இத்யாரண்யகாண்டே. [உக] "தம்-ஶத்ருஹந்தாரம்-த்ருஷ்ட்வா" என்கிறபதங்களுக்கர்த்தம்-வெறும்புறத்திலே இத்யாதி. "தம்" என்ற ப்ரஸித்தியாலே - ஸ்வாபாவிகமான அழகைச் சொல்லுகிறது. "ஶத்ரு" என்கிறபதத்துக்கும், "ஹந்தாரம்" என்கிறபதத்துக்கும் வ்யாவ்ருத்திபூர்வகமாக பாவம் - தந்திருமேனியிலே இத்யாதி. "த்ருஷ்ட்வா" என்கிறதுக்குபாவம் - முன்பு திருவயோத்யையில் இத்யாதிவாக்யத்வயத்தாலே. ருஷிகளுக்கு ஸுகாவஹரானது எவ்வழியாலே? என்ன - ருஷிகளுடைய இத்யாதி. "மஹர்ஷீணாம்" என்றதுக்குபாவம் - தங்கள் இத்யாதி. அதாவது - "ஈஶ்வரோ ரக்ஷகன்" என்று, ஈஶ்வரனே ரக்ஷகன், நாம் ரக்ஷ்யர் என்கிறஜ்ஞாநத்தையுடையவர்களென்றபடி. அப்படி அவனிடத்திலே ந்யஸ்தபாரோ? என்ன - கர்ப்பபூதா இத்யாதி "ந்யஸ்ததண்டா வயம் ராஜந் ஜிதக்ரோதா ஜிதேந்த்ரியா: । ரக்ஷிதவ்யாஸ்த்வயா ஶஶ்வத் கர்ப்பபூதாஸ்தபோதநா:" இத்யாரண்யகாண்டே. இதுக்கர்த்தம்-தந்தாம் இத்யாதி. உக்தத்தை ஶப்தத்திலே ஏறிட்டுக் காட்டுகிறார் - தபோதநராய் இத்யாதி. விவரணம் - தந்தாமுக்கென்ன இத்யாதி. இயற்றி - யத்நம். இப்படிரக்ஷிக்கிறது ஆர்க்கு ப்ரியமாக? என்ன அநுகூலஇத்யாதி. "ஶத்ருஹந்தாரம் மஹர்ஷீணாம் ஸுகாவஹம்" என்கிறத்தைப் பற்ற, 'அநுகூலரக்ஷணமும் ப்ரதிகூலநிரஸநமுமென்றது'. "ஶத்ருஹந்தாரம் த்ருஷ்ட்வா - பபூவ" என்றுகூட்டி பாவம் - பதினாலாயிரம் இத்யாதி. "பபூவ" என்றால் உளளாகையைக்காட்டுமோ? என்ன-பூஸத்தாயாம் என்று; "ஹ்ருஷ்டா" என்றத்தை ருகாரகர்ப்பமாக விவக்ஷித்தருளிச்செய்கிறார் - ஸத்தையுண்டானால் இத்யாதி. பபூவ, ஹ்ருஷ்டாசேத்யர்த்த:. ஶத்ருஹந்தாவாகக்கண்டு பரிஷ்வங்கிக்கைக்கு இவள் வீரவாசியறிகைக்கு

உண்டாயிற்று. "வைதேஹீ" (வைதேஹீ) - உபாத்யாயர்கள்பெண்பிள்ளைகளுக்குச் செவியேற்றாலே † ஓத்துப்போயிருக்குமாபோலே: வீரவாசியறியுங்குடியிலேபிறந்தவளிறே: ஒருவில்லுமுறித்த இதுக்கு உகந்துஎன்னைக்கொடுத்த எங்கள்ஐயர், பதினாலாயிரம்பேரைத் தனியேநின்று முடித்தஇத்தைக்கண்டால் என்படுகிறார்தான்! "ஹதரிபூ" (பர்த் தாரம்) - முன்பு, இவர்ஸாது ப்ரகாரமாகையாலே "குழைசரக்கு" என்றும், "ஐயர்நம்மை இவர்க்கு நீர்வார்த்துக்கொடுக்கையாலே நாம்இவர்க்கு சேஷம்" என்றும் அணைத்தாளத் தனை; "ஆண்பிள்ளை" என்று அணைத்ததுஇப்போது: "பரிஷஸ்வஜே" (பரிஷஸ்வ ஜே) - ராவணஸமராய், அவன்மதித்த வீரத்தையுடையராயிருப்பார் பதினாலாயிரம் பேரும் விட்ட அம்புகளடங்கலும் இவர்மேலேபட்டு, கண்டவிடமெல்லாம் யுத்தவவோ யிறே திருமேனிகிடக்கிறது; அவ்வோவிடங்கள்தோறும் திருமுலைத்தடத்தாலே வேதுகொண் டாள். [திருமாமகள்கேள்வா] - உனக்குசக்திவைகல்யம் உண்டாயிழக்கிறேனோ ? புருஷ காரமில்லாமலிழக்கிறேனோ ? [தேவா] - இவளணைத்தபின்பு திருமேனியிற்பிறந்த புகர். அன்றியே விரோதிகளைப்போக்குகையாலே வடிவிலேபிறந்த காந்தியைச்சொல்லவுமாம். ("நம்முடைய விரோதிகளைப் போக்கினவன் வர்த்திக்கிறதேசம்" என்று, தேவர்களும் ருஷி களும் தங்களபிமதங் கிடைக்குமென்று ஆதரிக்கிற திருமலை): [சுரர்கள் இத்யாதி] - அநு கூலர்அடையத் திரண்டு படுகாடுகிடக்கும் தேசம். [பூவார்கழல்கள்] - பூவாலல்லது செல் லாததிருவடிகளென்னுதல். பூவோடொத்த திருவடிகள்என்னுதல். [அருவினையேன்] - அவன்ப்ரதிபந்தகங்கள் போக்கவல்லனாயிருப்பது, எனக்குஆசை கரைபுரண்டிருப்பது, திருவடிகள் நிரதிசயபோக்யமாயிருப்பது; இங்ஙனேயிருக்கச்செய்தே, கிட்டியநுபவிக்கப் பெறாத பாபத்தைப் பண்ணினேன். [பொருந்துமாறுபுணராயே] - அசோகவனிகையிலேஇருந்த பிராட்டியோபாதிகாணும் தம்மைநினைத்திருக்கிறது; [புணராயே] - உன்னைக்கிட்டும்வழி கல்பிக்கவேணுமென்னுதல், நான் கிட்டும்படிபண்ணவேணுமென்னுதல். (ச)

---

ஹேதுவேதென்ன; - "வைதேஹீ" என்றதுக்குபாவம்-உபாத்யாயர் இத்யாதி. "வைதேஹீ", என்றதுக்கு தாத்பர்யாந்தரம் - ஒருவில்லு இத்யாதி. 'என்படுகிறார்தான்' என்று ஐயரை நினைத்தா ளென்றுகூட்டுவது. "ஸாது ஹதாரிபூ" என்றவநந்தரம் "ஹதரிபூ" என்றதுக்குபாவம் - முன்புஇவர் இத்யாதி. குழைசரக்கு-ரக்ஷ்யவஸ்து. "பரிஷஸ்வஜே" என்றதுக்கு - பரிதஸ்ஸஸ்வ ஜே என்றுக்கி, எங்குங் கட்டிக்கொள்ளுகைக்கு ஹேதுவருளிச்செய்கிறார் - ராவணஸமராய் இத் யாதி. "தீவாய்வாளிமழை பொழிந்தசிலையா, திருமாமகள்கேள்வா" என்ற பதத்வயப்ரயோகத்துக்கு ப்ரயோஜநம் - உனக்குசக்தி இத்யாதிவாக்யத்வயத்தாலே. "தேவா" என்கிறத்தை "திருமாமகள் கேள்வா" என்றத்தோடும், "தீவாய்வாளிமழைபொழிந்த சிலையா" என்றத்தோடுங்கூட்டி இரண்டு வகையாகபாவம் - இவளணைத்தபின்பு இத்யாதிவாக்யத்வயத்தாலே. படுகாடுகிடக்கும்தேசம் - ஈடு பட்டுக்கிடக்கும் தேசமென்றபடி. படுகாடு - வெட்டிவிழுந்தகாடு. "ஆர்தல்" - பொருந்துதலாய், புஷ்பங்களோடு கூடியிருக்கிற திருவடிகளென்னுதல். இரண்டாமர்த்தத்துக்கு நிர்வாஹம் - ஸாத் ருஸ்யாகாரேண பொருந்துகையென்ற. கீழிற்பதங்களையுங்கடாக்ஷித்துபாவம் - அவன்ப்ரதிபந்தகங் கள் இத்யாதி. "ஆறவன்பிலடியேன்" என்றத்தைப்பற்ற - எனக்காசை கரைபுரண்டிருப்பது என் றது: பெறுமாறென்னாதே, "பொருந்துமாறு" என்கையாலே - முன்புகூடியிருந்து பிரிந்தவர் போலே யிருக்கிறாரென்கிறார் - அசோக இத்யாதி. "ஆறு" என்று - வழியாதல், ப்ரகாரமாதல். புணர்தல் - கற்பித்தல்.

(ச)

---

† ஓத்து - வேதம்,

# ஐந்தாம் பாட்டு.

புணராநின்றமரமேழ் அன்றெய்தவொருவில்வலவாவோ!
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ!
திணரார்மேகமெனக்களிறுசேரும் திருவேங்கடத்தானே!
திணரார்சார்ங்கத்துஉனபாதம் சேர்வதடியேனெந்நாளே?

ஆ.—(புணரா) - இதுக்குமுன்பு க்லுப்தமன்றியே அபூர்வமாயிருப்பதொரு உபாயத்தைப் பரிகல்பிக்க முடியுமோவென்னில், ஒரு திருச்சரத்தினாலே மஹீயரஸங் நிஹமான மராமரங்களேழையும் மஹீதரத்தையும் ரஸாதலத்தையும் உருவும்படியெய்த உனக்கு முடியாததுண்டோ? ஆதலால், அன்று உனக்கு ஒருதீங்குவிளையாதபடி மருதின் நடுவேபோய் என்னுடைய மஹாபயத்தைப்போக்கி என்னை உஜ்ஜீவிப்பித்தாற்போலே, ஸர்வபூதஶரண்யமான திருமலையிலே ப்ரணதஜநாஶ்ரிதநிரஸந ஸமர்த்தமான ஸ்ரீஶார்ங்கப்ரப்ருதிஅஸங்க்யேயதிவ்யாயுதோபேதனாய்க்கொண்டு நின்றருளின உன் திருவடிகளிலே சேர்த்து என்னை உஜ்ஜீவிக்கப்பண்ணுவது எந்நாள்? என்கிறார்.

ஒ.—அஞ்சாம்பாட்டில்,"உம்முடைய அபேக்ஷிதங்களெல்லாம் செய்கிறோம்" என்று எம்பெருமான் அருளிச்செய்ய, 'அது என்றுசெய்வது?' என்கிறார்.

[புணரா வென்றுதொடங்கி] - நேரொக்கநில்லாதே திரண்டுநின்ற மராமரம் ஏழையும் எய்தவகவீரனானவனே! [புண ரென்றுதொடங்கி] - நிர்விவரமாம்படிகூடிநின்ற யமளார்ஜுநங்களின் நடுவே உனக்குஒருநலிவின்றிக்கே போய் இஜ்ஜகத்தை யுண்டாக்கினவனே! [திணர்என்றுதொடங்கி] - செறிந்த மேகம் என்னலாம்படியான ஆனைகள் சேராநின்றுள்ள திருமலையிலேநின்றருளினவனே! மிகவும் வலியுடைத்தான ஸ்ரீஶார்ங்கத்தையுடைய உன்திருவடிகளை. கையிலே அவ்வில்லுண்டாயிருக்க, காலக்ஷேபம் பண்ணுவதே யென்றுகருத்து.

ப.—அநந்தரம், ஆஶ்ரிதரக்ஷணார்த்தமான அநாயாஸ வ்யாபாரத்தையுடைய உன்திருவடிகளைச் சேர்வது எந்நாள்? என்கிறார்.

(செவ்வைகண்டுஇலக்குக்குறிக்கவொண்ணாதபடி), புணராநின்ற - திரளாக நின்ற, மரம் - மராமரங்கள், ஏழ்-ஏழையும், அன்று - (மஹாராஜர் ஶங்காதிஶங்கை பண்ணின) அன்று, எய்த - (அவருக்கு விஶ்வாஸம் பிறக்கும்படியாக) எய்த, ஒருவில் வலவா - ஏகதநுர்த்தரனாய், புணர் - சேர்த்தி, ஏய் - பொருந்தும்படி, நின்ற - நின்ற, மரம் இரண்டின் - இரண்டு மரத்தின், நடுவே-நடுவே, போன - போய, முதல்வா - ஜகத்துக்குக் காரணபூதனானவனாய், திணர் - கதிப்பு, ஆர் - விஞ்சின, மேகம் - மேகங்கள், என - என்னலாம்படி, களிறு - யானைகள், சேரும் - சேர்ந்து வர்த்திக்கிற, திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனானவனே! திணர் - (பிடித்தகை நிரம்பும்) பெருமையை, ஆர்-உடைத்தான, சார்ங்கம் - ஸ்ரீசார்ங்கத்தையுடையனான, உன-உன், பாதம்-திருவடிகளை, அடியேன் -(உன்வீரசரிதத்துக்குத்தோற்று அடிமைப்பட்ட) நான், சேர்வது - சேருவது, எந்நாள் - எந்நாள்? ஓஓ - ஓஓவென்று சேரப்பெறாத விஷாதாதிஶயத்தைக் காட்டுகிறது. [திணர் - கதிப்பாய், பெருமையைச் சொல்லுகிறது.

இ.—அஞ்சாம்பாட்டில், நீர் இங்ஙனே த்வரிக்கிறதென்? உம்முடைய அபேக்ஷிதம் செய்கிறோமென்ன, 'அது என்று?' என்கிறார்.

[புணராநின்ற] - புணர்ந்துநின்ற. அம்புக்கு நேரோடவொண்ணாதபடி திரண்டுநின்ற. [மரமேழ்அன்று எய்த] - ரக்ஷணத்தில் ஸங்கைபண்ணினவன்று ஏழையும் ஓரம்பாலேயழித்த. அதிஸங்கைபண்ண, மழுவேந்திக்கொடுத்து ரக்ஷித்தவன்கிடீர், ஆசைப்பட்டஎன்னை அநாதரிக்கிறான்! அதிஸங்கையைப்போக்கிப் பணிகொண்டவன் கிடீர் இரந்தஎன்னைப் பணிகொள்ளாதொழிகிறான். [ஒருவில்வலவா] - ஏகவீரனே! ஓ என்று - விஷாதாதிஸயஸூசகம். [புணரேய்நின்ற] - புணர்ந்துநின்ற. இரண்டுங்கூடி "ஒன்று" என்னலாம்படி பொருந்திநிற்க, அதிலே இடங்கண்டுபோய் உன்னைத்தப்புவித்து ஜயத்தையுண்டாக்கினவனே! [திணரார் இத்யாதி] - செறிந்த மேவமென்னலாம்படி ஆனைகள் திரள்திரளாக ஸஞ்சரிக்கும் திருமலை. ஆனையையும் மேவங்களையும் மலைக்குச்சிறப்பாகச் சொல்லக்கடவது. [திணரார்சார்ங்கம்] - மிக்க பலத்தையுடைய ஸார்ங்கம். சக்ரவர்த்தித்திருமகனையொழிய எடுக்கவொண்ணாத வில்லு. [உனபாதம் இத்யாதி] - கையிலே வில்லிருக்க விரோதியுண்டு என்னவொண்ணாது; உன்னைப் பெறும் நாளையாகிலும் சொல்லவேணும்.

ஈடு.—அஞ்சாம்பாட்டு. நீர் இங்ஙன் த்வரிக்கிறதென்? உம்முடைய அபேக்ஷிதஞ் செய்கிறோமிறே என்ன, அதுஎன்று? என்கிறார்.

[புணரா இத்யாதி]-க்ஷத்ரியர் விற்பிடிக்கிறது, ஆர்த்தத்வநி கேளாமைக்கன்றோ? "க்ஷத்ரியைர்தார்யதே சாபம் நார்த்தஸப்தோ பவேதிதி." (க்ஷத்ரியைர் தார்யதேசாபம் நார்த்தஸப்தோபவேதிதி.) இலக்குக்குறிக்கப் போகாதபடி திரண்டுநின்ற ஏழுமராமரங்களை முஷ்டியாலும் நிலையாலும் நேர்நிற்கப்பண்ணி எய்த ஏகவீரனே! [ஓ]-ஓ என்று விஷாதாதிஸய ஸூசகம். ரக்ஷணத்தில் அதிஸங்கை பண்ணினானையும் விஸ்வஸிப்பித்துக் காரியங்கொள்ளும் நீ, ஆசைப்பட்ட எனக்கு உதவவாராதொழிவதே! "ஸுக்ரீவஸ்ஸங்கிதஸ்சாஸீத்" (ஸுக்ரீவஸ்ஸங்கிதஸ்சாஸீத் இத்யாதி) பெருமாளைக்

ப்ர.—[புணராநின்றமரமேழன்றெய்த] - ஆரண்யகாண்டே, "நிஸாமய க்ஷத்ரியைர்தார்யதே சாபோ நார்த்தஸப்தோ பவேதிதி ॥ தேவாத்ஸம்ஜ்ஞாகாரணாத் ஸுக்ரீவஸ்ஸங்கிதஸ்சாஸீத் ... ஸர்வதா பரமாத்மாநம் ஸரணம் கதா: ॥ ௪ ॥"

அஞ்சாம்பாட்டு.—புணரா இத்யாதி. "எந்நாள்" என்றதைக் கடாக்ஷித்து அவதாரிகை - நீர்இங்ஙன் இத்யாதி.

"வில்வலவா" என்றதுக்கு பாவம் - க்ஷத்ரியர் இத்யாதி. உக்தார்த்தத்துக்கு ப்ரமாணம் - க்ஷத்ரியைரித்யாதி. ஆரண்யகாண்டே. "நிஸாமய க்ஷத்ரியைர்தார்யதே சாபோ" இதி பூர்வார்த்தம். இலக்குக் குறிக்கப் போகாதபடி திரண்டு நிற்கையாவது - அம்புக்கு நேரோடவொண்ணாதபடி நெருங்கிநிற்கை. புணர்தல் - திரட்சி. இப்படிக்கொத்த மராமரங்களை எய்யும் ப்ரகாரமேதென்ன - முஷ்டியாலும் இத்யாதி. விஷாதஹேதுவை யருளிச்செய்கிறார் - ரக்ஷணத்தில் இத்யாதி. ரக்ஷணத்தில்அதிஸங்கைபண்ணினதுக்கு ப்ரமாணம்- ஸுக்ரீவ இத்யாதி. 'நித்யம்' என்றதுக்குபாவம் -பெருமாளை இத்யாதி, "ரக்ஷணத்தில்" இத்யாதி வாக்யவிவரணம் - அந்தஸங்கா

கண்ட அன்றுதொடங்கி மராமரங்களைப் பிளக்க எய்யுந்தனையும், மூடிய ஶங்கித்தேயிருந்தான். அந்தஶங்காநிராகரணத்தைப்பண்ணி ரக்ஷித்த நீ, நிஶ்ஶங்கமாகப் பற்றின என்னை ரக்ஷிக்கவேண்டாவோ? [புணரா இத்யாதி] - ஒருநிரையாய்ச் சேர்ந்துநின்ற மருதுகளை ஊடறுத்து, ஒன்றிலே வெளிகண்டு போவாரைப்போலே போய், ஜகத்துக்கு வேர்ப்பற்றான உன்னைத் தந்தவனே! ப்ரளயகாலத்திலன்று ஜகத்தையுண்டாக்கிற்று; இன்றாயிற்று. அற்றைக்கு இவன்தான்உண்டாகையாலே உண்டாக்கலாம்; இங்கு நிரந்வயவிநாசமிறே பிறக்கப்புக்கது. [முதல்வாவோ] - ஜகத்தையுண்டாக்கினவனே! ஜகத்துக்கு வேர்ப்பற்றான தன்னையிறே நோக்கித்தந்தது; "[illegible]" (ஸதேவ ஸோம்யேதமக்ரஆஸீத்) என்கிறபடியே. தான் உளனாகவே உண்டாமதிறே ஜகத்து. இப்படியிருக்கிற தன்னளவிலேவந்த ஆபத்தோ பரிஹரிக்கலாவது! [திணர் இத்யாதி]-திண்மை மிக்கிருந்துள்ள மேகமென்னும்படி ஆனைகளானவை சேராநின்றுள்ள திருமலையிலே நின்றருளினவனே! மேகங்களோடே ஸர்வதா ஸாம்யமுண்டாகையாலே, மேகங்களைக் கண்டபோது ஆனையென்னலாம்: ஆனைகளைக்கண்டபோது மேகம் என்னலாயிருக்கும். "மதயானைபோலெழுந்த மாமுகில்காள்" என்னக்கடவதிறே. ஸமாநதர்மத்தால் வந்த ஸம்ஶயம் த்விநிஷ்டமிறே! விஷயங்களால் வரும் அந்யதாஜ்ஞாநத்தைக்கழித்து, அத்தேசத்தே பிறக்கும் அந்யதாஜ்ஞாநத்தை யாகாதே இவர் கணிசிக்கிறது. அங்குள்ளதெல்லாம் போக்யமாய்த் தோற்றுகிறபடி. [திணரார்சார்ங்கத் துணபாதம்] - திண்மை மிக்கிருந்துள்ள ஸ்ரீ ஶார்ங்கத்தையுடைய உன்னுடைய திருவடிகளை. "[illegible]" (ஶரண்யம்ஶரணம்யாதா ராமம்தஶரதாத்மஜம்) என்கிறபடியே, ஶரண்யமான திருவடிகளை. சக்ரவர்த்திபிள்ளைகள் எடுக்குமத்தனைகாணும் வில்லு. [திணரார்சார்ங்

ப்ர.—[illegible]

இத்யாதி. "புணரேய்" - 'நிரையாய்ச்சேர்ந்து' என்றபடி. "முதல்வா" என்றதுக்கர்த்தம் - ஜகத்துக்கு வேர்ப்பற்றான என்று. [illegible] - ப்ரளயகாலத்தில் இத்யாதி. அதெப்படி? என்ன - அற்றைக்கு இத்யாதி. நிரந்வயவிநாசம் - காரண பூதனான தான் இன்றிக்கேயிருக்கை. ஜகத்தையுண்டாக்கினபடி யெப்படி? என்ன - ஜகத்துக்கு இத்யாதி. தன்னை நோக்கினால் ஜகத்துஉண்டாமோ? என்ன, அருளிச்செய்கிறார்-ஸதேவ இத்யாதி வாக்யத்வயத்தாலே. 'தன்னளவிலே வந்த ஆபத்தோ பரிஹரிக்கலாவது'-என்றுபத்தாலுல் பரிஹரிக்கப்போகாதோ என்றபடி. ஆனைகளை மேகமென்று ப்ரமிக்கைக்கு அடியேதென்ன - மேகங்களோடே இத்யாதி. "மேகங்களைக்கண்டால் ஆனையென்னலா யிருக்கும்" என்றதுக்கு ப்ரமாணம் - மதயானை இத்யாதி. நாச்சியார் திருமொழி. ஸ்பஷ்டோர்த்த:. 'மேகமெனக்களிறுசேரும்" என்றொழிய, "மேகத்தைக்கண்டால் ஆனையென்னலாயிருக்கும்" என்றதுக்கு ஶப்தமில்லையேயென்ன - ஸமாநதர்மத்தால் இத்யாதி. அதஸ்மிம்ஸ்தத்புத்திரூபா அந்யதாஜ்ஞாநம் த்யாஜ்யமன்றோ? என்ன-விஷயங்களால் இத்யாதி. கணிசிக்கிறது - அபேக்ஷிக்கிறது. இது உத்தேஶ்யமாகைக்கு ஹேது அருளிச்செய்கிறார் - அங்குள்ளது இத்யாதி. "சார்ங்கத்துணபாதம்" என்று விசேஷித்ததுக்கு பாவம் - ஶரண்யம் இத்யாதி. வில்லுக்குத் திண்மையேதென்ன - சக்ரவர்த்தி

கம்] - தன்வளேவிலே விரோதிகளைத் தப்பாமல் அகப்படுத்திக்கோள்ளுகை. [உனபாதம்]- அவ்வளவுக்கு அகப்படாதாரை முதலடியிலே யகப்படுத்திக்கோள்ளுமது. [சேர்வதடியே னெந்நாளே] - கையில் வில்லிருக்க இழக்கவேண்டா, விரோதியுண்டேன்று; இனி உன்னைப் பேறும் நாளேயாகிலும் சோல்லவேணும். (ரு)

---

## ஆறும் பாட்டு.

---

எந்நாளேநாம்மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பதற்கேன்று
எந்நாளும்நின்றுஇமையோர்களேத்தி இறைஞ்சியினமினமாய்
மேய்ந்நாமனத்தால்வழிபாடுசேய்யும் திருவேங்கடத்தானே!
மேய்ந்நானெய்திஎந்நாள் உன்னடிக்கண்அடியேன்மேவுவதே?

ஆ —(எந்நாளே) - பரமவ்யோமத்திலிருக்கும் ஸர்வஸ்வாமிக்கு ஸர்வசேஷ வ்ருத்தியும் பண்ணுகையன்றோ எல்லார்க்கும் ப்ராப்யமென்னில், அங்குள்ள அயர்வறு மமரர்களும் திருவேங்கடமுடையான் திருவடிகளை 'என்றோ நாங்கள்காண்பது? என்று ஆசைப்பட்டு இங்கே இனமினமாகவந்து உன்னுடைய திருவடிகளிலேயன்றோ வாங்மநஃ காயங்களாலே ஸர்வகாலமும் ஸர்வசேஷவ்ருத்தியும் பண்ணுகிறது! அப்படி எனக்கும் இதுவே ப்ராப்யமாதலால், "திருமலையிலேசெல்லவேணும்" என்னத் தகாத நான் மெய் யாகத் திருமலையிலேவந்து உன்திருவடிகளிலே ஸர்வகாலமும் ஸர்வ கரணங்களாலும் ஸர்வசேஷ வ்ருத்தியும் பண்ணுவதுஎன்றோ? என்கிறார்.

ஒ.—ஆறும்பாட்டில், ஸ்ரீ வைகுண்டத்திலே எனக்கு அடிமைசெய்கை யன்றோ எல்லார்க்கும் ப்ராப்யமென்னில், அங்குள்ளாரும் ஆசைப்பட்டு வந்தன்றோ திருமலையிலே உனக்கு அடிமைசெய்கிறது? அப்படியே நானும் திருமலையிலே புஷ்கலமாக அடிமைசெய்யப் பெறுவதென்று? என்கிறார். அந்யபரரான தேவர்களும் வந்து ஆசைப் பட்டு அடிமைசெய்யும்படி ஸ்ப்ருஹணீயமான உன்திருவடிகளை மெய்யாக நான்பெறுவது என்று? என்றுமாம். [எந்நாளென்று தொடங்கி] - ஸர்வஸுலபமான திருவடிகளை நாம் என்றோ காணப்பெறுவது என்று பேராசையோடேவந்து அயர்வறுமமரர்கள் திரண்டு நின்று ஸ்தோத்ரம்பண்ணி அநந்யப்ரயோஜநமானமநஃப்ரப்ருத்யுபகரணங்களாலேஅடிமை செய்யும்படியான திருமலையிலே நின்றருளினவனே! [மேய்ந்நானெய்தி] - ஜ்ஞாநாநுஸந் தாநமாத்ரமன்றிக்கே ஸாக்ஷாத்கரித்து.

---

இத்யாதி. "திணரார்" - பாரம் மிக்கவென்றபடி. "திண்மை" என்று - பாரமாகக் கீழருளிச்செய்து, மிடுக்காகவர்த்தாந்தரம் - தன்வளேவிலே இத்யாதி. அவ்வளவுக்குஅகப்படாதாரையென்றது-அநு கூலரை. விரோதியைப்போக்கவேணுமென்றோதே காலப்ரஸ்நம்பண்ணுகிறதென்? என்ன-கையில் இத்யாதி. இது-"எந்நாள்" என்றதுக்குபாவம். ஶரண்யம்ஶரணமிதி' - "ராக்ஷஸௌஸ்ய்ஶோ நாநாவாநராணாம்ஷோவஶ்ய: । ஶரண்ய ஶரணம்யாதா ராஶஶரயாத்ரஜ்" இதியுத்தகாண்டே [கூச-கஎ].

(சு)

ப.—அநந்தரம், அதிஶயிதஜ்ஞாநரான ஸூரிகளும் அடிமைசெய்யுந்திருமலையிலே உன்திருவடிகளைக்கிட்டி நான் அடிமைசெய்வதுஎந்நாள்? என்கிறார்.

(வரையாதே), மண் - பூப்ப்பலக்ஷித ஸகலலோகத்தையும், அளந்த - அளந்து எல்லாரோடும் ஸம்ஶ்லேஷித்த ஶீலாதிஶயத்தையுடைய, தாமரைகள் - திருவடித்தாமரைகள், இணை - இரண்டையும், நாம் - (பரத்வைகாநுபவபரரான) நாம், காண்பதற்கு - காண்பதற்கு, எ-எந்த, நாளேம் - நாளையுடையோம், என்று - என்று, இமையோர்கள் - அஸ்கலிதஜ்ஞாநரான ஸூரிகள், எந்நாளும் - எல்லாக்காலத்திலும், நின்று - நின்று, ஏத்தி - இப்படி சொல்லிஸ்துதித்து, இறைஞ்சி - வணங்கி, இனமினமாய் - திரள்திரளாக, மெய்ந்நாமனத்தால் - ஶரீரவாங்மநஸ்ஸுக்களாலே, வழிபாடு - அடிமை, செய்யும் - செய்யும்படியான, திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனானவனே! அடியேன் - அநந்யார்ஹனாய், நான் - (அவிநிவிஷ்டனான) நான், மெய்-ஸ்வப்நகல்பமான, (மாநஸாநுபவமன்றியே மெய்யேகண்டு), எய்தி-கிட்டி, உன்-உன், அடிக்கண் - திருவடிகளிலே, மேவுவது - பொருந்துவது, எந்நாள் - எந்நாள்? எந்நாளேமென்று - எந்நாளையுடையோமென்றபடி.

இ.—ஆறும்பாட்டில், "எந்நாள்" என்கிறதென்? ஒரு தேசவிசேஷத்திலே வ்யவஸ்திதமன்றோ? என்ன, அங்குள்ளாரும்வந்து அடிமைசெய்கிற திருமலையிலே என்னை அடிமைகொள்ளவேணுமென்கிறார்.

[எந்நாளே இத்யாதி] - நித்யஸூரிகள் பாசுரமிருக்கிறபடி: - 'பரமபதத்திலே மேன்மையை அநுஸந்தித்திருக்கிற நாம், ஸர்வஸுலபமான திருவடிகளைக்கிட்டுவது என்றோ?' என்று. இங்குள்ளார் அங்குப்போவது மேன்மையை யநுபவிக்க; அங்குள்ளார் இங்குவருவது ஶீலகுணாநுபவம்பண்ண. விஷயமுண்டாகையாலே வ்யக்தமாக அநுபவிக்கலாவது இங்கே. ஸங்கோசமற்றவர்களுக்கும் "எந்நாள்" என்னும்படியிறே ஶீலகுணத்தில் ஏற்றம். [எந்நாளும் இத்யாதி] - காலமெல்லாம் நித்யஸூரிகள் நின்று ஸ்தோத்ரம்பண்ணியிறைஞ்சி. [இனமினமாய்] - விண்ணகத்தில் இழிவாரைப்போலே திரள்திரளாக இழிந்து மெய்யாலும் நாவாலும் மநஸ்ஸாலும் வழிபடுவரென்னுதல்; மெய்யான நாவாலும் மநஸ்ஸாலுமென்னுதல். அநந்யப்ரயோஜநமான கரணங்களைக்கொண்டு ஆஶ்ரயிக்கும்படி திருமலையிலே ஸந்நிஹிதனானவனே! [மெய்ந்நானெய்தி] - மாநஸாநுபவமாத்ரமன்றிக்கே ஸாக்ஷாத்கரித்து என்றோ நான்உன்னைக்கிட்டுவது? எனக்கு ருசியுண்டாய், நீயும் ஸந்நிஹிதனாயிருக்க இழக்கவோ? "இப்பாட்டு - ப்ரஹ்மாதிகளைச் சொல்லுகிறது" என்பாருமுண்டு; மேலே - அவர்களைச்சொல்லுகையாலே, அது உசிதமன்று.

ஈடு.—ஆறும்பாட்டு. "எந்நாள்" என்றுஸந்தேஹிக்கிறதென்? அதொரு தேசவிசேஷத்திலே வ்யவஸ்த்திதமன்றோ? என்ன, அங்குள்ளாரும் இங்கேவந்தன்றோ உன்னைப்பெற்று அநுபவிக்கிற தென்கிறார். அங்ஙனன்றிக்கே, ப்ரயோஜநாந்தரபரரான அந்தர ஜாதிகளுங்கூட அநந்ய ப்ரயோஜநரைப்போலே வந்துஆஶ்ரயிக்க நிற்கிறவிடத்தே நான் இழந்துபோவதே என்கிறாராகவுமாம்.

---

ஆறும்பாட்டு.—எந்நாளே இத்யாதி. "இமையோர்கள்" என்றதின் அர்த்தத்வயாநுகுணமாக அவதாரிகாத்வயம் - எந்நாள்என்று இத்யாதி.

[எந்நாளே நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள் காண்பதற்கென்று] - "எந்நாள் யான்உன்னை இனிவந்து கூடுவனே" என்று இங்குள்ளார் அங்கே அடிமைசெய்ய ஆசைப்படுமாபோலேகாணும், அங்குள்ளாரும் இவனுடைய ஸௌலப்யத்தைக்கண்டு அநுபவிக்கவேணும் என்று ஆசைப்பட்டுவரும்படி. ஸர்வஸுலபமான திருவடிகளை நாம் காணப்பெறுவது என்றோ? பூமியையடங்கலும் அநாயாஸேந அளந்துகொள்ளக் கண்ட காட்சியிலே தலைமேலே எடுத்துவைத்துக் கொள்ளவேண்டும்படியான போக்யதையையுடைய திருவடிகளை. [எந்நாளும்] - மற்றொருபோது வேறொன்றைப்பற்றிப் போகிறார்களன்றே. [இமையோர்கள்இத்யாதி] - நித்யஸூரிகள் காலமெல்லாம்நின்று ஸ்தோத்ரம்பண்ணிப் பின்னைத்திருவடிகளிலே விழுந்து, கிண்ணகத்தில்இழிவாரைப்போலே திரள்திரளாய். [மெய்ந்நாஇத்யாதி] - மநோவாக்காயங்களாலே ஆஸ்ரயியாநிற்பர்கள். அன்றியே, மெய்யானநாவாலும்மனத்தாலும் வழிபடுவர்களென்றுமாம். அதாகிறது - அநந்யப்ரயோஜநமான கரணங்களைக்கொண்டு ஆஸ்ரயியாநிற்பர்களென்றபடி. நித்யஸூரிகளானபோது, கைங்கர்யமாகிறது; ப்ரஹ்மாதிகளானபோது, உபாஸநமாகிறது. [மெய்ந்நானெய்திஇத்யாதி] - ரூஹ்விஷ்காரத்தாலே மாநஸாநுபவத்தைப்பண்ணுவித்துப் பகட்டவொண்ணாது; நான் உன் திருவடிகளைப் பத்தும்பத்தாக வந்துகிட்டி, பின்னை விஸ்லேஷத்தோடே வ்யாப்தமாகாதபடி பொருந்தப்பெறுவதுஎன்றோ? என்கிறார். ஓரடிவிடில் ஸத்தையற்றிறே இவர்க்கு இருக்கிறது. (சா)

---

## ஏழாம் பாட்டு.

---

அடியேன்மேவியமர்கின்றஅமுதே! இமையோரதிபதியே!
கொடியாவடுபுள்ளுடையானே! கோலக்கனிவாய்ப்பெருமானே!
செடியார்வினைகள்தீர்மருந்தே! திருவேங்கடத்தெம்பெருமானே!
நொடியார்பொழுதும்உனபாதம் காணநோலாதாற்றேனே.

---

பரமபதத்திலே அவன்திருவடிகளை எப்போதும் ஒக்க அநுபவித்திருக்கிற நித்யஸூரிகள், "எந்நாள் காண்பது" என்று ப்ரார்த்திக்கைக்கு அடியேதென்ன-எந்நாள் யானுன்னை இத்யாதி. "மண்ணளந்த" என்றதுக்கு பாவம் - ஸர்வஸுலப இத்யாதி. "தாமரை" என்றதுக்கு பாவம் - பூமியையடங்கலும் இத்யாதி. எந்நாளும்நின்று - காலமெல்லாம்நின்று. "மெய்" என்று - ஸரீரமாதல், ஸத்யமாதல். முந்தின அர்த்தத்தைப்பற்ற - மநோவாக்காய இத்யாதி. த்விதீயார்த்தத்தைப் பற்ற - அன்றியே மெய்யான இத்யாதி. அதாகிறதென்றது - வாங்மநஸ்ஸுக்கள் மெய்யாகையாகிறதென்றபடி. வழிபடுகையாவதேதென்ன, அவதாரிகையிற்சொன்ன யோஜநாத்வயாநுகுணமாக அருளிச்செய்கிறார் - நித்யஸூரிகள் இத்யாதி வாக்யத்வயத்தாலே. வழிபாடுசெய்யும் - அடிமைசெய்யாநிற்கிற என்னுதல்; ஆஸ்ரயியாநிற்கிறவென்னுதல். "மெய்யாகவெய்தி" என்றதுக்கர்த்தம் - ரூஹ்விஷ்காரத்தாலே இத்யாதிவாக்யத்வயமும். "மேவுவது" என்றதுக்கர்த்தம் - பின்னைவிஸ்லேஷத்தோடே இத்யாதி. "திருவடிகள்" என்றுவிசேஷிக்கிறதுக்கு பாவம் - ஓரடிவிடில் இத்யாதி. அடிவிடில் என்றவிடத்திலே, அடியென்று - க்ஷணத்துக்கும், திருவடிக்கும்பேர். 'நாம் மண்ணளந்த இணைத்தாமரைகள்காண்பது - எந்நாளே - என்று - இமையோர்கள் - இனமினமாய் - எந்நாளும் நின்று - ஏத்தியிறைஞ்சி - மெய்ந்நா' என்று தொடங்கி, 'திருவேங்கடத்தானே! உன்னடிக்கண்அடியேன்-நான் மெய்யாக - எய்தி - மேவுவது - எந்நாள்' என்றந்வயம். காண்பதற்கு - காண்பதென்றபடி. இறைஞ்சி - வணங்கி, திருவடிகளிலே விழுந்தென்றபடி. (சா)

**ஆ.**—(அடியேன்மேவி.) - உபாயாநுஷ்டாநம் பண்ணிலனன்றோ இந்த ப்ராப்யம் பெறலாவதென்னில், பரமவ்யோமநிலயரான பரமஸூரிகளாலே பரிவுருதனைக் கொண்டு, உனக்கு விஜயத்வஜமாய் ஆச்ரிதவிரோதிநிரஸநஸ்வபாவனான பெரியதிருவடி திருத்தோளிலே ஏறியருளி எனக்காகத் திருமலையிலே புகுந்தருளி என்பக்கலுள்ள ப்ரதிபந்தகத்தைப்போக்கி, என்னெஞ்சிலே வந்து புகுந்தருளி, உன் திருப்பவளத்தின் அழகாலே ப்ராக்ருதவிஷயப்ரவணனான என்னையுங்கூடத் தோற்பித்து அடிமையாக்கி, ஒரு க்ஷணமாத்ரவிச்சேதத்திலும் ஆத்மதாரணக்ஷமனன்றியே அவிச்சேதேந நான்உன்னையநுஸந்திக்கும்படி எனக்குப் பரமபோக்யமாயிருக்கையாலே, உன்னைக் காண்கைக்கோர் உபாயம்அநுஷ்டித்திலேனாகிலும் உன்னைக்காணாதொழியில் தரிக்கமாட்டேன்; ஆதலால் உன்னைக்காட்டியருளாய்! என்கிறார்.

**ஒ.**—ஏழாம்பாட்டில், நான் நிஸ்ஸாதநனாயிருக்கச்செய்தே, உன்னுடைய போக்யதையையநுஸந்தித்து உன்னையொழிய ஒருக்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டுகிறிலேனென்கிறார். [அடியேன் என்றுதொடங்கி] - அயர்வறுமமரர்களதிபதியாய் வைத்து என்னை அடிமைகொள்ளுகைக்காகத் திருமலையிலேவந்து நின்றருளி என்னுடைய ப்ரதிபந்தகங்களைப் போக்கி ப்ரதிபக்ஷநிரஸநசீலனான பெரிய திருவடியை த்வஜமாக உடையையான வேண்டற்பாட்டாலும் அழகாலும் என்னை அடிமைகொண்டு எனக்கு நிரதிசயபோக்யனானவனே!

**ப.**—அநந்தரம், என்னோடு ஸூரிகளோடு வாசியற ஸர்வ ஸாதாரணமாக ரஸிப்பித்துக்கொண்ட உன்னை யநுபவிக்கைக்கு ஸாதநமநுஷ்டியாதிருக்க, அநுஷ்டித்து பலம் தாழ்ந்தாரைப்போலே க்ஷணகாலமும் பொறுக்கமாட்டுகிறிலேனென்கிறார்.

அடியேன் - (நிருபாதிக சேஷத்வத்தை ஸ்வரூபமாக வுடையேனான) நான், மேவி - கிட்டி, அமர்கின்ற - நிரந்தராநுபவம்பண்ணும்படியான, அமுதே - நித்ய போக்யபூதனைப், (இப்படி ஸூரிகளையு மநுபவிப்பித்து), இமையோர் - அவர்களுக்கு, அதிபதியே - நிர்வாஹகனாயிருக்கும் மேன்மையையுடையையாய், (இந்த போக்யதைக்கு ஸூசகமாம்படி), அடு - ஆச்ரிதவிரோதி நிரஸநசீலனான, புள் - பெரியதிருவடியை, கொடியா - கொடியாக, உடையானே - உடையையாய், கோலம் - இந்தபோக்யதாவர்த்தகமான ஸௌந்தர்யாதிகளை யுடைத்தாய், கனி - பக்வ பலம்போலே சிவந்த, வாய் - அதரசோபையையுடையனாய்க்கொண்டு, பெருமானே - இந்தபோக்யதைக்கு எல்லை காணவொண்ணாத பெருமையை யுடையனாய், (போகப்ரதிபந்தகமாய்), செடி - செடி போலே, ஆர் - செறிந்த, வினைகள் - பாபங்களை, தீர் - தீர்க்கைக்கு, மருந்தே - அப்ரதிஹதஔஷதமாய், திருவேங்கடத்து - திருமலையிலே ஸந்நிஹிதனாய், எம் - என்னை, பெருமானே - அடிமைகொண்ட ஸ்வாமியே! உன - உன், பாதம் - திருவடிகளை, காண - காண்கைக்கு, நோலாது - நோற்றுவையாதே, (நோற்றார், பலம் தாழ்த்தப்படுங் கணக்கிலே), நொடி - நொடி, ஆர்-சேர்ந்த, பொழுதும் - க்ஷணமாத்ரமும், ஆற்றேன் - ஆற்றமாட்டுகிறிலேன்.

**இ.**—ஏழாம்பாட்டில், நான் நிஸ்ஸாதநனாயிருந்துவைத்து உன்போக்யதையாலே க்ஷணமாத்ரமும் தரிக்கமாட்டுகிறிலேன் என்கிறார். "இமையோரதிபதியாய் - கொடியாவடுபுள்ளுடையானாய் - செடியார் வினைகள் தீர்மருந்தாய் - திருவேங்கடத்தெம்

பெருமானும் - கோலக்கனிவாய்ப் பெருமானும் - அடியேன் மேவியமர்கின்றவமுதனுன வனே! உனபாதம் காணநோலாதே - கொடியார்பொழுதும் - ஆற்றேன்' என்று அந்வயம். அயர்வறுமமரர்களதிபதியாய்வைத்து ப்ரதிபக்ஷத்தை முடிக்கும் பெரியதிருவடியை த்வஜமாகவுடையனும், தூறுமண்டின ஸாம்ஸாரிக ஊரிதங்களைப்போக்கும் மருந்தாய், திருமலையிலே நித்யவாஸப்பண்ணி, உன்னுடைய ஸௌந்தர்யாதிகளாலே என்னை அநந்யார்ஹனுக்கி, ஸ்வரூபஜ்ஞாநமுடைய நான் அநந்யப்ரயோஜநமாக அநுபவிக்கிற அம்ருதமானவனே! தேஹத்தைப் பூண்கட்டும் அம்ருதத்தில் வாசிசொல்லுகிறுர்: உன்திருவடிகளைக் கிட்டுகைக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணுதே, அநுஷ்டித்து ஃபலந் தாழ்த்தாரைப்போலே கூப்பிடாநின்றேன்.

எடு.—ஏழாம்பாட்டு. '''மெய்ந்நானெய்தி'' என்கிற இந்த ஜ்ஞாநலாபம் உமக்கு உண்டாயிற்றிறே; அது ஃபலத்தோடே வ்யாப்தமாயல்லது நில்லாதிறே; ஆனபின்பு அவ்வளவும் நீர்ஆறியிருந்தாலோ ?' என்ன; 'அத்தனை க்ரமப்ராப்தி பார்த்திருக்கப்போகிறதில்லை உன் போக்யதை' என்கிறுர். உன்றனை யாறியிருக்க நான் மாட்டுகிறிலேன்.

[அடியேன்மேவியமர்கின்றவமுதே] – தேவஜாதிகளுடைய உப்புச்சாறுபோலன்று; ஒருதிரளாய் அநுபவிக்குமதன்று; அநந்ய ப்ரயோஜநரநுபவிக்கும் அம்ருதமாயிற்று ! † (மேவியமர்-அநந்ய ப்ரயோஜநமா யத்விதீயமாயிருக்கை. மேவுகை - இதரத்யாகம். அமருகை - அர்ச்சாவதாரம்.) [இமையோரதிபதியே] - இது புஜிக்கைக்குக் கூட்டாவதோரு திரள் அங்கே உண்டாயிருக்கிறபடி. [கொடியாவடுபுள்ளுடையானே] - ப்ரதிபக்ஷநிரஸநத்தை ஸ்வபாவமாகவுடைய பேரியதிருவடியை த்வஜமாக வுடையவனே! [கோலக்கனிவாய்ப்பெருமானே] - அழகியதாய்க் கனிந்திருந்துள்ள திருவதரத்தின் சிவப்பைக் காட்டி என்னை யடிமைகோண்டவனே! வாய்க்கரையிலே தோற்றுர்காணும். ஆஶ்ரிதரை இவ்வழகை யநுபவிப்பிக்கைக்குக் கோடிகட்டிக்கோண் டிருக்கிறபடி. [சேடியார்வினைகள் தீர்மருந்தே] - சேடி - பாபம்; பாபத்தோடே போருந்தின அஸத்கர்மங்களாலுண்டான

---

எழாம்பாட்டு.—அடியேன் இத்யாதி. "கொடியார் பொழுதுமுனபாதங் காண நோலாதாற்றேன்" என்றத்தைப்பற்ற அவதாரிகை - மெய்ந்நான் இத்யாதி. "அமுதே" என்றத்தைப் பற்ற - உன்போக்யதை என்றது. நீ திருவேங்கடமுடையானுயிருக்கச்செய்தேயும் என்னையங்கீகரியாமல் ஆறியிருந்தாய் ; இப்படியிருந்த உன்னைப்போலே நான் ஆறியிருக்கமாட்டே னென்கிறுர் - உன்றனை இத்யாதி.

"அமுது" என்றதுக்கு - ஆராவமுதென்றுவிவக்ஷித்துபாவம் - தேவஜாதி இத்யாதி. "அடியேன்" என்ற ஏகவசநத்துக்குபாவம் - ஒருதிரளாய் இத்யாதி. "அடியேன்" என்று - மேஷத்வஞ்சொன்னதுக்குபாவம் - அநந்யஇத்யாதி. ஒருதிரளாயநுபவிக்குமது அன்றென்றுசொல்லிவைத்து, "இமையோர்" என்று - பஹுவசநமாகச்சொன்னதுக்கு பாவமேதென்ன - இதுபுஜிக்கைக்கு இத்யாதி. அதாவது - இங்குள்ளார் ப்ரயோஜநாந்தரபரரானாற்போலே, அங்குள்ளார் அநந்யப்ரயோஜநர் என்று கருத்து. "அடுபுள்ளை - கொடியாக உடையவன்" என்று விவக்ஷித்தருளிச்செய்கிறுர் - ப்ரதிபக்ஷ இத்யாதி. "கனிவாய்" என்றவநந்தரம் "பெருமான்" என்றதுக்கு ரஸோக்தியாகபாவம் - வாய்க்கரையிலே இத்யாதி. அதரத்திலேயென்று ஸ்வபாவார்த்தம்; மேலெழ என்று சாடு. பதச்சேர்த்திக்குபாவம் - ஆஶ்ரிதரை இத்யாதி. "ஆர் - சேடி - வினை" என்றுய் - பூர்ணமான பாபத்தா

---

† குண்டலிக்ரந்தம் க்வாசித்கம். இவ்வாக்யத்தில் 'அத்விதீயமாய்' என்றவிடத்தில் 'நித்யமாய்' என்றும் காண்கிறது.

து:கத்தைப் போக்குகைக்கு மருந்தானவனே! அது புஜிப்பிக்கைக்கு விரோதிகளைப் போக்கும்படி. அன்றிக்கே, தூறுமண்டின கர்மங்களைப் போக்குகைக்கு மருந்தானவனே! அவ்வம்ருதந்தானே காணும் மருந்தாகிறது. "மருந்தும் பொருளு மமுதமுந்தானே," "மருந்தே நங்கள் போகமகிழ்ச்சிக்கு" என்றும், அவன்தன்னையொழிய வேறு மருந்துமில்லையே; மருத்துவனாய்நின்ற மாமணிவண்ணனிறே. [திருவேங்கடத்தெம்பெருமானே]. அவ்வம்ருதம், புஜிப்பார்க்கு மலைமேல் மருந்திறே. அவ்வம்ருதம், புஜிப்பார்க்குச் சாய்கரகம் போலே உயரத்திலே யணித்தாக நிற்கிறபடி. 'இமையோரதிபதியாய், கோடியாவபுள்ளுடையானாய் - செடியார்வினைகள் தீர்மருந்தாய், திருவேங்கடத் தெம்பெருமானாய்-கோலக் கனிவாய்ப்பெருமானாய் - அடியேன்மேவி யமர்கின்றவமுதே!' என்கிறார். பட்டர், "நித்யத்திலே, 'அமுதுசெய்யப்பண்ணும்போது ஸ்தோத்ரத்தை விண்ணப்பஞ்செய்வது' என்று என்ன ஸ்தோத்ரத்தைவிண்ணப்பஞ்செய்வது?" என்ன, "'அடியேன் மேவியமர்கின்ற வமுதே', 'பச்சைமாமலைபோல்மேனி' என்கிற பாட்டுக்கள்போலேயிருக்குமவற்றை விண்ணப்பஞ்செய்வது" என்றருளிச்செய்தார். [நொடியார்பொழுதும்] - நொடிநிறையுமளவும். [உனபாதங்காணநோலாதாற்றேனே]-உன்திருவடிகளைக் காண்கைக்கு ஒருஸாதநாநுஷ்டானம் பண்ணாதிருக்க, க்ஷணகாலமும் ஆற்றமாட்டுகிறிலேன். ஸாதநத்தைக்கண்ணழிவற அநுஷ்டித்து ஃபலந்தாழ்ப்பாரைப்போலே படாநின்றேன். அதில்லாமையிறே இவர் இங்ஙனே கிடந்துபடுகிறது. தனியே ஒருஸாதநம் அநுஷ்டிக்குமவனுக்கு, "அது தலைக்கட்டினவாறே பெறுகிறோம்" என்றுதல், "அதிலே சிலவைகல்யம்பிறக்கப்பட்டிறே ஃபலந்தாழ்த்தது" என்றுதல் ஆறியிருக்கலாம்; அவனே ஸாதநமானஇவர்க்கு விளம்பித்தால் "அவன் க்ருபையும் ஏறிப்பாயாதபடியானேனே!" என்னும் ஹ்ருதயமிறேயநுவர்த்திப்பது. (எ)

---

*லுண்டான து:கமென்றுதல்; "செடி" என்று - பாபமாய், ஆர்தல் - உண்டானதாய், வினை என்று - து:கமாய், பாபத்தாலுண்டான து:கமென்றுதல் முந்தினவர்த்தம்; செடியென்று - தூறாய், ஆர்தல் - மிகுதியாய், வினையென்று - கர்மமாய், தூறு மண்டிக்கிடக்கிற கர்மமென்று இரண்டாமர்த்தம். "அமுதே" என்றத்தைக் கூட்டி பாவம் - அவ்வம்ருதந்தானே இத்யாதி. "அம்ருதந்தானே மருந்து" என்றதுக்கு ப்ரமாணம் - மருந்தும் இத்யாதி. ஸம்ஸாரவ்யாதியைப் போக்கும் ஔஷதமும், இஷ்டமான மோக்ஷத்தைத்தரும் பொருளும், ஸ்வத: இஷ்டமாய்போக்யமான அம்ருதமும் அந்தத்திருவடிகளே யென்றபடி. மூன்றாந்திருவந்தாதி நாலாம்பாட்டு. 'மருந்தேநங்கள்' இத்யாதிக்கு - எங்களுடைய போகத்தினுடைய வ்ருத்திக்கும் வர்த்தகமான மருந்தானவனே யித்யர்த்த:. மருந்துவனாய்நின்ற - மருந்துஅறியுமவனா யிருக்கிறவனேயென்றபடி. பெரியாழ்வார்திருமொழி, அஞ்சாம்பத்து, மூன்றாந்திருமொழி, ஆறாம்பாட்டு, "எருத்துக்கொடி" இத்யாதி. "மருந்தே" என்றத்தோடே "திருவேங்கடத்தெம்பெருமானே" என்றுகூட்டி பாவம் - அவ்வம்ருதம் இத்யாதி. "அடியேன் மேவியமர்கின்றவமுதே" என்ற பதத்தோடே "திருவேங்கடத்தெம்பெருமானே" என்றத்தைச்சேர்த்து பாவம் - அவ்வம்ருதம்புஜிப்பார்க்கு இத்யாதி. சாய்கரகம் – தண்ணீர்ப்பந்தலில் தண்ணீர்வார்க்கிற கரகம். பரத்வத்தைச்சொல்லி, விரோதிநிரஸநத்துக்கு உறுப்பான பரிகரத்தைச்சொல்லி, விரோதிநிரஸநத்தைச்சொல்லி, ஸௌலப்யத்தைச்சொல்லி, அழகைச்சொல்லி, போக்யனாயிருக்கிறானென்றிப்படி ஒருக்ரமஞ்சொல்லுகைக்காக அந்வயிக்கிறார் - இமையோரதிபதியாய் இத்யாதி. ப்ராஸங்கிகம் - பட்டர் இத்யாதி. நித்யத்திலேயென்றது - உடையவர்நித்யத்திலேயென்றபடி. உனபாதங்காண நோலாதிருக்கச்செய்தேயும் போக்யதையாலே நொடியார்பொழுதும் ஆற்றேனென்கிறார் - உன்திருவடிகளை இத்யாதி. விவரணம் - ஸாதநத்தை இத்யாதி. நோலாமையாலே விளம்பஹேதுவில்லை; ஆகையாலே, ஆற்றேனென்றர்த்தாந்தரம் - அதில்லாமையிறே இத்யாதி. கீழ்வாக்யத்தை ஸோபபத்திகமாக விவரிக்கிறார் - தனியே இத்யாதிவாக்யத்வயத்தாலே. (எ)*

## எட்டாம் பாட்டு.

**நோலாதாற்றேன்உனபாதம்காணவேன்றுநுண்ணுணர்வின்**
**நீலார்கண்டத்தம்மானும்நிறைநான்முகனுமிந்திரனும்**
**சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்புந்திருவேங்கடத்தானே !**
**மலாய்மயக்கியடியேன்பால்வந்தாய்போலேவாராயே.**

**ஆ.**—(நோலாதாற்றேன்) - உபாயசூந்யரா யிருந்துவைத்து ஆசைப்பட்டால் கிடைக்குமோ ? என்னில் ; அறிவுடையரான ஸர்வ சதுர்முகஇந்த்ராதிதேவர்களுங்கூட ஸபரிக்ரஹமாக வந்து, நாங்கள் உபாயசூந்யராகிலும் உன்னைக் காணுதொழியில் தரிக்கமாட்டோம் என்றாசைப்பட்டன்றோ உன்னைக்காணப்பெறுகிறது ? ஆதலால், அடியேனும்உன்னை ஸர்வகாலமுங் காணும்படி வரவேணுமென்றபேக்ஷிக்க, அப்போதே யெழுந்தருளாவிட்டவாறே இப்படிச்செய்கை திருவுள்ளமன்றாகில், உன்னைக் காணப் பெறாத வ்யஸநத்தாலே பித்தேறி மயங்கியிருந்த அடியேன்பால் ஸ்ரீகஜேந்த்ராழ்வானுக்குவந்து தோற்றினாற்போலேயாகிலும் வந்து என்னை தரிப்பித்தருளாய் ! என்கிறார்.

ஒ.—எட்டாம்பாட்டில், நோலாதுவைத்து "ஆற்றேன்" என்ன, பெறலாமோ? சிறிதுயத்நம் பண்ணவேண்டாவோவென்னில் ; எத்தனையேனுமளவுடைய ப்ரஹ்மாதிகளும் ஸபரிகரமாகவந்து தங்களகிஞ்சநத்வத்தை ஆவிஷ்கரித்தன்றோ தங்கள் அபேக்ஷிதங்களைப்பெற்றுப்போவது ? ஆனபின்பு, வந்து என்னுடைய ஆர்த்தியைத் தீர்த்தருளவேணும் என்கிறார்.

[நோலாதென்று தொடங்கி] - உன்னுடைய திருவடிகளைக் காண்கைக்கீடாக ஸாதநாநுஷ்டாநம் பண்ணாதேயிருந்துவைத்து ஒன்றும் தரிக்கமாட்டுகிறிலேன் என்று விலக்ஷணஜ்ஞாநனாய் ஜகத்ப்ரதாநனான நீலகண்டனும் அவனிலும் பூர்ணனானசதுர்முகனும் இந்த்ரனும். [சேலேயென்று தொடங்கி] - ஊயநீயமாம்படி தங்களுக்கு போக்ய ஸாதைகளான ஸ்த்ரீகளை முன்னிட்டுக்கொண்டு ஸமாஶ்ரயிக்கலாம்படி அவர்களுக்கு ஸுலபனாய்த் திருமலையிலேநின்றருளினவனே! கறுத்த நிறத்தோடே கண்டார் பிச்சேறும்படி ஸ்ரீவஸுதேவர்திருமகனாய்வந்து பிறந்தருளினாற்போலே என்னுடைய ஆர்த்தி தீர வரவேணும்.

ப.—அநந்தரம், ஸாவரோதரான ஈஶ்வராபிமாநிகளும் ஸாதராஶ்ரயணம் பண்ணும்படி ஸுலபனாய்நிற்கிற நீ, க்ருஷ்ணனாய் வந்தாற்போலே என்பக்கலிலே வர வேணுமென்கிறார்.

உன - உன், பாதம் - திருவடிகளை, காண - காண்கைக்கு, நோலாது - ஸாதநமநுஷ்டியாதே வைத்து, ஆற்றேன் - ஆற்றமாட்டுகிறிலேன், என்று - என்றுசொல்லி, நுண்ணுணர்வில் - ஸர்வஜ்ஞனாகையாலே ஸூக்ஷ்மார்த்ததர்ஶியாய், (விஷத்தாலே), நீல் - கருமை, ஆர் - ஆர்ந்திருக்கிற, கண்டம் - கண்டத்தை யுடையனாய், அம்மானும் - அத்தாலே ஜகத்ப்ரதாநனான ருத்ரனும், நிறை - தஜ்ஜநகனாய் ஸ்ரஷ்ட்ருத்வாதி அநுகுணஜ்ஞாநாதிபூர்ணனான, நான்முகனும் - சதுர்முகனும், இந்திரனும் - த்ரைலோக்யைஶ்வர்யவிசிஷ்டனான இந்த்ரனும், சேல் ஏய் - முக்தமான சேல்போலேயிருக்கிற, கண்

ணார் - கண்ணையுடையரான, பலர் - உமா ஸரஸ்வதி ஶசீப்ரப்ருதிகளான பலபெண்டு களும், சூழ - தங்கள் பரிஸரவர்த்திகளாக, விரும்பும் - ஸாதரமாக ஆஶ்ரயிக்கும், திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனானவனே ! மால்ஆய் - கரியநிறத்தை யுடையனாய்க்கொண்டு [க்ருஷ்ணனாய்], மயக்கி - குணசேஷ்டிதங்களாலே ஸர்வரையும் மயக்கி, வந்தாய்போலே - வந்தாற்போலே, அடியேன்பால் - உன்னையொழியச் செல் லாதபடி அநந்யார்ஹனான என்பக்கலிலே, வாராய் - வரவேணும் ! மாலாய் - க்ருஷ்ணனா யென்றபடி.

இ.—எட்டாம்பாட்டில், நோலாதவைத்து "ஆற்றேன்" என்ன, பெற லாமோவென்ன : அளவுடையாரான ப்ரஹ்மாதிகளும் ஆகிஞ்சந்யத்தை முன்னிட் டன்றோ தந்தாம் அபேக்ஷிதம்பெற்றது! என்கிறார்.

[உனபாதங்காண - நோலாதாற்றேன்]-உன்திருவடிகளைக் கிட்டுகைக்கு ஸாத நாநுஷ்டாநம்பண்ணாதேயிருந்து வைத்து, உன்தாளையொழிய ஆற்றமாட்டேனென்றா யிற்று, அவர்கள் தனித்தனியே சொல்லுவது. [நுண்ணுணர்வில்] - "ஸத்த்வாத்ஸஞ்ஜாய தெ ஜ்ஞாநம்" என்று ஸத்வம்தலையெடுத்து தத்வஜ்ஞாநம் பிறந்தபோது அவர்களும் இப்படியாயிற்றுசொல்லுவது: — "ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தா தேவதாகணா:". விஷத்தைக் கண்டத்திலேயடக்கின ஶக்தியையுடையனாய் அத்தாலே ஜகத்ப்ரயாநனாக அபிமாநித்திருக்கும் ருத்ரனும், அவனுக்கும் ஜநகனாய் அவனிலும் ஜ்ஞாநஶக்திகளால் பூர்ணனான சதுர்முகனும் த்ரைலோக்யநிர்வாஹகனான இந்த்ரனும். "ஸப்ரஹ்மகாஸ் ஶிவஸேந்த்ரா:" என்னக்கடவதிறே. [சேலேய்கண்ணார் பலர்சூழ] - "உமாஸஹாயோ ஈஶாந:" என்கிறபடியே ஸ்த்ரீகள் கழுத்திலே கப்படத்தைக்கட்டி அவர்களை முன்னிட் டுக்கொண்டாயிற்று ஆஶ்ரயிப்பது. "ஸ்த்ரியோ நாகஸ்ய ஸர்வாஸ்த்ரியோ நாத:" என்று காளி யன் ஸ்த்ரீகளை முன்னிட்டு ஶரணம்புக்காற்போலேயும், மஹாராஜர் தாரையை முன் னிட்டாற்போலேயும். [திருவேங்கடத்தானே] - அவர்களுக்கு ஆஶ்ரயிக்கலாம்படி ஸுலபனாய் வர்த்திக்கிறவனே! [மாலாய்இத்யாதி] - கரியநிறத்தோடே இடையரும் இடைச்சிகளும் பிச்சேறவந்து பிறந்தாற்போலே, என் ஆர்த்தி தீரவரவேணும். மாலாய் - மயங்கியிருக்கிற அடியேன் என்றுமாம்.

ஈடு.—எட்டாம்பாட்டு. "'உன்னைக் கிட்டுகைக்கு என்தலையில் ஒரு ஸாதநமில்லை" என்றநின்றீர்; 'இதொருவார்த்தையோ ! ஸாதநம் அநுஷ்டித்தார்க்கன்றி ஃபலமுண்டோ ?' என்ன, 'தந்தாமுடைய அபிமதஸித்தி ஸாதநாநுஷ்டாநத்தாலே என் றிருக்கும் ப்ரஹ்மாதிகளுக்கும், கிட்டினால் பாசுரமிதுவன்றோ ?' என்கிறார். தந்தாமுடைய ஆகிஞ்சந்யத்தை முன்னிடுமத்தனைபோக்கி, ஒன்றுஅநுஷ்டித்துப் பெறலாம்படியோ நீ யிருக்கிறது ?

எட்டாம்பாட்டு.—நோலாதாற்றேன் இத்யாதி. "நோலாதாற்றேன்" இத்யாதியாலே தங்கள் வெறுமையை முன்னிடுகிற ப்ரஹ்மாதிகளுடைய பாசுரத்தையருளிச்செய்கிறதுக்கு அநு குணமாக அவதாரிகை - உன்னைக்கிட்டுகைக்கு இத்யாதி. பாசுரமிதுவன்றோ என்றது - தாமருளிச் செய்த "உனபாதங்காண - நோலாதாற்றேன்" என்றது. இத்தால் சொல்லிற்றாயிற்ற அர்த்தமேது ? என்ன அருளிச்செய்கிறார் - தந்தாமுடைய இத்யாதி விவரணமாதல்.

[நோலாதுஇத்யாதி] - உன்திருவடிகளைக் காண்கைக்கு ஸாதநாநுஷ்டாநம்பண்ணாதே யிருந்துவைத்து உன்னையொழிய ஆற்றமாட்டேன் என்றாயிற்று, அவர்கள் தனித்தனியே சொல்லுவது. ஒரு பாண யுத்தத்திலே தோற்றுப் போக்கடியற்றவாறே இங்ஙனே வந்து விழுவர்கள். ரஜஸ்தமஸ்ஸுக்கள் தலையெடுத்தபோது "ஈஶ்வரோஹம்" (ஈஶ்வரோஹம்) என்றிருப்பர்கள்; முட்டினவாறே, "க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம்" (க்ருஷ்ணக்ருஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம்) என்று ஸ்தோத்ரம்பண்ணத் தொடங்குவர்கள்; 'ஶரணம் த்வாமநுப்ராப்தாஸ் ஸமஸ்தா தேவதாகணா:" (ஶரணம்த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தா தேவதா கணா:). விஷத்தைக்கண்டத்திலேதரித்தஶக்தியையுடையனாய் அத்தாலே ஜகத்ப்ரதாநனாக அபிமாநித்திருக்கும் ருத்ரனும், அவனுக்கும் ஜநகனாய் அவனிலும் ஜ்ஞாநஶக்திகளால் பூர்ணனான சதுர்முகனும், த்ரைலோக்ய நிர்வாஹகனான இந்த்ரனும்; 'ஸப்ரஹ்மகாஸ்ஸஶிவாஸ் ஸேந்த்ரா:" (ஸப்ரஹ்மாஸஶிவஸ்ஸேந்த்ரா:). "இங்ஙனே யிருக்கச்செய்தேயும், அஹிர்ப்புத்ந்ய ஸம்ஹிதையிலே இவர்களுடைய வாக்யங்களை ப்ரமாணமாகக்கொண்டு போராநின்றோமே யென்னில்; ஸத்த்வம் தலையெடுத்தபோது சொல்லுமவையெல்லாங் கொள்ளக்கடவோம். இவை கைக்கொண்டோமென்னா, இவர்கள் தாங்கள் உத்தேஶ்ய ராகார்கள்; 'காக்கைவாயிலும் கட்டுரைகொள்வர்' என்றுண்டே' என்று பட்டர் அருளிச்செய்வர். ஓராழ்வார், 'பிதிருமனமிலேன்' - பேதிக்கப்பட்ட நெஞ்சையுடையேனல்லேன்; 'பிஞ்ஞகன் றன்னோடேதிர்வன்' - ருத்ரனெனக்கு ஶத்ருவான்; 'அவனெனக்கு நேரான்'- அவனுமெனக்கு ஶத்ருவானல்லன்; அது என்னேன்னில்: 'அதிருமித்யாதி' - பகவத்விஷயத்திலே நெஞ்சை

---

நோலாதாற்றோம் என்னாதே, "நோலாதாற்றேன்" என்கையாலே தனித்தனியே' என்கிறது. "ஈஶ்வரோஹம்" என்றவர்கள் "நோலாதாற்றேன்" என்பர்களோ? என்ன - ஒருபாண இத்யாதி. பாணயுத்தத்திலேயென்றது - பாணயுத்தாதிகளிலே யென்றபடி. யுத்தம்பண்ணுகிறதென்? அநந்தரம் சரணம்புகுகிறதென்? என்ன - ரஜஸ்தமஸ்ஸுக்கள் இத்யாதி. ப்ரஹ்மாதிகள் வேறுமையை முன்னிட்டதுக்கு ப்ரமாணம் - ஶரணம்த்வாம் இத்யாதி. ஸ்ரீவிஷ்ணுபுராணே, 'க்ருஷ்ண க்ருஷ்ண மஹாபாஹோ ஜாநே த்வாம் புருஷோத்தமம் । [illegible] ப்ரதயம்பரம்" இதி ருத்ர: [ரு. - சக]. [illegible] ஜிதா: । ஶரணம் த்வாமநுப்ராப்தாஸ்ஸமஸ்தா தேவதாகணா:" இதி ஸ்ரீராப்திநாதம் ப்ரதி ப்ருஹஸ்பதிப்ரமுகா தேவர்ஷய:. [க-கூ-கரு] ப்ரஹ்மருத்ரர்களோடே இந்த்ரனையுஞ்சேரப்படித்திருக்குமோ? என்ன - ஸப்ரஹ்மா இத்யாதி. நாராயணனுவாகே. இப்படி தூர்மாநிகளாகில் இவர்கள் வாக்யங்கள் ப்ரமாணமாகக்கூடுமோ? என் றாஶங்கித்துப்பரிஹரிக்கிறார் - இங்ஙனே இத்யாதி இங்ஙனேயிருக்கச்செய்தேயுமென்றது - இப்படி அஹங்காரிகளாயிருக்கச்செய்தேயுமென்றபடி. வாக்யங்களாவன - "ஏகோ ஹ வை நாராயண:" இத்யாதிகள். அவர்கள் வாக்யங்களை ப்ரமாணமாகக்கொண்டால் அவர்களை ப்ரதிபத்திபண்ணவேண்டாவோ? என்ன - இவை கைக்கொண்டோம் இத்யாதி. அநுத்தேஶ்யர் வார்த்தை கைக்கொள்ளலாமோ? என்ன - காக்கை இத்யாதி. காக்கையினுடைய பேச்சிலும் நற்சொற்கொள்ளுவர் என்றபடி. பெரியாழ்வார்திருமொழி, "வாக்குத்தூய்மை" இத்யாதி. "அவர்கள் அநுத்தேஶ்யர்" என்கைக்கு ஸம்வாதம் - ஓராழ்வார் இத்யாதி. நாலாந்திருவந்தாதி, எண்பத்துநாலாம் பாட்டு, "பிதிருமனமிலேன்" இத்யாதி. 'பேதிக்கப்பட்டநெஞ்சையுடையேனல்லேன்' என்றதுக்கு பாவம் - அவன் அஸந்நிதியிலே "அவனோடேயெதிர்வன்" என்றுசொல்லி, அவனைக்கண்டவாறே

வைத்து அநுபவிக்கையே யாத்ரையான எனக்கு, அந்யபரனானவன் ஒப்பாகப்போருமோ? 'குறைகொண்டு' - தன்வெறுமையைக் கைதோமோனமாகக்கொண்டு; 'நான்முகன் குண்டிகைநீர்பெய்து' - நினைவறத் திருவடி சென்றுகிட்டிற்று: உபகரணம் பெற்றிலன். தர்ம தேவதையானது த்ரவீபூதமாயிற்றது; அத்தைக்கொண்டு 'மறைகொண்டமந்திரத்தால் வாழ்த்தி' - வேதாந்தங்களில் பகவத் பரத்வ ப்ரதிபாதகமான மந்த்ரங்களைக்கொண்டு ஸ்தோத்ரம்பண்ணி; 'கறைகொண்டகண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான்' - அவிநீதராய்த் திரியும்ப்ரஜைகள் தலையிலே ஸ்ரீபாததீர்த்தங்கொண்டு தெளிப்பாரைப்போலே. [நுண்ணுணர்வில்] - ஸத்த்வம் தலையெடுத்தபோது சொல்லுவதுஇதுவே.* ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநமிறே. [நீலார்கண்டத்தம்மானும்] - விஷத்தைக் கண்டத்திலேயுடைத்திருக்கை யாலே ஈஶ்வராபிமாநியான ருத்ரனும். [நிறைநான்முகனும்] - அவனுக்குங்கூட ஜநகனாய் ஸம்பூர்ணஜ்ஞாநனான ப்ரஹ்மாவும். [இந்திரனும்] - இவர்களோடொக்க ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களில் ஓரந்வயமின்றிக்கே யிருக்கச்செய்தே, "ஸப்ரஹ்மாஶிவஸேந்த்ரா:" (ஸப்ரஹ்மாஶிவஸ்ஸேந்த்ர:) என்றுகொண்டு ஒக்கஎண்ணலாம்படியான இந்த்ரனும். [சேலேய்கண்ணாரித்யாதி] - தந்தாமுக்கு ஒருயார்த்தியுள்ளபோது ஸ்த்ரீகள் ஸந்நிதியில் ஓரேளிமைதோற்றவிரார்களிறே; ஆபத்துவந்தவாறே, மணட்டிமார்கழுத்திலும் தங்கள்கழுத்திலும் கப்படங் கட்டிக்கொண்டு வந்து விழத் தொடங்குவர்கள். "உபயா ஸாயு-

*பயப்பட்டு பேதிக்கும் மநஸ்ஸையுடையேனல்லேனென்றபடி. எதிர்வன் - ஒப்பன். ஸத்ருஶனென்றது - ஜ்ஞாந ஸாம்யத்தாலே. அதிரும்கழற்காலமன்னனையேகண்ணனையே - ஶப்தியாநிற்கிற வீரக்கழலையுடைய திருவடிகளையுடைய ராஜாவாயிருக்கிற க்ருஷ்ணனையே, நாளும் - ஸர்வகாலத்திலும், தொழுக்காதல் - அநுபவிக்கைக்கீடான அபிநிவேஶத்தை, தொழில் பூண்டேன்—தொழிலாக - நித்யக்ருத்யமாக, ஏறிட்டுக்கொண்டேன்; ஆகையாலே, காதாசித்கமான ஐஶ்வத் ஜ்ஞாநத்தையுடைய ருத்ரனெனக்குநேரான்: அவனெனக்கு ஸத்ருஶனன்று. பிஞ்ஞகன் - ருத்ரன். 'பிதிருமனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடெதிர்வன், அதிரும்' என்று தொடங்கி, 'தொழுக்காதல் - தொழில் - பூண்டேன்'; ஆகையாலே 'அவனெனக்கு நேரான்' என்றந்வயம். "நாளும்" என்றத்தைப்பற்ற 'அநுபவிக்கையே யாத்ரையானவெனக்கு' என்றது; 'ஒப்பாகப்போருமோ' என்றருளிச்செய்தாரென்று கூட்டுவது. 'க்ருஷ்ணக்ருஷ்ணமஹாபாஹோ' என்றும்,' ஶரணம்த்வாமநுப்ராப்தா: என்றும்' ருத்ரனும் இந்த்ராதி தேவதைகளும் வெறுமையைமுன்னிட்டு ஆஶ்ரயித்ததுக்கு ப்ரமாணங்காட்டி, ப்ரஹ்மா ஆகிஞ்சந்யத்தை முன்னிட்டு ஆஶ்ரயித்ததுக்கு ப்ரமாணம் - குறைகொண்டு இத்யாதி நான்முகன் திருவந்தாதிங் கைதோமோனம் - ஸஹாயம். த்ரவீபூதமாயிற்றது - ஜலமாய்க்கமண்டலுவிலேப்ரவேஶித்ததென்றபடி. குண்டிகை - கமண்டலம். "த்ரவீபூதஸ்ஸதாசார்யோ ஹரிபக்த்யா பரோ தே நந்த । ப்ரஹ்மஸ்வாயம்புவா நீயம் வாரணம் சாப்யஸ்த்ரசேஷமே । க்ஷாலிதம் வாமபாதாக்ரம் பாதாப்ரம்ஸஹிதம் ததஸ்ய ஹ்ருதா" என்னக்கடவதிறே. நுண்ணுணர்வில் - ஸூக்ஷ்மஜ்ஞாநத்தையுடையபோதென்று ஶப்தார்த்தம் விவக்ஷித்து, தாத்பர்யார்த்தம் அருளுகிறார் - ஸத்த்வந்தலையெடுத்தபோது இத்யாதி. சொல்லுவதிதுவேயென்றது - "நோலாதாற்றேன்" என்றவார்த்தையை. "நுண்ணுணர்வு" என்றால்-ஜ்ஞாநத்தையன்றோசொல்லுவது: ஸத்த்வந்தலையெடுத்தபோதென்று காட்டுமோ? என்ன - ஸத்த்வாத் இத்யாதி. ஸத்த்வகார்யமான ஜ்ஞாந ஶப்தத்தாலே-ஸத்த்வத்தைச்சொல்லுகிறது லக்ஷணையாவென்றபடி. ஶ்ரோத்ருபுத்தி ஸமாதாநார்த்தமாக புநஶ்சஶப்தார்த்தம் - விஷத்தை இத்யாதி. இவர்கள், ஸ்த்ரீகளோடேவந்து ஆஶ்ரயிக்கைக்குப்ரயோஜநமேதென்ன - தந்தாமுக்கு இத்யாதி. அதாவது - "ஸ்த்ரீகளோடேவந்து ஆஶ்ரயித்தால் அவன்இரங்குவன்" என்றாஶ்ரயிக்கிறார்கள் என்ற

ஶீமாநஃ'' (உமயாஸார்த்தமீமாநஃ) என்றும், ''ஹதக்ருபிக்ஷாப்ரதீயதாம்'' (பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்) என்றும், ''ஸமுத்ரஸ்ஸரிதாம்பதிஃ'' (ஸமுத்ரஸ்ஸரிதாம்பதிஃ) என்றும், ''கிம்கோபமூலம்'' (கிம்கோபமூலம்) என்றுஞ் சொல்லுகிறபடியே வந்து விழுவர்களிறே. [திருவேங்கடத்தானே] - அவர்களுக்கு ஆஶ்ரயிக்கலாம்படி ஸுலபனாய்வந்து நிற்கிறபடி. [மாலாய்மயக்கி] - ''மயங்கல் கூடலும் கலவியும்;'' ''மாலாய், நான் மயங்கும்படிக்கீடாக வரவேணுமென்கிறா ரென்னுதல்; அன்றிக்கே, மாலாம்படி மயக்கிக்கொண்டு வரவேணுமென்கிறார்'' என்றுஞ் சொல்லுவர்கள்; அவையன்று பொருள். மாலென்று - கறுப்பாய், அத்தால் நினைக்கிறது - க்ருஷ்ணனென்கையாய், க்ருஷ்ணனாய்க் கொண்டு உன் குணசேஷ்டிதங்களாலே அவ்வவதாரத்தில் உள்ளாரைப் பிச்சேற்றிக்கொண்டு வந்தாற்போலே எனக்காகவும் ஒருவரத்து வரவேணும்; ''மாலாய்ப்பிறந்த நம்பியை மாலேசெய்யும் மணாளனை'' என்றுஞ் சொல்லுகிறபடியே. (அ)

---

படி. ''ஸ்த்ரீகளைமுன்னிட்டு ஆஶ்ரயிக்கும்'' என்றதுக்கு ப்ரமாணங்கள் - உமயாஸார்த்தம் இத்யாதி. ''ஸதாந்தஂ ஜாயதே ஜ்ஞாநஂ ரஜஸோ லோப ஏவ ச । ப்ரமாதமோஹௌ தமஸோ பவதோ ஜ்ஞாநமேவ ச'' இதி கீதாஸு.[1] ''ஸ த்ரிஂஶத்வர்ஷஂ ப்ரதக்ஷிணீக்ருத்ய ப்ரண்ம்ய ப்ரஸாத்ய ஶங்கரஃ । உமயாஸார்த்தமீஶாநோ ரராஜ ஹரிதுல்யதேஜா'' இதி ஹரிவம்ஶே.[1] ''ததஃ ஸுராஜாஸுதா ஸ்வஸுதா ப்ராணாம்ஸ்த்யக்ஷிகா மேயம் ஹதக்ருபிக்ஷாப்ரதீயதாம்'' இதி பஞ்சமேம்ஶே காளியபத்ந்யஃ.2 ''ப்ரயாதோஸ்மி ஸமுத்ரஸ்ஸரிதாம் பதிஃ'' இதி ஸங்க்ஷேபே.3 ''கிம்கோபமூலம் மநுஜேந்த்ர புத்ர கஸ்தே ந ஸந்திஷ்டதி வாங்நிதேஶே । கஶ்ஶஸ்த்ரவ்ருக்ஷம் வநமாததீத ஸ்வாங்கம் ஸஞ்சிந்த்ய விதிஶ்ச ஜீவஃ''

தாரா.4 'ஸமுத்ரஸ்ஸரிதாம்பதிஃ' என்றதும், 'கிம்கோபமூலம்' என்றதும், 'பர்த்ருபிக்ஷாப்ரதீயதாம்' என்றதும் - ஸமுத்ரராஜனும் மஹாராஜரும் காளியனும், இங்கு ப்ரஸ்தாவமின்றிக்கே யிருந்தாலும், ஸ்த்ரீகளைமுன்னிட்டு ஆஶ்ரயித்தார்களென்றமாத்ரத்துக்கு ப்ரமாணங்கள். கப்படம் - தைங்யஸூசக படவிசேஷம். ''மயக்கி'' என்றதுக்கர்த்தம் சொல்லுவதாகநிகண்டுஅருளிச்செய்கிறார் - மயங்கல் இத்யாதி. கூடலாவது - ப்ரணயரோஷந்தீர்ந்துகூடுகை. கலவியாவது - ஸம்ஶ்லேஷாந்தரஹாவியான ஸம்ஹோகம். இவ்விடத்தில், மயங்கலாவது - கூடல் முந்தினவர்த்தத்துக்கு: நீ, மாலாய் - வ்யாமுக்தனாய்க்கொண்டு, மயக்கி - மயங்கும்படி நான் ஸம்ஶ்லேஷிக்கும்படி வரவேணுமென்றபடி. நான் மயங்கும்படிக்கு ஈடாகவென்றது - நான் ஸம்ஶ்லேஷிக்கும்படிக்கு ஈடாகவென்றபடி. த்விதீயார்த்தத்துக்கு: நான், மாலாம்படி - வ்யாமுக்தனும்படி, மயக்கி - வ்யாமோஹத்தையுண்டாக்கிக்கொண்டு வரவேணுமென்றபடி. இந்த அர்த்தத்வயத்திலும், ''வந்தாய்போலே'' என்றது - சொற்பாடு. இவ்வர்த்தத்வயத்திலும், ''வந்தாய்போலே'' என்றதுக்கு ஸ்வாரஸ்யமில்லையென்று திருவுள்ளம்பற்றி - 'அவையன்றுபொருள்' என்கிறார். அப்படி பிச்சேற்றிக்கொண்டு வந்தானோ? என்ன - மாலாய்ப்பிறந்த இத்யாதி. மாலாய்ப்பிறந்தநம்பியை - வ்யாமோஹந்தான் ஒருவடிவுகொண்டாற்போலே இருக்கிற குணபூர்ணனை. மாலேசெய்யும் மணாளனை - தன்வ்யாமோஹத்தைக்காட்டி இத்தலைக்கு வ்யாமோஹத்தை விளைக்குமவனை என்றபடி. நாய்ச்சியார்திருமொழி, பதினொராந்திருமொழி, மூன்றாம்பாட்டு. 'நுண்ணுணர்வில்' என்றுதொடங்கி, 'இந்திரனும் - உனபாதங்காண - நோலாதாற்றேன்' என்று சொல்லி, 'சேலேய்கண்ணார் பலர்' என்றுதொடங்கி, 'மயக்கி - வந்தாய்போலே - அடியேன்பால் வாராய்' என்றந்வயம். மாலாய் . க்ருஷ்ணனாய் என்றபடி. வந்தாய்போலே-வந்தாற்போலேயென்றபடி.

---

1. 279அ - 15½ (ஶ்லோ) 2. 7 - 57. 3. 79½. 4. கிஷ் - 33- 40½.

# ஒன்பதாம் பாட்டு.

வந்தாய்போலேவாராதாய்வாராதாய்போல்வருவானே
செந்தாமரைக்கட்செங்கனிவாய்நாற்றோளமுதேயெனதுயிரே
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய்திருவேங்கடத்தானே
அந்தோவடியேனுனபாதமகலகில்லேன்இறையுமே.

ஆ.—(வந்தாய்போலே.) - ப்ரதிகூலர்க்குக்கண்டவாற்றாலே எளியாரைப் போலேயிருந்து அரியையாகையாலும் ஆஶ்ரிதர்க்குக் கண்டவாற்றால் அரியாரைப் போலேயிருந்து எளியையாயிருக்கையாலும், நீ என்னை த்வத்ஸௌந்தர்யைக தாரக போஷக போக்யனாக்குகையாலும், திநகரகிரண ஸந்நிபமான ஸ்வப்ரபைகளாலே ராத்ரியையும் பகலாக்காநின்ற ரத்நங்களாலே அலங்க்ருதமான திருமலையிலே எனக்காக நின்றருளுகையாலும், அடியேன் ஒருக்ஷணமும் உன்திருவடிகளை விஶ்லேஷிக்கமாட்டாமையாலும் உன்க்ருபையாலே அடியேனையுன்திருவடிகளிலே சேர்த்தருளவேணும் என்கிறார்.

ஒ.—ஒன்பதாம்பாட்டில், தாம் அபேக்ஷித்தபோதே காணப்பெறாமையாலே, இப்போதே யுன்னைக்காணவிடில் ஒருக்ஷணமும் தரிக்கமாட்டேன் என்கிறார். [வந்தாயென்றுதொடங்கி]-அநாஶ்ரிதர்க்கு எளியாரைப்போலேயிருந்தே அறவரியையாய் ஆஶ்ரிதர்க்கு அரியாரைப்போலேயிருந்தே அறவெளியையுமாய் செந்தாமரைப்பூப்போலேயிருக்கிற அழகியதிருக்கண்களையும் சிவந்தகனிபோலேயிருக்கிற திருப்பவளத்தையும் நாலுதிருத் தோள்களையும் உடையையாய்க்கொண்டு எனக்கு நிரதிஶயபோக்யனாய் எனக்கு தாரகனானவனே! [சிந்தாமணிகளென்று தொடங்கி]-பெருவிலையனான மாணிக்கங்களினுடைய ஒளி ராத்ரியைப் பகலாக்காநின்றுள்ள திருமலையிலே நின்றருளினவனே! அத்யந்தஶோசநீயதஶாபந்நராய், நோவாலே அந்தோ! வென்கிறார்.

ப.—அநந்தரம், அதிஶயிதபோக்யமான அவயவஶோபையையுடையனான உன்திருவடிகளை க்ஷணமும் பிரியமாட்டேனென்கிறார்.

(அநாஶ்ரிதவிஷயத்தில்), வந்தாய்போலே - வந்து கைப்புகுந்தாற்போலே, வாராதாய் - கைவாராதிருக்குமவனாய், (ஆஶ்ரிதவிஷயத்தில்), வாராதாய்போல் - ஆகிஞ்சந்யத்தாலே "வருகைக்கு சங்கையில்லை" என்றுநினைத்திருக்கச்செய்தே, வருவானே - இஷ்டவிநியோகார்ஹமாம்படி கைவருமவனாய், செம் - சிவந்த, தாமரை - தாமரைபோலே தர்ஶநீயமாய், ("ஜிதம்" என்னும்படிபண்ணும்), கண் - திருக்கண்களையும், செம் - சிவந்த, கனி - கனிபோலேபோக்யமாய், வாய் - "மாமேகம்ஶரணம்வ்ரஜ" என்னும் திருப்பவளத்தையும், "ஸஹாஸம்வஸிஷ்யஸெஜ" என்றுஆஶ்ரிதரையெடுத்தணைக்கும், நால் - நாலு, தோள் - திருத்தோள்களையுமுடையனாய், அமுதே - ஆஶ்ரிதர்க்கு நித்யபோக்யனாயிருக்கிறவிருப்பை, எனது - எனக்குப்ரகாஶிப்பித்து, உயிரே - தாரகனானவனாய், சிந்தா - நினைத்ததெல்லாம்கொடுக்கவற்றான, மணிகள் - மஹார்க்கரத்நங்களினுடைய, பகர் - ஒளியானது, (ஸக்ருத் திவாவாம்படி), அல்லை - ராத்ரியை, பகல் - பகல், செய் - ஆக்குவதான, திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹித

ளனவனே ! அந்தோ - ஐயோ! (நிரதிஶயபோக்யமான), உன - உன், பாதம் - திருவடிகளை, அடியேன் - அநந்யரக்ஷ்யனும்படி அத்யந்தபரதந்த்ரனான நான், இறையும் - ஏகதேஶமும், அகல - அகல, கில்லேன் - க்ஷமனுகிறிலேன். அந்தோவென்றது - ஆர்த்திக்கு மேலே யபேக்ஷிக்கவும் வேண்டுவதேயென்றுகருத்து. பகர் - ஒளி.

இ.---ஒன்பதாம்பாட்டில், தாம் அபேக்ஷித்தபோதே காணப்பெருமையாலே, இப்போதே உன்னைக்காணுவிடில் தரிக்கமாட்டேனென்கிறார்.

[வந்தாய்இத்யாதி] - அநாஶ்ரிதர்க்குக் கைப்புகுந்தாற்போலேயிருந்தே அற அரியையாமவனே! ஆஶ்ரிதர்க்கு அரியைபோலேயிருந்தேகையாளாயிருக்குமவனே!அங்ஙனன்றியே, மநஸ்ஸிலே ஸந்நிஹிதனாய் பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு எட்டாதவனே ! "பாஹ்யஸம்ஶ்லேஷத்துக்கு எட்டாதவன்" என்று நிராஶனாயிருந்தால் மறக்கவொண்ணாதபடி மநஸ்ஸைவிடாதவனே! [செந்தாமரையித்யாதி] - சிவந்த தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையும், சிவந்து கனிந்த திருவதரத்தையும், கல்பகதரு பணைத்தாற்போலே நாலுதோளையுமுடைய நிரதிஶயபோக்யனே! வாத்ஸல்ய பிரகாஶகமான கண்ணும் முறுவலும், அணைக்கைக்கு நாலுதோள்களுமாயாயிற்று இவ்வம்ருதமிருப்பது. [எனதுயிரே] - புண்டரீகாக்ஷமாய் சதுர்புஜமாயாயிற்று இவர் ப்ராணனிருப்பது. [சிந்தாமணியித்யாதி] - பெருவிலையனான மணிகளுடையவொளி ராத்ரியைப் பகலாக்காநின்றுள்ள திருமலை. * ஸக்ருத் திவாவான தேஶம். [அந்தோ] - ஆற்ருமையும் அபேக்ஷையும் எனக்கே பாரமாவதே. [அடியேன்] - ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத பாரதந்த்ர்யத்தையுடைய நான். [உனபாதமகலகில்லேன் இறையுமே]- நிரதிஶயபோக்யமான உன்திருவடிகளை க்ஷணகாலமும் அகல க்ஷமனுகிறிலேன்.

ஈடு.—ஒன்பதாம்பாட்டு. தாம் அபேக்ஷித்தபோதே காணப்பெருமையாலே இப்போதே யுன்னைக் காணுவிடில் தரிக்கமாட்டேனென்கிறார்.

[வந்தாய்போலேவாராதாய்] - மாநஸாநுபவத்திலுண்டான கரைபுரட்சிதான் "பாஹ்யஸம்ஶ்லேஷமும் பெற்றோம்" என்றுகொண்டு த்ருப்திபிறக்கும்படியாய், அத்தை "மெய்" என்றுஅணைக்கக் கணிசித்தால் கைக்கெட்டாதபடியாயிருக்கை.[வாராதாய்போல் வருவானே] -"ஒருநாளும்கிட்டமாட்டோம் என்றிருக்கச் செய்தே கடுகக் கைப்புகுந்துகொடு நிற்குமென்கை. (அதாவது - "பாஹ்யஸம்ஶ்லேஷத்துக் கெட்டாதவன்" என்று நிராஶனாயிருந்தால் மறக்கவோ) அன்றிக்கே, அநாஶ்ரிதவிஷயத்தில் "கைப்புகுந்தான்" என்று தோற்றியிருக்கச் செய்தே புறம்பாய், ஆஶ்ரிதர்க்கு 'இவன் கிட்டவரியன்' என்றிருக்கச் செய்தே உட்புகுந்திருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம். [செந்தாமரை யித்யாதி] - ஸகலதாபங்களும் ஆறும்படி குளிர்ந்த திருக்கண்களை யுடையவனுமாய், சிவந்து கனிந்திருந்துள்ள திருவதரத்தை யுடையனுமாய், கல்பகதரு பணைத்தாற்போலேயிருக்கிற

---

ஒன்பதாம்பாட்டு.—வந்தாய் இத்யாதி. "இறையும் - அகலகில்லேன்" என்றத்தைக்கடாக்ஷித்தவதாரிகை - தாம்அபேக்ஷித்த இத்யாதி.

"வந்தாய்போலே" என்கிறதுக்கும், "வாராதாய்" என்கிறதுக்கும் அர்த்தம் - மாநஸாநுபவத்தில் இத்யாதி. "வாராதாய்போலே" இத்யாதிக்கர்த்தம் - ஒருநாளும் இத்யாதி. ஒருநாளும் மாநஸமாகக்கிட்டமாட்டோமென்றிருக்கச்செய்தே, மாநஸமாகக்கடுகக் கைப்புகுந்துகொடுநிற்குமென்றபடி. கண்ணென்னுதே, "செந்தாமரை" என்றுவிசேஷித்ததுக்கு பாவம் - ஸகலதாபங்களும் இத்

நாலுதிருத்தோள்களையுடையனுமாய் போக்யனுமானவனே! [எனதுயிரே] - இவ்வடிவழகை என்னையநுபவிப்பித்து, வ்யதிரேகத்தில்நானுளனாகாதபடி பண்ணினவனே! [சிந்தாமணிஇத்யாதி] - விலக்ஷணமான ரத்நங்களினுடைய, பகருண்டு - ப்ரபை, அது அல்லைப் பகல் செய்யாநின்றதாயிற்று; திவாராத்ரவிபாகம் அறுத்துக்கொண்டிருக்கை. "மணிகளினொளியால் விடிபகலிரவென்றறிவரிதாய" என்னக்கடவதிறே. இத்தால்நினைக்கிறது, "நகாலஸ்தத்ரவைப்ரபு:" (நகாலஸ்தத்ரவைப்ரபு:)என்கிற தேசத்தேபோய் அநுபவிக்கும் அநுபவத்தை இங்கேயநுபவிக்கக்காணும் நினைவு. [அந்தோ] - போக்யமும் குறைவற்று, அவன்தானும் ஸந்நிஹிதனாய், எனக்காசையும் மிகுத்திருக்க, கிட்டியநுபவிக்கப்பெறுதொழிவதே! என்கிறார். [அடியேனுனபாதம்அகலகில்லேனிறையுமே]-என் ஸ்வரூபத்தைப்பார்த்து என்னுடைமையை புத்திபண்ணாய்; ஊர்ஷியாநிற்கச்செய்தே, அதுக்குவர்த்தகமாகக் கண்ணை மாறவைக்கிலும் பொறுக்கமாட்டேன். (கூ)

---

## பத்தாம் பாட்டு.

---

அகலகில்லேன்இறையுமென்று அலர்மேல்மங்கையுறைமார்பா!
நிகரில்புகழாய்! உலகம்மூன்றுடையாய்! என்னையாள்வானே!
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்புந்திருவேங்கடத்தானே!
புகலொன்றில்லாஅடியேன் உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே.

*ஆ.—(அகலகில்லேன்.) - அபாரகாருண்ய மஹோததியாய், உன்னுடைய குணங்களாலே அஸ்மத்ஸ்வாமியுமாய், திருநாட்டிலே த்வத்பரிசர்யைக போமராயும் த்வத்குணாநுபவைகபோகராயும் நிருபமராயிருந்த நித்யஸித்த புருஷர்களுக்குங்கூட ஸ்ப்ருஹணீயமான திருமலையிலே அநாலோசித விசேஷாசேஷ லோகசரண்யனாய்க்கொண்டு நின்றருளுவதுஞ்செய்த உன்திருவடிகளை, அநந்யசரணனான அடியேன் அநந்யப்ரயோஜநனாய்க்கொண்டு, பெரியபிராட்டியார் புருஷகாரமாக சரணம்புகுந்தேன்; இப்*

---

*யாதி. உமக்குஉயிரானபடி யெங்ஙனே? என்ன - இவ்வடிவழகை இத்யாதி. "சிந்தாமணி"-சிந்திதபலப்ரதமான மணியென்று சப்தார்த்தம். ச்லாக்யமான ரத்நமென்று தாத்பர்யார்த்தம்; அத்தையருளிச்செய்கிறார் - விலக்ஷண இத்யாதி. பகர் - தேஜஸ்ஸு. அல்லை-ராத்ரியை. அல்லு - ராத்ரி. அல்லைப்பகல் செய்கையாவதேதென்ன - திவாராத்ர இத்யாதி. உக்தத்துக்கு ப்ரமாணம் - மணிகளின் இத்யாதி. நாநாவான ரத்நங்களினொளியாலே விடிவு-பகல், இரவு - ராத்ரி, என்றறியவரிதானவென்றபடி. திருமொழி நாலாம்பத்து பத்தாந்திருமொழி எட்டாம்பாட்டு, "முடியுடை" இத்யாதி. "சிந்தாமணிகள் பகரல்லைப்பகல்செய்" என்று வர்ணித்ததுக்கு பாவமேதென்ன-இத்தால் இத்யாதி. "மாற்றேளமுதே, திருவேங்கடத்தானே" என்கிறபதங்களைக்கடாக்ஷித்துபாவம் - போக்யமும் இத்யாதி. எனக்காசையும் மிகுத்திருக்கவென்றது - "ஆறுவன்பில்" என்றத்தைப்பற்ற. "அடியேன்" என்றுவைத்து, "உனபாதமகலகில்லேன்" என்றதுக்கு பாவம் - என்ஸ்வரூபத்தை இத்யாதி. என் ஸ்வரூபத்தைப்பார்த்தேனென்றது - என்னுடைய அநந்யகதித்வரூபஸ்வரூபத்தைப் பார்த்தென்றபடி. புத்திபண்ணாய் - க்ருபைபண்ணுயென்றபடி. "இறையும்" என்றதுக்கர்த்தம் - ஊர்ஷியாநிற்க இத்யாதி. ஊர்ஷியாநிற்கச்செய்தேயென்றது - ஸம்ச்லேஷியாநிற்கச்செய்தே என்றபடி. (கூ)*

போதே நிரஸ்தஸமஸ்த ப்ரதிபந்தகனாய் உன்திருவடிகளிலே ஸர்வகாலமும் ஸர்வவித கைங்கர்யமும் அடியேன் பண்ணப்பெறவேணுமென்கிறார்.

ஒ.—பத்தாம்பாட்டில், தம்முடைய அபேக்ஷிதம் சடக்கெனப் பெறுகைக்காக, பெரிய பிராட்டியாரை புருஷகாரமாகக்கொண்டு திருவேங்கடமுடையானை சரணம் புகுகிறார்.

[அகலகில்லேன் என்றுதொடங்கி] - வெய்யிலிலேநின்று நிழலிலேயொதுங்கினார் சொல்லுமாபோலே க்ஷணமாத்ரமும் விச்லேஷிக்க க்ஷமையல்லேன் என்று நிரதிசயபோக்யையான பெரிய பிராட்டியார் நிரந்தரவாஸம் பண்ணுகிற திருமார்வையுடையையாய், பிராட்டியோட்டைப் பழக்கத்தாலே ஆச்ரிதரைக்கைவிடாத ஒப்பில்லாத குணப்ரதையையுடையையாய், எல்லாரோடும் அவர்ஜநீயமான ஸம்பந்தத்தையும் உடையையாய், உன்னையறியாதேயிருக்கிறஎனக்கு குணங்களை யறிவித்து அத்தாலே என்னை நடத்துவதுஞ்செய்து திருநாட்டிலுள்ளாரும் விரும்பும் திருமலையிலே எனக்கு ஆச்ரயிக்கைக்கு எளிதாம்படிவந்து நின்றருளினவனே! [புகலொன்றில்லா தொடங்கி] - சாஸ்த்ரங்களில் சொல்லுகிறஉபாயம் ஒன்றுமில்லாத நான் அநந்யப்ரயோஜநனைக்கொண்டு உன்திருவடிகளை உபாயமாகப்பற்றினேன். புருஷார்த்த ஸாத்யநமாக என் தலையிலுள்ளவற்றையெல்லாம் தவிர்ந்து என்தலைக்கும் திருவடிகளுக்கும் நடுவு விளக்குவாய் தெரியாதபடி செறிந்துபுகுந்தேன் என்றுமாம்.

ப.—அநந்தரம், ஆச்ரயணீயதைக்கு ஏகாந்தமான புருஷகாரயோகத்தையும் குணயோகத்தையுமுடையையா யிருக்கிற உன்திருவடிகளை அநந்யகதியாய்க்கொண்டு ஆச்ரயித்தேனென்று, ஸக்ரமமாக சரணாகதியைப் பண்ணுகிறார்.

(ப்ராப்யப்ராபகங்களைப்போலே யிருக்கிற ஸ்வரூபஸம்பந்தத்தாலும், எதிர்த்தலையில் போக்யதாதிசயத்தாலும்), இறையும் - க்ஷணமாத்ரமும், அகல - விச்லேஷிக்க, கில்லேன் - க்ஷமையல்லேன், என்று-, அலர்மேல் - பூவிற்பிறப்பாலுண்டான மார்த்தவபோக்யதைகளை யுடையளாய், மங்கை - மங்கைப்பருவத்தாலுண்டான வாத்ஸல்யாதிசயத்தையுடைய லக்ஷ்மியானவள், உறை-(தன் ஆபிஜாத்யமும் ஆத்மகுணமும் ஆபிரூப்யமுங்கிடக்க ஓர் அவயவ விசேஷத்திலே) நித்யவாஸம்பண்ணும்படியான போக்யதாதிசயத்தையுடைய, மார்பா - திருமார்பையுடையையாய், (இவளோட்டைச் சேர்த்தி யடியாக உதிக்கக்கடவதாய்), நிகர்இல்-(ஆச்ரிதரோஷாநபிஜ்ஞதையாலே குணாந்தரங்களோடுசேர்க்க வொண்ணாதபடி) நிருபமமான, புகழாய் - நிரவதிகவாத்ஸல்யப்ரதையை யுடையையாய், (இதுக்குஹேதுவாயிருக்கிற), மூன்றுஉலகம் - ப்ரமாணப்ரஸித்தமாயுள்ள த்ரிவித சேதநாசேதநங்களையும், உடையாய் - ஸ்வம்மாகவுடைய ஸ்வாமித்வத்தை யுடையையாய், (அந்த மேன்மையை யன்றியே), என்னை - அத்யந்தஹேயனான வென்னையும், ஆள்வானே - அங்கீகரிக்கும் ஸௌசீல்யாதிசயத்தையுடையையாய், (அந்தசீலத்தோடே யெல்லாருங்கண்டநுபவிக்கும்படி ஜ்ஞாநப்ரேமாதிகுணோத்கர்ஷத்துக்கு), நிகர் - ஒப்பு, இல் - இல்லாதபடியாயுள்ள, அமரர் - கைங்கர்யநிஷ்டரானஅமரரும், முனி-(குணாநுஸந்தானபரராய்க்கொண்டு) மநநசீலரான முனிவர்களுமான, கணங்கள் - திரள்களானவை, விரும்பும் - (வாத்ஸல்யாத்யநுபவாபிநிவேசத்தாலே) அத்யந்தாதரம்பண்ணி வர்த்திக்கும், திருவேங்கடத்தானே - திருமலையிலே ஸந்நிஹிதனான

ஸௌலப்யபூர்த்தியையுடையவனே! (உன்னையொழிய), புகல் - உபாயாந்தரங்களான புகலும் ரக்ஷகாந்தரங்களான புகலும், ஒன்று - ஒன்றும், இல்லா - இல்லாதபடி அநந்யஶரணனான, அடியேன் - (பாரதந்த்ர்யத்தையுடைய) நான், உன் - (கீழ் உக்தமான புருஷகாரயோகத்தையும் குணயோகத்தையுமுடைய) உன்னுடைய, அடி - திருவடிகளின், கீழ்-கீழே, (ரேகாவதந்தர்க்கதனாய்க்கொண்டு), அமர்ந்து - அநந்யப்ரயோஜநத்வ வ்யவஸாயவிஶிஷ்டனாய், புகுந்தேன் - ஆஶ்ரயித்துவிட்டேன். அகலகில்லேனென்கையாலே - ஸ்ரீஶப்தார்த்தமான ஸேவாகரணத்தாலே வந்த நித்யாநபாயித்வத்தையும், அலர்மேல்மங்கையாலே - ஸேவ்யதைக்கு ஏகாந்தமான மார்த்தவாதியோகத்தையும், மங்கையென்கையாலே - ஸேவாகரணத்துக்கு அடியான வால்லப்யத்தையும், உறைமார்பனென்கையாலே - மதுப்அர்த்தமான நித்யயோகத்தையும், 'நிகரில் புகழாய்' என்றுதொடங்கி, 'திருவேங்கடத்தானே' என்றது அறுதியாக - "ஶோ காவிதாஸூா.தாநிவாஸ꞉" என்று நாராயணஶப்தார்த்தத்தைச்சொன்ன ஶ்ருதிக்ரமத்தாலே வாத்ஸல்யாதி குண சதுஷ்டயக்ரமத்தையும், புகலொன்றில்லாவென்கையாலே - அதிகாரி விஶேஷணமான ஆகிஞ்சன்யாநந்யகதித்வத்தையும், அடியேனென்று - க்ரியாபதத்தில் உத்தமனாலே ஆக்ஷிப்தமான அதிகாரி ஸ்வரூபத்தையும், உன்னென்று - ஸப்புத்யந்த யோஜனையாகையாலே அத்யாஹார்யமான தவஶப்தார்த்தத்தையும், அடிக்கீழென்கையாலே - சரணஶப்தார்த்தத்தையும், அமர்ந்தென்கையாலே - க்ரியாபதத்தில் உபஸர்க்கார்த்தமாய் உபாயோபேய விஷயமான வ்யவஸாயத்தையும், புகுந்தேனென்று - க்ரியாரூபமான ஆஶ்ரயணத்தையும், புகுந்தேனென்கிற பூதார்த்தநிர்த்தேஶத்தாலே - ஆஶ்ரயணத்துக்கு ஆவ்ருத்யபேக்ஷையில்லாத ஸக்ருத்கரணத்தையும் ப்ரகாஶிப்பித்ததாய்; இது பூர்ணஶரணாகதியாகையாலே, ஆஶ்ரயணார்த்தமான லக்ஷ்மீஸம்பந்தமும் குணயோகமும் ப்ராப்யாந்விதமாயிருக்கையாலும்; அடியேனென்கிற அதிகாரிஸ்வரூபத்திலே - அநந்யார்ஹத்வ அநந்யஶரணத்வங்களோபாதி அநந்யபோக்யத்வமும் ஸூசிதமாகையாலே, அமர்ந்தென்று - ப்ரயோஜநாந்தரநிரஸம் ஸூசிதமாகையாலே நமஶ்ஶப்தார்த்தம் ஸித்திக்கையாலும்; புகுந்தேனென்கிற பூதவசநம் - ப்ராப்திக்கும் ஸூசகமாகவற்றாகையாலும்; ப்ரயோகமான உபாய வாக்யத்துக்குள்ளே வாக்யஶேஷமான உத்தரவாக்யார்த்தமும் அந்தர்க்கதமாயிற்றதாயிற்று. ஆகையாலே, இப்பாட்டு - வாக்யத்வயார்த்த ப்ரகாஶகமாகையாலே பூர்ணஶரணாகதியாகக் குறையில்லை. இப்படி, இப்பத்தாலே - கீழ்ப்பத்தில், உபாயதயா நிஷ்கர்ஷித்தவஸ்துவை ஸப்ரகாரமாக ஸ்வீகரித்தருளினாராயிற்று.

இ.—பத்தாம்பாட்டில், தம்அபேக்ஷிதம் சடக்கெனத் தலைக்கட்டுகைக்கு, பிராட்டி புருஷகாரமாகத் திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஶரணம் புகுகிறார்.

[அகலகில்லேன் இத்யாதி] - ஸம்பவத்விஶ்லேஷஹேது கர்மமாயிருக்க, தத்ஸ்பர்ஶமுமின்றிக்கே நித்யாநபாயிநியான இவள், "இறையுமகலகில்லேன்" என்பானென்? என்னில்; கர்மத்துக்கு அஞ்சினார் வார்த்தையேயாயிற்று, விஷய வைலக்ஷண்யத்திலே அவகாஹித்தார் வார்த்தையும்; ஹேதுஹேதுமேயுள்ளது. அவன் விஷயத்தில் போக்யதாதிஶயத்தாலே விஶ்லேஷத்தை அதிஶங்கித்துச் சொல்லுகிறாள். எதிர்த்தலை இவ்வார்த்தை சொல்லும்படியான ஸௌகுமார்யத்தையும் பருவத்தையுமுடையவள், அவ்வலர்மேல் மறந்து நித்யவாஸம் பண்ணும்படியான மார்வு படைத்தவனே! ஒப்பில்லாத வாத்ஸல்யத்தையுடையனாய் த்ரிவிதாத்மவர்க்கத்துக்கும் ஸ்வாமியாய், விமுவ

ஞனவென்னை இவ்வளவு புகுரநிறுத்தின ஶீலகுணத்தையுடையனாய், ஒப்பின்றிக்கே இருக்கிற கைங்கர்யநிஷ்டரும் மஹாஶீலருமான நித்யஸூரிகள் ஆதரித்து வர்த்திக்குந் திருமலையிலே வர்த்திக்கிற ஸௌலப்யத்தையுடையவனே! ஶாஸ்த்ரங்களில் சொல்லு கிற உபாயாந்தரங்களில் அந்வயமின்றிக்கே அநந்யார்ஹஶேஷபூதனான நான்; இத் தால் - அநந்யகதித்வமும் ஸ்வரூபஜ்ஞாநமும் ப்ரபத்திக்கு பரிகரமென்கிறது. [உன் னடிக்கீழ்] - விக்ரஹயோகஞ்சொல்லுகிறது. [அமர்ந்து] - செறிந்து, ஸஹகாரி வ்யவ யாநமின்றிக்கேயொழிகை. [புகுந்தேனே] - போக்குவரவுண்டாய்அன்று. வைஸி - மதியாய், அத்யவஸாயத்தைச் சொல்லுகிறது.

ஈடு.—பத்தாம்பாட்டு. தம்முடைய அபேக்ஷிதம் சடக்கென ஸித்திக்கைக்சா கப் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாகக்கொண்டு திருவேங்கடமுடையான் திருவடி களிலே ஶரணம்புகுகிறார். ஆக, ஒன்பதுபாட்டாலும் - ஶரண்யன்ஸ்வரூபத்தைச் சோன் னார். இதில் - தம்முடையஸ்வரூபத்தைச் சோல்லி ஶரணம்புகுகிறார். கீழே, 'அடியேன்' என்றும், 'அருவினையேன்' என்றும் தம்முடைய ஆகிஞ்சந்யத்தையும், ஶேஷத்வத்தையும், அவனுடைய ஶரண்யதைக்கு உறுப்பாகச்சோல்லிக் கோடுபோந்தார்; இங்கு, அதுதன் னையே பேற்றுக்கு உடலாகச்சோல்லி ஶரணம்புகுகிறார். இப்பாட்டுத்தன்னை - த்வயத்திற் பதங்களோடோக்க யோஜித்துத் தலைக்கட்டக்கடவது. அதில் அர்த்தப்ராப்தமான அஹ மர்த்தத்தை - இங்கு, அடியேனென்கிறது.

பத்தாம்பாட்டு - அகலகில்லேன் இத்யாதி. "அலர்மேல் மங்கையுறைமார்பா" என்று பெரியபிராட்டியாரோட்டைச் சேர்த்தியைச்சொல்லி ஶரணம்புகுகிறதுக்கு ப்ரயோஜநம் - தம்மு டையஅபேக்ஷிதம் இத்யாதி. இத்தால் - கீழ், "நோற்றநோன்பு" என்றுதொடங்கி நாலுதிருவாய் மொழிகளிலும் பண்ணின ப்ரபத்தியைக்காட்டில் இதிற்பண்ணின ப்ரபத்திக்கு வாசிசொல்லிற்று யிற்று. இத்திருவாய்மொழிக்கு நிதாநப்பாட்டுஇதுவென்று விவக்ஷித்து, கீழொன்பதுபாட்டிற் சொன்ன அர்த்தத்துக்குமிதுக்கும் வாசியருளிச்செய்கிறாராதல், உக்தங்கமமாதல் - ஆகவொன்பது இத்யாதி வாக்யத்வயத்தாலே. புநருக்தியைப்பரிஹரிக்கிறார்-கீழேஅடியேன் இத்யாதி. "அருவினையேன்" என் றது - ஆகிஞ்சந்யம். ஶரண்யதைக்குஉறுப்பாகவென்றது - அஶரண்யஶரண்யதைக்கு உறுப்பாக என்றபடி. பேற்றுக்குஉடலாகவென்றது - பேற்றுக்கு உடலானஸ்வீகாரத்துக்கு உபயுக்தமாகவென்ற படி. 'அதுதன்னையே'என்றது - கீழுக்தமானஆகிஞ்சந்யஶேஷத்வங்களாகிற அதிகாரஸ்வரூபந் தன்னையே யென்றபடி. 'பேற்றுக்குடலாக' என்றதுக்கு, பேற்றுக்கு உடலான ப்ரபத்திக்கு உப யுக்தமாக என்றர்த்தம் சொல்லுகைக்கு நியாமகம்-"வெறுமையும் ஸ்வரூபமுமிரண்டும் ப்ரபத்திக்குப் பரிகரமிறே"என்றுஇரண்டாம்யோஜனையி லருளிச்செய்த வாக்யம். இப்பாட்டிற்சொல்லுகிற ப்ர பத்தியினுடைய சீர்மையை யருளிச்செய்கிறார் - இப்பாட்டுத்தன்னை இத்யாதி. "அலர்மேல்மங்கை" என்கையாலே - ஸ்ரீஶப்தார்த்தஞ்சொல்லிற்று; "அகலகில்லேன்" என்கையாலே - மதுப்பிரர்த்தஞ் சொல்லிற்று; "உறைமார்பா" என்கையாலே - நித்யயோகஞ்சொல்லிற்று; "நிகரில் புகழாய்" என்று தொடங்கி "திருவேங்கடத்தானே" என்கையாலே - நாராயணஶப்தார்த்தஞ்சொல்லிற்று; "புக லொன்றில்லாவடியேன்" என்கையாலே - உத்தமனால் ஆக்ஷிப்தனான அதிகாரியைச் சொல்லிற்று; "உன்னடிக்கீழ்" என்கையாலே சரணஶப்தார்த்தஞ் சொல்லிற்று; "அமர்ந்துபுகுந்தேனே" என் கையாலே - க்ரியாபதத்தில் அர்த்தஞ் சொல்லிற்று. ஶரணஶப்தம்:—"புகுந்தேன்" என்கிறக்ரியா பதத்துக்குள்ளே கோல்விழுக்காட்டாலேவரும். அந்தத்வயத்தைப்பற்ற வாசியருளிச்செய்கிறார் - அதில் இத்யாதி. அர்த்தப்ராப்தமான அஹமர்த்தமாவது - "ப்ரபத்யே" என்கிறபதத்திலுத்தமனாலே ஆக்ஷிப்தனானஅதிகாரிஸ்வரூபமென்றபடி. "புகலொன்றில்லாவடியேன்" என்கிற ஆகிஞ்சந்யாநந்ய கதித்வங்கள்த்வயத்தில் அநுக்தங்களாகிலும், லக்ஷணஶ்லோகத்திலே "ஸுஹ்ஜஸு வபாயா... ஙெயாஜகிஷுணொ" என்றிருக்கையாலே த்வயத்திலும் விவக்ஷிதங்கள்.

[அகலகில்லேனிறையுமென்று]-இது, அகன்றிருந்து சொல்லுகிற பாசுரமுமன்று; நித்ய ஸம்ஸ்லேஷம் பண்ணாநிற்கச்செய்தேயாயிற்று "இறையுமகலகில்லேன், இறையுமகலகில்லேன்" என்று உரைப்பது நித்யாநுபவம் பண்ணுவார்க்கெல்லாம் பாசுரம்இதுவே. நாட்டாருடைய அகலகில்லேன் போலன்று, இவளுடைய அகலகில்லேன்; அது கர்மாதீநமாகவருவது: இது விஷயாதீநமாக விளையுமது. [அலர்மேல்மங்கை] - அவன்தன்னை "ந ஜீவேயம் க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னப் பண்ணவல்ல போக்யதையையும் பருவத்தையுமுடையவள். பரிமளந்தான் ஒரு வடிவுகொண்டாற்போலேயிருக்கை. [உறைமார்பா] - இத்தால் - நித்யயோகஞ்சொல்லுகிறது. எனக்கு ஒரு காலம்பார்த்து ஶரணம்புகவேண்டும்படியாயோவிருக்கிறது? இத்தலையில் அபராதத்தையும் ஈஶ்வரஸ்வாதந்த்ர்யத்தையும் அநுஸந்தித்துப் பிற்காலிக்கவேண்டாதபடியா யிருக்கை. "ஒருநாள் பட்டர், பிள்ளையழகியமணவாளவறையர்க்கு த்வயமருளிச்செய்கைக்காக 'எல்லாரும்போங்கோள்' என்ன, நஞ்சீயரும் எழுந்திருந்துபோய், 'நம்மை 'இராய்' என்றருளிச்செய்திலர்' என்று வெறுத்திருக்க, அப்போதே 'சீயர் எங்குற்றார்?' என்று கேட்டருளித் தேடியழைத்துக் கூடவைத்துக்கொண்டிருந்து த்வயத்தை அருளிச்செய்யாநிற்கச்செய்தே, அப்போதுஅருளிச்செய்தவார்த்தை" என்று சீயர் அருளிச்செய்வர். 'இவ்வாத்மவஸ்து ஶேஷமாகில் அவன் ஶேஷியாகில் இங்குப் பிராட்டி ஸம்பந்தத்தால் செய்கிறதேன்?' என்று கேட்க, "அதுஇருக்கிறபடிகேளீர்! ராவணனுக்கும் காகத்துக்கும் ஸம்பந்தமும் அநுஷ்டாநமுமொத்திருக்க, இன்னி ராவணன்ஶாபத்தாலே கிட்டமாட்டாதே யிருப்பதோன்றுண்டிறே; அங்ஙனன்றிக்கே, ஜநநிபக்கல் அபராதத்தில் கைதோடனாயிருக்கத் தலைகொண்டு தப்பினானிறே, அவள்ஸந்நிதி யுண்டாகையாலே. அவள் கடக்கவிருக்கையாலே ராவணன் தலையறுப்புண்டான்." போக்கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை யவனுக்கும் ஒக்குமிறே; இங்ஙனேயிருக்கச்செய்தேயும் கார்யமாயிற்றதில்லையிறே, அவனுக்குப் பிராட்டி ஸந்நிதியில்லாமையாலே. இனித்தான், மாதாவும் பிதாவுமானால் பிதாவைப்போலன்றிறே, ப்ரஜைகள் விஷயத்தில் மாதாஇருக்கும்படி; இவன்செய்த குறைதான் காணக்கண்ணிட்டிருக்கையன்றிக்கே, பிதாவின்பக்கலிலும் மறைத்துக்காட்டுவா ளொருத்தியிறே. ஆகையிறே உத்தரார்த்தத்தில் - அவனோடொப்புச்சொல்லி, பூர்வார்த்தத்தில் - புருஷகாரமாகையாகிற நீர்மையில் ஏற்றஞ்

ப்ரஸக்தஸ்யஹி ப்ரதிஷேதஃ: இவளுக்கு அகலுகைக்கு ப்ரஸக்தி யுண்டோ? என்ன - இது அகன்று இத்யாதி. 'பாசுரமும்' என்ற ஶப்தத்தாலே-யோக்யதையுமில்லையென்றபடி. இப்பாசுரம் இவளொருத்திக்குமோவுள்ளது? என்ன - நித்யாநுபவம் இத்யாதி. நித்யாநுபவம்பண்ணுவார்க்கெல்லாமென்றது - "ஹாவு ஹாவு" என்றத்தைக்கடாக்ஷித்து. நாட்டார்க்கும் இப்பாசுரமுண்டே: அதில் இதுக்குவாசியேதென்ன - நாட்டாருடைய இத்யாதி. அதுக்கு ஹேதுஏது? என்ன - அது கர்மாதீநம் இத்யாதி. "அலர்மேல்மங்கை" என்கிறதுக்கு ஹார்த்தபாவம் - அவன்தன்னை இத்யாதி. பருவம் "நஜீவேயம் க்ஷணமபி" என்னப்பண்ணினதுக்கு - "நஜீவேயம்க்ஷணமபி" இத்யாதி "வயோஸ்யா ஹ்யதிவர்த்ததே" என்கிறத்தை யருளிச்செய்வர். "அலர்மேல்" என்றதுக்கர்த்தம் - பரிமளந்தான் இத்யாதி. "உறை" என்கிற வர்த்தமாநார்த்தம் - இத்தால் இத்யாதி. நித்யயோகத்தால்ஃபலிதம் - எனக்கொருகாலம் இத்யாதி. காலம்பார்க்கைக்குஹேதுகதநபூர்வகமாக விவரணம் - இத்தலையில் இத்யாதி. "பிராட்டி புருஷகாரம்அவஶ்யம்வேணும்" என்கைக்குஐதிஹ்யம் - ஒருநாள் இத்யாதி. இவ்வாக்யத்தால் - த்வயத்தினுடைய, அஷட்கர்ணமாகவுபதேசிக்க வேண்டும்படியான சீர்மைசொல்லிற்று. இனிமேல், இவள் ‡ துஸ்வாமித்வப்ராப்தி ஜீவியாமையாலே விநியோகங்

‡ இவ்விடத்திலே குறையும் ஜீயரும்பத க்ரந்தத்தை கோஶாந்தரங்களிலேகாண்க.

சொல்லுகிறது. தொட்டாரைத்தொட்டு "நகஸ்ஸிந்நாபராத்யாதி" (நகஸ்சிந்நாபராத்யாதி) என்னக்கடவஇவள், "நம்மையொருகார்யத்திலே ஏவுவதுகாண்" என்று அவஸரப்ரதீக்ஷரு யிருக்குமவனைப் பெற்றால் விடாளிறே. தன்வார்த்தை கேளாதார்க்குங்கூட "மித்ரமௌபயிகம்கர்த்தும்" (மித்ரமௌபயிகம்கர்த்தும்) என்னக்கடவ இவள் தன்முகம்பார்த்து வார்த்தைகேட்குமவனைப் பெற்றால் விடாளிறே. "தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்ப்பலா" (தாஸீநாம்ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹதுர்ப்பலா) என்றாளிறே. திருவடி, "ராக்ஷஸிகளை என்கையிலே காட்டித்தரவேணும்" என்ன, "பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலைகாண்" என்றாளிறே. ராவணன் பட்டானாகில், பெருமாள் விஜயத்தோடேநின்றாராகில், திருவடிவந்து முன்னேநின்றானாகில், வேறொருதௌர்ப் பல்யமில்லையிறே; இனி தௌர்ப்பல்யமாவது-பிறர் நோவுகாணமாட்டாமையிறே. [நிகரில் இத்யாதி] - அதுக்குஅநந்தரபதத்தில் அர்த்தஞ்சொல்லுகிறது. * தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் "என்னடியாரதுசெய்யார்" என்னும் குணதிக்யஞ்சோல்லுகிறது. [உலக மூன்றுடையாய்] - தான் நிர்க்குணனென்னிலும் விடவொண்ணாத ப்ராப்திசோல்லுகிறது. [என்னையாள்வானே]- ப்ராப்தியைக்ரயஞ்செலுத்திக்கொடுக்கும்படி.மோக்ஷத்தளவும்செல்ல நடத்திக்கொடுபோந்துநடுவுள்ளஅபேக்ஷிதப்ரதனாகையிறேஆளுகையாவது.[நிகரிலித்யாதி] - அப்பதத்தில் முடிகிற ஸௌலப்யஞ் சோல்லுகிறது. [புகலொன்றில்லாஅடியேன்] - ஆகிஞ்சந்யமும் ஸ்வரூபமும் ப்ரபத்திக்கு பரிகரமிறே. [உன்னடிக்கீழ்] - "சரணௌ" (சரணௌ) [அமர்ந்து] - நடுவோர் இடையீடுஇன்றிக்கேயிருக்கை. [புகுந்தேனே] - இவ்வத்யவஸாயமும் உபாயபாவத்தில் அந்வயியாமையாலும், உபகாரஸ்ம்ருதி ஸ்வரூப மாகையாலும், ஸ்வீகாரமும்சைதந்ய ப்ரயுக்தமாகையாலும்(இவையெல்லாம்)-அதிகாரிவிஶேஷண மாக்கிற்றிறே. (த்வயார்த்தவிவரண ப்ரதேசங்களிலே) இவையெல்லாம் பூர்வார்த்தத்தில் முடிகிற பதத்தோடே சேரக்கடவதிறே. [அகலகில்லேனித்யாதி] – இதில், உபாய பாவஞ் சொல்லச்செய்தே, உபேயவிஷயஸூசகமுமாயிருக்கிறது. அதாகிறபடி யெங்ஙனே?

---

*கொண்டு ப்ராப்தியை ஸ்திரீகரித்தானென்றபடி. ஆளுகைக்கவதியேதென்ன - மோக்ஷத்தளவும் இத்யாதி. நடுவுள்ள அபேக்ஷிதப்ரதனாகையாவது - அத்வேஷாபிமுக்யாதிகளைவிளைக்கை. அப்பதத்தில்-நாராயணபதத்திலென்றபடி. முடிகிறஸௌலப்யமென்றது - "நிகரில் புகழாய்" இத்யாதியாற் சொன்ன வாத்ஸல்ய ஸ்வாமித்வஸௌஶீல்யங்களுக்கநந்தரம் "திருவேங்கடத்தானே" என்றுக்தமாகை யாலே முடிகிறதென்றபடி. ஆகிஞ்சந்யத்தையும் ஸ்வரூபத்தையும் இங்கே எதுக்குச்சொல்லுகிறது? என்ன - ஆகிஞ்சந்யமும் இத்யாதி. ஸ்வரூபமாவது – ஶேஷஶேஷிபாவஜ்ஞாநகார்யமான அநந்யகதித் வம். இடையீடு - வ்யவதாநம். இடையீடின்றிக்கே என்றது - ஸ்வீகாரத்தில் உபாயபுத்தி யின்றிக்கே யென்றபடி. இது உபாயமல்லவாகில் இதனிலே யந்தர்ப்பவிக்குமென்ன: - "அவனேயுபாயம்" என் றநுஸந்திக்கிற இவனுக்கு உபகாரஸ்ம்ருதிபோலே யதிகாரிவிஶேஷணத்திலே யந்தர்ப்பவிக்குமென்கி றார் -இவ்வத்யவஸாயம் இத்யாதி. உபாயத்தில் உபகாரஸ்ம்ருதிவேணுமே, அது தானுபாயமாறுலோ? என்ன - உபகாரஸ்ம்ருதி இத்யாதி. "புகலொன்றில்லாவடியேன்" என்றும், "அமர்ந்து" என்றுஞ் சொல்லுகிற இவைகளெல்லாம் வ்யாக்யேய த்வயத்திலில்லையேயென்ன - இவையெல்லாம் இத் யாதி. அதாவது – க்ரியாபதத்திலர்த்தாதந்தர்ப்பூதமென்றபடி. த்விதீயயோஜநா - முந்தின யோஜனை யில் ஸம்க்ஷிப்தமான அர்த்தங்களைவிசதீகரிக்கைக்காகவும், பின்னையும் சிலஅர்த்தவிசேஷங்களை அருளிச்செய்கைக்காகவுமின்னமும் ஒருயோஜநை அருளிச்செய்வதாகத் திருவுள்ளம்பற்றி, அதில்ப்ரதமம் இப்பாட்டில் - பூர்வவாக்யார்த்தம் முக்தகண்டமாகச்சொல்லாநிற்கச்செய்தே உத்தரவாக்யார்த்தத்துக்கு ஸூசகமாயுமிருக்கிறதென்று விசேஷார்த்தம் அருளிச்செய்கிறார் - இதிலுபாயபாவம் இத்யாதி. இதில்-*

என்னில்: இருவருமான சேர்த்தியிலேயிறே இவன் அடிமைசெய்வது; அச்சேர்த்திதன்னையே யிறே இவன் உபாயமாகப் பற்றுகிறதும். இத்தால் சொல்லிற்றாகிறது, நித்யப்ராப்யத்வமிறே. நித்யாபூர்வவிஷயமிறே நித்யப்ராப்யமாகவல்லது. †(பிராட்டி நித்யஸம்ஶ்லிஷ்டையா யிருக்கச்செய்தேயும் "பிரியக்ஷமையல்லேன்" என்னும்போது - அவ்விஷயம் நித்யப்ராப்யமாக வேணுமிறே: இனி, இருவருமான சேர்த்தி நித்யப்ராப்யமென்னுமிடஞ் சொல்லவேண்டாவிறே)[அகலகில்லேனிறையுமென்று]-இதுஅகன்றிருந்துசொல்லுகிறவார்த்தையன்று. தனக்கு அகலுகைக்கு ஸம்பாவனையின்றிக்கே யிருக்கச்செய்தேயும், அங்குத்தை போக்யதையை அநுஸந்தித்து, க்ஷணகாலமும் நான் அகலுகைக்கு ஶக்தையாகிறிலேனென்னும். "அநந்யா" (அநந்யா) என்றும், "அநபாயிநீ" (அநபாயிநீ) என்றுஞ் சொல்லாநிற்கச் செய்தே சொல்லுகிறவார்த்தையிறே இது! க்ஷணகாலமும்பிரியக்ஷமையல்லேனென்று· [அலர்மேல்மங்கை] - இங்ஙன் சொல்லுகிறவள்ஆரென்னில்,—தன்வடிவழகாலும் பருவத்தாலும் அவன்தனக்குங்கூட உத்தேஶ்யமாயிருக்கிறவள்; அவனை, "நஜீவேயம் க்ஷணமபி" (நஜீவேயம்க்ஷணமபி) என்னப்பண்ணுமவள். நாட்டாரகலகில்லேன்போலன்றிறே இவளுடைய அகலகில்லேன்; அது கர்மநிபந்தநமாகவரும் அகலுகையிறே; இவளுக்கு அதுஇல்லாமையாலும் அவன்தான் மேல்விழும் ஸ்வபாவனாகையாலும், அவனால் வரும் பிரிவுமில்லை, தன்னால்வரும் பிரிவுமில்லையானால், இவ்வுக்திக்கு ப்ரஸங்கமேன்? என்

---

*இப்பாட்டில். உபேயமானவிஷயத்துக்கு ஸூசகமுமாயிருக்கிற தென்றபடி. இருவருமான சேர்த்தியே உபேயமென்று கருத்து. அத்தை உபபத்தியாலே ஸாதிக்கைக்காக தத்விஷய ஶங்கையையநுவதிக்கிறார் - அதாகிறபடியெங்ஙனேயென்னில் என்று. இதுக்கு உபபத்தியை யருளிச்செய்கிறார் - இருவருமான இத்யாதி. "அகலகில்லேனிறையும்"என்கிற பதத்தால் ஃபலிதமானதோர் அர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார்-இந்நால் இத்யாதி. இந்நால்-பிராட்டி "அகலகில்லேனிறையும்" என்று வர்த்திக்கிற இத்தா லென்றபடி. "க்ஷணகாலமும் பிரியக்ஷமையல்லேன்" என்கிறஇத்தால் நித்ய ப்ராப்யத்வந் தோற்றுகிறபடி யெங்ஙனே? என்ன-நித்யாபூர்வ இத்யாதி. நித்யாநுபவம்பண்ணாநிற்கச்செய்தே "இறையும் அகலகில்லேன்" என்கையாலே - இவ்விஷயம் நித்யாபூர்வமென்றுதோற்றுகிறது; நித்யாபூர்வமாகையாலே நித்யப்ராப்யமாகிறதென்றபடி. மூன்றினயோஜனையில் - போக்யதாதிஶயத்தாலே "இறையுமகலகில்லேன்" என்கிறாளென்று. ஏற்நுதிக்ருதமானத்தை, இந்தயோஜனையிலே விசதமாக அருளிச்செய்கிறார்-இதுஅகன்றிருந்து இத்யாதிவாக்யத்வயத்தாலே. போக்யதையையநுஸந்தித்து "அகலகில்லேன்" என்கிறதுக்குநியாமகமேது? அகன்றிருந்துசொல்லுகிறவார்த்தைதானாலோ? என்ன-அநந்யா இத்யாதி. "ஶக்யா லோபயிதும் நாஹமைஶ்வர்யேண தநேந வா। அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா" இதி ஸுந்தரகாண்டே ஸீதா[உக-கரு]. "நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஶ்ரீரநபாயிநீ। யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம" இதி ஸ்ரீவிஷ்ணுபுராணே[க அ கஎ]. ஶப்தார்த்தம் - க்ஷணகாலமும் இத்யாதி. "அவன்தனக்குங்கூட வுத்தேஶ்யமாயிருக்கிறவள்" என்றத்தால்ஃபலித்தபாவம்-அவனை இத்யாதி. "நஜீவேயம் க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்" இதிராம:. "அநந்யா" இத்யாதிவாக்யத்தாலே - அகன்றிருந்துசொல்லுகிறவார்த்தையன்றென்றத்தை உபபாதித்தாராய் நின்றார்கீழ்; இனி, "அகலுகைக்கு ஸம்பாவனையின்றிக்கே யிருக்கச்செய்தேயும்" என்றத்தையுபபாதிப்பதாகத் திருவுள்ளம்பற்றி,நாட்டாரில்இவளுக்குண்டான வ்யாவ்ருத்தியை யருளிச்செய்கிறார் - நாட்டாரகலகில்லேன் இத்யாதி. அதுக்குவாசியேதென்ன - அதுகர்ம இத்யாதி. இவளுக்கும் ஸ்வகர்மத்தாலேயாதல் ஐகவத்ஸ்வாதந்த்ர்யத்தாலே யாதல் பிரிவுண்டானாலோ? என்ன - இவளுக்கு இத்யாதி. அவனாகை*

னில்: அவனுகையாலே வந்தது. நாட்டாருடைய ப்ரார்த்தனை கர்மமடியாகவருமது; இவளுடைய ப்ரார்த்தனை விஷயாதீநமாக விளையுமது. [உறைமார்பா] - ப்ரதமபதத்தில் மதுப்பால் சொல்லுகிற நித்யயோகத்தைச்சொல்லுகிறது; இதுவும் இங்ஙனே ஃபலிக்கக்கண்டோமித்தனை. இச்சேர்த்திக்கு ப்ரயோஜநம் - அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையாதல், தன்னுடைய ஸம்ஸாரித்வத்தை யாதல் அநுஸந்தித்துக் கைவாங்கவேண்டாதபடியா யிருக்கை. அவன் ஸர்வஜ்ஞத்வத்தையும் தன்னுடைய ஸாபராதத்வத்தையும்அநுஸந்தித்து அஞ்சவேண்டாதபடியாயிருக்கை. அதாகிறது - இவனுடைய அபராதகாலம் பார்த்திருந்து ப்ரதிபத்தி பண்ணுகைக்கு அவனுக்குஅவஸரமில்லை: அவள்கூட இருக்கையாலே. பிராட்டிபக்கல் அபராதம் காகத்துக்கும் ராவணனுக்கும் ஒத்திருக்கச்செய்தேயும், இவள் ஸந்நிதியாலே தலைபெற்றது காகம்; அத்தனை அபராதமின்றியிலேயிருக்க, ராவணன் தலையறுப்புண்டானிறே, இவள் ஸந்நிதியில்லாமையாலே. இத்தனையுண்டிறே இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்கும் வாசி. தமப்பன் பகையாக, மாத்ருஸந்நிதியிலே ப்ரஜையை யழியச்செய்யமாட்டாமையும் ஒன்றுண்டே. அவன் பண்ணின அபராதத்துக்கு ப்ரஹ்மாஸ்த்ரத்தைவிட்டு, அதுதொடர்ந்து கொண்டு திரிந்தவாறே புகலற்றுவிழ, இவனைநோக்கி, ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு ஒருகண்ணழிவு சொல்லிவிட்டான் இத்தனையிறே. "தமேவஶரணங்கதஃ" (தமேவஶரணங்கதஃ) என்றதும், "நநமேயம்" (நயமேயம்) என்றதும், இரண்டும் அப்ரயோஜகம். அதேன்? என்னில், காகத்துக்கும் போகிறபோது அகவாயில் நினைவுஅதுவேயிறே. அங்ஙனன்றாகில்

---

யாலேயென்றது - அவன் நிரதிஶயபோக்யனுகையாலேயென்றபடி. விவரணம் - நாட்டாருடைய இத்யாதி. "அலர்மேல்மங்கை" என்று - ஸ்ரீஶப்தார்த்தஞ்சொல்லுகிறதென்று விவக்ஷித்து, "உறைமார்பா" என்கிறதால் எப்பதத்திலர்த்தஞ் சொல்லுகிறதென்ன - ப்ரதமபதத்தில் இத்யாதி. இந்நித்யயோக கதநத்துக்கு ஹேதுவம் - இதுவும் இத்யாதி. இதுவுமென்றது - காலம்பார்க்கவேண்டாதபடி புருஷகாரத்தினுடைய நித்யயோகமென்றபடி. புருஷகாரபூதையானவளோட்டைச் சேர்த்தி நம்முடைய கார்யசித்திக்கு உடலானாற்போலே, இவளுடைய நித்யயோகமும் நம்முடைய கார்யசித்திக்குடலாகக்கண்டோமென்று - சஶப்தார்த்தம். இத்தை யுபபாதிக்கிறார் - இச்சேர்த்திக்கு இத்யாதி. விவரணம் - அவன் ஸர்வஜ்ஞத்வத்தையும் இத்யாதி. அவன் ஸர்வஜ்ஞத்வத்தை யநுஸந்தித்தால் அஞ்சவேண்டாவோ? என்ன - அதாகிறது இத்யாதி. இவள் புருஷகாரத்தின் அவஶ்யாபேக்ஷிதத்வத்தை அறிவிக்கைக்காக, இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்குமுள்ள வாசியை அருளிச்செய்கிறார் - பிராட்டிபக்கல் இத்யாதி. கீழ்ச்சொன்னவர்த்தத்தை விசதீகரிக்கிறார் - இத்தனையுண்டிறே இத்யாதியாலே. அநுஷ்டாநங்காட்டி யுபபத்தியுங்காட்டுகிறார் - தமப்பன் இத்யாதி. இவ்வாக்யம் முந்தினயோஜனையில், "இனித்தான்மாதாவும்" இத்யாதிவாக்யத்தாற்சொன்ன அர்த்தத்தை விசதீகரிக்கிறது. இவள் ஸந்நிதியுண்டாயிருக்கச்செய்தேயும் காகத்துக்குக்கண்போயிற்றே? என்ன - அவன்பண்ணின இத்யாதி. சாடு - கண்ணழிவு என்றது. இவள் ஸந்நிதி அஸந்நிதிகளே ரக்ஷணதத்ஹேதுவாகவேணுமோ? காகம்ஶரணம்புகுருகையாலேரக்ஷித்தான்; ராவணன்"நநமேயம்" என்றிருக்கையாலே நிரஸித்தானென்றாலோ? என்ன - தமேவ இத்யாதி. "ஸவிஸ்ருஷ்டோவஶி த்ருஷ்டேன ஸர்வைர்தேவைரதோஷிதஃ । த்ரீந்லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவஶரணங்கதஃ" இதிஸுந்தரகாண்டே[௩அ-௩௩]. "த்விதாபஜ்யேயமப்யேவம் நநமேயந்து கஸ்யசித் । ஏஷமேஸஹஜோதோஷஃ ஸ்வபாவோ துரதிக்ரமஃ" இதி யுத்தகாண்டே ராவணஃ[௩௬-௧௧]. நினைவுஅதுவேயென்றது-"நநமேயம்" என்றதேயென்றபடி. ஏதந்நியாமகமேதென்ன - அங்ஙனன்றாகில் இத்யாதி. "தத ஸ்ம வாயஸம் த்ருஷ்ட்வா ஸ ஓரேநாஜமானஃ। ககாநாஸ்த்ரவஸ்த்ரக

“ஸ்வகமாலயம்-ஜகாம” (ஸ்வகமாலயம்-ஜகாம) என்று போகப்பாரானே; செயல்மாட்சி யாலே விழுந்த இத்தனையிறே. இது ராவணனுக்கு மூண்டாயிருக்கச்செய்தே கார்யமாயிற்றதில்லையிறே, இவள் அஸந்நிதியாலே. கீழ்ச்சொன்ன அர்த்தம் இத்தனையும் - த்வயத்தில் முதற்பதத்தோடேயற்றது.மேல்‘நிகரில்’ என்று தொடங்கி, ‘திருவேங்கடத்தானே’என்னுமளவும்வர, அநந்தரபதத்தில் அர்த்தஞ்சொல்லுகிறது: [நிகரில்புகழாய்] - இப்படியிருக்கிறவள் தானே சிதகுரைக்குமன்றும் அவளுடனே மன்றுமே குணதிக்யவிசேஷஞ் சொல்லுகிறது. அதாகிறது, “என்னடியார்அதுசெய்யார்”என்று என்னைப்பற்றினார்க்குஅதில்லைகாண்என்கை. ‘இல்லை நான் இப்போது இன்னகுற்றஞ் செய்யக்கண்டேன்’ என்று காட்டிக்கொடுத்தாலும், ‘ஆனாலென்? தர்மாதர்மங்களும் பரலோகமுமில்லை யென்றுசெய்கிறார்களோ? ப்ராமாதிகத்துக்கு நாமுளோம் என்றன்றோ செய்கிறது’என்கை. இவளுடைய உத்கர்ஷத்துக்கு அடிசொல்லும்போது அவனைப்பற்றிச்சொல்லலாம்; அவனுடைய உத்கர்ஷத்துக்கு ஒன்றுதேடிச் சொல்லலாவதில்லை. இதுவோதான் அர்த்தஸ்வரூபமிருக்கும்படி! இத்தால் சொல்லிற்றாயிற்று-இவள் அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தையநுஸந்தித்து “இவற்றின்பக்கல் என்னாய்விளைகிறதோ?” என்றிருக்கையும், அவன் இவளுடைய மார்த்தவத்தையும் மௌக்த்யத்தையும் அநுஸந்தித்து “இவற்றின்பக்கல் எவ்வளவாயிருக்கிறாளோ?” என்றிருக்கையும். ஆக, ஒருவரையொருவர் அதிஸங்கைபண்ணி நோக்கும் இருவர்நிழலையும் பற்றியிறே உபயவிபூதியுங் கிடக்கிறது. [உலகமூன்றுடையாய்] - தான் நிர்க்குணனென்றாலும் விடவொண்ணாத ப்ராப்தியைச் சொல்லுகிறது. “சிதகுரைக்குமேல்” என்றவிடத்தில்,

---

கோஜமாவேஸ்வகமாலயம்” இதிஸுந்தரகாண்டே [௩௮-௩௨].பிற்பாடானாலும்ஸரணம்புகுந்தானே யென்ன -செயல்மாட்சி இத்யாதி. இவ்வர்த்தங்களெல்லாம் த்வயத்தில் எந்தப்பதத்திலே சொல்லப்பட்டன என்ன - கீழ்ச்சொன்ன இத்யாதி.அநந்தரபதத்தில்- நாராயணபதத்தில்.“நிகரில்புகழாய்”என்றதுக்குக்கீழ்ப்பதத்தோடே ஸங்கதியருளிச்செய்கிறார் - இப்படியிருக்கிறவள் தானே இத்யாதி. “நசஸ்நிஹாவாரா ஸந்தி” என்று மவள்தானேயென்றபடி. “செய்தாரேல்நன்றுசெய்தார்” என்றதுக்கர்த்தம்-இல்லை,நான் இத்யாதி.“நிகரில்”. என்ற விசேஷணத்துக்குபாவம் - இவளுடைய இத்யாதி. “ஸ்வாராஹ்யாம்வொ யத்ராவரிவராம்ஸஹதாஹஸ்ரிஸ” என்றும், “தவஸ்ஸப்ராதீஸாஹஸ்ஸிகஸ்மெஸஹஉவஹம்தவெஹம்நோவாயொரவநிவதிதஃ” என்றும், இவனுடையவுத்கர்ஷத்துக்குஹேது பிராட்டியென்றும், இவளுடைய வுத்கர்ஷம் ஸ்வதஸ்ஸித்தமென்றும் சொல்லாநின்றதேயென்ன: அது - ப்ரணயித்வநிபந்தநம், இது - வாஸ்தவாகாரமென்கிறார் - இதுவோதான் இத்யாதி என்னுதல். அன்றிக்கே, உக்தார்த்தத்தைக்கடாக்ஷித்தாதல், வக்ஷ்யமாணார்த்தத்தைக் கடாக்ஷித்தாதல் அருளிச்செய்கிறார் - இதுவோதான் இத்யாதி ஆதல். அதாவது - பிராட்டி யுத்கர்ஷம் ஈஸ்வராதீநமாய், ஈஸ்வரோத்கர்ஷம் ஸ்வாதீநமாயிருக்கு மிதுவோதானென்னுதல்; பரஸ்பரம் அதிஸங்கைபண்ணி நோக்குமிதுவோதானென்னுதலென்றபடி. “அகலகில்லேன்” இத்யாதிபதத்வயங்களாலும் பலித்தஅர்த்தவிசேஷத்தை யருளிச்செய்கிறார் - இத்தால் என்று தொடங்கி. இத்தால்-“அகலகில்லேன்” என்றுதொடங்கி “நிகரில்புகழாய்” என்றபதத்வயத்தாலும் என்றபடி. இவற்றின்பக்கல்- இந்தஜந்துக்கள்பக்கல் என்றபடி. கீழ்ச்சொன்ன குணயோகத்திற்காட்டில் ஸம்பந்தத்திலுண்டான உறைப்பையருளிச்செய்கிறார் - தான் நிர்க்குணன் இத்யாதி. “விடவொண்ணாத”என்றத்தை த்ருடீகரிக்கிறார் - சிதகுரைக்குமேல் இத்யாதி. ஸ்வரூபாநுரூபமான குணங்களாவன:—ரக்ஷகத்வஸ்வரூபத்துக்குத் தகுதியான க்ருபாதிகுணங்கள். கூடாதவன்றிறே அவள் அதுசொல்லுவதென்றது. இவையில்லையாகிலன்றோ அவள் இவற்றின்தோஷங்களைச் சொல்

அவளுக்கு ஸ்வரூபாநுரூபமான குணங்கள் கூடாதவன்றிறே அவள் அதுசொல்லுவது; அப்படியே இவனுக்கும் இக்குணங்களின்றிக்கே யிருந்தாலும் விடவோண்ணாதே குடற்றேடக்கைச்சோல்லுகிறது. அவன் ''அல்லேன்'' என்று கைவிடுமென்றும் செங்கற்சீரை கட்டி வளைக்கலாம்படியிறே இஸ்ஸம்பந்தமிருப்பது; இனி இவன்தான் காதாசித்கமாக ப்ரணமம்பண்ணிப் பின்பு கைகழியப்போகப் பார்க்கிலும், காலிலே விலங்கைத்தைத்துக் காரியங்கோள்ளலாம்படியான உரிமை சோல்லுகிறது. [என்னையாள்வானே] - அடிமைதன்னை க்ரயஞ்சேலுத்திக் கோடுக்கும்படி. ''ஶேஷத்வஸாமாந்யத்தைப்பற்றச் சோல்லுகிறீராகில் அவ்வளவிறே யுமக்கும்'' என்ன வோண்ணாதபடி, என்னை மயர்வறமதிநலமருளி இவ்வளவும் வர நிறுத்திப்போகடப்போமோ? [நிகரிலமரர்இத்யாதி] - அங்குள்ளாரும் விரும்பிவந்துஅடிமைசெய்கிறதும் இங்கேயிறே. ''வைகுந்தத்தமரரும்முனிவரும்'' என்றுஇரண்டுகோடியாயிறேயிருப்பது, குணநிஷ்ட்டரும் கைங்கர்யநிஷ்ட்டரும். [திருவேங்கடத்தானே] - அதுக்கு முடிந்தபோருள் ஸௌலப்யமென்னக்கடவதிறே; குணயோகமும், ஶேஷித்வமும், விசேஷகடாக்ஷமும், ஸௌலப்யமும், இவையித்தனையும் உண்டிறே இப்பதத்துக்கு. இவனுக்கு ஸகலாபேக்ஷித ஃபலப்ரதானைக்காக, அந்தராத்மதயா ஸ்த்திதிபண்ணுமென்றிறே நாராயணஶப்தத்திற் சோல்லுகிறது; அந்தஸௌலப்யம், இங்கு ஸதாஸந்நிதிபண்ணுகையாலே திருவேங்கடமுடையான் பக்கலிலே கிடக்குமிறே. இந்தஸௌலப்யம் உபாயமாகிறபடி எங்ஙனே? யென்னில்: ''ஊ௭ெஃகூ'' (மாமேகம்) என்கிறவிடத்தில் - ஸாரத்யவேஷத்தையிறே

லுவதென்றபடி. அப்படியேயென்றது - ''சிதகுரைக்குமேல்'' என்று க்ருத்வாசிந்தைபண்ணிச் சொன்னாற்போலே என்றபடி. க்ருத்வாசிந்தைபண்ணுகையாவது - அஸம்பாவிதத்தை யாரோபித்து நினைக்கை. 'இக்குணங்கள்' என்கையாலே, ''நிகரில்புகழாய்'' என்று - வாத்ஸல்யமாமன்றிக்கே, குணஸமஷ்டிபரமென்றும் கருத்து. இஸ்ஸம்பந்தத்தைப்பார்த்தால் உபயராலும் விடவொண்ணாதென்கிறார் - அவன்அல்லேன் இத்யாதிவாக்யத்வயத்தாலே. செங்கற்சீரைகட்டி வளைக்கலாம்படியென்றது - ''காவிவஸ்த்ரமுடுத்து பிக்ஷைபுகுகிறேன்'' என்று வளைக்கலாம்படியென்றபடி. கீழ்ச்சொன்னஸம்பந்தத்தை யநுஷ்ட்டாந பர்யந்தமாக நடத்தும்படி சொல்லுகிறதென்று, ''என்னையாள்வானே'' என்கிற பதத்துக்கவதாரிகை - அடிமைதன்னை இத்யாதி. க்ரயஞ்செலுத்திக்கொடுக்கையாவது - அநுஷ்ட்டாந பர்யந்தமாக நடத்துகை. ஸம்பந்தத்தை யநுஷ்ட்டாநபர்யந்தமாக நடத்துகிறமைசொல்லுகிறாராகில் - உலகமூன்றையுமாள்வானே யென்றுசொல்லவமைந்திருக்க, அதுசெய்யாதே, ''என்னையாள்வானே'' என்று தம்மையொருவரையும் ஆண்டமையை விசேஷிக்கிறதுக்கு ஹாவமருளிச்செய்கிறார் - ஶேஷத்வஸாமாந்யத்தை இத்யாதி. '' 'உலகமூன்றுடையாய்' என்றது - ''ஸர்வஸ்ய வஶீ'' என்றாற்போலே; 'என்னையாள்வானே' என்றது - 'ஸைஷ ஸ்வராஜ்' என்றாற்போலே'' என்றருளிச்செய்வர். ஆனால் பரமபதத்திலே வாரும்மென்ன - அங்குள்ளாரும் இத்யாதி. ''அமரர்'' என்னவமையாதோ? ''முனிவர்'' என்றுவிசேஷிக்கிறதென்? என்ன - வைகுந்தத்தமரரும் இத்யாதி. ''திருவேங்கடத்தானே'' என்றது - நாராயணபதத்தி லர்த்தமானபடி யெப்படி? என்ன - அதுக்கு இத்யாதி. அதுக்கு - நாராயணபதத்துக்கு என்றபடி. ''முடிந்தபொருள்'' என்கைக்கு, முதலிற் பொருள்களெவையென்ன - குணயோகமும் இத்யாதி. குணயோகமென்றது - வாத்ஸல்யம். விசேஷகடாக்ஷம் என்று - ஸௌஶீல்யம். தத்புருஷனாலே - ஸ்வாமித்வமும், ஹஹுவ்ரீஹியாலே - வாத்ஸல்ய ஸௌஶீல்ய ஸௌலப்யங்களுஞ் சொல்லுகிறது. * நாராயணபதார்த்தம் - அந்தர்யாமியின் ஸௌலப்யமாயிருக்க, அர்ச்சாவதார ஸௌலப்யத்தை அருளிச்செய்வானென்? என்ன - இவனுக்கு இத்யாதி. ஸதாஸந்நிஹிதத்வாகாரம் இரண்டிடத்திலும் ஒத்திருக்கையாலே சொல்லுகிறதென்றபடி. இந்தஸௌலப்யம் ப்ரபத்திக்குஉபயோகியென்னுமிடத்தை தர்ஶிப்பிக்கைக்காக தத்விஷயஶங்கையையநுவதிக்கிறார் - இந்தஸௌலப்யம் இத்யாதி. உபாயமாகிறபடியென்றது - உபாயோபயோகியாகிறபடி என்றபடி.

காட்டுகிறது. இன்னமும் அவ்வளவன்றிறேயிங்கு: அதுக்கு முன்புமில்லை பின்புமில்லையிறே அந்த ஸௌலப்யந்தான்; நித்யஸந்நிதிபண்ணுகிறவிடமிறே இவ்விடம். அங்குத்தானும் "[illegible]" (மய்யாஸக்தமநா: பார்த்த) என்றுஒருதேவையிட்டிறே சொல்லிற்று; அதுவும் இல்லையிறே இங்கு. இனித் தம்படி சொல்லுகிறார். [புகலொன்றில்லாவடியேன்] - கீழே "அடியேன்" என்றும், "அருவினையேன்" என்றும் தம்முடைய ஶேஷத்வத்தையும், ஆகிஞ்சந்யத்தையும் உருவச்சொல்லிக் கொடுபோந்தார்; இனித்தான் வெறுமையும், ஸ்வரூபமும், இரண்டும் ப்ரபத்திக்குப் பரிகரமிறே; அத்தை இங்கேயும் ப்ரயோகிக்கிறார்; அது தன்னைச் சொல்லவேணுமிறே. இங்குச்சொல்லவேண்டுகிறதென்? என்னில்; அவனுக்கு உபாயபாவம் ஸ்வரூபமானவோபாதி இவனுக்கும் இப்ப்ரதிபத்திஸ்வரூபமாகையாலே. இவனுக்கு இதில்லாதவன்று ஸர்வமுக்திப்ரஸங்கமுமாமே. [அடியேன்] - அதில் அர்த்தப்ராப்தமானஅஹம்ஶப்தத்தை இங்குவாசகஶப்தத்தாலே சொன்னதுவே வாசி. [உன்னடிக்கீழ்] - "[illegible]" (சரணௌ) என்றதுதன்னையே சொல்லுகிறது. "[illegible]" (ஸப்ராதுஶ்சரணௌ) என்றாற்போலே சொல்லக்கடவதிறே; [அமர்ந்து புகுந்தேனே] - "[illegible]" (முமுக்ஷுர்வை ஶரணமஹம்ப்ரபத்யே) என்னுமாபோலே. [அமர்ந்து] - அவனுக்கு ஒருஸஹகாரி வேண்டுதல், தன்தலையிலே யுபாயபாவங்கிடத்தல் செய்யிலிறே நடுவேயொரு வ்யவதாந விளம்

---

ஸௌலப்யம் ப்ரபத்யுபயோகியென்னுமிடத்துக்கு உதாஹரணம் - மாமேகம் இத்யாதி. ஸாரத்யவேஷத்தைக்காட்டுகையாலே - ஸௌலப்யவிஶிஷ்டன் உபாயமாகவேணுமென்றபடி. ஸாரத்யவேஷத்தைப்பற்ற அர்ச்சாவதார ஸௌலப்யத்துக்கு இரண்டுவகையாக ஏற்றமருளிச்செய்கிறார் - இன்னமும் இத்யாதி அஞ்சுவாக்யத்தாலே. அதுக்கு - அக்காலத்துக்கு. தேவை - நிர்ப்பந்தம். "[illegible]" இதி கீதாஶாஸ்த்ரம். (க)கீழேயும், ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களை யருளிச்செய்துவைத்து, மீளவும் அருளிச்செய்வானென்? என்ன - கீழேயடியேன் இத்யாதி. அதாவது - கீழ ஶரண்யதைக்கு உறுப்பாக அருளிச்செய்கிறார்; இங்கே ஸ்வீகாராங்கத்வேந அருளிச்செய்கிறாரென்றபடி. ஸ்வரூபமும் - அநந்யகதித்வமும். 'அது தன்னைச்சொல்லவேணுமிறே - அத்தையிங்கேயும் ப்ரயோகிக்கிறார்' என்று அந்வயிப்பது. சொல்லவேணுமிறேயென்றது - ப்ரபத்யங்கத்வேநவென்றபடி. 'இங்குச் சொல்லவேண்டுகிறதென்? என்னில்' என்றதுக்குக்கருத்து - ப்ரயாஜாத்யங்கக கர்மம்போலே, இவைஅங்கமானால் ப்ரபத்திக்கு ஸாபேக்ஷத்வம் வாராதோ? என்னிலென்று. இப்ப்ரதிபத்தி - ஆகிஞ்சந்யாநந்யகதித்வ ப்ரதிபத்தியென்றபடி. அவனுக்கு உபாயபாவம் ஸ்வரூபமானால் ப்ரபத்தி பண்ணவேண்டுவானென்? என்ன - இவனுக்குஅதில்லாத இத்யாதி. த்வயத்தில் "அடியேன்" என்றதுக்கு வாசகஶப்தமில்லையேயென்ன - அதில்அர்த்த இத்யாதி. அதில் - "[illegible]" என்கிற அதில். திருவடிகளையே பற்றவேணுமென்கிற நிர்ப்பந்தமுண்டோ? என்ன - ஸப்ராது: இத்யாதி. "[illegible]" இத்யயோத்யாகாண்டே. ப்ரபத்தி பண்ணுகிறவிடத்தில் அஹம்ஶப்தத்தை ப்ரயோகித்தபேருண்டோ? என்ன - முமுக்ஷுர்வை இத்யாதி. ஶ்வேதாஶ்வதரே - "[illegible]" இத்யாதி. "அமர்ந்து" என்றதுக்கு - வ்யவதாந விளம்பமறப்பொருந்தி யென்றர்த்தம் விவக்ஷித்து, அவை இல்லாமைக்கு ஹேதுவேதென்ன - அவனுக்குஒரு இத்யாதி. அதாவது - ஸ்வீகாரத்தில் உபாயபுத்திநிவ்ருத்தமாகையாலே, நடுவே உபாயாந்தரவ்யவதாநமும் அவன் ஸஹகாரிநிரபேக்ஷனாகையாலே விளம்பமும் இல்லையென்றபடி. "புகுந்தேன்" என்றதுக்கு - அத்யவஸித்தேனென்று அர்த்தம் விவக்ஷித்து, அதுவென்? காயிகப்ரபத்தியைச் சொல்லிற்றாலோ? என்ன, அது ஒண்ணாதென்னுமிடத்தை

பங்களுக்கு ஹேதுவுள்ளது. [புகுந்தேனே] - போனஎல்லையளவுமிறே புகுருவதும்; முன்பும் அர்த்தத்திலிழவில்லையிறே. இவனுடைய விப்ரதிபத்தியேயிறே யுள்ளது; அதுபோமித்தனையிறே வேண்டுவது. அத்யவஸித்தே னென்கிறார்; இங்குத்தை வர்த்தமாநம் - ஸ்ம்ருதி ஸந்ததிபோலன்றிறே; ருசிகார்யமாய் வருகையாலே ப்ராப்யத்தினுடைய ப்ராப்தியளவும் நிற்குமிறே. ஸகலஶாஸ்த்ரங்களிலும் வ்யாபரிப்பதொன்றாய், இஶ்ஶாஸ்த்ரங்களுக்கெல்லாம் அடியான வேதாந்தங்களுக்குக் கிழங்காய், நம்ஆசார்யர்களெல்லாரும் ஒக்க ஆதரித்துப்

---

அருளிச்செய்கிறார் - போனஎல்லை இத்யாதி. அதாவது - ஸர்வஶரீரியானவனை முன்பு பிரிந்து மீளவும் கூடுகை அஸம்பாவிதமாகையாலே, விபரீத ப்ரதிபத்திபோய் யதார்த்த ப்ரதிபத்தி ரூபாத்யவஸாயத்தைப் பண்ணினேன் என்றபடி. அர்த்தத்தில் இழவில்லையிறேயென்றது - ஈஶ்வரனோட்டை ஸம்யோகமாகிற அர்த்தத்தில் இழவில்லையிறே யென்றபடி. இப்படியானபின்பு, மாநஸமான அத்யவஸாயத்தையே சொல்லுகிறதென்னுமத்தையே இசைவிக்கிறார் - இவனுடையவிப்ரதிபத்தி இத்யாதி வாக்யத்ரயத்தாலே. த்வயத்தில் வர்த்தமாந நிர்த்தேசமாயிருக்க, "புகுந்தேன்" என்று, பூதார்த்தமாக நிர்த்தேசிப்பானென்? என்ன, அது ஹேதுபுத்தியாய்ச் சொல்லுகிற இத்தனை; உபாயத்துக்கு ஸக்ருத்தேயமையுமென்கிறார் - இங்குந்தை இத்யாதி. இங்குத்தை வர்த்தமாநம் - த்வயத்தில் வர்த்தமாநமென்றபடி. அதாவது - ஸ்ம்ருதிஸந்ததிபோலே ஸாதநத்வேநவன்றிக்கே, ஹேதுத்வத்தையாலே வர்த்தமாநமாக நிர்த்தேசித்தது; இவர் "ஸக்ருத்க்ருதஶாஸ்த்ரார்த்த:" என்கையாலே, பூதார்த்தமாக நிர்த்தேஶித்தா ரென்றபடி. ஶாஸ்த்ரார்த்தமென்றது - ப்ரபத்தியை த்ருதீயயோஜநா இப்பாட்டிற்சொல்லுகிற ப்ரபத்தியிலே எல்லார்க்கும் ருசிபிறக்கைக்காக. இதின் வைலக்ஷண்யத்தை யருளிச்செய்கிறார் - ஸகல இத்யாதியாலே. ஸகலஶாஸ்த்ரங்களிலும் வ்யாபரிப்பதொன்று யென்றது - [1]"யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்" இத்யாரப்ய, "முமுக்ஷுர்வை ஶரணமஹம் ப்ரபத்யே" என்றும்; ஆத்மபுத்தி ப்ரஸாதமென்றது, எனக்கு "தானேயுபாயம்" என்கிற வ்யவஸாயரூபபுத்தி ஜநகனென்றபடி. [2]"தேவா வை [illegible] ப்ராபத்யந்த | தாந் ப்ரதி ப்ராயச்சந் | தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதி ப்ரயச்சந்தி" என்றும்; பத்நீ: என்றது - தேவதா பத்நிகளை. [3]"[illegible] ஶரணாகதோ ந ப்ரத்யர்ப்பணீய:" இதி ஸ்ம்ருதி: ; ந ப்ரத்யர்ப்பணீய: - நோபேக்ஷணீய: என்றர்த்தம். [4]"யஸ்யாஸ்மி ந தமந்தரேமி. யோஹமஸ்மி ஸ ஸந் யஜே," [5]"ப்ரஹ்மணே த்வா மஹஸ ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத," [6]"[illegible]," [7]"தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:," என்றும; [8]"யாநி [illegible] தேஷாம் [illegible] ந்யாஸாதிரிக்தம் தபஸ்[illegible]" என்றும்;

[1]"தேவா வை யஜ்ஞாத்ருத்ரமந்தராயந் | ஸ ஆதித்யாநந்வாக்ரமத | தே த்விதேவத்யாந் ப்ராபத்யந்த | தாந் ந ப்ரதி ப்ராயச்சந் | தஸ்மாதபி வத்யம் ப்ரபந்நம் ந ப்ரதி ப்ரயச்சந்தி" என்றும்; விசேஷித்து கடவல்லயுபநிஷத்தான த்வயமுமான ஶ்ருதிகளும்; [2]"ஸக்ருதேவ," [3]"ஸர்வதர்மாந்," [4]"ப்ரணாமப்ரவணா:," [5]"ஶங்கசக்ரகதாபாணே," [6]"[illegible] ஶரணம் ஶரண்யம் [illegible]" இதி மார்க்கண்டேயநோக்தே ஸதி [7]"[illegible]"

---

1. ஶ்வே. உப-6. 2. யஜுர்வே. காண். 6. 3. 4. யஜுர் அஷ். 3, ப்ர-7.
5. தைத். நாரா. 51. 6. ஷெ ஷெ, 10. 7. ஷெ. ஷெ. 50. 8. பாரத. ஆர. 189.

1. யஜுர். காண். 6. 2. ராமா. யுத். 18, 33-½. 3. பக்வ. 18, 66. 4. விஷ். பு. 1, 9, 65.
5. பார. 6. பார. ஆர. 189. 7. பார. உத்.

போருவதோர் அர்த்த விஸேஷத்தை, இப்பாட்டாலே அருளிச்செய்கிறார். ப்ரதமாசார்யருமாய், ''மயர்வறமதிநலமருளினன்'' என்கிறபடியே ஹகவத்ப்ரஸாதலப்த ஜ்ஞாநவைஹவருமானஇவர் பரிக்ரஹிக்கையாலே வந்த ஏற்றமுமுண்டு. இவ்வுபாயந்தன்னைப் பரிக்ரஹித்து ப்ரயோஜநாந்தரத்தைக் கோள்வாரும், ஸாதநாந்தரத்தைப்பரிக்ரஹித்து இவனையே ப்ரயோஜநமாகப்பற்றுவாருமா யிருப்பர்கள் புறம்புள்ளார்; அங்ஙனன்றிக்கே, இவனையே ப்ராப்யமும் ப்ராபகமுமாக அத்யவஸித்திருக்கிற ஏற்றமுண்டு இவர்க்கு. ப்ராப்யம் இவனேயாகில் ப்ராபகாந்தரங்களை பரிக்ரஹித்தால் வரும் குற்றமேன்? என்னில், அவை ஸாத்யமுமாய்ப் பலவுமாய் துஶ்ஶகமுமாய் ஸ்வரூபத்துக்கு அநநுரூபமாயிருக்கும். இப்படியிருக்கும் ஸாதநாந்தரங்கள் பல. அவையேவை? என்னில், கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோகங்கள். கர்மயோகமாவது - ஆத்மயாதாத்ம்ய ஜ்ஞாநபூர்வகமாக ஸ்வவர்ண ஸ்வாஶ்ரமோசிதமாய்

---

[illegible],'' 8''[illegible]'' 9''[illegible]'' இத்யாதியுமான இதிஹாஸ புராணங்களுமான ஸகல ஶாஸ்த்ரங்களிலும் வ்யாபரிப்பதொன்று யென்றபடி. இவ்விடத்திலே, ''[illegible]'' இத்யாதி அதிகாரஸங்க்ரஹத்தில் ஶ்லோகம்அருளிச்செய்வர். இஶ்ஶாஸ்த்ரங்களுக்கெல்லாம்- உபப்ரும்ஹணங்கள் பூர்வபாகங்களாகிற இஶ்ஶாஸ்த்ரங்களுக்கெல்லாமென்றபடி. வேதாந்தங்களுக்குக் கிழங்காய் - வேதாந்தங்களுக்கு ஸாரமாயென்றபடி. அதாவது, கடவல்லீ உபநிஷத் ஸித்தமான த்வயத்தில் ப்ரபத்திவைஹவத்தைச் சொல்லிற்றிறேயென்றபடி. ''[illegible]'' என்று ஆப்தப்ரமாணமான வேதத்துக்கு முன்னே யெடுக்கும்படி ஶிஷ்டாசாரம் ப்ரபலமாகையாலே யருளிச்செய்கிறார் - நம்மாசார்யர்கள் இத்யாதி. இவ்விடத்திலே - ''[illegible]'' என்கிற ஶ்லோகம் அநுஸந்தேயம். அர்த்தவிஶேஷமென்றது - ப்ரபத்தியை. ஆசார்யாதரமன்றிக்கே, இவ்வாழ்வார் பரிக்ரஹமுமுண்டென்கிறார் - ப்ரதம இத்யாதி. இவர் பரிக்ரஹத்தாலே யதிஶயமுண்டென்கைக்கு இவர்க்கதிஶயமேதென்ன-இவ்வுபாயம் இத்யாதி. இனிமேல், உபாயாந்தரங்களினுடைய தோஷபூயஸ்த்வத்தையும், ப்ரபத்தியினுடைய நைர்தோஷ்யந் தொடக்கமான அதிஶயத்தையும் தர்ஶிப்பிக்கிறார் - ப்ராப்யமிவனேயாகில் இத்யாதி. ஸாத்யமுமாயென்றது - சேதநப்ரவ்ருத்தி ஸாத்யமுமாயென்றபடி. பலவுமாயென்றது - கர்மாதிகளொரொன்றே பலவிதமாயென்றபடி. அதாவது, 1''[illegible]'' என்று கர்மயோகமும் பஹுவிதமாயிருக்கும்; ஜ்ஞாநயோக பக்தியோகங்களுக்குமிப்படியேகண்டுகொள்வது. ஸ்வரூபத்துக்கு அநநுரூபமென்றது - பாரதந்த்ர்ய ஸ்வரூபத்துக்கு அநநுரூபமென்றபடி. ஸாத்யத்வாதிகளை யுபபாதிக்கைக்கு அதிஷ்டிகை - இப்படி இத்யாதி. கர்மஜ்ஞாநங்களும் திருநாமஸங்கீர்த்தநாதிகளும் வேதாந்தமர்யாதையாலே அங்கதயா ஸாதகங்களன்றிக்கே, 2''[illegible]'' என்கிற இதிஹாஸபுராண ப்ரக்ரியையாலே ஸ்வதந்த்ரஸாதநங்களென்கிறார் - கர்மயோகமாவது இத்யாதி. கர்மாதிகளின் ஸ்வதந்த்ர ஸாதநத்வம் ''[illegible]'' என்கிற பஹுவசநத்தாலும்ஸித்தம். ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநமாவது - ஶரீரஶரீரிபாவஜ்ஞாநமென்றபடி. 'ஸ்வவர்ணஸ்வாஶ்ரமோசிதமாய்' என்றவிடத்திலே - 3''[illegible]'' என்றது அநுஸந்தேயம். ஃபலாபிஸந்திரஹிதமாகையாவது - ஸ்வர்க்காதி ஃபலங்களில் ஆசைவிடுகை. 'கர்த்ருத்வத்யாகத்தையும்' என்றவிடத்திலே, 4''[illegible]

---

8. ரா. யுத். 18, 27½. 9. ஷை. ஷை. 25½. 1, 2. 3, விஷ்-பு. 3, 8, 9.

விஹிதமானகர்மத்தை ஃலாபிஸந்திரஹிதமாகவும் கர்த்ருத்வத்யாகத்தையும் ஸங்கத்யாகத்தையும்பண்ணி ஹகவத்ஸமாராதந புத்த்யா பண்ணவே, விரோதியானபாபம் க்ஷயித்து மநஸ்ஸு நிர்மலமாய் ஸ்வரூபப்ரகாஶமுமுண்டாய் ஹகவத்ஜ்ஞாந ப்ரேமங்கள் பிறந்து, அது பரபக்திபரஜ்ஞாந பரமபக்தியாய்ப் பேற்றோடே சந்திப்பிக்கும். ஜ்ஞாநயோகமாவது - இந்த்ரியங்களை நியமித்துக்கொண்டு ஸ்வரூபத்தை விஷயமாக்கி ஹகவத்ஜ்ஞாநம் பிறந்து தத்விஷயப்ரேமமும் பிறந்து, மேல் பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளும் பிறந்து பேற்றோடே சந்திப்பிக்கும். அங்ஙனன்றிக்கே, இக்கர்மஜ்ஞாநங்களிரண்டையும் ஹகவத்விஷயத்திலே யாக்கி, "[illegible]" (மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீ மாம்நமஸ்குரு) என்கிறபடியே, பரபக்தி பரஜ்ஞாந பரமஹக்திகளாய்ப் பேற்றோடே தலைக்கட்டுமது - பக்தியோகமாவது. இவைபோல் துஶ்ஶகமன்றியிலே, திருநாமத்தை ஸாஶகோபாயமாக விதித்தது, எங்கே? என்னில், தர்மபுத்ரனுக்கு அநேகதர்மங்களையுஞ் சொல்ல, "[illegible]" (கோதர்மஸ்ஸர்வ தர்மாணாம் பவதஃபரமோமதஃ) என்கிறபடியே, உன்னெஞ்சால் அறுதியிட்டிருக்கும் பரம தர்மத்தைச் சொல்லவேணு மென்ன; "[illegible]" (ஏஷமேஸர்வ தர்மாணாம்)இத்யாதிப்படியே அபிகதமமானதர்மம் திருநாமமென்றுசொன்னாரிறே. திருநாமம் ஸாதநாங்கமன்றோ? ஸ்வயம் ஸாதநமோ? என்னில்; "[illegible]" (ஜந்மஸம்ஸாரபந்தநாத் - முச்யதே) என்று - விரோதிநிவ்ருத்தியையும், "[illegible]" (யாதிப்ரஹ்மஸநாதநம்) என்று-ஃலப்ராப்தியையுஞ் சொல்லித் தலைக்கட்டுகையாலே, விரோதிநிவ்ருத்தி பூர்வகமான அபிமதஃலஸித்திக்கும் ஸ்வயம் ஸாதநமே. "[illegible]" (தேஶோயம்ஸர்வகாமதுக்) என்று ஸர்வாபிமதஸாதநமாகதேஶவாஸத்தைச்சொல்லிற்று. '[illegible]' (ஆராதநாநாம்ஸர்வேஷாம்) என்று தொடங்கி, "[illegible]" (ததீயாராதநம் பரம்) என்று தலைக்கட்டுகையாலே - ஸர்வாபிமதஸித்தியும் ததீயரை யாராதிக்கவே கிடைக்குமென்றுசொல்லிற்று; அப்படி சொன்ன துஶ்ஶகமான ஸர்வோபாயங்களும்

---

[illegible]" என்றதநுஸந்தேயம். கர்த்ருத்வயாகமாவது - ஸ்வதந்த்ர ஸ்வர்க்காதி ஸாதநகர்த்தாக்களைப்போலன்றிக்கே. 1'[illegible]' என்று சர்த்ருத்வம் தததீநமாகையாலே, ஈஶ்வரனை ஸஹகாரியாகக்கொண்டு தான் கர்த்தாவாகை. ஸங்கத்யாகமாவது - "[illegible]" என்கிற புத்தித்யாகம். விரோதியான பாபம் - ஜ்ஞாநோத்பத்திவிரோதியானபாபமித்யர்த்தஃ. 'பாபம்க்ஷயித்து' என்கிற விடத்திலே- 2"[illegible]" இத்யாத்யநுஸந்தேயம். ஸ்வரூப ப்ரகாஶமாவது - ஆத்ம ஸ்வரூபம் நன்றாகத்தோன்றுகை. பரபக்தியாவது - தத்ஸம்ஶ்லேஷவிஶ்லேஷைககஸுகதுஃகித்வம். பரஜ்ஞாநமாவது- அவ்விஷயத்திலுண்டான ஸாக்ஷாத்காரம். பரமஹக்தியாவது-விஶ்லேஷத்தில் ஸத்தாஹாநி பிறக்கும்படியாயிருக்கை. 'இந்த்ரியங்களை நியமித்துக்கொண்டு' என்றவிடத்திலே - 3"[illegible]," 4"[illegible]," 5"[illegible]" இத்யாதிகள் அநுஸந்தேயங்கள். 6'மந்மநாபவ மத்பக்தோ மத்யாஜீமாம்நமஸ்குரு' என்கிறபடியே - கர்மஜ்ஞாநங்களிரண்டையும் ஹகவத்விஷயத்திலே யாக்கி, என்றந்வயிப்பது. அதாவது கர்மத்தை ஹகவதாராதநமாகவும், ஜ்ஞாநத்தை ஈஶ்வரவிஷயமாகவும் ஆக்கியென்னுதல்; அன்றிக்கே, கர்மஜ்ஞாநஸ்த்தாநே ஹகவத்க்ருபையையாக்கி யென்னுதல்.

1. 2. பூர்வ-மீமா. 2, 3, 40. 3. 4. கீதை. 3-6. 5. ஷை 2,70.9. ஷை, 3, 6. 6. ஷை 9, 34.

அஹங்காரஸ்பர்சமுண்டாகையாலே த்யாஜ்யமாகச் சொல்லிற்று. ஒன்றாய் ஸித்தமாய் ஸாதகமாய் ப்ராப்தமாய், தனக்கவ்வருகொன்றின்றிக்கே - "[illegible]" (தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:) என்கிற ப்ரபதநத்தைச் சொல்லுகிறது இப்பாட்டால். கீழ்ஒன்பது பாட்டாலும் - சரண்யன் ஸ்வரூபத்தையும் அதிகாரிஸ்வரூபத்தையுஞ் சொல்லி, சரணாகதிப்ரகாரத்தைச் சொல்லுகிறது இப்பாட்டில். சரண்யன் ஸ்வரூபமாவது - நிரதிசயபோக்யமுமாய் வகுத்தவிஷயமுமாய் விரோதிநிவர்த்தகமுமாய் ஸர்வஸுலபமுமாயிருக்குமது. அல்லாதவைபோலன்றியிலே ஆச்ரயணத்துக்கு ஏகாந்தமாயிருப்பது ஸௌலப்யம். †பரத்வம் சேதநனுக்கு ருசிபிறந்தபோதே யாச்ரயிக்கவொண்ணாதபடி தேசவிப்ரக்ருஷ்டமாயிருக்கும். வ்யூஹ

---

'ஸாதகோபாயமாக விதித்தது' என்றவிடத்திலே-1"[illegible]" என்றது அநுஸந்தேயம். 'விதித்தது' - ஸஹஸ்ரநாமத்திலே யென்றபடி. அத்தை யுபபாதிக்கைக்காக தத்விஷய சங்கையை யநுவதிக்கிறார் - எங்கேயென்னில் இத்யாதியாலே. திருநாமம்—திருநாமஸங்கீர்த்தம். 2"[illegible]" என்கிற வசநத்தை விவக்ஷித்து 'ஸாதநாங்கமன்றோ' என்கிறார். "[illegible]," "[illegible]," "[illegible]" இதி மஹாபாரதே ஸஹஸ்ரநாமாத்யாயே. "[illegible]", "[illegible]". த்யாஜ்யமாகச் சொல்லிற்றென்றது - சரமச்லோகத்திலே த்யாஜ்யமாகச் சொல்லிற்றென்றபடி. ஆக, இப்படி ஸாதநாந்தரங்களினுடைய தோஷபூயஸ்த்வத்தை யருளிச்செய்தவநந்தரம், ப்ரபத்தியினுடைய நைர்த்தோஷ்யந் தொடக்கமான அதிசயத்தை யருளிச் செய்யாநின்றுகொண்டு, இத்தை இப்பாட்டாலே யருளிச்செய்கிறாரென்கிறார் - ஒன்றாய் இத்யாதி. இனி, அர்ச்சாவதாரமே ப்ரபத்திக்கு நியதவிஷயமென்னுமத்தையும் உபபிப்பிக்கவேணுமென்ற திருவுள்ளம்பற்றி பரத்வாதிகளுடைய தௌர்லப்யத்தையும் அர்ச்சாவதாரத்தினுடைய ஸௌலப்யத்தையும் அருளிச்செய்கைக்கு அதிஷ்டிகை-கீழ்ஒன்பதுபாட்டாலும் இத்யாதி. 'நிரதிசய போக்யமுமாய்' இத்யாதி விசேஷணத்ரயமும் - "காற்றோளமுதே," "அடியேன்மேவியமர்கின்ற வமுதே," "அண்ணலே," "கூறாய்நீறாய்" இத்யாதியைப்பற்ற. ஸர்வஸுலபமாயென்றது - "திருவேங்கடத்தானே" என்றத்தைப்பற்ற. பரத்வாதிகளுடைய தௌர்லப்யத்தையும் அர்ச்சாவதாரத்தினுடைய ஸௌலப்யத்தையும் அறிவிக்கைக்கு உறுப்பாக, மற்றுமுண்டான குணங்களிற் காட்டில் ஆச்ரயணத்துக்கு அபேக்ஷிதம் ஸௌலப்யமென்கிறார்-அல்லாதவை இத்யாதி. அல்லாதவைபோலன்றியிலே யென்றது - ஆச்ரயணோபயோகியான அல்லாதகுணங்கள்போலன்றிக்கே யென்றபடி. ஸௌலப்யந்தான் பரவ்யூஹாதிகளிலுமில்லையோ? என்ன, அவையெல்லாம் யோக்யராயிர்க்கு ஆச்ரயிக்கைக்கு உறுப்பாகையாலே ஸௌலப்யாதிக்யமில்லையென்கிறார் - பரத்வமென்று:

---

† வ்யூஹங்களென்ற பாடாந்தரம். 1, விஷ்-பு-6-2-17. 2. கீதை-9-14.

மும், ப்ரஹ்மாதிகளுக்கா மத்தனையாகையாலே தத்ப்ராயம்; அவதாரங்கள் ஸாக்ஷாதிகராய் அக்காலத்தில் உதவினார்க்கொழியப் பிற்பாடர்க்கு உதவாமையாலே காலவிப்ரக்ருஷ்டமாயிருக்கும்; அக்குறைகளிரண்டுமின்றியிலே எல்லாக்காலத்திலும்எல்லார்க்கும் வந்துஆஶ்ரயிக்கலாம்படி, ''வானவர்வானவர்கோனோடும்'' என்கிறபடியே நித்யஸூரிகளோடு,இவ்வருகுள்ள ப்ரஹ்மாதிகளோடு, இவ்வருகுள்ள மநுஷ்யர்களோடு *கானமும் வானரமுமாய்க்கொண்டு அத்யந்த ஹேயஜந்மாக்களானாரோடுவாசியற ஸர்வஸமாஶ்ரயணீய ஸ்த்தலம்திருவேங்கடமுடையான் திருவடிகளே. அஜஹத்ஸ்வபாவனாகையாலே அபிமதஸித்திக்கு உடலான ஜ்ஞாநஶக்த்யாதி குணஷ்டகங்களையு முடையனாகையாலே, ஸர்வகுணங்களாலும் பரிபூர்ணனான திருவேங்கடமுடையான் ஶரண்யன். அதிகாரிஸ்வரூபமாவது - அநந்யகதித்வமும் ப்ராப்யருசியும் ஸ்வரூபப்ரகாஶமுமென்கிற இவையிறே திர்யக்குக்களுக்கு இப்படியாஶ்ரயணங் கூடுமோ ? என்னில்; - ஸ்ரீகஜேந்த்ராழ்வான் பகவத் ஸமாஶ்ரயணம் பண்ணினானாகத் துறைச்சுவடிகளிலே யெழுதியிட்டுவைத்துஞ் சொல்லியும் கேட்டும் போராநின்றோமே; இங்கும் ''வைப்பன்மணிவிளக்காமாமதியை மாலுக்கென், றெப்பொழுதும் கைநீட்டும்யானையை'' என்றும், ''புதுமதத்தால்வாய்பூசிக்கீழ்தாழ்ந்தருவி, யுதுமதத்தால் கால்கழுவிக்கையால்-மிதுமதத்தேன் விண்டமலர்கொண்டுவிறல்வேங்கடவனையே, கண்டு வணங்கும்களிறு'' என்றும், ஸ்த்தலாந்தரத்திலே, ''புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டி

---

தொடங்கி. பரத்வம் தேஶவிப்ரக்ருஷ்டம்: வ்யூஹம் பூமியிலேயன்றோ ? என்ன - வ்யூஹமும் இத்யாதி. அவதாரம் ஸந்நிஹிததேசத்திலேபாயிருக்குமே, அதுக்குக்குறைத்தவில்லையே? என்ன-அவதாரங்கள் இத்யாதி. அக்குறைகள்இரண்டுமென்றது - தேஶகாலவிப்ரகர்ஷங்களாகிற இரண்டுமென்றபடி. ஆஶ்ரயணியனும்போது கார்யபாதநோபயோகிஜ்ஞாந ஶக்த்யாதிவிஶிஷ்டனாகவேண்டாவோ? என்ன- அஜஹத் இத்யாதி. ஶரண்ய ஸ்வரூபத்தை நிஷ்கர்ஷித்தவநந்தரம், அதிகாரி ஸ்வரூபமின்னதென்னுமத்தையும் தர்ஶிப்பிக்கிறார் - அதிகாரிஸ்வரூபமாவது இத்யாதி. 'அநந்யகதித்வமும்,ஸ்வரூபப்ரகாஶமும் என்றது - ''புகலொன்றில்லாவடியேன்'' என்றபதத்திலே ஸித்தம். ஸ்வரூபப்ரகாஶமாவது-ஶேஷத்வ ஜ்ஞாநம். ப்ராப்யருசியும் என்றது - ''ஆராவன்பில்'' என்றத்தைப்பற்ற. கீழே, ''கானமும் வானரமும்'' இத்யாதியாலே - திர்யக்குக்களும் ஆஶ்ரயியாநிற்குமென்றத்தை ஶங்கித்து, உதாஹரணமுகேந தர்ஶிப்பிக்கிறார்-திர்யக்குக்களுக்கு இத்யாதி. துறைச்சுவடியாவது- ஸந்த்யாமடத்தில் புராணஞ்சொல்லும்புஸ்தகம்; ஆழ்வார்களும் அருளிச்செய்தமையுண்டென்கிறார் - இங்கும்வைப்பன் இத்யாதி. நாலாந்திருவந்தாதி நாற்பத்தாறாம் பாட்டு. இதுக்குஅர்த்தம்:—மாமதியை-ஸம்பூர்ணமான பூர்ணசந்த்ரனை, ஆஶ்ரிதவ்யாமோஹனான திருவேங்கடமுடையானுக்கு அழகிய திருநந்தாவிளக்காகத் திருமுன்பே வைப்பனென்று கருதி, அவனைப்பிடிக்கைக்காக ஸர்வகாலத்திலும் துதிக்கையைநீட்டுகிற ஆனையைஎன்று மூன்றாந்திருவந்தாதி எழுபதாம்பாட்டு, 'புதுமதத்தாலித்யாதி'. இதுக்கர்த்தம்: புதுமதத்தால் வாய்பூசி - மஸ்தகஸ்த்தலம் கண்டஸ்த்தலம் இவற்றில் நின்றும் பாய்ந்து வாயிலே புகுகிற மதஜலத்தாலே வாய்கொப்பளித்து ஆசமநம்பண்ணி,கீழ்தாழ்ந்துஅருவியுதுமதத்தால்கால்கழுவி- கீழ்தாழ்ந்தருவிகள்போலே வந்துவிழுகிற மதஜலத்தாலே காலைக்கழுவி, கையால் மிதுமதத்தேன் விண்டமலர்கொண்டு - மிக்கமதத்தைப் பண்ணக்கடவ தேனையுடைத்தாய் அப்போதலர்ந்த செவ்விப் பூக்களைப் பொய்கைகளிலே புக்குப்பறித்துக்கொண்டு, விறல்வேங்கடவனையே - திர்யக்குக்களுக்கும் ஸ்வவிஷயத்தில் ஜ்ஞாநப்ரேமங்களை விளைக்கவல்ல மிடுக்கையுடைய திருவேங்கடமுடையானையே, கண்டுவணங்கும்களிறு - கண்ணாரக்கண்டு தலையாரவணங்கி யாஶ்ராயியாநிற்கும் அங்குண்டான ஆனையானது என்றபடி. பெரியாழ்வார்திருமொழி அஞ்சாம்பத்து மூன்றாந்திருமொழி மூன்றாம்பாட்டு, ''உனக்குப்பணிசெய்திருக்கும்'' என்கிறபாட்டிலே, 'புனத்தினை' இத்யாதி: புனத்தினைக்கிள்ளி - புலத்தில் புதுத்தினையைமுறித்து, புதுவவிக்காட்டி - புதியதான ஹவிஸ்ஸை யமுதுசெய்யப்பண்ணி

யுன்பொன்னடிவாழ்கவென், றினக்குறவர்புதியதுண்ணுமெழில்மாலிருஞ்சோலையெந்தாய்'' என்றும் ஆழ்வார்கள் அருளிச்செய்துவைத்தார்கள். இனி, அவ்வோபாதியாகிலும் இத்தையும் விஸ்வஸிக்கவேண்டாவோ நமக்கு? இனி, (ஜ்ஞாநாதிகளால் பூர்ணனான) ஶரண்ய விஷயத்தில் ஶரணாகதி ஃபலவ்யாப்தை யென்னுமோபாதி, ஆநுகூல்யாதிவிஶிஷ்டனான அதிகாரி ஶரணம்புக்கால் ஃபலவ்யாப்தி யென்கிற அர்த்தத்தையுஞ் சொல்லுகிறது. 'அகலகில்லேனிறையு மென்றலர்மேல்மங்கையுறைமார்பா'என்கிற இத்தாலே தம்முடைய ஆகிஞ்சந்யபூர்வகமாகப் பெரியபிராட்டியார் புருஷகாரமாக, ஸர்வஸுலபனான திருவேங்கடமுடையான்திருவடிகளிலே விழுந்து ஶரணம்புகுகிறார். [அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா]-நிரபேக்ஷமுமாய் ஸாபேக்ஷமுமா யிருக்கும் இவ்வுபாயம்: ஆகாரபேதத்தாலே. நிரபேக்ஷ மாகிறபடி எங்ஙனே? என்னில்; ருசியைப்பிறப்பிக்கையும், பிறந்த ருசியை வளர்க்கையும் விரோதிகளைப்போக்குகையும், ஒருதேஶவிசேஷத்தேறக்கொண்டுபோகையும் ப்ராப்தமான கைங்கர்யத்தைக் கொள்ளுகையு மாகிற இவ்வோவிடங்களில் நிரபேக்ஷமாகத் தானே செய்யும்; ஸஹகாரி வேண்டா. (ஸாபேக்ஷமானபடியென்? என்னில்; அதிகாரிஸாபேக்ஷமுமாய், புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கையாலே.) இவ்வுபாயம் ஆர்க்கென்றால், அதிகாரிக்கு என்கையாலே, அதிகாரிஸாபேக்ஷம்; (அதிகாரிஸாபேக்ஷமானவோபாதி புருஷகாரஸாபேக்ஷம்.) எங்ஙனேயென்னில்; இவ்வதிகாரி, பூர்வாபராதத்தையும்பார்த்து அவனுடையஸ்வாதந்த்ர்ய ஸார்வஜ்ஞ்யாதிகளையும்பார்த்துப் பிற்காலிக்க, "அஞ்சாதே'' என்று புருஷகாரமானவள் சொல்லவேண்டுகையாலே. (ஆகையாலே,) அதிகாரிஸாபேக்ஷமுமாய் புருஷகாரஸாபேக்ஷமுமா யிருக்கும். [அகலகில்லேனிறையும்] - ஒருக்ஷணகாலமும் பிரிய ஶக்தையல்லேன். இப்படிசொல்லுகிறவள்தான் ஆர்? என்னில்;

*உன்பொன்னடிவாழ்கவென்று - உன்னுடைய ஸ்ப்ருஹணீயமான திருவடிகள் வாழ்கவென்று மங்களாஶாஸநம்பண்ணி, இனக்குறவர் - புருஷர்களோடு ஸ்திரீகளோடு வ்ருத்தர்களோடு வாசியற எல்லாரும்; புதியதுண்ணும்-புதியதுஉண்ணுகிற்கும், எழில்மாலிருஞ்சோலை எந்தாய் - அழகிய திருமாலிருஞ்சோலையிலேயிருக்கிற என் ஸ்வாமியானவனே! என்றபடி. இது-வேடராஶ்ரயிக்குமதுக்கு பிரமாணம். ஸ்ரீகஜேந்த்ராழ்வானுஶ்யிரத்து ருஷிவசநவித்தமாகையாலேப்ராமாணமாகிறது; ஆழ்வார்களருளிச்செய்தது ப்ரமாணமாகிறபடியென்? என்ன-இனிஅவ்வோபாதி இத்யாதி. அவ்வோபாதியாகிலுமென்றது-அத்தைப்பற்ற அதிகவிஶ்வாஸம்வேணும்: அது இல்லையாகிலும் அம்மாத்ரமாகிலும் விஶ்வஸிக்கவேண்டாவோ? என்றபடி. நமக்கு-ஆழ்வார்கள் ஸ்ரீஸூக்தியைத் தஞ்சமாகப்பற்றின நமக்கென்றபடி. "புகலொன்றில்லாவடியேன்'' என்றத்தைக் கடாக்ஷித்தருளிச்செய்கிறார் - இனிஶரண்ய இத்யாதி. இத்தால் - ஶரண்யன்பக்கலிலே பண்ணவும்வேணும்: அதிகாரி ஶரணம்புகவும்வேணும் என்கை. பாட்டுக்கெல்லாம் அவதாரிகை - அகலகில்லேன் இத்யாதி. ஈஶ்வரன் நிரபேக்ஷோபாயமாயிருக்க, புருஷகாரமும் அதிகாரமும் வேண்டுவானென்? என்ன - நிரபேக்ஷமுமாய் இத்யாதி. இவ்வுபாயம் - ஸித்தோபாயமென்றபடி. அத்தையுபபாதிக்கைக்காக தத்விஷயஶங்கையை யநுவதிக்கிறார் - நிரபேக்ஷமாகிறபடிஎங்ஙனேயென்னில் என்று. அதிகாரிஸாபேக்ஷதையையும் புருஷகார ஸாபேக்ஷதையையும் உபபாதிக்கிறார்-இவ்வுபாயம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. புருஷகாரஸாபேக்ஷதையை யுபபாதிக்கைக்காக தத்விஷயஶங்கையை யநுவதிக்கிறார்-எங்ஙனேயென்னில் இத்யாதி. 'ஸஹகாரிவேண்டா' என்றவநந்தரம், ஸாபேக்ஷமானபடியென்? என்னில் அதிகாரிஸாபேக்ஷமுமாய் புருஷகாரஸாபேக்ஷமுமாயிருக்கையாலே என்றத்ப ஹரித்துக்கொண்டு, அநந்தரம் இவ்வுபாயம் ஆர்க்கென்றால் இத்யாதி யநுஸந்தித்து, இந்தவாக்யாநந்தரம், அதிகாரிஸாபேக்ஷமானவோபாதி புருஷகாரஸாபேக்ஷமென்றத்யாகரித்துக்கொண்டு, அநந்தரம் 'எங்ஙனேயென்னில்' இத்யாத்யநுஸந்தேயம். நிகமிக்கிறார்-அதிகாரிஸாபேக்ஷமுமாய் இத்யாதி. ஶப்தார்த்தம்-ஒருக்ஷணகாலமும் இத்யாதி. "அலர்மேல்*

த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநியுமாய், உபயவிபூதிநாதனுக்கும் நியாமிகையுமா யிருக்கு மவள்கிடீர்! த்ரிவிதசேதநர்க்கும் ஸ்வாமிநி யென்னுமிடத்தில் ப்ரமாணம் - **"ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்"** (ஈஶ்வரீம்ஸர்வபூதாநாம்) என்னக்கடவதிறே. உபயவிபூதிநாத னுக்கும் நியாமிகையென்னுமிடத்துக்கு ப்ரமாணம்: - **"பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்"** (பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீம்)என்று ப்ரதாநபுருஷர்களுக்கு ஈஶ்வரன் அவன்; அவனுக்கு இவள் ஈஶ்வரியென்று சொல்லுகையாலே. ஆக, ஸர்வர்க்கும் நியாமிகையென்னுமிடஞ் சொல்லிற்று. இவள்நியமிக்கும் ப்ரகாரமேன்? என்னில்; த்ரிவிதசேதநரையும் மாத்ருத்வ ப்ரயுக்தமாக நியமிக்கும்: ஈஶ்வரனை ப்ரணயித்வநிபந்தநமாக நியமிக்கும். மாத்ருத்வம் ஸ்வரூபாநுபந்தி: ப்ரணயித்வம் காதாசித்கமாகையாலே வந்தேறியாகாதோ? என்னில்; ஆகாது. எங்ஙனேயென்னில்?- உபாதி நித்யமாகையாலே அதுவும் நித்யம். ஈஶ்வரன் ஸ்ருஷ்ட்யாதிகளைப் பண்ணுமிடத்திலும் இவள்நியாமிகை. **"யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே(அ)கிலம்"** (யஸ்யாவீக்ஷ்யமுகம் ததிங்கிதபராதீநோவிதத்தேகி லம்) என்று அவள்கடாக்ஷமடியாக ப்ருகுடிபடனுய்க்கொண்டு ஸ்ருஷ்ட்யாதிகளைப்பண் ணும். அது என்? **"கரணகளேபரைர்கடயிதும் தயமாநமநா:"** (கரண களேபரைர்க்கடயிதும் தயமாநமநா:) என்று, தன்தயை அடியாகவன்றோ ஸ்ருஷ்டிப்பதுஎன் னில்?—அவற்றின் செல்லாமை பார்த்து ஸ்ருஷ்டிக்கிலிறே தயை யடியாவது; தன் செல்லாமையாலே அவள் கடாக்ஷமடியாகத் தன் ஸத்தையுண்டாய், அவள் ப்ரேரிக்க தயைபிறந்து, அத்தயையடியாகவிறே அவன் ஸ்ருஷ்டிப்பது. நியமிக்குமிடத்தில்

---

*மங்கை" என்கிற பதத்துக்கவதாரிகை-இப்படி இத்யாதி. "அலர்மேல்மங்கை" என்றதுக்கு-வ்யாக்யேய ஸ்ரீஶப்தத்தினுடைய 'ஸ்ரீயதே' என்கிற கர்மணிவ்யுத்பத்தியில் இன்னாரென்று ஸேவாகர்த்தாக்களை விசேஷியாமையாலே, த்ரிவிதசேதநராலும் பரமசேதநனாலும் ஸ்வரூபப்ரயுக்தமாகவும் ப்ரணயித்வ நிபந்தநமாகவும் ஆஶ்ரயணீயையென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் த்ரிவிதசேதநர்க்கும் இத்யாதி. 'ஈஶ்வரீம் ஸர்வபூதாநாம்' இத்யாதி. ஸ்ரீஸூக்தே "யா ஸா ஸ்வஸ்ஸ்தா தயஸர்வ: பும்ப்ரதாநேஶ்வரேஶ்வரீ। ஸாஶேஷலோகஜநநீ லக்ஷ்மீ ரக்ஷிவீக்ஷதாம்". உபாதி நித்யமாகையாலேயென்றது-ஈஶ்வரன்ப்ரணயித்வத்துக்குஹேதுவானபிராட்டிவைலக்ஷண்யம் நித்ய மாகையாலே யென்றபடி. இவள் நியாமகத்வமெங்கேகண்டோம்? என்ன.மோக்ஷப்ரதத்வமாத்ரத்திலன் றிக்கேஸ்ருஷ்ட்யாதிகரணத்திலும் நியாமிகையென்கிறார்-ஈஶ்வரன்இத்யாதி. இதுக்குப்ரமாணம் யஸ் யாவீக்ஷ்ய இத்யாதி. "ஸ்வஸ்தி ஶ்ரீர்திஶதாதஶேஷஜகதாம் ஸர்க்கோபஸர்க்கஸ்திதீ: ஸ்வர்க்கம் துர்க்கதிமாபவர்க்கிகபதம் ஸர்வஞ்ச குர்வந்ஹரி: । யஸ்யா வீக்ஷ்ய முகம் ததிங்கிதபராதீநோ விதத்தே(அ)கிலம் க்ரீடேயம் கலு நாந்யதா(அ)ஸ்ய ரஸதா ஸ்யாதைகரஸ்யாத் தயா" இதி ஸ்ரீஸ்தவே. 'அஶேஷஜகதாம்' இத்யாரப்ய, ஸர்வஞ்சகுர்வந்ஹரி: யஸ்யா: - முகம்வீக்ஷ்ய - தயை:ரஸ்யாத் - ததிங்கிதபராதீநஸஸந்-அகிலம்விதத்தே; இயம்க்ரீடா - அந்யதாஸ்ய ரஸதா நஸ்யாத்கலு-ஸாஸ்ரீ:ஸ்வஸ்தி திஶதாத் இத்யந்வய:. கரணேதி. 'அவிதவிஶேஷிதாநு ப்ரலயஸீம்நிஸம்ஸரத: கரணகளேபரைர்கடயிதும் தயமாநமநா: । வரத நிஜேப்ஸயைவ பரவாநகரோ: ப்ரக்ருதிம் மஹதபிமாநபூதகரணாவலிகோரகிணீம்" இதி ஸ்ரீரங்கராஜஸ்தவே. தன் செல்லாமையாலேயென்றது - பிராட்டி வைலக்ஷண்யத்திலே ஈடு பட்டு அவள்சொன்னது செய்தன்றிநிற்கவொண்ணாதபடியான தன் செல்லாமையாலேயென்றபடி. இவள் நியமித்தால் ஸ்வபாரதந்த்ர்யஹாநிவாராதோ? என்ன-நியமிக்குமிடத்தில் இத்யாதி. "அஹஸ்ர)*

"அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ" (அஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ) என்றும், "விஷ்ணோஃஶ்ரீரநபாயிநீ" (விஷ்ணோஃஶ்ரீரநபாயிநீ) என்றுஞ் சொல்லுகிற படியே தன்ஸ்வரூபங் குலையாமேயிறே நியமிப்பது. எங்ஙனேயென்னில்; ப்ரபை ப்ரபாவானுக்கு ஶேஷமாய் நின்றே அத்தலைக்கு நிறங் கொடுக்குமாபோலவும், பரிமளம் புஷ்பத்துக்கு ஶேஷமாய் நின்று பெருவிலையனுக்குமாபோலவும், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ர்யங் குலையாதே பரதந்த்ரனுமாபோலேயுமிறே இவளும் அத்தலைக்கு அநந்யார்ஹஶேஷமாய்க்கொண்டே நிறங்கொடுக்கும்படி. விஶ்லேஷத்துக்கடி கர்மமன்றோ? கர்மஸ்பர்ஶ மின்றிக்கே யிருக்க, இவள் "அகலகில்லேன்" என்னப்போமோ? என்னில்?-கர்மத்தோபாதி, அவனுடைய வைலக்ஷண்யம் அடியாகச்சொல்லுகிறாள். வைலக்ஷண்யம் போக்யமா மத்தனையன்றோ? என்ன; மஹார்க்கமா யிருப்பதொரு ரத்நத்தை லஹித்தால், "இது நமக்குத்தோங்குமோ!" என்று துணுக்குத்துணுக்கென்னுமவனைப்போலே, "அவன்மார்விலேயிருந்து அகலிற்செய்வதேன்?" என்று அஸ்த்தாநே பயஶங்கைபண்ணுகிறாள். [இறையும் - அகலகில்லேன்] - ஸம்ஶ்லேஷாங்கமான விஶ்லேஷமும் பொறுக்கமாட்டேன். அவன்உபாயமாமிடத்தில் அங்கத்தை ஸஹியாத சுணையுடைமைபோலே, ஸம்ஶ்லேஷாங்கமான விஶ்லேஷமும் பொறாத மார்த்தவம். அவன் மார்விலேயிருந்து அவன்முகத்தைநோக்கி, "உன்னையகல ஶக்தையாகிறிலேன்" என்று அவன்வைலக்ஷண்யத்தை யவனுக்குச் சொல்லுகிறாள். ஸ்வதஸ்ஸர்வஜ்ஞனுமிருக்கிறவன் தன்னுடைய வைலக்ஷண்யம் ஸ்வகீயஜ்ஞாநத்துக்கு விஷயமன்றோ? இவள்சொல்ல அறியுமிடம் அவனுக்கு ஜ்ஞாநக்கோத்தையன்றோ? என்னில்; இவள்சொல்லவறிந்திலனாகில் அவன் ப்ரணயித்வத்துக்குக் கோத்தையாமே! "தனக்குந்தன்தன்மை அறிவரி

ப்ர.—தைத்திரீயகே [நீளாஸூக்தே] "விஷ்ணோஃபோவிஷ்ணுவோ யாபம்ணஃ ப்ருயஷ்வாநஸ்யேஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ"

ஶாநாஜகதோவிஷ்ணுபத்நீ" இதிதைத்தரீயகே. "நித்யைவைஷாஜகந்மாதாவிஷ்ணோஃ ஶ்ரீரநபாயிநீ" இதிஸ்ரீவிஷ்ணுபுராணே. [க-அ-கஎ] எங்ஙனேயென்னிலென்றது-தன்ஸ்வரூபங் குலையாதபடி எங்ஙனேயென்னிலென்றபடி. போக்யதாதிஶயத்தாலேயதிசங்கை பண்ணுகிறாளென்று-ஸ்ரீமிஶ்ரண்டுயோஜனையிலும் விஸ்த்தரேணசொன்னத்தை ஶங்காபரிஹாரமுகேந ஸங்க்ரஹேணவருளிச்செய்கிறார் - விஶ்லேஷத்துக்கடி இத்யாதி. 'போக்யமாமத்தனையன்றோ' என்றவநந்தரம், அது உத்தரோத்தரமநுபுபூஷையை விளைக்குமத்தனைபோக்கி "இறையும் - அகலகில்லேன்" என்னப்பண்ணுமோ? என்ன, என்றுகூட்டுவது. "இறையும்" என்றதுக்குபாவம் - ஸம்ஶ்லேஷாங்க இத்யாதி. ஸம்ஶ்லேஷாங்கமான விஶ்லேஷமாவது - காடாலிங்கநார்த்தமாக நெகிழ்த்தணைக்கை. ஸத்ருஷ்டாந்தமாக விவரணம் - அவன்உபாயம் இத்யாதி. அங்கத்தையென்றது-ஆநுகூல்யஸங்கல்பாதிகளை. சுணையுடைமை-அபிமாநம். "இறையும் - அகலகில்லேன்" என்று ஆரைக்குறித்துச்சொல்லுகிறாள் என்ன-அவன்மார்விலே இத்யாதி. இதுக்கு - "மார்பா" என்றதிலேநோக்கு. ஶங்காவாக்யம் - ஸ்வதஃ இத்யாதி. பரிஹாரம் - இவள்சொல்ல இத்யாதி. ப்ரணயித்வத்துக்குக் கொத்தையாமேயென்றது - ப்ரணயித்வஹாநிவாரணைக்காக இவள்சொல்லவறிந்தால் ஸார்வஜ்ஞ்யஹாநியாகவேணுமோவென்று கருத்து. ப்ரணயித்வத்துக்குக் கொத்தையாவது - இவள் பாசுரஞ்சொல்லாதபோது அவனுக்குஇவளிடத்தில் ப்ராவண்யம் ஒருதலைக்காமமாய் விடுகை. தன்வைலக்ஷண்யம் தான்அறியாமையாலே இவள் சொல்லவேணுமென்று பரிஹாரார்த்தம் - தனக்கும் இத்யாதி. ஆனால் இவன்ஸர்வஜ்ஞதைக்கு விஷய

யான்'' என்றுஞ் சொல்லாநின்றதிறே. ஜகத்ஸ்ருஷ்ட்யாதிகளேயிறே ஜ்ஞாநத்துக்குவிஷயம்; ''ஞானமஃதே கொண்டேல்லாக் கருமங்களுஞ்செய்'' என்றதிறே. ''அகலகில்லேன் இறையும்'' என்கிற பாசுரமுஞ் சொல்லமாட்டாத தமையிறே அவன் தமை. அவன்வைலக்ஷண்யங்கண்ட இவளிலும் அவனுக்குண்டான ஏற்றம், விஶ்லேஷதசையில் அவன்பாசுரத்தே காணு மத்தனையிறே. ''மாஸாதுர்த்வம் நஜீவிஷ்யே'' (மாஸாதுர்த்வம்நஜீவிஷ்யே) என்றாள்இவள்; ''நஜீவேயம் க்ஷணமபி'' (நஜீவேயம்க்ஷணமபி)என்றான்அவன். பரதந்த்ரராயிருப்பார்க்கு உடையவன்வருந்தனையும் பொறுக்கவேணுமிறே; ஸ்வதந்த்ரனுக்கு அதுவேண்டாவே. இப்படி உபயமும் விலக்ஷணமான மிதுநம் உத்தேஶ்யமாகவிருக்கிற முமுக்ஷுக்களுக்கு ஒருதுறையுண்டோ? இவர்களைத் தனித்தனியே பற்றினார்க்கு ஸ்வரூபவிநாஶமிறே. ''மிதுநமேயுத்தேஶ்யம்'' என்றிருப்பார்க்கு ஸ்வரூபோஜ்ஜீவநமிறே. ராவணாதிகள் பக்கலிலே இவ்வர்த்தம் காணவுமாம். [அலர்மேல்மங்கை] - பூவில் ருஜீஷமான தாதும் சுண்ணமுங்கழிந்த பரிமளமே வடிவாறாற்போலே யிருந்துள்ள ஸௌகுமார்யமும், நித்யாநுஸந்தேயமானபருவமுமுடையவள். அவனை ''அகலகில்லேன்'' என்னப்பண்ணவல்ல பரிகரத்தையுடைய இவள், ''அகலகில்லேன்'' என்கிறாளிறே. [உறைமார்பா] - அவன்மார்விற்சுவடறிந்தபின்பு, பிறந்தகமான பூவும் நெருஞ்சிமுள்ளோபாதியாயிற்று. ஸ்ரீஜநகராஜன்திருமகள் பெருமாளைக் கைபிடித்தபின்பு ஸ்ரீமிதிலையை நினையாதாப்போலவும், முக்தன் ''நோபஜநம் ஸ்மரந்நிதம் ஶரீரம்'' (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்று ஸம்ஸாரத்தை நினையாதாப்போலவும், அவன்மார்வில் போக்யதை யறிந்தபின்பு பூவைநினைத்திலள். அஸங்குசிதஜ்ஞாநராயிருக்கச் செய்தே ஸம்ஸாரத்தைக் காணுதவிடம் ஜ்ஞாநக்குறையன்றே: போக்யதாதிஶயமிறே; இவளும் போக்யதையாலேயிறே காணுதொழி

மெங்கே? என்ன - ஜகத்ஸ்ருஷ்ட்யாதி இத்யாதி. இதுக்குப்ரமாணம் - ஞானமஃதே இத்யாதி. இவள் ''அகலகில்லேன்'' என்றால் ஒருதலைக்காமமாகாமைக்காக, அவனும் ''அகலகில்லேன்'' என்ன வேண்டாவோ? என்ன -அகலகில்லே னிறையும் என்கிற இத்யாதி. அந்ததசையையெங்கேகண்டோம் என்ன - அவன்வைலக்ஷண்யம் இத்யாதி. பாசுரந்தனையருளிச்செய்கிறார் - மாஸாதுர்த்வம் இத்யாதி. ''யாவத்ஜீவிஷ்யே...'' ...ஸுந்தரகாண்டேஸீதா. ''நஜீவேயம்க்ஷணமபி விநா தாமஸிதேக்ஷணாம்'' இதி ராமஃ. அவன் 'நஜீவேயம்க்ஷணமபி' என்னுநிற்க, இவள் ''மாஸாதுர்த்வம்நஜீவிஷ்யே'' என்றால் ப்ராவண்யத்துக்குக் கொத்தையன்றோ? என்ன - பரதந்த்ரராய் இத்யாதி. ஸவிஶேஷமாதல், ஆசார்யோக்தியாதல் - இப்படிஉபயமும் இத்யாதி. மிதுநமாகவன்றிக்கே தனித்தனியேபற்றினாலோ? என்ன - இவர்களை இத்யாதி. ஆதிஶப்தத்தாலே - ஸ்ரீவிபீஷணாழ்வானையும், சூர்ப்பணகையையும்நினைக்கிறது. இத்தால் ஸவிஶேஷமாதல், வ்யாக்யாதாவினுடைய ஈடுபாடாதல் - அவனையகலகில்லேன் இத்யாதி பரிகரத்தையுடைய இவள்என்றது- வைலக்ஷண்யத்தையும் பருவத்தையுமுடைய இவளென்றபடி. ''உறை''என்கிற வர்த்தமாநார்த்தம் - அவன்மார்வில் இத்யாதி. சிரபரிசிதத்தை நினையாதொழியப்போமோ? என்ன, ஸத்ருஷ்டாந்தமாக அருளிச்செய்கிறார் - ஸ்ரீஜநகராஜன் இத்யாதி. முக்தன்போக்யதையாலே ஸம்ஸாரத்தை நினையாதொழிந்தானென்ன வேணுமோ?, ஜ்ஞாநஸங்கோசத்தாலே நினையானென்றாலோ? என்ன - அஸங்குசித இத்யாதி.

கிறது. [உறைமார்பா] - இவள் பூவைக் காணுதவோபாதி திருமார்வுக்குஅவ்வருகு அவயவங்களைக் காணுள். மற்றுள்ள அவயவங்கள் குமர்கிடந்துபோமத்தனை. இவ் வளவால் சொல்லிற்றுயிற்று - ஸ்ரீஶப்தமும், மதுப்பிலர்த்தமும். ஸ்ரீஶப்தம் - புரு ஷகாரம் வேண்டுகையாலே சொல்லிற்று; மதுப்பில் - நித்யயோகத்துக்கு ப்ரயோஜந மேன் ? என்னில்; ஆஶ்ரயிப்பார்க்குக் காலம்பார்க்கவேண்டாதபடி ஸதா ஸந்நிஹிதம். [நிகரில்புகழாய்இத்யாதி] - நாராயணஶப்தார்த்தம் சொல்லுகிறது. இதுக்குப்பொருள் - உபயவிபூதியோகமும், "நராஜ்ஜாதாநிதத்வாநி" (நராஜ்ஜாதாநிதத்வாநி) என்கிற படியே ஜகத்காரணத்வமும் அர்த்தமாகச் சொல்லாநிற்கச்செய்தே, நம்மாசார்யர்கள் ஆஶ்ரயணத்துக்கு ஏகாந்தமான ஸௌலப்யாதிகுணங்கள்நாலையும் சொல்லிப் போருவர்கள்; அக்குணங்களுக்கு க்ரமம்அருளிச்செய்கிருர்இவர். அக்குணங்கள் சொல்லுகிறவிடத்தில், வாத்ஸல்யம் முன்னுகச்சொல்லுவானேன் ? என்னில்; ஸாபராதனுகையாலே இவ்வப ராதம் பொறுக்கைக்கு உறுப்பாகப் புருஷகாரம் வேண்டினுல், அநந்தரம் இவ்வபராதம் போக்யமாவதொருகுணம் முன்னுக வேண்டுகையாலே. 'நிகரில் புகழாய் என்ன' வாத் ஸல்யத்தைக்காட்டுமோ ? என்னில்; இதுக்குப்பொருள் - கத்யத்திலே "அபாரகாருண்யஸௌஶீல்யவாத்ஸல்ய" (அபாரகாருண்யஸௌஶீல்யவாத்ஸல்ய) என்று குணங்களோடொக்கவெடுத்து, "ஆஶ்ரிதவாத்ஸல்யைகஜலதே" (ஆஶ்ரிதவாத் ஸல்யைகஜலதே) என்று இக்குணத்தை விஶேஷிக்கையாலே சொல்லிற்று. [உலக மூன்றுடையாய்] - கீழ்ச்சொன்ன வாத்ஸல்யத்துக்கடியான குடற்றுடக்கைச்சொல்லு கிறது. தன்வயிற்றிற்பிறப்பாலேயிறே ஜநநி வத்ஸலையாகிறது. 'என்னையாள்வானே'என்று ஸௌஶீல்யத்தைச்சொல்லுகிறது. "என்னையாள்வானே" என்று - கைங்கர்யஃஸை போலே, உபகாரந்தோற்றச்சொல்லப்பெறுவரோ ஆகிஞ்சந்யம் முன்னுக ஆஶ்ரயிக்கிற வரென்னில்?- (அவன்கைவிடாமல் கைக்கொள்ளுகைக்காக.) புருஷகாரத்தைப்பார்த்து வார்த்தைசொன்னுர் - ப்ரதமபதத்தில்; அநந்தரம் - உபாயத்தைப்பார்த்து வார்த்தை

---

"மார்பா"என்றதுக்கு பாவம் - இவள்பூவை இத்யாதி. தத்வ்யதிரிக்தாவயவங்கள் என்செய்பு மென்ன - மற்றுள்ள இத்யாதி. குமர்கிடந்து - அநுபவயோக்யமன்றிக்கேகிடந்து. 'இவ்வளவால் சொல்லிற்றுயிற்று என் ?' என்னில் என்றுகூட்டுவது. ஸ்ரீஶப்தமுமென்றது - ஸ்ரீஶப்தார்த்தமு மென்றபடி. ஸதாஸந்நிஹிதம் - ஸதாஸந்நிஹிதத்வம். "நிகரில்" என்று - அல்லாதகுணங்களிற்காட் டில் இதுக்கொப்பில்லாமையைச் சொன்னதுக்குபாவம் - இதுக்குப்பொருள் இத்யாதி. "நராஜ்ஜாதாநிதத்வாநி நாராணீதிதேதாவிது: । தாந்யேவாயநம் தஸ்ய தேந நாராயண ஸ்ம்ருத:" இதி பாத்மபுராணே. இதுக்கு - நாராயணஶப்தத்துக்கு. இதுக்குப்பொருள்கத்யத்திலே இதி. இதுக்குப்பொருள்-இதுக்கு ஹேதுவென்றபடி. வாத்ஸல்யத்துக்கடி குடற்றுடக்கென்னுமத்தை உதாஹரணமுகத்தாலே தெரிவிக்கிறுர் - தன்வயிற்றில் இத்யாதி. உபகாரந்தோற்றச்சொல்லப் பெறுவரோ ? என்றது - "புகலொன்றில்லாவடியேன்" என்று வெறுமையை முன்னிட்டாஶ்ரயிக்கிற வர், "என்னை" என்று தமக்குச் சிலகைம்முதலுண்டாய் அத்தாலேஆளுகிறுன் என்றுசொல்லப்பெறு வரோ? என்றபடி. உபகாரந்தோற்ற - தாம் ஒருபகாரஞ்செய்தமை தோற்றவென்றபடி. ப்ரகரண பலத்தாலே, தம்முடைய அயோக்யதாநுஸந்தாநத்தாலே யருளிச்செய்கிறுரென்கிறுர் - புருஷகா ரத்தை இத்யாதி. அதாவது ஸாபராதசேதநனை ஈஶ்வரனோடேசேர்க்கும் புருஷகாரவைபவத்தைப் பார்த்து "அகலகில்லேன்" இத்யாதியைச்சொன்னுர்; புருஷகாரமேமிகையாம்படி இவன்தோஷமே பச்சையாகக் கைக்கொண்டு ரக்ஷிக்கும் உபாயவைபவத்தைப்பார்த்து "நிகரில்புகழாய்" இத்யாதியைச்

சொன்னர்; இதில் - நாட்டைப்பார்த்துச்சொல்லுகிறுர். (தாமுமவர்களிலே யந்யதம ரிறே.) விஷயாந்தரங்களினுடைய லாபாலாபமே பேறிழவாகவிருக்கிறவர்களிலே அந்ய தமராயிருக்கிறதம்மை, "கர்மாத்யுபாயங்கள் ஸ்வரூபவிரோதி" என்றறியுந்தனையும்வர நிறுத்தி, பிராட்டி புருஷகாரமாகத் தானேயுபாயமும் தானேப்ராப்யமும் என்னும்படி பண்ணின உபகாரத்தைச்சொல்லுகிறுர். இது - ஸௌசீல்யமானபடி யெங்ஙனே? என்னில்; '[grantha]' (சீலம் ஹிநாம - மஹதோமந்தைஸ்ஸஹநீரந்த்ரேணஸம்ஶ்லேஷ꞉) என்கிறபடியே, தன்மேன்மையையும் என்சிறுமையையும்பாராதே ஒருநீராகக்கலந்தானென்கிறுர். 'நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்புந்திருவேங்கடத்தானே'என்று ஸௌலப்யம். 'அமரர்முனிக் கணங்கள்' என்கிற த்வைவித்யம் - "வைகுந்தத்தமரரும்முனிவரும்" என்றும், "[grantha]"(பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ)என்றுஞ்சொல்லுகையாலே. "நிகரில்" என்பானேன்? என்னில்; இவர்களுக்கு ஒருவருமொப்பல்ல. ப்ரக்ருதி ஸம்பந்தத்தாலே ஸம்ஸாரிகளோப்பல்லர்; ப்ரக்ருதி[grantha] நிர்க்கதராகையாலே முக்தரோப்பல்லர்; ஜகத்வ்யாபாராதிகளுண்டாகையாலே ஈஶ்வரனுமொப்பல்லன். "[grantha]" (ஜகத்வ்யாபாரவர்ஜம்) என்றுநிஷேதித்து, "[grantha]" (போகமாத்ரஸாம்யலிங்காச்ச) என்று - ஹகவதநுஹவத்திலே யந்வயம். [விரும்புந்திருவேங்கடத்தானே] - இவர்களுக்கு விருப்பமாவது, இருட்டறையிலே விளக்குப்போலே, பரமபதத்திற்காட்டிலும் "கானமும் வானரமும்" என்கிறபடியே எத்தனையேனுந் தாழ்ந்தார்க்கும் முகங்கொடுக்கிற சீலாதிகுணங்கள் இங்கே யுண்டாகையாலே, அங்கில்லாததும் இங்கேபெறுகையாலே விரும்புவர்கள்; ஸௌலப்யமாவது - உயர்ந்தாரோடு தாழ்ந்தாரோடுவாசியற ஸர்வஸுலபமான அர்ச்சகபராதீநத்வம். [புகலொன்றில்லாவடியேன்] - "[grantha]" (ப்ரபத்யே) என்கிறவிடத்தில் உத்தமனுல் வந்த அதிகாரிஸ்வரூபத்தைச்சொல்லுகிறது. அநந்யகதித்வமும், ஸ்வரூபப்ரகாஶமானஅநந்யார்ஹஶேஷத்வமுஞ்சொல்லுகிறது."புகலொன்றில்லா"என்றும், "அடியேன்"

சொன்னுர்; இதில், நாட்டாரிலந்யதமராயிருக்கிற தம்முடைய அயோக்யதையைப்பார்த்து, ஸம்ஸாரிகளில் அந்யதமனை 'என்னை' என்கிறுர் என்றபடி. இப்படியானவிறே, ஸௌசீல்யந்தோற்றுவது. ஏதத்விவரணம் - விஷயாந்தரங்களின் இத்யாதி. நீரந்த்ரேண - புஷ்யற, ஹக்தைரிதி, '[grantha]' இதி ஸைவே. "ஒருவருமொப்பல்ல" என்றத்தைவிவரிக்கிறுர் - ப்ரக்ருதி இத்யாதி. இவர்களுக்கு ஜகத்வ்யாபாரமில்லையோ? என்ன-ஜகத்வ்யாபாரவர்ஜம் இத்யாதி. "[grantha]" (கஎ) '[grantha]' (உக)இதிஉத்தரமீமாம்ஸாயாம்சதுர்த்தாத்யாயே சதுர்த்தபாதே."திருவேங்கடத்தானே" என்றதுக்கர்த்தம் - ஸௌலப்யமாவது இத்யாதி. "புகலொன்றில்லா" என்று - ப்ரபத்த்யங்கத்வேந ஆகிஞ்சந்யமும், "அடியேன்" என்று-அநந்யகதித்வமும், ஸ்வரூபப்ரகாஶமான அநந்யார்ஹஶேஷத்வமுஞ்சொல்லுகிறதென்றபடி. "அடியேன்" என்றதுக்கு ப்ராப்தமானவர்த்தம் - அநந்யார்ஹஶேஷத்வம், ஆர்த்தமான வர்த்தம் - அநந்யகதித்வம். "[grantha]" இத்யாதி. ஆகிஞ்சந்யமாவது - உபாயாந்தரத்யாகம். இத்தால்-உபாயாந்தரத்யாகத்தில் ஸ்வரூபவிரோதமேப்ரதாநஹேதுவென்று ஹலி

என்றும் இரண்டுஞ்சொல்லவேணுமோ? என்னில்; ப்ரக்ருதிஸம்பந்தத்தில் பாரமார்த்யத்தாலேயும், மயர்வறமதிநலமருளப்பெற்ற ஜ்ஞானவைஶவத்தாலேயும் அருளிச்செய்கிறார். [உன்னடிக்கீழ்] - "ஶரணௌ" (சரணௌ) என்கிற பதத்தில் விக்ரஹவத்தையைச் சொல்லுகிறது. ஶுபாஶ்ரயமுமாய், விஷயாந்தரங்களில் அருசி பூர்வகமாகத் தன்பக்கலிலே ருசியையுமுண்டாக்கி, பிறந்தருசியையும்வளர்த்து ப்ராப்திவிரோதியையுந்தவிர்த்து, ஒருதேஶவிசேஷத்திலேபோனால் நித்யகைங்கர்ய ப்ரதிஸம்பந்தியுமாய், ஸதாபஶ்யந்திக்கு விஷயமுமாவது விக்ரஹமாகையாலே. அடியிலே, "துயரறுசுடரடிதொழுதெழு" என்று திருவுள்ளத்தைக்குறித்தருளிச்செய்து, தாம் பற்றுகிறவிடத்தில், "உனபாதங்கூடுமாறு கூறாய்" என்றும், "உன்னடிசேர்வண்ணமருளாய்" என்றும், "உன்னடிசேரவடியேற்காவாவென்னாயே!" என்றும், "பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராய்" என்றும், "உனபாதஞ்சேர்வதடியேனெந்நாள்?" என்றும் "மண்ணளந்தவிணைத்தாமரைகள்காண்பதற்கு" என்றும், "எந்நாளுன்னடிக்களடியேன்மேவுவதே?" என்றும், "நொடியார்பொழுது முனபாதங் காண நோலாதாற்றேன்" என்றும், "நோலாதாற்றேனுன பாதங்காண" என்றும், "அடியேனுனபாதமகலகில்லேனிறையும்" என்றும், "உன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேன்" என்றும் இவரடிவிடாமல் அநுஸந்தித்தபடி கண்டதே! [அமர்ந்து] - அமருகையாவது - உபாயாந்தரங்களைவிட்டவோபாதி ப்ராப்யாந்தரங்களில் அருசியைச்சொல்லுகிறதோ? என்னில்; அதுஇங்கு ப்ரஸ்துதமல்லாமையாலே ப்ரஸங்கமில்லை. இதுக்குப்பொருள்:—"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய" (ஸர்வதாமாங்பரித்யஜ்ய) என்றும், "ஶரணம் வ்ரஜ" (ஶரணம்வ்ரஜ) என்றும் சொல்லச்செய்தே ஏகபத ப்ரயோகம் பண்ணினவோபாதி, திருவேங்கடமுடையான் திருவடிகளும் தம்முடைய தலையும் கோக்குவாயும் படுகண்ணியும்போலே நிர்விவரமாகப் பொருந்தினபடிசொல்லு

*தம்.' "புகலொன்றில்லாவென்றும் அடியேனென்றும் இரண்டுஞ்சொல்லவேணுமோ' என்றுதொடங்கி, 'ஜ்ஞாநவைபவத்தாலேயுமருளிச்செய்கிறார்' என்னுமளவுக்கும் அர்த்தம்ஸந்திக்தம்" என்று அப்பு அரும்பதம். அரும்பதாந்தரங்களில்நிர்வஹிக்கும்படி - 'புகலொன்றில்லாவென்றுமடியேனென்றுமிரண்டும் சொல்லவேணுமோ? என்கிறஶங்கைக்குஹாவம்: 'புகலொன்றில்லா' என்கிறபதமும் - ஆகிஞ்சந்யத்தைச்சொல்லி, 'அடியேன்' என்கிறபதமும் - ஆகிஞ்சந்யம் ஸ்வரூபத்திலே ப்ரகாஶிக்கும்படியான அநந்யார்ஹசேஷத்வத்தைச் சொல்லுகையாலே, அந்யதரபதம்போருமே? என்னில் என்ற; அது அப்படியேயாகிலும், உபாயாந்தரத்யாகரூபஆகிஞ்சந்யத்திலே அஜ்ஞாநமும் ஜ்ஞாநாதிக்யமும் ஶக்திபாரவஶ்யமுமென்றுஹேதுத்ரயமுண்டாகையாலே, அத்தை த்யோதிப்பிக்கைக்காக பதத்வயமும்வேணுமென்றுபரிஹரிக்கிறார் - ப்ராக்ருதிஸம்பந்தத்தில் இத்யாதி. பாரமார்த்யத்தாலேயென்றது - அர்த்தக்ரியாகாரித்வத்தாலேயென்றபடி; இத்தால்-ப்ரக்ருதிஸம்பந்தகார்யமான அஜ்ஞாநத்தாலேயென்றபடி; 'மதி' என்கையாலே - ஜ்ஞாநாதிக்யமும், 'நலம்' என்கையாலே - ஶக்திபாரவஶ்யமும்சொல்லிற்று; 'இம்மூன்றும்மூன்றுதத்த்வத்தையும்பற்றிவரும்' என்றிறே ஸ்ரீவசநபூஷணத்திலும் அருளிச்செய்தது; அப்போது மூன்றுபதங்கள்வேண்டாவோ? என்னில், ஹேதுத்வயத்தையும் - 'அடியேன்' என்று ஒன்றாகச்சேர்த்தருளிச்செய்கையாலே இவ்வளவே யமையும்" என்று, 'புகலொன்றில்லாவென்றும்' இத்யாதிவாக்யத்வயத்துக்கு அரும்பதாந்தரத்தில் நிர்வாஹம். திருவடிகள் விக்ரஹைகதேஶமாகையாலே, இத்தைச்சொன்னது - திருமேனிக்கும் உபலக்ஷணமென்று விவக்ஷித்தருளிச்செய்கிறார் - சரணௌஇத்யாதி. விக்ரஹவத்தாகதநத்துக்குப்ரயோஜநமேதென்ன அருளிச்செய்கிறார் - ஶுபாஶ்ரயமாய் இத்யாதி. இப்ராப்திவிரோதியாவது - அவித்யாதிகள். ஸ்வரூபகுணங்களிலுங்காட்டில் விக்ரஹத்திலேமண்டியிருப்பரென்கிறார் - அடியிலேதுயரறு இத்யாதி. கீழில்யோஜநாத்வயத்திலும்*

கிறது. [புகுந்தேனே] - **வ ரய**க்ஸத்தித்யாதிகளில்லாதபடி ஶரீரவச்சேஷமான தமக்கு அந்தர்யாமியாய் நிற்கிறபடியை அறிந்திருக்கிற இவர், 'புகுந்தேன்' என்கிறவிது - ஒரு போக்குவரத்து உண்டாயன்று; அவனுடைய ஸர்வஜகத்காரணத்வத்தையும் ஸர்வாத்ம ஹாவத்தையும் ஸர்வரக்ஷகத்வத்தையும் அறிந்து, "அவனேயுபாயம்" என்கிற அத்யவஸாயஜ்ஞானத்தைச் சோல்லுகிறது. "**கத்யர்த்தா புத்த்யர்த்தா:**" (கத்யர்த்தா புத்த்யர்த்தாஃ) என்கிறபடியே. [புகுந்தேனே]-"**ப்ரபத்யே**" (ப்ரபத்யே) என்கிறவர்த்தமாநம்-கௌணம்; அடைந்தேன் என்கிறப்போலே, புகுந்தேனேன்கிற இதுவே முக்யம். "**பாபாநாம்வா**" (பாபாநாம்வா)-பிராட்டியுடைய அஹயப்ரதாநம் இஶ்ஶ்லோகம். "ராவணனும்பட்டு, பெருமாளும்விஜயிகளானர்" என்று பெரியப்ரியத்தைப் பிராட்டிக்குத் திருவடிவிண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் ப்ரீதி ப்ரகர்ஷத்தாலே விம்மல் பொருமலாய் ஸ்தப்தையாயிருக்க, இவனும் விக்கலுக்கு வெம்மாற்றம்போலே" "**கிந்நுசிந்தயஸேதேவி கிம்த்வம்மாம் நாபிபாஷஸே**" (கிந்நுசிந்தயஸேதேவி கிம்த்வம்மாம் நாபிபாஷஸே) என்று பெரியப்ரியத்தைவந்து விண்ணப்பஞ்செய்த எனக்கு ஒருமறுமாற்றஞ்சொல்லாதே தேவரீர் எழுந்தருளியிருக்கிற இருப்பு என்தான்? என்று திருவடி விண்ணப்பஞ்செய்ய, பிராட்டியும் "உனக்கு ஸத்ருஶமாகத் தரலாவதொன்றில்லாமைகாண் நான் பேசாதிருந்தது" என்ன, இவனும் "இவ்வளவிலே நம்அபேக்ஷிதத்தை விண்ணப்பஞ்செய்துகோள்ளவேணும்" என்றுபார்த்து, "தேவரைச்சுற்றும் முற்றும்நலிந்த ராக்ஷஸிகளாகிறர் க்ரூரைகளாய் தருணகுணஹாவைகளாயிற்று: ராவணனுக்கு முன்பேகோல்லவேண்டுவது இப்பெண்பிள்ளைகளையாயிற்று: அவனும் இவர்களோபாதிகேடனல்லன்; இவர்கள் இப்போது பாம்பு படமடங்கினற்போலே யிருக்கிறர்கள் இத்தனையாயிற்று;

ப்ர.—தமேவ [கககூ] ஶ்லோகத்துக்கு முன்பு, "ஸுப்ரீதிஹாஸிநீரூஷஸ்தாணுர்விஜயதீ: । கிம்த்வம்விந்தயஸேதேவிகிம்த்வம்மாம்நாபிபாஷஸே॥ கறு॥"

"புகுந்தேன்" என்றதுக்கு ஸங்க்ரஹேண அருளிச்செய்தத்தை விஶதமாகஅருளிச்செய்கிறர் - ப்ரநஷ்ஸ்தித்யாதிகள் இத்யாதி. உபபத்தியழகிது. ஶப்தமும் வசிக்கவேணுமேயென்ன - கத்யர்த்தா இத்யாதி. "ப்ரபத்யே" என்று - வர்த்தமாநார்த்தமாகச் சொல்லியிருக்க, "புகுந்தேன்" என்று பூதமாகச் சொல்லுவானென்? என்ன - ப்ரபத்ய இத்யாதி. கௌணமென்றது - கார்யார்த்தமாகக்கிடக்கிறதென்றபடி. "ஸகுர்தேவ ஹிஶாஸ்ருஸாயமுங்க்ஷுதாயஜ்ஞாரயேஹாமு" இத்யாதியிலே - இதுக்குநோக்கு. த்ருதீயயோஜனையிலே - "கர்மஜ்ஞாநங்களை ஹத்யங்கத்வேந சொல்லுகிறது" என்றும் ஒருருவிலேயருளிச்செய்வர்;ப்ரத்யேகஸ்வதந்த்வமே பலகாலும் அருளிச்செய்வது. முதல்யோஜனையிலே "அகலகில்லேன்" என்கிறபதத்திலே, தொட்டாரைத்தொட்டு "நகஶ்சிந்நாபராத்யதி" என்று ப்ரஸ்துதமாகஎடுத்த ஶ்லோகத்தைவிஸ்தரேண வ்யாக்யாநம்பண்ணுவதாக பதோபாதாநம்பண்ணுகிறர் - பாபாநாம்வா இத்யாதி. இதின்சீர்மையை யருளிச்செய்கிறர் - பிராட்டியுடைய இத்யாதி. ஶ்லோகத்துக்கு உபோத்காதம் - ராவணனும் இத்யாதி. ப்ரீதிப்ரகர்ஷத்தாலே விம்மல் பொருமலாயென்றது - ஹர்ஷேணாவருத்தாஸாவ்யாஜஹார நகிஞ்சந" என்றத்தைப்பற்ற. விம்மல்பொருமலாய்-அத்யுந்மஸ்தகமாய் வெம்மாற்றம்-வெவ்வியவார்த்தை.'ஹிரண்யம்வாஸுவர்ணம்வா' இத்யாதியைப்பற்ற-உன்க்குஸத்ருஶமாக இத்யாதி. இப்போது ஒன்றும்செய்யவில்லையேயென்ன இவர்கள்இப்போது இத்யாதி. விவரணம் - ஏகவதபகாரிகளையும் இத்யாதி. அப்போதேசெய்யா

இவர்களை ஬ஹுப்ரகாரமாக ஹிம்ஸிக்கப்பாராநின்றேன். "முஷ்டிபி:பாணிபிஶ்சைவ" (முஷ்டிபி꞉பாணிபிஶ்சைவ) என்று கையாலேகுத்தியும் காலாலேதுகைத்தும் நகங்களாலே † சோதித்தும் பற்களாலேகடித்தும் துண்டித்தும் "ஸிம்ஹம்ஸிம்ஹம்ஶரைர் ரக்தம்" (சிங்கம்பிங்கம்ஶரைர்தக்தம்) என்று பெருமாள் திருச்சரங்கள்செய்ததெல்லாம் நானேபண்ணப்பாராநின்றேன்; ஭கவதபசாரிகளையும் ஭ாகவதாபசாரிகளையும் தண்டிக்கும் க்ரமத்திலே தண்டிக்கக்கோலாநின்றேன்; முன்புவந்தபோது இடமில்லாமைவிட்டுப்போனேனித்தனை; இப்போது எனக்கு எல்லாப்ரத்யுபகாரங்களும் பண்ணியருளிற்றாகலாம்; இதுஇத்தனையும் திருவுள்ளமாகவேணும் என்றான்? என்ன, "பாபாநாம்வா" (பாபாநாம்வா) - என்றருளிச்செய்கிறாள். "பாபாநாம்வாஶுபாநாம்வா" (பாபாநாம்வாஶுபாநாம்வா)-இவர்கள் நீ நினைத்திருக்கிறபடியே பாபைகளாகவுமாம், நான் நினைத்திருக்கிறபடியே சுபைகளாகவுமாம். அதுதானேயன்றே உத்தேஶ்யம்; "தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்" (தோஷோயத்யபிதஸ்யஸ்யாத்) என்றாற்போலே. 'அழுக்குடையவனன்றே குளிக்க ப்ராப்தியுடையான்: அவர்கள் பாபைகளாகிலன்றே நாம் முகங்கொடுக்கவேண்டுவது. சுபைகளாகில் உன்வால் வேணுமோ? அவர்கள் புண்யங்களே அவர்களுக்குக் கைகொடுக்குமே: கைம்முதலில்லாதார்க்கன்றே நாம் கைம்முதலாகவேண்டுவது' என்றாள். "வதார்ஹாணாம்"(வதார்ஹாணும்)-தண்ட்யரைத் தண்டிக்கவும் அல்லாதாரைத்தவிரவும் சொல்லுகிற ஧ர்மஶாஸ்த்ரம் தேவரைத் தோற்

---

தொழிவானென்? என்ன-முன்புவந்தபோது இத்யாதி. "பாபாநாம்வாஶுபாநாம்வா" என்கிற விகல்பம் புத்திபேதேந என்கிறார்-இவர்கள் இத்யாதி. சுபைகளுத்தேஶ்யமாமதொழிய பாபைகள் உத்தேஶ்யமாகக்கூடுமோவென்ன - அதுதானேயன்றே இத்யாதி. அதாவது - அவர்கள் பாபைகளானவையன்றோநாம் ரக்ஷிக்கைக்குவுடலென்றபடி. பாபைகளைரக்ஷிப்பாருண்டோ? என்ன-தோஷோயத்யபி இத்யாதி. இப்படிசொல்லுகிறவளுடைய ஹார்த்த஭ாவத்தை இரண்டுவகையாகவருளிச்செய்கிறார் அழுக்குடையவன் இத்யாதிவாக்யத்வயத்தாலே. அதாவது-பாபனுவனுக்கு பாபவிநாஶநம்அபேக்ஷிதமாகையாலும், நமக்குத்தான் புண்யவான்களைப்பற்றவும் பாபிகளைரக்ஷிக்குமதுவே கர்த்தவ்யமாகையாலும், பாபைகளானதுவேயுத்தேஶ்யமென்று – இவ்வாக்யத்வயத்துக்கும்தாத்பர்யம். சுபைகளுக்கு தேவரீர் வேண்டாவோ? என்ன, சுபைகளுக்குநானும்வேண்டா, நீயும்வேண்டா, பாபைகளுக்கிரண்டு பேரும் வேணுமென்கிறாள் - சுபைகளாகில் இத்யாதிவாக்யத்வயத்தாலே. உன்வால்வேணுமோ வென்றது – உத்க்ராந்திரேஶாதாநமூலமாக வைதரணி கடக்கிறவன் பசுவின்வாலைப்பிடித்துக்கொண்டு போகக்கடவனிறே; அப்படியேயுன்னை யபேக்ஷிக்கவேணுமோவென்றபடி. திருவடிதான் இவர்களை "க்ரூரமாகத் தண்டிக்கவேணும்" என்று அபேக்ஷிக்கிறதுக்குக் கருத்தென்? என்னில்:—"அ஭யம்ஶரணம்ஸிவ꞉" என்றது நிலைநிற்கிறதோ, இல்லையோ? என்று சோதிக்கைக்காக என்றருளிச்செய்வர். பாபைகளைரக்ஷிக்கவேணுமென்று இவ்வளவே போந்திருக்க, "வதார்ஹாணாம்" என்கிற பதம் - வ்யர்த்தமாயிருந்ததீயென்ன - தண்ட்யரை இத்யாதி. ராக்ஷஸிகளை 'ஶரணாகதர்' என்றது. "சுமஹேஷாவசிஷ்டாநாம்ராக்ஷஸ்யோஹஸமேதாயாக | ஶ்ரீணிவாதஷ்ஷமஹாஸி ஸைமிரீஜநகாத்மஜா" இத்யாதிக்கநந்தரம் - 'அ஭யம்ஶரணம்ஸிவ꞉' என்றத்தைப்பற்ற,

† 'சாடித்தும்' என்று பாடாந்தரம்.

றிக் கிழித்துப் போகடக் கடவதோ? என்ன,—ஆரேனுமாக ஶரணாகதரை ரக்ஷிக்கக் கடவதென்கிற விசேஷஶாஸ்த்ரம் உன்னைத்தோற்றிக் கிழித்துப் போகடக்கடவதோ என்கிறாள். ''ஶரணம்'' என்றுவந்த ஸ்ரீவிபீஷணாழ்வான் தோஷவானேயாகிலும் ''நத்யஜேயம்'' (நத்யஜேயம்) என்று பெருமாள் கடற்கரையிற்சொன்னவார்த்தை கடலோசையாகக் கடவதோ? என்கிறாள். ''ப்லவங்கம'' (ப்லவங்கம)-பின்னையும் இவன்புத்தி திரியவிடாமையினாலே ஹரி! ஹரி! என்கிறாள். 'ப்லவங்கம' என்கிறாள் - நச்சினத்தை நச்சும் ஜாதியானமை கண்டோமே யென்கிறாள். வஸிஷ்டாதிகள் மந்த்ரிக்குங் குடியான இக்ஷ்வாகுவம்ஶத்தில் பிறந்தாயல்லை; யோகிகளான ஜநககுலத்தில் பிறந்தாயல்லை; காட்டிலே பணையோடு பணை தத்தித் திரிகிற ஜாதியிலேயிறே பிறந்தது! அங்ஙனேத்தார்க்கு ஶரணாகதியோட்டையது தெரியாதிறே என்கிறாள். ''வாநரோத்தம'' (வாநரோத்தம) என்றவள், ஹரி! ஹரி! என்கிறாள் தானே யிறே; 'ப்லவங்கம' என்கிறாள், ராஜாக்களுமாய் மூலையடியே நடக்கவுரியருமாயிருக்கிற பெருமாளும் எங்கள்முன் இத்தனை கோபித்தறியார்; நீ வாநரஜாதியாயிருந்துவைத்து இங்ஙன்கோபிக்கக்கடவையோ? ''கார்யம்கருணமார்யேண'' (கார்யம்கருணமார்யேண) - இவர்கள்புண்யபாபங்கிடக்க: இப்போது ஓடுகிற தயநீயதஶையைப் பாராய். உன்கையிலே யகப்பட்டு ''நாம் என்படக்கடவோம்'' என்று தியங்குகிறபடி பாராய். இவர்களுக்கு வேறுரக்ஷகரில்லையே. இப்போது இவ்வளவில் நாம்இரங்கவேணுங்காண்! ''ஆர்யேண''(ஆர்யேண)-இவையெல்லாம் இப்போது நான் கற்பிக்க வேண்டும்படியாவதேஉனக்கு! 'ஆர்யேண' (ஆர்யேண)-ஐந்த்ரவ்யாகரணபண்டிதனென்கிறது பொய்யோ? அவையுமெல்லாம் கற்றுக்கேட்டிருக்கச்செய்தேயும், இப்போது ராமகோஷ்டியில் பரிசயம் பின்னாட்டினபடியாகாதே. அக்கோஷ்ட்டியிற்பழக்கமிறே நீ இங்ஙன்சொல்லவல்லையாயிற்று. நான்போந்த

''ஶரணாகதரை ரக்ஷிக்கவேணும்''என்று சொன்னவிடமுண்டோ? என்ன - ஶரணமென்றுவந்த, இத்யாதி. ''நத்யஜேயம்'' என்றவநந்தரம் ''ப்லவங்கம'' என்கிறதுக்கு ரஸோக்தியாகபாவம் - பின்னையும் இத்யாதி. வாநர என்னாதே, ''ப்லவங்கம'' என்று விசேஷிக்கிறதுக்குப்ரயோஜநமருளிச்செய்வதாக பதோபாதாநம்பண்ணுகிறார் - ப்லவங்கமஎன்கிறள் என்று. ப்ரயோஜநந்தன்னை யருளிச்செய்கிறார் - நச்சினத்தை இத்யாதி. ''நத்யஜேயம்'' என்றவநந்தரம் ''ப்லவங்கம'' என்று ஸம்போதிக்கிறவளுக்கு பாவாந்தரம்அருளிச்செய்கிறார்-வஸிஷ்டாதிகள்இத்யாதி நாலுவாக்யத்தாலே. மந்த்ரிக்கும் - ஆலோசிக்கும். ''ப்லவங்கம'' என்றால் - க்ஷேபோக்தியென்று தோற்றமோவென்ன, வாநரோத்தம இத்யாதி. 'வாநரோத்தம என்றவள் தானேயிறே - ஹரிஹரி என்கிறாள்' என்றுங்வயிப்பது. ''ப்லவங்கம''என்றதுக்கு பாவாந்தரம் - ராஜாக்களும் இத்யாதி. அதாவது - ஶாஸ்த்ரவஶ்யதையின்றிக்கேயிருக்கிற நீ என்னுதல்; பெருமாளைப்போலே ஸ்வதந்த்ரனன்றிக்கே பரதந்த்ரனா நீயென்னுதல். ரக்ஷணம் கர்த்தவ்யமென்னாதே, ''கருணம்கார்யம்''என்ற பதப்ரயோகத்துக்கு பாவம்-இவர்கள் புண்யபாபங்கிடக்க இத்யாதி. தயநீயதஶைதான்ஏதென்ன - உன்கையிலே இத்யாதி. தியங்குகிறபடி - மயங்குகிறபடி. தியங்குகை - மயங்குகை. ''கார்யம்'' என்று - அவஶ்யகர்த்தவ்யமாகச்சொன்னதுக்குபாவம் - இவர்களுக்கு இத்யாதி வாக்யத்வயத்தாலே. ''ஆர்யேண'' என்கிறபதத்தை ப்ரயோகிக்கிறவளுடைய ஹார்த்தபாவத்தை இரண்டுவகையாக அருளிச்செய்கிறார் - இவையெல்லாம் இத்யாதிவாக்யத்வயத்தாலே. இப்படி ஐந்த்ர வ்யாகரணபண்டிதனாயிருக்கச்செய்தே நீ இப்படி சொல்லுகைக்குஹேது, ராமகோஷ்ட்டியில் பரிசயமென்கிறாள் - அவையுமெல்லாம் இத்யாதி வாக்யத்வயத்தாலே. ''அக்கோஷ்டியில்பழக்கம்'' என்றதுக்குபாவமேதென்ன-நான்போந்த

பின்புஅக்கோஷ்டி இங்ஙனேநீரற்றதாகாதேயென்றுகருத்து. "ந கஶ்சிந்நாபராத்யதி" (நகஶ்சிந்நாபராத்யதி)-ஸம்ஸாரத்தில்குற்றமில்லாதார்ஆர்! திரைநீக்கிக்கடலாடப்போமோ? நற்குதிரையாகப்பாவித்திருக்கிற பெருமாள்தான் குற்றவாளரல்லரோ! நான்தான் குற்றவாட்டி யல்லேனோ? நீதான் குற்றவாளனல்லையோ? பெருமாள் குற்றவாளரானபடி யெங்ஙனே? என்னில், - தாம்காடேறப்போந்தார்; அவர்பின்னே மடலூருவாரைப்போலே இளையபெருமாளும் போந்தார்; தம்மோடே ஏகாந்தஹோகம்பண்ணக் கடவதாக இலையகலப்படுத்துக்கொண்டு நானும்போந்தேன்; என்னைப்பிரிந்து பத்துமாஸம் இருந்தார்: தாம் வாராவிட்டால் தம்மதோரம்பு இசங்கமாட்டாமையில்லையிறே இவ்வழி; இத்தனைநாள் பிரிந்திருக்க வல்லரானபோதே பெருமாள்பக்கலிலேயன்றோ குற்றம்? பாரதந்த்ர்யத்துக்கு அநுகுணமாகப்பேசாதிராதே, அதுதன்னைச்சொன்ன என்பக்கலதன்றோ குற்றம். இனி, நாயகன்சொன்னகார்யம் செய்த அடியாரைத் தண்டிக்கப்பார்த்தவன்று, பெருமாளருளிச்செய்த கார்யம் செய்யப்போந்தஉன்னை முற்படத்தண்டித்துக்கொண்டன்றோ ராவணன் சொன்னகார்யஞ்செய்த இவர்களைத் தண்டிப்பது? ஆகையால், நீயல்லவோ குற்றவாளன்! "எல்லாப்படியாலும் பெருமாள் ஒருவிஷயத்தை முனிந்தவன்று ஆறவிடுகைக்கு நானுண்டு; நானும் அவர்வழி போகவேண்டி இருந்தவன்றைக்கு நீயுண்டு" என்றிருந்தேன்; நீயும்இங்ஙனேயானால் அபராதஞ்செய்தார்க்குப்புகுவாசல் உண்டோ? என்கிறாள்.

---

## பதினோராம் பாட்டு.

---

அடிக்கீழமர்ந்துபுகுந்து அடியீர்! வாழ்மினேன்றென்றருள்கொடுக்கும்
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன்
முடிப்பான்சொன்னஆயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும்
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே.

இத்யாதி. குற்றமுடையாளைத்தள்ளிக் குற்றமில்லாதவர்களைக் கூட்டிக்கொண்டாளோ? என்ன - ஸம்ஸாரத்தில் இத்யாதி. "குற்றவாளர்" என்றதை விசேஷநிஷ்டமாகக் காட்டுகிறாள் - திரைநீக்கி இத்யாதி. "எல்லார்க்கும்" என்பானென்? பெருமாள், நான், நீர், மூன்றுபேருக்கும் குற்றமில்லையேயென்ன, மூவர்க்கும் குற்றமுண்டென்கிறாள் - நற்குதிரையாக இத்யாதிவாக்யத்ரயத்தாலே. நற்குதிரையாக - ஒத்தாரில்லாதவராக. நற்குதிரை - ஒத்தாரில்லாமையும், இறுமாந்திருக்கையும். இசங்குகை - நகருகை; வருகையென்றபடி. "ந கஶ்சிந்நாபராத்யதி" என்கிற பதத்தின் தாத்பர்ய ஸித்தமான அர்த்தத்தை யருளிச்செய்கிறார் - எல்லாப்படியாலும் இத்யாதி வாக்யத்ரயத்தாலே. நீயுண்டென்றிருந்தேனென்றது - ஸ்ரீவிபீஷணாழ்வான் ஶரணம்புகுந்தபோது மஹாராஜருள்ளிட்டார் "வத்யதாம்" என்னுநிற்க, "ததஸ்து ஸுக்ரீவம் விபீஷண:" என்று நீ புருஷகாரிக்கையாலே நீயுண்டென்றிருந்தேனென்றபடி. "பாபாநாம் வா ஶுபாநாம் வா வதார்ஹாணாம் ப்லவங்கம। கார்யம் கருணமார்யேண ந கஶ்சிந்நாபராத்யதி" இதி ராவணவதாநந்தரே. ஏதத்பூர்வத்ர, "ஸ ஏஷ் விஷ்ணுர்ஹரிஶ்ரேஷ்ட ஸீதாயாஶ்ச திஜஸ்வதீம்। கிஞ்சித்விஜயஸேஷுவிக்கிம் க்ஷம்யதாம் நாஹிஹாஷஸே" தத்ரோபரி, "ஶிஷ்டிஸ்ஸ்வாணிஹிதேஶ்வரவரணேஶ்வ வஶோஸந்த। ஜ்வாதிவிவிசேவஸ்யதைகஸ்யதேசோஸக்தாராணா:" "ராஜஸம்ஶ்ரயவஶ்யாநாம் குர்வதீநாம் பராஜ்ஞயா। விதேயாநாம் ச தாஸீநாம் க: குப்யேத் வாநரோத்தம" (கo)

ஆ.—(அடிக்கீழமர்ந்து.) - கைங்கர்யைக ரதிகளாய்க்கொண்டு தன் திருவடிகளை ஶரணம்புக்கவர்களுக்குக் கைங்கர்யஸம்பத்தைக் கொடுத்துக்கொண்டு நிற்கிற நிருடமமான ஆஶ்ரித வாத்ஸல்யத்தையுடைய திருவேங்கடமுடையானைச் சேர்ந்து முடிக்கைக்காகத் திருமலையில் ஸம்ருத்தியைச்சொன்ன இத்திருவாய்மொழியை ஆஶ்ரயித்தவர்களை ஆஶ்ரயித்தவர்களே, திருநாட்டிலே ஹகவச்சேஷத்வஸாம்ராஜ்யத்திலே அபிஷிக்தராய் ஸர்வகாலமும் ஸர்வஶேஷவ்ருத்தியும் பண்ணிக்கொண்டு வர்த்திக்கப்பெறுவரென்கிறார்.

ஓ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் எல்லாரும் திருநாட்டிலேசென்று அடிமையிலே மூர்த்தாபிஷிக்தராயிருந்து என்றும் அடிமை செய்யப்பெறுவர்என்கிறார்.

[அடிக்கீழ் என்று தொடங்கி] - 'தன் திருவடிக்கீழே அநந்யப்ரயோஜநராய்ப் புகுந்து அடியாருள்ளார் வாழுங்கோள்' என்னும்படிக்கு ஒப்பில்லாதானும் இருந்துள்ள ஸர்வேஶ்வரனை ஸம்ருத்மான பழனங்களையுடைய திருநகரியிலே ஆழ்வார். [முடிப்பானென்றுதொடங்கி] - ஆயிரந்திருவாய்மொழியிலும் தம்முடைய ஶேஷவநிவ்ருத்யர்த்தமாகத் திருமலையிலே சொன்ன இத்திருவாய்மொழி பற்றினரெல்லாம் திருநாட்டிலேபோய் அவ்விடம் தாங்களிட்ட வழக்காய்க்கொண்டிருந்து என்றும் செலுத்தப்பெறுவர். கற்றவர்களை ஸமாஶ்ரயித்தவர்கள் என்றுமாம்.

ப.—அநந்தரம், இத்திருவாய்மொழியைப் பற்றினவர்கள், மஹாவகாசமான பரமபதத்திலேவ்யாவ்ருத்தராயிருந்துநித்யவாஸம்பண்ணுவரென்றுபலத்தையருளிச்செய்கிறார்.

அடியீர் - சேஷபூதராயுள்ளவர்களே! அடிக்கீழ் - நம்முடைய அடிக்கீழே, அமர்ந்து - அநந்யஸாதநராய் அநந்யப்ரயோஜநராய்க்கொண்டு வ்யவஸ்திதராய், புகுந்து - புகுந்து, வாழ்மின் - நிரந்தராநுபவம்பண்ணுங்கோள்! என்றென்று - என்றென்று, (உபாயபாவத்திலு முபேயபாவத்திலும்), அருள் - தன் க்ருபையை, கொடுக்கும் - உபகரிக்கும், படி - ப்ரகாரத்துக்கு, கேழ் - ஒப்பு, இல்லா - இல்லாத, பெருமானை - ஸர்வாயிகனைக்குறித்து, பழனம் - ப்ரமஹரமான நீர்நிலங்களையுடைய, குருகூர் - திருநகரிக்கு நிர்வாஹகரான, சடகோபன் - ஆழ்வார், முடிப்பான் - தம்முடைய கார்யமடங்கத் தலைக்கட்டிக்கொள்வதாக, சொன்ன - அருளிச்செய்த, ஆயிரத்து - ஆயிரந் திருவாய்மொழியிலும் வைத்துக்கொண்டு, திருவேங்கடத்துக்கு - திருமலைக்கு ப்ரதிபாதகமான, இவை - இவை, பத்தும் - பத்தையும், பிடித்தார் - சப்தாவலம்பநம்பண்ணினார், பிடித்தார் - அர்த்தாவலம்பநம் பண்ணினார் (எல்லாரும்), பெரிய - நிரதிஶயமஹத்தையையுடைத்தாய், வானுள் - பரமவ்யோமஶப்தவாச்யமான பரமபதத்திலே, வீற்றிருந்து - (இத்திருவாய்மொழியில் ஸம்பந்தமடியான) வ்யாவ்ருத்திதோன்றும்படியிருந்து, நிலாவுவர் - நித்யாநுபவம்பண்ணி வர்த்திப்பர். நிலாவுதல் - நிலைநிற்க நடத்தல். பிடித்தாரைப் பிடித்தென்றுமாம். இது - அறுசீராசிரியவிருத்தம்.

இ.—நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றார் பரமபதத்திலேசென்று ஊர்ஸ்யரஸத்திலே அபிஷிக்தராய் அடிமைசெய்யப்பெறுவர்களென்கிறார்.

[அடிக்கீழ் இத்யாதி] - தன் திருவடிகளின் கீழே அநந்யப்ரயோஜநராய்ப் புகுந்து ஸ்வரூபஜ்ஞாநமுடையார் வாழுங்கோளென்று முத்ரையால் அருளிச்செய்கிறாப்போலேயாயிற்று நின்றருளுவது. "ஸாகேதம் ஶரணம் வ்ரஜ - ஸாமஶ்வஹ:" என்றாற்போலேயாயிற்றுநிற்பது. [படிக்கேழில்லாப் பெருமானை] - இப்படிக்குத் தனக்கு ஒப்பில்லாத ஸர்வேஶ்வரனை. [பழனக்குருகூர்] - அழகிய நீர்நிலங்களையுடைய திருநகரி.

தம்முடைய விரோதியை முடிக்கைக்காகத் திருமலையைக்குறித்து அருளிச்செய்த இப் பத்தும். [பிடித்தார் பிடித்தார்] - பற்றினர் பற்றினர் என்னுதல், பற்றினரைப் பற்றினர் என்னுதல். பரமபதத்திலே குறைவற்ற அடிமை செய்யப்பெறுவர். இவர் பண்ணின ப்ரபத்தியாக பரமபதத்தேறப்போவர்கள்.

ஈடு.—நிகமத்தில் - இத்திருவாய்மொழிகற்றார், பரமபதத்திலே சென்று தாஸ்யத்திலே யபிஷிக்தராய் அடிமைசெய்யப் பெறுவர்க ளென்கிறார்.

[அடிக்கீழ்இத்யாதி] - உங்கள் உத்தேஶ்யங்கண்டிகோளே, இத்தைப்பற்றி ஆழ்ந்து க்ருதக்ருத்யராய்ப் போங்கோ ளென்று. [அருள்கொடுக்கும் படிக்கேழில்லாப்பெருமானை] - ஆஶ்ரிதவிஷயத்தில் அருள்கொடுக்கும் ஸ்வபாவத்துக்கு ஒப்பில்லாத ஸர்வேஶ்வரனை. "மாஶுச:" (மாஶுச:) என்ற க்ருஷ்ணனும் ஒவ்வான்இவன்படிக்கு. [பழனக் குருகூர்ச் சடகோபன்] - நல்ல நீர்நிலங்களையுடைய திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [முடிப்பான்சொன்னஇத்யாதி]- "பலநீகாட்டிப் படுப்பாயோ" என்கிற ஸம்ஸார விரோதத்தை முடிக்கையிலே திருவுள்ளத்தாலே உத்ஸாஹித்தருளிச்செய்த ஆயிரத்திலும் வைத்துக்கொண்டுஇப்பத்தும் திருமலைக்குச் சொல்லிற்றின. "ரத்நஹாரீசபார்த்திவ:" (ரத்நஹாரீசபார்த்திவ:) என்கிறபடியே. [பிடித்தார் பிடித்தார்] - பிடித்தவர்களைப் பிடித்தவர்கள்; பற்றினரைப்பற்றினர். [வீற்றிருந்து]-" ஸஸ்வராட்பவதி" (ஸஸ்வராட்பவதி) என்கிறபடியே இருவர்க்கும் ஒக்குமாகாதேவீற்றிருக்கை.ஸ்வவ்யதிரிக்தங்களையும் ஶேஷமாகவுடை யனுகையால் வந்த ஆநந்தத்தையுடையனுயிருக்கும்இவன்:"ஏஷஹ்யேவாநந்தயாதி"(ஏஷஹ்யேவாநந்தயாதி)என்கிறபடியேஅவன்ஆநந்திப்பிக்கஆநந்தியாயிருக்கும்இவன் [பெரியவானுள் நிலாவுவரே] - "மஹாகம்" (மஹாகம்) என்றும், "பரமாகாஶ"

நிகமம் - அடிக்கீழ் இத்யாதி. "வீற்றிருந்து பெரியவானுள் நிலாவுவரே" என்றத்தைப் பற்ற அவதாரிகை - இத்திருவாய்மொழி கற்றார் பரமபதத்திலே இத்யாதி. தாஸ்யத்திலே யபிஷிக்தராய் என்றது - "வீற்றிருந்து" என்றத்தைப்பற்ற.

ஶேஷபூதரானவர்களே! திருவடிகளின்கீழே பொருந்திப் புகுந்து வாழுங்கோ ளென்று சொல்லி என்று ஶப்தார்த்தம். "அமர்ந்து" என்றது - அநந்யப்ரயோஜநரா யென்றபடி. ஶேஷபூதர்க்கு உத்தேஶ்யம் திருவடிகளாகையாலே 'உங்களுத்தேஶ்யங்கண்டிகோளே' - என்றது. படியென்று - ஸ்வபாவம், கேழென்று - ஒப்பு. "அருள்கொடுக்கும்" என்றத்தை விசேஷ்ஷ்டமாக்குகிறார் - ஆஶ்ரிதவிஷயத்தில் இத்யாதி. ஒப்பில்லாமையென்று ஆரை வ்யாவர்த்திக்கிற தென்ன - மாஶுச: இத்யாதி. அதாவது - க்ருஷ்ணனைப்போலே காலவிசேஷத்திலே யதிகாரியான அர்ஜுநமாத்ரத்துக் கருள்கொடுக்கையன்றிக்கே, அடியீரென்று - * கானமும் வானரமுமானார்க்கும், "பின்னானார்வணங்கும்" என்று - ஸர்வகாலத்திலும் எல்லார்க்கும் முகங்கொடுக்கையாலே, க்ருஷ்ணனுமொப்பல்ல னென்றபடி. "அருள்கொடுக்கும்" என்ற வர்த்தமாநத்தாலே - எப்போதும் க்ருபை பண்ணுமென்று தோற்றுகிறது; 'அடியீர்" என்கிற பஹுவசநத்தாலே - எல்லார்க்கும் க்ருபை பண்ணுமென்று தோற்றுகிறது. 'உத்ஸாஹித்து' என்றது - அர்த்தாத்ஸித்தம். "இவை" என்றதுக்கு பாவம் - ரத்நஹாரீச இத்யாதி. அதாவது - நல்லதெல்லாம் ராஜாவுக்காயிருக்குமென்கிறபடியே இதினுடைய நன்மையாலே - இவைபத்தும் திருமலைக்கென்றாரென்றபடி. "பவாம்ஶ்ச ஸஹஸ்ரேண தீயதாம்ஶுபலக்ஷணா। ரத்நம் ஹி பகவந்நேதத் ரத்நஹாரீசபார்த்திவ:" இதி பாலகாண்டே விஶ்வாமித்ர வைபவகதநப்ரகரணே [ருஉ-கூ]. வீற்றிருக்குமது அவனுக்கன்றோ வென்ன-ஸஸ்வராட்இத்யாதி. வீற்றிருக்கை - வேறுபாடு தோற்றவிருக்கை. ஸ்வராட் - ஸ்வதந்த்ர:. அகர்மவஶ்யஇத்யர்த்த:. ஆனால் ஈஶ்வரனுக்கும் இவனுக்கும் வாசியேதென்ன-ஸ்வவ்யதிரிக்தங்களை "பெரியவான்" என்கிறதுக்கு ஶப்தார்த்தம் - மஹாகம் இத்யாதி. "பெரியவான்" என்

(பரமாகாஶம்) என்றுஞ் சொல்லப்படுகிற பரமபதத்திலே வர்த்திக்கப்பெறுவர்கள். இந்த்ராதிகள் வர்த்திக்கும் இவ்வருகில் வெளியிலல்ல. மேல்வரும் அநுபவமொழிய ப்ராப்திக்கு ப்ரபத்தி பண்ணவேண்டாத தேசத்திலே போய்ப் புகப்பெறுவர். இவர் பண்ணின ப்ரபத்தியே நமக்குமெல்லாம்: தனித்து வேண்டா; இப்பாசுரத்தைச்சொல்லி ஃபலத்திலே அந்வயிக்கும் அத்தனை. நற்கன்றுக்கிரங்கினது தோல்கன்றுக்கு இரங்குமாபோலே, இவரை நினைத்து இப்பத்துங்கற்றார்பக்கலிலும் ஈஶ்வரன் ப்ரஸந்நனும். ஸ்ரீவிபீஷணாழ்வானோடே வந்த நால்வர்க்கும் அவன்பண்ணின ப்ரபத்தியே யமைந்ததிறே. "இவனுடையவன்" என்று எதிர்த்தலைக்குத் தோற்றவிருக்கும் அத்தனையே வேண்டுவது. (௧௧)

கிறதுக்கு ஃபாவம் - இந்த்ராதிகள் இத்யாதி. பரமபதத்துக்குப் பெருமை யேதென்ன - மேல்வரும் இத்யாதி. மேல்வரும் அநுபவமொழியவென்றது - உத்தரோத்தரம் அநுபவிக்குமதொழிய ப்ரபத்தி பண்ணவேண்டாவென்றபடி. "பிடித்தார்பிடித்தார்" என்ற திருவாய்மொழியில் அந்வயமாத்ரம் போருமோ? தனித்துப்ரபத்தி பண்ணவேண்டாவோ? என்ன - இவர்பண்ணின இத்யாதி. ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் வேண்டாவோ? கேவலம் இதிலந்வயம் போருமோ? என்ன-நற்கன்றுக்கு இத்யாதி. இப்படி ஸம்பந்தங்கொண்டு அங்கீகரித்த இடமுண்டோவென்ன - ஸ்ரீவிபீஷணாழ்வான் இத்யாதி. ஆழ்வார்பண்ணின ப்ரபத்தியே போருமாகில், ஜ்ஞாநாநுஷ்டாந பஞ்சஸம்ஸ்காராதிகள் வேண்டாவோ? திருவாய்மொழியை வெறுமனே யதிகரித்திருக்கவமையுமோ? என்ன - இவனுடையவன் என்று இத்யாதி. அதாவது, இந்த ஃபாகவதாபிமாநாந்தர்ப்பூதன் இவனென்று எதிர்த்தலையான ஈஶ்வரனுக்குத் தோற்ற வர்த்திக்குமதிலே, ஜ்ஞாநாநுஷ்டாநங்கள் பஞ்சஸம்ஸ்காராதிகளெல்லாம் அந்தர்ப்பூதங்களென்றபடி. 'இவைபத்தும் பிடித்தார் பிடித்தார்' - இவை பத்தையும் ஶப்தாவலம்பநம் பண்ணினார், அர்த்தாவலம்பநம் பண்ணினாரெல்லாருமென்னுதல்; இவைபத்தையும் பிடித்தாரைப் பிடித்தாரென்னுதல். (௧௧)

---

த்ரவிடோபநிஷத்ஸங்கதி—"[illegible]"

த்ரவிடோபநிஷத்தாத்பர்யரத்நாவலி.—"[illegible]"

[illegible] ॥

---

திருவாய்மொழி நூற்றந்தாதி.

உலகுய்யமால்நின்றவுயர்வேங்கடத்தை
யலர்மகளைமுன்னிட்டவன்றன் - மலரடியே
வன்சரணாய்ச்சேர்ந்தமகிழ்மாறன்றாளிணையே
யுன்சரணாய்நெஞ்சமே யுள்.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம், எம்பெருமானார் திருவடிகளே ஶரணம், ஜீயர்திருவடிகளே ஶரணம்.

---

# ௬ ஆம் பத்து—பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 4 | 2 | (யதோவசோ...) | (யதோவாசோ...) |
| ,, | 7 | சபால | சாபல |
| 5 | 2 | ஸஜ்ஜாதஹாஷ꞉ | ஸஜ்ஜாதவாஷ꞉ |
| 7 | 34 | வழிபரிக் | வழிபறிக் |
| 8 | 21 | என்றிருதே | என்றிராதே |
| 9 | 8 | அறிவிக்குங் | அறிவிக்குந் |
| 10 | 8 | நமாஸ்ரூகஸா | நமாஸ்ரீகஸா |
| ,, | 30 | ஹார்ய ஹாவம் | ஹார்ஓ ஹாவம் |
| ,, | 38 | செங்நேலைப் | செங்நெலைப் |
| 11 | 22 | மேன் | மென் |
| 14 | 10 | உஷ்ஂஜேயூ | உஷ்ஂஜெயூ |
| 15 | 18 | ஜஹுரா | ஜஹுரா |
| 16 | 5 | யிருப்பதோன்றிறே | யிருப்பதொன்றிறே |
| 30 | 37 | ஹாவங் | ஹாவாங் |
| 31 | 22 | ஜஹாதநம | ஜஹாதாநம |
| 45 | 27 | ஹபர | ஹர |
| 70 | 5 | (பார்த்தா) | (பார்த்தா...) |
| 72 | 17 | க்காள்ளுகிற | க்கொள்ளுகிற |
| 77 | 10 | வார்த்தனை த | வார்த்தை |
| 120 | 40 | எல்லப்பொருள் | எல்லாப்பொருள் |
| 135 | 22 | அவடி | அவடித |
| 151 | 21 | விபூயாக | விபூதியாக |
| 154 | 16 | ரும்பாய் | ருடம்பாய் |
| 158 | 11 | பாதத்சானை | பாதச்சாயை |
| 160 | 20 | வேறாக்ஷ | வேறாக்ஷ |
| 164 | 35 | ஹவொநா | ஹாவொநா |
| 167 | 31 | நப்பிரானை | நம்பிரானை |
| 186 | 2 | அநுஹவபெற்ற | அநுஹவிக்கப்பெற்ற |
| 267 | 18 | ஸ்ரீவாமநா | ஸ்ரீவாமநா |
| 269 | 29 | குணுனு்ம் | குணநாம் |
| 270 | 9 | ஸூசகமான | ஸூசகமான |
| ,, | 11 | பொருத்தோனை | பொருததோனை |
| ,, | 35 | சதுரங்றே | சதுரனிறே |
| 270 | 38 | ஆயர்கு | ஆயற்கு |
| 271 | 15 | துக்க வறிவை | மிக்கவறிவை |
| ,, | 23 | வக்ஷஸூ | வக்ஷஸூ |
| 275 | 13 | தாயர் | தாயார் |
| 277 | 3,4 | வயிறெறிய | வயிறெரிய |
| 278 | 9 | நகைபண்ணும் | நசைபண்ணும் |
| 279 | 28 | சோலையும் | சோலைகளையும் |
| 280 | 7 | ஹோஷகமும் | போஷகமும் |
| ,, | 32 | ஜெவஸவ்வாழி | ஜெவஸ்வஹ்ழி |
| 282 | 36,37 | தெருட்டுகை | தெவிட்டுகை |
| 283 | 4 | வகுத்து அவனே | வகுத்தவனே |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 283 | 7 | பின்பூணுற | பின்புஊணுற |
| 284 | 17 | சாவள | சீர்வள |
| 286 | 7 | வெளிரும்காழ்ப்பு | வெளிறும்காழ்ப்பு |
| 387 | 10 | பொறுக்மாட்டா | பொறுக்கமாட்டா |
| 289 | 35 | சுவரிவிட்டது | சுவறிவிட்டது |
| 290 | 24 | ஶத்ருஷ்ட | ஸத்ருஷ்ட |
| 291 | 26 | தாயாரை | தாயரை |
| 292 | 13 | ஸங்ந ரனுல் | ஸங்நமானுல் |
| 293 | 20 | கோவையாய் | கோவைவாய் |
| 294 | 21 | ஶ்ரூஷ | ஶுஶ்ரூஷ |
| ,, | 20 | ராஜ்யே | ராஜ்யஂஏ |
| ,, | 38 | க்ஷஉயா | க்ஷஔயா |
| 295 | 17 | பாவையோயினி | பாவைபோயினி |
| 363 | 17 | ஶத்ருக்நவ்யஶரீரெ | ஶத்ருக்நவ்யவஶரீரெ |
| 367 | 11 | க ண்ணையுடை | கண்ணையுடை |
| 373 | 29 | பற்றுதல் | பற்றுதல் |
| 378 | 17 | லுள்ளங்கரியான் | லுள்ளுங்கரியான் |
| 380 | 18 | பரச்ருதி | ப்ரக்ருதி |
| 382 | 9 | வர்த்தை | வார்த்தை |
| 423 | 12 | பர்க்கிருயோ | பார்க்கிருயோ |
| 434 | 27 | ஸா...ம் | ஸாமரம் |
| 448 | 29 | அடியோர்க்கு | அடியேர்க்கு |
| 456 | 11 | மாமள் | மாமகள் |
| 469 | 13 | ஸைபிவஸ் | ஸபிவஸ் |
| ,, | 31 | வாஜ—ா | வாஜ்யா |



PRINTED AT THE "NOBLE PRESS" TRIPLICANE, MADRAS. S. E.